# KANINI

## KALANJIYAP

# PERAGARATHI

**(COMPUTER ENCYCLOPAEDIC TAMIL DICTIONARY)**

*ValarTamil Selvar*

**MANAVAI MUSTAFA**

**Price Rs. 425/-**

Published by

**MANAVAI PUBLICATION**

AE 5 (103) ANNA NAGAR,
CHENNAI - 600 040.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | : | KANINI KALANJIYAP PERAGARATHI (COMPUTER ENCYCLOPAEDIC TAMIL DICTIONARY) |
| Author | : | MANAVAI MUSTAFA |
| Copyright holder | : | Author |
| Language | : | Tamil |
| Paper used | : | Bible Paper |
| Size of the Book | : | Crown Octovo |
| First edition | : | 2002 |
| No. of Pages | : | 1600 |
| Binding | : | Calico Binding |
| Price | : | Rs. 425/- |
| Type Setting | : | Laser Impression<br>12-B/4, Pulla Avenue, (Opp. TNSC Bank)<br>Shenoy Nagar, Chennai - 600 030. |
| Printer | : | *Radha offset press, Chennai - 13.* |
| Publisher | : | Manavai Publication<br>AE 5 (103), Anna Nagar,<br>Chennai - 600 040. |

# கணினி
# களஞ்சியப்
# பேரகராதி

வளர்தமிழ்ச் செல்வர்
மணவை முஸ்தபா

**விலை ரூ. 425/–**

வெளியீடு :
மணவை பப்ளிகேஷன்
ஏஇ 5 (103) அண்ணா நகர்,
சென்னை - 600 040.

# முன்னுரை

ஒரு மொழியின் உண்மையான வளர்ச்சி, எந்த அளவு கோலைக் கொண்டு மொழியியல் வல்லநுர்கள் அளவிட்டுக் கணிக்கிறார்கள் என்பது மிக முக்கியமான கேள்வி.

காப்பியம் முதலான மரபுக் கவிதை வடிவிலான இலக்கியப் படைப்புகளைக் கொண்டா அல்லது புதுக்கவிதை, சிறுகதை, புதினம், நாடகம் போன்ற நவீன புத்திலக்கியப் படைப்புகளைக் கொண்டா அல்லது அம்மொழியில் பெரும் எண்ணிக்கையில் உருவாக்கப்படும் பல்வேறு துறைகளைச் சார்ந்த ஏராளமான நூல்களின் பெருக்கத்தைக் கொண்டா?

இவை மட்டுமே மொழி வளர்ச்சியின் முழுமையான அளவு கோல்கள் ஆகா. 'மொழியில் புதிது புதிதாக வந்து இணையும் சொல் வளத்தை, குறிப்பாக, கலைச்சொற்களின் பெருக்கத்தைக் கொண்டே ஒரு மொழியின் வளர்ச்சியின் அளவு கணிக்கப்படும்' என்பதுதான் உலக மொழியியலார் தரும் முடிவு. இதிலிருந்து 'சொல் வளமே ஒரு மொழியின் உண்மையான மொழி வளம்' என்பது தெளிவாகிறது.

இன்றைய அறிவியல் வளர்ச்சிச் சூழலுகேற்ப, ஆயிரமாயிரம் கலைச்சொற்கள், குறிப்பாக அறிவியல், தொழில்நுட்பக் கலைச் சொற்கள் தமிழில் உருவெடுக்க வேண்டியது காலத்தின் இன்றியமையாக் கட்டாயமாகும் எனக் கூற வேண்டியதில்லை.

இன்றைய அறிவியல் துறைகளின் வளர்ச்சி முழுக்க முழுக்க மேனாட்டவர்களால் உருவாக்கப்பட்டு வளர்க்கப்பட்டது. அவற்றிற்கான அறிவியல் கலைச்சொற்களும் அவர்களாலேயே ஆங்கிலத்தில் படைக்கப்பட்டுள்ளன. அவை உலகினரால் 'உலகப் பொதுமொழி' போன்று பயன்படுத்தப்பட்டு வருகின்றன. அவற்றை நாமும் ஆங்கில வடிவில் அப்படியே ஏற்றுப் பயன் படுத்த வேண்டியதுதானே? தமிழில் எதற்குப் புதிதாகக் கலைச் சொற்கள்? வேண்டுமானால் விளக்கங்களைத் தமிழில் எழுதிக் கொள்ளலாம். முழுமையாகத் தமிழிலும் இதற்கான கலைச்

சொற்களை உருவாக்குவது வீண் வேலை அல்லவா?' என்று கூறு வோரின் கூற்றில் ஓரளவு உண்மை இருப்பதுபோல் தோன்றினும் இக்கூற்று முழுமையாக ஏற்றுக் கொள்ளத்தக்கதன்று.

அறிவியல் - தொழில்நுட்பக் கலைச்சொற்களில் இருவேறு தன்மை உண்டு. முதலாவது சாதாரணமாகப் பொருளுணர்த்தும் கலைச்சொற்கள். மற்றொரு வகை அசாதாரணத் தன்மை களோடுகூடிய சிறப்புப் பொருளுணர்த்தும் கலைச்சொற்கள். இவை 'பன்னாட்டுக் கலைச்சொற்கள்' (International Technical Terms) எனப்படும். இவ்வகைக் கலைச்சொற்கள் உலக முழுவதிலும் மொழி பெயர்க்கப்படாமல் ஒலி பெயர்ப்பு மட்டும் செய்யப்பட்டு, பயன்படுத்தப்படுவனவாகும். சான்றாக, லேசர் (Laser), ரேடார் (Radar) போன்ற முதலெழுத்துச் சொற்களும் என்சைம், ஐசோ டோப், ஓசோன் போன்ற சொற்களும் மற்றும் அறிவியலார் பெயரில் அமைந்த ஆம்பியர், ஓம் போன்ற சொற்களும் பன்னாட்டுக் கலைச்சொற்களாகும்.

ஆங்கில மொழியும் அறிவியலும் நன்கு அறிந்தோரே இவற்றின் பொருள்நுட்பம் அறிவர். மற்றவர்கட்கு இச்சொற்கள் வெறும் குழூஉக்குறிகள் போன்றே தோன்றும்.

இஃதன்னியில் 'டெலிவிஷன்', 'டெலஸ்கோப்' போன்ற சொற்களும் உலகளாவிய முறையில் மக்களால் பெரிதும் பயன் படுத்தப்படுகின்றன. அறிவியல் அறிவோ அல்லது படிப்பறிவோ இல்லாதவர்கள் இச்சொற்களைக் குழூஉக்குறிச் சொற்களாகவே பயன்படுத்துகின்றனர். இந்த ஆங்கிலக் கலைச்சொற்களுக்கு நேர்த் தமிழ்க் கலைச்சொற்களாக 'தொலைக்காட்சி', 'தொலைநோக்கி' எனத் தரும்போது தொலைவிலிருக்கும் காட்சிகளை அண்மையில் கொண்டு வந்து காட்டும் கருவியே 'தொலைக்காட்சி' என்றும் தொலைவிலிருப்பவைகளை நெருங்கிக் காண உதவும் கருவியே 'தொலைநோக்கி' என்றும் யாரும் விளக்காமலே தமிழ்க் கலைச் சொல் மூலம் பொருள் உணர்ந்து தெளிய முடிகிறது. இவ்வாறு ஆங்கிலம் அறியாத சாதாரண பாமர மக்களும் கேட்ட மாத்திரத்தில் தெளிவாகப் பொருள்புரியும் இத்தகைய வாய்ப்பை ஏற்படுத்தித்

தருவதால் ஏற்படும் இழப்பு எதுவுமில்லை. பயனோ ஏராளம், ஏராளம்!

எனவே, எழுத்தறிவின் உச்சத்தைப் பெறாத நம் மக்களிடையே அறிவியல் அறிவையும் உணர்வையும் அதிகரிக்க தாய்மொழியாம் தமிழ் மூலம் சொல்வதே சாலச்சிறந்ததாகும்.

அறிவியல் நுட்பங்களைத் திறம்பட விளக்கவல்ல மொழி யாகத் தமிழ் அமைந்திருக்கிறதா என ஐயுருவோரும் இருக்கவே செய்கின்றனர். மொழியியல் பேரறிஞர் டாக்டர் கிரியர்சன் 'உள்ளத்தில் உருவெடுக்கும் சிந்தனைகளை - மிக நுட்பமான உணர்வுகளை, எண்ணிய எண்ணியாங்கு, திறம்பட வெளிப்படுத்த வல்ல மொழியாகத் தமிழ் அமைந்திருக்கிறது' எனப் புகழ்ந்துரைத்த தற்கொப்ப எத்தகைய அறிவியல்நுட்பச் செய்தியாயினும் அவற்றைச் சொற்செட்டோடும் பொருட்செறிவோடும் தமிழில் கலைச்சொல் வடிவில் சொல்ல முடிகிறது என்பதுதான் என் நாற்ப தாண்டு காலக் கலைச் சொல்லாக்கப் பட்டறிவு உணர்த்தும் உண்மை. இதற்கு அடிப்படைக் காரணம் தமிழ் இயல்பிலேயே அறிவியல் மொழியாக, அறிவியலைத் திறம்பட உணர்த்துவதற்கான ஆற்றல்மிகு மொழியாக அமைந்திருப்பதுதான். இது நாமே அறிந்துணரா உண்மைநிலை.

தமிழ்மொழி வரலாற்றை, வரலாற்று வழி நுணுகி ஆராய்ந்தால், காலந்தொறும் தமிழ் பல்வேறு துறைக் கலைச் சொற்களை உருவாக்கி, வளர்ந்து வந்துள்ள வரலாறு தெள்ளத் தெளிவாகப் புலப்படும்.

'காலத்தின் போக்குக்கும் தேவைக்குமேற்ப ஒருமொழி தன்னைத் தகைவமைத்துக் கொள்வதன்மூலமே வளர்ச்சியும் வளமும் பெறமுடியும்' என்பது மொழியியல் வரலாறு. அவ் வகையில் சமயத்தாக்கம் ஏதுமில்லாத சங்க காலத்தில் அறிவியல் அடிப்படையில் சமுதாயப்பூர்வமாக அகம், புறம் என வளர்ந்த தமிழ், வைதீக சமய, சமண, பௌத்த, கிருத்துவ, இஸ்லாமியத் தமிழாக, தத்துவம் சார்ந்த சித்தாந்தத் தமிழாக வளர வேண்டிய தவிர்க்கவியலா சூழல். ஆங்கிலேயர் உறவால் அறிவியல் அடிப்

படையிலும் புதினம், சிறுகதை என்ற புத்திலக்கியப் போக்கிலும் வளர வேண்டிய சூழ்நிலை. இக்கால கட்டங்களிலெல்லாம் புதிய கருத்துகளையும் சிந்தனைகளையும் வெளிப்படுத்த புதிய புதிய சொற்களை உருவாக்கிக் கொண்டு வளர, வளமடையத் தவற வில்லை. ஆனால், தயக்கமெல்லாம் தமிழர்களிடம்தான். தொய்வு மனப்பான்மை படைத்த சிலர் தங்களால் இயலாது என்பதை வெளிப்படுத்த விரும்பாது, அஃது தமிழாலேயே இயலாது என விளம்ப முற்பட்டு விடுகின்றனர்.

மருத்துவத் துறைக்கான ஆங்கிலக் கலைச்சொற்களுக்கு நேர்த்தமிழ்க் கலைச்சொல் காணும் முயற்சி நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்பே தொடங்கிவிட்டதெனலாம். அம்முயற்சிக்கு வடிவம் தந்தவர் ஈழத்தில் மருத்துவம் பயிற்றுவிக்க வந்த, யாழ்ப்பான மருத்துவக் கல்லூரிப் பேராசிரியர் ஃபிஷ்கிரீன் என்ற அமெரிக்கர். அவர் தமிழில் உருவாக்கிய கலைச்சொற்கள் தமிழ்ப் பெயர் தாங்கியிருந்தபோதிலும் பெரும்பான்மையான கலைச்சொற் கள் சமஸ்கிருத ஒலி வடிவினவாகும். இதற்குக் காரணம் இக்கால கட்டத்தில் அங்கு உச்சத்தில் இருந்த இந்து சமயத் தாக்கமும் அதன் புனித மொழி என்ற போர்வையில் தமிழ்மீது செலுத்தி வந்த ஆதிக்கப் போக்குமாகும். இந்நிலையே இங்கும் நிலவியபோதிலும் திராவிட இயக்க எழுச்சிக்குப் பிறகு தமிழிலேயே கலைச் சொல்லாக்க முயற்சிகள் வலுப்பெறலாயின.

அன்றைய சமஸ்கிருதச் செல்வாக்கு தமிழ்க் கலைச் சொல்லாக்கத்துக்கு ஏதோ ஒருவகையில் முட்டுக்கட்டையாக அமைந்தது போன்றே, இன்று 'தூய தமிழ்' ஆர்வலர்களின் தனித் தமிழ்ப் போக்கும் அமைந்துவிடுமோ என்ற அச்சத்தை வெளிப் படுத்தாமலிருக்க முடியவில்லை. இலக்கியத்தில் மொழி முதன்மை நிலை பெறலாம். அறிவியல் கலைச்சொற்களைப் பொறுத்தவரை மொழியைக்காட்டிலும் கருத்துணர்த்தும் திறனுக்கே முதலிடம். சொல்வழி கருத்தை வெளிப்படுத்த உதவும் துணைக்கருவி மட்டுமே மொழி என்பதை நாம் உணர்ந்து தெளியவேண்டும். அறிவியலில் மொழிக்கு முதன்மைதர முற்பட்டால் கருத்துச் சிதைவும் பொருட்பிறழ்வும் தவிர்க்க முடியாததாகிவிடும்.

தமிழ்க் கலைச்சொல்லாக்கத்தில் மற்ற மொழிகளில் காண முடியாத ஒரு தனித்தன்மை தமிழ்க் கலைச்சொற்களுக்கு உண்டு. அதுதான் வேர்ச்சொல் தேடல்.

ஆங்கில மொழியில் ஒரு புதிய கலைச்சொல்லை உருவாக்க வேண்டுமெனில், அதற்கான வேர்ச்சொல்லை லத்தீன், கிரீக், ஹீப்ரு அல்லது வேறு மொழிகளில் தேடிப் பெறவேண்டும். ஆங்கில மொழியில் வேர்ச்சொல் கிடைப்பது மிக அரிது. ஏனெனில், ஆங்கில மொழி, மேற்கூறிய மொழிகளின் கூட்டுக் கலவையாகும்.

ஆனால், அதே சமயத்தில் இந்தியிலோ அல்லது மராத்தியிலோ ஒரு புதிய கலைச்சொல்லை உருவாக்க வேண்டுமெனில் அதற்கான வேர்ச்சொல்லை சம்ஸ்கிருதத்திலோ, பாலி, பிராகிருத மொழிகளிலோ தேடிப் பெற வேண்டும். கன்னட, தெலுங்கு, மலையாள மொழிகளின் சொல் உருவாக்கத்துக்கான வேரை சமஸ்கிருதத்திலோ அல்லது தமிழிலோ தேட வேண்டும். ஆனால், தமிழில் ஒரு கலைச்சொல்லை உருவாக்க வேண்டுமெனில், அதற்கான வேர்ச்சொல்லைத் தமிழில் மட்டுமே காண முடியும். வேறு எந்த இந்திய மொழிகளிலும் தேடிக் காணவே முடியாது.

'இன்றையக் கலைச்சொல் தேவையை நிறைவு செய்யுமளவுக்குத் தமிழில் அறிவியல், தொழில்நுட்பக் கலைச்சொற்களுக்கான வேர்ச்சொற்கள் வேண்டுமளவு கிடைக்க வாய்ப்புண்டா?' என வினா எழுப்பத் தோன்றலாம். இதற்கு நாம் விடை கூறுவதைவிட தமிழை அறிவியல் பூர்வமாக, மொழியியல் அடிப்படையில் ஆராய்ந்தவரும் 'மொழியியல் தந்தை' எனப் போற்றப்படுபவருமான டாக்டர் எமினோ அவர்கள் கூறுவதைக் கேட்போம். "உலகத்து மொழிகளிலேயே மிக அதிகமான வேர்ச்சொற்களையுடைய மொழியாகத் தமிழ் அமைந்துள்ளது", எனப் பாராட்டியுள்ளது இங்கு நினைவுகூரத்தக்கதாகும். வேர்ச்சொற்கள் தமிழ் இலக்கியங்களில் மட்டுமல்ல, அன்றாட வாழ்விலும் மிகுதியாக விரவிக் கிடக்கின்றன. அதையெல்லாம்விட தமிழில் புதிய வேர்களை எளிதாக உருவாக்கவும் இயலும். அந்த அளவுக்கு நெகிழ்வுத் திறமுள்ள மொழியாகத் தமிழ் அமைந்துள்ளது.

கலைச்சொல்லாக்கப் பணியை மேற்கொள்வோருக்கு இருக்க வேண்டிய தகுதிப்பாடுகள் என்னென்ன என்பதிலும் நாம் கருத்தூன்ற வேண்டியவர்களாக உள்ளோம்.

முதற்கண் எந்தத் துறை சார்ந்த சொல்லாக்க முயற்சி மேற் கொள்ளப்படவிருக்கிறதோ அந்தத் துறையில் சிறப்பறிவு பெற்றிருக்க வேண்டும். துறை சார்ந்த ஆங்கிலக் கலைச்சொல் உணர்த்தும் பொருள்நுட்பத்தை நன்கு உணர்ந்து, தெளிந்து, அதனைத் தமிழில் முழுமையாக வெளிப்படுத்தத்தக்க வகையில் தமிழ் சொல்லாட்சி வல்லவராகவும் இருத்தல் வேண்டும். இதற்கு ஏதுவாக தமிழ் வேர்ச்சொற்களை இனங்கண்டு தேர்வு செய்யுமளவுக்கு தமிழ் இலக்கிய புலமை அல்லது பயிற்சிமிக்க வராக இருத்தல் வேண்டும். சரியான கட்டுக்கோப்பில் இலக்கண வரம்புகளுடன் சொல்லை வடித்தெடுக்குமளவுக்கு இலக்கண அறிவும் அவசியம். இலக்கியங்களிலோ அல்லது அன்றாட வழக் காற்றிலோ உரிய சொல் அல்லது வேர்ச்சொல்லை இனங்காணும் திறன் வேண்டும். உரிய சொல்லோ அல்லது வேர்ச்சொல்லே கிடைக்காதபோது புதிய சொல்லை உருவாக்க மொழியியல் அறிவு ஓரளவு அவசியம். இவையே கலைச்சொல்லாக்க வல்லுநருக்கு இருக்க வேண்டிய அடிப்படை தகுதிகளாகும்.

கலைச்சொல்லாக்கத்தில் முதல் உரிமையும் பொறுப்பும் உடையவர்கள் அவ்வத்துறை வல்லுநர்களே என்பதில் இரு கருத்துக்கு இடமில்லை. அவர்களில் போதிய தமிழறிவும் இலக்கியப் பயிற்சியும் இலக்கண அறிவும் உடையவர்கள் இப் பணியில் முழுமையாக ஈடுபடவேண்டும். அதிக அளவு இல்லை யென்றாலும் ஒரு சில சொற்களையேனும் உருவாக்கும் முயற்சியில் ஈடுபடலாம். இப்பணியில் ஒரு சிலர் முனைப்புக் காட்டிய போதிலும் பெரும்பாலான தமிழறிந்த துறை வல்லுநர்கள் "கலைச் சொற்கள் தமிழில் மிகுதியாக வேண்டும். அதில் நாம் உடனடிக் கவனம் செலுத்த வேண்டும்", என வேண்டுகோள் விடுவதிலும் அறிவுறுத்துவதிலும் ஆர்வம் காட்டி, காலத்தை ஓட்டுகிறார்களே தவிர, அப்பணி தங்களுக்குரியது எனக் கருதி செயல்படத்

துணிவதில்லை. மற்றவர்களைச் செய்யச் சொல்லும்முன், தான் அதில் முனைப்போடு, ஈடுபட்டு வழிகாட்ட வேண்டும் என்ற உணர்வு ஏனோ அவர்களிடம் இல்லாமற் போய்விடுகிறது.

இந்நிலையில்தான், ஓரளவு துறையறிவு பெற்றவர்கள் முனைந்து மேன்மேலும் துறையறிவை முனைப்போடு வளர்த்துக்கொண்டு, அதனடிப்படையில் சொல்லாக்கம் செய்து, அதனை அவ்வத்துறை வல்லுநர்களின் மேற்பார்வையோடு செப்பனிட்டு, தகுதிமிக்க கலைச்சொற்களாக உருவமைத்து வெளிப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டு வெற்றி பெறுகிறார்கள். இவர்களின் வெற்றி தமிழின் வெற்றியாகவும் அமைகிறது. என்போன்ற ஆர்வலர்கள் அம்முறையில் தான் வீறுநடைபோட்டு வருகிறோம். 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்றாற்போல் துறை வல்லார்க்கு அவர் சிறப்பறிவு பெற்ற ஒரு துறை மட்டுமே களமாக அமைகிறது. ஆனால் என்போன்ற ஆர்வலர்கட்கு எதனையும் அறிந்துகொள்ள வேண்டும் என்ற பெருவேட்கையோடு முனைந்து கற்பதால், 'இதுதான் நம் துறை' என்ற வேறுபாடு இல்லாமல், இன்னும் சொல்லப்போனால் எல்லையே இல்லாமல், எல்லா துறைகளுமே களமாயமைகின்றன. இவ்வகையில் தான் உயிரியல் முதல் கணினி ஈராக அனைத்து அறிவியல், தொழில்நுட்பத் துறைகளுக்கான ஏழு கலைச்சொல் தொகுதிகளை (சுமார் நான்காயிரம் பக்கங்களில், சுமார் ஒன்றரை இலட்சம் கலைச்சொற்கள்) வெளியிட முடிந்தது. வேறு சிலரும் என்னைப் போலவே சொல்லாக்கப் பணியில் முனைப்புக் காட்டி உழைத்து வருகிறார்கள்.

கலைச்சொல்லாக்க முயற்சியைப் பொறுத்தவரை, ஆர்வமுடையவர்கட்கு, சொல்லாக்க வாய்ப்பை உருவாக்கித் தர வேண்டும் என்ற நன்னோக்கில், ஆங்கிலக் கலைச்சொல்லுக்கு நேர்த்தமிழ்க் கலைச்சொல் சொல்வதோடு அமையாமல், சொல்விளக்கம், பொருள்விளக்கங்களைப் படத்தோடு தருவதை வழக்கமாகக் கொண்டுள்ளேன். இதைப் படித்துத் தெளிவுபெறும் சொல்லாக்க ஆர்வலர்கள் இதனினும் சுருங்கிய வடிவிலான சொற்செட்டும், பொருட்செறிவுமுடைய, நயமிக்க கலைச்சொற்களை உருவாக்க வாய்ப்பேற்படுத்த வேண்டும் என்பதே என் நோக்கம்.

இனி, கணினி கலைச்சொல்லாக்கத்தைப் பொறுத்தவரை நான்மேற்கொண்டு வரும் வழிமுறைகள் சிலவற்றைப் பற்றி விவாதிக்க விரும்புகிறேன்.

எனது கணினி அகராதிகளை வெறும் ஆங்கில-தமிழ்க் கலைச்சொல் பட்டியல்களாக (Glossaries) அமைக்காமல், களஞ்சியத் தன்மையும் அகராதித் தன்மையும் ஒருங்கியைந்த, 'களஞ்சிய-அகராதி'களாக அமைத்து வருகிறேன். காரணம், அவை சொல் விளக்கமும் பொருள் விளக்கமும் ஒருங்கிணைந்து படிப்போருக்கு தெளிவைத் தரவேண்டும் என்பதுதான் முக்கிய நோக்கம். அதற்காக ஒரு ஆங்கிலக் கலைச்சொல்லுக்கு இயன்றவரை பல கலைச் சொற்களைத் தருகிறேன். சான்றாக,

| | | |
|---|---|---|
| Data | : | தகவல், தரவு, விவரம், செய்திக் குறிப்பு. |
| Mouse | : | சுட்டி, சுட்டுக் கருவி, சுட்டுப்பொறி, சுட்டு நுண்பொறி. |
| Key | : | விசை, திறவு, விரற்கட்டை, குமிழ், சாவி. |
| Pixel | : | படக்கூறு, படப்புள்ளி, படத்துணுக்கு. |

இதில் ஏதாவது ஒரு சொல் நிலைபேற்றுத் தன்மையைப் பெறாதா என்ற எண்ணமும் நாளை தரப்படுத்தம் செய்ய விழையும்போது, ஒப்பீட்டாய்வு செய்வதற்கும் ஒன்றிற்கு மேற்பட்ட சொற்கள் தேவைப்படுமே என்பதும் காரணங்களாகும்.

கணினித்துறை போன்ற அறிவியலுக்கான கலைச்சொல் உரு வாக்கத்துக்கு இலக்கியத் தரமான சொற்களைப் பயன்படுத்த சிலர் விழைவதில்லை. உரிய பொருளை விளக்க அவைகளால் இயலாது என்று கருதப்படுகிறது. ஆனால், தக்க மாற்ற திருத்தங்களுடன் பயன்படுத் தினால் கருதிய பொருளைத் திட்ப, நுட்பமாக விளக்க முடியும். சான்றாக,

| | | |
|---|---|---|
| Jergon | : | குழூஉச் சொல் |
| Slug | : | பருங்குழை |
| Finesse | : | நய நுட்பம் |
| Host | : | ஓம்புநர், புரவலர் |
| Malfunction | : | பிறழ்வினை |

என அமைக்கலாம்.

எல்லாவற்றிற்கும் இலக்கியச் சொல்லைத் தேடி ஓட வேண்டியதில்லை. அன்றாட பேச்சு வழக்கில் பயன்படுத்தப்படும் சாதாரணச் சொற்களையே பயன்படுத்தி அறிவியல் செய்திகளை நுட்பமாக விளக்க முடியும். சான்றாக,

| | | |
|---|---|---|
| Jaggies | : | பிசிறுகள் |
| Pad | : | திண்டு |
| Glarefilter | : | கூசொளி வடிகட்டி |

கலைச் சொல்லாக்கத்துக்கான வேர்ச்சொற்கள் வேண்டிய அளவுக்கு இலக்கிய நூல்களிலும் அன்றாட பேச்சு வழக்குச் சொற் களிலும் கிடைக்கின்றன. அவற்றைப் புதிய பகுதி, விகுதிகளோடு உருவாக்கினால் பொருளாழமிக்க சொற்களாக உருவாக்க இயலும்.

| | | |
|---|---|---|
| Quantum | : | துளியம் |
| Terminal | : | முனையம் |
| Bit | : | துண்மி |
| Robot | : | எந்திரன் |

தெளிவுக்காக இரு சிறு சொற்களை இணைத்துப் புதுச் சொல்லாக்கிப் பொருள் விளக்கம் பெறலாம். சான்றாக,

| | | |
|---|---|---|
| Antenna | : | அலைவாங்கி |
| Virus | : | நச்சுநிரல் |
| Audio | : | கேட்பொலி |

கூடுமானவரை ஆங்கிலத்திலிருந்து சொல்லுக்குச் சொல் மொழிபெயர்ப்பு செய்வதைத் தவிர்க்க வேண்டும். ஆங்கிலச் சொல் உணர்த்தும் பொருளை நுட்பமாகப் புரிந்து கொண்டு, அதனைத் திட்பமாக உணர்த்தும் சொற்களைக் கொண்டு சொல்ல முற்படவேண்டும். சான்றாக,

| | | |
|---|---|---|
| Handset | : | ஒலியுறுப்பு |
| Cold fault | : | உடன்தெரியும் பிழை |
| Creet | : | விளங்கா மொழி |
| Femaleconnector | : | துளை இணைப்பி |
| Gun | : | வீச்சுப்பொறி |

ஒரு கணினிச் சொல் தனியாக வரும்போதும் சொல் தொடருடன் இணைந்து வரும்போதும் சொல் மாறாமல் இடம் பெறச் செய்வதன்மூலம் பொருள் தெளிவை அளிக்க முடியும். சான்றாக,

| | | |
|---|---|---|
| Input | : | உள்ளீடு |
| Inputting | : | உள்ளிடுதல் |
| Input data | : | உள்ளீட்டுத் தரவு |
| Input Unit | : | உள்ளீட்டகம் |

எனக் குறிக்கலாம்.

தலைப்பெழுத்துகளைக் கொண்ட குறும்பெயர்களை ஒலி பெயர்ப்பாக இணைந்து வரும் சொற்களுக்குப் பொருள் தரும் வகையில் அமைக்கலாம். சான்றாக,

| | | |
|---|---|---|
| PERT Chart | : | பெர்ட் வரைபடம் |
| PET Computer | : | பெட் கணினி |

மற்றபடி, நிறுவனப் பெயர்கள், மென்பொருள் தொகுப்புப் பெயர்கள், பொருட்பெயர்கள். அளவீடுகள் மற்றும் சிறப்பு பெயர் களை ஒலி பெயர்ப்பாகக் குறிக்கலாம்.

| | | |
|---|---|---|
| Macpaint | : | மாக்பெய்ன்ட் |
| Herts | : | ஹெர்ட்ஸ் |
| Javlin plus | : | ஜேவ்லின் பிளஸ் |
| Hentry | : | ஹென்றி |

மற்றொன்று ஒலிக்குறைபாடு. ஸ, ஷ. ஜ, ஹ, க்ஷ ஒலிக் குறிகள் தமிழில் இல்லாததால் Geroge-ஐ குறிப்பிடும்போது 'சார்சு' என்றுதான் எழுத நேரும். இவ்வொலிக் குறைப்பாட்டை நீக்க 'ஜார்ஜ்' என்றே எழுதலாம். ஏனெனில், கிரந்த எழுத்துகள் எனக் கருதப்படும் ஜ,ஷ,ஸ,ஹ,க்ஷ போன்ற எழுத்துகள் சமஸ்கிருத வரி வடிவங்கள் அல்லவே அல்ல. அவை ஒலி வடிவங்கள் மட்டுமே. சில சம்ஸ்கிருத ஒலிகளை உரிய முறையில் வெளிப்படுத்த தமிழில் எழுத்துகள் இல்லை என்ற குறைபாட்டை நீக்க, பல்லவர்கள் காலத்தில் காஞ்சி மாநகரில் தமிழ் வரிவடிவச் சாயலில் புதிதாக உருவாக்கப்பட்ட எழுத்துகளாகும். இவ்வெழுத்துகள் கன்னடத்திலோ தெலுங்கிலோ இல்லை. தமிழிலும் தமிழிலிருந்து கிளைத்த மலையாளத்திலும் மட்டுமே உள்ளன. அதிலும் கிரந்த எழுத்துகள் பலவாக இருந்தாலும் இந்த நான்கைந்து எழுத்துகளை மட்டுமே தமிழ் பட்டும்படாமலும் தன்னுடன் உறவாட

அனுமதித்து வருகிறது. எனவே, ஆங்கில எழுத்தொலியை ஒலி பெயர்ப்பின்போது முழுமையாகப் பெற இக்கிரந்த எழுத்துகளை பயன்படுத்துவதில் தவறேதும் இல்லை என்றே கருதுகிறேன்.

இப்போது வெளியாகும் இப்பேரகாதிக்கு ஒரு சிறப்பு உண்டு. பயன்பாட்டுக்கு வந்திருப்பினும் ஆங்கில அகராதியில் இடம்பெறாத பல புதிய சொற்கள் இப்பேரகராதியில் இடம் பெற்றுள்ளன. இதற்காக அமெரிக்கா, கனடா, ஃபிரான்ஸ் நாடுகள் சென்றிருந்தபோது இக்கலைச் சொற்களைச் சேகரிக்க இயன்றது. ஆங்கில அகராதிக்கும் முந்தி, தமிழ் அகராதியில் நேர்ச் சொல்லாக்கம் இயல்கிறதென்றால் தமிழ் இயல்பிலேயே ஆற்றல் மிக்க அறிவியல் மொழி என்பது தெளிவாகிறதன்றோ!

இப்பேரகராதி சிறப்பாக வெளிவரப் பெருந்துணையா லமைந்த கணினித்துறை வல்லுநரும் சிறந்த கணினி எழுத்தாளரு மான திரு. மு. சிவலிங்கம், என் உடன் படித்த கல்லூரித் தோழரும் அறிவியல் அறிவும் தமிழறிவும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற புலமைச் செல்வர் இரா. நடராசன், கணினித் தமிழ் புலமைமிக்க பன்னூலாசிரியர் திரு. ராம்குமார் ஆகியோரின் உதவியும் ஒத்துழைப்பும் மறக்க முடியாதவை. அவர்களுக்கு என் இதய நன்றியைத் தெரிவித்துக் கொள்வதில் பெருமகிழ்ச்சிவடைகிறேன்.

என் அறிவியல் தமிழ் வளர்ச்சிப் பணிக்கு அடிநாள் தொட்டே பெருந்துணையாகவும் பெரும் ஊக்கியாகவும் இருந்து வருபவர் என் துணைவியார் சித்தை செளதா அவர்களாவர்.இப்படியொரு பேரகராதி உருவாக்கப்பட வேண்டும் என்ற உணர்வை என்னுள் இடையறாது விதைத்து வந்தவர். இப்பேரகராதி உருவாக்கத்துக்கு எல்லா வகையிலும் பேருதவியாயிருந்த அவர்கட்கும் எனது தமிழ் வளர்ச்சிப் பணி முயற்சிகளுக்கும் சமுதாயப் பணிகளுக்கும் பெருந்துணையாயிருந்து வரும் பெருந்தகை அல்ஹாஜ் (மெஜஸ்டிக்) கே.வி.எம். கறீம் அவர்கட்கும் என் நன்றி என்றும் உரித்தாகும்.

எல்லாவற்றிற்கும் மேலாக இன்று 1,600 பக்கங்களைக் கொண்ட கணினிக் களஞ்சியப் பேரகராதி (வேறு இந்திய

மொழிகளிலோ அல்லது ஆங்கிலத்திலோ கணினிக்கு இவ்வளவு பெரிய அகராதி வெளியிடப்பட்டுள்ளதா எனத் தெரியவில்லை) நூலைத் தமிழில் வெளியிட இயன்றதென்றால், அதற்கு என் திறனோ இப்பணியில் என்னோடு இணைந்து பணியாற்றும் நண்பர்களின் திறமையோ மட்டும் காரணமில்லை. தமிழின் தனிப்பெரும் ஆற்றலே காரணம். ஏனெனில், இயல்பிலேயே தமிழ் ஓர் அறிவியல் மொழியாக, அறிவியலைச் சொல்வதற்கென்ற உருவான மொழியாக அமைந்திருப்பதுதான்.

இன்று "கணினிக் களஞ்சியப் பேரகாதி" உங்கள் கைகளில் தவழப் பெருந்துணையாயமைந்தவர் கப்பலோட்டும் தமிழர், பவழ விழா செல்வர் அல்ஹாஜ் பி. எஸ். அப்துர் ரஹ்மான் அவர்களாவார்.

"செத்தும் கொடை கொடுத்த" சீதக்காதி வள்ளலின் மறு பதிப்பாயமைந்துள்ள ஹாஜி. பி.எஸ். அப்துர் ரஹ்மான் அவர்கள் கல்வி வளர்ச்சியிலும் தொழில் வளர்ச்சியிலும் மட்டுமல்லாது தாய்மொழியாம் தமிழ் வளர்ச்சியிலும் பேரார்வம் காட்டி வருபவர். கீழக்கரை இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மாநாடும் ஆண்டுதோறும் சிறந்த தமிழ் நூல்களுக்கு சீதக்காதி டிரஸ்ட் மூலம் பரிசளித்தும் வருவதே இதற்குத் தக்க சான்றாகும். அதன் தொடர்ச்சியாகவே இப்பேரகராதி விரைந்து வெளிவரவும் துணை நின்றார்கள். தமிழ் உள்ளவரை அவரது கொடைக்குணமும் தமிழ் வளர்ச்சியில் காட்டும் பேரார்வப் பெருக்கும் தமிழ்கூறு நல்லுலகால் நினைவுக் கூறப்படும் என்பது திண்ணம். காலத்தைக் கடந்து நிற்கும் அவரின் அரிய சேவையை என்றென்றுமாகப் பதிவு செய்யவே இந்நூலை அன்னாரின் பவழ விழா நினைவாக அவருக்குக் காணிக்கையாக்கி உள்ளேன்.

எனது முந்தைய நூல்களை ஆதரித்ததுபோன்றே இப் பேரகராதியையும் தமிழுலகம் இரு கரமேந்தி ஏற்று ஆதரிக்கும் எனப் பெரிதும் நம்புகிறேன்.

மணவை முஸ்தபா
நூலாசிரியர்

# கணினி - களஞ்சியப் பேரகராதி

## ஓர் ஆய்வு

*தீயின் கண்டுபிடிப்பு திருப்புமுனை ஆனது. சக்கரம் சரித்திரத்தை மாற்றியது. மின்சாரம் வாழ்க்கையை எளிமை ஆக்கியது. கணினியின் கண்டுபிடிப்போ அகில உலகத்தையும் ஒரு கையகலச் சிப்புக்குள் அடக்கி விட்டது. நவீன சமுதாயத்தை அடையாளம் காட்டும் ஒரு கருவியாய் கணினி விளங்குகிறது. மனித வாழ்வின் பிரிக்க முடியாத ஓர் அங்கமாய் பிணைந்து விட்டது. மக்களின் அன்றாட நடைமுறைகள் ஒவ்வொன்றிலும் கணினியின் ஆதிக்கம் தவிர்க்க முடியாதது ஆகிவிட்டது.*

*இத்தகைய காலகட்டத்தில்தான், அறிவியல் தமிழ் அறிஞர், வளர்தமிழ்ச் செல்வர் மணவை முஸ்தபா அவர்களின் 'கணினி களஞ்சியப் பேரகராதி' நம் கைகளில் தவிழ்ந்து கொண்டிருக்கிறது. கணினி என்பது மெத்தப் படித்தவர்களின் சொத்தாக மட்டும் இருந்துவிடக் கூடாது. கணினிக் கல்வி பெரு நகரங்களில் வாழ்வோரின் பெருமிதமாய் நின்றுவிடக் கூடாது. தமிழ்நாட்டின் சிற்றூரில் தமிழ் வழியாய் கல்வி கற்கும் மாணவனுக்கு, கணினி அறிவியல் அந்நியமாகிவிடக் கூடாது என்கிற ஆவேசத்தோடு இக்களஞ்சியப் பேரகராதியை திரு. மணவையார் எழுதி வெளி யிட்டுள்ளார். நவீன அறிவியலில் நாம் எவர்க்கும் சளைத்தவர்கள் இல்லை. ஆங்கிலத்தின் மூலமாகத்தான் கணினி அறிவைப் பெற முடியும் என்கிற மாயை உடைத்தெறியப் படவேண்டும். கணினித் துறை சார்ந்த அனைத்து நுணுக்கங்களையும் எளிய தமிழில் எடுத்துக் கூறமுடியும் என்கிற சவாலுக்குச் சாட்சியம் கூறுகிறது இந்நூல்.*

*கணினியின் வரலாற்றையும் அதன் இன்றைய தாக்கப் பரப்பையும், பயன்பாட்டுத் தளங்களையும் விரிவாகத் தெரிந்து கொண்டால்தான், திரு. மணவை முஸ்தபா அவர்களுடைய முயற்சியின் ஆக்கத்தையும், ஆற்றியுள்ள பங்களிப்பின் தாக்கத்தையும் சரியாகப் புரிந்து கொள்ள முடியும்.*

## கணினியின் வளர்ச்சிப் படிகள்

தொடக்கக் காலத்தில் கணினிகள் பல்கலைக் கழகங்களிலும் ஆய்வுக் கூடங்களிலும் ஆய்வுப் பொருளாகவே இருந்து வந்தன. 1951இல் தான் கணினி விற்பனைக்கு வந்தது. ரெமிங்டன் நிறுவனம் யுனிவாக்-1 கணினியை அமெரிக்க அரசுக்கு விற்றது. மிகப் பெரிய கட்டடத்தில் நிறுவப்பட்ட அக்கணினி மக்கள் தொகைக் கணக்கெடுப்புக்குப் பயன்படுத்தப்பட்டது.

அதன் பிறகு பரவலாக விற்பனைக்கு வந்த கணினிகளும் பல நூறுபேர் ஒரே நிறுவனத்தில் பணியாற்றக் கூடிய பெருமுகக் கணினிகள் (Main Frames) ஆகும். இவற்றை மிகப் பெரிய வணிக நிறுவனங்களே வாங்கிப் பயன்படுத்தி வந்தன. அடுத்து, நடுத்தர நிறுவனங்களும் பயன்படுத்தக்கூடிய வகையில் அதைவிடச் சிறிய (Mini) கணினிகள் விற்பனைக்கு வந்தன. 1971ஆம் ஆண்டில் நுண்செயலி (MIcro Processor) கண்டுபிடிக்கப்பட்டபின், கணினியின் வளர்ச்சிப் படியில் திடீர் தாவல் ஏற்பட்டது.

1977ஆம் ஆண்டில் விலை குறைந்த மிகச் சிறிய (Micro) ஆப்பிள் - II கணினிகள் பெருமளவில் விற்பனைக்கு வந்தன. நிறுவனங்கள் மட்டுமே கணினியை நிறுவ முடியும் என்ற நிலைமாறி, தனியார் ஒருவர் தன் சொந்தப் பயன்பாட்டுக்காக ஒரு கணினியை வாங்க முடிந்தது. எனவே, அக்கணினி சொந்தக் கணினி (Personal Computer-PC) என்றழைக்கப்பட்டது. 1980ஆம் ஆண்டில் மிக எளிதாகப் பயன்படுத்தக்கூடிய சொந்தக் கணினிகளை ஐபிஎம் நிறுவனம் விற்பனைக்குக் கொண்டு வந்தபின் உலகெங்கிலும் கணினியின் பயன்பாடு பெருமளவு அதிகரித்தது. நுண்செயலி மற்றும் நினைவகச் சிப்புகளின் திரை, விசைப்பலகை, அச்சுப் பொறி போன்ற துணைச் சாதன உற்பத்தியில் ஏற்பட்ட வளர்ச்சி, மனிதனின் அன்றாடப் பணிகளை எளிமைப்படுத்தும் ஏராளமான மென்பொருள் தொகுப்புகளின் உருவாக்கம் காரணமாக, கணினித் துறையில் அதிகமாகப் பரிச்சயம் இல்லாதவர்களும் கணினியில் பணியாற்ற முடியும் என்ற நிலை ஏற்பட்டது.

நிறுவனங்கள் தத்தம் அலுவலகங்களில் பயன்படுத்திவந்த தனித்த கணினிகளை நன்றாகப் பிணைத்து, கணினிப் பிணையங்கள் (Computer Networks) உருவாக்கப்பட்டன. ஒரே அலுவலகத்தில் (Local Area), ஒரு பெருநகரில் (Metro Area) மற்றும் கணினிகளை ஒருங்கிணைத்துப் பிணையங்கள் உருவாயின. தகவல் மற்றும் மூலாதாரங்களைப் பகிர்ந்து கொள்வது இதன்மூலம் சாத்தியமானது. அரசுத் துறையினர், பல்கலைக் கழகங்கள், பொது நூலகங்கள், அறிவியல் ஆய்வுக் கூடங்கள், வங்கிகள் மற்றும் ஏனைய வணிக நிறுவனங்கள் தத்தம் செயல்பாடுகளுக்காக உருவாக்கிய குறும்பரப்பு/விரிபரப்புப் பிணையங்கள் ஒன்றுக்கொன்று இணைக்கப்பட்டன. ஒவ்வொரு நாட்டில் இவ்வாறு உருவாக்கப்பட்ட முதுகெலும்புப் பிணையங்கள் (Back Bone Network) ஒருங்கிணைக்கப்பட்டு இணையம் (Internet) உருவானது. உலகின் எந்த மூலையிலிருந்தும் வேறெந்த மூலையில் குவித்து வைக்கப்பட்டுள்ள தகவல் களஞ்சியத்தை ஒரு நொடியில் பெற வழியேற்பட்டது.

எல்லா விந்தைகளுக்கும் அப்பால் 'இன்டர்நெட்' எனப்படும் இணையம் உலகம் அனைத்தையும் ஒரு கிராமமாக (Global Village) ஆக்கிவிட்டது. தொழிற்புரட்சிக்கு அடுத்தபடியாகத் தகவல் புரட்சி (Information Revolution) இணையத்தின் மூலமாய் இன்று உலகைக் குலுக்கிக் கொண்டிருக்கிறது. மனிதன் காலையில் எழுந்து இரவில் உறங்கப் போகும்வரை அனைத்துப் பணிகளையும் இணையம் மூலமே நிறைவேற்றிக் கொள்ள முடியும் என்ற நிலை உருவாகி யுள்ளது. செய்தித்தாள் படித்தல், உறவினர்க்குக் கடிதம் அனுப்பு தல், அறிஞர்களுடன் கலந்துரையாடல்/கருத்துப் பரிமாற்றம், நண்பர்களுடன் அரட்டை, இசை/சினிமாப் பொழுதுப்போக்கு, விளையாட்டு, நூலகப் படிப்பு, தொலைபேசி உரையாடல், ரயில்/விமானப் பயண முன்பதிவு, கடையிலுள்ள பொருள்களைப் பார்வையிடல், பல்கலைக் கழகத்தில் படித்துப் பட்டம் பெறுதல், .......... மூலம் இணையத்தில் இணைத்துக் கொண்டு செய்து முடிக்க முடியும். வேறென்ன வேண்டும்?

## கணினிக் கல்வியின் இன்றியமையாமை

கணினியின் ஆதிக்கம் பரவப் பரவ கணினி அறிவியலைக் கற்றுத் தேர்வதும் கட்டாயமாகிவிட்டது.

ஒவ்வொரு எந்திரத்திலும் அதற்கே உரிய பாகங்கள் இருக்கின்றன. ஆனால், ஸ்குரூ டிரைவர் என்று சொல்லப்படும் திருப்புளி எந்த எந்திரத்தின் பாகமும் இல்லை. ஆனால் திருப்புளி இல்லாமல் எந்த எந்திரத்தையும் கையாள முடியாது. எந்தவொரு எந்திரத்தையும் கழற்ற, பழுதுபார்க்க, இணைக்க, பராமரிக்க திருப்புளி ஒரு கருவியாகப் பயன்படுகிறது. கணினியைத் திருப்புளிக்கு ஒப்பிடலாம். தொடக்கக் காலத்தில் குறிப்பிட்ட எந்திரத்தின் பாகம்போல் விளங்கிய கணினி இன்றைக்கு அனைத்து எந்திரங்களையும் கையாளவல்ல திருப்புளியாய் ஆகிவிட்டது.

ஆம், ஒரு காலத்தில் பல்கலைக் கழகங்களில் ஒரு பாடமாக மட்டுமே இருந்துவந்த கணினி அறிவியல் நாளடைவில் தொழில்நுட்ப அறிவியலின் ஒரு துறையாக வளர்ச்சி பெற்று, இன்றைக்கு எந்தவொரு அறிவியல் துறையையும் அணுகி ஆய்வு செய்ய உதவும் ஒரு கருவியாகப் பரிணமித்துள்ளது. எந்த அறிவியல் பாடத்தைக் கற்பவராயினும், எந்தத் தொழில்நுட்பத் துறையில் பயில்பவராயினும் கணினி அறிவியலையும் கற்றிருக்க வேண்டும் என்பது கட்டாயத் தேவையாகி விட்டது.

## தமிழ்நாட்டில் தகவல் தொழில்நுட்பம்

தமிழ்நாட்டின் சின்னஞ்சிற்றூர்களில் - மூலை முடுக்குகளில் - எல்லாம் கணினி கற்றுத் தரும் பயிற்சி மையங்கள் ஏராளமாய்ப் பெருகிவிட்டன. மாணவர்கள் மட்டுமின்றி சமுதாயத்தின் அனைத்துப் பகுதி மக்களும் கணினியில் பயிற்சி பெற ஆர்வம் காட்டுகின்றனர். கணினியை இயக்கத் தெரிந்தாலே நல்ல வேலை கிடைக்கும் என்ற நிலை ஏற்பட்டுள்ளது.

மென்பொருள் உருவாக்கத்தில் உலகிலேயே இந்தியா முன்னணி இடம் வகிக்கிறது. அதில் தமிழ்நாட்டு இளைஞர்களின் பங்கு கணிசமானது. உலகின் அனைத்து முன்னணிக் கணினி

நிறுவனங்களிலும் தமிழ்நாட்டு இளைஞர்கள் முக்கிய பதவிகளில் இருக்கின்றனர். பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் மாணவர்கள் கணினி அறிவியலைத் தேர்வுச் செய்து விரும்பிப் படிக்கின்றனர்.

பத்திரிகைகளில், வானொலியில், தொலைக்காட்சியில் நாள்தோறும் கணினித் துறை சார்பான செய்திகள் வந்தவண்ணம் உள்ளன. இந்தியாவில் வேறெந்த மாநிலத்தை விடவும் கணினி விழிப்புணர்வு தமிழ்நாட்டில் அதிகமாகவே உள்ளது.

அச்சுத்துறையில் நுழைந்த முதல் இந்திய மொழி தமிழ். அது போலவே இணையத்தில் நுழைந்த முதல் இந்திய மொழி தமிழ் தான். தமிழுக்கென்றே தமிழில் 13,000 இணைய தளங்கள் இருப்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. இந்திய மொழிகளிலேயே கணினிக்கென்று தனியாகப் பத்திரிகை வெளிவந்தது தமிழ்மொழியில்தான். கணினி அறிவியல் தொடர்பான ஏராளமான புத்தகங்களும் கடந்த இரண்டு ஆண்டுகளில் தமிழ்மொழியில் வெளியிடப்பட்டுள்ளன.

கணினித் திரைகளில் தமிழ்மொழி உலாவந்து கொண்டிருக்கிறது. உரைத் தொகுப்பான்கள் (Text Editor), சொல் செயலிகள் (Word Processor), தகவல்தள மேலாண்மை (Database Management), இ-மெயில் (E-Mail), இணைய உலாவி (Browser), கணக்கியல் தொகுப்புகள் (Account Packages), குழந்தைகள், மாணவர்கட்குப் பயன்படும் பாடங்கள், வெளிநாட்டில் வாழும் மக்கள் தமிழ் கற்றுக் கொள்ள உதவும் தொகுப்பு, பல்லூடக விளையாட்டுகள் (Multimedia Games) - இன்னும் இவை போன்ற மென்பொருள் தொகுப்புகள் தமிழ்மொழியிலேயே வெளிவந்து கொண்டிருக்கின்றன. இப்படிப் பட்ட காலத்தில்தான் நான்காம் தமிழாகிய அறிவியல் தமிழின் ஓர் அங்கமான 'கணினித் தமிழ்' செழுமைப் பெற்று வளரத் துடித்துக் கொண்டிருக்கிறது. ஆனால், கணினி அறிவியல் வளர்ந்த வேகத்தில் கணினி தமிழ் வளரவில்லை என்றே கூறவேண்டும்.

பேச்சுத் தமிழில் நெல்லைத் தமிழ், கோவைத் தமிழ், சென்னைத் தமிழ் என்றெல்லாம் வழங்கப்படுவதுபோல கணினித் தமிழும் ஊருக்கு ஒரு வடிவம், நாட்டுக்கு ஒரு வடிவம் என ஆகிவிடுமோ என அஞ்சவேண்டியுள்ளது. அறிவியல் என்பது அனைத்துலகுக்கும் பொதுவானது. அதுபோலக் கணினித் தமிழும்

தமிழ்பேசும் சமுதாயம் எங்கும் ஒன்றுபோல் பயன்படுத்தப்பட வேண்டும். கணினித் தமிழ்ச் சொல்லாக்கம் தரப்படுத்தப்பட்டு, கணினித் துறைக்கான கலைச்சொல் களஞ்சியம் தொகுக்கப்பட்டு வெளியிடப்பட வேண்டும் என்பது காலத்தின் கட்டாயம். ஆனால், அதற்கான திசை வழியில் அரசோ, பல்கலைக் கழகங்களோ, தமிழ்ச் சங்க அமைப்புகளோ போதுமான முயற்சிகள் ஏதும் மேற்கொள்ளவில்லை என்றே கூறவேண்டும். இப்படிப்பட்ட காலக்கட்டத்தில், ஒரு தனியாளாக நின்று, இம்மாபெரும் கடமையைத் தோளில் சுமந்து, தொலைநோக்குப் பார்வையோடு, திரு மணவை முஸ்தபா அவர்கள் உருவாக்கி வெளியிட்டுள்ள இக்கணினிக் களஞ்சியப் பேரகராதியின் முக்கியத்துவத்தையும் பயன்பாட்டையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

## மணவையாரின் அறிவியல் தமிழ்ப்பணி

அறிவியல் தமிழ்ப் பணிக்காகத் தம் வாழ்க்கையையே அர்ப்பணித்துக் கொண்டவர் திரு. மணவை முஸ்தபா அவர்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் படிப்பை முடித்ததுமே, சேலம் அரசுக் கல்லூரியில் ஆசிரியர் பணிக்கான ஆணையைப் பெற்றார். தம் பேராசிரியர்களிடம் வாழ்த்துப் பெற சிதம்பரம் சென்றார். அங்கு நடைபெற்ற 'பயிற்சி மொழி தமிழா? ஆங்கிலமா?' என்ற கருத்தரங்கு இவர் வாழ்க்கையின் திருப்புமுனையாக அமைந்தது. 'அனைத்து அறிவியல் துறைகளும் ஆங்கிலத்திலேயே உள்ளன. அவற்றை தமிழில் கற்பது முடியாத செயல். பயிற்சி மொழி தமிழ் என்பது கானல் நீர்' என்று ஒரு பேராசிரியர் குறிப்பிட்டார். வெகுண்டெழுந்த மணவையார், 'தமிழால் முடியும். சொல்வதோடு நில்லாமல் செயல்மூலம் தமிழால் முடியும் என்பதை நிறுவிக் காட்டுவேன். இன்று முதல் இதுவே என் வாழ்வின் ஒரே இலட்சியம். அறிவியல் தமிழுக்காக என் வாழ்வையே அர்பணித்துக் கொள்கிறேன்' என்று முழங்கிய தோடு மட்டுமின்றி, கையிலிருந்த ஆசிரியர் பணிக்கான ஆணையை அங்கேயே கிழித்துப் போட்டார். அன்று முதல் அறிவியல் தமிழ் ஒன்றை மட்டுமே தன் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டு இன்று வரை அந்தப் பாதையிலேயே வீறுநடைபோட்டு வருகிறார்.

ஒவ்வொரு அறிவியல் துறையிலும் புதிய புதிய கலைச் சொற்களை உருவாக்க வேண்டும் என்பதே இவரின் குறிக்கோள். இக்குறிக்கோளை நிறைவேற்றும் பொருட்டு, 'அறிவியல் கலைச்சொல் களஞ்சியம்' என்ற தலைப்பில் இரண்டு தொகுதிகளை வெளியிட்டார். இந்நூல்களில் ஐம்பத்து நான்கு அறிவியல், தொழில்நுட்ப பிரிவுகளுக்குரிய கலைச் சொற்களையும் பொருள் விளக்கத்தையும் உருவாக்கி வழங்கியுள்ளார். அடுத்து பட விளக்கங்களோடு, 'மருத்துவ, அறிவியல், தொழில்நுட்ப கலைச் சொல் களஞ்சிய அகராதி' என்னும் நூலை வெளியிட்டார். இந்நூலின் ஒவ்வொரு கலைச் சொல்லின் வாயிலாகவும் அறிவியல் தகவல்களைச் செய்தித் துணுக்குகளாகத் தந்துள்ளார். இந்த வகையில் தமிழில் மட்டுமல்லாது இந்திய மொழிகளிலேயே முதலாவது வெளிவந்த முதல் நூல்கள் இவையெனில் மிகையாகாது.

அறிவியல் கற்றவர் தமிழறிஞர்களாக விளங்குகிறார்கள். தமிழ் கற்றவர்கள் அறிவியல் அறிஞர்களாக விளங்க முடியாதா? இக்கேள்விக்குத் தக்க பதிலாகத் தன்னையே மாற்றிக் கொண்டவர் திரு. மணவையார். கடந்த நாற்பதாண்டுகளாக அறிவியல் துறைகள் பலவற்றையும் கற்றறிந்த அறிவியல் அறிஞராகத் திகழ்கிறார். இவர் வெளியிட்ட மருத்துவக் கலைச்சொல் களஞ்சியம் இவரின் மருத்துவ அறிவைப் பறைச்சாற்றும். மருத்துவத் துறையின் பதினைந்து உட்பிருவுகளுக்கான கலைச்சொற்களையும் பொருள் விளக்கங்களையும் படங்களையும் தாங்கி வெளிவந்த இந்த நூல் தமிழக அரசின் பரிசையும் பாராட்டையும் பெற்றதோடு மக்களின் பெரும் வரவேற்பையும் பெற்றது.

இந்த நூற்றாண்டின் இணையற்ற அறிவியல் துறையாய் வளர்ந்து நிற்கும் கணினித் துறைக்கான கலைச்சொல் களஞ் சியத்தை உருவாக்க வேண்டும் என்பதும் இவரது வேட்கையாக இருந்து வந்தது. தொலைநோக்குப் பார்வையுடன் ஐந்தாறு ஆண்டுகட்கு முன்பே இதற்கான பணியைத் தொடங்கி விட்டார். இதற்காக, கணினி அறிவியலையும், கற்கத் தயங்கவில்லை. இவர் அண்மையில் அமெரிக்கா, கனடாவுக்குப் பயணம் மேற்கொண்ட போது அப்பயணத்தை கணினிக் கலைச்சொல் களஞ்சியத்தை

செம்மையாக உருவாக்கும் பணிக்காகவே அப்பயனத்தின் பெரும்பாலான நாட்களைச் செலவிட்டார்.

திரு. மணவையாரின் கலைச்சொல் களஞ்சியங்கள் அனைத்திலும் ஒரு சிறப்புக் கூறு உண்டு. அகர வரிசையில் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களைத் தரும்போது அது 'அகராதி' ஆகிறது. அத்தோடு நில்லாமல், உடன் சொல் விளக்கத்தையும் பொருள் விளக்கத்தையும் விரிவாகத் தருவதால் அது கலைக் களஞ்சியமாகப் பரிணமிக்கிறது. ஆங்காங்கே தேவையான இடங்களில் படங்களும் இடம் பெற்றிருப்பது இன்னொரு சிறப்புக் கூறாகும்.

## மொழியாக்கச் சிறப்புக் கூறுகள்

அகர வரிசையில் சொற்களின் பொருளைக் கூறும் நூலை 'அகராதி' என்கிறோம். ஒவ்வொரு சொல்லின் விளக்கத்தையும் விரிவாகத் தரும்போது 'கலைச்சொல் களஞ்சியம்' என்கிறோம். சொல்லின் பொருள், விளக்கம் இவற்றோடு நில்லாமல் சில எடுத்துக்காட்டுகளையும் கூறி விளக்குவதை என்னவென்பது? ஒரு பாட நூலைப் படிப்படி போன்ற எண்ணம் நமக்கு ஏற்படுகிறது. எடுத்துக்காட்டாக Hexadecimal Notation என்பதை பதினாறிலக்கக் குறிமானம் என்று பொருள்கூறி, இதில் 0 முதல் 9 வரையிலான இலக்கங்கள் A, B, C, D, E, F, என்ற எழுத்துகள் பயன்படுத்தப்படுகின்றன என்று குறிப்பிட்டுவிட்டு, A60B என்ற ஹெக்ஸா எண்ணை 42507 என்ற டெசிமல் எண்ணாக மாற்றும் முறையையும் விளக்கியுள்ளார். அதேபோல் Factorial என்ற சொல்லை விளக்கும்போது 4!-ன் மதிப்புக் கண்டறிவது எப்படி எனவும் விளக்கப்பட்டுள்ளது.

Line surge என்ற சொல்லுக்கு மின்சார வெள்ளம், மின்தொடர் எழுச்சி என்று பொருள் கூறி, திடீரென்று உயர்ந்த வோல்ட் மின்சாரம் பாயும் நிலை என்ற விளக்கம் கூறி, உயர்வோல்ட் மின்சாரம் திடீரென்று குறுகிய காலத்திற்குப் பாய்வதால், தவறான பதிவு, தவறான செயல்பாடு, தகவல்கள் இழத்தல், சில சமயங்களில் கணினியில் மிகவும் நுண்ணிய

இணைப்புகள், தகவல் உள்ளீட்டு முனையங்கள், தகவல் பரிமாற்றச் சாதனங்களின் அழிவு முதலியன ஏற்படுவதுண்டு என்று அதன் விளைவுகளைக் கூறி, திடீரென்று மின்சார டிரான்ஸ்பார்மர்களை இயக்குதல், பிற துணைக் கருவிகளை இயக்குதல் மற்றும் பிற காரணங்களால் ஏற்படுவதுண்டு என்று அதன் காரணங்களையும் எடுத்துக் கூறுவதுடன் நில்லாமல், உயர்வோல்ட் மின்சாரம் திடீரென்று பாய்வதைத் தடுக்கும் சாதனங்களால் கருவிகளைப் பாதுகாக்கலாம் என்று பாதுகாப்பு வழிமுறையையும் கூறுவதைப் பார்க்கும்போது அகராதி, கலைக் களஞ்சியம் என்கிற வரம்புகளையும் உடைத்தெறிந்து ஒரு புதிய பரிமாணத்தையே எட்டி விடுகிறது என்றுதான் சொல்ல வேண்டும்.

நாகரிகமற்ற முறையில் கணினியைப் பயன்படுத்துவதை Geek என்று கூறுகிறார்கள். அதனை 'கற்றுக்குட்டித்தனம்' என்று நாகரிகமான முறையில் மொழி பெயர்த்துள்ள பாங்கு குறிப்பிடத்தக்கது. Eavesdropping என்பதை 'ஒற்றுக் கேட்டல்' என்கிறார். Hacker-களை 'குறும்பர்' எனச் செல்லமாகக் குறிப்பிடுகிறார். Paddle என்பதைத் துடுப்பு, மத்து என மொழி பெயர்க்கிறார். Menu Item என்பதை 'பட்டி உருப்படி' என்கிறார். Packet என்பதைப் பொதிவு, பொட்டலம் என்று குறிப்பிடுகிறார். Pattern என்பதை தோரணி, தினுசு என்கிறார். இவ்வாறு தமிழ்பேசும் மக்களிடையே பேச்சு வழக்கில் பயன்படுத்தக்கூடிய பொருள் பொதிந்த பொருத்தமான தமிழ்ச் சொற்களை மொழியாக்கமாகக் கொடுத்திருக்கும் பாங்கு திரு. மணவையாருக்கே உரிய தனித்தன்மை என்றே கூறவேண்டும்.

Flexible என்பதன் பேச்சு வழக்குச் சொல் Floppy என்பதாகும். எனவே Flooppy Disk 'நெகிழ் வட்டு' என மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. மெல்லியதாக இருப்பதாலும் Hard Disk என்பதற்கு மாறாக இருப்பதாலும் 'மென் வட்டு' என்றும் குறிக்கலாம். செருகி எடுத்துப் பயன்படுத்துவதால் 'செருகு வட்டு' என்ற மூன்று சொற்களையுமே தந்து நம்மைத் திக்குமுக்காட வைக்கிறார் திரு. மணவையார் அவர்கள். Hard Disk என்பது பிரிக்க

முடியாதவாறு தனிப் பொதியுறையில் நிரந்தரமாய் பிணைக்கப் பட்டுள்ளதால் அதனை 'நிலை வட்டு' என மொழியாக்கம் செய்துள்ளதும் முற்றிலும் பொருத்தமே.

இவ்வாறு திரு. மணவையாரின் மொழியாக்கச் சிறப்புக் கூறுகளைப் பக்கம் பக்கமாக எழுதிக் கொண்டே போகலாம். கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே' என்று பழம் பெருமை மட்டுமே பேசிக் காலம் கழிக்காமல் நல்ல தமிழை - நல்ல அறிவியல் தமிழை - புத்தம் புதுத் தமிழைப் பற்றி - எந்த நேரமும் சிந்தித்துச் செயலாற்றி வரும் திரு. மணவையாரைப் போல் இன்னொரு தமிழறிஞரைக் காண முடியுமா என்பதே சந்தேகத்துக்குரிய கேள்வி. அரசும், பல்கலைக் கழகங்களும், வல்லுநர் குழுவும் செய்ய வேண்டிய ஒரு பணியைத் தனியொருவராக நின்று சாதித்துள்ள திரு. மணவையார் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். ஆங்கில மொழியில் கணினித் துறைக்கென எத்தனையோ அகராதிகளும், சொற்களஞ்சியங்களும் வெளியிடப்பட்டுள்ளன. ஆனால், இந்திய மொழிகளில் இதுவே முதலாவது நூலாக இருக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இவ்வண்

**மு. சிவலிங்கம்**

# காணிக்கை

*நம்மில் சம்பாதிக்கத் தெரிந்தவர்கள் பலர் உண்டு. ஆனால், தாங்கள் தேடிய செல்வத்தை உரிய வழியில் செலவழிக்கத் தெரிந்தவர்கள் மிகச் சிலரே உண்டு. அத்தகையோருள் தலையாய வராக விளங்குபவர் சமுதாயச் சேவைச் செம்மல், பவழ விழா செல்வர் அல்ஹாஜ் பி.எஸ். அப்துர் ரஹ்மான் அவர்கள்.*

*நற்குணக்குன்றான அவர்கள் அன்பு, பரிவு, எளிமை, வள்ளன்மை எனும் சொற்களுக்கு இலக்கணமாகவே விளங்குபவர். இளமைத் தொட்டே தனித்துவச் சிந்தனையிலும், அறிவாற்றலிலும் மிக்குயர்ந்து, வணிகத் துறையில் தனக்கென தனி வழி வகுத்து, கடும் முயற்சியாலும் இடையறா உழைப்பாலும் உயர்ந்து, பன்னாடு போற்றும் வணிகராக, பல்முனைத் தொழில் மேதையாக உலகெங்கும் காலூன்றி, அழுத்தமான தடம் பதித்து, தாய் மண்ணுக்குப் பெரும் புகழ் தேடித் தரும் பெரியார்.'கப்பல் தலைவர் ' எனும் பொருள் பொதிந்த 'மரைக்காயர்' எனும் சொல்லுக்குப் பெருமை சேர்க்கும் வகையில், உலகெங்கும் கப்பல் செலுத்தும் 'கப்பலோட்டும் தமிழன்' எனும் பெருமைக்குரிய அடைமொழியோடு உலா வருபவர்.*

*தம் நுண்மாண் நுழைபுலத்தால் பல பேருக்கு வேலை வாய்ப்பளிக்கும் தொழில்களை உருவாக்கி, பல்லாயிரம் பேர் பணிபுரியவும் அதன் மூலம் வாழ்வில் வளம் பெருகவும் வழி கண்ட பிறர் நலம் பேணும் பேராண்மையாளர்.*

*நத்தைக்குக் கூடுபோல் தான் சார்ந்த இஸ்லாமிய சமுதாயம் ஏழ்மை, அறியாமை, சுகாதாரக்கேடு போன்றவற்றால் நலிவடைந்து கிடக்கும் நிலையை மாற்றி,அவ்வடித்தட்டு மக்கள் வாழ்க்கையில் மேன்மையுற கல்வி ஒன்றே வழி எனத் தெளிந்து, மழலையர் பள்ளி முதல் பொறியியல் கல்லூரி வரை கல்வி நிறுவனங்கள் பலவற்றை உருவாக்கி, சமுதாயத்தில் புது சரித்திரம் படைத்த சாதனை நாயகர் அல்ஹாஜ் பி.எஸ். அப்துர் ரஹ்மான் அவர்கள்.*

*இன்றையப் போக்குக்கும் காலத் தேவைக்குமேற்ப அறிவியல், தொழில்நுட்பக் கல்வி மூலமே வாழ்வு வளம் பெற*

முடியும் என்பதைக் கருத்தில் கொண்டு உருவாக்கிய 'கிரஸென்ட் இன்ஜினீயரிங் கல்லூரி' அமைந்து, ஆற்றலாளர்களை உருவாக்கி உலகுக்கு வழங்கிக் கொண்டுள்ளது.

அறிவு வளர்ச்சியின் அடித்தளம் பெண்களே என்பதை நன்கு உணர்ந்து தெளிந்த பவழ விழா செல்வர், கீழக்கரையில் 'தாஸீம் பீவி அப்துல்காதர்' மகளிர் கல்லூரியைத் தோற்றுவித்து, பெண் உயர் கல்விக்கு வழி வகுத்துள்ளார். அன்னார் உருவாக்கிய நான்கு மேல்நிலைப் பள்ளிகளில் மூன்று மகளிர்க்கானவை என்பதிலிருந்து இவர் பெண் கல்வியில் கொண்டுள்ள பேரார்வம் எத்தகைய தென்பது புலனாகும்.

ஆதரவற்ற ஏழை எளிய இளஞ்சிறார்களைத் தாயுள்ளத்தோடு அரவணைத்துப் பேணிப் பாதுக்காத்து, அவர்களை வாழ்வின் உயர்நிலைக்குத் தயார் செய்ய 'அல்அமீன்' என்ற பெயரில் நான்கு சிறுவர் இல்லங்களையும் இரண்டு சிறுமியர் இல்லங்களையும் சிறப்பாக நடத்தி வருகிறார்.

சமுதாயக் கல்வியோடு மார்க்கக் கல்வி வளர்ச்சியிலும் பேரார்வம் காட்டி வரும் இப்பெருந்தகை 'புகாரி ஆலிம் அரபுக் கல்லூரி'யை சீரும் சிறப்புமாக நடத்தி வருகிறார். சொல்லப் போனால், தமிழ்நாட்டிலும் இந்திய அளவிலும் இவர் உதவி பெறாத அரபுக் கல்லூரிகளோ, மதராசாக்களோ இல்லையென்றே கூறலாம்.

மனநலம் நாடும் கல்வித்துறை போன்றே மக்கள் உடல் நலம் பேணும் மருத்துவத் துறையிலும் பேரார்வமிக்கவர் இப் பெருந்தகை. இதற்கு கட்டியங்கூறுவன கீழக்கரை 'யூசுப் சுலைஹா மருத்துவமனை'யும் மதுரை 'கிரஸென்ட் மருத்துவமனை'யும் அதோடு இணைந்த 'செவிலியர் பயிற்சிக் கல்லூரி'யும்.

அன்று தமிழாய்ந்த தமிழ்ப் புலவர்கட்கு நிழல் தரும் குளிர் தருவாக விளங்கிய வள்ளல் சீதக்காதி போன்றே இன்று தமிழார்வலர்கட்கும் தமிழ்ப் படைப்பாளர்கட்கும் இளைப்பாறக் கிடைத்த இனிய தருவாக விளங்குகிறார். 'இஸ்லாமிய ஆய்வுப் பண்பாட்டு நிலையம்' அமைத்து இஸ்லாமிய இலக்கியப் பண் பாட்டுக்கு வழிகோலியுள்ளார். தமிழ்ப் படைப்பையும்

படைப்பாசிரியர்களையும் ஊக்குவிக்கும் வகையில் ஆண்டுதோறும் சிறந்த நூல்களுக்கு சதக்கத்துல்லா அப்பா பெயரில் பரிசளித்துப் பாராட்டி மகிழ்கிறார்.

சிறப்புமிகு இச்செயல்கள் அனைத்தும் தம்மோடு நின்றுவிடக் கூடாது, என்றென்றுமாக நடைபெறவேண்டும் என்ற நல்லெண்ணத்தில் சீதக்காதி அறக்கட்டளை, அகில இந்திய இஸ்லாமிய நிறுவனம், ஐக்கியப் பொருளாதாரப் பேரவை, ஐக்கியப் பொருளாதாரப் பேரவை டிரஸ்ட், அனைத்திந்திய ஐக்கியப் பொருளாதாரப் பேரவை கூட்டமைப்பு முதலான அறக் கட்டளைகளை நிறுவி, அவற்றின் அறங்காவலராகவும் அமைந்து தொண்டாற்றி வருகிறார்.

இவரது கல்விப் பணியாயினும் தமிழ்ப் பணியாயினும் அனைத்துச் சமுதாய மக்களுக்கென அமைந்து வருவது, இவரது சமய நல்லிணக்க உணர்வுக்குக் கட்டியங் கூறுவதாகும்.

இத்தகு பெருமைமிகு பெரும் பணியைத் தளராது நாளும் ஆற்றி வரும் அன்னாரின் சமுதாயத் தொண்டு இன்று அவரொத்த பலரையும் ஊக்கி வருகிறது. இப்பணிகள் அனைத்தும் வருங்காலத் தலைமுறைக்கு வழிகாட்டுநெறிகளாகக் கொண்டுச் செல்லத் தக்கவையாகும்.

உமறுப் புலவரின் சீறாப்புராணம் மூலம் வள்ளல் சீதக்காதி வாழ்ந்து கொண்டிருப்பதுபோல் புரவலர் பெருந்தகை, பவழ விழாச் செல்வர் பி.எஸ். அப்துர் ரஹ்மான் அவர்கள் இப்பேரகராதி மூலம் காலமெல்லாம் வாழ்வார் என்பது திண்ணம்.

இவரது அளப்பரிய பணி கண்டு வியந்து நிற்கும் நான், எனது அரும் படைப்பான இக் 'கணினி களஞ்சியப் பேரகராதி' பெருநூல் மூலம் பவழ விழா செல்வர் அல்ஹாஜ் பி.எஸ். அப்துர் ரஹ்மான் அவர்களின் தொண்டும் சிந்தனையும் என்றென்றும் நிலைபெற அன்னாரின் அருந்தொண்டுக்கு இந்நூலை நினைவுக் காணிக்கையாக்குகிறேன்.

அன்பன்
**மணவை முஸ்தபா**
நூலாசிரியர்



நூலாசிரியர் திரு.மணவை முஸ்தபா - புரவலர் அல்ஹாஜ் பி.எஸ். அப்துர் ரஹ்மான்.

# A

**A** : ஏ : டாஸ், விண்டோஸ் மற்றும் சில இயக்க முறைமை (ஆப்பரேட்டிங் சிஸ்டம்)களில், முதல் அல்லது முதன்மை நெகிழ் வட்டு இயக்ககப் பெயர் - இரண்டு நெகிழ் வட்டுகள் இருப்பின் ஏ,பி (A,B) என்று அழைக்கப்படும். கணினிக்குள் நிரந்தரமாகப் பொருத்தப் பட்டுள்ள நிலைவட்டு எப்போதும் 'சி' (C) என்றே அழைக்கப் படும். தொடக்க காலக் கணினிகளில் நெகிழ்வட்டுகள் மட்டுமே இருந்தன. பிற்காலக் கணினிகளில்தான் நிலைவட்டு இடம் பெற்றது. எனவேதான் பெயர் வரிசை இவ்வாறு அமைந்தது.

கணினியை இயக்கும் போது, இயக்க முறைமை உள்ளதா என முதலில் ஏ-வட்டில்தான் தேடும். இல்லையேல் சி-யில் தேடும். இதற்கான குறிப்பு சீமாஸ் நினைவகத்தில் பதிவு செய்யப்பட்டிருக்கும். நாம் இந்த வரிசையை மாற்றி அமைக்கவும் முடியும்.

**AAAI** : **ஏஏஐ** : அமெரிக்க செயற்கை நுண்ணறிவுச் சங்கம் என்பதைக் குறிக்கும் American Association for Artificial Intelligence என்பதன் குறும்பெயர். செயற்கை நுண்ணறிவை மேம்படுத்துவதற்கான தொழில்துறை அமைப்பு.

**abacus** : **மணிச் சட்டம்** : மணிகள் வரிசையாகக் கோர்க்கப் பட்ட, கம்பிகள் பொருத்தப் பட்ட, எளிய கணக்குகளைச் செய்யப் பழங்காலத்தில் பயன் படுத்தப்பட்ட கருவி. இப்போதும் பல கீழ்த்திசை நாடுகளில் பரவலாகப் பயன்படுத்தப் படுகிறது.

**abbreviated address** : **சுருங்கிய முகவரி முறை** : முழு முகவரியைப் பயன்படுத்தும் முறையிலிருந்து மாறுபட்டது. இதில் முகவரியின் ஒரு பகுதி மட்டுமே பயன்படுத்தப்படுகிறது. இவ்வாறு குறுக்கப்பட்ட குறியீடு காரணமாக விரைவாக தகவல்களைக் கையாள இயலுகிறது.

**abbreviated dialing** : **சுருங்கிய சுழற்றுகை; குறுக்குச் சுழற்றுகை.**

**ABC** : **ஏபிசி** : 'Atanasoff-Berry Computer' எனப்படும் முதல் இலக்கமுறை கணினியின் குறும் பெயர். இதனை 1939 இல் ஜான் அடனசோஃபும் அவரது உதவியாளர் கிளிப்போர்டு பெர்ரியும் உருவாக்கினர்.

**abend** : இயல்பற்ற முடிவு: இயல்புக்கு மாறான, முடித்தலுக்குரிய குறும்பெயர். சுழி (பூஜ்யம்)யினால் வகுத்தல் அல்லது ஓர் எண்ணோடு ஓர் எழுத்தைக் கூட்டும் முயற்சி காரணமாக ஏற்படும் பிழையால், நிரல் ஒன்றின் செயற்பாட்டை முன்கூட்டியே முடித்தல்.

**ABIOS** : ஏபயாஸ் : உயர்நிலை அடிப்படை உள்ளீட்டு வெளியீட்டு முறைமை என்று பொருள்படும். 'advanced basic input/output system' என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும் பெயர். பல்பணி மற்றும் பாதுகாக்கப்பட்ட இயக்க முறைமைக்குத் துணை செய்யும், உள்ளீட்டு/வெளியீட்டுப் பணி நிரல் தொகுதிகள். ஐபிஎம், பீஎஸ்/2 சொந்தக் கணினிகளில் உள் இணைக்கப்பட்டுள்ளது.

**abnormal termination** : இயல்பற்ற நிறுத்தம் : சுழி (பூஜ்யம்) யத்தால் வகுத்தல், எண் அளவு மீறல் போன்ற பிழையின் விளைவாக ஒரு நிரல் பிரதியிலேயே நிறுத்தப்படுதல்.

**abondon** : கைவிடு.

**abort** : கைவிடல்; முறித்தல்: ஒரு முறை பிறழ்ந்த செயல், அல்லது தவறு நிகழும்பொழுது, ஒரு நிரலை முடிவுக்குக் கொண்டு வரும் முறை.

**about** : பற்றி

**abscissa** : இடையச்சுத் தொலவு : ஒரு புள்ளியிலிருந்து நிலையச்சுக்குள்ள தொலைவு. ஒரு வரைபடம் புள்ளிவிவர அட்டவணையின் எக்ஸ் (x) அச்சு ஒய் (y) அச்சுக்கோட்டுக்கு மாறுபட்டதாகும்.

**absolute address** : நேரடி முகவரி; தனி முகவரி; முற்று முகவரி; துல்லிய முகவரி; நிரந்தர முகவரி : நினைவகத்தில் ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு நிரந்தரமாக வழங்கப்படும் முகவரி. 0000, 0001, 0002, 0003 ஆகிய முகவரிகள் கணினியின் நினைவிடத்தின் முதல் நான்கு இடங்களுக்கு ஒதுக்கப்படலாம். எந்திர முகவரி என்றும் அழைக்கப்படும்.

**absolute addressing** : சரியான முகவரியிடல்.

**absolute cell reference** : தனிச் சிற்றம் குறித்தல்; நேரடிக் கலம் குறித்தல்.

**absolute code** : தனிக் குறி முறை.

**absolute coding** : நேரடிக் குறியீட்டு முறை; தனிக் குறி முறை; முற்றுக் குறிமுறை : எந்திரக் கட்டளைகளையும் நிரந்தர முகவரிகளையும் பயன்படுத்தும் குறியீட்டு முறை. வேற்று வடிவத்துக்கு மாற்றாமல் நேரடியாக

கணினியால் செயல் படுத்தப் படும். இம்முறை அடையாளக் குறியீட்டு முறையிலிருந்து மாறுபட்டது.

**absolute coordinates** : நேரடி ஆயத் தொலைவுகள் : ஒரு மைய அச்சின் தொடர்பாகக் குறியிடப்படும் ஆயத் தொலைவு. சார்பு ஆயத் தொலைவு முறை யின்படி முந்தைய ஆயத் தொலைவுகளை ஒட்டி வரு வதற்கு மாறானது.

**absolute disk sectors** : நேர் வட்டுப் பகுதி : ஒரு குறிப் பிட்ட எண்ணிடத்தில் உள்ள வட்டுப் பகுதி.

**absolute error** : தனித் தவறு; தனி வழு: முற்றுப் பிழை.

**absolute link** : நேரடித் தொடர்பு; முழு இணைப்பு.

**absolute movement** : நிரந் தரப் பெயர்ச்சி : திரையில் உள்ள ஒரு வடிவை ஒரு குறிப்பிட்ட எக்ஸ் - ஒய் ஆயத் தொலைவு அச்சுகளின்படி ஒரு புதிய இடத்துக்கு மாற்றுதல். இது சார்நிலைப் பெயர்ச்சியிலிருந்து மாறுபட்டது.

**absolute path** : முழுமையான பாதை; முழுப்பாதை : ஒரு கோப் பின் இருப்பிடத்தை வட்டு (drive) அதன் மூலக் கோப்பகத் (root directory)திலிருந்து தொடங்கி முழுமையாகக் குறிப்பிடும் முறை. (எ-டு) c:\windows\ system\ms386.dll

**absolute pointing device** : முற்றுப் பொருந்திய சுட்டுக்கருவி : பேனாவைப்போந்த சுட்டுக் கருவிகளில் ஒரு வகைக் கருவிக்குப் பெயர். பயனாளர், வரைகலைப் பட்டிகை மீது வலது மேல் மூலையில் பேனாச் சுட்டுக் கருவியை வைக்கும் போது, திரையிலுள்ள சுட்டுக்குறி (cursor)யும் கணினித் திரையின் வலது மேல்மூலைக்கு நகரும்.

இவ்வாறு திரையில் நகரும் நிலை சுட்டுக்குறியின் இடத்துடன் பொருந்தி நகர்த்தப் படும் இடம் அல்லது நிலை இருப்பதால் சுட்டுக் கருவிக்கு இந்தப் பெயரிடப்பட்டுள்ளது.

**absolute URL** : முழு யூ ஆர் எல்.

**absolute value** : நேர் அளவு : கூட்டல் அல்லது கழித்தல் குறி யீடு இல்லாத எண் அளவு.

**absolute vector** : நேர் அளவு நெறியம் : கணினி வரைகலை முறையில் நேர் ஆயத் தொலைவு களுடன் வடிவமைக்கப்பட்ட ஒரு அளவு நெறியம்.

**abstract** : கருத்தியல்; சுருக்கம்; பொழிப்பு : ஒரு ஆவணத் தினைப் பற்றிய சுருக்கமான விளக்கம்.

**abstract automatic** : தன்னியக்கக் கருத்துரு; தாணியங்கு கருத்தியல்.

**abstract class** : கருத்தியல் இனக்குழு.

**abstract data type** : கருத்தியலான தரவு இனம்.

**abstract machine** : கருத்தியல் எந்திரம்; பொழிப்பு எந்திரம். *ஒரு நுண்செயலிக்கான வடிவாக்கம். உண்மையில் பயன்படுத்துவதற்குரியது அல்ல. இது ஒரு மாதிரி வடிவம் மட்டுமே. கருத்தியல் எந்திர மொழி என அறியப்படும் ஓர் இடை நிலை மொழியின் செயலாக்கத்திற்கான ஒரு மாதிரி வடிவமைப்பு. இந்த வடிவமைப்பை ஓர் ஆணை மாற்றியோ* (interpreter) *மொழி மாற்றியோ* (compiler) *பயன்படுத்திக் கொள்ள முடியும்.*

*இந்த நுண்செயலியின் நிரல் தொகுதி உண்மையான கணினி நிரல்களோடு ஒத்திருக்காது. மொழிமாற்றம்* (compile) *செய்யப்பட்ட நிரல் தொகுதியுடன் பெரிதும் ஒத்திருக்கும்.*

**abstract methods** : கருத்தியல் வழி முறைகள்.

**abstract syntax** : கருத்தியல் தரவு தொடரியல் : *கருத்தியல் தரவு இன வரையறை. கணினியின் வன்பொருள் கட்டமைப்பு மற்றும் குறியீட்டு முறை சாராத, ஒரு தரவுக் கட்டமைப்பின் வரையறை அல்லது இலக்கணம். இத்தகைய தரவு இன வரையறை, எல்லாவகைக் கணினிக்கும், எல்லாவகைக் கணினி மொழிகளுக்கும் பொதுவான ஒன்றாகும்.*

**abstract syntax notation** : கருத்தியல் தரவு இனக் குறிமானம் - 1 : *கருத்தியல் தரவு இனங்களுக்கும், தரவுக் கட்டமைப்பு பற்றிய வரையறைகளுக்குமான ஐஎஸ்ஓ-வின் தரக் கட்டுப்பாடு. ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழிக்கு மாற்றுவதற்கு இத் தரக்கட்டுப்பாடு அடிப்படையாக விளங்குகிறது.*

**abstract syntax tree** : கருத்தியல் தொடரமைப்பு மரவுரு : *பல்வேறு, ஒருங்கிணைந்த கட்டளைத் தொடர் சூழல்களிலும் கட்டமைப்பு சார்பான உரைத் தொகுப்பான்களிலும் பயன்படுத்தப்படுகின்ற மர உரு.*

**A/B switch box** : ஏ/பி நிலை மாற்று விசைப் பெட்டி : *இரு நிலை விசை அமைப்பை தன்னகத்தே கொண்ட ஒரு பெட்டி. இந்தப் பெட்டி வழியாகச் செல்லும் சைகை (சமிக்கை)யை இரு வகையாக நெறிப்படுத்தலாம். (1) ஒற்றை உள்ளீட்டிலிருந்து, இரு வெளியீடுகளில் ஏதேனும் ஒன்றுக்கு. (2) தேர்ந்தெடுக்கப்*




ஏ/பி நிலைமாற்று விசைப் பெட்டி

*பட்ட ஒரு உள்ளீட்டிலிருந்து, ஒற்றை வெளியீட்டுக்கு.*

**AC** : ஏசி : *மாற்று மின்விசையைக் குறிக்கும்* Alternating Current *என்பதன் குறும் பெயர். இவ்வகை மின்சாரமே இல்லம், பள்ளிகள், வணிக அமைப்புகளில் பயன்படுத்தப்படுகிறது.*

**AC adapter** : ஏசி (மாற்று மின் விசை) ஏற்பி; ஏசி இயைபி; ஏசி



ஏசி ஏற்பி

தகவி; மாற்று மின் இயைபி : *110 அல்லது 220 வோல்ட் அளவுள்ள வீட்டு மின்சாரத்தை, கணினி உறுப்புகளுக்குத் தேவைப்படுகின்ற குறைந்த மின் அழுத்தம் கொண்ட நேர்மின்சாரமாக மாற்றித்தரும் ஒரு புறச் சாதனம்.*

**academic network** : கல்வித் துறைப் பிணையம்.

**ACC** : ஏசிசி : *ஆஸ்திரேலிய கணினி மாநாடு என்பதைக் குறிக்கும்* Australian Computer Conference *என்பதன் குறும் பெயர். ஆஸ்திரேலிய கணினிச் சங்கத்தின் ஆண்டு மாநாடு.*

**accelerated graphics port (AGP)** : முடுக்கு வரைகலைத் துறை.

**acceleration time** : முடுகு நேரம்; முடுக்கல் நேரம்.

**accelerator** : முடுக்கி; வேகப் படுத்தி : *ஒரு பணியை விரைவு படுத்தும் முக்கிய இணைப்பு.*

**accelerator board** : முடுக்குப் பலகை; வேகமூட்டிப் பலகை.

**accelerator card** : முடுக்கி அட்டை : *கணினியின் மைய நுண்செயலிக்குப் பதிலாக அல்லது அதன் வேகத்தை அதிகரிக்க பயன்படுத்தப்படும் அச்சு மின் சுற்றுப் பலகை* (printed circuit board). *இதனால் கணினியின் வேகத் திறன் அதிகரிக்கும்.*

**accelerator key** : முடுக்கு விசை.

**accept** : ஏற்றுக்கொள்.

**acceptable user policy** : ஏற்கத் தக்க பயனாளர் கோட்பாடு : ஏற்கத்தக்க பயன்பாட்டுக் கொள்கை; இணையச் சேவை யாளர் அல்லது இணையத்தில் தகவல் சேவை வழங்குபவர் வெளியிடும் ஓர் அறிக்கை. இணையச் சேவையைப் பயன் படுத்திக் கொள்ளும் பயனாளர் எந்தெந்த நடவடிக்கையில் ஈடு படலாம் அல்லது ஈடுபடக் கூடாது என்று குறிப்பிட்டுக் காட்டும் அறிக்கை. எடுத்துக் காட்டாக, பயனாளர்கள் வணிக நடவடிக்கைகளில் ஈடுபடு வதைச் சில இணையச் சேவை யாளர்கள் அனுமதிப்பதில்லை.

**acceptance test** : ஏற்புச் சோதனை : புதிய கணினி முறைமை ஒன்றின் திறன்களை யும் செயல்பாட்டையும் விளக்கு வதற்கான சோதனை. கணினி முறைமை செயலொழுங்கு நிலை யில் உள்ளது என்பதை நுகர் வோர்க்கு உணர்த்த உற்பத்தி யாளரால் பெரும்பாலும் இச் சோதனை நிகழ்த்தப்படுகிறது.

**access** : அணுகல் : 1. விரும் பும் தகவலைக் கண்டறிய பொதுவாக கணினி முறை மையை அல்லது ஒரு தரவுத் தளத்தை அணுகுதல். 2. மைக்ரோ சாஃப்ட் நிறுவனத்தின் தரவுத்தள மென்பொருள்.

**access arm** : அணுகு கை; பெறுநிலைக் கரம் : காந்த



அணுகு கை

வட்டுக் கோப்பு சேமிப்பகத்தில் படித்தல் மற்றும் எழுதுதலுக் கான பொறியமைமவை குறிப் பிட்ட நிலையால் பொருத்த உதவும் எந்திர உறுப்பு.

**ACCESS .bus** : அணுகு பாட்டை; அணுகு மின்வழி : கணினியுடன் புறச் சாதனங்களை இணைக்கப் பயன்படும் இருதிசை மின்

இணைப்புத் தொகுதி. அச்சுப் பொறிகள், இணக்கிகள், சுட்டிகள், விசைப் பலகைகள் போன்ற 125 குறைவேகப் புறச் சாதனங்களை ஒற்றைப் பொதுப் பயன் வாயில் மூலமாக, இந்த அணுகுபாட்டையில் கணினியுடன் இணைக்க முடியும். இதற்கு இயைபுடைய புறச் சாதனங்கள், தொலைபேசி செருகி போன்ற இணைப்பானால் பொருத்தப்படுகின்றன. ஆனால் கணினி ஒவ்வொரு புறச் சாதனத்துடனும் நேரடியாக தொடர்பு கொள்கிறது. கணினி செயல்பட்டுக் கொண்டிருக்கும் போதே புறச்சாதனத்தைப் பொருத்தலாம். கணினி, தானாகவே அதற்கொரு முகவரியை ஒதுக்கி செயல் நிலைக்கு கொண்டுவந்து விடும். டிஜிட்டல் எக்யூப்மென்ட் கார்ப்பரேஷன் உருவாக்கியுள்ள இந்த அக்செஸ் பஸ், இன்டெல் நிறுவனத்தின் யுஎஸ்பி (universal serial bus)-க்குப் இணையானது எனலாம்.

**access code :** அணுகுக் குறிமுறை : ஒரு கணினி முறைமையில் இயக்குவோரைக் குறிக்கும் எழுத்துகள் அல்லது எண்களின் குழு.

**access control :** அணுகுக் கட்டுப்பாடு : அணுகுக் குறியீட்டைப் பயன்படுத்தும் செயல்முறை. இதன் மூலம் ஒரு கணினியை அனுமதிக்கப்பட்டவர் மட்டுமே பயன்படுத்தும் வகையில் கட்டுப்படுத்தப்படுகிறது.

**access control list :** அணுகல் கட்டுப்பாட்டுப் பட்டியல் : வட்டில் பதிவு செய்து வைக்கப்பட்டுள்ள ஒரு கோப்பினை அணுகவும், திருத்தம் செய்யவும் உரிமை பெற்றுள்ள பயனாளர்கள் அல்லது குழுக்கள் பற்றிய தகவல்கள் அடங்கிய பட்டியல்.

**access control register :** அணுகுக் கட்டுப்பாட்டுப் பதிவகம் : செயல்பட்டுக் கொண்டிருக்கும் இயக்கத்துக்கு தகவல் அணுகலைக் கொடுக்கும் எந்திரப் பதிவகம்.

**access denied :** அணுகல் மறுப்பு.

**access event :** அணுகல் நிகழ்ச்சி, அணுகு நிகழ்வு.

**access hole :** அணுகு துளை.

**access, immediate :** உடனடி அணுகல்.

**access level :** அணுகு மட்டம்; அணுகு நிலை.

**access light :** அணுகு ஒளி : கணினி, ஒரு வட்டில் எழுதும் போதோ அல்லது படிக்கும் போதோ கணினி முகப்பில் ஒளியின் மூலம் சமிக்கை அளிப்பது.

வட்டு இயக்ககத்தில்கூட இது சில சமயம் இருக்கலாம்.

**access limits** : அணுகு எல்லைகள் : *பாதுகாக்கப்பட்ட தகவல் கோப்புகளின் தொகுதியைப் படிக்கவோ, பயன்படுத்தவோ அனுமதிக்கப்படுவோர் எண்ணிக்கை.*

**access mask** : அணுகல் மறைப்பி.

**access mechanism** : அணுகு பொறியமைவு: *காந்த வட்டுச் சேமிப்பகத்தில் படித்தல் மற்றும் எழுதுதல் முனையை உரிய தடத்தில் நிறுத்தும் உறுப்பு.*

**access memory, random** : குறிப்பின்றி அணுகு நினைவகம்.

**access method** : அணுகுமுறை : *சேமிப்பு மற்றும் உள்ளீட்டு/வெளியீட்டுப் பொறிகளுக்கு இடையில் தகவல் பரிமாற்றத்துக்கு இயக்குவோர் பயன்படுத்தக்கூடிய பராமரிப்பு உத்திகளில் ஏதாவது ஒன்று.*

**access mode** : அணுகு பாங்கு.

**access monitoring** : அணுகுக் கண்காணிப்பு : *சரியான அனுமதிச் சொல்லைக் கொடுப்பதற்கு ஒருசில வாய்ப்புகளை மட்டுமே கொடுக்கும் அணுகுக் கட்டுபாட்டு முறை.*

**access number** : அணுகு எண் : *இணையத்திலுள்ள ஒரு சேவையை அணுகுவதற்கு சந்தாதாரர் பயன்படுத்தும் தொலைபேசி எண்.*

**accessibility** : அணுகல் தரம்; அணுகுதிறன்; அணுகுதரம் : *ஏதேனும் ஒருவகையில் உடல் ஊன முற்றவர்கள், நடமாடுவதில், பார்வையில், கேட்பதில் குறைபாடு உடையவர்கள், எவ்வித இடையூறும் இல்லாமல் கையாள்வதற்கு ஏற்ற வகையில் கணினியில் அமைந்துள்ள வன்பொருள், மென்பொருள்களின் தரம்.*

**accessiblity options** : அணுகுமுறை விருப்பத் தேர்வுகள்.

**accessory** : துணையுறுப்பு: *நெகிழ்வட்டு இயக்ககம், அச்சுப்பொறி போன்ற ஒரு வெளிப்புறச் சாதனம்.*

**access path** : அணுகு பாதை; அணுகுவழி : *ஒரு கோப்பின் இருப்பிடத்தைக் கண்டறிய, இயக்க முறைமை (operating system) பின்பற்றிச் செல்லும் பாதை. அணுகுபாதை ஒரு இயக்ககம் அல்லது வட்டுத் தொகுதி (disk volume) பெயருடன் தொடங்கும். அதனைத் தொடர்ந்து கோப்பகம் மற்றும் உள்கோப்பகங்களின் பெயர்கள் தொடர்ச்சியாக இடம் பெறும் (அவ்வாறு இருப்பின்). இறுதியில் கோப்பின் பெயர் இருக்கும். (எ.டு): C:\WINDOWS\ SYSTEM\ abc.dll*

**access permission** : **அணுகல் அனுமதி** : அணுகுவதற்குரிய பாதுகாப்பு விதிமுறைகளுக்கு ஏற்ப செயற்பட்டு ஒரு நிரலாக்கத் தொடரை இயக்க அனுமதித்தல்.

**access points** : **அணுகு முனைகள்; இயக்க முனைகள்.**

**access privileges** : **அணுகு சலுகைகள்** : ஒரு பிணையத்தில் அல்லது ஒரு கோப்பு வழங்கலில் சேமிக்கப்பட்டுள்ள தகவல் வளங்களைக் கையாள்வதற்கு ஒரு குறிப்பிட்ட பயனாளருக்கு அனுமதிக்கப்பட்டுள்ள செயல்பாடுகள். வழங்கல் கணினியை அணுகுதல், ஒரு கோப்பகத்தின் உள்ளடக்கத்தைப் பார்வையிடல், ஒரு கோப்பினைத் திறந்து பார்த்தல், அதனைப் பிறருக்கு அனுப்புதல், ஒரு கோப்பினை அல்லது கோப்பகத்தை உருவாக்குதல், திருத்தியமைத்தல், அழித்தல் போன்ற செயல்பாடுகள் இந்தச் சலுகைகளில் அடங்கும். முறைமை நிர்வாகி ஒரு பயனாளருக்கு இச் சலுகைகளை வழங்கலாம் அல்லது மறுக்கலாம். நிர்வாகிக்கு இத்தகைய உரிமை இருப்பதால் தகவல் பாதுகாக்கப்படுகிறது; இரகசியத் தகவலின் மறைதன்மை காப்பாற்றப்படுகிறது. வட்டிலுள்ள சேமிப்பிடங்கள் போன்ற வளங்களை முறைப்படி பிரித்தளிக்க முடிகிறது.

**access protocol** : **அணுகு நெறிமுறை** : தடங்களில் சமிக்கைகளை அனுப்புவதற்கு ஒரு கட்டமைப்பில் உள்ள சாதனங்களைப் பயன்படுத்தும் போக்குவரத்து விதிகள். எதைப் பயன்படுத்தினாலும், ஒரு நேரத்தில் ஓர் இடத்திலிருந்து மட்டுமே அனுப்பப்பட வேண்டும். இல்லையேல், தரவு தவறாகும் அல்லது தொலைந்து போகும்.

**access provider** : **அணுகல் வழங்கி.**

**access, random** : **குறிப்பின்றி அணுகல்.**

**access rights** : **அணுகு உரிமைகள்** : ஒரு கோப்பு அல்லது கோப்பகம் அல்லது ஒரு முறைமையைப் பார்க்க, உள் நுழைய அல்லது மாற்றம் செய்வதற்கான அனுமதி.

**access, serial** : **தொடரியல் அணுகல்.**

**access series** : **அணுகு தொடர்.**

**access specifier** : **அணுகல் வரையறுப்பி.**

**access speed** : **அணுகு வேகம்** : முதன்மை அல்லது துணை நிலை

*நினைவகத்தில் தரவுகள் கேட்கப் பட்டதிலிருந்து அவை எடுக்கப் பட்டு, பயன்படுத்த ஆகும் நேரம்.*

**access storage device, direct :** நேரடி அணுகு களஞ்சியக் கருவி; நேரடி அணுகு சேமிப்பக சாதனம்.

**access storage, direct :** நேரடி அணுகு சேமிப்பகம்; நேரடி அணுகு களஞ்சியம்.

**access storage, random :** தற் போக்கு அணுகு தேக்ககம்; குறிப் பின்றி அணுகு சேமிப்பகம்.

**access storage, zero :** சுழி அணுகு சேமிப்பகம்.

**access time :** அணுகு நேரம் : *சேமிப்பிலிருந்து ஒரு குறிப் பிட்ட தரவுவைக் கண்டறிந்து, வெளியீட்டுக்கு வழங்குவதற் கான நேரம் அல்லது தரவு ஒன் றைச் சேமிப்பு இடத்தைக் கண் டறிந்து வழங்குவதற்கான நேரம்.*

**access to store :** சேமிப்பக அணுகல்.

**access vector :** அணுகு நெறி யம் : *தேவையான தரவுகளைக் கண்டுபிடிக்க உதவும் ஒரு தரவு விவரம்.*

**account :** கணக்குவைப்பு : *1. இணையத்தில், ஒரு பயனா ளரை அடையாளம் காணவும், அவர் இணையத்தைப் பயன் படுத்தும் நேரத்தைக் கணக் கிடவும், இணையச் சேவை நிறுவனம் பராமரித்து வரும் கணக்கு வைப்பு. 2. குறும்பரப்பு பிணையங்களிலும், பல் பயனா ளர் இயக்க முறைமைகளிலும், நிர்வாகம் மற்றும் பாதுகாப்புக் காரணங்களுக்காக, அனுமதிக் கப்பட்ட பயனாளர்களை அடை யாளம் காணும் பொருட்டு, பதிவு செய்து வைக்கப்பட்டுள்ள ஒரு குறிப்பேடு.*

**accountancy :** கணக்கியல்.

**accountancy card calling :** வங்கிக் கணக்கு அழைப்பு அட்டை

**accounting file :** கணக்கு வைப்புக் கோப்பு : *ஒரு பிணைய அல்லது பல் பயனாளர் பணிச் சூழலில், ஓர் அச்சுப்பணி அச்சுப்பொறிக்கு அனுப்பப் படும்போது, அதை அனுப்பிய பயனாளர் பற்றிய விவரம் மற் றும் இதுவரை அச்சடிக்கப்பட்ட பக்கங்கள் பற்றிய விவரம் ஆகியவற்றைக் கொண்ட ஒரு கோப்பு. இந்தக் கோப்பு அச்சுப் பொறி கட்டுப்படுத்தி (printer controller)யால் உருவாக்கப் படுகிறது.*

**accounting information system :** கணக்கிடும் தகவல் அமைப்பு : *ஒரு நிறுவனத்தின் பணம் கைமாறல் போன்ற வணிகப்*

புழக்கங்களைப் பதிவு செய்து வைக்கப்பட்டுள்ள ஒரு கோப்பினை அணுகவும், திருத்தம் செய்யவும் உரிமை பெற்றுள்ள பயனாளர்கள் அல்லது குழுக்கள் பற்றிய தரவுகள் அடங்கிய பட்டியல்.

**accounting machine : கணக்கியல் எந்திரம்; கணக்கு வைப்பு எந்திரம் :** *1. 1940 மற்றும் 50-களில் வணிகக் கணக்கியல் நடவடிக்கைகளுக்காகப் பயன்படுத்தப்பட்ட எந்திரம். தானியங்கு தரவு செயலாக்கத்திற்குப் பயன்படுத்தப்பட்ட பழமையான கருவிகளுள் ஒன்று. தொடக்க கால கணக்கியல் எந்திரங்கள் மின்னணு அடிப்படையிலானவை அல்ல. துளை அட்டை மற்றும் செருகு பலகைச் சட்டங்களைப் பயன்படுத்தின. 2. கணக்கியல் செயல்பாடுகளுக்கு என்றே தனிச் சிறப்பாகப் பயன்படுத்தப்படும் கணினி. இக்கணினியை இயக்கியதும் அதில் பதிவு செய்யப்பட்டுள்ள கணக்கியல் மென்பொருள் இயங்கத் தொடங்கும்.*

**accounting package : கணக்கிடு தொகுப்பு.**

**accounting routine : கணக்கிடு நடைமுறை.**

**accounting systems : கணக்கிடும் அமைப்புகள் :** *நிதி சார்ந்த தரவுகளை அளவிட, விளக்க, ஆராய மற்றும் பரப்ப முடிவெடுப்பவர்களை அனுமதிக்கும் கணினி அமைப்புகள்.*

**account number : கணக்கு எண் :** *ஒரு கணினி மையத்தில் கணினி பயன்படுத்தும் ஒரு வருக்கோ அல்லது பலருக்கோ அளிக்கப்படும் எண். அந்த எண் பாதுகாப்பு மற்றும் கட்டணம் கணக்கிடும் நோக்கத்துக்காகப் பயன்படும். நுழை சொற்களையும் (Passwords) கணக்கு எண்களாகப் பயன்படுத்தலாம் அல்லது நுழைச் சொற்களுடன் கணக்கு எண்ணும் தரப்படலாம்.*

**account policy : கணக்கியல் கொள்கை; கணக்குவைப்புக் கோட்பாடு :** *1. குறும்பரப்புப் பிணையங்கள் மற்றும் பல் பயனாளர் பணித் தளங்களில் பயனாளர்களின் உரிமைகள் தொடர்பாகப் பின்பற்றப்பட வேண்டிய நடைமுறைகள் பற்றிய வரையறைகள். ஒரு புதிய பயனாளர், முறைமையை அணுக அனுமதிக்கலாமா, ஏற்கெனவே உள்ள பயனாளருக்குக் கூடுதலான வளங்களைக் கையாளும் உரிமைகளையும் வழங்கலாமா என்பது போன்ற கொள்கை நிலைகளை வரையறுப்பது. ஒரு பயனாளர் தனக்குரிய சலுகைகளை முறைப்படி பயன்படுத்திக்*

கொள்வது தொடர்பான விதி முறைகளையும் இக் கொள்கை வரையறை செய்கிறது. 2. விண்டோஸ் என்டி (விண்டோஸ் 2000) மற்றும் விண்டோஸ் எக்ஸ் பீ இயக்க முறைமையில் பிணையத்தைச் சேர்ந்த ஒரு குறிப்பிட்ட கணினி அல்லது ஒரு குறிப்பிட்ட களப்பிரிவில் (domain) உள்ள பயனாளர்கள் நுழைசொற்களைப் (pass-words) பயன்படுத்துவதற்கான விதிமுறைகளை இச் சொல் தொடர் குறிக்கிறது.

**accoustic coupler** : கேட்பொலி பிணைப்பி.

**accumulation** : திரட்சி; சேர்ப்பு.

**accumulator** : குவிப்பி; திரளகம்; திரட்டகம்; சேர்ப்பகம் : நுண்செயலில் கணக்கீடுகளுக்குப் பயன்படுத்தப்படும் ஒரு பதிவகம், பொதுவாக, குறிப்பிட்ட உறுப்புகளை எண்ணுவதற்கோ, தொடர் கூட்டுத் தொகையை பதிவு செய்யவோ இப்பதிவகம் பயன்படுகிறது.

**accuracy** : துல்லியம்.

**accurate** : துல்லியமான.

**ACD** : ஏசிடி : Automatic Call Distributor என்பதன் சுருக்கம். வரிசைமுறை அமைப்பில் பயன்படுவது.

**ACF** : ஏசிஎஃப் : Advanced Communication Facility என்பதன் சுருக்கம்.

**ACH** : ஏசிஎச் : Association for Computers and the Humanities என்பதன் குறும்பெயர். மொழி, இலக்கியம், வரலாறு, மானிடவியல், சமூகவியல் இவற்றில் கணினி ஆய்வுகளையும் மற்றும் கலை, இசை, நடனம் ஆகியவற்றைப் படைக்கவும் கற்கவும் கணினியைப் பயன்படுத்துபவரை ஊக்குவிக்கும் பன்னாட்டுச் சங்கம்.

**ACI** : ஏசிஐ : Automatic Car Identification என்பதன் குறும்பெயர். தானியங்கு முறையில் ரயில் பெட்டிகளை அறிதலைக் குறிக்கும். இரயில் பாதை நிறுவனங்கள் இரயில்பெட்டிகளை அறிவதற்குப் பயன்படுத்தும் தானியங்கு முறை.

**ACIA** : ஏசிஐஏ : Asynchronous Communications Interface Adapter என்பதன் குறும் பெயர். செய்தித் தகவல் தொடர்பு இடைமுகங்களில் பயன் படுத்தப்படும் ஒரு ஒருங்கிணைந்த மின்சுற்றுச் சிப்பு.

**ACIS** : அசிஸ் : Andy, Charles, Ian's System என்ற சொல் தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இது பொருள்

நோக்கிலான வரைவியல் மாதிரிகளை உருவாக்கும் கருவித் தொகுதியாகும். முப்பரிமாணப் பயன்பாடுகளில் பயன்படுத்த வடிவமைக்கப்பட்ட வரைவியல் எந்திரம் (geometry engine).

**ACK : ஏசிகே; ஏற்பு அறிவிப்பு :** Acknowledge என்பதன் குறும்பெயர். தகவல் தொகுப்பு ஒன்று சரியாகப் பெறப்பட்டுள்ளது என்பதை, அதனை அனுப்பிய முனையத்துக்கு, பெற்ற முனையம் திருப்பி அனுப்புவது. இதற்கு எதிர்மறையான குறும்பெயர் என்ஏகே (NAK).

**acknowledge : ஏற்பு ஒப்பு:** ஒரு பணி முடிந்துவிட்டது என்பதையும், அடுத்த பணிக்கு வன்பொருள் தயார் என்பதையும் குறிப்பிடும் உள்ளீட்டு/வெளியீட்டு சமிக்கை.

**acknowledge character : ஏற்பு ஒப்பு எழுத்து :** அனுப்பப்பட்ட தகவல் சரியாகப் பெறப்பட்டது என்பதைக் குறிப்பிடும் தகவல் தொடர்பு கட்டுப்பாட்டு எழுத்து.

**acknowledgement : ஏற்பு ஒப்பம் :** தகவல் பெறும் சாதனத்திலிருந்து அனுப்பும் சாதனத்திற்கு ஏற்பு ஒப்ப எழுத்தை அனுப்புதல்.

**ACM : ஏசிஎம்:கணினி எந்திரங்களுக்கான சங்கம் :** Association for Computing Machinery என்பதன் குறும்பெயர். கணினி வல்லுநர்களுக்கான தொழில் திறனையும் தகுதியையும் வளர்க்கப் பாடுபடும் உலகின் மிகப் பெரிய கல்வி மற்றும் அறிவியல் சங்கம். 1947இல் உருவாக்கப்பட்டது. அவ்வப்போது மாணவர்கள் கல்வியாளர்கள் தொழில்செய்வோர் இடையே நடைபெறும் விவாதங்களைக் கொண்ட மதிப்புமிக்க இதழ்களை வெளியிட்டும் எண்ணற்ற கருத்தரங்குகளை நடத்தியும் தொழில் நுட்பத் திறனுக்காகப் புகழ் பெற்றது.

**ACMST : ஏசிஎம்எஸ்டீ :** Association for Computers in Mathematics and Science Teaching என்பதன் தலைப்பெழுத்துக் குறும்பெயர். கணிதம் மற்றும் அறிவியல் கல்வியில் கணினிகள் சங்கம். இது கல்வியில் கணினியைப் பயன்படுத்துவதில் ஆர்வம் கொண்டுள்ள கல்லூரி மற்றும் மேல் நிலைப் பள்ளி ஆசிரியர்களுக்கான தொழில் முறை அமைப்பு.

**acoustic coupler : ஒலிப் பிணைப்பி; ஒலி இணைப்புச் சாதனம் :** ரப்பர் கோப்பைகள் வழியாக தொலைபேசியின் கைக்கொள் பகுதியுடன்

இணைக்கப்படும் மோடெம். இது கணினி தரும் சமிக்கை களை தொலைபேசியின் வாய் பேசி உணரக் கூடிய ஒசையாக மாற்றுகிறது. தொலைபேசி ஓசை களை கணினி படிக்கக் கூடிய மின்சார சமிக்கைகளாக மாற்று கிறது. இவை ஒலி மோடெம் என்றும் அழைக்கப்படுகின்றன. இவை எந்த வகை தொலைபேசி யுடனும் இணையக் கூடியவை. நேரடி இணைப்பு மோடெம் களை ஒரு தொலைபேசி அமைப் புடன் இணைக்கத் தொகுப் பியல் தொலைபேசி இணைப்புத் தேவை. ஒரு விநாடிக்கு 1,200 துண்மி (பிட்) என்பது இதன் தகவல் பரிமாற்ற வேகம்.

**acoustic delay line** : ஒலி அடிப் படையின் தாமதத் தடம்.

**acoustic memory** : ஒலி நினை வகம் : தொடர்ச்சியாக ஒரு சமிக் கையை மீண்டும் மீண்டும் உரு வாக்குவதன் மூலம் தகவலைச் சேமிக்கும் இடம்.

**acoustic modem** : ஒலி இணக்கி; ஒலி மோடெம் : இரும சமிக்கைகளை ஒலி அலை வரிசைகளாக மாற்றுவதன்மூலம் தகவல்களை அனுப்பிப் பெறுகிறது.

**acoustic sound enclosure** : ஒலித் தடுப்பு உறை : ஓர் அச்சுப் பொறி அல்லது பிற எந்திரங் களில் பொருந்தி ஓசையை மட்டுப்படுத்தும் சாதனம்.

**ACPA** : ஏசிபிஏ : கணினி நிரலர் மற்றும் பகுப்பாய்வாளர் சங்கம் எனப் பொருள்படும் Association of Computer Programmer and Analysts என்பதன் குறும்பெயர். கணினித் தொழிலில் ஈடு பட்டிருப்போரது பன்னாட்டுச் சங்கம். தொழில் நுணுக்கப் பிரச் சினைகளில் உறுப்பினர்களின் கருத்துகளுக்கு இடமளிக்கிறது. மற்றும் தொழில்நுணுக்கத் திறனை வளர்த்துக் கொள்ள கருத்தரங்குகள், கருத்துப் பட்டறைகள், மாநாடுகள் மூலம் வாய்ப்பளிக்கிறது. தேசிய அள விலும் வட்டார அளவிலும் தகவல்கள் நிறைந்த துறைசார் வெளியீடுகளை வழங்குகிறது. மற்ற பிரிவுகளைச் சேர்ந்த தொழில்நுணுக்கத் திறனாளரு டன் கருத்துப் பரிமாற்றத்தை ஊக்குவிக்கிறது.

**Acrobat** : அக்ரோபேட் : அடோப் நிறுவனம் உருவாக்கி யுள்ள ஒரு வணிக மென் பொருள். டாஸ் விண்டோஸ், மெக்கின்டோஷ், யூனிக்ஸ் பணித்தளங்களில் உருவாக்கப் பட்ட, முழுதும் வடிவமைக்கப் பட்ட ஆவணங்களை பிடிஎஃப் (PDF - Portable Document Format)

கோப்பாக மாற்றித் தரும். பிடிஎஃப் கோப்பினை வெவ்வேறு பணித்தளங்களில் பார்வையிட முடியும். மூலக் கோப்பு எந்தப் பயன்பாட்டுத் தொகுப்பில் உருவாக்கப்பட்டிருந்தாலும், அக்கோப்பிலுள்ள வேறு வேறான எழுத்துருக்கள், நிறங்கள், வரைகலை மற்றும் ஒளிப்படங்களையும் சேர்த்து, கணினி வழியாக பிறருக்கு அனுப்பி வைக்க முடியும். பிடிஎஃப் கோப்புகளைப் பார்வையிட மட்டும் முடிகின்ற 'அக்ரோபேட் ரீடர்' என்னும் மென்பொருள் இலவசமாகவே கிடைக்கிறது.

**acronym** : முதலெழுத்துக் குறும் பெயர்; தலைப் பெழுத்துச் சுருக்கப் பெயர்.

**across worksheets** : பணித் தாள்களுக்கிடையே.

**action** : செயல் : *குறிப்பிட்ட சூழலில் வெளியாகும் செயற்பாடு.*

**action argument** : செயல் மதிப்புரு: செயல் இணைப்பு மாறி.

**action diagram** : செயல் வரிப்படம்.

**action entry** : செயல் பதிவு.

**action message** : செயல் தகவல்; செயல் செய்தி.

**action oriented management** : செயல் சார்ந்த மேலாண்மை.

**action oriented management report** : செயல் சார்ந்த மேலாண்மை அறிக்கை : *சிறப்புக் கவனம் தேவைப்படுகின்ற அசாதாரண சூழ்நிலைகள் குறித்து நிர்வாகத்தினை விழிப்படையச் செய்யும் ஒரு சிறப்புக் குறிப்புரை.*

**action statement** : செயல் கூற்று : *சில செயல்களை மேற்கொள்ளும்படி கணினிக்குத் தரப்படும் கட்டளை.*

**action stub** : செயலிடம்.

**activation** : இயங்குவித்தல் : *ஒரு செயல்முறையை இயங்கச் செய்தல்.*

**activation record** : இயங்குவிப்பு ஏடு : *இயங்க வைத்தல் தொடர்பான தரவுவைக் கொண்ட உள்ளமைப்பு தரவு அமைப்பு முறை.*

**activation stack** : இயங்குவிப்பு இருப்பு : *நிகழ்வு இயக்கி உட்பட அனைத்து இயக்கிகளுக்குமான ஒரு உட்பகுதி தகவல் அமைப்பு.*

**active addressing** : இயங்கு முகவரி; செயற்படு முகவரி.

**active area** : இயங்கு பரப்பு.

**active cell** : செயற்படும் சிற்றிடம்; இயங்கு கலன் : *மின்னணு வியல் விரிதாளில், தளப் பரப்பில் சுட்டியினால் உணர்த்தப் படும் கட்டம்.*

active channel : இயங்கு தடம்; செயற்படு அலை வரிசை.

active class : இயங்கு இனக்குழு.

active configuration : இயங்கு அமைவடிவு; செயல்படு தக வமைவு.

active content : இயங்கும் உள்ளடக்கம்; மாறும் உள்ள டக்கம் : நேரத்தின் அடிப்படை யிலோ, பயனாளரின் நட வடிக்கை காரணமாகவோ, தள வலைப்பக்கத்தின் மாறுகின்ற உள்ளடக்கம். இணையத்தில் திரையில் தோன்றும் ஒரு வலைப் பக்கத்தில் காணப்படும் படங்கள், எழுத்துகள், விளம் பரப் பட்டைகள் இவற்றை, நேரத்தின் அடிப்படையிலோ, பயனாளரின் தலையீட்டின் அடிப் படையிலோ (சுட்டியில் சொடுக்குவதன் மூலமோ) மாற்றியமைக்க முடியும். இத் தகைய மாறும் உள்ளடக்கம், ஆக்டிவ்எக்ஸ் கட்டுப்பாட்டு விசைகள் மூலம் இயல்கிறது.

active database : இயங்கு தக வல் தளம்; இயங்கு தரவுத் தளம்.

active data dictionary : இயங் கும் தரவு அகராதி : ஒரு நிறு வனத்தின் தரவுத் தளத்தை அணுகுவதற்கு டிபிஎம் எஸ்ஸை பயன்படுத்துபவர்கள் மற்றும் பயன்பாட்டு நிரல் தொடர்கள் அணுகும்போது, தரவு பொருள் வரையறைகளை தானாகவே செயற்படுத்தும் தரவு அகராதி.

active decomposition : செயற் படு சிதைவு.

active decomposition diagram : இயங்கு சிதைவு வரைபடம்.

active device : இயங்கு உறுப்பு; இயங்கு பகுதி : இயங்கிக் கொண்டிருக்கும் சாதன நிரலின் அடிப்படையில், ஒரு கோப்பு அல்லது கணினித் திரையில் ஒரு பகுதி, தற்போது செயல்பாட்டில் இருக்கும் அல்லது கட்டளைச் செயல்பாடுகளுக்கு ஆட்பட் டிருக்கும். பொதுவாக, திரையில் தோன்றும் சுட்டுக்குறி (Cursor) அல்லது தேர்வு செய்யப்பட்ட ஒரு பகுதி, கணினித் திரையில் இயங்கும் உறுப்பினைக் காட்டும்.

active element : செயற்படு உறுப்பு; இயங்கு உறுப்பு.

active file : நடப்புக் கோப்பு; பயன்படும் கோப்பு : தற்பொழுது பயன்படுத்தப்படும் கோப்பு.

active index : செயற்படும் சுட்டு.

active links : இயங்கும் இணைப்புகள்; செயற்படு தொடுப்புகள்.

active matrix display : இயங்கு அணி காட்சி.

**ActiveMovie : இயங்கும் திரைப் படம்:** மேசைக் கணினி மற்றும் இணையத்தில் செயல்படுத்தும் பல்லூடகப் பயன்பாடுகளுக் காக, மைக்ரோசாஃப்ட் நிறு வனம் உருவாக்கிய, பணித்தளம் சாரா இலக்க முறை ஒளிக்காட்சி (Digital Video) தொழில் நுட்பம்.

**active partition : இயங்கும் பாகம் :** வன்பொருளில் மின் சக்தி வந்தவுடன் பயன்படுத்தப் படும் இயக்க முறைமையைக் கொண்ட நிலைவட்டின் பகுதி.

**active programme : நடப்பு நிரல்; இயங்கும் செயல் நிரல் :** நுண்செயலி தற்போது நிறை வேற்றிக் கொண்டிருக்கும் நிரல்.

**active sensing : நடப்பு ஆணைத் தொடர்.**

**active star : இயங்கும் நட்சத் திரம்:** வெளியிலுள்ள முனையங் கள் ஒரு தனி மைய முனையுடன் இணையும் ஒரு பிணையக் கட்டமைப்பு முறை.

**active window : இயங்கும் சாளரம் :** மைக்ரோசாஃப்ட் விண் டோஸ் தொகுப்பில் இயங்கும் திறந்த சாளரம்.

**ActiveX : ஆக்டிவ்எக்ஸ் :** வெவ் வேறு மொழிகளில் உருவாக்கப் பட்ட மென்பொருள் செயல் உறுப்புகள் (components) ஒரு பிணையப் பணிச் சூழலில், தமக்குள் உறவாடிக் கொள்ள வகை செய்யும் தொழில் நுட்பங் களின் கூட்டுத் தொகுதி. 1990-களின் இடைப்பகுதியில் மைக்ரோசாஃப்ட் நிறுவனம் இதனை உருவாக்கியது. மைக் ரோசாஃப்ட் நிறுவனத்தின் காம் (COM.-Component Object Model) தொழில் நுட்பத்தின் அடிப் படையில் இது உருவாக்கப் பட்டுள்ளது. தற்போது வைய விரிவலையில் பயனாளர் உறவாடும் பக்கங்களை வடி வமைக்க ஆக்டிவ்எக்ஸ் பெரு மளவு பயன்படுத்தப்படுகிறது. மேசைக் கணினிப் பயன்பாடு களிலும், ஏனைய நிரலாக்கங் களிலும்கூடப் பயன்படுத்திக் கொள்ள முடியும்.

**ActiveX controls : ஆக்டிவ் எக்ஸ் கட்டுப்பாடுகள்; ஆக்டிவ் எக்ஸ் இயக்குவிசைகள் :** ஆக் டிவ்எக்ஸ் தொழில் நுட்ப அடிப்படையில் உருவாக்கப் பட்ட, மீண்டும் மீண்டும் பயன் படுத்திக் கொள்ளக்கூடிய மென் பொருள் செயலுறுப்புகள். அசை வூட்டம் (animation), மீள்-எழு பட்டிகள் (pop-up menus) போன்ற தனிச்சிறப்பான செயல் பாடுகளை வலைப்பக்கங் களிலும் மேசைப் பயன்பாடு களிலும் உருவாக்குவதற்கு இச்

செயலுறுப்புகளைப் பயன்படுத்திக் கொள்ள முடியும். சி, சி++, விசுவல் பேசிக், விசுவல் சி++ போன்ற மொழிகளில் ஆக்டிவ்எக்ஸ் செயலுறுப்புகளை உருவாக்க முடியும்.

**ActiveX documents** : ஆக்டிவ் எக்ஸ் ஆவணங்கள்.

**activity** : நடவடிக்கை; செயற்பாடு: பணியின் பகுதிகளில் ஒரு நடவடிக்கை.

**activity rate** : செயற்பாட்டு வீதம்.

**activity ratio** : செயல்பாட்டு விகிதம் : கோப்பு ஒன்று கையாளப்படும்பொழுது நடவடிக்கைகளுக்கு ஆட்படும் ஆவணங்களுக்கும் கோப்பில் உள்ள ஆவணங்களுக்கும் இடையிலான விகிதம்.

**ACTOR** : ஆக்டர் : ஒயிட்வாட்டர் குழுப் நிறுவனத்தினர் உருவாக்கிய, பொருள் நோக்கிலான நிரலாக்க மொழி. மைக்ரோசாஃப்ட் விண்டோஸ் நிரலாக்கத்திற்கு உதவும் நோக்கில் வடிவமைக்கப்பட்ட மொழி.

**actual argument** : தரு மதிப்பு: ஒரு செயல்கூறு, செயல்முறை அல்லது துணைநிரல் கூறினை (Function, Procedure of sub-routines) அழைக்கும் கட்டளையில், அளபுருக்களுக்கு (para - meters) இயைந்த வகையில் அனுப்பி வைக்கப்படும் தரு மதிப்புகள்.

**actual decimal point** : உண்மை பதின்மப் புள்ளி : ஓர் உள்ளீட்டுத் தரவுப் பொருளில் சேர்க்கப்படும் உண்மையாக இடம் பெறும் பதின்மப் புள்ளி.

**actuate** : உந்திவிடு.

**actuator** : செயல் ஊக்கி : காந்த வட்டில் விருப்பப்படும் இடத்துக்கு படித்தல், எழுதுதல்,



செயல் ஊக்கி

முனையை நகர்த்தும் இயக்கப் பொறியமைப்பு.

**ACU : ஏசியு** : தானியங்குத் தொலைபேசி அழைப்புப் பிரிவு எனப் பொருள்படும் Automatic Calling Unit என்பதன் குறும் பெயர். இது தொலைபேசி இணைப்பில் அழைப்புகளை வணிக எந்திரம் ஒன்று அனுப்ப அனுமதிக்கிறது.

**ada : அடா** : ஒரு கணினி மொழி. அமெரிக்க இராணுவத் துறை உருவாக்கிய உயர்திறன் நிரலாக்க மொழி. உலகின் முதலாவது நிரலரான அடா அகஸ்டா லவ்லேஸ் நினைவாக 'அடா' எனப் பெயரிடப்பட்டது.

**A-D Analog to Digital : தொடர் முறை இலக்கமுறை மாற்றி.**

**Ada Lovelace : அடா லவ்லேஸ் :** சார்லஸ் பாபேஜுடன் பணியாற்றிய பெண். அப்பெண் ஆங்கிலக் கவிஞர் பைரன் பிரபுவின் மகள். கணிதவியலார். உலகின் முதல் நிரலர் என்ற பெருமையை இவர் பெறுகிறார்.

**ADAPSO : ஏடாப்சோ** : Association of Data Processing Service Organization என்பதன் குறும் பெயர். தரவு கையாளும் சேவை நிறுவனச் சங்கங்களின் கூட்டமைப்பின் பெயர். இந்த அமைப்பு ஆண்டுக்கொரு முறை உறுப் பினர்களின் பெயர்களை அகர வரிசையில் தொகுப் பாக வெளியிடுகிறது.

**adapter : தகவி; இயைபி; பொருத்தி:** பல்வேறு கருவிகளுக்கிடையே இயைபை அனுமதிக்கும் கருவிப் பகுதி.




பொருத்தி

**adapter boards : தகவிப் பலகைகள்; இயைபுப் பலகைகள் :** அச்சிடப்பட்ட மின் இணைப் புப் பலகைகள். இவை ஒரு முறைமைப் பலகையை உள்ளீட்டு, வெளியீட்டுக் கருவிகளுடன் இணைக்கிறது அல்லது ஒரு முறைமையுடன் சிறப்பான பணிகளைச் சேர்க்கிறது.

**adapter cards : தகவி அட்டைகள்; இயைபு அட்டைகள் :** தகவிப் பலகைகளுக்கான மாற்றுப் பெயர்.

**adapter class** : ஏற்பி இனக் குழு.

**adapter ROM** : நினைவகம் தகவி; இயைபு நினைவகம் : தகவிச் சாதனத்தைக் கட்டுப் படுத்தும் குறியீட்டைக் கொண்ட நினைவகம். இது கணினி அமைப்பின் இயக்கத் திறனை அதிகரிக்கும். பல நிலை வட்டு இயக்கங்களில் ஏற்பு ரோம்கள் உள்ளன. ஸ்கஸ்ஸிப் புரவன் தகவி கூடுதல் நினைவகம், புறச் சாதனங்கள் அல்லது கூடுதல் நேரியல் அல்லது இணை நிலைத் துறை ஆகியவை தகவிச் சாதனங்களில் அடங்கும்.

**adaptive** : இயைபு.

**adaptive allocation** : இயைபு ஒதுக்கீடு.

**adaptive answering** : பிரித்தறி மறு மொழி; இயைபறி பதிலுரை : தொலைபேசி வழியாக வரும் அழைப்பு ஒரு தொலைநகல் கருவியிலிருந்து வருகிறதா அல்லது கணினியிலிருந்து வரும் தகவல் பரிமாற்றமா என்பதைக் கண்டறிந்து, அதற்கேற்ப பதிலிறுக்கும் ஒரு இணக்கியின் (modem) திறனைக் குறிக்கும்.

**adaptive differential pulse code modulation** : தகவேற்பு வேறுபாட்டுத் துடிப்புக் குறியீட்டுப் பண்பேற்றம் : இலக்க முறை கேட்பொலித் தகவலை இறுக்கிச் சேமிப்பதற்குப் பயன் படும் தருக்க முறை. கேட்பொலியின் ஒவ்வொரு துணுக்கையும் அப்படியே இலக்கமுறையில் சேமிக்காமல், ஒவ்வொரு துணுக்கும் அதன் முந்தைய துணுக்கிலிருந்து எவ்வாறு வேறுபட்டுள்ளது என்பதை மட்டும் பதிவு செய்யும் முறை.

**adaptive interface** : இயைபு இடைமுகம்.

**adaptive routing** : தகவுத் திசைவிப்பு; இயைபு வழியமைப்பு : மாற்று வழியமைப்புக்கு மாறானது. பிணையத் தரவு தொடர்பில் ஒவ்வொரு தடத்திலும் நடைபெறும் போக்குவரத்தைக் கண்காணித்து, எந்தத் தடத்தைப் பயன்படுத்தலாம் என்று முடிவு செய்யப்படுதல்.

**adaptive system** : இயைபுறு அமைப்பு; தகவுறு முறைமை : கற்கும் திறன், சூழலுக்கேற்ப அதன் நிலையை மாற்றிக் கொள்ளுதல் அல்லது ஒரு தூண்டலுக்கு எதிர் வினையாற்றல் போன்றவற்றைக் கொண்ட கணினி அமைப்பு. சூழ்நிலையின் மாற்றங்களுக்கேற்ப தன்னை மாற்றிக்கொள்ளும் கணினி அமைப்பு.

**A-D converter** : தொடர்முறை இலக்க முறை மாற்றி: தொடர்

முறைத் தரவுவை இலக்கமுறைத் தரவுவாக மாற்றும் சாதனம்.

**add data** : தரவு சேர்.

**add data table** : தரவு அட்டவணை சேர்.

**add echo** : எதிரொலி சேர்.

**addend** : கூட்டெண் : இரண்டு எண்களைக் கூட்டும்போது முதல் எண் கூட்டெண் என்று அழைக்கப்படும்.

**addendum** : சேர்ப்பு; பின்னிணைப்பு.

**adder** : கூட்டி : இரண்டு இரும எண்களைக் கூட்டப் பயன்படும் மின்னுறுப்பு.

**adder, binary half** : இரும அரைக் கூட்டி.

**adder, half** : அரைக் கூட்டி.

**adder unit** : கூட்டி அலகு : இரண்டு பல இலக்க இரும எண்களை ஏற்று அவற்றைக் கூட்டும் திறனுள்ள ஒரு மின்னணுச் சாதனம்.

**add-in** : கூடுதல் இணைப்பு : கணினியில் ஏற்கெனவே பொருத்தப்பட்ட அச்சிடப்பட்ட இணைப்புப் பலகையில் பொருத்தப்படக்கூடிய மின்னணு உறுப்பு. நுண் கணினியில் உள்ள காலியறைகளில் பொருத்தப்படக் கூடிய நினைவுச் சிப்புகள் ஓர் எடுத்துக்காட்டு.

**adding machine** : கூட்டல் எந்திரம்.

**adding wheel** : கூட்டல் சக்கரம் : பற்கள் உள்ள பல்லிணை (கியர்). இது எந்திரவியல் முறையில் கூட்டல் நடவடிக்கையை அனுமதிக்கிறது. பாஸ்கல் கணக்கிடு பொறியில் பயன்படுத்தப்படுகிறது.

**add-in manager** : கூடுதல் வசதி மேலாளர்.

**add-in programme** : சேர்ப்பு செய் நிரல்; கூடுதல் நிரல்.

**addition** : கூட்டல் : இரண்டு மதிப்புகளைக் கூட்டுதல்.

**addition record** : கூட்டிய ஏடு : கோப்பு ஒன்றினைக் கையாளும் பொழுது புதிய ஏட்டை உருவாக்குவதால் கிடைக்கும் ஆவணம்.

**addition table** : கூட்டல் அட்டவணை.

**add method** : கூட்டு வழிமுறை.

**addnew hardware** : புதிய வன்பொருள் சேர்.

**add-on** : திறனேற்றி : கணினி அமைவு ஒன்றுடன் அதன் கட்டமைவு அல்லது செயல் திறனை மேம்படுத்த அல்லது அதன் சேமிப்புத்திறனை அதிகரிக்கப் பொருத்தப்படும் துணைக் கருவி.

**add - on card** : திறனேற்றி அட்டை; கூடுதல் அட்டை; கூட்டுறுப்பு அட்டை.

**add record** : ஏடு சேர்.

**add/remove programmes** : நிரல்கள் சேர்/அகற்று.

**addresable** : அழைதகு முகவரி.

**address** : முகவரி; முகவெண் : *சேமிப்பில் ஒரு குறிப்பிட்ட இடத்தைக் குறிப்பிடுகிற அடையாள எண் அல்லது பெயர்.*

**addressable cursor** : முகவரி இடஞ்சுட்டி; முகவரி இடப்படு காட்டி: *திரையில் உள்ள எந்தக் கிடக்கை அல்லது நெடுக்கையையும் நகர்த்தக்கூடிய வகையில் நிரல் தொடர் அமைக்கப்பட்ட இடங்காட்டி.*

**address arithmatic** : முகவெண் கணக்கீடு; முகவரிக் கணக்கீடு.

**address bar** : முகவரிப்பட்டை.

**address, base** : தள முகவெண்; தள முகவரி; அடி முகவரி; தொடக்க முகவரி.

**address book** : முகவரி புத்தகம்; முகவரி சேமிப்பு நூல்; முகவரிக் கையேடு : *ஒரு மின்னஞ்சல் மென்பொருளில், மின்னஞ்சல் முகவரிகளையும் அவர்களின் பெயர்களையும் கொண்ட பட்டியல். அடிக்கடி மின்னஞ்சல் அனுப்ப வேண்டியவர்களின் முகவரிகளைச் சேமித்து வைத்துக் கொள்ள முடியும். முதல் முறையாக அஞ்சல் அனுப்புபவரின் முகவரியையும் முகவரிப் புத்தகத்தில் சேமித்துக் கொள்ள முடியும். பட்டியலிலுள்ள ஒருவருக்கு அஞ்சல் அனுப்ப நினைக்கும்போது, முகவரிப் புத்தகத்திலிருந்து எடுத்துக் கொள்ளலாம்.*

**address buffer** : முகவெண் தாங்கி; முகவரி இடையகம்.

**address bus** : முகவெண் பாட்டை; முகவெண் மின் இணைப்புத் தொகுதி : *கணினிச் சாதனங்களில் குறிப்பாக நுண்செயலிகளில் ஒரு பகுதியில் இருந்து இன்னொரு பகுதிக்குத் தரவு ஏந்திச் செல்லப் பயன்படும் மின் இணைப்புத் தொகுதி, பாட்டை எனப்படுகிறது. இவற்றுள் நினைவக இருப்பிட முகவரிகளைக் குறிப்பிடும் சமிக்கைகளை ஏந்திச் செல்லும் பாட்டை, முகவரிப் பாட்டை எனப்படும். இது பெரும்பாலும் 20 முதல் 6 வரையிலான தனித்தனி தடங்களின் சேர்க்கையாக இருக்கும்.*

**address calculation** : முகவெண் கணக்கீடு; முகவரிக் கணக்கீடு.

**address decoder** : முகவெண் கொணர்வி; முகவரி குறிவிலக்கி :

எண்களால் குறிக்கப்பட்டிருக்கும் ஒரு நினைவக முகவரியை, ரேம் சில்லுகளிலுள்ள நினைவக இருப்பிடங்களைத் தேர்வு செய்யும் வகையாக மாற்றித் தரும் ஒரு மின்னணுச் சாதனம்.

**address, direct** : நேரடி முகவெண்; நேரடி முகவரி.

**address field** : முகவெண் புலம்.

**address format** : முகவரி வடிவம் : *முகவரியைக் குறிப்பிடும் முறை.*

**address, indirect** : மறைமுக முகவெண்; மறைமுக முகவரி.

**addressing** : முகவரியிடல் : *(1) குறிப்பிட்ட உத்திகள் மூலம் தேவையான தரவுகளை ஒரு குறிப்பிட்ட இடத்தில் காணல். (2) தரவு அனுப்பும் கணினி மற்றொரு குறிப்பிட்ட முனையத்துக்கான தரவு, தன்னிடம் இருப்பதைக் குறிப்பிடும் தரவுத் தொடர்பு கட்டுப்பாட்டு முறை.*

**addressing, absolute** : முற்று முகவெண்ணிடல்; முற்று முகவரியிடல்.

**address, instruction** : முகவெண்; அறிவுறுத்தல்; ஆணை முகவரி; அறிவுறுத்த முகவரி.

**addressless instruction formate** : முகவரியிலா கட்டளை வடிவம்.

**address, machine** : எந்திர முகவெண்; பொறி முகவரி.

**address management** : முகவரி மேலாண்மை : *முகவரி எண்களைக் கொண்ட தரவுத் தளம் அமைக்க உதவும் மென்பொருள்.*

**address mapping** : முகவரி காணல் : *ஒரு விவர சேமிப்பு இருப்பிடத்தின் சரியான முகவரி எண்ணைக் கண்டுபிடித்தல்.*

**address mapping table** : முகவெண் பதிலீட்டு அட்டவணை : *கணினிப் பிணையங்களில் குறிப்பாக இணையத்தில் திசைவிகளிலும்* (routers), *களப் பெயர் வழங்கன் கணினிகளிலும்* (domain name servers) *பயன்படுத்தப்படும் அட்டவணை. உரை வடிவில் (எழுத்துகளில்) அமைந்துள்ள ஓர் இணைய தளத்தின் களப்பெயரை, இணைய நெறிமுறை முகவரியாகப்* (internet protocol address) *பதிலீடு செய்யப்பட்ட விவரங்கள் அந்த அட்டவணையில் இருக்கும். எடுத்துக்காட்டாக,* md2. vsnl.net.in *என்ற இணைய தள முகவரி இணையான 202.54.1.30 என்னும் ஐபீ முகவரி அவ்வட்டவணையில் இருக்கும்.*

**address mask** : முகவெண் மறைப்பான்; முகவரி மறைப்பு :

ஒரு கணினி தனக்கு ஒதுக்கப் பட்ட பிணைய முகவரி எண்ணு டன் ஒப்பிட்டுப் பார்த்து, தேவையில்லாத தரவுகளை நடுக்கப் பயன்படும் ஓர் எண். எடுத்துக்காட்டாக, xxx.xxx.xxx. yyy என்ற முகவரியைப் பயன் படுத்தும் ஒரு பிணையத்தில், அதில் இணைக்கப்பட்டுள்ள கணினிகள் அதே முதல் முகவரி எண்களைப் பயன்படுத்துகை யில், மறைப்பான் xxx.xxx.xxx முகவரிகளை மறைத்து விட்டு yyy முகவரி யிலுள்ள குறிப் பிட்ட எண்களை மட்டுமே பயன்படுத்திக் கொள்ளும்.

address memory : நினை முக வெண் முகவரி; நினைவக முகவரி.

address mode : முகவெண் முறை; முகவரிப் பாங்கு : கணினி நினைவகத்தில் ஒரு முகவரியை குறிப்பிடும் வழிமுறை, absolute address, indexed address, paged address, relative address போன்ற சொற்களையும் காண்க.

address modification : முகவரி திருத்தம்; முகவரி மாற்றம் : கணினி ஒன்றினால் ஒரு குறிப் பிட்ட வழியில் முகவரியை மாற்றுவதற்கான நடவடிக்கை.

address, multi : பன்முக வெண்; பன் முகவரி.

address, one : ஒற்றை முகவரி.

address part : முகவரி பகுதி.

address port : துறை முகவரி.

address, real : உண்மை முகவெண்; மெய் முகவரி.

address, reference : மேற் கோள் முகவெண்; குறிப்பு முகவரி.

address register : முகவரிப் பதிகவகம் : தற்பொழுது நிறை வேற்றப்படும் ஆணையின் முகவரி உள்ள பதிவு.

address space : முகவரி இடம்; முகவரி பகுதி : கணினி ஒன்றைப் பயன்படுத்துவோருக் குக் கிடைக்கக்கூடிய முகவரி களின் முழுத் தொகுப்பு.

address, specific : குறித்த முக வெண்; குறிப்பிட்ட முகவரி.

address resolution : முக வெண் அறிதல் : முகவெண் பதிலீட்டு அட்டவணையில், ஒரு வன்பொருள் உறுப்பின் முக வரியைக் கண்டறிதல்.

address resolution protocol : முகவெண் கண்டறி நெறி முறை.

address translation : முகவரி பெயர்ப்பு; முகவரி மாற்றம் : உள் நினைவகத்தில் சேர்க்கப்பட வேண்டிய, அல்லது வேறிடத்

துக்கு மாற்றப்பட வேண்டிய முகவரிக்கு ஏற்கெனவே நினைவகத்தில் உள்ள தரவுவின் அல்லது நிரலின் முகவரியை மாற்றும் நடைமுறை.

address, variable : மாறு முகவெண்.

address, virtual : மெய்நிகர் முகவரி; மாய முகவெண்.

address, zero level : சுழிநிலை முக வெண்.

add separater : பிரிப்பி சேர்.

add-subtract time : கூட்டு - கழிப்பு நேரம்: இரண்டு எண்களைக் கூட்டவும், கழிக்கவும் எடுத்துக் கொள்ளப்படும் நேரம்.

add time : கூட்டல் நேரம் : ஒரு கூட்டலைச் செய்யக் கணினிக்குத் தேவைப்படும் நேரம். இதில் சேமிப்பிலிருந்து தரவுகளைப் பெறுவதற்கும் மீண்டும் அதனை சேமிப்பகத்துக்கு அனுப்புவதற்கும் தேவைப்படும் நேரம் அடங்காது.

add to favourites : கவர்வுகளில் சேர்.

add trend line : போக்கு வரி சேர்.

ad hoc inquiries : தற்காலிக வேண்டுகோள்கள் : தனிப்பட்ட, பட்டியலிடப்படாத, சூழ்நிலைக்கேற்ற தரவு வேண்டுகோள்கள்.

ad hoc query : தற்காலிக வினவல்; தற்காலிகத் தேடல் : கோப்பில் எந்த இடத்திலாவது இருக்கும் தரவுவை திரும்பப் பெறுவதற்கான திறன்.

ADI (Apple Desktop Interface) : ஏடிஐ (ஆப்பில் கணினி இடைமுகம்).

adjacency operator : அண்மைய செயற்குறி.

adjacent matrix : அண்டை அணி; அருகு அணி.

adjective : பெயரடை.

adjust : சரிசெய்தல்.

adjust to : சரியாக்க.

administrative data processing : நிர்வாகத் தரவுகள் செயலாக்கம் : நிர்வாகம் அல்லது நிறுவனம் ஒன்றின் நிரல் தொடர்பான தரவுகளைச் செய்முறைப்படுத்தும் துறையாகும்.

ADP : ஏடிபி : Automatic data processing என்பதன் குறும்பெயர். தானியங்கு முறையில் தரவுகளைச் செய்முறைப் படுத்தும் பணி.

advanced BASIC : மேம்பட்ட பேசிக்; உயர்நிலை பேசிக் : தொடக்கக் கால பேசிக்

மொழியை மேம்படுத்தி உருவாக்கப்பட்ட கணினி மொழி.

**advanced controls** : உயர் நிலை இயக்கு விசைகள்.

**advanced course** : உயர் நிலைப் பாடத்திட்டம்.

**Advanced Digital Network : உயர் நிலை இலக்கமுறைப் பிணையம்** : தரவு ஒளிக் காட்சி (Video) மற்றும் ஏனைய இலக்க முறை சமிக்கைகளை மிகவும் நம்பகத் தன்மையுடன் அனுப்பும் திறன்வாய்ந்த தனி தடச் சேவை. தரவுத் தொடர்பு நிறுவனங்கள் சிறப்புச் சேவையாக இதனை வழங்குகின்றன. இத்தகைய உயர்நிலைப் பிணையங்களில், பெரும்பாலும் வினாடிக்கு 56 கிலோ (துண்மி) பிட்டுக்கு அதிகமான வேகத்தில் தரவுப் பரிமாற்றம் நடைபெறும்.

**advanced filter** : உயர்நிலை வடிகட்டி.

**advanced interactive executive** : உயர்நிலை இடைப் பரிமாற்ற நிர்வாகி.

**advanced power management : உயர்நிலை மின்சார மேலாண்மை** : கணினி அமைப்புகளில் குறிப்பாக, மின்கலன்களால் இயங்குகின்ற மடிக் கணினிகளில் மின்சாரத்தைச் சிக்கனமாகச் செலவழிக்கப் பயன்படுத்தப்படும் ஒரு பயன்பாட்டு நிரலாக்க இடைமுகம் (API). மைக்ரோ சாஃப்ட் மற்றும் இன்டெல் நிறுவனங்கள் இணைந்து இதனை உருவாக்கியுள்ளன. கணினி இயக்க நிலையில் நாம் பணியாற்றாமல் இருக்கின்ற போது, கணினியின் பாகங்கள் (தாய்ப்பலகை, செயலி, நிலை வட்டு, திரையகம்) மிகக் குறைந்த மின்சாரத்தையே எடுத்துக் கொள்ளும்படி இந்த நிரல் கட்டுப்படுத்தும்.

**Advanced RISC : உயர்நிலை ரிஸ்க்** : குறைந்த நிரல் தொகுதிக் கணினிப் பணி (Reduced Instruction Set Computing) என்பதை சுருக்கமாக ரிஸ்க் (RISC) என்று அழைக்கின்றனர். நுண் செயலி வடிவாக்கத்தில் பயன்படுத்தப்படும் தொழில் நுட்பத்தை இது குறிக்கிறது. மிப்ஸ் கம்ப்யூட்டர் சிஸ்டம்ஸ் நிறுவனம், பல்வேறு மென்பொருள் பயன்பாடுகளுக்கு இடையே இரும ஒத்தியில்பை (binary compatibility) ஏற்படுத்தும் வண்ணம் ரிஸ்க் கட்டமைப்பு மற்றும் பணிச் சூழலுக்கென உருவாக்கிய வரையறுப்பு, உயர் நிலை ரிஸ்க் எனப்படுகிறது.

**advanced RISC computing specification : உயர்நிலை ரிஸ்க் கணிப்பணி வரையறுப்புகள்:**

ரிஸ்க் செயலி அடிப்படை யிலான ஒரு கணினி, உயர் நிலைக் கணிப் பணி பணித்தளத் தரத்தை எட்டுவதற்குரிய குறைந்த அளவு மென்பொருள் தேவைகள்.

**advanced SCSI programming interface : உயர்நிலை ஸ்கஸ்ஸி நிரலாக்க இடைமுகம் :** ஸ்கஸ்ஸி புரவன் தகவி (host adapter)களுக்குக் கட்டளைகளை அனுப்புவதற்கு, அடாப்டெக் நிறுவனம் உருவாக்கிய ஓர் இடைமுக வரையறுப்பு (interface specification). இந்த இடை முகம், நிரலுக்கு ஒரு கருத்தியல் அடுக்கினை (abstraction layer) வழங்குகிறது. எத்தகைய தகவி பயன்படுத்தப்பட்டுள்ளது என் பதைப்பற்றி நிரலர் கவலைப் படத் தேவையில்லை.

**advanced search : மேம்பட்ட தேடல்.**

**AEDS : ஏஇடிஎஸ் :** 'கல்வி தரவு முறைமைக்கான சங்கம்' எனப் பொருள்படும் Association for Educational Data System என்ப தன் குறும் பெயர். கல்வியின் எல்லா நிலைகளிலும் ஆசிரியர் மற்றும் தரவு பணியில் ஈடு பட்டிருப்பவர்களுக்குச் சேவை செய்யும் லாப நோக்கமற்ற தனியார் நிறுவனம். நவீனக் கல்விக்கும் நவீனத் தொழில் நுணுக்கத்திற்கும் இடையிலான உறவைப் பற்றிய கருத்துகளை தரவுகளைப் பரிமாற்றிக் கொள்ள ஒரு அரங்கத்தை வழங்குகிறது. ஆண்டுக்கொரு முறை மாநாடு, தேசிய, வட் டார, உள்ளூர் பயிலரங்குகளை நடத்துகிறது. மேனிலைப் பள்ளி மாணவர்களுக்காகக் கணினி செயல்முறைப் போட்டி ஒன்றை நடத்துகிறது. காலாண்டு அறிக்கை, சஞ்சிகை ஆகிய வற்றை வெளியிடுகிறது.

**AFCET : ஏஎஃப்சிஇடிஇ :** Association Francaise pour la Cybernetique Economique et Technique என்பதன் குறும் பெயர்.

**AFIPS : ஏஎஃப்ஐபீஎஸ் :** American Federation of Information Process Societies என்பதன் குறும்பெயர். தரவு செயலாக்கச் சங்கங்களின் அமெரிக்கக் கூட் டமைப்புகள் என்பது பொருள்.

**AFK : ஏஎஃப்கே :** விசைப் பல கையிலிருந்து விலகி எனப் பொருள்படும் Away From Keyboard என்ற சொல்தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணையத்திலும், தரவுப் பணி களிலும் நிகழ்நேர அரட்டை களில் இம்மரபுத் தொடர் பயன் படுத்தப்படுகிறது. ஒரு வினா வுக்கு சட்டென்று பதிலிறுக்க முடியாத நிலையைச் சுட்டுகிறது.

**.af.mil** : .ஏஎஃப்.மில் : அமெரிக்க நாட்டு விமானப் படையின் இணைய தள முகவரி என்பதைக் குறிப்பிடும் களப் பெயர்.

**AFS** : ஏஎஃப்எஸ் : ஆண்ட்ரு கோப்பு முறைமை என்று பொருள்படும் Andrew File System என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். மிகப் பெரும் பிணையங்களில் தொலை விலுள்ள கோப்புகளை அணுகு வதற்கு வகைசெய்யும், பகிர் மானக் (distributed) கோப்பு முறைமை. கார்னெஜி - மெல்லான் (Carneie - Mellon) உருவாக்கியது.

**.ag** : .ஏஜி : இணையத்தில், ஆன்டீகுவா மற்றும் பார்புடா பகுதிகளைச் சேர்ந்த இணைய தளம் என்பதைக் குறிப்பிடும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**agent** : முகவர் நிரல் : 1. ஒரு பயனாளர் இட்ட பணியைப் பின்னணியில் செய்து, அப்பணி முடிந்த பிறகோ அல்லது ஏதாவது ஒரு நிகழ்வின்போதோ, பயனாளருக்கு அறிவிக்கும் ஒரு நிரல். 2. பயனாளர் குறிப்பிட்ட தலைப்பிலுள்ள தரவுகளை ஆவணக் காப்பகங்களில் அல்லது தரவுக் கருவூலங்களில் தேடிக் கண்டறிந்து தரும் ஒரு நிரல். பெரும்பாலும் இத்தகைய முகவர் நிரல்கள் இணையத்தில் பயன்படுத்தப்படுகின்றன. பொதுவாக இவை ஒரே வகையான தரவு சேமிப்புக் கருவூலங்களில் தேடுவதற்கென உருவாக்கப் பட்டவை. எடுத்துக்காட்டாக, யூஸ்நெட் எனப்படும் செய்திக் குழுக்களில் வெளியிடப் பட்டுள்ள தரவுகளைத் தேடு பவை. இணையத்தில் ஸ்பைடர் என்ற முகவர் நிரல் பயன் படுத்தப்படுகிறது. அறிவுக் கூருள்ள முகவர் என்றும் அழைக்கப்படும். 3. கிளையன்/வழங்கன் பயன்பாடுகளில், வழங்கன் கணினிக்கும், கிளையன் கணினிக்கும் இடையே இடையீடாக இருந்து செயல்படுவது. 4. எளிய பிணைய மேலாண் நெறிமுறையில் (Simple Network Management Protocol - SNMP) - பிணையப் போக்குவரத்தை கண்காணிக்கும் செயல்முறை.

**aggregate operator** : மொத்த மாக்கு செயல்குறி.

**AGP - Accelarated Graphics Port** : முடுக்கு வரைகலைத் துறை.

**AI** : ஏஐ : செயற்கை நுண் அறிவு : Artificial Intelligence என்பதன் குறும்பெயர். இது கணினி அறிவியலின் ஒரு கிளையாகும். அது மனிதர்களைப்போல கணினிகளைச் சிந்திக்கவைக்கும் முயற்சியில் ஈடுபடுகிறது. இந்

நோக்கங்களுக்காக மனிதப் பகுப்பாய்வு குறித்து பெருக ஆய்வுகள் நடந்துள்ளன.

**AIFF** : ஏஐஎஃப்எஃப் : *ஆப்பிள் மற்றும் சிலிக்கான் கிராஃபிக்ஸ் கணினிகளில் தொடக்க காலத்தில் பயன்படுத்தப்பட்ட ஒலித் தரவுச் சேமிக்கும் கோப்பு வடிவம். ஒலியலை வடிவக் கோப்புகள் 8 துண்மி (8-பிட்) வடிவில் சேமிக்கப்படுகின்றன.*

**Aiken, Howard Hathaway : (1900-1973) அய்க்கன் ஹோவர்ட் ஹாத்வாய்** : *(1900-1973) 1937-க்கும் 1944-க்கும் இடைப்பட்ட காலத்தில் ஹார்வர்டு பல்கலைக் கழகத்தில் தானியங்கு தொடர் முறைக் கட்டுப்பாட்டு கணிப்பி எனும் முதல் மின் இயந்திரக் கணினியை உருவாக்கி வடிவமைத்த வல்லுநர்கள் குழுவின் தலைவர்.*

**aircraft simulator : வானூர்தி போன்மி : வானூர்தி பாவிப்பு** : *வானூர்தி விமானிகளுக்குப் பயிற்சியளிக்கும் கணினி கட்டுப்பாட்டுச் சாதனம். நவீன ஜெட் வானூர்தி விமானி அறையில் உள்ள கருவிகள் அனைத்தும் இதில் இருக்கும். உண்மையான விமானத்தில் இருப்பது போன்ற சூழ்நிலையை உருவாக்கி மனம் வியக்கும் வரைகலைகள் உருவாக்கப்படும். உண்மையான விமானத்தில் போன்றே இதிலும் பயிலலாம்.*

**airline reservation system : வானூர்தி முன்பதிவு முறைமை** : *நேரடிப் பயன்பாட்டு அணுகல் கணினித் தொடர்பு முறை. இம்முறையில், வானூர்திகளின் இருக்கைகள் நிலை, வானூர்தி பறக்கும் நேர வரிசைகள், மற்றும் வானூர்திப் பணிகளை நடத்த தேவையான தரவுகள், அந்நேரம் வரையிலான தரவுக் கோப்புகளைப் பராமரித்தல், கோரல்களுக்கு விநாடிகளுக்கு குறைவான நேரத்தில் பதிலளித்தல், முதன்மைக் கணினியிலிருந்து தொலைதூரத்தில் உள்ள பயணச் சீட்டு முகவர்களின் கேள்விகளுக்கு உடனடியாகப் பதிலளித்தல் ஆகியவற்றுக்கு கணினி பயன்படுத்தப்படுகிறது.*

**AISP** : ஏஐஎஸ்பீ : *'தகவல் முறைமைத் தொழில் நுட்பவியலாளர் சங்கம்' எனப் பொருள்படும்* Association of Information Systems Professionals *என்பதன் குறும்பெயர். தரவு முறைமைகளின் எல்லா அம்சங்களுடன் தொடர்புடைய தொழில் நுட்பவியலாளர் சங்கம். 1972இல் உருவாக்கப்பட்டது. இதன் கிளைகள் உலகெங்கும் உள்ளன.*

**AIX** : ஏஐஎக்ஸ் : *உயர்நிலை ஊடாடும் இயக்கநிலை என்று*

பொருள்படும் Advanced Interactive Executive என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஐபிஎம் நிறுவனம் தனது பணிநிலையக் கணினிகளிலும், சொந்தக் கணினிகளிலும் செயல்படுத்திய இயக்க முறைமை - யூனிக்ஸின் இன்னொரு வடிவம்.

**AL** : **சில்லுமொழி** Assembly Language என்பதன் சுருக்கம்.

**alarm beep** : **எச்சரிக்கை ஒலி.**

**alert box** : **எச்சரிக்கும் பெட்டி** : ஒரு திரைக்காட்சி சிறிய சாளரம்



எச்சரிக்கும் பெட்டி

போன்று இருக்கும். பயனாளரின் அடுத்த இயக்கம் தவறானதாக இருந்தால் இது எச்சரிக்கும். சுட்டி (மவுஸ்) பொத்தானை அழுத்தியோ அல்லது விசை மூலம் நிரல் கொடுத்தோ இதற்குப் பதில் தரலாம்.

**alert messages** : **எச்சரிக்கைச் செய்திகள்** : செய்யப்படும் இயக்கம் தவறானது அல்லது இயலாதது என்பதை உணர்த்தும் செய்திகள்.

**algebra** : **அல்ஜீப்ரா; இயற் கணிதம்** : ஒரு வகைக் கணிதம். இதில் எழுத்துகள் எண்ணிக்கை அலகுகளை பிரதிநிதித்துவப் படுத்துகின்றன. எண் கணித விதிகளின்படி இம்முறை கையாளப்படுகிறது.

**algebra, boolean** : **பூலியன் இயற் கணிதம்.**

**algebra of logic** : **தருக்க முறை அல்ஜீப்ரா; தருக்க முறை இயற்கணிதம்** : இதில் தருக்க முறை உறவுகள் இயற் கணித அல்ஜீப்ரா சூத்திரங்களாக வெளியிடப்படுகின்றன. ஜார்ஜ் பூல் இதனை அறிமுகப்படுத்தினார்.

**ALGOL** : **அல்கால்** : 1960களில் உருவாக்கப்பட்ட கணினி மொழி. அல்கோரித்மிக் மொழி என்பதன் குறும்பெயர். பிரச்சினைகளைத் தீர்த்து வைப்பதற்கான கணிதமுறைகளைச் செய்யப் பயன்படும் உயர்நிலை கணினி மொழி.

**algorithm** : **கணி முறை; தருக்கப்படிமுறை** : ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையிலான நடவடிக்கைகள் மூலம் பிரச்சினைக்குத் தீர்வு காண்பதற்கான நடை

முறை அல்லது முழுமையாக வரையறுக்கப்பட்ட குழப்ப மற்ற விதிகள்.

**algorithmic language** : தருக்கப் படிமுறை மொழி; கணிமுறை மொழி : தருக்கப்படிமுறைகளை வெளியிட வடிவமைக்கப்பட்ட மொழி.

**alias** : மாற்றுப் பெயர்; மறு பெயர்; புனை பெயர் : ஒரு கோப்புக்கு அல் லது அட்ட வணைக்கு பயனாளர் வழங்கும் மாற்றுப் பெயர்.

**aliasing** : ஏற்பற்ற தோற்ற மாறு பாடு : கணினி உருவாக்கிய படிமங்களில் ஏற்படக்கூடிய



ஏற்பற்ற தோற்ற மாறுபாடு
(Aliasing)

விரும்பத்தகாத தோற்ற மாறு பாடுகள். இத்தோற்ற மாறுபாடு களில் பொதுவான விளைவு படிமத்தின் எல்லைகளில் தோன் றும் ஒழுங்கற்ற கோடுகளாகும்.

**align bottam** : அடிவரி நேர்ப் படுத்தல்.

**aligning** : ஓரஞ் சீரமைத்தல்.

**aligning disk** : இயைவு வட்டு; சீரமை வட்டு.

**aligning edge** : ஒழுங்கமை விளிம்பு : வடிவத்தின் முன் விளிம்புடன் இணைந்து ஓர் ஆவணத்தை நிலைப்படுத்தி கருவி மூலம் நுண்ணாய்வு செய்ய உதவும் ஒப்பு விளிம்பு.

**alignment** : இயைவு நிலை; சீர் மை நிலை : கருவியின் எந்திர அமைவிற்கு எந்திரம் முறையாக இயங்கப் பிழை பொறுத்தல் நிலைகளைச் சரி செய்தல்.

**alignment/justify** : ஓரச் சீர்மை.

**align property** : சீரமைப் பண்பு.

**align top** : விளிம்புவரி நேர்ப் படுத்தல்.

**all** : அனைத்தும்.

**allocate** : ஒதுக்கு; ஒதுக்கிடு; ஒதுக்கி வை : போதுமான நினை வகப் பகுதி அல்லது அது போன்ற, எந்தவொரு வளத்தை யும் நிரலின் பிந்தைய பயன் பாட்டுக்காக ஒதுக்கி வைத்தல்.

**allocation** : ஒதுக்கீடு : இயக்க முறைமைகளில், ஒரு நிரல் பயன் படுத்திக் கொள்வதற்காக நினை வகத்தில் ஒதுக்கீடு செய்யும் முறை.

**allocation block size : ஒதுக்கீட்டுத் தொகுதி அளவு :** *நிலைவட்டுப் போன்ற சேமிப்பு ஊடகங்களில் ஒரு தனிப்பட்ட தொகுதியின் கொள்ளளவு. வட்டின் மொத்தக் கொள்ளளவு மற்றும் பாகப்பிரிவுகளின் அடிப்படையில் இந்தத் தொகுதி அளவு தீர்மானிக்கப்படுகிறது.*

**allocation table : ஒதுக்கீட்டு அட்டவணை.**

**allow zero length : வெற்றுச் சரம் அனுமதி.**

**ALOHA : அலோஹா :** *செயற்கைக்கோள் தரவுத் தொடர்புகளில் அமெரிக்காவில் முதன் முதலில் பயன்படுத்தப்பட்ட தரவுத் தொடர்பு நெறிமுறை* (Protocol).

**all points addressable : அனைத்துப் புள்ளி முகவரியிடல் :** *ஒரு திரையிலுள்ள ஒவ்வொரு படப்புள்ளியையும் தனித்தனியாக முகவரியிடக் கூடிய ஒரு வரைகலை முறை.*

**all purpose computer : அனைத்துச் செயல் நோக்குக் கணினி.**

**Alpha : ஆல்ஃபா :** *டிஜிட்டல் எக்யூப்மென்ட் கார்ப்பரேஷன்* (DEC) *ரிஸ்க்* (RISC) *தொழில் நுட்ப அடிப்படையில் உருவாக்கிய 64-துண்மி (64-பிட்) நுண்செயலியின் வணிகப் பெயர். 1992 பிப்ரவரியில் டெக்சிப் 21064 என்ற பெயரில் விற்பனைக்குக் கொண்டு வந்தது. டெக் நிறுவனத்தின் சிப்புத் தொழில் நுட்பத்தையும் இப் பெயர் குறிக்கிறது. சில வேளைகளில் ஆல்ஃபா சிப்பு பொருத்தப்பட்ட கணினியை ஆல்ஃபா அடிப்படையிலான கணினி எனக் கூறுவர்.*

**Alpha AXP : ஆல்ஃபா ஏஎக்ஸ்பீ :** *டெக் நிறுவனத்தின் 64-துண்மி (64-பிட்) ரிஸ்க் சிப்பின் தொழில் நுட்பம் இவ்வாறு அழைக்கப்பட்டது. டெக் நிறுவனம் தான் உற்பத்தி செய்த சொந்தக் கணினிகள் டெக் சிப்பினைக் கொண்டுள்ளன என்பதைக் குறிக்க ஏஎக்ஸ்பீ என்னும் பெயரைக் குறிப்பிட்டது.*

**alphabet : அகரவரிசை :** *1. ஒரு மொழியிலுள்ள எழுத்துகள். 2. ஒரு கணினி மொழியைப் பொறுத்தவரை பல்வேறு வகையான எழுத்துகள், எண்கள், நிறுத்தற் குறிகள் மற்றும் பிற சிறப்புக் குறியீடுகளும் பயன்படுத்தப்படுகின்றன. அவற்றுள் அகர வரிசை ஓர் உட்குழுவாகும்.*

**alphabetic : எழுத்துக் கோவை :** *எழுத்துகள் மற்றும் சிறப்புக் குறியீடுகளைக் கொண்ட தரவுகள்.*

**alphabetic code** : எழுத்துக் குறி முறை.

**alphabetical order** : அகர வரிசை: ஆங்கிலத்தில் ஏ முதல் இசட் வரை.

**alphabetic string** : எழுத்துக் கோவை; எழுத்துச் சரம்: எழுத்துகளின் தொகுதிகளைக் கொண்ட ஒரு கோவை.

**alphabetical sorting** : அகர வரிசையாக்கம்; எழுத்தெண் வரிசையாக்கம்.

**Alpha box** : ஆல்ஃபா பெட்டி; ஆல்ஃபா கணினி : டெக் (DEC) நிறுவனத்தின் ஆல்ஃபா என அழைக்கப்படும் 21064 சிப்பினை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்ட கணினி.

**alpha build** : தொடக்க உரு வாக்கம்.

**alpha channel** : எழுத்து வழித் தடம் : 32 துண்மி வண்ணக் கணினி அமைப்பில் கூடுதல் 8 துண்மி தரவு வழித் தடத்தைக் குறிக்கும் ஆப்பிள் கணினிச் சொல். இது படப்புள்ளிகளின் தெளிவைக் கட்டுப்படுத்துவதன் மூலம் பல ஒளிக்காட்சி மாற்றங் களுக்கு வழி வகுக்கிறது.

**alpha geometric** : முதல் வடிவக் கணிதம்.

**alpha micro systems** : ஆல்ஃபா மைக்ரோ சிஸ்டம்ஸ் : ஆல்ஃபா செயலியைக் கொண்ட ஓர் உயர் முனை நுண் கணினி. சிறு (mini) கணினி என்றும் வகைப் படுத்தலாம்.

**alphamosaic** : எழுத்துக் கோலம் : மிகக்குறைந்த தெளிவு கொண்ட காட்சி தொழில் நுட்பம். ஆஸ்கி யின் மேல்பகுதியைக் கொண்ட அடிப்படை வரைகலை எழுத்து களை மட்டும் பயன்படுத்துவது.

**alphanumeric** : எழுத்தெண்: எழுத்தும் எண்ணும் கொண்ட வரைவுருக்களுக்கான பொதுச் சொல் எழுத்துகள். ஏ (A) முதல் (z) இசட் வரை, எண் இலக்கங் கள், சிறப்புக் குறியீடுகள் ஆகிய வற்றை உள்ளடக்கியது.

**alphanumeric characters** : எழுத்தெண் வரையுருக்கள் : தரவு செயலாக்க இயக்கங்களில் பயன்படுத்தப்படும் எழுத்துகள், எண்கள் மற்றும் சிறப்புக் குறியீடுகள்.

**alphanumeric code** : எழுத் தெண் குறிமுறை : A முதல் Z வரையுள்ள எழுத்துகள் மற்றும் 0 முதல் 9 வரை யுள்ள எண்கள் இவற்றில் சிலவற்றைக் கொண்ட தொகுதி.

**alphanumeric display terminal** : எழுத்தெண் காட்சி முனையம் :

கணினி முறைமையில் எழுத் தெண் தகவல்களைப் பதிவதற் கும் திரையில் காட்டுவதற்கு மான கருவி.

**alphanumeric sort** : **எழுத்தெண் வரிசையாக்கம்** : ஒரு பட்டியலை எழுத்து வரிசையில் அல்லது எண்ணேறு முகத்தில் அல்லது இரண்டு வகையிலும் ஆக்கும் கணினிச் செயல்முறை.

**alpha photographic** : **எழுத்தெண் ஒளிக்கீற்று.**

**alpha test** : **ஆல்ஃபா சோதனை** : ஒரு மென்பொருள் தொகுப்பினை உருவாக்கி முடித்தவுடன் அது சரியாகச் செயல்படுகிறதா எனக் கண்டறிவதற்கு நடத்தப் படும் முதல்கட்டப் பரி சோதனை. மென்பொருள் தயாரிப்புக் கூடத்திலேயே தயாரிப்பாளரின் கட்டுப்பாட்டில் பயனாளரால் நடத்தப்படும் சோதனை. காண்க Beta Test.

**alpha testing** : **முதல் கட்டச் சோதனை:** பீட்டா ஆய்வுக்கு உட்படுத்தும் முன்னால் சொந்த நிறுவன ஊழியர் ஒருவர் மூலம் புதிய பொருள் அல்லது பணித் தொகுப்பு ஒன்றை ஆய்வு செய்தல்.

**alt (key)** : **மாற்று (விசை).**

**alternate path routing** : **மாற்றுவழி திசைவித்தல்.**

**alternate routing** : **மாற்றுத் திசைவிப்பு** : இரண்டு முனைகளுக்கிடையில் ஒரு வழித் தடத்தில் வழக்கமாகச் செல்லும் தகவலை, கட்டமைப்பில் அதிக போக்குவரத்துக் காரணமாய் வேறு ஒரு வழித் தடத்தில் செலுத்தும் கணினி அமைப்பு.

**alternate sector** : **மாற்றுப் பிரிவு** : காந்த வட்டில் ஒரு பிரிவு சோதனையின்போது மோசமானது என்று கண்டுபிடிக்கப் பட்டால் வேறு பிரிவைப் பயன்படுத்துவது.

**alternate track** : **மாற்றுத் தடம்** : நேர் அணுகு சேமிப்பகத்தின் குறைபாடுள்ள தடத்திற்கு மாறான தடம்.

**alternating current** : **(AC) மாறு மின்னோட்டம்** : ஒரு விநாடிக்கு 50 அல்லது 60 முறை தனது ஓட்டத் திசையை எதிர் எதிராக மாற்றிக் கொள்ளும் மின்சாரம். நேர் மின்சாரத்துக்கு மாறானது.

**alternator** : **மின்மாற்றி**

**Altair** : **அல்டேர் (முதல் குறுங் கணினி):** 1974ஆம் ஆண்டின் முதலாவது குறுங்கணினி. எஸ்-100 மின்பாட்டை மூலம் கணினிக்குள் உள்ளே அச்சிடப் பட்ட இணைப்புப் பலகைகள் இணைக்கப்பட்டிருக்கும். அல்டேர் 8800 - தொகுப்பு வடிவில்



ஆல்டேர் 8800 - முதல் குறுங் கணினி

*விற்பனைக்கு வழங்கப்பட்ட முதலாவது குறுங்கணினி ஆகும்.*

**ALU : கணிதத் தருக்ககம்; கணித தருக்க முறை அலகு :** *கணித தருக்கக* (Arithmetic Logic Unit) *பகுதியின் குறும் பெயர். மையச் செயலகத்தின்* (CPU) *ஒரு பிரிவாகும். இங்கு கணித மற்றும் தருக்கச் செயல்கள் நிகழ்கின்றன.*

**alway programme : ஆல்வே நிரல்; ஆல்வே செயல்முறை.**

**always on top : எப்போதும் மேலாக.**

**ambarsand : உம்மைக்குறி**

**ambient conditions : சூழல் நிலைமை:** *ஒளி, வெப்பம், ஈரப்பதம் போன்ற சுற்றுச் சூழல் நிலைகள்.*

**ambient error : சூழல் பிழை.**

**ambient temperature : சூழல் வெப்பம்:** *ஒரு கருவியைச் சூழ்ந்துள்ள வெப்ப நிலை.*

**ambiguity error : இரு பொருள் வழு; இரட்டுறு பிழை.**

**Amdahl Gene : அம்தால் ஜெனி :** *முன்பு ஐபிஎம் கணினிகள் பலவற்றை உருவாக்கிய இவர் 1964இல் ஐபிஎம் கணினி-360*

வரிசை முறைமையை உருவாக்கியதன் மூலம் கணினிக் கட்டமைப்பில் புரட்சியை நிகழ்த்தினார். இந்தக் கணினியில் ஒருங்கிணைந்த இணைப்புகள் முதலில் பயன்படுத்தப்பட்டன. அவர் பின் அம்தால் வாரியத்துக்காகப் பல கணினிகளை வடிவமைத்தார்.

**American Federation of Information Processing Societies (AFIPS) : அமெரிக்க தகவல் செயலாக்க சங்கங்களின் கூட்டமைப்பு** : கணினி, அறிவியல் மற்றும் தரவு செயலாக்க நிறுவனங்களின் பிரதிநிதித்துவ அமைப்பு. உலகின் மிகப் பெரிய கணினி மாநாட்கிய வருடாந்திர தேசிய கணினி மாநாடுகளை சார்பாளராக நடத்துதல், அரசின் கல்வி, ஆய்வு நடவடிக்கைகள், தர நிலைகள், நடைமுறைகள், கணினி வரலாற்றியல் தொடர்பான குழுப் பணிகளை நிறைவேற்றுதல் உள்பட பல நடவடிக்கைகள் இதன் பணிகளாகும். தரவு செயலாக்கத்துக்கான பன்னாட்டுக் கூட்டமைப்பில் அமெரிக்கப் பிரதிநிதியாகவும் உள்ளது.

**American National Standards Institute (ANSI) : அமெரிக்க தேசிய தர நிறுவனம்** : அமெரிக்காவில் சுய தர நிலைகளுக்கான தேசிய ஒப்புதல் நிறுவனமாகவும் ஒருங்கிணைப்பு நிறுவனமாகவும் இவ்வமைப்பு செயல்படுகிறது.

**American Online (AOL) : அமெரிக்கா ஆன்லைன் (ஓர் இணைய நிறுவனம்)** : இணையத்தில் மின்னஞ்சல், செய்தி, கல்வி, பொழுதுபோக்கு மற்றும் பிற சேவைகளை வழங்கும் இணைய தகவல் சேவை நிறுவனம். அமெரிக்காவில் வியன்னா வர்ஜீனியாவைத் தலைமையகமாய் கொண்டது. அமெரிக்காவிலேயே மிகப் பெரிய இணையச் சேவை மையம்.

**American Society for Information Science (ASIS) : தகவல் அறிவியல் சங்கம்** : தகவல் பரிமாற்றத்தை மேம்படுத்த உழைக்கும் நூலகர்கள், தகவல் வல்லுநர்கள், அறிவியலாருக்கு அரங்கம் ஒன்றை வழங்கும் தொழில் முறை அமைப்பு இது. இதன் உறுப்பினர்கள் பெரும்பாலும் கற்றவர்கள், செயல் முறை நிர்வாகிகள், மேலாளர்கள், ஒருங்கிணைப்பாளர்கள், தகவல் துறை தொழில் நுணுக்க வல்லுநர்கள், அறிவியலார்கள். இவர்கள் முறைமை ஆய்வு, வடிவமைப்பு ஆகிய துறைகளில் பணிபுரிகிறார்கள். தகவல் தொடர்பு திட்டங்களை,

சேவைகளை நிர்வகிக்கிறார்கள். தகவல் தொடர்பு சந்தை, தகவல் திட்ட சேவைகள், தகவல் தொடர்பு அடிப்படைகள் ஆகியவற்றில் தேடுதல், தயாரிப்பு ஆய்வு ஆகிய வற்றை மேற்கொள்கிறார்கள்.

**American Standard Code for Information Interchange (ASCII) :** தகவல் பரிமாற்றத்துக்கான அமெரிக்கத் தரக் குறிமுறை.

**American Statistical Association (ASA): அமெரிக்க புள்ளியியல் சங்கம் :** புள்ளி விவர இயலை மேம்படுத்துவதைக் குறிக்கோளாகக் கொண்ட பன்னாட்டு அமைப்பு. 1983இல் உருவாக்கப்பட்டது. முடிவுகளை மேற்கொள்வதற்கும், முன் அறிவிப்புச் செய்வதற்கும் கையாளப்படும் உத்திகளின் தரத்தை உறுதி செய்ய ஆய்வு மற்றும் பயன்பாட்டில் புள்ளி விவரங்களின் தரத்தை பேணுகிறது. தொழில் முறை அறிவைப் பரிமாறுதல், வளர்ச்சிகளை அறிவித்தல் மூலம் மாணவர்களை வணிகத்துக்கும் தொழில் துறைக்கும் தயார் செய்கிறது.

**AMI BIOS : அமி பயாஸ் :** ஐபிஎம் ஒத்தியல்புக் கணினிகளில் பயன்படுத்துவதற்கென அமெரிக்கன் மெகாட் ரெண்ட்ஸ் நிறுவனம் (AMI) தயாரித்து விற்பனை செய்யும் ரோம் பயாஸ் (ROM BIOS). ரோம் சிப்பிலேயே பயாஸ் செயல் முறைகளுடன் மென்பொருள் தகவமைவு (Configuration) விவரங்களையும் உள்ளடக்கியிருப்பது இதன் சிறப்புக் கூறாகும். பயனாளர் தன் கணினியின் நினைவகம் மற்றும் வட்டுகள் பற்றிய தகவமைவு விவரங்களை மாற்றியமைக்க தனியாக ஒரு வட்டினைப் பயன் படுத்தத் தேவையில்லை.

**Amiga : அமிகா :** பிரபலமான குறுங் கணினி. காமடோர் இன்டர் நேஷனல் நிறுவனத்தின் தயாரிப்பு.



அமிகா

**AMIS : Audio Media Intergration Standard :** கேட்பொலி ஊடக ஒருங்கிணைப்புத் தரம்.

**AMPS** : ஆம்ப்ஸ் : உயர்நிலை நடமாடும் தொலைபேசிச் சேவை என்று பொருள்படும், Advanced Mobile Phone Service என்ற சொல்தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். அலை வரிசைப் பகிர்வு ஒன்று சேர்ப்பு (Fraquency Division Multiplexing) நுட்பத்தின், அடிப்படையில் செயல்படும் தொடக்க கால நடமாடும் தொலைபேசிச் சேவைகளில் ஒன்று.

**ampere** : ஆம்பியர்; மின்னோட்ட அலகு : மின்சாரத்தின் அடிப்படை எஸ்ஐ அலகு.

**amplifier** : பெருக்கி : உள்ளீட்டு மின் குறிப்பின் மின்னழுத்தம், மின்னோட்டம், மின் ஆற்றலைப் பெருக்குவது.

**amplifier, buffer** : இடையகப் பெருக்கி

**amplitude** : வீச்சு; அலைவீச்சு : ஒரு குறிப்பிட்ட நேரத்தில், ஒலி, மின் அல்லது மின்காந்த சமிக்கையின் வலிமையை அளக்கப் பயன்படும் அளவீடு. படுகை அச்சிலிருந்து அலைவீச்சின் உயரத்தைக் கொண்டு இது மதிப்பிடப்படுகிறது.

**amplitude modulation** : அலைவீச்சுப் பண்பேற்றம் : மின்காந்த அலை மூலம் நமது பேச்சுத் தகவலை ஏந்திச் செல்லும்




அலைவீச்சுப பணபேறறம

பொருட்டு, இயல்பான தகவலை மாற்றியமைக்கின்ற ஒரு செயல் முறை. இம்முறையில், தகவல் அலையை, நிலையான அலை வெண் கொண்ட ஒரு மின்காந்த சுமப்பி அலையின் மீது செலுத்தி, அத்தகவல் அலையின் அலை வீச்சுக்கு ஏற்ப, சுமப்பி அலையின் அலைவீச்சு மாற்றி யமைக்கப்பட்டு மறுமுனைக்கு அனுப்பி வைக்கப்படுகிறது.

**anachromic** : காலத்திற்குப் பொருந்தாத.

**analog** : தொடர்முறை; ஒத்திசை முறை; ஒத்திசைவிலான : தொடர்ச் சியாக மாறிக் கொண்டிருக்கும் ஒத்திசைவுகளால் குறிப்பது. இலக்கமுறைக்கு மாறானது.

**analog channel** : தொடர்முறைத் தடம்; ஒத்திசை வழித் தடம்: மாறும் மின்சமிக்கைகளை தொடர்ச்சியாக அனுப்ப அல்லது பெற பயன்படும் ஒரு தகவல் தொடர்புத் தடம்.

**analog circuit** : தொடர்முறை மின்சுற்று; ஒத்திசை மின் சுற்று : வெளியீடானது தொடர்ச்சியான உள்ளீட்டின் பணியாக உள்ள மின்சுற்று. இலக்கமுறை மின் சுற்றின் தனித்தனி மதிப்பு களுக்கு மாறான நிலை.

**analog computer** : தொடர் முறைக் கணினி; ஒத்திசைக் கணினி: மாறும் வெப்பநிலை அழுத்தம் போன்ற தொடர்ந்து மாறும் நிலைகளை அளந்து பரு நிலை அளவுகளாகக் காட்டும் கணினி. இலக்கமுறை கணினி மற்றும் கலப்பினக் கணினி முறைமைக்கு மாறானது.

**analog data** : தொடர்முறைத் தரவு; ஒத்திசைத் தரவு : இம் முறையில் தரவுக்கும் அளவு களுக்கும் இடையில் உள்ள உறவு துல்லியமாக உணர்த்தப்படு கிறது. தொலை பேசி வழியாகச் செல்லும் மின் சமிக்கைகள் தொ டர்முறைத் தரவாகும். இவை ஒலிகளுக்கான துல்லியமான உருவகிப்பாகும். இலக்கமுறை தரவுகளுக்கு இது மாறானது.

**analog device** : தொடர்முறை காரணிப்படுத்தல்; ஒத்திசைக் கருவி; தொடர்முறைச் சாதனம்.

**analog display** : ஒத்திசைக் காட்சி; தொடர்முறை சமிக்கை வடிவிலான திரைக் காட்சி : நிறம், நிழல் இவற்றின் அளவு கள் துண்டு துண்டான மதிப்பு களாக இல்லாமல் தொடர் மதிப்புகளாய் அமைந்த ஒளிக் காட்சி முறை.

**analogical reasoning** : ஒத்திசை அறிதல்; ஒப்புமை அறிதல்.

**analog input system** : ஒத்திசை உள்ளீட்டு முறைமை; தொடர் முறை உள்ளீட்டு முறைமை.

**analog line** : ஒத்திசைத் தகவல் தடம்; தொடர்முறைச் சமிக்கை வடிவில் தகவலை ஏந்திச் செல்லும் ஊடகம் : தொடர்ச்சி யில் நிலைமாறும் அலை வடிவிலான தகவல் சமிக்கைகளை ஏந்திச் செல்லும் தகவல் தொடர்பு ஊடகம். பரவலாகப் பயன் படுத்தப்படும் தொலை பேசி இணைப்புக் கம்பிகளை எடுத் துக்காட்டாய்ச் சொல்லலாம்.

**analog model** : தொடர்முறை மாதிரியம்; ஒத்திசை மாதிரி; ஒத்திசை வடிவு : நிலவும் சூழலுக்கு ஏற்ற பருநிலை ஒற்றுமையை வெளிப்படுத்தும் மாதிரி வடிவு.

**analog modem** : ஒத்திசை இணக்கி.

**analog monitor** : ஒத்திசைக் கணித் திரை; தொடர்முறைத் திரையகம்.

**analog reasoning** : தொடர் முறை காரணிபடுத்தல்; ஒத்திசை வடிவப் பகுப்பாய்வு : முறைமை ஒன்றின் மாதிரி வடிவு ஒன்றை ஆய்வு செய்து அதன் அடிப் படையில் முறைமை குறித்த முடிவுகளை எடுத்தல்.

**analog representation** : தொடர் முறை உருவகிப்பு; தனிப்பட்ட மதிப்பீடுகள் அற்ற உருவகிப்பு. ஆனால் தொடர்ந்து மாறக் கூடியது.

**analog signal** : தொடர்முறை சமிக்கை; ஒத்திசை சமிக்கை : மனிதக் குரல்போல தொடர்ந்து அலை வடிவில் மாறிச் செல்லும் சமிக்கை.

**analog signal generator** : ஒத்திசைச் சமிக்கை உருவாக்கி : தொடர்ச்சியாய் நிலைமாறும் அலை வடிவிலான சமிக்கை களை உருவாக்கும் ஒரு சாதனம். ஒரு கணினியில் வட்டு இயக்கி யின் சுழற்றியை இயக்கி வைக்க சிலவேளைகளில் இச் சாதனம் பயன் படுகிறது.

**analog-to-digital converter (A-D converter)** : தொடர்முறையி லிருந்து இலக்கமுறைக்கு மாற்றி (ஏ-டி மாற்றி) : தொடர்ச்சியான அளவியல் சமிக்கைகளை தனித் தனியான எண்களாக மாற்றக் கூடிய மின்னுறுப்பு. எண்களை அளவியல் மதிப்புகளாக மாற்றும் உறுப்புக்கு மாறானது.

**analog transmission** : தொடர் முறைபரப்பி; ஒத்திசை பரப்பி: தரவுகளை தொடர்ச்சியான அலை வடிவ முறையில் பரப்புதல்.

**analysis** : பகுப்பாய்வு : ஒரு குறிப்பிட்ட சூழ்நிலை அல்லது சிக்கலின் பல்வேறு பரிமாணங் களையும் பல கோணங்களில் ஆய்வு செய்தல். கணினித் துறை யைப் பொறுத்தவரை, பகுப்

*பாய்வு என்பது, பொதுவாக தொடர்வரிசைக் கட்டுப்பாடு, பிழைக் கட்டுப்பாடு மற்றும் திறன் மதிப்பீடுகளை உள்ளடக் கியது. ஒரு சிக்கலை எளிதாக எதிர் கொள்ளும் பொருட்டு அதனை சிறுசிறு கூறுகளாகப் பிரித்து ஆய்வு மேற்கொள்வது வழக்கமான நடைமுறை ஆகும்.*

**analysis, cost** : செலவுப் பகுப்பாய்வு.

**analysis, system** : முறைமை பகுப்பாய்வு.

**analyst** : பகுப்பாய்வாளர் : *பிரச் சினை ஒன்றைத் தீர்ப்பதற்கான உத்திகளை உருவாக்குகிற, அதனை வரையறை செய்கிற திறனுள்ள நபர். குறிப்பாக கணினி ஒன்றில் தீர்வுக்கான உத்திகளை வகுப்பவர்.*

**analyst/designer work bench** : பகுப்பாய்வாளர்/வடிவமைப் பாளர் பணி இருக்கை.

**analyst, programmer** : நிரல் பகுப்பாய்வாளர்.

**analyst, system** : முறைமைப் பகுப்பாய்வாளர்.

**Analytical Engine** : பகுப் பாய்வுக் கருவி; பகுப்பாய்வுப் பொறி : *கணிதப் பிரச்சினை களைத் தீர்க்க 1800களின் மத்தி யில் பிரிட்டன் கணிதவியலாள ரான சார்லஸ் பாபேஜ் என்பவர் கண்டுபிடித்த கருவி. நவீன இலக்கமுறை கணினியின் முன்னோடி.*

**analytical graphics** : பகுப் பாய்வு வரைகலை : *பாரம்பரிய வரி வரைபடங்கள், மற்றும் பட்டை வரைபடங்களைக் கொண்டு தரவுகளை ஆராய்தல், விரிதாள், தரவுத் தளம் அல்லது சொல் செயலி தொகுப்புகளில் அமைக்கப்பட்டுள்ள வரைகலை.*

**analytical machine** : பகுப்பாய்வு எந்திரம்.

**analyze** : பகுப்பாய்

**ancestral file** : முந்தையக் கோப்பு : *கோப்பில் உள்ள தரவு தொலைந்து போகும் அல்லது சிதைந்து போகும் என்ற எச்சரிக் கையினால் முந்தைய கோப்பு பாதுகாப்பாக வைக்கப்படு கிறது. ஒரு கோப்பின் மூன்று பிரதிகள் வைக்கப்பட வேண்டும். தாத்தா, தந்தை, குழந்தை. சமீபத்தியதைப் பயன் படுத்துவது குழந்தைக் கோப் பாகும். குழந்தைக்குச் சேத மானால் தந்தை கோப்பையும், அதுவும் சேதமானால் தாத்தா கோப்பையும் தேடி எடுத்து பயன்படுத்தலாம்.*

**anchor** : நங்கூரம்

**anchor cell** : தாக்கு கலம். விரி தாள் பயன்பாட்டில் ஒரு பணித் தாளில் காட்டி நிற்கும் கலம்.

**AND** : உம்மை : (a and b) என்பதன் பொருள், 'ஏ' யும் 'பி'யும் ஒரே நேரத்தில் உண்மையாக இருந்தால் மட்டுமே சொற்றொடர் உண்மையானதாக அமையும் என்பதாகும். இதனை 'தருக்கவியல்' உம்மை என்றும் கூறலாம்.

**AND gate** : உம்மை வாயில் : 1. இருமச் சுற்றிணைப்பு. இதில் இரண்டு அல்லது இரண்டுக்கு மேல் உள்ளீடுகள் இருக்கும். அவற்றின் வெளியீடு ஒருமையாக இருக்கும். இதில் எல்லா உள்ளீடும் தருக்கம் ஒன்று என்றால் வெளியீடு தருக்கம் 1 ஆகும். உள்ளீடுகளில் ஏதாவது ஒன்று தருக்கம் சுழி (பூஜ்யம்) யாக இருந்தால் வெளியீடு சுழி(பூஜ்யம்)யாக அமையும். 2. கணினி ஒன்றின் வாயில் மின்னிணைப்பு ஒன்றுக்கு மேற்பட்ட உள்ளீட்டு முனையங்களைக் கொண்டது. எல்லா உள்ளீடுகளுக்கும் ஒரே நேரத்தில் துடிப்பு வழங்கப்படாவிட்டால் வெளியீட்டுச் சமிக்கை எதுவும் உருவாகாது.

**AND operation** : உம்மைச் செயல் : இரண்டு வாக்கியங்கள், உண்மை மதிப்புகள் போன்றவற்றை இணைக்கும் இணைப்பு. இவற்றில் வெளியீடு 'உண்மை' என்று வர வேண்டுமென்றால் இரண்டும் உண்மையாக இருக்க வேண்டும். இல்லை யென்றால் வெளியீடு 'பொய்' ஆகிவிடும்.

**android** : ஆண் மனிந்திரம் : மனிதர்களைப் போன்ற ஆண் தானியங்கு எந்திரம்.

**angle bracket** : கோண அடைப்புக் குறி.

**angstrom** : ஆங்ஸ்ட்ராம்; ஒளி அலை நீளளவை : நீட்டலளவை அலகு : 2.5 சென்டி மீட்டரில் 1/25 கோடி. சிப்பு - ஒன்றில் உள்ள மின்னணுவியல் கருவிகளில் உள்ள பாகங்களை அளக்கப் பயன்படுபவை.

**ANI** : அனி : Automatic Number Identification, என்பதன் சுருக்கம். தொலைபேசி அமைப்புகளின் ஒரு தன்மை. அழைப்பவரின் எண்ணை கணினி அமைப்பின் மூலம் பெறுபவருக்கு அனுப்பி, அழைப்பவரை அடையாளம் காண உதவுவது.

**animated cursors** : அசைவூட்ட சுட்டுக்குறிகள்; இயங்கு இடங்காட்டி.

**animated GIF** : அசைவூட்ட ஜிஃப்; இயங்கும் ஜிஃப்; நகர் பட ஜிஃப் : வரைகலைப் படங்கள் கோப்புகளாக வட்டுகளில் பதியப்படும்போது பல்வேறு

தொழில்நுட்ப அடிப்படையில் பதியப்படுகின்றன. அவற்றுள் ஜிஃப் என்பது குறிப்பிட்ட வடிவமைப்பைக் குறிக்கிறது. வரைகலை மாறுகொள் வடிவாக்கம் (Graphics Interchange Format) என்பதன் சுருக்கமே GIF எனப்படுகிறது. இந்த வடிவமைப்பிலுள்ள வரைகலைப் படங்கள் வட்டுகளில் குறைந்த இடத்தையே எடுத்துக் கொள்கின்றன. ஜிஃப் வடிவமைப்பில் அமைந்த வரைகலைப் பட உருவங்களை கணினித் திரையில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஒன்றன்பின் ஒன்றாய்த் தொடர்ந்து திரையிடும்போது, அந்தப்படம் உயிரோட்டம் பெற்று இயங்குவது போன்ற தோற்றத்தை ஏற்படுத்தும்.

**animated graphics : அசைவூட்ட வரைகலை :** இயங்கும் வரைபடங்கள் அல்லது கருத்துப் படங்கள். காந்த வட்டுகளில் வரை படங்கள் ஒளிக்காட்சி தோற்றங் குறைந்த இடத்தையே எடுத்துக் கொள்ளும்.

**animation : அசைவூட்டம் :** நிகழ்வு ஒன்றின் தொடர் வரிசைப் படங்களை மிகவிரைவாக வெளிப்படுத்துவதன் மூலம் இயங்குவது போன்ற தோற்றத்தை உருவாக்குதல். இவ்வுத்தி, கணினி மூலம் திரைப் படங்களைத் தயாரிக்கப் பயன்படுகிறது.

**animation picture : அசைவூட்டப் படம்.**

**animation window : அசைவூட்டச் சாளரம்.**

**anion : எதிர்மின்மம் :** மின்னூட்டத் திரவத்தில், நேர்மின் முனையை நோக்கி நகர்கிற ஓர் எதிர் அயனி (மின்மயத்தாள்).

**anisotropic : திசை மாறுபாட்டுப் பண்பு :** அளவுக்கும் திசைக்குமேற்ப மாறும் அனுப்பு வேகம் போன்ற பண்புகளைக் குறிப்பிடுகிறது.

**annexure : இணைப்பு.**

**anode : நேர்மின் முனை; நேர் மின்வாய் :** மின்னணுவியலில் பயன்படுத்தப்படும் சொல். நேர் மின்னூட்டம் பெற்ற முனையை அல்லது மின்வாயை நோக்கி மின்னணு (எலெக்ட்ரான்) பாய்கிறது.

**annotation : குறிப்புரை :** சேர்க்கப்பட்ட விளக்கக் குறிப்பு.

**annotation symbol : குறிப்புக் குறியீடு; விளக்கக் குறியீடு:** தொடர் வரைபடம் ஒன்றில் செய்திகள் மற்றும் குறிப்புகளைச் சேர்க்கப் பயன்படுத்தப்படும் குறியீடு. மற்ற தொடர் வரைபடம் துண்டுக் கோடுகள் மூலம் இணைக்கப்பட்டிருக்கும்.

**anomaly** : முரண் : இயல்புக்கு மாறானது.

**anonymity** : பெயர் மறைப்பு; பெயர் ஒளிப்பு; பெயரிடாமை : இணையத்தில் மின்னஞ்சல் அல்லது செய்திக் குழுவில் தகவல் அல்லது கட்டுரை அனுப்பும்போது, அனுப்பியவர் எவர் என்பதைப் பெறுபவர் தெரிந்து கொள்ள முடியாதவாறு அனுப்பி வைக்கும் முறை. இணையத்தில் நடைபெறும் தகவல் பரிமாற்றத்தில் பொதுவாக அனுப்புபவரின் மின்னஞ்சல் முகவரி தகவலின் தலைப்புப் பகுதியில் இடம்பெறும். தகவல் பரிமாற்றத்துக்கான கிளையன் அல்லது கேட்பன் (client) மென்பொருள்தான் இந்த முகவரியைத் தகவலின் தலைப்பில் இடும். பெயர் மறைப்புச் செய்ய, ஒரு பெயர் மறைப்பு மறு மடல் வழங்கன் மூலம் செய்தியை அனுப்பி வைக்க வேண்டும். செய்தியைப் பெறுபவர், பதில் அனுப்ப வசதியாக அனுப்பியவரின் முகவரி, வழங்கன் கணினியில் சேமித்து வைக்கப்பட்டிருக்கும். செய்தியைப் பெறுபவர் அனுப்பியவர் யார் என்பதை அறிந்து கொள்ள முடியாதே யொழிய பதில் அனுப்ப முடியும்.

**anonymous** : அனாணிமஸ் : பெயரிலி: இணையத்திலுள்ள எவரும் இலவசமாகப் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் பல் வகைக் கோப்புகளைச் சேமித்து வைத்துள்ள எஃப்டிபீ தளங்கள் பல உள்ளன. இணையப் பயனர்ளர் ஒருவர் இத்தகைய தளங்களை அணுகப் பயன்படுத்தும் அணுகுப் பெயர் "பெயரிலி" எனப் பொருள்படும் "அனாணிமஸ்" என்ற பெயராகும்.

**anonymous FTP** : அணுகுப் பெயரிலா ஆவணச் சேமிப்பகம்; பொதுப்பயன் எஃப்டிபீ தளம் : இணையத்தில் எவ்வளவோ தகவல்கள் எல்லோரும் எடுத்துப் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் சேமித்து வைக்கப்பட்டுள்ளன. இணையத் தகவல் பரிமாற்றத்தில் கோப்புப் பரிமாற்ற நெறி முறை (File Transfer Protocol) என்பது ஒருவகை. இந்த அடிப்படையில் கோப்புப் பரிமாற்றம் கொள்ள வாய்ப்பளிக்கும் தளங்கள் எஃப்டிபீ தளங்கள் என்றழைக்கப்படுகின்றன. பொதுவாக பிணையத்திலுள்ள (network) ஒரு சேமிப்பகக் கணினியை அணுக உரிமம் பெற்றிருக்க வேண்டும். உரிய அணுகு பெயரையும் நுழை சொல்லையும் தந்தபிறகே தளத்தை அணுக முடியும். ஆனால் இணையத்திலுள்ள பல எஃப்டிபீ தளங்களை அனானிமஸ் அல்லது

எஃப்டிபி என்ற அணுகு பெயர் கொடுத்து, நுழைசொல் ஏதுமின்றியோ அல்லது பயனாளரின் மின்னஞ்சல் முகவரி அல்லது அனானிமஸ் என்ற சொல்லையோ நுழைசொல்லாகத் தந்து அணுக முடியும். இத்தகு தளங்கள் பொதுப் பயன் எஃப்டிபி தளங்கள் என்று அழைக்கப்படுகின்றன.

**anonymous post : பெயரிடா மடல்; மொட்டைக் கடிதம் :** இணையத்தில் செய்திக் குழுவிற்கு அல்லது அஞ்சல் குழுவிற்கு (Newsgroups or Mailing Lists) அனுப்புவர் பெயரில்லாமல் அனுப்பி வைக்கப்படும் ஒரு செய்தியை அல்லது ஒரு மடலைக் குறிக்கிறது. செய்திக் குழுவிற்கு ஒரு பெயர் மறைப்பு வழங்கன்/கணினி மூலம் இத்தகைய பெயரிடாச் செய்தியை அனுப்ப முடியும். மின்னஞ்சல் முறையில் பெயரிடா மறுமடல் வழங்கன் கணினி, மொட்டைக் கடிதம் அனுப்புவதைச் சாத்தியமாக்குகிறது.

**anonymous remailer : பெயர் மறைப்பு மறுமடல் கணினி :** இணையத்தில் மின்னஞ்சல் போக்குவரத்தை அதற்குரிய வழங்கன் (server) கணினிகள் ஒழுங்குபடுத்துகின்றன. அனுப்புபவரின் பெயரை மறைத்துக் கடிதங்களை அனுப்பும் வசதியைச் சில கணினிகள் வழங்குகின்றன. அவை தன் வழியாக அனுப்பப்படும் கடிதங்களின் தலைப்பிலுள்ள அனுப்புபவரின் முகவரியை நீக்கிவிட்டுச் செய்தியை மட்டும் முகவரிதாரருக்கு அனுப்பி வைக்கின்றன. ஆனால், மடலைப் பெறுபவர் இதே வழங்கன் கணினி மூலம் அனுப்பியவருக்குப் பதில் மடல் அனுப்ப முடியும்.

**ANSI : அன்சி:** அமெரிக்கத் தேசிய தரக்கட்டுப்பாட்டு நிறுவனம் எனப் பொருள்படும் American National Standards Institute என்பதன் குறும்பெயர்.

**ANSI character set : 'அன்சி' எழுத்துத் தொகுதி :** அன்சி வரையறுத்த எழுத்து எண் மற்றும் சிறப்புக் குறியீடுகளைக் குறிப்பிடும் குறியீட்டுத் தொகுதி.

**ANSI & COBOL : அன்சி & கோபால் :** *1974*இல் அமெரிக்க தேசிய தரநிறுவனம் தரப்படுத்திய கோபால் கணினி மொழிப் பதிப்பு.

**ANSI graphics : அன்சி வரைகலை.**

**ANSI key board : அன்சி விசைப் பலகை.**

**ANSI screen control : அன்சி திரைக் கட்டுப்பாடு.**

**ANSI/SPARC** : அன்சி/ஸ்பார்க் : *அமெரிக்க தேசிய தரக் கட்டுப்பாட்டுக் கழகம்/தரக் கட்டுப்பாட்டுத் திட்டம் மற்றும் தேவைகளின் குழு எனப் பொருள்படும்* American National Standards Institute/Standards Planning and Requirements Committee *என்பதன் தலைப்பெழுத்துக் குறும் பெயர். 1970-களில் அன்சிக் குழு குறிப்பிட்ட சில தரவுத் தள மேலாண்மை அமைப்புகளின் அடிப்படையாக விளங்கக்கூடிய, பொதுமைப்படுத்தப்பட்ட மூன்றடுக்குக் கட்டமைப்பு ஒன்றை பரிந்துரை செய்தது.*

**ANSI.SYS** : அன்சி.சிஸ் : *பயனாளர் தன்விருப்பப்படி கணினித் திரையில் செய்திகளைத் திரையிட அன்சிக் கட்டளைகள் (எஸ்கேப் வரிசை) பயன்படுகின்றன. இத்தகைய கட்டளைகள் அடங்கிய, எம்எஸ்-டாஸ் கணினிகளில் நிறுவப்படத் தக்க சாதன இயக்கிக் கோப்பு 'அன்சி. சிஸ்' என்றழைக்கப்படுகிறது.*

**ANSI terminal** : அன்சி முனையம் : *தரமான அன்சி மொழியில் உள்ள ஆணைகளைப் பின்பற்றும் காட்சி முனையம்.*

**answering machine** : விடையளிக்கும் பொறி; விடைப் பொறி : *வரும் செய்திகளைச் சேகரிப்பது. முற்பதிவு செய்திகளை அழைத்தவருக்கு அனுப்பி, பதில் அளிக்க வேண்டியவர் இல்லாத குறையைத் தீர்க்கும் பொறி.*

**answer mode** : விடைப் பாங்கு : *வேறொரு இணக்கி (மோடெம்) யிலிருந்து வரும் அழைப்பை, இணக்கி (மோடெம்) ஒன்று ஏற்கும் நிலை .*

**answer only modem** : தகவல் பெறு இணக்கி; அழைப்பேற்பு இணக்கி; பதிலுக்கு மட்டுமான இணக்கி : *இவ்வகை இணக்கிகள் வருகின்ற தகவல்களை ஏற்கும். ஆனால் தகவல் அனுப்பும் திறன் அற்றவை.*

**answer / originate** : விடையளி / தொடக்கு .

**answer/originate modem** : தகவல் பெறு/தரு இணக்கி : *இவ்வகை இணக்கிகள் தகவல் அனுப்பவும் அழைப்புகளை ஏற்கவும் திறனுள்ளவை. பொதுவாக இவ்வகை இணக்கிகளே புழக்கத்தில் உள்ளன.*

**answer tone** : விடை ஒலி : *இணக்கி (மோடெம்) பதில் கொடுத்துவிட்டது என்பதை அழைத்தவருக்குக் கூறும் ஒலிக் குறிப்பு.*

**antenna** : மின்காந்த அலை வாங்கி.

**anthropomorphism** : மனிதப் பண்பேற்றல் : கணினிகள் மற்றும் கணினிகளால் கட்டுப் படுத்தப்படும் விசைக் கருவி களைக் குறிப்பதற்கான உருவக முறை. இதில் அவை மனிதர்கள் போன்று கருதப்படுகின்றன.

**anti-aliasing** : மாற்று நீக்கி : திரையில் காட்டும் வடிவம்



மாற்று நீக்கி

ஒன்றின் விளிம்புகளும் கோடு களும் பிசிரற்றதாக தோன்றக் கையாளப்படும் வடிகட்டும் உத்தி.

**anticedent driver reasoning** : முன்னிகழ்வு ஏதுவாதம்.

**anticipatory paging** : எதிர் பார்ப்பு பக்கமாக்கல்.

**antidote** : முறிப்பி.

**anti-glare** : கூசொளித் தடுப்பு : கணினித் திரையில் வெளி யிலிருந்து வரும் வெளிச்சம் பட்டுப் பிரதிபளிப்பதைக் குறைக்கும் நடவடிக்கை. பிரதி பலிப்பைக் குறைக்கும் வேதியல் பொருளை கணினித் திரையில் பூசுதல், கூசொளியைத் தடுக்கும் ஒரு சல்லடைத் திரையை கணினித் திரையின்மேல் இடல் அல்லது வெறுமனே வெளி வெளிச்சம் பயனாளர் கண் களுக்கு நேராகப் பிரதிபலிக்காத வகையில் கணினித் திரையை குறிப்பிட்ட திசையில் திருப்பி வைத்தல் - போன்ற நடவடிக்கை கள் மூலம் கூசொளியைத் தடுக்கலாம்.

**antiglare filter** : கூசொளி வடிகட்டி.

**antistatic device** : நிலை மின் சாரத் தடுப்புச் சாதனம் : கணினிச் சாதனங்கள் பழுதுபட்டுப் போகவும் தரவு இழப்பு ஏற் படவும் காரணமான, நிலைமின் சார அதிர்வுகளைக் குறைக்கப் பயன்படும் சாதனம். இது நிலை மின்சாரத்தைத் தடுக்கும் தரை விரிப்பாக இருக்கலாம். கணினி யோடு இணைத்து மணிக்கட்டில் கட்டப்படும் ஒயராக இருக்க லாம். அல்லது நிலை மின்சாரத் தைத் தடுக்கும் தைலத்தைப் பூசிக்கொள்வதாய் இருக்கலாம்.

**antistatic mat** : நிலை மின்சார எதிர்ப்புப் பாய்: நிலை மின்சாரத் தினால் ஏற்படும் அதிர்ச்சிகளைத் தடுக்க ஒரு சாதனத்தின் முன்

னால் வைக்கப்படும் தரைப் பாய். மனிதர்கள் மின்காந்த கருவிகளை கையாளும்போது ஏற்படும் அதிர்ச்சியால் தரவுகள் அழிந்து போகாமல் இது காப்பாற்றும்.

**antivirus programme : நச்சு நிரல் எதிர்ப்புச் செயல்நிரல்; நச்சு நிரல் எதிர்ப்பி :** ஒரு கணினியின் சேமிப்பு வட்டிலும் நினைவகத்திலும் தங்கியிருந்து ஊறு விளைவிக்கும் நிரல் தொகுப்பை வைரஸ் அல்லது நச்சுநிரல் என்கிறோம். அத்தகைய நச்சு நிரல் நமது கணினியின் சேமிப்பகத்திலோ நினைவகத்திலோ உள்ளதா என்பதைக் கண்டறியவும், இருப்பின் அதனைக் களையவும் திறனுள்ள நிரல் தொகுப்பை நச்சுநிரல் எதிர்ப்பி என்கிறோம். பிணையம் (network) அல்லது இணையம் (internet) வழியாக பதிவிறக்கம் (download) செய்யும் கோப்புகளில் நச்சு நிரல் ஒட்டிக் கொண்டு உள்ளதா என்பதை அறிந்து சொல்கின்ற எதிர்ப்பிகளும் உள்ளன.

**antonym dictionary : எதிர்ச் சொல் அகராதி.**

**any key : ஏதேனும் ஒரு விசை :** கணினி விசைப் பலகையிலுள்ள ஏதேனும் ஒரு விசை. கணினியில் இயக்கப்படும் செயல்முறைத் தொகுப்புகள் சில, சிலவேளைகளில் தொடர்ந்து செல்ல, ஏதேனும் ஒரு விசையை அழுத்தவும் (Press any key to continue) என்ற செய்தியைத் தருவதுண்டு. அப்போது பயனாளர் விசைப் பலகையிலுள்ள ஏதேனும் ஒரு விசையை அழுத்தலாம். விசைப் பலகையில் any என்ற பெயரில் ஒரு விசை இல்லை என்பதை அறிக.

**any-to-any connectivity : எதிலிருந்து எதற்கும் இணைப்பு :** பிணையங்களில் (network) பல்வகை உள்ளன. பிணையக் கட்டமைப்பிலும் (topology), புரவலர் வழங்கன் (host/server) இனத்திலும், தரவுப் பரிமாற்ற நெறிமுறையிலும் (protocol) பல்வேறு வகைகளும் முறைகளும் உள்ளன. பல்வகைச் சூழலும் ஒருங்கிணைந்த ஒரு பிணையக் கட்டமைப்பில் தரவுவைப் பகிர்ந்து கொள்ள முடியுமெனில் அதனை எதிலிருந்து எதற்குமான (any to any) இணைப்பு என்கிறோம்.

**aperture card : துளை அட்டை :** நுண் படச்சுருள் பொருத்துவதற்காகத் தயாரிக்கப்பட்ட திறப்புள்ள, துளை அட்டை.

**API : ஏபிஐ :** பயன்பாட்டு நிரல் இடைமுகம் என்று பொருள்படும் Applications Programming Interface என்பதன் சுருக்கம்.

**APL** : ஏபிஎல் : A Programming Language எனும் கணினி மொழிக்கான குறும்பெயர். கணிதமுறையில் அமைக்கப் பட்ட செயலாக்க மொழி. கணக்குகளுக்குத் தீர்வு காண்பதன் மூலம் புகழ்பெற்றது. ஏபிஎல் தன்னுடைய எளிய முறை இயக்கங்கள் மூலம் புத்தி சாலித்தனமான கணக்கிடு கருவி ஒன்றின் பணிகளைச் செய்கிறது.

**APPC** : ஏபீபீசி : *1.* உயர் நிலை கட்டளைத் தொடரிலிருந்து இன்னொரு கட்டளைத் தொடருக்கான தகவல் தொடர்பு என்று பொருள்படும் Advanced Programme to Programme Communication என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். ஐபிஎம் (IBM) நிறுவனத்தின் முறைமைப் பிணையக் கட்டுமானத்தின் (Systems Network Architecture) ஓர் அங்கமாக இந்த நெறி முறை உருவாக்கப்பட்டது. வேறுபட்ட கணினி முறைமைகளில் இயங்குகின்ற பயன்பாட்டுத் தொகுப்புகள். தமக்குள்ளே தொடர்பு கொள்ளவும் நேரடியாகத் தகவல் பரிமாற்றம் செய்து கொள்ளவும் முடியும் வகையில் இந்நெறிமுறை உருவாக்கப்பட்டது.

**app code** : 'ஆப்' முறை : பயன்பாட்டுக் குறியீடு. தகவல்களை செயலாக்கம் செய்யும் ஒரு நிரலில் உள்ள ஆணைகள்.

**appearance** : தோற்றம்.

**append** : இணை; கூட்டு : தரவுத் தொகுப்பு ஒன்றுடன் மேலும் புதிய ஆவணங்களைச் சேர்த்தல் அல்லது எழுத்துத் தொடரின் இறுதியில் அல்லது பட்டியலின் இறுதியில் சேர்த்தல்.

**appearance** : தோற்றம்.

**append mode** : சேர் பாங்கு.

**append record** : சேர் ஏடு.

**Apple** : ஆப்பிள் : நுண் கணினி வரிசையொன்றின் விற்பனைப் பெயர். இவற்றைத் தயாரிக்கும் நிறுவனம் ஆப்பிள் கணினி நிறுவனம் ஆகும்.

**Apple II** : ஆப்பிள் II : ஆப்பிள் நிறுவனம் ஏப்ரல் 1977இல் அறிமுகப்படுத்திய இரண்டாவது சொந்தக் கணினி (Personal Computer). இதில் 4கே இயங்கு நிலை நினைவகம் இருந்தது. 48கே வரை விரிவாக்கிக் கொள்ளலாம். 6502 என்னும் நுண் செயலி பயன்படுத்தப்பட்டது. வண்ணக் கணினித் திரைக்குப் பதிலாக, தொலைக்காட்சிப் பெட்டியைப் பயன்படுத்திக் கொள்ளும் வசதி முதன்முதலாக ஆப்பிள் II கணினியில்தான்

அறிமுகப்படுத்தப்பட்டது. இதில் எட்டு விரிவாக்கச் செருகுவாய் கள் (expansion slots) இருந்தன.

**Apple computers** : **ஆப்பிள் கணினிகள்** : தனிநபர், கல்வி, வணிகம் மற்றும் மேசைக் கணினி வழி நூல் பதிப்பகப் பயன்பாடுகளில் அதிகம் பயன் படும் நுண் கணினிகள்.

**AppleDraw** : **ஆப்பிள் டிரா** : ஆப் பிள் மெக்கின்டோஷ் கணினி களில் செயல்படக் கூடிய படம் வரையப் பயன்படும் ஒரு பகிர்வு மென்பொருள் (shareware) தொகுப்பு.

**Apple Events** : **ஆப்பிள் நிகழ்வு கள்** : ஆப்பிள் மேக் ஓஎஸ் சிஸ்டம் 7 இயக்க முறைமையில் சேர்க்கப்பட்ட ஒரு பயன்பாடு. இதன் மூலம் ஒரு பயன்பாட்டுத் தொகுப்பிலிருந்து இன்னொரு பயன்பாட்டுத் தொகுப்புக்கு சேமி, திற, மூடு போன்ற கட் டளைகளை அனுப்ப முடியும்.

**Apple Extended Keyboard** : **நீட்டிக்கப்பட்ட ஆப்பிள் விசைப் பலகை** : பிற்காலத்தில் வெளி யிடப்பட்ட ஆப்பிள் மெக்கின் டோஷ் கணினிகளில் (ஆப்பிள் எஸ்இ, மெக்கின்டோஷ் II, ஆப்பிள் IIஜிஎஸ்) பயன்படுத்தப் படும், 105 விசைகள் உள்ள விசைப் பலகை. ஐபிஎம் மற்றும் அதன் ஒத்தியல் கணினிகளில் பயன்படுத்தப்பட்ட விசைப் பலகையில் இருப்பது போன்று ஆப்பிள் விசைப் பலகையில் இல்லையே என்ற குறையை நிறைவுசெய்ய, இந்த விசைப்



நீட்டிக்கப்பட்ட ஆப்பிள் விசைப் பலகை

பலகையில் முதன்முதலாக செயல் விசைகள் (function keys) சேர்க்கப்பட்டன. புதிய விசைகளையும் சேர்த்து, வடிவமைப்பிலும் சில மாற்றங்கள் செய்து உருவாக்கப்பட்ட இந்த விசைப் பலகை ஐபிஎம்மின் மேம்படுத்தப்பட்ட விசைப் பலகையைப் பெரிதும் ஒத்திருந்தது.

**Apple information technology division :** **ஆப்பிள் தகவல் தொழில் நுட்பப் பிரிவு :** *கணினி ஆலோசனை மற்றும் பயிற்சி நிறுவனம்.*

**Apple key :** **ஆப்பிள் விசை :** *கட்டளை விசையின் பழைய பெயர்*

**Apple menu :** **ஆப்பிள் பட்டியல் :** *மெக்கின்டோஷ் திரையின் இடதுபக்க மேல்பகுதியில் உள்ள பட்டியல்.*

**Apple Newton :** **ஆப்பிள் நியூட்டன் :** *ஆப்பிள் நிறுவனத்தின் கையகக் கணினி.*

**Apple printer :** **ஆப்பிள் அச்சுப் பொறி:** *கணினி வெளியீட்டின் அச்சுப் பிரதியைப் பெற பயன்படுத்தும் சாதனம். அச்சுப் பொறியானது அழுத்தமுறை அல்லது அழுத்தம் அல்லாத முறையினதாக இருக்கலாம். ஆப்பிள் லேசர் அச்சுப்பொறிகள் புகழ்பெற்றதாகவும் உயர்தர வெளியீட்டை அளிப்பதாகவும் இருக்கின்றன.*

**Apple scanner :** **ஆப்பிள் வருடு பொறி :** *34 செ.மீ* X 21 - 25 *செ.மீ. அளவுள்ள உருவங்கள் ஒரு அங்குலத்துக்கு 300 புள்ளிகள் என்ற அளவில் வருடி மெக்கின்டோஷுக்கு மாற்றுகிறது.*

**AppleScript :** **ஆப்பிள்ஸ்கிரிப்ட் :** *சிஸ்டம் 7 இயக்க முறைமையில் செயல்படும் மெக்கின்டோஷ் கணினிகளில் கட்டளைகளை நிறைவேற்றவும், தானியக்கச் செயல்பாடுகளுக்கும் பயன்படும் ஒரு வடிவாக்க மொழி.*

**AppleShare :** **ஆப்பிள் ஷேர் :** *ஆப்பிள் நிறுவனத்திலிருந்து உருவான கணினிக்கான மென்பொருள்.*

**Applesoft BASIC :** **ஆப்பிள் சாஃப்ட் பேசிக் :** *ஆப்பிள் ஐஐசி மற்றும் ஐஐஇ கணினிகளில் பயன்படுத்தப்படும் விரிவுபடுத்தப்பட்ட அடிப்படை நிரல் தொகுப்புகளை உருவாக்கப் பயன்படுத்தப்படும் மொழி. பதின்ம எண்களைக் கையாளும் திறன் கொண்டது. ஆப்பிள் சாஃப்ட் பேசிக்கில் நிரல்களை உருவாக்கவும் நிறைவேற்றவும் கணினியிலேயே உள் கட்டமைப்பாக உருவாக்கப்பட்ட ஆணை மாற்றி* (Interpreter).

**applet :** **ஆப்ளெட்; குறுநிரல் :** *பயன்பாட்டு நிரல் போன்ற சிறிய பயன்கூறு. ஜாவா மொழியில்*

உருவாக்கப்படும் சிறுசிறு செயற் கூறுகள் இவ்வாறு அழைக்கப் படுகின்றன. இவை ஹெச்டீ எம்எல் மொழியில் உருவாக்கப் படும் வரைப்பக்கங்களின் உள்ளி லிருந்து செயல்படுகின்றன.

**AppleTalk** : ஆப்பிள்டாக் : ஆப்பிள் நிறுவனம் உருவாக்கிய செலவு குறைந்த குறும் பரப்புப் பிணையம் (Local Area Network). இதில் ஆப்பிள் மற்றும் ஆப்பிள் அல்லாத கணினிகள் தொடர்பு கொண்டு அச்சுப் பொறி மற்றும் கோப்புகள் போன்ற வளங் களைப் பகிர்ந்துகொள்ள முடி யும். ஆப்பிள் அல்லாத கணினி கள் ஆப்பிள்டாக்கின் மென் பொருளையும் வன்பொருளை யும் கொண்டிருக்க வேண்டும். ஐஎஸ்ஓ/ஓஎஸ்ஐ மாதிரியை ஒத்த நெறிமுறைகளையே இந்தப் பிணையம் பின்பற்று கிறது. சட்டம் (frame) எனப் படும் பொட்டலங்களில் தகவல் பரிமாற்றம் செய்கிறது. ஓர் ஆப்பிள்டாக் பிணையம் இன் னொரு ஆப்பிள்டாக் பிணையத் துடன் இணைவி (bridge) மூல மாகவும், வேறுபட்ட பிணையங் களுடன் நுழைவி (gateway) மூலமாகவும் இணைப்பை ஏற் படுத்திக் கொள்ள முடியும்.

**application** : பயன்பாடு; பயன் பாட்டுத் தொகுப்பு : கணினியில் சொல்செயலி, கணக்குவழக்கு, கையிருப்பு மேலாண்மை போன்ற ஒரு குறிப்பிட்ட பணி யை நிறைவேற்ற உதவும் வகை யில் உருவாக்கப்படும் மென் பொருள் தொகுப்பு.

**application backlog** : பயன் பாட்டுத் தேக்கம்

**application binary interface (ABI)** : பயன்பாட்டு இரும இடைமுகம் : ஒரு இயக்க முறைமையில் இயங்கு நிலைக் கோப்பு (executable file), கணினி யின் வன்பொருள் உறுப்பு களுடன் எவ்வாறு தொடர்பு கொள்கிறது, தகவல் எவ்வாறு பதியப்படுகிறது என்பதை வரை யறுக்கும் நிரல் தொகுதி.

**application-centric** : பயன் பாட்டுத் தொகுப்பை மையப் படுத்திய; பயன்பாட்டு முக்கியத் துவமுள்ள : ஒரு கணினி இயக்க முறைமையின் (operating system) பண்பியல்பைப் பற்றியது. ஒரு பயனாளர் ஒரு குறிப்பிட்ட வகை ஆவணத்தை (சொல் செயலிக் கோப்புகள், விரிதாள் கள்) திறக்க, உருவாக்க விரும் பினால் அதற்குரிய பயன் பாட்டுத் தொகுப்பை முதலில் இயக்க வேண்டும். கட்டளை வரி பணிச்சூழல் கொண்ட டாஸ், வரைகலைச் சூழலை வழங்கும் விண்டோஸ் 3.x

ஆகியவை இந்தப் பிரிவைச் சார்ந்தவை.

**application close :** பயன்பாட்டு நிறுத்தம்.

**application control menu :** பயன் பாட்டுக் கட்டுப்பாட்டுப் பட்டி.

**application control :** பயன் பாட்டுக் கட்டுப்பாடு : கணினி பயன்பாடு - உற்பத்திப் பயன் பாடுகளில் துல்லியமாக, சரி யான நேரத்தில், தகவல்கள் செய லாக்கப்படுவதை உறுதி செய்ய, கணக்குத்துறை மற்றும் கணினித் துறை தொழிலில் ஈடுபட்டுள்ள வர்கள் பரிந்துரைக்கும் கட்டுப்பாடு.

**application controller :** பயன் கருவிக் கட்டுப்படுத்தி : கணினி ஒரு துணைக் கருவியைக் கட்டுப் படுத்த உதவும் சாதனத்திற்குப் பொதுவான பெயர்.

**application developer :** பயன் பாடு உருவாக்குபவர் : வணிகப் பயன்பாட்டை உருவாக்கி, முறைமை ஆய்வாளர் மற்றும் பயன்பாட்டு நிரலர் பணிகளைச் செய்யும் ஒரு நபர்.

**application development environment :** பயன்பாட்டு மென்பொருள் உருவாக்கச் சூழல் : மென்பொருள் உருவாக் குவோர் பயன்படுத்தக்கூடிய, செயல்முறைத் தொகுப்புகள் ஒருங்கிணைக்கப்பட்ட கூட்டுத் தொகுப்பு. ஒரு மொழி மாற்றி (compiler), உலாவி (browser), பிழைசுட்டி (debugger), ஆணைத் தொடர்களை எழுதப் பயன் படும் ஓர் உரைத் தொகுப்பான் (text editor) - ஆகியவை சேர்ந்தே இத்தகைய பணிச்சூழலை வழங்குகின்றன.

**application development language :** பயன்பாட்டு மென் பொருள் உருவாக்க மொழி : பயன்பாட்டுத் தொகுப்புகளை உருவாக்குவதற்கென்று வடி வமைக்கப்பட்ட மொழி. தரவுத் தளத்திலுள்ள தரவுகளைப் பெறுதல், புதுப்பித்தல் மற்றும் அதையொத்த பணிகள், தரவுவை உள்ளீடு செய்வதற் குரிய படிவங்களை உருவாக்கு தல் மற்றும் அறிக்கை தயாரித் தல் ஆகிய பணிகளுக்கான உயர் நிலைக் கட்டளை அமைப்பு களை உடைய குறிப்பிட்ட கணினி மொழிகளை மட்டுமே இது குறிக்கிறது.

**application development system:** பயன்பாட்டு உருவாக்க முறைமை : உருவாக்குதல், மேம்படுத்தல் மற்றும் பயன் பாட்டு ஆணை நிரல்களை இயக்க அனுமதிக்கும் நிரலாக்க மொழி மற்றும் அதன் தொடர் பான பயன்பாடுகள். வினவல்

மொழிகள், அறிக்கை தயாரிப் புக் கருவிகள் உள்ளிட்ட டிபிஎம் எஸ்-ஐ இதில் சேர்த்துக் கொள்ளலாம்.

**application gateway : பயன் பாட்டு நுழைவாயில் :** வெளி உலகுடன் தகவல் போக்கு வரத்தில் ஈடுபடக் கூடிய ஒரு நிறுவனத்தின் பிணையக் கணினி யிலுள்ள தரவுகளுக்கான பாதுகாப்பினை வழங்கக்கூடிய மென் பொருள் தொகுப்பு.

**application generator : பயன் பாட்டு உருவாக்கி :** பிரச்சினை யின் விவரங்களிலிருந்து பயன் பாட்டுத், தொகுப்பை உருவாக் கும் மென்பொருள். உயர்நிலை கணினி மொழியைவிட ஒன்று அல்லது மேற்பட்ட உயர்நிலை யில் உள்ளது. இருப்பினும், நிர லர், சிக்கலான பணிகளை விவரிக்கக் கணித, மொழி யமைப்பு விளக்கங்களை அமைத்துத் தர வேண்டும்.

**application heap : பயன் பாட்டு நினைவகக் குவியல் :** ஒரு பயன்பாட்டுத் தொகுப்பு தனது நிரல் தொடர்களை, விவரக் குறிப்புகளை மற்றும் தேவை யான தரவுகளைப் பதிவுசெய்து வைத்துக் கொள்ள ரேம் (RAM) நினைவகத்தில் ஒதுக்கப்படும் பகுதி.

**application icon : பயன்பாட்டு சின்னம் ; பயன்பாட்டுக் குறு படம்.**

**application layer : பயன் பாட்டு அடுக்கு :** கணினிப் பிணையங் களில் இரு கணினிகளுக்கிடையே நடைபெறும் தரவுப் பரிமாற்றத் தின் தொழில்நுட்ப நெறிமுறை களை பன்னாட்டுத் தரநிர்ணய அமைப்பு (International Standards Organisation-ISO) வகுத்துத் தந் துள்ளது. சமிக்கைப் பரிமாற்றங் களுக்குரிய ஓஎஸ்ஐ மாதிரி (OSI Model-Open System Inter connec- tion Model) என்பது முக்கியமான ஒன்று. ஏழு அடுக்குகளைக் கொண்டது. அவற்றுள் பயன் பாட்டு அடுக்கும் ஒன்றாகும். இந்த அடுக்கில்தான் ஒரு தொலை தூரக் கணினியுடன் இணைப்பை ஏற்படுத்திக் கொள்ளவும், கோப்புப் பரிமாற்றம் செய் வதற்குமான சமிக்கைகள் அடங் கியுள்ளன. பயனாளருக்கு மிக வும் பயனுள்ள பணியைச் செய் வது இந்த அடுக்குத்தான். ஏழு அடுக்குகளில் ஏனைய கீழடுக்கு கள், அனுப்பும்/பெறும் கணினி களுக்கிடையே தரவு பரிமாற்றத் தைக் கட்டுப்படுத்துகின்றன.

**application level : பயன்பாட்டு நிலை.**

**application mathematics : பயன்பாட்டுக் கணிதம்.**

**application minimise button** : பயன்பாட்டைச் சிறிதாக்கு பொத்தான்.

**application notes** : பயன் பாட்டுக் குறிப்புகள் : வழக்க மான உதவிக் குறிப்பு கையேடு களுடன் விளக்கங்கள் மற்றும் பரிந்துரைகளைச் சேர்த்து விற் பனையாளர் கொடுப்பது.

**application-oriented language** : பயன்பாடுசார் மொழி; பயன் நோக்கு மொழி : ஒரு குறிப்பிட்ட பிரச்சினைக்குத் தீர்வு காண்பதற் கான நிரல் தொகுப்பு மொழி. இதன் கட்டளைகள் கணினி யைப் பயன்படுத்துவோர் கையாளும் சொற்களைக் கொண்டிருக்கும் அல்லது அவற்றை ஒத்திருக்கும்.

**application package** : பயன் பாட்டுத் தொகுப்பு : ஒரு குறிப் பிட்ட பயன்பாட்டுக்காக வடி வமைக்கப்பட்ட கணினி நிரல் கள் அல்லது நிரல்களின் தொகுப்பு. தொழில் துறைக்காக அல்லது குறிப்பிட்ட நோக் கத்துக்காக உருவாக்கப்பட்ட மென்பொருள் தொகுப்பு. சிறப்பு அல்லது பொது நோக்கப் பணிகளுக்காக எழுதப்பட்ட கணினி நிரல்கள். சிலவற்றில் ஒரே ஒரு பணி மட்டுமே இருக் கும். மற்றவற்றில் பல பணிகள் இருக்கலாம்.

**application portability profile (APP)** : பயன்பாட்டு கையாண்மை விவரக் குறிப்பு.

**application portfolio** : பயன் பாட்டு மதிப்பீடு : ஒரு திட்ட மிடும் கருவி. இப்போதுள்ள மற்றும் திட்டமிட்டு வரும் தகவல் அமைப்புகளின் பயன் பாடுகளை அவை உண்டாக்கும் வருமானம், அவற்றை ஏற்படுத் தும் செலவு ஆகியவை பெரிய வணிகப் பணிகளுக்கு உதவுமா என்று மதிப்பிடுதல்.

**application processor** : பயன் பாட்டுச் செயலி: கட்டுப் பாட்டுப் பணிகள் அல்லாமல் தரவுகளை செயலாக்கம் செய்யும் கணினி.

**application programme** : பயன் பாட்டு : சொல் செயலாக்கம் விலைப்பட்டியலிடல், இருப்பு கட்டுப்பாடு போன்ற பணி களைச் செய்ய எழுதப்படும் மென்பொருள்.

**application programmer** : பயன்பாட்டு நிரலர் : முறைமை வகுப்போரைப் போன்றல்லாது குறிப்பிட்ட செயல்பாட்டுக்கான நிரல்களின் தொகுப்பை உருவாக்குகிறவர்.

**application programming** : பயன்பாட்டு நிரலாக்கம் : குறிப் பான பிரச்சினைகளுக்குத் தீர்வு

காணப் பயன்படுத்துவதற்கு உரிய நிரல்களின் தொகுப்பைத் தயாரித்தல். இது முறைமைத் தொகுப்பைத் தயாரித்தலுக்கு மாறானது.

**application programming interface** : பயன்பாட்டு நிரலாக்க இடைமுகம்.

**application programms** : பயன்பாட்டு நிரல்கள்.

**applications, computer** : கணினிப் பயன்பாடுகள்.

**application shortcut key** : பயன்பாட்டு சுருக்குவழி விசை : பயன்பாட்டுத் தொகுப்புகளில் பல்வேறு பணிகளையும் பட்டி விருப்பத் தேர்வுகளின் (menu options) மூலமே நிறைவேற்றிக் கொள்கிறோம். வழக்கமாகத் தொடர்ச்சியான பல்வேறு பட்டித்தேர்வுகளின் மூலம் நிறைவேற்ற வேண்டிய ஒரு பணியை ஒன்றிரண்டு விசைகளை ஒருசேர இயக்குவதன் மூலம் நிறைவேற்றிக் கொள்ள முடியும். அத்தகைய விசை அல்லது விசைகள் சுருக்குவழி விசை என்று அழைக்கப்படுகிறது. இம்முறையை விசைப் பலகைச் சுருக்குவழி (keyboard shortcut) என்றும் கூறுவர்.

**application software** : பயன்பாட்டு மென்பொருள் : பயன்படு நிரல்கள் தொகுப்பு என்பதைக் காண்க.

**application specific programms** : பயன்பாடு சார்ந்த நிரல்கள் : வணிக அறிவியல், பொறியியல் மற்றும் பிற துறைகளில் உள்ள இறுதிப் பயனாளரின் குறிப்பிட்ட பணிகளுக்கு உதவும் பயன்பாட்டு மென்பொருள் தொகுப்பு.

**application restone button** : பயன்பாட்டு மீட்புப் பொத்தான்.

**application specific integrated circuit (ASIC)** : பயன்பாடு சார்ந்த ஒருங்கிணைந்த மின்சுற்று.

**application window** : பயன்பாட்டுச் சாளரம்; பயன்பாட்டுப் பலகணி.

**application wizard** : பயன்பாட்டு வழிகாட்டி

**applied mathematics** : பயன்பாட்டுக் கணிதம் : எந்திரவியல், இயற்பியல், அல்லது கணினி அறிவியலில் நடைமுறைப் பயன்பாட்டுக்குப் பயன்படுத்தப் படும் கணிதம்.

**apply** : செயலாக்கு.

**apply filter** : வடிகட்டி பயன்படுத்து.

**applying** : பயன்படுத்துதல்.

**appointment order** : பணி ஆணை.

**apprentice** : பயிற்சியாளர்.

**approximation** : பகுதிக்கு ஏற்ற விதிகளின் தொகுதி.

**arcade game** : **விதானத் தொகுதி விளையாட்டு** : *கணினி விளையாட்டுகள் நாணயத்தால் இயக்கப்படும் கருவிகளால் பிரபலமாக்கப்பட்டவை. இக் கருவிகள் உயர்திறன் கொண்ட வண்ண வரைவுருக்கள். உயர் வேகச் சித்திர இயக்கம், ஒலி வழங்குதல் ஆகிய திறன்களைக் கொண்டவை. பெரும்பாலும் விளையாட்டுக் குச்சிகளினால் திரையிலுள்ள வடிவம் கட்டுப் படுத்தப்படுகிறது. விளையாட்டு களின் விதிப்படி கணினி மதிப் புப் புள்ளிகளை அளிக்கிறது.*

**Archie** : **ஆர்க்கி** : *பெயர் கொடா கோப்புப் பரிமாற்ற நெறிமுறை யின் மூலம் இலவச ஆவணக் காப்பகங்களில் சேமித்து வைக்கப்பட்டுள்ள கோப்பு களைத் தேடிக் கண்டறியும் இணையப் பயன்பாடு. மான்ட் ரீல் நகரின் மெக்கில்* (McGill) *பல்கலைக் கழகத்திலுள்ள தலைமை ஆர்க்கி வழங்கன் கணினி, தன்னுடன் இணைக்கப் பட்ட கோப்புப் பரிமாற்ற நெறி முறை அடிப்படையிலான அனைத்து வழங்கன் கணினி களிலிருந்தும் கோப்புப் பட்டி யல்களைப் பதிவிறக்கம் செய்து, அவற்றை ஒன்றிணைத்து ஒரே பட்டியலாக்கி, அப்பட்டியலை அனைத்து ஆர்க்கி வழங்கன் கணினிகளுக்கும் நாள்தோறும் அனுப்பி வைக்கிறது. ஆவணக் காப்பகம் என்று பொருள்படும் ஆர்க்கிவ் என்ற சொல்லின் சுருக்கமே ஆர்க்கி ஆகும்.*

**archie server** : **ஆர்க்கி வழங்கன் கணினி; ஆர்க்கி சேமிப் பகம்; ஆர்க்கி சேவையகம்** : *இலவசக் கோப்புப் பரிமாற்ற நெறிமுறைக் காப்பகங் களிலுள்ள கோப்புகளின் பெயர் களையும் முகவரிகளையும் கொண்ட பட்டியலை வைத் திருக்கும், இணையத்தில் இணைக்கப்பட்டுள்ள வழங்கன் கணினியின் பெயர்.*

**architectural protection** : கட்டமைப்புப் பாதுகாப்பு; கட்டு மான காப்பு.

**architecture** : **கட்டுமானம்; வடி வமைப்பு** : *கணினியின் உள் இயக்க நடவடிக்கைகளின் வடி வமைப்பு. நினைவக நிரல் பகுதி மற்றும் உள்ளீட்டு, வெளியீட்டு அமைப்புகள் கொண்டது.*

**archival** : **ஆவணக் காப்பகம்** : *தரவு ஒன்றை நீண்ட காலம் சேமிப்பது தொடர்பானது.*

**archival backup** : ஆவண ஆதார நகல்.

**archival store** : காப்பகச் சேமிப்பு; ஆவண இருப்பகம்; அடிக்கடி பயன்படுத்தாமல் பின் தேவைக்கு ஆதாரமாக வைக்கப் பட்டிருக்கும் கோப்புகள்.

**archive** : ஆவணக் காப்பகம்; கோப்புச் சேமிப்பகம் : 1. வேறொரு சேமிப்பகத்திலுள்ள கோப்புகளை நகலெடுத்துப் பாதுக்காப்பாக வைத்துக் கொள்கிற நாடா அல்லது வட்டுச் சேமிப்பகங்களைக் குறிக்கிறது. 2. இறுக்கிச் சுருக்கப்பட்ட கோப்பு. 3. இணையத்தில் கோப்புப் பரிமாற்ற நெறிமுறை (FTP) மூலமாக அணுக முடிகிற ஒரு கோப்பகம் (Directory) அல்லது அணுகுவோருக்கு வழங்குவதற்கென்றே இணையத்தில் கோப்புகளைச் சேமித்து வைத்துள்ள ஒரு கோப்பகம்.

**archive attribute** : காப்புக்கூறு : கோப்புகளை வகைப்படுத்தும் இயல்புநிலை. சில படிகள் மற்றும் பின்னாதரவு நிரல்களில் இந்த நிலையைச் சோதிக்க முடியும்.

**archive bit** : ஆவணக் காப்பகக் குறி : ஒரு கோப்பு ஆவணக் காப்பகத்தில் சேர்க்கப் பட்டுள்ளதா என்பதை அறிந்து கொள்ள உதவும் ஒரு குறியீடு.

**archieve file** : காப்பகக் கோப்பு : பல்வேறு கோப்புகளை உள்ளடக்கிய ஒரு கோப்பு. ஒரு மென்பொருள் தொகுப்பு, அதன் விளக்கக் குறிப்புகளையும் எடுத்துக்காட்டு உள்ளீட்டுக் கோப்புகளையும் உள்ளடக்கிய ஒரே கோப்பாக இருக்க முடியும். இணையத்தில் செய்திக் குழுவில் (news group) தொகுக்கப்பட்ட செய்திகளையும் இச்சொல் தொடர் குறிக்கிறது. யூனிக்ஸ் முறைமையில் tar கட்டளை மூலம் காப்பகக் கோப்புகளைக் கையாள முடியும். அவற்றை இறுக்கிச் சுருக்கவும் முடியும். டாஸ் மற்றும் விண்டோஸ் இயக்கத் தளத்தில் pkzip, மேக் ஓஎஸ்-இல் stuffit ஆகியவை ஏற்கெனவே இறுக்கிச் சுருக்கப்பட்ட கோப்புகளைக் கொண்ட காப்பகக் கோப்புகளை உருவாக்கப் பயன்படுகின்றன.

**archive gateway** : காப்பக நுழைவாயில்.

**archive site** : ஆவணக் காப்பகத் தளம் : கோப்புகளைச் சேமித்து வைத்துள்ள ஓர் இணைய தளம். இங்குள்ள கோப்புகளை பொதுவாக கீழ்க்காணும் ஏதேனும் ஒரு முறையில் அணுக முடியும். (1) பெயரின்றி அணுகும் கோப்புப் பரிமாற்ற நெறிமுறை மூலம் பதிவிறக்கம் செய்யலாம்.

*(2). கோஃபர் (gopher) மூலம் அணுகலாம். (3) வைய விரிவலை (www)யில் பார்வையிடலாம்.*

**archiving** : ஆவணப்படுத்தல்.

**arcnet** : ஆர்க்நெட் : *ஒரு கணினிப் பிணையக் கட்டமைப்பு.*

**area** : பரப்பு.

**area chart** : பரப்புநிரல் படம் : *வரைபட வகைகளுள் ஒன்று. கடந்த நான்கு காலாண்டுகளில் நடைபெற்ற விற்பனையின் அளவைக் குறிக்க இது போன்ற வரைபடத்தைப் பயன்படுத்தலாம். இருவேறு விவரக் குறிப்புகளைக் குறிக்கும் இரண்டு கோடுகளுக்கு இடையே நிறம் அல்லது புள்ளிகளால் நிறைத்துக் காட்டப்படும் பரப்பளவு.*

**area, common storage** : பொதுச் சேமிப்பகப் பரப்பு

**area, constant** : மாறாப் பரப்பு.

**area density** : பரப்பு அடர்த்தி.

**area graph** : பரப்பு வரைபடம்.

**area, seek** : தேடு பரப்பு.

**area, search** : பகுதி தேடல் : *பெரும் எண்ணிக்கையிலான ஆவணத் தொகுதிகளில் குறிப்பிட்ட ஒன்றைத் தேர்ந்தெடுப்பதற்காகப் பரிசீலித்தல்.*

**area, work** : பணிப் பரப்பு

**argument** : மதிப்புரு; தரு மதிப்பு: *ஒரு செயல்கூறு அல்லது செயல்முறைக்கு அழைக்கும் நிரலிலிருந்து அனுப்பி வைக்கப்படும் மதிப்புகள்.*

**argument list** : மதிப்புருப் பட்டியல்.

**argument seperator** : மதிப்புரு பிரிப்பி.

**arithmetic** : எண் கணிதம் : *1. கணிதவியலின் ஒரு பகுதி - உடனிலை முழு எண்கள் மற்றும் பூஜ்யம் ஆகியவற்றின் ஆய்வு தொடர்பானது. 2. கூட்டல், கழித்தல், பெருக்கல் மற்றும் வகுத்தல் சம்பந்தப்பட்ட நடவடிக்கைகள் தொடர்பானது. அல்லது இப்பணிகளைச் செய்யும் கணினி கருவியின் ஒரு பகுதி தொடர்பானது.*

**arithmetic address** : எண் கணித முகவரி; எண்கணித முகவெண்.

**arithmetic and logical operators** : கணித மற்றும் தருக்கச் செயற் குறிகள்.

**arithmetic check** : எண்கணிதச் சோதனை.

**arithmetic coding** : கணித முறையாக்கம் : *புள்ளிவிவர முறை தரவுகளை சுருக்கும்*

முறை. நரவுச் சரங்களை 0 முதல் 9 வரை உள்ள தனி பதின்ம எண்ணாக மாற்றுவது.

**arithmetic exception** : எண் கணித விதிவிலக்கு

**arithmetic expression** : கணக்கீட்டுத் தொடர்; எண் கணிதக் கோவை : ஒன்று அல்லது கூடுதலான எண்கள், மாறிகள், செயல்கள், குறியீடுகள் அல்லது இவை இணைந்த கோவை. கணக்கீட்டின் விளைவாக ஒரு தனி மதிப்பைக் குறிப்பிடுவது.

**arithmetic, fixed point** : நிலைப் புள்ளிக் கணக்கீடு

**arithmetic, floating decimal** : மிதவைப் புள்ளிக் கணக்கீடு

**arithmetic instruction** : கணித ஆணை : கணித இயக்கத்தைச் செய்யுமாறு கணினிக்குச் சொல்கிறது.

**arithmetic-logic unit** : கணிதத் தருக்ககம் : மையச் செயலாக்கத்தின் ஓர் அங்கம். அங்கு கணித மற்றும் தருக்கவியல் நடவடிக்கைகள் நிறைவேற்றப்படுகின்றன.

**arithmetic operation** : கணிதவியல் செயல்பாடு; எண் கணித வினை : எண்ணியல் அளவுகளின் பல்வேறு நடவடிக்கைகள். இவற்றில் அடிப்படை நடவடிக்கைகளான கூட்டல் அல்லது கழித்தல், பெருக்கல், வகுத்தல், தொகுத்தல் கூறுபடுத்துதல் மற்றும் வேர்களை பிரித்தெடுத்தல் ஆகியவையும் அடங்கும்.

**arithmetic operation, binary** : இருமக் கணிதச் செயல்பாடு

**arithmetic operator** : கணிதச் செயற்குறி : ஒரு கணக்கீட்டைச் செய்ய கணினிக்கு கூறும் குறியீடு. கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல், தொகுத்தல் போன்ற செயல்களைக் குறிப்பிடும் செயற்குறிகள்.

**arithmetic overflow** : கணித மிகைவழிவு : வரையறுக்கப்பட்ட வரம்புக்கு அதிகமாகப் பெறப்படும் மதிப்பு. ஒரு நான்கு இலக்க எண் வகை மாறியில் ஐந்து இலக்க மதிப்பை இருத்த முனைதல்.

**arithmetic register** : கணிதப் பதிவகம்: கணித மற்றும் அளவை இயக்கங்களைச் செய்வதற்கென்றே ஒதுக்கப்பட்ட பதிவகம்.

**arithmetic shift** : கணிதவியல் பெயர்ச்சி : ஓர் எண்ணிக்கையினை அடிப்படை எண் ஒன்றினால் பெருக்கல் அல்லது வகுத்தல். எடுத்துக்காட்டு: 13ஐ 10ஆல் இருமுறை பெருக்கியதால்

கிடைப்பது 1,300 ஆகும். இதில் 13 என்ற எண் இரு இடங்களில் இடப்புறப் பெயர்ச்சி அடைகிறது.

**arithmetic statement : கணக் கீட்டுக் கூற்று**

**arithmetic underflow : கணிதக் குறைப் பொழிவு** : சரியாகக் கூறமுடியாத அளவுக்குச் சிறிய எண்ணாக வரும் கணக்கீடு.

**arithmetic unit : கணக்ககம்; கணக்கிடும் பகுதி.**

**arm access : அணு குகை**

**.army.mil : .ஆர்மி.மில் :** அமெரிக்க நாட்டு இராணு வத்தைச் சுட்டும் இணைய தள முகவரி. இணைய தளங்களை அவற்றின் உள்ளடக்கங்களுக் கேற்ப .com, .gov, .edu, .org, .mil, .net, .int ஆகிய பெரும் பிரிவு களில் அடக்குகின்றனர். அமெரிக்க இராணுவத் தள முக வரி .mil என்ற பெரும் பிரிவில் அடங்குகிறது.

**ARP : ஏஆர்பீ :** முகவரி கண்டறி நெறிமுறை என்று பொருள்படும் Address Resolution Protocol என்பதன் தலைப்பெழுத்துச் சுருக்கம். கணினிப் பிணையங் களுக்கிடையே தகவல் தொடர்புக்கான டிசிபி/ஐபீ (TCP/IP) நெறிமுறையின் ஒரு வடிவம். ஒரு குறும்பரப்பு பிணையம் இணையத்தில் தொடர்பு கொள்ளும்போது ஐபீ முகவரி (தருக்க முகவரி)யை மட்டுமே அறிய முடியும். அப்பிணை யத்திலுள்ள ஒரு கணினியின் மெய்யான வன்பொருள் (ஈதர் நெட்) முகவரியை அறிந்து கொள்ள ஏஆர்பீ நெறிமுறை பயன்படுகிறது. இணையத்தின் வழியாக ஓர் ஏஆர்பீ கோரிக்கை பிணையத்துக்கு அனுப்பி வைக்கப்படும்போது, குறிப் பிட்ட ஐபீ முகவரி கொண்ட கணுக் கணினி தன்னுடைய வன் பொருள் முகவரியோடு பதில் அனுப்பும். வன்பொருள் முகவரி கண்டறிதலைப் பொதுவாகக் குறித்தபோதும் ஏஆர்பீயின் எதிர்மறைப்பணியான ஆர்ஏ ஆர்பீ (Reversed ARP)யையும் சேர்த்தே குறிக்கிறது.

**ARPANET :** 'அர்ப்பாநெட்' மேம் பட்ட ஆய்வுத்திட்ட முகமைப் பிணையம்' எனப் பொருள்படும் Advanced Research Projects Agency Network என்பதன் குறும் பெயர். இது பாதுகாப்புத் துறை இடங்கள், ஆய்வு மையங்கள் மற்றும் கணினி அறிவுக்கூடங் களை இணைக்கிறது. இதன் நோக்கம் கணினி விவரங்களைப் பகிர்ந்து கொள்ளுதல், மிகவும் நம்பிக்கையான, சிக்கனமான கணினித் தகவல் தொடர்பை உருவாக்குதல்.

**ARP request** : ஏஆர்பீ கோரிக்கை : *முகவரி கண்டறி நெறிமுறைக் கோரிக்கை என்று பொருள்படும்* Address Resolution Portocol Request *என்பதன் சுருக்கம். ஓர் ஏஆர்பீ பொதிவு (அல்லது பொட்டலம்), புரவன் கணினியின்* (host computer) *இணைய முகவரியைக் கொண்டிருக்கும். கோரிக்கையைப் பெறும் கணினி தனக்குரிய ஈதர்நெட் முகவரியுடன் பதிலை அனுப்பும்.*

**ARQ** : ஏஆர்கியூ : *தானியங்கு முறையில் மீண்டும் அளிப்பதற்கான வேண்டுகோள்.* Automatic Repeat request *என்பதன் குறும்பெயர். தரவு வழங்கப்படுவதை கண்காணிக்கும் பணி.*

**arrange** : ஒழுங்கமை.

**arrange icons**: சின்னங்களை ஒழுங்கமை.

**arrangement** : ஏற்பாடு : வரிசை ஒழுங்கு : பொருள் பட்டியல்: *சொற்களின் வரிசையொழுங்கு அல்லது ஒரு அமைவில் உள்ள தரவு வகைகள்.*

**array** : கோவை; வரிசை : *தொடர்புடைய பொருள் வகைகளின் வரிசை.*

**array and sringes** : கோவை மற்றும் சரம்.

**array bound** : கோவை வரம்பு.

**array dimension** : கோவைப் பரிமாணம்.

**array element** : கோவை உறுப்பு; வரிசைப் பொருள் : *வரிசையில் உள்ள ஒரு கூறு.*

**array index number** : கோவை இடஞ்சுட்டு எண்; வரிசை அடையாள எண் : *ஒரு வரிசையில் உள்ள குறிப்பிட்ட பொருளை அடையாளம் காட்டும் இருப்பிட வரிசை எண்.*

**array iterator** : கோவை வரிசை இயக்கி : *ஒரு வரிசையில் உள்ள ஒவ்வொரு பொருளிலும் புகுந்து இயக்கத்தைச் செய்யும் ஒரு பணி.*

**array processor** : கோவைச் செயலி; வரிசைச் செயலி : *அணி* (matrix) *கணக்குகளை சாதாரணக் கணினிகளைவிட விரைவாகச் செய்யக் கூடியது.*

**array reference** : கோவைக் குறிப்பி ; வரிசைக் குறிப்பு : *எந்த வரிசையிலும் அணுகக் கூடிய சிறப்புத் தரவு மதிப்பு.*

**arrival rate** : வருகை வீதம் : *குறிப்பிட்ட அளவு நேரத்தில் தரவு தொடர்புச் சாதனத்தில் எவ்வளவு தரவுகள் அல்லது எழுத்துகள் வருகின்றன எனும் வீதம்.*

**arrow key** : அம்புக்குறி விசை : கணினித் திரையில் தோன்றும் சுட்டுக் குறியை அல்லது விருப்பத் தேர்வுப்பட்டியல்களில் தேர்வுக் குறியை மேல் கீழாக, பக்கவாட்டில் நகர்த்துவதற்குப் பயன்படக்கூடிய, மேல், கீழ், வலம், இடம் நோக்கிய அம்புக்குறி இடப்பட்ட விசைகள்.

**article** : கட்டுரை; செய்திக் குறிப்பு : இணையத்தில் செய்திக் குழுவில் (news- group) வெளியிடப்பட்டுள்ள ஒரு செய்திக் குறிப்பு. கடிதம் என்றும் கூறப்படுவதுண்டு.

**article selector** : கட்டுரை தேர்வி.

**artificial inteligence (AI)** : செயற்கை நுண்ணறிவு : ஒரு எந்திரம் எவ்வளவு அறிவுத் திறனுடன் இருக்க முடியும் என்பதை விளக்கும் கணினி அறிவியலின் ஒரு பிரிவு. பகுத்தறிதல், கற்றல் போன்ற மனித அறிவுத்திறனோடு தொடர்புடைய செயல்களைச் செய்யும் கருவி ஒன்றின் திறனோடு தொடர்புடையது.

**artificial language** : செயற்கை மொழி: வரையறை செய்யப்பட்ட விதிகளை அடிப்படையாகக் கொண்ட மொழி - இவ்விதிகள் அதன் பயன்பாட்டுக்கு முன் உருவாக்கப்பட்டதாகும். இது இயற்கையான மொழிக்கு வேறுபட்டதாகும்.

**artificial life** : செயற்கை உயிர் : வாழும் உயிரினங்களின் நடத்தையில் சில கூறுகளை போலச் செய்யும் கணினி அமைப்புகள் பற்றிய ஆய்வு. ஒரு குறிப்பிட்ட பணியை நிறைவேற்ற எழுதப்பட்ட நிரல், அதன் செயல்திறனை அடிப்படையாகக் கொண்டு, தகவமைத்தல், தப்பிப் பிழைத்தல், இனம் பெருக்குதல் போன்ற மனிதப் பண்புகளின் மொத்த நடவடிக்கைகளையும் மேற்கொள்ளுமாறு செய்ய முடியும். இந்த நிரல்கள் ஒரு சிக்கலுக்கு மிகச்சரியான தீர்வு கிடைக்கும்வரை தம்மைத் தாமே தொடர்ந்து மாற்றிக் கொள்கின்றன. இத்தகைய நிரல்களை இயக்கும் கணினி முறைமைகளை செயற்கை உயிர் என்கின்றனர்.

**artificial network** : செயற்கைப் பிணையம்.

**artificial neural network** : செயற்கை நரம்புசார் பிணையம் : மனிதனின் மூளையும் நரம்பு மண்டலமும் ஒரு பிணையம் (network) போலவே செயல்படுகின்றன. மனித உடலில்

செயல்படும் இந்தப் பிணையத்தின் தொழில் நுட்ப அடிப்படையில் ஒரு கணினிப் பிணையத்தை உருவாக்க ஆய்வுகள் நடைபெற்று வருகின்றன. மனித நரம்பு மண்டலப் பிணையக் கருத்தமைவின் அடிப்படையில் கணினியில் ஒரு குறிப்பிட்ட பணிக்கான மென்பொருளைச் செயல் படுத்தக்கூடிய செயற்கை நுண்ணறிவு அமைப்பினை நரம்பு சார்பிணையம் என்று அழைக்கலாம்.

**Artline : ஆர்ட் லைன்; ஒரு வரைகலை மென்பொருள் :** ஐபிஎம் சார்பு நுண்கணினிகளில் பயன்படுத்துவதற்கு ஏற்ற விளக்கமுறை வரைகலை மென்பொருள். அளவெடுக்கக்கூடிய எழுத்துகள், முப்பரிமாணச் சாயல்கள், ஒரு உருவத்தை வேறொன்றாக மாற்றும் பணி போன்ற பல அம்சங்கள் இதில் உள்ளன.

**artwork : வரைகலை வேலை :** வரி ஓவியங்கள் போன்ற வரைகலை வேலைகளைச் செய்தல்.

**ARTSPEAK : பேச்சுக் கலை :** அனுபவமற்ற பயனாளர் கணினி வரைவுகளை வரை கருவியில் உருவாக்க உதவுவது.

**ASA : ஏஎஸ்ஏ :** அமெரிக்க புள்ளியியல் சங்கம் எனப் பொருள்படும் American Statistical Association என்பதன் குறும்பெயர்.

**ASCC : ஏஎஸ்சிசி :** 'தானியங்கு தொடர் செயல் கட்டுறு கணிப்பான்' எனப் பொருள்படும் Automatic Sequence Controlled Calculator என்பதன் குறும்பெயர். இது ஹார்வர்டு பல்கலைகழகத்தில் ஹோவர்டு அய்க்கன் ஆணைப்படி உருவாக்கப்பட்டது. 1944இல் நிறைவு செய்யப்பட்டது. காகித நாடா ஒன்றில் சேமிக்கப்பட்ட ஆணைகளைப் பயன்படுத்துவது. 'ஹார்வர்டு மார்க்' என்றும் அழைக்கப்பட்டது.

**ascender : ஏற்றி :** கீழ்வரிசை எழுத்துகளின் ஒரு பகுதி எழுத்தின் முக்கிய பகுதிக்கு மேலே நீளுதல்.

**ascending : ஏறுமுகமாய் வரிசைப்படுத்தல் :** பட்டியல் உறுப்புகளை ஏறுமுக வரிசையில் வரிசைப்படுத்தும் முறை.

**ascending order : ஏறுமுக வரிசை :** ஏறுவரிசை என்பது ஒரு பட்டியலிலுள்ள உறுப்புகளை சிறியதில் தொடங்கி பெரியதில் முடியுமாறு வரிசைப்படுத்துவது. எடுத்துக்காட்டாக 1 முதல் 10 வரை, அ முதல் ஔ வரை அடுக்குவது. ஒரு குறிப்பிட்ட

பயன்பாட்டுத் தொகுப்பில் இத்தகைய அகர வரிசையை முடிவு செய்வது மிகவும் சிக்கலானது. எடுத்துக்காட்டாக, எண்களை எழுத்துகளுக்கு முன்னால் வைப்பதா பின்னால் வைப்பதா, இட வெளிகளை (spaces) எங்கு சேர்ப்பது? ஆங்கிலத்தைப் பொறுத்தவரை பெரிய எழுத்து, சிறிய எழுத்துச் சிக்கல் உண்டு. ஆஸ்க்கி அட்டவணையின் எண் மதிப்பு அடிப்படையில், ஆங்கிலச் சிறிய எழுத்து, பெரிய எழுத்தை விட அதிக மதிப்புக் கொண்டது.

**ASCII : அஸ்கி :** தகவல் பரிமாற்றத்துக்கான அமெரிக்கத் தரக் குறிமுறை எனப் பொருள்படும் American Standard Code for Information Interchange என்பதன் குறும் பெயர். ஏழு துண்மியுள்ள இந்தக் குறியீடு பல்வேறு வகையான சாதனங்களுக்கிடையே தரவுப் பரிமாற்றத்துக்கு உதவுகிறது.

**ASCII character set : ஆஸ்கி எழுத்துத் தொகுதி :** இரும இலக்கங்களில் ஏழு துண்மி (பிட்) குறிப்பிடப்படுகின்ற ஆஸ்கிக் குறியீடுகள். 0 முதல் 127 வரை அவற்றின் ஆஸ்க்கி மதிப்பு இருக்கும். பெரும்பாலான கணினிகளில் எட்டு துண்மி (பிட்)களால் ஆன விரிவாக்கப்பட்ட ஆஸ்கி குறியீடு பயன்படுத்தப்படுகிறது. அதில் கூடுதலாக 128 எழுத்துகளும் குறியீடுகளும் அடங்கியுள்ளன. பிறமொழி எழுத்துகள், வரைகலைக் குறியீடுகளைக் கொண்டுள்ளன.

**ASCII file : ஆஸ்கிக் கோப்பு :** ஆஸ்கி எழுத்து வடிவங்களில் உருவாக்கப்பட்ட ஆவணம். எழுத்துகள், எண்கள், நிறுத்தற் குறிகள், இடவெளிகள், புதுவரிக் குறியீடுகள் இவற்றைக் கொண்டிருக்கும். சில வேளைகளில் தத்தல் (Tab) இட வெளிகள் மற்றும் கோப்பிறுதிக் குறியையும் கொண்டிருக்கும். ஆனால் வடிவமைப்பு (formatting) விவரங்கள் எதையும் கொண்டிருக்காது. இத்தகைய கோப்பு, உரைக் கோப்பு (text file) எனவும், உரை மட்டுமுள்ள கோப்பு (text only file) எனவும் அழைக்கப் படுகிறது.

**ASCII transfer : ஆஸ்கி அனுப்புகை ; ஆஸ்கிப் பரிமாற்றம் :** மின்னணுத் தகவல் பரிமாற்றத்தில் ஓர் உரைக் கோப்பினை அனுப்புவதற்கு ஏற்ற படிவமுறை. இத்தகைய பரிமாற்ற முறையில் பிணையத்திற்கும், பிணையத்திலிருந்தும் தகவல் அனுப்பி வைக்க உலகப் பொதுவான குறியீட்டுத் தொகுதி

அடிப்படையில் எழுத்து மாற்றம் செய்யப்படுகிறது.

**ASCII sort order** : ஆஸ்கி வரிசையாக்கம்

**ASCII string** : ஆஸ்கி சரம் : சில நிரலாக்க மொழிகளில் குறிப்பிட்ட ஓர் எழுத்துடன் (NULL) முடியும் சரம். ஆஸ்கி மதிப்பு சுழி (பூஜ்யம்) யாக இருக்கும் எண்மி (பைட்), சர ஈற்று எழுத்தாகும்.

**ASIC** : ஏஎஸ்ஐசி (அசிக்) : குறித்த பயன்பாட்டு ஒருங்கிணைப்பு மின்சுற்று என பொருள்படும் Application Specific Integrated Circuit என்பதன் குறும்பெயர். ஒரு குறிப்பிட்ட பயன்பாட்டுக்காக உருவாக்கப்பட்ட சிப்பு. மற்ற சிப்புகளைவிட இதை விரைவாக உருவாக்கலாம். மாற்றங்களையும் எளிதாகச் செய்யலாம்.

**ASIS** : ஏஎஸ்ஐஎஸ்; அசிஸ் : தகவல் அறிவியலுக்கான அமெரிக்க சங்கம் என்பதைக் குறிக்கும் American Society for Information Science என்பதன் குறும் பெயர்.

**ASM** : ஏஎஸ்எம் : முறைமை மேலாண்மைச் சங்கம் என்பதைக் குறிக்கும் Association for Systems Management என்பதன் குறும்பெயர்.

**aspect card** : ஆவண எண் அட்டை : தகவல் பெறும் அமைவில் உள்ள ஆவணங்களின் எண்கள் அடங்கிய அட்டை.

**aspect - oriented program - ming** : விவரண நோக்கு நிரலாக்கம்.

**aspect ratio** : வடிவ விகிதம் : ஒரு கணினி வரைபடத்தில் காட்சித்திரை அல்லது பட வரம்பின் உயரத்துக்கும், அகலத்துக்கும் உள்ள விகிதம்.

**ASR** : ஏஎஸ்ஆர் : தானியங்கு முறையில் செய்தி அனுப்புதல் மற்றும் பெறுதலுக்கான Automatic Send/Receive என்பதன் குறும்பெயர்.

**assemble** : இணை; தொகு : கணினி நிரல் தொகுப்பு ஒன்றுக்காக தரவுகளை சேகரித்து, பொருட்படுத்தி ஒருங்கிணைத்தல். தரவுகளை கணினி மொழிக்கு மாற்றி, அதனை கணினி பின்பற்றுவதற்காக இறுதி நிரல் தொகுப்புக்குள் இணைத்தல்.

**assembler** : சில்லு மொழி மாற்றி; சிப்பு மொழி பெயர்ப்பி : இது ஒரு மொழி பெயர்ப்பி. கணினியைக் கையாளும் ஒருவர் தயாரித்த எந்திர மொழியில் இல்லாத நிரல்களை ஏற்று, அதனை கணினி பயன்படுத்தக்

கூடிய எந்திர மொழி வடிவத்துக்கு மாற்றுவது.

**assembler directive** : சிப்பு மொழி மாற்றி நெறியுறுத்தம் : ஒரு சிப்பு மொழி நிரலில் தரப்படும் மாற்றி. இதனை அடையாளம் கண்டு அதன்படி செயல்படும்.

**assembling** : தொகுத்தல் : ஒரு குறியீட்டு ஆதார மொழி நிரல் தொகுப்பை ஒன்றின் பின் ஒன்றாக எந்திர மொழியாக ஒரு கணினியில் மாற்றும் தன்னியங்கு நடைமுறை.

**assembly** : தொகுப்பு; சேர்ப்பு : ஒருங்கிணைந்த மின்சுற்றை கம்பிகளால் இணைத்து ஒரு அமைப்புக்குள் கொண்டு வரும் செயல்.

**assembly language** : சில்லு மொழி; சிப்பு மொழி: இலக்கக் குறியீட்டு ஆணைகளுக்குப் பதிலாக குறியீட்டுச் சொற்களை (mneumonic codes) கொண்டு எழுதப்படும் கணினி மொழி.

**assembly listing** : தொகுப்புப் பட்டியல்: தொகுப்பி ஒன்றினால் தயாரிக்கப்பட்ட அச்சுத் தயாரிப்பு.

**assembly programme** : தொகுப்பு மொழி நிரல்: சிப்பு மொழி நிரல்.

**assertion** : உறுதிப்படுத்துதல் : மதிப்பீட்டை உண்மையாக்கும் ஒரு பூலியன் வாக்கியம்.

**assign** : மதிப்பிருத்து; குறித்தளி.

**assigned number** : குறித்தளித்த எண்.

**assign macro** : குறுநிரல் குறித்தளி.

**assignment** : குறித்தளித்தல்; மதிப்பிருத்தல்.

**assignment operator** : மதிப்பிருத்தும் செயற்குறி; மதிப்பிருத்தும் செய்முறைக் குறி; மதிப்பிருத்தும் இயக்கி : ஒரு மாறியில் (variable) அல்லது ஒரு தரவுக் குழுவில் (data structure) ஒரு மதிப்பை இருத்தி வைக்கப் பயன்படும் செயற்குறி அல்லது குறியீடு. பெரும்பாலும் = என்னும் அடையாளம் இப்பணிக்குப் பயன்படுத்தப்படுகிறது.

**assignment statement** : மதிப்பிருத்தல் கூற்று: ஒரு மாறியில் (variable) ஒரு குறிப்பிட்ட மதிப்பினை இருத்தப் பயன்படும் கட்டளை.

**associate** : உறவுபடுத்து; தொடர்புறுத்து : ஒரு கோப்பின் குறிப்பிட்ட வகைப்பெயர் (extension) ஒரு குறிப்பிட்ட பயன்பாட்டுத் தொகுப்புடன் உறவுடையது என்று இயக்க முறைமை (operation system) -க்கு அறிவித்தல். ஒரு கோப்

பினைத் திறக்கும்போது, அக் கோப்பின் வகைப்பெயர் அடிப்படையில் குறிப்பிட்ட பயன்பாடு முதலில் இயக்கப் பட்டுப் பிறகு அந்தக் கோப்பு அந்தப் பயன்பாட்டினுள் திறக்கப்படும். எடுத்துக் காட்டாக, விண்டோஸ் இயக்க முறைமையில் .doc என்னும் வகைப் பெயருள்ள கோப்பு களைத் திறக்க ஆணையிட்டால், முதலில் வேர்டு இயக்கப்பட்டு அதனுள் அக்கோப்பு திறக்கப் படுவதைக் காணலாம்.

**associated document : இணைவு ஆவணம்.**

**Association for Computing Machinery (ACM) : கணினி எந்திரவியலார் சங்கம் :** 1947ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட அமைப்பு. தகவல் தொழில் நுட்ப வல்லுநர்களின் அறிவு மற்றும் தொழில்நுட்ப மேதமையை மேம் படுத்துவதை நோக்கமாகக் கொண்டு இச் சங்கம் அமைக்கப்பட்டது.

**Association for Systems Management (ASM) முறைமை மேலாண்மைச் சங்கம் :** முறைமை மேலாண்மை மற்றும் தகவல் செயலாக்கத் துறையில் விரைவாக ஏற்படும் வளர்ச்சி மாற்றம் ஆகியவற்றை உறுப்பி னர்களுக்கு அறிமுகப்படுத்தலில் ஈடுபடும் பன்னாட்டுச் சங்கம். 1947இல் இச்சங்கம் உரு வாக்கப்பட்டது. அது ஐந்து தொழில் நுணுக்கப் பகுதிகளைக் கொண்டது. தரவுப் பரிமாற்றம் தரவு செயலாக்க மேலாண்மை, தரவு முறைமை, முறைமைக்குத் திட்டமிடல் மற்றும் எழுத்து மூலமான தகவல் பரிமாற்றம். உறுப்பினர்கள் இப்பிரிவுகளில் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற் பட்ட பிரிவுகளைச் சேர்ந்தவர் களாக இருக்கலாம்.

**Association of C and C++ users : சி மற்றும் சி++ பயனா ளர்கள் சங்கம்:** கணினி நிரலாக்க மொழிகளான சி, சி++ மற்றும் அவற்றின் உறவு மொழிகளில் ஆர்வமுள்ளவர்களின் சங்க அமைப்பு. இம்மொழிகளின் தொழில்முறை நிரல் வரை வாளர்கள், இவற்றின் மொழி மாற்றிகளை (compilers) உருவாக்கும்/விற்பனை செய்யும் வணிகர்கள், தொழில் முறை அல்லாத நிரல் வரைவு ஆர் வலர்கள் ஆகியோர் இச்சங்க உறுப்பினர்கள்.

**associative array : சார்புக் கோவை :** கணினி பெர்ல் (perl) மொழியில்ஒரு தரவு இனம்.

**associative computer : சார்புக் கணினி :** சார்பு நினைவகத்தைக் கொண்ட கணினி.

**associative dimensioning : சார்புப் பரிமாணம் அமைத்தல் :** பரிமாணப் பொருள்களில் பயனாளர் செய்யும் மாற்றங் களுக்கேற்ப நிரலானது தானாகவே பரிமாணப் பொருள்களில் மாற்றம் செய்து கொள்ளும் செயல்முறை.

**associative memory: சார்பு நினைவகம் :** ஒரு சேமிப்புச் சாதனம். இதன் சேமிப்பு இருப்பிடங்களை அவற்றின் உள்ளடக்கங்களைக் கொண்டே அடையாளம் காண முடிகிறது.

**associative retrieval : சார்பு மீட்பு; இணை மீட்பு.**

**associative store : சார்புறு சேமிப்பு.**

**associative storage : சார்பு சேமிப்பு :** இதன் நினைவிடங்கள் அதன் உள்ளடக்கத்தினால் அறியப் படுகின்றன. (இது பெரும் பாலான கணினி சேமிப்புகளில் பெயர் அல்லது எண்ணால் நினைவிடத்தைக் குறிப்பிடு வதற்கு மாறானது). உள்ளடக்க முகவரி நினைவகம் என்றும் தேடல் நினைவகம் என்றும் குறிப்பிடப்படுகின்றன.

**assumed decimal point :** எடுபதின்மப் புள்ளி; கற்பனைப் பதின்மப் புள்ளி.

**astable:** நிலையற்ற : மின்னணு மின் சுற்றுகளில் மாறிக் கொண்டிருக்கும் நிலை. ஒரு நிலையில் இருந்து தொடர்ச்சியாக வேறொரு நிலைக்கு மாறிக் கொண்டே இருத்தல். மின்னணுக் கடிகாரங்களில் பயன் படுத்தப்படும் நேரம் அமைக்கும் மின்னணுச் சாதனம் மற்றும் கணினி கடிகாரத்துக்கும் இதுவே அடிப்படை.

**asterisk : உடுக்குறி :** பல கணினி மொழிகளில் பெருக்கல் செயற்குறியாக பயன்படும் குறியீடு.

**astomisher :** வியப்பாளி.

**astronomy : வானவியல் :** நட்சத்திரங்கள், கோள்கள் பற்றி மின்னணுத் தகவல் தொடர்பு முறையில் ஆராயும் அறிவியல்.

**asymmetrical transmission : செஞ்சீரிலா செலுத்துகை; சமச்சீரற்ற அனுப்பீடு :** அதிவேக இணக்கிகளில் (modems) பயன் படுத்தப்படும் அனுப்பீட்டு முறை. குறிப்பாக வினாடிக்கு 9,600 துண்மி(பிட்)கள், அதற்கும் அதிகமாக அனுப்பவல்ல இணக்கிகளில் இம்முறை செயல் படுத்தப்படுகிறது. இம்முறையில் ஒரே நேரத்தில் தகவலை வெளிச் செலுத்தவும் உள்வாங்கவும் முடியும். தொலைபேசித் தகவல் தடத்தின் அலைக் கற்றையை இரு பாதைகளாக்கி

ஒன்றில் 300 முதல் 450 துண்மிகள் (வினாடிக்கு) வரையும் இன்னொரு பாதையில் 9,600 துண்மிகள் அல்லது அதற்கும் அதிகமான வேகத்தில் தகவல் பரிமாற்றம் நடைபெறும்.

**asymmetric digital subscriber line : செஞ்சீரிலா இலக்கமுறை சந்தாதாரர் தகவல் தடம் :** சாதாரணமான முறுக்கிய இணை தொலை பேசிச் செப்புக் கம்பிகள் வழியாகவே ஒளிக் காட்சிச் சமிக்கை உட்பட மிகுவேக இலக்க முறைத் தகவல் தொடர்பைச் சாத்தியமாக்கும் வகையில் தொழில் நுட்பமும் சாதனங்களும் மேம்பட்டுள்ளன. இறங்கு திசையில் வினாடிக்கு மெகா துண்மி (மெகாபிட்)கள் வரையிலும், ஏறு திசையில் 800 கிலோ துண்மி (பிட்)கள் வரையிலும் தகவல் பரிமாற்றம் இயலும்.

**asymmetric key cryptography : ஒழுங்கற்ற விசை, மறைக் குறியியல்.**

**asymmetric modem : ஒருங்கிலா இணக்கி (மோடெம்) :** இருபுற தகவல் பரிமாற்றம் செய்யும் மோடெம். வெவ்வேறு திசைகளில் வெவ்வேறு வேகத்தில் தகவல்களை அனுப்பக் கூடியது. சான்றாக ஒப்புதல்கள் ஒரு திசையில் மெதுவாக அனுப்பப்படும். ஆனால் தகவல் அதிக வேகத்தில் வேறொரு திசையில் அனுப்பப்படும்.

**asymmetric multiprocessing: ஒருங்கிலா பல்முனைச் செயலாக்கம் :** ஒரு மையச் செயலகம் குறிப்பிட்ட பணிக்கு மட்டும் என்று ஒதுக்கப்பட்டுள்ள பல்முனை செயலாக்க வடிவமைப்பு.

**asymmetric system : ஒழுங்கிலா முறைமை :** பெரிய பாகங்கள் அல்லது தன்மைகள் வெவ்வேறாக உள்ள கணினி அமைப்பு. ஒளிக்காட்சி நெருக்குதலில், தகவல்களை நெருக்குவதற்கு அதிகக் கருவிகள் தேவைப்படுகின்ற அமைவு.

**asynchronous : நேரச்சீரிலி :** ஒரு வகை தரவுத் தொடர்புடன் தொடர்புடையது. எழுத்துகள் அனுப்பப்படும் பொழுது ஒன்றுக்கும் மற்றொன்றுக்கும் இடையே மாறுபடும் நேர இடைவெளி கொண்டது.

**asynchronous communication : ஒத்தியங்காத் தகவல் தொடர்பு; நேரச் சீரற்ற தொடர்பு; ஒத்திசைவில்லாத தகவல் தொடர்பு.**

**asynchronous computer : நேரச் சீரற்ற கணினி :** முன் செயல் நிறைவடைந்தால்

உருவாக்கப்படும் சமிக்கையைத் தொடர்ந்து அல்லது செயலாக்கத்துக்குச் சாதனம் கிடைக்கும்பொழுது அடுத்த செயல் தொடரும் கணினி. நேர்ச்சீர்க் கணினிக்கு இது மாறானது.

**asynchronous data transmission : நேரச் சீரிலா தகவல் அனுப்புகை; ஒத்தியங்கா தகவல் அனுப்புகை.**

**asynchronous device : நேரச் சீரற்ற சாதனம் :** தகவல் தொடர்பு கொள்ளும் கணினி அமைப்புக்கு வெவ்வேறு இடைவெளிகளில் சமிக்கைகளை அனுப்பிடும் சாதனம்.

**asynchronous input : ஒத்தியங்கா உள்ளீடு; நேரச்சீரிலா உள்ளீடு :** கணினியின் நேரச்சீரிலா உள்ளீட்டுத் தகவல்.

**asynchronous mode : நேரச் சீரிலா பாங்கு :** ஒரு செயல் முடிந்த பிறகே அடுத்ததைத் தொடங்க அனுமதிக்கும் முறையில் செயலாற்றும் கணினி. ஒரே நேரச்சீர்க் கணினியில் உள்ளது போல் ஒரு செயலைச் செய்ய அடுத்த நேரத் தொடக்கம் வரை காத்திருக்க வேண்டியதில்லை.

**asynchronous operation : ஒத்தியங்காச் செயல்பாடு :** கடிகாரம் போன்ற ஒரு நேரச் சாதனத்தை சாராமல் தனித்தியங்கும் ஒரு செயல்பாடு. எடுத்துக்காட்டாக, இரண்டு இணைக்கிகள் தமக்குள் ஒத்தியங்காத் தகவல் பரிமாற்றம் செய்து கொள்ளும்போது நேரக் கணக்கின்படி தகவலை அனுப்புவதில்லை. தொடங்கு, நிறுத்து என்னும் சமிக்கையை ஒன்றுக்கொன்று அனுப்பி தமக்குள் சீராகத் தகவலை பரிமாறிக் கொள்கின்றன. ஒத்தியங்கு செயல்பாட்டுடன் ஒப்பிடுக.

**asynchronous procedure call : ஒத்தியங்காச் செயல்முறை அழைப்பு :** செயல்பட்டுக் கொண்டிருக்கும் ஓர் நிரல் தொடரில், ஒரு செயல்கூறு இயக்கப்படுவதற்கான நிபந்தனைகள் நிலவும்போது, அச் செயல்கூறு அழைக்கப்பட்டுச் செயல்படுத்தப்படும். அந்த நிரல் தொடர் இயங்காத போதும், அதேபோன்ற நிபந்தனைகள் நிலவுமெனில், இயக்க முறைமையின் கருவகம் (kernel) ஒரு மென்பொருள் குறுக்கீட்டை நேரடியாக வழங்கி, அந்த நிரல் தொடரை இயக்கி அதிலுள்ள செயல் கூற்றையும் அழைத்துச் செயல்படுத்தும்.

**asynchronous protocol : நேரச் சீரிலி நெறிமுறை :** நேரச் சீரிலா முறையில் தகவல் அனுப்புவதைக் கட்டுப்படுத்தும் தகவல் தொடர்பு நெறிமுறை.

**asynchronous terminal** : ஒத்தியங்கா முனையம்; நேரச் சீரிலா முனையம்.

**Asynchronous Transfer Mode** : நேரச் சீரிலா பரிமாற்றுப் பாங்கு.

**asynchronous transmission** : நேரச் சீரிலா அனுப்புகை : ஒவ்வோர் எழுத்தும் தனித் தன்னிறைவு அலகாக அமைந்து தனக்கென தொடக்க, முடிவு துண்மிகளைக் கொண்டதாக தரவுகளை அனுப்பும் முறை. ஒவ்வொரு எழுத்துக்கும் இடையில் உள்ள இடைவெளி வெவ்வேறாக இருக்கும். கணினிக்கும், மோடெத்துக்கும் இடையில் இத்தகைய தரவு அனுப்பும் முறையே உள்ளது. ஒரு மோடெம் வேறொன்றுக்குத் தரவுகளை அனுப்பும் போது நேரச் சீர்மையைக் கடைப் பிடிக்கலாம்.

**ATA** : ஏடீஏ : 'உயர்நிலைத் தொழில்நுட்ப உடன் இணைப்பு' என்று பொருள்படும் Advanced Technology Attachment என்பதன் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஐடிஇ நிலைவட்டு இயக்கத் துக்கு அன்சிக் குழுமத்தின் எக்ஸ் எஸ்டீ10 குழு தந்த முறைப்படியான பெயர் இது. ஏடீ உடனிணைப்பு என்றும் இதற்குப் பெயர்.

**ATA hard disk drive card** : ஏடீஏ நிலைவட்டு இயக்கக அட்டை : ஏடீஏ நிலைவட்டு இயக்கத்துக்கான கட்டுப்பாடு இடைமுகமாய் பயன்படும் விரிவாக்க அட்டை. இவை பெரும்பாலும் ஐஎஸ்ஏ செருகுவாய்களில் பொருத்தப்படும் அட்டைகளாக இருக்கும்.

**ATA/IDE hard disk drive** : ஏடீஏ/ஐடிஇ நிலைவட்டகம்/நிலைவட்டு இயக்ககம் : ஐடிஇ (IDE-Intergrated Drive Electronics), ஏடீஏ (AT Attachment) ஆகிய இரண்டும் ஒரே தொழில் நுட்பத்தையே குறிக்கின்றன. ஒரு வட்டகத்தின் கட்டுப்பாட்டுச் சாதனத்தையும் வட்டகத்தோடு ஒருங்கிணைக்கும் வட்டு இயக்கக வடிவமைப்பாகும். இதன்மூலம் இடைமுகத்துக் கான செலவு குறைகிறது.

**Atanasoff-Berry Computer (ABC)** : அடனாசோஃப்- பெர்ரி கணினி : முதல் மின்னணு கணினி. டாக்டர் ஜான் வின்சென்ட் அடனாசோஃப் மற்றும் கிளிஃபோர்டு பெர்ரி ஆகியோரால் உருவாக்கப்பட்டது. தகவல் சேமிப்பு மற்றும் கணிப்புகளுக்கு வெற்றிடக் குழாய்களைப் பயன்படுத்தியது.

**Atanasoff John V** : அடனா சோஃப் ஜான் வி : 1939இல் தன்

உதவியாளர் கிளிப் ஃபோர்டு பெர்ரி உதவியுடன் முதல் மின்னணுவியல் இலக்கமுறைக் கணினியைக் கண்டுபிடித்தவர். கணிதச் சிக்கல்களுக்குக் கணினியில் தீர்வு காண்பதில் அவர் ஆர்வம் கொண்டிருந்தார்.

**ATAPI : அட்டாப்பி :** குறு வட்டுச் சாதனங்களைக் கையாள, ஐபிஎம் பீசி ஏடீ கணினிகளில் பயன்படுத்தப்படும் இடைமுகச் சாதனம்.

**Atari : அட்டாரி :** தனியார் கணினிகள் மற்றும் இணைப்புச் சாதனங்கள் வரிசையில் புகழ்பெற்ற நிறுவனம். தொடங்கியதிலிருந்தே அமெரிக்க நிறுவனமாக உள்ளது.

**at birth : பிறக்கும்போது.**

**AT bus : ஏடீ மின்வழித்தடம்; ஏடீ மின்பாட்டை :** ஐபிஎம் ஏடீ மற்றும் அதன் ஒத்தியியல்புக் கணினிகளில் தாய்ப்பலகையுடன் புறச் சாதனங்களை இணைக்கும் மின்வழித் தடம். முன்பிருந்த பீசி மின்பாட்டை 8 துண்மி (பிட்)களையே ஏந்திச் செல்லும். ஏடீ மின் பாட்டையில் 16 துண்மிகள் (பிட்கள்) ஒருசேரப் பயணம் செய்ய முடியும். இது விரிவாக்க மின் பாட்டை என்றும் அழைக்கப்படுகிறது.

**at death : இறக்கும்போது.**

**ATDP : ஏடீடிபீ :** எண் சுழற்றுத் துடிப்புகளைக் கவனி என்று பொருள்படும் Attention Dial Pulse என்ற சொல்தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஹேய்ஸ் மற்றும் ஹேய்ஸ் ஒத்தியல்பு இணக்கிகளில் துடிப்புமுறை எண் சுழற்றலைத் தொடக்கி வைக்கும் கட்டளை.

**ATDT : ஏடீடிடீ :** எண்சுழற்று ஒலியைக் கவனி என்று பொருள்படும் Attention Dial Tone என்ற சொல்தொடரின் தலைப்பெழுத்துச் சுருக்கம். ஹேய்ஸ் மற்றும் ஹேய்ஸ் ஒத்தியல்பு இணக்கிகளில் ஒலிமுறை எண் சுழற்றலைத் தொடங்கி வைக்கும் கட்டளை.

**atlas: அட்லாஸ் :** டிரான்சிஸ்டர்களை வைத்து உருவாக்கப்பட்ட இரண்டாம் தலைமுறைக் கணினிகளில் புகழ்பெற்றது.

**ATM: ஏடீஎம் :** 'தன்னியக்கப் பணப் பொறுப்பு எந்திரம்' எனப் பொருள்படும். Automatic Teller Machine என்பதன் குறும்பெயர்.

**ATM Forum : ஏடீஎம் மன்றம் :** 1991ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டது. தகவல் தொடர்பு மற்றும் கணினித்துறை சார்ந்த 750 குழுமங்கள், அரசு முகமைகள் மற்றும் ஆய்வுக் குழுக்கள்

இதன் உறுப்பினர்கள். தகவல் பரிமாற்றத்தில் ஒத்தி யங்கா அனுப்பீட்டு முறையை முன் னேற்றுதல் இம்மன்றத்தின் குறிக்கோள்.

**atom : ஆட்டம்** : தரவு அமைப்புகளை உருவாக்கு வதற்கான அடிப்படை அலகு. கோப்பில் உள்ள ஒரு ஏடு போன்றது. அதில் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட தரவுகள் இருக்கலாம்.

**atomic : அணுநிலை.**

**atomic indivisible : பகுக்க இயலா அணுத்தன்மையுள்ள** : ஒரு அணுச் செயல் அணுத் தன்மை என்றால் ஒரு செயலை முழுவதுமாகச் செய்ய வேண்டும் அல்லது செய்யாமல் இருக்க வேண்டும். சான்றாக, எந்திரக் கோளாறின் காரண மாக, ஒரு பரிமாற்றம் முடிவது தடைபடுமானால், கணினி அமைப்பு அந்தப் பரிமாற்றம் தொடக்கத்தில் இருந்த நிலைக்கு மீண்டும் சென்று விடும்.

**atomicity : அணுத்தன்மை** : எதையும் எந்த அளவுக்குப் பகுக் கலாம் என்பதைக் கூறுவது.

**atomic operation : அணுச் செயல்பாடு** : மேலும் சிறிய செயல்களாகப் பகுக்க முடியாத செயல்.

**attach : இணை** : கணினி ஒன்றின் திறனைக் கூட்ட புறச் சாதனம் ஒன்றைச் சேர்த்தல்.

**atomic resolution storage : அணு முறை சேமிப்பு.**

**attached document : உடனி ணைக்கப்பட்ட ஆவணம்** : ஒரு மின்னஞ்சல் செய்தியுடன் உடனிணைப்பாக அனுப்பி வைக்கப்படும் ஓர் ஆவணம். ஆஸ்கி உரைக் கோப்பு, இருமமொழிக் கோப்பு, ஒரு வரைகலைப் படக் கோப்பு, ஓர் இசைப் பாடல் கோப்பு, ஓர் ஒளிக் காட்சிக் கோப்பு, ஒரு மென் பொருள் தொகுப்பு- இவற்றுள் எதை வேண்டுமானா லும் மின்னஞ்சல் செய்தியுடன் இணைத்து அனுப்ப முடியும். வேறுவேறு பயன்பாட்டுத் தொகுப்புகளில் உருவாக்கப் பட்ட ஆவணங்களாக இருக்க லாம். இணைக்கப்படும் ஆவணங்கள் மின்னஞ்சல் செய் தியின் ஒரு பகுதியாகக் கருதப் படுவதில்லை. அவை மைம் (MIME), பின்ஹெக்ஸ் (BINHEX) என்ற முறையில் மாற்றுக் குறியீடாக்கப்பட்டு அனுப்பி வைக்கப்படுகின்றன. பெரும் பாலான மின்னஞ்சல் தொகுப்பு கள் தாமாகவே இம் மாற்றத்தை செய்து அனுப்பும் திறன் பெற்றுள்ளன. மின்னஞ்சலைப்

பெறுபவர் பயன்படுத்தும் மின்னஞ்சல் தொகுப்பு இந்த ஆவணங்களை மீண்டும் மூல வடிவுக்கு மாற்றும் திறன் படைத்ததாக இருக்க வேண்டும். இல்லையேல் அதற்கென உள்ள மென்பொருளை பயன் படுத்தி மாற்றிக்கொள்ள வேண்டும்.

**attached processor : உடனிணை; இணைக்கப் பட்ட செயலி :** *வேலைகளைச் செய் வதில் உதவுவதற்காக ஒரு தலைமை கணினியுடன் இணைக்கப்பட்ட செயலி. பல் செயலாக்கச் சூழ்நிலையில், தலைமை செயலக அமைவுடன் சேர்க்கப்பட்ட கூடுதல் மையச் செயலகம். தலைமைச் செயல் அமைவுடன் சேர்ந்து செயல் பட்டு கணினி அமைப்பின் மென் பொருள் மற்றும் வெளிப் புறச் சாதனங்களைப் பகிர்ந்து கொள்கிறது.*

**attachment : உடனிணைப்பு.**

**attachment encoding : உடனி ணைப்புக் குறி முறையாக்கம்.**

**attended operations : கவனிக்கப்பட்ட செயற்பாடு; கவனிக்கப்பட்ட செயலாக்கம்.**

**attention key : கவன விசை :** *கணினி முனையத்தில் உள்ள ஒரு பணி விசை. அப்போது செய்து கொண்டிருக்கிற வேலையில் தடையிடுமாறு, கணினிக்கு இது சமிக்கை அளிக்கும்.*

**attenuation : தேய்வு :** *சமிக்கை ஒன்றின் அளவு அது கட்டுப் பாட்டு அமைவு வழியாகச் செல்லும் பொழுது குறைதல்.*

**attrib : அட்ரிப் :** *டாஸ் கட்டளை களில் ஒன்று. ஒரு கோப்பின் பண்புகூறை மாற்றுவது.*

**attribute : பண்புக்கூறு :** *1. மாறிலி ஒன்றைக் கணினி கையாளும் முறை. 2. தரவு மாதிரி ஒன்றின் இனங்காட்டும் பண்பு. தரவு அமைவு ஒன்றின் அடிப்படை அலகு. 3. ஒரு கருவி ஒன்றின் பண்பு.*

**attribute byte : பண்புக்கூறு பைட் :** *வட்டுக் கோப்பில் உள்ள சேமிக்கப்பட்ட தரவைக் குறிப்பது. அக் கோப்பில் உள்ள பண்பு கூறுகளை இது குறிப் பிடுகிறது.*

**attribute inheritance : மரபுரிமப் பண்பு; பண்புக் கூறு; மரபுரிமம்.**

**attribute representations : பண்புக் கூறு உருவகிப்புகள்.**

**ATX : ஏடீஎக்ஸ் :** *1995ஆம் ஆண்டில் இன்டெல் நிறுவனம் அறிமுகப்படுத்திய தாய்ப்பலகை யின் கட்டமைப்புகள் தொடர்*

பான தரக்கோட்பாடுகள். கேட்பொலி மற்றும் ஒளிக் காட்சித் திறன்கள் உள் இணைக்கப்பட்ட தாய்ப்பலகை பற்றியவை. அனைத்துச் செருகுவாய்களிலும் முழு நீளப் பலகைகளையும், யுஎஸ்பி துறைகளையும் ஏடீஎக்ஸ் ஏற்க வல்லது.

**audio : கேட்பொலி** : மனிதரால் கேட்கக் கூடிய ஒலி.

**audio board : கேட்பொலி அட்டை** : தனிநபர் கணினி விரிவாக்க அட்டை. ஒலியை உருவாக்கி வெளியில் உள்ள சிறிய ஒலிபெருக்கிகளுக்காக அதைப் பெரிதாக்கித் தருகிறது. ஒலி அட்டை (sound card) என்றே பெரிதும் அழைக்கப்படும்.

**audio card : கேட்பொலி அட்டை** : கணினியின் தாய்ப் பலகையில் பொருத்தக் கூடிய விரிவாக்க அட்டை. தொடர்முறை (analog) வடிவிலான கேட்பொலிச் சமிக்கைகளை இலக்கமுறைக்கு மாற்றி, கணினியில் கோப்புகளாகப் பதிவு செய்யவும், கணினிக் கோப்புகளை மின்காந்த சமிக்கைகளாக மாற்றி ஒலி பெருக்கி மூலம் கேட்பொலியாகத் தரவும் இவ்வட்டை பயன்படுகிறது. கணினியில் இணைக்கப்பட்ட ஒலிவாங்கி மூலம் கேட்பொலியை உள்ளீடாகத் தர முடியும். வெளியீட்டு ஒலியை ஒலிபெருக்கி மற்றும் தலைபேசி (headphone) மூலமாகக் கேட்க முடியும். கேட்பொலிக் குறுவட்டுகள், ஒலிநாடாக்கள் மற்றும் இணையத்திலிருந்தும் ஒலியை/ இசையை/ பாடலைக் கேட்பதற்கு கேட்பொலி அட்டைகள் உதவுகின்றன. இவை ஒலி அட்டை, ஒலிப்பலகை, கேட்பொலிப் பலகை என்றும் அழைக்கப்படுகின்றன.

**audiocast : கேட்பொலி பரப்புகை** : இணைய நெறி முறை எனப்படும் ஐபீ நெறி முறையைப் பயன்படுத்தி கேட்பொலிச் சமிக்கைகளைப் பரப்புதல்.

**audio cassette : கேட்பொலிப் பேழை; ஒலிப் பேழை.**

**audio CD : ஒலிக் குறுவட்டு; கேட்பொலிக் குறுவட்டு.**

**audio compression : கேட்பொலி இறுக்கம்** : கேட் பொலிச் சமிக்கைகளின் ஒட்டுமொத்த சத்த அளவைக் குறைப்பதற்கான வழிமுறை. ஒரு கேட்பொலிச் சமிக்கையை ஓர் ஒலி பெருக்கி மூலமாக ஒலிபரப்பும் போதோ, தகவல் தொடர்பு ஊடகம் வழியாக அனுப்பிடும் போதோ ஏற்படும்

மேலோட்டமான சிதைவின் அளவும் இம்முறையில் கட்டுப் படுத்தப்படுகிறது.

**audio conferencing** : **ஒலிச் சொல்லாடல்; கேட்பொலிச் சொல்லாடல்.**

**audio data** : **கேட்பொலி தரவு** : ஒலியை இலக்கமாக்கியபின் வெளிப்படும் தரவு.

**audio device** : **கேட்பொலிக் கருவி** : ஒலியை ஏற்கும் அல்லது உருவாக்கும் கணினிக் கருவி.

**audio editor programmes** : **ஒலித் தொகுப்பு நிரல்கள்.**

**audio file** : **கேட்பொலிக் கோப்பு.**

**audio input** : **கேட்பொலி உள்ளீடு** : ஒரு கணினியில் தரவுவை உள்ளீடு செய்ய ஒலியைப் பயன்படுத்துவது.

**audio graphics** : **கேட்பொலி வரை கலை; ஒலி வரையம்.**

**audio monitor** : **கேட்பொலிக் கண்காணி.**

**audio output** : **கேட்பொலி வெளியீடு** : மனிதக் குரல் போன்ற ஒலிச் சமிக்கைகளை உருவாக்கக்கூடிய ஒலி இயற்றி களினால் உருவாக்கப்படும் கணினி வெளியீடு.

**audio output port** : **கேட்பொலி வெளியீட்டுத் துறை** : இலக்க முறையிலிருந்து தொடர் முறைக்கு மாற்றும் மின்சுற்று. இதுதான் கணினியிலுள்ள தகவலைக் கேட்பொலியாக மாற்றித் தருகிறது. இம் மின் சுற்று, ஒலி பெருக்கி, பேச்சொலி பெருக்கி ஆகியவற்றுடன் இணைந்து பயன்படுத்தப்படுகிறது.

**audio properties** : **கேட் பொலிப் பண்புகள்**

**audio response** : **கேட்பொலி மறுமொழி** : ஒரு குறிப்பிட்ட வகை உள்ளீட்டைப் பெற்றுக் கொண்டு, கணினி உருவாக்கும் ஒலி-குறிப்பாக பேச்சொலி வெளியீடு. இத்தகைய வெளி யீடு, இலக்க முறைப்படுத்திய அகராதியிலுள்ள சொற்களின் கூட்டாகவோ, அட்டவணை யிலுள்ள ஒலியன்களின் கூட் டிணைவாகவோ இருக்கலாம்.

**audio response device** : **கேட் பொலிப் பதிலுரைச் சாதனம்** : பேசப்படும் குரல் போன்ற எதிர்விளைவை உருவாக்கும் வெளியீட்டுக் கருவி. ஒலி வெளி யீடு என்பதைப் பார்க்கவும்.

**audio response output** : **கேட் பொலி பதிலுரை வெளியீடு** : ஒலியாக அல்லது பேசும் மொழி யாக கணினியின் வெளியீடு.

**audio response unit** : **கேட் பொலி பதிலுரையகம்** : பேசும்

சொல்லாக வெளியீடு தருகின்ற கணினியின் வெளியீட்டுச் சாதனம்.

**audio signal : கேட்பொலி சமிக்கை** : ஒலி அலைகளைப் பெரிதாக்கி மின்வடிவில் தருவது.

**audio sphere : கேட்பொலிப் புலம்** : மெய்நிகர் தோற்றச் சூழ்நிலையில், பயனாளரின் இருப்பிடம் மற்றும் ஒலி தோன்றுமிடத்திற்கேற்ப ஒலியை முப்பரிமாண முறையில் குறிப்பிடும் அமைப்பு.

**audio system : ஒலி முறைமை; கேட்பொலி முறை.**

**audio tex : ஆடியோடெக்ஸ்** : தொலைபேசி தகவலை அனுப்பவும் பெறவும் அனுமதிக்கும் ஒலி முறையில் பதில் தரும் பயன்பாடு. குரல் வேண்டுகோள்களுக்கேற்ப, பயனாளர்கள் விசையை அழுத்தியோ அல்லது கேள்விகளுக்குப் பதில் கூறியோ தங்களது வழியை பல விருப்பத் தேர்வுகளுக்கிடையில் தேர்ந்தெடுப்பார்கள். நிதி தொடர்பான தரவுகளை அறியவும் பொருள்கள் வாங்க ஆணை தரவும் பயன்படுகிறது. தரவுத் தளங்களை மாற்ற வசதியாக இடைப் பரிமாற்ற அமைப்புகளில் இது உருவாக்கப்பட்டுள்ளது.

**audio visual : ஒலி ஒளி** : நாடாப்பேழைகளுடன் தொடர்புடையது. இவை தகவலை ஒலி மூலமும் ஒளியின் மூலமும் பதிவு செய்கின்றன.

**audit : தணிக்கை** : கணினி இயக்கங்களின் திறனை முடிவு செய்ய, அமைப்புகள், நிரல் தொடரமைத்தல் மற்றும் தரவு மைய நடைமுறைகளைச் சோதித்தல்.

**auditing : கணக்காய்வு** : ஓர் இயக்க முறைமை, கோப்புகள், கோப்பகங்கள் போன்ற உருப் பொருள்களை உருவாக்கவோ, அணுகவோ, அழிக்கவோ முற்படுவதுபோன்ற பாதுகாப்பு தொடர்பான நிகழ்வுகளைக் கண்டறிந்து பதிவுசெய்யும் இயக்க முறைமையின் செயல்பாடு. பாதுகாப்புக் குறிப்பேடு (security log) என்றறியப்படும் ஒரு கோப்பில் அத்தகைய நிகழ்வுகள் பதிவு செய்யப்பட்டிருக்கும். தகுந்த உரிமை பெற்ற பயனாளர்கள் மட்டுமே இக் கோப்பின் உள்ளடக்கத்தை அறிய முடியும்.

**audit of computer system : கணினி முறைமைத் தணிக்கை.**

**audit software : தணிக்கை மென்பொருள்** : தரவுத் தளங்களிலிருந்து மாதிரிகளை எடுப்

பது மற்றும் உறுதி செய்யும் கடிதங்களை வாடிக்கையாளர்களுக்கு அனுப்புவது போன்ற பல தணிக்கைப் பணிகளைச் செய்யும் சிறப்பு நிரல் தொடர்கள்.

**audit trail: தணிக்கைச் சோதனை: தணிக்கைத் தடம்:** ஊடகங்களைக் கொண்டு தரவுச் செயலாக்கத்தின் அனைத்து நிலைகளையும் தேடுதல். மூல ஆவணத்தில் அது இடம் பெறுவதில் துவங்கி இறுதி ஆவணமாக வெளிவரும் வரை அனைத்துச் சோதனைகளும் செய்யப்படும்.

**AUI cable : ஏயுஐ வடம் :** 'உடனிணைப்புச் சாதன இடைமுகக் கம்பி வடம்' என்ற பொருள் தரும் Attachment Unit Interface Cable என்பதன் சுருக்கம். ஓர் ஈதர்நெட் பிணையத்துடன் ஒரு கணினியின் தகவியை (adapter) இணைக்கும் அனுப்பிப் பெறும் வடம்.

**authenticate : சான்றுறுதிப் படுத்து.**

**authentication : சான்றுறுதி; அங்கீகாரமளித்தல் :** ஒரு சிறு தகவல் சரிதானா என்பதைச் சோதித்துப் பார்க்கும் செயல் முறை.

**authenticity : நம்பகப்பண்பு :** தகவல் ஒன்றின் நம்பகத் தன்மை.

**author : படைப்பாளி; ஆசிரியர் :** கணினி வழிக் கற்றலுக்குப் பாடப் பொருளை உருவாக்குபவர்.

**authoring: படைப்பாக்கம்.**

**authoring language : படைப்பாக்க மொழி:** கணினி வாயிலாகக் கற்பிக்கப்படும் பாடங்களையும், தரவுத் தளங்கள் மற்றும் நிரல் தொகுப்புகளையும் உருவாக்குவதற்காக வடிவமைக்கப்பட்ட ஒரு கணினி மொழி அல்லது பயன்பாட்டு உருவாக்க முறைமை. நுண் கணினி பணித்தளம் பொறுத்த வரை, பலரும் அறிந்த எடுத்துக் காட்டு, பாடங்களை உருவாக்கப் பயன்படும் பைலட் (PILOT) மொழியாகும்.

**authoring system : படைப்பாக்க முறைமை :** படைப் பாக்க மொழி ஒன்றினைசெயல்படுத்தும் திறன் கொண்ட கணினி முறைமை.

**authoring system standard : படைப்பாக்க முறைமைத் தரம் :** படைப்பாக்க நிரலைச் செயல்படுத்தும் திறனுள்ள கணினி அமைப்பு. கற்றுக் கொள்ளவும், சிபிடீ நிரலை உருவாக்கவும் அனுமதிக்கும் மென்பொருள்.

**authoring tool** : படைப்பாக்கக் கருவி : பல் ஊடகப் பொருளை உருவாக்க உதவும் மென் பொருள். பல்ஊடகம் வழங்கு தற்குரிய தேவையான சூழ்நிலை யையும் அது உருவாக்கித் தரும்.

**authorised programme** : ஏற்கப் பெற்ற நிரல்.

**authorization** : ஏற்புறுதி; அனுமதி அளித்தல் : செய லாக்கம் நடைபெறுவதற்கு முன்பு குறிப்பிட்ட அனுமதி பெறவேண்டிய கணினி அமைப் பின் கட்டுப்பாட்டுத் தன்மை.

**authorization code** : ஏற்புறுதிக் குறிமுறை; அங்கீகாரக் குறியீடு : கணினி அமைப்பை அணுக அனுமதிக்கும் நுழை சொல் (password) அல்லது அடையாள எண்.

**authorization distribution list** : ஏற்புறுதி விநியோகப் பட்டியல்; அங்கீகரிப்பு விநியோகப் பட்டியல் : குறிப்பிட்ட அறிக் கைகளின், அங்கீகரிக்கப் பட்ட பயனாளரின் பட்டியல். தகுதி பெறுபவர்களுக்கு மட்டுமே பிரதிகள் விநியோகிக்குமாறு கட்டுப்படுத்த உதவுகிறது.

**authorization level** : ஏற்கப் பட்ட ஆணைத் தொடர் மட்டம்.

**authorization programme**: ஏற்புறுதி; அங்கீகரிப்பு நிரல் : ஒரு கணினி அமைப்பின் தகுதி அல்லது அடிப்படை இயக் கத்தை மாற்றக் கூடிய ஒரு கணினி செயல்முறை.

**author language** : படைப்பாக்க மொழி : கணினி வழி கற்பித் தலுக்கான மென் பொருள்களை உருவாக்கப் பயன்படுத்தப்படும் கணினி மொழி.

**authors** : படைப்பாளிகள்; ஆசிரியர்கள் : கணினி வழிக் கற்றலுக்கான பாட முறைமை களை வடிவமைப்போர்.

**author styles** : படைப்பாக்கப் பாணி

**auto answer** :தானியங்குப் பதில் : கணினிகளிலிருந்து வரும் தொலைபேசி அழைப்புகளுக்கு தானியங்கு முறையில் மோடெம் ஒன்றிலிருந்து மற்றொரு கணினிக்கு பதிலை அனுப்புதல்

**auto attendent** : தானியங்கி உதவிப் பொறி : மனிதர்கள் இயக்குவதற்கு மாற்றாகக் குரலை சேமித்து அனுப்பி வைக்கும் அமைப்பு. அழைப் பவர்களைக் குரல் அஞ்சல் பெட்டிகளுக்கு அனுப்பி வைப்பது.

**auto bypass** : தானே ஒதுங்கிப் போதல் : கட்டமைப்பில் உள்ள ஒரு குறிப்பிட்ட முனையமோ அல்லது பிற சாதனமோ

பழுதானால், அதை விடுத்து மாற்று வழியில் போகும் திறன். இதனால் மற்ற சாதனங்கள் தொடர்ந்து இயங்க முடியும்.

**Auto Cad :** ஆட்டோ காட் - ஒரு மென்பொருள் தொகுப்பு.

**auto chart : உடனடி நிரல் படம்;** தானியங்கு வரைபடம்.

**auto code :** தானியங்கு குறிமுறை.

**auto correct : தானாகப் பிழை திருத்தல்; தானியங்கு பிழை திருத்தம் :** விண்டோசில் இயங்கும் மைக்ரோ சாஃப்ட்வேர்டு பணித் தொகுப்பில் இடம் பெற்றுள்ள ஒரு செயல்கூறு. ஓர் ஆவணத்தில் தட்டச்சு செய்து கொண்டிருக்கும்போது, சொல்லில் இருக்கும் எழுத்துப் பிழைகள் தாமாகவே சரி செய்யப் பட்டு விடும். அதுமட்டுமின்றி, தட்டச்சு செய்யப்படும் சில குறியீடுகள்/சொற்கள், முன் கூட்டியே வரையறுக்கப்பட்ட படி பதிலீடு செய்யப்பட்டு விடும். எடுத்துக்காட்டாக, the என்ற சொல்லைத் தவறுதலாக teh என்று தட்டச்சு செய்தோமெனில் அது தானாகவே the என்று மாறிவிடும். விசைப் பலகையிலுள்ள மேற்கோள் குறிகள் ஒரேபுறம் திரும்பிய நிமிர்ந்த குறிகள் ("") ஆகும். இதுபோன்ற ஒற்றை மற்றும் இரட்டை மேற்கோள் குறிகள் ஆவணத்தில் இருபுறம் அடைக்கும் வரைந்த குறிகளாய் ("மற்றும்") மாறிவிடும். பயனாளர் இது போன்ற தானியங்கு பிழை திருத்த/பதிலீட்டு வசதிகளை செயலுமைப்படுத்த வேண்டும்.

**auto dial : தானியங்கு எண் சுழற்றி; தானியங்கு அழைப்பி :** தொலைபேசி இணைப்புடன் பொருந்தக் கூடிய மோடெம். ஒரு தொலைபேசி எண்ணைச் சுழற்றி மோடெமும் தகவல் தொடர்பு மென்பொருளும் முறையான தகவல் தொடர்பு நடைமுறைகளை நிறைவேற்றக் கூடியவை. அதனால் கணினிகளுக்கிடையே தரவுகளைப் பரிமாறிக் கொள்ள முடியும்.

**AUTODIN :** ஆட்டோடின் : தானியங்கு இலக்க முறை பிணையம் எனப் பொருள்படும் AUTOmatic DIgital Network என்பதன் குறும் பெயர். ராணுவ தகவல் தொடர்பு முறையில் தரவுகளைக் கையாளும் பகுதி.

**AUTOEXE.BAT : ஆட்டோ இஎக்ஸ் இ.பேட்; தானியங்கு நிரல் :** எம்எஸ்-டாஸ் இயக்க முறைமையில் பயன்படுத்தப் படும் கோப்பு. நிரல்களடங்கிய தொகுதிக் கோப்பு (batch file). கணினி இயக்கப்படும்போது

தானாக இயக்கப்படும் சிறப்புப் பயன் கோப்பாகும். தொடக்கக் காலப் பதிப்புகளில் பயனாளர் இக் கோப்பினை உருவாக்க வேண்டும். பிந்தைய டாஸ் பதிப்புகளில், இயக்க முறைமை கணினியில் நிறுவப்படும் போதே இக்கோப்பு உருவாக்கப் பட்டுவிடும். பயனாளரின் விருப்பத்திற்கு ஏற்றவாறு முன் நிறுவப்பட்ட சாதன இயக்கி களுடன் கணினியும், இயக்க முறைமையும் தயாரான நிலை யில் இருப்பதற்குரிய நிரல்கள் இந்தக் கோப்பினில் எழுதப் பட்டிருக்கும்.

**autofit : தானாகப் பொருந்த வை.**

**autoflow : முன்னோட்டம் :** ஒரு பக்கத்திலிருந்து அடுத்த பக்கத் திற்குப் போதல் அல்லது வரை கலை உருவத்தைச் சுற்றி வரி களைப் பொருத்துதல்.

**autofont : ஆட்டோ ஃபாண்ட்; தன்னியல்பு எழுத்துரு :** தானே பயிற்சியளிக்கும் ஓசிஆர். பல தரப்பட்ட ஆவணங்களை விரை வாகவும் துல்லியமாகவும் படிக்க வசதியான பல்வேறு வகையான எழுத் தமைப்புகளுக் கேற்ப இது தன்னை சரி செய்து கொள்கிறது.

**auto form : உடனடிப் படிவம்.**

**autohide : தானாக மறைதல்.**

**auto indexing : தானியங்குப் பட்டியலிடல் :** முறைமைப் பட்டியலிடுதல். கூடுதல் தகவல்களை, தரப்பட்டுள்ள முகவரிகளில் ஏதாவது ஒன்றில் கூடுதல் இணைப்பைச் சேர்த்தல்.

**auto - loader : தானியங்கு ஏற்றி :** சிலவிசை - கணினியை பலகை களில் உள்ள விசை - கணினியை செயலுக்குத் தூண்டுவது. முக்கியமாக இயக்க முறை மையை கணினியில் உள்சேமிப் புப் பகுதியில் சேர்த்து கணினி அமைப்பை இயக்கத் தொடங்குகிறது.

**automata : தானியக்கக் கொள்கை :** இயக்கக் கோட் பாடுகள், தானியங்குக் கருவி களைப் பயன்படுத்துதல் பற்றிய கல்வியுடன் தொடர்புடைய கொள்கை.

**automated data processing : தானியங்குத் தரவு செயலாக்கம் :** குறைந்தபட்ச மனித முயற்சி மற்றும் இடையீட்டுடன், தரவுகள் கையாளப்படும். பெரும் பாலும் தானே ஒழுங்குபடுத்திக் கொள்கிற முறை.

**automated flowchart : தானி யங்கு பாய்வு நிரல்படம் :** கணினி கட்டுப்பாட்டில் உள்ள அச்சிடு கருவி அல்லது வரை

கருவியினால் வரையப்படும் நிரல் படம்.

**automated office : தானியங்கு அலுவலகம்** : அலுவலகச் சூழலில் கணினிகள் அலுவலக மின்னணுக் கருவிகள் மற்றும் தொலைத் தகவல் தொடர்புத் தொழில் நுணுக்கம் ஆகியவை இணைவதன் விளைவு. மின்னணுவியல் அலுவலகம் என்பதைப் பார்க்கவும்.

**automatic : தானியங்கி** : சில குறிப்பிட்ட சூழல்களில் இயக்குவோரின் இடையீடு இல்லாமல் இயங்குகிற நடைமுறை அல்லது கருவி தொடர்பானது.

**automatic abstract: தானியங்கிச் சுருக்கம்** : ஒரு ஆவணத்தில் இருந்து முக்கிய சொற்களை நிரலே சுருக்கித் தருவது.

**automatic backup : தானியங்கு காப்பு நகல்.**

**automatic carriage: தானியங்கு நகர்த்தி** : தட்டச்சுப் பொறி அல்லது அச்சிடு கருவி ஒன்றுக்கான கட்டுப்பாட்டுப் பொறியமைவு. அது தானே காகிதம் நகர்த்தல், சொற்களுக்கு இடைவெளி தருதல், வரித்தாள் காகிதத்தை வெளியேற்றுதல் ஆகியவற்றைக் கட்டுப் படுத்துகிறது.

**automatic carriage return : தானியங்கு நகர்த்தி திரும்பல்.**

**automatic check : தானியங்குச் சரிபார்ப்பு**: ஓர் ஆவணத்திலுள்ள சொற் பிழை, இலக்கண பிழைகளை, நிரல், தாமாகவே சரி பார்த்தல்.

**automatic coding : தானியங்கி குறிமுறையாக்கம்** : மொழிமாற்றி போன்ற ஒரு நிரலைப் பயன்படுத்தி சங்கேதக் குறியீட்டிலிருந்து எந்திரக் குறியீட்டை உருவாக்குதல்.

**automatic computer : தானியங்கு கணினி** : ஒரு குறிப்பிட்ட வேலையை செயல் படுத்தும் கணினி. நிரல் தொகுப்பை மாற்றுதல் தவிர வேறு மனிதக் குறுக்கீடு இல்லாமல் செயல்படுத்த வல்லது.

**automatic controller : தானியங்கு கட்டுப்படுத்தி** : உணர் சாதனம் மூலம் வரும் சமிக்கைகளை ஏற்றுக் கொண்டு, ஒழுங்குபடுத்தி, தரவுகளை ஒப்பிட்டு தேவையான திருத்தங்களைச் செய்யும் திறனுள்ள ஒரு கருவி அல்லது சாதனம்.

**automatic data processing : தானியங்குத் தரவுச் செயலாக்கம்** : தரவுகளின் மீது எந்திரங்களைப் பயன்படுத்தி, செயலாக்கி விடை பெறுவது.

**automatic dictionary** : தானியங்கு அகராதி; தானியங்கு அகரமுதலி.

**automatic digital network** : தானியங்கு இலக்கமுறை பிணையம்.

**automatic error correction** : தானியங்கு பிழை திருத்தம் : *தரவு அனுப்புதலில் ஏற்படக் கூடிய அல்லது அமைப்பிலேயே ஏற்படக் கூடிய தவறுகளைக் கண்டுபிடித்து சரி செய்யும் உத்தி.*

**automatic feature negotiation** : தானியங்கு ஏற்புத் தன்மை : *எதிர்முனையில் உள்ள மோடெத்தின் வேகம், பிழை கட்டுப்பாடு மற்றும் தகவல் சுருக்குதல் முறைக்கேற்பத் தன்னை சரி செய்து கொள்ளும் மோடெத்தின் திறன்.*

**automatic hardware dump** : தானியங்கு வன்பொருள் திணிப்பு.

**automatic hyphenation** : தானியங்கி ஒட்டுக்குறியமைத்தல் : *சொற்களின் இடையில் தானாகவே சிறுகோடு அமைக்கும் தன்மை. சொல்செயலி மற்றும் பக்க வடிவமைப்பு மென்பொருள்களில் அதிகம் காணப்படுவது.*

**automatic interrupt** : தானியங்கு இடைமறிப்பு; தானியங்கு குறுக்கீடு.

**automatic loader** : தானியங்கு ஏற்றி : *வன்பொருள் இயக்கத்தைத் தொடங்கி வைக்கும் நிரல்.*

**automatic message switching** : தானியங்குச் செய்தி இணைப் பாக்கம்.

**automatic message switching** : தானியங்குச் செய்தி இணைப் பாக்கம்.

**automatic network switching** : தானியங்கு பிணைய இணைப் பாக்கம்.

**automatic pagination** : தானியங்கி பக்கமமைத்தல் : *செய்தி வரிகளைப் பக்கவாரியாகத் தானாகவே பிரிக்கும் தன்மை. சொல்செயலி மற்றும் பக்க வடிவமைப்பு மென்பொருள்களில் காணப்படுவது.*

**automatic programming** : தானியங்கு நிரலாக்கம் : *1. நிரல் ஒன்றைத் தயாரிப்பதில் சில நிலைப் பணிகளைச் செய்யக் கணினி மூலமே நிரலை உருவாக்குதல். 2. எந்திர மொழி நிரல் ஒன்றை குறியீட்டுத் தொகுப்பின் வழிகாட்டுதலின் பேரில் தயாரித்தல்.*

**automatic quality control : தானியங்கு தரக் கட்டுப்பாடு :** செயலாக்கப்படும் பொருளின் தரத்தை, ஏற்கெனவே நிர்ணயிக்கப்பட்ட தர அடிப்படையில் சோதித்து; நிர்ணயிக்கப்பட்ட தரத்துக்கும் குறைவாக இருக்குமானால், சரி செய்வதற்கான நடவடிக்கையினை மேற்கொள்வதற்கான உத்தி.

**automatic recharge : தானியங்கு மறு மின்னேற்றம்.**

**automatic recovery programme : தானியங்கு மீட்பு நிரல் :** வன் பொருள் செயலிழத்தலின்போது கட்டுப்பாட்டை ஏற்றுக்கொண்டு கணினியை இயங்க வைக்கும் ஒரு நிரல்.

**automatic reformating : தானியங்கு மறுவடிவாக்கம் :** சொல் செயலியில் மாற்றங்களை ஏற்று வரிகளைத் தானாகச் சரிசெய்து கொள்ளல்.

**automatic scrolling : தானியங்கு உருளல் :** ஒரு நீண்ட ஆவணம் கணித் திரையில் கீழ் மேலாக அல்லது மேல் கீழாக உருண்டு செல்லல்.

**automatic shutdown : தானியங்கு பணி நிறுத்தம் :** ஒழுங்கு முறைப்படி பிணையம் (Network) ஒன்றை அல்லது கணினியின் செயல்பாட்டை முழுமையாக ஒழுங்கான முறையில் நிறுத்துவதற்கான மென்பொருள் ஒன்றின் திறன்.

**automatic system reconfiguration : தானியங்கு முறைமை மறுதகவமைப்பு :** ஒரு கணினியில் புதிதாக ஒரு வன்பொருளையோ மென்பொருளையோ சேர்க்கும்போது அல்லது மாற்றும்போது கணினி முறைமை தானாகவே தகவமைத்துக் கொள்ளுமாறு செய்தல்.

**automatic tag reader : தானியங்கிப் படிப்பி :** வட்டமான ஓட்டைகள் உடைய துளையிட்ட அட்டைகளைப் படித்தறியும் ஒரு சாதனம்.

**automatic teller machine (ATM) : தானியங்கிப் பணப் பொறுப்பு எந்திரம் :** வங்கி ஒன்றின் முனையம். அது வாடிக்கையாளருக்கு 24 மணி நேர வைப்பு மற்றும் திரும்பப் பெறும் சேவைகளை வழங்குகிறது. வங்கிக் கணினியுடன் இணைக்கப்பட்ட சிறப்பு நோக்கமுடைய கருவி. தானியங்கிக் கருவியை வாடிக்கையாளர் இயக்க, ஒரு பிளாஸ்டிக் அடையாள அட்டையைச் செருகி, சிறப்பு அனுமதிக் குறியீட்டை குறிப்பிடுகிறார். இதன் மூலம் பணம் எடுக்கவும் தன்

கணக்கு பற்றிய விவரங்களை அறியவும் முடியும்.

automatic typewriter : தானியங்கு தட்டச்சுப்பொறி.

automatic verifier : தானியங்கு சரிபார்ப்பி.

automation : தானியங்கு முறை; தானியங்கி : *1. நடைமுறை ஒன்றை தானியங்கு முறையில் செயல்படுத்துதல். 2. கருவி அல்லது நடைமுறை அல்லது முறைமையினை மனித நோக்கு, முயற்சி அல்லது முடிவுக்கு மாற்றாக, பொறியமைவு அல்லது மின்னணுவியல் கருவி மூலம் தானியங்கு முறையில் கட்டுப்படுத்தும் செயல்.*

automonitor : தானியங்கு கண்காணிப்பி : *1. கணினி நடவடிக்கைகளின் கணினிப் பதிவேடு. 2. கணினி ஒன்றின் செயல்பாட்டு நடைமுறைகளை பதிவு செய்யும் கணினி மென்பொருள்.*

auto outline : தானியங்கு சுற்றுக் கோடு

auto pilot : தானியங்கு விமானி : *விமானம் ஒன்றை அல்லது விண்வெளிக் கலத்தைப் பறக்கச் செய்ய உதவும் கருவி.*

AutoPlay : தானியக்கம் : *குறுவட்டு இயக்ககத்தில் ஒரு குறுவட்டு வைக்கப்பட்டவுடன் தானாகவே இயங்குமாறு அமைக்கப்பட்டுள்ள ஒரு வசதி, விண்டோஸ் 95/98 இயக்க முறைமையில் உள்ளது. அந்தக் குறுவட்டில்* Auto-Run-INF *என்னும் ஒரு கோப்பு இருக்க வேண்டும். குறுவட்டு, இயக்ககத்தில் செருகப் பட்டவுடன், விண்டோஸ் இக்கோப்பினைத் தேடும். (அவ்வாறு தேடும்படி நாம் முன்பே விண்டோசுக்கு அறிவுறுத்தியிருக்க வேண்டும்). அக்கோப்பு இருப்பின் அதில் குறிப்பிட்டுள்ள கட்டளைகளின்படி விண்டோஸ் செயல்படும். பெரும்பாலும் கணினியின் நிலைவட்டில் ஒரு பயன்பாட்டுத் தொகுப்பை நிறுவுவதற்கான கட்டளையாக இருக்கும். ஒரு கேட்பொலிக் குறுவட்டினைச் செருகியவுடன் விண்டோஸ், பாடலைப் பாட வைக்கும் பயன்பாட்டை இயக்கி, குறுவட்டிலுள்ள முதல் பாடலை தானாகவே பாட வைக்கும்.*

autopolling : தானியங்கு சோதனை : *தானியங்கு பதிவு முறை. இம்முறையில் கணினி பிணையம் ஒன்றின் முனையங்கள் குறிப்பிட்ட கால இடைவெளியில், தகவல்களை அனுப்பத் தயார் நிலையில் உள்ளனவா என்பதை அறிய சோதிக்கப்படுகின்றன. கணினி*

பிணையம் ஒன்றில் வன்பொருளும் மென்பொருளும் இணைந்து இச்சோதனையை மேற்கொள்கின்றன.

**auto - redial : தானியங்கு மறுசுழற்றி :** அழைக்கப்பட்ட தொலைபேசி கிடைக்கும்வரை மீண்டும் எண் சுழற்றுவதற்கான மோடெம் ஒன்றின் பண்புக்கூறு.

**auto - repeat : தானே திரும்பச் செயல்; தானியங்கு மீள் செயற்பாடு:** சில விசைப் பலகைகளின் பண்புப்படி சில விசைகளை அழுத்தினால் அவற்றின் செயல்கள் தானியங்கு முறையில் மீண்டும் செய்யப்படுகின்றன.

**auto-restart : தானியங்கு மீள் தொடக்கம்; தானியங்கு தொடக்கம் :** கருவி பழுதுபட்டாலோ மின்சாரம் தடைப்பட்டாலோ மீண்டும் சீராகும் பொழுது பணிகளைத் தொடரத் தயார் நிலையை அடைவதற்கான நடவடிக்கைகளைத் தானியங்கு முறையில் நிறைவேற்றுவதற்கான கணினி ஒன்றின் திறன்.

**auto resume : தானே தொடர்தல் :** கணினியில் ஒரு இடத்தில் நிறுத்தி விட்டுப் பின்னர் தொடர்ந்து அனுமதிக்கும் தன்மை. பயன்பாடுகளை இரண்டாவது தடவை மேலேற்றத் தேவையில்லை. நினைவு விவரங்கள் வட்டில் சேமிக்கப்பட்டோ அல்லது மின்சார பேட்ரி மூலம் தயார் நிலையில் வைக்கப்பட்டோ இருக்கும். மடிக் கணினி மற்றும் கையேட்டுக் கணினிகளில் இத் தன்மை பெரும்பாலும் காணப்படும்.

**autosave : தானியங்கிச் சேமிப்பு :** பயனாளர் தலையிடாமல் தொடர்ச்சியான இடைவெளிகளில் தகவல்களை வட்டில் சேமித்தல்.

**autoscore : தானே கோடிடல் :** சொல் செயலியில், எழுதப் பட்ட பகுதியில் அடிக் கோடிடுவதற்கான ஆணை.

**autoserve : தானியங்கு வழங்கல்.**

**autoshapes : உடனடி வடிவங்கள்.**

**autosizing : தானே அளவமைத்தல் :** ஒரு அமைப்பிலிருந்து வேறு ஒன்றுக்கு மாறும்போது அதே செவ்வக உருவத் தோற்றத்தை வைத்துக் கொள்ளும் முகப்பின் திறன்.

**autostart : தானே தொடங்குதல் :** சில வணிக நுண் கணினிகளில் ரோம் நினைவகத்தில் சேமிக்கப்பட்டுள்ள ஒரு குறியீடு, கணினியை இயக்கியவுடன் இது இயக்க முறைமையை மேலேற்றி உடனே செயல்படத் தயாராக்கும். இவ்

வசதியை விளக்கும் சொல் Turnkey.

**autostart routine : தானே தொடங்கும் நிரல்கூறு :** கணினியில் அமைக்கப்பட்ட நிரல்கள் கணினியை இயக்கத் தொடங்கியவுடன் தாமே செயல்படத் துவங்கும். கணினி நினைவகத்தைச் சோதித்தல் போன்ற கண்டறி சோதனைகளை நடத்தி, இயக்க முறைமையை ஏற்றி கட்டுப்பாட்டை அதற்குக் கொடுக்கும்.

**auto run : உடனடிக் கூட்டல்.**

**auto text : உடனடி உரை**

**autotrace : தானியங்கு எல்லை வரைவு; தானியங்கு ஓரம் வரைதல் :** படவரைவு நிரல்களிலுள்ள ஒரு வசதி. ஒரு துண்மிப்பட (பிட்- மேப்) உருவப் படத்தை ஒரு பொருள்-நோக்கு (object-oriented) படமாக மாற்ற அதன் ஓரங்களில் கோடு வரைகிறது.

**A/UX : ஏ/யூஎக்ஸ் :** பல் பயனாளர், பல்பணி யூனிக்ஸ் இயக்க முறைமையின் ஒரு வடிவம். ஆப்பிள் கம்ப்யூட்டர் நிறுவனத்தின் படைப்பு. ஏடீ&டீ யூனிக்ஸ் சிஸ்டம்V வெளியீடு 2.2 இயக்க முறைமையை அடியொற்றி உருவாக்கப்பட்டது. பல புதிய வசதிகள் சேர்க்கப்பட்டுள்ளன. பல்வேறு மெக்கின்டோஷ் கணினிகளில் செயல்படுமாறு வடிவமைக்கப்பட்டது. மெக்கின்டோஷின் பல்வேறு சிறப்புக்கூறுகளும் ஏ/யூஎக்ஸில் ஒருங்கிணைக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, மெக்கின்டோஷ் டூல்பாக்ஸ் வசதி இதில் உண்டு. இதன்மூலம், பயனாளர்கள், வரைகலைப் பணிச் சூழலைப் (Graphical User Interface) பெறமுடியும்.

**AUX : ஏயூஎக்ஸ் :** கணினித் துணைச் சாதனங்களுக்குரிய தருக்கமுறைச் சாதனப் பெயர். எம்எஸ் டாஸ் இயக்க முறைமையில் வழக்கமான துணைச் சாதனத்துக்கென ஒதுக்கீடு செய்யப்பட்ட பெயர். பெரும்பாலும் இப்பெயர் கணினியின் முதல் தொடரியல் துறைக் குறிக்கும் காம்1 (COM1) என்றும் இதனை அழைப்பர்.

**auxiliary equipment : துணை நிலைச் சாதனம் :** மையச் செயலகத்தின் நேரடிக் கட்டுப்பாட்டில் இல்லாத கருவி.

**auxiliary function : துணை நிலைச் செயல் :** தானியங்கு எந்திரக் கருவிக் கட்டுப்பாட்டில், செயல்படு கருவி ஒன்றின் வேகக் கட்டுப்பாடு அல்லது எந்திரத்தின் வெட்டுக் கருவியின் கட்டுப்பாடு நீங்கலாக பிற

செயல்கள். எண்ணெயிடல், கருவியைக் குளிர்வித்தல் முதலியன மாதிரித் துணைச் செயல்களாகும்.

**auxiliary memory** : துணை நிலை நினைவகம்.

**auxiliary operation** : துணைச் செயல்பாடு : மையச் செயலகத்தின் கட்டுப்பாட்டில் இல்லாத கருவியினால் செய்யப் படும் செயல்பாடு.

**auxiliary speakers** : துணை நிலை ஒலிப்பிகள்.

**auxiliary store** : துணை நிலைச் சேமிப்பு.

**auxiliary storage** : துணை நிலை சேமிப்பகம் : வட்டு, நாடா போன்ற சேமிப்பகங் களைக் குறிக்கின்றது. கணினி யின் நுண்செயலி நிலையா நினைவகத்தைப் போன்று இவற்றை நேரடியாக அணுகுவ தில்லை. தற்போதைய வழக் காற்றில் இத்தகைய துணைநிலை சேமிப்பகங்கள் வெறுமனே சேமிப்பகம் என்றோ, நிலை யான சேமிப்பகம் என்றோ அழைக்கப்படுகின்றன. நுண் செயலி தற்காலிகச் சேமிப்பக மாய் நேரடியாகப் பயன்படுத்திக் கொள்ளும் நிலையா நினைவக (RAM) சிப்புகள் வெறுமனே நினை வகம் என்றே குறிக்கப்படுகின்றன.

**available list** : கிடைக்கும் பட்டியல் : ஒதுக்கப்படாத நினை வகப் பகுதிகளின் பட்டியல் என்றும் அறியப்படும்.

**available point** : கிடைக்கும் இடம் : கணினி முகப்பில் திரையில் உள்ள ஒரு இடம்.

**Availability** : கிடைப்பு நிலை : குறிப்பிட்ட செயலுக்கான மணி நேரத்துக்கும், வன் பொருளின் சரியான இயக்க நேரத்துக்கும் உள்ள விகிதம். இதனை செயலாக்க விகிதம் என்று பெரும்பாலும் கூறுவதுண்டு.

**available time** : கிடைக்கும் நேரம் : கணினி ஒன்று பயன் படுத்துவதற்கு கிடைக்கும் நேரம்.

**available machine** : கிடைக்கும் எந்திரம்.

**available machine time** : கிடைக்கும் எந்திர நேரம்.

**available memory** : கிடைக்கும் நினைவகம்.

**avatar** : அவதாரம் : சில வகை இணைய அரட்டை அறைகள் போன்ற மெய்நிகர் நடப்புச் சூழல்களில் பயனாளரின் வரை கலை வடிவிலான தோற்றம் இவ் வாறு அழைக்கப்படுகிறது. மனி தரின் இருபாலரில் ஒருவருடைய பொதுப்படையான படம்

அல்லது அசைவூட்டம், பயனாள ரின் ஒளிப்படமாகவோ கேலிச் சித்திரமாகவோ இருக்கலாம். ஒரு விலங்கின் படமாகவோ அசைவூட்டமாகவோகூட இருக் கலாம். பயனாளர் தன்னுடைய மெய்நிகர் நடப்புத் தோற்ற மாகக் காட்டுவதற்குத் தேர்வு செய்த ஒரு பொருளாகவும் இருக்கலாம்.

**average : சராசரி :** புள்ளி விவர அல்லது எண் இலக்கச் சராசரி.

**average latency : சராசரி உள் ளுறை சுணக்கம் :** நேரடி அணுகு சேமிப்புச் சாதனத்தில் முழு சுழற்சியில் பாதியில் பதிவுப் பரப்பில் சுற்றிவர ஆகும் நேரம்.

**average search length : சராசரித் தேடு நீளம்:** ஒரு குறிப் பிட்ட முகவரியைக் கண்டு பிடிக்க சராசரியாகத் தேவைப் படும் நேரம் அல்லது செயல் களின் எண்ணிக்கை.

**AVI : ஏவிஐ :** கேட்பொலி, ஒளிக்காட்சி பிணைந்தது என்று பொருள்படும் Audio Vedio Interleaved என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். விண்டோஸ் இயக்க முறையில் பயன் படுத்தப்படும் ஒரு பல் லூடகக் கோப்பு வடிவம். ஒலி மற்றும் ஒளிக்காட்சி இவ் வகைக் கோப்புகளில் பதியப் படுகின்றன. மைக்ரோ சாஃப்டின் ரிஃப் (RIFF- Resource Interchange File Format) தொழில் நுட்பத்தைப் பின்பற்றியது.

**avionics : வான் மின்னணு வியல் :** விமானங்கள் மற்றும் விண்கலங்களில் பயன்படும் மின்னணுக் கருவியமைப்புகள் மற்றும் கட்டுப்பாட்டுக் கருவிகள்.

**avoiding data repetition : தக வல் சுழற்சியைத் தவிர்த்தல்.**

**.aw : .ஏடபிள்யூ :** இணையத் தில் அருபாவைச் சேர்ந்த இணைய தளங்களைக் குறிக்கும் பெருமி புவிப் பிரிவு களப் பெயர்.

**AWC : ஏடபிள்யூசி : கணிப் பணியில் பெண்களுக்கான சங் கம் :** Association for Women in Computing என்பதன் குறும் பெயர். கணினித் தொழிலில் ஈடு பட்டிருப்போரைக் கொண்ட சங் கம். கணினித் தொழிலில் பெண் களுக்கான தொழில் திறனை வளர்த்தல்; கணினித் தொழிலில் ஈடுபட்டிருப்போரிடையே தக வல் தொடர்பை ஊக்குவித்தல் இதன் முக்கிய நோக்கமாகும்.

**awk : ஆக் : ஏடபிள்யுகே :** Aho, Weinberger Kernighan என்பதன் சுருக்கம். அஹோ, வெயின் பர்கர், கெர்னிகன் ஆகியோர்

1977இல் உருவாக்கிய யூனிக்ஸ் செயல்தள மொழி.

**axes : அச்சுகள் :** ஒரு இரட்டைப் பரிமாண ஒருங்கிணைப்பு முறைமையில் செங்குத்து (Y) மற்றும் படுக்கைக் குறியீடு (X)களாகப் பயன்படுத்தப்படும் கோடுகள்.

**axis : அச்சு; சுழலச்சு :** இரு பரிமாண வரைபடங்களில் பயன்படும் கிடைமட்ட, செங்குத்து அச்சுகள். முறையே, x-அச்சு, y-அச்சு என்று குறிக்கப்படுகின்றன. இவற்றை அடிப்படையாகக் கொண்டு அளக்கப்படும் ஆயத்தொலைவுகளைக் (coordi - nates) கொண்டு படங்கள் வரையப்படுகின்றன. முப் பரிமாண ஆயத்தொலைவு அமைப்பில் மூன்றாவது அச்சு, உயர/ஆழ அச்சாக இருக்கும். z-அச்சு எனப்படும்.

**axons : ஆக்சன்கள் :** மனித மூளையில் ஒரு நரம்பணுவிலிருந்து இன்னொரு நரம்பணுவுக்கு இந்த நரம்புகள் மூலம் வெளியீடுகள் அனுப்பப்படும்.

**.az : .ஏஇஸட் :** இணையத்தில் அஜெர்பெய்ஜான் நாட்டைச் சேர்ந்த இணைய தளங்களைக் குறிக்கப் பயன் படும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**azimuth : அஸிமத் :** ஒரு ஆதாரப் பகுதியில் இருந்து கடிகாரப் போக்கில் செல்லும் கோணத்தை அளக்கும் கருவி. வழித்தடத்தில் உள்ள படி / எழுது முனைகளின் சரியான அமைப்பை இது சோதிக்கும்.

# B

**b** : பி : 'பைட்' (byte) அல்லது 'பாட்' (baud) என்பதன் சுருக்கப் பெயர். இருப்பகத்தைக் குறிப் பிடும் இடங்களில் 'பைட்' (எண்மி) என்றும் தகவல் தொடர்புகளில் குறிப்பிடும் போது 'பாட்' (செய்தி வேகம்) என்றும் உணர்த்தும் கேபி (KB) - *1000* பைட்டுகள் அல்லது பாட் (தொழில்நுட்ப அடிப்படை யின்படி 1கே (1K) என்பது 1024 பைட்டுகளைக் குறிக்கும்).

**babbage, charles** : **பாபேஜ், சார்லஸ்** : (1792 - 1871) ஆங் கிலேய கணிதவியலாளர்; கண்டு பிடிப்பாளர். 20 பதின்மப் புள்ளி கள் வரை மடக்கை எண் (லாகர் தம்) மூலம் கணக்கிடக் கூடிய ஒரு வேறுபாட்டு எந்திரத்தை வடிவமைத்தவர். இலக்கமுறை கணிப்பொறிக்கு முன்னோடியாக விளங்கும் 'பகுப்பு' எந்திரத்தை யும் உருவாக்கியவர். பாபேஜ் காலத்தில் அவரது எந்திரங்களை வெற்றிகரமாக உருவாக்குவதற்கு வேண்டிய பொறியியல் தொழில் நுட்பங்கள் முன்னேறியவையாக இல்லை.

**babble** : **பிறழ்வு** : ஒரு அமைப் பின் பெருமளவு வழித்தடங்களில் ஏற்படும் குறுக்கீட்டுப் பேச்சு.

**bachman diagram** : **பக்மன் வரைபடம்.**

**back** : **முந்தைய**

**backbone** : **முதுகெலும்பு; அடியாதாரம்** : 1. சிறு சிறு பிணையங்களை ஒருங்கிணைத்து அவற்றுக்கிடையே தகவல் போக்குவரத்தை ஏற்படுத் தும் பெரும் பிணையம். இணை யத்தில் ஒவ்வொரு நாட்டி லுமுள்ள இத்தகைய முது கெலும்புப் பிணையங்கள் ஒருங் கிணைக்கப்பட்டுள்ளன. அமெரிக் காவில் மட்டும் ஆறு முது கெலும்புப் பிணையங்கள் உள் ளன (எ-டு: Sprint, MCI). ஆயிரக் கணக்கான மைல்கள் பரப் பிலுள்ள பகுதிகள் நுண் அலை (microwave) தடங்கள், நிலத்தடி, கடலடிக் கேபிள்கள் மற்றும் செயற்கைக் கோள்களால் இணைக்கப்படுகின்றன. 2. இணையத் தகவல் தொடர்பில் பெருமளவு தகவல் பொட்டலப் பரிமாற்றங்களைச் செயல் படுத்துகின்ற சிறிய பகுதிப் பிணையங்கள். 3. ஒரு பிணை யத்தில் தகவல் தொடர்புப் போக்குவரத்துக்கு ஆதாரமாக விளங்கும் இணைப்புக் கம்பி கள். ஒரு குறும்பரப்புப் பிணை

யத்தில் பாட்டை (Bus) என்பது முதுகெலும்பாக விளங்கும்.

**backbone cabal : முது கெலும்பு மறை குழு :** இணையத்தில் யூஸ்நெட் செய்திக் குழுக்களின் படி நிலை அமைப்பை அறிவித்தல் மற்றும் புதிய செய்திக் குழுக்களை உருவாக்கல் ஆகியவற்றுக்கு பொறுப்பான பிணைய நிர்வாகிகளின் குழுவைக் குறிக்கும் சொல். இப்போது அத்தகைய மறைகுழுக்கள் இல்லை.

**back door : பின்வாசல்; பின் கதவு :** ஒரு நிரல் அல்லது முறைமையின் பாதுகாப்புக் கட்டுப்பாடுகளை மீறி உள்ளே நுழையும் வழி. நிரலாக்க வல்லுநர்கள் உருவாக்கிக் கொண்டிருக்கும் மென்பொருள்களில், பிழைகளைக் கண்டறியும் நோக்கில் இத்தகைய பின்வாசல்களை அமைப்பர். பின்வாசல் வசதி நிரலர் தவிர ஏனையோர்க்கு தெரிந்துவிட்டாலோ, மென்பொருள் வெளியிடப்படுவதற்கு முன்பு அத்தகைய பின் வாசல் வசதிகள் நீக்கப்படாவிட்டாலோ (கவனக் குறைவாக), பாதுகாப்புக்கு பங்கம் ஏற்பட்டுவிடும்.

**backdrop : பின்னணி :** பின்னணித் தோற்றம். சிடி- ஐ-யில் மற்ற தோற்றங்கள் தெளிவாகத் தெரியும்போது பின்னணி தோற்றப் பகுதியும் முழுவதும் தெரியும்.

**back end : பின்னிலை; பின்னணி; பின்அமைவு :** *1.* கிளையன்/வழங்கன் (Client/Server) பயன்பாடுகளில், வழங்கு கணினியில் செயல்படும் நிரலின் பகுதி. (Client/Server Architecture, Front End என்பதனுடன் ஒப்பிடுக). *2.* மொழிமாற்றி (compiler) யின் ஒரு பகுதி. மனிதர்களுக்குப் புரிகிற மூல நிரல் வரைவை (source code), எந்திரத்துக்குப் புரிகிற குறிநோக்கு வரைவாக (object code) மாற்றியமைக்கும் பகுதி.

**back-end case : பின்முனை எழுத்து :** நிரல் குறியீடுகளை உருவாக்கும் எழுத்துக் கருவிகள்.

**back end operation : பின் முனைப் பகுதிகள்; பின்னிலைப் பணிகள்; பின் இயக்கப் பணிகள்.**

**back-end processor : பின் நிலைச்செயல் :** தரவுத் தள எந்திரம் (Data base machine) போன்றது. மையச் செயலகத்திற்கும் நேரடி - அணுகு சேமிப்புச் சாதனங்களில் சேமித்து வைக்கப்பட்டுள்ள தரவுத் தளங்களுக்கும் இடை முகமாகப் பணியாற்றும் கணினி.

**backfilling : பின்புற நிரப்புதல் :** *8086 /88* மற்றும் *286* பி.சிக்களின்

வழக்கமான நினைவகத்திற்குப் பதிலாக இஎம்எஸ் நினைவகத்தை ஒதுக்குவது. மூல தாய்ப் பலகை அட்டை சிப்புகள் செயலிழக்கின்றன. இஎம்எஸ் சிப்புகளுக்குக் கீழ் நினைவு முகவரிகள் இடப்படுகின்றன. பின்புற நிரப்புதலின் மூலம் டெஸ்க்வியூ போன்ற பல்பணி நிரல்கள் இயங்கவும், விரிவாக்கப்பட்ட நினைவகத்தில் ஒரே நேரத்தில் கூடுதல் நிரல்களை அமைக்கவும் முடியும்.

**background** : பின் புலம்; பின்னணி : *1. பன்முகக் கட்டளையிடலில் குறைந்த முன்னுரிமையுள்ள நிரல் செயல்படுத்தும் சூழல். 2. காட்சித் திரையில் காட்டப்பட உருக்களோ வரைபட முன்புலங்களோ இல்லாத திரைப்பகுதி.*

**background application** : பின்புலப் பயன்பாடு.

**background colour** : பின்னணி வண்ணம்; பின்புல நிறம் : *காட்சித்திரையின் பின்னணி நிறம். காட்சித் திரை துடைக்கப்பட்ட பிறகு இந்த நிறத்துக்குத் திரை திரும்பும்.*

**background communication** : பின்புலத் தகவல் தொடர்பு

**background job** : பின்புலப் பணி.

**background ink** : பின்புல மை : *அதிகம் பிரதிபலிக்கும் மை. வருடுபொறி கண்டுபிடிக்க முடியாத வகையில் படிவத்தின் பகுதிகளை இது அச்சிடும்.*

**background noise** : பின்னணி இரைச்சல் : *கம்பியிலோ, வழித்தடத்திலோ அல்லது மின்சுற்றிலோ வந்துசேரும் தொடர்பில்லாத, தேவையற்ற சமிக்கைகள்.*

**background operation** : பின்புல இயக்கம் : *ஒரு நிரல் இயங்கிக் கொண்டிருக்கும்போது ஏற்படும் துணைச் செயலாக்கம். ஒரு நிரலை மொழிமாற்றும் பணியைச் செய்யும்போது, அச்சுப்பொறிக்கும் தகவல் அனுப்பலாம். குறுக்கீடுகளைப் (Interrupt) பயன்படுத்தி பின்னணி இயக்கம் நடைபெறலாம்.*

**background printing** : பின்புல அச்சிடல்; பின்னணி அச்சிடு முறை : *ஓர் ஆவணத்தை அச்சிட அச்சுப்பொறிக்கு அனுப்பி விட்டு கணினியில் வேறுபணிகளை மேற்கொள்ளும் முறை.*

**background processing** : பின்னணி செயலாக்கம் : *முன்புலத்தில் ஒரு நிரல் செயல்படும் போது பின்னணியில் அதே நேரத்தில் வேறொரு நிரல் இயக்கப்படுவது.*

**background programme** : பின்புல நிரல்: *பல நிரல்களை ஒரே சமயத்தில் செயல்படுத்தும்*

கணினி அமைப்புகளில் உயர் முன் னுரிமை உள்ள நிரல்களைச் செயல்படுத்தத் தேவையில் லாதபோது செயல்படுத்தப் படும் நிரல். முன்புல நிரலுக்கு மாறானது.

**background reflectance : பின்னணி பிரதிபலிப்பு :** ஒரு எழுத்தைச் சுற்றி ஏற்படும் பிரதி பலிப்பை அளக்கும் ஓசிஆர் (OCR-Optical CharacterRecognition).

**background tasks : பின்புலப் பணிகள்.**

**backing storage : தாங்கும் இருப்பகம் :** பின்னர் பயன் படுத்துவதற்காக வட்டுகள் அல்லது நாடாக்களில் வைக்கப் பட்டிருக்கும் துணை நிலை நினைவகம்.

**backing store : பின்தாங்கும் இருப்பு :** கணினியின் முதன்மை நினைவகத்திற்கு பின்பலமாக இருந்து தாங்குகின்ற நினைவகம். துணை இருப்பகம் என்றும் அழைக்கப்படுகிறது.

**backing-up : பின் ஆதரவு :** மூலம் சேதமாகவோ அல்லது தொலைந்து போகவோ செய்யு மானாலும் உள்ளடக்கங்களை இழக்காமல் இருப்பதற்காக பின் ஆதரவு படிகளை ஏற்படுத்திக் கொள்ளல்.

**backlash : பின் விளைவு :** எந்திரமுறை செயல்பாட்டின் போது, தாங்குவதன் விளைவாக இரண்டு பல் சக்கரங்களைப் போன்ற சேர்ந்தியங்கும் பகுதி களின் செயல்.

**backline : பின் பகுதி :** ஒரு அமைப்பின் அட்டைகளில் மின் சுற்றுகள் மற்றும் எந்திரப் பகுதி கள் இணைக்கப்படுவதுண்டு. இதில் முதன்மை மின்சுற்று அட் டைகள் பொருத்தப்படும். தாய்ப் பலகை என்றும் முறைமைப் பலகை என்றும் அழைப்பர்.

**backlit : பின்னொளி :** திரை யின் பின்பக்கத்திலிருந்து ஒளி வருகின்ற எல்சிடி திரை. இதனால் பின்னணி பிரகாச மாகவும் எழுத்துகள் தெளி வாகவும் இருக்கும்.

**back-lit display : பின்-ஒளி திரைக் காட்சி :** திரைக்குப் பின் னால் ஒளிபடுமாறு அமைக்கப் பட்ட எல்சிடி திரைக் காட்சி. உருவங்கள் கூர்தெளிவாகவும், எழுத்துகள் நன்கு படிக்கும் படி யும் இருக்கும். குறிப்பாக, சுற்றுப்புறம் மிகவும் ஒளியுடன் விளங்கும்போது இத்தகைய ஏற்பாடு பலன் தரும்.

**back panel : பின் பலகம் :** கணினி பெட்டியில் வெளிப்புறச் சாதனங்களை கணினியுடன்



பின் பலகம்

இணைப்பதற்கான பல துளைகளுடன்கூடிய பின்புறப்பகுதி.

**backplane : பின்தளம்.**

**backquote : பின்மேற்கோள் குறி.**

**back slash : பின்சாய்வுக் கோடு :** விசைப்பலகையில் உள்ள ஒரு சிறப்புக் குறியீடு.

**backspace : பின்னிடவெளி :** காட்டியை (Cursor) இடதுபுறமாக ஒரு இடவெளிக்கு நகர்த்துகின்ற விசைப்பலகையின் செயல்பாடு. ஏற்கெனவே தட்டச்சு செய்யப்பட்டதை கணினியில் பதிவதற்குமுன் மாற்றம் செய்ய அனுமதிக்கிறது.

**backspace character : பின் இட எழுத்து.**

**backspace key : பின்னிட வெளிவிசை (விரற் கட்டை).**

**backspace tape : பின் இட நாடா :** ஒரு காந்த நாடாவை அது ஆரம்பித்த இடத்திற்கோ அல்லது பதிவேட்டிற்கோ திருப்பி அனுப்பும் செயல்பாடு.

**backterium : இனப்பெருக்கி :** கணினி நச்சு நிரலில் ஒரு வகை. தொடர்ந்து தன்னைத்தானே நகலெடுத்துக் கொள்ளும். இறுதியில் முழுக் கணினியையும் (சேமிப்பகம் முழுமையும்) இந்த நச்சு நிரலின் நகலே ஆக்கிரமித்திருக்கும்.

**backtracking : பின்தேடல் :** ஒரு பட்டியலை தலை கீழாகத் தேடும் செயல் முறை.

**backup : காப்பு நகல்; பின் ஆதரவு; பின்படி; ஆதார நகல்; மறுபடி :** 1. வழக்கமாகப் பயன் படுத்தப்படும் செயல்முறைகள் அல்லது கருவிகளில் அதிக சுமை ஏற்றப்பட்டோ அல்லது பழுதடைந்தோ போகும் வேளையில் பயன்படுத்துவதற்காக, கிடைக்கக்கூடிய மாற்றுக் கருவிகள் அல்லது செயல்முறைகள் பற்றியது. 2. மூலம் தொலைந்து போகக் கூடும் என்பதற்காக

*நிரல் தொடர் அல்லது தகவலுக்கு ஒரு பிரதி எடுத்தல்.*

**backup and restore : பாது காப்பும் மீட்டளிப்பும் :** *கோப்பு களை பாதுகாப்பு நகல் எடுத்துச் சேமித்தலும், அவற்றை மீண்டும் அந்த இடத்திலேயே மீட்டளித்தலும்.*

**backup copy : காப்பு நகல்; பின் ஆதரவுப் பிரதி :** *மூலத் தரவுத் தொகுப்பு அல்லது கோப்பு அழிந்து போகுமானால் பயன் படுத்துவதற்காக வைக்கப் பட்டுள்ள கோப்பு அல்லது தரவுத் தொகுப்பின் பிரதி.*

**backup disk : காப்பு வட்டு :** *முக்கிய கோப்புகளின் நகல் களை வைத்துக்கொள்ளப் பயன் படும் வட்டு. அதிக அடர்த்தி உள்ள நெகிழ் வட்டுகளும், வெளியே எடுக்கக்கூடிய வட்டுப் பெட்டிகளும் பாதுகாப்பு வட்டு களாகப் பயன்பட வல்லவை.*

**backup files : காப்புக் கோப்பு கள்; ஆதரவு கோப்புகள் :** *மூலக் கோப்புகள் சேதமாகி அல்லது அழிந்துபோனால், பயன்படுத்தக் கூடிய கோப்புகளின் பிரதிகள்.*

**backup power : காப்பு மின் சக்தி :** *மின்சாரம் நின்று போகு மானால் பயன்படுத்தக்கூடிய கூடுதல் மின்சார ஆதாரம்.*

**backup procedures : காப்பு நடைமுறைகள் :** *பாதுகாப்பு அளிப்பதற்காக மாற்று நாடாக் கள் அல்லது காந்த வட்டுகளில் தரவுகள் மற்றும் நிரல்களை நகல் எடுப்பதற்கான நடைமுறைகள்.*

**backup programmer : துணை நிரல் எழுதுபவர் :** *தலைமை நிரல் எழுதுபவருக்கு உதவி யாளராக இருக்கும் ஒரு நிரல் எழுதுபவர்.*

**backup & recovery : காப்பும் மீட்பும் :** *வன் பொருள் அல்லது மென்பொருள் பழுது ஏற்படும் போது இழந்துபோன தரவுகளை மீண்டும் பெறக்கூடிய மனிதனா லான, எந்திரத்தினாலான நடை முறைகளின் இணைப்பு.*

**backup storage : பாதுகாப்புச் சேமிப்பகம்.**

**backup utility : காப்புப் பயன் கூறு.**

**Backus, john : பேக்கஸ், ஜான் :** *1957இல் ஐபிஎம் நிறுவனத்தில் பணியாற்றிய இவர், கணித, அறிவியல் மற்றும் பொறியியல் கணக்கீடுகளுக்காக ஃபோர்ட் ரான் (Fortran) என்னும் உயர் நிலைக் கணினி மொழியை உரு வாக்கினார்.*

**Backus Normal Form (BNF) : பேக்கஸ் இயல்பு வடிவம் (பிஎன்எஃப்) :** *ஆர்டிபி எம்எஸ்*

விதிகளின்படி திருத்தியமைக்கப் பட்ட அட்டவணை வடிவம். மூன்றாவது இயல்பு வடிவத் துக்கு அடுத்து இடம் பெறுவது.

**back volume :** முன்தொகுதி.

**backward - chaining : பின்னோக்கி சங்கிலியிடல் :** தேவைப் படும் இலக்கிலிருந்து ஏற்கெனவே தெரிந்த உண்மைகளை நோக்கிச் செல்லும் இலக்கு நோக்கிய காரண முறை.

**backward compatible : பின்னோக்கிய ஒத்தியல்பு :** கீழ் நோக்கிய ஒத்தியல்பு போன்றது.

**backward read : பின்புறமாகப் படி :** சில காந்த நாடா அமைப்பு களில் உள்ள வசதி. இதில் காந்த நாடா அலகுகள் தலைகீழாக நகர்ந்து கொண்டே, கணினி பின் இருப்பகத்திற்குள் தரவுகளை மாற்றித் தரும்.

**backward reasoning : பின்னோக்குக் காரணியம்.**

**bad block : பழுதுத் தொகுதி :** நினைவகத்தில் பழுதான பகுதி. கணினியை இயக்கி வைக்கும் போது, நினைவகக் கட்டுப்பாட்டு பொறி சுயபரிசோதனை செய்து கொள்கையில் பழுதான தொகு தியை அடையாளங் காண்கிறது.

**badge reader : பட்டை படிப்பி :** கடன் அட்டைகள் அல்லது சிறப் புக் குறியீட்டுப் பட்டைகளைப் படிக்கக் கூடிய முனையம்.

**bad sector : பழுதுப் பகுதி :** வட்டில் உள்ள குறை காரணமாக சரியாகப் படிக்கவோ அல்லது எழு தவோ முடியாத வட்டின் ஒரு பகுதி.

**bad track : பழுதுத் தடம் :** ஒரு நிலை வட்டில் அல்லது நெகிழ் வட்டில், பழுதான பிரிவைக் கொண்டுள்ள ஒரு தடம். இவ் வாறு பழுதெனக் குறிக்கப்பட்ட தடத்தை இயக்க முறைமை புறக்கணித்துச் செல்லும்.

**.bak : பாக் :** பெரும்பாலான உரைத்தொகுப்பான் அல்லது சொல் செயலிகளில் ஒரு கோப்பில் திருத்தம் செய்து சேமிக்கும்போது அக்கோப்பின் முந்தைய வடிவம் இந்த வகைப் பெயருடன் (Extension) சேமிக்கப் படுவதுண்டு.

**balanced line : சமச்சீர் இணைப்புத் தடம் :** முறுக்கிணைக் கம்பிகள் போன்ற தகவலனுப்பு தடம். அதிலுள்ள இரு மின் கடத்திகளும், சம அளவுள்ள எதிரெதிர் துருவமும்/திசையும் கொண்ட மின் அழுத்தத்தையும் மின்னோட்டத்தையும் கொண் டிருப்பின் அது சமச்சீர் இணைப் புத் தடம் எனப்படுகிறது.

**Baldwin, Frank Stephen : பால்ட்வின், ஃப்ராங்க் ஸ்டீஃபன் :**

பின்னோக்கி வரக்கூடிய நான்கு செயல் முறைகளையுடைய முதல் கணிப்பியை இவர் 1875இல் அமெரிக்காவில் கண்டுபிடித்தார்.

**ballistic gain : செலுத்து வினை ஆதாயம் :** சுட்டி அல்லது கோளச் சுட்டியின் கைவேகத்தை ஒட்டி சுட்டி பயணம் செய்யும். சுட்டியின் கோளம் வேகமாக ஓடினால், திரையில் சுட்டியும் அதைவிட அதிக தூரம் நகரும்.

**balloon help : பலூன் உதவி :** குறிப்பிட்ட பொருளின்மீது சுட்டியில் சொடுக்கும்போது, கார்ட்டூன் பாணியில் திரையில் காட்டப்படும் உரையாடல் பெட்டி. மெக்கின்டோஷில் சிறப் பாகப் பயன்படுத்தப்படுகிறது.

**ball printer : கோள அச்சுப் பொறி :** மீண்டும் மாற்றக் கூடிய பந்து வடிவ அச்சு முனை உள்ள அச்சுப்பொறி. அச்சுப் பந்தினை மாற்றுவதன் மூலம் அச்சு எழுத்துகளை மாற்ற முடியும்.

**band : கற்றை :** தொலைத் தகவல் தொடர்பில் தொடர்ச்சி யான அலை வரிசைகள். பட்டை அச்சுப் பொறியால் அச்சிடும் சாதனம்.

**band pass filter : கற்றை அனுப்பும் வடிகட்டி :** மின் னணுச் சாதனம் அதன் வழியாக ஒரு குறிப்பிட்ட அலை வரிசையை மட்டும் செல்ல அனு மதித்து மற்றவற்றைத் தடுக்கும்.

**band printer : கற்றை அச்சுப் பொறி :** எழுத்துகளின் தொகு தியை எடுத்துச் செல்வதற்கு இரும்பு வரிப் பட்டை அல்லது பாலியுரேத்தேன் பெல்ட்டைப் பயன்படுத்துகின்ற அழுத்தும் அச்சுச் சாதனம். ஒரு நிமிடத் திற்கு 300 முதல் 2,000 வரிகள் வரையிலான வேகத்தில் அச்சிடு வதுடன் பல கார்பன் பிரதிகளை யும் இதனால் தரமுடியும்.

**bandwidth : கற்றை அகலம் :** செய்தித் தகவல் தொடர்புகளில் அதிக அலைவரிசைக்கும், குறைந்த அலைவரிசைக்கும் உள்ள வேறுபாடு. ஒரு நிமிடத் திற்கு இத்தனை துண்மிகள் அல் லது பாட்கள் (bauds) என்னும் அளவை முறையில் ஒரு தகவல் தொடர்பு வழித்தடத்தைக் குறிப்பிடுவது.

**bandwidth on demand : தேவைக்கேற்ற அலைக் கற்றை :** தொலைதொடர்பில் ஒரு தகவல் தடத்தில் தகவல் பரிமாறிக் கொண்டிருக்கும்போது, அத்தக வல் பரிமாற்றத்தின் தேவைக் கேற்ப கையாள் திறனை அதிகரித்துக் கொள்ளுதல்.

**bank : வங்கி :** 1. தகவல் தொடர்புகளில், இரண்டு

குறிப்பிட்ட எல்லைகளுக்கிடையிலான அலைவரிசைகளின் பரப்பு. 2. செயல்பாட்டின் பரப்பு அல்லது தன்மை. 3. வட்டு அல்லது உருளை போன்ற இருமுக சாதனத்தில் வட்டமான பதிவு செய்யும் வழித்தடங்களின் தொகுதி.

bank, data : தரவு வங்கி; தகவல் வங்கி.

banked memory : சேமிக்கப்பட்ட நினைவகம் : வழக்கமான 64கே ரேம் நினைவகத்தை அதிகப்படுத்தும்முறை. முகவரியிடலில் ஏற்படும் குழப்பத்தைத் தவிர்க்க 8 துண்மி நுண் செயலகங்களில் இருந்து மேலும் பெரிய அளவுள்ளவற்றுக்கு பொதுவாக 1 மெகா பைட் உள்ளவற்றுக்கு முகவரியிடுவது. 64கே-வுக்கு மேல் உள்ள அட்டைகள் தேவைப்படும்போது மட்டும் மென்பொருள் கட்டுப்பாட்டின் மூலம் தொடங்கப்படும்.

banking software : வங்கிப் பணி மென்பொருள்.

banking through telephone : தொலைபேசி வழி வங்கிப் பணி.

bank switching : தடு இணைப்பாக்கம் : மின்னணு மின்சுற்றுகளை ஏற்படுத்துதல், நிறுத்துதல். மற்ற அலகுகள் நிறுத்தப்படும்போது ஒன்று மட்டும் செயல்படும். தேவையுள்ள முறையில் எல்லா மின்சுற்றுகளையும் முகவரியிடுவதையோ, இயக்கப்படுவதையோ தடுக்கும் கணினி அமைப்பின் வடிவமைப்பு.

banner : பட்டிகை; பதாகை : 1. இணையத்தில் வலைப் பக்கத்தின் ஒரு பகுதியில் தோன்றும் விளம்பரப்பட்டிகை. பெரும்பாலும் ஓர் அங்குல அகலத்தில், வலைப்பக்கத்தின் நீளத்தில் காணப்படும். விளம்பரப்படுத்தப்பட்டுள்ள நிறுவனத்தின் வலைத் தளத்துக்கு அப்பட்டிகையில் ஒரு தொடுப்பு இருக்கும். 2. யூனிக்ஸ் இயக்க முறையில் உள்ள கட்டளை. கணினித் திரையின் ஒரு வரியில் 10 எழுத்துகள் வீதம் பெரிய எழுத்துகளில் செய்திகளைத் திரையிடலாம்.

banner page : பட்டிகைப் பக்கம் : 1. பெரும்பாலான அச்சு மென்பொருள்களினால் ஒவ்வொரு அச்செடுப்பின்போதும் சேர்த்துக் கொள்ளப்படும் முகப்புப்பக்கம். பயனாளர் அடையாளத் தகவல், அச்சுப் பணியின் அளவு, அச்சு மென்பொருளின் தகவல் ஆகியவற்றை இப்பக்கம் கொண்டிருக்கும். ஒரு அச்சுப் பணியை இன்னொன்றிலிருந்து வேறுபடுத்திக்காட்ட இப்பக்கம் பயன்படும். 2. மென் பொருள் தொகுப்புகளில் தொடக்கத்தில்

தோன்றும் பக்கம். அத்தயாரிப்பைப் பற்றியும் அதைத் தயாரித்த நிறுவனம் பற்றியும் தகவல் இடம் பெற்றிருக்கும்.

**bar :** பட்டை.

**bar chart :** பட்டை நிரல் படம் : வணிக வரைபடத் தொகுப்புகளில் பரவலாகப் பயன்படும் வரைபடம். கால அட்டவணையைக் காட்டுவதற்குப் பயன்படுவது.

**bar code :** பட்டைக் குறிமுறை; பட்டைக் கோடு; பட்டை வரி : வருடு பொறியினால் படிப்பதற்காக ஒட்டுச்சீட்டில் பயன்படுத்தப்படும் குறியீடு. சில்லறை விற்பனைப் பொருள்களை அடையாளம் காண பட்டைக் குறியீடு முறை பயன்படுகின்றன. நூல் நிலையங்களில் உள்ள புத்தகங்களையும் இரயில் வண்டி பெட்டிகளிலும் இது பயன்படுத்தப்படுகிறது.

**bar-code reader :** பட்டைக் குறிமுறை படிப்பி; பட்டைக் கோடு படிப்பி; பட்டை படிப்பான்; பட்டைக் குறியீட்டுப் படிப்பான் : பிரதிபலிக்கும் ஒளியின் மூலம் பட்டைக் குறியீடுகளைப் படிக்கும் ஒரு ஒளிப்படமின் சக்தி வருடி.

**bar-code scanner :** பட்டைக் குறிமுறை வருடு பொறி : இணையான பட்டைகளின் வடிவத்தில் பதிவு செய்யப்பட்ட எழுத்துகளைக் கொண்ட பொருள்களின் தகவலைப் படிக்கக்கூடிய ஒளிச்சாதனம். இருப்பு வைப்பதற்காகவோ அல்லது செயலாக்கத்திற்காகவோ எழுத்துகள் இலக்க சமிக்கைகளாக மாற்றப்படுகின்றன.

**bar code wand :** பட்டைக் குறிமுறைக் கோடு.

**bare board :** வெற்று அட்டை; வெறும் பலகை : எந்த ஒரு மின்னணுச் சாதனமும் இல்லாத அச்சிட்ட மின்சுற்று அட்டை.

**bare bone :** வெற்றெலும்பு; சிக்கனப் படைப்பு : வேறெந்தக் கூடுதல் சிறப்புக் கூறுகள் எதுவுமில்லாத, கட்டாயத் தேவையான குறைந்தபட்சக் கூறுகளை மட்டுமே கொண்டுள்ள ஒரு கணினி அல்லது ஒரு மென்பொருள் தொகுப்பு. மென்பொருளெனில், கொடுக்கப்பட்ட பணியை நிறைவேற்றுவதற்குரிய செயல்கூறுகளை மட்டுமே கொண்டிருக்கும். ஒரு கணினி எனில் வேறெந்தக் கூடுதல் புறச்சாதனங்களும் இல்லாமல் கணினி இயங்கத் தேவையான மிகக்குறைந்த வன்பொருள் உறுப்புகளையே கொண்டிருக்கும். இயக்க முறைமை தவிர வேறெந்த மென்பொருளும் அக்கணினியில் இருக்காது.

**bar printer :** பட்டை அச்சகம் : *வரியின் குறுக்கே அடுத்தடுத்து நிற்க வைக்கப்பட்ட பல பட்டைகளைப் பயன்படுத்தி அழுத்தி அச்சிடும் சாதனம்.*

**barrel distortion :** உருளைச் சிதைவு : *பக்கவாட்டில் வெளியேறக்கூடிய திரைக் காட்சிச் சிதைவு.*

**barrel printer :** உருளை அச்சுப் பொறி : Drum Printer-க்கு வேறொரு பெயர்.

**base :** அடிவாய்; ஆதாரம் ; தளம் : *1. எண் முறையின் ஒரு மூலம். 2. உமிழிலிருந்து வெளியேற்றப்பட்ட சிறுபான்மை கடத்திகளைப் பெறுகின்ற, இணைப்புமின்மக் கடத்தியைப் பெறுமிடத்திற்கும் உமிழிக்கும் இடையே உள்ள பகுதி. 3. அச்சிட்ட மின்சுற்று அட்டையில் அச்சிட்ட அமைப்பைத் தாங்கும் பகுதி.*

**base 2 :** ஆதார எண் 2.

**base 8 :** ஆதார எண் 8.

**base 10 :** ஆதார எண் 10.

**base 16 :** ஆதார எண்16.

**base address :** தொடக்க முகவரி; அடிப்படை முகவரி; அடி முகவரி : *ஒரு குறிப்பிட்ட இருப்பிடத்தின் முழுமுகவரியை உருவாக்க துணை முகவரியுடன் சேரும் குறிப்பிட்ட முகவரி.*

**base alignment :** அடிப்பகுதி ஒழுங்கமைவுதல் : *அடிக்கோடுகளில் பலவித அளவுகளில் எழுத்து வடிவங்களை அடுக்குதல்.*

**baseband :** அடிக் கற்றை; தாழ் அலைவரிசை : *தாழ் அலைவரிசை வழித்தடத்தில் முழுப் பட்டை அகலமும் பயன்படுத்தப் பட்டு டிடிஎம்மை இடையில் செருகி பல்தொகுதி தகவல்களை ஒரே நேரத்தில் அனுப்பமுடியும்.*

**base band coaxial cable :** தாழ் அலைக்கற்றை இணையச்சு வடம்.

**baseband networking :** அடிக் கற்றைப் பிணையம் : *அனுப்பும் சாதனத்தில் இலக்கமுறை சமிக்கையை நேரடியாக வைக்கும் தகவல் தொடர்பு முறை.*

**baseband transmission :** அடிக் கற்றை பரப்புகை : *கோஆக்சியல் குழாய் மூலமாக குறைந்த தூரத்துக்கு குறைந்த அலைவரிசையில் சமிக்கைகளை அனுப்பும் முறை.*

**base case disk :** அடிப் பெட்டி வட்டு : *சிடி1-இல் பேஸ் கேஸ் அமைப்பில் இயங்கக்கூடிய வட்டு.*

**base case system :** அடித் தட்டு அமைப்பு : *சிடி1 முழு அமைப்பு அளவுகளில் குறைந்த அளவே பயன் படுத்துதல்.*

**base class :** அடிப்படை இனக் குழு : பொருள்நோக்கு நிரலாக் கத்தில் இனக்குழு அமைப்பில் பொதுவான அமைப்பு. இந்த அடிப்படை இனக்குழுவின்மீது தருவிக்கப்பட்ட இனக் குழுக் கள் (Derived classes) உருவாக்கப் படுகின்றன. பணியாளர், கண் காணிப்பாளர், மேலாளர், இயக் குநர், மேலாண் இயக்குநர்-இந்த இனக்குழுப் படிநிலையில் 'பணி யாளர்' என்பது அடிப்படை இனக் குழுவாகும்.

**base concept, data :** தரவுத் தளக் கருத்துரு.

**base, data :** தரவுத் தளம்; தகவல் தளம்.

**base/displacement :** அடிப் படை/இடமாற்றம் : நினைவகத் தின் குறித்த இடத்தில் இருந்து நிரல்களை இயக்கும் தொழில் நுட்பம். எந்திர மொழி நிரல் களில் உள்ள முகவரிகள் ஆரம் பத்தில் இருந்ததை நோக்கி இடம் மாறிய முகவரிகள். நிரல் இயக் கப்படும்போது மாறிய முக வரியை வன்பொருளானது அடிப் படை முகவரிக்கு அளித்து முழு முகவரியைப் பெற்றுத் தரும்.

**based system knowledge :** அறிவு வழி அமைப்பு.

**baseline :** அடிப்படைக்கோடு : சிறிய எழுத்தின் அடிப் பகுதிகள் வரிசைப்படுத்தப்படும் குறுக்கு வட்டக் கோடு.

**baseline document :** ஆதார ஆவணம் : தரவு செயலாக்க அமைப்பில் ஒரு தரவுவை மாற் றம் செய்வதற்குத் தேவைப்படும் ஒரு குறிப்புதவி ஆவணம்.

**Base Management System, Data :** தரவுத் தள மேலாண்மை அமைப்பு: சுருக்கமாக டிபி எம்எஸ் (DBMS) எனக் குறிப்பிடு வர். டிபேஸ், ஃபாக்ஸ் புரோ போன்ற மென்பொருள்களை இந்த வகையில் அடக்குவர்.

**base memory :** அடிப்படை நினைவகம் : ஒரு பீசி-யில் இயங்கும் டாஸ் நிரல்களுக்குக் கிடைக்கும் முதல் 640 கிலோ எண்மி (பைட்) நினைவகம்.

**base name :** அடிப்படைப் பெயர் : புள்ளியால் பிரிக்கப்படு வதற்கு இடப்புறம் உள்ள கோப்புப் பெயரின் பகுதி. எட்டு எழுத்துகள் வரை நீளம் இருக்கும். ஒரு கோப்பின் முதல் பெயர் எனவும் சொல்லலாம்.

**base number :** அடிப்படை எண்.

**base notation :** அடிப்படைக் குறிமானம்.

**base point :** அடிப்படை எழுத்து வடிவம்; அடிப்படைப் புள்ளி : எண் முறையின் ஆரம்ப நிலை.

வேறொன்றும் குறிப்பிடவில்லை யென்றால் அச்சடிக்கப் பயன் படும் எழுத்து வடிவம்.

**base register :** அடிப்படைப் பதிவகம்: தொடர்பு முகவரியை முழு முகவரியாக மாற்றும் பட்டியல் பதிவகம்.

**Basic :** பேசிக் - ஒரு கணினி மொழி (தொடக்கநிலை பல்திறன் குறியீட்டு ஆணைமொழி) : Beginners All Purpose Symbolic Instruction Code என்னும் நீண்ட பெயரின் ஒவ்வொரு சொல்லின் முதலெழுத்துகளின் சுருக்கப் பெயர். கற்பதற்கும் பயன்படுத்து வதற்கும் எளிமையான ஒரு கணினி நிரலாக்க மொழி. மிகக் குறைவான ஆணைகளும் எளிய சொற்றொடர் வடிவங்களும் உடையது. டார்ட் மவுத் கல்லூரி யில் ஜான் கெம்னி மற்றும் தாமஸ் குர்ட்ஸ் ஆகியோரால் உருவாக்கப்பட்டது. சொந்தக் கணினியிலும் வணிக, தொழில் துறை, நுண்கணினிகளிலும் பரவ லாகப் பயன்படுத்தப்படுகிறது.

**basic contents :** அடிப்படை உள்ளடக்கங்கள்.

**basic FORTRAN :** அடிப்படை ஃபோர்ட்ரான் : ஃபோர்ட்ரான் நிரலாக்க மொழியில் அமெரிக் காவில் அங்கீகரிக்கப்பட்ட இரண்டு பிரிவுகளில் ஒன்று.

**Basic Input Output System (BIOS) :** அடிப்படை உள்ளீட்டு /வெளியீட்டு முறைமை : வட்டு இயக்கி தொடர்பானது தவிர மற்ற உள்ளீட்டு / வெளியீட்டு பணிகளைக் கட்டுப்படுத்தும் செயலாக்க அமைப்பின் பகுதி.

**BASIC in ROM :** ரோமில் பேசிக் : பயன்படுத்துவோருக்கு எப் போதும் கிடைக்கும் வகையில் படிக்க மட்டும் நினைவகத்தில் சேமித்து வைத்துள்ள பேசிக் நிரல் மாற்றி.

**basic language :** பேசிக் கணினி மொழி.

**Basic linkage :** அடிப்படை தொகுப்புகை : ஒரு நிரலின் சிறு செயல்கூறு அல்லது ஒரு நிரல் அல்லது ஒரு கணினி முறைமை - இவற்றில் ஒன்றில் அடிக்கடி பயன்படுத்தப்படும் ஓர் இணைப்பு முறை. ஒவ்வொரு முறையும் இவ்விணைப்பு ஒரே மாதிரியான விதிமுறைகளையே பின்பற்றும்.

**BASIC PLUS :** பேசிக் பிளஸ் : பேசிக் மொழியை நீட்டித்த மொழி. தரவுவைக் கையாளுதல் போன்ற சக்திமிக்க செயல்திறன்கள் சேர்க்கப்பட்ட பேசிக் மொழி.

**.bat :** .பேட் : எம்எஸ்-டாஸ் இயக்க முறைமையில் தொகுதி நிரல் கோப்புகளை அடையாளங்

காணப் பயன்படும் வகைப் பெயர் (Extention). .பேட் கோப்புகள் இயங்குநிலை கோப்புகளாகும். ஏனைய நிரல் கோப்புகளை அழைக்கும் கட்டளைகள் .பேட் கோப்பில் இடம் பெற முடியும்.

**bat : வளைவு :** மின்னணு சாதனங்களைப் பொருத்தக்கூடிய அலமாரி அல்லது அடுக்கு கருவிகளின் வளைவு என்றும் அழைக்கப்படும்.

**BAT : பேட் :** ஒரு கோப்பு வகை

**batch : தொகுதி :** 1. ஒரு கணினியில் செயலாக்கத்திற்காக ஒரே தொகுதியாகக் கருதப்படும் நிரல்கள் அல்லது பதிவுகளின் குழு. 2. தொகுதி முறை செயலாக்கத்தைப் பயன்படுத்துதல்.

**batch control : தொகுதிக் கட்டுப்பாடு :** தகவலின் சரியான தன்மையை உறுதி செய்ய கட்டுப்பாடுகளின் தொகுப்பைப் பயன்படுத்தும் தொழில் நுட்பத்தினை இது குறிப்பிடுகிறது.

**batch control document : தொகுதிக் கட்டுப்பாட்டு ஆவணம் :** உள்ளீட்டு தரவு தொகுதியைக் கொண்ட கட்டுப்பாட்டு ஆவணம். இதில் கட்டு எண், தொகுப்பு தேதி, ஆவணங்களின் எண்ணிக்கை, உள்ளீட்டு தரவுவின் கட்டுப்பாட்டு மொத்த எண்ணிக்கைகள் போன்ற தரவு இருக்கும்.

**batch file : தொகுதிக் கோப்பு :** வரிசையாக இயக்கப்படும் கட்டளைகளின் பட்டியலைக் கொண்ட டாஸ் கோப்பு. ஒரு குறிப்பிட்ட (திரும்பச் செய்யும்) பணியை நிறைவேற்ற அடிக்கடி விசைகள் அடிப்பதைத் தவிர்க்க தொகுதிக் கோப்புகள் பயன்படுத்தப்படுகின்றன.

**batch file transmission : கோப்புத் தொகுதி அனுப்புகை :** ஒரேயொரு கட்டளை மூலம் கோப்புகளின் தொகுதியை அனுப்பி வைக்கப் பயன்படும் கட்டளை.

**batch job : தொகுதி வேலை.**

**batching : தொகுதிப்படுத்தல்; தொகுதியாக்கம்.**

**batch processing : தொகுதிச் செயலாக்கம்; தொகுப்பு முறை :** 1. செய்யப்பட வேண்டிய நிரல்களை குறியீடு செய்து தொகுத்து குழுக்கள் அல்லது தொகுதிகளாகச் செயலாக்கத்திற்கு தயார் செய்யும் முறை. பயனாளர் ஒரு கணினி மையத்திற்கு வேலையைக் கொடுத்தால் அங்கு நிரல் தொகுதியாக்கப்பட்டு செயல்

படுத்தப்பட்ட பின் திருப்பி அளிக்கப்படுகிறது. பயனாளருக்கு எந்திரத்துடன் நேரடி தொடர்பு இல்லை. 2. நீண்ட காலமாக சேர்க்கப்பட்டு வந்த ஒரு தரவுத் தொகுதியையோ அல்லது சம்பளப் பட்டியல், விலைப் பட்டியல் தயாரித்தல் போன்று அடிக்கடி செய்யும் பணிகளையோ செயலாக்கப் படுத்தல்.

**batch processing mode** : தொகுதி செயலாக்க பாங்கு.

**batch programme** : தொகுதி நிரல் : உரையாடல் முறையில் நிரல் பிரித்தல் அல்லது அறிக்கை பட்டியலிடல் போன்றவை.

**batch session** : தொகுதி நிகழ்வு : ஒரு முழு கோப்பையுமே புதுப்பித்தல் அல்லது அனுப்புதல். ஆரம்பம்முதல் கடைசிவரை தடையின்றி நடைபெறுவது. Interactive session-க்கு எதிர்ச் சொல்.

**batch stream** : தொகுதித் தாரை : கணினியில் செயல்படுத்தக் கூடிய தொகுதி நிரல்களின் திரட்டு.

**batch system** : தொகுதி முறைமை : முன்வரையறுக்கப் பட்ட ஊடாடும் வகையிலோ, நிகழ்நேரத்திலோ இல்லாமல், தொகுதி தொகுதியாகச் செயல் படுத்தும் ஒரு முறைமை.

**batch total** : தொகுதி முழுமை ; தொகுதிக் கூட்டல் : ஒரு பதிவேடுகளின் தொகுதியில் உள்ள வகையுருக் கூட்டங்களின் கூட்டுத் தொகை. தொகுதியுடன் தொடர்புடைய வேலைகளின் துல்லியத்தைச் சோதிக்கப் பயன் படுத்தப்படுவது.

**bat file (Batchfile)** : பேட் கோப்பு : ஒன்றையடுத்து ஒன்றாக இயக்கப்பட்டு வரும் டாஸ் அல்லது ஓஎஸ்/2 கட்டளைகளின் தொகுதியைக் கொண்ட கோப்பு.

**Batten system** : பேட்டன் அமைப்பு : டபிள்யு.இ.பேட்டன் கண்டுபிடித்த பட்டியலிடும் முறை. தனி இயல்புகளை ஒருங்கிணைத்து குறிப்பிட்ட ஆவணங்களை அடையாளம் கண்டறியப் பயன்படுவது. பீக்-ஏ-பூ என்றும் சிலசமயம் அழைக்கப் படுகிறது. அட்டைகளின் மேல் அட்டைகளை வைத்து துளைகளை ஒப்பிட்டு துளைகளின் ஒற்றுமையைச் சோதித்தறிவதால் இவ்வாறு அழைக்கப்படுகிறது.

**battery** : மின்கலத் தொகுதி; மின்வழங்கி : இரண்டு அல்லது மேற்பட்ட மின் கலன்களை ஒரு கொள்கலனில் கொண்ட தொகுதி. மின்சாரக் கரைசலில் கொள்கலன் இணைந்து மின் சாரம் உற்பத்தி செய்யப்படு கிறது. சொந்தக் கணினிகளுக்கு

மின்கலத் தொகுதி, ஒரு மாற்று மின்சார வழங்கியாகப் பயன்படுகிறது. கையேட்டுக் கணினி மற்றும் மடிக் கணினிகளுக்கு இத்தகைய மின்சார வழங்கிகளே (நிக்கல் கேட்மியம், நிக்கல் மெட்டல் ஹைடிரைடு, லித்தியம் அயான் மின் வழங்கிகள்) பயன்படுத்தப்படுகின்றன. கணினிக்குள் இருக்கும் கடிகாரம், அழியா நினைவகத்தின் ஒரு பகுதி (முக்கிய முறைமைத் தகவல்கள் பதியப்பட்டுள்ள சீமாஸ் பகுதி) ஆகியவை எப்போதும் மின்சாரம்பெற இந்த மறுமின்னூட்ட மின் வழங்கிகள் பயன்படுகின்றன.

**battery backup :** காப்பு மின்கலம்; மின்கல பின்னாதரவு; மாற்று மின்கல அடுக்கு: *மின்தடங்களின்போது மாறி வரும் தகவலை கணினி இழந்துவிடக் கூடாது என்பதற்காக ஏற்படுத்தப்படும் துணை மின்சக்தி.*

**battery meter :** மின்கல மானி : *ஒரு மின்கலத்தின் மின்னோட்டத்தை (திறனை) அளக்கப் பயன்படும் கருவி.*

**baud :** பாட் ; செய்தி வேகம் : *தகவல் அனுப்பப்படும் வேகத்தைக் கண்டறியும் அலகு.*

**baudot code :** பாடாட் குறிமுறை : *ஒரு எழுத்தை ஐந்து துண்மிகள் மூலம் குறிப்பிட்டு தரவுகளை அனுப்பும் ஒரு குறியீட்டு முறை. பல தொலை அச்சு அமைப்புகளில் வழக்கமாகப் பயன்படுத்தப்படுகிறது. பன்னாட்டு தந்தி முறை குறியீட்டு எண் என்றும் அழைக்கப்படுகிறது. 1950இல் இந்த குறியீட்டு முறையே பன்னாட்டுத் தந்தித் தொடர்புக்கான தர நிர்ணயங்களில் ஒன்றாக ஆகிவிட்டது.*

**Baudot. Emile :** பாடாட் எமிலி : *பாடாட் குறியீட்டு தந்தி முறையை 1880-இல் கண்டுபிடித்த முன்னோடி.*

**baud rate :** பாட் வீதம்; செய்தியனுப்பும் வேக வீதம் : *தரவு அனுப்புதலின் வேகத்தின் அளவுமுறை. ஒரு நொடிக்கு இத்தனை துண்மிகளுக்குச் சமம் என்பதைக் குறிப்பிடுகிறது. ஒவ்வொரு எழுத்துக்கும் 8 துண்மி தேவைப்படுகிறது. ஃபிரெஞ்சுக் கண்டுபிடிப்பாளரான ஜே.எம்.இ. பாட் என்பவரின் பெயர் இடப்பட்டது.*

**Baum.L.Frank :** பாம் எல். ஃப்ராங்க் : *எந்திரங்களை ஒரு நன்மை தரும் சக்தியாகக் கருதி இந்த நூற்றாண்டின் நன்னம்பிக்கையில் பங்கேற்றவர். அவரது புகழ் பெற்ற ஓஇஸட் வரிசை நூல்களில் வரும் டிக்டாக் என்பவன் கடிகாரம் போன்று*

வேலை செய்யும் பித்தளை மனிதன். சொல்லி வைத்ததை எப்போதும் எந்தச் சூழ்நிலையிலும் செய்யக் கூடியவன்.

**bay : வைப்பிடம்; செருகிடம் :** ஒரு மின்னணுக் கருவியை ஓர் எந்திரத்தில் பொருத்துவதற்காக அமைக்கப்பட்டுள்ள இடம் அல்லது செருகுவாய். எடுத்துக்காட்டாக, ஒரு நுண் கணினியின் நிலைப்பெட்டியில் பின்னாளில் கூடுதலாக ஒரு நிலை வட்டினையோ, குறு வட்டகத்தையோ பொருத்துவதற்காக விட்டு வைக்கப்பட்டுள்ள வைப்பிடம்.

**.bb : .பிபி :** இணையத்தில், பார்படாஸ் நாட்டைச் சேர்ந்த இணைய தளம் என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**B2C : மின் வணிக (e-commerce) நடைமுறையில் வணிக நிறுவனத்துக்கும் (Business) வாடிக்கையாளருக்கும் (Customer) இடையே நடைபெறும் வணிகத் தகவல் பரிமாற்றங்கள்.**

**BBC : பிபிசி :** இங்கிலாந்து நாட்டு வானொலி நிறுவனம்.

**BBL : பிபிஎல் :** பிறகு திரும்பி வருவேன் என்று பொருள்படும். Be Back Later என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணைய அரட்டையில் பங்கு பெற்றுள்ள ஓர் உறுப்பினர் தற்காலிகமாக அரட்டையிலிருந்து விலகிப் பிறகு இணைந்து கொள்ள எண்ணும்போது பயன்படுத்தக்கூடிய ஒரு சொல்.

**BBS : செய்திப் பலகை அமைப்பு; தகவல் பலகை முறைமை :** Bulletin Board System என்ற தொடரின் குறும்பெயர். ஒன்று அல்லது மேற்பட்ட இணக்கிகள் அல்லது வேறெந்த பிணைய அணுகுமுறைச் சாதனங்கள் இணைக்கப்பட்ட கணினி அமைப்பு. தொலை தூரங்களிலிருந்து தொடர்பு கொள்ளும் பயனாளர்கள் தகவல் மற்றும் செய்திகளைப் பெறுவதற்கு இக் கணினி அமைப்பு உதவுகிறது. இதில் வகைப்படுத்தப்பட்ட தகவல்கள், பயன்பாட்டு மென்பொருள்கள் பயனாளர்களின் பார்வைக்கு வைக்கப்படுகின்றன. பயனாளர்கள் தகவல்களைப் படிக்கலாம். தாம் விரும்பும் தகவல்களை பிறரின் பார்வைக்கு வைக்கலாம். பிபிஎஸ் பயனாளர்கள் தமக்குள் மின்னஞ்சல் பரிமாறிக் கொள்ளலாம். அரட்டை (chat) அடிக்கலாம். கோப்புகளை பதிவேற்றம்/பதிவிறக்கம் செய்யலாம். பிபிஎஸ் சேவைகள் கட்டண அடிப்படையிலும் இலவசமாகவும் அமைகின்றன.

**bcc : பிசிசி :** பிறர் அறியா கார்பன் நகல் என்று பொருள்படும் (blind carbon copy) என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும் பெயர். (blind courtesy copy என்றும் கூறுவர்). மின்னஞ்சலில் ஒரு மடலை பலருக்கும் அனுப்பலாம். பெறுநர் (to) முகவரி இருக்குமிடத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட முகவரிகளைக் குறிப்பிடலாம். அல்லது cc என்ற கட்டத்துள் வேறு பலரின் முகவரிகளைக் குறிப்பிடலாம். அல்லது BCC என்ற கட்டத்துள்ளும் குறிப்பிடலாம். to, cc ஆகியவற்றில் குறிப்பிடும் முகவரிதாரர்களுக்கு இந்த மடல் வேறு யாருக்கெல்லாம் அனுப்பப்பட்டுள்ளது என்பதை அறிந்து கொள்ள முடியும். ஆனால், BCC யில் குறிப்பிட்டுள்ள முகவரி தாரருக்கு மடலின் நகல் கிடைக்கும். ஆனால் அந்த மடலின் நகல் வேறு யாருக்கெல்லாம் அனுப்பப்பட்டுள்ளது என்பதை அறிய முடியாது.

**.bc.ca : .பிசி.சிஏ :** ஓர் இணைய தளம். கனடா நாட்டுப் பிரிட்டிஷ் கொலாம்பியாவைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**BCD : பிசிடி :** Binary coded decimal என்பதன் சுருக்கப் பெயர்.

**BCNF : பிசிஎன்எஃப் :** பாய்ஸ் காடின் இயல்புப் படிவம் என்ற பொருள் தரும் boyce-codd normal form என்னும் தொடரின் தலைப்பெழுத்துச் சுருக்கம். ஆரக்கிள் போன்ற ஆர்டிபி எம்எஸ் தரவுத் தளத் தொகுப்புகளில் ஓர் அட்டவணை எப்படி அமைய வேண்டும் என்பதற்கான வரைமுறைகள் உள்ளன. அட்டவணைகள் அந்த வரையறையின்படி அமையவில்லையெனில் பின்னாளில் தரவுத் தள மேலாண்மையில் சிக்கல் ஏற்படும். எனவே, அப்படிப்பட்ட அட்டவணைகள் இயல்பு நிலைக்குக் கொண்டுவர வேண்டும். இயல்பு நிலைக்குக் கொண்டுவருதல் நான்கைந்து படிநிலைகளில் மேற்கொள்ளப் பட வேண்டும். பாய்ஸ்-காடின் முறை அதில் ஒரு படிநிலை.

**BCS : பிசிஎஸ் :** இங்கிலாந்தின் கணிணிச் சங்கம் எனப் பொருள் படும் British Computer Society என்ற பெயரின் குறும் பெயர்.

**BDOS : பிடிஓஎஸ் :** அடிப்படை வட்டு இயக்க முறைமை எனப் பொருள்படும் Basic Disk operating System என்பதன் குறும் பெயர். சில இயக்க முறைமைகளில் ஒரு குறிப்பிட்ட வட்டு இயக்கத்துக்கு ஏற்ப சரிப்படுத்தும் அந்த முறைமையின் பகுதி.

**.bd** : .பிடி : வங்க தேசத்தைச் சேர்ந்த இணைய தளங்களைக் குறிக்கும் பெருங் களப் பெயர்.

**.be** : .பிஇ : பெல்ஜியம் நாட்டைச் சேர்ந்த இணைய தளங்களைக் குறிக்கும் பெருங்களப் பெயர்.

**beacon** : **இடர் எச்சரிக்கை** : ஒரு கட்டமைப்பில், ஒரு முனையில் இருந்து அனுப்பப்படும், கட்டமைப்புச் சிக்கல் பற்றிய அபாயச் செய்தி.

**beaconing** : **இடர் எச்சரித்தல்** : ஒரு குறும்பரப்பு பிணையமாகிய லேனில் (Lan) தவறான நிலைகளை சமிக்கை மூலம் அனுப்புதல்.

**bead** : **பீட்** : 1. நிரலின் ஒரு சிறிய துணைச் செயல் முறை. பல பீட்கள் ஒன்று சேர்ந்தால் 'நூல்' (த்ரெட்) எனப்படும். 2. கோஆக்சியல் கம்பியில் இன்சுலேட்டரைச் சுற்றியுள்ள உள் கம்பி. 3. தரவுத் தகவல் தள ஆவணத்தில் தேவையின்றி முன்னால் செல்வது.

**beam penetration CRT** : **கற்றை உட்செலுத்தும் சி ஆர்டீ** : நிறத்தை உருவாக்கும் நெறியக் காட்சித் திரை அமைப்பு. சிகப்பு மற்றும் பச்சை கந்தகம் பூசப்பட்ட திரையில் செலுத்தப்படும் மின்னணு ஒளிக்கற்றை.

**beam splitter** : **கற்றை பிரிப்பான்.**

**bearer channel** : **தாங்கு தடம்** : ஓர் ஐஎஸ்டிஎன் இணைப்பில் நடைபெறும் 64 kbps தகவல் தொடர்புத் தடங்களில் ஒன்று. ஒரு பிஆர்ஐ (basic rate interface) ஐஎஸ்டிஎன் இணைப்பு 2 தாங்கு தடங்களையும் ஒரு தரவுத் (data) தடத்தையும் கொண்டுள்ளது. ஆனால் பிரைமரி ரேட் இன்டர்ஃபேஸ் (PRI) ஐஎஸ்டிஎன் இணைப்பு வட அமெரிக்காவில் 23 தாங்கு தடங்களையும் ஐரோப்பாவில் 30 தாங்கு தடங்களையும் ஒரு தரவுத் தடத்தையும் கொண்டுள்ளன.

**BeBox** : **பி-கணினி; பி-பெட்டி** : ரிஸ்க் (RISC) தொழில்நுட்ப அடிப்படையிலான மிகு திறனுள்ள பவர் பிசி (powerPC) நுண் செயலியைக் கொண்ட கணினி. பி நிறுவனம் (Be Inc.) உருவாக்கியது. பி நிறுவனத்தின் இயக்க முறைமையான பிஓஎஸ் (BeOS) நிறுவப்பட்டது. தற்போது மென்பொருள் தயாரிப்பாளர்களுக்கு ஒரு கருவியாக பி-கணினி விற்பனைக்கு வந்துள்ளது.

**bebugging** : **பிழை நுழைத்துதல்** : ஒரு நிரலில் தெரிந்த பிழைகளையே ஏற்படுத்தி, பயிற்சி நிரலர்களின் பிழை நீக்கும்

திறனைச் சோதிப்பதற்கான நடைமுறை.

**beenet : பீனெட் :** ஒரு லேன் (Lan). இதில் தகவல் பரிமாற்ற வேகம் ஒரு நொடிக்கு ஒரு மெகா பைட்.

**beep : பீப் ; விளி :** ஒரு கணினியின் ஒலி பெருக்கி ஏற்படுத்தும் ஓசை. கணினி ஒலிபெருக்கிகளில் ஓசையை ஏற்படுத்துவதற்காக சில நிரலாக்க மொழிகளில் உள்ள ஒரு ஆணை.

**beep statement : பீப் கூற்று.**

**beginning-of-file : கோப்பின் தொடக்கம் :** 1. ஒரு கோப்பில் முதல் எண்மி (பைட்)க்கு முன்பாக இடப்படும் குறியீடு. கோப்பை உருவாக்கும் நிரல் இக்குறியீட்டை இடுகிறது. கணினியிலுள்ள இயக்க முறைமை இக் குறியீட்டைக் கொண்டுதான் ஒரு கோப்பின் தொடக்கத்தை அறிகிறது. கோப்பின் பிற இடங்களையும் இதன் அடிப்படையிலேயே கணக்கிட்டு அணுகுகிறது. 2. ஒரு வட்டில் எழுதப்பட்டிருக்கும் கோப்பின் தொடக்க இடம். கோப்புகளின் தரவுகளைக் கொண்டிருக்கும் ஒரு கோப்பகம் (Directory) அல்லது திரட்டு இத் தொடக்க இருப்பிடத்தைக் கொண்டிருக்கும்.

**beginning of tape marker : நாடா காட்டியின் தொடக்கம் :** காந்த நாடாவின் ஒரு புள்ளியைக் காட்டும் அடையாளம். அங்கிருந்துதான் பெரும்பாலும் தரவு தொடங்கும்.

**behaviour : நடத்தை :** பொருள்நோக்கு நிரலாக்கத்தில் ஒரு பொருள் எவ்வாறு வினையாற்றுகிறது, எதிர் வினையாற்றுகிறது என்பதை அதன் நிலை மாற்றங்கள் மற்றும் செய்தி அனுப்புதலின் மூலம் அறியலாம்.

**Bell 103 : பெல் 103 :** 300 பாட் வேகம் (Baud) மோடம்களின் தர நிருணயம்.

**Bell 212A : பெல் 212எ :** 12கேபி செய்தி வேக மோடம்களின் தர நிருணயம்.

**Bell laboratories : பெல் ஆய்வகங்கள்:** ஏ டீ அண்டு டீ நிறுவனத்தின் ஆராய்ச்சி மையம். உலகப் புகழ் பெற்றது. பல கணினி வன்பொருள், மென்பொருள் கோட்பாடுகள் மற்றும் கணினி மொழிகள் பெல் ஆய்வகங்களில் உருவாக்கப்பட்டன.

**bell communications standards : பெல் தகவல் தொடர்பு தர வரையறை:** தகவல் பரிமாற்றத்துக்கான பல்வேறு தர வரையறுப்புகளை 1970களின் பின்பகுதியிலும் 1980களின்

முன்பகுதியிலும் ஏடீ&டீ நிறுவனம் வகுத்துத் தந்தது. வட அமெரிக்காவில் அவை பெரிதும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. இணக்கி (modem)களுக்கான சட்டபூர்வ தர வரையறைகளாக அவை காலப்போக்கில் ஏற்றுக் கொள்ளப்பட்டன. 1200 bps வரையிலான இணக்கிகளுக்கு இத் தரவரையறை இருந்தது. இந்த வேக இணக்கிகள் இப்போது வழக்கொழிந்து விட்டன. 1200 bps-க்கு அதிகமான வேகமுள்ள இணக்கிகளுக்கு, சிசிஐடீடீ (CCITT) என்னும் அமைப்பு (இப்போது ITUCT) பரிந்துரை செய்யும் தர வரையறைகளே இப்போது உலகம் முழுவதிலும் பொதுவாக ஏற்றுக் கொள்ளப் படுகின்றன.

**bell compatible modem : பெல் ஒத்தியல்பு இணக்கி :** பெல் நிறுவனத்தின் தர வரையறைகளுக்கு ஏற்பச் செயல்படும் ஓர் இணக்கி.

**bells and whistles : அணி ஆபரணங்கள்; அலங்கார அணிகள் :** ஒரு மென் பொருள் அல்லது வன் பொருளுக்கு அதன் அடிப்படைச் செயல்பாட்டுக்கும் அதிகமாகக் கவர்ச்சிகரமான வசதிகளை வழங்குவது. எடுத்துக்காட்டாக, ஒரு காரில் அமைக்கப்படும் மின் கதவையும் குளிர்சாதனக் கருவியையும் கூறலாம். கணினிகளைப் பொறுத்தமட்டில் இத்தகைய அலங்கார அணிகலன்கள் எதுவும் இல்லாத கணினியை சாதாவெனில்லா கணினி என்பர்.

**belt - bed plotter : வார்ப் பட்டை வரைவு பொறி :** காகிதத்தைத் தொடர்ந்து படித்துக் கொண்டிருக்க தொடர் வார் பட்டையைப் பயன்படுத்தும் எழுது கோல் வரைவு பொறி.

**BEMA : பீஈஎம்ஏ :** வணிகக் கருவி தயாரிப்பாளர் சங்கம் எனப் பொருள்படும் Business Equipment manufacturer's Association என்பதன் குறும்பெயர்.

**benchmark : திறன் மதிப்பு; தரஅளவு; மதிப்பீடு செய்தல்:** ஒரு கணினியின் செயல் திறனை ஒரு நிரலைப் பயன்படுத்தி தர அளவீடுகளைச் செய்வதைக் குறிப்பிடும் சொல். பொருள்களை ஒப்பீடு செய்ய உதவும் ஒரு தர நிருணயம்.

**benchmark problem : திறன் மதிப்பீட்டுச் சிக்கல் :** இலக்க முறை கணினிகளின் செயல் திறனை ஒப்பிட்டு, மதிப்பீடு செய்ய வடிவமைக்கப்பட்ட சிக்கல்.

**bench mark programme : தர நிருணய நிரல்; மதிப்பீட்டு நிரல் :** ஒரு கணினியின் திறன் மற்றும் பிற அளவைகளை மதிப்பிடும் நிரல்.

**benchmark test : திறன் மதிப்பீட்டுச் சோதனை :** *முழு செயல் வேகத் திறமையை ஒப்பிடுவதற்காக பல்வேறு கணினிகளில் இயக்கப்படும் ஒரு கணினி நிரல். குறிப்பிட்ட பயன்பாட்டு சூழ்நிலையில் கணினிக் கருவியின் செயல்திறனை அளக்கப் பயன்படுத்தப்படும் சோதனை.*

**benign virus : தீங்கிலா நச்சுநிரல் :** *நச்சுநிரல் போன்ற பண்புடைய ஒரு நிரல். தன்னைத் தானே இனப் பெருக்கம் செய்து கொள்ளும் பண்பில் நச்சுநிரலை ஒத்தது. மற்றபடி, அது தொற்றியுள்ள கணினிக்கு வேறெந்த தீங்கும் விளைவிக்காது.*

**BeOS : பிஓஎஸ் :** *பி ஆப்பரேட்டிங் சிஸ்டம் (BeOS) என்பதன் குறும் பெயர். பி நிறுவனம் (Be Inc) உருவாக்கிய பொருள் நோக்கிலான இயக்க முறைமை. பி-கணினி மற்றும் பவர் மெக்கின்டோஷ் கணினிகளுக்காக வடிவமைக்கப்பட்டது. இந்த இயக்க முறைமை சமச்சீர் பல் செயலாக்கம், பல்பணி மற்றும் பாதுகாக்கப்பட்ட நினைவகம் ஆகிய வசதிகளைக் கொண்டது. பல்லூடகம், அசைவூட்டம் மற்றும் தகவல் தொடர்புக்கு ஏற்றது.*

**Berroulli box : பெர்னவுலி பெட்டி :** *சொந்தக் கணினிகளில் பயன்படுத்தக்கூடிய, எளிதாகச் செருகி எடுக்கக்கூடிய நெகிழ் வட்டகம். அதிகமான சேமிப்புத் திறன் கொண்ட பேழையைக் கொண்டது. 18ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த டேனியல் பெர்னவுலி (daniel bernoulli) என்ற இயற்பியல் அறிஞரின் பெயர் சூட்டப்பட்டுள்ளது. காற்றியக்கத்தில் செயல்படும் இயங்கேணி (lift) பற்றிய கோட்பாட்டை முதன் முதலில் செயல்படுத்திக் காட்டியவர். பெர்னவுலிப் பெட்டி, மிகுவேகத்துடன் சுழலும் நெகிழ் வட்டை வட்டின் எழுது/படிப்பு முனைக்கு அருகில் கொண்டு வரும்.*

**Bernoulli Box drive : வட்டு இயக்ககம்.**

**Bernoulli cartridges : பெர்னவுலி பேழைகள் :** *நிலைவட்டு மற்றும் நெகிழ் வட்டு கலந்த ஒரு சேமிப்பகச் சாதனம்.*

**Bernoulli process : பெர்னவுலி செயலாக்கம் :** *பெர்னவுலி தேர்வாய்வு முறையை உள்ளடக்கிய ஒரு கணித முறைச் செயலாக்கம். புள்ளியியல் பகுப்பாய்வில் மிகவும் பயன்படுகிறது. வெற்றி, தோல்வி என்கிற இரண்டே இரண்டு முடிவுகளை மட்டுமே கொண்ட ஒரு பரிசோதனையை திரும்பத் திரும்பச் செய்வதால் ஏற்படக்கூடிய முடிவுகளை அடிப்படையாக வைத்து ஆய்வு செய்தல்.*

**Bernoulli sampling process :** பெர்னவுலி மாதிரிகாண் செய லாக்கம்: ஒவ்வொரு முயற்சி யிலும் இரண்டிலொரு முடி வைத் தரக்கூடிய ஏதேனும் ஒரு பரிசோதனையை, தொடர்ச்சி யாக n தடவைகள், ஒன்றை யொன்று சாராத, ஒரே மாதிரி யான தேர்வாய்வுக்கு உட்படுத் தும்போது வரக்கூடிய முடிவு களின் அடிப்படையில் மேற் கொள்ளப்படும் புள்ளியியல் ஆய்வு. (எ-டு): ஒரு நாணயத் தைச் சுண்டினால் பூ அல்லது தலை விழும். 10 முறை சுண்டி னால் எத்தனை முறை தலை விழும்? எத்தனை முறை பூ விழும்?

**Bernoully drive :** பெர்னவுலி இயக்ககம்.

**Berr Clifford :** பெர்ரி கிளி ஃபோர்டு : 1939இல் ஜான் அடனசாஃபுடன் சேர்ந்து ஏபிசி எனப்படும் முதல் மின்னணு இலக்கமுறை கணினியைக் கண்டுபிடித்தவர்.

**best of breed :** உள்ளதில் சிறப்பு; ஆயிரத்தில் ஒன்று : குறிப்பிட்ட வகைப் பிரிவில் மிகச்சிறந்த பொருளைக் குறிக் கும் சொல். வன்பொருளாகவோ மென்பொருள் தொகுப்பாகவோ இருக்கலாம்.

**beta site :** பீட்டாத் தளம் : ஒரு மென்பொருளின் பீட்டா சோதனையை மேற்கொள்ளும் ஒரு தனி நபர் அல்லது ஒரு நிறு வனம். மென் பொருளை உரு வாக்கிய நிறுவனம், பெரும் பாலும் பட்டறிவுமிக்க வாடிக் கையாளர், தன்னார்வலர்களின் குழுவில் சிலரையே பீட்டாத் தள மாகத் தேர்வு செய்யும். பெரும் பாலான பீட்டாத் தளத்தினர் இச் சேவையை இலவசமாகவே செய்வர். வெளியீட்டுக்கு முன் பயன்படுத்தும் வாய்ப்பு, மென் பொருளின் இலவச நகல் இவர் களுக்குக் கிடைக்கிறது. வெளி யிடப்பட்ட பின்பு, இறுதிப் படைப்பின் இலவச நகலும் இவர்களுக்குக் கிடைக்கும்.

**beta test :** பீட்டா சோதனை : மென்பொருள் அல்லது வன் பொருள், இறுதியாகப் பயன் பாட்டுக்கு வருவதற்கு முன்பாக பல கட்டச் சோதனைக்கு உட் படுத்தப்படும். அவற்றுள் வெளி யீட்டுக்கு முந்தைய இறுதிக் கட்டச் சோதனை 'பீட்டா சோதனை' எனப்படுகிறது.

**beta testing :** பீட்டா சோதனை யிடல் : பொது மக்களுக்கு வெளியிடுவதற்கு முன்பு வன் பொருள், மென்பொருள்களை, தேர்ந்தெடுத்த சிலரிடம் கொடுத்து அவரவர் பணியிடத்

திலேயே பயன்படுத்தச் செய்து அதில் ஏற்படும் பிழைகளைக் கண்டறிதல்.

**beta test site : பீட்டா சோதனை செய்யுமிடம் :** புதிதாக உருவாக்கப் பட்ட கணினி அமைப்பை சாதாரண இயக்கச் சூழ் நிலையில் பல மாதங் களுக்குச் சோதனை செய் யும் ஒருவித செயலாக்க மையம் அல்லது ஒரு கிளை அலுவலகம் அல் லது பிரிவு. முறையாக வெளியிடப்படும் முன்பு ஏராளமான பேர்களுக்குக் கொடுத்து பீட்டா சோதனை செய்யப்படும் மென்பொருள்.

**beta version : பீட்டா பதிப்பு :** வெளியீட்டுக்கு முந்தைய பரிசோதனைப் பதிப்பு.

**between : இடையில்.**

**Bezier : பெஸியர் :** அல்கோரி தத்தில் உருவாக்கப்படும் ஒரு வகை வளைவு. ஃபிரெஞ்சு கணிதமேதை பியரே பெஸியரின் பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. ஏராளமான வடிவங்களை வரை யறுக்க பெஸியர் வளைவுகளுக்கு ஒரு சில புள்ளிகளே போது மானது. ஓவிய மென் பொருளுக்கு உகந்தது.

**bezier curve : பெஸியர் வளைவு :** ஒரு குறிப்பிட்ட கணித முறைப்படி இரண்டு தனிப் புள்ளிகளை இணைத்து



பெஸியர் வளைவு

வரையப்படும் இழைவான வளைகோடு மற்றும் வரை தளம். கேட் உருமாதிரி (CAD model)களுக்கு தேவையான ஒன்று. ஒரு வடிவத்தை தோராய மாக வடிவமைக்க ஏனைய கணிதவியல் மாதிரிகளை விடச் சிறந்தது. ஏனெனில் மிகக் குறைந்த எண்ணிக்கையிலான புள்ளிகளைக் கொண்டே அதிக எண்ணிக்கையிலான வடிவங் களைப் பெறமுடியும்.

**.bg : .பிஜி :** பல்கேரிய நாட்டைச் சேர்ந்த இணைய தளம்

என்பதைக் குறிக்கும் பெருங் களப் பெயர்.

.bh : .பிஹெச் : ஓர் இணைய தளம் பஹ்ரைன் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெருங்களப் பெயர்.

bias : மதிப்புகளின் தொகுதியின் சராசரியிலிருந்து ஒரு குறிப்பிட்ட மதிப்பு விலகிச்செல்லும் அளவு.

bibliography : நூல் விவரத் தொகுதி : 1. ஆவணங்களின் விவரங்களைக் கூறும் பட்டி. 2. விவர நூல் பட்டியல். 3. ஒரு தலைப்பு அல்லது ஆசிரியர் தொடர் பான ஆவணங்களின் பட்டியல். 4. பட்டி அல்லது பட்டியலைத் தொகுக்கும் செயல் முறை.

bidirectional : இரு திசையில் : ஒரு கம்பியில் தரவு இரு திசை களிலும் போகலாம். இரண்டு திசையிலும் ஒவ்வொரு செலுத்தி/வாங்கி (Transcei-vers)களும் வாங்கி வெளியிடும். பொதுவாக இரு திசை இணைப் புத் தொகுதிகள் மின்பாட்டை நிலையிலோ அல்லது திறந்த கலெக்டர், டிரான்சிஸ்டர், டிரான் சிஸ்டர் தருக்க முறையில் அமைந்திருக்கும் அளவை களாகவோ இருக்கும்.

bidirectional bus : இருதிசை மின்பாட்டை: ஒரே மின் இணைப்புப் பாதையில் இரு திசைகளிலும் தரவு பரி மாறப்படுதல்.

bidirectional parallel port : இருதிசை இணை வாசல்; இரு திசை இணை நிலைத் துறை : கணினிக்கும் இன்னொரு புறச் சாதனத்துக்கும் இடையே இரு திசையிலும் இணை நிலைத் தகவல் தொடர்புக்கு வழியமைத் துத் தரும் ஓர் இடைமுகம்.

bidirectional printer : இரு திசை அச்சுப் பொறி : அச்சிடும் தலை திரும்பி வருவதன் தாம தத்தைத் தவிர்க்க இடப்புறத் திலிருந்து வலப்புறமாகவும், வலப்புறத்திலிருந்து இடப்புற மாகவும் அச்சிடும் அச்சுப்பொறி.

bi-endian : இரு முடிவன்; இரு முனையன் : சிறு முடிவன், பெரு முனையன் (காண்க Little Endian and Big Endian) ஆகிய இரண்டு முறைகளில் எந்த முறை யில் வேண்டுமானாலும் செயல் படும் திறனுள்ள ஒரு நுண் செயலி அல்லது வேறெந்த சிப்பு களின் பண்புக் கூறு. பவர்பிசி (powerPC) நுண்செயலி இத் தகைய இரு முடிவன் திறனைக் கொண்டுள்ளது. சிறுமுடிவன் விண்டோஸ் என்டீ, பெரு முடிவன் மேக் ஓஎஸ்/பீபீஜி ஆகிய இரு இயக்க முறைமை களும் இயங்க அனுமதிக்கிறது.

**biform** : **இரு வடிவம்** : எழுத்து வடிவ இயலில், சிறிய எழுத்து மற்றும் சிறிய தலைப்பெழுத்து களைச் சேர்த்து உருவாக்கும் சிறிய எழுத்து அகரவரிசை.

**bifurcation** : **இரண்டாகப் பிரித்தல்; இருகூறாக்கல்** : இரண்டு, இரண்டாக மட்டும் வெளியீடு வருகின்ற சூழ் நிலை. 1 அல்லது 0 உண்மை அல்லது பொய், இயக்கு அல்லது நிறுத்து போன்றவை.

**BIGAS** : **பைகாஸ்** : Business International Country Assessment Service என்பதன் குறும்பெயர்.

**Big Blue** : **பிக்புளூ** : ஐபிஎம் நிறுவனத்தின் இன்னொரு பெயர். ஒரு வேறுபாடான நீல வண்ணத்தை அதன் கணினிகள் மற்றும் பிற கருவிகளில் அந்த நிறுவனம் பயன்படுத்துவதால் இப் பெயர் ஏற்பட்டது.

**Big endian** : **ஒரு முடிவன்; பெரு முனையன்** : ஓர் எண்ணை பதிவகங்களில் (registers) பதிவுசெய்து வைக்கும் முறை. இம்முறையில் ஓர் எண்ணின் பெரு மதிப்புள்ள பைட் (most significant byte) முதலில் இடம் பெறும். (எ-டு) A02B என்ற பதின் அறும (Hexadecimal) எண் A02B என்று பதியப்படும். சிறு முடிவன் முறையில் 2BA0. பெரு முடிவன் முறை மோட்டோரோலா நுண் செயலிகளில் பின்பற்றப்படு கிறது. இன்டெல் நுண்செயலிகள் சிறுமுனைய முறையைப் பயன் படுத்துகின்றன. பெரு முடிவன் என்ற சொல் ஜோனாதன் ஸ்விஃப்ட் எழுதிய கல்லிவர்ஸ் டிராவல்ஸ் என்ற நாவலிலிருந்து எடுக்கப்பட்டது. அதில் பெரு முடிவன் என்ற சொல், ஒரு குறிப்பிட்ட மக்கள் குழுவைக் குறிக்கிறது. அக்குழுவினர், முட்டையை உண்ணும்போது அதனைச் சிறுமுனைப் பக்கம் உடைக்க வேண்டும் என்ற சட்டத்தை எதிர்ப்பவர்கள்.

**big red switch** : **பெரும் சிவப்பு விசை**: கணினியை இயக்க/ நிறுத்த (மின்சாரம் செலுத்த/ நிறுத்த) பயன்படும் விசை. கணினி திடீரென செயல்படா மல் விக்கித்து நிற்கும்போது, கடைசி முயற்சியாக இந்த விசை யைப் பயன்படுத்தி கணினிக்கு மீண்டும் புத்துயிர் அளிக்கலாம் (Re-booting). ஐபிஎம் பீசி மற்றும் பல கணினிகளிலும் தொடக்க காலங்களில் இந்த விசை பெரிதாக சிவப்பு வண் ணத்தில் இருந்தது. கணினி நடு வில் நின்றுவிடும்போது, இந்த விசையைப் பயன்படுத்தி கணி னிக்குப் புத்துயிர் ஊட்டுவதில் ஓர் ஆபத்தும் உள்ளது. நிலையா

நினைவகத்தில் (RAM) உள்ள தரவுகள் அழிக்கப்பட்டு விடும். நிலைவட்டும் பழுதுபட வாய்ப்புள்ளது. எனவே தான் இவ்விசையை இறுதி ஆயுத மாகப் பயன்படுத்த வேண்டும்.

**billion** : பில்லியன் : ஓராயிரம் மில்லியன்: நூறு கோடி.

**bin** : கூடை : வெற்றுக் காகிதம் அல்லது முன்பே அச்சடிக்கப் பட்ட படிவங்களைப் படித்துக் கொள்ள அச்சுப்பொறியில் உள்ள ஒரு தட்டு. முடிந்த வேலையை வாங்கிக் கொள்வதற்கும் கூடை பயன்படுத்தப்படலாம். நிலை வட்டில் பலவகைப் பொருளுக் கான பட்டியல் செயலாக்க அமைப்பு மற்றும் சேவை நிரல் கள் இதில் இடம் பெறும்.

**BINAC** : பினாக் : Binary Automatic Computer என்ற கணினி யின் குறும்பெயர். 1949ஆம் ஆண்டு எக்கார்த் - மாக்லி நிறுவனம் உருவாக்கியது.

**binaries** : இரும மொழி நிரல் கள் : எந்திர மொழியில் இயங்கக் கூடிய நிரல்கள்.

**binary** : இருமம் : 2-ஐ அடிப் படையாகக் கொண்ட எண் முறை .இரண்டு வாய்ப்புகள் மட்டுமே உள்ள ஒரு சூழ்நிலை.

**binary arithmetic** : இருமக் கணக்கு; இருமக் கணக்கீடு; ஈரிலக்கக் கணக்கு : 1. பதின்ம எண் முறைக்குச் சமமான கணக்கீட்டு முறை. ஆனால், இதில் 0,1 ஆகிய இரண்டு இலக் கங்கள் மட்டுமே பயன்படுத் தப்படுகின்றன. 2. ஒரே நேரத் தில் இரண்டு மதிப்புகளை மட்டுமே வைத்து எல்லா கணக்குகளும் செய்யப்படு வதைக் குறித்தல்.

**binary arithmetic operation** : இரும பூலியன் செயற்பாடு.

**binary boolian operation** : இருமக் கணக்கீட்டுச் செயல் பாடு.

**binary card** : இரும எண் அட்டை : தரமான துளைஅட்டை 0 அல்லது 1-ஐக் குறிப்பிட 12 வரிசைகளில் 80 பத்திகளில் 960 துளையிடும் இடங்களைக் கொண்டது.

**binary chop** : இரும வெட்டு.

**binary code** : இருமக் குறி முறை; ஈரிலக்கக் குறியீடு : எந்தத் தகவலையும் துண்மிகள் 0 அல்லது 1இன் மூலமே குறியீடு செய்யும் குறியீட்டு முறை 8ASCII மற்றும் EBCDIC போன்ற இரண்டு முறைகளில் இவை பயன்படுத் தப்படுகின்றன. 0 என்றால் நிறுத்து. 1 என்பது இயக்கு.

**binary coded character** : இருமக் குறியீட்டு எழுத்து : எண்

குறியீட்டு முறையில் ஒன்று. இதில் பதின்ம இலக்கங்கள், எழுத்துகள், சிறப்புக் குறியீடுகள் ஆகியவை, ஏற்கெனவே முடிவு செய்யப்பட்ட, தொடர்ச்சியான இரும இலக்கங்களினால் குறிப் பிடப்படும் எழுத்து - எண் கொண்ட குறி களைக் குறிப்பிடு கிறது.

**binary coded decimal; (BCD)** : இருமக் குறி முறைப் பதின்மம் ; பிசிடி : ஒரு வகை யான கணினி குறி யீட்டு முறை. இதில் ஒவ்வொரு பதின்ம இலக்கமும் 1-க்கள் 0-க்கள் கொண்ட நான்கு இலக்கத் தொகுதியால் குறிப் பிடப்படுகின்றன.

| 7 | 5 | 2 | 1 | 3 |
|---|---|---|---|---|
| 0111 | 0101 | 0010 | 0001 | 0011 |

இருமக் குறியீட்டு பதின்ம எண்

**binary coded decimal inter change code** : இருமக் குறி முறைப் பதின்ம மாற்றக் குறி முறை : 64 எழுத்து மாற்ற வசதி கொண்ட 6 துண்மி உள்ளீட்டுக் குறி முறை.

**binary coded decimal notation** : இருமக் குறியீட்டு பதின்மக் குறி மானம்.

**binary coded decimal number** : இருமக் குறிமுறை பதின்ம எண் : நான்கு எண்களைக் கொண்ட தொடர்ச்சியான இரும எண் தொகுதிகள். பதின்ம எண்ணில் குறிப்பிடப்படும் மதிப்புக்குச் சமமானது என்று குறிப்பிட முடியாது. ஆனால் பதின்மான எண்ணுக்கு ஒவ்வொன்றுக்கும் இரும முறை எண் உண்டு. எடுத் துக் காட்டாக 264-க்கு இரும எண் 0010 0110 0100.

**binary coded decimal representation**: இருமக் குறியீட்டு பதின்ம உருவகிப்பு

**binary coded digit** : இருமக் குறியீட்டு இலக்கம்.

**binary coded octal** : இருமக் குறி முறை எண்மம் : 3 துண்மிகள் தொகுதியில் எட்டிலக்க அல்லது எண்ம இலக்கங்களைச் சேமித்தல்.

**binary compatible** : இரும ஒத்தியல்பு; இரும தகவமைவு :

இரும வடிவத்தில் உள்ள எந்த ஒரு வன்பொருள் அல்லது மென் பொருள் அமைப்பையும் குறிப்பிடுகிறது.

binary conversion : இரும எண் மாற்றம் : ஒரு பதின்ம (decimal) எண்ணை இரும எண்ணாக மாற்றலும், ஓர் இரும எண்ணை பதின்ம எண்ணாக மாற்றலும்.

binary counter : இருமக் கணக் ககம் : ஒவ்வொரு உள்ளீட்டுத் துடிப்புடனும் 1 எனிலக்கம் சேர்க்கும் கணக்ககம்.

binary decimal conversion : இரும - பதின்ம மாற்றம்.

binary device : இருமச் சாதனம் : 1. நிறுத்துதல் அல்லது இயக்கு தல் என்று இயங்கும் மின்சார பொத்தானைப் போன்ற இரண்டு நிலைகளில் பதிவு செய்யும் சாதனம். 2. கணினி அறிவிய லில், இரும வடிவில் பதிவு செய்யும் சாதனம் அல்லது அவ்வாறு குறியீடு செய்யப் பட்டதைப் படிக்கும் சாதனம்.

binary digit : இரும இலக்கம் : 'பிட்' துண்மி என்று சுருக்கப் பெயர் அளிக்கப்பட்ட 0 அல்லது 1 என்ற எண்களில் ஏதாவது ஒன்று.

binary encoding : இருமக் குறி யாக்கம் : எந்த ஒரு மொழியிலும் எழுத்துத் தொகுதியை இரும வடிவத்தில் குறிப்பிடுதல்.

binary field : இருமப் புலம் : இரும எண்களை மட்டும் கொண்டுள்ள புலம். கணக்கீடு களுக்காக இரும எண்களை சேமிப்பதையோ அல்லது சொற் றொடர், வரைகலை உருவங்கள், குரல், ஒளிக்காட்சி போன்ற எத் தகைய தகவலையும் வைத்துக் கொள்ளும் திறனுள்ள புல மாகவோ இருக்கலாம்.

binary file : இருமக் கோப்பு: இருமக் குறியீடுகளால் ஆன கோப்பு.

binary file transfer : இருமக் கோப்புப் பரிமாற்றம் : இரும வடிவில் தகவல் பதியப் பட்டுள்ள கோப்புகளை கணினி வாயிலாகப் பரிமாற்றம் செய் தல். உரை வடிவக் கோப்பு களைப் பரிமாறிக் கொள் வதிலிருந்து மாறுபட்டது. தற் போதைய நவீன கணினி இயக்க முறைமைகளில் ஓர் உரைக் கோப்பே, அச்சிடத்தக்க எழுத்து களடங்கிய இருமக் கோப் பாகவே கருதப்படுகிறது. ஆனால் பழைய முறைமைகளில் இவற்றை வேறுபடுத்திப் பார்க்கும் முறை இருந்தது.

binary format : இரும வடி வமைவு; இரும வடிவம் : பிசிடி

வடிவத்திற்கு மாறாக முழுமையும் இரும வடிவத்தில் சேமிக்கப்பட்டுள்ள எண்கள். தரவு, உரை, படங்கள், வரைகலை, குரல், ஒளிக்காட்சி போன்ற இருமக் குறியீட்டு வடிவத்தில் சேமிக்கப்படும் தரவு விவரங்களை இழக்காமல் எந்த கோப்பையும் அனுப்பக் கூடிய கோப்புப் பரிமாற்ற குறிமுறை.

**binary fraction** : இரும பின்னங்கள் : ஒவ்வொரு இரும இலக்கம் அதற்கு வலப்புறம் வரும் இலக்கத்தைப் போல இரண்டு மடங்கு மதிப்பு கொண்டது. பதின்மப் புள்ளிக்கு முன்போ அல்லது பின்போ இருமக் குறியீட்டு பதின்மமாக வந்தாலும் அதே மதிப்பையே கொண்டிருக்கும். சான்றாக 11-11 என்பது இருமத்தில் 2+1+ 0.5+ 0.25 அதாவது பதின்மான எண்ணில் 3.75

**binary half adder** : இரும அரை கூட்டி.

**binary language** : இரும மொழி.

**binary notation** : இருமக் குறிமானம் : 2-ஐ அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட எண் முறை.

**binary number** : இரும எண் : ஒவ்வொரு இலக்கத்திற்கும் 2ஐ அடிப்படையாகக் கொண்ட ஒரு மதிப்பு அளிக்கப்படுகிறது. 0, 1 ஆகிய இரண்டு இலக்கங்களே பயன்படுத்தப்படுகின்றன.

**binary number system** : இரும எண் முறை : 2-ஐ அடிப்படையாகக் கொண்ட எண்முறை.

**binary number system or code** : இரும எண்முறை அல்லது குறிமுறை : 0 மற்றும் 1 ஆகிய இரண்டு இலக்கங்களை மட்டும் பயன்படுத்தி எண்களை எழுதும் முறை.

**binary operation** : இருமச் செயற்பாடு.

**binary point** : இருமப் புள்ளி : கலவையான இரும எண்ணில் முழு எண்ணிலிருந்து அதன் பதின்மப் பகுதியை பிரிக்கும் புள்ளி. 110.011 என்ற இரும எண்ணில் இரண்டு 0-க்களுக்கு இடையில் இருமப் புள்ளி உள்ளது.

**binary relation** : இரும உறவு : இரண்டு தொகுதிகளுக்கு இடையே உள்ள உறவு.

**binary representation** : இரும உருவகிப்பு.

**binary row** : இரும வரிசை; இருமக் கிடக்கை.

**binary search** : இரும தேடல் : ஒவ்வொன்றையும் இரண்டு

பகுதிகளாகப் பிரித்து, அதில் தேவையான ஒன்றைத் தேர்ந்தெடுத்து, மற்றொன்றை ஒதுக்கும் முறை. பல தரவுத் தளங்களில் இந்த முறையில் தேடுகிறார்கள்.

**binary sequence** : இரும வரிசை : தொடர்ச்சியான இரும இலக்கங்கள்.

**binary system** : இரும முறை: *0 மற்றும் 1 ஆகிய 2 இலக்கங்களை மட்டுமே பயன்படுத்தும் எண் முறை.*

**binary time** : இரும நேரம்.

**binary-to-decimal conversion** : இருமத்திலிருந்து பதின்மத்துக்கு மாற்றல் : *2-ன் அடிப்படையில் எழுதப்பட்ட எண்ணை 10-ன் அடிப்படையில் மாற்றி அதற்குச் சமமான இலக்கத்தை எழுதுதல்.*

**binary-to-gray code conversion** : இருமத்திலிருந்து கிரே குறியீடுக்கு மாற்றுதல் : *இடது புறத்திலிருந்து வலப்புறமாக படிக்கும் விதியைப் பயன்படுத்தி இருமக் குறிமுறைக்குச் சமமான கிரே குறிமுறையினைக் கொண்டு வரமுடியும்.*

**binary-to-hexadecimal conversion** : இருமத்திலிருந்து பதினறும அடிப்படைக்கு மாற்றுதல் : *2-ன் அடிப்படையில் எழுதப்பட்ட எண்ணிலிருந்து 16-ன் அடிப்படையில் எழுதப்பட்ட எண்ணுக்கு மாற்றுதல்.*

**binary-to-octal conversion** : இருமயெண்ணிலிருந்து எண்ம எண்ணுக்கு மாற்றுதல் : *2-ஐ அடிப்படையாகக் கொண்ட எண்ணிலிருந்து 8-ஐ அடிப் படையாகக் கொண்ட எண்ணிற்குச் சமமானதை எழுதுதல்.*

**binary transfer** : இருமப் பரிமாற்றம் : *இயக்குநிலை* (execut-able) *கோப்புகள், 'பயன்பாட்டு தரவுக் கோப்புகள் மற்றும் மறையாக்கம் செய்யப்பட்ட கோப்புகளை கணினி வழியாகப் பரிமாற்றம் செய்து கொள்வதற்கு உகந்த மின்னணுத் தகவல் பரிமாற்ற முறை.*

**binary tree** : இரும மரம் : *எந்த ஒரு மரத்தையும் இடது, வலது துணை மரங்களாகப் பிரித்தல். ஒவ்வொரு முறையிலும் ஒரு பெற்றோர் மற்றும் இரண்டுக்கு மேற்படாத குழந்தைகள் உள்ள தரவுக் கூட்டமைப்பு.*

**binary variables** : இரும மாறிலிகள் : *இரண்டு மதிப்புகளில் ஒன்றை உண்மை அல்லது பொய், 1 அல்லது 0 என ஏற்கும் மாறிலி.*

**bind** : கட்டு; பிணை : *1. எந்திர முகவரியை அளவை அல்லது குறியீடு அல்லது முகவரிக்குக்*

கொடுத்தல். 2. ஒரு மாறிலி அல்லது அளவு கோலுக்கு ஒரு வகை மதிப்பை அளித்தல். 3. தொகுதிகளை ஒன்றாக இணைத்தல்.

**binding time** : பிணைக்கும் நேரம் : ஒரு தொகுப்பு அடையாள எண் அல்லது முகவரியை எந்திர மொழி வடிவத்தில் மாற்றும் நிலை.

**BinHex** : பின்ஹெக்ஸ் : 1. இருமத் தரவு கோப்புகளை, மின்னஞ்சல் மற்றும் செய்திக் குழுக் கட்டுரையாக மற்றொரு கணினிக்கு அனுப்புவதற்கு உகந்த வகையில் ஆஸ்கி (ASCII) உரைக் கோப்பாய் மாற்றுவதற்கான குறிமுறை. இணையத்தில் ஆஸ்கிக் குறியீட்டு வடிவில் தகவல் அனுப்ப வேண்டிய தேவைகளுக்கு இம்முறை உகந்தது. பெரும்பாலான மேக் (Mac) கணினிப் பயனாளர்கள் பின் ஹெக்ஸ் முறையை அடிக்கடி பயன்படுத்துகின்றனர். 2. ஓர் இருமத் தரவுக் கோப்பை, ஆஸ்கி உரைக் கோப்பாகவும், ஓர் ஆஸ்கிக் கோப்பை இரும வடிவக் கோப்பாகவும் மாற்றித் தருகின்ற ஆப்பிள் மெக்கின்டோஷ் நிரல்.

**biochip** : உயிரியச் சிப்பு : உயிருள்ள பொருள்களை நுண் சிப்புகளாக மாற்ற கணினி தொழிலின் முயற்சி. இப்போதைய சிலிக்கான் சிப்புகளில் இருந்து 500 மடங்கு அதன் அளவு குறையும் என்று சில மதிப்பீடுகள் சொல்கின்றன. ஆனால், இதை செய்ய 80 ஆண்டுகள் ஆகும் என்று அறிவியலார் சிலர் கூறுகின்றனர்.

**biocomputer** : உயிரியக் கணினி : உயிரியச் சிப்புகளில் தனது மையச் செயலகம் அல்லது நினைவகத்தைச் சேர்த்து வைக்கும் கணினி.

**biodata** : தகுதிக்குறிப்பு; தன் விவரக் குறிப்பு.

**biological neuron** : உயிரியல் நரம்பகம் : 0.01 மி.மீ. நீளமுள்ள உயிரியல் நரம்பு அறை.

**biomechanics** : உயிரிய எந்திரவியல் : இயக்கத்தின் உயிர்க்கூறு கொள்கைகளை ஆய்தல். விளையாட்டு வீரர்கள் மற்றும் பந்தயக் குதிரைகளின் இயக்கத்தை மாதிரியாகக் கொண்டும் உயிர் எந்திரவியல் பயன்பாடுகள் செய்யப்படுகின்றன.

**biometrics** : உயிரளவை : தனித்தனி உடல் அமைப்புகளை அளக்கும் அறிவியல். சில பாதுகாப்பு முறைகள் மற்றும் தடய அறிவியல் ஆராய்ச்சிகளில் பயன்படுத்தப்படுகிறது.

**biomic chips** : உயிரியல் சிப்பு; உயிரியல் சில்லு.

**bionics : உயிரியம் :** *உயிர் அமைப்புகளை ஆராய்ந்து அவற்றின் தன்மைகளையும், செயல்பாடுகளையும் மின்னணு மற்றும் எந்திர வன்பொருளுடன் தொடர்புப்படுத்தல்.*

**BIOS : பயாஸ் :** *அடிப்படை உள்ளீட்டு-வெளியீட்டு அமைப்பு எனப் பொருள்படும்* Basic Input/output System *என்பதன் குறும்பெயர். ஒரு குறிப்பிட்ட கணினிக்கு இசையுமாறு மாற்றப்படும் அமைப்பின் பகுதி.*

**Bios data area : பயாஸ் தரவுப் பகுதி :** *0040: 0000-வில் தொடங்கும் நினைவகத்தின் பகுதி. இங்கு தான் பயாஸ்நிலை பற்றிய தரவுவையும் விசைப் பலகையின் இடைநிலை நினைவகத்தையும் வைத்திருக்கிறது.*

**biosensors : உயிர் உணரிகள்.**

**bipolar : இருதுருவ :** *சிலிக்கான் படிமங்களிலிருந்து ஒருங்கிணைந்த மின்சுற்றுகளை உருவாக்கும் மிகவும் புகழ்பெற்ற அடிப்படை முறை. 'இருதுருவ' என்றால் இரண்டு துருவங்களை உடையது என்று பொருள். இதற்கு முந்தைய மோஸ் ஃபீல்டுக்கு மாறானது. மோஸ் ஃபீல்டில் ஒரே துருவம்தான் உண்டு. ஒரே திசையில்தான் மின்சாரம் பாயும். இருதுருவ டிரான்சிஸ்டர்களில் இரண்டு திசைகளிலும் உள்ள முகப்புகளை நோக்கி மின்சாரம் பாயும். ஒரு துருவம் என்பதற்கு மாறானது.*

**bipolar read only memory : இரு துருவ படிக்க மட்டுமான நினைவகம்.**

**bipolar transmission : இரு துருவ செய்தி பரப்புகை :** *பாசிட்டிவ் மற்றும் நெகட்டிவ் சமிக்கைகளாக மாற்றி மாற்றி அனுப்பும் இலக்க முறை தகவல் பரிமாற்ற தொழில் நுட்பம்.*

**biquinary code : பிக்குனரி பதின்மக் குறியீடு :** *இருமக் குறிமுறை துண்மி மதிப்புள்ள குறியீடு. பதின்ம எண்களைக் குறிப்பிடுவது. பிழை திருத்தத்திற்குப் பயன்படுத்தப்படுகிறது. பதின்ம எண் 5-ஐக் குறிக்க மூன்று துண்மிகள்போதும். மற்ற 5 துண்மிகளும் பதின்ம எண் 0-வை 4-ன் மூலம் குறிப்பிடுகின்றன.*

**birefringence : இரட்டை பதின்ம அலை வீச்சு :** *ஒரு படிகத்தைப் பயன்படுத்தி ஒளியை இரண்டு அலைவரிசைகளில் பிரித்து இரண்டு வெவ்வேறு வேகங்களில் ஒன்றுக் கொன்று செங்கோணத்தில் போக செய்தல். எல்சிடி காட்சித் திரையில் நிறத்தை வடிகட்டி அனுப்ப இது பயன்படுகிறது.*

**bisam** : பைசாம் : அடிப்படை சுட்டுறு வரிசைமுறை - அணுகு முறை எனப் பொருள்படும் Basic Indexed Sequential Access Method என்பதன் முதலெழுத்துக் குறும்பெயர்.

**bistable** : இருநிலை : 1 அல்லது 0, இயக்கும் அல்லது நிறுத்தும். இவை இரண்டு நிலைகளில் ஒன்றை மட்டும் ஏற்கும் வன் பொருள் சாதனம்.

**bistable circuit** : இருநிலை மின்சுற்று : இரண்டே இரண்டு நிலைகளில் ஏதேனும் ஒன்றில் நிலைக்கும் மின்சுற்று. ஒரு நிலையிலிருந்து இன்னொரு நிலைக்கு மாற, மின் சுற்றுக்கு வெளியிலிருந்து தூண்டப்பட வேண்டும். ஓர் இரு நிலை மின்சுற்று, ஒரு துண்மி (பிட்) தகவலை இருத்தி வைக்கும் திறனுடையது.

**bistable device** : இரு நிலைச் சாதனம் : நிறுத்துதல் அல்லது இயக்குதல் ஆகிய இரண்டு நிலைகள் மட்டுமே உள்ள சாதனம்.

**bistable magnetic core** : இரு நிலை காந்த உள்ளகம்.

**bi-state** : இருநிலை : இரண்டு நிலைகள் மட்டும் இருக்கும் போது அவற்றில் ஒன்றை மட்டுமே எடுத்துக் கொள்ளும் கணினி உறுப்புகளின் நிலை.

**bit** : பிட் : துண்மி ; இரு நிலைத் துணுக்கு; இரும இலக்கம்: 1.இரும இலக்கம். இரும எண் முறையில் 1 அல்லது 0-வைக் குறிக்கும் ஒரு எண். 2. ஒரு கணினியாலும் அதன் துணைக் கருவிகளாலும் புரிந்து கொள்ளக் கூடிய தகவலின் மிகச் சிறிய அலகு. 3. பல துண்மிகள் சேர்ந்தே ஒரு எண்மியில் அல்லது ஒரு கணினி சொல் உருவாகிறது.

**bit block** : துண்மித் தொகுதி; பிட் தொகுதி : கணினி வரைகலையிலும் திரைக்காட்சியிலும் ஒரு செவ்வகப் பகுதிக்குள் அடங்கிய படப்புள்ளிகள் (pixels) ஓர் அலகாகக் கருதப்படுகின்றன. படப் புள்ளிகளின் நிறம், செறிவு ஆகிய காட்சிப் பண்பியல்புகளைக் குறிக்கும் துண்மிகளின் தொகுப்பு என்பதால் இப்பெயர் பெற்றது. நிரலர்கள் துண்மித் தொகுதிகளையும், துண்மித் தொகுதி இடமாற்ற நுட்பத்தையும் பயன்படுத்தி, கணினித் திரையில் மின்னல் வேகத்தில் உருவங்களை அடுத்தடுத்துத் திரையிடுவதன் மூலம், பட உருவங்கள் இயங்குவது போலச் செய்ய முடியும்.

**bit block transfer** : துண்மித் தொகுதி இடமாற்றம் : வரைகலைத் திரைக்காட்சியிலும், இயங்கு படங்களிலும் செவ்வகத் தொகுதி

யாய் அமைந்த படப்புள்ளிகளின் பண்பியல்புகளை மாற்றவும், கையாளவும் பயன்படும் ஒரு நிரலாக்கத் தொழில்நுட்பம். பட உருவம் ஒரு சிறிய சுட்டுக்குறி (cursor)யாகவோ, ஒரு கார்ட்டூன் படமாகவோ இருக்கலாம். இத்தகைய துண்மித் தொகுதியை ஒற்றை அலகாக ஒளிக்காட்சி நினைவகத்தில் நகர்த்துவதன் மூலம் கணினித் திரையில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் அதிவேகமாய் திரையிட முடியும். துண்மிகளின் மதிப்புகளை மாற்றுவதன் மூலம் உருவப்படங்களில் ஒளிப் பகுதியை மாற்ற முடியும். தொடர்ச்சியாக அடுத்தடுத்துத் திரையிடுவதன் மூலம் பட உருவங்களின் தோற்றத்தை மாற்ற முடியும். நடமாடுவது போலச் செய்யவும் முடியும்.

**bit bucket : துண்மிக் கூடை; துண்மிக் குப்பைத் தொட்டி :** தரவுவை கழித்துக்கட்டப் பயன்படுத்தப்படும் ஒரு கற்பனை இடப்பகுதி. வெற்று (null) உள்ளீட்டு/வெளியீட்டுச் சாதனம் எனலாம். இதில் போடப்படும் விவரங்களைப் படித்தறிய முடியாது. டாஸ் இயக்க முறைமையில் இந்தத் துண்மிக் குப்பைத் தொட்டி நல் (null) என்று அறியப்படுகிறது. யூனிக்ஸ் இயக்க முறைமையில், /dev என்னும் கோப்பகத்தில் இத்தகைய வெற்றுச் சாதனக் கருத்துரு உண்டு. ஒரு கோப்பகத்திலுள்ள கோப்புகளின் பட்டியலை வெற்றுச் சாதனத்துக்கு அனுப்பும்போது, பட்டியல் திரையில் தெரியாமல் மறைந்து விடுகிறது. இயக்க முறைமை தருகின்ற பிழை சுட்டும் அல்லது பிற வகைச் செய்திகளை திரையில் காட்டப்படாமலிருக்கும் பொருட்டு அச்செய்திகளை வெற்றுச் சாதனம் என்னும் குப்பைத் தொட்டிக்கு அனுப்பி வைப்பதுண்டு. C: \>Copy File1 File2 > NUL என்ற டாஸ் கட்டளை கோப்பை நகலெடுத்த பிறகு 1 File(s) copied என்னும் செய்தியைத் திரையில் காட்டாது.

**bit check : துண்மிச் சரி பார்ப்பு.**

**bit control : துண்மிக் கட்டுப்பாடு :** வரிசையான தரவுவை அனுப்பும் முறை. இதில் ஒவ்வொரு துண்மியும் ஒரு தனிப் பொருள் கொண்டது. ஒவ்வொரு எழுத்துக்கு முன்னும் பின்னும் தொடங்கவும், நிறுத்தவுமான துண்மிகள் இருக்கும்.

**bit density : துண்மி அடர்த்தி :** ஒரு குறிப்பிட்ட நீள அலகிலோ அல்லது காந்த நாடாவின் பரப்பளவிலோ அல்லது வட்டிலோ பதிவு செய்யப்பட்டுள்ள துண்மிகளை அளப்பது.

**bit depth** : துண்மி ஆழம் : ஒரு வரைகலைக் கோப்பில் நிறத் தகவலைப் பதிவு செய்ய ஒரு படப் புள்ளிக்கு ஒதுக்கப்படும் துண்மிகளின் எண்ணிக்கை.

**bit error rate** : துண்மி பிழை வீதம்.

**bit error single** : துண்மி தனிப் பிழை.

**bit field** : துண்மி புலம் : ஒரு எட்டியலையோ சொல்லையோ துண்மிகளாகப் பார்க்கும்போது, பல துணுக்குகள் ஒன்றுசேர்ந்து ஒரு தகவலின் பகுதியைத் தருகிறது. சான்றாக, 0 - 3 துண்மிகள் ஒரு துண்மி புலத்தில் உள்ள எழுத்துகளின் முன்னணி நிறத்தைக் குறிப்பிடுகின்றன.

**bit flipping** : துண்மி மாற்றுதல் : 0-ஐ 1 ஆகவும் 1-ஐ 0 ஆகவும் மாற்றும் செயல். சான்றாக, வரைகலை நிரலில் கறுப்பு-வெள்ளை துண்மி வரைந்த உருவத்தை மாற்ற அதன் துண்மிகளை மாற்றிப் பெறலாம்.

**bit image** : துண்மிப் படிமம் : ஒரு கணினியின் நினைவகத்தில் இருப்பு வைக்கப்பட்டுள்ள துண்மிகளின் கூட்டம். ஒரு செவ்வக அணிபோல வரிசைப்படுத்தப்பட்டது. கணினியின் காட்சித் திரை பயனாளருக்குத் தெரிகின்ற ஒரு துண்மித் தோற்றம் எனலாம்.

**bit length** : துண்மி நீளம்.

**bit level device** : துண்மி நிலை சாதனம் : வட்டு இயக்ககம் போன்ற ஒரு சாதனம். இது தகவல் துண்மிகள் அல்லது தகவல் கட்டங்களை உள்ளீடு/வெளியீடு செய்யும் pulse Level Device -க்கு எதிர்ச் சொல்.

**bit location** : துண்மி இருப்பிடம்.

**bit manipulation** : துண்மியைக் கையாளல் : துண்மிகளை மாற்றியமைத்து ஒரு தரவு மதிப்பினை மாற்றுதல். துண்மிமாற்றுதல் என்றும் சில சமயம் சொல்லப்படுவதுண்டு.

**bit map** : துண்மி நிலைப் படம் : 1. கணினியில் வரைபடங்களுக்கென்று ஒதுக்கப்பட்டுள்ள இருப்பிடப் பகுதி. தொடர்ந்து காட்சித்திரைக்கு படத்தை அனுப்பி வருவது. 2. துண்மிகளின் வரிசை நின்றோ இயங்கியோ செயல்படுவதை ஒட்டி பிற பொருள்களின் வரிசை மாற்றம் அடைதல்.

**bitmap display** : துண்மி நிலைப்படக் காட்சி.

**bitmap font** : துண்மிப்பட எழுத்துரு : துண்மி முறையினைப் பயன்படுத்தி உருவாக்கப்படும் எழுத்துரு. பொதுவாக இதை அளவு மாற்றவோ சுழற்றவோ முடியாது. ஒரு குறிப்பிட்ட

அளவு முறையில் உள்ள எழுத்துகளின் தொகுதி. ஒவ்வொரு எழுத்தும் தனித்தனி முறையிலான புள்ளிகளை உடையது. துண்மி மூலம் உருவான திரை அல்லது அச்சுப்பொறியின் அச்செழுத்துகள் புள்ளிக் கணக்குகளாலான எழுத்துகளைக் கொண்டிருக்கும்.

**bitmapped display : துண்மிப் படக்காட்சி :** *திரையில் உள்ள ஒவ்வொரு படப்புள்ளியும் ரேமில் உள்ள ஒரு நினைவகப் பகுதியுடன் தொடர்பு படுத்தும் காட்சித் திரை.*

**bit-mapped graphics : துண்மிப் பட வரைகலை :** *திரையில் உள்ள படப் புள்ளிகளுக்கும் நினைவகத்தில் உள்ள துண்மிகளுக்கும் இடையே ஒன்றுக்கொன்றான தொடர்பை ஏற்படுத்துவதன் மூலம் திரையில் உருவங்களை உண்டாக்கும் முறை. வண்ண வரைகலைகளில், சிவப்பு, பச்சை மற்றும் நீலநிற படப்புள்ளிகளை துண்மிப்பட முறையில் உருவாக்க மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட துண்மிகள் தேவைப்படும். சில வருடி பொறிகளிலும் ஓவிய மென்பொருள்களிலும் துண்மி வரைகலைகள் உருவாக்கப்படுகின்றன.*

**bitmapped screen : துண்மி படத் திரை :** *கணினியின் ரேமில் ஒவ்வொரு நினைவக இடத்திற்கும் தொடர்புள்ள புள்ளிகளைக் கொண்ட காட்சித் திரை. ஒவ்வொரு புள்ளியுடன் தொடர் புள்ள நினைவக இருப்பிடத்தை ஒட்டி புள்ளிகளை இயக்கவோ, நிறுத்தவோ செய்ய முடியும்.*

**bitmapping : துண்மிப் படமாக்கம் :** *துண்மிகளின் புள்ளிகள் குழுக்களைப் பயன்படுத்தி அகரவரிசை எழுத்து அல்லது வரைகலை உருவத்தை உருவாக்குதல்.*

**bitmap scanning : துண்மிப் நிலைப்பட வருடல்.**

**bit mask : துண்மி மறைப்பு :** *ஒரு பதிவகம் மற்றும் மாறியின் உள்ளடக்கத்தைச் சோதனை செய்யப் பயன்படுத்தப்படும் துண்மிகளின் தொகுதி.*

**bit matrix : துண்மி அணி :** *இரு பரிமாண அணி. இதன் உறுப்புகளாக இரும இலக்கங்களாகிய 0 அல்லது 1 மட்டும் வரும்.*

**BitNET : பிட்நெட் :** *ஏனெனில் அது நேரப் பிணையம் என்ற பொருள் தரும்* Because It's Time Network *என்ற சொல்தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். 1981ஆம் ஆண்டில் வாஷிங்டன் நகரில் அமைக்கப்பட்ட விரிபரப்புப் பிணையம்* (WAN). *ஆராய்ச்சி மற்றும் கல்விப் பிணையக் கழகம்* (CREN -

Corporation for research and educational networking) இதனைப் பராமரித்து வந்தது. வட அமெரிக்கா, ஐரோப்பா, ஜப்பான் ஆகிய நாடுகளிலுள்ள கல்வி மற்றும் ஆய்வு நிறுவனங் களின் பெருமுகக் கணினி அமைப்புகளிடையே (main frames) மின்னஞ்சல் மற்றும் கோப்புப் பரிமாற்றங்களுக்காக இப்பிணையம் பயன்பட்டது. பிட்நெட், டிசிபி/ஐபி நெறி முறைக்குப் பதிலாக, ஐபிஎம் மின் பிணையப் பணி உள்ளீடு என்ற பொருள் படும் Network Job Entry (NJE) என்னும் தகவல் பரிமாற்ற நெறிமுறையைப் பயன்படுத்தியது. இன்றைக்கு இணையத்தில் அஞ்சல் குழுக் களைப் (mailing lists) பராமரிக்கப் பயன்படும் லிஸ்ட்செர்வ் (Listserve) என்னும் மென் பொருள் தொகுப்பு பிட்நெட் டில் உருவாக்கப்பட்டது.

**.bit newsgroups : துண்மி செய்திக் குழுக்கள்; துண்மி செய்தி அரங்குகள் :** *பிட் நெட்டி லுள்ள சில அஞ்சல் பட்டியல் அல்லது அஞ்சல் குழுக்களின்* (mailing list) *உள்ளடக்கத்தைப் பிரதி பிம்பமாய் தம்மகத்தே கொண்டுள்ள இணைய செய்திக் குழுக்களின் படிமுறை.*

**bitonal : இரு வண்ண.**

**bit operations : துண்மிச் செயல் பாடுகள் :** *தகவலுக்குள் குறிப் பிட்ட துண்மிகளை மட்டும் படிக்கும் அல்லது மாற்றும் நிரல் செயல்பாடுகள்.*

**bit oriented protocol : துண்மி சார்ந்த நெறிமுறை :** *தகவல் துண்மிகளின் தனித்தனி குழுக் களைப் பிரிக்கப் பயன்படும் துண்மி அமைப்பு.*

**bit parallel : துண்மி இணை :** *பல துண்மிகளை ஒரே சமயத் தில் அனுப்புதல். ஒவ்வொரு துண்மியும் கம்பித் தொகுதியில் உள்ள ஒவ்வொரு கம்பி வழி யாகச் செல்லும்.*

**bit parity : துண்மிப் பொருத்தம்; துண்மிச் சமநிலை.**

**bit pattern : துண்மித் தோரணி:** *குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள ஒரு தொகுதி துண்மி சேர்ந்து இரும எண் ஆதல். இரும எண் இலக்கங்களின் குறிப்பிட்ட வடிவமைப்பு.*

**bit plane : துண்மித் தளம் :** *ஈஜிஏ-வில் ஒளிக்காட்சி இடை யகம் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்படுகிறது. ஒவ்வொரு துண்மி தளமும் 0 - 3 ஆகக் குறிக்கப்படுகிறது. 16 நிறமுறை யில், நான்கு தளங்கள் இணை யாகப் பிரிக்கப்பட்டுக் குறிப் பிட்ட நினைவக முகவரியில்*

நான்கு பட்டியல்களாகக் காணப் படுகின்றன. சில சமயங்களில் தளங்களை வரிசையாகச் சங்கிலியிட்டு ஒன்று அல்லது இரண்டு தளங்கள் இணைக்கப்படுவதுண்டு.

**bit position : துண்மி இட நிலை.**

**bit rate : துண்மி வீதம் :** தரவு தொடர்பிலோ அல்லது வழித் தடங்களிலோ இலக்கங்கள் அல்லது துடிப்புகள் தோன்றும் விகிதம்.

**bit serial : துண்மித் தொடர் :** ஒரு வழியில் ஒன்றன்பின் ஒன்றாக துண்மிகளை அனுப்புதல்.

**bit sign : துண்மி அடையாளம்.**

**bit slice microprocessor : துண்மித் துண்டு நுண் செயலி :** பொதுவாக நுண்செயலிகள் எட்டுத்துண்மித் தொகுதி களையே (ஒரு பைட் = 8 பிட்டு கள்) கையாள்கின்றன. 2 பிட்டு கள், 4 பிட்டுகளில் ஆன தகவல் களைக் கையாளவும் முடிகிற நுண்செயலி துண்மித் துண்டு நுண்செயலி எனப்படுகிறது. ஏனைய நுண்செயலிகள் செய் கின்ற அதே பணிகளை இந்த நுண் செயலிகள் செய்து முடிக்க, நிரல் அமைக்க முடியும்.

**bit-slice processor : துண்மி-துண்டு செயலகம் :** ஒரு தனி சிப்புவில் 2, 4 அல்லது 8 துண்மி துண்டுகள் தனித்தனியாக இயங்குமாறு உள்ள செயலகம், பலவித சொல் அளவுகள் உள்ள வாறு நுண்செயலகங்களை அமைத்தல். அமைப்பின் பிற உறுப்புகளைச் சேர்த்தவுடன் நுண் கணினியில் 8, 12, 16, 24 அல்லது 32 துண்மி கிடைக்கக் கூடிய முறை.

**bit specifications : துண்மி வரன்முறைகள் :** ஒரே நேரத்தில் மையச் செயலகம் கணிப்பீடு செய்யும் அளவான கணினியின் உள் சொல் அல்லது பதிவகத்தின் அளவு. தகவல் பரிமாற்றப் பாதை, நினைவகத்திலிருந்து மைய செயலகத்துக்கோ அல்லது வெளிப் புறச் சாதனங்களுக்கோ தகவல்களை அனுப்பும் அளவு.

**bits per inch : அங்குலத்துக்கு இத்தனை துண்மிகள் :** தகவல் சேமிப்புத் திறனை அளக்கும் அலகு. ஒரு வட்டில் ஒரு வட்டத் தடம் (track) சுற்றில் கொள்ளு கின்ற துண்மிகளின் எண்ணிக்கை.

**bits per Second : ஒரு நொடிக்குத் துண்மிகள் :** ஒரு நொடிக்கு இத்தனை துண்மிகள் என்ற வகையில் தரவு துண்மிகள் அனுப்பப்படும் விகிதத்தை அளக்கும் முறை. பிபீஎஸ் என்று சுருக்கி

அழைக்கப்படும் இது பாட் விகித அளவுடனும் மாற்றிப் பயன் படுத்தப்படுகிறது. ஆனால், இந்த இரண்டின் அனுப்புதல் விகிதம் சமமாக இருக்க வேண் டிய அவசியமே இல்லை.

**bit stream : துண்மித் தாரை; துண்மி வரிசை:** எழுத்துத் தொகுதிகளாகப் பிரிக்காமல் தகவல் தொடர்புக் கம்பி வழி யாக வரிசையாக அனுப்பப் படும் துண்மித் தொடர்.

**bit stuffing : துண்மி நுழைத் தல் :** ஒரு குறிப்பிட்ட தோற் றத்தை முழுமைப்படுத்த அனுப் பப்பட்ட செய்தியுடன் துண்மி களைச் சேர்த்தல். கட்டுப் பாட்டுக் குறியீடுகளாகத் தவறாகக் கருதப்படுவதைத் தடுக்க தகவல் துண்மிகளின் அமைப்பைப் பிரித்தல்.

**bit synchronous protocol : துண்மி ஒத்தியங்கு நெறி முறை.**

**bit test : துண்மி சோதனை :** ஒரு குறிப்பிட்ட துண்மியின் அடை யாளம் ஒன்றா அல்லது சுழியா (பூஜ்யம்), இயக்கமா அல்லது நிறுத்தமா என்று கண்டறிய உதவும் நிரல் சோதனை முறை.

**bit transfer rate : துண்மி பரி மாற்ற வீதம் :** 1. ஒரு குறிப்பிட்ட நேர அலகில் இடமாற்றம் செய்யப்பட்ட துண்மிகளின் எண்ணிக்கை. 2. ஒரு நொடிக்கு இத்தனை துண்மி என்றே பொதுவாகக் குறிப்பிடப்படும்.

**bit twiddler : துண்மி ஆர்வலர் :** 1. கணினி நேசர். 2. கணினி யோடு பணியாற்றுவதில் மகிழ்ச்சி அடைபவர்.

**BIX : பிக்ஸ் :** எண்மித் தகவல் பரிமாற்றம் என்று பொருள்படும் byte information exchange என்ப தன் தலைப்பெழுத்துக் குறும் பெயர். பைட் (byte) இதழ் தொடங்கி வைத்த ஓர் இணையச் சேவை. இப்போது டெல்ஃபி இணையச் சேவைக் கழகம் (delphi internet services corporation) இதனை வாங்கிச் செயல் படுத்தி வருகிறது. மின்னஞ்சல், மென்பொருள் பதிவிறக்கம், மென்பொருள்/வன்பொருள் தொடர்புடைய கருத்தரங்குகள் போன்ற சேவைகளை பிக்ஸ் வழங்கி வருகிறது.

**biz.newsgroups : வணிகச் செய்தி அரங்கம்; வணிகச் செய்திக் குழுக்கள்:** இணையத் திலுள்ள செய்திக் குழுக்களில் ஒருவகை. வணிகம் பற்றிய விவாதங்களே இக்குழுக்களில் நடைபெறுகின்றன. ஏனைய செய்திக் குழுக்களில் இருப்பது போன்று அல்லாமல், இவற்றில் விளம்பரம் மற்றும் ஏனைய விற்பனை தொடர்பான தகவல்

*களை வெளியிடவும் அனுமதி உண்டு.*

**.bj : .பிஜே :** *இணைய தளங்கள்* (sites) *பல்வேறு களங்களாக* (domain) *வகைப் படுத்தப்படு கின்றன. பெருங்களம்* (major domain), *உட் களம்* (minor domain) *என்ற பிரிவுகளும் உண்டு. இணைய தள முகவரியின் இறுதிப் பகுதியில் இருப்பது பெருங்களப் பிரிவு.* .com, .org, .edu, ... *என்று இவை அமையும். ஒரு நாட்டின் பெயரைக் குறிக் கும் சொல்லும் பெருங்களப் பிரிவைக் குறிப்பது உண்டு. முகவரியின் இறுதியில்* .in *என்று அமைந்தால் இந்தியாவைக் குறிக்கும்.* .bj *என்பது பெனின்* (benin) *நாட்டைக் குறிக்கிறது.*

**BL : பிஎல் :** Blank and Empty Space in text *என்பதன் குறும் பெயர்.*

**black box : கறுப்புப் பெட்டி :** *எதிர்பார்க்கப்படும் முறையில் உள்ளீடு சமிக்கைகளை மாற்று கின்ற ஒரு மின்னணு அல்லது எந்திர சாதனம். ஆனால், இதன் உள்ளே எவ்வாறு செயல்படு கிறது என்பது அதைப் பயன் படுத்துகின்றவருக்குப் பெரும் பாலும் மர்மமாகவே இருக்கும்.*

**black box approach : கறுப்புப் பெட்டி அணுகுமுறை :** *ஒரு கணினி அமைப்பின் தகவல் மாற்றும் செயல்முறை பற்றிய தொழில்நுட்ப தகவல்களை ஆராய்வதற்குப் பதிலாக, எல்லைகள், இடைமுகங்கள், உள்ளீடுகள் மற்றும் வெளி யீடுகளைப் பற்றி ஆராய்வது.*

**blackout : இருட்டடிப்பு :** *மின் சக்தி ஓட்டம் நின்று போதல்.*

**blank : வெற்றிடம்; காலியிடம் :** *1. எழுத்து எதுவும் பதியப் படாத, ஆவணத்தின் ஒரு பகுதி. 2. மின்னணு விரிதாளில் ஒரு கலம் அல்லது கல வரிசைகளில் உள்ளவற்றை அழிக்கக்கூடிய ஒரு கட்டளை. 3. ஒரு எழுத்துத் தகவல் சேர்க்கக்கூடிய வெற்றிடம்.*

**blank character : வெற்றிட எழுத்து :** *1. வெளியீட்டுச் சாதனத் தில் ஒரு எழுத்து இடவெளியை உருவாக்கக் கூடிய ஒரு குறியீடு. 2. பொதுவாக* b *என்று இதைக் குறிப்பிடுவார்கள்.*

**blank database : வெற்றுத் தரவுத் தளம்.**

**blanking : வெற்றிடமாக்கல் :** *காட்சித் திரையில் ஒரு எழுத்து இருந்தபோதிலும், அந்த இடத்தை வெற்றிடமாக ஆக்கி அந்த எழுத்தை இடாமலிருத்தல்.*

**blank lines : வெறுங் கோடுகள்.**

**blank space : வெற்றிடம்.**

**blank squash : வெற்றிட நீக்கம் :** தகவல் பொருள்களுக்கிடையில் வெற்றிடங்களை நீக்குதல். சான்றாக, City + ", " + STATE என்றும் Austin TX என்றும் வருவதை விட AUSTIN, TX என்று வந்து வெற்றிடம் நீக்கப்பட்டிருக்கும்.

**bleed : சொட்டுதல் :** டிடீபீ மற்றும் வணிக அச்சில் பயன் படுத்தப்படும் சொல். பக்கத்தின் இறுதிப் பகுதியில் இருந்து வெளியே போவதைக் குறிப் பிடுகிறது.

**blickering : பளிச்சிடுதல்.**

**blind carbon copy : அறியா நகல்.** காண்க : bcc

**blind search : கண்மூடித் தேடல் :** ஒரு முறையான திட்டமின்றித் தேடல். அதிகநேரம் எடுக்கும் தேடல். இதில் எல்லா வாய்ப்பு களும் முயற்சிக்கப்படும். ஆனால் புத்திசாலித்தனம் இருக்காது.

**blinking : சிமிட்டல்; இமைத்தல் :** வடிவமைப்பவரின் கவனத்தைக் கவர திரையில் தோன்றித் தோன்றி மறையும் ஒரு வரை படத் தோற்றம்.

**blink speed : மின்னும் வேகம்; துடிக்கும் வேகம் :** கணினி இயங் கிக் கொண்டிருக்கும்போது, ஒரு பயன்பாட்டுத் தொகுப்பைத் திறந்தவுடன், எடுத்துக்காட் டாக, ஒரு சொல்செயலியைத் திறந்தவுடன், திரையில் நாம் தகவலைத் தட்டச்சுச் செய்ய வசதியாக ஒரு குறிப்பிட்ட இடத்தில் சுட்டுக்குறி (cursor) துடித்துக் கொண்டிருக்கும். சுட்டுக் குறி மின்னுகின்ற, துடிக் கின்ற வேகத்தைக் குறிக்கும் சொல் இது.

**blip : திரைத் தோற்றம் :** ஒளிக் காட்சி திரையில் உள்ள ஒரு சிறிய பிரகாசமான தோற்றம். பொது வாக இது ஒரு ரேடார் திரையாக இருக்கும்.

**blip mark : திரைத் தோற்றக் குறியீடு :** நுண் ஃபிலம் போன்ற ஒரு ஊடகத்தில் காணப்படும் கோடு அல்லது புள்ளி. இதை ஒளி முறையில் கண்டறிய முடி யும். நேரம் அறிய அல்லது எண் ணுவதற்குப் பயன்படுத்தப்படும்.

**bloat : உப்பல்**

**bloatware : உப்பிய மென் பொருள் :** பயனாளரின் நிலை வட்டில் இயல்புக்கு அதிகமாய் ஏராளமான இடத்தை அடைத் துக் கொண்டிருக்கும் கோப்பு களையுடைய மென்பொருள். குறிப்பாக, அதே மென்பொரு ளின் முந்தைய பதிப்போடு ஒப் பிடுகையில் இப்போதைய பதிப்பு ஏராளமான இடத்தை எடுத்துக் கொண்டால் இப் பெயரிட்டு அழைப்பதுண்டு.

**block** : தொகுதி; தொகுப்பு; தொகை; திரட்டு : *1. உள்ளீட்டு/ வெளியீட்டுச் சாதனத்தில் ஒரே அலகாகக் கருதப்படும் எழுத்து கள், இலக்கங்கள் அல்லது சொற்களின் தொகுதி. எடுத்துக் காட்டாக, ஒரு காந்தவட்டில் இரண்டு இடைப்பட்ட கட் டத்தின் இடைவெளிக்கு இடை யில் பதிவு செய்யப்பட்ட தரவு களைக் கூறலாம். 2. ஒரு தனிப் பதிவேடாகக் கருதப்படும் ஒரு பதிவேட்டின் தொகுதி.*

**Block Check Character (BCC)** : தொகுதி சோதனை எழுத்து.

**block cipher** : தொகுதி மறை யெழுத்து; தொகுதி மறைக் குறி : *இணைய தரவுப் பரிமாற்றத்தில் பாதுகாப்பு முக்கியத்துவம் உள்ள தரவுகள் மறையாக்கம் (Encryption) செய்யப்பட்டு அனுப்பி வைக்கப்படுகின்றன. மறுமுனையில் மறை விலக்கம் (decryption) செய்யப்பட்டு மூலத் தரவுப் பெறப்படுகிறது. இதற்குப் பல்வேறு மறையாக்க முறைகள் பயன்படுத்தப்படு கின்றன. அவற்றுள் ஒன்று தனி பொதுமறைக் குறிமுறை. ஒரு தனிமறைக் குறியைப் பயன்படுத் தித் தரவுவை மறையாக்கம் செய்வர். அதற்குரிய பொது மறைக்குறியைப் பயன் படுத்தி மறைவிலக்கம் செய்வர். தரவுவைக் குறிப்பிட்ட துண்மி எண்ணிக்கையுள்ள (எடுத்துக் காட்டாக 64 துண்மிகள்) தொகுதிகளாகப் பிரித்து அத் தொகுதியை தனிமறைக் குறி மூலம் மறையாக்கம் செய்ய லாம். மறையாக்கம் செய்யப் பட்ட தரவுவிலும் மூலத் தரவு விலிருந்த அதே எண்ணிக்கை யிலான துண்மிகளே இருக்கும். இம்முறைக்கு தொகுதி தனி மறைக்குறி என்று பெயர்.*

**block compaction** : கட்டம் அமைத்தல் : *நினைவகம் அமைத்தலில் ஒரு செயல்முறை.*

**block cursor** : கட்டச் சுட்டுக் குறி : *உரைக் காட்சித் திரையில் (text screen) வரிக்கு 80 எழுத்து கள் வீதம் 25 வரிகள் திரையிட முடியும். ஒவ்வோர் எழுத்தும் ஒரே அகல, உயரத்தில் அமைந்த கட்டத்துக்குள் படப்புள்ளி களால் திரையில் காட்டப்படு கிறது. உரை அடிப்படையிலான பயன்பாட்டுத் தொகுப்புகளில் சுட்டி (mouse) நிறுவப்படும் போது, அதன் சுட்டுக்குறி ஓர் எழுத்தை உள்ளடக்கும் கட்டத் துக்குள் அமையும் வகை யில் உருவாக்கப்படுகிறது.*

**block device** : தொகுதிச் சாத னம் : *ஒரு நேரத்தில் தகவல் பைட்டுகளின் தொகுதியை*

வட்டு போன்ற ஒன்றுக்கு அனுப்பும் வெளிப்புறச் சாதனம்.

**block diagram : கட்ட வரைபடம்; பகுதிவாரி வரைபடம் :** தரவுகளை செயலாக்கம் செய்யப்படுகின்ற தருக்க வரிசையை குறிப்பிடும் வரைபட வடிவம்.

**blocked process : தடுக்கப்பட்ட செயல்முறை :** தேவையான வசதிகள் கிடைக்காமல் போதல் அல்லது முன்னதாகவே தடுக்கப்படுவதால் செய்யப்பட முடியாத கணிப்பு செயல் முறை.

**blocked records : தொகுக்கப்பட்ட பதிவேடுகள் :** இரண்டு அல்லது மேற்பட்ட தருக்கக் கோப்புகளில் உள்ள ஏடுகளை ஒரே குழுவாக்கி ஒற்றை ஏடாக மாற்றி அமைத்தல்.

**block gap : தொகுதி இடைவெளி :** சேமிப்பக நாடாக்களிலும், வட்டுகளிலும் தரவு, தொகுதி தொகுதியாகத்தான் எழுதப்படுகிறது. அவ்வாறு எழுதப்படும்பொழுது இரு தொகுதிகளுக்கிடையே சிறிது இடைவெளி விடப்படுகிறது. இவ்வாறு இரு தரவுத் தொகுதிகளைப் பிரிக்கும் இடைவெளி தொகுதி இடைவெளி எனப்படுகிறது.

**block graphics : தொகுதி வரைகலை :** தொகுதி வரைகலை எழுத்துகள், ஆஸ்கி எழுத்துகளைப் பயன்படுத்தி உருவாக்கப்படும் வரைகலை உருவங்கள். இந்த எழுத்துகளை சாதாரண எழுத்துகளைப் போலவே கணினி கையாள்வதால் துண்மிப் பட வரைகலையைவிட தொகுதி வரைகலையை கணினி வேகமாகக் காட்ட முடியும். அவற்றை அனுப்புவதும் விரைவாக நடக்கும்.

**block header : தொகுதித் தலைப்பு :** ஒரு நினைவக தொகுதியையோ மற்றும் அதன் உள்ளடக்கங்களையோ குறிப்பிடும் தரவுகளின் சிறு பதிவேடு.

**blocking : தொகுத்தல்; தொகுதியாக்கம் :** திரட்டு தொகுதி என்று அழைக்கப்படும் ஒரு தொடர்ச்சியான சேமிப்பு அலகாக குறிப்பிட்ட அளவில் பதிவேடுகளைத் தொகுக்கும் செயல். கணினியின் உள்ளீட்டு, வெளியீட்டு செயல் முறைகளின் திறனை அதிகரிக்க இவ்வாறு செய்வதுண்டு. சொல் செயலாக்கத்தில், உரையின் ஒரு பகுதி தொகுதியாக ஒதுக்கப்படுவதுண்டு.

**blocking factor : தொகுக்கும் காரணி :** ஒரு வட்டு அல்லது காந்த நாடாவில் உண்மையாக இருக்கும் பதிவேட்டின் படி உள்ள தருக்கப் பதிவேடுகளின் எண்ணிக்கை.

**blocking object : தொகுக்கும் பொருள்:** *பொருள் சார்ந்த நிரல்களில், பல்வகைக் கட்டுப்பாட்டு இழைகளுக்கு உறுதியளிக்கும் அமைப்பு கொண்ட இயங்காத பொருள்.*

**block leader : தொகுதித் தொடக்கம்.**

**block length : தொகுதி நீளம் :** *ஒரு தொகுதியின் அளவை அளப்பது. பொதுவாக பதிவு, சொற்கள், எழுத்துகள் அல்லது பைட்டுகள் என்ற அலகுகளில் குறிப்பிடப்படும்.*

**block length, fixed : மாறாத் தொகுதி நீளம்.**

**block list : தொகுதிப் பட்டியல் :** *ஒரு கோப்பின் அச்சுத் திணிப்பு. மீண்டும் மாற்றியமைப்பதை குறைவாகச் செய்து, பதிவுகளும், புலங்களும் அச்சிடப் படுகின்றன.*

**block move : தொகுதியாக நகர்த்தல் :** *1. ஒரு உரையின் தொகுதியை ஒரு ஆவணம் அல்லது கோப்பில் இருந்து வேறொரு ஆவணம் அல்லது கோப்புக்கு மாற்றுதல். 2. சொல் செயலிகளில் ஒரு பனுவலின் தொகுதியை அடையாளம் கண்டு ஒரு கோப்பின் எந்த பகுதியில் வேண்டுமானாலும் நகர்த்தும் வசதி.*

**block operator : தொகுதிச் செயற்குறி**

**block protection : தொகுதிக் காப்பு.**

**block quote : தொகுதி வினா.**

**block size : தொகுதி அளவு :** *கோப்புப் பரிமாற்றத்தில் அல்லது இணக்கி வழியிலான தரவுப் பரிமாற்றத்தின்போது கணினிக்குள் ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்கு இட மாற்றம் நடக்கும்போது கையாள வேண்டிய தரவுத் தொகுதியின் அளவு முன்கூட்டியே தீர்மானிக்கப்படுகிறது. தரவுப் பரிமாற்றத்தில் ஈடுபட்டுள்ள அனைத்து வன்பொருள் சாதனங்களையும் திறன்மிக்க முறையில் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் இந்த அளவு தீர்மானிக்கப்படுகிறது.*

**block sort : தொகுதி வரிசையாக்கம் :** *ஒரு கோப்பினை தொகுதி தொகுதியாகப் பிரிக்கும் நுட்பம். கோப்பு தொடர்பான குழுக்களாகப் பிரிக்க இந்த நுட்பம் பயன்படும்.*

**block, storage : சேமிப்புத் தொகுதி.**

**block structure : தொகுதிக் கட்டமைப்பு :** *தொடர்புடைய அறிவிப்புகள், தொடர்கள் ஆகியவற்றை ஒன்றாகத் தொகுப்பதற்கான நிரல் கோட்பாடு.*

**block structured language** : தொகுதிக் கட்டமைப்பு மொழி.

**blocks world** : தொகுதிகள் உலகம்; தொகுதிகள் சூழல் : எந்திர மனிதனியல் மற்றும் இயற்கை மொழிகள் பற்றிய ஆராய்ச்சியில் செயற்கையாக உருவாக்கப்பட்ட தொகுதிகளின் சூழல்.

**block transfer** : தொகுதிப் பரிமாற்றம் : சேமிப்பகத்தின் ஓரிடத்திலிருந்து வேறொரு இடத்திற்கு தரவுத் தொகுதி முழுவதையும் மாற்றுதல்.

**block, variable** : மாறு தொகுதி

**blow** : ஊது; உப்பல்: துண்மிகளின் மென்கம்பிகளை ஊதி ப்ரோம் PROM சிப்புகளில் தரவு அல்லது குறியீடுகளை எழுதுதல். 1 துண்மி தனித்து விடப்படும்.

**blow up** : தடுத்து நிறுத்து; மிகை உப்பல் : ஒரு பிழை காரணமாகவோ, தன்னால் கையாள முடியாத தரவுகளைப் பெற்ற சூழ்நிலையிலோ ஒரு நிரல் திடீரென்று நின்று விடுதல்.

**blue ribbon problem** : நீல நாடா பிரச்சினை : முதல் முயற்சியிலேயே சரியாக இயங்கும் கணினி ஆணை தொடர். பிழை நீக்கவேண்டிய அவசியமில்லை.

**blue ribbon programme** : நீல நாடா நிரல் : முதல் முயற்சியிலேயே மிகச் சரியாக இயங்கி பிழைநீக்கம் செய்யப்பட வேண்டிய தேவையில்லாத நிரல்.

**blue screen** : நீலத் திரை : திரைப்படங்களில் ஓர் உருப்படத்தின் மீது இன்னோர் உருப்படத்தைப் பொருத்தி இணைத்து சிறப்பு விளைவுக் காட்சிகளை அமைக்கப் பயன்படுத்தப்படும் ஒரு நுட்பம். முதலில் ஒரு நீலத் திரைக்கு முன்னால் ஒரு காட்சியை அல்லது ஒருவரின் நடிப்பைப் படம் பிடித்துக் கொள்வர். அடுத்து, விரும்புகின்ற பின்புலத்தைத் தனியாகப் படமெடுப்பர். முதலில் எடுத்த காட்சியை இந்தப் பின்புலத்தின் மீது பதியச் செய்வர். இப்போது குறிப்பிட்ட பின்புலத்தில் அக்காட்சி நடைபெறுவதுபோல இருக்கும். ஒருவர் நடந்து செல்வதையும் பாலைவனத்தையும் தனித்தனியே படம்பிடித்து, அவர் பாலைவனத்தில் நடப்பது போலக் காட்டிவிட முடியும்.

**.bm** : .பிஎம் : ஓர் இணைய தள முகவரியில், அத்தளம் பெர்முடா நாட்டில் அமைந்துள்ளது என்பதைக் குறிக்கும் பெருங்களப் பிரிவு.

**BMMC** : பிஎம்எம்சி : அடிப்படை மாதப் பாராமரிப்புக் கட்டணம் என்று பொருள்படும்

Basic Monthly Maintenance Charge என்பதன் குறும் பெயர்.

**.bmp : .பிஎம்பீ :** துண்மி வரை படக் கோப்புப் படிவத்தில் சேமிக்கப்பட்டுள்ள, ராஸ்டர் வரைகலைக் படத்தைச் சுட்டும் ஒரு கோப்பின் வகைப் பெயர் (extension).

**.bn : .பிஎன் :** ஓர் இணைய தளம் புரூணை தாருஸ்ஸலாமில் அமைந்துள்ளது என்பதைச் சுட்டும் பெருங்களப் பிரிவின் பெயர்.

**BNC : பிஎன்சி :** இணையச்சு (coaxial) வடத்தில் இணைப்புக் காகப் பயன்படுத்தப்படுவது. ஒரு உருளைபோல தோன்றும் இந்த பிளக்கின் இரு எதிர்ப் புறங்களிலும் இரு சிறிய கம்பி கள் இருக்கும். பிளக்கை நுழைத் தவுடன், சாக்கெட்டை இயக் கினால் பிளக்கில் உள்ள கம்பிகள் இறுக்கம் அடைகின்றன.

**BNC connector : பிஎன்சி இணைப்பி :** கோ-ஆக்சியல் கேபிள் எனப்படும் இணையச்சுக் கம்பி வடத்தின் முனையைச் சாதனங்களில் இணைக்கப் பயன் படுகிறது. வண்ணத் தொலைக் காட்சிகளில் அலைவாங்கிகளை இணைக்க இத்தகைய இணைப் பிகள் பயன்படுத்தப்படுகின்றன. இணைப்பியை அதற்குரிய



பி என் சி இணைப்பி

செருகு வாயில் செருகி 90o திருப் பினால் சரியாகப் பொருந்திக் கொள்ளும்.

**BNF : பிஎன்எஃப் :** பேக்கஸ் இயல்பு வடிவம் என்று பொருள் படும் Backus Normal form என் பதன் குறும்பெயர். ஆர்டிபி எம்எஸ் தரவுத்தள அட்டவணை களில் பேசப்படுவது.

**.bo : .பிஓ :** ஓர் இணைய தளம் பொலீவியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்க, முகவரியின் இறுதியில் குறிக்கப்படும் பெருங்களப் பெயர்.

**board : அட்டை :** அச்சிடப் பட்ட மின்சுற்று அட்டை என் பதை சுருக்கமாகக் குறிப்பிடு வது. ஒரு தட்டையான, மெல் லிய, செவ்வக வடிவமுள்ள அட்டை. கணினியின் உள்ளிருப் பது ஒன்று அல்லது அதற்கு மேற்

பட்ட அச்சிடப்பட்ட மின்சுற்று அடுக்குகளைக் கொண்ட வெளிப் புற உறுப்பு. இதில் சிப்புகள் மற்றும் பிற மின்னணு உறுப் புகள் இணைக்கப்படுகின்றன.

**board computer : அட்டைக் கணினி** : ஒரு தனி மின் சுற்று அட்டையில் எல்லா மின்னணு பாகங்களும் அமைக்கப் பட்டுள்ள ஒரு கணினி.

**board exchange warranty : அட்டை மாற்றக்கூடிய சான்று றுதி** : முதல் அட்டையில் பழுது ஏற்பட்டால் அதற்குப் பதிலாக புதிய ஒன்றை மாற்றித் தருவதற்கு வாடிக்கையாளருக்கு அளிக்கப்படும் உறுதி.

**board level : அட்டை நிலை:** மரப் பலகையில் அல்லாது அச்சிட்ட மின்சுற்று அட்டையில் ஏற்றப் படும் மின்சுற்றுச் சாதனங்கள்.

**body : உடற்பகுதி** : இணையத் தில் மின்னஞ்சல் மற்றும் செய்திக் குழுத் தகவல்களில் தலைப் பகுதி மற்றும் உடற் பகுதிகள் உண்டு. அனுப்புபவரின் பெயர், இடம், சென்று சேரும் முகவரி போன்றவை தலைப்பகுதியிலும், உள்ளடக்கத் தகவல் உடற்பகுதி யிலும் இடம் பெறுகின்றன.

**body face : உடற்பகுதி எழுத்து வடிவம்** : ஓர் ஆவணத்தை உருவாக்கும்போது முகப்புத் தலைப்பு, ஆவணத் தலைப்பு, பத்தித் தலைப்புகள் பெரிய/ தடித்த எழுத்தில் அமைகின்றன. உடற்பகுதியில் அமையும் தக வல்கள் ஓரளவு சிறிய எழுத் திலேயே அமைய வேண்டும். உடற்பகுதிக்கு ஏற்ற வடிவத்தை உடற்பகுதி வடிவம் என்கிறோம். சேன் செரீஃப், டைம்ஸ் நியூ ரோமன் போன்ற எழுத்துருக்கள் (fonts) உடற்பகுதிக்கு ஏற்றவை.

**body type : உடல்வகை மாதிரி.**

**body works : உடல் இயக்கம்** : மனித உடல் அமைப்பை ஆராய் வதற்காக உருவாக்கப்பட்ட கல்வி மென்பொருள்.

**BOF : பிஓஎஃப்** : Beginning of File என்பதன் குறும்பெயர். முதன் முதலாகத் திறக்கும்போது உள்ள கோப்பின் நிலை. கோப்பு காட்டியை மீண்டும் அமைக்கும் ஆணை அல்லது கட்டளை.

**boilerplate : கொதிகலன் தகடு; கொதி தட்டு** : பல்வேறு ஆவணங்களில் சொல்லுக்குச் சொல் மீண்டும் பயன்படுத் தப்படுகின்ற பனுவலின் பகுதி.

**boilerplate document : கொதி கலன் தகட்டு ஆவணம்** : சில தரமான பத்திகளில் தகவலைக் கொண்டு தேர்ந்தெடுத்த பத்திகளை ஒன்றாக இணைத்து ஏற்படுத்தப்படும் ஆவணம்.

**bold** : தடித்த.

**bold declaration** : தடித்த எழுத் தமைத்தல் : *அச்சிட்ட பக்கத்தில் சொற்கள் தடிமனாக அமைய அச்சுக்கட்டுப்பாட்டு எழுத்து களை சொல் செயலக ஆவணத் தில் சேர்த்தமைத்தல்.*

**boldface** : தடித்த எழுத்து : *சாதாரண எழுத்தைவிடத் தடித்துத் தோன்றும் எழுத்து. ஆவணத்தில் உள்ள உரையில் ஒரு குறிப்பிட்ட பகுதியைத் தேர்வு செய்து தடிமன் என்ற கட்டளை தரும்போது, அப்பகுதி முழுவதும் தடித்த எழுத்து களாகிவிடும்.*

**boldface bomb** : தடித்தமுகக் குண்டு: *Abend and Crash போன்றது. நிரல் தொடர்களை அழிக்கும் நச்சு நிரலில் (வைரசின்) ஒரு அம்சம்.*

**boldface font** : தடித்த அச் செழுத்து : *வழக்கமான எழுத்து களைவிட கறுப்பாகவும் கன மானதாகவும் உள்ள எழுத்து களின் தொகுதி. தடித்த அச் செழுத்தில் எல்லா எழுத்துகளும் தடித்ததாக இருக்கும்.*

**boldfacing** : தடித்த எழுத்து அச்சு; தடிப்பாக்கம் : *சில அச்சுப் பொறிகளிலும் சொல்செய லாக்க அமைப்புகளிலும் உள்ள ஒரு தன்மை. கொட்டை எழுத்து அச்சுபோன்ற தோற்றத்தைத் தருவது. நிழல் அச்சு முறை மூலம் கொட்டை எழுத்து அச்சு போன்ற தோற்றம் பல அச்சுப் பொறிகளில் தரப்படுகின்றது.*

**bold italics** : தடித்த சாய் வெழுத்து.

**bold printing** : தடித்த அச்சு : *சுற்றிலும் உள்ள எழுத்துகளை விட அழுத்தமாக சில எழுத்து களை உருவாக்கும் திறன். நிழல் அச்சு அல்லது பலமாக அடித்தல் மூலம் சில அச்சுப்பொறிகள் தடித்த எழுத்துகளை உருவாக்கு கின்றன.*

**Bollee, Leon** : போலி, லியோன் : *திரும்பத் திரும்ப கூட்டுவதற்குப் பதிலாக நேரடியாக பெருக்கலைச் செய்யும் முதல் எந்திரத்தை 1886இல் வெற்றிகரமாக வடி வமைத்த ஒரு ஃபிரெஞ்சுக்காரர்.*

**bomb** : வெடி : *1. ஒரு நிரலாக் கத் தொடரின் மகத்தான தோல்வி. 2. ஒரு அமைப்பைத் தடுக்கக் கூடிய ஒரு நிரலாக்கத் தொடரை எழுதி ஒரு அமைப்பை வேண்டு மென்றே நாசம் செய்தல்.*

**book keeping** : கணக்கு வைப்பு.

**bookman** : புக்மேன் : *ஒரு வகை யான எழுத்துரு. ஐடிசி நிறு வனம் உருவாக்கிய ஒரு எழுத்துரு வகை.*

**bookmark** : பக்க அடையாளக் குறி; நினைவுக் குறி : 1. பின்னால் எளிதாக அடையாளம் காணும்பொருட்டு ஓர் ஆவணத்தில் ஒரு குறிப்பிட்ட பகுதியில் இட்டு வைக்கும் அடையாளக் குறி. 2. நெட்ஸ்கேப் நேவிக்கேட்டர், இன்டர்நெட் எக்ஸ்புளோரர் போன்ற இணைய உலாவிகளில் ஒரு குறிப்பிட்ட இணையப் பக்கம் அல்லது இணைய முகவரிக்கு, பின்னால் மீண்டும் காணும்பொருட்டு ஒரு தொடுப்பினை நிலைவட்டுக் கோப்பில் குறித்து வைத்துக் கொள்வது.

**bookmark file** : அடையாளக் குறிக்கோப்பு : 1. நெட்ஸ் கேப் நேவிக்கேட்டர் உலாவியில் இது ஒரு கோப்பு. நமக்குப் பிடித்தமான வலையகங்களின் முகவரிகளைக் கொண்டது. இன்டர்நெட் எக்ஸ்புளோரரில் விருப்பத் தளங்களின் கோப்புறை (Favourites Folder) எனப்படுகிறது. சூடான பட்டியல் (hotlist) என்றும் அழைக்கப்படுவதுண்டு. 2. யாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம் என்பதற்கேற்ப, ஹெச்டி எம்எல் வடிவத்தில் ஒரு பக்கத்தில் வெளியீடு செய்யப் படுகின்ற, நாம் விரும்பிப் பார்த்த வலையகங்களின் முகவரிகள் அடங்கிய கோப்பு.

**boolean** : பூலியன் : பெரும்பாலான கணினி மொழிகளில் பயன்படுத்தப்படும் தரவு இனம் (data type). உண்மை/பொய், சரி /தவறு, ஆம்/இல்லை என்பது போன்ற இரண்டிலொரு மதிப்புகளையே இந்தத் தரவு இனம் ஏற்றுக் கொள்ளும். சில மொழிகளில் நேரடியாகவே பூலியன் என்னும் தகவல் இனம் உண்டு. சரி, தவறு ஆகிய மதிப்புகளில் ஒன்றை இருத்திவைக்க முடியும். வேறுசில மொழிகளில் நேரடியான பூலியன் இனம் கிடையாது. சுழி என்னும் பூஜ்யம் தவறு எனவும், சுழியல்லாத மதிப்பு சரி எனவும் கையாளப் படுகிறது. பூலியன் குறிக் கணிதத்தை உருவாக்கிய ஆங்கிலக் கணித மேதை ஜார்ஜ் பூல் (George Bool) அவர்களின் பெயரில் இது அமைந்துள்ளது.

**boolean algebra** : பூலியன் குறிக்கணக்கு : குறிக்கணக்கில் உள்ளது போன்ற குறியீட்டு அளவையின் பிரிவு. எண் தொடர்களைப்பற்றிக் குறிப்பிடுவதற்குப் பதிலாக காரண காரிய உறவுகளைப் பற்றி ஆராய்வது. மின்னணு கணினி தொடர் பொத்தானிடுதல் போன்ற துறைகளில் வெளியே தெரியாமல் இருந்த துறை. மின்னணு கணினியின் காரண - காரிய வடிவமைப்பில் ஒரு முக்கிய பிரிவாக உருவாகி உள்ளது. ஜார்ஜ் பூலேவுக்காக இவ்வாறு பெயரிடப்பட்டது.

**boolean calculus :** பூலியன் கணக்கீடு.

**boolean complementation :** பூலியன் நிரப்புகை.

**boolean data :** பூலியன் தரவு : ஆம்/ இல்லை அல்லது உண்மை / பொய் என்னும் மதிப்புகளை ஏற்கும் தரவு.

**boolean equations :** பூலியன் சமன்பாடுகள் : கணக்கோட்பாடு (set theory) கணக்கீடுகளில் பயன்படுத்தப்படும் கணங்களுக் கிடையேயான சமன்பாடுகள்.

**boolean expression :** பூலியன் தொடர்; பூலியன் கோவை : பூலியன் இயக்கிகளின் மூலம் உண்மை அல்லது பொய் என்ற இரண்டில் ஒன்றை குறிக்கும் தொடர்.

**boolean logic :** பூலியன் தருக் கம் : 19ஆம் நூற்றாண்டின் நடு வில் ஜார்ஜ் பூல் என்ற ஆங்கிலக் கணிதமேதை உருவாக்கிய தருக்கக் கணிதம். அதன் விதி களும், இயக்கங்களும் எண் களுக்குப் பதிலாக தருக்கப் பணி களை ஆற்றுகின்றன. AND, OR, NOT ஆகியவை பூலியன் இயக் கத்தின் அடிப்படைகள்.

**boolean operation, binary :** இரும பூலியன் செயற்பாடு.

**boolean operator :** பூலியன் இயக்கி : தருக்க இயக்கிக் கணக் கீடுகள் மற்றும் முடிவுகள் இரண்டு மதிப்புகளில் ஒன் றாகவே அமையும்.

**boolean search :** பூலியன் தேடல் : குறிப்பிட்ட தரவுகளைத் தேடல். பூலியன் இயக்கிகளான AND, OR, NOT ஆகியவற்றைப் பயன்படுத்தி எந்த ஒரு நிலையையும் தேட முடியும்.

**boolean variable :** பூலியன் மாறிலி : உண்மை அல்லது பொய் என்ற இரண்டு மதிப்பு களை மட்டுமே ஏற்கும் மாறிலி.

**Boole, george 1815 - 1864 :** பூல், ஜார்ஜ் : 1815-1864 : ஆங்கில தருக்கவியல் மற்றும் கணித வியல் அறிஞர். 1847இல் தருக்கவியலை கணித முறையில் ஆய்வது என்று ஒரு துண்டுப் பிரசுரம் வெளியிட்டார். 1851இல் தருக்க அமைப்பைப் பற்றிய முதிர்ச்சிமிக்க சிந்தனை விதி களின் ஆய்வு என்ற அறிக்கை ஒன்றினை வெளியிட்டார். இதில் தருக்கவியல் பற்றிய கணித கொள்கைகள் உருவாக்கப்பட்டன.

**bool type :** தருக்க இனம்.

**boot :** ஏற்று; இயக்கு: Boot strap என்பதில் இருந்து எடுக்கப்பட்ட சொல். கணினியின் சேமிப்புச் சாதனத்தின் மூலம் நிரல்களைப் படித்து ஒரு கணினியின் நினைவகத்திற்கு அனுப்புவது

அல்லது மீண்டும் கணினியைத் இயக்குவது. ஏற்கெனவே கணினி இயங்கிக் கொண்டிருக் கும்போது அதனை இயக்கும் முறையை முதன்மை நினை வகத்திற்கு அனுப்புவது.

**bootable : இயக்க முறைமை ஏற்றிய** : இயக்க முறைமைக் கோப்புகள் பதியப்பட்டு கணி னியை இயக்கி வைக்கப் பயன் படுகின்ற நெகிழ்வட்டைக் குறிக்கும்.

**bootable disk : இயக்குறு வட்டு** : இயக்க முறைமையைக் கொண் டுள்ள வட்டு. பொதுவாக இது நெகிழ் வட்டின் இயக்கத்தில் ஏற்றக்கூடிய நெகிழ்வட்டு இல்லை யென்றால், நிலைவட்டிலிருந்து எடுத்துத் துவக்கும் ஆணை ஏற்றப்படும்.

**boot block : இயக்கத் தொடக்கப் பகுதி** : இயக்க முறைமையை நினைவகத்தில் ஏற்றும் ஆணைகளையும், கணினியை இயக்கிவைக்கும் ஏனைய தகவல்களையும் பதித்து வைத்துள்ள வட்டுப் பகுதி.

**boot/booting : இயக்கு/இயக்கு தல்** : கணினியைத் தொடக்கு என்பதைக் குறிப்பிடப் பயன் படுத்தப்படும் தனி மொழிச் சொல். நாம் கணினியின் பொத் தானை இயக்கியவுடன், ஏற்றும் பகுதியிலிருந்து ஆணை வந்து கணினி இயங்குகிறது. அந்த உற்பத்தியாளரே ரோமில் (ROM) சிறிய நிரலாக அமைத்திருப்பார்.

**boot disk : இயக்கு வட்டு** : கணினியை இயக்குவதற்குரிய இயக்கமுறைமை சேமிக்கப் பட்டுள்ள வட்டு. கணினியை இயக்கியதும், இந்த வட்டிலுள்ள இயக்க முறைமை நினைவகத் தில் ஏற்றப்பட்டு, கணினி பணி யாற்ற தயாராகி விடும். இயக்கு வட்டு நெகிழ்வட்டாகவோ அல்லது நிலைவட்டின் ஒரு பகுதி யாகவோ இருக்கலாம்.

**boot drive : இயக்கு வட்டியக்க கம்** : இயக்க முறைமை அமைந் துள்ள வட்டு இயக்ககம்.

**boot failure : இயக்கத் தோல்வி** : கணினியை இயக்க முற்படும் போது, இயக்க முறைமையை வட்டில் கண்டறிந்து நினைவகத் தில் ஏற்றிக் கணினி இயக்கத் தைத் தொடக்கி வைக்க முடியா மல் போகும்போது இத்தகைய தோல்வி நேருகிறது.

**boot partition : இயக்க பாகப் பிரிவு** : இயக்க முறைமைக் கோப்புகள் மற்றும் துணைக் கோப்புகள் எழுதப்பட்டுள்ள வட்டுப் பகுதி. கணினியை இயக்கும்போது அல்லது புத்துயிரூட்டும்போது இக்

கோப்புகள் நினைவகத்தில் ஏற்றப்படுகின்றன.

**boot protocol** : இயக்க நெறி முறை : ஆர்எஃப்சி 951 மற்றும் 1084 ஆகியவற்றில் வரையறுக்கப் பட்டுள்ள நெறிமுறை. வட்டில் லாத பணி நிலையக் கணினி களை இயக்க வைக்கப் பயன் படுகிறது. பூட்பி (bootP) என்றும் கூறுவர்.

**boot record** : இயக்கு ஏடு : கணினியைத் இயக்குவதற்கு வேண்டிய இன்றியமையாத வற்றைக் கொண்ட செயலாக்க அமைப்புப் பகுதி. இயக்கும் தகவலைச் சேமித்து வைக்கும் துணை நிலை சேமிப்பகத்தின் பகுதி.

**boot ROM** : இயக்கு ரோம் : வழங்கன் கணினியிலோ அல் லது பிற தொலைதூர நிலையத் திலோ பணி நிலையம் இயங்க அனுமதிக்கும் நினைவகச் சிப்பு. booting எக்கித் தள்ளல்; boot sector இயக்கு வட்டக்கூறு; boot strap இயக்க முன்னோடி.

**boot sector** : இயக்க வட்டக் கூறு; இயக்க வட்டுப் பிரிவு : ஒரு வட்டு பல்வேறு வட்டக் கூறு களாகப் பிரிக்கப்படுகிறது. இயக்க முறைமையை வட்டி லிருந்து நினைவகத்தில் ஏற்றும் எந்திரமொழி நிரல்பதிவு செய்யப்பட்டுள்ள பகுதி இயக்க வட்டக் கூறு எனப்படுகிறது. கணினிக்கு மின்சாரம் வழங் கியதுமே இந்த நிரல் தானாகவே செயல்படும். வட்டில் பதியப் பட்டுள்ள இயக்க முறைக் கோப்புகளைக் கண்டறிந்து அவற்றை நினைவகத்தில் ஏற்றும் பணியை இச்சிறிய நிரல் செய்து முடிக்கிறது.

**boot sequence** : இயக்கும் முறை விசை.

**bootstrap** : ஏற்றும் வசதி; முன் னோடி: கணினியில் பெரிய நிரலை நுழைக்க அனுமதிக்கும் வசதி.

**bootstrap loader** : முன்னோடி ஏற்றி : ஏற்றுப் பதிவேட்டின் முதல் பகுதி. இந்தத் தொழில் நுட்பத்தின்படி ஒரு நிரல் தொடரின் முதல் சில நிரல்களின் மூலம் மீதமுள்ளவற்றையும் உள்ளீட்டுச் சாதனத்திலிருந்து கணினியில் கொண்டு வர முடியும்.

**bootstrapping** : இயக்கத் தொடக்கம் : பூட்ஸ்ட்ராப் என்னும் சிறிய அரிச்சுவடி நிரலைப் பயன்படுத்தி வேறொரு நிரலை நினைவகத்தில் ஏற்றி, ஒரு கணினியை இயக்க வைத்தல்.

**boot tape** : ஏற்றும் நாடா : பல கணினிகளில் இயக்க முறை

மையை நாடாவில், பொதுவாக பேழையில் சேமிப்பார்கள். நாடா இயக்க முறைமையைப் பயன்படுத்தும் கணினியை இயக்கும் நாடா அடங்கியுள்ள, நாடா இயக்ககம் இல்லாமல் பயன்படுத்த முடியாது.

**bootup disk : இயக்கும் வட்டு.**

**boot virus : இயக்க நச்சு நிரல் :** ஃபிளாப்பி எனும் நெகிழ் வட்டில் இயக்குப் பகுதியில் எழுதப்பட்ட நச்சுநிரல். அத்தகைய நெகிழ்வட்டை ஏற்றும் போது அது கணினி அமைப்பில் தொற்றிக் கொள்கிறது. சான்றாக, மைக்கேல் ஏஞ்சலோ வைரசானது அது பிடித்துள்ள வட்டை ஏற்றினால் மைக்கேல் ஏஞ்சலோ பிறந்த நாளான மார்ச் 6ஆம் நாள் அன்று அது ஏற்றப்பட்ட கணினியில் உள்ள தரவுகளை அழித்து விடும்.

**BOP : பிஓபீ :** பிட் சார்ந்த நெறிமுறை என்று பொருள் படும் Bit-Oriented Protocol என்பதன் குறும்பெயர்.

**border : எல்லை :** திரையின் மீது இயங்கும் சாளரத்தில், பயனாளரின் பணியிடத்தைச் சுற்றியுள்ள விளிம்பு. ஒரு ஆவணம் அல்லது வரைகலையைச் சுற்றி தெரியக் கூடிய எல்லைக் கோடு, அச்சில், ஒரு பக்கம் அல்லது ஓவியத்தில் ஒன்று அல்லது மேற்பட்ட விளிம்புகளில் காணப்படும் கோடு அல்லது அமைப்பு.

**Border Gateway protocol : எல்லை நுழைவி நெறிமுறை :** இன்றைய இணையத்தின் முன்னோடியாக விளங்கிய என்எஸ் எஃப் நெட் பிணையத்தில் பயன்படுத்தப்பட்ட தகவல் பரிமாற்ற நெறிமுறை. புறநுழைவி நெறிமுறை (External Gateway Protocol)யின் அடிப்படையில் உருவாக்கப்பட்டது. சுருக்கச் சொல் பிஜிபீ (BGP) ஆகும்.

**border layout : கரை உருவரை.**

**border properties : கரைப் பண்புகள்.**

**bore : போர் :** ஒரு நெகிழ் வட்டு அல்லது காந்த நாடா சுருணை போன்றவற்றின் துளையின் குறுக்களவு.

**Borland C++ : போர்லேண்ட் சி++ :** டாஸ் மற்றும் விண்டோஸ் பயன்பாடுகளுக்காக போர்லாண்ட் நிறுவனம் உருவாக்கிய அன்சி சி மற்றும் சி++ தொகுப்பு மொழி மென்பொருள். சி-யில் எழுதப்பட்ட விண்டோஸ் நிரல்கள் மற்றும் டர்போசி-யை ஏற்பதுடன் பிழை நீக்கவும் செய்யும்.

**Borland (Borland int'l) : போர்லாண்ட் :** 1983இல்

பிலிப்கான் உருவாக்கிய முன்னணி பீ சி மென் பொருள் நிறுவனம். அதனுடைய டர்போ பாஸ்கல் கல்வி நிலையங் களிலிருந்து வெளிவந்து வணிகப் பொருளானது டர்போ சி தொழில்துறை தர அளவு கோலானது. டர்போ பாஸ்கல் மற்றும் போர்லண்ட் சி++ மூலம் விண்டோஸ் மற்றும் பொருள் நோக்கு நிரலாக்கமும் இயலும்.

**borrow : கடன் வாங்கு** : கணித முறையில் கழித்தல் செய்யும் போது, குறைந்த வரிசை இலக்கத்தினை உயர்த்தி அடுத்த உயர் வரிசை இலக்கத்திலிருந்து ஒன்று கழிக்கப்படுகிறது.

**boss screen : முதலாளியின் திரைக் காட்சி; மேலதிகாரியின் திரைத் தோற்றம்** : அனைத்துக் கணினி இயக்க முறைமை களிலும் கணினி விளையாட்டு கள் உள்ளிணைக்கப்பட்டுள்ளன. சொந்தக் கணினிகளின் வரு கைக்குப்பின் கணினி விளை யாட்டுகள் பலரையும் ஈர்த்தன. அலுவலகங்களில் கணிப் பொறிகள் புகுத்தப் பட்டபின், அலுவலக ஊழியர்கள் பணி நேரத்தில் கணினி விளையாட்டு களில் மூழ்கி விடுவது வாடிக் கையாக நிகழும் ஒன்று. அந்த நேரம் முதலாளி அல்லது மேலாளர் அங்கே வந்து விட் டால், உடனடியாக கணினித் திரையில் ஒரு புதிய தோற்றத்தை வரவழைத்து விடுவர். இது போல முதலாளி/மேலதிகாரி வரும்போது காட்டுவதற் கென்றே டாஸ் விளையாட்டு களில் தனிச் சிறப்பான திரைத் தோற்றங்கள் இருந்தன. அதில் பெரும்பாலும் வணிகம் தொடர் பான விவரங்கள் காணப்படும். இப்போதுள்ள மேக், விண் டோஸ், லினக்ஸ் பணித்தளத்தில் இத்தகைய சிக்கல் இல்லை. நொடியில், ஒரு சுட்டிச் சொடுக் கில் திரைத் தோற்றத்தை மாற்றிவிட முடியும்.

**bot : பாட்** : நாடாவின் தொடக் கம் எனப் பொருள்படும் Beginning of Tape என்பதன் குறும் பெயர். ஒரு காந்த நாடாவில் பதிவு செய்வதை எந்த இடத் திலிருந்து தொடங்க வேண்டும் என்பதைக் குறிக்கும் குறியீடு.

**bottleneck : இடர்ப்பாடு.**

**bottom-up design : கீழிருந்து-மேல் வடிவமைப்பு** : ஒரு மென் பொருள் பயன்பாட்டை உரு வாக்குவதில் பின்பற்றப்படும் வடிவமைப்புச் செயல்முறை. முதலில் கீழ்நிலைப் பணிகளுக் கான நிரல்வரைவும், பிறகு அவற்றை அடிப்படையாகக் கொண்டு உயர்நிலைப் பணி

களுக்கான நிரல் வரைவும் வடிவமைக்கப்படும்.

**bottom-up programming : கீழிருந்து-மேலான நிரலாக்கம் :** பெரும்பாலான நிரலர்கள், மேலிருந்து கீழ், கீழிருந்து மேல் ஆகிய இரண்டு முறைகளின் சரியான கலவையே சிறந்தமுறை என நம்புகின்றனர்.

**bottom up technique : கீழிருந்து மேல் செல்லும் நுட்பம்.**

**bounce : திருப்புகை; திருப்பிவிடும்; திருப்பியனுப்பு :** நமக்கு வரும் மின்னஞ்சலை நமது கருத்துரை எதுவுமின்றி, மேலொப்பம் எதுவுமின்றி அப்படியே இன்னொருவருக்குத் திருப்பி அனுப்புதல். அந்த மின்னஞ்சலைப் பெறுபவர்க்கு நாம் திருப்பியனுப்பிய மடல் என்பதை அறிய முடியாது. நமக்கு அஞ்சல் அனுப்பியவரிடமிருந்து அது வந்துள்ளதாகவே எண்ணிக் கொள்வார்.

**Bouncekeys : திருப்பு விசைகள் :** விண்டோஸ் 95/98இல் உள்ள ஒரு சிறப்புக் கூறு. விசைப் பலகையில் ஒரே விசையை இருமுறையோ, அறியாமல் தவறுதலாக வேறுசில விசைகளையோ சேர்த்து அழுத்தும்போது, அவற்றைப் புறக்கணிக்குமாறு நுண்செயலிக்கு ஆணையிடலாம்.

**bound : கட்டுப்பட்ட :** செயலகம் அல்லது உள்ளீடு / வெளியீடு போன்ற கணினியின் எந்தப் பகுதியின் செயல்முறையாவது, கட்டுப்பட்டதாக இருத்தல். வேகமாகச் செயல்படுவதைக் கணினியின் எந்த பாகம் தடைசெய்கிறது என்பதைக் குறிப்பிடுவது.

**boundary : எல்லை :** ஒரு கோப்பு போன்றவற்றில், நினைவகத்தில் வரையறுக்கப்பட்ட இடைவெளி. சான்றாக, நிரல் தொடர்கள் 16 பைட் எல்லைகளுக்குள் நினைவகத்தில் வைக்கப்படும். அத்தகைய முழு நினைவு முகவரியை எப்போதும் 16ஆல் வகுக்க முடியும்.

**boundary fill : எல்லை நிரப்பி :** ஒரு பகுதியை நிறத்தால் நிரப்பும் செயல்முறை. எல்லை மதிப்பு உள்ள படப்புள்ளிகளால் எல்லையமைக்கப்பட்ட அனைத்துப் படப்புள்ளிகளையும் புதிய மதிப்பு (நிறம்)களால் நிரப்புதல்.

**bound column : கட்டுண்ட நெடுக்கை.**

**bound controls : கட்டுண்ட இயக்கு விசைகள்.**

**boundry of input : உள்ளீட்டு எல்லை.**

**Bourne shell : போர்ன் செயல் தளம் :** யூனிக்ஸ் இயக்க

முறைமைக்காக முதன் முதலாக உருவாக்கப்பட்ட செயல்தளம் அல்லது நிரல் மாற்றி எனலாம். ஏடீ&டீ சிஸ்டம்-V- யூனிக்ஸின் அங்கமாக இடம் பெற்றது. 1979ஆம் ஆண்டில் ஏடீ&டீ பெல் ஆய்வுக் கூடத்தில் ஸ்டீவ் போர்ன் (steve bourne) இதனை உருவாக்கினார். ஏனைய யூனிக்ஸ் செயல்தளங்களில் இருக்கின்ற சில வசதிகள் (கட்டளை வரியில் ஒரு கோப்பினைத் திருத்தியமைப்பது, முந்தைய கட்டளைகளைத் திரும்ப வரவழைப்பது) இல்லாத போதும், செயல்தள நிரல்கள் பெரும்பாலானவை போர்ன் செயல்தளத்தில் இயங்குபவையாகவே உள்ளன.

**box class** : பெட்டி இனக்குழு.

**box, decision** : தீர்வுப் பெட்டி.

**box drawing characters** : பெட்டி வரையும் குறிகள் : நீட்டிக்கப்பட்ட ஆஸ்கியில் உள்ள, பெட்டிகளை வரையப் பயன்படுத்தப்படும் குறிகளின் தொகுதி.

**box layout** : பெட்டி உருவரை.

**bozo** : போஸோ : இணையத்தில் குறிப்பாக செய்திக் குழுக்களில் முட்டாள்தனமான, பிறழ்மனப் போக்கு உடையவர்களைக் குறிக்கப் பயன்படும் கொச்சைச் சொல்; பேச்சு வழக்குச் சொல்.

**bozo filter** : போஸோ வடி கட்டி : இணையப் பயனாளரின் கணினியில் மின்னஞ்சல் மற்றும் செய்திக் குழுவுக்கான மென்பொருள் தொகுப்பில் இருக்கும் வசதி. இதன்மூலம் ஒருவர் தனக்கு, குறிப்பிட்ட சிலரிடமிருந்து வரும் மின்னஞ்சல்களையும், செய்திக்குழுக் கட்டுரைகளையும் வடிகட்டிப் புறக்கணித்து விடலாம். பெரும்பாலும், போஸோக்களிடமிருந்து வரும் தகவல்களைத்தான் இவ்வாறு தடுப்பர்.

**BPI** : பிபிஐ : ஓர் அங்குலத்தில் இத்தனை பிட்டுகள் எனப் பொருள்படும் bit per inch என்பதன் சுருக்கம். bytes per inch என்பதற்கு BPI என்று குறும்பெயர் தரப்படுகிறது.

**bps** : பிபீஎஸ் : ஓர் வினாடியில் இத்தனை பிட்டுகள் எனப் பொருள்படும் bits per second மற்றும் bytes per second என்பதன் குறும்பெயர், bps என்பதாகும்.

**bracket** : அடைப்புக்குறி.

**brain-damaged** : மூளை பாதிக்கப்பட்ட : மோசமாக நடக்கும் அல்லது அழிக்கும் முறையில் செயல்படும் நிரலைக் குறிப்பிடும் சொல்.

**brain dump** : குப்பைத் தகவல் : மின்னஞ்சல் அல்லது

செய்திக்குழு வழியாக கேட்கப் பட்ட கேள்விக்கு வந்து குவிந்த முறைப்படுத்தப்படாத ஏராளத் தகவல் குப்பை. அவற்றைப் புரிந்து கொள்வதும் பொருளறி வதும் மிகக் கடினமான செயல்.

**brain-wave interface : மூளை - அலை இடைமுகம் :** மனிதனின் எண்ணங்களை அறிந்து அதற் கேற்ப கணினி செயலாற்றும் திறனுடைய மென்பொருள் மற்றும் வன்பொருள்.

**branch : இணை பிரிதல் :** 1. சில நிபந்தனைகளின் அடிப் படையில் கட்டுப்பாட்டின் ஓட்டம் ஒன்று அல்லது பல பாதைகளில் ஒன்றினைத் தேர்ந் தெடுத்தல். 2. ஒரு நிரல்வரிசை யில் இருந்து மற்றொரு நிரல் வரிசைக்குக் கட்டுப்பாட்டினை மாற்றக் கூடிய ஆணை.

**branching : கிளைத்தல்; கிளை பிரித்தல்.**

**branching Statement : கிளைபிரிக் கூற்று; கிளை பிரி கட்டளை.**

**branch Instruction : கிளை பிரிப்பு ஆணை :** ஒரு நிரலில் இரண்டில் ஒரு பாதையைத் தேர்ந் தெடுப்பதற்குக் கணி னிக்கு உதவும் ஆணை. நிரலை இயக்கும்போது, சூழ்நிலைக்கேற்ப பிரிந்து போதல் செயல்படுத்தப்படும்.

**branch point : பிரியும் இடம் :** ஒரு நிரலில் பிரிந்து போதலைத் தேர்ந்தெடுக்க வேண்டிய இடம்.

**branded : முத்திரைப் பெயர்.**

**BRB : பிஆர்பி :** நான் மீண்டும் வருவேன் என்று பொருள்படும் I'll be right back என்பதன் தலைப் பெழுத்துச் சுருக்கம். இணைய அரட்டை மற்றும் இணைய தகவல் சேவைகளில் கலந்து கொள்வோர் தற்காலிகமாக அக்குழுக்களிலிருந்து பிரியும் போது தரும் செய்தி. •

**breadboard : சோதனைப் பலகை; பிரெட்போர்ட் :** ஒரு செயல்முறைச் சாதனம் அல்லது ஒரு அமைப்பின் சோதனை முறையிலான அல்லது தற்காலிக மான மாதிரி அமைப்பு.



சோதனைப் பலகை

**breadth-first search** : அகல - முதல் தேடல் : மரவடிவ தரவு அமைப்பை அலசும் ஒரு முறை. இம்முறையில் ஒரு நிலையில் உள்ள எல்லா முனைகளையும் தேடிய பின் அடுத்த நிலையில் தேடுவது. இதன் மூலம் இரண்டு புள்ளிகளுக்கிடையிலான சுருக்கமான பாதையை முதலில் கண்டு பிடிக்க முடியும்.

**Break** : முறி; நிறுத்து : ஒரு நிரலாக்கத்தொடர் செயல்படுவதைத் தடுப்பதற்கான ஆணை. Control Break என்பதற்கு ஒப்புமை உடையதல்ல.

**break code** : முறிவு குறிமுறை : விசையினை முதல் முதலில் அழுத்தும்போது வெளியிடப்படும் ஸ்கேன் குறியீடு.

**break, control** : கட்டுப்பாட்டு முறிப்பு. கணினியில் ஒரு நிரல் செயல்பட்டுக் கொண்டிருக்கும் போது Ctrl., Break ஆகிய இருவிசைகளையும் அழுத்தி நிரலின் ஓட்டத்தை நிறுத்தலாம்.

**break down** : நிலைகுலைவு.

**break detect** : முறிவு அறிதல் : நீள் வரிசை அளவை 0-க்களை கண்டுபிடிக்கும், தகவல் தொடர்பு தகவியின் திறன்.

**break key** : முறிவு விசை : கணினி செய்து கொண்டிருக்கும் வேலையை நிறுத்துவதற்கான விசை. சில கணினிகளில் காணப்படும்.

**break mode** : முறிவு பாங்கு.

**breakout box** : அவசர உதவிப் பெட்டி: கணினியில் இரண்டு சாதனங்களுக்கு (கணினியும் இணக்கியும்) இடையில் ஒரு வடம் மூலம் இணைக்கப்படும் ஒரு வன்பொருள் சாதனம். தேவையெனில், வடத்தின் தனித்த கம்பிகளின் வழியாகவும் சாதனங்களைக் கட்டுப்படுத்த முடியும்.



அவசர உதவிப் பெட்டி

**breakpoint** : முறிவிடம் : ஒரு கட்டுப்பாட்டு ஆணை மூலமாகவோ அல்லது கையால் இயக்குவது மூலமாகவோ ஒரு நிரலை நிறுத்தக்கூடிய ஒரு இடம். சோதனை

செய்தல் அல்லது பிழைநீக்க நிரல்களில் பொதுவாக பயன் படுத்தப்படுகிறது.

**breakpoint instructions : நிறுத்துமிட ஆணைகள்.**

**break signal : முறிவு சமிக்கை :** தொகுதி கோப்பு செயல்படு வதை நிறுத்தவோ அல்லது நிரலை நிறுத்தவோ அல்லது செய்தித் தகவல் தொடர்பு நிகழ்வை நிறுத்தவோ பயன் படுத்தப்படும் சிறப்பு எழுத்து அல்லது எழுத்துகளின் தொகுதி.

**BRI : பிஆர்ஐ :** அடிப்படைக் கட்டண இடைமுகம் என்ற பொருள் தரும் Basic Rate Interface என்பதன் தலைப் பெழுத்துச் சுருக்கம். ஐஎஸ் டிஎன் தகவல் தொடர்பில் இரண்டு பி (64 கேபிபிஎஸ்) தடங்களையும் ஒரு டி (64 கேபிபிஎஸ்) தடத்தையும் பயன்படுத்தி குரல், ஒளிக் காட்சி மற்றும் கணினித் தகவல் ஆகியவற்றை ஒரே நேரத்தில் அனுப்பிப் பெறக்கூடிய வசதி.

**bridge : இணைவி :** பல தகவல் தொடர்பு இணைப்புகளை ஒன்றாக இணைத்து ஒரு பல்முனை மின் சுற்றினை உருவாக்கும் சாதனம்.

**bridge router : இணைவித் திசைவி :** பிணையத்தில் இணைவியாகவும் திசைவியாக வும் செயல்படும் ஒரு சாதனம். ஒரு குறும்பரப்பு அல்லது விரி பரப்பு பிணையத்தின் இரு கூறு களை இது இணைக்கிறது. இரு கூறுகளுக்கிடையே தகவல் பொதி களை வழிச்செலுத்த இரண் டாம் நிலை முகவரிகளைப் பயன்படுத்திக் கொள்கிறது.

**bridge ware : இணைப்புப் பொருள் :** ஒருவகைக் கணினிக்கு எழுதப்பட்ட நிரல்களை வேறு வகையான கணினி புரிந்து கொள்வதற்கு மொழி பெயர்ப்பு செய்யும் நிரல்கள்.

**briefcase : கைப்பெட்டி :** விண் டோஸ் 95/98 இயக்க முறை மையில் இருக்கும் ஒரு கோப் புறை (folder). பொதுவாக இரண்டு கணினிகளுக்கிடையே (குறிப்பாக மேசைக் கணினிக் கும் மடிக்கணினிக்கும் இடையே) கோப்புகளை ஒத்திசைவுப் படுத்திக் கொள்ளப் பயன்படு கிறது. இந்தக் கோப்புறை யிலுள்ள கோப்புகளை வேறொரு கணினிக்கு வட்டின் மூலமோ, கம்பிவடம் மூலமோ பிணையம் மூலமாகவோ மாற்றலாம். அவ் வாறு நகலெடுத்த கோப்புகளை மீண்டும் முந்தைய கோப்புறை யில் மாற்றும்போது, திருத்தம் செய்யப்பட்ட கோப்புகளை நாளதுவரை புதுப்பித்துக்

கொள்ளும். மேசைக் கணினி, மடிக் கணினி இரண்டையும் தம் அலுவலகப் பணிகளுக்காகப் பயன்படுத்துவோர்க்கு இது மிகவும் உதவியாக இருக்கும்.

**briefcase computer : கைப் பெட்டி கணினி** : ஒரு கைப் பெட்டி (Briefcase)யின் உள்ளே பொருத்தக்கூடிய, எடுத்துச் செல்லும் கணினி.

**bright** : பொலிவு; ஒளிர்வு.

**brightness : ஒளிர்மை** : 1. கணினி வரைபடங்களில் ஒளி இருத்தல் அல்லது குறைத்தல் (வெண்மை, பழுப்பு, கருமை ஆகிய நிறங்களில் மாறக் கூடியது). 2. சில சிஆர்டீ முகப்புகளில் திரையில் காட்டப்படுவதை மாறுபடுத்திக் காட்டுதல் - குறிப்பாக சில பகுதிகளை மட்டும் தெளிவாகக் காட்டுதல்.

**bring to front** : முன்னால் கொண்டு வா.

**brittle** : நொறுங்கக் கூடிய.

**broadband : அகலக்கற்றை** : குரல் நிலை தரவுத் தொடர்புக்குத் தேவைப்படுவதைவிட அதிக அலை வரிசைகளில் தகவல் பரிமாற்றம் செய்தல். நுண் அலை, ஒளியிழை (fiber optics), லேசர் கதிர்கள் மற்றும் செயற்கைக்கோள் போன்றவற்றில் அகலக் கற்றை தரவுத் தொடர்பு வழித் தடங்கள் செயல்படுகின்றன. ஐம்பது இலட்சம் பாட் (baud) செய்தி வேகம் வரை இதன் மூலம் தரவுகளை அனுப்ப முடியும். Narrow- band உடன் ஒப்பிட்டுப் பார்க்கவும்.

**broadband and video** : அகல அலைக்கற்றை மற்றும் ஒளிக் காட்சிக் கலந்துரையாடல் (conferencing).

**broadband coaxial cable** : அகலக் கற்றை இணை அச்சு வடம்.

**broadband modem : அகலக் கற்றை இணக்கி** : அகல அலைக் கற்றையில் செயல்படும் பிணையத்தில் பயன்படும் இணக்கி. ஒரே வடத்தில் பல்வேறு பிணையங்களின் தகவல் பரிமாற்றம் நடைபெற அகலக்கற்றைத் தொழில்நுட்பம் அனுமதிக்கிறது. வானொலிச் செயல்பாடு போல இரண்டு பிணையங்களுக்கிடையேயான உரையாடல் வெவ்வேறு அலைவரிசைகளில் நடைபெறுவதால், ஒரு பிணையத்தின் தகவல் போக்குவரத்து இன்னொரு பிணையத்தின் போக்குவரத்தில் குறுக்கிடுவதில்லை.

**broadband network : அகலக் கற்றைப் பிணையம்** : தகவல் போக்குவரத்து ரேடியோ அலை

வரிசையில் உள்கற்றையிலும் வெளிக்கற்றையிலும் தனித் தனியாக நடைபெறக்கூடிய குறும்பரப்புப் பிணையம். அகலக்கற்றைப் பிணையத்திலுள்ள பணி நிலையங்கள் இணையச்சு அல்லது ஒளியிழை வடங்களினால் பிணைக்கப் பட்டுள்ளன. இவற்றின் வழியாக சாதாரணத் தகவல், குரல் மற்றும் ஒளிக்காட்சி ஆகியவற்றை ஒரே நேரத்தில் வெவ்வேறு அலை வரிசைகளில் அனுப்ப முடியும். அகலக் கற்றைப் பிணையம் உயர்வேகத்தில் செயல்பட முடியும் (வினாடிக்கு 20 மெகா பைட்டுக்கும் மேல்). ஆனால் சாதாரண அடிக் கற்றைப் பிணையங்களை விட செலவு அதிகமாகும். நிறுவுவது கடினம். வடத் தொலைக்காட்சியின் தொழில் நுட்பமே இப்பிணையத்தில் பின்பற்றப்படுகிறது.

**broadband research network :** அகலக்கற்றை ஆய்வுப் பிணையம்.

**broadband transmission :** அகலக்கற்றை பரப்புகை : அனுப்பும் ஊடகத்தை பல வழித்தடங்களாகப் பிரித்து, ஒவ்வொன்றிலும் தகவல் அனுப்பும் முறை.

**broadcast :** அலைபரப்பு : ஒரே நேரத்தில் பல இடங்களுக்குத் தகவலை அனுப்புவது.

**broadcast storm :** அலை பரப்புப் புயல்: ஒரு பிணையத்தில் நடைபெறும் தகவல் ஒலிபரப்பு, பல்வேறு சேவை மையக் கணினிகளை ஒரே நேரத்தில் பதிலிறுக்கத் தூண்டும் போது ஏற்படுகின்ற போக்கு வரத்து நெரிசல். ஒரு பிணையத்தில் பழைய டீசிபி/ஐபீ திசைவிகளையும், புதிய நெறிமுறைகளை ஏற்கும் திசைவிகளையும் கலந்து பயன்படுத்துவதால் அலை பரப்புப் புயல் ஏற்படுகிறது. பிணையம் உருகிக் கரைதல் (network meltdown) என்றும் கூறுவர்.

**brom :** ப்ரோம் : இருதுருவ படிக்க மட்டும் நினைவகம் எனப் பொருள்படும் Bipolar read only memory என்பதன் குறும் பெயர்.

**bromide :** ஒளியுணர் தாள் : ஒளி உணரும் தாள். டைப் செட்டில் பயன்படுவது.

**brooklyn bridge :** புரூக்ளின் பாலம் : ஐந்தாம் தலைமுறை கணினி அமைப்புகளில் உள்ள கோப்பு பரிமாற்ற நிரல். தகவல்களை மடிக் கணினிக்கும், மேசைக் கணினிக்கும் இடையில் மாற்றுகிறது.

**brownout :** பழுப்பு வெளி யேறல் : வழக்கத்தைவிடக் குறைவாக மின்சக்தி குறையும்போது

'புரவுன்அவுட்' ஏற்படுகிறது. மின்சக்தியின் தேவை, அதன் உற்பத்தியை விட 50 ஹெர்ட்ஸ் அதிகரிக்கும்போது இந்நிலை ஏற்படுகிறது. இதனால் கணினியின் இயக்கம் பாதிக்கப்படுகிறது.

browse : உலாவு; தேடு : *1. டிபேஸ், ஃபாக்ஸ் புரோ போன்ற தரவுத் தளத் தொகுப்புகளில், ஒரே திரையில் ஒட்டுமொத்தமாக பல ஏடுகளைத் திரையிட்டு தகவலைத் தேடவும் திருத்தவும் பயன்படும் கட்டளை. 2. இணையத்தில் மேலோட்டமாக தகவல் பக்கங்களைப் பார்வையிடுவதைக் குறிக்கும் சொல்.*

browse button : உலாவு பொத்தான்.

browse mode : உலாவுப் பாங்கு.

browse option : உலாவுத் தேர்வு.

browse stylesheets : உலாவி பாணித் தாள்கள்.

browser : உலாவி : *நிரலாக்க மொழி அளிக்கின்ற கருவி வரிசை முறையைப் பார்த்து, குறிமுறையைத் திருத்த நிரலருக்கு உதவும் மென் பொருள்.*

browser/web browser : உலாவி/வலை உலாவி : *வலையில் ஆவணங்களைத் தேடிப் பெறவும், ஆவணத்திலிருந்து ஆவணத்திற்கு இணைப்புப் பின் தொடரவும் அனுமதிக்கும் மென்பொருள் இணையத்தில் பயன்படுவது.*

browse view: உலாவுத் தோற்றம்.

browsing : உலாவுதல்; நோட்டமிடல் : *கணினி பட்டியல்களிலோ அல்லது கோப்புகளிலோ சுவையான செய்தி கிடைக்காதா என்று தேடுதல்.*

brush : தூரிகை : *கணினி வரைபடங்களில் ஜாய் ஸ்டிக், பேடில் அல்லது அதைப் போன்ற உள்ளீட்டுச் சாதனங்களின் மூலம் காட்சித் திரையின் எந்தப் பகுதியிலும் நகர்த்தக் கூடிய வண்ணம் தரும் சாதனம்.*

brute-force technique : முரட்டு விசை நுட்பம்.

.bs : .பிஎஸ் : *ஓர் இணைய தளம் பஹாமஸ் நாட்டில் உள்ளது என்பதைக் குறிக்கும் பெருங் களப் பெயர். தள முகவரியின் இறுதியில் இடம்பெறும்.*

BSAM (Bee Sam) : பி.சாம் : *அடிப்படைத் தொடர் வரிசை அணுகுமுறை என்று பொருள்படும்* Basic Sequential Access Method *என்பதன் குறும்பெயர்.*

BSC : பிஎஸ்சி : *இரும ஒத்திசைவு தகவல் தொடர்பு என்று*

பொருள்படும் Binary Synchronous Communication என்பதன் குறும்பெயர். தரவு அனுப்புவதற்குப் பயன்படும் ஒரு செயல் முறை.

**BSD UNIX** : பிஎஸ்டி யூனிக்ஸ் : யூனிக்ஸ் இயக்க முறைமை ஏடீ&டீ பெல் ஆய்வுக் கூடத்தில் உருவாக்கப்பட்ட போதிலும், உலகின் பல்வேறு நிறுவனங்களும் பல்கலைக் கழக ஆய்வுக் கூடங்களும் யூனிக்ஸ் முறைமையை பல்வேறு வடிவங்களில் மேம்படுத்தி உருவாக்கி வெளியிட்டுள்ளனர். அவற்றுள் குறிப்பிடத்தக்கது, கலிஃபோர்னியா விலுள்ள பெர்க்கிலி பல்கலைக் கழகத்தின் பெர்க்கிலி சாஃப்ட்வேர் டிஸ்ட்ரிபியூஷன் என்ற அமைப்பின் மூலம் வெளியிடப்பட்ட யூனிக்ஸ் பதிப்பு ஆகும். இதுவே சுருக்கமாக பிஎஸ்டி யூனிக்ஸ் என்று அழைக்கப்பட்டது. இன்று யூனிக்ஸில் இருக்கின்ற பிணையத் திறன், கூடுதல் புறச் சாதன ஏற்பு, நீண்ட கோப்புப் பெயர், சி-செயல் தளம், விஐ தொகுப்பான், டீசிபீ/ஐபீ ஆகிய பல கூடுதல் வசதிகள் பிஎஸ்டி யூனிக்ஸின் பங்களிப்பாகும். இன்றைக்கு யூனிக்ஸின் பரவலுக்கும், கல்விக் கூடங்களை இணையத்தில் இணைப்பதற்கும் காரணமாக அமைந்தது பிஎஸ்டி யூனிக்ஸ். 1பிஎஸ்டி என்ற பதிப்பில் தொடங்கி 4.3 பிஎஸ்டி பதிப்புவரை வெளியிடப்பட்டது. 1993 ஆண்டுடன் பிஎஸ்டி யூனிக்ஸின் வெளியீடு நிறுத்தப்பட்டு விட்டது.

**BSN** : பிஎஸ்என் : வணிக சந்தாதாரர் பிணையம் என்று பொருள் படும் Business Subscriber Network என்பதன் குறும்பெயர்.

**b-spline** : பி-ஸ்ப்ளைன் : கணினி வரைகலையின் தொடர்ச்சியை உறுதி செய்யும் கணித வாய்பாட்டைப் பயன்படுத்தி உருவாக்கப்படும் வளைவு.

**.bt** : .பிடீ : ஓர் இணைய தள முகவரியின் இறுதியில், பூட்டான் நாட்டைச் சார்ந்த தளம் என்பதைக் குறிக்க இணைக்கப் படும் பெருங்களப் பிரிவுப் பெயர்.

**BTAM** : பிடாம் : அடிப்படை தொலைத் தொடர்பு அணுகுமுறை என்று பொருள்படும் Basic Telecommunication Access Method என்பதன் குறும்பெயர். தொலை தூர சாதனங்களுடன் படித்து எழுதி தொடர்பு கொள்ள அனுமதிக்கும் ஒரு அணுகு முறை.

**B-tree** : பி.மரம் : சமனாக்கிய மரம் என்று பொருள்படும் Balanced Tree என்பதன் குறும் பெயர். தரவுக் கட்டமைப்பு

களில் தரவு இருக்கும் இடத்தைக் காட்ட ஏற்பாடு செய்யும் ஒரு வழி. இதன் மூலம் எந்த ஒரு குறிப்பிட்ட பதிவை யும் உடனடியாகத் தேடி கண்டறிய முடியும்.

**Btrieve** : பிட்ரீவ் : நாவல் (Novell) நிறுவனத்தின் தரவு தள மேலாண்மை முறைமை

**BTW** : பிடீடபிள்யூ : இந்த வழியே என்று பொருள் படும் By The Way என்பதன் தலைப் பெழுத்துச் சுருக்கம். இணையத் தில் மின் அஞ்சல் மற்றும் செய்திக்குழுக் கட்டுரைகளில் குறிப்புரையைச் சுட்டும் சொல் தொடராக இது அடிக்கடி பயன் படுத்தப்படுகிறது.

**bubble** : குமிழ் : குமிழ் வரைபடத்தில் ஒரு குறியீடு அல்லது குமிழ் நினைவகத்தில் துண்மி.

**bubble chart** : குமிழ் நிரல் படம் : குமிழ் போன்ற குறியீடுகளை அதிகம் பயன் படுத்தி தரவுப் பாய்வு நிரல் படங்களை உருவாக்குதல்.

**bubble jet** : குமிழ் ஜெட் : கேனனின் இங்க் ஜெட் அச்சுப் பொறி தொழில் நுட்பம். லேசர் அச்சுப் பொறியினைவிட மலிவானது.

**bubble jet printer** : குமிழி பீச்சு அச்சுப்பொறி : தொடா அச்சு முறை சார்ந்த அச்சுப் பொறி. மைபீச்சு அச்சுப்பொறியில் அமைந்துள்ளது போன்ற நுட்பமே இதிலும் பயன்படுத் தப்படுகிறது. தாளின்மீது ஊசித் துளை வழியே மை பீச்சப்பட்டு எழுத்துகள் அச்சிடப்படு கின்றன. மையைத் தயாரிக்க தனிச் சிறப்பான சூடாக்கும் கம்பிகளைக் கொண்டுள்ளது.



குமிழ் பீச்சு அச்சுப் பொறி

ஆனால் மைபீச்சு அச்சுப்பொறியில் பீஸோ மின்படிகங்கள் பயன்படுத்தப்படுகின்றன.

**bubble memory : குமிழ் நினைவகம் :** காந்தப் புள்ளிகளாக தகவலை சேமித்து வைக்கும்முறை. ஒரு மெல்லிய, மின்கடத்தாப் பொருளால் ஆன படலத்தின் (film) மீது குமிழ்கள் நிற்கின்றன. அழியாத இருப்பகத் திறனை இது அளிக்கிறது.

**bubble sort : குமிழி வரிசைப் படுத்தல் :** ஒரு பட்டியலை வரிசைப் படுத்தப் பயன்படும் தருக்கமுறை. ஒரு பட்டியலில் அடுத்தடுத்துள்ள இரண்டு உறுப்புகளை எடுத்துக் கொண்டு அவை சரியான வரிசையமைப்பில் இல்லாவிடில் அவற்றை இடமாற்றம் செய்யும் முறை. இந்த முறையில் n உறுப்புகள் உள்ள பட்டியலில் ஓர் உறுப்பு n-1 உறுப்புகளுடன் ஒப்பிடப்பட்டு மிகச்சிறிய உறுப்பு, பட்டியலின் உச்சிக்குக் கொண்டு வரப்படுகிறது. இச்செயல்முறை அடுத்தடுத்துள்ள ஒவ்வொரு உறுப்புக்கும் மேற் கொள்ளப்படுகிறது. நீரின் அடிப்பாகத்திலிருந்து எடை குறைந்த காற்றுக் குமிழ் உந்தியுந்தி நீரின் மேற் பரப்புக்கு வருவதுபோல குறைந்த மதிப்புள்ள உறுப்பு பட்டியலின் உச்சிக்குக் கொண்டு வரப்படுவதால் இப்பெயர் ஏற்பட்டது.

**bucket : வாளி :** கூட்டாக அழைக்கப்படும் பதிவேடுகளின் குழுவைச் சேமித்து வைக்க இருப்பகத்தில் இருக்கும் குறிப்பிட்ட பகுதி. வன்பொருள் தொடர்பானதாக இருக்கலாம் அல்லது 'தற்சார்பு முகவரியாக்கம்' (hasing) மூலம் முடிவு செய்யக்கூடியதாக இருக்கலாம்.

**bucket sort : கலன் வரிசையாக்கம்.**

**buddy system : மொட்டு அமைப்பு :** நினைவகத்தை நிர்வகிக்கும்முறை. இதன் அளவுகள் 2-ன் மடங்காக இருக்கும்.

**budget forcasting model : நிதிநிலை முன்மதிப்பீட்டு மாதிரியம் :** தரமான கணக்கீட்டுச் செயல்பாடுகளைப் பயன்படுத்தி தனித்தனி துறையிலிருந்து அளிக்கக்கூடிய நிதிநிலைத் தகவல்களைத் தொகுப்பதற்குப் பயன்படக் கூடிய மாதிரியம். பணப் பாய்வு, ஒரு பங்குக்கான வருமானம் மற்றும் பிற நிதித் துறை விகிதாச்சாரங்களை முன்னறிவிப்புச் செய்யும் திறன்களையும் இதில் உள்ளடக்கலாம். இதன் விளைவாக நிதிநிலைக்கு ஏற்றவாறு, விரிதாள் பணித் தொகுப்புகளில் இத்தகைய

*மாதிரியங்கள் பொதுவாக சேர்க்கப்படும்.*

**budgeting** : வரவு செலவுத் திட்டமிடல்.

**buffer** : இடையகம்; இடைநிலை நினைவகம் : *பல்வேறுபட்ட இயக்க வேகத்தினைச் சரி செய்யவோ அல்லது சம நிலைப் படுத்தவோ பயன்படுகின்ற தற்காலிக இருப்பிடப் பகுதி. மெதுவாக உள்ளீடு செய்கின்ற சாதனமான விசைப் பலகையுடன் அதிவேகமாக இயங்குகின்ற கணினியின் செயலகத்துடனும் இணைப்பதற்குப் பயன்படுத்தலாம்.*

**buffer amplifier** : இடையகப் பெருக்கி.

**buffer card punch** : இடையகத் துளை அட்டை.

**buffered computer** : இடைத் தடுப்புக் கணினி : *ஒரே நேரத்தில் உள்ளீடு / வெளியீடு மற்றும் செயலாக்க நடைமுறைகள் அளிக்கின்ற கணினி.*

**buffer flush** : இடையகம் வழித்தல் இடைநிலை : *நினைவகத்திலிருந்து வட்டுக்குத் தரவுவை மாற்றுதல்.*

**buffering** : இடைச்சேமிப்பு : *தகவல் தொடர்பு பாதையில் தரவுகளை அனுப்புவதைத் தாமதப்படுத்துவதோ அல்லது தற்காலிகமாக சேமித்து வைப்பதோ செய்யப்படுவது.*

**buffer memory** : இடை நினைவகம்; இடைநிலை நினைவகம் : *உள்ளீடு அல்லது வெளியீட்டை வைத்துக் கொள்ளப் பயன் படுத்தப்படும் தற்காலிக நினைவகம். இதனால் மையச் செயலகம் வேறு பணிகளில் ஈடுபட முடிகிறது.*

**buffer pool** : இடையகக் குவிப்பு : *கூடுதல் இருப்பிடங்களுக்காக நினைவகத்தில் ஒதுக்கப்பட்ட பகுதி.*

**buffer storage** : இடைநிலைச் சேமிப்பு; இடைநிலை தகவல் தேக்கம் : *1. ஒரு குறிப்பிட்ட தரவுத் தொகுதியை, இயக்க முறைமையோ, ஓர் நிரலாக்கத் தொடரோ பயன்படுத்திக் கொள்ளத் தயாராகும் நேரம் வரை, கணினி நினைவகத்தின் ஒரு பகுதியில் தற்காலிகமாகச் சேமித்து வைக்கும் முறை. 2. ஒரே வேகத்தில் செயல்படாத இரண்டு சாதனங்களுக்கிடையே தகவல் பரிமாற்றம் நடைபெறும் போது, தகவல் எடுத்தாளப்படும் வரை சிறிதுநேரம் தற்காலிகமாகத் தேக்கிவைக்கும் இடம். விசைப் பலகையிலிருந்து வரும் தகவலை செயலி படிக்கும் போது, அச்சுப்பொறிக்குத்*

தகவல் அனுப்பப் படும்போது, வட்டிலிருந்து தகவலைப் படிக்கும்போது, வட்டில் தகவல் எழுதப்படும் போது மற்றும் இதுபோன்று வேக வேறு பாடுள்ள) இரு சாதனங்களுக் கிடையே தகவல் பரிமாற்றத் துக்கு இடைநிலை தகவல் தேக்கம் அவசியமாகும்.

**bug :** பிழை; தவறு : ஒரு கணினி யின் நிரலிலோ அல்லது அதன் அமைப்பிலோ, அதன் வன் பொருள் பகுதியிலோ ஏற்படும் ஒரு தவறு. Debug என்றால் பிழைகளை நீக்கி கோளாறு களை சரி செய்வதாகும்.

**buggy :** முற்றப் பிழையான; முழுக்கப் பிழையான : பிழைகள் மலிந்த மென் பொருளைக் குறிக்கப் பயன்படும் சொல்.

**building block principle :** உறுப்புத் தொகுதிக் கோட்பாடு.

**built-in :** உள்ளிணைக்கப்பட்ட.

**built-in check :** உள்ளிணைந்த சரிபார்ப்பு.

**built-in font :** உள்ளிணைந்த எழுத்துரு.

**built-in function :** உள்ளி ணைந்த செயற்பாடு.

**built-in groups :** உள்ளிணைந்த குழுக்கள்; உள்ளிணைந்த உரி மைத் தொகுதிகள் : விண்டோஸ் என்டீ வழங்கன், விண்டோஸ் என்டீ உயர் நிலை வழங்கன் அமைப்பில் உள்ளிருப்பாய் உள்ள உரிமைத் தொகுதிகள். பிணைய அமைப்பில் ஒவ் வொரு பயனாளருக்கும் குறிப் பிட்ட பணிகளைச் செய்வதற் கான அனுமதியும் உரிமை களுமே வழங்கப்படுகின்றன. அத்தகைய உரிமைகளுள் குறிப் பிட்ட சிலவற்றை ஒரு தொகுதி யாக வைத்துக்கொள்வதால், ஒரு பயனாளருக்கு அத்தொகுதி உரிமையை வழங்குவது எளிமை யாக இருக்கும். குறிப்பிட்ட பொதுவான உரிமைகள் பெற்ற பயனாளர் குழுக்களை உரு வாக்குவதும் எளிதானது.

**built-in pointing device:** உள்ளி ணைந்த சுட்டுச் சாதனம்.

**bulk eraser :** முழுக்க நீக்கல்; முற்றத் துடைத்தல்; ஒட்டு மொத்தமாய் அழித்தல் : நெகிழ் வட்டு, நாடா போன்ற சேமிப்பு ஊடகங்களிலுள்ள தகவல் அனைத்தையும் ஒட்டு மொத்த மாய் அழிக்கப் பயன்படும் செயல் முறை அல்லது ஒரு சாதனம். வட்டு, நாடா ஆகிய வற்றில் மின் காந்த முறையில் தகவல் பதியப்படுகிறது. எனவே, சக்தி வாய்ந்த மின் காந்தப் புலத்தை உருவாக்கு வதன் மூலம் மின்காந்த ஊடகத்

திலுள்ள இரும்புத் தூகள்களைச் சிதைத்து தகவல் அனைத்தையும் துடைத்திட முடியும்.

**bulk storage** : மொத்த சேமிப்பகம்; மொத்த இருப்பகம் : அதிக அளவில் தகவல்களைச் சேமிப்பது. பொதுவாக, நீண்டகால தேவைக்காக இவ்வாறு செய்யப்படும்.

**bullet** : பொட்டு : ஒரு பட்டியலில் உள்ள வகைபாடுகளைத் தொடங்கப் பயன்படுத்தப்படும் பொட்டுப் போன்ற அடையாளம்.

**bulletin board** : அறிக்கைப் பலகை; தகவல் பலகை : கணினியைப் பயன்படுத்துபவர்கள் செய்திகளையோ அல்லது நிரல்களையோ மற்றவர்களுக்காக அனுப்ப அனுமதிக்கும் கணினி முறைமை. மின்னணு அறிவிப்புப் பலகை என்றும் அழைக்கப்படுவதுண்டு.

**bulletin board service** : அறிக்கைப் பலகை சேவை : ஒரு வணிக தகவல் தொடர்பு கட்டமைப்பு. இதில் சந்தாதாரர்கள் செய்திகளை அனுப்பலாம்; மென்பொருள் ஆலோசனை பெறலாம்; நிரல்களை ஏற்றிப் பெறலாம்; இன்னும் பல வற்றைச் செய்யலாம். BBS என்று சுருக்கி அழைக்கப்படுகிறது. Bulletin Board System என்றும் சொல்லப்படுகிறது.

**bullet-in font** : உள்ளமைந்த எழுத்துரு: அச்சுப்பொறியின் ரோமில் (ROM) நிரந்தரமாகக் குறியீடு இடப்பட்ட எழுத்துருக்கள்.

**bullet proof** : பிழைதடுப்புத் திறன் : வேறொரு கணினியின் வன்பொருள் குறைபாடுகளால் நல்லபடியாக இயங்கிக் கொண்டிருக்கும் ஒரு கணினிச் செயல்பாட்டுக்கு இடையூறு ஏற்படா வண்ணம் தடுத்துக் காக்கும் திறன்.

**bullets and numbering** : பொட்டும் எண்ணிடலும்.

**bump mapping** : பம்ப் மேப்பிங் : கணினி வரைகலையில் ஒரு தொழில் நுட்பம்.

**bundle** : கட்டு ; உள்ளிணைந்த : மென்பொருள் துணைப் பொருள்கள் மற்றும் சேவைகளை ஒரு கணினி விலையின் பகுதியாகச் சேர்ப்பது.

**bundled** : உள்ளிணைக்கப்பட்ட : கணினி பொருட்கள் மற்றும் சேவைகள் முழுவதையும் ஒரே விலைக்கு சேர்த்துத் தருவதைக் குறிப்பது.

**bundled software** : உள்ளிணைந்த மென்பொருள் : கணினி அமைப்பின் மொத்த

விலையில் ஒரு பகுதியாகச் சேர்க்கப்பட்ட மென்பொருள்.

**bundled / unbundled** : உள்ளிணைந்த /பிரிக்கப்பட்ட : ஒரு விலைக்கு அளிக்கப்படும் வன்பொருள் / மென்பொருளின் மொத்தப் பொதிவுத் தொகுதிகள் பிரிக்கப்பட்ட அமைப்புகளில் ஒவ்வொரு பொருளுக்கும் தனித்தனி விலை உண்டு.

**bundling** : உள்ளிணைத்தல்; உடன்சேர்த்தல் : கணினி அமைப்பின் விலையிலேயே மென்பொருள், பராமரிப்பு, பயிற்சி மற்றும் பிற பொருள்கள் அல்லது சேவைகளைச் சேர்த்தல்.

**bunny suit** : காப்பு உடை : சிப்பு தயாரிக்கும் இடங்களில் மனித நுண்ணுயிரிகள் தொற்றாமல் தடுக்க தூய்மையான அறையில் பாதுகாப்பு ஆடை அணிதல்.

**bureau** : அலுவலகம் : தகவல் செயலாக்கச் சேவைகளை வேறொரு நிறுவனத்திற்கு அளிக்கும் நிறுவனம்.

**burn** : எரித்தல் : 1. மிக அதிக மின்சக்தி அல்லது வெப்பத்திற்கு உள்ளாக்கி மின்சுற்றை அழித்தல். 2. குறுவெட்டில் எழுதுவதையும் குறிக்கிறது.

**burn-in** : உள்ளெரித்தல் : உயர்த்தப்பட்ட வெப்பநிலையில் அடுப்பில் மின்சுற்றுகளை இயக்குவதன்மூலம் மின்சுற்றுகள் மற்றும் பாகங்களைச் சோதனை செய்யும்முறை. கணினி பாகங்களை தொடர்ச்சியாக ஒரு வாரத்திற்கு 50 டிகிரி செல்ஷியஸ் வெப்பநிலையில் இயக்குவது ஒரு சராசரியான சோதனை. இதன்மூலம் பலவீனமான மின்சுற்றுகள் எரிந்து போய் சோதனைகளைத் தாங்கும் பாகங்கள் மட்டும் மிஞ்சும்.

**burning** : எரித்தல் : படிக்க மட்டுமான நினைவகத்தில் (ROM) நிரல்களைப் பதித்தல். குறுவட்டில் எழுதுவதையும் குறிக்கும்.

**Burroughs adding machine** : பரோவின் கூட்டல் எந்திரம் : 1884இல் வில்லியம் பரோஸ் என்பவரால் கண்டுபிடிக்கப்பட்ட முதல் வணிகமுறையிலான கூட்டும், பட்டியலிடும் எந்திரம். வகைப் பலகை மற்றும் அதன் தொழில் நுட்பம் இன்னும் கைகளால் இயங்கும் சில எந்திரங்களில் அப்படியே மாறாமல் உள்ளது.

**Burroughs Corporation** : பரோஸ் நிறுவனம் : கணினிக் கருவிகளை அதிக அளவில் உற்பத்தி செய்யும் நிறுவனம்.

**Burroughs, William Seward (1857-1898)**: பரோஸ் வில்லியம்

சீவார்ட் (1857-1898) : முதல் வணிக முறையிலான கூட்டல் எந்திரத்தைக் கண்டுபிடித்தவர். இன்றைய பரோஸ் கார்ப்ப ரேஷன் அந்த எந்திரத்திலிருந்து தான் துவங்கியது.

**burst : வெடிப்பு :** *1. கணினி செயல்பாடுகளில், தொடர்ச் சியான காகிதத்தில் இருந்து தனித் தாள்களைப் பிரித்தல். 2. தரவு அனுப்புதலில் ஒரே அலகாகக் கணக்கிடப்படும் சமிக்கைகளின் தொகுப்பு.*

**burster : வெடிப்பி :** *பல பக் கங்கள் உள்ள கணினி அச்சு வெளி யீட்டினைப் பிரிக்கும் ஒரு எந்திர சாதனம். நகல்களைப் பிரித்து கார்பன் தாள்களை எடுக்கிறது.*

**burst errors : வெடித்த பிழை கள் :** *தகவல் தொடர்புகளில் மிக நெருக்கத்தில் (வெடிப்பில்) ஏற்படும் தொடர் பிழைகள், நடை முறையில் பெரும்பாலான பிழைகள் நெருக்கத்தில் (வெடிப் பில்)தான் ஏற்படுகின்றன.*

**bursting : வெடித்தல் :** *தொடர்ச் சியான படிவ காகிதத்தைத் தனித் தாள்களாகப் பிரிக்கும் செயல் முறை.*

**burst mode : வெடிப்பு முறை :** *தடை செய்யமுடியாத முறையில் தரவுகளைப் படிக்கும் அல்லது எழுதும் முறை.*

**burst mode transfer : வெடிப்பு பாங்கு மாற்றம் :** *குறுவட்டு (CD-Rom)விலிருந்து தகவல் பரி மாற்றம். சராசரி தகவல் பரிமாற்றம் விகிதமான 150 கிலோ பைட்/ நொடி / (முறை 1) அல்லது 171 கிலோ பைட்டுகள்/ நொடி (முறை 2) ஆகியவற்றைவிட பல மடங்கு பெரியது. ஸ்கஸ்ஸி (SCSI) தொகுதியைவிட அதிக வேகத்தை இது எடுக்க முடியும்.*

**burst speed : வெடிப்பு வேகம் :** *1. வெடிப்பு முறை தரவுப் பரி மாற்றத்தில், ஒரு சாதனம் இடை யூறின்றி தரவுவை அனுப்பக் கூடிய உச்ச அளவு வேகம். பல் வேறு தகவல் தொடர்புச் சாதனங்கள் வெடிப்பு முறையில் தகவலை அனுப்ப வல்லவை. வெடிப்பு முறையில் தகவல் பொட்டலங்களை அனுப்பும் போது அதன் தகவல் பரிமாற்ற வேகம் அதிகரிக்கப்படுகிறது. 2. ஒர் அச்சுப்பொறி அடுத்த வரிக்கு வராமல் ஒரே வழியில் ஒரு வினாடி நேரத்தில் அச்சடிக் கும் எழுத்துகளின் எண்ணிக்கை. தாளைத் தள்ளும் நேரம், அச்சுமுனை அடுத்தவரிக்கு வர எடுத்துக் கொள்ளும் நேரம் இவற்றைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாமல் கணக்கிடப்படும் வேகம் இது. அச்சுப்பொறி உற்பத்தியாளர்கள் கூறிக்*

கொள்ளும் அச்சிடும் வேகம் உண்மையில் அதன் வெடிப்பு வேகத்தைத்தான். ஆனால், உண்மையில் அச்சுப் பொறியின் செயல்திறன் ஒரு பக்கம் முழுமையும் அடிக்க எடுத்துக் கொள்ளும் மொத்த நேரத்தைக் கொண்டே கணக்கிடப்படும்.

**bursty : வெடிப்பி; வெடிப்பு முறை** : தகவல் பரிமாற்றத்தில் தொடர்ச்சியாகத் தரவை அனுப்புவதற்குப் பதில் வெடிப்பு முறையில் துண்டு துண்டாக அனுப்பும் முறை.

**bus : மின் பாட்டை** : தகவல் மற்றும் மின் சமிக்கைகளை அனுப்புவதற்கான பாதை அல்லது வழித்தடம்.

**bus architecture : மின் பாட்டைக் கட்டுமானம்.**

**bus bridge : மின் பாட்டைப் பாலம்** : இரண்டு மின் பாட்டைப் தொகுதிகளை ஒன்றாக இணைக்கும் சாதனம்.

**bus card : மின் பாட்டை அட்டை** : விரிவாக்க அட்டை. இது கணினியின் விரிவாக்க மின் பாட்டையில் பொருத்தப்படுவது.

**bus common : பொது மின் பாட்டை** : வன்பொருள் சாதனங்களுக்கோ கணினியின் உள் பாகங்களுக்கோ அல்லது தகவல் தொடர்பு கட்டமைப்பில் இரு நிலைகளுக்கிடையிலோ செயல்படும் வழித்தடம். ஒரு கணினியில் மின்பாட்டைத் தொகுதி அமைப்பு பயன்படுமானால், அதன் செயலகங்கள், நினைவகம், வெளிப்புற அலகுகள் ஆகிய அனைத்தும் மின்பாட்டை ஒன்றோடொன்று இணைக்கப் படுகின்றன. மின் இணைப்புத் தொகுதியில் இரண்டு வழித் தடங்கள் உள்ளன. ஒன்று தகவல் இருக்கும் இடத்தைக் கண்டறி யவும், மற்றொன்று தகவலை மாற்றவும் செய்கிறது. கட்ட மைப்பில் உள்ள அனைத்து உறுப்பு களும் மின்பாட்டை இணைக் கப்படும்.

**bus enumerator : மின் பாட்டைக் கணக்கெடுப்பி** : ஒரு குறிப்பிட்ட மின்பாட்டையில் இணைக்கப்பட்டுள்ள அனைத்து சாதனங்களையும் கண்டறிந்து ஒவ்வொன்றுக்கும் தனித்த அடையாளக் குறியீடு அளிக்க வல்ல ஒரு சாதன இயக்கி (device driver) ஆணைத் தொகுப்பு. ஒரு கணினியை இயக்கியவுடன், கணினியில் பொருத்தப்பட்டுள்ள அனைத்து சாதனங்களின் தகவல் களையும் நினைவகத்தில் ஏற்றும் பணியை இக்கணக்கெடுப்பியே கவனித்துக் கொள்கிறது.

**bus extender : மின் பாட்டை விரிவாக்கம்** : சோதனைக்காக

சுற்றிலும் உள்ள அட்டைகளுக்கு வெளியே ஒரு அச்சிட்ட மின் சுற்று அட்டையைத் தள்ளும் அட்டை. அது முதலில் ஒரு விரிவாக்க இடத்தில் பொருத்தி பின்னர் மின்பாட்டை விரிவாக்கி யில் சேர்க்கிறது. இதில் பல விரிவாக்க இடங்கள் மட்டும் இருக்கலாம் அல்லது அவற்றில் மின்சக்தி அளிக்கும் வசதியும் இருக்கலாம்.

**bush button** : அழுத்து பொத்தான்.

**bush, vannevar (1890-1974)** : **புஷ், வான்னேவர்** : மின் தடங் களினால் ஏற்படும் கணித சமன் பாட்டு வேறுபாடுகளைத் தீர்க்கும் முயற்சியில் ஈடுபட்ட போது, 1930ஆம் ஆண்டு பல் வேறு சிக்கல்களைத் தீர்க்கக் கூடிய முதல் தானியங்கிக் கணி னியை உருவாக்கினார். மாறு பாட்டு பகுப்பாய்வி (Differential Analyzer) என்று அழைக்கப்பட்ட கணினி, இன்றைய ஒப்புமை கணினிகளுக்கெல்லாம் முன் னோடியானது. 100 டன் எடை யுள்ள இக்கணினியில் பல்லா யிரக்கணக்கான வெற்றிடக் குழல்கள் பயன்பட்டன.

**business applications** : **வணிகப் பயன்பாடுகள்** : சம் பளப்பட்டி, வரவேண்டிய, கொடுக்க வேண்டிய பணம் பற்றிய கணக்குகள், இருப்பு கணக்கெடுத்தல் போன்ற அன் றாட கணக்கீட்டு நடைமுறை களுக்குப் பயன்படும் கணினிப் பணித் தொகுப்புகள் அறிவியல் பயன்பாடுகளுக்கு மாறானது.

**business computer** : **வணிகக் கணினி**: வணிகப் பயன்பாடு களுக்கு மட்டுமே பயன்படுத்தப் படும் கணினி.

**business data processing** : **வணிகத் தரவு செயலாக்கம்** : சம்பளப்பட்டி, பட்டியலிடல், கணக்கெடுத்தல் போன்ற வணிக நோக்கங்களுக்காக நடைபெறும் தரவு செயலாக்கம்.

**Business Equipment Manufacturers Association (BEMA)** : **பீமா** : வணிகக் கருவி தயாரிப் பாளர்கள் சங்கம் என்று பொருள் படும் Business Equipment Manufacturers Association என்பதன் குறும்பெயர். கணினி கருவிகள் மற்றும் அலுவலக எந்திரங்களை உற்பத்தி செய்யும் நிறுவனங்களைக் கொண்ட சங்கம். பயன்பாட்டாளர்களது பிரச்சினைகளைத் தீர்க்கவும், பொது நலனுக்காக தகவலைப் பயன்படுத்தவும், கணினி மற்றும் தகவல் செயலாக்கக் கருவிகளுக்கான தர நிர்ணயங் களை உருவாக்கவும் வழி காட்டுவதே இதன் நோக்கங்கள். ஒரு வாராந்தர செய்தி மடலும்,

ஒரு ஆண்டு அறிக்கையும், வெளியிடுகின்றது.

**business graphics : வணிக வரை கலை :** *1. வட்ட (Pie) வரைபடங்கள், நீள்கட்ட வரை படங்கள், பிரிவு படங்கள், மற்றும் பிற புலனாகும் முறை களில் வணிகச் செயல்பாடுகள் மற்றும் திட்டங்களின் விற் பனைக்கும் விலைக்கும் உள்ள வேறுபாடு. துறை வாரி விற்பனை, உற்பத்திப் பொருள் செயல்பாட்டின் ஒப்பீடு, இருப்பு விலைகள் போன்ற துறைகளில் அளித்தல். 2. தரவுகள் பார்த்துத் தெரிந்து கொள்ளும் வண்ணம் காட்டக்கூடிய பயன்பாட்டுத் தொகுப்புகளை உருவாக்குதல்.*

**business information processing : வணிக தகவல் செய லாக்கம் :** *வணிகச் சூழ் நிலை யில் தகவல் செயலாக்கம் மற்றும் பரிமாற்றத்தை விளக்கும் ஒரு பொதுச் சொல். விலைப் பட்டியல் தயாரித்தல் அல்லது விமானப் பயண முன் பதிவு கள், காசோலை நீக்கம், சம்பளப் பட்டி வெளியீடு போன்றவை எடுத்துக் காட்டுகள்.*

**business machines : வணிக எந்திரங்கள் :** *வணிகச் செயல் பாடுகளுடன் தொடர்புள்ள கணினிகள், சொல் செயலாக்க எந்திரங்கள், முனையங்கள் மற்றும் பிற மின்னணு, எந்திரக் கருவிகள்.*

**business mini computer : வணிகச் சிறு கணினி.**

**business - oriented programming language : வணிகம் சார்ந்த நிரலாக்க மொழி :** *வணிகப் பயன்பாடுகளில் அதிக தரவுக் கோப்புகளைக் கையாளக் கூடிய தாக உருவாக்கப்பட்ட மொழி. (எ.டு. : கோபால் COBOL)*

**business programming : வணிக நிரலாக்கம் :** *கணினி தீர்வுக்காக வணிகப் பிரச்சினை களுக்குக் குறியீடு இடப்படும் கணினி நிரலாக்கும் பிரிவு. பொதுவாக குறைந்த கணக்கீடு களே இடம் பெற்றாலும் ஏராள மான தரவு உள்ளீடு வெளியீடு களைக் கொண்ட கோப்புகளைக் கையாளக் கூடியது.*

**business software : வணிக மென்பொருள் :** *மின்னணு விரி தாள், தரவுத் தள மேலாண்மை அமைப்புகள், வணிக வரைபட சம்பளப் பட்டி நிரல்கள் மற்றும் கணக்கீட்டு நிரல்கள் போன்ற வணிக பயன்பாடுகளுக்காக வென்றே குறிப்பிட்டு உரு வாக்கப்பட்ட பணித்தொகுப்புகள்.*

**business systems planning (BSP) : வணிகமுறைத் திட்ட மிடல்.**

**bus mouse :** மின் பாட்டைச் சுட்டி : வரிசைத் துறையில் (Port) பொருந்துவதற்குப் பதிலாக விரிவாக்க அட்டையில் பொருந்தும் மின்பாட்டைச் சுட்டி.

**bus network :** பாட்டைப் பிணையம் : மின் பாட்டை அல்லது ஒரு பொது விநியோக வழித்தடத்தினைப் பயன்படுத்தி அனைத்து நிலையங்கள் அல்லது கணினிச் சாதனங்கள் தகவல் தொடர்பு கொள்ளும் அமைப்பு.



பாட்டைப் பிணையம்

**bus system :** மின்பாட்டை முறைமை : மின்பாட்டை அமைப்பு : கணினி உள்ளே தரவுகள் போவதற்கு வகை செய்யும் பாதைகளின் கட்டமைப்பு. தரவு மின் பாட்டை, கட்டுப்பாட்டு மின்பாட்டை, முகவரி மின் பாட்டை ஆகியவை கணினியில் முக்கிய மின்பாட்டைகளாக அடையாளம் காணப்படுகின்றன.

**bussy hour :** மிகைவேலை நேரம்.

**bus topology :** மின் பாட்டை அமைப்பியல் : மின்னணு கட்டமைப்பு கட்டுமானத்தை விளக்குவது.

**button bar :** பொத்தான் பட்டை

**Button :** பொத்தான் : சுட்டியினால் சொடுக்கினால் திரையில் ஒரு இடத்தில் ஒரு செயலைத் துவக்கவோ அல்லது நிறுத்தம்



பொத்தான்கள்

செய்யவோ அதிகம் பயன் படுத்தப்படுவது.

**button bomb :** **குண்டுப் பொத்தான்; பொத்தான் குண்டு :** இணையத்திலுள்ள வலைப் பக்கத்தில் பல்வேறு செயல் முறைகளை இயக்க பல்வேறு உருவங்களில் பொத்தான்கள் அமைக்கப்படுவது உண்டு. சுட்டியின் சுட்டுக்குறியை ஒரு பொத்தான்மீது வைத்துச் சொடுக்கும்போது அதற்குரிய பணி செயல்படுத்தப்படும். குண்டின் உருவத்தில் தோற்ற மளிக்கும் பொத்தான், 'பொத்தான் குண்டு' எனப்படுகிறது.

**button, help :** **உதவிப் பொத்தான் :** பயனாளர் கணினித் திரையில் ஒரு பயன்பாட்டுத் தொகுப்பினை பார்வையிட்டுக் கொண்டிருக்கும்போது, ஏதேனும் விளக்கம் தேவைப் பட்டால் திரையில் தோன்றும் ஒரு பொத்தான் அல்லது ஒரு சின்னத்தின் மீது சுட்டுக் குறியை வைத்துக் சொடுக்கினால் உதவிக் குறிப்புகள் திரையில் விரியும். வைய விரிவலைப் பக்கங்கள், பல்லூடகச் சேவை நிலையங்கள், கணினி வழியாகக் கற்பித்தல் ஆகியவற்றில் பயனாளர் தாமாக அறிந்து கொள்ளும் வகையில் இத்தகைய பொத்தான்கள்/சின்னங்கள் அமைக்கப்படுகின்றன.

**.bw :** **.பிடபிள்யூ :** இணையத்தில் குறிப்பிட்ட தளம் போட்ஸ்வானா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்க தள முகவரியில் இடம் பெறும் பெருங்களப் பெயர்.

**by default :** **உள்ளிருப்பாய்; இயல்பாகவே.**

**bypass :** **மாற்றுவழி; சுருக்கு வழி :** ஒரு மின்சுற்றில் ஒன்று அல்லது பல பொருள்களைச் சுற்றிச் செல்லும் இணைவழி.

**bypass capacitor :** **மாற்றுவழி தாங்கி :** மின்சக்தி வழங்குதலின் போது ஏற்படும் மின்சார இரைச் சலைக் குறைக்க உதவும் தாங்கி.

**Byron Lady Ada Augusta :** **பைரன் அடா அகஸ்டா சீமாட்டி :** லவ்லேஸ் பெருமகள் என்று அழைக்கப்படுபவர். புகழ்பெற்ற ஆங்கிலக் கவிஞர் பைரன் பிரபுவின் மகளே செல்வி பைரன். சார்லஸ் பாபேஜியிடம் அவர் நெருங்கிப் பணியாற்றி, அவரது பகுப்பு எந்திரத்திற்கு ஒரு விளக்க நிரலைக் கொடுத்தார். உலகின் முதல் நிரலர் என்று ஏற்றுக் கொள்ளப்பட்டவர். அடா என்னும் நிரல் மொழி அவரது நினைவாக பெயரிடப்பட்டது.

**byte :** **பைட் ; எண்மி :** 1. கணினியில் ஒரு தனி அலகாக செயல்படும் அடுத்தடுத்துள்ள

இரும இலக்கங்களின் தொகுதி. எண்மியில் எட்டு இரும இலக்கங்கள் இருக்கும். 2. ஒரு தனி எழுத்தைக் குறியீடு செய்யப் பயன்படுத்தப்படும் இரும இலக்க தொகுதி. 3. சில சமயம் B என்றும் சுருக்கமாக அழைக்கப்படுகிறது.

**byte code :** பைட் குறிமுறை.

**byte machine :** பைட் எந்திரம்; **எண்மி இயந்திரம்:** மாறும் எண்மி (Byte) துண்மி (Bit) தொகுதிகளுக்கு நேரடியாக அணுகி இயங்கக்கூடிய ஒரு கணினி.

**byte mode :** பைட் பாங்கு : மையச் செயலகத்திற்கும் வேறு வெளிப்புறச் சாதனத்திற்கும் தகவல் பரிமாற்றத்தைக் குறிப்பிடுவது. இம்முறையில் ஒரு நேரத்தில் ஒரு தனி பைட் மாற்றப்படுகிறது.

**byte order :** பைட் வரிசை; **எண்மி வரிசை :** ஏஐஎக்ஸ் விரிவு எக்ஸ் பலகணியில் துண்மிக்கு வரையறை அல்லது பிக்ஸ்மேப் தகவலுக்காக பணியாளர் வரையறுக்கும் எட்டியல்களின் வரிசை.

**byte oriented protocol :** பைட் சார்ந்த நெறிமுறை : தகவல் தொடர்பு இதில் கட்டுப்பாட்டுக் குறியீடுகள் முழுவதும் பைட்டுகளாகவே இருக்கும். ஐபிஎம் மற்றும் பிற விற்பனையாளர்கள் பயன்படுத்தும் பைசிங்க்ரனஸ் விதிமுறைகளும் இதற்கு எடுத்துக்காட்டு.

**byte specifications :** பைட் வரையறைகள் : வன்பொருள் பற்றிய வரையறைகள். எண் துண்மிகளில் செய்யப்படுகின்றன. சான்றாக 80 மெகா பைட் வட்டு 8 கோடி எழுத்துகளை அடக்குகிறது. ஒரு மெகா பைட் நினைவகம் 18 இலட்சம் எழுத்துகளை சேமிக்கிறது. குறைந்த துல்லிய வரைகலை கோப்பில் 8,000 பைட்டுகள் மட்டுமே அடங்கும். ஆனால், மேற்பட்ட பைட்டுகள் ஒவ்வொரு படத்திற்கும் ஏற்கப்படுகிறது.

**bytes per inch (BPI) :** பிபீஐ : Byte Per Inch என்பதன் குறும்பெயர். ஒரு அங்குல காந்த நாடாவில் கொள்ளக்கூடிய பைட்டுகளின் எண்ணிக்கை. (தகவல்) அடர்த்தியைப் பதிவு செய்யும் பொதுவான அளவுகோல்.

**byte string :** பைட் சரம் : வருடப்பட்ட ஆவணத்திலிருந்து இலக்க மயமாக்கப்பட்ட வடிவம்.

**.bz :** .பிஇஸட் : இணைய தள முகவரியில் பீலைஸ் நாட்டைச் சேர்ந்த தளம் என்பதைக் குறிக்கும் பெருங் களப் பெயர்.

# C

**C : சி :** ஒரு கணினி மொழி- நுண்கணினிகளில் பயன்படுத்த வடிவமைக்கப்பட்ட ஒரு நிரலாக்க மொழியின் முழுப் பெயர். பயன்படுத்த எளிமையாகவும், அதே வேளையில் மிகவும் திறன்மிக்கதாகவும் தொகுப்புகளை உருவாக்கவல்ல மொழி. கீழ்நிலை எந்திரக் கட்டுப்பாடுகளையும், உயர்நிலை சொல் தொடர்களையும் இணைத்து உருவாக்கப்பட்ட இடைநிலை மொழி.

**C ++ : சி++ :** பெல் ஆய்வுக் கூடத்தில் 1980களின் தொடக்கத்தில் ஜேர்ன் ஸ்ட்ரௌஸ்ட்ரப் உருவாக்கிய கணினி மொழி. டென்னிஸ் ரிட்சி உருவாக்கிய சி-மொழியின் விரிவாக்கமாய் அமைந்த மொழி. சி- மொழியின் பொருள்நோக்கிலான நிரலாக்கப் பதிப்பு என இதனைக் கூறலாம். ஆப்பிள் மற்றும் சன் நிறுவனங்கள் உட்பட பல்வேறு கணினி நிறுவனங்களும் இம்மொழியை விழைந் தேற்றுக் கொண்டன.

**C2 : சி2 :** அமெரிக்காவில் தேசிய கணினி பாதுகாப்பு மையம், கணினி அமைப்புகளின் பாதுகாப்பு தொடர்பாக வரையறுத்துள்ள அளவுகோலில் மிகக்குறைந்த அளவிலான பாதுகாப்பு அலகு. பயனாளர், ஒரு நுழைசொல் (password) மூலம் கணினி அமைப்பை அணுக வேண்டும். தரவு பரிமாற்றங்களை தணிக்கை செய்யும் முறையும் இதில் அடங்கும். ஆரஞ்சு புத்தகத்தில் சி2 பாதுகாப்புத் தரமுறை விளக்கப்பட்டுள்ளது. காண்க orange Book.

**C2C : நுகர்வோர் - நுகர்வோர் மின்வணிக நடவடிக்கை :** மின் வணிக (e-commerce) நடவடிக்கைகளில் வாடிக்கையாளர்கள் (customer) அல்லது நுகர்வோர் (consumer) தங்களுக்குள் நடத்திக்கொள்ளும் வணிகப் பரிமாற்றம். தம்மிடமுள்ள ஒரு பழைய பொருளை இணையத்தில் விளம்பரம் செய்து விற்றல் அல்லது ஏல விற்பனை இதில் அடங்கும்.

**.ca : .சிஏ :** இணையத்தில் ஒரு தள முகவரி கனடா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் களப்பெயர்.

**.cab : .கேப் :** ஒரு குறிப்பிட்ட வகை கோப்பின் வகைப் பெயர் (file extention). பல கோப்புகளை இறுக்கிச் சுருக்கி ஒரே கோப்பாக உரு வாக்குவர். பின்

அதனை விரித்து மீண்டும் தனித் தனிக் கோப்புகளைப் பெறுவர். மைக்ரோசாஃப்ட் நிறுவனத்தின் விண்டோஸ் 95/98 போன்ற இயக்க முறைமைத் தொகுப்புகள் இது போன்ற கேப் கோப்பு வடிவிலேயே வழங்கப்படுகின்றன. cab என்பது cabinet என்பதன் சுருக்கம் ஆகும். பல கோப்புகளைப் பாதுகாப்பாக வைத்திருக்கும் பெட்டி என்ற பொருளைக் குறிக்கிறது.



நிலைப்பெட்டி

**cabinet : நிலைப்பெட்டி; கணினிப் பெட்டி; வெளிக் கூடு :** ஒரு கணினியின் இன்றியமையாத பாகங்களான மையச் செயலகம், நினைவகம், புறச் சாதனங்களுக்கான விரிவாக்கச் செருகுவாய்கள் அடங்கிய தாய்ப் பலகை மற்றும் நிலை வட்டகம், நெகிழ் வட்டகம், குறுவட்டகம் இவற்றை உள்ளடக்கியுள்ள கணினிப் பெட்டி.

**cable : வடம் :** ஒரு அமைப்பின் இரண்டு பகுதிகளை ஒன்றாக இணைக்கப் பயன்படும் கம்பிகளின் கற்றை மின்சக்தி அல்லது மின் சமிக்கைகளைக் கொண்டு செல்கிறது.

**cable connector : வடம் இணைப்பி :** ஒரு கணினியையும், வெளிப்புற உறுப்புகளையும் இணைக்கும் வடங்களுக்குப் பயன்படுத்தப்படும் நுழை/துளை இணைப்பிகள்.

**cable matcher : வட இசைவி :** ஒரு சாதனத்தில் இணைக்கப்படும். வடத்தில் சற்று வேறுபாடான கம்பி இணைப்புகள் இருக்கும்போது, அதனைப் பொருத்தமானதாய் மாற்ற உதவும் ஓர் இடையிணைப்புச் சாதனம்.

**cable modem : வட இணக்கி :** சாதாரணத் தொலைபேசிக்

கம்பித் தடத்தில் இணைந்து செயல்படும் இணக்கியிலிருந்து மாறுபட்டது. கோ-ஆக்சியல் கேபிள் எனப்படும் இணையச்சு வடம் வழியாகத் தரவுவை அனுப்பவும் பெறவும் செய்கிற இணக்கி. வினாடிக்கு 500 கிலோ துண்மி(பிட்)கள் வரை தரவு பரிமாற்ற வேகமுள்ளவை வட இணக்கிகள். தற்போது அதிக மாய்ப் பயன்பாட்டில் உள்ள வழக்கமான இணக்கிகளைவிட அதிக வேகத்தில் தகவலை அனுப்ப வல்லவை.

**cable ribbon** : வட நாடா.

**cable television** : வடத் தொலைக்காட்சி.

**cabling diagram** : வட வரைபடம் : கணினி அமைப்பில் அதன் பாகங்களையும் புறச் சாதனங்களையும் இணைக்கும் வடங்களின் பாதைகளைக் காட்டும் திட்ட வரைபடம். கணினியின் வட்டகங்களை அவற்றின் இயக்கிகளோடு இணைக்கும் வட இணைப்புகளைப் புரிந்துகொள்ள இத்தகைய வரைபடங்கள் தேவை.

**cache** : இடைமாற்றகம் : தற்காலிக இருப்பகமாகப் பயன்படும் ஒரு சிறிய அதிவேக நினைவகம்.

**cache card** : இடைமாற்று அட்டை : ஒரு கணினியின் இடைமாற்று நினைவகத்தை (cache memory) அதிகப்படுத்தும் விரிவாக்க அட்டை.

**cache controller** : இடைமாற்றகக் கட்டுப்படுத்தி : இடைமாற்று நினைவகத்திற்கு படி / எழுது இயக்கங்களைக் கட்டுப்படுத்தும் மின்னணு மின்சுற்று. கட்டுப்பாட்டு பொறியானது இன்டெல் 82385 போன்ற ஒரு சிப்புவாகவோ அல்லது தனிச் சாதனமாகவோ இருக்கலாம்.

**cache memory** : இடைமாற்று நினைவகம்; அவசரத்தேவை நினைவகம் : தகவலைத் தற்காலிகமாக சேமித்து வைப்பதற்கான சிறிய அதிவேக நினைவகம். மெதுவாக இயங்கும் மைய நினைவகத்திற்கும், வேகமான மையச் செயலகத்துக்கும் இடையில் வழக்கமாகப் பயன்படுத்தப்படுவது. அழைத்தெழுது அட்டை (scratch pad) என்றும் அழைக்கப்படுகிறது.

**cache settings** : இடைமாற்று அமைப்புகள்.

**caching** : இடைமாற்றல் : விரைவு அணுகலுக்காக இடைமாற்றம் நினைவகத்தில் தரவுகளை வைத்திருத்தல்.

**CAD : காட் :** கணினி வழி வடிவமைப்பு என்று பொருள் படும் Computer - Aided Design என்பதன் குறும்பெயர்.

**CADAM : கேடம் :** Computer - Graphics Augmented Design and Manufacturing என்பதன் குறும் பெயர். கணினி வரைபடங் களைக் குறிப்பது.

**CAD/CAM : கேட்/கேம் :** கணினி வழி வடிவமைப்பு/கணினி உதவும் உற்பத்தி எனப் பொருள் படும். Computer-Aided Design / Computer - Aided Manufacturing என்பதன் குறும்பெயர்.

**CADD : கேட் :** கணினி வடி வமைப்பு மற்றும் வரைவாக்கம் என்று பொருள்படும் Computer Aided Design and Drafting என்பதன் குறும்பெயர். அளவு அமைத்தல், சொல் நுழைவு உள்ளிட்ட, வடிவமைப்புக்கான கூடுதல் வசதிகள் கொண்ட காட் அமைப்புகள்.

**CADD centre :** கேட் மையம்.

**caddy : குறுவட்டுறை :** ஒரு வட்டினை இந்த குழைம (பிளாஸ்டிக்) உறையில் இட்டு குறுவட்டகத்தில் செருகுவர். பழைய கணினிகளில் இருந்த ஒருவகை குறுவட்டகத்தில் இது போன்ற உறையிலிட்ட



குறுவட்டுறை

குறுவட்டினைத்தான் பயன் படுத்த முடியும். இப்போதுள்ள குறுவட்டகங்களில் உறையில் லாத வட்டுகளைப் பயன் படுத்தலாம்.

**CAE : சிஏஇ :** கணினி உதவிடும் பொறியியல் என்று பொருள் படும் Computer - Aided Engineering என்பதன் குறும்பெயர். அடிப்படை பிழை திருத்தத் திற்கான வடிவமைப்பை அலசுகிறது அல்லது உற்பத்தி செய்யப்படக்கூடியதுதானா என் பதன் செயல்பாட்டையும், பொருளாதாரத்தையும் ஆய்வு செய்து தருகிறது. கேட்/கேம் வடிவமைப்பு தரவுத் தளத்தில் இருந்து எடுக்கப்பட்ட

தகவலைப் பயன்படுத்தி ஒருபகுதி, உற்பத்திப்பொருள் அல்லது வடிவமைப்பில் உள்ள அமைப்பினை ஆராயவும் பல் வேறு சூழ்நிலைகளில் அதன் செயல்திறனை மாதிரியாகச் செய்து காட்டவும் பயன் படுகிறது.

**CAFM** : சிஏஎஃப்எம் : Compare to Aided Factory Management என் பதன் குறும்பெயர். கணினி உத விடும் தொழிற்சாலையாகும்.

**CAGE** : பெட்டி : அச்சிட்ட மின் சுற்று அட்டைகள் ஏற்றப்படும் ஒரு பெட்டி.

**CAI** : கேய் : கணினி உதவி யுடன் கற்றுத் தரல் என்று பொருள் படும் Computer-Assisted Instruction என்பதன் குறும்பெயர்.

**CAL** : கால் : கணினி வலுப் படுத்திய கற்றல் என்று பொருள் படும் Computer Augmented Learning என்பதன் குறும்பெயர்.

**calculate** : கணக்கிடு; மதிப்பிடு.

**calculated field** : கணக்கிடப் படும் புலம் : பிற புலங்களைக் கணக்கிட்டு பெறப்பட்ட எண் அல்லது தரவு புலம். பயனாள ரால் கணக்கிடப்படும் புலத்தில் தரவுகளை நுழைக்க முடியாது.

**calculating** : கணக்கிடல் : மதிப் பீடு செய்தல் : சில எண் வகை யிலான உண்மைகளைச் சுருக்கி, புதிய தகவலை ஏற்படுத்தல் அல்லது புதிதாக உருவாக்குதல்.

**calculations** : கணக்கீடுகள் : தரவுகளின்மீது கணித செயல் முறைகள்.

**calculator** : கணிப்பி; கணக்கி : கணக்கீடுகளைச் செயல்படுத்தப் பயன்படுத்தப்படும் எந்திரக் கணித அல்லது மின்னணு எந்திரம். கணினிகளிலிருந்து மாறுபட்ட கணிப்பிகளுக்கு அடிக்கடி மனிதத் தலையீடு தேவைப்படும்.

**calculator mode** : கணிப்பி பாங்கு.

**calculus boolean** : பூலியன் வகையீட்டு நுண்கணிதம்

**calendar** : நாட்காட்டி.

**calendar programme** : நாள் காட்டி நிரல்; காலங்காட்டி நிரல் : மின்னணுக் காலங் காட்டியை ஒத்திருக்கும் ஒரு காலக்குறிப் பேட்டை படைத்துக் காட்டும் ஒரு பயன்பாட்டு நிரல். குறிப் பிட்ட நாளில் குறிப்பிட்ட நேரத்தில் ஆற்றவேண்டிய நமது பணிகளைக் குறித்து வைத்துக் கொள்ளலாம். சில காலங்காட்டி

நிரல்கள் சுவரில் மாட்டும் நாள்காட்டிகளை ஒத்துள்ளன. சிலவற்றில், ஒரு நாளில் ஒவ்வொரு மணி நேரத்திலும் நினைவுக் குறிப்புகளை எழுதி வைத்துக்கொள்ள முடியும். காலங்காட்டியில் குறிப்பிட்டுள்ளபடி நமது பணியை நமக்கு நினைவூட்டவல்ல நிரல் களும் உண்டு. ஒரு கணினிப் பிணையத்தில், ஓர் அலுவல கத்தின் பல்வேறு அலுவலர் களின் காலங்காட்டிகளை ஒருங் கிணைத்துச் செயல்படுத்தும் திறனுள்ள நிரல்களும் உள்ளன.

**calibration : மதிப்பாராய்தல் : அளவீடு செய்தல்** : ஒரு கட்டுப் பாட்டுக் குமிழ் கைப்பிடியில் (knob) ஏற்படுத்தப்பட்டுள்ள, நிர்ணயிக்கப்பட்ட சரியான மதிப்பினையோ அல்லது ஒரு மீட்டரில் ஒவ்வொரு அளவை எண்ணிக்கையில், சரியான மதிப்பு நிர்ணயிக்கப்பட்ட தரத்தையோ ஒத்திட்டுப் பார்த்து அல்லது அளந்து முடிவு செய் யும் செயல்முறை.

**call : அழைப்பு** : 1. கணினி நிரலில் ஒரு குறிப்பிட்ட துணைச் செயல்பாட்டுக்குக் கட்டுப்பாட்டை மாற்றுவது. 2. தரவு தொடர்பில், அழைக் கும் நபர் செய்யும் செயல், அல்லது ஒரு அழைப்பினைச் செய்வதற்கு தேவையான செயல்பாடுகள் அல்லது இரு நிலையங்களுக்கும் இடையிலே உள்ள இணைப்புகளை மிகத் திறமையாகப் பயன்படுத்துவது.

**callable statement : அழைதகு கூற்று.**

**call accepted packet : அழைப் பேற்புப் பொட்டலம்; அழைப் பேற்ற பொதிவு.**

**callback : திரும்ப அழைப்பு** : தொலைபேசி மூலமாக அணுகும் ஒரு கணினியில் பயனாளரை அடையாளங் காணும் ஒரு பாதுகாப்பு முறை. ஒரு பயனாளர் கணினி அமைப்பை தொலைபேசி மூல மாக அணுகுகிறார். அடை யாளப் பெயரையும் நுழை சொல்லையும் தருகிறார். உடனே இணைப்புத் துண்டிக்கப் பட்டுவிடும். கணினி, முன்பே குறித்து வைத்துள்ள அந்தப் பயனாளரின் தொலைபேசி எண்ணுக்குத் தானாகவே தொடர்பு கொண்டு, இணைப்பை ஏற்படுத்திக் கொள்ளும். இந்தப் பாதுகாப்புமுறை, அத்துமீறி நுழையும் ஊடுருவிகளைத் தடுக் கிறது. ஒரு பயனாளரின் நுழை பெயரையும், நுழை சொல்லையும் இன்னொருவர்

திருடினாலும் அதனைப் பயன் படுத்திக் கொள்ள முடியாது.

**callback modem : திரும்ப அழைக்கும் இணக்கி :** திரும்ப அழைப்புப் பாதுகாப்பு முறையில் பயன்படுத்தப்படும் இணக்கி. வெளியிலிருந்து தொலைபேசி மூலம் கணினி அமைப்பை அணுகும்போது பயனாளர் ஒரு மறைக்குறியீட்டைத் தருவார். ஏற்கெனவே உருவாக்கி வைக்கப்பட்டுள்ள அட்டவணையில் மறைக் குறியீடு சரிபார்க்கப்பட்டு அக் குறியீட்டுக்குரிய பயனாளரின் தொலைபேசி எண்ணைத் தானாகவே தொடர்பு கொண்டு இணைப்பை ஏற்படுத்திக் கொள்ளும்.

**callback PPD : மீண்டும் அழைக்கும் பீபீடி :** வருகின்ற அழைப்புகளைக் கண் காணிக்கும் ஒரு சாதனம்.

**call blocking : அழைப்புத் தடுப்பி.**

**call by reference : குறிப்பு மூலம் அழைத்தல் :** நிரலாக்கத்தில், துணை நிரல்கூறில் பயன் படுத்தப்படும் மாறிகளின் நினைவக முகவரிகளையே அளபுருகிகளாக துணை நிரல் கூறலுக்கு (Subroutine) அனுப்பி அழைக்கும் முறை.

**call by value : மதிப்பு மூலம் அழைத்தல் :** நிரலாக்கத்தில் பயன்படுத்தப்படுவது. துணை நிரல்கூறுகளில் முறைகளில் பயன்படுத்தப்படும் அளபுருக் களின் உண்மை மதிப்புகளை அவற்றுக்கு அனுப்பி அழைக் கும் முறை.

**call cleaning : அழைப்பு நிறை வேற்றம்.**

**call connected packet : அழைப்பு இணைத்த பொதிவு.**

**called routine : அழைக்கப்பட்ட நிரல்கூறு :** ஒரு குறிப்பிட்ட பணியை நிறைவேற்றும் ஒரு துணை நிரல். இதை ஒரு அழைப்பு அல்லது நிரலின் கிளைபிரி ஆணையின் மூலம் அணுக முடியும்.

**called terminal : அழைக்கப் பட்ட முனையம்.**

**caller ID : அழைத்தவர் அடை யாளம்.**

**call establishment : அழைப்பு ஏற்படுத்துகை; அழைப்பு நிறுவுகை.**

**calligraphic graphics : எழுத்து வனப்பு வரைபடங்கள் ; வரி வடிவ வரைவியல்:** ஒரு ஒழுங் கில்லாத வகையில் ஒழுங் கில்லாத திசைகளை நோக்கி இழுக்கப்பட்ட கோடுகளைக்

கொண்டு ஒரு உருவத்தை அமைத்தல். இதற்கு அதிகச் செலவாகும். கருவி தேவைப் படுகிறது. ஆனால், இடஞ் சார்ந்த ஒழுங்களவு கொண்ட இதேபோன்ற வரைபடங்களைக் கொண்டதுதான் "கம்பி உருவ" மாதிரிகள். தொடக்கக் காலத் தில் கணினி வரைபடங்களுக்குச் சமமானதாக இவை கருதப்பட்டன.

**calligraphic sequence** : எழுத்து வனப்பு வரிசைமுறை; வரி வடிவ வரிசைமுறை.

**calling programme** : அழைக்கும் நிரல் : வேறொரு நிரலைத் தொடங்கி வைக்கும் நிரல்.

**calling rate** : அழைப்பு வீதம்.

**calling sequence** : அழைக்கும் வரிசை : கொடுக்கப்பட்ட ஒரு துணை நிரல்கூறை அழைப்பத ற்குத் தேவையான தரவுகள் மற்றும் குறிப்பிட்ட ஆணைத் தொகுதிகள்.

**calling terminal** : அழைக்கும் முனையம்.

**CALL instruction** : அழைப்பு ஆணை : ஆணைகளின் புதிய வரிசையை இயக்க திசை மாற் றிய பிறகு, நிரலில் தொடக்க வரிசைக்குத் திரும்பி வருவதை அனுமதிக்கும் ஆணை.

**calloc** : சிஅலாக் : 'சி' மொழியில் உள்ள ஒரு பணி. எம்அலாக், (malloc) ரிஅலாக் (realloc) போன்றது.

**call request packet** : அழைப்புக் கோருவோர் பொதிவு.

**call screening** : அழைப்பு வடி கட்டல்.

**call setup** : அழைப்பு அமைப்பு முறை.

**CALS** : கால்ஸ் : கணினிவழி ஈட்டுதல் மற்றும் தகவுப் பொருத்த உதவி எனப் பொருள் படும் Computer Aided Acquisition Logistics Support என்ற சொல் தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். வணிகமுறை விற் பனையாளர்களுடன் மின்னணு முறை தகவுப் பரிமாற்றத்துக் கான பாதுகாப்புத் தரநிர்ணயத் துறையாகும்.

**CAM** : கேம் : கணினி உதவிடும் உற்பத்தி எனப் பொருள்படும் Computer-Aided Manufacturing என்பதன் குறும்பெயர்.

**cambridge ring** : கேம்ப்ரிட்ஜ் வளையம் : இங்கிலாந்தின் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகம் வடிவமைத்த அதிவேக குறும் பரப்புப் பிணையம் (LAN).

**camera - ready** : அச்சுக்குத் தயாராய் : நூல் அச்சுத்துறையில் கணினியின் பயன்பாடு அதிகரித்துள்ளது. நூலில் இடம் பெற வேண்டிய விவரங்களை

கணினியில் தட்டச்சு செய்து தாளில் அச்செடுப்பர். பிறகு விவரங்களையும் இடை யிடையே இடம்பெறும் படங் களையும் வெட்டி ஓர் அட்டை யில் ஒட்டுவர். அச்சில் வர வேண்டிய பக்கங்களை இவ் வாறு அட்டைகளில் ஒட்டி வடிவமைப்பர். பிறகு அதனை ஒளிப்படக்கருவி மூலம் ஒளிப் பட ஃபிலிமாக படம் பிடிப்பர். அந்த ஃபிலிமை வைத்து அச்சு வார்ப்பினை உருவாக்குவர். அச்சு வார்ப்பினைக் கொண்டு நூல் பக்கங்களை அச்சிடுவர். ஆனால், இப்போதெல்லாம் அட்டைகளில் வெட்டி ஒட்டிப் பக்கங்களை வடிவமைக்க வேண்டிய தேவையில்லை. கணினித் திரையிலேயே வெட்டி ஒட்டி பக்கங்களை வடிவமைக்க வல்ல மென்பொருள் தொகுப்பு கள் பயன்பாட்டில் உள்ளன. அச்சுக்கு தயாரான பக்கங்களை உருவாக்க முடியும் என அவை விளம்பரப்படுத்தப்படுகின்றன.

**camera-ready artwork** : **ஒளிப் படக் கருவிக்குத் தயாரான கலை வேலை** : வணிக அச்சகப் பகுதி யில் ஒளிப்படம் எடுக்கத் தயா ராக உள்ள அச்சிடும் பொருள். ஒருமுறை ஒளிப்படம் எடுத்த பின் அச்சுத் தகட்டினைச் செய்யத் தயாராக உள்ளது.

**campus interview** : **வளாக நேர் முகத் தேர்வு.**

**campuswide information system** : **வளாகத் தகவல் முறைமை** : கணினிப் பிணையங்கள் மூல மாக ஒரு கல்லூரி அல்லது பல் கலைக் கழக வளாகத்துக்குள் தகவல் மற்றும் பிறசேவைகளை வழங்கும் முறை. இத்தகவல் அமைப்பு முறையில் மாணவர் கள் மற்றும் ஆசிரியர்களின் குறிப்புகள், வளாகத்தில் நடை பெறும் நிகழ்ச்சிகளின் நிரல்கள் அனைத்தும் இருக்கும். தரவுத் தளங்களை அணுகும் வசதியும் இருக்கும்.

**Canadian Information Processing Society; CIPS** : **கனடாவின் தக வல் செயலாக்கச் சங்கம்; சிப்ஸ்** : தகவல் செயலாக்கத் துறையில் பொதுவான ஆர்வமுள்ள கனடாக்காரர்களை ஒன்று திரட்ட ஏற்படுத்தப்பட்ட அமைப்பு. தங்களது வாழ்க் கையை கணினி தகவல் செய லாக்கத் துறைகளில் அமைத்துக் கொண்டுள்ள 400-க்கும் மேற் பட்ட அறிவியலாளர்கள், வணிகர்களை உறுப்பினர் களாகக் கொண்டது.

**cancel** : **ரத்து ; விடு ; நீக்கு** : அப்போது தட்டச்சு செய்த வரியை நீக்குவதற்கான விசைப் பலகைச் செயல்பாடு.

**cancelbot** : தவிர்க்கும் எந்திரன் : இணையத்தில் செய்திக் குழுக்களில் வெளியிடப்படுவதற்காக அடுக்கப்பட்ட கட்டுரைகளில் ஒவ்வாதவற்றைக் கண்டறிந்து நீக்குகின்ற ஒரு நிரல். பலருக்கும் அனுப்பப்படுவதற்கு முன்பாகக் கண்டறிந்து நீக்கும். நீக்கப்படுவதற்கான அடிப்படை வரையறையை அந்த நிரலை உருவாக்கியவரே நிர்ணயம் செய்கிறார். எனினும் பயன்பாட்டில் உள்ள பெரும்பாலான தவிர்க்கும் எந்திரன்கள், பலநூறு செய்திக் குழுக்களில் இடம் பெறும் எண்ணற்ற உதவாக் குப்பைச் செய்திக் குறிப்புகளைக் கண்டறிந்து நீக்கி விடுகின்றன.

**cancel button** : தவிர் பொத்தான்.

**cancel character** : தவிர் எழுத்துரு.

**cancel message** : தவிர்க்கும் செய்தி: யூஸ்நெட் எனப்படும் செய்திக் குழுக்களுக்கான வழங்கன் கணினிகளில் சேமித்து வைக்கப்பட்டுள்ள சில கட்டுரைகளை வெளியிடாமல் தவிர்க்கவும், அல்லது கணினியில் இருந்தே நீக்கிவிடவும் அக்கணினிக்கு அனுப்பப்படும் ஒரு செய்தி.

**candidate key** : அடையாளத் திறவி : ஓர் அட்டவணையில் ஒரு குறிப்பிட்ட கிடக்கையை (Row) தனித்து அடையாளங் காணப் பயன்படும் புலம். கூட்டு முதன்மைத் திறவியின் (Compound Primary Key) ஓர் அங்கமாக இருக்கும்.

**candidates** : வேட்பாளர்கள் : ஒரு திட்டத்தின் தொடக்க வடிவமைப்பு நிலையில் வழங்கப்படும் மாற்றுத் திட்டங்கள்.

**canned programme** : தயார் நிலை நிரல் : ஒரு சிக்கலுக்கு நிலையான தீர்வை வழங்கும் நிரல் தொகுதி. கணினி உற்பத்தியாளர்கள் மற்றும் மென்பொருள் உருவாக்குபவர்கள் பயன்படுத்தத் தயாரான நிலையில் பயனாளருக்கு அளிக்கும் இந்த நிரல்களை தனி நபர்களும், பல வணிக நிறுவனங்களும் பயன்படுத்த ஏற்றதாக உள்ளது. Custom Software-க்கு எதிர்ச் சொல்.

**canned routine** : அடைக்கப்பட்ட நிரல் கூறு : ஒரு குறிப்பிட்ட கணினியில் பயன்படுத்துவதற்காக முன்னதாக எழுதப்பட்ட நிரல். ஒரு குறிப்பிட்ட செயலாக்கப் பணியைச் செய்யும் துணை நிரல்கூறு (சப்ரொட்டீன்).

**canned software** : தயார் நிலை மென்பொருள் : உடனே பயன்படுத்தத் தயாரான நிலையில்

யன்படுத்துவோருக்கோ அல்
து வேறொரு விற்பனை
ாளருக்கோ கணினி உற்பத்தி
ாளர்கள் தயாரித்த மென்
பாருள். பல வணிகர்கள் மற்
ும் தனி நபர்கள் பயன்படுத்
ம் அளவுக்குப் பொதுவானது.
ustom Software-க்கு மாறானது.

**non engine : கேனன் எந்திரம் :** கனன் ஒளிப்பட நகலெடுக்கும் நவியில் பயன்படும் உள் எந்
ர அமைப்பு. பல லேசர் அச்சுப் பாறிகளில் பயன்படுத்தப் டுகிறது.

**nonical form : விதிமுறை ாதிரிப் படிவம் :** கணிதத்தி ும், நிரல்வரைவிலும் ஒரு வளிப்பாடு அல்லது ட்டுரைத் தொடருக்கான ாதிரிப் படிவம்.

**nonical synthesis : விதிமுறை நப்பாய்வு :** மீண்டும் வரும் வரப் பொருள்கள் இல்லாமல் ந தரவு தள மாதிரியை டிவமைக்கும் செயல்முறை. திமுறை முன் மாதிரி அல்லது ட்டமானது எத்தகைய வன் ாருள் அல்லது மென்பொரு ாக இருந்தாலும் தரவு யலாக்கம் செய்யும்.

**'t undo : செய்தது தவிர்க்க லாது.**

**vas : வரைதிரை.**

**P : கேப் :** கணினி வழி பதிப்பித்தல் எனப் பொருள் படும் Computer - Aided Publishing என்பதன் குறும்பெயர்.

**capability : திறன்; ஆற்றல்.**

**capability list : திறன் பட்டியல் :** ஒரு குறிப்பிட்ட நேரத்தில் செய்யப்படும் விவரக் குறிப்புப் பட்டியலை வரிசைப்படுத்துதல்.

**capacitance : மின்தேக்கு திறன் :** மின் சக்தியைச் சேமிக்கும் திறனின் அளவு. Farad என்பதை அடிப்படை அளவுகோலாகக் கொண்டது.

**capacitor : மின்தேக்கி; மின்னுறைக் கலன் :** நிலையான



மின்னுரைக் கலன்

மின்சக்தியை தேக்கி வைக்கும் மின்சாதனம். முறையாகக் கிளப்பி விட்டால் மின்சக்தியை வெளியிடும். கணினி சேமிப்பகத்தில் துண்மிகளை எழுதும் முறையும், படிக்கும் முறையும் இதுதான்.

**capacitor storage : மின்தேக்கி சேமிப்பகம்; மின்னுறைகலன் சேமிப்பகம் :** மின்தேக்கிகளைப் பயன்படுத்தி தரவுகளை சேமிக்கும் ஒரு சேமிப்புச் சாதனம்.

**capacity : கொள்திறன் :** ஒரு சேமிப்பகச் சாதனத்தில் எவ்வளவு தரவுகளைச் சேமித்து வைக்க முடியும் என்பது கணினிச் சொற்கள், பைட்டுகள், எழுத்துகள் போன்ற பல வகைகளில் கூறப்படுகிறது.

**capacity management : திறன் நிர்வாகம் :** தரவு செயலாக்கப் பணிகளின் அளவு, வன்பொருள் -மென்பொருள், பயன்பாடு மற்றும் பிற கணினி அமைப்புத் தேவைகளைக் கட்டுப்படுத்தி, வருவது வரைக்கும் திட்டமிடல் மற்றும் கட்டுப்பாட்டு முறைகளைப் பயன்படுத்தல்.

**capacity, memory : நினைவகக் கொள்திறன்.**

**cap height : தலைப் பெழுத்து உயரம் :** கீழ் வரியிலிருந்து தலைப்பெழுத்தின் உயரம்.

**caps : தலைப்பெழுத்துகள்; பெரிய எழுத்து மேல் எழுத்துகள் :** All caps என்றால் எல்லா எழுத்துகளும் தலைப்பெழுத்துகளாக வேண்டும். Initial caps என்றால் ஒவ்வொரு முக்கிய சொல்லிலும் முதல் எழுத்து தலைப்பெழுத்தாக்கப்பட வேண்டும்.

**capstan : கேப்ஸ்டன்; இழுவிசைப் பொறி :** ஒரு நிலையான வேகத்தில் பதிவு செய்யும் முனையை, நாடாவின் குறுக்காக இழுக்கும் காந்த நாடா இயக்கியின் சுழலும் சாதனம்.




இழுவிசைப் பொறி

**caps (key)** : தலைப்பெழுத்து (விசை); மேலெழுத்து (விசை).

**caps lock** : தலைப்பெழுத்துப் பூட்டு.

**Caps Lock Key** : தலைப் பெழுத்து பூட்டு விசை : *கணினி விசைப் பலகையில் உள்ள ஒரு விசை எழுத்துகளில் தலைப்பு எழுத்தை மட்டும் அணுக அனு மதிக்கும் விசை. ''மாற்று விசை''யுடன் இதை ஒப்பிடுக. இது எழுத்துகள் மட்டுமல்லாது இரண்டாவது பணியையும் அனுமதிக்கும் தலைப்பெழுத்து பூட்டப்பட்டபின் 'மாற்று'* (Shift) *விசையை அழுத்தினால் சில கணினிகளில் மீண்டும் பழைய நிலையே வந்துவிடும்.*

**caption** : தலைப்பு.

**capture** : பதிவு செய் : *கணினி யிலோ அல்லது ஏதாவது ஒரு வடிவிலோ தரவுகளைப் பதிவு செய்தல்.*

**capture card and display card** : பதிவு அட்டை மற்றும் காட்சி அட்டை.

**capture, data** : தரவுக் கவர்வு.

**CAR** : கார் : *கணினி வழி தரவு பெறுதல் என்று பொருள்படும்* Computer Assisted Retrieval *என்ப தன் குறும்பெயர். காகிதம் மற்றும் நுண்வடிவத்தில் சேமிக் கப்படும் பாகங்கள், ஆவணங் கள் அல்லது பதிவுகளைத் தேடிக் கண்டுபிடிக்க கணினி பயன்படுத்தும் ஏற்பாடு. கணினியானது அந்தப் பொருள் எங்கிருக்கிறது என்பதைக் கண்டுபிடித்தபின், கணினியைப் பயன்படுத்துபவர் தனது கைகளால் அதை எடுத்துக் கொள்வார்.* LISP*இல் பயன் படுவது.*

**carbon ribbon** : படிவுத்தாள் பட்டை : *நன்றாகத் தெரியக் கூடிய துல்லியமான எழுத்து களை உருவாக்கித்தரும், அச்சுப் பொறிகளில் பயன்படுத்தப் படும், படிவுத்தாள் இழை பட்டை.*

**card cage** : அட்டைப் பெட்டி : *அச்சிடப்பட்ட மின்சுற்று அட்டைகளைப் பொருத்து கின்ற கணினியின் உள்ளே இருக்கும் ஒரு பெட்டி.*

**card code** : அட்டைக் குறியீடு : *ஒரு துளையிடப்பட்ட அட் டையில் எழுத்துகளைக் குறிப் பிடும் துளைகளின் தொகுதி*

**card column** : அட்டைப் நெடுக்கை : *ஒரு துளையிட்ட அட்டையில் துளையிடும்*

இடங்களின் செங்குத்தான வரிகளில் ஒன்று.

**card** : அட்டை : *(1) அச்சிடப்பட்ட மின்சுற்று அட்டை. (2) 18.7 செ.மீ-க்கு 8.3 செ.மீ அளவுகளில் செங்குத்தான வரிசையில் துளைகளைப் பதிவு செய்வதன் மூலம் தரவுகளைக் குறிப்பிடும் ஒரு சேமிப்பு ஊடகம்.*



அட்டை
துளையிட்ட அட்டை (மேலே)
அச்சிட்ட மின்சுற்று அட்டை (கீழே)

**card deck** : அட்டைத் தொகுதி : துளையிட்ட அட்டைகளின் ஒரு தொகுதி.

**card face** : அட்டை முகம் : ஒரு துளையிட்ட அட்டையின் அச்சிடப்பட்ட பக்கம்.

**card feed** : அட்டை செலுத்தி; அட்டை ஊட்டி: துளையிட்ட அட்டைகளை எந்திரத்தில் ஒவ்வொன்றாக நகர்த்தும் சாதனம்.

**card field** : அட்டைப் புலம் : ஒரு தரவு அலகுக்கு அளிக்கப்படும் தொடர்ச்சியான துளையிட்ட அட்டைகள்; குறிப்பிட்ட எண்.

**card format** : அட்டை வடிவமைவு.

**card frame** : அட்டைச் சட்டம் : ஒரு கணினி அமைப்பின் மின்சுற்று அட்டைகளை ஒரு இடத்தில் வைத்துப் பிடிக்கும் ஒரு பகுதி.

**card hopper** : அட்டை தள்ளி : துளையிட்ட அட்டைகளை,

அட்டையைக் கையாளும் கருவியின் நகர்த்தும் பாகத்துக்குத் தள்ளிவிடும் சாதனம்.

**card image :** அட்டைப் படிமம் : ஒரு அட்டையில் துளையிடப்பட்ட, சேமிக்கப்பட்டுள்ள பொருள்.

**cardinality :** வகைபடு தன்மை : ஒரு இனக்குழுவானது எத்தனை முறை வரலாம், இனக்குழு உறவுகளை எத்தனை தடவை பயன்படுத்தலாம் என்று, பொருள் நோக்கு நிரலாக்கத்தில் பயன்படுவது.

**cardinal number :** வகை எண் : ஒரு தொகுதியில் எத்தனை வகையறாக்கள் உள்ளன என்பதைக் குறிப்பிடும் எண். சான்றாக, "21" என்ற எண்ணில் 10 எழுத்துகள் என்றால் 21 கார்டினல் 10 ஆர்டினல் ஆகும்.

**card job control :** வேலைக் கட்டுப்பாட்டு அட்டை.

**card loader :** அட்டையேற்றி.

**card punch :** அட்டை துளையிடும் கருவி : கணினியின் நினைவகத்தில் இருந்து தகவலைப் பெற்று, அதை அட்டைகளில் துளையிட்டுத் தரும் வெளியீட்டுச் சாதனம்.

**card punch buffer :** அட்டைத் துளை இடையகம்.

**card punching :** அட்டை துளையிடல்.

**card reader :** அட்டை படிப்பி : 1. இது ஓர் உள்ளீட்டுச் சாதனம். பெரும்பாலும் ஒரு நபரை அடையாளம் காணப் பயன்படுவது. ஒரு குழைம (பிளாஸ்டிக்) அட்டையில் காந்த முறையில் இரு தடங்களில் எழுதப்பட்ட தகவலைப் படித்துச் சரிபார்க்கும் கருவி. ஒரு தொழிலாளியின் அடையாள அட்டையாக இருக்கலாம் அல்லது பற்று அட்டை (credit card)யாக இருக்கலாம். 2. கணினி செயல்படாத நேரத்தில், அட்டைகளில் துளையிடும் முறையில் எழுதப்பட்ட தகவலைப் படித்தறியும் கருவி. இப்படிச் செய்வதன் மூலம் மையச் செயலியின் நேரம் பெருமளவு மிச்சமாகும். கணினி செயல்படும்போது, தகவலை உள்ளீடு செய்யும் முறையைக் காட்டிலும், மையச் செயலியிடம் குறைந்த நேரமே வேலை வாங்கப்படும்.

**card reproducer :** அட்டை மறு தயாரிப்புப் பொறி : ஒரு அட்டையைப் போன்றே வேறொரு அட்டையில் துளையிட்டுத் தரும் சாதனம்.

**card row :** அட்டை கிடக்கை : ஒரு துளையிட்ட அட்டையின்

துளையிடும் நிலையில் உள்ள கிடைமட்ட வரிசைகளில் ஒன்று.

**card sorting** : அட்டை பிரித்தல்; அட்டை வரிசையாக்கம் : தனிப் பட்ட அட்டைகளில் போடப் பட்டுள்ள துளைகளுக்கேற்ப துளையிட்ட அட்டைகளைப் பிரித்து வைத்தல்.

**card stacker** : அட்டை அடுக்கி : துளையிட்ட அட்டை தரவு செயலாக்க எந்திரத்தைக் கடந்த பின் அட்டைகளைச் சேர்த்து வைக்கும் கொள்கலம்.

**card-to-disk converter** : அட்டை யிலிருந்து வட்டுக்கு மாற்றும் பொறி : துளையிட்ட அட்டை களிலிருந்து வட்டு சேமிப் பகத்துக்கு தரவுகளை நேரடியாக மாற்றித் தரும் சாதனம்.

**card-to-tape converter** : அட்டை யிலிருந்து நாடாவுக்கு மாற்றும் பொறி : துளையிட்ட அட்டை களிலிருந்து காந்த அல்லது காகித நாடாவுக்கு தரவுகளை நேரடியாக மாற்றும் சாதனம்.

**card verification** : அட்டை சோதித்தல்; அட்டை சரிபார்ப்பு : விசைத் துளையிடலின் துல்லியத்தை சோதிக்கும் செயல்முறை. அதே தரவு மூலத்தைப் படித்துச் சோதிக்கும் பொறியின் விசைகளை அழுத்தி, முதலில் துளை யிட்டதை இரண்டாவதாக ஒருவர் சோதிப்பார். ஏற்கனவே துளையிடப்பட்ட அட்டை களின் துளையை விசையை அழுத்தி, சோதித்து அவை சரியாக இல்லையென்றால் பிழை என்பதைக் காட்டும்.

**card verifier** : அட்டை சோதிப்பி; அட்டை சரிபார்ப்பி.

**caret** : கேரட் ; முகடு : *1.* ஒரு எண்ணின் மூலமானது எந்த இடத்தில் இருக்கிறது என்பதைக் காட்டும் குறியீடு. 2. எங்கே செய்தியை நுழைக்க வேண்டும் என்பதைக் குறிப்பிட திரையில் அடையாளச் சுட்டி யாகப் பயன்படுத்தப்படும் அடையாளம்.

**carpal tunnel syndrome** : கார்பல் சுரங்க உணர்வு : மணிக்கட் டைச் சுற்றிலும் உள்ள திசுக் களில், சுருங்கினாலோ அல்லது தழும்பு ஏற்பட்டாலோ முக்கிய நரம்பு சுருக்கப்படுதல். இது கைகளுக்கு பெரும் சேதம் ஏற்படுத்தக் கூடியது.

**carriage** : நகர்த்தி ; ஏந்தி : ஒரு தட்டச்சுப் பொறி அல்லது அச்சுப் பொறியில் இடங்களை நகர்த்தவோ அல்லது காகிதப்

படிவங்களை வெளியேற்றவோ செய்யும் கட்டுப்பாட்டு எந்திர அமைப்பு.

**carriage, automatic** : தானியங்கி நகர்த்தி.

**carriage control key** : நகர்த்தி கட்டுப்பாட்டு விசை : அச்சுப் பொறியின் நகர்த்தியை தொடக்கத்திலோ அல்லது அது இருக்க வேண்டிய இடத்திலோ மீண்டும் கொண்டுவரும் பொத்தான்.

**carriage control tape** : நகர்த்தி கட்டுப்பாட்டு நாடா : வரி அச்சுப் பொறியில் வரி நகர்த்து தலைக் கட்டுப்படுத்தும் துளையிட்ட நாடா.

**carriage motor** : நகர்த்தி விசைப் பொறி.

**carriage register** : நகர்த்திப் பதிவகம்.

**carriage return (CR)** : நகர்த்தியைக் கொண்டுவரல் : எழுத்து அச்சிடும் பொறியில் இடது மூலையில் அடுத்த எழுத்தை அச்சிடச் செய்யும் செயல் முறை.

**carrier** : சுமப்பி; தாங்கி : சமிக்கை அனுப்பப்படுவதற்கு ஒரு எல்லை அல்லது உறையாக அமைந்த மின்காந்த அலை வரிசை. ஒரு கம்பி அல்லது குழாய் மூலம் ஒரே நேரத்தில் பல சமிக்கைகளை இது கொண்டு செல்ல முடியும். சான்றாக ஒரே சுமப்பியில் குரல், தரவு மற்றும் ஒளிக் காட்சி சமிக்கைகள் ஒரே நேரத்தில் பயணம் செய்ய முடியும். ஏனென்றால், ஒவ்வொன்றும் மாறுபட்ட அலைவரிசை இடைவெளிகளில் செல்பவை.

**carrier based** : சுமப்பி சார்ந்த : அனுப்பப்படும் தரவுகளை வைத்துக் கொண்டிருப்பதற்கு ஒரு நிலையான அலைவரிசையை (சுமப்பியை) உருவாக்கி அனுப்பும் அமைப்பு.

**carrier frequence** : சுமப்பி அலை வரிசை : இரும எண் (பைனரி) தரவுக் குறியீடு செய்ய ஏற்றவாறு அமைக்க, தரவு தொடர்புச் சாதனங்களின் இடையே பரிமாறப்படும் இடைவிடாத சமிக்கை.

**Carrier Sence Multiple Access (CSMA)** : சுமப்பி உணர் பன்முக அணுகல்.

**carrier signal** : சுமப்பி சமிக்கை : செய்தித் தரவு தொடர்புகளில் தரவு சமிக்கைகளை மாற்றி அனுப்புவதற்காக ஊடகத்தில் ஏற்படுத்தப்படும் சமிக்கை.

**carrier system** : ஒலியேந்தித் தரவு தொடர்பு முறை; சுமப்பி

முறைமை : பல்வேறு அலை வரிசைகளை, செய்திகளைச் சுமந்து செல்லும் ஊடகமாகப் பயன்படுத்தி, ஒரே பாதையில் பல்வேறு தடங்களில் பல்வேறு செய்திகளை ஒரே நேரத்தில் அனுப்பிவைக்கின்ற தரவு தொடர்பு முறை. ஒவ்வொரு செய்தி அலையும் ஒரு குறிப் பிட்ட அதிர்வெண்ணுள்ள மின் காந்த அலையின் மேல் பண் பேற்றம் (modulation) செய்து ஒரே அலைக்கற்றையாக மறு முனைக்கு அனுப்பி வைக்கப் படும். அங்கு, அதே அதிர் வெண் அடிப்படையில் பண் பிறக்கம் (demodulation) செய்யப் பட்டு மூலத் தரவு பெறப்படும்.

**carrier working** : சுமப்பி செயல் பாடு : வீச்சு மாறுவதன் மூலம் ஒரு பேச்சை அதன் தொடக்க ஒலி அலைவரிசையிலிருந்து (300 முதல் 3,400 ஹெர்ட்ஸ்) உயர் ''சுமப்பி'' அலை வரிசைக்கு மாற்ற முடியும். உல கின் பெரும்பாலான தொலை தூர தொலைபேசி அமைப்பு கள் 12 அலைவரிசை குழு வையே பயன்படுத்துகின்றன. 12 குரல் அலைவரிசைகளாக மாற்றப்பட்டு 48 கிலோ ஹெர்ட்ஸ் அலைக்கற்றையில் அடங்குகின்றது. இவை 60-108 கிலோஹெர்ட்ஸ்வரை செயல் படுபவை.

**carry** : ஏந்தி; வழிவி; மிகுதி : 1. ஒரு நெடுக்கையில் உள்ள இரண்டு இலக்கங்களின் கூட்டல் தொகை அடிப்படை எண்ணைவிடப் பெரியதாகவோ அல்லது சமமாகவோ இருக்கும் போது ஏற்படும் சிறப்பு நிலையைக் கொண்டுவரும் செயல்முறை. 2. மிகுந்திடும் இலக்கம் அல்லது அடுத்த நெடுக்கையில் சேர்க்கப்படும் இலக்கம்.

**carry bit** : மீந்திடும் துண்மி : இரும எண்களின் கூட்டல் 0+0=1, 0+1=1, 1+0=1; 1+1=10 என்று அமையும். இத்தகைய இரும எண் கூட்டலைச் செய் யும் மின்சுற்றுகள் தொடர்ச்சி யாக அமைக்கப்பட்டிருக்கும். ஒவ்வொரு மின்சுற்றும் இரண்டு உள்ளீடுகளை ஏற்கும். 0 அல்லது 1 என்பதை விடை யாகத் தரும். இரண்டு உள்ளீடு களும் 1 ஆக இருப்பின் வெளி யீடு 0 ஆக இருக்கும். மீதமுள்ள 1, அடுத்த மின்சுற்றின் உள் ளீடாக அமையும். இவ்வாறு இரும எண் கூட்டலில் இரண்டு 1-களைக் கூட்டும்போது பெறப் படும் 1,0-வில், 0 விடையாக

வும், 1 மீந்திடும் துண்மியாக வும் அமைகிறது.

```
   1 1
   1 0 1 0
   0 1 1 1
 ---------
 1 0 0 0 1
 ---------
```

மேற்கண்ட கூட்டலில் மூன்று முறை 1 மீதமாகிறது. முதல் இருமுறை அடுத்த கூட்டலுடன் சேர்க்கப்படுகிறது. கடைசியாக மீந்திடும் 1 விடையின் இடப்புறத் துண்மியா அமர்ந்து கொள்கிறது.

**carry digit : மிகுதி இலக்கம் :** கூட்டலின்போது ஒரு நெடுக்கையிலிருந்து அடுத் ததற்குக் கொண்டு செல்லப் படும் இலக்கம். பதின்ம முறையில் 5 + 7-ஐக் கூட்டும்போது கூட்டுத் தொகை 2 ஆகவும் மிகுந் திடும் இலக்கம் 1 ஆகவும் வரும். இரும எண் முறை யில் 1+1+0+1-க்கு கூட்டுத் தொகை 1 மிகுந்திடும் இலக்கம் 1.

**carry flag : மிகுதி ஒட்டி :** மையச் செயலகத்தின் ஒட்டி பதிவகத்தில் உள்ள துண்மிகளில் ஒன்று. பிழை நிலையைக் குறிப்பிட டாஸ் (DOS) பணிகளில் பயன் படுத்தப்படுகிறது.

**carry register : மிகுதிப் பதிவகம்; வழிவிப் பதிவகம் :** சுழற்சி அல்லது மிகுந்திடும் சூழ்நிலையில் சேர்ப்பியில் விரி வாகச் செயல்படும் ஒரு துண்மி யின் பதிவு. இணைப்புப் பதி வகம் என்றும் அழைக்கப்படும்.

**cartesian coordinates : கார்ட்டீ சியன் ஆயத்தொலைவுப்புள்ளி கள் :** ஒரு தளத்தில் செங்குத்தாக வெட்டிக் கொள்ளும் இரு அச்சு கள் (இரு பரிமாணம்), அல்லது




கார்ட்டீசியன் ஆயத்தொலைவுப் புள்ளிகள்

வெளியில் செங்குத்தாக வெட்டிக் கொள்ளும் மூன்று அச்சுகள் - இவற்றை அடிப் படையாகக் கொண்டு குறிக்கப் படும் ஒரு புள்ளி. இவற்றில் கிடைமட்ட அச்சு x எனவும், செங்குத்து அச்சு y எனவும் இவை இரண்டுக்கும் 90 டிகிரி உயரவாக்கில் அமையும் அச்சு z என்றும் அழைக்கப்படுகின்றன. வீட்டில் அறையின் ஒரு மூலை யில் இது போன்ற மூன்று அச்சு களின் அமைப்பைக் காணலாம். தரையில் உள்ள ஒரு புள்ளியை x,y ஆகிய இரு அச்சுகளின் ஆயத்தொலைவு அடிப்படை யில் குறிப்பிடலாம். தரைக்கு மேல் மேல்தளம் வரையுள்ள எந்தவொரு புள்ளியையும் மூன்று அச்சுகளின் ஆயத் தொலைவுகளாகக் குறிப்பிட வேண்டும். 17ஆம் நூற்றாண்டில் இந்த வரைவியல் கணித முறையை ஃபிரெஞ்சுக் கணித மேதை டகார்ட்டீஸ் (Descartes) அறிமுகப்படுத்தினார்.

**Cartesian coordinate system : கார்டீசியன் ஆயத்தொலை அமைப்பு** : ஃபிரெஞ்சு கணித வியலார் ரெனி டெஸ்கார்ட் கார்டீசியன் பெயரில் ஏற் படுத்தப்பட்ட அமைப்பு. இதன் படி, தளத்தில் உள்ள ஒரு புள்ளியின் தூரம் இரண்டு நேர் கோடுகளில் இருந்து கணக்கிடப் படுகிறது. அவை அச்சுகள் என்று அழைக்கப்படுகின்றன. ஒரு அச்சிற்கான தூரமானது மற்றொரு அச்சிற்கு இணை யாகக் கணக்கிடப்படுகிறது. புள்ளியுடன் தொடர்புள்ள இந்த எண்கள் அந்த புள்ளியின் ஆயத் தொலைவுகள் எனப்படும். இது செவ்வக ஆயத்தொலைவு அமைப்பு என்றும் அழைக்கப் படுகிறது.

**cartridge : நாடா பேழை; பேழை; பொதியுறை** : ரோமில் நிரந்தர மாகச் சேமிக்கப்படும் மென் பொருளைக் கொண்டுள்ள தனிப்பேழை. வசதியான, நீண்ட காலம் வரக்கூடிய, பயன் படுத்த எளிதான, ஓசையற்ற, அழிக்க முடியாத, கணினியில் ஒரு சிறப்பு இடத்தில் நுழைக்கப்படும் பேழை. வட்டிலோ, நாடாவிலோ படி எடுக்க முடியாது. Solid state cartridge என்றும் Rom Cartridge என்றும் அழைக்கப்படுகிறது.

**cartridge disk unit : பொதியுறை வட்டகம்** : சேமிப்பகச் சாதனம். இதில் இரு வகை வட்டுகள் உள்ளன. ஒன்று நிலையாக நிற்பது. மற்றொன்று மீண்டும் பயன்படக்கூடியது.

**cartridge drive** : பொதியுறை இயக்ககம்; நாடா பேழை இயக்ககம்.

**cartridge font** : பொதியுறை எழுத்துரு : அச்சுப்பொறியில் நேரடியாகப் பொருந்தும் பொதியுறை நாடாவில் உள்ள ஒரு எழுத்துரு. லேசர் அச்சுப் பொறிகளில் இவை அதிகமாக பயன்படுத்தப்படுகின்றன. எச்.பீ லேசர் ஜெட் குடும்ப அச்சுப் பொறிகளில் பயன்படுத்தப் பட்டாலும் சில புள்ளியணி அச்சுப்பொறிகளிலும் இவை பயன்படுத்தப்படுகின்றன.

**cartoon sounds** : கார்ட்டூன் ஒலிகள்; கேலிப்பட ஒலிகள்.

**cartridge tape** : பொதியுறை நாடா : இது 8 மி.மீ அகலமுள்ள ஒரு காந்த நாடா. 12x12 செ.மீ அளவுள்ள குழைம (பிளாஸ்டிக்) உறையில் வைக்கப்பட்டுள்ளது. தலைமைப் பொறியமைவுக் கணினிகளில் இவை அதிகம் பயன்படுத்தப்படுகின்றன. இவை தொடர் அணுகு முறை தரவு சேமிப்பகத்தை அளிக்கின்றன. 2000 மெகாபைட் வரை கொள்திறன் கொண்டவை. தனிமுறைக் கணினிகளில் 60-100 மெகாபைட் கொள்திறனுடையவையாக அவை உள்ளன.

**CAS** : **சிஏஎஸ்** : தரவு தொடர்பு வரன்முறைகள் என்று பொருள்படும் Communication Application Specification என்பதன் குறும்பெயர். 1980இல் அறிமுகப்படுத்தப்பட்ட இன்டல் கம்யூனிகேஷன்ஸ் நிறுவனத்தின் விதிமுறைகள்.

**cascade** : அடுக்கு; தொடர்; கவிப்பு : சீட்டு விளையாட்டில்



அடுக்கு

கையில் சீட்டுகளை ஒன்றடுத்து மற்றொன்றை அடுக்கி வைத்திருப்பதுபோல, அடுக்கி வைக்கும் முறை. விண்டோஸ் பணிச்சூழலில் ஒரு நேரத்தில் திறக்கப்படும் ஒன்றுக்கு மேற்பட்ட சாளரங்களை இம்முறையில் அடுக்கி வைக்கலாம். 1. ஒரு சாளரத்தில் அமையும் உரையாடல் பெட்டியில் (dialog box) உரைப்பெட்டி (text box), பட்டியல் பெட்டி (list box), தேர்வுப் பெட்டி, (check box), கட்டளைப் பொத்தான்கள் (command buttons) போன்ற அனைத்து இயக்குவிசைப் பொருட்களையும் ஒரே திரையில் அமைக்க முடியாதபோது ஒன்றன் மேல் ஒன்றாய் அடுக்கப்பட்ட ஒன்றுக்கு மேற்பட்ட திரைகளில் அவற்றை அடுக்கி வைப்பர். 2. இணையச் செய்திக் குழுக்களில் ஒரு செய்தி ஒருவரிடமிருந்து இன்னொருவருக்கு அனுப்பப்படும்போது மூலச் செய்தியில் ஒவ்வொரு வரியிலும் > என்ற அடையாளம் சேர்க்கப்படும். அவரிடமிருந்து இன்னொருவர்க்குப் போகும்போது இன்னொரு அடையாளம் சேர்க்கப்படும். இதுபோல் சேர்ந்துகொண்டே போகும்.

**cascaded carry : அடுக்கிய மிகுதி :** மொத்தத் தொகையில், மிகுந்திடும் எண்ணைச் சேர்க்கும் முறை.

**cascade connection : அடுக்கு இணைப்பு :** இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட ஒரே மாதிரியான துணைச் சாதனங்களை ஒன்றோடொன்று இணைத்தல். ஒன்றின் வெளியீடு அடுத்ததன் உள்ளீட்டுடன் இணைக்கப்படும்.

**cascade control : அடுக்கு கட்டுப்பாடு :** கட்டுப்பாட்டுச் சாதனங்கள் சங்கிலியைப் போன்று இணைக்கப்பட்டுள்ள தானியங்கி கட்டுப்பாட்டு அமைப்பு ஒவ்வொன்றும் அடுத்ததற்குக் கொடுப்பதுடன் அடுத்த நிலையை ஒழுங்குபடுத்தும்.

**cascade sort : அடுக்கு வரிசையாக்கம் :** வெளிப்புற நாடா கொண்டு வரிசைப்படுத்தும் ஒரு முறை.

**cascading menu : அடுக்குப் பட்டியல் :** ஒரு பட்டியிலிருந்து கொண்டு அடுத்த பட்டியைத் தொடங்குதல். இத்தகைய பட்டியில் இதை அடுத்து வலது அம்புக்குறி இருக்கும்.

**cascading style sheets : அடுக்கி வைத்த அழகுத் தாள்கள் :** ஹெச்டிஎம்எல் மொழியில் உருவாக்கப்படும் இணைய ஆவணங்களில் சிறப்புத் தன்மை வாய்ந்த, அழகாக

*அடுக்கி வைக்கப்பட்ட பக்கங்கள். ஹெச்டிஎம்எல் ஆவணங்களை உருவாக்குபவர்கள் இது போன்று வடிவமைக்கப்பட்ட பக்கங்களை இணைத்துக் கொள்வதற்கான வரைமுறைகளை வைய விரிவலைக் கூட்டமைப்பு நிர்ணயம் செய்துள்ளது. ஹெச்டிஎம்எல் 3.2-ன் தர நிர்ணயத்தில் இவை அடங்கியுள்ளன. ஒரு வலைப் பக்கத்தில் உரை விவரங்கள் இடம்பெறும் விதம், அதன் எழுத்துரு, உருவளவு, வண்ணம் போன்றவை நிர்ணயம் செய்யப் பட்டுள்ளன.*

**cascading windows : அடுக்கி வைத்த சாளரங்கள் :** *வரைகலைப் பணிச்சூழலில், தலைப்புப்பட்டை தெரியும் வண்ணமாக ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கி வைக்கப்படும் பல்வேறு சாளரத் திரைகள்.*

**CASE : கேஸ் :** *1. சி, சி ++, ஜாவா. சி #, மொழிகளில் நிரல்களை எழுதுவதில் பயன்படும் கட்டளைச் சொல். 2. தரவு அமைப்பினை உருவாக்கும் எல்லா நிலைகளிலும் பயன்படும் மென்பொருள் வழக்கமான தொழில்நுட்பங்களை உருவாக்க தானியங்கி முறைகளைப் பயன்படுத்துகிறது. எல்லாவற்றுக்கும் பொருந்தும் ஒரு மொழியை உருவாக்குவதே இதன் இறுதி இலக்கு.*

**case control structure : நிலைக் கட்டுப்பாட்டு அமைப்பு.**

**case logic : எழுத்துருவ தருக்கம்.**

**case sensitive : எழுத்தின் தன்மை உணர்வு :** *தலைப்பெழுத்து, கீழெழுத்துகளை வேறுபடுத்துவது. இத்தகைய மொழியில் தலைப்பெழுத்து "A" வுக்கும் கீழெழுத்து "a"க்கும் உள்ள வேறுபாட்டை கணினி கண்டறியும்.*

**case-sensitive search : எழுத்து வடிவ உணர்வுத் தேடல் :** *ஒரு தரவு தளத்தில் சேமித்து வைக்கப் பட்டுள்ள விவரங்களில் ஒரு குறிப்பிட்ட விவரத்தைத் தேடும்போது மேற்கொள்ளப் படும் ஒருமுறை. ஆங்கிலச் சொற்களை சிறிய எழுத்தில் அல்லது பெரிய எழுத்தில் அல்லது கலந்த எழுத்துகளில் எழுதலாம். தேடும்போது வடிவ ஒப்புமை இல்லாமலும் தேடலாம். ஓர் ஆவணத்தில் Computer என்ற சொல் உள்ளதா எனத் தேடும்போது, COMPUTER, computer என்ற சொற்களையும் கண்டறிந்து சொல்லும். ஆனால், வடிவ அடிப்படையில் தேடினால், Computer*

என்ற சொல் இருந்தால் மட்டுமே உள்ளதெனக் காட்டும். computer, COMPUTER ஆகிய சொற்களைப் புறக்கணிக்கும்.

**case sensitivity :** எழுத்துவடிவ உணர்வு : ஒரு நிரலாக்க மொழியில், ஒரு நிரலில் சிறிய எழுத்து பெரிய எழுத்து வடிவங்களை வேறுபடுத்திப் பயன்படுத்துதல். எடுத்துக்காட்டாக சி,சி++ மற்றும் ஜாவா மொழிகளில் sum, SUM, Sum ஆகிய மூன்று சொற்களும் வேறு வேறாகவே அறியப்படும். எழுத்து வடிவ உணர்வு மிக்கவை என்று இம்மொழிகளைக் கூறுவர். ஆனால் பேசிக், பாஸ்கல் போன்ற மொழிகளில் மேற்கண்ட மூன்று சொற்களும் ஒன்றாகவே கருதப்படும். இம்மொழிகள் வடிவ உணர்வற்ற மொழிகள்.

**case statement :** கிளைபிரி கூற்று : அடா, பாஸ்கல், சி, சி++, ஜாவா மற்றும் விசுவல் பேசிக் மொழிகளில் பயன்படுத்தப்படும் கட்டுப்பாட்டுக் கட்டளைத் தொடர். ஒரு மாறியின் மதிப்பைச் சோதித்து அம்மதிப்பின் அடிப்படையில் வெவ்வேறு பணிகளை நிறைவேற்றுமாறு அமைக்கப்படும் கட்டளை. ஒன்றுக்குள் ஒன்றாக அமையும் if ... then ... else கட்டளைக்குப் பதிலாக சில சூழ்நிலைகளில் கிளைபிரி கட்டளையமைப்பு பயன்படுத்தப்படுகிறது.

**cashless society :** பணமிலாச் சமுதாயம் : வாங்குபவரின் வங்கிக் கணக்கிலிருந்து கொடுப்பவரின் வங்கிக் கணக்குக்கு உடனடியாகப் பணத்தைச் செலுத்துவதன் மூலம் வாங்கும் பரிமாற்றத்தை முடிக்கும் கணினி அமைப்பு. ரொக்கமாக எதுவும் மாற்றப்படுவதில்லை. சம்பளக் காசோலைக்குப் பதிலாகவும், சரக்குகள் மற்றும் சேவைகளுக்கும் இவ்வாறு பணமாற்றம் செய்யப்படுகிறது.

**cassette :** பேழை; நாடாப் பெட்டி; ஒளிச் சுருள்; ஒளிப் பேழை : தரவு சேமிப்புக்குப் பயன்படும் காந்த நாடாவைக் கொண்டுள்ள சிறிய பேழை.

**cassette drive :** பேழை இயக்ககம்.

**cassette interface :** நாடா இடைமுகம் பேழை இடைமுகம் : ஒரு கணினிக்கும் ஒரு காந்த நாடாவுக்கும் இடையில் தரவு பரிமாற்றங்களைக் கட்டுப்படுத்தப் பயன்படும் மின்சுற்று.

**cassette recorder :** பேழைப் பதிவி; நாடாப் பதிவி : நாடாப்

பேழைகளைப் பயன்படுத்தி இலக்க முறை தரவுகளைப் பதிவு செய்து சேமிக்கவும், பின்னர் ஒருமுறை இந்த தரவு களைக் கணினியின் உள் இருப் பகத்தில் ஏற்றவும் வடி வமைக்கப்பட்ட சாதனம். நுண் கணினிகளில் அதிகம் பயன் படுத்தப்படுகிறது.

**cassette tape** : பேழை நாடா : *ஏறக்குறைய 1/3செ.மீ. அகல முள்ள காந்த நாடா. சிறிய பிளாஸ்டிக் பேழையில் வைக்கப்பட்டிருப்பது.*

**casting** : இனமாற்றம் : *நிரலாக் கத்தில் ஒரு தரவினை மதிப்பை வேறொரு தரவின மதிப்பாக மாற்றியமைத்தல்.*

**CAT** : கேட் : Computer Assisted Training and Computerised Axial Tomography *என்பதன் குறும் பெயர். கணினி உதவிடும் பயிற்சி மற்றும் கணினிமய அச்சு ஊடுகதிர் உள்தளப் பட முறை* (Tomography) *என்பதன் சுருக்கம்.*

**catalog** : திரட்டு ; அடைவு: *ஒவ்வொரு வகையாக விவரித்து வரிசையாகச் சேர்த்து வைப்பது. நிரல்கள் அல்லது ஒரு வட்டில் சேமிக்கப்பட்டுள்ள தரவுகளின் பட்டியலை வரிசைப் படுத்துதல். ஒரு வட்டைத் திரட்டி அமைத்தல் என்றால் ஒரு வட்டில் உள்ள அனைத்துக் கோப்புகளின் பட்டியலையும் அச்சிட்டுத் தருமாறு கணினி யைக் கேட்பதாகும்.*

**catch** : பிடி.

**catena** : தொடுப்புப் பட்டியல் : *பல்வேறு உறுப்புகளைச் சேர்த்துத் தொடுக்கப்பட்ட ஒரு பட்டியலில் ஓர் உறுப்பு, பட்டி யலிலுள்ள அடுத்த உறுப்பினைச் சுட்டுமாறு அமைக்கப்பட்டிருக்கும்.*

**category** : வகையினம்.

**category storage** : வகையினச் சேமிப்பகம்.

**cat eye** : பூனைக் கண்.

**cathode** : எதிர்மின்வாய் : *மின் னணுவியல் சொல். மின்னணுக் களை எதிர்நிலை* (Negative) *சக்தி யுள்ள எதிர் மின்வாயிலிருந்து நேர்நிலை* (positive) *சக்தியுள்ள நேர்மின் வாய்க்கு மாற்றும் சாதனம்.*

**cathode ray tube (CRT)** : எதிர் மின் கதிர்க் குழாய் : *தகவலைக் காட்டக்கூடிய திரை உள்ள மின்னணுக் குழாய்.*

**cathode ray tube visual display unit** : எதிர்மின்வாய்க் கதிர்க் குழாய் காட்சித் திரையகம்.

**CAT scan** : கேட் வருடல் : Computer Assisted Tomography

Scaning என்பதன் குறும்பெயர். மருத்துவ ஆய்வு மற்றும் நோயறிதல்களில் பயன்படுவது.

**CAU : காவ் :** கூட்டுறு அணுகு கருவி எனப் பொருள்படும் Controlled Access Unit என்பதன் குறும்பெயர். வில்லை வளைய பிணையங்களுக்காக ஐபிஎம் உருவாக்கிய தானறி குவியம் (Intelligent Hub). மேலாண்மை மென்பொருள் வழியாக பழுதான முனைகளை குவிய (Hub) அடையாளம் காட்டும்.

**.ca.us : .சிஏ.யுஎஸ் :** இணையத்தில் அமெரிக்காவின் கலிஃபோர்னியா மாநிலத்தைச் சேர்ந்த வலைத் தளங்களைக் குறிக்கும் பெருங்களப் பெயர்.

**CBASIC : சிபேசிக் :** *8080, 8085* மற்றும் இஸட்80 நுண் செயலகக் கணினிகளுக்குப் பிரபலமான மொழி.

**CBBS : சிபிபிஎஸ் :** Computerized Bulletin Board Service என்பதன் குறும்பெயர். கணினிமய செய்தி அறிக்கை சேவை என்பதன் சுருக்கப் பெயர்.

**CBEMA : சிபிஇஎம்ஏ :** Computer and Business Equipment Manufacturers Association என்பதன் குறும்பெயர். கணினி மற்றும் வணிகக் கருவி உற்பத்தியாளர்களின் சங்கம் என்பதன் சுருக்கம்.

**CBI :சிபிஐ :** Charles Babbage Institute என்பதன் குறும்பெயர்.

**CBL : சிபிஎல் :** Computer Based Learning என்பதன் குறும்பெயர்.

**CBT : சிபிடீ :** கணினி அடிப்படையிலான பயிற்சி என்ற பொருள்படும் Computer Based Training என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். கணினியையும் இதற்கென்றே உருவாக்கப்பட்ட மென் பொருளையும் பயன்படுத்திக் கற்பிக்கும் முறை. இம்முறையில் உரைக் கோவை மட்டுமின்றி, வண்ண மிக்க வரைகலைப்படங்கள், அசைவூட்டப் படங்கள் மற்றும் குரல் மூலமான விளக்கங்கள் உட்பட பயனாளரை ஈர்க்கும் வண்ணம் பாடங்கள் அமைக்கப் பட்டிருக்கும். பயன்படுத்த எளிமையானதாகவும் நுட்ப மானதாகவும் இருக்கும். ஒரு மென்பொருள் தயாரிப்பாளர் தன் மென்பொருளைப் பயன் படுத்துபவருக்கு அம்மென் பொருளைப் பயன்படுத்தும் வழிமுறைகளையே ஒரு சிபிடீ யாகத் தயாரிக்க முடியும். ஒரு மேலாண்மைத்துறைக் கருத் தரங்கில் சிபிடீ-யை ஒரு சிறந்த கற்பித்தல் கருவியாகப் பயன் படுத்தலாம்.

**CC : சிசி; நகல் :** உண்மை நகல் என்று பொருள்படும் Carbon

Copy அல்லது Courtesy Copy என்ற தொடரின் தலைப் பெழுத்துச் சுருக்கம். ஒருவருக்கு அனுப்பும் மின்னஞ்சல் செய்தியை அப்படியே இன் னொருவருக்கு அனுப்ப, மின்னஞ்சல் மென்பொருளில் வழியுள்ளது. To என்பதில் அஞ்சல் பெறுபவரின் முகவரி யைத் தரவேண்டும். CC என்ப தில் வேறு ஒருவரின் அல்லது பலரின் முகவரியைத் தரலாம். அவர்களுக்கும் அஞ்சல் சென்று சேரும். CC-யில் தரப்பட்ட முகவரிதாரர்கள் அனைவரும் இந்த மடல் வேறு எவருக்கெல் லாம் அனுப்பப்பட்டுள்ளது என்பதை அறிந்து கொள்ளவும் முடியும். இந்த வகையில் bcc என்று குறிப்பிட்டு இன்னும் சிலருக்கு அதே மடலை அனுப்பிவைக்கும் முறை யிலிருந்து மாறுபடுகிறது. bcc-யில் குறிப்பிடப்படும் முகவரி தாரர்களுக்கும் மடல் கிடைக் கும். ஆனால், இந்த மடல் எவருக்கெல்லாம் அனுப்பப் பட்டுள்ளது என்பதை அவர்கள் அறிய முடியாது. (bcc-blind carbon copy).

**.cc : .சிசி** : இணையத்தில் தள முகவரி காகஸ் தீவுகளைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் களப்பிரிவு.

**CCD : சிசிடி** : மின்னூட்டச் சேர்ப்பு சாதனம் என்று பொருள் படும் Charge Coupled Device என்பதன் குறும்பெயர். மின் னூட்டப் பிணைப்பு சாதனம் என்பதன் சுருக்கப் பெயர்.

**CCFT : சிசிஎஃப்டி** : Cold Cathode Fluorescent Tube என்பதன் குறும் பெயர். பின்புற ஒளி வரும் திரையில் ஒளி உண்டாக்கும் வகைகளில் ஒன்று. மற்ற பின் புற ஒளிகளைவிட அதிக எடை யுடனும், அதிக மின்சாரம் வாங்குவதாகவும் இது உள்ளது.

**CCITT : சிசிஐடீடி** : Consultative Committee International Telegraph and Telephone என்பதன் குறும் பெயர். பன்னாட்டுத் தந்தி மற்றும் தொலைபேசி ஆலோ சனைக் குழு என்பதன் சுருக்கப் பெயர். உலகளாவிய தர நிர்ண யங்களை தரவு தொடர்புத் துறையில் உருவாக்குவதற்காக ஐக்கிய நாடுகள் பேரவை உருவாக்கியுள்ள ஒரு நிறுவனம்.

**CCITT Groups 1-4 : சிசிஐடீடீ 1-4 விதிகள்** : பன்னாட்டுத் தந்தி - தொலைபேசி ஆலோசனைக் குழு (International Telegraph and Telephone Consultative Committee) தொலைநகல் எந்திரங்களின் மூலமாக பட உருவங்களை குறியீடுகளாக்கவும் மறு

முனைக்கு அனுப்பி வைக்கவும் பரிந்துரை செய்த நான்கு பிரிவிலான நெறிமுறை கள். முதலிரண்டு பிரிவுகள் தொடர்முறை (analog) சாதனங் களுக்கும் 3,4-வது பிரிவு நெறி முறைகள் இலக்கமுறை (digital) சாதனங்களுக்கும் ஆனவை.

**ccNUMA : சிசிநூமா** : நினைவக அணுகலில் ஒரு வழிமுறை. Cache Coherent Non-Uniform Memory Access என்ற தொடரின் தலைப்பெழுத்துச் சுருக்கம். ஒத்தியைந்த பல்செயலாக்கக் கணினி முறைமைகள் (Symmetric, Multiprocessing System) பலவற்றை, அதிவேக/அகல அலைக்கற்றையுடைய வன்பொருள் ஊடகம் மூலம் ஒருங்கிணைத்து ஒரே கணினி அமைப்பாகச் செயல்பட வைக்கும் ஒரு தொழில்நுட்பம்.

**CCP : சிசிபீ** : Certification in Computer Programming என்பதன் குறும்பெயர். கணினி நிர லாக்கத்தில் சான்றிதழ் என்பது பொருள். அமெரிக்கா, கனடா மற்றும் பல பன்னாட்டு கல்லூரி கள், பல்கலைக் கழகங்களில் ஆண்டுத் தேர்வுகள் நடத்தப்படு கின்றன. நிரலாக்க அறிவையும், வணிக, அறிவியல் மற்றும் சிறப்பு பயன்பாடுகள் உருவாக் கம் போன்ற திறன் குறித்தும் பொதுத்தேர்வு நடத்தப்படு கிறது. தரவு, கோப்பு முறைமை, நிரலாக்க மொழி, தொழில்நுட்பம், வன்பொருள் - மென்பொருள்களுக்கிடையே பரிமாற்றம், மக்களுடன் பரி மாற்றம் போன்ற துறைகளில் அறிவு வலியுறுத்தப்படுகிறது.

**C³L : சி³எல்** : Complementary Constant Current Logic என்பதன் குறும்பெயர்.

**CD¹ : சிடி (CD)** : கோப்பகம் மாறு என்று பொருள்படும் change directory என்ற தொடரைக் குறிக் கும் கட்டளைச் சொல். எம்எஸ்டாஸ், யூனிக்ஸ் மற்றும் எஃப்டீபீ கிளையன் நிரல்களில் இக்கட்டளை பயன்படுத்தப் படுகிறது. இக்கட்டளைச் சொல்லையடுத்துத் தரப்படு கின்ற பாதையுடன்கூடிய இன்னொரு கோப்பகத்துக்கு மாறிக்கொள்ள முடியும். எடுத்துக்காட்டாக, C:\VB> CD \VC\Project என்ற கட்டளை மூலம் VB என்னும் கோப் பகத்திலிருந்து, VC என்னும் கோப்பகத்திலுள்ள Project என்னும் உள்கோப்பகத்துக்கு மாறிக் கொள்ள முடியும். பிறகு அங்கிருக்கும் கோப்புகளையும் பயன்பாடுகளையும் எளிதாகக் கையாள முடியும்.

**CD²** : **சிடி** : *1.* மின்சாரம் அறியப் பட்டது என்று பொருள்படும் Current Detected என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும் பெயர். ஓர் இணக்கியிலிருந்து, இணைக்கப்பட்ட ஒரு கணினிக்கு அனுப்பப்படும் சமிக்கை. இணக்கி, தகவலை ஏற்கத் தயார் நிலையில் இருப்பதை உணர்த்து வது. காண்க DCD. *2.* குறுவட்டு என்று பொருள்படும் Compact Disc என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர்.

**CDC** : **சிடிசி** : Call Directing Code என்பதன் குறும்பெயர். ஒரு செய்தி அல்லது ஆணையை தானாகவே வழி நடத்திச் செல்லும் மூன்று அல்லது இரண்டு எழுத்துகளைக் கொண்ட ஒரு குறியீடு.

**C-Drive - சி - இயக்ககம்**: கணினி யின் உள்ளே நிலையாகப் பொருத்தப்பட்டுள்ள தரவு சேமிப்பு வட்டு இயக்ககம், எப்போதும் 'சி' என்ற பெயரால் அழைக்கப்படுகிறது.

**cdev** : **சிடெவ்** : மெக்கின் டோஷ் கணினிகளில் பயன் படுத்தப்படும் ஒரு பயன்பாட்டு நிரல். கணினிச் சாதனங்களை நம் விருப்பப்படி அமைத்துக் கொள்வதற்குப் பயன்படுகிறது. மேக் பதிப்பு 6 (Mac OS 6)-ல் இந்த நிரல், முறைமைக் கோப் புறையில் வைக்கப்பட்டிருந்தது. விசைப்பலகை மற்றும் சுட்டிக் கான சிடெவ்கள் கணினியை இயக்கும்போதே நிறுவப்பட்டு விடும். ஏனைய சிடெவ்கள் அந்தந்த மென்பொருள் தொகுப் புகளுடன் இணைந்து வரு கின்றன. மேக் பதிப்பு 7இல் சிடெவ்கள் கன்ட்ரோல் பேனல் கள் என்று அழைக்கப்பட்டன.

**CDFS** : **சிடிஎஃப்எஸ்** : *1.* குறுவட்டில் பயன்படுத்தப் படும் கோப்பு முறைமை. 32 துண்மி (பிட்) பாதுகாப்பு முறை யில் இது அமைந்துள்ளது. இந்த அடிப்படையிலேயே விண் டோஸ் 95/98 ஆகிய இயக்க முறைமைகளில் குறுவட்டின் உள்ளடக்கத்தை அணுகும் முறைகள் வரையறுக்கப்படு கின்றன. 2. யூனிக்ஸ் இயக்க முறைமையில், ஒரு கோப்பு முறைமை, படிக்க மட்டுமே யான, கழற்றி எடுக்கப்படும் ஓர் ஊடகத்தில் (குறிப்பாக குறு வட்டு) அமைந்துள்ளது என் பதைக் குறிக்கும் தகுதிச் சொல். குறுவட்டு ஐஎஸ்ஓ 9660 தர நிர்ணயப்படி அமைந்தது என் பதை இச்சொல் குறிக்கும். நிலைவட்டு, நாடா, தொலைவுப் பிணைய இயக்ககங்கள் மற்றும் குறுவட்டு இயக்ககங்களை

யூனிக்ஸ் கணினியில் நிறுவும் போது இது போன்ற கட்டளைச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.

**CD-I : சிடி-ஐ :** ஊடாடும் குறுவட்டு என்று பொருள்படும் Compact Disk-Interactive என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒளிவ வட்டு (optional disk)த் தொழில்நுட்பத்தில் வன்பொருள்/மென்பொருள் பற்றிய தர நிர்ணயம். படஉருவக் காட்சி, உருத்தெளிவு, அசைவூட்டம் கேட்பொலி மற்றும் சிறப்பு விளைவுகள் ஆகிய கூறுகளை சிடி-ஐ உள்ளடக்கியது. இத் தர நிர்ணயம் தரவுவைக் குறியீடாக்கல், இறுக்கிச் சுருக்குதல், சுருக்கியவற்றை விரித்தல், பதிவான தரவுவை திரையிடல் ஆகிய செயல்முறைகளையும் உள்ளடக்கியது.

**C DOT : சி-டாட் :** Centre for Development of Telematics (Telecommunications) என்பதன் குறும்பெயர். இந்திய அரசு நிறுவனம்.

**CDP : சிடிபீ :** தரவு செயலாக்கத்தில் சான்றிதழ் படிப்பைக் குறிக்கும் Certificate in Data Processing என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். கணினி மற்றும் நிரலாக்கம், மென்பொருள் உருவாக்கம், முறைமை ஆய்வு உட்பட, கணினி தொடர்பான துறைகளில் சில தேர்வுகளை எழுதித் தேர்ச்சிபெறும் தனி நபர்களுக்கு இன்ஸ்டிடியூட் ஃபார் சர்ட்டிஃபிகேஷன் ஆஃப் கம்ப்யூட்டர் புரொஃபஷனல்ஸ் என்ற நிறுவனம் இந்தச் சான்றிதழை வழங்குகிறது.

**CD Player : சிடி இயக்கி.**

**CD plus : சிடி பிளஸ் :** குறுவட்டில் தரவுவைப் பதியும் முறை. கணினித் தரவுகளையும் கேட்பொலிப் பதிவுகளையும் ஒரே குறுவட்டில் பதிய இம்முறை வழிவகுக்கிறது. தரவு பகுதியைப் படிக்கும்போது கேட்பொலிப் பதிவுகளோ, கேட்பொலிப் பகுதியை இயக்கும்போது தரவு பகுதியோ பாதிக்கப்படுவதில்லை.

**CD-R : சிடி-ஆர் :** பதிதகு குறுவட்டு எனப் பொருள்படும் Compact Disk Recordable என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். குறுவட்டு எழுதி (CD writer) மூலம் தகவலைப் பதிப்பித்து, குறுவட்டகத்தில் வைத்துப் படிக்க முடிகிற ஒரு வகைக் குறுவட்டு.

**CD Recorder : குறுவட்டெழுதி : குறுவட்டுப் பதிவி :** ஒரு குறுவட்டில் எழுதும் சாதனம். குறு



குறுவட்டெழுதி

வட்டில் இந்த சாதனம் மூலம் ஒருமுறை எழுதப்பட்டு பல முறை படிக்கப்படுகிறது. நிரந்தரத் தரவு சேமிப்புக்காக வும், பாதுகாப்பு நகலாக (Backup) பயன்படுத்தவும், மென் பொருள்களை பல நகல்கள் எடுத்து வினியோகிக்கவும் குறுவட்டெழுதி மூலம் வட்டில் தரவுகள் எழுதப்படுகின்றன.

**CD-ROM : சிடி-ரோாம் :** படிக்க மட்டுமேயான குறுவட்டு என்று பொருள்படும் Compact Disk - Read Only Memory என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும் பெயர். விவரச் சேமிப்பகத்தில் ஒருவகை. அதிகக் கொள்திறன் உள்ளது (650 MB). தரவுவைப் படிக்க மின் காந்த முறைக்குப் பதில் லேசர் கதிர் பயன்படுத்தப் படுகிறது. ஒரு முறை எழுதப் பட்டு பலமுறை படிக்கப்படுகிறது (Write Once Read Many Times).

**CD-ROM Changer :** சிடி ரோம் மாற்றி.

**CD-ROM drive : குறுவட்டகம்; குறுவட்டு இயக்ககம் :** படிக்க மட்டுமேயான தரவுகள் பதியப்பட்டுள்ள குறுவட்டினை கணினியில் வைத்துப் பயன் படுத்தக்கூடிய வட்டகம் அல்லது வட்டு இயக்ககம்.

**CD-ROM juke box : குறுவட்டு தொகுதிப் பெட்டி :** குறுவட்டு களின் தொகுதியை கணினி யுடன் இணைத்துக் கையாள வழி செய்யும் வட்டியியக்குச் சாதனம். 200 குறுவட்டுகள்

வரை இதில் வைத்துப் பயன் படுத்த முடியும். பயனாளர் எந்த வட்டிலுள்ள தரவுவையும் கையாள விரும்பலாம். இச் சாதனம் அக்குறிப்பிட்ட வட்டினைத் தேடிக் கண்டறிந்து தரவுவை எடுத்துத் தரும். ஒரு நேரத்தில் ஒரு குறுவட்டு மட்டுமே பயன்பாட்டில் இருக்கும். ஒன்றுக்கு மேற்பட்ட குறுவட்டினைக் கையாளும் திறனுள்ள கணினியெனில், தொகுதிப் பெட்டியிலுள்ள வட்டுகளில் ஒன்றுக்கு மேற் பட்டவற்றைக் கையாள முடியும்.

**CD-ROM/XA : சிடி-ரோம்/எக்ஸ்ஏ; குறுவட்டு/எக்ஸ்ஏ :** சிடி-ரோம் எக்ஸ்டெண்டடு ஆர்க்கிடெக்சர் என்பதன் சுருக்கச் சொல். ஒரு விரிவாக்கப்பட்ட குறுவட்டுத் தரவு பதிவுமுறை. ஃபிலிப்ஸ், சோனி, மைக்ரோசாஃப்ட் நிறு வனங்கள் இணைந்து இதனை உருவாக்கியுள்ளன. சிடி-ரோம்/ எக்ஸ்ஏ, ஐஎஸ்ஓ 9660 தர நிர்ணயத்திற்கு ஒத்தியல்பானது.

**CDV : சிடிவி :** *1.* இறுக்கப்பட்ட இலக்கமுறை ஒளிக்காட்சி என்று பொருள்படும் Compressed Digital Video என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். அதிவேக ஊடகங்களில் அனுப்பி வைப்பதற்கு ஏற்ப இறுக்கிச் சுருக்கப்பட்ட ஒளிக் காட்சி உருவப்படங்கள். 2. குறு வட்டு ஒளிக்காட்சி என்று பொருள் படும் Compact Disc Video என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். 5 அங்குல விட்டமுள்ள வட் டினைக் குறிக்கிறது.

**CE : சிஇ :** வாடிக்கையாளர் பொறியாளர் எனப் பொருள் படும் Customer Engineer என் பதன் குறும்பெயர்.

**cell : கலம்; சிற்றம் :** *1.* ஒரு எழுத்து, ஒரு பைட் அல்லது ஒரு சொல்போன்ற தகவலின் ஒரு அலகை மட்டும் சேமிக்கு மிடம். 2. ஒரு மின்னணு விரி தாளின் அணிபோன்ற அமைப் பில் கிடைக்கையும் நெடுக்கை யும் சந்திக்கும் இடம்.

**cell address : கல முகவரி :** விரிதாள் செயல்முறையில் நெடுக்கையின் பெயர். (ABC..) மற்றும் கிடக்கை எண் *(1,2,.....)* இரண்டும் சேர்ந்த முகவரி. A1, G22, J320 என அமையும்.

**cell animation : கலை அசை வூட்டம் :** ஒரு அசைவூட்டத் தொழில்நுட்பம். இதில் ஒரு ஓவியம் பின்னணியில் நிலை யாக இருக்கும். அசைவூட்டப் பட்ட உருவங்கள் ஓவியத்தின் மீது நகரும்போது அவை

இயல்பாக நகர்வது போன்ற ஒரு மாயத்தோற்றத்தை ஏற் படுத்துகிறது. கல ஆசை வூட்டத்துக்கென பயன்பாட்டுத் தொகுப்புகள் கிடைக்கின்றன.

**cell array** : கலக்கோவை: GKSஇல் அடிப்படை வெளியீடு களில் ஒன்று. சிறிய பாலிகன் வரிசை முறையை அமைத்து ஒவ்வொன்றுக்கும் தனி நிறம் தருகிறது.

**cell contents** : கல உள்ளடக்கம் : ஒரு விரிதாள் கலத்தில் உள்ள எழுத்துச் சரம், மதிப்பு, வாய் பாடு அல்லது செயல்கூறு.

**cell definition** : சிற்றம் வரை விலக்கணம்; கல வரையறை.

**cell pointer** : சிற்றம் சுட்டு; கலச்சுட்டு.

**cellular automata** : செல்பேசித் தானியங்கு கொள்கை.

**Cellular Digital Packet Data** : செல்பேசி இலக்கமுறைப் பொதி தரவு : ஏற்கெனவேயுள்ள செல்பேசித் தடங்களின் வழியே வினாடிக்கு 19.2 கிலோபிட் வேகத்தில் இருதிசை விவரப் பொதி தரவு பரிமாற்றத் திற்கான தர நிர்ணயம்.

**cellular phone** : செல்லிடப் பேசி; செல்பேசி ; கைத் தொலை பேசி :

**cellular radio** : செல்லிட வானொலி : முழு நிலப் பரப்புக்கும் அதிக சக்தியுள்ள நிலையான வானொலி நிலை யம் அமைப்பதற்குப் பதிலாக சிறுசிறு பகுதிகளாகப் பிரித்து சேவை அளிப்பது. ஒருசில கிலோ மீட்டர்கள் மட்டுமே கேட்பதாக அவை இருக்கும். நடமாடும் தொலைபேசியின் தேவை அதிகரிப்பதால் கல அமைப்பின்மூலம் நிலை மையை ஈடு கட்டலாம். பல இயங்கும் சேவைகள், குறும் பகுதிக்குள் கொண்டு வரப்பட்டு கலத்தின் அளவு குறைக்கப்படுகிறது. ஒவ்வொரு கலத்திலும் தனி பல்லிணைப்பு அலைவரிசை பரப்பி - வாங்கி ஆகியவை அமைக்கப்படு கின்றன. பரப்பிகட்கு குறை வான மின்சக்தியே தேவைப்படு கிறது. இதனால் வானொலி அலைவரிசைக் கற்றை(பாண்டு) களை மீண்டும்மீண்டும் பயன் படுத்தி சில நூறு பேர்களுக்குப் பதிலாக பல்லாயிரவர் பயன் பெறமுடியும்.

**center** : மையம் : தட்டச்சு செய் யப்படும் தரவுவை வரியின் மையத்தில் இடம்பெறச் செய் யும் விசைப் பலகையின் பணி.

**Centre for Development of Advanced Computing** :

உயர்நிலை கணிப் பணி மேம் பாட்டு மையம் : சுருக்கமாக சி - டாக் (CDAC) என அழைக்கப் படுகிறது. மைய அரசு நிறுவனம்.

center vertically : செங்குத்து மையப்படுத்து.

centering cone : மையப் படுத்தும் கூம்பு : 5.25 நெகிழ் வட்டை (ஃபிளாப்பி) இயக்கி அச்சாணியில் ஏற்றப் பயன் படுத்தும் சிறிய செயற்கை இழை அல்லது உலோகக் கூம்பு. இயக்ககக் கதவை மூடிய வுடன், இது வட்டின் மையக் குழியில் நுழைக்கப்படுகிறது.

centi : சென்டி : நூறாவது என்பதைக் குறிக்கும் மெட்ரிக் அளவை முன் சொல். நூறு என்பதைக் குறிக்கும் ஹெக்டோ வுடன் வேறுபடுத்திப் பார்க்க.

centi second : சென்டி நொடி : ஒரு நொடியில் நூறில் ஒரு பங்கு.

central control unit : மையக் கட்டுப்பாட்டகம்.

central information file : மைய தரவு கோப்பு : முக்கிய தரவு சேமிப்பு அமைப்பு.

central office : மைய அலு வலகம் : தரவு தொடர்பு அமைப்பில் வாடிக்கையாளர் களின் தரவு தொடர்புத் தடங்கள் ஒன்றுக்கொன்று இணைக்கப் படும் இணைப்பு மையம்.

central processing : மையச் செயலாக்கம்.

central processing unit : மையச் செயலகம்.

central processor : மையச் செயலி. மையச் செய்முறைப் படுத்தி; மையச் செயலாக்கி.

central site : மையத் தளம் : பகிர்ந்தமை செயலாக்க அமைப் பில் முக்கிய கருவிகள் உள்ள இடம்.

central spindle : மையச் சுழல் தண்டு.

central tendency : மையப் போக்கு : எதிர்பார்க்கப்பட்ட மதிப்புகளுக்கு ஏற்றதாக தரவு கள் அமையக் கூடிய வாய்ப்பு.

central terminal : மைய முனை யம் : கணினிக்கும் தொலை தூர முனையத்துக்கும் இடையே தரவு தொடர்பு கொள்வதற்கு இடைப்பட்ட ஊடகமாகப் பயன்படும் வன்பொருள் தாங்கி.

centralized data processing : மையப்படுத்தப்பட்ட தரவு செய லாக்கம் : ஒரு நிறுவனம் தன் னுடைய கணினி கருவிகளை யெல்லாம் ஒரே இடத்தில்

வைத்திருக்கும் கோட்பாடு. கள அலுவலகச் செயல்பாடுகளில் தரவு செயலாக்கம் இல்லாத நிலை.

**centralized design** : மையப் படுத்தப்பட்ட வடிவமைப்பு : ஒரு நிறுவனத்தின் தரவுச் செய லாக்க வசதிகளை, ஒரு தனி தரவுச் செயலாக்கத் துறையே வழங்கும் தரவு அமைப்பு.

**centralized network configuration** : மையப்படுத்தப்பட்ட பிணையத் தகவமைவு : ஒரு மையக் கணினியின் தொடர் புடன் பெரும்பாலான பணி களைச் செய்யும் ஏற்பாடுள்ள கணினிப் பிணையம். நட்சத்திரப் பிணையம் என்றும் அழைக்கப்படுகிறது.

**centralized processing** : மையப் படுத்தப்பட்ட செயலாக்கம் : ஒரு தனி, மைய இடத்திலிருந்து ஒன்று அல்லது மேற்பட்ட கணினிகளை இணைத்து செயலாக்கம் செய்தல். இதன் பொருள் என்னவென்றால் தரவு மையத்துடன் நிறுவனத்தின் அனைத்து முனையங்களையும் இணைத்து செயல்பட வைக்கப் படுகிறது என்பதே.

**centred text** : மையப்படுத்திய உரை : சொல்லமைவுகளை ஒரு வரியின் மையத்தில் அமைத்தல். ஒரு பக்கத்தில் இடது ஓரம் அல்லது வலது ஓரத்தில் இல்லா மல் மையத்தில் இடம் பெறும் சொல் அல்லது சொற்றொடர்.

**centronics interface** : சென்ட்ரானிக்ஸ் இடைமுகம் : கணினி களையும் அச்சுப் பொறிகளை யும் இணைக்கும் புகழ் பெற்ற ஒரேநேர பரிமாற்ற அமைப்பு. கணினிகளுக்கும் அச்சுப் பொறி களுக்கும் இடையில் தரவு தொடர்புக்கு ஒரே நேரத்தில் சேர்ந்தியங்கும் திட்டத்தைச் செயல்படுத்திய அச்சுப்பொறி உற்பத்தி நிறுவனம் சென்டிரானிக்ஸ்.

**centronics parallel interface** : சென்ட்ரானிக்ஸ் இணைவழி இடைமுகம் : கணினிக்கும் அதன் புறச்சாதனங்களுக்கும் இடையேயான இணைவழி தரவு பரிமாற்றப் பாதைகளுக் கான தர நிர்ணயம். அச்சுப் பொறிகளை உற்பத்தி செய்யும் சென்ட்ரானிக்ஸ் நிறுவனம் இந்தத் தர நிர்ணயத்தை முதலில் உருவாக்கியது. சென்ட் ரானிக்ஸின் இணைவழி இடை முகம், எட்டு இணைவழி தரவு தடங்களையும் கட்டுப்பாடு மற்றும் நிலையறி தரவுக்கான கூடுதல் தடங்களையும் வழங்கு கிறது.

**censorship : தணிக்கைமுறை :** ஒரு தரவு தொடர்பு ஊடகத்தின் வழியே ஆட்சேபத்துக்குரிய செய்திகளைப் பரப்பக் கூடாது எனத் தடை செய்யும் முறை. இணையத்தில் செய்யப்படும் தரவு பரப்புகைக்கு இத்தகைய தணிக்கை முறை கிடையாது. ஆனால் இணையத்தில் சில குறிப்பிட்ட பகுதிகள் பலவித மான கட்டுப்பாடுகளுக்கு உள்ளாகின்றன. எடுத்துக் காட்டாக, இணையத்தில் செய்திக் குழுக்களில் alt என்னும் பிரிவில் முழுவதுமோ, alt.sex அல்லது alt.music.write-power ஆகிய பிரிவுகளில் வெளி யிடப்படும் ஆபாசமான ஆட்சேபத்துக்குரிய செய்திகள் செய்திக் குழுவின் இடை யீட்டாளரால் (moderator) தணிக்கை செய்யப்படுகின்றன. சிலநாடுகளில் அந்நாடு பின் பற்றும் தேசியக் கொள்கை அடிப்படையில் சில அரசியல் மற்றும் கலை, பண்பாட்டு வலைத் தளங்களை அந்நாட்டுப் பயனாளர்கள் பார்வையிட அனுமதிப்பதில்லை.

**CEO : முதன்மை மேலாண் அலுவலர்.**

**CERN : சொ்ன் :** அணு இயற் பியலுக்கான ஐரோப்பிய ஆய்வுக்கூடம் என்று பொருள் படும் Conseil Europeen Pour La Recherche Nucleaire (The European Laboratory for Particle Physics) என்ற பெயரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். சுவிட்சர்லாந்து நாட்டில் ஜெனீவா நகரில் சொ்ன் ஆய்வுக் கூடம் அமைந்துள்ளது. 1989 -ஆம் ஆண்டில் இந்த ஆய்வுக் கூடத்தில்தான் டிம் பெர்னர்ஸ் -லீ வையவிரிவலையை (World Wide Web) உருவாக்கினார். அறிவியல் ஆய்வு அறிஞர்களுக் கிடையே தரவு தொடர்பு வசதியை ஏற்படுத்தித் தருவதே இதன் நோக்கமாய் இருந்தது.

**CERN server : சொ்ன் வழங்கன் கணினி:** சொ்ன் ஆய்வுக் கூடத் தில் டிம் பெர்னர்ஸ்-லீ உருவாக் கிய ஹெச்டீடீபீ (HTTP) வழங்கன் கணினிகளில் ஒன்று. இணையம் முழுவதிலும் இப்போதும் சொ்ன் கணினிகள் பயன்பாட்டில் உள்ளன. அதன் சேவைகள் இலவசமாகவே கிடைக்கின்றன.

**CERT : செர்ட் :** கணினி அவசர நடவடிக்கைக் குழு என்று பொருள்படும் Computer Emergency Response Team என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணையப் பயனாளர்களுக்கு 24 மணி நேர மும் கணினிப் பாதுகாப்பு

ஆலோசனைகளை வழங்கும் நிறுவனம் இது. புதிய நச்சுநிரல் (Virus) மற்றும் வேறெந்த கணினிப் பாதுகாப்பு அபாயம் குறித்தும் ஆலோசனைகள் பெறலாம்.

**certification** : சான்றளிப்பு : *1.* ஒரு மென்பொருள் அதன் செயல்திறன் எண்பிக்கப்பட்ட பிறகு ஏற்றுக் கொள்ளல். 2. ஒருவர் குறிப்பிட்ட அளவு தொழில் முறையிலான தகுதியை அடைந்து விட்டார் என்று கடுமையான தேர்விற்குப் பிறகு அவருக்கு அங்கீகாரம் அளித்தல்.

**.cf** : சிஎஃப் : மத்திய ஆஃப்ரிக்கக் குடியரசில் செயல்படும் இணைய தள முகவரிகளில் குறிப்பிடப்படும் பெரும் புவிக்களப் பெயர்.

**.cg** : சிஜி : இணைய தள முகவரி, காங்கோ நாட்டில் பதிவுசெய்யப்பட்டது என்பதைக் குறிப்பதற்கான பெரும் புவிக்களப் பெயர்.

**CGA** : சிஜிஏ : வண்ண வரைகலைத் தகவி என்று பொருள்படும் Colour Graphics Adapter என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். *1981*இல் ஐபிஎம் நிறுவனம் அறிமுகப்படுத்திய ஒளிக்காட்சித் தகவிப் பலகை. சிஜிஏ, பல்வேறு எழுத்து மற்றும் வரைகலைக் காட்சி முறைகளைத் தர வல்லது. எழுத்து முறைகளில் *16* நிறங்களில் *25* வரிகள், *80* எழுத்துகள், *25* வரிகள்/*40* எழுத்துகள் காண்பிக்கும் முறைகளும் உண்டு. *2* நிறங்களில் *640* கிடைமட்ட படப் புள்ளிகளும் (pixels), *200* செங்குத்துப் படப் புள்ளிகளும் இடம்பெறும் வரைகலைக் காட்சி முறையும், *320×200* படப்புள்ளி, நான்கு நிறக் காட்சி முறையும் உண்டு.

**CGI** : சிஜிஐ : பொது நுழைவாயில் இடைமுகம் எனப் பொருள்படும் Common Gateway Interface என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஹெச்டீடீபீ போன்ற தரவு பரிமாற்ற வழங்கன் (Server) கணினிகளுக்கிடையேயும், தரவு தளம் மற்றும் ஏனைய பயன்பாட்டு மென்பொருள் தொடர்பான விவரப் பரிமாற்றம் செய்துகொள்ளும் புரவன் கணினிகளுக்கிடையேயும் நடைபெறும் தரவு தொடர்புக்குரிய செந்தரக் கட்டுப்பாடுகளை இது குறிக்கிறது.

**cgi-bin** : சிஜிஐ-பின் : Common Gateway Interface-binaries என்ற தொடரின் தலைப்பெழுத்துக்

குறும்பெயர். ஹெச்டீடீபீ வழங்கன் கணினிகளில் சிஜிஐ நிரல்களின் மூலம் இயக்கப்படும் புறநிலைப் பயன்பாடுகள் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் கோப்பகம் (directory).

**CGI script** : **சிஜிஐ உரைநிரல்.**

**.ch** : **.சிஹெச்** : இணைய தளங்களில் சுவிட்சர்லாந்து நாட்டுத் தளமுகவரியில் குறிப்பிடப்படும் பெரும் புவிப்பிரிவு களப்பெயர்.

**chad** : **காகிதத் துண்டு** : சேமிப்புச் சாதனத்தில் துளையிடப்பட்டவுடன் தனியாக விழும் நாடா அல்லது தொடர் எழுதுபொருளில் துளையிட்டவுடன் வெளியே விழும் துண்டுக் காகிதம்.

**chain** : **சங்கிலி** : 1. சுட்டுகள் மூலம் ஏடுகளை இணைத்தல். கடைசி ஏட்டுக்கும் முதல் ஏட்டுக்கும் இதன் மூலம் இணைப்பு ஏற்படுத்தப்படும். 2. வரிசையாகச் செய்ய வேண்டிய செயல் முறைகள்.

**chained file(s)** : **இணைக்கப்பட்ட கோப்புகள்** : ஒவ்வொரு பிரிவு தரவு கட்டமும் அடுத்த ஒன்றுக்கு அழைத்துச் செல்லும் கோப்பு பாயின்டர் எனப்படும் சுட்டுகளைப் பயன்படுத்தி தரவு கட்டங்களை இணைத்துள்ள தரவு கோப்பு.

**chained files** : **சங்கிலியிடப்பட்ட கோப்புகள்** : சுட்டுக் கருவிகள் மூலம் தொடராக இணைக்கப்பட்ட தரவு கோப்புகள்.

**chained list** : **சங்கிலியிடப்பட்ட பட்டியல்** : ஒவ்வொன்றும் அடுத்து வருவதைக் குறிப்பிடும் பட்டியல். சேமிக்கப்பட்ட அதே வரிசையிலேயே அதைத் திரும்பப் பெறவேண்டிய தேவையில்லை.

**chain field** : **சங்கிலிப் புலம்** : சேமிப்புச் சாதனத்தில் அடுத்ததாக சேர்க்கப்படாவிட்டாலும் ஆரம்பப் பதிவேட்டுடன் இணைக்கப்பட்டுள்ள ஒரு பதிவேட்டில் உள்ள புலத்தின் வரையறை.

**chaining** : **சங்கிலியிடல்** : 1. நிரல்கள் அல்லது செயல் முறைகள் அல்லது ஏடுகளை வரிசையாக இணைக்கும் முறை. கணினியின் முதன்மை நினைவகத்தைவிடப் பெரிதான நிரல்களை பகுதி பகுதியாகப் பிரித்து செயல்படுத்துதல். இதில் பல சிறிய பணிக்கூறுகளாக (modules) உருவாக்கப் பட்டு அவை கணினியில் ஏற்றப்பட்டு வரிசையாக செயல்படுத்தப் படும்.

**chaining search** : **சங்கிலி முறைத் தேடல்** : பதிவேட்டில்

உள்ள முகவரிகளைப் பயன்படுத்தி, ஒரு கோப்பில் தரவு தேடும் நுட்பம். இதில் சங்கிலி முறையில் ஒவ்வொரு பதிவேடும் அடுத்த பதிவேட்டுடன் இணைக்கப்பட்டிருக்கும்.

**chaining printer : சங்கிலி அச்சுப்பொறி** : அச்சிடும் இடங்களில் செங்குத்தாகச் சுற்றும் சங்கிலியில் எழுத்துகளை அமைத்துள்ள அச்சுப் பொறி. அச்சுச் சங்கிலியில் அமைக்கப்பட்டுள்ள எழுத்துகளின் மீது ஒரு அச்சு சுத்தி அடிப்பதன் மூலம் காகிதத்தில் அச்சிடுகிறது.

**chain printing : சங்கிலி அச்சுப் பதிவு**

**Challenge Handshake Authentication Protocol : சேப் : (CHAP) : பீபீபி (ppp - point to point protocol) நெறிமுறை வழங்கன்** : கணினிகளில் இணைப்பு ஏற்படுத்திக் கொள்பவரின் அடையாளத்தை இணைப்பு ஏற்படுத்தும் போதோ அல்லது அதன்பிறகோ அடையாளம் காண்பதற்காகப் பயன்படுத்தப்படும் சான்றுறுதி நெறிமுறைத் திட்டமுறை.

**chamfer : சமன் விளிம்பு** : இரண்டு சந்திக்கும் கோடுகளுக்கு இடையில் சமன்படுத்தப்பட்ட விளிம்பு.

**change : மாற்று.**

**change agent : மாற்ற உதவியாளர்** : ஒரு நிறுவனத்தின் மாற்றத்திற்கு எதிர்ப்பு ஏற்படின் அதைச் சமாளிக்கும் முறைமைப் பகுப்பாய்வாளர் (System Analyst).

**change all : அனைத்தும் மாற்று.**

**change directory command : கோப்பக மாற்று ஆணை**: டாஸ், யூனிக்ஸ் முறைகளில் செயல்படும் கட்டளை.

**change dump : மாற்றத் திணிப்பு** : முன்பு பதிவு செய்த நிகழ்வினை அடுத்து ஏற்பட்ட மாற்றங்கள் பற்றிய நினைவகத்தின் அனைத்து தன்மைகளையும் வெளியிடல்.

**change file : மாற்றக் கோப்பு** : மாற்றப்பட்ட தரவு கோப்பு. தலைமைக் கோப்பைப் புதுப்பிக்கப் பயன்படும் செயல் பரிமாற்றக் கோப்பு.

**change of control : கட்டுப்பாட்டு மாற்றுகை.**

**channel : இணைப்பு; வழி; தடம்; அலைவரிசை** : *1.* இரண்டு அல்லது இரண்டுக்கும் மேற்பட்ட முனைகளை இணைக்கும் மின்சார அல்லது

மின்னணு தரவு பயணிக்கும் பாதை. 2. துணைச் சாதனங்களை கணினியுடன் இணைக்கும் தரவு தொடர்பு பாதை

**channel adapter** : தடத் தகவி : பல்வேறு வன்பொருள் சாதனங்களின் வழிகளிடையே தரவு தொடர்பினை ஏற்படுத்தும் சாதனம்.

**channel capacity** : தடக் கொள்ளளவு/கொள்திறன்; தட வேகம்; தட இணைப்புத் திறன் : ஒரு தரவு பரிமாற்றத் தடத்தின் வேகம் அது ஒரு வினாடி நேரத்தில் எத்தனை துண்மிகளை (bits) அல்லது எத்தனை பாடுகளை (bauds) அனுப்பி வைக்கிறது என்ற அடிப்படையில் அளக்கப்படுகிறது.

**channel command** : இணைப்புக் கட்டளை : ஒரு உள்ளீட்டு/வெளியீட்டு இணைப்பைச் செயல்படுத்தும் கட்டளை.

**channel, communication** : தரவு தொடர்புத் தடம்.

**channel emitter** : தட ஒளிர்வு; தட உமிழி.

**channel guide** : தட வழித் துணை.

**channel hop** : தடத் தாவல் : இணையத்தில் தொடர் அரட்டையில் (IRC) ஈடுபட்டுள்ளவர் ஓர் அரட்டைத் தடத்திலிருந்து இன்னொரு தடத்திற்கு அடிக்கடி மாறிக் கொண்டிருப்பது.

**channel, information** : தரவு தடம்.

**channel, input/output** : உள்ளீட்டு வெளியீட்டுத் தடம்.

**channel map** : இணைப்பு அமைபடம்: மிடி (midi) இணைப்புச் செய்திகளுக்குச் சேரவேண்டிய இணைப்புகள், வெளியீட்டுச் சாதனங்கள் மற்றும் ஒட்டு அமைபடங்களைக் குறிப்பிடுகிறது.

**channel op** : தட நிர்வாகி; தட மேலாளர்; தட இயக்குநர் : channel opearator என்பதன் குறுக்கம். இணையத் தொடர் அரட்டையில் ஒவ்வொரு தடத்திலும் நடைபெற்றுக் கொண்டிருக்கும் அரட்டை உரையாடல்களை ஒருவர் மேற்பார்வை செய்து கொண்டிருப்பார். விரும்பத்தகாத அநாகரிகமான உரையாடலில் ஈடுபடுவோரை அரட்டைத் தடத்திலிருந்து நீக்கிவிட இவருக்கு அதிகாரம் உண்டு.

**channel, peripheral interface** : புறச்சாதன இடைமுகத் தடம்.

**channel programme** : தட நிரல் : *ஒரு அதிவேக வெளிப்புற செயல்பாட்டு ஆணைகளின் தொகுதி. உள்ளீட்டு/வெளியீட்டு இயக்கத்தைத் தொடக்கும் நிரலின் ஆணை. இணைப்பு நிரலைத் தனியாக இணைப்பு செயல்படுத்தும். அதேவேளையில் மற்ற இயக்கங்கள் கணினியால் செய்யப் படும்.*

**channel, read/write** : படி/எழுது தடம்.

**channels** : தடங்கள், வழிகள்.

**character** : எழுத்து வகை; வரி வடிவம் : *கணினி சாதனத்தில் சேமித்து, செயலாக்கப்படும் ஏதாவது ஒரு குறியீட்டெண், நிறுத்தக் குறியீடு அல்லது வெற்றிடம்.*

**character-at-a-time printers** : ஒரு நேரத்தில் ஒரு எழுத்து அச்சுப் பொறிகள் : *தொடர் அச்சுப் பொறிகள் என்று அழைக்கப் படும். ஒரு நேரத்தில் ஒரு எழுத்தினை மட்டுமே அச்சிடும் அச்சுப் பொறிகள்.*

**character based programme** : எழுத்து சார் நிரல்.

**character, binary code** : இருமக் குறிமுறை எழுத்து.

**character cell** : எழுத்துக் கலம்; எழுத்துச் சிற்றறை : *காட்சித் திரை அல்லது அச்சுப் பொறியில் ஒரு தனி எழுத்தை அமைக்கப் பயன்படும் புள்ளிகளின் அமைப்பு 8 x 16 எழுத்துச் கலங்களில் 16 கிடைவரிசைகள் இருக்கும். ஒவ்வொரு வரிசையிலும் 8 புள்ளிகள். இப்புள்ளிகளின் இணைப்பின் மூலமே எழுத்து உருவாகிறது.*

**character checking** : எழுத்துச் சரிப்பார்ப்பு : *எல்லா எழுத்துகளையும் ஒரு குழு அல்லது புலமாகச் சோதித்து ஒவ்வொரு எழுத்தையும் சரிபார்த்தல்.*

**character code** : எழுத்துக் குறிமுறை : *எழுத்துத் தொகுதி ஒன்றைக் குறிப்பிடும் ஒரு எண் குறியீடு.*

**character data** : எழுத்துத் தரவு : *எழுத்து அல்லது எழுத்து எண்களால் ஆன விவரம்.*

**character definition table** : எழுத்து வரையறை அட்டவணை : *கணினித் திரையில் புள்ளிகளால் ஆன எழுத்துகளையும், துண்மிவரைவு எழுத்து வடிவங்களையும் காண்பிக்க அடிப்படையாக விளங்கும் தோரணிகள் (patterns) அடங்கிய அட்டவணை. கணினிகள்*

நினைவகத்தில் இந்த அட்டவணையை இருத்தி வைத்துச் செயல்படும்.

**character density** : **எழுத்து அடர்த்தி** : சேமிப்புச் சாதனங்களில் தகவல்களின் அடர்த்தி. ஒரு ச.செமீ. அல்லது ச.அங்குலத்திற்கு எத்தனை எழுத்துகள் என்பதைக் குறிப்பிடுகிறது.

**character device** : **எழுத்துச் சாதனம்** : ஒரு நேரத்தில் ஒரு எழுத்து என்ற அளவில் தரவுகளை அனுப்பிப் பெறும் சாதனம்.

**character emitter** : **எழுத்து ஒளிர்வு; வரிவடிவ உமிழி.**

**character field** : எழுத்துப் புலம் : எழுத்து அல்லது எண், எழுத்துகளைக் கொண்டிருக்கும் தரவு புலம். Numeric field-க்கு எதிர்ச்சொல்.

**character fill** : எழுத்து நிரப்பு : இடங்களை நிரப்பப் பயன்படும் வெற்றிடம் அல்லது பிற குறியீடுகள்.

**character generator** : **எழுத்து இயற்றி; எழுத்து உருவாக்கி** : ஒரு திரை அல்லது அச்சுப் பொறியில் எண் அல்லது எழுத்துகளை ஏற்படுத்தும் மின்சுற்று.

**character graphics** : **எழுத்து வரைகலை** : அகர வரிசை எழுத்துகளைப் போல வரைகலையை உருவாக்க சிறப்புக் குறியீடுகளை ஒன்றாகக் கோத்தல். சான்றாக, தொடரும் எழுத்து வரைகலையினைப் பயன்படுத்தி படிவங்கள், வரைபடம் மற்றும் எளிய வரைகலைகள் அச்சிடப்படுகின்றன. ஆஸ்கி (ASCII) எழுத்துகளின் பகுதியாக இவை அமைகின்றன.

**character image** : எழுத்துப் படிமம்; எழுத்து உருக்காட்சி : ஓர் எழுத்தின் வடிவில் ஒழுங்கமைக்கப்படும் துண்மிகளின் (பிட்) தொகுப்பு. ஒவ்வொரு எழுத்தின் உருவமும் செவ்வக வடிவத்தில் அமைந்த கட்டங்களுக்குள் அடங்கியுள்ளது. ஓரெழுத்தின் உயரமும் அகலமும் அதன் மூலமே நிர்ணயிக்கப்படுகின்றன.

**characteristic** : பண்பியல்புகள்.

**characater layout** : எழுத்து உரு வரை.

**character, least significant** : குறை மதிப்பெழுத்து.

**character machine** : எழுத்து எந்திரம் : ஒரு பைட்டை ஓர் எழுத்தாகக் கையாளும் எந்திரத்தைக் குறிப்பிடுகிறது.

**character map** : எழுத்து அமைபடம் : காட்சித்திரையில் உள்ள

கட்டங்களின் தொகுதி. இதில் உள்ள ஒவ்வொரு கட்டமும் ஒரு எழுத்து, எண் நிறுத்தக் குறியீடு அல்லது சிறப்பு எழுத்தைக் குறிப்பிடுகிறது.

**character mode terminal** : எழுத்துப் பாங்கு முனையம்.

**character modifier** : எழுத்து மாற்றமைப்பி.

**character, numeric** : எண்வகை எழுத்து.

**character oriented** : எழுத்து அடிப்படையிலான.

**character pattern** : எழுத்துத் தோரணி .

**character pitch** : எழுத்து இடைவெளி: ஒரு வரியில் ஒரு அங்குலத்திற்கு இத்தனை எழுத்து என்று குறிப்பிடுவது.

**character printer** : எழுத்தச்சுப் பொறி: 1. ஒரு நேரத்தில் ஒரு எழுத்தை அச்சடிக்கும் அச்சுப் பொறி. வழக்கமாகப் பயன்படுத்தப்படும் புள்ளியணி அச்சுப்பொறியும், டெய்ஸி-சக்கர அச்சுப்பொறியும் எடுத்துக் காட்டுகள். வரி அச்சுப்பொறி, பக்க அச்சுப்பொறி ஆகியவற்றோடு ஒப்பிட்டு அறிக. 2. வரைகலைப் படங்களை அச்சிடவியலாத புள்ளியணி அச்சுப்பொறிகளையும், டெய்ஸி சக்கர அச்சுப்பொறிகளையும், லேசர் அச்சுப்பொறிகளையும்கூட இச்சொல் குறிக்கிறது. இத்தகைய அச்சுப்பொறி கணினியிலிருந்து எழுத்து வடிவிலான விவரங்களைப் பெற்று அப்படியே எழுத்து வடிவில் அச்சிடும். வரைகலை அச்சுப்பொறியோடு ஒப்பிட்டு அறிக.

**character reader** : எழுத்துப் படிப்பி.

**character reader magnetic ink** : காந்த மை எழுத்துப் படிப்பி.

**character recognition** : எழுத்துணர்தல்; எழுத்தறிதல் : கணினியில் ஓர் எழுத்தை வெவ்வேறு எழுத்துருக்களில் (fonts) வெவ்வேறு பாணிகளில் (styles) (a : த : ஒ) பயன்படுத்துகிறோம். ஒரு தாளில் அச்சிடப்பட்ட எழுத்தை வருடுபொறி மூலம் வருடி கணினிக்குள் செலுத்தும்போது, கணினி அந்த எழுத்தை அடையாளம் கண்டுகொள்வதில் பிழை நேர வாய்ப்புண்டு. பிழையின்றி அறிய வேண்டுமெனில் எழுத்துகள் இந்த வடிவமைப்பில்தான் இருக்கவேண்டும் என்ற கட்டுப்பாடுகள் சில கணினி அமைப்புகளில் உள்ளன. ஆனால் சில கணினிகள், தோரணி ஒப்பீட்டு (pattern matching) தொழில்நுட்ப அடிப்படையில் அமைந்த மென்பொருளின் உதவியுடன்

எப்படிப்பட்ட வடிவமைப்பிலுள்ள எழுத்துகளையும் அடையாளம் கண்டுகொள்ளும்.

**character rectangle** : எழுத்துச் செவ்வகம் : ஓர் எழுத்தின் வடிவத்தை வரைகலை வடிவில் படப்புள்ளிகளால் குறிப்பிட எடுத்துக் கொள்ளப்படும் செவ்வகப் பரப்பு.



எழுத்துச் செவ்வகம்

**character set** : எழுத்துரு தொகுதி.

**characters per inch** : ஓர் அங்குலத்தில் எழுத்தெண்ணிக்கை : ஓர் அங்குல நீளத்தில், குறிப்பிட்ட உருவளவில் (size) அமைந்த, ஒரு குறிப்பிட்ட எழுத்துரு வடிவில் எத்தனை எழுத்துகள் இடம்பெற முடியும் என்கிற அளவீடு. இந்த எண்ணிக்கை எழுத்து வடிவின் இரண்டு பண்பியல்புகளினால் பாதிக்கப்படுகிறது. ஒன்று அதன் புள்ளி (பாயின்ட்) அளவு. அடுத்தது, அந்தக் குறிப்பிட்ட எழுத்துருவில் எழுத்துகளின் அகலம். ஒற்றையிட எழுத்துருக்களில் எழுத்துகள் சமமான அகலத்தைக் கொண்டிருக்கும். தகவுப் பொருத்தமுள்ள எழுத்துருக்களில் எழுத்துகளின் அகலம் வேறுபடும். எனவே ஓர் அங்குலத்தில் எத்தனை எழுத்துகள் என்பது சராசரியாகக் கணக்கிடப்படும். ஓர் அங்குலத்தில் எத்தனை எழுத்துகள் என்று பொருள்படும் character per inch என்பதன் தலைப்பெழுத்துக் குறும்பெயர் சிபீஐ (CPI) எனப்படுகிறது.

**character space** : எழுத்து இடவெளி.

**characters per second** : ஒரு நொடிக்கு இத்தனை எழுத்துகள் : குறைந்த வேக தொடர் அச்சுப் பொறிகளின் வெளியீட்டை அளக்கும் அலகு. CPS என்று சுருக்கிக் கூறப்படுகின்றது.

**characters, special** : சிறப்பு எழுத்துகள்.

**character string** : எழுத்துச் சரம் : எழுத்து-எண் அல்லது இரண்டும் கொண்ட சரம்.

**character style** : எழுத்தின் பாணி; எழுத்தின் அழகமைவு : *தடித்த எழுத்து, சாய்வெழுத்து, அடிக் கோட்டெழுத்து, சிறிய எழுத்து, பெரிய எழுத்து என எழுத்துகளின் பாங்கு மாறுபடு கிறது. எழுத்துரு (font) என்பதையும் எழுத்தின் பாங்காகச் சேர்ப்பது, இயக்க முறைமையையும் அந்தக் குறிப்பிட்ட மென் பொருளையும் சார்ந்ததாகும்.*

**character template** : எழுத்துப் வார்ப்படம் : *மின்னணு ஒளிக் கற்றை காட்சித் திரையில் எண்ணெழுத்துகளாக மாற்றித் தரும் ஒரு சாதனம்.*

**character terminal** : எழுத்து முனையம் : *வரைகலை திறனில் லாத காட்சித் திரை.*

**character type field** : எழுத்து வகைப் புலம் .

**character user interface** : எழுத்து வழி பயனாளர் இடைமுகம்; எழுத்தமைப் பணிச் சூழல் : *சியுஐ* - Character User Interface *என்ற தொடரின் தலைப்பெழுத் துக் குறும்பெயர். வெறும் எழுத்துகளை மட்டுமே திரை யில் காட்டவல்ல பயனாளர் இடைமுகம், கணினிப் பணிச் சூழல். வரைகலைப் பணிச் சூழலுடன் ஒப்பிட்டு அறிக.*

**character view** : எழுத்துத் தோற்றம்.

**charactron** : கேரக்ட்ரான் : *திரையில் எழுத்து அல்லது எண் எழுத்துகளையும், சிறப்பு குறி யீடுகளையும் காட்டும் சிறப்பு வகை எதிர்மின் கதிர்க் குழாய்.*

**charge** : மின்னேற்றம் : *ஒரு பொருளில் உள்ள சமநிலைப் படுத்தப்படாத மின்சக்தியின் அளவு.*

**charge back systems** : மின் கட்டண அமைப்புகள் : *இறுதிப் பயனாளர் துறைகளுக்கு செலவு களை ஒதுக்கீடு செய்யும் முறை. பயன்படுத்திய தரவு அமைப்பு மூலாதாரங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் செலவின் மதிப்பீடு செய்யப்படுகிறது.*

**charge card** : மின்னூட்ட அட்டை : *286 பீ.சி. வகைகளை உற்பத்தி செய்யும் ஆல் கம்ப்யூட்டர் நிறுவனத்தின் வன் பொருள் நினைவக மேலாளர். 286 சிப்புவை வெளியே எடுத்து மின்னூட்ட அட்டையில் பொருத்தி அதை துளையில் பொருத்தலாம்.*

**Charge Coupled Device (CCD)** : மின்னூட்டப் பிணைப்புச் சாதனம் (சிசிடி).

**charges magnetically** : காந்த முறை மின்னூட்டம்.

**Charles Babbage Institute** : சார்லஸ் பாபேஜ் இன்ஸ்டிடியூட் : வரலாற்றுக் கண்ணோட்டத்தில் தரவுப் புரட்சியை ஆராய்வதற் காக ஏற்படுத்தப்பட்ட நிறுவனம். தகவலின் வரலாறு மற்றும் தொன்மைப் பொருள்கள் பற்றிய ஆராய்ச்சிகளுக்கான மைய நிறுவனமாகத் திட்டமிட்டு ஏற்படுத்தப்பட்ட அமைப்பு.

**chart** : நிரல் படம்; வரைபடம் : செங்குத்தான அல்லது கிடை மட்டமான கோடுகளாகவோ, அல்லது பட்டையாகவோ வட்டப் படமாகவோ, தரவுவை சிறுசிறு துண்டுகளாகப் பிரித்து படமாக அமைத்துக் காட்டுதல்.

**chart chassis** : நிரல்பட அடிக்கட்டகம் : ஓர் உலோகச் சட்டம். இதன் மீது கம்பி யிழுத்தல், துளைகள் மற்றும் பிற மின்னணு தொகுப்பு களைப் பொருத்த முடியும்.

**chart of accounts** : கணக்கு களின் நிரல்படம் : பொதுப் பேரேடு கணக்கீட்டு அமைப் பில் குறிப்பிட்ட தலைப்புகள் அல்லது கணக்குகளின் எண்ணிக்கை.

**chart options** : நிரல்பட விருப்பத் தேர்வுகள்.

**chart recorder** : நிரல்பட பதிவி : பதிவேடு வைக்கும் சாதனம். பேனாவை வலது அல்லது இடது புறமாகத் திருப்பி அடியிலிருக்கும் காகிதத்தில் வரைபடங்கள் வரைவது.

**chart, system** : முறைமை நிரல்படம்.

**chart type** : நிரல்பட வகை.

**chassis** : அடிக் கட்டகம்; அடிப் பகுதி: ஒரு மின்னணு சாதனத் திற்கான கம்பிகளை இணைக் கும் வசதி அமைக்கப்பட்டுள்ள உலோக அடிப்பாகம்.

**chat** : அரட்டை : கணினி வழி யாக நடைபெறும் நிகழ்நேர உரையாடல். அரட்டையில் பங்குபெறும் ஒருவர் ஒரு வரியை விசைப் பலகையில் தட்டச்சு செய்து 'என்டர்' விசையை அழுத்தியதும், மறு முனையில் இன்னொருவரின் கணினித் திரையில் அச்சொற்கள் தெரியும். அதற்குரிய பதிலுரையை அவரும் தட்டச்சு செய்து அனுப்பலாம். இவ்வாறு உரையாடல் தொடரும். நிகழ் நேரச் சேவைகள் வழங்கும் கணினிப் பிணையங்களில் பெரும்பாலும் அரட்டை வசதி உண்டு. இணையத்தில் ஐஆர்சி (IRC) என்பது தொடர் அரட்டைச் சேவையாகும். தற்

போது இணையத்தில் குரல் அரட்டை (Voice Chat) வசதியும் உள்ளது.

**chat mode :** அரட்டைப் பாங்கு : தரவு தொடர்பு முறை பயன்படுத்துபவர்கள் இதில் செய்திகளை ஒருவருக்கொருவர் தட்டச்சு செய்து பெறலாம். ஒவ்வொரு விசையை அழுத்தியவுடன் அது அனுப்பப்பட்டு விடும்.





தேர்வுசெய் பெட்டி

**chat page :** அரட்டைப் பக்கம்.

**chat room :** அரட்டை அரங்கம்.

**cheapernet :** மலிவுப் பிணையம்.

**check :** சரிபார்ப்பு.

**check, arithmatic :** கணக்கீட்டுச் சரி பார்ப்பு.

**check bit :** சரிப்பார்ப்பு பிட் ; சரி பார்ப்புத் துண்மி: சமநிலைத் துண்மி போன்ற இரும எண் சோதனை இலக்கம்.

**check box :** தேர்வு செய் பெட்டி : ஆம் அல்லது இல்லை என்னும் பதிலைப் பயனாளரிடமிருந்து பெறப் பயன்படுத்தப்படும் ஒரு சிறிய சதுரப் பெட்டி. சிறிய பெட்டியில் எக்ஸ் அல்லது டிக் குறியீடு போட்டால் அதைத் தேர்ந்தெடுக்கிறோம் என்பதை உணர்த்தும்.

**check character :** சரிபார்ப்பு எழுத்து : ஒரு தரவு தொகுதியின் இறுதியில் சேர்க்கப்படும் எழுத்து. சோதனை செய்யப்படும்போது இதைப் பயன்படுத்துகிறோம்.

**check digits :** சரிபார்ப்பு இலக்கங்கள்: எண் வடிவ தரவு தொகுதியை அனுப்பும்போது அதனுடன் சேர்க்கப்படும்

ஒன்று அல்லது இரண்டு இலக்கங்கள். தரவு எழுதும்போதோ அல்லது அனுப்பும் போதோ ஏதாவது தவறு ஏற்பட்டால் பிழை என்பதற்கான அடையாளம் தோன்றும்.

checked objects : தேர்வு செய்த பண்பு.

checked property : சரிபார்ப்புப் பொருள்.

check, even parity : இரட்டைச் சமன் சரிபார்ப்பு.

check indication : சரிபார்ப்பு அறிகுறி : ஒரு பதிவகத்தில் 1 அல்லது 0 துண்மியை அமைத்து அதில் பிழை ஏற்பட்டதா இல்லையா என்று குறிப்பிடச் செய்தல்.

check indicator : சரிபார்ப்பு அறிகுறி : ஒரு சாதனத்தில் ஒலி அல்லது ஒளி மூலம் அதன் இயக்கத்தில் பிழை அல்லது கோளாறு ஏற்பட்டுள்ளது என்பதைக் குறிப்பிடுதல்.

check now : இப்போது சரிபார்.

check, odd parity : ஒற்றைச் சமன் சரிபார்ப்பு.

check out : சரிபார்த்து அனுப்புகை.

check, parity : சமன் சரிபார்ப்பு.

check plot : சரிபார்ப்பு வரைவு : இறுதி வெளியீட்டை அளிப்பதற்கு முன் ஒளிச் சோதனை மற்றும் திருத்துவதற்காக ஒளிக் காட்சிச் சாதனம் தானாக உருவாக்கும் ஒரு வரைவு.

check point : சரிபார்ப்பிடம் : கையால் இயக்கும்போதோ அல்லது கட்டுப்பாட்டுச் செயல் முறையிலோ ஒரு நிரலைத் தடுத்து நிறுத்தும் குறிப்பிட்ட இடம். பிழை தீர்க்கும் நிரல்களில் உதவுவதற்காக பெரும்பாலும் பயன்படுத்தப்படும்.

checkpoint / restart : சரிபார்ப்பிடம் / மீளியக்கம் : கணினி அமைப்பின் கோளாறிலிருந்து வரும்முறை. கணினி நினைவகத்தில் தரவு பதிவு செய்யப்படும்போது அங்கங்கே வைக்கப்படும் புள்ளி. கணினியில் ஏதாவது கோளாறு ஏற்பட்டால், கடைசி சரிபார்ப்பிடத்திலிருந்து மீண்டும் துவக்கலாம். கடைசி சரிபார்ப்பிடத்திற்குப் பிறகு நுழைக்கப்பட்டவை எல்லாம் தொலைந்து போய்விடும்.

check problem : சரிபார்ப்புச் சிக்கல் : ஒரு கணினி அல்லது கணினி நிரல் சரிவர இயங்குகிறதா என்பதை முடிவு செய்வதற்காக செயற்கையாக உருவாக்கப்பட்ட சிக்கல்.

check register : சரிபார்ப்புப் பதிவேடு

**check spelling** : எழுத்துப் பிழையறி.

**check sum** : சரிபார்ப்புக் கூட்டுத் தொகை : *சோதனைக்காகப் பயன்படுத்தப்படுகின்ற துண்மிகள் அல்லது எண்களின் கூட்டுத் தொகை. தானாக ஏற்படுத்தப்படும் விதிகளின்படி கூட்டல் நடைபெறுகிறது. தரவு சரியாக இருக்கிறதா என்பதை சோதிக்கப் பயன்படுகிறது.*

**check, validity** : செல்லுபடிச் சரிபார்ப்பு.

**chemical collissions** : வேதி மோதல்கள் : *பிபிசி அக்கார்ன் அல்லது இந்திய எஸ்சிஎல் யூனிக்கார்ன்-க்கான ஒரு கல்வி மென்பொருள். வரைகலை முறையில் வேதி கலவைகளில் ஏற்படும் எதிர் வினைகளின் பல் வேறு தன்மைகளை இது கூறும்.*

**chicken-and-egg-loop** : கோழியா முட்டையா மடக்கு.

**chicklet keyboard** : சுண்டு விசைப்பலகை : *விரைவாகத் தட்டச்சு செய்யமுடியாத அளவில் சிறிய, சதுர விசைகள் உள்ள விசைப்பலகை.*

**chief information officer** : தலைமை தரவு அலுவலர் : *நீண்ட கால தரவு திட்டமிடல் மற்றும் உத்தியில் கவனம் செலுத்தி ஒரு நிறுவனத்தின் தரவு தொழில் நுட்பப் பணிகள் அனைத்தையும் மேற்பார்வையிடும் ஒரு மூத்த நிர்வாகப் பதவி.*

**chief programmer** : தலைமை நிரலர் : *ஒரு நிரலர் குழுவுக்குத் தலைவராக நியமிக்கப்பட்டவர். திட்டம் முழுவதும் வெற்றிகரமாக முடிக்கப்பட வேண்டும் என்பதற்காக முழுப் பொறுப்பையும் ஏற்றிருப்பவர்.*

**chief programmer team** : தலைமை நிரலர் குழு : *கணினி நிரலாக்கத்துக்கு ஏற்படுத்தப்பட்ட ஒரு அமைப்பு. ஒரு தலைமை நிரலர், ஒரு மாற்று நிரலர், ஒரு நிரலர் நூலகர் / செயலாளர் உள்ளிட்ட குழுவின் தலைமையை ஒரு தொழில் நுட்ப நிரலர் ஏற்றிருப்பார். தேவைப்பட்டால், இரண்டு அல்லது மூன்று கூடுதல் உறுப்பினர்கள் சேர்க்கப்படலாம் அல்லது வல்லுநர்கள் ஆலோசனை பெறலாம். நிரலர் எழுதுவதை ஒரு தனியார் கலையாகக் கருதாமல் அதை ஒரு பொறியியல் தொழிலாக மாற்றுவதும், திறமைமிக்க படைப்பாளி தன் படைப்புத் திறனில் கவனம் செலுத்தி ஊக்கம் அளிப்பதும் இதில் முக்கிய கோட்பாடுகளாகும்.*

**child process** : **துணைச் செயலாக்கம்:** ஒரு கணினி செயலாக்கத்தின் கட்டுப்பாட்டில் இன்னொரு செயலாக்கத்தைத் தொடங்குதல். ஒரு நிரலின் கட்டுப்பாட்டில் இன்னொரு நிரலை இயக்குதல்.

**child programme** : **துணைநிலை நிரல்** : ஒரு நிரலின் உள்ளேயே இயக்கப்பட்டு, அதன் இயக்கம் தீர்ந்தவுடன் தனியாக செயல்படும் ஒரு நிரல். முதன்மை நிரலினால் அழைக்கப்பட்டு நினைவகத்தில் ஏற்றப்படும் இரண்டாம் நிலை அல்லது துணைநிலை நிரல்.

**child record** : **சேய்ஏடு; கீழ்நிலை ஏடு** : வரிசைக்கிரம தரவுகள் அமைப்பில் இரண்டு அடுத்தடுத்த நிலையிலுள்ள பதிவேடுகளில் கீழ்நிலை ஏடு. ஏற்கெனவே இருக்கும் பெற்றோர் ஏடு ஒன்று அல்லது இரண்டுக்கு மேற்பட்ட பதிவேடுகளின் உள்ளடக்கங்களைச் சார்ந்து உருவாக்கப்படும் தரவு பதிவேடு.

**chimes of doom** : **சாவு மணி; இறுதி மணியோசை** : மெக்கின்டோஷ் கணினிகளில், மிகமோசமான பழுது ஏற்பட்டு செயல்படாத நிலையேற்படும்போது தொடர்ந்து மணியொலிக்கும்.

**chip** : **சில்லு; சிப்பு** : சிப்பு ஏராளமான மின்னணுச் சுற்றுகளைக் கொண்டுள்ள ஒரு சிறிய



சில்லு (அ) சிப்பு

சாதனம். ஒருங்கிணைக்கப்பட்ட மின்சுற்றுகள் வடிவத்தில் மின்னணு பாகங்கள் மெல்லிய சிலிக்கான் தகட்டின்மீது வைக்கப்படுகின்றன. கணினியை உருவாக்குபவை சிப்புகளே. கணக்கிடல், நினைவகம், கட்டுப்பாடு போன்ற பல்வேறு பணிகளை அவை செய்கின்றன.

**chipcard** : **சிப்பு அட்டை; சில்லு அட்டை.**

**chip carrier** : **சிப்பு சுமப்பி** : சிப்பு செய்வதற்கு ஈயம் போன்ற உலோகத்தில் அதன் அச்சை ஏற்றுதல். எல்லா திசைகளிலும் இணைப்பிகள் உள்ள சிப்புப் பொதிவுகள்.

**chip family** : சிப்புக் குடும்பம் : தொடர்புடைய சிப்புகளின் குழு. முதலாவது சிப்பு விலிருந்து ஒவ்வொரு சிப்பும் உருவாக்கப்படுகிறது.

**chipper** : சிப்பாக்கி; சில்லு ஆக்கி.

**chips** : சிப்புகள்; சில்லுகள்.

**chip select** : சிப்புத் தேர்வு : சிப்புப் பெட்டியிலிருந்து வெளியே வரும் முனை. சிப்புவிற்கோ அல்லது சிப்புவிலிருந்தோ தரவுகளை எழுதுவதையும், படிப்பதையும் இது செய லற்றதாக்கும்.

**chip set** : சிப்புத் தொகுதி : ஒரு பணியைச் செய்வதற்காக சேர்ந்து இயங்க வடிவமைக்கப் பட்டுள்ள சிப்புகளின் குழு.

**chip, silicon** : சிலிக்கான் சிப்பு; சிலிக்கான் சில்லு.

**choice** : தேர்வு : ஒரு டாஸ் (DOS) கட்டளை. அது பயனாளர் விசையழுத்தக் காத்திருக்கிறது. ஆணையின் உள்ளேயே ஏற்றுக் கொள்கிற விசைகளின் பட்டி யல் குறிப்பிடப்படுகிறது.

**choose** : தேர்ந்தெடு : சாளரத் தில் ஒரு செயலைச் செய் வதற்குச் சுட்டி அல்லது விசைப் பலகையை தேர்ந்தெடுப்பது. பட்டியலில் உள்ளபடி கட்டளைகளைத் தேர்ந்தெடுத்து பணிகள் செய்யப்படுகின்றன. பயன்பாடுகளை இயக்க 'ஐக்கான்' (icons)களைத் தேர்ந் தெடுக்கலாம்.

**chooser** : தேர்பவர் : மெக்கின் டோஷ் மேசை துணைப்பொருள், அச்சுப்பொறி, ஃபைல் சர்வர் அல்லது கட்டமைப்பு மோடம் போன்றவற்றை தேர்ந்தெடுக்க அனுமதிப்பது.

**chop** : நீக்கு ; வெட்டு : தேவைப் படாத தரவுவை வெளியேற்றுதல்.

**chorus** : குழு ஒலி.

**chroma** : நிறமி : வண்ணங்களை ஏற்படுத்த உதவும் நீர்மம், நிழல், சாயல் போன்றவை.

**chromaticity** : நிறப்பொலிமை : வண்ணத்தின் தூய்மை மற்றும் மீதூன்றும் அலைநீளம் இவற்றை அளக்க முடியும் என்பதுடன் பிரகாசம் எவ்வள வாயினும் அதன் நீர்மை மற்றும் சாயலுக்கு ஏற்றதாக அமையும்.

**chrominnance** : நிறப்பொலிவு : வண்ணத்தைக் கட்டுப்படுத்தும் ஒளிக்காட்சி சமிக்கையின் பகுதிகள்.

**chunking** : தொகுத்தல் : இரும எண் முகவரிகளை பதினறும இலக்கத்துக்கு மாற்றும் முறை. 0011 1100 என்ற இரும எண்ணை

பதினறும முறையில் 3C என்று மாற்றலாம்.

**chunking along : தொகுத்துச் செல்லல் :** நீண்ட நேரம் செல்லும், நம்பிக்கைமிக்க நிரலின் செயல்பாட்டைக் குறிப்பிடும் குழுக் குறிசொல்.

**churing : கடைதல்.**

**churn rate : உதிரும் வீதம்; குறையும் வீதம்; ஒதுங்கு வீதம் :** செல்பேசி பயன்படுத்தும் வாடிக்கையாளர்கள், நிகழ்நேர வணிகத்தில் ஈடுபடும் வாடிக்கையாளர்கள் மற்றும் இது போன்றோர் அடிக்கடி தங்கள் சந்தாவைப் புதுப்பிக்காமல் விட்டுவிடுவர். இதனால் அக் குறிப்பிட்ட நிறுவனத்தின் வாடிக்கையாளர்கள் எண்ணிக்கை 2 முதல் 3 விழுக்காடு வரை அவ்வப்போது குறைந்துவிட வாய்ப்புண்டு. இந்த எண்ணிக்கை அதிகமாகும் எனில் அந்நிறுவனத்துக்கு புதிய செலவுகளை உருவாக்கும். விளம்பரம் மற்றும் பல நடவடிக்கைகள் மூலம் புதிய வாடிக்கையாளர்களை உருவாக்க நிறையப் பணம் செலவழிக்க வேண்டும்.

**.ci : .சிஐ :** இணைய தள முகவரியில் ஐவரி கோஸ்ட் நாட்டைச் சேர்ந்த தளத்திற்கான பெரும் புவிபிரிவுக் களப் பெயர்.

**CICS : சிஐசிஎஸ் :** வாடிக்கையாளர் தகவல் கட்டுப்பாட்டு அமைப்பு எனப் பொருள்படும் Customer Information Control System என்பதன் குறும்பெயர். தொலைவிலிருந்து செயலாக்கம் புரியும் முனையங்களில் அதிகம் பயன்படுவது.

**CIM : சிஐஎம் :** கணினி உள்ளீட்டு நுண்படலம் எனப் பொருள்படும் Computer Input Microfilm என்பதன் குறும்பெயர்.

**cipher : சைஃபர்; மறையெழுத்து :** கணினி பாதுகாப் பாகத் தகவலைக் குறிப்பிட உதவும் இரகசிய முறை.

**cipher system : மறையெழுத்து முறை.**

**cipher text : மறையெழுத்து உரை.**

**CIPS : சிஐபீஎஸ் :** கனடியத் தரவு செயலாக்க கழகம் எனப் பொருள்படும் Canadian Information Processing Society என்பதன் குறும் பெயர்.

**circle : வட்டம் :** ஒளிக்காட்சி முகப்பில் வட்டங்களை வரைவதற்கான பேசிக் / கியூபேசிக்கில் உள்ள ஒரு கட்டளை.

**circuit : மின்சுற்று; மின் இணைப்பு :** 1. மின்னணுக்

களைக் கட்டுப்பாடான முறையில் செலுத்துவதற்காக வடிவமைக்கப்பட்ட பாதை. 2. மின் சக்தி செல்லக்கூடிய கடத்திகள் மற்றும் அது தொடர்பான மின் சாதனங்களின் அமைப்பு. 3. இரண்டு அல்லது கூடுதல் இடங்களிடையே ஏற்படும் தரவு தொடர்பு இணைப்பு.

**circuit analyzer : மின்சுற்று பகுப்பாய்வி** : ஒரு மின்னணு மின் சுற்று செல்லத்தக்கதா என்று சோதித்துக் கூறும் சாதனம்.

**circuit, AND : உம்மை மின்சுற்று.**

**circuit board : மின்சுற்று அட்டை** : தொடர்ச்சியான நுண் சிப்புகளையும், பல்வேறு மின்னணுச் சாதனங்களையும் ஏற்றிப் பொருத்தக்கூடிய அட்டை. அட்டையின் மேற்பரப்பில் மின் சுற்று அமைப்புகள் அச்சிடப் படுகின்றன. printed circuit board என்றும் அழைக்கப்படுகிறது.

**circuit breaker : மின்சுற்று துண்டிப்பி** : அதிக மின்னோட்டம் ஏற்படுவதை உணர்ந்து மின்சுற்றைத் துண்டிக்கும் பாதுகாப்புச் சாதனம். ஃப்யூஸ் போல் அல்லாது, இதை மீண்டும் சரி செய்ய முடியும்.

**circuit capacity : மின்சுற்றுக் கொள்திறன்** : ஒரே நேரத்தில் ஒரு மின்சுற்று கையாளக் கூடிய வழித் தடங்களின் எண்ணிக்கை.

**circuit card : மின் சுற்று அட்டை.**

**circuit, control : கட்டுப்பாட்டு மின்சுற்று.**

**Circuit Data Services : மின் சுற்று தரவு சேவைகள்** : மின்சுற்று தொடர்பிணைப்புத் தொழில்நுட்ப அடிப்படையில்,



மின்சுற்று அட்டை

மடிக்கணினி மற்றும் செல்பேசி வாயிலாக அதிவேக தரவு பரிமாற்றத்தை வழங்குதல்.

**circuit diagram** : மின்சுற்று வரிப் படம்.

**circuit elements** : மின்சுற்று உறுப்புகள்; மின் இணைப்புக் கூறுகள்.

**circuit, leastable** : ஈருறுதி மின் சுற்று.

**circuit, NOR** : இல் அல்லது மின்சுற்று.

**circuitry** : மின்சுற்றுத் தொகுதி : அமைப்புகளுக்கு உள்ளேயும், இடையிலும் ஏற்படும் இணைப்புகளை விவரிக்கும் மின்சுற்றுகளின் தொகுதி.

**circuit switching** : மின்சுற்று இணைப்பாக்கம் : ஒரு மின் சுற்றின் அகலப் பாதையை, இணைப்பு நிறுத்தப்படும்வரை செயல்படுத்தும், தரவு தொடர்பு கட்டமைப்பின் இரண்டு முனைகளுக்கிடையிலான இணைப்பு.

**circuit, virtual** : மெய்நிகர் மின் சுற்று.

**circular list** : வட்டப் பட்டியல்; சுழல் பட்டியல்: தொடுக்கப் பட்ட பட்டியல். பெரும்பாலும் ஒன்றன்பின் ஒன்றாய்த் தொடுப்பது. இதில் கடைசி உறுப்புக்கும் முதல் உறுப்புக்கும் இணைப்பு ஏற்படுத்தப்பட்டிருக்கும். Ring (வளையம்) என்றும் அழைக்கப்படுகிறது.

**circular queue** : வட்டச் சாரை; சுழல் சாரை : தரவுகளை ஒரு முனையில் நுழைத்து மற்றொன்றில் எடுக்கின்ற ஒரு வகை தரவுக் கட்டமைப்பு. சாரையின் இருபுறமும் தொடர்ந்து மாறிக் கொண்டே இருக்கும். சுட்டுகள் இரண்டும் நடப்பின் 'முன்' பகுதியையும், 'பின்' பகுதியையும் கவனித்துக் கொண்டே இருக்கும்.

**circular reference (CIR)** : சுழல் குறிப்பு : விரிதாளில் ஒரு கலத்தில் அதனுடைய முகவரியையே வாய்பாட்டின் பகுதியாகப் பயன்படுத்தும் வாய்பாடு. சான்றாக கலம் IV25 -இன் வாய்பாடு @sum (IV12:IV25) என்று படிக்கப்படும். இது தன்னைத்தானே தொடர்ந்து கூட்டிக் கொண்டு மிகப்பெரிய எண்ணை உருவாக்கும்.

**circular shift** : சுழல் நகர்வு : ஒரு முனையிலிருந்து வெளியேற்றப் படும் துண்மிகள் அல்லது எழுத்துகள் பதிவகத்தின் எதிர் முனையில் சென்று சேரும்படியான இடமாற்றும் செயல்

முறை. End around shift என்றும் சொல்லப்படுகிறது.

**circulating register** : **சுழற்சிப் பதிவகம்.**

**circulations** : **சுழற்சிகள்.**

**CISC architecture** : **சிஸ்க் கட்டுமானம்** : சிக்கல் துணைத் தொகுதி கணிப்பணிக் கட்டுமானம் என்று பொருள்படும் Complex Instruction Set Computing Architecture என்பதன் குறும்பெயர்.

**CIU** : **சிஐயு** : கணினி இடைமுக அலகு எனப் பொருள்படும் Computer Interface Unit என்பதன் குறும்பெயர்.

**.ck** : **.சிகே** : இணைய தள முகவரியில், குக் தீவின் தளங்களைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**.cl** : **.சிஎல்** : (.cl) : இணைய தள முகவரியில், சிலிநாட்டுத் தளங்களைக் குறிக்கும் பெரும் புவிபிரிவுக் களப் பெயர்.

**cladding** : **மூடுதல்** ; ஒளி இழைகளில், ஒளி இழை சாதனத்தின் இரண்டாவது அடுக்கு, ஒளி அலையை அந்த சாதனத்தின் மையப் பகுதிக்கு அனுப்பும் முறை.

**clamping ring** : **பிடிக்கும் வளையம்** : வளையத்திற்குள் நெகிழ் வட்டைத் தள்ளி விடும் 5.25" நெகிழ்வட்டு இயக்கக் மையக் கூம்பின் ஒரு பகுதியாகவே இது இருக்கும்.

**clari newsgroups** : **கிளாரி செய்திக் குழுக்கள்** : இணையத்தில் அமைக்கப்பட்டுள்ள ஒரு முக்கிய செய்திக்குழு. கிளாரி நெட் செய்திக் குழுவை தரவு தொடர்பு நிறுவனம் பராமரித்து வருகிறது. ராய்ட்டர்ஸ் (Reutuers), யுனைட்டட் பிரஸ் இன்டர் நேஷனல் ஒயர் சர்வீசஸ், ஸ்போர்ட்ஸ் டிக்கர், காமர்ஸ் பிசினஸ் டெய்லி மற்றும் பிற செய்தி நிறுவனங்களிடமிருந்து பெறப்பட்ட செய்திக் கட்டுரைகளை இதில் காணலாம். மற்ற செய்திக் குழுக்களைப் போலன்றி, கிளாரிநெட் செய்திக் குழுவில் உறுப்பினராகக் கட்டணம் உண்டு. இச்சேவையைக் கட்டணம் செலுத்தி வாங்கியுள்ள இணையச் சேவை நிலையங்கள் மூலமாகவே இச்செய்திக் குழுவை அணுக முடியும்.

**clarion** : **கிளாரியன்** : கிளாரியன் மென்பொருள் கார்ப்பரேஷனின் பீ.சி. பயன்பாட்டு உருவாக்க மென்பொருள் Professional Development என்பதே முக்கிய தயாரிப்பு. இதில் பாஸ்கல் போன்ற

நிரலாக்க மொழியும், டிபி எம்எஸ் மற்றும் புரோட்டோ டைப்பிங் ஜெனரேட்டரும் அடக்கம். Personal Developer என்பது நிரலர் அல்லாத வர்களுக்கு.

**Claris CAD : கிளாரிஸ் கேட் :** கிளாரிஸ் கார்ப்பரேஷனிட மிருந்து மெக்கின்டோஷுக்காக உருவான முழுத்தன்மையுள்ள இரு பரிமாண "கேட்" மென் பொருள் பயன்படுத்துவதற்கு எளிது.

**CLASS[1] : கிளாஸ்[1] :** Computer Literacy And School Studies Project என்பதன் குறும்பெயர். இந்திய அரசின் NCERT நடத்திய திட்டப்பணி.

**class[2] : கிளாஸ்[2] ; இனக்குழு வகுப்பு :** பொருள்நோக்கு நிரலாக்கத்தில், தரவுக் கூறு களும், அவற்றை கையாளும் வழிமுறைகளும் அடங்கிய ஒரு புதிய தரவினத்தின் வரையறை, ஓர் இனக் குழுவைச் சார்ந்த இனப் பொருள்களை உருவாக்கி நிரல்களில் கையாளப்படும்.

**class and objects : இனக்குழுவும் இனப் பொருட்களும்.**

**Class A network : ஏ-பிரிவு பிணையம் :** 16,777,215 புரவன் (Host) கணினிகள் வரை இணைக்கத்தக்க ஓர் இணையப் பிணையம். ஏ-பிரிவு பிணை யங்கள், ஒரு பிணையத்தை அடையாளங்குறிக்க ஐபீ (IP) முகவரியின் முதல் எண்மியைப் (பைட்) பயன்படுத்திக் கொள் கிறது. முதல் துண்மியை (பிட்) சுழியாக (0) மாற்றி விடும். புரவன் கணினி கடைசி மூன்று எண்மிகளால் குறிக்கப்படும். ஏ-பிரிவு முகவரியிடல் தற் போது 128 பிணையங்கள்வரை ஏற்றுக் கொள்கிறது. மிகச்சில பிணையங்களையும் ஆனால் அதிக எண்ணிக்கையிலான புர வன் கணினிகளையும் கொண்ட மிகப்பெரிய அரசு மற்றும் கல்வி நிறுவனங்களின் இணைய தளங்களுக்கு ஏ-பிரிவு முகவரி முறை ஏற்றது.

**class category : இனக்குழு வகைப் பிரிவு :** பொருள்நோக்கு நிரலாக்கத்தில், குறிப்பிட்ட இனக்குழுக்களின் தொகுப்பு. சில இனக்குழுக்கள் மற்ற வற்றுக்கு தெரியும். மற்றவை மறைக்கப்பட்டிருக்கும்.

**class hierarchy : இனக்குழுப் படிநிலை; வகுப்பு தொடர்முறை.**

**classic style : மரபுப் பாணி.**

**classifications : வகைப்படுத்து தல்கள் :** கணினிகளை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். இலக்கமுறை, ஒப்புமை மற்றும் கலப்பினம்.

**classify** : வகைப்படுத்து : தரவுகளை வகை வாரியாகப் பிரித்தல் அல்லது ஒத்த தன்மை களை உடையனவற்றை ஒரே வகையில் சேர்த்தல்.

**classless interdomain routing : பிரிவிலாக் களங்களுக்கிடையே திசைவித்தல்** : இணையத்தில் உயர்நிலை திசை செலுத்து அட் டவணைகளின் உருவளவைச் சிறிதாக்க, ஒருங்கிணைப்புச் செயல் தந்திரத்தைப் பயன்படுத் தும் ஒரு முகவரி அமைப்பு முறை. முதன்மை திசைவிகள் (Routers) ஏந்திச் செல்லும் தரவு களின் அளவைக் குறைக்கும் பொருட்டு, பல்வேறு திசை வழிகள் குழுக்களாகப் பிரிக்கப் படுகின்றன. இந்தத் திட்ட முறை செயல்பட இதனை ஏற்றுக் கொள்ளும் திசைவித்தல் நெறிமுறைகளைப் பயன்படுத்த வேண்டும். எல்லை நுழை வாயில் நெறிமுறை (Border Gate way Protocol-BGP)யின் பதிப்பு 4 மற்றும் ஆர்ஐபீயின் பதிப்பு 2 (RIPV.2) இவற்றுள் சில. இத் திட்டமுறையின் தலைப்பெழுத் துக் குறும்பெயர் CIDR ஆகும்.

**class library : இனக்குழு நூலகம்** : மூன்றாம் நபர்கள் கொடுக் கின்ற பொருள் நோக்கு நிரலாக் கத்துக்கான இனக்குழுக்களின் தொகுப்பு.

**class methods** : வகுப்பு வழிமுறை கள்; இனக்குழு வழிமுறைகள்.

**class module** : வகுப்புக் கூறு; இனக்குழு கூறு.

**class path** : வகுப்புப் பாதை; இனக்குழுப் பாதை : ஜாவா மொழியில் நூலக இனக் குழுக் களைச் சேமித்து வைத்துள்ள கோப்பகத்தைக் குறிக்கும்.

**class structure : இனக்குழு கட்டமைப்பு** : ஒரு அமைப்பின் வரிசை முறை. செங்குத்துக் கோடுகள் இக்குழுக்களையும், ஆரங்கள் இனக்குழுக்களுக்குள் உள்ள உறவு முறைகளையும் காட்டும் வரைபடம். இனக்குழு வரைபடத் தொகுதியின் மூலம் ஒரு கணினி அமைப்பின் வகுப்பு வரைபடத்தைக் குறிப்பிடலாம்.

**class variable : இனக்குழு மாறி** : ஓர் இனக்குழுவின் பண்பு கூறு கள் ஒரு இனக்குழுவின் மாறி கள் கூட்டாக அதன் வடி வமைப்பை உண்டாக்குகின்றன. ஓர் இனக்குழுவில் உருவாக்கப் படும் அனைத்து இனப்பொருள் களுக்கும் இனக் குழு மாறி பொதுப்பண்பாக விளங்குகிறது.

**Claud P. Shannon : கிளாட் பி. ஷானான்** : அமெரிக்காவின் எம்ஐடீயில் படித்த பட்டதாரி மாணவன். இணைப்பாக்க

(ஸ்விட்சிங்) மின்சுற்றுகளின் முதல் தலைமுறையை விவரிக்க பூலியன் தருக்க இயற்கணிதத்தைப் பயன்படுத்தியவர்.

**clean boot : தூய இயக்கம் :** இயக்க முறைமையின் குறைந்த எண்ணிக்கையிலான கோப்புகளின் துணைகொண்டு கணினியை இயக்கி வைக்கும் முறை. கணினிச் செயல்பாட்டில் ஏற்பட்ட பழுதினைக் கண்டறிய இம்முறை பயன்படுகிறது. கணினியில் செயல்படுத்திய ஒரு குறிப்பிட்ட மென்பொருளின் காரணமாகத்தான் சிக்கல் ஏற்பட்டது என்பதைப் பிரித்தறிய முடியும்.

**cleaning disk : தூய்மை வட்டு.**

**clean install : தூய நிறுவுகை; முழு நிறுவுகை :** கணினியில் ஏற்கெனவே நிறுவப்பட்டுள்ள ஒரு மென்பொருளை மீண்டும் நிறுவும்போது, முன்பே நிறுவப்பட்டுள்ள கோப்புகளை நிறுவாமல் விட்டுவிடும். ஒரு மென்பொருள் செயல்பாட்டில் சிக்கல் நேரும்போது, இவ்வாறு மறு நிறுவுகை செய்வது பயன் தராது. முன்னால் நிறுவிய போது இருந்த பயன்பாட்டு அல்லது முறைமைக் கோப்புகள் எதுவும் இல்லாத வகையில் மறுநிறுவுகை செய்ய வேண்டும். இதன் மூலம் குறிப்பிட்ட மென் பொருளினால் ஏற்பட்ட சிக்கல் தீர வாய்ப்புண்டு.

**clean room : தூய்மையான அறை :** கணினிக் கருவியை உற்பத்தி செய்யப் பயன்படும் பகுதி. இதில் நுழைவதற்குக் கட்டுப்பாடு, சுகாதாரத்திற்குத் தனிக்கவனம், சிறப்பு குளுகுளு வசதி, காற்றைத் தூய்மைப்படுத்தும் அமைப்பு போன்றவை அமைந்திருக்கும்.

**clear : அழி ; துடை :** காட்சித் திரையில் உள்ளவற்றைத் துடைக்கும் விசைப் பலகையின் பணி.

**clear/delete/remove : அழி/நீக்கு/அகற்று.**

**clear down : துடைத்தெறி.**

**clearing : துடைத்தல் ; அழித்தல்; நீக்குதல் :** பதிவகம், சேமிப்பிடம், அல்லது சேமிப்பு அலகுகளில் உள்ள தகவலை வெளியேற்றி பூஜ்யங்கள் அல்லது வெற்றிடங்களால் நிரப்புதல்.

**Clear key : துடைக்கும் விசை; விலக்கு விசை :** சில விசைப் பகுதிகளில் எண்முறை விசைப் பலகையின் மேல்பக்க இடது மூலையில் உள்ள விசை. நடப்பில் தெரிவு செய்த

பட்டியலைத் துடைக்கவோ நடப்பில் தெரிவு செய்ததை நீக்கவோ பயன்படும்.

**clear memory : நினைவகம் துடை :** குறிப்பிலா அணுகு நினைவகம் (RAM) மற்றும் வன்பொருள் பதிவகங்கள் அனைத்தையும் பூஜ்யம் அல்லது வெற்றிட நிலைக்கு மீண்டும் அமைத்தல். கணினியை 'ரிபூட்' செய்தால் நினைவகம் துடைக்கப்படலாம் அல்லது துடைக்கப்படாமல் போகலாம். ஆனால், கணினியை நிறுத்தி மீண்டும் துவக்கினால் நினைவகம் நிச்சயமாக காலியாகும்.

**clear method : துடைப்பு வழிமுறை.**

**clear outline : சுற்றுக்கோடு நீக்கு.**

**clear print area : அச்சுப் பரப்பெல்லை நீக்கு.**

**clear request packet : துடைத்தெறி வேண்டுகோள் பொதி.**

**click : சொடுக்கு :** சுட்டியின் (மௌஸ்) பொத்தானை அழுத்தும் முறை.

**clicking : சொடுக்குதல் :** சுட்டியின் (Mouse) மேல் பொத்தானை அழுத்துதலைக் குறிப்பிடும் ஒரு சொல்.

**click speed : சொடுக்கு வேகம் :** பயனாளர் சுட்டியின் மேலுள்ள பொத்தானை அல்லது வேறு சுட்டும் சாதனத்தை முதலாவது தடவை அழுத்தியதற்கும் இரண்டாவது தடவை அழுத்தியதற்கும் இடையிலுள்ள எந்த குறுகியகால இடைவெளி, இரட்டைச் சொடுக்காக (double click) எடுத்துக் கொள்ளப்படுமோ, அந்தக் கால அளவு, சொடுக்கு வேகம் எனப்படும். இரண்டு ஒற்றைச் சொடுக்குகளாக எடுத்துக் கொள்ள இயலாததாக ஆக்கும் விரைவான கால இடைவெளி.

**click stream : சொடுக்குத் தாரை :** வலைத்தளம் ஒன்றில் ஒன்றைத் தேடும்போது பயனாளர் செல்லும் வழி. வலைப்பக்கத்தில் செய்யப்படும் ஒவ்வொரு தனித் தனித் தேர்வும் தாரையில் ஒரு சொடுக்கைச் சேர்த்துவிடும். தேவையானதைக் கண்டுபிடிக்க இயலாமல் மேலும் பயனாளர் சொடுக்குத் தாரையில் போவாரானால் அவர் வேறு வலைத் தளத்துக்குத் திசைமாறிச் செல்லக் கூடும். பயன்படுத்தும் போக்குகளை ஆய்ந்தால் வலைத் தளம் உருவமைப் போர் இணக்கமான தள அமைப்புகள், இணைப்புகள், தேடு வசதிகள் போன்றவற்றை வழங்க முடியும்.

**client : கிளையன்; வாடிக்கையாளர் :** 1. வன்பொருளுக்கும்

மென்பொருளுக்கும் இச்சொல் பயன்படுத்தப்படுகிறது. ஒரு வழங்கன் (server) கணினியுடன் இணைத்துக்கொண்டு செயல் படும் ஒரு கிளைக் கணினி அல்லது ஒரு வழங்கன் மென் பொருளுடன் தொடர்பு ஏற் படுத்திக் கொண்டு செயல்படும் ஒரு கிளை அல்லது உறவு மென் பொருள் (எ.டு.) மின்னஞ்சல் கிளையன். 2. முறைமை பகுப் பாய்வுக்காக (system analysis) ஒப்பந்தம் செய்யப்படும் தனி நபர் அல்லது ஒரு நிறுவனம்.

**client application :** கிளையன் பயன்பாட்டுத் தொகுப்பு.

**client computer :** கிளையன் கணினி; பிணையத்தில் இணைக்கப்பட்டுள்ள கிளைக் கணினி.

**client error :** வாடிக்கையாளர் பிழை; வாடிக்கையாளர் தவறு; கிளையன் பிழை : கட்டளை ஒன்றைப் பொருள் கோள் செய் வதில் உள்ள சிரமத்தின் விளை வாக அல்லது சேய்மை புரவன் கணினியுடன் சரிவர இணைக்க இயலாமையின் விளைவாக எழும் சிக்கல்.

**client/server :** கிளையன் / வழங் கன் : கேட்கும் கணினி வாடிக் கையாளராகவும், கொடுக்கும் எந்திரம் வழங்குபவராகவும் உள்ள கட்டுமான அமைப்பு. வழங்கன் பயன்பாட்டுச் செயல் பாடுகளைச் செய்ய, வழங்கன் தரவுத் தளத்தை வைத்திருந்து தேவையான தரவுகளை வழங் கும். ஒன்று மற்றொன்றிலிருந்து தரவுகளைக் கேட்டுப் பெறலாம்.

**client / server protocol :** கிளை யன் / வழங்கன் நெறிமுறை : ஒரு கட்டமைப்பில் ஒரு பணி நிலையத்திற்கும் (கிளையன்) வழங்கனுக்கும் இடையே வேண்டு கோள்களுக்கான அமைப்பை வழங்கும் தரவு தொடர்பு நெறிமுறை. ஓஎஸ்ஐ (OSI) மாதிரியத்தில் 7 வது அடுக்கை இது குறிக்கும்.

**client - server relationship :** கிளையன்-வழங்கன் உறவுமுறை.

**client-server system :** கிளை யன்/வழங்கன் முறைமை.

**client side image maps :** கிளையன் பக்க படிமப் பதிவீடு கள் : வலைத் தளப் பக்கக் கிளையன் (எ.டு. வலை உலாவி) தெரிவு செய்ய உதவும் சாதனம். இதன்மூலம் ஒரு படி மத்தின் பல பகுதிகளைச் சுட்டி மூலம் சொடுக்கி விருப்பத் தேர்வின்படி பயனாளரால் தெரிவு செய்யப்பட்டவற்றைக் காட்டலாம். சின்னத்தைச்

சொடுக்கி பட்டியலில் விரும்பிய படங்களைப் பார்ப்பதை ஒத்தது. தொடக்க காலத்தில் (1993) படிமங்களை வலைத் தளத்தில் நடைமுறைப்படுத்தியது போன்று கிளையன் பக்க படிமத்தை அனுப்ப வலை வழங்களை ஒருங்கிணைக்காது. ஆனால் செயல்பட வைக்கும். பொதுவாக பதிலீட்டு வேகத்தை மேம்படச் செய்யும்.

**clients/server architecture : கிளையன்/வழங்கன் கட்டுமானம்.**

**clik art : கிளிக் கலை :** கணினியால் உருவாக்கப்படும் ஆவணங்களில் பயன்படுத்துவதற்கும் எடுத்துக்கொள்வதற்கும் தயாராக உள்ள ஓவியங்கள் மற்றும் படங்களின் பட்டியல்.

**CLIP : க்ளிப் :** குறிமுறை மொழித் தரவு செயலாக்கம் எனப் பொருள்படும் Coded Language Information Processing என்பதன் குறும்பெயர். ஊடு கதிர்களை எக்ஸ்ரேயில் சேர்ப்பதற்கு கதிரியக்க மருத்துவர்கள் பயன்படுத்தும் ஒரு திட்டம்.

**clip art : துணுக்குப்படம்; நறுக்குப் படம் :** வெட்டிப் பயன்படுத்தக்கூடிய வரைகலைப் படம். வரைகலை மென்பொருள் பயன்பாடாக அளிக்கப்படுவது. இதில் கணினி உருவாக்கும் கலைப் பொருட்கள் உள்ளன. சான்றாக, உருவங்கள், அறிவிப்புப் படங்கள், விலங்குகள், கருத்துப் படங்கள் போன்றவை. துணுக்குப் படத்திலிருந்து ஒன்றை எடுத்து பின்னர் பயன்படுத்துவதற்காக நகல் எடுக்கலாம்.

**clipboard : இடைநிலைப் பலகை; துணுக்குப் பலகை; நறுக்குப் பலகை :** ஒரு கோப்பிலிருந்து மற்றொரு கோப்புக்கு மாற்றி அனுப்பப்படும் தரவுகளைச் சேமித்து வைப்பதற்காக வென்றே ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள கணினியின் நினைவகத்தில் உள்ள பகுதி.

**clipboard computer : பிடிப்புப் பலகைக் கணினி :** எந்த இடத்துக்கும் எடுத்துச் செல்லக் கூடிய கணிணி. தோற்றத்திலும் செயல்பாட்டிலும் மரபுமுறைப் பிடிப்புப் பலகையை ஒத்தது. பிடிப்புப் பலகைக் கணினியில் நீர்மப் படிகக் காட்சித்திரை (LCD) உள்ளீட்டுச் சாதனத்துக்குப் பதிலாக ஒரு பேனா இருக்கும். பயனாளர் பேனாவைத் தொட்டுச் செயல்படுத்துவர். பிடிப்புப் பலகையில் பதிவான தரவு கம்பி வடம் அல்லது இணைக்கியின் வழியாக வேறு கணினிக்கு மாற்றப்படுகிறது. மரபுமுறைப் பிடிப்புப் பலகை

யைப் பயன்படுத்துவது போலவே, களப்பணி, தரவு சேகரிப்பு, கூட்டம் போன்ற வற்றில் பிடிப்புப் பலகைக் கணினியும் பயன்படுத்தப்படும்.

**clipboard object** : இடை நிலைப் பலகைப்பொருள்கள்.

**clipboard view** : இடைநிலைப் பலகைத் தோற்றம்.

**clipper** : கிளிப்பர் : 'கம்ப் யூட்டர் அசோசியேட்ஸ்' - சின் பயன்பாட்டு உருவாக்க மென் பொருள். முதலில் தரவுத் தள (dbase) மொழி மாற்றியாக இருந்து, பின்னர் தனித்து இயங் கும் பல சிறப்புத்தன்மைகள் உள்ள பயன்பாட்டுத் தொகுப்பு களை உருவாக்கும் பணித் தளமாக உருவெடுத்தது. நான்டுக்கட் கார்ப்பரேஷன் இதை உருவாக்கியது.

**Clipper Chip** : கிளிப்பர் சிப்பு : துள்ளல் வகை இணைப்பு நெறி முறையையும், மறைக் குறியீடு களைக் கொண்ட நெறிமுறை யையும் அமல்படுத்துகிற ஒருங் கிணைந்த மின்சுற்று. அமெரிக்க தேசிய பாதுகாப்புக் கழகம் உண்டாக்கியது. 64 துண்மி தரவு தொகுதிகளையும், 80 துண்மி களுக்கான திறவிகளையும் கொண்டது. தொலைபேசித் தரவுகளை இரகசியக் குறியீடு களாக வைக்க அமெரிக்க அரசு இதனை உருவாக்கியது. மறைக் குறியீடுகள் என்ன குறிப்பிடு கின்றன என்பதை அமெரிக்க அரசு அறிய முடியும். அந்த மின் சுற்றைத் தன் நாட்டில் கட்டாய மாக்க முயன்ற அமெரிக்க அரசின் எண்ணம் நிறை வேறவில்லை.

**clipping** : நறுக்குதல்; செதுக்கு தல் ; சீரமைத்தல் : காட்சித் திரை எல்லைகளின் வெளிப் பகுதியில் உள்ள படத்தின் பகுதிகளை நீக்குதல். scissoring என்றும் அழைக்கப்படும்.

**clipping level** : சீரமை அளவு : தன்னுடைய காந்தத் தன்மை களைக் காத்து உள்ளடக்கங் களை வைத்துக் கொள்ளும் வட்டின் திறன். அதிக தரமுள்ள அளவு என்பது 65-70%; குறைந்த அளவு என்பது 55%-க்குக் கீழே.

**clipping path** : கிளிப்பிங் வழி : ஆவணமொன்றின் ஒரு பகுதியை மூடிமறைக்கப் பயன் படுத்தும் பல் கோண வடிவம் அல்லது வளைவு. ஆவணத்தை அச்சிடும்போது கிளிப் வழியில் உள்ளது மட்டுமே தோன்றும்.

**clobber** : மெழுகுதல் : ஒரு கோப்பில் உள்ள நல்ல தரவுவின் மேற்பகுதியில் புதிய தரவுவை எழுதியோ அல்லது

ஒரு கோப்பில் உள்ளவற்றை எப்படியாவது சேதப்படுத்தியோ அதைப் பயனற்றதாக்குதல். ஒரு கோப்பை ஒழித்து விடல்.

**clock : கடிகாரம் : மின் துடிப்பு :** 1. ஒரே நேரக் கட்டுப்பாட்டில் இயங்கும் கணினியின் அனைத்துச் செயல்பாடுகளின் நேரத்தைக் கட்டுப்படுத்த உதவும் தொடர்ச்சியான அடிப்படை சமிக்கையை உருவாக்கும் சாதனம். 2. உண்மையான நேரம் அல்லது அதன் மதிப்பீட்டில் சிலவற்றின் மாற்றத்தைப் பதிவு செய்யும் சாதனம். இதன் செயல்பாடு கணினி நிரலுடன் இணைக்கப்பட்டிருக்கும்.

**clock/calendar : கடிகாரம்/நாட்காட்டி :** சரியான நேரம் மற்றும் தேதி காட்டுவதற்கு நுண்கணினியினுள் நேரக் கணக்கு கொண்ட தனியான சுற்று பயன்படுத்தப்படுகிறது. மின் கலம் அளிக்கும் மின்சாரத்தின் மூலம் அது இயங்குகிறது. கணினியை நிறுத்திவிட்டாலும் அது தொடர்ந்து இயங்கிக் கொண்டிருக்கும். இயக்க முறைமை நேரம்/தேதியைப் பயன்படுத்த இயலும். சான்றாக, கோப்புகளை உருவாக்கிய தேதியைப் பதிக்கலாம். கோப்பினைப் படித்த நேரம், திருத்தம் செய்த நேரம் எல்லாம் குறிக்கலாம். எந்தவொரு பயன்பாட்டுத் தொகுப்பும் அதைப் பயன்படுத்த இயலும். சான்றாக, ஓர் ஆவணத்தில் அன்றைய தேதி மற்றும் நேரத்தைக் குறிக்க உதவும்.

**clock, digital : இலக்கமுறை கடிகாரம்.**

**clock doubling : இரட்டிக்கும் கடிகாரம்; இரட்டிக்கும் மின்துடிப்பு :** சில இன்டெல் நுண்செயலிகள் பயன்படுத்தும் தொழில்நுட்ப முறை. அதன்மூலம் தரவுகளையும், ஆணைகளையும் அமைப்பு முறையின் மீதப் பகுதியைவிட இரட்டை அளவு வேகத்தில் சிப்பு செயல்முறைப்படுத்த இயலும்.

**clock frequency : கடிகார அலைவரிசை.**

**clocking : நேரம் அளவிடல்; நேரப்படுத்துதல்; நேர இசைவாக்கம் :** தரவு தொடர்புச் சாதனம் அனுப்புகின்ற, பெறுகின்ற வேலையை ஒரே கால முறைப்படி ஒழுங்குபடுத்தப் பயன் படும் தொழில் நுட்பம். அதிக வேகத்தில் குறிப்பிட்ட நேரப்படி அனுப்புவதற்கு உதவுகிறது.

**clock input : கடிகார உள்ளீடு :** மேலுள்ள உள்ளீட்டு முனையம். நேரக்கட்டுப்பாடு கடிகார

சமிக்கையைப் பெறுவதற்காகப் பயன்படுத்தப்படுவது.

**clock pulse : கடிகாரத் துடிப்பு; மின்துடிப்பு அதிர்வு :** இலக்க முறை சாதனத்தின் செயல்பாடு களோடு ஒத்தியங்கச் செய்வதற் காக படிக ஊசலினால் ஒரு கால ஒழுங்கில் உற்பத்தி செய்யப் படும் மின்னணுத் துடிப்பு.

**clock pulse circuit : கடிகாரத் துடிப்பு மின்சுற்று :** ஒரே நேரத் தில் செயல்களை ஆற்றும் இலக்கமுறை கணினியில் இயக் கங்களுக்கு உதவுவதற்காக சரி யான இடைவெளியில் நேரத் துடிப்புகளை உருவாக்கும் மின்சுற்று.

**clock rate : துடிப்பு வீதம் :** ஒரு கடிகாரத்திலிருந்து துடிப்புகள் வெளியிடப்படும் நேர வீதம்.

**clock signal generator : கடிகாரச் சமிக்கை இயற்றி.**

**clock speed : கடிகார வேகம் :** கணினியின் உட்பகுதி இதயத் துடிப்பு வேகம். ஒரு குவார்ட்ஸ் படிகத்தில் உருவாக்கப்படும் நிலையான அசைவுகளை கடி கார மின்சுற்று பயன்படுத்திக் கொண்டு மையச் செயலகத் திற்கு தொடர் துடிப்புகளை அனுப்புகிறது. வேகமான கடி காரத் துடிப்பு உள் செயலாக் கத்தை வேகப்படுத்தும். சான் றாக, ஒரே செயலகம் 20 மெகா ஹெர்ட்சில் ஓடும்போது 10 மெகா ஹெர்ட்சில் ஓடுவதை விட இரண்டு பங்கு வேகமாகச் செயல்படும்.

**clock timer : நேரங்காட்டி; காலங்காட்டி கடிகாரம்.**

**clock track : கடிகாரத் தடம்:** காலத்தைக் குறிப்பதற்கான சமிக்கைகளைப் பதிவு செய்து வைத்திருக்கிற பாதை.

**clockwise : வலச்சுற்று :** இடது புறத்திலிருந்து வலது புறத்திற்கு நகர்தல்.

**clone : வார்ப்பு; நகலி :** ஒன்றின் நகல் அல்லது சரியான பிரதி யாக இருக்கும் ஒரு பொருள் அல்லது கருத்து. உயிரியலுக்கு அப்பாற்பட்டு இவ்வாறு பொது வாகக் கூறலாம்.

**close : மூடு :** பெரும்பாலான கணினி மொழிகளில் முன்பே திறந்த கோப்பை மூடுவதற்கான கட்டளை. செயல்பட்டுக் கொண்டிருக்கும்போது வெளி யேறி எல்லா திறந்த கோப்பு களையும் மூடுவதற்குப் பல மென்பொருள் பயன்பாடுகளில் உள்ள ஒரு கட்டளை. ஒரு கோப்பை சரிவர மூடத் தவறி னால் தரவு சிதைந்தோ அல்லது தொலைந்தோ போகலாம்.

**close box** : மூடு பெட்டி : மெக்கின்டோஷ் வரைகலை முறை பயன்படு இடைமுகப்பில் சாளரத் தலைப்புப் பட்டையின் இடது மூலையில் உள்ள சிறுபெட்டி. பெட்டியின் மீது சொடுக்கினால் சாளரம் மூடப்பட்டுவிடும்.

**close button** : மூடு பொத்தான் : விண்டோஸ் 95/98/ என்டி இயக்க முறைமைகளில் தோன்றும் சாளரங்களில் தலைப்புப் பட்டையில் வலது மூலையில் உள்ள x குறியிட்ட ஒரு சதுரப் பொத்தான். விண்டோஸ் 3.x பணித்தளத்தில் இப்பொத்தான் தலைப்புப் பட்டையின் இடது மூலையில் இருக்கும். பொத்தானில் சொடுக்கினால் பலகணி மூடப்படும்.

**closed architecture** : மூடிய கட்டுமானம் : கணினியில் கட்டுமான அமைப்பு அதன் தொழில் நுட்ப புள்ளி விவரங்களை பொதுமக்களுக்குத் தெரிவிக்காமல் இருப்பது.

**closed file** : மூடப்பட்ட கோப்பு : படிக்கவோ, எழுதவோ அணுக முடியாத கோப்பு.

**closed frame** : மூடிய சட்டம்

**closed loop** : மூடிய மடக்கி பாதை : முழுமையான வட்டமைப்பிலுள்ள மாற்றுப் பாதை.

**closed routine** : மூடிய நிரல் கூறு; மூடிய துணை நிரல்.

**closed shop** : மூடிய அங்காடி : தரவு செயலாக்க மையத்தை தொழில் முறையில் இயக்குபவர்களை மட்டும் கொண்டு இயக்குவது. நிரல்களையும் தரவுகளையும் ஏவலாளர்கள் கொண்டு வருவார்கள் அல்லது தொலைபேசிக் கம்பிகளின் வழியாக அனுப்புவார்கள். இதன் மூலம் கணினி அறைக்குள் பயனாளர்கள் மிகவும் திறமையாக செயல்பட முடிகிறது.

**closed subroutine** : மூடிய துணை நிரல்கூறு : அழைக்கும் செயல்முறைகள் ஒன்று அல்லது பலவற்றுடன் இணைக்கப்பட்டு ஓரிடத்தில் வைக்கப்பட்டுள்ள துணைச் செயல்முறை.

**closed system** : மூடிய அமைப்பு : அந்நிய முனையங்கள் அல்லது சாதனங்களுடன் இணைவதை ஏற்றுக்கொள்ளாத கணினி அமைப்பு.

**close statement** : மூடு ஆணை; மூடு கூற்று.

**closeup** : அணுக்கக் காட்சி ; நெருக்கக் காட்சி.

**closing files** : மூடிய கோப்புகள்.

**cloth ribbon** : துணி நாடா : தொடுநிலை அச்சுப்பொறி தட்டச்சுப் பொறி ஆகியவற்றில்

பொதுவாக மையிடப்பட்ட நாடா பயன்படுத்தப்படும். அச்சுப்பதிப்புமுனை நாடாவைத் தாக்கி மையைத் தாளுக்கு கொண்டு சென்று பதிய வைக்கிறது. பின் புதுமை பெறுவதற்காக நாடா சிறிது நகரும். அச்சுப்பொறியில் பொருந்துவதாக துணி நாடா சுருணையில் பொதிய வைக்கப்பட்டிருக்கும் அல்லது நாடாப் பேழையில் ஏற்றி வைக்கப்பட்டிருக்கும். பல காரியங்களுக்கும் துணி நாடா போதுமானது என்றாலும், துல்லியம் வேண்டும் என்னும் போது அதற்குப் பதிலாக ஃபிலிம் நாடா பயன்படுத்தப்படும். ஆனால் ஃபிலிம் நாடா பன்முறைப் பயனுக்கு உதவாது. துணிநாடாவில் மீண்டும் மீண்டும் மை தடவிக் கொள்ளலாம். அதனால் அது பன்முறைப் பயனுக்கு உகந்தது.

**cluster : கொத்து; தொகுதி** : ஒரு கன்ட்ரோலர் மூலமாக பெரிய கணினி ஒன்றுடன் இணைக்கப்பட்டுள்ள கணினி முனையங்களின் ஒரு குழு. வட்டு பிரிவுகளில் (2 முதல் 16 வரை) ஒரே அலகாகக் கருதப்படுபவை. 30 கோப்பானது வட்டில் 2,048 பைட் உள்ளதாக இருக்கலாம். ஆனால், வட்டு தொகுதியில் 512 பைட் பிரிவுகள் இருக்கும்.

**cluster controller : கொத்து கட்டுப்படுத்தி** : குறைந்த வேக சாதனங்கள் பலவற்றிலிருந்து தரவுகளைத் திரட்டும் அடிப்படைச் செயலகம். பின்னர் தொகுக்கப்பட்ட தரவுகளை ஒரு தனித் தரவு தொடர்புச் சாதனம் மூலம் அனுப்புகிறது.

**clustered devices : கொத்தாக்கிய சாதனம்** : ஒரு பொதுக் கட்டுப்பாட்டுக் கருவியுடன் இணைக்கப்பட்ட முனையங்களின்குழு.

**clustering : கொத்தாக்கம்** : ஒத்த தன்மைகள் உள்ளவற்றை குழுவாக்குதல்.

**.cm : சிஎம்** : இணைய தள முகவரி, கேமரூன் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**CMA** : Computer Aided Manufacturing என்பதன் முதலெழுத்துக் குறும்பெயர். கணினி உதவியுடன் உற்பத்தி என்பது இதன் பொருள்.

**CMI : சிஎம்ஐ** : கணினி வழிபடு ஆணை எனப் பொருள்படும் Computer Managed Instruction என்பதன் குறும்பெயர்.

**CML : சிஎம்எல்** : மின்சாரப் பாங்குத் தருக்கம் எனப் பொருள்படும் Current Mode Logic என்பதன் குறும்பெயர்.

**CMOS : சிமாஸ்** : நிரப்புக்கூறு ஆக்ஸைடு குறை கடத்தி எனப்

பொருள்படும் Complementary Metal Oxide Semiconductor என்பதன் குறும்பெயர்.

**CMOS RAM : சீமாஸ் ரேம் :** நிரப்பு உலோக ஆக்சைடு குறை கடத்தி தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி நினைவகம் அமைத்தல். சீமாஸ் சிப்புகள் மிகமிகக் குறைந்த அளவு மின் சாரத்தைப் பயன்படுத்துகின் றன. மின்சாரம் வழங்கும் சாதனத்தின் இரைச்சலைத் தாங்க வல்லவை. இம்மாதிரி யான சிப்புகள் மின் கலங்கள் அளிக்கும் மின்சாரத்தில் செயல் படும் வன்பொருள் பாகங்களில் மிகுந்த பயனுள்ளவையாய் இருக்கின்றன. நுண்கணினிக் கடிகாரங்கள், செயல்முறையில் அமைப்பில் இருந்துவரும் சில வகை அழித்தெழுது அட்டை கள் போன்ற வன்பொருள்களில் பயனுள்ளவையாய் உள்ளன.

**CMOS setup : சீமாஸ் அமைவு :** தேதி, நேரம் போன்று சில குறிப்பிட்ட விருப்பத் தேர்வு களை அமைத்துக் கொள்ள, இயக்க நேரத்தில் அணுகக் கூடிய பயன்பாடுமிக்க அமைப்பு.

**CMU : சிஎம்யு :** கார்னஜி மெலான் பல்கலைக் கழகம் எனப் பொருள்படும் Carnegie Mellon University என்பதன் குறும் பெயர். இந்நிறுவனம் ஒரு எந்திரன் (எந்திர மனிதன்) ஆராய்ச்சி மையமாகவும், ஒரு முக்கிய கணினி மையமாகவும் செயல்படுகிறது.

**CMY : சிஎம்ஓய் :** CYAN (மயில் நீலம்), MAGENTA (செந்நீலம்) YELLOW (மஞ்சள்) என்ற சொற் களின் முதல் எழுத்துக்களான சொல். ஒளியை உட்கிரகித்து உருவாக்கப்படும் வண்ணங் களை வருணிப்பதற்கான ஒரு மாதிரி. தாளின்மீதுபடும் மை போன்றது. ஒளியை நீக்கும் வகையிலான கணித்திரை ஒளிக் காட்சி போன்றது அன்று. கண் ணிலுள்ள மூவகை கூம்புவடிவ செல்கள் மயில்நீலம், செந்நீலம், மஞ்சள் நிறங்களால் முறையே உட்கிரகிக்கப்படும் அதாவது (வெண்மை நிறத்திலிருந்து பிரிந்து வரும்) சிவப்பு, பச்சை, நீல நிறங்களை உணர்கின்றன. ஒளியை வடிகட்டும் இந்த அடிப்படை நிறங்களிலுள்ள வண்ணப் பொருளின் விழுக் காடு கலந்து விரும்பிய நிறத் தைக் கொண்டு வரலாம். எந்த வண்ணப் பொருளும் இல்லா திருந்தாலும் வெண்மையில் எந்த மாற்றமும் இராது. இந்த வண்ணப்பொருள்கள் எல்லா வற்றையும் நூறு விழுக்காடு சேர்த்தால் வெண்மை கருமை ஆகிவிடும்.

**CMYK : சிஎம்ஒய்கே :** CYAN *(மயில் நீலம்)*, MAGENTA *(செந் நீலம்)* YELLOW *(மஞ்சள்)*, BLOCK *(கருப்பு)* ஆகிய சொற் களின் முதல் எழுத்துகளால் உரு வான குறும்பெயர் CYMK. CMY நிறமாதிரி போன்ற ஒரு நிற மாதிரி. நூறு விழுக்காடு மயில் நீலம், செந்நீலம், மஞ்சள் சேர்ப் பதைப் போலன்றி தனிக் கருப்பு நிறக் கூறுடன் சேர்ந்தால் கருப்பு நிறம் காட்டும் தன்மையது.

**.cn : .சின் :** ஓர் இணைய தள முக வரி, சீன நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**.co : .சிஓ :** ஓர் இணைய தள முக வரி. கொலம்பிய நாட்டைச் சேர்ந் தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**coaxial cable : இணைஅச்சுக் கம்பி வடம் :** அதிகவேகத்தில் தரவுகளை அனுப்ப உதவும் சிறப்பு வகை தரவு தொடர்புக் கம்பி. பொதுவாக, தொலைதூர கட்டமைப்புகளில் பயன் படுத்தப்படுவது.




இணையச்சு கம்பி வடம்

**COBOL : கோபால் :** Common Business Oriented Language என் பதன் குறும்பெயர். பொது வணிகச் சார்பு மொழி என்பதன் சுருக்கப்பெயர். ஒரு உயர் நிலைக்கணினி மொழி. வணிகத் துறை பயன்பாடுகளுக்காக என்றே உருவாக்கப்பட்டது. ஒவ் வொரு கோபால் நிரல்களும் நான்கு பிரிவுகளைக் கொண்டது.

(1) Identification Division.
(2) Environment Division.
(3) Data Division.
(4) Procedure Division.

அமெரிக்க இராணுவத்துறைக் காக 1959ஆம் ஆண்டு கோபால் மொழி உருவாக்கப்பட்டது.

**cobweb site : ஒற்றடைத் தளம் :** அநேக நாட்களாகப் பழக்கத்தில் இல்லாதுபோன ஒரு வலைத் தளம்.

**cocktail party : கலக்கல் விருந்து.**

**CODASYL : கோடாசில் :** தரவு முறைமை மற்றும் மொழி களுக்கான கருத்தரங்கு எனப் பொருள்படும் Conference On DAta SYstem and Languages என்பதன் குறும்பெயர்.

அமெரிக்க மைய அரசு ஏற்படுத்திய தொழில் துறை கமிட்டி. கணினித் துறையில் தர நிர்ணயங்களை உருவாக்கிட அமைக்கப்பட்ட இக்குழுவின் மூலம்தான் கோபால் மொழியும் சிக்கலான தரவு தளங்கள் பலவும் உருவாயின.

**Code** : குறிமுறை : *1. தரவுகளை எவ்வாறு குறிப்பிட வேண்டும் என்பதை விளக்கும் விதிகளின் தொகுதி. 2. தரவுகளை ஒரு குறியீட்டிலிருந்து வேறொன்றுக்கு மாற்றுவதற்கான விதிகள். 3. ஒரு நிரல் அல்லது செயல் முறையை எழுதுவது, குறியீடு அமைத்தல் போன்றது.*

**code, absolute** : முற்றுக் குறிமுறை; நேரடிக் குறிமுறை.

**code, alphabetic** : அகரவரிசைக் குறி முறை; எழுத்துக் கோவை குறி முறை.

**code, alphanumeric** : எழுத்தெண் குறிமுறை.

**code, binary** : இருமக் குறிமுறை.

**codec** : கோடெக் : coder, decoder என்ற இருசொற்களின் கூட்டுச் சொல்.

**code conversion** : குறிமுறை மாற்றல் : *ஒரு குறியீட்டிலிருந்து எழுத்துகள், துண்மி தொகுதிகளை அதே பொருளுள்ள எழுத்துகளைக் கொண்ட வேறு ஒரு குறியீட்டுக்கு மாற்றுதல்.*

**coded decimal number** : குறிமுறைப் பதின்ம எண்.

**coded decimal representation, binary** : இருமக் குறிமுறைப் பதின்ம உருவகிப்பு.

**coded digit, binary** : இருமக் குறிமுறை இலக்கம்.

**Code, Division Multiple Access** : பகுதி பன்முக அணுகல்குறிமுறை : *பல தடங்களை ஒன்று சேர்ப்பதில் ஒருவகை. இதில் செய்தி பரப்பும் சாதனம் சமிக்கையைக் குறியீடு ஆக்குகிறது. அதற்குப் போலி தொடர்பிலா வரிசைமுறையைப் பயன்படுத்துகிறது. அந்த வரிசை முறையை வாங்கியும் அறியும். அதனால் பெற்ற சமிக்கையை குறியீடு ஆக்க முடியும். ஒவ்வொரு தொடர்பிலா வரிசை முறையும் வெவ்வேறு தரவு தொடர்பு தடத்தை ஒத்தது. இலக்கமுறை செல்பேசிக்காக மோட்டா ரோலா இந்த ஒன்று சேர்ப்பு வகையைப் பயன்படுத்துகிறது.*

**coded number** : குறியிடப்பட்ட எண் : *ஒரு பொருளின் பதிவேட்டு எண். ஒரு நிறுவனத்தின் குறிப்பிட்ட கணினி*

அமைப்பிற்கு ஏற்றாற் போல் இதனை அமைக்கலாம் அல்லது குறியிடலாம். எடையிட்ட சோதனை இலக்க முறைகள் அல்லது சோதனை இலக்கங்களின் மூலம் குறியிடப்பட்ட எண்கள் செல்லத்தக்கவையா என்று சோதிக்கலாம்.

**coded octal binary** : இரும குறிமுறை எண்மம்.

**code editor** : குறிமுறை தொகுப்பி.

**code error** : பிழைக் குறிமுறை.

**code generator** : குறியீடு உருவாக்கி.

**code in binary** : இருமக் குறிமுறை.

**code level** : குறிமுறை நிலை : ஒரு குறிப்பிட்ட எழுத்தைக் குறிப்பிடப் பயன்படுத்தப்படும் துண்மிகள்.

**code, machine** : எந்திரக் குறிமுறை.

**code number** : குறியீட்டெண்.

**code, optimization** : குறிமுறைச் சீர்த்திறனாக்கம்.

**code page** : குறிமுறைப் பக்கம் : டாஸ் (DOS)3.3 மற்றும் அதன் பின் வந்த பதிப்புகளில் வருவது. பல்வேறு அந்நிய மொழி எழுத்துகளுக்கான விசைப் பலகைகளை அமைக்க உதவும் பட்டியல்.

**coder** : குறிமுறையாளர் : கணினி மொழியில் ஒரு சிக்கலையோ அல்லது சிக்கலின் ஒரு பகுதியையோ எடுத்துரைப்பவர். பிறரது வடிவமைப்பையே எடுத்துப் பயன்படுத்திக் கொண்டு தானாக எந்த உழைப்பையும் செய்யாத ஒரு கணினி நிரலரை ஏளனமாகக் குறிப்பிடவும் இச்சொல் பயன்படுத்தப் படுவதுண்டு.

**coder-decoder (codec)** : குறியாக்கி-குறிவிலக்கி (கோடெக்) : தரவு தொடர்புகளில் பயன்படுத்தப்படும் ஒரு தனிச் சிப்பு. தொடர்முறைத் தரவுவை இலக்க முறையாகவும் இலக்க முறையை தொடர் முறையாகவும் மாற்ற இவை பயன்படுகின்றன.

**code, relocatable** : மறுஇட அமைவுக் குறிமுறை.

**code segment** : குறிமுறைப் பகுதி : அடையாள மதிப்புடைய நினைவகத்தின் பகுதியைக் குறிப்பிடுகிறது. ஒரு நிரலின் கட்டளைக்கு ஏற்பட்டுள்ள பயன்படுத்தும் நினைவகத்தின் பகுதி.

**code set** : குறிமுறைத் தொகுதி : ஒரு குறிமுறை வரையறுத்துக் கொடுக்கும் பதிலிகளின் முழுத் தொகுதி. ஒரு தொலைபேசி எண்ணில் (625 8485) முதல் மூன்று எண்கள் (ஆறு இலக்க

எண்ணாயின் முதல் இரண்டு எண்கள்), குறிப்பிட்ட தொலை பேசி நிலையத்தைக் குறிக்கும் குறிமுறைத் தொகுதி ஆகும்.

**code snippet** : குறியீட்டுச் சிறு பகுதி: 1. வரைகலைப் பயன் பாட்டில் இடைமுகம் ஒன்றில் பயனாளர், பட்டியில் விருப்பத் தேர்வு செய்யும்போது அல்லது பொத்தானை அழுத்தும்போது என்ன நிகழ வேண்டும் என்பதைத் தீர்மானிக்கும் சிறிய நிரல் பகுதி. 2. பெரிய செயல் முறைத் திட்டத்தின் பகுதியாக உள்ள செயல்முறை நிரலில் சிறுதுண்டு. அச்சிறுபகுதி குறிப் பிட்ட வேலை அல்லது பணியை நிறைவேற்றும்.

**code, source** : ஆதாரக் குறி முறை; மூலக் குறிமுறை; மூல வரைவு.

**code system** : குறியீட்டு முறைமை.

**code view** : கோட்வியூ; (குறி முறைப் பார்வை) : மைக்ரோ சாஃப்ட் (Microsoft) மற்றும் ஏற் புடைய மொழி மாற்றிகளுக்கு எழுதப்பட்ட நிரல்களுக்கான பிழை நீக்கி. பிற நவீன பிழை நீக்கிகளைப்போல, மூல மற்றும் இலக்கு நிரல்களை இது இணைக்கிறது. நிரல் இயக்கப் படும்போது மூலக்குறி முறை யின் வழியாக நிரலர் செல்ல இது வழி வகுக்கிறது.

**coding** : குறிமுறையாக்கம் : 1. குறிப்பிட்ட செயல்பாட்டுக்கான ஆணைகளின் பட்டியலை எழுதுவது.

**coding, absolute** : முற்றுக் குறி முறையாக்கம்.

**coding, automatic** : தானியங்கு குறிமுறையாக்கம்.

**coding basics** : குறிமுறை அடிப் படைகள்.

**coding, direct** : நேரடிக் குறிமுறையாக்கம்.

**coding form** : குறிமுறை வடிவம் : ஒரு கணினிக்கு நிரல் அமைப் பதற்கான ஆணைகள் எழுதும் வடிவம். ஒவ்வொரு நிரலாக்க மொழிக்கும் ஒரு குறிப்பிட்ட குறிமுறை வடிவம் உண்டு. குறி முறைத் தாள் என்றும் அழைக்கப்படும்.

**coding sheet** : குறிமுறை யாக்கத் தாள்.

**co-efficient** : குணகம்

**coercion** : வலிந்த மாற்றம்; கட்டாயப்படுத்தல் : நிரலாக்க மொழி வெளிப்பாடுகளில், ஒருவகை தகவலிலிருந்து வேறொன்றுக்குத் தானாகவே மாற்றிக் கொள்ளுதல்.

**cognitive styles** : **புலப்பாட்டு பாணிகள்** : *பிரச்சினைகளை எதிர்கொண்டு மக்கள் தகவலை எவ்வாறு கையாள்கிறார்கள் என்பதன் அடிப்படை அமைப்புகள்.*

**cognitive theory** : **புலப்பாட்டுக் கொள்கை** : *பிரச்சினைகளை எதிர்கொண்டு தகவலை எவ்வாறு கையாள்கிறார்கள் என்பதற்கான கொள்கைகள்.*

**COGO** : **கோகோ** : *ஆயத் தொலைவடிவக் கணிதம் எனப்படும்* Coordinate Geometry, *என்பதன் குறும்பெயர். வடிவக் கணக்கு* (Geometry) *சிக்கல் களைத் தீர்க்க உதவும் ஒரு நிர லாக்க மொழி. சிவில் பொறி யாளர்களால் அதிகம் பயன் படுத்தப்படுவது.*

**coherence** : **தொடர் இசைவு** : *ராஸ்டர் வரைகலைக் காட்சி தொழில் நுட்பத்தில் ஒரு குறிப் பிட்ட படப்புள்ளியின் மதிப்பே அதனை அடுத்து வரும் படப் புள்ளியிலும் இருக்கும் என்ற அனுமானம்.*

**cohesion** : **இணைவு** : *ஒரு பொதுவான பணியை ஒரு கூறு (மாடுல்) எவ்வாறு செய்கிறது என்பதற்கான அளவு. ஒரு நிரலின் உள் பலத்தின் அளவு.*

**coincidence error** : **தற்செய லான பிழை** : *பல ஒருங் கிணைப்பிகளை* (integrators) *இணைக்கும்போது கால வேறு பாட்டில் ஏற்படும் பிழை.*

**cold boot** : **தொடக்க இயக்கம்** : *புதிதாகக் கணினியைத் இயக்கி அதில் இயக்க முறைமையை ஏற்றும் செயல்.*

**cold fault** : **உடன் தெரியும் பிழை** : *கணினி எந்திரத்தைத் இயக் கிய உடனே தெரிகின்ற பிழை.*

**cold link** : **குளிர் தொடுப்பு; புதுத் தெடுப்பு** : *தரவு வேண்டு மென்று கேட்டதன் மேல் உண்டாக்கப்படும் இணைப்பு. அந்த வேண்டுகோள் நிறை வேறியவுடன் இணைப்பு துண்டிக்கப் பெறும். அடுத்த முறை கிளையன், வழங்கனிடம் மீண்டும் தரவு வேண்டு மெனக் கேட்டால் மீண்டும் இணைப்பு நிறுவப்பட வேண்டும். பரிமாற நிறைய தரவுகள் கொண்டிருந்தால், கிளையன்/ வழங்கன் கட்டமைப்பில் குளிர் இணைப்புகள் பயனுள்ளவை. மைக்ரோசாப்ட் எக்செல் போன்றவற்றில் பயன்படுத்தப் படும் இயங்கு நிலை தரவு பரிமாற்றம் குளிர் இணைப்பு களைப் பயன்படுத்துகிறது.*

**cold restat** : புது மறுதொடக்கம்.

**cold start** : **புதிய தொடக்கம்** : *ஒரு அமைப்பில் பெரும் தவறு*

ஏற்பட்டு, அதில் ஏற்கெனவே சேமிக்கப்பட்டவை பயனற்றுப் போன பின் மீண்டும் தொடங்குதல். தவறு ஏற்பட்டபின் கணினியை மீண்டும் சாதாரணமாகத் துவங்கினால் அதில் உள்ள தரவுகளும், நிரல்களும் நினைவகத்திலிருந்து அழிந்து போயிருக்கும். இதில் மீண்டும் நிரலையும், தரவுகளையும் ஏற்ற வேண்டும்.

**collaborative filtering : இணைந்து வடிகட்டல்; உடனுழை வடிகட்டல் :** பலருடைய பட்டறிவுகளிலிருந்தும், கருத்துகளிலிருந்தும் தரவு பெறும் ஒருவழி. ஜெராக்ஸ் பார்க்கில் டெலிக் டெர்ரி என்பவரால் இந்தக் கலைச் சொல் உண்டாக்கப் பட்டது. ஆவணங்களைப் படித்துக் கொண்டு வரும் போதே, பயன்படுத்துபவர்கள் அவ்வப்போது விளக்க உரை குறித்துக் கொண்டு வரும் நுட்பத்தை முதலில் அவர்தான் பயன் படுத்தினார். தவிரவும், உள்ளடக்கம் பொறுத்து மட்டுமின்றி மற்றவர்கள் என்ன எழுதியிருக்கிறார்கள் என்பதைப் பொறுத்தும் அடுத்து எந்த ஆவணங்களைப் படிக்கலாம் என்பதைத் தெரிவு செய்ய முடியும். இணைந்து வடிகட்டுதலின் சாதாரண பயன்பாடு என்னவென்றால் குறிப்பிட்ட மக்களுக்கு விருப்பமான உலகளாவிய வலைத்தளங்களின் பட்டியலை உண்டாக்குவதாகும். பலருடைய அனுபவங்களை எழுத்தில் கொணர்ந்து சுவையான வலைத் தளங்களின் பட்டியலை வடிகட்டும் முறையில் உருவாக்க முடியும். அங்காடி ஆராய்ச்சிக்கான கருவியாக இணைந்து வடிகட்டுதலைப் பயன்படுத்துகிறார்கள். உற்பத்திப் பொருள்கள் பற்றிய கருத்துகள், மதிப்பீடுகள் ஆகியவை கொண்ட தரவுத் தளம் ஏற்படுத்தி, தரவுத் தளத்திலுள்ள கருத்துகளை வைத்து எந்தப் புது உற்பத்திப் பொருளை மக்கள் விரும்பி வாங்குவார்கள் என்பதை ஆராய்ச்சியாளர்கள் முன் கூட்டிக் கூற இயலும்.

**collate : அடுக்கு ; சேர் :** இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வரிசைப்படுத்தப்பட்ட தரவு தொகுப்புகளை ஒன்று சேர்த்து ஒரே வரிசையில் உள்ள தொகுதியாக மாற்றுதல்.

**collating sort : சேர்க்கும் வரிசையாக்கம் :** தரவுகளைத் தொடர்ச்சியாக ஒன்று சேர்த்து ஒரே வரிசையாக உருவாகும் வரை சேர்க்கும் முறை.

**collation sequence : சேர்க்கும் வரிசை** : தொடக்கம் முதல் கடைசிவரை பொருள்களை வரிசைப்படுத்தும்போது கணினி பயன்படுத்தும் வரிசை முறை. எழுத்துகளுக்கு அகர வரிசையும், எண்களுக்கு எண்வரிசையுமாக இந்த வரிசைமுறை பொதுவாக அமையும். பெரிய எழுத்து, சிறிய எழுத்து, எண் - எழுத்துக் கலப்பு, நிறுத்தக் குறியீடுகள் போன்றவை இதில் இணையும்போது வரிசைமுறை சிக்கலாகிவிடுகிறது.

**collator : சேர்ப்பி** : அட்டைகள் அல்லது பிற ஆவணங்களின் தொகுதிகளை ஒரே வரிசையில் சேர்த்துத் தரும் எந்திரம்.

**collection : திரட்டு; தொகுப்பு** : பல்வேறு இடங்களிலிருந்து தரவுகளைப் பெற்று அவற்றை ஒரே இடத்தில் தொகுப்பது.

**collection, data : தரவு சேகரிப்பு; தரவுத் திட்டம்**

**collector : சேகரிப்பி; திரட்டி.**

**collision : மோதல்** : இரண்டு விசைப்பலகை இயக்கங்கள் ஒரே நேரத்தில் ஆணையிடப் படும்போது ஒரே முகவரியில் விசைகள் மோதிக்கொள்வதன் விளைவு. கணினியின் இயக்க முறையில் எந்த இயக்கத்தை செயல்படுத்துவது என்று நிரலில் குறிப்பிடப்படும்.

**collision detection : மோதலைக் கண்டுபிடித்தல்; மோதல் உணர்தல்** : 1. கணினி வரைபடமுறைகளில் குறிப்பாக, ஆர்க்கேட் வகை விளையாட்டுகளில், இரண்டு பொருள்கள் எப்போது மோதிக் கொள்ளும் என்பதை முடிவு செய்ய வேண்டும். மோதலைக் கண்டுபிடிப்பதற்குப் பல்வேறு நிரல் தொழில் நுட்பங்களைப் பயன்படுத்தலாம். 2. பல்முனை அணுகு கட்டமைப்பில் ஒரே நேரத்தில் இரண்டு கணினிகள் தரவு அனுப்புவதைத் தடை செய்யும் நுட்பம்.

**colmar : கோல்மார்** : நமக்குக் கிடைத்துள்ள முதல் எந்திரக் கணிப்பியான அரித்மோமீட்டரின் வேறு பெயர்.

**colossus : கொலாசஸ்** : ஜெர்மானிய குறியீடுகளைப் பிரித்தறிய 1943இல் உருவாக்கப்பட்ட சிறப்பு நோக்கக் கணினி.

**colour : வண்ணம்; நிறம்** : அலைவரிசை பொறுத்து மனிதர்கட் புலனால் காணத்தக்க ஒளியின் ஒரு பண்பு நிறம் என இயற்பியல் குறிப்பிடுகிறது. உயர் அலைவரிசை உடைய வயலெட் நிறத்திலிருந்து குறை அலை

வரிசை உடைய சிவப்பு நிறம் வரை நிறங்கள் உண்டு. மின் காந்த நிறமாலை முழுமையின் ஒரு சிறு பகுதியாகக் காணக் கூடிய ஒளிப் பட்டையில் அந்த நிறங்களைக் காணலாம். கணினி ஒளிக்காட்சியில் வன்பொரு ளும் மென்பொருளும் இணைந்து செயல்பட்டு நிறம் உண்டாக்கப் படுகிறது. தனித்தனி நிறங்களுக் குரிய துண்மிகளை இணைக்கும் வேலையை மென்பொருள் செய்கிறது. அந்தத் துண்மிகளுக் குத் திரையில் குறிப்பிட்ட இடங் கள் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. படக்கூறுகள் எனப்படும் தனித் தனிப் புள்ளிகள் அல்லது குறி யீட்டு எண் குறிப்பிட்ட இடமா கும். வன்பொருளிலுள்ள தக வமைப்பு ஏற்பாடு இந்தத் துண்மிகளை மின்குறியீடுகளாக மாற்றுகிறது. எதிர்மின்வாய்க் கதிர்க் குழல் காட்சித்திரையில் நேரிணைவான இடங்களில் உள்ள வெவ்வேறு நிறமுடைய எரியங்களின் பிரகாச அளவை அந்தக் குறியீடுகள் கட்டுப்பாடு செய்கின்றன. பயனாளரின் கண் கள் எரியங்கள் (Phosphors) கொடுக் கும் ஒளிகளை இணைத்து ஓர் ஒற்றை நிறமாகக் காண்கின்றன.

**colour balancing : வண்ண சம நிலைப்படுத்துதல்; நிறச் சமனாக்கம்.**

**colour bits : நிறத் துண்மிகள் :** நிறத்தைக் குறிப்பிடும் ஒவ்வொரு படப்புள்ளியுடனும் இணைக் கப்படும் துண்மிகளின் எண் ணிக்கை. 16 நிறங்களுக்கு 4 துண்மி கள் பயன்படுத்தப்படுகின்றன. 256 நிறங்களுக்கு 8 துண்மிகள்.

**colour burst : நிற வெடிப்பு :** வண்ணத்தில் ஒளிபரப்பாகும் நிகழ்ச்சிகளை கருப்பு வெள் ளைத் தொலைக் காட்சித் திரை யில் காண்பதற்காக ஆரம்பத்தில் உண்டாக்கப்பட்ட தொழில் நுட் பம். ஒளிக் காட்சி சமிக்கையில் நிறத்தைக் குறியீட்டு வடிவில் மாற்ற உதவும் தொழில் நுட்பமாக இப்போது உள்ளது.

**colour burst signal : நிறம் வெடிப்புச் சமிக்கை :** நிறம் பற்றிய தரவுவை அளிக்கும் ஒளிக்காட்சி வெளியீட்டில் உள்ள சமிக்கை. நிறம் வெடிப்புச் சமிக்கையை நிறுத்து வதனால் கறுப்பு வெள்ளை திரை களில் படங்களின் தரம் கூடும்.

**colour camera : வண்ணப் படப்பிடிப்பு :** ராஸ்டர் ஸ்கேன் காட்சி சாதனங்களில் தரவு களைப் பதிவு செய்யப் பயன் படுத்தும் வெளியீட்டுச் சாதனம்.

**colour code : நிறக் குறிமுறை :** காட்சித்திரையில் தெரிகின்ற 16 நிறங்களுள் ஒன்றைக் குறிப்

பிடும் 0 முதல் 15 வரையுள்ள எண்களில் ஒன்று. ஐபிஎம் கூடுதல் திறனுடைய நிற முகப்புடன் சேர்க்கப்பட்ட இஜிஏ வில் 64 நிறக்குறியீடுகள் (0-63) இருக்கும்.

**colour coding** : நிறம் குறியிடல் : பல்வகையான பதிவேடுகளைப் பயன்படுத்தி நிறங்களை அடையாளம் காணும் செயல்முறை.

**colour contrast** : வண்ண மாறுபாடு; நிற வேறுபாடு.

**colour cycling** : நிற சுழற்சியாக்கம் : கணினி வரைகலைகளில், பொருள்களை நகர்த்துவதற்குப் பதிலாக, தொடர்ச்சியாக நிறங்களை மாற்றுவதன் மூலம் அசைவூட்டப் படத்தினைப்போல் அமைக்கும் தொழில் நுட்பம்.

**colour enrichment** : நிறச் செறிவு.

**colour genie (EACA)** : கலர் ஜீனி : 8Z- 80 செயலகம் சார்ந்த நுண் கணினி 16K குறிப்பிலா அணுகு நினைவகம் (RAM) உடையது. 32K வரை விரிவாக்கிக் கொள்ளலாம்.

**colour graphics** : வண்ண வரைகலை : நிறங்களைப் பயன்படுத்தி ஓவியங்களை வரைதல், வரைபடங்களை உருவாக்குதல் போன்றவற்றைச் செய்யும் கணினி அமைப்பு.

**Colour Graphics Adapter** : நிற வரை கலைத் தகவி.

**colour inkjet printer** : வண்ண மையச்சுப் பொறி.

**colour keying** : வண்ண விசை அமைத்தல் : ஒரு ஒளிக்காட்சி (வீடியோ) தோற்றத்தை ஒன்றன் மீது ஒன்றாக மேலே அழுத்தும் தொழில் நுட்பம். சான்றாக, கடலில் ஒரு காரை மிதக்க விட வேண்டுமென்றால், நீல நிறப் பின்னணியில் காரின் தோற்றத்தை வைப்பது. கார் மற்றும் கடலின் உருவத்தை ஒன்றாக வருடிக் காரைக் கடலில் மிதப்பதுபோல் செய்தல்.

**colour laser printer** : வண்ண லேசர் அச்சுப்பொறி.

**colour look-up table** : நிற நோக்கு அட்டவணை : கணினியின் ஒளிக்காட்சி தகவியில் சேமித்து வைக்கப்பட்டுள்ள அட்டவணை. கணினியின் காட்சித்திரையில் காட்டக்கூடிய வெவ்வேறு வண்ணங்களுக்கு நேரிணையான நிறக்குறியீட்டு நிலை எண்களைக் கொண்டது அப்பட்டியல். மறைமுகமாக வண்ணம் காட்டப்படும்போது, நிறத் துண்மிகள் ஒரு சிறிதளவு ஒவ்வொரு படக் கூறுக்காக சேமித்து வைக்கப்பட்டு, நிறத் திற்காகப் பார்க்கவேண்டிய

பட்டியலிலிருந்து குறியீட்டு நிலை எண்களின் ஒரு தொகுதி யைத் தெரிந்தெடுப்பதற்காகப் பயன்படுத்தப்படுகின்றன.

**colour management : நிற மேலாண்மை** : அச்சுத்துறையில் வெளிப்பாட்டுச் சாதனங்கள் பலவற்றில் எதையும் பயன் படுத்தி துல்லியமான ஒரு சீரான வண்ணம் உண்டாக்கும் முறை. நுண்ணாய்வுக் கருவி, ஒளிப் படப்பிடிப்புக் கருவி, அல்லது காட்சித்திரை எதிலுமிருந்து ஆர்ஜிபி உள்ளீட்டினைத் துல் லியமாக அச்சிடு கருவி, அச்சிடு கருவிக்கான அளவுக் கோட்டுச் சாதனம் அல்லது உருவம் திரும்பவும் கொணருவதற்கான வேறு வெளிப்பாட்டு சாதனம் ஆகியவற்றுக்காக சிஎம்ஒய்கே வெளிப்பாட்டுக்கு மாற்றுதலும் நிற மேலாண்மை என்பதில் உள் ளடங்கும். ஈரப்பதம் காற்றழுத்த மானி காட்டும் அழுத்தம் போன்ற சூழல் மாறுபாடுகளுக் கேற்ப செயற்படுவதும் உள்ளடங்கும்.

**colour management system : நிற மேலாண்மை முறைமை** : கோடாக் நிறுவனம் உருவாக் கிய தொழில் நுட்பம். மற்ற மென்பொருள் விற்பனையாளர் கள் அதைப் பயன்படுத்த உரிமங்கள் வழங்கப்பட்டன. ஒளிக்காட்சித் திரை, கணினிக் காட்சித்திரை, மற்றும் அச்சு வடிவில் எதிலும் தோன்றும் வண்ணங்களுக்கு இணையான வற்றை உண்டாக்கவும் அளவீடு செய்யவும் பயன்படுவதற்கான தொழில் நுட்பமாகும்.

**colour map : வண்ண அமை படம்** : சில குறிப்பிட்ட துண்மி களைக் கொண்டு அதிக வேலை வாங்குவதற்காக, கணினி வரை பட முறையிலுள்ள ஒரு திட்டம்.

**colour meter : வண்ண மதிப் பீட்டுச் சாதனம்** : தரமான தொகுப்பு வண்ணங்களைக் குறிப்பிடும் முறையில் வண் ணங்களை மதிப்பிட்டு அடை யாளம் காண உதவும் சாதனம்.

**colour missing : வண்ண இழப்பு; நிறம் காணப்படாமை.**

**colour model : நிற மாதிரியம்** : வரைகலைகளிலும், டி.டீ.பீ யிலும் நிறத்தைக் குறிப்பிடும் முறை. இதில் நிறங்கள் பான்டூன் (Pantone) முறையில் குறிப்பிடப்படுகின்றன. கணினி யில் பலமுறைகளில் நிறங் களைக் குறிப்பிடலாம். RGB (சிகப்பு, பச்சை, நீலம்) CMY (சியான், மெஜந்தா, மஞ்சள்) மற்றும் HSB (Hue, Saturation, brightness) என்பன.

**colour mode property : நிறப் பாங்குப் பண்பு.**

**colour monitor : வண்ணத் திரையகம் :** நிறத்தில் வரைகலை உருவங்களையோ அல்லது சொற்களையோ அமைக்க தகவி அல்லது ஒளிக்காட்சி (Video) அட்டையும் சேர்ந்தியங்க வடிவமைக்கப்பட்ட கணினி திரைக் காட்சி. திரையில் உள் பக்கமாக மூன்று நிறக்கலவைகள் (சிகப்பு, பச்சை, நீலம்) உள்ளன. நிறக்கலவை எரியத்தை (பாஸ்பரை) ஒளியூட்டி நிறத்தை அளிப்பதற்கு மூன்று நிறங்களைக் கொண்ட மின்னணு பீச்சிகள் உள்ளன.

**colour named literals :** நிறப் பெயர் நிலையுரு; நிறப்பெயர் மதிப்புருக்கள்.

**colour printer : வண்ண அச்சுப் பொறி :** பல நிறங்களில் செய்தி, வரைபடங்கள், வரிப் படங்கள், கலைப் படைப்புகள் ஆகியவற்றை உருவாக்கும் வெளியீட்டுச் சாதனம்.

**colour resolution : நிறத் தெளிவு :** ஒரு கணினி அமைப்பு உருவாக்கக்கூடிய பல்வகை நிறங்களின் எண்ணிக்கை. இதன் மதிப்புகளை துண்மிகளில் கொடுப்பார்கள்.

**colour saturation : நிற உச்சம் :** ஒரு நிறத்தில் உள்ள ஒளியின் அளவு. மேலும் உச்சத்திற்குச் சென்றால், மேலும் அதிக நிறத்தைப் பெறலாம்.

**colour scanner : நிற வருடு பொறி :** உருவங்களை இலக்கமாக்கிய உருவமைவாக மாற்றுகிற நுண்ணாய்வுக் கருவி. நிறத்தின் விளக்கமும் அளிக்கக்கூடியது. வருடு பொறியின் துண்மி (bit)யின் ஆழத்தைப் பொறுத்து வண்ணத்தின் செறிவும் அமையும். துண்மியின் ஆழம் என்பது வண்ணத்தை 8, 16, 24 அல்லது 32 நுண்மிகளாக மாற்றும் ஆற்றலாகும். வெளிப்பாட்டை அச்



நிற வருடுபொறி

சிட வேண்டுமானால் சாதாரண மாக உயர்வகை வண்ண வருடு பொறிகள் பயன்படுத்தப்படு கின்றன. அக்கருவிகள் தரவு களை உயர் தெளிவுத்திறனுடன் குறியீடாக்கவோ அங்குல வாரிப் புள்ளிக் குறிகளாகவோ ஆக்கக் கூடியவை. கீழ்மட்ட வண்ண வருடுபொறிகள் 72 அங்குல வரிப்புள்ளிகள் கொண்ட தெளிவுத்திறனுடன் குறிகளாக்கு கின்றன. அச்சு செய்யக் கருதப் படாத கணினித்திரை உருவங் களை உண்டாக்க சாதாரணமாகப் பயன்படுத்தப்படுகின்றன.

**colour separation : நிறம் பிரிப்பு :** நிறங்களில் அச்சிடுதலுக்கான 'நெகட்டிவ்' (Plate) மற்றும் அச் செழுத்துத் தட்டுகளைச் செய்ய நிறங்களால் படங்களைப் பிரித் தல். முழுநிறம் வேண்டுமென் றால் நான்கு வகையாகப் பிரிக்க வேண்டும். சியான், மெஜந்தா, மஞ்சள், கறுப்பு (CMYK).

**colour television principles : வண்ணத் தொலைக்காட்சி கொள்கைகள் :** எதிர்மின்வாய் (Cathode) கதிர்க் குழாயில் நிறம் பெறுமிடத்தில் ஒவ்வொரு அடிப்படை நிறத்துக்கும் ஒன்றாக மூன்று மின்னணு பீச்சி கள் உள்ளன. ஒவ்வொரு நிறத் தினையும் காட்டும்போது மின்னணு பீச்சிட நிறம் எரியும். மனிதக் கண்கள் இவற்றை ஒன்றுசேர்த்துப் பார்க்கின்றன. மூன்று நிறங்களும் ஓரிடத்தில் அடுத்தடுத்து வந்தால் வெள்ளை நிறம் தெரியும்.

**colour terminals : வண்ண முனையங்கள்.**

**.columbus.oh.us : .கொலம்பஸ். ஓஹெச்.யுஎஸ். :** இணையத்தில் ஒரு முகவரி அமெரிக்க நாட்டு ஓஹீயோ மாநிலத்துக் கொலம் பஸ்ஸில் உள்ளதென்பதைக் குறிப்பிடும் பெரும் புவிபிரிவுக் களப் பெயர்.

**column : நெடுக்கை ; நிரை ; நெடு வரிசை :** 1. ஒரு வரியில் ஓரே வரிசையாக உள்ள செங் குத்தான உறுப்புகள். 2. ஒரு துளையிட்ட அட்டையில் செங் குத்தான வரிகளில் உள்ள துளை யிடும் இடங்கள். 3. ஒரு கணினி சொல்லில் தரவு இருக்கும் இடம். 4. மின்னணு விரிதாளில் நெடுக்கைப் பகுதி. நெடுக்கை களுடன் சேர்ந்து நெடுக்கைகள் விவரத்தினை, கணக்கீடுகளை உருவாக்க உதவுகின்றன.

**columnar : நெடுக்கையாக.**

**column - binary : நெடுக்கை - இரும எண் :** துளையிட்ட அட்டையின் ஒவ்வொரு நெடுக் கையிலும் குறிப்பிடப்படும் நெடுக்கை எண்

column break : நெடு வரிசை நிறுத்தம்; நெடுக்கை முறிவு.

column chart : நெடுக்கை நிரல் படம் : *மதிப்பளவுகள் செங்குத் தான பட்டைகளாக அச்சிடப் பட்டு வெளியிடப்படும் பட்டை வரைபடம்.*

column count : நெடுக்கை எண்ணிக்கை.

column graph : நெடுக்கை வரை படம்.

column head : நெடுக்கைத் தலைப்பு.

column indicator : நெடுக்கை சுட்டிக் காட்டி.

column move : நெடுக்கை நகர்த்தல் : *விவரத்தாளில் பத்தி அல்லது உரை ஆவணத்தில் எழுத்துகளை செவ்வகக் கட்டமாக மாற்றி வேறிடத்தில் வைத்தல்.*

column split : பத்தி பிரித்தல் : *துளையிடும் அட்டையில் 11வது அல்லது 12-வது வரிசை தொடர் பான துடிப்புகளைக் குறிப்பிட எண் துளைகளைப் நெடுக்கை வாரியாக தனித்தனியாகப் போட்டு அட்டையைத் துளை யிடும்போது படிக்க அல்லது எழுதும்போது கிடைக்கச் செய்வது.*

column text chart : நெடுக்கை உரை நிரல்படம்.

column width : நெடுக்கை அகலம்.

.com : .காம் : *1. வணிக அமை வனங்கள் பயன்படுத்தும் வலைத்தள முகவரிகளை அடை யாளம் காண உதவும் உயர் மட்டப் பகுதி. இணையத்தின் களப்பெயர் அமைப்பில் பெரும் பிரிவுக் களப் பெயர். காம் என் பது முகவரியின் இறுதிப் பாகத் தில் சேர்க்கப்படுவது. டிஎன்எஸ் (பொருள் வரையறை) பிரதேசம் (பொருள் வரையறை ) ஆகிய வற்றையும் பார்க்க. (எ.டு). .கல், .மில், .நெட், ஆர்க் இவற்றுடன் . ஒப்பிட்டுப் பார்க்கவும். 2. எம்எஸ்-பாஸ்லில் கோப்பின் வகைப் பெயர்-கட்டளைக் கோப்பை அடையாளம் காட்டுவது.*

combinational circuit : ஒன்றிணைவு மின்சுற்று : *கணினியின் பல்வேறு தருக்க இயக்கங்களைச் செய்ய மின் சுற்று அமைக்க உதவும் ஒன்றோ டொன்று இணையும் வாயில் களின் வரிசை முறை அமைப்பு.*

combination chart : சேர்க்கை நிரல் படம்.

combination logic : ஒன்றிணை தருக்கம் : *உள்ளீட்டின் தற் போதைய நிலையைக் கொண்டே வெளியீட்டின்*

நிலையை முடிவு செய்யும் மின் சுற்று ஏற்பாடு. நினைவகப் பகுதிகளைப் பயன்படுத்தும் இலக்கமுறை அமைப்பு.

**combinatorial explosion : ஒன்றிணைவு வெடிப்பு :** கணினி தீர்க்க வேண்டிய சிக்கலின் அளவு மிக அதிகமாகிவிட்ட போது ஏற்படும் நிலை. பெரிய கணினிகளிலும் இந்நிலை ஏற்படலாம்.

**combinatorics : இணைப்பியல் :** நிகழ்தகவு மற்றும் புள்ளி விவர தொகுப்பியல் தொடர்புடைய கணக்கியல் கிளை. எண்ணுதல், தொகுத்தல், வரிசைப்படுத்தல் ஆகியவை பற்றியது. இணைப் பியல் இரண்டு வகை இணைப்புகளையும் வரிசை மாற்ற வகைகளையும் கொண் டது. பெரிய குழுவிலிருந்து எடுத்த உறுப்புகளைத் தொகுத் தல். குழுவில் உறுப்புகள் இருந்துவந்த வரிசையைப் பொருட்படுத்தாமல் எடுத்துத் தொகுக்க வேண்டும். சான்றாக, 4 பொருள்கள் கொண்ட குழு விலிருந்து ஒவ்வொரு முறை யும் இரண்டு உறுப்புகள் எடுத்து ஆறு இணைப்பு வகைகள் உண்டாக்குதல். ABCD என்னும் பொருள்களில் இரண்டை எடுத்து AB, AC, AD, BC, BD, CD என ஆறு உண்டாக்குதல். உறுப்புகளின் வரிசையை அப்படியே கொண்டு பெரிய திலிருந்து உறுப்புகள் எடுத்துத் தொகுப்பது வரிசை மாற்ற வகையாகும். உதாரணமாக நான்கு பொருள் தொகுதி யிலிருந்து இரண்டு பொருள்கள் எடுத்து வரிசை மாற்ற வகை செய்தலைக் குறிப்பிடலாம். முதல் தெரிந்தெடுப்பான Aயில் நான்கிலிருந்து எடுக்க வேண்டி யிருக்கும். அடுத்த B தெரிந் தெடுப்பு மீத மூன்றிலிருந்து எடுப்பதாகும். மொத்தத்தில் 12 வரிசைமாற்ற வகைகள் உண் டாக்கலாம். அதாவது AB, AC, AD, BA, BC, BD, CA, CB, CD, DA, DB, DC.

**combined head : சேர்வுத் தலைப்பு; ஒன்றிணைந்த தலைப்பு.**

**combining characters : கூட்டு எழுத்துகள்.**

**combo box : சேர்க்கைப் பெட்டி.**

**combo box control : சேர்க்கைப் பெட்டி இயக்குவிசை.**

**COMDEX : காம்டெக்ஸ் :** தரவு தொடர்பு மற்றும் தரவுச் செய லாக்கக் கண்காட்சி எனப் பொருள்படும் Communications and Data Processing Exposition என்பதன் குறும்பெயர். அமெரிக்காவிலும் பிற இடங்

களிலும் நடைபெறும் மிகப் பெரிய கணினி பொருட்காட்சி.

**comic book : நகைச்சுவை நூல் :** 1985இல் முதல் முறையாக கணினி மூலமான நகைச்சுவை நூல் முறை உருவாக்கப்பட்டது. ஷாட்டர் (Shatter) என்னும் முதல் கணினி நகைச்சுவை நூலை உருவாக்கியவர் மெக்கின்டோஷ் நுண் கணினியை கருவியாகப் பயன்படுத்தினார்.

**COMIT : காமிட் :** சர செயலாக்க மொழிகளில் ஒன்று.

**comma delimited : காற்புள்ளியால் பிரிக்கப்பட்ட :** தரவு புலங்களை காற்புள்ளியால் தனியாகப் பிரிக்கும் பதிவேடு அமைப்பு. இதில் பொதுவாக எழுத்துத் தரவுகள் மேற்கோள் குறியீடுகளுடன் தரப்பட்டிருக்கும்.

**command : கட்டளை :** 1. கட்டுப்பாடு சமிக்கை. 2. ஒரு கணித அல்லது தருக்க இயக்கி. 3. ஒரு கணினி ஆணை. 4. கட்டளை.

**command and control system : கட்டளை, கட்டுப்பாட்டு முறைமை.**

**command based : கட்டளை அடிப்படையிலான.**

**command buffer : கட்டளை இடையகம் :** பயனாளர் பதிந்துள்ள கட்டளைகள் வைத்திருக்கும் நினைவகத்திலுள்ள ஒரு பகுதி. பயனாளர் மீண்டும் கட்டளைகளை முழுவதும் தட்டச்சு செய்யாமல், கட்டளைகளை மீண்டும் பயன்படுத்த உதவும். ஏதாவது பிழையிருந்தால் திருத்தவும், சிலவற்றை மாற்றவும், கட்டளைகளை நீக்கவும், பழைய கட்டளைகளின் பட்டியலைப் பெறவும் உதவும்.

**command button : கட்டளைப் பொத்தான் :** அழுத்தும் பொத்தானைப் போன்ற உருவுடைய இயக்குவிசை. வரைகலை பயனாளர் இடைமுகத்தில் உள்ள உரையாடல் பெட்டியில் இருப்பது. கட்டளைப் பொத்தானை அழுத்தி பயனாளர் உரையாடல் பெட்டியிலுள்ள வேறு கட்டுப்பாட்டு அமைப்பைப் பயன்படுத்தி அப்போது தான் தெரிந்தெடுத்த கோப்பைத் திறப்பதுபோன்ற செயல்களைச் கணினியை செய்ய வைக்கலாம்.

**command chained memory : கட்டளை இணைந்த நினைவகம் :** மாறும் சேமிப்பக ஒதுக்கீட்டில் பயன்படுத்தப்படும் நுட்பம்.

**COMMAND.COM : கமாண்ட்காம் :** எம்எஸ் டாஸ் இயக்க முறை

யின் தலையாய கோப்பு. அகக் கட்டளைகளை இதுவே நிறை வேற்றி வைக்கிறது.

**command driven : கட்டளை முடுக்கம்** : தட்டச்சு செய்த சொற்றொடர்களாக கட்டளை களை ஏற்றுக்கொள்ளும் நிரல் தொடர். பொதுவாக, இதைக் கற்றுக்கொள்வது அரிது. ஆயினும் பட்டியல் செலுத்து நிரலைவிட அதிக நெகிழ்வுத் தன்மையைத் தரும்.

**command driven software : கட்டளையால் முடுக்க மென் பொருள்** : முனையத்தைப் பயன் படுத்துவோருக்குப் பட்டிகள் (Menus) மூலம் வழிகாட்ட எந்த முயற்சியும் செய்யாத நிரல்கள். அதற்குப் பதிலாக, கட்டளை யால் இயங்கும் மென்பொரு ளில் எத்தகைய கட்டளை உள்ளது என்றும், அவற்றில் எது பொருத்தமானது என்றும் அறிந்து கொண்டிருக்க வேண் டும் என்றும் எதிர்பார்க்கப் படுகிறது.

**command driven system : கட்ட ளையால் இயங்கும் முறைமை** : கட்டுப்பாட்டு முனையத்தி லிருந்து நுழைந்த ஆணையைக் கொண்டு பயனாளர் செயற் பாடுகளைத் தொடங்குகிற ஓர் அமைப்பு.

**command file : கட்டளைக் கோப்பு; ஆணைக் கோப்பு.**

**command interpreter : கட்டளை பெயர்ப்பி; ஆணை பெயர்ப்பி; கட்டளை வரிமாற்றி** : சாதாரண மாக இது இயக்க முறைமை யின் பகுதியாக இருக்கும். விசைப் பலகையிலிருந்து தட்டச்சான கட்டளைகளை ஏற்று அதில் சொன்னபடி வேலைகளைச் செய்து முடிக் கும். ஆணை பெயர்ப்பி பயன் பாட்டுத் தொகுப்புகளை இயக்க வும், பயன்பாடு தொடர்பான தரவுகள் செல்வதை வழிப் படுத்தவும் செய்கிறது. ஒ.எஸ்/2 மற்றும் எம்எஸ்- டாஸில் கட்டளை பெயர்ப்பி, கோப்பு களை நகர்த்தவும், படி எடுக்க வும், நீக்கவும், கோப்பகத் தரவு களைக் காட்டவும் செய்கிறது.

**Command key : கட்டளை விசை** : குறிப்பிட்ட பணிகளைச் செய்ய பயன்படுத்தும் விசைப் பலகை யில் உள்ள ஒரு விசை.

**command language : கட்டளை மொழி** : ஆணை பெயர்ப்பி அமைப்பால் சரியானவை என்று ஏற்றுக் கொள்ளப்பட்ட சொற்களும் சொற்கோவை களும் கொண்ட தொகுதி.

**command line : கட்டளை வரி** : இயக்க முறைமையினால் (Operating System) கட்டளை

செயல்படுத்தும் நுழைவு. டாஸில் C:\>, யூனிக்ஸில் அடையாளத்துக்குப் பின் உள்ளீடு செய்யப்படும் கட்டளை வரியைக் குறிக்கிறது.

**command line arguments** : கட்டளை வரி உள்ளீடுகள்.

**command line interface** : கட்டளை வரி இடைமுகம் : இயக்க முறைமைக்கும் பயனாளருக்கும் இடையே உள்ள ஒருவித இடைமுகம். பயனாளர் அதில் ஆணைகளை ஒரு தனி வகை ஆணை மொழியைப் பயன்படுத்தித் தட்டச்சு செய்வார். கட்டளைவரி இடைமுகம் கற்றுக் கொள்வதற்குக் கடினமானது என்று கருதப்படுவது வழக்கமென்றாலும், ஆணை அடிப்படை கொண்ட அமைப்புகள் செயல்முறைப்படுத்தத்தக்கவை. செயல்முறைப்படுத்தும் இடைமுகம் அற்ற வரைகலை அடிப்படை கொண்ட அமைப்பில் இல்லாத நெகிழ்வு கிடைக்கிறது.

**command line operating system** : கட்டளைவரி இயக்க முறைமை.

**command line parameters** : கட்டளை வரி அளப்புருக்கள் : ஒரு கட்டளையில் சேர்க்கப்படும் கூடுதல் உள்ளீடுகள். டாஸ் அல்லது யூனிக்ஸில் பிராம்ப்டிலிருந்து ஒரு நிரலை இயக்கக் கட்டளை தரும் போது, அந்த நிரலுக்குத் தரப்படும் உள்ளீட்டுத் தரவுகள்.

**command line user interface** : கட்டளைவரி பயனாளர் இடை முகம்.

**command mode** : கட்டளைப் பாங்கு : செயல்படுத்தப்படுவதற்கான கட்டளைகளை கணினியை ஏற்றுக் கொள்ளச் செய்யும் இயக்க பாங்கு.

**command path** : கட்டளை வழி.

**command processing** : கட்டளைச் செயலாக்கம் : கணினி ஆணைகளைப் படித்தல், ஆராய்தல் மற்றும் செயல்படுத்தல்.

**command processor** : கட்டளைச் செயலி : ஒரு இயக்க முறைமையின் மிக எளிமையான கட்டளைகளை அறிந்து கொள்ளப் பயன்படும் ஒரு பொதுவான கட்டளைக் கோப்பு.

**command prompt** : கட்டளை தூண்டி.

**command queuing** : கட்டளைச் சாரை : பல கட்டளைகளைச் சேமித்து அவற்றை ஒவ்வொன்றாகச் செயல்படுத்தும் திறன்.

**command set** : கட்டளைத் தொகுதி : ஆணைத்தொகுதி (Instruction set) போன்றது.

**command shell** : கட்டளைச் செயல்தளம்.

**command state** : கட்டளை நிலை : ஒரு தொலைபேசி எண்ணுக்கு தொலைபேசி இணைப்பு ஏற்படுத்து என்று கூறப்படுவது போன்ற கட்டளைகளை இணக்கி (மோடெம்) ஏற்றுக் கொள்கிற நிலை.

**command statement** : கட்டளைக் கூற்று

**command tree** : கட்டளை மரம் : தலைமைக் கட்டளைப் பட்டியலுக்கும் தொடர்புடைய துணைப் பட்டியல்களுக்கும் உள்ள அனைத்து வாய்ப்புகளையும் கூறும் ஒரு வரிசைமுறை நிரல் படம்.

**comment out** : விளக்கக் குறிப்பாக்கு : ஒரு நிரலில் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட வரிகளை தற்காலிகமாக விளக்கக் குறிப்புப் பகுதியில் அடைத்துச் செயல்பட இயலாமல் செய்தல்.

**comments** : குறிப்புரைகள் : கணினி நிரலில் உள்ள கணினி மொழி கட்டளைகளுக்கு இடையே ஆங்காங்கே சேர்க்கக் கூடிய ஆங்கில உரைநடை. நிரலின் செயல்களை மனிதர்களுக்கு விளக்கப் பயன்படுத்தப் படுகிறது. கணினி விளக்க நூல்களில் சரியாக எழுதப்பட்ட குறிப்புகள் மிகவும் பயனுள்ளவை. நிரலின் உள்ளேயே இவை அமைவதால் எதிர்காலத்தில் பயன்படுத்துவோர்களுக்கு நிரல்களைப் புரிந்து கொள்ளவும், மாற்றவும் மிகவும் உதவியாக இவை அமைகின்றன.

**comment statements** : குறிப்புரைக் கூற்றுகள்.

**commerce server** : வணிக வழங்கன்; வணிகப் சேவையகம் : நேரடியாகத் தொழில் நடவடிக்கைகள் நடத்துவதற்காக வடிவமைக்கப்பட்ட ஒரு எச்டீடீபி வழங்கன் கணினி. பற்று அட்டை எண்கள் போன்ற தரவுகளை மறைக்குறியீட்டு முறையில் வழங்கனுக்கும் வலை உலாவிற்கும் இடையில் தரவு மாற்றம் செய்யப்படுகிறது. அஞ்சல்வழி வணிகம் புரியும் கம்பெனிகளும் வணிக வழங்கன்களை பயன்படுத்துகின்றன. சேமிப்பகம் அல்லது கம்பெனி அளிக்கும் பண்டங்கள் அல்லது சேவைகள் ஒளிப்படங்களாக விளக்கப்பட்டு காட்சியாக சேமிப்பகம் அல்லது கம்பெனியின் வலைத் தளத்தில் காட்டப் படுகின்றன. பயனாளர்கள் நேரடியாகத் தங்கள் வலை உலாவியைப் பயன்படுத்தி வேண்டியவற்றைக் கேட்டுப்

பெறலாம். நெட்ஸ்கேப், மைக்ரோசாஃப்ட், குவார்ட்டர் டெக் போன்றவை உள்ளடங்கலாக அநேக கம்பெனிகள் வணிக வழங்கன்களை விற்பனை செய்கின்றன.

**commercial data processing :** வணிகத் தரவு செயலாக்கம்.

**Commercial Internet Exchange : வணிக இணைய இணைப்பகம் :** பொதுமக்களுக்கு இணைய சேவை அளிக்கும் இலாப நோக்கமில்லாத வணிக அமைவனம். வழக்கமான பிறர் சார்பான நடவடிக்கைகள், சமூக நடவடிக்கைகள் ஆகியவற்றோடுகூட அதன் உறுப்பினர்களுக்கு இணைய இணைப்பு வசதியையும் அளிக்கிறது.

**commercial software :** வணிக மென்பொருள்.

**commission :** தரகுத் தொகை.

**Common Access Method : பொது அணுகு வழிமுறை :** ஃபியூச்சர் டொமைன் நிறுவனம் மற்றும் ஏனைய ஸ்கஸ்ஸி வணிக நிறுவனங்கள் இணைந்து உருவாக்கிய தர வரையறை. எப்படிப்பட்ட வன்பொருள்களைப் பயன்படுத்தினாலும் ஸ்கஸ்ஸி தகவிகள் (adapters) ஸ்கஸ்ஸி சாதனங்களுடன் தரவு பரிமாற்றத்தைச் சாத்தியம் ஆக்குகின்ற பொது அணுகு வழிமுறை இதுவாகும்.

**common applications environment (CAE) :** பொதுப் பயன்பாட்டுச் சூழல்.

**common area : பொது இடம் :** தலைமை நினைவகத்தில் ஒதுக்கப்பட்டுள்ள ஒரு இடம். ஒரே நிரலின் பல பகுதிகள் இதைப் பயன்படுத்திக் கொள்ளும்.

**common business oriented language :** பொது வணிகம் சார்ந்த மொழி. கோபால் (COBOL) மொழியின் விரிவாக்கப் பெயர்.

**Common Carriers : காமன் கேரியர்ஸ் :** பொது மக்களின் பயன்பாட்டுக்காக தொலைபேசி, தந்தி மற்றும் பிற தரவு தொடர்பு வசதிகளை ஏற்படுத்தித் தரும் அரசு வழிகாட்டலில் இயங்கும் தனியார் நிறுவனம்.

**Common Client Interface : பொது கிளையன் இடைமுகம் :** என்சிஎஸ்ஏ நிறுவனத் தயாரிப்பான மொசைக் மென்பொருளின் எக்ஸ்-விண்டோஸ் பதிப்பில் அறிமுகப்படுத்தப்பட்ட ஒரு கட்டுப்பாட்டு இடைமுகம். ஒரு வலை உலாவியின் உள்ளகங்களை வேறு நிரல்கள் கட்டுப்படுத்த முடியும். என்சிஎஸ்ஏ

மொசைக்கின் எக்ஸ்-விண்டோஸ் மற்றும் விண்டோஸ் பதிப்புகள் டிசிபி/ஐபீ நெறி முறை மூலமாக பிற நிரல்களுடன் தரவு பரிமாறிக் கொள்கின்றன. விண்டோஸ் பதிப்பில் ஓஎல்இ தரவு பரிமாற்றமும் இயல்வதாகும்.

**common control : பொதுக் கட்டுப்பாடு.**

**Common Dialog Box Control : பொது உரையாடல் பெட்டி இயக்குவிசை.**

**commondore international inc : கமாண்டோர் இன்டர்நேஷனல் இன்க் :** வீட்டுப் பயன்பாட்டிற்காக நுண்கணினி அமைப்புகளை உற்பத்தி செய்வதில் சிறப்பிடம் பெற்ற நிறுவனம். கமாண்டோர் பெட்விக் மற்றும் கம்மோடோர் 64 ஆகியவை மிகவும் புகழ் பெற்றவை. பரவலாகப் பயன்படுத்தப்படுகின்றன. கம்மோடோர் 128 மற்றும் அமிகா உள்ளிட்ட பெரிய நுண்கணினி அமைப்புகளை இந்த நிறுவனம் உற்பத்தி செய்கிறது.

**Common Hardware Reference Platform : பொது வன்பொருள் குறிப்புப் பணித்தளம் :** பவர்பீசி செயலியின் அடிப்படையில் அமைந்த ஒரு கணினிக் குடும்பத்துக்கான வரையறுப்பு. மேக்ஓஎஸ், விண்டோஸ் என்டி, ஏஐஎக்ஸ் மற்றும் சோலாரிஸ் உட்பட பல்வேறு இயக்க முறைமைகளில் இக்கணினிகள் செயல்பட முடியும்.

**Common Internet File System : பொது இணையக் கோப்பு முறைமை :** சன் மைக்ரோசிஸ்டம்ஸ் நிறுவனத்தின் வெப்நெட்வொர்க் என்னும் கோப்பு முறைமைக்குப் போட்டியாக மைக்ரோசாஃப்ட் நிறுவனம் முன்வைத்த தர வரையறை. இணையம் மற்றும் அக இணையக் கோப்புகளை பகிர்ந்து கொள்வதற்கான ஒரு கோப்பு முறைமை ஆகும்.

**common language runtime(CLR) : பொதுமொழி இயக்கச் சூழல்.** மைக்ரோசாஃப்ட் நிறுவனத்தின் .நெட் (.NET) தொழில்நுட்பத்தின் ஓர் அங்கம். பல்வேறு மொழியில் எழுதப்பட்ட நிரல்களை ஓரே இயக்க சூழலில் செயல்படுத்த முடியும்.

**common language specification (CLS) : பொதுமொழி வரையறை; பொது மொழி வரையறுப்பு.** மைக்ரோ சாஃப்ட் நிறுவனத்தின் .நெட் (.NET) தொழில் நுட்பத்தின் ஓர் அங்கம்.

**Common Lisp : பொது லிஸ்ப் :** லிஸ்ப் நிரலாக்க மொழியின்

தரப்படுத்தப்பட்ட பதிப்பு. லிஸ்ப் மொழியை எந்த நிறுவனமும் தம் சொந்த வடிவில் வெளியிட முடியும். இதன் காரணமாய் லிஸ்ப் மொழி வெவ்வேறு வடிவில் வெளியிடப்பட்டது. எனவே அம்மொழியைத் தரப்படுத்த வேண்டிய தேவை ஏற்பட்டது. தரப்படுத்தப்பட்ட பொது லிஸ்ப் மொழி உருவாக்கப்பட்டது. இதன் மூலம் லிஸ்ப் நிரலர்களுக்கு ஒரு வரையறுக்கப்பட்ட மூலமொழி கிடைத்தது.

**common storage : பொது சேமிப்பகம் :** எல்லா நிரல்களும் அணுகக்கூடிய தரவு அல்லது அளவுகோல்களை வைத்துக் கொண்டிருக்கும் நினைவகத்தின் பகுதி.

**common storage area : பொதுச் சேமிப்பகப் பரப்பு.**

**Common User Access : பொதுப் பயனர் அணுக்கம் :** ஐபிஎம் நிறுவனத்தின் முறைமைப் பயன்பாட்டுக் கட்டுமானத்தில் ஒரு பகுதியாக, பயனாளர் இடைமுகங்களை மேலாண்மை செய்வதற்கான தர வரையறைகளின் தொகுதி. வெவ்வேறு பணித்தளங்களில் ஒத்தியல்பாகவும் முரணின்றியும் செயல்படக்கூடிய பயன்பாடுகளை உருவாக்க உதவுவதற்கென இந்தப் பொதுப்பயனாளர் அணுக்கம் வடிவமைக்கப்பட்டுள்ளது.

**communicating : தரவு தொடர்பு கொள்ளல் :** பயன் படுத்தும் இடம் ஒன்றுக்கு தகவலை அனுப்பும் செயல்முறை.

**communicating word processors : தரவு தொடர்பளிக்கும் சொல் செயலிகள் :** மின்னணு அஞ்சலை அனுப்பப் பயன்படுத்தப்படும் சொல்செயலிகளின் கட்டமைப்பு.

**communication : தரவு தொடர்பு :** 1. ஒரு இடத்திலிருந்து (மூலம்) வேறொரு இடத்துக்கு (சேரிடம்) தரவு செல்லுதல். 2. அனுப்புதல் அல்லது தெரியப்படுத்தல். 3. பொதுவாக ஏற்றுக் கொள்ளப் பட்ட சமிக்கைகளின் தொகுதியைப் பயன்படுத்த தனிநபர்களுக்கிடையே தரவு மாற்றிக் கொள்ளும் செயல் முறை.

**communication channel : தரவு தொடர்பு வழித்தடம் :** தரவுகளை அனுப்புதல் அல்லது பெறுவதற்காக ஒரு இடம் அல்லது சாதனத்தினை வேறொன்றுடன் இணைக்கும் பருநிலை வழி. தரவு தொடர்பு வழித்தடங்களாக இணையச்சு வடம், ஒளிவ நுண் இழைகள், நுண்ணலை சமிக்கைகள்,

தொலைபேசிக் கம்பிகள் மற்றும் செயற்கைக் கோள் தரவு தொடர்புகள் ஆகியவை பயன்படுகின்றன.

**communication control unit : தரவு தொடர்புக் கட்டுப்பாட்டுச் சாதனம் :** பல்நோக்குக் கணினியிலிருந்தோ அல்லது கணினிக்கோ செய்தித் தரவு தொடர்பு ஓட்டத்தை மட்டும் கையாள வேண்டிய ஒரே வேலையைச் செய்கின்ற ஒரு சிறிய கணினி.

**communication data : தரவு தொடர்பு தரவு.**

**communication device : தரவு தொடர்புச் சாதனம்.**

**communication inferface : தரவு தொடர்பு இடைமுகம்.**

**communication line : தரவு தொடர்பு இணைப்பு :** தொலைபேசிக் கம்பி இணையச்சு வடம், ஒளியிழை வடம் அல்லது நுண்ணலை இணைப்பு போன்று தரவுகளை அனுப்புவதற்கேற்ற இணைப்பு.

**communication link : தரவு தொடர்புத் தொடுப்பு :** கணினிகளுக்கிடையே தரவு பரிமாற்றத்துக்கு வழியமைத்துத் தரும் இணைப்பு.

**communications controller : தரவு தொடர்பு கட்டுப்படுத்தி :** கணினியுடன் பல தரவு தொடர்புக் கம்பிகளை இணைக்கும் வெளிப்புறக் கட்டுப்பாட்டுச் சாதனம். அனுப்புதல், பெறுதல் மற்றும் செய்தி குறியாக்கம், குறிவிலக்கம் போன்ற நடவடிக்கைகளை இது செய்கிறது.

**communications interrupt : தரவு தொடர்புக் குறுக்கீடு :** நேரியல் தகவி மூலம் வரும் வன்பொருள் குறுக்கீடு. வரிசைக் கோட்டில் வேறொன்றை அனுப்பும்போது ஒரு எழுத்து குறுக்கே வருதல்.

**communications link : தரவு தொடர்பு தொடுப்பு :** இரண்டு கணினி சாதனங்களுக்கிடையில் தகவலை அனுப்பும் முறை.

**communications network : தரவு தொடர்பு பிணையம் :** முனையங்களையும் கணினிகளையும் இணைக்கும் தரவு தொடர்பு வழித் தடங்கள்.

**communications parameters : தகவல் தொடர்பு அளபுருக்கள் :** கணினிகள் தம்மிடையே தகவல் பரிமாறிக் கொள்ளத் தேவையான பல்வேறு தகவமைவுகளைக் குறிக்கும் அளபுருக்கள் ஒத்தியங்காத் தரவு தொடர்புகளில், எடுத்துக்காட்டாக, இரு இணக்கி(மோடம்)களுக்கிடையே தரவு தொடர்பு

நடைபெற மோடத்தின் வேகம், தரவு துண்மிகள், முடிப்புத் துண்மிகளின் எண்ணிக்கை, மற்றும் வகைச் சமன் ஆகிய அளபுருக்களை சரியாக தகவமைக்க வேண்டும்.

**communications processor : தகவல் தொடர்புச் செயலகம் :** கணினி அமைப்புக்கும் தகவல் தொடர்பு கட்டமைப்புகளுக்கும் இடையே தரவு பரிமாற்றலுக் கான பாதை அமைத்துத் தரும் கணினி.

**communications programme : தகவல் தொடர்பு நிரல் :** மோடெம் மூலமாக தகவல் தொடர்பு கொள்ள கணினிகளை அனுமதிக்கும் நிரல். தகவல் தொடர்பு கொள்வதற்கும், தகவலைப் பெறுவதற்கும் தானியங்கி முறைகளாகிய தானியங்கி பதில் அளித்தல், தானே டயல் செய்தல், வேறொரு கணினியை டயல் செய்தல் போன்றவற்றை சில தரவு தொடர்பு நிரல்கள் செய்யவில்லை. தொலை தூர கணினியில் ஆளில்லாமலே தொடர்பு கொள்ளவும் சில நிரல்கள் திறனுடையவை.

**communications protocol : தகவல் தொடர்பு நெறிமுறைகள் :** இரண்டு கணினி சாதனங் களுக்கிடையே நடைபெறும் தகவல் தொடர்பை நெறிபடுத் தும் விதிமுறைகள். தரவு இழப்பு, தரவு பிழை தவிர்கின்ற வழி முறைகளையும் கொண்டிருக்கும்.

**communications server : தகவல் தொடர்பு வழங்கன் :** குறும் பரப்புப் பிணையங்களை விரி பரப்புப் பிணைப்பு அல்லது தொலைத் தகவல் தொடர்பு பிணையங்களுடன் இணைக் கும் கருவி.

**communications slot : தகவல் தொடர்புச் செருகுவாய் :** மெக்கின்டோஷ் கணினியின் பல்வேறு மாதிரிகளில் பிணைய இடைமுக அட்டைகளைச் செருகுவதற்கென உள்ள விரி வாக்க செருகுவாய்.

**communications software : தகவல் தொடர்பு மென்பொருள் :** பயனாளரின் கட்டளைகளுக்கு ஏற்ப இணக்கியை (modem) கட்டுப்படுத்தும் மென்பொருள். பெரும்பாலும் இது போன்ற மென்பொருள் முனையக் கணினிகளை குறிப்பிட்ட வகை யில் தகவமைத்தல், கோப்பு களைப் பரிமாறிக்கொள்ளல் போன்ற வசதிகளைக் கொண் டிருப்பதுண்டு.

**communication satellite : தகவல் தொடர்பு செயற்கைக்கோள் :** பூமியின் மேலே சுற்றுப்பாதை

யில் பூமியின் வேகத்தில் சுற்றிக் கொண்டிருக்கும் செயற்கைக் கோள். நுண்ணலை பரப்பும் நிலையமாக அது செயல்படும். தரை நிலையத்திலிருந்து அனுப்பப்படும் சமிக்கைகளை ஏற்று, அவற்றின் திறன்பெருக்கி வெவ்வேறு அலைவரிசைகளில் பூமியிலுள்ள இன்னொரு தரை நிலையத்துக்கு அனுப்பி வைக்கும். தொடக்க காலங்களில் தொலைபேசி மற்றும் தொலைக்காட்சி சேவைகளுக்காகவே இத்தகைய தரவு தொடர்பு செயற்கைக் கோள்கள் பயன்படுத்தப்பட்டன. கணினி தரவுகளின் அதிவேக பரப்புகைக்கும் பயன்படுத்த முடியும். ஆனால் இரண்டு இடையூறுகள் உள்ளன. ஒன்று, அலைபரவலில் ஏற்படும் தாமதம் (சமிக்கைகள் நீண்ட தொலைவு பயணம் செய்வதற்கு எடுத்துக் கொள்ளும் காலத்தினால் ஏற்படும் தாமதம்). இரண்டாவது தரவு பாதுகாப்பு.

**communications system : தகவல் தொடர்பு அமைப்பு :** தகவல் அனுப்புகின்றவரின் கருப்பொருள், வழித்தடங்கள் மற்றும் தரவு பெறுபவர்களையும் கொண்ட அமைப்பு.

**communication standard : தரவுத் தொடர்புத் தரம்; செய்தித் தொடர்பு செந்தரம்; செய்தித் தொடர்பு திட்ட அளவு.**

**Communications Terminal Protocol : தகவல் தொடர்பு முனைய நெறிமுறை :** ஒரு பயனாளர் தன்னுடைய கணினியிலிருந்து தொலைதூரத்தில் உள்ள ஒரு கணினியை, அதனுடன் நேரடியாக இணைக்கப்பட்ட ஒரு கணினியைப் போலவே அணுக வழி செய்யும் முனைய நெறிமுறை இது.

**Community Antenna Televisions (CATV) : சமுதாய அலைவங்கித் தொலைக்காட்சி.**

**compact : குறு; குறுக்கி; கச்சிதம்.**

**compact database : தரவு தளத்தை இறுக்கு.**

**compact disc : குறுவட்டு :** *1.* தொடக்க காலங்களில், கேட்பொலி (audio) தகவலை இலக்கமுறை (digital) வடிவில் பதிந்து வைப்பதற்கான ஒரு ஒளியியல் சேமிப்பு ஊடகமாக அறிமுகம் ஆனது. இது மின்காந்த வட்டுகளிலிருந்து வேறுபட்டது. பளபளப்பான உலோகப் பூச்சும் பாதுகாப்பான பிளாஸ்டிக் மேல் பூச்சும் கொண்டது. 74 நிமிடங்கள் கேட்கக்கூடிய உயர்தர ஒலித் தகவலைப் பதிய முடியும். மிகு அடர்த்தியுள்ள

லேசர் கதிர் மற்றும் பிரதி பலிப்பு ஆடிகளின் உதவியுடன்



குறுவட்டு

இதிலுள்ள தரவு படிக்கப்படு கிறது. சுருக்கப் பெயர் சிடி (CD). சிலவேளைகளில் ஒளிவட்டு என்று அழைக்கப்படுவதுண்டு. 2. சிடி- ரோம், சிடி-ரோம்/ எக்ஸ்ஏ, சிடி-ஆர், சிடி-ஆர் டபிள்யூ, ஃபோட்டோசிடி, டிவிஐ என்று பல பெயர்களில், பல்வேறு வகையான தரவு வடிவங்கள் பதியப்பட்டுள்ள குறுவட்டுகள் கிடைக்கின்றன. பல்வேறு படிப்பு/எழுது வேகங் களில் மற்றும் கொள்ளளவு களில் தயாரிக்கப்படுகின்றன.

**compact disc interactive (CDI) : இடைப்பரிமாற்ற குறுவட்டு; ஊடாட்டம் குறுவட்டு.**

**compact disc player : குறுவட்டு இயக்கி :** குறுவட்டில் பதியப் பட்டுள்ள தகவலைப் படிப்பதற் கான ஒரு சாதனம். வட்டின் உள் ளடக்கத்தைப் படிப்பதற்குரிய ஒளியியல் கருவிகளையும், படித்த தகவலை சரியான வகை யில் வெளியீடு செய்வதற்குரிய மின்னணுச் சுற்றுகளையும் இச் சாதனம் கொண்டிருக்கும்.

**compact disc read only memorry (CDROM) : படிக்கமட்டுமான தரவு பதியும் குறுவட்டு.**

**compact disc-recordable and erasable : குறுவட்டு-பதிதகு மற்றும் அழிதகு :** பதிதகு குறு வட்டுகள் வெற்று வட்டுகளாகத் தயாரிக்கப்படுகின்றன. அதா வது தொடக்கத்தில் அவற்றில் தரவு எதுவும் பதியப்பட்டிருக் காது. இத்தகைய வெற்று வட்டு களை வாங்கி அவற்றில் எழுது வதற்கென உரிய சாதனங்கள் மூலம் தகவலைப் பதியலாம். அவ்வாறு ஒருமுறை பதியப் பட்ட தகவலை மீண்டும் அழித்து எழுத முடியாது. அழிதகு குறுவட்டுகளில் ஒரு முறை எழுதப்பட்ட தகவலை அழித்து விட்டு மீண்டும் புதிய தகவலை எழுத முடியும்.

**compaction : நெருக்கம் :** சேமிப் பதற்கு இடம் தருவதற்காக தரவு கோப்புகளை இறுக்கும் முறை.

**compact model : கச்சித மாதிரியம் :** இன்டெல் 80×86 செயலிக் குடும்பத்தில் பின்பற்றப்படும் ஒரு நினைவக மாதிரியம். இதில் நிரலாணைத் தொடர்களுக்கென 64 கேபி நினைவகம் ஒதுக்கப்படுகிறது. ஆனால் நிரலின் தரவுகளுக்கென 1 எம்பி வரை ஒதுக்கப்படுகிறது.

**company sites : நிறுவனத் தளங்கள்.**

**comparative grammer knowledge : ஒப்பிலக்கண அறிவு.**

**comparative knowledge : ஒப்புமை அறிவு.**

**comparative sort : ஒப்பீட்டு வரிசையாக்கம் :** இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட விவரங்களை ஒப்பிட்டு வரிசையாக்கும் முறை.

**comparator : ஒப்பீட்டுப் பொறி :** மாற்றப்பட்ட தரவுகளின் துல்லியத்தைச் சோதனை செய்ய இரண்டாவது முறையும் மாற்றம் செய்து இரண்டுக்குமிடையில் உள்ள வேறுபாட்டைக் குறிப்பிடும் சாதனம்.

**compare : ஒப்பீடு :** ஒன்றின் மதிப்பைச் சோதித்து சுழி (பூஜ்யம்)யுடனான அதன் உறவை முடிவு செய்தல் அல்லது இரண்டு பொருள்களை சோதித்தல். ஒப் பீட்டு அளவை முடிவு செய் யவோ அல்லது அடையாளம் காணும் நோக்கத்துடனோ இது செய்யப்படும்.

**comparison : ஒப்பீடு :** இரண்டு எண்களை அவற்றின் அடையாளத்துக்காக ஒப்பிடுதல் அல்லது இரண்டு எழுத்துகளை அவற்றின் அளவின் ஒப்புமைக்காக ஒப்பிடுதல் அல்லது அகர வரிசைப்படுத்துதல்.

**comparison operators : ஒப்பீட்டுச் செயற்குறிகள்.**

**comparison tests : ஒப்பீட்டுச் சோதனைகள்.**

**compart :** கம்பார்ட் : Computer Art என்பதன் குறும்பெயர்.

**compatibility : ஒத்தியல்பு; தகவுடைமை ; ஏற்புடைமை :** 1. ஒரு கணினிக்காக எழுதப்பட்ட நிரல், வேறு ஒரு மாறுபட்ட கணினியில் செயல்பட அனுமதிக்கும் சில கணினிகளின் தன்மை. 2. கணினியும், அச்சுப் பொறியும் போன்று பல்வேறு சாதனங்கள் ஒன்றுசேர்ந்து வேலை செய்யும் திறன்.

**compatibility mode : ஒத்தியல்புப் பங்கு :** ஒரு கணினி முறைமைக்காக உருவாக்கிய மென்பொருளோ வன்பொருளோ இன்னொரு கணினி முறைமையிலிருந்து செயல்படும் தன்மை.

பொதுவாக இம்முறை, இன்டெல் நுண்செயலிகளுக்காக உருவாக்கப்பட்ட உயர்நிலை இயக்க முறைமைகளில் (ஓஎஸ்/2 மற்றும் விண்டோஸ் என்டி) எம்எஸ்-டாஸ் மென்பொருளை இயக்குதலைக் குறிக்கும். அல்லது சில யூனிக்ஸ் பணி நிலையங்கள் மற்றும் சில மெக்கின்டோஷ் கணினிகளில் எம்எஸ்-டாஸ் மென்பொருள் இயக்குவதைக் குறிப்பதுண்டு.

**compatible : ஏற்புடைமை :** இரண்டு சாதனங்கள் அல்லது அமைப்புகளுக்கிடையே சேர்ந்து பணியாற்றும் தன்மையைக் குறிப்பிடுகிறது. ஒரு அமைப்பின் பகுதி ஒன்று வேறொரு அமைப்பின் பருப்பொருள் மற்றும் செயல்படு தன்மைகளுடன் முழுமையாக ஏற்புடையதென்றால், எந்த மாற்றமும் செய்யாமல் அதை வேறொரு அமைப்புடன் சேர்த்துக் கொள்ளலாம்.

**compatible software : ஒத்தியல்பு மென்பொருள் :** எந்தவித மாற்றமும் செய்யாமல் பல்வகை கணினிகளில் செயல்படக்கூடிய நிரல்கள்.

**compilation : தொகுத்தல் ; மொழி மாற்றல் :** கணினிச் செயலகத்தில் நேரடியாக இயக்கப்படுவதற்காக உயர்நிலை மொழிகளில் எழுதப்பட்ட நிரல்களை எந்திர மொழி ஆணைகளாக மொழி பெயர்த்துத் தரும் இரு முக்கிய முறைகளில் ஒன்று. இயக்கத்திற்கு முன்பே முழு நிரல் மொழி பெயர்க்கப்பட வேண்டும். ஆணை மாற்றி (interpretation)-க்கு மாறானது. ஆணைமாற்றி முறையில் ஒவ்வொரு ஆணையும் அது செயல்படுத்தப்படும்போது மட்டுமே மாற்றப்படுகிறது.

**compilation process : மொழி மாற்றுச் செயல்முறை.**

**compilation software : தொகுப்பு; மென்பொருள்; மொழிமாற்றி மென் பொருள்.**

**compilation time : மொழி மாற்று நேரம் :** மூலமொழி நிரலை இலக்கு நிரலாக மொழிபெயர்க்கும் (தொகுக்கும்) நேரம்.

**compile : மொழிமாற்று :** ஃபோர்ட்ரான், கோபால், அல்லது பாஸ்கல் போன்ற உயர் நிலை நிரலாக்க மொழியில் எழுதப்பட்ட நிரலை எந்திர மொழி நிரலாக மாற்றி அமைத்தல்.

**compile and go : மொழிமாற்றி இயக்க :** ஒரு நிரலை எந்திர மொழிக்கு மாற்றி அதனை இயக்கும் பணியையும் ஒரே நேரத்தில் செய்தல்.

**compiled basic** : மொழிமாற்று பேசிக்: பொதுவாக பேசிக் மொழி ஒவ்வொரு ஆணையாக நிறைவேற்றக்கூடிய ஆணை மாற்றி (interpreter)யை அடிப் படையாகக் கொண்டது. அவ்வாறில்லாமல், முழு நிரலையும் பொறிமொழியாக்கி இயக்கும் மொழிமாற்றியை (compiler) அடிப்படையாகக் கொண்ட பேசிக் இவ்வாறு அழைக்கப்படுகிறது. இவ்வாறு மொழி மாற்றப்பட்ட பேசிக் நிரல் மிகவேகமாக இயங்கும் என்பதால் தொழில் முறையான நிரல்களுக்கு இத்தகு பேசிக் மொழியையே தேர்வு செய்வர்.

**compiled language** : மாற்றிய மொழி; தொகு மொழி : கணினி யில் இயக்கப்படுவதற்கு முன் பொறிக் குறி முறையாக்கப் பட்ட ஒரு மொழி ஒவ்வொரு ஆணையாக மொழி பெயர்க்கப் பட்டு இயக்கப்படும் ஆணை மாற்று முறையிலிருந்து வேறு பட்டது.

**compiled programme** : தொகுக்கப்பட்ட நிரல்; மொழி மாற்றிய நிரல்.

**compiler** : மொழிமாற்றி; தொகுப்பி : உயர் நிலை மொழி நிரலை, கணினி வன்பொருளில் நேரடியாக செயல்படுத்தும் நோக்கத்துடன், மொழி பெயர்க்கும் மென்பொருள், இயக்கப்படுவதற்கு முன்பே முழு நிரலையும் மொழி பெயர்க்கிறது.

**compiler language** : மொழி மாற்றியின் மொழி : உயர்நிலை மொழிச் சொற்றொடர்களை இலக்கு மொழிக்கு மொழி பெயர்த்துத் தருவதற்கு பயன்படுத்தும் மொழிமாற்றி உருவாக்கப்பட்ட மொழி.

**compiler programme** : மொழி மாற்று நிரல்.

**compile time** : மொழிமாற்று நேரம் : ஒரு நிரலை மொழி மாற்ற ஆகும் நேரம். மூல மொழி யிலிருந்து எந்திர மொழிக்கு மொழி பெயர்க்க ஆகும் நேரம். நூலக செயல்களுடன் தொடுக் கும் நேரமும் இதில் சேர்த்துக் கொள்ளப்படும்.

**compile time binding** : தொகு நேர பிணைப்பு; மொழிமாற்று நேரப் பிணைப்பு : ஒரு நிரல் மொழி மாற்றப்படும்போதே அந்நிரலிலுள்ள ஓர் இனங் காட்டிக்கு (Identifier) (எடுத்துக் காட்டாக ஒரு செயல்கூறு அல் லது மாறிலி) இன்ன பொறுப்பு என முடிவு செய்து விடுவது. சிலவகை நிரல்களில் இப் பொறுப்பு, நிரல் இயக்கப்படும் போது முடிவு செய்யப் படுவதுண்டு.

**compile-time error** : மொழி மாற்று நேரப் பிழை : மூலக் குறியீட்டை மொழி மாற்றும் போது ஏற்படும் பிழை.

**compiling** : தொகுத்தல்.

**compiling application** : தொகுப்பு பயன்பாடு; மொழிமாற்றப் பயன் பாடு.

**complement** : நிரப்பு எண் ; சேர்ப்பு எண் : ஒரு குறிப்பிட்ட எண்ணின் எதிர்மறையை உரு வகிக்கும் எண். கடைசி முக்கிய இலக்கத்திற்கு ஒற்றுமையுடைய தாக 10-ன் சேர்ப்பெண் மற்றும் 2-ன் சேர்ப்பெண் போன்று ஆதார எண்ணிலிருந்து எண் ணின் ஒவ்வொரு இலக்கத்தை யும் கழிப்பதால் வரும் எண். Radix Complement என்றும் அழைக்கப்படுகிறது.

**complementary MOS (CMOS)** : நிரப்பு உலோக ஆக்சைடு குறை கடத்தி எனும் பொருள்படும் Metallic Oxide Semiconductor (MOS) (Complementary MOS) என்பதன் குறும்பெயர். மாசை விட வேகமாக வேலை செய் கின்ற, ஏறக்குறைய மின்சக்தி யைப் பயன்படுத்தாமலே இயங்கும் உலோக ஆக்சைடு. குறைக் கடத்தி சிப்பு. LSI-ஐ விடச் சிறந்ததல்ல. ஆனால் பேட்டரியிலிருந்து சக்தி பெறு கின்ற மின்னணு கைக்கடி காரங்கள் மற்றும் பிற கடிகாரங் களில் பயன்படுத்தப்படுகிறது.

**complementary operation** : நிரப்பு கைச் செயல்பாடு : பூலி யன் தருக்க முறையில், நேரெ திர் விடையை வரவழைக்கும் செயல்பாடு. இச் செயல்பாடு அதே தரவுகளின் மீதே நிகழ்த்தப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது. எடுத்துக் காட்டாக, ஏ என்பது சரி என்ற மதிப்புடையது எனில் 'இல்லை ஏ' என்பது தவறு என்ற விடையைத் தரும்.

**complementation, boolean** : பூலியன் நிரப்புகை.

**complementing** : நிரப்புதல்.

**complement notation** : நிரப்பு முறை.

**complement, tens** : பத்தின் நிரப் பெண்.

**completeness check** : முழுமைச் சரிபார்ப்பு : புலங்கள் எல்லாம் சரியாக இருக்கிறது என்றும் முழுப் பதிவுகளும் சோதிக்கப் பட்டது என்றும் உறுதி செய்வது.

**complete word** : முழுச் சொல்.

**complex** : கலவை : கலவை எண்களை (a+ib) பயன்படுத்தும் வகையில் சில கணினி மொழி களில் உள்ள தரவு இனம்.

**Complex Instruction Set Computer (CISC) : கலவை ஆணைத் தொகுதிக் கணினி.**

**complexity** : உட்சிக்கல்நிலை; கடுஞ்சிக்கல்.

**complex number** : கலப்பு எண் : a+ib என்ற வடிவில் உள்ள எண். a, b ஆகிய இரண்டும் மெய் எண்கள். i என்பது -1ன் வர்க்க மூலம் √- 1. a என்பது மெய்ப் பகுதி என்றும் b என்பது கற் பனைப் பகுதி என்றும் அழைக்கப்படுகிறது. கலப்பு எண்களை இரு பரிமாண வரைபடத் தாளில் எக்ஸ்-ஒய் அச்சுகளில் ஆயத் தொலைவுப் புள்ளிகளினால் குறித்துக் காட்டமுடியும். கிடைமட்ட அச்சில் (எக்ஸ்) மெய்ப்பகுதி யும் a), செங்குத்து அச்சில் (ஒய்) கற்பனைப் பகுதியும் (b) இடம்பெறும். எக்ஸ், ஒய் அச்சு கள் முறையே மெய், கற்பனை அச்சுகள் என்றழைக்கப்படுகின் றன. வரை படத் தளம் கலப்புத் தளம் (complex plane) எனப்படு கிறது.

**comp.newsgroups** : காம்ப். நியூஸ் குருப்ஸ்; கணி.செய்திக் குழுக்கள் யூஸ்நெட் செய்திக் குழுக்களின் படிநிலைப் பெயர். முன்னொட்டாக (prefix) comp. என்ற சொல் இருக்கும். இந்தச் செய்திக் குழுக்களில் கணினி வன் பொருள், மென்பொருள் மற்றும் கணினி அறிவியல் தொடர்பான ஏனைய செய்தி களைப் பற்றிய கலந்துரை யாடல்கள் நடைபெறும். யூஸ்நெட் செய்திக் குழுக்களின் படிநிலையில் அடிப்படையான ஏழு குழுக்களில் comp என்ப தும் ஒன்று. ஏனைய ஆறு: news., rec., sci., soc., talk., misc ஆகியவை.

**component** : பொருள்கூறு; ஆக்கக்கூறு; கணினி அமைப்புச் சாதனம் : ஒரு கணினி அமைப் பில் அடிப்படை உறுப்பு, மூலக உறுப்பு; ஒரு பயன்பாட்டின் பகுதி. மென்பொருள் ஆக்கக் கூறுகளையும் குறிக்கும்.

**component dialog box** : பொருள் கூறு உரையாடல் பெட்டி; ஆக் கக் கூறு உரையாடல் பெட்டி.

**component event** : பொருள்கூறு நிகழ்வு; ஆக்கக்கூறு நிகழ்வு.

**component object model** : பொருள் கூறு மாதிரியம். ஆக்கக் கூறு பொருள் மாதிரியம்.

**component reusability** : பொருள் கூறு மறுபயன்பாடு; ஆக்கக் கூறு மறுபயன்பாடு.

**component software** : ஆக்கக் கூறு மென்பொருள்; பொருள் கூறு மென்பொருள் : கூறுநிலை மென்பொருளாக்கத்தில் பயன்

படுத்தப்படும் பொருள்கூறுகள். பொருள் கூறுகள் பிற பொருட் கூறுகளுடன் இணைந்து ஓர் ஒட்டுமொத்த நிரலை உருவாக்குகின்றன. ஒரு நிரலர், ஏற்கெனவே உருவாக்கி வைக்கப்பட்டுள்ள பொருள்கூறு ஒன்றினை தன் நிரலில் பயன் படுத்திக் கொள்ள முடியும். மீண்டும்மீண்டும் பயன்படுத்திக் கொள்ள முடியும். பொருள்கூறு எவ்வாறு உருவாக்கப்பட்டது, அதனுள்ளே எழுதப்பட்ட நிரல்கள் ஆணைத் தொடர்கள் எவை, அவை எப்படிச் செயல் படுகின்றன என்பதைப் பற்றி யெல்லாம் அறிந்துகொள்ளா மலே அப்பொருள்கூறின் முழுப் பயனையும் நுகர முடியும்.

**COM port** : காம் துறை : பிற வெளிப்புற சாதனங்களுடன் தரவு தொடர்பு கொள்வதற்காக பீ.சி.யில் பொருந்தும் ஒரு நேரியல் வெளியீட்டு துறை.



காம் துறை

**compose** : உருவாக்கு.

**compose message** : செய்தி யாக்கல்.

**compose sequence** : இயற்று வரிசை முறை.

**composite** : கலப்பு : அனைத்து மூன்று அடிப்படை ஒளிக்காட்சி (வீடியோ) நிற சமிக்கைகளும் (சிவப்பு, பச்சை, நீலம்) கலந் துள்ள ஒளிக்காட்சி சமிக்கை வகை. சில கணினி திரையகங் களில் உள்ள உருவங்களின் கூர்மையைக் கட்டுப்படுத்து கிறது. எலெக்ட்ரான் பீச்சு கருவி யைப் பயன்படுத்தி மூன்று அடிப் படை நிறங்களை உருவாக்கும் தொலைக்காட்சிகளிலும் பயன் படுத்தப்படுகிறது.

**composite card** : கலவை அட்டை : பலநோக்கு தரவு அட்டை. அல்லது பல்வேறு பயன்பாடுகளைச் செயலாக்கம் செய்ய தேவைப்படும் தரவு களைக் கொண்ட அட்டை.

**composite colour monitor** : ஒருங்குசேர் வண்ணத்திரையகம்.

**composite display** : கூட்டுருத் திரைக்காட்சி : தொலைக்காட்சி மற்றும் சில கணித் திரை களின் காட்சிப் பணியல்பைக்

குறிக்கிறது. கூட்டுக் கலவை யான சமிக்கைகளிலிருந்து ஒரு படிமத்தை மீட்டெடுக்கும் திறனைக் குறிப்பிடுகிறது. கூட்டுருக் காட்சி கறுப்பு வெள் ளையாகவோ, வண்ணமாகவோ இருக்கலாம். சாதாரண கறுப்பு வெள்ளை அல்லது சிபநீ (RGB) வண்ணத்திரைகளைக் காட்டி லும் தெளிவற்றே இருக்கும். சிபநீ காட்சித் திரைகள் **சிவப்பு, பச்சை, நீலம்** ஆகிய நிறக் கூறு களுக்குத் தனித்தனி சமிக்கை களையும் தனித்தனி இணைப்புக் கம்பிகளையும் கொண்டுள்ளன. ஆனால் கூட்டுருக் காட்சித் திரைகள் ஒரே இணைப்புக் கம்பியிலேயே படிமத்தை உரு வாக்குவதற்கான தரவு சமிக்கை களையும், கிடைமட்ட மற்றும் செங்குத்து வருடல்களுக்கான துடிப்புத் தரவுகளையும் பெறு கின்றன.

**composite key : கூட்டுத் திறவி:** ஓர் அட்டவணையில் தரவுவைத் தேடிப் பெறப் பொதுவாக ஒரு குறிப்பிட்ட புலம் திறவு கோலாகப் பயன்படும். (எ-டு) பணியாளர்களின் விவரங் களைப் பதிந்து வைத்துள்ள அட்டவணையில் ஒரு குறிப் பிட்ட ஏட்டை(record) இனங் காண பணியாளர் எண் திறவு கோல் புலமாகப் பயன்பட முடியும். சில அட்டவணை களில் ஒற்றைப் புலம் திறவு கோலாகப் பயன்பட முடியாது. பல்வேறு வணிகர்களிடம் கொள்முதல் செய்த பல்வேறு பொருள்களின் விவரங்கள் அடங்கிய பட்டியலில் ஒரு குறிப்பிட்ட ஏட்டினை (record) இனங்காண வணிகர் எண்+ பொருள் எண் இரண்டு புலங் களும் சேர்ந்த கூட்டுத் திறவு கோலையே பயன்படுத்த முடியும்.

**composite statement : கலவைக் கூற்று.**

**composite symbol : கலப்புக் குறியீடு** : ஒரு குறிக்கு மேற் பட்ட குறிகளைக் கொண்ட சமிக்கை < > என்ற குறியீடு சம மானதல்ல என்பதைக் குறிப் பிடச் சில மென்பொருள் அமைப்பு களில் பயன்படுத்தப்படுகிறது.

**composite video : கலவை ஒளிக் காட்சி; கலப்பு ஒளிக்காட்சி; கலந்த ஒளிக்காட்சி** : ஒரு தனி ஒளிக்காட்சி சமிக்கையாக குறி யீடு செய்யப்பட்டு பிரகாசம், நிறக்கூறு வடிவில் தோன்றும் ஒரு கணினியின் வண்ணக் காட்சித் திரையில் தோன்றும் நிற வெளிப்பாடு. நிறக் கட்டுப் பாடு சமிக்கை ஒரு தரவு தொடராக மூன்று நிறங்களில் (சிகப்பு, பச்சை, நீலம்) குறியீடு

செய்யப்படுகிறது. கலவை காட்சித்திரைகள் எனப்படும் சிக்கனமான வண்ண காட்சித் திரைகள் கலவை ஒளிக்காட்சி யைப் பயன்படுத்தி தொலைக் காட்சி பெட்டியைவிட ஓரளவு சிறந்த படத்தை அளிக்கும். ஆனால் ஆர்ஜிபி காட்சித்திரை போன்ற உயர்தரத்தில் அளிக்க இயலாது.

**composite video display :** கூட்டு ஒளிக்காட்சித் திரை.

**composition :** எழுத்துக் கோப்பு : எழுத்துகளின் அளவுகள், முறை கள் மற்றும் ஒரு பக்கத்தில் அவற்றின் அமைப்புகளைத் தேர்ந்து எடுத்தல்.

**compound document :** கூட்டு ஆவணம் : சொற்கள் மற்றும் வரைகலை ஆகிய இரண்டும் உள்ள கோப்பு. கூட்டு ஆவணங் களில் குரல் மற்றும் ஒளிக் காட்சியும் இடம் பெறும்.

**compound statement :** கூட்டு கூற்று : தனியாகப் பயன் படுத்தக்கூடிய இரண்டு அல்லது கூடுதல் ஆணைகளைக் கொண்டுள்ள தனி ஆணை.

**compress :** இறுக்கு; சுருக்கு : இடத்தை சேமிக்க தரவுகளைச் சுருக்குதல். தரவுகளைச் சுருக்க, செயல்பாட்டு ஆணையின் பயனீட்டுக் கோப்புப் பெயருடன் A-Z பின்னிணைப்பு சேர்க்கப்படுகிறது. Uncompress என்ற பயன்பாடு கோப்புகளை விரிவாக்கி பழையபடியே தரும்.

**compressed disk :** இறுக்கிய வட்டு; இறுகு வட்டு : ஒரு நிலைவட்டு அல்லது நெகிழ் வட்டில் இயல்பாகக் கொள்ளும் அளவுக்கும் அதிகமாகத் தரவுவைப் பதிவதற்கென மென் பொருள் பயன்கூறுகள் உள்ளன. (எ-டு) ஸ்டேக்கர், டபுள்ஸ் பேஸ் போன்றவை. இவை வட் டில் உள்ள தரவுவை இறுக்கிச் சுருக்கிப் பதிவதன் மூலம் அதிக மான அளவு தரவுவைப் பதிய வழியமைத்துக் கொடுக்கின்றன.

**compressed drive :** இறுகு வட்டகம்; இறுகு இயக்ககம்.

**compressed file :** இறுக்கப்பட்ட கோப்பு : வழக்கமானதைவிட குறைவான சேமிப்பு இடத்தை எடுத்துக் கொள்ளும் வகையில் சேமிக்கப்படும் கோப்பு.

**Compressed SLIP :** இறுகு ஸ்லிப் : ஸ்லிப் என்பது ஓர் இணைய நெறிமுறை (Internet Protocol). இதன் ஒரு பதிப்பு இறுகு ஸ்லிப் எனப்படுகிறது. இணைய முகவரித் தகவலை இறுக்கிச் சுருக்கிப் பயன்படுத்து கிறது. இதன் காரணமாய் சாதாரண ஸ்லிப் நெறிமுறையை

விட இது வேகமாகச் செயல் படுகிறது.

**compression** : இறுக்குதல்; இறுக்கம்.

**compression alogrithm** : இறுக்கப் படி முறை.

**compression ratio** : இறுக்கு வீதம் : இறுக்கப்பட்ட தரவு களை அளப்பது. சான்றாக, அதன் மூல அளவின் கால் பங்காக இறுக்கினால் அதை 4:1, 25%, 75% என்று குறிப்பிடலாம்.

**compression technique** : இறுக்கிச் சுருக்கும் நுட்பம்.

**compressor** : இறுக்கி; செறிவி; சுருக்கி : மிகவும் வலுவானதும் மிகவும் பலவீனமானதுமான அனுப்பும் சமிக்கைகளின் எல்லையைச் சுருக்கும் சாதனம். தரவுகளைச் சுருக்கும் நிரல் அல்லது நடைமுறை ஒழுங்கு.

**CompuServe** : கம்ப்யூசெர்வ் : தனிநபர்கள் மற்றும் வணிகத் துறையினர் பயன்படுத்தும் பெரிய தகவல் சேவை கட்டமைப்பு. புதிய செய்திக் கட்டுரைகள், பங்குச் சந்தை அறிக்கைகள், மின் அஞ்சல், கல்வி நிரல்கள், நிரலாக்க உதவிச் சாதனங்கள் போன்ற வற்றைக் கொண்டுள்ளது. பொது தொலைபேசி அமைப்பு மூலம் சொந்தக் கணினி வைத் திருப்போர் 'கம்ப்யூசெர்வ்' யுடன் தொடர்பு கொள்ளலாம்.

**computability** : கணக்கிடும் தன்மை : கணக்கு முறையில் சிக்கல்களைத் தீர்க்கும் பொருள்.

**computation** : கணக்கிடல் : கணக்கிடுவதன் விளைவு.

**computational complexity** : கணக்கிடல் உட்சிக்கல் நிலை.

**computational linguistics** : கணினி மொழியியல்.

**computational stylistics** : கணினி நடையியல்.

**compute** : கணக்கிடு; கணி.

**compute bound** : கணக்கிடும் வரையறை : மையச் செய லகத்தின் வேகத்தினால் கட்டுப் படுத்தப்பட்ட கணினி அமைப் பின் ஒரு நிரலாகக் குறிப்பிடு வது. கட்டுப்படுத்தும் செயல் முறை அல்லது செயலக வரை யறை என்பதைப் போன்றது. உள்ளீடு:வெளியீடு வரையறை என்பதற்கு மாறானது.

**computer** : கணினி; கணிப் பொறி : தரவுகளை ஏற்றுக் கொண்டு அத்தரவுகளின்மீது குறிப்பிட்ட செயல்முறை (கணித அல்லது தருக்க முறை) களை நிகழ்த்தி அச்செயல்முறை

களின் முடிவைத் தருவதன் மூலம் சிக்கல்களைத் தீர்க்கும் திறனுடைய சாதனம்.

**computer abuse** : கணினி கெடு வழக்கு.

**Computer Aided Design (CAD) : கணினி உதவிடும் வடிவமைப்பு** : காட்சி முறையும் ஒளிப்பேனா அல்லது பலகையின் மூலம் ஒரு கணினிக்கும், ஒரு வடிவமைப் பவருக்கும் இடையில் ஏற்படும் நேரடியான, தரவு தொடர் பினைக் கொண்ட கணினித் தொழில்நுட்பம். கட்டட வடி வமைப்பு, எந்திரங்கள் மற்றும் பொறியியல் கருவிகள் உற் பத்திப் பொருள்கள் வடிவமைப் புக்கு பெரிதும் உதவுகிறது.

**Computer-Aided Design and Drafting (CADD) : கணினி உத விடும் வடிவமைப்பு மற்றும் படம் வரைதல்** : ஓவியங்களை உரு வாக்குதல், படம் வரைதல். விருப்பங்களை வரிசைப்படுத்து தல் போன்ற பணிகளுக்கு பயன் படும் கணினித் தொழில்நுட்பம்.

**Computer Aided Design/ Computer aided manufacturing (CAD/CAM) : கணினி ரேம்; கணினி உதவிடும் வடிவமைப்பு / கணினி உதவிடும் உற்பத்தி முறை** : வடிவமைத்தல் மற்றும் உற்பத்தி முறை செயல்பாடு களைத் தானியங்கி முறையில் செய்யும் முயற்சி. வேகமாக வளரும் கணினி வரைபட முறை. தற்போது கையெழுத்துக் கலை வரைபட முறையையே முக்கிய ஆதாரமாக கொண் டுள்ளது. என்றாலும் ராஸ்டர் வரைபட முறையை உள்ளடக் கிய பகுதிகள், கட்டுமானம் மற் றும் ஒருங்கிணைந்த மின்சுற்று கள் போன்ற பரவலான பயன் பாடுகளைச் உருவாக்க கிளை விட்டுள்ளது.

**computer-aided engineering : கணினி - உதவிடும் பொறி யியல்** : கணினி - உதவிடும் வடி வமைப்பு முறைகளைப் பயன் படுத்தி உருவாக்கப்படும் உற்பத்தி வடிவமைப்புகளின் மாதிரிகளை உருவாக்க, ஆராய, மதிப்பீடு செய்ய கணினிகளைப் பயன்படுத்துதல்.

**Computer Aided Factory Management : (CAFM) : சிஏ எஃப்எம்; கணினி உதவிடும் தொழிற்சாலை மேலாண்மை** : உற்பத்தி முறைகளையும், உற் பத்தித் தொழிற்சாலையின் இயக்கத்தையும் தானியங்கி யாக செய்வதற்கு கணினிகளைப் பயன்படுத்துதல். Factory Automation என்றும் அழைக்கப் படுகிறது. உதிரி பாகங்களைக் கணக்கெடுத்தல். வழங்கு

மையங்களின் தேவைக் கேற்ப புதிய பொருள்களுக்கு ஆணை யிடுதல் போன்றவற்றில் துல் லியமான கணக்கு வைத்திருக்க, கணினி மூலம் செயல்படும், உற்பத்தி மேலாண்மை அமைப்பு.

**Computer Aided Manufacturing (CAM) : கணினி உதவிடும் உற்பத்தி முறை (கம்);** உற்பத்தித் துறையைச் சேர்ந்த மேலாண்மை, கட்டுப்பாடு, செயல்முறை ஆகியவற்றுக்கு கணினித் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்துதல்.

**Computer Aided Materials Delivery : கணினி உதவிடும் பொருள் விநியோகம் :** கணினி இயக்கத்தில் நகர்த்திப் பட்டை களையும், எந்திரன் (எந்திர மனித) வண்டிகளையும் பயன் படுத்தித் தொழிற்சாலை யிலிருந்து பொருள்களையும் உதிரி பாகங்களையும் நகர்த்து தல். இதன் மூலம் உற்பத்தித் திறன் அதிகரித்து நிறுவனத்தின் ஒட்டுமொத்த செயல்திறன் கூடுகிறது.

**Computer Aided Materials Selection : கணினி உதவிடும் பொருள் தேர்வு :** ஒரு புதிய பொருள் அல்லது உதிரி பாகத்தை உருவாக்க எந்தெந்த பொருள்களைப் பயன்படுத்த லாம் என்பதை முடிவுசெய்ய கணினியைப் பயன்படுத்துதல்.

**Computer-Aided Planning (CAP) : கணினி-உதவிடும் திட்டமிடல் :** திட்டமிடல் செயல்முறைக்கு உதவ கணினி மென்பொருள் களை கருவிகளாகப் பயன் படுத்துதல்.

**Computer - Aided Software Engineering (CASE) : கணினி உதவிடும் மென்பொருள் பொறி யியல் :** மென்பொருள் உருவாக் கம் அல்லது நிரலாக்கம் உள் ளிட்ட தரவு அமைப்பு வளர்ச் சியில் பல்வேறு நிலைகளைத் தானியங்கியாகச் செய்ய மென் பொருள் தொகுப்பைப் பயன் படுத்துவது.

**computer, all purpose : அனைத்துப் பயன் கணினி.**

**computer, anolog : ஒத்திசைக் கணினி; தொடர்முறை கணினி.**

**computer anxiety : கணினி பதட்டம் :** கணினிகள் பற்றிய அச்சம்.

**computer application : கணினிப் பயன்பாடு :** இறுதி பயனாளர் ஒரு குறிப்பிட்ட வேலைக்கோ அல்லது ஒன்றைச் சாதிக்கவோ, ஒரு குறிப்பிட்ட பிரச்சினை யைத் தீர்க்கவோ கணினியைப் பயன்படுத்துவது. சான்றாக,

பொதுவான வணிகக் கணினி பயன்பாடுகளில் கொள்முதல், கோரிக்கை விலைப்பட்டி, கணக்கெடுப்பு, சம்பளப்பட்டி போன்றவை அடங்கும்.

**computer architecture : கணினிக் கட்டுமானம் :** கணினி அமைப்பின் வன்பொருளின் பருப்பொருள் அமைப்பையும், மற்ற வன்பொருள்களுடன் அவற்றுக்குள்ள உறவையும் பற்றி ஆராயும் கணினி பற்றிய ஆய்வு.

**computer art : கணினிக் கலை :** ஓவியர்களுக்கான கணினி கருவியைப் பயன்படுத்தி ஓவியர்கள் உருவாக்கிய வடிவம். வண்ணம் பூசும் தூரிகை, கரிபென்சில் அல்லது மனதின் ஒரு விரிவாக்கம் என்பதாக கணினியைக் கருதலாம். ஓவியர் அழகான உருவங்களைக் கனவு கண்டு கணினியைப் பயன்படுத்தி அவற்றை உயிரோட்ட முள்ளனவாகக் கொண்டு வரலாம். காட்சி வரைபட முறைகளிலும், அச்சுப் பொறிகள், இலக்கமுறை வரைவு பொறிகள், படியெடுக்கும் சாதனங்கள் போன்றவற்றால் கணினிக் கலைப் பொருட்களை உருவாக்கலாம்.

**computer artist : கணினி ஓவியர் :** கலைப் படைப்புகளை உருவாக்கக் கணினிகளைப் பயன்படுத்துபவர்.

**computer assisted diagnosis : கணினி உதவிடும் நோயறிமுறை :** வேகமாகவும், துல்லியமாகவும் நோயறிவதற்கும், மருத்துவர் நேரத்தைச் மிச்சப்படுத்தவும் கணினியை ஒரு கருவியாகப் பயன்படுத்துதல். மருத்துவத் தரவுகளைப் படித்து வழக்கமாக உள்ளதிலிருந்து மாறுபாடுகளை மதிப்பீடு செய்து நோய் என்ன வென்று அறிந்து கொள்ள கணினியைப் பயன்படுத்துதல்.

**Computer Assisted Instruction (CAI) : கணினி உதவிடும் கல்வி :** கல்வி கற்கக் கணியைப் பயன்படுத்துதல். படிநிலை முறையில் தொகுக்கப்பட்ட பாடங்களை மாணவர்கள் கணினி வழியாகப் பயிலலாம். மாணவரின் தகுதி, தேவை, திறனுக்கேற்ப பாட வரிசை மற்றும் உள்ளடக்கம் அமையும்.

**computer-assisted learning : கணினிவழி கற்றல் :** கணினிகளையும் அவற்றின் பல்லூடகத் திறனையும் பாடங்களைக் கற்பிக்கப் பயன்படுத்திக் கொள்ளுதல்.

**Computer Assisted Manufacturing (CAM) : கணினி உதவி உற்பத்தி.**

**Computer Augmented Learning (CAL) : கணினி மேம்படுத்தும்**

**கல்வி (கால்) :** கற்பித்தலுக்கும், சிக்கல் தீர்ப்பதற்கும் க்ணினி அமைப்பைப் பயன்படுத்துதல் வழக்கமான கல்விமுறையை மேம்படுத்தவோ, துணை புரியவோ செய்தல். Computer Assisted Instruction என்பதும் இதுவும் ஒன்றல்ல.

**computer awareness : கணினி விழிப்புணர்வு :** கணினி என்றால் என்ன என்றும், அது எவ்வாறு செயல்படுகிறது என்றும் அறிந்து கொள்வதைவிட சமுதாயத்திற்கு கணினியின் பங்கும் பயனும் பற்றி புரிந்து கொள்வதையே பொதுவாக இவ்வாறு சொல்வர்.

**Computer Based Consultant (CBC) : கணினி சார்ந்த ஆலோசகர் :** 1970 தொடக்கத்தில் வடிவமைக் கப்பட்ட, மின்னியந்திரக் கருவி யினைப் பழுதுபார்க்க உதவு வதற்காக உருவாக்கப்பட்ட அறிவு சார்ந்த அமைப்பு.

**computer based information system : கணினி சார்ந்த தகவல் அமைப்பு :** தனது தகவல் செய லாக்க நடவடிக்கைகளுக்கு கணினியின் வன்பொருள் மற் றும் மென்பொருளைப் பயன் படுத்தும் தகவல் அமைப்பு.

**Computer Based Learning (CBL) : கணினி அடிப்படையிலான கல்வி (சிபிஎல்) :** கணினி வழிக் கற்றலின் அனைத்து வடிவங் களையும் குறிக்கின்றது.

**computer binder : கணினி ஒட்டி :** அச்சுப்பொறிகள் உருவாக்கு கின்ற அச்சு வெளியீடுகளைப் பாதுகாக்கவும், வைத்துக் கொள்ளவும் உருவாக்கப் பட்டுள்ள ஒட்டி.

**computer, buffered : இடைத் தடுப்புக் கணினி.**

**computer bulletin board : கணினி அறிக்கைப் பலகை :** ஒரு செய்தித் தாளின் விளம்பரப் பிரிவின் மின்னணுப் பதிப்பு போன்ற ஒரு கணினி அறிக்கைப் பலகை.

**computer bureau : கணினி அலு வலகம் :** பல பயனாளர்களுக்கு தன்னுடைய கணினியின் நேரத்தை விற்கும் நிறுவனம்.

**computer camp : கணினி முகாம் :** கோடை வாரங்களில் நடத்தப் படும் முகாம். இதில் பங்கு கொள்பவர்கள் நீச்சலடிப்பது, காரோட்டுவதுடன் நுண்கணினி களைப் பயன்படுத்தவும் கற்றுக் கொள்வார்கள்.

**computer center : கணினி மையம் :** கணினி, அதன் துணைப் பொருள்கள் மூலமாக வும், அதன் பணியாளர் அளிக்

கும் சேவைகள் மூலமாகவும் பல தரப்பட்ட பயனாளர்களுக்கு கணினிச் சேவைகளை வழங்கும் நிலையம்.

**computer center director : கணினி மைய இயக்குநர்** : ஒரு கணினி மையத்தின் பணியாளர்களை இயக்கும் தனி நபர்.

**computer chess : கணினிச் சதுரங்கம்** : சதுரங்க விளையாட்டை ஆடும் கணினி நிரல். 1970 முதல் ஏசிஎம் வட அமெரிக்க கணினி சதுரங்க சாம்பியன்ஷிப்புகள் வளர்ச்சிக்கு ஒரு கிரியா ஊக்கியாகவும், செயற்கை நுண்ணறிவு ஆய்வுக்கு வரலாற்றுப் பதிவேடாகவும் விளங்குகிறது. கடந்த 20 ஆண்டுகளில், மன்ற ஆட்டக்காரர்கள் நிலையிலிருந்து உலகின் மிகச்சிறந்த வரிசையில் நிரல்கள் முன்னேறி உள்ளன.

**computer circuitry : கணினிச் மின்சுற்றமைப்பு.**

**computer circuits : கணினி மின் சுற்றுகள்** : வாயில் மின்சுற்றுகள், சேமிப்பு மின்சுற்றுகள், தொடக்கும் மின்சுற்றுகள், தலைகீழாக்கும் மின்சுற்றுகள், மின்சக்தி பெருக்கும் மின் சுற்றுகள் போன்றவை இலக்க முறை கணினிகளில் பயன் படுத்தப்படும் மின் சுற்றுகள்.

**computer classifications : கணினி வகைப்பாடுகள்** : இலக்க முறை, தொடர்முறை என்று இரண்டு பெரும் பிரிவுகளில் கணினிகள் அடங்குகின்றன. இலக்கமுறை மற்றும் தொடர் முறைக் கணினிகளை ஒன்றாக இணைத்து கலப்பினம் என்று சொல்லப்படும் மூன்றாவது வகையும் உருவாக்கப்படுகிறது. மிகப்பெரிய மீத்திறன் கணினிகள் முதல் மிகச்சிறிய நுண் கணினிகள் வரை கணினிகளின் அளவு, விலை, திறன் மாறுபடுகிறது.

**computer code : கணினிக் குறி முறை** : ஒரு குறிப்பிட்ட கணினிக்கான எந்திரக் குறி முறை.

**computer conferencing : கணினிக் கலந்துரையாடல்** : ஒரு கட்டமைப்பில் பங்கு கொண்டுள்ள பலவற்றுக்கிடையேயான தகவல் தொடர்பு. மனிதர்களின் உண்மையான சந்திப்புக்கும், தொலைபேசி மாநாட்டமைப்புக்கும் ஒரு மாற்று ஏற்பாடாக தொலைத் தகவல் தொடர்புகள் வழியாக பலதரப்பட்டவர்கள் தங்களுக்குள் செய்திகளையும், தகவலையும் பரிமாறிக் கொள்வது.

**computer control : கணினிக் கட்டுப்பாடு.**

**computer control console :** கணினிக் கட்டுப்பாட்டுப் பணியகம்.

**computer crime :** கணினிக் குற்றம் : கணினி அமைப்பை தீயநோக்கங்களுக்குப் பயன்படுத்தி அனுமதியற்ற செயல்களைச் செய்ய கணினியைப் பயன்படுத்துதல். சிறிய ஏமாற்றுத் திட்டங்களிலிருந்து வன்முறைக் குற்றங்கள்வரை கணினிக் குற்றங்களின் தன்மை இருக்கும். சட்டமுறைகள் இன்னும் சரிவர வரையறுக்கப்படவில்லை. இந்தியா உட்பட சில நாடுகளில் மட்டுமே இதற்கான சட்டம் இயற்றப்பட்டுள்ளது.

**computer design :** கணினி வடிவமைப்பு : ஒரு கணினி பற்றிய கருத்து, திட்டமிடல் மற்றும் வடிவமைப்பு கணினி வழி வடிவமைப்பையும் குறிக்கும்.

**computer designer :** கணினி வடிவமைப்பாளர் : ஒரு கணினியின் மின்னணு அமைப்பினை வடிவமைப்பவர். கணினி மூலம் வடிவமைப்பைவரையும் குறிக்கும்.

**computer, digital :** இலக்க முறைக் கணினி.

**computer disease :** கணினி நோய் : கணினிகளின் நினைவகத்தையோ, செயல்பாட்டையோ பழுதாக்கி எல்லா நிரல்களும் வீணாகுமாறு செய்வது.

**computer drawing :** கணினி ஓவியம் : கணினி வெளியீட்டுச் சாதனம் உருவாக்கிய ஒரு குறிப்பிட்ட உருவம். பொதுவாக வரைகலை அச்சுப்பொறி அல்லது வரைவு பொறி (பிளாட்டர்) இதை வரையும்.

**computer enclosure :** கணினி நிலைப்பெட்டி : கணினியின் மின்சுற்று அட்டைகளையும், மின்சக்தி வழங்கலையும் பாதுகாக்க அமைக்கப்படும் பெட்டி அல்லது கொள்கலன்.

**computer engineering :** கணினி பொறியியல் : கணினி வன்பொருள் /மென்பொருள் அமைப்புகளின் வடிவமைப்பினை உள்ளடக்கிய அறிவுப்புலம். பல கல்லூரிகள் அல்லது பல்கலைக் கழகங்களில் பட்டப் படிப்பாக நடத்தப்படுகிறது.

**computer errors :** கணினிப் பிழைகள்.

**computerese :** கணினிய : கணினிகள் மற்றும் தகவல் சார்ந்த அமைப்புகளுடன் பணியாற்றும் மனிதர்களின் குழூஉச் சொற்கள் மற்றும் பிற சிறப்புச் சொற்கள்.

**computer ethics :** கணினிப் பண்பாடு; கணினி ஒழுக்கம் : கணினி வல்லுநர்கள் மற்றும் பயனாளர்

களின் சட்ட, தொழில் சார்ந்த, சமூக, ஒழுக்கமுறைப் பொறுப்புகளைக் கட்டுப்படுத்தும் கொள்கைகள்.

**computer family : கணினிக் குடும்பம் :** ஒரே வகையான நுண்செயலிகளையோ, ஒரே வடிவமைப்பிலமைந்த நுண்செயலிகளையோ கொண்ட கணினிக் குழுக்களைக் குறிக்கும் சொல். (எ-டு) ஆப்பிள் குடும்பக் கணினிகள் மெக்கின்டோஷ் என்றழைக்கப்படுகின்றன. சுருக்கமாக மேக் எனப்படும் இவை மோட்டோரோலா 68000, 68020, 68030, 68040 ஆகிய நுண்செயலிகளில் செயல்படுகின்றன. சில வேளைகளில் அவை வேறு செயலிகளைப் பயன்படுத்திக் கொள்வதும் உண்டு. (எ-டு) மேக் கணினிக் குடும்பத்தில் இப்போதெல்லாம் பவர்பீசி (PowerPC) நுண்செயலிகள் பயன்படுத்தப்படுகின்றன. இவை பவர்மேக் என்றழைக்கப்படுகின்றன.

**computer, first generation : முதல் தலைமுறைக் கணினி.**

**computer flicks : கணினிப் படங்கள் :** கணினி தயாரிக்கும் திரைப்படங்கள்.

**computer floor : கணினி தரை :** ஒரு பொய்த்தரை. உண்மையான தரை அளவிலிருந்து 25-30 செமீ-க்கும் மேலாக இருக்கும். கணினி தரைதான் கணினி இருப்பிடத்தில் வசதியாகக் வடங்கள் நீக்கவும், தடையில்லாமல் இயங்கும் சூழ்நிலையையும் உருவாக்க உதவும்.

**computer fraud : கணினி ஏய்ப்பு; கணினி மோசடி.**

**computer game : கணினி விளையாட்டு :** விளையாடுபவரின் உடற் செய்கைகளை உள்ளீட்டுத் தரவுவாகக் கொண்டுள்ள உரையாடல் வகை மென்பொருள். இதன் வெளியீடு உரையாடல் முறையிலான வரைபட முறை காட்சியாக இருக்கும்.

**computer, general purpose : பொதுப் பயன் கணினி.**

**computer generations : கணினி தலைமுறைகள் :** ஐந்து வேறுபட்ட கால இடைவெளிகளில் மின்னணுக் கணினிகள் உருவாக்கப்பட்டன. ஒவ்வொரு நடைமுறையும் வன்பொருள்/மென்பொருள் அடிப்படையில் பிரிக்கப்படுகின்றன. வெவ்வேறு தொழில் நுட்பத்தைச் சார்ந்து உருவானவை. கணிப்பின் வரலாற்று முன்னேற்றத்தின் முக்கிய நிலைகள்.

**computer graphicist : கணினி வரைகலைஞர் :** கணினி வரை

கலை அமைப்புகளைப் பயன் படுத்தும் வல்லுநர். படங்கள் அல்லது ஒலியங்கள் தோன்று வதைக் குறிப்பிடும் பொதுச் சொல். எழுத்துகள் மற்றும் எண் களைப் பயன்படுத்துவதிலிருந்து வேறுபட்டதே வரைகலை.

**computer graphics : கணினி வரைகலை** : தொடக்க காலத் தில் கணினித் திரைகளில் வெறும் எழுத்துகளையும் எண் களையுமே பார்க்க முடிந்தது. இப்போதெல்லாம் திரைகளில் படங்கள் பவனி வருகின்றன. இதற்கு கணினி வரைகலைத் தொழில்நுட்பமே காரணம். படங்களை உருவாக்குவது, திரையில் காட்டுவது, நிலை யாகப் பதிந்து வைப்பது ஆகிய பணிகளுக்கான பல்வேறு வழி முறைகளை கணினி வரைகலை நுட்பம் உள்ளடக்கியுள்ளது.

**Computer Graphics Interface : கணினி வரைகலை இடைமுகம்** : வரைகலைச் சாதனங்களான அச்சுப்பொறிகள், வரைவு பொறிகள் ஆகியவற்றுக்குரிய மென்பொருள் தர வரை யறைகள். ஏற்கெனவே இருந்த ஜிகேஎஸ் (GKS -Graphics Kernel System) என்ற வரையறையின் இணைத் தொகுதியாக உரு வாக்கப்பட்டது. பயன்பாடு களை உருவாக்கும் நிரலர் களுக்கு, வரைகலைப் படங்களை உருவாக்குதல், கையாளுதல், காட்சிப்படுத்தல், அச்சிடல் ஆகிய வற்றுக்கான வரையறுக்கப்பட்ட வழிமுறைகளை வழங்குகின்றன.

**Computer Graphics Metafile : கணினி வரைகலை மீகோப்பு** : பரவலாக ஏற்றுக் கொள்ளப் பட்ட ஜிகேஎஸ் (GKS-Graphical Kernel System) தர வரையறை களுடன் தொடர்புடைய தரக் கட்டுப்பாடு. ஒரு வரைகலைப் படத்தை ஆணைகளின் தொகுதி யாக உருவகிப்பது. அந்த ஆணைகளைக் கொண்டு அப்படத்தை மீட்டுருவாக்கம் செய்ய முடியும். பயன்பாடு களை உருவாக்கும் நிரலர் களுக்கு இதற்கான வரையறுத்த வழிமுறைகளை வழங்குகிறது. ஒரு வரைகலை மீகோப்பை வட்டில் சேமிக்க முடியும். ஒரு வெளியீட்டுச் சாதனத்துக்கு அனுப்பி வைக்க முடியும்.

**computer independent language : கணினி சாராத மொழி** : பேசிக், கோபால், ஃபோர்ட்ரான், பாஸ் கல், பிஎல்/1 போன்ற மொழி களைப் பொருத்தமான மொழி மாற்றிகளுடன் எந்தக் கணினி யிலும் பயன்படுத்தலாம். அத் தகைய பயன்பாட்டுக்கு வடி வமைக்கப்பட்ட உயர்நிலை மொழிகள்.

**computer industry : கணினித் தொழில்துறை** : *கணினி வன்பொருள், மென்பொருள் மற்றும் கணினி தொடர்பான பணிகளை அளிக்கும் நிறுவனங்கள், வணிகர்களைக் கொண்ட தொழில் துறை.*

**Computer Information System (CIS) : கணினி தரவு அமைப்பு (சிஐஎஸ்)** : *வன்பொருள், மென்பொருள், தரவு, மக்கள் மற்றும் ஆதரவு அமைப்புகளை ஒருங்கிணைத்து செயலாக்கம், சேமிப்பு, உள்ளீடு மற்றும் வெளியீடு ஆகியவைகளை ஒருங்கிணைந்த தொடர் பணிகளைச் செய்தல்.*

**Computer Input Microfilm (CIM) : (சிஐஎம்) கணினி உள்ளீடு நுண் படலம்** : *நுண்படலம் அல்லது நுண் அட்டையின் உள்ளடக்கங்களை நேரடியாகக் கணினிக்குள் சேர்ப்பதற்காகப் பயன்படுத்தப் படும் உள் ளீட்டைக் கொண்ட தொழில் நுட்பம்.*

**computer instruction : கணினி ஆணை; கணினி வழி பயிற்றுவித்தல்; கணினி அறிவுறுத்தம்** : *1. ஒரு கணினி புரிந்துகொண்டு அதன்படி செயல்படுதற்குரிய ஓர் ஆணை. காண்க* machine instruction *2. கற்பித்தலுக்குக் கணினியைப் பயன்படுத்துவது.*

**Computer-Integrated Manufacturing (CIM) : கணினி - ஒருங்கிணைப்பு உற்பத்தி முறை** : *தொழிற்சாலை தானியங்கி மயமாதலில் கணினியைப் பயன்படுத்துவதன் இலக்குகள் எளிமைப்படுத்துதல், உற்பத்தி செயல்முறைகளையும் பிற உற்பத்தித் தன்மைகளையும் ஒருங்குபடுத்துதலாக மட்டுமே இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தும் ஒட்டு மொத்தக் கோட்பாடு. இதில் கேட்/காம் அமைப்பு அனைத்து உற்பத்தி செயல்முறைகளையும் கட்டுப் படுத்தி ஒருங்கிணைக்கிறது. உற்பத்தி வடிவமைப்பாளர்களும், பொறியாளர்களும் பயன் படுத்தும் அதே தரவு தளத்தையே கணக்காய்வாளர்களும், மேற்பார்வையாளர்களும், பட்டியலிடுபவர்களும், உற்பத்தி திட்டமிடுபவர்களும் பயன் படுத்துவார்கள்.*

**Computer Interface Unit (CIU) : (சிஐயு) கணினி இடைமுகச் சாதனம்** : *கணினியுடன் வெளிப் புறச் சாதனங்களை இணைப் பதற்குப் பயன்படும் சாதனம்.*

**computerise : கணினி மயமாக்கு.**

**computerization : கணினி மயமாதல்** : *1. இதற்கு முன்பு வேறு முறைகளில் செய்த*

செயலை கணினியைப் பயன்படுத்திச் செய்தல். 2. பரவலாக ஏற்றுக் கொண்டு கணினியைப் பயன்படுத்தி சமுதாயத்தின் உண்மையான தோற்றத்தை மாற்றுதல்.

**Computerized Axial Tomography : CAT : கணினி மய ஆக்சியல் டோமோக்ராபி :** கணினி கட்டுப்பாட்டில் இயங்கும் ஊடுகதிர் (எக்ஸ்ரே) தொழில் நுட்பம். இது ஒரு இடத்தில் படத்தை குறிப்பிட்ட உருவத்தின் வழியாக ஆழத்தில் காட்டும். அப்படத்தின் விவரங்களைக் கொண்டு வரவும், மாறும் திசைகளில் உருவத்தின் மூலம் செல்லும் ஊடுகதிர்களைப் பதிவுசெய்தல் மற்றும் உருவத்தின் அமைப்பைப் போன்ற ஒரு தோற்றத்தினை உருவாக்குதல் ஆகியவற்றைச் செய்வதற்கு கணினி பயன்படுகிறது.

**computerized database : கணினிமய தரவுத் தளம் :** ஒரு நிறுவனத்துக்குரிய அனைத்துத் தரவுகளும் குறிப்பிட்ட வடிவமைப்பில் கணினியில் சேமித்து வைக்கப்பட்டுள்ள தரவுத் தொகுதி. துல்லியம், ஒத்தமைவு, நம்பகத் தன்மை மற்றும் பாதுகாப்பு அனைத்தும் கொண்டிருக்கும்.

**computerized games : கணினி மய விளையாட்டுகள் :** பலவகையான புகழ்பெற்ற பொழுது போக்கு விளையாட்டுகளை விளையாட கணினிகளைப் பயன்படுத்துவது.

**computerized game playing : கணினி மய ஆட்டம் ஆடுதல் :** கணினிகளில் பலதரப்பட்ட விளையாட்டுகளை ஆடுவதற்கு நிரலமைத்து, பொழுது போக்கிற்காகப் பயன்படுத்துதல். டிக்-டாக்டோ, பேக்மேன், பிரேக் அவுட், ஸ்டார் ரைடர்ஸ், ஸ்பேஸ் வார், பிளாக் ஜாக், ஹேங்மேன், செஸ், செசர்ஸ் போன்ற பல விளையாட்டுகளை ஆட கணினி பயன்படுத்தப்படுகிறது.

**computerized jargon : கணினி குழூஉ மொழி; கணினி குழூஉச் சொல் :** கணினி அறிவியலுடன் தொடர்புள்ள தொழில்நுட்பச் சொற்கள்.

**computerized mail : கணினிமய அஞ்சல் :** கணினி கருவி மூலமாக வணிக அமைப்புகளுக்கும், வீடுகளுக்கும் மின்னணு வடிவத்தில் அஞ்சல் அனுப்பும் தொழில்நுட்பம்.

**computerized numerical control : கணினி மய எண் கட்டுப்பாடு.**

**computer kit : கணினி கருவிப் பெட்டி** : கருவிப்பெட்டி வடிவில் நுண்கணினி, கணினி கருவிப் பெட்டியை வாங்குபவர்கள், மாதிரி விமானத்தையோ அல்லது ஸ்டீரியோ ஒலி அமைப்பையோ உருவாக்குவது போல், நுண்கணினியை உருவாக்க முடியும். பள்ளிகளில் கணினி வடிவமைப்பு சொல்லித் தருவதற்கும், கணினி பொழுது போக்கினை பழக்கமாகக் கொண்டவர்களுக்கும் கணினி கருவிப்பெட்டி புகழ் பெற்று விளங்குகிறது.

**computer language : கணினி மொழி**: ஒரு கணினியில் செயல்படுத்துவதற்கான ஆணைகளைக் கொண்டுள்ள ஒரு செயற்கை மொழி. இருமக் குறிமுறை மொழி தொடங்கி உயர்நிலை மொழிகள்வரை மிகப்பரந்த தொகுதியை இச்சொல் குறிக்கிறது.

**computer leasing company : கணினியை வாடகைக்குத் தரும் நிறுவனம்** : கணினி உற்பத்தியாளரிடமிருந்து வாங்கிய கணினிக் கருவியை வாடகைக்கு விடுவதில் சிறப்பாக ஈடுபட்டுள்ள நிறுவனம்.

**computer letter : கணினி எழுத்து** : ஒரு சொல் செயலி பொருள் உருவாக்கும் தனிப்பட்ட எழுத்து வடிவம்.

**computer literacy : கணினி எழுத்தறிவு** : சிக்கல்களைத் தீர்க்க கணினிகளைப் பயன்படுத்துவது என்ற பொது அறிவும், வன்பொருள் மற்றும் மென்பொருளின் செயல்பாடு பற்றிய பொதுவிழிப்புணர்வும், கணினிகளால் ஏற்படும் சமுதாய மாற்றங்கள் பற்றிப் புரிந்து கொள்ளுதலும் சேர்ந்தது. இவ்வறிவு கணினி சார்ந்த சமுதாயத்தில் வாழ்வது பற்றிய புரிந்து கொள்ளுதல்களையும், அறிவுக் கருவிகளையும் உருவாக்கி உள்ளது. தொழில்நுட்ப அறிவு கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. கணினி சூழ்நிலையில் ஒரு பயனாளராக இயல்பாக செயல்படமுடிவதே கணினி எழுத்தறிவு பெற்றிருப்பதாகும்.

**Computer Managed Instruction (CML)** : (சிஎம்எல்) பதிவேடு காக்கும் மேலாளராகவும், கற்றுத் தருவதை வரையறுப்பவராகவும் கணினியைப் பயன்படுத்துவது. கல்விக்காக கணினிகளைப் பயன்படுத்தல்.

**computer museum : கணினி கண்காட்சி** : அமெரிக்காவில் மசாசூசெட்சின் போஸ்டனில் உள்ள கணினி வரலாறு

உரைக்கும் ஆவணக் காப்பகம். இதில் பல தொடக்ககால கணினி அமைப்புகளும், கணினி முன்னோடிகளின் ஒலிநாடா குறிப்புக் கொண்ட தொகுப்பும் உள்ளன.

**computer music : கணினி இசை :** இசை அமைத்தல், அல்லது ஒலி ஏற்படுத்துதலில் ஏதாவது ஒரு நிலையில் கணினிக் கருவியைப் பயன்படுத்துதல்.

**computer name : கணினிப் பெயர் :** ஒரு கணினிப் பிணை யத்தில் ஒரு குறிப்பிட்ட கணினி யைத் தனித்து இனங்காட்டும் பெயர். ஒரு கணினிப் பெயர் வேறொரு கணினிக்கு இருக்க முடியாது. களப்பெயராகவும் இருக்கக்கூடாது. பயனாளர் பெயர் என்பதும் கணினிப் பெயர் என்பதும் வேறு வேறா கும். பிணையத்தில் ஒரு கணினி யின் பெயரைக் கொண்டே அதன் வளங்களைப் பிற கணினி கள் பெற முடியும்.

**computer network : கணினி பிணையம்; கணினி கட்டமைப்பு :** ஒன்றோடொன்று இணைப்பு ஏற்படுத்திக் கொண்டுள்ள இரண்டு அல்லது இரண்டுக்கும் மேற்பட்ட கணினிகள், முனை யங்கள் மற்றும் தரவு தொடர்பு வசதிகளைக் கொண்ட கணினி அமைப்பு.

**computernik : கணினியார் :** கணினிகளைப் பயன்படுத்து வதில் அதிக நேரத்தைச் செல வழிக்கும் ஒரு நபர்.

**computer numeric control : கணினி எண்முறைக் கட்டுப் பாடு :** ஒரு எந்திரத்தைக் கட்டுப் படுத்த கேட்/கேம் மூலம் உருவாக்கப்பட்ட எண் கட்டுப் பாட்டு ஆணைகளைச் சேமிக்க கணினியைப் பயன்படுத்தும் ஒரு எந்திரக் கருவி; கட்டுப் பாட்டுத் தொழில் நுட்பம்.

**computer on a chip : ஒரு சிப்புக் கணினி :** ஒரு ஒருங்கிணைந்த மின்சுற்று சிப்புவின்மீது அமைக் கப் படும் முழு நுண் கணினி.

**computer operations : கணினிச் செயல் முறைகள் :** தரவுகளை அன்றாட முறையில் திரட்டுதல், உற்பத்தி செய்தல், விநியோகித் தல், பராமரித்தல் ஆகியவற் றைச்செய்யும் கணினியின் செயல்பாடுகள்.

**computer operations manager : கணினி செயல்முறை மேலாளர் :** ஒரு நிறுவனத்தில் கணினி செயல்பாடுகளை மேற்பார்வை செய்யும் நபர். பணியாளர்களை நியமித்தல் கணினி செய்ய வேண்டிய வேலைகளை முடிவு செய்தல் ஆகியவற்றைச் செய் யப் பொறுப்பேற்று இருப்பவர்.

**computer operator : கணினி இயக்குநர்.**

**computer organisation : கணினி ஒருங்கிணைப்பு** : *பின்வரும் துறைகளைக் கையாளும் கணினி அறிவியல் பிரிவு. கணினி சிபீயு ஒருங்கிணைப்பு ஆணைகள், முகவரியமைக்கும் முறைகள், சேமித்த நிரல் கோட்பாடு, நிரல் இயக்கம், உள்ளீடு/வெளியீடு ஒருங்கிணைப்பு, கைகுலுக்குதல், நினைவகம், மைய நினைவகம், நுண்செயலி போன்றவற்றின் செயல்பாடுகள்.*

**Computer Output Microfilm (COM) : கணினி வெளியீடு நுண்படலம்** : *நுண்படலம் அல்லது நுண் அட்டைகளின் மீது கணினி வெளியீடுகளைப் பதிவு செய்யும் தொழில் நுட்பம். நேர்முக வெளியீடுகளான நுண்படலத்திலிருந்தும், ஆணைவழி வெளியீடுகளை காந்த நாடாவிலிருந்தும் இந்த நுட்பப்படி பதியலாம்.*

**computer, personal : சொந்தக் கணினி.**

**computerphile : கணினிப் பைத்தியம்** : *கணினியில் பணியாற்றுவதிலேயே எப்போதும் மூழ்கிப் போகின்ற நபர். இவர் கணினிகளைச் சேகரித்து வைப்பார். கணினிப் பணியே இவர் பொழுதுபோக்கு.*

**computer phobia : கணினி அச்சம்** : *கணினி பயன்பாடு, குறிப்பாக எந்திரன் மற்றும் தானியங்கிச் சாதனங்களின் பயன்பாடு குறித்து உளவியல் சார்ந்த அச்சம்.*

**computer power : கணினி சக்தி; கணினித் திறன்** : *பணி செய்வதில் கணினிக்கிருக்கும் திறன். பல வகையிலும் கணினியின் திறன் மதிப்பிடப்படுகிறது. ஒரு வினாடிக்கு எத்தனை மில்லியன் ஆணைகளை நிறைவேற்றும் என்று அதன் வேகம் மதிப்பிடப்படுவதுண்டு* (MIPS - Million Instruction Per Second) *அல்லது வினாடிக்கு எத்தனை மிதவைப் புள்ளிக் கணக்கீடுகளைச் செய்யவல்லது என்ற முறையில் அளப்பதுமுண்டு* (MFLOPS - Million Floating Point Operations Per Second) *கணினியின் திறனை வேறு வகையிலும் மதிப்பிடலாம். மதிப்பிடுபவரின் தேவைகளையும் நோக்கங்களையும் பொறுத்தது.*

**Computer Press Association : கணினிப் பத்திரிகையாளர் சங்கம்** : *கணினித் தொழில்நுட்பம் பற்றியும் கணினித் தொழில் துறை பற்றியும் எழுதுகின்ற பத்திரிகைகளில், வலை பரப்*

பாளர்கள் மற்றும் படைப்பாளி கள் இவர்கள் சேர்ந்த ஒரு வணிக அமைப்பு.

**computer process** : கணினிச் செயலாக்கம்; கணினி செயற் பாங்கு; கணினி நடைமுறை.

**computer process control system** : கணினி செயல்முறைக் கட்டுப்பாடு அமைப்பு : இலாப நோக்கில் பொருளை உற்பத்தி செய்ய மேற்கொள்ளப்படும் செயல்முறையையும் அதன் மாற்றங்களையும் கண்காணிக் கும் சென்சார்களுடன் இணைக் கப்பட்டுள்ள கணினிக் கட்டுப் பாட்டு அமைப்பு.

**computer processing cycle** : கணினி செயலாக்கச் சுழற்சி : 1. ஒரு சிக்கலைத் தீர்க்க கணினி யைப் பயன்படுத்துவதில் உள்ள நிலைகள். பேசிக் அல்லது ஃபோர்ட்ரான் போன்ற மொழி யில் நிரல் எழுதுவது. நிரலைக் கணினியில் உள்ளீடு செய்து மொழிபெயர்க்கச் செயலாக்கு வது. 2. அடிப்படைச் செய லாக்கச் சுழற்சியில் உள்ளீடும் / வெளியீடும்.

**computer programme** : கணினி நிரல் : ஒரு தரவு செயலாக்கப் பணிக்குத் தேவையான தொடர்ச் செயல்களை முறை யாக, கணினிக்கு எடுத்துரைப் பது. ஒரு குறிப்பிட்ட செயல் முறை அல்லது பணியைச் செய் யுமாறு நிரல்களையும், சொற் றொடர்களையும் அமைத்தல்.

**computer programmer** : கணினி நிரலர் : ஒரு குறிப்பிட்ட வேலையைச் செய்யுமாறு கணினிக்கு ஆணையிடும் நிரல் களை வடிவமைத்து எழுதி, சோதித்துத் தருவதை வேலை யாகக் கொண்டுள்ளவர்.

**computer readable** : கணினி படித்தகு : கணினி படித்துப் பொருள் கொண்டு நிறை வேற்றும் வடிவில் அமைந்த ஆணை. இருவகையான தரவு கணினி படித்தகு என்று சொல்லப்படுகிறது. பட்டைக் கோடுகள், காந்த நாடா, காந்த கையெழுத்துகள் மற்றும் வருடிப் பார்த்து அறிந்து கொள் ளும் ஏனைய வடிவங்கள் - இவையனைத்தும் கணினி படித்தகு தகவலாகும். கணினி யின் நுண் செயலிக்குப் புரியும் வகையில் எந்திர மொழியில் இருக்கும் தரவு.

**computer revolution** : கணினிப் புரட்சி : தரவு தொழில்நுட்பத் துறையில் ஏற்பட்டுவரும் அதிவேக வளர்ச்சி காரணமாக சமூக, தொழில்நுட்பத் துறை களில் கணினியின் பயன்பாடு அதிகரித்து வருகிறது. குறிப்பாக

தனியாள் பயன்படுத்தும் சொந்தக் கணினிகளின் பயன்பாடு மிகவும் அதிகரித்துள்ளது. சமூக வாழ்வில் இவற்றின் தாக்கம் புரட்சிகரமானது என்று தான் கூறவேண்டும். கணினியின் வேகம், துல்லியம், சேமிப்புத் திறன் ஆகியவை தகவல் சேமிப்பு, செயலாக்கம் மற்றும் பரிமாற்றத்தில் புரட்சிகரமான மாற்றங்களை ஏற்படுத்தியுள்ளன.

**computer science : கணினி அறிவியல் :** கணினிகளை வடிவமைத்து பயன்படுத்துவது பற்றிய அனைத்து நுட்பங்களையும் உள்ளடக்கிய அறிவுப் புலம். பல கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங்களிலும் பட்டப் படிப்பாக அளிக்கப்படுகிறது.

**computer, scientific : அறிவியல் கணினி.**

**computer security : கணினிப் பாதுகாப்பு :** அனுமதியில்லாமல் பயன்படுத்துவதையும், தவறாகப் பயன்படுத்துவதையும் தடுத்து கணினி மூலாதாரங்களைப் பாதுகாப்பது. தற்செயலான அல்லது வேண்டுமென்றே ஏற்படும் சேதம், மாற்றம், வெளியிடல் போன்றவற்றிலிருந்து தரவுகளைப் பாதுகாப்பது.

**computer select : கணினித் தேர்வு :** கணினி நூலகத்திலிருந்து சிடிரோம் சேவை. இது முழுச் செய்திக் கட்டுரைகளும், சுருக்கங்களும் 250-க்கும் மேற்பட்ட கணினி தொடர்பான பருவ இதழ்களிலிருந்து வழங்குகிறது.

**computer services : கணினிச் சேவைககள் :** தரவு செயலாக்கம், காலப்பங்கீடு, தொகுதி செயலாக்கம், மென்பொருள் உருவாக்கம் மற்றும் ஆலோசனைப் பணிகள்.

**computer services company : கணினிச் சேவைகள் நிறுவனம் :** பிற தனிநபர்களுக்கும், நிறுவனங்களுக்கும் கணினிச் சேவைகளை அளிக்கும் நிறுவனம்.

**computer simulation : கணினி பாவிப்பு :** உண்மையான அல்லது கற்பனையான அமைப்பைக் குறிப்பிடுதல்; கணினி நிரலில் உருவாக்கப்படுவது.

**computer specialist : கணினி வல்லுநர் :** ஒரு தனிப்பட்ட ஒப்பந்தக்காரராகவோ அல்லது ஆலோசகராகவோ கணினியைப் பயன்படுத்தும் நிறுவனங்களுக்கு கணினி சேவைகளை அளிக்கும் ஒரு நிரலர் அல்லது அமைப்பை ஆராய்பவர் போன்ற ஒரு தனி நபர்.

**computer, special purpose : சிறப்புப் பயன் கணினி.**

**computer store : கணினி கடை :** ஒரு முழு கணினி அமைப்பையோ அல்லது சில உதிரிப் பாகங்களையோ வாடிக்கையாளர்கள் தேர்ந்தெடுக்கக் கூடிய சில்லரைக்கடை. இந்தக் கடைகளில் மென்பொருள், புத்தகங்கள் மற்றும் இதழ்களும் கிடைக்கும். பெரிய கணினிக் கடையில் பலவகையான நுண்கணினி அமைப்புகள் கிடைக்கும்.

**computer system : கணினி அமைப்பு; கணினி முறைமை :** கணினி வன்பொருள், மென்பொருள் மற்றும் தரவுகளை பயனுள்ள தகவலாக செயலாக்கம் செய்யும் மனிதர்களை உள்ளடக்கிய அமைப்பு.

**computer systems, audit of : கணினி முறைமைத் தணிக்கை.**

**computer telephone integration : கணினி-தொலைபேசி ஒருங்கிணைப்பு :** தொலைபேசியில் வரும் அழைப்புகளை முறைப்படுத்துதல், மாற்று எண்ணுக்கு திசைதிருப்புதல், தானாகப் பதில் தருதல், ஒரு தரவு தளத்தில் உள்ள தரவுவைத் தேடி அறிவித்தல், தானாகவே இன்னொரு தொலைபேசி எண்ணை அழைத்து தரவுவைத் தெரிவித்தல் போன்ற அனைத்துப் பணிகளையும் ஆட்களின் தலையீடு எதுவுமின்றி செய்து முடிக்கக் கணினியையும் கணினி மென்பொருள்களையும் பயன்படுத்தும் தொழில்நுட்பம்.

**computer terminal : கணினி முனையம் :** கணினியுடன் தொலைத் தகவல் தொடர்பு இணைப்புகள் ஏற்படுத்தும் உள்ளீட்டு வெளியீட்டுச் சாதனம். அதனிடம் மையச் செயலகம் இருந்தால் அது ஒரு அறிவாளி முனையம் என்றும், இல்லையென்றால் ஊமை முனையம் என்றும் அழைக்கப்படுகிறது.

**computer terminal, remote : சேய்மை கணினி முனையம்; தொலை கணினி முனையம்.**

**Computer Tomographic (CT) : (சிடி) கணினி ஊடுகதிர் உள் தளப்படம்.**

**computer town : கணினி நகரம் :** கணினி எழுத்தறிவையும், சிறிய கணினிகளைப் பொது மக்கள் அணுகுவதையும் ஊக்குவிக்கும் கலிபோர்னியா நிறுவனம்.

**computer type setting : கணினி அச்சுக்கோப்பு :** ஓர் அச்சுப் பணிக்கான விவரத்தை சில சிறப்பு மென்பொருள்களில் தட்டச்சுச் செய்து அச்சிட தயார் செய்தல்.

**computer user : கணினி பயனாளர் :** ஒரு கணினி அமைப்பையோ அல்லது அதன் வெளியீட்டையோ பயன்படுத்தும் ஒரு நபர்.

**computer users group : கணினி பயனாளர் குழு :** ஒரு கணினி அல்லது ஒரு குறிப்பிட்ட கணினி உற்பத்தியாளரின் ஒரு வகைக் கணினிகளில் நிரல்களை உருவாக்கி தங்களது அறிவினை பங்கிட்டுக் கொள்ளும் உறுப்பினர்களைக் கொண்ட குழு. பெரும்பாலான குழுக்கள் கூட்டங்களை நடத்தியும், வணிகக் கருவிகளைப் பரிமாற்றங்கள் செய்தும், நிரல்களைப் பங்கிட்டும், தகவலை பரிமாற செய்தி அறிக்கைகளை விநியோகித்தும் செயல்படுபவர்கள்.

**computer utility : கணினி பயன் கூறு; கணினிக் குறுபயன் :** கணினித் திறனைப் பயன்படுத்தும் சேவை. நேரப் பங்கீட்டு கணினி அமைப்பையே இது பொதுவாகக் குறிக்கும். பயனாளருக்கு மென்பொருள்களும், தரவுகளும் கிடைக்கும். மையச் செயலகத்தில் உள்ள ஒருவரது சொந்த நிரல்களையோ அல்லது வேறிடத்திலிருந்து பெற்று கணினியில் ஏற்றியோ பயன்படுத்தலாம். சேவையில் உள்ள சில தரவுகளையும், மென்பொருள்களையும் அனைவரும் பயன்படுத்தலாம்.

**computer vendor : கணினி விற்பவர் :** கணினி கருவிகளை உற்பத்தி செய்வது, விற்பது அல்லது சேவைகளை அளிப்பதில் ஈடுபட்டுள்ள நிறுவனம்.

**computer virus : கணினி நச்சு நிரல் (வைரஸ்) :** வேறொரு நிரல் அல்லது தரவுடன் தன்னை இணைத்துக்கொள்ளும் நிரல். ஒரு நச்சு நிரலின் (வைரஸ்) சாதாரண நோக்கம் கணினி அமைப்பைப் பீடித்துக் கொண்டு தரவு செயலாக்கத்தைத் தடுப்பதாகும். பீடித்த நிரல் இயக்கப்பட்டவுடன் முன்பு "தூய்மை"யாக இருந்த மென்பொருளுடன் தன்னை இணைத்துக் கொள்ளும். இவ்வாறே பரவிக் கொண்டே செல்லும்.

**computer vision : கணினிப் பார்வை :** பார்த்தல், புரிந்து கொள்ளல் ஆகிய வசதிகளை கணினி பெற உதவும் அறிவியல்.

**computer word : கணினிச் சொல் :** ஒரு தனி முகவரி இடக்கூடிய சேமிப்பு இடத்தில் இடம் பெற்று, கணினியால் தனி சாதனமாகக் கருதப்படும் துண்மிகள், பைட்டுகளின் தொடர்.

**computing : கணிப்பு; கணித்தல் :** தரவுகளை செயலாக்கம் செய்ய

கணினியைப் பயன்படுத்தும் செயல். பயனாளர் விரும்புவதை கணினியைச் செய்யுமாறு செய்கின்ற கலை அல்லது அறிவியல்.

computing devices : கணிக்கும் சாதனம்; கணிப்புக் கருவி.

COM recorder : காம் பதிவி : கணினி வெளியீட்டை ஒளிப்பட உணர்வு படலத்தில் நுண் வடிவில் பதிவுச் செய்யும் சாதனம்.

COMSAT : காம்சாட் : தரவு தொடர்பு செயற்கைக் கோள் என்று பொருள்படும் Communication Satellite என்பதன் குறும் பெயர்.

CON : கான் (கன்சோல்) : எம்எஸ் டாஸ் இயக்க முறைமையில் விசைப்பலகை மற்றும் கணினித் திரையைக் குறிக்கும் கருத்தியலான சாதனப் பெயர். உள்ளீடு மட்டும் செய்ய முடிகிற விசைப்பலகை மற்றும் வெளியீடு மட்டும் செய்ய முடிகிற காட்சித் திரை இரண்டும் சேர்ந்து முறையே முதன்மையான உள்ளீட்டு/வெளியீட்டு ஊடகமாய் எம்எஸ்-டாஸ் இயக்க முறைமையில் பயன்படுகின்றன.

concatenate : சேர்த்தல் : இரண்டு அல்லது மேற்பட்ட எழுத்துச் சரங்களை ஒரே எழுத்துச் சரமாகச் சேர்த்தல் அல்லது காட்சித்திரையில் ஒரு வரியை அடுத்தவரியில் சேர்த்தல். Decatenate - க்கு மாறானது.

concatenated data set : சேர்த்த தரவு தொகுதி : தருக்க முறையில் தரவு தொகுதியைத் திரட்டுதல்.

concatenated key : சேர்க்கப்பட்ட திரவி : ஒரு பதிவேட்டை அடையாளம்காட்ட ஒன்றுக்கு மேற்பட்ட தரவுகளை ஒன்றாகச் சேர்த்த திறவுச் சொல்.

concatenated operator : சேர்ப்பு செயற்குறி : கணினி நிரலாக்க மொழிகளில் இரு விரைக் குறிப்புகள் இணைக்கப் பயன்படும் குறியீடு.

concatenation : ஒன்றிணைப்பு; இணைத்தல்; பிணைத்தல்.

concatenation concentrator : சேர்ப்புச் செயல் மையம் : ஒரு மிகுவேக சாதனத்தில் பல குறைவேக சாதனங்கள் பயன்படுத்த அனுமதிக்கும் சாதனம். குறைந்த வேகமுள்ள கணினிகளில் இருந்து வரும் தகவலை ஏற்றுக் கொண்டு அதிக வேகமுள்ள கணினிக்குத் தரும் ஒரு சிறப்பு நோக்கக் கணினி.

concentrator : செயல்மையம்; மையப்படுத்தி : ஒரு தனியான அதிவேக தகவல் தொடர்புக் கம்பியினைப் பயன் படுத்தி பல

தகவல்களை மெதுவாகச் செலுத்தும் சாதனம். பல் பயன்கள் அமைப்பு என்றும் அழைக்கப்படுகிறது.

concept : கருத்துரு; மனவுரு; கருத்தமைவு.

concept, database : தரவுத் தளக் கோட்பாடு; தரவுத் தள எண்ணக் கருத்துரு.

conceptual scheme : கருத்துருத் திட்டவரை : தரவுத் தளங்கள் பல, மூன்று நிலைத் திட்டவரைக் கட்டுமானத்தை ஏற்பவையாய் உள்ளன. தரவுத் தளத்தின் கட்டமைப்பு மற்றும் தரவு உள்ளடக்கம் இரண்டும் சேர்ந்தே திட்டவரைக் கட்டுமானத்தை நிர்ணயம் செய்கின்றன. மூன்று திட்டவரைகளுள் கருத்துருத் திட்டவரை (தருக்க முறைத் திட்டவரை) தரவு தள முழுமையின் மாதிரியை விளக்குவதாய் உள்ளது. எனவே இது அக மற்றும் புற (Internal and External) திட்டவரைகளுக்கு இடைப்பட்டதாய் விளங்குகிறது. அகத் திட்டவரை, தரவு சேமிப்பையும், புறத் திட்ட வரை பயனாளருக்குத் தரவுவை வெளிப்படுத்தும் பணியையும் செய்கின்றன. பொதுவாக திட்டவரை என்பது தரவுத் தளம் வழங்கும் தரவு வரையறை மொழி (Data Definition Language - DLL)யின் கட்டளைகளால் வரையறுக்கப்படுகின்றது.

conceptual tool : கோட்பாட்டுக் கருவி : பொருள்களுக்குப் பதிலாக எண்ணங்களுடன் பணியாற்றும் கருவி.

concordance : சொல் தொகுதி விளக்கப் பட்டியல் : ஒரு ஆவணத்தில் உள்ள சொற்கள், தொடர்களின் வரிசைப் பட்டியல். குறிப்பிட்ட சொற்களும் தொடர்களும் எங்கே உள்ளன என்பதைக் குறிப்பிடுகிறது.

concurrency : உடன்நிகழ்வு : பொருள் மாதிரியத்தின் அடிப்படைத்தன்மைகளில் ஒன்று. பொருள் நோக்கு நிரலாக்கத்தில் இயங்காத பொருள் ஒன்றிலிருந்து இயங்கும் பொருளை வேறுபடுத்துதல்.

concurrency control : உடன்நிகழ்வுக் கட்டுப்பாடு : டிபிஎம்எஸ்ஸில் தரவு தளத்திற்கு ஒரே நேர அணுகலை நிர்வகித்தல். ஒரே ஏட்டை ஒரே நேரத்தில் இரண்டு பயனாளர்கள் திருத்துவதைத் தடுக்கிறது. பரிமாற்றங்கள் மாற்று ஏற்பாட்டுக்கும், மீண்டும் பெறுவதற்கும் வரிசைப் படுத்துவது தொடர்பானது.

**concurrent** : ஒரே நேரத்தில் : ஒரு குறிப்பிட்ட நேர இடைவெளிக்குள் இரண்டு அல்லது கூடுதல் நிகழ்ச்சிகள் அல்லது நடவடிக்கைகள் நடைபெறுவது பற்றியது.

**concurrent access** : உடனிகழ்வு அணுகல்.

**concurrent execution** : உடன் நிகழ் நிறைவேற்றம் : இரண்டு அல்லது மேற்பட்ட நிரல்கூறு களை அல்லது நிரல்களை, ஒரே நேரத்தில் இயங்குவதுபோல் தோற்றமளிக்குமாறு செயல் படுத்துதல். ஒரு நிரலைப் பல் வேறு பணிக்கூறுகளாக அல்லது பல்வேறு புரிகளாக (threads) பிரித்து நேரப் பங்கீட்டு முறை யில் ஒற்றைச் செயலியில் நிறை வேற்றிக்கொள்ள முடியும். அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட செயலிகள் மூலமும் உடன் நிகழ் நிரல்களை நிறைவேற்ற முடியும்.

**concurrent language** : உடன் நிகழ்வு மொழி : பல்வேறு செயல்கூறுகள் ஒரே நேரத்தில் இயக்குவதற்கு உதவும் மொழி. இணைக்கட்டுமான அமைப்பு வன்பொருள்களில் இது அதிகம் ஏற்படும். ஒரு நிரலில் இரு வேறு பணிகளை ஒரே நேரத் தில் செயல்படுத்தும் வசதி ஜாவா, சி# மொழிகளில் இவ் வசதி உண்டு.

**concurrent object** : உடன் நிகழ் பொருள் : கட்டுப்பாட்டின் பல இயக்கங்களுக்கும் ஈடு கொடுக் கும் ஒரு பொருள்.

**concurrent operation** : உடன் நிகழ் செயல்பாடு : நேரப்பங் கீட்டு அடிப்படையில் ஒரு குறிப்பிட்ட நேர இடைவெளி யில் இரண்டு அல்லது மேற் பட்ட நிரல்களை ஒரேநேரத் தில் இயக்குதல்.

**concurrent processing** : உடன்நிகழ் செயலாக்கம் : ஒரு குறிப்பிட்ட இடைவெளியில் இரண்டு அல்லது மேற்பட்ட தரவு செயலாக்கப் பணிகளைச் செய்தல்.

**concurrent programme execution** : உடனிகழ் நிரல் இயக்கம் : ஒரே நேரத்தில் இரண்டு அல்லது பல நிரல்களை செயல்படுத்தல்.

**concurrent programming** : உடன் நிகழ் நிரலாக்கம் : பல பணி களை ஒரே நேரத்தில் குறிப் பிடும் நிரல்களை உருவாக்குதல்.

**condensed** : சுருக்கப்பட்ட : தரமான எழுத்துகளின் அகலத் தில் ஏறக்குறைய 60% மட்டுமே அகலமுடைய அச்சு. சுருக்கப் பட்ட பைகாவில் 2.5 செ.மீ-க்கு

16 எழுத்துகள் மட்டுமே இருக்கும்.

condensed type : சுருக்கப்பட்ட அச்செழுத்து : ஒரு அங்குல வரிசையில் அதிக எழுத்துகள் பொருந்தும் வண்ணம் அகலத்தில் சுருக்கப்பட்ட அச்செழுத்து.

condensed print : சுருக்கப் பட்ட அச்சு : வழக்கமான எழுத்துகளைவிட (செங்குத்தாகவோ அல்லது குறுக்குவாட்டிலோ) சிறியதாக அச்சிட்ட எழுத்துகள்.

condition : நிபந்தனை; சூழ் நிலை : 1. குறிப்பிட்ட சூழ் நிலைகள். 2. இருக்கும் நிலைமை.

conditional : நிபந்தனைக்குட் பட்டது: ஒரு நிபந்தனை மெய்யாக இருக்கும்போது அல்லது மெய்யாக இல்லாத போது ஒரு நடவடிக்கையை அல்லது ஒரு செயல்பாட்டை மேற்கொள்ளுமாறு ஒரு நிரலில் அமைக்கப்படும் கட்டளை தொடர்பானது.

conditional branching : நிபந்தனைக் கிளை பிரிதல் : குறிப்பிட்ட நிபந்தனைகளின் அடிப்படையில் வேறுவேறு நிரல்களை அல்லது செயல்கூறு களை செயல்படுத்த வைக்கும் கட்டளை அமைப்பு.

conditional branch instruction : நிபந்தனை சார் ஆணை.

conditional compilation : நிபந்தனை மொழிமாற்றம் : ஒரு நிரலின் மூல வரைவினை சில நிபந்தனைகளின் அடிப்படையில் பொறிமொழியாய் மொழி பெயர்க்கும் முறை. எடுத்துக் காட்டாக நிரலை மொழிமாற் றம் செய்யும் நேரத்தில் (DEBUG) குறியீடு வரையறுக்கப்பட்டிருந் தால் மட்டுமே நிரலர் குறிப் பிட்ட பகுதிகள் மொழி மாற்றப் பட வேண்டும் என்று கட்டளை அமைக்க முடியும்.

conditioinal expression : நிபந் தனைக் கோவை; நிபந்தனை தொடர்.

conditional jump : நிபந்தனை தாவல்: குறிப்பிட்ட விதிமுறை கள் பொருந்தி வருமானால் "தாண்டுதல்" ஏற்படுத்தும் ஆணை.

conditional jump instruction : நிபந்தனை தாவல் ஆணை.

conditional line : நிபந்தனைக் கோடு.

conditional operators : நிபந் தனைச் செயற்குறிகள்.

conditional paging : நிபந் தனைப் பக்கமிடல் : வரிகளின் ஒரு குறிப்பிட்ட பகுதி. ஒரு பக்கத்தின் மீதமுள்ள இடத் துடன் முழுமையாகப் பொருந் தாவிட்டால் அடுத்த பக்கத்துக்கு

மாற்றும் சொல்செயலி பண்புக் கூறு.

**conditional parameters** : நிபந்தனை அளபுருக்கள்.

**conditional replace** : நிபந்தனை மாற்றீடு : ஒரு சொல் செயலாக்கப் பணி. ஒரு குறியிட்ட பொருளைக் காணும் ஒவ்வொரு தடவையும் அதை மாற்ற வேண்டுமா என்று அது கேட்கும்.

**conditional statement** : நிபந்தனைக் கூற்று : ஒரு நிரல் குறிப்பிட்ட நிபந்தனை நிறைவேற்றப் பட்டால் மட்டுமே கட்டளைகளை நிறைவேற்றுமாறு அமைக்கப்படும் கூற்று.

**conditonal sum** : நிபந்தனைக் கூட்டல்.

**conditional transfer** : நிபந்தனை மாற்றல் : பின்பற்றப்படுகின்ற நிரல்களின் வரிசையிலிருந்து மாற்றத்தை ஏற்படுத்துகின்ற நிரல். இயக்கத்தின் விளைவைப் பொறுத்து, ஒரு பதிவு அல்லது பரிமாற்றம் அமைதல்.

**condition code** : நிபந்தனைக் குறிமுறை : முந்தைய பொறி ஆணையின் அடிப்படையில் ஒரு துண்மி தொகுதியில் ஒரு குறிப்பிட்ட துண்மி நிகழ் (on) அகல் (off) நிலைக்கு மாற்றப் படுவதுண்டு. பெரும்பாலும் தொகுப்பு மொழி (assembly language) அல்லது பொறி மொழிச் சூழலில் இச்சொல் பயன்படுத்தப்படுகிறது. நிபந்தனைக் குறிமுறைகள் பெரும் பாலும் வன்பொருள் தொடர்பானவை. ஆனால், மிச்ச வழிவு (carry overflow), சுழி விடை (zero result) அல்லது குறைநிலை (negative) விடைதரும் குறிமுறைகளைக் கொண்டிருக்கும்.

**condition entry** : நிபந்தனை நுழைவு : முடிவு பட்டியலின் நான்கு பிரிவுகளில் ஒன்று. நிபந்தனைக்குப்பின் அனைத்துக் கேள்விகளுக்கும் விடையளிக்கிறது.

**conditioning** : நிபந்தனையிடல் : ஒரு குரல் ஒலிக்கற்றை அனுப்புக் கம்பியில் தகவல் அனுப்புதல் தன்மைகளை மேம் படச் செய்தல்.

**condition portion** : நிபந்தனைப் பகுதி.

**condition stub** : நிபந்தனைப் பொதிவு: முடிவு பட்டியலின் நான்கு பிரிவுகளில் ஒன்று. ஒரு செயல் தொடரினை முடிவு செய்ய கவனிக்கப்பட வேண்டிய அனைத்து, காரணிகளையும் (மாற்றுகளையும்) விவரிக்கிறது.

**conducting** : மின் கடத்தல்.

**conducting state** : மின்கடத்தும் நிலை.

**conductor** : கடத்தி : மின் சக்தியை எடுத்துச் செல்லும் பொருள். Insulator-க்கு எதிர்ச் சொல்.

**CONDUIT** : காண்டியூட் : கல்வி மென்பொருள் வெளியிடும் நிறுவனம். சோதனை பொட்டலத் தொகுதிகளையும் ஆய்ந்து, கல்வி அளிக்கும் கணினி நிரல் களையும், அது தொடர்பான அச்சிடப்பட்ட பொருள்களை யும் விநியோகிக்கிறது.

**conference** : கலந்துரையாடல்; மாநாடு : தொலைபேசி மூலம் ஒரு கலந்துரையாடல் சாத்தியம். கணினி மூலமும் செயல்படுத்த லாம்.

**conference tree** : மாநாட்டு மரம் : தலைப்புகள் மற்றும் பயனாளர் குறிப்புகளுடன் அமைக்கப் பட்ட ஒரு வகையான செய்தி அறிக்கை. அதன் ஒவ்வொரு கிளையும் ஒரு பெரிய தலைப்பு. கிளை நீள்வதற்கேற்ப அதைப் பயன்படுத்துவோர் மேலும் விரிவாக்கலாம்.

**confidence factor** : நம்பிக்கைக் காரணி.

**confidentiality** : இரகசியத் தன்மை : தனிப்பட்ட அல்லது இரகசியத் தகவலை அனுமதி யின்றி அணுகாமல் இருப்பதற் கான பாதுகாப்பின் தரம்.

**configuration** : தகவமைவு : ஒரு அமைப்பாக இயங்கும் வகை யில் ஒன்றோடு ஒன்று தொடர்பு படுத்தி சேர்க்கப்பட்ட எந்திரங் கள் மற்றும் மென்பொருள் கூறுகள். தரவு செயலாக்க அமைப்பு அல்லது வன்பொரு ளில் உள்ள பொருள்களின் வடி வமைப்பு அல்லது வரைபடம்.

**configuration file** : (கணினி) தகவமைவுக் கோப்பு : பெரும் பாலும் கணினியை இயக்க வைக்கும்போது மட்டுமே பெரும்பாலும் படிக்கும் ஒரு சிறப்புக் கோப்பு. கணினியின் மூலாதாரங்களை, குறிப்பாக நினைவகத்தை எவ்வாறு ஒருங்கமைத்து பிரிப்பது என் பதை வரையறுப்பது.

**configuration management** : தகவமைவு மேலாண்மை : ஒரு உற்பத்திப் பொருளின் உற் பத்திக் காலம் முழுமையும் மற் றும் இயக்க வாழ்நாள் முழு மைக்குமாக கணக்கெடுத்து, கட்டுப்படுத்தி, திட்டமிட்டு வடிவமைத்தல்

**configure** : தகவமை ; செயல் படத் தயார் செய் : சில குறிப் பிட்ட வன்பொருளையோ

அல்லது மென்பொருளைபோ ஒன்று சேர்த்து ஒரு அமைப் பாக்குதல். அதன் ஒவ்வொரு பகுதிகளும் சரிசெய்யப்பட்டு மொத்தமாக ஒன்றாக இயங்கச் செய்தல். பிற மென்பொருள் அல்லது வன்பொருளோடு ஒத் திசைவாய் இயங்கும் வண்ணம் ஒரு மென்பொருள் அல்லது வன் பொருளைத் தயார் செய்தல்.

**conjuct : இணை :** ஒரு இணைப் பின் பல துணைச் சிக்கல்களில் அல்லது நிலைகளில் ஒன்று.

**conjugation : புடைபெயர்ப்பு.**

**connect : இணைத்திடு.**

**connect charge : இணைப்புக் கட்டணம் :** வணிகமுறைத் தரவு தொடர்பு அமைப்பு அல்லது சேவையுடன் இணைப்பு ஏற் படுத்திக் கொள்வதற்கு ஒரு பயனாளர் செலுத்த வேண்டிய தொகை. சில சேவைகளுக்கு, ஒரு குறிப்பிட்ட கால அளவுக்கு இவ்வளவு தொகை என இணைப்புக் கட்டணம் கணக்கிடப்படுகிறது. வேறு சில சேவைகளுக்கு, சேவையின் வகைக்கேற்ப அல்லது பெற்ற தகவலின் அளவுக்கேற்ப கட்டணம் வசூலிக்கப்படுவ துண்டு. வேறுசில சேவையாளர் கள், எவ்வளவு மணி நேரம் இணைப்பைப் பயன்படுத்திக் கொள்கின்றனர் என்ற அடிப் படையில் கட்டணம் நிர்ணயிக் கின்றனர். சில வேளைகளில், இணைப்பின் தொலைவு, அலைக்கற்றை அகலம் அல்லது மேற்கூறியவற்றுள் ஒன்றுக்கு மேற்பட்ட கூறுகளைக் கணக் கில் கொண்டும் இணைப்புக் கட்டணம் வரையறுக்கப் படுகின்றது.

**connected graph : இணைந்த வரை படம் :** ஒரு வரைபடத்தின் தனி முனையிலிருந்து தொடர்ச் சியான விளிம்புகள் வழியாக வேறு ஏதாவது ஒரு முனைக்கு நகர்த்தி உருவாக்கப்படும் வரைபடமுறை.

**connected line : இணைத்தடம்; தொடர்புடைய இணைப்பு.**

**connecting cable : இணைப்பு வடம் :** இரண்டு கருவிகளுக் கிடையில் மின்துடிப்புகளை பரிமாற உதவும் குழாய்.

**connection : இணைப்பு :** ஒரு வடம் அடிக்கட்டகம் அல்லது ஒரு பகுதியுடன் இணைப்பு ஏற்படுத்தும் மின்சார அல்லது எந்திர இணைப்பு வழங்கும் பொருத்து சாதனம்.

**connectionless : இணைப்பற்ற :** கணினி வழி தகவல் தொடர்பில் ஒருவகை. நேரடி இணைப்பு அல்லது முனை

களுக்கிடையேயான முறையான இணைப்பு தேவைப்படாமல் ஒவ்வொரு பாக்கெட்டிலும், மூல மற்றும் சேரும் முகவரி களைச் சேர்த்தல். யுடிபீ (UDP - User Datagram Protocol) நெறி முறையில் தகவல் பரிமாற்றம் இவ்வாறுதான் நடைபெறுகிறது.

connection machine : இணைப்பு எந்திரம் : திங்கிங் மெஷின் கார்ப்பரேசன் உருவாக்கிய இணைச் செயலாக்கக் கணினி களின் குடும்பம். 4,096 முதல் 65,536 வரை செயலகங்கள் இடம் பெற்றிருந்தன. ஹைபர் கியூப் அல்லது பிற அமைப்பு களில் அவற்றை அமைக்க முடியும். சரிக்கை செயலாக்கம், பாவிப்பு நிகழ்வு, தரவு தளங் களில் விவரங்களைப் பெறல் போன்ற பயன்பாடுகளுக்கு இவை பயன்படுகின்றன. முன் முனையாக வேக்ஸ் (VAX) அல்லது பிற கணினிகள் தேவைப்படுகின்றன.

connection matrix : இணைப்பு அணி.

connection oriented : இணைப்பு அடிப்படையிலான; இணைப்பு சார்ந்த : ஒரு பிணையத்தில் அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட பிணையங்களிலுள்ள இரு கணுக் (node) கணினிகளுக் கிடையே தரவு பரிமாற்றம் நடைபெற ஒரு நேரடி இணைப்புத் தேவைப்படுகிற தகவல் தொடர்பு முறைக்கு இணைப்பு சார்ந்த தரவுத் தொடர்பு என்று பெயர்.

connection-oriented network service (CONS) : இணைப்புசார் பிணைய சேவை.

connection oriented protocol : இணைப்புசார் நெறிமுறை.

connections : இணைப்புகள்.

connection wizard : இணைப்பு வழிகாட்டி.

connectivity : இணைப்புநிலை : 1. ஒரு பிணையத்தில் அல்லது இணையத்திலுள்ள புரவன் (Host) கணினிக்கும் அல்லது பயனாளர் கணினிக்கும் இடையே அமைந்துள்ள இணைப்பின் இயல்பைக் குறிக்கிறது. இணைப்பு ஏற்பட்டுள்ள மின் சுற்று அல்லது தொலைபேசி இணைப்பின் தரத்தைப்போ, இரைச்சல் இல்லாத் தன்மை யைபோ தரவு தொடர்பு சாதனங்களில் அலைக்கற்றை அளவைபோ குறிக்கும். 2. பிற சாதனங்களுக்கிடையே தரவுவை அனுப்புவதற்குரிய ஒரு வன் பொருளின் திறன், அல்லது பிற மென்பொருள் தொகுப்புகளு டன் தொடர்பு கொள்வதற்குரிய

ஒரு மென் பொருளின் திறன். 3. பிணையத்திலுள்ள வேறொரு கணினியுடனோ, பிற வன்பொருள் சாதனத்துடனோ, பிற மென் பொருள் தொகுப்புடனோ தொடர்பை ஏற்படுத்திக் கொள்வதற்குரிய ஒரு வன்பொருள்/மென்பொருள் அல்லது ஒரு கணினி இவற்றின் திறனைக் குறிக்கிறது.

**connectivity platform** : இணைப்பு நிலைப் பணித்தளம்.

**connect node** : இணைப்புக் கூணு : கணினி உதவிடும் வடிவமைப்பில் வரிகள் அல்லது சொற் பகுதிக்கான இணைப்பு முனை.

**connector** : இணைப்பி : வன்பொருள் அமைப்பில், இரண்டு வடங்களை இணைக்கவோ, ஒரு இணைப்பு வடத்தைச் சாதனத்துடன் இணைக்கவோ பயன்படுகிறது. (எ-டு: ஆர்எஸ்-232-சி என்னும் இணைப்பி இணைக்கியின் இணைப்பு வடத்தை ஒரு கணினியுடன் இணைக்கப் பயன்படுகிறது). பெரும்பாலான இணைப்பிகள் ஆண், பெண் என்கிற இரு வகைகளில் அடங்கிவிடுகின்றன. ஆண் இணைப்பிகள் (male connectors) ஒன்று அல்லது மேற்பட்ட பின்களைக் கொண்டிருக்கும். இவற்றை **நுழை இணைப்பிகள்** என அழைக்கலாம். பெண்வகை இணைப்பிகளில், ஆண் இணைப்பிகளிலுள்ள பின்களை ஏற்பதற்கான துளைகள் இருக்கும். இவற்றை **துளை இணைப்பிகள்** என்று அழைக்கலாம்.

**connector box** : இணைப்புப் பெட்டி.

**connector, multiple** : பன்முக இணைப்பி.

**connector symbol** : இணைப்புக் குறியீடு : சந்திப்புப் பகுதியைக் குறிப்பிடும் ஒரு வரைபடக் குறியீடு. பாய்வு நிரல் படங்களில் சில அடையாளங்காட்டிகளைக் கொண்டதாக ஒரே பக்கத்தில் ஓடும் கோடுகளின் பிரிந்து போன பாணிகளை இணைக்கும் சிறிய வட்டம். ஒரு பாய்வு நிரல் படத்தின் பல்வேறு பக்கங்களின் பாய்வுகளை இணைக்கும் ஒரு ஐங்கோண வடிவம்.

**connect time** : இணைப்பு நேரம் : ஒரு கணினி அமைப்புடன் முனையத்தில் உள்ள ஒருவர் எவ்வளவு நேரம் இணைப்பு வைத்திருந்தார் என்பதைக் குறிப்பிடுவது.

**connect using** : இதன்மூலம் இணைத்திடு.

**consecutive** : தொடர்ச்சியான : எந்தவித பிற நிகழ்ச்சிகளின்

தடையுமின்றி தொடர்ச்சியாக இரண்டு ஒரே மாதிரியான நிகழ்வுகள் ஏற்படுவது.

consequent rules : வினைவுறு சட்டங்கள்.

consight : கன்சைட் : ஜெனரல் மோட்டார்ஸ் நிறுவனம் உருவாக்கிப் பயன்படுத்திய கணினி கட்டுப்பாட்டில் இயங்கும் எந்திர பார்வை அமைப்பு.

consistent check : நம்பகச் சரி பார்ப்பு : குறிப்பிட்ட உள்ளீட்டுத் தரவு ஏற்கெனவே முடிவு செய்யப்பட்ட விதிமுறைகளுக்கு ஏற்ப உள்ளது என்ற நம்பகத்தன்மையைச் சோதித்தல். ஒரே மாதிரியான தரவு பொருள்கள் அவற்றின் மதிப்பு, வடிவம் ஆகியவற்றில் நம்பகமாக உள்ளதா என்று கட்டுப்படுத்தும் முறை.

console : பணியகம் : ஒரு அமைப்புடன் மனிதர்கள் தகவல் தொடர்பு கொள்ள அனுமதிக்கும் கணினி அமைப்பின் முகப்புப் பகுதி.

console applications : பணியகப் பயன்பாடுகள்.

console display register : பணியகக் காட்சிப் பதிவகம்

console log : பணியகப் பதிவு

console operator : பணியக இயக்குநர் : கணினி முனையங்களில் உள்ளீட்டு வெளியீட்டுப் பணிகளைக் கவனிப்பவர்.

console printer : பணியக அச்சுப் பொறி.

console switch : பணியக விசை

console typewriter : முனையத் தட்டச்சுப் பொறி : கணினியுடன் நேர்முக இணைப்புள்ள தட்டச்சுப் பொறி. இது கணினிக்கும் கணினியை இயக்குபவருக்கும் இடையில் தகவல் தொடர்பினை அனுமதிக்கிறது.

consolidate : ஒருங்கு திரட்டு.

consortium : பேரமைப்பு : அவசர நிலை காலத்தில் பயன்படுத்துவதற்காக முழுமையான கணினி வசதியைத் தாங்கி நிற்கும் ஒரு கூட்டு முயற்சி.

constant : மாறிலி; மாறா மதிப்பு; நிலைமதிப்பு : கணினி செயல்படும்போது மாறாமல் இருக்கும் மதிப்பு. Literal என்றும் அழைக்கப்படுகிறது. Variable என்பதற்கு மாறானது.

Constant Angular Velocity (CAV) : மாறாக் கோண வேகம்.

constant area : மாறாப் பரப்பு.

constant expression : மாறாத் தொடர் : ஒரு நிரலில், அனைத்தும் மாறிலிகளால் ஆன ஒரு கணக்கீட்டுத் தொடர். நிரல் நிறைவேற்றப்பட்டு முடியும்

வரை அதன் ஒட்டுமொத்த மதிப்பு மாறாது.

**Constant Linear Velocity (CLV)** : மாறா நேர் வேகம்.

**constants and variables** : மாறிலிகளும் மாறிகளும்.

**constellation** : கொத்து; திரள் : தகவல் தொடர்பு அமைப்பில் சுமப்பி அலைகளின் (carrier wave) வெவ்வேறு நிலைகளை உருவகிக்கும் ஒரு தோரணி (pattern) அமைப்பு. ஒவ்வொரு நிலையும் ஒரு குறிப்பிட்ட துண்மி சேர்க்கைகளைக் கொண்டிருக்கும். ஒரு தகவல் தொடர்பு சமிக்கையில் ஏற்படும், தனித்துக் காட்டக்கூடிய ஒவ்வொரு மாற்றத்தையும் அடையாளம் காட்டும் நிலைகளின் எண்ணிக்கையை இத் திரள் மூலம் அறியலாம். எனவே, ஒற்றை மாற்றத்தில் அதிகபட்சமாக குறி முறைப்படுத்த வேண்டிய துண்மிகளின் எண்ணிக்கையை இது காட்டும்.

**constraint** : நிபந்தனை: ஒரு சிக்கலுக்கான தீர்வுகளை கட்டுப்படுத்தும் நிபந்தனை.

**construct** : கட்டு; கட்டமை; உருவாக்கு.

**constructor** : ஆக்கி; பொருளாக்கி : பொருள்நோக்கு நிரலாக்கத்தில் ஓர் இனக்குழுவில் ஒரு பொருளை உருவாக்கும் போது, அப்பொருளின் பண்புக் கூறுகளை நிர்ணயிக்கும் ஒரு செயல்கூறு அல்லது வழிமுறை. இது தானாகவே இயக்கப்படும்.

**consultant** : ஆலோசகர் : வணிக தரவு செயலாக்கம், கல்வி, இராணுவ அமைப்பு அல்லது நலவாழ்வு போன்ற சில பயன்பாட்டு சூழ்நிலைகளில் கணினிகளைப் பயன்படுத்துவதில் வல்லுநர். ஒரு குறிப்பிட்ட சிக்கலை பரிசீலித்து தீர்ப்பதற்கு உதவுகின்றவர்.

**consumable** : நுகர் பொருட்கள் : வன்பொருள் துணைக் கருவிகள். அச்சுப் பொறி நாடாக்கள், மை, காகிதம் போன்று தொடர்ச்சியாக வாங்க வேண்டிய பொருள்கள்.

**consumer electronics** : நுகர்வோர் மின்னணுவியல்.

**cont** : காண்ட் : பேசிக் மொழியில் ஒரு ஆணை. தற்காலிகமாக நின்று போன நிரலை தொடரப் பயன்படுத்தப்படுவது.

**contact** : தொடர்பு : மின்சாரம் செல்ல அனுமதிக்கும் இணைப்புக்காக தொடர்புள்ள உலோக சுருளைத் தொடும் பொத்தான் அல்லது சாக்கெட்டில் உள்ள உலோகச் சுருள். அரிப்பைத்

தடுப்பதற்காக விலை மதிப்புள்ள உலோகங்களின் மூலம் தொடர்பு கொள்ளப்படலாம்.

contact manager : தொடர்பு மேலாளர்.

container class : கொள்கலன் இனக்குழு : வேறு இனக்குழுக்களின் பொருட்களைத் தனக்குள்ளே கொண்டுள்ள ஓர் இனக்குழு. பொருள்நோக்கு நிரலாக்கத்தில் பயன்படுத்தப்படுவது.

containing text : உரையடங்கிய.

content : உள்ளடக்கம் : ஒரு குறிப்பிட்ட சேமிப்பு இடத்தில் உள்ள முகவரியிடக்கூடிய அனைத்து தரவுகளையும் இது குறிப்பிடுகிறது.

content addressable memory : உள்ளடக்க முகவரியிடும் நினைவகம் : துணை சேமிப்பகத்தைப் போன்றது.

content adviser : உள்ளடக்க ஆலோசகர்.

contention : பூசல்; மோதல் : தகவல் தொடர்பு மற்றும் கணினி கட்டமைப்புகளில் பயன்படுத்தப்படும் ஒரு சொல். இரண்டு சாதனங்கள் அனுப்பும் தகவல்களை ஒரே பாதையில் ஒரேநேரத்தில் பயணிக்கும் சூழ்நிலையை விளக்குவது. அமைப்பு விதிமுறைகளால் நெறிப்படுத்தப்படுவது. ஒரே நேரத்தில் இரண்டு செயலிகள் ஒரே சாதனத்தைக் கட்டுப்படுத்த முயலும்போது ஏற்படும் நிலையையும் குறிக்கும்.

contention resolution : மோதல் நிலைத் தீர்வு : இரண்டு சாதனங்களும் ஒன்றை அணுகும்போது எதற்கு இணைப்பு தரப்படுகிறது என்பதைத் தீர்க்கும் செயல்முறை.

contents directory : உள்ளடக்கப் பட்டியல் : ஒரு உட்புற சேமிப்பகத்தில் குறிப்பிட்ட பகுதியில் நடைபெறும் வழக்கச் செயலைக் குறிப்பிடும் தொடர்வரிசைகள்.

context : சூழல் : வல்லுநர் முறைமையின் (Expert System) உரிமைப்பகுதி பகுக்கக் கூடிய பல்வேறு சிக்கல் பகுதிகள்.

context diagram : சூழ்நிலை வரைபடம் : மிக உயர்நிலை பாய்வு நிரல்படம். ஒரு கணினி அமைப்பின் எல்லைகளை வரையறை செய்கிறது. தனி செயல்முறையையும், தரவு உள்ளீடுகள், வெளியீடுகள் போன்றவற்றையும் காட்டுகிறது.

context sensitive : சூழ்நிலை உணர்வு : குறிப்பிட்ட ஒரு நிரலை இயக்குவது. ஒரு விசையைத் தொடுவது அல்லது

சுட்டியைச் சொடுக்குவது போன்றவற்றால் இதனைச் செய்ய முடியும்.

**context sensitive help : சூழ்நிலை உணர் உதவி :** உதவி கேட்கும் நேரத்தில் நிரலின் நிலை அல்லது முறை என்ன என்பது உணர்வது. அது பற்றிய குறிப்பிட்ட தரவு வழங்கும் உதவி முறை.

**context sensitive help key : சூழ்நிலை உணர் உதவு விசை :** பல விசைப் பலகைகளில் உள்ள ஒரு முக்கிய விசை. விசைப்பலகையில் உள்ள இந்த விசையை அழுத்தும்போது குறிப்பிட்ட சிக்கலைத் தீர்க்க உதவும் 'உதவி' காட்சித் திரையில் தானாகத் தோன்றும். பெரும்பாலும் F1ஆக இருக்கும்.

**context sensitive language : சூழ்நிலை உணர் மொழி.**

**context switching : சூழல்நிலை மாற்றம் :** பல்பணி இயக்க முறைமையில் ஒருவகைமையச் செயலியின் கவனத்தை ஒரு பணியிலிருந்து இன்னொரு பணிக்குத் திருப்பும் செயல் முறை. ஒவ்வொரு பணிக்கும் நேரத்தைக் கூடுதலாக்கி மாற்றி மாற்றி ஒதுக்கீடு செய்யும் முறையிலிருந்து மாறுபட்டது.

**contextual search : சூழ்நிலைத் தேடல் :** அவற்றில் உள்ள சொல் பகுதியின் அடிப்படையில் பதிவேடுகள் அல்லது ஆவணங்களைத் தேடுவது. விசைப்புலம் அல்லது கோப்பின் பெயர்மீது தேடுவதற்கு மாறானது.

**contiguous : அடுத்தடுத்து; ஒட்டியுள்ள :** பொது எல்லைக் கோட்டைக் கொண்ட அடுத்தடுத்த பகுதிகள். (எ-டு.) ஒரு வட்டில் அடுத்தடுத்த தரவு குறிப்புகள் சேமிக்கப்பட்டுள்ள வட்டுப் பிரிவுகள் அடுத்தடுத்து அமைந்திருக்கும் முறை.

**contiguous data structure : அடுத்தடுத்துள்ள தரவுக் கட்டமைப்பு.**

**contingency plan : எதிர்பாரா நிலைத் திட்டம் :** அவசர நிலைகள் அல்லது சேதங்கள் ஏற்படும் பொழுது கணினி தரவு அமைப்பினை மீட்டுக் கொண்டு வருவதற்கான திட்டம்.

**continuation card : தொடர்ச்சி அட்டை :** முந்தைய துளையிட்ட அட்டையில் தொடங்கப்பட்ட தகவலைக்கொண்ட துளையிட்ட அட்டை.

**continue : தொடர்க :** முன்பே வரையறுக்கப்பட்ட வரையறைகளுடன் பொருந்தும் பதிவேடு

களைத் தேடுவதைத் தொடர் வதற்கான டி'பேஸின் கட்டளை.

**continuing path control** : தொடர்பாதைக் கட்டுப்பாடு: எந்திரன் இயங்கு நுட்பத்தில் பயன்படுத்தப்படும் சொல். தேவையான வளைவுப் பாதை வழியாக எந்திரனை நகர்த்திச் செல்வது.

**continuity** : தொடர்நிலை.

**continuity check** : தொடர்ச்சிச் சரிபார்ப்பு : தொடக்கம் முதல் இறுதிவரை உள்ள பாதை சமிக்கைகளை அனுப்புவதற்கு சரியாக இருக்கிறது என்பதை முடிவு சொல்ல ஒரு கம்பி, வழித்தடம் அல்லது மின்சுற்று ஒன்றை சோதனை செய்தல்.

**continuous** : தொடர் : அடுத்தது அல்லது அடுத்ததாக இருப்பது.

**continuous analysis** : தொடர் பகுப்பாய்வு.

**continuous carrier** : தொடர் சுமப்பி : தகவல் தொடர்புகளில் கம்பியில் தகவல்கள் அனுப்பப் படாவிட்டாலும் செல்கின்ற சுமப்பி அலைவரிசை.

**continuous data structure** : அண்மை தரவுக் கட்டமைப்பு.

**continuous-feed paper** : தொடர்ந்து வழங்கும் தாள் : பக்கங்களுக்கிடையில் துளை யிடப்பட்டு ஒவ்வொரு பக்கத்தி லும் கிழிக்கக்கூடிய வகையில் அரை அங்குல துளைகள் உள்ள காகிதம்.

**continuous forms** : தொடர் படிவங்கள் : அச்சுப்பொறிகளில் தானாகவே அனுப்புவதற்கேற்ப வெளிப்புற விளிம்புகளில் சிறிய துளைகள் உள்ள விசிறி மடிப்புத் தாள் அல்லது சுருள் தாள். வெற்றுத்தாளாக இருக்க லாம். அல்லது சோதனைகள், விலைப் பட்டியல்கள், வரி படிவங்கள் போன்ற முன் பாகவே அச்சிடப்பட்ட படிவங் களாக இருக்கலாம்.

**continuous- form paper** : தொடர் படிவத் தாள் : தொடர் எழுது



தொடர்படிவ காகிதம்

பொருள் என்றும் அழைக்கப் படுகிறது. அச்சுப் பொறியில் டிராக்டர் மூலம் அளிக்கப்படு கிற துளையிடப்பட்ட நூற்றுக் கணக்கான தாள்களைக் கொண் டது. முன்னதாகவே துளை யிடப்பட்டு அச்சடிப்புக்குப் பின்னர் தனித்தனியாகப் பிரிக்கக் கூடிய தாள்கள். ஒரு பிரபல அச்சு ஊடகமாகிய இதை ஒரு முறை ஒன்று சேர்த்தால் காகிதத் தொகுதி முழுவதையும் கணினி அச்சுப்பொறியில் ஏற்றமுடியும். தனியாக எடுக்கக்கூடிய (முன் துளையிடப்பட்ட) ஒரு பகுதி யில் ஸ்ப்ராக்கெட் துளையைப் பயன்படுத்தித் தொடர்தாள் அனுப்பப்படும்.

**continuous graphics** : **ஒட்டிக் கொள்ளும் வரைகலை** : ஒன்றை யொன்று தொட்டுக்கொள்ளும் சில எழுத்துகள் கொண்ட வரைபடங்கள்

**continuous processing** : **தொடர் செயலாக்கம்** : ஒரு அமைப்பில் அவை நிகழ்கின்ற வரிசை யிலோ அல்லது நிகழ்ந்த உடனேயோ உள்ளீடு செய் யப்படும் நடவடிக்கைகள்.

**continuous scrolling** : **தொடர் நகர்த்தல்** : செய்திகளை வரிவரி யாக சாளரத்தில் மூலம் முன் னாகவோ பின்னாகவோ நகர்த்தல்.

**continuous speech recognition** : **தொடர்பேச்சு அறிதல்** : பேச்சு ஏற்பிக்கு ஒரு அணுகு முறை. சாதாரண இடைவெளிகளில் சராசரியான உரையாடல்களில் நடைபெறும் பேச்சை இது புரிந்து கொள்ளும்.

**continuous stationary** : **தொடர் தாள்.**

**continuous tone** : **தொடர் நீழல்** : ஒரு அச்சுப்பொறியிலிருந்து வெளிவரும் புள்ளிகள். அச் சிடலுக்குத் திரை செய்யப் படாத ஒளிப்படம்.

**continuous tone image** : **தொடர் கூட்டுத் தோற்றம்** : பல்வகை யான வண்ணக் கூட்டுகள் அல்லது சாம்பல்நிறக் கூட்டு களைக் கொண்டதாக உள்ள தனித்தனிப் பகுதிகளை ஒன்றாக இணைப்பதன் மூலம் உரு வாக்கப்படும் வண்ணத் தோற்றம் அல்லது கருப்பு வெள்ளைத் தோற்றம்.

**continuous tone printer** : **தொடர் மை அச்சுப் பொறி** : ஒருவகை அச்சுப்பொறி. உருவப் படங் களை அச் சிடும்போது சாம்பல் நிற அல்லது வண்ணப் படி மங்களைத் தொடர் மை பூச்சு முறையில் மிக இயல்பான வகையில் அச்சிடும்.

**contour analysis** : **படவேறு பாட்டு பகுப்பாய்வு** : ஓ.சி.ஆர்

முறையில் ஒரு ஒளிப் புள்ளியைப் பயன்படுத்தி எழுத்தின் வெளிப்புற விளிம்புகளில் நகர்ந்து செல்வதன் மூலம் ஒரு எழுத்தின் தோற்றத்தைக் கண்டறிய உதவும் தொழில்நுட்பம்.

**contouring** : **பட வேறுபாடு அமைத்தல்** : கணினி வரைபட முறைமைகளில் ஒரு உருவம், பொருள் அல்லது அடர்த்திப் பொருளின் வெளிப்புற தோற்றத்தை உருவாக்குதல்.

**contrast enhancement** : **மாறுபாடு அதிகரித்தல்** : ஒளிர்மை அல்லது இருட்டினை அதிகரித்தல். உண்மையான இலக்கமுறை செயலாக்கமானது அது வருடும் பொருளின் நேர் கோடல்லாத வற்றைக் கண்டுபிடிப்பதைப் பொறுத்திருக்கிறது. கண்டு பிடிப்பதன் தன்மையை அறிந்தால் சரியான மாறுபாடுகளை மீண்டும் அறி முகப்படுத்தலாம். மாறுபாடுகள் விரும்பும் வண்ணம் அதிகரிக்கப் படலாம்.



படவேறுபாடமைத்தல்

**control** : **கட்டுப்பாடு; இயக்கு விசை** : 1. ஒரு கணினியையும் அதன் செயல்பாடுகளையும் முறைப்படுத்தி மேலாண்மை செய்தல். பிழையற்ற செயல்பாடுகளை நடைமுறைப் படுத்த சரியான நேரத்தில் சரியான வரிசையில் மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகள். கட்டுப்பாடு என்னும் சொல் வன்பொருள், மென்பொருள் இரண்டுக்கும் பொருந்தக்கூடியதே. வன்

**contrast** : **மாறுபாடு** : ஓ.சி.ஆர் முறையில் ஒரு ஆவணத்தின் அச்சிடப்பட்ட பொருள் அல்லது அது அச்சிடப்பட்ட பின்னணியைக் குறிக்கக் காட்டப்படும் வண்ண அல்லது நிழல் தோற்றத்தின் வேறுபாடுகள்.

பொருளைப் பொறுத்தவரை. கட்டுப்பாட்டு மின் இணைப்புப் பாட்டை (control bus) என்னும் மின்வழி மூலமாக கணினியின் செயல்பாடுகள் கட்டுப்படுத்தப் படுகின்றன. மென்பொருளைப் பொறுத்தவரை தரவுகளைக் கையாளும் நிரல் ஆணைகளைக் குறிக்கின்றன. 2. ஒரு வரைகலைப் பயனாளர் இடைமுகத்தில் (GUI) ஒரு குறிப்பிட்ட செயல்பாட்டை நிறைவேற்றப் பயனர் இயக்குகின்ற, திரையில் தோன்றும் ஒரு சிறு உருப் பொருள். மிகப் பரவலாகப் பயன்படும் இயக்கு விசைகள், கட்டளைப் பொத்தான்கள், தேர்வுப் பெட்டிகள், உருள் பட்டைகள் போன்றவையாகும்.

**control block : கட்டுப்பாட்டுப் பகுதி** : ஒரு செயலாக்க அமைப்பைக் கட்டுப்படுத்துவதற்குத் தேவையான குறிப்பிட்ட வகையான தகவல். அதன் பிறபகுதிகளுக்கு அனுப்பப்படுகின்ற சேமிப்பகத்தின் பகுதி.

**control break : கட்டுப்பாட்டு நிறுத்தம்** : கட்டுப்பாட்டுப் புலத்தில் உள்ள மதிப்புகளின் மாற்றத்தின் விளைவாக ஒரு நிரல் செயலாக்கத்தில் சில சிறப்பு நிகழ்வுகள் ஏற்படும் இடம்.

**control bus : கட்டுப்பாட்டு மின் பாட்டை** : ஒரு கணினியில், மையச் செயலகத்தில் கட்டுப் பாட்டகத்திலிருந்து நினைவகத்தை இணைக்கும் பாதை.

**control cards : கட்டுப்பாட்டு அட்டைகள்** : உருவாக்கி போன்ற செயலாக்க அமைப்பு, ஒரு பொது வழக்கச் செயலைக் குறிப்பாகப் பயன்படுத்தும் போது, தேவைப்படும் உள்ளீட்டுத் தரவுகளைக் கொண்டுள்ள துளையிட்ட அட்டை. எடுத்துக்காட்டு: ஒரு குறிப்பிட்ட நிரலை ஏற்றி இயக்குமாறு ஆணையிடும் தொடர் அட்டைகளில் ஒன்று.

**control change of : கட்டுப் பாட்டு மாற்றம்.**

**control character : கட்டுப்பாட்டு எழுத்து** : ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் கட்டுப்பாட்டு இலக்கத்தை நிறுத்துதல் அல்லது மாற்றம் செய்தலை ஆரம்பித்து வைக்கும் எழுத்து.

**control circuits : கட்டுப்பாட்டு மின்சுற்றுகள்** : கணினியின் ஆணைகளை விளக்கி தேவையான இயக்கங்களை செய்ய வைக்கும் மின்சுற்றுகள்.

**control clerk : கட்டுப்பாட்டு எழுத்தர்** : தரவு செயலாக்க

இயக்கங்களை கட்டுப்படுத்து வது தொடர்பான பணிகளைச் செய்யப் பொறுப்பேற்றுள்ளவர்.

**control code :** கட்டுப்பாட்டுக் குறிமுறை : அச்சிடலில், தரவு பரிமாற்றத்தில், திரைக்காட்சி களில் ஒரு சாதனத்தின் நட வடிக்கையைக் கட்டுப்படுத்து வதற்காக ஒரு கணினி நிரலில் பயன்படுத்தப்படும் அச்சிட வியலாக் குறிகள். (எ-டு) : புதிய வரி, ஒரு வரி நகர்த்தல், தாளை வெளித் தள்ளல், நகர்த்தியை திரும்பச் செய்தல் போன்ற பணிகளுக்கான அச்சுப் பொறிக் கட்டுப்பாட்டு குறி கள்). ஒரு பயன்பாட்டு மென் பொருள், அச்சுப் பொறியைக் கட்டுப்படுத்தும் வழி முறை களைக் கொண்டிராதபோது ஒரு நிரலரால் அல்லது ஒரு பயனாள ரால் கட்டுப்பாட்டுக் குறிகள் பெரும்பாலும் பயன்படுத்தப் படுகின்றன. ஒளித்தோற்றத் திரைக்காட்சியில் கட்டுப் பாட்டுக் குறிகள், உரைப் பகுதியை அல்லது காட்டியைக் கையாள்வதற்கென மையச் செயலியால் திரையகத்துக்கு அனுப்பி வைக்கப்படுகின்றன. மிகப் பரவலாகப் பயன்படுத்தப் படும் ஒளிக்காட்சிக் கட்டுப் பாட்டு குறிகள் அன்சி (ANSI) மற்றும் விடீ-100 (VT-100) ஆகும்.

**control collection :** இயக்கு விசைகள் தொகுப்பு.

**control computer :** கட்டுப் பாட்டுக் கணினி.

**control console :** கட்டுப்பாட்டுப் பணியகம் : முனையத்தை இயக்குபவர் அல்லது சேவை பொறியாளருக்கும் கணி னிக்கும் இடையில் தகவல் தொடர்பு கொள்ளப் பயன்படும் கணினி அமைப்பின் பகுதி.

**control counter :** கட்டுப்பாட்டு எண்ணி.

**control data :** கட்டுப்பாட்டுத் தரவு : வேறொரு தரவு மதிப்பையோ அல்லது துணைச் செயல்பாட்டையோ அல்லது ஒரு கோப்பு நடவடிக்கை யையோ அடையாளம் காண தேர்ந்தெடுக்க, செயல்படுத்த அல்லது மாற்றியமைக்கப் பயன் படுத்தப்படும் ஒன்று அல்லது மேற்பட்ட கட்டுப்பாட்டு தரவு வகைகள்.

**control data corporation :** கண்ட்ரோல் டேட்டா கார்ப்ப ரேஷன் : மீத்திறன் (சூப்பர்) கணினிகள் உள்ளிட்ட கணினிக் கருவிகளைப் பெருமளவு உற்பத்தி செய்யும் நிறுவனம்.

**control elements :** கட்டுப்பாட்டு உறுப்புகள்.

**control field** : கட்டுப்பாட்டுப் புலம் : *தரவு பதிவேட்டில் உள்ள ஒரு புலம். அதே பதி வேட்டில் உள்ள புலங்களை அடையாளம் கண்டு, வகைப் படுத்த பயன்படுவது.*

**control flow** : கட்டுப்பாட்டுப் பாய்வு: *ஒரு நிரலில் இயலக் கூடிய செயல்பாட்டு வழிகள் அனைத்தையும் நுணுகிப் பார்ப் பது. பொதுவாக இது ஒரு வரை பட வடிவில் விளக்கப்படும்.*

**control flowchart** : கட்டுப் பாட்டுப் பாய்வு நிரல்படம்.

**control instruction register** : கட்டுப்பாட்டு ஆணை பதிவகம்: *ஒரு சிறப்பு தற்காலிக சேமிப்பு இடம். கட்டுப்பாட்டகம் செயல் படுத்துகின்ற எந்திர ஆணைகள் இதில் இடம் பெறும்.*

**control key** : கட்டுப்பாட்டு விசை : *கணினி விசைப் பலகை யில் உள்ள சிறப்புச் செயல் விசை. கணினியை ஒரு பணி யைச் செய்யுமாறு ஆணையிடு வதற்கு வேறொரு விசையுடன் இந்த விசையைச் சேர்த்து ஒரே நேரத்தில் அழுத்தினால் போதும்.*

**controlled variable** : கட்டுறு மாறி : *ஒரு மொழியில் உரை யாடல் முறை அமைப்பில் ஒரு குறிப்பிட்ட மதிப்புகளின் தொகுதி தொடர்பான மாறி.*

**controller** : கட்டுப்படுத்தி; கட்டுப்பாட்டுப் பொறி : *ஒரு வெளிப்புற உறுப்பை இயக்கு வதற்கு கணினிக்குத் தேவைப் படும் சாதனம்.*

**control listing** : கட்டுப்பாடு பட்டியலிடல் : *ஒரு குறிப்பிட்ட சமயத்தில் நடைபெறும் ஒவ்வொரு வணிகப் பரிமாற்றத் தையும் விவரிக்கும் விரிவான அறிக்கை.*

**control logic** : கட்டுப்பாட்டுத் தருக்கம்; கட்டுப்பாட்டு அளவை : *ஒரு கணினியின் செயலாக்க பணிகளைச் செயல்படுத்தும் வரிசை முறை.*

**control logo** : கட்டுப்பாட்டுச் சின்னம் : *எந்திரன்கள் (ரோபோக் கள்) இயக்கும் சாதனங் களுக்குப் பயன்படுத்தப்படும் ஒரு லோக்மைரன் சின்னம்.*

**control loops** : கட்டுப்பாட்டு மடக்கிகள்.

**control mechanism** : கட்டுப்பாடு எந்திர நுட்பம்.

**control memory**: கட்டுப்பாட்டு நினைவகம் : *கணினியின் உள் இயக்கத்திற்காக ஆணைகளைச் சேமிக்கப் பயன்படும் கட்டுப் பாட்டகத்தின் நினைவகம்.*

**control menu** : கட்டுப்பாட்டுப் பட்டி : *சாளரங்களைக் கையாளும்*

கட்டளைகளைக் கொண்ட பட்டி. பயன்பாட்டுப் பிம்பங்கள் மற்றும் உரையாடல் பெட்டிகளில் கட்டுப்பாட்டு பட்டி இருக்கும். கட்டுப்பாட்டு பட்டியைத் திறக்க வேண்டுமென்றால் சாளரத்தின் தலைப்புப் பட்டையின் இடது பக்கம் உள்ள கட்டுப்பாட்டு பட்டிப் பெட்டியை பயன்படுத்த வேண்டும்.

**control menu box : கட்டுப்பாட்டு பட்டி பெட்டி :** *சாளரத்தின் தலைப்புப் பட்டையில் இடது பக்கத்திலேயே இது எப்போதும் இருக்கும். கட்டுப்பாட்டு பட்டி இதில் அடக்கம்.*

**control panel : கட்டுப்பாட்டுப் பலகம் :** *1. மனிதக் கட்டுப்பாடுகளைக் கொண்டுள்ள கணினி கட்டுப்பாட்டு முகவு. மைக்ரோசாஃப்ட் விண்டோஸ் இயக்க முறைமைகளில் உள்ள ஒரு கோப்புறை. 2. அலகு பதிவு சாதனங்களின் இயக்கங்களைக் கட்டுப்படுத்தப் பயன்படுத்தும் நீள் கம்பிகளைப் பொருத்துப் அட்டை.*

**control programme : கட்டுப்பாட்டு நிரல் :** *கணினி மற்றும் அதன் மூலாதாரங்களை முழுவதுமாக மேலாண்மை செய்வதற்குப் பொறுப்பான செயலாக்க அமைப்பின் நிரல்.*

**control punch : கட்டுப்பாட்டு துளை :** *ஒரு குறிப்பிட்ட இயக்கத்தைச் செய்யுமாறு கணினிக்கு ஆணையிடும் ஒரு குறிப்பிட்ட குறியீட்டைக் கொண்ட அட்டை.*

**control register, access : அணுகுக் கட்டுப்பாட்டுப் பதிவகம்.**

**controls[1] : கட்டுப்பாடுகள் :** *செயலாக்கத் தொழில் நுட்பங்கள் அல்லது நரவுகளின் துல்லியம், பாதுகாப்பு, நம்பகத் தன்மை அல்லது முழுமையை உறுதி செய்யும் முறைகள்.*

**controls[2] : இயக்குவிசைகள் :** *விசுவல்பேசிக் போன்ற பயன்பாட்டு உருவாக்கக் கருவி மொழிகளில் பயனாளர் இடைமுகங்களை மிக எளிய முறையில் உருவாக்க உடன்பயன் முறையில் இருக்கின்றன.*

**control section : கட்டுப்பாட்டு பிரிவு :** *நிரலின் ஆணைகளின் படி கணினியின் இயக்கத்தை வழி நடத்தும் மையச் செயலக சாதனத்தின் பகுதி.*

**control sequence : கட்டுப்பாட்டு வரிசை :** *ஒரு நேரத்தில் ஒன்று மட்டும் என்ற வரிசையில் ஆணைகளை இலக்கமுறை கணினிக்கு தேர்ந்தெடுப்பதற்கான வழக்கமான முறை.*

**control signal : கட்டுப்பாட்டு சமிக்கை** : எந்திரங்களையும், செயல் முறைகளையும், தானியங்கி முறையில் கட்டுப்படுத்த கணினி உருவாக்கும் சமிக்கை.

**control statement : கட்டுப்பாட்டுக் கூற்று** : ஒரு நிரலில் வேறொரு பகுதிக்கு கட்டுப்பாட்டை மாற்றுவதற்கான கட்டளை அமைப்புகளை வரிசை முறையில் செயற்படுத்துவதை நிறுத்தும் இயக்கம்.

**control station : கட்டுப்பாட்டு நிலையம்** : முகவரியிடல், வாக்களித்தல், தேர்ந்தெடுத்தல், திரும்பப் பெறல் போன்ற கட்டுப்பாட்டு நடைமுறைகளை மேற்பார்வை செய்யும் கட்டமைப்பு நிலையம். கொள்கை நிலை அல்லது பிற வழக்கத்துக்கு மாறான சூழ்நிலைகள் ஏற்படும்போது ஒழுங்கினை ஏற்படுத்தப் பொறுப்பானது.

**control store : கட்டுப்பாட்டுக் கிடங்கு** : நுண் நிரல் கட்டுமான அமைப்பில் நுண் ஆணைகளை சேமிக்கப் பயன்படுத்தப்படும் ஒரு சிறப்பு, அதிவேக சாதனம்.

**control string : கட்டுப்பாட்டுச் சரம்** : வன்பொருளைக் கட்டுப்படுத்துகின்ற எழுத்துகளின் தொடர் வரிசை. அச்சுப்பொறிகளுக்கும், மோடம்களுக்கும் அனுப்பப்படுகின்ற தரவுகளின் உள்ளேயே கட்டுப்பாட்டுச் சரங்கள் சேர்க்கப்பட்டிருக்கும். தம் தகுதியைக் குறிப்பிடும் சிறப்பு எழுத்திலிருந்து அவை தொடங்கும்.

**control strip : கட்டுப்பாட்டுப் பட்டை** : *1.* பதிவு செய்யப்பட்ட தரவுகளை ஏற்கெனவே அறிந்த மதிப்புகளுடன் ஒப்பிட்டு, துல்லியத் தன்மையைப் பாதுகாக்கத் தேவையான திருத்தங்களைத் தீர்மானிக்கப் பயன்படுத்தப்படும் அளவீட்டுக் கருவிகள். *2.* கணினிப் பணியின்போது அடிக்கடிப் பயன்படுத்தக்கூடிய நிரல்களை, தரவுகளைக் குறுவழி (shortcuts) வடிவில் எளிதில் கையாளக் கூடிய இடத்தில் குழுவாக இருத்தி வைப்பது. நேரம், தேதி, மின்கலச் சக்தியின் நிலை போன்றவை இக்குழுவில் இடம் பெறலாம்.

**control structures : கட்டுப்பாட்டு கட்டளை அமைப்புகள்** : சொற்றொடர் ஆணைகளை வரிசை முறையில் செயல்படுத்துவதிலிருந்து விலகிச் செல்வதைக் குறிப்பிடும் ஆணைத் தொடர் மொழியில் உள்ள ஒரு வசதி.

**control system** : கட்டுப்பாட்டு முறைமை.

**control tape** : கட்டுப்பாட்டு நாடா.

**control technology** : கட்டுப் பாட்டு தொழில்நுட்பம் : வெளிப் புறச் சாதனங்களைக் கட்டுப் படுத்துவதற்காக கணினிகளை யும் நுண் மின்னணுக் கருவி களையும் பயன்படுத்துவது. தானியங்கி அமைப்புகளில் இதை அதிகம் காணலாம்.

**control, total** : முழுக் கட்டுப் பாட்டு.

**control unit** : கட்டுப்பாட்டகம் : கணினியின் முழு அமைப்புச் செயல்படுவதைக் கட்டுப்படுத் தும் செயலக சாதனத்தின் பகுதி. கட்டுப்பாட்டு பிரிவு என்றும் அழைக்கப்படும்.

**control unit, central** : மையக் கட்டுப்பாட்டகம்.

**control variable** : கட்டுப்பாட்டு மாறி: திரும்பத் திரும்பச் செயல் படுத்தப்படும் ஒரு செயல் முறையின் போது பின் தொடர்ந்து செல்லும் ஒரு மாறி. ஒவ்வொரு முறை செயல்படும் போதும் அதன் மதிப்பு கூடு கிறது. அல்லது குறைகிறது. ஒரு நிலை எண் அல்லது பிறமாறி களுடன் ஒப்பிடப்பட்டு செயல் முறையின் இறுதி அறியப் படுகிறது.

**control words** : கட்டுப்பாட்டுச் சொற்கள் : நிரலின் சிறப்புப் பொருள் உள்ள ஒதுக்கப்பட்ட சொற்கள்.

**convention** : மரபு : ஒரு குறிப் பிட்ட நிரல் அல்லது அமைப்பு களுக்காக ஏற்படுத்தப்பட்ட திறமான, ஏற்கப்பட்ட நடை முறைகள் மற்றும் சுருக்கங்கள், குறியீடுகள் மற்றும் அவற்றின் பொருள்கள். பல்வேறு நிரல் களை ஒன்றிணைக்கும் நடை முறை விதிகள்.

**convergence** : சங்கமம் : ஏற் கெனவே தனித்தனியாக இருக் கும் தொழில் நுட்பங்களை ஒன்று சேர்த்தல். ஒரு சிஆர்டி படப்புள்ளியில் சிகப்பு, பச்சை மற்றும் நீல மின்னணு ஒளிக் கதிர்கள் ஒன்று சேர்தல்.

**conversational** : உரையாடல் முறை : பயனாளருடன் உரை யாடல் நடத்த அனுமதிக்கும் நிரல் தொடர் அல்லது அமைப்பு. அவர் கொடுக்கும் உள்ளீட்டை வாங்கிக் கொண்டு அவரது போக்கில் செயல்பட அது இசைந்து கொடுக்கிறது.

**conversational interaction** : உரையாடல் பரிமாற்றம் :

பயனாளருக்கும் எந்திரத்துக்கும் இடையில் உரையாடல் முறையில் நடைபெறும் பரிமாற்றம்.

**conversational language :** உரையாடல் முறை மொழி : *கணினிக்கும் அதனைப் பயன்படுத்துபவருக்கும் இடையில் தகவல் தொடர்பு ஏற்பட வசதியாக ஏறக்குறைய ஆங்கிலச் சொற்களைப் பயன்படுத்தும் நிரல் தொடர் மொழி. பேசிக் ஒரு உரையாடல் மொழி.*

**conventional memory :** அடிப்படை நினைவகம் ; மரபு நினைவகம் : *பீ.சி.யின் நினைவகத்தில் முதல் மெகா பைட்டில் முதல் 640- கேயை மட்டும் இது குறிப்பிடலாம். மீதி மேல்நிலை நினைவகப் பகுதியென்று அழைக்கப்படும்.*

**conversational mode :** உரையாடல் பாங்கு : *கணினிக்கும் அதனைப் பயன்படுத்துபவருக்கும் இடையில் உரையாடல் நடைபெற உதவும் இயக்க முறை. இதில் அதற்குக் கிடைக்கும் உள்ளீட்டினைப் பெற்று அதற்கேற்ப கேள்விகள் அல்லது குறிப்புகளை கணினி திருப்பி அளிக்கும்.*

**conversational operation :** உரையாடல் முறை செயல்பாடு : *ஒரு நேரத்தில் ஒரு எழுத்து என்ற முறையில் தரவு பயணம் செய்யும் கணினியில் ஒளிக் காட்சித்திரை முகப்புக்கும், கணினிக்கும் இடையில் தரவு அனுப்பப்படுதல்.*

**conventional programming :** மரபு நிரலாக்கம் : *ஒரு நடைமுறை மொழியைப் பயன்படுத்தி நிரல் உருவாக்குவது.*

**conversational remote job entry :** உரையாடல் முறை தொலை வேலை நுழைத்தல்.

**conversion :** மாற்றல் ; மொழி மாற்றம் : *1. ஒரு கணினி மொழியிலிருந்து வேறு ஒன்றுக்கு அல்லது துளையிட்ட அட்டைகளிலிருந்து காந்தத் தட்டுக்கு என்பது போன்று ஒரு வகையிலிருந்து வேறு ஒரு வகைக்கு தகவலை மாற்றும் செயல் முறை. 2. ஒருவகையான செயலாக்க முறையிலிருந்து வேறொன்றுக்கு அல்லது ஒரு கருவியிலிருந்து வேறொன்றுக்கு மாற்றுதல். 3. ஒரு வகையான எண்முறையிலிருந்து வேறொன்றுக்கு மாற்றல்.*

**conversion, data :** தரவு மாற்றம்.

**conversion table :** மாற்றல் பட்டியல் : *இருவகையான எண் முறைகளில் உள்ள எண்களை ஒப்பிடும் பட்டியல்.*

| பதின்மம் | இருமை | பதினாறின் எண்முறை | எண்ம எண்முறை |
|---|---|---|---|
| 0 | 00000 | 0 | 0 |
| 1 | 00001 | 1 | 1 |
| 2 | 00010 | 2 | 2 |
| 3 | 00011 | 3 | 3 |
| 4 | 00100 | 4 | 4 |
| 5 | 00101 | 5 | 5 |
| 6 | 00110 | 6 | 6 |
| 7 | 00111 | 7 | 7 |
| 8 | 01000 | 8 | 10 |
| 9 | 01001 | 9 | 11 |
| 10 | 01010 | A | 12 |
| 11 | 01011 | B | 13 |
| 12 | 01100 | C | 14 |
| 13 | 01101 | D | 15 |
| 14 | 01110 | E | 16 |
| 15 | 01111 | F | 17 |
| 16 | 10000 | 16 | 20 |

**convert : மாற்று :** *ஒரு எண் அடிப்படையிலிருந்து வேறொரு எண் அடிப்படைக்குத் தகவலை மாற்றுதல். 2. நெகிழ் வட்டிலிருந்து நிலைவட்டுக்கு என்பது போன்று ஒரு வகையான இருப்பிடத்திலிருந்து வேறொன்றுக்கு மாற்றுதல்.*

**convert data base : தரவுத் தளத்தை மாற்று.**

**converter : மாற்றி :** *1. ஒரு வகையான ஊடகத்திலிருந்து வேறு வகையான ஊடகத்திற்குத் தரவுவை மாற்றும் சாதனம். துளையிட்ட அட்டைகளிலிருந்து தரவுவைப்பெற்று காந்த வட்டுகளில் பதிவு செய்வதைப் போன்றது. 2. தொடர் முறையிலிருந்து இலக்க முறைக்கு என்பது போல் ஒரு வடிவத்தில் உள்ள தரவுவை வேறு ஒரு வடிவத்திற்கு மாற்றுதல்.*

**converter, analog/digital : தொடர் முறை - இலக்கமுறை மாற்றி.**

**converter, digital/analog : இலக்க முறை - தொடர்முறை மாற்றி.**

**convertion, binary to decimal : இரும, பதின்ம மாற்றுகை.**

**convex : புற வளைவு; குவி.**

**cookbook : பயனாளர் கையேடு :** *ஒரு நிரலாக்கத் தொடரை எவ்வாறு நிறுவி பயன்படுத்துவது என்பதை படிப்படியாக விவரிக்கும் ஆவணம்.*

**cookie : குக்கி :** *1. வாடிக்கையாளராகிய கிளையன் ( client) கணினியின் கோரிக்கைக்கு மறுமொழியாக வழங்கன் (server) கணினி அனுப்புகின்ற தரவு தொகுதி. 2. வைய விரிவலையில் ஒரு வலை வழங்கன் கணினி, கிளையன் கணினியில் பதிவு செய்கின்ற தரவு தொகுதி. பயனாளர் மீண்டும் அதே தளத்தைப் பார்வையிடும் போது, இணைய உலாவியானது குக்கியின் ஒரு நகலை வலை*

வழங்கனுக்கு அனுப்பி வைக்கும். பயனாளர்களை அடையாளம் காணவும், பயனாளருக்கு ஏற்ற வகையில் வலைப் பக்கத்தை வடிவமைத்து அனுப்புமாறு வழங்கனுக்கு அறிவுறுத்தவும் மற்றும் பிற நிர்வாகப் பணிகளுக்கும் குக்கிகள் பயன்படுகின்றன. 3. தொடக்க காலத்தில் யூனிக்ஸ் இயக்க முறைமையில்தான் இத்தகைய குக்கி நிரல்கள் இயக்கப்பட்டன. அதிர்ஷ்ட குக்கி என அழைக்கப்பட்டது. ஒவ்வொரு முறை இந்த நிரலை இயக்கும் போதும் வெவ்வேறு அதிர்ஷ்ட செய்திகள் வெளியிடப்படும். பொதுவாக, ஒரு பயனாளர் யூனிக்ஸ் முறைமைக்குள் தன்னை இணைத்துக்கொள்ளும் போது (logon) இந்த குக்கி நிரல் இயக்கப்படும். ஒவ்வொரு முறையும் வெவ்வேறு செய்தி பயனாளருக்குக் கிடைக்கும்.

**cookie filtering tool** : குக்கி வடிகட்டிக் கருவி : ஒரு வலைத் தளத்தை அணுகும்போது பயனாளரைப் பற்றிய தரவுகளை, வலை உலாவி மூலம் அனுப்பி விடாமல் குக்கியைத் தடை செய்யும் ஒரு பயன் கூறு (utility).

**coolants** : குளிர்விப்பான்கள்.

**cooling fan** : குளிரூட்டும் விசிறி : மின்சுற்று அட்டைகளும், ஐ.சி-க்களும் குளிர்ச்சியாக இருக்குமாறு வைத்துக் கொள்ளும் ஒரு சிறிய காற்றாடி.

**co-operating sequential process** : கூட்டுறவு வரிசைமுறைச் செயலாக்கம்.

**co-operative multitasking** : கூட்டுறவு பல்பணி முறை : பல்பணிச் செயலாக்கத்தில் ஒரு வகை. ஒரு முன்புலப் பணியின் செயல்படா இடை நேரத்தில், ஒன்று அல்லது மேற்பட்ட பின்புலப் பணிகளுக்கான செயலாக்க நேரத்தை முன்புலப் பணி அனுமதிக்கும்போது மட்டுமே ஒதுக்க முடியும். மெக்கின்டோஷ் இயக்க முறைமையில் இதுதான் முதன்மையான பல்பணி முறையாகும்.

**co-operative processing** : கூட்டுறவு செயலாக்கம் : பெருமுக கணினி, சிறு கணினி மற்றும் பீ.சி. போன்ற இரண்டு அல்லது மேற்பட்ட கணினிகள் ஒரு வேலையைப் பங்கிட்டுக் கொள்ளல். அதிகத் திறனுக்காக வேலையைப் பகுத்துக் கொள்ளல்.

**co-operative work** : கூடிப் பணியாற்றல்; கூடிச் செயல் படல்.

**co-ordinate** : ஆயத்தொலை; சந்திப்புள்ளி : கார்ட்டீசிய ஒருங்கிணைப்பு அமைவின் ஒரு இடத்தைக் குறிப்பிடும் தொடர்

புள்ள தரவு மதிப்புகளின் தொகுதி. மின்னணு தரவு தாளில், இரண்டு எண்கள் மற்றும் எழுத்துகள் சங்கமித்து ஒரு கலந்தின் நெடுக்கை அல்லது கிடக்கையை அடை யாளம் காணல்.

**coordinate dimensioning** : ஆயத் தொலை பரிணாமம் : பரிணா மம் அமைத்தல். இதில் புள்ளிகள் ஒரு குறிப்பிட்ட பரிணாமத் தினை வரையறுக்கும். ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து போவது ஒரு வரையறுக்கப்பட்ட அச்சை ஒட்டி அளிக்கப்படும்.

**coordinate indexing** : ஒருங் கிணைந்த பட்டியலிடல் : 1. தனி ஆவணங்களை விரித் துரைத்தல் மூலம் பட்டியலிடும் முறை. சமமான நிலையில் உள்ள விரித்துரைப்புகளால் இது செய்யப்படுவதால் நூலகத்தில் ஒன்று அல்லது மேற்பட்ட வரைவு மூலம் தேடமுடியும். 2. தனிப் பட்ட சொற்களை ஒன்று சேர்க்கும் முறையில் சொற்களுக்குக்கிடை யேயான தொடர்பைக் காட்டும் பட்டியலிடல் தொழில் நுட்பம்.

**coordinate paper** : ஒருங் கிணைந்த தாள் : இலக்கமுறை வரைவு பொறிகளால் உரு வாக்கப்படும் படங்கள், வரை படங்களுக்குப் பயன்படுத்தப் படும் வரைபட முறை காகிதம்.

**co-processor** : இணைச் செயலி : மையச் செயலியை ஓய்வாக வைத்திருக்க, நேரம் எடுக்கும் பணிகளைச் செய்யும் துணைச் செயலி. அதன் விளைவாக ஒட்டு மொத்த அமைப்பின் செயல்வேகம் அதிகரிக்கிறது. ஒரு மைய செயலி வேறொரு மையச் செயலியுடன் சேர்ந்து செயலாற்றி மொத்த அமைப் பின் கணிப்பு சக்தியைக் கூட்ட முடியும். அறிவார்ந்த முனைய மும் இணைச் செயலகமாகச் செயலாற்றுகிறது.

**copy** : படி; பிரதி; நகல்; படி எடு; பிரதி எடு; நகலெடு : மூல நகல் மாறாமல் வேறொரு இடத்தில் தரவுவை மறு உற்பத்தி செய்வது.

**copy, backup** : பாதுகாப்பு நகல்.

**copy buster** : நகல் கிளர்வி : நகல் பாதுகாப்புத் திட்டங்களை ஒதுக்கிச் செல்லும் நிரல். சாதாரண, பாதுகாப்பற்ற பிரதி கள் எடுக்க அனுமதிப்பது.

**copy command** : நகல் ஆணை.

**copy disk** : காப்பி டிஸ்க் : ஒரு நெகிழ் வட்டிலுள்ள தரவுகளை இன்னொரு நெகிழ் வட்டில் பதிவதற்கான எம்எஸ் டாஸ் கட்டளை.

**copy fit** : நகல் பொருத்தி : கிடைத்துள்ள இடத்தில் செய்தி யைப் பொருத்துதல்.

**copy, hard** : வன்நகல், தாள் நகல்.

**copy holder** : நகல் பிடிப்பொறி : விசைப்பலகையில் தட்டச்சு செய்யும்போது படிக்க வசதியாக காகிதத்தினை பிடித்துக் கொண்டிருக்கும் சாதனம். முதுகு, தோள், கழுத்து, கண் தொல்லையைக் குறைக்க உதவுவதே இதன் நோக்கம்.

**copying machine** : நகலெடுக்கும் எந்திரம் : எழுதப்பட்ட/அச்சிடப்பட்ட பொருளின் நகலைத்தரும் மின்னணு எந்திரம். நிலைமின் ஒளிப்படவியலின் பிரிவான xerography தொழில்நுட்பத்தைப் பயன் படுத்துவது. புலனாகின்ற அகச் சிவப்பு, (அல்ட்ரா வயலட்) கதிர்கள், நிலை மின்சக்தி மாறும் தன்மையைக் கொண்டு ஒளிகடத்தும் ஊடகத்தில் நகல் எடுக்கப்படுகிறது.

**copy programme** : நகல் நிரல் : ஒன்று அல்லது மேற்பட்ட கோப்புகளை வேறொரு வட்டுக்கு நகலெடுக்க வடிவமைக்கப் பட்ட நிரல். ஒரு கணினி மென் பொருளை நகல் பாதுகாப்பு முறையை நகலெடுக்கும் நிரல்.

**copy protection** : நகல் பாதுகாப்பு : தங்களது மென்பொருள்களை யாரும் நகல் எடுத்துவிடக்கூடாது என்பதற்காக மென்பொருள் உருவாக்குபவர்கள் பயன்படுத்தும் முறைகள். மென்பொருளை சட்டத்திற்குப் புறம்பாக நகல் எடுப்பதிலிருந்து எதிராகப் பாதுகாப்பதற்காக, பெரும்பாலான உற்பத்தியாளர்கள் நகல் பாதுகாப்பு செயல் கூறுகளை தங்களது மென் பொருள்களில் சேர்த்திருப்பார்கள். நகல் பாதுகாப்பு முறைகள் உயர்நுட்பம் வாய்ந்தவை. ஆனால் பல நகல் பாதுகாப்பு நுட்பங்களை முறியடித்து, அத்துமீறி நகலெடுக்கும் அதி புத்திசாலி நிரலர்களும் உள்ளனர்.

**copyright** : பதிப்புரிமை : ஒருவருடைய படைப்புக்கு சட்ட முறையான பாதுகாப்பு தருவது. கணினி மென்பொருளுக்கும் இது பொருந்தும்.

**copyrighted software** : பதிப் புரிமைபெற்ற மென்பொருள் : பணம் கொடுத்து வாங்க வேண் டிய மென்பொருள். மென் பொருளை உருவாக்குகின்றவரின் அனுமதியின்றி நகல் எடுக்கக்கூடாது.

**copy, soft** : மென்நகல், வட்டு நகல்.

**CORBA** : கோர்பா : பொதுப் பொருள் கோரிக்கை தரகர் கட்டுமானம் என்று பொருள்படும்

Common Object Request Broker Architecture என்ற தொடரின் தலைப்பெழுத்துச் சுருக்கம். 1992ஆம் ஆண்டில் பொருள் மேலாண்மைக் குழு உருவாக்கித் தந்த வரன்முறைகள் ஆகும். வெவ்வேறு பணித்தளங்களில் செயல்படும் இரு நிரல்களில் உருவாக்கப்பட்டுள்ள வெவ்வேறு பொருள் கூறுகள் தமக்குள்ளே தரவு பரிமாற்றம் செய்து கொள்ளும். ஒரு நிரல், ஒரு பொருள் கோரிக்கை முகவர் (ORB) மூலமாக ஒரு பொருள்கூறின் சேவைக்கான கோரிக்கையை முன் வைக்கும். அந்தப் பொருள்களை உள்ளடக்கிய நிரலின் கட்டமைப்பு எப்படிப் பட்டது என்பதை அறிந்திருக்க வேண்டிய தேவை இல்லை. கோர்பா, ஒரு பொருள்நோக்கு பணிச் சூழலுக்கென வடிவமைக்கப்பட்ட தொழில் நுட்பம் ஆகும்.

cordless telephone : கம்பியில்லாத் தொலைபேசி.

cordless video transmitter : கம்பியில்லாத ஒளிபரப்பி : 60 மீட்டர் குறுக்களவுக்குள் எத்தனை தொலைக்காட்சிப் பெட்டிகள் இருந்தாலும் அத்தனைக்கும் ஒலிஒளி சமிக்கைகளை அளிக்கும் மின்னணுக் கருவி.

core : உள்ளகம் : காந்தப் படுத்தப்படக்கூடிய ஃபெரைட் மையத்தைக் கொண்ட தலைமை நினைவகம்.

core, bistable magnetic : இரு நிலை காந்த உள்ளகம்.

core ferrite : இரும்பு உள்ளகம்.

core magnetic : காந்த உள்ளகம்.

core memory : உள்ளக நினைவகம்; உள்மைய நினைவு : ஃபெரைட் வளையங்களாலான டாரைடுகளால் உருவாக்கப் படும் காந்த நினைவகம். இதை ஒரு திசையில் காந்தப்படுத் தினால் இரும எண் 1-ம் வேறு திசையில் காந்தப்படுத்தினால் 0-வும் வரும். 1940இல் ஜே. பிர் பாரஸ்டர் மற்றும் டாக்டர் அன்வாஸ் ஆகியோர் இதை உரு வாக்கினார்கள். மின்சாரம் இல் லாமலேயே இது இயங்கும் என்பதால் இராணுவம், விண் கலங்கள் ஆகியவற்றில் இன்னும் இது பயன்படுத்தப் படுகிறது.

core programme : உள்ளக நிரல் : குறிப்பிலா அணுகு நினைவகத் தில் (Random Access Memory) தங்கியிருக்கும் ஒரு நிரல் அல்லது நிரலின் ஒரு பகுதி.

coresident : உடன்தங்கல் : இரண்டு அல்லது மேற்பட்ட நிரல்கள் ஒரே நேரத்தில் நினை

வகத்தில் ஏற்றப்பட்டு இருக்கும் நிலையைக் குறிக்கிறது.

**core storage** : உள்ளகச் சேமிப்பு : காந்த மையங்களைப் பயன் படுத்தும் சேமிப்புச் சாதனம். ஒரு வரிசையாக கம்பிகளின் மூலம் இது தொகுக்கப்படுகிறது.

**core store.** : உள்ளக சேமிப்பு.

**core system** : உள்ளக முறைமை : கணினி வரை கலைக்காக முதலில் உருவாக்கிய தர நிர்ண யம். சிகார்ப் நிறுவனம் உரு வாக்கியது. கணினிகளுக் கிடையே நிரல்களை மாற்றி அனுப்ப முடிவதும், பார்க்கும் வரைகலையும் மாதிரியாக்கும் வரைகலையும் தனிமைப்படுத் தப்படுவதும் இதன் நோக்கங் கள். அன்சி அங்கீகரித்த ஜீகோஸ் தர நிர்ணயம் இதன் அனைத்து தன்மைகளையும் ஏற்றுள்ளது.

**corner cut** : மூலை வெட்டு : துளையிட்ட அட்டையின் மூலை வெட்டு. தொடர்புடைய அட்டைகளின் குழுக்களை கண்டுபிடிக்க உதவுகிறது.

**corona wire** : மின்னுமிழ்வுக் கம்பி : லேசர் அச்சுப்பொறிகளில் பயன்படுத்தப்படும் ஓர் இணைப்புக் கம்பி. காற்றை அயனியாக்க இதன் வழியாக உயர் மின்னழுத்தம் பாய்ச்சப் படுகிறது. அதன்மூலம் ஒரே சீரான நிலைமின்னூட்டம் ஓர் ஒளியுணர் ஊடகத்துக்கு மாற்றப் பட்டு லேசர் கதிர் உருவாக்கப் படுகிறது.

**coroutine** : இணை நிரல்கூறு : உள்ளீட்டுத் தொகுதி ஒன்றை வெளியீட்டு தொகுதியாக மாற்ற உதவும் ஆணைகள்.

**corporate model** : நிறுவன மாதிரியம் : ஒரு நிறுவனத்தின் கணக்கீட்டு நடைமுறைகள் மற்றும் நிதிக் கொள்கை வழி காட்டிகளை பாவிப்பு நிகழ் வாகக் கணித முறையில் குறிப் பிடுவது. சில குறிப்பிட்ட அனு மானங்களின் கீழ் ஏற்படும் நிதி விவகார முடிவுகளை மதிப்பீடு செய்து மாற்றுத் திட்டங்களை உருவாக்குதல். நீண்டகால மதிப்பீடுகளை இத்தகைய மாதிரியங்களைப் பயன்படுத்தி மதிப்பிடுவார்கள். சமநிலை செயலாக்கிகளைப் பயன் படுத்துவதே சிறந்தது என் றாலும் விரிதாள்களும் அடிக்கடி பயன்படுத்தப்படுகின்றன.

**corporates** : நிறுமங்கள்.

**correction** : திருத்தம்.

**corrective** : பழுது நீக்கல்.

**corrective maintenance** : சரி செய்யும் பராமரிப்பு : தவறுகள் ஏற்பட்ட பிறகு அவற்றைக் கண்டுபிடித்து சரி செய்தல்.

தற்காப்பு (preventive maintenance) பராமரிப்புக்கு மாறானது.

**correspondence quality** : கடிதப் போக்குவரத்துத் தரம் : டெய்சி சக்கரம் மற்றும் சில புள்ளியணி அச்சுப்பொறிகளால் கிடைக்கும் உயர்தர அச்சு. புள்ளியணி அச்சுப் பொறியில் எழுத்துகளை உருவாக்கப் பயன்படும் புள்ளிகளின் எண்ணிக்கை அதிகரிப்பதால் அச்சின் தரம் கூடுகிறது.

**correspondence quality printing** : கடிதத் தொடர்பு தர அச்சு : புள்ளியணி அச்சுப் பொறிகளின் அச்சுத் தரம். முதலில் விட்ட இடைவெளியை நிரப்ப இரண்டாவது முறை அச்சடிப்பது, NLQ எனப்படும் Near letter Quality என்பதும் இதுவும் ஒன்றே.

**corrupt** : பழுதடைதல்.

**corrupt data file** : பழுதடைந்த தரவுக் கோப்பு.

**corrupted file** : பாழ்பட்ட கோப்பு : துண்மிகளை மீண்டும் வரிசைப்படுத்தும் வகையில் மாற்றமடைந்த தரவு அல்லது நிரல் கோப்பு. படிக்கமுடியாத வகையில் வீணாகிப்போவது.

**corruption** : பாழாதல் : வன்பொருள் அல்லது மென்பொருள் கோளாறின் காரணமாக தரவு அல்லது நிரல் பாழ்படுதல்.

**cosmos** : காஸ்மோஸ் : நோர்ஸ்க் டேட்டா நார்வே உருவாக்கிய ஒரு தரவுத் தொடர்பு தொகுப்பு. குறும்பரப்பு பிணையம் அல்லது விரிபரப்புப் பிணையம் மூலம் விநியோகிக்கப்பட்ட தரவு செயலாக்கங்களுக்கான மூலாதாரங்களை, பங்கிட்டுக் கொள்வதில் சிறந்த தீர்வளிப்பது.

**cost analysis** : செலவு பகுப்பாய்வு : ஒரு அமைப்பின் ஒட்டு மொத்தச் செலவை முடிவு செய்து, ஒரு புதிய வடிவமைப்புக்கு எதிர்பார்க்கப்படும் செலவு காரணிகளை ஒப்பிடும் நுட்பம்.

**cost/benefit analysis** : செலவு/பலன் பகுப்பாய்வு : ஒரு புதிய தரவு அமைப்பின் செலவுகள் மற்றும் ஆதாயங்களைக் கண்டு உரைக்கும் ஒரு ஆய்வு. வளர்ச்சிக்குத் தேவையான ஆட்கள் மற்றும் எந்திரச் செலவுகள் மட்டுமல்லாது கணினி அமைப்பை இயக்குவதும் செலவுகளில் அடங்கும். பழையதை ஒப்பிடும்போது புதிய கணினி அமைப்பை இயக்குவதில் ஏற்படும் எந்திர மற்றும் மனித மூலாதாரங்களின் சேமிப்பும் இதில் அடங்கும். கூடுதல் வாடிக்கையாளர் சேவை, ஊழியர் உறவுகள் போன்ற அளந்து சொல்ல முடியாத பலன்களும் இதில் அடங்கும்.

**cost effectiveness : செலவின் விளைவு :** இலாபங்கள் மற்றும் அவற்றை அடைய உதவும் மூலாதாரங்களுக்கான உறவின் செயல்முறை அல்லது அமைப்பின் விளைவு. தொடர்பான செலவுகளைவிட பெறப்பட்ட பலன்கள் அதிகரித்தால் செலவு குறைவு என்று கருதப்படும்.

**costing : செலவுக் கணக்கிடல் :** ஒரு திட்டம், வேலை அல்லது பணிக்கு ஆகும் செலவுகளைக் கண்டறியும் முறை.

**cottage key people : இல்லப் பணியாளர் :** தங்கள் வீடுகளில் அமர்ந்து பணியாற்றி, தொலைத் தரவுத் தொடர்புகள், வட்டுகள் அல்லது பிற வழிகளில் நிறுவனங்களுடன் தொடர்பு கொள்பவர்கள்.

**coulomb : கூலம்(ப்) :** மின் சக்தி ஏற்கும் அடிப்படை எஸ்.ஐ அலகு $6.25 \times 10^{18}$ எலெக்ட்ரான்கள் சேர்ந்து 1 கூலம்(ப்) மின்சக்தி ஏற்கிறது.

**count : எண்ணிக்கை :** ஒரு நிகழ்வு எத்தனை தடவை நடைபெறுகிறது என்பதில் அடுத்தடுத்த கூடுதல் அல்லது குறைவதின் ஒட்டுமொத்த எண்ணிக்கை.

**counter : எண்ணி :** ஒரு நிகழ்வு எத்தனை முறை நடைபெறுகிறது என்பதைக் குறித்து வைக்கும் பதிவகம் அல்லது ஒரு நிரலில் அத்தகைய எண்ணிக்கையை இருத்தி வைக்கும் ஒரு மாறி (variable).

**counter, binary : இரும எண்ணி.**

**counter clerk : கணக்கெழுத்தர்; கணக்கிடு எழுத்தர்.**

**counter clockwise : இடச்சுற்று :** வலது புறத்திலிருந்து இடது புறமாக நகர்த்தல்.

**counter, control : கட்டுப்பாட்டு எண்ணி.**

**counter, ring : வளைய எண்ணி.**

**counter, step : படி எண்ணி.**

**counting devices : எண்ணிடும் சாதனம்.**

**counting loop : எண்ணிடும் மடக்கி :** ஒரே செயலை குறிப்பிட்ட தடவைகள் திரும்பத் திரும்ப செய்யவேண்டும் என்பதைக் குறிப்பிடும் கட்டளை அமைப்பு.

**count, record : ஏட்டு எண்ணிக்கை.**

**country : கன்ட்ரி :** எழுத்துத் தொகுதியை அமைப்பதற்காக கணினியை இயக்கும் நேரத்தில் செயல்படுத்தப்படும் டாஸ் கட்டளை.

**country code : நாட்டுக் குறிமுறை.**

**country. sys** : கன்ட்ரி. சிஸ் : கன்ட்ரி கட்டளை இயக்கப் படும்போது நினைவகத்தில் ஏற்றப்படும் டாஸ் முறைமைக் கோப்பு.

**coupler, acoustic** : கேட்பொலிப் பிணைப்பி.

**coupling** : இடையிணைப்பு : அமைப்புகளுக்கிடையிலோ அல்லது அமைப்பின் உறுப்பு களுக்கிடையிலோ ஏற்படும் செயல்பரிமாற்றங்கள்.

**courier** : கூரியர் : தட்டச்சி லிருந்து வருகின்ற ஒரே இடை வெளி உள்ள எழுத்துரு (font).

**course details** : பாடத்திட்ட விவரம்; பாடத் திட்டம்.

**courseware** : கல்விப்பொருள் : கல்விப் பயன்பாடுகளுக்கென்று எழுதப்பட்ட கணினி நிரல் களுக்குத் தரப்பட்ட பெயர். வேதியியல், வரலாறு, கணிதம், ஸ்பானிஷ் சொல்லித் தருதல் போன்றவை இதில் அடங்கும்.

**covariance** : சார்பு விலக்கல்; சார்பு மாறுகை : இரண்டு தற் செயல் மாறிகளின் ஒன்றை யொன்று விலகிச் செல்லும் அளவுகள்.

**cpi** : சிபீஐ : ஓர் அங்குலத்தில் எத்தனை எழுத்துக்கள் எனப் பொருள்படும் characters per inch என்பதன் குறும்பெயர்.

**CPM** : சிபீஎம் : உயிர்நாடிப் பாதை முறை எனப் பொருள் படும் Critical Path Method என்பதன் குறும்பெயர்.

**CP/M** : சிபீ/எம் : நுண் கணினிக் கான கட்டுப்பாட்டு நிரல் எனப் பொருள்படும் Control Programme for Micro computer என்பதன் குறும்பெயர். நுண் கணினிகளுக்குப் பரவலாக பயன்படுத்தப்பட்ட முதல் இயக்க முறைமை (operating system). ஒரு வட்டின் மீதுள்ள நிரல்களின் தொகுப்பாகிய சிபீ/ எம், கணினி அமைப்புடன் இணைந்துள்ள சாதனங்களுக்குத் தரவு மாற்றவும், நிரல்களைச் செயல்படுத்தவும், கோப்புகளை வசதியாக கையாளவும் ஆணை களை அளிக்கிறது.

**CP/M compatible** : சிபீ/எம் ஏற்புடைய : சிபீ/எம் இயக்க முறைமையுடன் சேர்ந்து செயல் பட ஏற்றதாக வடிவமைக்கப் பட்ட மென்பொருளைக் குறிப் பிடுகிறது

**CPS** : சிபீஎஸ் : உரையாடல் நிரலாக்க முறைமை எனப் பொருள்படும் Conversation Programming System என்பதன் குறும்பெயர். இது ஒரு கணினி

அமைப்பு. இதில் உள்ளீடு, வெளியீடுகளை தொலைவிலுள்ள ஒரு முனையம் கையாள்கிறது. நேரப்பங்கீட்டினைக் கடைப் பிடிப்பதால், பயனாளர் உடனடி யாகப் பதில் பெறுவது போலவே தோற்றமளிக்கும். நிரலாக்க மொழியின் துணைத் தொகுதி எனலாம். ஜாவாவின் ஒரு பகுதியாக உருவாக்கப்பட்டது.

**CPSR : சிபீஎஸ்ஆர் :** சமூகப் பொறுப்புணர்வுமிக்க கணினி இயலாளர் எனப் பொருள்படும் **Computer Professionals for Social Responsability** என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். கணினித் தொழில் நுட்பம் இராணுவத் தேவை களுக்குப் பயன்படுத்தப்படு வதை எதிர்த்து உருவாக்கப் பட்ட ஒரு பொதுநல அமைப்பு. மனித சமூகத்தின் வாழ்வியல் உரிமைகள் மற்றும் தொழி லாளர்களின்மீது கணினிகளின் தாக்கம் போன்ற பிரச்சினை களில் இவ்வமைப்பு நாட்டம் செலுத்துகிறது.

**CPU : சிபீயு :** மைய செயலகம் எனப் பொருள்படும் Central Processing Unit என்பதன் குறும் பெயர்.

**CPU cache : சிபீயூ இடை மாற்ற கம் :** மையச் செயலகத்தையும் முதன்மை நினைவகத்தையும் இணைக்கும் விரைவு நினை வகத்தின் ஒரு பகுதி. சிபீயூ வுக்குத் தேவையான அதாவது சிபீயூ அடுத்துக் கையாளவிருக் கும் தரவு மற்றும் நிறை வேற்றவிருக்கும் ஆணைகளை யும் இந்த நினைவகப் பகுதி தற்காலிகமாகக் கொண்டிருக் கும். முதன்மை நினைவகத் துடன் ஒப்பிடுகையில் சிபீயூ இடைமாற்று நினைவகம் அதிக வேகமுடையது. இதிலுள்ள தரவு, தொகுதி தொகுதியாகப் பரிமாறப்படுவதால் செயல் பாட்டு வேகம் அதிகரிக்கிறது. சிபீயூவுக்கு அடுத்துத் தேவைப் படும் தரவு எதுவென்பதை சில படிநிலைத் தருக்க முறையில் இயக்க முறைமை தீர் மானிக்கிறது. இது, இடை மாற்று நினைவகம் (cache memory) என்றும் நினைவக இடைமாற்று (memory cache) என்றும் அழைக்கப்படும்.

**CPU cycle : சிபீயூ சுழற்சி :** 1. மையச் செயலகம் உணர்ந்து கொள்ளுமளவுக்கான மிகச்சிறிய நேர அலகு - ஒரு வினாடியில் சில பத்துக் கோடியில் ஒரு பகுதியைக் குறிக்கும். 2. ஒரு பதிவகத்தின் (register) உள்ளடக் கத்தைக் கொணர்தல் போன்ற மிக எளிய ஆணைகளை நிறை வேற்ற அல்லது செயல்

பாடில்லா (Non-Operation-No) ஆணையை நிறைவேற்ற சிபீயூ எடுத்துக் கொள்ளும் நேரம்.

**CPU fan : சிபீயூ விசிறி :** மையச் செயலகத்தின்மீது அல்லது சிபீயூவின் வெப்பக்கவர்வி மீது பொருத்தப்படும் ஒரு மின்சார விசிறி. சிபீயூவைச் சுற்றிக் காற்றைச் சுழலச் செய்து வெப்பத்தைத் தணிக்க உதவுகிறது.

**CPU speed : சிபீயூ வேகம் :** ஒரு குறிப்பிட்ட மையச் செயலகத்தின் தரவு செயலாக்கத் திறனின் ஒப்பீட்டு அளவுகோல். பெரும்பாலும் மெகா ஹெர்ட்ஸில் அளக்கப்படும்.

**CPU time : சிபீயு நேரம் :** நிரலின் ஆணைகளைச் செயல்படுத்துவதற்காக மையச் செயலகம் எடுத்துக் கொள்ளும் நேரம்.

**.cr : .சிஆர் :** ஓர் இணைய தளம் கோஸ்டா ரீக்கா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**cracker : தகர்ப்பர்; உடைப்பவர் :** ஒரு கணினி அமைப்பின் பாதுகாப்பு ஏற்பாடுகளை உடைத்து அத்துமீறி நுழையும் நபர். ஒரு கணினி அமைப்பிலிருந்து சட்டத்துக்குப் புறம்பாக தகவலைப் பெறுதல் அல்லது கணினி வளங்களைப் பெறுதல் - இதுவே சில தகர்ப்பர்களின் நோக்கமாக இருக்கின்றது. ஆனால், அமைப்பின் பாதுகாப்பை வெற்றிகரமாக உடைத்து உள்நுழைவது மட்டுமே பெரும்பாலான தகர்ப்பர்களின் மைய நோக்கமாய் உள்ளது.

**crash : வீழ்ச்சி :** மென்பொருள் தவறு அல்லது வன்பொருள் செயல் கோளாறினால் கணினி அமைப்பு இயங்காமல் நின்று போவது.

**crash, conversion : முறிவு நிலை மாற்றம்.**

**crash recovery : முறிவு மீட்சி :** ஒரு கணினியில் நிலைவட்டு பழுதடைவது போன்ற ஒரு பேரழிவுப் பழுதுக்குப்பின் மீண்டும் செயல்பாட்டைத் தொடங்க அக்கணினிக்கு இருக்கும் திறனை இவ்வாறு குறிப்பிடலாம். பெரும்பாலும், தகவலுக்கு எவ்வித இழப்பும் இல்லாமல் மீட்கப்பட முடியும். சிலவேளைகளில், முழுவதுமாக இல்லாவிட்டாலும் சிறிதளவு தரவு இழக்கப்படுவதுண்டு.

**cray : கிரே :** கிரே ரிசர்ச் நிறுவனம் உருவாக்கிய மீத்திறன் (சூப்பர்) கணினிகளின் வரிசை. கிரே-1 ஒரு நொடியில் 80 கோடி நிரல்களைச் செயல்படுத்தும்.

பத்து இலட்சம் எழுத்துகளை சேமித்து வைக்கும். கிரே-2 ஒரு நொடியில் நூறு கோடி செயல்பாடுகளை நிகழ்த்தவல்லது.

**Cray Seymour** : கிரே செய்மோர் : 1980 முதல் மீத்திறன் கணினியான கிரே 1-ஐயும் பின்னர் ஐந்து ஆண்டுகள் கழித்து கிரே-2 மீத்திறன் கணினியையும் வடிவமைத்து அறிமுகப்படுத்தியவர்.

**CRC** : சிஆர்சி : சுழல்மிகைச் சரிபார்ப்பு எனப் பொருள்படும் Cyclic Redundancy Check என்பதன் குறும்பெயர். தரவுகளை அனுப்புவதில் ஏற்படும் பிழைகளைச் சோதிக்க இந்த முறை கடைபிடிக்கப்படுகிறது.

**create** : உருவாக்கு : 1. இருக்கின்ற கோப்பை மாற்றுவதற்குப் பதிலாக புதிய கோப்பை வட்டின்மீது உருவாக்குதல். 2. தரவுத் தளத் தொகுப்புகளில் ஓர் அட்டவணையை வடிவமைக்கும் பொருட்டு அதில் இடம் பெறும் புலங்களின் பெயர், நீளம், தரவினம் போன்றவற்றை வரையறுக்கும் கட்டளை.

**create image** : படிமம் உருவாக்கு.

**create replica** : படி உருவாக்கு.

**create root pane** : மூளப் பாளம் உருவாக்கு.

**create shortcut** : குறுவழி உருவாக்கு.

**creating** : உருவாக்குதல்.

**creation** : உருவாக்கல்; தோற்றுவிப்பு.

**creative designer** : படைப்புத் திறன் வடிவமைப்பாளர் : கணினிப் பதிப்புத் துறையில் (டிடீபி) பக்கங்களை வெளியமைப்பு செய்து வடிவமைக்கும் நபர்.

**creativity** : படைப்பாக்கம்; படைப்புத் திறன்.

**creator** : கிரியேட்டர் : ஆப்பிள் மெக்கின்டோஷில் உள்ள ஒரு நிரல். ஓர் ஆவணத்தை உருவாக்கும்போது அதற்கும் அதை உருவாக்கிய பயன்பாட்டுத் தொகுப்புக்கும் இடையே ஒரு தொடுப்பினை உருவாக்கும் நிரல் இது. ஒரு ஆவணத்தைத் திறக்கும்போது, இயக்க முறைமையானது அந்த ஆவணம் உருவாக்கப்பட்ட பயன்பாட்டுத் தொகுப்பை அடையாளம் கண்டு திறக்க இத் தொகுப்புப் பயன்படுகிறது.

**credit card** : பற்று அட்டை.

**credit card number** : பற்று அட்டை எண்; பணப் பொறுப்பு அட்டை எண்.

**creeping** : ஊர்தல் : திரையின் குறுக்காக சொற்கள் நகர்ந்து செல்லல்.

**creeping featurism** : படரும் சிறப்புக் கூற்றியல் : ஒரு மென்பொருள் தொகுப்பின் புதிய

பதிப்பில் அதனை உருவாக்கியவர் மேலும் மேலும் புதிய சிறப்புக் கூறுகளை சேர்த்துக் கொண்டே செல்லும் முறை. அந்தொகுப்பு மிகப் பெரிதாகி, பயன்படுத்த முடியாத அளவுக்குப் பெரிதாகி விடாமல் இந்த முன்னேற்றங்களைச் செய்வர். சந்தையில் இதே போன்ற பிற மென்பொருள் தயாரிப்புகளுடன் போட்டியிடப் புதிய பதிப்பினை வெளியிடும்போது, மேலும் புதிய சிறப்புக் கூறுகளைச் சேர்த்து அதன் செய்திறனை மேம்படுத்த முயலும் போது இவ்வாறு நிகழ்கிறது.

**cricket presents : கிரிக்கெட் வழங்கும் :** கம்ப்யூட்டர் அசோசியேட்ஸ் நிறுவனத்தின் மெக்கின்டோஷுக்கான டி.டீ.பீ மென்பொருள். திரைப்பட பதிவுகள், துண்டறிக்கைகள், ஒட்டுமொத்த செலவு போன்ற வெளியீடுகளை உருவாக்குவதற்கான திறனை இது அளிக்கிறது.

**cricket stylist : கிரிக்கெட் ஸ்டைலிஸ்ட் :** ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினிக்கான புகழ்பெற்ற பொருள்நோக்கு படம் வரையும் மென்பொருள். கோடுகள் செவ்வகம் மற்றும் நீள் வட்டம் கருவிகளைப் பயன்படுத்தி கிரிக்கெட் ஸ்டைலிஸ்ட் மூலம் ஒவியங்களை உருவாக்கும்.

**cripped version : சுருக்கப் பதிப்பு :** ஒரு வன்பொருள் அல்லது மென்பொருள் தயாரிப்பின் முன்னோட்டப் பதிப்பு. சுருங்கிய வடிவில் இருக்கும். குறைந்த வசதிகளைக் கொண்டதாக இருக்கும்.

**crippleware : தடுக்கும் பொருள் :** சில கட்டுப்பாடுகளுடன் உருவாக்கப்படும் செயல்விளக்க மென்பொருள். சான்றாக, 50 பதிவேடுகளை மட்டும் நுழைக்க அனுமதிக்கும் தரவுத் தளத் தொகுப்பைக் குறிப்பிடலாம்.

**criteria range : வரன்முறை எல்லை :** பதிவேடுகளைத் தேர்வு செய்வதற்கான நிபந்தனைகள்.

**critical error : உயிர்நாடிப் பிழை; நெருக்கடிப் பிழை :** கணினியின் செயலாக்கத்தையே இடைநிறுத்தம் செய்துவிடும் பிழை. ஒரு மென்பொருள் மூலமாகவோ, பயனாளரின் தலையீட்டினாலோதான் அப்பிழையைச் சரிசெய்ய முடியும். (எ-டு) இல்லாத ஒரு வட்டிலிருந்து படிக்க முயல்தல், அச்சுப்பொறியில் தாள் தீர்ந்துபோகும் நிலை, தரவுச் செய்தி அனுப்புகையில் சரிபார்ப்புத் தொகை (checksum) யில் ஏற்படும் பிழை, இன்ன பிற.

**critical-error handler : ஆபத்தான பிழை கையாளி :** டாஸ் குறுக்

கீட்டு ஆணைகளில் ஒன்று. சாதனத்தில் முக்கிய பிழை ஏற்பட்டால் இதைப் பயன்படுத்துவர். பிழையிலிருந்து மீண்டெழும் நிரல்கூறை இதற்குப் பதிலாக பயன்படுத்தலாம்.

**critical path : முக்கிய பாதை :** ஒரு பெரிய திட்டத்தை ஒழுங்கு படுத்தப்பட்ட தொடர்பகுதிகளாகப் பிரிக்கும் முறை. முந்தைய இயக்கத்தை ஒட்டியே ஒவ்வொரு நிலையும் அமையும். கால அளவுகளைப் பற்றிய மதிப்பீடுகளைச் செய்ய முடியும். கணினிகளுடன் மட்டுமே தொடர்புள்ளது என்று சொல்ல முடியாவிட்டாலும் முக்கிய பாதை ஆய்வுமுறை ஏராளமான கணக்கீடுகளைக் கொண்டது. கணினி மூலமே இதை எளிதல் செய்ய முடியும்.

**critical path method (CPM) : முக்கியப் பாதை முறை (சிபிஎம்) :** திட்டம் நிறைவேற்றப்படுவதற்குத் தேவையான ஒவ்வொரு முக்கிய நிரல்களையும் ஆராய்ந்து முடிவு செய்வதை உள்ளடக்கிய பேரளவு நீண்டகாலத் திட்டங்களைக் கட்டுப்படுத்தும் மேலாண்மை தொழில் நுட்பம்.

**critical region : முக்கிய மண்டலம் :** ஒரே நேரத்தில் (பல் செயலாக்க முறையில்) ஒன்றுக்கு மேற்பட்ட செயல் முறையில் இயக்க முடியாத ஆணைகளின் தொகுப்பு.

**critical success factors : முக்கிய வெற்றிக் காரணிகள் :** அவர்களது முயற்சியின் வெற்றிக்கு முக்கிய காரணமாக நிர்வாகிகள் கருதும் சிறிய எண்ணிக்கையிலான முக்கிய காரணிகள். இவற்றில் வெற்றி பெற்றால் அவர்களது இலக்குகளை அடைவதுடன் நிறுவனத்தின் வெற்றிக்கும் உறுதியளிக்கலாம்.

**CRJE : சிஆர்ஜேஇ :** உரையாடல் முறை சேய்மைப் பணி பதிவு என்று பொருள்படும் Conversational Remote Job Entry என்பதன் குறும்பெயர். உரையாடல் முறை மொழியைப் பயன்படுத்தி தொலை தூரத்தில் உள்ள முனையத்தில் பணியாற்றும் ஒருவர் தன்னுடைய பதிவுகளை இடம் ஒன்றுக்கு அனுப்ப, தொலை தூர மைய நிலையத்தில் அதைச் செயலாக்கம் செய்தல்.

**CROM : க்ரோம் :** Control ROM என்பதன் குறும்பெயர். பெரும்பாலான மையச் செயலகச் சிப்புகளுடன் ஒருங்கிணைந்த பகுதி. மையச் செயலக சிறு ஆணைகளை ஒரு வரிசையாகச்

சேர்ந்த கூட்டு மெருகு ஆணை களாக மாற்றி சேமிக்கும் இடம். கணினியைப் பயன்படுத்து வோருக்கு கூட்டியின் மூலம் கிடைக்கும் பெருக்கு அல்லது பிரி போன்றவை பெரு ஆணை களில் அடங்கும்.

**crop : க்ராப்** : கணினி வரை கலையில் ஒரு படத்தின் சில பகுதிகளை வெட்டுதல்.

**crop marks : க்ராப் அடை யாளங்கள்** : வடிவத்தை விரும் பும் அளவில் வெட்டுவதற்குப் பயன்படுகின்ற, காகிதத்தில் உள்ள அச்சிடப்பட்ட கோடுகள்.

**cropping : வெட்டுதல்.**

**cross assembler : குறுக்குச் சில்லுமொழி மாற்றி** : ஒரு கணினிக்காக நிரல்களை மொழி பெயர்ப்பதற்கு இன்னொரு கணினியில் இயங்கும் சில்லு மொழி மாற்றி.

**cross check : குறுக்குச் சரி பார்ப்பு** : இரண்டு மாறுபட்ட முறைகளின் மூலம் கணிப் பினை சோதனை செய்தல்.

**cross compiler : குறுக்கு மொழிமாற்றி** : குறிப்பிட்டு தொகுப்பதற்காக வடிவமைக் கப்பட்டது அல்லாத வேறு ஒரு கணினியில் செயல்படும் மொழிமாற்றி.

**cross compiling/assembling : குறுக்கு மொழிமாற்றல்/சில்லு மொழிமாற்றல்** : சிறு கணினி, பெருமுகக் கணினி அல்லது நேரப் பங்கீட்டு சேவையைப் பயன்படுத்தி நுண் கணினிகளில் பின்னர் பயன்படுத்துவதற்காக நிரல்களை எழுதி பிழைதிருத்தல்.

**cross development : குறுக்கு உருவாக்கம்; மாற்று உருவாக்கம்** : ஒரு குறிப்பிட்ட முறைமை யைப் பயன்படுத்தி முற்றிலும் வேறுவகையான ஒரு முறை மைக்கான நிரல்களை உருவாக் குதல். இலக்கு முறை மையைக் காட்டிலும் உருவாக்கு முறை மையின் உருவாக்கக் கருவிகள் உயர்தரமானதாக இருப்பின் இது இயலும்.

**cross foot : குறுக்குக் கால்; குறுக்குச் சரிபார்ப்பு** : ஒரு கூட்டுத் தொகையின் துல்லியத் தன்மையை சரிபார்க்கும் முறை. ஒரு கணக்குப் பதிவேட்டில் ஒரு கூட்டுத் தொகையைச் சரிபார்க்க அக்கூட்டலில் இடம் பெறும் நெடுவரிசை மற்றும் கிடை வரிசைகளின் கூட்டுத் தொகையைச் சரி பார்ப்பதைப் போன்றது.

**cross footing check : குறுக்கும் நெடுக்கும் சரிபார்ப்பு** : குறுக் காக சேர்த்து அல்லது கழித்து

சுழி (பூஜ்யம்)யாக்கி முடிவு களைக் காணும் முறை.

**cross functional information systems :** குறுக்குச் செயல் பாட்டு தரவு அமைப்பு கள் : வணிகச் செய லாற்றமும் தரவு அமைப்புகளும் ஒருங் கிணைந்த தரவு அமைப்புகள். இதன் மூலம் ஒரு நிறுவனத் தின், பிற செயல் படும் உறவுகளின் தரவுவைப் பங் கிட்டுக் கொள்ள முடியும்.

**cross hairs :** குறுக்கு முடிகள் : ஒரு உள்ளீட்டுச் சாதனத்தில் ஒன்று செங்குத்தாகவும், ஒன்று கிடைமட்டமாகவும் உள்ள இரண்டு குறுக்கு வெட்டுக் கோடுகள். இவற்றின் குறுக்கு வெட்டு அடையாளமானது வரை பட மறை அமைப்பில் காட்டி யின் இடத்தைக் குறிப்பிடுகிறது.

**cross hatch :** குறுக்குக் கோடு : ஒரு ஓவியத்தின் பகுதிகளைச் குறுக்கு வளைவு முறையில் பிரித்து, ஒவ்வொரு பகுதியை யும் வேறுபடுத்திக் காட்டுதல்.

**cross - hatching :** குறுக்குப் பின்னலிடல் : ஒரு வரைகலைப் படத்தின் பரப்பை நிரப்பு வதற்குப் பயன்படுத்தப்படும் பல வழிமுறைகளில் இதுவும்




குறுக்குப் பின்னலிடல்

ஒன்று. ஒன்றுக்கொன்று வெட்டிக் கொள்ளும் நிலை யான இடை கோடுகளினால் ஆன நிழலிடு முறை.

**cross - linked files :** குறுக்குத் தடுப்புக் கோப்பு; மாற்றித் தொடுக்கப்பட்ட கோப்புகள் : எம்எஸ் டாஸ், விண்டோஸ் 3.x, விண்டோஸ் 95 ஆகிய வற்றில் ஏற்படும் கோப்புச் சேமிப்புப் பிழை. ஒரு நிலை வட்டு அல்லது நெகிழ்வட்டி லுள்ள ஒன்று அல்லது மேற் பட்ட வட்டுப் பிரிவு அல்லது கொத்துப் பகுதி, கோப்பு ஒதுக் கீட்டு அட்டவணையில் ஒன்றுக்கு மேற்பட்ட கோப்பு களுக்கு ஒதுக்கப்படுவதால் ஏற்படுவது. காணாமல் போன

கொத்துகளைப்போலவே மாற்றித் தொடுக்கப்பட்ட கோப்புகளினாலும் ஒரு பயன்பாட்டுத் தொகுப்பு இயங்கிக் கொண்டிருக்கும்போதே நட்ட நடுவில் நின்று போகும்.

**cross - platform** : **பல் பணித் தளத்தது; குறுக்குப் பணித் தளத்தது; மாற்றுப் பணித் தளத்தது** : ஒன்றுக்கு மேற்பட்ட பணித் தளங்களில் இயங்கக் கூடிய ஒரு மென்பொருள் அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கணினி அமைப்பில் இணைத்து இயக்கக்கூடிய ஒரு வன் பொருள் சாதனம்.

**cross - post** : **குறுக்கு அஞ்சல்; மாற்று அஞ்சல்** : ஒரு செய்திக் குழுவில் உள்ள ஒரு கட்டுரையை அல்லது செய்தியை, ஒரு மின்னஞ்சல் அமைப்பில் உள்ள ஒரு மடலை இன்னொரு மின்னஞ்சல்/செய்திக் குழுவில் நகலெடுப்பது. எடுத்துக் காட்டாக, யூஸ்நெட் செய்திக் குழுவிலிருந்து ஒரு காம்பு செர்வ் குழுவுக்குச் செய்தியை மாற்றுவது. அல்லது ஒரு மின்னஞ்சலை வேறொரு செய்திக் குழுவுக்கு அனுப்பி வைப்பது.

**cross - reference** : **மாற்றுக் குறிப்பு.**

**cross reference dictionary** : **குறுக்குக் குறிப்பு அகராதி** : ஒரு குறிப்பிட்ட அடையாளம் உள்ள சில்லுமொழி நிரலின் எல்லா குறிப்புகளையும் அடையாளம் காண்கின்ற அச்சிட்ட பட்டியல். பல அமைப்புகளில், ஒரு மூல நிரலைச் சேர்த்து விட்ட பிறகு இந்த பட்டியல் தரப்படுகிறது.

**cross tabulate** : **குறுக்குப் பட்டியலிடு** : தரவுகளை ஆய்ந்து தொகுத்தல், சான்றாக, ஒரு தரவு தள கோப்பில் உள்ள தரவுகளைத் தொகுத்து, விரிதாள் அட்டவணையில் சேர்ப்பது.

**cross talk** : **குறுக்குப் பேச்சு** : ஒரு மின்சுற்றிலிருந்து அருகிலுள்ள வேறொரு மின்சுற்று மீது ஏற்படும் தேவையற்ற மின் தாக்கம். அனுப்பும் மின்சுற்றை தொல்லை தரும் மின்சுற்று என்றும், பெற்ற மின்சுற்றை தொல்லைப்படும் மின் சுற்று என்றும் சொல்வர். குறுக்கீடாக ஒரு மின்சுற்றிலிருந்து வேறொரு மின்சுற்றுக்கு சமிக்கை சென்று சேர்தல்.

**cross word puzzles** : **குறுக்கெழுத்துப் புதிர்கள்** : கம்மோடோர் -64 வீட்டுக் கணினியில் பயன்படுத்துவதற்கான மென் பொருள்.

**crowbar** : **கடப்பாரை** : அதிக மின்னழுத்தம் தாக்குவதன் அபாயத்திலிருந்து ஒரு கணினி

அமைப்பைப் பாதுகாக்கும் மின்சுற்று.

**CRT : சிஆர்டீ :** எதிர்மின் கதிர்க் குழாய் என்று பொருள்படும் Cathode Ray Tube என்பதன் குறும்பெயர்.

**CRT controller : சிஆர்டீ கட்டுப் படுத்தி :** ஓர் ஒளிக்காட்சி தகவிப் பலகையின் ஒரு பகுதி யாக இருப்பது. இதுதான் ஒளிக் காட்சி சமிக்கைகளை இயற்று கிறது. கிடைமட்ட, செங்குத்து ஒத்திசைவுச் சமிக்கைகளையும் சேர்த்தே உருவாக்குகிறது.

**CRT plot : சிஆர்டீ வரைவு :** எதிர் மின் கதிர்க் குழாயின் திரையில் காட்டப்படும் கணினி உருவாக் கிய ஓவியம் அல்லது வரைபடம்.

**CRT terminal : சிஆர்டீ முனை யம் :** *1.* காட்சித்திரை சாதனம். கணினியுடன் தகவல் தொடர்பு கொள்ள ஒரு இயக்குநரால் பயன்படுத்தப்படும் விசைப் பலகையுடன்கூடிய காட்சி சாதனம். ஒரு செய்தி அல்லது சொற்றொடரின் பகுதியை இயக்குபவர் விசைப்பலகையில் தட்டச்சு செய்ததும் திரையில் எழுத்துகள் காட்டப்படும்.

**crunch : நொறுக்கு :** கணினி நபர்களால் பயன்படுத்தப்படும் தொழில்நுட்பம் அல்லாத சொல். வழக்கமான கணினிச் செயல்பாடுகளைச் செய்து எண் களைச் செயலாக்கம் செய்யும் கணினியின் திறனை இது குறிப் பிடுகிறது. கணினிகள் ஏராள மான எண்களை செயலாக்கம் செய்து அல்லது நொறுக்கித் தள்ளிவிடும் திறனுடையது.

**crunching : நொறுக்குதல்.**

**cryoelectronic storage : மீக்குளிர் மின்னணு சேமிப்பகம் :** மிகக் குறைவான வெப்பநிலையில் மீக் கடத்திகளாக விளங்கும் பொருள்களைக் கொண்ட சேமிப்பகம்.

**cryogenics : மீக்குளிர் நுட்ப வியல் :** பூஜ்யத்துக்கு அருகில் உள்ள வெப்பநிலையில் செயல் படும் பொருள்களைப் பயன் படுத்தி செய்யப்படும் சாதனங் களைப் பற்றிய ஆய்வும் பயன் பாடும்.

**cryosar : மீக்குளிர் நிலைமாற்றி :** மிகக் குறைந்த வெப்பநிலை யில் இயங்கும் இரண்டு அரைக் கடத்தி முனையச் சாதனங்கள்.

**cryotran : மீக்குளிரி :** கணினி மின்சுற்றுகளில் அதிகமாகப் பயன்படுத்தப்படும் மீக் கடத் தும் திறனை அடிப்படையாகக் கொண்ட மின்சாரம் கட்டுப் படுத்தும் சாதனம்.

**cryptoanalysis : மறையீட்டுப் பகுப்பாய்வு; இரகசிய எழுத்**

தாய்வு : இரகசியக் குறியீடு அமைக்கப் பயன்படுத்தப்பட்ட திறவி பற்றிய ஆரம்ப அறிவு இல்லாமல் இரகசியக் குறி யீட்டு செய்தியை வழக்கமான சொற்றொடர் செய்தியாக மாற்றும் இயக்கம்.

**cryptographic techniques** : மறைக் குறியீட்டு நுட்பம்; மறை யீட்டு நுட்பம் : ஒவ்வொரு எழுத்து அல்லது எழுத்துத் தொகுதிகளுக்குப் பதிலாக வேறு வகையான குறியீடு களைக் கொடுத்து தரவுகளை மறைக்கும் முறை.

**cryptography** : மறைக் குறி யீட்டியல்; மறையீட்டியல் : இரகசியக் குறியீடுகளை எழு தும் பல்வேறு முறைகளில் ஒன்று. கணினிகளையே அதிகம் சார்ந் திருக்க வேண்டியதாக சமு தாயம் ஆகிவிட்டதால், கணினி கள் மற்றும் கணினி கட்ட மைப்புகள் மூலம் சேமிக்கப் பட்டு, செயலாக்கப்பட்டு அனுப்பப்படும் ஏராளமான தரவுகளைப் பாதுகாக்க வேண்டியது அவசியம். பாது காப்பைப் பெற இரகசியக் குறியீடு அமைப்பது ஒரு வழி. தந்திக்கம்பிகள், செயற்கைக் கோள்கள், நுண்ணலை அமைப்புகள் போன்ற அணுகக் கூடிய தரவு தொடர்புக் கட்ட மைப்புகளில் அனுப்பப்படும் தகவலைப் பாதுகாக்க இதுவே நடைமுறைக்கு ஏற்றவழி.

**crystal** : படிகம் : அதற்கு சக்தி வழங்கப்படும்போது ஒரு குறிப் பிட்ட இடைவெளியில் சுழலும் படிகக் கல். இந்தச் சுழற்சிகள் கணினி அமைப்பில் உள்ள கடி காரத்திற்கு நேரத்தைத் துல்லிய மாக அளிக்க உதவுகின்றன.

**crystal bistability** : இருநிலைப் படிகம்.

**crystal 3D** : முப்பறிமாணப் படிகம்.

**crystallin** : படிக நிலை : படிகத் தின் திட நிலை. Neumatic-ன் எதிர்ச்சொல்.

**Crystal Report** : கிறிஸ்டல் ரிப்போர்ட்; தரவுத் தளங் களிலுள்ள தரவுகளில் அடிப் படையில் அறிக்கை தயாரிக்க உதவும் ஒரு மென்பொருள், விகவல் பேசிக்கில் பெரும் பாலும் பயன்படுத்தப்படுகிறது.

**cs** : .சிஎஸ் : செக்கோஸ் லோவாக்கியா நாட்டைச் சேர்ந்த இணைய தளம் என் பதை அடையாளம் காட்டும், பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**C shell** : சி செயல்தளம் : யூனிக்ஸ் இயக்க முறையில்

இயங்கும் பல்வேறு கட்டளை வரி இடைமுகங்களில் இதுவும் ஒன்று. சி-செயல் தளம் மிகவும் பயனுள்ளது. ஆனால் அனைத்து முறைமைகளிலும் சி-செயல் தளம் இருக்குமென்று சொல்ல முடியாது.

**CSMA/CD : சிஎஸ்எம்ஏ/சிடி :** சுமப்பி உணர்வு பல்முக அணுக்கம் மோதல் அறிதல் என்று பொருள்படும் Carrier Sense Multiple Access/Collusion Deduction என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இது ஒரு பிணைய நெறிமுறை (Network Protocol). ஒரே நேரத்தில் இரண்டு அல்லது மேற்பட்ட கணுக்களில் (Nodes) கோரிக்கை அனுப்பப்பட்டு மோதல் ஏற்படும் சூழ்நிலையைக் கையாள்வதற்கான நெறிமுறை. ஒவ்வொரு கணுவும் பிணையப் போக்குவரத்தைக் கண்காணித்துக் கொண்டிருக்கும். தடம், போக்குவரத்தின்றி இருக்கும்போது தகவலை அனுப்பும். அதே நேரத்தில் இன்னொரு கணுவும் தகவலை அனுப்பி மோதல் ஏற்படின் இரண்டு கணுவும் தரவு அனுப்புவதை நிறுத்திவிடும். மீண்டும் மோதல் ஏற்படுவதைத் தடுக்க, ஒவ்வொரு கணுவும் வேறுவேறு கால அளவுகள் காத்துக் கொண்டிருந்துவிட்டுப் பின் தரவு அனுப்ப முனையும்.

**CSO : சிஎஸ்ஓ :** 'கணிப்பணி சேவைகள் அலுவலகம்' என்று பொருள்படும் Computing Services Office என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணையத்தில் பயனாளர்களின் சொந்தப் பெயர்களை மின்னஞ்சல் முகவரிகளுடன் ஒப்பிட்டுத் தேடித்தரும் இணையச் சேவையாகும். இது பெரும்பாலும் கல்லூரிகள், பல்கலைக்கழகங்களிலுள்ள மின்னஞ்சல் முகவரிகளில் தேடும். கோஃபர் (Gopher) பிணையங்களின் வழியாக சிஎஸ்ஓ சேவையைப் பெறலாம். இல்லினாய்ஸ் பல்கலைக்கழகத்தில் சிஎஸ்ஓ-வில் இது உருவாக்கப்பட்டது.

**CSO name server : சிஎஸ்ஓ பெயர் வழங்கன் :** சிஎஸ்ஓ அமைப்பின் மூலம் மின்னஞ்சல் முகவரி பற்றிய தகவலை வழங்கும் ஒரு கணினி.

**CT : சிடீ :** Computer Tomographic என்பதன் குறும்பெயர்.

**CTL : சிடீஎல் :** கன்ட்ரோல் (Control) என்ற சொல்லின் சுருக்கம்.

**CTRL : சிடிஆர்எல் :** கட்டுப்பாடு என பொருள்படும் Control என்பதன் குறும்பெயர். விசைப்

பலகையில் ஒரு சிறப்பு விசை.

**Ctrl-Alt-Delete : கன்ட்ரோல்-ஆல்ட்- டெலீட்** : ஐபிஎம் மற்றும் ஒத்தியல்புக் கணினிகளில் மீட்டியக்கப் (reboot) பயன்படும் மூவிசைச் சேர்க்கை. Ctrl, Alt, Del என்று குறிக்கப்பட்டுள்ள மூன்று விசைகளையும் ஒருசேர அழுத்தினால் எம்எஸ் டாஸில் இயங்கும் கணினியில் இடைத் தொடக்கம் (warm boot) நடைபெறும். இம்முறையில் கணினி, அகப் பரிசோதனைகள் அனைத்தையும் மேற்கொள்வதில்லை. மின்சாரத்தை நிறுத்தித் தரும் முதல்தொடக்க (cold boot) முறையில் அனைத்துச் சரிபார்ப்புகளும் நிகழும். விண்டோஸ் 95/98/என்டி/2000 இயக்க முறைமைகளில் Ctrl+Alt+Del விசைகளை அழுத்தும் போது ஓர் உரையாடல் பெட்டி தோன்றும். நடப்பிலுள்ள ஒரு பணியை மட்டும் முடித்து வைக்கலாம். அல்லது கணினியையே நிறுத்தவும் செய்யலாம்.

**Ctrl-C : கன்ட்ரோல்-சி** : 1. யூனிக்ஸ் இயக்க முறைமையில் இயங்கிக் கொண்டிருக்கும் ஒரு செயல்பாட்டை நடுவிலேயே முறிக்க இந்த இரு விசைகளையும் அழுத்த வேண்டும். 2. விண்டோஸ் இயக்க முறைமையில் இயங்கும் பல்வேறு பயன்பாடுகளிலும், தற்போது தேர்வு செய்துள்ள உருப்படியை (உரை, படம் எதுவும்) இடைநிலை நினைவகத்தில் நகலெடுத்துக் கொள்வதற்கான கட்டளை.

**Ctrl-S : கன்ட்ரோல்-எஸ்** : 1. மையக் கணினியுடன் முனையக் கணினி மென்பொருள் மூலம் கைகுலுக்கிக் கொள்கிறது. முனையக் கணினித் திரையில் தொடர் தரவு திரையிடப் படும்போது இந்த இரு விசைகளையும் சேர்த்து அழுத்தும் போது அப்படியே நின்றுவிடுகிறது. மீண்டும் தொடர கன்ட்ரோல்-கியூ விசைகளை அழுத்த வேண்டும். 2. ஓர் ஆவணம் அல்லது கோப்பினைச் சேமிப்பதற்குப் பெரும்பாலான மென்பொருள் தொகுப்புகளில் பயன்படுத்தப்படும் விசைச் சேர்க்கை.

**CTS : சிடீஎஸ்** : அனுப்பப் பாதை தயார் என்று பொருள்படும் Clear To Send என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். தொடர்நிலை (analog) தகவல் தொடர்பில் இணக்கிகள் கணினிக்கு அனுப்பும் சமிக்கை. கணினி, தகவலை அனுப்பத் தொடங்கலாம் என்பது பொருள். ஆர்எஸ் 232-சி இணைப்புகளில் 5-வது தடத்தில் அனுப்பி வைக்கப்படும் வன்பொருள் சமிக்கை.

**.cu : .சியூ :** ஓர் இணைய தள முகவரி கியூபா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**CUBE : க்யூப் :** பரோ கணினிப் பயனாளர்களின் கூட்டுறவு எனப் பொருள்படும் Cooperating User of Burroughs Equipment என்பதிலிருந்து பெறப்பட்ட சுருக்கப் பெயர். பரோ கணினிகளைப் பயன்படுத்துபவர்களின் அதிகாரப்பூர்வ அமைப்பு.

**cue : க்யூ :** கணினி பயன்படுத்தும் கல்வியாளர்கள் எனப் பொருள்படும் Computer Using Educators என்பதன் குறும் பெயர். கலிபோர்னியா மாநிலத்தில் உள்ள ஆசிரியர்கள் அனைவருக்கும் கணினிக் கல்வியை வழங்கும் ஒரு நிறுவனம்.

**CUL 8 R : சியூஎல் 8 ஆர் :** பிறகு சந்திக்கலாம் என்ற பொருள்படும் See You Later என்ற தொடரின் விந்தையான சுருக்கச் சொல். இணையக் கலந்துரையாடல்களில் கலந்து கொண்டுள்ள ஒருவர் தற்காலிகமாக அக்குழுவைவிட்டு நீங்கும் போது விடைபெறும் முகத்தான் குறிப்பிடும் சொல்.

**cumulative record : திரட்டுப் பதிவேடு.**

**current : மின்னோட்டம்; நடப்பு :** 1. ஒரு கடத்தி வழியாக மின்னூட்டம் பாய்தல், அல்லது பாயும் அளவு. ஆம்பியர் என்னும் அலகினால் அளக்கப்படுகிறது. 2. ஒரு தரவுத் தளத்திலுள்ள அட்டவணையில் நடப்பு ஏடு என்கிறோம்.

**current awareness system : நடப்பு உணரும் அமைப்பு; நடப்பு விழிப்புணர்வு அமைப்பு :** தேர்ந்தெடுக்கப்பட்ட தகவலின் வகைகள் கிடைத்தவுடன் ஒரு மையக்கோப்பு அல்லது நூலகம் மூலம் ஒரு பயனாளருக்கு குறிப்பிட்ட கால இடைவெளியில் அறிவித்துக் கொண்டிருப்பது.

**current block : நடப்புத் தொகுதி :** தொகுதிக் கோப்பு அணுகு முறையில் தற்போது அணுகப்படும் கோப்பில் உள்ள தரவுகளில் பதிவேட்டுத் தொகுதி

**current cell : நடப்புக் கலம்:** தரவுத் தாளில் நடப்பில் கிடைக்கக் கூடிய கலம்.

**current data : நடப்புத் தரவு.**

**current database : நடப்புத் தரவு தளம்.**

**current directory : நடப்புக் கோப்பகம் :** கணினி அமைப்பு நடப்பில் பயன்படுத்திவரும் வட்டு தரவுப் பட்டியல்.

வேறாகச் சொல்லவில்லை யென்றால், வட்டு கோப்பிற்கு வரும் நிரல்கள் நடப்புக் கோப்பகத்தையே குறிப்பிடும்.

current drain : மின்னோட்ட ஒழுக்கு: 1. ஒரு மின்னழுத்த மூலத்துடன் இணைக்கப்பட்ட மின்சாரம் பெறும் கருவி எடுத்துக் கொள்கின்ற மின்சக்தி. 2. ஒரு மின்குமிழ் விளக்கு மின் சாரத்தை எடுத்துக் கொண்டு எரி கிறது. மின்சாரம் ஒரு மின்கலனி லிருந்து வருகிறது எனில் மின் சக்தி, மின்கலனில் வடிந்து கொண்டிருப்பதாகக் கூறலாம். சிலவேளைகளில் குமிழ் விளக்கையே ஒழுக்கு என்றும் கூறுவர்.

current drive : நடப்பு இயக்ககம் : கணினி அமைப்பால் நடப்பில் பயன்படுத்தப்படும் வட்டு இயக்ககம்.

current image : நடப்புப் படிவம்

current instruction register : நடப்பு ஆணைப் பதிவேகம்.

current intensity : மின்னோட்ட வலிமை.

current location counter : நடப்பு இருப்பிட எண்ணி : ஒரு நிரலுக்கோ அல்லது ஒரு நிலை யெண்ணுக்கோ கொடுக்கப் படும் முகவரியினை முடிவு செய்ய ஒரு சேர்ப்பி வைத் திருக்கும் எண்ணி.

current loop : நடப்பு மடக்கி : மின் சமிக்கைகள் இருப்பது அல்லது இல்லாதிருப்பதை ஒட்டி துண்மிகளை அனுப்பும் தொடர் தரவு தொடர்பு வகை.

current mode logic : நடப்பு பாங்கு தருக்கம் (சிஎம்எல்) : தன்னுடைய வடிவமைப்பில் மாறுபட்டு பெரிதாக்கி மின் சுற்றின் தன்மைகளைப் பயன் படுத்தும் தருக்க மின்சுற்று.

current page box : நடப்புப் பக்கப் பெட்டி : டிடீபீ மென் பொருள்களில், நடப்பில் வேலை செய்கின்ற பக்கத் தினைக் காட்டுகின்ற பகுதி.

current positions : நடப்பு நிலவரம்; தற்போதைய இட நிலைமை.

current pulses : மின்னோட்டத் துடிப்புகள்.

current record number : நடப்பு ஏட்டு எண் : கோப்பு அனுகலில் கோப்பு கட்டுப்பாடு கட்டமுறை மூலம், தரவுகளை 128 கட்டங்களாக ஒழுங்கு படுத்தப்படுகின்றன. நடப்புப் ஏட்டு எண் நடப்பு கட்டத்தில் இருக்கும். சான்றாக, தற்செயல் ஏடு 128-ன் நடப்பு எண் 0

ஏனெனில் கட்டம் 1-ன் முதல் பதிவேடு எண் 1. கடைசி பதிவேட்டின் எண் 127. 1இல் தொடங்கினால் கடைசிப் பதிவேடு 129.

**current value** : தற்போதைய மதிப்பு.

**cursive scanning** : கோட்டு முறை வருடல் : ஒளிக்காட்சி முனையங்களுடன் பயன்படுத்தப்படும் வருடும் தொழில் நுட்பம். ஓவியன் ஒரு உருவத்தை வரைவதுபோல திரையை நோக்கி அனுப்பப்படும் எலெக்ட்ரான்கள் ஒரு நேரத்தில் ஒரு கோடு என்ற முறையில் படங்களின் வெளிப்புறக் கோடுகளைப் போடும்.

**cursor** : இடஞ்சுட்டி ; காட்டி : 1. அடுத்த எழுத்து திரையில் எங்கே தோன்றும் என்பதைக் காட்ட மினுமினுக்கும், நகரும், வழுக்கும் குறியீடு. 2. ஒளிக்காட்சி முனைப்பில் திருத்த வேண்டிய ஒரு எழுத்தையோ அல்லது நுழைக்க வேண்டிய தரவுகளின் இடத்தையோ குறிப்பிடும் இடம் உணர்த்தி.

**cursor blink speed** : காட்டி மினுக்கு வேகம்; இடஞ்சுட்டி மினுக்கு வேகம்: திரையில் தோன்றும் காட்டி, தோன்றி மறைந்து மினுக்குகின்ற வேகம்.

**cursor control** : காட்டிக் கட்டுப்பாடு : திரையில் எந்த இடத்துக்கும் ஒளிக்காட்சி உணர்த்தும் குறியீட்டை நகர்த்தும் திறன்.

**cursor control keys** : காட்டிக் கட்டுப்பாட்டு விசைகள் : காட்சித்திரையில் காட்டியை நிலைநிறுத்த உதவும் விசைப் பலகையின் விசைகள். சுற்று வடிவில் அமைக்கப்பட் டால் பயன்படுத்த எளிதாக இருக்கும்.

**cursor key** : காட்டி விசை; இடஞ்சுட்டி விசை; சுட்டுக்குறி விசை.

**cursor tracking** : சுட்டி இயக்குதல் : கணினியுடன் இணைந்துள்ள எழுத்தாணி அல்லது சுட்டியை நகர்த்துவதன் மூலம் காட்சித் திரையில் காட்டியை நிலை நிறுத்துவது

**curve fitting** : வளைவு பொருத்தல்; வளைக் கோட்டுப் பொருத்தம் : தரவு புள்ளிகளின் தொகுதியைக் குறிப்பிட ஒரு சூத்திரத்தைக் கண்டறிய உதவும் கணித நுட்பம். ஒரு புள்ளியில் பொருந்தும் கோடுகளில் சிறந்தது எது என்பதைக் கண்டுபிடித்து அமைப்பதற்கு இந்த சூத்திரம் பயன்படுகிறது.

**CUSeeMe** : சியூசீமீ : கார்னெல் பல்கலைக்கழகம் (Cornel

University) உருவாக்கிய ஒளிக் காட்சி கலந்துரையாடல் (video conference) மென்பொருள். விண்டோஸ் மற்றும் மேக் ஒஎஸ் பயனாளர்கள் இணையத்தில் நிகழ்நேர ஒளிக்காட்சி கலந்துரையாடலில் பங்கு பெறுவதற்கான முதல் மென்பொருளாகும் இது. ஆனால், இந்த மென்பொருள் செயல்பட அதிக மான அலைக்கற்றை வேண்டும். குறைந்தது 128 கேபிபீஎஸ் வேக அலைக்கற்றை இருந்தால் தான் சரியாகச் செயல்படும்.

**custodian** : பொறுப்பாளர்.

**custom** : வழமை.

**customer engineer** : வாடிக்கையாளர் பொறியாளர் : கணினியைப் பழுது பார்க்கும் அல்லது கணினியில் தடுப்புப் பராமரிப்பினைச் செய்யும் அல்லது உள்ளீடு/வெளியீடு போன்ற சாதனங்களைப் பராமரிக்கும் நபர். Field Engineer என்றும் அழைக்கப்படுவார்.

**custom IC** : வாடிக்கையான ஒருங்கிணைப்புச் சுற்று.

**customic** : வாடிக்கையாக்கிய : ஒரு குறிப்பிட்ட வாடிக்கையாளரின் வடிவமைப்பு மற்றும் அளவுக்கேற்ப உற்பத்தி செய்யப்படும் ஒருங்கிணைந்த மின்சுற்று (ஐ.சி).

**customize** : வாடிக்கையாக்கல் : பொது நோக்க மென்பொருள் அல்லது வன்பொருள் ஒன்றின் செயல்திறனைக் கூட்டுதல் அல்லது மாற்றுதல். குறிப்பிட்ட பயனாளரின் தேவைக்குப் பொருத்தமாக இது செய்யப்படுகிறது.

**customized form letters** : வாடிக்கையாக்கப்பட்ட வடிவக் கடிதங்கள் : சொல்செயலி மென்பொருள்களில் உருவாக்கப்பட்ட தனிப்பட்டவருக்கேற்ற வடிவக் கடிதங்கள்.

**custom software** : வாடிக்கை மென் பொருள் : ஒரு வணிகம் அல்லது நிறுவனத்தின் தேவைக்கேற்ப உருவாக்கப்பட்ட நிரல்கள். canned software என்பதற்கு மாறானது.

**custom view** : தனிப்பயன் தோற்றம்.

**cut** : வெட்டு : ஒரு ஆவணத்திலிருந்து படங்கள் அல்லது உரைப் பகுதிகளை நீக்கும் செயல்.

**cut and paste** : வெட்டி ஒட்டு : சில வரைகலை மென்பொருள்களிலும், சொல் செயலி மென்பொருள்களிலும் ஒரு இடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் சொற்றொடர் பகுதிகளை நகர்த்தப் பயன்படுத்தும் முறை. வெட்டி ஒட்டும் படிகளுக்கு

இடையிலுள்ள பிற செயல் பாடுகளைச் செய்யவும் இத் தகைய அமைப்புகள் அனு மதிக்கின்றன.

**cut/copy/paste** : வெட்டு/ நகலெடு/ஒட்டு.

**cut form** : நறுக்குப் படிவம்; வெட்டு வடிவம் : ஓசிஆர் (OCR) சாதனங்களில் பயன்படுத்து கின்ற பயன்பாட்டு விலைப் பட்டியல் போன்ற தரவு நுழைவுப் படிவம்.

**CUT mode** : கட் பாங்கு : கட்டுப் பாட்டக முனையப் பாங்கு எனப் பொருள்படும் Control Unit Terminal Mode என்பதன் குறும் பெயர். முனையத்தை ஒரு முறை பெருமுகக் கணினியுடன் சேர அனுமதிக்கும் முறை. நுண் கணினி இந்த முறையைப் பின் பற்றி பெருமுகக் கணினியுடன் தொடர்பு கொள்வது.

**cutout** : வெட்டியெடு : வண்ணத் தூரிகை மென் பொரு ளில் கத்தரி மற்றும் எடுக்கும் கருவியைப் பயன் படுத்தி தேர்ந்தெடுக்கும் பரப்பு.

**cut-sheet feader** : நறுக்குத்தாள் செலுத்தி.

**cutter path** : வெட்டுப் பாதை : கணினி உதவிடும் உற்பத்தி அமைப்பில் கட்டுப்படுத்தப்படு கின்ற வெட்டுக் கருவியின் இயக்கத்தை விவரிக்கும் வரி.

**.cv** : .சிவி : ஓர் இணைய தள முகவரி கேப் வெர்தே நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.cy** : .சிஓய் : ஓர் இணைய தள முகவரி சைப்ரஸ் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**cyan** : சியான் ; மயில் நீலம் : வண்ண வரைபட முறைகளில் விடிடீ (VDT)களின் மீது அடிக் கடி பயன்படுத்தப்படும் நீல வண்ணம்.

**cyber** : சைபர் : கன்ட்ரோல் டேட்டா கார்ப்பரேஷன் உற் பத்தி செய்த பெருமுக மற்றும் மீத்திறன் கணினிகளின் வரிசை.

**cyberbunk** : சைபர் பங்க் : எதிர் கால குற்றவாளிகளைப் பற்றி யது. கணினி வங்கிகளை உடைத்துச் செல்லும் ஏமாற்றுக் காரர்கள். அதிக தொழில்நுட்ப அறிவுக் கூர்மையைச் சார்ந்தே அவர்கள் வாழ்கிறார்கள். நியூ ரோமான்சர் மற்றும் ஷாக்வேவ் ரைடர் போன்ற அறிவியல் புதினங்களில் இருந்து தோன்றிய சொற்கள்.

**cybercafe or cyber cafe : மின்வெளி உணவகம் :** *1. இணையத் தொடர்புகள் உள்ள கணினி முனையங்களைக் கொண்ட சிற்றுண்டி விடுதிகள். இங்கே காபி, தேநீர் மற்றும் சிற்றுண்டி சாப்பிட்டுக் கொண்டே இணையத்தில் உலா வரலாம். ஒரு மணி நேரத்துக்கு இவ்வளவு ரூபாய் எனக் கட்டணம் செலுத்த வேண்டியிருக்கும். சாப்பிட வருபவர்கள் இணையத்தைப் பார்வையிடவும், இணையத்தில் உலாவ வருபவர்கள் சாப்பிடவும் இங்கே வாய்ப்புக் கிடைக்கிறது. 2. இணையத்தில் இருக்கின்ற ஒரு மெய்நிகர் (virtual) உணவகம். இது பெரும்பாலும் சமூகப் பயன்களுக்கானது. இங்கே கூடுபவர்கள் அரட்டை நிகழ்ச்சி மூலம் ஒருவருக்கொருவர் அறிமுகப்படுத்திக் கொள்வர். அறிக்கைப் பலகை முறையில் செய்திகளைப் பரிமாறிக் கொள்வர். செய்திக் குழுக்கள் மூலமாக கருத்துகளைப் பரிமாறிக் கொள்வர்.*

**Cyberdog : சைபர்டாக் :** *ஆப்பிள் நிறுவனத்தின் இணையப் பயன்பாட்டுக்கான கூட்டுத் தொகுப்பு. இதில் இணைய உலாவி மற்றும் மின்னஞ்சல் இணைக்கப்பட்டுள்ளன. ஓப்பன்டாக் (OpenDoc) என்னும் தொழில்நுட்பத்தின் அடிப்படையில் உருவாக்கப்பட்டுள்ளது. ஏனைய பயன்பாடுகளுடன் எளிதாக சேர்த்து இணைத்துச் செயல்படுத்த முடியும்.*

**cyber law : மின்வெளிச் சட்டம்.**

**cybernatics : தண்ணாள்வியல்.**

**cybernaut : சைபர்நாட்; மின்வெளி வீரர்; மின்வெளியாளி :** *எப்போதும் தன் வளமான நேரங்களை இணையத்தில் உலா வருவதிலேயே செலவழிப்பவர். இன்டர்நாட்/இணைய வீரர் என்றும் அழைக்கப்படுவார்.*

**cybernetic system : தன்னாள்வியல் முறைமை :** *சுய கண்காணிப்பு மற்றும் சுயக் கட்டுப்பாட்டுத் திறனை அடைய கட்டுப்பாடு மற்றும் திரும்பப் பெறும் பகுதிகளைப் பயன்படுத்தும் அமைப்பு.*

**cyberphobia : சைபர்போபியா :** *கணினிகளைக் கண்டு அஞ்சுதல்.*

**cyberspace : மின்வெளி :** *நியூரோ மான்சர் என்னும் புதினத்தில் வில்லியம் கிப்சன் உருவாக்கிய சொல் இணையப்*

பண்பாட்டை இது குறிப்பிடு கிறது.

**cyborg : சைபோர்க் :** மின்னணு மற்றும் மின்னியந்திர ரோபோ வின் உறுப்பினை வைத்திருக் கும் மனிதர்.

**cycle : சுழற்சி :** கணினி சேமிப் பகம் தொடர்பானது. ஒரு கணினி அல்லது அதன் சேமிப் பக சாதனத்தில் இருந்தோ, அதற்கோ தகவலை மாற்றல் செய்யும்போது ஏற்படும் தொடர் நிகழ்வுகள். ஒரு முகவரி யைக் குறிப்பிட்டு, அதன் தக வலை வெளியேற்றி அடுத்ததைத் தேடத் தயாராக இருத்தல்.

**cycle code : சுழற்சிக் குறிமுறை.**

**cycle per second : ஒரு நொடிக்கு சுழற்சி :** ஒரு நொடி யில் எத்தனை தடவைகள் ஒரு நிகழ்வு அல்லது நிகழ்வுகளின் தொகுதி திரும்பச் செய்யப்படு கிறது என்பது. பார்க்க: ஹெர்ட்ஸ்.

**cycle power : சுழற்சித் திறன் :** நினைவகத்தில் உள்ள சில தரவுகளை துடைக்கும் பொருட்டு அல்லது கணினி செயலிழக்கும்போது அதற்குப் புத்துயிர் ஊட்டும் பொருட்டு கணினிக்குத் தரும் மின்சாரத்தை நிறுத்தி, மீண்டும் வழங்குவது.

**cycle stealing : சுழற்சி திருடல் :** உள்ளீட்டு வெளியீட்டு மின் பாட்டையின் கட்டுப்பாட்டைத் தற்காலிகமாகச் செயலிழக்கச் செய்து வெளிப்புறச் சாதனம் ஒன்றை அனுமதிக்கும் நுட்பம். இதன்மூலம் கணினியில் உள் நினைவகத்தை அணுக அந்தச் சாதனம் அனுமதிக்கப்படுகிறது.

**cycle reset : சுழற்சி மாற்றமைவு; சுழற்சி திரும்ப அமைதல்.**

**cycle time : சுழற்சிநேரம் :** 1. தொடர் செயலின் தொடக்கத் தில் இருந்து சேமிப்பக இருப் பிடத்திற்குப் போய்ச் சேரும் வரை இடைவெளியின் குறைந்தபட்ச நேரம். 2. ஒரு பதிவுத் தொகுதியில் தகவலை மாற்ற தேவைப்படும் நேரம்.

**cyclic binary code : சுழற்சி இருமக் குறிமுறை :** இரும எண் முறையில் ஒரு வகை. பதின்ம எண்களை (Decimal Numbers) இரும வகைக்கு மாற்றும்போது எந்தவொரு இரும எண்ணும் முந்தைய இரும எண்ணோடு ஒப்பிட்டால் ஒரேயொரு துண்மி (bit) மட்டுமே மாறி இருக்க வேண்டும். 0111, 0101 ஆகிய இரு எண்களில் நடுத் துண்மி மட்டுமே மாறி இருக்கிறது.

சாதாரண இரும எண் முறை யிலிருந்து மாறுபட்டது.

| பதின்மம் | சுழற்சி இருமம் | சாதா இருமம் |
|---|---|---|
| 0 | 0000 | 0000 |
| 1 | 0001 | 0001 |
| 2 | 0011 | 0010 |
| 3 | 0010 | 0011 |
| 4 | 0110 | 0100 |
| 5 | 0111 | 0101 |
| 6 | 0101 | 0110 |
| 7 | 0100 | 0111 |
| 8 | 1100 | 1000 |
| 9 | 1101 | 1001 |

**cyclic code : சுழற்சிக் குறியீடு ;** சாம்பல் குறிமுறை (gray code) போன்றது.

**Cyclic Redundancy Check (CRC) : சுழற்சி மிகைச் சரிபார்ப்பு :** வட்டுச் சாதனங்களில் பிழை சோதிக்கும் முறை. தரவுகளைச் சேமிக்கும்போது சிஆர்சி மதிப்பு மீண்டும் கணிக்கப்படு கிறது. இரண்டு மதிப்புகளும் சமமாக இருந்தால், அந்த தரவு பிழையற்றது என்று கருதப் படுகிறது.

**cyclic shift : சுழல் நகர்வு :** ஒரு முனையில் விலக்கப்படும் எண் மறுமுனையில் சுழற்சி போன்று சேர்ந்து கொள்ளும் மாற்றம். ஒரு பதிவகத்தில் 23456789 என்னும் எட்டு இலக்கங்கள் இருக்குமானால் இரண்டு பத்தி களில் இடதுபுறமாக சுழற்சி நுகர்வு செய்தால் மாற்றப்பட்ட உள்ளடக்கம் 45678923 என்று இருக்கும்.

**Cycolor : சைகாலர் :** மீட் இமேஜிங்கின் அச்சிடும் செயல் முறை. ஒளிப் படங்களைப் போல முழு டோனல் உருவங் களை இவை அச்சிடும்.

**cylinder : உருளை :** ஒவ்வொரு வட்டின் பரப்பிலும் ஒரே இடத் தில் தங்குகின்ற அனைத்துத் தடங்களின் மொத்தம். வட்டு தட்டுகளில், ஒவ்வொரு மேற் பரப்பிலும் அதே தடத்தில் உள்ள தடங்களின் மொத்தம்

**cylinder addressing : உருளை முகவரியிடல் :** ஒவ்வொன்றுக் கும் ஒரு உருளை எண், மேற் பரப்பு எண் மற்றும் பதிவேடு கூட்டல் எண் ஆகியவற்றைக் கொடுத்து வட்டு பதிவேடு களைத் தேடும் முறை.

**cylinder method : உருளை முறை :** படி/எழுது முனை களை இயக்குவதன் மூலம் நடப்பில் பயன்படுத்தப்படு கின்ற தடத்திற்கு மேலும் கீழும் உள்ள தரவுகளைப் பெறலாம் என்ற கோட்பாடு அல்லது

முறை. அணுகுசாதனத்தில் கூடுதல் இயக்கம் இல்லாமலேயே அதிக அளவு தகவல் அணுக அனுமதிக்கிறது.

**cylinder skew** : உருளை ஸ்கியூ : முந்தைய உருளையின் கடைசி தடத்தின் தொடக்கத்தில் இருக்கும் ஆஃப் செட் இடை வெளி ஒரு சிலிண்டரில் இருந்து மற்றொன்றுக்கு மாற உதவுவது.

**cypher : மறை எழுத்து** : இரகசியக் குறியீட்டியலின் ஒரு வடிவம். சில திறவிகளின் அடிப்படையில் தகவலை இடையிலேயே மாற்றி எடுக்க முயன்றாலும் எவருக்கும் புரியாத ஒன்றாகத் தோன்றும் முறை.

**.cz : .சிஇஸட்** : ஓர் இணைய தளம் செக் குடியரசைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

# D

**D** : பதினாறிலக்க எண்மான முறையில் 14 ஆவது இலக்கம்.

**DA** : நேரடித் தொடர்பு, நேரணுகல் : Direct Access என்பதன் குறும்பெயர்.

**D/A (Digital to Analog)** : இலக்க முறையிலிருந்து தொடர் முறைக்கு.

**DAA** : டிஏஏ : 'தரவு அணுகு வரிசை முறை' என்று பொருள்படும் "Data Access Arrangement" என்பதன் குறும்பெயர்.

**DAC** : டிஏசி : 'இலக்கத்திலிருந்து ஒத்த சொல்லுக்கு உருமாற்றி' என்று பொருள்படும் "Digital-to-Analog (D/A) Converter" என்பதன் குறும்பெயர்.

**DA converter** : இலக்க ஒத்திசை மொழிமாற்றி; இலக்கத்திலிருந்து ஒத்த சொல்லுக்கு உருமாற்றி.

**DAD** : டிஏடி : 'தரவு தள நடவடிக்கை வரைபடம்' என்று பொருள்படும் Database Action Diagram என்பதன் குறும்பெயர். ஒரு தரவு தளத்தில் ஆதாரத்தில் தரவு மீது நடைபெறும் செயலாக்கத்தைக் குறிக்கும் ஆவணமாக்கம்.

**daemon** : தேமான் : சைத்தானின் ஏவலாட்களில் ஒருவன். நேரப்பகிர்வை ஆதரிக்கும் UNIX என்ற செயற்பாட்டுப் பொறியமைவையும் குறிக்கும். இது, பொறியமைவில் நிகழ்வுகள் நிகழ்வதற்கும், அதற்குப் பதிலாகக் காத்துக் கொண்டிருக்கும் ஏவலாள் போன்ற ஒரு செய்முறையாகும். HTTP, NCSA httpd, CERN httpd, lpd, ftpd ஆகியவை இதில் அடங்கும். "Daemon" என்பதை "Demon" என்றும் உச்சரிப்பர். ஆனால் தொழில்நுட்ப வல்லுநர்கள் "Daemon" என்ற உச்சரிப்பையே விரும்புகின்றனர்.

**daily cycle** : நாட் சுழற்சி.

**daisy chain** : டெய்சி சங்கிலி; தளமட்டச் சங்கிலி : ஒயர்கள் தொகுப்பு ஒன்றின் வழியாக சமிக்கைகளை அனுப்பும் குறிப்பிட்ட முறை. ஒயர்கள் தொகுப்பில் கருவிகள் எந்த இடத்தில் அமைந்திருக்கிறதோ அதைப் பொறுத்து கருவிகளுக்கான முன்னுரிமைகளை அம்முறை அனுமதிப்பதாக உள்ளது.

**daisy chain interrupt** : டெய்சி சங்கிலி இடைத் தடுப்பு; தளமட்டச் சங்கிலி இடைத்தடுப்பு :

தனியொரு தடம் நெடுகிலும் மையச்செய்முறை அலகுடன் புறநிலைச்சாதனங்கள் இணைக்கப்பட்டுள்ள ஓர் இடைத் தடுப்பு பொறியமைவு.

**daisy printer** : டெய்சி அச்சுப் பொறி.

**daisy wheel** : டெய்சி சக்கரம்; தளமட்டச் சக்கரம் : டெய்சி சக்கர அச்சிடு கருவியில் உள்ள அச்சிடு சாதனம். நடுவில் குறுக்குக் கம்பியில் எழுத்துகள் புடைப்பு முறையில் அமைக்கப்பட்டிருக்கும். டெய்சி என்பது ஒரு மலர். அந்த மலரின் இதழ்களை ஒத்திருப்ப தால் இதற்கு இப்பெயர் வந்தது.

**daisy wheel printer** : டெய்சி சக்கர அச்சுப்பொறி; தளமட்டச் சக்கர அச்சுப் பொறி; தளமட்ட அச்சு எந்திரச் சக்கரம் : அச்சிடு கருவி. இதில் ஓரத்தில் அச்சிடப்பட்ட எழுத்துகளைக் கொண்ட உலோக அல்லது பிளாஸ்டிக் தகடு பயன்படுத்தப்படுகிறது. அந்தத் தட்டு தேவையான எழுத்து சுத்தி ஒன்றின் முன்னே வரும் வரை சுழற்றப் படுகிறது. சுத்தி அந்த எழுத்தினை மைநாடா ஒன்றின் மீது தட்டுகிறது. பிரபலமான தரமான அச்சிடு



தளமட்டச் சக்கரம்

கருவி தனிப்பட்ட கணினிகளில் பயன்படுத்தப்படுகிறது.

**DAL (Data Access Language) : டிஏஎல் :** 'தரவு அணுகு மொழி' என்று பொருள்படும் "Data Access Language" என்பதன் குறும்பெயர். 'ஆப்பிள்' (Apple) கணினியிலுள்ள தரவு தள இடைமுகப்பு. இது, ஆதாரத் தரவு 'Mac' என்ற நுண் கணினிகளில் அல்லது 'ஆப்பிள்' அல்லாத கணினிகளில் அணுகுவதற்கு அனுமதிக்கிறது.

**DAM (Direct Memory Access) : டிஏஎம் - நேரடி நினைவக அணுகல்.**

**damping : தளர்வூட்டுதல் :** தேவைப்படாத அல்லது மிகையான ஊசலாட்டங்களைத் தவிர்ப்பதன் மூலம் ஒரு மின்னணு அல்லது எந்திரச் சாதனத்தை நிலைப்படுத்துவதற்கான உத்தி.

**dark bulb : கருங்குமிழ் :** ஒரு வகையான கத்தோட் கதிர்க் குழாய், நிறுத்தப்பட்டதும் ஏறத்தாழ கறுப்பு நிறத்தை அடைந்து விடுகிறது. அது ஒளிக் காட்சிகளுக்கு சிறந்த பின்புலமாகி விடுகிறது.

**darkest : மிகு இருள்மை.**

**dark fiber : கறுப்பு ஒளியிழை; கரு ஒளியிழை :** தகவல் தொடர்புக்குப் பயன்படுத்தப்படும் ஒளியிழை வடங்களில் பயன்பாட்டில் இல்லாத இழைகளை கறுப்பு ஒளியிழை என்று அழைப்பர்.

**darkness : இருட்டு.**

**darlington circuit : டார்லிங்டன் சுற்று வழி :** இரண்டு மின்மப் பெருக்கிகளை (Transistor) ஒன்றாக இணைத்துப் பயன்படுத்துகிற மின்பெருக்கச் சுற்றுவழி.

**DARPAnet : டார்ப்பா நெட் :** அமெரிக்காவின் பாதுகாப்பு உயர்நிலை ஆராய்ச்சித் திட்டப் பணி முகமை எனப் பொருள் படும் Defense Advanced Research Projects Agency என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**dart : டார்ட் :** கணிப்பொறியமைவில் ஏற்படும் தவறுகளை வாடிக்கையாளரின் இடத்திலேயே கண்டுபிடிப்பதற்காக ஸ்டான்ஃபோர்ட் பல்கலைக் கழகமும், பன்னாட்டு வணிக எந்திரக் கழகமும் (IBM) சேர்ந்து வகுத்துள்ள ஒரு கூட்டுத் திட்டம்.

**DASD : டிஏஎஸ்டி :** நேரடித் தொடர்பு சேமிப்புச் சாதனங்களுக்கான 'Direct Access Storage Device' என்பதன் குறும்பெயர்.

**dash style** : கீறுகோட்டுப் பாணி.

**DAT** : டாட் : 'இயங்குநிலை ஆணை மொழி மாற்று' என்று பொருள்படும். 'Dynamic Address Translation என்பதன் குறும்பெயர்.

**data** : தரவு ; தகவல்; செய்திக் குறிப்பு ; விவரம் : முறைப் படுத்தப்பட்ட வடிவில் வழங் கப்படும் உண்மைகள் அல்லது கருதுகோள்கள். மனிதர்கள் அல்லது தானியக்க முறையில் தொடர்பு கொள்ளல், கருத்துக் கூறல் அல்லது வகைப்படுத்து த்லுக்கு பொருத்தமானதாகும். வகைப்படுத்தப்படாத தரவுகள் (உ-ம்) விரிப்புகளுக்கான டாலர் விலை, வழங்கப்பட்ட கட்டட அனுமதிகள். வரலாற்றுக் காலம் தொட்டு 'டேட்டா' என் பது பன்மைப் பெயர் ஆகும். டேட்டம் என்பது ஒருமைப் பெயர் ஆகும். இந்த வேறுபாடு தரவு முறைப்படுத்தும் தொழில் நுணுக்கத்தில் பொதுவாகப் புறக்கணிக்கப்படுகிறது.

**data abstract** : தரவுச் சுருக்கம்.

**data abstraction** : தரவு உருவாக் கம் : பொருள் சார்ந்த செயல் முறைப்படுத்தலில், பயனாளர் வரையறுத்த தரவு வகைகளை உருவாக்குதல். இவை, சொந்த மான தரவுகளையும், செய்முறை யையும் கொண்டிருக்கும்.

**data acquisition** : தரவு ஈட்டல் ; புள்ளிவிவரம் பெறல், தரவு பெறல்: தொலைதூரத் தளங்களி லிருந்து தரவுகளை மத்திய கணினி அமைப்பு ஒன்றினால் பெறுதலாகும். புறஉணர்வி களிலிருந்து தரவுகளைச் சேகரித்தலாகும்.

**data administration** : தரவுத் தள மேலாளர் மேலாண்மை ; தரவு மேலாளர் மேலாண்மை : தரவு தளத்தின் தொழில்நுட்ப வடி வமைப்பும் மேலாளர் மேலாண் மையும் தரவு நிருவாகம் எனப் படும். இதில், ஓர் அமைவனத் தின் தரவுத் தொடர்புகளின் பகுப்பாய்வு, வகைப்பாடு, பரா மரிப்பு ஆகியவை அடங்கும். தரவு உருமாதிரிகள், தரவு விவர ஏடுகள் ஆகியவற்றை உருவாக்கு வதும் இதில் சேரும். இவை தரவு தள வடிவமைப்புக்கு மூலப் பொருள்களாக அமை யும். தரவுகளை ஓர் அமைவனத் தின் ஒட்டு மொத்த மேலாண் மைக்கு தரவு நிருவாகப் பணிகள் உதவுகின்றன.

**data aggregate** : தரவுத் தொகுதி : ஆவணம் ஒன்றிற்குள் உள்ள தரவு வகைகளின் தொகுப்பு. பெயர் ஒன்று தரப்பட்டு தொகுப்பு என்று குறிப்பிடப்படுகிறது.

**data analysis** : தரவுப் பகுப் பாய்வு.

**data analysis package** : **தரவுத் தளப் பகுப்பாய்வுத் தொகுதி; தரவு பகுப்பாய்வுத் தொகுதி** : குறிப்பிட்ட ஒரு சில முடிவுகளைப் பெறுவதற்காகக் கட்டமைப்புக்கும், தரவுகளைச் சீரமைப்பதற்கும் பயன்படும் ஒரு மென்லினச் சாதனம். ஒரு மின்னணுவியல் அகல் தட்டுச் செயல்முறை இதற்கு எடுத்துக் காட்டு.

**data area** : **தரவுப் பகுதி.**

**data attribute** : **தரவின் பண்புக் கூறு; விவரத்தின் பண்பியல்பு** : ஒரு தரவின் இடம், பொருள், ஏவல் பற்றிய கட்டமைப்பு விவரங்கள்.

**data bank** : **தரவு வங்கி** : *1.* தரவு நூலகங்களின் ஒருங்கிணைந்த தொகுப்பு ஆகும். 2. நெருக்கமில்லாத தொகுப்பு எனும் நிலையில் தரவு அடிப்படை என்று கூறப்படுகிறது.

**database** : **தரவுத் தளம்** : தரவு மேலாண்மைப் பொறியமைவினால் உருவாக்கப்பட்டு, மேலாண்மை செய்யப்படும் ஒன்றுக்கொன்று தொடர்புடைய கோப்புகளின் தொகுதி. மின்னணுவியல் முறையில் சேமித்து வைக்கப்பட்டுள்ள தரவுகளின் தொகுப்பு. தருக்க முறையில் தொடர்புடைய பதிவேடுகளின் அல்லது கோப்புகளின் ஒரு தொகுப்பு. ஒரு தரவுத் தளம், பல்வேறு பயன்பாடுகளுக்குப் பயன்படுத்தப் படுகிறது.

**database administration** : **தரவுத் தள நிருவாகம்** : ஓர் அமைவனத்தின் தரவு அகராதியைத் தயாரித்துப் பேணி வருதல், தரவு தளத்தின் செயல்முறையை வடிவமைத்துக் கண்காணித்து வருதல், தரவு தளப் பயன்பாட்டுக்கும் பாதுகாப்புக்கும் தர அளவுகளைச் செயற்படுத்துதல் முதலிய பல பணிகள் இதில் அடங்கும்.

**database administrator** : **தரவு தள நிருவாகி** : தரவுத் தளத்தின் இயற்பியல் வடிவமைப்புக்கும், மேலாண்மைக்கும், அதன் பொறியமைவின் மதிப்பீட்டுக்கும், தேர்வுக்கும், செயற்பாட்டுக்கும் பொறுப்பாக இருப்பவர். சிறிய அமைவனங்களில், தரவுத் தள நிருவாகி, நிருவாகி இருவரின் பணியும் ஒன்றுதான். ஆனால், இரு பொறுப்புகளும் தனித்தனியே மேலாண்மை செய்யப்படும்போது தரவுத் தள நிருவாகியின் பணி அதிகம் தொழில் நுட்பம் சார்ந்ததாக இருக்கும்.

**database analyst** : **தரவுத் தள பகுப்பாய்வாளர்** : வடிவமைப்பு

மற்றும் தரவு அடிப்படைச் சூழலில் தரவு அமைப்பை அமல்படுத்துதலில் முக்கிய நபர் ஆவார்.

**database broadcasting** : தரவுத் தள அலைபரப்பு.

**database concept** : தரவுத் தள கருத்துரு.

**database definition language** : தரவுத் தள வரையறை மொழி : ஒரு தகவலை உருவாக்கி, சேமித்து வைத்து, மேலாண்மை செய்வதற்கு தரவு நிருவாகி பயன்படுத்தும் ஒரு மொழி.

**database design** : தரவுத்தள வடிவமைப்பு.

**database designer** : தரவுத்தள வடிவமைப்பாளர்; தரவுத் தள திட்ட அமைப்பாளர் : ஒரு தரவுத் தளத்தைப் பயன்படுத்தி உருவாக்கப்படும் பயன்பாட்டு மென்பொருள்களுக்குத் தேவையான செயல்கூறுகளை வடிவமைத்து நடைமுறைப்படுத்துகின்ற கணினி வல்லுநர்.

**database driver** : தரவுத் தள இயக்கி : ஒரு தரவுத் தளத்தை அணுகுகிற மென்லின வாலாயம். இது, ஒரு குறிப்பிட்ட தரவுத் தளத்தை அணுகுவதற்கு ஒரு தொகுப்பாணை அனுமதிக்கிறது.

**database engine** : தரவுத்தளப் பொறி; தரவுத் தள இயக்கக் கருவி : ஒரு தரவுத் தள மேலாண் அமைப்பை அணுகித் தரவுகளை எடுத்தாள வழியமைத்துக் கொடுக்கும் நிரல் தொகுதிகளைக் கொண்ட மென்பொருள்.

**database environment** : தரவுத் தளச் சூழல் : பயன்படுத்துவோர், தரவு மற்றும் தரவுத் தளத்தை அமல்படுத்துவதால் விளையும் சுற்றுச் சூழல்.

**database machine** : தரவுத் தள எந்திரம் : தரவுத் தளத்தை அணுகுவதற்காகத் தனிவகையில் வடிவமைக்கப்பட்ட கணினிப் பொறி. இது முதன்மைக் கணினிப்பொறியுடன் அதிவேக வழி வாயிலாக இணைக்கப்பட்டிருக்கும். இது விரைவான வட்டு தேடுதலுக்காக பன்முகச் செய்முறைப்படுத்திகளைப் பயன்படுத்துகிறது.

**database management** : தரவுத் தள நிர்வாகம், தரவுத் தள மேலாண்மை : கோப்பு ஒன்றில் ஆவணங்களின் வடிவில் தரவு வகைகளை சேமித்தல், நாளது தேதிக்கு மேம்படுத்துதல், மீண்டும் பெறல். தொலைதூர அமைப்புகளின் மூலம் பல பயனாளர் பலரும் பொதுவான தரவு வங்கிகளைப் பயன்படுத்த முடியும்.

**database management approach: தரவுத் தள மேலாண்மை அணுகுமுறை** : தரவுகளைச் சேமித்தல், செய்முறைப்படுத்துதல் பற்றிய அணுகுமுறை. இதில், தனித் தனிக் கோப்புகள் ஒரே தொகுதியாக ஒருங்கிணைக்கப்பட்டு, அல்லது தரவுத் தள பதிவுகளாக்கப்பட்டு, செய்முறைப்படுத்துவதற்காகவும், தரவு மீட்புக்காகவும் பயனாளருக்குக் கிடைக்குமாறு செய்யப்படுகின்றன.

**database management system : (DBMS) : தரவுத் தள மேலாண்மை முறைமை** : ஒரு கணினி மயமாக்கப்பட்ட தரவுத் தள கோப்பு ஒன்றை உருவாக்கவும் கோப் பில் புதிய தரவுகளைச் சேர்க்கவும், கோப்பில் உள்ள தரவுகளை மாற்றவும், கோப்பிற்குள்ளேயே தரவுகளை வகைப்படுத்தவும், கோப்பில் தரவுகளைத் தேடவும், மற்றும் பிறவற்றுக்கும் இடமளிக்கிற, வகைப்படுத்துகிற வன்பொருள் மற்றும் மென்பொருள்களின் தொகுப்பாகும். கோப்பு நிர்வாகியுடன் ஒப்பிடவும்.

**database manager : தரவுத் தள மேலாளர்** : தரவுகளை கணினியில் ஏற்ற, திரட்ட, வகைப்படுத்த, தரவுகளைப் பெற பயன்படுத்த ஒருவரை அனுமதிக்கும் நிரல் தொகுப்பு.

**database objects : தரவுத் தளச் செயல்பாடு.**

**database operation : தரவுத் தளப் பண்புகள்.**

**database packages : தரவுத் தள தொகுப்புகள்.**

**database publishing : தரவுத்தள வெளியீடு; தரவுத் தளப் பிரசுரம்; தரவுத் தள அறிக்கை** : ஒரு தரவுத் தளத்திலுள்ள விவரங்களைத் திரட்டி அறிக்கையாகத் தயாரித்து, கணினிப் பதிப்பக முறையில் (Desk Top Publishing) அல்லது இணையத் தொழில் நுட்ப அடிப்படையில் வெளியிடும் முறை.

**database query language : தரவுத் தள வினவு மொழி** : ஒரு தரவுத் தளத் தொகுதியின் ஒருங்கிணைந்த ஒரு பகுதியாக அமைந்துள்ள ஓர் ஆணை அல்லது செயல்முறைப்படுத்தும் மொழி. இந்த மொழி, தரவுத் தளத்திலிருந்து தரவுகளை வரவழைத்துக் கையாள்வதற்குப் பயனாளரை அனுமதிக்கிறது.

**database server : தரவுத் தள ஏவலர்** : ஓர் உள்ளகப் பகுதி இணையத்தில் (Local Area Network) தரவுத் தளத்தைச்

சேமித்து வைப்பதற்கும், மீட்பதற்குமான கணினி. இது, கோப்பு ஏவலர் (File Server) என்பதிலிருந்து வேறுபட்டது. இது பலவகைக் கோப்புகளையும் செயல்முறைகளையும், பகிர்ந்து பயன்படுத்துவதற்காகச் சேமித்து வைக்கிறது.

**database specialist** : தரவுத் தள வல்லுநர் : தரவுத் தளங்களுடன் பணிபுரிவோர்.

**database splitter** : தரவுத்தள பிரிப்பி.

**database structure** : தரவுத்தளக் கட்டமைப்பு; தரவுத்தள வடிவமைப்பு: ஒரு தளத்தில் இணைக்கப்பட்டுள்ள அட்டவணை வடிவிலான கோப்பின் ஒவ்வொரு ஏட்டிலும் (record) இருக்க வேண்டிய புலங்களின் (fields) எண்ணிக்கை, அவற்றின் பெயர், தரவு இனம் (data type) இவற்றைப் பற்றிய தரவுகளை உள்ளடக்கிய வடிவமைப்பு பற்றிய பொதுவான விளக்கக் குறிப்பு.

**database utilities** : தரவுத்தள பயன்கூறுகள்.

**database wizard** : தரவுத்தள வழிகாட்டி.

**data bits** : தரவு துண்மிகள்; தரவு பிட்டுகள் : ஒத்திசைவில்லா தரவுத் தொடர்பில், அனுப்பப்படும், ஓரெழுத்தைக் குறிக்கும் எட்டுத் துண்மிகளில் 5 முதல் 8 வரையுள்ள துண்மிகளை இவ்வாறு அழைப்பர். தரவுத் துண்மிகளுக்கு முன்பாக தொடக்கத் துண்மி (start bit) அனுப்பப்படும். அதன்பின், சமன் துண்மி (parity bit) அனுப்பப்படும். சமன் துண்மி அனுப்பப்படாமலும் இருக்கலாம். இறுதியில் ஒன்றிரண்டு நிறுத்த துண்மிகள் (stop bits) அனுப்பி வைக்கப்படும்.

**data broadcasting** : தரவு அலைபரப்பு.

**data buffer** : தரவு இடையகம் : கணினிச் செயல்பாட்டில் ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு தகவலை அனுப்பி வைக்கும்போது, தற்காலிகமாக இருத்தி வைக்கப்படுகின்ற நினைவகப் பரப்பு.

**data bus** : தரவுத் தடம்; தரவுப் பாட்டை : தரவு விவரங்களைக் கடத்துகிற ஒயர்களின் தொகுப்பு முறை. தரவுகளைப் பரிமாற, அது மத்திய முறைப்படுத்தும் அலகின் சேமிப்பையும் கணினியின் எல்லா உள்ளீட்டு மற்றும் வெளியீட்டு கருவிகளையும் இணைக்கிறது.

**data byte** : தரவு எண்மி : எண்மி - துண்மி இரட்டை இலக்க எண் - தரவு கணினியின் ஒரு

எழுத்தை பிரதிநிதித்துவப் படுத்துகிறது. அது கணிதவியல் அல்லது தருக்கவியல் நடை முறைகளிலோ, நினைவக சேமிப்பிலோ பயன்படுத்தப் படுகிறது.

**data cable** : தரவு வடம் : தரவுத் தொடர்புச் செயல்பாட்டில் ஒரு சாதனத்திலிருந்து இன்னொன் றுக்குத் தகவலை அனுப்புவ தற்குப் பயன்படுத்தப்படும் இழை-ஒளிவ வடம் அல்லது கம்பி வடம்.

**data capture** : தரவுப் பதிப்பி; தரவுக் கவர்வு.

**data capturing** : தரவைக் கவர்தல் : கணினி கையாளு வதற்காக தரவுகளை சேகரித்தல் அல்லது தொகுத்தல், பணியை வகைப்படுத்தலில் முதல் நட வடிக்கையாகும். இதனை தரவு சேகரிப்பு என்றும் கூறுவார்கள்.

**data card** : தரவு அட்டை : துளையிடப்பட்ட அட்டை ஒன்றுக்கு மேற்பட்ட தரவு களைக் கொண்டது.

**data carrier** : தரவு ஏந்தி : எந்திரத்தில் படிக்கக் கூடிய தரவுகளை இருத்திவைத்துக் கொள்ளக்கூடிய ஒரு வட்டு, நாடா போன்ற ஓர் ஊடகம்.

**data carrier store** : தரவு ஊர்திச் சேமிப்பி : கணிப்பொறியின் புற நிலைச் சாதனமாக உள்ள நிரந்தரச் சேமிப்புச் சாதனம். எடுத்துக்காட்டு : நெகிழ் வட்டுகள் (Floppy disks).

**data cartridge** : தரவுப் பொதி யுறை : காந்த நாடா அடங்கி யுள்ள, அப்புறப்படுத்தத்தக்க சேமிப்புத் தகவமைவு.

**data catalog** : தரவுப் பதிப்பி; தரவு கவர்வி : ஓர் அமைவனம் பயன்படுத்தும் தரவுக் கூறுகள் அனைத்தின் முழுப் பெயரை யும் கொண்ட ஒழுங்குமுறைப் படுத்திய பட்டியல்.

**data cell** : தரவு அறை : நேரடித் தொடர்பை ஏற்கும் மின்காந்த சேமிப்புக் கருவி. ஐபிஎம் நிறு வனம் உருவாக்கியது. இக்கருவி மின்காந்தப் பட்டியலில் அறை களில் பதிவு செய்யப்பட்ட தரவு களைக் கையாளுகிறது.

**data center** : தரவு மையம் : கணிப்பொறியமைவுகளும், அதன் தொடர்புடைய சாதனங் களும் வைக்கப்பட்டிருக்கும் துறை. தரவு நூலகம் இந்த மையத்தின் ஒரு பகுதியாகும். தரவும் பதிவுத் துறையும், பொறியமைவு செயல்முறைப் படுத்தும் துறையும் இந்த மையத்தின் கீழ்வரும். இதிலுள்ள கட்டுப்பாட்டுப் பிரிவு, பல் வேறு பயன்பாட்டுத் துறை

களிடமிருந்து வெளிப்பாடு களைப் பெற்று வெளியிடுகிறது.

**data chaining** : **தரவு சங்கிலி இணைப்பு** : *தரவு வகைகளை இணைப்பதற்கான ஒரு செய்முறை. ஒவ்வொரு தரவு இனத்திலும், அடுத்த இனத்தின் அமைவிடம் அடங்கியிருக்கும்.*

**data channel** : **தரவு வழி** : **தரவுத் தடம்** : *இரு புள்ளிகள் அல்லது கருவிகளுக்கிடையிலான தரவுத் தொடர்பு இணைப்பு.*

**data channel multiplexer** : **தரவுத் தட ஒன்றுசேர்ப்பி.**

**data checks** : **தரவுச் சோதனைகள்** : *தரவுகளைச் செய்முறைப் படுத்துவதற்கு முன்பு அதில் செல்லுபடியாகாத தரவுகள் இருக்கின்றனவா என்பதைக் கண்டறிவதற்காக நடத்தப்படும் பல்வேறு சோதனைகள்.*

**data clerk** : **தரவு எழுத்தர்** : *கணினி ஒன்றில் எழுத்தர் பணிகளைச் செய்யும் ஒருவர்.*

**data collection** : **தரவுத் திரட்டு; தரவுத் தொகுப்பு** : *1. தரவுகளை வகைப்படுத்தும் முறைமை ஒன்றில் சேர்க்க ஆதாரத் தரவுகளைச் சேகரித்தல். தரவுகளைச் சிறைப்பிடித்தல் என்றும் கூறுவார்கள். 2. ஒன்றுக்கு மேற்பட்ட மையங்களில் இருந்து ஒரு மையப் பகுதிக்கு தரவுகளைக் கொண்டுவந்து சேர்த்தல்.*

**Data collection form** : **தரவுத் திரட்டுப் படிவம்.**

**data command** : **தரவு ஆணை** : *ஓர் இடைவெளியைத் தொடர்ந்து எழுத்துகள் வரும் அமைப்புடைய ஓர் ஆணை. இது, சொல் செய்முறைப் படுத்தும் செயல்முறைகளின் சில பழைய வகைகளில் பயன் படுத்தப்படுகிறது.*

**data communication equipment** : **தரவுத் தொடர்புக் கருவி** : *ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு தரவுகளைக் கடத்துவதுடன் தொடர்புடைய துணைக் கருவி. எடுத்துக்காட்டு: மோடெம்கள், தொலை தூர முனையங்கள் மற்றும் தரவுத் தொடர்பை வகை செய்யும் கருவிகள், உள்ளீட்டு, வெளியீட்டு வழிகள்.*

**data communications** : **தரவுத் தொடர்புகள்** : *குறியீடாக்கிய தரவுகளைக் குறிப்பிட்ட ஒழுங்குமுறை விதிகளின்படி அனுப்புதல். இதற்கு, உள்ளூர் அனுப்பீட்டுமுறை எதுவும் அல்லது நிலம், ஆகாயம் அல்லது கடல்வழியான தொலைத் தொடர்புமுறை எதுவும் பயன் படுத்தப்படுகிறது.*

**data communications package : தரவுச் செய்தித் தொடர்புத் தொகுதி** : செய்தித் தொடர்புக் கம்பிகளின் வழியாகத் தரவுகளை அனுப்புவதற்கும், பெறுவதற்கும் பயன்படுத்துவோரை அனுமதிக்கும் மென்பொருள்.

**data communications system : தரவுத் தொடர்பு அமைப்பு** : கணினிகள், இணையங்கள் மற்றும் தரவுத் தொடர்பு இணைப்புகளைக் கொண்ட அமைப்பு முறை.

**data compatibility : தரவு ஒத்தியல்பு** : ஒருவர் மற்றொருவரின் தரவு வட்டுகளிலிருந்து படிக்கவும் எழுதவும், ஒருவர் மற்றவரின் தரவுக் கோப்புகளைப் பயன்படுத்தவும் இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட கணினிகளின் திறம்பாடு, அவை, ஒரே செயல்முறைகளை இயக்க முடியாவிட்டாலும் கூட இவ்வாறு செய்யலாம்.

**data compression : தரவு இறுக்கம்** : வெற்றுக் களங்களைத் தவிர்த்து, தேவையற்ற இடைவெளிகளையும் தேவையற்ற தரவுகளையும் தவிர்த்து ஆவணங்களின் அளவையும் நீளத்தையும் குறைத்தல்.

**data concentration : தரவுகளைத் திண்மைப்படுத்தல்** : 1. பல குறைவான நடுத்தர வேகங் கொண்ட வழிகளிலிருந்து ஒரு இடைப்பட்ட மையத்தில் தரவுகளைச் சேகரித்தல். 2. ஒரு தரவின் இறுதியில் மற்றொரு தரவைச் சேர்த்து ஒரு நீண்ட தரவு வகையை உருவாக்குதல்.

**data conferencing : தரவுக் கலந்துரையாடல்; தரவுக் கருத்தரங்கு** : வெவ்வேறு இடங்களில் உள்ளவர்கள் தங்களுக்கிடையே ஒரு கலந்துரையாடலில் கருத்துப்



தரவுக் கலந்துரையாடல்

பரிமாற்றம் செய்து கொள்ளல். ஓரிடத்தில் சேமித்து வைக்கப் பட்டுள்ள கோப்புகளை பல் வேறு இடங்களில் பணிபுரிபவர் கள் அணுகவும் திருத்தவும் வழி செய்யும் மென்பொருள் தொகுப்புகளை உள்ளடக்கியது.

**data consistency :** தரவு ஒத் திசைவு.

**data contamination :** தரவு மாசு படுதல் : *தரவுகளைத் தன்னை யறியாமல் அல்லது தீய நோக்குடன் வேண்டுமென்றே சீரழித்தல்.*

**data control :** கட்டுப்பாட்டுத் தரவு : *ஆதார ஆவணங் களிலிருந்து, எந்திரம் படிக்கக் கூடிய தரவுகளைத் தயாரிப்பதன் மூலம், பல்வேறு பணிகளை நிறைவேற்றுவதைக் கட்டுப் படுத்தும் செய்முறை.*

**data control department :** தரவுக் கட்டுப்பாட்டுத் துறை : *ஒரு கணிப்பொறியின் தொகுதிச் செய்முறைப்படுத்தும் செயற் பாடுகளில் உள்ளிடுவதற்காகத் தரவுகளைச் சேகரிப்பதற்கும், முடிவுற்ற அறிக்கைகளை வழங்குவதற்கும் பொறுப்பான செயற்பணி.*

**data control section :** தரவுக் கட்டுப்பாட்டுப் பிரிவு : *வகைப் படுத்துதல், உள்ளிடு தரவு களைச் சேகரித்தல் மற்றும் கணினியைப் பயன்படுத்து வோருக்கு வெளியீடுகளை வழங்குதல் ஆகியவற்றில் தரக் கட்டுப்பாட்டை ஏற்பதற்குப் பொறுப்பான நிறுவனம் அல்லது குழு.*

**data conversion :** தரவு மாற்றம்; தரவு வடிவ மாற்றம் : *தரவு வடிவம் ஒன்றினை மற்றொரு வடிவத்துக்கு மாற்றுதல் அதா வது துளையிடப்பட்ட அட்டை ஒன்றிலிருந்து மின்காந்த வட்டு அல்லது நாடா ஒன்றுக்கு மாற்றுதல்.*

**data cycle :** தரவுச் சுழற்சி : *தரவு களை உள்ளிடுதல், செய்முறைப் படுத்துதல், வெளிப்படுத்துதல் ஆகியவற்றின் வரிசை முறை.*

**data declaration :** தரவு அறி விப்பு; விவர அறிவிப்பு : *ஒரு நிரலில் பயன்படுத்தவிருக்கும் பல்வேறு விவரக் குறியீடுகளை நிரலின் தொடக்கத்திலேயே அறிவிக்கப்பயன்படும் ஒரு கூற்று* (statement). *எடுத்துக்காட் டாக, பணியாளர்களின் விவரங் களைக் கையாள பெயர், வயது, சம்பளம் போன்ற தரவு மாறிலி களை* (variables) *அறிவிக்க வேண்டும். இவ்வாறு அறிவிக் கும் முறை மொழிக்கு மொழி*

வேறுபடும். ஆனால், அனைத்து முறைகளிலும் சில கூறுகள் - மாறிலியின் பெயர், தரவு இனம், தொடக்க மதிப்பு, உருவளவு ஆகியவை பொதுவானவை.

C, C++, Java : char name[15]; int age; double pay;

pascal : name : string[15];
age : integer;
pay : real;

**data definition : தரவு வரையறை; தரவு விளக்கம் :** அறிக்கை ஒன்றுக்கான நிரல் தொகுப்புகளை வரையறுக்கும்பொழுது, அதில் அளவு, வகை, களம் ஆகியவற்றின் தன்மை, இடம் பெற்றிருக்க வேண்டும்.

**data definition language : தரவு விளக்க மொழி :** தரவு அடிப்படை நிர்வாகி ஒருவர், தரவு அடிப்படைச் சூழலில், தரவுவை உருவாக்கவும், சேமிக்கவும், பராமரிக்கவும் கையாளும் மொழி. இதனை, தரவு வரையறை மொழி என்றும் கூறுவார்கள்.

**data definition statement : தரவு வரையறை அறிக்கை :** ஒரு கோப்பு பற்றிய தரவுகளை அளிக்கும் ஒரு பணிக் கட்டுப்பாட்டு மொழி அறிக்கை.

**data description language (DDL) : தரவு விவரிப்பு மொழி (டிடிஎல்) :** தரவு அடிப்படைச் சூழலில், தரவு அடிப்படை நிர்வாக முறையில், தரவு விவரணையில் சேமிக்கப்பட வேண்டும், பராமரிக்கப்பட வேண்டும் என்பதைக் குறிப்பிடும் மொழி. இதனை தரவு விளக்கமொழி என்றும் அழைப்பதுண்டு.

**data description library : தரவு விவரிப்பு நூலகம் :** ஒரு தரவு ஆதார மேலாண்மைப் பொறியமைவில், பல்வேறுவகைத் தரவு குறிப்புகளிடையிலான இடைத் தொடர்புகளுடன் சேர்த்துச் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் பல்வேறுவகைத் தரவுகள், விவரங்களின் ஒரு பதிவேடு.

**data description standard : தரவு விவரிப்புத் செந்தரம்.**

**data descriptor : தரவு விவரிப்பி:** ஓர் இணைப்புமொழிச் செயல்முறையில், முதன்மை நினைவுப் பதிப்பியில் நிலையான அல்லது காப்பிடச் சேமிப்பு அமைவிடங்களை வரையறுத்துக் கூறுவதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு செயல்முறைப்படுத்தும் அறிக்கை.

**data design : தரவு வடிவமைப்பு :** ஒரு தரவு பொறியமைவினால் பயன்படுத்தக் கருதப்படும் தரவுத் தளம் மற்றும் கோப்புகளின் தருக்கமுறைக் கட்டமைப்பின் வடிவமைப்பு. இது,

ஆக்கக்கூறுகளின் விரிவான விவரிப்புகள், தொடர்புகள், தரவுகூறுகள், கோப்புகள் மற்றும் தரவுத் தளத்திற்கான ஒருங்கிணைப்பு விதிமுறைகள் ஆகியவற்றை அளிக்கிறது.

**data dictionary : தரவு அகர முதலி; தரவு அகராதி :** ஒரு தரவு அடிப்படை நிர்வாக முறையில் பயன்படுத்தப்படும் கோப்புகள், களங்கள் மற்றும் மாறக்கூடியவற்றை உள்ளடக்கியது. தரவு அகரமுதலி, பயன்படுத்துவோருக்கு எவற்றுடன் தாங்கள் வேலை செய்ய வேண்டியுள்ளது என்பதையும், அவை எவ்வாறு வரையறை செய்யப்பட்டுள்ளது என்பதையும் நினைவுபடுத்த உதவுகிறது. குறிப்பாக பெரிய எண்ணிக்கையிலான இணைக்கப்பட்ட நடைமுறைகளை அல்லது நிரல் தொகுப்புகளை தரவு அடிப்படையில் பகிர்ந்து கொள்ளும்பொழுது, எழுதும் பொழுது உதவியாக உள்ளது.

**data diddling : தரவு மாற்றியமைத்தல் : தரவுகளை மாற்றும் உத்தி :** கணினிக் கோப்பு ஒன்றிற்குள் சேர்க்கும் முன்பு அதனை எளிதில் பெற முடியாதபடி தரவுகளை மாற்றும் உத்தி.

**data directory : தரவு அடைவு; தரவு அட்டவணை :** தரவின் பெயர்களை அல்லது கண்டறியும் அம்சங்களை அவற்றின் விளைவுகளுடன் ஒழுங்குமுறையில் தொகுத்தல். இதன் மூலம் அந்த அம்சங்களைக் கண்டறிய முடியும்.

**data directory / data dictionary : தரவு அடைவு/தரவு அகரமுதலி:** தரவு அம்சங்களை ஒழுங்குமுறைப்படுத்துதல். இம்முறையில் தரவு அட்டவணை, தரவு பொருளுணர்த்தும் அட்டவணை, தரவு அகரமுதலி முதலியவற்றின் பண்புகள் ஒருங்கிணைக்கப்படுகின்றன. தரவுகளின் அம்சங்களை விவரிப்பதோடு அவற்றின் இடத்தையும் கண்டறிய முடியும்.

**data division : தரவு பகுதி ; தரவு பிரிவு :** கோபால் நிரல் தொகுப்பின் நான்கு முக்கிய பகுதிகளில் மூன்றாவது பகுதி.

**data driven processing : தரவு உந்து செயலாக்கம் :** தரவு செயலாக்க முறைகளுள் ஒன்று. செயலி (Processor) அல்லது நிரல் (Programme), வரிசைமுறையிலான செயல்பாடுகளில் அடுத்த கட்ட நடவடிக்கையை மேற்கொள்ளும் முன், தரவின் (data) வருகைக்காகக் கட்டாயமாகக் காத்திருக்க வேண்டிய நிலை.

**data dump : தரவு சேமிப்பு :** தொல்லை நீக்கும் அம்சம். அச்சடிப்பி, தரவு சேமிப்புத் தக

வமைவாக இருக்கும்போது, அதுபெறும் ஒவ்வொரு குறியீடும் பதினாறிலக்கக் குறிமானத்தில் அச்சிடப்படுகிறது. இதனைப் பதினாறிலக்கச் சேமிப்பு என்றும் கூறுவர்.

**data editing : தரவுச் சீரமைப்பு :** தரவு உள்ளீட்டில் பிழைகளை, தவறுகளை, முரண்களைக் கண்டறிவதற்கான உத்தி. எடுத்துக்காட்டாக சோதனைகளைக் கூறவேண்டும். விரிவெல்லைச் சோதனை, காரிய சாத்தியமா என்பதற்கான சோதனை, தரவுகள், எழுத்து, எண்ணியல் முறையில் தேவைப்படும் வகையில் முறையாக உள்ளதா என்பதற்கான சோதனைகள்.

**data element : தரவு உறுப்பு ; தரவுக் கூறு :** ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட தரவு வகைகளின் இணைப்பாகும். அவை ஒரு அலகு அல்லது சிறு தரவைக் குறிப்பிடுகிறது. அத்தகவல் ஒரு தொழிலாளியின் சமூகப் பாதுகாப்பு எண், அல்லது சம்பளப் பட்டியலைப் பற்றிய தரவு அடிப்படையாக அமையலாம்.

**data encryption : தரவுக் குறியீட்டு முறை; தரவுக் குறியீட்டாக்கம் ;** முன்பே தீர்மானிக்கப் பட்ட திட்டப்படி கலந்திருக்கும் மிக முக்கியமான தரவுகளைப் பெறுவதற்கான குறியீட்டு முறை.

**data encryption key : தரவு மறையாக்கத் திறவி :** ஒரு தரவை மறையாக்கம் (encryption) செய்யவும், மறைவிலக்கம் (decryption) செய்யவும் பயன்படுத்தப்படும் மறைக்குறியீடு.

**data encryption standard : தரவுக் குறியீட்டு முறை தரவரைவு ; தரவு முறைக் குறியீட்டுச் செந்தரம் :** ஐபிஎம் உருவாக்கிய தரவு பாதுகாப்பு முறை, தேசிய தரங்கள் நிறுவனம் ஏற்றுக் கொண்டது. இம்முறையில் ஒரு தனிக் குறியீட்டுத் தரவுகளை சேமிப்பிலிருந்து பெற உதவுகிறது.

**data entry : தரவு உள்ளீடு; தரவு சேர்ப்பு :** 1. தரவுகளை கணினி ஒன்றில் சேர்ப்பதற்கு ஏற்ற வகையில் மாற்றும் முறை. அதாவது முனையம் ஒன்றிலிருந்து மின்காந்த வட்டு அல்லது நாடா அல்லது துளையிடும் அட்டைகளுக்கு விசைகள் மூலம் அனுப்புதல். 2. கணினி முறை ஒன்றில் நேரடியாகத் தரவுகளை ஏற்றும் முறை.

**data entry device : தரவு பதிவுச் சாதனம் :** கணினி ஏற்றுக்

கொள்ளும் வகையில் தரவு களை செலுத்தப் பயன்படுத்தப் படும் சாதனம்.

**data entry form** : தரவு உள் ளீட்டுப் படிவம்; தரவு பதிவுப் படிவம்.

**data entry operator** : தரவு உள்ளீட்டாளர்; தரவுப் பதிவு ஆள்; குறிப்புப் பதிவாளர் : விசைப் பலகைச் சாதனத்தைக் கணினி ஒன்றில், தரவுகளைப் பதிவு செய்வதற்கு ஏற்ற வகையில் பயன்படுத்துகிறவர். அவர் பெரும்பாலும் கணினியை இயக்கும் குழுவில் ஒரு உறுப் பினராக இருப்பார். கணினி முறையில் தரவுகளைப் பதிவு செய்யும் பொறுப்பு அவருடையது.

**data entry programme** : தரவுப் பதிவுச் செயல்முறை : விசைப் பலகையிலிருந்து அல்லது பிற உட்பாட்டுச் சாதனத்திலிருந்து தரவுகளைப் பெற்று, அவற் றைக் கணினியில் சேமித்து வைக்கிற பயன்பாட்டுச் செயல் முறை. இது, நாளது நிலைக்குக் கொணர் தல், வினவுதல், செய்தியறிவித்தல் ஆகியவற்றைச் செய் திடும் ஒரு பயன் பாட்டின் ஒரு பகுதி யாக இருக்கலாம். இந்தச் செயல் முறை, தரவுத் தளத்தில் தரவை நிலை பெறச் செய்கிறது. உட்பாட்டுப் பிழைகள் அனைத்தையும் சோதனை செய்கிறது.

**data entry specialist** : தரவு பதிவு வல்லுநர் : கணினி ஒன்று வகைப்படுத்துவதற்குத் தரவு களை வழங்குவதற்குப் பொறுப் பான நபர்.

**data export** : தரவு ஏற்றுமதி : எழுதப்பட்ட தளங்களை ஒரு தரவு அடிப்படையிலிருந்து மற் றொரு நிரல்தொகுப்பில் பயன் படுத்தக்கூடிய வகையில் மாற்று வதற்கான திறன். கடிதங்கள், அறிக்கைகள், விரி நிலைத்தாள் கள் ஆகியவற்றை உருவாக்கு வதற்கான தொகுப்புச் சொற்களை வகைப்படுத்துவது தரவு இறக்கு மதிக்கு எதிர்நிலையானது.

**data facts** : தரவு மெய்ம்மை : தரவுகளுக்கான மூலச்செய்திகள்.

**data/fax modem** : தரவு/தொலை நகல் இணக்கி : துண்மித் தாரை



தரவு/தொலைநகல் இணக்கி

(bit stream) வடிவிலான தகவலையும், பட உருவங்களையும் அனுப்பவோ பெறவோ பயன்படும் இணக்கி.

**data field :** தரவுக் களம்; தரவுப் புலம்; *தரவுகளை வகைப்படுத்தும் வடிவத்தில் ஒரு உயர் பகுதி அல்லது அடுத்தடுத்த உயர்பகுதிகள் அல்லது குறிப்பிட்ட தரவு அம்சத்தைப் பதிவு செய்வதற்கான துளையிடப்பட்ட அட்டை. 2. தரவு ஆவணம் ஒன்றின் பகுதி.*

**data field masking :** தரவு மறைப்பு ; தரவுகளுக்கு மூடியிடல் : *தரவுக் களங்களை தனித்து இருத்த, பிரிக்க, தேதிகளைக் குறிப்பிட சாய் வெட்டுக் கோடுகள் அல்லது கிடைக் கோடுகள் பயன்படுத்தப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, நாள், மாதம், ஆண்டு இவற்றைத் தனியாகப் பிரிக்கப் பயன்படுத்தப்படுகின்றன. 07/12/86. தொலைபேசி எண்களைக் குறிப்பிட பிறை அடைப்புக்குறிகள், கிடைக்கோடுகள் பயன்படுத்தப்படுகின்றன. (999) 999-9999. இதே போன்ற குறியீடுகள் பகுதி எண்களைக் குறிக்கவோ, எழுத்துக் கோவையின் பரப்புத்திறனை மேம்படுத்தவோ கையாளப்படுகின்றன. இத்தகைய மூடிகளை கணினியால் செருக இயலும். அவற்றை இயக்குவோர் தானாகச் சேர்க்கவேண்டியதில்லை. தேதிக்கான பகுதியில் 071286 என்ற எண்களை மட்டும் பதிவு செய்தால்போதும். கணினி ஆணைத்தொகுப்பு சாய் கோடுகளைத் தானாகச் சேர்த்து விடும். இம்முறை தரவுப் பதிவை எளிதாக்குகிறது. பணிகளைத் தரப்படுத்துகிறது. சில நிரலாக்கத் தொடர்கள் மூடியிடும் பணியை முறையாகச் செய்கின்றன.*

**data file :** தரவுக் கோப்பு : *தொடர்புடைய தரவுகள் சேகரிக்கப்பட்டு ஒரு குறிப்பிட்ட முறையில் வகைப்படுத்தப்படுகின்றன. இதனை உரைக் கோப்பு என்றும் கூறுவார்கள்.*

**data file processing :** தரவுக் கோப்புச் செயலாக்கம்; தரவுக் கோப்பு வகைப்படுத்துதல் : *தேதிக்கோப்புகள் நடைமுறைத் தரவுகளைப் பிரதிபலிக்கிற வகையில் ஆவணங்களைச் சேகரித்தல், மாற்றுதல், நீக்குதல் மூலம் நாளது தேதிக்கு இணங்க மேம்படுத்துதல்.*

**data flow :** தரவு பாய்வு; தரவு ஒழுகை : *பதின்ம முறை தொடர்பான வேர்ச்சொல் அல்லது தரவுகளின் கிடைநிலையை அடிப்படையாகக் கொண்டு இப் பணிகளைச் செய்யும் எந்திரங்கள்.*

**data flow analysis** : **தரவு பாய்வுப் பகுப்பாய்வு** : செய்முறைப்படுத்தும் நடவடிக்கைகளிடையே தரவுகளின் ஓட்டம் பற்றிய ஆய்வு.

**data flow diagram** : **தரவுப் பாய்வு வரைபடம்** : ஒரு முறைமை வழியாக தரவுகளின் பாய்வை பிரதிநிதித்துவப்படுத்தும் முறைமையைப் பகுப்பாய்வு செய்ய உதவுகிற வரைபட ஆய்வு முறைமை மற்றும் வரைபடக் கருவி.

**data fork** : **தரவுக் கவைமுனை** : தரவுகளைக் கொண்ட ஒரு மெக்கின்டோஷ் கோப்பின் பகுதி. எடுத்துக்காட்டு : ஒரு மிகை அட்டை அடுக்கில், வாசகம், வரைகலை, மிகைப் பேச்சுப் படிகள் ஆகியவை தரவு கவை முனையில் அமைந்திருக்கின்றன. சேமக்கலங்கள், ஒலிக் கட்டுப்பாட்டுத் தரவுகள், புறச் செயற்பணிகள் ஆகியவை ஆதாரக் கவை முனையில் அமைந்திருக்கின்றன.

**data form** : **தரவுப் படிவம்.**

**data format** : **தரவு வடிவம்** : கணினியில் செயல்படுத்தப் படும் பயன்பாட்டு நிரல்களில் தகவலானது பல்வேறு வடிவங்களில் எடுத்தாளப்படுகிறது. ஒரு தரவு ஒரு குறிப்பிட்ட சூழலில் ஒரு குறிப்பிட்ட கட்டமைப்பில் விளக்கம் பெறுகிறது. அக்கட்டமைப்பையே தரவு வடிவம் என்கிறோம்.

**data formatting statements** : **தரவு வடிவாக்கக் கட்டளைகள்** : தரவைப் படிக்கிறபோது அல்லது வெளிப்படுத்துகிறபோது, தரவின் வடிவத்தை வரையறுக்கிற செயல்முறைப்படுத்தும் மொழிகளின் கட்டளைத் தொடர்கள்.

**data frame** : **தரவுத் தொகுதி; தரவுச் சட்டம்; தரவு பொதி; தரவு பொட்டலம்** : கணினிப் பிணையங்களில் ஒற்றைத் தொகுதியாக அனுப்பப்படுகின்ற ஒரு தரவுப் பொதி பிணையங்களின் தரவுத் தொடுப்பு அடுக்கு (Data Link Layer) தரவுச் சட்டத்தை நிர்ணயம் செய்கின்றது. பிணையக் கணுக்கள் (Network Nodes) இரண்டுக்கிடையே இணைக்கும் கம்பிகளில்தான் தரவுச் சட்டம் நிலவுகிறது. கணினிக்குள் நுழைந்த பிறகு சட்டம், பொதி என்ற பரிமாணத்தை இழக்கிறது.

**data gathering** : **தரவு சேகரிப்பு** : உள் அல்லது வெளி ஆதாரங்களிலிருந்து தரவுகளைச் சேகரிக்கும் பணி.

**data general corporation** : **தரவுப் பொதுக் கார்ப்பரேஷன்** : குறுங்

*கணினிகளைப் பெருமளவில் தயாரிக்கும் நிறுவனம்.*

**data glove :** தரவுக் கையுறை : *ஒரு கணினியில் பயனாளர் ஒருவரின் கைகள், விரல்களின் நிலையைத் தெரிவிப்பதற்கு விபிஎல் ஆராய்ச்சி நிறுவனம் தயாரித்துள்ள ஒரு கையுறை.*

**datagram :** தரவுச் செய்தி : *இணைய* (Internet) *ஆதாரம், சேரிட முகவரிகள், செய்திக் குறிப்புகள் ஆகியவற்றைக் கொண்டிருக்கிற அனுப்பீட்டுக் கட்டுப்பாட்டு நெறிமுறை/ இணைய நெறிமுறை* (TCP/IP) *செய்தி அலகு.*

**data hiding :** தரவு மறைப்பு.

**data hierarchy :** தரவுப் படி நிலை: *தரவுகளை ஒழுங்கான வரிசை முறையில் தொகுதி களாகவும், உட் தொகுதிகளாக வும் கட்டமைப்புச் செய்தல்.*

**data import :** தரவு இறக்குமதி : *மற்றொரு ஆணைத்தொகுப்பில் உருவாக்கப்பட்ட தரவுகளைப் பயன்படுத்தும் (படிக்கும்) திறன். ஒருங்கிணைந்த மென் பொருள் பயன்பாட்டில் இது முக்கியமானது. ஏனெனில் அதில் ஒரு நிரல் தொகுப்பில் சேகரிக்கப்பட்ட அல்லது தயாரிக்கப்பட்ட தரவுகளைப் பல நிரல் தொகுப்புகள் பயன் படுத்துகின்றன. தரவு ஏற்று மதிக்கு எதிர் நிலையானது.*

**data independence :** தரவு சார் பின்மை ; தரவு சுயேட்சை : *பயன்பாட்டில் பெரும் மாறு பாடு இல்லாமல் மாற்றக்கூடிய, சேமிப்பு அமைப்பு மற்றும் பெறுதல் நடைமுறையைக் கொண்ட தரவு முறைமை ஒன்றின் நிலை.*

**data input & verification :** தரவு உள்ளீடு மற்றும் சரிபார்த்தல்.

**data integrity :** தரவு ஒருங் கிணைவு; தரவு ஒழுங்கமைவு : *கண்டுபிடிக்கப்படாத தவறு களின் விகிதத்தை அடிப்படை யாகக் கொண்ட பணி அலகு.*

**data interchange format :** தரவு பரிமாற்ற வடிவம் : *மென் பொருள் உருவாக்குவோர் மத்தி யிலான தர நிலை. அது ஒரு நிரல் தொகுப்பின் தரவுகளை மற்றொரு நிரல் தொகுப்பு பெற அனுமதிக்கிறது.*

**data item :** தரவு வகை; தரவு உருப்படி : *ஒரு மதிப்பீட்டைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் தரவு வகை. பெயரிடப்பட்ட தரவின் மிகச் சிறிய அலகு.*

**data leakage :** தரவுக் கசிவு : *கணினி ஒன்றிலிருந்து திருட்டுத் தனமாக தரவுகளை அகற்றுதல்.*

**data librarian : தரவு நூலகர் :** தரவு ஆதாரங்களான வட்டுகள், நாடாக்கள் மற்றும் நடைமுறைக் குறிப்புகளை அட்டவணைப்படுத்தி பொறுப்பாகப் பராமரிப்பவர். அவற்றின் பயன்பாட்டையும் கண்காணிப்பவர். வழக்கமாக நூலகர் அல்லது காப்பாளர் என்று அழைக்கப்படுகிறார்.

**data library : தரவு நூலகம் :** வட்டு அல்லது அதுபோன்ற சேமிப்புச் சாதனங்களில் சேமித்து வைக்கப்பட்டுள்ள தரவு கோப்புகளின் வரையறுக்கப்பட்ட தொகுப்பு, தரவு நூலகம் எனப்படுகிறது.

**data line : தரவுப் பாதை :** ஒரு கணினியினுள் அல்லது செய்தித் தொடர்புப் பாதையினுள் தரவுகளைக் கொண்டுசெல்கிற தனித் தனி மின்சுற்று வழி அல்லது பாதை.

**data line monitor : தரவுப் பாதைத் திரையகம் :** செய்தித் தொடர்புகளில், ஒரு செய்தித் தொடர்புப் பாதையில் குறியீடுகளையும், நேரத்தையும் பகுப்பாய்வு செய்கிற ஒரு வாசகக் கருவி. இது, செய்தி அனுப்புவதற்குத் தேவையான மென்பொருள்கள், வன்பொருள்கள் அனைத்தையும் குறிக்கும்.

**data link : தரவு இணைப்பு :** செய்தி ஒன்றைத் தரவு வடிவில் அனுப்ப அனுமதிக்கும் கருவி.

**data link escape : தரவுத் தொடர்புப் போக்கு வழி :** அடுத்துவரும் எழுத்து, தரவு இல்லை என்பதையும், ஒரு கட்டுப்பாட்டுக் குறியீடு என்பதையும் குறிக்கின்ற செய்தித் தொடர்புக் கட்டுப்பாட்டு எழுத்து.

**data link layer : தரவுத் தொடுப்பு அடுக்கு :** இரண்டு கணினிகளுக்கிடையே நடைபெறும் தரவு பரிமாற்றத்துக்கான வரையறுப்புகள் ஐஎஸ்ஓ குழுவினால் தரப்படுத்தப்பட்டுள்ளன. அது ஐஎஸ்ஓ/ஓஎஸ்ஐ மாதிரியம் (ISO/OSI model) என்று அழைக்கப்படுகிறது. தரவு பரிமாற்றத்தில் ஏழு அடுக்குகள் (Layers) வரையறுக்கப்பட்டுள்ளன. அவை ஓஎஸ்ஐ அடுக்குகள் என்று அழைக்கப்படுகின்றன. அவற்றுள் இரண்டாவது அடுக்கு தரவுத் தொடுப்பு அடுக்கு எனப்படுகிறது. பருநிலை அடுக்குக்கு (Physical Layer) மேலாக அமைந்துள்ளது. இரண்டு சாதனங்களுக்கிடையே உண்மையில் தகவலைப் பரிமாற்றம் செய்கின்ற மூன்று அடுக்குகளுள் (தரவுத் தொடுப்பு, பிணையம் மற்றும்

*போக்குவரத்து அடுக்குகள்) கீழ் நிலையில் இந்த அடுக்கு அமைந்துள்ளது.*

**data link level :** தரவுத் தொடுப்பு நிலை; தரவு இணைப்புப் படித் தளம்.

**data logging :** தரவாக்கம்; தரவுப் பதிவு : *ஒரு கணினிக்குரிய தரவு களை ஓர் எந்திரம் தானாகவே சேகரிப்பதைக் குறிக்கும் சொல். எடுத்துக்காட்டாக, ஒரு நுண் செய்முறைப்படுத்தியினால் கட்டுப்படுத்தப்படும் ஒரு மைய வெப்பமூட்டும் பொறியமைவு, கட்டிடம் எங்குமுள்ள பல்வேறு அறைகளிலுள்ள வெப்ப உணர்விகளிலிருந்து வரும் தரவு களை திரும்பத் திரும்பப் பதிவு செய்கிறது. இந்தத் தரவுகள் வெப்பமூட்டுவதைக் கட்டுப் படுத்தப் பயன்படுத்தப்படுகிறது.*

**data management :** தரவு நிர் வாகம்; தரவு மேலாண்மை : *கவன் பொருள் அமல்படுத்து தல், தரவு சேமிப்பு மரபுகள், உள்ளீட்டு மற்றும் வெளி யீட்டுச் சாதனங்களை ஒழுங்கு படுத்துதல் ஆகியவற்றுக்கு இட மளிக்கிற ஒரு முறைமையின் பணிகளைக் கூட்டாகக் குறிக் கும் ஒரு பொதுச்சொல். 2. தரவு களை முறைப்படுத்துதல், அட் டவணைப்படுத்துதல், இருக்கு மிடம் அறிதல், பெறுதல், சேமித்தல், மற்றும் பராமரித்தல் ஆகிய பெரும் பணிகளைக் கொண்ட இயக்க முறைமை ஒன்றின் முக்கியப் பணிகள்.*

**data management system :** தரவு மேலாண்மை அமைப்பு ; தரவு நிர்வாக முறைமை : *1. தரவு முறைமைகளுக்குத் தேவைப் படும் தரவுகளைச் சேகரிக்க, முறைப்படுத்த, பராமரிக்கத் தேவைப்படும் நிரல் தொகுப்பு, நடைமுறைகளை வழங்கும் முறைமை. 2. நிறுவனம் ஒன்றிற்குத் தரவு சேமிப்பு ஒன்றினை ஏற்படுத்தவும் பரா மரிக்கவும், தரவு உள்ளிடுகிற, ஒருங்கிணைக்கிற பொறுப் பினை வழங்கும் முறைமை.*

**data manager :** தரவு செயலாக்க மேலாளர்.

**data manipulation :** தரவுகளில் திருத்தம் : *மொழி நிரல்கள் மூலம் தரவு அடிப்படை அல்லது தரவுக் கோப்பு ஒன்றுடன் தரவுகளைச் சேர்த் தல், நீக்குதல், திருத்தியமைத் தல், பெறுதல் ஆகிய பணி களைச் செய்யும் நடைமுறை.*

**data manipulation & analysis :** தரவு கையாள்தல் மற்றும் பகுப் பாய்வு.

**data manipulation instruction :** தரவு கையாள்தல் ஆணை.

**data manipulation language, DML** : **தரவு பராமரிப்பு மொழி; தரவுகளைத் திருத்தும் மொழி** : *ஆங்கில மொழி ஆணைகளைப் பயன்படுத்தி, கணினி ஒன்றின் தரவு சேமிப்பு ஒன்றினை அணுகுதல் மற்றும் ஆய்வு செய்தல் ஆகியவற்றுக்குப் பயனாளர் ஒருவரை அனுமதிக்கும் மொழி.*

**data mart** : **தரவுக் குறுங் கிடங்கு;** *மிகப்பரந்த அளவிலான தரவு சேமிப்பு, தரவு கிடங்கு (Data Warehouse) எனப்படுகிறது. தரவுக் கிடங்கின் ஒரு சுருங்கிய வடிவம் தரவுக் குறுங்கிடங்கு எனப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட பயனாளர் குழுவின் தேவைகளை மட்டும் நிறைவு செய்யும் தரவுகளைக் கொண்டுள்ள கிடங்கு.*

**data matrix** : **தரவுப் படிமம்; தரவு அச்சுவார்ப்புரு** : *தரவுகளை நிரல் நிறைகளில் காட்டும் முறை.*

**data medium** : **தரவு ஊடகம்** : *பொருள் ஒன்றில் அல்லது அதன் மீது தரவுகளைப் பிரதிபலிக்கும் குறிப்பான இயற்பியல் மாறுதல்களுக்கு இடமளிக்கும் பொருள். எடுத்துக்காட்டு : காந்தவட்டு அல்லது காந்த நாடா.*

**data migration** : **தரவு இடப் பெயர்வு** : *1. தரவுத் தளம் போன்ற ஒரு சேமிப்பிடத்திலிருந்து இன்னொன்றுக்கு தரவைப் பெயர்த்தெழுதும் செயல்முறை. பெரும்பாலும் இத்தகைய இடப்பெயர்வு தானாக இயக்கப்படும் நிரல்கள் மூலம் மேற்கொள்ளப்படுகின்றன. இத்தகைய இடப் பெயர்வில் தரவு பெரும்பாலும் ஒருவகைக் கணினி அமைப்பிலிருந்து வேறுவகைக் கணினி அமைப்பிற்கு அனுப்பி வைக்கப்படும். 2. மீத்திறன் கணினிப் (*Super Computer*) பயன்பாடுகளில், அகல் நிலை* (offline)-*யில் ஏராளமான தரவுகளை பதிவுசெய்து அவற்றை வட்டுக் கோப்புகளாய் நிகழ் நிலை* (online) *தகவலாய்க் கிடைக்கச் செய்யும் முறை தரவு இடப்பெயர்வு எனப்படும்.*

**data mining** : **தரவுச் சுரங்கம்; தரவு அகழ்ந்தெடுப்பு** : *தரவுத் தளங்களிலும் மற்றும் அது போன்ற கணினிச் சேம வைப்புகளிலும் வணிக முறையிலான பயனுள்ள தோரணி* (pattern) *களையும், உறவு முறைகளையும், மிக உயர்நிலை புள்ளியியல் நுட்பம் மூலமாகக் கண்டறியும் செயல்முறை.*

**data model** : **தரவு மாதிரி; தரவு படிமம்:** *தரவு வடிவங்களை அல்லது அவ்வடிவங்கள் மீதான நடவடிக்கைகளை விளக்குகிற*

முறையான மொழி. இதனை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று, தரவு விவரணை மொழி; இரண்டு, தரவு திருத்த மொழி.

**data modelling** : தரவு உரு மாதிரி : *தரவு கூறுகளிடையிலான தொடர்புகளை அடையாளங்கண்டு, தரவு உருமாதிரிகளை உருவாக்குவதற்கான ஒரு செய்முறை. ஒரு தரவு உரு மாதிரிக்கான வடிவமைப்பு நெறிமுறைகளை அடையாளங் காணல்.*

**data module** : தரவு தகவமைவு : *முத்திரையிட்ட, அப்புறப்படுத்தத்தக்க வட்டுத் தொகுதியை குறிக்கும் சொல்.*

**data movement time** : தரவு இயக்க நேரம்; தரவு இடப் பெயர்வு நேரம் : *ஒன்றை இடமாற்ற எடுத்துக் கொள்ளப்படும் நேரம் அல்லது ஒரு வட்டு ஒன்றின் வழியில் படிக்கும் அல்லது எழுதும் தலைப்பகுதி முறையாகப் பொருத்தப்பட்டதும் எடுத்துக் கொள்ளும் நேரம்.*

**data name** : தரவுப் பெயர் : *மாறக் கூடியதன் பெயர், தரவு மதிப்பீடு ஒன்றைக் காட்டக் கூடியது. எடுத்துக்காட்டு 3.14159-க்கு* pi *என்று குறிப்பிடப்படுகிறது.*

**data network** : தரவு இணையம் : *தரவுகளை அனுப்புகிற செய்தித் தொடர்பு இணையம்.*

**data, numeric** : எண் வகைத் தரவு.

**data organization** : தரவு அமைப் பாக்கம் : *தரவுகளை அவற்றின் மூல வடிவத்திலிருந்து எந்திரம் உணர்ந்தறியக் கூடிய வடிவத்திற்கு மாற்றுதல்.*

**data origination** : தரவுத் தோற்றம் : *தரவை அதன் ஆதி வடிவிலிருந்து எந்திரம் உணரக் கூடிய வடிவத்துக்கு மாற்றுதல்.*

**data output & presentation** : தரவு வெளியீடு மற்றும் சமர்ப் பித்தல்.

**data packet** : தரவு சிப்பம் : *தரவு வரிசைகளை திறன்மிகு சிப்பங்களாக அனுப்புவதற்கான வழிகள். தவறுகளைக் களைவதற்கான நெறிமுறைகளைக் கொண்டதாக அமையும்.*

**data pen** : தரவுப் பேனா : *பட்டைகள், முகப்புச் சீட்டுகள் ஆகியவற்றில் காந்தமுறையில் குறியீடாகப் பதிவு செய்யப்பட்ட தரவுகளைப் படிப்பதற்கான, கையினால் இயக்கக் கூடிய, ஒரு காந்த நுண்ணாய்வுச் சாதனம்.*

**data phone** : தரவு தொலைபேசி : AT&T *நிறுவனத்தின் வணிக*

இலச்சினை. பெல் முறைமையில் உருவாக்கப்பட்டு வழங்கப்பட்ட தரவு தொகுப்புகளைக் குறிப்பிடப் பயன்படுத்தப்படுகிறது. இவை தொலைபேசி இணைப்பு மூலம் தரவுகளை அனுப்பவும் பெறவும் பயன்படுத்தப்படுகிறது.

**data planning** : தரவு திட்டமிடல் : தரவு ஆதார மேலாண்மையில் கவனம் செலுத்தும் ஒரு கூட்டுத் திட்டமிடல் மற்றும் பகுப்பாய்வுப் பணி. நிறுவனத்தின் தரவு ஆதாரத்திற்காக ஓர் ஒட்டு மொத்தத் தரவு கொள்கையினை வகுப்பதையும், தரவு கட்டமைப்பை உருவாக்குவதையும் இது உள்ளடக்கும்.

**data plotter** : தரவு வரைவு பொறி.

**data point** : தரவு முனை; தரவு புள்ளி : வரைபட அட்டவணையிடும் நோக்கத்துக்காகப் பயன்படுத்தப்படும் எண் மதிப்பீடு. ஒரு எளிமையான நேரட்டு வரைபடத்தில் நேரத்தை எக்ஸ் அச்சில் குறிப்பிடலாம். தூரத்தை ஒய் அச்சில் குறிப்பிடலாம். இரண்டும் வெட்டிக் கொள்ளும் இடம் தரவு மையம் ஆகும்.

**data preparation** : தரவு தயாரிப்பு : தரவுகளை வடிவமைப்பில் திரட்டி, கணினி ஒன்றில் உள்ளிடுவதற்கு உரிய வடிவத்தில் சேமித்தல்.

**data preparation device** : தரவு தயாரிப்புக் கருவி : கணினி ஒன்றினால் வாசிக்கக்கூடியதாக ஊடகம் ஒன்றில் அல்லது வடிவத்தில் தரவுகளைச் சேகரித்து மாற்றும் கருவி.

**data privacy** : தரவு இரகசியம்; தரவு கமுக்கம்; தரவுத் தனிமறைவு.

**datapro** : டேட்டாபுரோ : கணினி ஒன்றின் வன்பொருள் மற்றும் மென்பொருள் சாதனங்கள் தொடர்பான ஆழ்ந்த விவரங்களை வழங்குகிற ஆய்வு மற்றும் வெளியீட்டு நிறுவனம்.

**data processing** : தரவுச் செயலாக்கம் : 1. ஒரு குறிப்பிட்ட நோக்கத்தை நிறைவு செய்ய தரவில் செய்யப்படும் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட பணிகள். 2. கணினி மையம் ஒன்றின் அனைத்துப் பணிகள். 3. தரவுத் தயாரிப்புக் கருவியின் பணிகள். 4. பயனாளருக்குப் பயனுள்ள தரவுகளை வழங்க தரவுகளில் செய்யப்படும் பணிகள்.

**data processing, automatic** : தானியங்கு தரவு செயலாக்கம்.

**data processing centre** : தரவுத் தயாரிப்பு மையம் : தரவுகளைப்

பெறவும் மனிதர்களின் நிரல்களுக்கு ஏற்ப அவற்றை வகைப்படுத்தவும் பின்னர் அதன் முடிவுகளையும் வழங்கத் தேவையான கருவிகளைக் கொண்ட கணினி மையம். தரவு தயாரிப்பு மையம் போன்றது. இதனை நடவடிக்கை மையம் என்றும் கூறுவதுண்டு.

**data processing, commercial :** வணிகத் தரவுச் செயலாக்கம்.

**data processing curriculum :** தரவுத் தயாரிப்புக் கல்வி : பள்ளி அல்லது கல்லூரி ஒன்று வழக்கமாக வழங்கும் வகுப்புக் கல்வி. இக்கல்வி பயன்படு நிரல் தொகுப்புகளைக் கையாளவும், முறைமை ஆய்வாளராகப் பணிபுரியவும், உள்ளீடு நிலையிலான பணிகளைச் செய்யவும் மாணவர்களைப் பயிற்றுவிக்கும் நிறுவனம்.

**data processing cycle :** தரவுத் தயாரிப்புச் சுழல் ; தரவுச் செயலாக்கச் சுழல் ; உள்ளீடு, தயாரிப்பு மற்றும் வெளியீடு ஆகியவை அடங்கிய ஒருங்கிணைந்த பணிகள்.

**data processing department :** தரவுச் செயலாக்கத் துறை.

**data processing, electronic :** மின்னணு தரவுச் செயலாக்கம்.

**data processing management :** தரவுத் தயாரிப்பு நிர்வாகம் : தரவுத் தயாரிப்புப் பணி, அதில் ஈடுபடுவோர், அதற்கான கருவிகளை நிர்வகித்தல், இந் நிர்வாகத்தில் திட்டமிடல், கட்டுப்பாடு, செயல்பாடு ஆகியன. ஏற்கப்பட்ட கோட்பாடுகள் பின்பற்றப்படுவதில் மற்ற நிர்வாகங்களுக்குத் தேவைப்படும் திறனே இதற்கும் தேவைப்படுகிறது.

**data processing manager :** தரவுச் செயலாக்க மேலாளர்.

**data processing system :** தரவுத் தயாரிப்பு முறைமை; தரவுச் செயலாக்க அமைப்பு; தரவுத் தயாரிப்பு இணைப்பு, வன்பொருள் 'மென்' பொருள், உழைப்பவர், தரவுகளை ஏற்றல், திட்டப்படி அதனைத் தயாரித்தல், மற்றும் விரும்பும் முடிவுகளைத் தயாரிப்பதற்கான நடைமுறைகள் ஆகியவற்றின் தொகுப்பு.

**data processing technology :** தரவுத் தயாரிப்பு தொழில் நுணுக்கம்; தரவுச் செயலாக்கத் தொழில் நுட்பம் : தரவுகளைக் கையாளுவதற்கான அறிவியல்.

**data processor :** தரவுத தயாரிப்புக் கருவி : தரவுகளின் மீதான செயல்பாட்டை ஆற்றக் கூடிய கருவி. எடுத்துக்காட்டாக மேசைக் கணக்கிடு கருவி அல்லது எண்ணியல் கணினி.

**data propagator** : தரவு பரப்பி : DB2 மற்றும் IMS/ESA DB தரவு தளங்களிடையே ஒரு நிலைப் பாட்டினை ஏற்படுத்துகிற IBM மொழி. IMS தரவு தளத்தில் தரவு மாற்றப்படுகிறபோது, அது தானாகவே DB2 தரவுத் தளத்திற்கு மாற்றப்படுகிறது.

**data protection** : **தரவுப் பாதுகாப்பு** : தரவுகளின் அழிவு, மாற்றம் அல்லது வெளிப் படலுக்கு வகை செய்யக்கூடிய, விரும்பியோ, விரும்பாமலோ இடம்பெறும் செயல் களிலிருந்து தரவுகளைப் பாது காப்பதற்கான நடவடிக்கைகள்.

**Data Protection Act** : **தரவுப் பாது காப்புச் சட்டம்** : இது நாடாளு மன்றத்தால் இயற்றப்படும் ஒரு சட்டம். மக்கள் பற்றிய கணினி சார்ந்த சொந்தத் தரவுகளை வைத்திருக்கும் அமைவனங்கள், வணிக நிறுவனங்கள், நிலையங் கள் அனைத்தும் அந்த உண்மை யைப் பதிவு செய்து கொள்ள வேண்டும். தங்களைப் பற்றிய கோப்புகளைப் பார்வையிடு வதற்குத் தனிமனிதர்களுக்கு உரிமையுண்டு. காவல் மற்றும் மருத்துவத்துறை பதிவேடு களுக்கு இதிலிருந்து விலக்கு உண்டு. தவறான தரவுகளைக் கொண்ட ஒரு பதிவேட்டினை மாற்றும்படி ஆணையிடப் படலாம்.

**data protection register** : **தரவுக் காப்புப் பதிவேடு.**

**data purification** : **தரவுத் தூய்மையாக்கம்** : தரவுகளின் செல்லும் தன்மையை உறுதிப் படுத்தும் செய்முறை.

**data range properties** : **தரவு எல்லைப் பண்புகள்.**

**data rate** : **தரவு வேக வீதம்** : தரவுகள் அனுப்பப்படும் வேக வீதம். செய்தி வேகம் மூலம் அளவிடுவர். ஒரு விநாடிக்கு இத்தனை துண்மிகள் என்று கணக்கிடப்படும்.

**data, raw** : **செப்பமிலாத் தரவு.**

**data record** : **தரவு ஆவணம்** : ஒரு குறிப்பிட்ட பொருள் தொடர்பான பல்வேறு கூறு களைப்பற்றிய தரவுத் தொகுப்பு, தரவு கோப்பு ஒன்றின் பகுதி.

**data reduction** : **தரவு இறுக்கம்; தரவுக் குறைப்பு** : வகை செய்யப் படாத தரவுகளைப் பயனுள்ள தாகவும் இறுக்கமானதாகவும் எளிமையானதாகவும் மாற்றும் நடைமுறை. இம்முறையில் ஈடுகட்டல், அளவிடல், நெரு டல், நீக்குதல், இறுக்குதல், சீர் செய்தல், வகைப்படுத்துதல்

ஆகிய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன.

**data representation** : தரவு உருவகிப்பு.

**data resource management** : தரவு ஆதார மேலாண்மை : ஓர் அமைவனத்தின் தரவு ஆதாரங்களை மேலாண்மை செய்யும் பணிகள் தொடர்பாகப் பயன்படுத்தப்படும் தரவு பொறியமைவுகள், தொழில் நுட்பம், நிருவாகச் சாதனங்கள் ஆகியவற்றை மேலாண்மை செய்யும் நடவடிக்கை. தரவுத் தள நிருவாகம், தரவு நிருவாகம், தரவு திட்டமிடல் ஆகியவை இதன் மூன்று முக்கிய அமைப்புகள்.

**data scope** : தரவு காட்டி : தரவு காட்சித் திரையைக் கண்காணிக்க உதவும் சிறப்பு காட்சியகக் கருவி. அனுப்பப்படும் தரவுகளின் உள்ளடக்கத்தை அது காட்டுகிறது.

**data security** : தரவுப் பாதுகாப்பு : தற்செயலாகவோ, வேண்டுமென்றோ தரவுகள் அழிந்து விடாமலும், வெளிப்படுத்துதல், திருத்தல் ஆகியவற்றுக்கு ஆட்படாமலும் பாதுகாத்தல். கணினிப் பாதுகாப்பு, வட்டு நூலகம், பதிவு நாடா நூலகம் ஆகியவற்றையும் காண்க.

**data security officer** : தரவுக் காப்பு அலுவலர்.

**data segment** : தரவுக் கூறு : கணிப்பொறியானது எந்தத் தரவுக் குறிப்புகளின் அடிப்படையில் செயற்படுகிறதோ அந்தத் தரவுகளைச் சேமித்து வைக்கிற கணினி நினைவுப் பகுதி.

**data service unit** : தரவுச் சேவை அலகு.

**data set** : தரவுத் தொகுப்பு ; தரவுத் தொகுதி : 1. தரவுத் தொடர்பு வழி ஒன்றின் மூலமாக அனுப்பக்கூடிய வடிவத்துக்கு தரவுகளை அனுப்பும் கருவி. அடுத்த முனையில் அதே போன்ற மற்றொரு கருவி தரவுகளை அதன் பழைய வடிவத்துக்கு மாற்றுகின்றது. அதனால் கணினி அல்லது பிற எந்திரங்களுக்கு அந்தத் தரவுகள் ஏற்புடையவை ஆகின்றன. 2. தொடர்புடைய தரவு வகைகளின் தொகுப்பு, குறிப்பாக தொடர்புடைய ஆவணங்களின் தொகுப்பு, கோப்பு எனப்படும்.

**data set control block** : தரவுத் தொகுதிக் கட்டுப்பாட்டுப் பகுதி : ஒரு வட்டில் சேமித்து வைக்கப்பட்டுள்ள ஒரு தரவுத் தொகுதியின் அல்லது தொகுதிகளின் பெயர். சுருக்க விவரிப்பு, அமைவிடம் ஆகியவற்றைக் கொண்டிருக்கிற பகுதி.

**data set label (DSL) : தரவுத் தொகுதி முகப்புச்சீட்டு (டிஎஸ் எல்) :** *தரவுத்தொகுதியை அடையாளம் காண்பதற்கு அதன் பெயர், வடிவளவு, எழுதப்/படிக்க வசதிகள், சேமிப்பகத்தில் அதன் அமைவிட எல்லைகள் போன்ற விவரங்களைக் கொண்டுள்ள முகப்புச் சீட்டு.*

**data sharing : தரவுப் பகிர்வு :** *கணினி ஒன்றின் தயாரிப்புத் திறன் அல்லது பல முனைகளில் உள்ள கணினி பயன்படுத்துவோர் ஒரு முனையில் உள்ள தரவுகளைப் பெறுவதற்கான திறன்.*

**data sheet : தரவுத் தாள் :** *உள்ளீட்டு மதிப்பீடுகளைத் தட்டச்சு செய்வதற்கு வசதியான ஒரு வடிவில் பதிவு செய்வதற்கு உதவும் சிறப்புப் படிவம்.*

**data sheet view : தரவுத் தாள் தோற்றம்.**

**data signal : தரவுக் குறிப்பு :** *ஒரு வரியில் அல்லது வழியில் செல்லும் பருநிலைத் தரவு (துடிப்புகள் அல்லது அதிர்வுகள் அல்லது மின்விசை அல்லது ஒளி).*

**data sink : தரவு சேமிப்புக் கலன் :** *தரவுகளை அனுப்பும் கருவி ஒன்றின் வழியாக அனுப்பப்படும் சமிக்கைகளை ஏற்கக் கூடிய பதிவுக் கருவி அல்லது எதிர்காலப் பயன்பாட்டுக்காக சேமிக்கும் கருவி.*

**data source : தரவு ஆதாரம் :** *தரவு அனுப்பு கருவி ஒன்றுக்காக குறியீடுகளை உருவாக்கும் திறன் உள்ள கருவி.*

**data station : தரவு நிலையம்.**

**data storage : தரவுச் சேமிப்பகம். தரவு தேக்ககம்.**

**data storage device : தரவு தேக்கக் கருவி; தரவு சேமிப்புக் கருவி :** *ஆயிரக்கணக்கான அல்லது பல இலட்சக்கணக்கான எழுத்துகளை சேமிப்பதற்கான கருவி, மின்காந்த வட்டு, நாடா, கொள்கலன் அல்லது அட்டை.*

**data storage media : தரவு சேமிப்பு ஊடகம்.**

**data storage techniques : தரவு தேக்க நுட்பங்கள்; தரவு சேமிப்பு உத்திகள் :** *தரவு கோப்புகளை சேமிக்க, ஆணைத்தொகுப்பு ஒன்றில் கையாளப்படும் உத்திகள்.*

**data store tier : தரவுச் சேமிப்பு அடுக்கு.**

**data stream : தரவு ஓடை :** *ஒற்றை உள்ளீட்டு/வெளியீட்டுச் செயல் மூலம் தரவு வழி ஒன்றின் மூலமாக அனுப்பப்படும் தொடர் வரிசைத் தரவு.*

**data structure : தரவு அமைப்பு ; தரவு கட்டமைவு :** *தரவு அடிப்*

படை ஒன்றின் கோப்புகளுக்கிடையிலான உறவு வடிவம் மற்றும் ஒவ்வொரு கோப்பிலும் உள்ள தரவு வகைகளுக்கிடையிலான உறவு.

**data switch** : தரவு விசை : ஒரு தொடரை இன்னொரு தொடருக்கு அனுப்புகிற விசைப் பெட்டி. எடுத்துக்காட்டு : பன்முக அச்சடிப்பிகளை ஒரு கணினியுடன் இணைக்க அல்லது பன்முகக் கணினிகளை ஒரே அச்சடிப்பியுடன் இணைக்க இது பயன்படுகிறது. இதனைக் கையாலோ, தானியங்கு விசையினாலோ செய்யலாம்.

**data table** : தரவு அட்டவணை.

**data tablet** : தரவுப் பலகை : வரைபட வெளியீட்டு விசைகளுக்கான கையால் இயக்கும் உள்ளீட்டுக் கருவி.

**data terminal** : தரவு முனையம் : கணினி முறைமை ஒன்றில் தரவுத் தொடர்பு இணைப்பில் தரவுகளை உள்ளிட அல்லது பெற உதவும் முனையம்.

**data terminal equipment** : தரவு முனையச் சாதனங்கள் : ஒரு முனையத்திலிருந்து தரவை அனுப்புவதற்கு உதவுவதற்குத் தேவையான சாதனம். எடுத்துக்காட்டு : தரவு வட்டு, தரவு ஆதாரம்.

**data terminator** : தரவு முடிவுறுத்தி : உட்பாட்டுத் தரவுகள் முடிவுற்று விட்டன என்பதைக் குறித்துக் காட்டும் ஒரு தனி வகைத் தரவு சாதனம். இதனைக் காவல் சாதனம் (Sentinal) அல்லது மோப்பச் சாதனம் (Trailer) என்றும் கூறுவர்.

**data, test** : சோதனைத் தரவு.

**data traffic** : தரவுப் போக்குவரத்து : கணினிப் பிணையம் வழியாக மின்னணுச் செய்திகளையும் தரவுகளையும் பரிமாறிக் கொள்ளுதல். போக்குவரத்தின் அடர்வு அலைக்கற்றையாக அளக்கப்படுகிறது. போக்குவரத்தின் வேகம் ஒரு கால அலகில் எத்தனை துண்மிகள் (பிட்டுகள்) அனுப்பப்படுகிறது என்பதைக் கொண்டு அளக்கப்படுகின்றது.

**data transaction** : தரவுப் பரிமாற்றம்.

**data transfer** : தரவு மாற்றம் : கணினி அமைவுக்குள் தரவுகளை இட மாற்றம் செய்தல். செய்தித் தொடர்பு இணையத்தின் மூலம் இந்த மாற்றம் செய்யப்படுகிறது. தரவுகள் ஆதாரத்தில் தானாக அழிக்கப்படுவதில்லை என்பதால், இடமாற்றம் என்பது உண்மையில் ஒரு படியெடுப்பு பணியேயாகும்.

**data transfer operations** : தரவு செலுத்துச் செயல்முறைகள் ; தரவு அனுப்புகைச் செயல்கள் : தரவுத் தொடர்பு வழியிலோ அல்லது கணினி ஒன்றின் சேமிப்புப் பகுதியிலோ, ஓரிடத்தில் உள்ளதை பிரதி செய்து மற்றொரு இடத்திற்கு மாற்றுதல்.

**data transparency** : தரவு மறைப்பின்மை : தரவுகள் எந்த அமைவிடத்தில் இருந்தாலும் அல்லது அது எதற்குப் பயன்படுவதாக இருந்தாலும், அதனை எளிதில் அணுகுவதற்கான திறம்பாடு.

**data transmission** : தரவு அனுப்புகை; தரவு செலுத்துகை : முறைமை ஒன்றின் ஒரு பகுதியிலிருந்து மற்றொரு பகுதிக்கு, தரவுகளை அனுப்புதல்.

**data transmission, asynchoronous** : நேரச்சீரற்ற தரவு அனுப்பீடு.

**data transmission channels** : தரவு அனுப்பீட்டு வழிகள் : தரவு அனுப்பீட்டு வழிகள் அல்லது 'பெருவழிகள்' என்பவை, ஓர் அமைவிடத்திலிருந்து இன்னோர் அமைவிடத்திற்குத் தரவுகளைக் கொண்டு செல்லப் பயன்படுகின்றன. இவை குறும அலைநீளம், அகல அலைநீளம், குரல் அலைநீளம் என மூன்று வகைப்படும்.

**data transfer rate** : தரவு செலுத்து வீதம் : தரவு அனுப்புகை வீதம் : கணினியின் முக்கிய நினைவிடத்திலிருந்து வட்டுக்கு அல்லது ஒரு கணினியின் நினைவிடத்திலிருந்து மற்றொரு கணினியின் நினைவிடத்துக்குத் தரவுகளை அனுப்பும் வேக வீதம்.

**data type** : தரவு வகை ; தரவு மாதிரி.

**data validation** : தரவு கள வரையறை : தகவல் களங்கள் விரும்பப்படும் பண்புகளுக்கேற்ப அமைவதை உறுதி செய்ய மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகள். பொருத்தமற்ற எழுத்துகள் அல்லது குறிப்பிடப்பட்ட நீளம், அல்லது மதிப்பீடுகள் ஆகியவற்றின் அடிப்படையில் தரவு, களங்கள் சோதனையிடப்படலாம்.

**data value** : தரவு மதிப்பளவுகள்; தரவு மதிப்பீடு : தரவு வகைகளின் பிரதிநிதியாகப் பயன்படும் குறியீடுகளின் தொடர்.

**data verification** : தரவு சரிபார்த்தல் : தரவு ஆதாரங்களில் பதிவு செய்யப்பட்டிருக்கும் தரவுகள் சரியான வகையைச் சார்ந்ததா, சரியான நீளமுடையதா என்பனவற்றைச் சரி பார்த்தல் இன்றியமையாதது. எடுத்துக்காட்டாக,

ஒரு சம்பளப் பட்டியல் தரவு ஆதாரத்தில் ஒரு பணியாளரின் முகவரி அஞ்சல் குறியீடு முக்கியமாகப் பதிவாகியிருக்க வேண்டும். அஞ்சல் குறியீடு இலக்கங்களில் அமைந்திருக்கிறதா, ஆறு இலக்கங்களைக் கொண்டிருக்கிறதா (இந்திய அஞ்சல் குறியீடுகள் ஆறு இலக்கங்கள் கொண்டவை) என்பதைத் தரவு ஆதாரம் சரி பார்த்தல் வேண்டும்.

**data warehouse** : தரவுக் கிடங்கு: ஒரு நிறுவனத்தின் அனைத்துவகைத் தரவுகளும் சேமித்து வைக்கப்பட்டுள்ள மிகப் பெரிய தரவுத் தளம். ஒரு தரவுக் கிடங்கு என்பது பல தரவுத் தளங்களை உள்ளடக்கியதாக இருக்கலாம். ஒரு தரவுக் கிடங்கு, பல்வேறு கணினிகளில் பகிர்ந்து சேமிக்கப்பட்டிருக்க முடியும். வேறு வேறு வடிவங்களில் வேறு வேறு மூலங்களிலிருந்து தரவுக் கிடங்குக்கு தரவு வந்து சேர முடியும். ஆனால், ஒரு வழங்கன் கணினி மூலமாகத் தரவை அணுக இயல வேண்டும். பயனாளருக்குத் தரவுக் கிடங்கை அணுகும் முறை மிகவும் வெளிப்படையானது. மிகஎளிய கட்டளைகள்மூலம் தரவு கிடங்கிலிருந்து தகவலைப் பெறவும் ஆய்வு செய்யவும் முடியும்.

**data word** : தரவுச் சொல் : ஒழுங்கமைக்கப்பட்ட, குறிப்பிட்ட எழுத்துகளின் தொகுப்பு. பொதுவாக முன்பே வரையறுக்கப்பட்ட எண், கணினியின் இணைப்புகளில் சேமிக்கப்பட்டு, தரவுவின் அடிப்படை அலகாக வேறிடத்துக்கு மாற்றப்படுகிறது.

**data word size** : தரவு சொல் நீளம்.

**date** : தேதி; நாள்.

**date expansion** : தேதி விரிவாக்கம்.

**date field** : தேதிப்புலம் ; தேதி வகைப் புலம்.

**date math** : தேதிக் கணக்கு : தேதிகளைக் கொண்டு செய்யப்படும் கணிப்புகள். எடுத்துக்காட்டு : ஜனவரி 30 + 5 : பிப்ரவரி 4.

**date stamping** : தேதி முத்திரை : அன்றைய தேதியை ஓர் ஆவணத்தில் தானாகவே பதியச் செய்யும் முறை. பயன்பாட்டு மென்பொருள் தொகுப்புகள் பலவற்றில் இவ்வசதி உண்டு.

**date time** : நாள்-நேரம்.

**datum** : தரவு உருப்படி : கணினிச் சொல் போன்ற தரவுவின் ஒரு அலகு.

**daughter board : துணைப் பலகை :** *தாய்ப் பலகையுடன் பொருத்தப்படும் இணைப்புப் பலகை.*

**DB : டிபி :** *'டெசிபல்'* (Decibal) *என்பதன் குறும்பெயர். ஒரு செய்தித் தொடர்புக் கம்பியில் அனுப்பீட்டு இழப்பீடுகளை மடக்கை முறையில் அளவிடுவதற்கான அலகு.*

**DB/DC (Data Base / Data Communications) : டிபி/டிசி (தரவுத் தளம் / தரவுத் தொடர்புகள் :** *தரவுத் தளப் பணிகளையும், தரவு தொடர்புப் பணிகளையும் ஆற்றுகிற மென்பொருள்களைக் குறிக்கும் சொல்.*

**DB2 : டிபி2 (தரவுத் தளம்-2) :** *ஒரு பெரிய முதன்மைப் பொறியமைவில் இயங்குகிற ஐபிஎம்* (IBM) *முதன்மைப் பொறியமைவிலிருந்து உருவான தரவுத் தள மேலாண்மைப் பொறியமைவு* (DBMS). *இது, ஐபிஎம்-இன் பெருந்தரவு தள விளைபொருளாகியுள்ள முழுமையான டிபிஎம்எஸ் பொறியமைவு. இது கட்டமைவு வினவு மொழி* (SQL) *இடைமுகப்பு.*

**DB-25-connector : டிபி-25 இணைப்பி :** *25 செருகிகளை அல்லது 25 செருகு இடங்களைக் கொண்ட இணைப்பி, பெரும்பாலும் ஆர்எஸ்-232 சி முகவிடை இணைப்பில் பயன்படுத்தப்படுகிறது.*

**D.base file :** தரவுத் தளக்கோப்பு.

**D.base programme :** தரவுத் தளச் செயல்முறை.

**DBMS : டிபிஎம்எஸ் :** Database Management System *என்பதன் குறும்பெயர். இதற்குத் 'தரவுத் தள நிர்வாக முறைமை' என்பது பொருளாகும்.*

**DC : டிசி :** *1. தரவு மாற்றம்* (Data Convertor). *2. வடிவமாற்றம்* (Design Change). *3. எண்ணியல் கணினி* (Digital Computer). *4. நேர்மின்* (Direct Current). *5. நேர்வட்டம்* (Direct Circle). *6. பட வெளியீட்டு விசைப் பலகை* (Display Console). *ஆகியவற்றின் குறும்பெயர்.*

**DCA : டிசிஏ :** *ஆவண உள்ளடக்கக் கட்டுமானம் என்று பொருள்படும்* (Document Content Architecture) *என்பதன் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஐபிஎம்மின் முறைமைப் பிணையக் கட்டுமானத்தில்* (System Network Architecture - SNA) *பயன்படுத்தப்பட்ட, ஆவணங்களின் வடிவாக்கம் பற்றிய வழிகாட்டு நெறிமுறைகளை இது குறிக்கிறது. வெவ்வேறு வகையான கணினிகளுக்*

கிடையே உரை மட்டும் உள்ள ஆவணங்களைப் பரிமாறிக் கொள்வதை இது சாத்தியமாக்கிறது. டிசிஏ, இருவகையான ஆவண வடிவாக்கங்களை முன் வைக்கிறது. ஒன்றில், வடிவமைப்பில் மாற்றங்கள் செய்ய முடியும் (Revisable Form Text DCA). இன்னொன்றில் அத்தகைய மாறுதல்களைச் செய்ய முடியாது (Final Form Text DCA).

**DCD : டிசிடி :** தரவுச் சுமப்பி அறியப்பட்டது என்று பொருள்படும் Data Carrier Detected என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இரண்டு கணினிகளுக்கிடையேயான நேரியல் தரவுப் பரிமாற்றத்தில் (Serial Communication), ஓர் இணக்கி (Modem), தகவலை அனுப்பத் தயாராயிருக்கிறது என்பதை உணர்த்த, இணக்கியிலிருந்து கணினிக்கு அனுப்பி வைக்கப்படும் சமிக்கை.

**DCE : டிசிஇ :** தரவுத் தொடர்பு சாதனம் என்று பொருள்படும் Data Communication Equipment என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஆர்எஸ்-232-சி நிலை இணைப்பில் இருவகை உண்டு. ஒன்று டிசிஇ. இன்னொன்று, டிடிஇ (DTE-Data Terminal Equipment). டிசிஇ ஓர் இடைநிலை சாதனம். ஒரு டிடிஇயிலிருந்து வரும் உள்ளீட்டை பெறுநருக்கு அனுப்பி வைப்பதற்கு முன்பாக, ஏற்புடைய தகவலாய் மாற்றியமைக்கும். எடுத்துக்காட்டாக ஓர் இணக்கி, டிசிஇ-யாகச் செயல்படுகிறது. டிடிஇ-யாக இருக்கும் கணினியிலுள்ள தரவை இணக்கமான வடிவத்தில் (Analog) மாற்றி, தொலைபேசி இணைப்பு வழியாக அனுப்பி வைக்கிறது.

**decimal arithmatic, floating :** மிதவைப் புள்ளி பதின்மக் கணக்கீடு.

**decimal, coded :** குறிமுறைப் பதின்மம்.

**decimal notation, binary coded :** இருமக் குறியீட்டுப் பதின்மக் குறிமானம்.

**decimal point, actual :** உண்மைப் பதின்மப் புள்ளி.

**decoding :** குறிவிலக்கம்; குறிமொழி மாற்றல்.

**DCOM : டிகாம் :** பகிர்ந்தமை ஆக்கக் கூறு பொருள் மாதிரியம் என்று பொருள்படும் Distributed Component Object Model என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். காம்பொனன்ட் ஆப்ஜெக்ட் மாடல் (COM) என்ற மைக்ரோசாஃப்ட் நிறுவனத் தொழில்நுட்பத்தின் விரிவாக்

கம். விண்டோஸ் அடிப்படையிலான பிணையங்களில் பயன்பாட்டுத் தொகுப்புகளுக்குத் துணை புரியும் ஆக்கக் கூறுகள் தமக்குள்ளே எவ்வாறு தொடர்பு கொள்ள வேண்டும் என்பதை இத்தொழில் நுட்பம் வரையறுக்கிறது. ஒரு குறிப்பிட்ட பயன்பாட்டுத் தொகுப்புக்குத் தேவையான பல்வேறு ஆக்கக் கூறுகள் ஒரு பிணையத்திலுள்ள ஒன்றுக்கு மேற்பட்ட கணினிகளில் பகிர்ந்தமைவதை இத்தொழில் நுட்பம் சாத்தியமாக்குகிறது. பயனாளரின் பார்வையில் அத்தொகுப்பு அனைத்து ஆக்கக்கூறுகளும் ஒருங்கிணைக்கப்பட்ட ஒட்டுமொத்தப் பயன்பாடாகவே தோன்றும்.

**DCTL : டிசிடிஎல் :** DIrect Coupled Transister Logic என்பதன் குறும்பெயர். நேரடி இணைப்பு மின்மப் பெருக்கி (டிரான்சிஸ்டர்) தருக்க முறை என்பது இதன் பொருள்.

**DDC : டிடிசி :** காட்சித் தரவுத் தடம் என்று பொருள்படும் Display Data Channel என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். கணினியின் வரைகலை காட்சித்திரையை மென்பொருள் மூலம் கட்டுப்படுத்துவதை இயல்விக்கிற வீஸா (VESA) தரநிர்ணயம். டிடிசி-யின் கீழ், காட்சித் திரைக்குரிய பண்பியல்புகள் வரைகலைத் துணை முறைமைக்கு உணர்த்தப்படுகின்றன. அதனடிப்படையில் திரைக்காட்சி வடிவமைக்கப்படுகிறது. அதுமட்டுமின்றி, கணினிக்கும் காட்சித் திரைக்குமிடையே ஓர் இருவழி தொடர்புத் தடம் உருவாக்கப்படுகிறது.

**DDD : டிடிடி :** நேரடித் தொலைவு அழைப்பு Direct Distance Dialing என்பதன் குறும்பெயர். நேரடித் தொலைதூர அழைப்பு என்பதாகும். தொலைபேசி இயக்குபவரின் உதவியில்லாமல் இவ்வசதியைப் பயன்படுத்தி வெகு தொலைவில் உள்ள தொலைபேசியுடன் தொடர்பு கொள்ள இயலும். தரவுத் தொலைத் தொடர்புக்கும் இவ்வசதி பயன்படுகிறது.

**DDE : டிடிஇ :** இயங்குநிலைத் தரவு பரிமாற்றம் எனப் பொருள்படும் Dynamic Data Exchange என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். மைக்ரோசாஃப்ட் விண்டோஸ் மற்றும் ஓஎஸ்/2 ஆகியவற்றில் ஒன்றுக்கு மேற்பட்ட பயன்பாட்டுத் தொகுப்புகள் தமக்கிடையே தரவுப் பரிமாற்றம் செய்துகொள்ளும் முறை. விண்டோஸ் 3.1-ல் ஓஎல்இ (OLE-Object Linking and Embedding)

என்னும் செயல்முறை மூலம் இத்தகைய தரவுப் பரிமாற்றம் நடைபெற்றது. விண்டோஸ் 95/98/என்டி ஆகியவற்றில் ஓஎல்இ-யுடன் ஆக்டிவ்எக்ஸ் என்னும் தொழில்நுட்பமும் பரவலாகப் பயன்படுத்தப்படுகிறது.

**DDL : டிடிஎல் ; தரவு விவரிப்பு மொழி** : Data Definition Language என்பதன் குறும்பெயர். தரவு அடிப்படை ஒன்றில் தரவு வடிவங்களை வெளியிடுவதற்கான மொழி.

**.de : .டிஇ** : ஜெர்மனி நாட்டில் இயங்கும் இணைய தளத்தைக் குறிக்கும் புவிசார் பெருங்களப் பெயர்.

**dead halt : முழு நிறுத்தம்** : இச்சூழ்நிலையில் நிறுத்தப்பட்ட மையத்துக்கு முறைமையினால் திரும்ப வர முடிவதில்லை.

**dead key : வெற்று விசை; நிலைத்த விசை; நகராவிசை; மரித்த விசை** : விசைப்பலகையில் இன்னொரு விசையுடன் இணைந்து ஓர் எழுத்தை உருவாக்கும் விசைக்கு இப்பெயர். இந்த விசையைத் தனித்து இயக்கினால் பொருள் இல்லை. பொதுவாக விசைப் பலகையில் ஓர் எழுத்து விசையை அழுத்தினால் அவ்வெழுத்து திரையில் பதிவதுடன், சுட்டுக்குறி அடுத்த இடத்துக்கு நகரும். ஆனால், பெரும்பாலும் வெற்று விசையை அழுத்தும்போது, அடுத்த எழுத்துக்கு நகர்வதில்லை. திரையில் எவ்வித எழுத்தும் தோன்றுவதில்லை. தமிழில் தட்டச்சு செய்யும் போது ஒரு மெய்யெழுத்தைப் பதிய முதலில் புள்ளியையும் பின் உயிர்மெய் எழுத்தையும் அழுத்தும் முறையில் புள்ளிக்குரிய விசை நகரா விசையாகச் செயல்படும். புள்ளி வைத்தபின் அதன் கீழேயே உயிர் மெய்யைப் போடவேண்டுமல்லவா?

**dead letter box : சேராக் கடிதப் பெட்டி** : செய்திகளின் நடைமுறைக்கான முறைமைகளில் வழங்கமுடியாத செய்திகளைக் கைப்பற்றுவதற்கான கோப்பு.

**dead lock : முட்டுக்கட்டை ; முடக்க நிலை ; தேக்க நிலை** : ஆதாரம் ஒன்றிலிருந்து தரவுகளைப் பெறுவதற்கு இடையூறாக இருக்கும், தீர்வு காணப் படாத முட்டுக்கட்டை.

**deadly embrace : தேக்கநிலை மேவல்** : ஒரு செய்முறையில் இரு ஆக்கக்கூறுகள் ஒன்றின் பதிலை ஒன்று எதிர்பார்த்து ஒரு தேக்கம் ஏற்பட்டிருக்கும் நிலை. எடுத்துக்காட்டு: ஓர் இணையத்தில், ஒரு பயனாளர் 'A' என்ற

கோப்பில் பணிபுரிந்துகொண்டு, 'B' என்ற கோப்பினை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார். ஆனால், மற்றொரு பயனாளர் 'B' கோப்பில் பணியாற்றிக் கொண்டு 'A' கோப்பை எதிர் பார்க்கிறார் என்றால் இருவரும் ஒருவரையொருவர் எதிர்பார்க்கின்றனர். இதனால், இருவர் பணியும் தேங்கி நிற்கிறது.

**deallocate : விடுவி :** ஒரு தரவை நினைவகத்தில் பதிவு செய்வதற்காக ஏற்கனவே ஒதுக்கி வைத்த நினைவக இருப்பிடத்தை விடுவித்தல்.

**deallocation : விடுவிப்பு :** இனி மேலும் தேவைப்படாத ஆதாரம் ஒன்றை நிரல் ஒன்றின் ஆதாரத்திலிருந்து விடுவித்தல். ஒதுக்கீடு என்பதற்கு எதிர் நிலையானது.

**deamon : ஏவலாளி (பணி யேற்கும் நிரல்)**

**d-BASE : தரவுத் தள நிரல் தொகுப்பு.** ஆஸ்டன் டேட் (Ashton Tate) என்ற நிறுவனம் உருவாக்கிய தொகுப்பு.

**debit card : பற்று அட்டை :** கடை ஒன்றில் பொருள்களை வாங்கும் ஒருவர், பொருள்களுக்கான விலையைச் செலுத்தப் பயன்படுத்தும் வங்கி ஒன்றின் அட்டை. (கடைக்காரரும் அந்தக் குறிப்பிட்ட வங்கியில் கணக்கு வைத்திருப்பார்).

**deblock : ஆவணப்பிரிப்பு :** ஒரு தொகுதியிலிருந்து ஆவணங்களைப் பிரித்தெடுத்தல்.

**deblocking : தொகுப்பிலிருந்து பகுத்தல் :** ஒரு தொகுப்பு அல்லது தருக்கவியல் ஆவணங்களின் குழு ஒன்றிலிருந்து தருக்கவியல் ஆவணம் ஒன்றைப் பிரித்தெடுத்தல்.

**debounce : மறுபதிவு தவிர்ப்பு :** கண்டுபிடிக்கப்படுவதைத் தவிர்க்க ஒரு விசை அல்லது இணைப்புக் குமிழ் அழிவு தரும் வகையில் மூடப்படுவதைத் தவிர்த்தல். ஒரு மின்குமிழின் இணைப்புகள் தடைப்பட கால அவகாசம் அளிப்பது ஒரு வகை வழியாகும்.

**debug : தவறு நீக்குதல்;தவறு நீக்கி ; பிழை நீக்கி :** நிரல் தொகுப்பு ஒன்றில் பிழைகள் அனைத்தையும் கண்டுபிடித்தல், இருக்குமிடத்தை உறுதி செய்தல், மற்றும் அவற்றை நீக்குதல். கணினியின் பிழையான இயக்கத்தைச் சீர் செய்தல்.

**debugger : தவறு கண்டறி சாதனம்; பிழை நீக்கி :** ஒரு செயல்முறையிலுள்ள தவற்றைக் கண்டறிய உதவுகிற

மென்சாதனம். இது, ஒரு குறிப்பிட்ட அறிக்கையில் செயல்முறையை நிறுத்தவும், ஒரே சமயத்தில் அதன் வழியே ஓர் அறிக்கையைச் செலுத்தவும் பொறியமைவுத் தரவுகளையும், செயல்முறை மாறி மதிப்புருக்களையும் பார்க்க அனுமதிக்கிறது. நவீன தவறு கண்டறி சாதனங்கள் ஆதார மற்றும் இலக்குக் குறியீடுகளை இணைக்கிறது. இதனால், செயல்முறைப்படுத்துபவர், அறிவுறுத்தங்கள் நிறைவேற்றப் பட்டுக் கொண்டிருக்கும்போதே ஆதாரச் செயல்முறையை வருக்க முடிகிறது.

**debugging** : பிழைநீக்கம் ; தவறு போக்கல் : *தவறு கண்டறிதல்.*

**debugging aids** : பிழை நீக்க உதவிகள் : *கணினியின் வழக்கமான சோதனை நடவடிக்கைகள்.*

**DEC** : டிஇசி : Digital Equipment Corporation *என்பதன் குறும்பெயர். எண்ணியல் துணைக் கருவி அமைவனமாகும்.*

**decatenate** : தொடர் பிரித்தல் : *ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட பகுதிகளாகப் பிரித்தல். சேர்த்தலுக்கு எதிர்நிலையானது.*

**decay** : சிதைவு : *குறியீடு அல்லது மின்னேற்றத்தின் வலிமை குறைதல்.*

**decay time**: சரிசெய்யும் நேரம்.

**deceleration time**: ஒடுக்க நேரம்.

**decending sort** : இறங்குமுக வரிசைப்படுத்தல் : *தரவுகளை மேலிருந்து கீழாக இறங்குமுக வரிசையில் வகைப்படுத்தல்.*

**decentralized computer system** : மையமிலா கணினிப் பொறியமைவு: *கணினியும், சேமிப்புச் சாதனங்களும் ஒரே அமைவிடத்தில் அமைந்து, கணினியை அணுகும் சாதனங்கள் வேறிடங்களில் அமைந்திருக்கிற பொறியமைவு.*

**decentralized processing** : மையமற்று செயல்முறைப்படுத்துதல் : *வெவ்வேறு அமைவிடங்களில் அமைந்துள்ள கணினியமைவுகள், கணினியமைவுகளிடையே தரவுகளை அனுப்பலாமென்றாலும், இது அன்றாடச் செய்தித் தொடர்புகளைக் கட்டுப்படுத்துகிறது. இது பகிர்மானச் செய்முறைப்படுத்துதல், மையச் செய்முறைப்படுத்துதல் ஆகியவற்றிலிருந்து மாறுபட்டது.*

**dechotomissing research** : இருகிளைத் தேடல்.

**decibel** : டெசிபல் : *ஒரு குறியீட்டின் குரல் முனைப்பினை அல்லது வலிமையினை அளவிடும் அலகு. மனிதர்கள் 10 டிபி முதல் 140 டிபி வரை*

*யிலான குரல் முனைப்பினைக் கேட்க முடிகிறது. சந்தடி மிகுந்த ஒரு தொழிற்சாலையில் 90 டிபி ஓசை எழுகிறது. இடி முழக்கத்தில் 110 டிபி ஓசை உண்டாகிறது. 120 டிபி அளவுக்கு மேற்பட்ட ஓசையினால் காது வலி உண்டாகும்.*

**decimal : பதின்மம் ; தசமம் ; பதின்மானம் :** *பதின்மக் குறிமானத்தில் பயன்படுத்தப்படும் 0 முதல் 9 வரையிலான இலக்கம். பதின்மக் குறிமானத்தைக் (ஆதாரம் 10) கையாளும் போது, '0' முதல் '9' வரையிலான (பத்துக்கு ஒன்று குறைவு) இலக்கங்கள் பயன்படுத்தப்படுகின்றன. அதே போன்று '6' -ஐ ஆதாரமாகக் கொண்ட குறிமானத்தில் '0' முதல் '5' முதல் வரையிலான (ஆறைவிட ஒன்று குறைந்த) எண்களையும், ஈரிலக்கக் குறிமானத்தில் (ஆதாரம் 1) 0 முதல் 1 வரை மட்டும் பயன்படுத்துகிறோம்.*

**decimal code : பதின்மக் குறியீடு ; தசமக் குறியீடு :** *தனியாக வேறொரு எண்முறைமையில் பதின்ம எண்களைக் குறிப்பிடும் முறை.*

**decimal digit : பதின்ம இலக்கம்; தசம இலக்கம் :** *பதின்ம எண் முறைமையில் உள்ள ஒரு எண். பதின்மமுறையின் அடிப்படை எண் 10. கீழ்க்காணும் குறியீடுகள் பயன்படுத்தப்படுகின்றன. 0,1,2,3,4,5,6,7,8 மற்றும் 9.*

**decimal number : பதின்ம எண்; தசம எண் :** *பொதுவாக ஒற்றை இலக்கத்துக்கு மேற்பட்ட எண், அதன் அளவு 10-ஐ அடிப்படையாகக் கொண்ட எண்களால் குறிக்கப்படுகிறது.*

**decimal numbering : பதின்ம இலக்கமிடல் :** *எண்ணுவதற்கு அடிப்படையாக ஒரு 10 இலக்கச் சுழற்சியைப் பயன்படுத்துகிற எண்மானமுறை. இதில் பயன்படுத்தப்படும் இலக்கங்கள் 0 1 2 3 4 5 6 7 8 9.*

**decimal point : பதின்மப் புள்ளி; தசமப் புள்ளி :** *பதின்மப்புள்ளி என்பது எண்ணும் பதின்ம எண்களும் கலந்த ஒன்றில் முழு எண்களை பதின்ம எண்களிலிருந்து பிரிக்கிறது. 741.12 என்ற பதின்ம எண்ணில் உள்ள பதின்மப் புள்ளி 741-ஐயும் 12-ஐயும் பிரிக்கிறது.*

**decimal system : பதின்ம முறை; தசம முறை :** *அடிப்படை 10 எனக் கொள்ளும் எண் முறைமையாகும்.*

**decimal to binary conversion : பதின்ம-இருமமுறை-மாற்றம்;**

பதின்ம முறைமையிலிருந்து இரட்டை இலக்க எண்களாக மாற்றுதல் : *பதின்ம முறைமையில் எழுதப்பட்ட எண்களை இருமமுறைக்குச் சமமான எண்களாக மாற்றுதல்.*

$$44_{10} = 1 \times 2^5 + 0 \times 2^4 + 1 \times 2^3 + 1 \times 2^2 + 0 \times 2^1 + 0 2^0 = 101100_2$$

**decimal to hexadecimal conversion** : பதின்ம முறையிலிருந்து பதினாறெண் முறைக்கு மாற்றுதல் : *10-ஐ அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட ஒரு எண்ணை 16-ஐ அடிப்படையாகக் கொண்ட எண் முறைமையில் எழுதுதல்.*

**decimal to octal conversion** : பதின்ம-எண்ம முறை மாற்றம்; பதின்ம முறையிலிருந்து எட்டை அடிப்படையாகக் கொண்ட முறைக்கு மாற்றுதல் : *பத்தை அடிப்படையாகக் கொண்ட பதின்ம முறையில் எழுதப்பட்ட எண் ஒன்றை எட்டை அடிப்படையாகக் கொண்ட முறையில் சமமான எண்ணுக்கு மாற்றுதல்.*

**decision** : தீர்வு : *நினைவகத்தில் உள்ள தரவுகளுக்கிடையிலும், பதிவேட்டில் உள்ள தரவுகளுக்கிடையிலும் ஒரு வகையான உறவு முறை உள்ளது என்பதைத் தீர்மானிக்கும் கணினிச் செயல். மாற்றுவழிகளுக்கு மாற்றுவதற்கான செயல், எதிர்கால நடவடிக்கையை உறுதி செய்தல்.*

**decision box** : தீர்வுப் பேழை : *தொடர் வரிசை வரைபடங்களில் பயன்படுத்தப்படும் சாய்சதுர வடிவக் குறியீடு. இது, ஒரு முடிவு தேவைப்படும்போது செயல்முறையில் ஒரு புள்ளியைச் சுட்டிக் காட்டுகிறது.*




**decision instruction** : முடிவு காணும் கட்டளை : *நிரல் தொகுப்பில் உள்ள ஒரு பகுதியைத் தேர்வு செய்வதைப் பாதிக்கும் கட்டளை. எடுத்துக்காட்டு : நிபந்தனைத் தாவல் ஆணை.*

**decision, logical** : தருக்கத் தீர்வு; தருக்கமுறை முடிவு.

**decision making** : தீர்வு செய்தல் : *பல விருப்பத் தேர்வுகளிலிருந்து ஒன்றைத் தேர்ந்தெடுத்தல். மனிதனும் எந்திரமும் எடுக்கும் முடிவுகளில் முறையான*

சமநிலை இருப்பது பொறி யமைவின் வடிவமைப்பில் முக் கியமான அங்கமாகும். செயல் முறைப்படுத்தும் நோக்கில் இருவழிகளில் முடிவெடுக்கப் படுகிறது. இது, என்றும் மாறாத விதிகள் மற்றும் நிபந் தனைகளின் தொகுதி. இன் னொன்று, கண்டுணர்வு முறை. இதில், விதிகள் அவ்வப்போது நிலைமைக்கேற்ப மாறுதலடை யும். கண்டுணர்வு முறை, செயற்கை நுண்ணறிவு, (AI) பொறியமைவுகளில் பயன் படுத்தப்படுகிறது.

**decision making process** : முடிவெடுக்கும் செய்முறை : ஒரு குறிப்பிட்ட நடவடிக்கைப் போக்கினைத் தேர்ந்தெடுப் பதில் ஏற்படும் அறிவுத் திறன், வடிவமைப்பு, தேர்வு நட வடிக்கைச் செய்முறை.

**decision structure** : தீர்மான அமைப்பு: தேர்வு அமைப்பு போன்றது.

**decision support** : தீர்மான உதவி.

**decision support system (DSS)** : தீர்மானிக்க உதவும் பொறி யமைவு (டிஎஸ்எஸ்) : மற்றப் பொறியமைவுகளிலிருந்து இன்றியமையாத தரவுகளை எடுத்துக்கொண்டு, கட்டமை வற்ற முடிவுகளை எடுப்பதற்கு அந்தத் தரவுகளைப் பயன் படுத்த மேலாளர்களுக்கு உதவு கிற ஒரு மேலாண்மைத் தரவு பொறியமைவுப் பிரிவினைக் குறிக்கும் ஒரு பொதுவான சொல்.

**decision symbol** : முடிவுக் குறி யீடு ; முடிவு காண் குறியீடு : ஒரு தேர்வினைச் செய்வதற்குத் தருக்கமுறை பயன்படுத்தப்படு கிறது. ஒரு செய்முறையினைக் குறிக்கப் பயன்படுத்தப்படும். இணைகர வடிவம் உள்ளீடு-வெளியீடுகளுக்குப் பயன் படுத்தப்படுகிறது. சாய்சதுர வடிவத் தொடர்வரிசை வரை படக் குறியீடு.

**decision table** : முடிவுகாண் அட்டவணை : சிக்கல் ஒன்றை விளக்கும்பொழுது தோன்றும் அனைத்து நிலைமைகளையும் அவற்றுக்கான நடவடிக்கை களையும் வரிசைப்படுத்தும் அட்டவணை. சில நேரத்தில் நடவடிக்கை ஒழுங்குமுறைப் பட்டியலுக்குப்பதிலாகப் பயன் படுத்தப்படுகிறது.

**decision theory** : முடிவுகாண் கோட்பாடு : ஒன்றுக்கு மேற் பட்ட பல இயலக்கூடிய மாற்று களிடையே ஒன்றைத் தேர்வு செய்யும் முறையை விவரிக்க வும், அதனை அறிவுபூர்வ

மானதாக ஆக்கவும் உருவாக்கப் பட்ட உத்திகள் மற்றும் கொள் கைகளின் விரிவான வரிசை.

**decision tree** : முடிவுகாண் மரம்: எந்தவொரு சூழ்நிலையிலும் உள்ள மாற்றுகளை கூறும் படவிளக்கம்.

**deck** : தொகுப்பு : துளையிடப் பட்ட அட்டைகளின் தொகுப்பு.

**declaration** : அறிவிக்கை : செயல்முறையிலும் அதன் வகையிலும் பயன்படுத்தப்பட விருக்கும் மாறியல் மதிப்புருக் களின் (variable) மென் சாதனம் / தொகுப்பி / மொழி பெயர்ப்பி போன்றவற்றை செயல்முறைப் படுத்துபவர், அறிவிக்கை செய்ய வேண்டியிருக்குமிடத்து, சில செயல்முறைப்படுத்தும் மொழிகளில் பயன்படுத்தப் படும் உத்தி.

**declaration statement** : அறி விப்பு அறிக்கை : நிரல் தொகுப் பின் மற்றக் கூறுகளின் தன் மையை விளக்கும் நிரல் தொகுப்பு ஒன்றின் பகுதி அல்லது வன்பொருள் ஒன்றின் சில பகுதிகளை சிறப்பான பயன்பாட்டுக்காக ஒதுக்கும் நிரல் தொகுப்புப் பகுதி.

**declaration time** : நிறுத்த நேரம் : நாடா ஒன்றிலிருந்து தரவு ஒன்றின் கடைப்பகுதியை படித்த அல்லது பதிவு செய்த பிறகு அதனை நிறுத்தத் தேவை யான நேரம்.

**declarative knowledge** : அறி விப்பு அறிவு : பொருள்கள் பற்றியும், நிகழ்வுகள் குறித்தும், அவை ஒன்றுக்கொன்று எவ் வாறு தொடர்புடையன என்பது பற்றியும் உண்மைகளை அறிந்து கொள்வதன் மூலம் கற்றுக் கொள்ளுதல்.

**declarative language** : அறிவிப்பு மொழி : ஒரு பணியைச் செய்து முடிப்பதற்குக் கணினிக்குத் தேவைப்படும் துல்லியமான நடைமுறையைக் குறித்துரைப் பதிலிருந்து செயல் வரை வாளரை விடுவிக்கும் ஒரு செயல்வரைவு மொழி. பதிலாக, செயல்முறைப்படுத்துபவர், தான் என்ன செய்ய விரும்பு கிறார் என்பதைச் செயல் வரைவுக்குத் தெரிவிக்கிறார்.

**decode** : குறி மொழி மாற்றம் ; குறிமுறை நீக்கம் : குறியீடு களினால் கூறப்பட்ட தரவு ஒன்றை மொழி மாற்றம் செய் தல் அல்லது உறுதி செய்தல், Encode என்ற சொல்லுக்கு எதிர்நிலையானது.

**decoder** : குறி மொழி மாற்றி; குறி முறை நீக்கி; பொருள் உணர்த்தும் சாதனம் : 1. பொருள்

உணர்த்தும் சாதனம். 2. தரப்படும் உள்ளீட்டுச் சமிக்கைகளுக்கு ஏற்ப ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட வெளியீட்டு வழிகளைத் தேர்வு செய்யும் விசைகளின் அடித்தளப் பலகை.

**decollate : தாள் பிரித்தல் :** தொடர் படிவங்களின் பிரதிகளை வரிசையாகச் சேர்த்து அவற்றுக்கிடையிலான கரித் தாள்களை அகற்றுதல்.

**decompiler : பிரிப்பி :** எந்திர மொழியை ஓர் உயர்நிலை ஆதார மொழியாக மாற்றுகிற செயல்முறை. இதன் மூலம் கிடைக்கும் குறியீடு புரிந்து கொள்வதற்குக் கடினமானதாக இருக்கக்கூடும். ஏனென்றால், மாறிலி மதிப்புருக்களும், வாலாயங்களும் பொதுவாக A0001, A0002 போன்ற பெயர்களில் இருக்கும்.

**decompress : தளர்த்துதல் :** திரட்சியாக்கம் செய்த தரவுகளை அது முதலிலிருந்த வடிவளவுக்கு மீண்டும் தளர்த்திக் கொண்டுவருதல்.

**decrement : குறைவு ; கீழிறக்கு; குறைப்பு :** மதிப்பீடு அல்லது மாறக்கூடிய ஒன்று குறைக்கப்பட்டிருக்கும் அளவு. Increment என்பதற்கு எதிர் நிலையானது.

**decryption : குறியீடுமாற்றம் :** குறியீடுகளினால் தரப்பட்ட செய்தி ஒன்றிலிருந்து பொருள் உள்ள ஆதி செய்தியை உருவாக்குதல் அல்லது தெளிவான உரைப்படுத்துதல். குறியீட்டுக்கு நிலையானது.

**DECUS : இலக்கக் கருவிக் கணினி :** Digital Eqipment Computer Users Society என்பதன் குறும்பெயர். இலக்கக் கருவிக் கணினியைப் பயன்படுத்துவோர் குழு, அக்குழுவின் நோக்கம் இலக்கக் கருவிக் கணினி தொடர்பான கருத்துகளையும் தரவுகளையும் பரிமாறிக் கொள்வதாகும்.

**dedicated : தனிப்பயனான ; ஒதுக்கப்பட்ட :** தொகுப்பாணைக் கருவிகள் தொடர்பான அல்லது சிறப்பான பயன்பாட்டுக்காகத் தயாரிக்கப்பட்ட அல்லது ஒதுக்கப்பட்ட நடைமுறைகள்.

**dedicated channel : ஒருநோக்க வழி :** ஒரே நோக்கத்திற்காகப் பயன்படுத்தப்படும் கணினி வழி அல்லது செய்தித் தொடர்பு வழி.

**dedicated chip : தனிப்பயன் சிப்பு ; ஒரு நோக்கச் சிப்பு :** ஒரு பணியை மட்டுமே செய்கிற ஒரு சிப்பு. எடுத்துக்காட்டு : நினைவுப் பதிப்பான் சிப்பு.

**dedicated computer : தனிப் பயன் கணினி ; ஒதுக்கப்பட்ட கணினி :** ஒரு குறிப்பிட்ட

பணிக்காக ஒதுக்கப்பட்ட கணினி. வடிவத்தில் மட்டும் இந்த ஒதுக்கீடு இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. சிறப்புப் பயன் கணினியுடன் ஒப்பிடவும்.

**dedicated device : தனிப்பயன் கருவி ; ஒதுக்கப்பட்ட கருவி :** ஒரு குறிப்பிட்ட வேலைக்கென வடிவமைக்கப்பட்ட கருவி. மற்ற பணிகளுக்காக அதில் ஆணையிட முடியாது.

**dedicated lines : தனிப்பயன் தொலை பேசி இணைப்புகள் ; ஒதுக்கீடு செய்யப்பட்ட தொலை பேசி இணைப்புகள் :** தனிப் பட்ட ஒருவருக்கோ, ஒரு குழு வினருக்கோ தொலைத்தரவு தொடர்புக்காக தனிப்பட்ட முறையில் குத்தகை முறையில் ஒதுக்கீடு செய்யப்பட்ட தொலைபேசி இணைப்புகள். இத்தகைய இணைப்புகளுக்கு ஒரு குறிப்பிட்ட கட்டணம் செலுத்தப்படுகிறது. பொது வான இணைப்புகளுக்கு ஒரு நிமிடத்திற்கு என்று கணக் கிட்டுக் கட்டணம் வசூலிப்பது போல் கட்டணம் வசூலிக்கப் படுவதில்லை.

**dedicated service : அர்ப் பணிப்புப் பணி ; ஒரு நோக்கப் பணி :** மற்றப் பயன்படுத்து வோர் அல்லது அமைவனங்கள் பகிர்ந்து கொள்ளாத பணி.

**dedicated system : தனிப் பயன் முறைமை ; ஒதுக்கப்பட்ட முறைமை:** ஒரே ஒரு பணிக்காக ஒதுக்கப்பட்ட கணினியை அடிப்படையாகக் கொண்ட கருவி. எடுத்துக்காட்டு : சொற் களை வகைப்படுத்துதல். மற்ற பணிகளைவிட எதற்காக வடி வமைக்கப்பட்டதோ அதற்காக அதனைப் பயன்படுத்துவது எளிது. பொதுவான நோக்கங் களுக்கான முறைமைகள் அதிக மாக வளைந்து கொடுக்கக் கூடியவை.

**dedicated word processor : தனிப்பயன் சொல் தொகுப்பி ; ஒதுக்கப்பட்ட சொல் வகை செய் கருவி :** இக்கருவியின் வன் பொருள், சொற்களை வகை செய்வதற்காக வடிவமைக்கப் பட்டதாகும். இதன் விசைகள் சிறப்பான பணிகளுக்கு ஒதுக்கப்பட்டு, நிரல்கள் அதன் மேல் குறிப்பிடப்பட்டிருக்கும். எடுத்துக்காட்டாகச் சொற்களை நீக்கு, வாக்கியத்தை நீக்கு, அல்லது இடையில் சேர் என்று குறிப்பிடப்பட்டிருக்கும்.

***de facto* standard : நடைமுறைத் தர அளவு :** போட்டியில்லாமல் பரவலாகப் பயன்படுத்தப்பட்டு வந்தாலும், தர நிர்ணய அமை வனங்களினால் அதிகார முறை யில் தரநிலை வாய்ந்ததாக

அறிவிக்கப்படாத ஒரு செயல் முறைப்படுத்தும் மொழி, பொருள், வடிவமைப்பு அல்லது செயல்முறை.

**default** : முன்னிருப்பு ; கொடா நிலை: முன்னரே தீர்மானித்து வைக்கப்பட்டது, தொடக்க நிலையில் முன் குறித்து, பயனாளரின் தலையீடு இன்றி தன்னியல்பாய் இருப்பது. நிரல் தொகுப்பு அல்லது பயனாளரினால் குறிப்பான விருப்பம் எதுவும் தரப்படாத நிலையில் முறைமை அல்லது மொழி மாற்றுவோரினால் தானாக மேற் கொள்ளப்படும் அனுமானம்.

**default data** : முன்னிருப்புத் தரவு குறிப்பு ; தன்னியல்பான தரவு : விசைப்பலகை சாவிப் பதிவு அழுத்தங்களைக் குறைத்து, கணினி பயன்படுத்து பவரின் ஆக்கத்திறனை அதி கரிப்பதற்கு மென்பொருளால் தானாகவே அளிக்கப்படும் மதிப்புருக்கள். எனினும், தேவைப்படுமானால் தன்னியல் பான தகவல்களுக்குப் பதி லாகப் புதிய மதிப்புருக்களைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

**default directory** : முன்னிருப்பு விவரக் குறிப்பேடு : ஒரு வட்டு விவரக் குறிப்பேடு. இதில், வெளிப்படையான விவரக் குறிப்பேட்டுக் குறிப்பீடு இருந் தாலன்றி, கணினி பொதுவாகச் செயல்பாடுகளை நிறைவேற்று கிறது.

**default drive** : முன்குறித்த வட்டி யக்கி : பயன்படுத்துவோரினால் குறிப்பான இயக்கி எண் தரப் படாவிட்டால் முறைமை ஒதுக்கித் தரும் வட்டு இயக்கி.

**default font** : முன்குறித்த எழுத்து முகப்பு : பயனாள ரினால் வேறெதுவும் குறித் துரைக்கப்பட்டிராவிடில், அச் சடிப்பதற்காகப் பயன்படுத்தப் படும் அச்செழுத்து முகப்பு மற்றும் வடிவளவு.

**default setting** : தன்னியல்பு அடைவு : பயன்படுத்துபவர் வேறுவகையில் குறித்துரைத் தாலன்றி, ஒரு செயல்முறை யினால் தானாகவே பயன் படுத்தப்படும் அடைவு.

**default value** : முன்னிருப்பு மதிப்பீடு : தயாரிப்பாளரால் ஒரு கருவி அல்லது நிரல் தொகுப் புக்கு தரப்படும் மதிப்பு. பொது வாக நிரல் தொகுப்பு ஒன்றில் தொடக்கநிலையில் உள்ள பொது வான பாதுகாப்பான மதிப்பு.

**deferred address** : தாமத முகவரி; ஒத்திவைக்கப்பட்ட முகவரி ; மறைமுக முகவரி.

**deferred entry** : தாமதப் பதிவு : தனக்குக் கட்டுப்பாட்டை

மாற்றிய செயல்முறையிலிருந்து காலத்தாழ்வாக வெளியேறிய தன் காரணமாக ஒரு நிரல்கூறில் செய்யப்படும் பதிவு.

**deferred exit** : தாமத வெளியேற்றம் ; ஒத்திவைக்கப்பட்ட வெளியேற்றம் : முன்னரே தீர்மானிக்கப்பட்ட நேரத்தில் அல்லாமல், ஒருங்கிணைவில்லா ஒரு நிகழ்ச்சியினால் தீர்மானிக்கப்படும் ஒரு நேரத்தில் நிரல்கூறு கட்டுப்பாடு மாற்றப்படல்.

**definition** : பிரச்சினை ஒன்றுக்கான வரையறை : தருக்கங்களை பதின்ம வடிவுகளாகவும், பட்டியல்களாகவும் மற்றும் நிரல் தொகுப்பு விளக்கங்களாகவும் தொகுத்தல். அவை பிரச்சினையை தெளிவாக விளக்குகின்றன, வரையறை செய்கின்றன.

**defrag** : நெருங்கமை : அடுத்தடுத்த அமைவிடங்களில் வட்டுக் கோப்புகளில் தரவுகளைச் சேமித்து வைக்கும் நோக்கமுடைய DOS நிரல்.

**defragmentation** : நெருங்கமைத்தல் : ஒவ்வொரு கோப்பின் அனைத்துப் பகுதிகளும் அடுத்தடுத்த கூறுகளில் எழுதப்படுமாறு, அனைத்துக் கோப்புகளையும் ஒரு நிலை வட்டில் மறுபடியும் எழுதுதல்.

**degausser** : காந்தப் புல நீக்கி ; அழிப்பி: மின்காந்த வகையில் வட்டுகளிலும் நாடாக்களிலும் பதிவு செய்யப்பட்ட தரவுகளை அழிக்க உதவும் கருவி. இதனை பேரழிப்பி என்றும் கூறுவர்.

**degradation** : தரங்குறைதல் ; தரமிழத்தல் : முறைமை தொடர்ந்து இயங்கினாலும், அதன் சேவை குறைந்த அளவிலேயே அமையும். முறையான கருவிப் பராமரிப்பு கிடைக்காத நிலை மற்றும் அன்றாடத் தேவைகளுக்கு ஈடுகொடுக்கும் வகையில் கணினி நிரல் தொகுப்புகள் பராமரிக்கப்படாதிருத்தல் ஆகியவை இரண்டு முக்கிய காரணங்களாகும்.

**deinstall** : நீக்கல் : இயக்கப் பயன்பாட்டிலிருந்து நிரல் தொகுப்பு ஒன்றையோ, வன்பொருளையோ நீக்குதல்.

**dejagging** : பிசிரற்ற வரைவு : பிசிரற்ற கோடுகளை, எழுத்துகளை, பல கோண வடிவங்களை வரையப் பயன்படுத்தப்படும் கணினி வரைபட உத்தி.

***de jure* standard** : சட்டமுறைத் தர அளவு : அமெரிக்கத் தேசியத் தர நிருணய நிறுவனம் (ANSI) போன்ற தர நிருணய நிறுவனங்களினால் ஏற்றுக்கொள்ளப்பட்டு அங்காடியில் விற்பனையிலுள்ள தர அளவுகள்.

**delay circuit : காலந்தாழ்த்தும் இணைப்பு** : *சமிக்கைகளை வழங்கும் பொழுது இடைவெளியை வேண்டுமென்றே அதிகமாக்கும் மின்னணுவியல் இணைப்பு.*

**delay line : சுணக்க வழி.**

**delay line storage : காலந் தாழ்ந்து வரும் வரிச்சேமிப்பகம்** : *காலந்தாழ்ந்து வரும் வரியைக் கொண்ட சேமிப்பகம். அதில் நிரலை மீண்டும் உருவாக்கி இணைப்பதற்கான வசதி உண்டு. ஆதிக் கணினிகளில் பயன்படுத்தப்பட்டது.*

**delete : நீக்கு ; நீக்குதல் ; அழித்தல்** : *களம் அல்லது கோப்பு ஒன்றின் ஆவணத்திலிருந்து நீக்குதல் அல்லது அழித்தல் அல்லது போக்குதல். 2. தரவுகளைப் போக்கும் முறை.*

**delete all : அனைத்தும் அழி; அனைத்தும் நீக்கு.**

**delete file : கோப்பை நீக்கு.**

**delete key : நீக்கல் விசை; அழித்தல் விசை** : *1. ஐபிஎம் மற்றும் ஒத்தியல்புக் கணினிகளில் பயன்படுத்தப்படும் ஒரு விசை. விசைப் பலகையில் Del என்று குறிக்கப்பட்டிருக்கும். பெரும்பாலான பயன்பாட்டுத் தொகுப்புகளில் இந்த விசையை அழுத்தியவுடன் சுட்டுக் குறியின் அடுத்துள்ள எழுத்து அழிக்கப்படும். ஆனாலும் வேறு சில பயன்பாடுகளில், தேர்வு செய்யப்பட்ட உரைப் பகுதி அல்லது வரைகலைப் படத்தை நீக்கிவிடும். 2. ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினிகளில் ஏடீபி மற்றும் விரிவாக்க விசைப்பலகைகளில் உள்ள விசை. செருகு குறிக்கு முந்தைய எழுத்தை அழிக்கும் அல்லது தேர்வு செய்யப்பட்ட உரைப் பகுதியையோ, வரைகலைப் பகுதியையோ அழிக்கும்.*

**delete record : ஏட்டை நீக்கு.**

**delete sheet : தாளை நீக்கு.**

**deletion record : நீக்கும் ஆவணம்** : *அடிப்படைக் கோப்பு ஒன்றில் உள்ள ஆவணம் ஒன்றுக்குப் பதிலாக அமையும் புதிய ஆவணம்.*

**delimit : எல்லையிடு ; வரம்பிடல்** : *ஒன்றின் வரம்புகளைத் தீர்மானித்தல். குறிப்பிட்ட மாறக்கூடிய ஒன்றின் உயர்ந்தபட்ச, குறைந்தபட்ச வரம்புகளைத் தீர்மானித்தலைப் போன்றது.*

**delimiter : வரம்புக்குறி ; வரம்பு காட்டி ; எல்லைக்குறியீடு** : *சிறப்பு வடிவம். எடுத்துக்காட்டாக பட்டியல் ஒன்றில் மாறக்கூடிய பெயர்கள்*

அல்லது பொருள்களைப் பிரிக்கப் பயன்படுத்தப்படும். அல்லது தரவு வகைகளைப் பிரிப்பதுபோல ஒரு தொடர் வடிவங்களை மற்றொன்றிலிருந்து பிரிக்கப் பயன்படும் கால் புள்ளி அல்லது இடைவெளி.

**delivery : வழங்குதல் ; பட்டுவாடா :** நிரல் தொகுப்பை உருவாக்கும் பணி வட்டத்தில் இறுதிச்செயல். இதில், உண்மையான தரவுகளைக் கையாளப் பயனாளருக்கு நிரல் தொகுப்பு அல்லது முறைமை வழங்குகிறது.

**delivery challon : விநியோகத் தரவு.**

**Dell Computer Corporation : டெல் கணினிக் கழகம் :** IBM ஒத்தியல்பு நுண்கணினிகளைத் தயாரிக்கும் ஓர் அமைவனம். இதனை 1984இல் மைக்கேல் டெல் என்பவர் டெக்சாஸ் மாநிலத்திலுள்ள (அமெரிக்கா) ஆஸ்டின் நகரில் நிறுவினார். 'லேப்டாப்' (Laptop) முதல் உயர்முனை எந்திரங்கள்வரைப் பல்வேறு வகை நுண்கணினிகளை இது தயாரிக்கிறது.

**Delphi Information Service : டெல்ஃபி தரவு சேவை :** அமெரிக்காவில் பாஸ்டன் நகரில் உள்ள இணையச் சேவை நிறுவனம் வழங்கும் இணையத் தரவு சேவை.

**delta modulation : 'டெல்டா' அதிர்விணக்கம் :** குரல் அலைகளின் மாதிரியை எடுத்து, அவற்றை இலக்கக் குறியீடாக மாற்றுவதற்கான உத்தி.

**deltree : அகற்றாணை :** ஒரு விவரக் குறிப்பேட்டில் அனைத்துக் கோப்புகளையும் அகற்றிவிட்டு, துணை விவரக் குறிப்பேடுகளையும் அகற்றுகிற ஓர் உயர்நுட்ப DOS நிரல்.

**demagnetization : காந்த நீக்கி :** காந்த வட்டு அல்லது நாடாக்களில் சேமிக்கப்பட்ட தரவுகளை அழிக்கும் செயல்.

**demand driven processing : தேவை முடுக்கு செயலாக்கம் :** தரவு பெறப்பட்ட உடனேயே நடைபெறும் செயலாக்கம். இது போன்ற நிகழ்நேரச் (Realtime) செயலாக்கத்தின் காரணமாய் செயலாக்கப்படுத்தாத தகவலைச் சேமித்து வைக்கத் தேவையில்லாமல் போகிறது.

**demand paging : பக்கமேற்றல் கோரிக்கை :** நிகழ்சேமிப்பு முறைமைகளில், புறப்பக்கச் சேமிப்பகத்திலிருந்து உண்மையான சேமிப்பகத்திற்கு அப்பணியை நிறைவேற்றப்படும் நேரத்தில் மாற்றுதல்.

**demand report : கோரல் அறிக்கை ; வேண்டிய அறிக்கை:**

கோரிக்கையின் பேரில் மட்டுமே வழங்கப்படும் அறிக்கை. எதிர்பார்க்கப்படாத கேள்விகளுக்கான விடையாக வழங்க, மிக முக்கியத்துவம் வாய்ந்த அடிப்படையான முடிவுகளை மேற்கொள்ள இது பயன் படுத்தப்படுகிறது.

**demo : செயல் விளக்க செய்முறை :** விளம்பரம், விற்பனை நோக்கங்களுக்காக ஒரு பயன்பாட்டுச் செயல்முறையில் சில செயற்பணிகளை எடுத்துக் காட்டுவதற்காக வடிவமைக்கப் பட்டுள்ள ஒரு செயல் விளக்கச் செய்முறை.

**demodulate : அதிர்விணக்க நீக்கம் :** ஒத்தியல்புடைய சைகைகளை இலக்கங்களாக மாற்றுவதற்கான செய்முறை. ஊர்தியிலிருந்து தரவு சைகைகளை வடிகட்டுதல்.

**demodulation : மீளப்பெறல் :** தகவல் தொடர்பில் எடுத்துச் செல்லும் அலை வரிசையில் அனுப்பப்பட்ட ஆதிக் குறியீட்டை மீண்டும் பெறும் நடைமுறை. தரவு தொகுப்புகளில், தரவுத் தொடர்புச் சமிக்கைகள், கணினி முனையச் சமிக்கைகளுடன் இணையச்செய்யப் பயன்படுத்தப்படுகின்றன. Modulation என்பதன் இணைப் பகுதியாகும்.

**demodulator : மீளப்பெறும் கருவி :** தகவல் தொடர்பு இணைப்பு ஒன்றின் வழியாக அனுப்பப்படும் சமிக்கைகளை பெறும் கருவி. அது, அச்சமிக்கைகளை மின் துடிப்புகளாக அல்லது துண்மிகளாக மாற்றி, தரவு தயாரிப்பு எந்திரங்களுக்கு அவற்றை உள்ளீடாகத் தரும். Modulator என்பதற்கு மாறானது.

**demonstration programme : சான்று விளக்க நிரல்; முன்மாதிரி நிரல் :** *1.* உருவாகிக் கொண்டிருக்கும் ஒரு நிரலின் செயல் திறனை விளக்கும், அந்நிரலின் ஒரு முன்மாதிரி வடிவம். 2. ஒரு நிரலை விற்பனைக்குக் கொண்டுவரும்முன் அதன் செயல்திறனை விளக்கும் வகையில் உருவாக்கப்பட்ட சுருக்கமான வடிவ முன்மாதிரி.

**demonstrative education : செயல்முறை விளக்கக் கல்வி.**

**demount : இணைப்பைக் கழற்றுதல் :** கருவி ஒன்றிலிருந்து எழுத அல்லது படிக்கக்கூடிய காந்த சேமிப்பு ஊடகத்தை நீக்குதல். இது வட்டு இயக்கி ஒன்றிலிருந்து வட்டுத் தொகுப்பு ஒன்றை நீக்குதல் போன்றது.

**demultiplexer : ஒருங்கிணைக்கி; பல இணைப்புக் கருவி :** ஒருங்கிணைத்து அனுப்பப்

பட்ட மின்காந்த அல்லது இலக்க வடிவிலான தரவுத் தொகுப்பிலிருந்து ஒவ்வொரு தரவையும் தனித்தனியாகப் பிரித்தெடுக்கும் சாதனம். Multiplexer *(பல்பயன்இணைப்பு)* என்பதற்கு எதிரானது.

**denary : பதின்மான முறை :** பத்திலக்க பதின்ம எண்மான முறை.

**denary notation : பதின்மக் குறிமானம் :** பதின்மங்களைப் பயன்படுத்தி நாம் எண்ணுகிற வழக்கமான எண்மான முறை.

**dendrite : மர இழை :** மனித மூளையிலுள்ள அடிப்படைச் சேமச்சிற்றம். இது, மரத்தடங்கள் (Dendrites) எனப்படும் மரவடிவ இழைகளின் கட்டமைப்பைக் கொண்டது.

**denizen : டெனிஸன் :** இணையத்தில் செய்திக் குழுவில் பங்கு பெறும் ஒருவரை இவ்வாறு அழைக்கின்றனர்.

**denominator :** விகுதி.

**dense binary code : செறிவு இரும எண் குறியீடு :** எல்லா இயலத்தக்க இரும எண் (இரட்டை இலக்க) நிலைகளையும் பயன்படுத்தக்கூடிய குறியீடு.

**dense list : செறிவுப் பட்டியல், அடர் பட்டி :** எல்லாச் சிற்றங்களும் இயன்றளவு நிரப்பப்பட்டிருக்கிற ஒரு பட்டியல்.

**density : திண்மை ; அடர்த்தி; செறிவு :** ஒரு குறிப்பிட்ட பருண்மையான இடத்தில் சேமிக்கக்கூடிய எழுத்துகளின் எண்ணிக்கை. மின்காந்த ஊடகம் ஒன்றில் எவ்வளவு நெருக்கமாக தரவுகள் பதிவு செய்யப்பட்டுள்ளன என்ற அளவுமுறை. பொதுவாக ஒரு அங்குலத்துக்கு இத்தனை எண்மி(எட்டியல்)கள் என்ற முறையில் கணக்கிடப்படுகிறது. பதிவுத்திண்மை அதிகரிக்க அதிகரிக்க சேமிப்புக் கருவியின் திறன் கூடுகிறது.

**density, bit : துண்மி (பிட்) அடர்த்தி.**

**density, character : எழுத்து அடர்த்தி.**

**density, double : இரட்டை அடர்த்தி.**

**density, packing : பொதி அடர்த்தி.**

**density, recording : பதிவடர்த்தி.**

**density, single : ஒற்றை அடர்த்தி.**

**density, storage : சேமிப்பு அடர்த்தி.**

**departmental computing : துறைக் கணிப்பு :** ஒரு துறையின் தரவுகளை அதன் சொந்தக்

கணினி அமைவினைக் கொண்டே செய்முறைப் படுத்துதல்.

**departmental processing** : துறைசார் செயலாக்கம்.

**dependability** : நம்பகமான ; நம்பத் தகுந்த.

**dependency** : சார்புநிலை ; சார்பு: மற்றொரு பணியைத் தொடங்கு முன் ஏற்கனவே தொடங்கப் பட்ட பணி ஒன்றை நிறை வேற்றும் உறவு நிலை.

**dependent** : சார்ந்திருப்பு.

**dependent segment** : சார்புக்கூறு: தரவு மேலாண்மையில், தரவு தனது முழுப்பொருளுக்காகவும் ஓர் உயர்நிலைத் தகவலை நம்பியிருக்கும் நிலை.

**dependent variable** : சார்பு மாறி யல் மதிப்புரு : ஓர் உருமாதிரி யின் வெளிப்பாடு. இது, உட் பாடுகளை நம்பியிருப்பதால் இப்பெயர் பெற்றது.

**deposit** : வைப்பீடு : எந்திரப் பதிவேட்டில் அல்லது நினைவுப் பதிப்பியின் அமைவிடத்தில் தரவுகளைச் சேமித்து வைத்தல்.

**depth queuing** : முப்பரிமாணத் தோற்றமிடல் : இருபரிமாணப் பொருளை முப்பரிமாணத் தோற்றமுடையதாக மாற்றப் பயன்படுத்தும் 'ஷேடிங்' (Shading) போன்ற தொழில் நுட்பம்.

**deque** : டிகியூ ; இருமுனைப் பட்டியல் : Double Ended Queue என்பதன் குறும்பெயருமாகும். பட்டியலின் இரண்டு முனை களிலும் நீக்கவும், சேர்க்கவும் அனுமதிக்கும் இருபுறமும் உள்ள வரிசை.

**dereference** : சுட்டு விலக்கம்; மறைமுகச் சுட்டு : நினைவகத் தில் இருத்திவைக்கப்பட்டுள்ள ஒரு மதிப்பினை அணுக முக வரிச் சுட்டு (Pointer) என்னும் கருத்துரு சில நிரலாக்க மொழி களில் பயன் படுத்தப்படுகிறது. சுட்டு என்பது அம்மதிப்பு பதியப்பட்டுள்ள முகவரி யையே குறிக்கும். அம் முகவரி யில் இருத்தி வைக்கப்பட்டுள்ள மதிப்பினை எடுத்தாள அச் சுட்டினையே மறைமுகமாய் பயன்படுத்திக்கொள்ள முடியும். (எ-டு) : சி மற்றும் சி++ மொழி களில் int *p ; int n = 5; p = & n ; என்று கட்டளை அமைக்கலாம். p என்பது, 5 என்னும் மதிப்பு இருத்தி வைக்கப்பட்டுள்ள முக வரியைக் குறிக்கும். *p என்பது 5 என்னும் மதிப்பைக் குறிக்கும். இவ்வாறு ஒரு முகவரிச் சுட்டு மூலம் அம்முகவரியிலுள்ள மதிப்பை மறைமுகமாகச் சுட்ட முடியும்.

**derived class : தருவித்த இனக் குழு; உட்குழு; தருவித்த வகுப்பு :** பொருள் நோக்கிலான நிரலாக் கத்தில், ஓர் இனக்குழுவை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்படும் இன்னோர் இனக்குழு. அடிப்படை இனக் குழுவின் (Base Class) அனைத்து பண்பியல்புகளையும் தருவித்த இனக்குழு கொண் டிருக்கும். அதே வேளையில் அடிப்படை இனக்குழுவில் இல்லாத புதிய உறுப்புகளை யும், செயல்முறைகளையும் சேர்த்துக்கொள்ள முடியும். சில செயல்முறைகளை மாற்றி யமைக்கலாம். மறுவரையறை செய்யலாம்.

**derived font : தருவித்த எழுத் துரு :** ஏற்கெனவே இருக்கும் ஓர் எழுத்துருவை சற்றே மாற்றி யமைத்து உருவாக்கப்படும் புதிய எழுத்துரு. இப்போது பயன்பாட்டில் உள்ள வரைகலை அடிப்படையிலான மெக்கின்டோஷ் இயக்க முறை மையில் ஏற்கெனவே நிறுவப் பட்டுள்ள எழுத்துருக்களின் உரு வளவுகளை மாற்றி புதிய எழுத் துகளை உருவாக்க முடியும்.

**derived relation : தருவித்த உறவுமுறை :** ஏற்கெனவே வரை யறுக்கப்பட்ட ஒன்றுக்கு மேற் பட்ட உறவு முறைகளின் அடிப் படையில் உருவாக்கப்படும் புதிய உறவுமுறை.

**DES : டெஸ்; டிஇஎஸ் : தரவு** மறையாக்கத் தரநிர்ணயம் எனப் பொருள்படும் Data Encryption Standard என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். 1976-ஆம் ஆண்டில் ஐபிஎம் நிறு வனத்தால் உருவாக்கப்பட்டு அமெரிக்க அரசினால் ஏற்றுக் கொள்ளப்பட்ட கணினித் தரவு மறையாக்கத்துக்கான வரை யறைகள். டெஸ், 56 துண்மி மறைக்குறியைப் பயன் படுத்துகிறது.

**descendant : வாரிசு :** 1. பொருள் நோக்கிலான நிரலாக்கத்தில் ஓர் இனக்குழுவிலிருந்து தருவிக்கப் பட்ட இனக்குழு அதன் வாரிசு என அழைக்கப்படுகிறது. தாத்தா, தந்தை, மகன் என்ற உறவுமுறை யைப் போன்றது. 2. கணினிச் செயலாக்கத்தில், ஒரு குறிப் பிட்ட செயலாக்கம் (ஒரு நிரல் அல்லது ஒரு பணி) இன்னொரு செயலாக்கத்தினால் பயன்படுத் திக் கொள்ளப்படும்போது, மூலச் செயலாக்கத்தின் சில பண்பியல்பு களை அழைத்த செயலாக்கம் மரபுரிமையாகப் பெறும்.

**descender : கீழிறங்கி ; இறங்கி :** மற்ற எழுத்துகளின் அடிக் கோட்டுக்கு கீழே இறங்கும் g

போன்ற சிறிய எழுத்துகளின் பகுதி. Kern என்றும் அழைக்கப் படுகிறது.

**decending** : இறங்குமுகம்.

**descending order : இறங்குமுக வரிசை** : *அகர வரிசையிலோ அல்லது எண்முறையிலோ அதிக அளவிலிருந்து குறைந்த அளவுக்கு இறங்கி வரும் வரிசை.*

**descending sort : இறங்குமுக வரிசையாக்கம்** : *ஒரு பட்டியலுள்ள உறுப்புகளை இறங்கு முக வரிசை முறைப்படுத்தல். Zஇல் தொடங்கி A-யில் முடியு மாறும், எண்களைப் பொறுத்த வரை பெரிய எண்ணில் தொடங்கி சிறிய எண்ணில் முடியுமாறும் வரிசைப்படுத்தல்.*

**description** : விவரிப்பு.

**description, data** : தரவு விவரிப்பு.

**descriptive statistics** : விவரிப்பு புள்ளியல் : *மாற்ற விகிதம், சகவிகிதங்களின் விகிதம், திட்ட அளவு பிழைபாடு, கணித நடு எண், வரிசை போன்ற எண்ணள விலான தரவுத் தொகுதி ஒன் றின் முக்கியத் தன்மைகளைக் குறிப்பிடும் எண் மதிப்புகள்.*

**descriptor : விளக்கச்சொல்; வர்ணிப்பி** : *விவரிப்புச் சொல் தகவலைப் பட்டியலிடவோ அல்லது வகை வாரியாகப் பிரிக்கவோ உதவும் முக்கிய சொல். விசைச்சொல் என்றும் சில சமயம் அழைக்கப்படும்.*

**deserialize : தொடர்வரிசை நீக்கம்** : *ஒரு தொடர்வரிசைத் துண்மிக் கற்றையை ஒருபோகு துண்மிக் கற்றையாக மாற்றுதல்.*

**desh symbol** : கீற்று குழூஉக் குறி.

**design : வடிவாக்கம்; வடி வமைப்பு.**

**design aids : வடிவமைப்பு உதவிகள்** : *கணினி அமைப் பைச் செயல்படுத்த உதவும் நோக்கமுள்ள கணினி நிரலாக்கத் தொடர் அல்லது வன்பொருள் உறுப்புகள்.*

**design automation : வடி வமைப்பு தன்னியக்கம்** : *மின் சுற்று வடிவங்கள், புதிய கணினி மற்றும் பிற மின்னணுச் சாதனங்களின் வடிவமைப்பு மற்றும் உற்பத்தியில் கணினி யைப் பயன்படுத்துதல்.*

**design costs : வடிவமைப்புச் செலவுகள்** : *அமைப்புகளின் வடிவமைப்பு, நிரலாக்கத் தொடர் பயிற்சி, மாற்றல், சோதனை செய்தல், ஆவணப் படுத்துதல் போன்றவற்றுடன் தொடர்புள்ள செலவு.*

**design cycle** : வடிவமைப்புச் சுழற்சி : ஒரு வன்பொருள் அமைப்பில், இயக்க அமைப்பை உருவாக்குவதற்கான முழுத் திட்டம். இதில் சிக்கலை விவரித்தல், அல்கோரித நெறி முறை ஏற்படுத்தல், ஒடுபடக் குறியீடு அமைத்தல், நிரல் தொடர் பிழை நீக்கம், ஆவணப் படுத்தல் ஆகியவை அடங்கும்.

**design engineer** : வடிவமைப்புப் பொறியாளர் : வட்டு அலகு, நுண் செயலி அல்லது சிப்பு போன்ற ஒரு வன்பொருள் வடிவமைப் புடன் தொடர்புள்ள நபர்.

**design error** : வடிவமைப்புப் பிழை.

**design heuristics** : வடிவமைப்பு கண்டுணர்தல் : ஒரு பெரிய சிக்கல் அல்லது நிரலாக்கத் தொடரை மிகச் சிறியதான எளிதில் சமாளிக்கக்கூடிய 'மாடுல்' (module) கூறுகளாகப் பிரிப்பதற்குக் கடைபிடிக்கப் படும் வழிகாட்டுதல்கள்.

**design language** : வடிவமைப்பு மொழி : வடிவமைப்புப் பணியில் அதன் சொற்றொடர்களையும், இலக்கணங்களையும் பயன் படுத்தக்கூடிய நிரலாக்கத் தொடர்மொழி.

**design phase** : வடிவமைப்பு நிலை : முன்பே நிர்ணயிக்கப் பட்ட வடிவமைப்புத் தேவை களைப் பொறுத்து ஒரு தகவல் அமைப்பை உருவாக்கும் செயல்.

**design problem** : வடிவமைப்புச் சிக்கல்.

**design review** : வடிவமைப்புச் சீராய்வு; வடிவமைப்பு மீள் பார்வை.

**design specifications** : வடி வமைப்பு வரன்முறைகள்; வடி வமைப்புக் குறியீடுகள் : ஒரு நிறுவனத்தின் குறிப்பிட்ட பிரிவின் தகவல் தேவைகளை ஆராய்ந்ததன் விளைவு. உள்ளீடு, செயலாக்கம், வெளியீடு போன்ற வற்றிற்கான வரன்முறைகள்.

**design, systems** : முறைமை வடிவமைப்பு.

**design template** : வடிவமைப்பு படிம அச்சு.

**design time** : வடிவமைப்பு நேரம்.

**design walkthrough** : வடி வமைப்பு மேல்நோக்கு : பயன் படுத்துவோர், செயல்முறை யாளர்கள், ஆலோசகர்கள் ஆகி யோர் ஒரு பொறியமைவினை மேலிருந்து நோக்குதல்.

**desk accessories** : மேசை தேவைகள் : வரைபட முறை களைச் சார்ந்த அமைப்பில், பிற

*ஆவணங்களைப் பயன்படுத்துவதற்குத் தேவைப்படும் பணியாற்றும் கருவிகள்.*

**desk checking : மேசை சோதனை :** *நிரலாக்கத் தொடர் அளவையில் பிழைகளைச் சோதிக்கும் மாதிரி தரவு பொருள்களைக்கொண்டு சோதித்தல். கணினியில் செயல்படுத்துவதற்கு முன்பு இத்தகைய சோதனை செய்யப்படுகிறது.*

**desk scanner : மேசை வருடி; மேசை நுண்ணாய்வுக் கருவி :** *மேசை நுண்ணாய்வுக் கருவியின் சுருக்கப் பெயர். இரு உருக் காட்சிகளை நுண்ணாய்வு செய்யப் பயன்படு கிறது. இந்த உருக்காட்சிகளைப் பின்னர் ஒரு மேசை வெளியீட்டு அல்லது வரைகலை மென்பொருள் உருவாக்கிய ஓர் ஆவணத்தில் பதிவு செய்யலாம். நுண்ணாய்வு செய்த உருக்காட்சிகளை விருப்பம்போல் வெட்ட லாம், ஒட்டலாம். கையால் இயக்கும் நுண்ணாய்வுக் கருவிகளும், தட்டைப் படுகை நுண்ணாய்வுக் கருவிகளும் கிடைக்கின்றன.*

**desktop : மேசைப் பதிப்பு தொழில் நுட்பம் :** *ஆவணங்கள், காகிதங்கள் மற்றும் துணைப் பொருள்களைக் கொண்ட திரையில் காட்டப்படும் காட்சி.*

**desktop computer : மேசைக் கணினி :** *நுண்செயலகம், உள்ளீடு, வெளியீடு, சேமிப்புச் சாதனங்களை ஒன்றாக, கணினி அமைப்பாக உருவாக்கி மேசை மேல் வைக்கக்கூடிய சிறு கணினி. வீட்டுக் கணினி* (Home Computer) , *நுண் கணினி* (Micro Computer) , *தனி முறைக் கணினி* (Personal Computer) *எனப் பல வகை உண்டு.*

**desktop conferencing : கணினிக் கலந்துரையாடல்; கணினிக் கருத்தரங்கு :** *தொலைதூர ஊர்களில் உள்ளவர்கள், ஒரே நேரத்தில் கணினி வழியாகக் கூடிப் பேசல். அவர்கள் ஓரிடத்தில் அமர்ந்து உரையாடுவது போன்ற தோற்றத்தை ஏற்படுத்த முடியும். இத்தகவல் தொடர்பில் பயன்பாட்டு நிரல்களிலுள்ள தரவுகள் மட்டுமின்றி கேட்பொலி*(audio) *ஒளிக்காட்சி* (video) *தரவு பரிமாற்றமும் இயலக்கூடியதே.*

**desktop enhancer : மேசைக் கணினித் திறன்கூட்டி :** *மைக்ரோசாஃப்ட் விண்டோஸ், மேக் ஓஎஸ் போன்ற சாளரக் காட்சி அடிப்படையிலான இயக்க முறைமைகளின் செயல்பாட்டுத் திறனைக் கூட்டும் மென்பொருள் தொகுப்பு. திறன் மிகுந்த கோப்பு உலாவி, இடைச்*

சேமிப்புப் பலகை (clipboard) மற்றும் பல்லூடக இயக்கி (multimedia player) போன்ற வசதிகள் இதில் அடங்கும்.

**desktop file : மேசைக் கணினிக் கோப்பு :** ஆப்பிள் மெக்கின் டோஷ் இயக்க முறைமையில் ஒரு வட்டிலுள்ள கோப்புகளின் விவரங்கள் சேமித்து வைக்கப் பட்டுள்ள கோப்பு. இக்கோப்பு மறைத்து வைக்கப்பட்டிருக்கும்.

**desktop management interface : கணினிவழி மேலாண்மை இடை** முகம்.

**desktop publishing (DTP) : மேசைப்பதிப்பு வெளியீடு (டிடீபீ) ; மேசைப் பதிப்புத் தொழில்நுட்பம் :** வெளியீட் டாளர்களும், அச்சகங்களும் பயன்படுத்துவதற்கு, ஒளிப் பதிவு செய்வதற்கு ஆயத்தமான நிலையில் ஆவணங்களைத் தயாரிக்கும் கணினி இயக்கப் பொறியமைவு.

**desktop publishing package : மேசை வெளியீட்டுத் தொகுதி :** உருவமைப்பு வரைபடங்கள், படங்கள் ஆகியவற்றை வாசகர் கள், தலைப்புகள் ஆகியவற்று டன் பயன்படுத்துவதற்கு அனுமதிக்கக் கூடிய வாசகமும், வரைகலை நுட்பங்களும் இணைந்த மென்பொருள். எடுத்துக்காட்டு: பக்க வடி வமைப்பி (பேஜ் மேக்கர்), வெஞ்சுரா, குவார்க் எக்ஸ்பிரஸ்.

**desktop publishing system : மேசை வெளியீட்டுப் பொறி யமைவு :** படங்கள், பல்வேறு எழுத்து முகப்புகளுடன் அச் சிட்ட வாசகங்கள் ஆகியவற்று டன் கவர்ச்சிகரமான பக்க வடி வமைப்புகளை உருவாக்கக் கூடிய புறநிலைச் சாதனங்கள் கணினியுடன் இணைக்கப்பட்ட ஒரு பொறியமைவு.

**desktop system : மேசைப் பொறியமைவு :** ஓர் அலுவலக மேசையில் முழுமையாகப் பொருந்தக்கூடிய ஒரு கணினி.

**desktop video : மேசைக் கணினி ஒளிக்காட்சி;** ஒளிப்படங்களைத் திரையிட சொந்தக் கணினி யைப் பயன்படுத்துதல். ஒளிக் காட்சிப்படங்களை ஒளிக் காட்சிச் சுருளில் பதிவு செய்ய லாம் அல்லது லேசர் வட்டு களில் பதியலாம் அல்லது படப்பிடிப்புக் கருவி மூலம் பதிவு செய்யலாம். இவ்வாறு பதியப்பட்ட ஒளிக்காட்சிப் படங்களை இலக்க முறை (digital) வடிவில் அனுப்பி ஒரு பிணையத்தின் மூலம் நிகழ் படக் கலந்துரையாடலில் பயன் படுத்திக் கொள்ள முடியும்.

**despatch : அனுப்பு.**

**destination : சேருமிடம் ; இலக்கு :** ஒரு தரவு மாற்றல் இயக்கத்தின்போது தரவுகளைப் பெறுகின்ற சாதனம் அல்லது முகவரி.

**destination disk : இலக்கு வட்டு.**

**destination file : சேரிடக் கோப்பு.**

**destination, object : சேரிட இலக்கு.**

**destructive memory : அழிவுறு நினைவுப் பதிப்பி :** படித்தவுடன் உள்ளடக்கத்தை இழந்து விடுகிற நினைவுப் பதிப்பி. படித்தவுடன், இதன் துண்மிகளுக்கு மின்சுற்று வழியாக உயிரூட்ட வேண்டும்.

**destructive operation : சிதைப்புச் செயல்பாடு; அழிப்புச் செயல் பாடு.**

**destructive read : அழித்திடும் படிப்பு:** சிலவகை நினைவக அமைப்புகளின் பண்பியல்பு. நினைவக இருப்பிடத்திலுள்ள தகவலைப் படிக்கும்போது அத் தகவல் செயலிச் சில்லுவுக்கு அனுப்பி வைக்கப்படும். ஆனால் நினைவகத்திலுள்ள தரவு அழிக்கப்பட்டுவிடும். இத் தகைய நினைவக அமைப்பில் அழிக்கப்பட்ட இடத்தில் தகவலை மறுபடியும் எழுதுவதற்கு தனிச்சிறப்பான நுட்பம் தேவைப்படும்.

**destructor : அழிப்பி ; சிதைப்பு :** பொருள் சார்ந்த செயல்முறைப் படுத்துதலில், ஒரு பொருளின் நிலையை விடுவிக்கிற அல்லது அந்தப் பொருளையே அழித்து விடுகிற ஒரு செயற்பாடு.

**detachable keyboard : பிரிக்கக் கூடிய விசைப்பலகை :** ஒளிக் காட்சித் திரை அல்லது வட்டு அலகுபோல ஒரே அமைப்பில் சேர்த்து உருவாக்கப்படாத விசைப்பலகை. ஒரு கம்பியின் மூலம் கணினியுடன் இணைக்கப்பட்டு காட்சித்திரையை வைப்பதில் அதிக வசதியைத் தருகிறது.

**detail : விவரம் :** பெரியகோப்பு அல்லது வரைபடத்தின் சிறிய பிரிவு.

**detail band : விவரக் கற்றை.**

**detail diagram : விவர வரை படம் :** ஹிப்போவின் (HIPO) ஒரு மாடுலில் (module) பயன் படுத்தப்படும் தரவுப் பொருள்கள் அல்லது ஒரு குறிப்பிட்ட பணியைக் குறிப்பிடும் வரைபடம்.

**detail file : விவரக் கோப்பு :** தற்காலிகத் தகவலைக்கொண்ட கோப்பு. ஒரு குறிப்பிட்ட நேரத்தில் நடைபெற்ற மாற்றங்களைக் கொண்ட பதிவேடுகள் போன்றவை, தற்காலிகத் தகவலாகக் கொள்ளப்படுகின்றன.

**detail flowchart** : விவர வரை படம் : ஒரு குறிப்பிட்ட நிரலாக்கத் தொடருக்குள் தேவைப் படும் செயலாக்க நிலைகளை குறிப்பிடும் வரைபடம்.

**detail line** : விவர வரி : செய்முறைப்படுத்தப்படும் ஒவ்வொரு பதிவேட்டையும் கண் காட்சியாகக் காட்டுகிற வரி.

**detail printing** : விவர அச்சிடல்: கணினிக்குள் படித்து அனுப்பப் படும் ஒவ்வொரு பதிவுக்கும் ஒருவரி அச்சிடப்படும் இயக்கம்.

**detail report** : நுணுக்க அறிக்கை : அச்சிட்ட அறிக்கை. இதில் ஒவ்வொரு வரியும் படித்து முடித்த உள்ளீட்டுப் பதிவேட்டை ஒட்டியே அமையும்.

**detail view** : விளக்கமான பார்வை; விளக்கக் காட்சி.

**detection** : கண்டுபிடித்தல் : ஒரு சிக்கலைக் கண்டுபிடிக்கும் நோக்கத்துடன் ஒரு நிகழ்வை அமைதியாகக் கண்காணிப்பது.

**determinant** : தீர்வுப் பண்பு : தரவுத் தள வடிவாக்கக் கோட்பாட்டில், ஓர் அட்டவணையில் ஒரு பண்புக்கூறு அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட பண்புக் கூறுகள் வேறொரு பண்புக்கூறு அல்லது பண்புக் கூறுகளின் மீது செயல்முறையில் சார்ந்திருக்குமாயின், அத்தகைய பண்புக் கூறு/கூறுகளை தீர்வுப் பண்பு என்கிறோம். சார்ந்து நிற்கும் பண்புக் கூறு/கூறுகளை சார்புப் பண்பு எனலாம்.

**determinism** : முன்னறி திறன் : கணினிவழிச் செயல்பாடுகளில், பலன் எப்படி இருக்கும் என்பதை முன்கூட்டியே தீர்மானிக்கும் திறன். ஒரு செயலாக்க முறைமையில் தரவு எவ்வாறு கையாளப்படும் என்பதை முன் கூட்டி அறிதல். எடுத்துக்காட்டாக, குறிப்பிட்ட உள்ளீடுகளைத் தரும்போது, குறிப்பிட்ட வெளியீட்டையே எப்போதும் தரக்கூடிய பாவிப்பு (Simulation) முன்னறியக்கூடிய பாவிப்பு (A Deterministic Simulation) எனப்படுகிறது.

**deterministic model** : முடிவு செய்யும் கருவி ; உறுதியாக்கும் கருவி மாதிரி : நேரடியான காரண-விளைவுத் தொடர்புகளையும் தெரிந்த நிலையான மதிப்புகள் உள்ள தரவுகளைப் பற்றியும் ஆய்வு நடத்த உதவும் கணித மாதிரி.

**developer** : உருவாக்குபவர்.

**developer's toolkit** : உருவாக்கக் கருவித் தொகுதி : ஒரு பயன்பாட்டுச் செயல்முறையை ஒரு குறிப்பிட்ட சூழலுடன் இணைப்பதற்கு செயல்முறைப்படுத்து

வதில் பயன்படுத்தப்படும் மென் பொருள் நிரல்கூறுகளின் தொகுதி.

**development** : உருவாக்கம்.

**development engine** : மேம் பாட்டு எந்திரம் : தரவு ஆதாரத்தை மேம்படுத்தவும், பேணிவரவும் தரவுப் பொறி யாளருக்கும் மேலாண்மை வரம்புப் பொறியாளருக்கும் உதவுகிற எந்திரம்.

**development cycle** : உருவாக்கச் சுழற்சி; உருவாக்கப் படிநிலை : ஒரு பயன்பாட்டு மென்பொருள் தொகுப்பு உருவாக்கலில் தேவைகளை ஆய்வு செய்தல் தொடங்கி முழுமையாக்கப் பட்ட தொகுப்பை வெளிக் கொணர்வது முடிய, இடைப் படும் பல்வேறு செயலாக்கப் படிமுறைகள். பகுப்பாய்வு, வடிவாக்கம், முன்மாதிரி உரு வாக்கம், நிரலாக்கம், சரி பார்ப்பு, நிறுவுதல், பராமரிப்பு போன்ற பல்வேறு படிநிலைகள் உள்ளன.

**developement library support** : உருவாக்க நூலக உதவி; உரு வாக்க உதவி நூலகம்.

**development life cycle** : உரு வாக்க காலச் சுழற்சி.

**developement support library** : உருவாக்க உதவி நூலகம் : பயன்பாட்டுத் தொகுப்புகளை உருவாக்குபவர்களுக்கு உதவும் மென்பொருள் நிரல் தொகுதி கள். நிரலாக்கத் தொடர் அமைக் கும் நூலக அமைப்பு ஒன்று மூலக்கோடு மாற்றுதல், சோதனை தரவுத் தொகுதிகள், விளக்க ஆவணங்கள் போன்ற நிரலாக்கத்தொடர் வளர்ச்சி கோப்புகளை வைத்திருந்து மனிதர்களின் பங்கு இல்லாமல் தானியங்கியாக செயல்படும் வசதி. கணினி மற்றும் மனிதர் படிக்கும் வடிவத்தில் நிர லாக்கத் தொடர்கள் மற்றும் சோதனைத் தரவுகளையும் புதுப் பித்து வைத்திருக்கிறது. எழுத்தர் முறை கணக்கு வைத்திருக்கும் இயக்கங்களிலிருந்து நிரல் தொடர் பணிகளைப் பிரித்து வைத்திருப்பது போன்று அலு வலக மற்றும் கணினி நடை முறைகளின் தொகுதிக்கு ஏற்ப நூலகம் ஒன்றை வைத்திருக்கும் நூலக அமைப்பு.

**development system** : உருவாக்க அமைப்பு : ஒரு குறிப்பிட்ட நுண் செயலாக்கத்திற்கான திறன் மிக்க வன்பொருள் மற்றும் மென்பொருள் பயன்பாடுகளுக் குள் தேவையான சக்திகள் கொண்ட கணினி அமைப்பு. இதில் நுண்கணினி, முகப்பு, அச்சுப்பொறி, வட்டுச் சேமிப்

பகம், ப்ராம் (Prom) நிரலாக்கத் தொடர்பொறி மற்றும் மின் சுற்று உருவாக்கி போன்றவை இதில் அடங்கும்.

**development time** : உருவாக்க நேரம் : புதிய நிரலாக்கத்தொடர் அல்லது மென்பொருளின் பிழையை நீக்கத் தேவைப்படும் நேரம்.

**development tools** : உருவாக்கக் கருவிகள் : உருவாக்க நிர லாக்கத் தொடர்கள் மற்றும் / அல்லது வன்பொருள் அமைப்பு களில் பயன்படுத்துவதற்காக உருவாக்கப்பட்ட வன்பொருள் மற்றும் மென்பொருள் உதவிச் சாதனங்கள்.

**device** : சாதனம் ; கருவி : 1. ஒரு குறிப்பிட்ட நோக்கத்துடன் உரு வாக்கப்பட்ட எந்திர அல்லது மின்சார சாதனம். 2. கணினி யின் வெளிப் புறப்பொருள். 3. கணினிக்குள்ளே அல்லது அத னுடன் இணைக்கப்பட்டுள்ள கருவி.

**device address** : சாதன முகவரி: ஒரு கணினியின் ரேம் (RAM) நினைவகத்துள், நுண்செயலி அல்லது ஏதேனும் ஒரு புறச் சாதனத்தால் மாற்றியமைக்கக் கூடிய நினைவக இருப்பிடம். நுண்செயலியினால் மட்டுமே மாற்றியமைக்கக்கூடிய நினை வக இருப்பிடங்களிலிருந்து சாதன முகவரிகள் மாறுபட்டவை. புறச்சாதனங்களும் இவற்றை மாற்றியமைக்க முடியும்.

**device cluster** : சாதனத் தொகுதி : தகவல் தொடர்புக் கட்டுப் பாட்டுப் பொறியுடன் பங்கு கொள்ளும் முகப்புத் தொகுதி அல்லது பிற சாதனங்கள்.

**device code** : சாதனக் குறியீடு : ஒரு குறிப்பிட்ட உள்ளீடு அல் லது வெளியீட்டுச் சாதனத்திற் கான எட்டு துண்மிக் குறியீடு.

**device, communication** : தரவு தொடர்புச் சாதனம்.

**device dependent** : சாதனம் சார்ந்த : ஒரு நிரலாக்கத்தொடர் அல்லது ஒரு குறிப்பிட்ட கணினியுடன் பயன்படுத்தப்பட வேண்டிய மொழி அல்லது அச்சுப்பொறி அல்லது மோடெம் போன்ற ஒரு குறிப் பிட்ட வெளிப்புறப் பொருள். உள்ளீடு அல்லது வெளியீட்டு டன் பயன்படுத்தப்படவில்லை யென்றால் செயல்படாதது .

**device, direct access storage** : நேரணுகு சேமிப்பகச் சாதனம்.

**device driver** : சாதன இயக்கி : ஒரு கணினியின் தவறுகை அடைவினை, முக்கியமாக நினைவுப் பதிப்பி எவ்வாறு

நிருவகிக்கப்படுகிறது என்பதைப் பொறுத்து உயர்த்துவதற்கு அல்லது மாற்றுவதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு மென்பொருள் பயன்பாட்டுச் செயல்முறை.

**device, external : புற நிலைச் சாதனம்.**

**device flag : சாதனக் குறி :** ஒரு சாதனத்தின் தற்போதைய தகுதியைப் பதிவு செய்யும் ஒரு துண்மிப் பதிவு.

**device header : சாதனத் தலைப்பு :** ஒரு DOS சாதன இயக்கி நிரல்கூறில், சாதனத்தை அடையாளங் காட்டுவதற்குள்ள தொடக்கப் பகுதி.

**device independence : சாதன சுதந்திரம் :** உள்ளீடு/வெளியீடு சாதனங்களின் தன்மைகளின்றி உள்ளீடு/வெளியீடு இயக்கத்தின் நிரலை அளிக்கும் திறன்.

**device, intelligent : நுண்ணறிவுச் சாதனம்.**

**device, input : உள்ளீட்டுச் சாதனம்.**

**device interrupt handler : சாதன இடையீட்டுக் கைப்பிடி :** ஒரு சாதன நிரல்கூறுவின் உடற்பகுதி. இது சாதன இயக்கிச் செயற்பணிகளைக் கொண்டு செல்கிற குறியீட்டினைப் பற்றி வைத்துக்கொள்கிறது.

**device manager : சாதன மேலாளர் :** ஒரு கணினியில் வன்பொருளின் தகவமைவு அமைப்புகளை (Configuration Settings) பார்வையிடவும், மாற்றியமைக்கவும் உதவிடும் ஒரு மென்பொருள் பயன்பாட்டு நிரல். எடுத்துக்காட்டாக, குறுக்கீடுகளின் (Interrupts) அடிப்படை முகவரிகள், நேரியல் (Serial) தகவல் தொடர்பின் அளபுருக்களை (Parameters) பார்க்கவோ; மாற்றவோ முடியும்.

**device media control language : சாதனத் தரவுத் தொடர்புக் கட்டுப்பாட்டு மொழி :** ஒரு தரவு தளத்தை ஒரு வட்டுச் சேமிப்புச் சாதனத்தின்மீது வரைவதற்குத் தரவுத் தள நிர்வாகி பயன்படுத்தும் மொழி.

**device mode : சாதனக் கணு.**

**device name : சாதனப் பெயர் :** ஐபிஎம் தனிமுறைக் கணினி (Personal computer) அல்லது 3840 மாடல் வட்டு அலகு போன்ற ஒரு வகையான சாதனத்தின் பொதுப்பெயர்.

**device number : சாதன எண் :** ஒரு குறிப்பிட்ட புறநிலைச் சாதனத்திற்குக் குறித்தளிக்கப்பட்டுள்ள ஓர் எண். இது கணினியில் அச்சாதனத்தை அடையாளங்காணப் பயன்படுத்தப்படுகிறது.

**device options** : சாதன விருப்பத் தேர்வுகள்.

**device strategy** : சாதன உத்தி : ஒரு சாதன இயக்கி நிரல் கூறின் ஒரு பகுதி. இது, இயக்கியை வேண்டுகோள் தலைப்புடன் இணைக்கிறது. இந்தத் தலைப்புத்தான், இயக்கியை நிருவகிப்பதற்கு DOS உருவாக்குகிற நிலையளவுருக்களின் தொகுதியாகும்.

**devorak keyboard** : துவோரக் விசைப்பலகை.

**DIA** : டயா; டிஐஏ : 'ஆவணப் பரிமாற்றக் கட்டுமானம்' என்று பொருள்படும் Document Interchange Architecture என்னும் தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஐபிஎம் நிறுவனத்தின் முறைமைப் பிணையக் கட்டுமானத்தில் (Systems Network Architecture-SNA), ஆவணப் பரிமாற்றம் தொடர்பாக வரையறுக்கப்பட்டுள்ள வழிகாட்டு நெறிமுறைகள். வெவ்வேறு வகைக் கணினிகளுக்கிடையே அனுப்பி வைப்பதற்கு ஆவணங்களை ஒழுங்குபடுத்தி முகவரியிடும் வழிமுறைகளை டயா வரையறுத்துள்ளது.

**diacritical mark** : பிரித்தறி குறியீடு; ஒலிபிரித்தறி அடையாளம் : ஓர் எழுத்தின் மேலே அல்லது கீழே அல்லது நடுவே, உச்சரிப்பை வேறுபடுத்திக் காட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் குறியீடு. எடுப்போசை (acute) படுத்தல் மற்றும் ஒலியழுத்த (grave) குறியீடுகளாக பயன்படுகின்றன.

**diagnosis** : குறை கண்டறிதல் ; பழுதறிதல் : கணினி கருவியிலோ அல்லது நிரலாக்கத் தொடர் மற்றும் அமைப்புகளிலோ உள்ள பிழை, அல்லது கோளாறுகளைத் தனிமைப்படுத்தும் செயல்முறை.

**diagnostic** : ஆய்ந்தறிதல்; பழுதறிதல்.

**diagnostic board** : குறைகுறி பலகை; பழுதிற பலகை : குணங்குறிகாண் சோதனைகளைத் தன்னுள்ளே கொண்டுள்ள விரிவாக்கப் பலகை. இது, தனது சொந்தப் படிப்பியின் வாயிலாக முடிவுகளை அறிவிக்கிறது. இதன் மூலம் கணினியின் தவறான செயற்பாட்டினைச் சோதனை செய்யலாம்.

**diagnostic compiler** : பழுதறி தொகுப்பி; பழுதறி மொழிமாற்றி.

**diagnostic message** : குறைகுறி காண் செய்தி ; பழுதறி செய்தி : முறையற்ற நிரல்களை ஒரு செயல்முறையாளருக்குச் சுட்டிக்

காட்டுகிற, கணினி உருவாக்கும் குறிப்புகள்.

diagnostic programme : பழுதறி நிரல்.

diagnostic routine : குறை கண்டறியும் செயல்முறை ; பழுதறி செயல்முறை : மையச் செயலக அலகு அல்லது ஒரு வெளிப்புற சாதனத்தின் கோளாறினைக் கண்டுபிடிக்க வடிவமைக்கப்படும் வழக்கச் சொல்.

diagnostics : குறை அறிவிப்பு : ஒரு கணினி தானாகவே அச்சிட்டு அதனைப் பயன்படுத்துவோருக்கு அனுப்பும் செய்திகள், பிழைச் செய்திகள் எனப்படும் தவறான ஆணைகளையும், அளவைப் பிழைகளையும் இது குறிப்பிடுகிறது.

diagnostic tracks : குறை குறிகாண் தடங்கள் ; பழுதறி தடங்கள் : சோதனை நோக்கங்களுக்காக இயக்கியினால் அல்லது கட்டுப்பாட்டாளரால் பயன்படுத்தப்படும், ஒரு வட்டு மீதான தனித்தடங்கள். நினைவுப் பதிப்பி, விசைப்பலகை, வட்டுகள் போன்ற வன்பொருள் அமைப்பிகளைச் சோதனை செய்வதற்கான மென்பொருள் நிரல்கூறுகள். சொந்தக் கணினிகளில் இவை படிப்பதற்கு மட்டுமான நினைவுப் பதிப்பியில் (ROM) சேமித்து வைக்கப்பட்டுத் தூண்டிவிடப்படுகின்றன.

diagram : வரைபடம் : இயக்கங்கள் அல்லது வழக்கச் செயல்களை வரிசை முறையில் குறிப்பிடல்.

diagram; block : தொகுதி வரைபடம்.

diagram, circuit : மின்சுற்று வரைபடம்.

diagram, flow : பாய்வு வரைபடம்.

diagram, network : பிணைய வரைபடம்.

diagram, wiring : கம்பிச் சுற்று வரைபடம்.

dialect : கிளைமொழி ; பேச்சு மொழி : பேசிக் அல்லது பாஸ்கல் போன்ற சில அடிப்படை மொழிகளில் சிறு மாற்றங்கள் செய்து உருவாக்கப்பட்ட ஒரு கணினி மொழி. அதே மொழியில் இருந்து உருவாக்கப்பட்ட பிற பேச்சு மொழிகளிலிருந்து இது மாறுபட்டிருக்கும்.

dialing properties : எண் சுழற்று பண்புகள்.

dialing system : சுழல்வட்டு இயக்கு முறை.

dialog : உரையாடல் : ஒரு கணினிக்கும், மனிதனுக்கும்

இடையே நடைபெறும் கேள்வி-பதில் நிகழ்ச்சி.

**dialog box : உரையாடல் கட்டம் / சட்டம்** : *பயனாளருக்கு பல்வேறு வினாக்களை அல்லது மாற்றுகளைக் கூறும் ஒரு பட்டியல். இந்தக் கேள்விகள் அனைத்திற்கும் அல்லது அவற்றுள் சிலவற்றுக்குப் பயன்படுத்துபவர் பதிலளிப்பார். (இதனாலேயே 'உரையாடல்' என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது) பிறகு முக்கிய பட்டியலுக்கு அல்லது முந்திய / அடுத்த பணிக்குச் செல்கிறார்.*

**dialogue management** : உரையாடல் மேலாண்மை.

**dialogue window** : உரையாடல் சாளரம்; சொல்லாடற் பலகணி.

**dials** : சுட்டுமுகப்பு ; அளவு சுட்டு முகப்பு.

**dial-up** : தொலைபேசி இணைப்பி : *செய்தித் தரவுத் தொடர்புகளில், தொலைபேசி இணைப்பி பயன்படுத்தி அல்லது அழுத்தும் பொத்தான் தொலைபேசியைப் பயன்படுத்தி ஒரு இடத்திலிருந்து வேறொரு இடத்திற்கு தொலைபேசி அழைப்பு ஏற்படுத்துவது.*

**dial up access** : தொலைபேசி வழி அணுகல் : *ஒரு தகவல் தொடர்புப் பிணையத்துடன், தொலைதொடர்புத் துறையினரின் தொலைபேசி வழியாக ஏற்படுத்திக் கொள்ளும் இணைப்பு.*

**dialup adapter** : தொலைபேசி வழித் தகவி.

**dial-up IP** : தொரைபேசிவழி ஐபீ.

**dial-up-line** : தொலைபேசி இணைப்புத் தொடர் ; அழைப்பு வழி : *செய்தி தரவுத் தொடர்புகளை பரிமாற்றும் ஊடகமாகப் பயன்படுத்தப்படும் சாதாரண தொலைபேசிக் கம்பித் தொடர்.*

**dial-up modem** : தொலைபேசி மோடம்.

**dial-up-network** : தொலைபேசி வழி தொடர்பு கொள்ளும் இணையம் : *அரசினால் முறைப்படுத்தப்பட்டு இணைய சேவையாளர்களால் நிருவகிக்கப்படும் தொலைபேசி வழி தொடர்புபடுத்தும் இணையம்.*

**dial-up networking** : தொலைபேசி வழி பிணைப்பு; தொலைபேசி வழி இணைப்புப் பெறும் பிணையம்.

**dial-up service** : தொலைபேசி அணுகல் சேவை : *உள்ளூர் அல்லது உலகளாவிய பொது மக்களுக்கு தொலைபேசிச்*

சேவையை வழங்கி வரும் ஒரு நிறுவனம், இணையம் (Internet), அக இணையம் (Intranet) ஆகியவற்றை அணுகுவதற்கு வழங்கி வரும் சேவை. செய்திச் சேவைகளையும், பங்குச் சந்தை விவரங்களையும் அணுக இச் சேவை துணைபுரியும்.

**diary management** : நாட்குறிப்புப் பதிவு மேலாண்மை.

**diazo film** : 'டியோசோ' சுருள் : நுண் சுருள் படிகள் எடுப்பதற்குப் பயன்படுத்தப்படும் படச்சுருள். இது, புறவூதா ஒளியில் மூலப்படச்சுருள் முன் காட்டப்பட்டு, ஒரு மாதிரியான படிகள் உருவாக்கப்படுகின்றன. படியின் வண்ணம் ஊதா, ஊதா-கருப்பு அல்லது கருஞ் சிவப்பு நிறத்தில் இருக்கும்.

**DIB** : டிப்; டிஐபி : *1.* சாதனம் சாரா துண்மிப் படம் என்று பொருள்படும் Device Independent Bitmap என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும் பெயர். ஒரு பயன்பாட்டு மென்பொருளில் உருவாக்கிய துண்மி வரைகலைப் படத்தை, அந்தப் பயன்பாட்டில் தோற்றமளிப்பது போலவே இன்னொரு பயன்பாட்டு மென்பொருளிலும் காண்பதற்கு ஏதுவான கோப்பு வடிவமைப்பில் உருவாக்கப்பட்ட படம். 2. கோப்பகத் தகவல் தளம் என்று பொருள் படும் Directory Information Base என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். எக்ஸ்.500 முறைமையில் பயனாளர்கள் மற்றும் வளங்களின் பெயர்களைக் கொண்ட ஒரு கோப்பகம். இந்தக் கோப்பகம், ஒரு கோப்பக வழங்கன் முகவரால் (Directory Server Agent - DSA) பராமரிக்கப்படுகிறது.

**dibble** : தரவு குலைவு.

**dibit** : இருதுண்மி ; டிபிட் : கீழ் வரும் இரும எண் வரிசை முறைகளில் ஏதாவது ஒன்று : *00, 01, 10* அல்லது *11.*

**dichotomizing search** : இருமையாக்கும் தேடல் :

**dictionary** : அகராதி ; அகர முதலி : ஒரு செயல்முறையில் பயன்படுத்தப்படும் முகப்புச் சீட்டுகள் அல்லது விடைக் குறிப்புகளையும், அவற்றின் தருக்க முறையான பொருள் விளக்கங்கள் பற்றிய ஒரு விவரிப்பினையும் கொண்டுள்ள ஒரு பட்டியல்.

**dictionary, automatic** : தானியங்கு அகரமுதலி.

**dictionary programme** : அகராதி நிரலாக்கத்தொடர் : எழுத்துப் பிழை சோதனை செய்யும் நிரலாக்கத் தொடர். சொல்

செயலாக்க அமைவுகளில் அதிகம் பயன்படுத்தப்படுகிறது.

**diddle** : டிடில் ; தரவுக் குலைப்பு: தரவுகளை மாற்றுதல்.

**die** : அச்சு : மின்மப் பெருக்கிகள் அல்லது ஒருங்கிணைந்து மின்சுற்றுகளை உருவாக்கும் போது துண்டாக்கப்படும் அல்லது அறுக்கப்படும் வட்ட வடிவ அரைக்கடத்தி சிலிக்கான் தகட்டின் மிகச்சிறிய நாற்கோணத் துண்டு.

**dielectric** : மின்தாங்கு பொருள் : மின் விசையைக் கடத்தாமல், மின்விசை விளைவுகளை மட்டும் கடத்தக்கூடிய கண்ணாடி, ரப்பர், பிளாஸ்டிக் முதலிய பொருள்கள்.

**DIF** : டிஐஎப் : Data Interchange Format என்பதன் குறும்பெயர். தரவுக் கோப்புகளுக்கான ஒரு குறிப்பிட்ட தர நிர்ணயம். எதிர்காலத்தை உரைக்கும் பல நிரலாக்கத்தொடர்களில் பயன்படுத்தப்படுகிறது. ஒரு மென்பொருள் தொகுதியில் உருவாக்கிய கோப்புகளை முற்றிலும் வேறுபட்ட ஒரு நிறுவனம் உருவாக்கிய வேறு ஒரு மென்பொருளில் படிக்கப்படுவது.

**difference** : வேறுபாடு : ஒன்றைவிட மற்றொரு எண் அல்லது அளவு அதிகமாக அல்லது குறைவாக இருக்கும் அளவு.

**difference engine** : வேறுபாட்டு எந்திரம் : 1822இல் சார்லஸ் பாபேஜ் வடிவமைத்த எந்திரம். வேறுபாட்டு முறை என்னும் கணக்கிடும் செயலை இதில் எந்திரப்படுத்தினார்கள்.

**differential** : வேறுபாட்டளவை : மின்னணுவியலில் ஒரு குறிப்பிட்ட வகை மின்சுற்றைக் குறிப்பிடுகிறது. இந்த மின்சுற்று இரண்டு சமிக்கைகளுக்கிடையே உள்ள வேறுபாட்டைப் பயன்படுத்திக் கொள்ளும். வருகின்ற ஓர் உள்ளீட்டு சமிக்கையை வேறொரு உள்ளிருப்பு மின் அழுத்தத்துடன் ஒப்பிடாது.

**differential analyzer** : வேறுபாட்டளவையியல் பகுப்பாய்வுக் கருவி : வேறுபாட்டளவையியல் சமன்பாடுகளுக்குத் தீர்வு காண வான்னேவார் புஷ் (MIT,1930களில்) உருவாக்கிய ஒத்தியல்புக் கணிப்புச் சாதனம். இவை 12 எண்ணிக்கைக்குக் குறைவாகவே தயாரிக்கப்பட்டன. எனினும், இவை இரண்டாம் உலகப்போரின் போது ஏவுகணை அட்டவணைகளைக் கணிக்கத் திறம்படப் பயன்படுத்தப்பட்டன. இந்த எந்திரம் ஓர் அறை முழு

வதையும் அடைத்துக் கொள்ளும் அளவுக்குப் பெரிதாக இருந்தது. முனைந்த பகுதியுள்ள சுற்றுருளை போன்ற பல்லிணைகள் மூலம் இது செயல்படுத்தப்பட்டிருந்தது.

**differential configuration : வேறுபாட்டளவையியல் உருவமைதி :** ஓசையினையும் குறுக்குப் பேச்சுகளையும் கேட்கமுடியாத அளவுக்கு ஒவ்வொரு மின்னியல் சைகைக்கும் கம்பியிணைகளைப் பயன்படுத்துதல். இது, ஒற்றை முனை உருவமைதியிலிருந்து (Single-ended configuration) வேறுபட்டது.

**differentiator : வேறுபாட்டளவி; வேறுபாட்டளவைக் கருவி; மாறுபாடளப்பான் :** உள்ளீட்டு சமிக்கை என்ன வேகத்தில் மாறிக் கொண்டிருக்கிறது என்பதை அளக்கும் மின்சுற்று. இந்த மின்சுற்றின் வெளியீட்டு மின்அளவு, உள்ளீட்டு சமிக்கை மாறும் வேக விகிதத்துக்கு நேர்விகிதத்தில் இருக்கும். x என்பது உள்ளீட்டு சமிக்கை, t என்பது நேரம் எனில், இந்த மின்சுற்றின் வெளியீட்டளவு dx/dt ஆகும்.

**DIF files : டிஐஎஃப் கோப்புகள் :** டிஐஎஃப் தரநிர்ணயத்திற்கு ஏற்ப உருவாக்கப்பட்ட கோப்புகள். பல்வேறு எந்திரங்களுக்கிடையே மாற்றிக் கொள்ளக் கூடிய கட்டு. கோப்புகள் ஏற்புடையனவாக இருந்தாலும், ஆப்பிள் டிஐஎஃப் கோப்பு வட்டினை நேரடியாக ஐபிஎம் எந்திரத்தில் படிக்க முடியாது. இந்த வட்டுகள் வெவ்வேறு எந்திரத்துக்காக வெவ்வேறு முறையில் அமைக்கப்படுகின்றன.

**diffusion : பரவச் செய்தல் :** சிலிக்கான் மென்தகடு போன்ற ஒரு பொருளின் மீது தூய்மைக் குறைவு. அணுக்களைச் சேர்க்கும் அதிவெப்ப செயல்முறை. இவை சென்று சேரும் பொருளில் உள்ள அணுக்களை மாற்றி அதில் உள்ள பொருள்களின் தன்மையை, விரும்பும் வழிகளில் மாற்றிவிடும் நிலை சக்தி உள்ளவை. சிலிக்கானில் தூய்மைக்குறைவுகளைச் சேர்க்க 900 முதல் 1,200 டிகிரி செல்ஷியஸ் வெப்பத்தில் பரவச் செய்யப்படுகிறது.

**digest : சுருக்கத் தொகுப்பு :** 1. இணையத்திலுள்ள செய்திக் குழுவில், இடையீட்டாளரிடம் சமர்ப்பிக்கப்பட்ட கட்டுரைகளின் சுருக்கங்களைக் கொண்ட தொகுப்பு. 2. ஒரு அஞ்சல் பட்டியலிலுள்ள வாடிக்கையாளர்களுக்கு அனுப்பப்படும் தனித்தனிக் கட்டுரைகளுக்குப் பதிலாக அவற்றின் சுருக்கங்

களைத் தொகுத்து அனுப்பி வைக்கப்படும் ஒரு செய்தி. அஞ்சல் பட்டியலுக்கு ஓர் இடையீட்டாளர் இருப்பின் அச் சுருக்கத் தொகுப்பு திருத்திச் சீரமைக்கப்படலாம்.

digit : இலக்கம் ; எண்ணியல் : ஒரு அளவைக் குறிப்பிடப் பயன்படுத்தப்படும் எண் முறைக் குறியீடு. பதின்ம முறையில் 0 முதல் 9 வரை பத்து இலக்கங்கள் உள்ளன.

digital : எண்ணியல் ; எண்மம் ; இரு நிலை உரு ; இலக்க முறை; இலக்க வகை : இயக்கம், நிறுத்தத்தினைக் குறிப்பிட 1 அல்லது 0-க்களாகத் துண்மி குறியீடு இட்டு தரவைக் குறிப்பது பற்றியது. கணினி மற்றும் செய்தித் தரவுத் தொடர்பு தொழில் நுட்பத்தில் மிகவும் இன்றியமையாதது.

digital audio tape : இலக்க முறை ஒலிநாடா.

digital audio/video connector : இலக்க முறை கேட்பொலி/ஒளிக் காட்சி இணைப்பி : சில உயர்திறன் ஒளிக்காட்சி அட்டைகளிலும் (தொலைக்காட்சி டிவி) நடத்தேர்வு அட்டைகளிலும் இருக்கும் இடைமுகம். இதன் மூலம் இலக்கமுறை கேட்பொலி மற்றும் ஒளிக்காட்சி சமிக்கைகளை ஒரே நேரத்தில் அனுப்ப முடியும். டிஏவி இணைப்பி எனச் சுருக்கமாவும் அழைப்பர்.

digital camera : இலக்கமுறைப் படப்பிடிப்புக் கருவி; எண்ணுருப் படமாக்கி : வழக்கமான ஃபிலிமிற்குப் பதிலாக மின்னணு முறையில், பட உருவங்களைப் பதிவுசெய்யும் கருவி. இக் கருவியில் மின் ஏற்றப்பட்ட சாதனம் (Charge-Coupled Device-CCD) உள்ளது. இயக்குநர், படக் கருவியின் மூடியைத் திறக்கும் போது, லென்ஸ் வழியாக பட உருவத்தை சிசிடி உள் வாங்குகிறது. பிறகு அப்பட உருவம், படக் கருவியின் உள்ளே இருக்கும் நிலை நினைவகம் அல்லது நிலைவட்டில் சேமிக்கப்படுகிறது. படக்கருவியுடன் தரப்படும் மென்பொருளின் உதவியுடன் பதியப்பட்ட பட உருவத்தை கணினியில் பதிவிறக்கம் செய்துகொள்ளலாம். வருடுபொறி மற்றும் அது போன்ற உள்ளீட்டுக் கருவிகள் மூலம் கணினியில் கையாளும் படங்களைப் போன்றே படப் பிடிப்புக் கருவி மூலம் கணினியில் பதிவு செய்யப்பட்ட படத்தையும் நாம் விரும்பிய வாறு திருத்தி, சீரமைத்து வைத்துக் கொள்ளலாம்.

**digital cassette :** இலக்க ஒளிப் பேழை : தரவு சேமிப்புச் சாதனத்தின் ஒரு குறிப்பிட்ட வகை.

**digital circuit :** இலக்கச் சுற்று வழி : ஓர் ஒருங்கிணைந்த மின் சுற்றுவழி. இது, உயர்ந்த அல்லது தாழ்ந்த மின் அழுத்தங்கள் போன்ற சைகை அளவுகளின் குறிப்பிட்ட மதிப்பளவுகளில் இயங்குகிறது.

**digital clock :** இலக்கக் கடிகாரம்.

**digital communications :** இலக்க முறை தகவல் தொடர்புகள் : மின்னணு சமிக்கைகள் மூலம் குறியீடு அளித்து தகவலைப் பரிமாறுதல்.

**digital computer :** இலக்கமுறை கணினி : இலக்கமுறைத் தரவுகளைக் கையாண்டு அந்தத் தரவுகளில் கணித மற்றும் அளவை இயக்கங்களைச் செய்யும் சாதனம்.

**digital control :** இலக்கமுறை கட்டுப்பாடு : இயக்கும் சூழ்நிலைகளில் மாற்றம் இருந்தாலும் விரும்பிய வகையில் இயக்க அமைப்புகளின் நிலையைக் கட்டுப்படுத்த இலக்க முறை தொழில் நுட்பத்தைப் பயன்படுத்துதல்.

**digital darkroom :** இலக்க இருட்டறை : கறுப்பு-வெள்ளை ஒளிப் படங்களின் நுட்பத்திறனை அதிகரிப்பதற்காக சிலிக்கன் பீச் மென்பொருள் தயாரிப்பு நிறுவனம் தயாரித்துள்ள மெக்கின்டோஷ் வரைகலைத் தொகுப்புச் செயல்முறை.

**digital data :** இலக்கமுறை தரவு : தொடர் வடிவத்தில் ஒத்திசைவான முறையில் தரவுகளைக் குறிப்பிடுவதற்குத் தொடர்ச்சியில்லாத முறையில் தனித்தனியாக தரவுகளைக் குறிப்பிடுதல்.

**digital data service :** இலக்க தரவுப் பணி : பொதுத் தரவுத் தொடர்பு சேவையாளர்களால் இயக்கப்படும் ஒரு செய்தித் தொடர்பு இணையம் (எடுத்துக்காட்டு : டெலிகாம் ஆஸ்திரேலியா). இது, இலக்கத் தரவுகளை அதிவேகத்தில் கொண்டு செல்கிறது. தரவுகள் பெரும்பாலும் கணினிக்கும், கணினியிலிருந்து புறநிலைச் சாதனங்களுக்கும், சேய்மை உணர்விகள், தொலைமானிச் சாதனங்கள் போன்றவை மூலம் கொண்டு செல்லப்படுகின்றன. இதன் சுருக்கப்பெயர் 'DDS'. இதனைச் சிலசமயம் 'இலக்கத் தரவு இணையம்' (Digital Data Network-DDN) என்றும் அழைக்கின்றனர்.

**digital data storage :** இலக்க முறை தரவுச் சேமிப்பு.

**digital data transmission : இலக்க முறை தரவு அனுப்புதல் :** கணினி சாதனம் உருவாக்கிய மூல மின்னனு சமிக்ஞையை அனுப்புதல். எல்லா வழித் தடங்களும் இலக்கமுறை திறன்கள் உடையவை அல்ல.

**digital display : இலக்கமுறைத் திரைக்காட்சி; எண்ணுருத் திரைக்காட்சி :** ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையிலான நிறங்களில் அல்லது சாம்பல் நிறத்தில் மட்டுமே நிகழ்படத் திரைக் காட்சி சாத்தியமாகும் காட்சி முறை. ஐபிஎம் அறிமுகப்படுத் திய ஒருநிறக் (Monochrome) காட்சி, சிஜிஏ (Colour Graphics Array), இஜிஏ (EGA-Enhanced Graphics Array) ஆகியவை இவ் வகையைச் சேர்ந்தவை.

**Digital Equipment Corporation ; DEC : டிஜிட்டல் எக்விப்மென்ட் கார்ப்பரேஷன் ; டிஇசி :** சிறு கணினி அமைப்புகளைப் பெரு மளவில் உற்பத்தி செய்யும் நிறுவனம்.

**digital image processing : இலக்கமுறைப் படிமச் செயல் முறை.**

**digital imaging : இலக்கமுறைப் படிமமாக்கல்.**

**digital line : இலக்க முறை இணைப்புத் தடம்; எண்ணுரு வழித்தடம் :** இருமக் குறியீட்டு வடிவிலான தகவலை மட்டுமே ஏந்திச் செல்லும் தரவு பரிமாற்ற இணைப்புத் தடம். தரவு சிதைவு மற்றும் இரைச்சல் குறுக்கீடுகளைக் குறைப்பதற்கு இலக்கமுறை இணைப்புத் தடத் தில், தரவு சமிக்கைகளை மீட்டு ருவாக்கம் செய்யும் திறன் மிகுப்பு நிலையங்கள் (Repeaters) பயன்படுத்தப்படுகின்றன.

**digital linear tape : இலக்கமுறை வரிசை நாடா; எண்ணுரு வரிசை முறை நாடா :** ஒரு காந்தவகை சேமிப்பு ஊடகம். பாதுகாப்பு நகலெடுக்கப் பயன்படுகிறது. பழைய நாடாத் தொழில்நுட்பங் களைவிட வேகமான தரவு பரிமாற்றம் இயலும்.

**digital mail : இலக்கமுறை மின்னஞ்சல்.**

**digital micromirror display : இலக்கமுறை நுண்ணாடித் திரைக்காட்சி; எண்ணுரு நுண்ணாடித் திரைக்காட்சி :** டெக்சஸ் இன்ட்ஸ்ருமென்ட்ஸ் நிறுவனத்தின் இலக்கமுறை திரைக்காட்சிக் கருவியில் பயன் படுத்தப்படும் மின்சுற்றுத் தொழில்நுட்பம். 0.002 மிமீ-க்கும் குறைவான அகலமுள்ள நுண்ஆடிகள் தொகுப்பாக ஒரு சிப்புவில் பொருத்தப்பட்டிருக் கும். இதனைத் திருகி ஒளியைப்

பிரதிபலிக்கச் செய்து திரைக் காட்சி சாதனத்தின் லென்ஸ்மீது விழச் செய்யலாம். இதனால் மிகப் பிரகாசமான முழு வண்ணத் திரைக்காட்சியை உரு வாக்க முடியும். 1,920×1,035 (1,987,200) படப்புள்ளிகளும் (pixels), 6 கோடியே 40 இலட்சம் நிறங்களும் கொண்ட தெளி வான திரைக்காட்சியை உரு வாக்க முடியும்.

**digital multipliear** : இலக்கமுறை பன்முகப் பெருக்கி.

**digital optical recording** : இலக்க முறை ஒளிவப் பதிவாக்கம்.

**digital paper** : இலக்கக் காகிதம் : அழித்திட முடியாத சேமிப்புப் பொருள். இதனை ICI மின்னணு வியல் நிறுவனம் தயாரித் துள்ளது. இது, நாடா மற்றும் வட்டு ஆவணக் காப்பகச் சேமிப்புப் பொருளாகப் பயன் படுகிறது. இது, ஒரு பிரதி பலிப்புப் படுகைப் பூச்சுடைய ஒரு பாலிஸ்டர் படலத்தைப் பயன்படுத்துகிறது. இதன் உச்சி யில் அகச் சிவப்பு ஒளிக்குச் செயலுணர்வுடைய சாயப் பாலி மர் படலம் ஒட்டப்பட்டிருக்கும்.

**digital PBX** : இலக்க அஞ்சல் பெட்டி : ஒரு தனியார் கிளைப் பரிமாற்றமைவு. இது, மனிதர் உதவியில்லாமல், பல்லாயிரம் செய்தித் தொடர்பு வழிகளைத் தானாகவே கையாளக்கூடியது. தொலைபேசி இணைப்புகளில் ஒரே சமயத்தில், குரல் மற்றும் தரவு அனுப்பீடுகள் செய்ய லாம். உள்ளூர் தரவுப் பரி மாற்றங்களுக்கு அதிர்விணக்கி களும், அதிர்விணக்க நீக்கிகளும் (Modems) தேவையில்லை.

**digital photography** : இலக்க முறை ஒளிப்படக்கலை; எண் ணுரு ஒளிப் படவியல் : இலக்க முறை (எண்ணுரு) ஒளிப்படக் கருவியைப் பயன்படுத்தும் ஒளிப்படக்கலை. வழக்கமான ஒளிப்படத் தொழில்நுட்பத் திலிருந்து இலக்கமுறை ஒளிப் பட நுட்பம் மாறுபட்டது. ஓர் உருப்படத்தைப் பதிவுசெய்ய சில்வர் ஹேலைடு தடவிய ஃபிலிம் இலக்கமுறை ஒளிப் படக் கருவியில் பயன்படுத்தப் படுவதில்லை. அதற்குப் பதி லாக, இலக்கமுறைப் படக் கருவி உருவப்படங்களை மின்னணு முறையில் பதிவு செய்கிறது.

**digital plotter** : இலக்கமுறை வரைவி: வரைபடமுறைகள், வரி ஓவியங்கள் மற்றும் பிற படங்களை வரைவதற்கு மைபேனா அல்லது பேனாக் களைப் பயன்படுத்தும் வெளி யீட்டுச் சாதனம்.

**digital recording : இலக்கமுறை பதிவு செய்தல் :** *காந்தப் பதிவு ஊடகத்தில் நுட்பமான புள்ளிகளாக தகவலைப் பதிவு செய்யும் நுட்பம்.*

**digital repeater : இலக்கமுறை மீட்டுரு வாக்கப் பொறி :** *இலக்கமுறை துடிப்புகள் நீண்ட கடத்திகள் வழியாகச் செல்லும் போது பலவீனமடையும் என்பதற்காக அவற்றை மீண்டும் உருவாக்க செய்தி தரவுத் தொடர்புகளின் பாதையில் அமைக்கப்படும் சாதனம்.*

**digital research : இலக்கமுறை ஆராய்ச்சி :** *(இலக்கமுறை ஆராய்ச்சி நிறுவனம், மான்டெரி, சிஏ) கேரி கில்டால் என்பவர் 1976இல் நிறுவிய மென்பொருள் நிறுவனம். இது தனது நுண்கணினிக் கட்டுப்பாட்டுச் செயல்முறை* (CP/M) *மூலம் நுண்கணினிப் புரட்சியில் முன்னணியில் திகழ்ந்தது. இந்த நிறுவனத்தின் தயாரிப்புகளில்* GEM *பலகணிச் சூழல்,* FlexOS *இயல்புநேரச் செயற்பாட்டு முறை,* DR DOS *ஆகியவை முக்கியமானவை. இந்த நிறுவனத்தை 1991இல் நோவல் என்ற நிறுவனம் விலைக்கு வாங்கியது.*

**digital signal : இலக்க முறை சைகை; இலக்கமுறை சமிக்கை:** *கணினி புரிந்து கொள்ளக்கூடிய வகையில் இரும எண் தரவுகளாக (1,0) குறியீட்டை அனுப்பிவைக்கும் இரண்டு மின்சார நிலைகள். ஒவ்வொரு 1-ம் 0-வும் ஒரு துண்மி. 8 முதல் 10 துண்மிகள் சேர்ந்து ஒரு பைட் அல்லது ஒரு எட்டியல் எழுத்து உருவாகிறது. இலக்கமுறை சமிக்கையை அலைவு முறைக்கு மாற்றவும், அலைவு முறையிலிருந்து கணினி புரிந்து கொள்ளும் இலக்க முறைக்கு மாற்றவும் அதிர்விணக்கி (மோடெம்) பயன்படுத்தப் படுகிறது.*

**digital signal processing : இலக்கமுறைக் குறிப்பு செயலாக்கம்.**

**digital signature : மின்னணுக் கையொப்பம்; இலக்கமுறைக் கையொப்பம்; எண்ணுருக் கையொப்பம் :** *மின்னணு ஆவணங்களில் பயன்படுத்தப் படும் இரகசியக் குறியீட்டு முறைக் கையொப்பம். ஒருவர் தானே உரிமைச் சான்றளிக்கும் முறையாகும். மறையாக்கத்தையும்* (encryption), *இரகசிய சான்றுறுதிக் குறியீட்டையும் அடிப்படையாகக் கொண்டது.*

**digital simultaneous voice and data : இலக்க முறையில் ஒரே நேரத்தில் குரலும் தரவும் :**

மல்ட்டிடெக் சிஸ்டம்ஸ் நிறு வனம் காப்புரிமை பெற்றுள்ள ஒரு நவீனத் தொழில் நுட்பம். ஒற்றைத் தொலைபேசித் தடத்தில் உரையாடலையும், தகவலைப் பரிமாற்றத்தையும் இயல்விக்கும் தொழில்நுட்பம். குரலை அனுப்பவேண்டிய தேவை எழும்போது பொதித் தகவல் பரிமாற்ற முறைக்கு மாறிக் கொள்ளும். இலக்க முறையாக்கப்பட்ட குரல் பொதிகள், கணினித் தரவு மற்றும் கட்டளைப் பொதிகளோடு சேர்த்து அனுப்பி வைக்கப்படும்.

**digital sorting** : இலக்கமுறை பகுத்தல்; இலக்க முறை வரிசை யாக்கம்: பட்டியலிடும் எந்திரத் தில் பிரிப்பது போன்றதொரு பிரிக்கும் நுட்பம். விசைகளை வரிசைப்படுத்துவதிலும், தரவு களின் மதிப்பாலும் இடைப் பட்ட காலத்திற்கு நேரடி விகித மாக எழுத்துகளின் எண்ணிக்கை அமையும் முறை.

**digital speech** : இலக்கமுறைப் பேச்சு : பதிவான பேச்சை சிறு ஒலி அலகுகளாகப் பிரித்தநன் நிலை. ஒவ்வொரு அலகும் உரத்த ஓசை, பிட்ச், டிம்பர் போன்றவற்றை எண்களாகக் குறிப்பிடப்பட்டு பேச்சின் இலக்கமுறைக் குறியீடாக மாற்றப்படும்.

**digital subscriber line** : இலக்க முறை வாடிக்கையாளர் இணைப்பு : இது ஓர் ஐஎஸ்டிஎன் பிஆர்ஐ இணைப்பு அல்லது தடம். வாடிக்கையாளரின் வளாகம் வரை இலக்கமுறைத் தகவல் பரிமாற்றம் இயலும். முந்தைய தொலைபேசித் தடத் தகவல் பரிமாற்றத்திலிருந்து மாறு பட்டது. சுருக்கமாக டிஎஸ்எல் (DSL) என்று அழைக்கப்படு கிறது. இந்த வகை வழித்தடத் தில் இணைய இணைப்புப் பெற்றால் 24 மணி நேர இணையத் தகவல் பரிமாற்றம் இயலும். அதிவேகத் தகவல் பரி மாற்றமும், குறைந்த நேரத்தில் அதிக அளவு பதிவேற்றமும் பதிவிறக்கமும் இயலும்.

**digital switching (DVI)** : இலக்க முறை இணைப்பாக்கம்.

**digital telephone** : இலக்க முறைத் தொலைபேசி.

**digital to analog converter- D-A converter** : இலக்க முறை யிலிருந்து அலைவு முறைக்கு மாற்றும் சாதனம் : நுட்பமான இலக்கமுறை எண்களை தொடரலைவான சமிக்கை களாக மாற்றப் பயன்படுத்தப் படும் எந்திர அல்லது மின் னணுச் சாதனங்கள்.

**digital tracer** : இலக்க வரைபடக் கருவி : படங்களையும், வரை

கலைகளையும், வரைபடம் எடுப்பதற்குப் பயன்படுத்தப் படும் ஒரு தனிவகைக் கீலுடைய கரம். இது கணினிக்குத் தரவு களை அனுப்புகிறது.

**digital transmission** : இலக்க முறை அனுப்பீடு : ஈரிலக்க வடிவில் ('0' மற்றும் '1') தரவுகளை அனுப்புவதற்கான ஓர் அனுப் பீட்டு முறை. இது அலைவு வடிவிலிருந்து வேறுபட்டது. குறுகிய தொலைவுகளுக்கு மட்டும் இலக்கமுறை அனுப் பீட்டு முறையைப் பயன்படுத்த முடியும். எடுத்துக்காட்டு : ஒரு உள்ளூர்ப் பகுதி இணையம்.

**digital versatile disk** : இலக்க முறைப் பல்திறன் வட்டு.

**digital video disc** : இலக்கமுறை ஒளிக்காட்சி வட்டு; எண்ணுரு நிகழ்பட வட்டு : அடுத்த தலை முறை ஒளிவட்டுத் சேமிப்பகத் தொழில்நுட்பம். ஒரு குறுவட் டில் கேட்பொலி, ஒளிக்காட்சி மற்றும் கணினித் தரவு ஆகிய வற்றை ஒருசேரச் சேமித்து வைக்க இத்தொழில்நுட்பம் உதவுகிறது. வழக்கமான குறு வட்டைவிட அதிகமான தரவு களை ஒரு இலக்கமுறை ஒளிக் காட்சி குறுவட்டு சேமிக்க முடியும். ஒருபக்க-ஒரடுக்கு வட்டில் 4.7 ஜிபி வரை தரவைச் சேமிக்க முடியும். ஒருபக்க -ஈரடுக்கு வட்டில் 8.5 ஜி.பி வரை சேமிக்கலாம். இருபக்க -ஈரடுக்கு வட்டில் 17 ஜி.பி வரை சேமிக்கலாம். இந்த வட்டுகளைப் படிக்க தனியான இயக்ககம் (Drive) உண்டு. இந்த இயக்ககம் (Drive) பழைய லேசர் வட்டுகள், குறுவட்டுகள், கேட் பொலிக் குறுவட்டுகள் ஆகிய அனைத்தையும் படிக்கும். டிவிடி (DVI) என்பது தலைப் பெழுத்துக் குறும்பெயர்.

**digital video disc-erasable** : இலக்கமுறை ஒளிக்காட்சி வட்டு அழித்தெழுத முடிவது; எண்ணுரு நிகழ்பட வட்டு - அழித்தெழுத முடிவது : பயன்பாட்டுக்கு வரப் போகிற ஒளிக்காட்சி வட்டில் ஒரு வகை. நுகர்வோர் இந்த வட்டில் உள்ள விவரங்களை பலமுறை அழித்து மீண்டும் எழுதிக் கொள்ள முடியும்.

**digital video disc-recordable** : இலக்கமுறை ஒளிக்காட்சி வட்டு பதியமுடிவது; எண்ணுரு நிகழ் பட வட்டு-எழுதமுடிவது: பயன் பாட்டுக்கு வரப்போகின்ற, இலக்கமுறை ஒளிக்காட்சி வட்டில் ஒரு வகை. நுகர்வோர் இந்த வட்டில் ஒரு முறை எழுதிக்கொள்ள முடியும்.

**digital video disc-ROM** : இலக்க முறை ஒளிக்காட்சி வட்டு - படிக்க மட்டும்; எண்ணுரு நிகழ்

படவட்டு - படிக்க மட்டும் : இப்போது பயன்பாட்டில் உள்ள ஒளிக்காட்சி வட்டு. இதிலுள்ள விவரங்களைப் படிக்கமட்டுமே முடியும். அழித்தெழுத முடியாது. 4.7 மற்றும் 8.5 ஜிபி கொள்ளளவுகளில் கிடைக்கின்றன. ஒருபுறம் ஓரடுக்கு, ஒருபுறம் ஈரடுக்கு, இருபுறம் ஓரடுக்கு, இருபுறம் ஈரடுக்கு என நான்கு முறைகளில் இந்த வட்டில் தரவுகள் பதியப்படுகின்றன. அதிக அளவாக 17 ஜிபி வரை தரவு பதியமுடியும்.

**Digital Video Interactive (DVI) : இலக்கமுறை ஒளிக்காட்சி உறவாடல்; எண்ணுரு நிகழ்பட ஊடாடல் :** ஜெனரல் எலெக்ட்ரிக் மற்றும் இன்டெல் நிறுவனங்கள் இணைந்து, நுண்கணினிப் பயன்பாட்டுத் தொகுப்புகளுக்காக உருவாக்கிய, இலக்கமுறை ஒளிக்காட்சி மற்றும் கேட்பொலித் தரவு சுருக்க முறை. வன்பொருள், மென்பொருள் இணைந்த ஓர் அமைப்பு.

**digit, binary coded : இருமக் குறிமுறை இலக்கம்.**

**digit, check : சரிபார்ப்பு இலக்கம்.**

**digitize : இலக்கமாக்கு :** பட ஓவியம் போன்ற வரைபட முறைத் தோற்றத்தை இலக்க முறை குறியீடு செய்து வரைமுறைப் படமாக மாற்றுதல்.

**digitized type : இலக்கமாக்கிய எழுத்துரு :** கணினி படிக்கத்தக்க வடிவில் சேமித்து வைக்கப்பட்டுள்ள எழுத்துரு. இது புள்ளிகளின் அல்லது கோடுகளின் ஒரு தொகுதியைக் கொண்டது.

**digitizer : இலக்கமாக்கி :** பேனா போன்ற எழுது கருவி மூலமோ அல்லது பிற சுட்டுவி (கர்சர்) மூலமோ இயக்குபவர் எழுத உதவும் தட்டையான பலகையைக் கொண்ட உள்ளீட்டுச் சாதனம். இயக்குபவர் எழுதும் வடிவங்கள் கணினி அமைப்பின் நினைவகத்தில் தானாகப் பதிவாகி செயலாக்கம் பெறும்.

**digitizing : இலக்கமுறை ஆக்கல் :** படங்கள், ஓவியங்கள் போன்றவற்றை, கணினி அமைப்பு செயலாக்கம் செய்யக்கூடிய இலக்க முறை தரவுகளாக மாற்றுதல்.

**digitizing tablet : இலக்க முறையாக்கும் பலகை :** வரைமுறை மற்றும் படத் தரவுகளை கணினியில் பயன்படுத்தும் இருமை உள்ளீடுகளாக மாற்றும் உள் ளீட்டுச் சாதனம். இதில் ஒரு மேல் தகடும் அதன் அடியில் மெல்லிய கம்பித் தொகுதிகளும் இருக்கும்.

digit, octal : எண்ம இலக்கம்; எட்டியல் இலக்கம்.

digit place : இலக்க இடம் : ஒரு எண்ணைக் குறிப்பிடும் சொல் இடம்பெற்றுள்ள இலக்கத்தைக் குறிப்பிடும் இடக்குறிப்பு எண் அமைப்பு, அமைப்பில் 10-களின் இடம், ஒன்றுகளின் இடம் போன்றவை உள்ளன.

digit position : இலக்கு நிலை.

digit punch : இலக்கத் துளை : ஒரு 80- பத்தி அட்டையில் எந்த ஒரு வரிசையிலும் '0' முதல் '9' வரையில் இலக்கத்திற்கு இடப்பட்ட துளையின் இட நிலை.

digit punching place : இலக்கத் துளையிடுமிடம்.

digit punching position : இலக்கம் துளையிடும் இடம் : 1, 2,....9 என்ற வரிசையில் துளையினைக் குறிப்பிடும் பதின்ம இலக்கத்திற்காக துளையிட்ட அட்டையில் ஒதுக்கப்பட்ட இடம்.

digit, sign : அடையாள இலக்கம்; குறியீட்டு இலக்கம்.

DikuMUD : டிக்குமட் : 1. டச்சு நாட்டில் கோபன்ஹேகன் பல்கலைக் கழகத்தின் கணினி அறிவியல் துறையில் பணியாற்றிய ஐந்துபேரின் டேனிஷ் மொழித் தலைப்பெழுத்துக் குறும்பெயர். டிக்கு (DIKU) உருவாக்கிய மென்பொருள், பல்பயனாளர் பாழ்பொந்து என்று பொருள்படும் Multi User Dungeon என்ற தொடரின் தலைப்பெழுத்துச் சுருக்கத்துடன் (MUD) சேர்ந்து டிக்குமட் (DIKUMUD) என்றாயிற்று. டிக்குமட் பல்லூடகப் பயன்பாடு உடையது. பொருள் நோக்கிலானது. ஆனால் இவற்றின் இனக்குழுக்கள் (Classes) நிலை நிரல் (Hard code) கொண்டது. பயனாளர் தாம் விரும்பியவாறு மாற்றியமைக்க முடியாது. இந்த மென்பொருளுக்கு உரிமம் பெற்றவர்கள் பணத்துக்காக இதனை விற்பனை செய்ய முடியாது. 2. டிக்குமட் மென்பொருளைப் பயன்படுத்தி உருவாக்கப்பட்ட ஒரு கணினி விளையாட்டும் இதே பெயரில் அழைக்கப்படுகிறது.

dimension : பரிமாணம் : ஒரு வரிசையில் உள்ள பொருள்களின் வரிசையமைப்பின் அதிகபட்ச அளவு அல்லது எண்.

dimensional, multi : பன்முகப் பரிமாணம்; பல் பரிமாணம்.

dimensional storage, two : இரு பரிமாணச் சேமிப்பு.

dimensioning : பரிமாணமாக்கல்.

dimmed : மங்கிய தேர்வு; மறுக்கப்பட்ட : வரைகலைப்

பணித்தளத்தில் நாம் நிறைவேற்ற விரும்பும் பணிகளை பட்டியலுள்ள தேர்வுகளில் ஒன்றைத் தேர்வுசெய்து இயக்க வேண்டும். சில சூழ்நிலைகளில் சில பட்டியல் தேர்வுகள் வெள்ளைப் பின்புலத்தில் கருப்பு எழுத்தில் இல்லாமல் மங்கிய சாம்பல் நிறத்தில் இருக்கும். கருப்புப் பின்புலத்திலுள்ள வெள்ளை எழுத்துகளும் மங்கிய நிலையில் இருக்கும். இவற்றைப் பயனாளர் தேர்வு செய்ய முடியாது. எடுத்துக்காட்டாக, சொல் செயலித் தொகுப்புகளில், உரைப் பகுதி எதையும் தேர்வு செய்யாத போது Cut, Copy என்ற விருப்பத் தேர்வுகள் மங்கிய நிலையில் இருக்கும். அதேபோல, ஏற்கெனவே ஒரு பகுதியை வெட்டியோ (Cut), நகலெடுத்தோ (Copy), இடைச்சேமிப்புப் பலகை (Clip Board)-யில் வைத்திராத போது Paste என்னும் பட்டியல் தேர்வு மங்கலாக இருக்கும்.

**dimmed command : மங்கிய ஆணை :** ஒரு பட்டியலில் மங்கலாக்கப்பட்டுள்ள ஆணை. தற்போதைக்கு விருப்பத்தேர்வு எதுவுமில்லை என்பதை ஒரு மங்கிய ஆணை சுட்டுகிறது. அந்தத் தேர்வினைச் செய்வதற்கு முன்னர் இன்னொரு செயற்பணி முடிக்கப்பட வேண்டும் என்பது இதற்குக் காரணமாக இருக்கலாம்.

**dimmed icon : மங்கிய உருவம் :** மங்கிய கருநிற உருவம். இது, அது குறித்துக்காட்டும் வட்டு, மடிதாள் அல்லது வட்டு ஆவணம் போன்ற பொருள் ஏற்கனவே திறக்கப்பட்டு விட்டது, அல்லது வட்டு இயக்கியிலிருந்து வெளியேற்றப்பட்டு விட்டது என்பதைக் குறிக்கிறது.

**DIN connector : டின் இணைப்பான்; டின் இணைப்பி :** ஜெர்மன் தேசிய தரக் கட்டுப்பாட்டு நிறுவனம் (Deutsch Industries Norm - DIN) வகுத்துள்ள நெறிமுறைகளுக்கு இசைந்து உருவாக்கப்பட்ட பல்லூசி இணைப்பான். கணினியின் பல்வேறு உறுப்புகளை இணைப்பதற்கு டின் இணைப்பான்கள் பயன்படுத்தப்படுகின்றன.



டின் இணைப்பி

**dingbats** : டிங்பேட்ஸ் : எழுத்துருவாக்க மற்றும் மேசை மோட்டு வெளியீட்டுக் குறியீடுகளின் தொகுதி. 'இன்டர் நேஷனல் டைப்ஃபேஸ் கார்ப்பரேஷன்' என்ற நிறுவனம் இதைத் தயாரித்துள்ளது. இதில், அம்புக்குறிகள், சுட்டுக் கைகள், நட்சத்திரக் குறிகள், வட்ட மிட்ட இலக்கங்கள் அடங்கியிருக்கும். இவை "ITC Zapf Dingbats" என்று அழைக்கப்படுகின்றன.

**dinousaurs** : டினோசார்ஸ் : 'கம்மோடோர்-64' என்ற இல்லக் கணினியில் பயன்படுத்துவதற்கான ஒரு மென்பொருள்.

**diode** : இருமுனையம் : ஒரு திசையில் மட்டும் மின் ஓட்டத்தைத் தடுத்து அடுத்த திசையில் மின்ஓட்டத்தை அனுமதிக்கும் மின்னணுச் சாதனம்.

**diode transistor logic** : டயோடு டிரான்சிஸ்டர் லாஜிக்; இருமுனைய மின்மப்பெருக்கி இணைப்புமுறை : ஒருதிசை இருமுனையம், மின்மப்பெருக்கி மற்றும் மின்தடுப்பி ஆகிய உறுப்புகளைக் கொண்ட ஒருவகை மின்சுற்று வடிவாக்கம். தருக்கமுறைச் செயல்பாடுகளுக்குப் பயன்படுகிறது.

**diogonal** : மூலைவிட்டம்.

**DIP** : டிஐபி : Dual Inline package என்பதன் குறும்பெயர்.

**dipole** : இருதுருவம் : சிறிய இடைவெளியால் பிரிக்கப்பட்டுள்ள நேர்-எதிர் மின் செறிவுகள். இருவேறு எதிரெதிர் காந்தத் துருவங்கள்.

**DIP switches** : டிஐபி நிலை மாற்றிகள்: பல கணினிகளிலும் வெளிப்புறப் பொருள்களிலும் காணப்படும் சிறிய நிலை மாற்றிகள். சாதனங்களை நிலை நிறுத்தவும், சரிசெய்யவும் பயன்படுகிறது.

**dir** : (டிர்) : டாஸ் இயக்கமுறைமையில் உள்ள கட்டளை. இக் கட்டளை இருப்புக் கோப்பகம் அல்லது கோப்புறையிலுள்ள கோப்புகள் மற்றும் உள்கோப்பகங்களின் பட்டியலைத் திரையில் காட்டும். ஒரு குறிப்பிட்ட கோப்பக அல்லது உள்கோப்பகத்தின் உள்ளடக்கத்தையும் உரிய பாதையைக் குறிப்பிட்டு அறிய முடியும்.

**direct access** : நேரடி அணுகு முறை ; நேர்வழிச் சேர்வு : சுற்றிலும் உள்ள தரவுகளைத் தொடாமல் நேரடியாக, தேவையான தரவுகளை மட்டும் தேடி எடுக்கும் அல்லது தரவுகளை சேமிக்கும் செயல்முறை. வரிசை முறை அணுகுமுறையில்

ஒவ்வொரு கோப்பையும் படித்தே செல்லவேண்டியிருக்கும் என்பதால் இது விரைவான முறை.

**direct access file :** நேர்வழிக் கோப்பு.

**direct access processing :** நேரடி அணுகல் செயலாக்கம் : நேரடி செயலாக்கம் மற்றும் தற்செயல் செயலாக்கம் போன்றது.

**direct access storage :** நேர் வழிச் சேகரம்.

**Direct Access Storage Device (DASD) :** நேரடி அணுகல் சேமிப்புச் சாதனம் : தகவல் இருப்பிடங்களை நேரடியாக முகவரியிட அனுமதித்து தேவையான தகவலை நேரடியாக எந்திர முறையில் அணுக அனுமதிக்கும் சேமிப்பு ஊடகம்.

**direct address :** நேரடி முகவரி : ஒரு இயக்கப்படும் ஒரு பொருளின் இருப்பிடத்தைக் குறிப்பிடும் முகவரி.

**direct cable connection :** நேரடி வட இணைப்பு : இரண்டு கணினிகளை அவற்றின் உ/வெ (I/O) துறை வழியாக, இணக்கி அல்லது வேறெந்த இயங்கு இடைமுகச் சாதனங்களும் இன்றி, நேரடியான ஒற்றை வடம் மூலம் பிணைத்தல். பெரும்பாலும் இதுபோன்ற நேரடி இணைப்புகளுக்கு வெற்று இணக்கி வடம் (NUll Modem Cable)என்னும் சாதனம் தேவைப்படும்.

**direct connect modem :** நேரடி இணைப்பு அதிர்விணக்கி (மோடெம்) : தரவுப் பரப்புதலுக்குப் பயன்படுவதற்காக தொலைபேசியுடன் நேரடியாக இணைக்கப்படும் அதிர்விணக்கி (மோடெம்).

**direct conversion :** நேரடி மாற்றல் : ஒரு அமைப்பிலிருந்து மற்றொரு அமைப்புக்கு மாற்றி புதிய முறையை மட்டும் செயல்படுத்தும் மாற்றல் முறை.

**Direct Coupled Transister logic; DCTL :** நேரடி இணைப்பு மின் பெருக்கி அளவை : மின் பெருக்கிகளை மட்டுமே செயல்படும் பொருள்களாகக் கொண்ட மின் இணைப்பு முறைமை.

**direct current :** நேரடி மின்சக்தி : மின்கலத்திலிருந்து அளிப்பது போன்று ஒரு திசையில் மட்டும் மின்னணுக்களின் ஓட்டம்.

**direct data entry :** நேரடி தரவுப் பதிவு : நேர்முக முகப்புகள் மூலமோ அல்லது எந்திரம் படிக்கக்கூடிய மூல ஆவணங்கள் மூலமோ கணினியில் நேரடியாக தரவுகளை பதிவு செய்தல்.

**direct data organization** : நேரடித் தரவு அமைவாக்கம் : இயற்பியல் தரவு ஊடகத்தினுள் தருக்க முறைத் தரவுக் கூறுகள் குறிப்பின்றிப் பகிர்மானம் செய்யப்படுகிற ஒரு தரவு அமைவாக்க முறை. எடுத்துக் காட்டு : தருக்கமுறைத் தரவு மற்றும் பதிவேடுகளை ஒரு காந்த வட்டுக் கோப்பின் மேற்பரப்பில் குறிப்பின்றிப் பகிர்மானம் செய்தல். இதனை 'நேரடி அமைவாக்கம்' (Direct organization) என்றும் அழைப்பர்.

**direct digital colour proof** : நேரடி இலக்கமுறை வண்ண மெய்ப்பு.

**direct distance dialing** : நேரடி தொலைதூர அழைப்பு.

**direct file organization** : நேரடிக் கோப்பு அமைவாக்கம் : ஒவ்வொரு பதிவேடுகளையும் தனித்தனியே அணுகக்கூடிய அமைவாக்கம்.

**direct file processing** : நேரடிக் கோப்புச் செய்முறைப்படுத்துதல் : ஒரு பதிவேட்டு விடைக் குறிப்பினைப் பயன்படுத்தி, அப்பதிவேட்டினை நேரடியாக அணுகுவதற்குப் பயனாளரை அனுமதிக்கிற செயல்முறை.

**direct input/output** : நேரடி உள்ளீடு/வெளியீடு : ஒரு கணினிப் பொறியமைவுக்குள் தரவுகள் உள்ளிடுவதற்கு அல்லது கணினிப் பொறியமைவிலிருந்து எந்திரம் படிக்கக் கூடிய ஊடகங்களைப் பயன்படுத்தாமல் வெளிப்படுத்துவதற்கான முனையங்கள் போன்ற சாதனங்கள்.

**directive** : பொதுஆணை; பணிப்பு.

**Direct Memory Access (DMA)** : நேரடி நினைவக அணுகல் (டிஎம்ஏ) : மையச் செயலக அலகின் தலையீடு இல்லாமல் உட்புற நினைவகத்திலிருந்து வெளிப்புற சாதனங்களுக்கு தரவுகளை நேரடியாக மாற்றல் செய்யும் முறை.

**direct mode** : நேரடி முறை.

**direct processing** : நேரடி செயலாக்கம் : ஒரு கணினி அமைப்பானது, தரவு பெறப்பட்ட உடனேயே அதனை செயற்படுத்துவது. ஒத்தி வைக்கப்பட்ட செயலாக்கத்துக்கு மாறானது. அதில், தரவு, பகுதி பகுதியாக சேமிக்கப்பட்டுப் பிறகு செயலாக்கம் நடைபெறுகிறது.

**direct recovery plan** : நேரடி மீட்புத் திட்டம்.

**direct screen copy device** : நேரடித் திரைப்படியெடுப்புச் சாதனம் : முனையத் திரையில் காண்பவற்றை அப்படியே படியெடுக்கும் ஒரு சாதனம்.

**direct search index** : நேர் வழித் தேடல் (அட்டவணை).

**direct sequence** : நேரடித் தொடர் வரிசை : *அகலக் கற்றைத் தரவு தொடர்பில், பண்பேற்றத்தின் ஒரு வடிவம். தொடர்ச்சியான இருமத் துடிப்புகளால் சுமப்பி அலை பண்பேற்றம் செய்யப்படுகிறது.*

**direct X** : டைரக்ட் எக்ஸ் : *கணினியின் ஒலி மற்றும் வரைகலைக்கான வன்பொருள் சாதனங்களை, ஒரு பயன்பாடு நேரடியாக அணுகுவதற்கு வசதி ஏற்படுத்தித் தரும் ஒரு மென்பொருள். இது விண்டோஸ் 95/98-ல் செயல்படக் கூடியது.*

**directory** : விவரப்பட்டியல் ; தரவுக் குவியல் ; அடைவு : *1. மென்பொருளை பல தனித்தனி கோப்புகளாகப் பிரித்து, அந்தக் கோப்புகளின் இருப்பிடத்தைக் கண்டுரைக்க தகவல் பட்டியலைக் கொண்டுள்ள ஒரு சாதனம். 2. சேமிப்பு ஊடகத்தில் உள்ள அனைத்துப் பெயர்கள் மற்றும் இடங்களைக் கொண்ட, எல்லா கோப்புகளையும் உள்ளடக்கிய பட்டியல் கோப்பு.*

**Directory Access Protocol** : கோப்பக அணுகு நெறிமுறை : *எக்ஸ் 500 கிளையன் (Client) களுக்கும் வழங்கன் (Server) களுக்கும் இடையே நடைபெறும் தகவல் பரிமாற்றத்தை ஒழுங்குபடுத்தும் நெறிமுறை.*

**directory management** : விவரக் குறிப்பேட்டு மேலாண்மை : *ஒரு வட்டில் விவரக்குறிப்பேடுகளைப் பேணிக் கட்டுப்படுத்துதல். இது பெரும்பாலும் பட்டியலிடும் மென்பொருளைக் குறிக்கிறது. இது, நிரல்களைப் பதிவு செய்வதைவிடப் பயன்பாட்டுக்கு எளிதானது.*

**directory replication** : கோப்பக நேர்படியாக்கம் : *ஏற்றுமதி வழங்கன் எனப்படும் வழங்கன் கணினியிலிருந்து கோப்பகங்களின் மூலத்தொகுதியை, அதே களப்பகுதியில் (domains) அல்லது வேறு களப் பகுதியிலுள்ள இறக்குமதிக் கணினி எனப்படும் குறிப்பிட்ட வழங்கன்களிலோ பணிநிலையங்களிலோ நகலெடுத்து வைத்தல். இவ்வாறு நேர்படியாக்கம் செய்வதில் நன்மை உள்ளது. கோப்புகள் மற்றும் கோப்பகங்களின் ஒரே மாதிரியான தொகுதிகளை பல்வேறு கணினிகளில் பதிவுசெய்து வைத்துப் பராமரிக்கும் பணியை நேர்படியாக்கம் எளிமையாக்குகிறது. மூலத் தொகுதியின் ஒரேயொரு படியை மட்டும் பராமரித்தல் போதும்.*

**directory service : கோப்பக சேவை :** பிணையத்திலிருக்கும் ஒரு சேவை. ஒரு பிணையத்தில் பணிபுரியும் பயனாளர் ஒருவர் பிற பயனாளர்களின் அஞ்சல் முகவரிகளை அறிந்து கொள்ளலாம். அதுமட்டுமின்றி ஒரு பயனாளர், பிணையத்திலுள்ள புரவன் கணினிகளையும் (hosts) சேவைகளையும் அறிந்து பயன் பெற உதவுகிறது.

**directory structure : விவரக் குறிப்பேட்டுக் கட்டமைவு :** துணைச் சேமிப்புச் சாதனங்களில் பல்வேறு விவரக் குறிப்பேடுகளைப் படியடுக்கு முறையில் வரிசைப்படுத்துதல், இந்த விவரக் குறிப்பேட்டுக் கட்டமைவு, விவரக் குறிப்பேடுகளுக்கிடையிலான உறவுநிலைகளைக் குறிக்கிறது. பல்வேறு மென்பொருளைப் பயன்பாடுகள் விவரக்குறிப்பேட்டுக் கட்டமைவினைத் திரையில் அச்சு நகலாகக் காட்டுகின்றன அல்லது வன்படியாகத் தருகிறது.

**directory tree : விவரக் குறிப்பேட்டு மரம் :** ஒரு வட்டினுள் பல்வேறு தகவல் குறிப்பேடுகளையும் துணைக் குறிப்பேடுகளையும் காட்டுகிற படிமுறை உருக்காட்சி.

**dirty : அழுக்கு; மாசு :** தரவு தொடர்புத் தடத்தின் தரத்தைக் குறிக்கப் பயன்படும் சொல். அதிகப்படியான இரைச்சல் காரணமாக தரவு சமிக்கையின் தரம் தாழ்ந்து போதல்.

**dirty bit : அழுக்கு பிட், மாசுத் துண்மி :** முதன்மை நினைவகத்திலுள்ள தகவல் உடனடிப் பயன்பாட்டுக்கென இடைமாற்று (cache) நினைவகத்தில் இருத்தப்படுகிறது. அத்தகவல் மாற்றம் அடைந்துள்ளது என்பதைக் குறிக்கப் பயன்படும் துண்மி. இதனை அடையாளமாகக் கொண்டே முதன்மை நினைவகத்திலுள்ள தகவலும் மாற்றம் செய்யப்படுகின்றது.

**dirty power : சீரற்ற மின்விசை :** அழுத்த ஏற்றத்தாழ்வுகள், ஓசை, இறுக்கம், பெருக்கம் போன்ற சீரற்ற மாற்று மின்னோட்ட விசை. இது அலுவலகத்திலுள்ள மின் பயன்பாட்டு அல்லது மின்னணுவியல் சாதனத்தினால் உண்டாகிறது.

**dirty ROM : அழுக்கு ரோம்; அழுக்குறு அழியா நினைவகம் :** படிக்க மட்டுமே முடிகிற (திருத்த/அழிக்க முடியாத) நினைவகத்தை ரோம் என்கிறோம்.

**disable : செயலற்றதாக்கல் ; முடக்கமாதல் :** இயல்பான திறனைத் தடுத்தல் அல்லது

நீக்குதல். வெளிப்புற சாதனத்தின் இயக்கத்தை மேலும் தொடராமல் தடுக்கும் ஆணை ஒன்றைப் பயன்படுத்தல்.

**disabled folders : செயல் முடக்கப்பட்ட கோப்புறைகள் :** மேக்ஓஎஸ் இயக்க முறைமையில் பல்வேறு கோப்புறைகள் இவ்வாறு ஆக்கப்பட்டுள்ளன. முறைமைக் கோப்புறையில் உள்ள பல்வேறு கோப்புகள், முறைமை நீட்டிப்புகள், கட்டுப்பாட்டு பாளங்கள் மற்றும் நீட்டிப்பு மேலாளர் (Extension Manager) எனப்படும் மென்பொருள் கருவி கொண்டு கணினியிலிருந்து நீக்கப்பட்ட ஏனைய உறுப்புகளையும் இக் கோப்புறைகள் கொண்டுள்ளன. செயல்முடக்கப்பட்ட கோப்புறையில் தற்போதுள்ள உறுப்புகள், கணினியை இயக்கும் போது தொடக்கத்தில் நிறுவப் படுவதில்லை. ஆனால், அதன் பிறகு நீட்டிப்பு மேலாளர் நிரலால் அவ்வுறுப்புகள், அவற்றின் இயல்பான கோப்புறைகளுக்கு தாமாகவே கொண்டு செல்லப்படுகின்றன.

**disassembler : பிரிக்கும் நிரல் தொடர்; பிரிப்பி :** எந்திர மொழிக் குறியீட்டை ஏற்று பொறிமொழிக் குறியீட்டை உருவாக்குதல்.

**disassociate : தொடர்புநீக்கம் :** விண்டோஸ் 95/98/என்டி இயக்க முறைமைகளில் ஓர் ஆவணம் ஏதேனும் ஒரு பயன்பாட்டு மென்பொருளுடன் தொடர்பு படுத்தப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக, .doc என்ற துணைப்பெயர் கொண்ட ஆவணங்கள் வேர்டு பயன்பாட்டுடனும், .xls ஆவணங்கள் எக்செல், .mdb ஆவணங்கள் அக்செஸ், .ppt ஆவணங்கள் பவர்பாயின்ட், .htm ஆவணங்கள் இன்டர்நெட் எக்ஸ்புளோரர் ஆகியவற்றுடனும் தொடர்புப்படுத்தப்பட்டுள்ளன. இத்தொடர்பினை மாற்றியமைக்க முடியும். .bmp ஆவணங்கள் பெயின்ட் பயன்பாட்டுடன் தொடர்புபடுத்தப் பட்டுள்ளன. .bmp ஆவணம் ஒன்றின் பெயர்மீது இரட்டைக் கிளிக் செய்தால், அந்த ஆவணம் பெயின்ட் பயன்பாட்டில் திறக்கப்படும். இதனை மாற்றி, கோரல் பெயின்ட் பயன்பாட்டில் அல்லது பெயின்ஷாப் புரோவில் திறக்கும்படி செய்யலாம்.

**disaster dump : அபாய ஏற்பாடு:** மென்பொருள் அல்லது வன்பொருளுக்கு ஏதாவது அபாயம் ஏற்படுமானால் அதற்கு மாற்றுச் செயல் திட்டம்.

**disaster planning** : பேரிடர் திட்டப் பதிகை.

**disaster recovery** : இடர் மீட்சி : ஓர் இடர்ப்பாட்டிலிருந்து முழுமையான செயற்பாட்டிற்கு மீள்வதற்கான மேலாண்மை உத்தி. (எடுத்துக்காட்டு: நெருப்பு அல்லது தளச் சேதம்). இது, அனைத்தையும் கூடுதல் படியெடுத்து வைத்துக் கொள்வதையும், வேறிடங்களில் சேமித்து வைப்பதையும் உள்ளடக்கும்.

**disaster recovery specialist** : சேதமீட்புச் சிறப்பாளர்; இடர் மீட்சி வல்லுநர்.

**disc** : வட்டு; (குறிப்பாக ஒளி வட்டு): வட்டினைக் குறிக்க Disc, Disk ஆகிய இரண்டு சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. லேசர் ஒளிக்கதிர் மூலம் எழுத/படிக்க முடிகிற, காந்தத் தன்மையற்ற உலோகப் பூச்சுள்ள பிளாஸ்டிக் வட்டுகள் Disc என்ற சொல்லால் குறிப்பிடப்படுகின்றன. அவையல்லாத ஏனைய வட்டுகள், நெகிழ் வட்டு, நிலைவட்டு, ரேம் வட்டு (நினைவகத்தில் உருவாக்கப்படும் மெய்நிகர் வட்டு) ஆகியவை Disk என்ற சொல்லால் குறிக்கப்படுகின்றன. லேசர் வட்டு, குறுவட்டு, கேட்பொலி/ஒளிக்காட்சி வட்டு, டிவிடி வட்டு ஆகியவை பெரும்பாலும் Disc என்று குறிக்கப்படுகின்றன.

**disclaimer** : ஒதுங்கல் ; உரிமைத் துறப்பு : அந்தப் பொருளைப் பயன்படுத்துவதனால் ஏற்படும் வணிக இழப்புகளுக்கு விற்பனையாளர் பொறுப்பல்ல என்று பல மென்பொருள்களுடன் வரும் நிபந்தனை.

**disconnect** : துண்டிப்பு; துணி(த்தல்): ஒரு தகவல் தொடர்பு இணைப்பினைத் துண்டித்தல்.

**discrete** : தனியான : உதிரி எழுத்துகள் அல்லது துண்மிகளைப் போன்ற தனிப்பட்ட பொருட்களால் குறிப்பிடப்பட்ட அல்லது தனிப்பட்ட பொருள்கள் தொடர்பான.

**discrete component** : தனி உறுப்பு : ஒரே ஒரு செயலை மட்டும் செய்கின்ற மின்சாதனப் பொருள். ஒருங்கிணைந்த மின் சுற்றுக்கு மாறானது.

**discrete cosine transform** : பிரிநிலைக்கிடை கோண உரு மாற்றம் : படக்கூறுகள் (Pixels) அலையுருவங்கள் போன்ற தரவுகளை அதிர்வெண் தொகுதியாக மாற்றுகிற படிநிலை நடைமுறை. இதில் முதல் அதிர்வெண்கள் மிகவும் பொருள் பொதிந்தவை. கடைசி அதிர்

வெண்கள் மிகக் குறைந்த பொருள் கொண்டவை.

**discrete device : பிரிநிலைச் சாதனம் :** ஒரு கொண்மி அல்லது மின்பெருக்கி போன்ற மின்னியல் அமைப்பி.

**discrete multitone : தொடர்ச்சியற்ற பல்தொனி :** தொலைத் தகவல் தொடர்பில் பயன்படுத்தப்படும் ஒரு தொழில் நுட்பம். இருக்கின்ற அலைக் கற்றையை இலக்கமுறை சமிக்கைச் செயலிகளால் பல்வேறு தடங்களாகக் கூறு போட்டு, ஓர் இணைச் செப்புக் கம்பியில் 6 mbps (வினாடிக்கு 60 இலட்சம் துண்மிகள்) தகவல் வரை அனுப்ப, இத் தொழில் நுட்பம் வகை செய்கிறது.

**discretionary access control : தனி விருப்ப அணுகுக் கட்டுப்பாடு.**

**discretionary hyphen : பிரிநிலை ஒட்டுக்குறி :** ஒரு சொல்லில் இணைப்புக் குறியிடுவதற்காகப் பயனாளர்குறித்துள்ள இடம். சொல், ஓரக் கோட்டுக்கும் மேலே செல்லுமானால், அது அந்த இடத்தில் பிளவுபடும்.

**discussion groups : இணைய விவாதக் குழுக்கள்; இணையக் கலந்துரையாடல் குழுக்கள் :** தமக்கிடையே பொதுவான ஆர்வமுள்ள பொருள்பற்றி கணினிப் பிணையத்தில் கலந்துரையாடும் பயனாளர்களைக் குறிக்கிறது. இணையத்தில் மின்னஞ்சல் பட்டியல், இணையச் செய்திக் குழுக்கள் மற்றும் ஐஆர்சி எனப்படும் இணையத் தொடர் அரட்டை போன்றவற்றைக் குறிக்கவே இப்போது இச்சொல்தொடர் பயன்படுத்தப்படுகிறது.

**disk : வட்டு ; மின்காந்தத் தட்டு :** கணினியால் அணுகக்கூடிய தகவல் மற்றும் நிரலாக்கத் தொடர்களை சேமிக்கும் மின்காந்த சாதனம். நிலைத்த வட்டு அல்லது வளையக்கூடிய செயற்கை இழை வட்டுகளின் தகவல்கள் சேமிக்கப்படுகின்றன.

**disk access : வட்டு அணுகல் :** வட்டில் எழுத/படிக்க உதவும் முனை தரவை வட்டில் எழுதவோ படிக்கவோ அணுகுதல்.

**disk access time : வட்டு அணுகல் நேரம் :** வட்டில் குறிப்பிட்ட ஒன்றின் இருப்பிடம் அறிய தேவைப்படும் நேரம். தேடும் நேரம் என்றும் அழைக்கப்படும். மொத்த அணுகு நேரத்தில் ஒரு பகுதி.

**disk array : வட்டு வரிசை :** ஒரு சைகை அலகில், கூடுதல் திறம்பாடு, வேகம், தவறுகை தாங்கும் செயற்பாடு ஆகியவற்றுக்

காக இணைந்துள்ள இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட வட்டு இயக்கிகள்.

**disk back** : வட்டுத் தொகுதி.

**disk based** : வட்டு அடிப்படை: வட்டுகளைச் சேமிப்பு ஊடகமாகப் பயன்படுத்துகிற கணினிப் பொறியமைவு. வட்டிலிருந்து தரவுகளை மீட்கிற பயன்பாடு. இது, 'நினைவுப் பதிப்பி அடிப்படை' யிலிருந்து மாறுபட்டது.

**disk buffer** : வட்டின் இடைநிலை நினைவகம் : வட்டில் எழுதப்படாத தரவுவை ஒதுக்கி வைக்க கணினியின் நினைவகத்தில் உள்ள ஒரு பகுதி.

**disk cache** : வட்டுப் பொதியறை : வட்டிலிருந்து தரவுகளைப் படிப்பதற்கான ஒரு இடைநிலை. இது வட்டு அணுகுதலை விரைவுபடுத்த பயன்படுத்தப்படுகிறது.

**disk capacity** : வட்டுக் கொள்ளளவு.

**disk cartridge** : வட்டுப் பொதியுறை : தனியொரு நிலை வட்டினை அல்லது ஒரு செருகு வட்டினைக் கொண்டிருக்கிற அப்புறப்படுத்தத்தக்க வட்டுப் பொதிவுச் சாதனம்.

**disk change** : வட்டு மாற்று.

**disk change sensor** : வட்டு மாற்று உணரி.

**disk cleanup** : வட்டு செம்மை செய்.

**disk, compact** : குறுவட்டு.

**disk controller** : வட்டுக் கட்டுப்பாட்டுக் கருவி : சைகைகளை மீட்டு, வட்டு இயக்கிக்கு அனுப்புகிற மின்சுற்று வழி. ஒரு சொந்தக் கணினியில், இது ஒரு விரிவாக்கப் பலகை. இது தாய்ப்பலகையிலுள்ள விரிவாக்கப் பள்ளத்தில் பொருந்தச் செய்கிறது. ஒரு வட்டு இயக்கிக்கும் மையச் செயலகத்துக்கும் (CPU) இடையிலான இடைமுகப்பாக உள்ள மின்னணுவியல் சுற்றுநெறி.

**disk controller card** : வட்டுக் கட்டுப்பாடு அட்டை : வட்டு இயக்கியை கணினியுடனும் அதன் கட்டுப்பாட்டு இயக்கத்துடனும் இணைக்கும் வெளிப்புற மின்சுற்று அட்டை.

**disk copy** : வட்டுப் படி : ஒரு செருகு வட்டின் உள்ளடக்கங்களை இன்னொரு செருகு வட்டில் படியெடுப்பதற்கான DOS ஆணை. இதில், செருகு வட்டுகள் முழுவதையும் தடவாரியாகப் பயன்படுத்தப்படும் DOS, OS/2 பயன்பாடு.

**disk copying** : வட்டு நகலெடுத்தல் : ஒரு வட்டில் உள்ள அனைத்து உள்ளடக்கங்களையும் வேறொரு வட்டிற்கு மாற்றும் செயல்.

**disk crash** : வட்டுப் பழுது ; வட்டுக் கேடு : பயன்படுத்த முடியாததாகிப்போன வட்டு அலகின் நிலை. வட்டு இயக்கியின் படிக்கும்/எழுதும் முனைக்கும் தட்டின் மேற்பகுதிக்கும் இடையில் தொடர்பு ஏற்பட்டதால் இது ஏற்படுவதுண்டு.

**disk directory** : வட்டு விவரக் குறிப்பேடு : கணினியின் ஒவ்வொரு கோப்பும் அல்லது செயல்முறையும் வட்டில் சேமித்து வைக்கப்பட்டிருக்கிற ஒரு பட்டியல். விவரக் குறிப்பேடு, பொதுவாக ஒரு வட்டின் தொடக்கத்தில் சில தடங்களில் பதிவு செய்கிறது.

**disk doctor** : வட்டுப் பொருளறி சாதனம் : ஒரு வட்டில் என்னென்ன சேமித்து வைக்கப்பட்டிருக்கின்றன என்பதைப் பயனாளர் ஆராய்ந்தறிய உதவுகிற ஒரு செயல்முறை. ஒரு வட்டு சேதமடையுமானால், அதிலுள்ள மதிப்புமிக்க தரவுகளை மீட்பதற்கு இது பயன்படுகிறது.

**disk drive** : வட்டு இயக்கி, வட்டு செலுத்தி : கணினி பயன்படுத்துவதற்காக, நினைவகத்



வட்டு இயக்கி

தில் வட்டிலிருந்து தரவுகளைப் படிக்கும் சாதனம். கணினியின் நினைவகத்திலிருந்து சேமிப்பதற்காக தட்டில் எழுதவும் செய்யும்.

**disk drive controller** : வட்டு இயக்ககக் கட்டுப்படுத்தி.

**disk drive, floppy** : நெகிழ்வட்டு இயக்ககம்.

**disk dump** : வட்டுக் குவியல் : அறிக்கை உருவமைவாக்கம் இல்லாமல் வட்டின் உள்ளடக்கங்களை அச்சுப் படியாக எடுத்தல்.

**disk duplication** : வட்டு பிரதியெடுத்தல் ; வட்டு நகலாக்கம் : ஒரு காந்த வட்டில் பதியப்பட்டுள்ள தரவு வேறொரு

வட்டுக்கு மாற்றும் செயல் முறை.

**disk emulator** : வட்டு உரு மாதிரி: ஒரு வட்டு இயக்கியின் திண்மநிலை உருப்படிவாக்கம். இது, மைய முறைகளுக்கும், முனையங்களுக்கும் பெரும் பாலும் பயன்படுத்தப்படுகிறது.

**disk envelope** : வட்டு உறை : செருகு வட்டுகளை கையாளும் போதும் சேமித்து வைக்கும் போதும் பயன்படுத்தும் காகித உறை. வட்டு இயக்கியில் வட்டை நுழைப்பதற்குமுன் வெளியே எடுக்கப்பட வேண்டும்.

**diskette** : டிஸ்கெட் ; செருகு வட்டு : நுண் கணினிகள், சிறு கணினிகளுக்கான குறைந்த விலை, அதிக சேமிப்பு தரும் சாதனம்.

**diskette tray** : டிஸ்கெட் தட்டு : செருகு வட்டுகளைச் சேமிக்கப் பயன்படும் கொள்ளகம். திறந்தோ மூடியோ இருக்கலாம்.

**disk failure** : வட்டுச் செயலறவு : ஒரு நிலைவட்டு அல்லது செருகுவட்டு இயக்கி அல்லது வட்டுங்கூடச் செயலற்றுப் போதல். இவை, மின் எந்திரச் சாதனங்கள் என்பதால், வட்டு கள், வட்டு இயக்கிகள் அனைத் தும் இறுதியில் செயலிழந்து போவது இயற்கையே. ஒரு நிலைவட்டின் சராசரிச் செய லறவு நேர்வு 20,000 மணிகள் என மதிப்பிடப்பட்டுள்ளது.

**disk file** : வட்டுக் கோப்பு : காந்த வட்டில் தங்கி இருக்கும் கோப்பு. ஒரு வட்டில் சேமித்து வைக்கப்பட்டுள்ள ஒழுங்கு படுத்தப்பட்ட தரவுத் தொகுதி.

**disk format** : வட்டு உருவமைவு : ஒரு சேமிப்புச் சாதனத்தில் தடங்கள் மின்னியல் முறையில் அச்சிடப்படும் முறை குறித்த தரவு. ஒரு வட்டின் உரு வமைவு, அதன் இயல்பான ஊடகம், உருவமைவுச் செயல் முறை மூலம் தீர்மானிக்கப்படு கிறது. எடுத்துக்காட்டு : 5.25'' 360 KB செருகு வட்டு (எ) 8.89 செ.மீ. 1.44 MB செருகுவட்டு.

**disk, hard** : நிலைவட்டு.

**disk interface** : வட்டு இடை முகம் : 1. வட்டகத்தை (disk drive) கணினியுடன் இணைக்கப் பயன்படும் இடையிணைப்பு மின்சுற்று அமைப்பு. 2. வட்டகங்களைக் கணினியுடன் இணைப்பதற்கென உருவாக்கப் பட்ட தர வரையறை. எடுத்துக் காட்டாக, எஸ்டீ506 (ST 506) என்பது, நிலைவட்டுகளை கணினியுடன் இணைக்கப் பின் பற்றப்படும் வட்டு இடைமுகத் தர வரையறை ஆகும்.

**disk jacket** : வட்டு மேலணி : காகிதம் அல்லது செயற்கை இழையில் செய்யப்படும் வட்டுக்கான நிரந்தர பாதுகாப்பு முனை. வட்டு இயக்கியில் நுழைக்கும்போது உள்ளிட்ட எந்த சமயத்திலும் மேலணியிலிருந்து வட்டு எப்போதும் நீக்கப்படுவதில்லை.

**diskless workstation** : வட்டிலா வேலை நிலையம் : ஓர் இணையத்திலுள்ள வட்டுச் சேமிப்பி இல்லாத கணினி. அனைத்துச் செயல்முறைகளும், தரவுகளும் இணைய வட்டிலிருந்து மீட்கப்படுகின்றன.

**disk library** : வட்டு நூலகம் : சுற்றுப்புறக் கட்டுப்பாட்டு சூழ்நிலைகளில் பாதுகாப்பாக வட்டுத் தொகுதிகளை வைத்திருக்கும் தனி அறை அல்லது வட்டுகளின் கோப்பை வைப்பதற்கான இருப்பக வசதி.

**disk, magnetic** : காந்த வட்டு.

**disk management** : வட்டு மேலாண்மை : ஒரு நிலை வட்டினைப் பேணிக் கட்டுப்படுத்துதல், உருவமைவு, படி, தன்மைக்குறி விவரக் குறிப்பேட்டு மேலாண்மை, கூறுபாட்டுத் தடுப்புச் செயற்பணிகள் போன்ற பல்வேறு பயன்பாடுகளை இது குறிக்கிறது. ஒரு வட்டில் தரவுகளைச் சேமித்து வைப்பதற்குப் பயன்படுத்தப்படும் அமைப்பாக்கக் கட்டமைவு.

**disk memory** : வட்டு நினைவகம் : சுழலும் வட்டுகளை தற்காலிக நினைவகமாக பயன்படுத்தும் சேமிப்பகம்.

**disk mirroring** : வட்டுப் பிரதிபலிப்பு : தவறுகை தாங்கும் செயற்பாட்டிற்காகத் தேவைக்கு அதிகமாகவுள்ள தரவுகளைப் பதிவு செய்தல். தரவுகள் ஒரே வட்டில் இரு பகுதிகளில் அல்லது ஒரே பொறியமைவில் இரு தனித்தனி வட்டுகளில் இரு தனித்தனிக் கணினிப் பொறியமைவுகளில் எழுதப்படுகின்றன.

**disk operating system** : வட்டு இயக்க முறைமை : நிரலாக்கத் தொடர்களை மின்காந்த வட்டுகளில் சேமித்து வைக்கும் இயக்க அமைப்பு. கோப்புகளின் இருப்பிடத்தை அறிதல், கோப்புகளைச் சேமித்துத் திரும்ப எடுத்தல், சேமிப்பகத்தை ஒதுக்குதல், வட்டு சேமிப்பு தொடர்பான பிற கட்டுப்பாட்டுப் பணிகளை இந்த அமைப்பு செய்வது வழக்கம்.

**disk optimiser** : வட்டுச் சிக்கனம் : தரவு கோப்புகள் சிதறுவதைக் கண்காணிக்கும் ஒரு பயனீட்டுச்

செயல் முறை. இது, சிதறலைக் குறைக்கும் வகையில் கோப்பு களைப் படியெடுக்கிறது. வட்டுப் பரப்புகளை மறு ஒதுக்கீடு செய்கிறது.

**disk pack :** **வட்டு அடுக்கு :** ஒரே அலகாகக் கருதப்பட்டு ஒரு கம்பியில் ஏற்றப்படும் நிலை வட்டுகளின் வெளியே எடுக்கக்கூடிய தொகுதி.

**disk partition : வட்டுப் பிரிவினை :** வட்டில் உள்ள தரவு களை சிறு பகுதிகளாகப் பிரித்து எளிதாகக் கையாள உதவும் அளவைப் பகுதி.

**disk sector : வட்டுப் பிரிவு :** வட்டின் மேல் தொடர்ச்சியான இரண்டு ஆரங்களுக்கு இடையிலுள்ள தரவுச் சேமிப்பு இடப் பகுதியைக் குறிப்பிடுகிறது. ஒரு பட்டாணியைத் துண்டு போடுவது போன்ற முறையிலேயே வட்டின் பிரிவுகளை அமைக்க முடியும்.

**disk server : வட்டு வழங்கன்; வட்டு வழங்கன் கணினி :** ஒரு குறும் பரப்புப் பிணையத்தில், பயனாளர்கள் பகிர்ந்து கொள்வதற்கான வட்டினைக் கொண்ட ஒரு கணுக் கணினி. இது கோப்புப் வழங்கனிலிருந்து (File Server) மாறுபட்டது. கோப்பு வழங்கன் பயனாளர்களிடமிருந்து வரும் கோரிக்கைகளை ஏற்றுக் கோப்புகளை வழங்கும். மிகவும் நுட்பமான மேலாண்மைப் பணிகளையும் மேற்கொள்ளும். ஆனால் வட்டு வழங்கன் மேலாண்மைப் பணி எதுவும் செய்வதில்லை. வெறுமனே ஒரு தரவு சேமிப்பகமாகச் செயல்படும். பயனாளர்கள் வட்டு வழங்கனிலுள்ள கோப்பு களைப் படிக்கலாம்/எழுதலாம். வட்டு வழங்கனிலுள்ள வட்டினைப் பல்வேறு தொகுதி (Volume) களாகப் பிரிக்கலாம். ஒவ்வொரு தொகுதியும் ஒரு தனிவட்டுப் போலவே செயல்படும்.

**disk space :** வட்டுப் பரப்பு : ஒரு வட்டில் காலியான இடப்பரப் பினைத் தெரிவிக்கின்ற ஒரு செய்திக் குறிப்பு ஆதாரச் செயற்பணி.

**disk storage : வட்டுச் சேமிப் பகம்.**

**disk striping : வட்டுச்செய்தி இடையிணைப்பு :** பன்முக வட்டு இயக்கிகளுக்கு தரவு களைப் பரவச்செய்தல். இயக்கி களின் ஊடே எண்மிகள் அல்லது வட்டக்கூறுகள் மூலம் தரவுகள் இடையிணைப்பு செய்யப்படுகின்றன.

**disk/track info : வட்டு/தடத் தரவு.**

**disk unit enclosure** : வட்டு அலகு அடைப்பி : ஒன்று அல்லது மேற்பட்ட வட்டு இயக்கிகளையும் மின்சக்திச் சாதனத்தையும் வைப்பதற்கு வடிவமைக்கப்பட்ட பெட்டி.

**dispatch** : அனுப்பு : அடுத்த வேலை என்ன என்று தேர்ந் தெடுத்து அதை செயலாக்கம் செய்ய தயாராக இருத்தல்.

**dispatcher** : விரைவுச் செயல் முறை : ஓர் இடையீடு ஏற்பட்ட பிறகு, நடப்பு இயக்கப்பணித் தொகுதியிலிருந்து நிறைவேற்று வதற்காக அடுத்த பணியைத் தேர்ந்தெடுக்கிற கட்டுப்பாட்டுச் செயல்முறை.

**dispatching** : விரைவுச் செய லாக்கம் : உருத்தெளிவு, வண் ணம், வரைகலைத் திறம் பாட்டினைக் கட்டுப்படுத்து வதற்கு, கண்காட்சி அலகினை மின்னணுவியல் முறையில் கட்டுப்பாட்டுடன் இணைக்கிற ஒரு பலகை.

**dispatching priority** : அனுப்பும் முன்னுரிமை : பல பணிகளின் சூழ்நிலையில் மைய செயலக அலகில் பயன்படுத்துவதற்காக முன்னால் அனுப்பப்படுவன வற்றை முடிவு செய்யும், பணி களுக்கு ஒதுக்கப்படும் எண்கள்.

**dispatch table** : அனுப்புகை அட்டவணை : குறுக்கீடு (interrupt)களைக் கையாளும் செயல்கூறுகள் (functions) அல்லது துணை நிரல்களின் முகவரிகளைக் கொண்ட அட்ட வணை. ஒரு குறிப்பிட்ட சமிக்கை கிடைத்தவுடனோ, அல்லது சில குறிப்பிட்ட சூழ் நிலைகளிலோ நுண்செயலி, அட்டவணையில் குறிக்கப் பட்ட குறிப்பிட்ட துணை நிரலைச் செயல்படுத்தும்.

**disperse** : கலைத்தல்; பிரித்தல் : ஒரு குறிப்பிட்ட தரவுத் தொகுதி யைப் பிரித்து வெவ்வேறு இடங்களில் கிடைக்கும்படி செய்தல். எடுத்துக்காட்டாக அட் டவணைக் கோப்பிலுள்ள ஏடு களில் (records) உள்ள புலங்களைப் (fields) பிரித்து, வெளியீட்டின் போது வெவ்வேறு இடங்களில் கிடைக்கச் செய்தல்.

**dispersed data processing** : பரவலான தரவு செயலாக்கம்.

**dispersed intelligence** : பரவ லாக்கப்பட்ட அறிவுத்திறன் : கணினி ஆற்றலை கட்டமைப்பு முழுவதும் பரவலாக்கப்பட்ட கட்டமைப்பு.

**dispersion** : பரப்பீடு : முரண் பாட்டு அளவை. பல்வேறு பரப்

பீட்டு வடிவங்களைக் கண்டறிவதற்கு மாற்றுவழிகள் உள்ளன.

**displacement** : இடமாற்றல் : அடிப்படை முகவரிக்கும் உண்மையான எந்திர மொழி முகவரிக்கும் இடையில் உள்ள வேறுபாடு.

**display** : காட்சி ; காட்சியகம் ; ஒளி எழுத்து ; கண் காட்சி : 1. திரையிலோ அல்லது காட்சியிலோ தரவுகளைக் குறிப்பிடல். 2. கணினி முகப்பில் உள்ள ஒளி அல்லது குறிப்பிகள். 3. வரைகலை தரவுகளை வெளியீட்டுச் சாதனத்தில் காட்சியாக உருவாக்கும் செயல்.

**display adapter** : காட்சி ஏற்பி ; காட்சி அமைப்பு அட்டை : கணினியை ஒரு காட்சித் திரையுடன் மின்னணு முறையில் இணைக்கும் ஏற்பி அட்டை. கணினித் திரையின் அளவு, நிறம் மற்றும் வரைகலை உண்டா இல்லையா என்பது போன்ற திறன்களை இது முடிவு செய்யும்.

**display background** : காட்சிப் பின்னணி ; காட்சிப் பின்புலம் : செயலாக்கம் செய்வதன் பகுதியாக இல்லாத, பயன்படுத்துவோரால் மாற்ற முடியாத வரைகலை தரவுகளில் திரையில் காட்டப்படும் பகுதி. காட்சி முன்னணி எனப்படும் காட்சியில் தோன்றும் தோற்றத்தை மேம்படுத்தப் பயன்படுகிறது.

**display card** : காட்சி அட்டை.

**display composition** : காட்சியக இணைப்பாக்கம் : மேசை மோட்டு வெளியீட்டில், திண்மையாகவும், அலங்காரமாகவும் மாறுபட்ட எழுத்து முகப்புகளாகவும் உள்ள எழுத்துருக்களைக்கொண்ட வரிகள். இது கவனத்தை ஈர்ப்பதற்குப் பயன்படுத்தப்படுகிறது.

**display console** : காட்சி முகப்பு; காட்சி முனையம் : காட்சித் திரை மற்றும் உள்ளீட்டு விசைப் பலகையைக் கொண்ட உள்ளீட்டு / வெளியீட்டுச் சாதனம். பணிநிலையம் என்றும் சில சமயம் அழைக்கப்படுகிறது.

**display control** : காட்சிக் கட்டுப்பாடு.

**display cycle** : காட்சிச்சுழற்சி ; காட்சிச் சுழல் : புலனாகும் காட்சித்திரை மீண்டும் புதிதாக மாற எடுக்கும் நேரம்.

**display device** : காட்சிச் சாதனம் : வரைகலை அச்சுப்பொறி, இலக்கமுறை பலகை, ஒளிக் காட்சி முகப்பு போன்ற பார்க்கக்கூடிய வகையில் தரவுகளை உருவாக்கும் திறனுடைய சாதனம்.

**display element** : காட்சியகக் கூறு : வரைகலையில், பின் புலம், முன்புலம், வாசகம், வரைகலை உருக்காட்சி போன்ற அடிப்படை வரை கலை அமைப்பிகள். கணினி வரைகலையில் ஓர் உருக்காட்சி யின் ஓர் அமைப்பி.

**display entity** : காட்சி அலகு : கணினி வரைகலையில் ஒளிக் காட்சிக் கூறுகளின் ஒரு தொகுதி. இதனை ஓர் அலகாகக் கொள்ளலாம்.

**display face** : காட்சி முகப்பு : ஓர் ஆவணத்தில் தலைப்புகள், பெயர்கள் ஆகியவற்றுக்குப் பொருத்தமான எழுத்து முகப்பு. பக்கத்திலுள்ள மற்ற வாசக எழுத்துகளிலிருந்து இது தனித்து முனைப்பாகத் தோன்றுகிறது.

**display foreground** : காட்சி முன்புலம் : பயனாளரால் மாற்றக்கூடிய காட்சிச் சாதனத் தில் காட்டப்படும் வரைகலை தரவுகளின் பகுதி.

**display frame** : காட்சிச் சட்டகம் : கணினி வரைகலையில் ஒரு தொடர்ச்சியான தூண்டுதல் சட்டகங்களிலுள்ள ஒரு தனிச் சட்டகம்.

**display highlighting** : காட்சி அதிகரித்தல் ; காட்சி சிறப்புறல் : மினுக்குதல், பெரிய எழுத்து, அதிகக் கருமை, தலைகீழ் ஒளி, அடிக்கோடிடல் மாறுபட்ட நிறங்கள் போன்ற முறைகளைப் பயன்படுத்தி காட்சித்திரையில் தரவுவை முக்கியப்படுத்தும் வழி.

**display image** : காட்சி உருவம்; காட்சிப் படிமம் : காட்சிச் சாதனத்தில் அப்போது தெரியும் வரைகலை கோப்பின் காட்டப் பட்ட பகுதி.

**display list** : காட்சியகப் பட்டி யல் : கணினி வரைகலையில், அளவுரு வரைகலை உருவமை வில் சேமித்து வைக்கப் பட்டிருக்கிற ஓர் உருக்காட் சியை உருவாக்குகிற அளவுருக் களின் தொகுதி.

**display list processor** : காட்சியக பட்டியல் செய்முறைப்படுத்தி : கணினி வரைகலையில், கோடு கள், வட்டங்கள் போன்றவற்றை வரைதல் போன்ற வரைகலை வடிவ கணித உருவங்களை, ஒளிக்காட்சிப் பட்டியலிலிருந்து மையச் செயலகத்தை (CPU) உருவாக்குகிற ஓர் எந்திரம்.

**display memory** : காட்சி நினைவகம்.

**display menu** : காட்சி வகைப் பட்டியல் : செயல்படுத்தப்பட வேண்டிய நடவடிக்கைத் தொட ரின் அடுத்த செயலை முடிவு

செய்யப் பயனாளருக்கு வாய்ப்பு அளிக்கும் நிரல் தொடரில் உள்ள, திரையில் தெரியும் வாய்ப்புகள். காட்சித் திரையில் தெரிவதை அச்சிடுவது, வரைகலை காட்சியை வட்டில் சேமிப்பது போன்றவை வாய்ப்புகளில் சில.

**display port** : திரைக்காட்சித் துறை : கணினியிலுள்ள வெளியீட்டுத்துறை. காட்சித்திரை போன்ற வெளியீட்டுச் சாதனத்துக்குரிய சமிக்கைகளை இத்துறையின் வழியாகப் பெறலாம்.

**Display PostScript (DPS)** : காட்சிப் பின்குறிப்பு (டிபிஎஸ்) : ஆடோப் கழகம் தயாரித்துள்ள ஒரு காட்சியக மொழி. இது, ஒரு பயன்பாட்டுச் செயல்முறையிலுள்ள அடிப்படை நிரல்களை திரையில் வரைகலை உருவங்களாகவும், வாசகங்களாகவும் காட்டுகிறது. பின்குறிப்பு அச்சடிப்பு மொழியின் திரை வடிவம்.

**display postscript screen** : காட்சியகப் பின்குறிப்புத் திரை : பின்குறிப்பு அச்சடிப்பி மொழியின் மறுபடிவம். இது, ஒரு பயன்பாட்டில் அடிப்படை நிரல்களை, திரையில் வரைகலை உருவங்களாகவும் வாசகங்களாகவும் மாற்றிக் காட்டுகிறது. இது, ஒரு செந்திறமான, சாதனச் சார்பிலாத காட்சி மொழியை அளிப்பதற்கு ஒரு செயற்பாட்டுப் பொறியமைவில் சேர்க்க வடிவமைக்கப்படுகிறது.

**display processor** : காட்சிச் செய்முறைப்படுத்தி : ஒரு கோப்பின் உள்ளடக்கங்களை கணினித் திரை (Monitor) போன்ற ஒரு சாதனத்தில் காட்சியாகக் காட்டுகிற செயற்பாட்டுக்கான ஒரு செய்முறைப்படுத்தி.

**display screen** : காட்சித் திரை : மனிதர் பார்ப்பதற்காக வாசகங்களையும், வரைகலை உருவங்களையும் காட்டுவதற்கான ஒரு பரப்பு. இது, எதிர் மின் கதிர்க் குழல் அல்லது பட்டைச் சேணத் தொழில் நுட்பத்தில் அமைந்திருப்பது.

**display surface** : காட்சி மேற்பரப்பு : புலனாகும் காட்சித் திரை, அச்சுக் காகிதம், பலகைக் காகிதம் அல்லது திரைப்படம் போன்ற வரைகலை தரவுகளைக் காட்டக்கூடிய சாதனம்.

**display terminal** : காட்சி முகப்பு; காட்சி முனையம் : வரைகலை தரவுகளைப் பார்க்கக்கூடிய வகையில் வெளியிடும் திறனுள்ள ஒரு வெளியீட்டுச் சாதனம்.

**display tolerence** : காட்சி சகிப்பு; காட்சிப் பொறுதி : எவ்வளவு

வரைகலை தரவுகளை எவ்வளவு துல்லியமாக வெளியிட முடியும் என்பதன் அளவு.

**display type :** காட்சி வகை : எதிர்மின்வாய் (காத்தோட்) கதிர்க் குழாய் (சிஆர்டி), ஒளி உமிழும் டையோடு (எல்இடி), ஒளிப் படிகக் காட்சி (எல்சிடி) போன்ற காட்சித் தொழில் நுட்பம்.

**display unit :** காட்சி அலகு : தரவுகளைப் பார்க்கக்கூடிய வகையில் அளிக்கும் ஒரு சாதனம்.

**display write :** காட்சி எழுத்து : IBM காட்சி எழுத்துத் தொகுதியானது, அந்நிறுவனத்தின் சொல் பகுப்பி, காட்சி எழுது கருவியிலிருந்து உருவாக்கப் பட்டதாகும். பழைய முறை இப்போது வழக்கில் இல்லை.

**dispose :** முடித்துவை.

**distortion :** சிதறல் ; திரிபு : அனுப்பும் சாதனம் உள்ளிட்ட மின்சுற்றுகளின் வழியாக அனுப்பப்படும் மின்சுற்றுகளின் அலை வடிவத்தில் ஏற்படும் விரும்பத்தகாத மாற்றம். ஒரு அளவுக்கு மேற்படாமல் சிதறல்களைக் கட்டுப்படுத்தி உள்ளீட்டு சமிக்கைகளை மாற்றுவதே மின்சுற்றுகளை வடிவமைப்பதில் உள்ள முக்கிய சிக்கல்.

**distribute :** பகிர்ந்தளி; பகிர்ந்தமை : ஒரு பிணையத்தில் பிணைக்கப்பட்டுள்ள கணினிகள் மற்றும் பிற சாதனங்களின் தொகுதியால் நிறைவேற்றப் படும் தரவு செயலாக்கம் போன்ற செயல்பாடுகளை, பல்வேறு கணினிகளுக்கிடையே பகிர்ந்தமைத்தல்.

**distributed bulletin board :** பகிர்ந்தமை அறிக்கைப்பலகை : ஒரு விரி பரப்புப் பிணையத்திலுள்ள அனைத்துக் கணினிகளுக்கும் பகிர்ந்தளிக்கப்படுகின்ற செய்திக் குழுக்களின் தொகுதி.

**distributed computing :** பகிர்ந்தமை கணிப்பணி.

**distributed computing environment :** பகிர்ந்தமை கணிப்பணிச் சூழல்; பகிர்மானக் கணிமைச் சூழல் : ஒன்றுக்கு மேற்பட்ட பணித்தளங்களில் செயல்படக் கூடிய பகிர்ந்தமை பயன்பாடுகளை உருவாக்குவதற்கான தரவரையறைத் தொகுப்பு. வெளிப்படை குழு என்ற குழுவினர் உருவாக்கியது. இக்குழு, முன்பு, வெளிப்படை மென்பொருள் அமைப்பு (Open Software Foundation) என்ற பெயரில் நிலவியது.

**distributed database :** பகிர்மான தரவுத் தளம் ; பரவிய தரவுத்

தளம் : ஒரு கட்டமைப்பில் கணினி அமைப்புகளின் மூல மாக பரவலாக்கப்பட்ட தரவுத் தளம்.

**distributed database management system : பகிர்ந்தமை தரவுத் தள மேலாண்மை முறைமை :** பகிர்ந்தமை தரவுத் தளங்களைக் கையாளும் திறன்பெற்ற ஒரு தரவுத் தள மேலாண்மை முறைமை.

**distributed data processing : பகிர்மான தரவுச் செயலாக்கம் :** கணினி அமைப்பில் இயக்கங் களைச் செய்யும் கொள்கை களில் ஒன்று. அதன்படி மையச் செயலக அலகுகளும், முகப்பு களும் பல்வேறு இடங்களில் பிரிந்திருந்தாலும் அவை தரவுத் தொடர்பு கட்டமைப்புகளின் மூலம் செயல்பாட்டில் இணைக்கப்பட்டுள்ளன.

**distributed design : பகிர்மான வடிவமைப்பு ; பரவிய வடி வமைப்பு :** தனிப்பட்ட இயக்கும் அலகுகள் இருப்பதை அடையாளம் காணுவதுடன் மைய ஒருங்கிணைப்பு மற்றும் கட்டுப்பாட்டின் பலன்களையும் ஏற்கும் தரவு அமைப்பு.

**distributed file system : பகிர் மானக் கோப்பு முறை :** பன்முக இணையங்களில் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் கோப்பு களின் தடம் பற்றிச் செல்லும் மென்பொருள். கோப்புகள், அமைவிடத்தைப் பொறுத்து அல்லாமல், அவற்றின் பெய ரால் அடையாளங் காணப் படுகின்றன.

**distributed function : பகிர்மானச் செயற்பணி :** அமைவனம் முழு வதிலும் செய்முறைப்படுத்தும் பணிகளைச் செய்தல்.

**distributed information processing system : பகிர்மான தரவு செயலாக்க அமைப்பு :** பல் வேறு இடங்களில் அமைந் துள்ள தரவுத் தளங்கள் அல்லது எதிர்வினை ஆற்றும் கணினி அமைவுகளின் தொகுதி.

**distributed intelligence : பகிர் மான அறிவுத் திறன் :** முனையங் களிலும், பிற புறநிலைச் சாதனங்களிலும் செய்முறைப் படுத்தும் திறம்பாட்டினை அமைத்தல். திரை உருவமைவு, தரவுப் பதிவுச் செயல்மானம், பிற செய்முறைப்படுத்துதலுக்கு முந்திய நடவடிக்கைகளை அறிவுத் திறன் முனையங்கள் கையாள்கின்றன. வட்டு இயக்கி கள், பிற புறநிலைச் சாதனங் களில் அமைக்கப்படும் அறிவுத் திறன். மையக் கணினியை வாலாயப் பணிகளிலிருந்து விடுவிக்கிறது.

**distributed network** : பகிர்மான இணையம்; பகிர்மான கட்டமைப்பு : இடைப்பட்ட முனைகளின் வழியாக நேரடியாகவோ அல்லது மிதமிஞ்சிய பாதைகளின் வழியாகவோ எல்லா முனை இணைகளும் இணைக்கப்பட்டுள்ள கட்டமைப்புத் தொகுதி.

**distributed processing** : பகிர்ந்தமை செயலாக்கம் : ஒரு தரவு தொடர்புப் பிணையத்தில் பிணைக்கப்பட்ட தனித்தனிக் கணினிகளால் நிறைவேற்றப்படும் தரவு செயலாக்கத்தின் ஒரு வடிவம். பகிர்ந்தமை செயலாக்கம் பொதுவாக இரண்டு வகைப்படும். 1. சாதாரண பகிர்ந்தமை செயலாக்கம். 2. உண்மையான தரவு செயலாக்கம். சாதாரணத் தரவு செயலாக்கத்தில், பணிச் சுமையானது, தமக்குள்ளே தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள முடிகிற கணினிகளுக்கிடையே பகிர்ந்து கொள்ளப்படுகிறது. உண்மையான பகிர்ந்தமை செயலாக்கத்தில், பல்வேறு பணிகள் ஒவ்வொரு கணினியும் ஒவ்வொரு பணியை நிறைவேற்றும் வகையில் பணிச்சுமை பகிர்ந்தளிக்கப்படுகிறது. பணிகளின் ஒட்டு மொத்தப் பங்களிப்பு ஒரு பெரும் குறியிலக்கை அடைய வழி வகுக்கும்.

**distributed processing system** : பகிர்ந்தமைத் தரவு செயலாக்க முறைமை.

**distributed transaction processing** : பகிர்ந்தமை பரிமாற்றச் செயலாக்கம் : ஒரு பிணையத்தின் வழியாக தரவு பரிமாற்றம் செய்துகொள்ளும் கணினிகள், பரிமாற்றச் செயலாக்கப் பணிகளை தமக்குள்ளே பகிர்ந்து கொள்ளும் முறை.

**distribution list** : பகிர்மானப் பட்டியல்; வினியோகப் பட்டியல் : ஒரு மின்னஞ்சல் குழு (mailing list) உறுப்பினர்களின் முகவரிப் பட்டியல். இது லிஸ்ட்செர்வ் (Listserv) போன்ற ஒரு அஞ்சல் குழு மென்பொருளாகவோ, ஒரு மின்னஞ்சலைப் பெறுகின்ற அனைவருடைய முகவரிகளுக்கும் சேர்த்த ஒரு மாற்றுப் பெயராகவோ இருக்கலாம்.

**distributive nature** : பகிர்வுத் தன்மை; பகிர்ந்தளிக்கும் இயல்பு.

**distributive sort** : பகிர்மானப் பிரிவு : ஒரு பட்டியலை பல பகுதிகளாகப் பிரித்து மீண்டும் வரிசையாக அடுக்குவதனால் உருவாக்கப்படும் பிரிப்புமுறை.

**disturbance** : தடங்கல் : ஒரு சமிக்கையை அனுப்பும்போது அறிவு பரிமாற்றலில் எப்போதாவது ஏற்படும் குறுக்கீடு.

**dithering** : குழப்ப நிலை : 1. ஒரு புதிய நிறத்தை உருவாக்க பலநிறப் புள்ளிகளை ஒன்று கலத்தல். புள்ளிகள் சிறியதாகவும், குறைவான இடைவெளியுடனும் அமைந்து அவை ஒன்றாக இருப்பதுபோல் கண்களைக் குழப்பும். 2. உருவம் மற்றும் சாதனத்தின் உருவாக்கல் திறன் ஒன்றாகும்போது காட்சியின் நெருக்கத்தை அதிகரிக்க உதவும் வரைகலை நுட்பம்.

**divergence** : விலகல் : நேர் பாதையினின்று விலகிச் செல்லல். குறியிலக்கை விட்டு விலகிச் செல்லல். 1. கணினியின் வண்ணத் திரையில் அடிப்படை நிறங்களான சிவப்பு, பச்சை, நீலம் ஆகியவற்றின் மின்னணுக் கற்றைகள் திரையின் ஒரு குறித்த இலக்கில் ஒருங்கிணைந்து குவியாதபோது இத்தகைய விலகல் ஏற்படுகிறது. 2. விரிதாள் பயன்பாடு போன்ற மென்பொருள்களில் ஒரு நிரலில் தவறான ஒரு வாய்பாட்டின் காரணமாக சுழல் தன்மை ஏற்பட்டு, கணக்கீடு, திரும்பத் திரும்ப செய்யப்படும் நிலை ஏற்படலாம். ஒவ்வொரு கணக்கீட்டின் போதும் கிடைக்கும் முடிவு, விடையை விட்டு விலகிவிலகிச் செல்லும்.

**dividend** : வகு எண்; ஆதாயப் பங்கு.

**division** : பிரிவு.

**division by zero** : சுழியால் வகுத்தல்; பூச்சியத்தால் வகுத்தல் : வகுத்தல் கணக்கீட்டில் ஓர் எண்ணை பூஜ்யத்தால் (0 சுழி) வகுக்க முயலும்போது ஏற்படும் பிழைநிலை. எந்தவொரு எண்ணையும் பூச்சியத்தால் வகுத்தால் எண்ணிலி (infinity) விடையாகும். கணித முறைப்படி கணிக்க முடியாத மதிப்பாகும் இது. அதாவது ஒரு வகுத்தல் கணக்கீட்டில் விகுதி (denominator) மிகச் சிறிதாகிக் கொண்டே போனால் கிடைக்கும் ஈவு பெரிதாகிக் கொண்டே போகும். விகுதி ஏறத்தாழ பூச்சியத்துக்குச் சமமான மிகச் சிறிய மதிப்பாக இருக்குமெனில், ஈவானது ஒரு கணினியால் கணிக்க முடியாத அளவுக்குப் பெரிய எண்ணாக இருக்கும். எனவே, பூச்சியத்தால் வகுக்கும் கணக்கீட்டை கணினி அனுமதிப்பதில்லை. எனவே, நிரலர் இது போன்ற சூழ்நிலை ஏற்படாதவாறு தம்முடைய நிரலில் பாதுகாப்பு வழிமுறைகளை மேற்கொள்ள வேண்டும். இல்லையேல் நிரல் செயல்படாமல் பாதியில் நிற்கும்.

**division check** : வகுத்தல் சரி பார்ப்பு ; பரிவு சோதனை : ஆரம்ப வகுத்தலுடன் சுழி (பூஜ் யம்)யை சமநிலைப்படுத்து வதைச் சோதிக்கும் பெருக்கல் சோதனை.

**division, identification** : இனங்காண் பிரிவு. கோபால் மொழி நிரலின் ஒரு பகுதி.

**divisor** : வகுப்பி; வகு எண்.

**.dj** : .டிஜே : இணையத்தில், ஓர் இணைய தளம் டிஜிபவுட்டி நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெருங்களப் பெயர்.

**.dk** : .டிகே : இணையத்தில், ஓர் இணைய தளம் டென்மார்க் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெருங்களப் பெயர்.

**DLC** : டிஎல்சி : தரவு தொடர்புக் கட்டுப்பாடு என்று பொருள் படும் Data Link Control என்ற சொல் தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். பிணையத்தில் பருநிலையில் இணைக்கப்பட்ட இரண்டு கணுக் கணினிகளிடையே நடை பெறும் தரவு பரிமாற்றத்தில் ஏற்படும் பிழைகளைச் சரி செய்யும் நெறிமுறை. எஸ்என்ஏ (SNA - Systems Network Architecture) அமைப்பில் பயன் படுத்தப்படுகிறது.

**.dll** : .டிஎல்எல் : விண்டோஸ் இயக்க முறையில் பயன் படுத்தப்படும் ஒரு வகைக் கோப்பின் வகைப்பெயர். இயங்குநிலை தொடுப்பு நூலகக் கோப்பு என்று பொருள் படும் Dynamic Link Library என்ற சொல் தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர்.

**DMA** : டிஎம்ஏ : Direcl Memory Access என்பதன் முதலெழுத் துக் குறும்பெயர். இதற்கு நேரடி நினைவக அணுகல் என்பது பொருளாகும்.

**DML** : டிஎம்எல் : Data Manipulation language என்பதன் குறும் பெயர். தரவு கையாளும் மொழி.

**DMTF** : டிஎம்டீஎஃப் : மேசைக் கணினி மேலாண்மைப் முனைப்புக் குழு என்று பொருள்படும் Desktop Management Task Force என்ற சொல் தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். பயனாளர் மற்றும் தொழில் துறைத் தேவைகளுக் காக பீசி அடிப்படையிலான தன்னந்தனிக் கணினி மற்றும் பிணைய அமைப்புகளுக்கான தர வரையறைகளை உருவாக்கு வதற்கென 1992ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட கூட்டமைப்பு.

**DNC** : டிஎன்சி : Direct Numerical Control என்பதன் குறும்பெயர்.

நேரடி எண் கட்டுப்பாட்டு முறை என்ற இந்த முறையில் கணினி கட்டுப்பாட்டில் தொடர்ச்சியாக எண்களை செயலாக்கம் செய்வதற்குப் பதில் தனித்தனி தரவுகளில் தானியங்கி எந்திரக் கருவிகள் மூலம் கட்டுப்பாடு செய்யப் படுகின்றன.

**DNS** : டிஎன்எஸ் : *1.* களப்பெயர் முறைமை என்று பொருள்படும் Domain Name System என்ற சொல்தொடரின் தலைப்பெழுத் துக் குறும்பெயர். இணையத் திலிருக்கும் புரவன் கணினி களின் களப்பெயர் (md2.vsnl. net.in) மற்றும் ஐபீ முகவரி (202.54.6.30) இவற்றை உடைய அமைப்பு. களப்பெயர் எளி தாகப் புரியக் கூடியது. பயனா ளர்கள் பயன்படுத்துவது. இப் பெயர் தாமாகவே ஐபீ முகவரி யாக மாற்றப்பட்டு இணையத் தின் தரவு போக்குவரத்துக்குப் பயன்படுத்தப்படும். 2. களப் பெயர் சேவை எனப் பொருள் படும் Domain Name Service என்ற சொல்தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். களப் பெயர் முறைமையை நடை முறைப்படுத்தும் இணையப் பயன்பாடு. டிஎன்எஸ் வழங்கன் கள் (பெயர் வழங்கன் என்றும் அழைக்கப்படுவதுண்டு) களப் பெயரும் அதற்கிணையான ஐபீ முகவரியும் இணைந்த ஓர் அட்ட வணையைக் கொண்டுள்ளன.

**DNS server** : டிஎன்எஸ் வழங் கன் : களப் பெயர் சேவையைக் கவனித்துக் கொள்ளும் ஒரு கணினி. இணையத்திலிருக்கும் புரவன் கணினிகளின் பெயர் களையும் அதற்கிணையான ஐபீ முகவரிகளையும் கொண்ட அட்டவணையை வைத்துள்ளன. microsoft.com என்பது இணையத் திலுள்ள ஒரு களப்பெயர் எனில், அதற்குரிய நிறுவனக் கணினியின் ஐபீ முகவரியைத் தரும்.

**.do** : .டிஓ : இணையத்தில் ஓர் இணைய தளம் டொமினிக்கன் குடியரசைச் சேர்ந்தது என் பதைக் குறிக்கும் பெருங் களப் பெயர்.

**DOA** : டிஓஏ : Dead On Arrival என்பதன் குறும்பெயர். உற் பத்தியாளர் அல்லது விற்பனை யாளரிடமிருந்து வாங்கி எடுத்து வந்ததும் வேலை செய்யாத ஒரு பொருளைப்பற்றிக் குறிப் பிடுவது.

**.doc** : .டாக்; .டிஓசி : ஒரு சொல் செயலியில் உருவாக்கப்படும் கோப்புகளின் இயல்பான வகைப் பெயர். மைக்ரோ சாஃப்ட் நிறுவனத்தின் வேர்டு

தொகுப்பில் உருவாக்கப்படும் கோப்புகளின் வகைப்பெயர்.

**dock : பொருத்து; இணை; பிணை :** *1. ஒரு மடிக் கணினியை ஒரு நிலைக் கணினியில் பொருத்துதல். 2. விண்டோஸ் பணித்தளத்தில் செயல்படும் ஒரு பயன்பாட்டுத் தொகுப்பில், கருவிப்பட்டையை, பயன்பாட்டுச் சாளரத்தின் விளிம்புக்கு இழுத்துச் சென்றால், கருவிப்பட்டை அச்சாளரத்தில் பொருந்திவிடும். பயன்பாட்டுச் சாளரத்தின் ஒரு பகுதியாகவே தோற்றமளிக்கும். விண்டோஸ் பயன்பாடுகளில் தாய்ச் சாளரத்துள் சேய்ச் சாளரமாக ஆவணச் சாளரம் திறக்கப்படும். ஆவணச் சாளரத்தை பெரிதாக்கினால்* (Maximize) *அது தாய்ச் சாளரத்துடன் பொருந்தி ஒரே சாளரம் போல் தோற்றமளிக்கும்.*

**docking station : பொருத்து நிலையம்:** *ஒரு மடிக்கணினியை எங்கும் எடுத்துச் செல்லலாம். காரில், ரயிலில், விமானத்தில் செல்லும் போதுகூட வைத்துப் பயன்படுத்தலாம். ஆனாலும் அதிலுள்ள திரை, விசைப் பலகை போன்ற புறச் சாதனங்கள் கைக்கு அடக்கமாக மிகச் சிறியதாகவே இருக்கும். வீட்டில் / அலுவலகத்தில் இருக்கும்போது, மடிக் கணினியை ஒரு மேசைக்*



பொருத்து நிலையம்

கணினியைப்போலப் பயன் படுத்த விரும்பலாம். ஆனால் அதற்கு மேசைக் கணினியின் காட்சித் திரை, விசைப்பலகை, சுட்டி மற்றும் பிற சாதனங் களைப் பயன்படுத்திக் கொள் ளும் வசதி வேண்டும். இவ் வசதிகளைக் கொண்டதுதான் பொருத்து நிலையம். இக்கருவி யில் ஒரு மடிக்கணினி, காட்சித் திரை, விசைப்பலகை, அச்சுப் பொறி, சுட்டி ஆகியவற்றைப் பொருத்திக்கொள்ள வசதி இருக்கும்.

**doctype : ஆவணவகை; ஆவண இனம் :** எஸ்ஜிஎம்எல் (SGML) ஆவணத்தின் தொடக்கத் தில் குறிப்பிடப்படும் அறி விப்பு. ஒவ்வொரு எஸ்ஜி எம்எல் ஆவணத்திலும் ஆவண வகையின் வரையறை (Document Type Difinition) குறிப்பிடப்பட வேண்டும்.

**document : ஆவணம் :** 1. கையால் எழுதப்பட்ட, தட்டச்சு செய்யப்பட்ட அல்லது அச் சிடப்பட்ட தரவுகள் கொண்ட காகிதம். 2. தரவு அல்லது உரை நடையின் தொகுதியைக் குறிப் பிடுதல் · அது மனிதர்கள் படிப் பதாக இருந்தாலும் அல்லது எந் திரம் படிப்பதாக இருந்தாலும்.

**documentation : ஆவணப்படுத் தல் ; ஆவணமாக்கம் ; ஆவணச் சான்று :** 1. அமைப்பு ஆய்வு மற்றும் நிரலாக்கத் தொடர் அமைத்தலில், அமைப்பு, தயாரிக்கப்பட்ட நிரலாக்கத் தொடர்கள் மற்றும் பின்னர் செய்ய வேண்டிய மாற்றங்கள் உள்ளிட்டவற்றை பற்றி விவரிக் கும் ஆவணங்கள். 2. குறிப்பு கள், கருத்துரைகள் போன்ற வடி வில் உள்ளே அமைக்கப்படும் ஆவணப்படுத்தல்.

**documentation aids : ஆவணப் படுத்தல் உதவிப்பொருள்கள் :** ஆவணப்படுத்தல் செயல்முறை களைத் தானியங்கியாகச் செய்ய உதவும் பொருள்கள். நிரலாக்கத் தொடர் வர்ணனை குறிப்புகள், ஓடு படங்கள், ஹிப்போ நிரலாக்கத் தொடர் ஒட்டங்கள், போலி குறியீடுகள் போன்றவை.

**documentation and versioning : ஆவணமாக்கமும் பதிப்பாக்கமும்.**

**documentation, programme : நிரல் ஆவணமாக்கல்.**

**document centric : ஆவண மையமானது :** இது ஓர் இயக்க முறைமையின் பண்புக் கூறு ஆகும். முன்பிருந்த இயக்க முறைமைகள் நிரலை மைய மாகக் கொண்டவை. அதாவது, ஓர் ஆவணத்தைத் திறக்குமுன் அந்த ஆவணம் உருவாக்கப் பட்ட பயன்பாட்டுத் தொகுப்

யைத் திறக்க வேண்டும். பிறகு அதனுள்ளேதான் ஆவணத்தைத் திறக்க வேண்டும். ஆனால் இப்போதுள்ள மெக்கின் டோஷ், விண்டோஸ் இயக்க முறைமைகளில் ஓர் ஆவணத்தைத் திறப்பதற்குக் கட்டளை தந்தால் போதும். அந்த ஆவணம் உருவாக்கப்பட்ட பயன்பாடு தானாகவே திறக்கப்பட்டு அதனுள்ளே ஆவணம் திறக்கப்படும். எடுத்துக்காட்டாக, விண்டோஸ் இயக்கமுறைமையில் எம்எஸ்வேர்டு தொகுப்பில் உருவாக்கப்பட்ட ஓர் ஆவணத்தை சுட்டியால் இரட்டை கிளிக் செய்து திறந்தால், வேர்டு தொகுப்பு, தானாகவே திறக்கப்பட்டு அதனுள்ளே வேர்டு ஆவணம் திறக்கப்படும். ஓர் ஆவணம் எந்தத் தொகுப்பில் உருவாக்கப்பட்டது என்பதை அறியாமலே அந்த ஆவணத்தைப் பயனாளர் திறக்கமுடியும்.

**document close button :** ஆவண மூடு பொத்தான்.

**Document Content Architecture (DCA) :** ஆவண உள்ளடக்க உருவமைவு (டிசிஏ) : மாறுபட்ட உருவமைவுகளுக்கிடையே தரவுகளை (வாசகங்கள்) மாற்றுவதற்குப் பயன்படும் ஒரு வாசகக் கோப்பு உருவமைவு.

**document distribution :** ஆவணப் பகிர்மானம்.

**document file :** ஆவணக்கோப்பு : ஒரு சொல் பகுப்பி மூலம் உருவாக்கப்பட்ட கோப்பு. இது, ஓரக் கோடுகள், உள்வரிகள், தலைப்புகள், அடிக் குறிப்புகள் ஆகியவற்றுடன் உருவமைவு செய்யப்பட்டிருக்கும்.

**document image processing :** ஆவணப் படிமச் செயலாக்கம்.

**document interchange architecture (DIA) :** ஆவண மாறுகொள் கட்டமைப்பு.

**document management :** ஆவண மேலாண்மை : ஓர் நிறுவனத்துக்குள் கணினிவழியாகப் பரிமாறிக் கொள்ளப்படும் மின்னணு ஆவணங்களை உருவாக்குதல், வினியோகித்தல் போன்ற பணிகளுக்கான கோப்பு மேலாண்மை அமைப்பு.

**document mark :** ஆவணக் குறியீடு : நுண்வரைகலையில், நுண்படச்சுருளின் ஒவ்வொரு சட்டகத்திலுள்ள ஒரு சிறிய ஒளியியல் வடிவம். இது சட்டகங்களைத் தானாகவே எண்ணுவதற்குப் பயன்படுத்தப்படுகிறது.

**document minimise button :** ஆவணச் சிறிதாக்கு பொத்தான்.

**documentor :** ஆவணப்படுத்தி : நிரலாக்கத் தொ. ரி, ஒடு படங்கள், உரைநடைப்பொருள் மற்றும் பிற பட்டியல் அல்லது

வரைகலை தரவுகளை உருவாக்குதல், பராமரித்தலுக்காக தரவு செயலாக்க முறைகளைப் பயன்படுத்தும் வடிவமைக்கப்பட்ட நிரலாக்கத் தொடர்.

**document processing** : ஆவணச் செய்முறைப்படுத்துதல் : சொல் பகுப்பியில் செய்வது போன்று, வாசக ஆவணங்களைச் செய்முறைப்படுத்துதல். ஆவண உள்ளடக்கம் அடிப்படையிலான வாசக மீட்புக்கான அட்டவணைப்படுத்தும் முறைகளையும் உள்ளடக்கும்.

**document reader** : ஆவணப் படிப்புப் பொறி : ஒரு குறிப்பிட்ட அளவு தரவைப் படிக்கும் ஓசிஆர் அல்லது ஓஎம்ஆர் கருவி.

**document restore button** : ஆவண மீட்டாக்கப் பொத்தான்.

**document retrieval** : ஆவணம் திரும்பப் பெறல் : சேமிப்புச் சாதனங்களிலிருந்து தரவுகளைப் பெறும் செயல்முறை. தரவுகளைக் கையாளுதல் மற்றும் பின்னர் அறிக்கை தயாரித்தலும் இதில் அடங்கும்.

**document routing** : ஆவணம் திசைவித்தல்.

**document scanner** : ஆவண வருடு பொறி.

**document source** : ஆவண மூலம் : வைய விரிவலையில் (www) காணப்படும் அனைத்து ஆவணங்களும் ஹெச்டிஎம்எல் மொழியில் உருவாக்கப்பட்டவை. அவை சாதாரண உரைக் கோப்புகள் ஆகும். <HTML>, <HTML>, <FONT>, </FONT>, <TR>. <TR> என்பது போன்ற குறி சொற்களுடன் (Tags) உருவாக்கப்படுகின்றன. ஹெச்டிஎம்எல் மொழியில் உருவாக்கப்பட்ட உரைக்கோப்பினை ஓர் இணைய உலாவியில் (Browser) பார்வையிடும்போது அழகான வடிவமைப்புடன் தோற்றமளிக்கும். ஹெச்டிஎம்எல் மூல உரைக்கோப்பு, ஆவணமூலம் எனப்படுகிறது. இணையத்தில் (வைய விரிவலையில்) பார்வையிடுகின்ற மீவுரை (Hyper Text) ஆவணங்களின் மூல வரைவினை (Source Code) அதாவது ஆவண மூலத்தைப் பார்வையிட உலாவியிலேயே வசதி உண்டு.

**document style semantics and specification language** : ஆவண பாணி தொடரிலக்கணம் மற்றும் வரையறுப்பு மொழி : உருவாகிக் கொண்டிருக்கும் ஐஎஸ்ஓ தரவரையறை. ஒரு குறிப்பிட்ட வடிவாக்கம் அல்லது செயலாக்கம் சாராத ஓர் ஆவணத்தின்

உயர்தர வடிவாக்கம் தொடர்பான தொடரிலக்கணம் பற்றியது. தொடரிலக்கணத்துக்கான எஸ்ஜிஎம்எல் வரையறைக்குச் செழுமை சேர்ப்பதாய் அமையும்.

**document window : ஆவணச் சாளரம்:** மெக்கின்டோஷ், விண்டோஸ் போன்ற வரைகலைப் பணித்தளத்தில் எந்தவொரு பயன்பாட்டுத் தொகுப்பும் ஒரு சாளரத்தினுள்ளேதான் காட்சியளிக்கும். அதுபோலவே அத்தொகுப்பில் ஓர் ஆவணத்தை உருவாக்குதலும் பார்வையிடுதலும் ஒரு தனிச் சாளரத்தினுள்ளேதான் நடைபெறும். சில தொகுப்புகளில் இவையிரண்டும் இணைந்து ஒரே சாளரமாகத் தோற்றமளிப்பதும் உண்டு. வரைகலைப் பணித்தளத்தில் ஓர் ஆவணம் தோற்றமளிக்கும் சாளரம் ஆவணச் சாளரம் எனப்படுகிறது.

**docuterm : ஆவண வாசகம் :** ஆவணத்தின் உள்ளடக்கங்களை அடையாளங் காண்பதற்கு ஒரு வாசக ஆவணத்தில் பயன்படுத்தப்படும் சொல் அல்லது சொற்றொடர்.

**DOE : மின்னணுவியல் துறை :** Department of Electronics என்பதன் குறும்பெயர். மின்னணுவியல் துறை என்று பொருள்படும்.

**DO loop : செய் மடக்கி :** பெரும்பாலான கணினி மொழிகளில், ஒரு குறிப்பிட்ட பணியைத் திரும்பத் திரும்பப் பலமுறை செயல்படுத்த கட்டுப்பாட்டு மடக்கி (control loop) என்னும் கட்டளை வடிவம் பயன்படுத்தப்படுகின்றது. For... Next, While .. Wend, Do ... Enddo போன்ற பல்வேறு கட்டளை வடிவங்கள் உள்ளன. DO என்னும் மடக்கி, ஃபோர்ட்ரான், விசுவல்பேசிக், சி, சி++, சி ஷார்ப் ஜாவா மொழிகளில் உள்ளது.

**domain : செயற்களப்பகுதி :** *1.* தொடர்புகளுடைய பொருள்கள் தமது மதிப்புகளைப் பெறும் தரவுத் தொகுதி. 2. ஆர்வம் உள்ள எந்தச் சிக்கல் துறையும் இதில் அடங்கும்.

**domain expert : செயற்கள வல்லுநர் :** ஒரு நிபுணத்துவப் பொறியமைமை உருவாக்க உதவுகிற ஒரு மனித வல்லுநர்.

**domain knowledge : கள அறிவு:** பயன்பாட்டுச் சூழ்நிலையின் அறிவு.

**domain name : களப் பெயர்; திணைப் பெயர் :** ஒரு பிணையத்தில் ஒரு குறிப்பிட்ட

வழங்கன் அல்லது புரவன் கணினியின் உரிமையாளரை அடையாளம் காட்டும் பெரும் படிமுறை அமைப்பில் அம் முகவரி அமையும். எடுத்துக் காட்டாக www.chennai telephones.gov.in என்ற முகவரி, இந்தியாவிலுள்ள (in), அரசுக்குச் சொந்தமான (gov), சென்னைத் தொலைபேசி நிறுவனத்தின் வலை வழங்கன் (web server) என்பதைக் குறிக்கிறது. in என்பது புவியியல் பெரும் களம் (major geographical domain) எனவும், gov என்பது வகைப் படு பெருங்களம் எனவும், chennai telephones என்பது உட்களம் (minor domain) எனவும் அறியப்படுகிறது.

கணிமொழி.வணி
தமிழ்.வலை
யாகூ.நிறு.இந்

என்பதுபோன்று தமிழ்மொழியி லேயே களப் பெயர்களை அமைத்துக் கொள்ளும் தொழில் நுட்பமும் வந்து விட்டது.

**domain name address** : களப் பெயர் முகவரி : இணையத் திலோ அல்லது ஏதேனும் ஒரு டீசிபீ/ஐபீ பிணையத்திலோ இணைக்கப்பட்ட ஒரு கணினி யின் முகவரி. குறிப்பாக, ஒரு வழங்கன் கணினியை அல்லது நிறுவனத்தை அடையாளம் காண, எண்களுக்குப் பதிலாக சொற்களை முகவரியாகப் பயன்படுத்தும் முறை.

**domain name server** : களப் பெயர் வழங்கன்.

**domain name system** : களப் பெயர் முறைமை.

**Domain Naming Services (DNS)** : களப் பெயரிடு சேவை.

**domain tip** : கள முனை : இலக்கமுறை தரவைச் சேமிக்க மெல்லிய திரைப்படங்களைப் பயன்படுத்தும் ஒரு வகை சேமிப்புச் சாதனம்.

**dominant carrier** : முனைப்பு நிலை ஊர்தி : ஒரு குறிப்பிட்ட அங்காடியின் பெரும்பகுதிமீது கட்டுப்பாடு கொண்டுள்ள தொலைத் தொடர்புப் பணிக் கருவி.

**dongle** : வன்பூட்டு.

**door** : கதவம் : ஒரு BBS கணினி யில் சேமித்து வைக்கப் பட்டுள்ள ஒரு பயன்பாட்டினை இயக்குவதற்கு ஒரு தொடுப்புப் பயனாளரை அனுமதிக்கும் ஒரு நுழைவாயில் அல்லது இடை முகப்பு.

**dopant** : ஒட்டுப்பொருள் ; மாசுப் பொருள் : உள்ளியம் சார்ந்த அல்லது பாஸ்பரஸ் போன்று ஒட்டும்போது பயன்படுத்தும் ஒரு பொருள்.

**dope vector : ஒட்டுச் சரம் :** இணைப்புப் பட்டியலில் உள்ள ஒரு அணு, அந்தப் பட்டியலில் உள்ள பிற அணுக்களின் உள்ள டக்கங்களைக் கூறும் ஒரு அளவுச் சரம் (வெக்டார்).

**doping : ஒட்டல்; மாசு ஊட்டல் :** அரைக்கடத்தியை உருவாக்கும் போது தூய சிலிக்கானின் படிக அமைப்பில் தூய்மையற்ற பொருள்களைச் சேர்க்கும் செயல்முறை.

**doping vector : மாசு நெறியம்; மாசு திசையம்.**

**DOS : டாஸ் :** Disk Operating System என்பதன் குறும்பெயர். இது வட்டு இயக்க அமைப்பு ஆகும். வட்டத் தகட்டுச் செயற் பாட்டு முறை அல்லது வட்டுச் செயற்பாட்டு பொறியமைவு மாகும். பயன்படுத்துவோருக் கும் கணினியின் வட்டு இயக் கத்துக்கும் இடையில் எளிதாகப் பயன்படுத்திக் கொள்ளும் இணைப்பை ஏற்படுத்தும் வட்டு சார்ந்த ஒரு சிறப்பு நிரலாக்கத் தொடர்.

**DOS box : டாஸ் பெட்டி :** ஓஎஸ்/2 இயக்க முறைமையில், எம்எஸ் -டாஸ் நிரல்களை இயக்குவதற்குத் துணைபுரியும் ஒரு செயலாக்கம்.

**DOS extender : டாஸ் நீட்டிப்பான் :** டாஸ் இயக்க முறைமையில் டாஸ் பயன் பாட்டு நிரல்கள் பயன்படுத்திக் கொள்ள, 640 கேபி மரபு நினைவகத்தை நீட்டிப்பதற்காக உருவாக்கப்பட்ட நிரல். ஒளிக் காட்சி தகவி, ரோம் பயாஸ், உ/வெ துறைகள் போன்ற கணினி உறுப்புகளுக்காக ஒதுக்கப்பட்ட நினைவகத்தை டாஸ் நீட்டிப்பான் பயன் படுத்திக் கொள்ளும்.

**DOS prompt : டாஸ் தூண்டி :** எம்எஸ்-டாஸ் இயக்க முறைமையில், பயனாளரின் கட்டளையை ஏற்கத் தயாராக இருக்கும் நிலையை உணர்த்தும் அடையாளச் சின்னம். டாஸின் கட்டளைச் செயலி இதனை வழங்குகிறது. பெரும்பாலும் இச்சின்னம் இருப்பு வட்டகம்/ கோப்பகத்தைச் சுட்டுவதாக இருக்கும். எடுத்துக்காட்டாக, A:\>, C:\>, D:\DBASE> என்பது போல இருக்கும். பயனாளர், தன் விருப்பப்படி இச் சின்னத்தை மாற்றி அமைத்துக் கொள்ளவும் முடியும். Prompt என்ற கட்டளை அதற்குப் பயன் படுகிறது.

**dot : டாட்; புள்ளி :** 1. யூனிக்ஸ், எம்எஸ்-டாஸ், ஓஎஸ்/2 போன்ற இயக்க முறைமை களில் கோப்பின் முதற்பெயரை யும், வகைப்பெயரையும்

பிரிக்கும் குறியீடு. (எ-டு) text.doc. இதனை டெக்ஸ்-டாட்-டாக் என்று வாசிக்க வேண்டும். 2. கணினி வரைகலையிலும் அச்சடிப்பிலும் புள்ளிகள் தாம் ஒரு படத்தையோ எழுத்தையோ உருவாக்குகின்றன. கணினித் திரையில் காணப்படும் உருவப்படங்கள் புள்ளிகளால் ஆனவையே அவை படப்புள்ளிகள் (pixels-picture elements) எனப்படுகின்றன. அச்சுப்பொறியின் திறன் ஓர் அங்குலத்தில் எத்தனைப் புள்ளிகள் (dots per inch - dpi) என்று குறிக்கப்படுகிறது. 3. இணைய தள முகவரியின் வெவ்வேறு பகுதிகளை புள்ளிகளே பிரிக்கின்றன. (எ-டு) www.vsnl.com.

dot addressable : புள்ளி முகவரியாக்கம் : தனித்தனிப் புள்ளி ஒவ்வொன்றையும், ஒரு ஒளிப் பேழைக் காட்சியில், புள்ளிக் குறி அச்சுவார்ப்புரு அச்சடிப்பியில் அல்லது லேசர் அச்சடிப்பியில் செயல்முறைப்படுத்தும் திறம்பாடு.

dot chart : புள்ளிக்குறி வரைபடம் : சிதறல் வரைபடம் போன்றது.

dot commands : புள்ளி ஆணைகள் ; புள்ளிக் கட்டளைகள் : வடிவமைப்பு நிரல்களை அளித்து சொல் பகுப்பியில் பதிவேடுகளை தயார் செய்தல். அச்சிடும் போதுதான் அந்த ஆணைகள் செயல்படுத்தப்படும். வேர்டுஸ்டார் தொகுப்பில் இவை பயன்படுத்தப்படுகின்றன.

dot file : புள்ளிக் கோப்பு : யூனிக்ஸ் இயக்க முறைமையில் புள்ளியில் தொடங்கும் பெயரைக் கொண்ட கோப்பு. (எ-டு) profile ஒரு கோப்பகத்திலுள்ள கோப்புகளின் பட்டியலைத் திரையிடும்போது, புள்ளிக் கோப்புகள் இடம் பெறா. பெரும்பாலும் ஒரு குறிப்பிட்ட பயனாளருக்கான நிரல்களின் நிலைபாடுகளை இருத்தி வைக்கப் பயன்படுகின்றன.

dot gain : புள்ளிக்குறி ஈட்டம் : ஒவ்வொரு மைப் புள்ளிக்குறியின் வடிவளவும், வெப்பநிலை, மை, காகிதத்தின் தரம் காரணமாக பெருக்கமடைதல்.

dot graphic : புள்ளிக்குறி வரைகலை : புள்ளிக்குறிகளின் உருவமைகளினால் உருவாக்கப்பட்ட ஒரு வரைகலை வடிவமைப்பு.

dot matrix : புள்ளி அச்சு முறை; புள்ளி அணி : புள்ளி அச்சு எந்திரம் ; குத்தூசி அச்சு எந்திரம்: எழுத்துகளைக் குறிப்பிட புள்ளிகளைத் தேர்ந்தெடுத்து

அவைகளை செவ்வக வடிவில் அச்சிடத் தயார் செய்யும் தொழில் நுட்பம்.

**dot matrix character : புள்ளிக் குறி அச்சுவார்ப்புரு எழுத்து :** புள்ளிக்குறி அச்சுவார்ப்புரு உருவமைப்பில் நெருக்கமாக அச்சடிக்கப்பட்ட எழுத்துகள். நெருக்கமாக அச்சடிக்கப்பட்டிருப்பதால், இது ஒரு திண்மத் தோற்றத்தைக் கொடுக்கும்.

**dot matrix printer : புள்ளி வரிசை அச்சுப்பொறி ; புள்ளிக் குறி அச்சு வார்ப்புரு அச்சடிப்பி :** நெருக்கமாக அமைக்கப்பட்ட தொடர்புள்ளிகளாக எழுத்துகள் மற்றும் வரைகலைகளை உருவாக்கும் அச்சுப் பொறி. அச்சிடும் தலை காகிதத்திற்கு நேராக வரும் சரியான நேரத்தில் சுத்தியால் அடிக்கும் ஊசி தொழில் நுட்பம். மலர்ச் (டெய்சி) சக்கர அச்சுப்பொறி தரத்தில் நுட்பமாக அழகிய அச்சுகளை சில பொறிகள் உருவாக்கும்.

**dot operator : புள்ளிச் செயற்குறி.**

**dot per inch : ஓர் அங்குலத்தில் புள்ளிகள்.**

**dot pitch : புள்ளி இடைவெளி :** ஒரு முகப்புத்திரையில் தனிப்பட்ட புள்ளிகளுக்கு இடையிலுள்ள இடைவெளி மில்லி மீட்டரில் கூறப்படுகிறது. புள்ளி இடைவெளி குறையக் குறைய, இடம் பெறவேண்டிய புள்ளிகள் அதிகமாகி படம் மேலும் தெளிவாகத் தெரியும்.

**dot prompt : புள்ளிக்குறி நினைப்பூட்டல் :** இது தரவுத் தள நினைவூட்டுதல். இது ஒரு புள்ளி ('.'). இதற்கு எதிராக தரவுத் தள நிரல்கள் கொடுக்கப்பட வேண்டும். டிபேஸ் தொகுப்பில் இது பயன்படுத்தப் பட்டுள்ளது.

**Dots Per Inch (DPI) : அங்குல வாரிப் புள்ளிக்குறி :** ஓர் அங்குல நீளத்தில் ஓர் அச்சடிப்பி எத்தனை புள்ளிக் குறிகளை அச்சடிக்கும் என்பதை அளவிடுவதற்கான நீட்டலளவை. எடுத்துக் காட்டாக 300 DPI என்றால், ஒரு காகிதத்தில் ஒவ்வொரு கிடைமட்ட அல்லது செங்குத்து அங்குலத்திலும் 300 புள்ளிக்குறிகளை அச்சடிப்பி அச்சடிக்கும் என்று பொருள். இது எழுத்துகளை உருவாக்கப் புள்ளிக்குறி அச்சுவார்ப்புருக்களைப் பயன்படுத்தும் அச்சடிப்பிகளுக்கு மட்டுமே பொருந்தும். எடுத்துக் காட்டு : புள்ளிக்குறி அச்சுவார்ப்புரு அச்சடிப்பிகள் ; லேசர் அச்சடிப்பி; அனல் அச்சடிப்பி.

**double : இரட்டையளவு ; இரட்டிப்பளவு.**

**double buffering :** இரட்டை இடைநிலைத் தாங்குதல்; இரட்டை இடைநிலை வைப்பக முறை : கணினிக்கும் வெளிப் புறச் சாதனங்களுக்கும் இடையில் தரவுவை மாற்றுவதற்கான வன்பொருள் அல்லது மென் பொருள் தொழில்நுட்பம். ஒரு தாங்கியில் உள்ள தரவுவை கணினி செயலாக்கம் செய்யும் போது, அடுத்த ஒன்று, தரவுவை வெளியே அனுப்பும் அல்லது உள்ளே வாங்கும்.

**double-click :** இரட்டை கிளிக்கி; இரட்டை அமுக்க முறை : சுட்டுப் பொத்தானைப் பயன் படுத்தி நிரல் உருவாக்கும் முறை. இடஞ்சுட்டி அல்லது கர்சரை காட்சித்திரையில் சரியான நிலையில் வைத்துக் கொண்டு வேகமாக அடுத் தடுத்து இரண்டுமுறை சுட்டுப் பொத்தானை அழுத்தினால் நிரல் செலுத்தப்படும்.

**double-dabble :** இரட்டை மாற்று முறை : ஈரிலக்க எண்களை அவற்றுக்கு நிகரான பதின்ம எண்களாக மாற்றுகிற ஒரு படி நிலை முறை.

**double density :** இரட்டை அடர்த்தி : வழக்கமான வட்டு அல்லது நாடாவின் சேமிப்புத் திறனைப்போல் இரண்டு மடங்கு திறன் உடையதாக இருத்தல். தனி அடர்த்தி வட்டு அல்லது நாடாவில் உள்ளது போன்ற இரண்டு மடங்கு சேமிக்கும் திறன்.

**double density disk :** இரட்டை அடர்த்தி வட்டு; இரட்டைச் செறிவு வட்டு; இரட்டைக் கொள்திறன் வட்டு : முந்தைய வட்டுகளைப்போல் இரண்டு மடங்கு கொள்திறன் (ஓர் அங்குலப் பரப்பில் கொள்ளும் துண்மிகள்) உள்ள வட்டுகள். முற்கால ஐபிஎம் பீசியில் பயன் படுத்தப்பட்ட நெகிழ்வட்டு களின் கொள்திறன் 180 கேபி. இரட்டைக் கொள்திறன் வட்டு களில் 360 கேபி தகவலைப் பதியலாம். இவ்வட்டுகள் தரவைப் பதிய, திருத்தப்பட்ட அலைவரிசைப் பண்பேற்றக் குறியீட்டுமுறை பயன்படுத்தப் பட்டது.

**double dereference :** இரட்டைச் சுட்டுவிலக்கம் : p என்பது a என்னும் மாறிலியின் முகவரியைக் குறிக்கும் சுட்டு (Pointer) எனில், *p என்பது a-யில் இருத்தி வைக்கப்பட்ட மதிப் பினை நேரடியாகச் சுட்டும். இதில் * என்னும் அடையாளம் சுட்டு விலக்கக் குறியீடாகப் பயன்படு கிறது. q என்பது p-யைச் சுட்டும் சுட்டு எனில், *q என்பது p-யின் மதிப்பைச்

(அதாவது அதில் இருத்தி வைக்கப்பட்டுள்ள a-யின் முக வரியை) சுட்டும். **q என்பது a-யின் மதிப்பை நேரடியாகச் சுட்டும். இதனை இரட்டைச் சுட்டு விலக்கம் என்கிறோம்.

**double linked list :** **இருமுனைத் தொடுப்புப் பட்டியல்.**

**double precision :** **இரட்டைத் துல்லியம்; இரட்டைச் சரி நுட்பம் :** எண்கள் கூடுதல் துல்லி யத்தைப் பெற கணினி சொற் களைப் பயன்படுத்துதல் பற்றியது.

**double precision arithmetic :** **இரட்டைச் சரிநுட்பக் கணக்கீடு; இரட்டைத் துல்லியக் கணக்கீடு.**

**double punch :** **இரட்டைத் துளை :** ஒரு அட்டையின் பத்தி ஒன்றில் செய்யப்படும் ஒன் றுக்கு மேற்பட்ட எண் துளை.

**double scan :** **இரட்டை நுண் ணாய்வு; இரட்டை வருடல் :** வண்ண வரைகலைத் தக வமைவு (CGA) மென்பொருள் சுற்றுவழியில் வண்ண வரை கலைத் தகவமைவுத் திண் மத்தை அதிகரிக்கும் அமைவு.

**double sided :** **இருபுற.**

**double sided disk :** **இருபுற வட்டு :** அதன் இரண்டு மேற் புறங்களிலும் தரவுவை சேமிக் கும் திறனுடைய காந்த வட்டு.

**double sided floppy disk :** **இரட்டைப் பக்க செருகுவட்டு.**

**double strike :** **இரட்டை அச் சடிப்பு :** ஒவ்வொரு எழுத்தினை யும் இருமுறை அச்சடிக்கும் ஒரு அச்சடிப்பு முறை. இரண்டாவது அச்சடிப்பு முதலாவதற்குச் சற்றுக் கீழே இருக்கும்.

**double striking :** **இரட்டை அச்சடிப்பு.**

**double surface :** **இரட்டை வட்டுப் பரப்பு.**

**double width :** **இரட்டை அகற்சி :** ஒவ்வொரு எழுத்தும் இயல் பான எழுத்துகளைப் போல் இருமடங்கு அகலமாக இருக்கக் கூடிய அச்சு அகற்சி. இந்த இரட்டை அகற்சி முதலில் 'விரிவாக்க அகற்சி' என அழைக்கப்பட்டது.

**double word :** **இரட்டைச் சொல் :** இரண்டு சொற்கள் நீளமுள்ள சேமிப்பகப் பொருள்.

**doubly linked list :** **இருமுனைத் தொகுப்புப் பட்டியல் ; இருவழி இணைப்புப் பட்டி :** பட்டியலின் ஒவ்வொரு உறுப்பிலும் முந்தைய மற்றும் அடுத்துவரும் அணுவைப் பற்றிய தரவுவைக் கொண்டுள்ள பட்டியல்.

**do until :** **அதுவரை செய் :** அமைக்கப்பட்ட நிரலாக்கத்

தொடரின் மாறுபாடுகளில் ஒன்றான பழைய சுற்று அமைப்பு. ஒரு குறிப்பிட்ட பணியைத் திரும்பத் திரும்பச் செய்வதற்காக, ஓர் நிரலாக்கத் தொடரில் எழுதப்படும் கட்டளை அமைப்பு.

**do while : அப்போதெல்லாம் செய்:** *அமைக்கப்பட்ட நிரலாக்கத் தொடர் முறையின் மாறுபாடுகளில் ஒன்றான பழைய சுற்று முறை.*

**dow jones information service : டோ ஜோன்ஸ் தரவுப் பணியம் :** *பங்கு விலைகள் போன்ற நடப்பு நிதியியல் செய்திகளைக் கொண்டிருக்கிற ஒரு கணினி தரவுத் தளம். இதனை, சந்தாதாரர்கள், நுண்கணினிகள், மோடெம்கள் மூலம் அணுகலாம்.*

**down : செயலிழந்த நிலை :** *மென்பொருள் அமைப்பில் தவறு ஏற்படுவதால் அல்லது வன்பொருள் மின்சுற்றுகள் செயல்பட முடியாமல் போதலைக் குறிக்கும். ஒரு கணினி 'செயலிழந்த நிலை' என்றால் அது செயல்படவில்லை என்பதே பொருள்.*

**down arrow : கீழ்நோக்கு அம்புக் குறி.**

**down line processor : துணை நிலைச் செயலகம் :** *செய்தித் தரவு தொடர்புக் கட்டமைப்பின் முகப்பு முனையில் அல்லது அதற்கு அருகில் இருந்து தரவுகளை அனுப்பி வைக்கும் செயலகம்.*

**down link : தரை இணைப்பு :** *பூமியிலுள்ள ஒரு நிலையத்துடன் ஒரு செயற்கைக்கோளிலிருந்து ஏற்படுத்தப்பட்டுள்ள செய்தித்தொடர்பு வழி. இது, 'வான்இணைப்பு' (Uplink) என்பதிலிருந்து வேறுபட்டது.*

**down load : கீழிறக்கு ; தரவு இறக்கம் :** *தரவுவை, பெரிய மையக் கணினி அமைப்பிலிருந்து சிறிய, தொலை தூர கணினி அமைப்புக்கு மாற்றும் செயல்முறை.*

**downloadable font : பதிவிறக்கத்தகு எழுத்துரு :** *ஓர் ஆவணத்தை அச்சிடும்போது, அந்த ஆவணத்தின் தரவு, அச்சுப் பொறியின் நினைவகத்தில் ஏற்றப்படும். அச்சுக்குரிய எழுத்துருவும் கணினியின் நிலைவட்டிலிருந்து அச்சுப் பொறிக்கு அனுப்பப்படும். பதிவிறக்கத்தகு எழுத்துருக்கள் மிகப்பரவலாக லேசர் அச்சுப்பொறிகளிலும் பக்க அச்சுப் பொறிகளிலும் பயன்படுத்தப்படுகின்றன. சில புள்ளியணி அச்சுப் பொறிகளும் இத்தகைய எழுத்துருக்களை ஏற்கின்றன.*

**down loading** : தரவுவிறக்கம் : ஒரு பெரிய கணினியிலிருந்து ஒரு சிறிய கணினிக்குத் தரவுகளை மாற்றும் செய்முறை. எடுத்துக்காட்டு : முதன்மைப் பொறியமைவிலிருந்து ஒரு சொந்தக் கணினிக்கு மாற்றம் செய்தல். ஒரு சொந்தக் கணினியிலிருந்து ஒரு புறநிலைச் சாதனத்திற்குத் தரவுகளை மாற்றுவதையும் இது குறிக்கும். எடுத்துக்காட்டு : லேசர் அச்சடிப்பிக்கு மாற்றம் செய்தல். 'தரவுவிறக்கம்' என்பது கணினியின் வடிவளவினைக் குறிப்பதில்லை. ஒரு கணினியிலிருந்து இன்னொரு கணினிக்குத் தரவுகளை மாற்றுவதையே குறிக்கும். 'தரவுவேற்றம்' (uploading) என்பது இதற்கு எதிர் மாறானது.

**downsizing** : சிறிதாக்கம் : ஒரு நிறுவனத்தில் கணினிச் செயல்பாடுகள் முழுவதையும் பெருமுகக் கணினி (mainframe) சிறு கணினி (mini). போன்ற பெரிய கணினி அமைப்பிலிருந்து குறுங்கணினி அல்லது நுண் கணினி (micro) அமைப்புக்கு மாற்றியமைத்தல். பெரும்பாலும் இம்மாற்றம் செலவைக் குறைக்க, அல்லது புதிய மென்பொருளுக்கு மாறுவதற்காக இருக்கலாம். சிறிய கணினி அமைப்பு என்பது பீசிக்கள், பணி நிலையங்கள் இணைந்த கிளையன் (client) வழங்கன் (server) அமைப்பாக இருக்கலாம். ஒன்று அல்லது சில குறும்பரப்பு/விரிபரப்புப் பிணையங்கள் இணைக்கப்பட்ட பெருமுகக் கணினியாகவும் இருக்கலாம்.

**downstream** : கீழ் தாரை; கீழ் ஒழுக்கு; கீழ்பாய்வு: ஒரு செய்திக் குழுவுக்கான செய்தி, ஒரு செய்தி வழங்கனிலிருந்து இன்னொன்றுக்கு அனுப்பி வைக்கப்படும் திசை வழியைக் குறிக்கிறது.

**down time** : முடக்க நேரம்; செயல்படா நேரம் : ஒரு கணினி அமைப்பு அல்லது அதனோடு தொடர்புடைய வன்பொருள், செயல்படாமல் இருக்கும் நேரம்/ நேரத்தின் விழுக்காடு எதிர்பாராவிதமாக வன்பொருள் பழுதுபட்டுச் செயல்படாமல் இருந்த நேரமாக இருக்கலாம். அல்லது திட்டமிட்டுப் பராமரிப்புக்காக செயல்படாமல் நிறுத்தி வைத்த நேரமாகவும் இருக்கலாம்.

**downward compatible** : சூழ்நிலைப் பொருத்தமுடைய : முந்தைய தலைமுறையைச் சேர்ந்த அல்லது சிறிய கணினியுடன் ஏற்புடைய கணினி பற்றியது.

**DPMA : டிபீஎம்ஏ :** Data processing Management Association என்பதன் குறும்பெயர்.

**DPMA certification : டிபீஎம்ஏ சான்றிதழ் :** ஒருவர் தரவு செயலாக்கத் துறையில் குறிப்பிட்ட அளவு திறனை அடைந்து விட்டார் என்பதைக் குறிக்கும் வகையில் தரவுச் செயலாக்க மேலாண்மைச் சங்கம் (DPMA) முன்பு அளித்துவந்த சான்றிதழ். ஆண்டுதோறும் நடத்தப்படும் தேர்வில் வெற்றி பெறுபவர்களுக்கு இந்தச் சான்றிதழ் வழங்கப்படுகிறது. இப்போது ஐ.சி.சி.பி. (Institute for Certification of Computer Professionals) இந்தச் சான்றிதழை வழங்குகிறது.

**DPMI : டிபீஎம்ஐ :** பாதுகாக்கப்பட்ட டாஸ் செயல்பாட்டு இடைமுகம் என்று பொருள்படும் Dos Protected Mode Interface என்ற சொல்தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். மைக்ரோசாஃப்ட் விண்டோஸ் 3.0 பதிப்புக்காக உருவாக்கிய மென்பொருள் இடைமுகம். 80286 மற்றும் அதனினும் கூடுதல் திறன் நுண்செயலிகளில் எம்எஸ்-டாஸ் அடிப்படையிலான பயன்பாட்டு நிரல்கள் பாதுகாக்கப்பட்ட முறையில் செயல்பட உதவும் மென்பொருளாகும் இது. பாதுகாக்கப்பட்ட செயல்முறையில் நுண்செயலி பல்பணிகளை ஒரே நேரத்தில் நிறைவேற்றும். சாதாரணமாக எம்எஸ் டாஸில் செயல்படும் நிரல்களுக்கு 1 எம்பி நினைவகம் மட்டுமே கிடைக்கும். ஆனால் பாதுகாக்கப்பட்ட செய்முறையின் போது 1எம்பிக்குக் கூடுதலான நினைவகப் பரப்பையும் பயன்படுத்திக் கொள்ள முடியும்.

**DPMS : டிபீஎம்எஸ் :** திரைக் காட்சி மின்சார மேலாண்மை சமிக்கை முறை என்று பொருள்படும் Display Power Management Signaling என்ற சொல்தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். கணினி செயல்படாத போது காட்சித்திரை ஓய்வு அல்லது இடைநிறுத்த நிலையில் இருக்கும். அப்போது மிகக் குறைந்த மின்சாரத்தையே எடுத்துக் கொள்ளும். வேஸா (VESA) நிறுவனத்தின் தர வரையறையாகும் இது.

**draft :** வரைவு நகல்.

**draft mode : நகல் பாங்கு :** பெரும்பாலான புள்ளியணி அச்சுப் பொறிகளில் இருக்கின்ற குறைந்த தரமுடைய அதிவேக அச்சுக்கான அச்சுமுறை.

**draft quality : வரைவு தரம் :** அச்சிடப்பட்ட வெளியீடுகளின்

தரத்தின் அளவு. அதிவேக அச்சிடும் முறையை இது குறிப்பிடுகிறது. அதிவேக அச்சிடல் என்பதால் எழுத்துகள் தெளிவாக இல்லாமல் இருக்கும். வேலை செய்யும் பிரதிகள் எடுக்க சரியாக இருக்கும். ஆனால், இறுதி நகலுக்கு ஏற்றதல்ல.

**drag** : இழு : பொத்தானைக் கீழே வைத்துப் பிடிக்கும்போது 'மௌஸ்' எனும் சுட்டியை (அம்புக்குறி) நகர்த்தும் செயல். கணினி காட்சித் திரையில் பொருள்களை கையாள அல்லது நகர்த்தப் பயன்படுத்தப் படுகிறது.

**drag and drop** : இழுத்து விடுதல்; இழுத்துப் போடுதல் : வரைகலைப் பணித்தளத்தில் மேற்கொள்ளப்படும் ஒரு செயல்பாடு. திரையில் தோன்றும் ஒரு பொருளை சுட்டியின் மூலம் இழுத்துச் சென்று வேறிடத்தில் இருத்திவைத்தல். (எ-டு) விண்டோஸ் இயக்க முறைமையில் ஒரு கோப்பினை அழிக்கவேண்டுமெனில், கோப்புக்கான சின்னத்தை இழுத்துச் சென்று Recycle Bin எனப்படும் மீட்சிப் பெட்டியில் போட்டு விடலாம். மெக்கின்டோஷில் கோப்புச் சின்னத்தை Trashcan எனப்படும் ஒழிவுப் பெட்டியில் போட்டு விடலாம்.

**dragging** : இழுத்துவரல் : காட்டப்படும் வரைகலைப் பொருள் சுட்டும், இடஞ்சுட்டும் கருவியை (கர்சரை) பின் பற்றி வருமாறு செய்யும் தொழில் நுட்பம். சுட்டுக் கருவி பொத்தானைக் கீழிறக்கிப் பிடித்து சுட்டும் கருவியை நகர்த்தும் போது இவ்வாறு செய்யுமாறு சில கணினிகள் இயங்குகின்றன.

**drain** : சேரிடம் ; வடிகால் : களச் செயல்பாட்டு மின்மப் பெருக்கிகளுடன் இணைக்கும் முகப்புகளில் ஒன்று. மற்ற இரண்டும் மூல மற்றும் வாயில் மின்மப் பெருக்கி. சக்தி எடுத்து வருபவை நேர் மின்னாக இருந்தால், மின்சக்தி மூல இடத்திலிருந்து சேரிடத்திற்குப் போய்ச் சேரும்.

**DRAM** : டிராம் : Dynamic RAM என்பதன் குறும்பெயர்.

**DRAW** : டிரா : எழுதியபின் நேரடி வாசிப்பு என்று பொருள்படும் Direct Read After Write என்ற சொல் தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஓர் ஒளிவட்டில் எழுதப்பட்ட தரவின் துல்லியத்தைச் சோதித்தறிய, வட்டில் எழுதப்பட்டவுடனே, சரியாக உள்ளதா என்பதைப் பரிசோதிப்பர். இதற்கான தொழில் நுட்பமே டிரா ஆகும்.

**drawing** : வரைதல் : ஒரு கணினியின் வரைகலை திறன்களைப் பயன்படுத்தி வரைகலை முறையில் வடிவங்களை உருவாக்குதல். கணினி வரைகலை அமைவினால் கோடுகளை உருவாக்குதல் அல்லது வடிவம் மற்றும் வண்ணம் அளிக்கும் நிரலாக்கத் தொடர்களுடன் ஒரு துல்லியமான வரைபடம் வரையமுடியும்.

**drawing programme** : ஓவிய நிரல் : பொருள் அடிப்படையிலான வரைகலைப் படங்களைக் கையாள்வதற்கான ஒரு நிரல். படப்புள்ளிகளால் (pixels) வரையும் படங்களைக் கையாள்வதிலிருந்து மாறுபட்டது. எடுத்துக்காட்டாக, ஓவிய நிரலில், பயனாளர் கோடு, சதுரம், செவ்வகம், வட்டம், ஓர் உரைத் தொகுதி ஆகியவற்றை தனித்த பொருள்களாகக் கையாளலாம். அவற்றைத் தேர்வு செய்து நகர்த்தலாம். மாற்றலாம், வண்ணம் தீட்டலாம். (எ-டு) விண்டோஸ் 95/98 இயக்க முறைமையில் உள்ளிணைக்கப்பட்டுள்ள 'பெயின்ட்' (Paint).

**draw perfect** : முழுநிறைவு வரைபடம் : IBM இசைவுடையதும் கணினிகளுக்கான ஒரு வரைவுச் செயல் முறை. இந்த வரைபடச் செயல்முறை 256 வண்ணங்களைக் கொடுக்கிறது. இது, இருபரிமாண பட்டை, கலவை அச்சுப்படிவ, வரை படங்களை உருவாக்குகிறது.

**DRDW** : டிஆர்டிடபிள்யூ : எழுதும் போதே நேரடியாகப் படித்தல் என்னும் பொருள்படும் Direct Read During Write என்ற சொல்தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஓர் ஒளி வட்டில் எழுதும்போதே பதிவின் துல்லியத்தை சரிபார்க்க இத் தொழில்நுட்பம் பயன்படுகிறது.

**dribbleware** : முன்னோட்ட மென்பொருள் : விற்பனைக்கு வெளியிடப்படுவதற்கு முன்னதாகவே பகிரங்கமாகக் காட்சிக்கு வைக்கப்பட்டுப் பொது மக்களால் பார்க்கப்படும் மென்பொருள். இது, 'மறை மென்பொருள்' (vapourware) என்பதிலிருந்து ஒரு படி அப்பாற்பட்டது.

**drift** : விலகல் : ஒரு மின்சுற்றின் வெளியீட்டில் ஏற்படும் மாற்றம். மெதுவாக ஒரு குறிப்பிட்ட கால இடை வெளியில் ஏற்படும்.

**drill down** : துருவிச் செல்லுதல்; சுருக்கத் தரவுகளிலிருந்து அதை உருவாக்கிய விவரமான தரவுகளுக்கு ஆழமாகத் துருவிச் செல்லுதல்.

**drill-and-practice programme** : துருவிப் பழகும் செயல்முறை :

பழைய பாடங்களை வலுப் படுத்தும் மென்பொருள்களைக் கற்பித்தல்.

**drive : இயக்கி ; முடுக்கி :** வட்டு அல்லது டிஸ்கில் தரவுகளை எழுதவும் அல்லது தரவுகளைப் படிக்கவும் தேவையான பருப்பொருள்.

**drive bay : இயக்கித் தடம் :** ஒரு கணினிப் பேழையில் வட்டு இயக்கிக்காக உள்ள துளை விளிம்பு.

**drive change : இயக்ககம் மாற்று.**

**drive converter : இயக்கக மாற்றி.**

**drive cartridge : இயக்கக பேழை.**

**drive, disk : வட்டு இயக்ககம்.**

**drive door : இயக்கிக் கதவம் :** ஓர் வட்டு இயக்கியில் ஒரு வட்டினைப் பூட்டி வைக்கப் பயன்படுத்தப்படும் சேணம், வாயில் அல்லது நெம்புகோல். ஒரு 13.33 செ.மீ. செருகுவட்டு இயக்கியில் இந்தக் கதவம் ஒரு நெம்புகோல். இது வட்டினைச் செருகிய பிறகு தடத்தின் மீது கீழ்நோக்கி திருப்பப்படுகிறது.

**drive identified : இயக்கி அடையாளம் காட்டி.**

**drive letter : இயக்கக எழுத்து :** ஐபிஎம் மற்றும் ஒத்திசைவுக் கணினிகளில் இயக்ககங்களுக்கான பெயரைத் தேர்வு செய்யும் மரபுமுறை. இயக்ககங்களுக்கு A-யில் தொடங்கி பெயர்கள் சூட்டப்படுகின்றன. எழுத்துக்குப்பின் முக்காற்புள்ளி இடப்பட வேண்டும். (எ-டு). A:, C:, D:

**drive mapping : இயக்ககப் பெயரீடு :** ஒரு கணினியிலுள்ள இயக்ககங்களுக்கு பெயர் சூட்டல். ஓரெழுத்தாகவும் இருக்கலாம். ஒரு பெயராகவும் இருக்கலாம். இயக்க முறைமை அல்லது பிணைய வழங்கன் இந்தப் பெயரைக் கொண்டே அந்த வட்டகத்தை அடையாளம் காணும். எடுத்துக்காட்டாக, பீசிக்களில் எப்போதுமே நெகிழ்வட்டு இயக்ககங்கள் A:, B: என்றும், நிலை வட்டகம் C: என்றும் பெயர் பெறுகின்றன.

**drive number : இயக்கி எண்; இயக்கக எண் :** கணினி அமைப்பில் உள்ள வட்டு இயக்கிகளில் ஒன்றுக்குக் கொடுக்கப்படும் எண் மதிப்பு.

**driver : இயக்கி; செலுத்தி :** கணினியில் ஒரு சாதனத்தை இயக்கும் அல்லது கட்டுப்படுத்தும் அல்லது முறைப்படுத்தும் இன்னொரு வன்பொருள் சாதனம் அல்லது மென்பொருள் நிரல். எடுத்துக்காட்டாக, ஒரு தட இயக்கி, தொலை

தொடர்புத் தடத்தில் அனுப்பப் படும் சமிக்கைகளை திறன் மிகுத்துத் தரும். விசைப்பலகை யிலுள்ள விசைகள் இன்ன வித மாக இயங்க வேண்டும் என் பதை அதற்குரிய இயக்கி நிரலே தீர்மானிக்கிறது. அதனை விசைப்பலகை இயக்கி (keyboard driver) என்று அழைக் கிறோம். இதுபோல அச்சுப் பொறியை வழிநடத்த இயக்கி உள்ளது. கணினி, அதனுடன் இணைக்கப்பட்ட புறச்சாதனங் களோடு ஒத்திசைவுடன் செயல் பட உதவும் இயக்கிகள் சாதன இயக்கிகள் (Device Drivers) எனப்படுகின்றன.

**driver manager** : இயக்கி மேலாளர்.

**drive specifier** : இயக்கிக் குறி யீடு : ஒரு வட்டு இயக்கியை A:, B: போன்ற வடிவில் பெயர் சுட்டுகிறது. ஓர் இரு எண்மி (எட்டியல்) நெறியம்.

**drive Z** : இயக்கி - Z : ஒரு IBM அல்லது IBM இசைவுடைய சொந்தக் கணினியின் மீதான கடைசித் தருக்கமுறை நிலை வட்டு இயக்கி வடிவமைப்பி. கோட்பாட்டு முறையில், ஒரு சொந்தக் கணினியில் அல்லது சொந்த இசைவுக் கணினியில், A முதல் Z வரையிலான 26 செருகு மற்றும் நிலைவட்டுகளைக் கொள்ளலாம்.

**driving chains** : இயக்கு சங்கிலி.

**DRO** : டிஆர்ஓ : Destructive Read Out என்பதன் குறும்பெயர்.

**droid** : மனித எந்திரம்; எந்திரன் : மனிதரைப் போன்ற தோற்ற முள்ள எந்திர மனிதன், ராய்டு ஆண் அல்லது கைனாய்டு பெண் உருவாக்கப்படுதல்.

**drop** : தொங்கட்டம் ; இணைப்பு முனை : ஓர் இணையத்தில் ஒரு சேய்மை முனைய அமைவிடம். ஒரு கணினி காகிதத்தின் உச்சிக்கும் அடிக்குமிடையி லுள்ள தொலைவு. இது மில்லி மீட்டரில் அல்லது அங்குலத் தில் அளவிடப்படுகிறது.

**drop cap** : தொங்கல் முகடு : அச்செழுத்துருவாக்கக் கலை யில், முதல் வரிக்குக் கீழே தொங்கிநிற்கும் ஒரு பெரிய முதலெழுத்து.

**drop dead halt** : மீளா நிலை ; உயிரற்ற நிறுத்தம் விழுதல் : மீண்டும் சரி செய்ய முடியாத வாறு நிறுத்தப்படுதல்.

**drop down menu** : கீழ்தொங்குப் பட்டியல் : நிரந்தரமாக திரை யில் தெரிந்து கொண்டிராத ஒரு பட்டியல். ஓர் உயர்நிலைப் பட்டியல் தூண்டப்படும்போது மட்டுமே ஒரு கீழ் தொங்கு பட்டியல் தோன்றுகிறது.

**drop in** : உரு பிழையுரு : ஒன்று அல்லது மேற்பட்ட துண்மி களை வட்டு இயக்கி அல்லது நாடா இயக்கி, தவறாகச் சேமித் தல் அல்லது படித்தலின் விளை வாக, ஒரு கோப்பில் அல்லது ஒரு அச்சுவெளியீட்டில் அல்லது ஒரு காட்சித்திரையில் தோன்றும் பிழையான எழுத்துகள்.

**droplet** : டிராப்லெட் : 1. குவார்க் எக்ஸ்பிரஸ் தொகுப்பில் கூடுத லாக இணைக்கப்பட்டுள்ள ஒரு வசதி. ஃபைண்டரிலிருந்து கோப்புகளை இழுத்து வந்து ஆவணத்தின் ஒரு பக்கத்தில் இணைத்துவிட முடியும். 2. ஃபிரன்டியர் (Frontier) தொகுப் பில் உள்ள வசதி. ஒரு பயன் பாட்டினுள்ளே கட்டளை வரி களை உள்ளிணைத்து, அப்பயன் பாட்டினை இரட்டைக் கிளிக் செய்யும்போது, கட்டளை வரி கள் இயங்குமாறு செய்ய முடி யும். 3. ஒரு கோப்பினை இழுத்து வந்து போடுவதற்கு அனுமதிக் கிற எந்தவொரு ஆப்பிள் ஸ்கிரிப்ட் நிரலும் இப்பெய ராலேயே அழைக்கப்படுகிறது.

**drop out** : விடுபிழையுரு : 1. தரவு அனுப்புவதில், சமிக்கை திடீரென்று காணாமல் போதல். இரைச்சல் அல்லது அமைப்பில் செயற்கோளாறு ஏற்படுவதன் காரணமாகவே இது ஏற்படு கிறது. 2. ஒன்று அல்லது மேற் பட்ட துண்மிகளை வட்டு இயக்கி அல்லது நாடா இயக்கி தவறாகப் படித்து அல்லது சேமித்ததன் விளைவாக, காட்சித்திரையில் அச்சு வெளி யீடு அல்லது கோப்பில் இருந்து மறைந்துபோகும் எழுத்து.

**drop shadow** : தொங்கல் நிழல் : ஓர் உருக்காட்சிக்குப் பின்புறம், கிடைமட்டத்தில் சற்றே பக்கவாட்டிலும், செங்குத்தாக வும் விழும்படி செய்யப் பட்டுள்ள ஒரு நிழல். இது, உச்சியிலுள்ள உருக்காட்சி யானது பக்கத்தின் மேற் பரப்பிலிருந்து உயர்த்தப்பட் டிருப்பது போன்ற முப்பரிமாண தோற்றத்தை ஏற்படுத்துகிறது.

**dross** : பயனற்ற வரி : மோச மான செயல்முறைப்படுத்துதல் /உத்தி அல்லது அடிக்கடி செய்த மாற்றமைவுகள் காரணமாக ஒரு செயல்முறையில் விட்டு விடப் பட்டுள்ள தேவைக்கு மிகை யான குறியீட்டு வரிகள்.

**drouple** : தொழில் முனைவர் : செயல் முறையாளர்கள், தரவு செய்முறைப்படுத்தும் தொழில் முறையாளர்களின் மத்தியில் நேரங்கழிக்க விரும்பும் ஆள்.

**drum** : உருளை : 1. தொடக்க காலப் பெருமுகக் கணினிகளில்

தரவுகளைச் சேமித்து வைக்கும் காந்த ஊடகமாகப் பயன்பட்டது. 2. சில அச்சுப்பொறிகளிலும், வரைவு பொறிகளிலும் (Plotter) பயன்படுத்தப்படும் சுழலும் உருளை. 3. லேசர் அச்சுப்பொறியில் ஒளிமின் பொருள் பூசப்பட்ட சுழலும் உருளை பயன்படுகிறது. லேசர் கதிர்கள் ஒளிமின் பூச்சின்மீது தாக்கும்போது, அந்த இடம் மின்னூட்டத்தைத் தக்கவைத்துக் கொள்கிறது. உருளையின்மீது மின்னூட்டம் பெற்ற பகுதிகள், மைப்பொடித் துகள்களை ஈர்க்கின்றன. பின் உட்செலுத்தப்படும் தாளின்மீது அத்துகள்கள் படியவைக்கப்படுகின்றன.

**drum, magnetic** : காந்த உருளை.

**drum plotter** : உருளை வரைவி : தானியங்கியாகக் கட்டுப்படுத்தப்படும் பேனாக்களைக் கொண்டு காகிதத்தில் வரைகலைகள், படங்கள், திட்டப் படங்கள் போன்றவற்றை வரைகின்ற வெளியீட்டுச் சாதனம். சிலிண்டர் வடிவ உருளையில் சுற்றப்பட்டுள்ள காகிதம் முன்னும், பின்னுமாக மாறுபடும் வேகங்களில் செல்ல, மேல் கீழாக நகரும் பேனாக்கள் காகிதத்தில் படங்களை வரைந்து கொண்டே செல்கின்றன.

**drum printer** : உருளை அச்சுப் பொறி : அகரவரிசை-எண் எழுத்துகளை உடைய உருளையைப் பயன்படுத்தும் அச்சிடும் சாதனம். ஒரு நிமிடத்தில் பல்லாயிரம் வரிகள் அச்சிடும் வரி அச்சுப்பொறி.

**drum scanner** : உருளை வருடு பொறி: வருடுபொறிகளில் ஒரு வகை. வருடப்படவேண்டிய அச்சடித்த தாள் உருளையின்மீது சுற்றப்பட்டுத் தரவு கணினிக்கு அனுப்பப்படுகின்றது.

**drum sorting** : உருளை பிரிப்பு : பிரிக்கும்போது துணை சேமிப்பகமாக காந்த உருளைகளைப் பயன்படுத்தும் பிரிக்கும் நிரலாக்கத்தொடர்.

**drum storage** : உருளைச் சேமிப்பகம்.

**.drv** : .டிஆர்வி : இயக்கிக் கோப்புகளின் வகைப்பெயர்.

**dry plasma etching** : உலர் பிளாஸ்மா செதுக்கல் ; உலர் மின்மப் பொறிப்பு : ஒரு மென் தகட்டின் மீது மேற்பகுதியை ஏற்படுத்துதல்.

**dry run** : உலர் ஓட்டம் : எழுதப்பட்ட நிரல்களிலிருந்து நிரலாக்கத் தொடர் அமைத்து, குறியீடு இடுதல், பின்னர் அதன் இயக்கத்தின் ஒவ்வொரு நிலையிலும் முடிவைச் சோதித்துப்

பதிவு செய்தல். கணினியில் நிரலாக்கத் தொடரை செயல் படுத்துவதற்குமுன் செய்யப் படும், நிரலாக்கத் தொடர் சோதிக்கும் தொழில் நுட்பம்.

**dry running** : உலர் ஓட்டம்; வெள்ளோட்டம்.

**DSA** : டிஎஸ்ஏ : கோப்பக முறைமை முகவர் அல்லது கோப்பக வழங்கன் முகவர் என்று பொருள்படும் Directory System Agent/Directory Server Agent என்ற சொல்தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். எக்ஸ்.500 வழங்கன்களில் பயன் படுத்தப்படும் ஒருநிரல். டியூஏ (DUA-Directry User Agent) என்னும் கிளையன் நிரல் அனுப்பும் கோரிக்கையின் அடிப்படையில் பிணையத்தில் ஒரு பயனாளரின் முகவரியைத் தேடித் தரும் நிரல்.

**DSL** : டிஎஸ்எல் : Dynamic Simulation Language என்பதன் குறும்பெயர்.

**DSR** : டிஎஸ்ஆர் : தரவுத் தொகுதி தயார் என்று பொருள் படும் Data Set Ready என்ற சொல்தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். தொடர் வரிசைத் தரவுத் தொடர்பில் அனுப்பப்படும் ஒரு சமிக்கை. ஓர் இணக்கி அது இணைக்கப் பட்டுள்ள கணினிக்கு தான் பணியாற்றத் தயாராக இருக்கும் நிலையைத் தெரிவிக்கும் சமிக்கை. ஆர்எஸ்-232-சி இணைப்புகளில் தடம் 6-ல் அனுப்பப்படும் வன்பொருள் சமிக்கை.

**DTE** : டிடீஇ : தரவு முனையக் கருவி என்று பொருள்படும் Data Terminal Equipment என்ற சொல் தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். ஆர்எஸ்-232-சி வன்பொருள் தர வரையறையில், ஒரு வடத்தில் அல்லது ஒரு தரவுத் தொடர்புத் தடத்தில், தகவலை இலக்க முறை வடிவில் அனுப்பத் திறன்வாய்ந்த நுண்கணினி அல்லது முனையம் போன்ற ஒரு சாதனத்தைக் குறிக்கிறது.

**DTL** : டிடிஎல் : Diode Transistor Logic என்பதன் குறும்பெயர். அரைக்கடத்தி டையோடுகள் மற்றும் மின்மக் கடத்திகளுக்கு இடையிலான நுண் மின்னணு அளவைமுறை சார்ந்த இணைப்புகள்.

**DTV** : டிடீவி : மேசைக் கணினி ஒளிக்காட்சி என்று பொருள் படும் Desk Top Video என்ற சொல்தொடரின் தலைப்பெழுத் துக் குறும்பெயர். பிணையத் தில் நிகழ்படக் கலந்துரை யாடலுக்காக ஒளிப்படக் கருவி யின் பயன்பாட்டைக் குறிக்கிறது.

**DUA : டியூஏ :** 'கோப்பகப் பயனாளர் முகவர்' என்று பொருள்படும் Directory User Agent என்ற சொல்தொடரின் தலைப்பெழுத்துக் குறும் பெயர். இது ஓர் எக்ஸ்.500 கிளையன் நிரல். இது, பிணையத்திலுள்ள ஒரு பயனாளரின் முகவரியைத் தேடித் தருமாறு டிஎஸ்ஏ-வுக்குக் கோரிக்கை அனுப்பும்.

**dual boot : இரட்டைச் செயல்பாடு :** இரு மாறுபட்ட செயற் பாட்டுப் பொறியமைவுகளில் ஏதாவதொன்றுடன் தொடங்கப் படக்கூடிய கணினி.

**dual channel controller : இரட்டை தடக் கட்டுப்பாட்டுப் பொறி :** ஒரே நேரத்தில் ஒரு சாதனத்தில் இருந்து படித்தல், எழுதுதல் ஆகிய இரண்டையும் இயங்கச் செய்யும் கட்டுப் பாட்டுப் பொறி.

**dual density : இரட்டை அடர்த்தி :** 1. அடர்த்தியாக தரவுகளைப் பதிவு செய்ய உதவும் காட்சி வட்டின் நாடாக்களைக் குறிப் பிடுகிறது. 2. இருபுறமும், பதியக்கூடிய திறனுள்ள வட்டுத் (ஃபிளாப்பி) தட்டு.

**dual disk drive : இரட்டை வட்டு இயக்ககம் :** ஒரு கணினி யிலுள்ள இரண்டு நெகிழ்வட்டு இயக்ககங்களைக் குறிக்கிறது.

**dual in line package : DIP : இரட்டை வரிசைப் படிப்பொதி வுகள் :** சிப்பு ஏற்றப்பட்டிருக் கும் புகழ்பெற்ற ஒருங் கிணைந்த மின்சுற்றுவகை. சிப்புவை மின்சுற்று அட்டை யில் சொருகுவதற்கு வேண்டிய பின் இணைப்புகளையும் ஒருங் கிணைந்த மின்சுற்றுக்கான பாதுகாப்புக் கவசம்.

**dual intensity : இரட்டைத் திறன் :** வழக்கமான அல்லது தடித்த எழுத்துகளில் எழுத்துகளை வெளியிடும் திறனுள்ள அச்சுப் பொறிகள் அல்லது முனையங்கள்.

**dual port memory : இருதிற நினைவுப் பதிப்பி :** இரு மாறு பட்ட வழிகளில் ஒரே சமயத்தில் அணுகக்கூடிய நினைவுப் பதிப்பி.

**dual processing : இரட்டைச் செயலகம் :** ஒரு கணினி அமைப்புக்குள் இருந்து கொண்டு ஒரே நேரத்தில் வேலை செய்யும் திறனுடைய இரண்டு மையச் செயலக அலகு கள். இரண்டு நுண் செயலகங் களும் ஒரே நுண்கணினியில் இருந்துகொண்டு இரண்டு சிப்பு களிலுமே செயல்படுமாறு வடி வமைக்கப்பட்ட மென்பொருள்.

**dual processor : இரட்டைச் செயலி; இரட்டைச் செய் முறைப்படுத்தி.**

**dual scan display : இரட்டை வருடு திரைக்காட்சி :** மடிக் கணினிகளில் பயன்படுத்தப் படும் எல்சிடி (LCD-Liquid Crystal Display) காட்சித் திரையின் தொழில்நுட்பம். இயங்கா அணி (Passive Matrix) அடிப் படையிலான நுட்பம் இது. திரையின் புதுப்பித்தல் விகிதம் மற்ற காட்சித் திரைகளைவிட இருமடங்கு வேகம் ஆகும். இயங்கு அணி (Active Matrix) அடிப்படையிலான தொழில் நுட்பத்தோடு ஒப்பிடுகையில், இரட்டை வருடு திரைக்காட்சி மிகவும் சிக்கனமானது; குறைந்த அளவு மின்சாரத் தையே எடுத்துக் கொள்ளும். ஆனால் அதேவேளையில், தெளிவு குறைவாகவும், குறைந்த பார்வைக் கோணமும் கொண்டதாக இருக்கும்.

**dual sided disk drives : இருபுற வட்டு இயக்கிகள் :** வட்டின் மேல், கீழ் ஆகிய இருபுறங் களிலும் தரவுகளைச் சேமிக்க வும் திரும்பிப் பெறவும் இரண்டு படி/எழுதுமுனைகளைப் பயன் படுத்தும் வட்டு இயக்கிகள்.

**duct : செல்வழி :** அகற்றக்கூடிய பொதியுறையினையுடைய கம்பி களுக்கான ஒரு செல்வழி.

**dump, automatic hardware : தானியங்கு வன்பொருள் திணிப்பு.**

**dumb quotes : ஊமை மேற் கோள்; மருங்கல் மேற்கோள் :** ஒரு சொல் அல்லது தொடரின் தொடக்கத்தில் இருக்கும் மேற்கோள் குறியும், இறுதியில் இருக்கும் மேற்கோள் குறியும் ஒன்று போலத் தோற்றமளித் தல் (தட்டச்சுப் பொறியில் இருப்பதுபோல). கணினி விசைப் பலகையிலும் ஒற்றை மேற்கோள் குறியும், இரட்டை மேற்கோள் குறியும் ஒரு பக்கக் குறியாகவே இருக்கும். அவற்றை ' ' " " என்பது போல இருபக்கக் குறிகளாக மாற்றுவதற்கு எம்எஸ்வேர்டு போன்ற மென்பொருள் தொகுப்பு களில் வசதி உண்டு. இருபக்கக் குறிகளை துடிப்பான மேற் கோள் (smart quotes) என்பர்.

**dumb terminal : ஊமை முனை யம் ; ஊமை முகப்பு :** குறைந்த உள்ளீடு/வெளியீடு திறன்களும் செயலாக்கத் திறமைகள் எதுவுமின்றி வரும் ஒளிக்காட்சி முனையம்.

**dummy : போலி ; வெற்று :** குறிப்பிட்ட நிபந்தனைகளை நிறைவேற்றுவதற்காகவென்றே நுழைக்கப்படுகின்ற செயற்கை வாக்குவாத நிரல், முகவரி அல்லது தரவுப் பதிவேடு.

**dummy argument : போலி வாக்குவாதம்; வெற்று**

இணைப்புரு ; போலி வாத முறை : எந்த மதிப்புகளும் இல்லாத செயல் வாக்குவாதங்களாகப் பயன்படுத்தப்படும் மாறிகள்.

**dummy instruction** : போலி நிரல்; வெற்று நிரல் : *1. நிரலாகச் செயல்படுத்தப்படுவதைத் தவிர வேறு ஒரு நோக்கத்திற்காக பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ள செயற்கை நிரல் அல்லது முக வரி. 2. ஒரு வழக்க நிரலில் உள்ள நிரல். தானாக அது எதையும் செய்யாது. ஆனால், ஒரு நிரலாக்கத் தொடரினை முடித்து வைப்பதற்கு ஒரு முனையாக அமையும்.*

**dummy module** : வெற்று அடுக்கு ; போலி மிச்சவகை (மாடுல்) : *உண்மையான செயலாக்கம் இல்லாத நுழைதல் அல்லது வெளியேறுதலைக் கொண்ட மிச்ச வகையின் (மாடுலின்) மாதிரி. கீழ்நிலை, கீழ்ப்பணிகள் ஒருங்கிணைய தயாராக இல்லாத நிலையில் மேலிருந்து கீழாகச் சோதனை செய்வதற்கு இது குறிப்பாகப் பயன்படுகிறது.*

**dummy routine** : வெற்றுத் துணை நிரல்; வெற்று வாலாயம்: *இந்தத் துணைநிரல் எப்பணியையும் செய்யாது. ஆனால் ஒரு துணை நிரலுக்குரிய சொல் தொடர் அமைப்புகளைப் பெற்றிருக்கும். செயல்பாட்டுப் பகுதி மட்டும் வெற்றாக இருக்கும். (எ.டு). Private Sub Command-Click End Sub என்பது விசுவில் பேசிக்கில் ஒரு வெற்றுத் துணை நிரல். பின்னாளில் வெற்றுத் துணைநிரலில் கட்டளை வரிகளைச் சேர்த்து அதனைப் பயனுள்ள துணைநிரலாய் மாற்றிக் கொள்ளலாம். மேலிருந்து கீழ் (Top-Down) நிரலாக்க முறையில் இது போன்ற வெற்றுத் துணை நிரல்களை உருவாக்கி வைத்துக் கொண்டு, நிரலாக்கம் வளர்ச்சி பெறும் கட்டத்தில் அவற்றைப் பயனுள்ள துணை நிரல்களாய் மாற்றியமைப்பர்.*

**dummy variables** : வெற்று மாறியல் மதிப்புருக்கள் ; போலி மாறியல் மதிப்புருக்கள் : *செயற்பணி வாதவுரைகளுக்கு குறித்தளிக்கப்படும் உறவு நிலைகளை ஏற்படுத்துகிற, DEFFN கட்டளையிலுள்ள மாறியல் மதிப்புருக்கள். ஒரு மாறியல் மதிப்புருவின் பெயராகப் பயன்படுத்த வேண்டிய ஓர் அமைவிடத்தில் பயன்படுத்தப்படும் ஒரு மாறியல் மதிப்புருவையும் இது குறிக்கும். ஆனால் அந்த மாறியல் மதிப்புருவின் உள்ளடக்கத்தினால் செயல்முறையில் எந்த விளைவும் ஏற்படுவதில்லை.*

**dump** : சேமிப்பு ; திணி ; **கொட்டு** : திணிக்கும் செயலாக்கத்தின் விளைவாக ஏற்படும் தரவுகள் ஒரு சேமிப்பகச் சாதனத்திலிருந்து வேறொரு சேமிப்பகச் சாதனத்திற்கோ அல்லது அச்சுப் பொறிக்கோ உள்ளடக்கங்களை மாற்றி நகலெடுப்பதை இது குறிப்பிடுகிறது.

**dumping** : திணித்தல் ; கொட்டுதல் : சேமிப்பகத்தில் உள்ளவை முழுவதும் அல்லது பகுதியை நகலெடுத்தல். கணினியின் உள்சேமிப்பகத்திலிருந்து துணை சேமிப்பகத்திற்கோ அல்லது வரி அச்சுப்பொறிக்கோ மாற்றுவதை இவ்வாறு குறிக்கலாம்.

**duodecimal** : இரட்டைப் பதின்மம் : நிலைகள் அல்லது இலக்கங்களுக்கு உள்ள 12 மாறுபட்ட மதிப்பளவுகள் உள்ளன. இவற்றிலிருந்து தேவையானதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

**duplex** : இருதிசை இயங்கு வழித்தடம் ; இருவழித்தடம் : ஒரே நேரத்தில் இரண்டு திசைகளிலும் தரவுத் தொடர்பு அனுப்புவதை அனுமதிக்கும் தரவுத் தொடர்பு வழித்தடம்.

**duplex channel** : இருதிசைத் தடம் : இருதிசையிலும் தரவை அனுப்பப்/பெற வசதியுள்ள தரவுத் தொடர்பு இணைப்பு.

**duplexing** : மாற்றமைத்தல் ; இரட்டை வழியாக்கம் : ஒரு கருவி செயலிழந்தால் மாற்றுக் கருவியைக் கொண்டு கணினி தொடர்ந்து இயங்கச் செய்ய மின் சுற்று அல்லது கணினியின் வெளிப் புறக் கருவிகளுக்கு மாற்றுக் கருவியைப் பயன்படுத்துதல்.

**duplex operation** : இருமடிச் செயற்பாடு : தரவுகள் இருதிசைகளிலும் செல்வதற்கு அனுமதிக்கும் ஓர் அனுப்பீட்டு முறை. இது, அச்சடித்த எழுத்தினைக் கணினிக்கு அனுப்புகிற அதே சமயத்தில் திரையிலும் காட்சியாகக் காட்டுகிறது. பாதி இருமடி என்பது இரு திசைகளிலும் செல்ல அனுமதிக்கிறது; ஆனால் ஒரே சமயத்தில் அன்று.

**duplex printer** : இருதிசை அச்சுப்பொறி : பொதுவாக, அச்சுப்பொறிகளில் அச்சு முனை (print head) ஒரு திசையில் மட்டுமே அச்சிடும். இடப்புறமிருந்து வலப்புறம் அச்சிட்டுச் செல்லும். பிறகு அச்சுமுனை அச்சிடாமல் இடப்பக்கம் திரும்பி வரும். பிறகு முன்போல வலப்பக்கம்வரை அச்சிட்டுச் செல்லும். சில அச்சுப் பொறிகளில் இரு திசைகளிலும் அச்சிடும்படி அமைத்திருப்பர்.

**duplex printing** : இருமடி அச்சடிப்பு : ஒரு தாளின் இரு

பக்கங்களிலும் ஓர் ஆவணத்தை அச்சடித்தல். இதனால், ஆவணம் கட்டுமானம் செய்யப்பட்ட பிறகு, இட, வலப் பக்கங்கள் ஒன்றையொன்று எதிர்நோக்கியவாறு இருக்கும்.

**duplexed system** : இருவழியாக்க பொறியமைவு ; இருமடியாக்கிய பொறியமைவு : செயற்பணியில் ஒரு படித்தாக இருக்கும் இரு பொறியமைவுகள். அவை இரண்டும், ஒரே செயற்பணியைச் செய்யலாம் ; அல்லது மற்றொன்று செயலிழக்கும் போது ஒன்று செயற்பட ஆயத்தமாக இருக்கும்.

**duplicate** : நகலெடு : மூல வடிவம் போலவே பரு வடிவத்தில் முடிவுகள் ஒன்றாக இருக்கும் வண்ணம் நகல் எடுத்தல். மூல டிஸ்கெட்டில் உள்ள அதே வடிவமைப்பில், அதே தரவுவைக் கொண்டதாக புதிய வட்டினை உருவாக்குதல்.

**duplicate keys** : இருமடி விடைக் குறிப்புகள் : ஒரு கோப்பிலுள்ள ஒரு படித்தான விடைக் குறிப்புகள். கணக்கு எண் போன்ற அடிப்படை விடைக் குறிப்புகளை இருமடியாக்கம் செய்ய முடியாது. ஏனென்றால், இரு வாடிக்கையாளர்களுக்கு அல்லது பணியாளர்களுக்கு ஒரே எண்ணைக் குறித்தளிக்க முடியாது. தேதி, பொருள், நகர் போன்ற துணை விடைக்குறிப்புகளை கோப்பில் அல்லது தரவுத் தளத்தில் இருபடியாக்கம் செய்யலாம்.

**duplication check** : இரட்டிப்பாதல் சோதனை ; மறு சரி பார்ப்பு : ஒரே இயக்கத்தை இரண்டுமுறை தனித்தனியாகச் செய்தபோதிலும் அதன் விளைவுகள் ஒரே மாதிரியாக இருக்கும் என்பதற்கான சோதனை. வேறொரு கருவியில் ஒரே நேரத்தில் இதைச் செய்யலாம் அல்லது அதே கருவியில் வெவ்வேறு தடவைகளில் செய்யலாம்.

**duration** : கால நீட்சி : ஒரு பணியைச் செய்து முடிப்பதற்கு எடுத்துக் கொள்ளப்படும் செயற்பணி நேர அளவு.

**dust cover** : தூசு உறை ; தூசு காப்புறை: நுண்கணினிகள், வட்டு இயக்கிகள், முகப்பு அச்சுப்பொறிகள் போன்றவற்றின் மோசமான எதிரிகளிடமிருந்து அவற்றைக் காப்பாற்றப் பயன்படுத்தப்படும் பிளாஸ்டிக் தூசு உறைகள்.

**DVD** : டிவிடி : Digital Versatile Disc/Digital Video Disc என்பவற்றின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**DVI or DV-I : டிவிஐ/டிவி-ஐ :** இலக்க முறை ஒளிக்காட்சி இடைமுகம் என்று பொருள்படும் (Digital Video Interface) என்ற சொல்தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒரு கணினியின் நிலைவட்டில் அல்லது குறுவட்டில் ஒளிக்காட்சி, கேட்பொலி, வரைகலை மற்றும் பிற தரவுகளைப் பதிவு செய்வதற்குரிய வன்பொருள் அடிப்படையிலான இறுக்கும்/விரிக்கும் தொழில்நுட்பம். 1987ஆம் ஆண்டு ஆர்சிஏ நிறுவனத்தால் உருவாக்கப்பட்டு 1988இல் இன்டெல் நிறுவனத்தால் வாங்கப்பட்டது. அதன்பிறகு இன்டெல் டிவிஐ-யின் மென்பொருள் பதிப்பை இன்டியோ (Indeo) என்ற பெயரில் வெளியிட்டுள்ளது.

**Dvorak keyboard : டிவிஓஆர் ஏகே விசைப்பலகை :** ஆகஸ்ட் என்பவரால் உருவாக்கப்பட்ட விசைப்பலகை. அதிகமாகப் பயன்படுத்தப்படும் எழுத்துகளை விசைப்பலகையில் நடுவில் வைத்து வலுவான விரல்களால் அடிக்கச் செய்வதன் மூலம் பிழைகளைக் குறைத்து வேகத்தையும் வசதியையும் டிவிஓஆர்ஏகே விசைப்பலகை அளிக்கிறது. வழக்கமான கியூடபிள்யூஇஆர்டீஒய் (QWERTY) யைவிட இதில் விரல் அசைவுகள் 90 விழுக்காடு குறைகின்றன. 1936இல் இந்தமுறை பேடன்ட் செய்யப்பட்டாலும் 1982இல் அன்சியால் ஏற்கப்பட்ட பிறகே இது புகழ் பெற்றது. இந்த விசைப் பலகைதான் உயிர் எழுத்துகளான AEIOU-க்களை ஒன்றாக அமைத்துள்ளது. மைய வரிசையில் இடதுகையில் உயிர் எழுத்துகளும், வலதுகையில் DHTNS என்னும் அதிகமாக பயன்படுத்தப்படும் எழுத்துகளும் அமைந்துள்ளன.

**dyadic : இருவினை ; இரட்டை:** இரண்டு இயக்கிகளைப் பயன்படுத்தும் இயக்கமுறை பற்றியது.

**dyadic operation : இருவினை; இரட்டை இயக்கம் :** இரண்டு இயக்கப் பொருளைக் கொண்ட இயக்கம்.

**dyadic two : இரட்டை இணை :** இரு அமைப்பிகளைப் பயன்படுத்துவதைக் குறிக்கும் தொடர்.

**dye polymer recording : சாய மீச்சேர்மப் பதிவு :** சாயமிட்ட பிளாஸ்டிக் படுகைகளைப் பதிவு ஊடகமாகப் பயன்படுத்தும் ஒளியியல் பதிவு உத்தி. சில ஒருமுறை எழுதி பன்முறை படிக்கப்படும் WORM சாதனங்களில் ஒற்றைச் சாய மீச்சேர்மப் படுகை பயன்படுத்தப்படுகிறது.

அழித்திடக்கூடிய ஒளியியல் வட்டுகளில் உச்சி இருத்தி வைப்புப் படுகை, அடிநிலை விரிவாக்கப் படுகை என்ற இரு சாயமிட்ட பிளாஸ்டிக் படுகைகள் பயன்படுத்தப்படுகின்றன.

**Dynaload drivers : நிகழ்நேர இயக்கிகள்:** ஐபிஎம் பீசி டாஸ் 7 இயக்க முறைமையில் Dynaload என்ற கட்டளை உண்டு. டாஸ் சின்னத்தில் இக்கட்டளையைத் தந்து, சில சாதன இயக்கிகளை நினைவகத்தில் ஏற்றிக் கொள்ள முடியும். பொதுவாக, சாதன இயக்கிகள் config.sys என்னும் தானியங்கிக் கட்டளைக்கோப்பு மூலமாகவே நினைவகத்தில் ஏற்றப்படுகின்றன. கணினி இயக்கப்படும்போதே இது நிகழ்ந்து விடும். புதிதாக சாதன இயக்கி எதனையும் ஏற்ற வேண்டுமெனில் config.sys கோப்பில் திருத்தம் செய்து மீண்டும் கணினியை இயக்க வேண்டும். ஆனால், Dynaload மூலம் config.sys கோப்பினைத் திருத்தாமலே சாதன இயக்கியை நினைவகத்தில் ஏற்ற முடியும்.

**dynamic : இயங்குநிலை :** மாஸ் (MOS) தாங்கிகளில் தரவு மின் சக்தியாக மாற்றும் மின்சுற்று. பொதுவாக நிலையற்ற தன்மையுடைய, இதை அடிக்கடி புதுப்பிக்க வேண்டும்.

**dynamic address translation (DAT) : இயங்குநிலை முகவரி மொழி பெயர்ப்பு (டாட்); இயங்கு நிலை முகவரி மாற்றம் :** மெய்த்தோற்ற சேமிப்பு அமைப்புகளில், மெய்த்தோற்ற சேமிப்பு முகவரிகளை உண்மை சேமிப்பு முகவரிகளாக நிரல் இயக்கத்தின் மூலம் மாற்றுதல்.

**dynamic allocation : இயங்கு நிலை ஒதுக்கீடு; நிகழ்நேர ஒதுக்கீடு :** ஒரு நிரல் இயங்கிக் கொண்டிருக்கும்போதே தேவைக்கேற்ப நினைவகத்தில் இடம் ஒதுக்கீடு செய்தல். அவ்வாறு ஒதுக்கப்பட்ட நினைவகத்தை, நிகழ்நேரத்திலேயே விடுவிக்கவும் முடியும். இதனால் நிகழ்நேரத்தில் தேவையான தரவுக் கட்டமைப்புகளை உருவாக்கிக் கையாண்டு பின் விடுவிக்க முடிகிறது. பாஸ்கல், சி, சி++ போன்ற மொழிகளில் இதற்கான வழிமுறைகள் உள்ளன.

**dynamic binding : இயங்கு நிலை கட்டுமானம் :** ஒரு கண நேரத்திலுள்ள நிலைமைகளின் அடிப்படையிலான ஓட்ட நேரத்தில் ஒரு நிரல்கூறை அல்லது பொருளை இணைத்தல்.

**dynamic caching : இயங்குநிலை இடைமாற்று; நிகழ்நேர இடைமாற்று :** அடிக்கடி கையாள வேண்டிய தகவல்களை

உடனடியாக எடுத்தாள வசதியாக, முதன்மை நினைவகத்திலுள்ள தரவுகளை நுண்செயலி தனக்கருகில் ஓர் இடைமாற்று நினைவகத்தில் (cache memory) வைத்துக் கொள்ளும். இதனால் கணினியின் செயல்பாட்டு வேகம் அதிகரிக்கும். மிக அண்மையில் பயன்படுத்திய தரவுவை இடைமாற்று நினைவகத்தில் வைத்துக் கொள்ளல் நிகழ்நேர இடைமாற்று எனப்படுகிறது. இடைமாற்று நினைவகத்தின் கொள்திறன் அடிப்படையில் இப்பணி மேற்கொள்ளப்படுகிறது. குறிப்பாக, தற்போது இயங்கிக் கொண்டிருக்கும் ஒரு பயன்பாட்டுத் தொகுப்புக்கு எவ்வளவு நினைவகப் பகுதி ஒதுக்கப்பட்டுள்ளது என்ற அடிப்படையில் இல்லாமல், எவ்வளவு நினைவகப் பகுதி கையிருப்பில் உள்ளது என்ற அடிப்படையில் இடைமாற்று நினைவகக் கொள்ளளவு தீர்மானிக்கப்படும்.

**dynamic compression : இயங்கு நிலை இறுக்கிச் சுருக்கல் :** இயல்பு நேரத்தில் தரவுகளை அழுத்தி வைப்பதற்கும் தளர்த்தி விடுவதற்குமான திறம்பாடு. எடுத்துக்காட்டு : வட்டில் எழுதுதல் அல்லது அதிலிருந்து படித்தல்.

**dynamic data : விரைந்து மாறும் தரவு.**

**dynamic data exchange : இயங்கு நிலை தரவுப் பரிமாற்றம் :** ஓர் எந்திரத்தில் அமைந்துள்ள பல்வேறு பயன்பாட்டுத் தொகுதிகளுக்கிடையே தரவுகளை மாற்றம் செய்வதற்கான திறம்பாடு. எடுத்துக்காட்டு : கணக்கீட்டு விரிதாள் தரவுகளை சொல் பகுப்பி மாற்றுதல். இவ்வாறு, ஓர் விரிதாளில் உள்ள தரவுகளைப் பயன்படுத்துகிற ஒரு சொல் பகுப்பியிலுள்ள அறிக்கை, விரிதாள் இலக்கங்கள் மாற்றப்படும் போது தானாகவே நாளது தேதி வரையில் திருத்தியமைக்கப்படுகிறது.

**dynamic dump : இயங்குநிலை திணித்தல் :** ஒரு நிரல் தொடரைச் செயல்படுத்தும்போது நடைபெறும் திணித்தல்.

**dynamic font : இயங்குநிலை எழுத்துரு.**

**dynamic keys : இயங்குநிலைத் திறவிகள்; நிகழ்நேர மறைக்குறிகள் :** பிணையம் அல்லது இணையத்தில் தரவு மறையாக்கம் செய்யப்பட்டு (Encryption) அனுப்பிவைக்கப்படுவதுண்டு. மறுமுனையில் மறைவிலக்கம் செய்யப்பட்டு மூலத்தரவு பெறப்படும். இவ்வாறு

மறையாக்கம், மறைவிலக்கம் செய்ய திறவிகள் (Keys) பயன் படுகின்றன. ஒரு பயனாளரின் தனித்திறவி (Private key) மூலம் மறையாக்கம் செய்யப்பட்ட தரவு அவருக்குரிய பொதுத் திறவி மூலம் மறைவிலக்கம் செய்யப்படுகிறது. தகவலை அனுப்பும்போது ஒவ்வொரு அனுப்புகையும் வெவ்வேறு திறவிகளால் மறையாக்கம் செய்யப்பட்டு அனுப்பப் படலாம். மறுமுனையில் ஒருமுறை மறைவிலக்கத்துக்குப் பயன் படுத்திய திறவியை மீண்டும் பயன்படுத்த முடியாது. இந்த நுட்பம், தகவலின் பாதுகாப் பினை அதிகரிக்கிறது.

**dynamic link :** இயங்குநிலை இணைப்பு : ஓட்ட நேரத்தில் ஒரு செயல்முறையிலிருந்து இன்னொரு செயல்முறைக்கு ஏற்படுத்தப்படும் இணைப்பு.

**dynamic link library :** இயங்கு நிலை இணைப்பு நூலகம் : ஓட்ட நேரத்தில் பயன்பாடு களுக்குக் கிடைக்கக்கூடிய செயல் முறை நெறியங்கள்.

**dynamic memory :** இயங்கு நிலை நினைவகம் : பலவித மான நினைவுப் பதிப்பி சிற்றங் கள் அனைத்தையும் சரியான முறையில் இயங்கும் வகையில் அடிக்கடிப் புதுப்பிக்கப்படும் வகையில் அமைந்த நினைவுப் பதிப்பி அமைவு முறை.

**dynamic memory allocation :** இயங்குநிலை நினைவக ஒதுக் கீடு; நிகழ்நேர நினைவக ஒதுக் கீடு : ஒரு நிரல் அல்லது செய லாக்கத்துக்கான நினைவகப் பகுதியை இயக்க நேரத்தில் ஒதுக்கீடு செய்தல். நிரலின் கோரிக்கைக்கு ஏற்ப, முறைமை நினைவகக் குவியலில் இத் தகைய ஒதுக்கீடு செய்யப்படுகிறது.

**dynamic method dispatch :** இயங்கு நிலை வழிமுறை அனுப்புகை.

**dynamic network services :** இயக்காற்றல் இணையப் பணி கள் : தகவமைவு நிரல்கூறு, ஒரு மையமுனை சேர்க்கப்படுகிற போது அல்லது நீக்கப்படுகிற போது இணையத்துக்குத் தானா கவே மறு உருவங்கொடுத்தல் போன்ற இயல்புநேரத் திறம் பாடுகள்.

**dynamic object :** இயங்குநிலைப் பொருள்.

**dynamic operand :** இயங்கு நிலை செயலேற்பி.

**dynamic page :** இயங்குநிலை பக்கம் : அசைவூட்ட ஜிஃப்கள், ஜாவா அப்லெட்டுகள், ஆக்டிவ் எக்ஸ் இயக்குவிசைகளை உள்

ளடக்கிய ஹெச்டீஎம்எல் ஆவணம்.

**dynamic partitioning :** இயங்கு நிலை பிரிவினை : *மையச் செயலகத்தின் (CPU) நினைவுப் பதிப்பியை, பல்வேறு செயல் முறைகளைத் திறம்படச் சேமித்து வைக்கும் வகையில் பல்வேறு வடிவளவுகளைக் கொண்ட பகுதிகளாகப் பகுத்தல்.*

**dynamic RAM :** இயங்குநிலை நேர் அணுகு நினைவகம் : *அடிக்கடி புதுப்பிக்க வேண்டிய கணினி நினைவகம்.*

**dynamic random access memory (DRAM) :** இயங்குநிலை குறிப்பிலா அணுகு நினைவகம்.

**dynamic range :** இயங்குநிலை வரிசை : *மிகப்பலவீனமானது முதல் மிக வலுவானதுவரையிலான சைகைகளின் வரிசை.*

**dynamic relocation :** வேறிடம் மாறுதல் ; இயங்குநிலை இருப்பிட மாற்றம்: *செயல்பட்டுக் கொண்டிருக்கும் நிரலாக்கத் தொடர் முழுமையும் அல்லது ஒரு பகுதியையும் சேமிப்பகத்தின் ஒரு இடத்திலிருந்து வேறு இடத்துக்கு மாற்றுதல். புதிய இடத்திலிருந்து நிரலாக்கத் தொடர் தொடர்ந்து முறையாக இயங்குவதற்கு வசதியாக முகவரிக் குறிப்புகள் யாவும் சரி செய்யப்படும்.*

**dynamic scheduling :** மாறும் வரிசைப்படுத்து முறை ; இயங்கு நிலை நிலைப்படுத்தல் : *சூழ்நிலைகளைப் பொறுத்து நொடிக்கு நொடி வேலையை வரிசைப்படுத்தும் கணினி.*

**dynamic simulation language (DSL) :** இயங்குநிலை பாவனை மொழி ; டிஎஸ்எல் : *உயர்நிலை நிரலாக்கத் தொடர் மொழி, தொடர்முறையில் பொறியியல் மற்றும் அறிவியல் சிக்கல்களை போலி நிகழ்வாகச் செய்வதற்கு ஏற்ற மொழி. சாதாரண மாறுபாட்டுச் சமன்பாடுகளைத் தீர்க்கவும், நேரச் செயல்பாடு, மாறும் அமைப்புகளின் நிலையற்ற தன்மை ஆகியவற்றை ஆராய்வதற்கு மிகவும் ஏற்ற மொழி இதுவே.*

**dynamic slip :** இயங்குநிலை ஸ்லிப் : *இயங்குநிலை நேரியல் தட இணைய நெறிமுறை என்று பொருள்படும்* Dynamic Serial Line Internet Protocol *என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணையத்தில் ஸ்லிப் நெறிமுறைப்படி பயனாளரின் ஐபீ முகவரி ஒவ்வொரு முறையும் புதிதாக (ஒரு பட்டியலிலிருந்து) ஒதுக்கப்படும்.*

**dynamic spot : இயக்காற்றல் நிறுத்தம் :** ஒரு செயல்முறை இயக்கப்படும்போது, இயக்குநரின் கவனத்தை ஏதாவதொரு அம்சத்திற்கு ஈர்ப்பது அவசியமாகிறது. ஓர் இயக்காற்றல் நிறுத்தமானது, அந்தச் செயல்முறையை ஒரே சமயத்தில் முடிவற்ற வளையத்திற்குள் கொண்டு செல்கிறது. எந்திரம் செய்முறைப்படுத்துவதை மீண்டும் தொடங்கிவிட்டது என்பதை இயக்கி சுட்டிக் காட்டுகிறது.

**dynamic storage : இயங்கு நிலை சேமிப்பகம்:** தரவுகளை இழக்காமல் காப்பாற்ற அடிக்கடி மின்சக்தி ஏற்ற வேண்டிய தேவையுள்ள நினைவகச் சாதனம். அதிவேக இயக்க சேமிப்பகம்.

**dynamic storage allocation : இயங்கு நிலை சேமிப்பக ஒதுக்கீடு :** ஒரு செயல்வரைவு அல்லது நிரலாக்கத் தொடர் செயல்பட்டுக் கொண்டிருக்கும் போது நினைவகத்தில் ஒதுக்கீடு செய்தல்.

**dynamic tool display : இயங்கு நிலை கருவிக் காட்சி :** எண்மானத்தால், கட்டுப்படுத்தப்படும் அறுவைக் கருவியின் உருவத்தை வரைகலை முறையில் காட்டுகிற ஒரு CAD/CAM அம்சம்.

**dynamic variable : இயங்கு நிலை மாறியல் மதிப்புரு :** பாஸ்கல் (Pascal) போன்ற செயல்முறைப்படுத்தும் மொழியிலுள்ள ஒரு மாறியல் மதிப்புரு. ஒரு நிரலாக்கத் தொடர் செயல்பட்டுக் கொண்டிருக்கும்போது உருவாக்கப்படுகிறது. பொதுவாக மாறியல் மதிப்புருக்கள் நிரலாக்கத் தொடர் எழுதப்படும்போதுதான் உருவாக்கப்படுகின்றன.

**dynamic web page : இயங்கு நிலை வலைப்பக்கம் :** நிலையான வடிவம், மாறும் உள்ளடக்கம் கொண்ட வலைப்பக்கம். இணையத்தில் உலா வரும் பயனாளரின் தேடல் அடிப்படையில் கிடைத்த விடைகளைத் தாங்கிய பக்கமாக இருக்கலாம்.

**.dz : .டிஇஸட் :** இணையத்தில் ஓர் இணைய தளம் அல்ஜீரியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் களப் பெயர்.

# E

**E : இ :** மிதக்கும் புள்ளி. எண் முறையில் மடங்கு என்பதைக் குறிக்கும் குறியீடு. 17-E2 என்றால் 17-ன் அடுக்கு 2 என்பதைக் குறிக்கும்.

**EAM : இஏஎம் : மின்னணுக் கணிதப் பதிவுக் கருவி :** Electronic Accounting Machine என்பதன் குறும்பெயர். வழக்கமாக அலகு பதிவுக் கருவியைக் குறிக்கும்.

**early binding : தொடக்கக் கட்டுமானம் :** தொகுப்பு நிலையில் அச்செழுத்துருக்களைக் குறித்தளித்தல்.

**EAROM : இஏரோம் ; மின்னோட்டத்தால் மாற்றத்தக்க படிப்பு நினைவகம் :** Electrically Alterable Read Only Memory என்பதன் குறும்பெயர். சேமிக்கப்பட்ட தரவுகளை அழிக்கத் தேவையில்லாமல் குறிப்பிட்டவற்றை மட்டும் மாற்றுகின்ற, படிக்க மட்டுமான (ரோம்) நினைவகம். அழிக்கத்தக்க செயல்முறையிலான, படிப்பதற்கான நினைவுப் பதிப்பி (EPROM) சாதனத்தில் எல்லாவற்றையும் அழித்துத்தான் புதியவற்றைச் சேர்க்க வேண்டும்.

**earth : தரையிணைப்பு.**

**earth station : தரை நிலையம் :** செயற்கைக்கோள் செய்தித் தொடர்புகளுக்கான அனுப்பீட்டு/ஏற்பு நிலையம். இது, நுண்ணலை அனுப்பீட்டுக்காக ஒரு கிண்ண வடிவ வானலை வாங்கியைப் பயன்படுத்துகிறது.

**easter egg : ஈஸ்டர் முட்டை :** ஒரு கணினி நிரலில் மறைந்து கிடக்கும் பண்புக்கூறு. மறைந்து கிடக்கும் ஒரு கட்டளையாக இருக்கலாம். நகைச்சுவையான செய்தியாக இருக்கலாம். ஓர் அசைவூட்டமாக இருக்கலாம். அந்த மென்பொருளை உருவாக்கியவர்களின் பட்டியலாக இருக்கலாம். ஈஸ்டர் முட்டையை உடைத்துப் பார்க்க, பயனாளர் பெரும்பாலும் தெளிவற்ற வரிசையில் பல விசைகளை அழுத்த வேண்டியிருக்கும்.

**easy colour paint : எளிய வண்ண மை:** தொழில்முறை சாராதவர்களுக்காக வடிவமைக்கப்பட்ட "ஆப்பிள் மெக்கின்டோஷ்" வரைகலைச் செயல்முறை. பயன்படுத்துபவர் ஒரு வண்ணத்தையும், தோரணியை

யும் தேர்ந்தெடுத்துக் கொண்டு, ஒரு கருவியினால் வண்ணம் பூசத் தொடங்குகிறார்.

**easy writer : ஈசி ரைட்டர் :** சொல் தொகுத்தலில் பயன் படுத்தப்படும் பல மென் பொருள் தொகுதிகளில் ஒன்று.

**eavesdropping : ஒற்றுக்கேட்டல்:** தரவுகளை இரகசியமாகக் கேட்டல். செய்திகளை இடைத் தடுப்பு செய்து கேட்டறிதல். இவ்வாறு செய்வது பெரும் பாலும் யாரும் அறிய முடியாத தாக இருக்கும்.

**EBAM : ஈபாம் :** Electron Beam Addressed Memory என்பதன் குறும்பெயர். உலோக ஆக் சைடு அரைக் கடத்தி மேற்பரப் பின்மேல் படிக்கவோ எழு தவோ செய்யும் ஒளிக்கற்றை யைக் கட்டுப்படுத்தப் பயன்படுத் தும் மின்னணு சேமிப்புச் சாதனம்.

**EBCDIC : இபிசிடிக் :** Extended Binary Coded Decimal Interchange Code என்பதன் குறும்பெயர். நவீன கணினிகளில் தரவுகளைக் குறிப்பிடப் பயன்படுத்தப்படும் 8 துண்மிக் குறியீடு. இபிசிடிக் மூலம் 256 தனி எழுத்துகளைக் குறிப்பிடலாம்.

**e-bomb : மின்குண்டு; மின் னஞ்சல் குண்டு :** மின்னஞ்சல் குண்டு என்பதன் சுருக்கம். சில கணினிக் குறும்பர்கள் (Hackers) ஒரு கணினிப் பிணையத்தில் (குறிப்பாக இணையத்தில்) நடைபெறும் தகவல் போக்கு வரத்தை நிலைகுலையச் செய் வதற்குப் பயன்படுத்தும் உத்தி. ஏராளமான அஞ்சல் குழுக் களைக் குறிவைத்து அஞ்சல் அனுப்பி, அங்கிருந்து தொடரஞ் சலாக பிற அஞ்சல் குழுக்களுக் கும் அனுப்பச் செய்து, பிணையப் போக்குவரத்தையும், கணினி சேமிப்பகங்களையும் அஞ்சல் போக்குவரத்தால் நிரம்பி வழியு மாறு செய்து நிலைகுலையச் செய்வர்.

**.ec : .இசி :** ஓர் இணைய தள முகவரி. ஈக்குவாடர் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**ECAD : எக்காட் :** 'மின்னணு வியல் கணினிசார் வடி வமைப்பு' என்று பொருள்படும் "Electronic Computer - aided Design" என்ற ஆங்கிலத் தொட ரின் தலைப்பெழுத்துச் சுருக்கம்.

**e-cash : மின் பணம்.**

**.ECC : ஈசிசி (பிழை திருத்தக் குறியீடு) :** பிழை திருத்தத்திற் காக தரவுத் தொகுதி முறையில் உள்ள குறியீடு.

**ECF : இசிஎஃப்; உயர்தொடர்ப் பாட்டு வசதிகள் :** முதன்மைப்

பொறியமைவுகளிலிருந்து தரவு குறிப்புகளைக் கேட்கவும், தக வலிறக்கம் செய்யவும், முதன் மைப் பொறியமைவு நிரல் களைப் பிறப்பிக்கவும் DOS சொந்தக் கணினிகளை (PC) அனுமதிக்கிற IBM மென் பொருள். சொந்தக் கணினி யிலிருந்து முதன்மைப் பொறி யமைவுக்கு அச்சடிப்பி வெளிப் பாடுகளையும் இது அனுமதிக் கிறது.

**echo : எதிரொலி ; எதிரளிப்பு ; மறுமொழி :** 1. செய்தித் தரவு பரி மாற்றங்களின்போது அனுப்பப் பட்ட சமிக்கை சற்று தமாதமாக வருவதன் மூலம் சமிக்கை பிரதிபலிப்பதைக் குறிப்பிடுதல். 2. கணினி வரைகலைகளில், கணினி அமைப்பிற்கு வரை கலைகளை உள்ளீடு செய் யும்போது வடிவமைப்பவர் பெறும் பதில்கள்.

**echo cancellation : எதிரொலி அழித்தறவு :** முதன்மை அனுப் பீட்டுக் குறியீட்டிலிருந்து ஏற் படும் எதிரொலிகளினால் உண் டாகும் தேவையற்ற குறியீடு களைத் தனிமைப்படுத்தி, வடி கட்டுவதற்கான மிகைவேக அதிர்விணக்க மற்றும் அதிர் விணக்க நீக்கத் தொழில்நுட்பம்.

**echo check : எதிரொலி சோதனை ; மறுமொழிச் சோதனை :** தரவு இடமாற்றல் இயக்கத்தின்போது துல்லியத்தைச் சோதித்தல். இம் முறையில் பெறப்பட்ட தரவு களைத் தொடங்கிய இடத்திற்கு அனுப்பி மூலத் தகவல்களுடன் ஒப்பிடுதல்.

**echoplex : எதிரொலிச் சரிபார்ப்பு :** தரவு தொடர்பில் பிழை கண்ட றியப் பயன்படும் ஒரு நுட்பம். தகவலைப் பெறும் நிலையம், பெற்ற தகவலை மீண்டும், அனுப் பிய நிலையத்துக்குத் திருப்பி யனுப்பும். அதனைத் திரையில் கண்டு, தரவு துல்லியமாகப் பெறப்பட்டுள்ளதா என்பதை உறுதி செய்து கொள்ளலாம்.

**echo suppressor : எதிரொலி ஒடுக்கி :** ஒரு தொலைபேசி இணைப்பில் எதிர்த்திசை அனுப்பீட்டுக்கு வழி செய்கிற செய்தித்தொடர்பு உத்தி. இதன் மூலம், மின்சுற்று வழியைத் திறம்பட ஒரு வழிச்சுற்றாக்க முடிகிறது. தொலைபேசி இணைப்புகளில், குறிப்பாகச் செயற்கைக்கோள் மின்சுற்று வழிகளில், இடையூறாக இருக் கும் எதிரொலி விளைவுகளைக் குறைக்க இது பயன்படுகிறது.

**Eckert, J. Presper : எக்கர்ட், ஜே. பிரஸ்பெர் :** ஜான் மவ்க்லியுடன் சேர்ந்து பென்சில்வேனியா பல் கலைக்கழகத்தின் மூர் மின் பொறியியல் கல்லூரியில் 1943

முதல் 1946-க்குள் ஈனியாக் கணினியை உருவாக்கியவர். முழுவதுமான பேரளவு மின்னணு இலக்கமுறை கணினி இதுதான். இன்று நாமறியும் கணினித் தொழிலை இதன் வளர்ச்சிதான் உருவாக்கியது.

**ECL : இசிஎல் :** Emitter Coupled Logic என்பதன் குறும்பெயர். நடப்புமுறை அளவை என்றும் அழைக்கப்படுகிறது. டீடீஎல்-ஐவிட வேகமானது. அவ்வளவு புகழ்பெற்றதல்ல.

**eclipse : ஒளிமறைப்பு :** 'டேட்டா ஜெனரல்' எனப்படும் அமைவனம் தயாரித்துள்ள 32 துண்மி நுண்கணினிகளின் வரிசை. தொடக்க 32 துண்மி உருவாக்கம்.

**ECMA : எக்மா :** 'ஐரோப்பியக் கணினி உற்பத்தியாளர் சங்கம்' என்று பொருள்படும் "European Computer Manufacturers' Association" என்ற ஆங்கிலத் தொடரின் தலைப்பெழுத்து குறும்பெயர்.

**ECOM : ஈக்காம் : மின்னணு கணினி வழி அஞ்சல் :** Electronic Computer Originated Mail என்பதன் குறும்பெயர். தொலைத் தகவல் தொடர்பு வசதிகள் மூலம் இலக்க வடிவில் செய்திகளை அனுப்பிப் பெறும் செயல்முறை.

**E-commerce : மின் வணிகம்.** கணினி பிணையங்கள் வழியாக வணிக நடவடிக்கைகளைப் பொதுவாகக் குறிக்கிறது. தற்போது இணையம் வழி நடைபெறும் வணிகத்தையும் இவ்வாறே குறிக்கின்றனர்.

**ED : ஈடி : மிகை உயர் செறிவு :** Extra High Density என்பதன் குறும்பெயர் இது 2.88 MB / செருகு வட்டுகளைக் குறிக்கும்.

**Edge : விளிம்பு :** கணினி வரைகலையில் ஒரு கனசதுரத்தின் விளிம்புகள் போன்ற இரு திடப்பொருள்களின் சமதள முகப்புகளின் குறுக்கு வெட்டாக அமைந்துள்ள ஒரு நேர் கோட்டுக் கூறு.

**edge card : விளிம்பு அட்டை :** விளிம்பு இணைப்பியுடன் சேரும் வகையில் வடிவமைக்கப்பட்ட விளிம்பில் மட்டும் தொடரும் கோடுகள் உள்ள மின்சுற்று அட்டை.

**edge connection socket : விளிம்பு இணைப்பு பொருத்துவாய்; விளிம்பு இணைப்பு குதை குழி.**

**edge cutter/trimmer : விளிம்பு வெட்டி/ செதுக்கி :** தொடர் வடிவ அச்சுக் காகிதத்தில் துண்டுப் பகுதிகளை வெட்டும் சாதனம்.

**edge connector : விளிம்பு இணைப்பி :** தாய் அட்டை அல்லது அடிப்பகுதியுடன் மின்சுற்று அட்டையை இணைக்கும்



விளிம்பு இணைப்பி

துளை விளிம்பி (Slot) வடிவ மின்சாதனப் பொருத்தி.

**edge punched card : விளிம்பு துளையிடும் அட்டை :** துளையிட்ட நாடாவில் பயன்படுத்துவது போன்ற மர்திரியில் ஒரு விளிம்பில் மட்டும் துளைகளை இட்டு தரவுகளைப் பதிவு செய்யும் அட்டை. ஐந்து, ஆறு, ஏழு அல்லது எட்டு வழித் தடங்களில் குறியிடப்பட்ட முறையில் துளைகள் இடப்படும் இருமைக் குறியீட்டு பதின்ம அமைப்பில் குறியீடு அமையும்.

**edge sharpening : விளிம்புக் கூர்மையாக்கல் :** இலக்கமாக்கப்பட்ட படத்தின் விளிம்புகளை செயல்முறை மூலம் அல்லது மின்னணுவியல் பேனாவின் மூலம் கூர்மையாக்கும் முறை.

**EDI (Electronic Data Interchange) : ஈடிஐ : மின்னணு வியல் தரவு மாறுகொள்ளல் :** அமைவனங்களிடையிலான மின்னணுவியல் செய்தித் தொடர்பு நடவடிக்கைகள். எடுத்துக்காட்டு : அனுப்பாணைகள்; உறுதியுரைகள்; பற்றுச்சீட்டுகள். பயன்படுத்தப்படும் சாதனம் எவ்வாறிருப்பினும், மற்றொரு அமைவனத்தின் கணினி கட்டமைவுடன் பயனாளர் இடைத்தொடர்பு கொள்வதற்கு இயல்விக்கிற ஈடிஐ பணிகளை தனித்தனிப் பணியமைவனங்கள் அளிக்கின்றன.

**edit :** சீர்மை செய்தல்; தொகு ; பதிப்பி ; உள்ளிடு : *1.* தரவுகள் சரியா என்று சோதித்தல். 2. சில எழுத்துகளைச் சேர்த்தும், நீக்கியும் தரவுகளின் வடிவத்தினை தேவையான அளவில் மாற்றல். நிரலாக்கத் தொடரின் ஒரு பகுதியை அச்சிடுவதற்காக தரவுகளை தொகுக்கலாம். தேவையற்ற சுழி (பூஜ்யம்)களை நீக்கியும் சிறப்புக் குறியீடுகளைச் சேர்த்தும் தொகுக்கப்படும்.

**editable post script :** தொகுக்கத்தக்க பின்குறிப்பு : ஒரு சொல் பகுப்பி அல்லது பிற வரைவு மூலம் தொகுக்கப்படத்தக்க பின் குறிப்பு நிரல்களின் கோப்பு. நிரல்களை முதலில் உருவாக்கிய பயன்பாட்டினைப் பயன்படுத்தாமல் அந்த பின் குறிப்பு ஆவணங்களை மாற்றுவதற்கு இது அனுமதிக்கிறது.

**edit data source :** மூலத் தரவைத் தொகு.

**editing :** தொகுப்பாக்கம்; தொகுத்தல் : தரவுகள் அல்லது ஒரு நிரலாக்கத் தொடரில் மாற்றங்கள் செய்தல் அல்லது திருத்துதல்.

**editing a file :** பதிப்பித்தல்: ஒரு கோப்பில் மாற்றங்கள் செய்தல் அல்லது திருத்துதல்.

**editing keys :** தொகுத்தல் விசைகள்: ஆவணத்தில் திருத்தம் செய்து தொகுக்கப் பயன்படும் விசைத் தொகுதி சில விசைப்பலகைகளில் இருப்பதுண்டு. விசைப்பலகையின் முதன்மைப் பகுதிக்கும் எண்விசைத் திண்டுவுக்கும் இடையில் இருக்கும். தொகுத்தல் விசைகள் மூன்று இணைகளாக இருக்கும். செருகு (Insert) நீக்கு (Delete); முகப்பு (Home) - இறுதி (End); முந்தைய பக்கம் (Page Up) - பிந்தைய பக்கம் (Page Down).

**editing run :** தொகுக்கும் ஓட்டம்; தொகுப்போட்டம் : தொகுதி முறை செயலாக்கத்தில், தொகுப்பு நிரலாக்கத் தொடரானது தரவுகள் செல்லத்தக்கவைதானா என்பதை ஆராயும். எண்களும், தரவுகளும் எதிர்பார்க்கப்பட்ட வரிசைகளில் இருக்கிறதா என்று பார்த்து, தனித்தனியாக நுழைக்கப்பட்ட அல்லது தொடர்முறையிலான கூட்டல்களைச் சோதித்து சோதனை இலக்கங்களை நிரூபித்து திருத்துவதற்கும், மீண்டும் சமர்ப்பிப்பதற்கும் ஏற்ற பிழைகளை அடையாளம் காணுதல்.

**editing terminal :** திருந்து முனையம்; தொகுப்பு முனையம்.

**edit instruction :** தொகுப்பு அறிவுறுத்தம் : திரைக் காட்சிக்காக அல்லது அச்சடிப்பதற்காக

ஒரு களத்தை உருவமைக்கிற கணினிக் கட்டளை. ஒரு தொகுப்பு முகமூடி மூலம் இது பதின்மப் புள்ளிகளையும், அரைப் புள்ளி களையும் டாலர் குறியீடுகளை யும் தரவுக்குள் புகுத்துகிறது.

**edit key** : தொகுப்பு விடைக் குறிப்பு : செயல்முறையை தொகுப்பு முறையாக மாற்றுகிற விடைக் குறிப்பு இணைப்பு அல்லது செய்பணி விடைக் குறிப்பு.

**edit line** : தொகுப்பு வரி ; பதிப்பு வரி : விரிதாள் அல்லது சொல் தொகுப்பு நிரலாக்கத் தொடர் பயன்படுத்தப்படும்போது திரை யில் காட்டப்படும் நிலை அறிக் கை வரி. அடையாளம் சுட்டும் அம்புக்குறி அப்போது எங்கே இருக்கிறது என்றும், எவ்வளவு நினைவகம் மீதமுள்ளது என் றும், பயனில் உள்ள கோப்பின் பெயர் என்ன என்றும் பயனா ளருக்கு இது கூறுகிறது. தரவு வின் வகைகளில் ஒன்று அல் லது இரண்டினைக் கூறலாம். அடையாளம் காட்டும் அம்புக் குறி இடத்தில் உள்ள உள்ளடக் கம் அல்லது தரவு திட்டத்தின் அமைப்பு போன்றவற்றை விரி தாளில் இது காட்டும்.

**edit mask** : தொகுப்பு முகமூடி : உருவமைவுக் குறியீடுகளைக் குறிக்கிற எழுத்துகளின் தோரணி. இதன் வழியாகத் தரவுகள் திரைக்காட்சிக்காக அல்லது அச்சடிப்பதற்காக வடி கட்டப்படுகின்றன.

**edit menu** : பதிப்புக் கட்டளைப் பட்டியல்.

**edit mode** : தொகுக்கும் முறை ; பதிப்பு நிலை : பல நிரலாக்கத் தொடர்களில் உள்ள முறை. முழு தரவுகளையும் மீண்டும் நுழைக்கத் தேவையின்றி தரவு கட்ட உள்ளடக்கங்களை மட் டும் எளிதாக மாற்ற உதவுவது.

**editor** : தொகுப்பி ; பதிப்பி : வாசகங்களையும் பிற செயல் முறை அறிவுறுத்தங்களையும் இடைத்தொடர்பு மூலம் மறு ஆய்வு செய்வதற்குப் பயன் படுத்தப்படும் ஒரு செயல் வரைவு.

**edit play list** : இயங்கு பட்டி யலைத் தொகு.

**edit programme** : தொகுப்புச் செயல் வரைவு : பயனாளரின் உட்பாட்டினைச் செல்லுபடி யாக்கி, கோப்பில் புதிதாக உரு வாக்கப்பட்டுள்ள பதிவேடு களில் சேமித்து வைக்கிற தரவு பதிவுச் செயல்முறை. ஒரு கோப்பில் ஏற்கனவே இருக்கும் தரவை மாற்றுவதற்கு அனு மதிக்கிற செயல்முறை.

**edit query** : வினவல் தொகு.

**edit routine** : தொகுப்பு வாலாயம் : தரவுவின் செல்லுந் தன்மையைச் சோதனை செய்கிற ஒரு செயல் வரைவிலுள்ள நிரல்கூறு.

**edlin** : எட்லின் : DOSஇல் பயன்படுத்தப்படும் பழைய வாசகத் தொகுப்பி.

**.edmonton.ca** : .எட்மான்டன்.சிஏ : இணையத்தில், ஓர் இணையதள முகவரி கனடாவிலுள்ள எட்மான்டனில் உள்ளது என்பதைக் குறிக்கும் புவிப்பிரிவுப் பெருங்களப் பெயர்.

**EDO DRAM** : ஈடோ டி'ரேம் : நீட்டித்த தரவு வெளியீடு இயங்குநிலை குறிப்பின்றி அணுகு முகவரி என்று பொருள்படும் `Extended Data Out Dynamic Random Access Memory' என்ற சொல்தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். டி'ரேமைவிட வேகமாகப் படிக்க முடிகிற ஒருவகை நினைவகம். முந்தைய சுழற்சியில் ஒரு விவரத்தைப் படித்துக் கொண்டிருக்கும்போதே, புதிய படிப்புச் சுழற்சியைத் தொடங்க அனுமதிக்கும் செயல். இது, ஒட்டு மொத்தமாக கணினியின் செயல் திறனை அதிகமாக்கும்.

**EDO RAM** : ஈடோ ரேம் : நீட்டித்த தரவு வெளியீடு குறிப்பின்றி அணுகு நினைவகம் என்று பொருள்படும், Extented Data Out Random Access Memory என்ற சொல்தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இயங்குநிலை ரேமில் ஒரு வகை. அடுத்த நினைவக அணுகல் தொடங்கும்போது, மையச் செயலகத்துக்குத் தகவலைத் தயாராக வைத்திருக்கும். இதனால் கணினிச் செயல்பாட்டு வேகம் அதிகரிக்கிறது. பென்டியம் கணினிகளில் இன்டெலின் டிரைட்டன் சிப்புத் தொகுதி மற்றும் டி'ரேம் உண்டு.

**EDP** : ஈடிபி : Electronic Data Processing என்பதன் குறும்பெயர்.

**EDS** : ஈடிஎஸ் : Exchangeable Disk Store என்பதன் குறும்பெயர்.

**EDSAC** : Electronic Delayed Storage Automatic Computer என்பதன் குறும்பெயர். சேமிக்கப்பட்ட நிரலாக்கத் தொடர் கோட்பாட்டை செயல்படுத்திய முதல் இலக்கமுறை கணினி. 1949இல் இங்கிலாந்தில் உள்ள கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் உருவாக்கப்பட்டது.

**.edu** : .இடியு : இணையக் களப் பெயர் முறைமையில் உயர்நிலைக் களம். கல்வி

நிலையங்கள் தம் தளப் பெயர்களில் பின்னொட்டாக இப்பெயரைச் சேர்த்துக் கொள்கின்றன. (எ-டு) www.annanuniv.edu. அமெரிக்காவில், பால்வாடி முதல் உயர்நிலைப்பள்ளிக் கல்வி வரை அளிக்கும் கல்விக் கூடங்கள், கே12.யுஎஸ் என்னும் உயர்நிலைக் களப்பெயரைப் பயன்படுத்திக் கொள்கின்றன. அல்லது வெறுமனே யுஎஸ் என்று பயன்படுத்துகின்றன.

**edutainment : கல்வியேற்பு :** கல்விச் சாதனங்களை ஏற்றுக் கொள்ளுதல். இது தொடர்பான மற்றொரு சொல் 'தரவு ஏற்பு' (Infortainment).

**EDVAC : எட்வாக் :** Electronic Descrete Variable Automatic Computer என்பதன் குறும்பெயர். அமெரிக்காவில் உருவாக்கப்பட்ட சேமிக்கப்பட்ட நிரலாக்கத் தொடர் கொண்ட முதல் கணினி. 1951இல் ஜான் நியூமென் என்பவரால் பென்சில்வேனியா பல்கலைக் கழகத்தில் மூர் மின்பொறியியல் கல்லூரியில் உருவாக்கப்பட்டது.

**EEMS : இஇஎம்எஸ் :** மேம்படுத்திய விரிவாக்க நினைவக வரன்முறை என்று பொருள்படும் Enhanced Expanded Memory Specificaton என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். மூலமான விரிவாக்க நினைவக வரையறைகளை (EMS) மேம்படுத்தி உருவாக்கப்பட்டது. இஎம்எஸ்ஸின் 3ஆம் பதிப்பு தரவு சேமிப்பையும், நான்கு பக்கச் சட்டங்களையுமே (Frames) அனுமதிக்கும். ஆனால் இஇஎம்எஸ், 64 பக்கங்களை அனுமதிப்பதுடன் நிறைவேற்றப்பட வேண்டிய நிரலாக்கத் தொகுதிகளை விரிவாக்க நினைவகத்தில் இருத்தவும் அனுமதிக்கிறது. இஇஎம் எஸ்ஸின் சிறப்புக் கூறுகள் இஎம்எஸ் பதிப்பு 4.0-வில் சேர்க்கப்பட்டுள்ளன.

**EEPROM : ஈப்ரோம் :** Electronically Erasable and Programmable Read Only Memory என்பதன் குறும்பெயர். மின்னோட்டத்தால் மாற்றத்தக்க படிப்பு நினைவகமாகும்.

**EEROM : ஈரோம் :** மின்சாரத்தால் அழுத்தி மீண்டும் நிரலாக்கத் தொடர் அமைக்கக் கூடிய சேமிப்புச் சாதனம்.

**E-fax : மின் தொலைநகல்**

**effective address : செயல்படும் முகவரி :** ஒரு குறிப்பிட்ட முகவரியில் முகவரி மாற்றல் இயக்கத்தைச் செய்வதன் மூலம் கிடைக்கும் முகவரி.

**effective data transfer rate** : செயல்படு தரவு மாற்று வீதம்.

**effectiveness** : செயல்திறம் : விரும்பிய நோக்கத்திற்கேற்ப எந்த அளவுக்கு வெளியீடு சாதிக் கிறது என்பதைக் குறிப்பது.

**effectors** : அகவுணர்வி : உள்ளமைவுச் சூழல் மாற்றத்து டன் இடைத் தொடர்பு கொள் கிற சாதனங்கள்.

**effects** : விளைவு; செயல் விளைவு.

**efficiency** : இயக்குதிறம்; வினைத் திறன்.

**efficient** : செயல்திறன்மிக்க; செயலாற்றல் நிறைந்த.

**e-form** : மின்படிவம் : மின் னணுப் படிவம் என்பதன் சுருக் கம். ஒரு கணினிப் பிணையத் தில் இருக்கின்ற ஒரு வெற்றுப் படிவம். பயனாளர் ஒருவர் தேவையான விவரங்களை அப்படிவத்தில் நிறைவுசெய்து, உரிய நிறுவனத்துக்கு அப் பிணையம் வழியாகவே அனுப்பி வைக்க முடியும். இணைய நிறுவனங்கள் பலவும் தத்தமது வாடிக்கையாளர்களிட மிருந்து பெறவேண்டிய விவரங் களை இதுபோன்ற படிவங்கள் மூலம் பெறுகின்றன. இணை யத்தில் பயன்படுத்தப்படும் மின்படிவங்கள் பெரும்பாலும் சிஜிஐ என்னும் உரைநிரல் மொழியில் உருவாக்கப்படு கின்றன. மறையாக்கம் மூலம் பாதுகாக்கப்படுகின்றன.

**EFT** : ஈஎஃப்டீ (மின்னணுவியல் நிதிப் பரிமாற்றம்) : Electronic Funds Transfer என்பதன் சுருக் கம். காசோலை போன்ற காகித ஊடகம் மூலமாக இல்லாமல் மின்னணுச் சாதனம் மூலம் ஒரு கணக்கிலிருந்து இன்னொரு கணக்குக்கு மின்னணு நிதி மாற் றல் (EFT) மாற்றித் தருகிறது. அவ்வப்போது கட்டவேண்டிய பில்களுக்கு இம்முறை மிகவும் புகழடைந்து வருகிறது.

**.eg** : .இஜி : இணைய தள முக வரி எகிப்து நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் புவிப் பிரிவுப் பெருங்களப் பெயர்.

**EGA** : இஜிஏ (உயர் வரை கலைத் தகவமைவு) : Enhanced Graphics Adapter என்பதன் குறும் பெயர். IBM ஒளிப் பேழைக் காட்சி தர அளவு. இது, நடுத்தர உருச்செறிவு வாசகத்தையும் வரைகலையையும் அளிக்கிறது. இது முந்திய காட்சி முறை களை ஆதரிக்கிறது. இதற்கு ஓர் இலக்க RGB தேவை.

**egoless programming** : ஆணவ மற்ற நிரலாக்கத் தொடர்

அமைத்தல் : நிரலாக்கத் தொடர் அமைப்பதை ஏற்பாடு செய்யும் ஒரு கோட்பாடு. இம்முறையில் வெற்றிக்கான பெருமை அல்லது தோல்விக்கான பழி ஒருவருக்கே போய்ச் சேராமல் பலர் பங்கிட்டுக் கொள்கின்றனர். அமைப்பு நடையோட்டம் மற்றும் பல தொழில் நுட்பங்களை இது பயன்படுத்துகிறது.

**e-government :** இணைய அரசு; மின் அரசு.

**e-health care :** மின் உடல்நலப் பாதுகாப்பு; இணைய நலப் பாதுகாப்பு.

**EIA :** இஐஏ : Electronic Industries Association என்பதன் குறும்பெயர்.

**EIA interface :** இஐஏ இடைமுகம் : நுண்கணினிகளுக்கும் வெளிப்புற உறுப்புகளுக்கும் இடையிலும், மோடெம்களுக்கும் முகப்புகளுக்கும் இடையிலும் உள்ள தரமான இடைமுகம்.

**eight bit chip :** எட்டுத் துண்மிச் சிப்பு : தரவுகளை ஒரு நேரத்தில் எட்டுத் துண்மிகள் என்ற வகையில் செயலாக்கம் செய்யும் மையச் செயலகச் சிப்பு.

**eighty-column display :** எண்பது நெடுக்கை திரைக்காட்சி; எண்பது எழுத்துக் காட்சி.

**elastic banding :** நெகிழ்வுக் கட்டமைவு : கணினி வரைகலையில், திரையில் ஒரு குறிப்பிட்ட புள்ளியிலிருந்து இன்னொரு புள்ளிக்கு வரையப்படும் ஒரு கோட்டின் இயக்கம். இரண்டாவது புள்ளியை, ஒரு நுண்பொறியைப் பயன்படுத்தித் திரையில் நகர்த்தலாம். அந்தக் கோடு நெகிழ்வுப் பொருளால் செய்யப்பட்டது போன்று, கோட்டின் நீளத்தை நீட்டலாம் அல்லது சுருக்கலாம். இது கணினி அடிப்படையிலான வடிவமைப்புச் செயல்முறைகளில் பயன்படுத்தப்படுகிறது. இதனை 'ரப்பர் கட்டமைவு' (Rubber banding) என்றும் கூறுவர்.

**elastic buffer :** நெகிழ்வு இடைத் தடுப்பு : மாறுபடத்தக்க தரவு அளவினை, ஒரு குறிப்பிட்ட நேரத்தின் தேவைக்கேற்ப இருத்தி வைத்துக் கொள்கிற ஓர் இடைத் தடுப்பு.

**electrical accounting machine :** மின்னியல் கணக்கு வைப்பு எந்திரம்: நிரந்தரமாக மின் எந்திர முறையில் இயங்குகிற தரவு செய்முறைப்படுத்தும் சாதனம்.

**electrical communications :** மின் தகவல் தொடர்புகள் : ஒரு ஆரம்ப இடத்திலிருந்து தோன்றிய தரவை மின்சக்தியாக அல்லது புலங்களாக மாற்றி, மின்கட்ட

மைப்புகள் மூலம் வேறு ஒரு இடத்துக்கு அனுப்பப்பட்டு, பெறுகின்ற பொருளில் விளங்குவதற்கு ஏற்ற வகையில் மீண்டும் மாற்றும் அறிவியல் மற்றும் தொழில் நுட்ப முறை.

**electrical schematic : மின்சார திட்டமுறை :** வன்பொருள் மின்சுற்று அல்லது அமைப்பின் தருக்கமுறை வரிசையை வழக்கமான குறியீடுகளைக் கொண்டு குறிப்பிடும் வரைபடம். கணினி உதவிடும் வடிவமைப்பிலும் இதை அமைக்க முடியும்.

**electrically operated computer : மின்னியக்கக் கணினி.**

**electric bulb : மின்குமிழ்.**

**electroluminescent : மின்சுடரொளி :** செறிவான, தெளிவான உருக்காட்சியையும் அகன்ற பார்வைக் கோணத்தையும் அளிக்கிற தட்டையான சேணக் காட்சி. இது, ஓர் x அச்சு மற்றும் y அச்சுச் சேணத்திற்கிடையே ஒரு மெல்லிய பாஸ்வரப் படலத்தைக் கொண்டிருக்கிறது. x - y ஆயங்களில் மின்னேற்றப் பட்டதும், அதனையொட்டிய பகுதியிலுள்ள பாஸ்வரம், கணினியில் காணக்கூடிய ஒளியை உமிழ்கிறது. பாஸ்வரம் பொதுவாக பழுப்பு நிறமாக இருக்கும். பச்சைப் பாஸ்வரமும் பயன்படுத்தப்படுகிறது.

**electroluminescent display : மின் ஒளிர்வு திரைக்காட்சி :** மடிக் கணினிகளில் பயன்படுத்தப் படும் தட்டை வடிவத் திரைக் காட்சியில் ஒருவகை. செங்குத்து மற்றும் கிடைமட்ட மின்வாய்களுக்கு (electrodes) இடையே ஒரு பாஸ்பர் அடுக்கு அமைக்கப்பட்டிருக்கும். மின்வாய்கள் எக்ஸ்-ஒய் ஆய அச்சுகளாகச் செயல்படுகின்றன. இரண்டு மின்வாய்களும் மின்னூட்டம் பெறும்போது, அவற்றின் குறுக்குவெட்டுப் புள்ளியில் அமைந்த பாஸ்பரஸ் ஒளியை உமிழும். மின்ஒளிர்வுத் திரைக் காட்சி ஏனைய காட்சித்திரைகளைவிட விரிவான பார்வைக் கோணத்தையும் தருகின்றன. தற்போது இத்தகைய காட்சித் திரைகளுக்குப்பதில் இயங்கணி (active matrix) எல்சிடி திரைகள் பயன்படுத்தப்படுகின்றன.

**electrolysis : மின்பகுமம் :** ஒரு வேதிக் கூட்டுப் பொருளினூடே (Chemical Compound) மின்சாரத்தைச் செலுத்தி, மூலத் தனிப் பொருட்களாகப் பிரிக்கும் செயலாக்கம்.

**electromagnet : மின்காந்தம் :** மின்விசை மூலம் ஆற்றலூட்டப்

பட்ட காந்தம். இதில், ஒரு கம்பிச்சுருள், ஓர் இரும்புத் தண்டின் மீது சுற்றப்படுகிறது. கம்பியில் மின்விசை பாயும் போது இரும்புத்தண்டு காந்தத் தன்மை பெறுகிறது.

**electromagnetic delay line : மின் காந்த சுணக்கச் சுற்று** : தொடக்கக் கால கணினிகளில் பயன் படுத்தப்பட்டது. தாங்கிகளின் மூலம் மின்காந்த அலைகளைப் பரப்புவதனால் இயக்கப்படும் சுணக்கச் சுற்று.

**electromagnetic disk : மின் காந்த வட்டு.**

**electromagnetic heads : மின் காந்த முனைகள்.**

**electromagnetic radiation : மின் காந்தக் கதிர்வீச்சு** : மனிதர் உட்பட அனைத்துப் பொருள் களிலும் இருந்துவரும் ஆற்றல். இது மின்காந்த நுண்ணலைகள், காமாக்கதிர்கள், எக்ஸ்- கதிர்கள், புறஊதா ஒளி, கண்காணும் ஒளி, அகச்சிவப்பு ஒளி, ராடார் போன்றவற்றைத் தன்மய மாக்கிக் கொள்கிறது.

**electromagnetic spectrum : மின்காந்த நிறமாலை:** மின் காந்தக் கதிர்வீச்சு உருவடிவம்.

**electromechanical : மின்எந்திர முறையிலான** : மின்சாரமுறை, எந்திரமுறை ஆகிய இரண்டு கொள்கைகளின் அடிப்படை களைப் பயன்படுத்தி தரவுகளைச் செயலாக்கம் செய்யும் சாதனம் அல்லது அமைப்பு பற்றியது.

**electro mechanical relay : மின் எந்திரவியல் அஞ்சல்** : அசையும் உறுப்புகள் இறுதியில் தேய்ந்து போவதற்காக வடிவமைக்கப் பட்டுள்ள, காந்த விசையால் இயக்கக்கூடிய எந்திரப் பொறியமைவு.

**electromotive force : மின் னியக்க விசை** : ஒரு மின்சுற்று வழியிலுள்ள அழுத்தம். இது 'ஓல்ட்' (Volts) அலகுகளில் அளவிடப்படுகிறது.

**electron : மின்னணு (எதிர்மின் ணணு) எதிர்மின்மம்** : ஓர் அணு வின் உட்கருவில் வட்டமிடுகிற அடிப்படைத் துகள்கள். எலெக்ட் ரான், எதிர்மின்னேற்றம் செய் யப்பட்டதெனக் கருதப்படுகிறது.

**electron beam : மின்னணுக் கற்றை** : ஓர் ஏற்புப் பொருள் மீது செலுத்தப்படுகிற எலெக்ட் ரான் அல்லது மின்னணுக் கற்றை.

**electron beam deflection system : மின்னணு ஒளிக்கற்றை/விலகல் அமைப்பு** : மின்சார அல்லது காந்தப் புலத்தின் தாக்கத்தினால்

அதே திசையில் மின்னணுக்கள் குறுகிய பாதையில் நகர்வது.

**electron beam lithography : மின்னணுக் கற்றை கற்பாள அச்சு முறை :** எலெக்ட்ரான் கற்றைகளைப் பயன்படுத்தி மின் சுற்று வழிகளை உண்டாக்குகிற ஓர் உத்தி.

**electron gun : மின்னணுத் துப்பாக்கி :** எலெக்ட்ரான்களின் ஒரு நுண்ணிய கற்றையை உண்டாக்குகிற சாதனம். இந்தக் கற்றை ஓர் எதிர்மின் கதிர்க் குழலில் பாஸ்வரத் திரைமீது விழச் செய்யப்படுகிறது.

**electronic : மின்னணு சார்ந்த :** சாதாரண கடத்திகள் மூலம் மின்சாரம் தாராளமாக ஓடுவதற்கு மாறாக அரைக்கடத்திகள், வால்வுகள், வடிகட்டிகளின் வழியாக மின்சாரம் ஓடுவது தொடர்பானது. மிகவேகமாக இயங்கும் மின்னணுப் பொத்தான்கள் மூலம் மின்சாரத்தை ஓடவோ அல்லது நிறுத்தவோ செய்யும் மின்னணுச் சாதனங்கள் தேர்வு முறையிலும் கூட்டாகவும் பயன்படுத்துவதில்தான் கணினி தொழில் நுட்பத்தின் சாராம்சமே உள்ளது.

**electronic accounting machine (EAM) : மின்னணு கணக்கு வைப்புப் பொறி (இஏஎம்) :** விசைத்துளை, எந்திரப் பிரிப்பி, பட்டியலிடுவான் அல்லது சேர்ப்பி போன்ற பெருமளவில் மின் எந்திரத்தன்மையுள்ள கணக்கீட்டுக் கருவி.

**electronically programmable : மின்னணு முறையில் நிரலாக்கத் தொடரமைக்கக் கூடிய :** 'ப்ராம்' நிரலாக்கத் தொடர் அமைப்புக் கருவியைப் பயன்படுத்தி இருமைக் குறியீட்டு முறையில் 1,0 வடிவங்களில் தரவுகளை மின்னணு முறையில் சேர்க்கக் கூடிய இலக்கமுறைச் சாதனம் அல்லது நிரலாக்கத் தொடர் அமைக்கும் ராம் பற்றியது.

**electronic blockboard : மின்னணுக் கரும்பலகை.**

**electronic book : மின்னணு நூல்.**

**electronic bulletin board : மின்னணு செய்திப்பலகை :** செய்திகளின் பட்டியலை வைத்திருக்கும் மின்னணு அமைப்பு. தங்களது கணினி அமைப்புகளில் இருந்து இந்தப் பலகையுடன் தொடர்பு கொண்டு செய்திகளை பெறமுடியும் அஞ்சல் செய்யமுடியும் அல்லது அங்கே இருக்கும் செய்திகளைப் படிக்க முடியும்.

**electronic calculators : மின்னணுக் கணிப்பான் ; மின்னணுக் கணிப்பிகள்.**

**elelctronic circuit : மின்னணு வியல் சுற்றுவழி :** ஒருங்கிணைந்த மின்னணுவியல் அமைப்பி களின் வரிசை. ஒரு பணியைச் செய்வதற்கு ஒரு குறிப்பிட்ட தோரணியில் மின் விசை செலுத்தப்படுகிற ஒரு வழி இதுவாகும். இலக்க முறைக் கணினிகளில் பயன்படுத்தப் படும் மின்னணுவியல் சுற்று வழிகள், வெவ்வேறு ஈரிலக்க எண்களைக் கையாளுகின்றன. வானொலி, தொலைக் காட்சி போன்ற ஒத்தியல்புச் சாதனங் களில் பயன்படுத்தப்படும் மின் னணுவியல் சுற்று வழிகள், மின் னியல் அதிர்வுகளைக் (அலை வெண்கள்) கையாளுகின்றன.

**electronic circuits : மின்னணுச் சுற்றுவழிகள் ; மின்சுற்று வழிகள்.**

**electronic commerce : மின்னணு வணிகம் :** கணினிப் பிணையம் வழியாக மேற்கொள்ளப்படும் வணிக நடவடிக்கை. மின்வணி கம், நிகழ்நிலை(Online) தரவு சேவை, இணையம் அல்லது அறிக்கைப் பலகைச் சேவை (BBS) ஆகியவற்றின் வழியாக ஒரு பயனாளருக்கும் ஒரு வணிக நிறுவனத்துக்கும் இடையே நடைபெறுவதாக இருக்கலாம். ஒரு வணிக நிறு வனத்துக்கும் அதன் வாடிக்கை யாளருக்கும் இடையே, மின்னணு தரவு பரிமாற்றத் (EDI) தடங்கள் வழியாக நடைபெறும் எவ்வித வணிகத் தரவு பரிமாற்ற மாகவும் இருக்கலாம்.

**electronic computer : மின் னணுக் கணினி.**

**electronic content : மின்னணுவ உள்ளடக்கம்.**

**electronic cottage : மின்னணுக் குடிசை; மின்னணுக் குடில் :** மைய அலுவலகத்துடன் தங் களது வீட்டிலிருந்தே கணினி மூலம் தொடர்பு கொண்டு வேலைகளைச் செய்யும் தொழி லாளர் பற்றிய கோட்பாடு.

**electronic credit : மின்னணுப் பற்று :** இணையத்தின் வழியாக பற்று அட்டை பரிமாற்றங்கள் மூலம் நடைபெறும் மின் வணிக நடைமுறை.

**electronic data change : மின்னணு தரவு மாற்றி.**

**electronic data interchange (EDI): மின்னணுவியல் தரவு இடைப் பரிமாற்றம் (இடிஐ) :** பற்றுச் சீட்டுகள், அனுப்பாணைகள் போன்ற வடிவங்கள் தொடர் பான தரவுகளை, நாடாப் பரி மாற்றம் அல்லது தொலைபேசி இணைப்புகள், மின்னணுவியல் அஞ்சல், கணினிகள் மூலமாக வழங்குகிற பொறியமைவு. ஒரு வணிக நடவடிக்கையை முடிவு

செய்வதற்கு முன்பு கொள் வினையாளர்களும் பொருள் வழங்குவோரும் பல ஆவணங் களை முடிவுறுத்த வேண்டி யிருக்கிறது. பன்னாட்டு வணி கத்தில், நாடுகளிடையிலான சுங்கவரி முனையங்கள் வணிக நடவடிக்கையைத் தாமதப் படுத்துகின்றன. இத் தாமதங் களை இந்த முறை தவிர்க்கிறது.

**electronic data processing (EDP): மின்னணு தரவு செயலாக்கம் (இடிபி) :** 'இடிபி' என்பது Electronic Data Processing என்பதன் குறும்பெயராகும். மின்னணு இலக்கமுறை கணினி போன்ற மின்னணுக் கருவி யினால் பெருமளவு செய்யப் படும் தரவு செயலாக்கம்.

**electronic data processing system : மின்னணு தரவு செய லாக்க அமைப்பு :** மின்னணு வேகத்தில் மின்னணு மின் சுற்று களைப் பயன்படுத்தும் எந்திரங் களைக்கொண்டு தரவு செய லாக்கம் செய்யும் அமைப்பு. மின் காந்தக் கருவிக்கு மாறானது.

**electronic device : மின்னணுச் சாதனம்; மின்னணுக் கருவி.**

**electronic document : மின்னணு ஆவணம்.**

**electronic document distribution : மின்னணு ஆவணப் பகிர்மானம்.**

**electronic filing : மின்னணு கோப்பு அமைத்தல் :** வட்டுகள் அல்லது நாடாக்களின் மீது மின்னணு முறையில் தகவலை எவ்வாறு கணினி அமைப்புகள் சேமிக்கின்றன என்பதைக் குறிப்பிடுவது.

**electronic frontier foundation : மின்னணு எல்லை நிதிய நிறு வனம் :** கணினிப் பயனாளர் களின் பொது உரிமைகளைப் பாதுகாப்பதற்கென்றே உருவாக் கப்பட்ட, பொது நல அமைப் பாகும். அமெரிக்காவில் சூதாட் டக்காரர்களிடம் இரகசியப் போலீசார் அதிரடிச் சோதனை களை நடத்தி வந்தனர். அதனை எதிர்கொள்ள 1990ஆம் ஆண்டு மிட்சேல் கபூர், ஜான் பெர்ரி பார்லோ ஆகிய இருவரும் சேர்ந்து இந்த அமைப்பைத் தொடங்கினர்.

**electronic funds transfer (EFT) : மின்னணு நிதி மாற்றல் (இஎஃப்டீ) :** இஎஃப்டீ என்பது Electronic Funds Transfer என் பதன் குறும்பெயர். ரொக்கம் இல்லாத முறையில் சரக்குகள் அல்லது சேவைகளுக்குப் பணம் செலுத்துவது, பரிமாற் றத்தில் ஈடுபட்டுள்ள இரண்டு நபர்களுடைய கணக்குகளை மின்னணு முறையில் கணினி களைப் பயன்படுத்தி சரி

செய்யப்படுகிறது. இன்சூரன்ஸ் பிரிமியம் போன்று அடிக்கடி கட்டப்பட வேண்டிய வற்றைக் கட்டுவதற்கு அதிகம் பயன் படுத்தப்படுகிறது.

**electronic industries association: மின்னணுத் தொழில்கள் சங்கம் ; இஐஏ:** இஐஏ (EIA) என்பது Electronic Industries Association என்பதன் குறும்பெயர். தகவல் வழங்குதலில் தர நிர்ணயம் உருவாக்கி, தகவலை வழங்கி, அரசுடன் தொடர்பு கொண்டு மக்கள் தொடர்பை கவனித்து வருகிற மின்னணு உற்பத்தி யாளர்கள் சங்கம்.

**electronic journal : மின்னணு இதழ் :** ஒரு கணினி அமைப்பு செய்கின்ற பணிகளை நேர் வரிசையில் தொகுக்கின்ற மின்னணுக் கோப்பு.

**electronic magazine : மின்னணு இதழ் :** 1. ஒளிநாடா அல்லது ஒளி வட்டு வடிவத்தில் வெளி யிடப்படும் பருவ இதழ். 2. ஒரு வகை மின்னணுப் பதிவு முறை.

**electronic mail : மின்னணு அஞ் சல்; மின்னஞ்சல் :** தொலைத் தகவல் தொடர்பு வசதிகளைப் பயன்படுத்தி இலக்கமுறை வடிவத்தில் செய்திகளை அனுப்பும் செயல் முறை. E-mail என்றும் அழைக்கப்படுகிறது.

**electronic mail address : மின்னணு அஞ்சல் முகவரி; மின்னஞ்சல் முகவரி**

**electronic mall : மின்னணு அங்காடி:** கணினிப் பிணையங் களில் குறிப்பாக இணையத்தில் நிகழ்நிலை வணிகச் செயல்பாடு களின் மெய் நிகர் தொகுப்பு (Virtual Collection). ஒன்றை யொன்று சார்ந்த வணிகச் செயல் பாடுகள் ஒன்று இன்னொன்றின் வளர்ச்சிக்கு உதவும் வகையில் ஓர் இணைய தளத்தில் ஒருமுகப்படுத்தப்பட்டிருக்கும்.

**electronic market place : மின் னணுவியல் அங்காடிக் கூடம் :** தரவு பணியங்கள், ஒளிப்பேழை வாசகப் பணியங்கள் வாயிலாகக் கொள்வினை, விற்பனை செய்தல். எடுத்துக்காட்டு: ஆதாரம், கணினிப் பணியம்; அருந்திறல் பணி.

**electronic messaging : மின் னணுவியல் செய்தியனுப்பீடு :** இது, மின்னணுவியல் அஞ்சல் போன்றதேயாகும்.

**electronic music : மின்னணு இசை; மின் இசை :** மின்னணு முறையில் ஒலிகள் உருவாக்கப் படுகின்ற இசை.

**electronic numeric integrator and calculator (ENIAC) : மின்னணு எண்மான ஒருங்கிணைப்பி மற்றும் கணிப்பி.**

**electronic office** : **மின்னணு அலுவலகம்** : கணினி மற்றும் செய்தி தரவு தொடர்பு தொழில் நுணுக்கங்களைச் சார்ந்து செயல்படுகின்ற அலுவலகம்.

**electronic paper** : **மின்னணுத் தாள்; மின்னணுக் காகிதம்.**

**electronic pen** : **மின்னணு எழுது கோல்:** நிரலாக்கத் தொடர் கட்டுப்பாட்டில் கத்தோட் கதிர்க் குழாயுடன் சேர்ந்து தகவலை உள்ளிடும் அல்லது மாற்றும் பேனா போன்ற ஒரு எழுது பொருள். ஒளிப்பேனா என்றும் அழைக்கப்படுகிறது.

**electronic point of sale (EPOS)** : **மின்னணு விற்பனை முனையம்.**

**electronic power supply** : **மின்னணு மின் வழங்கல்** : குழாய்கள் மற்றும் அரைக் கடத்திச் சாதனங்களில் உள்ள மின்னணு மின்சுற்றின்போது மின்சார வோல்டேஜ்களில் அலைகளின் இயக்கத்துக்குத் தேவையான மின்சக்தியை வழங்கும் வேலையில் பயன்படுத்தப்பட்டுள்ள மின்சக்தியின் மூலாதாரம்.

**electronic printer** : **மின்னணு வியல் அச்சடிப்பி** : அச்சிடும் செயல்முறையைக் கட்டுப் படுத்துவதற்கு லேசர் அச்சடிப்பி, வரிவாரி அச்சடிப்பி போன்ற மின்னணுவியல் சாதனங்களைப் பயன்படுத்தும் அச்சடிப்பி.

**electronic publishing** : **மின்னணு பதிப்பு முறை** : அச்சிடுதல் தவிர பிற வகையில் எளிதில் தொகுக் கவும் கூடுதல் வசதி பெறவும் ஏற்ற வகையில் தகவலை அனுப்ப அல்லது சேமிக்கத் தேவையான பலவகை நட வடிக்கைகளை உள்ளடக்கிய தொழில்நுட்பம். கல்வி மென் பொருள் வட்டுகள், கல்வி மென்பொருள் பேழைகள், நேர்முக தரவுத் தளங்கள், மின் னணு அஞ்சல் ஒளிச் செய்தி, தொலைச் செய்தி, ஒளிநாடா பேழைகள், ஒளிவட்டுகள் போன்ற பல முறைகளில் தரவு சேமித்து அனுப்பப்படுகிறது.

**electronics** : **மின்னணுவியல்** : வாயுக்கள் அல்லது வெற்றிடம் அல்லது அரைக் கடத்திப் பொருட்கள் மூலமாகச் செல்லும் மின்சக்தியைக் கட்டுப்படுத்தி இயக்குதல் தொடர்பான அறி வியல், தொழில் நுட்பப் பிரிவு.

**electronic shopping** : **மின்னணு கடைச் செலவு.**

**electronic signature authenticator software** : **மின்னணு கையெழுத்து சான்றுறுதி மென்பொருள்.**

**electronic smoke trails** : **மின் னணுவியல் புகைத் தடங்கள்** :

ஒரு தாரை விமானம் வானத்தில் விரைவாகச் செல்லும்போது விட்டுச் செல்லும் புகைத் தடங்கள்.

**electronic speech synthesis : மின்னணு பேச்சு ஒருங்கிணைவு.**

**electronic spreadsheet : மின்னணு விரிதாள் :** கணினி முகப்பை ஒரு பெரிய பேரேட்டின் தாளாக மாற்றும் கணினி நிரலாக்கத் தொடர். தொகுப்புப் பயனாளர் குறிப்பிடும் விதிகளின்படி பெரிய நிரல்கள், நிரைகளில் எண்கள் மாறுவதை அனுமதிக்கிறது. ஒரு உள்ளீடு மாறும்போது மொத்த எண்களும் மாறும். கலவையான கணிப்புகளும் எண்முறை எதிர்பார்ப்புகளும் சோர்வடைய வைக்கும் மனித கணக்கீடுகள் இல்லாமல் செய்ய வைக்கும் முறை.

**electronic station : மின்னணு வியல் நிலையம் :** மின்னணு வியல் பரிசோதனைகளையும் ஆராய்ச்சிகளையும் நடத்துவதற்கான ஒரு பணி நிலையம்.

**electronic storefront : மின்னணுக் கடைமுனை :** இணையத்தில் ஒரு நிறுவனம் தன்னுடைய விற்பனைப் பொருட்களைக் கடை பரப்பி வைத்து, வாடிக்கையாளர்கள் தொடர்பு கொள்வதற்கு அல்லது நிகழ்நிலை விற்பனைக்கு வழி செய்தல்.

**electronic table : மின்னணு வரை பட்டிகை.**

**electronic switch : மின்னணு வியல் விசை :** மின்னோட்டத்தின் மூலம் தூண்டிவிடப்படும் தொகுப்பு/ விடுப்பு விசை.

**electronic tablet : மின்னணுப் பலகை.**

**electronic text : மின்னணு உரை.**

**electronic text manipulation : மின்னணுவியல் வாசகக் கைத் திறன் :** ஒரு சொல் பகுப்பியில் ஒரு வாசகத்தை அச்சிடுவதற்கு முன்பு அந்த வாசகத்தை உருவாக்கவும், பார்வையிடவும் பதிப்பிக்கவும் கையாளவும் உள்ள வசதிகள்.

**electronic wand : மின்னணு ஒளிக்கோல்; மின்னணு மாத் திரைக் கோல்.**

**electron tube : மின்னணுக் குழாய் :** மின்னணுச் சமிக்கைகளை அனுப்பவும், திறன் பெருக்கவும் பயன்படும் ஒரு சாதனம். உலோகத் தகடுகள் அல்லது வலைகள் போன்ற மின்னணு உறுப்புகள் உள்ளே பொருத்தப்பட்ட, உறையிடப்பட்ட கண்ணாடிக் குழாய்.

இப்போதெல்லாம் பல்வேறு கருவிகளில் மின்னணுக் குழாய் களுக்குப் பதில் மின்மப் பெருக்கிகளே (Transistors) பயன்படுத்துகின்றனர். என்றா லும், எதிர்மின் கதிர்க் குழாய் (Cathode Ray Tubes), வானொலி அலைமின் சுற்றுகள் மற்றும் கேட்பொலிப் பெருக்கிகளில் குழாய்களைப் பயன்படுத்து கின்றனர்.

**electro photographic printers : மின் ஒளிப்பட அச்சுப்பொறிகள் :** லேசர், எல்இடி, எல்சிடி, அயனிப் படிவு அச்சுப் பொறி களை இந்த வகையில் சேர்க்க லாம். மின்னூட்டப்பட்ட ஒளி உணர்வுள்ள உருளைமீது எதிர் நிலைப் படிமம் ஒன்றைப் படிய வைப்பர். அப்படத்திற்கு ஏற்ப, ஒளி உணர்வுள்ள உருளை நிலை மின்னூட்டத்தை அதன் மேற் பரப்பில் உருவாக்கும். மைத் துகள் (Toner) அப்பரப்பில் ஒட்டிக் கொள்ளும். உருளை, மைத் துகளை தாளின்மீது பரப் பும். வெப்பமானது மைத் துகள் களை தாளோடு ஒட்டிக் கொள்ளச் செய்யும். உருளையானது மின் தூண்டப்படும் முறையின் அடிப்படையில் அச்சுப்பொறி கள் வேறுபடுகின்றன.

**electro photographing : மின் னியல் ஒளிப்படக்கலை :** இது படியெடுப்பு எந்திர மற்றும் லேசர் அச்சடிப்பி அச்சடிப்பு உத்தியினைக் குறிக்கிறது. ஒளிப்புள்ளிக் குறிகளினாலான மறிநிலை உருக்காட்சி ஓர் ஒளி யுணர்வுடைய வட்டுருளையில் அல்லது மின்னேற்றம் செய்யப் பட்ட பட்டையில் வண்ணம் பூசப்படுகிறது. ஒரு லேசரி லிருந்து அல்லது திரவப் படிகங் களிலிருந்து ஒளி வருகிறது. வட்டுருளையில் ஒளிபடும் இடத்தில் எல்லாம் மின்னேற் றம் நீக்கப்படுகிறது. ஓர் உலர் மையைப் பூசுவதன் மூலம் வட்டுருளையில் மின்னேற்ற மடைந்த பகுதிகளை அது ஒட்டிச் செல்கிறது. உலர் மையை வட்டுருளை காகிதத் திற்கு மாற்றிய பின்னர் அந்த மையினையும் காகிதத்தினையும் அழுத்தமும் வெப்பமும் நிரந்தர மாக இணைக்கின்றன.

**electroplating : மின்முலாம் பூச்சு:** மின்பகுப்பு முறையில் ஓர் உலோகத் தகட்டின்மீது இன்னொரு வேதிப் பொருளின் மெல்லிய படுகையினை படியச் செய்தல்.

**electro sensitive paper : மின் உணர்வுத் தாள் :** அலுமினியம் போன்ற கடத்திப்பொருள் மெலிதாகப் பூசப்பட்ட அச் சிடும் காகிதம். கடத்தும்

பரப்பில் மின்சக்தி ஓடுவதற்கு அச்சு முனை உதவுவதன் மூலம் அங்கு இருளடைந்து அச்சிடப் பட்டது தெளிவாகத் தெரி கின்றது.

**electrosensitive printer : மின் உணர்வு அச்சுப்பொறி :** சிறப் பாகத் தயாரிக்கப்பட்ட காகிதத் தில் மின்சக்தி மூலம் எழுத்து கள் அமைப்பதைப் பயன் படுத்துகின்ற அழுத்து முறை அல்லாத அச்சுப்பொறி.

**electrostatic : மின்நிலைப்பு; நிலை மின்சாரம் :** ஒரு கடத்துப் பாதையில் மின்னூட்டம் பரவிச் செல்லாமல் நிலைத்து நிற்றல். இத்தகைய நிலை மின்னூட்டம் நகலெடுக்கும் கருவிகளிலும், லேசர் அச்சுப்பொறிகளிலும் - மைத் துகளை ஒளியுணர்வு உருளையில் ஒட்டவைக்கப் பயன்படுகிறது. தட்டை வரைவு பொறிகளிலும் (Plotters) இது போலவே பயன்படுகிறது.

**electrostatic discharge : நிலை மின்னிறக்கம் :** வெளி மூலத்தி லிருந்து நிலைமின்சாரம் ஒரு மின்சுற்றுக்குள் மின்னிறக்கம் ஆகிவிடல். எடுத்துக்காட்டாக, ஓர் ஒருங்கிணைந்த மின்சுற்றுப் பலகையை (Integrated Circuit Board) நாம் கையால் தொடும் போது, நம் உடலிலுள்ள நிலை மின்சாரம் மின்னிறக்கமாகி, அம்மின்சுற்றினை பழுதாக்கி விடுவதுண்டு.

**electrostatic plotter : நிலைமின் னியல் வரைவி :** மின்வாய்களின் ஒரு வரிசை மேற்செல்லும் போது மின்னேற்றமடைகிற ஒரு தனி வகைக் காகிதத்தைப் பயன்படுத்துகிற வரைவான். மின்னேற்றமடைந்த காகிதத்தில் உலர் மை பூசப்படுகிறது. இதில் உருமாதிரிகளில் கறுப்பு- வெள் ளையில் அல்லது வண்ணத்தில் அச்சடிக்கப்படுகின்றன. சில வரைவான்கள், 6 அடிவரை அகலமுள்ள காகிதத்தைப் பயன் படுத்துகின்றன.

**electrostatic printer : நிலைமின் அச்சுப்பொறி :** வேதியியல் முறை யில் பதப்படுத்தப்பட்ட காகிதத் தில் எழுத்துகளை ஏற்படுத்து கின்ற அதிவேக அழுத்தமற்ற அச்சுப்பொறி.

**electrothermal printer : மின் வெப்ப அச்சுப்பொறி :** வெப்ப உணர் காகிதத்தில் சிறுபுள்ளிகள் வடிவால் எழுத்துகளை உரு வாக்கும் வெப்பப் பொருள் களைப் பயன்படுத்தும் அதிவேக அச்சுப்பொறி.

**electro tube : மின் குழாய் :** மின்மப் பெருக்கிகள் உருவாக்கப்படு வதற்கு முன்பு கணினிகளில் பயன்படுத்தப்பட்டு வந்த முக்கிய மின்னணுப் பொருள்.

**element :** உறுப்பு : ஒருவரிசை அல்லது சதுரத்தில் உள்ள தரவு வகை.

**element, active :** செயற்படு மூலகம்; செயற்படு உறுப்பு; செயற்படு தனிமம்.

**element, AND :** உம் உறுப்பு.

**elementary diagram :** தொடக்க நிலை வரைபடம் : ஒரு மின் அமைப்பின் கம்பியிழுக்கும் வரைபடம். மின்சக்தி வரும் வழிகளை செங்குத்துக் கோடுகளுக்கிடையில் குறிப்பிட்ட எல்லா சாதனங்களும் வரையப்படும். செய்தி, கம்பிக் கட்டமைப்பு, அளவைப் பொருள் போன்ற அனைத்தையும் உள்ளடக்கியது. CAD அமைப்பில் எளிதில் உருவாக்கமுடியும்.

**elementary item :** தொடக்க நிலை உருப்படி.

**elementary perciever and memories :** தொடக்க உணர்வி மற்றும் நினைவுப் பதிப்பிகள் : எட் ஃபெய்கென்பாம் என்ற அமைவனம் 1960இல் உருவாக்கிய செயற்கை நுண்ணறிவு (AI) கல்விப் பொறியமைவு.

**elements of a microcomputer :** ஒரு நுண்கணினியின் உறுப்புகள் : நுண் செயலகம், நிரலாக்கத் தொடர் நினைவகம் (ரோம்), நிரலாக்கத் தொடர் மற்றும் தகவல் சேமிப்பகம் (ராம்), உள்ளீடு / வெளியீடு மின்சுற்று, மற்றும் நேரத் துடிப்பு உருவாக்கி ஆகியவற்றை உள்ளடக்கிய ஒரு நுண் கணினியின் பாகங்கள்.

**elegant :** நேர்த்தி; செம்மை : எளிமை, செறிவடக்கம், திறன், நயநுட்பம் அனைத்தும் சேர்ந் திருத்தல். கணினி அறிவியலின் கோட்பாட்டு அடிப்படையில் நேர்த்தியான வடிவமைப்புக்கே (நிரல்கள், நிரல்களுக்கு அடிப்படையான செயல்பாட்டு வரைவுகள், வன்பொருள் ஆகியவற்றில்) முன்னுரிமை தரப்பட வேண்டும். ஆனால் கணினித் தொழிலின் வளர்ச்சி வேகத்தில் ஓர் உற்பத்திப் பொருளின் உருவாக்கத்தை விரைவுபடுத்த வேண்டும் என்பதற்காக பெரும்பாலும் நேர்த்தியான வடிவமைப்பு புறக்கணிக்கப்பட்டு விடுகிறது. இதன் காரணமாய், திருத்துவதற்குக் கடினமான குறைபாடுகளை (bugs) அவை கொண்டுள்ளன.

**elegant programme :** நுட்பநயச் செயல் வரைவு : எளிய வடிவமைப்புடன் மிகக்குறைந்த அளவு நினைவாற்றலைப் பயன்படுத்தி, மிகவேகமாக இயங்கக் கூடிய செயல் வரைவு.

**elevator :** மேலேற்றி : கணினித் திரையில் ஓர் ஆவணத்தை

அல்லது ஓர் படிமத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் போது, முழுமையாகப் பார்த் தறிய கிடைமட்ட, செங்குத்து உருள்பட்டை (Scroll Bar) களைப் பயன்படுத்துகிறோம். உருள்பட்டையில் மேலும் கீழும் நகர்த்துமாறு அமைந் துள்ள ஒரு சதுரப் பெட்டி மேலேற்றி எனப்படுகிறது.

**elevator seeking : மேலேற்றி தேடல் :** ஒரு நிலைவட்டி லிலுள்ள தகவலைத் தேடிப் பெற பல்வேறு கோரிக்கைகள் எழும்போது, படிப்பு/எழுது முனைக்கு அருகிலுள்ள தரவு என்ற அடிப்படையில் அவற்றை வரிசைப்படுத்தி செயலாக்கு வதன் மூலம், முனையின் இயக் கத்தைக் குறைப்பதுடன், நிலை வட்டின் அணுக்க நேரத்தைக் குறைக்கவும் உதவுகிறது.

**eleven-punch : பதினோராவது துளை:** ஹோலரித் துளையிடப் பட்ட அட்டையின் மேற்பகுதி யின் இரண்டாவது வரிசையில் போடப்படும் துளை.

**elite : எலைட் :** *1.* ஓர் அங்குல இடத்தில் *12* எழுத்துகள் அச் சிடும் வகையில் அமைந்த ஒரே அகலத்தில் அமைந்த எழுத்துரு வின் உருவளவு எலைட் எனப் படுகிறது. *2.* வெவ்வேறு உரு வளவுகளில் அமைகின்ற ஒரே அகல எழுத்துரு (Font) ஒன்றின் பெயர்.

**elite type : எலைட் டைப் :** பன்னிரண்டு எழுத்துகளும் ஒரு அங்குல அச்செழுத்தில் பொருந்துவது போன்ற அளவுள்ள அச் செழுத்து. 'பிகா' (Pica) வுக்கு மாறானது.

**eliza : எலைசா (ஒரு மென் சாதனம்):** ஒரு உளவியல் முறை மருத்துவரைப் போன்று செயல் படும், ஆரம்பகால இயற்கை மொழியைப் புரிந்து கொள்ளும் நிரலாக்கத் தொடர்.

**ellipse : நீள்வட்டம் :** நேர்க் கோடு ஆக்கப்பட்ட வட்டம் போன்ற வரைகணித உருவம். எல்லா கணினி வரைகலை அமைப்புகளிலும் நீள வட்டத்தை உருவாக்குவது ஒரு தானியங்கி செயல்முறையாகும்.

**ellipsis : முப்புள்ளி :** *1.* ஒரு விவரத்தை எழுதிச் செல்லும் போது அது முற்றுப் பெறாத நிலையில் முப்புள்ளி (...) இட்டு முடிப்பது வழக்கமாகும். முழுவதையும் சொல்லாமல் ஒரு பகுதியை மட்டும் சொல்லி நிறுத்திக்கொள்ளும் போதும் முப்புள்ளி இடுவோம். *2.* விண் டோஸ் பயன்பாடுகளில் பட்டிப் பட்டையில் (Menu Bar) உள்ள விருப்பத் தேர்வுகளில் (Menu Options) முப்புள்ளி இடப்

பட்டதைத் தேர்வு செய்தால் ஓர் உரையாடல் பெட்டி தோற்ற மளிக்கும். 3. நிரலாக்கத்திலும், மென்பொருள் குறிப்பேடு களிலும், ஒரு கட்டளை வரி யிலுள்ள முப்புள்ளி, கட்டளைக் கட்டமைப்பிலுள்ள சில உறுப் புகள் திரும்பத் திரும்ப இடம் பெறுவதைக் குறிக்கும்.

**ELM** : எல்ம்; இஎல்எம் : மின் னணு அஞ்சல் என்று பொருள் படும் Electronic Mail என்பதன் சுருக்கம். யூனிக்ஸ் இயக்க முறைமையில் மின்னஞ்சல் எழுதவும் படிக்கவும் பயன் படும் ஒரு நிரல். எல்ம் நிரல் ஒரு முழுத்திரை உரைத் தொகுப்பானைப் பெற்றுள்ளது. யூனிக்ஸிலுள்ள மெயில் நிரலைக் காட்டிலும் எளிதாகப் பயன் படுத்த முடிகிறது. ஆனால், பைன் (pine) என்ற மின்னஞ்சல் நிரலின் வருகைக்குப் பின் எல்ம் செல்வாக்கு இழந்தது.

**else** : மற்று : பல செயல் முறைப்படுத்தும் மொழி களிலும், அறிவுறுத்தங்களிலும் நிபந்தனையைச் சரிபார்த்து முடி வெடுக்கும் கட்டளை அமைப் பில் பயன்படும் சொல். IF .... THEN ..... ELSE .... ENDIF

**EM** : எம் : அச்செழுத்துருக் கலையில், ஓர் அச்செழுத்தின் அலகு. இது, 'M' என்ற ஆங்கிலத் தலைப்பெழுத்தின் அகலத்திற்குச் சமமானது.

**E-mail** : மின் அஞ்சல் : 'Electronic Mail' என்பதன் குறும்பெயர். கணினி பயன்படுத்துபவர்களுக் கான தகவல் தொடர்பு சேவை. இம்முறையில் ஒரு மையக் கணினி அமைப்புக்கோ அல்லது மின்னணு அஞ்சல் பெட்டிக்கோ செய்திகள் அனுப்பப்பட்டு பின்னர் முகவரியிடப்பட்டவர் அதைப் பெற்றுக்கொள்வார்.

**e-mail address** : மின்னஞ்சல் முகவரி: மூன்று பகுதிகளைக் கொண்டிருக்கும். முதலில் முகவரியாளரின் பெயர். அடுத்து @ என்னும் அடை யாளம். மூன்றாவதாக, இணைய தளப் பெயரைக் கொண்டி ருக்கும். அப்பெயரில் அஞ்சல் வழங்கன் (mail server) கணினி யின் பெயர் மற்றும் களப்பெயர் இடம் பெற்றிருக்கும். (எ-டு) Jenny@md2.vsnl.net.in

ஜென்னி என்பவர் விஎஸ்என்எல் என்ற நிறுவனத் தின் எம்டி2 என்னும் கணினி யில் மின்னஞ்சல் கணக்கு வைத்திருக்கிறார். net என்பது பெருங்களப் பெயர். in என்பது இந்தியா என்னும் நாட்டைக் குறிக்கும் புவிப்பிரிவுக் களப் பெயர். இம்முகவரியை, ஜென்னி

அட் எம்டி2 டாட் விஎஸ் என்எல் டாட் நெட் டாட் இன் என்று உச்சரிக்க வேண்டும்.

**E-mail filter :** மின்னஞ்சல் சல்லடை; மின்னஞ்சல் வடிகட்டி மின்னஞ்சல் கிளையன் (Client) மென்பொருளில் இருக்கும் ஒரு வசதி. வருகின்ற அஞ்சல்களை பொருளடிப்படையில் பிரித்து வெவ்வேறு கோப்புறைகளில் சேமித்து வைக்கும். அன்பரசு மாமாவிடமிருந்து வரும் மடல் களை அன்பரசு என்னும் கோப் புறையில் சேமிக்கலாம். அது மட்டுமின்றி, வேண்டாதவர் களிடமிருந்து வரும் மடல்களை வடிகட்டி நிறுத்திவிடும் சல்லடை வசதியும் உண்டு. balan@yahoo.com என்ற முகவரி யிலிருந்து வரும் மடல்களைப் புறக்கணிக்குமாறு வடிகட்டி அமைக்க முடியும். அல்லது இன்னாரிடமிருந்து வரும் மடல் களை மட்டும் அனுமதிக்கு மாறும் வடிகட்டி அமைக்கலாம்.

**E-mail greeting :** மின்னஞ்சல் வாழ்த்துரை; பாராட்டுரை; வர வேற்பு.

**embedded :** உள்ளிடப்பட்ட விதைத்த; மறைத்த.

**embedded command :** உள்ளிடப் பட்ட நிரல் ; உட்பொதிந்த நிரல்: சொல் பகுப்பியில் ஒன்று அல்லது மேற்பட்ட எழுத்துகள் உரைநடையில் உள்ளே சேர்க் கப்படும். ஆனால் அவை, அச் சிடப்படுவதில்லை. பக்கத்தை முடி அல்லது ஒரு வரிசையை விட்டுச் செல் என்பது போன்ற சில பணிகளைச் செய்யுமாறு அச்சுப் பொறிக்கோ அல்லது சொல் பகுப்பு நிரலாக்கத் தொட ருக்கோ ஆணையிடும்.

**embedded chips :** உட்பொதி சிப்புகள்; உள்ளமைச் சிப்புகள்.

**embedded controller :** உட்பொதி கட்டுப்படுத்தி : கணினியின் சாதனங்களை (நிலைவட்டு போன்றவை) இயக்குகின்ற இணைப்புக் கருவிகள் நுண் செயலிக்கு வெளியே தனிக் கருவியாகவே இருப்பதுண்டு. அப்படி இல்லாமல், அக்கருவி யின் செயல்பாடுகளை செய லியே கவனித்துக் கொள்ளு மாறும் இப்போது மேம்பட்ட செயலிகள் உருவாக்கப்படுகின் றன. கட்டுப்பாட்டு மின்சுற்று நுண்செயலியில் உள்ளமைந் திருக்கும். இந்த மின்சுற்றுப் பலகை, கணினியில் உள் ளிணைக்கப்பட்டிருக்கும்.

**embedded hyperlink :** உட்பொதி மீத்தொடுப்பு : ஓர் உரை ஆவணத்தில் ஒரு வளத்துக்கான மீத்தொடுப்பு உரைகளுக்கிடையே

அமைந்திருத்தல். அல்லது அந்த ஆவணத்திலுள்ள ஒரு பட உருவத்துடன் மீத்தொடுப்பு இணைந்திருக்கலாம்.

**embedded interface** : உட்பொதி இடைமுகம் : ஒரு வன்பொருள் சாதனத்தின் இயக்கி மற்றும் கட்டுப்பாட்டுப் பலகையிலேயே உள்ளிணைக்கப்பட்ட இடைமுகம். இதனால் அச்சாதனத்தை கணினியின் முறைமைப் பாட்டையில் (System Bus) நேரடியாக இணைக்க முடியும்.

**embedded object** : உட்பொதி பொருள்; உள்ளிடப்பட்ட பொருள்.

**embedded system** : உள்ளிடப்பட்ட அமைவு ; பதிக்கப்பெற்ற பொறியமைவு ; உட்பொதிந்த அமைப்பு : ஒரு சாதனத்தைக் கட்டுப்படுத்துவதற்காகப் பயன்படுத்தப்படும் தனி வகைக் கணினி. உந்துஊர்திகள், கருவிகள், வானூர்தி, விண்வெளிக் கலங்கள் ஆகியவற்றில் இது பெருமளவில் பயன்படுத்தப்படுகிறது. செயற்பாட்டு முறை, பயன்பாட்டுச் செயற்பணிகள் ஆகியவற்றை ஒருங்கிணைக்கிற மென்பொருள்.

**embedded version** : உட்பொதி பதிப்பு.

**embedding** : உள்ளிடல் ; உட்பொதித்தல் : உரைநடையின் உள்ளேயே நிரல்களாக சிறப்பு அச்சிடும் நிரல்களைச் சேர்த்தல்.

**embedding styles** : உட்பொதி பாணிகள்.

**emboss** : உந்துவி.

**em dash** : எம் டேஷ் : ஒரு சொற்றொடரின் முறிவை அல்லது குறிக்கீட்டைக் குறிக்கப் பயன்படும் நிறுத்தற்குறி (–). தட்டச்சு அளவீட்டில் அந்தக் கோட்டின் நீளம், சில எழுத்துருக்களில் M என்ற எழுத்தின் அகலத்துக்குச் சமமாக இருப்பதால் இப்பெயர் பெற்றது.

**emergency** : அவசர நிலை.

**emitter** : உமிழி : ஒரு இணைப்பு மின்மப் பெருக்கியில் உள்ள எலெக்ட்ரோடு.

**emitter, character** : வரிவடிவ உமிழி; எழுத்துரு ஒளிர்வி.

**emmitter coupled logic (ECL)** : உமிழி பிணைப்புத் தருக்கம்; ஒளிர்வு இணைவுத் தருக்க முறை : இசிஎல் (ECL) என்பது Emmitter Coupled Logic' என்பதன் குறும்பெயர். அதிவேகக் கணினிகளில் பெரும்பாலும் பயன்படுத்தப்படும் ஒருவகைத் தருக்கமுறைச் சுற்று வழி.

**e-money or emoney** : மின் பணம் : மின்னணுப் பணம் என்பதன் சுருக்கம். இணையத்தில்

பரிமாறிக் கொள்ளப்படும் பணத்திற்கான பொதுப்பெயர்.

**emotag** : உணர்ச்சி ஒட்டு; உணர்ச்சிக் குறிச்சொல் : இணைய ஆவணங்களில், வலைப் பக்கங்களில் ஏராள மான ஹெச்டிஎம்எல் ஒட்டுகள் இணையாகப் பயன்படுத்தப் படுகின்றன. <Body>... <Body>, <TR>... </TR>, என்பது போல அவை அமையும். அது போலவே ஒரு மின்னஞ்சலில் அல்லது செய்திக்குழுக் கட்டுரைகளில், கட்டுரையாசிரி யர் உணர்ச்சிகளை வெளிப்படுத் தும் ஒட்டுகளை அமைத்துக் கொள்ளலாம். இவையும் ஹெச்டி எம்எல் ஒட்டுகள் போலவே அடைப்புக் குறிகளுக்குள் முன் ஒட்டு பின் ஒட்டு என இணை யாக அமையும். இரண்டுக்கும் நடுவில் சொல், சொல் தொடர் இருக்கலாம். (எ-டு). (joke) you didn't think that would really be a joke here, did you? (joke) சில ஒட்டுகள், ஒற்றையாகவும் அமையும் (எ-டு) (gris)

**emotion** : உணர்ச்சிச் சின்னம் : ஒரு குறித்தொடர் பக்கவாட்டி லிருந்து பார்த்தால் ஒரு குறிப் பிட்ட உணர்ச்சியை வெளிப் படுத்தும் முக பாவனைபோலத் தோற்றமளிக்கும். பெரும் பாலும் இவ்வகை உணர்ச்சிச் சின்னங்கள் மின்னஞ்சல் அல்லது செய்திக் கட்டுரைகளில் ஒரு சொல்தொடரை அடுத்து கருத்துரை போல அமையும். (எ-டு). :-) :-C :-( ) :-1 :-S

**emphasized** : இரட்டை அச்சிடும் முறை : ஒவ்வொரு புள்ளிக்குறியும் இருமுறை அச்சிடப்படும் அச்சு முறை. இதில் , இரண்டாவது அழுத் தம் முதலாவது அழுத்தத்திற்கு சற்று வலப்புறமாக இருக்கும்.

**employment centre** : வேலை தேடு மையம்; வேலை வாய்ப்பு மையம்.

**empty lines** : வெற்று வரிகள்.

**empty shell** : வெற்று உறை பொதி.

**empty string** : காலியான சரம் ; வெற்றுச் சரம் : எழுத்துகள் எதுவும் இல்லாத சரம். இல்லாச் சரம் என்றும் அழைக்கப்படும்.

**EMS** : இஎம்எஸ் : விரிவாக்க நினைவக வரன்முறை என்ற பொருள்படும் Expanded Memory Specification என்ற தொடரின் தலைப்பெழுத்துச் சுருக்கம். இன்டெல் 80×86 நுண்செயிலிச் சொந்தக் கணினிகளில் மெய்ம் முறை வரையெல்லையான 1 மெகா பைட்டு வரம்பைத் தாண்டி நினைவகத்தை விரி வாக்கும் நுட்பம். நுண் செயலி களின் முந்தைய பதிப்புகளில்,

இஎம்எஸ் என்பது எல்லையைத் தாண்டி கூடுதல் நினைவகத்தை அணுக ஏதுவாக கூடுதலான 16 கேபி நினைவகச் சிப்புகள் பொருத்தப்பட்டு மென்பொருள் மூலம் அவற்றை அணுக வழி செய்யப்பட்டிருந்தன. இன் டெலின் பிந்தைய பதிப்புகளில் இஎம்எஸ் என்பது இஎம்எம் 386 (எம்எஸ் டாஸ் 5.0) என்பது போன்று மென்பொருள் நினை வக மேலாளர்களாக இருந்தன. இப்போதைய கணினிகளில் 1எம்பி என்கிற வரம்பு இல்லை. 80386 மற்றும் மேம்பட்ட செயலிகளில் செயல்படும் கணினிகளில், பாதுகாக்கப் பட்ட முறையில் பழைய பயன் பாடுகளை இயக்க இஎம்எஸ் பயன்படுகிறது.

**em space** : எம் இடவெளி : ஒரு தட்டச்சு அளவீட்டு அலகு. ஒரு குறிப்பிட்ட எழுத்துருவின் உரு வளவைக் குறிப்பதாக இருக் கும். பெரும்பாலான எழுத் துருக்களில் இந்த இடவெளி பெரிய M எழுத்தின் அகலத் துக்கு சமமாகும். இதனாலேயே இப்பெயர் ஏற்பட்டது.

**emulate** : போலச்செய் : 1. மின்னணு இணைப்பின் மூலம் ஒரு வன்பொருள் அமைப் பைப் போல இன்னொன்று செயல்படுத்தல். இதில் போலச் செய்யும் அமைப்பு அதே தக வல்களை ஏற்றுக்கொண்டு அதே நிரலாக்கத் தொடர்களைச் செயல்படுத்தி மூல அமைப்பில் கிடைத்தது போன்ற அதே முடிவுகளையே கொண்டு வரும். 2. மற்றொரு மென் பொருள் அல்லது வன்பொருள் செயலைப் போலச் செய்யும் நிரலாக்கத் தொடர் அமைத்தல்.

**emulation** : போன்மம் ; போலச் செய்தல்.

**emulation mode** : முன்மாதிரி முறை; போன்ம முறை : ஒரு கணினி ஓர் அயல் செயல் முறையை முன்மாதிரியாக இயக்கும்போது ஏற்படும் செயற்பாட்டு நிலை.

**emulator** : பின்தொடர்பவர் ; போன்மி : ஒருவகையான கணினி அமைப்புக்காக எழுதப்பட்ட நிரலாக்கத்தொடர் வேறு ஒரு வகையான கணினியில் செயல் பட அனுமதிக்கும் சாதனம் அல்லது நிரலாக்கத்தொடர்.

**emulsion laser storage** : எமுல் சன் லேசர் சேமிப்பு : ஃபிலிமில் லேசர் கற்றை மூலம் சூடாக்கித் தகவலைப் பதியும் முறை.

**EN** : என் : அச்செழுத்துருக் கலையில், 'எம்' என்ற எழுத் தின் அகலத்தில் பாதியளவுக்குச் சமமான ஓர் அலகு. ஓர் 'என்'

என்பது , ஓர் எண்ணிலக்கத்தின் அகலமாகும்.

**enable : இயலச் செய் ; இயலு மைப்படுத்து :** ஒரு கணினி சாதனம் அல்லது வசதியை இயக்குவதற்கு ஒரு பொத் தானை அழுத்துதல்.

**encapsulated postscript : பொதிவுப் பின்குறிப்பு :** ஆவணங் களுக்கும் ஒளியியல் முன் னோக்கு உருக்காட்சிகளுக்கு மான பின்குறிப்புக் குறியீட்டில் அடங்கியுள்ள பின்குறிப்புக் கோப்பு உருவமைவு. பின் குறிப்புக் குறியீடு, ஒரு குறிப்பு அச்சடிப்பானை நேரடியாக இயக்குகிறது. முன்னோக்கு உருவமைவுகள், திரையில் உருக் காட்சிகளைக் கையாள உதவு கின்றன. DOS, OS/2 கோப்புகள் இதனைப் பயன்படுத்துகின்றன.

**encapsulation : பொதிவுறை யாக்கம் :** பொருள் சார்ந்த செயல் வரைவுகளில் தரவுகளை யும், செயல்கூறுகளையும் ஒரு பொருளுக்குள் தனிமையாக்கு தல். இது, செயல்முறையில் வேறெங்கும் சிக்கல் ஏற்படாத வாறு மாற்றமைவு செய்ய அனு மதிக்கிறது. செய்தித் தொடர் பில், சட்டகத் தலைப்பினையும் தரவுகளையும் ஓர் உயர் நிலைப் படியிலிருந்து, ஒரு தாழ்நிலைப் படியின் தரவு சட்டகத்தினுள் நுழைத்தல் இதற்கு எடுத்துக் காட்டு.

**enchancements : மேம்படுத்தல் கள் ; மேம்பாடுகள் :** கணினி அல்லது மென்பொருள் அமைப் பிற்கு வன்பொருள் அல்லது மென்பொருள் முன்னேற்றங் கள், கூடுதல்கள், அல்லது புதுப்பித்தல்கள் செய்தல்.

**encipher : மாற்று :** பழைய மாற்றல்களைச் சரிசெய்யாவிட் டால் பயன்படுத்த இயலாத நிலையில் உள்ள தரவுகளை மாற்றுதல்.

**enclosure : தங்குமிடம் ; கூடு : உறை :** மின்சார அல்லது மின் னணுச் சாதனங்கள் வைக்கப் படும் இடம்.

**encode : குறியீடு அடை : குறி யீடாக்கல் :** கணினிக் கருவிக்கு ஏற்கும் வண்ணம் தகவல்களை ஒரு குறியீட்டு வடிவத்தில் மாற்றல்.

**encoder : குறியீட்டுப்பொறி ; குறியீடு ஆக்கி :** மனிதர் இயக் கும் விசைப்பலகை மூலமோ அல்லது வேறு குறியீட்டில் பதிந்துள்ள தரவுகளி லிருந்தோ காகித நாடா போன்ற எந்திரம் படித்தறியும் வெளி யீட்டு வடிவில் உருவாக்கித் தரும் சாதனம்.

**encrypt : மறையாக்கு.**

**encrypted message** : உரு மறைந்த தரவு ; மெய்யுரு மாற்றிய தகவல்.

**encryption** : இரகசியக் குறியீடு அமைத்தல் ; மறைக் குறியீடாக்கல் ; உருமாற்றியமைத்தல் : மீண்டும் மாற்றியமைக்கும் விசையால் மாற்றினால் ஒழிய புரியாத வகையில் தரவுகளைக் குறியீடாக அமைத்தல்.

**encryption algorithm** : மறையாக்கக் கணிமுறை; மறையாக்கப் படிமுறை.

**encryption key** : உருமாற்றுத் திறவு கோல்.

**encryption process** : உருமாற்று முறை.

**encyclopedia** : கலைக்களஞ்சியம்.

**end** : முடிவு : ஒரு செயல்முறையின் முடிவில் நிறைவேற்றப் படவேண்டிய, அறிக்கைகளின் முடிவினைக் குறிக்கிற ஒரு கட்டளைச் சொல்.

**end around carry** : தொகு எண் சுற்றிய முனை : மிக முக்கிய இலக்கத்தின் இடத்திலிருந்து, மிகக்குறைந்த முக்கியத்துவமுடைய இலக்க இடத்திற்குக் கொண்டு செல்லுதல்.

**end around shift** : முடிவு சுற்று நகர்வு; ஓரச் சுழல் நகர்வு : கணினிச் செயல்பாட்டின்போது நுண்செயலியின் பதிவகங்களில் துண்மிகளின் நகர்வு நிகழும். (எ-டு): 01000101 என்ற துண்மிகளில் ஒருமுறை இடப்புற நகர்வு நேர்ந்தால், 10001010 என்ற விடை கிடைக்கும். இடப்புறமுள்ள ஒரு துண்மி நீங்கி வலப்புறம் 0 என்னும் துண்மி சேரும். 10101100 என்பதில் வலப்புறமாக நகர்வு நிகழ்ந்தால் 01010110 என்பது கிடைக்கும். இவ்வாறு ஓரமாய் இருக்கும் துண்மி நீங்காமல் அது மறுமுனையில் சென்று சேருவதை முடிவு சுற்று அல்லது ஓரச் சுழல் நகர்வு எனலாம். 00101001 என்பது வலது ஓரச் சுழல் நகர்வில் 10010100 என்றாகும். அதாவது வலது ஓரத்திலுள்ள 1 என்ற துண்மி நகர்ந்து வெளியேறி அது இடப்புறம் வந்து ஒட்டிக் கொள்ளும்.

**en dash** : என் டேஷ் : 1990-92 என்று ஆண்டுகளைக் குறிக்கவும். இரட்டை அடைசொல் அல்லது இரட்டைச் சொற்களிலும் (pre-civil war) இடம் பெறும் - என்னும் நிறுத்தற்குறி. தட்டச்சு எழுத்தின் உருவளவுகளை அளவீடு செய்யும் அலகு. என்-இடவெளி எம்-இடவெளியில் பாதி. என்-இடவெளி அளவில் அமைந்த-, என் டேஷ் ஆகும்.

**end capture** : பிணைப்பை விடு.

**end effector : 'முடிவு' உரு வமைவுச் சாதனம் :** எந்திர மனிதனைக் கையாளும் சாதனத்துடன் இணைந்த கரம். இது 'முடிவு' உருவமைப்புச் சாதனம் அல்லது கைப்பிடி என்று அழைக்கப்படுகிறது.

**endif : என்டிஃப் :** நிபந்தனையைச் சரிபார்த்து முடிவெடுக்கும் கட்டளை அமைப்பில் இடம்பெறும் இறுதிச் சொல். IF ... THEN .... ELSE ..... ENDIF.

**endless loop : முடிவற்ற வளையம் ; முடிவிலாக் கணினி :** இடையறாது திரும்பத்திரும்ப நிறைவேற்றப்படுகிற அறிவுறுத்தங்களின் வரிசை. இது, செயல்முறையில் ஒரு பிழையினால் உண்டாகலாம் அல்லது வேண்டுமென்றே ஏற்படுத்தப் படலாம்.

**end key : 'முடிவு' விரற்கட்டை அல்லது விசை :** ஒரு சறுக்குச் சட்டத்தைக் கோட்டின் முடிவுக்கு சில செயல்முறைகள் மூலம் திரையின் அல்லது கோப்பின் அடிப்பகுதிக்கு அல்லது அடுத்த சொல்லுக்கு நகர்த்துவதற்குப் பொதுவாகப் பயன்படுத்தப்படும் விசைப் பலகையிலுள்ள விசை.

**end mark : முடிவுக் குறி; இறுதிக் குறி:** ஒரு கோப்பு அல்லது ஒரு சொல் செயலி ஆவணம் போன்ற ஏதேனும் ஒன்றின் இறுதியைக் குறிப்பிடப் பயன்படுத்தும் குறியீடு.

**end note : முடிவுக் குறிப்பு.**

**end-of-block (EOB) : தொகுதி முடிவு :** ஒரு தொகுதியாக உள்ள நிரல் அல்லது நிரலாக்கத் தொடர் முடிதல். இஓபி (EOB) என்ற குறும்பெயராலும் அழைக்கப்படும்.

**end-of-file : கோப்பு முடிவு :** ஒரு குறிப்பிட்ட அளவு தரவுகள் முடிதல் அல்லது முடியும் இடம். மின்காந்தக் கோப்புகளில் இத்தகைய இடத்தைக் குறிப்பிட கோப்பின் முடிவுக் குறியீடுகள் பயன்படுத்தப்படுகின்றன.

**end of file lable : கோப்பு முடிவுக் குறியீடு முகப்புச் சீட்டு; கோப்பு முடிவு அடையாளக் குறி.**

**end-of-file mark : கோப்பு முடிவுக் குறி :** Ctrl மற்றும் Z விசைகளை ஒரு சேர அழுத்துவதன் மூலம் பெறப்படும் 'Z' எழுத்து. DOS இதனை எதிர்நோக்கும்போது அதன் பிறகு ஒரு தரவு கோப்பில் வேறெதையும் படிப்பதில்லை. Ms-dosஇன் கீழ் பணியாற்றும்போது. F6-ஐ அழுத்துவதன் மூலம் இந்த எழுத்து உண்டாக்கப்படுகிறது.

**end of file routine** : கோப்பு முடிவு நிரல்; கோப்பு முடிவு-வாலாயம்.

**end-of-job (EOJ)** : பணி முடிவு ; வேலை முடிவு : ஒரு பணி முடிந்து விட்டது என்பதைச் செயல்முறைக்குத் தெரிவித்து, மற்றொரு நடவடிக்கையைத் தொடங்கும்படி கூறும் ஒருநிலை.

**end-of-message (EOM)** : செய்தி முடிவு (இஓஎம்) : ஒரு செய்தியின் முடிவுறுத்தம்.

**end-of-page halt** : பக்கமுடிவில் நிறுத்தம் : வெளிப்பாட்டின் முடிவுற்ற ஒவ்வொரு பக்கத்தின் முடிவிலும் அச்சடிப்பியை நிறுத்தி, மற்றொரு தாளைச் செருகுவதற்கு அனுமதிக்கிற ஓர் அம்சம்.

**end of page routine** : பக்க முடிவு வாலாயம்; பக்க முடிவு நிரல்கூறு.

**end of reel block** : சுருள் தொகுதி முடிவு.

**end of reel lable** : சுருள் முடிவு அடையாளக் குறி; சுருள் முடிவு முகப்பு அடையாளம்.

**end-of-run** : இயக்கம் முடிவுறல்.

**end-of-tape marker** : நாடா முடிவுக் குறி ; நாடா முடிவுக் குறியீடு : அனுமதிக்கப்பட்ட ஒத்திசைவுப் பகுதியின் முடிவினைப் பயன்படுத்துபவருக்குக் குறித்துக் காட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு காந்த நாடாவிலுள்ள குறியீடு.

**end-of-text** : உரைநடையின் முடிவு; உரை முடிவு ; வாசக முடிவு : செய்தியின் கடைசி எழுத்து இதற்கு முந்தைய எழுத்து தான் என்று பெறுகின்றவன் பொருளுக்கு உணர்த்தும் அனுப்புதல் கட்டுப்பாட்டு எழுத்து.

**end-of-transmission** : அனுப்பீட்டு முடிவு ; செலுத்தல் முடிவு: ஓர் அனுப்பீடு முடிவுற்று விட்டது என்பதைக் குறித்துக்காட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு கட்டுப்பாட்டு எழுத்து.

**end of transmission block** : அனுப்பீட்டுத் தொகுதி முடிவு : ஒரு தரவு தொகுதியின் முடிவினைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் ஒரு செய்தித் தொடர்புக் கட்டுப்பாட்டு எழுத்து.

**endogenous** : தண்டு அகவலளர்வு; அகவளர்ச்சி.

**end page** : இறுதிப் பக்கம்.

**end points** : முடிவு முனைகள் ; நுழைவிடங்கள் : வரைகலையில், ஒரு கோட்டின் இரு முனைகள். இரு பரிமாண

வரைகலையில், முடிவு முனை ஒவ்வொன்றும் x, y அச்சுகளின் மீதான ஆயத்தொலைவுகளைக் குறிக்கும் இரு எண்கள். முப்பரி மாண வரைகலையில் முடிவு முனை ஒவ்வொன்றும் x,y,z அச்சுகளின் மீதான ஆயத் தொலைவுகளைக் குறிக்கும் மூன்று எண்களினாலானது.

**end statement** : முடிவுறுத்தல் கட்டளை.

**end-to-end control** : இறுதி முடிவு கட்டுப்பாடு.

**end user** : இறுதிப் பயனாளர் : கணினி அமைப்பையோ அதன் வெளியீட்டையோ பயன்படுத் தும் ஒரு நபர்.

**end-user computing** : இறுதிப் பயனாளர் கணிப்பணி.

**end user license agreement** : இறுதிப் பயனாளர் உரிம ஒப் பந்தம் : ஒரு மென்பொருள் தயாரிப்பாளருக்கும், அந்த மென்பொருளை விலைக்கு வாங்கிப் பயன்படுத்துபவருக் கும் இடையே வினியோகம், மறு விற்பனை, கட்டுப்படுத்தப் பட்ட பயன்பாடு போன்றவை தொடர்பாக ஏற்படுத்திக் கொள் ளும் சட்டமுறையான ஒப்பந்தம்.

**end-user system** : இறுதிப் பயனாளர் முறைமை.

**energy star** : ஆற்றல் நட்சத்திரம்; ஆற்றல் விண்மீன் : கணினியை இயக்கி வைத்து விட்டுப் பணிபுரியாமல் இருக் கும் நேரத்திலும் காட்சித்திரை, நிலைவட்டு, நுண்செயலி, தாய்ப்பலகை ஆகியவை மின்சக்தியைச் செலவழித்துக் கொண்டுதான் இருக்கின்றன. இதனால் வீணாகும் மின்சாரம் ஏராளம். அமெரிக்க நாட்டில் அனைத்துக் கணினிகளிலும் பணிபுரியாதபோது வீணாகும் மின்சாரத்தை சேமிக்க முடிந் தால் மூன்று பெரும் அணுமின் நிலையங்களை மூடிவிடலாம் என்று ஒரு கணக்கெடுப்புக் கூறுகிறது. இந்நிலையை மாற்ற அமெரிக்க அதிபர் கிளின்டன் சுற்றுச்சூழல் பாதுகாப்பு முகமையிடம் ஒரு மாற்றுவழி காணச் செய்தார். அவர்களின் திட்டப்பணி அடிப்படையில், கணினியில் பணியாற்றாதபோது மிகக்குறைந்த அளவு மின் சாரமே செலவாகுமாறு கணினி உற்பத்தியாளர்கள் பணிக்கப் பட்டனர். கணினி இயக்க நிலை யில் பணிபுரியாதபோது தாய்ப் பலகை, நுண்செயலி, நிலை வட்டு, காட்சித்திரை ஆகியவை 50 விழுக்காடு மின்சாரத்தை மட்டுமே எடுத்துக் கொள்ளு மாறு கணினிகள் வடிவமைக்கப் பட்டன. காட்சித்திரை குறிப்

பிட்ட நேரம்வரை பயன் படுத்தப்படாவிட்டால் குறைந்த மின்சாரத்தை மட்டுமே எடுத்துக் கொண்டு உறக்க நிலைக்கு மாறிவிடும். இது போன்ற கணினி, பசுமைக் கணினி (Green PC) என்று அழைக்கப்படுகின்றது. ஆற்றல் நட்சத்திர ஒட்டிகளை (Stickers) கொண்டிருக்கும்.

**engine** : எந்திரம் : ஒரு தரவு ஆதாரத்தைச் செயற்படுத்துகிற ஓர் ஊர்தியின் இயக்குவிசையாக விளங்கும் ஒரு செய்முறைப் படுத்தியின் மற்றொரு பெயர். வரைகலைச் செய்முறைப் படுத்தி போன்ற தனிவகைச் செய்முறைப்படுத்தி. எடுத்துக் காட்டு : தரவுத் தள எந்திரம். வரைகலை எந்திரம். செய்முறைப் படுத்தியின் கொச்சை வழக்கு.

**engineering workstation** : பொறியியல் பணிநிலையம்.

**engineering units** : பொறியியல் அலகுகள் : மாறிலி செயல் முறைக்குப் பயன்படுத்தப்படும் அளவைமுறை அலகுகள்.

**enhanced graphics adapter (EGA)** : மேம்பட்ட வரைகலை ஏற்பி; மேம்பட்ட வரைவியல் தகவி.

**enhanced graphics display** : மேம்பட்ட வரைகலைக் காட்சி.

**Enhanced Integrated Drive Electronics EIDE** : மேம்பட்ட ஒருங்கிணை இயக்க மின்னணு வியல் (இஐடிஇ) : ஒரு வட்டினை இயக்கக்கூடிய கட்டுப்பாடு மின்சுற்றுகள் உள்ளிணைக்கப்பட்ட வட்டு இயக்க வடிவமைப்பான ஐடிஇ தரமுறையின் விரிவாக்கமே இஐடிஇ. இவை, முறைமைப் பாட்டையில் (system bus) தரப்பட்ட இடை முகங்களை இணைக்க உதவுகின்றன. முன்னில்லாத வெடிப்புத் தரவு பரிமாற்றம் - நேரடித் தரவு அணுக்கம் போன்ற கூடுதல் சிறப்புக் கூறுகள் உள்ளன. அது மட்டுமின்றி இஐடிஇ இலக்கம் 8.4 கிகாபைட்டுகள் வரை ஏற்கும். (ஐடிஇயில் 528 மெகா பைட்டு வரைதான்). ஏடீஏ-2 இடைமுகப்பை ஏற்கும். வினாடிக்கு 13.3 எம்பி தரவு பரிமாற்றம் சாத்தியம் (ஐடிஇ யில் 3.3 எம்பி தான்). ஸ்கஸ்ஸி (SCSI) இயக்கங்கள் அளவுக்குத் திறனுடையது. ஆனால் அவற்றைவிட விலை மலிவானது.

**enhanced keyboard** : உயர்த்திய விசைப்பலகை : 101 விரற்விசைகள் உள்ள IBM விசைப்பலகை. இது, PC, AT விசைப்பலகைக்கு பதிலாக உருவாக்கப்பட்டது . இதில் முதலிலிருந்து எண்



உயர்த்திய விசைப் பலகை

மான/சறுக்குச்சட்ட விசை திண்டுக்கும் எழுத்துவிசைகளுக்குமிடையில் விசைத் தொகுதி ஒன்று அமைந்திருக்கும். மேலும் f11, f12 என்ற இரு செயற்பணி விசைகள் கூடுதலாக இருக்கும்.

**enhanced parallel port :** மேம்பட்ட இணைநிலைத் துறை : அச்சுப்பொறி, புற வட்டியக்ககம், நாடா இயக்ககம் போன்ற புறச் சாதனங்களை இணைப்பதற்குப் பயன்படுத்தப்படும் ஓர் இணைப்புத்துறை. மேம்படுத்தப்பட்ட இணை நிலைத் துறைகள் விரைவான தரவு பரிமாற்றத்துக்கு மிகுவேக மின் சுற்றுகளைப் பயன்படுத்துகின்றன. தரவுத் தொடர்புக்கான கட்டுப்பாட்டுத் தடங்கள் ஒரு துண்மிக்கு ஒன்றாக உள்ளன. ஒரேநேரத்தில் அனைத்துத் தடங்களிலும் தரவு துண்மிகள் ஒன்றாகப் பயணம் செய்கின்றன.

**enhanced serial port :** மேம்பட்ட நேரியல் துறை : சுட்டி, புற இணக்கி போன்ற மிகுவாகப் பயன்படுத்தப்படும் புறச் சாதனங்களை இணைக்கப் பயன்படும் இணைப்புத் துறை. மேம்படுத்தப்பட்ட நேரியல் துறைகள் விரைவான தரவு பரிமாற்றத்துக்கு 16550-வகை அல்லது புதிய மிகுவேக யுஏஆர்டி மின் சுற்றுகளைப் பயன்படுத்துகின்றன. தரவு ஒவ்வொரு துண்மியாக ஓர் இணைக்கம்பியில் ஒரு திசையில் மட்டுமோ, இரு திசையிலுமோ பயணம் செய்கின்றன.

**Enhanced Small Device Interface (ESDI) :** மேம்பட்ட சிறுசாதன இடைமுகம்.

**ENIAC :** ஈனியாக் : Electronic Numerical Integrator and Calcu-

lator என்பதன் குறும்பெயர். முழுவதும் மின்னணு மயமான முதல் பேரளவு கணினி. 1946இல் பென்சில்வேனியாவில் ஜான் மாக்லியும் ப்ரெஸ்பர் எக்கர்டும் உருவாக்கியது. 15,000 சதுர அடி அகலமாகவும், 30 டன் எடையுடனும், 18,000 வெற்றிடக்குழாய்களுடனும் இருந்த இதற்கு 130 கிலோ வாட் மின்சாரம் தேவைப்பட்டது. ஈனியாக் ஒரு நொடிக்கு 5,000 கட்டளைகளைச் செய்தது. தானியங்கி கணினி வளர்ச்சியில் முன்னோடியாகக் கருதப்பட்ட ஈனியாக் 9 ஆண்டு இயக்கத்துக்குப்பின் 1955இல் ஓய்வு பெற்றது.

**enlarge : பெரிதாக்கு :** மைக்ரோசாஃப்ட் விண்டோஸ் மற்றும் ஏனைய வரைகலைப் பணித்தளங்களில் ஒரு சாளரத்தின் உருவளவைப் பெரிதாக்குதல்.

**enlarge font : பெரிதாக்கிய எழுத்துரு; பெரிய எழுத்துரு.**

**E notation : E எண்முறை :** மிகப்பெரிய மற்றும் மிகச்சிறிய எண்களைக் குறிக்கப் பயன் படுத்தப்படும் எண்முறை. ஒரு மான்டிசா மற்றும் மடங்காக்கல் ஆகிய இரண்டு பகுதிகள் கொண்டது.

**enquiry : விசாரணை.**

**enquiry character : விசாரணை எழுத்து:** செய்தித்தொடர்புகளில் உள்ள ஒரு கட்டுப்பாட்டு எழுத்து. இது ஏற்பு நிலையத்திலிருந்து ஒரு பதிலை வேண்டுகிறது.

**en space : என்-இடவெளி :** ஒரு குறிப்பிட்ட எழுத்துருவில் பாயின்ட் அளவில் பாதி அகலம் கொண்ட ஓர் அளவீட்டு அலகு.

**ensure capacity : கொள்திறன் உறுதி செய்.**

**enter : நுழை பதவி; உள்ளீடு.**

**enter key : நுழைவு விசை ; நிரைவேற்று விசை; முடிப்பு :** விசைப் பலகையில் இருக்கும் மிக முக்கியமான விசை. கணினிக்கு ஒரு கட்டளையைத் தந்து அதனை நிறைவேற்றச் செய்ய இந்த விசையைத்தான் அழுத்த வேண்டும். உரையைத் தட்டச்சு செய்து ஒரு வரியை முடித்து வைக்க இந்த விசையைத் தட்ட வேண்டும். சொல் செயலி நிரல்களில் ஒரு பத்தியை முடித்த பிறகு இவ் விசையை அழுத்த வேண்டும்.

**enternal sort : புறநிலைப் பகுப்பி:** குழுமம் முழுவதும் மிகப்பெரிதாக இருக்கும்போது, பகுக்கப்பட்ட இனங்களின் இடைநிலைக் குழுமங்களைச் சேமித்துவைக்கப் பயன்படுத்தப்

படும் ஒரு புறச்சேமிப்புச் சாதனம் உள்ள ஒரு பகுப்பி.

**enterprise computing : தொழிலகக் கணிப்பணி; தொழில்துறை கணினிச் செயலாக்கம் :** பெருந் தொழில் நிறுவனங்களில் கணினிப் பிணையங்கள் அல்லது பல்வேறு பிணையங்களின் ஒருங்கிணைப்பு மூலம் கணினிச் செயல்பாடுகளை மேற்கொள்ளல். பெரும்பாலும் அத்தகைய பிணையங்கள் வேறுபட்ட பணித்தளம், வேறுபட்ட இயக்க முறைமை/நெறிமுறைகளைக் கொண்டவையாகவும், வேறுபட்ட பிணையக் கட்டமைப்புகளைக் கொண்டவையாகவும் இருப்பதுண்டு.

**enterprise data : தொழில் முனைவுத் தரவு :** அமைவனம் முழுவதிலுமுள்ள பல பயனாளர்கள் பகிர்ந்து கொள்ளும் மையப்படுத்திய தரவுகள்.

**enterprise model : தொழிலக மாதிரியம்.**

**enterprise network : தொழிலகப் பிணையம் :** பெருந் தொழிலகங்களில் பயன்படுத்தப்படும் கணினிப் பிணையம் அல்லது பிணையங்களின் ஒருங்கிணைப்பு. அத்தொழில் நிறுவனத்தின் பல்வேறு கணினிச் செயலாக்கத் தேவைகளை நிறைவு செய்வதாக அது இருக்கும். இத்தகைய பிணையம் பெரும்பாலும் விரிந்து பரந்த புவி எல்லைகளைக் கொண்டிருக்கும். வேறுபட்ட பணித்தளம், இயக்க முறைமை/நெறிமுறை/பிணையக் கட்டமைப்புக் கொண்டவையாக இருக்கும்.

**enterprise scheme : தொழிலகத் திட்டமுறை.**

**enter/return key : நுழை/திரும்பு விசை.**

**entire column : நெடுக்கை முழுதும்.**

**entire row : கிடக்கை முழுதும்.**

**entity : உட்பொருள் :** ஒரு குறிப்பிட்ட பயன்பாட்டுக்கு உட்பொருளைக் கொண்டுள்ள ஒரு பொருள்.

**entity life history : உட்பொருள் வாழ்க்கை வரலாறு.**

**entity model : உட்பொருள் மாதிரியம்.**

**entity relationship model : உட்பொருள் உறவுமுறை மாதிரியம்.**

**entity sub type : உட்பொருள் துணை வகை.**

**entity type : உட்பொருள் வகை :** ஒரு தரவுத் தளத்தில், உள்ள ஒரு வகைக் கோப்பு. எடுத்துக்காட்டு : வாடிக்கையாளர் கோப்பு ; உற்பத்திப் பொருள் கோப்பு.

**entropy** : செறிவளவு : தரவு செறிவாக்கத்தில், ஒரு பொருளிலுள்ள மிகையில்லாத, செறிவாக்கம் செய்ய முடியாத தரவுகளின் அளவு.

**entry** : நுழைவு ; உள்ளிடு : மின்னணு விரிதாளில், ஒரு குறிப்பிட்ட அறையில் உள்ள தகவல் அல்லது மதிப்பு.

**entry point** : நுழைவுப் பகுதி ; நுழைவிடம் : ஒரு வழக்கச் செயலின் பகுதி. வேறொரு வழக்கச் செயலில் இருந்து இதற்கு கட்டுப்பாடு அனுப்பப்படும். மாற்றல் முகவரி என்றும் குறிப்பிடப்படும். நிரலாக்கத் தொடரில் முதலில் செயல்படுத்தப்படும் நிரல்.

**enumerate** : கணக்கீடு : ஒன்றன் பின் ஒன்றாகக் கணக்கிடுதல் அல்லது பட்டியலிடுதல். கணக்கிட்ட தரவு வகையானது, ஒரு மாறியல் மதிப்புருவின் நிகழ் தகவு மதிப்பளவுகள் அனைத்தின் ஒரு பட்டியலை வரையறுக்கிறது.

**enumerated data type** : எண்ணிட்ட தரவு இனம்; பெயர் மதிப்பெண் தரவு இனம் : கணினி மொழிகளில் பல்வேறு தரவு இனங்கள் கையாளப்படுகின்றன. முழுஎண் (Integer) மெய் எண் (Real), எழுத்து (Character), சரம் (String), தேதி (Date), ஆமில்லை (Boolean) போன்றவை அவற்றுள் சில. சில வேளைகளில் 1,2,3.... போன்ற எண் மதிப்புகளுக்குப் பதில் Sun, Mon, Tue என்றோ, Jan, Feb, Mar ... என்றோ பெயர் மதிப்புகளைப் பயன்படுத்துவது நிரலாக்கத்தில் எளிதில் புரியும்படி இருக்கும். அதுபோன்ற சூழ்நிலைகளில் பெயர் மதிப்புகளைக் கொண்ட எண் விவர இனத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம். (எ-டு). enum day (Sun, Mon, Tue ...) enum month (Jan, Feb, Mar ...) இங்கே, Sun, Mon ... Jan, Feb, ... ஆகியவை பெயர் மதிப்பாக இருந்த போதிலும், கணினி அவற்றை 0,1,2,3 என்றே எடுத்தாளும்.

**enumeration** : கணக்கிடுதல் : முறையாக உருவாக்கிய ஒரு பட்டியல்.

**envelope** : உறையீடு : ஒரு குறிப்பிட்ட செயற்பாட்டின் அதிர்வெண்களின் வீச்செல்லை. தனியொரு அலகாகத் தொகுக்கப்பட்டுக் கையாளப்படும் துணுக்குகளின் அல்லது இனங்களின் குழுமம்.

**envelopes and lables** : உறைகளும் முகப்புச் சீட்டுகளும்; உறைகளும் சட்டைகளும்; உறைகளும் முகவரிச் சிட்டைகளும்.

**environment** : சூழ்நிலை ; சூழல்: கணினிப் பின்னணியில் நேரப் பங்கீட்டுச் சூழ்நிலை போன்ற இயக்க முறையைக் குறிப்பிடு கிறது. வெப்பநிலை, ஈரப்பதம் போன்றவற்றை இது அவ்வள வாகக் குறிப்பிடுவதில்லை. ஆனால், இரண்டு வகையான சூழ்நிலையும் கணினி இயக்கத் தின் திறனைப் பாதிக்கக் கூடியவை.

**environment division** : சூழல் பகுதி : கோபால் நிரலாக்கத் தொடரின் நான்கு பகுதிகளில் இரண்டாவது பகுதி.

**environment variable** : சூழல் மாறியல் மதிப்புரு : DOS சூழல் இடைவெளியிலுள்ள எழுத்து களின் ஒரு குழுமம். இதற்கு ஒரு மதிப்பளவு குறித்தளிக்கப் படுகிறது.

**EOB** : இஓபி : End of Block என் பதன் குறும்பெயர்.

**EOF** : இஓஎப் : கோப்புறுதி : End Of File என்பதன் குறும்பெயர். ஒரு கோப்பில் உள்ள எல்லா பதிவேடுகளும் செயலாக்கம் செய்யப்பட்டுவிட்டபின், கோப் பின் இறுதிநிலையை கணினி அடைந்து விட்டதாகப் பொருள்.

**EOF exception** : ஈஓஎப் விதி விலக்கு.

**EOJ** : இஓஜே : End of Job என் பதன் குறும்பெயர்.

**EOLN** : இஓஎல்என் : End of line என்பதன் குறும்பெயர். ஒருவரி யில் உள்ள தரவுகள் முடிவதைக் குறிப்பிடும் கொடி. EOL என் றும் சில சமயம் சுருக்கப்படும்.

**EOM** : இஓஎம் : end of message என்பதன் குறும்பெயர்.

**EOT** : இஓடி : End of Transmission என்பதன் குறும்பெயர்.

**epitaxial layer** : எபீடேக்ஸியல் படுகை அல்லது அடுக்கு : குறை கடத்திகளில் கீழடுக்கின் திசையிலேயே அமைந்துள்ள படிகப் படுகை.

**EPO** : இபிஓ (அவசர மின் துண்டிப்பு) : Emergency Power off என்பதன் குறும்பெயர். அவசர நிலையில் மின்சுற்றும் அதனை இயக்கும் பொத்தான்களும் முழுகணினியையும் நிறுத்தி விடக்கூடும். ஒரு பெரிய கணினி அமைப்பில் இருபது வரையிலான இபிஓ பித்தான் கள் இருக்கக்கூடும்.

**EPROM** : இப்ரோம்: அழித் தெழுது படிப்பு நினைவகம் : Erasable Programmable Read Only Memory என்பதன் குறும்பெயர். அதிக அடர்த்தியுள்ள அல்ட்ரா வயலட் ஒளியில் அழித்து

மீண்டும் நிரலாக்கத் தொடர் அமைக்கக் கூடிய சிறப்பு ரோம் (PROM)

**EPROM eraser : இப்ரோம் அழிப்பி** : எழுதிப்படிப்பதற்கு மட்டுமேயான நினைவுப் பதிப்பியில் ஏற்கனவே சேமித்து வைக்கப்பட்டுள்ள ஒரு செயல் முறையை அழிப்பதற்கு ஒரு சில நிமிடங்களுக்கு ROM சிப்புகள் ஏற்றி வைக்கப் பட்டுள்ள ஒரு சாதனம்.

**EPROM programmer : இப்ரோம் நிரலாக்கத் தொடர்** : இப்ராம் (EPROM) சிப்புகளுக்கு நிரலாக் கத் தொடர் அளிக்கப் பயன் படும் சிறப்பு எந்திரம்.

**EPS : எப்ஸ்; இபீஎஸ்** : பொதி யுறையிட்ட போஸ்ட் ஸ்கிரிப்ட் என்று பொருள்படும் Encapsu-lated Post Script என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும் பெயர். ஒரு போஸ்ட் ஸ்கிரிப்ட் கோப்பு வடிவாக்கம், ஒரு தனித்த உள் பொருளாகப் பயன் படுத்த முடிகின்ற கணினிப் பதிப்பகப் பயன்பாடுகளில் (Desktop Publishing Applications) இபீஎஸ் பட உருக்கள் போஸ்ட் ஸ்கிரிப்ட் வெளியீட்டுடன் உடன் சேர்க்கப்பட வேண்டும்.

**EPSILON : இப்சிலான்** : ஒன்றின் சிறிய அளவு.

**EPSON : இப்சன்** : வரைகலை யையும் வாசகங்களையும் அச்சிடக் கூடிய ஒரு புகழ்பெற்ற தயாரிப்பு நிறுவனம் அச்சடிப்பி.

**epson emulation : இப்சன் முன் மாதிரி** : ஒத்தியல்பு இப்சன் புள்ளிக்குறி வார்ப்புரு அச் சடிப்பிகள். இப்சன் Mx, Rx, Fx, அச்சடிப்பிகளிலுள்ள நிரலாக்கத் தொகுதி, ஒரு தொழில் துறைத் தர அளவாக உருவாகியுள்ளது.

**EPSON printer : இப்சன் அச்சடிப்பி** : ஜப்பானிலுள்ள இப்சன் கழகம் என்ற அமை வனம் தயாரிக்கும் உலகப் புகழ் பெற்ற அச்சடிப்பி வகை. இது புள்ளிக்குறி வார்ப்புரு அச் சடிப்பிகளையும், மை தூவு அச்சடிப்பிகளையும் லேசர் அச் சடிப்பிகளையும் தயாரிக்கிறது.

**e-publishing : மின்னணுப் பதிப்பு; மின்பதிப்பு.**

**equality : சமம் ; சமத்துவ நிலை:** சமன்பாடு குறியீட்டினால் உணர்த்தும் கருத்து. பல நிர லாக்கத் தொடர் மொழிகளிலும், வடிவமைப்புகளிலும் பயன் படுத்தப்படுவது. மாற்றாக அமைக்கப்படும் குறியீடாகவும் சமன்பாடு குறியீடு பயன் படுத்தப்படுகிறது.

**equal priority : சம முன்னுரிமை.**

**equalization** : சரிநிகராக்கம் : உருத்திரிபினைக் குறைத்து, நெடுந்தொலைவுகளில் சைகை இழப்பீட்டை ஈடுசெய்வதற்குப் பயன்படுத்தப்படும் உத்திகள்.

**equate directive** : சமவாக்கு பணிப்பு.

**equation** : சமன்பாடு : ஒரே எண்ணைக் குறிப்பிடும் இரண்டு கணித வெளியீடுகளுக்கிடையில் சமன்பாடு குறியீட்டைப் பயன்படுத்தும் கணிதச் சொற்றொடர். Aயுடன் 10 சேர்த்தால் 6 என்ற சமன்பாட்டில் A-யின் மதிப்பு 4 ஆகும்.

**equipment** : கருவி : ஒரு கணினி அமைப்பின் பகுதி.

**equipment bay** : கருவி இருப்பிடம் : மின்னணுக் கருவி பொருத்தப்படுகின்ற பெட்டி அல்லது அலமாரி.

**.er** : .இஆர் : இணையத்தில் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர். எரித்திரியா நாட்டைச் சேர்ந்த இணைய தளம் என்பதைக் குறிக்கிறது.

**erasable** : அழிக்கவல்ல.

**erasable optical storage** : அழிதகு ஒளியியல் சேமிப்பகம்.

**erasable storage** : அழிக்கக் கூடிய சேமிப்பகம் ; அழிக்கக் கூடிய தேக்ககம் : அழித்து மீண்டும் பயன்படுத்தக்கூடிய சேமிப்பு ஊடகம். காந்த வட்டு, உருளை, நாடா போன்ற ஊடகங்களை அழித்து மீண்டும் பயன்படுத்தலாம். துளையிடப்பட்ட அட்டைகள் அல்லது காகித நாடாக்களை இவ்வாறு செய்ய முடியாது.

**erase** : அழி : மீண்டும் வேறொன்றை வைக்காமல் தகவல்களை சேமிப்பகத்திலிருந்து நீக்குதல்.

**erase/delete/remove** : அழி/நீக்கு/அகற்று.

**erase head** : அழிக்கும் முனை : வீட்டு உபயோக, நாடாப்பதிவு கருவியில் புதிய செய்தியினைப் பதிவு செய்யும் முன்பு நாடாவில் ஏற்கனவே பதிவு செய்ததை அழிக்கும் முனை. மையம் இல்லாத காந்தமயப்பட்ட பெரிக் அமில மேற்பரப்புகளான நாடா, அட்டை அல்லது வட்டில் அழிக்கும் முனையானது எழுதும் முனை அத்தகைய செயலைச் செய்யும் முன்பு அழித்துவிடும்.

**eraser** : அழிப்பி; அழிப்பான்.

**ergonomic keyboard** : சூழல் தகவமை விசைப்பலகை; தகவமை விசைப்பலகை : இடைவிடாமல் தொடர்ந்து விசைப்பலகை

யைப் பயன்படுத்திக் கொண் டிருப்பவர்கள் அடிக்கடி கையை இங்குமங்கும் நகர்த்திக் கொண் டேயிருப்பதால் கைமுட்டி களும், மணிக்கட்டும் பழு தடைய வாய்ப்புண்டு. இவற் றைக் குறைக்க ஏற்றவகையில் வடிவமைக்கப்பட்டுள்ள விசைப் பலகையில் விசைகள் வேறு வகையில் அமைக்கப்பட்டிருக் கும். கைகளை சிரமமின்றி இயல்பாக வைத்துக் கொள்ள வசதியிருக்கும்.

**ergonomics : சூழலியல் :** மனிதர்களுக்கும் அவர்களது பணிச் சூழலுக்கும் இடை யிலுள்ள பருப்பொருள் உறவை ஆராய்தல். அதிகத்திறன், நல்ல உடல்நலம் போன்ற பொது நலனுக்காக இயக்குபவர்களின் வசதிக்காக எந்திரங்களை மாற்றுதல். விசைப்பலகைகளில் உள்ள எண் விசைகள் பிரிக்கக் கூடிய விசைப் பலகைகள், தலைப்பு காட்டும் திரை போன் றவை இது தொடர்பான நல்ல முடிவுகள்.

**erlang : எர்லாங்க் :** ஓர் தொலை பேசிப் பொறியமைவில் மொத் தத் திறம்பாட்டினை அல்லது சராசரிப் பயன்பாட்டினை குறித் துரைக்கிற போக்குவரத்துப் பயன்பாட்டு அலகு. ஓர் 'எர் லாங்க்' என்பது ஒரு தொலை பேசி இணைப்பின் தொடர்ச்சி யான பயன்பாட்டுக்குச் சமம். அனைத்து இணைப்புகளின் இயங்கு நேரங்களின் கூட்டுத் தொகையினை அளவீட்டுக் கால அளவினால் வகுத்துக் கிடைக் கும் ஈவுதான் எர்லாங்க் அலகு களின் போக்குவரத்து அலகாகும்.

**EROM : இரோம் :** Erasable Read Only Memory என்பதன் குறும் பெயர்.

**error : பிழை ; தவறு :** கணினி அல்லது சரியானதை அளந்த தன்மை அல்லது உண்மை மதிப் பிலிருந்து விலகிச் செல்வது. fault, malfuncion, mistake இவைகளுடன் வேறுபடுத்துக.

**error, absolute : முற்றுப் பிழை.**

**error, ambiguity : மயக்குறு பிழை.**

**error analysis : பிழை ஆய்வு ; பிழை பகுப்பாய்வு :** எண்முறை ஆய்வு நடைமுறைகளில் பிழை யின் பங்கை ஆராயும் எண் ஆய்வு தொடர்பான துறை. கணிப்பு கணிதத்தின் வினோதத் தன்மை காரணமாக கணிப்பில் ஏற்படும் பிழைகளை ஆராய் வதையும் குறிப்பிடுகிறது.

**error checking : பிழை சோதித் தல் :** 1. தரவுகளின் செல்லத்தக்க நிலையைச் சோதிப்பதற்கான

பல்வேறு தொழில்நுட்பங்கள். 2. தொலைத் தரவு தொடர்பு கொள்ளும் இரண்டு கணினிகள் தாங்கள் பெற்ற தகவல், பிழை இல்லாதது என்று சோதித்துக் கொள்ளும் செயல்முறை.

**error code :** பிழைக் குறிமுறை; தவறான குறிமுறை.

**error control :** பிழைக் கட்டுப் பாடு : செய்தித் தகவல் தொடர்பு அமைப்பில் ஏற்படும் பிழை களைக் கண்டுபிடிக்கவோ அல்லது திருத்தவோ மென் பொருள் அல்லது வன்பொருள் அமலாக்கப்படும் திட்டம்.

**error-correcting code :** பிழைத் திருத்தக் குறியீடு ; பிழை திருத்தும் குறிமுறை : ஒரு துணுக்கின் ஈட்டத்தினால் அல்லது இழப்பீட்டினால் ஏற் படும் தடைசெய்யப்பட்ட துடிப்புகளின் இணைப்பிலுள்ள குறியீடு. இது எது தவறானது என்பதைச் சுட்டிக்காட்டுகிறது.

**error correction :** பிழை திருத் தம் : தரவு அனுப்பப்படும் கருவிகளில் பிழைகள் ஏற் பட்டால் தானாகவே கண்டு பிடித்து திருத்தம் செய்யும் உள்ளார்ந்த அமைப்பு.

**error - correction coding :** பிழை திருத்தும் குறியீடு : ஒரு தகவலை குறியீட்டு முறையில் மாற்றியமைத்து (encoding) அனுப்பி வைக்கும்போது அதிலுள்ள பிழைகளைக் கண் டறிந்து திருத்தும் திறனுள்ள குறியீட்டு முறை. அதிகப் பட்ச மாய் எவ்வளவு பிழைகளைக் கண்டறியும், எவ்வளவு பிழை களைத் திருத்தும் என்பதன் அடிப் படையில் குறியீட்டு முறை வகைப்படுத்தப்படுகிறது.

**error - detecting code :** பிழை யறியும் குறியீடு ; பிழையறியும் குறிமுறை : ஒவ்வொரு தொட ரும் குறிப்பிட்ட கட்டுமான விதிகளுக்கு இணங்க இருக்கு மாறு செய்கிற குறியீடு.

**error detection and correction :** பிழை கண்டறிதல், திருத்துதல் : ஒரு கோப்பினைக் கணினி மூலமாய் ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்கு அனுப்பி வைக்கும்போது, அதிலேற் படும் பிழைகளைக் கண்டு பிடித்துத் திருத்தும் முறை. சில நிரல்கள் பிழைகளைக் கண் டறிய மட்டும் செய்யும். இன் னும் சில கண்டறிந்து அவற் றைத் திருத்தவும் செய்யும்.

**error diffusion :** பிழை பரவல்.

**error file :** பிழைக் கோப்பு : கணினியால் கண்டுபிடிக்கப் பட்ட பிழையை நிறுத்திவைக்க செயலாக்கத்தின் மீது உரு வாக்கப்படும் கோப்பு.

**error free** : பிழை இலா; பிழை அற்ற; தவறு அல்லாத.

**error-free channel** : பிழையிலா வழி : புறநிலைக் குறுக்கீடுகளுக்கு உள்ளாகாதிருக்கிற சாதனங்களுக்கிடையிலான கம்பி, கம்பிவடம் போன்ற இடைமுகப்பு.

**error guessing** : பிழை ஊகித்தல் : சோதனைத் தரவு தேர்வு தொழில்நுட்பம். பிழைகள் ஏற்படுத்தக்கூடிய மதிப்புகளைக் கண்டுபிடிப்பதே தேர்வு விதிமுறை.

**error handler** : பிழை கையாளி.

**error handling** : பிழை கையாளல் : விசைப்பலகை இயக்குபவர் தவறான விசையை அழுத்திவிட்டால் ஏற்படும் பிழையைக் குறைக்கும் நிரலாக்கத் தொடரின் செயல்.

**error, inherited** : மரபுவழிப் பிழை.

**error list** : பிழைப் பட்டியல்.

**error, logical** : தருக்கப் பிழை.

**error message** : பிழைச் சுட்டும்; தவறு சுட்டும் செய்தி : கணினி ஒரு பிழையையோ அல்லது எந்திரக் கோளாறையோ கண்டு பிடித்து விட்டது என்பதைக் குறிப்பிடும் அச்சிட்ட அல்லது காட்டப்பட்ட சொற்றொடர்.

**error rate** : பிழை விகிதம்; பிழைவீதம் : செய்தித் தகவல் தொடர்புகளில், மின்சுற்றுக் கருவியின் தரத்தின் ஒரு அளவு. ஒரு மாதிரி பகுதியில் உள்ள பிழையான துண்மிகள் அல்லது எழுத்துகள்.

**error ratio** : பிழை விகிதம் : மொத்த தரவு அலகுகளில் பிழையான தகவல் அலகுகளின் விகிதம்.

**error register** : பிழைப் பதிவேடு.

**error report** : பிழை அறிக்கை.

**error routine** : பிழை நிரல்கூறு.

**error, run time** : இயக்க நேரப் பிழை.

**error, single bit** : ஒற்றை பிட் பிழை.

**error transmission** : பிழை அனுப்பீடு; தவறான செலுத்துகை; பிழை அனுப்புதல் ; பிழை பரவல் : அனுப்பும் செயலின்போது தரவுகளில் ஏற்படும் மாற்றம். உள்ளே விழுதல் அல்லது வெளியே விழுதல்.

**error, truncation** : துணிப்புப் பிழை.

**escape character** : இடர்பிழைப்பு எழுத்து : முந்திய எழுத்துகளிலிருந்து மாறுபட்டுப் பொருள் கொள்ள இடமளிக்கும் ஓர்

எழுத்து. கட்டுப்பாட்டு எழுத்து. பெரும்பாலும் பிறகுறியீடுகளு டன் பயன்படுத்தப்படுகிறது.

**escape code :** விடுபடு குறி முறை.

**escape key :** விடுபடு விசை ; விடுபடு சாவி : கணினி விசைப் பலகையிலுள்ள ஒரு விசை, இதனை அழுத்தும்போது, குறிப்பிட்ட செய்தி குறியீடாகக் கணினிக்கு தெரிவிக்கப்படு கிறது. பெரும்பாலான பயன் பாட்டுத் தொகுப்புகளில் விடுபடு விசையை அழுத்தும் போது முந்தைய நிலைக்குத் திரும்பலாம். பட்டித் தேர்வு களில் முந்தைய மெனுநிலைக் குத் திரும்பும். சிலவற்றில் நிரலைவிட்டு வெளியேறவும் இவ்விசை உதவும்.

**escape sequence :** விடுபடு குறித்தொடர்; இடர் பிழைப்பு வரிசை : விடுபடு குறியை முன்னொட்டாகக் கொண்டு தொடரும் குறித்தொடர். பதின்ம எண் முறையில் விடு படு விசையின் ஆஸ்க்கி மதிப்பு 27. பதினாறெண் முறையில் 1B ஆகும். இதனைத் தொடர்ந்து ஒன்று அல்லது இரண்டு குறிகள் அமையும். ஓர் ஆவணத்தில் உரையின் நடுவே விடுபடு குறித்தொடர் அமைந்திருப்பின் கணினியானது அதனைச் சாதாரண உரையாக எடுத்துக் கொள்ளாமல், கட்டளையாகக் கருதி அதனை நிறைவேற்றும். அக்கட்டளை ஒரு சாதனம் சார்ந்த அல்லது நிரலுக்குரியதாக இருக்கலாம். (எ-டு) : சி-மொழி யில், printf ("One\tTwo"); என்ற கட்டளை, one two என்று இரு சொற்களுக்கிடையே நிறைய இடம் விட்டுக் காட்டும். printfl ("One\nTwo"); என்ற கட்டளை, one two என்று அடுத்தடுத்த வரியில் காட்டும். இங்கே, \t, \n என்ற குறியீடுகள் விடுபடு குறித்தொடர் ஆகும்.

**ESC character :** விடுபடு எழுத்து; விடுபடு குறி : ஆஸ்கி குறித்தொகுதியில் அமைந் துள்ள 32 கட்டுப்பாட்டுக் குறி களுள் ஒன்று. இது பெரும் பாலும் விடுபடு குறித்தொட ரில் முதல் குறியாக அமையும். அச்சுப்பொறி போன்ற சாதனத்துக்குக் கட்டளை தரும் குறித்தொடராக அமைந்த சர மாக இருக்கலாம். கணினி, விடு படு குறியின் மதிப்பை 27 அல்லது 1B என்றே எடுத்துக் கொள்ளும்.

**ESD :** இஎஸ்டி : 1. நிலை மின்னியல் போக்கு. ஒரு மின்னேற்றம் செய்யப்பட்ட பொருளிலிருந்து ஓர் அணுகு மின்கடத்து பொருளுக்குத் தாவு

கிற சுடர் (எலெக்ட்ரான்கள்) 2. மின்னணுவியல் மென்பொருள் பகிர்மானம். மென்பொருள் களை ஓர் இணையத்தின் வாயிலாக சேரவேண்டிய எந்திரங் களுக்கு அனுப்புவதன் மூலம் மென்பொருள்களை நிறுவுதல்.

**ESDI : எஸ்டி : இஎஸ்டிஐ : உயர்த்திய சிறுசாதன இடை முகப்பு :** மேம்படுத்திய சிறு சாதன இடை முகப்பு என்று பொருள்படும் Enhanced Small Device Interface என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். வட்டுகள் கணினியுடன் அதி வேகத்தில் தகவல் பரிமாறிக் கொள்ள உதவும் ஒரு சாதனம். எஸ்டி இயக்கம் வினாடிக்கு 10 மெகா பைட்டு அளவில் தகவல் பரிமாற்றம் செய்யும். இந்த வேகத்தை இருமடங்காக்கும் திறனும் இவற்றுக்கு உண்டு.

**ESF : இஎஸ்எஃப் :** *1. (விரிவாக்கிய மீச்சட்டகம்) :* இயல்பான செயற்பாட்டின்போது ஒரு இணைப்பினை கண்காணிக்க அனுமதிக்கிற உயர்த்திய T1 உருவமைவு. 2. *(புறநிலை ஆதார உருவமைவு) :* IBM இன் CSP/AD பயனீட்டு உருவாக்கியில் வரையறுக்கப்படுவதற்கான தனிக் குறியீட்டு மொழி.

**ESP : இஎஸ்பி :** *1. (E டெக் விரைவு மரபுக்குறிப்பு) :* Eடெக் ஆராய்ச்சி நிறுவனத்தின் அதிர் விணக்க மற்றும் அதிர்விணக்க நீக்கிகளில் பயன்படுத்தப்படும் வணிக உரிமையுடைய மரபுக் குறிப்பு. 2. (மின்னணுவியல் இயங்கா ஒளிப்படக்கலை) தொலைபேசி இணைப்பில் உருக்காட்சிகளை இலக்கமாக்கி அனுப்புதல். *3.* எமுலெக்ஸ் SCSI செய்முறைப்படுத்தி. எமுலக்ஸ் SCSI வட்டுக் கட்டுப் பாட்டுக் கருவியில் பயன் படுத்தப்படும் வணிக உரிமை யுடைய சிப்பு.

**ESP IEEE standard : இஎஸ்பீ ஐஇஇஇ செந்தரம் :** Encapsulating Security Payload IEEE Standard என்பதன் சுருக்கம். இணைய நெறிமுறையான ஐபீ (Internet Protocol) மூலம் அனுப்பப்படும் செய்தியின் நம்பகத்தன்மை மற்றும் இரகசியத்தன்மையைப் பாதுகாப்பதற்கான தரக்கட்டுப் பாடு. சில சூழ்நிலைகளில் ஐபீ தரவு செய்திக்கு சான்றுறுதி வழங்குவதாகவும் அமையும்.

**ESS : இஎஸ்எஸ் :** மின்னணு வியல் விசைப் பொறியமைவு. : ஒரு மைய அலுவலகத்தில் தொலைபேசி உரையாடல் களுக்குக் கம்பியிணைப்புக் கொடுப்பதற்குப் பயன்படுத்தப் படும் பேரளவுக் கணினி.

**.et : .இடீ :** இணையத்தில் ஓர் இணைய முகவரி. எத்தியோப் பியா நாட்டைச் சேர்ந்தது என் பதைக் குறிக்கும் புவிப்பிரிவு பெருங்களப் பெயர்.

**ETB : இடீபி :** 'அனுப்பீட்டுத் தொகுதி முடிவு' என்று பொருள் படும் "End of Transmission Block" என் பதன் தலைப்பெழுத்துச் சுருக்கம்.

**etching : செதுக்கல்; பொறித்தல்.**

**ETE : business solution : வணிகத் தீர்வு :** விரைவாக விரிவடைந்து வரும் கணினி மென்பொருள் சாதனம் உரு வாக்கும் அமைவனம்.

**e-text : மின்னுரை :** மின்னணு உரை என்பதன் சுருக்கம். மின் னணு ஊடகத்தில் நிகழ்நிலை யில் (on - line) கிடைக்கும் ஒரு புத்தகம் அல்லது உரை அடிப் படையிலான ஆவணம். மின்னு ரையை நிகழ்நிலையில் படிக்க லாம். அல்லது பயனாளரின் கணினியில் பதிவிறக்கி அகல் நிலையில் (off - line) படித்துக் கொள்ளலாம்.

**ethernet : கணிப்பொறி உள் வளாக இணைப்பு :** கணினி தக வல்களுடன் ஒலி, ஒளி தகவலும் அனுமதிக்கப்படும் கட்டமைப்பு வகை.

**ether talk : ஈதர் உரையாடல் :** 'Apple' நிறுவனம் உருவாக்கிய மெக்கின்டோஷ் மென்பொருள். இதன் 'ஈதர்நெட் இன்டர்பேஸ்' NB அட்டையுடன் சேர்த்து அனுப்பப்படும். இது ஈதர்னெட் இணையங்களுக்கு MAC தன்னை தகவமைவு செய்து கொள்ள உதவுகிறது.

**ethics : ஒழுகலாறு; அறவியல் கோட்பாடு.**

**ETX : இடீஎக்ஸ் :** End of Text என்பதன் குறும்பெயர்.

**eudora : ஈடோரா :** ஒரு மின்னஞ் சல் கிளையன் (Client) நிரல். இல்லினாய்ஸ் பல்கலைக் கழகத்தில் ஸ்டீவ் டார்னர் என் பவர் மெக்கின்டோஷ் கணினி களில் செயல்படும் இலவச மென்பொருளாய் உருவாக் கியது. இப்போது மெக்கின் டோஷ் மற்றும் மைக்ரோ சாஃப்ட் விண்டோஸ் கணினி களில் செயல்படக்கூடிய இலவச மற்றும் விற்பனைக் கான மென்பொருளாய் குவால் காம் நிறுவனம் உருவாக்கி வெளியிட்டு வருகிறது.

**European Article Number (EAN): ஐரோப்பியப் பொருள் எண் :** சில்லறை விற்பனைக் கடை களுக்கும், பேரங்காடிகளுக்கு மான ஒரு பட்டைக் குறியீடு.

**evaluation : மதிப்பிடல் :** புதிய தாக உருவாக்கப்பட்ட கணினி

அமைப்பு எதற்காக வடிவமைக் கப்பட்டதோ அதை உண்மை யிலேயே செய்கிறதா என்பதைக் கண்டறியும் செயல்முறை.

**evelyn wood dynamic reader :** ஈவ்லின் உட் இயக்கப் படிப்பி : 'கமோடோர் -64' என்ற வீட்டுக் கணினியில் படிப்புச் செறிவு மற்றும் இருத்தி வைப்புத் திறனை மேம்படுத்துவதற்காகப் பயன்படும் ஒரு மென்பொருள்.

**even parity check :** இரட்டைப் படை சரிபார்ப்பு ; இலக்க முறைத் தகவல் தொடர்பில், துண்மி எண்ணிக்கையில் இரட் டைப்படை சரிபார்க்கும் முறை.

**event :** நிகழ்வு : எந்த ஒரு நடப்பு அல்லது நிகழ்ச்சியையும் குறிப்பிடும் மைல்கல் முனை என்றும் அழைக்கப்படும். கால எல்லை எதுவும் இல்லை. நட வடிக்கைகளை தொடங்குதல் அல்லது முடித்தல் மற்றும் ஒன்றுடன் ஒன்றாக அவை தொடர்புபடுத்தலை இது குறிப்பிடுகிறது.

**event driven :** நிகழ்வு இயக்கம் : பயனாளரின் உட்பாட்டுக்கு அல்லது ஒழுங்குபடுத்தப்படாத நேரங்களில் பிற பயன்பாட்டுக் குப் பதிலளிக்கிற பயன்பாடு. இது பயனாளரின் தெளிவு களினால் இயங்குகிறது. (தெரிந் தெடுத்த பட்டியல்; அழுத்தும் பொத்தான் முதலியன).

**event-driven environment :** நிகழ்வுத் தூண்டல் சூழல்.

**event-driven language :** நிகழ்வுத் தூண்டல் மொழி.

**event driven programme :** நிகழ்வுத் தூண்டல் நிரல்.

**event-handler :** நிகழ்வுக் கையாளி.

**event-driven processing :** நிகழ்வுத் தூண்டல் செயலாக்கம்: ஆப்பிள் மெக்கின்டோஷ், மைக்ரோ சாஃப்ட் விண்டோஸ், யூனிக்ஸ், ஓஎஸ்/2 போன்ற மிகவும் மேம்பட்ட இயக்க முறைமைக் கட்டமைப்புகளில் இடம் பெற்றுள்ள ஒரு நிரல் பண்பு. நிகழ்வுகள் பல்வேறு வகைப்பட்டவை. சுட்டியின் ஒரு பொத்தானை சொடுக்கு வது, விசைப்பலகையில் ஒரு விசையை அழுத்துவது, வட்டி னைச் செருகுவது, ஒரு சாளரத் தின் மீது சொடுக்குவது இவை யெல்லாம் நிகழ்வுகளே. தொடர்ந்து ஏற்படும் நிகழ்வு கள் வரிசையாக அமைகின்றன. நிரலானது ஒவ்வொரு நிகழ்வாக ஏற்று, அதற்கேற்ப செயல்படும். சில வேளைகளில் சில நிகழ்வு கள் முன்னுரிமையுள்ள இன் னொரு நிகழ்வைத் தூண்டலாம்.

**event-driven programming : நிகழ்வுத் தூண்டல் நிரலாக்கம்; நிகழ்வு முடுக்க நிரலாக்கம் :** விசையை அழுத்துதல், சுட்டியைச் சொடுக்குதல் போன்ற நிகழ்வுகளின்போது செயல்பாடுகளை மேற்கொள்ளுமாறு நிரலாக்கம் செய்யும் முறை. முதன்முதலாக ஆப்பிள் மெக்கின்டோஷில் நிகழ்வு முடுக்க நிரல்கள் அறிமுகப் படுத்தப்பட்டன. ஆனால் இப்போது மைக்ரோசாஃப்ட் விண்டோஸ், யூனிக்ஸில் எக்ஸ்-விண்டோஸ் போன்ற அனைத்து வரைகலைப் பணித்தளங்களிலும் நிகழ்வு முடுக்க நிரலாக்கமே பின்பற்றப்படுகிறது.

**evolutionary refinement : படிமலர்ச்சிச் செம்மையாக்கம்.**

**exa : எக்ஸா; இஎக்ஸ்ஏ :** ஒரு குவின்டில்லியனை ($10^{18}$) குறிக்கும் முன்னொட்டுச் சொல். கணினிச் செயல்பாட்டில் (இரும எண்முறையில் அமைந்த), எக்ஸா என்னும் சொல் 1,152, 921,504,606,846,976 என்ற மதிப்பைக் குறிக்கிறது. இது 260 ஆகும். ஏறத்தாழ ஒரு குவின்டில்லியனுக்குச் சமம்.

**excel : எக்செல் :** ''மைக்ரோசாஃப்ட் கார்ப்பரேஷன்'' என்ற அமைவனம் உருவாக்கிய மின்னணு விரிதாள் மென்பொருள். இது IBM PC, மெக்கின்டோஷ் கணினி இரண்டுக்கும் உரியது.

**exception : விதிவிலக்கு; இயக்க நேரப்பிழை :** ஒரு நிரல் இயங்கிக் கொண்டிருக்கும்போது ஏதேனும் பிழையிருப்பின் நுண்செயலி நிரலை நிறைவேற்றாமல் பாதியிலேயே நின்றுவிடும். இடையிலேயே நிரல் நின்றுவிடாமலிருக்க இயக்க நேரப் பிழைகளை எதிர்கொள்ள அதற்கேற்ற துணைநிரலை தனியே எழுத வேண்டும். இயக்கநேரப் பிழையும் ஒரு குறுக்கீடு (Interrupt) போலவே நுண்செயலியின் கவனத்தைத் திருப்பி வேறொரு துணை நிரலை இயக்கச் செய்யும்.

**exception error 12 : இயக்க நேரப் பிழை 12 :** டாஸ் இயக்க முறைமையில் அடுக்கு (Stack) நிரம்பி வழிந்தால் ஏற்படும் பிழை. Config.sys கோப்பில் அடுக்குக்கு ஒதுக்கப்பட்டுள்ள நினைவக அளவை உயர்த்துவதன் மூலம் இப்பிழையைச் சரி செய்யலாம்.

**exception report : விதிவிலக்கு அறிக்கை :** இயல்பு கடந்த இனங்களை அல்லது குறிப்பிட்ட வீச்செல்லைக்கு அப்பாற்பட்ட இனங்களைப் பட்டியலிடுதல்.

**exception reporting : விதிவிலக்கு அறிக்கையளித்தல் ; விதிவிலக்கு அறிவித்தல் :**

காட்சிக்கோ அல்லது அச்சிடவோ கணினிமய தரவு அதிக அளவில் திரையிடும் நுட்பம். வழக்கமான எல்லைக்கு அப்பால் உள்ளவற்றையே அறிவிக்கும். விதிவிலக்கு முறை நிர்வாகத்தில் முக்கிய பங்கு வகிக்கிறது.

**excess three code : கூடுதல் மூன்று குறியீடு** : இருமைக் குறியீடு இடப்பட்ட பதின்ம எண் முறை. இதில் ஒவ்வொரு பதின்ம x இலக்கத்தையும் இருமை x உடன் 3-ஐ கூட்டும் எண்ணால் குறிப்பிடப்படும்.

**exchange[1] : பரிமாற்றம்.**

**exchange[2] : இறைப்பகம்.**

**exchangeable disk : மாற்றிக் கொள்ளக்கூடிய வட்டு.**

**exchangeable disk store : மாற்றிக் கொள்ளக்கூடிய வட்டு சேமிப்பு** : வட்டுகள் மூடிய வடிவில் பின் ஆதாரமாக வரும் வட்டு இருப்பகம். ஒவ்வொரு மூடியிலும் பல வட்டுகள் இருக்கும். கணினியின் இயக்கத்தின் போது வட்டு மூடிகளை தேவைப்படும்வரை கணினி மாற்றிக் கொண்டேயிருக்கும். 'டிஸ்க் பேக்' என்றும் இது அழைக்கப்படுகிறது.

**exchange buffering : மாற்று தாங்கல்** : உள் சேமிப்பகத்தில் தரவுகளை மாற்றும் தேவை இல்லாமல் தரவுகள் சங்கிலியாக அமைக்கும் தொழில் நுட்பம்.

**exclusive : தனித்த**

**exclusive or (XOR) : தனியான அல்லது (எக்ஸார்) ; விலக்கிய அல்லது : ஏதேனும் ஒன்று** : உண்மைப்பட்டியலின் அடிப்படையில் இயங்கும் ஒரு பூலியன் இயக்கி. இதில் இணையும் மாறிலிகளில் ஒன்று உண்மையாக இருந்தால்தான் மதிப்பு உண்மை என்று வரும். உண்மைப்பட்டியல் இரண்டு மாறிலிகளும் உண்மையாக இருந்தால், அதன் மதிப்பு பொய்.

**.exe : .இஎக்ஸ்இ** : எம்எஸ்-டாஸ் இயக்க முறைமையில் ஒரு வகைக் கோப்பின் வகைப் பெயர். இயக்க நிலை நிரல் (executable programme) என்பதைக் குறிக்கிறது. இத்தகு நிரலை இயக்க, கோப்பின் பெயரை வகைப் பெயரின்றி உள்ளீடு செய்து நுழைவு விசையை (Enter key) அழுத்தினால் போதும்.

**executable : இயக்குநிலை** : ஒரு நிரல் கோப்பு இயக்கப்படும் நிலையில் இருப்பது. இத்தகைய கோப்புகள் பெரும்பாலும் .bat, .com, .exe போன்ற வகைப் பெயர்களைக் கொண்டிருக்கும்.

**executable file :** இயக்குநிலைக் கோப்பு; நிறைவேற்றக் கூடிய கோப்பு.

**executable programmes :** நிறை வேற்றத்தக்க செயல்முறைகள்; இயக்க நிரல்கள்.

**executable statement :** செயல் படுத்தக் கூடிய சொற்றொடர் ; செயல்பாட்டுச் சொற்றொடர் : உடனடியாக செய்யப்பட வேண்டிய கணித செயல்பாடு களையோ அல்லது நிரல் களையோ தரும் நிரலாக்கத் தொடரின் சொற்றொடர். Assignment Statement இதற்கு ஒரு சான்று.

**execute :** நிறைவேற்று.

**execute cycle :** செயற்படுத்தும் சுழற்சி ; செயற்சுற்று : குறிப் பிட்ட ஒன்றின்மீது எந்திர நிரல் புரிந்து கொள்ளப்பட்டு எந்திர நிரல் இயங்கும் நேரம்.

**execution :** செயற்படுத்தல் ; செயற்படுத்தம் : ஒரு நிரலாக்கத் தொடரை உண்மையாகவே செயல்படுத்தும்போது, நடை பெறும் செயல்களின் சுழற்சி.

**execution interface :** இயக்க இடைமுகம்.

**execution slot :** இயக்கச் செருகு வாய்; இயக்க துளைவிளிம்பு; இயக்கப் பொருத்துமிடம்.

**execution time :** இயக்க நேரம் : நினைவகத்திலிருந்து ஓர் நிரலை எடுத்து அதனைக் குறி விலக்கி (decode) செயல்படுத்த நுண் செயலி எடுத்துக் கொள்ளும் நேரம். கணினியின் உள் கடிகாரத் துடிப்பின் அடிப் படையில் இது அளக்கப்படும்.

**execution trace cache :** இயக்கச் சுவட்டு இடைமாற்று.

**execution units :** நிறைவேற்று அலகுகள்.

**executive :** நிர்வாகி ; மேலாளர் : மற்ற நிரலாக்கத் தொடர்கள் இயக்கப்படுவதைக் கண்காணிக் கும் மேலாண்மை நிரலாக்கத் தொடர். Monitor, Supervisory system, Operation system ஆகியனவும் இதே பொருளில் குறிப்பிடப்படும்.

**executive information system :** செயலாண்மை தரவு முறைமை : ஒரு நிறுவனத்தின் மேலாண்மை அமைப்புக்கு (அதாவது உயர் நிலை மேலாளர்களுக்கு) உத வும் தகவல் முறைமை. அவர் களுக்குத் தேவையான செய்தி கள், விவரங்கள், அறிக்கைகளை கணினி மூலம் உருவாக்கித் தரும் அமைப்பு. தகவலுக்கு முக்கியத்துவம் தருவதால் இது தீர்வு உதவு முறைமை (Decision Support System - DSS)-க்கு மாறு

பட்டது. பகுப்பாயவும் தீர்வு மேற்கொள்ளவும் உதவும்.

**executive programme** : செயலாண்மை நிரல்; இயக்கக் கட்டளைத் தொடர்.

**executive routine** : செயலாட்சி வாலாயம் : ஒரு செயற்பாட்டு முறையில், மற்றச் செயல்முறைகளை நிறைவேற்றுவதைக் கட்டுப்படுத்துகிற, ஒரு முதன்மைச் செயல்முறை. இதனை மேற்பார்வையாளர் அல்லது உருவாக்க மையம் என்றும் கூறுவர்.

**executive workstation** : செயலாட்சிப் பணி நிலையம் : தட்டச்சு செய்ய விரும்பாத, பணி அதிகமுள்ளவர்களுக்காக வடிவமைக்கப்பட்ட தனி வகை மேசைமோட்டுக் கணினி சார்ந்த அலகுகள். இதில் தனிவகைச் செயற்பணி விசைகள் இருக்கும். ஒரு நுண்பொறி அல்லது ஒரு தொடுதிரை மூலம் இது உட்பாட்டினை ஏற்றுக் கொள்ளும். இவை, சொல்/ தரவு செய்முறைப்படுத்துதலைச் செய்யவும், தரவுத் தளங்களை நிருவகிக்கவும், வரைகலைகளை உருவாக்கவும், வேறு பல நடவடிக்கைகளுக்கு உதவவும் வல்லவை.

**exerciser** : செயல்படுத்தி : மனிதர்கள் மூலம் வன்பொருள் பயன்படுத்தல் மற்றும் நிரலாக்கத் தொடர்களை உருவாக்குதல், பிழைநீக்கல் ஆகியவற்றைச் செய்ய உதவும் சாதனம்.

**exit** : வெளியேறு, வெளியேற்றம் : நிரலாக்கத் தொடர் அல்லது அல்கோரிதத்திலிருந்து கட்டுப்பாட்டை வேறிடத்திற்கு மாற்றும் இடம்.

**expand** : விரிவாக்கம் : கோப்பு மேலாண்மையில், விவரக்குறிப்பேட்டு மரத்தில் மறைவான கிளைக் குறிப்பேடுகளைக் காட்டுவதற்கு, தனியொரு விவரக் குறிப்பேட்டினையோ, ஒரு விவரக்குறிப்பேட்டு மரத்தின் ஒரு கிளையையோ அல்லது அனைத்துக் கிளைகளையுமோ ஒரே சமயத்தில் விரிவாக்கம் செய்யலாம்.

**expandable** : விரிவாக்கத்தக்க : கூடுதலான முதன்மை நினைவுப் பதிப்பி அல்லது வட்டு இயக்கிகள் மூலம் சேமிப்புத் திறம்பாட்டினை அதிகரிக்கக் கூடியவாறு ஒரு கணினியை வடிவமைத்தல்.

**expandablility** : விரிதிறன் : சாத்னங்கள் அல்லது மாடுல்களைச் சேர்த்து கணினியின் செயல் திறனை அதிகரிக்கும் திறன்.

**expand and colapse** : விரிக்கவும் மூடவும்.

**expanded memory** : விரிவுபடுத்திய நினைவகம் : AT நுண் கணினிக் குடும்பத்தில், நுண் செயலி மூலம் நேரடியாக அணுக முடியாதவாறு அமைக்கப்பட்டுள்ள கூடுதல் நினைவகம். மையச் செயலகத்தினால் நேரடியாக அணுக முடியாதிருக்கிற நினைவக தொகுதிகள். செய்முறைப்படுத்தியின் முகவரி அமைவிடத்திலுள்ள இடைத் தடுப்புகளுக்குள் அல்லது பக்கச் சட்டங்களுக்குள் மாற்றி வைக்கப்பட்டுள்ள ஒருவகை நினைவக விரிவாக்கம். மரபு நினைவகத்தில் போதிய இடம் இல்லாதபோது, தரவுகளை இது இருத்தி வைத்துக் கொள்கிறது.

**expanded memory emulator** : வரிவுபடுத்திய நினைவகம் முன் மாதிரி : 386களுக்கான நினைவகப் பதிப்பி மேலாளர்.

**expanded memory manager** : விரிவுபடுத்திய நினைவக மேலாளர் : விரிவுபடுத்திய நினைவகத்தை பயன்படுத்துவதற்குப் பயன்பாட்டுச் செயல் முறையை இயல்விக்கிற செயற் பணிகளை வழங்கும் மென்பொருள் இயக்கி. Lotus - Intel Microsoft Expanded Memory Standard (LIM-EMS) என்ற தர அளவுகளுக்கிணங்க ஒரு சாதன இயக்கி மூலம் மேலாண்மை செய்யப்படும் நினைவகம்.

**expanded memory specification:** விரிவாக்க நினைவக வரன்முறை.

**Expanded notation** : விரிவாக்கிய குறிமானம்.

**expanded storage** : விரிவுபடுத்திய சேமிப்பகம் : IBM முதன்மைப் பொறியமைவுகளிலுள்ள துணை நினைவகம். இதில், தரவுகள் வழக்கமாக விரிவுபடுத்திய சேமிப்பகத்திலிருந்து மையச் சேமிப்பகத்து (முதன்மை நினைவகம்) 4 K பாளங்களில் மாற்றப்படுகின்றன.

**expansion** : விரிவாக்கம் : கணினியில் சில புதிய வன்பொருள்களை இணைத்து, அடிப்படையான செயல்பாடுகளுக்கு அப்பாலும் அதன் திறனை உயர்த்தும் ஒரு வழிமுறை. பெரும்பாலும் அச்சு மின்சுற்று பலகைகளை (விரிவாக்கப் பலகைகள்) கணினியின் தாய்ப் பலகையினுள் விரிவாக்கச் செருகுவாய்களில் செருகி, விரிவாக்கம் செய்யப்படுகிறது.

**expansion bit** : விரிவாக்க பிட்; விரிவாக்கத் துண்மி.

**expansion board** : விரிவாக்கப் பலகை : கணினிக்கு அதிகப்படியான செயல்பாடுகளைச் சேர்க்க



விரிவாக்கப் பலகை

வும் அல்லது புதிய வளங்களைச் சேர்க்கவும் அதன் முதன்மை யான தரவு பரிமாற்றப் பாதை யில் (பாட்டையில்) செருகப் படும் ஒரு மின் சுற்றுப் பலகை. நினைவகச் சில்லுகள்,இயக்கக் கட்டுப்படுத்திகள், ஒளிக்காட்சி இணைநிலை மற்றும் நேரியல் துறைகள், அக இணக்கிகள் போன்றவை இவ்வகையில் அடங்கும். மடிக்கணினி மற்றும் ஏனைய கையடக்கக் கணினி களில் பொருத்தப்படும் விரி வாக்கப் பலகைகள் பற்று அட்டை (credit card) வடிவில் இருக்கும். இவை பீசி அட்டை கள் எனப்படுகின்றன. இவை கணினியின் பின்பக்கம் அல்லது பக்கவாட்டில் பொருத்தப்படு கின்றன.

**expansion bus : விரிவாக்கப் பாட்டை :** விரிவாக்கப் பலகைகள் ஒளிப்பேழைக் காட்சி, வட்டு இயக்கி போன்றவை செருகக்கூடிய கொள்கலங்களின் அல்லது வரிப்பள்ளங்களின் ஒரு தொடர் வரிசையைக் கொண்டுள்ள கணினிப் பாட்டை.

**expansion card : விரிவாக்க அட்டை :** கணினி அமைப்பின் திறனை அதிகரிப்பதற்குக் கூடுதல் சிப்புகள் அல்லது மின் சுற்றுகளை அதில் ஏற்றும் நோக்கத்திற்காக கணினியில் சேர்க்கப்படும் அட்டை.

**expansion interface : விரிவாக்க இடைமுகம் ; விரிவாக்க இடை வெளி :** ஆதார கணினியுடன் வட்டு இயக்கிகள் கூடுதல் நினைவகம் மற்றும் பிற வெளிப்புறப் பொருள்களைச் சேர்க்க உதவும் மின்சுற்று அட்டை.

**expansion port : விரிவாக்கத் துளை வாய் :** ஒரு கணினியி லுள்ள துளை. இது, கூடுதல் சுற்றுவழிப் பலகையை அல்லது சாதனத்தை இணைப்பதற்கு அனுமதிக்கிறது.

**expansion slots : விரிவாக்க இடங்கள் : விரிவாக்கத் துளை கள் :** ஆதார கணினிக்குக் கூடுத லாக புதிய விரிவாக்க அட்டை களைச் சேர்க்கப் பயன்படுத்தும் கணினி மின்சுற்று அட்டையின் கூடுதல் இடங்கள். சான்றாக, கணினியின் முதன்மை நினை வகத்துடன் கூடுதல் நினைவக அட்டைகள் சேர்க்கப்படுதல். எளிமையாக மாற்றங்கள் செய்ய வசதியாக அட்டைகளை வைக்க பெரும்பான்மையான கணினி களில் விரிவாக்க இடங்கள் உள்ளன.

**expansion unit : விரிவாக்க அலகு :** கூடுதல் அச்சிட்ட மின் சுற்று அட்டைகள் பொருத்தப் படுவதற்காக கூடுதல் பொத் தான்களுடன் கணினியில் இணைக்கப்படும் சாதனம்.

**exper logo : 'எக்ஸ்பர்' செயல் முறை மொழி :** 'எக்ஸ்பர்' டெலி ஜென்ஸ் என்ற அமைவனம் தயாரித்துள்ள செயல்முறை மொழியின் மெக்கின்டோஷ் பதிப்பு. இது பெரும்பாலான செயல்முறை மொழிப் பதிப்பு களை விட அதிகமான செயற் பணிகளைக் கொண்டது. LISP மொழி போன்றது.

**expert shell : நிபுணத்துவப் பொதிவு :** நிபுணத்துவப் பொறி யமைவில் அல்லது KBSஇல் உள்ள விதி ஆதாரத்தை ஆதாரிக் கக்கூடிய செயல்முறை தரவு ஆதாரத்தை உருவாக்க, இது ஒரு மேம்பாட்டுக்கருவி வடிவத்தை எடுத்துக்கொள்கிறது. தரவுத் தளங்கள், சொல் பகுப்பிகள் போன்ற பிற ஆதாரங்களி லிருந்து விதியாதாரத்திற்குச் தரவுகளையேற்றலாம்.

**expert support system : வல்லு நர் உதவி அமைப்பு ; வல்லுநர் துணை அமைப்பு :** வல்லுநர் அமைப்பு போன்றது. பெரும் பாலும் முடிவெடுக்க உதவும் அமைப்புடன் சேர்த்தே பயன் படுத்தப்படுவது. முறையான விதிகளுக்குப் பதிலாக உணர்ந் தறி காரணிகளை ஆய்ந்து சிக் கல்களைத் தீர்க்க உதவுவது.

**expert system : வல்லுநர் அமைப்பு; நிபுணத்துவப் பொறி யமைவு :** சிறப்பான சிக்கல் தீர்க்கும் நிபுணத்துவத்துடன் உள்ள மனித/ எந்திர அமைப்பு களை உருவாக்குவதற்கான முறைகளும், தொழில்நுட்பங்

களும் செயற்கை நுண்ணறிவின் இந்தப் பகுதியைத் தொடர்வதனால் மனித நிபுணத்துவத்திற்கு முக்கியத்துவமும், துறை கருதாத சிக்கல் தீர்க்கும் முறையினைக் குறைப்பதுமான அறிவு முறை வலியுறுத்தப்படுகிறது. சிக்கல்களைத் தீர்ப்பதற்காக நிபுணருக்கு உதவவும் அவருக்கு பதிலாக செயல்படவும் செய்கிறது.

**expert system building tools : நிபுணத்துவப் பொறியமைவுக் கட்டுமானக் கருவிகள் :** நிபுணத்துவப் பொறியமைவினை உருவாக்கிப் பேணி வருவதற்கு உதவுவதற்காக உருவாக்கப்பட்டுள்ள ஒரு மென்பொருள்.

**expert system expireware : நிபுணத்துவப் பொறியமைவு முடிவுறு மென்பொருள் :** தேதி அல்லது பயன்பாடுகளின் எண்ணிக்கை உள்ளுக்குள்ளேயே முடிவுறு தேதியைக் கொண்டுள்ள மென்பொருள்.

**expert system shell : வல்லுநர் முறைமை செயல்தளம்.**

**expiration date : முடிவுத் தேதி; காலாவதித் தேதி :** ஒரு மென்பொருளின் மாதிரியம் அல்லது பரிசோதனைப் பதிப்பு இயங்காமல் நின்றுவிடும் தேதி. ஒரு மென்பொருளை விற்பனைக்குக் கொண்டுவரும் முன்பு அதற்கான பரிசோதனைப் பதிப்பினை (Beta or Trial) பயனாளர்களுக்குத் தருவர். விற்பனைக்குள்ள சில மென்பொருள்களை சிறிது காலத்துக்கு இலவசமாகப் பயன்படுத்திக் கொள்ளுமாறும், பிடித்திருந்தால் பணம் செலுத்தும்படியும் கூறுவர். இது போன்ற மென்பொருள் குறிப்பிட்ட காலம் முடிந்ததும் இயங்காமல் போகும். அந்தத் தேதிக்கு முன்பாக புதிய பதிப்பைப் பெற வேண்டும்; அல்லது அதற்குரிய அணுகுக் குறியீட்டைப் பெற வேண்டும்; அல்லது பணம் செலுத்திப் பதிவெண் பெற வேண்டும்.

**explicit address : தெளிவான முகவரி ; வெளிப்படையான முகவரி :** மூல மொழி நிரலாக்கத் தொடரில் தெளிவாகச் சொல்லப்பட்ட சேமிப்பகத்தின் முகவரி. Symbolic Address-க்கு எதிர்ச்சொல்.

**expire : முடிவு; காலாவதி :** ஒரு மென்பொருள் முழுமையாக அல்லது ஒரு பகுதி செயல்படாமல் நின்றுபோதல். பரிசோதனைப் பதிப்புகள் பெரும்பாலும், முழுப் பதிப்பு வெளியிடப்படும் தருணத்தில் செயல்படாமல் போகுமாறு நிரலாக்கம் செய்திருப்பர்.

**exploded view** : வெடித்த கருத்து; தெறிப்புத் தோற்றம் : ஒரு முழுமையைப் பகுதிகளாகப் பிரித்து அம்முழுமைக்கும் பிற பகுதிகளுக்கும் உள்ள உறவுகளைக் காட்டும் திட கட்டமைப்பின் வரைபடம்.

**explore** : முழுதும் தேடு.

**explorer bar** : எக்ஸ்புளோரர் பட்டை.

**exponent** : அடுக்குக் குறி ; அடுக்குக் குறிமானம் : 1. ஒரு குறியீடு அல்லது எண்ணின் வலதுபுற மேற்பகுதியில் எழுதப்படும் குறியீடு. அந்தக் குறியீட்டின் காரணியாக எத்தனை முறை அது பயன்படுத்தப்படுகிறது என்பதைக் குறிப்பிடுகிறது. 10-ஐ அடிப்படையாகக் கொண்ட எண்ணில் பத்துப் பத்துகள் என்பதைக் குறிப்பிட $10^2$ என்று எழுதும் சுருக்கமுறை. ஆதார எண்ணைக் காரணியாக்கி எத்தனை முறை பயன்படுத்தப்படுகிறது என்பதை அடுக்குக் குறியீடு குறிப்பிடுகிறது. 2. பதின்மப் புள்ளி எண்முறையில் E என்ற எழுத்தின் மூலம் அடுக்குக் குறியீடு குறிப்பிடப்படுகிறது. 10 E2 என்றால் 10இன் அடுக்குக் குறி 2 என்று பொருள்

**exponential notation** : அடுக்குக் குறியீடு.

**exponential smoothing** : அடுக்கு முறை சரியாக்கல்; அடுக்கு முறை சீர்மையாக்கம் : தர மதிப்பு இட்டு நகரும் சராசரி முறையில் வருவது உரைத்தல். இம்முறையில் முந்தைய கூற்றுகளை வயதின் அடிப்படையில் கழித்தல். அண்மை தரவுகளுக்கு அதிக மதிப்பு கொடுக்கப்படும். அவற்றை வயதின் அடுக்கு முறை பணியின் மூலம் தகவல்கள் தர மதிப்பிடுவதால் இந்த சரியாக்கலை அடுக்கு முறை சரியாக்கல் என்று கூறப்படுகிறது.

**exponentiation** : அடுக்கு முறையாக்கல் ; அடுக்குப்பெருக்கல் ; அடுக்கேற்றம் : ஒரு எண்ணின் அடுக்கை பயன்படுத்துபவர் கணக்கிட்டுச் சொல்ல உதவும் செயல்முறை அல்லது பணி. எடுத்துக்காட்டாக 9 என்ற எண்ணை 5 முறை அதன் பெருக்குத் தொகையாலேயே பெருக்குவதற்குப் பதிலாக ஒரே தடவையில் கணக்கிடுதல்.

**export** : ஏற்றுமதி : ஒரு தரவு தள அமைப்புக்காக மற்ற நிரலாக்கத் தொடர்களில் பயன்படுத்தக்கூடிய வகையில் தரவுகளை எழுதுதல் (பொதுவாக வட்டு கோப்பில்). பல தரவு தள செயல்வரைவாளர்கள் தங்கள் தரவுகளை ஏதாவது ஒரு குறியீட்டு வடிவத்தில் அமைப்

பார்கள். ஆனால், சாதாரண சொல்தொகுப்பில் படிக்கக் கூடிய வகையில், அஸ்கி கோப் புகளுக்கு ஏற்றுமதி செய்யும் வகையில் உருவாக்குவார்கள்.

**expression : சொற்றொடர்; கோவை; வெளிப்பாடு; எண் ணுருக் கோவை; தொனிபாவக் குறிகள் :** செயற்பாட்டுக் குறி யீடுகள், மாறியல் மதிப்புருக்கள் இவற்றின் இணைப்புகள் ஆகி யவற்றைக் கொண்ட எண்களைக் குறிக்கும் பொதுச்சொல். செயல் முறைப்படுத்துவதில் தரவு களையும் செய்முறைப்படுத்து தலையும் விவரிக்கும் ஒரு கட்டளைத் தொடர்.

**extended addressing : நீட்டிப்பு முகவரியாக்கம் :** நினைவகத்தில் பல இடங்களை எட்டக் கூடிய முகவரிக் குறியீடு. இதற்கு, நினைவகத்தில் தரவுகளின் இடத்தைக் கண்டறிய ஒன்றுக்கு மேற்பட்ட எட்டியல் தேவை.

**extended ASCII : நீட்டித்த ஆஸ்கி :** ஆஸ்க்கி (ASCII - American Standard Code for Information Interchange) குறியீடுகள் மொத் தம் 256. 0 முதல் 255 வரை. நமது அன்றாடப் பயன்பாட் டில் 0 முதல் 127 வரை (7பிட்டு கள்) மட்டுமே பயன்படுத்து கிறோம். 128 முதல் 255 வரை (8 பிட்டுகள்) அரிதாகப் பயன் படுத்தப்படுகின்றன. இந்த மதிப்புகளில் பயன்படுத்தப் படும் குறியீட்டுத் தொகுதிகள் நீட்டித்த ஆஸ்க்கி எனப்படு கின்றன. இவை பெரும்பாலும் கணினிக்கு கணினி வேறுபடு கின்றன. ஆங்கிலம் தவிர வேறு பட்ட மொழியாளர்கள் தத்தம் மொழியின் எழுத்துகளை இந்தப் பகுதியில் வைத்துக் கொள்கின்றனர். அல்லது உச் சரிப்பு எழுத்துகள், வரைகலை வடிவங்கள், சிறப்புக் குறியீடு களையும் வைத்துக் கொள்ள முடியும்.

**extended board : நீட்டிப்பு அட்டை; நீட்டிப்புப் பலகை :** மின்சுற்று அட்டைகளை வசதி யாகக் கண்காணிக்க உதவும் பிழை நீக்குச் சாதனம்.

**extended characters : நீட்டித்த குறியீடுகள்; நீட்டித்த எழுத்துகள் :** 128 முதல் 255 வரையுள்ள ஆஸ்கி மதிப்புக் கொண்ட எழுத்து வடிவங்கள். விரிவாக்க ஆஸ்கி எட்டு துண்மி(பிட்) களைக் கொண்டிருக்கும். பெரும்பாலும் பிறமொழி எழுத்துகள், பட உருவங்களை உருவாக்கும் குறிகள், உச்சரிப் பைக் குறிக்கும் சிறப்பு அடை யாளங்களைக் கொண்டிருக்கும்.

**extended edition : நீட்டித்த பதிப்பு :** உள்ளிணைந்த தரவுத் தளம், தரவுத் தொடர்பு வசதிகள் கொண்ட ஓஎஸ்/2 இயக்க முறையின் பதிப்பு. ஐபிஎம் உருவாக்கியது.

**Extended Graphics Array : நீட்டித்த வரைகலைக் கோவை :** 1990ஆம் ஆண்டில் ஐபிஎம் நிறுவனம் அறிமுகப்படுத்திய, வரைகலைக் கட்டுப்படுத்தி மற்றும் திரைக்காட்சிமுறை வடிவமைப்புக்கான உயர் நிலை செந்தரம். இதன்படி 640×480 படப்புள்ளித் தெளிவு, 65, 536 வண்ணங்கள் பெறலாம். அல்லது 1,024×768 தெளிவும் 256 வண்ணங்களும் பெறலாம். பெரும்பாலும் பணி நிலையக் (work station) கணினிகளில் பயன்படுகின்றன.

**extended maintenance : நீட்டிப் புப்படுத்திய பேணுகை :** அடிப் படைப் பேணுகைக் கால அளவுக்குக் கூடுதலான கால அளவுகளுக்கு வேண்டப்படும் நேரடி அழைப்புப் பணியம்.

**extended memory : நீட்டிப்பு நினைவகம் :** 1 MB-க்கு மேற் பட்ட நினைவகம். இதனை 24 மற்றும் 32 துண்மி நுண் செய் முறைப்படுத்திகளினால் அணுக லாம். இன்டெல் - 286-களுக் கும் அதற்கு மேற்பட்டும், ஒரு மீமிகு எட்டியலுக்கு மேற்பட்ட செந்நிற நினைவகம். RAM வட்டுகளுக்கும், வட்டுப் பொதிவு களுக்கும், DOS விரிவாக்கிகளைப் பயன்படுத்தும் பயன்பாடு களுக்கும் இது உதவுகிறது.

**extended memory specification : நீட்டித்த நினைவக வரன்முறை (இஎம்எஸ்) :** லோட்டஸ், இன் டெல், மைக்ரோசாஃப்ட், ஏஎஸ்டி ஆய்வக நிறுவனங்கள் இணைந்து உருவாக்கியது. எம்எஸ்டாஸ் இயக்க முறைமை பயன்படுத்திக் கொள்ளாத நினைவகப் பரப்புகளையும், 1 எம்பிக்கு அதிகமான நீட்டித்த நினைவகத்தையும் இயல்பு நிலைப் பயன்பாட்டுத் தொகுப் புகள் பயன்படுத்திக் கொள்வதற் கான மென்பொருள் இடை முகம். நீட்டித்த நினைவக மேலாளர் (Extended Memory Manager) என்னும் சாதன இயக்கி நிரல் நினைவகத்தை மேலாண்மை செய்யும். தேவை யானபோது இதனை நிறுவிக் கொள்ளலாம். குறிப்பிட்ட பயன்பாட்டுத் தொகுப்பு, இயக்கி நிரல் மூலமாக கூடுதல் நினைவகப் பகுதியை அணுகிக் கொள்ளும்.

**extended partition : நீட்டிப்பு; பிரிவினை :** தனியொரு இயற்

பியல் சாதனத்தைப் பிரிவினை செய்தல். எடுத்துக்காட்டு: ஒரு நிலைவட்டினை பல்வேறு தருக்க முறைப் பகுதிகளாகப் பகுத்தல்.

**extended VGA** : நீட்டித்த விஜிஏ: ஒளிக்காட்சி வரைகலைக் கோவை (Video Graphics Array) தர வரையறைகளின் மேம்பட்ட வடிவம். இது, ஒரு படிமத்தை 800×600 முதல் 1600×1200 வரை படப்புள்ளித் தெளிவுடன் காட்ட வல்லது. ஒரு கோடியே 67 இலட்சம் ($2^{24}$) வண்ணங்கள் கொண்ட நிறமாலையைப் பெற முடியும். இந்த நிறமாலையை ஒரு சாதாரண மனிதர் வேறு படுத்திப் பார்க்கக்கூடிய அளவுக்கு ஒரு கோடியே 90 இலட்சம் வண்ணங்களைக் கொண்டதாக ஆக்க முடியும். எனவே இது, தொடர்முறை (Analog) தொலைக் காட்சிக்கு ஈடான நிறக்காட்சி யைத் தரும் இலக்கமுறைச் செந்தரம் எனக் கருதப்படுகிறது.

**extensible language** : விரிவாக்கக்கூடிய மொழி ; நீட்டிப்பு மொழி : ஒரு நிரலாக்கத் தொடர் மொழியில் இருப்பதை மாற்றும் புதிய தன்மைகளைப் பயனாளர் சேர்க்கின்ற கோட்பாடு.

**extension** : நீட்சி ; நீட்டிப்பு : வழக்கமான தர அமைப்பில் உள்ளதற்கு மேலாக கணினி அமைப்பிலோ அல்லது நிரலாக்கத் தொடர் மொழியிலோ சேர்க்கப்படும் கூடுதல் தன்மை.

**extention file** : கோப்பு வகைப் பெயர்.

**extension manager** : நீட்டிப்பு மேலாளர் : மெக்கின்டோஷ் கணினியிலுள்ள ஒரு பயன் பாட்டு நிரல். கணினியை இயக்கும்போது எந்தெந்த நீட்டிப்புகளை நினைவகத்தில் மேலேற்றிக் கொள்ள வேண்டும் என்பதை வரையறுக்க பயனாளருக்கு உதவுகிறது.

**extension name** : நீட்சிப் பெயர்.

**extent** : அளவு : ஒரு துணை சேமிப்பகத்தில் தொடர்ச்சியாக உள்ள பருப்பொருள் பதிவு களின் தொகுதி.

**extent, file** : கோப்பு நீட்டிப்பு.

**external buffer** : புற இடைநிலை நினைவகம்: ஒரு கணினிக்கும் மற்றொரு சாதனத்திற்கு மிடையே செல்லும் தரவுகளுக் கான ஒரு தற்காலிக தரவு சேமிப்புப் பகுதி.

**external access protection** : புற அணுகல் பாதுகாப்பு .

**external command** : புறநிலை ஆணை; புறக்கட்டளை : வட்டில் சேமித்து வைக்கப் பட்டுள்ள உள் முக நினைவகத் தில் (RAM) நிரந்தரமாக ஏற்றி

வைக்கப்பட்டிராத ஒரு தனி வகைக் கோப்பினை நிறை வேற்றுவதன் மூலம் இயக்குகிற ஒரு DOS நிரல்.

**external data file :** வெளிப்புற தரவுக் கோப்பு ; புறத்தரவுக் கோப்பு : செயலாக்கம் செய்யும் நிரலாக்கத் தொடரிலிருந்து தனி யாக சேமிக்கப்படும் தரவுகள்.

**external device :** புறநிலைச் சாதனம் : ஒரு கணினியின் உள் ளிணைந்த அங்கமாக அமைந் திராமல், கம்பிவடச் செயல்முறை மூலம் அதனுடன் இணைக்கப் பட்டுள்ள ஒரு சாதனம்.

**external, file :** புறக் கோப்பு.

**external gateway protocol :** புற நுழைவி நெறிமுறை : பிணை யங்களை இணைக்கும் திசைவி களுக்கும் நுழைவிகளுக்கும் (Routers and Gateways) இருப்பு நிலைத் தரவுவைக் கொண்டு சேர்க்கும் நெறிமுறை.

**external interrupt :** புறநிலை இடையீடு அல்லது குறுக்கீடு : கணினி இயக்கி, புறநிலை உணர்வி, கண்காணிப்புச் சாதனம், மற்றொரு கணினி போன்ற புறநிலை ஆதாரத்தின் மூலம் உண்டாகும் இடையீடு.

**external label :** வெளிப்புற அடையாளச் சீட்டு : ஒரு கோப்பு ஊடகத்துக்கு வெளியே அந்த கோப்பை அடையாளம் காண இணைக்கப்படும் அடையாளச் சீட்டு. காந்த மின்வட்டு அல்லது நாடா வைத்துள்ள உறையில் இணைக்கப்படும் காகிதச் சீட்டு அல்லது ஒட்டி.

**external memory :** வெளி நினை வகம்; புற நினைவகம்.

**external modem :** புறநிலை மோடெம் : ஒரு கணினியின் தொடர்வழிப் புழையுடன் இணைக்கப்படக்கூடிய 'மோடெம்' இது, ஒரு சுவர் வெளிவாயில் மூலம் தனது விசையைப் பெறுகிறது. இது, 'உள்முக மோடெம்' என் பதிலிருந்து வேறுபட்டது.

**external reference :** வெளிப்புற குறிப்பு; புற மேற்கோள் : ஒரு குறியீட்டை வேறு ஒரு வழக்கச் செயலில் வரையறுத்துள்ள குறிப்பு.

**external report :** புறநிலை அறிக்கை : ஏற்கனவே அச்சிடப் பட்ட வடிவத்தில் அல்லது வேறு வடிவில். அரசாங்கத் திற்கோ அல்லது வாடிக்கை யாளர்களுக்கோ விநியோகிப் பதற்காக, ஒரு நிறுவனத்திற்கு வெளியில் பயன்படுத்த உரு வாக்கப்படும் அறிக்கை.

**external routine :** புறநிலை வாலாயம் : 'பாஸ்கல்' செயல் முறைப்படுத்தும் மொழியில், செயல்முறைக்கு வெளி யிலிருந்து வாலாயத்தை வரை யறுப்பதற்கு வரவழைக்கக் கூடிய ஒரு நடைமுறை அல்லது செயற்பணி.

**external scheme :** புறநிலைத் திட்டம் : ஒரு குறிப்பிட்ட பயனாளரின் தரவுத் தள நோக் கின் வரம்பெல்லை தொடர் பான ஒரு தரவுத் தளத் துணைத் திட்டம்.

**external sort :** புறநிலைப் பிரிப்பு : பன்னோக்குப் பிரிப்பு நிர லாக்கத் தொடரில் இரண்டாம் நிலை. தரவுகளின் சரங்களை வரிசை யாக ஒன்று சேர்த்து ஒரே சரமாக ஆகுமாறு செய்தல்.

**external storage :** புறநிலைச் சேமிப்பகம் : துணை சேமிப் பகம் போன்றது.

**external symbol :** புறநிலைக் குறியீடு : *1.* கட்டுப்பாடு பிரி வின் பெயர். நுழைவு இடத்தின் பெயர் அல்லது வெளிப்புறக் குறிப்பு. 2. வெளிப்புறக் குறியீடு அகரமுதலியில் உள்ள குறியீடு.

**external symbol dictionary :** புற நிலைக் குறியீட்டு அகரமுதலி : ஒரு நிரலாக்கத் தொடரில் உள்ள புறநிலைக் குறியீடுகளை அடையாளம் காணுதல் தொடர் பான கட்டுப்பாட்டு தரவு.

**external viewer :** புறப்பார்வை நிரல்; புறக்காட்சி நிரல் : தற் போது பயன்படுத்திக் கொண் டிருக்கும் பயன்பாட்டுத் தொகுப்பினால் கையாள முடியாத வகையைச் சேர்ந்த ஓர் ஆவணத்தைப் பார்வையிடப் பயன்படும் ஒரு பார்வைநிரல்.

**extract :** வெளியே எடு : ஒரு வடிகட்டி அல்லது மேற்பகுதி முடிவு செய்யும் ஒரு கணினி கோப்பில் இருந்து குறிப்பிட்ட தரவுவை வெளியே எடுத்தல்.

**extra-high-density floppy disk :** கூடுதல் மிகுஅடர்வு நெகிழ் வட்டு : *4* எம்பி தரவு சேமிக்க வல்ல *3.5* அங்குல நெகிழ் வட்டு. இதனை இயக்க இரண்டு முனைகள் கொண்ட தனிச் சிறப்பான இயக்ககம் (Drive) தேவை.

**extranet :** புறப்பிணையம் : ஒரு நிறுவனம் இணையத் தொழில் நுட்ப அடிப்படையில் (குறிப் பாக வைய விரிவலைத் தொழில் நுட்பங்கள்) தமது நிறுவனப் பிணையத்தை அமைத்திருப்பின் அதனை அக இணையம் (Intranet) என்றழைக் கிறோம். அந்த நிறுவனத்துக்கு பொருள் வழங்குவோர்,

வாடிக்கையாளர் இவர்களும் வரம்புக்குட்பட்ட வகையில் நிறுவனப் பிணையத்தை அணுக அனுமதித்தால் அதனை புறப் பிணையம் எனலாம். இவ்வாறு அனுமதிப்பதால் வணிக நட வடிக்கைகள் விரைவுபடுகின் றன. உறவுகள் பலப்படுகின்றன.

**extrapolation** : புற இடுகை.

**extrinsic semiconductor** : புறத் தூண்டல் குறைகடத்தி : (P)-வகை அல்லது (N-)-வகை மாசு சேர்ப்பதன் மூலம் வெப்பப் படுத்துதல் போன்ற சூழ்நிலைகளில் மின்னணுக் களைப் பயணிக்க வைத்து மின்சாரத்தைக் கடத்துகின்ற ஒருவகைக் குறைகடத்தி. மின்னணுக்களை அவற்றின் இயல்பான நிலையிலிருந்து வலிந்து நகரச்செய்து புதிய மின்னணுக்கற்றை அல்லது மின்னணு இடைவெளிகளை உருவாக்குகின்றன.

**ezine** : மின்னிதழ் : மின்னணு இதழ் என்பதன் சுருக்கம். இணையம், அறிக்கைப் பலகைச் சேவை (BBS) மற்றும் இதர நிகழ்நிலைச் சேவை மூலம் பெரும்பாலும் இலவச மாக வழங்கப்படும் நாளிகை இதழ்.

# F

**F : எஃப் :** 'Frequency' என்பதன் குறும்பெயர். இது அலை வெண் அல்லது அதிர்வெண் குறியீடாகும்.

**F2F : எஃப்2எஃப் :** முகத்துக்கு நேராக என்று பொருள்படும் Face to Face என்ற தொடரின் குறுஞ்சொல். இணையத்தில் மின்னஞ்சலில் பயன்படுத்தப் படுகிறது.

**fabricated language : உருவாக் கப்பட்ட மொழி; புனைவு மொழி :** சங்கேத மொழி போன்றது.

**fabrication : உருவாக்கம்; புனைவு :** விரும்பும் விதிமுறை களுக்கேற்ப பொருள்களை உற் பத்தி செய்யும் செயல்முறை.

**face : முகம்; முகப்பு :** கணினி வரைகலைகளில், கூம்பு அல்லது பிரமிட் போன்ற பன்முக வடிவப்பொருள். பல பக்கங்கள் சேர்ந்து உருவாகும் இத்திடப்பொருள் 'திடப் பொருளின் முகங்கள்' என்று அழைக்கப்படும். சான்றாக, ஒரு கூம்புக்கு ஆறுமுகங்கள்.

**FACE : ஃபேஸ் :** 'Field Alterable Control Element' என்பதன் குறும் பெயர்.

**face time : பார்வை நேரம் :** மற்றொருவருடன் நேருக்கு நேர் சந்தித்துச் செலவிட்ட நேரம். இணையம் வழிச் சந்திப்பைக் குறிப்பதில்லை.

**facilities : வசதிகள் :** கணினி மற்றும் தரவு தொடர்பு மையங் களில் பயன்படுத்தப்படும் பருப்பொருள் கருவிகள், மின் சக்தி, தரவுத் தொடர்புக் கம்பி கள், மற்றும் பிற வகையறாக் களைக் குறிப்பிடும் பொது வான தொடர்.

**facilities management : வசதிகள் மேலாண்மை :** ஒரு தரவு செய லாக்க அமைப்பினை மேற் பார்வையிட்டு இயக்க, ஒரு தனிப்பட்ட சேவை நிறுவனத் தைப் பயன்படுத்தல்.

**facility : வசதி :** 1.கணினி அமைப்பின் உற்பத்தித்திறனை முடிவு செய்ய கணினியை எளி தாகப் பயன்படுத்த முடிவதை ஒரு அளவுகோலாக எடுத்துக் கொள்ளுதல். 2. இரண்டு முனை களுக்கிடையில் மின்சாரப் பரி மாறலுக்கான வழித் தடம்.

**facing pages : எதிர்ப் பக்கங்கள் :** ஒரு கட்டுமானம் செய்யப்பட்ட ஆவணத்தில், ஆவணத்தைத் திறக்கும்போது ஒன்றை யொன்று எதிர்நோக்கியவாறு

உள்ள இரு பக்கங்கள். இரட்டை எண்ணுடைய பக்கம் இடப் பக்கத்திலும், ஒற்றை எண் பக் கம் வலப்புறத்திலும் இருக்கும்.

**facsimile** : தொலைநகலி : *1. படங்கள், நிலப்படங்கள், வரைபடங்கள் ஆகியவற்றை அனுப்புதல். உருக்களை அனுப் பும் கருவி மாற்றி அனுப்ப, அவற்றைப் பெறும் நிலையத்தில் மீண்டும் உருவாக்கி ஒரு வகை யான காகிதத்தில் நகலெடுத் தல். தொலை நகலெடுத்தல் என்றும் அழைக்கப்படும். 2. மூல வண்ணத்தை உள்ளது உள்ளபடி நகலெடுத்தல். 3. உண்மை நகல் மறு ஆக்கம்.* Fax *என்று சுருக்கி அழைக்கப்படுகிறது.*

**facsimile transceiver** : தொலை நகல் போக்கு வருவி : *உருவங் களை மின்னணு அனுப்பு முறையில் அனுப்பவும் பெற வும் பயன்படுத்தும் அலகு.*

**facsimile transmission** : தொலை நகல் செலுத்தம்; தொலை நகல் அனுப்பீடு.

**factor** : காரணி : *கணித முறைப் படி செயற்படக்கூடிய ஒரு தரவு கூறு அல்லது மாறுவகை மதிப்புரு.*

**factor analysis** : காரணி ஆய்வு : *முக்கியத்துவத்தின் தன்மையை யும், மிக முக்கிய காரணிகளை யும் முடிவுசெய்ய பல காரணி களின் இடைச்செயலை ஆய்வு செய்யும் கணிதத் தொழில் நுட்பம்.*

**factor, blocking** : தடு காரணி.

**factorial** : படிவரிசைப் பெருக்கப் பேரெண் : *1-லிருந்து குறிப் பிட்ட எண்ணுக்கு எல்லா முழு எண்களையும்* (Integer) *பெருக்கு வதன் மூலம் கணித்து காரணி களை உருவாக்குதல். காரணி யத்தைக் குறிப்பிடப் பயன்படுத் தப்படுகிறது. சான்றாக 41 என்பது* 1 x 2 x 3 x 4-*க்கு சம மானது;* n1 *என்பது* 1 x 2 x 3 x 4 x .... (n - 1 ) x n -*க்குச் சமமானது.*

**factor, scale** : அளவுகோல் காரணி; அளவீட்டுக் காரணி.

**facts** : பொருண்மைகள் : *சிறிய /நடுத்தர வணிகத்திற்கு வசதி கள் (பொதுப் பேரேடு, வரவுக் கணக்குகள், செலுத்தக் கணக்கு கள்) உடைய நிதியியல் கணக் கீட்டுப் பொறியமைவு.*

**fact template** : பொருண்மைப் படிம அச்சு; நிகழ்வுப் படிம அச்சு.

**failsafe** : பழுது தடுப்பி.

**fail - safe system** : பழுது தடுப்பு அமைப்பு : *பெரும் சேதம் ஏற்படுவதைத் தடுக்க உருவாக்கப்படும் அமைப்பு.*

இதனால் சில வசதிக் குறைவும் ஏற்படலாம். சான்றாக, கணினி கட்டுப்பாட்டு சாலை விளக்கு அமைப்பில், ஒரு தவறு ஏற்பட்டால், விளக்குகளை நிறுத்துவதற்குப் பதிலாக, பழுது தடுப்பு அமைப்பின்படி, சாலை விளக்குகள் யாவும் சிகப்பு நிறத்தைக் காட்டும். மின்சக்தி நிலைய இயக்கத்தில், வெப்பம் அளவுக்கதிகமாகும்போது மின் வழங்குதல் துண்டிக்கப்படும்.

**fail - soft system : பழுதாயினும் பணியாற்றும் அமைப்பு** : ஒரு கணினி அமைப்பின் சில பகுதிகள் மட்டும் செயல்படவில்லையென்றாலும் தரவுச் செயலாக்கம் தொடரும் அமைப்பு. வழக்கமாக, அதைத் தொடர்ந்து செயல்திறனும் சீர்கேடு அடையும். பழுது தடுப்பு அமைப்பில் சொல்லப்பட்ட அதே எடுத்துக்காட்டைப் பயன்படுத்திக் கூறுவதென்றால் கோளாறு ஏற்படும்போது சாலை விளக்குகள் மஞ்சள் ஒளிவீசும், வெப்பம் அதிகமாகும்போது இந்த அமைப்பின்படி, மின்சக்தி வரும் ஆரம்ப பகுதியை நிறுத்தி விட்டு, அவசர சாதனமாகிய மாற்று மின்கலம் மூலம் மின் சக்தி வழங்குவது தொடரும்.

**failure : பழுது** : கணினி அல்லது கணினி சார்ந்த சாதனம் சரியாகச் செயல்படாமை அல்லது செயல்படா நிலை. மின்சாரம் நின்று போனால் கணினி செயல்படாமல் போகிறது. இதைத் தவிர்க்க மின்கலன் உடைய காப்பு மின்சாதனம் (யுபிஎஸ்) பயன்படுத்தலாம். கணினியை முறைப்படி நிறுத்தி வைக்கும் மின்சாரம் கிடைத்துக் கொண்டிருக்கும்.

**failure prediction : பழுது முன்னறிவித்தல்** : குறிப்பிட்ட துணை பாகங்கள் அல்லது கருவிகள் பழுதடையப்போவதை முன்னதாகவே மதிப்பிட்டு அவற்றை நீக்கி வேறு ஒன்றை அந்த இடத்தில் பொருத்தி பழுது ஏற்படும் முன்பு சரி செய்து முடித்தல்.

**failure rate : பழுது வீதம்** : ஒரு கருவி செயல்படுவதிலுள்ள நம்பகத் தன்மையை அளவிடும் முறை. ஒரு குறிப்பிட்ட காலக் கெடுவில் எத்தனை முறை பழுதாகிறது என்பதை அடிப்படையாகக் கொண்டது.

**Fairchild : ஃபேர்சைல்ட்** : *1974*இல் F-*8* என்ற நுண்சிப்பு வினை உருவாக்கிய ஒரு நிறுவனம். அந்தச் சமயத்தில் இந்தச் சிப்பு பெருமளவில் விற்பனையாகியது.

**fairness : உறுதி; நயமை** : ஒரு குறிப்பிட்ட காலத்துக்குப்பின்

ஒரு கணினி அமைப்பில் தேவைப்படும் அனைத்துச் செயல்களும் உத்திரவாதமளிக் கப்படும் நிலை.

**fair pointer : நடுநிலைச் சுட்டுமுள் :** இன்டெல் 80 x 86 கூறிடப்பட்ட முகவரி எண்ணில், கூறு, மாற்றச்சு இரண்டையும் உள்ளடக்கியுள்ள ஒரு நினைவக முகவரி எண்.

**fair use : நியாயமான பயன் நுகர்வு; சட்டப்படி பயன்படுத்தல் :** பதிப்புரிமை பெற்ற ஒரு மென்பொருளை சட்டப்படி பயன்படுத்திக் கொள்ளுதல்.

**falcon : ஃபால்க்கன் :** சேமித்து வைக்கப்பட்ட செயல்முறை நினைவுப் பதிப்பானாக அல்லது தறியாகச் செயற்படும் காகித நாடா.

**fall back : சார்ந்து நிற்றல் :** அவசர சூழ்நிலையில் மாற்று ஏற்பாட்டைப் பயன்படுத்துதல். காலமுறை அமைப்பில் கோளாறு கண்டுபிடிக்கப்பட்டால், மாற்று நிரலாக்கத் தொடர், தரவுத் தளம் உடனடியாக செயல்படுத்தப்படல்.

**fallout : விழுந்துவிடல்; சிதறல் :** மின்னணு பாகங்கள் பழுது அடைதல். புதிய கருவியை எரிய வைக்கும்போது சில சமயங்களில் இது ஏற்படுகிறது.

**family of computers : கணினிக் குடும்பம் :** ஒரு அளவை முறை வடிவமைப்பில் உள்ள வேகம் மற்றும் முதன்மை நினைவகத் திறன்களில் மட்டும் மாறுபடுகிற மையச் செயலக அலகுகளின் தொடர். குறைந்த செலவுள்ள மெதுவாகச் செல்லும் மையச் செயலகத்தில் இருந்து துவங்கி கணினி அமைப்பின் மற்ற பகுதிகளை மாற்றாமல் வேகமாக இயங்கும் மையச் செயலகங்களை மட்டும் வேலைப் பளுவிற்கேற்ப மாற்றிக்கொள்ளுதல்.

**FAMOS : ஃபமாஸ் :** Floating Gate Avalanche injection-MOS என்பதன் குறும்பெயர். PROM போன்ற மின்சக்தி மூலம் சேமிப்பகச் சாதனங்களை உருவாக்கும் தொழில் நுட்பம்.

**fan[1] : விசிறி :** கணினி உட்பாகங்கள், லேசர் அச்சுப்பொறிகள் தொடர்ந்து செயல்படும் போது வெப்பம் உண்டாகிறது. இதன் காரணமாய் அக்கருவி செயல்படாமல் போவதற்கு வாய்ப்புள்ளது. இக்குறையைத் தவிர்க்க அக்கருவிகளுக்குள் விசிறி பொருத்தப்படுவதுண்டு. கணினி செயல்பட்டுக் கொண்டிருக்கும்போது தொடர்ந்து ஒரு மெல்லிய இரைச்சல் ஒலி கேட்டதுண்டா? அது விசிறியின் சத்தமே.

**fan²** : **பிரி; பிரிப்பு** : அச்சுப் பொறியின் இரண்டு தாள்கள் ஒன்றோடொன்று ஒட்டிக் கொள்ளாமல் வரச் செய்வது.

**fanfold paper** : **விசிறி மடிப்புத் தாள்** : ஒவ்வொரு பக்கத்தையும் குறிக்க விசிறி போன்று மடித்து, தொடர்ந்து இடைவெளிகளில் துளைகள் இடப்பட்ட ஒரு நீண்ட தொடர் காகிதத் தாள்.

**fan - in** : **உள்வீச்சு** : ஒரு இலக்க முறை உறுப்புக்கு உள்ளீடு செய்யப்படும் சமிக்கைகள்.

**fan - out** : **வெளிவீச்சு** : *1.* மோசமான நிலையிலும், டீடீஎல் (TTL) சாதன வெளியீடு ஏற்றக் கூடிய டீடீஎல் அலகுகள். *2.* ஒரு வடிவமைக்கப்பட்ட நிரலாக்கத் தொடரில் ஒரு குறிப்பிட்ட மாடுலின் கீழ் அமைக்கப் படும் நிரலாக்கத் தொடர் கூறு களின் (Modules) எண்ணிக்கை.

**fanzine** : **சுவைஞர் இதழ்** : ஒரு குழு, ஒரு நபர் அல்லது ஒரு நடவடிக்கைமீது பற்றுக் கொண்டுள்ள சுவைஞர்களால் அத்தகைய சுவைஞர்களுக்காக இணையத்தில் மின்னஞ்சல் வழியாக வழங்கப்படுகின்ற ஒரு இதழ்.

**FAQ** : **எஃப்ஏகியூ (அகேகே)** : அடிக்கடி கேட்கப்படும் கேள்விகள் என்று பொருள் படும் Frequently Asked Questions என்ற தொடரின் தலைப்பெழுத் துக் குறும்பெயர். ஒரு குறிப் பிட்ட பொருள்பற்றி பொது வான வினாக்களும் அவற்றுக் குரிய பதில்களும் அடங்கிய ஓர் ஆவணம். இணையத்தில் செய்திக் குழுக்களில் புதிய உறுப்பினர்கள், ஏற்கெனவே பலமுறை பதிலளிக்கப்பட்ட கேள்விகளை மீண்டும் மீண்டும் கேட்பதுண்டு. இப்படிப்பட்ட கேள்வி பதில்களைத் தொகுத்து நூலாக வெளியிடுவார்.

**farad** : **ஃபராடு** : தாங்கும் தன்மை அளவின் அலகு. 1 வோல்ட் திறன் அதனுள் அனுப் பப்படும்போது 1 கூலும் மின் ஆற்றல் அலகு சக்தியை அது சேமிக்குமானால் ஒரு தாங்கி யின் தாங்கும் திறன் 1 ஃபராட் என்று மதிப்பிடப்படுகிறது.

**FAST** : **ஃபாஸ்ட்** : ''மென் பொருள் திருட்டு எதிர்ப்பு கூட்டமைப்பி'' என்று பொருள் படும் "Federation Against Software Theft" என்பதன் தலைப் பெழுத்துச் குறும்பெயர். இது ஓர் அமெரிக்க மென்பொருள் தொழிற் கழகம். இது கோப்பு களை மிக விரைவாக அனுப்பு வதற்கு உதவுகிறது. கோப்பு முழுவதும் அனுப்பப்பட்டதும் பிழைதிருத்தம் நடைபெறுகிறது.

**fast-access storage :** விரைவு அணுகு சேமிப்பகம்.

**fastCAD :** ஃபாஸ்ட் கேட் : நன்கு வடிவமைக்கப்பட்ட பயனாளர் இடைமுகப்பு தயாரிப்பில் புகழ் பெற்ற ''எவலூஷன் கம்ப்யூட் டர்ஸ்'' என்ற அமைவனம் தயாரிக்கும் முழு அம்சங்களை யும் கொண்ட PC CAD செயல் முறை. இதற்கு ஒரு கணித இணைச் செய்முறைப்படுத்தி தேவை.

**fast core :** விரைவு உள்மையம் : ஒரே செய்முறைப்படுத்தியில் செயல்முறைச் சேமிப்பகத் துக்குப் பயன்படுத்தப்படும் சாதனங்களைவிடக் குறைந்த அணுகுநேரம் கொண்ட ஒரு வகை உள்மையச் சேமிப்பகம்.

**fast farward :** வேகமாய் முன் நகர்.

**fast fourier transform :** விரைவு ''ஃபூரியர்'' உருமாற்றி : சிக்க லான குறியீடுகளை அடிப்படை அமைப்பான்களாகப் பகுக்கக் கூடிய இலக்கமுறைக் குறி யீட்டுச் செய்முறைப்படுத்து தலில் பயன்படுத்தப்படும் ஒரு படிநிலை நடைமுறை.

**fast line :** விரைவு அனுப்பீட்டுத் தொடர்பு : தரவுகளை அனுப்பீடு செய்யும் வீதம் பெரும்பாலும் 'பாட்' (Baud) என்ற அலகுகளில் குறிப் பிடப்படுகிறது. 'பிரஸ்டெல்' முறையில் பயன்படுத்து பவருக்கு 1,200 பாட் வேகத்தில் அனுப்பீடு செய்யப்படுகிறது. ஆனால், தொலைபேசித் தொடர்புகளில் அதைவிட அதிகவேகத்தில் தரவுகள் இழக் கப்படுகின்றன. ''பிரிட்டிஷ் டெலிகாம்'' என்ற அமைவனம் தயாரித்துள்ள தனி வகை நேரடித் தொடர்புகள், தரவு களை 48,000 அல்லது 96,000 பாட் வேகத்தில் அனுப்ப வல்லவை. இவை விரைவு அனுப்பீட்டுத் தொடர்புகள் என அழைக்கப்படுகின்றன.

**fast SCSI :** வேக ஸ்கஸ்ஸி : ஸ்கஸ்ஸி-2 இடைமுகத்தில் ஒரு வகை. ஒரே நேரத்தில் எட்டு துண்மி(பிட்)களைப் பரிமாற் றம் செய்யும். வினாடிக்கு 10 மெகா துண்மி (மெகா பிட்)கள் வரை தரவு பரிமாற்றம் இயலும். வேக ஸ்கஸ்ஸி இணைப்பி 50 பின்களைக் கொண்டது.

**fast/wise SCSI :** வேக/விவேக ஸ்கஸ்ஸி : ஸ்கஸ்ஸி-2 இடை முகத்தில் ஒருவகை. ஒரே நேரத் தில் 16 துண்மி (பிட்) தரவுவைக் கையாள வல்லது. வினாடிக்கு 20 மெகா துண்மிகள்வரை தரவு பரிமாற்றம் இயலும். வேக/ விவேக ஸ்கஸ்ஸி இணைப்பி 68 பின்களைக் கொண்டது.

**FAT : ஃபேட் :** ''கோப்பு ஒதுக் கீட்டு அட்டவணை'' என்று பொருள்படும் "File Allocation Table" என்பதன் தலைப் பெழுத்துக் குறும்பெயர்.

**fatal error : முடிவான பிழை :** ஒரு நிரலாக்கத்தொடர் இயக்கப் படும்போது ஏற்படும் எதிர் பாராத பழுது அல்லது பிற சிக்கல்களினால் கணினியானது தொடர்ந்து செயல்பட முடியா மல் போவது. முடிவான பிழை இல்லை எனில் சரியான முறை யில் இல்லையென்றாலும் நிர லாக்கத் தொடர் சென்று கொண் டிருக்கும். நிரலாக்கத் தொடர் நின்றுபோகுமாறு செய்கின்ற ஒரு இயக்காளரின் தவறு அல் லது ''ராம்'' நினைவகத்தில் சேமிக் கப்பட்டுள்ள தரவுகள் அழிந்து போதல் போன்றவை முடிவான பிழைகளாகும். Terminal Error என்றும் அழைக்கப்படுகிறது.

**fat application : ஃபேட் பயன் பாடு :** பவர்பீசி பிராசசர் பொருத் தப்பட்ட மெக்கின்டோஷ், 68000 பிராசசர் பொருத்தப்பட்ட மெக்கின்டோஷ் ஆகிய இரு வகைக் கணினிகளிலும் செயல் படுத்தக்கூடிய ஒரு பயன்பாடு.

**fat binary : ஃபேட் இருமம் :** பவர்பீசி பிராசசர் அடிப்படை யிலான மெக்கின்டோஷ், 68000 பிராசசர் அடிப்படையிலான மெக்கின்டோஷ் ஆகிய இரு வகைக் கணினியிலும் செயல் படக்கூடிய ஒருவகை பயன் பாட்டு வடிவாக்கம்.

**fatbits : பருமனான துண்மிகள் :** தனிப்பட்ட திரை உறுப்புகளை மாற்றும் வகையில் திரையின் ஒரு பகுதியைப் பெரிதாக ஆக்குகிறது. வண்ணமிடும் ஓவிய நிரலாக்கத்தொடரின் தேர்ந்தெடுக்கும் முறை. எழுத்து அமைப்பு உருவாக்கு வதில் பயனுள்ளது.

**fat client : கொழுத்த கிளையன் :** ஒருவகை கிளையன்/வழங்கன் கட்டமைப்பில் செயல்படும் கிளையன் கணினி. இவ்வகை அமைப்பில் பெரும்பாலான அல்லது அனைத்துச் செயலாக் கங்களையும் கிளையன் கணினியே செய்து கொள்ளும். வழங்கன் கணினி மிகச் சில வற்றைச் செய்யும் அல்லது எதையுமே செய்யாது. தகவலை வெளியிடும் பணியையும், செயல்கூறுகளையும் கிளையன் கணினியே கவனித்துக் கொள் ளும். வழங்கன் கணினி, தரவு தளத்தை மற்றும் அதனை அணுகுதல் போன்ற பணி களைக் கவனித்துக் கொள்ளும்.

**FAT file system : ஃபேட் கோப்பு முறைமை :** கோப்புகளை ஒழுங்குபடுத்தி மேலாண்மை

செய்ய எம்எஸ்-டாஸில் மேற்கொள்ளப்படும் முறைமை. கோப்பு ஒதுக்கீட்டு அட்டவணை என்று பொருள்படும் File Allocation Table என்பதன் சுருக்கமே FAT எனப்படுகிறது. ஒரு வட்டினை வடிவாக்கம் (Format) செய்யும்போது எம்எஸ் டாஸ் அவ்வட்டில் ஒரு தரவு கட்டமைப்பை (Data Structure) உருவாக்குகிறது. ஒரு கோப்பினை வட்டில் சேமிக்கும் போது, சேமித்த கோப்பின் விவரங்களை எம்எஸ்டாஸ் ஃபேட்டில் எழுதிக் கொள்ளும். பின்னாளில் ஃபைலின் விவரங்களைப் பயனாளர் கோரும் போது, டாஸ், ஃபேட்டின் உதவியுடன் ஃபைல் விவரங்களைக் கொணர்ந்து தரும். டாஸ் ஃபேட் கோப்பு முறைமையை மட்டுமே பயன்படுத்த முடியும். ஓஎஸ்/2, விண்டோஸ் என்டி மற்றும் விண்டோஸ் 98 ஆகியவை தமக்கேயுரிய கோப்பு முறைமைகளை (முறையே HPFS, NTFS, VFAT) பின்பற்றுவதுடன் ஃபேட் முறைமையை ஏற்றுக் கொள்ளவும் செய்கின்றன.

**father file : 'தந்தை கோப்பு' :** மூலப்பதிவேட்டின் ஒரு நகலையும் வைத்துக்கொண்டு திருத்தப்பட்ட பதிப்பையும் தருகின்ற வகையில் பதிவேடுகளைப் புதுப்பிக்கும் அமைப்பு. ஒரு கோப்பினைப் புதுப்பிக்கும் பணி நடைபெறும்போது பழைய மூல கோப்பை 'தந்தை கோப்பு' என்கிறோம். தந்தை கோப்பை உருவாக்கும் கோப்பு 'தாத்தா கோப்பு'. வட்டு அல்லது நாடா போன்ற மின்காந்த ஊடகத்தில் வைக்கப்பட்டுள்ள கோப்புகளுக்கு இத்தொழில் நுட்பம் மிகவும் பொருத்தமானது.

**fat server : கொழுத்த வழங்கன்; கொழுத்த சேவையகம் :** ஒரு கிளையன்/வழங்கன் கட்டமைப்பில் செயல்படும் வழங்கன் கணினி. ஏறத்தாழ அனைத்துச் செயலாக்கப் பணிகளையும் வழங்கன் கணினியே மேற்கொள்ளும். கிளையன் மிகச் சில பணிகளையே செய்யும். அல்லது எப்பணியும் செய்யாது. பயன்பாட்டு நிரல்கள் மற்றும் தரவு, வழங்கன் கணினியிலேயே இருக்கும். தகவலைப் பெற்று வெளியிடும் பணியையே கிளையன் செய்யும்.

**fatware : கொழுத்த மென்பொருள் :** திறனற்ற மோசமான வடிவமைப்பு, அரிதாகப் பயன்படுத்தப்படும் ஏராளமான தேவையற்ற வசதிகள் இவற்றின் காரணமாக, நிலைவட்டில் அதிகமான இடத்தை ஆக்கிரமித்துக் கொள்ளும் மென்பொருள்.

**fault** : **கோளாறு; பழுது** : வடிவமைக்கப்பட்ட விதிமுறைகளின்படி செயல்பட முடியாமல் தடுக்கும் நிலை. பிரிந்தகம் அல்லது அரை மின்சுற்று போன்றவை ஒரு துணை பாகத்திலோ, கணினியிலோ அல்லது வெளிப்புற உறுப்பிலோ செயல்பட முடியாமையை ஏற்படுத்தல். Error and Mistake என்பதற்கு எதிர்ச்சொல்.

**fault tolerance** : **பழுது தாங்கு திறன்** : வன்பொருள் அல்லது மென்பொருள் கோளாறுகள் இருந்தபோதும் வடிவமைப்பு விதிமுறைகளின்படி ஒரு கணினி அமைப்பு தன் பணிகளைச் செய்யும் திறன். கோளாறின்போது இயங்கி அதே வேளையில் சரிவர செயல்படவில்லையென்றால் பாதி அல்லது ஓரளவு கோளாறு தாங்கும் திறனுடையது என்று சொல்லலாம். கூடுதல் வன்பொருள், மென்பொருள் அல்லது இந்த இரண்டின் இணைப்பின் மூலம் பாதுகாப்பு ஏற்பாடு செய்யப்படுகிறது.

**fault tolerance level** : **பழுது தாங்கு திறன் மட்டம்; பழுது சகிப்பு நிலை.**

**fault-tolerant computer systems** : **பழுது சகிப்புக் கணினிப் பொறியமைவு** : பன்முக மையச் செயல்முறைப்படுத்தி, பொறியமைவு மென்பொருள் ஆகியவையுடைய கணினிகள். இவை, ஒரு முக்கியமான வன்பொருள் அல்லது மென்பொருள் செயலிழந்தாலுங்கூட செயற்பாடுகள் தொடர்ந்து நடைபெறுமாறு செய்கின்றன.

**favorite** : **கவர்வி; ஈர்ப்பி; விருப்பமான; விருப்பத் தளங்கள்; விரும்பும் பக்கம்** : இணையத்தில் பயனாளர் ஒருவர் அடிக்கடி விரும்பிப் பார்க்கும் வலைப் பக்கம், மைக்ரோசாஃப்ட் இன்டர்நெட் எக்ஸ்புளோரரில் இவ்வாறு அழைக்கப்படுகிறது. அடிக்கடி பார்க்க விரும்பும் பக்கத்துக்கு ஒரு குறுவழியை (Shotcut) பயனாளர் தாமாகவே அமைத்துக் கொள்ள முடியும். நெட்ஸ்கேப் நேவிக்கேட்டரில் இத்தகைய பக்கத்துக்கு புத்தகக் குறி (Book Mark) என்று பெயர்.

**favourites folder** : **கவர்விகள் கோப்புறை** : அடிக்கடி பார்க்க விரும்பும் வலைப்பக்கங்களுக்கான குறுவழிகளடங்கிய கோப்புறை. மைக்ரோசாஃப்ட் இன்டர்நெட் எக்ஸ்புளோரரில் இத்தகைய பெயர். பிற உலாவிகளில் புத்தகக் குறிகள் (Book Marks), சூடான பட்டியல்

(Hotlists) என்று வேறுபல பெயர் களில் அழைக்கப்படுகின்றன.

**FAX : ஃபேக்ஸ்; தொலை நகலி** : 1. ஃபேக்சிமிலி (Facsimile) என்ற சொல்லின் பேச்சு வழக்கு. 2. ஒரு பொதுவான எடுத்துச் செல்லும் கட்டமைப்பின் மூலம் படங்களை ஒரு இடத்திலிருந்து வேறிடத்திற்கு அனுப்ப வசதியளிக்கும் கருவி.

**fax board : தொலை நகலிப் பலகை** : ஒரு விரிவாக்கப் பலகையிலுள்ள தொலைநகலி அனுப்பீடு. இது, வட்டுக் கோப்புகளிலிருந்து அல்லது திரையிலிருந்து தொலை நகலி குறியீடுகளை நேரடியாக உண்டாக்கும் மென்பொருள்களைப் பயன்படுத்திக் கொள்கிறது. மேலும், தனது உருக்காட்சியை நுண்ணாய்வு மூலம் பெறுகிற ஒரு தொலை நகலி எந்திரத்தைவிடச் செறிவான உருக்காட்சியை அனுப்புகிறது. வந்து சேரும் தொலைநகல், கணினியின் அச்சடிப்பானில் அச்சடிக்கப்படுகிறது.

**fax machine : தொலை நகல் எந்திரம்** : தொலைபேசிக் கம்பிகளைப் பயன்படுத்தி மின்னணுவியல் செய்தித் தொடர்புகள் மூலமாக வாசகங்களையும், வரைகலைகளையும், உருக்காட்சிகளையும் அனுப்புவதற்கான ஓர் எந்திரம்.



தொலைநகல் எந்திரம்

**fax/modem : தொலைநகலி / மோடெம்** : ஒரு புறநிலை அலகாக அல்லது தரவு மோடெமாக இருக்கக் கூடிய தொலைநகல் தரவு மோடெம் இரண்டின் இணைப்பு. இதில், அழைப்



தொலைநகலி/ மோடெம்

பினை தொலைநகலிக்கு அல்லது தரவு மோடெமுக்கு வழிச் செலுத்துகிற ஒரு தொலைநகல் செய்தி விசை யினை உள்ளடக்கியிருக்கிறது.

**fax programme : தொலை நகலி செயல்முறை; தொலை நகலி கட்டளைத்தொடர்; தொலை நகலி நிரல்.**

**fax server : தொலை நகல் வழங்கன்.**

**fax switch : தொலைநகல் விசை :** ஒரு தொலைநகல் குறியீட்டுக் காக ஒரு தொலைபேசிக் கம்பி யினை சோதனை செய்து, தொலைநகல் எந்திரத்துக்கு அழைப்பினைச் செலுத்துகிற சாதனம். ஒரு தொலைநகல் எந்திரம் ஓர் எண்ணைச் சுழற்றி, அதற்கு அந்த இணைப்பு பதி லளிக்கும்போது, அது தன்னை அடையாளம் காட்டு வதற்கு ஒரு தொனியை வெளிப் படுத்துகிறது. சில சாதனங்களில், குரல் தொலை நகல் தரவு வகையைக் கையாள் கின்றன. இதனை மாற்றுவதற்கு ஒரு விரிவாக்க எண்ணில் விசை இயக்கம் தேவைப்படும்.

**FCB : எஃப்சிபி :** ''கோப்புக் கட்டுப்பாட்டுத் தொகுதி'' என்று பொருள்படும் "File Control Block" என்பதன் தலைப்பெழுத்து குறும்பெயர்.

**FCC : எஃப்சிசி :** Federal Communi-cations Commission என்பதன் குறும்பெயர். அமெரிக்க அரசின் நிறுவனமாகிய இது மாநிலங் களுக்கிடையிலான தரவுத் தொடர்புகளையும், பொதுத் தரவு போக்குவரத்து வழித் தடங் களையும், ஒலிபரப்பு ஊடகங் களையும் (Media) ஒழுங்கு படுத்தும் பொறுப்பேற்றுள்ளது.

**F connector : எஃப் இணைப்பி :** ஒளிக்காட்சி (Video) பயன்பாடு களில் பெருமளவு பயன்படுத் தப்படும் ஓர் இணையச்சு (Coaxial) இணைப்பி. இணைக் கும்போது திருப்பாணி (Screw) ஒன்று தேவை.



எஃப் இணைப்பி

**FDDI : எஃப்டிடிஐ :** ஒளியிழை பகிர்ந்தமை தரவு இடைமுகம் என்று பொருள்படும் Fiber Distributed Data Interface என்ற சொல்தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். அதி வேக ஒளியிழை குறும்பரப்புப் பிணையங்களுக்காக அமெரிக்க தேசிய தரக்கட்டுப்பாட்டு நிறு வனம் (ANSI) உருவாக்கிய செந் தரம். வில்லை வளைய (Token Ring) கட்டமைப்பில் அமைந்த பிணையங்களில் வினாடிக்கு 100மெகா துண்மிகள் (மெகா பிட்ஸ்) வீதம் தரவு பரிமாற்றம் செய்வதற்கான வரையறுப்புகள் இதில் அடங்கியுள்ளன. எஃப்டி டிஐ-II என்பது எஃப்டிடிஐ-ன் நீட்டித்த வடிவமாகும். நிகழ் நேரத் தரவு பரிமாற்றத்தில் தொடர்முறைத் தகவலை இலக்க முறைத் தரவு வடிவத்தில் அனுப்பு வதற்குரிய கூடுதலான வரை யறுப்புகள் இதில் உள்ளன.

**FDM : எஃப்டிஎம் :** அலைப் பகிர்வுச் சேர்ப்புமுறை என்று பொருள்படும் Frequency Division Multiplexing என்ற சொல்தொடரின் தலைப்பெழுத் துக் குறும்பெயர். ஒன்றுக்கு மேற்பட்ட தரவு சமிக்கைகளை வெவ்வேறு அலைவரிசைக்கு மாற்றிப் பின் அனைத்து அலை வரிசைகளையும் ஒற்றை அலைக்கற்றையாக்கி ஒரே தரவு தடத்தில் அனுப்பிவைக்கும் முறை. அடிக்கற்றைப் (Base-band) பிணையங்களிலும், தொலைபேசி வழித் தரவு தொடர்பிலும் தொடர்முறை (Analog) சமிக்கைப் பரிமாற்றத் திலும் எஃப்டிஎம் பயன்படு கிறது. எஃப்டிஎம் முறையில் தரவுத் தடத்தின் அலைக்கற்றை சிறுசிறு கற்றையாகப் பிரிக்கப் பட்டு ஒவ்வொரு கற்றையும் ஒரு தரவு சமிக்கைகளை ஏந்திச் செல்லும்.

**FE : எஃப் இ :** Field Engineer என்பதன் குறும்பெயர்.

**feasibility study : சாத்தியக் கூறு; இயலுமை ஆய்வு :** மாற்றுத் தீர்வுகள், செயல்முறை பரிந் துரைகள், செயல் திட்டத்துடன் ஒரு தரவு செயலாக்கச் சிக்கலை வரையறுத்து கணினி அமைப்பை வடிவமைத்து நிறுவுவது பற்றிய ஆய்வு. 'Preliminary Study', 'Systems Study' என்றும் அழைக்கப்படுகிறது.

**feathering : இறகிணைப்பு :** ஒரு பக்கத்தில் அல்லது பத்தி யிலுள்ள ஒவ்வொரு கோட்டுக் கிடையிலும் செங்குத்து வரிச் சரியமைவினை ஏற்படுத்துவதற் காகச் சரிநிகரான இடைவெளி யைச் சேர்த்தல்.

**feature : தன்மை; பண்புக்கூறு :** ஒரு சொல்பகுப்பி நிரலாக்கத் தொடரில் வலது பக்க இடை வெளி அமைப்பது போன்று ஒரு நிரலாக்கத்தொடரில் அல் லது வன்பொருளில் சிறப்பாக ஏதாவது செய்தல்.

**feature extraction : தன்மை கண்டறிதல்; பண்புக் கூறறிதல் :** அமைப்பு கண்டறிதலுக்காக மேலோங்கும் தன்மைகள் தேர்ந்தெடுத்தல். கணினி கட்டுப்பாடு ஒளிப்படக் கருவி யில் (வீடியோ) வடிவங்கள் மற்றும் முனைகள் போன்ற தன்மைகளைக் கொண்டு பொருள்களை அறியும் திறன்.

**federal database : கூட்டி ணைப்புத் தரவுத் தளம் :** ஒரு குறிப்பிட்ட துறை பற்றிய அல்லது சிக்கல் பற்றிய தத்தம் கண்டுபிடிப்புகளையும் பட்டறி வையும் அறிவியல் அறிஞர்கள் சேமித்து வைத்துள்ள ஒரு தரவுத் தளம். ஒரு தனி மனித ரால் தீர்க்க முடியாத அல்லது தீர்ப்பதற்குக் கடினமான சிக்கல்களுக்குத் தேவையான அறிவியல் கலந்தாய்வுக்கு ஏற்ப வடிவமைக்கப்பட்டது கூட் டிணைப்புத் தரவுத் தளம்.

**Federal Information Processing Standards : கூட்டரசின் தரவு செயலாக்கத் தரங்கள் :** அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசாங்க அமைப்புகளுக்குள் நடைபெறும் தரவு செயலாக்கத் திற்கான வழி காட்டுதல்களும் தொழில்நுட்ப வழிமுறைகளும் அடங்கிய செந்தரக்கட்டுப்பாடு.

**Federal Privacy Act : ஐக்கிய தனிமைச் சட்டம் :** அரசாங்க அமைப்புகள் மற்றும் ஒப் பந்தக்காரர்கள் தனிநபர் பற்றிய இரகசியக் கோப்புகளை வைத் திருப்பதைத் தடுக்கும் ஐக்கியச் சட்டம். அனைத்து அரசாங்க அமைப்புகளிலும் அவர்களது ஒப்பந்தக்காரர்களிடம் தங்களைப் பற்றிய எத்தகைய தரவு, கோப் பில் உள்ளது என்று தனிநபர்கள் அறிந்து கொள்ள இது அனுமதி யளிக்கிறது. Private Act of 1974 என்றும் அறியப்படுகிறது.

**Federation of American Research Networks : அமெரிக்க ஆராய்ச்சிப் பிணையங்களின் கூட்டமைப்பு :** அமெரிக்க நாட் டிலுள்ள பிணையங்களின் இணைப்புத் தொழில்நுட்பக் குழுமங்களை ஒன்று சேர்த்து உருவாக்கப்பட்ட ஒரு லாப நோக்கில்லா சங்கம். கல்வி, ஆராய்ச்சி மற்றும் தொடர் புடைய சமூகங்களிடையே பிணையங்களை ஒருங்கிணைப்

பதை தேசிய அளவில் முக்கிய மாக வலியுறுத்தும்.

**Federation on Computing in the United States : அமெரிக்காவின் கணிப்பணிக் கூட்டமைப்பு :** தகவல் செயலாக்கப் பன்னாட்டுக் கூட்டமைப்பில் (International Federation of Information Processing - IFIP) அமெரிக்க நாட்டின் பிரதிநிதி அமைப்பு.

**feed : செலுத்து :** காகித அல்லது மின் காந்த நாடா, வரி அச்சுப்பொறி காகிதம் அல்லது அச்சுப்பொறி நாடா போன்ற நீளமான பொருள்கள் இயக் கப்படும் நிலைக்கு நகர்த்து கின்ற எந்திரச் செயல்முறை.

**feedback : பதில்பெறுதல்; பின்னூட்டம்; நிலையறிதல் :** 1. ஒரு செயலாக்கத்தில் உண்மை நிலையை அளந்து அதை மாற்றக்கூடிய உள்ளீடு அனுப்பும் செயலை கட்டுப் பாட்டு அமைப்பு செய்ய வகை செய்யும் தானியங்கிக் கட்டுப் பாட்டு முறைகள். 2. தரவு செயலாக்கத்தில், செயலாக்கத் தின் ஒரு குறிப்பிட்ட நிலையில் உருவாகும் தரவு, அடுத்துவரும் தரவு செயலாக்கத்தைப் பாதிக் கும் வகையில் பதில் பெறக் கூடும். சான்றாக சேமிப்பகம் நிரம்பிவிட்டது என்ற பதில் பெற்றால் மேலும் தரவுகளை ஏற்றுக்கொள்வதைத் தாமதப் படுத்தலாம் அல்லது வேறு சேமிப்பகத்துக்கு அனுப்பலாம். 3. வரிசைமுறை செயல் வெளி யீடு அடுத்து வரும் செயலை மாற்றுகின்ற செயலாக்க முறை.

**feedback circuit : நிலையறியும் மின் சுற்று :** ஒரு மின்னணு மின் சுற்று அல்லது கட்டுப்பாட்டு அமைப்பின் வெளியீட்டுச் சமிக் கைகளில் ஒரு பகுதியை அந்த அமைப்பு அல்லது மின்சுற்றின் உள்ளீட்டுப்பகுதிக்கு அனுப்பு கின்ற மின்சுற்று.

**feed, card : அட்டை செலுத்தம்.**

**feed, friction : உராய்வு ஊட்டல், உராய்வு செலுத்தம்.**

**feed holes : செலுத்து துளை கள் :** ஸ்ப்ராக்கெட் சக்கரத்தில் செலுத்த வசதியாக காகித நாடா வில் இடப்படும் துளைகள்.

**feed, horizantal : கிடைமட்டச் செலுத்தம்.**

**feed, vertical : செங்குத்துச் செலுத்தம்.**

**feep : ஃபீப் :** பயன்படுத்துபவ ரின் கவனத்தை இழுக்க முகப்பு கள் செய்யும். 'பீப்' பின் மற் றொரு பெயர்.

**Felt Dorr : ஃபெல்ட் டார் :** பரி சோதனை முறையில் 1885இல் ஒரு பன்முறை விசை இயக்கும்

கணக்கிடும் எந்திரத்தை உருவாக்கினார். இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர், காம்ப்டோமீட்டர் என்னும் பயன்படுத்தக் கூடிய காட்டும், பட்டியலிடும் எந்திரத்தை உருவாக்கினார்.

**female connector : துளை இணைப்பி** : இணைப்பி சாதனத்தில் வேறொரு பகுதி சேரக்கூடிய எஞ்சியுள்ள பகுதி.



துளை இணைப்பி

Male connector-க்கு எதிர்ச் சொல்.

**femto : ஃபெம்ட்டோ** : மில்லியனில் அல்லது ஒரு குவாட்ரில்லியனில் ஒரு பகுதி என்பதன் முன்சொல், $10^{-15}$.

**femtosecond : ஃபெம்ட்டோ நொடி** : ஒரு நொடியின் குவாட்ரில்லியனில் ஒன்று. 30 மில்லியன் ஆண்டுகளுக்கு எத்தனை நொடிகள் உண்டோ அத்தனை ஒரு நொடிக்கும் உண்டு. 1 -ஐ அடுத்து வரும் 15 சுழி (பூஜ்யம்)கள். 1,000,000,000,000,000. இரண்டு நொடிகளில் ஒளி பூமியில் இருந்து நிலவைக் கடந்து செல்கிறது. 12 ஃபெம்ட்டோ நொடிகளில், அது ஐந்து மைக்ரான்கள் மட்டுமே நகர்கிறது. ஒரு மனித முடியின் அகலத்தில் பத்தில் ஒரு பங்கு. FS என்று சுருக்கி அழைக்கப்படுகிறது.

**ferric core : அய உட்புரி** : வளைய வடிவிலுள்ள காந்தத் துண்டு. இது ஓர் ஊசித் தலையின் அளவுக்கு அல்லது அதற்குச் சிறிதாக இருக்கும். ஒரு இரும்புச் சலாகைக்கு வடமுனை தென்முனை அல்லது தென்முனை வடமுனை என்று காந்தமேற்றுதல் போன்று ஒரு வளையத்திற்கும் வலஞ்சுழியாக அல்லது இடஞ்சுழியாகக் காந்தமேற்றலாம். இது ஈரிலக்க '0'-களையும் '1' -களையும் சேமித்து வைக்க உதவுகிறது. ஒரு கணினியின் உள்மையச் சேமிப்பியை உருவாக்குவதற்கு இத்தகைய உட்புரிகள் அமைக்கப்படுகின்றன.

**ferric oxide ($Fe_2O_3$) : அய ஆக்சைடு ($Fe_2O_3$)** : மின்காந்த வட்டுகளிலும் நாடாக்களிலுமுள்ள பூச்சுகளில் பயன்படுத்தப்படும் இரும்பின் ஆக்சிகரணி.

**ferromagnetic** : **அயக்காந்தம்:** அயம், நிக்கல் போன்ற ஒரு பொருள். மிக உயர்ந்த காந்த மேற்பரப்புத் திறன்.

**ferromagnetic material** : **இரும்புக் காந்த ஆக்கப் பொருள்; நேர்காந்த ஆக்கப் பொருள்** : மிகுகாந்தப் பண்பு பெறக்கூடிய பொருள். மின்னணுத் துறையில் பரவலாகப் பயன்படுத்தக்கூடிய பொருள். எஃகு மற்றும் தூளாக் கப்பட்ட இரும்பு ஆகியவை. மின்தூண்டி (Inductor)களின், தூண்டல் திறனை அதிகரிக்க, அவற்றின் சுருள் மையமாய்ப் பயன்படுகிறது. நெகிழ்வட்டு, நிலைவட்டு மட்டும் காந்த நாடாக்களில் மேல்பூச்சுக்குப் பயன்படுகிறது.

**ferrous oxide** : **ஃபெர்ரஸ் ஆக்சைடு** : பதிவு செய்யும் வட்டுகள் மற்றும் நாடாக் களுக்கு பூசும் பொருள். இதை மின்காந்தப்படுத்த முடிவதால், மின்காந்த முறையில் தரவுப் பதிவு செய்ய முடிகிறது.

**FET** : **எஃப்இடீ** : Field Effect Transistor என்பதன் குறும்பெயர்.

**fetch** : **கொண்டு வா; கொணர்; எடு** : ஒரு சேமிப்பகத்திலிருந்து நிரல் அல்லது தரவுகளைக் கண்டுபிடித்து ஏற்றுதல்.

**fetch cycle** : **கொணர் சுற்று.**

**fetcher daemon** : **நேர்த்திச் செயல்முறை** : முதன்மைச் செயல் முறையிலிருந்து வேண்டு கோள்களைக் கேட்டறிந்து, பிறகு முதன்மைச் செயல்முறை யின் சார்பாக ஒரு வேண்டு கோளை விடுக்கிற ஒரு பெரிய செயல்முறையின் பகுதியாக இருக்கிற ஒரு சிறிய செயல் முறை. இந்தச் செயல்முறைகள் சிறிதாக இருப்ப தால் இவற்றை மிகநேர்த்தியாகத் தனிப் பண்புடையதாக்கி, மிகத் திறம் படச் செயல்புரியும்படி செய்யலாம்.

**fetch instruction** : **கொணர் ஆணை.**

**FF** : **எஃப்எஃப்** : Form Feed என் பதன் குறும்பெயர்.

**.fi** : **எஃப்ஐ** : இணையத்தில் ஃபின் லாந்து நாட்டைச் சேர்ந்த இணைய தளம் என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**fiber channel** : **ஒளியிழைத் தடம்** : அதி வேகமாகச் செயற் படும் கணினிக்காக உருவாக் கப்பட்டு வரும் எதிர் கால ANSI செந்தரம் (தர அளவு). இதில், IPI, SCSI, HIPPI நிரல் தொகுதிகள் இணைக்கப்பட்டுள்ளன. இதன் வேகம் வினாடிக்கு 12.5 முதல் 100 MBytes வரை இருக்கும்.

**fiber - optic cable :** ஒளியிழைத் தொகுப்பு: பெருமளவுத் தரவுகளை ஒளியின் வேகத்தில் கொண்டு செல்லக்கூடிய, நுண்ணிய கண்ணாடி அல்லது பிளாஸ்டிக் இழைகளினாலான தரவு அனுப்பீட்டு ஊடகம்.

**fiber optics :** ஒளி இழைகள் : ஒளியின் வேகத்தில் அதிக எண்ணிக்கைகளில் தரவுகளை அனுப்பக்கூடிய கண்ணாடி அல் லது செயற்கை நுண் இழைகளின் ஊடக தரவு அனுப்பல் முறை.

**fibonacci numbers :** ஃபைபோன் ACCI எண்கள் : முந்திய இரு எண்களின் கூட்டுத்தொகை யாக (1,1,2,3, 5,8,13 என்று இருக்கும் வகையில்) ஒவ்வொரு எண்ணும் இருக்கிற முழுஎண் களின் வரிசை. தேடுதலை இரு கீழின எண்களாகப் பகுக்கிற ஈரிலக்கத் தேடுதல்களை இது விரைவுபடுத்துகிறது.

**fibonacci search :** ஃபைபோன் ACCI தேடுதல் : ஃபைபோன் ACCI எண்களைப் பயன்படுத் தும் ஒரு தேடுதல் படிநிலை வரிசை. இது ஈரிலக்கத் தேடு தலில் இரண்டின் வர்க்கங் களைப் பயன்படுத்துவது போன்றதாகும்.

**fiche :** படத்தாள்; நுண்படத் தாள் : பல்வகை நுண் தோற்றங் களை உள்ளடக்கிய ஒளிப்படத் தாள்.

**fidoNet :** ஃபைடோனெட் : டாம் ஜென்னிங்ஸ் என்பவர் 1984இல் உருவாக்கிய ஃபைடோ BBS என்பதிலிருந்து தோன்றிய மின் னணுவியல் அஞ்சல் மரபுத் தொகுதி. 10,000-க்கும் அதிக மான ஃபைடோனெட் மைய முனைகள் பயன்பாட்டில் உள்ளன.

**field :** புலம் : தரவுத் தள மேலாண்மை அமைப்பு கையாளும் மிகச்சிறிய அல காகிய தரவுவின் ஒரு துண்டு. பணியாளர் கோப்பில், ஒரு நபரின் பெயர், வயது ஆகிய இரண்டும் இரண்டு தனித்தனி புலங்களாகக் கருதப்படும். ஒன்று அல்லது மேற்பட்ட புலங்களைக் கொண்டதே பதிவேடு.

**Field Alterable Control Element (FACE) :** புலம் மாற்றக்கூடிய கட்டுப்பாட்டு அலகு : பயனா ளர் நுண் நிரலாக்கத் தொடர் எழுத வழிவகுக்கும் சில அமைப்புகளில் உள்ள சிப்பு.

**field - based search :** புலம் சார் தேடல்

**field, card :** அட்டைப் புலம்.

**field data :** புல தரவுக் குறியீடு : மாறுபடும் உற்பத்தியாளர் குறி

யீடுகளுக்கு இடைப்பட்ட ஏற்பாடாக அமெரிக்க இராணுவம் தரவு செயல்பாடுகளில் பயன்படுத்தும் சரிசெய் குறியீடு.

**field delimitter : புல வரம்புக் குறி.**

**field effect transistor (FET) : புல விளைவி மின்மப் பெருக்கி :** மாறிலி சக்தியேற்கும் சேமிப்புப் பொருளாகச் செயல்படும் இறுதிப்பகுதி அரைக்கடத்திச் சாதனம்.

**field emmission : புல அனுப்புதல்; புல வீச்சு; புல உமிழ்வு :** வலுவான மின்சாரப் புலத்தின் தாக்கத்தினால் ஒரு உலோகம் அல்லது அரைக் கடத்தியிலிருந்து எலெக்ட்ரான்களை வெற்றிடத்திற்கு அனுப்புதல்.

**field engineer : களப் பொறியாளர் :** கணினி வன்பொருள் மற்றும் மென்பொருளின் களப் பராமரிப்புக்குப் பொறுப்பேற்றுள்ள தனிநபர். வாடிக்கையாளரின் பராமரிப்பு பொறியாளர் என்றும் அழைக்கப்படுவார்.

**field list : புலப் பட்டியல்.**

**field menu : புலப்பட்டி.**

**field name : புலப்பெயர் :** ஒரு புலத்திற்கு ஒதுக்கப்பட்டுள்ள பெயர். (பெயர், முகவரி, நகரம், மாநிலம் முதலியன). இது எல்லாப் பதிவேடுகளிலும் ஒரே மாதிரியாக இருக்கும். இது புலத்தை அடையாளங்காட்டக் கூடியதேயன்றி, அதில் பதிவு செய்யப்பட்டுள்ள தரவுவை அடையாளங்காட்டக் கூடியதன்று.

**field of view : புலப் பார்வை; காட்சிப் புலம் :** கணினி வரைகலைகளில், உருவாக்கப்பட்ட ஒளிப்படக் கருவி பார்க்கும் திறனின் எல்லைகளைக் குறிப்பிடுகிறது. ஒளிப்படக் கருவியை மையமாகக் கொண்ட கிடைமட்டக் கோணத்தையே இது பெரும்பாலும் குறிப்பிடுகிறது. கணிப்புக்கு எளிமையாக்க, கணினி வரைகலையாளர்களின் அனுமானத்தின்படி, ஒளிப்படக்கருவி ஒரு பிரமிட்டிற்குள் உள்ளது; கூம்புக்குள் அல்ல.

**field programmable logic array : புல நிரலாக்க தருக்கக் கோவை :** ஒரு வகையான ஒருங்கிணை மின்சுற்று (IC). இதில் தருக்க மின்சுற்றுகளின் (logic circuits) கோவை இருக்கும். தனித்த மின்சுற்றுகளிடையே இணைப்புகளையும், அதன்மூலமாக கோவையின் தருக்கச் செயல்முறைகளையும் நம் விருப்பப்படி நிரலாக்கம் செய்யமுடியும், தயாரிப்புக்குப் பிறகு, குறிப்பாக அவற்றைக் கணினிகளில்

நிறுவும் நேரத்தில் நிரலாக்கம் செய்யலாம். இத்தகைய நிர லாக்கத்தை ஒரேயொருமுறை மட்டும் செய்யமுடியும். சிப்பு வின் இணைப்புகளிடையே மிக அதிக மின்சாரத்தை செலுத்தி இத் தகைய நிரலாக்கத்தைச் செய்வர்.

**field/record** : புலம்/ஏடு.

**field separator** : புலப் பிரிப்பி : ஒரு பதிவேட்டில் புலங்களைப் பிரித்துக் காட்டுவதற்குப் பயன் படுத்தப்படும் குறியீடு காற் புள்ளி, அரைப்புள்ளி அல்லது முக்காற்புள்ளியாக இருக்கலாம்.

**field size** : புல அளவு.

**field squeeze** : புலப் பிழிவுக் கருவி : ஓர் அஞ்சல் இணைப் பியில், ஒரு தரவு புலத்தில் கூடுதலான காலியிடங்களை அகற்றி, எழுத்து வாசகத்தினுள் துல்லியமாக அச்சிடும்படி செய்யும் ஒரு செயற்பணி.

**field, updatable** : மாற்றத்தகு புலம்.

**field upgradable** : **களத்தில் மேம்படுத்தக்கூடிய வன்பொருள்** : வழங்கப்பட்ட பிறகு கணினி கிடங்கிலோ அல்லது பழுது பார்க்கும் மையத்திலோ அல்லது ஒருவரது அலுவலகத் திலோ, இத்தகைய களத்தில் மேம்படுத்தக் கூடியது.

**FIFO** : எஃப்ஐஎஃப்ஓ : First In First Out என்பதன் சுருக்கம். ஒரு பட்டியலில் பொருள்களைச் சேமிக்கவும் திரும்பப் பெறவு மான முறை. காத்திருப்போர் வரிசையில் (கியூவில்) முதலில் வந்தவர் முதலில் கவனிக்கப் பட்டு அனுப்பப்படுவார்.

**field, variable** : மாறுபுலம்.

**fifth generation computers** : **ஐந்தாம் தலைமுறைக் கணினி கள்** : அடுத்த கணினி வளர்ச்சி நிலை, ஒலி உள்ளீடு /வெளியீடு செயற்கை நுண்ணறிவு, காரண காரியமறிந்து, பகுத்தறிந்து, முடிவெடுக்கக்கூடிய எந்திரங் களை உருவாக்கும் தொழில் நுட்பம் ஆகியவற்றைக் கொண்டதாக இருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

**figure** : உரு.

**figure shift** : எண் மாற்றம் : விசைப் பலகையின் ஒரு விசை அல்லது விசை உருவாக்கும் குறியீடு, செய்தியில் 'மாற்று' வரும் வரை அடுத்து வரும் எழுத்து களை எண்களாகக் கருத வேண் டும் என்பதை உணர்த்துகிறது.

**file** : கோப்பு; தரவுத் தொகுப்பு : ஒரு அடிப்படை சேமிப்பு அல காகக் கருதப்படும், தொடர் புடைய பதிவுகளின் தொகுதி.

**file access time : கோப்பு அணுகல் நேரம்:** ஒரு கோப்பினைத் திறந்து தரவுவைப் படிக்கத் தொடங்குவதற்கு கணினி எடுத்துக் கொள்ளும் நேரம்.

**File Allocation Table (FAT) : கோப்பு ஒதுக்கீட்டு அட்டவணை :** ஒரு வட்டிலுள்ள தரவுகளின் பதிவேடு. இதன் மூலம் ஒவ்வொரு கோப்பின் உள்ளடக்கங்களையும் அணுகலாம். ஒரு செருகு வட்டில் அல்லது நிலைவட்டில் உள்ள ஒரு தரவுக் கோப்பு, அதில் எழுதப்பட்டுள்ள ஒவ்வொரு கோப்பின் அமைவிடம் பற்றிய தரவுகளைக் கொண்டிருக்கும். இது, ஒவ்வொரு கோப்பினையும் தேவைப்படும்போது கண்டறிந்து படிப்பதற்கு உதவுகிறது. இந்த அட்டவணை பெரும்பாலும் இருமடியாகச் சேமித்து வைக்கப்பட்டிருக்கும்.

**file and record locking : கோப்பு மற்றும் பதிவேட்டுப் பூட்டு :** பயனாளர் பன்முகச் சூழலில் தரவு மேலாண்மை செய்வதற்கான உத்திகள். தரவு, வாசகம், அல்லது உருக்காட்சிக் கோப்பினை ஒருவர் அணுகுவதை இந்தக் கோப்புப் பூட்டு தடுக்கிறது. ஒரு தரவுக் கோப்பினுள் தனியொரு பதிவேட்டினை அணுகுவதைப் பதிவேட்டுப் பூட்டு தடுக்கிறது.

**file, archived : காப்பகக் கோப்பு.**

**file attachment : கோப்பு உடன் இணைப்பு.**

**file attribute : கோப்புப் பண்பியல்பு :** ஒரு DOSகோப்பின் பண்பியல்புகள் தொடர்பான தரவுகள். எடுத்துக்காட்டாக, அது மறைந்துள்ளதா, படிப்பதற்கு மட்டுமேயானதா, எழுதுவதற்கு மட்டுமேயானதா என்ற விவரங்கள். ஒரு கோப்பினைப் பாதுகாப்பாகக் கையாள்வதற்கு அனுமதிக்கிற கோப்பு அணுகு வகைப்பாடு. முக்கிய பண்பியல்புகள் : எழுதப் படிப்பதற்குரியது; படிப்பதற்கு மட்டுமே உரியது; மறைவானது.

**file backup : கோப்பு மாற்று ஏற்பாடு; மாற்றுக் கோப்புப்படி; கோப்புக் காப்பு :** அழிக்கப்பட்ட அல்லது சேதமாக்கப்பட்ட தரவுத் தளம் ஒன்றை மீண்டும் கொண்டு வரப் பயன்படுத்தப்படும் தரவுக் கோப்புகளின் படிகள்.

**file codes : கோப்புக் குறிமுறைகள்.**

**file collection : கோப்புத் திரட்டு.**

**file compression : கோப்புச் சுருக்கம்; கோப்பு அழுத்தம்;**

கோப்பு இறுக்கம்: ஒரு கோப்பினை வேறிடத்துக்கு அனுப்பி வைக்க அல்லது சேமிக்க அதன் அளவைச் சுருக்கும் செயல் முறை.

**file control block method :** கோப்புக் கட்டுப்பாட்டுத் தொகுதி முறை : கோப்புக் கட்டுப்பாட்டுத் தொகுதிகள் மூலமாக வட்டுக்கோப்புகளை அணுகுகிற DOS செயற்பணி களின் ஒரு தொகுதி. இது இன்று வழக்கற்றுவிட்டது.

**file conversion :** கோப்பு மாற்றல் : கோப்பின் ஊடகம் அல்லது அமைப்பு முறையை மாற்றும் செயலாக்கம்.

**file conversion utility :** கோப்பு மாற்றல் பயன்பாடு.

**file control block :** கோப்புக் கட்டுப்பாட்டுத் தொகுதி : ஒரு கணினியின் இயக்க முறைமை, திறந்து வைக்கப்பட்ட ஒரு கோப்பு பற்றிய விவரங் களைப் பதிவுசெய்து வைத்துக் கொள் வதற்கு தற்காலிகமாக ஒதுக்கப் படும் நினைவகப் பகுதி.

**file creation module :** கோப்பு உருவாக்கத் தகவமைவு.

**file deletion :** கோப்பு நீக்கம்.

**file descriptor :** கோப்பு விவரிப்பி : BASIC போன்ற உயர் நிலை மொழிகளில், கோப்பு விவரிப்பி என்பது, கோப் பினைத் திறப்பதற்கான இடை யக எண். எடுத்துக்காட்டு : as # 1 அல்லது # 3.

**file, destination :** சேரிடக் கோப்பு.

**file directories :** கோப்பு அட்ட வணைத் தொகுப்பு.

**file dump :** கோப்புத் திணிப்பு.

**file, end of :** கோப்பு முடிவு.

**file extent :** பரவுக் கோப்பு.

**file extension :** கோப்பு வகைப் பெயர்.

**file format :** கோப்பு உருவமைவு : ஒரு கோப்பின் கட்டமைவு. தரவுத் தளம், சொல் செய்முறைப் படுத்துதல், வரைகலை, கோப்பு கள் ஆகியவற்றுக்கு வணிக முறை உருவமைவுகள் உள்ளன.

**file fragmentation :** கோப்புக் கூறாக்கம் : *1.* ஒரு கோப்பின் விவரங்கள் வட்டில் தொடர்ச்சி யாக எழுதப்படுவதில்லை. சிறுசிறு கூறுகளாக்கப்பட்டு வட்டில் ஆங்காங்கே பதியப் படுகின்றன. எங்கே பதியப் பட்டுள்ளது என்கிற விவரம் ஓர் அட்டவணையில் எழுதப்படு கிறது. இதன் காரணமாய் வட் டில் எழுதப்படாத இடங்களும் தொடர்ச்சியாக இருப்

பதில்லை. வட்டு நிறைந்து போகின்ற நிலையில் கோப்பினை எழுதவும் படிக்கவும் அதிக நேரம் ஆவதுண்டு. இவ்வாறு கூறுகளாக்கப்பட்டு பதிவு செய்யப்பட்டுள்ள விவரங்களை ஓரளவு வரிசையாக எடுத்தெழுதுவதற்கென பயன்பாட்டு நிரல்கள் உள்ளன. 2. ஒரு தரவுத் தளத்தில் அட்டவணைக் கோப்பில் (Tables) ஏடுகள் (Records) வரிசையாகப் பதிவு செய்யப்படுவதில்லை. அவ்வப்போது ஏடுகளை அழிக்கிறோம், சேர்க்கிறோம். இதனால் ஏடுகள் கூறாகிக் கிடக்கும். ஆனால் பெரும்பாலான தரவுத் தள தொகுப்புகளில் ஏடுகளை வரிசைப்படுவதற்கென பயன்பாட்டு நிரல்கள் உள்ளன.

**file gap : கோப்பு இடைவெளி :** கோப்பு எங்கு முடிகிறது என்று கணினி அமைப்புக்கு உணர்த்தக்கூடிய, கோப்பின் இறுதியில் உள்ள இடைவெளி.

**file handle : கோப்புக் கைப்பிடி :** ஒரு கோப்பினை அணுகுவதற்குரிய தரவுகளை கொண்டுள்ள ஒரு மாறியல் மதிப்புரு. வட்டு அணுகுதலின் கோப்புக் கைப்பிடி முறையைப் பயன்படுத்தி ஒரு கோப்பினைத் திறக்கும்போது DOS மூலம் திருப்பியனுப்பப்படும் ஒரு குறியீட்டு எண். பின்வரும் வட்டுச்செயற்பாடுகள் அனைத்திலும் கோப்பினை அடையாளங் காண்பதற்கு இந்தக் குறியீடு பயன்படுத்தப்படுகிறது.

**file handling : கோப்புக் கையாளல்.**

**file handling routine : கோப்பு கையாளும் வாலாயச் செயல்முறை :** ஒரு கோப்பில் உள்ள தரவுகளைப் படிக்கவோ அல்லது அதனுள் எழுதவோ செய்யக்கூடிய கணினி நிரலாக்கத் தொடரின் ஒரு பகுதி.

**file identification : கோப்பு அடையாளம் காணல்.**

**file index : கோப்புக் குறிப்புப் பட்டியல்; கோப்பு அட்டவணை.**

**file, index sequential : சுட்டுத் தொடரியல் கோப்பு.**

**file label : கோப்பு அடையாளச் சீட்டு :** ஒரு கோப்பினை அடையாளம் காட்டும் வெளிப்புற அடையாளச் சீட்டு.

**file layout : கோப்பு அமைப்பு முறை; கோப்பு இட அமைவி :** அதன் வரிசைமுறை மற்றும் உட்பொருள்களின் அளவுகள் உட்பட தரவுகளை வரிசைப் படுத்தி ஒரு கோப்பில் அமைத்தல்.

**file level model : கோப்பு நிலை மாதிரி; கோப்பு நிலைப் படிமம் :**

கேள்விகளுக்கோ அல்லது நிரலாக்கத் தொடர்களுக்கோ தரவு பயன்பாடுகளின் சிறந்த செயல்பாடுகள் தரவு அமைப்புகளை வரையறுப்பதற்கான மாதிரி அமைப்பு.

**file librarian : கோப்பு நூலகர் :** அனைத்துக் கணினிக் கோப்புகளையும் பாதுகாப்பாக வைத்திருப்பதற்குப் பொறுப்பேற்கும் நபர். வட்டுத் தொகுதிகளில் நிரலாக்கத் தொடர் - தரவுக் கோப்புகள்,மின்காந்த நாடாக்கள், துளையிட்ட அட்டைகள், நுண்திரைப்படங்கள் போன்றவை இவரது பொறுப்பில் அடங்கும்.

**file locking : கோப்புப் பூட்டல்.**

**File Maker II : கோப்பு உருவாக்கி II :** 'க்ளோரிஸ்' என்ற அமைவனம் உருவாக்கியுள்ள மெக்கின்டோஷ் கோப்பு மேலாளர். இது பொதுவான தரவு மேலாண்மைக்குப் புகழ் பெற்ற ஒரு செயல்முறை. இது பல்வேறு புள்ளியியல் செயற்பணிகளையும், விரைவுத் தேடுதல் திறம்பாடுகளையும், விரிவான செய்தியறிவிப்பு அம்சங்களையும் அளிக்கிறது.

**file man : கோப்பாளர் :** விண்டோவின் 'கோப்பு மேலாளர்' என்று பொருள்படும் File Manager என்பதற்கான கொச்சை வழக்குச் சொல். இது பொது எல்லை MUMPS மென்பொருள். MUMPS செயல்முறையாளருக்கான பல்வேறு பயனீடுகளின் ஒரு தொகுதியை உடையது.

**file management : கோப்பு மேலாண்மை.**

**file management system (FMS) : கோப்பு மேலாண்மைப் பொறியமைவு :** தரவுகளை வரையறை செய்து, இந்த இனங்களைக் குறிப்பிட்ட பதிவேடுகளில் வைக்கவும், இந்தப் பதிவேடுகளை குறிப்பிட்ட கோப்புகளாக ஒருங்கிணைத்து, அவற்றைக் கையாளவும், பல்வேறு வழிகளில் சேமித்து வைக்கப்பட்டுள்ள தரவுகளை மீட்கவும் பயன்படுகிற ஒரு மென்பொருள் தொகுதி.

**file manager : கோப்பு மேலாளர் :** எளிய கோப்புகள் மற்றும் பொருளடக்கங்களைப் பயன்படுத்தும் எளிய தரவுத் தள மேலாண்மை நிரலாக்கத் தொடர். தரவுத் தள மேலாண்மை அமைப்பின் தம்பி அல்லது பதிவேடு மேலாளர் என்றும் அழைக்கப்படுவதுண்டு.

**file maintenance : கோப்புப் பேணுகை; கோப்புப் பேணல் :** கோப்புகளில் ஆவணங்களை

நாளது தேதி வரையில் புதுப்பித்தும், துல்லியமாகவும் பேணிவருவதற்கான நடவடிக்கைகளின் ஒட்டுமொத்தம். முதன்மைக் கோப்புகளைக் காலாந்திரங்களில் நாளது தேதி வரையில் புதுப்பித்தல். வட்டு இயக்கிகளைக் காலாந்திரங்களில் சீரமைவு செய்தல்.

**file marker, end of** : கோப்பு முடிவுக் குறி.

**file, multi-reel** : பல்சுருள் கோப்பு.

**filename** : கோப்புப் பெயர் : ஒரு குறிப்பிட்ட கோப்பை அடையாளம்காண உதவும் அகர வரிசை எண் முறை எழுத்துகள்.

**file name extension** : கோப்புப் பெயர் விரிவாக்கம்; கோப்புப் பெயர் நீட்டம்; கோப்புத் துணைப் பெயர்; கோப்பு இனப் பெயர் : ஒரு கோப்புப் பெயரின் இரண்டாவது பகுதியாக அமையும் குறியீடு. ஒரு புள்ளியின் மூலம் கோப்பின் பெயரில் இருந்து பிரிக்கப்படுகிறது. கோப்பில் எத்தகைய தரவுகள் உள்ளன என்பதைக் குறிப்பிடுகிறது.

**file open** : கோப்புத் திறப்பு.

**file organization** : கோப்பு ஒருங்கமைத்தல்; கோப்பு அமைத்தல்; கோப்புத் தொகுப்பு : பயன்பாட்டு நிரலாக்கத் தொடர் அமைப்பவர் தரவுகளைப் பார்க்கும் முறை.

**file pointer** : கோப்புச் சுட்டு : DOS திறக்கிற கோப்பு ஒவ்வொன்றுக்கும் அது வைத்து வருகிற ஒரு மாறியல் மதிப்புரு. இந்தக் கோப்புச் சுட்டு, கோப்பில் படிப்பு/எழுத்து செயற்பாடு தொடங்குகிற அமைவிடத்தைச் சுட்டிக்காட்டுகிறது.

**file processing** : கோப்புச் செயல்பாடு; கோப்பு அலசல் : அடிப்படைக் கோப்புகளில் நடப்புத் தரவுகளின் மாற்றங்களுக்கேற்ப காலமுறைப்படி புதுப்பித்தல். அடிப்படை இருப்பு எடுப்புக் கோப்பில் மாதாந்திர இருப்பு எடுப்புக் கோப்பிலிருந்து மாற்றம் செய்தல் போன்ற பரிமாற்ற தரவுகளைக் கொண்டதாக இவை அமைந்திருக்கும். File Maintenence-க்கு எதிர்ச்சொல்.

**file protection** : கோப்புக் காப்பு; கோப்புப் பாதுகாப்பு : ஒரு கோப்பிலிருந்து எதிர்பாராத விதமாக தரவு அழிக்கப்படுவதைத் தடுக்கும் சாதனம் அல்லது தொழில்நுட்பம். மின்காந்த நாடா கோப்பு பராமரிப்பு வளையம் அல்லது செருகு வட்டினைப் பாதுகாக்க அதன் மேல் ஒட்டப்படும் பகுதி.

**file - protect ring : கோப்புப் பாதுகாப்பு வளையம் :** மின்காந்த நாடாவில் உள்ள தகவல்களைப் பாதுகாக்கப் பயன்படுத்தப் படும் சாதனம். நாடா சுருணை யிலிருந்து வளையத்தை நீக்கு வதன் மூலம் நாடாவின் மீது தவறுதலாக எழுதுவது தவிர்க் கப்படுகிறது. write protect-க்கு இணைச் சொல்.

**file recovery : கோப்பு மீட்பு :** இழந்துபோன அல்லது படிக்க முடியாத வட்டுக் கோப்புகளை மீட்டெடுக்கும் செயல்முறை. பல்வேறு காரணங்களினால் கோப்புகள் தொலைந்து போகலாம். கவனக்குறைவாக அழித்துவிடல், கோப்பு பற்றி எழுதி வைக்கப்பட்டுள்ள விவரங்களுக்கு பாதிப்பு ஏற்படல், வட்டு பழுதடைதல் போன்ற காரணங்களினால் நாம் கோப்புகளை இழக்க நேரிடு கிறது. ஒரு கோப்பினை அழிக் கும்போது அதன் விவரங்கள் அழிக்கப்படுவதில்லை. அந்த இடம் பிற கோப்புகளுக்குக் கிடைக்கும். கோப்பு விவரங் கள் எழுதப்பட்ட இருப்பிடங் களை அடையாளம் காணமுடிந் தால் ஒட்டு மொத்தக் கோப்பை யும் மீட்டுவிட முடியும். பழு தான கோப்புகளைப் பொறுத்த மட்டில், வட்டில் குறிப்பிட்ட பகுதியில் இருக்கும் விவரத் தைப் படித்து வேறொரு வட் டில் அல்லது கோப்பில் ஆஸ்கி (ASCII) அல்லது இரும/பதினறும எண்ணுருவில் எழுதிக்கொள் ளும் நிரல்கள் உள்ளன. எனினும் இந்த முறையில் மூலத்தகவலை அப்படியே பெறுவது இயலாது. இழந்த கோப்புகளை மீட்பதற் குச் சிறந்த வழிமுறை அவற்றை காப்பு நகலிலிருந்து (Backup) பெற்றுக் கொள்வதேயாகும்.

**file recovery programme : கோப்பு மீட்புச் செயல்முறை :** தற்செயலாக நீக்கப்பட்டு அல்லது சேதமடைந்துவிட்ட வட்டுக்கோப்புகளை மீட்பதற் கான மென்பொருள்.

**file retrieval : கோப்பு கொணர் தல் :** ஒரு தரவுக் கோப்பினை, சேமித்து வைக்கப்பட்ட இடத் திலிருந்து அதனைப் பயன் படுத்தவிருக்கும் கணினிக்குக் கொணரும் நடவடிக்கை.

**file, sequential : தொடரியல் கோப்பு.**

**file server : கோப்புப் பரிமாறி; கோப்பு வழங்கி :** ஒரு வளாகக் கணினிக் கட்டமைப்பிலுள்ள தலைமைக் கணினி. இது, இதனுடன் இணைக்கப்பட்டுள்ள மற்ற அனைத்துப் பொறி யமைவுகளும் அணுகக் கூடிய

கோப்புகள் அனைத்தின் சேமிப்புத் தொகுதியாகும்.

**file sharing : கோப்புப் பகிர்வு :** பிணையங்களில் மையக் கணினி அல்லது வழங்கன் கணினியில் சேமிக்கப்பட்டுள்ள ஒரு குறிப்பிட்ட கோப்பினைப் பல்வேறு பயனாளர்களும் ஒரே நேரத்தில் பார்வையிட, திருத்த, வசதி இருக்க வேண்டும். இவ் வாறு ஒரே நேரத்தில் ஒரு கோப் பினை பலர் கையாள்வது கோப்புப் பகிர்வு எனப்படு கிறது. ஒரே நேரத்தில் வேறு வேறு நிரல்கள் அல்லது வேறு வேறு கணினிகள் பயன்படுத்து கின்றன எனில் கோப்பு விவரங் கள் அதற்கேற்ற வடிவாக்கங் களில் மாற்றப்பட்டு அளிக்கப் பட வேண்டும். ஒரு கோப்பு, பலராலும் கையாளப்படுகிற தெனில் அக்கோப்பினை அணுகுவது, நுழை சொல் (Password) பாதுகாப்பு மூலம் ஒழுங்குப்படுத்தப்படவேண்டும். ஒரே நேரத்தில் ஒரு கோப்பினை ஒன்றுக்கு மேற்பட்டோர் திருத்த முடியாதவாறு கோப்புப் பூட்டு முறை (File lock) இருக்க வேண்டும்.

**file sharing protocol : கோப்புப் பகிர்வு மரபு முறை :** ஓர் இணை யத்தில் நிலையங்களிடையே கோப்பு வேண்டுகோள்களுக்கு (திற, படி, எழுது, மூடு முதலி யன) ஒரு கட்டமைவை அளிக் கிற செய்தித் தொடர்பு மரபு முறை. இது OSI உருமாதிரியின் படுகை - 7 - ஐக் குறிக்கிறது.

**file size : கோப்பு அளவு :** ஒரு கோப்பில் உள்ள தரவுகளின் அளவை 'பைட்டு' எண்ணிக்கை யில் குறிப்பிடுவது.

**file spec (file specification) : கோப்புக் குறியீடு :** ஒரு வட்டின் மீதுள்ள ஒரு கோப்பின் அமை விடத்தைக் குறித்தல். இதில் வட்டு இயக்கி, தரவு குறிப் பேட்டுப் பெயர், கோப்புப் பெயர் போன்றவை அடங்கும்.

**file storage : கோப்பு சேமிப்பகம் :** மின் காந்த வட்டு, நாடா, அட்டை அலகுகள் போன்ற கணினி அமைப்புக்குள் ஏராள மான தரவுகளை வைத்திருக் கும் திறனுள்ள சாதனங்கள்.

**file store : கோப்புச் சேமிப்பு.**

**file structure : கோப்பு வடிவ அமைப்பு; கோப்புக் கட்டமைப்பு :** ஒரு தரவு பதிவுக்குள் புலங் களின் அமைப்பு முறை. சான் றாக, ஒரு பதிவின் முதல் புலம் பெயர்ப்பகுதியாகவும், அதன் இரண்டாவது எண் புலம் விலைப் பகுதியாகவும் அடுத்து மூன்றாவது என்று தொடர்ந்து சென்று கோப்பின் வடிவ அமைப்பினைக் கூறுகிறது.

**file system : கோப்பு முறை; கோப்பமைவு முறை :** ஒரு கணினிப் பொறியமைவில் கோப்புகளைப் பட்டியலிடும் முறை. தனித்தனிக்கோப்புகளை மேலாண்மை செய்கிற தரவு செய்முறைப்படுத்தும் பயன்பாடு. இதில் பழக்கப்பட்ட செயல்முறைப்படுத்துதல் மூலம் கோப்புகள் தொடர்புபடுத்தப்படுகின்றன. இது, தொடர்முறைச் செய்தித் தரவுதளத்திலிருந்து (Relational Database) வேறுபட்டது.

**file transfer : கோப்பு மாற்றல்; கோப்புப் பெயர்வு :** ஒரு இடத்திலிருந்து வேறோர் இடத்திற்கோ அல்லது ஒரு சேமிப்பு ஊடகத்திலிருந்து வேறொன்றுக்கோ கோப்பினை மாற்றுதல்.

**File Transfer Access and Management (FTAM) : கோப்புப் பரிமாற்ற அணுகலும் மேலாண்மையும்.**

**file transfer protocol : கோப்புப் பெயர்வு வரைமுறை; கோப்புப் பரிமாற்று வரைமுறை.**

**file type : கோப்பு வகை :** ஒரு கோப்பின் செயல்பாட்டு அல்லது கட்டமைப்புப் பண்புக்கூறுகளின் அடிப்படையில் கோப்பு வகைகள் அமைகின்றன. பெரும்பாலும் ஒரு கோப்பின் வகை அதன் பெயரைக் கொண்டே அடையாளம் காணப்படுகிறது. எம்எஸ்டாஸில் கோப்பின் வகைப்பெயர் (Extension) கோப்பின் வகையை அடையாளம் காட்டும். (எ-டு) DBF-தரவுத்தள கோப்பு; EXE-இயக்குநிலைக் கோப்பு.

**file update : கோப்பு இற்றை நிலைப்படுத்துதல்; கோப்பு புதுக்குதல்.**

**file viewer : கோப்புப் பார்வையாளர் :** ஒரு கோப்பின் உள்ளடக்கத்தைக் கண்காட்சியாகக் காட்டுகிற மென்பொருள். இது, பொதுவாக உருவமைவுகளின் ஒருவகையைக் கண்காட்சியாகக் காட்டும் திறனுடையது.

**file virus : கோப்பு நச்சுநிரல்.**

**filexibility : நெகிழ்வுத்தன்மை.**

**fill : நிரப்பு :** ஓர் ஓவியச் செயல்முறையில், கரையிட்ட பகுதியில் வண்ணத்தை மாற்றுதல். ஓர் அகல் தட்டில் பொதுவான அல்லது மடிநிலை மதிப்பளவுகளை சிற்றங்களின் ஒரு குழுமமாகப் பதிவு செய்தல்.

**fill area : நிரப்புப் பகுதி :** முனைகளைக் குறித்துரைத்து ஒரு மூடிய பலகோணக் கட்டத்தை வரைந்து, பின்னர் அதன் உட்பகுதியை நிரப்புகிற ஒரு வசதி.

**fill character : நிரப்பு எழுத்து :** ஒரு சேமிப்புச் சாதனத்தில்

பயன்படாத இடப்பரப்புகளில் எழுதப்படும் ஓர் எழுத்து.

**fill colour** : நிரப்பு நிறம்.

**filling** : நிரப்புதல் : கணினி வரைகலையில், வரையறுக்கப் பட்ட பகுதியின் உட்புறத்தில் நிறம், சாயல் அல்லது இயக்கு பவர் விரும்புகின்றவற்றை இட்டு நிரப்பப் பயன்படும் ஒரு மென்பொருள் செயல்பாடு.

**fill in screen** : நிரப்புத் திரை : ஒரு தரவுப் பதிவுத் திரை. இதில் தரவுப் பதிவு முனை களாகப் பல பெட்டிகள் அல் லது கம்பித் தொடர்கள் அமைந் திருக்கும். ஒவ்வொரு தரவு முனையும் ஒரு தருக்க முறைப் படி அமைந்து, எந்த தரவு இனம் எங்கே செல்லவேண்டும் என்பதைக் குறிக்கும் முகப்புச் சீட்டையும் கொண்டிருக்கும். இந்த வகை நிரப்புத்திரை பெரும்பாலும் விமான பயணச் சீட்டு முன்பதிவுகளில் பயன் படுத்தப்படுகிறது. இதனைத் ''தரவு பதிவுத் திரை'' (Data Entry Screen) என்றும் கூறுவர்.

**fill pattern** : நிரப்புத் தோரணி : ஓர் உருக்காட்சியின் பரப்புப் பகுதியை நிரப்புவதற்குப் பயன் படுத்தப்படும் வண்ணம், வண்ணச்சாயல் அல்லது தோரணி. ஒரு LAN நிலையம் தகவல்களைப் பெறாதிருக்கிற போது அல்லது அனுப்பாதிருக் கிறபோது ஒருங்கிணைப்பைப் பேணுவதற்காக அந்த நிலையத் தினால் அனுப்பப்படும் குறி யீடுகள்.

**film** : படச்சுருள்.

**film developer** : படச்சுருள் துலக்கல் : கோம் (COM) சாதனங் களுக்காக நுண் திரைப்படத் தினை மாற்றி அமைக்கும் கருவி.

**film reader** : படச்சுருள் படிப்பி.

**film recorder** : படச்சுருள் பதிப்பி : ஒரு CAD, வண்ண அல்லது வணிக வரைகலைத் தொகுதி மூலம் உருவாக்கப் பட்டுள்ள ஒரு வரைகலைக் கோப்பிலிருந்து ஒரு 35மி.மீ. பட வில்லையைத் தயாரிக்கிற சாதனம். இது, 2,000 முதல் 4,000 வரையிலான வரிகளைக் கொண்ட உயர்செறிவுப் படங் களை உருவாக்குகிறது. படச் சுருள் பதிப்பியுடன் இணைக்கப் பட்டுள்ள ஒரு கட்டுப்பாட்டுப் பலகையில் செருகுவதன் மூலம் சொந்தக் கணினிகளுடன் படச் சுருள் பதிப்பிகளை இணைக்கலாம்.

**FILO** : ஃபைலோ : First In Last Out என்பதன் குறும்பெயர். ஒரு பட்டியல், மேசை அல்லது அடுக்கிலிருந்து வகையறாக் களைத் திரும்ப எடுப்பதற்கோ

அல்லது அவற்றில் சேமிப் பதற்கோ கடைப்பிடிக்கப்படும் முறை. முதலில் சேமிக்கப்படும் பொருளைக் கடைசியில்தான் வெளியில் எடுக்க முடியும்.

**filter :** வடிகட்டி : ஒரு தரவுவை, வாசகத்தை அல்லது வரைகலை உருவமைவை மற்றொன்றாக மாற்றுகிற செய்முறை. இதில், தேர்ந்தெடுக்கப்பட்ட தரவு மட்டுமே செல்லக்கூடிய, தோரணி அல்லது திரை பயன் படுத்தப்படுகிறது. தரவுத் தளத்திலிருந்து தரவு இனங் களை வரவழைக்கிற மென் பொருள் நிரல்.

**filter by form :** படிவவழி வடி கட்டல்.

**filter excluding selection :** தேர்ந் ததைத் தவிர்த்து வடிகட்டல்.

**filtering programme :** சல்லடை நிரல்; வடிகட்டி நிரல் : தகவலை வடிகட்டித் தேவையான விவரங்களை மட்டும் எடுத்துத் தரும் நிரல்.

**filter by selection :** தேர்வு மூலம் வடிகட்டல்.

**filter keys :** வடிகட்டி விசைகள் : விண்டோஸ் 95 இயக்க முறை மையில் கன்ட்ரோல் பேனலில் அணுகும் முறை (Accessibility) விருப்பத் தேர்வுகள் உள்ளன. உடல் ஊனமுள்ளவர்கள் விசைப்பலகையைப் பயன் படுத்தும் முறைகள் அதில் உள்ளன. விசைப்பலகை யிலுள்ள விசைகளின்மீது விரல் களை அழுத்தும்போது மெது வான அல்லது தவறான விரல் அசைவுகளினால் ஏற்படும் பிழைகளைப் புறக்கணிக்குமாறு கணினிக்கு அறிவுறுத்த முடியும். இதற்கென வடிகட்டி விசைகள் வசதி உள்ளது.

**final• form text DCA :** இறுதி வடிவ உரை டிசிஏ : ஒத்திசை வில்லா இரண்டு நிரல்களுக் கிடையே தரவு பரிமாறிக் கொள்ளும் பொருட்டு, அச்சிடு வதற்குத் தயாரான வடிவில் சேமித்து வைக்கப்படும் ஆவணத் தின் தரவரையறை. ஆவண உள்ளடக்கக் கட்டமைப்பு என்று பொருள்படும் Document Content Architecture என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர் டிசிஏ என்பது.

**finalize :** முடிவுறுத்து.

**finalizer :** முடிவுறுத்தி.

**finally :** முடிவாக.

**final value :** இறுதி மதிப்பளவை.

**finally :** முடிவாக.

**financial information systems :** நிதியியல் தரவுப் பொறியமைவு :

ஒரு வணிகத்திற்கு நிதியுதவி செய்வதிலும், நிதியியல் ஆதாரங்களை ஒதுக்கீடு செய்வதிலும், கட்டுப்படுத்துவதிலும் நிதியியல் மேலாளர்களுக்கு உதவுகிற தரவுப் பொறியமைவு. பண மற்றும் பிணைய ஆவண மேலாண்மை, மூலதன வரவு செலவுத் திட்டம் வரைதல், நிதியியல் முன்னறிவிப்பு, நிதியியல் திட்டமிடல் ஆகியவை இதில் அடங்கும்.

**financial planning language : நிதியியல் திட்டமிடல் மொழி :** தரவு உருமாதிரிகளை உருவாக்கவும், ஒரு நிதியியல் திட்டமிடல் பொறியமைவுக்கு நிரலிடவும் பயன்படுத்தப்படும் மொழி.

**financial planning system : நிதியியல் திட்டமிடல் பொறியமைவு :** மாற்று முறைகளைக் கணித்தறிவதற்குப் பயனாளருக்கு உதவிபுரிகிற மென்பொருள். இது, ஒரு தரவு உருமாதிரியை உருவாக்க அனுமதிக்கிறது. இந்த உருமாதிரி, சமன்பாட்டு வடிவில் தரவுக் கூறுகளின் ஒரு தொடர் வரிசையாக அமைந்திருக்கும். எடுத்துக்காட்டு : மொத்த ஆதாயம்; மொத்த விற்பனை; விற்பனைச் சரக்குகளின் அடக்கவிலை. பல்வேறு மதிப்பளவுகளைச் செலுத்தி, பல்வேறு விருப்பத் தேர்வுகளைப் பெறலாம்.

**find : கண்டுபிடிப்பு :** குறிப்பிட்ட கோப்புகளில் ஒரு சரத்தைத் தேடுவதற்கான ஒரு DOS ஆணை.

**find all files : அனைத்துக் கோப்புகளையும் கண்டறி.**

**find and replace : தேடி மாற்றி வை; தேடி மாற்று; கண்டறிந்து மாற்று.**

**find duplicates : போலிகளைக் கண்டறி.**

**find entire cells : அனைத்துக் கலங்களையும் கண்டறி.**

**finder : தேடி :** ஆப்பிள் மெக்கின்டோஷ் இயக்கச் சூழ்நிலையின் மையப்பொருள். வட்டுகளில் சேமிக்கப்பட்ட கோப்புகளை ஒழுங்குபடுத்துவதும், காட்டுவதும் உள்ளிட்ட பல பணிகளைச் செய்யும் ஒரு நிரலாக்கத்தொடர்.

**find next : அடுத்தது கண்டறி.**

**find now : இப்போது கண்டறி.**

**find unmatched : பொருந்தாதன கண்டறி.**

**fine : தரமான.**

**fine print : தரமான அச்சு.**

**finesse** : நய நுட்பம் : 'உருவங் கள்' என்ற பட்டியல் திரையின் 'ஜெம்' சூழலைப் பயன்படுத்து கிற ஒரு DTP மென்பொருள்.

**finger** : ஃபிங்கர் : இது ஓர் இணையப் பயன்பாட்டு நிரல். இணையத்தில் நுழையும் ஒரு பயனாளர், இணையத்தில் நுழைந்துள்ள இன்னொரு பயனாளர் பற்றிய விவரங்களை அறிந்துகொள்ள உதவும் நிரல். இன்னொரு பயனாளரின் மின் னஞ்சல் முகவரியைக் கொடுத் தால், அவரின் முழுப்பெயர் மற்றும் பிறர் அறிந்துகொள்ள அவர் அனுமதித்துள்ள மற்ற விவரங்களையும் பெற முடி யும். அல்லது ஒரு பெயரைத் தந்து அப்பெயரில் உள்ளவர்கள் இணையத்தில் அப்போது உலா வருகின்றனரா என்பதையும் அறியலாம். ஆனால், பிற வலைத் தளங்கள் இந்த நிரல் அணுகுவதற்கு அனுமதி தர வேண்டியது முக்கியமாகும். யூனிக்ஸ் பணித்தளத்தில் மட்டுமே செயல்பட்டு வந்த ஃபிங்கர் இப்போது வேறுபல பணித்தளங்களுக்கான வடிவங் களிலும் கிடைக்கிறது.

**fingerprint reader** : கைரேகை படிப்பி: பாதுகாப்பு நோக்கங் களுக்காக ஒருவரின் கைரேகையை அடையாளம் காணப் பயன்படுத்தப்படுகிற நுண்ணாய்வுக் கருவி. ஒரு கைரேகை முன் மாதிரி எடுக்கப் பட்டபின்பு, ஏற்கெனவே சேமித்து வைக்கப்பட்டுள்ள கைரேகைகளுடன் அது ஒத் திருக்குமானால், ஒரு கணினியை அல்லது பிற பொறியமைவை அணுகுவதற்கு அனுமதியளிக்கப்படுகிறது.

**finite** : முடிவான; அறுதியான; வரையறைக்குட்பட்ட : வரை யறைகளுக்குட்பட்டது. ஒரு முடிவு அல்லது ஒரு கடைசி எண். Infinite-க்கு எதிர்ச் சொல்.

**finite element method** : அறுதி பொருள் முறை : பல்வேறு பொறியியல் துறைகளில் களப் பகுதியின் சிக்கல்களைத் தீர்க்க உதவும் தொழில்நுட்பம்.

**FIPS** : ஃபிப்ஸ் : ''கூட்டரசுத் தகவல் செய்முறைப்படுத்தும் செந்தரம்'' எனப் பொருள்படும் "Federal Infor-mation Processing Standard" என்பதன் தலைப் பெழுத்துக் குறும்பெயர்.

**firewall** : நெருப்புச் சுவர்; தீச் சுவர் : ஓர் உள்முக இணையத் திலுள்ள கணினிகளைப் புறமுக அணுகுதல்களிலிருந்து பாது காப்பதற்கான ஒரு பாதுகாப்பு நடவடிக்கை. இது, இணையத் திற்கும் புற உலகிற்குமிடையில்

ஒற்றை வாயில் ஏற்படுத்துவதன் மூலம் அமைக்கப்படுகிறது. இந்த வாயில் வழியாக மட்டுமே எல்லாத் தொகுதிகளும் செல்ல முடியும். பிறகு இந்த வாயில் வழியே குறிப்பிட்ட சில அணுகுதல்கள் மட்டுமே அனுமதிக்கப்படுமாறு அமைக்கப்படுகிறது.

**firmware : நிலைச்சாதனம் :** வட்டு அல்லது நாடா போன்ற கணினியின் வெளிப்புறத்தில் வைக்கப்படும் வன்பொருள் மற்றும் மென்பொருள் நிரலாக்கத் தொடர் அல்லாத ரோம் எனப்படும் வன்பொருள் சிப்புவினுள் நிரந்தரமாக வைக்கப்பட்டுள்ள நிரலாக்கத் தொடர்.

**firmware programmes : அசையாப் பொருள் செயல்முறைகள்; நிலைச் சாதன செயல்முறைகள் :** இவை படிப்பதற்கு மட்டுமேயான நினைவுப் பதிப்பிகளில் (ROM) மட்டுமே அமைக்கப்படுகின்றன. இவற்றை மிக விரைவாக அணுகலாம். எந்திரத்தை நிறுத்தும்போது இவை இழக்கப்படுவதில்லை. எனவே, இவை எந்திரத்தில் நிரந்தரமாக இருந்து வரும் என்பதால் இவற்றைக் கணினியில் மீண்டும் ஏற்றவேண்டியதில்லை.

**FIR port : எஃப்ஐஆர் துறை :** வேக அகச்சிவப்புத் துறை என்று பொருள்படும் Fast Infrared Port என்ற தொடரின் சுருக்கச்சொல். ஒரு கம்பியில்லா உள்ளீட்டு/வெளியீட்டுத் துறை. பெரும்பாலும் கையிலெடுத்துச் செல்லும் கணினிகளில் இருக்கும். அகச்சிவப்பு ஒளிக்கதிர் மூலமாக புறச்சாதனங்களுடன் தரவுவைப் பரிமாறிக் கொள்ளும்.

**FIRST : ஃபர்ஸ்ட் :** நிகழ்வு எதிர்ச்செயல் மற்றும் பாதுகாப்பு குழுக்களின் அமைப்பு என்று பொருள்படும் Forum of Incident Response and Security Teams என்ற தொடரின் தலைப்பெழுத்துக் · குறும்பெயர். இணையக் கழகம் (Internet Society - ISOC) அமைப்பினுள் செயல்படும் ஒரு நிறுவனம் ஆகும். கணினி அமைப்புகளின் பாதுகாப்புக்கு ஏற்படும் ஆபத்துகளுக்கு எதிரான கூட்டு முயற்சியையும், தரவு பகிர்வையும் ஊக்குவிக்கும் பொருட்டு செர்ட் (CERT) அமைப்புடன் சேர்ந்து செயல்படுகிறது.

**first computer programmer : முதலாம் கணினி செயல் வரைவாளர்; நிரலர்:** ஆங்கிலக் கவிஞர் பைரனின் மகளான லேடி அடா லவ்லேஸ் இந்த சிறப்புத் தகுதியைப் பெற்று உள்ளார்.

**first fit : முதல் பொருத்திடம் :** திறம்பாடு தேவையான அளவைவிட அதிகமாகக் கொண்டுள்ள முதல் தொகுதிக்கு நுண்ணாய்வு மூலம் சேமிப்புப் பகுதியினைத் தேர்ந்தெடுக்கிற ஒரு முறை.

**first generation computer languages : முதல் தலைமுறைக் கணினி மொழிகள் :** ஈரிலக்கக் குறியீட்டில் பதிவு செய்யப்பட்டுள்ள அறிவுறுத்தங்களின் ஒரு தொகுதி. இது முதல் தலைமுறை மொழி எனப்படும். இதில், *'0'* களும், *'1'*களும் அடங்கியிருக்கும். இதனை 'எந்திர மொழி' என்றும் கூறுவர். இதனைக் கணினி புரிந்து கொள்ளும். இந்தத் தலைமுறையைச் சேர்ந்த மொழியை மட்டுமே கணினி நேரடியாகப் புரிந்து கொள்கிறது. கணினியால் செய்முறைப்படுத்துதல் தொடங்கப்படுவதற்கு முன்பு, பயன்படுத்துபவரின் அறிவுறுத்தங்கள் அனைத்தும் முதலில் இந்த மொழியில் மாற்றம் செய்யப்படுகின்றன. இதனை ''ஈரிலக்க மொழி'' (Binary Language) என்றும் கூறுவர்.

**first generation computers : முதல் தலைமுறைக் கணினிகள் :** *1951*இல் யூனிவாக்கில் (UNIVAC) அறிமுகப்படுத்தப்பட்டு, *1959* இல், முழுவதும் மின்மப் பெருக்கிகளால் ஆன கணினிகளாக வளர்ச்சி பெற்றதில் முடிகின்ற, வணிக முறையில் கிடைத்த முதல் கணினிகள். வெற்றிடக் குழாய்களைக் கொண்டிருந்த இவை இப்போது காட்சிப் பொருள்களாக மட்டுமே உள்ளன.

**first in first out : முதல் புகு முதல் விடு; முதலில் வந்தது முதலில் செல்லும் :** ஒரு கியூவில் நிற்பவர்களுள் முதலில் வந்தவரே முதலில் செல்ல முடியும். கணினியிலும் இது போல, ஒரு பட்டியலில் முதலில் சேர்க்கப்பட்டதே முதலில் நீக்கப்படுகின்ற முறை பல்வேறு செயலாக்கங்களில் பின்பற்றப்படுகிறது. எடுத்துக்காட்டாக, அச்சுப்பொறிக்கு அனுப்பப்பட்ட ஆவணங்களின் பட்டியலில் முதலில் வந்ததே முதலில் அச்சிடப்படும்.

**first-in-last-out : முதல் புகு கடை விடு; முதலில் வந்தது இறுதியில் செல்லும்.**

**first order predicate logic : முதல் நிலை பயனிலை தருக்க முறை :** ஒரு கோட்பாட்டில் உள்ள மாறிலிகளில் செய்யப்படவேண்டிய நியமங்களை இது அனுமதிக்கிறது. புரோ

லாக் (Prolog) கணினி மொழியில் இத்தகைய தருக்க முறை பயன்படுத்தப்படுகிறது.

**fitting** : பொருத்துதல் : தரவுகளின் தொகுதி மற்றும் வடிவமைப்பு விதிமுறைகளில் துல்லியமாகப் பொருத்துவதற்காக கோடுகள், மேற்பரப்பு அல்லது வளைவுகளைப் பற்றிய கணக்கீடுகளை கணினி வரைகலை முறையில் செய்வது.

**fixed** : நிலையான; மாறாத; குறிப்பிட்ட : ஒரு தரவு பதிவேட்டில் எப்போதும் நிலையாக இருக்கின்ற புலம் பற்றியது.

**fixed area** : குறிப்பிட்ட பரப்பு : குறிப்பிட்ட நிரலாக்கத்தொடர் அல்லது தரவு பகுதிகளுக்கென ஒதுக்கப்பட்ட உட்புற சேமிப்பகத்தின் பகுதி.

**fixed block length** : நிலைத்த தொகுதி நீளம்.

**fixed disk** : நிலை வட்டு : வட்டுத் தொகுதி நிரந்தரமாக ஏற்றிவைக்கப்பட்டுள்ள ஒரு வட்டு இயக்கி. பெரும்பாலான சொந்தக் கணினிகளில் உள்ள அகற்ற முடியாத வன்வட்டுகள் இவ்வகையைச் சேர்ந்தவை.

**fixed head disk unit** : பொருத்தப்பட்ட படிமுனை வட்டு அலகு : இருமை தரவுகளைக் குறிப்பிட காந்தப் புள்ளிகள் வடிவில் தரவுகளைத் தன் மேற்பரப்பில் காந்தமயக் குறியீடுகள் செய்யப்பட்டுள்ள ஒன்று அல்லது மேற்பட்ட வட்டுகளைக் கொண்ட சேமிப்புச் சாதனம். வட்டுகளைச் சுற்றி வட்டப்பாதைகளில் தரவுகளை வரிசைப்படுத்தியிருப்பார்கள். படி/எழுது முனைகள் ஒரு வழித்தடத்திற்கு ஒன்றாக செய்திகளைப் படிக்கவும் எழுதவும் செய்யும். படி/எழுது முனைகளின் மேலோ அல்லது கீழோ வட்டு சுழலும்போது ஒரு குறிப்பிட்ட வழித்தடத்தில் உள்ள தரவுகளைப் படிக்கவோ/எழுதவோ முடியும். Movable head disk unit-க்கு மாறானது.

**fixed length field** : நிலை நீளப் புலம் : புலத்தின் நிலையான வடிவளவு. எடுத்துக்காட்டு : 25 எண்மி (byte) புலம், ஒவ்வொரு பதிவேட்டிலும் 25 எண்மிகளை எடுத்துக்கொள்கிறது. இது, செயல்முறைப்படுத்துவதற்கும், படிப்பதற்கும் எளிதானது. ஆனால், வட்டு இடப்பரப்பை வீணாக்கி, கோப்பு வடிவமைப்பைக் கட்டுப்படுத்துகிறது. இது, மாறியல் நீளப் புலம் (variable length field) என்பதிலிருந்து மாறுபட்டது.

**fixed length files : நிலைநீளக் கோப்புகள் :** பயன்பாட்டுச் செயல் முறை கோப்புகளை, மற்றப் பதிவேடுகளின் துணையின்றி நேரடியாக அணுகக்கூடிய வகை யில் பதிவேடுகளைச் சேமித்து வைத்துள்ள கோப்புகள்.

**fixed length record : நிலையான நீளப் பதிவேடு :** எப்போதும் ஒரே எண்ணிக்கையில் எழுத்து களைக் கொண்ட பதிவேடு. Variable length record-க்கு எதிர்ச் சொல்.

**fixed numeric format : மாறா எண் வகை வடிவம்.**

**fixed point : நிலையான புள்ளி; மாறாப்புள்ளி :** ஒரு வகையான எண்முறை. ஒவ்வொரு எண் ணின் மதிப்பும் பல இலக்கங் களின் தொகுதியால் குறிப்பிடப் படுகிறது. இதில் பின்னணிப் புள்ளியின் (radix point) இடம் எது என்பது எண்களைப் பயன் படுத்தும் முறையைக் கொண்டு முடிவு செய்யப்படுகிறது. Floating Point-க்கு எதிர்ச்சொல்.

**fixed-point arithmatic : நிலைப் புள்ளிக் கணக்கீடு :** ஒவ்வொரு எண்ணின் பதின்மப் புள்ளி யினையும் சரியான இடத்தில் கொண்டிருக்கிற அமைப்பு முறை. எனினும், இதில் இட நிலையினைக் கணிப்புக்கு முன்பே குறித்து விடலாம். இது கணினி விரைவாகக் கணிப் பதற்கு அனுமதிக்கிறது; எனி னும் எண்களின் வடிவளவைக் கட்டுப்படுத்துகிறது.

**fixed point notation : நிலைப் புள்ளிக் குறிமானம்:** பதின்மப் புள்ளி ஒரு குறிப்பிட்ட இடத் தில் நிலைத்து இடம்பெறும் எண் வடிவாக்கம். இத்தகைய எண்வடிவம் கச்சிதமான திறன் மிக்க முழுஎண் வடிவத்துக்கும், பரந்த மதிப்புகளைச் சுட்ட வல்ல சிக்கலான மிதவைப் புள்ளி வடிவத்துக்கும் இடைப் பட்டதாகும். மிதவைப் புள்ளி எண்களைப் போலவே, நிலைப் புள்ளி எண்களிலும் பின்னப் பகுதி உண்டு. ஆனாலும், மிதவைப் புள்ளியெண் கணக் கீடுகளைவிட நிலைப்புள்ளி யெண் கணக்கீடுகளுக்கு குறைந்த நேரமே ஆகும்.

**fixed point representation : நிலைப் புள்ளி உருவகிப்பு.**

**fixed-programme computer : நிலை நிரல் கணினி.**

**fixed scale : நிலையான அளவு கோல்; நிலை அளவு கோல்.**

**fixed size records : நிலையான அளவுப் பதிவேடுகள் :** ஒரே அளவிலான சொற்கள், எழுத்து கள், எட்டியல்கள், துண்மிகள்,

புலங்கள் போன்றவற்றைக் கொண்ட கோப்புத் தன்மைகள்.

**fixed spacing : நிலையான இடைவெளி விடுதல்; மாறா இடைவெளி :** ஒரு பக்கத்தில் குறுக்குவாட்டில் நிலையான இடைவெளிவிட்டு எழுத்துகளை அச்சிடுதல்.

**fixed storage : நிலையான சேமிப்பகம் :** படிக்க மட்டுமான சேமிப்பகம். கணினி நிரல்கள் மூலம் உள்ளடக்கங்களை மாற்ற முடியாத சேமிப்பகம்.

**fixed word length : நிலையான சொல் நீளம்; மாறா சொல் நீளம் :** எப்போதும் ஒரே எண்ணிக்கையில் துண்மிகள், எண்மிகள், எழுத்துகளைக் கொண்ட எந்திரச் சொல் அல்லது இயக்கி பற்றியது. Variable word length என்பதற்கு எதிர்ச்சொல்.

**fixed word length computer : நிலைச் சொல்நீளக் கணினி :** ஏறத்தாழ அனைத்துக் கணினிகளுக்கும் இவ்விளக்கம் பொருந்தும். ஒரு கணினியில் நுண்செயலி, பிற வன்பொருள் பாகங்களுடன் தொடர்பு கொள்ளப் பயன்படுத்தும் முதன்மையான தரவுப் பாட்டையில் ஒரே நேரத்தில் எத்தனை துண்மி (பிட்)களைப் பரிமாறிக் கொள்ள முடியும் என்பதே ஒரு சொல் எனப்படுகிறது. ஒரு சொல் எனப்படுவது 2 பைட்கள் அல்லது 4 பைட்கள் நீளமுள்ளதாக இருக்கலாம். தற்போது புழக்கத்திலுள்ள ஐபிஎம் மற்றும் மெக்கின்டோஷ் சொந்தக் கணினிகளில் பொதுவாக 2 பைட்டு, 4 பைட்டு சொற்கள் கையாளப்படுகின்றன. 8 பைட்டு சொற்களைக் கையாளும் கணினிகளும் உள்ளன. நுண் செயலியின் அனைத்துச் செயலாக்கங்களிலும் ஒரே அளவான சொல் கையாளப்படும் எனில் அது நிலைச்சொல் நீளக் கணினி எனப்படுகிறது.

**.fj : .எஃப்ஜே :** இணையத்தில், பிஜி நாட்டைச் சேர்ந்த இணைய தளம் என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**Fkey (Function Key) : எஃப் விசை (செயற்பணி விசை) :** நிரல், புடை பெயர்வு, விருப்பத் தேர்வு விசை இணைப்புகளைப் பயன்படுத்துகிற மெக்கின்டோஷ் நிரல்வரிசை. எடுத்துக்காட்டு : எஃப் விசை 1 (நிரல் - புடை பெயர்வு 1), உள்முக நெகிழ் வட்டினை வெளியேற்றுகிறது.

**flag : அடையாளக் குறியீடு :** 1. முன்பு நடந்ததைக் கொண்டு, சொல் அல்லது நிரம்பி வழி

கிறதுபோன்ற சில நிலைகளை நிரலாக்கத்தொடரின் பிற் பகுதிக்கு உணர்த்தப் பயன் படுத்துவது. 2. சிறப்பு கவனத் திற்காக ஒரு பதிவேட்டைக் குறிப்பிடப் பயன்படுத்தப்படும் குறியீடு. சான்று: ஒரு நிர லாக்கத் தொடரை வரிசைப் படுத்தும்போது பிழை ஏற்படும் வாக்கியங்களுக்கு அடையாளக் குறியீட்டை அமைத்து நிர லாக்கத் தொடர் எழுதுபவரின் கவனத்தைக் கவரலாம். 3. குறுக் கீடு போன்ற சிறப்புச் சூழ்நிலை களைக் குறிப்பிடுவது.

**flag character** : அடையாளக் குறி; சுட்டுக்குறி.

**flame** : உணர்வெழுச்சி : மின் னணுவியல் அஞ்சல் வழியாக உணர்வு பூர்வமாக அல்லது அதீதமாகச் செய்தித் தொடர்பு கொள்வதைக் குறிக்கும் கொச்சை வழக்கு.

**flame bait** : பிழம்புத் தீனி; எரி கொள்ளிக்கு எண்ணெய் : உணர்ச்சி வயமான விஷயத்தில் சர்ச்சையைக் கிளப்பும் கருத்து களை முன்வைத்தல். இந்தியா வைப் பொறுத்தவரை சாதி, மதம், வழிபாட்டு இடம் தொடர்பான கருத்துகள் இவ் வகையில் அடங்கும். கணினித் துறையைப் பொறுத்தவரை அஞ்சல் பட்டியல், செய்திக் குழுக்கள், ஏனைய நிகழ்நிலைக் கருத்தரங்குகளில் பிறரின் சினத்தைக் கிளறும் வகையில் முன்வைக்கப்படும் ஒரு கருத்து.

**flame fest** : பிழம்பு விருந்து : இணையத்தில் செய்திக் குழு விலும் அல்லது பிற நிகழ் நிலைக் கருத்தரங்கிலும் சர்ச்சை யைத் தூண்டும் வகையில் தொடர்ச்சியாக முன் வைக்கப் படும் செய்திகள்/கருத்துரைகள்.

**flamer** : தீயாள்; நெருப்பாளி; பிழம்பர் : மின்னஞ்சலில், செய்திக் குழுக்களில், நிகழ் நிலை விவாத மேடைகளில், நிகழ்நிலை அரட்டைகளில் சின மூட்டும், சர்ச்சைக்கிடமான செய்தியை அனுப்பி வைப்பவர்.

**flame war** : தீப்போர்; பிழம்புப் போர்: அஞ்சல் பட்டியல், செய்திக் குழு மற்றும் பிற நிகழ் நிலைக் கருத்தரங்கில் காரசார மான வாதப் பிரதிவாதமாக மாறிப்போகின்ற ஒரு கலந்துரையாடல்.

**flash BIOS** : அதிவிரைவு பயாஸ்.

**flashing** : மின்வெட்டு : ஒரு காட்சித் திரையில் எழுத்துகள் மின் வெட்டுப்போல் தோன்றி மறைதல். திரையில் காட்டப்

படும் ஒன்றின் மீது கவனத்தை ஈர்ப்பதற்கு இது பயன்படுகிறது.

**flash memory : மின்வெட்டு நினைவகம்** : விசையின்றித் தனது உள்ளடக்கத்தை இருத்தி வைத்துக் கொள்கிற நினைவகச் சிப்பு. ஆனால், இது மொத்தமாக அழித்துவிடப்படுதல் வேண்டும். மின்வெட்டு நேரத்தில் அழித்துவிடக்கூடிய இதன் தன்மையிலிருந்து இதற்கு இந்தப் பெயர் வந்தது. இந்தச் சிப்புகளின் விலை குறைவு. அதே சமயம் இவை அதிகத் துணுக்குச் செறிவுகள் உடையவை. இது இன்றைய, படிப்பதற்கு மட்டுமேயான நினைவகத்திற்கு மாற்றாக அமையக் கூடும்.

**flat : தட்டை.**

**flat address space : தட்டை முகவரியெண் இடப்பரப்பு** : இது ஒருவகை நினைவக முகவரியிடும் முறை. இதில் ஒவ்வொரு எண்மி, '0'-லிருந்து தொடங்கும் வெவ்வேறு வரிசை எண் மூலம் குறிக்கப்படுகிறது. இது, 'கூறுபடுத்திய முகவரி யெண் இடப்பரப்பு' (Segmented address space) என்பதிலிருந்து வேறுபட்டது.

**flatbed plotter : கிடைத் தட்டை வருடு பொறி; கிடைத் தட்டை வரைவி; கிடைமட்ட படுகை வரைவி; சமதளப்படுகை வரைவி** : தட்டையான மேற்பரப்பில் செங்குத்து மற்றும் குறுக்குவாட்ட திசைகளில் நகரும் முனைகளைப் பயன்படுத்தும் இலக்கமுறை வரைவி. Drum Plotter-க்கு எதிர்ச்சொல்.

**flatbed scanner : கிடைத் தட்டை வருடு பொறி; கிடைத் தட்டை வருடி** : இத்தகைய வருடு பொறியில் கிடைமட்டமாக தட்டையான கண்ணாடிப் பரப்பு இருக்கும். இதன்மீது தான் புத்தகம் அல்லது தாள் ஆவணத்தைக் கிடத்த வேண்டும். அப்பரப்பின்கீழ் ஒரு வருடுமுனை அச்சுநகலின் உருப்படத்தை வருடிச் செல்லும். சில கிடைத்தட்டை வருடுபொறிகள் ஊடுகாண் (transparent) நகல்களை, காட்டாக சிலைடுகளை உருவாக்கும் திறனுள்ளவை.

**flatbed type : தட்டைப் படுகை வகை.**

**flat file : தட்டைக் கோப்பு** : மற்ற கோப்புகளுடன் தொடர்பு கொண்டிராத தரவுக் கோப்பு. இரு தட்டைக் கோப்புகளுக்கிடையிலான தொடர்பு எதுவும் தருக்க முறையிலானதாகும்.

எடுத்துக்காட்டு : இணை யொத்த கணக்கு எண்கள். தொடர்புத் திறம்பாடு இல்லாத கோப்பு மேலாளர்களை இது குறிக்கிறது.

**flat file database : தட்டைக் கோப்புத் தரவுத் தளம் :** அட்டவணை வடிவிலான தரவுத் தளம். ஒவ்வொரு தரவுத் தளமும் ஒரேயொரு அட்டவணையை மட்டுமே கொண்டிருக்கும். ஒரு நேரத்தில் ஒரு அட்டவணையில் மட்டுமே பணியாற்ற முடியும்.

**flat file directory : தட்டைக் கோப்பு கோப்பகம் :** உள் கோப்பகங்கள் (Sub Directories) இல்லாத, கோப்புகளின் பட்டியலை மட்டுமே உள்ளடக்கிய ஒரு கோப்பகம் இவ்வாறு அழைக்கப்படுகிறது.

**flat file system : தட்டைக் கோப்பு முறைமை :** படிமுறை அடுக்கு (hierarchieal order) இல்லாத ஒரு வகைக் கோப்பு முறை. இம்முறையில் வட்டில் உள்ள எந்த இரண்டு கோப்பும் ஒரே பெயரைக் கொண்டிருக்க முடியாது. அவை வெவ்வேறு கோப்பகத்தில் இருப்பினும் ஒரே பெயர் இருக்க முடியாது.

**flat panel display : தட்டைப் பலகக் காட்சி.**

**flat panel display terminal : தட்டையான காட்சி முகப்புப் பலகை; தட்டைப் பலகைக் காட்சியகம் :** மின்ம (Plasma) காட்சிப்பலகை போன்று தரவை காட்டக்கூடிய சிறிய திரையுள்ள வெளிப்புறச் சாதனம்.

**flat shading : தட்டை வண்ணச் செயல்:** கணினி வரைகலையில் ஒரு வண்ணச் சாயலிட்ட மேற் பரப்பினை எளிய ஒளிவிடும் படி தூண்டுகிற ஒரு கணினி உத்தி.

**flat screen : தட்டைத் திரை; தட்டைத் திரை :** தட்டையான காட்சிப் பலகையில் உள்ளது போன்ற சிறிய பலகை.

**flat square monitor : தட்டைச் சதுர திரையகம்.**

**flat pack : தட் டைப் பெட்டி; சம தளப் பொதிவு :** ஒரு முகப்பு அல்லது ஒரு அச்சிடப்படும் மின்சுற்று அட்டையில் பற்ற வைக்கக் கூடிய அல்லது ஒட்ட வைக்கக் கூடிய சிறிய, எளிய, தட்டையான ஒருங்கிணைந்த மின்சுற்று அட்டை. இணைப்பிகள் கீழ் நோக்கி இறக்கி விடப் படுவதற்குப் பதிலாக வெளிப் பக்கம் விரிந்து செல்லும்.

**flatted scanner : தட்டை நுண்ணாய்வு (வருடி)க் கருவி :** நுண்ணாய்வு செய்யப்பட



தட்டை நுண்ணாய்வுக கருவி

வேண்டிய பொருள் வைக்கப் படுவதற்கான ஒரு கண்ணாடி மேற்பரப்பினையுடைய நுண் ணாய்வுக் கருவி. நுண்ணாய் வின்போது மூலப்படி நகரா மலிருப்பதால், தகடு ஊட்ட நுண்ணாய்வுக் கருவிகளை விட தட்டை நுண்ணாய்வுக் கருவி கள் அதிகத் துல்லியமான பலன் களை உண்டாக்குகின்றன. ஒரு நுண்ணாய்வுக் கருவியினால் ஒரு முழுப்பக்க வரைகலையை அல்லது ஒரு பக்க வாசகத்தை ஓர் இலக்க முறைக் கோப்பாக மாற்ற முடியும்.

**flexible array : நெகிழ்வு வரிசை :** பரிமாணத்தை விரிவாக்கவோ சுருக்கவோ கூடியதாகவுள்ள ஓர் அணி வரிசை.

**flexible disk : நெகிழ்வட்டு.**

**flexible disk cartridge : நெகிழ்வு வட்டுப் பொதியுறை :** பன்னாட்டுத் தர அளவுகளின்படி ஒரு நெகிழ் வட்டின் பெயர்.

**flexi-disk : நெகிழ் வட்டு :** மென்வட்டு என்பதன் இன்னொரு பெயர்.

**flexowriter : ஃபிளக்சோரைட்டர் :** காகித நாடா உள்ளீட்டை ஏற்றுக் கொள்ளக்கூடிய தட்டச்சுப் படிவம். பல பழைய கணினி களில் உள்ளீடு / வெளியீடு சாதனமாகப் பயன்படுத்தப் பட்டது.

**flicker : மினுக்கி :** வேகமான தொடர்ச்சி மற்றும் போதாக் குறையான புத்தளிப்பு விகிதத் தின் காரணமாக திரையில் காட்டப்படும் விரும்பத்தகாத நிலையற்ற ஒளி, திரையில் காட்டப்பட வேண்டிய இயற் கையான வெளிச்சத்திற்கு ஈடு கட்டும் வகையில் உள்ளிருந்து வரும் வெளிச்சம் போதுமான தாக இல்லாதபோது இது நிகழ்கிறது.

**flickering : மினுக்கல்.**

**flight computer : பறக்கும் கணினி :** விண்கலம், விமானம் அல்லது ஏவுகணையில் அமைக் கப்பட்ட கணினி.

**flight simulator** : **பறத்தல் போன்ற நிகழ்வு** : புதிய விமானத்தில் விமான ஓட்டி களுக்குப் பயிற்சி அளிக்க விமான நிறுவனங்கள் பயன் படுத்தும் கணினி கட்டுப்பாட்டு போலி நிகழ்வு. விமானி உரிமம் புதுப்பித்தலின்போது பயிற்சி பெறவேண்டிய போலி விமானப் பயண நிகழ்வு. அதை இயக்கும் போது உண்மையில் வானத்தில் பறப்பது போலவே இருக்கும்.

**flip-flop** : **ஏற்ற இறக்கம்** : குறிப் பிட்ட நேரத்தில் நிலையான இரண்டு நிலைகளில் ஒன்றை ஏற்றுக்கொள்ளக்கூடிய இயங் கும் பொருள் கொண்ட சாதனம் அல்லது மின் சுற்று. Toggle-க்கு உடன்பாட்டுச் சொல்.

**flippy** : **ஃபிளிப்பி** : ஃபிளாப்பி வட்டுக்குச் சமமான சொல். நெகிழ் வட்டுக்கு இன்னொரு பெயர்.

**flippy board** : **இருபக்கப் பலகை** : AT மற்றும் நுண் வழித் தடங்கள் இரண்டையும் இணைக்கிற சொந்தக் கணினி (PC) பலகை. இந்தப் பலகையின் ஒரு பக்கத் தில் AT இணைப்பிகளும், மற்றொரு பக்கத்தில் MCA இணைப்பிகளும் இருக்கும்.

**flippy-floppy** : **இருபக்க நெகிழ் வட்டு** : இருபக்கப் பயன் பாட்டுக்காக மாற்றப்பட்டுள்ள ஒற்றைப் பக்க 13.33 செ.மீ. (5.25 அங்) நெகிழ்வட்டு. இந்த வட் டின்மீது இரண்டாவது தடம் ஒன்றை வெட்டுவதன் மூலம் இந்த மாற்றம் செய்யப்படு கிறது. இதில் வட்டின் சுழற்சி மாறிமாறி வருவதால், இது பரிந்துரைக்கப்படுவதில்லை.

**float** : **மிதவை** : ஒரு பணி அல்லது செயல்முடிந்த பிறகு அடுத்த பணி தொடங்குவதற்கு இடையில் இருக்கக்கூடிய காலம். Slack Time என்றும் அழைக்கப்படுகிறது.

**floating decimal arithmetic** : **மிதவைப் பதின்மக் கணக்கீடு.**

**floating point** : **மிதக்கும் புள்ளி; மிதவைப் புள்ளி** : ஆதார எண் ணின் மடங்கினால் பெருக்கப் படும் மான்டிசா என்ற எண்ணைப் பிரதிபலிக்கும் அளவுகளுள்ள எண் வடிவம். Fixed Point - க்கு எதிர்ச்சொல்.

**floating point arithmatic** : **மிதவைப் புள்ளிக் கணக்கீடு** : அடிப்படை எண்ணாகிய (Radix Point) ரேடிக்ஸ் பின்னப் புள்ளியின் இருப்பிடத்தினை தானாகவே கணக்கிடும் கணக்கு முறை. Fixed Point Arithmatic என்பதற்கு எதிர்ச்சொல்.

**floating - point BASIC** : **மிதக்கும் புள்ளி பேசிக்** : பதின்ம

எண்களைப் பயன்படுத்த அனுமதிக்கும் பேசிக் மொழியின் வகை.

**floating - point constant :** மிதக்கும் புள்ளி நிலையெண்; மிதவைப் புள்ளி மாறிலி : இரண்டு பகுதிகள் உடைய எண். இதில் ஒரு பகுதியானது அந்த எண்ணின் பதின்மப் பகுதியைக் குறிக்கும். மற்றொரு பகுதி அந்த எண்ணின் பின்ன (ரேடிக்ஸ்) அடிப்படையைக் குறிக்கும். real constant என்றும் அழைக்கப்படுகிறது.

**floating point notation :** மிதவை முனைக் குறிமானம்; மிதவைப் புள்ளிக் குறிமானம்; மிதக்கும் புள்ளி முறை : மிகச்சிறிய எண்களையும், மிகப்பெரிய எண்களையும் வசதியாகக் குறிப்பதற்கு இயல்விக்கும் பதின்ம எண்களின் குறியீடு.

**floating point number :** மிதவைப் புள்ளி எண் : கொடுக்கப்பட்ட ஓர் அடி யெண்ணு (Base)க்கு ஏற்ப, பின்னம் மற்றும் அடுக்கெண் (Mantissa and exponent) ஆகிய இரு பகுதிகளைக் கொண்ட எண் வடிவம். பின்னம், பொதுவாக 0-1க்கு இடைப்பட்ட எண்ணாக இருக்கும். அதனை, அடியெண்ணின்மீது அடுக்கெண்ணை பத்தின் அடுக்காகக் கொண்டு பெருக்கினால் மிதவைப் புள்ளி எண்ணின் மதிப்பு கிடைக்கும்.

$$0.12345 \times 10^3$$

என்பது ஒரு மிதவைப் புள்ளி எண். இதில் 0.12345 என்பது பின்னம் (mantissa). 10 என்பது அடியெண் (Base). 3 என்பது அடுக்கெண் (Exponent). இதன் மதிப்பு 123.45 ஆகும். இதே எண்ணை

$$1.2345 \times 10^2$$

$$12.345 \times 10$$

என்றும் கூற முடியும். இங்கே புள்ளி இடம் மாறிக் கொண்டே இருப்பதால், மிதவைப் புள்ளி எனப் பெயர் பெற்றது. சாதாரண அறிவியற் குறிமானம் (scientific notation) பத்தினை அடியெண்ணாகக் கொண்ட மிதவைப் புள்ளி எண்களைப் பயன்படுத்துகிறது. கணினியில் இரண்டினை அடியெண்ணாகக் கொண்ட மிதவைப் புள்ளி எண்களே பொதுவாக புழக்கத்தில் உள்ளன.

**floating - point operation :** மிதக்கும் புள்ளி இயக்கம்; மிதவைப் புள்ளிக் கணக்கீடு : மிதக்கும் புள்ளிக் கணக்கைக் கொண்டு செய்யப்படும் இயக்கம்.

**floating - point processor :** மிதவை முனைச் செயலி :

மிதவை முனைச் செயற்பாடு களை நிறைவேற்றுவதற்கு வடிவமைக்கப்பட்டுள்ள கணித அலகு. இது, ஒரு சொந்தக் கணினியில் ஒரு இணைச் செய் முறைப்படுத்தியாக இருக்க லாம். இதனை, முதன்மைக் கணினியுடன் இணைக்கப்படு கிற ஒரு வரிசைச் செய்முறைப் படுத்தி என்றும் அழைப்பர்.

**floating point register : மிதவைப் புள்ளியெண் பதிவகம் :** கணினியில் மிதவைப் புள்ளி எண் மதிப்புகளை இருத்தி வைக்க வடிவமைக்கப்பட்ட பதிவகம்.

**floating point representation : மிதவைப் புள்ளி உருவகிப்பு.**

**floating - point routine : மிதக்கும் புள்ளி வழக்கச் செயல்; மிதவைப் புள்ளி வாலாயம் :** வழக்கச் செயல்களின் தொகுதி. மிதக்கும் புள்ளி வன்பொருள் இல்லாமல் செய்யப்படும் கணினியில், மிதக்கும் புள்ளி இயக்கத்தைச் செய்ய வல்லது.

**floating point type : மிதவைப் புள்ளி வகை.**

**FLOP : ஃப்ளாப் :** Floating Point Operation என்பதன் குறும்பெயர்.

**floppy disk : நெகிழ் வட்டு; மென் வட்டு; செருகு வட்டு :** வளையக்கூடிய வட்டு. காகித அல்லது பிளாஸ்டிக் உறைகளில் வைக்கப்படும் ஆக்சைடு பூசப் பட்ட வட்ட மைலார் வட்டு. உறையோடு வட்டு இயக்கியில் உள்ளே நுழைக்கப்படும். சிறு கணினி, நுண்கணினிகளில் பரவலாகப் பயன்படுத்தப் படுவது. குறைந்த சேமிப்புத் திறனும், குறைந்த விலையும் அதே அளவு குறைந்த தகவல் பரிமாற்ற விகிதமும் உள்ளது. வழக்கமான ஃபிளாப்பி வட்டுகள் 20.32 செ.மீ. குறுக் களவுள்ளன. சிறு ஃபிளாப்பி வட்டுகள். 13.3. செ.மீ (5¼ அங்) குறுக்களவுள்ளவை. நுண் ஃபிளாப்பிகள் 9. செ.மீ (3½ அங்.)-க்கும் குறைவான குறுக் களவுடன் வருகின்றன. பார்க்க magnetic disk, diskete, hard disk - க்கு எதிர்ச் சொல்.

**floppy disk case : நெகிழ் வட்டுப் பெட்டி; மென் வட்டு உறை :** ஃபிளாப்பி வட்டு களைப் பாதுகாத்து வைக்கும் பெட்டி. பொதுவாக பிளாஸ்டிக் கினால் செய்யப்படும்.

**floppy disk controller : நெகிழ் வட்டு கட்டுப்பாட்டுப் பொறி; மென் வட்டுக் கட்டுப்படுத்தி :** மென்வட்டு இயக்கியைக் கட்டுப்படுத்தும் மின்சுற்று அட்டை அல்லது சிப்பு.

**floppy disk drive :** நெகிழ் வட்டு இயக்கி : ஒரு நெகிழ் வட்டின் மீது எழுதவும் படிக்கவும் செய்கிற ஒரு மின்னியல்- எந்திரவியல் சாதனம். வட்டு இயக்கியில் ஒரு படிக்கும்/எழுதும் முனை இருக்கும்; இது, வட்டின் மீதுள்ள தரவுக் கோப்புகளை அணுகுகிறது. தேவைப்பட்டால் அவற்றை நாளது தேதி வரைப் புதுப்பிக்கிறது. வட்டு இயக்கி, வட்டின் உள்முகக் காந்த ஊடகத்தை நிமிடத்திற்கு 360 சுழற்சி வேகத்தில் சுழலச் செய்கிறது. இதனால், வட்டில் எழுதும் / படிக்கும் முனையின் கீழுள்ள அனைத்துப் பகுதிகளும் குறைந்த இடைவெளிகளில் தோன்றுகின்றன. பெயர்ச் சுருக்கம் : FDD

**floppy disk unit :** நெகிழ் வட்டு அலகு : காந்தப்படுத்தப்பட்ட நெகிழ் வட்டுகளில் தரவுகள் பதிவு செய்யப்படும் புறச் சேமிப்புச் சாதனம்.

**FLOPS :** ஃபிளாப்ஸ் (மிதவை முனைச் செயற்பாடுகள்/ வினாடி) : Floating Point Operation Per Second என்பதன் குறும் பெயர். மிதவை முனைக் கணிப்புகளை அளவிடும் அலகு. எடுத்துக்காட்டு : 100 மெகா ஃபிளாப்ஸ் என்பது, ஒரு வினாடி 10 கோடி மிதவை முனைச் செயற்பாடுகளாகும்.

**floptical :** நெகிழ்ஒளிவம்; நிகழ் ஒளியியல் : காந்தம் மற்றும் ஒளிவத் தொழில் நுட்பங்களின் சேர்க்கை. இதனடிப்படையில் உருவாக்கப்படும் 3.5 அங்குல சிறப்புவகை வட்டுகளில் மிக அதிகத் தரவுகளை பதிய முடியும். வட்டினில் காந்த வடிவிலேயே தரவு எழுதப்படுகிறது. படிக்கப்படுகிறது. ஆனால், எழுது/படிப்பு முனை லேசர் கதிர்மூலம் இடம் நிறுத்தப்படுகிறது. இன்சைட் பெரிஃ பெரல்ஸ் என்னும் நிறுவனம் இச்சொல்லை உருவாக்கியது. வணிகக் குறியாகவும் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**floptical disk :** நெகிழ் ஒளியியல் வட்டு; நெகிழ் ஒளி வட்டு : ஒளியியல் உத்திகளும், காந்த உத்திகளும் ஒருங்கிணைந்த ஒருவகை நெகிழ் வட்டு. இவை மிக அடர்த்தியான தரவு சேமிப்புத் தடங்களை உடையவை. இதனால் மிக உயர்ந்த சேமிப்புத் திறன் கொண்டவை. இது புதிய தொழில்நுட்பமாகையால், ஒளியியல் நெகிழ்வட்டுகள் இன்னும் அதிகமாக பயன்பாட்டுக்கு வரவில்லை.

**floptical drive :** நெகிழ்ஒளிவ இயக்ககம்.

**flow :** ஒழுக்கு; பாய்வு.

**flow analysis** : ஒழுக்குப் பகுப்பாய்வு; பாய்வுப் பகுப்பாய்வு: கணினி அமைப்பில் பல்வேறு வகையான தரவுகளின் போக்கு வரத்தை ஆய்வு செய்யும் ஒரு வழிமுறை. குறிப்பாக, தரவுவின் பாதுகாப்பு மற்றும் அதன் நம்பகத்தன்மையை உறுதிப் படுத்த மேற்கொள்ளப்படும் கட்டுப்பாடுகள் தொடர்பான ஆய்வாக இருக்கும்.

**flow chart** : தொடர் வரைபடம் : குறியீடுகள் மற்றும் ஒன்றோடொன்று இணைக்கும் வரிகளைக் கொண்டு வரையப் படும் வரைபடம். இப்படத்தில் பின்வருவன இடம் பெறலாம். 1. குறிப்பிட்ட நிரலாக்கத் தொடர் இயக்கத்தின் தருக்க முறை மற்றும் தொடர்ச்சியைக் குறிப்பிடலாம். (நிரலாக்கத் தொடர் ஓடுபடம்) அல்லது 2. நோக்க அமைப்பு. ஒரு படத்தினை உருவாக்கும் செயலாக்க அமைப்பையும் குறிப்பிடலாம். கட்ட வரைபடம் (block diagram) என்றும் சிலசமயம் கூறப்படும். ஒப்பிடுக. Structured flow chart.

**flow chart, detail** : விவரப் பாய்வு நிரல்படம்.

**flow charter** : ஓடுபட உருவாக்கி; தொடர் வரைபடம் வரைவி : புலன் காட்சித்திரை இலக்க முறை வரைவி அல்லது அச்சுப் பொறியைக் கொண்டு தானாகவே ஓடுபடங்களை உருவாக்கும் கணினி நிரலாக்கத் தொடர்.

**flow charting symbol** : ஓடுபட அமைப்புக் குறியீடு; தொடர் வரைபடக் குழூஉக்குறி : ஓடுபடத்தில் கருவிகள், தரவு ஓட்டம் மற்றும் இயக்கங்களைக் குறிப்பிடும் குறியீடு.

**flow chart, system** : முறைமைப் பாய்வு நிரல்படம்.

**flow chart template** : ஓடுபட அட்டை; ஓட்டப்பட படிம அச்சு : ஓடுபடக் குறியீடுகளைக் கொண்டு வெளிப்புற வடிவங்களைக் கொண்ட பிளாஸ்டிக் வழிகாட்டி. ஓடுபடம் தயாரிப்பதில் பயன்படுவது.

**flow chart text** : ஓடுபடச் சொற்கள்; ஓட்டப்படக் குறிப்பு : ஓடுபடக் குறியீடுகளுடன் தொடர்புள்ள வர்ணனைத் தரவு.

**flow control** : தொடர்வரிசைக் கட்டுப்பாடு : செய்தித் தொடர்புகளில் தரவு அனுப்பீட்டினைக் கட்டுப்படுத்துதல். இது, அடுத்த தொகுதி அனுப்பப்படுவதற்கு முன்பு, தரவுகளை ஏற்பு நிலையம் செய்முறைப் படுத்தும்படி செய்கிறது. செயல்

முறைப்படுத்தும் நிரலாக்கத் தொடர்களில் தருக்க முறையாக அமையும் ''என்றால்'' (If) ''பிறகு'' (Then), வளையம் போன்ற கட்டளை அமைப்பு களைக் குறிக்கிறது.

**flowline : ஓடு வரி; பாய்வுக் கோடு** : ஓடுபடத்தில் ஓடுபடக் குறியீடுகளை இணைக்கும் பாதையைக் குறிப்பிடும் வரி. சாதாரணமாக அதன் ஓடும் போக்கு கீழ்நோக்கியும் பக்க வாட்டிலும் இருக்கும். ஓடு கோடுகள் மேல்நோக்கியோ அல்லது இடதுபக்கமாகவோ இருக்கும்போது அம்புத் தலை முறையில் அவற்றின் திசைகள் குறிப்பிடப்படும்.

**flush[1] : ஒழுங்கு; சீர்** : கணினித் திரையில் அல்லது தாளில் விவரங்கள் ஒரு குறிப்பிட்ட சீரமைவுடன் அமைந்திருப்பது. ஒழுங்கு-வலம் எனில் வலப் புறத்தில் எழுத்துகள் ஓரச்சீர்மை யுடன் அமைந்திருத்தலைக் குறிக்கும். ஒழுங்கு-இடம் எனில் இடப்புற ஓரச் சீர்மை யைக் குறிக்கும்.

**flush[2] : வெளியெடு; வழித் தெடு; துடைத்தெடு; அகற்று** : நினைவகத்தில் ஒரு பகுதி யிலுள்ள விவரங்களைத் துடைத்தெடுத்தல். எடுத்துக் காட்டாக, வட்டுக் கோப்பு இடைநிலை (Buffer) நினைவகத் திலுள்ள விவரங்களை அகழ்ந் தெடுத்து வட்டில் எழுதிக் கொள்ள வேண்டும். அதன்பின் இடைநிலை நினைவகத்தை துடைத்தெடுக்க வேண்டும் - மீண்டும் நிரப்புவதற்காக. இது போலவே விசைப்பலகையில் உள்ளீடு பெறும் விவரங்களை நுண்செயலி அல்லது வேறு உறுப்புகள் படிக்குமுன் அவை இடைநிலை நினைவகத்தில் தங்கியிருப்பதுண்டு. அவற்றை யும் துடைத்தெடுத்துப் படிக்கப் படவேண்டும்.

**flush center : வெளியேற்று மையம்** : அச்சுக்கலையில், வாசகத்தை இடது, வலது ஓரங் களிடையே ஒரே சீராக மையப் படுத்துவதைக் குறிக்கிறது.

**flush left : வெளியேற்று இடச் சீர்மை** : அச்சுக்கலையில், வாச கங்கள் அனைத்தையும் ஒரே சீராக இடப்புற ஓரத்தில் வரிசைப்படுத்துதல். இடது ஓரத்தில் செங்குத்துக் கோட் டினை உருவாக்கும் வகையில் வாசகத்தை வரிசைப்படுத்தும் முறை. இது ஒரு பொதுவான அச்சிடும் உத்தியாகும்.

**flush right : வலச்சீர்மை** : அச்சுக்கலையில், வாசகங்கள்

அனைத்தையும் வலது ஓரத்தில் வரிசைப்படுத்தும் முறை. இதில் இடப்புற ஓரம் ஒரே சீராக இராது.

**flux : காந்தப்புலம் :** ஒரு காந்தத்தினால் உருவாக்கப்பட்ட ஆற்றல் புலம்.

**flux reversal : காந்தப்புல திசை மாற்றம் :** காந்தவட்டில் அல்லது காந்த நாடாவின் மேற்பரப்பில் உள்ள மிக நுணுக்கமான காந்தத் துகள்களின் திசையமைப்பில் ஏற்படும் மாற்றம். இரும இலக்கங்கள் *0, 1* ஆகியவை இருவேறு காந்தப்புல திசையினால் குறிப்பிடப்படுகின்றன. காந்தப்புல திசைமாற்றம் இரும *1*-என்ற இலக்கத்தைக் குறிக்கின்றது. இரும *0*-வைக் குறிக்க திசைமாற்றக் குறியீடு எதுவும் இல்லை.

**FM : எஃப்எம் :** Frequency Modulation என்பதன் குறும்பெயர். சமிக்கைகளால் குறிப்பிடப்படும் மதிப்புகளை சமிக்கைகளின் நெருக்கத்தை ஒட்டி மாற்றுதல்.

**focus : முன்னிறுத்து.**

**focusing : துல்லியப்படுத்தல்; குவித்தல் :** காட்சித்திரையில் தெளிவற்ற உருவத்தைத் தெளிவாக்குதல்.

**folder : மடிப்புச் சுவடி; கோப்புத் தொகுப்பு :** ஒருவிவரக் குறிப்பேட்டின் மாற்றுப்பெயர். 'Apple' கணினிகள், WIndows NT கணினிகள் போன்றவற்றில் இச்சொல் பயன்படுத்தப்படுகிறது. மெக்கின்டோஷ் கணினியில், ஆவணங்களையும் (கோப்புகள்), பயன்பாடுகளையும் மற்ற மடிப்புச் சுவடிகளையும் இருத்தி வைத்துக் கொள்ளும் ஒரு மாற்றுக் கோப்புத் தொகுப்பு.

**folder options : கோப்புறை விருப்பத் தேர்வுகள்.**

**folders : கோப்புறைகள்.**

**folio : புத்தகத்தாள் எண் :** அச்சுக் கலையில் அச்சிட்ட பக்க எண். எடுத்துக்காட்டு : புத்தகத் தாள் எண் *3* என்பது, ஒரு நூலில் *27*ஆம் பக்கத்தைக் குறிக்கும்.

**folio VIEWS : ஃபோலியோ வியூஸ்; வாசக நோக்கி:** ''ஃபோலியோகார்ப்'' என்ற அமைவனம் தயாரித்துள்ள சொந்தக் கணினிகளுக்கான வாசக மேலாண்மை மென்பொருள், இது வாசகத் தரவு தளங்களுக்கான சேமிப்பு, மீட்புத் திறம்பாடுகளை அளிக்கிறது. இது *40*-க்கும் அதிகமான வாசக உருவமைவுகளிலிருந்து வாசகங்களை வரவழைக்கவல்லது.

**follow up : மறுமொழி; பதிலுரை; தொடர் நடவடிக்கை :** செய்திக் குழுவில் வெளியிடப் பட்ட ஒரு கட்டுரைக்குப் பதிலுரை. மூலக் கட்டுரையில் இருக்கும் பொருளடக்க (Subject) வரியே பதிலுரை யிலும் இருக்கும். 'Re' என்பது முன்னொட்டாக இருக்கும். ஒரு கட்டுரையும் அதற்கான பதிலுரைகளும் கால வரிசைப் படி தொகுக்கப்பட்டிருக்கும். பயனாளர் செய்தி படிக்கும் நிரல்மூலம் அனைத்தையும் வரிசையாகப் படிக்க முடியும்.

**font : எழுத்து அச்சு; எழுத்துரு; எழுத்து வடிவு; எழுத்து வடிவிலான :** ஒரு தொடர்ச்சி யான தனித்த அச்சு வடிவில் எழுத்துகளின் முழுத் தொகுதி.

**font cartridge : எழுத்து உரு வளவுப் பொதியுறை :** ஓர் அச் சடிப்பி வரிப் பள்ளத்தினுள் செருகக்கூடிய ஒரு தகவமை வில் அடங்கியுள்ள ஒன்று, அதற்கு மேற்பட்ட அச்செழுத்து முகப்புகளுக்கான உருவளவுத் தொகுதி. இந்த உருவளவுகள் பொதியுறைக்குள் ஒரு 'ROM' சிப்புடன் சேமித்து வைக்கப் பட்டிருக்கும்.

**font class : எழுத்துரு வகை; எழுத்துரு இனக்குழு.**

**Font/DA Mover : ஃபான்ட்/டிஏ மூவர் :** பழைய ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினிகளில் பயனாளர் விரும்பும் எழுத் துருக்களையும், திரைப் பயன் பாடுகளையும் நிறுவிக் கொள்ள உதவும் ஒரு பயன்பாட்டு நிரல்.

**font editor : எழுத்து உருப் பதிப்பி :** எழுத்து உருவளவு களை வடிவமைத்து, மாற் றமைவு செய்வதற்கு அனுமதிக் கிற மென்பொருள்.

**font family : எழுத்து உருக் குடும்பம் :** ஒரே எழுத்து முகப் பிலுள்ள பல்வேறு வடிவளவு எழுத்துருக்களின் தொகுதி. இதில், சாய்வெழுத்துகள், தடித்த எழுத்துகள் போன்ற மாறுபட்ட எழுத்துருக்கள் அடங்கும்.

**font family property : எழுத்துரு குடும்பப் பண்பு.**

**font generator : எழுத்துரு முகப்பு உருவாக்கி :** எழுத்துரு முகப்பு வரைவினை ஒரு குறிப் பிட்ட எழுத்துரு முகப்புக்குத் தேவையான புள்ளிக் குறித் தோரணியாக மாற்றக் கூடிய மென்பொருள். எழுத்துரு முகப்பு உருவாக்கம் நீள வாக் கில் இருப்பதில்லை. மாறாக, எழுத்து எந்த வடிவளவுக்கும் விரிவாக்கம் செய்யப்படுகிறது.

எழுத்துரு முகப்பளவு பெரிதாக பெரிதாக அதனை கவர்ச்சி கரமாக்கும் வகையில் அதன் பண்பியல்புகளும் மாறுதல் அடைகின்றன.

**font group :** எழுத்துருத் தொகுதி.

**font metric :** எழுத்துரு முகப்பு அளவீடு : ஓர் எழுத்துரு முகப்பின் ஒவ்வொரு பண்பியல்புக்கு உரிய அச்சுக்கலைத் தரவுகள் (அகலம், உயரம், உருவாக்க மையம்).

**font number :** எழுத்துரு எண் : ஒரு பயன்பாட்டுத் தொகுப்பு அல்லது இயக்க முறைமை, ஓர் எழுத்துருவை அடையாளம் கண்டுகொள்ள உதவும் எண். ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினியில் எழுத்துருக்கள் அவற்றின் பெயர்களைக் கொண்டும் மற்றும் அவற்றின் எண்களைக் கொண்டும் அடையாளம் காணப்படுகின்றன. ஓர் எழுத்துரு கணினியில் நிறுவப்படும்போது அதே எண்ணில் ஏற்கெனவே ஓர் எழுத்துரு நிறுவப்பட்டிருக்கிறது எனில், புதிய எழுத்துருவின் எண்ணை மாற்றிக் கொள்ள முடியும்.

**font page :** எழுத்துருப் பக்கம் : ஐபிஎம்-பல்வண்ண வரைகலைக் கோவை ஒளிக்காட்சி (Graphics Array Video) அமைப்புகளில் கணினித் திரையில் எழுத்துகளைக் காண்பிக்க, அடிப்படையாக இருக்கும் ஒளிக்காட்சி நினைவகத்தின் (Video Memory) ஒரு பகுதி. நிரலர் தன் விருப்பப்படி வடிவமைத்த எழுத்துருவின் வரையறுப்பு அட்டவணையை (எழுத்து வடிவங்களின் தொகுப்பு), இந்த நினைவகப் பகுதியில்தான் இருத்தி வைக்கவேண்டும்.

**font scaler :** எழுத்துரு முகப்பு மறு உருவாக்கம் : எழுத்துரு முகப்பு வரைவினை புள்ளிக் குறிகளாக மாற்றுகிற மென்பொருள். 'எழுத்துரு முகப்பு உருவாக்கி' என்பதும் இதுவும் ஒன்றே. ஆயினும் இது, பெரும்பாலும் எழுத்துரு முகப்புகளை மறு உருவாக்கம் செய்வதைக் குறிக்கிறது.

**font size :** எழுத்துரு அளவு : ஓர் எழுத்துருவின் உருவளவு. பெரும்பாலும் புள்ளிக் (point) கணக்கில் குறிக்கப்படுகிறது. ஓர் அங்குலம் 72 புள்ளிகளாகும்.

**font size property :** எழுந்துரு அளவுப் பண்பு.

**font style :** எழுத்துரு முகப்புப் பணி : இது எழுத்துரு முகப்பினையே (Type face) குறிக்கிறது. பெரும்பாலும் செங்குத்

தான அல்லது சாய்வான வாச கங்களைக் குறிக்கிறது.

**font style property :** எழுத்துரு பாணிப் பண்பு.

**font suitcase :** எழுத்துருக் கைப் பெட்டி : மெக்கின்டோஷ் கணினிகளில் சில எழுத்துருக் களையும் திரைப்பயன் நிரல் களையும் கொண்ட ஒரு கோப்பு. இந்த இயக்க முறை மையின் முந்தைய பதிப்பு களில் இத்தகைய கோப்புகள் ஒரு கைப்பெட்டிச் சின்னத்தில் ஆங்கில ஏ என்ற எழுத்துடன் காட்சியளிக்கும். பதிப்பு 7.0 விலிருந்து இந்தச் சின்னம் தனிப்பட்ட ஓர் எழுத்துருவைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

**font type :** எழுத்துரு வகை.

**font utility :** எழுத்துரு முகப்புப் பயனீடு : எழுத்துரு முகப்பு களைப் பளு இறக்கம் செய்தல், நிறுவுதல், வடிவமைத்தல், மாற்றமைவு செய்தல் உட்பட எழுத்துரு முகப்புகளை மேலாண்மை செய்வதற்கான செயற்பணிகளை அளிக்கும் மென் பொருள்.

**fontware :** எழுத்துரு முகப்புப் பொறி : சொந்தக் கணினிகளுக் காக ''பிட்ஸ் டிரீம்'' என்ற அமைவனம் தயாரித்துள்ள எழுத்துரு முகப்பு உருவாக்கப் பொறியமைவு. இது, எழுத்துரு முகப்பு வரைவு நூலகம் ஒன் றையும், ஒரு எழுத்துரு முகப்பு உருவாக்கியையும் கொண் டிருக்கிறது. எழுத்துரு முகப்புத் தொகுதிகளில், இயல்பு, சாய்வு, பருமன் , பருமச் சாய்வு எடை கள் அடங்கியுள்ளன.

**font weight :** எழுத்துரு முகப்பு எடை : எழுத்துகளின் எடை யளவு (நொய்மை, நடுத்தரம் அல்லது பருமன்).

**foo :** ஃபூ : நிரல்கள் ஒரு குறிப் பிட்ட தகவலை உணர்த்த எடுத்துக்காட்டாகக் குறிப்பிடும் சரம். ஒரு கட்டளை வாக்கி யத்தை விளக்குவதற்காகப் பயன்படும் மாறிலிகள், செயல் கூறுகள் மற்றும் தற்காலிக கோப்புகளின் பெயர்கள் ஆகிய வற்றைக் குறிக்க, நிரலர்கள் பொதுவாக 'ஃபூ' என்ற சொல்லையே பயன்படுத்துவர்.

**footer :** அடிப்பகுதி; அடிக் குறிப்பு : பக்க எண்கள் போன்று ஒரு பக்கத்தின் அடிப்பகுதியில் அச்சிடப்படும் தரவு, பெரும் பாலான சொல் பகுப்பிகளில் ஆவணத்தின் ஒவ்வொரு பக்கத் திலும் அடிப்பகுதி தானாகவே அச்சிடப்படும்.

**foot note :** அடிக் குறிப்பு : ஒரு பக்கத்தின் அடியில் விளக்கமாக

அமைந்துள்ள வாசகம். இது பெரும்பாலும் தரவுக்கான ஆதாரத்தைக் குறிக்கும். இவற்றை ஒன்று சேர்த்து ஓர் ஆவணத்தின் இறுதியில் அச்சிட்டால், இவை 'இறுதிக் குறிப்புகள்' (End notes) எனப்படும்.

**foot print : கால் தடம்; அடிச் சுவடு :** ஒரு கருவிக்குத் தேவை யான தரைப் பகுதியின் வடிவ மும், பரப்பும்.

**for : சார்பு :** ஒரு நிரலாக்கத் தொடரில் கட்டுப்பாட்டுக் கட்டமைவில், குறிப்பிட்ட கட் டளைகளின் தொகுதி எந்த அளவுக்குத் திரும்ப நிறை வேற்றப்படும் என்பதைக் குறித் துரைக்கிற முதல் அறிக்கை.

**force : 1. கட்டாயப்படுத்து :** ஒரு நிரலாக்கத் தொடரின் நடுவில் மனிதர் தலையிட்டு தாண்டு நிரலைச் செயல்படுத்துவது.

**force : 2. விசை; வலியச் செய்; வல்லந்தமாக :** 'சோஃப்கோ' என்ற அமைவனம் தயாரித் துள்ள தரவுதளத் தொகுப்பி. இதில் "C" மற்றும் dBase கட்டமைவுகள் இணைந் துள்ளன. இது மிகச்சிறிய, நிறை வேற்றத்தக்க செயல்முறைகளை உருவாக்குவதற்குப் புகழ் பெற்றது.

**forced page break : வலிந்த பக்கப் பிளவு :** பயனாளர் வலிந்து புகுத்திய ஒரு பக்கப் பிளவு.

**forecast : வருவதுரை; முன் கணிப்பு :** கடந்த காலத்தை ஒட்டி வருங்காலத்தினைக் கணித்துக் கூறல், அனுமான மாகச் சொல்லாமல் தரவுகளை அடிப்படையாகக் கொண்டு புதியதாக்க சக்திகளையும், மாற்றங்களையும் உள்ளடக்கிய வாறு எதிர்காலத்தை மதிப் பிட்டு தெளிவாகக் கணித்தல்.

**fore casting : முன் கணித்தல்.**

**foreground/background : முன் புறம்/பின்புறம்; முன்புலம்/பின் புலம்; முன்னணி/பின்னணி :** ஒரு பன்முகப் பணிச் சூழலில் செயல்முறைகளை இயக்கு வதற்குக் குறித்தளிக்கப் பட்டுள்ள முந்துரிமை. முன் புறச் செயல்முறைகள், மிக உயர்ந்த முந்துரிமையைக் கொண்டவை. பின்புறச் செயல் முறைகள், மிகக்குறைந்த முந்துரிமை கொண்டவை. ஒரு சொந்தக் கணினியில் முன்புறச் செயல்முறை என்பது, பயனா ளர் தற்போது கையாளும் செயல்முறை; பின்புறச் செயல் முறை என்பது, ஓர் அச்சு உருளை அல்லது செய்தித் தொடர்பு செயல்முறை.

**foreground colour** : முன்புற வண்ணம்; முன்புல வண்ணம்; **முன்னணி வண்ணம்** : திரையில் எழுத்துகள் அல்லது வரை கலைகள் எழுதப்பட்டுள்ள வண்ணங்கள்.

**foreground job** : முன்புல வேலை; முன்னணி வேலை.

**foreground processing** : முன் புறச் செய்முறைப்படுத்துதல்; முன்னணிச் செயலாக்கம்; முற் பகுதிச் செயலாக்கம்: கணிப்பு வசதிகளைப் பயன்படுத்தி முற்படு விளைகோள் பெறு வதற்கு வடிவமைக்கப் பட்டுள்ள கணினி செயல்முறை களைத் தானாகவே நிறை வேற்றுதல். இது பின்புறச் செய் முறைப்படுத்தலுக்கு மாறு பட்டது. திரையில் உள்ள அச்சடிக்கப்பட்டுள்ள எழுத்து கள் அல்லது வரையப்பட்டுள்ள புள்ளிகள்.

**oreground programme** : முற் பகுதி நிரலாக்கத்தொடர்; முன் னணி நிரலாக்கத் தொடர் : அதிக முன்னுரிமை உள்ள நிரலாக்கத் தொடர். பல நிரலாக்கத் தொடர் தொழில்நுட்பத்தினைப் பயன் படுத்தும் கணினி அமைப்பில் ஒரே நேரத்தில் இயக்கப்படும் நிரலாக்கத் தொடர்களில் முன்னதாக செயல்படுத்தப்பட வேண்டியது.

**foregrounds** : முன்புறங்கள்; **முன்புலங்கள்; முன்னணிகள்** : ஒரு பன்முகப் பணிப் பொறி யமைவில், மிக உயர்ந்த முந்துரிமைச் செயல்முறைகள். பார்க்க: பின்புறப்பணி (Background task).

**foreground task** : முன்புலப் பணி.

**forest** : **வனம்; காடு** : மரங் களின் தொகுதி. தரவு கட் டமைப்பில் (Data Structure) தொகுப்புப் பட்டியல்கள் (Linked liss) மூலம் உருவாக்கப் படும் ஒருவகைக் கட்டமைப் புக்கு tree என்று பெயர். வேர் எனப்படும் தலைமை உறுப்பு டன் பட்டியலின் ஏனைய உறுப் புகள் கிளைகளாக தொகுக்கப் பட்டிருக்கும். ஒன்றுக்கு மேற் பட்ட tree அமைப்புகள் இருப் பின் Forest என்கிறோம்.

**forest & trees** : **காடு - மரங்கள்** : 'சேனல் கணிப்பு' என்ற அமை வனம் தயாரித்துள்ள தரவு பகுப் பாய்வுச் செயல்முறை. இதில், பல்வேறு பயன்பாடு களிலிருந்து தரவுகள் ஒருங் கிணைக்கப்பட்டுள்ளது.

**fork**[1] : **கிளை** : மேக்ஓஎஸ் இயக்க முறைமையில் ஒரு கோப்பினை அடையாளம் காணப் பயன்படும் இரு பகுதி களில் ஒன்று. ஒரு மெக்கின் டோஷ் கோப்பு, தரவு கிளை

(data fork), வளக் கிளை (resource fork) இரண்டையும் கொண்டிருக்கும். பயனாளர் உருவாக்கும் பெரும்பாலான அல்லது அனைத்துக் கோப்புகளும் தரவு கிளையில் இருக்கும். வளக்கிளை பெரும்பாலும் பயன்பாட்டு நோக்கிலான தரவுகளை அதாவது எழுத்துருக்கள், உரையாடல் பெட்டிகள் மற்றும் பட்டிகளைக் கொண்டிருக்கும்.

**fork ² : கிளை :** பல்பணி இயக்க முறைமையில் ஒரு தாய் செயலாக்கம் தொடங்கிய பிறகு ஒரு சேய் செயலாக்கத்தைத் தொடங்கி வைக்கும் கட்டளை.

**FOR loop : ஃபார் மடக்கி :** ஒரு கணினி நிரலில் ஒரு குறிப்பிட்ட கட்டளைப் பகுதியை குறிப்பிட்ட தடவைகள் திரும்பத் திரும்பச் செய்ய வைக்கும் கட்டுப்பாட்டுக் கட்டளை. இக்கட்டளையின் தொடர் அமைப்பு மொழிக்கு மொழி வேறுபடுகிறது. பெரும்பாலான மொழிகளில் ஒரு சுட்டுமாறிலியின் மதிப்பு குறிப்பிட்ட எல்லைக்குள் தொடர் மதிப்பாக மாறிக் கொண்டே இருக்கும். (எ-டு) பேசிக் மொழி:

```
FOR I = 1 TO 10
      PRINT I
NEXT I
```

பாஸ்கல் மொழி:

```
FOR I : = 1 TO 10 DO
      WRITELN (I);
```

சி-மொழி:

```
for (i=0; i<10; i++)
      printf ("%d ", i);
```

சி. மொழியில் ஃபார் மடக்கியை இந்த வரையறைக்கு அப்பாலும் பல்வேறுபட்ட வடிவங்களில் பயன்படுத்த முடியும்.

**form : படிவம் :** 1. ஏற்கனவே அச்சிடப்பட்ட ஆவணம் கூடுதல் தரவுவைச் சேர்த்து பொருள் உள்ளதாக ஆக்கப்படுகிறது. 2. நிரலாக்கத்தொடர் வெளியீட்டுப் படிவம்.

**formal language : முறையான மொழி; முறைசார் மொழி :** புரியாத கணிதப் பொருள்கள். கோபால் அல்லது பேசிக் போன்ற நிரலாக்கத்தொடர் மொழிகள். ஆங்கிலம் அல்லது ஃபிரெஞ்சு போன்ற இயற்கை மொழிகளின் இலக்கணத்தைப் பின்பற்றிப் பயன்படுத்தப்படும்.

**formal logic : முறையான தருக்க அளவை :** ஒரு வாக்குவாதத்தின் போது பயன்படுத்தப்படும் சொற்களின் பொருளைவிட செல்லத்தக்க வாக்குவாதத்தின் அமைப்பு மற்றும் வடிவம் என்ன என்பதை ஆராய்தல்.

**format** : வடிவமைத்தல்; உரு வமைவு; வடிவம் : *1.* தரவு களைக் குறிப்பிட்ட முறையில் அமைத்தல். 2. வெளியீட்டுக்கு ஏற்ற வகையில் செய்திகளை ஒழுங்குபடுத்துவது தொடர் பான நிரலாக்கத்தொடர்.

**format, address** : முகவரி வடிவ அமைப்பு.

**format, addressless instruction** : முகவரியிலா ஆணை வடிவம்.

**format bar** : வடிவமைப்புப் பட்டை : ஓர் ஆவணத்திலுள்ள எழுத்துருவை, அதன் உரு வளவை, பாணியை, நிறத்தை மாற்றுவது போன்ற, பணி களுக்கென ஒரு பயன்பாட்டுத் தொகுப்பில் இருக்கும் ஒரு கருவிப் பட்டை.

**format card** : அட்டை வடிவம்.

**format effector** : உருவமைவுத் தூண்டுச் சாதனம் : பதிவு செய்யப்பட்ட அல்லது பொது வாக ஒரு குறியீடு மூலம் காட்சி யாகக் காட்டப்படுகிற, தரவு அச்சடிப்பு உருவமை வினைச் சீரமைவு செய்வதற்குப் பயன் படுத்தப்படுகிறது. ஒரு கட்டுப் பாட்டு எழுத்து.

**format operation** : உருவமைவுச் செயற்பாடு.

**format painter** : வடிவம் தீட்டி.

**format, print** : அச்சு வடி வமைப்பு.

**format programme** : உரு வமைவுச் செயல்முறை : ஒரு வட்டு வைத்துக் கொள்ளக் கூடிய சேமிப்புக்கூறு ஒவ் வொன்றின் மீதுள்ள கூறு அடை யாளத்தைப் பதிவு செய்வதன் மூலம் ஒரு காலி வட்டினைத் தொடங்கி வைக்கிற மென் பொருள்.

**format, record** : ஏட்டு வடி வமைப்பு.

**format specification** : உரு வமைவுத் தனி வரையறை; உரு வமைவு வரையறை : செயல் முறை உட்பாட்டுக்கும் வெளிப் பாட்டுக்கும் இடையிலான தொடர்பினைக் குறித்துரைக்கும் முறைசார்ந்த தருக்க முறைமை யினைப் பயன்படுத்துகிற தானியக்கச் செயல்முறைப் படுத்தும் உத்தி.

**formatted display** : வடி வமைக்கப்பட்ட காட்சி; வடிவுறு காட்சி : ஒன்று அல்லது மேற் பட்ட காட்சிப்புலங்களின் உள்ளடக்கம் அல்லது தன்மை களை, பயனாளர் வரையறுக் கும் திரைக்காட்சி.

**formatting** : வடிவமைத்தல்.

**formatting characters** : வடி வமைப்பு எழுத்துகள்.

**formatting bar** : வடிவமைப்புப் பட்டை.

**formatting tool bar** : வடி வமைப்புக் கருவிப் பட்டை.

**formatter** : வடிவமைப்பு; வடி வூட்டி : செய்திகளை வடி வமைக்கும் சொல் பகுப்பி நிரலாக்கத்தொடரின் பகுதி.

**form background** : படிவப் பின்னணி; படிவப் பின்புலம்

**form design** : படிவ வடி வமைப்பு : தரவு உள்ளீட்டுப் படிவங்களையும், மூல ஆவணங் களையும் உருவாக்குதல்.

**form factor** : வடிவக் காரணி : ஒரு சாதனத்தின் இயற்பியல் வடிவளவு.

**form feed (FF)** : பக்கம் நகர்த்தி; படிவ அளிப்பு : அடுத்த பக்கத் தின் உச்சிப் பகுதிக்குக் காகி தத்தை முன்னே நகர்த்துகிற ஒரு கட்டுப்பாட்டுக் குறியீடு மற்றும் பொத்தான்.

**form feed character** : பக்கம் நகர்த்தி எழுத்து : அடுத்த பக்கத் தின் அல்லது உருப்படிவத்தின் முதல் வரிக்கு நகர்த்துவதற்கு ஓர் அச்சடிப்பியைப் பயன் படுத்துகிற ஓர் உருவமைவுத் தூண்டுச் சாதனம்.

**form file** : படிவக் கோப்பு.

**form filling** : படிவம் நிறைவு செய்தல்; படிவ நிறைவாக்கம்.

**form letter** : படிவக் கடிதம் : ஒரு கடிதத்தைப் பலருக்கும் அனுப்பி வைக்கத் தயாரிக்கும் முறை, அஞ்சல்-இணைப்பு (mail-merge) என்றழைக்கப்படுகிறது. அனைத்துச் சொல் செயலி (word processor) தொகுப்புகளிலும் இத்தகைய வசதி உண்டு. பலரின் முகவரி கள் ஒரு தரவுத் தளத்தில் பதிவு செய்யப்பட்டிருக்கும். அனை வருக்கும் அனுப்ப ஒரேயொரு கடித ஆவணம் தயாரிக்கப் பட்டிருக்கும். அஞ்சல் இணைப்பு நிரலை இயக்கியதும், தனித் தனி முகவரிகளுடன் கடிதம் தயாராகி விடும். கடிதத்தில் முகவரி நாம் குறிப்பிடும் இடத் தில் செருகப்பட்டிருக்கும். தனித்தனிக் கடிதங்களை அச் சிட்டு அனைவருக்கும் அனுப்பி விட முடியும். அஞ்சல்- இணைப்பு மூலம் உருவாக்கப் படும் கடிதம் படிவக் கடிதம் என்றழைக்கப்படுகிறது.

**form letter programme** : படிவ எழுத்து நிரலாக்கத்தொடர்; படிவ மடல் நிரலாக்கத் தொடர் : படிவ எழுத்துகளை உருவாக்கும் நிரலாக்கத்தொடர். சங்கம அச்சு நிரலாக்கத் தொடர் என்றும் அழைக்கப்படுகிறது.

**forms** : படிவங்கள்.

**forms capolite browser** : படிவம் காண்தகு உலாவி.

**forms control** : படிவக் கட்டுப் பாடு : தரவு அளிக்க, சேகரிக்கப் பயன்படுத்தப்படும் ஆவணங் களைப் பயன்படுத்துவதில் வழிகாட்டுவதற்காக ஒரு நிறு வனம் ஏற்படுத்தும் நடப்புச் செயல்முறை.

**forms design** : படிவ வடிவமைப்பு.

**formula** : வாய்பாடு : ஒரு சமன்பாடாகக் கூறப்படும் விதி. சான்றாக ஒரு வட்டத்தின் வெளிச்சுற்றைக் கண்டுபிடிக்க C = 2πr என்ற வாய்பாடு கூறப் படுகிறது. சில அளவுகளின் சம உறவைக் காட்டும் வழி. மற்ற அளவுகளைக் கொடுத்து ஒரு அளவைக் கணக்கிடுவதற்குப் பயன்படுவது.

**formula bar** : வாய்பாட்டுப் பட்டை.

**formulas** : வாய்பாடுகள்.

**formula translator** : வாய்பாடு மொழி பெயர்ப்பி.

**form view** : உருப்படிவக் காட்சி : முன் அச்சிட்ட உருப்படிவம் போன்று வரிசைப்படுத்தப் பட்ட ஓர் இனத்தை அல்லது பதிவேட்டினைக் காட்டுகிற திரைக்காட்சி. இது, 'அட்ட வணைக் காட்சி' (Table view) என்பதிலிருந்து வேறுபட்டது.

**form wizard** : படிவ வழிகாட்டி.

**Forrester, Jay** : ஃபாரஸ்டர், ஜே : அமைப்பு மாற்றத்துறையில் தலைவராகக் கருதப்படுபவர். 1951 முதல் 1965-க்குள் உருவான பெரும்பாலான கணினிகளில் உள் நினைவகமாகப் பயன் பட்டு வந்த காந்த மையத்தை உருவாக்கியவர். எம்.ஐ.டி-யில் ஒரு அணிக்குத் தலைமை வகித் தவர். இன்றைய வணிக எந்தி ரங்களின் வரிசையில் ஆரம்பக் கணினியால் செல்வாக்குப் பெற்ற விர்ல்விண்ட் கணினியை உருவாக்கியவர். காந்த மைய நினைவகமும் இணைவான ஒரே நேரமுறையும் கணினியின் உள்ளே தரவுவைக் கையாள் வதற்கு ஏற்றதென்று விர்ல் விண்ட் வடிவமைப்பாளர்கள் தாம் முதன்முதலில் மெய்ப் பித்துக் காட்டினர்.

**for statement** : தீர்மானித்து திரும்பச் செய் கட்டளை : ஓர் நிரலாக்கத் தொடரில் சில குறிப் பிட்ட கட்டளைகளை, குறிப்பிட்ட தடவைகள் திரும்பத் திரும்ப நிறைவேற்றுகிற கட்டளை வாக்கியச் சொல். இது தனது சொந்தக் கட்டுப்பாட்டுத் தரவு களை உள்ளடக்கியிருக்கிற ஒரு வளையத்தை உண்டாக்குகிறது.

**FORTH** : ஃபோர்த் (கணிப்பொறி மொழிகளில் ஒன்று) : செயல்

முறை நிரலாக்கத் தொடர் அமைப்பதில் பயன்படுத்தப் படும் நிரலாக்கத் தொடர் மொழி. உற்பத்தித்திறன், நம்பகத்தன்மை மற்றும் செயல் திறன்களில் பயன்படுத்த குறிப் பாக ஏற்றது. வடிவமைப்பு நிரலாக்கத்தொடரமைத்தல், மேலிருந்து கீழ் வளர்ச்சி, மாய நினைவகம் ஆகியவற்றில் பயன் படுத்த ஏற்றது. மாய அடுக்கு நினைவகத்திற்கு ஏற்றதொரு பெருமொழியாக கூறப்படுவது.

**FORTRAN** : ஃபோர்ட்ரான் (நிர லாக்கத் தொடர் மொழி) : Formula Translator என்பதன் குறும் பெயர். பரவலாகப் பயன்படுத் தப்படும் உயர்நிலை நிரலாக்கத் தொடர் மொழி. கணித, அறி வியல் மற்றும் பொறியியல் கணிப்புகளுக்குப் பயன் படுத்தப்படுவது. அமெரிக்கத் தரநிர்ணய நிரலாக்கத் தொடர் மொழியாக இரண்டு பதிப்பு களில்-ஃபோர்ட்ரான், பேசிக் ஃபோர்ட்ரான் - ஏற்கப்பட்டது.

**FORTRAN 77** : ஃபோர்ட்ரான் 77 : ஃபோர்ட்ரானின் ஒரு வடிவம். அன்சி 3.9.1978 தர நிர்ணயத் திற்கு ஏற்றது. நுண்கணினி சூழ்நிலைகளில் பயன்படுத்தும் கூடுதல் வசதி பெற்றது.

**FORTRAN translation process** : ஃபோர்ட்ரான் மொழிபெயர்ப்பு செயல் முறை : ஃபோர்ட்ரான் மொழியில் எழுதப்பட்ட நிரலாக்கத் தொடரில் கணிப்பு முடிவுகளை உருவாக்கப் பயன் படும் செயல்முறை. கணினி கள் நிரலாக்கத் தொடர்களைத் தொகுக்கவும் செயல்படுத்த வும் உதவுவது.

**forum** : மன்றம் : ஒரு குறிப் பிட்ட தலைப்பில் பயனாளர்கள் தத்தம் கருத்துகளை எழுத்து வடிவில் தெரிவித்துக் கலந் துரையாட ஓர் ஊடகத்தைப் பல்வேறு நிகழ்நிலை (online) சேவைகள் வழங்கி வரு கின்றன. இணையத்தில் பெரு மளவு காணப்படும் மன்றங்கள் யூஸ்நெட்டில் செயல்படும் செய்திக் குழுக்களாகும்.

**fortune cookie** : செல்வவளக் குக்கி; அதிர்ஷ்டக் குக்கி : பொன்மொழிகள், வருவது உரைத்தல், நகைச்சுவை - இவற் றின் தொகுப்பிலிருந்து ஏதேனும் ஒன்றைத் தேர்வு செய்து கணினித் திரையில் காண்பிக் கும் ஒருநிரல். யூனிக்ஸ் இயக்க முறைமையில் பல நேரங் களில், உள்நுழையும் போதும் வெளியேறும்போதும் இது போன்ற குக்கிகள் செயல்படும்.

**forward** : முன்னோக்கு.

**forward chaining** : முன் நோக்குப் பிணைப்பு; முன்

நோக்கு சங்கிலித் தொடர் : மேதமைக் கணினி முறைமைகளில் (Expert Systems) சிக்கலைத் தீர்ப்பதற்கான ஒரு வழிமுறை. இம்முறையில் வரையறுக்கப்பட்ட விதிமுறைகள் ஒரு புறம். மெய்ம்மையான விவரங்கள் அடங்கிய தரவுத் தளம் இன்னொரு புறம். இரண்டிலும் தொடங்கி, இறுதியில் தரவுத்தள விவரங்களின் அடிப்படையில், விதிமுறைகளில் கூறப்பட்ட அனைத்து மெய்க்கூறுகளையும் நிறைவு செய்யும் வகையில் இறுதி முடிவு எட்டப்படும்.

**forward compatible : முன்னோக்கு ஒத்திசைவு :** 'மேல் நோக்கு ஒத்திசைவு' (Upward Compatible) என்பதும் இதுவும் ஒன்றே.

**forward error correction : முன்னோக்குப் பிழைதிருத்தம் :** ஏற்பு முனையில் தவறான தரவுகளைத் திருத்தக் கூடிய செய்தித் தொடர்பு உத்தி. அனுப்பீட்டுக்கு முன்பு, பிழைதிருத்தத்திற்காக கூடுதல் துண்மிகளைச் சேர்க்கிற ஒரு படிநிலை முறை மூலமாகத் தரவுகள் செய்முறைப் படுத்தப்படுகின்றன. அனுப்பப்படும் செய்தி பிழையுடனேயே வருமானால், அதைத் திருத்துவதற்குத் திருத்தத் துண்மிகள் பயன் படுத்தப்படுகின்றன.

**forward pointer : முன்னோக்கிய குறிப்பி; முன்னோக்குச் சுட்டி :** தரவு அமைப்பில் அடுத்த பொருளின் இருப்பிடத்தைக் கூறும் குறிப்பி.

**FOSDIC : ஃபோஸ்டிக் :** Film Optical Sen sing Device for Input to Computers என்பதன் குறும் பெயர். நிரப்பப்பட்ட மக்கள் தொகை படிவத் தரவுகளைக் கணினிக்குள் செலுத்த மக்கள் தொகைக் கணக்கெடுப்பு அலுவலகம் பயன்படுத்தும் உள்ளீட்டுச் சாதனம்.

**four address instruction : நான்கு முகவரி நிரல்; நான்கு முகவரி கட்டளை :** முடிவுகளை வகைப்படுத்துவதற்கான முகவரி மற்றும் அடுத்து செயல்படுத்தவேண்டிய கட்டளைக்கான நிரல் மற்றும் பிற பட்டியல்கள் போன்ற இரண்டு இயக்கிகளின் முகவரிகளை வழக்கமாகக் கொண்டிருக்கும் எந்திர நிரல்.

**fourier transform : ஃபூரியர் நிலைமாற்றம் :** ஜீன் பாப்டிஸ்ட் ஜோசப் ஃபூரியர் (Jean Baptiste Joseph Fourier : 1768-1830) என்னும் ஃபிரெஞ்சுக் கணித மேதை உருவாக்கிய ஒரு கணித

வழிமுறை. அலைக்கற்றைப் பகுப்பாய்வு (Spectral Analysis), படிமச் செயலாக்கம் (Image Processing) போன்ற சமிக்கை உற்பத்திப் பணிகளிலும் ஏனைய சமிக்கைச் செயலாக்க முறைகளிலும் இக்கோட்பாடு பயன்படுத்தப்படுகிறது. ஃபூரியர் நிலைமாற்றம் ஒரு சமிக்கை உருவாக்க மதிப்பை நேரம் சார்ந்த செயல்கூறாய் (function) மாற்றுகிறது. தலைகீழ் ஃபூரியர் நிலைமாற்றம் அலைவரிசை சார்ந்த செயல்கூறினை நேரம், வெளி அல்லது இரண்டும் சார்ந்த செயல்கூறாய் மாற்றித் தருகிறது.

**four out of eight code :** எட்டில் நான்கு குறியீடு; எட்டில் நான்கு குறிமுறை : பிழை கண்டுபிடிப்பதற்கான குறியீடு.

**fourth generation computers :** நான்காம் தலைமுறை கணினிகள் : மிகப் பேரளவு ஒருங்கிணைப்பு தொழில்நுட்பத்தினால் உருவாக்கப்பட்ட இப்போது புழக்கத்தில் உள்ள இலக்கமுறை கணினிகள். விஎல்எஸ்ஐ தொழில்நுட்ப கணினிகள் என்றும் அழைக்கப்படுகின்றன.

**fourth generation language : நான்காம் தலைமுறை மொழி :** பயனாளருக்குப் பெரிதும் உதவியாக இருக்கும் ஓர் உயர்நிலை மொழி. இதற்கு, மரபு முறையையும் சொற்றொடரியலையும் கண்டிப்பாகக் கடைப்பிடிக்கவேண்டிய அவசியமில்லை. பெயர்ச் சுருக்கம் : 4GL. வழக்கமான உயர்நிலை மரபு முறையையும் சொற்றொடரியலையும்விட மிக முன்னேறிய கணினி மொழி. எடுத்துக்காட்டாக தரவு தளத்தில், ஆணைப் பட்டியல், ஒரு தரவுக் கோப்பிலுள்ள அனைத்துப் பதிவேடுகளையும் காட்சியாகக் காட்டுகிறது. இரண்டாம், மூன்றாம் தலைமுறை மொழிகளில் ஒவ்வொரு ஏட்டினைப் படிக்கவும் கோப்பு முடிவைச் சோதிக்கவும், திரையில் ஒவ்வொரு தகவலையும் காட்டவும், செய்முறைப்படுத்தும் பதிவேடுகள் காலியாகும் அச்செயற்பாட்டினைத் திரும்பத் திரும்பச் செய்யவும் கட்டளைகள் எழுதப்பட வேண்டும். முதல் தலைமுறை மொழிகள் எந்திர மொழிகள்; இரண்டாம் தலைமுறை மொழிகள் எந்திரம் சார்ந்த ஒருங்கிணைப்பு மொழிகள். Fortran, Cobol, Basic, Pascal, C போன்ற மூன்றாம் தலைமுறை மொழிகள் உயர்நிலைச் செயல்முறைப்படுத்தும்

மொழிகள். dBASE, FoxBase, FoxPro போன்றவை நான்காம் தலைமுறைகள் என அழைக்கப் பட்டாலும், இவை உண்மை யில் மூன்றாம், நான்காம் தலை முறை மொழிகள் இணைந் தவை. dBASE list நிரல் என்பது நான்காம் தலைமுறை நிரல். ஆனால் இதில் செயல்முறைப் படுத்தப்பட்டுள்ள பயன்பாடு கள் மூன்றாம் தலைமுறையைச் சேர்ந்தவை. வினவு மொழியும், அறிக்கை எழுது கருவியுங்கூட நான்காம் தலைமுறையைச் சார்ந்தவை.

**fox message : சாம்பல் பூத்த செய்தி :** ஒவ்வொரு எழுத்தும் ஒரு முனையத்தினால் சரியாக அனுப்பப்படுமாறு சரிபார்ப் பதற்கான ஒரு வாக்கிய எழுத்துருக்கள்.

**FPLA : எஃப்பீஎல்ஏ :** Field Programmable Logic Array என்பதன் குறும்பெயர். இது பயனாளர் நிரலாக்கத் தொடர் அமைக்கக் கூடிய பிஎல்ஏ. சாதாரண பிஎல் ஏவை அரைக் கடத்தி உற்பத்தித் தொழிற் சாலையில்தான் நிரலாக்கத் தொடர் அமைத்து மாற்ற முடியும்.

**fractals : ஃபிராக்டல்ஸ் :** அண் மைக் காலத்தில் பெனோயிட் மண்டல் பிராட்டால், குறியீடு அமைக்கப்பட்ட கணிதத் துறை யின் ஒரு பிரிவு. கணினி வரை கலையியல் பயன்பாடுகளில், சில தரவு புள்ளிகளில் இருக்கும் சிக்கல்களில் இருந்து ஒற்றுமை யைக் கொண்டுவரும் தொழில் நுட்பம் தொடர்பானது.

**fractional TI : பின்ன டீ1 :** *டீ1* தடத்துக்கான ஒரு பகிர்மான இணைப்பு. *24* T1 குரல் மற்றும் தரவுத் தடங்களின் ஒரு பகுதி மட்டுமே பயன்படுத்தப்படு கிறது.

**fragmentation : சிதறிக் கிடத் தல்; துண்டாக்கல் :** முதன்மை நினைவகத்தின் அனைத்துப் பகுதிகளிலும் பயன்படுத்தப் படாத இடம் திட்டு, திட்டாக இருத்தல்.

**frame : சட்டம்; திரைக்காட்சி :** *1.* ராஸ்டர் ஸ்கேன் காட்சி அல கில் ஒரு முழு ஸ்கேன் உருவாக் கும் ஒளிக் காட்சி (வீடியோ) தோற்றம். *2.* முதல் பரப்பில் பதிவாகும் நிலை. காகிதம் அல் லது காந்த நாடா செங்குத்தாக நகரும்போது ஒரு முறை பதிவாகும் குறுக்குவெட்டு அகலம். ஒரு திரைக் காட்சியில் மாறுபட்ட பதிலிடு நிலைகளின் மூலம் பல துண்மி அல்லது துளையிடும் நிலைகளை உரு வாக்க முடியும்.

**frame base CAI : சட்டக ஆதார கணினி உதவிபெறு கட்டளை :** செயல்முறைப்படுத்திய கட்டளைகளை அடிப்படையாகக் கொண்ட கணினி உதவி பெறு கட்டளை உத்தி.

**frame-based knowledge : சட்டகம் சார்ந்த அறிவு :** சட்டகங்களின் ஒரு படிநிலை அல்லது இணைய வடிவில் குறிக்கப்படுகிற தரவு.

**frame buffer : திரைத்தோற்றம் தாங்கி; சட்டக வைப்பகம் :** கணினி வரைகலையில், ஒரு கணினி, படத்தை சேமிக்க ஏற்றுக் கொள்ளும் நினைவகத்தின் சிறிய பகுதி.

**frame grabber : சட்டகப் பறிப்பி:** கணினி வரைகலையில், ஒளிப் பேழை உருக்காட்சிகளை கணினி உருவாக்க உருக்காட்சிகளாக மாற்றுகிற ஒரு சாதனம். இந்தச் சட்டகப் பறிப்பி, செந்திறத் தொலைக்காட்சிக் குறியீடுகளைப் பெற்று, நடப்பு ஒளிப் பேழைச் சட்டகத்தை ஒரு கணினி வரைகலை உருக்காட்சியாக இலக்க முறைப்படுத்துகிறது.

**frame (computer), main : பெருமுகக் கணினி.**

**frame maker : சட்டக உருவாக்கி :** "சட்டகத் தொழில் நுட்பக் கார்ப்பரேஷன்" என்ற அமைவனம் தயாரித்த மேசை மோட்டு வெளியீட்டுச் செயல்முறை. இது யூனிக்ஸ், மெக்கின்டோஷ், விண்டோஸ் ஆகியவற்றில் செயல்படுகிறது. கட்டமைவு செய்யப்பட்ட ஆவணங்களுக்குப் பொருத்தமான இது, இதன் முழுமையாக ஒருங்கிணைந்த சொல் செய்முறைப் படுத்துதலுக்கும், வரைகலைத் திறம்பாடுகளுக்கும் புகழ் பெற்றது.

**frame rate : சட்ட வீதம் :** *1.* ஒரு ராஸ்டர் வருடு கணினித்திரையில் காட்டப்படுவதற்கு முழு ஒற்றைத் திரை படிமங்கள் எவ்வளவு வேகத்தில் அனுப்பி வைக்கப்படுகின்றன என்பதைக் குறிக்கிறது. மின்னணுக்கற்றை வினாடிக்கு எத்தனை முறை திரையை ஆக்கிரமிக்க வேண்டும் என்பதைக் குறிக்கிறது. 2. அசைவூட்ட (Animation) செயல்பாடுகளில், ஒரு வினாடிக்கு எத்தனைமுறை ஒரு படிமம் புதுப்பிக்கப்படுகிறது என்பதைக் குறிக்கிறது. சட்டவீதம் வினாடிக்கு 14 சட்டங்களைவிட அதிகமாயின் அசைவூட்டம் உண்மையான இயக்கம் போலவே தோற்றம் அளிக்கும்.

**frame relay : சட்டக அஞ்சல் :** x. 25-ஐ விட விரைவாக அனுப்

பீடு செய்வதற்கு உதவுகிற அதிவேகப் பையடக்க விசை. இது, குரலைவிட தரவுகளுக் கும் உருக்காட்சிகளுக்கும் பொருத்தமானது.

**frame relay assembler/dis-assembler:** சட்டத் தொடர்பி தொகுப்பான்/பிரிப்பான் : தடச் சேவை சாதனம் (Channel Service Unit-CSU), இலக்கமுறைச் சேவை சாதனம் (Digital Service Unit - DSU), பிணையத்தை சட்டத் தொடர்பியுடன் இணைக்கும் திசைவி (router) ஆகிய மூன்றும் இணைந்தது. இச்சாதனம், சட்டத் தொடர்பிப் பிணையங் களில் தகவலைப் பொட்டலங் களாக மாற்றி அனுப்பி வைக் கும். மறுமுனையிலிருந்து இது போல அனுப்பப்படும் பொட் டலங்களைச் சேர்த்து மூலத் தகவலாக மாற்றும். இம்முறை யில் தீச்சுவர் (Firewall) போன்ற பாதுகாப்பு ஏற்பாடுகள் எதுவும் கிடையாது. எனவே, தனியாக பிணையப் பாதுகாப்பு செயல் முறை சேர்க்கப்பட வேண்டும்.

**frame source :** சட்டமூலம் : ஹெச்டிஎம்மில் சட்டச் சூழ லில், ஒரு பொருளடக்க ஆவ ணம் மூல ஆவணத்தைத் தேடி, பயனாளர் கணினியிலுள்ள உலாவி வரைந்துள்ள ஒரு சட்டத்துக்குள் காண்பிக்கும்.

**frame work :** வரைச் சட்டம் : பொருள் சார் செயல்வரைவு அடிப்படையில், பயன்பாடு களை உருவாக்குவதற்கான பொதுவானதொரு துணைப் பொறியமைவு வடிவமைப்பு. இது அருவ வகைப்பாடுகளை யும், உருவ வகைப்பாடுகளை யும் கொண்டது. பொருள்சார் செயல்வரைவு முறை மென் பொருள் மறுபயன்பாட்டுக்கு உதவுகிறது. வரைச்சட்டங்கள், வடிவமைப்பு மறுபயன் பாட்டுக்கு உதவுகிறது.

**franz lisp :** ஃபிரான்ஸ் லிஸ்ப் : பெர்க்கியிலுள்ள கலிஃபோர்னி யாப் பல்கலைக்கழகம் தயாரித் துள்ள LISP- இன் ஒரு பதிப்பு.

**fred :** ஃபிரெட் : *1.* எக்ஸ் *500*-க்கான ஓர் இடைமுகப் பயன்நிரல். *2.* கட்டளைத் தொடர் எடுத்துக்காட்டுகளில் ஒரு மாறிலியின் பெயருக்காக நிரலர்கள் பலராலும் பயன் படுத்தப்படும் ஒரு சொல். ஒரு நிரலர் ஏற்கெனவே ஃபிரெட் என்னும் சொல்லைப் பயன் படுத்தியிருந்தால் இன்னுமொரு மாறிலியின் பெயர் இடம் பெறு மிடத்தில் பார்னே (Barnay) எனக் குறிப்பிடுவர்.

**free BSD :** இலவச பிஎஸ்டி : ஐபிஎம் ஒத்தியல்புக் கணினி களுக்காக இலவசமாக வெளி

யிடப்பட்ட பிஎஸ்டி யூனிக்ஸ் பதிப்பு. பெர்க்கிலி சாஃப்ட் வேர் டிஸ்ட்ரிபூஷன் என்பதன் சுருக்கமே பிஎஸ்டி எனப்படு வது. கலிஃபோர்னியாவிலுள்ள பெர்க்கிலி பல்கலைக் கழகத்தி லுள்ள பிஎஸ்டி அமைப்பு யூனிக்ஸ் இயக்க முறைமையை வளர்த் தெடுத்ததில் முக்கிய பங்கு வகித் தது. இன்றைக்கு யூனிக்ஸின் அங்கமாக இருக்கும் பல்வேறு சிறப்புக் கூறுகளும் பிஎஸ்டி யால் உருவாக்கப்பட்டவை.

**Freedom of Information Act : தரவு சுதந்திரச் சட்டம் :** (அமெரிக்க) ஐக்கிய அரசின் அமைப்புகள் தொகுக்கும் தரவுகளை சாதாரண மக்கள் பெறுவதற்கு அனுமதிக்கும் ஐக்கியச் சட்டம்.

**free form : தாராள வடிவம் :** தரவு நுழைவு சமயத்தில் உள் ளீட்டுச் சாதனங்களின் மூலம் நுழைக்கப்படும் குறியீடுகளால் கட்டுப்படுத்தப்படும் ஸ்கேனிங். இயக்கம்.

**free-form database : வடிவற்ற தரவுத் தளம் :** நீளம் அல்லது ஒழுங்கமைவினைப் பொருட் படுத்தாமல் வாசகத்தைப் பதிவு செய்வதை அனுமதிக்கிற தரவுத் தளப் பொறியமைவு. இது சொல்பகுப்பியை ஏற்றுக் கொண்டாலும், தேடுதல், மீட்பு, தரவு சீரமைப்பு ஆகிய வற்றுக்கு சிறந்த முறைகளை அளித்து வேறுபடுகிறது.

**free - form language : வடிவற்ற மொழி; சுதந்திர வடிவ மொழி; கட்டறு வடிவ மொழி :** கட் டளைத் தொடர் ஒரு வரியில் எந்த இடத்திலும் தொடங்க லாம். கட்டளைச் சொற்கள் ஒரு வரியின் எவ்விடத்திலும் இடம் பெறலாம் என்று அமைந்துள்ள மொழி. சி மற்றும் பாஸ்கல் மொழிகள் இவ்வகையைச் சார்ந்தவை. ஃபோர்ட்ரான், கோபால் மொழிகள் அவ் வாறில்லை. கட்டளைச் சொற் கள் வரியின் குறிப்பிட்ட இடத் தில் தொடங்க வேண்டும் என்கிற கட்டுப்பாடுகள் உண்டு.

**free-form text chart : தாராள வடிவ உரை நிரல் படம்.**

**freeHand : தாராளச் செயல் முறை :** 'அல்டஸ் கார்ப்பரேஷன்' என்ற அமைவனம் தயாரித் துள்ள முழு அம்சங்களும் கொண்ட வரைபடச் செயல் முறை. இதில் பல்வேறு வரைவுக் கருவிகள் தனி உத்திகளுடன் இணைக்கப் பட்டுள்ளன.

**free net : இலவச வலையம்.**

**free of cost : செலவில்லாமல்.**

**free phone service : இலவச தொலைபேசி இணைப்புச் சேவை; இலவச இணைப்புச் சேவை.**

**free software : கட்டறு மென் பொருள் :** இலவசமான மென் பொருள் மட்டுமன்று. கட்டுப் பாடற்ற சுதந்திர மென்பொருளு மாகும். மூல வரைவு உட்பட முழுமையாக இலவசமாக வெளியிடப்படும் மென்பொருள். பயனாளர்கள் அதனை இலவச மாகப் பயன்படுத்துவதுடன், விருப்பப்படி மாற்றியமைக்க லாம். மாற்றியமைத்தபின் மீண் டும் அதனை இலவசமாகவே பிறருக்கு வழங்க வேண்டும். செய்யப்பட்ட மாற்றங்கள் தெளிவாகக் குறிப்பிட்டுக் காட்டப்பட்டிருக்க வேண்டும். மூல ஆசிரியரின் பெயர் அவரு டைய பதிப்புரிமைச் செய்தி ஆகியவற்றை மாற்றவோ, நீக் கவோ கூடாது. இலவச மென் பொருளுக்கும் கட்டறு மென் பொருளுக்கும் வேறுபாடு உண்டு. இலவச மென் பொருளை இலவசமாகப் பயன் படுத்தலாம். ஆனால் அதன் மூலவரைவு கிடைக்காது. கிடைத்தாலும் மாற்றியமைக்க முடியாது. ஆனால் கட்டறு மென்பொருள் பொது உரிம ஒப்பந்த முறைப்படி பாது காக்கப்பட்டுள்ளது. கட்டறு மென்பொருள் என்னும் கருத்துரு, மாசாசூசட்ஸிலுள்ள கேம்பிரிட்ஜின் கட்டறு மென் பொருள் அமைப்பு (Free Software Foundation) உருவாக் கிய ஒன்றாகும்.

**Free Software Foundation : கட்டறு மென்பொருள் அமைப்பு (கழகம்) :** ஒரு மென்பொரு ளைப் பயன்படுத்த, நக லெடுக்க, திருத்த, வியாபார நோக்கின்றி மறுவினியோகம் செய்ய பொதுமக்களுக்கு கட் டற்ற உரிமை இருக்க வேண் டும் என்ற நோக்கத்தை முன் னிறுத்தி திரு. ரிச்சர்டு ஸ்டால் மேன் என்பவர் உருவாக்கிய அமைப்பு. யூனிக்ஸை ஒத்த ஜிஎன்யூ மென்பொருளின் பராமரிப்பை இந்த அமைப்பே கவனித்துக் கொள்கிறது. ஜிஎன்யூ மென்பொருளை இல வசமாக வழங்கலாம். மாற்றி அமைக்கலாம். விலைக்கு விற்பது கூடாது.

**free space : வெற்று இடம்; காலி இடம் :** ஒரு நெகிழ்வட்டு அல்லது ஒரு நிலைவட்டில் தரவு எழுதப்படாத வெற்று (காலி) இடத்தைக் குறிக்கும்.

**freeware : இலவசப் பொருள் :** கட்டணம் இல்லாமல்

விற்பனையாளர் கொடுக்கும் மென் பொருள்.

**freeze columns :** நெடுக்கைகளை நிலைப்படுத்து.

**freeze frame video :** உறைசட்ட ஒளிக்காட்சி : உருவம் சில வினாடிகளுக்கு ஒரேயொரு முறை மட்டுமே மாறக்கூடிய ஒளிக்காட்சிப் படம்.

**freeze panes :** பாளங்களை நிலைப்படுத்து.

**frequency :** அதிர்வலை; அதிர் வெண்; அலை வரிசை : ஒலி அழுத்தம், மின்சக்தி தீவிரம் அல்லது பிற அளவுகளில் ஒரு அலை தனது சமநிலை அளவுகளில் இருந்து மாறி ஒரு சுழற்சி ஏற்படுவதற்கு அலகு நேரத்தில் எத்தனை தடவைகள் முடிகிறது என்பதைக் குறிப்பிடுகிறது. மிகவும் பொதுவான அதிர்வெண் அலை ஹெர்ட்ஸ் (Hz); *1* Hz ஹெர்ட்ஸ் என்பது ஒரு நொடிக்கு ஒரு சுழற்சி.

**frequency counter :** அதிர்வெண் எண்ணி; அலைவெண் காட்டி : குறிப்பிட்ட நேர இடைவெளியில் ஒரு மின்சமிக்கை எத்தனை சுழற்சி அடைகிறது என்பதை எண்ணும் மின்னணுச் சாதனம்.

**frequency division multiplexing :** அலைவெண் பிரிவினைப் பன்முகமாக்கம் : அனுப்பீட்டு ஊடகத்தின் கட்டுக்கம்பிகளில் அனுப்பப்படும் மின்காந்த அலைக்கற்றை, தருக்க முறைத் தடங்களாகப் பகுக்கப்பட்டிருக்கும் பன்முக வடிவம். இந்த வழிகளில் பன்முகச் செய்திகளை ஒரே சமயத்தில் அனுப்பலாம்.

**frequency hopping :** அலை வரிசைத் துள்ளல் : ஒரு முனைக்கும் இன்னொரு முனைக்கும் இடையேயான தரவுப் பரிமாற்றத்தில் ஒரு குறிப்பிட்ட அலைக் கற்றைக்குள் வெவ்வேறு அலை வரிசைகளை மாற்றி மாற்றிப் பயன்படுத்துதல். இம்முறையினால் அத்துமீறிய குறுக்கீடுகளைத் தவிர்க்க முடியும். ஒற்றை அலைவரிசையை செயலற்றதாக்குவது போல் இதனைச் செய்ய முடியாது.

**frequency modulation :** அலை வெண் மாறுபாடு : ஒரு குறியீட்டின் அலைவெண், ஈரிலக்க '*1*'-க்கும் '*0*'-க்குமிடையில் பல விதமாக மாற்றப்படுகிற ஏற்ற இறக்க உத்தி. குறைந்த அலை வெண் '*0*' ஆகும்.

**frequency modulation encoding :** அலைவரிசைப் பண்பேற்ற குறியீடு : சுருக்கமாக எஃப்எம் குறியீடு என்றழைக்கப்படும்.

வட்டில் தகவலைப் பதிவதில் பின்பற்றப்படும் ஒரு வழிமுறை. தகவல் மற்றும் கடிகாரத் துடிப்புகள் எனப்படும் ஒத்திசைவுத் தகவலும் (Synchronicing information) வட்டின் மேற்பரப்பில் பதியப்படுகிறது. கடிகாரத் துடிப்புகளும் வட்டில் பதியப்படுவதால் அதிகமான வட்டுப் பரப்பு தேவைப்படுகிறது. எனவே எஃப்எம் குறியீட்டு முறை பிறமுறைகளோடு ஒப்பிடுகையில் திறன் குறைந்ததாகக் கருதப்படுகிறது. இப்போது இதைவிடச் சிறந்த முறைகளும் உள்ளன. திருத்தப்பட்ட அலைவரிசைப் பண்பேற்றக் குறியீட்டுமுறை (Modified Frequency Modulation Encoding-MFM) என்பது அவற்றுள் ஒன்று. தொடர் நீள வரம்பு (Run Length Limited - RLL) குறியீட்டு முறை சற்றே சிக்கலானது. ஆனால் எல்லாவற்றையும்விட மிகச்சிறந்த குறியீட்டுமுறை எனக் கருதப்படுகிறது.

**frequency response : அலைவரிசைப் பிரதிபலிப்பு :** ஒரு கேட்பொலி சாதனம், குறிப்பிட்ட உள்ளீட்டுச் சமிக்கைகளின் அடிப்படையில் உருவாக்கி, வெளியீடாகத் தரும் அலைவரிசைகளின் வரம்பு.

**frequency shift keying (FSK) : அதிர்வெண் மாற்றி விசையிடல் :** தரவு அனுப்பு முறை. இதில் அனுப்பப்படும் 'துண்மி'யின் நிலை கேட்கும் ஒலியால் உணர்த்தப்படும்.

**frequency spectrum : அலைக் கற்றை:** ஊர்தி மற்றும் அதிர்வெண் குறியீட்டு அலைவெண்களின் கூட்டுத்தொகை மேற்பக்க அலைவெண் எனப்படும். ஊர்திக்கும், அதிர்வெண் குறியீட்டு அலைவெண்களுக்குமிடையிலான வேறுபாடு, கீழ்ப் பக்க அலைவெண் எனப்படும்.

**frequency, ultra high : மீவுயர் அதிர்வலை**

**friction feed : உராய்வு செலுத்தி; உராய்வு அளிப்பு; உராய்வு வழி ஊட்டல் :** அச்சுப் பொறிக்குள் தாளைச் செலுத்தும் ஒரு முறை. பொதுவாக, இருபுறமும் துளையிடப்பட்ட தாள் இரு பல்சக்கரங்களின் மேல் இடப்பட்டு, சக்கரங்கள் சுழலும்போது நகர்த்தப்படும். ஆனால் சில அச்சுப்பொறிகளில் தட்டுகளில் தாள்கள் வைக்கப்பட்டு அதன்மீது சுழலும் அழுத்த உருளை (Pressure Roler) மூலமாக நகர்த்தப்படும். இன்னும் சிலவற்றில் சுழலும் இரு உருளைகளுக்கு இடையில் உட்

செலுத்தப்படும். துளையில்லாத தாள்களை உட்செலுத்த இது போன்ற உராய்வு செலுத்த முறை பயன்தரும்.

**friendliness** : தோழமை : ஒரு கணினி அல்லது நிரலாக்கத் தொடருடன் சேர்ந்து இயங்கு வது எவ்வளவு எளிமையானது என்பதைக் காட்டுகிறது. பயனாளர் - தோழமை நிரலாக் கத் தொடரைக் கற்றுக் கொள்ள குறைந்த நேரமே போதுமானது; பயன்படுத்த எளிதானது.

**friendly** : தோழமையான : கணினியை அல்லது கணினி நிரலை எவரும் எளிதாகக் கற்றுக் கொள்ளவும், எளிதாகப் பயன் படுத்தவும் ஒரு வன்பொருள் அல்லது ஒரு மென் பொருளில் உள்ளிணைக்கப்பட்டுள்ள ஒரு வசதி. தோழமை என்பது பெரும் பாலான தயாரிப்பாளர்களால் வலியுறுத்தப்படுகிறது. பெரும் பாலான பயனாளர்களால் எதிர்பார்க்கப்படுகிறது.

**friendly interface** : தோழமை இடைமுகம்; தோழமை பரி மாற்றம்: முகப்புக் கருவி மற்றும் கணினி நிரலாக்கத்தொடர் ஆகிய இரண்டையும் இணைத்து வடிவமைத்து, எப்போதாவது கணினியை இயக்குபவருக்கும் எளிமையாகச் செய்து தருவது.

**friendly user** : பயனாளர் தோழமை.

**fringeware** : கொசுறுப்பொருள் : இலவசமாகத் தரப்படும் மென் பொருள். ஆனால் அதன் மதிப்பும் செயல்திறனும் கேள்விக்குரியது.

**frob** : ஃப்ராப் : ஜாய்ஸ்டிக் அல்லது சுட்டுப்பொறி (மவுஸ்) போன்ற பிடிக்கும் சாதனத் துடன் விளையாடுவது.

**from scanner** : வருடி மொழி யிலிருந்து; வருடியிலிருந்து

**front and end processor** : தொடக்க மற்றும் இறுதிச் செய லகம் : புரவலர் கணினியின் தொடக்கம் / இறுதியில் உள்ள தனி தரவுத் தொடர்புக் கணினி. தரவுத் தொடர்புக்கு வரிசை ஒதுக்குதல், தரவு மாற்றல் பிழை ஆய்தல், செய்தி கையாளல் மற் றும் பிற விவர தரவுத் தொடர்பு பணிகளைக் கையாண்டு புரவலர் கணினிக்கு இந்த வேலைகளைக் குறைக்கிறது.

**front end** : முன்னிலை : பிறி தொரு பயன்பாடு அல்லது மென்பொருள் கருவியுடன் ஒரு இடைமுகத்தை ஏற்படுத்தித் தரும் ஒரு பயன்பாட்டு மென் பொருள் அல்லது அதன் ஒரு கூறு. இத்தகைய முன்னிலைக் கருவியாகச் செயல்படும் பயன் பாட்டுத் தொகுப்புகள் பின்புல

மாய்ச் செயல்படும் மென் பொருளைக்காட்டிலும் மிகவும் தோழமையான ஓர் இடை முகத்தை பயனாளருக்கு வழங் கும். வெவ்வேறு தயாரிப்பாளர் களின் மென்பொருள் படைப்பு களுக்கும் ஒரே மாதிரியான இடைமுகத்தை முன்னிலைக் கருவிகள் வழங்குகின்றன. 2. வழங்கன் கணினியில் சேமித்து வைக்கப்பட்டுள்ள தரவுத் தளம் பின்னிலை (Back End) என்றும், கிளையன் கணினிகளில் செயல் படும் பயன்பாட்டுத் தொகுப்பு கள் முன்னிலைக் (Front End) கருவி என்றும் அழைக்கப்படு கின்றன. (எ-டு) ஆரக்கிள் பின் னிலைத் தரவுத் தளம். விசுவல் பேசிக், டெவலப்பர் 2000 ஆகி யவை முன்னிலைக் கருவிகள்.

**front end processor :** முன்னணிச் செயலகம்.

**front end tool :** முன்னிலைக் கருவி.

**front panel : முகப்புப் பலகம் :** கணினிப் பெட்டியில் அதன் இயக்கு விசைகள், விளக்குகள், கட்டுப்பாட்டுக் குமிழ்கள் அடங்கிய முகப்புப் பட்டிகை.

**fry : வறு :** மிக அதிக வெப்பம் அல்லது மின்சாரம் செலுத்து வதன் மூலம் ஒரு மின் சுற்றினைப் பாழாக்குதல்.

**fs : எஃப்எஸ் :** femto second என் பதன் குறும்பெயர்.

**FSK : எஃப் எஸ் கே :** Frequency Shift Keying என்பதன் குறும் பெயர்.

**FTP commands : எஃப்டீபீ கட் டளைகள் :** கோப்புப் பரிமாற்ற நெறிமுறையின் (File Transfer Protocol) கட்டளைத் தொகுப்பு.

**FTP server : எஃப்டீபீ சேவை யகம்; எஃப்டீபீ வழங்கன்: Host - புரவன்:** இணையம் வழி யாகவோ அல்லது எந்தவொரு டீசிபீ/ஐபீ பிணையம் வழி யாகவோ, கோப்புப் பரிமாற்ற நெறிமுறையைப் (FTP) பயன் படுத்தி, பயனாளர்கள் கோப்பு களை பதிவேற்ற அல்லது பதி விறக்க அனுமதிக்கும் ஒரு கோப்பு வழங்கன் கணினி.

**FTP site : எஃப்டீபீ தளம் :** எஃப்டீபீ வழங்கன் கணினியில் சேமித்து வைக்கப்பட்டுள்ள கோப்புகள் மற்றும் நிரல்களின் தொகுப்பு.

**full adder : முழுக்காட்டி; முழு மைக் கூட்டி :** மூன்று இருமை துண்மிகளைத் தனித்தனியே உள்ளீடாகப் பெற்று அவற்றைக் கூட்டும் திறனுடைய கணினி மின்சுற்று. அவற்றில் ஒன்று முன்பு கூட்டப்பட்டதில் மீதியைக் கொண்டு செல்லும்.

**full duplex** : முழு இருதிசை இயங்கி; முழு இருவழிப் போக்கு : ஒரு தரவுத் தொடர்பு இணைப்பில் இரு திசைகளிலும் தரவுகளைத் தனித்தனியாக ஒரே நேரத்தில் அனுப்புவது பற்றியது. half duplex மற்றும் simplex ஆகியவற்றுக்கு எதிர்ச்சொல்.

**full featured** : முழு வடிவம் : ஒரே வகையைச் சேர்ந்த மிக முன்னேறிய உருமாதிரிகளுடன் அல்லது செயல்முறைகளுடன் ஒப்பிடத்தக்க திறம்பாடுகளையும், செயற்பணிகளையும் கொண்ட வன்பொருள் அல்லது மென்பொருள்கள்.

**full frame** : முழுத் திரை; முழுமைச் சட்டகம் : ஒரு காட்சித் திரையில் பார்க்கக்கூடிய முழுப் பகுதியையும் பார்க்கும் அளவுக்கு ஒரு படத்தின் அளவை மாற்றும் செயல்முறை.

**full justification** : முழு சீர்மை; இருபுற ஓரச் சீர்மை : சொல் செயலாக்கம் (word processing) அல்லது கணினிப் பதிப்பகப் பணிகளில், ஒரு பக்கத்தில் அல்லது பத்தியில் தட்டச்சு செய்யப்பட்ட வரிகளை இடம், வலம் இரு ஓரங்களிலும் ஒரே சீராக அமைக்கும் செயல்பாடு.

**full motion video** : முழுதியங்கு நிகழ்படம்; முழுதியங்கு ஒளிக்காட்சி : ஒரு வினாடிக்கு *30* படச் சட்டங்கள் (*30* FPS-Frames per second) வீதம் திரையில் காண்பிக்கப்படும் இலக்க முறை ஒளிக்காட்சி (Digital Video).

**full motion video adapter** : முழுதியங்கு ஒளிக்காட்சி ஏற்பி; முழுதியங்கு ஒளிக்காட்சித் தகவி : கணினியில் பயன்படுத்தப்படும் ஒரு விரிவாக்க அட்டை. ஒளிக்காட்சி நாடாப் பதிவி (Video Casstte Recorder) போன்ற சாதனங்களிலிருந்து இயங்கு நிகழ்படங்களைக் கணினியில் பயன்படுத்தும் இலக்கமுறை வடிவமாக (AVI, MPEG, MJPEG போன்ற வடிவங்களில்) மாற்றித் தரும் அட்டை இது.

**full name** : முழுப்பெயர் : ஒரு பயனாளரின் உண்மையான முழுப்பெயர். இது, பெரும்பாலும் முதல் பெயர், இடைப் பெயர் (அல்லது இடையெழுத்து), கடைப்பெயர் ஆகிய மூன்று பகுதிகளைக் கொண்டதாக இருக்கும். (எ-டு) டென்னிஸ் எம்.ரிட்சி, ஜான் எஃப். கென்னடி. ஒரு பயனாளரின் கணக்கு விவரத்தின் ஒரு பகுதியாக அவரைப் பற்றிய சொந்த விவரங்களும் கணினியில் பதிவு செய்யப்படுவதுண்டு. இயக்க முறைமை ஒரு பயனாளரை அடையாளம்

காணப் பயன்படும் விவரங் களுள் அவரின் முழுப்பெயரும் ஒன்று.

**full-page display :** **முழுப்பக்கம் காட்டுதல்; முழுப்பக்கக் காட்சி :** திரையில் ஒரு நேரத்தில் 21 X 28 செ.மீ அளவுக்கு செய்தியைக் காட்டும் சொல் பகுப்பி அமைப்புகளில் பயன்படுத்தப் படும் முனையம்.

**full path :** **முழுப் பாதை :** இயக் கம், தொடக்கம், விவரக்குறிப் பேடு, துணை விவரக் குறிப் பேடுகள் ஆகியவற்றை உள் ளடக்கி, கோப்பின் அல்லது பொருளின் பெயருடன் முடி வடையும் பாதைப் பெயர்.

**full pathname :** **முழுப் பாதைப் பெயர் :** ஒரு படிநிலைக் கோப்பு முறைமையில் ஒவ்வொரு வட்டகத்திலும் வேர் கோப் பகம் (Root Directory) தொடக்க நிலையாக உள்ளது. அதனுள் ஏனைய கோப்பகம்/கோப்புறை களும் அவற்றில் உள் கோப் பகம்/கோப்புறைகளும் அமை கின்றன. ஒரு கோப்பினை அணுகுவதற்கு அது சேமிக்கப் பட்டுள்ள வட்டகப் பெயர் (Drive Name), வேர் கோப்பகம், கோப்பகம், உள்கோப்பகங் களை வரிசையாகக் குறிப்பிட வேண்டும். எடுத்துக்காட்டாக, myfile.doc என்னும் கோப்பு C வட்டகத்தில் Book என்னும் கோப்பகத்தில் Chapter1 என்னும் உள்கோப்பகத்தில் சேமிக்கப்பட்டுள்ளது எனில், டாஸ் இயக்க முறைமையில், C:\BOOK\ CHAPTER1\MYFILE. DOC என்பது அக்கோப்பின் முழுப்பாதையைக் குறிக்கும் பெயராகும்.

**full project life cycle :** **முழுத் திட்ட ஆயுள் சுழற்சி :** தொடக் கம் முதல் முடிவு வரையிலான திட்டம்.

**full screen :** **முழுத் திரை :** ஒளிக்காட்சித் (வீடியோ) திரை யின் முழு முகமும் காட்சித் திரையாகப் பயன்படும் சூழ்நிலை.

**full-screen application :** **முழுத் திரைப் பயன்பாடு.**

**full screen editing :** **முழுத் திரை தொகுப்பு; முழுத் திரைப் பதிப்பு :** சொற்களை மாற்றுவதற்காக திரை முழுவதும் சுட்டியை நகர்த்தும் திறன்.

**full text searching :** **முழு சொல் பகுதி தேடுதல்; முழுத் திரை தேடல் :** கணினியின் துணை நினைவகத்தில் சேமிக்கப் பட்டுள்ள ஒரு கட்டுரை அல்லது நூலின் முழு சொற்

பகுதியையும் தேடி குறிப்பிட்ட தகவலைக் கண்டறிதல்.

**full version** : முழுப் பதிப்பு.

**fully formed character** : **முழு வடிவ எழுத்து** : அச்சுப்பொறிகளை தொட்டச்சுப்பொறி (Impact Printer), தொடா அச்சுப் பொறி (Non-Impact Printer) எனப் பிரிக்கலாம். புள்ளியணி அச்சுப் பொறிகள் (Dotmatrix Printers), டெய்சி சக்கர அச்சுப்பொறிகள் (Daisy Wheel Printers) ஆகியவற்றைத் தொட்டச்சில் சேர்க்கலாம். மையச்சு (Inkjet), ஒளியச்சு (Laser) பொறிகளை தொடா அச்சில் சேர்க்கலாம். புள்ளியணி அச்சுப்பொறியில், அச்சு முனை மைநாடாவில் மோதி தாளைத் தொட்டு அச்சிடுகின்றது. ஆனாலும் எழுத்துகள் புள்ளிகளால் ஆனவை. ஆனால் டெய்சி சக்கர அச்சுப்பொறியில் எழுத்து வடிவங்கள் தட்டச்சுப் பொறியில் உள்ளது போல, அச்சுக்கூடத்தில் பயன்படுத்தும் எழுத்துகளைப்போல அச்சுருவில் வார்த்தெடுக்கப்பட்ட முழு வடிவ எழுத்துகளாக இருக்கும்.

**fully populated** : **முழு இடவசதிப் பலகை** : மிக அதிக எண்ணிக்கையிலான சிப்புகளைச் செருகுவதற்கு இடவசதி கொண்ட ஓர் அச்சிட்ட சுற்றுவழிப் பலகை.

**fully populated board** : **முழுதும் நிரம்பிய பலகை** : அச்சிட்ட மின்சுற்றுப் பலகை. ஒருங்கிணை மின்சுற்றுப் பொருத்துவாய்கள் அனைத்திலும் ஒருங்கிணை மின்சுற்று (IC)-கள் பொருத்தப்பட்டிருக்கும். நினைவக பலகையில் பெரும்பாலும் சில ஐசி பொருத்து வாய்கள் மீதமிருக்கும். அதுபோன்ற பலகைகளை "முழுதும் நிரம்பாப் பலகைகள்" எனலாம்.

**function** : **பணி; செயல்முறை; செயல்கூறு; சார்பு** : *1.* ஒரு மதிப்பினை உருவாக்கும் செயல்முறை. *2.* செயலாக்கப்படும் வழக்கச் செயல். *3.* ஒரு பெரிய செயல்திட்டத்துக்கு நிரலாக்கத் தொடர் வரையும்போது, அச்செயல் திட்டத்தை சிறுசிறு பணிக்கூறுகளாகப் பிரித்து, ஒவ்வொரு பணிக்கூறுக்கும் தனித்தனியே நிரலாக்கத் தொடர் அமைத்து, பின்பு ஒருங்கிணைத்து இயக்கலாம். ஒரு சிறிய பணிக்கூறு அல்லது செயல்கூறு ஃபங்ஷன் எனப்படுகிறது.

**function call** : **செயற்பணி அழைப்பு** : மையச் செயலகத்துக்கு (CPU) ஒரு செயற்பணியை ஏற்றி, நிறைவேற்று

மாறு அறிவுறுத்துகிற ஒரு செயல்முறைக் குறியீடு. செயற்பணி அழைப்புடன் சேர்ந்து வாதங்கள் அல்லது நிலையளவுருக்களும் செல்லும்.

**function codes : பணிமுறை குறியீடுகள் :** வெளிப்புறச் சாதனங்களில் கட்டுப்பாட்டுப் பணிகளுக்கு உதவும் சிறப்புக் குறியீடுகள். காட்சித்திரையை காலி செய் என்பது ஒரு பணிக் குறியீடு.

**function key : பணி விசை; செயல்முறை விசை; சார்புச் சாவி; செயற்பணி விரற் கட்டை; இயக்கச் சாவி :** சிறப்பாக வடிவமைக்கப்பட்ட விசை. இதை அழுத்தும்போது கணினியின் விசைப்பலகை, சொல் பகுப்பி அல்லது வரைகலை முதலியவற்றில் சில பணிகளைத் துவக்குகிறது.

**function key, user defined : பயனாளர் வரையறு பணிவிசை**

**function library : செயற்பணி நூலகம் :** செயல்முறை நிரல்களின் தொகுப்பு.

**function overloading : செயல்கூறு பணிமிகுப்பு :** ஒரு நிரலில் ஒரே பெயரில் பல்வேறு செயல்கூறுகளை வைத்துக் கொள்ளும் வசதி. அளபுருக்களின் (parameters) எண்ணிக்கை, வகை, வரிசை ஆகியவற்றின் அடிப்படையில் செயல்கூறுகளின் வேறுபாடு அறியப்படும். அளபுருக்களின் வகை, வரிசை ஆகியவற்றின் அடிப்படையில் மொழிமாற்றி (compiler) சரியான செயல்கூறினை தானாகவே அடையாளம் கண்டுகொள்ளும். (எ-டு) sin(float), sin(int) என்று இரண்டு செயல்கூறுகள் இருக்க முடியும். ஒன்று ஆரக்கோணத்தையும் இன்னொன்று கோண மதிப்பையும் ஏற்கும். sin (3.142/2.0) என்பது sin(π/2) என்பதால் *1.0* என்ற விடை கிடைக்கும். sin(45) என்பது *0.5* என்ற விடையைத் தரும். பொருள்நோக்கு நிரலாக்க (Object Oriented Programming) மொழிகளில் செயல்கூறு பணி மிகுப்பு ஒரு முக்கிய கூறாகும். சி#, சி++, ஜாவா மொழிகளில் இது உண்டு.

**functional decomposition : செயற்பணிச் சிதைவு :** ஒரு செய்முறையை செயற்பாடுகளாகப் பகுத்தல்.

**functional description : பணிமுறை விளக்கம்; செயல் விவரிப்பு :** ஒரு கணினி அமைப்பின் தேவைகளை அடையாளம் காணப் பயன்படுத்தப்படும் சொற்றொடர்.

**functional design : செயல்பாட்டு வடிவமைப்பு :** கணினி அமைப்பின் செயல்பாட்டு உறுப்புகளிடையே நிலவும் உறவுமுறை பற்றிய வரையறுப்புகள். கருத்துரு சாதனங்களின் விவரங்கள் மற்றும் அவை இணைந்து செயல்படும் முறைகளும் இவற்றுள் அடக்கம். செயல்பாட்டு வடிவமைப்பு என்பது வரைகலை வடிவில் ஒரு செயல்பாட்டு வரைபடம் மூலம் விளக்கப்படும். கணினி அமைப்பின் பல்வேறு கூறுகளைக் குறிக்க தனிச்சிறப்பான குறியீடுகள் பயன்படுத்தப்படுகின்றன.

**functional programming : செயல்கூறு நிரலாக்கம் :** நிரலாக்கத்தில் ஒரு பாணி. நிரலின் அனைத்து செயல்பாடுகளும் தனித்தனி செயல்கூறுகளாக (Functions) அமைக்கப்பட்டிருக்கும். பொதுவாக, இதனால் பக்கவிளைவு எதுவும் ஏற்படாது. முழுமையான செயல்கூறு நிரலாக்க மொழிகளில் வழக்கமான மதிப்பிருத்து கட்டளை இருப்பதில்லை. நகலெடுத்தல், மாற்றம் செய்தல் ஆகிய செயல்பாடுகளின் மூலமாக மதிப்பிருத்தும் பணி நிறைவேற்றப்படுகிறது. இணைநிலை செயலாக்கக் (Parallel processing) கணினிகளில் செயல்கூறு நிரலாக்கம் மிகுந்த பலனைத் தரும் என்று கருதப்படுகிறது.

**functional redundancy checking : செயல்பாட்டு மிகை சரிபார்ப்பு :** ஒரு கணினிச் செயல்பாட்டில் நிகழும் பிழையைத் தவிர்ப்பதற்கான வழிமுறை. இதன்படி, கணினியில் இரண்டு நுண் செயலிகள் இருக்கும். அவையிரண்டும் ஒரே நேரத்தில் ஒரே விவரத்தின்மீது ஒரே கட்டளையைச் செயல்படுத்தும். இரண்டு நுண் செயலிகள் மூலம் கிடைக்கின்ற விடைகள் ஒன்றாக இருக்கின்றனவா என்று சரிபார்க்கப்படும். இல்லை எனில் பிழை ஏற்பட்டுள்ளது என்று பொருள். இன்டெல் நிறுவனத்தின் பென்டியம் மற்றும் அதற்கு மேம்பட்ட நுண்செயலிகளில் செயல்பாட்டு மிகை சரிபார்ப்பு முறை உள்ளிணைந்த ஒன்றாகும்

**functional specification : செயல்பாட்டு வரையறுப்பு :** ஒரு தரவு கையாளும் அமைப்பு முறையை உருவாக்கும்போது கணக்கில் எடுத்துக் கொள்ளவேண்டிய நோக்கங்கள், நடவடிக்கைகளின் வகைகள் - இவற்றைப் பற்றிய ஒரு விளக்கம்.

**functional units : செயல்படு உறுப்புகள்**

**functional units of a computer : ஒரு கணினியின் பணிமுறை அலகுகள் :** இலக்கமுறை கணினி களில் கணித தருக்க அலகு, சேமிப்பக அலகு, கட்டுப் பாட்டு அலகு, உள்ளீடு மற்றும் வெளியீட்டுச் சாதனங்கள்.

**function subprogramme : துணை நிரல் செயல்கூறு; பணி நிரலாக்கத் தொடர் :** ஒரு தனி மதிப்பு முடிவினைத் திருப்பி அனுப்பும் துணை நிரலாக்கத் தொடர்.

**funware : விளையாட்டுப் பொருள் :** நிறுவனப்பொருளில் உள்ள விளையாட்டு நிரலாக்கத் தொடர்.

**fuse : உருகி :** அளவுக்கு மேலான சுமை ஏற்றப்படும் போது ஒரு மின்சுற்றினைத் துண்டிக்கும் பாதுகாப்பு தற்காப்புச் சாதனம். உருகிக்கு மேலே உள்ள மின்னோட்டம் உருகியின் இணைப்பினை உருகவைத்து மின் சுற்றினைத் துண்டிக்கும். மின்சாரம் அளவுக்கு அதிகமாகப் போவதைத் தடுத்து கருவியைப் பாதுகாக்க பெரும் பாலான கணினிச் சாதனங்களில் இது பயன்படுத்தப்படுகிறது.

**fused-on toner : உருக்கு விசை :** ஓர் ஊர்தி உருமணி, ஒளிக் கடத்தி அல்லது வன்பொருள் போன்ற செய்முறைப்படுத்தும் பொருளுடன் இணைப்பதற்குத் தேவைப்படும் அளவுக்குச் சூடாக்கப்படும் உருக்கு விசை.

**fush : ஃபுஷ் :** *1.* ஒரு இருப் பகத்தில் இருக்கும் உள்ளடக்கங் களில் ஒரு பகுதியைக் காலி செய்தல். 2. எழுத்துகளை வரி, வரியாக அமைக்கும்போது இடது பக்கமாகவோ அல்லது வலது பக்கமாகவோ அமைத்தல்.

**fusible link : சங்கமிக்கும் இணைப்பு :** பரவலாகப் பயன் படும் நிரலாக்கத் தொடரமைப் புத் தொழில் நுட்பம். அதிக மின்சக்தியைப் பயன்படுத்தி ஒரு சேமிப்பகச் சாதனத்தில் உலோக இணைப்பைத் துண் டித்து *'0'*வை உருவாக்குவது. கடத்தும் பொருளை *1* ஆகக் கருதுவது.

**fuzzy logic : மங்கல் :** கணினி மூலம் ஒரு தரவை *0, 1* களின் தொகுதியாக மாற்றும்போது சில வேளைகளில் தரவுகளின் துல்லியத்தன்மை கெட்டு விடுகிறது. துல்லியம் தேவைப் படுகின்ற தரவுகளை, *0*-வுக்கும் *1*-க்கும் இடைப்பட்ட நிலை களையும் கணக்கில் எடுத்துக்

கொண்டு, கணினி முறைக்கு மாற்றும் தருக்க முறை.

**fuzzy search : மங்கல் தேடுதல் :** தேவையான தரவுகளுக்கு மிக நெருக்கமான தரவுகளைத் தருகிற வகையில் தரவுககளைத் துல்லியமின்றித் தேடுதல்.

**fuzzy set : மங்கல் தொகுதி :** ஒரு தொகுதித் தேற்றத்தில் அனைத்துக்கும் அல்லது எதற்கும் பதிலாக பல்வேறு அளவு தொகுதி உறுப்பாண்மைக்கு அனுமதிக்கிற ஒரு பொதுமுறை.

**fuzzy theroy : மங்கல் தேற்றம் :** கணினியில் செய்முறைப் படுத்துவதற்கு இடமளிக்கும் வகையில் தரவுகளையும், மனிதரின் பகுத்தறிவையும் குறிப்பாக குறிப்பதற்கு வடிவமைக்கப்பட்டுள்ள தருக்க முறையின் ஒரு பிரிவு.

**.fx : .எஃப்எக்ஸ் :** இணையத்தில், ஃபிரான்ஸ் பெருநகரைச் சேர்ந்த இணைய தளம் என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப்பெயர்.

**FYI : எஃப்ஒய்ஐ :** *1.* தங்களின் மேலான கவனத்துக்கு என்று பொருள்படும் For Your Information என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். மின் அஞ்சலிலும் செய்திக் குழுக் களிலும், படிப்பவர்க்குப் பயன் படக்கூடிய தரவுகளை அறிமுகப்படுத்தப் பயன்படுத்தப் படும் சொல். *2.* கருத்துரைக் கான கோரிக்கை (Request For Comments-RFC) போல இன்டர்நிக் (InterNIC) வழியாக வழங்கப் படும் ஒரு மின்னணு ஆவணம். ஆர்எஃப்சி என்பது வன்பொருள்/மென்பொருள் தயாரிப் பாளர்களுக்கானது. ஆனால் எஃப்ஒய்ஐ என்பது இணையத் தர வரையறை அல்லது பண்புக் கூறு பற்றிப் பயனாளர்களுக்கு விளக்குவதை நோக்கமாகக் கொண்டது.

# G

**G** : ஜி : ''ஜிகா'' என்பதன் குறியீடு. ஜிகா என்பது ஏறத்தாழ நூறு கோடி. கணினியில் இதன் மதிப்பு *1,073, 741,824, (230)* ஆகும். வழக்கமான *1,000,000,000* அன்று. இது __ ஐ விட அதிகம் எனப் பொருள்படும் "Greater than" என்பதன் சுருக்கக் குறியீடு.

**gage array** : வழி வரிசை.

**gain** : ஆதாயம்; பெருக்கம் : ஒரு இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு சமிக்கைகளை அனுப்பும் போது பெருக்கிகள் மூலம் மின் சக்தி அல்லது சமிக்கையின் சக்தி அதிகரித்தல். ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் போகும் டெசிபல் முறையில் ஆதாயத்தின் அளவு கூறப்படும்.

**gallium aresenide** : **கேலியம் ஆர்செனைடு** : உயர்நிலை அரைக் கடத்திகளை உருவாக்கப் பயன்படும் படிகப்பொருள். சிலிக்கானைவிட உயர்ந்தது. ஆனால் அதிகம் செலவாகக் கூடியது.

**Game Control Adapter** : **விளையாட்டுக் கட்டுப்பாட்டுத் தகவி** : ஐபிஎம் மற்றும் ஒத்தியல்பு சொந்தக் கணினிகளில் அமைந்துள்ள ஒரு மின்சுற்று அட்டை. கணினியின் விளையாட்டுத் துறை வழியாக வரும் உள்ளீட்டு சமிக்கைகளை செயலாக்குகிறது. சுட்டுக்குறியின் இட நிலையை மாறுகின்ற மின்னழுத்தமாய் மாற்றித் தரும் மின்னழுத்த மானி (Potentiometer) இதில் உண்டு. தொடர் முறையை இலக்க முறையாக மாற்றித் தரும் கருவி இந்த மின்னழுத்த அளவுகளை எண்களாக மாற்றித் தரும்.

**game pack** : **விளையாட்டுத் தொகுதி**: ஒரு கணினியில் ஒரு குறிப்பிட்ட விளையாட்டினை இயக்குவதற்கான ஓர் ஆயத்தச் செயல்முறை.

**game port** : **விளையாட்டுத் துறை** : ஐபிஎம்மின் சொந்தக் கணினிகளிலும் மற்றும் அதன் ஒத்தியல்புக் கணினிகளிலும், ஜாய்ஸ்டிக் மற்றும் விளையாட்டுக் கைப்பிடிகள் அமைக்கப்பட்டுள்ள ஓர் உள்ளீட்டு/வெளியீட்டுத்துறை. பொதுவாக, ஏனைய உள்ளீட்டு/வெளியீட்டுத் துறைகளடங்கிய ஒற்றை விரிவாக்க அட்டையிலேயே விளையாட்டுத் துறையும் இணைக்கப்பட்டிருக்கும்.

**games,computer** : **கணினி விளையாட்டுகள்.**

**game software** : விளையாட்டு மென்பொருள்.

**games** : விளையாட்டுகள்.

**games theory** : விளையாட்டுத் தேற்றம்; விளையாட்டுக் கொள்கை; விளையாட்டுக் கோட்பாடு : நிகழ்தகவு (Probability) தொடர்பான கணிதவியலின் ஒரு பிரிவு. ஒரு விளையாட்டுத் தந்திரத்தைக் கொண்டிருக்கிற ஓர் எதிராளியை எதிர்கொள்வதற்குப் பெரிதும் உகந்த ஓர் தந்திரத்தைத் தேர்ந்தெடுப்பதற்கான கணிதச் செய்முறை. இந்தச் சொல்லை 1928இல் முதன்முதலாக ஜான் வான் நியூமென் பயன்படுத்தினார். கணினி வரைகலையில் கண்ணுக்கு ஒரே மாதிரியாகப் புலனாகக்கூடிய பல்வேறு செறிவுகளைத் தரக்கூடிய ஒரு சூத்திரம்.

**gamut** : **வண்ணக்களம்** : கணினி காட்சித் திரையில் காட்டக்கூடிய மொத்த வண்ணங்களின் வரிசை.

**gang punch** : **குழு துளை** : துளையிடும் அட்டைகளின் குழுவிலுள்ள அனைத்து அட்டைகளுக்கும் ஒரே மாதிரியான அல்லது நிலையான தகவலைத் துளையிடுவது.

**gantt chart** : **கேன்ட் வரைபடம்** : பணிகள் அல்லது நடவடிக்கைகளின் ஆரம்பம் மற்றும் முடிவு முனைகளைக் குறிப்பிட நேர அடிப்படையில் பட்டைக் கோடு அல்லது அம்புக்குறி மூலம் குறிப்பிடும் வரைபடம். ஒரு திட்டத்தின் குறிப்பிட்ட காலக்கெடு அல்லது சாதனைகளைக் குறிப்பிட பயன்படுத்தப்படுகிறது.

**gap** : **இடைவெளி** : கோப்பு இடைவெளிபோல் அல்லாது இரண்டு பதிவேடுகள் அல்லது தரவு தொகுதிகளுக்கு இடையிலுள்ள மின்காந்த நினைவக இடைவெளியைக் குறிப்பிடுவது.

**gap, interback** : **தொகுப்பு இடைவெளி.**

**gapless** : **இடைவெளியின்மை** : ஒரு தொடர்ச்சியான விசையோட்டத்தில் இடைத்தடை இடைவெளிகள் இல்லாமல் பதிவு செய்யக்கூடிய காந்த நாடா.

**garbage** : **குப்பை** : 1. தரவு நுழைவின் தவறுகள் அல்லது கணினி நிரலாக்கத்தொடரின் பிழைகள் அல்லது எந்திரக் கோளாறு போன்றவற்றின் காரணமாக கணினி நிரலாக்கத் தொடரின் மூலம் ஏற்படும் சரியல்லாத விடைகளைக் குறிப்பிடப் பயன்படுத்தப்படும் சொல். 2. இருப்பகத்திற்குக்

கொண்டு செல்லப்படும் தேவையற்றதும், பொருளற்றது மான தரவுகள்.

**garbage characters : குப்பை எழுத்துகள்**

**garbage collection : குப்பை சேர்த்தல்; குப்பை திரட்டல் :** ஒரு கோப்பிலிருந்து செயலற்ற இருப்பிடங்களைத் துடைத் தெடுப்பதற்கு இவ்வாறு கூறுவார்கள்.

**garbage in garbage out : குப்பையிடக் குப்பை வரும் :** மோசமான தகவலை உள்ளிடுவதையும், அதே போன்ற மோசமாக வெளிப்பாட்டை ஒரு முடிவாகப் பெறுவதையும் குறிக்கும் வழக்குச் சொல்.

**gas discharge : வாயு மின்னிறக்கம்.**

**gas discharge display : வாயு உமிழ் திரைக்காட்சி :** கையடக்கக் கணினிகளில் பயன்படுத்தப்படும் தட்டை வடிவத் திரைக் காட்சி. கிடைமட்ட, செங்குத்து மின்முனை தொகுதிகளுக்கு இடையே நியான் வாயு நிரப் பப்பட்டிருக்கும். ஒவ்வொரு தொகுதியிலும் ஒரு முனை மின்னூட்டம் பெறும்போது இரு முனைகளும் சந்திக்கும் இடத்தில் நியான் வாயு எரியும் நியான் விளக்கில் உள்ளது போல). இந்தச் சந்திப்புப் புள்ளி ஒரு படப்புள்ளி (Pixel) ஆகும்.

**gas display : வாயு காட்சி; வளிமத் திரைக்காட்சி :** மின் சாரம் செலுத்தப்படும்போது ஒளி வீசுகின்ற வகையில் நிரப்பப்பட்ட காட்சித்திரைப் பலகையில் உள் செயலற்ற வாயு. ஒளி வீசும் வாயு மூலம் தேவைப்படும் இடங்களில் டாட் மேட்ரிக்ஸ் போன்ற முறையில் எழுத்துகள், படங் கள் ஆகிய வடிவில் மின்சாரம் செலுத்துவதன் மூலம் புள்ளி களை உருவாக்க முடியும்.

**gate : வாயில்; கதவு :** 1. ஒரு வெளியீட்டைக் கட்டுப்படுத் தும் இரண்டு அல்லது மேற் பட்ட உள்ளீடுகள் கொண்ட அளவை மின்சுற்று. 2. ஆரம்பத் திலிருந்து வடிந்து போகும் வரை மின் ஓட்டத்தைக் கட்டுப் படுத்தும் புல விளைவு டிரான் சிஸ்டர்களைக் கட்டுப்படுத்தும் பொருள்.

**gate, AND : உம் வாயில்.**

**gate array : வாயில் வரிசை :** தொடர்பில்லாத தருக்கமுறைக் கூறுகளைக் கொண்டிருக்கிற சிப்புவகை. கூறுகளிடையிலான பாதைகளின் மேற்பரப்பு உலோகப் படுகையினை அடி

யொற்றிச் செல்கிற முடிவுறுத்தப்பட்ட, வழக்குறுத்தப்பட்ட சிப்பு.

**gated** : வாயில் வழியாக அனுப்புகை; நுழைத்தல்; உட்செலுத்தல் : *1.* ஒரு மின்னணு மின்சுற்றுத் தொகுதியில் ஒரு தருக்க முறை உறுப்பிலிருந்து அடுத்த உறுப்புக்கு ஒரு வாயில் (gate) வழியாகத் தரவு செலுத்தப்படுதல். *2.* ஒரு பிணையம் அல்லது சேவையிலுள்ள தரவு இன்னொரு பிணையம் அல்லது சேவைக்கு ஒரு நுழைவி (gateway) வழியாக அனுப்பப்படுதல். (எ-டு) பிட்நெட் (BITNET) போன்ற ஒரு பிணையத்திலுள்ள அஞ்சல் பட்டியல், இணையத்திலுள்ள ஒரு செய்திக்குழுவுக்கு அனுப்பி வைக்கப்படுதல்.

**gate, NAND** : இல் உம் வாயில்

**gate, NOR** : இல் அல்லது வாயில்.

**gate, OR** : அல்லது வாயில்.

**gateway** : நுழைவாயில்; நுழைவாயில் பாதை : இரண்டு வேறுபட்ட தகவல் தொடர்பு பிணையங்களை ஒன்றாகச் சேர்த்து இணைக்கும் கணினி. ஒரு உள்ளூர்ப் பிணைய கணினி அமைப்பு மற்றொரு உள்ளூர்ப் பிணைய கணினி அமைப்புடன் தகவல் தொடர்பு கொண்டு தரவுகளைப் பங்கிட்டுக் கொள்ளும் வகையில் இது பயன்படுத்தப்படுகிறது.

**gather** : வரிசை ஆணை : சில தரவு மொழிகளில் பதிவேடுகளை ஒரு வரிசையில் படிப்பதற்கான ஒரு நிரல்.

**gathering, data** : தரவு சேகரிப்பு.

**gather write** : விசை ஆணை எழுத்து : அடுத்தடுத்து, அமைந்திராத இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட நினைவக அமைவிடங்களிலிருந்து ஒரே எழுத்துச் செயல்பாடு மூலம் தரவு வெளிப்பாடு செய்தல்.

**gating circuit** : வாயிலமைக்கும் மின் சுற்று; வாயில் மின்சுற்று : தேர்ந்தெடுக்கும் பொத்தானாக இயங்கும் மின்சுற்று. குறிப்பிட்ட கால இடைவெளிகளின் போது அல்லது சமிக்கையின் அளவு குறிப்பிட்ட எல்லைகளுக்கிடையில் இருக்கும் போது மட்டும் மின்சாரம் கடத்தப்பட இந்த மின்சுற்று அனுமதிக்கும்.

**gauges** : அளவிடு கருவி.

**.ga.us** : .ஜிஏ.யுஎஸ் : அமெரிக்காவின் ஜார்ஜியா மாநிலத்தைச் சேர்ந்த இணைய தளத்தைக் குறிக்கும் புவிப்பிரிவுப் பெருங்களப் பெயர்.

**gauss** : காஸ் : காந்த ஆற்றலை அளவிடும் அலகு.

**gaussian distribution** : குறிப்பற்ற பகிர்மானம் : மணி வடிவ வளைகோட்டினை வரை கோடாக வரையப்படுகிற நிகழ்வுகளின் குறிப்பற்ற பகிர் மானம். இயல்பான அல்லது புள்ளிவிவர நிகழ்தகவு வெளிப் பாட்டினை குறிப்பிடுவதற்கு இது பயன்படுத்தப்படுகிறது.

**gaussian noise** : குறிப்பற்ற ஓசை : செய்தித்தொடர்புகளில், ஒரு கம்பியில் மின்விசை யோட்டத்தின் மூலம் குறிப்பின்றி உருவாக்கப்படும் இடையீடு. இதனை ''வெண்மை ஓசை'' (White noise) என்றும் கூறுவர்.

**.gb** : .ஜிபி : இங்கிலாந்து நாட் டைச் சேர்ந்த இணைய தளத் தைக் குறிக்கும் புவிப்பிரிவு பெருங்களப் பெயர்.

**GB** : ஜிபி : giga byte என்பதன் குறும்பெயர்.

**g.-commerce** : அரசு வாணிகம்.

**GCR** : ஜிசிஆர் : குழுக்குறி யீட்டுப் பதிவு.

**.gd** : .ஜிடி : கிரினேடா நாட் டைச் சேர்ந்த இணைய தளம் என்பதைக் குறிக்கும் புவிப் பிரிவுப் பெருங் களப் பெயர்.

**GE** : ஜிஈ : ஒரு செய்முறையில் ஒரு தொடர்முறை இயக்கி யாகப் பயன்படுத்தப்படுகிற ஒரு சுருக்கக் குறியீடு. இது, "___- ஐ விட அதிகம்'' அல்லது "___ க்குச் சமம்'' என்பதைக் குறிக்கும்.

**gear wheels** : பல்லிணைச் சக் கரங்கள்.

**geek** : கற்றுக்குட்டித்தனம் : நாகரிகமற்ற முறையில் கணினி யைப் பயன்படுத்துவது.

**GEM** : ஜிஇஎம் (வரைகலைச் சூழல் மேலாளர்) : Graphics Environment Manager என்பதன் முன்னெழுத்துச் சுருக்கம். ''இலக்கமுறை ஆராய்ச்சி'' எனப்படும் டிஜிட்டல் ரிசர்ச் அமைவனம், சொந்தக் கணினி களுக்காகத் (PC) தயாரித்துள்ள வரைகலைப் பயன்படுத்துவோர் இடைமுகப்பு. ''வெஞ்சுரா பப்ளிஷர்'' என்ற அமைவனம், இதன் ''இயக்க நேரப் பதிப்பு'' ஒன்றைத் தயாரித்துள்ளது.

**gemisch** : கெமிஷ்ச் : மருத்து வப் பதிவுப் பயன்பாடுகளுக் காக உருவாக்கப்பட்ட நிரலாக்கத் தொடர் மொழி.

**genapp** : ஜெனாப் : DCM தரவுப் பொருள்களுக்கான ஒரு பொறி யமைவு. இது நான்காம் தலை முறை பயன்பாட்டு மேம் பாட்டுப் பொறியமைவு ஆகும்.

**gender bender** : பாலின மாற்றி : ஒரு மின்னியல் இணைப்பியின்

பாலினத்தைத் தலைகீழாக மாற்றுகிற ஒரு சிறிய மின்னிய இணைப்பி. (ஆண் பெண்; பெண் ஆண்).

**gender changer** : இனம் மாற்றி : இரண்டு நுழையிணைப்பி (Male connector) அல்லது இரண்டு




இனம் மாற்றி

துளை இணைப்பி (Female connector) முனைகளை இணைத்து வைக்கப் பயன் படும் ஓர் இடையிணைப்பி.

**genera** : ஜெனரா : ஒரு மொழி உருவமைவிலிருந்து இன்னொரு மொழிக்குத் தரவுகளை மாற்றுவதற்குப் பயன்படுத்தப் படுகிற ஒரு தரவு மாற்று மென் பொருள்.

**general** : பொது.

**general field** : பொதுப்புலம்.

**general format** : பொது உருவமைவு : "லோட்டஸ் 1-2-3" என்ற விரிதாள் செயல் முறையை உருவாக்குவதற்கான உருவமைவு.

**generality** : பொதுவான தன்மை; பொதுமை : ஒரு பொதுவான தேவை உள்ள பல தரப்பட்ட பயனாளருக்குப் பயன்படும் வகையில் சிக்கல்களுக்குத் தீர்வளிக்கும் கணினி நிரலாக்கத் தொடர் பற்றியது. சம்பளப் பட்டி நிரலாக்கத்தொடர் இதற்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டு. கணக்கிடப்பட்ட நிகர சம்பளம் குறிப்பிட்ட அளவுக்கு மேலே போனால் இதில் ஒரு எச்சரிக்கை சமிக்கை வரும். குறைந்த பொதுத்தன்மை கொண்ட நிரலாக்கத்தொடர் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குட்பட் டிருக்கும். பொதுத் தன்மை உள்ள நிரலாக்கத்தொடர் ஒவ் வொரு தனிப்பட்ட பயனாள ரும் தனது எல்லை மதிப்பைக் குறிப்பிட வேண்டும் அல்லது எச்சரிக்கை தரும் முறையை மொத்தமாக நிறுத்திவிட வேண்டும்.

**generalization** : பொது வடிவ மாக்குதல்.

**generalized programme** : பொது மையாக்கிய செயல்முறை : ஒரு மாறுகிற சூழலுக்கு உதவிபுரிகிற

மென்பொருள். இது, மாறியல் செய்திக் குறிப்புகளைப்புகுத்த அனுமதிப்பதன் மூலம், இந்தச் செயல்முறை, பல்வேறு பயனாளருக்காக அல்லது சூழ்நிலைகளுக்காக ஒரு சிக்கலுக்குத் தீர்வு காண்கிறது.

**generalized routine : வாலாயமான பொதுச் செயல்முறை :** ஒரு குறிப்பிட்ட வகையான பயன்பாட்டுக்குள் பரந்த எல்லையுடைய பணிகளைச் செய்யுமாறு வடிவமைக்கப்பட்ட வழக்கச் செயல்முறை.

**general protection fault : பொதுப் பழுதுக் காப்பு :** *80386* அல்லது அதனினும் மேம்பட்ட செயலி, பாதுகாக்கப்பட்ட முறையில் இயங்கிக் கொண்டிருக்கும்போது (காட்டாக விண்டோஸ் *3.x/9x* இயக்கத்தில்), ஒரு பயன்பாட்டு நிரல், வரம்புமீறி நினைவகத்தை அணுக முற்படும்போது ஏற்படுகின்ற பிழைநிலை. தலைப் பெழுத்துக் குறும்பெயர் ஜிபீஎஃப் (GPF).

**general public license : பொது மக்கள் உரிமம்.**

**general - purpose (GP) : பொது நோக்கம்; பொதுநோக்கு :** மாற்றங்கள் செய்யத் தேவையின்றியே பலதரப்பட்ட பயன்பாடுகளுக்கு செயல்படக் கூடியது. Special Purpose மற்றும் dedicated என்பதற்கு எதிர்ச் சொல்.

**general - purpose computer : பொது நோக்கக் கணினி :** பல வகையான சிக்கல்களைத் தீர்க்கும் வகையில் உருவாக்கப்படும் கணினி. பெரும்பாலான இலக்கமுறை கணினிகள் இந்த வகையைச் சேர்ந்தவை. Special Purpose Computer என்பதற்கு எதிர்ச்சொல்.

**general purpose controller : பொதுப் பயன் கட்டுப்படுத்தி :** பல்வேறு பயன்களுக்காக வடிவமைக்கப்பட்ட ஒருவகைக் கட்டுப்படுத்தி.

**general purpose interface bus : பொதுப்பயன் இடைமுகப் பாட்டை :** கணினிகளுக்கும் தொழிலகத் தானியக்கமாக்கக் கருவிகளுக்கும் இடையே தரவு பரிமாறிக்கொள்வதற்கு உருவாக்கப்பட்ட ஒரு பாட்டை. இந்தப் பாட்டையின் மின் வரையறை ஐஇஇஇ தரக் கட்டுப்பாட்டில் உள்ளிணைக்கப்பட்டுள்ளது.

**general-purpose language : பொது நோக்க மொழி :** பல விதமான சிக்கல்களுக்கும் தீர்வு காண்பதற்காகப் பயன்படுத்தப்

படும் செயல் வரைவு படுத்தும் மொழி. FORTRAN, COBOL, BASIC, PASCAL முதலிய பொதுச் செயல்வரைவு மொழிகள் அனைத்தும் இதற்கு எடுத்துக் காட்டுகள். இது, ''தனி நோக்க மொழி'' (Special Purpose Language) என்பதிலிருந்து வேறுபட்டது.

**general purpose register (CPU) :** பொதுநோக்கப் பதிவேடு; பொது நோக்குப் பதிவகம் : பட்டிய லிடல், முகவரியிடல், கணித மற்றும் தருக்க முறை இயக்கங் களுக்குப் பயன்படும் மையச் செயலக அலகின் பதிவேடு.

**general section :** பொதுப் பிரிவு.

**generate :** உருவாக்கு; ஆக்கு : உருவாக்கி ஒன்றின் பயனுக்காக நிரலாக்கத் தொடரை அமைத் தல். அந்த நிரலாக்கத் தொடர் சில வரையறைகளுக்குட்பட்டு குறிப்பிட்ட குறியீட்டுத் தொகுதிகளிலிருந்து தேர்ந் தெடுத்து அமைக்கப்படும்.

**generation :** தலைமுறை : கணினி தொழில்நுட்ப முன் னேற்றத்தினைக் குறிப்பிடப் பயன்படுத்தப்படும் சொல். முதல் தலைமுறைக் கணினி களில் வெற்றிடக் குழாய்கள் பயன்படுத்தப்பட்டன. இரண் டாம் தலைமுறைக் கணினி களில் டிரான்சிஸ்டர்கள் பயன் படுத்தப்பட்டன. மூன்றாம் தலைமுறைக் கணினிகளில் ஒருங்கிணைந்த மின்சுற்று களும், நான்காம் தலைமுறைக் கணினிகளில் எல்எஸ்ஐ, விஎல் எஸ்ஐ மின்சுற்றுகளும் பயன் படுத்தப்படுகின்றன.

**generation computer, first :** முதல் தலைமுறைக் கணினி.

**generation computer, fourth :** நான்காம் தலைமுறைக் கணினி.

**generator :** ஆக்கி : குறிப்பிட்ட பணிகளைச் செய்து முடிக்க பல வழக்கச் செயல்முறைகளைக் கொண்டதாக அமைக்கப்படும் மென்பொருள் பொதி. இந்த வழக்கச் செயல்முறைகளில் உள் ளீட்டு அளவு கோலை ஏற்றுக் கொண்டு தேவைப்படும் அளவு கோலுக்கு ஏற்றவாறு மாற்றிக் கொடுக்கப்படும். அறிக்கை தயாரிப்பது போன்ற குறிப் பிட்ட தலைப்புகளில் பணி களைச் செய்து முடிக்க இது உத வும். சாதாரணமாக, பணியை வரையறுத்து அளவுகோல் தொகுதிகளை நிரப்புவது பயனா ளரின் பணியாக இருக்கும்.

**generator, clock signal :** கடிகார சமிக்கை ஆக்கி.

**generator, number :** எண் ஆக்கி.

**generator, report :** அறிக்கை ஆக்கி

**generic : பொதுவாக :** தொழில் பெயர் பற்றிய குறிப்பு இல்லாமல் அடுத்து வரப்போகும் பொருள் அல்லது சாதனம் பற்றியது.

**generic icon : பொதுமைச் சின்னம் :** மெக்கின்டோஷ் கணினித் திரையில் ஒரு கோப்பினை ஓர் ஆவணம் அல்லது ஒரு பயன்பாடாகக் காட்டும் ஒரு சின்னம். பொதுவாக, ஒரு பயன்பாட்டைச் சுட்டும் சின்னம் அப்பயன்பாட்டை உணர்த்துவதாகவும், ஓர் ஆவணத்தைச் சுட்டும் சின்னம் அவ்வாவணத்தைத் திறக்கும் பயன்பாட்டை உணர்த்துவதாகவுமே இருக்கும். பொதுமைச் சின்னம் தோன்றியுள்ளது எனில் மெக்கின்டோஷின் கண்டறி நிரல் குறிப்பிட்ட அப்பயன்பாடு பழுதடைந்து விட்டது என்பதை உணர்த்தும்.

**generic model : பொதுவினைப் படிமம்.**

**GEnie : ஜெனீ :** தகவல் பரிமாற்றத்துக்கான ஜெனரல் எலெக்ட்ரிக் பிணையம் என்று பொருள்படும் General Electric Network for Information Exchange என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஜெனரல் எலெக்ட்ரிக் இன்பர்மேஷன் சர்வீஸ் (General Electric Information Services) உருவாக்கிய ஒரு நிகழ்நிலை (online) தகவல் சேவை. வணிகத் தகவல் மேடை, வீட்டுக்கான பொருள் வாங்கல், செய்திகள் மற்றும் மின்னஞ்சல் பரிமாற்றம் போன்ற சேவைகளை ஜெனீ வழங்குகிறது.

**genlock (generator lock) : ஜென்லாக் (உருவாக்கிப்பூட்டு) :** ஒளிப்பேழைக் குறியீடுகளைக் கலவை செய்வதற்காக ஒருங்கிணைக்கிற சுற்றுநெறி. சொந்தக் கணினிகளில், ஓர் உருவாக்கிப் பூட்டுக் காட்சித் தகவமைவு, திரைக்காட்சியை NTSC ஒளிப் பேழைக் குறியீடுகளாக மாற்றுகிறது. இந்தக் குறியீட்டினை இது ஒரு புறநிலை ஒளிப்பேழை ஆதாரத்துடன் ஒருங்கிணைக்கிறது.

**geocoding : நிலக்குறியீடு; நிலப்படக் குறிமுறை :** ஒரு குறிப்பிட்ட நிலப் பகுதி தொடர்பான தரவுகளை வரைபடமுறையில் காட்சித் திரையில் வைப்பது.

**geographic information system : புவியியல் தகவல் பொறியமைவு :** புவியியல் தகவல்களைப் பகுப்பாய்வு செய்வதற்குப் பயன்படுத்தப்படும் மென்பொருள், வன்பொருள் இரண்டும் அடங்கிய ஒரு கணினிப் பொறியமைவு. எடுத்துக்காட்டு : இயற்கை வளப் பகிர்மானம் ; நிலப்பயன்பாட்டு முறைகள்;

மக்கள் தொகைப் பரவல் போக்குகள். ஒரு புவியியல் தகவல் பொறியமைவு (CIS) என்பது ஒரு நேரடிப் பொறியமைவாக இருக்க வேண்டிய அவசியமில்லை. இது பெரும்பாலும் புறநிலை மற்றும் துணைநிலை ஆதாரங்களிலிருந்து தகவல்களை எடுத்துக்கொள்கிறது. நாட்டுப்படம் வரைதல், கால வரிசைப் பகுப்பாய்வு, புள்ளியியல் தரவுகள் ஆகியவை இதில் அடங்கும்.

**geometry : வடிவக் கணிதவியல்; வடிவியல்** : பொருள்களின் வடிவுகள், திடப்பொருள்களின் அளவுகள், தரைப் பரப்புகள், கோடுகள், கோணங்கள் ஆகியவைகளைப்பற்றிக் கூறும் கணிதப்பிரிவு. கணினி வரைபடவியலில் ஒரு குறிப்பிட்ட பொருளின் உருவத்தை உருவாக்கும் வகையில் அமைக்கப்படும் கோடுகளின் அமைப்பு முறையைக் குறிப்பிடுகிறது.

**geometry model : வடிவியல் படிமம்.**

**GeoPort : நிலத்துறை** : மெக்கின்டோஷ் சென்ட்ரிஸ் 660ஏவி, குவாட்ரா 660ஏவி, குவாட்ரா 840 ஏவி அல்லது பவர்மேக் கணினிகளில் உள்ள அதிவேக நேரியல் (serial) உள்ளீட்டு வெளியீட்டுத் துறை. இந்தத் துறையில் எந்தவொரு மெக்கின்டோஷ் ஒத்தியல்பு நேரியல் சாதனத்தையும் இணைக்க முடியும். இத்துறைக்கென்றே உருவாக்கப்பட்ட வன்பொருள் அல்லது மென்பொருள் எனில், வினாடிக்கு 2 மெகாபிட் வரை தரவு பரிமாற்றம் செய்ய முடியும். குரல், தொலைநகல் கணினித் தரவு மற்றும் ஒளிக்காட்சி ஆகியவற்றைக் கையாள முடியும்.

**GEOS : ஜியாஸ்** : முன்னாளில் பெர்க்கிலி சாஃப்ட் ஒர்க்ஸ் என்றழைக்கப்பட்ட ஜியோ ஒர்க்ஸ் நிறுவனம் உருவாக்கிய இயக்க முறைமை (operating system) ஜியாஸ், ஒரு கச்சிதமான பொருள் நோக்கிலான வரைகலைப் பணிச் சூழல் வழங்கும் முறைமை ஆகும். ஆப்பிள், காமோடோர், எம்எஸ்-டாஸ் பணித் தளங்களில் இது செயல்படும்.

**geosynchronous : புவியியல் இணைவமைவு** : பூமியுடன் இணையமைவு செய்யப்பட்டிருத்தல். இது பூமத்திய ரேகையிலிருந்து 35,888 கி.மீ. உயரத்தில் நிலைநிறுத்தப்பட்டு, பூமியின் சுழற்சி வேகத்தில் பயணம் செய்கிற செய்தித் தொடர்புச் செயற்கைக் கோள்களைக் குறிக்கிறது. இந்தச் செயற்கைக்

கோள்கள் பூமியிலிருந்து பார்க்கும்போது நிலைபெற்றுள்ளனவாகத் தோன்றும்.

**geo works ensemble :** புவியியல் பணித் தொகுதி : ''ஜியோ ஒர்க்ஸ்'' எனப்படும் அமைவனம் DOS-களுக்காகத் தயாரித்துள்ள வரைபடச் செயற்பாட்டுச் சூழல். எடுத்துக்காட்டு : சொல் செயலி : வரைதல்; செய்தித் தொடர்புகள்; அட்டைக்கோப்பு; நாட்டுக்குறிப்புப் பயன்பாடுகள். இது முழுமையான DOS மேலாண்மையை அளிக்கிறது.

**germanium :** ஜெர்மானியம் : சிப்புகளை, உற்பத்தி செய்வதில் பயன்படுத்தப்படும் இரசாயன மூலகங்கள் (அணு எண் 32).

**GERT :** ஜெர்ட் : Graphical Evaluation and Review Technique என்பதன் குறும்பெயர். கட்டமைப்பு அணுகுமுறையைப் பயன்படுத்தும் கணினிகளை மதிப்பிட விதிமுறைகளை ஏற்படுத்தும் செயல்முறை.

**get :** எழு; பெறு : உள்ளீட்டுக் கோப்பிலிருந்து ஒரு பதிவேட்டைப் பெறுதல். ஒற்று என்பதற்கு மற்றொரு பெயர்.

**get external data :** புறத் தரவு பெறு.

**.gf :** .ஜிஎஃப் : ஓர் இணைய தளம் ஃபிரஞ்ச் கயானாவைச் சேர்ந்தது என்பதைச் சுட்டும் புவியியல் பெருங்களப் பெயர்.

**g flops :** ஜி ஃபிளாப்ஸ் : ஒரு நொடிக்கு ஒரு பில்லியன் பதின்மபுள்ளி இயக்கமுறைகள்.

**.gh :** .ஜிஹெச் : ஓர் இணைய தளம் கானா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் புவியியல் பெருங்களப் பெயர்.

**ghost :** நிழலுருவம் : *1.* ஒரு கண்காட்சியில் அல்லது அச்சுப் பதிப்பில் அடிப்படை உருக் காட்சிக்கு நெருக்கமாகத் தோன்றுகிற மங்கலான இரண்டாவது உருக்காட்சி. கண் காட்சியில், இது பாஸ்ஃபோர் காரணமாக உண்டாகிறது. அனுப்பீட்டில், இரண்டாம் நிலைக்குறியீடுகளின் விளைவாக ஏற்படுகிறது. அச்சுப் படியில், காகிதம் நகரும்போது அச்சுக் கூறுகள் குறிப்பதால் உண்டாகிறது. *2.* மங்கலான அச்செழுத்து முகப்பில், ஒரு பட்டியல் தெரிவினைக் காட்சியாகக் காட்டுதல். இது தற் சமயத்தில் தேர்ந்தெடுக்கத் தக்க தன்று என்பதைச் சுட்டிக் காட்டுகிறது.

**.gi :** .ஜிஐ : ஓர் இணைய தள முகவரி ஜிப்ரால்டர் நாட்டைச் சேர்ந்தது என்பதைச் சுட்டும் புவியியல் பெருங்களப் பெயர்.

**giant magneto resistive** : மீகாந்த எதிர்ப்பு; மிகப் பெரும் காந்த எதிர்ப்பு.

**gibberish** : பயனிலாத் தரவு; தேவையற்ற தரவு.

**GIF** : ஜிஐஎஃப் (வரைகலைப் பரிமாற்ற உருவமைவு) : ''கம்ப்யூசெர்வ்'' எனப்படும் அமைவனம் உருவாக்கிய ''ராஸ்டர்'' வரைகலைக் கோப்பு உருவமைவு. இது, 8 துண்மி வண்ணங்களை (256 வண்ணங் களை) கையாளக்கூடியது. ஏறத் தாழ 1.5:1 அழுத்த விகிதங்களை 2:1 விகித அளவுக்குப் பெறு வதற்கு இது LZW முறையைப் பயன்படுத்துகிறது.

**GIF animation** : ஜிஐஎஃப் அசை வூட்டம்.

**GIF animator** : ஜிஃப் அனிமேட் டர் : அசைவூட்ட ஜிஃப் படிமங் களை உருவாக்க உதவும் ஒரு மென்பொருள்.

**giga** : கிகா $10^9$ : 1 பில்லியன் அல்லது 10இன் 9 மடங்கு. ஜி என்று சுருக்கி அழைக்கப்படுகிறது.

**gigabit** : கிகா துண்மி : 1,000,000,000 துண்மிகள். இதனை Gb, Gbit, G-bit, என்றும் கூறுவர்.

**gigabit ethernet** : கிகாபிட் ஈதர் நெட்: பொதுவாக ஈதர்நெட் செந்தரம் 802.3ன் படி வினாடிக்கு 100 மெகாபிட் தரவுப் பரிமாற்றமே இயலும். ஆனால் ஐஇஇஇ-யின் 802.3≥ தர வரை யறைப்படி முன்னதைப்போல இரு மடங்கு வேகம், அதாவது வினாடிக்கு ஒரு கிகாபிட் (IGpps) வேகத்தில் தரவுப் பரிமாற்றம் நடைபெறும். வழக்கமான ஈதர் நெட் செந்தரம் 802.3, வினாடிக்கு 100 மீமிகு மெகா பிட் தரவுப் பரிமாற்றத்தை அளிக்கிறது.

**gigabits per second** : வினாடிக்கு ஒரு கிகாபிட் (ஜிபிபீஎஸ்) : பிணையத்தில் தரவுப் பரிமாற்ற வேகத்தைக் கணக்கிடும் அளவீடு. 1,07, 37, 41, 824 (230) துண்மிகளின் (பிட்டுகள்) மடங்காக அளவிடப்படுகிறது.

**gigabyte** : கிகா எட்டியல் : 1,000,000,000 எட்டியல்கள். இன்னும் துல்லியமாகக் கூறு வதாயின் 1,073,741,824 எட்டியல் கள். இதனை **gb** என்றும் கூறுவர்.

**gigaflops** : கிகாஃபிளாப்ஸ் (வினாடிக்கு கிகா மிதவைப் புள்ளிச் செயற்பாடுகள்) : ஒரு வினாடிக்கு 1,000,000,000 பதின் மப் புள்ளிச் செயற்பாடுகள்.

**gigahertz** : கிகா ஹெர்ட்ஸ் : ஒரு நொடியில் ஒரு பில்லியன் தடவைகள். GHz என்று சுருக்கி

அழைக்கப் படுகிறது. மின்காந்த அலைகளின் வரிசையை அளக்கப் பயன்படுத்தப்படும் அலகு.

**GIGO** : (குப்பையிடக் குப்பை வரும்) : Garbage In Garbage Out என்பதன் குறும்பெயர்.

**glare** : பிரதிபலிப்பு; கூசுதல்; கூசொளி: ஒரு காட்சித் திரையின் மேற்புரப்பிலிருந்து வரும் பிரதிபலிப்பு.

**glare filter** : கூசொளி வடிகட்டி : மேல் நிலை மற்றும் சுற்றுப்புற ஒளியின் கூசொளியைக் குறைப்பதற்கு CRT திரையின்மீது பொருத்தப்படும் ஒரு நுண்ணிய வலைப்பின்னல் திரை.

**glitch** : கோளாறு; தடுமாற்றம் : வன்பொருளில் ஏற்படும் தற்காலிக அல்லது எதேச்சையான கோளாறு பற்றி குறிப்பிடும் பிரபல சொல். கூடுதல் மின் சக்தி மூலமும் இது ஏற்படுவதுண்டு. sang அல்லது snarl என்றும் அழைக்கப்படுவதுண்டு. Error என்பதற்கு மாறானது.

**global** : உலகளாவிய; முழுதளாவிய; முழுமையான : 1: உள்ளூர் அளவில் என்று சொல்வதற்கு மாறாக மிகப் பரந்த எல்லை என்பதைக் குறிக்கும் பொதுச்சொல். 2. முதன்மை நிரலாக்கத் தொடர் மற்றும் அனைத்து துணைவாலாயங்களையும் அணுகக்கூடிய மாறிலியின் பெயர் பற்றியது.

**global character** : முழுதளாவிய எழுத்து; முழுமையான எழுத்துரு : தேடும் வாலாயத்தில் எந்த எழுத்தினையும் சார்ந்து நிற்கும் எழுத்து ஒரு குறிப்பிட்ட நீளமுள்ள எழுத்துச் சரங்களைத் தேட அதன் ஒருசில எழுத்துகளை மட்டும் பயன்படுத்தி உலகளாவிய எழுத்துகளை பிறவற்றுக்காக சார்ந்து நிற்றல். wild card என்றும் அழைக்கப்படும்.

**global group** : பரந்த குழு : விண்டோஸ் என்டி உயர்நிலை வழங்கன் அமைப்பில் பயனாளர் குழுவின் பெயர். ஒரு களப்பிரிவில் சிறப்புரிமை பெற்ற பயனாளர்களின் குழுவைக் குறிக்கிறது. இக்குழுவில் உள்ள பயனாளர்கள் தத்தம் களப்பிரிவில் மட்டுமின்றி அதற்கு வெளியிலுள்ள வளங்களையும், வழங்கன்களையும், பணி நிலையங்களையும் அணுகுவதற்கு அனுமதியும் உரிமையும் பெற்றவர்கள்.

**global operation** : முழுதளாவிய இயக்கம்; முழுமையான எழுத்துரு : சொல் செயலியில் ஒரு கோப்பு முழுவதும் செய்யப்படும் இயக்கம்.

**global positioning system** : உலக இருப்பிட விவரம்.

**global search and replace** : முழுதளாவிய தேடி மாற்று; முழுமையான தேடலும் மாற்றலும் : சொல் செயலியில் ஒரு ஆவணத்தில் எங்கிருந்தாலும் ஒரு சரத்தினை தேடி அதற்குப் பதிலாக வேறொரு சரத்தினைப் பொருத்துதல்.

**global system for mobile communications** : நடமாடும் தரவுத் தொடர்புக்கான உலகளாவிய முறைமை : பல்வேறு ஐரோப்பிய நாடுகள் உட்பட 60-க்கு மேற்பட்ட நாடுகளில் நடைமுறையிலுள்ள இலக்க முறை செல்பேசிக்கான தர வரையறை. தலைப்பெழுத்துச் சுருக்கமாக, ஜிஎஸ்எம் (GSM) என்று அழைக்கப்படுகிறன. ஜிஎஸ்எம் தரவுத் தொடர்பு அமைப்புகள் பரிசோதனை முறையில் அமெரிக்க நாட்டிலும் நிறுவப்பட்டுள்ளது.

**global varible** : முழுதளாவிய மாறி : எங்கே அல்லது எந்த நிரலாக்கத் தொடரில் பயன்படுத்தப்பட்டாலும் அதே மதிப்பைக் கொண்டிருக்கும் மாறியல் மதிப்புரு.

**globally unique identifier** : உலகளாவிய தனித்த முத்திரை : மைக்ரோ சாஃப்டின் காம் பொனன்ட் ஆப்ஜெக்ட் மாடல் (COM) தொழில் நுட்பத்தில், ஒரு பரந்த கணினிப் பிணையத்தில் பயன்படுத்தப்படும் ஒரு மென்பொருள் இனப் பொருளுக்கான இடைமுகத்தை அடையாளம் காண உதவும் 16-பிட் பெயர். பிணைய வழங்கன் கணினியிலுள்ள இடைமுக அட்டையின் பிணைய முகவரியையும், நேர முத்திரையையும் அப்பெயர் உள்ளடக்கியிருப்பதால், பிறவற்றிலிருந்து பிரித்துக் காணும் தனித்த முத்திரை கிடைக்கிறது. இத்தகைய முத்திரைகள் ஒரு பயன்பாட்டு நிரல் மூலம் உருவாக்கப்படுகின்றன.

**global universal identification** : பரந்த உலகளாவிய அடையாளம் : ஒரு குறிப்பிட்ட இனப் பொருளுக்கு ஒரேயொரு பெயரைச் சூட்டும் அடையாளத் திட்டம். வேறுவேறான பணித்தளங்களிலும் பயன்பாடுகளிலும் இப்பெயர் அடையாளங் காணப்படும்.

**glue chip** : ஒட்டுச் சிப்பு : ஒரு நுண்செயலியின் செயற்பணித் திறனை அதிகரிக்கிற துணைச் சிப்பு. எடுத்துக்காட்டு : I/O செய் செயலி அல்லது கூடுதல் நினைவகம்.

**glyph encoding scheme :** சிறப்க் குறியீட்டுத் திட்டம்.

**.gm : .ஜிஎம் :** ஓர் இணைய தள முகவரி காம்பியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் புவிப்பிரிவு பெருங்களப் பெயர்.

**.gn : .ஜிஎன் :** ஓர் இணைய தள முகவரி கினியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**gnomon : நோமோன் :** முப்பரிமாணப் பொருள் ஒன்றின் இரு பரிமாண தோற்றத்தை விளக்க உதவும் வகையில் போக்கு மற்றும் பரிமாணத்தைக் குறிப்பிடும் பொருள்.

**GNU : ஜிஎன்யு :** ஜிஎன்யு என்பது யூனிக்ஸ் இல்லை என்று பொருள்படும் GNU's Not Unix என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். யூனிக்ஸ் இயக்க முறைமையை அடிப்படையாகக் கொண்ட மென்பொருள்களின் தொகுப்பினை இவ்வாறு அழைப்பர். கட்டறு மென்பொருள் நிறுமம் (Free Software Foundation) இவற்றைப் பராமரித்து Free Software Foundation என்ற பெயரில் உள்ள Free என்ற சொல் இலவசம் என்ற பொருளில் பயன்படுத்தப்படவில்லை. சுதந்தரமான, கட்டுப்பாடற்ற என்ற பொருளிலேயே பயன்படுத்தப் படுகிறது. ஜிஎன்யு மென்பொருள்கள், ஜிஎன்யு பொது மக்கள் உரிமம் (General Public License) அடிப்படையில் வழங்கப்படுகின்றன. இதன்படி, ஜிஎன்யு மென்பொருள்களை அல்லது அதனடிப்படையில் அமைந்த மென்பொருள்களை எவரும் விலைக்கு விற்கக் கூடாது. அவற்றை வழங்குவதற்கும், பராமரிப்பதற்கும் ஆகும் செலவுகளை மட்டும் விலையாகப் பெறலாம். அது போலவே, அவற்றை வாங்கும் பயனாளர் அந்த மென்பொருள்களில் மாற்றங்கள் செய்யலாம். மாற்றம் செய்யப்பட்ட மென்பொருளை ஜிஎன்யு உரிம நிபந்தனைகளின்படியே மற்றவர்க்கு வழங்க வேண்டும்.

**goal seek : இலக்கு தேடு.** விரிதாள் பயன்பாடுகளிலுள்ள ஒரு பயன்கூறு.

**goal seeking analysis : நோக்கம் நாடும் பகுப்பாய்வு :** தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு மாறியல் மதிப்புரு ஓர் இலக்கு மதிப்பளவினை எட்டும்வரை தேர்ந்தெடுத்த மாறிலிகளில் திரும்பத் திரும்ப மாறுதல்கள் செய்தல்.

**go bottom : அடித்தளம் செல்க :** ஒரு தளத்தின் அடிப்பகுதிக்கு

பதிவேட்டுச் சுட்டுமுனையை நகர்த்துகிற தரவுத் தள நிரல்.

**go down :** நின்று போதல்.

**golfball printer :** குழிப்பந் தாட்டப் பந்து அச்சடிப்பி : அச்செழுத்து முகப்பு எழுத்துகள் ஒரு கோளவடிவ ஊர்தியில் வார்த்தெடுக்கப்படுகிற ஒரு திண்ணிய எழுத்து முகப்பு அச்சடிப்பி.

**good conductors :** நல்ல கடத்திகள்.

**good times virus :** குட் டைம்ஸ் நச்சு நிரல் : இணையத்தில் மின்னஞ்சல் மூலமாகவும், தொலைநகல் போன்ற ஏனைய தொலைத் தகவல் தொடர்பு மூலமாகவும் பரவும் ஒரு நச்சுநிரல். மடலின் பொருள் பகுதியில் Good Times என்று காணப்படும். இந்த மடலைத் திறந்து படிக்கும் பயனாளரின் கணினிக்குப் பாதிப்பு ஏற்படும். ஒரு மின் அஞ்சலைத் திறந்து படிப்பதனாலேயே ஒரு கணினியை நச்சு நிரல் தாக்கும் அபாயம் இல்லை என்ற போதிலும், ஒரு மின்னஞ்சலின் உடனிணைப்பாக (Attachment) அனுப்பப்படும் ஒரு கோப்பில் நச்சு நிரல் ஒட்டிக் கொண்டிருக்க முடியும். வேறெந்த பாதிப்பையும் ஏற்படுத்தாத நச்சுநிரல்கள் சில, நமக்குத் தெரியாமலே சங்கிலித் தொடராக அஞ்சல்களை அனுப்பச் செய்யும். தேவையின்றி இணைய அலைக் கற்றையையும், பயனாளரின் நேரத்தையும் வீணடிப்பது கூட நச்சுச் செயல்தானே! http://www.cert.org என்னும் இணைய தளத்தில் நச்சு நிரல்கள்பற்றி மேலும் விவரங்கள் அறியலாம்.

**goodwill :** நன்மதிப்பு.

**gopher :** கொறிப்பு அணுகுதல் : இணையத்தில் (Internet) பகிர்மானத் தரவுகளை அணுகுவதற்கான ஒரு வழிமுறை. இது "WEB"-க்கு முந்தியது.

**Gopher server :** கோஃபர் வழங்கன் : ஒரு கோஃபர் பயனாளருக்கு விவரப் பட்டிகளையும், கோப்புகளையும் வழங்குகின்ற ஒரு மென்பொருள்.

**Gopherspace :** கோஃபர்வெளி : இணையத்தின் தொடக்க கால கட்டங்களில் கோஃபர்வெளி (Gopherspace) என்பது செல்வாக்குப் பெற்று விளங்கியது. இணையத்திலுள்ள தரவு களஞ்சியங்களைப் பற்றிய விவரங்களைத் தொகுத்து தலைப்பு வாரியாக அட்டவணையிட்டு வழங்கன் கணினிகளில் சேமித்து வைத்திருப்பர். இந்தக் கோஃபர் கணினியை அணுகும்

ஒருவர் தமக்கு வேண்டிய தரவு இருக்கும் இடமறிந்து தேடிப் பெறமுடியும். வைய விரி வலையின் (www) வருகைக்குப் பின் கோஃபர் வெளி செல் வாக்கு இழந்து விட்டது.

**goppa codes : 'கோப்பா' குறியீடுகள் :** நீள்வரை பிழை திருத்தத் தொகுதிக் குறியீடு களின் ஒரு குடும்பம்.

**GOSIP : காஸிப் :** அரசு திறந்த நிலை முறைமைகளின் பிணைப்புகளுக்கான குறிப்புரை என்று பொருள்படும் Government Open Systems Interconnection Profile என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர் (GOSIP). அமெரிக்க அரசு 1990ஆம் ஆண்டு ஆகஸ்ட் 15-ல் ஓர் ஆணை பிறப்பித்தது. அரசுக் காக வாங்கப்படும் புதிய கணினிப் பிணையங்கள் ஐஎஸ்ஒ/ஒஎஸ்ஐ தரக்கட்டுப் பாடுள்ளவையாய் இருக்க வேண்டும் என்று அறிவிக்கப் பட்ட ஆணையையே காஸிப் குறிக்கிறது. ஆனால் இவ்வழி காட்டுநெறி, முழுமையாகப் பின்பற்றப்படவில்லை. எனவே போசிட் (POSIT) என்னும் புதிய நெறியை உருவாக்கியது.

**GoTo - less programming : 'கோட்டூ' இல்லாச் செயல் வரைவு :** 'கோட்டூ' (Goto) என்ற கட்டளைகளைப் பயன்படுத்தா மல் ஒரு செயல்முறையை எழுதுதல். இது, கட்டமைப்பு செய்த செயல்வரைவுகளில் ஒரு முக்கியமான விதி முறை யாகும். ''கோட்டூ'' கட்டளை யானது, திரும்பி வரும் என்ற உத்தரவாதமில்லாமல், செயல் முறையில் பல்வேறு பகுதி களைச் சுட்டிக் காட்டுகிறது.

**go top : உச்சிக்குச் செல்க :** பதி வேட்டுச் சுட்டுமுனையை ஒரு தரவுத் தளத்தின் முதல் ஏட்டுக்கு நகர்த்துகிற தரவுத் தள ஆணை.

**go to page : செல்லும் பக்கம்.**

**go to statement : கோ டூ கூற்று; 'அங்கு செல்' ஆணை :** ஒரு நிரலிலுள்ள ஆணைகளை கணினி வரிசையாக நிறை வேற்றுகிறது. அவ்வாறின்றி நிரல் இயக்கத்தின்போது ஒரு கட்டத்தில் நிரலின் ஒரு குறிப் பிட்ட வரிக்குத் தாவ வேண்டு மெனில் இக்கட்டளையைப் பயன்படுத்த வேண்டும். நுண் செயலி மொழியில் கிளைபிரி (Branch), தாவல் (Jump) ஆணை யாக இருந்தது. உயர்நிலை கணினி மொழிகளில் அங்கு செல் (GoTo) என்று மாறியது. பேசிக், பாஸ்கல், சி, சி++ போன்ற பல்வேறு மொழிகளில் இக்கட்டளை பயன்படுத்தப்படு கிறது. பொதுவாக, இக்

கட்டளையைப் பயன்படுத்த வேண்டாம் என்றே நிரலர்கள் அறிவுறுத்தப்படுகின்றனர். காரணம், நிரலின் தருக்கமுறை ஓட்டத்தைப் புரிந்துகொள்ள நிரலருக்கும் கடினம்; மொழி மாற்றி (Compiler)யும் சிக்கலான வேலையைச் செய்யவேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது.

**gouraud shading** : 'கூராட்' நிழலடிப்பு : கணினி வரைகலையில், ஹென்றி கூராட் உருவாக்கிய ஓர் உத்தி. இது, பலகோண முகப்புகளில் வண்ணமும், ஒளிர்வும் கொண்ட ஒரு நிழலுரு மேற்பரப்பினை கணினியில் உருவாக்குகிறது.

**.gov** : .கவ்; .ஜிஓவி : அரசுத் துறையின் இணைய தளங்களை அடையாளம் காணப் பயன்படுத்தப்படும் பெருங்களப் பெயர். இணையக் களப்பெயர் முறைமையில் இடம் பெற்றுள்ள ஏழு முதன்மைக் களப் பெயர்களில் (.com, .org, .net, .edu, .mil,.int, .gov) ஒன்று. அமெரிக்காவில் இராணுவம் அல்லாத கூட்டரசின் முகமைகள் இப்பெயரைப் பயன்படுத்திக் கொள்ளலாம். அமெரிக்காவின் மாநில அரசுகள் states.us என்னும் மேல்நிலைக் களப் பெயரைப் பயன்படுத்திக் கொள்ளலாம். us என்ற சொல்லுக்கு முன் அந்தந்த மாநிலத்தைக் குறிக்கும் ஈரெழுத்துச் சொல்லையும் சேர்த்துக் கொள்ளலாம்.

**.gov.ca** : .ஜிஓவி.சிஏ : ஓர் இணைய தள முகவரி. கனடா நாட்டு அரசாங்கத்துக்குரியது என்பதைக் குறிக்கும் பெருங் களப்பெயர்.

**GP** : ஜி.பி : General - Purpose என்பதன் குறும்பெயர். Graphic Programming என்பதன் குறும் பெயராகவும் கொள்ளலாம்.

**GPS** : ஜிபிஎஸ் : General Problem Solver என்பதன் சுருக்கம். அறிவுத்துறையில் இருந்து தீர்வு காணும் முறைகளைப் பிரித்து பொதுப் பிரச்சினைகளைத் தீர்க்கும் முதல் நிரலாக்கத் தொடர். General Purpose Service என்பதன் குறும்பெயராகவும் கொள்ளலாம்.

**GPSS** : ஜிபிஎஸ்எஸ் : General Purpose System Simulation என்பதன் குறும்பெயர். கணினி அமைப்புகளை உருவாக்கப் பயன்படும் பிரச்சினை சார்ந்த மொழி.

**.gq** : ஜிகியூ : ஓர் இணைய தள முகவரி பூமத்திய கினியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.gr : .ஜிஆர் :** ஓர் இணைய தள முகவரி கிரீஸ் நாட்டைச் சேர்ந் தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**grabber : பறிப்பி; சுரண்டி; ஈர்ப்பி; கவர்வி :** சோதனைக் கருவி கம்பியின் இறுதியில் உள்ள இணைப்புப் பொருள் ஒருங்கிணைந்த மின்சுற்று இணைப்பு டிரான்சிஸ்டர் மற்றும் பிறவற்றின் இணைப் புடன் இணைக்கப்பட்டுள்ள அளவைக் கருவியுடன் இணைக்குமாறு வடிவமைக்கப் பட்ட ஸ்பிரிங் மூலம் இயக்கப் படும் கொக்கி மற்றும் இடுக்கி யைக் கொண்டது.

**grabber hand : சுரண்டு கரம் :** கை வடிவிலுள்ள சுட்டுமுனை. இது பொருள்களைச் "சுரண்டி" ஒரு திரையில் மறு இட அமைவு செய்வதற்கு ஒரு நுண்பொறி மூலம் நகர்த்தப்படுகிறது.

**graceful degradation : கௌரவ மான கீழிறக்கம்; படிப்படியாகச் செயல்திறன் இழத்தல் :** தோல்வி ஏற்படும்போது குரல் நிலை போன்ற குறைவான இயக்கம் மட்டும் தொடரும் வண்ணம் செய்யும் முறை.

**graceful exit : நேர்த்தியான வெளியேற்றம் :** கணினியின் ஒரு செயலாக்கத்தை பிழை நிகழும் வேளையில்கூட முறைப்படி முடித்து வைக்கும் வழிமுறை. செயலாக்கத்தின் இடையில் பிழையேற்படும் போது, கணினியின் கட்டுப் பாட்டை இயக்கமுறை எடுத்துக் கொள்ளும். அல்லது இச் செய லாக்கத்தைத் தொடக்கி வைத்த முந்தைய செயலாக்கம் எடுத்துக் கொண்டுவிடும். கணினி, செய் வதறியாது விக்கித்து நின்று விடும் நிலை தவிர்க்கப்படும்.

**grade : தரம்; தரப்படி :** குரல் தரம் போன்று குறிப்பிட்ட வழித்தடத்தில் அனுப்புவதற் காக கிடைக்கும் எல்லை அல் லது அகலம் அல்லது அலை வீச்சு பற்றியது.

**grade of service : சேவைத் தரம் :** பொதுத் தொலைபேசிக் கட்ட மைப்பு போன்ற ஒரு தரவுத் தொடர்புப் பங்கீட்டுப் பிணையத் தில் பயனாளர் ஒருவருக்கு, அனைத்துத் தடங்களும் பயன் பாட்டில் உள்ளன; சிறிது நேரங் கழித்துத் தொடர்பு கொள்ளவும், என்ற செய்தி கிடைப்பதற்குரிய வாய்ப்புநிலை. ஒரு பிணையத் தின், தரவு போக்குவரத்தைக் கையாளும் திறனை மதிப்பிட, சேவைத்தர அளவீட்டு முறை பயன்படுகிறது. ஒரு குறிப் பிட்ட காலநேரத்துக்கு இத்

திறன் மதிப்பிடப்படுகிறது. சேவைத்தரம் 0.002 என மதிப்பிடப்பட்டால் ஒரு பயனாளரின் அழைப்பு மறுமுனை சென்றடைய அந்தக் குறிப்பிட்ட கால நேரத்தில் (காலை, மாலை, இரவு) 99.8 விழுக்காடு வாய்ப்புள்ளது என்று பொருள்.

**grade sheet** : மதிப்பெண் சான்றிதழ்.

**gradient** : படித்தரம்/படித்திறன்.

**graf port** : வரைவுத் துறை : ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினிகளில் வரைகலைப் பணிச் சூழலை வரையறுப்பதற்கான ஒரு கட்டமைவு. திரையில் தோன்றும் ஒவ்வொரு சாளரத்திலும் ஒரு வரைவுத்துறை இருக்கும். திரையில் தோன்றும் வரைகலைப் படங்களை பின்னணியிலுள்ள சாளரத்திற்கோ அல்லது ஒரு கோப்பிலோ சேமிக்க இந்த வரைவுத் துறை பயன்படுகிறது.

**graftal** : வரைவுக்கூறு; வரைவுரு : வரைவியல் வடிவங்களின் தொகுதி. மெய்போலத் தோற்றமளிக்கும் சிறப்பு விளைவுக் காட்சிகளை உருவாக்கும் தொழில் பிரிவில், மரங்கள், செடிகொடிகள் போன்ற உருத் தோற்றங்களை வடிவமைக்க வரைவுருக்கள் பயன்படுகின்றன. துணுக்குருக்களை (Fractals) ஒத்திந்தபோதிலும் வரைவுருக்களை இணைத்து உருத் தோற்றங்களை வடிவமைத்தல் மிகவும் எளிது.

**grammatic** : இலக்கணச் சரிபார்ப்புச் செயல்முறை : டாஸ், விண்டோஸ், மெக்கின்டோஷ், யூனிக்ஸ் போன்ற வற்றுக்கு "Reference Software" என்ற அமைவனம் தயாரித்துள்ள "Grammatic" என்ற இலக்கணச் சரிபார்ப்பு செயல்முறை.

**grammatical error** : இலக்கணப் பிழை : ஒரு நிரலாக்கத்தொடர் மொழியின் அமைப்பு அல்லது விதிகள் பின்பற்றப்படாததன் விளைவாக ஏற்படும் பிழை. Syntax error என்றும் அழைக்கப்படுகிறது.

**grammatical mistake** : இலக்கணத் தவறு.

**grammer** : இலக்கணம்; வரையறுக்கப்பட்ட விதிமுறைத் தொகுப்பு : ஒரு மொழியின் பல்வேறு கூறுகளை எவ்வாறு இணைக்கலாம் என்பதற்கான விதிகள்.

**grammer checker** : இலக்கணச் சரிபார்ப்பு : ஒரு வாக்கியத்தின் இலக்கணத்தைச் சரிபார்க்கிற மென்பொருள். இது முடிவுறாத வாக்கியங்களையும், தவறான

சொற்றொடர்களையும், பிழையான நிறுத்தக்குறிகளையும், மிகு சொல்லாட்சியினையும், இலக்கணப் பிழைகளையும் சரிபார்த்து எடுத்துரைக்கிறது.

**grandfather file** : பாட்டன் கோப்பு; தாத்தா கோப்பு.

**grand total** : இறுதிக் கூட்டுத் தொகை.

**granularity** : சிறுமணிச் செறிவு : ஒரு பொறியமைவின் அகவரிச் செறிவு- சிறுமணிச் செறிவு எந்த அளவுக்கு அதிகமாக இருக்கிறதோ அந்த அளவுக்கு அந்தப் பொறியமைவு நெகிழ் திறனுடையதாக இருக்கும்.

**graph** : வரைபடம் : 1. இரண்டு அல்லது மேற்பட்ட மாறும் அளவுகளின் உறவினைக் காட்டும் படம். ஒரு கணித வரைபடத்தில் பொதுவாக இரண்டு அச்சுகளை வைத்து ஒரு வளைவுகோடு விவரங்களுக்கு கேற்ப வரையப்படும். 2. Chart என்றும் சொல்லப்படும்.

**graph chart** : வரைவு நிரல்படம்.

**graph theory** : வரைவியல் கோட்பாடு.

**graphic accelerator** : வரைகலை

**graphic adapter** : வரைகலை ஏற்பி; வரைகலைத் தகவமைவி : திரையில் வரைகலைகளைக் காட்சியாகக் காட்டுவதற்கு உதவுகிற கணினி வன்பொருள் அமைப்பி.

**graphical design** : வரைகலை வடிவமைப்பு.

**graphical divice interface** : வரைகலைச் சாதன இடைமுகம்.

**Graphical Kernel System** : வரைகலை கருவக முறைமை : வரைகலை உருவங்களை வடிவமைக்க, கையாள, சேமிக்க, பரிமாறிக்கொள்ள, அன்சி (ANSI) மற்றும் ஐஎஸ்ஒ (ISO) அமைப்புகள் ஏற்றுக் கொண்டுள்ள கணினி வரைகலைத் தர வரையறை. வன் பொருள் நிலையில் இவை செயல்படுத்தப்படுவதில்லை. பயன்பாட்டுத் தொகுப்பு நிலையிலேயே கடைப்பிடிக்கப்படுகின்றன. ஒரு தனிப்பட்ட சாதனத்துக்கென இல்லாமல், விசைப் பலகை, சுட்டி, காட்சித் திரை இவையிணைந்த பணி நிலையங்களுக்கானவை. 1978 ஆம் ஆண்டு இருபரிமாண வரைகலைக்காகவே இம் முறைமை உருவாக்கப்பட்டது. பின்னாளில் ஜிகேஎஸ்-3டி (GKS-3D) என்ற பெயரில் முப்பரி மாண வரைகலைக்கும் விரிவாக்கப்பட்டது.

**graphical output** : வரைபட வெளியீடு.

**graphical terminal** : வரைகலை முனையம்; வரைகலை முறை முகப்பு : ஓவியம் மற்றும் எழுத்துகள் வடிவ தரவுவைக் காட்டும் வண்ணம் திரை அமைக்கப்பட்டுள்ள (வீடியோ) காட்சித் திரை முகப்பு.

**graphical user interface (GUI)** : வரைகலை பயன்படுத்துவோர் இடைமுகப்பு : வாசகத்துடன் அல்லாமல் உருவங்களுடனும் ஒரு நுண்பொறியுடனும் பயனாளர் பணிபுரிவதற்கு உதவுகிற ஒரு வசதி. இதனால், விசைப் பலகையை மிகக்குறைந்த அளவில் பயன்படுத்த முடிகிறது. சிலசமயம் இது WIMP (Window, Icon, Mouse, Procedure) சூழல் என்றும் அழைக்கப்படுகிறது. இது, பயனாளருக்கு ஒரு பழக்கப்பட்ட திரைக்காட்சியையும், நிலையான செயற்பாட்டு நடைமுறையினையும் அளிக்கிறது.

**graphic card** : வரைகலை அட்டை : 'ஒளிப்பேழைக் காட்சிப் பேழை' என்பதும் இதுவும் ஒன்றே.

**graphic character** : வரைகலை எழுத்து : இலக்கங்கள், எழுத்துகள் உள்ளடங்கலாக அச்சிடத்தக்க குறியீடுகள்.

**graphic controller** : வரைகலைக் கட்டுப்படுத்தி : வரைகலைகளையும், வாசகங்களையும் உருவாக்கப் பயன்படுத்தப்படும் சாதனம். இதனை வரைகலை எந்திரம் என்றும் கூறுவர். ஒரு VGA அட்டை, வரைகலை எந்திரம் ஆகும். ஆனால், அது வரைகலைத் தகவமைவி அல்லது ஏற்பி என்று அழைக்கப்படுகிறது. MDA, CGA, EGA, VGA, MCGA, 8514/A ஆகியவை செந்திறமான IBM வரைகலை அட்டைகளாகும்.

**graphic data structure** : வரைகலை முறை தரவு அமைப்பு; வரைவியல் தரவுக் கட்டமைப்பு : வரைபட முறை தரவுகளைக் குறிப்பிட இலக்க முறை தரவுகளை தருக்கமுறையில் வரிசைப்படுத்தி வரைபடமுறை காட்சிக்காக அளித்தல்.

**graphic digitizer** : வரைகலை முறை இலக்கமாக்கி : கணினியில் பயன்படுத்துவதற்காக வரைபட முறை மற்றும் ஓவிய முறை தரவுகளை இருமை உள்ளீடுகளாக மாற்றித் தரும் உள்ளீட்டுச் சாதனம்.

**graphic display mode** : வரைகலைக் காட்சி முறைமை; வரைவியல் காட்சி முறைமை : சிறப்பு வரைபடமுறை திரையில் வரைபட வடிவங்களை அச்சிட

கணினியை அனுமதிக்கும் இயக்கமுறை.

**graphic display resolution :** வரைகலை முறை காட்சித் தெளிவு; வரைவியல் காட்சிப் பிரிதிறன் : ஒரு காட்சித் திரையில் ஒரு வரியில் எத்தனை எழுத்துகளையும் கோடுகளையும் காட்ட முடியும் என்பது.

**graphic display terminal :** வரைகலை முறை காட்சி முனையம்; வரைவியல் காட்சி முனையம் : திரையில் தகவலைக் காட்டும் கணினி முனையம். காத்தோட் கதிர்க் குழாய், தொலைக்காட்சி முனையம் அல்லது காட்சி முனையம் போன்றவை இதில் அடங்கும்.

**graphic display unit :** வரைகலைக் காட்சி அலகு : வரைகலை உருக்காட்சிகளைத் திரையில் காட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் காட்சிச் சாதனம்.

**graphic field :** வரைகலைப் புலம்

**graphic input device :** வரைகலை முறை உள்ளீட்டுச் சாதனம் : உருவங்களை சேமித்து, மறு உருக்கொடுத்து, காட்சிக்கு வைத்து, மாற்றும் வசதி அளித்துக் கையாள்வதற்குக் கணினிக்கு புள்ளிகளை அளிக்கக்கூடிய இலக்கமாக்கி போன்ற சாதனம்.

**graphic limits :** வரைகலை முறை எல்லைகள் : இலக்கமுறை வரைவி போன்ற வரைபட முறை சாதனத்தின் பிளாட்டிங் பகுதி. அதன் எந்திரஎல்லைகள்-உருளையின் அளவு, பிளேட்டர் போன்றவை வரையறுக்கப்படும்.

**graphic object :** வரைகலைப் பொருள்.

**graphic output :** வரைகலை முறை வெளியீடு : கணினி உருவாக்கும் வெளியீடு. புலனாகும் காட்சித்திரை அச்சுவெளியீடுகள் அல்லது பிளாட்டுகள் போன்ற வடிவத்தில் வெளியிடப்படும்.

**graphic output device :** வரைகலை முறை வெளியீட்டுச் சாதனம் : ஒரு உருவத்தைக் காட்டுவதற்கோ, அல்லது பதிவு செய்வதற்கோ பயன்படுத்தப்படும் சாதனம். மென்பிரதிக்கு காட்சித்திரை ஒரு வெளியீட்டுச் சாதனம். வன்பிரதிக்கு வெளியீட்டுச் சாதனங்கள் காகிதம், திரைப்படம் அல்லது டிரான்ஸ்பரன்சிகள் வடிவில் உருவத்தை வெளியிடுகின்றன.

**graphic package :** வரைகலைத் தொகுப்பு: எண்மானத் தரவுகளைக் காட்சி உருவங்களாக மாற்றக்கூடிய மென்பொருள்.

**graphic primitive :** வரைகலை மூலம் : புள்ளி, வரி, வில்

வளைவு போன்ற அடிப்படை யான வரைகலைக் கட்டுமானத் தொகுதி. ஒரு திண்ம உரு மாதிரிப் பொறியமைவில், நீள் உருளை, கன சதுரம், கோளம் ஆகியவை இதற்கு எடுத்துக் காட்டுகள்.

**graphics : வரைகலை முறை யியல்; வரைவு முறைகள்; வரை கலையியல்; வரைவியல் :** திரை, காகிதம் அல்லது திரைப்படங் களில் வெளியிடப்படும் கணினி உற்பத்தி செய்யும் எந்த ஒரு படத்தையும் இவ்வாறு கூறப் படும். சாதாரண கோடு அல்லது பட்டைக் கோடுகள் முதல் வண்ணமிகு, விளக்கப்படங்கள் எனப்படும்.

**graphics, computer : கணினி வரைவியல்; கணினி வரைகலை.**

**Graphics Controller : வரை கலைக் கட்டுப்படுத்தி :** திரைக் காட்சிக்கான தேக்கு நினை வகத்தைக் கணினி அணுகு வதற்கு அனுமதிக்கின்ற இஜிஏ, விஜிஏ ஒளிக் காட்சித் தகவியின் ஒரு பகுதி.

**graphics coprocessor : வரை கலைத் துணைச் செயலி :** சில ஒளிக்காட்சி தகவிகளில் இணைக்கப்பட்டிருக்கும் தனிச் சிறப்பான நுண்செயலி. மையச் செயலகத்தின் பிற பணிக்கான ஆணைகளுக்கு ஏற்ப, கோடுகள் நிரப்பிய பரப்புகளால் ஆன வரைகலை உருவங்களை இச் செயலி உருவாக்கும்.

**graphics data structure : வரைகலைத் தரவுக் கட்டமைவு :** ஒரு வரைகலைப் படிமத்தின் ஒன்று அல்லது மேற்பட்ட கூறுகளைச் சுட்டுவதற்கென்றே தனிச்சிறப்பாய் வடிவமைக்கப் பட்ட ஒரு தரவுக் கட்டமைவு.

**graphics display : வரைகலை முறை காட்சி :** ஒரு கணினி அமைப்பிலிருந்து எடுத்து வெளியீட்டுச் சாதனத்தால் காட்டப்படும் வரைபட முறை தரவுகள்.

**graphics engine : வரைகலை எந்திரம் :** முதன்மை மையச் செயலகத்தை (CPU) நம்பி யிராமல் சுதந்திரமாக வரை கலைச் செயல் வரைவுகளை செய்கிற தனிவகை வன் பொருள். இது பல்வேறு செயற் பணிகளில் எதனையும் செய் யும். எடுத்துக்காட்டு : வரை கலை வடிவகணித உருவாக்கம்; புள்ளிக்குறிப்பெருக்கம்; நினை வகத்திலிருந்து காட்சிக்கு விரை வாகத் தரவுகளை மாற்றுதல்.

**graphics file : வரைகலைக் கோப்பு :** வரைகலைத் தரவு களை மட்டுமே கொண்டிருக்

கிற கோப்பு. இது வாசகக் கோப்பு, ஈரிலக்கக் கோப்பு ஆகியவற்றிலிருந்து வேறு பட்டது.

**graphics input hardware : வரைகலை முறை உள்ளீடு வன்பொருள்** : வரைகலைமுறை தரவுவை கணினியில் கொடுக்கப்படும் வெளிப்புறச் சாதனங்கள், வரைபடமுறை வரைவு இலக்கமாக்கி (Tablet) , சுட்டுக்கருவி மற்றும் ஒளிப் பேனா போன்றவற்றை இந்த வகையில் சேர்க்கலாம்.

**graphics language : வரைகலை மொழி** : ஓர் உயர்நிலை மொழியில் ஒரு வரைகலை உருக்காட்சியை ஒரு செயல்வரைவாளர் தெரிவிப்பதற்கு அனுமதிக்கிற கட்டளைகளின் தொகுதி. இந்த மொழி, மென்பொருள் அல்லது தனிவகை வன்பொருள் மூலம் வரைகலை உருக்காட்சிகளாக மாற்றப்படுகிறது.

**graphics mode : வரைகலை முறை** : வாசகங்களுடன் சேர்த்து உருக்காட்சிகளையும் பயன்பாடுகள் காட்சியாகக் காட்டுவதற்கு உதவுகிற முறை. பல கணிப் பயன்பாடுகள் எப்போதும் வரைகலை முறையில் இயங்குகின்றன. பலகணியில்லாப் பயன்பாடுகள் வரைகலை முறையில் அல்லது வாசக முறையில் இயங்க வல்லவை.

**graphics output hardware : வரைகலை முறை வெளியீடு வன்பொருள்** : வரைகலை முறையில் கணினியில் காட்ட உதவும் வெளிப்புறப் பொருள்கள் வரைபடமுறை திரை, இலக்கமுறை வரைவி, அல்லது வரைகலைமுறை அச்சுப்பொறி போன்றவற்றை இந்த வகையில் சேர்க்கலாம்.

**graphics pen and tablet : வரைகலைப் பேனா மற்றும் பட்டயத் தகடு** : அழுத்த உணர்வுடைய பட்டயத்தகட்டில் வைக்கப்படும் பொருளைப் படம் வரைவதற்கு அல்லது படியெடுப்பதற்கு உதவுகிற ஒரு சாதனம். இதனை இது இலக்கமாக்கி, கணினி தனது காட்சித் திரையில் காட்டுவதற்கு உதவுகிறது.

**graphics port : வரைகலை வாயில்** : 1. ஒரு வரைகலைச் செய்தி அறிவிப்பியை இணைப்பதற்காகக் கணினியிலுள்ள குதை குழி.

**graphics printer : வரைகலை முறை அச்சுப்பொறி** : சொற்கள், படங்கள், வரைபடமுறைகளை உருவாக்கக் கூடிய வெளியீட்டுச் சாதனம்.

**graphics programme : வரைகலை முறை நிர லாக்கத்தொடர் :** வரை கலை முறைகளை உற் பத்தி செய்ய கணினியை அனுமதிக்கும் கணினி நிரலாக்கத் தொடர்.

**graphics resolution : வரைகலைத் துல்லியம்; வரைபட முறை பிரி திறன் :** வரைபட முறை யியல் படங்கள் வெளி யீட்டு வன்பொருள் எத்தகைய துல்லியமாக வெளியிடுகிறது என்பதற்கான அளவுகோல். அதிக துல்லியம் உள்ள படங் களில் மிகவும் தெளிவாகப் பார்க்கலாம். குறைந்த துல் லியம் உள்ள படங்களைவிட நன்றாகக் காட்சி தரும்.

**graphics screen : வரைகலை முறை திரை :** வரைகலை முறை படங்களைக் காட்டும் திரை.

**graphics spread sheet : வரை கலை விரிதாள்.**

**graphics & sound : வரைகலை மற்றும் ஒலி.**

**graphics tablet : வரைகலை முறை தகவல் இலக்கமாதல் :** வரைகலைமுறை மற்றும் படவடிவ தகவல்களை கணினி பயன்படுத்துவதற்காக இருமை உள்ளீடுகளாக மாற்றும் உள்ளீட்டுச் சாதனம். பொருளின் உருவங்களை கணினியில் சேமிக்கக்கூடிய தரவாக மாற்றித் தருவதற்கு திறமையான முறை. பேனா போன்ற எழுத்தாணி மற்றும் பட்டையான வரை விலக்கக் கருவியையும், பயன் படுத்தி வரைபடமுறை உள்ளீடு செய்யப்படுகிறது.



வரைகலை முறை தகவல் இலக்கமாதல்

**graphics terminal : வரைகலை முனையம்; வரைவியல் முனை யம் :** படங்கள் மற்றும் ஓவியங் களைக் காட்டுகின்ற வெளி யீட்டுச் சாதனம்.

**graphics view : வரைகலை காட்சி.**

**graphic workstation : வரை கலைப் பணிநிலையம்; வரை முறைப் பணிப்பொறி :** அது உண்மையில் கருவிகளின் ஒரு

தொகுதியைக் குறிக்கும். இது, ஒருவர் வரைகலைப் பணி களைச் செய்வதற்கு வசதி செய்து கொடுப்பதுடன், வரைகலைப் பயனாளருக்கான சூழலையும் உருவாக்கிக் கொடுக்கிறது.

**graph theory :** வரைகலை முறை கொள்கை : இடவியலில் ஒரு பகுதியும், இணைப்பு ஆய்வில் ஒரு பகுதியுமாகச் சேர்ந்து உரு வான கணிதத் துறையின் ஒரு பிரிவு. மின்சார கட்டமைப்புக் கொள்கை, இயக்கங்கள், ஆராய்ச்சி, புள்ளி விவரம், எந்திரவியல், சமூகவியல் மற்றும் நடத்தை யியல் ஆய்வு ஆகிய துறைகளில் பயன்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

**grass pay :** மொத்த ஊதியம்.

**great renaming :** மிகப்பெரும் பெயர் மாற்றம் : இணையத்தில் இப்போது நடைமுறையில் இருக்கும் செய்திக் குழுக்களின் பெயரமைப்புக்கு மாறிய நிகழ்ச்சியைக் குறிக்கிறது. முன்பெல்லாம், இணையம் சார்ந்த புறச் செய்திக் குழுவின் பெயர்கள் net, என்றெல்லாம் இருந்தன. எடுத்துக்காட்டாக நிரல்களின் மூல வரைவுகளைக் கொண்டுள்ள செய்திக்குழு net.sources என்று பெயர் பெற்றிருந்தன. 1985ஆம் ஆண்டு மிகப்பெரும் பெயர்மாற்றம் அறிமுகப்படுத்தப்பட்டது. அதன்படி, net.sources என்ற பெயர் comp.sources.misc என்று மாற்றம் பெற்றது. இதுபோல, செய்திக் குழுவின் அனைத்துப் பெயர்களும் புதிய பெய ரமைப்புக்கு மாற்றப்பட்டன.

**gray scale monitor :** சாம்பல் அளவீட்டுத் திரையகம்.

**gray scale scanner :** சாம்பல் அளவீட்டு வருடு பொறி.

**grey code :** சாம்பல் நிறக் குறி யீடு; சாம்பல் நிறக் குறிமுறை; கிரே குறியீடு : அடுத்தடுத்த எண்கள் ஒரே ஒரு இலக்கத்தில் மட்டும் வேறுபடுவதான தன்மைகளைக் கொண்ட குறி யீடு. ஒப்புமையிலிருந்து இலக்க முறை மாற்றல் கருவியில் செயல்படச் சிறந்தது. உள்ளீடு/ வெளியீடு நோக்கங்களுக்காக வும், குறியீட்டு மதிப்புகளுக் காகவும் பயன்படுத்தப்படு கிறது. கணித கணக்கீடுகளைச் செய்வதற்கு முன்பு இருமை எண் வகைக்கு மாற்றப்பட வேண் டும். cycle code, reflected code என்றும் அழைக்கப்படுகிறது.

**gray code - to - binary conversion :** சாம்பல் நிறக் குறியீட்டி லிருந்து இருமைக்கு மாற்றல் : கிரே குறியீட்டு எண்ணில்

இருமை (பைனரி)க்குச் சமமான மதிப்பு. இடது புறத்திலிருந்து வலதுபுறமாகப் படிக்க வேண்டும் என்ற விதியைக் கடைப் பிடித்து இந்த மாற்றம் செய்யப் படுகிறது. மிக முக்கிய இருமை இலக்கம் அதற்குச் சமமான கிரே குறியீட்டு இலக்கத்துடன் ஒப்பிடப்படுகிறது. கிரே குறியீட்டு இலக்கம் 1 என்றால் அடுத்த இருமை இலக்கம் மாறுகிறது. கிரே குறியீடு இலக்கம் பூஜ்யம் என்றால் அடுத்த இரும இலக்கம் மாறாது. சான்றாக, கிரே குறியீட்டு மதிப்பு 110100110 அதற்குச் சமமான இருமை எண் 100111011.

**gray scale : சாம்பல்நிற அளவு கோல் :** கணினி வரைபடமுறை அமைப்புகளில் ஒரே நிறக் காட்சி முறையில் வெளிச்சத்தின் மாறுபாடுகளின் அளவு. பல்வேறு வடிவமைப்புப் பொருள்களுக்கிடையில் உள்ள கருமை நிறத்தை அதிகரிக்க கிரே அளவுகோல் பயன்படுகிறது.

**greater than : அதைவிடப் பெரிய :** இரண்டு மதிப்புகளுக்கிடையில் உள்ள வேறுபாட்டின் உறவு. அதைவிடப் பெரிய எண் என்பது அதற்கான குறியீடு. 9 என்ற எண் 5- ஐ விடப் பெரியது என்றால் அம்புக்குறி சிறியதை நோக்கி இருக்கும். மாற்றுச் செயலாக்க முறையை ஒப்பிட இதைப் பொதுவாக பயன்படுத்துவார்கள்.

**greek : விளங்கா மொழி :** உண்மையான எழுத்துகள் விளங்கிக் கொள்ள முடியாத ஒருவகை வடிவத்தில் வாசகத்தைக் காட்சியாகக் காட்டுதல், எடுத்துக் காட்டு : மேசை மோட்டு வெளியீட்டில் முடிவுற்ற ஆவணத்தை முன்னதாகப் பார்க்கும்போது, செறிவினைக் கையாள்வதற்கு காட்சித்திரை போதிய அளவு பெரிதாக இல்லையெனில் அந்த வாசகம் விளங்கா மொழியில் உள்ளது எனப்படும்.

**greeking : விளங்கா மொழியில் அமைத்தல் :** வாசகங்களைப் போலி எழுத்துகளில் அல்லது பொருளற்ற குறியீடுகளில் உருப்படுத்திக் காட்டுதல்.

**green book standard : பசுமை நூல் தர அளவு :** 1987 ஜூன் மாதம் அறிவிக்கப்பட்ட CD-I முழுச் செயற்பணித் தனிக்குறிப்பீட்டுக்கான மாற்றுப் பெயர். இது, முதல் வரைவு வெளியிடப்பட்டுச் சரியாக ஓராண்டுக்குப் பிறகு வெளியிடப்பட்டது.

**green pc : பசுமைக் கணினி.**

**gregorian calendar : கிரிகோரியன் நாட்காட்டி :** மேலை நாடுகளில் முன்பு ஜூலியன் காலண்டர் பின்பற்றப்பட்டு

வந்தது. 1582இல் பதின்மூன்றாம் போப் கிரிகோரி புதிய காலக் கணக்கீட்டு முறையை அறிமுகப்படுத்தினார். அதுவே கிரிகோரியன் காலண்டர் எனப்படுகிறது. இது, முந்தைய முறையைவிட மிகத் துல்லியமான முறையாகும். ஓர் ஆண்டுக்கு 365.2422 நாட்கள் என மிகத் துல்லியமாகக் கணக்கிடப்பட்டது. இதன்படி நூறால் வகுபடும் ஓர் ஆண்டு நானூறாலும் வகுபட்டால் மட்டுமே நீள் (Leap) ஆண்டாகும். அதாவது 366 நாட்களைக் கொண்டதாகும். இதன்படி, 2000 ஒரு நீள் ஆண்டு. ஆனால் 1900 ஒரு நீள் ஆண்டில்லை. கி.பி. 1-ம் ஆண்டிலிருந்து கூடுதலாகக் கணக்கிடப்பட்ட 10 நாட்கள் 1582 அக்டோபர் மாதத்தில் கழிக்கப்பட்டன. ஆனாலும் இங்கிலாந்தும் அதன் காலனிகளும் புதிய காலண்டரை ஏற்றுக்கொள்ளவில்லை. 1752 ஆம் ஆண்டில் தான் அவை கிரிகோரியன் காலண்டரை ஏற்றுக் கொண்டன. 1952 செப்டம்பர் மாதத்தில் 11 நாட்கள் கழிக்கப்பட்டன.

**GREP[1] : கிரெப்[1] :** முழுதளாவிய இயல்பான சொல்லமைப்பைத் தேடிக் காட்டல் என்று பொருள்படும் Global Regular Expression Print என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒரு கோப்பில் அல்லது கோப்புகளில் ஒரு குறிப்பிட்ட சொல்லைத் தேடிக்காணும் யூனிக்ஸ் கட்டளை.

**GREP[2] : கிரெப்[2] :** யூனிக்ஸின் கிரெப் கட்டளையைப் பயன்படுத்தி ஓர் உரைப்பகுதியைத் தேடும் முறை.

**grid : தொகுப்பு; கட்டம் :** 1. காட்சித் திரை அல்லது இலக்கமாக்கியில் காட்டப்படும் ஒரே மாதிரியான இடைவெளிப் புள்ளிகள் உள்ள கட்ட மைப்பு. ஒரு இடத்தைக் கண்டுபிடிக்கவும், ஒரு வடிவமைப்பு அல்லது துல்லியமான வரைபடங்களை உருவாக்கவும் பயன்படுத்தப்படுகிறது. 2. நிரல் நிரைகளாக மின்னணு விரிதாள் மாதிரிகளைக் காட்டுவது. 3. ஒரு புள்ளியின் மதிப்பைக் கண்டுபிடிக்கப் பயன்படும் ஒரு வரைபடத்திலுள்ள குறுக்கு வாட்டு மற்றும் செங்குத்துக் கோடுகள். 4. வட்ட வரைபடத்தில், தொகுதி என்பது மையப் பகுதியிலிருந்து வட்டமாக வெளிப்புறம் சாய்ந்திருக்கும் கோடுகளின் தொகுதி.

**grid chart : தொகுப்பு வரைபடம்; கட்ட வடிவ வரைபடம் :** உள்ளீட்டுத் தரவுவை அதன்

பயன்பாட்டு நிரலாக்கத் தொடர் பயன்பாடுகளுக்குத் தொடர்பு படுத்தும் பட்டியல்.

**gridding :** தொகுப்பமைத்தல்; கட்டமாக்கல் : முடிவுப்புள்ளிகள் யாவும் தொகுதிப் புள்ளிகளின் மீது விழுமாறு அமைக்க வேண்டிய வரைபட உருவ கட்டுமான சிக்கல்.

**grid layout :** கட்ட உருவரை.

**gridsheet :** தொகுப்புத்தாள்; கட்டத்தாள் : தொகுப்பு போன்றதுதான். விரிதாள் அல்லது பணித்தாளைக் குறிக்கும்.

**grip :** கிரிப் : வரைகலை இடைவினைச் செயல்முறைப்படுத்தும் மொழி.

**grok :** கிராக் : ஆழமாய், தீர்க்கமாய் புரிந்துகொள்ளல். திரு.ராபர்ட் ஏ.ஹெய்ன்லெய்ன் எழுதிய அறியாத நாட்டில் தெரியாத ஆள் (Stranger in a Strange Land) என்னும் புதினத்தில் பயன்படுத்தப்பட்ட சொல். அருந்துதல் என்று பொருள்படும் மார்சியன் மொழிச் சொல்லும் ஆகும். பாலை நிலத்து வாசி நீரின்மீது கொள்ளும் அக்கறையைப் போன்று முனைப்பு ஆர்வத்தைக் குறிக்க மார்சியன் மொழியில் இச்சொல் பயன்படுகிறது. இணையக் கலந்துரையாடல்களில் கணினிப் புலமையைக் குறிக்கக் குறும்பர்கள் (Hackers) இச்சொல்லைப் பயன்படுத்துவர்.

**groove format :** வரிப்பள்ள வடிவம்.

**ground :** தரைத் தொடர்பு : ஒரு மின்சுற்றிலிருந்து பூமிக்கு இணைப்பு ஏற்படுத்தும் பாதை அல்லது தொடுகின்ற உடலோடு ஏற்படுத்தும் தொடர்பு. பொதுவாக, ஒரு பாதுகாப்புச் சாதனமாக இது பயன்படுகிறது.

**ground current :** தரை மின்னோட்டம் : ஒரு தரை இணைப்பில் காணப்படும் மின்னோட்டம். இது சமநிலையற்ற மின்னியல் ஆதாரங்களினால் ஏற்படலாம். எடுத்துக்காட்டு: இரு கணினிகளுக்கிடையிலான ஒரு செய்தித் தொடர்பு வழியில் தரை இணைப்பு, தனித்தனியே மின்விசை பெறுதல்.

**ground fault :** தரைக் குறைபாடு : ஒரு மின்னியல் அமைப்பியின் செயலிழப்பு அல்லது இடி, மின்னல், புயல் போன்ற புறநிலை மின்னியல் ஆதாரங்களிலிருந்தான இடையீடு காரணமாக தரை இணைப்பில் உண்டாகும் தற்காலிக மின்னோட்டம்.

**grounding :** தரை இணைப்பு : மனிதர்களுக்கும், கணினிகளுக்கு மின்சக்தி ஒட்டம் தீங்கு

செய்யாத வண்ணம் அமைக்கும் செயல்முறை.

**ground loop** : தரை வளையம் : இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட முறைகளில் தரையில் பதிக்கப்பட்டுள்ள இரு சாதனங் களுக்கிடையில் முன்னும் பின்னுமாகப் பாய்கிற தேவை யற்ற தரை மின்னோட்டம்.

**ground mark** : தொகுதிக் குறி மானம்.

**ground noise injection** : தரை யோசை புகுத்தல் : ஒரு மின் விசை வழங்கீட்டுக் கருவி மூலம் தரை இணைப்புக்குள் தேவையற்ற ஓசையை வேண்டு மென்றே புகுத்துதல்.

**group** : குழு : 1. பல உறுப்புகள் இணைந்த ஒரு முழுமை. ஒரு தரவுத் தள அறிக்கையில் குறிப் பிட்ட ஏடுகளின் தொகுதி. 2. ஒரு படவரைவு மென்பொரு ளில் வரைகின்ற ஒரு படத்தில் பல்வேறு உருப்பொருள்களை ஒரு தொகுதியாகச் சேர்ப்பதை யும் குழு என்பர். 3. பல் பயனா ளர் இயக்க முறைமையில் சில குறிப்பிட்ட பயனாளர்களை இணைத்து ஒரு குழுவை உரு வாக்க முடியும். சலுகைகளை யும் உரிமைகளையும் ஒரு குழுவுக்கென வரையறுக்க முடியும். அக்குழுவிலுள்ள அனைத்து உறுப்பினர்களும் அந்தச் சலுகைகளையும் உரிமை களையும் பெறுவர்.

**group and outline** : குழுவும் சுற்றுக் கோடும்.

**group band** : குழுப் பட்டை.

**group coding** : குழுக் குறி முறையாக்கம்.

**group decision support system (GDSS)** : குழு முடிவு ஆதார முறைமை : மக்கள் குழுமங் களினால் முடிவெடுக்கப்படு வதற்கு உதவியாக இருக்கிற முடிவு ஆதாரப் பொறியமைவு.

**group footer band** : குழு முடிப்புப் பட்டை.

**group header band** : குழுத் தலைப்புப் பட்டை.

**group icon** : குழும உருவம் : ஒரு செயல்முறை மேலாண் மைக் கருவியில் குழுமப் பலகணி குறும அளவுக்குக் குறைக்கப்பட்டிருக்கும்போது, ஒரு குழுமத்தைக் குறிக்கிற உருவம். ஒரு குழுமத்தைத் திறப்பதற்கும், அதன் உள்ளடக் கத்தைப்பார்ப்பதற்கும் குழும உருவத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

**grouping** : குழுக்கள்.

**grouping data** : தரவுக் குழுக்கள்.

**group mark : குழு அடையாளம் :** ஒரு சொல்லின் தொடக்கம் அல்லது முடிவு அல்லது விவர அலகு ஆகியவற்றைக் காட்டும் காட்டி.

**group printing : குழு அச்சிடல்; தொகுதி அச்சிடல் :** ஒரு கணக்கிடும் எந்திரத்தின் வழியாகச் செல்லும் ஒவ்வொரு தொகுதியின் முதல் அட்டையில் மட்டும் தரவுவை அச்சிடும் செயல்முறை.

**groupware : குழுமச் சாதனம் :** பணிக் குழுமங்களின் உறுப்பினர்களின் பணி நடவடிக்கைகளுக்கு ஆதரவாக இருக்கிற மென்பொருள் தொகுதிப் பொறியமைவு. இக்குழுமங்களின் பணிநிலையங்கள், ஓர் உள்முகப் பகுதி இணைவனத்தினால் ஒன்றுக்கொன்று இணைக்கப்பட்டிருக்கும்.

**grovel : ஊர்தல்; நகர்தல்; (நத்தை போல் நகர்தல்) :** *1.* ஒரு தேடலை அல்லது ஒரு பணியை எவ்வித முன்னேற்றமுமின்றி செய்து கொண்டிருத்தல். ஒரு கோப்பிலிருந்து தரவு பெற எழுதப்பட்ட சில நிரல்கள் வெளியீட்டைத் தருமுன்பு அக் கோப்பு முழுமையும் மெதுவாக ஊர்ந்து பார்வையிடுவதுண்டு. சில வேளைகளில், ஒரு நிரலர் ஒரு குறிப்பிட்ட கட்டளை பற்றி அறிய ஆவணங்களில் பக்கம் பக்கமாக ஊர்ந்து தகவலைத் தேடுவதுண்டு. அல்லது நிரலில் ஏற்பட்டுள்ள பிழையைக் கண்டறிய நிரலின் வரிகளுக்கிடையே நகர்தல் உண்டு. 2. ஒரு செய்திக் குழுவில் சில அனுகூலம் கருதி முன் வைக்கப்படும் கோரிக்கை.

**.gt : .ஜிடீ :** ஓர் இணைய தள முகவரி குவாதிமாலா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**.gu : .ஜியு :** ஓர் இணைய தள முகவரி குவாம் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**guarantee : உறுதிப்பாடு; உத்திர வாதம்.**

**guard signal : காப்புச் சைகை :** ஓர் இலக்கமாக்கியிலிருந்து வெளிப்பாட்டுச் சைகைகளைப் படிப்பதற்கான அனுமதியைச் சுட்டிக்காட்டுகிற ஒரு சைகை.

**guest : விருந்தினர் :** ஒரு பிணையத்தில் நுழைசொல் இல்லாமல் நுழைந்துகொள்ளும் உரிமையுடைய பயனாளரின் பெயரைப் பொதுவாக இவ்வாறு குறிப்பிடுவர். செய்தி அறிக்கை சேவைகள் மற்றும் இணையத்தில் பல்வேறு சேவைகளை

வழங்குபவர்கள் இதுபோன்ற ஒரு பயனாளரை உருவாக்கி வைத்திருப்பர். அப்பெயரைப் பயன்படுத்தி வருங்கால வாடிக் கையாளர்கள் . யார் வேண்டு மானாலும் நுழைந்து, வழங்கப் படும் சேவைகளின் மாதிரியை நுகர்ந்து பார்க்கலாம்.

**guest computer : விருந்தினர் கணினி; கிளைக் கணினி :** வேறொரு விருந்தினர் கணினி யின் கட்டுப்பாட்டில் இயங்கும் கணினி.

**guest page : விருந்தினர் பக்கம்.**

**GUIDE : கெய்ட் :** Guidance of Users of Integrated Data Processing என்பதன் குறும்பெயர். பேரளவு ஐபிஎம். கணினி களைப் பயன்படுத்தும் பயனாள ரின் பன்னாட்டுச் சங்கம்.

**guide edge : வழிகாட்டு விளிம்பு :** காகிதம், காந்த நாடா போன்ற ஒரு தரவு ஊடகத்தின் விளிம்பு. இது நாடா இயக்கிக்குள் அல்லது நாடா படிப்பிக்குள் அதனை இட்டுச் செல்கிறது.

**gulp : விழுங்கல்.**

**gun : வீச்சுப்பொறி :** காத்தோட் கதிர்க் குழாயில் எலெக்ட்ரான் ஒளிக்கற்றையை உருவாக்கும் எலெக்ட்ரோடுகளின் குழு.

**gunzip : ஜி-விரிப்பு :** ஜீஸிப் எனப்படும் பயன்பாட்டு நிரல் மூலம் இறுக்கிச் சுருக்கப்பட்ட கோப்புகளை மீண்டும் விரிக்கச் செய்கின்ற பயன்பாட்டு நிரல். ஜிஎன்யு அமைப்பின் படைப்பு.

**guru : குரு; ஆசான் :** நுண்மான் நுழைபுலம் மிக்க ஒரு தொழில் நுட்ப வல்லுநர். அவர் சார்ந்த துறையில் எவ்விதச் சிக்கலுக் கும் தீர்வு சொல்லும் வல்லமை படைத்தவர். ஐயங்களுக்கும் கேள்விகளுக்கும் அறிவார்ந்த முறையில் விளக்கம் தருபவர்.

**gutter : வடிகால் :** பன்முகப் பத்தி உருவமைவில், பத்தி களிடையிலான இடைவெளி. இது நூல் வெளியீட்டில் பயன் படுகிறது. எடுத்துக்காட்டு : DTP.

**.gy : .ஜிஒய் :** ஓர் இணைய தள முகவரி கயானா நாட்டைச் சேர்ந் தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**gynoid : ஜைனாய்ட் :** எந்திரப் பெண் போன்ற மனித வடிவம்.

**.gz : .ஜிஇஸட் :** யூனிக்ஸில் ஜீஸிப் (gzip) என்னும் இறுக்கிச் சுருக்கும் நிரல் மூலம் குறுக்கிய காப்பகக் கோப்புகளை அடை யாளம் காட்டும் வகைப் பெயர் (extension).

**gzip : ஜிஸிப் :** கோப்புகளை இறுக்கிச் சுருக்கப் பயன்படும் நிரல். இது ஜிஎன்யு-வின் பயன் பாட்டு மென் பொருளாகும்.

# H

**H : எச் (பதினாறிலக்கம்) :** ஒரு பதினாறிலக்க எண்ணைக் குறிக்கும் குறியீடு. எடுத்துக் காட்டு : *09 என்பது '9'* என்பதன் எண்மான மதிப்பளவு.

**H.324 : ஹெச்.324 :** பாட்ஸ் இணக்கி **(POTS modem)** வழியாக ஒளிக்காட்சித் தரவு மற்றும் குரல் ஆகியவற்றை ஒரே நேரத்தில் அனுப்புவதற்கான, பன்னாட்டுத் தொலைத் தொடர்புச் சங்கத்தின் தர வரையறைகள்.

**hack[1] : ஏனோதானோ; சிரத்தையற்ற; அரைகுறை :** *1.* நேர்த்தியான தீர்வு காணப் பொறுமையின்றி கணினி நிரலிலுள்ள கட்டளைகளை அவசர கோலமாய் மாற்றியமைத்தல். *2.* அரைகுறை வேலை.

**hack[2] : அரைகுறை :** *1.* படைப்பாக்கக் கூர்மதியுடன் ஒரு சிக்கலை அல்லது ஒரு திட்டப் பணியை அணுகுதல். *2.* ஓர் இயக்க முறைமை அல்லது ஒரு பயன்பாட்டுத் தொகுப்பின் கட்டளையைத் திருத்தி, அதன் இயல்பான செயல்பாட்டை மாற்றியமைத்தல்.

**hacker : ஹாக்கர்; ஆர்வலர்; குறும்பர் :** *1.* கணினியைப் பயன்படுத்துவதில் பட்டறிவு உள்ள, வேறுபாடான சிக்கல்களை கணினி மூலம் தீர்ப்பதில் ஆர்வம் உள்ள, கணினி ஆர்வலர். குறைந்த திட்டமிடலுடன் நிரலாக்கத் தொடர்களை உருவாக்குபவர். கணினி ஜங்கி என்றும் அழைக்கப்படுபவர். ஆர்வலருக்கு கணினிகள் மற்றும் நிரலாக்கத் தொடர்களில் ஆர்வம் உண்டு. ஆனால் அறிவியல் கோட்பாடுகளில் கவனம் இருக்காது. *2.* தீங்கு செய்ய வேண்டுமென்றோ அல்லாமலோ மற்றவரது கணினி அமைப்புகளில் வேண்டுமென்றே நுழைபவர்.

**HAGO : ஹேகோ :** நல்லதைப் பெறுக என்று பொருள்படும் Have A Good One என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணையத்தில் மின்னஞ்சலின் இறுதியிலோ, அரட்டையின் முடிவிலோ பயன்படுத்தப்படும் சொல்.

**hairline : மயிரிழை :** ஓர் அச்சிட்ட பக்கத்தில் அச்சிடப்படும் மிக மெல்லிய கோடு அல்லது திரையில் காட்டப்படும் குறைந்தபட்ச மெல்லிய கோடு. மயிரிழையின் அளவீடு, பயன்

படுத்தப்படும் மென்பொருள், வன்பொருள் அல்லது தொழில் நுட்பத்தைச் சார்ந்தது. அமெரிக்க நாட்டின் அஞ்சல் துறை மயிரிழை என்பதை 0.5 பாயின்ட் (ஏறத்தாழ 0.007 அங்குலம்) என வரையறுத் துள்ளது. ஆனால் கிராஃபிக்ஸ் ஆர்ட்ஸ் டெக்னிக்கல் ஃபவுன் டேஷன் (GATF) மயிரிழை என்பது 0.003 அங்குலம் என வரையறுத்துள்ளது.

**H KEY** : ஹெச் விசை : கையாள் விசை எனப் பொருள்படும் Handle Key என்பதன் சுருக்கச் சொல்.

**HAL** : ஹால் : ஆர்தர் கிளார்க்கின் "2001" என்ற நாவலில் வரும் கொல்லுதற்குரிய கணினியின் பெயர்.

**half** : பாதியளவு; அரை : ஓர் இடையீடு, பிழை அல்லது அறி வுறுத்தத்தினால் உண்டாக்கப் படும் ஒரு செயல்முறையின் நிறைவேற்றத்தில் ஒரு முடிவு.

**half adder** : அரைக்கூட்டி : இரண்டு இரும துண்மிகளைக் கூட்டும் திறனுள்ள கணினி மின்சுற்று.

**half adder, binary** : இரும அரைக் கூட்டி.

**half-duplex** : பாதி இருவழி; அரை இருவழிப்பாதை : இரண்டு திசைகளில் தகவல் தொடர்பை அனுப்பும் திறனுள்ளது. ஆனால் ஒரு நேரத்தில் ஒரு திசையில் மட்டுமே செலுத்தும்.

**half-duplex transmission** : அரை இருதிசை அலைபரப்பு : ஒரு நேரத்தில் ஒரு திசையில் மட்டும் நடைபெறும் இருவழி மின்னணு உத்தரவு தொடர்பு.

**half-height** : பாதி உயரம் : ஒரு தாழ்ந்த உயர வட்டு இயக்கி. பழைய பாணி வட்டு இயக்கிகள் *8-10* செ.மீ. உயரம் உடையவை. பாதி உயர இயக்கி கள் *4-5* செ.மீ. உயரமானவை. முதல் தலைமுறை இயக்கி களின் பாதியளவு செங்குத்து இடைவெளியைக் கொண் டவை. *5.2"* வட்டு இயக்கி. இது *1 5/8"* உயரமும் *5.75"* அகலமும் உடையது.

**half-height drive** : அரை உயர இயக்ககம் : இயக்ககங்களின் தலைமுறையைக் குறிக்கும் சொல். முந்தைய தலைமுறை சார்ந்த இயக்ககத்தின் உயரத்தில் பாதி உயரம் கொண்ட இயக்ககத்தைக் குறிக்கும் சொல் தொடர்.

**half information** : உதவித் தகவல்.

**half instruction** : பாதி கட்டளை; நிறுத்தும் ஆணை : ஒரு செயல்

முறையினை கையால் நிறுத்தும் வரை அதன் நிறைவேற்றத்தை நிறுத்தி வைக்கிற செயல் முறைக் கட்டளை.

**half menu** : துணைக் கட்டளைப் பட்டியல்.

**half router** : அரைத் திசைவி : ஓர் இணக்கியைப் பயன்படுத்தி, ஒரு குறும்பரப்புப் பிணையத்தை தகவல் தொடர்புத் தடத்தில் (இணையத்தில் இணைப்பது போன்று) இணைக்கும் ஒரு சாதனம்.

**half subtractor** : அரைக் கழிப்பி.

**halftone** : நுண்பதிவுப் படம் : ஒரு ஒளிப்படத்தை அல்லது உருவப் படத்தை சம இடைவெளியில் அமைந்த வேறுபட்ட அளவுகளில் அமைந்த புள்ளிகளைக் கொண்ட நகலாகப் படியெடுத்தல். ஒளிப் படத்திலுள்ள ஒளி மாறுபாட்டு அளவுகளை சாம்பல் நிறச் சாயையில் காட்டுவது. உருவப் படத்தில் சற்றே இருள் சாயலுள்ள பகுதியிருப்பின், நுண்பதிவுப் படத்தில் அமையும் புள்ளி பெரிதாக இருக்கும். மரபு வழியிலான பதிப்புத் துறையில், உருவங்களை ஓர் இடைத்திரையின் வழியாக ஒளிப்படம் எடுத்து இத்தகைய நுண்பதிவுப் படங்களை உருவாக்குவர். கணினிப் பதிப்புத் துறையில் நுண்பதிவுப் படப்புள்ளி என்பது ஒளியச்சுப்பொறி அல்லது இலக்கமுறை உருச் செதுக்கி (Image setter)யால் அச்சிடப்பட்ட புள்ளிகளின் தொகுப்பாக இருக்கும். இரண்டு முறையிலும் நுண் பதிவுப் படப்புள்ளிகளின் எண்ணிக்கை ஓர் அங்குலத்தில் இத்தனை வரிகள் என அளவிடப்படுகிறது. அதிகத் தெளிவுள்ள அச்சுப்பொறியெனில் அதிகப் புள்ளிகள் இடம் பெற்று படத்தின் தரம் மிகும்.

**half toning** : மங்கல் முறை : கறுப்பு-வெள்ளை காட்சிப் பின்னணியில் கிரே அளவுகளை உருவாக்க மாறும் அடர்த்தியில் புள்ளி அமைப்புகளைப் பயன் படுத்துதல்.

**halfword** : அரைச்சொல் : கணினி கையாளும் சொல்லின் பிட் (துண்மி) எண்ணிக்கையில் பாதி. ஒரு சொல் 32 துண்மிகள் (பிட்) எனில் அரைச் சொல் என்பது 16 துண்மி(பிட்)களை அல்லது இரண்டு பைட்டு களைக் கொண்டிருக்கும்.

**halt** : நிறுத்துகை.

**halting problem : நிறுத்துச் சிக்கல்** : அல்கோரிதம் இல்லாத- தீர்வு காணத் திட்டம் இல்லாத- சிக்கல்.

**halt instruction : நிறுத்துகை ஆணை.**

**hammer : சுத்தியல்** : ஓர் அச்சடிப்பியில், தட்டச்சு முகப்பை நாடாவுக்கும் காகிதத்துக்குமிடையில் நகர்த்துகிற அல்லது காகிதத்தை நாடாவுக்கும் தட்டச்சு முகப்புக்கும் இடையில் தள்ளிவிடுகிற செயல்முறை.

**hamming code : ஹாமிங் குறியீடு; ஹாமிங் குறிமுறை: ஹாமிங் சங்கேதம்** : தானாகவே பிழை திருத்திக் கொள்ளும் ஏழு துண்மி பிழைதிருத்தும் தரவுக் குறியீடு.

**hand calculator : கைக் கணிப்பி** : கையில் வைத்துக் கொள்ளக் கூடிய கணிப்பி. சிக்கலான கணக்கீடுகள் உட்பட கணிதச் செயல்பாடுகளைச் செய்ய ஏற்றது.

**hand-device : கைச் சாதனம்.**

**hand-held computer : கையகக் கணினி; கையடக்கக் கணினி** : எடுத்துச்செல்லக்கூடிய, பேட்டரியால் இயங்கும் கணினி. பேசிக் மொழி மூலம் நிரலாக்கத் தொடர் அமைத்து பலவகையான பணிகளுக்குப் பயன்படுத்தலாம். Packet Computer என்றும் அழைக்கப்படுகிறது.



கையகக் கணினி

**hand-held scanner : கைப்பிடி நுண்ணாய்வுக் கருவி** : ஓர் உருக்காட்சியை நுண்ணாய்வு செய்வதற்குக் கையினால் இயக்கப்படும் ஓர் ஒளியியல் நுண்ணாய்வுக் கருவி. நுண்ணாய்வுத் தலைப்பின் அடியிலுள்ள சிறிய உருளைகள் கையசைவினை நெறிப்படுத்துகின்றன.

**hand pointer : கைச் சுட்டு முனை** : விண்டோஸ்-*3.1* மற்றும் பிற விண்டோஸ் சார்ந்த, உள்ளுக்குள் நேரடி உதவிச் சாதனம் கொண்டுள்ள பொருள்களுடன் பணியாற்றுகையில், தொடர்புடைய உதவித் தலைப்புகளுக்கிடையில் நீங்கள் தாவும்போது தோன்றும் சுட்டுமுனை வடிவம்.

**hand scanner : கை நுண்ணாய்வுக் கருவி** : பிற கணினி

மென்பொருள்களைக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ள ஆவணங்களுக்காக உருக்காட்சிகளை நுண்ணாய்வு செய்வதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு சாதனம். படங்களை வாசகத்துடன் இணைப்பதற்குப் பயன் படுத்தப்படுகிறது.

**handle : கைப்பிடி :** ஒரு கோப்பினை அணுகுவதற்கு இயல்விக்கிற ஒரு மதிப்பளவு (இது ஒரு மாறிலியில் சேமித்து வைக்கப்பட்டிருக்கும்). கணினி வரைகலையில், உருக்காட்சியை நகர்த்துவதில் அல்லது மறு உருவாக்கத்தில் ஓர் உருக்காட்சியுடன் இணைக்கப்பட்டுள்ள ஒரு நுண்ணிய சதுரம். ஒரு சறுக்குச் சட்டத்தை இதன்மீது நகர்த்தி, ஒரு விசையை அல்லது சுட்டுப் பொறியினை அழுத்துவதன் மூலம் கைப்பிடி தேர்ந்தெடுக்கப்படுகிறது. ஒரு கோப்புக்குக் குறித்தளிக்கப்பட்டுள்ள ஒரு தற்காலிகப் பெயர்.

**handler : கையாளி :** ஒரு குறிப்பிட்ட உள்ளீடு, வெளியீடு, சேமிப்பகச் சாதனம். கோப்பு அல்லது நிறுத்தும் வசதியினைக் கட்டுப்படுத்துவதற்கென்றே உருவாக்கப்பட்ட நிரலாக்கத் தொடர்.

**handset : ஒலியுறுப்பு :** ஒலி பெருக்கியும், ஒலி வாங்கியும் கொண்டிருக்கிற தொலைபேசியின் உறுப்பு.

**handshaking : கைகுலுக்கல்; கைகுலுக்கல் முறை :** தரவுத் தொடர்பை ஏற்படுத்திக்கொள்ள இரண்டு கணினிகள் அல்லது ஒரு கணினியும் ஒரு வெளிப்புறச் சாதனமும் ஏற்படுத்திக் கொள்ளும் நடைமுறைகள்.

**handsharing logic : கை குலுக்கல் தருக்க முறை :** நிறைவேற்றப்பட்டுள்ள இனங்கள் பற்றிக் கணினி பதில் சைகை அனுப்புகிற ஒருவகைக் கணினி இடை முகப்பு வடிவமைப்பு.

**hands-on : கைகளால்; கை வைத்த; செயல் சார்பான :** ஒரு கணினி அமைப்பை நேரடியாகப் பயன்படுத்துவது பற்றியது.

**handwriting recognition : கையெழுத்துக் கண்டறிதல்; கையெழுத்து அறிதல்:** ஒரு கையெழுத்தைச் சோதிக்க அல்லது தரவு உள்ளடக்கத்தைக் கண்டறிய கணினி கட்டுப்பாட்டு நுண்ணாய்வுச் சாதனம் (ஸ்கேனர்) மூலம் கையெழுத்தை நுண்ணாய்வு (ஸ்கேனிங்) செய்வது.

**hang : தொங்கல் :** விசைப் பலகை செயற்படாமல் கணினி திடீரென நின்றுவிடும்போது ஒரு பொறியமைவு தொங்கி

விட்டதாகக் கூறப்படுகிறது. இந்த நிலையில் வெளி வருவதற்கான ஒரே வழி கணினியை நிறுத்திப் பின் திரும்ப இயக்குதல் (Boot) ஆகும்.

**hanging indent : தொங்கல் வரிப் பத்தி :** ஒரு பத்தியிடும் முறை. இதில், முழு அளவு முதல் வரியும், உள்ளடங்கிய அடுத்த வரிகளும் அடங்கியிருக்கும்.

**hanging paragraph : தொங்கல் பத்தி :** அச்சுக்கலையில் முதல் வரி இடது ஓரத்திலிருந்து தொடங்கி, இரண்டாவது வரியும், பின்வரும் வரிகளும் உள்ளடங்கியதாகவும் இருக்கும் வாசகப் பத்தி அமைப்பு.

**hang - up : தொங்க வை; தொங்கல் :** ஒரு வாலாயமாக (ரொட்டீன்) நிரலாக்கத்தொடர் அமைக்கப் படாத நிறுத்தம். சிக்கலைச் சரியாகக் குறியீடு செய்யாததாலோ, எந்திரக் கோளாறாலோ அல்லது சட்டவிரோதமான அல்லது இல்லாத குறியீட்டைப் பயன்படுத்துவதாலோ விரும்பத் தகாத அல்லது எதிர்பாராத ஒரு நிறுத்தம்.

**hard card : வன் அட்டை :** சொந்தக் கணினியில், ஒரு நிலை வட்டினைக் கொண்டிருக்கிற ஒரு செருகு அட்டை வடிவிலுள்ள துணைநிலை நினைவகம். ஒரு வன்அட்டை 20-40 MB திறம்பாடு உடையது. ஒரு கணினி நினைவகத்தில் விரைவாக விரிவாக்கம் பெறுவதற்கு இது பயனுள்ள வழி.

**hard clip area : தாளின் வரை பரப்பு :** ஒரு இலக்கவியல் வரைவியில் ஒரு குறிப்பிட்ட எல்லைக்கு மேல் கோடு போகாத நிலை.

**hard coded : நிலைக் குறியீடு :** ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையிலான சாதனங்களை மட்டுமே கொண்டு ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையிலான பணிகளைச் செய்கிற மென்பொருள். எடுத்துக்காட்டு : வேறு எந்த வகைகளையும் அனுமதிக்காமல், இரண்டு வகை அச்சடிப்பிகளால் மட்டுமே ஒரு செயல்முறையை எழுதுதல். சிக்கல்களுக்கான நிலைக்குறியீட்டுத் தீர்வுகள் பெரும்பாலும் துரிதமானவை. ஆனால், இவை எதிர்கால நெகிழ்திறனை அனுமதிப்பதில்லை.

**hard configuration : வன் தகவமைவு.**

**hard contact : வன்தொடர்பு அச்சுமுறை :** தேவையான அழுத்தத்துடன் அழுத்தி தொடர்பு முறையில் அச்சிடுவது.

**hard copy : உண்மை நகல்; தாள் படி; அச்சு நகல் :** அறிக்கைகள்,

பட்டியல்கள், ஆவணங்கள் அல்லது குறிப்புரைகள் போன்ற படிக்கக்கூடிய வடிவிலுள்ள எந்திர வெளியீட்டின் அச்சிடப்பட்ட பிரதி. Soft Copy-க்கு எதிர்ச் சொல்.

**hard disk :** நிலை வட்டு : வேகமான துணைசேமிப்பகச் சாதனம். கணினியின் உள்ளே நிரந்தரமாக அமைக்கப்படும் அல்லது ஒரு தனிப் பெட்டியில் வைக்கப்படும். வரைவியைப்போன்று பல மில்லியன் எழுத்துகள் அல்லது எண்மி(எட்டியல்)களைச் சேமிக்கும் திறன் ஒரு தனி நிலை வட்டுக்கு உள்ளது. Floppy disk என்பதற்கு எதிர்ச்சொல்.




நிலைவட்டு

**hard disk backup programme :** நிலை வட்டுக் காப்பு நிரல்.

**hard disk controller :** நிலை வட்டுக் கட்டுப்படுத்தி : ஒரு நிலை வட்டு இயக்கிக்கு ஓர் இடைமுகப்பினை அளித்து, அதனை மேற்பார்வையிடுகிற மின்னணுவியல் சுற்றுநெறி. சுருக்கம் : HDC இதில் பல வகைகள் பயன்பாட்டில் உள்ளன. எடுத்துக்காட்டு : ESDI, MFM, SCSI, ST 506.

**hard disk drive :** நிலைவட்டு இயக்கி : ஒரு நிலை வட்டுக்கு எழுத்து /படிப்புச் செயற்பாடுகளைச் செய்கிற ஒரு மின் -எந்திரவியல் சாதனம். இதில் குறைந்தது ஒரு எழுத்து/ படிப்பு முனை இருக்கும். இது, வட்டிலுள்ள வட்டினை அணுகி, அதனை நாளது தேதிவரைப் புதுப்பிக்கிறது. வட்டு இயக்கியானது, வட்டின் தட்டினை நிமிடத்திற்கு 3,600 சுழற்சிகள் என்ற வேகத்தில் சுழற்றுகிறது. இதனால், வட்டின் எல்லாப் பகுதிகளும், துரித இடைவெளிகளில் எழுத்து /படிப்பு முனையின் கீழ் வருகின்றன. சுருக்கப் பெயர் : HDD.

**hard disk measurements : நிலைவட்டு அளவைகள் :** திறம்பாட்டளவு ஒரு வினாடிக்கு எத்தனை எட்டியல்கள் என்ற வீதத்திலும், மில்லி வினாடிகளிலும் அளவிடப்படுகின்றன. இது "அணுகு நேரம்" (Access time) எனப்படும். அதிவேக சொந்தக்கணினி நிலைவட்டு அணுகு நேரங்கள் 12 முதல் 28 ms வரை வேறுபடும். மற்றக் கணினிகளில் வேகம் 1ms.

**hard disk store : நிலைவட்டுச் சேமிப்பு :** தன் அலகுக்குள் முத்திரையிடப்பட்டுள்ள ஒரு வட்டு. இந்த வட்டினை அகற்ற முடியாதாகையால் எழுத்து/படிப்புமுனை அதன் மேற்பரப்புக்கு மிக அருகில் இருக்கும்; தடங்களை அடர்த்தியாகச் செறிவாக்கம் செய்யலாம். துல்லியத் தொழில் நுட்பம் காரணமாக ஒரு படியெடுப்பு நெகிழ் வட்டினைவிட ஒரு நிலைவட்டு மிக அதிகத் திறம்பாடு கொண்டதாக இருக்கிறது. இது, நுண் சாதனங்களுக்கான 300 அல்லது அவற்றுக்கு மேற்பட்ட மெகா எட்டியல்களைக் கொண்டது. நெகிழ் வட்டுகளைப் போலவே, இதிலும் மென்பொருள் ஆணைகள்மூலம் செய்திக் குறிப்புகளையும், செயல்முறைகளையும் சேர்க்கலாம். நிலைவட்டுகளை "வின்செஸ்டர் வட்டு இயக்கிகள்" (Windchester disk drives) என்றும் அழைப்பர்.

**hard disk type : நிலைவட்டு வகை :** ஒரு நிலைவட்டு எந்த வகையைச் சார்ந்தது என்பதைக் கணினிக்குத் தெரிவிக்கும் ஒரு எண் அல்லது சில எண்கள். நிலைவட்டிலுள்ள எழுத்து/படிப்பு முனைகளின் எண்ணிக்கை, உருளைகளின் (Cylinders) எண்ணிக்கை ஆகியவற்றை அவ்வெண்கள் குறிக்கின்றன. நிலைவட்டின் வகையைக் குறிக்கும் இவ்வெண்கள் வட்டின் மீதுள்ள பெயர்ச் சீட்டை எழுதப்பட்டிருக்கும். கணினியில் வட்டினை நிறுவும்போது அவ்வெண்களை கணினியில் உள்ளீடாகத் தரவேண்டும். சீமாஸ் அமைப்பு நிலை நிரலில் அவற்றைத் தர வேண்டியிருக்கும்.

**hard error : வன் பிழை; கருவிப் பிழை :** வன்பொருளில் ஏற்படும் கோளாறால் உண்டாகின்ற பிழை.

**hard failure : கருவிப் பழுது; கருவிக் கோளாறு :** கருவியின் ஒரு பகுதியில் ஏற்படும் கோளாறு. அதை மீண்டும் பயன்படுத்த வேண்டுமானால் பழுது பார்க்க வேண்டும்.

**hard hyphen : எந்திரக்கோடு; வன் இணைகுறி;** கட்டாய

ஒட்டுக் குறி : எழுத்துக்கூட்டும் போது போட வேண்டிய சிறிய இடைக்கோடு. 11 துளை போன்றவற்றில் இதைப் பயன் படுத்துவார்கள். எப்போதும் அச்சிடப்படும். Soft Hyphen-க்கு எதிர்ச்சொல்.

**hard page break** : வன்பக்க முறிப்பு.

**hard return** : வன் மீள்வு; கட்டாய முறி : மீள்வு விசையை அழுத்தி ஒரு வாசக ஆவணத்தில் பதிவு செய்யப்படும் குறியீடு. DOS, OS/2 வாசகக் கோப்புகள் ஒரு CR/LF இணையினைப் பயன்படுத்துகின்றன. இதனைத் திரையில் கண்ணுக்குப் புலனாகும் ஒரு மாறி குறியீடாகக் காட்டலாம். அல்லது கண்ணுக்குப் புலனாகாத குறியீடாகவும் இருக்கலாம். இது, "மென் மீள்வு" (soft return) என்பதிலிருந்து மாறுபட்டது.

**hard sector** : வன் பகுதி : நெகிழ்வட்டில், உற்பத்தி செய்யப்படும்போதே அமைக்கப்படும் ஆப்பு வடிவ சேமிப்புப் பிரிவு. பல்வேறு பதிவுகளைக் குறிப்பிட வட்டில் துளைகளிட்டு அடையாளப்படுத்தப்படுகிறது. soft sector-க்கு எதிர்ச்சொல்.

**hard sectored disk** : வட்டப் பிரிவு துளைவட்டு : வட்டிலுள்ள ஒவ்வொரு வட்டப் பிரிவின் தொடக்கத்தையும், உணர்விகள் (sensors) அடையாளம் காண்பதற்கு ஏதுவாக, துளையிடப்பட்டுள்ள நெகிழ் வட்டு.

**hard space** : கட்டாய இடைவெளி; வன் இடவெளி : சொல் பகுப்பானில் இந்த இடவெளி, வாசகத்தின் பொருளுக்கு மிக முக்கியமானதாகும். எடுத்துக்காட்டு : "திரு ரஜ்னி" என்ற பெயரை இரண்டு வரிகளாகப் பிரிப்பது தவறான முறையாகும். இரு சொற்களுக்கு மிடையில் ஒரு கட்டாய இடவெளியைச் செருகுவதன்மூலம் இரு சொற்களையும் ஒரே சொல்லாகக் கருத முடியும்.

**hardvard mark - I** : ஹார்ட்வர்ட் மார்க் I : "ஹார்ட்வர்ட்ஸ் ஹோவர்ட்" (அய்க்கென்) என்ற அமைவனத்தின் கோட்பாட்டினை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்ட ஒரு மின் எந்திரவியல் கணினி.

**hardware** : வன் பொருள்; வல்லியல்பு; வன்சாதனம் : உருப்பொருள், இயங்கு பொருள், செயல் உறுப்பு, மின்னணு, காந்த, மற்றும் எந்திரச் சாதனங்கள் போன்ற பருப்பொருள், Software- உடன் வேறுபடுத்திப் பார்க்க.

**hardware abstraction layer** : வன்பொருள் கருத்தியல் அடுக்கு : விண்டோஸ் என்டீ போன்ற உயர்நிலை இயக்க முறைமைகளில், சில்லு மொழிக் (Assembly Language) கட்டளைகளை பிரித்துத் தரும் அடுக்கு. வன்பொருள் கருத்தியல் அடுக்கு, பயன்பாட்டு நிரலாக்க இடைமுகம் (Application Programming Interface-API) போலவே செயல்படுகிறது. சாதனம் சாரா (device independent) பயன்பாடுகளை உருவாக்க நிரலர்கள் இவ்வடுக்கினைப் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

**hardware cache** : வன்பொருள் இடை மாற்றகம்.

**hardware check** : வன்பொருள் சரிபார்ப்பு : கணினியின் உள் செயல்பாட்டில் ஏற்படும் பிழை அல்லது சிக்கலைக் கண்டறிய கணினி வன்பொருள் தானாகவே மேற்கொள்ளும் சரிபார்ப்பு (பரிசோதனை) நடவடிக்கை.

**hardware configuration** : வன்பொருள் அமைப்பு; வன்சாதன உருவமைப்பு : கணினி அமைப்பை உருவாக்கும் பல்வேறு கருவிகளின் பகுதிகளை ஒழுங்குபடுத்துவதும் அவற்றுக்கிடையிலான உறவுகளும். இதில் கம்பிகளும், தரவுத் தொடர்புப் பாதைகளும் அடங்கும்.

**hardware conflict** : வன்பொருள் முரண்பாடு.

**hardware-dependent** : வன்பொருள் சார்பி; வன்பொருள் சார்ந்த : ஒரு குறிப்பிட்ட கணினி அமைப்பில் மட்டுமே செயல்படக்கூடிய நிரல்கள், மொழிகள், சாதனங்கள் மற்றும் பிற கணினி உறுப்புகள். எடுத்துக்காட்டாக, சில்லு மொழி (Assembly Language) ஒரு வன்பொருள் சார்பியாகும். பொறி மொழி (Machine Language), ஒரு குறிப்பிட்ட வகை நுண்செயலிக்கென உருவாக்கப்பட்டு அதில் மட்டுமே செயல்படக் கூடியதாகும்.

**hardware description language** : வன்பொருள் விவரிப்பு மொழி : இலக்கமுறை கணினி அமைப்புகளுக்கு ஆவணப்படுத்தல், வடிவமைப்புபோல அமைத்தல் மற்றும் உற்பத்தி செய்தலுக்கு உதவும் மொழி மற்றும் எண்களமைப்பு.

**hardware dump, automatic** : தானியங்கு வன்பொருள் திணிப்பு; தானியங்கு வன்பொருள் கொட்டல்.

**hardware failure** : வன்பொருள் செயல் நிறுத்தம் : மின்னணுவியல் சுற்றுவழிகளில் அல்லது

மின் - எந்திரவியல் உறுப்புகளில் (வட்டுகள், நாடாக்கள்) அல்லது ஒரு கணினிப் பொறியமைவில் செயற்பணிகள் தவறாக நடைபெறுதல். இது "மென்பொருள் செயல் நிறுத்தம்" (software failure) என்பதிலிருந்து மாறுபட்டது.

**hardware flow control** : வன்பொருள் பாய்வுக் கட்டுப்பாடு.

**hardware interrupt** : வன்பொருள் குறுக்கீடு : வன்பொருள் செயற்பாட்டினால் ஏற்படும் இடைத் தடுப்பு. இது புறநிலைச் சாதனத்தால், ஆதாரச் சிப்புகளில் அல்லது மையச் செயலகத்தில் (CPU) ஏற்படலாம்.

**hardware key** : வன்பொருள் விசை; வன்பொருள் சாவி : சட்ட விரோதமாக மென்பொருளைப் படியெடுத்துக் கொள்வதைத் தடுக்கும் வழி. ஒரு கணினியின் விரிவாக்கப்பகுதி அல்லது போர்ட்டில் பொருத்தி, நிரலாக்கத் தொடர் களவுத் தடுப்பு மென்பொருளுடன் சேர்ந்து மட்டும் இயங்கக்கூடியது.

**hardware monitor** : வன்பொருள் திரையகம் : ஒரு கணினியின் செயல்திறனைப் பகுப்பாய்வு செய்வதற்காக அதனுடன் சுற்றுவழிகளுடன் இணைக்கப்பட்டுள்ள சாதனம்.

**hardware profile** : வன்பொருள் குறிப்புரை : ஒரு கணினிக் கருவி பற்றிய வரையறைகள் மற்றும் பண்பியல்புகள்பற்றிய ஒரு தரவுத் தொகுப்பு. புறச்சாதனங்களைக் கணினியுடன் இணைத்துச் செயல்பட வைக்க, இந்தத் தரவுக் குறிப்புரையின் அடிப்படையிலேயே கணினியில் வரையறுப்புகள் செய்து தயார் படுத்த வேண்டும்.

**hardware reliability** : வன்பொருள் நம்பகம் : வன்பொருள் தன் செயற் பணிகளை குறிப்பிட்ட கால அளவுகளுக்குச் செய்யும் திறம்பாடு உடையது எனக் கூறும் ஓர் அறிக்கை.

**hardware reset** : வன்பொருள் மீட்டமை.

**hardware resources** : வன்பொருள் மூலாதாரங்கள்; வன்பொருள் வளம் : மையச் செயலக நேரம், உள் சேமிப்பக இடம், நேரடி அணுகு இருப்பக இடம், உள்ளீடு, வெளியீடு சாதனங்கள் ஆகிய அனைத்தும் இருந்தால்தான் தரவு செயலாக்கம் தானியங்கியாகவும், திறனுடையதாகவும் இருக்கும்.

**hardware scrolling** : வன்பொருள் சுருளாக்கம் : ஒளிப் பேழைச் செங்குத்துச் சுருளாக்க உத்தி. இது, தரவுக் காட்சியாகக்

காட்டும் ஒளிப்பேழை இடைத் தடுப்பில் உள்ளடக்கங்களை மாற்றுவதற்குப் பதிலாக, தொடக்க நிலையை மாற்றுவதன் மூலம் செயற்படுகிறது.

**hardware security : வன்பொருள் பாதுகாப்பு** : கணினிக்குப் பாதுகாப்பளிப்பதற்காக வரம்புகள், பதிவேடுகள், பூட்டுகள் போன்ற வன்பொருள்களைப் பயன் படுத்துதல்.

**hardware specialist : வன் பொருள் வல்லுநர்** : ஒரு கணினி அமைப்பின் கருவிகளைப் பராமரித்து, பழுதுகளைக் கண்டறிந்து சரி செய்யும் நபர்.

**hardware tree : வன்பொருள் மரவுரு**: விண்டோஸ் 95 இயக்க முறையில், கணினி அமைப்பின் வன்பொருள் சாதனங்களின் வரையறைகள், தேவைகள் பற்றிய தரவுகள் அடங்கிய ஒரு தரவுக் கட்டமைவு (data structure). ஒரு மரத்தில் வேரில் தொடங்கி, கிளை பிரிவது போன்ற கட்டமைப்பைக் கொண்டிருக்கும். அதிலுள்ள ஒவ்வொரு கணுவும் (nodes) இயங்கும் ஒரு சாதனத்தைச் சுட்டுகிறது. இந்த வன்பொருள் மரவுரு அமைப்பு இயங்குநிலையிலேயே வடிவமைக்கப்படுகிறது. ஒவ்வொருமுறை விண்டோஸ் 95 இயக்கப்படும் போதும் இந்தப் பட்டியல் புதுப்பிக்கப்படுகிறது. இந்த மரவுருப் பட்டியலே விண்டோஸ் 95 முறைமையின் இணைத்து - இயக்கு (plug and play) திறனை இயல்விக்கிறது.

**hardware virtual memory : வன் பொருள் நடைமுறை நினைவகம்** : ஒரு சிப்புவினுள் அமைக்கப்பட்டுள்ள நடைமுறை நினைவக மேலாண்மை. நடைமுறை நினைவகத்தை மென்பொருளினால் மட்டுமே இயக்கமுடியுமாயினும் இதனை வன்பொருளால் செய்வது அதிகத் திறனுடையதாக இருக்கும்.

**hardware windowing : வன் பொருள் சாளரமாக்கும்.**

**hardwired : கம்பிவழி; கம்பி மூலம்** : இரண்டு மின்னணுக் கருவிகளுக்கிடையில் கம்பி மூலம் இணைப்பு அளிப்பது குறித்தது.

**hardwired logic : வன்கம்பியாக்கிய தருக்கமுறை** : ஒருங்கிணைந்த சுற்று வழியில் (அல்லது சிப்புவில்) உற்பத்தியாளரினால் உள்முகமாக அமைக்கப்பட்டுள்ள தருக்கமுறை. இது வாயில்களுக்கிடையிலும், வாயில்களிலும் அமைக்கப்பட்டுள்ள கம்பியிணைப்பினைக் குறிக்கிறது.

**harmonic distortion : ஒத்திசைவுத் திரிபாக்கம் :** செய்தித் தொடர்புகளில், அனுப்பீட்டுக் கம்பிகளில் சீர்கேடு காரணமாக மூல அலைவெண்ணின் மடங்குகளாக உருவாக்கப்பட்ட அலைவெண்கள்.

**harness : வடக்கம்பிக்கட்டு; வடக் கம்பித் தொகுதி :** தனிக் கம்பிகளை ஒன்றாக இணைத்த தொகுதி.

**Harvard architecture : ஹார்வார்டு கட்டுமானம் :** நுண் செயலிக் கட்டுமானத்தில் ஒரு வகை. நினைவகத்திலிருந்து ஆணைகளைக் கொணரவும், தரவுவை எழுத/படிக்கவும் தனித்தனிப் பாட்டைகளைக் கொண்டிருக்கும். ஒரேநேரத்தில் நினைவகத்திலிருந்து ஆணையைக் கொணரவும், தரவுவை எழுத/படிக்கவும் முடியும் என்பதால், செயலியின் செய்திறன் வீதம் அதிகரிக்கிறது. இக்கட்டுமானமுறை நினைவக வடிவமைப்பை உச்சதிறன் உடையதாக்கவும் வழி வகுக்கிறது. எப்படியெனில், ஆணைகள் எப்போதும் ஒன்றன்பின் ஒன்றாக வரிசையாய்க் கொணரப்படுகின்றன; ஆனால் தரவுவைப் படிப்பதோ எழுதுவதோ குறிப்பின்றி (Randomly) நடைபெறுகிறது.

**Harvard Graphics : ஹார்வார்ட் வரைகலை :** "சாஃப்ட்வேர் பப்ளிஷிங் கார்ப்பரேஷன்" என்ற அமைவனம் உருவாக்கியுள்ள சொந்தக் கணினி வணிக வரைகலை. இது முதலில் தயாரான வணிக வரைகலைத் தொகுதிகளில் ஒன்றாகும். இது, வாசக வரைபடங்களிலிருந்து விடுபட்ட பத்தியை உருவாக்குகிறது.

**HASCI : ஹஸ்கி :** Human Applications Standard Computer Interface என்பதன் குறும்பெயர். இது ஒரு விசைப்பலகை அமைப்பு முறையாகும்.

**hash : ஹாஷ் :** திரையில் காட்சி அசையாது நிற்றல்.

**hashed random file organisation : கதம்பக் குறிப்பற்ற கோப்பு அமைப்பாக்கம் :** தரவுகளைச் சேமிப்பதற்கான/மீட்பதற்கான ஒரு முறை.

**hashing : அடையாள வழிகாட்டல்; துண்டாடல் :** முகவரி மாற்றலுக்கான விசை. இதில் தரவுகளில் இருப்பிடத்தை விசையே முடிவு செய்யும்.

**hashing algorithm : தற்சார்பு முகவரியாக்க படிநிலை முறை :** 'k' என்ற ஒரு குறிப்பிட்ட விசைக்கு f(k). என்ற செயற்பணிகளைக் கொடுக்கிற ஒரு படி

நிலைமுறை. Hash Coding என்றும் அழைக்கப்படும்.

**hash search :** புலத்தேடல்; அடையாள வழி தேடல் : ஒரு தேடல் படிமுறை. ஒரு பட்டிய லிலுள்ள ஓர் உறுப்பினை அதன் தற்சார்பு முகவரி கொண்டு கண்டறியும் முறை. இத்தேடல் முறையில் ஏறத்தாழ நேரடி யாகவே தேடும் உறுப்பினை அணுக முடியும் என்பதால் இம் முறை மிகவும் திறன்மிக்கதாகக் கருதப்படுகிறது.

**hash totals :** ஹாஸ் மொத்தங் கள்; புல எண்ணிக்கைகள் : புலங்களை அடையாளம் காணும் எண்களின் மொத் தங்கள். பிழை சோதிப்பதில் பயன்படுத்தப்படுகிறது.

**hatching :** வரிவேய்தல் : ஒரே திசையில் இணைக்கோடுகளில் ஓர் ஓவியத்தின் சில பகுதிக்கு மட்டும் நிழலடித்தல், ஒன்றின் மேல் வேறொரு நிறம் அடிப் பது பல குறுக்கு ஹாட்சிங் எனப்படும்.

**hayes compatible :** "ஹேய்ஸ்" ஒத் தியல்பு : ஹேய்ஸ் நிரல் மொழி யினால் கட்டுப்படுத்தப்படும் மோடெம்களைக் குறிக்கிறது.

**hayes smart modem :** ஹேய்ஸ் அறிவுத்திறன் மோடெம் : "ஹேய்ஸ் மைக்ரோ கம்ப்யூட் டர் புராடக்ட்ஸ்" என்ற அமை வனம் தயாரித்துள்ள சொந்தக் கணினிகளுக்கான அறிவுத்திறன் மோடெம் குடும்பம். இதனை 1978இல் முதல் தலைமுறை சொந்தக் கணினிகளுக்காக ஹேய்ஸ் உருவாக்கினார். இதன் நிரல்மொழி, தொழில்துறைக் குரிய செந்திற மொழியாகியது. இது ஓர் நிரல் நிலையை உடை யது; இது அறிவுறுத்தங்களை ஏற்றுக்கொள்கிறது. நேரடிநிலை யில் இது சுழற்றுகிறது, பதிலளிக் கிறது; அனுப்புகிறது; ஏற்கிறது.

**hazard :** இடர்ப்பாடு : உட்பாட்டு மாறிகளின் நிலை மாறுகிற போது ஒரு தருக்க முறைச் சுற்று வழி தவறாகச் செயற்படுதல்.

**HDBMS :** எச்டிபிஎம்எஸ் : Hierarchical Database Management System என்பதன் குறும்பெயர்.

**head :** முனை; தலைமுனை : 1. சிறிய மின்காந்த வட்டு, நாடா போன்ற சேமிப்பு ஊடகத்தில் தரவுகளை அழிக்கவும், பதிவு களைப் படிக்கவும் பயன்படும் உறுப்பு. காந்தத் தட்டில் தரவு களைப் படிக்கவும், எழுதவும், அழிக்கவும் பயன்படுவது. 2. ஒரு பட்டியலின் ஆரம்பத்தை அடை யாளம் காட்டும் சிறப்புத் தரவு.

**head cleaning device :** முனை தூய்மைப்படுத்தும் சாதனம் :

தூசு நீக்கும் பொருள். நாடா இயக்கி அல்லது ஒரு நெகிழ் வட்டு இயக்கியின் படி/எழுது முனையைத் தூய்மைப்படுத்த அனுமதிக்கிறது.

**head crash :** முனை மோதல் : ஒரு நிலைவட்டின் பதிவிடும் பரப்புடன் படி/எழுது முனையுடன் மோதுதல். சிறிய புகை அல்லது தூசு அல்லது விரல் படுவதுபோன்ற சிறிய பொருளால் வட்டு கெட்டுப்போதல்.

**header :** வழிகாட்டி; தலைப்புச் செய்தி : 1. ஒரு செய்தியை அது போய்ச்சேர வேண்டிய இடத்திற்கு வழிகாட்டுவதற்குரிய அனைத்து தரவுகளும் கொண்டுள்ள ஒரு செய்தியின் முதல் பகுதி. 2. ஒரு பக்கத்தின் மேற்புற மூலை.

**header card :** வழிகாட்டி அட்டை; தலைப்பு அட்டை : தொடர்ந்து வரும் அட்டைகளில் உள்ளதைப் பற்றிய தரவுவைத் தரும் அட்டை.

**header file :** தலைப்புக் கோப்பு : ஒரு கோப்பு பற்றிய குறிப்புரையைக் கொண்டிருக்கும் செயல்முறைக்குள் அதன் உள்ளடக்கங்கள் ஒருங்கிணைக்கப்பட்டுள்ள ஒரு கோப்பு.

**header label :** தலைப்பு முகப்புச் சீட்டு : ஒரு காந்த நாடாவிலுள்ள ஒரு கோப்பின் தொடக்கத்தில் சேமித்து வைக்கப்பட்டுள்ள ஒரு முகப்புச் சீட்டுப்பதிவு. இது, கோப்புப் பற்றிய விவரிப்புத் தரவுகளைக் கொண்டிருக்கிறது.

**header record :** வழிகாட்டிப் பதிவேடு : தொடர்ந்து வரும் பதிவேடுகளின் தொகுதி பற்றிய நிலையான, பொதுவான அல்லது அடையாளம் காட்டும் தரவு வைக்கொண்டுள்ள பதிவேடு.

**head-per-track disk :** தடவாரித் தலைப்பு வட்டு : ஒவ்வொரு தடத்தின்மீது நிலைநிறுத்தப்பட்டுள்ள படி/எழுது முனையைக் கொண்டுள்ள வட்டு இயக்கி. இதன் மூலம், தடத்திலிருந்து தடத்திற்கு அணுகு கரம் நகர்வது ஒழிக்கப்படுகிறது.

**head-per-track disk drive :** தடவாரித் தலைப்பு வட்டு இயக்ககம்; தடத்துக்கொரு முனை வட்டு இயக்ககம் : வட்டிலிலுள்ள ஒவ்வொரு தடத்துக்கும் தனியான படிப்பு/எழுது முனை கொண்ட ஒரு வட்டு இயக்ககம். தகவலைப் படிக்கவும் எழுதவும் ஒரு குறிப்பிட்ட தடத்தை அணுக, வட்டு முனை நகரவேண்டிய தேவையில்லாத காரணத்தால், இத்தகைய வட்டுகளில் தேடு நேரம் (seek time) மிகவும் குறைவு. ஆனால்,

படிப்பு/எழுது முனைகளுக்கு செலவு அதிகம் என்பதால், இது போன்ற வட்டு இயக்ககங்கள் அதிகமாகப் புழக்கத்திலில்லை.

**head positioning** : முனை சரியமர்த்துதல் : நேரடி அணுகு சேமிப்பகச் சாதனத்தில் தரவு களைப் படி/எழுது முனையைப் பொருத்துதல். ஒரு நகரும் அணுகு கரத்தின் மூலம் செய்யப்படுகிறது.

**head, read** : படிப்பு முனை.

**head, read/write** : எழுது/படிப்பு முனை.

**head set** : தலைத் தொகுதி : ஒலிச் சாதனங்கள் உண்டாக்கும் இசையை அல்லது ஒலியைக் கேட்பதற்கு தலையில் பொருத்திக் கொள்ளும் ஒலிச் சாதனம். இது கணினிகளுடனும், பிற மின்னணுவியல் சாதனங்களுடனும் சேர்த்துப் பயன்படுத்தப் படுகிறது.

**head skew** : தலைப்புக் கோட்டம் : தகட்டின் உச்சிப்பகுதியிலிருந்து அடிப்பகுதிக்குத் தலைப்பு மாறிக் கொள்ளும் வகையில் முந்திய தடத்தின் தொடக்கத்திலிருந்து மாறி புதிய தடத்தில் இருக்கும் தூரம்.

**head slot** : முனை இடம்; தலைத் துணை : வட்டுப் பரப்பினை படி/எழுது முனைக்குக் காட்டும் நெகிழ் வட்டு உறையின் மீதுள்ள திறந்த இடம்.







முனை இடம்

**head switching** : முனை பொத்தானிடம்; தலைநிலை மாற்றல் : தரவுகளை நேரடி அணுகு சேமிப்பகச் சாதனத்தில் படிக்கும் போது படி/எழுது முனையை இயங்க வைத்தல்.

**head, write** : எழுது முனை.

**heap** : தொகுதி : கணிப்புக்காக ஒரு நிரலாக்கத்தொடர் கடன் வாங்கி பின்னர் திருப்பியளிக்கிற சேமிப்பக இடங்களின் தொகுதி.

**heap sort** : குவியல் வரிசையாக்கம்.

**hearsay** : கேள்வியறிவு : CMU தயாரித்துள்ள ஒரு செயற்கை நுண்ணறிவுத் திறன் (AI) செயல்முறை. இது, அடுத்தடுத்து இரண்டு செயல்முறைகளைக் கொண்டிருக்கும்.

**heatex** : வெப்பக் குறைப்பி : பல்வேறு செய்முறைத் தொகுதிகளிடையே வெப்பத்தைப் பரிமாற்றிக் கொள்வதற்கு அனுமதிக்கிற, எரியாற்றல் தேவையைக் குறும அளவுக்குக் குறைக்கிற இணையத்தை உருவாக்குவதில் உதவிபுரிகிற நிபுணத்துவப் பொறியமைவு.

**heath/zenith** : ஹீத் / ஜெனித் : நுண் கணினி கருவி மற்றும் மின்னணுப் பெட்டிகள் போன்ற பொருள்களை உற்பத்தி செய்பவர்.

**heating elements** : வெப்ப மூட்டும் தனிமங்கள்.

**heat sink** : வெப்ப வடிகால் : சுற்றுப்புறச் சூழலுக்கு வெப்பத்தைச் சிதறும்படி செய்கிற ஒரு மின்கடத்தாப் பொருளுடன்




வெப்ப வடிகால்

அல்லது அதன் பகுதியுடன் இணைக்கப்படும் ஒரு கட்டமைவு. இது பொதுவாக உலோகத்தில் அமைந்திருக்கும்.

**heavy client** : பருத்த கிளையன்.

**hecto** : ஹெக்டோ : எண்ணின் முன்பகுதியில் எப்போதாவது பயன்படுத்துவது. இதன் பொருள் "நூறு".

**height** : உயரம்.

**helical scan** : திருகு சுழல் நுண்ணாய்வு (வருடல்): ஒளிப் பேழை நாடாவிலும், இலக்க முறை ஒலிப்பேழை நாடாவிலும் பயன்படுத்தப்படும் மூலை விட்டத் தடத் தொடர்பு. இது ஒரு போகுமுறைகளில் சேமிப்புத் திறம்பாட்டினை அதிகரிக்கிறது.

**helical wave guide** : சுருள் அலை வழிப்படுத்தி.

**help : உதவி :** பலமுறைகளில் உடனடியாக கிடைக்கக்கூடிய செயல். முறைமை அல்லது நிரல் தொகுப்பு எப்படிச் செயல்படுகிறது என்பதைப்பற்றிய கூடுதல் தரவுகளைப் பயனாளருக்கு வழங்குகிறது. சூழ்நிலைக்கு ஏற்ற வகையில் உதவுகிற விசை என்பதைப் பார்க்கவும்.

**help applet : உதவி குறுநிரல்.**

**help controller : உதவித் தொகுப்பி :** வாசகங்களையும், தொகுப்பி கட்டளைகளையும் ஒரு நேரடி உதவிப் பொறியமைவாக மொழி பெயர்க்கிற மென்பொருள்.

**helper application : உதவிப் பயன்பாடுகள்.**

**help menu : உதவிப்பட்டியல் :** பயனாளருக்கு உதவக்கூடிய தரவுகளை திரையில் நேரடிக் காட்சியாகக் காட்டுதல். மென்பொருள் பற்றிய கேள்விகளுக்கு கட்டளைக் கையேடுகளின் துணையின்றி மென்பொருள் பயன்படுத்துவோர் பதிலளிப்பதற்கு இது உதவுகிறது. தனியொரு விசையை (பெரும்பாலும் F1) அழுத்துவதன் மூலம் உதவிப் பட்டியல்கள் வரவழைக்கப்படுகின்றன.

**henry : ஹென்றி (மின் தூண்டல் அலகு) :** மின் வலிமையை அளப்பதற்கான அலகு. ஒரு ஹென்றி என்பது, ஒரு இணைப்பில் உள்ள மின்சாரத்தினால் ஒரு வோல்ட் மின் இயக்க சக்தியைப் பெறுகிற மின் இணைப்பின் மின் வலிமை ஆகும். அம்மின்சக்தி ஒரு வினாடிக்கு ஒரு ஆம்பியர் என்ற அளவில் மாறுபடுகிறது.

**hercules adapter : ஹெர்குலஸ் தகவமைவு :** ஒரு நிறப்படச் செய்தி அறிவிப்பியில் உயர்ந்த செறிவளவுகளில் வரைகலைகளைக் காட்சியாகக் காட்டுகிற ஒரு மென்பொருள் பொறியமைவு.

**hercules card : ஹெர்குலஸ் அட்டை :** உயர்செறிவளவு ஒளிப்பேழை (செய்தி அறிவிப்பி) கட்டுப்படுத்தி அட்டை. இது பெரும்பாலும், உயர் செறிவளவு ஒரு நிறப்படக் காட்சியில் பயன்படுத்தப்படுகிறது.

**hercules graphics : ஹெர்குலஸ் வரைகலை :** 'ஹெர்குலஸ் கம்ப்யூட்டர் டெக்னாலஜி'' என்ற அமைவனம் சொந்தக் கணினிகளுக்காகத் தயாரித்துள்ள ஒளிப்பேழைக் காட்சித் தர அளவு. இந்த அமைவனம், 720 x 348 படக்கூறுகள் கொண்ட செறிவளவுடன் நிறப்பட வரைகலைகளையும், வாசகங்களையும் தயாரிக்கிறது.

**hermaphroditic : இருபாற்கூறுகளுடைய :** நீட்டப்பகுதியும், செருகு பகுதியும் ஒருங்கே யுடைய இணைப்பி. இது ஆண் பகுதி தனியாகவும், பெண் பகுதி தனியாகவும் உள்ள இணைப்பிகளிலிருந்து வேறுபட்டது.

**hertz : ஹெர்ட்ஸ் (அதிர்வெண் அலகு) :** ஒரு விநாடிக்கான மின்காந்த அலைச் சுற்றுகள் அல்லது சுழற்சிகள். சுருக்கமாக Hz என்று அழைக்கப்படுகிறது.

**heruistic programme : தன் மேம்பாட்டுச் செயல்வரைவு :** ஒரு செயல்முறை ஒவ்வொருமுறை ஓடும்போதும் தன் சொந்தச் செயல்களின் விளைவுகளிலிருந்து கற்றுக் கொண்டு, அடுத்த தடவை தனது பணியை மேம்படுத்துவதற்குத் தக்க மாற்றங்களைச் செய்து கொள்ளும் வகையில் எழுதப்பட்டுள்ள செயல்வரைவு.

**heterogeneous environment : கதம்பச் சூழல் :** பல்வேறு தயாரிப்பாளர்கள் தயாரித்துள்ள சாதனம்.

**heuristic : பட்டறிவு சார்ந்த :** பிரச்சினை ஒன்றுக்கு தீர்வு காண்பதற்கான ஆய்வு வழி. இம்முறையில் இறுதி முடிவுகளை அடைவதற்கான ஒவ்வொரு நடவடிக்கையையும் படிப்படியாக மதிப்பிட்டு தீர்வு எட்டப்படுகிறது. கண்டுபிடிப்பு ஒன்றில் உதவும் பொதுவான அறிவின் பயன்பாடு பற்றியது. Algorithm என்பதற்கு எதிர் நிலையானது.

**heuristic learning : பட்டறிவு வழி கற்றல் :** அனுபவத்திலிருந்து கண்டுபிடிக்கும் வழி. தங்கள் தவறுகளில் இருந்து கணினிகள் கற்றுக்கொள்ளும் வழி. தங்கள் நடவடிக்கைகளில் இருந்து, வெற்றியைத் தராத, பயனைத் தராத நடவடிக்கைகளை நீக்குதல்.

**Hewlett-Packard : ஹீவ்லெட் - பேக் கார்ட் :** கலிபோர்னியாவிலுள்ள மின்னணுவியல் கருவிகள், கணிப்பிகள், கணினிகள் உற்பத்தியாளர்கள். பெயர்ச் சுருக்கம் : HP.

**hexadecimal : பதினாறிலக்க முறை :** "16" - ஐ ஆதாரமாகக் கொண்ட எண்மான முறை. இதனை "அறுபதின் மானம்" (Hexadecimal) என்றும் கூறுவர்.

**hexadecimal notation : பதினாறிலக்கக் குறிமானம் :** பத்துகளுக்குப் பதிலாக பதினாறுகளைக் கொண்ட குறிமானம். இதில், 0 முதல் 9 வரையிலான இலக்கங்கள் பயன்படுத்தப் படுகின்றன. A,B,C,D,E,F, என்ற

எழுத்துகள் 10,11,12,13,14,15 என்ற எண்களைக் குறிக்கின்றன. பதின்மானக் குறிமானத்தில் ஒரு நான்கு இலக்க எண்ணில் ஒவ்வொரு இலக்கமும் ஆயிரங்கள், நூறுகள், பத்துகள், ஒன்றுகள் ஆகியவற்றைக் குறிக்கின்றன. பதினாறிலக்கக் குறிமானத்தில் ஒவ்வொரு இலக்கமும் 4096கள், 256கள், 16கள், ஒன்றுகள் ஆகியவற்றைக் குறிக்கின்றன. இவ்வாறு

A60B = (10 x 163) + (6 x 162) + (0 x 161) + (11 x 160)
= (10 x 4096) + (6 x 256) + (0 x16) + (11 x 1)
= 40960 + 1536 + 0 + 11
= 42507 *(பதின்மானம்)*

கணினிகளில் பதினாறிலக்க முறை பயன்படுத்தப்படுவதற்குக் காரணம், எண்களைச் சேமித்துவைக்கும் முறையாகும். ஈரிலக்க முறையில் 0 முதல் 9 வரையிலான இலக்கங்களைச் சேமிக்க 0000 முதல் 0101 வரையிலான 4 இலக்கங்கள் தேவை. இதனால் நமது இயல்பு எண்களுக்கு நான்கு ஈரிலக்க எண்களைப் பயன்படுத்த வேண்டும். ஆனால் நான்கு ஈரிலக்க இலக்கங்களைக் கொண்டு 0 முதல் 9 வரையில் மட்டுமின்றி 0 முதல் 15 வரையிலும் சேமிக்கலாம். அதாவது, 0000 முதல் 1111 வரைச் சேமிக்க முடியும். எனவே, பதினாறிலக்க முறையில், கணினியிலுள்ள சேமிப்புக் குறியீடுகள், அனைத்தையும் நாம் பயன்படுத்தலாம்.

**hexadecimal number : அறுபதின்ம எண் :** ஒற்றை இலக்கத்துக்கும் கூடுதலான எண். ஒரு மொத்தத் தொகையைக் குறிப்பது. அதில் ஒவ்வொரு எண்ணும் அளவை 16 இன் மூலத்தை அடிப்படையாகக் கொண்டு குறிப்பிடப்படுகிறது. பயன்படுத்தப்படும் எண்கள். 0,1,2,3,4,5,6,7,8,9, A,B,C,D,E & F.

**hexadecimal point : அறுபதின்ம புள்ளி :** அறுபதின்மக் கலவை எண் ஒன்றில் முழு எண்ணையும் பின்னப் பகுதிகளையும் பிரித்துக்காட்டும் மூலப்புள்ளி. அறுபதின்ம எண் 3F மற்றும் 6A7இல் அறுபதின்மப் புள்ளி எண்கள் 'F'-க்கும் 6-க்கும் இடையே உள்ளது.

**HGC plus : ஹெச்ஜிசி பிளஸ் :** ஹெர்க்குலிஸ் கம்ப்யூட்டர் டெக்னாலஜி நிறுவனம் 1986ஆம் ஆண்டு அறிமுகப்படுத்திய 36 ஒளிக்காட்சித் தகவி அட்டை. இதில், 256 எழுத்துகளை 12 எழுத்துருக்களில் இருத்தி வைக்கக் கூடுதலான இடைநிலை நினைவகம் கொண்டது. வரைகலை வடி

விலான எழுத்துருக்களை பெற முடியும்.

**HHOK : ஹெச்ஹெச்ஓகே :** ஹா, ஹா, சும்மா விளையாட்டுக்கு என்று பொருள்படும் Ha, Ha Only Kidding என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். மின்னஞ்சல் மற்றும் நிகழ்நிலை (online) தகவல் தொடர்புகளில் நகைச்சுவையை அல்லது குறும்புத் தனத்தை வெளிப்படுத்த பயன்படுத்தப்படும் சொல்.

**hide : மறை :** ஒரு பயன்பாட்டு மென்பொருள் இயங்கிக் கொண்டிருக்கும் நிலையில் அதன் இயக்கச் சாளரத்தை மறைத்து வைத்தல். இயக்க முறைமையின் ஒரு குறிப்பிட்ட கட்டளையைத் தந்தவுடன் மறைக்கப்பட்ட சாளரம் மீண்டும் தோற்றமளிக்கும்.

**hide column : நெடுக்கை மறை.**

**hide document : ஆவணம் மறை.**

**hidden character : மறைநிலை எழுத்து.**

**hidden codes : மறைநிலைக் குறியீடுகள் :** நேரடித் திரை உருவமைவுச் செயல்முறை மூலம் ஓர் ஆவணத்தில் இணைக்கப்பட்டுள்ள மறைநிலை வாசக உருவமைவுக் குறியீடுகள்.

**hidden file : மறைநிலைக் கோப்பு :** ஒரு கோப்புப் பட்டியலில் பார்வைக்குக் காட்டப்படாத ஒரு கோப்பு. எடுத்துக்காட்டு MS-DOS; VAX DIR ஆணை MS-DOSஇல் IO.SYS, DOS-SYS என்பவை மறைமுகக் கோப்புகள்.

**hidden-line algorithm : மறைகோட்டு படிநிலை நடைமுறை :** வரைபடம் வரைவதில், ஒரு முப்பரிமாணப் பரப்பு வரையப்படும்போது எந்தக் கோடுகள் கண்ணுக்குப் புலனாகக் கூடாது என்பதைத் தீர்மானிக்கப் பயன்படுத்தப்படும் ஒரு படிநிலை நடைமுறை.

**hidden line removal : மறைகோடு நீக்குதல் :** திட முப்பரிமாணம் உடையதாக காட்சிக்கு வைக்கப்பட்ட ஒரு பொருளைக் காணும்பொழுது மறைக்கப்படக்கூடிய கோட்டுப் பகுதிகளை படத்திலிருந்து நீக்குதல். கணினி வரைபட மென்பொருள்களும், வன்பொருள்களும் அத்தகைய மறைந்துள்ள கோடுகளை தானாகவே நீக்கக் கூடிய திறனைப் பெற்றுள்ளன.

**hidden lines : மறைநிலை வரிகள் :** ஒரு முப்பரிமாணப் பொருளை திரையில் காட்டும் போது, பொருளின் பொருண்மையினால் பார்வையாளரின் பார்வையிலிருந்து மறைக்கப்பட்டிருக்கும் வரி. திரையில்

பின்புல வண்ணங்களில் வரையப்படும் கோடுகள். அந்த வண்ணங்கள் மறையும்வரைக் கண்ணுக்குப் புலனாவதில்லை. ஒரு வரைபடத்தில் கண் ணுக்குப் புலனாகாத கோடுகள்.

**hidden objects : மறை பொருள் கள் :** தெளிவான உருக்கொண்ட பொருள் திடப்பொருளாக வைக்கப்பட்டால் அவை மற்ற பொருள்களால் மறைக்கப் படலாம்.

**hidden surface : மறைதளம் :** வரைபடத்தில் முப்பரிமாண திடப்பொருளாகக் காட்டப் பட்டால் பார்வையிலிருந்து மறையக்கூடிய வெளிப்பகுதி அல்லது தளப்பகுதி.

**hide window : சாளரம் மறை.**

**hierarchical : படிநிலை முறை :** ஒரு பெற்றோரின் வாயிலாக மட்டுமே பொருள்கள் அணுகத் தக்கவை என்பதை வலியுறுத் தும் கண்டிப்பான படிநிலை முறை. ஒரு நிறுமத்தில் அமை வன வரைபடம் போன்ற, பல் வேறு படிநிலைகளைக் கொண்ட கட்டமைவு, உயர் மட்ட நிலைகள், கீழ்மட்ட நிலைகள் மீது கட்டுப்பாடு அல் லது ஆதிக்கம் கொண்டிருக்கும். செய்தித்தொடர்புகளில், படி நிலை என்பது, அதனுடன் இணைக்கப்பட்டுள்ள அனைத்து மைய முனைகள் மீதும் கட்டுப் பாடு கொண்டுள்ள தனியொரு கணினியைக் குறிக்கும்.

**hierarchical communication : படி நிலைமுறைச் செய்தித் தொடர்பு கள் :** எல்லா இணைப்புகளை யும் மேலாண்மை செய்யும் பொறுப்புடைய ஒரு தாய்க் கணினியினால் கட்டுப்படுத்தப் படும் இணையம். இது "சரி யிணைச் செய்தித் தொடர்புகள்" (Peer-to Peer Communication) என்பதிலிருந்து மாறுபட்டது.

**hierarchial computer network : படிநிலை கணினிப் பிணையம் :** *1.* ஒரு தலைமைப் புரவன் (Host) கணினி பல சிறிய கணினிகளை மேலாண்மை செய்யும். ஒவ்வொரு சிறிய கணினியும் பல்வேறு பீசி பணிநிலையங் களின் வழங்கனாகச் செயல் படும். இத்தகைய பிணையம் படிநிலைப் பிணையம் எனப் படுகிறது. 2. தரவு செயலாக்கப் பணிகள் பகிர்ந்தளிக்கப்பட்டும், கட்டுப்பாட்டுப் பணிகள் அதி காரப் படிநிலைப்படி ஒழுங் கமைக்கப்பட்டும் இருக்கும் ஒரு பிணையம்.

**hierarchical database : படி நிலைத் தரவுத் தளம் :** பல்வேறு தரவுக் கூறுகளிடையே ஒன்று டன் ஒன்றின் தொடர்புகள், ஒரு

மரத்தின் இலைகளுக்கும் மிலாறுகளுக்கும், கிளைகளுக்கும், பெரிய கிளைகளுக்கும், மரத்தின் தூருக்குமிடையிலானதும், மற்றக் கிளைகளுக்கும் இலைகள், மிலாறுகளுக்கிடையிலானதுமான தொடர்பினை ஒத்திருக்கும் தரவுத் தளம்.

**hierarchical database management system (HDBMS) :** தொடர் வரிசை தரவுத் தள நிர்வாக முறைமை : தலை கீழாகக் கவிழ்க்கப்பட்ட மரம் போல கிளைகளாகவும் ·இலைகளாகவும் தரவு இணைக்கப்பட்ட தரவுத் தளம் ஒன்றை, கணினியில் ஏற்றவும் அணுகவும் கட்டுப் படுத்தவும் உதவுகிற சம்பந்தப் பட்ட நிரலாக்கத் தொகுப்புகளின் குழுமம். Network Database Management System மற்றும் Relational Database Management System-களுக்கு மாறுபட்டது.

**hierarchical data format :** படி நிலைத் தரவு வடிவம்.

**hierarchical file system :** படி நிலைக் கோப்பு முறை : மேலிருந்து கீழான அமைவாக்கக் கட்டமைவில் தரவுகளைச் சேமித்து வைக்கும் கோப்பு. அமைப்பாக்க முறை. செய்திக் குறிப்புகளை அணுகுதல் உச்சியில் தொடங்கி படி நிலைகள் அனைத்து வழியாகவும் செல்கிறது. DOS, OS/2 ஆகியவற்றில் மூலத் தரவு தொடக்க நிலையாகும். மெக்கின்டோஷில் வட்டுப் பலகணி தொடக்க நிலையாகும்.

**hierarchial menu :** படிநிலைப் பட்டி: ஒன்று அல்லது மேற் பட்ட துணைப் பட்டிகளைக் கொண்ட ஒரு பட்டி. துணைப் பட்டி அதன்கீழ் துணைப் பட்டி களைக் கொண்டிருக்கலாம். இதுபோன்ற பட்டி/துணைப் பட்டி அமைப்புக்குப் படி நிலைப் பட்டி எனப் பெயர்.

**hierarchical model :** தொடர் வரிசை மாதிரி : தரவுத் தளம் மாதிரி இதில் ஒவ்வொரு பொருளும் ஒரு மர அமைப்பில் ஒரு குறிப்பிட்ட தொடர் முறையில் அமைந்திருக்கும்.

**hierarchical network :** தொடர் வரிசை இணையம் : கணினி இணையம். இதில் தரவு வகைப் படுத்துதல், கட்டுப்படுத்துதல் ஆகிய பணிகள் ஒவ்வொன்றுக்கும் என சிறப்பாக அமைக்கப் பட்ட கணினியால் நிறை வேற்றப்படுகின்றன.

**hierarchical structure :** தொடர் வரிசை வடிவமைப்பு; படிநிலைக் கட்டமைப்பு : தரவுத் தளம் ஒன்றின் நிர்வாக முறைமை களில், மிகவும் எளிமையான

கோப்பு அமைப்பு முறை, இதில் பல்வேறு நிலைகளில் உள்ள ஆவணங்கள் ஒன்றுக் கொன்று வழங்குகின்றவை யாகவோ, தொடர்புடையவை யாகவோ இருந்தால், இதனை மர அமைவு என்றும் கூறுவர்.

**hierarchy** : **தொடர்முறை; படி நிலை; வழிமுறை** : *1.* ஒரு சூத் திரம் அல்லது அறிக்கை ஒன்றில் எண்களின் செயல்கள் அமைகிற வரிசை முறை. Order of Operations என்பதைப் பார்க்க வும். *2.* அடுக்குவரிசையில் அமைப்பு முறை.

**hierarchy chart : படிநிலை வரை படம்** : ஒரு செயல்முறை தக வமைவுகள் அமைப்பாக்கத் தினை வரைபடமாகச் சித்திரித் தல். இது, பெருந் திட்டமிடு தலிலும், ஆவணமாக்கத்திலும் படுகைகளாகவுள்ள செயல் முறைப் பணிகளை காட்டு கிறது. இதனை மேல்கீழ் வரை படம் என்றும் கூறுவர்.

**hierarchy of operations : செயற் பாடுகளின் படிநிலை** : கணிதச் செயற்பாடுகளை எந்த வரிசை முறையில் நிறைவேற்ற வேண் டும் என்பதைக் காட்டும் விதி களின் தொகுதி.

**hierarchy plus input process output (HIPO) : தொடர் வரிசை மற்றும் உள்ளீட்டு வெளியீட்டு நடைமுறை (ஹிப்போ)** : வடிவ மற்றும் நிரல் தொகுப்பு ஆவண முறை. அது செயல்முறை மற் றும் மூன்று வகையான வரை படங்களில் தரவுகள் வெளி யாவதைக் குறிப்பிடுகிறது. நிர லாக்கத் தொகுப்பு கற்றைகளை யும் அவற்றின் தொடர் வரிசை முறைகளையும் யாதி காட்டுகிற உள்ளடக்கப் பட்டியல். தொடர் வரிசையில் உள்ள உறுப்பினர் களுக்கான உள்ளீட்டு வகைப் படுத்துதல் மற்றும் வழங்கு தலை விவரிக்கிற வரைபடங் கள் மற்றும் விரிவான வரை படங்கள். இவை மேலோட்ட மான வரைபடங்களை குறிப் பான உள்ளீடு, வகைப்படுத்து தல் மற்றும் வெளியீடு விவரங் களை, விளக்கத்துடன் வெளி யிடுகின்றன.

**high bandwidth : உயர்நிலை அலைக்கற்றை; விரிந்த அலைக் கற்றை.**

**High-bit-rate Digital Subscriber Line : உயர்துண்மி வீத இலக்க முறை சந்தாதாரர் தடம்** : தொலை பேசியின் சாதாரண செப்புக் கம்பி மூலமாகவே இலக்க முறைத் தரவு பரப்புக்கான ஒரு நெறிமுறை.

**high byte : மேல் பைட்** : இரண்டு பைட் அல்லது *16*

பிட்களில் ஒரு மதிப்பினைக் குறிக்கும் அமைப்புகளில், 8 முதல் 15 வரையிலான பிட்டு களைக் கொண்ட பைட் மேல் பைட் எனப்படும். 0 முதல் 7 வரையுள்ள பைட் கீழ் பைட் ஆகும்.

**high colour** : உயர் வண்ணம் : 32,768 வண்ணங்களை (15 துண்மிகள்) அல்லது 65,536 வண்ணங்களை (16 துண்மிகள்) உருவாக்கும் திறன். அதிக எண்ணிக்கையிலான வண் ணங்களை உருவாக்கும் திறன்.

**high density** : மிகு அடர்த்தி; உயர் கொள்ளளவு : ஓர் "உயர் அடர்த்தி" நெகிழ்வட்டில், காந்தப் பூச்சின் அளவு (பரப்பு அடர்த்தி) ஒற்றை அல்லது இரட்டை அடர்த்திப் பூச்சினை விட அதிகமாக இருத்தல். இது, வட்டின் சேமிப்புத் திறனை அதிகரிக்கிறது. ஒற்றைப் பக்க 5.25' வட்டு, 160 KB திறனுடை யது; இரட்டைப் பக்க உயர் அடர்த்தி வட்டு (DSHD) 1.2 MB அல்லது 1.6MB திறன் கொண்டது.

**high-end** : உயர்நிலை; உயர் திறன் : செயல்திறனை மேம் படுத்தும் நவீனத் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தும் எந்த ஒன்றையும் இச்சொல்லால் குறிப்பிடுவர். உயர்திறன் தொழில் நுட்பம் எனில் அதிக விலை என்பது நிலவும் சூழ் நிலையாகும்.

**higher level software** : உயர் நிலை மென்பொருள்.

**highlight** : முனைப்பாக்கப் பகுதி : CRTஇல் அமைப்பு, அடிக் கோடு, மறிநிலை ஒளிப்பேழை, செறிவாக்கம் போன்ற உத்திகள் மூலம் ஓர் உருக்காட்சியின் பகுதியை முனைப்பாகக் காட்டுதல்.

**highlight bar** : முனைப்பாக்கச் சட்டம் : ஒரு நேரடித் திரைப் பட்டியலில் மறி நிலை ஒளிப் பேழையில் அல்லது மாறுபட்ட வண்ணத்தில், தற்போதைய தேர்வு/சறுக்கச் சட்டநிலையைக் குறியீடாகக் காட்டுவதற்கான வரி.

**highlight changes** : மாற்றங்கள் முனைப்புறுத்துக.

**highlighting** : முனைப்பாகக் காட்டுதல்: நேரடித் திரைவாசகத் தேர்வு மற்ற வாசகங்களிலிருந்து வேறுபட்டிருக்கும்போது, விசையை நிரல்கள் அல்லது நுண்பொறி மூலமாக அதனை முனைப்பாகக் காட்டுதல். தேர்ந் தெடுக்கப்பட்ட வாசகம், ஏதாவதொரு வழியில் வேறு படுத்திக் காட்டப்படுகிறது. எடுத்துக்காட்டு : வாசகத்தின் வண்ணத்தை மாற்றிக் காட்டுதல்.

**high-level format :** உய்நிலை உருவமைவு; மேல்நிலை உருவமைவு : ஒரு குறிப்பிட்ட செயற்பாட்டு முறைக்குத் தேவைப்படும் தரவுகள் (பொருட் குறிப்பு அகராதிகள், அட்டவணைகள் முதலியன) ஒரு வட்டில் பதிவு செய்யப்பட்டிருத்தல்.

**high-level language :** உயர்நிலை மொழி; மேல்நிலை மொழி : இது ஒரு வகைச் செயல் முறைப்படுத்தும் மொழி. இது, மனித மொழியை அல்லது கணித குறிமானத்தைப் பெரிதும் ஒத்திருக்கிற பேரளவு அறிவுறுத்தங்களையும் கட்டளைகளையும், தீர்க்கப்படவேண்டிய சிக்கல்களை அல்லது பயன்படுத்த வேண்டிய நடைமுறையை விவரிப்பதற்குப் பயன்படுத்துகிறது. இதனைத் தொகுப்பி மொழி, எந்திரம் சாராத செயல்முறைப்படுத்தும் மொழி என்றும் கூறுவர். எடுத்துக்காட்டுகள் : FORT- RAN; BASIC; COBOL; PASCAL; C. இது தாழ்நிலை மொழிகளைப்போல் எந்திரத்தின் கட்டமைவில் கவனம் செலுத்தாமல், தீர்க்கப்பட வேண்டிய சிக்கலின் தருக்க முறையில் கவனம் செலுத்த உதவுகிறது.

**high-level network :** உயர்நிலைப் பிணையம்.

**high level programming language :** உயர்நிலை நிரலாக்க மொழி.

**high memory :** உயர்நிலை நினைவகம்: *1.* நினைவகத்தில் மிக உயர்ந்த திறனளவு. *2.* சொந்தக் கணினிகளில், *640* K-க்கும் *1* M அல்லது *64*k-க்குமிடையிலான பரப்பளவு. *1024*-க்கும் *1088* K-க்கும் இடையிலான HMA பரப்பளவு.

**high memory area :** மேல் நினைவகப் பரப்பு : ஐபிஎம் பீசி மற்றும் ஒத்தியல்புக் கணினிகளில் ஒரு மெகாபைட் எல்லைக்கு அடுத்துள்ள *64* கிலோ பைட்டு பரப்பைக் குறிக்கிறது. டாஸ் *5.0* மற்றும் பிந்தைய பதிப்புகளில் HIMEM.SYS என்னும் நிரல், டாஸ் இயக்க முறைமையின் சில தரவுகளை மேல் நினைவகப் பரப்பில் மாற்றிக் கொள்ளும். இதன் காரணமாய் பயன்பாட்டுத் தொகுப்புகளுக்குக் கிடைக்கும் மரபு நினைவகப் பரப்பின் அளவு அதிகரிக்கும். சுருக்கச் சொல்: ஹெச்எம்ஏ (HMA).

**high order :** உயர்மதிப்பு நிலை : எண் ஒன்றின் கூடுதல் மதிப்பு அல்லது முக்கியத்துவமுடைய இலக்கம் அல்லது இலக்கங்கள் தொடர்பானது. *7643215* என்ற எண்ணில் உயர் ஒழுங்கில் இருப்பது 7. அடி நிலை ஒழுங்கு என்பதற்கு மாறானது. Most Significant Digit என்பதைப் பார்க்க.

**high-order bit : உயர்நிலைத் துண்மி :** ஒரு கணினியின் அடிப் படைச் சேமிப்பு அலகில் (Word) இடது ஓரமாகவுள்ள துணுக்கு.

**high-order column : உயர் ஒழுங்கு நிரை; உயர் மதிப்பு நிரை :** துளையட்டையின் பரப் பில் இடது ஓரத்திலுள்ள நிரை.

**highpass filter : மேல்அலை வடிகட்டி; உயரலை சல்லடை :** தரவு சமிக்கையில் ஒரு குறிப்பிட்ட அலைவரிசைக்கு மேல் உள்ள அலைவரிசைகளை அனுமதிக் கும் ஒரு மின்னணு வடிகட்டி மின்சுற்று.

**High Performance Serial Bus (1394) : உயர் செயல்திறன் நேரியல் பாட்டை:** பீசி மற்றும் மெக்கின்டோஷ் கணினிகளுக் கான நேரியல் பாட்டை இடை முகம். வினாடிக்கு 100, 200, 400 மெகாபிட் தரவு பரிமாற்றம் சாத்தியம். 63 சாதனங்கள் வரை டெய்சிச் சங்கிலி அமைப்பில் இணைக்க முடியும். இவ்வாறு இணைக்கப்படும் சாதனங்கள் இடைமுகத்தின் வழியாக நேரடியாக மின்சாரத்தைப் பெற முடியும்.

**high-persistence phosphor : கூடுதல் பாஸ்பரஸ் பூச்சு :** கண் காணிப்புக் கருவியில் உள்ள திரைகளில் உள்ள பாஸ்பரஸ் பூச்சு, இயல்பான தொலைக் காட்சித் திரைகளில் உள்ள பூச்சு களைவிடக் கூடுதலான நேரத் துக்கு உருவங்களை நிலைக்கச் செய்யக்கூடியது.

**high pitch : உயர் தொனி.**

**high punch : உயர்துளை :** பன்னிரு துளை அல்லது ஒய் (Y) துளை போன்றது.

**high resolution : உயர்நுணுக்கத் தெளிவு; மிகைத் தெளிவு; அதி நுட்ப வரைமுறை :** வெளியிடப் படும் விவரங்கள், துல்லியம் ஆகியவற்றின் அடிப்படையிலான தரம் தொடர்பானது. ஒரு பட வரைவு ஒன்றுக்குள் எத்தனை உரு உணர்த்தும் அலகுகள் உள் ளன என்பதைப் பொறுத்து படத்தின் தரம் அமைகிறது. படம் உணர்த்தும் அலகுகளின் எண்ணிக்கை எவ்வளவு அதிகம் உள்ளதோ அத்தனைக்கு உயர் நுணுக்க விவரம் கூடுதலாக அமையும். உயர் துணுக்க விவரம் கூடுதலான படங்கள் உயர் துணுக்க விவரம் குறைந்த படங் களைவிட தெளிவாக அமையும்.

**high resolution graphics : உயர் செறிவு வரைகலை; அதிநுட்ப வரைமுறை கலை :** பெரும் பாலான நுண் கணினிகள், புள்ளிகளையும், கோடுகளையும் செயல்முறை மூலம் வரைவதற் குரிய ஒருவகை வரைகலை

முறைகளை அளிக்கின்றன. வரைகலைத் திரை, 'x' கிடைமட்ட அச்சு, 'y' செங்குத்து அச்சு என்று பகுக்கப்பட்டிருக்கும். பரப்பளவு முழுவதும் படக்கூறுகளால் அமைந்திருக்கும். ஏறத்தாழ 640 x 480 படக்கூறுகள் உயர் செறிவு என்றும் 320 x 240 படக்கூறுகள் தாழ்செறிவு என்றும் கருதப்படுகின்றன. அச்சடிப்பிக்கு அல்லது வரைவிக்கு படக்கூறு தரவுகளை அனுப்புவதற்கும், திரையில் படிப்பதற்கும் தனிவகை வரைகலைச் செறிவுகள் தேவை.

**high sierra : உயர் சியரா :** முதலாவது CD-ROM தர அளவு. டாஹூ ஏரியின் அருகிலுள்ள ஒரு பரப்புக்காக 1985-இல் இது வகுக்கப்பட்டது. அந்தப் பகுதியின் பெயரே இதற்குச் சூட்டப்பட்டது. பின்னர், இது ISO 9660 தர அளவாக உருவாக்கப்பட்டது.

**high sierra group : உயர் சியரா குழுமம் :** CD-ROMஇல் தரவு சேமிப்பதற்கான தர அளவு. இது, அமெரிக்காவில் நெவடாவில் டாஹூ ஏரி அருகிலுள்ள உயர் சியரா உணவகத்தில் 1985-இல் நடைபெற்ற தொழில் துறைச் சார்பாளர்களின் கூட்டத்தில் வகுக்கப்பட்டது. இப்போது, இது CD-ROMஇன் ஒரு பகுதியாகும்.

**High Sierra Specification : உயர்நிலை சியாரா வரன்முறை :** ஒரு குறுவட்டில் பதியப்படும் தருக்கக் கட்டமைப்பு, கோப்புக் கட்டமைப்பு மற்றும் ஏட்டுக் கட்டமைப்பு ஆகியவற்றின் தொழில்முறை வடிவாக்க வரையறைகள். 1985 நவம்பரில் டாஹோ ஏரிக்கு அருகிலுள்ள சியாரா என்னுமிடத்தில் நடைபெற்ற குறுவட்டு தொடர்பான கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவுகள் என்பதால் இப்பெயர் ஏற்பட்டது. ஐஎஸ்ஓ 9660 பன்னாட்டுத் தரக்கட்டுப்பாட்டுக்கான அடிப்படையாக விளங்கியது.

**high speed networks : உயர்வேக கணினி இணையங்கள் :** வினாடிக்கு இரண்டு கோடி துண்மிகளுக்கு (MBps) மேற்பட்ட வேகத்தில் அனுப்பீடு செய்யக்கூடிய வளாகக் கணினி இணையங்கள் (LAN).

**high speed printer : மிகைவேக அச்சிடு கருவி; அதிவேக அச்சுப் பொறி :** ஒரு நிமிடத்தில் 300 முதல் 3,000 வரிகள் அச்சிடக் கூடிய கருவி. Line printer என்பதைப் பார்க்கவும்.

**high storage : உயர்சேமிப்புத் திறன் :** கணினி ஒன்றின் நினைவக மேல் முகவரி வரிசை.

பெரும்பாலான எந்திரங்களில் அதில் இயக்க முறைமை அமைந்திருக்கும்.

**high tech** : உயர்தொழில் நுட்பம் : கணினிகளிலும், மின்னணு வியலிலும், சமூக-அரசியல் சூழல்களிலும் மிக அண்மை யில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங் களையும், நவீன எந்திரங் களினால் ஏற்பட்டுள்ள விளைவு களையும் குறிக்கும் சொல்.

**hightech city** : மாநுட்ப நகரம்; பெரும் தொழில்நுட்ப நகரம். இந்தியாவில் ஆந்திர மாநிலம் ஹைதராபாத் நகருக்கு அருகில் புறநகராக உருவாகியுள்ள ஒரு பகுதி இவ்வாறு அழைக்கப்படு கிறது. ஏராளமான கணினி நிறுவனங்கள் அங்குள்ளன.

**high volatillity** : உயர் மாறுதிறன்; வேக அழிவு : கோப்பு ஒன்றில் குறிப்பிட்ட நேரத்தில் ஏற்படும் உயர்வேக மாறுதல்கள்.

**high voltage** : உயர்மின்னழுத் தம்; அதிக மின்னழுத்தம்.

**highway** : பெருவழி; நெடுந் தடம் : ஒரு கணினியமைவில், நினைவகம், பிற புறநிலைச் சாதனங்கள் ஆகியவற்றுக்கும், அவற்றிலிருந்தும் உட்பாட்டு/ வெளிப்பாட்டு மாற்றங்களைக் கையாள்வதற்கான குறியீடு களைக் கொண்ட வழி.

**hints** : நினைவுக் குறிப்புகள் : அச்செழுத்து வடிவளவின், குறிப்பாகச் சிறிய முகப்பு அளவுகளின் அடிப்படையில் இடைவெளியையும் மற்ற முகப்பு அம்சங்களையும் மாற் றும்படி உருவமைப்புச் சாதனத் திற்கு அறிவுறுத்துகிற பின் குறிப்பு எழுத்து முகப்புகளுக் கான தனிவகைக் கூடுதல் சேர்மானங்கள்.

**HIPO** : Hierarchy Plus Input-Output Process என்பதன் குறும்பெயர்.

**HIPPI** : ஹிப்பி : உயர் செயல் திறன் இணைநிலை இடை முகம் என்று பொருள்படும் High Performance Parallel Interface என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். மீத் திறன் (super) கணினிகளில் பயன்படுத்தக்கூடிய அன்சி தகவல் தொடர்பு தர வரையறை.

**hi-res graphics** : : High resolution graphics என்பதன் குறும்பெயர். நெருடலற்ற உண்மையானது போன்று வெளியீட்டுத் திரை யில் தோன்றும் படம். ஏராள மான பட உருவாக்கக் கூறு களால் உருவாக்கப்படுகிறது. Low-res graphics என்பதற்கு மாறானது.

**HIS** : : Hospital Information System என்பதற்கான குறும்பெயர்.

மருத்துவமனைத் தகவல் முறைமைக்கான ஆங்கிலக் குறும்பெயர்.

**histogram : பட்டை வரைபடம் :** செங்குத்தான குறுக்குப் பட்டியல் புள்ளி விவரத் தகவல்களை வரைபடமாக வழங்க அடிக்கடி பயன்படுத்தப்படுகிறது. செங்குத்துக் களங்களுக்கான அகலம், இடைவெளி அளவு கூட்டெண்ணிக்கை ஆகியவற்றைக் குறிப்பிடுகிறது.

**history : வரலாறு :** கணினியில் ஒரு மென்பொருளில் பயனாளர் மேற்கொள்ளும் தொடர்ச்சியான பணிகளின் பட்டியல். (எ-டு) 1. இயக்க முறைமையில் உள்ளீடு செய்யும் கட்டளைகளின் தொகுப்பு. 2. கோஃபர் கணினிகளில் ஒன்றன்பின் ஒன்றாய்க் கடந்துவரும் பட்டித் தேர்வுகள் (menu options). 3. இணைய உலாவியில் அடுத்தடுத்து தொடர்ந்து வந்த தொடுப்புகள். (links).

**history list : வரலாற்றுப் பட்டியல்.**

**history settings : வரலாற்று அமைப்புகள்.**

**hit : கிடைத்தல் :** இரண்டு வகையான தரவுகளை வெற்றிகரமாக ஒப்பிடல்; இணைகளை ஒப்பிடல்.

**hi-tech : உயர்-தொழில்நுட்பம் :** உயர் தொழில் நுட்பம் என்பதன் சுருக்கப் பெயர். அண்மைக் காலத் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தும் எல்லா வகை வன்பொருள்களையும் இது குறிக்கிறது.

**hit rate : மறைவிட நினைவக விழுக்காடு :** இது மறைவிட நினைவக மேலாண்மை தொடர்புடையது. மையச் செயலகத்துக்கு (CPU) தேவைப்படும் மறைவிட நினைவக விழுக்காட்டினை இது குறிக்கிறது. பெரும்பாலான மறைவிடக் கட்டுப்பாட்டாளர்கள் 90% வீதத்தை விரும்புவார்கள்.

**hit ratio : வெற்றி விகிதம் :** முதன்மை நினைவகத்தில் தரவுகள் எத்தனை முறை வெற்றிகரமாக இட அமைவு செய்யப்பட்டிருக்கின்றன என்பதற்கும், ஒரு குறிப்பிட்ட கால அளவின் போது மேற்கொண்ட முயற்சிகளின் மொத்த எண்ணிக்கைக்குமிடையிலான விகிதம்.

**.hk : .ஹெச்கே :** ஓர் இணைய தள முகவரி ஹாங்காங்கைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**.hn : .ஹெச்என் :** ஓர் இணைய தளம் ஹொண்டுராஸ் நாட்டைச்

சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவு களப் பெயர்.

**Hoff.Ted : ஹோஃப் டெட் :** 1971இல் இன்டர் கார்ப்பரேஷன் நிறுவனத்தின் பொறியாளரான ம்ஹாஃப் முதல் குறும் நுண் செயலியை (4004) வடிவமைத் தார். அந்த ஒற்றைச் சில்லில் 2250 டிரான்ஸ்சிஸ்டர்கள் இருந் தன. ஒரு முழு மையச் செயலி யின் எல்லாக் கருவிகளும் இருந் தன. இந்த குறும்சில் கணினித் தொழிலையும் அதன் விநியோ கிப்பாளர்களையும் கணினியின் எதிர்காலப் பங்கு குறித்து சிந்திக்க வைத்தது.

**hog : பன்றிப் பண்பு :** முதன்மை நினைவகம் போன்ற கிடைக்கக் கூடிய ஆதாரங்களை மிகப் பெருமளவில் அல்லது தன்னந் தனியாகப் பயன்படுத்துகிற ஒரு செயல்முறை.

**hold : பிடித்திரு.**

**holding time : பிடிமான நேரம் :** ஒரு செய்தியை அனுப்புவதற்கு ஒரு செய்தித் தொடர்புச் சாதனம் பயன்படுத்தப்படும் காலஅளவு.

**hold variable : பிடிமான மாறிலி :** ஒரு மதிப்பளவினை இருத்தி வைத்துக் கொள்வதற்குப் பயன் படுத்தப்படும் ஒரு மாறிலி. எடுத்துக்காட்டு : கட்டுப் பாட்டுப் இடைமுறிவுத் தருக்க முறைக்காக முந்திய பதிவேட்டி லிருந்து மதிப்பளவினை இருத்தி வைத்தல்.

**holes, procket : வழிப்படுத்து துளைகள்.**

**Hollerith card : ஹோலரித் அட்டை :** 80 செங்குத்து நிரை களைக் கொண்ட துளையிடப் பட்ட அட்டை. ஒவ்வொன்றும் மேலிருந்து கீழாக 12 துளையிடு நிலைகளைக் கொண்டது. 80 எழுத்து, எண் தரவுகளை ஏற்கக் கூடியது. 90 செங்குத்து நிரைகள் மற்றும் 96 செங்குத்து நிரை களைக் கொண்ட அட்டைக்கு மாறானது.

**Hollerith code : ஹோலிரித் குறி யீடு :** துளையிடப்பட்ட அட்டை களில் எழுத்து மற்றும் எண் ணைக் குறிக்கப் பயன்படுத்தப் படும் ஒரு வகையான குறியீடு. ஹெர்மன் ஹோலிரித் என்பவ ரால் பெயரிடப்பட்டது. இவர் தான் துளையிடப்பட்ட அட்டை கணக்கீட்டு முறையை உருவாக் கியவர். ஒவ்வொரு அட்டை நிரையும் ஒரு எழுத்தைக் கொண்டது. ஒவ்வொரு பதின்ம எண்ணும் எழுத்தும், சிறப்பு எழுத்துகளும், ஒன்று இரண்டு, மூன்று துளைகளால் குறிப்பிடப் படுகின்றன. இவை நிரையின்

குறிப்பிட்ட வரிசை நிரல்களில் அமைக்கப்படுகின்றன.

**Hollerith, Herman (1860-1929) : ஹோலரித். ஹெர்மன் (1860-1929) :** புள்ளி விவர வல்லுநர் மற்றும் மக்கள் தொகைக் கணக்கெடுப்பு ஊழியர் என்ற வகையில், *1890*ஆம் ஆண்டு கணக்கெடுப்பின்போது எளிமையான கூட்டல் மற்றும் வகைப்படுத்துதலுக்கு மின் எந்திரவியல் கருவிகள் மூலம் துளையிடப்பட்ட அட்டைகளைப் பயன்படுத்தும் முறையைப் பரிந்துரைத்தார். அவருடைய துளையிடப்பட்ட அட்டை கணக்கிடு கருவியை உற்பத்தி செய்ய அவர் அமைத்த நிறுவனம் ஐ.பி.எம். கார்ப்பரேஷன் நிறுவனத்தின் முன்னோடி ஆனது.

**Hollerith machine : ஹோலரித் எந்திரம் :** முதலாவது தானியங்கித் தரவு பகுக்கும் சாதனம். இது *1890*இல் அமெரிக்காவில் மக்கள் தொகைக் கணக்கெடுப்புக்குப் பயன்படுத்தப்பட்டது. இதனை ஹெர்மன் ஹோலரித் என்பவர் கண்டுபிடித்தார். இது, கையினால் துளையிடும் அட்டையினையும், எண்ணுவதற்கு ஓர் அட்டவணைப்படுத்தும் எந்திரத்தையும் பயன்படுத்தியது. *1890*இல் *10* ஆண்டுகளில் செய்திருக்கக்கூடிய பணியை, ஹோலரித் எந்திரத்தின் மூலம் ஈராண்டுகளில் முடிக்க முடிந்தது. இதனால், *50* இலட்சம் டாலர் மிச்சமாகியது. ஹோலரித் பின்னர் ஒரு நிறுவனத்தைத் தொடங்கி தமது எந்திரத்தை உலகெங்கும் விற்பனை செய்தார். இந்நிறுவனம் *1911* இல் IBM நிறுவனமாக உருமாறியது.

**Hollerith tabulating/recording machine: ஹோலரித் அட்டவணையிடும்/பதிவுசெய்யும் எந்திரம் :** *1800*களின் பிற்பகுதியில் ஹெர்மன் ஹோலரித் கண்டுபிடித்த மின் எந்திரப் பொறி. குறிப்பிட்ட இடங்களில் துளையிடப்பட்ட அட்டைகளில் பதியப்பட்ட தரவுகளைச் செயலாக்கும் எந்திரம். துளைகளின் மூலமாக மின்சுற்று நிறைவடைந்து சமிக்கைகள் உருவாக்கப்பட்டு எண்ணுகின்ற மற்றும் அட்டவணையிடும் எந்திரங்களுக்கு அனுப்பி வைக்கப்படுகிறது. இந்த எந்திரம் *1890*-ஆம் ஆண்டு அமெரிக்காவில் எடுக்கப்பட்ட மக்கள் தொகைக் கணக்கெடுப்புப் பணிகளை மூன்றில் இரண்டு பங்கு குறைத்தது. பின்னாளில் ஹோலரித், டேபுலேட்டிங் மெஷின் கம்பெனியைத் தொடங்கினார். *1911*ஆம் ஆண்டு இந்தக்

குழுமம் இன்டர் நேஷனல் பிஸினஸ் மெஷின்ஸ் (IBM) என்னும் புகழ்பெற்ற நிறுவனமாக உருவெடுத்தது.

**hologram : முழுமைப் படிவம் :** லேசர் கதிர்கள் ஒன்றுடன் ஒன்று வெட்டிக் கொள்வதால் மெல்லிய காற்றில் உருவாக்கப்படும் முப்பரிமாண உருவங்கள்.

**holographic : முழுமைப் படிமச் சேமிப்பு :** ஒரு படச்சுருளில் பெருமளவுத் தரவுகளைச் சேமித்து வைத்தல்.

**holographic store : முழுப் படிமச் சேமிப்பி :** ஒளிப்பட முறையில் சேமித்து வைத்தல்.

**holography : முழுமைப் படிமவியல் :** ஒரு சேமிப்பு ஊடகத்தில் பன்முகப் பரிமாண ஒளிப் படங்கள் எடுப்பதன்மூலம் தரவுகளைச் சேமித்துவைக்கும் உத்தி.

**holy war : புனிதப் போர் :** 1. கணினித் துறையில் ஒரு குறிப்பிட்ட கருத்துரு அல்லது கோட்பாடு பற்றி கணினி வல்லுநர்களிடையே பரவலாக நடைபெறும் கசப்பான விவாதம். (எ-டு) நிரலாக்க மொழிகளில் பயன்படும் goto கட்டளை பற்றியது அல்லது எண்களை இரும எண் முறையில் (Binary format) சிறு முடிவன்/பெரு முடிவன் முறையில் பதியும் முறை பற்றியது. 2. அஞ்சல் பட்டியல், செய்திக்குழு மற்றும் ஏனைய நிகழ்நிலைக் கலந்துரையாடல்களில் உணர்வுபூர்வமான சர்ச்சைக்கிடமான பொருள் பற்றி நடைபெறும் விவாதம். (எ-டு) பாபர் மசூதி, வட அயர்லாந்து, கருக்கலைப்பு, கருணைக் கொலை போன்றவை. எடுத்துக் கொண்ட தலைப்புக்குப் புறம்பாகப் புனிதப் போருக்கு வழி வகுக்குமாறு கருத்துகளை முன் வைப்பது இணைய நாகரிகத்துக்கு (Netiguette) எதிரானது.

**home : இல்லம்; தொடக்கம்:** முனையத் திரை ஒன்றின் இடது புற மேல் மூலையில் உணர்த்து குறியீடு தோன்றும் துவக்க இடம்.

**home address : இருப்பிட முகவரி :** பன்முக வட்டு நினைவகத்தின் நேர்வுகளில், ஒவ்வொரு தடத்திலும் சேமித்து வைக்கப்பட்டுள்ள ஒரு புலம், இதில், அந்தத் தடத்திலுள்ள தரவுவை அணுகுவதற்குப் பயன்படுத்தப்படும் எழுத்து/படிப்பு முனைகளின் எண்ணும், நீள் உருளையின் எண்ணும் அடங்கியிருக்கும்.

**home button : பிறப்பகக் குமிழ் :** ஒரு கோப்பின் அல்லது ஒரு செயற்பாட்டுத் தொகுதியின் தொடக்கத்தைக் குறிக்கும் உருவப்படம்.

**home computer : குறுங்கணினி :** ஆட்டங்களை விளையாட இல்லங்களில் பயன்படுத்தப்படுகிறது. வீட்டுப் பயன்பாட்டுச் சாதனங்களைக் கையாளவும், மாணவர்களுக்கு வீட்டுப் பாடங்களைச் செய்யவும் வணிகக் கணக்குகளைப் போடவும் மேலும் பலவகையான பணிகளைச் செய்யவும் பயன்படுகிறது.

**home-grown software : தாமே ஆக்கிய மென்பொருள் :** கணினி முறைமை ஒன்றைப் பயன்படுத்துவோரால் எழுதப்பட்ட நிரலாக்கத்தொகுப்பு.

**home key : ஆரம்பச் சாவி :** உணர்த்து குறியீட்டைத் தனது இல்ல நிலைத் திரையின் இடது மேல்மூலைக்குக் கொண்டு வருவதற்கான விசைப்பலகை இயக்கம்.

**homeostasis : சமநிலை :** ஒரு பொறியமைவில் உட்பாட்டு -வெளிப்பாட்டுத் தேவைகள் சரி நிகராக இருக்கும்போது ஏற்படும் சமநிலை.

**home management software : இல்ல மேலாண் மென்பொருள் :** வீட்டைப் பராமரிக்கவும், திட்டமிட்ட வகையில் கண்காணிக்கவும் தயாரிக்கப்பட்ட நிரலாக்கத் தொகுப்பு. எடுத்துக்காட்டாக சரிபார்த்தல், உணவுக் கோப்பு, இருப்புச் சரிபார்த்தல், கணக்கிடு நிரலாக்கத் தொகுப்பு ஆகியவற்றைக் கொண்டது.

**home office : இல்ல அலுவலகம்; வீட்டு அலுவலகம் :** *1.* வீட்டிலேயே அமைத்துக் கொள்ளும் அலுவலகம். 2. ஒரு நிறுவனத்தின் தலைமை அலுவலகம். 3. ஓர் அலுவலகத்துக்குத் தேவையான அனைத்து வகை வசதிகளும் உள்ளடங்கிய கணினியைக் குறிக்கவும் இச்சொல் பயன்படுகிறது.

**home page : முகப்புப் பக்கம் :** *1.* வைய விரி வலையில் (World Wide Web) ஒரு மீவுரை (hypertext) முறைமையில் தொடக்கப் பக்கமாக அமைக்கப்படும் ஓர் ஆவணம். 2. மைக்ரோ சாஃப்டின் இன்டர்நெட் எக்ஸ்புளோரரில் தொடக்கப் பக்கம் இவ்வாறு அழைக்கப்படுகிறது. 3. ஒரு வலைத்தளத்தில் நுழையும் போது காட்சியளிக்கும் முதல் பக்கம்.

**home record : இல்ல ஆவணம் :** நிறுவனம் ஒன்றின் இணைப்பு முறையில் உள்ள ஆவணத் தொடரில் முதல் ஆவணம்.

**home row : இல்ல வரிசை :** விசைகளை இயக்குவதற்கு இடையில் பயனாளர் தங்கள்

விரல்களை ஒய்வாக வைக்கும் விசை வரிசை.

**home server** : முதன்மை வழங்கன்.

**homogeneous** : ஒரு படித்தான; ஒரு முகப்பட்ட.

**homogeneous environment** : ஒரு படித்தான சூழல் : ஒரு நிறுவனத்துக்குள் ஒரே தயாரிப்பாளரின் வன்பொருளையும் ஒரே தயாரிப்பாளரின் மென்பொருள்களையும் பயன்படுத்துகின்ற ஒரு மென்பொருளாக்கச் சூழல்.

**homogeneous network** : ஒரு படித்தான பிணையம் : அனைத்து வழங்கன் கணினிகளும் ஒன்றுபோல இருந்து, ஒரேயொரு நெறிமுறையில் (protocol) இயங்குகின்ற கணினிப் பிணையம்.

**homunculus** : மூளையியக்கப் படிவம் : எண்ணற்ற, மீள் வளைவுகளைக் கொண்ட மூளையின் மாதிரி. செயற்கை நுண்ணறிவு ஆய்வுகளில் பயன்படுத்தப்படுவது.

**Honeywell** : ஹானிவெல் : கணினி கருவிகளைத் தயாரிக்கும் பெரிய நிறுவனம்.

**hook** : கொக்கி : செயல் வரைவுகளில், எதிர்கால விரிவாக்கத்திற்கான தருக்க முறை இடையீடுகள். இந்தக் கொக்கிகளை ஒரு சில புறவாலாயங்களை அல்லது செயற்கூறு வரவழைக்க மாற்றலாம். அல்லது கூடுதல் செயல் விரைவுகள் சேர்க்கப்படும் போது சரியான இடத்தில் அமைக்கலாம்.

**hooked vector** : கொக்கியிட்ட அளவுச் சரம் : ஒரு சொந்தக் கணினியிலுள்ள (PC) அகப்படுத்தப்பட்ட இடையீடு. இடையீட்டு அளவுச் சர அட்டவணையில் ஒரு குறிப்பிட்ட இடையீட்டுக்கான சுட்டுமுனை, அந்த இடையீட்டினைச் சீர் செய்வதற்காக ஒரு புதிய வாலாயத்திற்குத் தாவு மாறு மாற்றமைவு செய்யப்படுகிறது.

**hookemware** : தடையற்ற மென்பொருள் : மென்பொருளின் அதிக விரிவான பதிப்பினை வாங்குவதற்குப் பயனாளரை ஈர்ப்பதற்காக வடிவமைக்கப்பட்டுள்ள குறிப்பிட்ட எண்ணிக்கையிலான அம்சங்களைக் கொண்ட தங்குதடையற்ற மென்பொருள்.

**hopper** : தத்தி.

**hopper, card** : அட்டைத் தத்தி.

**Hopper, Grace** : ஹோப்பர் கிராஸ் : கணித வல்லுநர், மார்க் -1 மற்றும் யுனிவாக் கணினிகளுக்கான நிரலாக்கத்

தொகுப்பை உருவாக்கியவர். பின்னர் கணினி மொழியில் பேரும் புகழும் பெற்றார். முதல் நடைமுறையில் பயன் படும் compiler நிரலாக்கத் தொகுப்பை உருவாக்கினார். Cobol-ஐ உருவாக்குவதில் முக்கிய பங்கு வகித்தார்.

**horizontal feed : கிடைமட்ட ஊட்டு.**

**horizontal frequency : கிடை மட்ட அலைவரிசை.**

**horizontal market software : கிடைமட்டச் சந்தை மென் பொருள் :** அனைத்து வகையான தொழில், வணிக நடைவடிக் கைகளுக்கும் பயன்படுத்தக் கூடிய சொல்செயலி (Word Processor) போன்ற பயன் பாட்டு நிரல்கள். வேறுசில மென்பொருள்கள் குறிப்பிட்ட தொழில் துறைக்கு மட்டுமே பயன்படும்படி தயாரிக்கப் படுகின்றன.

**horizontal motion index : கிடை மட்ட இயக்கக் குறி; கிடைமட்ட இயக்கக் குறி அட்டவணை :** ஒரு கிடைமட்டத் திசையில் ஓர் அச்சுச் சுருள் முனை முன்னே நகர்த்தக்கூடிய பெருமத் தொலைவு. இது அச்சடிப்பான் சுழற்சியின் அளவீடாகும். பெயர்ச் சுருக்கம் : HMI.

**horizontal resolution : கிடை மட்டத் தெளிவு :** ஒரு கிடை மட்டக் கோட்டின் மீதுள்ள கூறு களின், அல்லது புள்ளிக் குறி களின் (ஒரு அச்சு வார்ப்புரு விலுள்ள நிரைகளின்) எண் ணிக்கை. இது, செங்குத்துத் தெளிவிலிருந்து மாறுபட்டது.

**horizontal retrace : கிடைமட்ட பின் வாங்கல் :** பரவல் வருடு ஒளிக்காட்சி திரைக்காட்சியில் ஒரு வருடுவரியின் வலது ஓரத்திலிருந்து அடுத்த வரியின் இடப்புற ஓரம்வரை (வரியின் தொடக்கம்வரை) மின்னணு ஒளிக்கற்றை நகர்வது.

**horizontal scan frequency : கிடை நுண்ணாய்வு அலை வெண் :** ஒளிப்பேழைத் திரை யில் ஒரு வினாடி நேரத்தில் ஒளிர்வூட்டப்படும் வரிகளின் எண்ணிக்கை. எடுத்துக்காட்டு : வினாடிக்கு 60 மடங்கு வலு வூட்டப்பட்ட 400 வரிகளின் தெளிவுக்கு 24KHz நுண்ணாய்வு விகிதம் தேவைப்படுகிறது. இது, தொலைக்காட்சியில் கிடைமட்ட ஒருங்கிசைவு அலைவெண் போன்றது. இது செங்குத்து நுண்ணாய்வு அலை வெண்ணிலிருந்து மாறுபட்டது.

**horizontal scan rate : கிடை மட்ட வருடி வேகம்.**

**horizontal scrolling : இட, வல நகர்த்தல்; கிடைமட்ட நகர்த்தல் :** திரையில் ஒரு நேரத்தில் கொள் ளும் தகவல்களைவிட கூடுதலான தகவல்களைப் பயனாளர் காணும் வகையில் கிடைநிலை தகவல் களை அல்லது உரையை நகர்த்துதல்.

**horizontal synchronization : கிடைமட்ட ஒத்திசைவு :** பரவல் திரைக்காட்சி (Raster display) முறையில் மின்னணுக் கற்றை இடப்புறமிருந்து வலப்புறம், மறுபடி வலப்புறமிருந்து இடப் புறம் நகர்ந்து வரிவரியாக ஓர் உருத்தோற்றத்தை உருவாக்கு வதில் பின்பற்றப்படும் நேரக் கட்டுப்பாடு. கோணம் நிலைத்த மடக்கி (phase locked loop) எனப்படும் மின்சுற்று கிடை மட்ட ஒத்திசைவு சமிக்கையைக் கட்டுப்படுத்துகிறது.

**host : ஓம்புநர்; புரவலர் :** ஓர் இணையத்திலுள்ள ஒரு நுழைவாயில் கணினி. ஒரு விருந்தில் விருந்தளிப்பவரை யும் குறிக்கிறது.

**host adapter : ஓம்பு தக வமைப்பி :** எந்த வடிவளவை யும் கொண்ட ஒரு கணினியுடன் ஒரு புறநிலை அலகினை இணைக்கிற சாதனம். இதில் ஒரு கட்டுப்படுத்தியைவிடக் குறைவான மின்னணுவியல் அடங்கியுள்ளது. எடுத்துக் காட்டு : IDE வட்டு, உள்ள மைந்த கட்டுப்படுத்தியைக் கொண்டிருக்கிறது. இது, ஒரு IDE அல்லாத ஆயத்தத் தாய்ப் பலகையுடன் ஒரு IDE ஒப்பு தகவமைப்பியின் மூலம் இணைக்கப்பட்டிருக்கிறது.

**host based : ஓம்புநர் அடிப்படை :** ஒரு பெரிய, மையக் கணினி யமைவு மூலம் கட்டுப்படுத்தப் படுகிற செய்தித் தொடர்புப் பொறியமைவு.

**host computer : புரவலர் கணினி; ஓம்பு கணினி :** *1.* தொலைவில் முனையங்களுக்கும் அதனுடன் இணைக்கப்பட்டுள்ள கருவி களுக்கும் கணினித் திறனை வழங்குகிற மைய வகைப்படுத் தும் அலகு. *2.* தொலைத் தகவல் தொடர்புக்கு அல்லது வளாக இணைய இணைப்புக்குப் பொறுப்பான கணினி. *3.* கணினி இணையம் ஒன்றில் மையக் கட்டுப்பாட்டுக் கணினி.

**host language : புரவலர் மொழி; ஓம்பு மொழி:** மற்றொரு மொழி பொதிந்துள்ள அல்லது உள் ளடங்கிய நிரலாக்கத் தொகுப்பு மொழி.

**host mode : ஓம்பு முறை :** மனிதர் உதவியின்றி வருகிற தொலைபேசி அழைப்புக்குப்

பதிலளிக்கவும், தகவல்களைப் பெறவும் ஒரு கணினியை அனு மதிக்கிற செய்தித் தொடர்பு முறை.

**host name : புரவன் பெயர்; புரவலர் பெயர்; ஓம்புநர் பெயர் :** இணையத்திற்குள் இயங்கும் ஒரு குறிப்பிட்ட பிணையத் திலுள்ள ஒரு குறிப்பிட்ட வழங் கன் கணினியின் (Server) பெயர். ஓர் இணைய தள முகவரி யிலுள்ள சொற்களில் இடக் கோடியில் உள்ள பெயர் பெரும் பாலும் அத்தளத்துக்குரிய புரவன் கணினிப் பெயராய் இருக்கும். (எ-டு) chn.vsnl.net.in என்ற முகவரியில் chn என்பது, விஎஸ்என்எல் நிறுவனத்துப் புரவன் கணினிப் பெயர்.

**host timed out : புரவன் நேரக் கடப்பு:** ஒரு டீசிபீ/ஐபீ (TCP/IP) பிணைய இணைப்பில் தரவு பரி மாற்றம் நடைபெறும்போது, ஒரு குறிப்பிட்ட நேர எல்லைக் குள் (சில நிமிடங்கள்) தொலை நிலைப் புரவன் கணினி பதி லிறுக்கத் தவறுகையில் ஏற் படும் பிழைநிலை. இந்நிலை பல்வேறு காரணங்களினால் ஏற்படலாம். புரவன் கணினி செயலிழந்து போவதால் அல்லது பிணையத்திலிருந்து துண்டிக்கப்பட்டிருப்பதால் ஏற் படலாம். ஆனால் பயனாள ருக்குக் கிடைக்கும் பிழை சுட்டும் செய்தி, பிழைநிலைக் காரணத்தைத் துல்லியமாகச் சொல்லும் என்று எதிர்பார்க்க முடியாது.

**host unreachable : புரவன் எட்டா நிலை :** ஒரு டீசிபீ/ஐபீ (TCP/IP) பிணைய இணைப்பில் பயனாளர் அணுக விரும்பும் குறிப்பிட்ட புரவன் கணினி யுடன் இணைப்பு ஏற்படுத்திக் கொள்ள முடியாதபோது நிகழும் பிழைநிலை. பிணையத் திலிருந்து துணிக்கப்பட்ட தாலோ, செயலிழப்பின் காரண மாகவோ இந்நிலை ஏற்பட லாம். பிழை சுட்டும் செய்தி, காரணத்தை துல்லியமாகத் தெரிவிக்கலாம், தெரிவிக் காமலும் போகலாம்.

**hot : சூடான :** தனிச்சிறப்பான, அவசர ஆர்வமூட்டும், மிகவும் புகழ்பெற்ற.

**hot docking : சூடான இணைப்பு; நடமாடும் இணைப்பு :** பயணம் செய்துகொண்டிருக்கும்போதே ஒரு மடிக்கணினியை வேறொரு தலைமைக் கணினியுடன் பிணையமுறையில் இணைத்துக் கொள்ளல். அவ்வாறு இணைத் துக் கொண்டு தலைமைக் கணினியில் ஒளிக்காட்சி, திரைக் காட்சி மற்றும் ஏனைய பணி களையும் இயக்குதல்.

**hot insertion : சூடாய்ச் செருகல் :** ஒரு கணினி அமைப்பு இயக் கத்தில் இருக்கும்போதே ஒரு புறச் சாதனத்தை அல்லது விரி வாக்க அட்டைகளைச் செருகு தல். தற்காலத்திய புதிய மடிக் கணினியில் பீசிஎம்சிஐஏ கார்டு களை இவ்வாறு செருக முடியும். உயர்நிலை வழங்கன் கணினி களும் (servers) இத்தகைய செரு கலை அனுமதிக்கின்றன. இத னால் இயங்காநேரம் குறைகிறது.

**Hot Java : ஹாட்ஜாவா :** சன் மைக்ரோசிஸ்டம்ஸ் நிறுவனம் உருவாக்கிய ஓர் இணைய உலாவி. வலைப் பக்கங்களில் உள்ளுறையும் ஜாவா பயன் பாடுகள் மற்றும் குறு நிரல் களை (applets) இயக்கும் வகை யில் உருவாக்கப்பட்ட உலாவி.

**hot key : தூண்டு விசை :** கணினியில், தற்போது என்ன ஓடிக்கொண்டிருப்பினும் அதைப் பொருட்படுத்தாமல் ஒரு சில செயற்பணிகள் நிகழும்படி செய்கிற விசை அல்லது விசை களின் கூட்டு இணைப்பு. இது பொதுவாக, நினைவகத்தில் அமைந்திருக்கும் ஒரு செயல் முறையைத் தூண்டி விடுகிறது.

**hot link : நேர் இணைப்பு :** செயல் முறைகளிடையே முன்னரே வரையறுக்கப்பட்ட இணைப்பு. இதனால், ஒரு தரவு தளத்தில் அல்லது கோப்பில் உள்ள தரவுகள் மாற்றப்படும் போது, மற்ற தரவுத் தளங் களிலும், கோப்புகளிலுமுள்ள தொடர்புற்ற தரவுகளும் புதுப் பிக்கப்படுகின்றன.

**hot list : சூடான பட்டியல் :** பயனாளர் ஓர் இணைய உலாவி மூலம் அடிக்கடி பார்வையிடும் வலைப் பக்கங்களின் முகவரித் தொகுப்பு. பட்டியலிலிருந்து பயனாளர் விரும்பும் பக்கத்தை ஒரேசொடுக்கில் அணுக முடி யும். இத்தகைய பட்டியல் நெட்ஸ்கேப் நேவிக்கேட்டர் மற்றும் லின்ஸ்க்கில் புத்தகக் குறி (Book mark) எனவும், மைக்ரோசாஃப்ட் இன்டர்நெட் எக்ஸ்புளோரரில் விருப்பத் தளக் கோப்புறை (Favourites Folder) எனவும் வழங்கப்படுகிறது.

**hot plugging : சூடான இணைப்பு :** இயங்கிக் கொண் டிருக்கும்போதே ஒரு பொறியில் இன்னொரு புறச் சாதனத்தை இணைத்தல். கணினி இயங்கிக் கொண் டிருக்கும்போதே ஒரு விரிவாக்க அட்டை அல்லது இணக்கி, அச்சுப்பொறி போன்ற புறச் சாதனத்தைப் பொருத்துதல்.

**hot site : முழுத் தளம் :** முழு மையான தயாரிப்புகளைக் கொண்ட கணினி மையம்.

நெருக்கடி நிலையின்போது பயன்படுத்தத் தயார்நிலையில் இருப்பது.

**hot spot : சுட்டு நுனி :** சுட்டியைச் சொடுக்கும்போது பாதிக்கப்படுகிற ஒரு திரையின் மீது படக் கூறுகளின் துல்லிய மான அமைவிடம். எடுத்துக் காட்டு : ஓர் அம்புச் சுட்டு முனையின் நுனிப்பகுதி. ஒரு விரல் சுட்டு முனையின் நுனி.

**hot wired : ஹாட் ஒயர்டு :** ஒயர்டு இதழின் வலைத்தளம். இணையப் பண்பாடு குறித்த கிசுகிசுக்கள் மற்றும் பிற தரவு கள் அடங்கிய தளம் முகவரி: http://www.hot wired.com/frontdoor.

**hot zone : வெம்மை மண்டலம் :** சில சொல் பகுப்பிகளில் பயனா ளர் வகைப்படுத்தும் பகுதி. பக்கத்தின் வலது விளிம்பில் தொடங்கி, பக்கத்தின் இடது பக்கத்தில் 7 இடைவெளிகள் வரை நீள்கிறது. அந்த வெப்பப் பகுதியில் ஒரு சொல் முடி வடைந்தால், அடுத்த எழுத்தை அடுத்த வரியின் தொடக்கத்தில் தானாகவே, முறைமை பொருத்துகிறது.

**housekeeping : இல்லப் பரா மரிப்பு; ஒழுங்கமைப்பு :** விரும் பும் பயனைத் தர நேரடியாகப் பங்களிக்காத கணினியின் இயக்கச் செயல்கள். ஆனால் அவை நிரல் தொகுப்பு ஒன்றின் பகுதியாகும். செயல்முறையை தொடங்குதல் மற்றும், நூல் பரா மரிப்பு எனும் இயக்கங்களை தூய்மைப்படுத்தும் செயல்கள் தேவையற்ற கோப்புகளை வட்டுச் சேமிப்பகத்திலிருந்து நீக்குதல் ஆகியவை இதற்கு எடுத்துக்காட்டுகளாகும்.

**housekeeping tasks : துப்புரவுப் பணிகள் :** ஒரு மென்பொருள் பயன்பாட்டினால் அல்லது செயற்பாட்டுப் பொறியமை வினால் செய்யப்படும் பின் னணிப் பணிகள். எடுத்துக் காட்டுகள் : தற்காலிகச் சேமிப்பு அமைவிடங்களுக்குத் தரவு களைப் படித்தல் மற்றும் எழுதுதல்; கோப்புகளை உரு வாக்குதல்; குறிப்பின்றி அணுகும் நினைவகத்தின் (RAM) பரப்புகளைத் துப்புரவாக்குதல்.

**housing : உறை; கூடு :** காபி னெட் அல்லது பிற மேல்உறை.

**HPFS : ஹெச்பீஎஃப்எஸ் :** உயர் செயல்திறன் கோப்பு முறைமை என்று பொருள்படும் High Performance File System என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஓஎஸ்/2 இயக்க முறைமையின் 1.2 மற்றும் அதற்குப் பிந்தைய பதிப்புகளில் இருக்கும் கோப்பு முறைமை.

**HPGL : ஹெச்பீஜிஎல் :** ஹீவ்லெட்- பேக்கார்டு வரைகலை மொழி எனப் பொருள்படும் Hewelet Packard Graphics Language என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். வரைவு பொறிகளில் (Plotters) படிமங்களை அச்சிடுவதற்காக உருவாக்கப்பட்ட மொழி. ஒரு ஹெச்பீஜிஎல் கோப்பு, ஒரு வரைகலைப் படிமத்தை மீட்டுரு வாக்கம் செய்வதற்கான ஆணை களையும் கொண்டிருக்கும்.

**HPIB : ஹெச்பீஐபி :** ஹீவ்லெட் -பேக்கார்டு இடைமுகப் பாட்டை என்று பொருள்படும் Hewlelt-Packard Interface Bus என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர்.

**HP/UX or HP-UX : ஹெச்பீ/ யுஎக்ஸ் அல்லது ஹெச்பீ-யுஎக்ஸ் :** ஹீவ்லெட்-பேக்கார்டு யூனிக்ஸ் என்று பொருள்படும் Hewlett Packard UNIX என்ற தொடரின் சுருக்கம். யூனிக்ஸ் இயக்க முறைமையின் ஒரு வடிவம். குறிப்பாக, ஹீவ்லெட் பேக்கார் டின் பணிநிலையக் கணினி களில் இயக்குவதற்காக வடி வமைக்கப்பட்டது.

**.hqx : .ஹெச்கியூஎக்ஸ் :** பின் ஹெக்ஸ் (BinHex) எண்முறையில் குறிமுறைப்படுத்தப்பட்ட கோப் பின் வகைப்பெயர் (Extension).

**.hr : .ஹெச்ஆர் :** ஓர் இணைய தளம் குரோசியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**HREF : ஹெச்ரெஃப் :** மீவுரை மேற்குறிப்பு என்று பொருள் படும் Hypertext Reference என்ற தொடரின் சுருக்கச்சொல். ஒரு ஹெச்டீஎம்எல் ஆவணத்தில் பயன்படுத்தப்படும் ஒரு குறி சொல் (tag). இணையத்திலிருக் கும் இன்னோர் ஆவணத்தைச் சுட்டும் தொடுப்பு.

**HSB : ஹெச்எஸ்பி :** நிறப் பூரிதம் - ஒளிர்மை (பிரகாசம்) என்று பொருள்படும் (Hue-Saturation Brightness) என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். சக்கர வடிவில் அமைந்த ஒரு நிறமாலை அமைப்பு. 0° என்பது சிவப்பு; 60°-மஞ்சள்; 120°-பச்சை; 180°-வெளிர்நீலம்; 240°-நீலம்; 300°-செந்நீலம். வெண்மை நிறத்தின் விழுக்காடு அளவு பூரிதத்தைக் குறிக்கிறது.

**HSP : ஹெச்எஸ்பீ (உயர்வேக அச்சிடு கருவி) :** High Speed Printer என்பதன் குறும்பெயர்.

**HSV : ஹெச்எஸ்வி :** நிறப் பூரித மதிப்பு எனப் பொருள்படும் Hue Satuaration Value என்ற

தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**.ht : .ஹெச்டீ :** ஓர் இணைய தள முகவரி ஹைத்தி தீவைச் சார்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**.htm : .ஹெச்டீஎம் :** வலைப் பக்கங்களாகப் பயன்படும் ஹைப்பர் டெக்ஸ்ட் மார்க்அப் மொழியின் (HTML) கோப்புகளை அடையாளம் காட்டும் எம்எஸ்-டாஸ்/விண்டோஸ் 3. எக்ஸ் கோப்புவகைப் பெயர். எம்எஸ்-டாஸ் மற்றும் விண்டோஸ் 3.எக்ஸ் ஆகியவை மூன்றெழுத்து வகைப்பெயர்களையே புரிந்து கொள்ளும் என்பதால் .html என்னும் நான்கெழுத்து வகைப் பெயர் மூன்றெழுத்தாகக் குறுக்கப்பட்டு விடுகிறது.

**.html : .ஹெச்டீஎம்எல் :** வலைப் பக்கங்களாகப் பயன்படும் ஹைப்பர் டெக்ஸ்ட் மார்க்அப் மொழியின் (HTML) கோப்புகளை அடையாளங் காட்டும் வகைப் பெயர்.

**HTML document : ஹெச்டீஎம்எல் ஆவணம்.**

**HTML editor : ஹெச்டீஎம்எல் உரைத் தொகுப்பி.**

**HTTP : ஹெச்டீடீபீ :** மீவுரைப் பரிமாற்ற நெறிமுறை என்று பொருள்படும் Hypertext Transfer Protocol என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். வைய விரிவலையில் தரவுவைப் பெறுவதற்குப் பயன்படும் கிளையன் /வழங்கன் (Client/Server) நெறி முறை ஆகும்.

**HTTPD : ஹெச்டீடீபீடி :** மீவுரை பரிமாற்ற நெறிமுறை ஆவியுரு எனப் பொருள்படும் Hypertext Transfer Protocol Daemon என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒரு சிறிய வேகம் மிக்க ஹெச்டீடீபீ வழங்கன் (server) கணினி. இது என்சிஎஸ்ஏ நிறுவனத்தின் இலவசச் சேவையகம்.

**HTTPS : ஹெச்டீடீபீஎஸ் :** விண்டோஸ் என்டீயில் வலை வழங்கனாகச் செயல்படும் மென்பொருள். ஐரோப்பிய மைக்ரோசாஃப்ட் விண்டோஸ் என்டீ அகாடெமி சென்டர் (EMWAC) ஸ்காட்லாந்து நாட்டு எடின்பரோ பல்கலைக் கழகத்தில் உருவாக்கியது. இணையத்திலிருந்து இலவசமாக பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். வெய்ஸ் (WAIS) எனப்படும் தேடு திறனைக் கொண்டது.

**HTTP server : ஹெச்டீடீபீ வழங்கன்;** *1.* இணைய உலாவியான கிளையன் மென்பொருளின் கோரிக்கையை ஏற்று ஹெச்டீ

எம்எல் ஆவணங்களையும் தொடர்புடைய கோப்புகளையும் ஹெச்டீடீபீ நெறிமுறையைப் பயன்படுத்தி அனுப்பி வைக்கும் வழங்கன் மென்பொருள். கேட்கப்பட்ட ஆவணம் அல்லது கோப்பு வழங்கப்பட்டவுடன் கிளையனுக்கும் வழங்கனுக்கும் இடையே உள்ள தொடர்பு முறிந்துவிடும். வைய வலை மற்றும் இணைய தளங்களில் ஹெச்டீடீபீ வழங்கன்கள் பயன்படுத்தப்படுகின்றன.

**HTTP status codes** : ஹெச்டீடீபீ நிலைமைக் குறியெண்கள் : தரவு பெறுவதற்கான கோரிக்கையின் விடைகுறித்து ஹெச்டீடீபீ வழங்கன் (server) அனுப்பி வைக்கும் மூன்றிலக்கக் குறியெண். குறியெண் 1இல் தொடங்கினால், கிளையன் கணினி தான் அனுப்பும் விவரங்களை இன்னும் அனுப்பி முடிக்கவில்லை என்றும், 2-எனில் வெற்றிகரமான விடை என்றும், 3 எனில் கிளையன் இனி, மேல்நடவடிக்கை எடுக்க வேண்டியுள்ளது என்றும், 4 எனில் கிளையன் பிழை காரணமாய் விடைபெறும் முயற்சி தோற்றது என்றும், 5 எனில் வழங்கன் பிழை காரணமாய்த் தோற்றது என்றும் பொருள்.

**.hu** : .ஹெச்யூ : ஓர் இணைய தளம் ஹங்கேரி நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**hub** : குவியன்; இணைப்பு மையம் : ஓர் நட்சத்தி அமைவிடத்தில் செய்தித் தொடர்பு இணைப்புகளுக்கான மைய விசையமைப்புச் சாதனம். இது, அனுப்பீட்டுக்கு உதவி புரியவோ, செய்திப் பரிமாற்ற நடவடிக்கைக்கு வலுவூட்டும் குறியீடுகளை மறு உருவாக்கம் செய்யவோ செய்யாது. இந்த குவியன்கள், ஒரு மின் இணைப்புத் தொகுதி அமைவிடங்களுடன் சேர்க்கப்படலாம். எடுத்துக்காட்டு : இடர்ப்பாடுகளை அகற்றும் திறனை அதிகரிப்பதற்காக ஓர் ஈதர்னெட் கணினி இணைப்பை ஓர் ஸ்டார் அமைப்பாக மாற்ற வல்லது.

**hub, remote access** : சேய்மை குவியம்; தொலை அணுகு குவியம்.

**hub ring** : குவிய வளையம்; அச்சு மைய வளையம் : 5.25" நெகிழ்வட்டின் துளையினுள் விறைப்புத் தன்மைக்காக அழுத்தி வைக்கப்படும் தட்டையான வளையம். இயக்கியின் பற்று வளையம், அச்சு மைய

வளையத்தைக் கதிர்மீது அழுத்துகிறது.

**hue :** **வண்ணச் சாயல்; நிறம் :** கணினி வரைகலையில், ஒரு குறிப்பிட்ட வண்ணத்தின் ஒரு குறிப்பிட்ட வண்ணச் சாயல்.

**Huffmann coding :** **ஹ∘ஃப்மன் குறியீட்டு முறை :** இடப்பரப்பு வடிவங்களில் செயற்படுகிற உருக்காட்சி அடர்த்திச் செய் முறை. இது JPEG படிநிலை நெறிமுறையின் ஒரு பகுதி. புள்ளியியல் அடர்த்தியாக்க முறை. இது மாறுகிற நீளத் துண்மிச் சரங்களாக எழுத்து களை மாற்றுகிறது. அடிக்கடி வரும் எழுத்துகள், மிகக் குறு கிய துண்மிச் சரங்களாக மாற்றப் படுகின்றன. மிக அருகில் வரும் எழுத்துகள், மிக நீளமான சரங் களாக மாற்றப்படும். அடர்த்திச் செய்முறை இருவழிகளில் செயற்படுகிறது. முதல் வழியில் தரவு தொகுதிப் பகுப்பாய்வு செய்யப்படுகின்றது. இது, அதன் உள்ளடக்கங்களின் அடிப் படையில் ஒரு மர உருமாதிரியை உருவாக்குகிறது. இரண்டாவது வழியில், இந்த உருமாதிரி வழி யாக தரவுகள் அடர்த்தியாக்கம் செய்யப் படுகின்றன.

**Huffman tree :** **ஹ∘ஃப்மன் மரம்; ஹ∘ஃப்மன் மரவுரு :** குறைந்த பட்ச மதிப்பீடுகளைக் கொண்ட மரம். Minimal tree and optimal merge tree என்பதைப் பார்க்கவும்.

**human biocomputer :** **மனித உயிரியல் கணினி :** ஒரு கணினி போல் செயற்படும் மனித மூளை. இதில் மூளையின் முக்கிய பகுதி, ஒரு பகுத்தறிவு அல்லது உள்ளுணர்வு அறி வாற்றலின் பல்வேறு கூறு களுக்கு ஆதரவாகத் தனிப்பண் பாக்கம் செய்யப்படுகிறது.

**human/engineering :** **மாந்தப் பொறியியல் :** மனிதர்கள் எளி தாகவும் வசதியாகவும் கையாளத் தக்கவகையில் பொருள்களை வடிவமைத்தல் தொடர்பான ஆய்வு. ergonomics என்றும் கூறுவர்.

**human / machine interface :** **மாந்த/எந்திர இணைமுக எல்லை ; மனிதன்/பொறி இடை முகம் :** எந்திரங்களுடன் மனிதர் கள் இணைந்து செயல்படும் எல்லை.

**human mind model :** **மனித அறிவு மாதிரியம்.**

**human oriented language :** **மனிதர் சார்ந்த மொழி :** ஒரு கணினிச் செயல் முறைப்படுத் தும் மொழி. இது, அன்றாடம் பேசப்படும் மொழியில் உள்ளது போன்ற சொற்களை உடையது. எடுத்துக்காட்டு : Basic, Cobol.

**humanware** : மனிதப் பொருள்.

**hung : தொங்கல் :** கணினி செயற்படுவது திடீரென நின்று விடுவதைக் குறிக்கப் பயன் படும் சொல்.

**hybrid circuit : கலப்பு மின்சுற்று :** அடிப்படையிலேயே முற்றிலும் வேறுபாடான உறுப்புகளைப் பயன்படுத்தி ஒரே மாதிரியான பணியைச் செய்தல். வெற்றிடக் குழாய்கள் (Vacuum tubes) மற்றும் மின்மப் பெருக்கிகளை (Transisters) பயன்படுத்தி உருவாக்கப்படும் தொகுப்பிசை பெருக்கிகளை (Stereo amplifier) எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

**hybrid computer : கலப்பினக் கணினி :** இலக்கமுறை (Digital) மற்றும் தொடர்முறை (analog) மின்சுற்றுகளைக் கொண்டு உருவாக்கப்பட்ட கணினி.

**hybrid computer system : கலப் பின கணினி முறைமை :** அலை நிலை மற்றும் எண்ணியல் கருவிகளைப் பயன்படுத்தும் முறைமை.

**hybrid microcircuit : கலப்பு நுண் மின்சுற்று வழி :** பல்வேறு ஒருங்கிணைந்த மின்சுற்று வழி களையும் தனிவேறு அமைப்பி களையும் ஒரு மண்பலகை மீது ஏற்றி அமைக்கப்பட்டுள்ள மின் னணுவியல் மின்சுற்று வழி. இது, இராணுவ மற்றும் செய்தித் தொடர்புப் பயன்பாடு களில் பயன்படுத்தப்படுகிறது.

**hybrid network : கலப்பு இணை யம் :** செய்தித் தொடர்புகளில், பல்வேறு விற்பனையாளர்களிட மிருந்து வாங்கப்பட்ட சாதனங் களினாலான ஓர் இணையம்.

**hybrids : கலப்பின வகை :** பல் வேறு தொழில் நுணுக்க வல்லு நர்களின் சிறு இணைப்புகளை இணைத்து ஒரே தளத்தில் உருவாக்கப்பட்ட இணைப்பு கள். ஓரின ஒருங்கிணைப்பு என் பதற்கு மாறானது.

**hydra (Hybrid Document Reproduction Apparatus) : ஹைட்ரா (கலப்பு ஆவணப் படிப் பெருக்கக் கருவி) :** ஒரே எந்திரத் தில் அமைந்துள்ள ஓர் அச் சடிப்பி, ஒளிப்படப் படி யெடுப்பி, நுண்ணாய்வுக் கருவி, தொலைநகல் ஆகியவற்றின் தொகுதி. இது ஒத்தியல்பான குறியீடுகளை ISDN, BRI குறியீடு களாக மாற்றுகிறது. "ஆஸ்டின் மாக் டெவலப்மென்ட் அசோசி யேஷன்" தயாரித்துள்ள இந்தச் சாதனம், மெக்கின்டோஷ் வரை கலை அட்டைப் பணித் திறனைச் சோதனை செய்கிறது.

**hyper - access : மிகை அணுகு தல் :** 'ஹில்கிரேவ்" என்ற அமை

வனம் தயாரித்துள்ள சொந்தக் கணினி (PC) செய்தித்தொடர்புச் செயல்முறை. இது தரவு செறிவாக்கத்தை அளிக்கிறது. தனக்கென ஒரு வரிவடிவ மொழியை உடையது. இது, ஏராளமான முனையங்களுக் கும், தரவு தொடர்பு நெறிமுறை களுக்கும் உதவுகிறது.

**hyperCard : மிகைத் திறன் அட்டை :** "ஆப்பிள்" (Apple) என்ற கணினி அமைவனம் தயாரித்துள்ள பயன்பாட்டு மேம்பாட்டுப் பொறியமைவு. இது, மெக்கின்டோஷ் மற்றும் ஆப்பிள் II GSஇல் செயல்படு கிறது. மிக முற்போக்கான ஒருங் கிணைந்த கூறுகளின் ஒரு தொகுதியை அளிக்கிறது. ஒரு தரவு தளப் பொறியமைவு என்ற முறையில், தரவுகளையும், வாசகங்களையும், வரைகலை களையும் இருத்தி வைத்துக் கொள்ளக்கூடிய அட்டை அடுக்குகளின் வடிவில் கோப்பு களை உருவாக்க இது பயனா ளருக்கு உதவுகிறது. ஒரு கட்டுப்பாட்டுப் பொறியமைவு என்ற முறையில், பயன்பாடு களைத் தொடங்குவதற்கான முதன்மைப் பட்டியலாக இது பயன்படுகிறது. CD ROM, ஒளிப் பேழை வட்டு போன்ற பன் முகச் செய்தித் தொடர்புச் சாதனங்களை இது கட்டுப் படுத்துகிறது. கல்விப் பயன் பாடுகள் உருவாக்கத்துக்கு உதவுகிறது.

**hypercube : மிகைக் கனசதுரம் :** ஈரிலக்கப் பன்முகக் கணினி களினாலான (4, 8, 16 முதலியன) ஒருபோகு செய்முறைப்படுத்தும் கட்டமைவு. இதில் தரவுகள் மிகக் குறைந்த அளவு பயணஞ் செய் கிற வகையில் கணினிகள் ஒன் றோடொன்று இணைக்கப்பட் டிருக்கின்றன. எடுத்துக்காட்டு : இரு 8-மையமுனைக் கனசதுரங் களில், கன சதுரத்திலுள்ள ஒவ் வொரு மைய முனையையும் மற்றொன்றிலுள்ள அதற்கு நேரிணையான மைய முனை யுடன் இணைக்கலாம்.

**hypercube topology : மிகைக் கன சதுர அமைவிடம் :** பன்முக நுண்செயலிகளைப் பயன்படுத் தும் பேரளவு ஒருபோகு செய் முறைப்படுத்தும் மீமிகைக் கணி னிகளுக்காக அண்மையில் உரு வாக்கப்பட்டுள்ள கட்டமைவு.

**hyperline : மிகைஇணைப்பு;** மீத்தொடுப்பு.

**hyperlink : மீத்தொடுப்பு :** ஒரு மீவுரை ஆவணத்திலுள்ள ஒரு சொல், ஒரு சொல் தொடர். ஒரு குறியீடு அல்லது ஒரு படிமம் ஓர் உறுப்புக்கும், அதே

ஆவணத்திலுள்ள வேறோர் உறுப்பு அல்லது வேறொரு மீவுரை ஆவணம் அல்லது வேறொரு கோப்பு அல்லது உரைநிரல் (Script) இவற்றுள் ஏதேனும் ஒன்றுக்கும் இடையே யுள்ள தொடர்பு. இத்தகைய தொடுப்புகள் பெரும்பாலும் நீல நிற எழுத்துகளில் (ஆவண எழுத்து நிறத்திலிருந்து மாறு பட்ட நிறத்தில்) அடிக்கோடிடப் பட்டிருக்கும். சுட்டிக் குறியை அருகில் கொண்டு சென்றால் கை அடையாளமாக மாறும். இந்த அடையாளங்களைக் கொண்டு அது ஒரு மீத் தொடுப்பு என்பதை அறியலாம். சுட்டியைக் கொண்டு தொடுப் பின்மீது சொடுக்கியதும், தொடுப்பில் சுட்டப்பட்டுள்ள ஆவணம் திறக்கும். எஸ்ஜி எம்எல், ஹெச்டீஎம்எல் போன்ற மீவுரைக் குறிமொழி களில் உருவாக்கப்படும் மீவுரை ஆவணங்களில், பல்வேறு வகையான குறி சொல்கள் (tags) கொண்டு மீத்தொடுப்புகளைக் குறிப்பிடுகின்றன.

**hyper media : மிகைத் தொடர்பு ஊடகங்கள் :** ஒரு மிகையுரை முறைமையில் தரவு, உரை, வரைகலை, ஒளிப்படம், நகல் படம், ஒலி ஆகியவற்றைக் கூறு களாகப் பயன்படுத்துதல். பல்வேறு தரவு வடிவங்கள் அனைத்தும், பயனாளர் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு எளிதாகச் சென்றிடும் வகையில் ஒன்றாக இணைக்கப்பட்டுள்ளன.

**hyperPAD : மிகைத் திண்டு :** "பிரைட் பில்-ராபர்ட்ஸ் - கம்பெனி" என்ற அமைவனம் தயாரித்துள்ள சொந்தக் கணினி களுக்கான (PC) பயன்பாட்டு மேம்பாட்டுப் பொறியமைவு. இது மிகை அட்டை போன்ற செயல் முறை. இது உரை வடி வமுறையில் செயற்படுகிறது. இதில், PAD உரை வரி வடிவ மொழி உள்ளடங்கியுள்ளது.

**HyperScript : மிகை வரிவடிவம் :** "WINGE" விரிதாள் தொகுப்புடன் வழங்கப்படும் ஒரு முன்னேறிய பெரும (வரிவடிவ) மொழி.

**hyperspace : மீவெளி :** வைய விரிவலையில் (WWW) மீத் தொடுப்புகளின் (Hyperlinks) மூலம் அணுகும்படியான மீவுரை ஆவணங்கள் அனைத் தின் தொகுப்பு.

**hypertalk : மிகைபேச்சு :** மிகை உரை / மிகைச் சாதனம் எழுது வதற்கு அல்லது மரபான செயல் முறைப்படுத்துதலுக்குப் பயன் படுத்தப்படும் மிகை அட்டைக் குரிய மொழி.

**hypertape** : மீதுயர் நாடா : மின் காந்த அலகு. நாடாப் பொதிந்த குடுவையாகப் பயன்படுத்தப் படுகிறது. நாடாச் சுருளாகப் பயன்படுத்தப்படுவதில்லை. நாடாப்பொறி குடுவையில் நாடாச்சுருளும் ஏற்பு நாடாச் சுருளும் உள்ளன.

**hyper terminal** : ஹைப்பர் டெர்மினல் - ஒரு மென்பொருள்.

**hypertext** : மிகையுரை; மீவுரைப் பரிமாற்ற நெறிமுறை; பிணைப்பு உரை : சொல் பகுப்பி பொறியமைவுகளில் பயன்படுத்தப்படும் ஒரு சொல். மிகை உரை பற்றிய தரவு. எடுத்துக்காட்டு : ஒரு சொற் றொடரிலுள்ள ஒரு சொல்லைத் தேர்ந்தெடுப்பதன்மூலம், அந்தச் சொல் தொடர்பான தரவு வேறு கோப்பில் இருக்குமானால் அது மீட்கப்படுகிறது; அல்லது அந்தச் சொல்லின் அடுத்த நிகழ்வு கண்டறியப்படுகிறது. மனிதச் சிந்தனைக்குக் கணினி பதிலளிக்கும்படி செய்கிற ஒரு முறையாக இந்தக் கோட் பாட்டினை டெட் நெல்சன் உருவாக்கினார்.

**hyper text markup language (HTML)** : மீவுரைக் குறியிடு மொழி.

**hyper text transfer protocol (HTTP)** : மீவுரைப் பரிமாற்ற நெறிமுறை.

**hyperware** : மிகைச் சாதனம் : மிகை உரைத் தரவுத் தொடர்புச் சாதனங்கள்.

**hyphenation** : இணைப்புக் குறி யிடல் : வலது ஓர விளிம்பைத் தாண்டி நீண்டுசெல்லும் சொற் களைப் பிளவு செய்து இணைப்புக் குறியிடுதல். சொற் களை ஒரு இணைப்புக் குறி யீட்டு அகராதி அடிப்படையில் இணைத்து வைப்பதன் மூலம் அல்லது உள்ளமைந்த விதித் தொகுதிகள் அல்லது இரண் டின் மூலமாக மென்சாதனம் சொற்களுக்கு இணைப்புக் குறியிடுகிறது.

**hyphenation dictionary** : இணைப்புக் குறியீட்டு அகராதி : முன்னரே வரையறுத்த சொல் லிடை இணைப்புக் குறி அமை விடங்களுடன்கூடிய சொற் கோப்பு.

**hyphenation programme** : சொல் ஒட்டு நிரல்; சொல்வெட்டு நிரல் : பெரும்பாலும் சொல்செயலிப் பயன்பாடுகளில் சேர்க்கப்படும் ஒரு நிரல். ஒவ்வொரு வரி முடிவிலும் இடம் போதாத

சொற்களை இருகூறாக்கி இறுதியில் ஓர் ஒட்டுக் குறியைச் சேர்க்கும் வசதி விருப்பத் தேர்வாக இருக்கும். ஒரு நல்ல சொல்லொட்டு நிரல், ஒரு பத்தியில், தொடர்ச்சியாக மூன்று வரிகளுக்கு மேல் வரி இறுதியில் சொற்களைப் பிரிக்காது. அப்படித் தேவைப் படின் பயனாளருக்குத் தெரி வித்து அவரின் ஒப்புதலின் பேரில் முடிவு செய்யும்.

**hyphenation zone : இணைப்புக் குறியீட்டு மண்டலம் :** வலது ஓர விளிம்பிலிருந்தான தொலைவு. இதனுள் ஒரு சொல்லுக்கு இணைப்புக் குறியிடலாம்.

**hypothesis : ஊகம்; தற்கோள்; விளக்கம்.**

**hysteresis : தயக்கம் :** ஒரு விளைவு ஒன்றுக்கான மொழி. அந்த விளைவுக்கான காரணத் தின் பின்புலமாக உள்ளது. அதேபோல மின்காந்தப் பொருளை துருவ நெறிப்படுத்த மொழி இயலாததாக உள்ளது. மின்காந்தமயமாக்கும் சக்தி அதற்கு இல்லை.

**hytelnet : ஹைடெல்நெட் :** டெல் நெட் மூலமாக இணைய வளங்களைத் தேடிப் பெற ஒரு பட்டித் தேர்வு மூலம் வாய்ப்புத் தரும் நிரல் மூலம் இயக்க முடியும்.

**Hz : ஹெச் இஸட் :** ஒரு வினாடிக்கான மின்காந்த அலைச்சுற்று என்பதைக் குறிக் கும் ஹெர்ட்ஸ் என்பதன் குறும் பெயர்.

# I

**IAC : ஐஏசி :** தகவல் பகுப்பாய்வு மையம் எனப் பொருள்படும் Infromation Analysis Centre என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். கிடைக்கின்ற அறிவியல் தொழில்நுட்ப தகவல்களைப் பயன்படுத்திக்கொள்ள அமெரிக்க நாட்டின் பாதுகாப்புத்துறை உருவாக்கியுள்ள பல்வேறு அமைப்புகளுள் இதுவும் ஒன்று. வரலாற்று, தொழில்நுட்ப மற்றும் அறிவியல் தரவுகள் உட்பட ஒட்டுமொத்த அறிவுத் தளங்களை (knowledge bases) உருவாக்கிப் பராமரிக்கும் பணியை ஐஏசி-க்கள் செய்கின்றன. மேலும் அவற்றைப் பயன்படுத்துவதற்கான பகுப்பாய்வுக் கருவிகளையும் நுட்பங்களையும் உருவாக்கிப் பராமரிக்கும் பணியையும் மேற்கொள்கின்றன.

**IAL : அயோல் :** International Algorithmic Language என்பதன் குறும்பெயர். ஆல்கால் 58 என்று பின்னர் அழைக்கப்பட்டு காலாவதியாகிவிட்ட மொழியின் ஆரம்பப் பெயர்

**I-BEAM : ஐ-உருக்குறி :** விண்டோஸில் சொல்செயலி போன்ற தொகுப்புகளில் உரையைத் தொகுக்கும்போது திரையில் தோற்றமளிக்கும் ஆங்கில I-வடிவச் சுட்டுக்குறி. இக்குறியானது, ஆவணத்தில் ஒரு பகுதியை உட்செருக, அழிக்க, மாற்ற, இடம் பெயர்த்தெழுதருக்கும் இடத்தைச் சுட்டுகிறது. ஆங்கில எழுத்து I போலத் தோற்றமளிப்பதால் இவ்வாறு பெயர்பெற்றது.

**I - beam pointer : ஐ பீம் சுட்டு :** "I" பெரிய எழுத்தின் வடிவமுள்ள வரைகலை பயனாளர் இடைமுகத்தில் உள்ள ஒரு சிறிய அடையாளக் குறி. செய்தித் தொகுப்பில் எந்த இடத்தில் சேர்க்கலாம் என்பதை இது குறிக்கிறது.

**IBG : ஐபிஜி:** Inter Block Gap என்பதற்கான குறும்பெயர்.

**IBI : ஐபிஐ :** Inter-Governmental Bureau of Informatics என்பதன் குறும்பெயர். ஐ.நா. சபை, யுனெஸ்கோ அல்லது ஐ.நா. முகமை அமைப்புகளின் உறுப்பினர்களைக் கொண்ட ஓர் அமைப்பு. அறிவியல்பூர்வமான ஆய்வு, கணினிக் கல்வி மற்றும் பயிற்சி, வளர்ச்சியடைந்த நாடுகள் வளரும் நாடுகளுக்கிடை

யிலான தகவல் பரிமாற்றம், வளரும் நாடுகளில் தகவல் பரிமாற்றத்தை ஊக்குவிப்பது ஆகியவை முக்கிய நோக்கமாகும்.

**IBIS** : இபிஸ் : இந்தியாவின் இந்தியன் ஆர்கானிக் கார்ப்பரேஷன் மூலம் சோனட்டா உருவாக்கிய Integrated Business Management Information System என்பதன் சுருக்கம். விற்பனை, வாங்குதல், இருப்புக் கணக்கெடுப்பு மற்றும் நிதிக் கணக்கு (பெற வேண்டியது, தர வேண்டியது) உள்ளிட்ட அனைத்து வணிகப் பணிகளையும் கணினிமயமாக்குவதற்கு உருவாக்கப்பட்டது.

**IBM** : **Information Business Machine** என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். முன்னணி கணினி நிறுவனம்.

**IBM 360 series** : ஐபிஎம் 360 வரிசை : மூன்றாம் தலைமுறை கணினிகளில் முன்னோடியாக விளங்கிய ஐபிஎம் 7,000 வரிசைகளுக்கு மாற்றாக 1964இல் ஐபிஎம் நிறுவனம் 360 வரிசை ஒருங்கிணைந்த மின்சுற்று அமைப்பை அறிவித்தது.

**IBM AT** : ஐபிஎம் ஏட்டீ : 1984 இல் அறிமுகப்படுத்தப்பட்ட சொந்தக் கணினிகளில் ஒரு வகை. ஐபிஎம் நிறுவனத்தின் பீசி/ஏட்டீ (AT-Advance Technology) வரையறுப்புகளுக்கு ஒத்தியல்பானது. முதல் ஏட்டீ கணினி இன்டெல் 80286 நுண்செயலியை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டது. இதற்கு முன்னோடியாயிருந்த எக்ஸ்ட்டீ (XT) கணினியை வேகத்தில் விஞ்சியது.

**IBM corporation** : ஐபிஎம் நிறுவனம்: உலகின் மிகப் பெரிய தரவு சீரமைப்புக் கருவிகளைத் தயாரிக்கும் நிறுவனம்.

**IBM mini computers** : ஐபிஎம் சிறு கணினிகள் : ஐபிஎம் நிறுவனத்திடமிருந்து வந்த நடுவரிசை கணினிகள். 1969இல் அறிமுகப்படுத்தப்பட்ட சிஸ்டம் 3 முதல் இந்த வரிசை துவங்கியது.

**IBM PC** : ஐபிஎம் பீசி : ஐபிஎம் சொந்தக் கணினி எனப் பொருள்படும் IBM Personal Computer என்பதன் சுருக்கம். 1981இல் அறிமுகப்படுத்தப்பட்ட சொந்தக் கணினிகளுள் ஒருவகை. ஐபி எம்மின் பீசி வரையறுப்புகளுக்கு ஒத்தியல்பானது. முதல் பீசி, இன்டெல் 8088 நுண்செயலியை அடிப்படையாகக் கொண்டது. கணினி உலகில் பல ஆண்டுகளாக ஐபிஎம் பீசிகள்தாம், உண்மையில் பீசி மற்றும் நகலி



ஐபிஎம் தனியாள் கணினி

களுக்கு அடிப்படையாக விளங்கின. ஐபிஎம் வரை பறுப்புகளின்படி அமைந்த கணினிகள் பீசி-ஒத்தியல்பிகள் (PC-compatibles) என்று வழங்க லாயின.

**IC : ஐ.சி. சில்லியல்** : Integrated Circuit என்பதன் குறும்பெயர். ஒரு எளிமையான பொருளில் - எடுத்துக்காட்டாக ஒரு சிலிக்கன் சிப்புவில் அமைக்கப்பட்ட சிக்கலான மின்னணுவியல் இணைப்பு.

**ICCA : இக்கா** : Independent Computer Consultants Association என்பதற்கான குறும்பெயர்.

**ICCE : ஐசிசிஇ** : International Council for Computers in Education என்பதற்கான குறும்பெயர்.

**ICCP : ஐசிசிபி** : Institute for Certification of Computer Professionals என்பதற்கான குறும்பெயர்.

**ICE : ஐசிஇ** : In Circuit Emulator என்பதன் குறும்பெயர். இயங்கும் நேரத்திலேயே அமைப்பு மென்பொருளில் உள்ள பிழைகளை நீக்க வடிவமைப்புவரை அனுமதிக்கும் சிறப்பு வன்பொருள் மற்றும் மென்பொருள்.

**ICES : ஐசிஇஎஸ்** : Integrated Civil Engineering System என்பதற்கான குறும்பெயர். பொறியியல் சிக்கல்களுக்குத் தீர்வு காண சிவில் பொறியாளர்களுக்கு உதவ உருவாக்கப்பட்ட முறைமை. பல பொறியியல் முறைமைகளும் நிரல் தொகுப்பு மொழிகளும் கொண்டது.

**ICIM : ஐசிஐஎம்** : International Computer India Manufacturer என்பதற்கான குறும்பெயர். உலகம் முழுவதும் 83 நாடுகளில் இயங்கும் ஐசிஐஎம் நிறுவனங்களின் தொகுதியில் ஒன்று.

**ICL : ஐசிஎல்** : International Computers Limited என்பதற்கான குறும்பெயர். ஒரு பிரிட்டிஷ் கணினி உற்பத்தியாளர்.

**ICMP : ஐசிஎம்பீ** : இணையக் கட்டுப்பாட்டு செய்தி நெறிமுறை எனப் பொருள்படும் Internet Control Message Protocol

என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். ஐஎஸ்ஓ/ஓஎஸ்ஐ 3-வது அடுக்கான பிணைய அடுக்கில், பிழைதிருத்தம் மற்றும் ஐபி (IP-Internet Protocol) பொதி செயலாக்கத்திற்குத் தேவையான பிற தகவல்களையும் தரக்கூடிய இணைய நெறிமுறை. எடுத்துக் காட்டாக, அடைய முடியாத இலக்கு பற்றிய தகவலை ஒரு கணினியிலுள்ள ஐபீ மென்பொருள் இன்னொரு கணினிக் குத் தெரிவிக்க உதவுகிறது.

**icon : சின்னம்; சிறு படம் :** ஒரு வெளியீடு ஒன்றில் ஒரு செய்தியை, ஒரு பொருளை, ஒரு கோட்பை, ஒரு கருத்தைக் குறிப் பிடும் ஒரு வரைபடம். ஒரு செயலைக் குறிப்பிட உதவும் கோட்டு வரைபடம். நிரல் தொகுப்பு ஆவணம் அல்லது செயல்பாடுகளில் ஒன்றைத் தேர்வுசெய்ய உதவும் வரைபடம்.

**iconic Interface : குறும்பட இடைமுகம்.**

**icon parade : அடையாள அணி வகுப்பு; சின்ன அணிவகுப்பு :** ஒரு மெக்கின்டோஷ் கணினி இயக்கப்படும்போது திரையில் வரிசையாகத் தோற்றமளிக்கின்ற சின்னங்கள்.

**ICOT : ஐசிஓடீ :** Institute for New Generation Computer Technology என்பதற்கான குறும்பெயர். ஜப்பானின் ஐந்தாவது தலைமுறை ஆய்வை நடத்தும் நிறுவனம்.

**ICPEM : ஐசிபிஇஎம்;** Independent Computer Peripheral Equipment Manufacturers என்பதற்கான குறும்பெயர்.

**.id : .ஐடி :** ஓர் இணைய தளம் இந்தோனேஷியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**IDE : ஐடிஇ :** ஒருங்கிணைந்த சாதன மின்னணுவியல் எனப் பொருள்படும் Integrated Device Electronics என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒருவகை வட்டக இடைமுகம். இதன் கட்டுப்படுத்தி மின்னணுச் சுற்றுகள் வட்டிலேயே பொருத்தப்பட்டிருக்கும். தனியான தகவி அட்டைகள் தேவையில்லை. பீசி/ஏட்டீ கணினிகளில் ஐபிஎம் பயன்படுத்திய கட்டுப்படுத்திகளுடன் ஒத்தியல்பானது. அதேவேளையில் முன்னோக்கிய இடைமாற்று நினைவகம் (Lookahead Caching) கொண்டது.

**ideas : ஐடியாஸ்;** சிஎம்சி இந்தியா நிறுவனம் உருவாக்கிய ஒரு இந்திய செய்தி பொதிந்திருக்கும் அமைப்பு. உலகத் தரத்திற்கு தொகுக்கும்

வசதியும், ஆவணப்படுத்தும் வசதியும் இதற்கு உண்டு. அதேவேளையில் புதிய இந்திய நிறுவனங்களின் சிறப்புத் தேவைகளை இது சமாளிக்கிறது. மோசமான தகவல் தொடர்புக் கம்பிகளுக்கிடையிலும் வெகுதொலைவில் உள்ள மாவட்ட நகரங்களுக்குச் செய்தியனுப்ப இது உதவுகிறது.

**identification** : அடையாளம் காணல்.

**dentification division** : அடையாளப் பகுதி : அடையாளம் காணும் பிரிவு. கோபால் நிரலாக்கத் தொகுப்பின் நான்கு முக்கிய பகுதிகளில் முதலாம் பகுதி.

**dentification, file** : கோப்பு அடையாளம் காணல்.

**dentifier** : குறிப்பி : தரவு தொகுப்பு ஒன்றினை அடையாளங்காட்டுகிற, சுட்டிக் காட்டுகிற, அல்லது அதன் பெயராக உள்ள குறியீடு.

**lentifier, lable** : சிட்டை அடையாளம் காட்டி.

**lentity of server** : வழங்கன் அடையாளம்; தலைமைக் கணினி அடையாளம்.

**iot box** : அறிவிலிப் பெட்டி.

**idle** : செயலற்ற : 1. இயக்க நிலையிலிருப்பது ஆனால் செயல்படாமல் இருப்பது. 2. ஒரு கட்டளைக்காகக் காத்திருத்தல்.

**idle character** : செயலற்ற எழுத்துகள்; முடங்கு உருக்கள்; செயலற்ற குறி : தரவு தொடர்பில், உடனடியாக அனுப்ப வேண்டிய செய்திகள் ஏதும் இல்லாதபோது, அனுப்பி வைக்கப்படும் ஒரு கட்டுப்பாட்டுக் குறியீடு.

**idle interrupt** : செயலற்ற குறுக்கீடு: ஒரு சாதனமோ அல்லது ஒரு செயலாக்கமோ செயலற்ற நிலையில் இருக்கும்போது ஏற்படும் ஒரு குறுக்கீடு.

**idle time** : செயலற்ற நேரம் : முடங்கு நேரம் : பயன்படுத்த கணினி ஒன்று கிடைக்கும் நேரம். ஆனால் உண்மையில் பயன்படுத்தப்படாத நேரம்.

**idle state** : செயலற்ற நிலை : ஒரு சாதனம் செயல்படும் நிலையில் இருப்பினும் பயன்படுத்தப்படாமல் இருக்கும் நிலை.

**IDP** : ஐடிபீ : Integrated Data Processing என்பதற்கான குறும்பெயர்.

**IDSL** : ஐடிஎஸ்எல் : இணைய இலக்க முறை சந்தாதாரர் தடம்

எனப் பொருள்படும் Internet Digital Subscriber Line என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். சாதாரணத் தொலைபேசி இணைப்புக் கம்பி வழியாகவே வினாடிக்கு 1.1 மெகாபிட் வரை இணையத் தகவல் பரிமாற்றத்தை வழங்குகின்ற அதிவேக இலக்கமுறைத் தகவல் தொடர்பு சேவை. ஐடிஎஸ்எல், சேவையானது ஐஎஸ்டிஎன் மற்றும் இலக்கமுறை சந்தாதாரர் தடத் தொழில்நுட்பம் ஆகியவற்றின் கலப்பு நுட்பத்தை அடிப்படையாகக் கொண்டது.

**.ie : .ஐஇ :** ஓர் இணைய தளம் அயர்லாந்து நாட்டைச் சார்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப்பெயர்.

**IE : ஐஇ :** 1. தகவல் பொறியியல் எனப்பொருள்படும் Information Engineering என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒரு நிறுவனத்துக்குள் கணினி அமைப்புகள், பிணையங்கள் உட்பட தகவல் செயலாக்க அமைப்புகளை உருவாக்கி பராமரிப்பதற்கான வழிமுறை. 2. மைக்ரோசாஃப்ட் நிறுவனத்தின் இணைய உலாவி மென்பொருளான இன்டர்நெட் எக்ஸ்புளோரரின் பெயர்ச் சுருக்கம்.

**IEEE : ஐஇஇஇ :** Institute of Electrical and Electronics Engineers என்பதற்கான குறும்பெயர். கணினி முறைமைகளிலும் அவற்றின் பயன்களிலும் தீவிர ஆர்வங் கொண்ட ஒரு தொழில்முறை பொறியமைவு நிறுவனம்.

**IEEE 488 : ஐஇஇஇ 488 :** பொதுப் பயன் இடைமுகப் பாட்டை (General Purpose Interface Bus - GPIB) -யின் மின்சார வரையறை. பாட்டையின் தரவு மற்றும் கட்டுப்பாட்டுத் தடங்களையும் மின்னழுத்தம் மற்றும் மின்னோட்ட அளவுகளையும் குறிப்பிடுகிறது.

**IEEE 696/S-100 : ஐஇஇஇ 696/S-100 :** மின்னியல் மற்றும் மின்னணுவியல் பொறியாளர்கள் நிறுவனத்தால் உருவாக்கப்பட்ட தரம் ஒன்றினை அடையாளம் காணல், கணினி துணைக்கருவி அனைத்தும் ஒருங்கிணைந்து செயல்படுவதை உறுதி செய்யும் வகையில் தரப்படுத்தப்பட்டது.

**IEEECS : ஐஇஇஇசிஎஸ் :** Institute of Electrical and Electronics Engineers Computer Society என்பதற்கான குறும்பெயர்.

**IEPG : ஐஇபீஜி :** இணைய பொறியியல் மற்றும் திட்ட

குழு என்று பொருள்படும் Internet Engineering and Planning Group என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். இணையத்தின் செல்வாக்கை வளர்த்தெடுப்பது, அதன் தொழில்நுட்ப முனைவுகளை ஒருங்கிணைப்பது ஆகிய வற்றை நோக்கமாகக் கொண்ட இணையப் பணியாளர்களின் ஒத்துழைப்புக் குழு.

**IESG** : ஐஇஎஸ்ஜி : இணையப் பொறியியல் நெறிப்படுத்துங் குழு எனப் பொருள்படும் Internet Engineering Steering Group என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர்.

**IETF** : ஐஇடீஎஃப் : இணையப் பொறியியல் முனைப்புக் குழு என்னும் பொருள்தரும் Internet Engineering Task Force என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணையத்தை எதிர்கொள்ளும் தொழில்நுட்பச் சிக்கல்களை ஆய்வு செய்து அவற்றுக்கான தீர்வுகளை ஐஏபி-க்குப் பரிந்துரை செய்யும் பொறுப்பினை இவ்வமைப்பு வகிக்கிறது. ஐஇஎஸ்ஜி இந்த அமைப்பினை மேலாண்மை செய்கிறது.

**IFAC** : ஐஎஃப்ஏசி : International federation of Automatic Control என்பதற்கான குறும்பெயர். கட்டுப்பாட்டுக்கான மிக முன்னேறிய அறிவியல் மற்றும் தொழில் நுணுக்கம் தொடர் பான ஒரு பன்னாட்டு நிறுவனம்.

**IFF** : ஐஎஃப்எஃப் (இஃப்) : ஒரு கோப்பு, மாறுகொள் கோப்பு வடிவாக்கத்தில் (Interchange File Format) உள்ளது என்பதைக் குறிக்கும் கோப்பு வகைப் பெயர் (File extension). அமிகா பணித்தளத்தில் இது மிகப் பரவலாகப் பயன்படுத்தப்படு கிறது. எவ்வகை தரவுகளைக் கொண்டதாகவும் அக்கோப்பு இருக்க முடியும். வேறு பணித் தளங்களில் பெரும்பாலும் படிமம் (image) மற்றும் ஒலி (sound) கோப்புகளுக்கான வகைப்பெயராகவே இது பயன் படுத்தப்படுகிறது.

**IFIP** : ஐஎஃப்ஐபீ : International Federation for Information Processing என்பதற்கான குறும்பெயர்.

**if statement** : if கட்டளை; if கூற்று : ஒரு பூலியன் தொடரின் விடை மெய் (அல்லது சரி) என்ற நிலையில், நிரலில் ஒரு குறிப்பிட்ட கட்டளைத் தொகுதியை நிறைவேற்றப் பயன்படும் கட்டளையமைப்பு. பெரும்பாலான நிரலாக்க

மொழிகளில் IF-உடன் ELSE-என்னும் துணைப் பிரிவும் பயன்படுத்தப்படுகிறது. அப் பூலியன் தொடர் பொய் (அல்லது தவறு) என்ற நிலையில் நிறைவேற்றப்படவேண்டிய கட்டளைத் தொகுதி ELSE பகுதியில் குறிப்பிடப்படுகிறது.

(எ-டு)
```
if (n>10)
{  a+=100;
   b=1*c+200;
}
else
{  a-=100;
   b=a/c-200;
}
```

**if-then-else : எனில்- இன்றேல் :** வடிவமைக்கப்பட்ட நிரல் தொகுப்பு தயாரிப்பின் அடிப் படையான மூன்று கட்டளை அமைப்புகளில் ஒன்று. நிபந்தனை சரிபார்ப்பு அல்லது தீர்வு செய் கட்டளை என இது அழைக்கப்படும்.

**ignore : புறக்கணி; தவிர்.**

**ignore all : அனைத்துப் புறக் கணி; அனைத்தும் தவிர்.**

**Ignore character : புறக்கணிப்பு உரு.**

**IGP : ஐஜிபீ :** உள்ளக நுழைவி நெறிமுறை என்று பொருள் படும் Interior Gateway Protocol என்ற தொடரின் தலைப்பெழுத் துக் குறும்பெயர். திசைப்படுத் தும் தகவலை அனுப்புவதை ஒழுங்குபடுத்தும் நெறிமுறை.

**IGRP : ஐஜிஆர்பீ :** உள்ளக நுழைவி திசைவிக்கும் (வழிப் படுத்தும்) நெறிமுறை எனப் பொருள்படும் Interior Gateway Routing Protocol என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். சிஸ்கோ நிறுவனம் இதனை உருவாக்கியது. ஒன்றுக்கு மேற் பட்ட நுழைவிகளை திசைவித்த லில் (வழிப்படுத்தலில்) ஓர் இணக்கத்தை ஏற்படுத்த இந் நெறிமுறை உதவுகிறது. மிகப் பெரிய பிணையங்களில் நிலைத்த வழிப்படுத்தல், பிணையக் கட் டமைவுகளின் மாற்றங்களுக்கு ஏற்ப விரைவான தகவமைவு மற்றும் குறைந்த செலவு இவையே ஐஜிஆர்பீ-யின் குறிக் கோள்கள்.

**IIL : ஐஐஎல் :** Integrated Injection Logic என்பதற்கான குறும் பெயர். வருங்கால குறும் செயலிகள் மற்றும் அரைக் கடத்தி நினைவகங்களில் பயன் படுத்தப்படக்கூடும் என்று எதிர்பார்க்கப்படும் ஒரு வளரும் தொழில்நுணுக்கம். இச்சிப்பு கள் ஏற்கனவே மின்னணுவியல் கைக்கடிகாரங்களில் பயன்

படுத்தப்படுகிறது. ஆனால் பொருள்கள், மோட்டார் வாகனங்கள் மற்றும் கணினி முறைமைகளின் கட்டுப் பாட்டுக் கருவிகளாக ஏற் கனவே கையாளப்படுகின்றன.

**IIR : ஐஐஆர் :** International Institute for Robotics என்பதற் கான குறும்பெயர்.

**IIS : ஐஐஎஸ் :** இணையத் தகவல் வழங்கன் எனப் பொருள்படும், **Internet Information Server** என்பதன் முதல் எழுத்துக் குறும்பெயர். மைக்ரோசாஃப்ட் உருவாக்கியுள்ள வலை வழங் கன் மென்பொருள்.

**.il : .ஐஎல் :** ஓர் இணைய தளம் இஸ்ரேல் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக்களப் பெயர்.

**illegal : சட்டப்புறம்பான; முறை கேடான; அனுமதிக்க முடியாத :** கணினிச் செயல்பாட்டில் அனு மதிக்க முடியாத நடவடிக்கை. மென்பொருள், வன்பொருள் எதில் வேண்டுமானாலும் ஏற் பட முடியும். (எ-டு) ஒரு சொல் செயலி மென்பொருளில் அனுமதிக்க முடியாத எழுத்து என்பது அந்நிரலால் அறிந்து கொள்ள முடியாத எழுத்தாகும். கணினி இயக்க முறைமை தவறான ஒரு நிரலின் வரம்பு மீறிய செயல்பாட்டை ஏற்றுக் கொள்வதில்லை. 'முறை கேடான செயல்பாடு!' என்று அறி விக்கப்பட்டு அந்நிரல் முடிவுக் குக் கொண்டு வரப்படும்.

**illegal character : ஏற்பிலா எழுத்துரு :** முறையான அல்லது தெரிந்த பிரதிநிதித்துவம் என்று கணினியால் ஏற்றுக் கொள்ளப் படாத எழுத்து அல்லது துண்மி களின் தொகுப்பாகும்.

**illuminance : ஒளிர்வூட்டம் :** *1.* ஒரு குறிப்பிட்ட தளப் பரப் பின்மீது விழுகின்ற ஒளிர்வூட்டும் ஒளியின் அளவு. 2. தொலைக் காட்சிப் பெட்டியின் திரை, கணினித் திரை போன்ற சாதனங்களின் ஒளிர்வூட்டத்தை அளவிடும் அலகு. ஒரு சதுர மீட்டருக்கு எத்தனை வாட்ஸ் என்று அளவிடப்படுவதுண்டு.

**Illuminate : ஒளியுமிழ்: ஒளி யூட்டும்:** வெளிப்படு திரை ஒன்றில் காட்டப்படும் வரை படம் ஒன்றின் ஒளி அளவை. பிரகாசத்தை அதிகரித்தல்.

**illustration software : விளக்க மென்பொருள்.**

**ILUG : ஐஎல்யூஜி** Indian Linux User Group என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**.il.us : .ஐஎல்.யுஎஸ் :** ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டின்

இல்லினாய்ஸ் மாநிலத்தைச் சேர்ந்தது என் பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**IMACS : உருவங்கள் : பட உருக்கள் :** International Mathematics And Computers Simulation என்பதற்கான குறும்பெயர். வல்லுநர்கள், கட்டடம் கட்டுவோர் மற்றும் இணை முறை மற்றும் கலப்பினக் கணினி முறைமைகளில் ஆர்வங் கொண்ட பயனாளர் இடையே அறிவியல்பூர்வமான தரவுகளைப் பரிமாறிக் கொள்ள உதவும் தொழில் முறை நிறுவனம்.

**Image : உருவப்படம் :** வேறு ஊடகம் ஒன்றில் சேமித்து வைக்கப்பட்டுள்ள படம் ஒன்றின் துல்லியமான காரண காரியப்படியான பிரதி. கணினியைப் பயன்படுத்துவோர் நினைவில் இருப்பதன் உள்ளடக்கத்தை கணினித் திரையில் வெளிப்படுத்தினால் நினைவில் இருப்பதன் படிவத்தைக் காணலாம். கணினி வரைபடத்தில், வரைபடக்கோப்பில் வரைந்திருப்பதைப் போன்ற வரைபடத் தரவுகளின் வெளிப்பாடு.

**Image area :** உருப்படப் பரப்பு.

**image base visual serving : படிமத் தளப் புலக்காட்சி வழங்குகை.**

**image colour matching : படிம நிறப் பொருத்தம் :** வருடப்பட்ட அல்லது உள்ளீடு செய்யப்பட்ட ஓர் படிமத்தின் நிறங்களை அப்படியே வெளியீடாகத் தருவதற்காகச் செய்யப்படும் திருத்தச் செயலாக்கம்.

**image compression : படிம இறுக்கம்:** ஒரு வரைகலை படிமக் கோப்பினைச் சேமிக்க தரவு இறுக்க நுட்பங்களைப் பயன்படுத்துதல். இறுக்கப்படாத வரைகலைக் கோப்புகள் சேமிப்பகத்தில் அதிகமான இடத்தை எடுத்துக் கொள்ளும். எனவே, படிம இறுக்கம், சேமிப்பக இடத்தைச் சிக்கனமாகப் பயன்படுத்த உதவும்.

**Image converter : உருப்பட மாற்றி.**

**image editing : படிமத் திருத்தம் :** ஓர் படிமத் தொகுப்பானில் ஒரு பிட்மேப் படிமத்தை மாற்றுதல் அல்லது திருத்துதல்.

**image editor : உருத்தோற்றத் தொகுப்பான்; படிமத் தொகுப்பான் :** பிட்மேப் படிமங்களைத் திருத்தியமைத்துச் சேமிக்க வகைசெய்யும் பயன்பாட்டு நிரல். வருடுபொறியில் வருடப்பட்ட ஒளிப்படங்களை (photographs) வடிகட்டல் மற்றும் வேறுபல செயல்கூறுகள் மூலம்

திருத்தி, செழுமைப்படுத்த முடியும். புதிய படிமங்களை, படங்களை இதில் உருவாக்க முடியாது. அதற்கென தனியான மென்பொருள் தொகுப்புகள் உள்ளன.

**Image enhancement : உருப்பட மேம்பாடு** : வரைபடம் ஒன்றின் எல்லாப் பாகங்களையும் அல்லது ஒரு பாகத்தை வண்ண மிடல், அல்லது நிழல்படியச் செய்தல், முக்கியத்துவம் அளித்தல், பெரிதுபடுத்துதல், தலைகீழாகப் படமாகக் காட்டல் அல்லது மினுக்கிடச் செய்தல்.

**image map : படிமக் குறிபடம்** : ஒரு வலைப்பக்கத்திலுள்ள ஒன்றுக்கு மேற்பட்ட மீத் தொடுப்புகளைக் கொண்டிருக்கும் ஒரு படிமம். ஒரு படிமத்தின் மீது வேறுவேறு பகுதிகளில் பயனாளர் சுட்டியால் சொடுக்கும்போது அதே வலைப்பக்கத்தின் வேறு பகுதிக்கோ, வேறொரு வலைப் பக்கத்துக்கோ, வேறொரு கோப்புக்கோ இட்டுச் செல்லப் படுவார். படிமக் குறிபடம் பெரும்பாலும் ஓர் ஒளிப்படமாகவோ, ஓர் ஓவியமாகவோ, பல்வேறு வரைபடங்களின்/ ஒளிப்படங்களின் கூட்டாகவோ இருக்கலாம். ஒரு குறிப்பிட்ட வலைத்தளத்தின் பல்வேறு வளங்களைச் சுட்டும் குறியீடுகளாக இப்படங்கள் அமைகின்றன. படிமக் குறிபடங்கள் சிஜிஐ (CGI) நிரல் மொழியின் மூலம் உருவாக்கப்படுகின்றன. சொடுக்குறு குறிபடம் என்றும் இவை அழைக்கப்படுகின்றன.

**Image - oriented backup : உருவம் சார்ந்த பின்பலம்** : கோப்புகள் தொடர்பின்றி வட்டில் கண்ணாடி உருவத்தை உருவாக்கும் எந்த ஒரு பின்பல அமைப்பும் இத்தகைய அமைப்புடன், பின்பல ஊடகத்தின் கோப்புகள் அணுக அனுமதித்து வட்டு முழுவதும் சுழல வேண்டும்.

**image processing : உருப்பட செயலாக்கம் ; பட அலசல்; உருவ அலசல்;** ஒரு கணினி வரைகலை உதவி தொழில் நுட்பம். பூமியைச் சுற்றும் செயற்கைக் கோள்கள் அனுப்புகின்ற தகவல்களை உருவங்களாக மாற்றி செயலாக்கம் புரிய வழி வகுக்கின்றன. தொழில் நுட்ப முறையில் நிறங்கள், நிழல்கள் அவற்றின் உறவுகளை ஆராய்வது. வானிலை நிலப்படங்களை உருவாக்கல், தடய (போரன்சிக்) அறிவியல் போன்ற துறைகளில் பயன்படுத்தப்படுகிறது.

**Imagesetter : உருப்பட அமைப்பு** : சொற்களையும், வரைகலைகளையும் கையாளும் எழுத்தமைப்பு எந்திரம்.

**imaginary number : கற்பனை எண் :** ஒரு மெய்யெண் (real number) மற்றும் i (($i^2$-ன் மதிப்பு = -1 ஆகும்) ஆகியவற்றின் பெருக்குத் தொகையாகக் குறிப்பிடப்படும் எண் கற்பனை எண் ஆகும். ஒரு மெய்யெண், ஒரு கற்பனை எண் ஆகியவற்றின் கூட்டு கலப்பு எண் (complex number) எனப்படுகிறது. கலப்பெண், a+ib என்ற வடிவில் எழுதப்படும். a, b ஆகியவை மெய்யெண்கள். பொதுவாக நம் வாழ்வில் கற்பனை எண்களை நாம் சந்திப்பதில்லை. நீளம் 15i அடி என்றோ, வினாடிக்கு 150i மெகாபிட் என்றோ நாம் பயன்படுத்தப் போவதில்லை. ஆனால், மின் பொறியியலில் சிலவகை இணை எண்ணிக்கைகள் ஒரு கலப்பெண்ணிலுள்ள மெய் மற்றும் கற்பனைப் பகுதிகளைப்போலக் கணித முறையில் கணக்கிடப்படுகின்றன.

**imaging : உருத்தோற்றி ; படிமமாக்கம் :** ஒரு வரைகலை உருத்தோற்றத்தை படமாக்கி, சேமித்து, திரையிட்டு, அச்சிடும் செயல்பாடுகள் உள்ளடக்கிய செயலாக்கம்.

**Imaging model : உருவமைப்பு மாதிரி:** உருவங்களைக் குறிப்பிடுவதற்கான விதிகளின் தொகுதி.

**imaging system : உருத்தோற்ற முறைமை; படிமமாக்க முறைமை.**

**IMAP4 : ஐமேப்4:** இணையச் செய்தி அணுக்க நெறிமுறை-4 என்று பொருள்படும் Internet Message Access Protocol-4 என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஐமேப்பின் அண்மைக்காலப் பதிப்பு. ஒரு அஞ்சல் வழங்கன் கணினியில் (mail server) மின்னஞ்சல் மற்றும் அறிக்கைப் பலகை செய்திகள் (Bulletin Board Message) சேமிக்கப்படுவதற்கான ஒரு வழிமுறையே ஐமேப். பாப் (POP-Post Office Protocol) என்னும் இன்னொரு முறையும் பயன்பாட்டில் உள்ளது. ஐமேப் முறையில் ஒன்றுக்கு மேற்பட்ட கணினிகளிலிருந்து அஞ்சல்/செய்திகளை மிகச்சிறப்பாக மீட்டெடுக்க முடியும். பாப் முறையில் இது இயல்வதில்லை.

**IMHO : ஐஎம்ஹெச்ஓ; ஐமோ :** எனது தாழ்மையான கருத்தின்படி என்று பொருள்படும் In My Humble Opinion என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். மின்னஞ்சல் மற்றும் நிகழ்நிலைக் கருத்தரங்குகளில் பயனாளர் ஒருவர் முன் வைக்கும் அவரின் சொந்தக் கருத்தினைக் குறிக்கும். ஒரு

மெய்ம்மை அடிப்படையிலான கூற்றாக இருக்க வேண்டிய தில்லை.

**Immediate access : உடனடி அணுக்கம்; உடனடி ஏற்பு:** தாமதமின்றி தரவுகளை உள்ளிடவும் திரும்பப் பெறவும் கணினிக்குள்ள திறன்.

**Immediate access storage : உடனடி ஏற்புச் சேமிப்பு.**

**Immediate address : உடனடி செயலேற்பு ஆணை :** ஒரு கட்டளை தொடர்பானது. அதன் முகவரிப் பகுதி செயல் பகுதியையும் உள்ளடக்கியதாக உள்ளது. அது முகவரியே அல்ல. கட்டளையின் ஒரு பகுதியாக வழங்கப்பட்ட செயல்பாடாகும்.

**immediate-mode-commands: உடனடி செயல்நிலை ஆணை ; உடனடி முறைமைக் கட்டளைகள் :** enter அல்லது return எனும் செயல் தொகுப்புக் கட்டுப்பாடு விசை அழுத்தப்பட்டதும் முறைமை மற்றும் தொகுப்பு ஆணைகள் நிறைவேற்றப்படும்.

**immediate operand : நேரடி மதிப்புரு:** சில்லு மொழி ஆணையைச் செயல்படுத்துகையில் பயன்படுத்தப்படும் ஒரு தரவு மதிப்பு. ஆணையிலேயே அம்மதிப்பு குறிப்பிடப்பட்டிருக்கும். ஆணையில் குறிப்பிடப்பட்டுள்ள ஒரு முகவரியின் மூலம் சுட்டப்படும் மதிப்பைக் குறிக்காது.

**immediate printing : உடனடி அச்சிடல் :** கணினியில் ஓர் உரைக் கோப்பினை அச்சுப் பொறிக்கு அனுப்புவதற்கு முன்பாக ஓர் அச்சுக் கோப்பாக சேமிக்கப்படுவதுண்டு. அல்லது இடைநிலையில் பக்க வடிவமைப்புச் செயல்முறை மேற்கொள்ளப்பட்டு அச்சுக்கு அனுப்பப்படுவதுண்டு. அவ்வாறில்லாமல் ஓர் உரையையும், அச்சிடுவதற்கான கட்டளைகளையும் நேரடியாக அச்சுப் பொறிக்கு அனுப்பும் முறைக்கு உடனடி அச்சிடல் என்று பெயர்.

**IMO : ஐஎம்ஓ :** என் கருத்தின் படி என்று பொருள்படும் In my opinion என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். மின்னஞ்சலில், இணையச் செய்தி/விவாதக் குழுக்களில் பயன்படுத்தப்படும் சுருக்கச் சொல். தாம் குறிப்பிடுவது நிச்சயமான ஒரு மெய்ம்மையாக இருக்க வேண்டியதில்லை என்பதை அவரே ஒத்துக் கொள்ளும் ஒரு கூற்று.

**impact print : தொட்டச்சு.**

**Impact printer : அழுத்து அச்சுப் பொறி; தாக்க அச்சிடு கருவி :** தரவு அச்சிடு கருவி உயர்த்தப் பட்ட அழுத்தம் காரணமாக விரைந்து உடனடியாக அச்சிடு கிறது. இதில் மையோ அல்லது நாடாவோ வண்ண ஊடக மாகப் பயன்படுத்தப்படுகிறது. Daisy wheel printer, Line printer, Thimble printer ஆகியவைகளைப் பார்க்கவும். தாக்கமிலா அச்சிடு கருவிக்கு இது எதிரானது.

**Impedance : மறிப்பு :** ஓம்சில் அலகிடப்படும் குறிப்பிட்ட இடைவெளியில் பாயும் மாற்று முறை மின்சாரத்துக்கு ஒரு மின் இணைப்பில் ஏற்படும் மொத்த எதிர்ப்பு மற்றும் எதிர்வினை.

**IMPLE : இம்பிள் :** Initial Micro Programme Load என்பதன் குறும்பெயர்.

**Implied address : மறைமுக முகவரி.**

**Implementation : அமல்; நடை முறைப்படுத்தல்:** கணினி முறைமை ஒன்றை நிறுவுவதில் கருவியைத் தேர்வு செய்தல், கருவியை நிறுவுதல், ஆட்களைப் பயிற்றுவித்தல், மற்றும் கணினி மையத்தின் இயக்கக் கொள்கை களை ஏற்படுத்துதல் ஆகியவை சம்பந்தப்பட்டுள்ளன. 2. ஒரு குறிப்பிட்ட கணினி முறைமை யில் ஒரு நிரல் தொகுப்பு மொழி யின் பிரதிநிதித்துவம். 3. நிரல் தொகுப்பு ஒன்றை நிறுவுதல்.

**impliment : செய்முறைப்படுத்து: செயலாக்கு.**

**Implode : உள்திணி :** ஒரு பெரிய சேர்ப்பியில் பாகங்களை இணைப்பது. ஒரு குறிப்பிட்ட தொழில்நுட்பத்தைப் பயன் படுத்தி தரவுகளைச் சுருக்கு வதையும் இது குறிப்பிடும்.

**Import : இறக்குமதி :** ஒரு தரவு முறைமைக்குள் மற்றொரு நிரலாக்கத் தொகுப்பில் உரு வாக்கப்பட்ட கோப்பு ஒன்றைப் படித்தல். ஏற்றுமதிக்கு எதிரானது.

**importing class : இறக்குமதி இனக்குழு.**

**impulse : கண உந்துகை.**

**IMS : ஐஎம்எஸ் :** Information Management System என்பதன் குறும்பெயர். வரிசைப்படி அமைக்கப்பட்ட கோப்புகள் மற்றும் தரவுத் தள அடிப்படை களில் தரவுகளைச் சேமிக்கவும் அவற்றை மீண்டும் பெறவும் வாய்ப்பளிக்கும் தரவுத் தள நிர்வாக முறைமை மற்றும் மென்பொருள் பொதி.

**.in : .இன்; .ஐஎன் :** ஓர் இணைய தள முகவரி. இந்திய நாட்டைச்

சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**Inactive** : செயலற்ற நிலை : பரிமாற்றம் தொடர்பானது. கணினியின் நினைவில் ஏற்றப்பட்டு ஆனால் இன்னும் நிறைவேற்றப்படாத ஒன்று.

**Inactive window** : செயலற்ற சாளரம்: பயன்படுத்தப்படாத சாளரம்.




செயலற்ற சாளரம்

**in-band signalling** : உள்-கற்றை சமிக்கை : ஒரு தரவு தொடர்புத் தடத்தில் பேச்சு அல்லது தகவலைக் கையாளும் அலை வரிசைக்குள்ளேயே அனுப்பி வைக்கப்படும் சமிக்கை.

**Incidence Matrix** : படு அணி : இரட்டைப் பரிமாண வரிசை. அது வரைபடம் ஒன்றின் ஓரங்களை வரையறை செய்கிறது. இணைப்புத் தளம் என்றும் அதனைக் கூறுவார்கள்.

**Incident Light** : படு வெளிச்சம் : ஒரு பொருள் ஒன்றின்மீது படுவது. வெளிச்சம் படு வெளிச்சத்தின் அலை வரிசைகளின் பிரதிபலிப்பு அல்லது ஈர்ப்புச் செயல்பாடு காரணமாக ஒரு பொருளின் வண்ணம் உணரப்படுகிறது.

**include sub folders** : உள் உறைகளிலும் தேடு.

**Inclusive OR** : அடங்கு அல்லது : உண்மையான பட்டியல் மதிப்பைத்தரும் பூலியன் செயல்பாடு. இதில் உண்மை மற்றும் அதனுடன் இணைந்துள்ள மாறுபாடுகள் உண்மை என்று தரப்படுகிறது. இப்பட்டியலில் அடங்கியுள்ளவை உண்மை இல்லை என்றால் மதிப்பு பொய்யானதாகி விடுகிறது. Exclusive OR compare NOR, NOR, NAND, AND, and logical sum ஆகியவைகளுக்கு எதிரானது.

**incoming data** : உள்ளீட்டுத் தரவு; வரும் தரவு.

**increase indent** : ஓரச்சீர்மை மிகு.

**increase speed** : வேகம் கூட்டு.

**increase volume** : ஒலியளவு கூட்டு.

**Increment :** உயர்வு : *1.* மதிப்பு ஒன்றுடன் அல்லது அதன் மாறு பாடுகளுடன் சேர்க்கப்பட்ட அளவு. Decrement என்பதற்கு எதிரானது. *2.* ஒரு வரைபட உள்ளீட்டு/வெளியீட்டுக் கருவியில் தொடர்பு கொள்ளக் கூடிய அருகில் உள்ள இரு புள்ளிகளுக்கு இடையில் உள்ள தூரம்.

**Increment Back-up :** கூட்டல் பின்பலம்; மேலேற்றுப் பின்பலம்; அதிகரிப்பு பின்பலம் : கடைசி பின்பல இயக்கத்திற்குப்பின் மாறிய கோப்புகளை மட்டுமே புதுப்பிக்கும் ஒரு பின்பல செயல்முறை. நேரத்தை மிச்சப்படுத்துவதற்கு இது பயனுள்ளது.

**increment compiler :** ஏறுமானத் தொகுப்பி; உயர்மானத் தொகுப்பி.

**Incremental plotter :** வளர் புள்ளி வரை கருவி ; பதின்ம முறைப் புள்ளியிடு கருவி: இது வரைபட தரவுகளை புள்ளியிடு முனையின் தொடர்பற்ற தன்னிச்சையான இயக்கத்தின் மூலம் வெளிப்படுத்துகிறது.

**Incremental spacing :** நுண் இடைவெளியிடல்

**incrementing :** மிகுத்தல்.

**Indefinite iteration :** நிச்சய மற்றுச் செய்தல்.

**Indegree :** உள்கோணம்; உட்புகு எண்: ஒரு முனையை நோக்கிய பல விளிம்புகள். வெளிக் கோணத்துக்கு எதிரானது.

**Indent :** உள்ளடக்கம்; உள் தள்ளு; ஓர் இடம் விடல்: பக்கத்தின் வலது அல்லது இடது ஓரத்திலிருந்து உள்ளே குறிப்பிட்ட இடவெளிவிட்டுத் துவங்குதல் அல்லது ஆவண உரையை நகர்த்துதல்.

**Indentation :** பத்தி உள்ளடக்கம்; உள் தள்ளல்: ஆவண உரையின் முதல்வரி துவக்கத்தில் காணப்படும் காலி இடம். இது பத்தி ஒன்றின் துவக்கத்தைக் குறிப்பிடுகிறது.

**independent :** சுயேச்சையான; சார்பற்ற; சார்பிலா.

**Independent Computer Consultants Association :** சுயேச்சையான கணினி ஆலோசகர்கள் சங்கம்: சுயேச்சையான கணினி ஆலோசகர்கள் சங்கத்தின் தேசிய இணைப்பு *1976*இல் உருவாக்கப்பட்டது. தேசிய அமைப்பு மற்றும் உள்ளூர் பிரிவுகளின் உறுப்பினர்கள் மூலமாக கருத்துகள் பரிமாறப்பட்டுக் கணினி ஆலோசனைத் தொழிலில் ஒரு கூட்டுக் குரலாக மாறுகிறது.

**Independent Computer Peripheral Equipment Manufacturers**

**(ICPEM) : சுயேச்சையான கணினி புற இணைப்புச் சாதன தயாரிப் பாளர்கள் :** கணினி சாதனங் களில் ஒன்றிரண்டு வகைகளைத் தயாரிப்பதில் சிறப்புத் திறன் உள்ள தொழிற்சாலைகளைக் கொண்ட நிறுவனம்.

**Independent Consultant : சுயேச்சையான ஆலோசகர் :** தகவல் சீரமைப்புத் துறையில் பயிற்சி உள்ளவர். வணிக நிறு வனங்கள் மற்றும் தொழில் நிறு வனங்களின் பிரச்சினைகளுக் குத் தீர்வு காண தாற்காலிக மாகப் பணி புரிகிறவர்.

**independent, machine : பொறி சாரா; கணினிசாரா.**

**Index : கோப்பு அட்டவணை; சுட்டு; வரிசைக் குறியீடு :** 1. ஒரே விதமான அலகுகள் கொண்ட வரிசையில் ஒரு குறிப்பிட்ட அளவைக் குறிக்க உதவும் குறி யீடு அல்லது எண். எடுத்துக் காட்டாக X 5 என்பது X வரிசை யில் 5வது உள்ள பொருளைக் குறிப்பிடுகிறது. 2. சில வரிசை முறை சேமிப்பில் உள்ள குறி யீட்டுப் பட்டியல். அதனை அணுகி தரவுத் தொகுப்பில் உள்ள பிற வகைகளின் முகவரி களைப் பெறலாம். எடுத்துக் காட்டாக வரைபடப் பட்டியலில் உள்ள வகைகள் அல்லது தரவு கோப்பில் புள்ளி விவரங்கள்.

**indexed : சுட்டுவரிசைப்பட்டது.**

**Indexed Address : சுட்டு முகவரி ;** அட்டவணை முகவரி; குறி யிடப்பட்ட முகவரி : கணினிக் கட்டளை ஒன்றை நிறைவேற் றும்பொழுதோ அதற்கு முந் தியோ குறியீட்டுப் பதிவேடு ஒன்றின் உள்ளடக்கத்தினால் மாற்றப்பட்ட முகவரி.

**indexed search : வரிசைமுறைத் தேடல் :** ஒரு தரவு தொகுதியில் ஒரு குறிப்பிட்ட தரவு குறிப் பைத் தேடிக் கண்டறியும் நேரத் தைக் குறைப்பதற்காக வரிசை முறைப்படுத்தலைப் பயன் படுத்திக் கொள்ளும் ஒருவகைத் தேடல் முறை.

**Indexed Sequential Access Method (ISAM) : சுட்டு வரிசை அணுகுமுறை;** குறியீட்டு வரிசைப்படுத்தப்பட்ட அணுகு முறை : நேரடி அணுகு கருவி யில் தரவுகளை வகைப்படுத் தும் வழிகள். தரவு ஆவணங் கள் எங்கே சேமிக்கப்பட்டுள் ளன என்பதைக் காட்ட உதவும் ஒரு அகர முதலித் தொகுப்பு அல்லது குறியீட்டுப் பட்டியல். குறியீட்டுப் பட்டியலின் உதவி யுடன் விரும்பும் தரவு ஆவணத் தைப் பெறலாம். ஆவணத்தின் சுமாரான இருப்பிடத்தைக் குறி யீட்டுப் பட்டியல் காட்டுகிறது. அல்லது நேரடி அணுகு கருவி

யில் தரவு துணுக்கின் இருப் பிடத்தைக் காட்டுகிறது. குறி யீட்டுப் பட்டியலில் குறிப் பிடும் இடத்தில் தேவையான ஆவணத்தை அல்லது தரவுத் துணுக்கை கண்டுபிடிக்கும் வரை கணினி தேடுகிறது.

**Indexer : சுட்டு ஆக்க வரிசை ; குறியீட்டு பட்டியல் தயாரிப்போர் :** ஆவணம் ஒன்றுக்காக குறியீட்டுப் பட்டியல் ஒன்றை உருவாக்கும் நிரலாக்கத் தொகுப்பு.

**Index File : பட்டியல் கோப்பு :** NDX அல்லது NTX என்ற விரி வாக்கங்கள் உள்ள கோப்புகள். ஒரு தரவுத் தளத்தில் உள்ள பதி வேடுகளை ஒரு குறிப்பிட்ட முறையில் அணுகுவதற்கான தகவலை இது கொண்டுள்ளது.

**Index hole : அட்டவணைத் துளை; குறியீட்டுத் துளை; குறியீட்டுப் பட்டியல் துளை:** மின் ஒளியியல் முறைமையால் அறியக்கூடிய துளையிடப்பட்ட வட்டு. இயக்கமுறைமையினால் தகட்டில் சுழிப் (பூஜ்யம்) பகுதி எங்கே துவங்குகிறது என் பதைத் துல்லியமாக அறியலாம்.




அட்டவணைத துளை

**index hole sensor : பட்டியல் துளை உணர்வி; சுட்டுவரிசை உணர்வி.**

**Indexing : சுட்டிணைப்பு வரிசை முறை; குறியீட்டு வரிசைப் படுத்துதல்:** நிரலாக்கத் தொகுப்பு உத்தி, அதனால் கட்டளை ஒன்றை குறியீடு என்றழைக்கப்படும் அம்சத் தினால் திருத்தி அமைக்கலாம்.

**Index mark : பட்டியல் அடை யாளம் ; அட்டவணைக் குறி :** பருப்பொருள் துளை அல்லது நாட்ச் அல்லது பதிவான குறி யீடு அல்லது அடையாளம். வட்டில் உள்ள ஒவ்வொரு வழித் தடத்தின் ஆரம்பமுனையை யும் அடையாளம் காட்டுவது.

**Index register : அட்டவணைப் பதிவகம் ; குறியீட்டுப் பதி வேடு:** ஆணை ஒன்றை நிறை வேற்றும்பொழுதோ அதற்கு முந்தியோ முகவரி ஒன்றி லிருந்து, பதிவேட்டின் உள் ளடக்கத்தோடு இன்னும் கூடு தலாகச் சேர்க்கலாம் அல்லது குறைக்கலாம்.

**Index Sequential :** அட்டவணை எண் வரிசை : வரிசை முறைப் பட்டியல் : ஒரு தரவு ஒருங் கமைப்பு முறை. இதில் பதி வேடுகள் வரிசை முறைப்படி ஒழுங்குபடுத்தப்பட்டு ஒரு பட்டியல் மூலம் குறிப்பிடப் படும். நேரடி அணுகுக் கோப்புச் சாதனங்களில் பயன் படுத்தப்படும்போது, இதனை ISAM - Index Sequential Access Method என்று சொல்லலாம்.

**index sequential access :** சுட்டு வரிசைமுறை அணுகல்; ஏட்டு எண் வரிசை அணுகல்.

**index sequential file :** சுட்டு வரிசை முறைக் கோப்பு; ஏட்டு எண் வரிசைக் கோப்பு.

**index variable :** சுட்டுவரிசை மாறிலி.

**Indicator :** சுட்டிக்காட்டி; காட்டி; அடையாளங்காட்டி : கணினி ஒன்றின் நிலையைப் பதிவு செய்யும் கருவி.

**Indirect addressing :** மறைமுக முகவரியாக்கம்; மறைமுக முகவரியிடல் : நேரடி முகவரி அல்லது மறைமுக முகவரியைக் கொண்ட இருப்பிடத்தை சேமிப்பில் குறிப்பிட முகவரி ஒன்றைப் பயன்படுத்துதல். இதனை பல அடுக்கு முகவரி யிடல் என்றும் அழைப்பார்கள்.

**Indirect mode :** மறைமுக முறை.

**Individual disks :** தனித்தனி வட்டுகள்.

**Indonet :** இன்டோநெட்: *1986* இல் சிஎம்சி நிறுவனம் இந்தி யாவில் நிறுவிய பொதுத் தரவு இணையம்.

**Induce :** தூண்டல் : தூண்டல் மூலம் ஒரு மின்சார ஓட்டம் அல்லது மின் வலிமையைத் தூண்டல். களப் பாதிப்பு மின் மயப் பெருக்கியின் வாயிலில் தூண்டப்படும் மின்னோட் டம். மின்னோட்டப் பாதையில் சம மான மின்னோட்டத்தைத் தூண்டுகிறது.

**Inductance :** தூண்டுநிலை : மின் இணைப்பில், ஏற்கனவே உள்ள மின் அளவு அலகில் ஏற் படும் மாற்றத்தை எதிர்க்கும் பண்பு ஹென்றி எனப்படும்.

**Induction :** தூண்டல்: மின்சார மற்றும் மின்காந்தப் பண்புகளைக் கொண்ட பொருள். நேரடித் தொடர்பில்லாமல் அருகில் உள்ள பொருள் ஒன்றில் மின் னேற்றத்தை அல்லது மின் காந்தப் புலத்தை உருவாக்குதல்.

**Industrial data collection device :** தொழில் தரவு சேகரிப்புக் கருவி: ஒரு குறிப்பிட்ட வேலையைச் செய்ய தொழிலாளி ஒருவர் எடுத்துக் கொள்ளும் நேரத்தை

பதிவு செய்யும் உள்ளீட்டுக் கருவி. செய்யப்படும் வேலைகளுக்கான சம்பளத்தைக் கணக்கிடப் பயன்படுத்தப்படுகிறது.

**Industrial espionage : தொழில் துறை கள்ளம் :** வெளியிடப்படாத, உரிமை பெற்ற தகவலை தவறாகப் பயன்படுத்தும் நோக்கத்துடன் நகலெடுத்தல் அல்லது திருடுதல். புதிய செயல்முறைகள், பொருள் வடிவமைப்புகள், விற்பனைத் திட்டங்கள் ஆகியவற்றையே பொதுவான இலக்காகத் திருடுகிறார்கள்.

**Industrial robot : தொழில் துறை எந்திர மனிதன் : தொழில் துறை எந்திரன்:** புதிய நிரல் தொகுப்புக்கு இடமளிக்கிற. பல பணிகளைச் செய்யக்கூடியது. பொருள்களை, கருவிகளை, சிறப்பான கருவிகளை திட்டமிடப்பட்ட இயக்கங்கள் மூலம் பல்வேறு பணிகளைச் செய்யக் கூடியது. மற்ற வகையான தானியக்கங்களைப் போல அல்லாமல் எந்திரன்கள் பல்வேறு வகையான பணிகளைச் செய்யும்படி நிரல் தொகுப்பை அளிக்கலாம். அதன் மூலம் அவற்றை இலகுவான தயாரிப்புக் கருவிகளாக மாற்றலாம். ரோபோக்களுக்கான நிரல் தொகுப்புகளை மாற்ற முடியுமாதலால் பல சாதகமான பயன்கள் உண்டு. மிகக் குறைந்த துவக்கச் செலவு மற்றும், குறைந்த மாசு நீக்கும் செலவுகள் காரணமாக எண்பிக்கப்பட்ட வடிவமைப்பும், ஒட்டு மொத்த தயாரிப்புச் செலவைக் குறைக்கும் பண்பையும் எந்திரன் கொண்டிருப்பதால் ஒரு நிறுவனம் அதன் இலாபத்தை அதிகரித்துக் கொள்ள முடிகிறது. மோட்டார் வாகனத் தொழில், விமானத் தொழில், வீட்டு உபயோக மின் அணுவியல் சாதனத் தயாரிப்பு, நுகர்வுப் பொருள்கள், சாலையில் செல்லாத வாகனங்கள் தயாரிப்பு ஆகியவற்றில் ஈடுபடும் பெரிய தொழில் நிறுவனங்கள் தொழில் துறை எந்திரன்களைப் பயன்படுத்துகின்றன. அண்மைக்கால வளர்ச்சி காரணமாக எந்திரன்கள் கூடுதல் அறிவுடன் இயங்குகின்றன. எந்திரப் பார்வை, தொடுஉணர்வு, நகரும் திறன் காரணமாக பல வகையான தொழில்களுக்கு எந்திரன்கள் (ரோபோக்கள்) பொருத்தமானவை. ஜவுளித் தொழில், உணவு பதப்படுத்துதல், மருந்துப் பொருள் தயாரிப்பு, மேஜை நாற்காலி வகைகள் தயாரிப்பு, கட்டுமானத் தொழில், சுகாதாரப் பராமரிப்பு ஆகியவற்றில்

மிகவிரைவில் எந்திரன்கள் பெருமளவு பயன்படுத்தப் படும். உற்பத்தி, உற்பத்தித் திறன் தொகுப்புகளில் எந்திரன் கள் பெருமளவு லாபம் தருவன வாக உள்ளன. அமெரிக்காவில் தொழில் நிறுவனங்களில் எந்திரன்களைப் பயன்படுத்து வதால் 20 முதல் 30 சதவீதம் உற்பத்தித் திறன் அதிகரிக்கிறது என்பதை அமெரிக்க வரலாறு காட்டுகிறது. எந்திரன்களைப் பயன்படுத்தும் நிறுவனங்கள் தற்பொழுது பயன்படுத்தப் படும் எந்திரங்களுக்கான நிலுவையைச் செலுத்துவதைத் துரிதப்படுத்த இயலும். அதே சமயம் எந்திர முதலீட்டுத் தேவைகளைக் குறைத்துக் கொள்ளமுடிகிறது. எடுத்துக் காட்டாக கூடுதலாக அழுத்த அச்சு எந்திரங்களையும் அல்லது எந்திரக் கருவிகளையும் வாங்கு வதை விட எந்திரன்களை வாங்குவது 20 முதல் 30 சதவீத கூடுதல் உற்பத்தி தருவதாக உள் ளது. சமமான செலவில் அல் லது கூடுதலான செலவில் குறை வான உற்பத்தித் திறன் உள்ள ஒரு எந்திரத்தை வாங்குவதை விட எந்திரன்களை வாங்கு வதால் 20 முதல் 30 சதவீதம் உற்பத்தி திறன் உயர்கிறது.

**Inequality : சமமின்மை :** சமம் இல்லாத இரண்டு மதிப்பீடு களின் வெளிப்பாடு. 'பி' யை விட 'ஏ' பெரியது, 'ஏ' யை விட 'பி' பெரியது என்று கூறும் சம மின்மையை வெளிப்படுத்தும் இரண்டு வழிகளாகும். ஏ-க்கு பி-சமம் இல்லை என்பது சம மின்மையின் வரிசை முறையை வெளிப்படுத்தாது சமமின் மையை மட்டும் காட்டுகிறது.

**infection : தொற்று :** ஒரு கணினி அமைப்பு அல்லது முறைமையில் நச்சுநிரல் குடி யேறியுள்ளதைக் குறிக்கும் சொல். ட்ரோஜான் குதிரை அல்லது நச்சுப்புழு வகையைச் சேர்ந்ததாக இருக்கலாம்.

**infer : உய்த்துணர்; ஊகி :** குறிப் பிட்ட தகவலின் அடிப்படை யில் எடுக்கப்படும் முடிவு. முறையான தருக்க விதிகளின் படியோ, பொதுவான கண் ணோட்டத்தின் அடிப்படை யிலோ எடுக்கப்பட்டதாக இருக் கலாம். (எ-டு) பறவைகளுக்கு இறகுகள் உள்ளன. கானரி என்பது மஞ்சள் நிறமுடைய பாடும் பறவை. இந்த இரு கூற்றுகளின் அடிப்படையில் கானரிகளுக்கு இறகுகள் உண்டு என்பதை உய்த்து அறியலாம் அல்லவா?

**Inference : முடிவறிதல்; உய்த் துணர்தல்; அனுமானம் :** அறிந்த உண்மை மதிப்பீடுகளையுடைய

துவக்கநிலை அலகுகளில் இருந்து முடிவு ஒன்றைப் பெறும் முறை.

**inference engine :** உய்த்துணர் பொறி ; ஊகித்தறி பொறி; முடிவு செய்பொறி : ஒரு வல்லுநர் முறைமையின் (Expert System) செயலாக்கப் பகுதி. வல்லுநர் முறைமையில் மெய்ம்மைக் கூறுகளும் (Facts) விதிமுறைகளும் (Rules) ஓர் அறிவுத் தளத்தில் (knowledge base) சேமிக்கப்பட்டிருக்கும். ஆய்வுக்கான கருதுகோள்கள் உள்ளீடாகத் தரப்படும்போது அவை மெய்ம்மைகளுடனும் விதிமுறைகளுடனும் ஒப்பிட்டுப் பார்க்கப்பட்டு, முடிவுகள் பெறப்பட்டு அதற்கேற்ப, வல்லுநர் முறைமை நடவடிக்கையை மேற்கொள்கிறது.

**Inference programme :** அனுமான நிரல் தொகுப்பு ; தரப்பட்ட உண்மைகளிலிருந்து முடிவு ஒன்றைப் பெறும் நிரலாக்கத் தொகுப்பு.

**inference rule :** உய்த்தறி விதி.

**infiled :** உள்புலம்.

**Infinite loop :** முடிவற்ற வளையம் : ஒரு நிரல் தொகுப்பு ஒன்றில் தொடர்ந்து வரும் நிரல்களின் தொகுப்பு. வெளியேறும் நிபந்தனையற்ற வளையம். முடிவற்ற வளையம் என்றும் அழைக்கப்படும்.

**infinite number :** வரம்பிலா எண்; வரம்பிலி.

**Infinite rule :** அனுமான விதி முறை.

**Infix notation :** உள் பொருத்தப்பட்ட குறியீடு ; பொதுவான கணிதச் சமன்பாடு. இதில் செயல்பாடுகள் பகுதி முறைகளில் அடங்கியுள்ளது. 5 -ஐயும் 3-யும் கூட்டுதலை 5 + 3 என்று குறிப்பிடப்படுகிறது. இதில் முன்னிணைப்புக் குறியீடோ, பின்னிணைப்புக் குறியீடோ கிடையாது.

**infobahn :** இன்ஃபோபான்; தகவல் விரைவுச் சாலை; தகவல் நெடுஞ்சாலை : இன்ஃபர்மேஷன் (Information), ஆட்டோபான் (Autobahn) ஆகிய இரு சொற்களும் இணைந்த கூட்டுச் சொல். இணையத்தை இச்சொல்லால் குறிப்பிடுகின்றனர். ஆட்டோபான் என்பது ஜெர்மன் நாட்டில் வாகன ஓட்டிகள் சட்டப்படி மிகவேகமாக வாகனத்தை ஓட்டிச் செல்வதற்கான நெடுஞ்சாலை ஆகும்.

**Infoprenneur :** தகவல் தொழில் முனைவர் : மின்னணுத் தகவலைத் திரட்டிப் பரப்பும் வணிகத் தில் உள்ள நபர்.

**Informal design review :** முறைசாரா வடிவமைப்பு மதிப்பியல்; முறைமையால் வடிவமைக்கப்பட்ட ஆவணத்தை தேர்வு செய்யப்பட்ட நிர்வாகம் முறைமை ஆய்வு, மற்றும் நிரல் தொகுப்புரைகளைக் குறியீடு செய்யும் முன் தேவையான சேர்ப்பு, நீக்கம், திருத்தம் ஆகியவைகளைச் செய்ய மதிப்பிடல்.

**Informatics : தகவலியல் :** தகவல் தொழில் நுணுக்கத்துக்கு சமமானதாகக் கையாளப்படும் சொல்.

**Information : தகவல் :** கணினி ஒன்றுக்குள் வழங்கப்பட்ட தரவுகளிலிருந்து பெறப்பட்ட பொருளுள்ள பயனுள்ள உண்மைகள். அறிந்த மரபுகளின்படி தரவுகளுக்கு வரையறை செய்யப்பட்ட பொருள்.

**Information Analysis : தகவல் ஆய்வு; செய்தி ஆய்தல்.**

**Information banks : தகவல் வங்கிகள்;** குறிப்பிட்ட பயன்பாடுகள் தொடர்பான தகவல்களைச் சேமிக்கக்கூடிய பெரிய புள்ளி விவர அடிப்படைகள்.

**Information bits : தகவல் துண்மிகள் :** தரவு தொடர்பில் தகவல்ஆதாரங்களினால் இத்துண்மிகள் உருவாக்கப்படுகின்றன. இவற்றில் பிழையைக் கட்டுப்படுத்தும் துண்மிகள் சேர்க்கப்படவில்லை.

**Information centre : தகவல் மையம் ;** ஒரு நிறுவனத்தில் இறுதி பயனாளராக இருப்பவருக்கான ஆதரவு வசதி. பயன்படுத்துபவர்கள் தங்களது சொந்தப் பயன்பாட்டு நிரலாக்கத் தொடர்களை உருவாக்க கற்றுத் தருவதுடன் தங்களது சொந்த தகவல் செயலாக்க பணிகளுக்கும் உதவுகிறது.

**information channel : தகவல் இணைப்பு; தகவல் தடம்; தகவல் அலைவரிசை.**

**Information engineering : தகவல் பொறியியல் :** ஒரு நிறுவனத்தில் தகவல் செயலாக்கத்தை உருவாக்கவும், வழிகாட்டவும் பயன்படும் பொருள்கள் மற்றும் செய்முறைகளின் ஒருங்கிணைந்த தொகுதி.

**Information explosion : தகவல் பொருத்தம் :** எல்லா வகையான தகவல்களின் உற்பத்திப் பெருக்கம், அவற்றின் விரிவு.

**Information filtering : தகவல் வடிகட்டல் ;** மனித மூளையில் தகவல் செயலாக்கப்படும் போது சில தூண்டல்களைத் திரையிட்டு தேர்ந்தெடுப்பதற்கு மனிதர்கள் பல வகையான கோட்பாட்டு அமைப்புகளைப் பயன்படுத்துதல்.

**Information float : தகவல் மிதவை :** அனுப்புபவருக்கும்,

பெறுபவருக்கும் இடையில் ப யணத்தில் உள்ள எழுதப்பட்ட கடிதம் அல்லது பிற ஆவணம். இந்த பயணத்தின்போது எந்த ந டவடிக்கைக்கும் அல்லது பதில் தரவும் அது கிடைப்பதில்லை.

**information hiding : தகவல் மறைப்பு:** பொருள்நோக்கு நிர லாக்கத்தில் ஒரு கருத்துரு. ஒரு தரவுக் கட்டமைப்பு மற்றும் செயல்கூறுகள் என்ன செய்யும் என்பதே அதைப் பயன்படுத் தும் நிரலருக்குத் தெரியும். எப்படிச் செய்யும் என்கிற தரவு மறைக்கப்பட்டிருக்கும். அத் தகைய செயல்கூறுகள் குறிப் பிட்ட செயலாக்க முறையைச் சார்ந்து இருப்பதில்லை. ஒரு நிரல் கூறு அல்லது துணைநிரல் செயல்படும் முறையை அவற் றைப் பயன்படுத்திக் கொள்ளும் நிரல்களுக்குச் சார்பின்றி மாற்றி யமைத்துக் கொள்ள தரவு மறைப்பு கோட்பாடு உதவுகிறது.

**information highway : தகவல் பெருவழி; தகவல் நெடுஞ்சாலை.**

**Information Industry : தகவல் தொழில்:** நேர்முகப் பணிகள் மூலமோ அல்லது வட்டுகள் மூலம் விநியோகிக்கப்பட்டோ அல்லது சிடி ரோம் மூலமோ தகவல் வழங்கும் நிறுவனங் கள். அனைத்து கணினிகள், தக வல் தொடர்புகள், மின்னணு தொடர்புள்ள நிறுவனங்கள், வன்பொருள், மென்பொருள் மற்றும் பணிகளும் இதில் அடங்கும்.

**Information management : தகவல் மேலாண்மை :** தரவுவை ஒரு நிறுவனத்தின் மூலாதாரமாக ஆராயும் துறை. கணினியால் செயலாக்கப்பட்டாலும் இல்லை யென்றாலும் ஒரு நிறுவனத்தில் உள்ள அனைத்து தரவுகள் மற் றும் தகவல்கள் பற்றிய விளக் கங்கள், பயன்கள், மதிப்பு மற் றும் விநியோகமும் இதில் அடங்கும். ஒரு நிறுவனம் திறம் பட முன்னேறவும் செயல்பட வும் எத்தகைய விவரங்கள் தரவு கள் தேவைப்படுகின்றன என் பதை இது ஆராய்கிறது. கணினி தீர்வுகளை உருவாக்குவதற்கு முன் தேவைப்படும் தரவுவை ஆராய்ந்து அறிய வேண்டும்.

**Information networks : தகவல் பிணையம் :** பூமியில் பல்வேறு பகுதிகளில் உள்ள நூலகங்கள் மற்றும் தரவு மையங்களை, அவற்றின் தள முழுத் தகவல் ஆதாரங்களை மேலும் அதிக மான மக்களிடையே பகிர்ந்து கொள்ளும் நோக்கத்துடன் உரு வாக்கப்பட்ட தொலைத் தகவல் கள் மூலமான இணைப்பு.

**Information overload : தகவல் மிகைப்பளு :** திறமுடன் ஏற்றுக்

கொள்ளக்கூடிய அல்லது கையாளக்கூடிய அளவுக்குமேல் ஒரு நபரிடம் தகவல் போய்ச் சேர்ந்தால் இத்தகைய நிலை ஏற் படுகிறது. இதனால் குழப்பமும் தகவல் பெற்றவர் செயல்பட முடியாத நிலையும் ஏற்படுகிறது.

**Information processing : தகவல் வகை செய்தல்; தகவல் அலசல் :** கணினி ஒன்றின் செயல்களின் முழுமை. மதிப்பீடு, ஆய்வு மற் றும் தகவல்களை வகைசெய்தல் ஆகியவற்றின் மூலம் பயனுள்ள தகவல்கள் தயாரிக்கப் படுகின்றன.

**Information processing center : செய்தி வகைசெய்யும் மையம்; தகவல் அலசி ஆராயும் மையம் :** Data Processing Center போன்றது.

**Information processing curriculum : தகவல் வகை செய்யும் கல்வி :** Data Processing Curriculum போன்றது.

**Information providers : தகவல் அளிப்போர் ;** கணினி பிணைய பிணைப்புக்கு கட்டணத்துக்காக தகவல்களை வழங்கும் பெரிய வணிக நிறுவனங்கள். எடுத்துக் காட்டு Source or CompuServe

**Information quality : தகவலின் தரம் ;** ஒரு குறிப்பிட்ட பயனா ளருக்குப் பயனளிக்கக்கூடிய வடிவம் உள்ளடக்கம் மற்றும் காலம் ஆகிய தன்மைகள் தகவலில் எந்த அளவு உள்ளது என்பதைக் குறிப்பிடுகிறது.

**Information reporting system : தகவல் அறிவிக்கும் அமைப்பு :** குறிப்பிட்ட கால இடைவெளி யிலோ அல்லது தேவையின் பேரிலோ தேவையான அறிக்கைகள், காட்சிப் பொருள் கள், பதில்கள் ஆகியவற்றை அளிக்கும் மேலாண்மை தரவு அமைப்பு.

**Information resource management : செய்தி வள மேலாண்மை; தகவல் ஆதார நிர்வாகம்;** தொழி லாளி, மூலதனம் மற்றும் கச்சாப் பொருள் தகவல் ஆதாரங்களை நிர்வகிப்பதற் கான முறைமை.

**Information retrieval : தகவல் பெறல்; தரவு மீட்பு :** 1. சேமிப்பு மற்றும் பெருமளவு தகவல் களில் தேடல் மற்றும் தேர்வு செய்யப்பட்ட தகவல்களைக் கிடைக்கச் செய்தல். தொடர் பான தொழில் நுணுக்கங்கள் தொடர்புடைய கணினித் தொழில் நுணுக்கப் பிரிவு.

**Information revolution : தகவல் புரட்சி :** சமூகத்தில் கணினித் தொழில் நுணுக்கம் ஏற்படுத்திய பாதிப்பு காரணமாக தற் பொழுதைய ஊழிக்குத் தரப்

பட்ட பெயர். தகவல் புரட்சி, கணினிப் புரட்சி என்றும் சில நேரங்களில் அழைக்கப்படுகிறது.

**Information science : தகவல் அறிவியல்; தகவலியல் :** எல்லா வகையான தகவலையும் மக்கள் எப்படி உருவாக்குகிறார்கள், பயன்படுத்துகிறார்கள் மற்றும் மற்றவர்களுக்கு வழங்குகிறார் கள் என்பது பற்றிய ஆய்வு.

**Information services : தகவல் பணிகள் :** விரிவான தகவல் அடிப்படை பல்வேறு வகை யான பணிகளுக்கு வகை செய் கிறது. எடுத்துக்காட்டாக விமானப் பயணப்பதிவு, பங்குச் சந்தை விலை விவரங்கள்.

**information storage : தகவல் சேமிப்பகம்; தகவல் களஞ்சியம்.**

**information storage and retrieval : தகவல் சேமிப்பும் மீட்பும்.**

**information super highway : தகவல் நீள் நெடுஞ்சாலை :** தனியார் பிணையங்கள், நிகழ் நிலைச் சேவைகள் மற்றும் இது போன்ற தகவல் போக்குவரத் தினை உள்ளடக்கிய, தற் போதுள்ள இணையம் மற்றும் அதன் பொதுக் கட்டமைப்பு களையும் குறிப்பது.

**Information system : தகவல் முறைமை; தகவல் அமைப்பு :** ஊழியர், நடைமுறைகள் மற்றும் கருவிகள் சேகரிப்பு, தகவல்களைச் சேகரிக்க, பதிவு செய்ய, வகைப்படுத்த, சேமிக்க, மீண்டும் பெற, வெளிக்காட்ட வடிவமைக்கப்பட்டது, இயக்கப் படுகிறது மற்றும் பராமரிக்கப் படுகிறது.

**information system, management : மேலாண்மை தகவல் முறைமை.**

**Information system specialist : தகவல் அமைப்பு வல்லுநர் :** கணினி தொழில் அல்லது கணினி பயன்படுத்தும் நிறு வனத்தில் கணினி சேவை களைக் கொடுப்பது தொடர் பான தொழிலில் உள்ள நபர்.

**Information technology : தகவல் தொழில் நுட்பம் :** தகவல்கள். ஒலி, படங்களைக் கொண்டு செல்லும் உயர்வேகத் தகவல் தொடர்பு இணைப்புகளையும் கணினி முறைமையையும் இணைத்தல்.

**Information Technology Act : மின்வெளிச் சட்டம்; தகவல் தொழில் நுட்பச் சட்டம்.**

**Information Technology Manager : தகவல் தொழில்நுட்ப மேலாளர்.**

**Information Technology Project Manager : தகவல் தொழில் நுட்பத் திட்ட மேலாளர்.**

**Information theory : தகவல் கொள்கை :** தகவல் பரிமாற்றம்,

பிழைகள், சப்தம், திரிவு ஆகிய வைகளுக்குட்பட்ட வகையில் சரியாக வழங்குதல் தொடர்பான கல்வி.

**Information Thru' Speech (ITS) : பேச்சின் மூலம் தகவல் (ஐடீஎஸ்)** : அமெரிக்காவின் மேரிலாண்ட் கம்ப்யூட்டர் சர்வீஸ் நிறுவனம் உருவாக்கிய நுண் கணினி.

**Information utility : தகவல் பயன்பாட்டமைப்பு.**

**information warehouse : தகவல் கிடங்கு** : ஒரு நிறுவனத்தின் அனைத்துக் கணினிகளிலும் சேமித்து வைக்கப்பட்டுள்ள தரவு வளங்களின் ஒட்டு மொத்தத் தொகுப்பு.

**information warfare : தகவல் போர்த் தாக்குதல்** : எதிரி நாட்டின் பொருளாதார வாழ்வும் பாதுகாப்பும் பெரிதும் சார்ந்துள்ள கணினி நடவடிக்கைகள் மீதான தாக்குதல். விமானப் போக்குவரத்துக் கட்டுப்பாட்டு அமைப்புகளை நிலைகுலையச் செய்தல், பங்குச் சந்தை ஆவணங்களை பெருமளவில் பாழாக்குதல் போன்ற நடவடிக்கைகளை எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

**infrared : அகச்சிவப்பு** : மின்காந்த நிறமாலையில் சிவப்பு ஒளிக்குச் சற்றே கீழான வரம்புக்குள் ஓர் அலைவரிசையைக் கொண்டுள்ள கதிர். பொருட்கள் தத்தம் வெப்ப நிலைக்கேற்ப அகச்சிவப்புக் கதிர்களை வெளியிடுகின்றன. வழக்கமாக, அகச்சிவப்புக் கதிர் வீச்சு அதன் அலைநீளத்தின் அடிப்படையில் நான்கு வேறு வகைகளாகப் பிரிக்கப்படுகின்றன.

**infrared data association : அகச்சிவப்புத் தரவுச் சங்கம்** : கணினிகளுக்கும் அவற்றின் புறச் சாதனங்களுக்கும் இடையே அகச்சிவப்புக் கதிர்மூலமான தகவல் தொடர்புக்குரிய தகவல் வரையறைகளை ஏற்படுத்தியுள்ள தொழில் நிறுவனங்களின் ஓர் அமைப்பு. இவை பெரும்பாலும் கணினி உதிரி உறுப்புகள் மற்றும் தகவல் தொடர்புச் சாதனங்களை உற்பத்தி செய்யும் நிறுவனங்களாகும்.

**infrared port : அகச்சிவப்புத் துறை** : அகச்சிவப்புக் கதிர் உணரும் சாதனத்துடன் தொடர்பு கொள்ள ஒரு கணினியில் அமைந்துள்ள ஓர் ஒளியியல் துறை. இணைப்பு வடக் கம்பிகள் இல்லாமலே தகவல் தொடர்பு இயல்கிறது. தற்போதைக்கு சில அடி தொலைவுக்கே தொடர்பு ஏற்படுத்த முடிகிறது. மடிக் கணினிகள், கையேட்டுக் கணினிகள்,

அச்சுப்பொறிகளில் அகச் சிவப் புத் துறைகள் வந்து விட்டன. தகவல் தொடர்பில் ஈடுபடும் இரண்டு சாதனங்களின் துறை கள் நேராகப் பார்த்துக் கொண் டிருப்பது கட்டாயம்.

**infrastructure : உள் கட்டமைவு.**

**Inherent error : உள்ளார்ந்த பிழை :** நிச்சயமற்ற அளவுகள், அப்பட்டமான தவறுகள், குறை வான பதின்ம நிலைகளினால் கரிக்கப்பட்ட மதிப்பீடு ஆகிய வற்றின் பிழையான துவக்க மதிப்பீடுகளைக் கொண்ட கணினிப் பிழை.

**Inheritance : வாரிசுரிமை:** பொருள் சார்ந்த நிரல் தொடர மைத்தலின் முதலாவது வகுப் பின் உடன்பிறந்த தன்மைகளை வேறொரு வகுப்புப் பொருள் கள் பெறும் திறன்.

**inheritance code : மரபுரிமக் குறி முறை :** பொருள்நோக்கு நிர லாக்கத்தில், ஒரு பொருளுக் குரிய கட்டமைப்பு மற்றும் செயல்முறைக் கூறுகளையும் குறிக்கிறது. எந்த இனக்குழு விலிருந்து இப்பொருள் மரபுரி மையாக உருவாக்கப்பட்டதோ, அந்த இனக்குழு அல்லது அதன் பொருளிலிருந்து இவை அனுப்பி வைக்கப்பட்டவை ஆகும்.

**inhibit : தடைசெய் : ஒரு நிகழ் வினைத் தடுத்தல். (எ-டு)** கணினியின் புறச்சாதனம் ஒன் றின் குறுக்கீடுகளை (interrupts) தடை செய்தல். அதாவது, அப் புறச்சாதனம் எவ்விதக் குறிக் கீடுகளையும் அனுப்புவதை தடைசெய்வது என்று பொருள்.

**In-house : வீட்டுக்குள்:** தன் னுடைய சொந்த மூலாதாரங் களைக் கொண்டு ஒரு நிறு வனம் செய்து முடிக்கின்ற நட வடிக்கைகள்.

**.ini : .ஐஎன்ஐ :** டாஸ் மற்றும் விண்டோஸ் 3.x இயக்க முறைமைகளில் இயக்கத்தை தொடங்கி வைக்கும் முக்கிய கோப்பினை அடையாளங் காட் டும் வகைப்பெயர் (File Extension). பெரும்பாலும் பயனாள ரின் விருப்பத் தேர்வுகளையும், ஒரு பயன்பாட்டுத் தொகுப்பின் தொடக்க நிலைத் தகவல்களை யும் ஐஎன்ஐ கோப்பு தன்ன கத்தே கொண்டிருக்கும்.

**INIT : தொடக்கு; இனிட் :** 1. பழைய மெக்கின்டோஷ் கணினிகளில், கணினியை இயக்கும்போது நினைவகத்தில் ஏற்றிக் கொள்ளப்படும் முறைமை யின் துணைநிரல். 2. யூனிக்ஸ் இயக்கமுறைமையில், முறைமை நிர்வாகி செயல்படுத்தும் ஒரு கட்டளை. 3. ஜாவா குறுநிரல்

களில் (Applets) கட்டாயமாக இடம்பெறும் முக்கிய வழி முறை. குறுநிரல் அழைக்கப் படும்போது இந்த வழிமுறை இயக்கப்படும்.

**initial base font :** தொடக்க தள எழுத்துரு.

**initial graphics exchange specification : தொடக்க வரை கலைப் பரிமாற்ற வரன்முறை :** அமெரிக்க தேசிய தரக்கட்டுப் பாட்டு நிறுவனத்தின் (ANSI) ஆதரவு பெற்ற கணினி வரை கலைக் கோப்பு வடிவாக்கத் தரம். குறிப்பாக, கணினியுதவு வடிவமைப்பு (CAD) நிரல்களில் உருவாக்கப்பட்ட மாதிரியங் களைக் கையாள இது ஏற்ற தாகும். அடிப்படையான வரை கணித வடிவங்களை உள்ளடக் கியது. கணினியுதவு வடி வமைப்பின் குறிக்கோள் களுக்கு இசைவானது. உரை விளக்க வரைபடங்கள், பொறி யியல் வரைபடங்கள் ஆகிய வற்றுக்கு உகந்தது.

**initialization :** தொடக்கி வைத் தல்; தொடக்க மதிப்பிருத்தல்; தொடக்க நிலைப்படுத்தல் : ஒரு நிரலில் மாறிகளிலும், தரவுக் கோவைகளிலும் தொடக்க மதிப்புகளை இருத்தி வைக்கும் செயல்பாடு.

**initialization list :** தொடக்க மதிப்பிருத்தும் பட்டியல்.

**initialization portion :** தொடங்கி வைக்கும் பகுதி.

**initialization string : தொடங்கி வைக்கும் சரம் :** ஒரு புறச் சாதனத்துக்கு, குறிப்பாக ஓர் இணக்கிக்கு அனுப்பி வைக்கப் படும் தொடர்ச்சியான கட் டளைகளின் தொகுப்பு. இணக்கி யைச் செயல்பட வைக்கத் தயார் செய்யும் கட்டளைகள்; பெரும் பாலும் எழுத்துகளைக் கொண்ட சரமாக இருக்கும்.

**Initialize : தொடக்க மதிப் பளிப்பு:** ஒரு தகடு ஒன்றைத் தயாரிப்பதற்கான கணக் கீட்டைத் துவங்குமுன் சரியான துவக்க மதிப்பீடுகளை அல்லது ஜன்னலை, மாறுபாடுகளை முன்னரே தீர்மானித்தல்.

**initializer : தொடக்க மதிப்பிருத்தி :** ஒரு மாறிலியின் தொடக்க மதிப்பாக அமையும் மதிப்பினை தரக்கூடிய கணக்கீட்டுத் தொடர்.

**initial programme load : தொடக்க நிரல் ஏற்றம் :** ஒரு கணினி இயக்கி வைக்கப்படும் போது, ஓர் இயக்க முறைமையை நினைவகத்தில் ஏற்றி எழுதிக் கொள்ளும் செயல்முறை.

**Initial value :** தொடக்க மதிப்பளவு.

**initiate :** தொடக்கி வை.

**initiator :** தொடக்கி : ஸ்கஸ்ஸி (SCSI) இணைப்பிகளில் கட்டளைகள் தரக்கூடிய ஒரு சாதனம். கட்டளைகளைப் பெற்றுக் கொள்ளும் சாதனம் இலக்கு (Target) எனப்படுகிறது.

**Initiator terminator :** துவக்கும் முகப்பு: உள்ளீடு / வெளியீடு சாதனங்களுக்கு ஒதுக்குவதற்கும் இயக்கப்படுவதற்கு நிரலியிடுவதற்கும் வெளியீட்டை அச்சிடுவதற்கும் வேலை ஒதுக்கீடு செய்யும் ஒரு வழமை.

**ink cartridge :** மைப் பொதியுறை : பெரும்பாலும் ஒரு மையச்சுப் பொறியில் (Ink-jet printer) பயன்படுத்தக்கூடிய மைக் குப்பி. பெரும்பாலும், மை தீர்ந்தவுடன் எறியப்படக் கூடியதாக இருக்கும்.

**ink character reader, magnetic :** காந்த மையெழுத்துப் படிப்பி.

**Ink-Jet :** மை-பீச்சு; மை வழங்கி: ஒரு அச்சுத் தொழில் நுட்பம். காகிதத்தில் மையினால் சிறிய புள்ளிகளை அமைப்பதன் மூலம் எழுத்துகளை உருவாக்குகிறது. 300 டி.பி.ஐ. அளவுள்ள லேசர் அச்சுப்பொறிகளைப் போன்று அதன் தோற்றம் இருப்பினும் அந்த அளவுக்கு வேகம் இருக்காது.

**Inkey :** உள்விசை: ஒரு டிபேஸ் நிரலைப் பயன்படுத்துவோர் ஒரு விசையை அழுத்தியவுடன் அதற்குரிய மதிப்பைக் காட்டுவது.

**Ink-Jet printer :** மைபீச்சு அச்சுப் பொறி : தாளின் மீது மெல்லிய மை தெளிப்பின் மூலம் அச்சிடும் ஒரு வெளியீட்டுக் கருவி.

**inline :** உள்ளமை : 1. நிரலாக்கத்தில், ஒரு செயல்கூறின் அமைப்பு இருக்குமிடத்தில் அச்செயல்கூறுக் கட்டளைகளை இட்டு நிரப்பிவிடுமாறு அமைத்தல். முறையான அளபுருக்கள் (parameters) மெய்யான தரு மதிப்புகளால் (arguments) பதிலீடு செய்யப்படுகின்றன. ஒரு நிரலின் செயல்திறனை மிகுவிக்க மொழிமாற்றத் தருணத்திலியேயே உள்ளமை செயல்கூறுகள் பதிலீடு செய்யப்படுகின்றன. 2. ஹெச்டீஎம்எல் நிரலில் ஒரு வரைகலைப் படத்தை உரைப் பகுதியுடன் உள்ளமைத்து அதனைச் சுட்டுதல். இதற்கு (IMG) என்னும் குறிசொல் (Tag) பயன்படுகிறது.

**Inline coding :** உள்ளமை ஆணைகள்: ஒரு வடிமையின் முக்கிய பகுதியில் ஒரு இடத்திற்குக் குறியிடுதல்.

**inline function : உள்ளமை செயல்கூறு.** சி++ மொழியில் உள்ளமை செயல்கூறுகள் பயன் படுத்தப்படுகின்றன.

**inline graphics : உள்ளமை வரைகலை :** ஹெச்டிஎம்எல் ஆவணத்தில் அல்லது ஒரு வலைப்பக்கத்தில் உள் ளமைக்கப்படுகின்ற வரை கலைக் கோப்புகள். ஹெச்டி எம்எல் மொழியைப் புரிந்து கொள்ளும் நிரல்கள் மற்றும் இணைய உலாவிகளின் மூலம் இப்படங்களைப் பார்க்க முடி யும். தனியான கோப்புத் திறப்பு செயல்பாட்டினைத் தவிர்ப் பதன் மூலம், உள்ளமை வரை கலைப் படங்கள் ஹெச்டி எம்எல் (HTML) ஆவணத்தை அணுகுதல் மற்றும் நினைவகத் தில் ஏற்றுதல் போன்ற செயல் பாடுகள் விரைவாக நடைபெறும்.

**inline image : உள்ளமைப் படி மம் :** ஓர் ஆவணத்தில் உரைப் பகுதியினூடே உள்ளமைக்கப் பட்ட ஒரு படிமம். வலைப் பக்கங்களில் இது போன்ற படி மங்களை அதிகம் காணலாம்.

**Inline processing : உள்ளமை செயலாக்கம் :** துவக்க நிலை சீர்செய்தல் அல்லது வகைப் படுத்தலுக்கு ஆட்படாமல் தன்னிச்சையான போக்கில் தரவுகளை வகைப்படுத்துதல்.

**Inline subroutine : உள்ளமை துணை வாலாயம்:** முதன்மை நடவடிக்கையில் தேவையான எண்ணிக்கையில் இடையில் செருகப்பட்ட துணை நட வடிக்கைக் குறிப்பு.

**inner join : உள் இணைப்பு :** உறவுமுறைத் தரவுத் தள மேலாண்மைத் தொகுப்புகளில் பயன்படுத்தப்படும் செய லாக்கம். இரண்டு அட்டவணை களை ஒரு முதன்மைப் புலம் மூலமாக உறவுபடுத்தி இரண்டி லிருந்தும் தகவலைப் பெறும் முறை. இடப்புற அட்டவணை யிலுள்ள அனைத்து ஏடுகளும் அவற்றோடு உறவுடைய வலப் புற அட்டவணையிலுள்ள ஏடு களும் விடையாகக் கிடைக்கும்.

**Inner loop : உள்கொக்கி வளையம்**

**Inoculate : நோயழிப்பு; நச் சழிப்பு:** ஒரு நிரலாக்கத் தொட ரில் தெரியாத நச்சுநிரல்கள் (வைரஸ்கள்) இருக்குமானால் கண்டுபிடித்து அதனைச் சேமித்து வைப்பது. கோப்புகளை மாற் றும்போது வைரஸ் புகுந்தாலும் இதில் கண்டுபிடித்து விடலாம்.

**Input : உள்ளீடு :** வெளியில் உள்ள சேமிப்பு ஊடகம் ஒன்றிலிருந்து தகவல்களை கணினியின் உள் சேமிப்புப் பிரிவுக்கு வழங்குதல். வெளியீட்டிலிருந்து மாறுபட்டது.

**Input area : உள்ளீட்டுப் பகுதி :** உள்ளீட்டுத் தகவல்களை சேமிக்க ஒதுக்கப்பட்ட பகுதி. வெளியீட்டுப் பகுதிக்கு எதிரானது.

**input bound : உள்ளீட்டு வரம்பு/எல்லை.**

**input buffer : உள்ளீட்டு இடையகம் :** ஒரு கணினிக்குள் உள்ளீடாகச் செலுத்தப்படும் தகவல்களைத் தற்காலிகமாகச் சேமித்து வைப்பதற்கென கணினி நினைவகத்தில் ஒதுக்கப்பட்டுள்ள ஒரு பகுதி.

**Input data : உள்ளீட்டுத் தரவு :** சீர் செய்யப்படவேண்டிய தரவுகள் வெளியீட்டுத் தரவுகளுக்கு எதிரானது.

**Input device : உட்பாட்டுச் சாதனங்கள்; உள்ளீட்டுக் கருவி; உள்ளீட்டுச் சாதனங்கள் :** மனிதர்கள் கையாளக்கூடிய சாதனங்களிலிருந்து மத்திய செயலகப் பகுதிக்கு தகவல்களைத் தரக்கூடிய கருவி. எடுத்துக்காட்டு : அட்டை வாசிப்பி, நாடாப் பதிவு, விசைப் பலகை முனையம், மின் காந்த நாடாப் பிரிவு.

**input job stream : உள்ளீட்டுப் பணித் தாரை; உள்ளீட்டுப் பணியோட்டம்.**

**input mask : உள்ளீட்டு மறைப்பு.**

**Input material : உட்பாட்டுப் பொருள்.**

**Input media : உள்ளீட்டு ஊடகம் :** தரவுகள் பதிவு செய்யப்படுகிற பகுப் பொருள்கள். எடுத்துக்காட்டு: சிறு தகடுகள், மின் காந்த நாடா, துளையிடப்பட்ட அட்டை, எம்ஐ சிஆர் ஆவணங்கள் மற்றும் ஓசிஆர் ஆவணங்கள், வெளியீட்டு ஊடகம் மற்றும் ஆதார ஊடகம் ஆகியவற்றை ஒப்பிடவும்.

**Input/Output (I/O) : உள்ளீடு/வெளியீடு :** மனிதர்களுக்கும் எந்திரங்களுக்கும் இடையிலான தகவல் தொடர்பை அடைவதற்கான உத்தி, ஊடகம் மற்றும் கருவி.

**Input/output bound : உள்ளீடு/வெளியீடு இறுக்கம் :** உள்ளீட்டு/ வெளியீட்டு நடவடிக்கைகள் காரணமாக மத்திய சீர்படுத்தும் பிரிவின் நடவடிக்கைகள் தொய்வடையும் சூழ்நிலை தொடர்பானது. உள்ளீட்டு/ வெளியீட்டு நடவடிக்கைகள் பொதுவாக மையச் செயலகப் பிரிவின் உள் சீர்படுத்தும் நடவடிக்கைகளுடன் ஒப்பிடும் பொழுது மிகவும் தாமதமாக உள்ளன.

**input/output buffer : உள்ளீட்டு/வெளியீட்டு இடையகம் :** ஒரு கணினியில் உள்ளீடாகத் தரப்படும் தரவுகளையும், வெளியீடாகப் பெறப்படும் தரவு

களையும் தற்காலிகமாகச் சேமித்து வைப்பதற்காக நினைவகத்தில் ஒதுக்கப்படும் ஒரு பகுதி. மையச் செயலி நேரடியாக உள்ளீட்டு/வெளியீட்டு சாதனங்களுடன் தரவு பரிமாற்றம் மேற்கொண்டால் செயலியின் பொன்னான நேரம் வீணாகிப் போகும். இடைநிலை நினைவகத்தில் எழுதிவிட்டு செயலி வேறு பணியை மேற்கொள்கிறது என்பதால் அதன் நேரம் பயனுள்ள முறையில் செலவாகிறது.

**input output bus : உள்ளீட்டு/வெளியீட்டுப் பாட்டை** : ஒரு கணினியின் உள்ளமைப்பில் மையச் செயலிக்கும் பிற உள்ளீட்டு, வெளியீட்டுச் சாதனங்களுக்குமிடையே தரவுகளைப் பரிமாறிக்கொள்ளப் பயன்படுத்தப்படும் வன்பொருளாலான மின்வழித் தொகுதி.

**Input/output channel : உள்ளீட்டு/வெளியீட்டு வழித்தடம்** : உள்ளீட்டுத் தடம் தரவுகளை கணினியிலிருந்து வெளியீட்டு தரவுகளாக வழங்குகிற வழித்தடம்.

**input/output controller : உள்ளீட்டு/வெளியீட்டுக் கட்டுப்படுத்தி** : ஒரு கணினியில் உள்ளீட்டு/வெளியீட்டுச் சாதனங்களுக்கும் மையச் செயலிக்குமிடையே நடைபெறும் தகவல் பரிமாற்றத்துக்கு உதவுகின்ற மின்சுற்று அமைப்பு. உள்ளீட்டு/வெளியீட்டுப் பணிகளை மேற்பார்வையிட்டுத் தரவுவைப் பெறுதல், வெளிடுதல் ஆகிய செயல்பாடுகளைக் கவனித்துக் கொண்டு, செயலியானது தன் நேரத்தைப் பிற பணிகளில் ஈடுபடுத்துவதற்கு உதவி செய்கிறது. நிலைவட்டு இயக்ககக் கட்டுப்படுத்திகளை (Hard Disk Drive Controllers) எடுத்துக்காட்டாகக் கூறலாம். பல கட்டுப்படுத்திகளுக்கு தரவுவைப் பெற்றுக் கையாள்வதற்கு மென்பொருள் தேவைப்படுகிறது. இவற்றை சாதனக் கட்டுப்படுத்தி, உ/வெ கட்டுப்படுத்தி என்றும் அழைப்பர்.

**Input/Output Control System (IOCS) : உள்ளீட்டு/வெளியீட்டுக் கட்டுப்பாட்டு முறைமை** : உள்ளீட்டு/வெளியீட்டு நடவடிக்கைகளின் விரிவான அம்சங்களைக் கட்டுப்படுத்துகிற, அந்நடவடிக்கைகளை துவக்குகிற வழமையான நடவடிக்கைகளின் தொகுப்பு.

**Input/output device : உள்ளீட்டு/வெளியீட்டுக் கருவி** : மனிதர்கள் கையாளும் சாதனத்திலிருந்து மத்திய சீர் செய்யும் பிரிவுக்கு தரவுகளைப் பெற்றுத்

தரும் பிரிவு. மற்றும் கணினியின் உள் சேமிப்பிலிருந்து மற்றொரு சேமிப்புக்கு அல்லது வெளியீட்டுக் கருவிக்குத் தரவுகளை மாற்றுகிற கருவி. உள்ளீட்டுக் கருவி, வெளியீட்டுக் கருவி, புறவளைய கருவி ஆகியவற்றைப் பார்க்கவும்.

**Input/output instructions : உள்ளீட்டு/வெளியீட்டு ஆணைகள் :** புறநிலைக் கருவிகள் மற்றும் முக்கிய சேமிப்புக்கு இடையே தரவுகளைப் பரிமாறுவதற்கான ஆணைகள். இவை மைச் செயலியுடன் இணைந்துள்ள புறநிலைக் கருவிகளைக் கட்டுப்படுத்த உதவுகின்றன.

**Input/output interface hardware : உள்ளீடு/வெளியீடு இடைமுக வன்பொருள் :** உள்ளீடு / வெளியீடு துறைகள், (போர்ட்டுகள்) தடங்கள், தாங்கிகள், வழித் தடங்கள் மற்றும் கட்டுப்பாட்டு அலகுகள் போன்ற சாதனங்கள், உள்ளீடு/வெளியீடு வேலை ஒதுக்கீடுகளைச் செய்ய மையச் செயலகத்துக்கு உதவுகின்றவை. இந்த சாதனங்கள் மூலம் ஒரே நேரத்தில் உள்ளீடு, வெளியீடு மற்றும் செயலாக்கப் பணிகளை நவீன கணினிகளில் செய்ய முடிகிறது.

**Input/Output (I/O) Port : உள்ளீட்டு/வெளியீட்டுத் துறை அல்லது வாயில் :** கணினியில் அமைக்கப்பட்டு தரவு துண்மிகளைப் பெறவும், அனுப்பவும் பயன்படும் ஒரு குறிப்பிட்ட சாதனத்துடன் இணைக்கப்பட்ட தனித்த முகவரியிடப்படும் இருப்பிடம்.

**Input/output processor : உள்ளீட்டு/வெளியீட்டு செயலி :** துணை சீர் செயலி -உள்ளீட்டு/வெளியீட்டு மாற்றங்களை கட்டுப்படுத்த உதவுகிறது. உள்ளீட்டு / வெளியீட்டுப் பணிகளுக்காக மையச் செயலகப் பிரிவை விடுவிக்கிறது.

**input/output statement : உள்ளீட்டு/வெளியீட்டுக் கூற்று :** நினைவகத்துக்கும், உள்ளீட்டு/வெளியீட்டுச் சாதனத்துக்கும் இடையே தரவுகளைப் பரிமாறிக் கொள்வதற்காக ஒரு நிரலில் பயன்படுத்தப்படும் கட்டளை.

**Input/output symbol : உள்ளீட்டு/வெளியீட்டு குறியீடு :** இணை சதுர வடிவ தொடர் பட்டியல் குறியீடு. இது ஒரு நடைமுறைக்கான உள்ளீட்டு நடவடிக்கையைக் குறிப்பிடுகிறது அல்லது ஒரு நடைமுறை ஒன்றின் வெளியீட்டு நடவடிக்கையைக் குறிப்பிடுகிறது.

**input/output unit : உள்ளீட்டு/வெளியீட்டுப் பகுதி.**

**Input programme** : உள்ளீட்டு நிரல் தொடர் : Data Entry Programme போன்றது.

**Input queue** : உள்ளீட்டு வரிசை முறை: நினைவகம் அல்லது வட்டில் வந்துள்ள செய்திகளை வைத்துக் கொண்டிருக்கும் ஒதுக்கப்பட்ட பகுதி. செய்ய வேண்டிய வேலைகளைக் குறிக்கும் வேலைக் கட்டுப்பாட்டு வாக்கியம்.

**Input statement** : உட்பாட்டு அறிக்கை; உள்ளீட்டுக் கட்டளை.

**Input stream** : உள்ளீட்டுத் தொடர்: இயக்குவோரால் குறிப்பிட்ட நோக்கத்துக்காக செயல் முறைப்படுத்தப்பட்ட உள்ளீட்டுப் பிரிவுக்காக வரிசையாக அனுப்பப்படும் அறிக்கைகள் மற்றும் தரவுகள். பணித் தொடர் போன்றது.

**Inputting** : உள்ளிடுதல் : கணினி முறைமை ஒன்றுக்கு தரவுகளை அனுப்பும் முறை.

**Input unit** : உள்ளீட்டகம் ; உள்ளிடு கருவி.

**Inquire PAC** : உசாவல் பீஏசி : கணினியில் கம்மோடர் 64இல் பயன்படுத்தப்படும் மென் பொருள். ஒழுங்குபடுத்தப் பட்ட தரவுவைக் கொண்ட மின்னணுக் கோப்புப் பெட்டியை உருவாக்க இது உதவுகிறது.

**Inquiry** : உசாவல்; ஆய்வு: சேமிப்பிலிருந்து தரவு ஒன்றினை பெறுவதற்கான வேண்டுகோள். எடுத்துக்காட்டு : விமான நிறுவனம் ஒன்றின் ஒதுக்கீட்டு முறைமையில் கிடைக்கக்கூடிய இருக்கை எவ்வளவு? என்பது போன்ற வேண்டுகோள்.

**Inquiry processing** : உசாவல் செயலாக்கம் : கோப்பு ஒன்றிலிருந்து ஒரு ஆவணத்தைத் தேர்வு செய்து அதன் உள்ளடக்கத்தை உடனடியாக வெளிப்படுத்தும் நடைமுறை.

**Inquiry programme** : உசாவல் நிரல் தொடர்.

**Inquiry screen** : உசாவல் திரை : திரை வடிவமைப்புக்கொள்கை. விரைவான தரவு திரும்பப் பெறல் தேவைப்படுகையில், பயனாளர் கணினி அறிவு பெற்றவராக இல்லாத நிலை. பெரிய நூலகங்களில் தலைப்பு/பொருள்/ஆசிரியர் முறையில் நூல்களைக் கண்டுபிடிப் பதற்குப் பொதுவாகப் பயன் படுத்தப்படுகிறது.

**Inquiry station** : ஆய்வு நிலையம் : ஆய்வு மேற்கொள்வதற்கான கருவி. அக்கருவி கணினியிலிருந்தோ கணினியின் விசை முனையத்திலிருந்தோ தொலைவில் இருக்கக் கூடும்.

**insert** : செருகு.

**insert file** : கோப்பைச் செருகு.

**Insertion** : இடையிடல்; இடைச் செருகல்.

**insertion method** : செருகு முறை.

**Insertion mode** : இடையீடு செய்யும் நிலை.

**Insertion point** : செருகு இடம் : ஆவணம் ஒன்றில் ஒரு குறிப் பிட்ட பகுதியை பதிவு செய்யும் இடம்.

**insertion sort** : செருகு வரிசை யாக்கம் : பல்வேறு வரிசை யாக்க முறைகளுள் ஒன்று. வரிசையாக்க வேண்டிய ஒரே யொரு உறுப்பினை முதலில் எடுத்துக்கொண்டு இந்த வரிசையாக்க முறை தொடங்கப் படுகிறது. இரண்டாவது உறுப் பினை எடுத்து, முதல் உறுப்பி னைவிடப் பெரிதா, சிறிதா எனப் பார்த்து முன்னாலோ அல்லது பின்னாலோ இணைக்க வேண்டும். அடுத்த உறுப்பினை எடுத்து, வரிசையாக்கப் பட்டி யலில் பொருத்தமான இடத்தில் செருக வேண்டும். இவ்வாறு ஒரு நேரத்தில் ஓர் உறுப்பினை மட்டும் எடுத்துக் கொண்டு பட்டியலில் அதற்குரிய இடத் தில் செருகி எவ்வளவு பெரிய வரிசையாக்கப் பட்டியலையும் உருவாக்க முடியும். குவித்து வைக்கப்பட்டுள்ள சீட்டுக் கட்டில் ஒவ்வொரு சீட்டாக எடுத்துக் கையில் வரிசையாக அடுக்கும் முறையை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். கோவைகளை (Arrays) பொறுத்த மட்டில் இம் முறை திறனற்றது. ஏனெனில், ஒவ்வொரு உறுப் பினைச் செருகும்போதும் பிற உறுப்புகளை இடமாற்றம் செய்ய வேண்டும். தொடுப்புப் பட்டியல்களுக்கு (Linked Lists) இந்த முறை மிகவும் ஏற்றது.

**Insert key (INS Key)** : ஐஎன்எஸ் விசை : Insert key என்பதன் குறும்பெயர். உள்நுழைத்தல் மற்றும் மேலே முதல் முறை களுக்கிடையிலோ தற்போதைய சுட்டி (கர்சர்) இருப்பிடத்தில் ஒரு பொருளை நுழைப்பதற்கு பயன்படுத்தும் விசை.

**insert menu** : செருகு பட்டியல்.

**Insert mode** : இடைச் செருகும் முறை: திரையில் நடப்பு சுட்டி (கர்சர்) இருப்பிடத்தில் வேறொன்றை நுழைக்க புதிய தரவுகளை தட்டச்சு செய்ய அனுமதிக்கும் தரவு நுழைவு முறை.

**insert page** : இடைச் செருகு பக்கம்; பக்கத்தைசெருகு.

**insight** : உள்ளொளி; உள் பார்வை; அகப்பார்வை.

**Install : நிறுவு :** புதிய நிரல் தொகுப்பு ஒன்றின் அம்சங் களை ஒரு குறிப்பிட்ட கணினி முறைக்கு, அதனைக் கையாள் வதற்காக பழக்கப்படுத்துதல். எடுத்துக்காட்டாக ஒரு குறிப் பிட்ட நிரல் தொகுப்பினை அச்சிடு கருவியுடன் உரையாட, மரபு வழி நடைமுறைகளை நிறுவுதல்.

**Installable device driver : நிறுவக் கூடிய சாதன இயக்கி :** பிழை நீக்கம் மற்றும் கட்டுப் பாட்டு வசதிகளைப் பயன் படுத்த இயக்க முறையுடன் முழுவதும் ஒருங்கிணைக்கப் பட்ட சாதன இயக்கி.

**Installable File System Manager : நிறுவத்தக்க கோப்பு முறைமை மேலாளர் :** விண்டோஸ் 95இல் கோப்புக் கட்டுமானத்தில் ஒரு பகுதி இவ்வாறு அழைக்கப்படு கிறது. கோப்பு முறைமையின் பல்வேறு கூறுகளையும் விருப்பப்படி அணுகுவதற்கு இம்மேலாளரே வழியமைத்துக் கொடுக்கிறது.

**Installation : நிறுவுதல் :** ஒரு குறிப்பிட்ட கணினி முறை மைக்கு அது செய்கின்ற ஒட்டு மொத்தமான பணி, அதனை நிர்வகிக்கிற தனியாள்கள், அதனை இயக்குவோர், அதனைப் பயன்படுத்துவோர், அது தீர்வு காணும் சிக்கல்கள், அதனால் விளையும் பயன் கள் அடிப்படையிலான பொதுப் பெயர்.

**installation programme : நிறுவு நிரல்:** ஒரு மென்பொருள் தொகுப்பை சேமிப்பகத்திலோ நினைவகத்திலோ நிறுவுகின்ற பணியைச் செய்யும் நிரல். ஒரு மென்பொருளைக் கணினியில் நிறுவும்போது ஒவ்வொரு வகைக் கணினியிலும் ஒவ் வொரு வகையான வழிமுறை களைப் பின்பற்ற வேண்டி யிருக்கும். பயனாளர் பல்வேறு கட்டளைகளை நினைவில் வைத்துக் கொண்டு நிறுவும் பணியைத் தொடர வேண்டி யிருக்கும். இத்தகைய சிக்க லான பணியை எளிமைப் படுத்தி பயனாளரைத் தோழ மையுடன் வழிநடத்தி, மென் பொருள் தொகுப்பைக் கணினி யில் நிறுவ உதவுவதே நிறுவு நிரலின் பணி. சட்டத்துக்குப் புறம்பாக அம்மென்பொருள் தொகுப்பை நகலெடுத்துப் பயன்படுத்த முடியாதவாறு நகல் பாதுகாப்பு (Copy Protection) பணியையும் இந்த நிரல் செய்வதுண்டு.

**Installation spec : நிறுவு வரையறை:** வெளிப்புறச் சூழ் நிலையில் ஒரு பொருளை எவ்

வாறு சரியாக வைக்க முடியும் என்பதைக் கூறும் கருவி உற்பத்தியாளரின் விளக்கக் குறிப்பு.

**Installation time : நிறுவு நேரம் :** நிறுவுதல், சோதித்தல் மற்றும் தட்டச்சுப் பொறிபோல அந்த முறைமையைப் பயன்படுத்தி ஏற்றுக் கொள்வதற்கான நேரம்.

**installer : இன்ஸ்டாலர்; நிறுவுனர்; நிறுவி :** ஆப்பிள் மெக்கின் டோஷ் இயக்க முறைமையுடன் தரப்படும் ஒரு நிரல். பின்னாளில் தரப்படும் முறைமை மேம்பாட்டுக் கூறுகளை கணினியில் நிறுவிக் கொள்ளவும், முறைமை இயக்கு வட்டுகளை (Bootable disks) உருவாக்கவும் இந்த நிறுவி நிரல் பயனாளருக்கு உதவுகிறது.

**installing software : நிறுவு மென்பொருள்.**

**Instance : சான்று ; பொருள்; உறுப்பினர் :** பொருள் சார்ந்த நிரல் தொடரமைப்பில், ஒரு வகுப்பின் உறுப்பினர். சான்றாக 'நாய்'' என்ற வகுப்பிற்குச் சான்றாக பொமேரியன், லேஸ்ஸி போன்றவைகளைக் கூறலாம். ஒரு சான்று உருவாக்கப்பட்டவுடன், அதன் ஆரம்ப மதிப்புகள் அளிக்கப்படுகின்றன.

**Instance variable : சான்று மாறிலி :** ஒரு பொருளில் உள்ள தரவு. பொருள் சார்ந்த நிரல் தொடர் அமைப்பில் பயன்படுத்தப்படுவது.

**instantaneous : அப்போதே.**

**Instantiate : சான்றாக்கல் ; பொருள் உருவாக்கம் :** ஒரு குறிப்பிட்ட வகுப்பைச் சேர்ந்த பொருளை உருவாக்கல். பொருள் சார்ந்த நிரல் தொடரமைப்பில் பயன்படுத்தப்படுவது.

**instant message : உடனடிச் செய்தி.**

**instant on modem : உடனடி இயக்க இணக்கி.**

**instant print : உடனடி அச்சு.**

**Institute for Certification of Computer Professionals (ICCP) : கணினி வல்லுநர்களுக்கான சான்றிதழ் வழங்கும் நிறுவனம் :** கணினியைப் பயன்படுத்தும் ஊழியர்களைச் சோதித்து அவர்களின் அறிவு மற்றும் திறன்களுக்குச் சான்றிதழ் வழங்கும் லாப நோக்கற்ற நிறுவனம். இதன் நோக்கம், குறிப்பிட்ட சமூகத்தில் உள்ள திறனாளிகளை ஒருங்கு திரட்டுவதாகும். அதன் மூலம் தரவுகளை, செயலாக்கும் தொழிலின் முழுக் கவனத்தையும், தகுதியுள்ளவர்களை உருவாக்கவும் மற்றும் தகுதி உள்ளவர்களை அங்கீகரிக்கவும் குவி முனைப்படுத்துவதாகும்.

**Institute of Electrical and Electronics Engineers Computers Society (IEEECS) : மின்னியல், மின்னணுவியல் பொறியாளர்கள் கணினிகள் கழகம் :** மின்னியல் மற்றும் மின்னணுவியல் பொறியாளர்கள் நிறுவனத்தில் கணினி சிறப்புக் குழு கணினி விவரணம் மற்றும் செயல்பாடு மற்றும் தகவல் செயலாக்க தொழில் நுணுக்கத்தை முன்னெடுத்துச் செல்லும் முன்னோடித் தொழில் வல்லுநர்கள் சங்கம். மூன்று பரிமாற்றங்களையும் மூன்று இதழ்களையும் வெளியிடுகிறது. உலகின் பல பகுதிகளிலும் உள்ள அதன் 62,000 உறுப்பினர்களிடையே ஒத்துழைப்பையும் நவீனத் தகவல் பரிமாற்றத்தையும் ஊக்குவிக்கிறது.

**Instruction : ஆணை; கட்டளை; அறிவுறுத்தம் :** கணினி செய்ய வேண்டிய நடவடிக்கை ஒன்றை வரையறை செய்யும் சொல் அல்லது சொல் தொடர். வழக்கமாக இவை இயக்குக் குறியீடு மற்றும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட இயக்க ஆணைகளைக் கொண்டதாக இருக்கும்.

**instruction address : ஆணை முகவரி.**

**Instructional computing : கல்விக் கணினி ஆற்றுப்படுத்துதல் :** கணினி அறிவியலின் பல்வேறு பகுதிகள் மற்றும் தரவு செயலாக்கம் குறித்து தனிப்பட்டவர்களுக்கு கற்பிக்கும் நடைமுறை.

**instruction, arithmetical : எண் கணித ஆணை.**

**instruction, branch : கிளைபிரி ஆணை.**

**instruction, break point : நிறுத்துமிட ஆணை.**

**Instruction code : ஆணைக் குறிமுறை; கட்டளைக் குறியீடு :** இயக்கக் குறியீடு போன்றது.

**instruction, computer : கணினிக் கட்டளை; கணினி ஆணை.**

**instruction, conditional branch : நிபந்தனைக் கிளை ஆணை.**

**Instruction counter : நிரலாக்கத் துறை : கட்டளைத் துறை :** உணரப்பட வேண்டிய கணினிக் கட்டளையின் இருப்பிடத்தைச் சுட்டிக்காட்டும் துறை. நிரலாக்கத் தொகுப்புத் துறை போன்றதே.

**Instruction cycle : ஆணைச் சுழற்சி : கட்டளைச் சுழற்சி :** கட்டளை ஒன்றை நெறிப்படுத்தத் தேவைப்படும் நேரம். உள் சேமிப்பிலிருந்து தேவைப்படும் கட்டளையைக் கொண்டு வருதல், கட்டளைக் குறியீட்டை உணர்தல், கட்டளையை

நிறைவேற்றுதல். கட்டளை நேரத்துடன் ஒப்பிடவும்.

**instruction, data manipulation :** தரவு கையாளல் கட்டளை.

**instruction, fetch :** கொணர் ஆணை.

**Instruction format :** ஆணைப் படிவம்; கட்டளைப் படிவு : கணினி கட்டளை ஒன்றின் அமைப்பு மற்றும் அமைப்புக் கிரய முறை.

**instruction format, addressless :** முகவரியிலா ஆணை வடிவம்.

**instruction, halt :** நிறுத்தக் கட்டளை; நிறுத்தல் ஆணை.

**instruction, jump :** தாவு கட்டளை; தாவல் ஆணை.

**Instruction length :** ஆணை நீளம் : முதன்மை நினைவகத்தில் ஒரு ஆணையைச் சேமிக்கப் பயன்படுத்தப்படும் சொற்கள் அல்லது எட்டியல்கள் எண்மிகள் (பைட்டுகள்).

**Instruction look / ahead :** ஆணை பார்: ஒரு ஆணையை இயக்கும்போது வேறொரு ஆணையைக் கொண்டு ஐந்து குறியீடு மாற்றல்.

**instruction, machine :** எந்திர ஆணை; பொறி ஆணை.

**Instruction mix :** ஆணைக் கலவை : ஒரு நிரல் தொடரில் ஆணை வகைகளைக் கலப்பது. பொதுவான தேர்வுக்குறி 'பெஞ்ச் மார்க்கு' களை எழுதுவதைக் குறிக்கிறது. உள்ளீடு / வெளியீடு செயலாக்கம், கணித ஆணைகள் போன்றவற்றை ஒன்றோடொன்று கலப்பது எத்தகைய பயன்பாட்டுக்காக தேர்வுக் குறி 'பெஞ்ச் மார்க்' எழுதப்பட்டது என்பதை விளக்க உதவும்.

**instruction, null :** வெற்று ஆணை.

**Instruction pointer :** ஆணை காட்டி; ஆணை சுட்டு : அடுத்து இயக்கப்பட வேண்டிய ஆணையை அணுக உதவும் மதிப்பினைக் கொண்டுள்ள பதிவகம்.

**Instruction register :** ஆணைப் பதிவகம்; கட்டளைப் பதிவேடு : வன்பொருள் பதிவேடு. செயலுக்கான கட்டளையை சேமிக்கிறது.

**instruction register, current :** நடப்பு ஆணைப் பதிவகம்.

**Instruction set :** நிரலாக்கத் தொகுதி : நிரலாக்கத் தொகை ; கட்டளைத் தொகுப்பு : ஒரு குறிப்பிட்ட கணினி அல்லது கணினிக் குடும்பத்துக்கு விற்பனையாளரால் வழங்கப்பட்ட குறியீடுகள். Repertoire போன்றது.

**Instruction time : ஆணை நேரம் : கட்டளை நேரம்** : உள் சேமிப்பிலிருந்து கட்டுப்பாட்டுப் பிரிவினால் கட்டளை ஒன்றைப் பெறவும் அதனை உணரவும் தேவைப்படும் நேரம். இதனை I - time என்று பெரும்பாலும் கூறுவதுண்டு. Instruction cycle என்பதோடு ஒப்பிடவும்.

**instruction, unconditional branch : நிபந்தனையற்ற கிளை பிரி ஆணை.**

**Instruction word : ஆணைச் சொல்; கட்டளைச் சொல்** : கட்டளையை உள்ளடக்கிய கணினிச் சொல்.

**Instrument : கருவி** : கோரிக்கையின் பேரில் தனிப்பட்டவர்களுக்கோ ஒரு நிறுவனத்துக்கோ தரவுகளை வழங்க, அவற்றைச் சேகரிக்க திட்டமிட்ட நடைமுறையில் பயன்படுத்துவதற்குப் படிவம், அறிக்கை, வினாத் தொகுப்பு, அல்லது வழிகாட்டி வடிவத்தில் தயாரிக்கப்பட்ட ஆவணம்.

**Instrumental input : எந்திர உள்ளீடு**: எந்திரங்களினால் சேகரிக்கப்பட்டு நேரடியாக கணினியில் பொதியப்பட்ட தரவுகள்.

**Instrumentation : கருவிகளைக் கையாளுதல்** : அளத்தல், பதிவு செய்தல். இயற்பியல் பண்புகளை மற்றும் அசைவுகளை அளத்தலுக்குக் கருவிகளைக் கையாளுதல்.

**instrument, input : உள்ளீட்டுக் கருவி.**

**insulator : மின்விலக்கி** : 1. ரப்பர், கண்ணாடி, பீங்கான் போன்று மின்சாரத்தை அரிதில் கடத்தும் (அல்லது கடத்தாத) பொருட்களை மின் விலக்கிகள் என்கிறோம். 2. ஒரு மின்சுற்றில் மின்சாரம் தவறான பாதையில் பாயாமல் இருக்கும் பொருட்டு இரு உறுப்புகளுக்கிடையே காப்பாகப் பயன்படுத்தப்படும் கருவி. 3. மிக உயர்ந்த மின்பரப்புக் கோபுரங்களில் உயர் மின்னழுத்தக் கம்பிகளிலிருந்து மின்சாரம் பாயாமல் இருக்க களிமண்/பீங்கான் மின்விலக்கிகள் பயன்படுத்தப்படுகின்றன.

**Integer : முழு எண்** : முழு எண்களையும் அவற்றின் எதிர் மறைகளையும் கொண்ட எண் தொகுப்பு. எடுத்துக்காட்டுகள் : -24, -1, 0, 1, 2, 13, 128.

**integer array : முழுஎண் கோவை.**

**integer attribute : முழுஎண் பண்புக் கூறு.**

**Integer BASIC : முழு எண் அடிப் படை:** முழுமையான எண்களை மட்டும் கையாளக்கூடிய அடிப் படை மொழி வகை. எடுத்துக் காட்டு: *1*-ஐ *3*-ஆல் வகுத்தால் கிடைக்கும் விடை *0.33333*-க்கு பதிலாக *0*-ஆக இருக்கும்.

**integer type : முழுஎண் இனம்.**

**Insteger variable : முழு எண் மாறி; முழு எண் மாறியல் மதிப் புரு :** எந்தவொரு முழுமை யான எண்ணுக்கும் சமமான அளவு மற்றும் பல மதிப்பீடு களை வழக்கமாக ஒரு குறிப் பிட்ட வரம்புக்குள் (அது எல்லையற்றதாகவும் இருக்க லாம்) ஏற்கக் கூடியதாகவும் அமையும்.

**integral modem : ஒருங்கிணை இணக்கி :** கணினிப் பெட்டிக் குள் தாய்ப்பலகையிலேயே பொருத்தப்படுகிற இணக்கி. தாய்ப்பலகையிலுள்ள செருகு வாய்களில் பொருத்தப்படும் விரிவாக்க அட்டையாக (Expansion Card) இது இருக்கும்.

**Integrate : ஒருங்கிணை:** ஒரு ஒருங்கிணைந்த கணினி முறை மையை உருவாக்க பல்வேறு உறுப்புகளை ஒன்றாக இணைக்கும் நடைமுறை.

**Integrated banking system : ஒருங்கிணைந்த வங்கி அமைப்பு:** சேமிப்பு மற்றும் நடப்பு கணக்கு போன்ற அன்றாட செயல்பாடுகளை தானியங்கியாக இயக்கும் இந்திய மென்பொருள்.

**integrated chips : ஒருங் கிணைந்த சிப்புகள்; ஒருங் கிணைந்த சில்லுகள்.**

**Integrated circuit-(IC) : ஒருங் கிணைந்த மின்சுற்று (ஐசி):** ஒரு அரைக் கடத்தி சிப்பில் உருவாகும் குறு மின்சுற்று. தொகுப்பில் பொருத்தப்பட்ட தும் இயக்கத்துக்கு தயாராக இருக்கும் சிப்பு. இது உதிரி யாக உள்ள பாகங்களுக்கு எதிரானது.

**Integrated circuit chips : ஒருங் கிணைந்த மின்சுற்று வழிச் சிப்பு.**

**Integrated circuits (ICA) : ஒருங் கிணைந்த மின்சுற்று வழிகள் ; ஒருங்கிணைந்த சுற்றுகள்.**

**Integrated computer package : ஒருங்கிணைந்த கணினித் தொகுப்பு :** ஒருங்கிணைந்த நிரல் தொகுப்பு என்பதைப் பார்க்கவும்.

**Integrated Data Processing - IDP : ஒருங்கிணைந்த தரவுகளை முறைப்படுத்துதல் - ஐடிபி :** தரவுகளை முறைப்படுத்தும்

முறை. இதில் பெறப்பட்ட தரவுகள் மற்ற நிலையில் உள்ள தரவுகளுடன் இணைக்கப்பட்டு ஒருங்கிணைந்த முறைமையாக உருவாக்குதல். எடுத்துக்காட்டு: வணிகத் தரவுகளை முறைப் படுத்தும் முறை. இதில் விற் பனைத் தரவுகள் கொள்முதல் விபரங்களுடன் இணைக்கப் பட்டு அடுத்த கொள்முதலுக் கான நிரல்களைத் தயாரிக்கவும் கணக்குகளைத் தயாரிக்கவும் பயன்படுகிறது.

**integrated development environment : ஒருங்கிணைந்த உரு வாக்கச் சூழல் :** ஒரு மென் பொருளை உருவாக்கத் தேவை யான அனைத்துக் கருவிகளின் தொகுதி. அனைத்துக் கருவி களும் ஒரே பயனாளர் இடை முகத்தில் இயக்கப்படும் வகையில் அமைக்கப்பட்டிருக் கும். நிரல்களை எழுதுவதற் கான ஓர் உரைத் தொகுப்பான் (text editor), மொழிமாற்றி (compiler), பிழைதிருத்தி (debugger), நிரலை இயக்கிப் பார்த்தல் ஆகிய அனைத்தும் பட்டி விருப் பத் தேர்வுகள் (menu options) மூலம் இயக்கப்படும் வகையில் அமைக்கப்பட்டிருக்கும்.

**Integrated Injection Logic (IIL) : ஒருங்கிணைந்த உட்செலுத்தி அளவை:** நடுத்தரச் செயல் பாடும் குறைந்த மின்சக்தி நுகர்வும் பெற இரு துருவ மின்மப் பெருக்கிகளைப் பயன் படுத்தும் ஒரு மின்சுற்று வடிவமைப்பு.

**integrated learning system : ஒருங்கிணைக் கற்றல் முறைமை.**

**integrated news : ஒருங் கிணைந்த செய்தி.**

**Integrated programmes : ஒருங் கிணைந்த நிரல் தொகுப்புகள் :** தங்களுக்குள் தரவுகளை சுதந்திர மாகப் பரிமாறிக் கொள்ளும் நிரல் தொகுப்புக் குழு. எ.கா. சொல்செயலி, தரவுத் தள மேலாண்மை, மின்னணுவியல் விரிதாள் மற்றும் தரவுத் தொடர்பு நிரல் தொகுப்பு ஆகியவற்றைக் கொண்ட மென்பொருள் சிமிழ். மின்னணுவியல் விரிதாளும் தரவு மேலாளரும் தரவுவை ஒருவருக்கொருவர் பகிர்ந்து கொள்ளலாம். பயனாளர் சொல் முறைப்படுத்தும் ஆவணங் களையும் மின்னணுவியல் விரி தாளையும் ஒன்றன்பின் ஒன்றாகக் கையாளலாம்.

**Integrated services digital network : ஒருங்கிணைந்த சேவை களின் இலக்க முறை பிணையம் :** குரல், தரவு மற்றும் ஒளி தரவு தொடர்புகளை பிணைக்கும் பொதுவான தாங்கியை வழங்

கும் சேவை. ஐ.எஸ்.டி.என். என்று சுருக்கி அழைக்கப்படுகிறது.

**integrated software : ஒருங்கிணைந்த மென்பொருள் :** சொல்செயலி, தரவுத் தள மேலாண்மைத் தொகுப்பு, விரிதாள் போன்ற அனைத்துப் பயன்பாட்டு மென்பொருள்களையும் ஒருங்கிணைந்த கூட்டுத் தொகுப்பு (Suite). அனைத்துப் பயன்பாட்டுத் தொகுப்புகளும் ஏறத்தாழ ஒரே மாதிரியான பயனாளர் இடைமுகத்தைக் கொண்டிருக்கும். வெவ்வேறு தொகுப்புகளுக்கு வெவ்வேறு கட்டளைகளை நினைவு வைத்துக் கொண்டு பணியாற்ற வேண்டியதில்லை. பயன்பாடுகளுக்கிடையே தகவலை, இயக்க நேரத்தில் பரிமாறிக் கொள்ளவும் (Dynamic Data Exchange) இக்கூட்டுத் தொகுப்புகளில் வழிவகை இருக்கும். மைக்ரோசாஃப்ட் ஆஃபீஸ் 2000, சன் ஸ்டார் ஆஃபீஸ், லோட்டஸ் ஸ்மார்ட் சூட், கோரல் ஆஃபீஸ் ஆகியவை இத்தகைய கூட்டுத் தொகுப்புகள்.

**Integrated software package : ஒருங்கிணைந்த மென்பொருள் பணித் தொகுப்புகள்:** பல பயன்பாடுகளை ஒரே நிரல் தொடரில் இணைக்கும் மென்பொருள். தரவுத் தள மேலாண்மை, சொல் செயலி, விரிதாள், வணிக வரைகலை மற்றும் தரவுத் தொடர்பு ஆகியவை இதில் அடங்கும். வெட்டி ஒட்டுதலையும் செய்ய முடியும். தனியாக நின்று செய்யும் பயன்பாடு களின் திறன்களை எந்த ஒரு தொகுப்பும் தர முடியாது. சான்று பிரேம்வொர்க், ஆப்பிள் வொர்க் மற்றும் மைக்ரோ சாஃப்ட் வொர்க்.

**Integration : ஒருங்கிணைப்பு:** பல்வேறு விற்பனையாளர்களிடம் பெறப்பட்ட வேறுபட்ட வன்பொருள்களையும், மென்பொருள்களையும் ஒரு ஒருங்கிணைந்த முறைமையாக இணைத்தல்.

**integrator : ஒருங்கிணைப்பான்; ஒருங்கிணைப்பி :** ஒரு மின்சுற்று. நேரத்தின் அடிப்படையில் உள்ளீடாகப் பெறும் மின்னோட்டத்தின் தொடர்கூட்டு மதிப்பை (accumulated value) வெளியீடாகத் தரும்.

**Integrity : ஒருங்கியைபு; ஒருங்கமைப்பு : இணக்கம் :** நிரல் தொகுப்புகளை அல்லது தரவுகளை அவை உருவாக்கப்பட்ட நோக்கத்துக்காகப் பாதுகாத்தல்.

**integrity class : ஒருங்கிணைந்த வகுப்பு; ஒருங்கிணைந்த இனக் குழு.**

**integrity confinement** : ஒருங் கமைப்பு வரையறை.

**integrity context** : ஒருங் கமைப்புச் சூழல்.

**integrity control** : ஒருங் கமைப்புக் கட்டுப்பாடு.

**integrity label** : ஒருங்கிணைந்த முகப்பு; ஒருங்கமைப்புச் சிட்டை.

**integrity tower** : ஒருங்கமைப்புக் கோபுரம்.

**integrity upgrading** : ஒருங் கிணைந்த மேம்படுத்தம்.

**Intel corporation** : இன்டெல் அமைவனம் : முதல் நுண் செயலியை 4 பிட் 4004-ஐ உரு வாக்கிய நிறுவனம். இப் பொழுது பல்வேறு வகையான நுண்செயலிகளைத் தயாரிக் கிறது. அவை பெரும்பாலான புகழ்பெற்ற நுண் கணினிகளில் பயன்படுத்தப்படுகின்றன.

**Intellect** : அறிவார்ந்த; அறி வாற்றல்: செயற்கை அறிவுக் கார்ப்பரேஷன் ஒன்றின் வணிக இலச்சினை. அந் நிறுவனம் இயற்கையான மொழியை வினா மொழியாக மாற்றக் கூடிய முறைமையை உருவாக் கியதாகும். தினசரி வாழ்க்கை மொழியில் பயனாளர் முன் வைக்கும் கோரிக்கையை அது எந்த வகையில் புரிந்து கொண்டது என்பதையும் தரவு களைத் தொகுப்பிலிருந்து அதற் கான பதிலையும் அம் முறைமை வெளிப்படுத்துகிறது.

**Intelligence** : அறிவுக்கூர்மை; நுண்ணறிவு: செயலாக்கும் திறன், ஒவ்வொரு கணினியும் அறிவுக்கூர்மை உடையது.

**intelligent** : அறிவுநுட்பன்; நுண் ணறிவன் : தன்னுள் இருக்கும் ஒன்று அல்லது மேற்பட்ட செயலிகளினால் (processors) பகுதியாக அல்லது முழுமை யாகக் கட்டுப்படுத்தப்படும் ஒரு கருவி அல்லது ஒரு சாதனத் தின் பண்பியல்பு இவ்வாறு அழைக்கப்படுகிறது.

**intelligent cable** : நுண்ணறிவு வடம்: வெறுமனே ஒரு முனை யிலிருந்து அடுத்த முனைக்குத் தரவுகளை அனுப்பும் பணியை மட்டுமின்றி, அது செருகப் பட்டுள்ள இணைப்பியின் பண்பியல்புகளை நிர்ணயம் செய்யும் திறனையும் உள்ளடக் கிய (கம்பி) வடம்.

**Intelligent controller** : அறிவு மிக்க கட்டுப்பாட்டாளர் : தன் னுடைய இயக்கங்களைக் கட்டுப்படுத்த உள்ளார்ந்த நுண் செயலகத்தைப் பயன்படுத்தும் வெளிப்புறக் கட்டுப்பாட்டு அலகு.

**Intelligent database : அறிவார்ந்த தரவுத் தளம் :** தன்னுடைய தரவுவின் உள்ளடக்கத்தைப்பற்றி அறிந்துள்ள தரவுத் தளம். ஒவ்வொரு தரவுப் புலத்திலும் மதிப்பளிக்கும் அளவுகோல்கள் சேமித்து வைக்கப்படும். அனைத்து நுழைவுகளின் பட்டியல் அல்லது குறைந்த மற்றும் அதிக மதிப்புகள் ஆகியவை இதில் குறிப்பிடப்படும்.

**intelligent device : நுண்ணறிவுச் சாதனம்; அறிவார்ந்த சாதனம்.**

**Intelligent form : அறிவார்ந்த படிவம் :** சரியான தரவுவை நுழைக்க உதவும் உதவி, திரைகள் மற்றும் குறைந்த அளவு செயற்கை நுண்ணறிவினை வழங்குகின்ற தரவு நுழைவு பயன்பாடு.

**Intelligent hub : அறிவார்ந்த குவியன்:** இணையத்திலுள்ள சமிக்கைகளை மீட்டுருவாக்கல், இணைய மேலாண்மைக்கான அனுப்புதல்களைக் கண்காணித்தல், பல வகையான கேபிள்களுக்கு இணைப்புகளை அனுமதித்தல் மற்றும் வழியமைத்துத் தருதல் போன்ற பல்வகைப் பணிகளை இது ஆற்றுகிறது.

**Intelligent language : அறிவார்ந்த மொழி:** நிரலாக்கத் தொகுப்பை உருவாக்கியவர் அல்லது பயன்படுத்துகிறவர் மூலம் கற்றுக் கொள்ளக் கூடிய அல்லது மாற்றக்கூடிய நிரலாக்கத் தொகுப்பு மொழி.

**Intelligent modem : அறிவார்ந்த மோடெம் :** நேர்முக அனுப்புதல் நடைபெறும்போதே புதிய ஆணைகளை ஏற்று கட்டளைகளுக்கு இசையும் மோடெத்தை, ஹேயஸ் என்பவர் முதலில் உருவாக்கினார்.

**Intelligent robots : அறிவார்ந்த எந்திர மனிதர்கள் ; அறிவார்ந்த எந்திரன்கள்:** அறிவார்ந்த எந்திர மனிதனுக்கு நிரலாக்கத் தொடரமைக்கப் பயன்படுத்தப்படும் செயற்கை நுண்ணறிவு தொழில் நுட்பம், தன்னுடைய சூழ்நிலையை அறிந்து கொண்டு பல்வேறு வெளிப்புற சூழ்நிலைகளுக்கேற்ற அறிவார்ந்த செயல்களை எந்திர மனிதன் செய்ய இது உதவுகிறது.

**Intelligent software development tools : அறிவார்ந்த மென்பொருள் வளர்ச்சிக் கருவிகள் :** மென்பொருள் வளர்ச்சியின் பல்வேறு நிலைகளில் உற்பத்தித்திறனை அதிகரிக்க மென்பொருள் வளர்ச்சிக் கருவிகள் என்று அழைக்கப்படும் சிறப்பு நிரலாக்கத் தொடர்களை நிரலாக்கத் தொடர் அமைப்பவர்கள் பயன்படுத்துகிறார்கள்.

**Intelligent terminal : அறிவார்ந்த முனையம் :** உள்ளீட்டு/வெளியீட்டுக் கருவி. அதில் கணினி ஒன்றின் முறைப்படுத்தும் பண்புகள் பொருத்தப்பட்டதாக அல்லது முனையப் பிரிவில் இணைக்கப்பட்டதாக இருக்கின்றன. Point of sale terminal, Local intelligence ஆகியவற்றைப் பார்க்கவும். Smart terminal என்பதோடு ஒப்பிடவும். Dumb terminal என்பதற்கு எதிரானது.

**intelligent terminal intensity : அறிவார்ந்த முனையச் செறிவு.**

**intelligent transportation infrastructure : நுண்ணறிவு போக்குவரத்து அகக் கட்டமைப்பு :** *1996* ஆம் ஆண்டில் அமெரிக்க நாட்டுப் போக்குவரத்துச் செயலர் (அமைச்சர்) ஃபெடரிக்கோ பானா அவர்கள் முன்வைத்த திட்டம். நகர்/புறநகர் நெடுஞ்சாலை மற்றும் திரளான போக்குவரத்துக் கட்டுப்பாடு/மேலாண்மை சேவைகளை தானியங்கு மயமாக்கும் திட்டம் இது.

**INTELSAT : இன்டெல்சாட் :** தகவல் தொடர்பு செயற்கைகோள்களை ஏவிய பன்னாட்டு நிறுவனம். பன்னாட்டுத் தகவல் தொடர்பில் பெரும்பாலான நீண்டதூரத் தொடர்புகள் இவற்றின் மூலமாகவே இயங்குகின்றன.

**Intensity : திண்ணம் :** வரைபட வெளிப்படுத்து கருவியில் வெளிப்படும் ஒளியின் அளவு. கத்தோட் கதிர்க்குழாய் வெளிப்படுத்தும் பிரகாசத்தின் அளவு. இதனை குமிழ் ஒன்றைப் பயன்படுத்திக் கட்டுப்படுத்தலாம்.

**Inter : இடை :** எல்லைகளைக் கடத்தல். சான்று. Inter work என்றால் ஒரு கட்டமைப்பிலிருந்து வேறு ஒன்றுக்கு என்று பொருள்.

**Interactive : இடைப்பரிமாற்ற; ஊட்டாடல் :** உள்ளீட்டுக்கு உடனடியாக எதிர் வினை தருதல். பயனாளர் கணினி முறைமையுடன் நேரடியாக தொடர்ந்து தொடர்பு கொள்கிறார். இந்த வழித் தொடர்பில் இயக்குவோர் ஒரு செயல் மூலம் நிரல் தொகுப்பை மாற்றியமைக்கலாம் அல்லது நுழைக்கலாம். முறைமையிடமிருந்து எதிர் தகவல் மற்றும் வழிகாட்டுதலுக்காகவும் சரி பார்ப்புக்காகவும் பெறலாம்.

**Interactive cable TV : இடைப்பரிமாற்ற கம்பிவட தொலைக்காட்சி 'கேபிள் டி.வி':** பிரச்சினைகள் குறித்து கருத்துகளைக் கூறி பார்வையாளர்கள் பங்கு பெறும் தொலைக்காட்சி நிகழ்ச்சி சேவை. வீடியோ டெக்ஸ்ட், டெலி டெக்ஸ்ட்

போல் அல்லாது முழுதாக தொலைக்காட்சி பார்ப்பதை இது உணர்த்துகிறது. காலப் போக்கில் இந்த சேவைகள் எல்லாம் கேபிள் டி.வி. சேவைகள் மூலம் தர முடியும். டிகோடரும், விசைப்பலகையும் தேவைப்படும்.

**interactive fiction : ஊடாடு கதை** : ஒருவகை கணினி விளையாட்டு. ஒரு பயனாளர் கணினிக்குச் சில கட்டளைகளைக் கொடுத்து, ஒரு கதையில் தானும் ஒரு கதை மாந்தராகப் பங்கு பெறலாம். பயனாளர் தரும் கட்டளைகள் ஓரளவுக்கு கதையின் நிகழ்வுகளை நிர்ணயிக்க முடியும். பெரும்பாலும் ஓர் இலக்கினை அடைவது கதையின் மையக் கருவாக இருக்கும். அந்த இலக்கை அடைவதற்கான சரியான நடவடிக்கைகளின் வரிசையைக் கண்டறிந்து செயல்படுவதே விளையாட்டின் புதிரான பகுதியாகும்.

**Interactive graphics : இடைப் பரிமாற்ற வரைபடங்கள்** : வரைபட முறை - இதில் பயனாளரும் கணினியும் தீவிர தகவல் பரிமாற்றத்தில் இருக்கும்.

**Interactive graphics system : இடைப் பரிமாற்ற வரைபட முறைமை** : கணினி வரைபட முறைமை - இதில் கணினி உதவியுடனான வரைபடத்தைத் தயாரிப்பதில் எல்லா பணி நிலையங்களும் பயன்படுத்தப்படுகின்றன. எல்லாம் இயக்குவோரின் கட்டுப்பாட்டில் உள்ளன. உரைத் தயாரிப்பு, பட்டியல்கள் உருவாக்குதல், வரைபடங்கள், கணினி உதவியுடனான பொறியியல் பணிகள், 35 மி.மீ அசையாத் தகடுகள், அல்லது செயல்படக்கூடிய படங்கள் ஆகியவற்றை உருவாக்கலாம்.

**Interactive input : இடைவினை உள்ளீடு.**

**interactive link : இடைப் பரிமாற்ற இணைப்பு; ஊடாட்டத் தொகுப்பு.**

**Interactive menu : இடைப் பரிமாற்றப் பட்டியல்** : ஒரு நேரத்தில் ஒன்று என்ற அடிப்படையில் கேள்வி கேட்கும் மெனு தத்துவம். ஒரு கேள்விக்கு பதில் வந்தவுடன் இரண்டாவது கேள்வி திரையில் வரும். வணிக தரவு செயலாக்கத்தில் இது அதிகம் பயன்படுத்தப்படுகிறது.

**Interactive processing : இடைப் பரிமாற்ற முறைப்படுத்துதல்** : பயனாளருக்கும் கணினிக்கும் இடையே இடையறாத

தொடர்ந்த தகவல் தொடர்பு மூலம் தரவுகளை மாற்றுதல், கட்டளைகளை மாற்றுதல் ஆகியவை நிறைவேற்றப்படு கின்றன. Conversational mode மற்றும் transaction oriented processing என்பதைப் பார்க்கவும்.

**Interactive programme : இடைப் பரிமாற்ற நிரல் தொகுப்பு; இடை வினைச் செயல்படுத்துதல் :** தரவுகள் பதிவு செய்யப்பட அல்லது தரவுகள் தொடர அல் லது நிரல் தொகுப்பை அதனை நிறைவேற்றும்போதே மாற்றி அமைக்க அனுமதிக்கும் கணினி நிரல் தொகுப்பு.

**Interactive programming : இடைப் பரிமாற்றச் செயல் முறைப்படுத்தல்.**

**Interactive query : இடைப் பரி மாற்ற வினா; ஊடாடு உசாவல்:** ஒரு குறிப்பிட்ட ஆவணத்தை அல்லது ஆவணங்களை உடனடியாகத் திரும்பப் பெற உதவும் நடவடிக்கை. இயல் பாகப் பயனாளரின் ஒவ்வொரு உள்ளீட்டுக்கும் முறைமையிட மிருந்து ஒரு எதிர் வினையைத் தரும் தொடர்பு.

**Interactive session : இடைப் பரிமாற்ற நிகழ்ச்சி :** பயன் படுத்துபவருக்கும் கணினிக்கும் இடையில் முன் பின்னான உரையாடல். Batch session என்பதன் எதிர்ச்சொல்.

**Interactive system : இடைப் பரிமாற்ற முறைமை :** பயனா ளரோ , கணினியின் சாதன சேவைப் பகுதியோ இயக்க நிரல் தொகுப்புடன் நேரடி யாகத் தொடர்பு கொள்ள முடி யும். பயனாளர் இதனை உரை யாடல் முறைமை என்று கூறு வார்கள்.

**interactive television : ஊடாடு தொலைக்காட்சி :** தொலைக் காட்சி நிகழ்ச்சிகளில் பார்வை யாளர் ஊடாட வகைசெய்யும் ஒரு ஒளிக் காட்சித் தொழில் நுட்பம் (Video Technology). இணையத் தொடர்பு, நேயர் விருப்ப ஒளிக்காட்சி (Video on demand), ஒளிக்காட்சிக் கலந் துரையாடல் (Video Conference) போன்றவை ஊடாடு தொலைக் காட்சியின் சில பயன்பாடு களாகும்.

**Interactive video : இடைப் பரி மாற்ற ஒளிக்காட்சி: ஊடாடு ஒளிக்காட்சி:** சொற்கள், குரல், ஒளி பரிமாற்ற தொழில் நுட் பங்களுடன் உருவ செயலாக் கத்தை ஒருங்கிணைக்கும் கணினி சார்ந்த அமைப்பு. இடைப் பரிமாற்ற பல் ஊடக முறையில் வழங்குவதை இது

இயல்பாக்குகிறது. கணினி கட்டுப்பாட்டில் வீடியோ டிஸ்க் அல்லது சிடி ரோமை பயன்படுத்தி இடைப்பரிமாற்றக் கல்வி அல்லது பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளை அளிப்பது.

**interactive video disk :** இடைப் பரிமாற்ற ஒளிக்காட்சி வட்டு; ஊடாடு ஒளிக் காட்சி வட்டு.

**Interaction :** திரும்பச் செய்தல் : மறுபடி மறுபடி செய்தல்.

**interapplication communication :** பயன்பாடுகளுக்கிடையேயான தகவல் தொடர்பு : ஒரு நிரல் இன்னொரு நிரலுக்குச் செய்தி அனுப்பும் செயல்பாடு. (எ-டு) சில மின்னஞ்சல் நிரல்கள், பயனாளர் அஞ்சலைப் படித்துக் கொண்டிருக்கும்போதே அதில் குறிப்பிட்டுள்ள ஓர் இணையத் தளத்தைச் சொடுக்கிப் பார்வையிட அனுமதிக்கின்றன. பயனாளர் சொடுக்கியதும், இணைய உலாவி அக்குறிப்பிட்ட இணையத் தளத்தை தானாகவே பெற்றுத் தருகிறது.

**Interbase :** இடைமுகம் : இடைமுகப்பு: போர்லாண்ட் நிறுவனத்தில் உறவுமுறை டி.பி.எம்.எஸ். நேர்முக கலவை செயலாக்கங்களைக் (online complex processing) கையாள வடிவமைக்கப்பட்ட இது யூனிக்ஸ் பணி நிலையங்களிலும் வேக்ஸ் களிலும் இயக்கப்படுகிறது. பியர்-டு-பியர் மற்றும் கிளயன்ட்/ செர்வர் அமைப்புகளாகவும் இது இருக்கலாம். எஸ்கியூஎல்-யும் மற்றும் அதனுடைய சொந்தத் தரவு கையாளும் மொழியையும் இது பயன்படுத்துகிறது.

**Inter Block Gap : (IBG) :** தொகுதி இடைவெளி; தொகுப்பிடைத் தூரம் : மின்காந்த நாடா, வட்டு அல்லது உருளையில் ஒரு ஆவணத் தொகுப்பின் முடிவுக்கும் அடுத்த ஆவணத் தொகுப்புக்கும் இடையில் உள்ள தூரம். கோப்புத் தூரம் மற்றும் ஆவண இடைத் தூரத்திலிருந்து மாறுபட்டது.

**inter connected network :** சேர்த்திணைப் பிணையம்.

**inter connected ring :** சேர்த்திணைப்பு வளையம்.

**Interconnection :** இணைப்பு: பல விற்பனையாளர்கள் வழங்கிய சாதனங்களுக்கிடையிலான இணைப்பு.

**Interface :** இடைமுகப்பு: ஒரு கணினியும், வெளிப்புற பொருள் ஒன்றும் சந்திக்கும் இடம். அந்த வெளிப்புறப் பொருள் இயக்கியாகவோ, வெளிப்புறச் சாதனமாகவோ

அல்லது தகவல் தொடர்பு ஊடகமாகவோ இருக்கலாம். இணைப்பி போன்ற பருப் பொருளாகவோ அல்லது மென் பொருளை உள்ளடக்கிய அளவைப் பொருளாகவோ இருக்கலாம்.

**Interface adapter : இடைமுக ஏற்பி** : கணினி அல்லது முகப்பை ஒரு கட்டமைப்புடன் இணைக்கும் சாதனம்.

**Interface card : இடைமுக அட்டை** : ஒரு வகையான விரி வாக்க அட்டை. தட்டு இடை முக அட்டை, தொடர் இடைமுக அட்டை, இணை இடை முக அட்டை போன்ற வெளிப்புறச் சாதனங்களை கணினிகளில் இணைக்க இது அனுமதிக்கிறது.

**Interface Message Processor (IMP) : இடைமுக செய்திச் செயலி.**

**Interfacial programme : இடைமுகப்புச் செயல்முறை.**

**Interference : குறுக்கீடு** : விரும் பும் சமிக்கைகளின் தரத்தினை சீர்கேடு அடையச் செய்யும் தேவையில்லாத சமிக்கைகள்.

**Inter frame coding : இடை உருவ குறியீடமைத்தல்** : உருவங்களுக் கிடையிலான வேறுபாடுகளை மட்டும் குறியீடமைக்கும் வீடியோ சுருக்கும் முறை.

**Inter graph : இடைப் பரிமாற்ற வரைகலை** : கணினி அமைப்பு களில் இருந்த இடைப்பரிமாற்ற வரைகலைகளை உருவாக்கும் அமெரிக்க நிறுவனம்.

**Interlace : இடைப்பின்னல்** : அணுகு நேரத்தைக் குறைக்கும் வகையில் காந்த வட்டு அல்லது உருளையில் தனித்தனியாக உள்ள சேமிப்பக இருப்பிடங் களில் அடுத்தடுத்த முகவரி களைக் கொடுப்பது.

**Interlacing : இடைப்பின்னியல்:** குறைவான செங்குத்து ஸ்கேன் விகிதங்களைக் கணினி வெளிப் படுத்தப்படும்போது லிக்கரின் (licker) அளவைக் குறைக்கும் முறை. ஒரே நேரத்தில் அடுத்த இரண்டாவது வரியையும் ஸ்கேன் செய்து இரண்டாவது முறை விட்டுப்போன வரி களை ஸ்கேன் செய்தல்.

**Inter language conversion : மொழிகளுக்கிடையில் மாற்றம்** : ஒரு மொழியில் இருந்து வேறொன்றுக்கு மாற்றுதல்

**Interleaf : இடைத்தாள்** : ஐபிஎம் மின் உயர் பீ.சிக்கள் மற்றும் 386 -களுக்கான முழு அம்சங்கள் உள்ள டி.டீ.பீ. மென்பொருள். உரை மற்றும் வரைகலை தொகுப்பு, தாராள கை ஓவியம் போன்றவற்றை உள்ளடக்கி

யதற்கு போஸ்ட் ஸ்கிரிப்ட் உதவியும் ஏஸ்/400 ஃபோல்டர் களுடன் இணைப்பும் கிடைக் கிறது.

**interleaved memory : இடைப் பின்னல் நினைவகம் :** கணினி யின் நிலையா நினைவகத்தில் (RAM) காத்திருக்கும் நேரத் தைக் குறைக்கும் பொருட்டு முகவரிகளை ஒழுங்கமைக் கின்ற ஒரு வழிமுறை. இடைப் பின்னல் நினைவகத்தில், அடுத் தடுத்த நினைவக இருப்பிடங் கள் சில்லுவின் வேறுவேறு இடைவரிசைகளில் இருப் பதுண்டு. மையச் செயலி யானது ஒரு பைட்டை அணு கியபின், அடுத்த பைட்டை அணுகுவதற்கு முன்பாக, ஒரு முழு நினைவகச் சுழற்சி முடி யும்வரை காத்திருக்க வேண்டிய தில்லை.

**Interleaving : இடைவிடல் :** பல் நிரல் தொடரமைக்கும் தொழில் நுட்பம். ஒரு நிரல் தொடரின் பகுதிகள் வேறொரு நிரலாக்கத் தொடரில் அமைத்து அதை வேறொரு நிரல் தொடரில் அமைப்பதுண்டு. இம்முறை யில் நிரலாக்கத் தொடர்களில் ஒன்றில் செயலாக்க தாமதம் ஏற்பட்டால் வேறொரு நிரல் தொடரின் பகுதிகள் செய லாக்கம் செய்யப்படலாம்.

**Interlink : தொடுப்புறவு; தொடுப்பிணைப்பு**

**Interlock : இடைப்பூட்டு :** ஒரு சாதனம் அல்லது இயக்கம் வேறொன்றில் தலையிடா வண்ணம் பாதுகாக்கும் வசதி. கணிப்பொறியில் நிரல் தொடர் ஒன்று செயல்படுத்தப்பட்டு வரும்போது அதை நகர்த்து வதைத் தடைசெய்யும் முறையில் கட்டுப்பாடு முகப்பில் உள்ள பொத்தான்கள் பூட்டிக் கொள் வது ஒரு குறுக்கீடு எனலாம்.

**Interlude : இடைச்செயல் :** ஆரம்பப் பராமரிப்பு.

**intermediate code generator : இடை நிலைக் குறிமுறை உருவாக்கி.**

**Intermediate mode routing : இடைமுறை வழியமைப்பு :** பக்கத்தில் அல்லாத முனை களுக்கு ஒரு செய்தியை அனுப் புதல். சான்றாக, அ - ஆ - இ என்ற மூன்று கணினிகளுக்கு இணைப்பு இருக்குமானால் 'அ' கணினி யிலிருந்து 'இ' கணினிக்கு 'ஆ' கணினி மூலம் செய்தி அனுப்ப முடியும்.

**intermediate language (IL) : இடைநிலை மொழி :** பொது வாக, ஒரு கணினி மொழி உயர் நிலை மொழியாகவும், செயல் படுத்த வேண்டிய இலக்கு

மொழி எந்திர மொழியாகவும் இருப்பதுண்டு. அதாவது, மொழி மாற்றிகள் (compilers) பெரும்பாலும் உயர்நிலைக் கணினி மொழி நிரல்களை எந்திர மொழிக்கு மாற்றியமைக்கின்றன. ஒருசில உயர் நிலை மொழி மாற்றிகள் முதலில் அசெம்பிளி மொழிக்கு மாற்றிப் பின் எந்திரமொழிக்கு மாற்றுகின்றன. இதில் அசெம்பிளி மொழி இடைநிலை மொழியாகப் பயன்படுகிறது.

**intermediate tool :** இடைநிலைக் கருவி.

**intermittent :** விட்டுவிட்டு : தகவல் சமிக்கை அல்லது தொலைபேசி இணைப்பு தொடர்ந்து கிடைக்காமலும் அதேவேளையில் துண்டிக்கப் படாமலும் குறிப்பிட்ட நேர இடைவெளிகளில் விட்டு விட்டுச் செயல்படுதல்.

**Intermittent error :** இடையிடையே வரும் பிழை : இடையிடையே அடிக்கடி வரும் பிழைகள். இதனால் பிழை திருத்தலும் மீண்டும் அதை உருவாக்குதலும் சிக்கலாகிறது.

**internal and external :** அகம்-புறம்.

**Internal clock :** உள்ளார்ந்த கடிகாரம் : அன்றாடம் நேரத்தைக் காட்ட கணினியின் உள்ளே அமைக்கப்படும் மின்னணு மின்சுற்று.

**Internal command :** உள்ளார்ந்த கட்டளை; அக ஆணை : எம்எஸ் டாசில் பொது கட்டளை செயலகத்தின் வழியான கட்டளை (command. com.) ஒன்று உள்ளது. இதற்காக எந்தக் கோப்பையும் ஏற்ற வேண்டியதில்லை.

**Internal data representation :** உள்ளே இருக்கும் தரவு : கணினியின் உள்ளே அமைந்திருக்கும் பதிவுகள் சேமிப்பகம் மற்றும் பிற சாதனங்களில் உள்ள தரவுகள்.

**Internal document :** அகநிலை ஆவணம்.

**Internal documentation :** உள் விவர ஆவணம் : அக ஆவணம் : 1. மூல மொழி நிரலாக்கத் தொடரில் விளக்கக் குறிப்புகள், குறிப்புரைகளைச் சேர்த்தல். இதற்கு கணினி மூலம் எதுவும் செய்ய வேண்டியதில்லை. நிரலாக்கத் தொடரின் பல்வேறு பகுதிகள் செய்யும் பணிகள் பற்றி தற்போதைய மற்றும் எதிர்கால நிரலாக்கத் தொடர் அமைப்பவர்களுக்கு இது உணர்த்துகிறது. 2. ஒரு வணிக நிறுவனத்தில் பயன்படுத்தப் படும் ஆவணப்படுத்தல்.

**Internal font : உள்ளார்ந்த எழுத்துரு :** ஒரு அச்சுப்பொறியில் உருவாக்கப்பட்ட ஒரு குறிப்பிட்ட எழுத்து முகம் கொண்ட எழுத்துகளின் தொகுதி.

**Internal fragmentation : அக நிலைத் துண்டிப்பு.**

**Internal interrupt : உள்ளார்ந்த குறுக்கீடு :** செயலாக்கம் மூலம் ஏற்படும் குறுக்கீடு. சான்று: உள்ளீடு அல்லது வெளியீடு அல்லது ஒரு கணித மிகு பிழைக்கான வேண்டுகோள். எதிர்ச் சொல் : external interrupt.

**Internally generated data : உள் தோன்றும் தரவு.**

**Internal memory : உள் நினைவகம் :** Internal storage போன்றது.

**Internal modem : உள்ளமைந்த மோடெம் :** கணினியின் உள்ளே இருந்து கொண்டு நேரடியாக கணினி விரிவாக்க வாயிலில் பொருந்தக் கூடியது.

**internal or external command : அகக்கட்டளை அல்லது புறக் கட்டளை.**

**Internal report : உள்ளார்ந்த அறிக்கை : அக நிலை அறிக்கை :** ஒரு நிறுவனத்தின் உள்ளே இருப்பவர்கள் தயாரிக்கும் நிறுவன அறிக்கை. இருப்புக் கணக்கெடுப்பு தரக்கட்டுப்பாடு, சம்பளப்பட்டி போன்றவை இதில் அடங்கும்.

**internal schema : அகப் பொழிப்பு; அக உருவரை :** ஒரு தரவுத் தளத்திலுள்ள கோப்புகள்-அவற்றின் பெயர்கள், அவற்றின் இருப்பிடம், அணுகும் முறைகள், தரவு தருவித்தல் போன்ற அனைத்தையும் பற்றிய ஒரு பார்வை அல்லது நோக்கு. அன்சி/எக்ஸ்3/ஸ்பார்க் ஆகியவை ஏற்கின்ற முப்பொழிப்புக் கட்டுமானம். கொடாசில் (CODASIL), டிபிடீஜி (DBTG) ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட முறைமைகளில் உள்ள பொழிப்புடன் தொடர்புடையது அகப் பொழிப்பு ஆகும். பகிர்ந்தமை தரவுத்தளத்தில், வெவ்வேறு இருப்பிடங்களில் வேறு வேறு அகப்பொழிப்புகள் இருக்க முடியும்.

**Internal sort : உள்ளே வகைப் படுத்தல்; அக நிலை வரிசையாக்கல் :** ஒரு மைய செயலக அலகுக்குள் இரண்டு அல்லது மேற்பட்ட பதிவுகளை வரிசைப் படுத்துதல். பல்வகைப்படுத்தும் நிரல் தொடரில் முதல் நிலை.

**Internal storage : உள்ளார்ந்த சேமிப்பகம்: உள் தேக்ககம் :**

மையச் செயலக அலகு நேரடியாகக் கட்டுப்படுத்தும் முகவரியிடும் சேமிப்பகம். நிரலாக்கத் தொடர் இயக்கப்படும் போதும் தரவு செயலாக்கம் செய்யப் படும்போதும் நிரல் தொடர்களை சேமிக்கப் பயன்படுகிறது.

**Internal timer :** உள்ளார்ந்த காலங்காட்டி : முறையான இடைவெளிகளில் பைபியசோ எலெக்ட்ரிக் படிகம் உருவாக்கும் துடிப்புகளைக் கட்டுப்படுத்தும் பதிவு.

**International Business Machines Corporation (IBM) :** பன்னாட்டு வாணிக எந்திரக் கழகம்.

**International Council for Computers in Education (ICCE) : கல்வியில் கணினிகளுக்கான பன்னாட்டுக் கழகம் (ஐ.சி.சி.இ) :** கல்லூரிக்கு முந்தைய அளவில் கல்வித் துறையில் கணினியைப் பயன்படுத்துவதில் ஆர்வமுள்ளவர்களைக் கொண்ட பன்னாட்டு நிறுவனம்.

**international data links :** பன்னாட்டுத் தரவு இணைப்பு.

**International Directory of Software :** பன்னாட்டு மென்பொருள் திரட்டு : கம்ப்யூட்டர் பப்ளிகேஷன்ஸ் லிமிடெட் நிறுவனத்தின் வெளியீடு.

**International Federation for Information Processing (IFIP) : தகவல் செயலாக்கத்திற்கான பன்னாட்டுப் பேரவை (ஐஎஃப்ஐபீ) :** தகவல் செயலாக்கத் துறையில் தீவிரமாக ஈடுபட்டுள்ள தொழில் முறை மற்றும் கல்வி முறை சங்கங்களைச் சேர்ந்தவர்களைக் கொண்ட பன்னாட்டு நிறுவனம். மூன்று ஆண்டுகளுக்கொரு முறை உலகின் பல்வேறு பகுதிகளில் கூட்டம் நடத்துகிறது.

**International Forum for Information Technology in Tamil (INFITT) : உலகத் தகவல் தொழில் நுட்பத் தமிழ் மன்றம்.** சுருக்கமாக "உத்தமம்" என வழங்கப் படுகிறது.

**international network :** உலகளாவிய பிணையம்; பன்னாட்டுப் பிணையம்.

**International Standard :** பன்னாட்டுத் தரம்.

**International Standard Book Number (ISBN) :** பன்னாட்டு தர நூல் எண் : ஐஎஸ்பிஎன் என்று சுருக்கி அழைக்கப்படுகிறது. நூலகங்களில் பயன்படுத்தப் படும் பட்டைக் குறியீடு.

**International Standard Organisation (ISO) :** பன்னாட்டுத் தர நிறுவனம் (ஐஎஸ்ஓ) : அறிவியல் மற்றும் பொறியியல்

பொருள்கள், அமைப்புகளுக் கான பன்னாட்டு தர நிர்ணயங் களை வழங்க உருவாக்கப்பட்ட தன்னார்வ நிறுவனம்.

**International Tele-communi-cations union : பன்னாட்டுத் தொலைத் தொடர்புக் குழுமம்; சர்வதேச தொலை தொடர்புச் சங்கம் :** பொதுத்துறை மற்றும் தனியார் தொலைத் தொடர்பு நிறுவனங்களின் தொலைபேசி மற்றும் தரவு தொடர்பு அமைப்பு களுக்கான பரிந்துரைகள் மற்றும் தர வரையறைகள் - இவற்றுக்குப் பொறுப்பு வகிக்கும், பன்னாட்டு அரசுகளின் கூட்டமைப்பு.

**Internet : இணையம் :** உலகம் முழுவதிலுமுள்ள பிணையங் களின் தொகுப்பு. பிணையங்கள் தமக்குள்ளே டீசிபீ/ஐபீ நெறி முறைத் தொகுப்புகளின் அடிப் படையில் தகவல்களைப் பரி மாறிக் கொள்கின்றன. இணை யத்தின் இதயமாக விளங்குவது, பெரிய கணுக்கணினிகள் (Nodes) அல்லது புரவன் கணினி களை (Hosts) இணைக்கும் அதிவேகத் தரவு தொடர்புத் தடங்களாலான முதுகெலும்பு (Back bone) ஒத்த அமைப்பே ஆகும். அமெரிக்க நாட்டுப் பாதுகாப்புத் துறை 1969இல் உருவாக்கிய ஆர்ப்பா நெட், இணையத்தின் ஊற்றுக் கண்ணாகும். அணுப்போர் ஏற் படினும் ஆர்ப்பாநெட் முற்றி லும் அழிந்து போகா வண்ணம் உருவாக்கப்பட்டது. பிட்நெட், யூஸ்நெட், யுயுசிபீ மற்றும் என்எஸ்எஃப்நெட் ஆகியவை ஆர்ப்பாநெட்டுடன் காலப் போக்கில் இணைந்துவிட்டன.

**Internet access : இணைய அணுகல் :** இணையத்துடன் இணைப்பு ஏற்படுத்திக் கொள் ளல். இருவகையில் இயலும். முதல் வழிமுறை தொலைபேசி +இணக்கி மூலம் ஓர் இணையச் சேவையாளரின் வழியாகத் தொடர்பு கொள்ளுதல். வீட்டுக் கணினிகளிலிருந்து பெரும் பாலான பயனாளர்கள் இந்த முறையிலேயே தொடர்பு கொள்கின்றனர். இரண்டாவது வழிமுறை : தனிப்பட்ட இணைப்புத் தடம் (dedicated line) மூலம் ஒரு குறும்பரப்புப் பிணையத்தை இணையத்துடன் இணைத்தல். பிணையத்தில் இணைக்கப்பட்ட கணினிகளில் பயனாளர் தொடர்பு கொள்வர். பெரும் நிறுவனங்கள் இத்தகு இணைப்புகளைப் பெற் றுள்ளன. தொலைக்காட்சிப் பெட்டியுடன் இணைக்கப்பட்ட கருவி மூலமும் இணையத்தை அணுக முடியும். இன்னும் பரவ லாகப் புழக்கத்தில் வரவில்லை.

**Internet access device : இணைய அணுகல் சாதனம் :** இணையத்துடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளவும், சமிக்கைகளை திசைப்படுத்தவும், இணைப்பு நேரத்தின்படி கட்டணம் கணக்கிடவும் பயன்படும் கருவி. ஒன்றுக்கு மேற்பட்ட தொலைதூரப் பயனாளர்கள் ஒரே நேரத்தில் இணையத்தை அணுக வழி செய்யும்.

**Internet account : இணையக் கணக்கு :** பயனாளர் ஒருவர் இணைய இணைப்புக்காக இணையச் சேவையாளரிடம் பதிவு செய்து கொள்ளல். அவர்கள் தரும் பயனாளர் பெயர் (username), நுழைசொல் (password) மூலமாக இணையத்தை அணுக முடியும். பீடீபீ (Point To Point) மூலம் இணைய அணுகல், மின்னஞ்சல் போன்ற சேவைகள் கிடைக்கும்.

**Internet address : இணைய முகவரி :** இணையத்தைப் பயன்படுத்துபவர்களுக்கு செய்திகளை முகவரியிடுவதற்கான படிவம்.

**Internet Architecture Board : இணையக் கட்டுமானக் கழகம் :** ஐசாக் (ISOC) எனப்படும் இணையச் சமூக அமைப்பின் (Internet Society) ஒரு குழு. இணையத்தின் ஒட்டுமொத்தக் கட்டுமான நோக்கங்களுக்கு பொறுப்பாக விளங்குகிறது. தர வரையறை செயலாக்கங்களில் ஏற்படும் தகராறுகளைத் தீர்த்து வைக்கும் பணியையும் செய்கிறது. தலைப்பெழுத்துக் குறும்பெயர் ஐஏபி (IAB).

**Internet backbone : இணைய முதுகெலும்பு :** இணையம் என்பது பிணையங்களின் பிணையம் (Network of Networks). ஒரு நாட்டிலுள்ள உள்ளூர் மற்றும் வட்டாரப் பிணையங்களை ஒருங்கிணைத்து இணையத்தில் பிணைக்கப்பட்டுள்ள இன்னொரு முதுகெலும்புப் பிணையத்துடன் தரவுகளைப் பரிமாறிக் கொள்ளும் அதிவேகப் பிணையம். வரலாற்றுப் போக்கில் பார்த்தால், இணையத்தின் முன்னோடியான என்எஸ்எஃப்நெட் (NSFNet) அமெரிக்க நாட்டின் முதுகெலும்புப் பிணையமாகத் திகழ்ந்தது. தேசிய அறிவியல் கழகம் (National Science Foundation) நடத்திவந்த அனைத்து மீத்திறன் கணினி மையங்களும் (Super Computer Centers) இந்த முதுகெலும்புப் பிணையத்தில் இணைக்கப்பட்டிருந்தன. இன்றைக்கு பல்வேறு தனியார் நிறுவனங்களும் தத்தமது முதுகெலும்புப் பிணையங்களை

நடத்தி வருகின்றனர் (எ-டு) எம்சிஐ, ஸ்பிரின்ட், இந்தியாவில் விஎஸ்என்எல் மற்றும் தொலை தொடர்புத்துறை (பிஎஸ்என்எல்) முதுகெலும்புப் பிணையங்களை நிறுவியுள்ளன.

**Internet broadcasting :** இணைய அலைபரப்பு : இணையம் வழியாக கேட்பொலி (Audio) மற்றும் ஒளிக் காட்சி (Video) தரவுகளைப் பரப்புதல். இது வலைபரப்பு (Webcasting) என்றும் அழைக்கப்படுகிறது. இணைய அலைபரப்பு என்பது வழக்கமான வானொலி நிலையங்கள் இணையம் வழியாக ஒலிபரப்புச் செய்வதையும் உள்ளடக்கியதே. இணையத்தில் மட்டுமே ஒலிபரப்புச் செய்யும் நிலையங்களும் உள்ளன. இணையம் வழி ஒலிபரப்பாகும் பாடல்களை ரியல் ஆடியோ (Real Audio) என்னும் மென்பொருள் உதவியுடன் கேட்கலாம். ஒளிக்காட்சி அலைபரப்பை ரியல்பிளேயரில் காணலாம். எம்போன் (MBONE) என்பது இணைய அலைபரப்பில் ஒரு முறை.

**Internet browser :** இணைய உலாவி.

**Internet business :** இணைய வணிகம்.

**Internet call :** இணைய அழைப்பு.

**Internet connection :** இணைய இணைப்பு.

**Internet connection wizard :** இணைய இணைப்பு வழிகாட்டி.

**Internet draft :** இணைய நகலறிக்கை: இணையத்தில் நடைமுறைப்படுத்தப்படும் தர வரையறைகளில் செய்யப்பட வேண்டிய மாற்றங்கள் குறித்து விவாதிப்பதற்காக ஐஇடீஎஃப். (IETF-Internet Engineering Task Force) தயாரித்து முன்வைத்த ஓர் ஆவணம். எந்த நேரத்திலும் இதனைத் திருத்தலாம்; மாற்றலாம். திருத்தமோ மாற்றமோ இல்லையெனில் ஆறுமாத காலத்துக்கு இந்த ஆவணம் செல்லுபடி ஆகும். ஓர் இணைய நகலறிக்கை ஏற்றுக் கொள்ளப்படும் எனில், அதனை ஓர் ஆர்எஃப்சியாக (RFC-Request for Comment) மேம்படுத்தலாம்.

**Internet directory :** இணையத் தரவுத் தொகுப்பு.

**Internet Engineering Steering Group :** இணையப் பொறியியல் வழி காட்டும் குழு : இணையக் கழகத்தின் (Internet Society-ISOC) உள்ளேயே ஐஏபியுடன் (Internet Architecture Board) இணைந்து,

இணையப் பொறியியல் முனைப்புக் குழு (IETF-Internet Engineering முன்வைக்கும் தர வரையறைகளை மதிப்பாய்வு செய்யும்.

**Internet Explorer : இன்டர்நெட் எக்ஸ்புளோரர் :** மைக்ரோ சாஃப்ட் நிறுவனம் 1995ஆம் ஆண்டு அக்டோபரில் அறி முகப்படுத்திய இணைய உலாவி மென்பொருள். விண் டோஸ் 95/98/எம்இ/என்டி/2000 மற்றும் மெக்கின்டோஷ் முறை மைகளில் செயல்படும் பதிப்பு கள் பயன்பாட்டில் உள்ளன. பிந்தைய பதிப்புகள், வலைப் பக்கங்களில் இணைக்கப் பட்டுள்ள மேம்பட்ட வடி வமைப்பு நுட்பங்கள், அசை வூட்டக் கூறுகள், ஆக்டிவ் எக்ஸ் கட்டுப்பாடுகள் மற்றும் ஜாவா குறுநிரல்களை அடையாளங் கண்டு செயல்படுத்தும் வல்லமை பெற்றவை.

**Internet gateway : இணைய நுழைவி; இணைய நுழை வாயில் :** ஓர் இணைய முது கெலும்புப் பிணையத்துடன் இன்னொரு பிணையத்தை இணைப்பதற்கு உதவும் சாத னம். பெரும்பாலும் இத்தகைய சாதனம் இப்பணிக்கென தனித் தொதுக்கப்பட்ட ஒரு கணினி யாகவோ, ஒரு திசைவி (Router) யாகவோ இருக்கும். இணைய முதுகெலும்புப் பிணையத் திற்கும் அதனுடன் இணைக்கப் பட்ட பிற பிணையங்களுக்கும் இடையேயான நெறிமுறை நிலைமாற்றம் (Protocol Conversion), தரவு மொழிபெயர்ப்பு மற்றும் செய்திப் பரிமாற்றங்களை இந்த நுழைவிகள் கவனித்துக் கொள்கின்றன. ஒரு நுழைவி இணையத்தில் ஒரு கணுவாகக் (Node) கருதப்படுகிறது.

**internet group membership protocol : இணையக் குழு உறுப்பினர் நெறிமுறை :** ஐபீ புரவன்கள் (IP hosts) பயன் படுத்தும் ஒரு நெறிமுறைத் தொகுதி. இவற்றுடன் இணைக் கப்பட்ட பிற பல்பரப்பு திசை விகளுக்கு (Multicast Routers) தமது புரவன் குழு உறுப்பினர் தகுதியை அறிவிக்க இந்த நெறி முறை பயன்படுகிறது.

**Internet language : இணைய மொழி.**

**Internet Information Server : இன்டர்நெட் இன்ஃபர்மேஷன் சொ்வர் :** மைக்ரோசாஃப்ட் நிறுவனத்தின் வலை வழங்கன் (Webserver) மென்பொருள். ஹெச்டீடீபீ (http - Hypertext Transfer Protocol) நெறிமுறை யைப் பயன்படுத்தி வைய விரி

வலை ஆவணங்களை (www documents) இணையத்தில் வினியோகம் செய்யும். பல்வேறு பாதுகாப்புச் செயல்கூறுகளை உள்ளடக்கியது. வலைப் பக்கங்களில் சிஜிஐ நிரல்களை அனுமதிக்கிறது. கோஃபர் (Gopher) மற்றும் எஃப்டீபீ வழங்கன்களை (FTP Servers) ஏற்கிறது.

**Internet nodes :** இணையக் கணுக்கள்.

**Internet options :** இணைய விருப்பத் தேர்வுகள்.

**Internet phone :** இணைய பேசி.

**Internet protocol :** இணைய நெறிமுறை.

**Internet Relay Chat :** இணைய அரட்டை அரங்கம்.

**Internet Research Steering Group :** இணைய ஆய்வு வழி காட்டுங் குழு : இணைய ஆய்வு முனைப்புக் குழுவினை (Internet Research Task Force - IRTF) நிர்வகிக்கும் அமைப்பு.

**Internet Research Task Force :** இணைய ஆய்வு முனைப்புக் குழு : இணையக் கட்டுமானக் கழகத்துக்கு (IAB) இணையம் தொடர்பான நீண்ட காலப் பரிந்துரைகளை முன்வைக்கும் தன் முனைப்பு அமைப்பு.

**Internet router :** இணைய வழிப்படுத்தி : ஆப்பிள் நிறுவனத்தின் மெக்கின்டோஷ் மென்பொருள். இதன்மூலம் இன்டர்நெட் இயக்கங்களை உள்ளூர் பேச்சு, ஈதர் பேச்சு, அடையாளப் பேச்சு ஆகிய எதனுடனும் இணைத்து எந்த இணைய நிலையத்துடனும் இணைத்துத் தர முடியும். ஒவ்வொரு மீட்டரும் 8 இணையங்களுடன் இணைக்க முடியும். அதிக பட்சமாக 1.6 கோடி முனைகளிலும் 1,024 இணையங்களுடனும் சேரும்.

**Internet security :** இணையப் பாதுகாப்பு : இணையத் தரவு பரிமாற்றத்தில் தரவு சான்றுறுதி, அந்தரங்கம், நம்பகத்தன்மை, சரிபார்ப்பு இவையனைத்தையும் உள்ளடக்கிய ஒரு கருத்துரு. (எ-டு) வைய விரிவலையில் (www) உலாவி (Browser) மூலமாக பற்று அட்டையைப் (Credit Card) பயன்படுத்தி ஒரு பொருளை வாங்குவதில் பல்வேறு பாது காப்புச் சிக்கல்கள் அடங்கி யுள்ளன. முதலாவதாக இணையம் வழியாக அனுப்பப்படும் பற்று அட்டையின் எண்ணை அத்துமீறிகள் எவரும் குறுக்கிட்டு அறிந்து கொள்ளக் கூடாது. அவ்வெண் பதிந்து

வைக்கப்பட்டுள்ள வழங்கன் கணினியிலிருந்து வேறெவரும் நகலெடுத்துவிடக் கூடாது. அந்த பற்று அட்டை எண்ணை அதற்குரிய நபர்தான் அனுப் பினாரா என்பதைச் சரிபார்க்க வேண்டும். அதை அனுப்பிய வர் பின்னாளில் தான் அனுப்ப வில்லை என்று மறுதலிக்க வழி யிருக்கக் கூடாது.

**Internet Service Provider (ISP) : இணையச் சேவை நிறுவனம்; இணையச் சேவை வழங்கு வோர்; இணையச் சேவை மையம்.**

**Internet society : இணையச் சமூகம்: இணையக் கூட்டுறவுச் சங்கம்:** இணையப் பயன் பாட்டை வளர்க்கின்ற, பரா மரிக்கின்ற மற்றும் மேம்படுத்து கின்ற தனிநபர்கள், குழுமங் கள், அமைப்புகள், அரசு முகமைகள் ஆகியவற்றை உள்ளடக்கிய ஒரு பன்னாட்டு அமைப்பு. இணையக் கட்டு மானக் கழகம் (ஐஏபி), இதன் ஓர் அங்கமாகும். தவிரவும், இணையச் சமூக அமைப்பு இணையச் சமூக செய்தி அறிக் கையை வெளியிட்டு வருகிறது. ஆண்டுதோறும் ஐநெட் (INET) மாநாடுகளை நடத்தி வருகிறது.

**Internet Software Consortium : இணைய மென்பொருள் கூட்ட மைப்பு :** இணையம் தொடர் பான மென்பொருள்களை உரு வாக்கி அவற்றை வைய விரி வலை மற்றும் எஃப்டீபீ மூலம் இலவசமாக உலகுக்கு வழங் கும் ஆதாய நோக்கில்லாத அமைப்பு. டிஹெச்சிபீ (DHCP - Dynamic Host Configuration Protocol) போன்ற இணையத் தர வரையறைகளை உருவாக்கிய திலும் இந்த அமைப்புக்குப் பங்கு உண்டு.

**Internet talk radio : இணையப் பேச்சு வானொலி :** வானொலி யில் ஒலிபரப்பாகும் நிகழ்ச்சி களைப் போன்று இணையத்தில் பதிவிறக்கம் செய் வதற்கு ஏற்ற வகையில் வெளியிடப்படுகின்ற ஒலிக்கோப்புகளிலான நிகழ்ச்சி நிரல். வாஷிங்டனிலுள்ள தேசிய தாளிகை மாளிகையில் இந்த நிகழ்ச்சிகள் தயாரிக்கப் படுகின்றன. இந்நிகழ்ச்சி 30 நிமிடம் முதல் 1 மணி நேரம் வரை இருக்கும். 30 நிமிட நிகழ்ச்சியில் ஒலிபரப்பாகும் ஒலிக் கோப்புகள் 15 எம்பி வட்டு இடத்தை எடுத்துக் கொள்ளும்.

**Internet telephone : இணையத் தொலைபேசி :** பொதுத் தொலைத் தொடர்புக் கட் டமைப்பைப் பயன்படுத்தாமல் இணையத்தின் வழியாக

இரண்டுபேர் பேசிக் கொள்ளும் முறை. இரு முனையிலும் ஒரு கணினி, ஓர் இணக்கி (modem), இணையத் தொலைபேசி மென் பொருள் இருப்பின் இணையம் வழியாகத் தொலைபேசி அழைப்பை ஏற்படுத்தவும், பெறவும், பேசிக் கொள்ளவும் முடியும்.

**Internet television : இணையத் தொலைக்காட்சி** : இணையம் வழியாக அலைபரப்பாகும் தொலைக் காட்சியின் கேட்பொலி மற்றும் ஒளிக்காட்சி நிகழ்ச்சிகள்.

**Internet time : இணைய நேரம்.**

**Internet tools : இணையக் கருவிகள்**

**Internet traffic : இணையப் போக்குவரத்து.**

**Internetwork : இணைப் பிணையம்** : ஒன்றாக இணைக்கப் பட்ட ஒன்றுக்கு மேற்பட்ட கணினிப் பிணையங்களுக்கு இடையிலான தகவல் தொடர்பு. பெரும்பாலும் இணையம் வழி அல்லது விரி பரப்புப் பிணையம் வழியாக, இரண்டு குறும் பரப்புப் பிணையங்களுக்கிடையேயான தகவல் தொடர்பைக் குறிக்கும்.

**Internet worm : இணையப் புழு** : நவம்பர் 1988இல் இணையம் வழியாகப் பரப்பப்பட்ட கணினி நச்சு நிரல். தனக்குத் தானே இனப் பெருக்கம் செய்து கொள்ளும். ஒரே இரவில் உலகம் முழுவதிலும் இணையத்தில் இணைக்கப்பட்டிருந்த ஏராளமான கணினிகளை நிலை குலையச் செய்தது. யூனிக்ஸ் இயக்க முறைமையிலிருந்த ஒரு குறைபாட்டைப் பயன்படுத்தி இந்த நச்சுநிரல் ஊடுருவித் தீங்கு விளைவித்தது. கார்நெல் (Cornell) பல்கலைக்கழகத்தில் பயின்ற மாணவர் ஒருவரின் குறும்புத்தனத்தில் உருவானதே இந்த இணையப் புழு நிரலாகும்.

**InterNIC : இன்டர்நிக்** : இணையப் பிணையத் தகவல் மையம் என்ற பொருள்படும் Inter Network Information Centre என்ற தொடரின் சுருக்கம். களப் பெயர்களையும் ஐபீ முகவரி களையும் பதிவு செய்யும் பணியை இந்த அமைப்பே கவனித்துக் கொள்கிறது. இணையத்தைப் பற்றிய தகவலைப் பரப்பும் பணியையும் செய்கிறது. அமெரிக்க நாட்டின் தேசிய அறிவியல் கழகம். (National Science Foundation), ஏடீ&டீ, ஜெனரல் அட்டாமிக்ஸ் (General Atomics), நெட்வொர்க் சொல்யூஷன்ஸ் இன்க் ஆகிய

நிறுவனங்கள் பங்கு கொண்ட கூட்டமைப்பாக இன்டர்நிக் 1993ஆம் ஆண்டு அமைக்கப் பட்டது. இன்டர்நிக்கின் மின் னஞ்சல் முகவரி info@internic.net. இணைய தளம்: http://www.internic.net

**Internist : இன்டர்நிஸ்ட் :** 1970-களின் ஆரம்பத்தில் பிட்ஸ்பர்க் பல்கலைக் கழகத்தில் மையர்ஸ் மற்றும் ஹாரி பீப்பிள் ஆகி யோரால் உருவாக்கப்பட்டது.

**Interoperable : இசைவு இயக்கத் தன்மை:** வேறொரு கணினி அமைப்புடன் சரிவர இயங்கக் கூடிய ஒரு அமைப்பின் திறன்.

**interplanetory internet : கோள் களுக்கிடையிலான இணையம்.**

**interpolate : இடைமதிப்பீடு; இடைக் கணிப்பு :** ஒரு வரிசை யான மதிப்புகளில் தெரிந்த இரண்டு மதிப்புகளுக்கு இடைப்பட்ட மதிப்பினைக் கணக்கிடல்.

**Interpolation : இடைச் செருகல்; இடைக் கணிப்பு :** இரண்டு தெரிந்த மதிப்புகளுக்கிடை யிலான மதிப்பினைக் காணும் முறை. கணினி வரைகலையில் இந்தச் செயல்முறையை அடிக் கடி பயன்படுத்தி இரண்டு நேர் கோடுகளை இணைத்து வளைவுகளையோ அல்லது இரண்டு குறிப்பிட்ட புள்ளி களுக்கிடையில் மென்மையான வளைவுகளையோ வரை யறுப்பது.

**Interpress : இன்டர்பிரஸ் :** ஜெராக்ஸ் நிறுவனத்தின் பக்க விளக்க மொழி. 2,700 மற்றும் 9,700 பக்க அச்சுப் பொறிகளில் பயன்படுத்தப்படுகிறது. வென்ச் சுரா பதிப்பகம் இன்டர் பிரசுக் கான வெளியீடுகளை அளிக் கிறது.

**interpret : ஆணைமாற்று :** 1. கணினிக்கான ஒரு கூற்றை அல்லது ஓர் நிரலை பொறி மொழி வடிவில் மாற்றி அதனைச் செயல்படுத்துதல். 2. ஒரு கணினி மொழியில் எழுதப்பட்ட ஒரு நிரலை, ஒவ் வொரு கூற்றாக பொறி மொழி யில் மொழி பெயர்த்து அதனை நிறைவேற்றுவது. ஒட்டு மொத்த நிரலையும் பொறி மொழிக்கு மாற்றம் செய்து, பிறகு தனியாக பொறி மொழி நிரலை இயக்கிக் கொள்ளும் மொழிமாற்று (Compile) முறைக்கு மாற்றானது.

**Interpretation : ஆணை மாற்றம்; விளக்கம் :** உயர்நிலை மொழி நிரல் தொடர் வாக்கியங்களை எந்திரமொழி நிரல்களாக மாற்றும் மொழி பெயர்ப்பு. ஒரு

நிரல் தொடருக்கு விளக்கம் அளிக்கும்போது, ஒவ்வொரு வாக்கியத்தினையும் மொழி பெயர்த்து அடுத்த வாக்கியத்தைச் செயலாக்கம் செய்வதற்கு முன் செயல்படுத்தப்படும்.

**interpreted language : ஆணை மாற்று மொழி :** எழுதப்பட்ட நிரலை ஒவ்வோர் ஆணையாக பொறி மொழிக்கு மொழி பெயர்த்து உடனுக்குடன் இயக்கும் முறை கொண்ட கணினி மொழி. பேசிக், லிஸ்ப், ஏடீஎல் ஆகிய மொழிகள் பொதுவாக ஆணை மாற்று மொழிகள் எனப்படுகின்றன. ஆனாலும், பேசிக் மொழி நிரலை பொறி மொழிக்கு ஒட்டுமொத்தமாக மொழிபெயர்த்து இயக்கும் மொழி மாற்றிகளும் (Compiler) உள்ளன.

**Interpreter : வரி மொழி மாற்றி; ஆணை மாற்றி :** மூல மொழியில் உள்ள ஒவ்வொரு வாக்கியத்தையும் தொடர் எந்திர நிரல்களாக மாற்றி அவற்றை இயக்கும் கணினி நிரலாக்கத் தொடர்.

**interprocess communication : பணிகளிடை தகவல் தொடர்பு :** ஒரே நேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட பணிகளை நிறைவேற்ற வல்ல கணினி முறைமைகளில் இரண்டு பணிகளுக்கிடையே அல்லது செயலாக்கங்களுக்கிடையே தகவல் தொடர்பை நிகழ்த்தும் முறை. குழாய் (pipes), அணுகல்குறி (semaphores), பகிர்வு நினைவகம், சாரைகள் (Queues), சமிக்கைகள் மற்றும் அஞ்சல்பெட்டி எனப் பல்வேறு முறைகளில் இந்தத் தகவல் பரிமாற்றம் நடைபெறுகிறது.

**Inter Record Gap (IRG) : பதிவேடு இடையில் உள்ள இடைவெளி :** நாடாவில் தரவுகளின் தொகுதிகளுக்கிடையில் உருவாக்கப்பட்ட இடைவெளி. சுருணையினை ஆரம்பித்தல் மற்றும் நிறுத்துதலின் மூலம் உருவாக்கப்படுகிறது. IRG என்று சுருக்கி அழைக்கப்படுகிறது.

**Interrogate : கேள்வி கேட்டல் :** *(1)* ஒரு கோப்பில் உள்ள பதிவேடுகளைத் தேடுதல், தொகுத்தல் மற்றும் எண்ணுதல். *(2)* ஒரு முகப்பு அல்லது கணினி அமைப்புத் தகுதியை அல்லது நிலையைச் சோதித்தல்.

**Interrupt : குறுக்கீடு ; இடையீடு :** வழக்கமான நிரல் தொடர் செயல்படுவதை நிறுத்தி உள்சேமிப்பகத்தில் குறிப்பிட்ட இடத்திற்கு வன்பொருளின் நிரல் தொடர் கட்டுப்

பாட்டினை மாற்றுவதற்கான சமிக்கை. குறுக்கீடு செயல் படுத்தப்பட்ட பிறகு, நிரல் தொடரின் கட்டுப்பாடு மீண் டும் குறுக்கிடப்பட்ட நிரல் தொடருக்கே திரும்பிவிடும்.

**interrupt, automatic : தானி யங்கு குறிக்கீடு; தானியங்கு இடைமறிப்பு.**

**interrupt controller : குறுக்கீடுக் கட்டுப்படுத்தி.**

**Interrupt-driven : குறுக்கீடு- இயக்கி; இடை மறிப்புத் தூண் டல் :** குறுக்கீடுகளைப் பயன் படுத்தும் கணினி அல்லது தரவுத் தொடர்பு கட்டமைப்பு.

**interrupt-driven processing : குறுக்கீட்டு முடுக்கச் செய லாக்கம் :** ஒரு குறுக்கீடு (interrupt) மூலம் கோரிக்கை கிடைக்கப்பெற்றவுடன் நடை பெறும் செயலாக்கம். கோரிக்கை நிறைவேற்றப்பட்ட பின் மையச் செயலகம் (CPU) அடுத்த செயலை நிறைவேற்றத் தயாராக இருக்கும். அடுத்து செய்யவிருக்கும் பணி முன்பு விட்டு வந்த பணியாகவோ, இன்னொரு குறுக்கீடு மூலம் உணர்த்தப்படும் பணியாகவோ இருக்கலாம். பயனாளர் விசைப் பலகையில் ஒரு விசையை அழுத்துவது, நெகிழ் வட்டகத் தில் ஒரு வட்டினைச் செருகிய தும் அது தரவு பரிமாற்றத்துக்கு தயார் நிலையில் இருத்தல் போன்றவை குறுக்கீட்டு முடுக்கச் செயலாக்கங்களாகும்.

**Interrupt handler : குறுக்கீடு கையாள்பவர் :** குறுக்கீடு ஏற் படும்போது தேவையான வேலைகளைச் செய்யும் நிரலாக்கத்தொடரின் ஒரு பகுதி.

**Interruption : குறுக்கிடுதல் :** நிரல்களை வழக்கம்போல் தொடர்ச்சியாக இயக்குவதில் ஏற்படும் தடை.

**interruption, machine : எந்திரக் குறுக்கீடு; எந்திர இடைமறிப்பு.**

**Interrupt mask : குறுக்கீட்டு மூடி; இடை மறிப்புத் திரை :** ஒரு குறுக்கீட்டை செயலாக்கம் செய்யலாமா? வேண்டாமா? என்பதற்கான கட்டுப்பாட்டை இயக்கும் உள்ளார்ந்த பொத் தான். நிரல் தொடரினால் அவ் வப்போது மூடி, திறக்கப்படும் ஒரு துண்மியே மூடியாகும்.

**Interrupt priorities : குறுக்கீட்டு முன்னுரிமைகள் :** குறுக்கீடு களுக்குக் கொடுக்கப்படும் முக்கியத்துவத்தின் வரிசை முறை. ஒரே நேரத்தில் இரண்டு குறுக்கீடுகள் ஏற்படுமானால், அதிக முன்னுரிமை உள்ள

குறுக்கீடே முதலில் கவனிக்கப் படும். சில கணினிகளில் இரண்டுமே செய்யப்படும்.

**Interrupt Request Line (IRL) : குறுக்கீட்டு வேண்டுகோள் வரி :** குறுக்கீடு செய்யவேண்டிய சமிக்கை தருவதற்கு ஒரு சாதனத்தினால் பயன்படுத்தப் படும் ஒரு வரி தரவுக் கோடு.

**Interrupt return : குறுக்கீடு திரும்ப வரல் :** குறுக்கீட்டினால் தடை செய்யப்பட்டு மீண்டும் இயங்குமாறு செயலகத்திற்கு நிரல் தருகின்ற எந்திர நிரல்.

**Interrupt service routine : குறுக் கீட்டு சேவை வாலாயம் :** உடனடியாக இயக்கப்படும் நிரலாக்கத்தொடர். மையச் செயலகம் தற்போது செய்யும் வேலையை ஐஎஸ்ஆர் சேமித்து, குறுக்கீடு செய்யப் பட்ட வேலையை முடித்து விட்டு, மீண்டும்விட்ட இடத்தில் இருந்து தொடரும்.

**Interrupt vector : குறுக்கீட்டு நெறியம் :** ஒரு பட்டியலின் தனித்தன்மை. குறுக்கீடு சேவை யின் ஆரம்ப முகவரிகளைக் கொண்டது. இது இருப்ப தனால் மையச் செயலகமானது குறுக்கீடு வரும்போது எங்கே குதிக்கலாம் என்று அறிந்து கொள்ள முடிகிறது.

**Interrupt vector table : குறுக் கீட்டு நெறிய அட்டவணை :** சேவை வழமைகளில் குறுக்கீடு செய்வதற்கான நெறிகளைக் (வெக்டார்கள்) கொண்டுள்ள ஒரு அட்டவணை.

**Intersect : குறுக்கு வெட்டு :** உறவுமுறை தரவுத் தளங்களில் இரண்டு கோப்புகளைப் பொருத்திப் பார்த்து இரண்டுக் கும் பொதுவாக உள்ளவற்றைக் கொண்டு ஒரு மூன்றாவது கோப்பை உருவாக்குவது.

**Interval timer : இடைவேளை நேரம் காட்டி :** ஒரு கணினி அமைப்பில் கடந்துபோன நேரத்தைக் கண்காணிக்கும் எந்திர அமைப்பு.

**Interview : நேர்முகம்; நேர் காணல் :** *1.* அமைப்பு வடி வமைப்பு மற்றும் ஆய்வில் உண்மை தேடும்முறை. *2.* வேலைதரும் நபருக்கும் வேலைக்கு விண்ணப்பிப் பவருக்கும் இடையே நடை பெறும் உரையாடல். நேர் முகத்தின்போது ஒருவருக்கு தனது திறமைகள், கல்வி, மற்றும் கடந்தகால பட்டறி வைப் பற்றியும் அந்த வேலை யில் அவரிடம் என்ன எதிர் பார்க்கப்படுகிறது என்பதையும் விளக்க அவருக்கு வாய்ப்புக் கிடைக்கிறது.

**Intra : அக இயக்கம் :** ஒரு எல்லைக்குள் சான்றாக Intra office என்பது ஒரு அலுவல கத்துக்குள்ளேயே நடைபெறும் இயக்கங்கள்.

**Intranet : உள் இணையம் :** இணையத் தொழில் நுட்பங் களைப் பயன்படுத்தும் ஒரு நிறு வனப் பிணையம் .

**intraware : அக இணைய மென் பொருள் :** ஒரு குழுமத்தின் அக இணையத்தில் (Intranet) பயன் படுத்தப்படும் குழு மென் பொருள்/இடை மென்பொருள் ஆகியவை இவ்வாறு அழைக் கப்படுகின்றன. இவை பெரும் பாலும் மின்னஞ்சல், தரவுத் தளம், பணிப்பாய்வு, மற்றும் உலாவிப் பயன்பாட்டுத் தொகுப்புகளை உள்ளடக் கியவை.

**intrinsic font : உள்ளுறை எழுத் துரு :** பெரிதாக்கல் சிறிதாக்கல் எதுவுமின்றி அப்படியே ஒரு பிட் படிமமாகப் பயன்படுத்திக் கொள்ளுமாறு உருவளவும், வடிவமைப்பும் அமைந்த ஓர் எழுத்துரு.

**intruder : அத்துமீறி :** ஒரு கணினியில் அல்லது ஒரு கணினிப் பிணையத்தில் பொது வாகத் தீங்கெண்ணத்துடன் அனுமதியின்றி நுழைகின்ற ஒரு பயனாளர் அல்லது அத்துமீறி நுழைகின்ற ஒரு நிரல்.

**Intuitive command : உள்ளுணர்வுக் கட்டளை :** ஒரு கட்டளையின் வெளியீடாக வரு வதைக் குறிக்கக்கூடிய பெய ருடைய கட்டளை. சான்றாக, ஒரு கோப்பை சேமிப்பதற்கு Control - S என்பது ஒரு உள் ளுணர்வுக் கட்டளை. எப்படி யென்றால் இக்கட்டளையின் முடிவு 'S' என்னும் எழுத்து டன் ஆரம்பிக்கும். Control - X என்பது ஒரு பயன்பாட்டி லிருந்து வெளியேறுவது.

**.in.us : .இன்.யுஎஸ் :** இணையத் தில் ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டின் இண்டி யானா மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**invalid : செல்லாத; பிழையான; தவறான; பொருந்தாத :** 1. கணினியில் உள்ளீடு செய்யப் படுகின்ற ஏற்றுக் கொள்ள வியலாத மதிப்பு. (எ-டு) எண் வகை மதிப்புக்குப் பதிலாக எழுத்துவகை மதிப்பை உள்ளீடு செய்தல். 2. ஒரு நிரலில் தவ றான தருக்க முறையில் எழுதப் பட்ட பிழையான கட்டளை. விடையும் பிழையானதாக இருக்கும்.

**invalid media** : முறையா யமையா ஊடகம்; பொருந்தா ஊடகம்.

**Inventory control** : இருப்புக் கணக்கெடுப்பு கட்டுப்பாடு : இருப்பு கணக்கெடுப்பைக் கண் காணிக்க கணினி அமைப்பைப் பயன்படுத்துதல்.

**Inventory control system** : இருப்புக் கட்டுப்பாட்டுப் பொறி யமைவு : கையிருப்புப் பொருள் முதன்மைக் கோப்பு.

**Inventory management** : இருப்புக் கணக்கெடுப்பு மேலாண்மை : இருப்புக் கணக் கெடுப்பு தொடர்பாக அன் றாடம் மற்றும் காலமுறைக் கணக்கு வைத்துக் கொள்ளுதல். வகையறு மற்றும் வகையறா குழுக்களின் தேவைகளைக் கணித்தல்.

**Inverse video** : தலைகீழ் ஒளிக் காட்சி; எதிர்மறை ஒளித் தோற் றம் : காட்சித் திரையில் வெளிச் சப் பின்னணியில் இருட்டான சொற்களைக் காட்டும் செயல் முறை. வழக்கமாக இருட்டு பின்னணியில் வெளிச்சமுள்ள சொற்கள் காட்டப்படும்.

**Inverson notation** : தலைகீழ் எண்முறை : ஏபிஎல்-ஸில் வாக்கியங்களை எழுதுவதற்காக கென்னத் இவர்சன் உருவாக் கிய குறியீடுகளின் தொகுதி.

**Invert** : தலை கீழாக்கு : தலை கீழாகத் திருப்புதல். திரைக் காட்சி அல்லது அச்சு வெளியீட் டில் சொற்கள் அல்லது பொருள் களைத் தலைகீழாகக் காட்டுதல்.

**Inverted file** : தலை கீழாக்கிய கோப்பு : பதிவு விசைகளுக்குப் பதிலாக எழுத்துகளை அணுகும் வகையில் அமைக்கப்பட்ட கோப்பு.

**inverted list** : தலைகீழ் பட்டியல் : ஓர் அட்டவணையில் குறிப் பிட்ட தகவல் தொகுதியை கண் டறிய மாற்றுக் குறியெண்களை உருவாக்கும் ஒரு வழிமுறை. (எ-டு) கார்கள் பற்றிய தரவுகள் அடங்கிய ஒரு கோப்பில் ஏடுகள் 3, 7, 19, 24, 32 ஆகி யவை நிறம் என்ற புலத்தில் சிவப்பு என்னும் மதிப்பைக் கொண்டுள்ளன. நிறம் என்ற புலத்திற்கான தலைகீழ் பட்டி யலில் (அல்லது வரிசைப் பட்டி யல்-Index) ஒரு ஏடு சிவப்பு என்ற நிறப் பெயரையும் 3, 7, 19, 24, 32 என்கிற ஏட்டுக் குறியெண் களையும் கொண்டிருக்கும்.

**inverted - list database** : தலை கீழ்ப் பட்டியல் தரவுத் தளம் : உறவுமுறைத் தரவுத் தளத்திற்கு (RDBMS) இணையான ஒரு

தரவுத் தளம். ஆனால் பல வேறுபாடுகளைக் கொண்டது. தரவுத் தள மேலாண்மை சற்றே கடினமானது. ஒரு உறவுமுறைத் தரவுத் தளத்தைக் காட்டிலும் இதில் தரவுகளின் ஒத்திசைவு, ஒருங்கமைவு மற்றும் பாது காப்பு ஆகியவற்றைச் செயல் படுத்துவது கடினம். தலைகீழ்ப் பட்டியல் அட்டவணையில் இடை வரிசைகள் (அல்லது ஏடு கள்) ஒரு குறிப்பிட்ட வரிசை யில் அடுக்கப்பட்டிருக்கும் வரிசையாக்கங்களின் மூலம் எவ்வித வரிசைமுறை ஆக்கப் பட்டிருப்பினும் இது மாறாது. இரு அட்டவணைகளுக் கிடையே சுமத்தப்படும் தருக்க முறை இணைப்பு, நிபந்தனை அடிப்படையிலும் தரவுத் தளத்தை வரிசைப்படுத்தலாம். எந்தப் புலத்தையும் எத்தனை புலங்களையும் தேடு புலமாகக் கொள்ளலாம். தேடு புலம் தனித்தோ பல சேர்ந்தோ இருக் கலாம். போலிகை (Duplicate) ஏடுகள் இருக்கக்கூடாது, உறவுடைய இரு அட்டவணை களுக்கு இடையேயான ஒருங் கிணைவு (Integrity) கட்டாயம் என்கிற கட்டுப்பாடுகள் இல்லை. அட்டவணைகளோ, வரிசையாக்கக் கோப்புகளோ பயனாளருக்குப் புரியாது.

**Inverted structure : தலை கீழாக்கிய அமைப்பு :** முன் குறிப்பிடப்படாத தரவுவை தானாக வேகமாகத் தேட அனு மதிக்கும் கோப்பின் வடி வமைப்பு. குறிப்பிட்ட புலத் தில் மதிப்புகளின்படி பதிவு விசைகளை அணுகக்கூடிய வகையில் பராமரிக்கப்படும் சுயேச்சைப் பட்டியல்கள்.

**Inverter : தலைகீழாக்கி :** ஒரு இருமை *1* உள்ளீட்டிலிருந்து இருமை *0* வெளியீட்டையோ அல்லது தலைகீழாகவோ செய்யும் மின் சுற்று.

**Inverting circuit : தலை கீழாக் கும் மின்சுற்று :** நேர் மின் சாரத்தை மாற்று மின்சாரத்தில் மின்சுற்றை மாற்றுதல். Adapter-க்கு எதிர்ச்சொல்.

**invert selection : ஏனைய வற்றை தேர்வு செய்.**

**Invisible refresh : புலனாகாத புதுப்பிப்பு :** இயங்கும் நினைவ கங்களைக் கணினியின் மற்ற பகுதிகள் தலையிடாமல் புதுப் பிக்கும் திட்டம்.

**invoice : விலைப்பட்டி.**

**Invoke : எழுப்புதல்; விளித்தல் :** ஒரு நிரலாக்கத் தொடர், வழமை, பணி அல்லது செய லாக்கத்தை இயக்கச் செய்தல்.

**I/O : ஐ/ஓ : (உள்ளீடு/வெளி யீடு)** உ/வெ என்பது input/output என்பதன் குறும்பெயர். மையச் செயலகத்திலிருந்து வெளிப் புறச் சாதனங்களுக்கு தரவுகளை மாற்றுதல். ஒவ்வொரு மாற்ற லும் ஒரு சாதனத்திற்கு வெளி யீடாகவும், இன்னொன்றுக்கு உள்ளீடாகவும் அமைகிறது.

**I/O area : உ/வெ பகுதி :** உள் ளீட்டுச் சாதனத்திலிருந்து தரவு களை ஏற்கவோ அல்லது வெளி யீட்டுச் சாதனத்திற்கு அனுப் பவோ தரவுகளை சேர்த்து வைக்கவோ பயன்படுத்தப் படும் நினைவக தனிப் பிரிவு. டிபிஎம்எஸ்ஸிலோ அல்லது செயலாக்க நிரலாக்கத் தொகை யிலோ இயக்க அமைப்புப் பயன்பாட்டு நிரலாக்கத் தொட ரிலோ இது அமைக்கப்படும்.

**I/O board : உ/வெ பலகை :** கணினிக்கும் வெளிப்புறச் சாதனங்களுக்கும் இடையிலான உள்ளீட்டு மற்றும் வெளி யீட்டுத் தரவுகளைக் கட்டுப் படுத்தும் மின்சுற்றுப் பலகை.

**I/O bound : உ/வெ கட்டுப் பட்ட, சார்ந்த :** அதிகநேர மையச் செயலக காத்திருக்கும் நேரம் ஏற்படும் வகையில் பேரளவு உள்ளீடு/வெளியீடு இயக்கங்கள் தேவைப்படும் நிரலாக்கத் தொடர்களை இது குறிப்பிடுகிறது.

**I/O card : உ/வெ அட்டை :** 1. உ/வெ கட்டுப்பாட்டு அல்லது விரிவாக்க அட்டை. 2. மோடெம், பேக்ஸ், லேன் அல்லது பிற ஐ/ஓ சாதனத்துடன் இணைக்கப்படும் பி.சி (PC).

**I/O channel : உ/வெ வழித் தடம்; உ/வெ தடம்:** ஒரு கணினியின் உள்ளீடு/ வெளியீடு அமைப்பின் பகுதி. உ/வெ ஆணைகளின் கட்டுப்பாட்டின் கீழ் உள் சேமிப்பகத்திலிருந்து வெளிப்புறக் கருவிக்குத் தரவு தொகுதிகளை மாற்றும் வழித் தடம்.

**I/O Control System (IOCS) : உள் ளீடு/வெளியீடு கட்டுப்பாட்டு முறைமை.**

**Iocs : ஐயோக்ஸ்:** உ/வெ கட்டுப்பாட்டு அமைப்பு.

**IO divice : உ/வெ சாதனம்.**

**ION : இயான் :** தன்னுடைய கூட்டில் ஒன்று அல்லது மேற் பட்ட இயான்களை சேர்த்ததால் அல்லது இழந்ததால் தன் மின் சக்தி நடுநிலைத் தன்மையை இழந்த ஒரு எதிர் மின்மம் எலெக்ட்ரான் அல்லது மூலக் கூறு 'மாலிக்யூல்'.

**ion Deposition : இயான் டிப்போசிஷன் :** அதிவேக பக்க அச்சுப் பொறிகளில் பயன்படுத்தப் படும் தொழில் நுட்பம். இது லேசர் பிரின்டிங் போன்றதே. ஆனால், உருளையில் ஒரு உருவத்தை உண்டாக்க ஒளியைப் பயன்படுத்துவதற்குப் பதிலாக அச்சிடும் முனையைப் பயன்படுத்தி அயான்களைச் செலுத்துகிறது. உருளையில் அயான்கள் சேர்க்கப்பட்டவுடன், காகிதம் நேரடியாக உருளைக்கு அனுப்பப்பட்டு டோனருடன் காகிதம் சேருகிறது. லேசர் அச்சுப்பொறி போன்ற தரம் கிடைக்கிறது.

**I/O exception : உ/வெ விதிவிலக்கு.**

**I/O instruction : உ/வெ ஆணைகள்:** உ/வெ கட்டளைகள்.

**I/O interface : உ/வெ இடைமுகம் :** மையச் செயலகம் மற்றும் ஒரு வெளிப்புறச் சாதனத்திற்கு இடையில் உள்ள வழித்தடம் அல்லது பாதை.

**I/O port : உ/வெ வாயில்; முகப்பு :** காட்சித்திரை முகப்புகள், தட்டச்சுகள், வரி அச்சுப் பொறிகள் மற்றும் காந்தவட்டு அலகுகள் போன்ற மையச் செயலகத்தின் தரவுப் பாதைகளுக்கும், வெளிப்புறச் சாதனங்களுக்கும் இடையில் மையச் செயலக அலகின் இணைப்பு.

**I/O processor : உ/வெ செயலகம் :** கணினிக்கும் வெளிப்புற உறுப்புகளுக்கும் இடையிலான உள்ளீடு/வெளியீடு இயக்கங்களை மட்டும் கையாளும் மின் சுற்றுப் பலகை அல்லது சிப்பு.

**I/O statement : உ/வெ கட்டளை :** உ/வெயிடம் வேண்டுகோள் விடுக்கின்ற நிரலாக்கத் தொடரமைப்பு ஆணைகள்.

**IO. SYS : ஐஓ.சிஸ் :** எம்எஸ்-டாஸ் இயக்க முறைமையில் தொடக்கமுறை வட்டுகளில் பதியப்பட்டுள்ள, மறைத்து வைக்கப்பட்டுள்ள இரு முறைமைக் கோப்புகளுள் ஒன்று. ஐபிஎம் வெளியிட்ட எம்எஸ்-டாஸ் பதிப்பில் இக்கோப்பு IBMBIO.COM என்றழைக்கப்பட்டது. கணினித்திரை, விசைப்பலகை, நெகிழ் வட்டகம், நிலை வட்டகம், நேரியல் துறை மற்றும் நிகழ்நேரக் கடிகாரம் போன்ற புறச்சாதனங்களுக்கான சாதன இயக்கிகளைக் கொண்டிருக்கும்.

**IO symbal : உ/வெ குறியீடு.**

**IP : ஐபீ :** இணைய நெறிமுறை என்று பொருள்படும் Internet Protocol என்ற தொடரின்

தலைப்பெழுத்துக் குறும் பெயர். டீசிபீ/ஐபீ நெறிமுறை யின் ஓர் அங்கமாக இருந்து செயல்படுவது. தரவு/செய்தி களை பொதிகளாகப் பிரித்து அனுப்பும் பணியையும் மறு முனையில் பொதிகளை ஒருங் கிணைத்து மீண்டும் மூலத் தக வலைக் கொணரும் பணியை யும் செய்கிறது. ஐஎஸ்ஓ/ ஓஎஸ்ஐ மாதிரியத்தில் அடுக் கில் பிணைய அடுக்கில் (Network Layer) இது செயல்படுகிறது.

**IP address : ஐபீ முகவரி :** இன்டர்நெட்டில் ஒரு குறிப் பிட்ட கணினியை அடையாளம் காட்டும் எண்முறை முகவரி. இதில் நான்கு எண்கள் உள்ளன. தொலைபேசி எண்களைக் கொண்டு தொலைபேசி அழைப்புகளை நெறிப்படுத்து வது போல, ஐ.பீ. முகவரியைப் பயன்படுத்தி இணையச் செய்திகளை ஒழுங்குபடுத்து கின்றார்கள்.

**IPC : ஐபீசி :** Internet Process Communication என்பதன் சுருக் கம். ஒரே கணினிக்குள்ளேயோ அல்லது ஒரு கட்டமைப்புக் குள்ளேயோ ஒரு நிரலாக்கத் தொடரிலிருந்து இன்னொன் றுக்கு தகவல்களைப் பரிமாறிக் கொள்ளுதல். வேண்டுகோளுக் குப் பதில் பெறும் வகையில் உறுதியளிக்கப்படுகிறது. "க்ளிப் போர்டை"ப் பயன்படுத்தி ஒரு கோப்பிலிருந்து வேறொன் றுக்கு தரவுகளை வெட்டி ஒட்ட வும் இதன் மூலம் முடியும்.

**IPCS : ஐபீசிஎஸ் :** Industrial Process Computer System என் பதன் குறும்பெயர். மும்பை யில் உள்ள டைனலோக் மைக்ரோ சிஸ்டம் நிறுவனம் உருவாக்கியது.

**IPDS : ஐபீடிஎஸ் :** Intelligent Printer Data System என்பதன் குறும்பெயர். செய்தி அல்லது வரைகலைகளை முழுப் பக்க அளவில் பெருமுக அல்லது சிறு கணினியிலிருந்து லேசர் அச்சுப்பொறிக்கு அனுப்புவதற் கான ஐபிஎம் மின் படிவம்.

**IPI : ஐபீஐ :** Intelligent Peripheral Interface என்பதன் குறும்பெயர். சிறு மற்றும் பெருமுகக் கணினி களுடன் பயன்படுத்தப்படும் அதிவேக நிலைவட்டு இடை முகம். ஒரு நொடிக்கு 10 முதல் 25 மீமிகு எட்டியல்கள் (மெகா பைட்டுகள்) அளவில் தரவுகளை மாற்றி அனுப்புவது. ஐபீஐ-2 ஐபீஐ-3 என்பன அவை செயல் படுத்தும் கட்டளைகளில் உள்ள வேறுபாடுகளைக் குறிப்பன.

**IPL-V : ஐபீஎல்-V :** Information Processing Language V என்பதன்

குறும்பெயர். எதிர்கால கணிப் புச் சிக்கல்களுக்கு அதிகம் பயன்படுத்தப்படும் ஒரு பட்டி யல் செயலாக்க மொழி.

**IP multicasting : ஐபீ குழு வாக்கம் :** குழுவாக்க இணைய நெறிமுறை என்று பொருள் படும் Internet Protocol Multi-casting என்ற தொடரின் சுருக் கம். குறும்பரப்புப் பிணையக் குழுவாக்கத் தொழில்நுட்பத் தின் அடிப்படையில் டீசிபீ/ஐபீ பிணையமாக மாற்றி யமைக் கும் முறை. புரவன் கணினிகள் (Hosts) குழுவாக்கிய செய்தித் தொகுதிகளை அனுப்பும்/ பெறும். இலக்கின் முகவரியில் ஒற்றை ஐபீ முகவரிக்கும் பதிலாக ஐபீ புரவன் குழு முகவரிகளைக் கொண்டிருக் கும். ஒரு புரவன் என்பது ஒரு குழுவின் உறுப்பினராகக் கருதப்படும். இணையக் குழு மேலாண்மை நெறிமுறை (Internet Group Management Protocol) இதனை நெறிப் படுத்தும்.

**IPng : ஐப்பிங் :** அடுத்த தலை முறைக்கான இணைய நெறி முறை என்று பொருள்படும் Internet Protocol next generation என்ற தொடரின் தலைப்பெழுத் துக் குறும்பெயர். இணைய நெறிமுறையின் (Internet Protocol) ஒரு வடிவம். மூல இணைய நெறி முறையை (IP) மேம்படுத்தி உருவாக்கப் பட்டது. சிறந்த பாதுகாப்புக் கொண்டது. ஐபீ முகவரி முந்தையதைவிட நீளமானது; 16 பைட்களால் ஆனது.

**IPS (Inches Per Second) : ஐபீஎஸ் :** Inches per second என்பதன் குறும்பெயர். ஒரு படி/எழுது முனையை நாடா கடந்து செல்வது அல்லது ஒரு வரைவானில் (பிளாட்டர்) காகிதம் கடந்து செல்வது ஆகிய வற்றைக் குறிப்பிடுவது.

**IP spoofing : ஐபீ ஏமாற்று :** ஒரு கணினி அமைப்புக்குள் அத்து மீறி நுழையும் பொருட்டு பொய்யான அனுப்புநர் ஐபீ முகவரியை இணையத் தரவு தொடர்பில் செருகும் செயல்.

**IP switching : ஐபீ இணைப் பாக்கம் :** இப்சிலான் நெட் வொர்க்ஸ் (சன்னி வேல், கலிஃபோர்னியா) நிறுவனம் உருவாக்கிய தொழில் நுட்பம். பொதுவான இலக்கு முக வரிக்கு தொடர்ச்சியான ஐபீ பொதிகளை அகல அலைக்கற் றையில், ஒத்தியங்கா செலுத்த முறையில் (Asynchronous Transfer Mode-ATM) அதிவேகத் தில் அனுப்ப வழிசெய்கிறது.

**IPv6 : ஐபீவி6 :** இணைய நெறி முறை பதிப்பு 6 என்று பொருள் படும் Internet Protocol Version 6 என்ற தொடரின் தலைப்பெழுத் துக் குறும்பெயர். அடுத்த தலைமுறை இணைய நெறி முறையாக, இணையப் பொறி யியல் முனைப்புக்குழு (Internet Engineering Task Force) 1995 செப்டம்பர் 2-ல் பரிந்துரைத்த நெறிமுறை. இதன் முந்தைய பெயர் ஐப்பிங் (IPng).

**IPX/SPX : ஐபீஎக்ஸ்/எஸ்பீஎக்ஸ் :** நாவெல் நெட்வேர் பிணைய முறைமையில் பயன்படுத்தப் படும் பிணைய நெறிமுறை. பிணைய (Network) மற்றும் போக்குவரத்து (Transport Layer) அடுக்குகளில் செயல்படும் நெறிமுறை. டீசிபீயும் ஐபீயும் இணைந்த டீசிபீ/ஐபீ நெறி முறைக்கு இணையானது.

**.iq : .ஐகியூ :** ஓர் இணைய தளம் ஈராக் நாட்டைச் சேர்ந்தது என்ப தைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**.ir : .ஐஆர் :** ஓர் இணைய தள முகவரி ஈரான் நாட்டைச் சேர்ந் தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**IRG : ஐஆர்ஜி :** Inter Record Gap என்பதன் குறும்பெயர்.

**IRGB : ஐஆர்ஜிபி :** அடர்வுச் சிவப்பு பச்சை நீலம் என்று பொருள்படும் (Intensity Red Green Blue) என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். முதன்முதலில் ஐபிஎம் மின் சிஜிஏ (Colour Graphics Adapter) அட்டைகளில் பயன்படுத்தப் பட்ட நிறக் குறியீட்டு முறை. அதன்பிறகு இஜிஏ (Enhanced Graphics Adapter) மற்றும் விஜிஏ (Video Graphics Adapter) அட்டைகளிலும் அது தொடர்ந் தது. வழக்கமான 3 துண்மி (பிட்) ஆர்ஜிபி நிறக்குறியீட்டில் (எட்டு நிறங்களைக் குறிக்கும்) நான்காவதாக ஒரு துண்மியைச் சேர்த்து (நிறத்தின் அடர்த்தி யைக் குறிக்க) 16 நிறங்கள் குறிப்பிடப்பட்டன. சிவப்பு, பச்சை, நீல நிறச் சமிக்கைகளின் அடர்த்தியை ஒரே சீராக அதி கரித்துப் புதிய நிறங்கள் பெறப் படுகின்றன.

**IRL : ஐஆர்எல் :** மெய்யான வாழ்க்கையில் எனப் பொருள் படும் In Real Life என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணையத்தில் நிகழ்நிலை (on-line) பயனாளர் கள் பயன்படுத்தும் சொல். குறிப்பாக, மெய்நிகர் (Virtual) உலகில் இணைய உரையாடல், இணைய அரட்டை, மெய்நிகர்

நடப்பு (Virtual Reality) இவற்றுக்கு மாற்றாகப் பொருள் உணர்த்தக் குறிப்பிடப்படும் சொல்.

**IRM : ஐஆர்எம் :** Information Rersource Manager என்பதன் குறும்பெயர். ஒரு நிறுவனத்தின் தலைமை கணினியை இயக்கு வதற்குப் பொறுப்பேற்று அதைப் பயன்படுத்தும் ஊழியர் களைக் கண்காணித்து வரும் நபர்.

**Iron oxide : இரும்பு/ஆக்சைடு:** காந்த நாடாக்கள் மற்றும் குறை திறன் வட்டுகளின் மேற்பரப் பில் பூசுவதற்குப் பயன் படுத்தப்படும் பொருள்.

**IRQ : ஐஆர்கியூ :** குறிக்கீட்டுக் கோரிக்கை என்று பொருள் படும். Interrupt Request என்ற தொடரின் சுருக்கம். வின்டெல் (விண்டோஸ் இன்டெல்) கணினிகளில் இயலக் கூடிய வன்பொருள் குறுக்கீடுகளின் (Hardware Interrupts) தொகுதி யில் ஒன்றை ஓர் எண்ணால் அடையாளம் காணும் முறை. எந்தக் குறுக்கீட்டு கையாளி யைப் (Interupt Handler) பயன் படுத்த வேண்டும் என்பதை ஐஆர்கியூ எண் உணர்த்துகிறது. ஏடீ பாட்டை(AT bus), ஐஎஸ்ஏ மற்றும் இஐஎஸ்ஏ-களில் 15 ஐஆர்கியூக்கள் உள்ளன. நுண் தடக் கட்டுமானத்தில் (Micro Channel Architecture) 255 ஐஆர் கியூக்கள் உள்ளன. ஒவ்வொரு சாதனத்துக்கான ஐஆர்கியூ இணைப்புக் கம்பி அல்லது டிப் நிலைமாற்றி (DIP Switch)களில் நிலையாகப் பிணைக்கப் பட்டிருக்கும். விஎல் பாட்டை (VL Bus) மற்றும் பீசிஐ உள்ளக பாட்டை (PCI Local Bus) ஆகியவை அவற்றுக்கே உரிய குறுக்கீட்டு முறைமைகளைக் கொண்டுள்ளன. குறுக்கீடுகள் குறுக்கீட்டு எண்களாக மாற்றப் படுகின்றன.

**IRQ conflict : ஐஆர்கியூ முரண்; ஐஆர்கியூ மோதல் :** வின்டெல் (Wintel) கணினிகளில் இருவேறு புறச் சாதனங்கள் ஒரே ஐஆர்கியூ மூலமாக மையச் செயலகத்தின் சேவையைக் கோருவதனால் உருவாகும் நிலைமை. ஐஆர் கியூ முரண், கணினியின் சீரான செயல்பாட்டைத் தடுக்கின்றது. (எ-டு) ஒரு கணினியில் நேரியல் துறை (Serial Port)யில் இணைக்கப்பட்ட சுட்டி (Mouse) மையச் செயலகத்துக்கு ஒரு குறுக்கீட்டை அனுப்புகிறது. ஆனால் அதே குறுக்கீட்டு எண் இணக்கி (modem) அனுப்பும் குறுக்கீட்டைக் கையாளும் நிரலைச் சுட்டுகிறது எனில்

கணினிச் செயல்பாட்டில் குழப்பமே மிஞ்சும்.

**irrational number : அல்பின்ன எண் :** இரண்டு முழு எண்களின் விகிதமாகக் குறிப்பிட முடியாத ஒரு மெய்யெண். (எ-டு) 3, π e. ஆங்கிலத்தில் எதிர்மறைக்கு un, im, ir, non போன்ற முன்னொட்டு கள் உள்ளன. வட மொழியில் அ, நிர், துர் போன்ற முன் னொட்டுகள் உள்ளன. அது போலத் தமிழிலும் அல்லாத என்று பொருள் தரும் அல் என்னும் முன்னொட்டை (prefix) பயன்படுத்தலாம்.

**.is : .ஐஎஸ் :** ஓர் இணைய தளம் ஐஸ்லாந்து நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**ISA : ஐஎஸ்ஏ :** Industry Standard Architecture என்பதன் சுருக்கம். ஐபிஎம் பீசிஏடீயுடன் அறிமுகப் படுத்தப்பட்ட 16 துண்மி மின் இணைப்புத் தொகுதி சார்ந்த தர நிர்ணயம்.

**ISAM : ஐஎஸ்ஏஎம் :** Indexed Sequential Accessed Method என்பதன் குறும்பெயர்.

**ISAPI : ஐசாப்பி; ஐஎஸ்ஏபீஐ :** இணைய வழங்கன் பயன் பாட்டு நிரலாக்க இடைமுகம் என்று பொருள்படும் Internet Server Application Programming Interface என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். மைக்ரோசாஃப்ட்டின் இன்டர் நெட் இன்ஃபர்மேஷன் செர் வரில் இயங்கும் (IIS) பின் னிலைப் பயன்பாடுகளுக்குரிய உயர்திறன் இடைமுகங்களை மிக எளிய வழியில் உருவாக்க இது உதவுகிறது. ஐசாப்பி தனக் கென ஓர் இயங்கு நிலைத் தொடுப்பு நூலகத்தைக் கொண் டுள்ளது. சிஜிஐ (CGI-Common Gateway Interface) வரையறுப்பு களைவிடவும் கூடுதல் திறன் மிக்கது எனக் கருதப்படுகிறது.

**ISA slot : ஐஎஸ்ஏ செருகுவாய் :** ஐஎஸ்ஏ (ISA - Industry Standard Architecture) தர வரையறைப்படி அமைந்த புறச் சாதனத்துக்கான ஓர் இணைப்புத் துறை. 80286 (ஐபிஎம் பீசி/ஏடீ) தாய்ப் பலகையில் பயன்படுத்தும் பாட்டைக்காக உருவாக்கப் பட்டது.

**ISDN : ஐஎஸ்டிஎன் :** தகவல் தொடர்பு கம்பியில் குரல், ஒளி மற்றும் தரவுகளை அனுப்பு வதற்கான பன்னாட்டுத் தொலைத் தகவல் தொடர்பு தர நிர்ணயம். அலைக் கற்றை சமிக்கை முறையை இது பயன் படுத்துவதனால் கட்டுப்பாட்டு தகவலுக்கு தனி வழித்தடம் கிடைக்கும். அடிப்படை /

ஆரம்ப விகித இடைமுக வடிவங்களில் இது கிடைக்கிறது. மோடெம் மூலம் தரவு தொடர்பு கொள்ளும் பி.சி. களுக்கு நொடிக்கு 9,600 துண்மிகள் வேகமாயினும், ஐஎஸ்டிஎன்-னில் 64 கிலோ துண்மிகள் ஒரு நொடிக்கு என்ற வேகம் பெரிய ஊக்கத்தைக் கொடுத்தது.

**ISDN terminal adapter : ஐஎஸ்டிஎன் முனையத் தகவி :** கணினியை ஐஎஸ்டிஎன் தடத்துடன் இணைக்கும் வன்பொருள் இடைமுகம்.

**ISIS : ஐஎஸ்ஐஎஸ் :** சிஎம்யு மற்றும் வெஸ்டிங் ஹவுஸ் உருவாக்கிய ஆலை நேரம் அமைக்கும் ஏபிஐ திட்ட அமைப்பு. வேலைக்கான நேரப் பட்டியல்களை உருவாக்குவதுடன் முரண்பட்ட காரணிகளையும் மதிப்பீடு செய்கிறது.

**Islands of Information : தகவல் தீவுகள்:** ஒரு தகவல் ஜிஐஎஸ் எம்ஐஎஸ் அல்லது டிஎஸ்எஸ் போன்ற தகவல் சேமிப்பில் ஏற்புடைத் தன்மை இல்லாத ஒன்று. பெருமுகக் கணினி நாடாக்களின் தரவுக் கோப்புகள் பி.சி. நெகிழ் வட்டுக்கள் போன்ற பருப் பொருளாகவோ அல்லது அஸ்கி, எப்சிடிக் போன்றவற்றில் எழுதப்பட்ட சில தகவல்கள் போன்ற மின் தொடர்பானதாகவோ இருக்கலாம். வேறொன்றில் மாற்றப்பட முடியாத தகவல் 'தகவல் தீவு' எனப்படுகிறது.

**ISO : ஐஎஸ்ஓ : International Standards Organisation** என்பதன் குறும்பெயர். தகவல் பரிமாற்றத்துக்கான தர நிர்ணயங்களை உருவாக்கப் பொறுப்பேற்றுள்ள ஒரு பன்னாட்டு நிறுவனம். அமெரிக்காவின் ''அன்சி''* போன்ற ஒரு பணியைச் செய்கிறது.

**ISO - 7 : ஐஎஸ்ஓ - 7 :** ஒவ்வொரு எழுத்துக்கும் 7 துண்மிகள் கொண்டதாக உலக அளவில் ஏற்றுக்கொண்ட எழுத்துக் குறியீடு. *(ஐஎஸ்ஓ 646 - 1973).*

**ISOC : ஐஎஸ்ஓசி:** இணையச் சங்கம். இணையத்தை ஆராய்ச்சி மற்றும் அறிவார்ந்த தகவல் தொடர்பு கூட்டுறவுக்குப் பயன்படுத்துவதை ஊக்குவிக்கும் ஒரு பன்னாட்டு இலாப நோக்கற்ற உறுப்பினர் நிறுவனம்.

**Isochronous : ஐசோக்ரனஸ் :** காலம் சார்ந்தது. உண்மை நேர குரல், ஒளி மற்றும் டெலிமெட்ரி போன்றவை ஐசோக்ரனஸ் தரவுகளுக்கு எடுத்துக் காட்டு.

**Isolation : தனிமை; தனிமைப் படுத்தல் :** *1.* ஒரு கணினி பாது காப்பு அமைப்பில், தரவுவைப் பகுதி பகுதியாகப் பிரித்து தேவையின் அடிப்படையில் அணுகுதல். 2. தனியாகப் பிரித் திருத்தல் அல்லது மற்றவற்றி லிருந்து தனிப்படுத்தல்.

**isolation item : தனிமை உருப் படி.**

**Isometric view : ஐசோமெட்ரிக் கண்ணோட்டம் :** கணினி வரை கலையில் மூன்று பரிமாணங் களையும் சம விகிதங்களில் காட்டும் முப்பரிமாணப் பொருளின் படம். ஐசோ மெட்ரிக் பார்வையில் உண்மை யான தோற்றம் காட்டப்படு வதில்லை.

**ISO/OSI model : ஐஎஸ்ஓ/ ஓஎஸ்ஐ மாதிரியம் :** ஐஎஸ்ஓ - தரப்படுத்தலுக்கான பன் னாட்டு அமைப்பு (International Organisation for Standardization); ஓஎஸ்ஐ-திறந்த நிலை முறைமை சேர்த்திணைப்பு (Open Systems Interconnection). இரு கணினிகள் ஒரு தரவு தொடர்புப் பிணையத் தின் வழியாக தகவலைப் பரிமாறிக் கொள்வதில் அடங்கி யுள்ள ஊடாடல் வகைப்பாடு கள், சேவைநிலைகள் ஆகிய வற்றைத் தரப்படுத்தும் ஓர் அடுக்குமுறை கட்டுமானம். ஐஎஸ்ஓ/ஓஎஸ்ஐ மாதிரியம் கணினிகளுக்கிடையேயான தகவல் தொடர்பினை ஏழு அடுக்குகளாகப் பிரிக்கிறது. ஒரு நிலையின் மீது எழுப்பப்பட்ட இன்னொரு நிலையென, ஏழு நிலைகளைக் கொண்டுள்ளது. ஏழு அடுக்குகளில் முதலாவ தாகக் கீழேயுள்ள அடுக்கு கணினி வன்பொருளுடன் தொடர்பு கொள்வதை மட்டுமே கவனித்துக் கொள்கிறது. ஏழாவ தாக உள்ள மேலடுக்கு பயன் பாட்டு நிரல் நிலையில் மென் பொருள் ஊடாட்டங்களைக் கவனித்துக்கொள்கிறது.

**Isotropic : ஐசோட்ரோப்பிக் :** பொருள்களின் தன்மையைக் குறிப்பிடுகிறது. அனுப்புதல் வேகம் போன்றவை எந்தத் திசையில் அளிக்கப்பட்டாலும் ஒன்றாகவே இருப்பது.

**ISP : ஐஎஸ்பீ :** இணையச் சேவையாளர் எனப் பொருள் படும் (Internet Service Provider) என்ற தொடரின் தலைப்பெழுத் துக் குறும்பெயர். பொதுமக்கள், வணிக நிறுவனங்கள் மற்றும் ஏனைய அமைவனங்களுக்கு இணைய இணைப்புச் சேவை களை வழங்கும் ஒரு நிறுவனம். சில சேவையாளர்கள் ஒரு நகரில் அல்லது ஒரு வட்டாரப்

பகுதியில் மட்டுமே இணையச் சேவை வழங்குவதுண்டு. இன்னும் சில சேவை நிறுவனங்கள் பல்வேறு நகரங்கள் மற்றும் நாடுகளில் சேவை வழங்குகின்றன.

**ISR** : ஐஎஸ்ஆர்: Information storage and retrieval என்பதன் குறும்பெயர்.

**IT** : **தகவல் தொழில்நுட்பம்** : Information Technology என்பதன் குறுக்கம்.

**.it** : **.ஐடீ** : ஓர் இணைய தளம் இத்தாலி நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவு களப்பெயர்.

**Italic** : **சாய்வெழுத்து** : சாய்வான எழுத்துகளைக் கொண்ட ஒரு எழுத்தச்சு அமைப்பு.

**Item** : **உருப்படி.**

**Iterate** : **திரும்பச் செய்; பன்முறை செய்** : நிரலாக்கத்தொடர் கட்டுப்பாட்டில் தானியங்கியாக திரும்பச் செய்தல். ஒரு முடிவு செய்யப்பட்ட நிறுத்தம் அல்லது பிரிவு நிலை வரும்வரை அதே முறையில் செயலாக்க நிலைகளைச் செய்தல்.

**iteration** : **பன்முறை செய்தல்; திரும்பச் செய்தல்.**

**Iterative** : **பன்முறை செய்தல்** : திரும்ப வருதல். விரும்பும் முடிவுக்கு நெருங்கி வரும் நடைமுறைக்காக அடுத்து வரும் வலியுறுத்தம் அல்லது திரும்ப வரும் சமயத்தில் பயன் படும்.

**Iterative operation** : **திரும்ப வரும் இயக்கம்** : ஆணைகள் அல்லது செயல் முறைகளை அடுத்தடுத்து செய்ய வேண்டி வரும் இயக்கம்.

**iterative statement** : **மடக்குக் கூற்று; மடக்குக் கட்டளை** : ஒரு நிரலில், ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கட்டளைகளை மீண்டும் மீண்டும் நிறைவேற்றச் செய்யப் பயன்படுத்தப் படும் ஒரு கூற்று அல்லது கட்டளை அமைப்பு.

எடுத்துக்காட்டு :

பேசிக் மொழி :

```
FOR I=1 TO 10
    PRINT "Welcome"
NEXT I
```

சி-மொழி :

```
while (n>0)
{
    printf ("%d", n);
    n - - ;
}
```

**ITI** : **ஐடீஐ** : நுண்ணறிவு போக்குவரத்து அகக் கட்டமைப்பு என்று பொருள்

படும் Intelligent Transportation Infrastructure என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**I-time** : அ-நேரம் : அறிவுறுத்தல் நேரம் என்று பொருள்படும் Instruction Time என்பதன் சுருக்கம்.

**ITR** : ஐடீஆர் : இணையப் பேச்சு வானொலி என்று பொருள்படும் Internet Talk Radio என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர்.

**ITU** : ஐடீயு : பன்னாட்டுத் தொலைத் தொடர்புச் சங்கம் என்று பொருள்படும் International Telecommunication Union என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர்.

**ivue** : ஐவ்யூ : ஒரு குறிப்பிட்ட நிறுவனத்துக்குச் சொந்தமான ஒரு படிமக் கோப்பு வடிவாக்கம். ஒரு படத்தை எவ்வளவு பெரிதாக்கிப் பார்த்தாலும் திரையின் தெளிவு நிலைக்கு ஏற்ப தகவமைத்துக் கொள்ளும் கோப்பு வடிவம்.

**i-way** : ஐ-வழி; இட-வழி; **த-சாலை** : தரவு நீள்நெடுஞ் சாலை (மீ நெடுஞ்சாலை).

**IZE** : ஐஇசட்இ : பெர்சாஃப்ட் நிறுவனம் உருவாக்கிய பீசி (PC). சொல் மேலாண்மை அமைவு. முக்கிய சொற்களை நாமாக நுழைக்கலாம் அல்லது Dear என்ற எழுத்துக்கும் காற்புள்ளிக்கும் இடையில் ஒரு பெயரைச் சேர்ப்பது போன்று ஒரு பட்டியல் அல்லது சூழ்நிலை யிலிருந்து உருவாக்கலாம்.

# J

**J : ஜே :** ஓர் உயர்நிலை கணினி நிரலாக்க மொழி. ஏபீஎல் (APL) என்னும் கணினி மொழியை உருவாக்கிய கென்னத் இவர்சன் (Kenneth Iverson) உருவாக்கிய மொழி இது. ஜே, ஏபீஎல்லின் அடியொற்றிய மொழி. ஏபீஎல் போலவே டாஸ், விண்டோஸ், ஓஎஸ்/2 மற்றும் மெக்கின் டோஷ் பணித்தளங்களில் செயல்படவல்லது. ஜெ மொழியைப் பெரும்பாலும் கணித வல்லுநர்களே பயன்படுத்துகின்றனர்.

**jabber : பிதற்றல்; உளறல் :** செயல்பாட்டில் ஏற்பட்ட ஏதோ குறைபாடு காரணமாக, ஒரு பிணையத்தில் தொடர்வோட்டமாய் அனுப்பி வைக்கப்படும் முறைமையற்ற தரவுக் கூறுகள்.

**Jack : முளை :** ஒரு கம்பி அல்லது மின்சுற்றின் கம்பிகள் இணைக்கப்பட்டுள்ள இணைக்கும் சாதனம். 'ஃபிளக்' பொருத்துவதற்காக ஒழுங்குபடுத்தப் பட்டது. "சாக்கெட்" என்றும் அழைக்கப்படுகிறது.

**Jacket : உறை :** நெகிழ்வட்டை (டிஸ்கெட்) வைத்துக் கொள்ளும் உறுதியான காகித உறை.

**jack in : நுழை முளை; முளை நுழை; புகு முளை; முளை புகு :** 1. ஒரு கணினி முறைமையில் பயனாளர் ஒருவர் நுழைபெயர் மற்றும் நுழை சொல் (password) தந்து நுழைதலைக் குறிக்கும். 2. ஒரு பிணையத்தில் பயனாளர் தன் கணினியைப் பிணைத்துக் கொள்ளுதலையும் குறிக்கும். பெரும்பாலும் இணைய தொடர் அரட்டை (Internet Relay Chat) அல்லது மெய்நிகர் நடப்புப் பாவனைகளில் (Virtual Reality Simulations) பயனாளர் தம்மை நுழைத்துக் கொள்வதைக் குறிக்கும். தொடர் பினைத் துண்டித்துக் கொள்வது, jack out (முளைவிடு/விடு முளை) எனப்படும்.

**Jacquard Joseph Marrie : ஜேக்கு வார்ட் ஜோசப் மேரி:** 'ஜேக்குவார்ட் லூம்' என்னும் நெசவு எந்திரத்தை உருவாக்கியவர். நெய்யப்படும் வடிவங்களை தானாகக் கட்டுப்படுத்த துளையிட்ட அட்டைகளின் வரிசை இதில் முதன் முறையாகப் பயன்படுத்தப்பட்டது.

**Jacquard loom : ஜேக்குவார்ட் எந்திரத் தறி :** 19ஆம் நூற்றாண்டு நெசவுத் தொழிலையே

மாற்றிய தானியங்கி நெசவு எந்திரம். எதிர்கால கணக்கீட்டுப் பட்டியலிடும் எந்திரங்களுக்கு வழிகாட்டி. ஃபிரெஞ்சுக்காரரான பட்டு நெசவு செய்யும் ஜோசப் மேரி ஜேக்வார்டு (1752 - 1834) உருவாக்கிய இப்பொறி துளையிட்ட அட்டைகளைப் பயன்படுத்தி இயக்கங்களைக் கட்டுப்படுத்துகிறது. ஏற்கெனவே இது புழக்கத்தில் இருந்தாலும், உடனடியாக சிக்கலான வடிவமைப்புகளை உருவாக்க ஜேக்குவார்டின் விசைத்தறி மிகவும் உதவியாக உள்ளது.

**Jaggies : பிசிறுகள் :** கணினி வரைகலை காட்சித் திரையில் படிகளாகவோ அல்லது வட்டங்கள், வளைவுகளில் வாள் பல்லாகவோ இருப்பது.

**jam : நெரிசல்.**

**janet : ஜேநெட் :** கூட்டுக் கலைக்கழகப் பிணையம் என்று பொருள்படும் Joint Academic Network என்பதன் சுருக்கம். இங்கிலாந்து நாட்டில் இணையத்தின் முதன்மை முதுகெலும்புப் பிணையமாகச் செயல்படக் கூடிய ஒரு விரி பரப்புப் பிணையம் (Wide Area Network).

**Jargon : குழூஉச் சொல்:** ஒரு துறையில் பணியாற்றுபவர்கள் அத்துறையில் உள்ள பொருள்கள் /வேலைகளை விவரிக்கப் பயன்படுத்தும் சொற்கள். மற்றவர்களுக்குப் புரியாது.

**Java : ஜாவா :** "சி ++" மொழியின் அடிப்படையில் உருவாக்கப்பட்ட புதிய கணினி மொழி. சன் மைக்ரோசிஸ்டம்ஸ் நிறுவனத்தில் பணிபுரிந்த ஜாஸ்லிங் என்பவர் உருவாக்கியது. எந்தக் கணினியிலும் எந்த பணித் தளத்திலும் இயங்கவல்லது. இணையப் பயன்பாடுகளுக்கு ஏற்றது. பிற கணினி அமைப்புகளுக்கு எந்த வித சேதமும் இல்லாமல் இயக்கங்களைச் செய்யக்கூடிய வகையில் கட்டுப்படுத்துவதால் இதை "பாதுகாப்பான மொழி" என்று கூறலாம்.

**java applet : ஜாவா குறுநிரல் :** ஜாவா மொழியில் இருவகையான நிரல்கள் உருவாக்கப்படுகின்றன. ஒன்று பயன் நிரல் (Application). மற்றது குறுநிரல் (Applet). இது ஒரு ஜாவா இனக்குழு (class). ஏற்கெனவே இயங்கிக் கொண்டிருக்கும் ஒரு ஜாவா பயன்பாட்டுத் தொகுப்பு. இந்த ஜாவா இனக்குழுவினை தன்னுள் ஏற்றிக் கொண்டு அதிலுள்ள கட்டளைகளை நிறைவேற்றுகிறது. இணைய உலாவி, குறுநிரல் நோக்கி ஆகியவை குறுநிரல்களை ஏற்றி இயக்க வல்லவை. எடுத்துக்

காட்டாக, இன்டர்நெட் எக்ஸ் புளோரர், நெட்ஸ்கேப் நேவிக் கேட்டர், ஹாட் ஜாவா போன்ற இணைய உலாவிகள் ஜாவா குறுநிரல்களை இணையத் திலிருந்து பதிவிறக்கம் செய்து இயக்கும் திறன் பெற்றவை. ஜாவா குறுநிரல்கள் பெரும் பாலும் ஒரு வலைப்பக்கத்தின் பல்லூடக (பின்னணி இசை, நிகழ்நேர ஒளிக்காட்சிப் படம், அசைவூட்டங்கள், கணக்கீடுகள் மற்றும் ஊடாடு விளையாட்டு கள்) விளைவுகளை இணைப் பதற்குப் பயன்படுத்தப்படுகின் றன. பயனாளரின் தலையீடின்றி தாமாகவே இயங்கும்படி குறு நிரல்களை அமைக்க முடியும். அல்லது வலைப் பக்கத்திலுள்ள சின்னத்தின்மீது சுட்டியால் சொடுக்கும்போது இயங்கும் படியும் குறுநிரலை அமைக்கலாம்.

**java application** : ஜாவா பயன் பாடு; ஜாவா பயன்நிரல்.

**JavaBean**: ஜாவாபீன் : ஜாவா அடிப்படையிலான ஒரு மென் பொருள் நுட்பம்

**java chip** : ஜாவா சிப்பு; ஜாவா சில்லு: ஜாவா மொழியில் எழுதப்பட்ட ஒரு நிரலை ஜாவா மெய்நிகர் பொறி (Java Virtual Machine - JVM) என்னும் ஆணைமாற்றி (Interpreter) செயல்படுத்துகிறது. ஜெவிஎம் செய்யும் பணியை நிறைவேற் றும் வகையில் ஒரு சிப்புவை - ஒரு நுண்செயலியை - வடிவமைக்க முடியும். சன் மைக்ரோசிஸ் டம்ஸ் நிறுவனம் இத்தகைய சிப்புவை உருவாக்கியுள்ளது. இந்த சிப்புவை மிகச் சிறிய சாதனங்களில் கட்டுப்படுத்தி களாகப் பயன்படுத்த முடியும்.

**java-compliant browser** : ஜாவா இணக்க உலாவி : ஜாவா மொழி யில் எழுதப்பட்ட நிரலை ஏற்று இயக்கும் திறனுள்ள ஓர் இணைய உலாவி. தற்கால இணைய உலாவிகள் பலவும் ஜாவா இணக்கம் உள்ளவையே.

**java database connectivity (JDBC)** : ஜாவா தரவு இணைப்பாக்கம்.

**Java Developer's Kit (JDK)** : ஜாவா உருவாக்கக் கருவித் தொகுதி : சன் மைக்ரோ சிஸ் டம்ஸ் நிறுவனம் உருவாக்கி யுள்ள மென்பொருள் கருவி களின் தொகுப்பு. ஜாவா பயன் நிரல்களையும் குறுநிரல்களை யும் உருவாக்க உதவுபவை. இத் தொகுப்பு, ஜாவா மொழி மாற்றி, ஆணைமாற்றி, பிழை திருத்தி, குறுநிரல் நோக்கி மற்றும் ஆவணமாக்கிகளை உள்ளடக்கியது. இலவசமாக வினியோகிக்கப்படுகிறது.

**Java Management Application Programming Interface** : ஜாவா

மேலாண்மை பயன்பாட்டு நிரலாக்க இடைமுகம்; ஜாவா மேலாண்மை பீஜ : பயன்பாட்டு நிரலாக்க இடை முகத்துக்கான வரையறுப்புகளின் தொகுப்பு. பிணைய மேலாண்மைக்கு, ஜாவா மொழியை ஏதுவாக்க சன் மைக்ரோசிஸ்டம்ஸ் இவ்வரை யறுப்புகளை முன்வைத்துள்ளது.

**Java Script : ஜாவா ஸ்கிரிப்ட்: ஒரு கணினி உரைநிரல் மொழி.** இணையப் பக்கங்களை சிறந்த முறையில் வடிவமைக்கப்படு கிறது. நெட்ஸ்கேப் நிறுவனம் உருவாக்கியது.

**Java Soft : ஜாவா சாஃப்ட் : ஒரு கணினி நிறுவனம்.**

**java terminal : ஜாவா முனையம் :** இணையத்தில் இணைத்து இயக்குவதற்கென்றே குறை வான சாதனங்களுடன் உரு வாக்கப்பட்ட ஒரு வகை சொந்தக் கணினி. ஜாவா குறு நிரல்களை பதிவிறக்கம் செய்து இயக்க வல்லவை. இக் கணினி களில் வட்டுச் சேமிப்பகங்கள் கிடையா. நிறுவப்பட்ட நிரல் களும் கிடையா. எத்தகைய பயன்பாட்டு நிரல்களையும் பிணையத்திலிருந்து இறக்குமதி செய்து பயன்படுத்திக் கொள் ளும். தேவையான நிரல்களை ஒரு கணினியில் மையப்படுத்தி சேமித்து வைத்து, இறக்குமதி செய்து பயன்படுத்திக் கொள் வதனால் செலவு குறைவா கிறது. அதேவேளை, ஒவ் வொரு நிரலையும் இறக்குமதி செய்து பயன்படுத்துவதால் சிறிது காலத் தாழ்வு தவிர்க்க முடியாதது. சன் மைக்ரோ சிஸ் டம்ஸ் ஜாவா முனையங்களை விரைவில் வெளியிட எண்ணி யுள்ளது. பிணைய பீசியை ஒத்தவை ஜாவா முனையங்கள்.

**Javelin Plus : ஜாவ்லின் பிளஸ்:** இன்ஃபர்மேஷன் ரிசோர்சஸ் நிறுவனம் உருவாக்கிய பீசி விரிதாள் நிரலாக்கத் தொடர் வரிசை, பத்தி எண்களுக்குப் பதிலாக பெயர்களைப் பயன் படுத்தி அறைகளை அடை யாளம் காணவும், தரவுகளைத் தொகுக்கவும் செய்கிறது.

**JCL : ஜேசிஎல்:** Job control language என்பதன் குறும்பெயர்.

**JDK : ஜாவா மென்பொருள் உருவாக்கக் கருவித் தொகுதி.**

**jerk : குலுக்கம்.**

**JES : ஜேஇஎஸ்:** Job entry system என்பதன் குறும்பெயர். செய்து முடிப்பதற்காக வேலை களையும் பட்டியல்களையும், ஏற்றுக் கொள்ளும் இயக்க அமைப்பில் ஒரு பங்கு.

**Jet set willy : ஜெட் செட் வில்லி:** ஸ்பெக்ட்ரம் ஹோம்

கம்ப்யூட்டரில் பயன்படுத்தக் கூடிய ஒரு மென்பொருள் விளையாட்டு.

**jewel box : வட்டுப்பெட்டி :** ஒரு குறு வட்டினை பாதுகாப்பாக



வட்டுப் பெட்டி

வைக்கப் பயன்படுத்தப்படும் சிறிய பிளாஸ்டிக் பெட்டி.

**.jiff : ஜிஃப் :** ஜேபெக் (JPEG) கோப்புப் பரிமாற்ற வடிவாக்கத்தில் அமைந்த வரைகலைப் படிம கோப்புகளைக் குறிக்கும் வகைப் பெயர். (File Extension).

**Jitter : தடுமாற்றம்:** ஒரு சமிக்கையில் சிறு நிலையற்ற தன்மை. ஒளிக் (வீடியோ) காட்சித் திரையில் வரும் சமிக்கைகளுக்கு இஃது குறிப்பாக சொல்லப்படுகிறது.

**JK technosoft : ஜேகே டெக்னோசாஃப்ட் :** ஒரு கணினி ஆலோசனை மற்றும் மென்பொருள் நிறுவனம். ஜேகே தொகுதியைச் சேர்ந்தது.

**.jm : .ஜேஎம் :** இணையத்தில் ஓர் இணைய தளம் ஜமைக்கா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிப்பிடும் பெரும் புவிப் பிரிவுக் களப்பெயர்.

**JMAPI : ஜேஎம்ஏபீஐ :** ஜாவா மேலாண்மைப் பயன்பாட்டு நிரலாக்க இடைமுகம் என்று பொருள்படும் Java Management Application Programming Interface என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**.jo : .ஜேஓ :** இணையத்தில் ஓர் இணைய தளம் ஜோர்டான் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**Job : முழுச் செயற்பாடு ; பணி :** ஒரு கணினிக்கான வேலை அலகின் குறிப்பிட்ட பணிகளின் தொகுப்பு. ஒரு நிரலாக்கத் தொடர் அல்லது தொடர்புள்ள நிரலாக்கத் தொடர்களின் தொகுதி ஒரு அலகாகப் பயன்படுத்தப்படுகிறது.

**job, batch : தொகுதிச் செயற்பாடு; தொகுதிப் பணி.**

**Job card : வேலை அட்டை :** ஒரு வேலையின் ஆரம்பத்தைக் காட்டும் ஜே.சி.எல் JCL சொற்றொடர் உள்ள அட்டை.

**Job class : வேலை பிரிவு:** செயல்படும்போது தேவைப்படும் கணினி வசதிகளைக் குறிப்பிடும் வேலைபற்றிய விளக்கம்.

**Job control language : வேலைக் கட்டுப்பாட்டு மொழி; ஜேசிஎல் :** காலஅளவுகள் போன்ற வேலையின் கட்டுப்பாடுகள் உள்ளிட்ட கணினி அமைப்பின் வேலையை வரையறுக்கும் மொழி.

**Job control programme : வேலைக் கட்டுப்பாட்டு நிரல் தொடர் :** வேலையின் ஓட்டத்தைக் கட்டுப்படுத்தும் நிரல்களின் தொகுதியைக் கொண்ட நிரல் தொடர்.

**Job control statement : வேலைக் கட்டுப்பாட்டுச் சொற்றொடர் :** ஒரு வேலையின் ஒரு அம்சத்தை மட்டும் வரையறுக்கும் வேலைக் கட்டுப்பாட்டு மொழியில் எழுதப்பட்ட ஒரு சொற்றொடர்.

**Job number : வேலை எண் :** ஒரு வேலைக்குக் கொடுக்கப்பட்ட அடையாள எண்.

**job oriented terminal : பணி சார்ந்த முனையம்.**

**Job processing : வேலைச் செயலாக்கம் :** கணினியில் வேலைகளைக் கையாண்டு செயலாக்கம் செய்தல்.

**Job queue : வேலை வரிசை :** கணினியில் அப்போது செயல்பட்டுக் கொண்டிருக்கும் தரவு மற்றும் நிரலாக்கத் தொடர்களின் தொகுதி. பெரும்பாலான இயக்க அமைப்புகளில், கணினியின் கட்டுப்பாட்டில் ஒவ்வொரு வேலையையும் வரிசைப்படுத்தி, அதில் மிகப் பழைய வேலையை அதன் முன்னுரிமைப்படி செய்யும். போதிய மூலாதாரங்கள் இல்லாததால் செயல்படுத்தப்படாத வேலைகள்தான் விதிவிலக்கு.

**Job scheduler : வேலை நிரல்படுத்துபவர்; வேலை முறைப்படுத்தி :** ஒரு பெரிய கணினி நிறுவனத்தை நடத்துவதில் கணினி இயக்குபவர்களுக்கு உதவுபவர்.

**Job stream : வேலை ஓட்டம்; வேலை ஓடை :** இயக்க அமைப்புக்கு உள்ளீடு. ஒன்று அல்லது மேற்பட்ட வேலையாக இருக்கலாம்.

**Job turn around : வேலை முடித்துத் தரல் :** ஒரு வேலையைக் கணினி அமைப்பிடம் கொடுத்ததிலிருந்து அதன் அச்சிடப்பட்ட வெளியீடு அந்த வேலையைக் கொடுத்

தவருக்குப் போய்ச் சேரும்வரை ஆகும் நேரம்.

**job turn around time : பணி முடிக்கும் நேரம்; பணிச் செய லாக்க நேரம்.**

**Jobs, Steve : ஜோப்ஸ் ஸ்டீவ்:** ஆப்பிள் கணினி நிறுவனத்தினை உருவாக்கியவர்களில் ஒருவர். ஆப்பிள் மெக்கின்டோஷ் உள்ளிட்ட பல நுண்கணினி அமைப்புகளை உருவாக்கியவர்.

**Job-to-Job transition : ஒரு வேலையிலிருந்து இன்னொரு வேலைக்கு மாற்றல் :** ஒரு குறிப்பிட்ட வேலையைச் செய்வதற்காகக் கணினியைத் தயார் செய்து ஒரு நிரலாக்கத் தொடரையும் அதன் தொடர்பான கோப்புகளையும் கண்டு பிடிக்கும் செயல்முறை.

**Joggle : குழை :** குறிப்பிட்ட வரிசை முறையில் வரிசைப் படுத்துவதற்காக துளையிட்ட அட்டைகளைக் குழைத்தல்.

**John McCarthy : ஜான் மெக் கார்த்தி:** டார்ட்மவுத் மாநாடு நடத்தி 1956இல் செயற்கை நுண்ணறிவு'Artificial intelligence என்ற பெயரை உருவாக்கியவர்.

**Join : ஜாய்ன்; சேர்ப்பு; இணை :** ஒரு தரவுத் தளத்தில் அட்டவணைமீது செயல்படுத்தப் படும் ஒரு கட்டளை. இரண்டு அட்டவணைகளை இணைத்து மூன்றாவதாக ஓர் அட்டவணையை உருவாக்கும் கட்டளை. இரு அட்டவணைகளிலும் முதன்மைப் புலங்களை (key fields) ஒப்பிட்டு ஒன்றாயிருக்கும் ஏடுகளை இணைத்து மூன்றாவது அட்டவணை உருவாக்கப்படுகிறது.

**join condition : சேர்ப்பு நிபந்தனை.**

**joliet : ஜோலியட் :** ஐஎஸ்ஓ 9660 (1988) தரக் கட்டுப்பாட்டின் நீட்டித்த செந்தர வரையறைகள். நீண்ட கோப்புப் பெயர்களை ஏற்கின்றன. 8.3 எழுத்துப் பெயர் மரபுக்கு மாற்றானது. விண்டோஸ் 95 போன்ற இயக்க முறைமைகள் நீண்ட கோப்புப் பெயர்களை ஏற்கின்றன. இந்த முறைமைகளில் பயன்படுத்தக் கூடிய குறுவட்டுகளில் இந்தப் கோப்பு வடிவாக்கம் பயன் படுத்தப்படுகிறது.

**Josephson junction : ஜோசப்சன் இணைப்பு :** சூப்பர் குளிர் மின்சுற்றுகளின் பொருள்களைக் கொண்டு உருவாக்கப்படும் அதிகத் திறனுள்ள தரவு சேமிப்பு அமைப்பு. க்ரையோ மின்னணு சேமிப்பு அமைப்பு ஆராய்ச்சி நிலையில் உள்ளது.

**journal : ஆய்வேடு; தாளிகை; குறிப்பேடு :** ஒரு கணினியில்

அல்லது ஒரு பிணையத்தில் நடைபெறும் தகவல் பரிமாற்றங் களை கணினியிலேயே பதிவு செய்து வைத்துக்கொள்ளும் குறிப்பேடு. ஒரு தரவு தொடர்பு பிணையத்தில் நடைபெறும் செய்திப் பரிமாற்றங்களைக் குறித்து வைத்துக்கொள்ள இக் குறிப்பேடு பயன்படும். ஒரு தரவுத்தளத்தில் சேமித்து வைக்கப்பட்டுள்ள விவரங்களை மாற்றியமைக்கும் நடவடிக்கை களைக் குறித்து வைத்துக் கொள்ள முடியும். ஒரு கணினி அமைப்பில் சேமித்து வைக்கப் பட்டுள்ள கோப்புகளின் விவரங் கள், அவ்வப்போது நீக்கப்பட்ட கோப்புகளின் விவரங்கள் - இவற்றையும் கண்காணித்துக் குறித்துக் கொள்ளலாம். சேமித்து வைக்கப்பட்ட தரவுகளுக்கு இழப்பு அல்லது பழுது ஏற்படு மாயின், இதற்கு முன் நடந்த நிகழ்ச்சிகளைப் பரிசீலித்து மூலத்தரவுகளை மீட்டுருவாக் கம் செய்ய, பொதுவாக இக் குறிப்பேடு பயன்படுகிறது.

**Jovial : ஜோவியல் (ஒரு கணினி மொழி)** : Jules Own Version of the International Algorithmic Language என்பதன் குறும் பெயர். அறிவியல், கட்டளை மற்றும் கட்டுப்பாட்டு சிக்கல் களில் செயல்படுவதற்கென்றே உருவாக்கப்பட்ட நிரல்தொடர் மொழி. அமெரிக்க விமானப் படையில் அதிகம் பயன் படுத்தப்படுகிறது.

**Joystick : இயக்கப்பிடி** : மின் னியந்திர விசை. அதை இயக்



இயக்கப் பிடி

கும் போது இடஞ்சுட்டியை (கர்சரை) நகர்த்துகிறது. ஒளிக் காட்சி விளையாட்டுக்கு அதிகம் பயன்படுத்தப்படு கிறது. கணினி யுடன் கம்பியால் இணைக்கப்படுகிறது.

**Joyswitch : நிலை மாற்றுப்பிடி** : ஜாய்ஸ்டிக் போன்ற உள்ளீட்டு - வெளியீட்டுச் சாதனம். இதை எண் திசைகளில்மேல், கீழ், வலது, இடது மற்றும் நான்கு குறுக்குத் திசைகளிலும் எப்படி வேண்டுமானாலும் இயக்கலாம்.

**JPEG : ஜேபெக்** : *1.* ஒளிப்பட வல்லுநர்களின் கூட்டுக் குழு

என்று பொருள்படும் Joint Photographic Experts Group என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். வரிசையற்ற கொசைன் மாற்றுகையைப் (Descrete Cosine Transform) பயன்படுத்தி படிமங்களை (images) இறுக்கிய வடிவத்தில் சேமிப்பதற்கான ஐஎஸ்ஓ/ஐடீயூ தர வரையறை. *100 : 1* விகித அளவுக்கு இறுக்கிச் சுருக்க முடியும். ஆனால் தகவல் துல்லிய இழப்பு இருக்கவே செய்யும். *20 : 1* அளவில் சுருக்கினால் ஓரளவு தகவல் இழப்பு வெளிப்படையாகத் தெரியாத அளவுக்கு இருக்கும். 2. ஒரு வரைகலைப் படம் ஜேபெக் வடிவாக்கத்தில் ஒரு கோப்பாக சேமிக்கப்படும் முறை.

**JUG : ஜக் :** Joint Users Group என்பதன் குறும்பெயர். இலக்க முறை கணினி பயன்படுத்துவோர் குழுக்களின் ஓர் அமைப்பு.

**jughead : ஜூஹெட் :** ஜான்ஸியின் உலகளாவிய கோஃபர் படிநிலை அகழ்வாய்வும் திரைக் காட்சியும் என்று பொருள்படும் Jonzy's Universal Gopher Hierarchy Excavation and Display என்பதன் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒரு சொல்லைத் தந்து தேடும் முறையில் கோஃபர் வெளியிலுள்ள கோப்பகங்களைத் தேடிக் கண்டறியப் பயனாளருக்கு உதவும் இணைய சேவை. மேல்நிலை கோஃபர் பட்டி (menu)களில் உள்ள கோப்பகத் தலைப்புகளில்காணும் முக்கிய சொற்களை ஒரு ஜூஹெட் வழங்கன் கணினி அகர வரிசைப்படுத்தி வைக்கிறது. ஆனால் அது கோப்பகங்களிலுள்ள கோப்புகளை அகரவரிசைப்படுத்துவதில்லை.

**Juke boxes : ஜூக் பெட்டிகள் :** நவீன ஜூக் பெட்டிகள் நுண்கணினி சார்ந்த அமைப்புகள். இதன் இசைத் தட்டை இயக்கும் அமைப்பின் கட்டுப்பாடு, தொலைவில் ஏற்றப்பட்டுள்ள நாணயம் மூலம் இயங்கும் சுவர் பெட்டிகளில் உள்ளது.

**julian calendar : ஜூலியன் நாள் காட்டி :** கி.மு. *46*ஆம் ஆண்டு ஜூலியஸ் சீசரால் அறிமுகப்படுத்தப்பட்ட நாள்காட்டி. சந்திரனை அடிப்படையாகக் கொண்ட முந்தைய காலண்டருக்குப் பதிலாக இது புகுத்தப்பட்டது. ஜூலியன் நாட்காட்டி முறையில் சராசரியாக ஆண்டுக்கு *365* நாட்கள். ஒவ்வொரு நான்காண்டிலும் ஒரு லீப் ஆண்டு. ஆக, ஆண்டுக்கு *365.25* நாட்கள். ஆனால், உண்மையில் சூரிய ஆண்டு என்பது சற்றே குறைவான நாட்களைக்

கொண்டது. இதன் காரண மாகவே ஜுலியன் நாட்காட்டி முறை வழக் கொழிந்தது. மிகத் துல்லிய கிரிகோரியன் நாட் காட்டி நடைமுறைக்கு வந்தது. இதனை போப் கிரிகோரி XIII அறிமுகப்படுத்தினார்.

**Julian number : ஜுலியன் எண் :** கணினி அமைப்பின் உள்ளே இருக்கும் காலண்டரின் வடி வம். ஜுலியன் தரவு அமைப் பில் ஆண்டையும் ஆண்டில் கடந்துபோன நாட்களையும் குறிப்பிடும். 86-029 என்பது 1986 ஆம் ஆண்டின் 29ஆம் நாள்.

**jullian date : ஜுலியன் தேதி :** ஜனவரி 1 முதல் துவங்கும் தொடர் எண்ணின் மூலம் மாதம், நாட்களைக் குறிப்பிடு தல். சான்றாக, பிப்ரவரி 1 என்பது ஜுலியன் 32 ஆகும்.

**Jump : குதி; தாண்டல்; தாவல் :** ஒரு கணினியில் நிரல்களை இயக்கும் வழக்கமான வரிசை யிலிருந்து விலகுதல். branch and transfer என்பதற்கு உடன் பாட்டுச் சொல்.

**jump, conditional : நிபந்தனை தாவல்.**

**Jumper (Jump Lead) : ஜம்பர் :** Jump Lead என்பதன் குறும் பெயர். இரண்டு அல்லது மேற் பட்ட வன்பொருள் இணைப்பு




ஜம்பர்

களை இணைக்கும் தற்காலிகக் கம்பி. கோளாறு கண்டறியவும் மாற்று வசதிகளை அளிக்கவும் இவற்றை பயன்படுத்துகிறார் கள். Jumper என்ற சொல் தரவுத் தொடர்புத் தொழிலில் இருந்து கடனாகப் பெறப்பட்டது.

**jump instruction : தாவல் ஆணை :** கணினி நிரலாக்க மொழிகள் பலவற்றில் பயன் படுத்தப்படும் ஆணை. நுண் செயலி நிரலாக்கத் தொகுதியில் jump என்ற பெயரிலேயே ஆணை உண்டு. உயர்நிலை மொழிகளில் பெரும்பாலும் goto என்ற வடிவில் வழங்கு கிறது. நிரலின் இயல்பான வரிசைமுறை ஓட்டத்தை மாற்றி யமைக்க இவ்வாணை பயன் படுகிறது.

**Junction : சந்தி :** 1. இரண்டு அல்லது மேற்பட்ட மின் உறுப்புகளை ஒன்றாக

இணைக்கும் புள்ளி. 2. N- வகை மற்றும் P வகை குறை கடத்திகள் இணைக்கின்ற இடம்.

**Junk : குப்பைக் கிடங்கு; கூளம் :** ஒரு தகவல் தொடர்புக் கம்பியில் வரும் குழப்பமான தரவு. தொலை அமைப்பில் சரியான தரவுத் தொடர்புகள் ஏற்படுத்தப் படவில்லையென்றால், தாறுமாறான பொருளற்ற எழுத்து கள்தாம் திரையில் தோன்றும். பார்க்க - garbage.

**junk mail : கூள மின்னஞ்சல்; குப்பை அஞ்சல்.**

**Justification : ஒழுங்குபடுத்தல்; முறைப்படுத்தல்; நேர்ப்படுத்தல்; வரிசையாக்கல் :** இடது அல்லது வலதுபக்கமாக எழுத்துகளை வரிசைப்படுத்தி, சரிசெய்து, இடம் மாற்றி ஒரு குறிப்பிட்ட அமைப்பில் வைத்தல். செய்திகளை இடது அல்லது வலதுபுறத்தில் ஒழுங்குபடுத்தல்.

**justified : இருபுற ஓரச்சீர்மை.**

**Justify : ஓரச் சீர்மை; நேரமைவு :** ஓர் ஆவணத்திலுள்ள உரைப் பகுதியை இடப்புற வலப்புற ஓரத்தில் சீரமைத்தல். இடச்சீர், வலச்சீர், மையச்சீர், முழுச்சீர் எனப் பலவகை உள்ளன. சொல்செயலிப் பயன்பாடுகளில் இத்தகைய வசதி உள்ளிணைக்கப்பட்டிருக்கும். வரிகளை ஓரச்சீர்மை செய்யும்போது சொற்களின் இடையே கூடுதல் இடவெளிகள் நிரப்பப்படும். அளவுக்கு அதிகமான இட வெளிகள்விட நேரின், வரியிறுதியிலுள்ள சொற்கள் கூறாக்கப்பட்டு ஒட்டுக்குறி (Hyphen) இடப்படும்.

**just in time : சரியான நேரத்தில்:** ஜப்பானிய நாட்டு கான்பான் (kanban) முறைமையின் அடிப்படையில் அமைந்த கையிருப்புக் கட்டுப்பாடு (inventory control), தொழிலக உற்பத்தி மேலாண்மை ஆகிய முறைமைகளை விளக்கும் சொல். இத்தகைய முறைமை களில் தொழிலாளர்கள், ஏற்கெனவே நேரங் குறிக்கப்பட்ட பொருள் உற்பத்திக்கு தேவையான மூலப் பொருட்களை விற்பனை நிறுவனங்களிடமிருந்து சரியான நேரத்தில் பெற்று விடுவர். உற்பத்திப் பிரிவு தொழிலாளர்கள் தமது தேவைகளை ஓர் அட்டை மூலமாகவோ, கணினி வாயிலான கோரிக்கை மூலமாகவோ தெரிவிப்பர்.

# K

**K : கே :** *1. கிலோ என்பதன் சுருக்கம். பதின்ம எண்ணில் 1000 என்பதைக் குறிப்பிடும். சான்றாக* 100K ch/s *என்றால் ஒரு நொடிக்கு 100,000 எழுத்துகள் அளவு படிக்கும் வேகம். 2. சேமிப்புத் திறனில் 2-ன் 10 மடங்கு என்பது பதின்ம எண் முறையில் 1024.* 8K *என்பது 8192 அதாவது 8* x *1024.*

**Kale : கேல் :** கேல் கன்சல் டன்ஸ் நிறுவனம் இந்தியாவின் முன்னணி மென்பொருள் நிறு வனங்களில் ஒன்று.

**Kansas city standard : கன்சாஸ் நகர தர நிருணயம் :** குறைந்த வேக ஒளிப்பேழை (கேசட்) சேமிப்பு வடிவம்.

**Karnaugh map : கார்னாக் வரை படம்:** உண்மைப் பட்டியலின் இரு பரிமாண அமைப்பு.

**Kb : கேபி :** kilo byte என்பதன் குறும்பெயர்.

**Kbits/Sec (KiloBits per SECond : கேபிட்ஸ்/செக்:** Kilobits per Second என்பதன் குறும்பெயர். ஒரு நொடிக்கு ஆயிரம் துண்மிகள்.

**KBps, Kbps (KiloBytes per Second, KiloBits per Second : கேபிபீஎஸ் :** Kilobytes per Second, Kilobits per Second என்பதன் குறும்பெயர்கள். ஒரு நொடிக்கு ஆயிரம் எட்டியல் கள், ஆயிரம் துண்மிகள்.

**KBS : கேபிஎஸ் :** ஒரு நொடிக்கு ஒரு கிலோ எட்டியல்கள் (1024 எட்டியல்கள்)

**K-Byte (Kbyte or KB) : கே-எட்டி யல்கள் :** Kbyte or KB என்பது ஏறக்குறைய ஒரு ஆயிரம் எட்டியல்கள். துல்லியமாக $2^{10}$ அல்லது 1,024 எட்டியல்கள்.

**Kbytes/sec (Kilobytes per second) : கேபைட்ஸ்/செக் :** Kilo-bytes per Second என்பதன் குறும்பெயர். ஏறக்குறைய ஒரு நொடிக்கு ஓராயிரம் எட்டி யல்கள்.

**Kc : கேசி :** ஒரு நொடியில் ஆயிரம் எழுத்துகள். தரவு மாற் றல் இயக்கங்களின் விகிதத்தைக் குறிப்பிடப் பயன்படுகிறது.

**KCS : கேசிஎஸ் :** ஒரு நொடிக்கு ஆயிரம் எழுத்துகள் அல்லது கிலோ எட்டியல்கள் என்பதன் சுருக்கம்.

**.ke : .கேஇ :** ஓர் இணைய தள முகவரி கென்யா நாட்டைச்

சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**KEE : கேஇஇ** : Knowledge Engineering Environment என்பதன் குறும்பெயர்.

**Keep- out areas : தவிர் பரப்புப் பகுதிகள்** : அச்சிட்ட மின்சுற்று வெளி அமைப்பில் பயன்படுத்துவோர் குறிப்பிடும் பகுதிகள். இதில் உறுப்புகள் அல்லது மின்சுற்றுப் பாதைகள் குறிப்பிடக்கூடாது. காட்/காம் முறையிலும் இதைத் தவிர்க்க வேண்டும்.

**Kelvin : கெல்வின்** : செல்ஷியஸ் டிகிரியில் குறிப்பிடப்படும் எஸ்.ஐ. மெட்ரிக் அமைப்பின் வெப்ப நிலை அளக்கும் அலகு.

**Kelvin, William Thomson (1824-1907) : கெல்வின், வில்லியம் தாம்சன்** (1824-1907) : ஸ்காட்லாந்து கணித மேதை. மாறுபாட்டு அலசலை எவ்வாறு உருவாக்குவது என்பதற்கான கொள்கைகளை *1875*இல் விவரித்தவர்.

**Kemeny John : கெம்னை ஜான்** : *1964*இல் டார்ட்மவுத் கல்லூரியில் தாமஸ் குர்ட்சுடன் சேர்ந்து பேசிக் என்னும் கணினி மொழியை உருவாக்கினார். கற்பதற்கு எளியது. பயன்படுத்துவதற்கு எளியது. அல்ஜிப்ரா முறை நிரலாக்கத் தொடர் மொழி பயன்படுத்த எளியது. டார்ட்மவுத் காலப் பங்கீட்டு அமைப்பையும் உருவாக்கினார்.

**kerberos or kerberos : கெர்பராஸ்** : எஜடீ நிறுவனம் உருவாக்கிய ஒரு பிணைய செல்லுபடியாக்க நெறிமுறை. பிணையத்தில் புகுகின்ற ஒரு பயனாளரின் அடையாளத்தைச் சரிபார்த்து அனுமதிக்கிறது. மறைக்குறியியல் முறையில் தரவு தொடர்பை மறையாக்கம் செய்கிறது. இணையத்திலிருந்து (http://web.mit.edu/kerberos/www) இலவசமாகப் பதிவிறக்கம் செய்து பயன்படுத்தலாம். பல்வேறுவகையில் விற்பனை செய்யப்படும் பல்வேறு மென்பொருள் தொகுப்புடனும் கிடைக்கிறது.

**Kermit : கெர்மிட்** : கணினிகளுக்கிடையில் கோப்புகளை மாற்றுவதற்கான அனுப்பல் விதிமுறை. பிழைகளைச் சோதித்தலும், பிழையானவற்றைத் திருப்பி அனுப்புதலும் இதில் அடங்கும். கொலம்பியா பல்கலைக்கழகத்தில் உருவாக்கப்பட்டது. இரைச்சலான வழித்தடத்திலும் துல்லியமாக அமைப்பை ஏற்றது. சிறு மற்றும் பெரு கணிணிகளுக்குப் புகழ் பெற்றது. 7பிட் அஸ்கி

அமைப்புகளில் துண்மி சார்ந்த மாற்றல்களுக்கு புகழ் பெற்றது.

**kern : நெருக்கம் :** குறிப்பிட்ட இரண்டு எழுத்துக் குறிகளுக்கு இடையேயுள்ள இடை வெளியை மாற்றியமைத்தல். இதனால் நெருடலின்றிப் படிக்க முடிகிறது. அச்சுக்கோப்பில் எழுத்தமைவில் சமனாக்கம் இயலுகிறது. (எ-டு): க ர என்ற இரு எழுத்துக் குறிகளுக்கு இடையேயான இடைவெளி குறைக்கப்படும்போது கி எனத் தோற்றமளிக்கும்.

**Kernel : கரு; உருவாக்க மையம் :** கணினி பணிகளின் மிகப் பழையவற்றைச் செயல்படுத்தும் இயக்க அமைப்பிலுள்ள நிரல் தொடர் தொகுதி.

**Kerning : நெருக்கல் :** குறிப்பிட்ட எழுத்துகளின் இணைகளுக்கு இடையே உள்ள கூடுதல் வெண்மை இடை வெளியைக் குறைப்பது.

**KES : கேஇஎஸ் :** Knowledge Engineering System என்பதன் குறும்பெயர்.

**KET : கெட் :** Kharagpur Expert Tool என்பதன் குறும்பெயர்.

**Key : விசை; திறவு; விரற்கட்டை; குமிழ்; சாவி :** *1.* ஒரு பதிவேட்டை அடையாளம் காட்டும் புலங்கள் அல்லது கட்டுப்பாட்டுப் புலம். பார்க்க Primary key. *2.* வகைப் படுத்தப்பட்ட வரிசையில் ஒரு பதிவேட்டின் நிலையினை முடிவு செய்யும் புலம். பார்க்க Major sort key, Minor sort key. *3.* தட்டச்சுப் பொறி அல்லது காட்சித் திரை விசைப்பலகை போன்ற கையால் இயக்கும் எந்திரங்களில் உள்ள விசை. *4.* விசைப் பலகை மூலம் ஒரு கணினி அமைப்பில் தரவுகளை நுழைப்பது.

**Keyb : கீபி :** பயன்படுத்தப்படும் விசைப்பலகையைப் பற்றிய தரவுவைக் கொண்ட டாஸ் (DOS) கட்டளை.

**Keyboard : விசைப்பலகை; தட்டச்சுப் பலகை; விரற்கட்டைப் பட்டடை :** கணினியின் சேமிப்பகத்திற்குள் தரவுகளையும், நிரலாக்கத் தொடரையும் விசைமூலம் அனுப்பும் உள்ளீட்டுச் சாதனம்.

**keyboard buffer : விசைப்பலகை இடையகம் :** கணினி நினைவகத்தில் ஒரு குறிப்பிட்ட சிறிய பகுதி. விசைப்பலகையில் மிக அண்மையில் உள்ளீடு செய்த எழுத்துகளைச் சேமித்து வைக்கும் இடம். செயல்முறைப்படுத்தப்படுவதற்கு முன்பாக உள்ளீட்டுத் தரவு இந்த நினைவகத்

தில் தங்கியிருக்கும். செயலி மற்றும் புறநிலைச் சாதனங்களுக்கு இடையே நிலவும் செயல்பாட்டு வேக வேறுபாடு காரணமாக இது போன்ற இடைநிலை நினைவகத்தில் உள்ளீட்டு/வெளியீட்டுத் தரவுகளை சேமிக்க வேண்டி யுள்ளது.

**Keyboard controller : விசைப் பலகை கட்டுப்பாட்டுப் பொறி :** அடித்த விசைகளைக் கண்காணித்து அழுத்தப்படும்போது தரவு துண்மிகளை உருவாக்கும் விசைப்பலகை.

**keyboard enhancer : விசைப் பலகை மேம்படுத்தி :** விசைப் பலகையில் அழுத்தும் விசைகளைக் கண்காணித்துக் கொண்டிருக்கும் ஒரு நிரல். அழுத்தும் விசையின் அல்லது விசைகளின் விளைவை மாற்றியமைக்க இந்த நிரலால் முடியும். ஒரு விசையை அழுத்தியவுடன் ஒரு நிரல் கூறினை இயங்க வைக்க முடியும்.

**Keyboarder : விசைப்பலகை அமைப்பவர் :** தட்டச்சு, சொல் செயலி அல்லது கணினி முகப்பின் விசைப் பலகையைப் பயன்படுத்துதல்.

**Key boarding : விசைப் பலகையிடல் :** உள்ளீட்டு ஊடகத்திலோ அல்லது நேரடியாக கணினியிலோ விசைப் பலகையில் தட்டச்சு செய்வதன் மூலம் தரவுகளையும் நிரல் தொடர்களையும் நுழைக்கும் செயல்முறை. கணினி முனையம் அல்லது சொல்செயலிகளில் விசைப் பலகைகளைப் பயன்படுத்துவது போன்றது.

**Keyboard initialisation : விசைப் பலகை ஆரம்பித்தல் :** பல கணினிகளை இயக்கத் துவங்கும்போது செய்யப்படும் நடைமுறை. ரோம் பயாஸ் நினைவகம் இதைத் துவக்கி சரியான விசைப்பலகை மின்னிணைப்பு பெறப்பட்டதா, சரியான ஸ்கேன் குறியீடுகள் இணைக்கப்பட்டதா என்பதை சோதிக்கிறது. NUM LOCK LED வருமானால் சரியான விசைப் பலகை ஆரம்பிக்கப்பட்டதாகப் பொருள்.

**Keyboard interrupt : விசைப் பலகை குறுக்கீடு :** ஒரு விசையை அழுத்தும்போதோ அல்லது விடும்போது செய்யப் படும் வன்பொருள் குறுக்கீடு. விசைப்பலகை நுண் செயலகத்தில் இருந்து வரும் நுண்ணாய்வு (ஸ்கேன்) கோடுகளை நிரலாக்கத் தொடர் பயன்படுத்தக்கூடிய குறியீடுகளாக மாற்றி விசைப் பலகை இடை நினைவகத்தில் இக்குறியீடுகளை நுழைக்கிறது.

**keyboard layout : விசைப்பலகை உருவரை :** ஒரு குறிப்பிட்ட விசைப்பலகையில் அமைந்துள்ள விசைகளின் அமைப்பு முறை. விசைகளின் எண்ணிக்கை (தற்போதைய தரவரையறை 101) மற்றும் விசைகளின் வரிசையமைப்பு (அமெரிக்க முறை - குவெர்ட்டி (QWERTY) ஆகியவற்றையும் உள்ளடக்கியது. சில நிறுவனங்கள் தம் சொந்த விசைப்பலகை உருவரைகளைப் பயன்படுத்திக் கொள்கின்றன. விசைக்கும் அதனோடு தொடர்புடைய எழுத்துக்கும் இடையேயான உறவினை பயனாளர் தம் விருப்பப்படி அமைத்துக் கொள்ளவும் முடியும்.

**Keyboard processor : விசைப் பலகைச் செயலகம் :** விசை அடிப்புகளை பொருத்தமான எழுத்துக் குறியீடுகளாக மாற்றும் விசைப் பலகையின் மின்சுற்று.

**keyboard punch : விசைப் பலகைத் துளை.**

**Keyboard skills : விசைப்பலகை திறன்கள் :** ஒரு கணினி விசைப் பலகையை திறமையாகவும், சிறப்பாகவும் பயன்படுத்தும் திறன். கணினி தொழில் புரிபவர்களுக்கு விசைப்பலகை திறன்கள் இன்றியமையாதவை என்று கருதப்படுகிறது. அன்றாட வாழ்க்கையிலும் இது தேவை என்பதால் ஒவ்வொரு வருக்கும் இது வாழ்க்கைத் திறனாக தேவைப்படுகிறது.

**Keyboard, sys : விசைப்பலகை, சிஸ் :** விசைப் பலகையின் இயக்கத்தைக் கட்டுப்படுத்தும் இயக்கிச் சாதனம்.

**Keyboard template : விசைப் பலகை படிம அச்சு அட்டை :** கணினி விசைப் பலகையின் விசைகளில் பொருந்தும் ஒரு செயற்கை இழைப்படிவம். இதன் மூலம் குறிப்பிட்ட மென்பொருள் பயன்பாடுகளில் விசைப் பணிகளைச் செய்ய எளிதான, விரைவான குறிப்பு. விசைப்பலகை படிம அச்சு அட்டைகள் மென்பொருள் தொகுப்புகளின் பகுதியாக இப்போது அதிகமாக வழங்கப் படுகின்றன.

**keyboard terminal : விசைப் பலகை முனையம் :** ஒரு கணினி அமைப்புக்குள் தரவுகளை நுழைக்க அனுமதிக்கும் தட்டச்சு போன்ற விசைப் பலகை.

**keyboard to - disk system : விசைப்பலகையிலிருந்து வட்டு முறைமைக்கு ; விசைப்பலகை யிலிருந்து வட்டுக்கான அமைப்பு :** விசைப்பலகையில்

தரவுவைத் தட்டச்சு செய்வதன் மூலம் தரவுகள் நேரடியாக வட்டுக்குள் நுழையும் தரவு நுழைவு அமைப்பு.

**keyboard to - tape system : விசைப் பலகையிலிருந்து நாடா முறைமைக்கு :** விசைப்பலகையில் தரவுகளைத் தட்டச்சு செய்து நேரடியாக நாடாவுக்குள் நுழைக்கும் தரவு நுழைவு அமைப்பு.

**Key bounce : விசை திரும்புதல் :** சில மோசமாக வடிவமைக்கப்பட்ட விசைப்பலகையின் தன்மை. விசையை ஒவ்வொரு முறை அழுத்தும்போதும் எழுத்து இரண்டு தடவைகள் பதிவாகும்.

**Key cap : விசை மூடி :** விசைப் பலகை விசையின் மேல் பகுதி. மாற்றக் கூடியது. பொதுவாகப் பயன்படுத்தப்படும் குறியீடுகளை அடையாளம் காண சிறப்பு விசை மூடிகளைக் கொண்டு மாற்றியமைக்கலாம்.

**Key chord : விசைக் கயிறு :** இரண்டு அல்லது மேற்பட்ட விசைகளை ஒரே நேரத்தில் அழுத்தி தனி நுண்ணாய்வுக் (ஸ்கேன்) குறியீட்டை உருவாக்குதல்.

**Key click : விசை (சொடுக்கு) ஓசை :** ஒரு விசையை அழுத்தியவுடன் கேட்கக் கூடிய ஓசை. இதை மாற்றியமைக்கலாம்.

**Key command : விசை ஆணை :** கணினியில் கட்டளைகளாகப் பயன்படுத்தப்படும் விசைத் தொகுதி.

**Key data entry device : விசைத் தரவு நுழைவுச் சாதனம் :** கணினி கருவி ஏற்றுக் கொள்ளும் வகையில் தரவுகளைத் தயார் செய்யப் பயன்படுத்தும் விசைத் துளை எந்திரங்கள், விசை யிலிருந்து வட்டுக்கான அலகுகள், விசையிலிருந்து நாடாவுக்கான அலகுகள்.

**key disk : மென்பூட்டு/திறவு வட்டு**

**Key-driven : விசை - இயக்கம் :** விசைளை அழுத்துவதன் மூலம் இயக்கப்படும் சாதனம்.

**Key entry : விசை நுழைவு :** விசைப்பலகை மூலம் கைகளால் தரவுகளை அனுப்புவது.

**key escrow : கீ எஸ்கிரோ :** ஒரு மறையாக்க முறை. அரசு முகமையினால் அங்கீகரிக்கப்பட்ட ஒரு தனித் திறவி (Private key) மூன்றாம் நபர்களுக்கு வழங்கப்படும். அத்திறவி மூலம் மறையாக்கம் செய்யப்பட்டு அனுப்பப்படும் செய்திகளை அரசு விரும்பினால் படித்துக் கொள்ள முடியும்.

**Key field : குறிப்புப் புலம்; விசைப்புலம் :** ஒரு பதிவேட்டி லிருந்து மற்றொன்றுக்கு வேறு பாடு காட்டும் புலம்.

**Key field : குறிப்புப் புலம்.**

**key-frame : முதன்மைச் சட்டம் :** ஓர் அசைவூட்ட நுட்பம். ஒரு பொருளின் தொடக்க நிலை மற்றும் இறுதி நிலைப்பாட் டைக் குறிப்பிட்டு விட்டால் இடைப்பட்ட சட்டங்கள் அனைத்தையும் கணினியே தீர் மானித்து மிக நளினமான தானி யங்கு அசைவூட்டப் படத்தை உருவாக்கித் தரும். இந்த நுட்பத்தைப் பயன்படுத்தித்தான் பெரும்பாலான கதிர்-வரைவு கணினி அசைவூட்டங்கள் உரு வாக்கப்படுகின்றன.

**Key in : விசை நுழை :** விசைப் பலகையில் தட்டச்சு செய்வதன் மூலம் தரவுகளை நுழைத்தல்.

**Keying error rate : விசை யிடலில் பிழைவிகிதம் :** மொத்த மாக விசையிடப்பட்ட எழுத்து களில் தவறாக விசையிடப்பட்ட வற்றின் சதவிகித அளவு.

**Key map : முக்கிய வரைபடம் :** சில குறிப்பிட்ட மிடி (MIDI) செய்திகளுக்கு முக்கிய மதிப்பு களை மாற்றித் தரும் மிடி ஒட்டு வரைபட நுழைவு. சான்று: குறிப்பிட்ட ஆக்டேவில்மெலடி இசைக்கருவி அல்லது பெர் குஷன் கருவியை இசைக்கப் பயன்படுத்தப்படும் விசைகள்.

**Key pad : விசை அட்டை; எண் தளம் :** 0 - 9 வரையிலான பதின்ம இயக்க விசைகளையும், இரண்டு சிறப்புப் பணி விசை களையும் பயன்படுத்தும் உள் ளீட்டுச் சாதனம். தனி சாதன மாகவும் பயன்படுகிறது அல் லது சிக்கனத்தின் விளைவான Qwerty விசைப்பலகையின் வலது புறத்திலும் இடம் பெறுகிறது.

**Key punch : விசைத்துளை; துளைப்பி:** கணினி படிப்பியில் படிப்பதற்காக தரவுகளைக் குறிப்பிடும் துளையிடும் அட் டைகளில் துளையிட்டுப் பயன் படுத்தப்படும் விசைப்பலகை இயக்கும் சாதனம்.

**Key punching : விசைத் துளை யிடல் :** மூலத் தரவுகளை துளை யிடும் அட்டைகளில் பதிவு செய்யும் செயல் முறை. இயக்கு பவர் மூல ஆவணங்களைப் படித்து விசைத்துளை எந்திரங் களில் விசையை அழுத்தி மூல ஆவண தரவுவை துளையிட்ட அட்டைகளாக மாற்றுகிறார்.

**Key punch department : விசைத் துளைப் பிரிவு :** data entry department போன்றது.

**Keypunch machine : விசைத் துளை எந்திரம் :** துளையிட்ட அட்டை தரவு நுழைவு எந்திரம். வெற்று அட்டைகளின் தொகுதி ஹாப்பரில் வைக்கப்பட்டபின் இயக்குபவரின் கட்டளையின் படி துளையிடும் இடத்திற்கு ஒரு அட்டையை எந்திரம் அனுப்புகிறது. எழுத்துகள் தட்டச்சு செய்யப்பட்டவுடன், தொடர் எழுத்தச்சுகள் தேர்ந் தெடுக்கப்பட்ட அட்டை பத்தி யில் தேவையான இடங்களில் துளைகளை இடுகின்றன.

**Key punch operator : விசைத் துளை இயக்குபவர் :** KPO என்று சுருக்கி அழைக்கப்படும். விசைத் துளை எந்திரத்தை இயக்கும் நபர். கணினியில் தரவுகளை நுழைக்கும் ஆரம்பகால முறை களில் இதுவும் ஒன்று. விசைத் துளை எந்திரம் தட்டச்சு செய்யப் பட்ட நுழைவுகளை காகித அட்டைகளில் தொடர்ச்சியாக குறியீடாக மாற்றியும் மின்- எந்திர அட்டை படிப்பியில் இது படிக்கப்படும். விசைத் துளை எந்திரங்கள் இப்போது அரிதாகவே பயன்படுத்தப்படு கின்றன. நுழைவுகளைச் செய்ய வேகமான ஊடகங்கள் வந்து விட்டன. என்றாலும், விசைத் துளை இயக்குபவர் என்ற பதம் நிலைத்து விட்டது.

**Key record : குமிழ் குறிப்பு.**

**key recovery : திறவி மீட்சி :** ஒரு தனித் திறவி (private key) வழி முறை. அரசு முகமை போன்று அதிகாரம் பெற்ற ஒருவர் தனிச் சிறப்பான மென்பொருளைப் பயன்படுத்தி மறையாக்கம் செய்யப்பட்ட தகவலிலிருந்து திறவியை பிரித்தெடுக்க முடி யும். அமெரிக்காவில் தற் போதுள்ள சட்டப்படி *1998*-க் குப் பிறகு அமெரிக்காவிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் எந்த வொரு மறையாக்க மென்பொரு ளும் திறவி மீட்சி வசதியைப் பெற்றிருக்க வேண்டும்.

**key, shift : நகர்த்து விசை.**

**Keysight : முக்கியப் பார்வை :** ஒரு எந்திரம் மனிதனின் பார்வை அமைப்பு. GM அமைப்பு என்றும் சொல்லலாம்.

**Key stations : முக்கிய நிலை யங்கள் :** பலர் பயன்படுத்தும் அமைப்புகளில் தரவு உள் ளீட்டுக்குப் பயன்படுத்தப்படும் முனையங்கள்.

**keystroke : விசையழுத்தம் :** ஒரு குறிப்பிட்ட எழுத்தை உள்ளீடு செய்யவோ அல்லது ஒரு கட்டளையை நிறைவேற்றும் பொருட்டோ விசைப்பலகை யிலுள்ள ஒரு விசையை அழுத்தும் நடவடிக்கை. சில

பயன்பாட்டு மென்பொருள்களின் செயல்திறனும் எளிமையும் அதிலுள்ள பொதுவான செயல்பாடுகளை மேற்கொள்ள எத்தனை விசையழுத்தங்கள் தேவைப்படுகின்றன என்பதைக் கொண்டு அளக்கப்படுகின்றன.

**key stroke buffer :** விசை அழுத்தல் இடையகம்.

**Keystore :** விசை இருப்பு : ஒரு நிமிடத்திற்கு எத்தனை விசைகளை அடிக்கலாம் என்று பல தரவு நுழைவுகளின் வேகத்தை அளப்பதற்காக ஒரு விசை அலகை அழுத்தும் செயல்.

**Key switch :** விசைப்பொத்தான் : ஒரு விசைப்பலகையில் உள்ளீடு விசையின் பொத்தான் பகுதி.

**Key-to-address :** விசையிலிருந்து முகவரிக்கு.

**Key to address transformation :** விசையிலிருந்து முகவரிக்கு மாற்றம் : விசைப்பலகையில் தரவுகளை தட்டச்சு செய்தால் அவை நேரடியாக வட்டில் பதிவு செய்யப்படுகின்ற பெரும்பாலும் நெகிழ்வட்டில் நடைமுறையைக் குறிப்பிடும் சொல்.

**Key-to-disk machine :** விசை வட்டு எந்திரம் : கணினி நுழைவுக்காக காந்த வட்டின் மீது தரவுகளை சேமித்து வைக்கும் தனித்து நிற்கும் தரவு நுழைவு எந்திரம்.

**Key-to-disk unit :** விசையிலிருந்து வட்டுக்கு அலகு : வளையும் வட்டுக்குள் தரவுகளை நேரடியாக சேமிக்கப் பயன்படும் விசைப்பலகை அலகு.

**Key-to-tape unit :** விசையிலிருந்து நாடாவுக்கான அலகு : தரவுகளை காந்த நாடாவுக்குள் நேரடியாக சேமிக்கப் பயன்படும் விசைப்பலகை அலகு.

**key, user difined function :** பயனாளர் வரையறுக்கும் பணிவிசை.

**Key verification :** விசை சோதித்தல்.

**key verifier :** விசை சோதிப்பி; விசைச் சரிபார்ப்பி.

**Key verify :** விசை சோதிப்பு : துளை அட்டை எந்திரத்தை சோதிப்பவராகப் பயன்படுத்தல். துளை அட்டையில் துளையிட வேண்டிய தரவு சரியாக துளையிடப்பட்டதா என்பதை சோதிக்க விசைப் பலகையை இந்த எந்திரம் பயன்படுத்துகிறது. துளையிட்ட அட்டையும், அழுத்தும் விசையும் ஒத்துப் போகவில்லையென்றால் சரியாக உள்ளது என்பது பொருள்.

**Key word :** முக்கியச் சொல்; சிறப்புச் சொல்; திறவுச் சொல்; நிர்ணயிக்கப்பட்ட சொல்; கட்டளைச் சொல் : தரவுத் தளங்களின் ஏடுகளிடையே வரிசை

யாக்கம் அல்லது தேடல் செயல்பாடுகளை மேற்கொள்வதற்கு பயன்படுத்தப்படும் சொல் அல்லது சொல்தொடர் அல்லது குறிமுறை. இது, தரவுத் தள அட்டவணையின் திறவுப் புலத்தில் (key field) இடம் பெற்றுள்ளதாயிருக்கும்.

**Keyword analysis : முதன்மைச் சொல் ஆய்வு :** ஒரு சொற்றொடரின் உள்ளடக்கங்களை ஆராயும் எளிமையான ஆனால் மிகவும் மோசமான முறை. முக்கிய சொல் ஆய்வு என்று அமைப்பு இணைக்கும் நுட்பம் அழைக்கப்படுகிறது.

**keyword-in-context : சூழ்நிலையில் முதல் சொல்; சூழலில்-திறவுச்சொல் :** ஒரு தானியங்கு தேடல் வழிமுறை. ஆவண உரை அல்லது தலைப்புகளை அடையாளங்காட்டுவதற்கான சுட்டுக் குறிப்புகளை உருவாக்கிக் கொள்ளும். ஒவ்வொரு திறவுச் சொல்லும் அதைச் சுற்றிய உரைப் பகுதியுடன் சுட்டுக்குறிப்பில் பதிவு செய்யப்படும். பெரும்பாலும் ஆவண உரை அல்லது தலைப்புகளில் திறவுச் சொல்லுக்கு முந்தைய அல்லது பிந்தைய சொல் அல்லது சொல் தொடராக இருப்பதுண்டு.

**keyword search : திறவுச் சொல் தேடு.**

**.kh : .கேஹெச் :** ஓர் இணைய தள முகவரி கம்போடியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**Khornerstones : திருப்புமுனைகள் :** மையச் செயலகம் உள்ளீடு /வெளியீடு மற்றும் மிதக்கும் புள்ளி செயல்பாட்டை சோதித்துத் தரமறியும் நிரலாக்கத் தொடர்.

**KHz : கே எச் இஸட் :** கிலோ ஹெர்ட்ஸ் என்பதன் குறும் பெயர். ஒரு நொடிக்கு ஓராயிரம் சுழற்சிகள்.

**.ki : .கேஐ :** ஓர் இணைய தள முகவரி கிரிபேட்டி நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**Kilby jack : கில்பி ஜேக் :** *1958* இல் ஒருங்கிணைந்த மின்சுற்றை அறிமுகப்படுத்திய டெக்சாஸ் கருவிகள் நிறுவனத்தின் கண்டுபிடிப்பாளர். கையில் வைத்துக் கொள்ளக்கூடிய ஆரம்பகால கணிப்பானையும் அவர் கண்டுபிடித்தார்.

**Kill : கொல் :** *1.* அதன் வழக்கமான முடிவை அடைவதற்குள் ஒரு செயலை நிறுத்துதல் அல்லது நீக்குதல். 2. தரவுவை அழிக்கும் முறை.

**killer app : அதிரடிப் பயன்பாடு :** ஒரு திருப்பு முனையை ஏற்படுத்துகின்ற செல்வாக்கான

மென்பொருள். இந்த மென் பொருள் விற்பனையில் ஒரு சாதனையை நிகழ்த்தும். அது மட்டுமின்றி இதன் விற்பனை காரணமாய் இது செயல்படும் இயக்க முறைமை அல்லது இது செயல்படும் வன்பொருளின் விற்பனையும் அதிகரிக்கும்.

**Kilo : கிலோ :** மெட்ரிக் அளவு. ஒரு ஆயிரத்தைக் குறிப்பது. *10-ன் 3* மடங்கு. K என்று சுருக்கி அழைப்பது.

**Kilobaud : கிலோ பாட் :** ஒரு நொடிக்கு ஆயிரம் பாட். தரவுத் தொடர்பு வேகங்களை அளக்கப் பயன்படுவது.

**Kilobit : கிலோ துண்மிகள் :** ஆயிரம் துண்மிகள்.

**kilobits per second : ஒரு வினாடியில் கிலோ பிட்டுகள் :** சுருக்கமாக கேபிபீஎஸ் (kbps) என்று குறிக்கப்படுகிறது. ஒரு பிணையத்தில் தரவு பரிமாற்றத் தின் வேகத்தை அளக்கப் பயன் படுத்தப்படும் அளவீடு. ஒரு வினாடியில் *1024* துண்மி (பிட்) என்ற வேகத்தின் மடங்காக அளவிடப்படுகிறது.

**Kilobyte : கிலோ எண்மிகள் :** *2*-ன் *10* மடங்கு ($2^{10}$) அல்லது *1024* எண்மிகளைக் குறிப்பிடு வது. பொதுவாக *1000* - என்று கருதப்பட்டு K என்று சுருக்கி அழைப்பது. *24* கே என்பது. *24* x *1024* அல்லது *24,576* எட்டியல் நினைவு அமைப்புக்குச் சம மானது. Kb என்றும் சில சமயம் சுருக்கி அழைக்கப்படும்.

**Kilocycle : கிலோசைக்கிள் :** ஆயி ரம் சுழற்சிகள். ஒரு நொடிக்கு ஆயிரம் சுழற்சிகள் என்று முன்பு அழைக்கப்பட்டது. இப்போது கிலோ ஹெர்ட்ஸ்.

**Kilo cycles per second :** நொடிக்கு இத்தனை கிலோ சுழற்சிகள் : ஒரு நொடிக்கு ஆயிரம் சுழற்சிகள்.

**Kilohertz : கிலோஹெர்ட்ஸ் :** ஒரு நொடிக்கு ஓராயிரம் சுழற்சி. தரவு அனுப்புதல் சுழற் சியை அளக்கப் பயன்படுகிறது.

**Kilomegacycle : கிலோ மெகா சைக்கிள் :** ஒரு நொடிக்கு ஒரு நூறாயிரம் கோடி சுழற்சிகள்.

**Kinematics : இயக்க வடிவியல் :** கணினி அமைப்பு வடிவமைக் கும் ஒரு அமைப்பு அல்லது ஒரு எந்திரத்தின் பகுதிகள் இயங்கு வதை அசைவூட்டம் (அனிமே ஷன்) மூலம் காட்டுவது அல் லது வரைவி (பிளாட்டிங்) ஆகிய வற்றில் கணினி உதவிடும் பொறியியல் செயல்முறை.

**kinesis ergonomic keyboard : கினிசிஸ் சூழலியல் விசைப் பலகை :** தொடர்ந்து விசைப் பலகையில் பணியாற்றுவதால் சோர்வும் உலைவும் ஏற்

படுத்தாத பணிச்சூழலுக்குகந்த விசைப்பலகை வடிவமைப்பு.

**kinetics :** இயக்கியல்.

**kiosk : கணினி முனையம் :** பொது மக்களுக்குத் தேவையான தரவுகளை பல்லூடகத் திரைக்காட்சி மூலம் தெரிவிக்கும் கணினி மையம்.

**kiosk mode : கணினியகப் பாங்கு.**

**KIPS :** கிப்ஸ் : எதிர்பார்க்கப்படுகின்ற ஐந்தாம் தலைமுறை கணினிக்குக் கொடுக்கப் பட்டுள்ள பெயர்.

**Kiudging :** கியுட்ஜிங் : நிரலாக்கத் தொடரின் நோக்கமாக இல்லையென்றாலும் தொழில் நுட்ப முறையில் முடியக்கூடிய ஏதாவது செய்வது. 'hacking' என்றும் அழைக்கப்படும்.

**Kludge :** ஒப்பேற்றல் : ஒரு கணினி அமைப்பில் பொருத்தப் பட்ட தவறான இணைப்புள்ள பாகங்களின் தொகுதி பற்றிய மாற்று அமைப்பு.

**Knob : கைப்பிடி; குமிழ்க் கைப்பிடி.**

**Knockout :** நாக் அவுட் : கம்மோடர் 64 வீட்டு கணினிக்கான மென்பொருள். பெட்டி வளையத்தைப்போலச் செய்து காட்டி இரண்டு பெட்டிகள் அதன் மீது வைக்கப்படுதல்.

**knowbot : நோபாட்; அறிந்திரன் :** அறிவு + எந்திரன் (Knowledge+ Robot) என்பதன் சுருக்கம். இது ஒரு செயற்கை நுண்ணறிவு நிரல். முன் வரையறுக்கப்பட்ட சில விதிமுறைகளின் அடிப் படையில் இந்த நிரல் செயல் படுகிறது. இணையம் போன்ற ஒரு மாபெரும் பிணையத்தில் ஒரு குறிப்பிட்ட கோப்பினைத் தேடுதல் அல்லது குறிப்பிட்ட தரவுவைக் கொண்டுள்ள ஓர் ஆவணத்தைத் தேடுதல் - இது போன்ற பணிகளுக்காக அறிந் திரன்கள் பயன்படுத்தப்படு கின்றன.

**Knowledge :** ஆய்வறிவு; சால்பு.

**Knowledge acquisition :** அறிவு சேர்த்தல்; அறிவு ஈட்டல்.

**Knowledge base :** அறிவு ஆதாரம்; **அறிவுத் தளம் :** ஒரு குறிப்பிட்ட பொருள் பற்றிய அறிவின் தரவுத் தளம். உண்மைகள், மதிப்பீடுகள், நடைமுறைகள் போன்ற சிக்கல் தீர்வுக்கான வழிமுறைகளைக் கொண்டது.

**Knowledge based system : அறிவு சார்ந்த அமைப்பு :** ஒரு பொருள் பற்றிய அறிவின் தரவுத் தளத்தைப் பயன்படுத்தும் செயற்கை நுண்ணறிவு பயன்பாடு.

**Knowledge build : அறிவுக் கட்டுமானம் :** வேக்ஸ் சூப்பர் மென் பொருள் தொடர். பிசினஸ் நிறுவனத்தின் புதிய தலைமுறை உற்பத்திக் கருவி.

**Knowledge domain : அறிவுப் பகுதி :** ஒரு வல்லுநர் அமைப்பில் குறிப்பிட்ட அறிவின் பகுதி.

**knowledge engineer : அறிவுப் பொறியாளர் :** தேவையான அறிவையெல்லாம் தேடிப் பெற்று அவற்றை ஒரு நிரலாக வடிவமைத்து ஒரு வல்லுநர் முறைமையை (Expert System) கட்டமைக்கும் ஒரு கணினி அறிவியலாளர்.

**Knowledge engineering : அறிவுப் பொறியியல் :** சாதாரணமாக மனிதப் பட்டறிவில் உயர்நிலை தேவைப்படுகின்ற சிக்கல்களைத் தீர்க்க கணினி அமைப்புகளில் அறிவை ஒருங்கிணைக்கும் பொறியியல் பிரிவு.

**Knowledge industries : அறிவுத் தொழில்கள் :** தரவு செயலாக்கம் செய்து தரவு பொருட்கள் மற்றும் சேவைகளை அளிக்கும் தொழில்கள்.

**Knowledge information : அறிவுத் தகவல்.**

**knowledge information processing system : அறிவுத் தரவு செயற்பாட்டு முறைமை.**

**Knowledge link : அறிவு இணைப்பு :** ஐபிஎம் நிறுவன கணினிகளுக்கும், துறைசார்ந்த வாக்ஸ் சூப்பர் பணிகளுக்கும் இணைப்பு ஏற்படுத்த வடிவமைக்கப்பட்ட அறிவு இணைப்பு. இதன் மூலம் நிறுவனத்திற்கும், துறைக்குமான கணிப்புச் செயல்கள் சுமுகமாகச் செல்ல முடிகிறது.

**Knowledge manager : அறிவு மேலாளர் :** நுண் தரவுத்தள கணினி அமைப்புகளிலிருந்து வரும் டிபிஎஸ் அமைப்பு. இதன் மூலம் எண்ணற்ற கோப்புகளைக் கையாள பயனாளருக்கு அனுமதி கிடைக்கிறது.

**Knowledge representation : அறிவு குறித்தல்; அறிவு குறிப்பிடு முறை :** ஒரு சிக்கலுக்குத் தேவைப்படும் தகவலை வடிவமைத்து ஒருங்குபடுத்துதல்.

**Knowledge work : அறிவு வேலை :** தகவலைப் பெறுதல், செயலாக்கப் புகுதல் மற்றும் அனுப்புதல் உள்ளடக்கிய வேலைகள்.

**Knowledge workers : அறிவுப் பணியாளர்கள் :** தரவுவை உருவாக்கல், பயன்படுத்தல் மற்றும் விநியோகித்தல் போன்றவற்றை முக்கிய வேலையாகக் கொண்டு பணியாற்றுபவர்கள்.

**korn shell : கார்ன் செயல்தளம் :** யூனிக்ஸ் இயக்க முறைமையில் உள்ள கட்டளைவரி இடைமுகம். போர்னே (Bourne) மற்றும் சி-செயல் தளங்களிலுள்ள கூறுகளை உள்ளடக்கியது. கார்ன் செயல்தளம் போர்னே செயல்தளத்துடன் முழுமையான

ஒத்திசைவு கொண்டது. அதே வேளையில் சி-செயல் தளத்தின் கட்டளை வரி திருத்தல் திறனும் கொண்டது.

**.kp : .கேபீ :** ஓர் இணைய தள முகவரி வடகொரிய நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**K & R C : கேஆர்சி :** Kernighan and Ritchie C என்பதன் குறும் பெயர். அன்சி (Ansi) தர நிர்ணயத்திற்கு இருந்த "சி' மொழியின் பதிப்பு. பிரியன் கெர்னிகன் மற்றும் டென்னிஸ் ரிச்சி உருவாக்கியது.

**KSR : கேஎஸ்ஆர் :** Keyboard Send / Receive என்பதன் சுருக்கப் பெயர். விசைப்பலகை மற்றும் அச்சுப்பொறியைக் கொண்ட தொலைத் தட்டச்சுப்பொறி.

**KSR terminal : கேஎஸ்ஆர் முனையம் :** விசைப்பலகை அனுப்புதல்/பெறுதல் முனையம் (Keyboard Send/Receive Terminal) என்பதன் குறும்பெயர். இந்த முனையம் விசைப் பலகையிலிருந்து மட்டுமே உள்ளீட்டை ஏற்கும். விசைப் பலகையின் உள்ளீட்டையும் பிற முனையங்களிலிருந்து பெறப் படும் தரவுவையும் திரைக் காட்சிக்குப் பதிலாக உள்ளிணைக்கப்பட்ட அச்சுப் பொறியில் வெளியிடும்.

**.kr : .கேஆர் :** ஓர் இணைய தள முகவரி தென்கொரிய நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**Kurtz Thomas : குர்ட்ஸ் தாமஸ் :** *1964*இல் டார்ட்மவுத் கல்லூரியில் ஜான் கெம்னையுடன் சேர்ந்து பேசிக் என்னும் கற்பதற்கு எளிய, அல்ஜீப்ரா கலந்த நிரலாக்கத்தொடர் மொழியை உருவாக்கினார்.

**.kw : .கேடபிள்யூ :** ஓர் இணைய தள முகவரி குவைத் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**KWIC : கேடபுள்யூஐசி :** Key& Word&In Context என்பதன் சுருக்கம். சொற்கள் எந்தச் சூழ்நிலையில் பயன்படுத்தப் படுகின்றன என்பதை வைத்து சொற்கள் மற்றும் சொற்றொடர்களை முன்னதாக தேர்வு செய்து தகவலைப் பட்டியலிடும் ஒரு முறை.

**.ky : .கேஒய் :** ஓர் இணைய தள முகவரி கேமான் தீவுகளைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப்பெயர்.

**.kz : .கேஇஸட் :** ஓர் இணைய தள முகவரி கஜகஸ்தான் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

# L

**L1 cache : எல் 1 கேஷ்; நிலை 1 இடைமாற்றகம் :** இன்டெல் 1486 மற்றும் அதைவிட மேம்பட்ட செயலிகளில் உள்ளமைக்கப் பட்டுள்ள இடைமாற்று நினை வகம். நிலை 1 இடைமாற்றகம் பொதுவாக 8கேபி கொள்திறன் உள்ளது. ஒற்றைக் கடிகாரச் சுழற்சியில் படித்துவிட முடி யும். எனவே தொடக்க காலங் களில் இது பரிசோதிக்கப் பட்டது. இன்டெல் ஐ1486 ஒரே யொரு நிலை 1 இடைமாற்றகம் கொண்டது. பென்டியம் செயலி யில் இரண்டு உண்டு. ஒன்று ஆணைகளுக்கு, மற்றொன்று தரவுகளுக்கு.

**L2 cache : எல்2 கேஷ்; நிலை2 இடைமாற்றகம் :** ஐ1486 மற்றும் அதனிலும் மேம்பட்ட செயலி கள் பயன்படுத்திக் கொள்ளும் இடைமாற்று நினைவகம். இது செயலிக்கு அருகில் தாய்ப் பல கையில் பொருத்தப்பட்டுள்ள நிலை ரேம் (static RAM) ஆகும். நிலை 2 இடை மாற்றகம் பொது வாக 128 கேபி முதல் 1 எம்பி வரை இருக்கலாம். முதன்மை நினைவகத்தைவிட வேக மானது. ஆனால், செயலிக் குள்ளே உள்ளமைந்துள்ள நிலை 1 இடைமாற்று நினைவ கத்தைவிட மெதுவானது.

**L8R : எல்8ஆர் :** பிறகு என்று பொருள்படும் Later என்ற சொல்லை செல்லமாய்ச் சுருக்க மாகக் குறிப்பிடல். சியூஎல்8ஆர் (See you Later) என்பதைப் போன்றது. மின் அஞ்சல், யூஸ்நெட் செய்திக் குழுக்களில் தற்காலிகமாக விடைபெறும் போது பயன்படுத்தப்படுவது.

**.la : .எல்ஏ :** ஓர் இணைய தள முக வரி லாவோஸ் நாட்டைச் சேர்ந் தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**label : அடையாளம்; குறி; முகப்புச் சீட்டு; முகப்பு :** ஒரு நிரலை விவரிக்க அல்லது அடை யாளம் காண கணினி நிரல் தொடரில் பயன்படும் பெயர் அல்லது அடையாளம் காட்டி. வாக்கியச் செய்தி, தரவு மதிப்பு, பதிவு, பொருள் அல்லது கோப்பு போன்றவைகள் இவ்வாறு பயன்படுத்தப்படும்.

**labeled common : பொதுவான சீட்டு :** நிரல் தொடர் அலகுகளுக் குள் பகிர்ந்து கொள்ளப்படும் நினைவகப் பகுதி. அதற்கென்று தனியாகப் பெயர் கொடுக்கப்

படும். Blank (unlabelled) Common என்பதற்கு எதிர்ச் சொல்.

**label prefix :** முகப்புச் சீட்டு முன் சொல்; முகப்புச் சீட்டு முன் னொட்டுச்சொல் : அகலத் தாளில் அரை நுழைவி ஆரம்பத்தில் தட்டச்சு செய்யப்படும் எழுத்து. சான்றாக 1-2-3இல் ஒற்றை மேற்கோள்குறி வருமானால் அரையில் இடதுபக்கமாக ஒழுங்குபடுத்துமாறும், இரட்டை மேற்கோள்குறி வருமானால் வலதுபக்கம் ஒழுங்குபடுத்து மாறும் நிரல் ஏற்கப்படும்.

**label record :** சீட்டுப் பதிவேடு: காந்த நாடாவில் சேமிக்கப்படும் கோப்பைப் பற்றிய தரவைக் கொண்டுள்ள காந்தப் பதிவேடு.

**lable, header :** தலைப்புச் சிட்டை.

**lab hours :** செய்முறை விளக்கம்; ஆய்வு நேரம்.

**lable identifier :** சிட்டை அடை யாளம் காட்டி.

**lable, trailer :** முன்னோட்டச் சிட்டை.

**lag :** இடைவெளி; பிந்துதல் : இரண்டு நிகழ்வுகள், எந்திர அமைப்புகள் அல்லது நிலை களுக்கும் இடையிலுள்ள வேறுபாடு.

**LAN :** லேன் : Local Area Network என்பதன் குறும்பெயர். வன் பொருள், மென்பொருள், அமைப்புகள் ஆகியவைகள் குறிப்பிட்ட இடைவெளிக்குள் தரவுத் தொடர்பு ஏற்படுத்து கின்றன.

**land :** பொருத்துப் பரப்பு : மின்னணு பொருட்களைப் பொருத்துவதற்கு அச்சிடப் பட்ட மின்சுற்று அட்டையில் உள்ள இடப்பகுதி.

**Land information system :** பொருத்து பரப்பு தகவல் மையம் : தரை மேலாண்மை தகவலை ஆராயப் பயன்படுத்தும் ஒரு கணினி அமைப்பு (வன் பொருள் மற்றும் மென் பொருள்). இயற்கை மூலாதாரங் களின் விநியோகம் நிலைப் பயன்படுத்தும் முனைகள், சொத்து உரிமை, வாடகை யிருப்பு மதிப்புகள் போன்றவை கள் இதற்குச் சான்று. தரை தகவல் மையம் ஒரு நேர்முக அமைப்பு அல்ல. வெளிப்புறத் தில் இருந்து அடிப்படைத் தகவலை விநாடிக்கு விநாடி பெறுகிறது. நிலப்படம் அமைத் தல், தகவல் மற்றும் தரவுத் தளங்கள் இவற்றின் பணிகள்.

**landing zone :** தரையிறங்கும் பகுதி : படி /எழுது முனையை நிறுத்துவதற்கான வன்வட்டின் பகுதி. முந்தைய வன்வட்டு அமைப்பில் நிறுத்துவதற்கான

ஆணை இடப்பட வேண்டும். ஆனால், இப்போது மின்சாரம் நிறுத்தப்படும்போது தானாகவே நடந்து விடுகிறது. அது நிறுத்தப் படும் இடம் விவரம் சேமிக் கப்படாத இடமாக இருக்கும். நிலைவட்டில் மிக அதிகமான எண் கொண்டுள்ள தடம்/ உருளையாக இருக்கும்.

**landmark : லேண்ட் மார்க் :** அமெரிக்காவில் உருவாக்கப் பட்ட உரிமையாளர் வன் பொருள்/மென்பொருள் மதிப் பீட்டமைப்பு.

**landmark rating : லேண்ட் மார்க் விகிதாச்சாரம் :** லேண்ட மார்க் ரிசர்ச் இன்டர்நேஷனல் நிறு வனத்தின் பரவலாகப் பயன் படும் பீ.சி. செயல்திறன் சோதனை. மையச் செயலக வேகம் கடிகாரத்திற்குத் தேவைப் படும் வேகமாக ஏடி-வகுப்பு எந்திரங்களில் இருக்கிறதா என்று மதிப்பீடு செய்வது. இதன் மூலம் சமமான செயல்திறன் தர முடியும்.

**lands : சமதளங்கள்:** குறுவட்டு களில் *1* எனும் பிட்டைக் குறிக் கும். குழி (pit) *0*-வை குறிக்கும்.

**landscape : லேண்ட்ஸ்கேப்; அகண்மை :** அச்சுப் பிரதி உருவங்களை அமைப்பது குறித்தது. வேலையை ஒரு பக்கத்தில் நீள வாட்டத்தில் அச்சிட வைக்கிறது. பொதுவாக செங்குத்தாக அச்சிடுவதே வழக்கமாகும்.

**landscape format : அகண்மை வடிவமைப்பு; பரப்புத் தோற்ற உருவமைவு.**

**landscape mode : பரப்புத் தோற்றப் பாங்கு; அகண்மைப் பாங்கு :** ஓர் உரைப்பகுதி அல் லது ஒரு படிமம் உயரத்தைவிட அகலம் அதிகம் இருப்பின் அச்சுப்பொறியில் கிடைமட்ட மாக அகலவாக்கில் அச்சிட லாம். நீள்மைப் பாங்கு Portrait எனப்படும்.

**landscape monitor : அகண்மைத் திரையகம்; பரப்புத் தோற்றக் காட்சித்திரை :** உயரத்தைவிட அகலம் அதிகம் இருக்கும் கணினித் திரையகம். இது போன்ற திரை உயரத்தைக் காட் டிலும் அகலம் *33* சதவீதம் அதி கம் இருக்கும். ஒரு தொலைக் காட்சித் திரையின் நீள அகல வீதங்களை ஒத்திருக்கும்.

**landscape printing : அகல வாக்கில் அச்சிடுதல்.**

**landscapes : லேண்ட்ஸ்கேப்ஸ் :** நுண்கணினிகளுக்கான மைக்ரோ - சாஃப்ட் நிறுவனத் தின் மென்பொருள். கான்டூர் (Contour) படங்கள் மற்றும்

அவை பிரதிபலிக்கும் இடங்களின் உறவைக் குறிப்பது.

**language :** மொழி : தகவலை வெளிப்படுத்தப் பயன்படும் விதிகள், குறியீடுகள், மரபுகளின் தொகுதி.

**language access :** மொழி அணுகல் : ஐ.பி.எம். நிறுவனத்தில் எஸ்ஏஏ ஏற்புடை கேள்வி மொழி. ஆங்கில மொழியில் கேட்கப்படும் கேள்வியை எஸ்கியூஎல் மொழியாக மாற்றி கியூ.எம்.எஃப் ஆக அளிக்கிறது. கியூ.எம்எஃப் தரவுகளைத் தேடித் தருகிறது.

**language and script :** மொழியும் வரி வடிவும்.

**language, assembly :** தொகுப்பு மொழி; சில்லுமொழி; சிப்பு மொழி.

**language, basic :** அடிப்படை மொழி.

**language checker :** மொழிச் சரி பார்ப்பி; மொழி திருத்தி.

**Language, Common Business Oriented:** பொதுத் தொழில் சார்ந்த மொழி. COBOL மொழியின் விரிவாக்கப் பெயர்.

**language description language :** மொழி விவரிப்பு மொழி.

**language, high level :** உயர்நிலை மொழி.

**language independent platform :** மொழிசாராப் பணித்தளம்.

**language, low level :** அடிநிலை மொழி.

**language, machine :** பொறி மொழி.

**language, object :** இலக்கு மொழி.

**language processor :** மொழி செயலாக்கி; மொழி அலசி : மனிதன் எழுதும் மூல்மொழி நிரலாக்கத் தொடர்களை கணினி இயக்கக் கூடிய வடிவில் மொழிபெயர்க்கும் நிரலாக்கத்தொடர். பொதுவாக மொழி செயலாக்கிகள் மூன்று வகை. தொகுப்பிகள், சேர்ப்பிகள் மற்றும் மொழி பெயர்ப்பிகள்.

**language prompt :** மொழி உணர்த்தி.

**language, query :** வினவு மொழி.

**language, source :** ஆதாரமொழி; மூலமொழி

**language statement :** மொழி விவர அறிவிப்பு : மொழி பெயர்ப்பு நிரலாக்கத் தொடர், சேவை நிரலாக்கத் தொடர் அல்லது கட்டுப்பாட்டு நிரலாக்கத் தொடர் போன்ற செயலாக்க நிரலாக்கத் தொடர்களுக்கு தரவுவை அனுப்ப கணினி அமைப்பைப் பயன்படுத்தும்

ஒருவர் குறியீடமைக்கும் சொற்றொடர். அது, செய்ய வேண்டிய ஒரு இயக்கத்தைக் குறிப்பிடலாம் அல்லது செயலாக்க நிரலாக்கத் தொடருக்கு அனுப்ப வேண்டிய தரவுகளை மட்டுமே கொண்டதாக இருக்கலாம்.

**language subset : மொழி துணைத் தொகுதி :** ஒரு மொழியின் மற்ற பகுதியைச் சாராமல் சுயேச்சையாக இயங்கக்கூடிய, ஒரு மொழியின் பகுதி.

**language tools : மொழியாளும் கருவிகள்.**

**language translation : மொழி பெயர்ப்பு :** பேசிக்கிலிருந்து ஃபோர்ட்ரானுக்கோ அல்லது ஃபோர்ட்ரானிலிருந்து பாஸ்கலுக்கோ மொழி பெயர்ப்பு செய்வது போன்று ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழிக்குத் தரவுவை மாற்றும் செயல்.

**language translator programme : மொழி பெயர்ப்பு நிரலாக்கத் தொடர் :** பொருளை மாற்றாமல் ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்கு சொற்றொடர்களை மாற்றும் நிரலாக்கத் தொடர்.

**LAN manager : லேன் மேலாளர் :** மைக்ரோ சாஃப்ட் நிறுவனத்தின் 'லேன்' இயக்க அமைப்பு. ஒரு பணியகத்தின் கீழ் ஓ/எஸ்2இல் பயன்பாடாக இயங்கி டாஸ் ஓ/எஸ்2 மற்றும் யூனிக்ஸ் வேலை நிலையங்களுக்கு உதவுகிறது. கோப்பு பங்கிடுவதில் நுண்மென்கோப்புப் பங்கீட்டு வரைமுறையை மைக்ரோசாஃப்ட் ஃபைல் ஷேரிங் புரோட்டோகால் பயன்படுத்துகிறது. போக்குவரத்து நுட்பத்திற்கு நெட் பயாஸ் (NET BIOS) வரைமுறையைப் பயன்படுத்துவதுடன் செயலாக்கத்திற்கிடையிலான தரவு தொடர்புக்கு பெயரிடப்பட்ட குழாய்களைப் பயன்படுத்துகிறது.

**LAN network manager : லேன் பிணைய மேலாளர் :** பிணையத்தைக் கண்காணித்து கட்டுப்படுத்த பிணைய நிர்வாகிக்குப் பயன்படும் ஐபிஎம் மின் அடையாள பிணைய நிர்வாகம். லேன் பிணைய மேலாளருக்குத் தேவையான தரவுகளைத் திரட்டித் தருகின்ற, பணி நிலைய சகாவாக லேன் நிலைய மேலாளரைக் கூறலாம்.

**LAN requester : லேன் வேண்டுபவர்:** வேலை நிலையத்திலேயே தங்கி இருக்கின்ற லேன் பணியக மென்பொருள்.

**lansel mail bag : கையளவு மின் அஞ்சல் கருவி.**

**LAN server : லேன் பணியகம்:** லேன் மேலாளரின் ஐபிஎம் பதிப்பு.

**LAN station : லேன் நிலையம் :** குறுபரப்பு இணையக் கட்டமைப்பில் (லேன்) பணியகம்.

**LANtastic : லேண்டாஸ்டிக் :** எளிதாக பயன்படுத்தக்கூடிய ஆர்ட்டி சாஃப்ட்டின் பீ.சி.க்களுக்கான புகழ்பெற்ற நேருக்கு நேர் லேன் இயக்க அமைப்பு. ஈத்தர் நெட், ஆர்க்நெட் மற்றும் டோக்கன் ரிங் ஏற்பிகளையும் அதனுடைய முறுக்கிய இணை ஏற்பிகளையும் ஒரு நொடிக்கு இரண்டு மெகாபிட் அளவில் இது ஆதரிக்கிறது. மின் அஞ்சல் (இ-மெயில்) மற்றும் சாட் பணிகளும் இதில் உள்ளடக்கி மீமிகு துண்மிகள் உள்ளது. குரல் அஞ்சல் மற்றும் உரையாடல் வசதியும் கூடுதலாகக் கிடைக்கும்.

**LAP : லேப் :** Line Access Protocol என்பதன் குறும்பெயர். இரண்டாம் நிலை (தரவு இணைப்பு நிலை) வரைமுறை.

**Lap Computer : மடிக் கணினி :** எடுத்துச் செல்லக்கூடிய பெட்டியளவு அல்லது நோட்டுப்புத்தக அளவு கணினி. பொதுவாக சுமார் 5 கிலோவுக்குக் குறைவான எடை உள்ளதாக இருக்கும்.

**laplink : லேப்லிங்க் :** டிராவலிங் சாஃப்ட்வேர் நிறுவனத்தின் பீ.சி. கோப்பு மாற்றல் நிரலாக்கத் தொடர். லேப்டாப் மற்றும் டி.டீ.பீ. கணினிகளுக்கிடையில் தரவுகளை இது மாற்றுகிறது. லேப்லிங்க் மேக், பீ.சி.க்கும் மேக்-குக்கும் இடையில் கோப்புகளை மாற்றுகிறது.

**laptop : மடிக் கணினி :** தட்டையான திரையுள்ள, எடுத்துச் செல்லக்கூடிய கணினி. பொதுவாக ஒரு டஜன் பவுண்டுக்குக் குறைவான எடை உடையது. ஏசி மின்சக்தி/பேட்டரியைப் பயன்படுத்துகிறது. வெளிப்புற திரையகத்து இணைப்புகளால் இணைக்கப்பட்டு டி.டீ.பீ. கணினியாகவும் செயல்பட வல்லது. வெளிப்புற சி.ஆர்.டி. மற்றும் முழு அளவு விசைப் பலகையுடன் இணைக்கலாம். மவுஸ் போர்ட், டிராக்பால் ஆகியவை உள்ளே அமைக்கப்பட்டிருக்கும். நின்றபிறகு மீண்டும் விட்ட இடத்தில் இருந்து தொடங்கக் கூடியது. வி.ஜி.ஏ. கிரே அளவும், வண்ணமும் உடையது. பேட்டரியில் இயங்கக் கூடிய 386 எஸ் அல்லது ஏஎம் 386 எக்ஸ் எல் ஆகிய மையச் செயலகங்களைக் கொண்டிருக்கும்.

**laptop computer : மடிக் கணினி.**

**large icons : பெரிய சின்னங்கள்.**

**large main memories :** பெரிய முதன்மை நினைவகம்; பெரிய முதன்மை நினைவுப் பதிப்பான்கள்.

**large model : பெரிய மாதிரியம் :** இன்டெல் 80×86 செயலிக் குடும் பத்தில் பயன்படுத்தப்படும் நினைவக மாதிரியம். இந்த மாதிரியத்தில் ஆணைகள் மற்றும் தரவுகள் இரண்டுமே 64 கிலோ பைட்டுகளைவிட அதிக மாக இருக்கலாம். ஆனால் இரண்டும் சேர்த்து 1 மெகா பைட்டுகளைவிடக் குறைவாக இருக்க வேண்டும். ஒவ்வொரு தரவு கட்டமைப்பும் 64 கிலோ பைட்டுகளைவிடக் குறை வாகவே இருக்க வேண்டும்.

**Large-Scale Integration (LSI) : பேரளவு ஒருங்கிணைப்பு: (எல்எஸ்ஐ) :** ஒரு சிலிக்கான் சிப்புவில் அதிக எண்ணிக் கையில் (பொதுவாக நூறுக்கு மேல்) ஒருங்கிணைந்த மின் சுற்றுக்களை வைக்கும் செயல் முறை.

**Large Scale Integration Circuits (LCIC) : பேரளவு ஒருங்கிணைந்த மின்சுற்று வழிகள்.**

**largest main frame computing capacity : உயர் ஆற்றல் பெரு முகக் கணினித் திறன்.**

**LASER : லேசர் (சீரொளி; ஒளி ஒழுங்கமைவு) :** Light Amplification by simulated Emission of Radiation என்பதன் குறும்பெயரே 'லேசர்'. மின்காந்த அலைகளை கதிர் வீச்சு வெளியிடுவது போன்ற செயல் மூலம் பெரிதாக்கும் கொள்கையைப் பயன்படுத்தும் தொழில் நுட்பம். அகச்சிவப்பு புலனாகும் அல்லது அல்ட்ரா வய்லட் பகுதியில் இயங்குகிறது.

**laser disk : ஒளிவட்டு; லேசர் வட்டு.**

**laser disk memory : லேசர் வட்டு நினைவகம் :** 12 அங்குல (294 மி.மீ) பிளாஸ்டிக் வட்டில் லேசரால் தரவு பதியப்பட்டு, படிக்கப்படக் கூடிய வடிவில் உள்ள சேமிப்பக சாதனம். அண் மையில் உருவாக்கப்பட்டது.

**laser font : லேசர் எழுத்துரு**

**laser jet : லேசர் ஜெட் :** எச்.பி. நிறுவனத்தின் டெஸ்க் டாப் லேசர் அச்சுப்பொறி குடும்பத் தைச் சேர்ந்தது. 1984இல் அறிமுகப்படுத்தப்பட்ட இது 300 டி.பி.ஐ. வரை அச்சிடும். 800 டி.பி.ஐ. வரை வேறொரு சாதனத்தினால் சக்தி கூட்டலாம். III வரிசையில் துல்லியம் அதிக மாகும். இதன் அச்சு கட்டளை மொழி பி.சி.எல். பிட்மேப் பிலான அச்செழுத்துகளை ஏற்றுக் கொள்கின்றன. அளவு கூடக் கூட அச்செழுத்துகள் சேர்க்கப்படுகின்றன. சில வற்றை கார்ட்ரிஜ் மூலம் அமைக்கலாம். வரிசை II -ஐ

பிசிஎல் 5-ன் மூலம் மேம் படுத்தலாம்.

**laser print :** ஒளி அச்சு.

**laser printer : லேசர் அச்சுப்பொறி :** ஒரு லேசர் கதிரைப் பயன் படுத்தி சுழலும் உருளையில் உருவங்களைப் பதிக்கும் அழுத்தம் தராத அச்சுப் பொறி. லேசர் தோன்றும் பகுதிகளில் மை தூளை உருளை எடுத்துக் கொள்கிறது. உருளையின் மேல் உள்ள இப்பகுதிகள் அழுத்தப் பட்டு காகிதத்தில் கலந்து எழுத்துகள் உருவாகின்றன.

**laser storage : லேசர் சேமிப்பகம்; லேசர் தேக்ககம் :** உலோக மேற் பரப்பின் மேல் லேசர் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி குறி யீடு அமைக்கும் துணை சேமிப் பகச் சாதனம்.

**laser writer : லேசர் எழுது பொறி :** ஆப்பிள் நிறுவனத்தின் லேசர் அச்சுப் பொறி. மோட்டோ ரோலா 68020 சில்லினால் இயக்கப்பட்டு 2 மீமிகு எண்மி களுடன் வருவது.

**last in first out : கடைபுகு முதல் விடு:** ஓர் அடுக்கில் (stack) உள்ள உறுப்புகளைக் கையாளும் வழி முறை. ஒன்றன்மேல் ஒன்றாய் அடுக்கி வைக்கும் பொருள் களில் (சாப்பாட்டுத் தட்டுகள்) கடைசியாக வைக்கப்பட்ட பொருளைத்தான் முதலில் எடுப் போம். ஒரு சாரையில் (queue) இருக்கும் உறுப்புகளைக் கை யாளும் முறைக்கு (first in first out) மாறானது.

**last modified : இறுதியாகத் திருத்தப்பட்டது.**

**LAT : லேட் :** Local Area Transport என்பதன் குறும்பெயர். டெக் நெட் சூழ்நிலையில் முகப்பு போக்குவரத்தினைக் கட்டுப் படுத்த டிஜிட்டல் நிறுவனம் உருவாக்கிய தரவு தொடர்பு வரைமுறை.

**latch : லேட்ச் :** புதிய தரவு அளிக் கப்படும்வரை அதன் அளவை உள்ளடக்கத்தை வைத்துக் கொண்டிருக்கும் ஒரு மின்னணு மின்சுற்று.

**latch registers : லேட்ச் பதி வகங்கள்:** ஒளிக்காட்சி தாங்கி யில் உள்ள குறிப்பிட்ட நினை வக முகவரியில் நான்கு எண்மி கள் அளவு தரவுவை வைத்துக் கொள்ளும் ஒரு எண்மி லேட்ச் பதிவகங்கள் ஈ.ஜி.ஏ.வில் நான்கு உள்ளன. தாங்கி (Buffer) யில் இருந்து மையச் செயலகம் படிக்கும்போது, லேட்ச் பதிவ கங்கள் நிரம்புகின்றன. தாங்கி யில் மையச் செயலகம் எழுதும் போது லேட்ச் உள்ளடக்கங்கள் அது தொடர்பான நினைவக

இருப்பிடத்தில் திணிக்கப்படு கின்றன.

**latch voltage : லேட்ச் வோல்ட் டேஜ்:** அளவை நிலையை ஏற்றம் இறக்கம் (flip-flop) மாற்றக் கூடிய உள்ளீடு மின்சக்தி.

**late binding : தாமத ஒட்டு :** ஓடும் போதே வாலாயங்களை (ரொட் டீன்) இணைப்பது.

**latency : உள்ளுறை சுணக்கம் :** தட்டு அல்லது உருளை போன்ற துணை சேமிப்பக சாதனத்தில் நேரடி அணுகு முறையில் ஒரு பதிவை எழுதவும், படிக்கவும் ஆகும் சுழற்சி தாமதம்.

**latent image : தெரியாத உருவம் :** மின்சக்தி மூலம் தோன்றும் புலனாகாத உருவம். சான்றாக, நகல் எந்திரத்தில், ஒரு பக்கத் தின் தெரியாத உருவத்தை ஒரு பலகையிலோ அல்லது உருளை யிலோ மின்சக்தி வடிவில் உரு வாக்கி வைக்கப்படும்.

**latest : அண்மை.**

**latex or Latex : லேட்டெக்ஸ் :** லெஸ்லி லேம்போர்ட் (leslie lamport) நிறுவனம் டெக்ஸ் (TeX) தொழில் நுட்பத்தின் அடிப் படையில் அமைத்த ஓர் ஆவண உருவாக்க மென்பொருள். உரைப்பகுதியின் தலைப்பு, உள்ளடக்கம் போன்று உரை உறுப்புகளுக்குரிய மிக எளிய கட்டளைகள் மூலம் ஆவணத் தின் தோற்றத்தைக் காட்டிலும் ஆவண உள்ளடக்கத்தை முன் னிலைப்படுத்த லேட்டெக்ஸ் உதவுகிறது.

**latter quality : எழுத்துத் தரம்.**

**latter quality mode : எழுத்துத் தர முறை.**

**latter quality printer : எழுத்துத் தர அச்சடிப்பான்.**

**lattice : லேட்டிஸ் :** பூலியன் அல்ஜீப்ரா போன்ற அல்ஜீப்ரா அமைப்பு.

**launch : துவக்கு :** ஒரு நிரலாக்கத் தொடரை ஏற்றி ஓடச் செய்வது.

**launcher : ஏவி; தொடக்கி :** மேக்ச எஸ் இயக்க முறைமையில், அடிக்கடி பயன்படுத்தக்கூடிய பயன்பாடுகளையும், நிரல்களை யும், பயனாளர் ஒற்றைச் சுட்டிச் சொடுக்கில் இயக்க வகை செய்யும் ஏவு நிரல்.

**.la.us : .எல்ஏ.யுஎஸ் :** ஓர் இணைய தள முகவரி அமெரிக் காவின் லூசியானாவைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**layer : அடுக்கு :** 1. வரைபட முறை கோப்பில் அளவை

முறையிலான தொடர்பில் தரவு களின் துணைத் தொகுதி. 2. முப் பரிமாண வரிசையில் மூன்றா வது பரிமாணம்.

**layered interface : அடுக்குநிலை இடைமுகம் :** கணினி வன்பொரு ளுக்கும் அதில் செயல்படும் பயன்பாட்டு மென்பொருளுக் கும் இடையே ஒன்று அல்லது மேற்பட்ட நிலைகளில் இருந்து செயல்படக்கூடிய நிரல்கூறுகள். முடிக்க வேண்டிய பணிகளுக் கேற்ப எடுக்க வேண்டிய நட வடிக்கைகள் வடிவமைக்கப் பட்டிருக்கும். பயன்பாட்டை யும் அது செயல்படும் வன் பொருளையும் நேரடித் தொடர் பின்றி பிரிப்பதே அடுக்குநிலை இடைமுகத்தின் நோக்கம். முடிவில் இதுபோன்ற இடை முகம், ஒரு நிரலை வெவ்வேறு வகைக் கணினிகளில் இயங்கச் செய்வது சாத்தியமாகும்.

**layered panel : அடுக்குப் பாளம்.**

**layering : அடுக்கமைத்தல்; அடுக்கு:** ஒரு தனி ஓவியத்திற் குள் வரைபடமுறை தரவுகளின் துணைக் குழுக்களைத் தொடர்பு படுத்தும் அளவைமுறைக் கோட்பாடு. மிகச் சிக்கலான கோப்பின் அனைத்துப் பகுதி களையும் பார்ப்பதன் மூலம் ஏற் படும் குழப்பத்தைத் தவிர்க்க, கணினியில் வேலை செய்யும் பகுதிகளை மட்டுமே பார்க்க இது அனுமதிக்கிறது.

**layout : வெளிப்புற அமைப்பு; இட அமைவு :** ஒட்டு மொத்த வடிவமைப்பு அல்லது திட்டம். கணினி அமைப்பு, ஓடு படம், திட்ட வரைபடங்கள், அச்சுப் பொறிக்கான வடிவமைப்பு, அட்டைபத்திகளின் வெளி யீட்டு வடிவமைப்பு, ஒரு ஆவணம் அல்லது புத்தகத்தின் வெளி அமைப்பு போன்றது.

**layout forms and screens : வடி வமைப்புப் படிவங்களும், திரை களும் :** படிவங்கள் மற்றும் உள் ளீடு/வெளியீடு ஊடக உள்ளடக் கம் மற்றும் முறைகளை உரு வாக்குவதற்கான கருவிகள். காட்சித் திரைகள் மற்றும் அறிக் கைகள் இவற்றுக்கு சான்று.

**layout setting : பக்கம் அளத்தல் :** ஒரு அச்சிடப்படும் பக்கத்தை அமைப்பதற்கான மதிப்புகளை அளித்தல். ஓரங்கள், பத்தி அளவு, மேற்பகுதி, கீழ்ப்பகுதி, தலைப்புகள், பட்டியல்கள் ஆகியவை இதற்கு எடுத்துக் காட்டுகள்.

**layout sheet : வெளி அமைப்புத் தாள்; அமைவுத் தாள் :** நிரலாக்கத் தொடர் திட்டமிடலுக்காக காட்சித்திரையில் உள்ளதைக் காட்ட வடிவமைக்கப்பட்ட

காகிதத் தொகுதி. வரைபட முறை எக்ஸ்-ஒய் ஒருங்கிணைப்புகள் மூலம் அல்லது வரிசைகள், பத்திகள் முறையில் சொற்கள் வரைபடங்களைக் காட்டுதல்.

**layout, character : எழுத்து உரு வரை.**

**lazy evaluation : சோம்பல் மதிப்பாய்வு; மடி மதிப்பாய்வு :** தேவையானபோது மட்டும் ஒரு குறிப்பிட்ட வரம்புக்குள் மதிப்பாய்வு மேற்கொள்ள அனுமதிக்கும் ஒரு நிரலாக்க நுட்பம். மிகப் பெரிய அட்டவணைகள் மற்றும் பட்டியல்கள் போன்ற தரவு கட்டமைப்புகளை சரியான நேரத்தில் திறன்மிக்க முறையில் கையாள்வதற்கு மடி மதிப்பாய்வு முறை உதவுகிறது.

**.lb : .எல்பி :** ஓர் இணைய தள முகவரி லெபனான் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**.lc : .எல்சி :** ஓர் இணைய தள முகவரி செயின்ட் லூசியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**LCD : எல்சிடி :** Liquid Crystal Display என்பதன் குறும்பெயர். சிறப்பு படிகப் பொருளின் மீது ஒளியைப் பிரதிபலிப்பதன் மூலம் எழுத்துகளும் எண்களும் தெரியும் அமைப்பு. அதிக ஒளி இருக்கும்போது மிக நன்றாகத் தெரியும். குறைந்த வெளிச்சத்தில் சரியாகப் பார்க்க முடியாது. அதன் குறைவான அளவின் காரணமாக, பாக்கெட் கணிப்பான்கள், கணினிகள், பெட்டி கணினிகள், விசைப் பலகைகள், கடிகாரங்கள் மற்றும் பல சாதனங்களில் அதிகம் பயன்படுத்தப்படுகிறது.

**LCD panel : எல்.சி.டி. பேனல் :** மேற்செலவு திட்டத்தில் ஓவர் ஹெட் புரொஜக்டரில் வைக்கக் கூடிய, உள்ளே தெரியும் படிகத் திரையில் காட்டுகின்ற கணினி வெளியீட்டை ஏற்றுக்கொள்ளும் தரவு திட்டம்.

**LCD printer : எல்சிடி. அச்சுப்பொறி :** மின் புகைப்பட முறை அச்சுப்பொறி. அது திரவ படிக மூடிகள் இயக்குகின்ற தனி ஒளி மூலத்தைப் பயன்படுத்துகிறது.

**LCD projector : எல்சிடி படப் பெருக்கி:** நீர்மப் படிகக் காட்சிப் படப்பெருக்கி என்று பொருள்படும் Liquid Crystal Display Projector என்ற தொடரின் சுருக்கப் பெயர். ஒரு கணினியின் ஒளிக்காட்சி வெளியீட்டை ஒரு நீர்மப் படிகக் காட்சி மூலம் பெரிய திரையில் படமாகக் காட்டும் கருவி.

**LCD watch : எல்சிடி. கடிகாரம் :** திரவ படிவ காட்சித்திரை கடிகாரம். வரி கட்டுப்பாடு வரையறுப்பது.

**LDL : எல்டிஎல் :** Language Description Language என்பதன் குறும்பெயர். ஒரு மொழியைப் பற்றி விவரிக்கும் பெருமொழி.

**lead : லீட் :** ஒரு மின் சுற்று அம்சத்தின் இணைப்பு.

**leaded chip carrier : லீடட் சிப்பு இடை நினைவகம் :** நான்கு பக்கங்களிலும் இணைப்புகளைக் கொண்டுள்ள சதுர சில்லு. (டி.ஐ.பியை விட அதிக உ/வெ பாதைகளைத் தருவது).

**leader : முன்னோடி; தலைப்பு :** ஒரு சுருணை காந்த நாடா அல்லது காகித நாடாவில் ஆரம்பத்தில் உள்ள நாடாவின் வெற்றுப் பகுதி.

**lead frame : முக்கியப் படம் :** ஒரு ஐ.சி.யில் உள்ள லீடை வைத்துக் கொள்கின்ற லீட் அசெம்பிளியின் பகுதி. படம் எடுத்த பிறகு அது போய்விடும்.

**leading : முன்பகுதி; வரி இடை வெளி:** ஒரு வரி அச்சின் அதிக பட்ச கீழ் அளவுக்கும் அடுத்த வரியின் அதிக பட்ச மேல் அளவுக்கும் இடையில் உள்ள செங்குத்து இடைவெளி.

**leading edge : முன்பக்க விளிம்பு; தலைப்பு முனை :** *1.* படிப்பியின் அட்டையில் முதலில் நுழையும் துளையிட்ட அட்டையின் விளிம்பு. Trailing edge-க்கு எதிர்ச் சொல். *2.* ஒளி நுண்ணாய்வில், படி நிலையில் முதலில் நுழையும் ஆவணம் அல்லது பக்கத்தின் விளிம்பு. *3.* தொழில் நுட்பத் தலைமையை உணர்த்தும் அடைமொழிச் சொல்.

**leading zeros : முன்னுள்ள பூஜ்யங்கள்:** தகவலின் எண் மதிப்பைக் கூட்டாத புலத்தை நிரப்பும் பூஜ்யங்கள். சான்றாக, *0001234* என்ற எண்ணில் உள்ள அனைத்து பூஜ்யங்களும் முன்னுள்ள பூஜ்யங்களாகும்.

**lead ion battery : ஈய அயனி மின் கலன் :** மின்சக்தியைச் சேமித்து வைக்கும் சாதனம். வேதியல் சக்தியை மின்சாரச் சக்தியாக மாற்றும் தொழில்நுட்பத்தை அடிப்படையாகக் கொண்டது. அமில ஊடகத்தில் ஒரு முனையிலிருந்து இன்னொரு முனைக்கு அயனிகள் பாய்கையில் மின் உற்பத்தி நடைபெறுகிறது.

**leadless chip carrier : லீட்லஸ் சிப்பு இடை நினைவகம் :** நான்கு பக்கங்களிலும் இணைப்புகள் உள்ள தட்டையான சதுர சிப்பு இருக்கும் இடம்.

**leaf : இலை :** மர வரைபடத்தின் முனையப் பகுதி.

**leaf nodes : இலை முனைகள் :** பிள்ளைகள் இல்லாத ஒரு மரத்தில் உள்ள முனைகள். இணையத்துக்குத் தொடர்புள்ள இதனை இணைய மொழியில் சொல்வதானால் இணைப்புகள் இல்லாத ஆவணங்கள் எனலாம்.

**leapfrog test : தாண்டும் சோதனை :** சேமிப்பு ஊடகம் முழுவதும் தன்னை இரட்டித்துக் கொள்ளும் சேமிப்பகம் கண்டறியும் நிரல்.

**learning curve : கற்கும் வளைவு :** ஒரு குறிப்பிட்ட பணியில் தொடரும் பழக்கத்திற்கு அதன் விளைவாக ஏற்படும் திறமை, வேகம், துல்லியம் போன்றவற்றுக்கும் இடையில் உள்ள உறவைக் காட்டும் வரைபடம். அனுபவ வளைவு என்றும் சில சமயம் கூறப்படும். 'சுலபமாகக் கற்கும் வளைவு' அல்லது 'நீண்ட கற்கும் வளைவு' என்று மென்பொருளைப் பயன்படுத்துபவர்கள் பேசுவதுண்டு.

**learning partner programme : கல்விப் பங்காளர் நிரல்; கல்விப் பங்காளர் நிகழ்ச்சி.**

**learning programme : கற்கும் நிரல் தொடர் :** தகுதியுள்ள எதிர்ப்புகளுடன் பல போட்டிகளைச் சந்தித்து தன் திறமையை படிப்படியாக மேம்படுத்தும் கணினி நிரல்

**lease : குத்தகை :** கணினி முறைமை ஒன்றைப் பயன்படுத்தும் உரிமையைப் பெறும் வழி. குத்தகை ஒப்பந்தத்துக்கு முதலீடு எதுவும் தேவை இல்லை. வாடகைக்கு கணினி முறைமையை எடுப்பதை விட செலவு குறைவானது.

**leased line modem : குத்தகை இணைப்பு மோடெம் :** தனியார் தொடர்புகளில் பயன்படுத்தும் அதிவேக மோடெம். டயல் செய்யும் இணைப்புகளுக்காக குறைந்த வேகத்தில் இயங்கும் மாற்று ஏற்பாடும் அதனிடம் இருக்கும்.

**leased lines : குத்தகை இணைப்புகள் :** பொதுவான அமைப்பு ஒன்றிடமிருந்து குத்தகைக்கு எடுக்கப்பட்ட ஒதுக்கப்பட்ட தகவல் தொடர்பு இணைப்புகள். துவக்கப்படாத இணைப்புகள் மற்றும் பிணைப்பு இணைப்புகள் என்று அழைக்கப்படும்.

**leasing companies : குத்தகை நிறுவனங்கள் :** குத்தகைக்கு அளிக்கும் நிறுவனங்கள். கணினிச் சாதனங்களை தயாரிப்பாளர் ஒருவரிடமிருந்து வாங்கி குத்தகைக்கு தருவதை சிறப்பாகக் கையாளும் நிறுவனங்கள்.

**least significant bit : மீக்குறை மதிப்புத் துண்மி :** ஒன்று அல்லது மேற்பட்ட பைட்டுகள் கொண்ட ஓர் இரும எண்ணில் குறைந்த மதிப்பு (value) உள்ள துண்மி (பிட்) பொதுவாக வலது ஓரத்தில் உள்ளது.

**least significant byte (LSB) : சிறும மதிப்புள்ள எண்மிகள் :** எழுத்துகள் வரிசையின் தொகுதி ஒன்றில், வலது பக்கத்தில் அதிக தூரத்தில் உள்ளதே குறைந்த முக்கியத்துவம் கொண்டது.

**least significant character : மீக்குறை மதிப்பு எழுத்து :** ஒரு சரத்தில் வலது ஓரத்தில் உள்ள எழுத்து. எல்எஸ்சி (LSC) என்பது தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**Least Significant Digit : (LSD) : குறைந்த முக்கியத்துவமுடைய எண்:** குறைந்த மதிப்பு அல்லது முக்கியத்துவம் உடைய எண். 58371 என்ற எண்ணில் குறைந்த முக்கியத்துவம் உடைய எண் 1.

**LED :** Light Emitting Diode என்பதன் குறும்பெயர். சாதாரணமாகப் பயன்படுத்தப்படும் ஆல்பா எண் வெளியீட்டு அலகு. குறிப்பிட்ட வோல்டேஜ் உள்ள மின்சாரம் அனுப்பப்பட்டால் ஒளிரக் கூடியது.

**LED display : எல்இடி. திரை:** சில கணிப்பான்கள், இலக்கமுறை கடிகாரங்கள் போன்றவற்றில் எண்கள் மற்றும் அகரவரிசை எழுத்துகளைக் காட்டும் சாதனம்.

**led printer : எல்இடி அச்சுப்பொறி :** ஒளி உமிழ் இருமுனைய அச்சுப் பொறி என்று பொருள்படும் Light Emitting Diode Printer என்ற தொடரின் சுருக்கச் சொல். எல்இடி, லேசர், எல்சிடி அச்சுப் பொறிகளின் முக்கியமான வேறுபாடு ஒளி மூலம் ஆகும். எல்இடி அச்சுப்பொறிகளில் ஒளி உமிழும் இருமுனையங்களின் (Diodes) கோவை (Array) பயன் படுத்துகின்றன.

**left : இடது :** ஒரு வாக்குவாத சரத்தின் இடது புறத்திலிருந்து எடுக்கப்பட்ட குறிப்பிட்ட நீளமுள்ள சரத்தை திருப்பி அனுப்புகின்ற பணி.

**left arrow : இடது அம்புக் குறி.**

**left justification : இடது ஓரச் சீர்மை :** சொல்செயலி, கணினிப் பதிப்பகப் பணிகளில் உரையைத் தட்டச்சு செய்து, இடப்புற ஓர இடைவெளியை ஒட்டி ஒரு சீராக வரிகளை அமைத்தல். வரிகளின் வலப்புற ஓரங்கள் சீராக இருப்பதில்லை.

**left justified : இடப்புற ஓரச் சீர்மை.**

**left justify : இடப்புற நேர்த்தியாக்கு.**

**left shift :** இடப்புறம் மாற்று: இடதுபுறத்தில் குறிப்பிட்ட இடைவெளியில் ஒரு பதிவகத்தில் சேமிக்கப்பட்டுள்ள ஒவ்வொரு துண்மியையும் மாற்றச் செய்தல்.

**legacy :** மரபுரிமை; மரபுவழி : கொஞ்ச காலத்துக்கு முன்பு நிலவிய ஆவணங்களை அல்லது தரவுகளைப் பற்றியது. ஒரு செயலாக்கத்தில் அல்லது தொழில்நுட்பத்தில் ஏற்படுத்துகிற ஒரு மாற்றத்தைக் குறிப்பாக உணர்த்துகிறது. இந்த மாற்றத்தின் காரணமாக, பழைய தரவு கோப்புகளைப் புதிய முறைமைக்கு ஏற்ப மாற்றியமைக்க வேண்டியிருக்கும்.

**legacy data :** மரபுவழித் தரவு : ஒரு நிறுவனத்தால் தொகுக்கப்பட்டு இன்னொரு நிறுவனத்தினால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஏற்றுக் கொள்ளும் நிறுவனம், இருக்கும் தரவுவை மரபுரிமையாக தகவலின் முந்தைய உடைமையாளரிடமிருந்து பெறுகிறது.

**legacy hardware :** பேற்று வன்பொருள்

**legacy system :** மரபுவழி முறைமை : ஒரு வணிக நிறுவனம் அல்லது அலுவலகத்தில் புதிய கணினி அமைப்புகளை நிறுவிய பிறகும் பயன்பாட்டில் இருக்கும் ஒரு பழைய கணினி மென்பொருள், கணினிப் பிணையம் அல்லது பிற கணினிக் கருவிகளைக் குறிக்கும். புதிய பதிப்புகளை நிறுவும் போது மரபுவழி முறைமைகளுடன் ஒத்திசைவு உள்ளதா என்பதைக் கவனிக்க வேண்டும். (எ-டு) இருக்கின்ற வணிகப் பரிமாற்ற விற்று வரவு ஏடுகளை, புதிதாக அறிமுகப்படுத்தியுள்ள விரிதாள் மென்பொருள், செலவும் நேரமும் அதிகம் எடுத்துக் கொள்ளும் புதிய வடிவ மாற்றம் எதுவுமின்றி ஏற்றுக் கொள்ளுமா? பெரும்பாலான மரபுவழி முறைமைகள் பெருமுகக் கணினி அமைப்புகளை அடிப்படையாகக் கொண்டவை. இப்போது பெரும்பாலான நிறுவனங்களில் அவை கிளையன்/வழங்கன் கட்டுமானம் மூலம் மாற்றீடு செய்யப்பட்டு வருகின்றன.

**legend :** படக்குறிப்பு : ஒரு வரைகலைப் படத்தின் அடியில் அதனை விளக்கி விவரிக்கும் உரைப்பகுதி. ஒரு வரைபடத்தில் அல்லது இயல் படத்தில் படக்குறிப்பு என்பது வரைபடத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள தோரணி அல்லது குறியீடுகளை விளக்குவதாக இருக்கும்.

**Leibniz :** லீப்னீஷ் : கோர்டிஃப் பிரைடுவான் *(1646-1716)* ஜெர்

மானிய கணித வல்லுநர். கணக்கிடும் எந்திரத்தை 1672இல் கண்டுபிடித்தார். அந்த எந்திரம் கூட்டல், கழித்தல், பெருக்கல் ஆகிய வேலைகளைச் செய்யக் கூடியது.

**Leibniz's calculator : லீப்னீஷ் கணிப்பி:** கோட்ஃபிரைடு வான் லீப்னீஷ் என்பவர் வடிவமைத்த கணக்கிடல் பொறி. பாஸ்கலின் கணிப்பிபோல கூட்டல், கழித்தல் செய்யவல்லது. கூடுதல் பற்சக்கரங்கள் சேர்க்கப்பட்டிருப்பதால் நேரடியாக பெருக்கல் வேலையையும் செய்யக் கூடியது.

**Lempel Ziv : லெம்பல் சிவ் :** ஏற்புடை சுருக்கும் நுட்பத்தினைப் பயன்படுத்தும் தரவு சுருக்கும் அல்கோரிதம்.

**lempel ziv algorithm : லெம்பெல் ஜிவ் படிமுறை :** தரவு கோப்புகளை அவற்றின் உள்ளடக்கத்திற்குப் பங்கமின்றி அளவினைச் சுருக்குவதற்காக வடிவமைக்கப்பட்ட ஒரு கணிதப் படிமுறைத் தருக்கம்.

**len : லென் :** ஒரு சரத்தின் நீளத்தைத் திருப்பி அனுப்பும் கட்டளை. LEN ('JUNE') என்ற கட்டளை 4 என்ற விடையைத் தரும்.

**length : நீளம் :** எழுத்துகளுக்கான எண்மிகள் எண்ணிக்கை அல்லது கணினி சொல் ஒன்றில் உள்ள துண்மிகள். ஒரு மாறும் சொல் பல எழுத்துகளால் ஆனது. ஆனால் சிறப்பு முடிவு எழுத்தைக் கொண்டது. நிலையான சொல் என்பது ஒரே எண்ணுள்ள துண்மிகளால், அல்லது எண்மிகளால் அல்லது ஒவ்வொரு சொல்லிலும் உள்ள எழுத்துகளால் ஆனது.

**length, block : தொகுப்பு நீளம்; தொகுதி நீளம்.**

**length, fixed block :** மாறாத் தொகுதி நீளம்.

**length, record : ஏட்டின் நீளம்.**

**length record, fixed : மாறா நீள ஏடு.**

**Leo : லியோ :** லியோன்ஸ் எண்ணும் இங்கிலாந்து நிறுவனம் உருவாக்கிய லியோனின் மின்னணு அலுவலகம் என்பதன் சுருக்கம். 1947இல் துவக்கிய ஒரு திட்டத்தின்படி அவர்கள் அலுவலகத்தின் எழுத்தர்கள் செய்யும் வேலைகளை கணினி மூலம் செய்ய கணினியை உருவாக்கினார்கள்.

**Leo - III : லியோ- III :** அதன் காலத்திற்கு மிகவும் முன்னேறிய வணிக எந்திரமான முதல் தலைமுறை கணினி.

**less than : விடக் குறைவு :** குறைவாக, சமமற்ற இரு மதிப்பீடு

களுக்கிடையிலான உறவு. குறியீட்டின் முனைப் பகுதி சிறிய எண்ணைச் சுட்டுவதாக இருக்கும். 3 less than 8 என்றால் 3 எனும் எண் எட்டைவிடக் குறைவானது என்று பொருள். ஒப்பீட்டில் மாற்று வகைப்படுத்து தலைத் தீர்மானிக்க பொதுவாகப் பயன்படுத்தப்படுகிறது.

**less time :** குறைந்த காலம்.

**letter :** எழுத்து; மடல்.

**letter bomb : கடிதக் குண்டு :** பெறுபவரின் கணினியைச் சீர்குலைக்கும் எண்ணத்துடன் அனுப்பப்படும் ஒரு மின்னஞ்சல் செய்தி. கடிதத்துடன் மறைந்துவரும் சில கட்டளைக் குறியீடுகள் பெறுபவரின் கணினியிலுள்ள கோப்புகளை முடக்கிவிடலாம். சில வேளைகளில் நச்சுநிரல் (virus) மடலில் மறைந்திருக்கலாம். பெறுபவரின் கணினியில் மறைந்திருந்து தாக்கும் ட்ரோஜான் குதிரை நச்சு நிரலாக இருக்கலாம். சில வேளைகளில் மடலின் செய்தியே மிகப்பெரிதாக இருந்து அஞ்சல் பெட்டியை நிரம்பி வழியச் செய்யலாம்.

**letter quality : அச்சுத் தரம்; அச்சு நேர்த்தி; எழுத்துத் தரம் :** அச்சிடப்பட்ட படி (பிரதி) ஒன்றின் உயர்தரம் தொடர்பானது. சிறந்த தட்டச்சுப் பொறி ஒன்றில் பெறப்பட்டதுடன் ஒப்பிடக் கூடியது.

**letter quality mode :** எழுத்துத் தர முறை.

**letter quality printer : எழுத்துத் தரமுள்ள அச்சுப்பொறி; எழுத்துத் தர அச்சடிப்பி :** சாதாரண தாளில் தெளிவான பிசிறற்ற எழுத்துகளை உருவாக்கும் அச்சுப் பொறி. பொதுவான அச்சுப் பொறி ஒன்று டெய்சி வடிவுள்ள சக்கரம் ஒன்றைப் பயன்படுத்துகிறது. அதில் எழுத்துகள் வளையக்கூடிய தண்டுகளின் முனையில் உள்ளன. சக்கரம் உயர்வேகத்தில் சுழலும்பொழுது அச்சிடு முனை பக்கத்தின்மீது நகர்கிறது. சுத்தி ஒன்று பொருத்தமான எழுத்துகளின் மீது அடிக்கிறது. அதன் மூலம் சிறந்த தட்டச்சுப்பொறியில் கிடைப்பதை விட தனித்தனியான நேர்த்தியான எழுத்துகளைக் கொண்ட உரை கிடைக்கிறது. இந்த வகை அச்சடிப்பிகளில் சில டெய்சி சக்கர முறைக்குப் பதிலாக கோல்ப் பந்து அச்சிடும் பொறியமைப்பைப் பயன்படுத்துகின்றன.

**letter shift : எழுத்து உயர்த்தி :** விசைப்பலகை விசை அல்லது விசையினால் உருவாக்கப்படும் குறியீடு. இது அடுத்து வரும்

வடிவங்களை மற்றொரு வடிவு உயர்த்தித் தோன்றும் வரை எழுத்துகளாகப் படிக்க வேண்டும் என்பதைக் குறிப்பிடுகிறது.

**letter translation :** எழுத்து மொழி மாற்றம்.

**level :** நிலை;படித்தளம்; படி நிலை; படிவம் : ஆதிக்க முறை ஒன்றில் அடிபணியும் அளவு. மரம் ஒன்றின் வேருக்கும் அதன் கணுவுக்கும் இடையே உள்ள இடைவெளி.

**level, access :** அணுகு மட்டம்; அணுகு நிலை.

**level address, zero :** பூச்சிய நிலை முகவரி; அடிநிலை முகவரி.

**level language, high :** உயர்நிலை மொழி.

**level language, low :** அடி நிலை மொழி.

**lex :** லெக்ஸ் : ஒரு மொழி படிவத்திலிருந்து வேறொரு மொழிக்கு தரவுகளை மாற்றும் தரவு மாற்றல் மென்பொருள்.

**lexical anaylsis :** சொல்லாக்க ஆய்வு: ஒரு நிரலாக்கத்தொடர் சொற்றொடரின் பல்வேறு பகுதிகளைத் தொகுப்பி அடையாளம் காணும் செயல்முறை.

**lexicographic sort :** சொல்லாக்க வகைப்படுத்தல் : அகராதியைப் போன்று அகர வரிசையில் வரிசைப்படுத்துதல். அகர வரிசை சொற்களின் மூலம் எண்கள் அமைக்கப்படும்.

**lexicon :** பேரகராதி; பேரகரமுதலி : எல்லாச் சொற்களுக்கும் விளக்கமளிக்கும் நூல்.

**lexicon analyser :** சொற்பகுப்பான்.

**LF :** எல் எஃப் : Line Feed என்பதன் குறும்பெயர்.

**LHA :** எல்எச்ஏ. : விரைவான, திறன்மிக்க இலவசமாகக் கிடைக்கும் கோப்பு சுருக்கும் பயன்பாடு.

**lharo :** லாரோ : ஹாருயாசு யோஷி சாகி உருவாக்கிய புகழ் பெற்ற இலவச சுருக்கும் நிரல் தொடர். LZW (LZ77) அகராதி முறையில் மாற்றம் செய்து பயன்படுத்தி ஹஃப் மேன் குறியீட்டு நிலையைத் தொடர்கிறது. பீ.சி., யூனிக்ஸ் மற்றும் பிற தளங்களிலும் இது இயங்க முடிவதன் காரணம் இதன் மூலம் குறியீடு இலவசமாகக் கிடைக்கிறது.

**librarian :** நூலகர் : *1.* தொழில் நுணுக்க ஆவணங்களைப் பராமரிக்கும் பொறுப்பாளர்; நிரல் தொகுப்புகளை உருவாக்குவோர்; இயக்குவோர் மற்றும் பிற ஊழியர்கள் பயன்படுத்தும்

விளக்கத் தொகுப்புகளைப் பராமரிப்பவர். 2. எல்லா கணினிக் கோப்புகள் அதாவது தகட்டுக் கற்றைகள் மின் காந்த நாடாக்களை பாதுகாப்பாக வைத்திருப்பவர். காப்பாளர், கோப்பு நூலகர், மென் பொருள் நூலகர், நாடா நூலகர் என்றும் அழைக்கப்படுகிறார்.

**library : நூலகம் :** வெளியான நிரலாக்கத் தொகுப்புகள், வழக்கமான செயல்கள், எப் பொழுதாவது நிறைவேற்றப் படும் பணிகள் ஆகியவைகள் கணினியைப் பயன்படுத்தும் ஒவ்வொருவருக்கும் கிடைக் கும் இடம். நிரலாக்கத் தொகுப்பு நூலகம் போன்றது.

**library automation : நூலகத் தானியக்கம்:** நூலக நடவடிக் கைகள் மற்றும் சேவைகளுக்கு கணினி மற்றும் பிற தொழில் நுணுக்கத்தைப் பயன்படுத்துதல்.

**library function : உள்ளிணைப்பு செயற்கூறு; நூலகச் செயற் கூறு.**

**library manager : நூலக மேலாளர்:** ஒரு இயக்க முறைமையில் சேமிக்கப்பட்ட நிரல் தொகுப்பு களைப் பராமரிக்கும் நிரலாக்கத் தொகுப்பு.

**library routine : நூலக வாலாயம் :** நிரலாக்கத் தொகுப்பு நூலகம் ஒன்றில் கையாளப்படும் சோதிக்கப்பட்ட வழமை அல்லது நிரல்.

**.lib.us : .லிப்.யுஎஸ் :** ஓர் இணைய தள முகவரி, அமெரிக்க நாட் டிலுள்ள ஒரு நூலகத்துக்குரியது என்பதைச் சுட்டும் பெரும் புவிப் பிரிவுக் களப்பெயர்.

**licence policy : உரிமக் கொள்கை.**

**licence agreement : உரிம ஒப்பந்தம்:** ஒரு மென்பொருள் விற்பனையாளருக்கும் ஒரு பயனாளருக்கும் இடையேயான ஒரு சட்ட ஒப்பந்தம். மென் பொருள் தொடர்பாக பயனா ளருக்கு இருக்கும் அனைத்து உரிமைகளையும் இந்த ஒப்பந் தம் குறிப்பிடும். இந்த உரிம ஒப் பந்தம் பயனாளர் மென்பொருள் தொகுப்பை பிரிக்கும்போதே நடைமுறைக்கு வந்துவிடுகிறது.

**license contrast : உரிம எதிர் மறை :** மென்பொருள் ஒன்றைப் பயன் படுத்துவோர் அதனைத் தன்னுடைய கணினியில் பயன் படுத்த அங்கீகாரம் வழங்கும் சிறுதாள்.

**licensing key : உரிம விசை; உரிமத் திறவி; உரிமத் திறவு கோல் :** உரிமம் பெற்ற ஒரு மென்பொருளை நிறுவும்போது, நுழைசொல்லாகப் பயன்படும் ஒரு சிறிய எழுத்துச் சரம். உரிமம் பெற்ற மென்பொருளை

சட்டத்துக்குப் புறம்பாக நகலெடுப்பதைக் குறைக்கும் நோக்கத்தில் உரிமத் திறவுகோலான இந்நுழை சொல் ஒரு பாதுகாப்புச் சாதனமாக பயன் படுத்தப்படுகிறது.

**life cycle : வாழ்க்கைச் சுழற்சி; ஆயுள் சுழற்சி :** நிரல் தொகுப்பு அல்லது முறைமை ஒன்றின் தோற்ற வழி. துவக்கக் கருத்து, உருவாக்கம், அமல் மற்றும் மாற்று ஒன்று உருவாக்கப்படும் வரை அல்லது இனிமேல் பயன் படாது என்ற நிலை ஏற்படும் வரை பராமரிப்பு.

**life testing : ஆயுள் சோதனை; வாழ்க்கைச் சோதனை :** களத்தில் நம்பகத் தன்மையை உறுதி செய்ய மின்னணு பாகங்களை விரைந்து சோதித்தல்.

**LIFO : லிஃபோ :** Last In First Out என்பதின் குறும்பெயர். இம் முறையில் தான் பெரும்பாலான நுண்வகைப்படுத்தி நிரல் தொகுப்பு முறைமைகள் செயல் படுகின்றன. கடைசியாக அனுப்பப்பட்ட தரவு அல்லது கட்டளை நிரல் தான் முதலில் பெறப்படுகிறது.

**ligature : லிகாச்சர் :** (உடலால் தொடக்கூடிய) தனி அலகாக வடிவமைக்கப்பட்ட இரண்டு அல்லது மேற்பட்ட தட்டச்சு முக எழுத்துகள்.

**light dots : ஒளிப்புள்ளிகள்.**

**light emitting diode : ஒளியுமிழ் இரு முனையம் :** அதற்கு மின்சக்தி அளிக்கப்படும்போது



ஒளியுமிழ் இரு முனையம்

ஒளியை உமிழும் ஒரு மின்னணு சாதனம். 'மின்சாரம் இயங்கு கிறது' என்பதை உணர்த்தும் குறியீடுகளாக கணினிகளிலும் கணினி மென்பொருளிலும் பயன்படுத்தப்படுகின்றன.

**lightest : மிகு ஒளிர்மை; மிகவும் லேசான.**

**light guide : ஒளி வழிகாட்டி; ஒளி வழிப்படுத்தி :** ஒளி இழைக் கம்பி போன்ற ஒளியைக் கடத்த வடிவமைக்கப்பட்ட கம்பி.

**lighting : ஒளியூட்டு.**

**lightness : வெளிர்மை :** ஒரு குறிப்பிட்ட வண்ணத்தில் உள்ள ஒளி அல்லது இருள்.

**light pen : ஒளிப் பேனா :** ஓர் உள்ளீட்டுச் சாதனம். கணினித் திரையுடன் இணைக்கப்பட்ட ஓர் எழுத்தாணி. இந்த எழுத்தாணியைக் கொண்டு திரையில் காட்சிப்படுத்தப்பட்டுள்ள சின்னங்களைச் சுட்டி, எழுத்தாணியின் பக்கவாட்டிலுள்ள ஒரு விசையை அழுத்தித் தேவையானதைத் தேர்வு செய்யலாம். அல்லது எழுத்தாணியால் திரைப்பரப்பைத் தொட்டுத் தேர்வு செய்யலாம். இது, சுட்டி மூலம் தொட்டுச் சொடுக்குவதற்கு இணையானது.

**light sensitive : ஒளி உணர்; ஒளி உணரி.**

**light sensitive screens : ஒளியுணர்வுத் திரைகள்.**

**light source : ஒளி மூலம் :** கணினி வரைகலையில் வருவது. முப்பரிமாண பொருளின்மீது ஒளியின் விளைவை போலியாக உருவாக்க பயன்படுத்தப்படுகிறது. சில நிரல் தொடர்களில் பல் ஒளி மூலங்களைக் கணிப்பிட முடியும்.

**lightwave system : ஒளி அலை அமைப்பு :** மிக அதிக வேகத்தில் ஒளி இழைகள் மூலம் ஒளித் துடிப்புகளை அனுப்பும் சாதனம் (நொடிக்கு ஜி-பிட்வரிசை). நகரங்களுக்கிடையிலான தொலைபேசி இணைப்புகள் ஒளி அலை அமைப்புகளாக மாற்றப்பட்டுள்ளன.

**Light Weight Directory Access Protocol : குறைச்சுமை கோப்பக அணுகு நெறிமுறை :** இது ஒரு பிணைய நெறிமுறை. டீசிபீ/ஐபீ நெறிமுறையுடன் இணைந்து செயல்படும்படி வடிவமைக்கப்பட்டது. எக்ஸ்-500 போன்ற படிநிலைக் கோப்பகங்களில் தகவலைத் தேடிப் பெறப் பயன்படுகிறது. கணினியிலுள்ள தரவு குவிப்பைத் தேடி பயனாளர் பெயர், மின்னஞ்சல் முகவரி, பாதுகாப்புச் சான்றிதழ் அல்லது தொடர்புக்கான பிற தகவல் இவை போன்ற ஒரு குறிப்பிட்ட தகவல் குறிப்பைப் பெறுவதற்கான ஒற்றைக் கருவியை இந்த நெறிமுறை பயனாளர்களுக்கு வழங்குகிறது.

**Light Weight Internet Person Schema : குறைச்சுமை இணைய நபர் திட்ட வரை :** குறைச்சுமைக் கோப்பக அணுகு நெறிமுறையில், பயனாளர் பெயர்கள் மற்றும் மின்னஞ்சல் முகவரிகள் போன்ற தகவலைப் பெற்றுத் தருவதற்கான வரன்முறை.

**LILO :** Last in Last out என்பதற்கான குறும்பெயர். வரிசைப் பட்டியல் அல்லது ஒன்றிலிருந்து கடைசியாக இடப்பட்டதை

கடைசியாகப் பெறும் சேமிப்பு அல்லது பெறும் முறை.

**LIM EMS : லிம் இஎம்எஸ் :** லோட்டஸ் / இன்டெல் / மைக்ரோசாஃப்ட் விரிவாக்க நினைவக வரன்முறை என்று பொருள்படும் Lotus/Intel/Microsoft Expanded Memory Specification என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**limit check : வரம்புச் சோதனை :** ஒரு குறிப்பிட்ட எல்லை வரம்புக்குள் மதிப்பீடுகள் அமைகின்றனவா என்பதை தரவு களம் ஒன்றின் மதிப்பீட்டை சோதனை செய்யும் உள்ளீட்டுக் கட்டுப்பாட்டு உத்தி.

**limiter : வரம்பி.**

**limiting operation : வரம்பு இயக்கம் :** முறைமை ஒன்றில் மிகச் சிறிய திறன் அல்லது மிகக் குறைவான வேகம் உள்ள செயல். மாற்று வழி எதுவும் இல்லாத நிலையில் குறைவான திறன் உள்ள செயல் உள்ள நடவடிக்கை காரணமாக அந்த முறைமையின் முழுத்திறனையும் மிகக்குறைவான திறன் உடைய வரம்பு இயக்கத்தின் திறனாக வகைப்படுத்தலாம். Bottle neck என்பதற்கு ஒத்தது. Bound என்பதைப் பார்க்கவும்.

**limit to list : வரம்புப் பட்டியல்.**

**LIMS : லிம்ஸ் :** லிம்ஸ் எம்ஸ் வரையறைகளுடன் கூட்டுறவில் உருவான லோட்டஸ் இன்டெல் மைக்ரோசாஃப்ட்.

**Linda : லின்டா :** சி, சி++ போன்ற மொழிகளுடன் சேர்க்கப்படும் இணை செயலகப் பணிகளின் தொகுதி. செயலாக்கங்களுக்கிடையே தரவுகளை உருவாக்கி, மாற்றியனுப்ப இது அனுமதிக்கிறது.

**line : வரி; இணைப்பு :** *1.* கணினி வரைபடம் ஒன்றில் முடிவு இல்லாமல் ஜியோமிதியில் இரு திசைகளில் நீளும் புள்ளிகள் அல்லது கோடுகள். கணிதவியலில் வேறு வழியாகக் கூறப்படாதவரை இக் கோடுகள் நேர் கோடுகள் என்று கூறப்படும். 2. பெரும்பாலான நிரல் தொகுப்பு மொழிகளில் ஒரு கோடு கண்டறியக் கூடிய எண் ஒன்றில் ஒரு கோடு துவங்குகிறது. மேலும் ஒன்றுக்கு மேற்பட்ட உரைகளைக் கொண்டதாக உள்ளது. சில நேரங்களில் ஒரு கட்டளைக்கு ஒன்றுக்கு மேற்பட்ட கோடுகள் தேவைப்படுகின்றன. 3. தரவு தொடர்பில் எந்த ஒரு வகையான வழி குறிப்பாக தொலைபேசி இணைப்புகள்.

**line adapter : கம்பி ஏற்பி:** தகவல் தொடர்புகளில் பயன்படும்

மோடெம் போன்ற ஒரு சாதனம். தகவல் தொடர்புக் கம்பியில் அனுப்புவதற்கேற்ற வடிவில் டிஜிட்டல் சமிக்கையை மாற்றுகிறது. இணை/தொடர் மாற்றுதலையும், குறிப்பேற்றம் மாடுலேஷன், குறிப்பிறக்கத்தையும் (டீ மாடுலேஷன்) மாற்ற உதவுகிறது.

**line analyzer : கம்பி ஆய்வர் :** ஒரு தகவல் தொடர்புக் கம்பி அனுப்புவதைக் கண்காணிக்கும் சாதனம்.

**linear : நேரான; அடுத்தடுத்த :** வரிசையான அல்லது ஒரு நேர்க்கோடான வரைபடத்தைக் கொண்டிருப்பது.

**linear addressing architecture : தொடரியல் முகவரியிடல் கட்டுமானம் :** ஒற்றை முகவரி மதிப்பைக் கொண்டு ஒரு தனிப்பட்ட நினைவக இருப்பிடம் எதையும் நுண்செயலி அணுகுவதைச் இயல்விக்கும் கட்டுமானம். இதன்படி, முகவரியிடத்தகு நினைவக எல்லை முழுமையிலும் ஒவ்வொரு நினைவக இருப்பிடங்களும் ஒரு தனித்த வரையறுத்த முகவரியைப் பெற்றுள்ளன.

**linear IC : நேர்வழி ஒருங்கிணைந்த சுற்று :** டிஜிட்டல் ஒருங்கிணைந்த சுற்றுக்கு எதிரானது.

**linear list : தொடரியல் பட்டியல் :** உறுப்புகளின் வரிசைமுறைப்படுத்தப்பட்ட ஒரு பட்டியல். இப்பட்டியலில் முதல் உறுப்பு தவிர ஏனைய உறுப்புகள் அனைத்தும் வேறோர் உறுப்பினைத் தொடர்ந்து அடுத்ததாக இடம் பெறும். கடைசி உறுப்பு தவிர ஏனைய உறுப்புகள் அனைத்தும் வேறோர் உறுப்பின் முகவரியைப் பெற்றிருக்கும்.

**Linear Programming (L.P) : நீள் நிரலாக்கத் தொகுப்பு தயாரிப்பு :** ஒரு பிரச்சினைக்குத் தீர்வாகச் சிறந்த வழி இல்லாத நிலையில் மிகச் சிறந்த கலவை ஒன்றைக் கண்டுபிடிக்கும் உத்தி. இந்த உத்தி குறைந்த செலவில் சிறந்த சத்துள்ள மிக அதிகமான கலோரிகளைத் தரும் உணவுக் கலவையைத் தயாரிப்பது எப்படி என்பதற்குப் பயன்படும். மனிதர்களால் இதற்குத் தீர்வு காண்பதற்கு நீண்ட நேரம் ஆகும் என்பதால் இச்சமயங்களில் கணினி வழக்கமாகப் பயன்படுத்தப்படுகிறது.

**linear search : நீள் தேடல் :** முதல் மூலகத்தில் துவங்கும் தேடல்; பொருந்தக்கூடிய விசை ஒன்றைக் கண்டுபிடிக்கும்வரை அல்லது வரிசையின் இறுதியை அடையும்வரை ஒப்பிடல் தொடர்கிறது.

**linear structure : வரிசை முறை அமைப்பு :** *1.* தரவுத் தள நிர்வாக முறைமையில் ஒரு வகையான கோப்பு அமைப்பு முறை. இதில் ஒவ்வொரு முதன்மை ஆவணமும் ஒரு துணை ஆவணத்தைத் தான் பெற முடியும். முதன்மை ஆவணம், நிரம்பி வழியும் பொழுது கொள்கலனாக துணை ஆவணம் செயல்படுகிறது. 2. புள்ளி விவர ஆவணங்களை நிரல்நிறையாக வரிசைப் படுத்துதல்.

**linear video : வரிசை முறை ஒளிக் காட்சி :** ஒளிக்காட்சி நாடா அல்லது ஒளிக்காட்சி வட்டை தொடர்ந்து கீழிலிருந்து மேலாகச் சுற்றுவது.

**line art : கோட்டு ஓவியம்.**

**line at a time printer : ஒரு வரி அச்சுப்பொறி :** ஒரு நேரத்தில் ஒரு வரியை அச்சிடும் அச்சுப் பொறி.

**line balancing : வரி சமன் செய் தல்; தடம் சமனாக்கல் :** உற்பத்திச் சூழல்களில் பணிகள் கணினி வரைபட பணி நிலையங்களுக்கு சம அளவில் ஒதுக்கி அவற்றின் திறனை உயர்த்துகிற நிர்வாக உத்தி.

**line - based browser : வரி அடிப் படையிலான உலாவி :** ஒரு வலை உலாவி. இதில் வரைகலைப் படங்களைக் காண இயலாது. உரைப்பகுதிகளை மட்டுமே காணமுடியும். செல்வாக்குப் பெற்ற வரி அடிப்படையிலான உலாவி லின்ஸ்க் (Lynx) ஆகும்.

**line cap : வரி முடி :** குறிப்பாக போஸ்ட்ஸ்கிரிப்ட்டுக்கு ஒத்தியல்பான அச்சுப் பொறியில் ஒரு வரித் துண்டம் அச்சிடப்படும் போது அவ்வரித் துண்டம் முடித்து வைக்கப்படும் முறை.

**line chart : கோட்டு வரைபடம் :** வணிகத் தரவுகளை x, y அச்சுகளிடையே ஒரு கோடாகக் காட்டுதல்.

**line circuit : வரிச்சுற்று :** சுற்றின் இயற்பியல் வழி தரவு தொடர்பு இணைப்பைப் போன்றது.

**line concentration : இணைப்புக் குவியமாக்கம்/ஒருமுகமாக்கம் :** பல்வேறு உள்ளீட்டுத் தடங்களைக் குறைந்த எண்ணிக்கையிலான வெளியீட்டுத் தடங்களில் செலுத்துவதற்கான வழிமுறை.

**Line counter : வரி எண்ணி :** அச்சிடப்பட்ட வரிகளின் எண்ணிக்கையைக் கூட்டி பக்கம் அச்சிட வேண்டிய இடத்தை முடிவு செய்யப் பயன்படுத்தப்படும் எண் மாறிலி.

**line dot matrix printer : வரிப் புள்ளி அச்சுப்பொறி :** டாட் மாட்ரிக்ஸ் முறையை பயன்படுத்தும் வரி அச்சுப்பொறி.

**line drawing : வரை கோட்டுப் படம் :** வடிவத்தின் புற விளிம்பை இடையீடற்ற கோட்டினால் குறிப்பதின் மூலம் பொருள்களை படமாக வரையும் முறை.

**line driver : வரி இயக்கி :** தனியார் கம்பிகள் வழியாக இணைக்கப்படும் முகப்புகளுக்கும் கணினிகளுக்கும் இடையில் உள்ள அனுப்பும் தொலைவை நீடிக்கப் பயன்படுத்தும் சாதனம். டிஜிட்டல் டிரான்ஸ்மிஷனுக்குப் பயன்படுத்தப்படுவது. கம்பியின் ஒவ்வொரு முனையிலும் தேவைப்படுகிறது.

**line editor : வரி தொகுப்பி :** ஒரு நேரத்தில் ஒரு வரி செய்தியை உருவாக்கி மாற்ற அனுமதிக்கும் எளிமையான தொகுப்பு நிரலாக்கத்தொடர்.

**Line Feed (LF) : வரிசை உள்ளீடு; வரியூட்டம் :** ஒவ்வொரு வரியாக அச்சாளரின் தாளை முன் நோக்கித் தள்ளும் செயல்.

**line filter : வரி வடிகட்டி :** மின்சாரக் கம்பியில் குறுக்கிடும் மின்காந்த இடையீடுகள்ள சரி செய்யும் கருவி.

**line frequency : வரி அலை வரிசை :** கம்பியின் மூலம் ஒரு நொடியில் அலை அல்லது சில சமிக்கைகளின் தொகுதி எத்தனை தடவைகள் அனுப்பப்படுகிறது என்பதைக் குறிப்பிடுவது.

**line generator : வரிசை உருவாக்கி :** தன்னிச்சையான ஒழுங்குமுறையில் கணினி வரைபட முறையில் வரிகளை உருவாக்கும் வன்பொருள் அல்லது மென்பொருள்.

**line graph : கோட்டு வரைபடம் :** ஒரு தரவு விவரத் தொகுதியின் அனைத்துத் தரவுகளையும் இணைக்கும் அல்லது இணைக்க முயலும் வரைபடம். ஒரு குறிப்பிட்ட காலத்தில் தரவு தொகுதி ஒன்றின் போக்குகளைக் காட்ட கோட்டு வரைபடம் பயன்படுத்தப்படலாம்.

**line height : வரி உயரம் :** ஒரு வரிசை அச்சுக்களின் உயரம். ஒரு அங்குல உயரத்துக்கு எத்தனை வரிசைகள் என்ற அலகில் கணக்கிடப்படுகிறது.

**line hit : கம்பி பாதிப்பு :** சமிக்கையில் தடை ஏற்பட்டு தகவல் தொடர்புக் கம்பியில் அனுப்பப்படும் தரவுகளில் பிழை ஏற்படுதல்.

**line join : வரி இணைப்பு :** குறிப்பாக ஒரு போஸ்ட்

ஸ்கிரிப்ட்டுக்கு ஒத்தியல்பான அச்சுப்பொறியில் இரண்டு வரித் துண்டங்கள் அச்சிடப்படும் போது இணைக்கப்படும் முறை.

**line level : கம்பி நிலை :** தரவு தொடர்பு வழித்தடத்தில் சமிக்கையின் பலம். டெசிபல் அல்லது நெப்பர் முறையில் அனுப்பப்படுகிறது.

**line load : இணைப்புச் சுமை :** *1.* தகவல் தொடர்பில், ஒரு தகவல் தொடர்புத் தடத்தின் உச்சக் கொள்திறனுக்கும் நடப்பில் பயன்பாட்டில் உள்ள தகவல் தொடர்பு இணைப்புகளுக்கும் இடையேயான விகிதமாக அளக்கப்படுகிறது. 2. மின்னணுவியலில் ஒரு மின்னிணைப்பு சுமந்து செல்லும் மின்னோட்டத்தின் அளவு.

**line noise : இணைப்பு இரைச்சல் :** ஒரு தகவல் தொடர்புத் தடத்தில் பரிமாறிக் கொள்ளப்படும் தகவலுக்கு இடையூறாகக் கலக்கும் போலிச் சமிக்கைகள். தொடர்முறை (analog) இணைப்பில் இரைச்சலானது உண்மையான கேட்பொலித் தொனி போலவடிவெடுக்கும். ஓர்இலக்க முறை (digital) இணைப்பில், இரைச்சல், தரவுவைப் பெறும் முனையிலுள்ள சாதனம் சரியான தரவுவைப் பெறுவதற்கு இடையூறாக இருக்கும்.

**line number : வரிசை எண்; வரி எண்:** பேசிக் போன்ற நிரல் தொகுப்பு மொழிகளில், அடையாளம் காணலுக்காக ஆதார நிரல் தொகுப்பின் ஒரு வரியின் துவக்கமாக அமைகிற எண், எண் அடையாள வில்லை.

**line of sight : பார்க்கும் கம்பி :** கம்பித் தொடர்பில்லாத நுண்ணலை (Microwave) தகவல் தொடர்பில் அனுப்பும், வானலை (ஆன்டெனா) வாங்கிக்கும் பெறும் வானலை (ஆன்டெனா) வாங்கிக்கும் இடையே தடையேதும் இல்லாமல் அமைப்பது.

**line of sight transmission : நேர் பார்வைச் செலுத்துகை.**

**line out : வெளிசெல் இணைப்பு.**

**line plot : வரி இடம் :** தரவு புள்ளிகள் வெளிப்படும் வரைபடம் மற்றும் புள்ளிகளை இணைக்கும் கோடுகள்.

**line printer : வரி அச்சடிப்பி; வரி அச்சுப்பொறி; வரிவாரி அச்சடிப்பி:** ஒரே நேரத்தில் ஒரே வரியை வெளியீடாக வழங்கும் புறநிலை அச்சிடு கருவி.

**line printer control : வரி அச்சுக் கட்டுப்படுத்து கருவி :** எழுத்து அச்சுகளை, புடைப்புகளை தானியங்கிக் கட்டுப்பாட்டை வழங்குகிற சாதனம் மற்றும்

குறிப்பிட்ட அச்சுப் பொறிக் கான நேரத்தை நிர்ணயிப்பது.

**line printer controller : வரி அச்சுக் கட்டுப்படுத்தி.**

**line printing : வரி அச்சிடல் :** ஒரு வரியிலுள்ள எழுத்துகள் அனைத் தையும் ஒரே அலகாக அச்சிடல்.

**line segment : வரித் துணுக்கு :** நீண்ட வரி ஒன்றின் பகுதி அதன் இருமுனைப் புள்ளிகளால் வரை யறுக்கப்படுகிறது.

**line space : வரி இடைவெளி :** அச்சுக் காகிதம் நகரும்போது வரிகளுக்கிடையில் ஏற்படும் இடைவெளி. தரமான வரி இடை வெளி 1/6 அங்குலம். ஆனால், மென்பொருள் கட்டளைகளின் மூலம் இதை மாற்றலாம்.

**line speed : வரி வேகம் :** ஒரு குறிப்பிட்ட வழியில் சமிக்கை களை அனுப்பக்கூடிய உயர்ந்த பட்ச வேக விகிதம் வழமையாக செய்தி வேகம் (Baud) அல்லது விநாடிக்கு இத்தனை துண்மிகள் என்று கணக்கிடப்படுகிறது.

**line squeeze : வரி சுருக்குதல் :** அஞ்சல் சேர்த்தலில் பெயர், முக வரிகளில் வெற்று வரி வரும் போது செய்தியில் செய்யப்படும் செங்குத்தான சரிப்படுத்தல்.

**line style : வரிக் குறியீடு; கோட்டு வகை :** கணினி வரைபடத்தில் வரைபட முறைமையில் ஒரு வரியை இடைக்கோடு, தடித்த கோடு அல்லது புள்ளிகளால் குறிப்பிடும் முறை.

**line surge : மின்சார வெள்ளம்; மின் தொடர் எழுச்சி :** திடீரென்று உயர்ந்த வோல்ட் மின்சாரம் பாயும் நிலை. உயர் வோல்ட் மின்சாரம் திடீரென்று குறுகிய காலத்திற்குப் பாய்வதால், தவறான பதிவு, தவறான செயல் பாடு, தரவுகள் இழத்தல், சில சமயங்களில் கணினியில் மிகவும் நுண்ணிய இணைப்பு கள், தரவு உள்ளீட்டு முனையங் கள், தரவுப் பரிமாற்ற சாதனங் களின் அழிவு முதலியன ஏற்படு வதுண்டு. திடீரென்று மின்சார டிரான்ஸ்பார்மர்களை இயக்குதல் பிற துணைக் கருவிகள் இயக்கு தல் மின்னல் மற்றும் பிற காரணங்களால் ஏற்படு வதுண்டு. உயர் வோல்ட் மின் சாரம் திடீரென்று பாய்வதைத் தடுக்கும் சாதனங்களால் கருவி களைப் பாதுகாக்கலாம்.

**line voltage : மின் இணைப்பு அழுத்தம் :** மாற்று மின்சார அழுத்தம். அவற்றில் உள்ள செருகு சாதனக் கருவியிலிருந்து வருவது.

**line width : கோட்டின் பருமன் ; கோட்டுத் தடிப்பு :** வரைபட

முறைமையில் ஒரு கோட்டின் இயற்பியல் பருமன்.

**line-protocol (line discipline) : வரி மரபொழுங்கு :** தகவல் தொடர்பு இணைப்பின் இரண்டு முனைகளும் தங்களுக்குள் புரிந்து கொள்கிற முறையில் தரவை அனுப்புமாறு உறுதி செய்யும் துண்மி வரிசையின் தொகுதி.

**lines of code : குறிமுறை வரிகள்; குறியீட்டு வரிகள் :** ஒரு நிரலின் நீளத்தை அளவிடும் முறை. சூழ்நிலையைப் பொறுத்து, ஒரு குறிமுறை வரி என்பது நிரலின் ஒவ்வொரு வரியையும் குறிக்கலாம் (வெற்று வரிகள், விளக்கவுரை உட்பட). சிலவேளைகளில் கட்டளை வரிகளை மட்டும் குறிக்கும். அல்லது ஒரு கட்டளைக் கூற்றினைக் குறிக்கலாம்.

**lines per minute (lpm) : நிமிடத்துக்கான வரிகள் :** வரி அச்சுப் பொறி ஒன்றின் வேகத்தை நிமிடத்துக்கு இத்தனை வரிகள் என்று குறிப்பிடுவதுண்டு.

**lineup icons : சின்னங்களை வரிசைப்படுத்து.**

**linguistic knowledge : மொழியியல் அறிவு.**

**linguistic theories : மொழியியல் கோட்பாடுகள்.**

**linguistics : மொழியியல் :** மனித மொழிகளைப் பகுப்பாய்வு செய்தல். மொழியியலுக்கும் கணினி அறிவியலுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு உள்ளது. இலக்கணம், சொல் தொடர் அமைப்பு, மொழிக் கொள்கை மற்றும் இயற்கை மொழிச் செயலாக்கம் ஆகியவை இரு இயல்களுக்கும் பொது.

**Link : இணைப்பு; தொடர்பு :** தரவு பரிமாற்றத்தில் ஒரு இடத்திற்கும் மற்றொன்றிற்கும் இடையிலான இயற்பியல் இணைப்பு. அதன் பணி தரவுகள் மற்றும் செயற்கைகோள் தொடர்புகளை இணைத்தல்.

**link adapter : தொடுப்புத் தகவி.**

**linkage : இணைப்பு :** இரு தனித்தனி குறியீட்டு வாலாயங்களை இணைக்கும் குறியீட்டு முறைமை. நிரல் தொகுப்பு ஒன்றுடன், அதன் பயன் பாட்டின்போது கையாளப்படும் துணை வாலாயம் ஒன்றை இணைத்தல். calling sequence என்பதைப் பார்க்கவும்.

**linkage editor : இணைப்பு தொகுப்பி; இணைப்புப் பதிப்பி :** தனித்தனியாக தொகுக்கப்பட்ட நிரல் தொடர் பகுதிகள் பலவற்றை ஒன்றாக்கி ஒரு கூறை 'மாடுல்' உருவாக்கக்கூடிய நிரல்

தொடர். நிரல் தொடர் மாடுல் கூறுகளிலும், துணை வாலாய (சப்ரொட்டீன்) நூலகங்களிலும் உள்ள குறிப்புகளை இது முறையாக ஒன்றுபடுத்துகிறது. இதன் வெளியீடு கணினியில் ஒட்டுவதற்குத் தயாரான ஏற்றும் கூறாகக் கிடைக்கும்.

**link attribute** : தொடுப்புப் பண்புக் கூறு.

**link designator** : தொடுப்புக் குறி சுட்டி.

**link edit** : இணைப்புத் தொகுதி : ஒட்டுவதற்கான நிரலாக்கத் தொடரை உருவாக்க இணைக் கும் தொகுப்பியைப் பயன் படுத்துவது.

**linked list** : தொகுப்புப் பட்டியல்; தொகுக்கப்பட்ட பட்டியல் : தரவு மேலாண்மையில் பல வகை யறாக்கள் பட்டியலிடப்பட்டு ஒவ்வொன்றும் அடுத்ததைக் காட்டுவதாக அமைக்கப்படும். தொடர்ந்து பரவாத சேமிப்பு இடங்களில் வரிசை முறை யிலான தரவுத் தொகுதிகளை தொகுக்க இது அனுமதிக்கிறது.

**Linked Talk Manager** : தொடுப் புடைய அட்டவணை மேலாளர்.

**linker** : இணைப்பாளி; இணைப்பி: பிற நிரல் தொகுப்புகளை அல் லது நிரல்தொகுப்புகளின் பகுதி களை இணைக்கும் நிரலாக்கத் தொகுப்பு. தனித்தனியான நிரல்தொகுப்பு கற்றைகளை ஒரு செயல்படு நிரல் தொகுப் பாக இணைக்கிறது.

**linking loader** : இணைப்பேற்றி : பல நிரல் தொகுப்புப் பகுதி களை இணைக்கக்கூடிய நிர்வாக நிரல் தொகுப்பு. அதன் மூலம் அவை கணினியில் ஒரு அல காகப் பயன்படுத்த முடியும். முக்கியப் பணிக்குத் துணைப் பணிகள் எளிதாகக் கிடைக்கக் கூடியதாக ஆக்கும் பயனுள்ள மென்பொருள் துணுக்கு.

**link language** : தொடர்பு மொழி.

**link list** : இணைப்புப் பட்டியல்.

**link name** : தொடுப்புப் பெயர்

**link register** : இணைப்புப் பதி வேடு; இணைப்புப் பதிவகம் : தொகுப்பியின் நீட்சியாகச் செயல்படும் ஒரு துண்ம பதி வேடு. இது சுழற்சி அல்லது பணி நிகழ்வின்போது பயன் படுகிறது. கைப் பதிவேடு என்றும் கூறுவார்கள்.

**link tables** : அட்டவைணகளைத் தொடு.

**link testing** : இணைப்பு சோதித் தல் : ஒரு புதிய கணினி அமைப்பு ஏற்கெனவே பயன்பட்டுவரும் ஒன்றுடன் சேருவதற்கு ஏற்றதா

என்பதை ஆராயும் செயல் முறை.

**link time : இணைப்பு நேரம்; தொடுப்பு நேரம்** : *1.* தொடுப்பு உரு வாக்கி இயக்குறு நிரலாய் மாற்று வதற்கான நேரம். *2.* தொடுப்பு உருவாக்குகின்ற நேரம்.

**link time binding : தொடுப்பு நேர பிணைப்பு** : மொழி மாற்றப் பட்ட பல்வேறு நிரல் கோப்பு களை ஒன்றாகத் தொடுத்து ஓர் இயக்குறு நிரலாக மாற்றும் நேரத்தில் ஓர் அடையாளங் காட்டி (identifier) க்கான மதிப்பை இருத்தும் பணியைச் செய்தல். இதுபோன்ற பணியை மூல நிரலை மொழிமாற்றம் செய்யும் போதோ, நிரலின் இயக்க நேரத்திலோ செய்ய முடியும்.

**links : இணைப்புகள்** : கணினி இணையம் ஒன்றில் தரவுத் தொடர்பு வழிகள்.

**linotronic : லைனோடிரானிக்** : அமெரிக்காவின் லைனோடைப் கார்ப்பரேஷன் உருவாக்கி உற்பத்தி செய்யும் அச்செழுத் துக் கருவியின் உரிமை பெற்ற தர வகை. லைனோ டிரானிக் *1200 - 2500* டிபிஐ அளவுக்கு மிக அதிக தெளிவு உள்ளது. வணிக முறையில் அச்சிடும் இடங் களில் அதிகமாகப் பயன் படுத்தப்படுகிறது.

**linpack : லின்பேக்** : எண்முறை லீனியர் அல்ஜீப்ராவுக்கான ஃபோர்ட்ரான் நிரலாக்கத் தொடர்களின் தொகுப்பு. கணினியின் மிதக்கும் புள்ளி செயல்பாட்டினை சோதனை செய்யப்படும் 'பெஞ்ச் மார்க்' நிரலாக்கத் தொடர்களை உரு வாக்க இது பயன்படுத்தப் படுகிறது.

**linus : லைனஸ்** : லைனஸ் டோர் வால்ட்ஸ் நிறுவனம் உருவாக் கிய x86 சிப்பு தொகுதிக்கான இலவசமாகக் கிடைக்கும் யூனிக்ஸ் இயக்க அமைப்பு.

**linux : லினக்ஸ்** : *80386* மற்றும் மேம்பட்ட நுண்செயலிகளைக் கொண்ட பீசிக்களுக்காக உரு வாக்கப்பட்ட, யூனிக்ஸ் சிஸ்டம் IV வெளியீடு *3.0*-ஐ அடிப்படை யாகக் கொண்ட முறைமைக் கருவகம் (system kernel). ஸ்வீடன் நாட்டைச் சேர்ந்த லினஸ்டோர் வால்டு என்பவர் உருவாக் கினார். உலகிலுள்ள எண்ணற்ற ஆர்வலர்களும் லினக்ஸ் உரு வாக்கத்தில் பங்கு கொண்டுள்ள னர். இணையம் வழியாக மூல வரைவுடன் இலவசமாக வினி யோகிக்கப்படுகிறது. இலவசம் மட்டுமின்றி மூல வரைவினைப் பெற்று எவர் வேண்டுமானா லும் மாற்றங்கள் செய்து மேம் படுத்தலாம். சில நிறுவனங்கள்

பின்னுதவிக்கு மட்டும் கட்டணம் என லினக்ஸை வினியோகிக்கின்றன. கட்டறு மென்பொருள் அமைப்பு (Free Software Foundation) லினக்ஸில் செயல்படக்கூடிய ஏராளமான ஜிஎன்யூ பயன்கூறுகளை உருவாக்கியுள்ளது. லினக்ஸ் கெர்னலை வெளியிட்டுள்ளது.

**Lips : லிப்ஸ் :** Logical inferences per second என்பதன் குறும்பெயர். 5வது தலைமுறை கணினியின் வேகத்தை அளப்பதற்கான அலகு.

**Liquid Crystal Display (LCD) : நீர்மப் படிகக் காட்சி: திரவப் படிகக்காட்சி :** இரண்டு தாள் துருவமாக்கு பொருளை திரவப் படிகக் கரைசலின் மூலம் இணைத்துக் காட்டும் காட்சி வெளியீடு. மின்னோட்டம் காரணமாக திரவப்படிகள் இணைகின்றன. அதனால் அவற்றின் வழி ஒளி ஊடுருவுவதில்லை; படிமங்கள் தோற்றுவிக்கப்படுகின்றன.

**liquid crystal display panel : நீர்மப் படிகக் காட்சிப் பாளம்.**

**Liquid Crystal Shutters : நீர்மப் படிக மூடிகள் :** மின் ஒளிப்பட வரைபட அச்சுப்பொறியில் உருளைக்கு ஒளியை அனுப்பும் முறை. திரவ படிகப் புள்ளிகள் மூடிகளாகச் செயலிட்டு திறந்து மூடுகின்றன.

**liquid plastics : நீர்மக் குழைமம்.**

**Lisa : லிசா:** ஆப்பிள் கணினி நிறுவனத்தினால் உருவாக்கப்பட்ட வணிகத்துக்கான குறுங்கணினி.

**Lisp : லிஸ்ப் :** List processing என்பதன் குறும்பெயர். மொழியியல் அலசல் பட்டியல்களைக் கொண்ட தரவுகளை வகை செய்வதை முதல் நோக்கமாகக் கொண்டு வடிவமைக்கப்பட்ட உயர்நிலை நிரல் தொகுப்பு முறைமை. இது உரையைக் கையாளுவதற்கும் ஆய்வு செய்வதற்கும் சிறப்பாக அமெரிக்காவில் செயற்கைப் பகுத்தறிவுக்கான தேர்வு செய்யப்படும் நிரல் தொகுப்பு மொழி.

**Lisp machine : லிஸ்ப் கணினி :** செயற்கையான பகுத்தறிவுப் பயன்பாடுகளுக்காக குறிப்பாக வடிவமைக்கப்பட்ட கணினி. அதுவும் Lisp மென்பொருளைப் பயன்படுத்தும் வகையில் வடிவமைக்கப்பட்டது.

**list : பட்டி :** *1.* வரிசை முறைமையற்ற வழியில் தரவுகளைப் பெறுவதற்காக உள்ளடக்க பட்டியல், குறிப்பிட்டுக் காட்டிகளைப் பயன்படுத்தி தரவுகளைச் சேர்த்தல் . 2. வரிசைப்

படுத்தப்பட்ட குழு பொருள்கள். 3. உள்ளீட்டுத் தரவுவின் ஒவ்வொரு தொடர்புடைய பொருளையும் அச்சிடல். 4. நிரல் தொகுப்பு அறிவிக்கைகளை அச்சிடுவதற்கான கட்டளை. எடுத்துக்காட்டாக அடிப்படை மொழியில் உள்ள வரிசைக் கட்டளை நிரல் தொகுப்பை அச் சிடச் செய்யும். 5. வரிசைப் படுத்தப்பட்ட தொகுப்புப் பொருள்கள்.

**list box :** பட்டியல் பெட்டி : விண்டோஸ் போன்ற வரைகலை பணிச் சூழலில் பயன்படும் ஓர் இயக்குவிசை. விருப்பத் தேர்வுகளின் பட்டியலிலிருந்து பயனாளர் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வாய்ப்பளிக்கும். பட்டியல் பெட்டி இருவகையாகத் தோற்றமளிக்கும். முதல் வகை: தரவுவை உள்ளீடு செய்வதற்குரிய உரைப் பெட்டி (Text Box) ஒன்று இருக்கும். அதனை ஒட்டிக் கீழே ஒரு பட்டியல் தோற்றமளிக்கும். பட்டியலிலிருந்து தேர்வு செய்யும் உறுப்பு உரைப்பெட்டியில் வந்து அமர்ந்து கொள்ளும். இரண்டாவது வகை: உரைப் பெட்டி மட்டுமே இருக்கும். வலது ஓரத்தில் சிறிய தலைகீழ் முக்கோணப் புள்ளி இருக்கும். அதைச் சொடுக்கினால், பட்டியல் விரியும். பட்டியலிலுள்ள ஓர் உறுப்பை தேர்வு செய்து கொள்ளலாம். இரண்டுவகை பட்டியல் பெட்டிகளிலும், பயனாளர் தாமாக எதையும் உள்ளீடு செய்ய முடியாது.

**list error :** பட்டியல் தவறு.

**listing :** வரிசையிடு; பட்டியலிடல் : அச்சிடு கருவியில் உருவாக்கப்பட்ட பொதுவான ஏதாவதொரு அச்சிடப்பட்ட பொருள். ஆதார வரிசை என்பது தொகுப்பானால் வகைப் படுத்தப்பட்ட ஆதார நிரல் தொகுப்பு. ஒரு தவறான வரிசையிடல் என்பது எல்லா உள் ளீட்டுத் தரவுகளும் வகைப் படுத்தும் நிரலாக்கத் தொகுப்பினால் பயனற்றவை என அறியும் நிலை.

**list organization :** பட்டியல் நிறுவனம் : பட்டியல்கள் வடிவில் தரவுகளைச் செயலாக்கும் முறை.

**list processing :** பட்டியல் வகைப் படுத்தல் : தரவுகளை பட்டியலாக வகைப்படுத்தும் முறை.

**list processing language :** பட்டியல் அஞ்சல் மொழி; பட்டியல் வகைப்படுத்தும் மொழிகள் : தரவுகளை Ipl, lisp, POP-2, மற்றும் sail போன்ற வடிவங்

களுக்கு மாற்றுவதற்கு வகை செய்யும் விதத்தில் சிறப்பாக வடிவமைக்கப்பட்ட மொழிகள்.

**list rows : பட்டியல் கிடைக்கைகள்.**

**LISTSERV : லிஸ்ட்சொர்வ் :** வணிக முறையிலமைந்த மிகவும் செல்வாக்குப் பெற்ற அஞ்சல் பட்டியல். எல்-சாஃப்ட் பன்னாட்டு நிறுவனம் பிட்நெட், யூனிக்ஸ் மற்றும் விண்டோஸில் செயல்படும் பதிப்புகளை வெளியிட்டுள்ளது.

**list structure : பட்டியல் வடிவமைப்புகள் :** டி.பி.எம்.எஸ் அமைப்பில் தரவுவைச் சேமிக்கும்முறை. இதில் காட்டிகள் மூலம் பதிவேடுகள் இணைக்கப்படுகின்றன.

**literal : நிலையுரு :** மாற்றமிலி என்பதற்கு மாற்றுப்பெயர். இக்குறியீடு தன் விளக்கம் உடையது.

**lithium ion battery : லித்தியம் அயனி மின்கலம் :** உலர் வேதியல் கலன்களில் ஒரு மின்சக்தி சேமிப்புச் சாதனம். வேதியல் ஆற்றலை மின்னாற்றலாய் மாற்றும் நுட்பத்தை அடிப்படையாகக் கொண்டது. விலை அதிகமானபோதும் மடிக் கணினிகளுக்கு லித்தியம் அயனி மின்கலன் மிகவும் உகந்ததாய்க் கருதப்படுகிறது. ஏனெனில், மடிக்கணினிகளில் அதிவேக செயலிகள், சிடி ரோம் இயக்ககம் போன்ற சாதனங்கள் எடுத்துக்கொள்ளும் அதிகமான மின்சாரத்துக்கு ஈடுகொடுப்பதிலும், உயர் சேமிப்புக் கொள் திறனிலும் இது, நிக்கல் கேட்மியம் மற்றும் நிக்கல் உலோக ஹைடிராக்ஸைடு மின்கலன்களைக் காட்டிலும் சிறந்ததாக உள்ளது.

**litrary function : நூலகச் செயல் கூறுகள்; நூலகச் சார்பு; மொழியகச் சார்பலன்**

**little endian : சிறு முடிவன் :** எண்களை இரும முறையில் இருத்தி வைப்பதில் ஒருமுறை. குறை மதிப்புள்ள பைட் முதலில் இடம்பெறும். (எ-டு) A02B என்னும் பதினறும எண்ணை எடுத்துக் கொண்டால் சிறு முடிவன் முறையில் 2BA0 என்று பதிந்து வைக்கப்படும். இன்டெல் நுண்செயலிகளில் இந்த முறையே பின்பற்றப்படுகிறது. இம்முறை பின்னோக்கு பைட் வரிசை என்றும் அழைக்கப்படும்.

**live : நேரடி; நிகழ்நேர :** *1.* ஒரு நிரல், சோதனைத் தரவுகளுக்குப் பதில் உண்மையான தரவுகளின் அடிப்படையில் இயங்குவது. **2.** ஓர் இணைய தளத்தில் ஏற்கெனவே பதிவுசெய்து வைக்கப்பட்டுள்ள கேட்பொலி

மற்றும் ஒளிக்காட்சித் தரவுவை இணைய இணைப்பின் மூலம் பெறமுடியும். அவ்வாறில் லாமல் அவை உருவாக்கப்படும் போதே அலைபரப்பச் செய்வது. 3. ஓர் ஆவணத்தை அல்லது ஆவணத்தின் ஒரு பகுதியை பயனாளர் இணையம் வழி பார்வையிடும்போதே மாற்றி யமைக்க வாய்ப்பளிப்பது.

**Live 3D : லைவ் 3டி (நிகழ் நேர 3டி) :** நெட்ஸ்கேப் நிறுவனத்தின் மென்பொருள். வலை உலாவியுடன் இணைக்கப்பட்ட மெய்நிகர் நடப்பு உருவார மொழி (Virtual Reality Modelling Language) ஆகும். இணையப் பயனாளர்கள் மெய்நிகர் நடப்பு உலகைப் பார்வையிடவும் ஊடாடவும் அனுமதிக்கும் மென்பொருள்.

**live data : நடப்புத் தரவு :** கணினி நிரல் தொகுப்பு ஒன்றினால் வகைப்படுத்தப்பட வேண்டிய தரவுகள்.

**live project : நடப்புத் திட்டம்; நேரடி செய்முறைப் பயிற்சி; நிகழ்நேரத் திட்டம்.**

**liveware : உயிர்ப் பொருள் :** கணினி மையம் ஒன்றில் உள்ளோர் அல்லது வன்பொருள் மற்றும் மென்பொருள்களைப் பயன்படுத்துவோர்.

**.lk : .எல்கே :** ஓர் இணைய தள முகவரி, இலங்கை நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**load : ஏற்றி :** 1. கணினி ஒன்றின் சேமிப்பிலிருந்து தரவுகளைப் படித்தல். 2. அட்டை வாசிப் பியில் அட்டைகளை இடல். காகித நாடா வாசிப்பானில் காகித நாடா ஒன்றை இடல் அல்லது வட்டத் தகடு இயக்கும் பிரிவில் வட்டத் தகட்டுத் தொகுப்பை இடல்.

**load and go : ஏற்றி இயக்கு :** நிரல் தொகுப்பு ஒன்றின் ஏற்றுதல் மற்றும் இயக்கப் பகுதிகளை ஒரே தொடர்ச் சியாக நிகழ்த்தும் இயக்க உத்தி.

**loaded line : சுமையேற்று தடம்/ இணைப்பு :** தகவல் தொடர்புக் கான கம்பித் தடத்தில் மின் னோட்டத்துக்கு ஏற்ப மாறும் மின்தடையைச் சேர்த்து வீச்சுச் சிதைவினை (Amplitude distortion) குறைக்க எடுக்கப்படும் நட வடிக்கை. அலை பரப்பு ஊடக மான கம்பி வடத்தில் சுமைச் சுருணைகளை (loading coils) இணைப்பது. பெரும்பாலும் ஒரு மைல் தொலைவு இடை வெளிகளில் இவை இணைக்கப் படும்.

**loader : ஏற்றுவி :** உள்சேமிப்பில் உள்ள நிரல் தொகுப்புகளை அவற்றை நிறைவேற்ற வகை செய்யும் தயாரிப்பாக படிக்க வகை செய்யும் விதத்தில் வடி வமைக்கப்பட்ட பணி நிரல்.

**loader routine : ஏற்று நிரல்கூறு :** இயக்குறு குறிமுறைக் கோப்பு களை நினைவகத்தில் ஏற்றி, இயக்கும் ஒரு நிரல்கூறு. ஓர் ஏற்று நிரல்கூறு இயக்க முறை மையின் ஓர் அங்கமாக இருக்க லாம் அல்லது இயங்கும் நிரலின் ஒரு பகுதியாகவும் இருக்கலாம்.

**loader, card : அட்டை ஏற்றி.**

**load high : மேலே ஏற்று :** உயர் நினைவகத்தில் நிரலாக்கத் தொடர்களை ஏற்றுதல்.

**loading : பளுவேற்றம்; ஏற்றம்; நிரலேற்றம்.**

**Load Module : ஏற்றும் கூறு :** கணினி இணைப்பினால் உடனடியாக செயல்படுத்தப் பொருத்தமான வடிவில் உள்ள கணினி நிரல் தொகுப்பு.

**load point : ஏற்றுப்புள்ளி :** மின் காந்த நாடா ஒன்றில் பதிவு துவங்கும் புள்ளி.

**load sharing : சுமைப் பகிர்வு :** உயர் சுமை நேரங்களில் கூடுதல் வேலையை இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கணினி களைப் பயன்படுத்தும் உத்தி. உயர் சுமைக்கும் குறைவான பளு உள்ள நேரங்களில் ஒரு கணி னியை மட்டுமே பயன்படுத்து தல் விரும்பத்தக்கது. பிறவற்றை நெருக்கடி நிலைக்கு உதவு கருவியாகப் பயன்படுத்தலாம்.

**local : உள்ளமை :** 1. அதற்குரிய இடத்தில் உள்ள கணினி ஒன்றின் கருவி தொடர்பானது. 2. நிரலாக்கத் தொகுப்பு ஒன்றின் வரையறுக்கப்பட்ட பகுதியில் பயன்படுத்தப்படும் பொருள் கள் தொடர்பானது.

**Local Area Network : LAN : குறும் பரப்பு பிணையம்; சிறு பரப்பு பிணையம்; பகுதி வலைப் பின்னல்; வளாகப் பிணையம் :** கட்டடம் ஒன்றில் உள்ள பல் வேறு வன்பொருள் சாதனக் கருவிகளை இணைக்கும் தகவல் தொடர்பு பிணையம். தொடர்ச் சியான கம்பியினால் பிணைக்கப் பட்டிருத்தல் அல்லது கட்டடத் தின் உள் பகுதிக்கான குரல் தரவு தொலைபேசி முறைமையினால் பிணைக்கப்பட்டிருத்தல்.

**local bus : உள்ளமை வழித்தடம் :** செயலகத்திற்கும் முதன்மை நினைவகத்திற்கும் இடையே வேகமாகவும் அகலமாகவும், இணைப்பை ஏற்படுத்துவது அல்லது வீடியோ ஏற்பி.

**local bypass : உள்ளமை துணை வழி:** உள்ளூர் தொலைபேசி நிறுவனத்தைப் பயன்படுத்தாமல் இரண்டு வசதிகளுக்கிடையே இணைப்பை ஏற்படுத்துவது.

**local group : உள்ளமை குழு; வட்டாரக் குழு :** *1.* விண்டோஸ் என்டியிலுள்ள பயனாளர் குழு. குழு உருவாக்கப்பட்டுள்ள பணி நிலையக் கணினியின் வளங்களை மட்டும் கையாளும் உரிமையும் சலுகையும் பெற்ற ஒரு பயனாளர் குழு. பணி நிலையத்தின் உள்ளேயும் வெளியேயும் உள்ள பயனாளர்கள் பணி நிலைய வளங்களை அணுக வசதியான ஒரு வழிமுறையை வட்டாரக் குழுக்கள் வழங்குகின்றன. *2.* விண்டோஸ் என்டி அட்வான்ஸ்டு செர்வர் இயக்க முறைமையில் வட்டாரக் குழு என்பது அதன் சொந்தக் களம் (own domain) அமைந்துள்ள வழங்கன் (server) கணினிகளின் வளங்களை மட்டும் அணுக உரிமையும் சலுகையும் பெற்ற பயனாளர்களின் குழு. களத்தின் வெளியேயும் உள்ளேயும் உள்ள பயனாளர்கள், அவர்கள் சார்ந்த களத்தின் வழங்கன்களிலுள்ள வளங்களை மட்டும் அணுக வட்டாரக் குழுக்கள் வாய்ப்பாக உள்ளன.

**localhost : உள்ளமை புரவன் :** ஒரு டீசிபீ/ஐபீ செய்தி அனுப்பப்படும் அதே கணினியை புரவனாக உருவகிக்கும் பெயர். உள்ளமை புரவனுக்கு அனுப்பப்படும் தரவு பொட்டலம் *127.0.0.1* என்ற ஐபீ முகவரியைக் கொண்டிருக்கும். ஒரே கணினி கிளையனாகவும் புரவனாகவும் செயல்படும். உண்மையில் அச்செய்தி இணையத்திற்கு அனுப்பி வைக்கப்பட மாட்டாது.

**local intelligence : உள்ளமை நுண்ணறிவு; பகுதிப் பகுப்பாய்வு :** முனையம் ஒன்றிலேயே அமைக்கப்பட்டுள்ள வகைப்படுத்தும் திறன் மற்றும் சேமிப்புத் திறன். அதனால் சில பணிகளைச் செய்ய கணினி ஒன்றுடன் இணைக்கத் தேவையில்லை.

**localization : வட்டாரமயமாக்கல் :** ஒரு நிரலை அந்நிரல் பயன்படுத்தப்படும் நாடு/ஊர்/மக்களுக்கு ஏற்ப மாற்றியமைக்கும் செயல்முறை. (எ-டு). சொல்செயலி மென்பொருளை வெவ்வேறு மொழிகளில் உருவாக்கும் நிரலர்கள் அட்டவணைகளை/பட்டியல்களை வரிசை முறைப்படுத்தும் நிரலை அந்தந்த மொழிகளுக்கு ஏற்ப அமைக்க வேண்டும். ஒரு மொழியில் ஒரு குறிப்பிட்ட

வரிசையில் அமையும் எழுத்துக் குறிமுறை பிறமொழியில் வேறு வரிசையில் அமையலாம்.

**local loop : உள்ளமை தனிச்சுற்று வழி** : வாடிக்கையாளருக்கும் தொலைபேசி நிறுவனத்தின் மைய அலுவலகத்திற்கும் இடையேயான தகவல் தொடர்புப் பாதை.

**local memory : உள்ளார்ந்த நினைவகம்** : தனி மையச் செயலகத்தில் பயன்படுத்தப்படும் நினைவகம் அல்லது தனிநிரல் தொடருக்கோ அல்லது பணிக்கோ ஒதுக்கப்படுவது.

**local network : வட்டாரப் பிணையம்.**

**Local newsgroups : வட்டாரச் செய்திக் குழுக்கள்** : ஒரு நகரம், ஒரு பல்கலைக்கழகம் என வரம்புக்குட்பட்ட நிலப்பரப்பில் இயங்கும் செய்திக் குழுக்கள். இச் செய்திக் குழுவில் அஞ்சல் செய்யப்படும் கட்டுரைகள் அந்த வட்டாரம் குறித்த தகவலையேக் கொண்டிருக்கும்.

**local reboot : உள்ளமை மீட்டியக்கம்**: ஒரு பிணையத்தில் இணைக்கப்பட்ட ஒரு கணினியை அதனுள்ளேயே மீட்டியக்குவது. (தொலைப் புரவனிலிருந்தும் மீட்டியக்க முடியும்).

**local store : பகுதி சேமிப்பகம்; உள்ளமைத் தேக்ககம்** : உயர்வேக சேமிப்புத் திறனுள்ள குறைந்த எண்ணிக்கையிலான பொருள்கள். நேரடியாக கட்டளைகளை அவைகளுக்கு அனுப்ப இயலும்.

**local talk : உள்ளமைப் பேச்சு** : ஆப்பிள் நிறுவனத்தின் 'லேன்' அணுகுமுறை. இது முறுக்கப்பட்ட இணைக்கம்பிகளைப் பயன்படுத்தி ஒரு நொடிக்கு 2,30,400 துண்மிகளை அனுப்புகிறது. Apple Talkஇன் கீழ் இயங்கி டெய்சி சங்கிலி இடத்திய டோப்பாலஜியைப் பயன்படுத்துகிறது. 1,000 அடி தொலைவுவரை உள்ள 32 சாதனங்களை இது இணைக்கும். மூன்றாவது நபர் பொருள்களுடன் வழித்தடம், அமைதியான நட்சத்திரம் மற்றும் இயங்கும் நட்சத் திர இடத்தியல்களில் இயங்கும். ஆப்பிள் டாக் கட்டமைப்பிலும் இயங்க முடியும்.

**local terminal : உள்ளார்ந்த முனையம்**: மையச் செயலகத்திற்கு அருகே உள்ள முகப்பு. ஆகவே, அதனை நேரடியாக இணைக்க முடியும்.

**local usenet hierarchy: உள்ளமை யூஸ்நெட் படிநிலை**

**local variable : உள்ளார்ந்த மாறிலி; வரம்புறு மாறிலி; உள்ள மாறிலி** :

துணை வாலாயம் (சப்ரொட்டீன்) போன்ற ஒரு நிரல் தொடர் கூறு மாடுல் மூலம் கட்டுப்படுத்தக்கூடிய மதிப்பினைக் கொண்ட மாறிலி. முதன்மை நினைவகம் அல்லது பிற கூறுகளால் அணுகக் கூடியதாகவோ அல்லாத தாகவோ இது இருக்கலாம்.

**location : இருப்பிடம்; அமைவிடம் :** கணினி ஒன்றின் நினைவகத்தில் தகவல்களைச் சேமிப்பதற்கான பகுதி.

**location, bit : துண்மி அமைவிடம்; பிட் இருப்பிடம்.**

**lock : பூட்டு :** *1.* கணினி ஆதாரத்தை ஒருவர் மட்டும் பயன்படுத்த உதவுதல். *2.* மாற்றப்படுதல் அழித்தலிலிருந்து வட்டினை அல்லது நாடாக் கோப்பைப் பாதுகாத்தல்.

**lock code : பூட்டுக் குறியீடு :** பயன்படுத்துவோரின் நிரல் தொகுப்பை அங்கீகாரமற்ற வகையில் காலப்பகிர்வு முறையில் பயன்படுத்தும் பிறரால் சிதைக்கப்படாமல் காக்க வழங்கப்படும் வரிசைப்படியான எழுத்துகள் மற்றும் எண்கள். பயனாளர் சரியான பூட்டுக் குறியீட்டைப் பயன்படுத்தாவிட்டால் பயனாளர் நிரல் தொகுப்பில் மாற்றங்களைச் செய்ய கணினி மறுக்கும்.

**locked file : பூட்டிய கோப்பு :** *1.* கையாள முடியாமல் பூட்டி வைக்கப்படும் ஒரு கோப்பு. குறிப்பாக, தரவுவை மாற்றியமைத்தல், புதிய தரவுவைச் சேர்த்தல், இருக்கும் தரவுவை நீக்குதல் போன்ற செயல்பாடுகளுக்கு இடம் கொடாமல் பூட்டி வைக்கப்படும் கோப்பு. *2.* அழிக்க முடியாத, வேறிடத்துக்கு மாற்ற முடியாத அல்லது பெயர் மாற்ற முடியாத ஒரு கோப்பு.

**locked up keyboard : பூட்டப்பட்ட விசைப்பலகை :** விசைகளின் இயக்கத்துக்கு கணினி இயங்க மறுக்கும் நிலைமை.

**locked volume : பூட்டிய தொகுதி :** ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினிகளில் சேமிப்பகங்களில் எழுத முடியாமல் தடுக்கப்படும் தொகுதி. ஒரு வன்பொருள் கருவி மூலமோ அல்லது ஒரு மென்பொருள் மூலமோ இவ்வாறு பூட்டிவைக்க முடியும்.

**locking a disk : வட்டைப் பூட்டல் :** வட்டு ஒன்றின் உரிமை பாதுகாக்கப்பட்டதாக இருந்தால் அந்த வட்டு பூட்டப்பட்டதாகும். கணினியின் பிற தரவுகளினால் வட்டின் உள்ளடக்கங்கள் திருத்தப்படாமல் பாதுகாப்பதை இந்நடவடிக்கை உறுதி செய்கிறது.

**lockout :** வெளித்தாழ்; அடைப்பு : 1. இடையீட்டை ஒடுக்குதல். 2. பல்முனை வகைப்படுத்து சூழலில் முக்கிய தரவுகளை ஒரே நேரத்தில் வகைப்படுத்தும் அலகுகள் பெற வகை செய்யும் நிரல் தொகுப்பு உத்தி.

**lockup :** பூட்டப்பட்ட; முடக்கம் : மேலும் எந்தச் செயலும் நடை பெற முடியாத சூழ்நிலை.

**log :** பதிவு; பதிவு செய்தல் : ஒவ்வொரு வேலை அல்லது ஓட்டம், அதற்குத் தேவைப் படும் நேரம், இயக்குபவர் செயல்கள் மற்றும் தொடர்பான தரவுகளைப் பட்டியலிடும் தரவு செயலாக்கக் கருவியின் இயக்கங்களின் பதிவேடு.

**logarithm :** லாகரிதம்; மடக்கை : ஒரு குறிப்பிட்ட எண்ணை உரு வாக்க ஒரு நிலையெண்ணை எத்தனை மடங்கு அதிகரிக்க வேண்டும் என்பதைத் குறிப் பிடுவர். அது பொதுவாக 10 அல்லது 0 ஆக இருக்கும். சான்றாக 2இன் 3 மடங்கு 8-க்குச் சமம் என்றால் 2இன் ஆதார எண்ணாகக் கொண்டு 8-ஐக் கொண்டுவர 3 லாகரிதம் ஆகும். இதன் பொருள் 2-ஐ அதன் மூன்றாதாவது மதிப்புக்கு உயர்த் தினால் 8 வரும் என்பதாம்.

**logarithm tables :** மடக்கை அட்டவணை.

**log book :** பதிவுப் புத்தகம் : கணினி தொழிலுக்குக் கடன் வாங்கப்பட்ட கடல்துறை குழூஉக் குறி. வேலையில் இருக்கும் கணினி பணியாளர் களைப் பற்றியும் அவர்கள் செய்து முடித்த பணிகளைப் பற்றியும் பதிவேடு வைத்துக் கொள்ள இது உதவுகிறது. வன் பொருள் பராமரிப்பு நேர ஒதுக் கீடுகள் மற்றும் பழுதானவை களைப் பற்றிய பதிவேடு வைத் திருக்கவும் இது உதவுகிறது.

**logging off :** முடித்தல் ; வெளி வருதல்: கணினிக்கும் அதைப் பயன்படுத்துபவருக்கும் இடை யேயுள்ள தகவல் தொடர்பை முடித்து வைக்கும் செயல் முறை.

**logging-in :** உள் நுழைத்தல்; தொடங்கல்; கணிப்பொறியினுட் புகும் செயற்பாடு : உரையாடல் முறையில் ஒப்பமிட்டு கணினி யைப் பயன்படுத்தும் உரிமை பெற்றவரைச் சோதித்துக் கணினியுடன் தகவல் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளும் செயல் முறை.

**logic :** தருக்கம்; அளவை; தருக்கப் பொருத்தம்; அளவைப் பொருத்தம் : 1. காரணமறிதல், கருத்து ஆகிய முறையான கொள்கைகளை ஆராயும் அறிவியல். 2. தானியங்கி தரவு

செயலாக்க அமைப்பில் எண் முறைக் கணிப்புகள் செய்யும் அளவைப் பொருள்களுக்கிடை யிலான இணைப்பு மற்றும் உண் மைப் பட்டியல்களைப் பயன் படுத்துவது பற்றிய அடிப் படைக் கொள்கைகள்.

**logical : தருக்கமுறை :** 1. எண் வகை மதிப்புகளைக் கொண்டு கணக்கீடு செய்வதுபோல் அல்லாமல் சரி/தவறு என்று இரண்டிலொரு முடிவை எடுக் கும் முறை. (எ-டு). ஒரு தருக்கத் தொடர் (logical expression) என்பது, அதன் இறுதி விடை சரி அல்லது தவறு என்கிற ஒற்றை விடையாக இருக்கும். 2. கருத் துருவாக நிலவும் ஒரு கொள்கை அல்லது கோட்பாடு. அதை உண்மையில் எவ்வாறு நடை முறைப்படுத்துவது என்பது முக்கியமில்லை.

**logical add : தருக்கக் கூட்டல் :** கணினி தருக்க இயக்கத்தில் ஒரு அளவை கூட்டல்.

**logical comparison : தருக்க முறை ஒப்பீடு :** தரவு அல்லது விளக்கங் கள் போன்ற இரண்டு வகை யான தரவுகளை ஒப்பிட்டு அவை ஒரே மதிப்புகளைக் கொண்டவையா என்பதை முடிவு செய்யும் தருக்கம்.

**logical data : தருக்க முறை தரவு :** உண்மை அல்லது பொய் என்று பட்டம் தரப்பட்ட இரண்டு மதிப்புகளில் ஒன்று.

**logical data design : தருக்க முறை தரவு வடிவமைப்பு.**

**logical data elements : தருக்க முறை தரவுப் பொருள்கள் :** எந்த பருப்பொருள் ஊடகத்தின் மீது பதியப்படுகிறது என்பதற்குத் தொடர்பில்லாத சுயேச்சையான தரவுப் பொருள்கள்.

**logical data group : தருக்க முறை தரவுக் குழு :** பல மூலாதாரங்களில் இருந்து எடுக்கப்படும் விவரம்.

**logical data system Design : தருக்க முறை தரவு அமைப்பின் வடிவமைப்பு :** தரவுகளுக்கிடை யிலான உறவைக் காட்டும் வடி வமைப்பு. பயன்பாட்டு நிரல் தொடர்கள் அல்லது தனிப்பட்ட பயன்படுத்துபவர்கள் தரவு களை எவ்வாறு பார்க்கிறார்கள் என்பது.

**logical decision : தருக்க முறை முடிவு :** இரண்டு வகையான செயல்முறைகளில் எதைக் கடைப்பிடிக்கலாம் என்பது. மதிப்புகளை ஒருவாறு ஒப்பிடுதலை அடிப்படையாகக் கொண்டது.

**logical design : தருக்கமுறை வடிவமைப்பு :** குறியீட்டுத் தருக்க முறையில் ஒரு கணினி அமைப்புப் பகுதிகளுக்குள்

செயல் உறவு எப்படி இருக்கும் என்பதைக் குறிப்பது. வன் பொருள் இயக்கத்தின் தொடர் பின்றி அமைவது.

**logical device : தருக்க சாதனம் :** ஒரு கணினி அமைப்பில் ஒரு சாதனத்தின் பருவுரு வகையிலான உறவுமுறை எப்படி இருப்பினும் மென்பொருள் முறைமையின் தருக்க அடிப் படையில் பெயர் குறிக்கப்பட்ட ஒரு சாதனம். (எ-டு) எம்எஸ் டாஸ் இயக்க முறைமையில் ஒற்றை நெகிழ்வட்டு இயக்ககம் 'ஏ' என்றழைக்கப்படும். அதனையே பி என்றும் பெயரிட லாம். கணினியில் இரு நெகிழ் வட்டகம் இல்லாத போதும் DISKCOPY A: B: என்று கட்டளை அமைக்கலாம். இதில் B என்பது தருக்க சாதனமாகச் செயல் படுகிறது.

**logical drive : தருக்க முறை இயக்கி :** தனி அலகாக நிர்வகிக் கப்பட்டு பெயரிடப்படும் பருப்பொருள் இயக்கியில் ஒதுக்கப்பட்ட பகுதி.

**logical error : தருக்க முறைப் பிழை:** நிரல் தொடர் மொழி இலக்கணப்படி சரி என்றாலும் தவறான செயல்முறை ஏற்படக் காரணமான நிரல் தொடர் அமைப்புப் பிழை.

**logical expression : தருக்க வெளிப்பாடு :** உண்மை அல்லது பொய் என்பதை வெளிப்படுத் தும் வெளிப்பாடு.

**logical field : தருக்கப் புலம் :** ஆம்/இல்லை, உண்மை/பொய் ஆகியவைகளைக் கொண்டுள்ள நிரல் புலம்.

**logical file : தருக்க முறைக் கோப்பு:** ஒன்று அல்லது மேற் பட்ட தருக்க முறைப்பதிவேடு களின் தொகுப்பு.

**logical inference : தருக்க முடிவுகள்.**

**logical instruction : அளவை முறை ஆணை :** குறியீட்டு தருக்கமுறையில் வரையறுக்கப் பட்ட இயக்கத்தை கணினியைச் செய்ய வைக்கும் ஆணை.

**logical lock : தருக்க முறைப் பூட்டு:** தரவுகளைப் பயன் படுத்துவதிலிருந்து பயன் படுத்துபவரைத் தடுப்பது. மென்பொருள் பயன்படுத்து வதன் மூலம் கோப்பு அல்லது பதிவேட்டில் அடையாளமிட்டு இதைச் செய்யப்படுகிறது.

**logical multiply : தருக்க முறைப் பெருக்கல் :**

**logical operations : தருக்க முறை இயக்கங்கள் :** தருக்க முறை

அடிப்படையில் அமைந்த கணினி இயக்கங்கள் தருக்க முறை முடிவுகள் போன்றது. முடிவு எடுக்கத் தேவையில்லாத தரவு மாற்றல் இயக்கம் மற்றும் கணக்கீட்டு இயக்கம் ஆகிய வைகளுக்கு மாறானது.

**logical operator : தருக்க இயக்கி :** AND, OR, NOT ஆகியவை கூட்டு நிலைகளை உருவாக்க தொடர்புடைய இணைப்புகளைப் பயன்படுத்த முடியும். பூலியன் தருக்க இயக்கிகளில் ஒன்று.

**logical product : தருக்க முறைப் பொருள் :** பல சொற்களின் AND பணிகள். அனைத்து சொற்களும் *1* ஆக இருக்கும்போது பொருள் *1* ஆக இருக்கும். அப்படி இல்லையென்றால் *'0'* ஆகிவிடும்.

**logical product :தருக்க முறைப் பெருக்கற் பலன்.**

**logical reasoning : தருக்க முறை விளக்கச் செய்முறைகள்.**

**logical record : தருக்கப் பதிவேடு :** அதன் பருப்பொருள் இருப்பிடத்திற்குத் தொடர்பில்லாமல் ஒரு தகவல் பதிவேட்டைக் குறிப்பிடுதல். இரண்டு அல்லது மேற்பட்ட இடங்களிலும் இதை சேமிக்க முடியும்.

**logical representation : தருக்க முறைக் குறிப்பீடு :** தருக்க முறை வாய்பாடுகளின் தொகுதியைக் கொண்ட அறிவுக் குறிப்பீடு.

**logical rules : தருக்க முறைச் சட்டங்கள்.**

**Logical sector number : தருக்க முறைப் பிரிவு எண் :** தட்டு பிரிவுகளை பக்கம் எக்ஸ், வழித்தடம் எக்ஸ், பிரிவு எக்ஸ் என்று பிரிப்பதற்குப் பதிலாக, தருக்க முறை பிரிவு எண்கள் தட்டின் வெளிப்புற விளிம்பிலிருந்து தொடங்கி எல்லா பிரிவுகளையும் எண்ணி ஒரு பிரிவின் இடத்தைக் குறிப்பிடுகிறது.

**logical sum : தருக்க முறைக் கூட்டுத் தொடர்; தருக்க முறைக் கூட்டல் :** பல சொற்களின் உள்வாங்கும் or செயல். ஒன்று அல்லது எல்லா சொற்களும் *1* ஆக இருந்தால் தொகையும் *1* ஆக இருக்கும். எல்லாம் *0* ஆனால் அதுவும் *0* ஆகும்.

**logical symbol : தருக்க முறைக் குறியீடு.**

**logical system design : தருக்க அமைப்பு வடிவமைப்பு :** அடிப்படை தரவு அமைப்பு பயன்படுத்துபவரின் தேவையை எந்த அளவு சமாளிக்கிறது என்பதற்கான பொதுவான தருக்க முறைகளை உருவாக்குதல்.

**logical type field : தருக்க வகைப் புலம்.**

**logical unit number : தருக்கமுறை அலகு எண் :** ஒரு பருப் பொருளாக உள்ள வெளிப்புற சாதனத்துக்குக் கொடுக்கப்படும் எண்.

**logical value : தருக்க முறை மதிப்பு:** ஒரு குறிப்பிட்ட தருக்க முறை முடிவின் விளைவாக உண்மை அல்லது பொய்யாக மாறும் மதிப்பு.

**logic analyser : தருக்க ஆய்வர்:** இலக்கமுறை அமைப்புகளின் தருக்க நிலைகளைக் கண் காணித்து பின்னர் காட்டுவதற்காக முடிவுகளை சேமிக்கும் ஒரு மின்னணு கருவி.

**logic array : தருக்க வரிசை:** மின்னணு வாயில்களின் வரிசை. கணினியின் பல்வேறு பணிகளை வாடிக்கையாளரின் சிறப்புத் தேவைக்கேற்ப செய்வதற்காக வரிசைப்படுத்தப் பட்டு அமைக்கப்படும் ஒருங்கிணைந்த மின்சுற்றுகள்.

**logic board : தருக்கப் பலகை.**

**logic bomb : தருக்க குண்டு :** தரவுகளை அழிக்கும் நிரல் தொடர். அது வன்தட்டை மறுவடிவமைத்து அல்லது தரவு கோப்புகளில் தற்செயல் துண்மிகளை அமைத்து நாசம் செய்யலாம். பாழ்பட்ட வெளியில் கிடைக்கும் நிரல் தொடர்களை வாங்கி ஏற்று வதன் மூலம் இது பீ.சி.யில் கொண்டு வரப்படலாம். ஒரு முறை இயக்கப் பட்டால் நேரடியாக இது பாழாக்குவதில்லை. ஆனால், நச்சு நிரல் (வைரஸ்) அழித்துக் கொண்டே இருக்கும்.

**logic card : தருக்க முறை அட்டை:** ஒன்று அல்லது மேற்பட்ட தருக்கப் பணிகள் அல்லது இயக்கங்களைச் செய்யக்கூடிய உறுப்புகள் அல்லது கம்பியிணைப்புகளைக் கொண்ட மின்சுற்று அட்டை.

**logic chip : தருக்க சிப்பு:** செயலக அல்லது கட்டுப்பாட்டுச் சிப்பு.

**logic circuits : தருக்க மின் சுற்றுக்கள்:** ஒரு கணினி அமைப்பின் குறிப்பிட்ட பகுதியின் உள்ளேயும் வெளியேயும் மின் துடிப்புகளைச் செலுத்தும் ஏற்ற இறக்கத் தொடர்.

**logic control statement : தருக்க முறைக் கட்டுப்பாட்டுக் கட்டளை அறிக்கை.**

**logic device : தருக்க சாதனம் :** ஒரு சாதனத்தை அடையாளம் காட்டும் ஒரு பெயர் அல்லது அடையாளம்.

**logic diagram : தருக்கவரைபடம் :** தருக்க முறை வடிவமைப்பைக் குறிப்பிடும் வரைபடம். சில சமயங்களில் வன்பொருள்

இயக்கத்தையும் இதில் குறிப் பிடுவதுண்டு.

**logic drive : தருக்க இயக்கி :** வன் வட்டு போன்ற பருப்பொருள் சேமிப்பு ஊடகம். இயக்க அமைப்பு இயக்க அமைப் பிலிருந்து பிரிக்கப்பட்டு தனி யான சேமிப்பகங்களாக்கப்படு கிறது. ஒரு வன்தட்டு 42 மெகா பைட் மீமிகு எண்மி சேமிப்புத் திறன் உள்ளதாக இருக்கலாம். ஆனால் இயக்குவதற்கு வசதி யாக 42 மீமிகு எட்டியலை இரண்டு 'தருக்க இயக்கி' களாகப் பிரிக்கலாம். எம்.எஸ் - டாசில் (MS-DOS) இரண்டு இருப் பிடங்களும் சி மற்றும் டி இயக்கி எனப்படும். (ஏ, பி மென் வட்டு இயக்கிக்கு ஒதுக்கப்பட்டிருக்கும்). இங்கு சி-யும், டி-யும் பொதுவான சேமிப்பு ஊடகத்தைப் பங்கிட்டுக் கொள்ளும்.

**logic element : தருக்கப் பொருள்:** ஒரு தருக்கப் பணியைச் செய்யும் சாதனம்.

**Logic error : அளவைப் பிழை; தருக்க முறைப்பிழை :** நிரல் தொடரில் ஏற்படும் பிழை. இதனால் நிரல் தொடர் ஓடுவது பாதிக்கப்படாது. ஆனால், வெளியீட்டில் பிழை ஏற்பட லாம். அளவை பிழை உள்ள நிரலாக்கத்தொடர்கள் முதலி லிருந்து கடைசி வாக்கியம் வரை ஓடும். ஆனால், தவறான விடையையோ அல்லது வெளி யீட்டையோ தரும்.

**logic expression : தருக்க முறை எண்ணுருக் கோவை.**

**logic family : தருக்க குடும்பம் :** ஒரே உற்பத்தி தொழில் நுட்பத்தில் உருவாக்கப்பட்டு பல தருக்கப் பணிகளை வழங்கும் மின்னணு சாதனங் களின் வரிசை.

**logic field : தருக்க முறைப்புலம்.**

**logic file : தருக்கக் கோப்பு :** தட்டு அல்லது நாடாவில் உள்ள ஒரு கோப்பைக் குறிப்பிடும் பெயர் அல்லது அடையாளம்.

**logic gates : தருக்க வாயில்கள் :** மின் இலக்க முறை மின் சுற்றில் உள்ள பொருள்கள்.

**logic log on : தருக்க லாக்-ஆன்:** ஒரு கணினி அமைப்புக்கு அதனை பயன்படுத்துபவர் தன்னை அடையாளம் காட்டிக் கொள்ளும் செயல்முறை.

**logic operation : தருக்க இயக்கம்:** ஒன்று அல்லது மேற்பட்ட உள் ளீடுகளை ஆராய்ந்த விதிகளின் அடிப்படையில் ஒரு குறிப் பிட்ட வெளியீட்டை உருவாக் கும் இயக்கம்.

**logic operator : தருக்க இயக்கி:** And, Or, Nand, Nor, Executive Or போன்ற பூலியன் இயக்கிகளில் ஒன்று.

**logic probe : தருக்க ஆராய்ச்சி :** மின்னணு சோதனைக் கருவி களில் ஒன்று. இது தருக்க நிலை களில் ஒன்றை - உண்மை (தருக்க 1), பொய் (தருக்க 0) - காட்டும் திறனுடையது.

**logic programming : தருக்க நிரல் தொடரமைப்பு :** சிக்கல்களை உரைக்கவும் தீர்க்கவும் தருக்கத் தையும், அனுமானத்தையும் பயன்படுத்தும் உடன் தொடர் புள்ள அறிவுக் குறிப்பீட்டு அணுகுமுறை.

**logic programming language : தருக்க நிரல் தொடர் மொழி :** நிரல் தொடரமைப்பு மொழி களில் ஒரு பிரிவு.

**logic seeking : தருக்க தேடல் :** இரு திசைகளிலும் செயல்படும் அச்சுப்பொறி சுருக்கமான அச் சிடும் பாதையைக் கண்டு பிடிக்கும் திறன்.

**logic seeking : தருக்க முறை தேடல்.**

**logic seeking printer : தருக்கம் தேடும் அச்சுப் பொறி :** வரியின் உள்ளடக்கத்தைத் தேடி அதி வேகத்திலும் வெற்றிடத்தைத் தாண்டிச் செல்லக்கூடிய அச்சுப் பொறி.

**logic symbol : தருக்கக் குறியீடு :** ஒரு தருக்கப் பொருளைவரைபட முறையில் குறிப்பிடும் குறியீடு.

**logic theorist : தருக்கக் கொள்கை யியலார் :** கணிதக்கொள்கை களை எண்பிக்கப் பயன்பட்ட ஆரம்ப கால தகவல் செயலாக்க நிரல் தொடர்.

**logic theory : தருக்கக் கொள்கை:** கணித இயக்கங்களின் அடிப் படையாகக் கொண்ட அளவை இயக்கங்களைப் பற்றிக் கூறும் அறிவியல்.

**logic tree : தருக்க மரம் :** கிளை பிரி உருவகிப்புகளைப் பயன் படுத்தும் ஒரு தருக்க வழிமுறை யாகும். மரத்தின் ஒவ்வொரு கிளைக் கணுவும் ஒரு தீர்வுசெய் புள்ளியைக் குறிக்கின்றன. கிளையின் நுனியில் எடுக்கப் படவேண்டிய நடவடிக்கை குறிக்கப்பட்டிருக்கும்.

**log in : உள் நுழைதல் :** கணினி யில் ஒப்பமிட்டுப் பணி துவங்கு தல். Log on போன்றது.

**log in name : உள் நுழையும் பெயர் :** கணினி அமைப்பு ஒரு பயன்படுத்துபவரை அறிந்து கொள்ளும் பெயர். password - க்கு உடன்பாட்டுச் சொல் அல்ல.

**login security : உள்நுழை காப்பு.**

**logo : லோகோ :** உயர்நிலை நிரல் தொடர்மொழி. வரைபடமுறை முகப்பு பயன்படுத்துவோரிடம் உள்ளது என்று அனுமானிப்பது. மாணவர்களுக்காக வடிவமைக்கப்பட்டது. இளைஞர்கள் அதிகம் பயன்படுத்துவது. வணிகம் மற்றும் தொழில் துறைகளில் வரைபட முறை அறிக்கைகளை உருவாக்குவதற்கு அதிகம் பயன்படுவது. உரையாடல் முறையில் செயல்பட அனுமதிக்கும். இது திரையில் படங்கள் மற்றும் கணிதப் படங்களை வரைய எளிதில் கற்றுத் தருகிறது. செய்மோர் பாபர்ட் என்பவரால் எம்.ஐ.டியில் உருவாக்கப்பட்டது.

**log off (log out) : லாக் ஆஃப் (லாக் அவுட்) :** பயன்படுத்துபவர் ஒருவர் தன் வேலை நேரத்தை முடித்துக் கொள்வதை இது குறிப்பிடுகிறது.

**log on : துவங்குதல்; நுழை முறை :** முகப்பு இயக்கத்தை ஒரு பயன்படுத்துபவர் துவங்குவது.

**logon file : நுழைமுறை கோப்பு; தொடங்கு கோப்பு; புகுதிகைக்கோப்பு.**

**logotron logo : லோகோட்ரான் லோகோ :** மற்ற லோகோக்களுடன் ஏற்புடைத்தான இதில் 16 கிலோ எண்மி (பைட்) சிப்பு உள்ளது.

**log out : நிறுத்துதல்; வெளி வரு முறை :** கணினியைப் பயன்படுத்துவதை நிறுத்துதல். log off போன்றது.

**long : நீண்ட :** நிரல் தொடரமைப்பில் பயன்படுவது. 'சி' மொழியில் நீண்ட என்பது 4 எண்மி (பைட்டு)கள். அதில் ஒப்பமிடலாம் (-2 ஜி முதல் +2ஜி) அல்லது ஒப்பமிடாமல் விடலாம் (4ஜி).

**long card : நீண்ட அட்டை :** பீ.சி-க்களில், முழு நீள கட்டுப்பாட்டு அட்டை. அதனை விரிவாக்கத் துளைகளுடன் ஸ்லாட்டுடன் பொருத்த முடியும்.

**long file names : நீண்ட கோப்புப் பெயர்:** அண்மைக் கால பீசி இயக்க முறைமைகளில், குறிப்பாக விண்டோஸ் 95/98, விண்டோஸ் என்டி மற்றும் ஓஎஸ்/2 ஆகியவை கோப்புகளுக்கு மிக நீண்ட பெயர்களைச் சூட்ட, பயனாளருக்கு வாய்ப்புத் தருகிறது. 250-க்கு மேற்பட்ட எழுத்துகளில் கோப்பிற்குப் பெயர் சூட்டலாம். ஆங்கிலச் சிறிய எழுத்து, பெரிய எழுத்து மற்றும் இரு சொற்களுக்கு இடையே இடவெளி இருக்கலாம்.

**long-haul : லாங்-ஹால்: நீண்ட** தொலைவுகளுக்குத் தகவல்களை அனுப்பக்கூடிய திறனுள்ள மோடெம்கள் அல்லது தகவல் தொடர்புச் சாதனங்கள்.

**longitudinal redundancy check : நீள் தொலைவு திரும்பவரல் சோதனை:** பிழை சோதிக்கும் தொழில் நுட்பம். விவரத் தகவல் தொடர்புகளில் பயன் படுவது. இணை சோதனை எழுத்தை ஒவ்வொரு தரவுக் கட்டத்திற்குள் உள்ள ஒவ் வொரு பத்தியின் துண்மி களிலும் அமைக்க முடியும்.

**long lines : நீண்ட கம்பிகள் :** நீண்ட தொலைவுகளுக்கு தகவல்களை அனுப்புவதைக் கையாளும் திறனுடைய மின் சுற்றுகள்.

**look alike : போலத் தோன்றுதல்; தோற்றப்போலி :** *1.* ஒரு நிரல் தொடரை இயக்குவதன் மூலம் மற்றொன்றையும் இயக்கும் முறை அறிதல். 2. ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு படி எடுத்தல். போட்டியாளர்கள் ஒன்று போன்ற வேறொன்றை உரு வாக்கி அளிப்பார்கள்.

**look and feel : தோற்றமும் உணர்வும்; தோற்றம்- செயல் பாடு :** ஒரு வன்பொருள் அல்லது மென்பொருளின் தோற்றம் மற்றும் செயல்பாட்டைக் குறிக் கும் தொடர். பெரும்பாலும் இத் தொடர் ஒப்பிட்டுச் சொல்லப் பயன்படுகிறது. (எ-டு) விண் டோஸ் என்டி-யின் தோற்றமும் உணர்வும் விண்டோஸ் 95 போலவே இருக்கிறது.

**look in :** உள் நோக்கு.

**lookup : தேடியறி :** விரிதாள் நிரல் களில் உள்ளிணைக்கப்படும் கூறு. ஒரு குறிப்பிட்ட விரிதாள் பரப்பில் பதிவு செய்யப் பட்டுள்ள தரவுத் தளத்தில் தரவுவை எளிதாகத் தேடியறியும் பொருட்டு முன்கூட்டியே தரவுத் தளத்தின் முதன்மை மதிப்பு களைக் கொண்ட தேடியறி (Look-up) அட்டவணை உருவாக்கப் பட்டிருக்கும். தேடியறி அட்ட வணையில் கிடக்கை (Row) நெடுக்கை (Column)களில் தரவு பதியப்பட்டிருக்கும். ஒரு தேடி யறி செயல் கூறு (Lookup Function) இந்த அட்டவணையில் கிடை மட்டமாகவோ செங்குத்தாகவோ குறிப்பிட்ட முதன்மை மதிப் பைத் தேடும். அதைக் கொண்டு மூலத்தரவு அட்டவணையில் அம்மதிப்புக்குரிய சரியான தரவுவைக் கண்டு சொல்லும்.

**lookup function : தேடியறி செயல்** கூறு.

**lookup reference : தேடல் குறிப்பு**

**lookup table :** தேடல்அட்டவணை.

**loop : வட்டம்; சுற்று; மடக்கி; கொக்கி வளையம்:** சில குறிப் பிட்ட நிபந்தனைகள் நிறை வேற்றப்படும்வரை மீண்டும் மீண்டும் செயல்படுத்தப்படும் நிரலாக்கத் தொடரின் தொடர் நிரல்கள்.

**loop back plug :** லூப்பேக் பிளக்: கண்டறியும் இணைப்பி. அனுப் பும் கம்பியை மீண்டும் பெறும் கம்பிக்கு அனுப்பி சோதனை செய்யச் சொல்வது.

**loop carrier :** சுற்றுப்பாதை தூக்கி : தொலைபேசி தகவல் தொடர்பு களில் பயன்படுவது. தொலை வில் உள்ள இறுதி நிலையத் திலிருந்து மைய அலுவலகத்திற் குச் செல்லும் ஒப்புமை (அன லாக்) அல்லது இயக்க முறை (டிஜிட்டல்) கம்பிகளைக் கவனிக்கும் ஒரு அமைப்பு. தொலைநிலையத்தின் ஒப்பு மைக் குரலை இயக்க முறையாக மாற்றித் தருகிறது. வாடிக்கை யாளருக்கு ஐ.எஸ்.டி.என். சேவையை அளிக்க இதைப் பயன்படுத்தலாம்.

**loop code :** சுற்றுக் குறியீடு : ஒரு நிரல் தொடரின் சுற்றைப் பயன் படுத்தி நிரல்களின் தொடர்ச் சியை மீண்டும் மீண்டும் செய்தல். நேர் வரிசைக் குறியீடு அமைப்பதைவிட சுற்றுக் குறியீட்டில் அதிக செயல் நேரம் எடுக்கும். ஆனால், சேமிப் பகத்தில் மீதம் கிடைக்கும்.

**loop configuaration : மடக்கு தகவமைவு :** ஒருவகை தகவல் தொடர்பு இணைப்பு முடிவுற்ற மடக்காகச் செயல்படும் நிலை யங்களை ஒன்றாகச் சேர்த்து ஒரு தகவல் தொடர்புத் தடமாக்கு தல். இது போன்ற அமைப்பில், ஒரு நிலையம் அனுப்பும் தரவுவை அடுத்திருக்கும் நிலை யம் பெறும். தரவு தனக்கில்லை யெனில் அதனை அடுத்த நிலை யத்துக்கு அனுப்பி வைக்கும். இவ்வாறு, தரவானது இறுதி இலக்கை அடை யும்வரை பயணம் செய்யும்.

**loop, control :** கட்டுப்பாட்டு மடக்கி.

**loop counter : சுற்றுப்பாதை எண்ணுமிடம் :** ஒவ்வொரு முறை ஒரு சுற்றுப் பாதை இயக்கப்படும்போதும் ஒரு எண் (வழக்கமாக 1) அதிகரிக்கும் அல்லது குறைக்கும் கணினி. எத்தனை முறைகள் இயக்கப் படுகிறது என்பதைக் கண் காணிக்க ஒரு நிரல் தொடர் மூலம் இது இயக்கப்படுகிறது.

**loophole : ஓட்டை :** கணினி அமைப்பின் அணுகுக் கட்டுப் பாடுகளை மீறிச் செல்லும் வன்

பொருள் அல்லது மென்பொரு ளின் தவறு அல்லது விட்டுப் போதல்.

**looping : பன்முறை செய்தல்; கொக்கி வளையமாக்கல் :** அதே நிரல் அல்லது நிரல்களின் தொடர்ச்சியை மீண்டும் மீண்டும் செயல்படுத்துதல்.

**loop, invariant : மாறாநிலை மடக்கி :** ஒரு மடக்குச் செயல் திரும்பத் திரும்பச் செய்யப் படும்போது சரி என்ற நிலை மாறாதிருக்கும் ஒரு நிபந்தனை.

**loop, nesting : பின்னல் மடக்கு.**

**loop, ring network : வளையப் பிணைய மடக்கி**

**loopsely coupled : இலேசாக இணைக்கப்பட்டது :** ஒரு கட்டமைப்பின் வழியாக இணைக் கப்பட்டு தனியாக நிற்கும் கணினிகளைக் குறிப்பிடுகிறது. இலேசாக இணைக்கப்பட்ட கணினிகள் தாங்களாகவே செய லாக்கம் புரிந்து தேவைக்கேற்ப தரவுகளைப் பரிமாறிக் கொள்வன.

**loop structure : சுற்று அமைப்பு :** வடிவமைக்கப்பட்ட ஓடு படத்தின் மூன்று அடிப்படை அமைப்புகளில் ஒன்று. ஒரு சூழ்நிலை ஏற்படும்வரை மீண் டும், மீண்டும் ஒரு பணியைச் செய்ய இது வழி செய்கிறது.

**loop technology : சுற்று தொழில் நுட்பம் :** ஒரு கணினி கட் டமைப்பில் எந்திரங்களை ஒன்றாக இணைத்து, தரவு தொடர்பு கொள்ளும் முறை.

**loss : இழப்பு.**

**loss balancing : இழப்பு ஈடு கட்டல் :** *1.* அலைபரப்பில் ஒரு சமிக்கை திறனிழக்கும்போது அதனை ஈடுகட்டும் பொருட்டு திறன் பெருக்கல் (amplification) 2. ஒரு மதிப்பினை வேறொன் றாகப் பெயர்க்கும்போது ஏற் படும் இழப்பினை ஈடுகட்டல்.

**lossless compression : தளர்ச்சி யில்லாத சுருக்கம் :** தரவுகளை மூலத்தில் இருந்தது போன்று 100 விழுக்காடு பழையபடியே விரித்துக் கொண்டு வரும் சுருக்கத் தொழில் நுட்பம்.

**lossy compression : தளர்ந்த சுருக்கம்:** தரவுகளை மூலத்தில் இருந்தது போன்ற பழைய நிலை அளவுக்கு 100% மாற்றி அமைக்காத சுருக்கத் தொழில் நுட்பம். சுருக்கத்தைக் கூட்டு வதற்காக படங்கள் மற்றும் குரல் மாதிரிகளை தளர்ச்சியான துல்லியத்தில் வைத்திருக்க முடியும்.

**lost cluster : தொலைந்த தொகுதி :** ஒரு கோப்பின் பெயருடனான தங்களது அடையாளத்தைத்

தொலைத்து விட்ட வட்டுப் பதிவேடுகள். ஒரு கோப்பினைச் சரியாக முடித்து வைக்காவிட்டால் இத்தகைய நிலை ஏற்படும். அதன் பயன்பாட்டிலிருந்து முறையாக வெளிவராமல் கணினியை நிறுத்தும்போது சில சமயம் இவ்வாறு ஏற்படுவதுண்டு.

**lotus 1-2-3 : ஒரு மென் சாதனம் :** அதன் பெயரே மூன்று பணிகளைக் குறிப்பிடும் ஒருங்கிணைந்த மென்பொருள் அமைப்பு. அகலத்தாள், தரவுத்தளம், வரைபடமுறை ஆகியவைகளே இந்த 3 பணிகள். தரவுத்தள மேலாண்மையுடன் மின்னஞ்சல் பணித்தாளை இணைக்கிறது. இத்துடன் உடனடியாக படங்களாலான தரவு அல்லது வரைபட முறையை உருவாக்கும் திறனுடையது.

**lotus add-in tool kit : லோட்டஸ் சேர்ப்பு கருவிப்பெட்டி :** லோட்டசிடமிருந்து வரும் பாஸ்கல் போன்ற நிரல் தொடர் மொழி. லோட்டஸ் 1-2-3இன் மதிப்பு 3.0-வில் இயக்குவதற்காக உருவாக்க வேண்டிய தானியங்கிச் செயல்முறைகளை இது அனுமதிக்கிறது. இதில் ஒரு பதிப்பி (எடிட்டர்), தொகுப்பி (கம்பைலர்), பிழை நீக்கி (டி-பக்கர்) ஆகியவை இருக்கும். சேர்க்கும் பொருள்களைச் செய்பவர்கள் அதை பதிப்பு 3.0-வுக்கு மாற்ற வசதி செய்து தருகிறது.

**lotus manuscript : லோட்டஸ் கையெழுத்துப்படி :** அறிக்கைகள் மற்றும் தொழில்நுட்ப ஆவணங்களை எழுத வடிவமைக்கப்பட்ட சொல் மற்றும் ஆவண செயலகம்.

**lotus menu : லோட்டஸ் பட்டி :** லோட்டஸ் 1-2-3-உடன் அறிமுகப்படுத்தப்பட்டு நடைமுறையில் தர நிர்ணயமாக ஆன பட்டியல் 'மெனு'. அதில் சொற்களின் வரிசை இருக்கும். ஒவ்வொன்றிலும் ஒரு வாய்ப்பு அளிக்கப்பட்டு 'enter' பொத்தானையோ அல்லது சொல்லின் முதல் எழுத்தையோ அழுத்தி தேர்ந்தெடுக்க வசதி உள்ளது. சொல் வந்தவுடன், அதற்கான விளக்கமும் வரும்.

**Lovelace, Ada Augusta : லவ்லேஸ், ஆடா அகஸ்டா :** லவ்லேசின் சீமாட்டி ஆடா அகஸ்டின் நிரல் தொடர் அமைப்பதற்கான முக்கியச் சிந்தனைகளை உருவாக்கினார். சார்லஸ் பாபேஜின் நண்பரும் சிறந்த கணித மேதையுமான இவர் பகுப்பு எந்திரம் பற்றி எழுதியுள்ளார்.

**low activity : குறைந்த நடவடிக்கை ; குறைந்த செயற்பாடு :**

புதுப்பிக்கும் பணியில் மொத்தப் பதிவேடுகளில் ஒரு சிறிய பகுதியே செயல்பட்ட நிலை.

**low bandwidth : குறுகிய அலைக் கற்றை.**

**low density : குறைந்த அடர்த்தி.**

**lower : கீழ்நிலை; கீழ்த்தட்டு :** டிபேஸ்/ சி-யில் ஒரு செயல் முறை. அதன் வாக்குவாத சரத் திற்குச் சமமான சிறிய எழுத்து சரத்தினைத் திருப்பி அனுப்பு கிறது.

**lower case : சிறிய எழுத்து ; கீழ்த் தட்டு எழுத்து :** தலைப்பு எழுத்து இல்லாத அகர வரிசை எழுத்து கள். விடிடீஎஸ் (VDTS)-இல் இதைப் பயன்படுத்த முடியாது.

**lower level management : கீழ் மட்ட நிர்வாகம் :** குறிப்பிட்ட பணிகளைச் செய்வதற்கான இயக்கும் முடிவுகளை எடுக்கும் முதல்வரிசை மேற்பார்வை யாளர்கள்.

**lowest layer : அடிநிலை அடுக்கு.**

**low frequency : குறைந்த அலை வரிசை :** *30 முதல் 300,000* ஹெர்ட்ஸ் அளவில் சுழலும் மின்காந்த அலை.

**low level format : கீழ்நிலை படிவம்:** ஒருவன் தட்டின் அடிப் படை (ஆரம்ப) நிறுவுதல், வன்வட்டின் வாழ்நாளில் ஒரே ஒருமுறைதான் இது நடைபெறு கிறது. வன்வட்டு இயக்கியில் பிரிவு தலைப்புகளை அடை யாளம் செய்யும் செயல்முறை. பல வட்டு மேலாண்மை பயன் பாடுகளில் 'முன்படிவம்' எனப் படும் கீழ்நிலை படிவ அமைப் பும் செய்ய முடியும்.

**low level language : அடிநிலை மொழி; தாழ்நிலை மொழி :** பொறி சார்ந்த மொழி அல்லது மிகக் குறைந்த கட்டுப்பாட்டு ஆணைகளையும் தரவு இனங் களையும் கொண்ட மொழி. அடிநிலை மொழியில் எழுதப் படும் நிரலின் ஒவ்வொரு கூற் றும் பெரும்பாலும் ஒரு பொறி ஆணையாக இருக்கும்.

**low memory : கீழ் நினைவகம்; அடி நினைவகம் :** மீச்சிறு எண் களால் சுட்டப்படும் நினைவக இருப்பிடங்கள். ஐபிஎம் பீசி களில் *1* மெகாபைட் நினைவகப் பரப்புக்குள் இருக்கின்ற முதல் *640* கிலோபைட் அளவுள்ள நினைவகப் பகுதி கீழ் நினை வகம் எனப்படுகிறது. கீழ் நினைவகப் பகுதி, ரேம் (RAM) நினைவகத்துக்கென ஒதுக்கப் படுகிறது. எம்எஸ்-டாஸ் இயக்க முறைமையும் பயன் பாட்டுப் புரோகிராம்களும்

அப்பகுதியைப் பகிர்ந்து கொள்கின்றன.

**low misconvergence :** குறைவான காட்சித் திருப்பம்.

**low order :** கீழ் நிலை : குறைந்த பலம் அல்லது முக்கியத்துவம் உள்ள எண்ணின் இலக்கம் அல்லது இலக்கங்கள் பற்றியது 7643215 என்ற எண்ணில் கீழ் நிலை இலக்கம் 5.

**low order column :** கீழ்வரிசை பத்தி: துளை அட்டை புலத்தில் அதிக எண்ணுள்ள வலது மூல பத்தி.

**low pass filter :** கீழ்க்கற்றை வடி கட்டி: ஒரு குறிப்பிட்ட அலை வரிசைக்குக் கீழேயுள்ள அதிர் வலைகளைக் கடந்து செல்ல அனுமதிக்கின்ற ஒரு மின்னணுச் சுற்று.

**low pitch :** தாழ் தொனி.

**low power microprocessor :** குறை திறன் நுண்செயலி.

**low quality :** தாழ் செறிவு.

**low radiation :** குறைந்த கதிர்வீச்சு : குறைந்த அலைவரிசையையும் மிகக் குறைந்த அலைவரிசை யையும் வெளியிடுகின்ற ஒளிக் காட்சி முனையங்களைக் (Video terminals) குறிப்பிடுவது. அலு வலக அறையைப் பிரிவினை செய்வதன் மூலம் இதைத் தடுக்க முடியாது. சி.ஆர்.டி.யி லிருந்து இதை நீக்க வேண்டும். இது குறித்த உடல்நல ஆராய்ச்சி கள் முடிந்தபாடில்லை என்பது டன் சர்ச்சைக்குரியவைகளாக வும் உள்ளன.

**low res graphics :** லோ ரெஸ் கிராஃபிக்ஸ் : Low resolution graphics என்பதன் சுருக்கம். குறைவான படப் புள்ளிகளைக் கொண்டு உருவாக்கப்படும், காட்சித் திரையில் காணும் தடுமாறும் படம்.

**low resolution :** குறைந்த தெளிவு : வரைபடமுறை திரையில் காணும் தகவலின் தரம் மற்றும் துல்லியம் பற்றியது. தெளிவின் தரமானது உருவம் ஏற்படுத்தும் படப்புள்ளிகளைச் சார்ந்தே உள்ளது. குறைந்த படப்புள்ளி களைக் கொண்டு உருவாக்கப் படும் படத் தெளிவுகள் அதிக தெளிவு படங்களைப் போல துல்லியமாகவும், தெளிவாக வும் இருக்கும்.

**low speed personnel computer networks :** குறைவேக பீ.சி. பிணைப்புகள் : தனிநபர் கணினி களையே இறுதி நிலை பயன் படுத்துபவர்களாகக் கொண்டுள்ள பிணைப்புகள்.

**low voltage :** குறைந்த மின்னழுத் தம்; தாழ் மின்னழுத்தம்.

**low-order bit : கீழ்வரிசைத் துண்மி :** கணினி சொல்லின் வலது ஓரத்தில் உள்ள துண்மி.

**low-res graphics : குறைந்த பிரி திறன் வரைவியல்.**

**l.p. : எல்.பீ. :** linear programming மற்றும் line printer என்பதன் குறும்பெயர்.

**LPI (Lines per Inch) : எல்.பீ.ஐ. (ஒரு அங்குலத்திற்கு இத்தனை வரிகள்) :** ஒரு செங்குத்தான அங்குலத்திற்கு எத்தனை வரிகள் அச்சிடப்படுகிறது என்பது.

**LPM : எல்.பீ.எம். :** Line Per Minute என்பதன் குறும்பெயர்.

**LPT : எல்பீடீ :** வரி அச்சுப் பொறியின் தருக்கநிலைச் சாதனப் பெயர். எம்எஸ்-டாஸ் இயக்க முறைமையில் இணைநிலை அச்சுப்பொறித் துறை(port)க் கென ஒதுக்கப்பட்ட பெயர். அதிக அளவாக மூன்று வைத்துக் கொள்ளலாம். எல்பீடீ1, எல்பீடீ2, எல்பீடீ3 என அவை அழைக்கப்படும். பிஆர்என் (PRN) என்பதும் அச்சுப்பொறியைக் குறிக்கும் தருக்கநிலைச் சாதனப் பெயராகும். இதுதான் எம்எஸ்-டாஸில் முதன்மை அச்சுநகல் வெளியீட்டுக்கான சாதனமாகக் கொள்ளப்படுகிறது. பெரும்பாலும், எம்எஸ்-டாஸில் எல்பீடீ1 என்பதும் பிஆர்என் என்பதும் ஒன்றாக இருக்கும்.

**.lr : .எல்ஆர் :** ஓர் இணைய தள முகவரி, லைபீரியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**LRC : எல்.ஆர்.சி. :** Longitudinal Redundancy Check என்பதன் சுருக்கம். அதன் நீள்பாதையில் ஒரு குறிப்பிட்ட துண்மி சரத்தில் இருந்து இணையான துண்மியை உருவாக்கி பிழை சோதிக்கும் முறை. காந்த நாடா போன்ற வரிசை. பத்தி படிவத்தில் வி.ஆர்.சி.யுடன் எல்.ஆர்.சி. பயன்படுத்தப்பட்டு ஒவ்வொரு எழுத்துக்கும் இணை எழுத்து உருவாக்கப்படுகிறது.

**.ls : .எல்எஸ் :** ஓர் இணைய தள முகவரி, லெசோத்தோ நாட்டைச் சார்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**ls : எல்எஸ் :** யூனிக்ஸ் இயக்க முறைமையில் ஒரு கட்டளை. நடப்புக் கோப்பகத்திலுள்ள உள் கோப்பகங்கள் மற்றும் கோப்புகளின் பட்டியலைக் காண்பிக்கச் செய்யும் கட்டளை. அல்லது ஒரு குறிப்பிட்ட கோப்பகப் பெயரைக் கட்டளையுடன்

குறிப்பிட்டு அதன் உள்ளடக் கத்தைப் பெற முடியும். இணையத்தில் ஏராளமான எஃப்டீபீ தளங்கள் பலவும் யூனிக்ஸ் முறைமையில் இயங்கு பவை என்பதால் அத்தளங் களிலும் இக்கட்டளையைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

**LS-120 : எல்எஸ்-120 :** ஓர் ஒற்றை 3.5 அங்குல நெகிழ் வட்டில் 120 எம்பி தரவுவைச் சேமிக்கும் திறனுள்ள ஒரு நெகிழ்வட்டு இயக்ககம். எல்எஸ்- 120 இயக்ககங்கள் பிற நெகிழ்வட்டு வடிவாக்கங்களுக் கும் ஒத்திசைவானவை.

**LSB : எல்.எஸ்.பி. :** Least Significant Bit என்பதன் குறும்பெயர்.

**LSC : எல்.எஸ்.சி. :** Least Significant Character என்பதன் சுருக்கம்.

**LSD : எல்.எஸ்.டி. :** Least Significant Digit என்பதன் குறும்பெயர்.

**LSI : எல்.எஸ்.ஐ. :** Large Scale Integration என்பதன் குறும் பெயர்.

**.lt : .எல்டீ :** ஓர் இணைய தள முகவரி லித்துவேனியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.lu : .எல்யூ :** ஓர் இணைய தள முகவரி லக்ஸம்பர்க் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**LU : எல்யூ :** தருக்க அலகு எனப் பொருள்படும் Logical Unit என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஓர் ஐபிஎம் எஸ்என்ஏ பிணையத்தில் ஒரு தகவல் தொடர்பு உரையாடலின் தொடக்கம் அல்லது முடிவைக் குறிக்கும் புள்ளி.

**LUG : எல்யூஜி :** Linux Users Group என்பதன் முதலெழுத்துக் குறும் பெயர்.

**luggable computer : எடுத்துச் செல் கணினி; கைப்பெட்டிக் கணினி :** 1980களின் தொடக்கத் தில் அல்லது மத்திய காலத்தில் உருவாக்கப்பட்ட கையில் எடுத்துச் செல்லத்தக்க முதல் கணினிகள். இந்தத் தொடக்க காலக் கணினிகள் சிஆர்டீ அடிப் படையிலான காட்சித்திரை களைக் கொண்டிருந்தன. 20 பவுண்டுக்கு மேல் எடை கொண் டவை. நடுத்தரக் கைப்பெட்டி யின் அளவுடையவை. எனவே தான் இப்பெயர் ஏற்பட்டது.

**lumen : லூமென் :** ஒளியின் ஓட் டத்தை அளக்கும் அலகு. ஒரு மெழுகுவர்த்தி 13 லூமென் களை உருவாக்குகிறது. 100 வாட் பல்பு 1,200 தருகிறது.

**lumena** : லூமனா : டைம் ஆர்ட்ஸ் நிறுவனத்தின் பீ.சி. ஓவிய நிரல் தொடர். என்.டி. எஸ்.சி. ஒளிக்காட்சி (வீடியோ) வெளியீடுகளை அது ஏற்று உரு வாக்குகிறது. அதற்கு ஒரு ஒளிக்காட்சி வரைகலை தேவை.

**luminance** : ஒளிர்வு : பிரகாசத் தைக் கட்டுப்படுத்தும் கூட்டு ஒளிக்குறிப்பின் பகுதி.

**luminance decay** : ஒளிர்வு மங்குதல்: காட்சித்திரை முகப் பில் நீண்ட நேரத்துக்குப் பிறகு ஏற்படும் திரை வெளிச்சத்தின் குறைவு.

**luminosity** : ஒளிர் திறன்.

**lurk** : ஒளிவு; பதுக்கம் : ஒரு செய்திக் குழுவில் அல்லது நிகழ் நிலைக் கலந்துரையாடல்களில் தாம் எதுவும் அனுப்பாமல் கட்டுரைகளையும் செய்திகளை யும் பெற்றுக் கொண்டிருத்தல்.

**.lv** : .எல்வி : ஓர் இணைய தள முகவரி லாத்துவியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**.ly** : .எல்ஒய் : ஓர் இணைய தள முகவரி, லிபியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**lynx** : லின்ஸ்க் : யூனிக்ஸ் பணித் தளத்தில் செயல்படும் ஒரு வலை உலாவி. உரைப் பகுதி களை மட்டுமே பார்வையிட முடியும்.

**.lzh** : .எல்இஸட்ஹெச் : லெம் பெல்ஸிவ் மற்றும் ஹருயாசு படிமுறைத் தருக்கப்படி இறுக் கிச் சுருக்கப்பட்ட காப்பகக் கோப்புகளின் கோப்பு வகைப் பெயர் (File Extension).

**LZW compression** : எல்இஸட் டபிள்யூ இறுக்கம் : கோப்புகளை இறுக்கிச் சுருக்குவதற்கான ஒரு படிமுறைத் தருக்கம் (algorithm). மீண்டும் மீண்டும் இடம் பெறும் ஒரே மாதிரியான சரங் கள் (strings) சில குறிப்பிட்ட குறி யீடுகளால் மதிப்பீடு செய்யப் படுகின்றன. ஜிஆர்எஃப் இறுக்கு முறைக்கும் இதுவே அடிப்படை ஆகும்.

# M

**M** : எம் (மெகா) : Mega என்பதன் குறும்பெயர், பத்து இலட்சம் என்பது பொருள். சேமிப்புச் சாதனங்களின் திறனைக் குறிக்க அடிக்கடி பயன்படுத்தப்படும் பெயர்ச் சீட்டு.

**M68000** : எம் 68000 : மோட்டோரோலா நிறுவனத்தால் தயாரிக்கப்படும் 16-துண்மி நுண் செய்முறைப்படுத்திச் சிப்பு. குறிப்பாக நுண்கணினிகளில் இது பயன்படுகிறது.

**.ma** : .எம்ஏ : ஓர் இணைய தள முகவரி மொராக்கோ நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**Mac** : **மேக்** : Apple Macintosh Computer என்பதன் சுருக்கம்.

**MacBinary** : **மேக்பைனரி** : ஒரு கோப்புப் பரிமாற்ற நெறிமுறை. மெக்கின்டோஷ் கணினிகளில் உருவாக்கப்பட்டு மெக்கின்டோஷ் அல்லாத கணினிகளில் சேமிக்கப்படும் கோப்புகளின் குறிமுறையைப் பாதுகாக்கப் பயன்படுகிறது. இக்கோப்புகளில் கோப்பின் உள்ளடக்கப் பகுதி, தரவுப் பகுதி, ஃபைண்டர் எனும் தேடு நிரலுக்கான பகுதி எனப் பிரிவுகள் இருக்கும்.

**MacDraw** : **மேக் டிரா:** ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினியின் வரைபடப் பணித்தொகுப்பு. கலைஞர்கள், கட்டடக் கலைஞர்கள், பொறியாளர்கள், வரைபடக் கலைஞர்கள் மற்றும் வரைபடக்கலை தொடர்புடைய தொழில் நுணுக்கக் கலைஞர்கள் ஆகியோருக்காக வடிவமைக்கப் பட்டது.

**MAC driver** : **மேக் டிரைவர்** : Media Access Control Driver என்பதன் குறும்பெயர். மைக்ரோசாஃப்ட் என்.டி.ஐ.எஸ். தர நிர்ணயத்தை செயல்படுத்தும் கட்டமைப்பு ஏற்பி இயக்கி.

**Mach** : **மேக்** : கார்னஜி - மெல்லன் பல்கலைக்கழகம் உருவாக்கிய யூனிக்ஸ் போன்ற இயக்க அமைப்பு (ஆப்பரேட்டிங் சிஸ்டம்).

**machanics** : **விசையியல்; எந்திரவியல்.**

**machine address** : **எந்திர முகவரி.**

**machine, accounting** : **கணக்குப் பொறி; கணக்கிடு எந்திரம்.**

**machine code :** எந்திரக் குறியீடு; பொறிக் குறிமுறை : ஒரு எந்திரம் புரிந்து கொள்ளும் வகையில் வடிவமைக்கப்பட்ட இயக்கக் குறியீடு.

**machine cycle :** எந்திரச் சுழற்சி; பொறிச் சுழற்சி : குறிப்பிட்ட எண்ணுள்ள உள் நடவடிக்கைகளைச் செய்ய ஒரு கணிணி எடுத்துக் கொள்ளும் நேரம்.

**machine dependent :** எந்திரச் சார்பு; பொறி சார்ந்த : ஒரு குறிப்பிட்ட வகைக் கணினியில் மட்டும் செயல்படும் மொழி அல்லது நிரல் தொகுப்பு தொடர்பானது. வன்பொருள் சார்ந்தது என்பதோடு சமமானது. எந்திரம் சார்ந்தது என்பதற்கு எதிரானது.

**machine error :** எந்திரப் பிழை; பொறித் தவறு : கருவிக் கோளாறு காரணமாக தகவலில் சரியானதிலிருந்து ஏற்படும் திரிபு.

**machine independent :** எந்திரச் சார்பிலி; பொறி சாரா : 1. கணினி முறைமையின் பண்புகளைச் சார்ந்ததாக இல்லாமல் பெரிதும் மொழி அல்லது நிரல் தொகுப்பு தொடர்பானது. 2. பல தயாரிப்பாளர்கள் உருவாக்கிய கணினிகளில் அல்லது ஒரே தயாரிப்பாளர் உருவாக்கிய பல எந்திரங்களில் நிரல் தொகுப்பு ஒன்றை இயக்கும் திறன். எந்திரச் சார்பு என்பதற்கு மாறானது.

**machine instruction :** எந்திர ஆணை; பொறி ஆணை: ஒரு கணினி நேரடியாகப் புரிந்து கொண்டு நிறைவேற்றக்கூடிய ஆணை.

**machine intelligence :** பொறி செயற்கை நுண்ணறிவு .

**machine interruption :** எந்திரக் குறிக்கீடு; எந்திர இடையீடு.

**machine language :** எந்திர மொழி; பொறி மொழி : கணினி ஒன்றின் அடிப்படை மொழி. எந்திர மொழியில் எழுதப்பட்ட நிரல் தொகுப்பு. அதனை கணினி மேலும் மொழிமாற்றம் செய்யத் தேவையில்லை.

**machine language subroutine :** எந்திர மொழி துணை வாலாயம் : சேர்ப்பி மொழியில் எழுதப்பட்ட துணை வாலாயம் (சப்ரொட்டீன்). உயர் நிலை மொழியில் எழுதப்பட்ட நிரல் தொடருடன் சேர்க்கப்படுகிறது. இத்தகைய துணை வாலாயம்களை விரைவாகவும் திரும்பத் திரும்பவும் செய்யப்படும் வேலைகளுக்கு அதிகம் பயன்படுத்துவார்கள். அத்தகைய நிரல் தொடர்கள் குறியீடு செய்யப்பட்டு நினைவகத்திலிருந்து

வட்டுக்குத் தனியாக ஏற்றப் படும்.

**machine learning** : எந்திரம் கற்றல்; பொறியாய்வு : பழைய செயல்களை அடிப்படையாகக் கொண்டு தன் செயல் திறனை மேம்படுத்திக் கொள்ளும் பட்டறிவு சார் (ஹீயரிச) முறை.

**machine operator** : எந்திர இயக்கர்; பொறி இயக்குநர்.

**machine oriented language** : எந்திரம் சார்ந்த மொழி; பொறி சார்ந்த மொழி: மனித மொழி யைப் போலல்லாமல் எந்திர மொழியை பெரிதும் ஒத்திருக் கும் நிரல் தொகுப்பு மொழி.

**machine readable information** : எந்திரம் அறிந்துக் கொள்ளக் கூடிய செய்தித் தரவு ; பொறி அறியத் தக்க தரவு : எந்திரம் ஒன்றினால் உணரக்கூடிய அல்லது படிக்கக் கூடிய வகையில் ஏதாவது ஊட கம் ஒன்றில் பதிவு செய்யப் பட்ட தரவு. எந்திரம் உணர் நிலை என்றும் கூறப்படுகிறது.

**machine sensible information** : பொறியுணர் தரவு.

**machine time, available** : கிடைக்கக் கூடிய எந்திர நேரம்; கிடைக்கும் பொறி நேரம்.

**macintosh** : மெக்கின்டோஷ் : ஆப்பிள் கம்ப்யூட்டர் தயாரித்த



மெக்கின்டோஷ்

புகழ்பெற்ற நுண்கணினி முறைமை. விசைப்பலகையுடன் முதன்மையான உள்ளீட்டுக் கருவியாக சுட்டியைப் (Mouse) பயன்படுத்துகிறது.

**macintosh application environment : மெக்கின்டோஷ் பயன்பாட்டுச் சூழல் :** எக்ஸ் விண்டோஸின் சிஸ்டம் சாளரத்துக்குள்ளேயே மெக்கின்டோஷ் இடைமுகத்தை வழங்கக்கூடிய, ரிஸ்க் (RISC) செயலி அடிப்படையிலான முறைமைகளுக்குரிய ஒரு செயல்தள அமைப்பு (system shell). இது மேக் மற்றும் யூனிக்ஸ் ஆகிய இரு முறைமைகளுக்கும் ஒத்தியல்பானது. மெக்கின்டோஷில் செயல்படும் அனைத்துவகை செயல்தளத் தயாரிப்புகளுக்கும் ஏற்றது.

**macintosh file system : மெக்கின்டோஷ் கோப்பு முறைமை :** தொடக்கக் காலங்களில் தட்டைக் கோப்பு முறைமையே (Flat File System) பயன்பாட்டில் இருந்தது. அதன்பிறகு படிநிலைக் கோப்பு முறைமை (Hierarchical File System) அறிமுகப்படுத்தப்பட்டது.

**macintosh user interface : மெக்கின்டோஷ் பயன்படுத்துபவர் இடைமுகம் :** ஜெராக்ஸ் நிறுவனத்தால் உருவாக்கப்பட்டு 1981இல் ஜெராக்ஸ் ஸ்டாரில் பயன்படுத்தப்பட்ட மெக்கின்டோஷை இயக்கும் முறை. வரைகலையைப் பயன்படுத்தி ஐக்கான்கள் எனப்படும் சிறிய படங்களின் மூலம் நிரல் தொடர்கள், கோப்புகள், மடிப்புகள் மற்றும் வட்டுகளைக் குறிப்பிடுகிறது. சுட்டி பொத்தானை நகர்த்தும்போது திரையில் உள்ள குறும்படம் நகர்ந்து, க்ளிக் செய்ததும் விருப்பப்படுவதைத் தேர்ந்தெடுக்கிறது. இது விண்டோஸ் போன்ற பலவற்றில் பயன்படுத்தப்படுகிறது.

**MacIRMA : மெசிர்மா :** மெக்கின்டோஷுக்கான தரவுத் தொடர்பு அட்டை. நுண்கணினியிலிருந்து பெருமுகக் கணினிக்கு மாற்றுவது. 3270 முனையத்தைக் கொண்டது.

**Mac Lisp : ஆரம்ப கால எம்.ஐ.டீ. ஏ.பி.ஐ. திட்டத்தின் பெயர். Machine Aided Cognition என்பதை உணர்த்துகிறது.**

**Mac OS : மேக் ஓஎஸ் :** மெக்கின்டோஷ் இயக்க முறைமை எனப் பொருள்படும் Macintosh Operating System என்ற தொடரின் சுருக்கம். 1994 செப்டம்பரில் வெளியிடப்பட்ட 7.5 ஆம் பதிப்புக்குப் பின்னரே மெக்கின்டோஷ் இயக்க முறைமை

மேக்ஓஎஸ் என அழைக்கப் படலாயிற்று. அப்போதிருந்து தான் ஆப்பிள் நிறுவனம் பிற கணினி உற்பத்தியாளர்களுக்கும் இதனை உருவாக்குவதற்கான உரிமம் வழங்கத் தொடங்கியது.

**MacPaint** : மேக்பெய்ன்ட் : மெக்கின்டோஷ் கணினிக்கான நவீன வரைபட நிரல் தொகுப்பு. வரைபட வெளி யீட்டுக்கான பல பயன்பாடு களை உடைய கருவிகளை வழங்கும் நிரல் தொகுப்பு.

**macro** : பெரும; அதிக : ஒற் றைக் குறியீட்டு நிரல் தொகுப்பு மொழிக்கட்டளை. அதனை மொழி பெயர்க்கும்பொழுது பல வரிசையான எந்திர மொழி கட்டளைகளை உருவாக்கு கின்றன.

**macro assembler** : பெரும நிரல் தொகுப்பி : பயன்படுத்துவோர் புதிய கணினி நிரல்களை உருவாக்கவும் அனுமதிக்கிற இணைப்பு. அப்புதிய கணினி நிரல்கள் பெரும நிரல்கள் என்றழைக்கப்படுகின்றன.

**macro expansion** : பெரும விரிவாக் கம் : மூல நிரல் தொடரில் உள்ள நுண் நிரல்களை எந்திர மொழி யில் மாற்றும் செயல்முறை.

**macro generator** : பெரும ஆக்கி; ஜெனரேட்டர்.

**macro instruction** : பெரும ஆணை : *1.* ஆதார மொழி நிரல்கள் - ஒரு குறிப்பிட்ட மொழி ஆணைகளுக்கு சம மானது. 2. பல குறு ஆணை களால் உருவாக்கப்பட்ட எந்திர மொழி.

**macro language** : பெரும மொழி : பெரும செயலகம் பயன்படுத்து கின்ற கட்டளை. பெருமக் கட்டளைகளை பயன்படுத்து கிற சேர்ப்பி மொழி.

**macro media flash** : மேக்ரோ மீடியா பிளாஷ்.

**macro processor** : பெரும செய லகம்: விசைப் பலகையிலிருந்து மேக்ரோக்களை உருவாக்கி செயல்படுத்துகின்ற மென் பொருள். மேக்ரோ அழைப்பு களுக்காக மேக்ரோ துணை வாலாயம்களை மாற்றித் தரு கின்ற பொறி மொழியாக்கியின் பகுதி.

**macro programming** : பெரும செயலாக்கம் : குறும வகைப் படுத்தி ஒன்றுக்கான கட்டுப் பாட்டு நிரல் தொகுப்பு போன்ற பெரும நிரல்களை நிரல் தொகுப்பாக்குதல்.

**macro recorder** : சுருக்க ஆணை; ஆணைச் சுருக்கி : பட்டியல் தேர்வுகள் மற்றும் விசை அடிப்புகளை பெரிதாக

'மேக்ரோ' மாற்றித் தரும் நிரல் தொடர் துணை வாலாயம். ஒருவர் பதிவியைத் திருப்பி, பதிவு செய்ய வேண்டிய செயல் முறைகளைச் செய்து பின்னர் பதிவியை நிறுத்தி பெரியதுக்கு முக்கிய கட்டளையைக் கொடுப்பார். விசைக் கட்டளையை அழுத்தியவுடன், தேர்வுகள் செய்யப்படும்.

**macros** : குறுமங்கள்.

**macro virus** : மேக்ரோ நச்சு நிரல்; குறும நச்சுநிரல் : ஒரு பயன்பாட்டு மென்பொருளு டன் தொடர்புடைய குறும மொழியில் எழுதப்பட்ட ஒரு நச்சு நிரல். ஓர் ஆவணக் கோப்புடன் இந்த மேக்ரோ நச்சு நிரல் எடுத்துச் செல்லப் படும். ஆவணத்தைத் திறக்கும் போது நச்சுநிரல் இயக்கப்படும்.

**Mac TCP** : மேக் டீசிபீ : மெக் கின்டோஷ் கணினிகளில் பயன் படுத்தப்படும் டீசிபீ/ஐபீ நெறி முறையின் மேக் வடிவம்.

**MacWrite** : மேக்ரைட் : சொல்லை வகைப்படுத்தும் செயல்முறை நிரல் தொகுப்பு. மெக் கின்டோஷ் கணினிக்கானது.

**Macwrite II** : மேக்ரைட் II : கிளாரிஸ் கார்ப்பரேஷன் உரு வாக்கிய அனைத்து அம்சங் களும் கொண்ட மெக்கின்டோஷின் சொல் செயலாக்க நிரல் தொடர். மேக் 128 மற்றும் 512 ஆகிய ஒவ்வொன்றுடன் ஒருங் கிணைத்து அனுப்பப்பட்டது.

**mag** : மேக் : Magnetic என்பதற் கான குறும்பெயர்.

**Magazette** : மேகசீட் : வட்டில் பதிவு செய்யப்படும் மேகசீன்.

**magazine** : இதழ்; சஞ்சிகை.

**mag card** : மேக் அட்டை : ஐபிஎம் கார்ப்பரேஷன் உருவாக் கிய மின்காந்த அட்டை. காந்தப் பொருள் பூசப்பட்டது. அதில் தரவு பதிவு செய்யப்படுகிறது. சொல் வகைப்படுத்து முறை மைகளில் அடிக்கடி பயன் படுத்தப்படுகிறது.

**Magellan** : மெகல்லன் : லோட்டசிலிருந்து பீ.சி.க்களுக் கான வட்டு மேலாண்மை பயன்பாடு. கோப்புப் பெயர்கள் மற்றும் உள்ளடக்கங்களைத் தேட உதவுகிறது. கோப்பு நோக் கியை இது பிரபலப்படுத்தியது. பல்வேறு தரவுக் கோப்புகளை, அவற்றை உருவாக்கியவரைப் போல நீங்கள் பயன்படுத்து வதற்காகத் தேட உதவுகிறது.

**magnet** : காந்தம்; மின் காந்தம்.

**magnetic** : மின் காந்தம் : காந் தத்தை உருவாக்குகிற, அல்லது காந்தத்தால் உருவாக்கப்படுகிற,

அல்லது காந்தத்தால் இயக்கப் படுகிறது.

**magnetic bubble memory : காந்தக் குமிழ் நினைவகம் :** நகரும் காந்தக் குமிழ்களைப் பயன்படுத்தும் நினைவு. குமிழ்கள் என்பது காந்த மேற்றப்பட்ட பகுதிகள். காந்தப் பொருளில் - அதாவது ஆர்த்தோ ஃபெரைட் போன்ற பொருளில் நகரக்கூடியது. காந்தப்பொருளின் உள்ளேயும் வெளியேயும் தோன்றும் காந்தக் குமிழ்களைக் கட்டுப்படுத்து வது. அதன் விளைவாக உயர் திறன் உள்ள நினைவை உருவாக்க முடியும். ஆண்ட்ரூ போபெக், ரிச்சர்டு ஹெர்வுட், அம்பெர்டோ ஜியானோலா, பெல் ஆய்வகத்தைச் சேர்ந்த வில்லியம் ஷாக்லி ஆகியோர் காந்தக் குமிழ் நினைவைக் கண்டுபிடித்தார்கள். ஒரு சதுர அங்குலத்துக்கு 50 இலட்சம் துண்மிகள் திறனைக் கொண்ட சேமிப்பகத்தை உருவாக் கினார்கள்.

**magnetic bubbles : காந்தக் குமிழ்கள்:** தளத்துக்கு எதிரான மின்காந்தப் பண்புள்ள வட்ட வடிவ மின்காந்தப் பரப்புகள். அவற்றைத் தூண்டல் கட்டுப் பாடுள்ள மின் முனைகளால் தளத்தில் இடம்விட்டு இடம் பெயரச் செய்யலாம். பொருத்த மான சிறிய வட்டவடிவப் பகுதிகள் அல்லது குமிழ்கள்.

**magnetic card : காந்த அட்டை :** தட்டு அல்லது காந்தப் பூச்சு உள்ள அட்டைகளைக் கொண்ட சிறு பெட்டி. அட்டைகள் காந்த நாடாவைப் போன்ற பொரு ளால் உருவாக்கப்பட்டவை. காந்த நாடா சிறு துண்டுகளாக வெட்டப்பட்டு ஒன்றின் அரு கில் பிளாஸ்டிக் அட்டை ஒன்றில் அடுக்கப்பட்டு சிறிய பெட்டியில் அடுக்கப்பட்டிருப் பதாக உருவகம் செய்யலாம்.

**magnetic cartridge : காந்தப் பொதியுறை.**

**magnetic cell : காந்தக் கலம்.**

**magnetic characters : காந்த எழுத்துரு :** எழுத்துகளின் தொகுப்பு. காசோலைகள், காப்பீட்டுக் கட்டணங்கள், பயன்பாட்டு கட்டணச் சீட்டு கள், செலவுச் சீட்டுகள் மற்றும் பிறவற்றில் பயன்படுகிறது. அவை எழுத்துகளைப் படிக்கும் சாதனங்களான எம்ஐசிஆர் படிப்புக் கருவிகள் தாமாக எழுத்துகளைப் படிக்க இட மளிக்கின்றன.

**magnetic core : காந்த அச்சு; காந்த உள் மையம்; காந்த வளையம் :** குறும் கொட்டை வடி

விலான பொருள். காந்தமேற்றக் கூடியது. இரும இயக்கங்களை சேமிக்கும் திறனுடையது.

**magnetic core, bistable :** இரு நிலைக் காந்த அச்சு; இரட்டை நிலை காந்த உள்ளகம்; இரு நிலைக் காந்த வளையம்.

**magnetic core memory :** காந்த உள் மைய நினைவகம்.

**magnetic core plane :** காந்த வளைய நினைவுத் தளம்; காந்த அச்சுத் தளம் : காந்த அச்சு இணையம் . ஒவ்வொரு அச்சும் ஒவ்வொரு சேமிப்பு இடத்துக்குப் பொதுவானது. பல காந்த அச்சுத் தளங்கள் ஒன்றாகச் சேர்க்கப் பட்டு காந்த அச்சு சேமிப்பு அலகை உருவாக்குகிறது.

**magnetic core storage :** காந்த அச்சு சேமிப்பகம் ; காந்த வளையத் தேக்ககம் : சேமிப்பு முறை. இதில் தரவுகள் இரும எண் வடிவில் சேமிக்கப்படு கின்றன. குறு மின்காந்தப் புலன்களின் ஓட்ட வழியில் அவை சேமிக்கப்படுகின்றன. வளைந்த டவுட்நட் வடிவிலான காந்த அச்சுகள் மின் இழப்பின் போது தரவுகளைச் சேமித்து வைக்கின்றன. இவை பழைய கணினிகளில் பயன்படுத்தப் பட்டன. தரவுகளை இழக்கும் சேமிப்பகத்துக்கு எதிரானது.

**magnetic data storage device :** காந்த முறை தரவு சேமிப்புச் சாதனம்.

**magnetic disk :** காந்த வட்டு; மின்காந்த மென்வட்டு: திண்மையான பொருளினால் ஆன தகடு அல்லது கனத்த மைலாரினால் ஆனது. வட்டின் தளப் பகுதி காந்தமேற்றப்பட்ட தரவுகளை கைக்கொள்கிறது. அவை வட்டில் எழுதப்படுகின்றன. வட்டு இயக்கியினால் வட்டிலிருந்து அவை பெறப்படு கின்றன.

**magnetic disk unit :** காந்த வட்டு அலகு; காந்த வட்டகம் : புறச் சேமிப்புக் கருவி. இதில் தரவுகள் காந்தமேற்றக்கூடிய வட்டுத் தளப் பகுதியில் பதிவு செய்யப்படுகின்றன.

**magnetic domain :** காந்தப் பகுதி; காந்தக் களம்: குமிழ் நினைவில் தரவுகளைக் குறிப்பிடும் காந்தமேற்றப்பட்டப் பகுதி.

**magnetic drum :** காந்த உருளை; காந்தப் பீப்பாய் : புறச் சேமிப்பு கருவி. இது காந்தமேற்ற தளத்தைக் கொண்ட உருளையை உடையது. இந்தத் தளத்தில் தரவுகளைப் பதிவு செய்யலாம்.

**magnetic field :** காந்தப் புலம் : ஒரு காந்தத்தினால் உமிழப்படும் புலனாகாத சக்தி.

**magnetic film storage** : **காந்த நாடாச் சேமிப்பகம்** : சேமிப்புக் கருவி. இதில் 35 மி.மீ. காந்த பிலிம் ஒரு சுருணையில் சுற்றி வைக்கப்பட்டுள்ளது. இந்தச் சுருணையை பிலிம் கையாளும் அலகில் ஏற்ற முடியும்.

**magnetic head** : **காந்தமுனை** : காந்த நாடா தகடு அல்லது உருளை போன்ற சாதனங்களில் தகவல்களை எழுதவும் படிக்கவும் உதவுகிற கருவி.

**magnetic ink** : **காந்த மை** : காந்தப் பொருள்களைக் கொண்ட மை. அந்த காந்தப் பொருள்களை காந்த உணர் விழைகள் மூலம் அறியலாம்.

**magnetic ink character device** : **காந்த மை எழுத்துச் சாதனம்.**

**magnetic ink character reader** : **காந்த மை எழுத்து படிப்பி** : காந்த மை எழுத்துகளால் அச்சிடப்பட்ட ஆவணங்களை படிக்கும் உள்ளீட்டுக் கருவி. MICR reader என்றும் கூறுவார்கள்.

**Magnetic Ink Character Recognition (MICR)** : **காந்த மை எழுத்தறி சாதனம் (எம்ஐசிஆர்)** : எந்திரங்களால் சிறப்புக்காட்டி மையினால் அச்சிடப்பட்ட எழுத்துகளை அறிதல். வங்கிக் கடன் அட்டையிலும் பொதுப் பயன்பாட்டுத் தொழில்களிலும் முக்கியமாகப் பயன்படுத்தப்படுகிறது.

**magnetic materials** : **காந்தப் பொருள்கள்.**

**magnetic media** : **காந்த ஊடகம்** : செருகு அட்டைகள், நாடாக்கள் மற்றும் பிற தரவு சேமிப்புச் சாதனங்களுக்கான இடைப்பெயர். காந்தத்தூண்டல் வடிவில் தரவுகள் சேமிக்கப்படுகின்றன.

**magnetic memory** : **காந்த நினைவகம்.**

**magnetic printer** : **காந்த அச்சிடு கருவி; காந்த அச்சுப் பொறி** : தொடர் அச்சிடு கருவி. இதில் புள்ளித்தளக் கருவியினால் எழுதப்பட்ட மின்சாரம் ஏற்றப்பட்ட துகள்கள் பயன்படுத்தப்படுகின்றன.

**magnetic recording** : **காந்தப் பதிவாக்கம்** : வட்டுகளிலும் நாடாக்களிலும் எண்முறை தரவுகளைப் பதிவு செய்யப் பயன்படுத்தும் தொழில் நுட்பம்.' பதிவு செய்யும் மேற்பரப்பை மின் சக்தியைச் செலுத்தும் படி/எழுதுமுனை வழியாகக் கொண்டு செல்வதன் மூலம் எழுதப்படுகிறது/பதியப்படுகிறது. இதன் கோட்பாடு மிகவும் எளிமையானது. வட்டு அல்லது நாடா மேற்பரப்பில்

பாசிட்டிவ் அல்லது நெகட்டிவ் துருவம் கொண்ட (0 அல்லது 1 துண்மி) ஒரு சிறிய புள்ளி உருவாக்கப்படுகிறது. நாடாக் களைப் பதியும்போது, அழிக் கும்முனை முதலில் மேற்பரப் பைத் தூய்மைப்படுத்துகிறது. வட்டுகளில் இருப்பதுபோல தரவுகளின் பகுதி. இதில் அள வுடன் பொருத்தப்படு வதில்லை. படி/எழுது முனையை அதன் மீது செல்ல விடுவதன்மூலம் துண்மியின் துருவம் உணரப்படுகிறது. குமிழ் நினைவகம் ஒரு வகை யான காந்தப்பதிவு முறை. ஆனால் வட்டுகள், நாடாக்கள் போல் அல்லாது இதில் மேற் பரப்பு நகர்வதில்லை.

**magnetic resonance : காந்த எதி ரொளிப்பு; காந்த ஒத்திசைவு :** இம்முறையில் ஒரு துகள் அல்லது துகள் முறைகள் எதிரொலிப்பு முறையில் புறக் காந்தப்புலத்துடன் இணைக்கப் பட்டுள்ளன.

**magnetic sensing devices : காந்த உணர்வுச் சாதனங்கள்.**

**magnetic storage : காந்தச் சேமிப்பகம்; காந்தத் தேக்ககம் :** நாடா அட்டைகள், உருளைகள், அச்சுகள் மற்றும் பிலிம் போன்ற சேமிப்பு ஊடகங்களில் பொருள்களின் காந்தப் பண்பு களைப் பயன்படுத்தி சேமிக்கும் முறைமை.

**magnetic store : காந்த சேமிப் பகம்; காந்தத் தேக்ககம்.**

**magnetic strip card : காந்த வரி அட்டை; காந்தப்பட்டை அட்டை :** கடன் அட்டையைப் போன்ற சிறிய அட்டை; அதில் காந்த மேற்றப்பட்ட பொருள் பொருத் தப்பட்டிருக்கும். இந்த காந்த மேற்றப்பட்ட துண்டில் தரவு களை எழுதலாம் அல்லது எழுதப் பட்டிருப்பதைப் படிக்கலாம்.

**magnetic tape : காந்த நாடா :** காந்தமேற்றப்பட்ட புள்ளி களைக் கொண்ட குறியீட்டின் வடிவில் தரவுவைச் சேமிப்பதற் கான காந்தமேற்பரப்பைக் கொண்ட பிளாஸ்டிக் நாடா. நாடாவில் 8 துண்மிகளைக் கொண்ட குறியீட்டு அமைப்பு மூலம் தரவுகளைச் சேமிக்க லாம். ஒரு நாடாச் சுருள் என்பது 750 மீட்டர் (2,400 அடி) நீள முடையது. இந்த நாடாவின் பரப்பில் தரவு எழுதப்பட்டிருக் கும். இதில் உள்ளத் தரவுகளை நாடா இயக்கிமூலம் பெறலாம்.

**magnetic tape cartridge : காந்த நாடாச் சுருணை; காந்த நாடாப் பேழை :** காந்த நாடா உள்ள சுருணை. இச்சுருணையில் நாடாச்சுருள் ஒன்று இருக்கும்.

இந்த நாடாச்சுருளை ஏற்கும் உருளை ஒன்றும் இருக்கும். மாற்றுச் சுழலிப்பொறி சுருணை போன்றது. ஆனால் வடிவமைப் பில் சற்று வேறுபாடானது.

**magnetic tape cassette** : காந்த நாடா பேழை : காந்த நாடா சேமிப்புக் கருவி. 1/8 அங்குல காந்த நாடா பிளாஸ்டிக் கொள் கலன் ஒன்றில் இருக்கும்.

**magnetic tape cassette recorder** : காந்த நாடாப் பேழை பதிவு கருவி : நாடாக்களை படிக்கிற மற்றும் அதில் எழுதுகிற, சேமிப்புக் கருவி. குறுங்கணினி முறைமைகளில் பெரிதும் பயன் படுத்தப்படுகிறது.

**magnetic tape code** : காந்த நாடாக் குறியீடு; காந்த நாடா குறிமுறை : காந்த நாடாவில் காந்தமேற்றப்பட்ட வடிவங் களை பதிவு செய்யப் பயன் படுத்தப்படும் குறியீட்டு முறைமை. காந்தமேற்றப்பட்ட வடிவங்கள் ஆல்பா எண்ணியல் தரவுகளை பிரதிநிதித்துவப் படுத்துகின்றன.

**magnetic tape deck** : காந்த நாடாத் தொகுப்பு : காந்த நாடா அலகு போன்றது.

**magnetic tape density** : காந்த நாடாத் திணிவு; காந்த நாடா அடர்த்திப் பதிவு : 2.54 செ.மீ (1) காந்த நாடாவில் பதிவு செய்யக் கூடிய எழுத்துகளின் எண் ணிக்கை. பொதுவான திணிவு கள் 800 மற்றும் 1600 எழுத்து கள்/ஓர் அங்குலம் என்பதாகும். ஆனால் சில கருவிகள் ஓர் அங்குலத்துக்கு 6,250 எழுத்துகள் வரை படிக்கக் கூடியனவாக வும் எழுதக்கூடியவைகளாக வும் உள்ளன.

**magnetic tape device** : மின் காந்த நாடா கருவி.

**magnetic tape drive** : காந்த நாடா இயக்கி : நாடாவை ஒரு தலை முனையின்மீது நகர்த்தும் கருவி. காந்த நாடாப் போக்கு வரத்து கருவி போன்றது.

**magnetic tape recorder** : காந்த நாடா பதிவி.

**magnetic tape reel** : காந்த நாடாச் சுருள் : காந்த நாடாவின் இயற்பியல் பண்புகளைப் பாதுகாக்க உதவும் சுழலி. நாடா பொதுவாக 1.27 செ.மீ (1.2 அங்குலம்) அகலம் உடைய தாகும். 751.52 மீட்டர் (2,400 அடி) நீளமுடையதாகும்.

**magnetic tapes and discs principle of recording** : காந்த நாடாக்கள் மற்றும் வட்டுகளில் பதியும் கொள்கை : காந்த மேற் பரப்பில் தரவுவைச் சேமிக்க பதிவு செய்யும் முறையைப்

போன்றதே நாடாவிலும் வட்டுவிலும் பயன்படுத்தப்படு கிறது. இரண்டுக்கும் இடை யிலான முக்கிய வேறுபாடு படி/எழுது மின்சுற்று மற்றும் பதிவு செய்யும் ஊடகம் ஆகிய வற்றின் எந்திர ஏற்பாடுதான். 'எழுது முனையில் அதிக காந்தம் ஊடுருவக்கூடிய நடுப் பகுதியைக் கொண்ட பொருளி னால் சுற்றப்படுகிறது. நடுப் பகுதியில் காந்தம் செல்வதற்கு காற்று இடைவெளியில் எழு தும் மின்சக்தி காந்த மேற்பரப் பில் செல்லும்போது அது காந்தப்படுத்தப்படுகிறது. எழு தும் மின்சாரத்தை எதிர்த் திசை யில் அனுப்பும்போது காந்த சக்தியும் தலை கீழாகி இரும எண் (பைனரி) அமைப்பு பதிவு செய்யப்படுகிறது.

**magnetic tape sorting** : காந்த நாடா வகைப்படுத்துதல்; காந்த நாடாவழி வரிசைப்படுத்தல் : வகைப்படுத்துதலின்போது துணை சேமிப்புக்காக காந்த நாடாக்களைப் பயன்படுத்து கிற வகைப்படுத்தும் நிரல் தொகுப்பு.

**magnetic tape transport** : காந்த நாடாப் போக்குவரத்து.

**magnetic tape unit** : காந்த நாடா அலகு : காந்த நாடா இயக் கியைக் கொண்ட கருவி. இத் துடன் எழுதுமுனைகளும் படிக் கும் முனைகளும் அவற்றுடன் இணைந்த கட்டுப்பாடுகளும் உடையது.

**magnetism** : காந்த விசை.

**magnetized spots** : காந்தமேற் றிய புள்ளிகள்.

**magnitizing station** : காந்தமேற் றும் நிலையம்; காந்தமூட்டு களம்.

**magneto-optic** : காந்த-ஒளி யிழையிலான : அதிக அடர்த்தி யுள்ள, அழிக்கக்கூடிய தரவு பதிவு செய்யும் முறை. இதிலும் தரவுகளை காந்த முறையில் தான் பதிவு செய்யப்படும். வட்டுகள் மற்றும் நாடாக்களில் செய்வதுபோல. ஆனால், துண்மிகள் மிகவும் சிறியதாக இருக்கும். ஏனென்றால் துண்மி களைக் குறிப்பிட லேசர் பயன் படுத்தப்படுகிறது. 300 செல் ஷியஸ் வெப்பத்தில் துண்மி களை வெப்பப்படுத்தி காந்தப் புலத்திற்கு ஏற்ப மறு வரிசைப் படுத்தப்படுகிறது. அதன் மேற் பரப்பில், புதிய துண்மிகளைப் பதிய வேண்டுமென்றால் இருக் கும் துண்மிகளை முதலில் ஏதாவது ஒரு திசையில் மாற்றி ஒழுங்குபடுத்த வேண்டும்.

**magneto optical disc** : காந்த ஒளியியல் வட்டு; காந்த ஒளிவ வட்டு.

**magneto optic disc : காந்த ஒளிவ வட்டு** : சிடி ரோம் வட்டுகளை ஒத்த மிக அதிகக் கொள்திறன் உள்ள அழித் தெழுத முடிகிற சேமிப்பக வட்டு. இதில் தரவுவைப் பதிய லேசர் கற்றையைப் பயன் படுத்தி வெப்ப மூட்டி வட்டின் ஒரு புள்ளியில் உள்ள காந்தப் புலத்தின் திசையை மாற்றி தரவு துண்மி (பிட்)யைப் பதிவு செய்வர்.

**magneto-optical features : காந்த ஒளியியல் கூறுகள்.**

**magneto optical recording : காந்த ஒளிவப் பதிவு** : ஒளிவ வட்டுகளில் தரவுவைப் பதி வதற்கான ஒரு வகைத் தொழில் நுட்பம். வட்டின் மீது பூசப் பட்டுள்ள காந்தப் பரப்பின் ஒரு மிகச்சிறு பகுதியை லேசர் கற்றை வெப்பமூட்டும். இந்த வெப்பம் பலவீனமான காந்தப் புலத்தின் திசையை மாற்றி யமைக்கும். இவ்வாறு தரவுகள் வட்டில் எழுதப்படுகின்றன. இதே நுட்பத்தைப் பயன்படுத்தி வட்டிலுள்ள தரவுவை அழித்து மீண்டும் எழுதவும் முடியும்.

**magnification : பெரிதாக்கம்; உருப்பெருக்கம்.**

**magnifier : உருப்பெருக்கி; பெரி தாக்கி.**

**magnitude : திறன்** : *1.* எண் ஒன்றின் முழுமையான மதிப்பு. 2. ஒன்றின் பரும அளவு.

**magstripe : காந்தப்பட்டி** : பெரும் பாலான முக்கிய அட்டைகள் மற்றும் கணினிக்கு இயையக் கூடிய பயணச் செலவு அட்டை களிலும் முதுகுப் பகுதியில் காணப்படும் காந்தநீள் பட்டை. இதில் கணக்கு எண் மற்றும் அட்டைக்கு உரியவரின் பெயர் அல்லது நுழைவு மற்றும் வெளியேற்றப் புள்ளிகள், மீத முள்ள பயணத்தொகை முதலி யன குறிக்கப்பட்டிருக்கும்.

**magstripe card : காந்தப் பட்டை அட்டை** : ஒரு சிறிய கைப் பை அளவு பிளாஸ்டிக் அட்டை. இதில் காந்த நாடாவின் மேற் பரப்பில் ஒரு பட்டை இருக் கும். வங்கிக்கடன் /செலுத்து அட்டைகளில் இதைப் பரவ லாகப் பயன்படுத்துகிறார்கள்.

**magtape : காந்த நாடா :**

**Mahon, Charles : (1753-1816) :** மஹோன், சார்லஸ் (1753-1816): *1777*இல் ஸ்டான்ஹோப் செயல்முறை விளக்கியைக் கண்டுபிடித்த ஸ்டான்ஹோப் பின் மூன்றாவது எர்ல். இந்தக் கருவிதான் பற்சக்கரங்களைக் கொண்ட முதல் கணக்கிடு எந்திரமாகும்.

**mail** : அஞ்சல்.

**mail bomb[1] : அஞ்சல் குண்டு[1]** : மின்னஞ்சல் மூலமாக பயனாளர் ஒருவரின் அஞ்சல் பெட்டியை நிலைகுலையச் செய்தல். பல்வேறு வழிமுறைகளில் இதனை நிறைவேற்றலாம். ஏராளமான மின்னஞ்சல்களை ஒருவருக்கு அனுப்பியோ, மிக நீண்ட மின்னஞ்சலை அனுப்பியோ அவருக்கு இனி வேறெந்த அஞ்சலும் வரவிடாமல் செய்து விடலாம்.

**mailbomb[2]** : அஞ்சல் குண்டு[2] : பயனாளர் ஒருவருக்கு அஞ்சல் குண்டு அனுப்புதல். இதில் இரண்டு வகை உண்டு. ஒரேயொரு நபர் ஒரு மிகப்பெரிய மின்னஞ்சலைப் பயனாளர் ஒருவருக்கு அனுப்பலாம். இரண்டாவது வகை, ஏராளமான பயனாளர்கள் சேர்ந்து அறிமுகமில்லாத பயனாளர் ஒருவருக்கு ஒரே நேரத்தில் சாதாரண அளவிலான பலநூறு அஞ்சல்களை அனுப்பி வைத்தல்.

**mail bot** : மெயில்பாட்; அஞ்சல் பாட் : மின்னஞ்சல்களுக்கு தானாகவே மறுமொழி அனுப்பிவைக்கும் ஒரு நிரல். அல்லது அஞ்சல் செய்திகளுக்கு இடையே இருக்கும் கட்டளைகளுக்கேற்ப நடவடிக்கை மேற்கொள்ளும் ஒரு நிரல். அஞ்சல் பட்டியல் மேலாண்மை நிரல் ஓர் எடுத்துக்காட்டு.

**mail box** : அஞ்சல் பெட்டி : ஒரு சேமிப்புப் பகுதியில் உள்ள இருப்பிடங்களின் தொகுப்பு. குறிப்பிட்ட புறநிலைக் கருவிகள் அல்லது பிற வகைப்படுத்திகளுக்கான தரவு சேமிப்புப் பகுதிகள்.

**mailing list** : அஞ்சல் பட்டியல் : (சொல் செயலகப் பயன்பாடுகள் போன்று) அச்சிடப்பட்ட ஆவணங்களை விநியோகிக்கப் பயன்படுத்தப்படும் பெயர்கள் மற்றும் முகவரிகள் கொண்ட கணினி மய கோப்பு.

**mailing list manager** : அஞ்சல் பட்டியல் மேலாளர் : ஓர் இணைய அல்லது அகஇணைய அஞ்சல் முகவரிப் பட்டியலை மேலாண்மை செய்யும் மென்பொருள். வாடிக்கையாளர்கள் அனுப்பும் செய்திகளை இந்த மென்பொருள் ஏற்கும். பயனாளர்களின் கோரிக்கைகளை ஏற்று நடவடிக்கை மேற்கொள்ளும். எடுத்துக்காட்டாக, அஞ்சல் பட்டியலில் பெயரை இணைத்துக்கொள்ளுதல், நீக்கிவிடுதல். லிஸ்ட்செர்வ் (LISTSERV), மேஜர்டெமோ (major domo) போன்றவை

பரவலாகப் பயன்பாட்டில் உள்ள அஞ்சல் பட்டியல் மேலாளர்கள் ஆகும்.

**mailing list programme : அஞ்சல் முகவரி நிரல் தொகுப்பு :** பெயர்கள் மற்றும் முகவரிகளையும் பிற தொடர்புடைய தரவுகளைப் பராமரிக்கிற நிரல் தொகுப்பு. இது அஞ்சல் மேலொட்டுச் சீட்டுகளைத் தயாரிக்கிறது.

**mail merging : அஞ்சல் இணைப்பு :** அஞ்சல் பட்டியல் கோப்பில் உள்ள பெயர் மற்றும் முகவரிகளை குறிப்பிட்ட வடிவக் கடிதங்களில் தானாக அச்சிடும் நடைமுறை. அஞ்சல் இணைப்பு நிரல் தொகுப்பு ஒரு கோப்பில் உள்ள முகவரித் தரவுகளை மற்றொரு கோப்பில் உள்ள உரைத் தரவுகளுடன் இணைக்கிறது.

**mail receipient : அஞ்சல் பெறுநர்.**

**mail reflector : அஞ்சல் பிரதிபலிப்பு:** ஒரு அஞ்சல் பட்டியலுக்கு அனுப்பப்பட்ட செய்திகளை செய்திக்குழு வடிவத்துக்கு மாற்றியமைத்து வைக்கப்பட்டுள்ள ஒரு செய்திக்குழு.

**mail server : அஞ்சல் வழங்கன்.**

**mailto : மெயில்டூ :** ஒரு ஹெச்டீஎம்எல் கோப்பில் மின்னஞ்சல் அனுப்புவதைக் குறிப்பிடும் மீத்தொடுப்பு (Hyperlink) HREF என்னும் குறி சொல்லால் (Tag) இது குறிப்பிடப்படும். எடுத்துக்காட்டாக, குமரேசன் என்பவரின் மின்னஞ்சல் முகவரி kumar @.yahoo.com என்று வைத்துக் கொள்வோம். ஹெச்டீஎம்எல் ஆவணத்தில்,

<A HREF = "mailto : kumar@yahoo.com">
E-mail : Kumaresan </A>

பயனாளர் E-mail : Kumaresan என்ற மீத்தொடுப்பின் மீது சுட்டியால் சொடுக்கினால் போதும். பயனாளரின் கணினியிலுள்ள மின்னஞ்சல் மென்பொருள் இயங்கத் தொடங்கும். அதில் To என்ற இடத்தில் kumar@yahoo.com என்ற முகவரி இடம் பெற்றிருக்கும்.

**main body : மையப் பகுதி; முதன்மைப் பகுதி :** ஒரு கணினி நிரலில் துணை நிரல்களை இயக்கும் கட்டளைகளும் பிற இன்றியமையாக் கட்டளைகளும் அடங்கிய நிரலின் முதன்மைப் பகுதி.

**main control module : முதன்மைக் கட்டுப்பாடு மாடுல் :** நிரல் தொடர் கூறு (மாடுல்)களின் வரிசைக் கிரமத்தில் மிக உயர்ந்த நிலை அதற்குக் கீழே

உள்ள கூறு (மாடுல்)களை இது கட்டுப்படுத்துகிறது.

**main distribution frames :** முக்கிய விநியோகச் சட்டம் : தரவுத் தொடர்பு முறையில் கம்பி மூலம் விநியோகிக்கும் அடுக்கு. பல மாடிக் கட்டிடங்களின் அடித்தளப் பகுதியிலேயே இது பெரும்பாலும் அமைக்கப்பட்டிருக்கும். உள் பகுதி மற்றும் வெளிப்பகுதி தரவுத் தொடர்புக் கம்பிகள் இணையும் இடம் இதுவே. mdf என்று சுருக்கி அழைக்கப்படும்.

**mainframe :** பிரதம அச்சு; முதன்மைப் பொறியமைவு : பெரும் விலையுயர்ந்த கணினி அமைப்பு. பொதுவாக பெரும் வணிக நிறுவனங்கள், கல்லூரிகள், பிற நிறுவனங்களில் தரவுகளை வகைப்படுத்த உதவுகிறது. துவக்கத்தில் இந்தச் சொற்றொடர் துவக்க கால கணினிகளில் இருந்த பெரிய இரும்புச் சட்ட வரிசைகளையும், வரிசையான இழுப்பறைகளையும் அவற்றில் உள்ள ஆயிரக்கணக்கான வெற்றிடக் குழாய்களையும் குறிக்கும். பிரதம அச்சு அறை முழுக்க ஆக்கிரமித்துக் கொண்டு பெருமளவு தரவுகளைக் கையாளும் திறன் கொண்டதாக இருந்தன. குறுங்கணினி அல்லது சிறு கணினிகளைவிட விலை உயர்ந்தவை. பிரதம அச்சுகள்தான் பெரிய, மிகவும் விரைவான விலையுயர்ந்த கணினி வகைகளாகும். பிரதம அச்சுகளைக் கொண்ட சூப்பர் கணினிகள் பெரியவை, விரைவானவை மற்றும் விலை உயர்ந்தவை.

**mainframe computer :** முதன்மைப் பொறியமைவுக் கணினி: ஆரம்பத்தில் மையச் செயலகத்தை மட்டுமே குறிப்பிடுவதாக பெருமுகம் என்ற சொல் பயன்படுத்தப்பட்டது. *1960*-களின் நடுவில் எல்லா கணினிகளும் பெருமுகங்கள் என்று அழைக்கப்பட்டன. ஏனென்றால், எல்லாவற்றிலும் மையச் செயலகம் உண்டல்லவா! இன்று மிகப்பெரிய கணினி அமைப்பையே இச்சொல் குறிக்கிறது. பல்லாயிரம் நேர்முக முகப்புகளைக் கையாளும் பெருமுகங்கள் பல உள்ளன. இவை நூற்றுக்கணக்கான மீமிகு எண்மி (மெகாபைட்) நினைவகங்களுடனும், பல நூறு கிகாபைட் வட்டுச் சேமிப்பகங்களுடனும் உள்ளன.

**mainframe system :** முதன்மைப் பொறியமைவு.

**main function :** மூல/முதன்மை/முக்கிய/மையச் செயல்கூறு :

ஒரு கணினி நிரலில் முக்கிய பகுதி. செயல்கூறு அடிப்படையிலான நிரலாக்க மொழிகளில் எழுதப்படும் நிரல்களில் ஏனைய செயல்கூறுகளை அழைத்து, பணியை நிறைவேற்றும் முதன்மையான செயல்கூறு. (எ-டு) சி-மொழியில் ஒரு நிரலில் எத்தனை செயல்கூறுகள் வேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால் main() என்கிற செயல்கூறு கட்டாயம் இருக்க வேண்டும். ஒரு நிரலானது அதில்தான் தொடங்கி முடியும்.

**mainline programme : முதன்மைச் செயல்முறை** : முதன்மை இணைப்பு நிரல் தொகுப்பு. நிரல் தொகுப்பில் பிற முனையங்களின் இயக்க முறைமையைக் கட்டுப்படுத்தும் பகுதி.

**main loop (main line) : முக்கிய/மைய மடக்கி** : ஒரு கணினி நிரலில் முதன்மைப் பகுதியில் இடம் பெற்றுள்ள மடக்கி. நிரலின் முக்கிய பணியை இந்த மடக்கிதான் நிறைவேற்றும். ஒரு குறிப்பிட்ட நிபந்தனை சரி அல்லது தவறாக இருக்கும் வரை இந்த மடக்கி செயல்பட்டுக் கொண்டிருக்கும். நிகழ்வு முடுக்க நிரலாக்கத்தில் (Event Driven Programming) இந்தப் பிரதான மடக்கி, இயக்க முறைமையிடமிருந்து பெறப்படும் நிகழ்வுகளுக்காகக் காத்திருந்து அவற்றைப் பெற்றுச் செயல்படுத்தும்.

**main memory : முதன்மை நினைவகம்; முகமை நினைவகம்; முதன்மை நினைவுப் பதிப்பி; தலைநிலை; நினைவுப் பதிப்பி.**

**main method : முதன்மை வழிமுறை.**

**main segment : முக்கிய/முதன்மை/மையத் துண்டம்** : மெக்கின்டோஷ் கணினிகளில் ஒரு நிரலின் முதன்மையான குறிமுறைப் பகுதி. அந்த நிரல் நிறைவேற்றப்பட்டு முடியும் வரை இப்பகுதி நினைவகத்தில் ஏற்றப்பட்டு அழியாமல் இருக்கும்.

**main storage : முதன்மைச் சேமிப்பு: முதன்மைத் தேக்ககம்** : மையச் செயலகத்தினால் நேரடியாகக் கட்டுப்படுத்தப்படுகிற நேரடியாக அணுகக்கூடிய சேமிப்பகம். நிரல் தொகுப்புகளை நிறைவேற்றும்பொழுதே அவற்றைச் சேமிக்க உதவுகிறது. தரவுகளை முறைப்படுத்தும் பொழுதே சேமிக்க உதவுகிறது.

**maintainability : பராமரிப்பு இயைபு; பேணு திறன்** : பழுது

ஒன்றினைச் சீர் செய்தல் மற்றும் தனித்து விடலுடன் தொடர் புடைய பண்பு.

**maintenance :** பேணல்; பராமரிப்பு: தவறுகளைக் களைய அல்லது வன்பொருள் அல்லது நிரல் தொகுப்புகளை திருப்தி கரமான பணிநிலைமையில் வைத்திருக்க மேற்கொள்ளப் படும் நடிவடிக்கைகள். இவற்றில் சோதனைகள், அளவில், மாற்றல், சீர் செய்தல் மற்றும் பழுது பார்த்தல் ஆகியவையும் அடங்கும்.

**maintenance, file :** கோப்புப் பராமரிப்பு.

**maintenance programmer :** பராமரிப்பு ஆணையர்; பேணல் ஆணையர் : ஏற்கெனவே தகவல் முறைமை ஒன்றில் சேர்க்கப்பட்ட நிரல் தொகுப்பு ஒன்றுடன் பணியாற்றுகிறவர். தேவையான மாற்றங்களை அவ்வப்போது செய்கிறவர்.

**maintenance programming :** பராமரிப்பு நிரலாக்கம்.

**maintenance routine :** பராமரிப்பு வழமை ; பேணல் முறைமை : கணினி முறைமை ஒன்றில் வழமையான தடுப்புப் பராமரிப்புப் பணிகளை வாடிக்கையாளரான பொறியாளர் ஒருவர் நிறைவேற்ற உதவும் வாடிக்கையான நடவடிக்கைகள்.

**maintenance service :** பராமரிப்புப் பணி ; பேணுதல் பணி: ஒரு பொருளை நன்றாக இயங்கும் நிலையில் வைத்திருக்க அளிக்கப்படும் சேவை.

**maintenance, updating and file :** இற்றைப்படுத்தலும் கோப்புப் பேணலும்.

**maintenance wizard :** பராமரிப்பு வழி காட்டி.

**MAIT :** மைட் : Manufacturer's Associaton of Information Technology, India என்பதன் குறும் பெயர்.

**Majordomo :** மேஜர்டோமோ : இணையத்தில் அஞ்சல் பட்டியல்களை மேலாண்மை செய்யும் செல்வாக்குப் பெற்ற மென் பொருள்.

**major geographic domain :** பெரும் புவிப்பிரிவுக் களம் : இணைய களப் பெயர்களில் (Domain names) ஈரெழுத்து முகவரி. இணைய தளப் புரவன் (Host) அமைந்துள்ள நாட்டின் பெயரைக் குறிக்கும். தளப் பெயர்களில் புவிப்பிரிவுக் களப் பெயர் பெரும்பாலும் இறுதியில் இடம் பெறும். (எ-டு) uiuc.edu.us - அமெரிக்காவில்

உள்ள இல்லினாய்ஸ் பல்கலைக் கழக இணைய தளம். cam.ac.uk - இங்கிலாந்திலுள்ள கேம் பிரிட்ஜ் பல்கலைக் கழகத் தளப்பெயர். நாட்டுக் குறிமுறை என்றும் அழைக்கப்படும்.

**major sort key : முதன்மை வரிசையாக்க விசைத் திறவு: முக்கியமான வகைப்படுத்தும் விசை :** தரவுகளைக் கொண்டுள்ள பகுதி (இறுதிப் பெயர் போன்றது) அதனைக் கொண்டு பெரும்பான்மையான தரவு வகைகளை வேறுபடுத்துதல் மற்றும் வகைப்படுத்துதல் இயலக்கூடியது. இக்களத்தில் இரட்டிப்பு நிகழும் பொழுது ஒரு கண்காணிப்பு வகைப் படுத்தும் விசை (முதல் பெயர் போன்றது) தேவையான வேறு பாட்டை வழங்க முடியும்.

**make code : குறியீட்டை உரு வாக்கு :** ஒரு விசையை அழுத்தியவுடன் உருவாக்கப்படும் நுண்ணாய்வுக் (ஸ்கான்) குறியீடு. (பின்னர் விசை விடுவிக்கப்பட்டவுடன் தடைக் குறியீடு வருகிறது).

**make MDE file : எம்டிஇ கோப்பு உருவாக்கு.** எம்எஸ் அக்செஸில் உள்ள பட்டித் தேர்வு.

**make new connection : புதிய இணைப்பை உருவாக்கு.**

**male connector : செருகு இணைப்பி :** மின் இணைப்புகளை உருவாக்க ஒரு செருகியில் பொருந்தும் வகையில்



செருகு இணைப்பி

வடிவமைக்கப்பட்ட செருகு இணைப்பி. Female connector-க்கு எதிரானது.

**malfunction : பிழைச் செயல்; பிறழ் வினை:** மையச் செயலகத்தில் அல்லது புறக் கருவியின் செயல்பாட்டில் ஏற்படும் பிழை. தவற்றின் விளைவு.

**malice programme : தீய நிரல். தீச் செயல்முறை; தீயகட்டளைத் தொடர்.**

**maltron keyboard : மால்ட்ரான் விசைப்பலகை :** மேலும் விரைவாகப் பணிகளை நடத்த உதவுகிற விசைப் பலகை வரிசை முறை. மரபு வழியான விசைப் பலகை முறைமையை விட எளிதாகக் கற்றுக் கொள்ளலாம்.

**MAN** : எம்ஏஎன் மாநகர இணையம்: Metropolitan Area Network என்பதன் குறும்பெயர்

**management graphics** : மேலாண் வரைவியல்; நிர்வாக வரைபடம் : வணிகம் ஒன்றின் பெயர் மற்றும் கள முக்கியத்துவம் வாய்ந்த அம்சங்களை விளக்கும் பட்டியல், வரைபடம் மற்றும் காட்சி வெளியீடுகள். வணிகத் தரவுகளை உணரவும் வெளியிடவும் உதவும் நோக்குடன் தயாரிக்கப்படுகிறது.

**management information service** : மேலாண்மைத் தகவல் சேவை : ஒரு நிறுவனத்தில் ஒரு பணிப் பிரிவாக இயங்கும் துறை. தகவல் தொடர்பான அனைத்துப் பணிகளையும் கவனித்துக் கொள்ளும்.

**Management Information System (MIS)** : நிர்வாகத் தகவல் முறைமை மேலாண் தகவல் அமைவு : MIS : அமைப்பு மேலாளர்களுக்குத் திட்ட மிட, தொழிலாளர்களை அமைக்க, ஆணையிட மற்றும் நிறுவனத்தின் செயல்பாட்டைக் கட்டுப்படுத்த, தேவையான தகவல்களை வழங்கும் வகையில் வடிவமைக்கப்பட்ட தகவல் முறைமை.

**management report** : நிர்வாக அறிக்கை : மேலாண் அறிக்கை : மேலாளர்களும், முடிவுகளை எடுப்போரும் தங்கள் பணிகளைச் செய்ய உதவும் வகையில் வடிவமைக்கப்பட்ட அறிக்கை.

**management science** : நிர்வாக அறிவியல்; மேலாண்மை இயல் : வணிகம் ஒன்றின் ஆதாரங்களை வழமையாக கணினி ஒன்றின் உதவியோடு நிர்வகிப்பது தொடர்பான கணிதவியல் அல்லது அளவீட்டு முறையிலான ஆய்வு.

**manager** : மேலாளர் : கணினி மையம், நிரல் தொகுப்புக் குழு, மென்பொருள் வளர்ச்சிக் குழு, சேவை நிறுவனம் மற்றும் பிறவற்றின் நடவடிக்கைகளை வழி காட்டுகிற பொறுப்புள்ள மனிதர்.

**managerial end user** : நிர்வாக இறுதிப் பயனாளர் : தரவு அமைப்பைத் தனிப்பட்ட முறையில் பயன்படுத்தும் முதலாளி, மேலாளர் அல்லது மேலாளர்-நிலை தொழில் வல்லுநர். தரவு அமைப்புகளைச் சார்ந்துள்ள துறை அல்லது நிறுவனப் பிரிவின் மேலாளர்.

**Manchester code** : மான்செஸ்டர் குறியீடு : தானே நேரம் அமைக்கும் தரவு குறியீட்டு அமைப்பு. துண்மியை வரையறுக்கத்

தேவைப்படும் நேரத்தை இரண்டு சுழற்சிகளாக இது பிரிக்கிறது. முதல் சுழற்சி தரவு மதிப்பினையும், (0 அல்லது 1) இரண்டாவது சுழற்சி எதிர் நிலைக்கு மாற்றி நேரத்தையும் அளிக்கிறது.

**mancos : மான்கோஸ் :** பி.சி.க் களுக்கான சக்தி மிக்க, முழுமை யான மேலாண்மைக் கட்டுப் பாட்டு அமைப்பு. உற்பத்தி செய்தல் மற்றும் விநியோகிப் பதில் ஈடுபட்டுள்ள நிறுவனங் களின் தேவைகளை இது கவனிக்கிறது.

**Maniac : மேனியாக் :** வான் நியூ மென்னால் உருவாக்கப்பட்ட சொல். ஹைட்ரஜன் குண்டினை உருவாக்குவதற்காக வடிவமைக் கப்பட்ட இராட்சத கணினி.

**manipulating : முனைப்படுத்து தல் ; கையாள்தல் :** பயன் படுத்துவோருக்கு கூடுதல் பொருள் உள்ள வடிவில் தரவு களைக் கையாளும் பணி.

**manipulation instruction, data : தரவு முனைப்படுத்தல் ஆணை; தரவு கையாள்தல் ஆணை.**

**man-machine interface : மனித எந்திர இடையிணைப்பு.**

**manpower loading chart : மனித சக்தியை ஏற்றும் பட்டியல்; பணி யாளர் பயன்பாட்டு வரைவு :** கால அடிப்படையில் தொழி லாளர்கள் ஒதுக்கீடு செய்யப்படு வதைக் காட்டும் பட்டியல்.

**mantissa : அடி எண் மடக்கையின் பதின்மக் கூறு :** 0.64321 x $10^3$ 64321 இல் மிதவைப் புள்ளி எண் களைக் குறிப்பிடும் பகுதி எண்.

**manual : கை நூல்; செயல் விளக்க நூல்.**

**manual data processing : மனி தர் மூலமான தரவு செயலாக்கம் :** தொடர்ச்சியான மனித இயக்க மும் தலையீடும் தேவைப்படும் தரவு செயலாக்கம். காகிதப் படிவங்கள், பென்சில்கள் நிரப் பும் பெட்டிகள் போன்ற எளிய தரவு செயலாக்கக் கருவிகளை இது பயன்படுத்துகின்றது. தட் டச்சுப் பொறிகள், கணிப்பிகள் போன்றவற்றைப் பயன்படுத் தினாலும்கூட எல்லா தரவு செய லாக்கங்களும் தானியங்கி யானவை என்று சொல்ல முடியாது.

**manual device : கையாள் இயக்கும் சாதனம்.**

**manual input : கைமுறை உள்ளீடு; இயக்க உள்ளீடு:** திருத்த, பணியைத் தொடர, கணினி நிரல் தொகுப்பு ஒன்றை வகைப்படுத்துவதைத் தொடர

கணினியைக் கையாள்வோர் கையால் பதிவுசெய்யும் தரவுகள்.

**manual operation : கை முறை இயக்கம் :** ஒரு முறைமையில் நேரடி கையால் இயக்கும் உத்திகளால் தரவுகளை வகைப்படுத்துதல்.

**manual speed : கைமுறை வேகம்; கைச்செயல் வேகம்.**

**manufacturer's software : தயாரிப்பவரின் மென்பொருள்:** கணினி ஒன்றில் கணினித் தயாரிப்பாளர் வழங்குகிற அல்லது கிடைக்கச் செய்கிற நிரல் தொகுப்பு துணைக்கருவிகள்.

**manufacturing information system : உற்பத்திக்கான தகவல் அமைப்பு :** உற்பத்தி செயல்பாடுகளுக்கான திட்டமிடல், கட்டுப்பாடு மற்றும் நிறைவேற்றுதலை செய்யும் தகவல் அமைப்புகள். கணினி ஒருங்கிணைந்த உற்பத்தி முறை (சிஐஎம்) மற்றும் கேட், கேம் (CAD-CAM) போன்ற தொழில் நுட்பங்களும் இதில் உள்ளடக்கம்.

**map : படம்:** நிரல் தொகுப்பு ஒன்றின் பல்வேறு அம்சங்களும் அதன் தரவுகளும் சேமிப்புப் பகுதியைச் சுட்டிக்காட்டும் பட்டியல். இதனைச் சேமிப்புப் படம் என்றும் கூறுவார்கள்.

**MAPI : மாப்பி; எம்ஏபிஐ :** செய்தி வழி பயன்பாட்டு நிரலாக்க இடைமுகம் என்று பொருள்படும் Messaging Application Programming Interface என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒற்றைக் கிளையன் வழியாக மின்னஞ்சல், குரலஞ்சல் தொலைநகல் போன்ற வெவ்வேறு செய்திப் பரிமாற்ற மற்றும் பணிக்குழு பயன்பாடுகள் செயல்பட வழி வகுக்கும், மைக்ரோசாஃப்ட் வகுத்துள்ள இடைமுக வரன்முறை. விண்டோஸ் 95/என்டீ முறைமைகளில் மைக்ரோசாஃப்ட் எக்ஸேஞ்ச் என்ற பெயரில் இவ்வசதி உள்ளது.

**map memoray : தொடர்புறுத்து நினைவகம்.**

**mapped drives : தொடர்புறுத்திய இயக்ககங்கள்/வட்டகங்கள் :** 1. விண்டோஸ் சூழலில், உள்ளக இயக்கக (Local drive) எழுத்துகளைத் தாங்கியுள்ள பிணைய வட்டகங்கள் அங்கிருந்தே அணுக முடியும். 2. யூனிக்ஸில், இயக்க முறைமைக்கு அறிமுகப்படுத்தபட்டுச் செயல்படும் நிலையிலுள்ள வட்டகங்கள்.

**mapping : பதிலிடல்; விவரணையாக்கம் :** ஒரு ஒருங்

கிணைப்பு முறையினை மற்றொரு ஒருங்கிணைப்பு முறைமையில் பயன்படக் கூடியதாக மாற்றியமைத்தல்.

**mar : மார்:** Memory Address Register என்பதன் குறும்பெயர்.

**Margie : மார்கி :** Memory Analysis and Response Generation in English என்பதன் குறும்பெயர்.

**margin : விளிம்புக்கோடு ; ஓரம் இடம்:** பக்கம் அல்லது சாளரம் ஒன்றின் வலது அல்லது இடது முனைக்கும் உரைத்தொகுப்பு துவங்கும் இடத்துக்கும் இடையே உள்ள தூரம்.

**marginal checking : விளிம்புக் கோடு சோதனை :** தடுப்புப் பராமரிப்பு நடைமுறை. இதில் சோதிக்கப்படும் அலகு அதன் இயல்பான மதிப்பீட்டிலிருந்து வேறுபட்டதாக அமைகிறது. விளிம்பு நிலையில் இயங்கும் உதிரிபாகங்களைக் கண்டறிவதும் அவற்றின் இருப்பிடத்தை உறுதி செய்யும் முயற்சியில் இப்பணி மேற்கொள்ளப்படுகிறது.

**marginal max. value . அதிக பட்ச மதிப்பு.**

**marginal min. value : குறைந்த பட்ச மதிப்பு.**

**marginal test : விளிம்பு நிலை சோதனை :** எதிர்பார்க்கப்படும் மதிப்புகளுக்கு மிகவும் அதிகமானதும் மிகவும் குறைவானதுமான மதிப்புகளை அறிமுகப்படுத்தும் அமைப்புச் சோதனை.

**mark : குறியீடு :** காலம் அல்லது இடத்தில் ஒரு நிகழ்வைச் சுட்டிக் காட்டுகிற அல்லது குறிப்பிடுகிற அடையாளம் அல்லது குறியீடு.

**marker : சுட்டி ; அடையாளங் காட்டி; அடையாளக் குறி :** வரிக் கோட்டுப் பட்டியலில் புள்ளி விவர முனைகளைக் குறிப்பிட உதவும் குறியீடு. இக்குறியீடு வடிவங்களில் வட்டங்களும், x, பெட்டிகள், நட்சத்திரங்கள், மற்றும் புள்ளிகளும் அடங்கும்.

**marker, end of file : கோப்பு இறுதிக் குறியீடு.**

**mark sense card : குறியீட்டு உணர்வு அட்டை :** கணினி படிக்கக்கூடிய அட்டை. மின்சாரம் கடத்தும் பென்சிலின் மூலம் இதை அடையாளப்படுத்தலாம்.

**mark sensing : அடையாள உணர்திறன்; குறி உணர்தல் :** அட்டைகள் அல்லது பக்கங்களை பென்சில் ஒன்றினால், அடையாளம் உணர்திறன் கருவி ஒன்றினால் கணினி நேரே படிக்கும் வகையில் குறிக்கும் திறன். காலம் வீணாவதையும்,

விசைகளைக் கையாளும் பொழுது ஏற்படும் தவறுகளை யும் தவிர்க்க கையால் தரவு களைப் பெறும், மிகவும் பயனுள்ள உத்தி.

**mark, tape : நாடா குறியீடு.**

**markup language : குறியீட்டு மொழி :** ஓர் உரைக் கோப்பில் உரைப்பகுதியை எந்த வடி வமைப்பில் அச்சுப்பொறி யிலோ அல்லது திரைக் காட்சி யாகவோ வெளிக்காட்ட வேண் டும், எவ்வாறு வரிசைப்படுத்தி அதன் உள்ளடக்கத்தை தொடுத் துக் காட்டவேண்டும் என கணினிக்கு அறிவுறுத்தும் குறி யீடுகளின் தொகுதியைக் கொண்ட மொழி. (எ-டு) : மீவுரைக் குறியீட்டு மொழி (HTML) வலைப்பக்கங்களை வடிவமைக்கப் பயன்படுகிறது. 2. செந்தரப் பொதுமைக் குறி யீட்டு மொழி (SGML) அச்சுக் கோத்தல் மற்றும் கணினிப் பதிப்பகப் பணிகளுக்கும் மின் னணு ஆவணங்களுக்கும் பயன் படுகிறது. இது போன்ற குறி யீட்டு மொழிகள் பணித்தளம் சாரா ஆவணங்களை/கோப்பு களை உருவாக்கப் பயன்படு கின்றன. பல்வேறு பயன்பாடு களுக்கிடையே கையாண்டு கொள்ளவும் வழி செய்கின்றன.

**marquee : நகர் தொடர் :** திரையில் இடவலமாக வலஇடமாக நகர்ந்துசெல்லும் சொல் தொடர்.

**maser : மாசர் :** Microwave amplification by the stimulated emission of radiation என்பதன் குறும் பெயர். வானொலி அலை வரிசை. வெளியீட்டை மிகைப் படுத்தக்கூடிய ஒரு சாதனம். செயற்கைக்கோள் தகவல் தொடர்பு தரை நிலையங்களில் மாசர் பெருக்குக் கருவிகள் தகவல் தொடர்புச் செயற்கைக் கோள்களிலிருந்து பெறப்பட்ட மிகவும் வலுவிழந்த சமிக்கை களை பெரிதுபடுத்த பயன் படுத்தப்படுகிறது.

**mask : மூடி :** *1.* எந்திரச்சொல். இதில் துண்மிகள் அல்லது எண்மிகள் அல்லது எழுத்துகள், நிரல் ஒன்றைக் கட்டுப்படுத்து வதன் மூலம் தேர்ந்தெடுக்கப் பட்ட எட்டியல்கள் அல்லது துண்மிகளை அல்லது எழுத்து களை இருத்திக் கொள்ளுதல் அல்லது நீக்குதல் ஆகிய பணி களைச் செய்கிறது. உற்பத்தி நடைமுறையில் பயன்படும் முறைமை ஒன்றில் உள்ள இணைப்பு ஒன்றின் இன்டியோ கிராஃபிக் பிரதிநிதித்துவம்.

**maskable interrupts : மூடக் கூடிய தலையீடுகள் :** மென்

பொருளால் செய்யக் கூடியதும், செய்யாமல் தடுக்கக்கூடியது மான வன்பொருள் தலையீடுகள்.

**mask bit : மறைப்புத் துண்மி :** கணக்கீட்டில் இடம்பெறும், இரும துண்மிகளால் (Binary Bits) ஆன ஒரு தரவு மதிப்பினை ஒரு குறிப்பிட்ட தருக்கச் செயற் குறி (logical operator) மூலம் செயல்படுத்தும்போது, தரவு மதிப்பிலுள்ள அனைத்து *1*-களையும் அப்படியே தக்க வைக்குமாறு செய்ய முடியும் அல்லது அனைத்து *1*-களையும் *0*-ஆக மாற்றிவிடவும் முடியும். மறைப்பு மதிப்பில் இப் பணியைச் செய்யும் அந்தக் குறிப்பிட்ட துண்மி, மறைப்புத் துண்மி எனப்படுகிறது. (எ-டு): தரவு மதிப்பு *00001111* என்க. மறைப்பு எண் *11111111* என்க. இந்த இரண்டு எண்களையும் (உ-ம்) (AND) செய்வோம் எனில் விடை, *00001111* எனக் கிடைக்கும். இங்கே மறைப்பு எண்ணில் உள்ள கடைசி நான்கு துண்மி(bits)களும் மறைப்பு துண்மிகளாக செயல்படுகின் றன. இவை தரவு மதிப்பிலுள்ள நான்கு *1*-களையும் மாற்றமின்றி அனுமதிக்க உதவுகின்றன.

**Mask design : மூடி வடி வமைப்பு :** ஒருங்கிணைந்த இணைப்பு வடிவத்தின் இறுதிக் கட்டம், அதன் மூலம் ஒருங் கிணைந்த இணைப்பு ஒன்றில் ஒன்றுக்கு மேற்பட்ட அடுக்கு களுக்கு இணையான ஒன்றுக்கு மேற்பட்ட மூடிகள் பெறப்படு கின்றன. நடைமுறை தொடர் பான கட்டுப்பாடுகள் அனைத் தையும் முகமூடி அமைப்பு முறை காட்ட வேண்டும். இணைப்பு இடம்பெறும் பரப் பளவைக் குறைக்க வேண்டும்.

**masked : மூடப்பட்ட :** முடக்கப் பட்ட அல்லது துண்டிக்கப் பட்ட நிலை.

**massage : செய்தி : விவரம் :** தகவல்களை வகை செய்ய.

**massively parallel processing : பெருமளவு இணைநிலைச் செய லாக்கம் :** ஏராளமான செயலிகள் இணைக்கப்பட்ட ஒரு கணினிக் கட்டுமானத்தில் நடைமுறைப் படுத்தப்படும் செயலாக்க முறை. ஒவ்வொரு செயலிக்கும் தனித்த ரேம் (RAM) நினைவகம் இருக்கும். அதில் இயக்க முறைமையின் நகல் இருக்கும். பயன்பாட்டு மென்பொருளின் நகலும் அதில் ஏற்றப்பட்டிருக் கும். அவை தனித்துச் செயல் படுத்தக்கூடிய தரவுப் பகுதி, ரேமில் இருக்கும்.

**mass storage : பெரும் சேமிப் பகம்; பெரும் தேக்ககம் :** நேர்

முக ஆதரிப்புச் சேமிப்பக அமைப்பு. வழக்கமான துணை நிலை இருப்பகத்தைவிட அதிக அளவுகளில் தரவுகளை சேமிக் கும் திறன் கொண்டது.

**mass storage device : பெருஞ் சேமிப்புக் கருவி** : பெருமளவு தரவுகளைச் சேமிக்க, சிக்கன மான சேமிப்பகங்களை வழங்கு கிற கருவி. எடுத்துக்காட்டு : வன்வட்டுகள், ஒளி நாடாக்கள், குமிழ் நினைவு பெரும் காந்த வட்டு அமைப்புகள் மற்றும் பெருமளவு சேமிப்புச் சுருணை முறைமைகள். 500 பில்லியன் எழுத்துகளுக்கு மேல் ஏற்கக் கூடியது.

**master : முதன்மையாளர்** : ஒன்று அல்லது மேற்பட்ட பிற சாதனங்களின் இயக்கத்தைக் கட்டுப்படுத்தும் சாதனம்.

**master boot record : முதன்மை ஏற்றும் பதிவேடு** : நிலை வட் டில் உள்ள ஏற்றும் பதிவேடு. பல்வேறு வட்டுப் பிரிவுகளைக் காட்டும், பிரிவினைப் பட்டி யல் இதில் உள்ளது. ஒவ்வொரு பிரிவும் ஏற்றுப் பதிவேட்டுடன் துவங்குகிறது. இது துணை இயக்க அமைப்புகளை ஏற்று வதைத் தொடங்கி வைக்கிறது.

**master card : முதன்மை அட்டை** : துளையிடப்பட்ட அட்டை படிவத்தில் மாஸ்டர் அட்டை.

**master clear : முழுமையும் அழித்தல்:** முற்றும் அழித்தல். சில கணினி முனையங்களை இயக்கி வைக்கும் சாதனம். அது சில நடைமுறைப் பதிவுகளை விலக்கி புதிய இயக்கத்துக்கு தயார் செய்யும்.

**master clock : முதன்மைக் கடி காரம்** : கணினி ஒன்றின் அடிப் படையான நேரத் துடிப்பைக் கட்டுப்படுத்தும் சாதனம்.

**master console : முதன்மை முகப்பு** : கணினிக்கு ஆணை யளிக்க கணினி இயக்குபவர் அல்லது அமைப்பிற்கு நிரல் தொடர் அமைப்பவர் பயன் படுத்தும் முதன்மை முகப்பு.

**master copy** : மூலப்படி.

**master data : முதன்மைத் தரவு** : அடிக்கடி மாற்றப்படும் தரவு தொகுப்பு. இது வகைப்படுத் தும் நடவடிக்கைகளுக்கான அடிப்படைத் தரவுகளை வழங்குகிறது.

**master file : முதன்மைக் கோப்பு; தலைமைக் கோப்பு** : ஒப்பு நோக்கில் நிரந்தரமான தரவுகளைக் கொண்ட கோப்பு. உசாவலுக்கும் உரிய ஆதார மாக உள்ளது. பொதுவாக குறிப்

பிட்ட கால இடைவெளியில் காலத்துக்கு ஏற்ற வகையில் மேம்படுத்தப்படுகிறது.

**master file maintenance : முதன்மைக் கோப்பு பராமரிப்பு :** காலத்துக்கேற்ற வகையில் மேம்படுத்துதல், மாற்றுதல் அல்லது முதன்மைக் கோப்பு களை திருத்தி அமைத்தல்.

**master key : முதன்மை விசை; முதன்மைத் திறவி :** மென் பொருள் அல்லது தரவு பாது காப்புக்கான வழங்கன் (server) அடிப்படையிலான ஆக்கப் பொருள்கூறு (component). சில கணினி அமைப்புகளில் தரவு அல்லது பயன்பாடுகள் ஒரு வழங்கன் கணினியில் சேமிக் கப்பட்டிருக்கும். கிளையன் (Client) கணினியில் அவற்றைப் பதிவிறக்கிப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். ஒரு கிளை யன் கணினி தரவு கேட்டு கோரிக்கை அனுப்பும்போது தொடர்வுத் திறவியை (session key) அனுப்பி வைக்கும். தொடர்வுத் திறவி, முதன்மைத் திறவியுடன் பொருந்தியிருப் பின், கிளையன் கேட்ட தரவுப் பொதியை வழங்கன் அனுப்பி வைக்கும்.

**master link : முதன்மை இணைப்பு :** மெக்டொனால்டு டக்ளஸ் உருவாக்கிய விநி யோகிக்கப்பட்ட எண் முறைக் கட்டுப்பாட்டு அமைப்பு. துளை யிட்ட அட்டையின் தொடர் பான பிரச்சினைகள் இன்றி வடி வமைப்பிலிருந்து பொருத்து வதற்கு நேரடியாக மின்னணு தரவுகளை வழங்குகிறது.

**master menu : முதன்மைப் பட்டியல்:** சிறு அல்லது நுண் கணினிகளில் பயன்படுத்தப் படும் எதிர்வினையாற்றும் செயலாக்க அமைப்பு. காட்சித் திரையில் பட்டியலைக் காட் டும் தொழில்நுட்பத்தைப் பயன் படுத்துகிறது. பல மாற்று வழமைகளில் விரும்பப்படும் நிரலைத் தேர்ந்தெடுக்க இது உதவுகிறது.

**master record : முதன்மைப் பதி வேடு:** வாடிக்கையாளர் பணி யாளர் அல்லது விற்பனையாளர் போன்ற தனிப்பட்ட தலைப்பு களுக்கான தரவுகளின் தொகுதி.

**master/slave arrangement : தலைமை/அடிமை அமைப்பு முறை; தலைவன்/பணியாள் அமைப்பு முறை :** (எ-டு) கணினி யானது ஏனைய புறச் சாதனங் களைக் கட்டுப்படுத்தும் முறை.

**master/slave computer system : தலைமை/அடிமை கணினி முறைமை :** ஒரு தலைமைக்

கணினியுடன் இணைக்கப்பட்ட ஒன்றுக்கு மேற்பட்ட அடிமைக் கணினிகளைக் கொண்ட கணினி முறைமை. தலைவர் கணினி இணைக்கப்பட்டுள்ள அடிமைக் கணினிக்குப் பட்டியல் பணிகளையும் பிற வேலைகளையும் வழங்குகிறது.

**master/slave system :** தலைமை/அடிமை முறைமை.

**master volume :** முதன்மைத் தொகுதி.

**match :** இணை; பொருத்தம் : இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வகை தரவுகளுக்கு இடையிலான பொருத்தத்தைச் சோதித்தல்.

**match case :** வடிவப் பொருத்தம் பார்.

**matching :** இணைவு பார்த்தல் : பொருத்தம் பார்த்தல் : இரண்டு கோப்புகளை அவற்றில் இணையான வகைத் தரவு அல்லது தரவுகள் இருக்கின்றனவா என்பதை உறுதி செய்ய சோதிக்கும் தரவுகளை வகைப்படுத்தும் நடைமுறை.

**material requirements planning :** பொருள் தேவையைத் திட்டமிடல்: சார்ந்து நிற்கும் பொருள் வகைகளுக்கான இருப்பறியும் கணினி சார்ந்த உத்திகள்.

**Math coprocessor : கணித இணைச் செயலகம் :** 386 நிரல் தொகுதிக்கும் அதற்கு முந்தையவற்றுக்கும் பயன்படுத்தக் கூடிய இணைச் சிப்பு. அமைப்பின் கணிப்புச் செயல் திறனைக் கூட்டுவதற்கும், ஆணைகளுக்கும் இதைப் பயன்படுத்தலாம். தொகுதி கூட்டுச் செயலகங்கள் எத்தகைய பயன்பாடுகளுக்கு பலன் தர வல்லது என்பதில் மிகுந்த வாக்கு வாதங்கள் உள்ளன. அதைத் தன்னுடைய சிப்புவில் சேர்த்துக் கொள்வதன் மூலம் 486 செயலகங்கள் இக்கேள்வியை மழுங்கடித்து விட்டன.

**mathematical expression : கணிதத் தொடர், கணிதக் கோவை :** முழு எண்கள், நிலைப் புள்ளி எண்கள் மற்றும் மிதவைப் புள்ளி எண்களையும் கூட்டல்/கழித்தல்/பெருக்கல்/வகுத்தல் போன்ற கணிதச் செயற்குறிகளையும் கொண்ட ஒரு தொடர் அல்லது கோவை. 5+1.2×4-8/2+1.3×10-3.

**mathematical functions : கணிதச் செயற்கூறு; கணிதவியல் பணிகள் :** பெரும்பாலான நிரல் தொகுப்பு மொழிகளில் கிடைக்கக்கூடிய வாலாயமான கணிதத் தொகுப்பு. மொழியின் ஒரு பகுதியாக பொதுவாக வழங்கப்படுகிறது.

**mathematical logic : கணித அளவையியல் :** மொழி மற்றும் அதன் வகைப்படுத்தும் நடைமுறைகளைப் பிரதிநிதித்துவப் படுத்த கணிதவியல் குறியீடுகளைப் பயன்படுத்துதல். ஒரு அறிவிக்கை அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட அறிவிக்கை வரிசைகள் உண்மையானவையா? பொய்யானவையா? என்பதைத் தீர்மானிக்க கணித விதிகளுக்கு இயைந்த வகையில் இந்தக் குறியீடுகள் கையாளப்படுகின்றன.

**mathematical model : கணிதவியல் மாதிரி: கணிதவியல் படிமம் :** ஒரு குழுக் கணித வெளியீடுகள். இவை ஒரு முறைமை நடவடிக்கையைப் பிரதிநிதித்துவப்படுத்துகின்றன அல்லது ஒரு கருவியின் செயல்பாட்டைப் பிரதிநிதித்துவப்படுத்துகின்றன.

**mathematical symbols : கணிதக் குறியீடுகள் :** சூத்திரங்கள், சமன்பாடுகள் மற்றும் பட்டியல் தொகுப்புகளில் பயன்படுத்தப் படும் குறியீடுகள்.

**mathematics : கணிதம் :** பொருள்களுக்கிடையிலான அல்லது அளவுகளுக்கிடையிலான உறவுகள் பற்றிய ஆய்வு. இதன் மூலம் தருக்க முறை வழிகளைப் பயன்படுத்தி சில உண்மைகளை நிரூபிக்க அல்லது பெற இயலும்.

**matrix : அணி; அடித்தளப் பரப்பு :** தொடர்புள்ள உருப்படிகளை (எண்களாக இருக்கலாம், விரிதாள் கலங்களாக இருக்கலாம், மின்சுற்று உறுப்புகளாக இருக்கலாம்) கிடக்கைகளாகவும் நெடுக்கைகளாகவும் (Rows and Columns) அடுக்கி வைக்கும் ஓர் ஒழுங்கமைப்பு. செவ்வக வடிவிலான எண் தொகுதிகளைக் கையாளக் கணிதத்தில் அணிகள் பயன்படுத்தப்படுகின்றன. கணிப் பணி (Computing) யிலும் கணினிப் பயன்பாடுகளிலும் (Computer Applications) தரவுவை அட்டவணை வடிவில் கையாள அணிகள் பயன்படுகின்றன. கணினி வன்பொருள்களிலும் அணிகளின் பயன்பாடு உண்டு. திரைக்காட்சியில் எழுத்துகள் படப் புள்ளிகளின் (pixels) அணியாகவே காட்சியளிக்கின்றன. அச்சுப்பொறியில் எழுத்துகள் புள்ளிகளின் அணியாகவே அச்சிடப்படுகின்றன. மின்னணுவியலில் டயோடு, டிரான்சிஸ்டர்களின் அணி அடிப்படையில் தருக்க மின்சுற்றுகளின் பிணைய அமைப்பு உருவாக்கப்படுகிறது. தகவலின் குறியாக்க (Encoding), குறிவிலக்கப் (Decoding) பணிகளுக்கு இவை பயன்படுகின்றன.

**matrix data : அணித் தரவு.**

**matrix notation : அடித்தளப் பரப்புக் குறியீடு :** *1858இல் ஆர்தர் கெய்லி என்னும் ஆங்கிலேய கணிதவியலாளரால் அறிமுகப்படுத்தப்பட்டது. அவர் ஒரு குறுங்குறியீட்டு முறையை அதாவது* ax *என்பது* b-*க்குச் சமம் எனும் நீள் சமன்பாட்டு வெளியீட்டு முறைமைகளைப் பயன்படுத்தினார்.*

**matrix printer : புள்ளியணி அச்சுப்பொறி; அடித்தளப்பரப்பு அச்சிடு கருவி :** *எழுத்து அச்சிடு கருவி. இது புள்ளி அடித்தளப் பரப்பை அச்சிடும் எழுத்தின் வடிவத்தைப் பெறப் பயன்படுத்தினார்.*

**mature system : முதிர்ந்த முறைமை :** *என்னென்ன பணிகளைச் செய்ய வடிவமைக்கப்பட்டதோ அந்தப் பணிகள் அனைத்தையும் நிறைவேற்றக் கூடிய, முழுமையாக இயங்கக் கூடிய முறைமை.*

**MAU : மாவ் :** Multi-station Access Unit *என்பதன் சுருக்கம். குறும் பரப்பு இணையத்தில் அடையாள வளையத்தின் மையஅச்சு.*

**Mauchly, John 1907-1980 : மக்லீ, ஜான்: 1907-1980 :** *இனியாக் கணினியின் கூட்டுக் கண்டுபிடிப்பாளர். இதுவே மின்னணுவியல் கணினிகளில் பெரியதாகும். பென்சில்வேனியாவில் உள்ள உர்சினஸ் கல்லூரியின் இயற்பியல் துறைத் தலைவராக 1930ஆம் ஆண்டில் கணினி மற்றும் மின்னணுவியல் தொடர்பான சோதனைகளை மக்லீ துவக்கினார். பள்ளியில் எட்டாண்டுகள் இருந்த காலத்தில் பருவ நிலை ஆய்வுத் திட்டம் ஒன்றில் அவர் பணியாற்றினார். சிக்கலான சுற்றுச் சூழல் தொடர்பான கணக்குக்ளைச் செய்ய விரைவாகச் செயல்படக்கூடிய மின்னணுவியல் கருவி ஒன்று அவசியம் என்ற முடிவுக்கு வந்தார். 1941இல் அவர் பென்சில்வேனியா பல்கலைக்கழகத்தில் உள்ள மின் பொறியியல் பள்ளியில் சேர்ந்தார். அங்கு 1943ஆம் ஆண்டின் துவக்கத்தில் ஜே. பிரெஸ்பெர் ஈக்கெர்ட்டைச் சந்தித்தார். இருவரும் சேர்ந்து இராணுவ ஆயுதப் படைப் பிரிவுக்கு மின்னணுவியல் கணினி ஒன்றைத் தயாரிப்பதற்கான திட்டத்தைத் தயாரித்தார். இராணுவத்தின் ஆயுதப் படைப் பிரிவு அவருக்கு அந்த எந்திரத்தைத் தயாரிப்பதற்கான ஒப்பந்தத்தை வழங்கியது. இராணுவத்துக்கு இரண்டாவது உலகப் போருக்காக புதிதாக உருவாக்கப்பட்ட பீரங்கிகளின் இலக்குகளை நிர்ணயிப்பதற்*

கான கணிதப் பட்டியல்களைத் தயாரிக்க வேண்டியிருந்தது. இத்தகைய பட்டியல்களை மூர் பள்ளி ஏற்கனவே பயன்படுத்தி வந்தது. 1943-க்கும் 1946-க்கும் இடைப்பட்ட காலத்தில் இவை மிகவும் மெதுவாக இயங்கின. ஈக்கெர்ட்டும், மக்லீயும் மின்னணுவியல் எண் ஒருங்கிணைப்பி மற்றும் கணினி ஒன்றை உருவாக்கினார்கள். எதிர்காலத்தில் பல கணினி வடிவமைப்புகளை உருவாக்குவதற்கான முன்னோடியாக இது அமைந்தது. ஈனியாக் உண்மையிலேயே ஒரு பெரிய ராட்சதன் ஆகும். அது 18 ஆயிரத்துக்கும் மேற்பட்ட வெற்றிடக் குழாய்களைக் கொண்டது. அதன் எடை 30 டன்கள். அது மூன்று படுக்கையறைகளைக் கொண்ட ஒரு வீட்டின் பரப்பளவைக் கொண்ட அறையில் அமைக்கப்பட்டிருந்தது. ஈனியாக் உருவானதைத் தொடர்ந்து ஈக்கெர்ட்டும் மக்கிலீயும் தங்கள் சொந்தக் கம்பெனியை நிறுவினார்கள். அவர்கள் பினாக் என்ற பெயரில் தங்கள் இரும எண் தானியங்கிக் கணினியை அமைத்தார்கள். அது சோதனை முயற்சியாக அமைந்தது. பொது நோக்கங்களுக்கான உலகின் முதலாவது வணிகக் கணினி யுனிவாக், அமெரிக்காவின் மக்கள் தொகைக் கணக்கெடுப்புக் கழகத்தில் நிறுவப்பட்டது. ஈக்கெர்ட்டும் மக்லீயும் துவக்கிய நிறுவனம் இப்பொழுது ஸ்பெரி கார்ப்பரேஷனின் ஒரு அங்கமாக உள்ளது. இந்நிறுவனம் உலகின் மிகப் பெரிய கணினி சாதனங்களைத் தயாரிக்கும் நிறுவனமாக உள்ளது.

**.ma.us : .எம்ஏ.யுஎஸ் :** ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டு மாசாசூஸட்ஸ் மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**maximinicomputer : பெரிய குறுங்கணினி :** 16 துணுக்குச் சொற்களைப் பயன்படுத்தும் பெரிய குறுங்கணினி. Minimini computer, Midiminicomputer and Superminicomputer ஆகியவற்றுக்கு எதிரானது.

**maximize : பெரிதாக்கு; உச்சப்படுத்து :** வரைகலைப் பயனாளர் இடைமுகத்தில் (GUI) ஒரு சாளரத்தை விரிவாக்கி தாய்ச் சாளரம்அல்லது கணினித் திரை முழுமையும் பரவும் வண்ணம் செய்தல்.

**maximize and minimize buttons : பெரிது, சிறிதாக்கும் பொத்தான்கள்.**

**maximize button : பெரிதாக்கு பொத்தான் :** விண்டோஸ் 3.x,

விண்டோஸ் 95/98 மற்றும் விண்டோஸ் என்டி ஆகியவற்றில் ஒரு சாளரத்தின் மேல் வலது மூலையில் அமைந்துள்ள ஒரு பொத்தான். தாய்ச் சாளரம் அல்லது கணினித் திரை முழுமையும் பரவும் வண்ணம் ஒரு சாளரத்தைப் பெரிதாக்க, இந்தப் பொத்தான் மீது சொடுக்கினால் போதும்.

**maximum value :** அதிகபட்ச மதிப்பு.

**mb :** எம்பி : Megabyte என்பதன் குறும்பெயர்.

**.mb.ca :** .எம்பி.சிஏ : ஓர் இணைய தள முகவரி கனடா நாட்டின் மின்டோப் மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**MBONE or Mbone :** எம்போன் : பல்முனைப் பரப்புகை முதுகெலும்பு என்று பொருள்படும் Multicast backBONE என்ற தொடரின் சுருக்கம். பல் இணைய தளங்கள் இணைந்த சிறிய தொகுதி. ஒவ்வொரு தளமும் நிகழ் நேர கேட்பொலி மற்றும் ஒளிக்காட்சித் தரவுகளை பிற தளங்களுக்கு ஒரே நேரத்தில் பரப்பும் திறன் பெற்றவை. ஒன்றிலிருந்து பலவற்றுக்கு பல்முனைப் பரப்புகை ஐபீ (Multicast-IP) நெறிமுறையைப் பயன்படுத்தி அதிவேகத் தரவு பொதிகளை அனுப்பவும் பெறவும் உதவும் தனிச்சிறப்பான மென்பொருளை எம்போன் தளங்கள் பெற்றுள்ளன. ஒளிக்காட்சிக் கலந்துரையாடல்களுக்கு (video conferencing) எம்போன் பயன்படுகிறது.

**Mbps :** எம்பிபீஎஸ் : ஒரு வினாடியில் இத்தனை மெகா பிட்டுகள் என்று பொருள்படும் Megabits per second என்பதன் சுருக்கம். ஒரு மெகாபிட் என்பது ஏறத்தாழ பத்து இலட்சம் துண்மிகளைக் கொண்டது.

**.mc :** .எம்சி : ஓர் இணைய தள முகவரி மொனாக்கோ நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**MCC :** எம்சிசி : Microelectronics and Computer Technology Corporation என்பதன் குறும்பெயர். மிக நவீன கணினி குறித்து ஆய்வு நடத்த 13 நிறுவனங்கள் இணைந்து உருவாக்கிய ஒரு அமெரிக்கக் கூட்டமைப்பு.

**McCarthy, John :** மெக்கார்த்தி ஜான் : LISP நிரல் தொகுப்பு மொழியை 1958இல் உருவாக்கியவர். மேலும் எதிர்வினைக்

கணினி எனும் கருதுகோளை எம்ஐடியில் பணிபுரியும் பொழுது உருவாக்கியவர். செயற்கைப் புலனாய்வு எனும் சொற்றொடரை முதலில் உரு வாக்கியவர். செயற்கைப் புலனாய்வு தொடர்பான தனது பணிகளுக்காக நன்கு அறியப் பட்டவர்.

**MCGA** : எம்சிஜிஏ : பல்வண்ண வரைகலைக் கோவை எனப் பொருள்படும் Multicolour Graphics Array என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும் பெயர். கணினித் திரைக்காட்சிக் கான மின்சுற்று அட்டை.

**MCI** : எம்சிஐ : 1. ஊடகக் கட்டுப்பாட்டு இடைமுகம் எனப் பொருள்படும் Media Control Interface என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும் பெயர். விண்டோஸ் இயக்க முறைமையின் பயன்பாட்டு நிரலாக்க இடைமுகம் (Windows API). பல்லூடகச் சாதனங்களை நிரல் மூலமாகக் கட்டுப்படுத்த உதவுகிறது. 2. தொலைதூரத் தொலைபேசி சேவை வழங்கும் ஒரு மிகப்பெரும் நிறுவனம். Microwave Communications Inc., என்பது அந்நிறுவனப் பெயர்.

**.md** : .எம்டி : ஓர் இணைய தள முகவரி மால்டோவாக் குடியர சைச் சேர்ந்தது என்பதைக் குறிக் கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**MDA** : எம்டிஏ : ஒற்றைநிறத் திரைக்காட்சித் தகவி என்று பொருள்படும் Monochrom Display Adapter என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும் பெயர். 1981-ல் ஐபிஎம் பீசி களில் அறிமுகப்படுத்தப்பட்ட ஒளிக்காட்சித் தகவி. எம்டிஏ-யில் ஒரேயொரு ஒளிக்காட்சிப் பாங்கு மட்டுமே உண்டு. 25 வரி கள் 80 எழுத்துகள். ஒவ்வொரு எழுத்துகளுக்கும் அடிக்கோடு உண்டு; மின்னுதல் மற்றும் ஒளிர்தல் (Bright) பண்புகளும் உண்டு.

**MDI** : எம்டிஐ : பல் ஆவண இடைமுகம் என்று பொருள் படும் (Multi Document Interface) என்ற தொடரின் தலைப் பெழுத்து குறும்பெயர். சில பயன்பாட்டு மென்பொருள் களில் இருக்கும் பயனாளர் இடைமுகம். ஒரே நேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட ஆவணங் களைத் திறக்க உதவுகிறது. மைக்ரோசாஃப்ட் வேர்டு, எக்செல் தொகுப்புகளில் உள்ளது. நோட்பேடு, வேர்ட் பேடு ஆகியவற்றில் கிடையாது.

**.md.us** : .எம்டி.யுஎஸ் : ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டின் மேரிலாந்து

மாநிலத்தைச் சேர்ந்தது என் பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப்பெயர்.

**means/ends analysis : வழி/ விளைவு-பகுப்பாய்வு :** துவக்கப் புள்ளியிலிருந்து முன்னும் பின் னும் இலக்கை நோக்கி ஆய்வு செய்கிற முறை. வேறுபாடு களைக் கலையும் முயற்சியின் அடிப்படையில் அமைந்தது.

**mean time between failure : கோளாறுகளுக்கு இடைப்பட்ட நேரம் :** கருவியின் கோளாறு களுக்கு இடையில் ஆகும் நேரத்தின் அளவு. இயக்கும் நேரங்களின் எண்ணிக்கையில் குறிப்பிடப்படும். சான்றாக, ஒரு நிலைவட்டின் கோளாறு களுக்கு இடைப்பட்ட நேரம் (MTBT) 20,000 மணிகளாகும்.

**measuring divices : அளவீட்டுச் சாதனங்கள்.**

**mechanical data processing : எந்திரவியல் தரவு வகைப் படுத்துதல் :** ஒப்பு நோக்கில் சிறிய பெரிய நிரல் தொகுப் புக்கு ஆட்படாத எந்திரவியல் சாதனங்களைக் கொண்ட தரவு களை வகைப்படுத்தும் முறை.

**mechanical mouse : எந்திர முறை (எலி வடிவ) சுட்டுக் கருவி :** ரப்பர் பந்தைப் பயன் படுத்தும் (எலி வடிவ) சுட்டி. அலகின் உள்ளே இருக்கும் சக்கரங்களுக்கிடையே இது சுற்றுகிறது.

**mechanical translation : எந்திர வியல் மொழி பெயர்ப்பு :** கணினி கள் அல்லது அதேபோன்ற சாதனங்களினால் செய்யப்படும் மொழி பெயர்ப்புக்கான வகைப் பெயர்.

**mechanization : எந்திரமய மாக்கல் :** மனிதர்களால் முன்பு செய்யப்பட்ட பணிகளை எளிமைப்படுத்த அல்லது எந்திரங்களுக்கு மாற்ற உதவும் எந்திரங்கள்.

**media : ஊடகம்; தகவல் சாதனம் :** கணினி அடிப்படை யிலான தரவுவைப் பதிவு செய் வதற்கான தாள், வட்டு, நாடா போன்ற பருப்பொருள்கள். கம்பிகள், கம்பி வடங்கள், ஒளிவ இழை வடங்கள், நுண்ணலை, வானொலி அலை போன்றவை தகவல் பரி மாற்றத்துக்கான ஊடகங்களாகப் பயன்படுகின்றன. மீடியம் - ஒருமை; மீடியா - பன்மை.

**media access control : ஊடக அணுகு கட்டுப்பாடு.**

**media compatibility : ஊடக ஏற்புத் திறன்:** வெற்று வட்டு களாக ஒரே மாதிரியான வட்டு களைப் பயன்படுத்தும் இரண்டு

அல்லது மேற்பட்ட மாறுபட்ட முறை அலகுகளின் திறன். ஒன்று மற்றொன்று பதிவு செய் வதைப் படிக்க முடியலாம் அல்லது இயலாமற் போகலாம்.

**media conversion : ஊடக மாற்றல் :** ஒரு சேமிப்பு ஊடகத் திலிருந்து வேறொன்றுக்கு தரவுவை மாற்றல். வட்டி லிருந்து நாடாவுக்கு அல்லது ஒரு வட்டுப் பெட்டியிலிருந்து இன்னொன்றுக்கு மாற்றுதல்.

**media eraser : சாதனங்கள் அழிப்பி: ஊடக அழிப்பி:** காந்த நாடாக்களை, குறுவட்டுகளை காந்தமிழக்கச் செய்ய வடி வமைக்கப்பட்ட சாதனம்.

**media failure : ஊடகப் பழுது :** பதிவு செய்யும் மேற்பரப்பில் உள்ள குறை காரணமாக வட் டிலிருந்து நாடா போன்ற ஒரு சேமிப்பகச் சாதனத்திலிருந்து வேறொன்றுக்கு படிக்கவோ, எழுதவோ முடியாத நிலை.

**media filter : ஊடக வடிகட்டி :** 1. குறும்பரப்புப் பிணையங் களில் இரு வேறு வகை ஊட கங்களுக்கிடையே பொருத்தி யாகப் பயன்படுத்தப்படும் சாதனம். (எ-டு): ஆர்ஜே-45 இணைப்பி, இணையச்சு வடத் திற்கும், உறையிடா முறுக் கிணை (UTP) வடத்திற்கும் இடையே பயன்படுத்தப்படு கிறது. ஊடக வடிகட்டிகள் செயல்பாட்டில் அனுப்பி வாங்கிகளை ஒத்தவை. 2. தரவுப் பிணையங்களில் சுற்றுச் சூழலிலிருந்து வரும் மின்னணு இரைச்சலை வடிகட்டி நீக்க இணைக்கப்படும் சாதனம். (எ-டு) இணையச்சு வட அடிப் படையிலமைந்த புறப் பிணை யங்களில் (Extranet) அருகமைந்த மின்னணுக் கருவிகளின் இடை யூறு காரணமாய் தரவு இழப்பு ஏற்படாமல் தவிர்க்க ஊடக வடிகட்டிகள் உதவும்.

**media interchangeability : ஊடக பரிமாற்றத் தன்மை :** ஒரே மாதிரியான இயக்கி உள்ள வட்டுகளை ஒரே எந்திரத்தின் மீது பதிந்து வேறொன்றில் திரும்பப் பயன்படுத்தக்கூடிய அளவு.

**median : மீடியன் :** ஒரு தரவுத் தொகுதியின் நடு அளவு. கீழ்க் கண்ட தரவு தொகுதியில் மீடி யன் மதிப்பு 4. இத்தொகுதியில் 19 வகையறாக்கள் இருப்பதால் இதன் மீடியன் நடுமதிப்பாகும். இரட்டைப்படை எண் தரவு களின் மீடியன் இரண்டு நடு வகையறாக்களின் சராசரி எண் ணாகும். அந்த எண்கள், 1, 1, 2, 3, 3, 3, 3, 3, 4, 4, 5, 5, 5, 6, 8, 8, 9, 9, 9.

**media specialist :** தகவல் சாதன வல்லுநர் : சேமிப்புச் சாதனங் களை வகைப்படுத்தவும், பரா மரிக்கவும் . பொறுப்பானவர். சிறு வட்டுகள், சிறு வட்டுத் தொகுப்பு, காந்த நாடாக்கள், மற்றும் தொடர்புடைய பொருள்கள்.

**medium :** ஊடகம் : பொதியுறை வட்டு, காந்த வட்டு, காகித நாடா, காந்த நாடா, துளை அட்டை மற்றும் காகிதம் போன்ற தரவுகளை பதிவு செய்கிற இயற்பியல் பொருள்.

**medium model :** நடுத்தர மாதிரியம் : இன்டெல் 80×86 செயலிக் குடும்பத்தில் பயன் படுத்தப்படும் நினைவக மாதிரி யம். இந்த மாதிரியத்தில் தகவலுக்காக 64 கிலோபைட் நினைவக இடமே ஒதுக்கப் படும். நிரல் கட்டளைகளுக்கு ஒரு மெகாபைட்வரை இடம் ஒதுக்கப்படும்.

**medium pitch :** நடுத்தொனி.

**medium scale integration (MSI) :** நடுத்தர அளவு ஒருங்கிணைப்பு : பெரும் ஒருங்கிணைப்புக்கும் சிறிய அளவிலான ஒருங் கிணைப்புக்கும் இடைப்பட்ட வகை ஒருங்கிணைப்பு வகை.

**meg :** மெக் : 'மெகாபைட்' என்பதற்கான விளிச்சொல்.

**mega :** மீமிகு : பத்து இலட்சத் தைக் குறிக்கும் முன்னிணைப்பு அல்லது $10^6$. குறும்பெயர் M . Micro என்பதற்கு எதிரானது - பத்து இலட்சத்தில் ஒரு பங்கு.

**megabit :** மீமிகு துண்மி : பொதுவாக ஒரு பத்து இலட்சம் துண்மிகள் அல்லது ஓராயிரம் கிலோ துண்மிகள். சரியாகச் சொன்னால் 10, 48, 576 துண்மிகள் அல்லது 1024 கிலோ துண்மிகள்.

**Megabyte :** மீமிகு எண்மி : குறிப்பாக $2^{20}$ அல்லது 10,48,576 எண்மிகள். 1024 கிலோ எண்மி கள். சராசரியாக ஒரு பத்து இலட்சம் எண்மிகள் அல்லது ஓராயிரம் கிலோ எண்மிகள். குறும்பெயர் MB.

**megacycle :** மீமிகு சுழற்சி : ஒரு விநாடிக்குப் பத்து இலட்சம் சுழற்சிகள்.

**megaflop :** மீமிகு இறக்கம் :ஒரு விநாடிக்கு பத்து இலட்சம் பதின்மப் புள்ளி நடவடிக்கை கள். M flops என்றும் அழைக்கப் படுகிறது.

**megahertz :** மீமிகு மின் அலை வரிசை : மின் அலைவரிசை அலகு. ஒரு விநாடிக்கு பத்து இலட்சம் சுழற்சிகளுக்குச் சம மானது. ஒலி பரப்பு அலை வரிசை அலகு Mhz என்று குறுக்கி அழைக்கப்படுகிறது.

**megapel display : மெகாபெல் காட்சி:** கணினி வரைகலையில் ஒரு பத்து இலட்சம் அல்லது மேற்பட்ட படப் புள்ளிகளைக் கையாளும் காட்சி அமைப்பு. ஒரு முழு திரைக்காட்சியில் ஒரு பத்து இலட்சம் படப்புள்ளிகள் வரவேண்டுமென்றால் *1,000* வரிகளில் ஒவ்வொன்றிலும் *1,000* புள்ளிகள் இருக்கும்.

**member : உறுப்பு; உறுப்பினர் :** பொருள்நோக்கு நிரலாக்கத்தில் ஓர் இனக்குழுவில் (class) வரையறுக்கப்படும் ஒரு மாறிலி (variable) அல்லது ஒரு வழி முறை (mothod).

**membrane keyboard : ஜவ்வு விசைப்பலகை :** இரண்டு மெல் லிய பிளாஸ்டிக் தாள்களினால் அமைக்கப்பட்டது. மின் சாரத்தை கடத்தும் மசிப்பூச்சு உடையது. பல குறைந்த விலை யுடைய நுண்கணினிகளில் பயன்படுத்தப்படும் சிக்கன மான சமதள விசைப் பலகை.

**memo field : குறிப்புப் புலம் :** செய்தியில் மாறும் அளவினைக் கொண்டிருக்கும் தரவுப் புலம். செய்தியை இணைகோப்பில் சேமிக்கலாம். ஆனால், அது தரவுப் பதிவேட்டில் ஒரு பகுதி என்பது போல நடத்தப்படும்.

**memory : நினைவகம்: நினைவுப்பதிப்பி:** ஏராளமான தரவுகளை சேமிக்கும் திறன் கொண்ட கணினியின் சேமிப்பு வசதிகள்.

**memory access : நினைவு அணுகல்.**

**memory addresses : பதிப்பி முகவரிகள்.**

**memory allocation : நினைவக ஒதுக்கீடு.**

**memory, associate: சார்பு நினை வகம்.**

**memory bank : நினைவக வங்கி.** தரவுகளை வைத்திருக் கும் கணினி அமைப்பை பொதுவாகக் குறிப்பிடுகிறது.

**memory based : நினைவகம் சார்ந்த :** செயலாக்கம் செய்வதற் காக நினைவகத்தில் எல்லா தரவுகளையும் வைத்துக் கொள் ளும் நிரல் தொடர். ஏறக்குறைய எல்லா விரிதாள்களும் நினை வகம் சார்ந்தவை. விரிதாளில் ஒரு முனையில் செய்யப்படும் மாற்றம் உடனடியாக அடுத்த முனையில் பிரதிபலிக்கும். இத னால் அவற்றின் இயக்கம் கணிசமாக விரைவடையும்.

**memory board : நினைவுப் பலகை:** கணினி முறையுடன் ராமை இணைக்கும் விரிவுப் பலகை. கூடுதல் தகவலைச் சேமிக்கவும் பயன்படுத்தவும் இதனால் இயல்கிறது.

**memory, bubble** : குமிழி நினைவகம்.

**memory capacity** : நினைவகக் கொள்திறன்.

**memory card** : நினைவக அட்டை: எடுத்துச் செல்லக் கூடிய கணினிகளில் வட்டுக்கு மாற்றாகப் பயன்படுத்தப்படும் கடன் அட்டை அளவுள்ள நினைவக (மாடுல்) ஐசி அட்டைகள், ரோம், ரேம் அட்டைகள் என்றெல்லாம் அழைக்கப்படும். இவை பலவகையான சில்லுகளைப் பயன்படுத்துகின்றன. ரேம் அட்டைகள் பேட்டரியைப் பயன்படுத்தி செல்களுக்கு மின்சக்தியை நினைவகம் அமைந்துள்ள அச்சிட்ட மின்சுற்று அட்டைகளுக்கு ஏற்றுகின்றன.

**memory cell** : நினைவக அறை; நினைவுப் பதிப்பி சிப்பு: நினைவகத்தின் ஒரு துண்மி. மாறும் ரேம் நினைவகத்தில். ஒரு டிரான்சிஸ்டர் மற்றும் ஒரு கொள் திறனைக் கொண்டு ஒரு அறை அமைக்கப்படுகிறது. நிலை ரேம் நினைவகத்தில் ஐந்து டிரான்சிஸ்டர்களைக் கொண்டு ஒரு அறை உருவாகிறது.

**memory check** : நினைவக சரி பார்ப்பு.

**memory chip** : நினைவகச் சிப்பு: மின்னேற்ற வடிவில் தகவலைச் சேமிக்கிற அரைக் கடத்திச் சாதனம். வழக்கமாக இவை நினைவகப் பலகைகள் அல்லது அமைப்புப் பலகைகளில் பொருத்தப்பட்டிருக்கும்.

**memory control block** : நினைவகக் கட்டுப்பாடு கட்டம் : நினைவகத்தின் ஒவ்வொரு கட்டத்தின் ஆரம்பத்திலும் டாசில் (DOS) அமைக்கப்பட்டுள்ள 16 எண்மி அளவுகோல் கட்டம். அதன் நினைவக ஒதுக்கீட்டுப் பணிகளின் மூலம் நிரலாக்கத் தொடரை இது அமைக்கிறது.

**memory core** : உள்ளக நினைவகம்.

**memory cycle** : நினைவுச் சுழற்சி: ஒரு எண்மி அல்லது தகவலின் ஒரு சொல்லை நினைவகத்தில் சேர்ப்பதற்கோ சேமிப்புக் கிடங்கு எனப்படும் நினைவகத்திலிருந்து அகற்றுவதற்கோ தேவையான நேரம்.

**memory cycle time** : நினைவக சுழற்சி நேரம் : ஒரு நினைவக சுழற்சியைச் செய்வதற்கு அது எடுக்கும் நேரம்.

**memory data register (MDR)** : நினைவகத் தரவுப் பதிவகம் : தலைமை நினைவகத்திற்கு வந்து போகும் அனைத்துத் தரவு நிரல்களையும் தற்காலிகமாக வைத்திருக்கும் ஒரு சிறப்பு நினைவகம்.

**memory dump** : நினைவகச் சேமிப்பு; நினைவகத் திணிப்பு; நினைவுக் கொட்டல்.

**memory, external** : புற நினைவகம்.

**memory fill** : நினைவக நிரப்பி : ஒரு குறிப்பிட்ட மதிப்புக்கு நினைவகத்தின் ஒரு கட்டத்தில் தரவுகளைப் பொருத்துதல்.

**memory interleaving** : நினைவக இடைவெளியேற்றம் : நினைவக வேகத்தை அதிகரிக்கும் தொழில்நுட்பத்தின் ஒரு வகை. சான்றாக, ஒற்றைப்படை மற்றும் இரட்டைப்படை முகவரிகளுக்கு தனித்தனி நினைவக வங்கியை அமைப்பதன் மூலம் நடப்பு எண்மியைப் புதுப்பிக்கும் வேளையில் நினைவகத்தின் அடுத்த எண்மியை அணுகலாம்.

**memory, internal** : அக நினைவகம்.

**memory, magnetic** : காந்த நினைவகம்.

**memory main** : முதன்மை நினைவகம்.

**memory management** : நினைவுப் பராமரிப்பு : நினைவு ஆதாரங்களை மிகவும் திறனுடன் கட்டுப்படுத்துகிற அல்லது ஒதுக்கீடு செய்கிற உத்தி.

**memory management programme** : நினைவக மேலாண்மை நிரல் : 1. தரவு மற்றும் நிரல் ஆணைகளை முறைமை நினைவகத்தில் இருத்தி வைத்தல், அவற்றின் பயன்பாட்டை கண்காணித்தல், விடுவிக்கப்படும் நினைவகப் பகுதியை மறுஒதுக்கீடு செய்தல் போன்ற பணிகளைச் செய்யும் ஒரு நிரல். 2. நிலைவட்டின் (Hard Disk) ஒரு பகுதியை ரோம் நினைவகத்தின் நீட்டிப்பாய் பயன்படுத்திக் கொள்ளும் ஒரு நிரல்.

**memory management unit** : நினைவக மேலாண்மையகம் : மெய்நிகர் நினைவக முகவரிகளை (Virtual Memory Address) மெய்யான நினைவக முகவரிகளுக்குப் பொருத்துகின்ற திறன் பெற்ற வன்பொருள். 68020 செயலியை அடிப்படையாகக் கொண்ட கணினிகளில், செயலியும் நினைவக மேலாண்மையகமும் தனித்தனியானவை. ஆனால் இன்றைய நவீனக் கணினிகளில் நினைவக மேலாண்மையகம் மையச் செயலகத்தில் உள்ளிணைக்கப்பட்டிருக்கும். இன்னும் சில கணினிகளில் இவை நுண்செயலிக்கும் நினைவகத்திற்கும் இடையே பாலமாகச் செயல்

படும். இந்த வகை நினைவக மேலாண்மையகங்கள் முகவரி ஒன்று சேர்ப்புப் பணிக்குக் காரணமாயிருக்கின்றன. 'டி' ரோம்களில் புதுப்பிப்புச் சுழற்சிகளுக்குக் காரணமாயுள்ளன.

**memory map :** நினைவகப் படம் : தரவு சேமிப்பகத்தில் உள்ள தோற்ற உரு வேறு இடத்தில் தோன்றுதல். எடுத்துக்காட்டாக நினைவகத்தில் உள்ள ஒவ்வொரு இடத்துக்கும் பொருத்தமான எழுத்து உரு வெளிப்படு திரையில் தோன்றுதல்.

**memory mapped I/O :** நினைவகப் பின்னணியிலான உ/வெ : வெளிப்புறச் சாதனம். இதன் உள்ளீடு அல்லது வெளியீட்டின் ஒவ்வொரு உறுப்புக்கும் ஏற்ற நினைவக இருப்பிடங்கள். சான்றாக, நினைவகப் பின்னணியிலான காட்சியமைப்பில் ஒவ்வொரு படப்புள்ளி அல்லது எழுத்தும் நினைவகத்தில் அதற்குரிய எண்மிகளில் இருந்து தரவுகளைப் பெறுகின்றன. மென்பொருளால் நினைவகம் புதுப்பிக்கப்பட்டவுடன். புதிய தரவுவை திரை காட்டுகிறது.

**memory mapping :** நினைவகம் அமைத்தல் : முன் வரையறை செய்யப்பட்ட அல்கோரிதம்களுக்கு ஏற்றவாறு மாய முகவரியை உண்மையான முகவரியாக மாற்றும் முறை.

**memory model :** நினைவக மாதிரியம் : ஒரு கணினி நிரலில் உள்ள தரவுகளையும் குறிமுறைகளையும் (கட்டளைகளையும்) நினைவகத்தில் ஏற்றுவது தொடர்பான ஓர் அணுகுமுறை. நினைவகத்தில் தகவலுக்கு எவ்வளவு இடம், கட்டளைகளுக்கு எவ்வளவு இடம் என்பதை நினைவக மாதிரியம்தான் தீர்மானிக்கிறது. பொதுவாகத் தட்டை நினைவகப் பரப்பினைக் கொண்டுள்ள பல கணினிகள் ஒற்றை நினைவக மாதிரியத்தையே ஏற்கின்றன. துண்டம் துண்டமான நினைவகப் பரப்பினைக் கொண்டுள்ள கணினிகள் பெரும்பாலும் பல்வகை நினைவக மாதிரியங்களுக்கு இடம் தருகின்றன.

**memory module :** நினைவகக் கூறு (மாடுல்) : தலைமை நினைவகத்தின் 4 கிலோ எண்மி அல்லது மேற்பட்ட கூறுகளைக் கொண்ட தனிப்பட்ட மின் சுற்று அட்டை.

**memory port :** நினைவக இணைப்பி: தலைமை நினைவகத்திற்கும் மையச் செயலகத்திற்குமான இணைப்பின் ஆரம்ப நிலை.

**memory power :** நினைவாற்றல்.

**memory protection :** நினைவகப் பாதுகாப்பு : ஒரு நிரல் தொடரானது தவறுதலாக வேறொரு இயங்கும் நிரல் தொடருடன் மோதுவதைத் தடுக்கும் தொழில்நுட்பம். நிரல் தொடரைச் சுற்றி ஒரு பாதுகாப்பு எல்லைக்கோடு உருவாக்கப்படுகிறது. நிரல் தொடருக்குள்ளிருக்கும் நிரல்கள் அதன் எல்லைக்கு வெளியே இருக்கும் நிரல்களைத் தொட தடை செய்யப்படுகிறது.

**memory, random access :** குறிப்பிலா அணுகு நினைவகம்.

**memory resident :** நினைவகத்தில் தங்கியுள்ள : எப்போதும் நினைவகத்தில் உள்ள நிரல் தொடர்.

**memory resident package :** நினைவகத்தில் தங்கியிருக்கும் பொட்டலம் : கணினியின் அடிப்படை சேமிப்பகத்தில் ஏற்றப்படும் மென்பொருள். நேரமெடுக்கும் அலுவலகப் பணிகளைச் செய்வதற்கு அழைக்கப்படும்வரை அது காத்திருக்கிறது.

**memory size :** நினைவக அளவு : ஒரு கணினியின் நினைவகக் கொள்திறன். பெரும்பாலும் மெகா பைட்டுகளில் அளவிடப்படும்.

**memory slot :** நினைவகச் செருகுவாய்; நினைவகப் பொருத்துமிடம்.

**memory sniffing :** நுகர்வு நினைவகம்; நினைவகச் சோதனைகள் : வகைப்படுத்தும் பணியின் போது சேமிப்பகத்தை தொடர்ந்து சோதனையிடல்.

**memory space :** நினைவக இடம் : மையச் செயலகம் அணுகக்கூடிய நினைவக முகவரிகளின் வரிசை. *8088* சிப்புவின் முகவரியிடம் ஏறக் குறைய பத்து இலட்சம் எண்மிகளாகும்.

**memory typewriter :** நினைவகத் தட்டச்சுப் பொறி : அதன் நினைவகத்தில் சில பக்கங்கள் அளவு செய்திகளை வைத்துக் கொண்டு ஓரளவான சொல் செயலாக்க பணிகளையும் செய்யும் தட்டச்சு. ஒன்று அல்லது இரண்டு வரி திரையை வைத்துக் கொண்டு தொகுப்பது தொல்லை தருவதாகும்.

**memory unit :** நினைவக அலகு.

**memory, volatile :** நிலையா நினைவகம்.

**memotype field :** குறிப்புரைத் தரவுப் புலம்.

**menu :** பட்டி; பட்டியல் : ஒரு பயனாளர் தாம் விரும்புகின்ற நடவடிக்கையை மேற்கொள்ள




பட்டியல்

விருப்பத் தேர்வுகளின் பட்டியலிலிருந்து ஒன்றைத் தேர்வு செய்து இயக்க வாய்ப்பளிக்கும் ஒரு பட்டியல். ஒரு கட்டளையை நிறைவேற்றுதல் அல்லது ஓர் ஆவணத்தை வடிவமைத்தல் போன்ற பணியாக இருக்கலாம். வரைகலை இடைமுகத்தை வழங்குகின்ற பல பயன்பாட்டு நிரல்கள், இது போன்ற தேர்வுப் பட்டியை பயன்படுத்துகின்றன. பயனாளர்கள் நிரல் கட்டளைகளையும் அவற்றைப் பயன்படுத்தும் முறைகளையும் நினைவில் வைத்துக் கொள்ள அவசியமில்லாத ஓர் எளிய மாற்று வழியை இதுபோன்ற பட்டிகள் வழங்குகின்றன.

**menu application :** பட்டிப் பயன்பாடு

**menu bar :** பட்டியல் பட்டை : திரையில் தோன்றும் பட்டியல் வாய்ப்புகளின் வரிசையடங்கிய பட்டை.

**menu block :** பட்டிப் பகுதி.

**menu definitions :** பட்டி வரையறைகள்.

**menu driven :** பட்டி வழிச் செலுத்தி; பட்டி முடுக்கம்.

**menu driven programme :** பட்டியல் வழி செலுத்தும் நிரல்கள்.

**menu driven software :** செயல் பட்டியலை இயக்கும் மென்பொருள் : பட்டியலை விரிவாகப் பயன்படுத்த உதவும் கணினி நிரல் தொகுப்பு. இவ்வகை மென்பொருள் குறைந்த அளவு கணினி பட்டறிவு உள்ளவர்கள் கூடப் பயன்படுத்தும் வகையில் வடிவமைக்கப்பட்டது. செய்ய வேண்டிய வேலைகளைத் தேர்வு செய்ய செயல் பட்டியல் வரிசை பயன்படுத்தப்படுகிறது.

**menu item :** பட்டியல் உருப்படி : செயல்பட்டியல் வரிசையில் உள்ள ஏதாவது ஒன்று.

**menu option :** பட்டித் தேர்வு.

**merge : சேர்ப்பு; சேர்; இணைப்பு :** பொருள் வரிசைகளை மாற்றாமல் பொருள்களை வரிசை முறையில் சிலவற்றை இணையாகவும் சேர்த்தல்.

**merge cell : கலம் இணைத்தல்; கலம் சேர்த்தல் :** சொல்செயலிப் பயன்பாடுகளில் ஓர் அட்டவணையில் ஒன்றுக்கு மேற்பட்ட கலங்களை ஒரே கலமாக்க உதவும் கட்டளை.

**merge document : ஆவணச் சேர்ப்பு; இணைப்பு ஆவணம்; ஆவண இணைப்பு.**

**merge print programme : இணைப்பு அச்சிடு நிரல் தொகுப்பு :** கணினியைப் பயன்படுத்துவோர் தனக்கெனத் தேவையான கடிதங்களைத் தயாரிக்க உதவுகிற நிரல் தொகுப்பு.

**merge purge : இணைப்பு - தூய்மையாக்கு :** இரண்டு அல்லது மேற்பட்ட பட்டியல்களை ஒன்றாக்கி தேவையில்லாதவற்றை நீக்குதல். சான்றாக, ஒரு புதிய பெயர், முகவரிப் பட்டியலுடன் பழைய பட்டியலைச் சேர்த்து குறிப்பிட்ட அளவு கோலுக்குட்பட்டு இரண்டாவது தடவையாக வரும் பெயர்களை நீக்குதல்.

**merge workbooks : பேரேடுகளை ஒன்றிணை.**

**mesa : மேடு :** ஜெர்மானியம் அல்லது சிலிக்கான் தகடுகளில் அவற்றைச் செதுக்கும்போது பாதுகாக்கப்பட்டு அதன் காரணமாய், செதுக்கப்பட்ட சுற்றுப் பகுதிகளைவிட சற்றே உயரமாய்த் தோற்றமளிக்கும் ஒரு பகுதி.

**MESFET : மெஸ்ஃபெட் :** Metal semiconductors field effect transistor என்பதன் குறும்பெயர். (உலோக அரைக்கடத்திகள் களநிலை மின்மப் பெருக்கி) முக்கியமான செயலூக்கமுள்ள சாதனமான கல்லியம் ஆர்சனைடு ஒருங்கிணைந்த இணைப்புகளில் பயன்படுத்தப்படுகிறது. இது மின்னேற்றத் திற்கும் மின் அகற்றலுக்கும் பயன்படுத்தப்படுகிறது.

**mesh : வலை கண்ணி :** ஒரு வலைப் பின்னலில் உள்ள மூடப்பட்ட வழியை உருவாக்கும் கிளைகள்.

**mesh network : வலைப் பிணையம்:** வலைப் பின்னல். இதில் உள்ள முனையங்கள் மற்ற பல முனையங்களுடன் பிணைக்கப்பட்டுள்ளன. இதன் காரணமாக தரவுகளைக் கடத்துவதற்கு ஏராளமான வழிகள் அனு

மதிக்கப்படுகின்றன. Ring network-க்கு எதிரானது.

**message : செய்தி;தரவு:** ஒரு குழு என்கிற வகையில் பொருளைத் தருகிற எழுத்துகள். இவை ஒரு குழு என்கிற வகையிலேயே கையாளப்படுகின்றன.

**message box : தரவுப் பெட்டி; செய்திப் பெட்டி.**

**message format : செய்தி வடிவமைப்பு :** தரவுவின் பகுதிகளை அதாவது தரவுத் தலைப்பு, முகவரி, உரைப் பகுதி மற்றும் தரவுவின் முடிவு ஆகியவற்றை வகைப்படுத்துதலுக்கான விதிகள்.

**message header : செய்தித் தலைப்பு :** தரவு ஒன்றின் தலைப்புப் பகுதி. அது தரவுத் தொடர்பான செய்தியை அதாவது தரவு போய்ச் சேர வேண்டிய இடம் முன்னுரிமை மற்றும் தரவுவின் வகைகள் பற்றிக் கூறுகிறது.

**message of the day : இன்றையச் செய்தி :** ஒரு பிணையத்தில் அல்லது பல்பயனாளர் கணினிகளில் அல்லது பிற பகிர்வு முறைமைகளில் அனைத்துப் பயனாளர்களுக்கும் அறிவிக்கப்படும் தினசரிச் செய்தியறிக்கை. பெரும்பாலானவற்றில், பயனாளர் கணினி அமைப்பிற்குள் நுழையும்போதே இச்செய்தி காட்டப்பட்டுவிடும்.

**message panes : செய்திப் பலகங்கள்.**

**message queuing : செய்தி வரிசைப்படுத்துதல் :** தரவுத் தொடர்பு முறைமை ஒன்றில் தரவுகளைக் கையாளுவதைக் கட்டுப்படுத்தும் உத்தி. இது கணினி ஒன்றினால் அவற்றை ஏற்கச் செய்கிறது. அவை வகைப்படுத்தப்படும்வரை சேமிக்கப்படுகின்றன அல்லது மற்றொரு வழியில் அனுப்பப்படுகின்றன.

**message reflection : செய்தி பிரதிபலிப்பு :** பொருள்நோக்கு நிரலாக்கச் சூழலில், குறிப்பாக விசுவல் சி++, ஓஎல்இ, ஆக்டிவ்எக்ஸ் போன்றவற்றில் ஒரு கட்டுப்பாடு தன்னுடைய சொந்த செய்தியையே கையாள வழி செய்யும் ஒரு செயல்கூறு.

**message retrieval : செய்தியை மீண்டும் பெறுதல் :** தகவல் முறைமை ஒன்றில் சேர்க்கப்பட்ட தகவலை சில நேரத்துக்குப் பிறகு மீண்டும் பெறும் திறன்.

**message security protocol : செய்திப் பாதுகாப்பு நெறிமுறை :** இணையத்தில் பரிமாறப்படும் செய்திகளுக்கான ஒரு நெறி

முறை. பாதுகாப்புக் கருதி மறையாக்கம் (encryption) மற்றும் சரிபார்ப்பு (verification) போன்ற உத்திகளைக் கையாளும் நெறிமுறை. ஒரு மின்னஞ்சலை ஏற்கவோ புறக்கணிக்கவோ வழங்கன் கணினியில் அனுமதி பெற வேண்டும் என்பதுபோன்ற பாதுகாப்பு நடைமுறைகளை மேற்கொள்ள இந்நெறிமுறை வழி செய்கிறது.

**message switching : செய்தி பணிக் குமிழ் :** தரவு ஒன்றைப் பெறும் உத்தி. சரியான வெளிச் செல் இணைப்பும் நிலையமும் கிடைக்கும் வரை அதனைச் சேமித்தல். பின்னர் அவற்றை இலக்குக் கணினிகளுக்கு மீண்டும் அனுப்புதல். இக்கணினிகள் பணிக்குமிழின் வேலைகளைச் செய்கின்றன.

**message switching centre : செய்தி பணிக்குமிழ் மையம் :** செய்திகளில் அடங்கியுள்ள செய்திகளுக்கேற்ப செய்திகளை அனுப்பும் மையம்.

**message transfer agent : செய்திப் பரிமாற்று முகவர்.**

**messaging : செய்தியனுப்பல் :** கணினி மற்றும் செய்தி தொடர்புக் கருவிகள் வழியாக மின்னஞ்சல், குரலஞ்சல் அல்லது தொலைநகல் மூலமாக ஒருவர் இன்னொருவருக்கு தகவல் அனுப்பும் முறை.

**messaging application : செய்தி யனுப்பு பயன்பாடு :** பயனாளர்கள் தமக்குள் செய்திகளை (மின்னஞ்சல் அல்லது தொலை நகல்) பரிமாறிக் கொள்ளப் பயன்படும் ஒரு மென்பொருள்.

**messaging client : செய்தி யனுப்பு கிளையன் :** மின்னஞ் சல், தொலை நகல் வழியாக பயனாளர் ஒருவர் செய்திகளை அனுப்பிவைக்க உதவும் ஒரு பயன்பாட்டு நிரல். தொலை தூரத்தில் இயங்கும் வழங்கன் கணினி இதற்காகப் பயன் படுத்திக் கொள்ளப்படும்.

**meta-assembler : உயர் சேர்ப்பி: உயர்மட்ட பொறி மொழி:** புரிந்து கொள்ள வேண்டிய சேர்ப்பி மொழியின் வர்ணனையை ஏற்றுக் கொள்கின்ற சேர்ப்பி.

**meta character : புறவெழுத்து :** நிரல் தொகுப்பு மொழி முறைமைகளில், இந்த எழுத்துகள், அவை இணைந்துள்ள எழுத்துகள் விஷயத்தில் சில கட்டுப் படுத்தும் பங்கு வகிக்கின்றன.

**meta content format : மீ உள் ளடக்க வடிவம் :** ஒரு வலைப் பக்கம் ஒரு கோப்புத் தொகுதி,

விண்டோஸின் முகப்புப் பக்கம், உறவுநிலைத் தரவுத் தளம் இவைபோன்ற கட்டமைப்பாயுள்ள தரவுகளின் உள்ளடக்கம் பற்றிய தகவலை விவரிக்கும் ஒரு திறந்தநிலை வடிவம். வரிசைமுறையாக்கம், அகராதிகள் மற்றும் விலைப்பட்டியல்களுக்கு இவ்வடிவத்தைப் பயன்படுத்திக்கொள்ள முடியும்.

**metacompiler :** உயர்மொழி தொகுப்பி: உயர் தொகுப்பி : எழுத்துப் பூர்வமான தொகுப்புகளுக்காக முதன்மையாகப் பயன்படுத்தப்படும் மொழிக்கான தொகுப்பி. இவை பெரும்பாலும் சொற்றொடர்களைத் தொகுப்பனவாக உள்ளன. ஒரு சிறப்பு முக்கியத்துவம் உடைய புறத் தொகுப்பி. சாதாரணமாக பொதுவான நிரல் தொகுப்புகளை எழுதுவதில் பெரிதும் பயன்படுவதில்லை.

**meta-data :** உயர்மட்ட தரவு : தரவு பற்றிய தரவு. ஒரு தரவுத் தளத்தின் அமைப்பு, உறுப்புகள், இடை உறவுகள் மற்ற தன்மைகளையும் விவரிக்கும் விவரம்.

**meta data, index :** உயர்மட்ட தரவு , அட்டவணை.

**meta data interchange specification :** மீத்தரவு மாறுகொள் வரன்முறை : தரவுகளைப் பற்றிய தரவுவை அதாவது மீத் தரவுவை பரிமாறிக் கொள்ளல், பகிர்ந்துகொள்ளல், மேலாண்மை செய்தல் இவற்றைப் பற்றிய வரன்முறைகளின் தொகுதி.

**metafile :** உயர்மட்டக் கோப்பு : ஒரு வகையான தரவுக்கு மேற்பட்டதை சேமித்து வரையறுக்கும் கோப்பு. சான்றாக, விண்டோஸ் மெட்டா ஃபைல் (WMF) வெக்டர் வரைகலையின் படங்களையும், பரவு வரைவியல் (rastar) வரைகலை படிவங்களையும், செய்திகளையும் வைத்துக் கொள்ள முடியும்.

**metalanguage :** மீமொழி; உயர் மட்ட மொழி: ஏனைய மொழிகளை விவரிக்கப் பயன்படும் ஒரு மொழி. நிரலாக்க மொழிகளை வரையறை செய்யப் பொதுவாக பேக்கஸ் நவுர் ஃபார்ம் (Backus Naur Form - BNF) என்னும் மீமொழி பயன்படுத்தப்படுகிறது.

**metallic oxide semiconductor (MOS) :** உலோக ஆக்ஸைடு அரைக்கடத்தி: களப் பயன் பாட்டு மின்மப் பெருக்கி (டிரான்ஸ்சிஸ்டர்). இதில் வாயில் மின்முனை வாயிலிலிருந்து ஆக்சைடு திரை ஒன்றினால் தனிமைப்படுத்தப்

பட்டுள்ளது. 2. திறன் கருவியில் அரைக் கடத்தியில் உள்ள ஒரு தகடு அலுமினியத்தால் ஆனது. மற்றொரு தகடு வேற்றுப் பொருளினால் ஆனது. ஆக்ஸைடு இரு துருவ முனையை உரு வாக்குகிறது.

**meta operating system : மீ இயக்க முறைமை** : பல இயக்க முறைமைகளை தனக்குக் கீழ் இயக்கவல்ல ஓர் இயக்க முறைமை.

**method : முறை; செய்முறை** : பொருள் சார்ந்த நிரல் தொட ரமைப்பில், ஒரு பொருளின் நடத்தை மற்றும் செயல் தன்மையைக் கட்டுப்படுத்தும் அல்கோரிதம். ஒரு பொருளுக்கு செய்தி அனுப்பப்படும்போது, ஒரு முறை செயல்படுத்தப்படு கிறது. தரவு திருப்பி அனுப்பப் படலாம் அல்லது திருப்பாமல் போகலாம்.

**methodology : முறையியல்** : தரவு களை ஒரு ஒழுங்கான முறையில் ஆய்வு செய்யப் பயன்படுத்தப் படும் உத்திகளைத் தொகுக்கும் நடைமுறை. குறிப்பிட்ட பணி ஒன்றை நிறைவேற்றப் பயன் படுத்தப்படும் தரப்படுத்தப் பட்ட நடைமுறைகள், தொழில் நடைமுறைகள், பராமரிப்பு உத்திகள் மற்றும் ஆவணத் தயாரிப்பு உள்ளிட்டவை.

**metric system : பதின்ம முறைமை** : பன்னாட்டு அளவில் கையாளப்படும் முறைமை அல்லது தற்பொழுது உலகெங் கும் பயன்படுத்தப்படும் பதின்ம முறைமையின் நவீனப் பிரதி. அது ஏழு அடிப்படை அலகு களைக் கொண்டது. அவை மீட்டர் , கிலோகிராம், விநாடி, ஆம்பியர் கெல்வ், செல்சியஸ், கேண்டெலா மற்றும் மோல்.

**metropolitan area exchange : மாநகரப் பரப்பு இணைப்பகம்** : ஒரு மாநகரப் பரப்புக்குள் இணையச் சேவை நிலையங்கள் ஒன்றிணைக்கப்படும் இணைப் பகம். மாநகரப் பரப்புக்குள் இருக்கும் ஒரு பிணையத் திலிருந்து இன்னொரு பிணை யத்துக்கு அனுப்பப்படும் தரவு இணையத்தின் முதன்மை முது கெலும்புப் பிணையம் வழி யாகப் பயணிக்காது. மாநகர இணைப்பகமே இப்பணியை மேற்கொள்ளும்.

**metropolitan area network : பெரு நகரப் பிணையம்.**

**M-flops : எம்- ஃப்பிளோப்ஸ்:** விநாடிக்கு பத்து இலட்சம் பதின்மபுள்ளி எண் கணக்கீடுகள்.

**MFT : எம்எஃப்டீ** : குறிப்பிட்ட பணிகளுடன் பல நிரல் தொகுப்பைத் தயாரித்தலுக்கான

குறும்பெயர். இங்கு பணிகள் என்பது நிரல் தொகுப்பு களாகும். எண்ணற்ற தொந்தரவு களுடன் பல நிரல் தொகுப்பைத் தயாரித்தல் என்றும் நகைச் சுவையுடன் குறிப்பிடுவதுண்டு. MVT என்பதற்கு எதிரானது.

**.mg : .எம்ஜி :** ஓர் இணைய தள முகவரி மடகாஸ்கர் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**mget : எம்கெட் :** பல்முனைப் பெறுதல் எனப் பொருள்படும் multiple get என்பதன் சுருக்கம். எஃப்டீபீ (கோப்புப் பரிமாற்ற நெறிமுறை) கிளையன்களில் பயன்படுத்தப்படும் கட்டளை. இதன்மூலம் ஒரு பயனாளர் ஒரேநேரத்தில் பல்வேறு கோப்பு களை அனுப்பி வைக்கும்படி கோரிக்கை வைக்க முடியும்.

**.mh : .எம்ஹெச் :** ஓர் இணைய தள முகவரி மார்ஷல் தீவுகளைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**$MH_z$ : எம்எச்இசட் :** மெஹ ஹெர்ட்ஜ் என்பதன் குறும் பெயர். விநாடிக்கு பத்து இலட்சம் சுழற்சிகள்.

**MICR : எம்ஐசிஆர்:** 'காந்த மையெழுத்தேற்பு' எனப் பொருள்படும் "Magnetic Ink Character Recognition" என்ற ஆங்கிலச் சொற்றொடரின் முதலெழுத்துகளைத் தொகுத்து உருவாக்கப்பட்ட தலைப் பெழுத்துக் குறும்பெயர்.

**micro : நுண்மை; நுண் :** *1.* பத்து இலட்சத்தில் ஒரு பகுதியைச் குறிக்கும் சொல். நுண் வினாடி (மைக்ரோ செகண்ட்) என்பது, ஒரு வினாடியில் பத்து இலட் சத்தில் ஒரு பகுதி. *2.* கணினி யில், 'மிக நுண்ணிய' என்று பொருள்படும்; 'மைக்ரோ கம்ப் யூட்டர்' என்றால், ''நுண் கணினி'' என்று பொருள். 'மியூ' (μ) என்னும் கிரேக்க எழுத்து மிகநுண்ணிய ஒன்றைக் குறிக் கும். இது பத்து இலட்சம் என்ற பேரெண்ணுக்கு நேர் எதிரானது.

**microcassette : நுண் ஒளிச் சுருள்கள்: நுண்ஒளிப் பேழை:** ஒரு சிறிய காந்த நாடாப் பெட்டி. பெயர்கள் போன்ற தரவுகளையும், நிரல் தொடர் களையும் சேமிக்கவும் சில மின் கணக்கீட்டு எந்திரங்களில் பயன் படுத்தப்படுகிறது.

**microchannel architecture : நுண் தடக் கட்டுமானம் :** ஐபிஎம் பீஎஸ்/2 கணினிகளில் *(25 மற்றும் 30 மாதிரிகள் தவிர)* உள்ள பாட்டைகளின் வடி

வமைப்பு. இத்தகைய பாட்டை கள் ஐபிஎம் பீசி/ஏடீ கணினி களின் பாட்டை அமைப்புடன் இணைப்பு அடிப்படையிலும் மின்சார அடிப்படையிலும் ஒத்தியல்பற்றவை. பீசி/ஏடீ பாட்டை போலன்றி நுண்தடப் பாட்டைகள் 16துண்மி (bit), அல்லது 32 துண்மி (bit) பாட்டைகளாகச் செயல்படுகின் றன. பல்பாட்டை நுண்செயலி களினால் தனித்த முறையிலும் இவற்றை இயக்க முடியும்.

**microchart** : நுண்வரைபடம் : செயல்முறையின் (Programme) அல்லது பொறியமைவின் (System) வடிவமைப்பின் இறுதி தரவுகளைக் காட்டும் வரை படம்.

**microchip** : நுண்சிப்பு : மணற் சத்தில் பெரிதாகவுள்ள 'கன்மம்' (Silicon) என்ற தனிமத்தினா லான நுண்ணிய சிப்பு. இதன் மேற்பரப்பில் பல்லாயிரக் கணக்கான மின்னணுவியல் அமைப்பிகளும் (Components), மின்சுற்று வழித் தோரணிகளும் (Circuit patterns) பதிவு செய்யப்பட்டுள்ளன.

**microcircuit** : நுண்மின்சுற்று : ஒரு குறைக்கடத்திச் சிப்பு மீது செதுக்கப்பட்ட மிகச்சிறு மின் னணுச் சுற்று. டிரான்சிஸ்டர்கள், ரெசிஸ்டர்கள் போன்ற மின் பொருள்கூறுகள் ஒன்றிணைக் கப்பட்டு ஒரு நுண்மின் சுற்று உருவாக்கப்படுகிறது. இது, வெற்றிடக் குழாய்களின் ஒரு தொகுதியாகவோ, தனித்தனி டிரான்சிஸ்டர்களின் இணைப் பாகவோ இல்லாமல் ஓர் ஒற்றை அலகாக வடிவமைக்கப் படுகிறது.

**microcode** : நுண்குறியீடு : கணினியில் அமைக்கப் பட்டுள்ள அடிப்படை துணை நிரல்களின் அல்லது போலி நிரல்களின் வரிசைமுறை; கணினியிலுள்ள வன்பொருள் கள் (Hardware) இந்த நிரல் களைப் பொதுவாக நிறைவேற் றும்; எனினும், ஒரு தனி வகை ஆயத்த நிலைக்கு மட்டுமான சேமிப்பு அலகில், இந்த நிரல் கள், நுண் செயல்முறை வகுத் திடத்தக்க கணிப்பொறியை இயக்குவதற்கான கட்டளை களை வகுக்கின்றன.

**microcoding** : நுண்குறியீட்டு முறை : கூட்டல் பெருக்கல் போன்ற கணினி கட்டளை களை அமைப்பதற்கு அடிப் படைத் தொடக்கச் செயற்பாடு களை அல்லது துணை நிரல்களை ஒருங்கிணைத்திடும் கணினி கட்டளை வரைவு.

**microcoding device** : நுண்குறி யீட்டுச் சாதனம் : மின்சுற்று

வழிப்பலகை. இதில் திட்ட அளவுச் செயற்பணிகளை நுண் மின்சுற்று வழிகள் மூலமாகச் செய்விக்க நிரல்கள் நிலையான நிரல்கள் அமைந்திருக்கும். இதன் மூலம், செயல் முறைப் படுத்தும்போது இந்த நிரல் களைக் குறியீட்டு முறைமைப் படுத்துவதற்கான தேவையைத் தவிர்க்கலாம்.

**microcomputer : நுண்கணினி :** மிக நுண்ணிய கணினி அனைத் திலும் இதுதான் மிகவும் மலி வானது. இவை, முழுமையான செயற்பாட்டுக் கணினிகள். இவை நுண் செய்முறைப் படுத்திகளைப் பயன்படுத்து கின்றன. வீடுகளில் சொந்தக் கணினிகளாகப் பயன்படுத்தப் படுகின்றன. இது, பள்ளி களிலும், வாணிக நிறுவனங் களிலுங்கூடப் பெருமளவில் பயன்படுத்தப்படுகிறது. இது, உட்பாட்டுச் செய்முறைச் சேமிப்புப் பணியினையும், வெளிப்பாட்டுச் செயற்பாடு களையும், ஓர் நிரல் தொகுதிக் கிணங்க மிகக்குறைந்த செல வில் செய்திடும் கணினியாகும்.

**microcomputer applications : நுண்கணினிப் பயன்பாடுகள் :** வணிகம், தொழில் நுட்பம், தொழில் துறை, வீடுகள் ஆகிய வற்றில் நுண் கணினிகள் பயன் படுத்தப்படுகின்றன. ஒளிப் பேழை விளையாட்டு எந்திரங் கள், போக்குவரத்துக் கட்டுப் பாட்டு அமைப்புகள், விற் பனை முனையங்கள், அறி வியல் கருவிகள், குருதிப் பரி சோதனைக் கருவிகள், கடன் வசதி அட்டை மற்றும் சரி பார்க் கும் கருவிகள், உந்து ஊர்தி, எரியூட்டுக் கட்டுப்பாடு, பட்டியலிடும் சாதனங்கள் ஆகியவற்றிலும் நுண் கணினி கள் பயன்படுத்தப்படுகின்றன. தொழில் துறையில் நுண் கணினிகள் பயனாகின்றன. நுண்ணலை அடுப்புகள், தையல் எந்திரங்கள், எரி வாயு நிலையங்கள், வண்ணம் பூசும் கருவிகள், செய்முறைத் தரவு அறிவிப்பி, தூய்மைக்கேடு தரவு அறிவிப்பி ஆகியவற்றில் நுண் செயலிகள் பயன்படுகின்றன. பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் கல்விச் சாதனங்களாகவும், வங்கிகளிலும் வணிக மையங் களிலும் பங்கு மாற்று அங்காடி களிலும் கணினிகள் பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன.

**microcomputer chip : நுண் கணிப்பொறிச் சிப்பு :** ஒரு சிப்பி லுள்ள நுண் கணினி. இது நுண் செயலியிலிருந்து வேறுபட்டது. இதில் மையச் செயலகம் (CPU) அடங்கியிருப்பதுடன் அதே

கன்மத் துண்டில் (சிலிக்கன்), குறிப்பின்றி அணுகும் நினை வகம், எழுதிப் படிப்பதற்கு மட்டுமேயான நினைவகம் (ROM), உட்பாட்டு/வெளிப் பாட்டு மின்சுற்று நெறி ஆகிய வையும் அடங்கியுள்ளன. இதனைச் "சிப்பில் கணினி" என்றும் அழைப்பர்.

**microcomputer components : நுண்கணினி அமைப்பிகள் :** ஒரு நுண் கணினியின் முக்கிய உறுப்புகள். இவை: நுண் செய் முறைப்படுத்தி உட்பாட்டு/ வெளிப்பாட்டு மின்சுற்று நெறி; ஒரு நினைவகம் (எழுதிப் படிப் பதற்கு மட்டுமேயான நினை வகம் (RAM); செயல்முறை வகுத்திடத்தக்க, படிப்பதற்கு மட்டுமேயான நினைவகம் (PROM); அழித்திடக்கூடிய செயல் முறை வகுத்திடத்தக்க படிப்பதற்கு மட்டுமேயான நினைவகம் (EPROM).

**microcomputer development system : நுண்கணினி மேம் பாட்டுப் பொறியமைவு :** நுண் கணினி அடிப்படையிலான மற்றப் பொறியமைவுகளைச் சோதனை செய்வதற்கும் உரு வாக்குவதற்கும் பயன்படுத்தப் படும் முழுமையான நுண் கணினி அமைவு. இணைப்பி வசதிகள், வாசகத் தொகுப்பி, தவறு கண்டறியும் வசதிகள், ஒரே மாதிரியாக அல்லாத இன் னொரு கணினிக்காக எழுதப் பட்ட எந்திரமொழிச் செயல் முறையை நிறைவேற்றத்தக்க வன்பொருள் திறம்பாடுகள், செயல்முறை வகுத்திடத்தக்க படிப்பதற்கு மட்டுமேயான நினைவகம் (PROM), செயல் முறைப்படுத்துவோர் செய்தி அறிவிப்பி, வட்டு, நாடா உள் பாட்டு/வெளிப்பாட்டுப் பொறி யமைவு போன்றவை இதில் அடங்கும்.

**microcomputer kit : நுண் கணினி கருவிப் பை:** நுண் கணினி விற்பனையாளர்கள் இணைத்துக் காட்டுவதற்காக வைத்துள்ள கருவிகளின் தொகுதி அடங்கிய ஒரு பை.

**microcomputer system : நுண் கணினி அமைவு :** ஒரு நுண் கணினி, புறநிலைச் சாதனங் கள், செயற்பாட்டுப் பொறி யமைவு, பயன்பாட்டுச் செயல் முறைகள் அடங்கியுள்ள பொறி யமைவு.

**microcontroller : நுண்கட்டுப் படுத்தி :** ஒரு குறுகிய பகுதிக் குள் மிகநுட்பமான உருக் காட்சியுடனான ஒரு செய் முறையைக் கட்டுப்படுத்தும் ஒரு சாதனம் அல்லது கருவி. ஒரு கட்டுப்பாட்டுச் செயற்

பாட்டில் பயன்படுத்தப்படும் நுண் செயல் முறைப்படுத்திய எந்திரம் (நுண் கணினி அல்லது நுண் செயலி). இது, ஒரு செய் முறையில் அல்லது செயற்பாட்டில் மாறுதல்கள் செய்வதற்கு அறிவுறுத்துகிறது அல்லது மாறுதல்களைச் செய்கிறது. எடுத்துக்காட்டாக, தையல் எந்திரங்களை இயக்குவதற்கு ஒரு நுண்கட்டுப்படுத்தியை யும் எழுதிப் படிப்பதற்கு மட்டுமே யான நினைவகத்தை யும் (ROM) சிங்கர் நிறுவனம் பயன் படுத்துகிறது.

**microelectronics** : நுண்மின்னணுவியல் : ஒருங்கிணைந்த மின்சுற்று வழிகள், மென்சுருள் உத்திகள், திண்மத் தருக்க முறை தகவமைவுகள் போன்ற நுண்ம மின்சுற்று வழிகளை உருவாக்குவதற்கான உத்தி களைக் கையாளும் புலம்.

**microgram** : நுண்கிராம் : நுண் குறியீடு அல்லது நுண் நிரல்கள் என்று அழைக்கப்படுகின்ற அடிப்படைக் கட்டுப்பாட்டு நிரல்களின் சிறிய தொகுதி.

**microfiche** : நுண்சுருள் தகடு : நுண் சுருள் படலம்; 10 செ.மீ x 15 செ.மீ (4" x 6") அளவுடையது. இதில் கணினியின் வெளிப்பாடுகளை (output) பதிவு செய்யலாம். ஒரு நுண் சுருள் தகட்டில் 270 பக்கங்கள் வரை பதிவு செய்ய முடியும்.

**microfilm** : நுண்சுருள்; நுண் படலம்: வரைகலைத் தரவுகளை நுண்ணிய வடிவளவில் பதிவு செய்வதற்குப் பயன்படுத்தப் படும் ஒளிப்படச் சுருள்.

**microfloppy disk** : நுண்நெகிழ் வட்டு : 9 செ.மீக்குக் குறைவான விட்டமுள்ள (3.5'') நெகிழ்வட்டு.

**microform** : நுண்படிவம்: நுண் சுருள் தகடு, நுண் சுருள் போன்ற நுண்மையாக்கம் செய்யப்பட்ட உருக்காட்சி களைக் கொண்ட ஓர் ஊடகம்.

**micrographics** : நுண்வரை கலை : வரைகலைத் தரவுகளைச் சுருக்கி, சேமித்து வைத்து, மீண்டும் வரவழைப்பதற்காக நுண்ம ஒளிப்படக் கலையைப் பயன்படுத்துதல். நுண் சுருள் தகடு, நுண்சுருள், கணினி வெளிப்பாட்டு நுண்சுருள் போன்ற எல்லா வகையான நுண்படிவங்களையும், நுண் உருக்காட்சிகளையும் பயன் படுத்துவதும் இதில் அடங்கும்.

**microimage** : நுண்படிமம் : ஒளிப் படமாக்கிச் சிறிதாக்கப் பட்ட படிமம். பொதுவாக நுண் படச் சுருள்களில் சேமித்து வைக்கப்படும். மிகவும் சிறி

தாக இருக்கும். உருப்பெருக்கி வழியாகத்தான் பார்க்க முடியும்.

**microinstructions : நுண்அறிவுறுத்தங்கள் :** கணினி பயன்படுத்து கைவசமுள்ள எந்திர மொழியில் பெரும் அறிவுறுத்தங்களைப் பெறுவதற்குப் பயன்படுத்தப்படும் மிகக் குறைந்த அளவு அறிவுறுத்தங்கள்.

**microjacket : நுண்அட்டை :** நுண் வரைகலையில், ஒன்றாக ஒட்டப்பட்ட உள்ளிருப்பது தெரிகின்ற இரண்டு பிளாஸ்டிக் தாள்கள். நுண் திரைப்படங்களுக்கான சுருள்களை நுழைத்து, சேமிக்கும் வழித் தடங்களை உருவாக்கப் பயன்படுகிறது.

**microjustification : நுண்வரிச் சரியமைவு நுண்வரிச் சரியாக்கம் :** சில சொல் செய்முறைப் படுத்தும் செயல்முறைகளில் சொற்களிடையிலும், சொற்களினுள்ள எழுத்துகளிடையிலும் சிறிய வெள்ளி எழுத்து இடை வெளிகளைச் சேர்த்திடுவதற்கான திறன். இது சாதாரணமாகச் சரிக்கட்டப்பட்ட பக்கங்களைவிட எளிதாகப் படிக்க உதவுகிறது.

**microkernel : நுண் கருவகம் :** 1. ஓர் இயக்க முறைமையின் வன்பொருள் சார்ந்த நிரல்பகுதி. வெவ்வேறு வகையான கணினிகளில் ஓர் இயக்க முறைமையைச் செயல்படுத்தும் நோக்கத்தில் நுண்கருவகம் அமைக்கப்படுகிறது. நுண் கருவகம் இயக்கமுறைமையுடன் ஒரு வன்பொருள் சாரா இடைமுகத்தை வழங்குகிறது. எனவே ஓர் இயக்க முறைமையை வெவ்வேறு பணித்தளங்களில் செயல்பட வைக்க வேண்டுமெனில் நுண் கருவகத்தை மட்டும் மாற்றி எழுதினால் போதும். 2. ஓர் இயக்க முறைமையின் மிக அடிப்படையான பண்புக் கூறுகளை மட்டுமே கொண்டு வடிவமைக்கப்பட்ட ஒரு கருவகம்.

**micrologic : நுண் தருக்க (அளவை) முறை :** ஒரு நுண் செயல் முறையில் அறிவுறுத்தங்களை உருமாற்றம் செய்வதற்கு நிரந்தரமாகச் சேமிக்கப்பட்ட ஒரு செயல்முறையைப் பயன்படுத்துதல்.

**micromail : நுண் அஞ்சல்:** ஏசிடி என்னும் இங்கிலாந்து கணினி நிறுவனம் உருவாக்கிய மின்னஞ்சல் முறை.

**micromainframe : நுண் பெருமுகம் :** பெருமுக அல்லது ஏறக்குறைய பெருமுகக் கணினியின் வேகமுள்ள தனிநபர் கணினி (பீ.சி.).

**microminiature : நுண்சிறுமம் :** மிகமிகச் சிறிய மின்சுற்று அல்லது மின்னணு பொருள்கூறு. குறிப்பாக, ஏற்கெனவே மிகச் சிறிதாக்கப்பட்ட ஓர் உறுப்பின் திருத்தப்பட்ட வடிவம்.

**microminiature chip : நுண்ம நுணுக்கச் சிப்பு :** கணினிச் சேமக்கலத்தில் (நினைவுப் பதிப்பி சிப்பு) அல்லது கட்டுப் பாட்டில் (நுண் செய்முறைப் படுத்தி சிப்பு) பயன்படுத்தப் படும் மிகப் பேரளவு ஒருங் கிணைப்புச் சிப்பு (VLSI chips) அல்லது பேரளவு ஒருங் கிணைந்த மின்சுற்று (LSI).

**microminiaturization : நுண்ம நுணுக்கமாக்கம் :** நுணுக்கமாக் கத்தை விட ஒருபடி சிறியதான மிகச் சிறிய வடிவளவு.

**micron : மைக்ரோன்:** பதின் மான நீட்டளவை அலகில், ஒரு மீட்டரில் பத்து இலட்சத்தில் ஒரு பகுதி. ஏறத்தாழ ஓர் அங்குலத்தில் 1/25,000.

**microphone : நுண்பேசி :** *1.* ஒலி அலைகளை தொடர்முறை (analog) மின்சாரச் சமிக்கை களாய் (signals) மாற்றித் தரும் சாதனம். நுண்பேசியின் வெளி யீட்டை ஒரு கூடுதல் வன் பொருள், கணினி ஏற்கத்தகு இலக்க முறைத் தகவலாய் மாற்றித் தரமுடியும். (எ-டு) பல் லூடக ஆவணங்களைப் பதிவு செய்தல்; ஒலிச் சமிக்கைகளை பகுத்தாய்தல். 2. ஆப்பிள் மெக் கின்டோஷ் கணினியில் இயங் கும் ஒரு தகவல் தொடர்பு நிரல்.

**microprocessor : நுண் செய் முறைப்படுத்தி :** ஓர் ஒருங் கிணைக்கப்பட்ட மின்சுற்று வழிச் சிப்பில் அடங்கியுள்ள வற்றைப் பொதுவாகச் செய் முறைப்படுத்துவதற்குத் தேவை யான அடிப்படைக் கணிதத் தருக்க முறையும் கட்டுப்பாட்டு மின்வாயும் ஆகும். நுண் கணினிகள், வீட்டுச் சாதனங்கள், வணிக எந்திரங்கள், கணிப்புச் சாதனங்கள், பொம்மை விளையாட்டு ஒளிப்பேழை எந்திரங்கள், மற்றும் பல்லா யிரம் பிற சாதனங்களில் இரு பெருமளவில் பயன்படுத்தப் படுகிறது.

**microprocessor chips : நுண் பகுப்புச் சிப்புகள்; நுண்பகுப்புச் சில்லுகள்.**

**microprogrammable computer : நுண்செயல்முறை வகுத்திடத் தக்க கணினி :** அறிவுறுத்தங் களின் தொகுதி நிலைப்படுத்தி யதாக இல்லாமல், படிப்பதற்கு மட்டுமேயான நினைவுப் பதிப்பி அல்லது பிற நினைவுப்

பதிப்பி சாதனங்களைச் செயல் முறைப்படுத்துவதன் மூலம் தனித் தனித் தேவைகளுக்கேற்ப செயல் முறைகளை வகுத் தமைக்கக்கூடிய ஒரு கணினி. இதனால், ஒரு கணினியானது முதன்மைப் பொறியமைவாக அல்லது நுண் கணினியாக இருப்பினும் கோட்பாட்டு முறைப்படி அதனை நுண் செயல்முறைப்படுத்திட இயலும்.

**microprogramme : நுண் நிரல் தொடர்; நுட்பு நிரல் :** ஆரம்ப நிரல்களின் வரிசை. இவற்றை நுண் செயலகத்தில் உள்ள நுண் அளவை துணை அமைப்பாக மாற்றப்படும்.

**microprogramming : நுண் செயல்முறைப்படுத்துதல் :** ஒரு கணினியின் கட்டுப்பாட்டுப் பகுதியை இயக்குவதற்கான முறை. இந்தப் பகுதியில் ஒவ் வொரு அறிவுறுத்தமும் பல சிறிய செயல்களாகப் (நுண் செயல்கள்) பகுக்கப்பட்டிருக் கும். இவை, ஒரு நுண் செயல் முறையின் ஒரு பகுதியாக அமைந்திருக்கும்.

**micropublishing : நுண்வெளி யீடு:** நுண்வரைகலையில் பயன்படும் சொல். விற்பனை அல்லது விநியோகத்திற்காக புதிய அல்லது மறு வடி வமைக்கப்பட்ட தரவுவை நுண் திரைப்படத்தில் வெளியிடுவது.

**microspace justification : நுண் இட ஓரச்சீர்மை :** உரை ஆவணங்கள் இரு ஓரங்களிலும் சீராக இருப்பின் அழகான தோற்றத்தைத் தரும். இவ்வாறு ஆவணங்களின் உரைப் பகுதி யின் ஓரங்களைச் சீராக ஆக்கும் பொருட்டு சொற்களின் இடை யேயும் ஒரு சொல்லில் எழுத்து களுக்கிடையேயும் மெல்லிய இடவெளியை இட்டு நிரப்பு தல். இதனை நுண் ஓரச்சீர்மை என்றும் கூறுவர். சொல்லில் இடம்பெறும் அதிகப்படியான இடவெளி சொல்லின் தோற்ற அழகைத் தோற்கடித்துவிடும்.

**microsecond : நுண்வினாடி :** ஒரு வினாடியின் பத்து இலட் சத்தில் ஒரு பகுதி. இதன் சுருக்க வடிவம் : μs அல்லது μsec.

**Microsoft C : நுண்மென் பொருள் சி :** நுண்மென்பொரு ளின் 'சி' தொகுப்பி. பல வகை யான வணிக உற்பத்திப் பொருள்களை உருவாக்கப் பயன்படுத்தப்படுகிறது. விண் டோஸ் நிரல் தொடரமைப்பதற் குத் தேவைப்படும் நுண்மென் பொருள் விண்டோஸ் மென் பொருள் வளர்ச்சி சாதனம். பீ.சி. பயன்பாடு வளர்ச்சிக்காக

பீ.சி.யில் பயன்படுத்தப்படு வதற்கு 'சி' மொழியில் அதிகம் பயன்படுவது மைக்ரோ நுண் மென்பொருள் 'சி' மற்றும் போர்லேண்டில் டர்போ 'சி' ஆகிய இரண்டும் ஆகும்.

**microsoft word** : நுண்மென் பொருள் சொல் : மைக்ரோ சாஃப்ட் நிறுவனம் மெக்கின் டோஷ் கணினி மற்றும் பீ.சி.க் களுக்காக உருவாக்கிய எல்லா தன்மைகளும் நிறைந்த சொல் செயலாக்க நிரல்தொடர். டாஸ் பதிப்பு ஒரு ஆவணத்தில் வரை கலை மற்றும் சொற்பகுதி சார்ந்த இடைமுகங்களின் மூலம் பணியாற்ற உதவுகிறது. Word for windows என்று அழைக்கப்படும் விண்டோசுக் கான மைக்ரோசாஃப்ட் வேர்ட் மென்பொருள் நவீன வசதிகள் கொண்டதாக விண்டோஸ்களில் பணியாற்ற ஏற்றதாக உள்ளது.

**microsoft works** : நுண்மென் பொருள் பணிகள் : மெக்கின் டோஷ் மற்றும் பீ.சி-க்களுக் கான ஒருங்கிணைந்த மென் பொருள் பொதி அல்லது தொகுப்பு. மைக்ரோசாஃப்ட் நிறுவனம் உருவாக்கியது. உறவு போன்ற திறன்களுடன் கோப்பு மேலாண்மை சொல் செய லாக்கம், விரிதாள், வணிக வரைகலை மற்றும் தரவு தொடர்பு திறன்கள் ஆகிய அனைத்தும் கொண்ட தொகுப் பாக இது கிடைக்கிறது.

**microspacing** : நுண் எழுத் திடை வெளி அமைவு: அச்சுத் துறையில் மிகச்சிறிய தொலைவுகளுக்கு நகர்த்து வதற்கு அனுமதிக்கும் இடை வெளியமைவு. இது, நுண் வரிச் சரியமைவிலும், நிழல் அச்சுக் கலையிலும் பயன்படுத்தப்படு கிறது. இதனை மிகைப்பாட்டு எழுத்திடை வெளியமைவு என்றும் கூறுவர்.

**micro to mainframe linkage** : நுண்ணிலிருந்து பெருமுக இணைப்பு : பயன்படுத்துபவ ரின் மேசையில் உள்ள பெருமுகக் கணினி அமைப்புக்கும் தனி நபர் கணினி அமைப்புகளுக் கும் இடையில் தகவல் தொடர்பு நடைபெற அனுமதிக்கும் வன் பொருள்/மென்பொருள்.

**microtransaction** : நுண் பரி மாற்றம் : 5 டாலருக்கும் குறை வான தொகைக்கான ஒரு வணிகப் பரிமாற்றம் இவ்வாறு அழைக்கப்படுகிறது.

**microvirus** : நுண் நச்சுநிரல்

**microwave** : நுண்ணலை: சென்டி மீட்டர் அளவில் ஓர் அலைநீளம் கொண்டுள்ள மின்காந்த அலை. மின் காந்த

நிறமாலையில் ஒரு பகுதியில் இந்த நுண்ணலை அமைந்துள்ளது. இதனைச் சுற்றி நீண்ட அலைவு நீளங்களின் பக்கத்தில் வானொலி அலைகளும் சிற்றலை நீளங்களின் பக்கத்தில் அகச்சிவப்பு அலைகளும் சூழ்ந்துள்ளன. இது தகவல் தொடர்புகளில் பயன்படுத்தப்படுகிறது.

**microwave hop : நுண்ணலைத் துள்ளல்; நுண்ணலைத் தாவல் :** ஒன்றையொன்று நோக்கியவாறு அமைக்கப்பட்டுள்ள இரு உட்குழிவு வானலை வாங்கிகளுக்கு நடுவிலுள்ள நுண்ணலை வானொலி அலைவரிசை.

**microwave relay : நுண்ணலை பரப்புகை :** ஒரு கிகா ஹெர்ட்ஸுக்கும் கூடுதலான அலைவரிசையில் இருமுனைகளுக்கிடையே வான் அலைபரப்பின் மூலம் ஏற்படுத்தப்படும் தகவல் தொடர்பு இணைப்பு.

**microwave transmission lines : நுண்ணலை பரப்பீட்டுக் கம்பிகள்; நுண்ணலை பரப்புத் தொடர் :** மின் காந்த ஆற்றலை நுண்ணலை அதிர்வெண்களில் ஒரு முனையிலிருந்து இன்னொரு முனைக்கு அனுப்புவதற்குப் பயன்படுத்தப்படும் கட்டமைவுகள்.

**MICR reader : எம்ஐசிஆர் படிப்பி; காந்த மை எழுத்து ஏற்புப் படிப்பி:** மின் காந்த மையெழுத்து ஏற்புப் படிப்பி (Magnetic Ink Character Reader). இது மின்காந்த மையெழுத்துகளில் அச்சடிக்கப்பட்டுள்ள ஆவணங்களைப் படித்துக் காட்டும் உட்பாட்டுச் சாதனம்.

**middle level language : இடைநிலை மொழி.** எந்திர மொழி போன்ற அடிநிலை மொழிகள் திறனும் வேகமும், பிற உயர்நிலை மொழிகளின் எளிமையும் கொண்டிருப்பதால் சி-மொழி இவ்வாறு அழைக்கப்படுவதுண்டு.

**middleware : இடைப்பொருள்; இடைமென்பொருள் :** இரண்டு அல்லது மேற்பட்ட வகை மென்பொருள்களுக்கிடையே இருந்து தகவலை மொழி பெயர்த்துத் தரும் ஒருவகை மென்பொருள். இது பலவகைப்படும். பொதுவாக ஒரு பயன்பாட்டுக்கும் ஓர் இயக்க முறைமைக்கும் இடையே செயல்படும். அல்லது ஒரு பயன்பாட்டுக்கும் ஒரு தரவுத்தள மேலாண்மை முறைமைக்கும் இடையே இருந்து செயல்படும். (எ-டு) கோர்பா மற்றும் பிற பொருள் முகவர் நிரல்கள், பிணைய மென்பொருள்கள் மற்றும் கட்டுப்பாட்டு நிரல்கள்.

**MIDI : மிடி; எம்ஐடிஐ :** இசைக் கருவி இலக்கமுறை இடைமுகம் என்று பொருள்படும் Musical Instrument Digital Interface என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். இசை ஒருங்கிணைப்பிகள், இசைக் கருவிகள் இவற்றை கணினி களுடன் இணைக்கும் ஒரு நேரியல் (serial) இடைமுக தர வரையறை. மிடி வரையறை பாதி வன்பொருள் அடிப்படை யிலானது. பாதி, இசையும் ஒலியும் எந்த முறையில் குறி யாக்கப்பட்டு மிடிச் சாதனங் களுடன் தொடர்பு படுத்தப்படு கின்றன என்ற விளக்கத்தை கொண்டிருக்கும். இது, ஒலியின் தொனி மற்றும் ஒலி அளவு போன்ற பண்புக்கூறுகள் 8 துண்மி (bit) இலக்கமுறைத் (digital) தகவலாய் மாற்றப்பட்ட குறி முறையாகும்.

**midicomputer : நடு கணினி :** சிறு கணினிக்கும், பெருமுகக் கணினிக்கும் இடைப்பட்ட செயல்திறன் உள்ள கணினி.

**midiminicomputer : நடு நுண்ணிய கணினி :** நடுத்தர வடிவளவுடைய நுண்ணியக் கணினி. இது 16 துணுக்குச் சொற் களைப் பயன்படுத்துகிறது. இது நுண் நுண்ணியக் கணினி, பெரும நுண்ணியக் கணினி, மீநுண்ணிய கணினி ஆகிய வற்றிலிருந்து மாறுபட்டது.

**midrange computer : நடு வரிசை கணினி :** சிறு கணினி போன் றதே. ஆனால் தனி பயனாளர் சிறு கணினி பணி நிலையங்கள் இதில் இருப்பதில்லை.

**migration : இடப்பெயர்வு.**

**.mil : .மில்; .எம்ஐஎல் :** அமெரிக்க நாட்டு இராணுவ அமைப்புகளின் இணைய தள முகவரிகளை அடையாளம் காட்டும் களப் பெயர். .mil என்பது தளமுகவரியின் இறுதி யில் இடம்பெறும்.

**milestone : நிகழ்வு; மைல்கல் :** ஒரு பணியை நிறைவேற்றுங் கால் நிகழும் ஒரு நிகழ்வு. ஓர் உட்பாட்டு/ வெளிப்பாட்டுச் செயற்பாடு முடிவடைவது இதற்கு எடுத்துக்காட்டு.

**millicent technology : மில்லி சென்ட் தொழில்நுட்பம் :** டிஜிட் டல் எக்யூப்மென்ட் கார்ப்ப ரேஷன் நிறுவனம் உருவாக்கிய இணைய நெறிமுறைத் தொகுதி. மிகச் சிறிய அளவிலான வணிகப் பரிமாற்றங்களைப் பற்றியது. ஒருசென்டுக்கும் குறைவான விலையில் தகவல் குறிப்புகளை வாங்குவது தொடர்பான வணிக நடவடிக்கைகளைக் கையாள் வதற்கான நெறிமுறை.

**milk disk** : பால் வட்டு: ஒரு சிறிய கணினியிலிருந்து தரவுகளைத் திரட்டப் பயன்படுத்தப்படும் வட்டு. பின்னர், ஒரு பெரிய கணினியில் செயலாக்கம் செய்யப்படுவதற்காக இவ்வாறு செய்யப்படுகிறது.

**mill** : ஆலை: பகுப்பாய்வு எந்திரம் என அழைக்கப்பட்ட முதல் எந்திரக் கணினியை வடிவமைக்கும்போது சார்லஸ் பாபேஜ் பயன்படுத்திய செயலகத்திற்கு மற்றொரு பெயர்.

**milli** : மில்லி: ஆயிரத்தில் ஒரு பகுதி. ஒரு மில்லி வினாடி என்பது, ஒரு வினாடியில் ஆயிரத்தில் ஒரு பகுதியாகும்.

**millimicrosecond** : மில்லி நுண் வினாடி: இது நானோவினாடி (nanosecond) என்றும் அழைக்கப்படும். இது ஒரு வினாடியில் நூறு கோடியில் ஒரு பகுதி.

**millisecond** : மில்லி வினாடி: ஒரு வினாடியில் ஆயிரத்தில் ஒரு பகுதி; இதன் சுருக்க வடிவம் : ms அல்லது msec.

**MILNET** : மில்நெட் : இராணுவப் பிணையம் என்று பொருள்படும் Military Network என்ற தொடரின் சுருக்கம். தொடக்க கால ஆர்ப்பா நெட்டின் இராணுவப் பிரிவை உருவகிக்கும் விரிபரப்புப் பிணையம். அமெரிக்க நாட்டு இராணுவத் தரவு போக்குவரத்துக்கானது.

**MIMD** : எம்ஐஎம்டி : பல் ஆணை பல் தரவு தாரைச் செயலாக்கம் எனப் பொருள்படும் (Multiple Instruction Multiple Data Stream Processing) என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணைநிலைச் செயலாக்கத்தை நடைமுறைப்படுத்தும் ஒரு வகை கணினிக் கட்டுமானம். இக்கணினி அமைப்பிலுள்ள ஒவ்வொரு மையச் செயலகமும் தனித்தனியே நிரல்களைக் கொணர்ந்து தரவுகளின்மீது செயல்படுத்தும்.

**MIME** : மைம் : பல்பயன் இணைய அஞ்சல் நீட்டிப்புகள் எனப் பொருள்படும் Multiple Internet Mail Extensions என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஆஸ்கி வடிவத்தில் மாற்றி அமைக்காமலேயே ஒலி, ஒளிக்காட்சி மற்றும் இரும (பைனரி) கோப்புகளை இணைய மின்னஞ்சல் வழியாக அனுப்ப வகை செய்யும் தரவரையறை. இது எஸ்எம்டீபீ (SMTP-Simple Mail Transfer Protocol) யின் நீட்டிப்பாகும். ஓர் ஆவணத்தின் உள்ளடக்கத்தை மைம் வகை சுட்டுகிறது. மைம் ஒத்தியல்புள்ள பயன்பாடு ஒரு

கோப்பினை அனுப்பி வைக்கும் போது அந்தக் கோப்புக்கு ஒரு மைம் வகையைக் குறிப்பிட்டு அனுப்புகின்றது. பெறுகின்ற பயன்பாடும் மைம் ஒத்தியல் பானதாய் இருக்க வேண்டும். மைம் வகை/உள் வகைப் பட்டியலுடன் ஒப்பிட்டு, பெற்ற ஆவணத்தின் உள்ளடக் கத்தைச் ச்ரியாகத் தீர்மானிக் கிறது. மைம் வகை உரை (text) எனில், சாதா (plain), ஹெச்டீ எம்எல் (html) என்ற இரு உள் வகை உள்ளன. மைம் வகை உரை/ஹெச்டிஎம்எல் எனில் அதை ஓர் ஹெச்டீஎம்எல் ஆவணமாக உலாவிகள் அடை யாளம் காணும்.

**minemonic codes :** நினை வூட்டுக் குறியீடுகள் :

**mini :** சிறிய; குறு; சிறு : நுண்ணிய கணினியின் சுருக்கப் பெயர்.

**miniaturization :** நுணுக்க மாக்கம்; சிற்றளவாக்கம் : ஒரு பொருளின் வடிவளவினை அதன் திறம்பாடு குறையாத வண்ணம், சிறியதாகக் குறைக் கும் செய்முறை. இதனை நுண்ம நுணுக்கமாக்கத்துடன் ஒப்பிட்டுப் பார்க்க.

**mini computer :** குறுங்கணினி; சிறு கணினி : எண்மானக் கணினி. இது ஒரு நுண்மக் கணினியிலிருந்து (micro computer) வேறுபட்டது. இது அதிகச் செயல்திறனுடையது. அதிக ஆற்றல் வாய்ந்த நிரல் களைக் கொண்டது. இதன் விலையும் அதிகம். இதில் அதிகச் செயல்முறைகளும், செயற்பாட்டுப் பொறியமைவு கள் உள்ளன. இது, சிறிய வடி வளவும் குறைந்த விலையும், குறைவான தரவு கொள்திறனும் கொண்ட முதன்மைப் பொறி யமைவிலிருந்து வேறுபட்டது. நுண்ணிய கணினி பொறி யமைவு நான்கு செயற்பாட்டு வகைகளாகப் பகுக்கப்பட்டுள் ளன : (1) நடு நுண்ணிய கணினி; (2) பெரும நுண்ணிய கணினி; (3) மீப் பெருமக் கணினி; (4) மீநுண்ணிய கணினி.

**mini floppy disk :** சிறு நெகிழ் வட்டு : நுண் கணினியமைவு களில் பயன்படுத்தப்படும் 13.3 செ.மீ. (5.25") விட்டமுடைய நுண் வட்டு.

**minimal :** குறுமம்.

**minimal pairs :** குறும இணை ஒலிச்சொல் பட்டியல்.

**minimal tree :** குறும மரம்: இதன் முனையங்கள், இந்த மரத்தை பெரிதும் உகந்த அளவில் செயற்படுமாறு செய்

யும் வகையில் அமைக்கப்பட்டிருக்கும். இது பெரும இணைப்பு மரத்திலிருந்து வேறுபட்டது.

**minimax : குறுமப் பெருமம்; சிறுமப் பெருமம் :** ஒரு செய்முறையில் பெருமப் பிழையினை குறும அளவுக்குக் குறைத்திடும் உத்தி.

**minimini computer : குறுஞ்சிறு கணினி :** நுண்ணிய கணிப் பொறியமைவுகளில் மிகச் சிறிய வகை. இதில், ஒரு குறிப்பிட்ட அளவு செயற்பாட்டு அம்சங்களே அமைந்திருக்கும். இது, நடு நுண்ணிய கணினி, பெரும நுண்ணிய கணினி, மீநுண்ணிய கணினி ஆகியவற்றிலிருந்து வேறுபட்டது.

**minimize : சிறிதாக்கு :** வரைகலை சூழ்நிலையில், ஒரு சன்னலை பிம்பம் அளவுக்குக் குறைப்பது.

**minimize button : சிறிதாக்கு பொத்தான் :** விண்டோஸ் 3.×, விண்டோஸ் 95/98/என்டி இயக்க முறைமைகளில் ஒரு சாளரத்தின் மேல் வலது மூலையில் உள்ள ஒரு பொத்தான். இதன்மீது சுட்டியால் சொடுக்கும்போது சாளரம் மறைந்து கொள்ளும். விண்டோஸ் 3.× மற்றும் விண்டோஸ் என்டி 3.5 ஆகியவற்றில் முகப்புத் திரையிலேயே ஒரு சின்னமாக அமர்ந்து கொள்ளும். விண்டோஸ் 95/98 மற்றும் விண்டோஸ் என்டி 4.0 மற்றும் அதற்குப் பின்வந்த விண்டோஸ் இயக்க முறைமைகளில் திரையின் அடிப்பகுதியிலுள்ள பணிப் பட்டையில் (Taskbar) சாளரப் பெயர் ஒரு பொத்தானாக அமர்ந்து கொள்ளும். அந்தப் பொத்தான்மீது சொடுக்கும் போது சாளரம் முந்தைய அளவுக்கு விரியும்.

**minimum value : குறைந்தபட்ச மதிப்பு.**

**miniport drivers : சிறுதுறை இயக்கிகள் :** ஒரு குறிப்பிட்ட சாதனம் குறித்த தரவுவைக் கொண்டுள்ள இயக்கிகள். இவை சாதனம்சாரா துறை இயக்கிகளுடன் தொடர்பு கொண்டு அவற்றின் வழியாக கணினி முறைமையுடன் பேசிக் கொள்ளும்.

**minitower : சிறு நெடுபெட்டி :** தரையில் செங்குத்தாய் நிற்கும் கணினி நிலைப்பெட்டி (cabinet). பொதுவாக கணினி முறைமைப் பெட்டி 24 அங்குல உயரம் இருக்கும். இதனை நெடு பெட்டி என்பர். சிறுநெடு பெட்டி 13 அங்குல உயரமே இருக்கும்.

**minor key : துணை விசை:** ஒரு பதிவேட்டை அடையாளம் காணப் பயன்படுத்தும் துணை விசை. சான்றாக, மாற்றங்களை கணக்கு எண் மற்றும் தேதி வாரியாக பிரித்தல். இதில் கணக்கு எண் பெருவிசை. தேதி துணைவிசை.

**minor sort key : குறும வகைப் பாட்டுப் பகுதி: சிறு வரிசை யாக்கத் துணைச் சாவி** : பதிவேடுகளை வகைப்படுத்து வதற்கான இரண்டாம் நிலைப் பாகுபாட்டு ஆதாரங்களைக் கொண்ட தரவுப் புலம். பெரும வகைப்பாட்டுப் பகுதியில் இரு மடியாக்கங்கள் நடைபெறும் போது மட்டுமே இது பயன் படுத்தப்படுகிறது.

**MIP mapping : மிப் பொருத் துகை; மிப் படமாக்கம்** : குறை வில் நிறைய என்று பொருள் படும் Multi-turn Is Parvo (Much in Little என்பதன் லத்தீன் தொடர்) என்பதன் சுருக்கமே MIP எனப் படுகிறது. படமாக்கிய ஒரு படிமத்தைச் சுற்றுத் தொலைவி லிருந்தே முன்கணக்கிட்டு ஒரு வரைகோல (Texture) பட மாக்கியில் பயன்படுத்தப்படு கிறது. படப்புள்ளி மாற்றுகை மனிதக் கண்புலனுக்கேற்ப நிறங்களை மாற்றித்தரும் என்பதால், படமாக்கிய உருவங் களின் இதமான வரை கோலத் திற்கு வழிவகுக்கும்.

**mips : மிப்ஸ்** : Million Instructions Per Second என்பதன் குறும் பெயர். ஒரு வினாடிக்குப் பத்து இலட்சம் ஆணைகள். ஒரு பெரிய கணினியமைவு, ஒரு வினாடி நேரத்தில் நிறைவேற் றும் எந்திர மொழி ஆணை களின் சராசரி எண்ணிக்கையைக் குறிக்க இது பயன்படுகிறது.

**mirror image : ஆடி பிம்பம் ; கண்ணாடிப் பிம்பம்.**

**mirroring : கண்ணாடி உருக் காட்சி:** ஓர் உருக்காட்சியைச் சித்திரித்துக் காட்டும் வரை கலைச் செய்திக் குறிப்பினை, அதன் நேர்தலை கீழ் பிம்ப மாகக் காட்டும் கண்காட்சி அல் லது உருவாக்கம். பல கணினி வரைகலைப் பொறியமைவு கள், காட்சித் திரையில், ஒரு வரைகலை உருக் காட்சியைத் தானாகவே தலைகீழாகப் பிரதிபலித்துக் காட்டுகின்றன.

**mirror site : நகல் தளம்; பிம்பத் தளம்** : ஒரு கோப்பு வழங்கன் கணினி. பிணையத்திலுள்ள முக்கிய வழங்கன் கணினி யிலுள்ள கோப்புகளின் நகல் களைக் கொண்டிருக்கும் தரவு போக்குவரத்துச் சுமையைப் பகிர்ந்து கொள்வதற்காகவும்,

அதிகமான தரவு போக்குவரத்தைக் கையாள உயர்திறன் வழங்கனின் தேவையைப் தவிர்ப்பதற்காகவும் பிம்பத் தளங்கள் பயன்படுத்தப்படுகின்றன.

**MIS :** எம்ஐஎஸ்: மேலாண்மைத் தகவல் பொறியமைவு என்று பொருள்படும் "Management Information System" என்ற ஆங்கிலத் தலைப்பெழுத்துச் சொல்.

**missconvergence : காட்சித் திருப்பம்.**

**misspelled words : பிழைச் சொற்கள்.**

**mistake : பிழை; தவறு:** மனிதர் செய்யும் சிறு பிழை. இதனால், தவறான கணிப்பு, தவறான கணினி நிரல்களைப் பயன்படுத்துதல், தவறான விசையை அழுத்துதல், கணினி செயல் முறையில் தவறான சூத்திரங்களைப் பயன்படுத்துதல் போன்ற கருதப்படாத விளைவுகள் ஏற்படக்கூடும்.

**.mi.us : .எம்ஐ .யுஎஸ் :** ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டு மிச்சிகன் மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப்பெயர்.

**mixed cell reference : கலப்புக் கலக் குறிப்பு :** விரிதாள்களில் ஒரு கலம் பற்றிய குறிப்பு. (ஒரு வாய்பாட்டினைக் கணக்கிட்டு விடை காணத் தேவைப்படும் ஒரு கலத்தின் முகவரி). கலத்தின் கிடக்கை (Row) அல்லது நெடுக்கை தொடர்புறு (Relative) குறிப்பாக இருக்கும் (வாய்பாட்டினை நகலெடுத்தாலோ நகர்த்தினாலோ தானாகவே மாறிக்கொள்ளும்). மற்றது நிலையாக இருக்கும். (வாய்பாட்டினை நகலெடுத்தாலோ நகர்த்தினாலோ மாறாதது).

**mixed number : கலப்பு எண் :** முழு எண் பகுதியும் பின்னப் பகுதியும் கொண்ட ஓர் எண். எடுத்துக்காட்டு : 63.71; -18.006; 298.413.

**mixed object : கலவைப் பொருள்:** Compound document போன்றது.

**mixing : ஒலிக் கலவை.**

**mix with file : கோப்புடன் சேர்.**

**.mk : .எம்கே :** ஓர் இணைய தள முகவரி மாசிடோனியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.ml : .எம்எல் :** ஓர் இணைய தள முகவரி மாலி நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**ML** : எம் எல்: 'வித்தகர் மொழி' என்று பொருள்படும் 'Manipulator Language" என்ற ஆங்கிலச் சொற்றொடரின் தலைப் பெழுத்துச் சொல். இது, எந்திர மனிதர்களைக் கட்டுப்படுத்துவதற்கு IBM என்ற முதன்மைப் பொறியமைவு நிறுவனம் பயன்படுத்தும் செயல்முறைப் படுத்தும் மொழி.

**.mm** : .எம்எம் : ஓர் இணைய தள முகவரி மியன்மார் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**MMX** : எம்எம்எக்ஸ் : பல்லூடக நீட்டிப்புகள் எனப் பொருள் படும் (Multimedia Extensions) என்ற தொடரின் சுருக்கம். இன்டெல் 80×86 குடும்பச் செயலிகளில் ஒரு குறிப்பிட்ட வகைச் செயலிகள். பல்லூடக மற்றும் தகவல் தொடர்புப் பயன் பாடுகளுக்கான கூடுதல் திறன் கொண்டவை. இவற்றின் நிரல் தொகுதியில் அதற்கான கூடுதல் நிரல்களைக் கொண்டவை.

**.mn** : .எம்என் : ஓர் இணைய தள முகவரி மங்கோலியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**mnemonic** : நினைவூட்டு வாசகம்; நினைவுபடுத்தி : மனிதர் எளிதில் நினைவில் பதித்து வைத்துக் கொள்ளக்கூடிய வாசகங்கள்; நினைவில் இருத்தி வைத்துக் கொள்வதற்கான உத்திகள்.

**mnemonic code** : நினைவூட்டு வாசகக் குறியீடு; நினைவூட்டுக் குறியீடு : எளிதில் நினைவில் வைத்துக் கொள்ளக்கூடிய இணைப்பு மொழிக் குறியீடு. எடுத்துக்காட்டு: பெருக்கல் (Multiply) என்பதற்கு 'MPY' என்ற சுருக்கெழுத்தைப் பயன் படுத்துதல்.

**mnemonic language** : நினைவூட்டு வாசக மொழி : எளிதில் நினைவில் வைத்துக் கொள்ளக் கூடிய சைகைகளின் அடிப் படையில் அமைந்த செயல் முறைப்படுத்தும் மொழி. இந்தச் சைகைகளைக் கணினி மூலம் எந்திர மொழியாக இணைக்கலாம்.

**MNP10** : எம்என்பீ10 : மைக்ரோ காம் பிணைய நெறிமுறை என்று பொருள்படும் (Microcom Networking Protocol Class 10) என்ற தொடரின் சுருக்கம். தொடர்முறை செல் தொலை பேசி (Analog Cellular Telephone)களுடன் இணைக்கப் படும் மோடம் இணைப்புகளுக்கான தொழிலகச் செந்தரத் தகவல் தொடர்பு நெறிமுறை.

**.mn.us** : .எம்என்.யுஎஸ் : ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டு மின்ன சோட்டா மாநிலத்தைச் சேர்ந் தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.mo** : .எம்ஓ : ஓர் இணைய தள முகவரி, மக்காவ் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**mobile computing : நடமாடும் கணிப் பணி; பயணக் கணிப் பணி** : பயணம் செய்து கொண் டிருக்கும்போது கணினியைப் பயன்படுத்தும் செயல்பாடு. பயணக் கணிப்பணிக்கு மேசைக் கணினியைவிட மின் கலத்தில் இயங்குகின்ற, கையிலெடுத்துச் செல்லத்தக்க கணினியே ஏற்றது.

**mobile radio systems : நட மாடும் வானொலி அமைப்புகள்:** எந்த நாட்டின் தொலைபேசி அமைப்புக்கும் பயனுள்ள விரிவாக்கமாக மேட்ஸ் (MTS) எனப்படும் நடமாடும் தானி யங்கித் தொலைபேசி அமைப்பு விளங்கும். வழக்கமான கம்பி களால் இணைக்கப்பட்ட தொலைபேசிபோல ஒவ்வொரு நடமாடும் நிலையமும் ஒரு காரில் வானொலி தொலைபேசி இணைக்கப்பட்டு அதற்கு தனி எண் கொடுக்கப்படும். அதே நகரத்தில் உள்ள பிற இயங்கும் தொலைபேசிகளுடன் மட்டு மல்லாது மற்ற வழக்கமான தொலைபேசிகளுடன் உலகின் எந்தப் பகுதிக்கும் பேச முடியும்.

**mobile robots : நடமாடும் எந்திர மனிதர்கள் (எந்திரன்)** : மனிதர்களைப்போல, சில எந்திர மனிதர்களும் தாமாகவே ஓரிடத்திலிருந்து வேறு ஒரு இடத்திற்கு நகரக்கூடியவை.

**mobile users : நடமாடும் பயனாளர்கள்.**

**modal : படிமம்: மாதிரி:** முறை சார்ந்தது. மாடல் இயக்கம் ஒரு முறையிலிருந்து மற்றொன் றுக்கு மாற்றித் தருகிறது.

**mode : முறைமை; செயற்பாட்டு முறை** : சொல் சார்ந்த, இடைப் பரிமாற்ற அல்லது வரைகலை முறை உள்ளிட்ட ஒளி மூல மான காட்சி. ஒரு அமைப்பு இயக்கப்படுகின்ற இயக்க நிலை. இரண்டு சூழ்நிலைகள் இதில் ஏற்படலாம். வன் பொருள் மென்பொருளுக்கு எண்ணற்ற முறைகள் உள்ளன.

**mode, batch processing : தொகுதிச் செயலாக்க பாங்கு.**

**modec : மோடெக்** : தொலை தகவல் தொடர்பில், இலக்கமுறை யில் (digital) மோடத்துக்குரிய தொடர்முறைக் சமிக்கைகளை உருவாக்கும் சாதனம். மாடு

லேட்டர், டிமாடுலேட்டர் ஆகிய சொற்கள் இணைந்ததே மோடம். கோடர், டிகோடர் ஆகிய சொற்கள் இணைந்தது கேடெக். மோடம், கோடெக் ஆகிய சொற்கள் இணைந்து உருவானது மோடெக்.

**model : உருப்படிவம்; படிமம் :** அறிவியல் ஆராய்ச்சிகளுக்காக எடுத்துக் கொள்ளப்படும் ஒரு பொருளின் அல்லது அமைப் பின் இன்றியமையாத அம்சங் களைக் கொண்ட ஒரு முன் மாதிரி வடிவம். அறிவியல் உருப்படிவங்களில் சிக்கலான சூத்திரங்களும், பெருமளவு கணிதமும் பயன்படுத்தப்படு கின்றன. சமன்பாடுகளுக்குத் தீர்வு காணவும், தேவையான கணிப்புகளைச் செய்யவும் கணினியைப் பயன்படுத்தினால் அது 'கணினி வடிவாக்கம்' எனப்படும். அறிவியல், வணி கம், பொருளாதாரம் முதலிய பல்வேறு துறைகளில் உருப் படிவமும், வடிவாக்கமும் மிகவும் இன்றியமையாதவை.

**model base : மாதிரி அடிப்படை :** கோட்பாடு, கணக்கீடு மற்றும் அளவைமுறை மாதிரிகளின் ஒழுங்குபடுத்தப்பட்ட தொகுதி. வணிக உறவுகள், கணிப்பீடு நிரல்கள் அல்லது பகுப்பாய்வு நுட்பங்கள் போன்றவற்றை இவை விளக்குகின்றன. நிரலாக் கத் தொடர்கள், துணை நிரல் கள், கட்டளைகளைக் கோப்புகள் மற்றும் விரி தாள்கள் போன்ற வடிவங்களில் இத்தகைய மாதிரிகள் சேமிக்கப்படுகின்றன.

**model-based expert system : மாதிரி-சார்ந்த வல்லுநர் அமைப்பு :** ஒரு பொருளின் வடி வமைப்பு மற்றும் பணி பற்றிய அடிப்படை அறிவு சார்ந்த வல்லுநர் அமைப்பு. சான்றாக இத்தகைய அமைப்புகள் கருவி யின் சிக்கல்களைக் கண்டறியப் பயன்படுத்தப்படுகின்றன. Rule based expert system என்பதன் எதிர்ச்சொல்.

**model dialog : உருப்படிவ உரை யாடல்.**

**model geometric : வடிவ மாதிரி யம்; வடிவ கணித உருப்படிவம் :** ஒரு கணினி வரைகலைப் பொறியமைவில் வடிவமைக் கப்பட்டு தரவுத் தளத்தில் சேமித்து வைக்கப்பட்டுள்ள ஓர் உருவத்தை, ஒரு பகுதியை அல் லது புவி வரைகலைப்பரப்பை, முழுமையான முப்பரிமாண அல்லது இருபரிமாணப் புவி யியல் வடிவ் கணித அமைப் பில் உருவாக்கிக் காட்டுதல்.

**modeling : உருப்படிவாக்கம்:** ஒரு பொறியமைவின் சில

பகுதிகளைத் துல்லியமாக உருப்படுத்திக் காட்டும் செய்முறை.

**modem** : **மோடம் (அதிர் விணக்க நீக்கி):** Modulator - Demodulator என்ற இரண்டு சொற்களின் முதலெழுத்துகளைச் சேர்த்து இச்சொல் உருவாக்கப்பட்டது. குரல்-நிலை தகவல் தொடர்பு வசதிகளின் சமிக்கைகளை ஏற்றும், மாற்றியும் அனுப்பிப் பெறுகின்ற சாதனம். தொலை பேசிக் கம்பி இணைப்புக்கு கணினி யையோ அல்லது முனையத்தையோ ஆற்றுப்படுத்துகின்ற சாதனம். பெறும் இடத்தில் கணினியில் இலக்க முறை துடிப்புகளை ஒலி அலைவரிசைகளாகவும் அவற்றை மீண்டும் துடிப்புகளாகவும் மாற்றித் தருகிறது. கணினியின் உள்ளேயும் மோடெத்தைப் பொறுத்து முடியும். வெளிப்பகுதியில் மோடெத்தை வைத்தால் 'போர்ட்' மூலம் அது கணினியில் சேர்கிறது. தொலைபேசியில் அழைப்பது, பதில் சொல்வது ஆகியவற்றை மோடெம் கையாள்கிறது. இவற்றை அனுப்பும் வேகம் ஒரு நொடிக்கு 300 முதல் 33,600 துண்மிகள் அல்லது அதற்கு மேற்பட்டதாகும். தொலைபேசிமூலம் அழைக்கும் மோடெத்தின் சராசரி வேகம் ஒரு நொடிக்கு 2,400 துண்மிகள். 33,600 துண்மிகள் திறனுள்ளது பிரபலமாகிறது. ஒரு நொடிக்கு 2,400 துண்மிகள் என்ற வேகத்தில் இயங்கும்போது 7 நொடிகளில் 2,000 எழுத்துகளைக் கொண்ட ஒரு திரையை நிரப்பும். எழுத்து விகிதமானது துண்மி விகிதத்தில் 10%. ஆகவே, 2,400 துண்மிகள் ஒரு நொடிக்கு என்பது 240 எழுத்துகள் ஒரு நொடிக்கு என்பதாகும். மோடெத்தில் பார்க்க வேண்டியது அதிவேகம், பிழை சோதித்தல் மற்றும் தகவல்களைச் சுருக்கல் ஆகியவையே. புதிய மோடெம்கள் தானாகவே பிற மோடெம்களின் வேகத்திற்கும், வன்பொருளின் விதிமுறைகளுக்கும் சரிசெய்து கொள்கிறது.

**modem bank : இணக்கி வங்கி; மோடம் வங்கி** : ஓர் இணையச் சேவையாளர் அல்லது ஒரு பிபிஎஸ் சேவை இயக்குநர் பராமரிக்கின்ற வழங்கன் கணினியுடன் அல்லது தொலை அணுகு வேன் (WAN) பிணையத்தில் இணைக்கப்பட்ட இணக்கி (மோடம்)களின் தொகுப்பு இவ்வாறு அழைக்கப்படுகிறது. தொலைதூரப் பயனாளர்கள் ஏதேனும் ஒரு குறிப்

பிட்ட ஒற்றைத் தொலைபேசி எண்ணை அழைத்தாலே, அப்போது பயன்பாட்டில் இல்லாத தொகுதியிலுள்ள வேறொரு எண்ணுக்கு திசைமாற்றித் தரும் வகையில் பெரும்பாலான இணக்கி (மோடம்) வங்கிகளின் இணக்கிகள் உள்ளமைக்கப்பட்டுள்ளன.

**modem eliminator : மோடெம் விலக்கி:** நெருக்கமாக உள்ள இரண்டு கணினிகள் மோடெம் இல்லாமலேயே தொடர்பு கொள்ள அனுமதிக்கும் சாதனம். தனிநபர் கணினிகளுக்கு, இது தேவையான மென்பொருளைக் கொண்ட முழு மோடெம் போன்றதாகும். ஒத்திசைவு (சின்க்ரனஸ்) அமைப்புகளில் ஒத்திசைவுக்கு அறிவுக் கூர்மையை அளிக்கிறது.

**modem port : இணக்கித் துறை :** ஒரு சொந்தக் கணினியில் புற இணக்கியை (மோடத்தை) இணைத்துப் பயன்படுத்தக் கூடிய ஒரு நேரியல் துறை (Serial port).

**moderated : கண்காணிக்கப்பட்ட முறைப்படுத்தப்பட்ட :** செய்திக்குழு, அஞ்சல் பட்டியல் அமைப்புகளிலும், அல்லது பிற செய்திப் பரிமாற்ற அமைப்புகளிலும் பொருத்தமில்லாத சர்ச்சைக்கு இடமாகும் கட்டுரைகள் அல்லது செய்திகள் உறுப்பினர்களுக்கு அனுப்பப்படுவதற்கு முன்னரே நீக்கிவிடும் உரிமை அக்குழுவின் கண்காணிப்பாளருக்கு உண்டு. இத்தகைய குழுச் செய்திப் பரிமாற்றங்களில் அனைவரும் ஏற்றுக் கொள்ளத்தக்க நாகரிகமான கருத்துரைகளையே அஞ்சல் செய்ய வேண்டும் என்பதை நினைவில் கொள்க.

**moderated discussion : முறைப்படுத்தப்பட்ட உரையாடல் :** அஞ்சல் பட்டியல், செய்திக் குழு அல்லது பிற நிகழ்நிலை மன்றங்களில் நடைபெறுவது. கண்காணிப்பாளர் ஒருவரால் முறைப்படுத்தப்படும் தகவல் பரிமாற்றம். உரையாடலில் ஒருவர் தன் செய்தியை அனுப்பியதும், அச்செய்தி நடைபெற்றுக் கொண்டிருக்கும் உரையாடலுக்கு பொருத்தமானதா என்பதை கண்காணிப்பாளர் முடிவு செய்வார். பொருத்தமானது எனில் அச்செய்தியை குழு முழுமைக்கும் சமர்ப்பிப்பார். முறைப்படுத்தப்படாத உரையாடல்களைவிட முறைப்படுத்தப்பட்ட உரையாடல் அதிக மதிப்புடையது. ஏனெனில் முறையற்ற செய்தி களை கண்காணிப்பாளர் ஒரு காவலாளிபோல் இருந்து

தடுத்து விடுகிறார். சிலவேளை களில் மோசமான விளைவு களை ஏற்படுத்தும் ஆபாசச் செய்திகளையும் அவர் வடி கட்டி விடுவார்.

**moderator** : இடையீட்டாளர், நடுவர், கண்காணிப்பாளர் : சில இணைய செய்திக் குழுக் களிலும், அஞ்சல் பட்டியல் களிலும் செய்திகளை குழு உறுப்பினர்களுக்கு சமர்ப்பிக்கப் படும்முன் தணிக்கை செய்து முறைப்படுத்துபவர். பொருத்த மற்ற, முறையற்ற செய்தி களைத் திருத்துவார், புறக் கணிப்பார் அல்லது வடிகட்டித் தடுத்து நிறுத்திவிடுவார்.

**mode reset** : மாற்றமைவு பாங்கு.

**modification** : திருத்தியமைத் தல்; மாற்றியமைத்தல்.

**modification, address** : முகவரி மாற்றியமைத்தல்; முகவரி திருத்தி அமைத்தல்.

**modified frequency modulation encoding** : திருத்தப்பட்ட அதிர் வலைப்பண்பேற்றக் குறியாக்கம் : சுருக்கமாக எம்எஃப்எம் குறி யாக்கம் எனப்படுகிறது. வட்டு களில் தரவுவைச் சேமிக்கப் பரவலாகப் பயன்படும் ஒரு வழிமுறை. இது ஏற்கெனவே உள்ள அதிர்வலைப் பண் பேற்றக் குறியாக்கத்தை அடிப் படையாகக் கொண்டது. ஆனால், ஒத்திசைவுத் தகவலுக்கு அவசியமில்லாத காரணத்தால் செயல் திறனில் மேம்பட்டது. முந்தைய அதிர்வலைப் பண் பேற்றக் குறியாக்கத்தைவிட அதிக அளவான தகவலை ஒரு வட்டில் பதிய முடியும். பெரு வாரியான நிலைவட்டுகளில் இம்முறையே பயன்படுத்தப் படுகிறது. எனினும் ஆர்எல்எல் (RLL-Run Length Limited) குறி யாக்க முறையைக் காட்டிலும் திறன் குறைந்ததே.

**modifier** : திருத்தியமைப்பி; மாற்றி.

**modifier, character** : எழுத்து மாற்றியமைப்பி.

**modifier key** : மாற்றம் செய் விசை : விசைப் பலகையிலுள்ள ஒரு விசை; அதை அழுத்திக் கொண்டு வேறொரு விசையை அழுத்தினால் அதன் இயல்பான பணியைச் செய்யாமல் வேறு பணியைச் செய்யும்.

**modify** : திருத்தம் செய்தல் : *1.* கணினி நிரலின் ஒரு பகுதியை அதன் இயல்பான பொருள் விளக்கத்திலிருந்தும் நிறைவேற்றத்திலிருந்தும் மாறுபடும் வகையில் மாற்றி யமைத்தல். இந்த மாற்றம்,

நிரலை நிரந்தரமாக மாற்றி விடலாம், அல்லது அதில் மாற்றம் எதுவும் செய்யாமல் நடப்பு நிறை வேற்றத்தை மட்டுமே பாதிக்கலாம். 2. ஒரு குறிப்பிட்ட தேவைப்பாட்டுக் கேற்ப ஒரு செயல்முறையை மாற்றுதல்.

**modify structure : வடிவமைப்பை மாற்று:** ஒரு கோப்பின் வடிவ அமைப்பை மாற்றும் தரவுத் தளக் கட்டளை. புல நீளங்களும், பெயர்களும் மாற்றப்படலாம். புலங்களைச் சேர்க்கலாம் அல்லது நீக்கலாம். பழைய தரவுக் கோப்புகளை, புலங்கள் நீக்கப்பட்டாலொழிய புதிய அமைப்புகளாக தரவு இழப்பின்றி மாற்றித் தரும்.

**modula-2 (Modular language-2) : மாடுலா-2:** பாஸ்கலை உருவாக்கிய சுவிட்சர்லாந்து பேராசிரியர் நிக்லாஸ்விர்த் 1979இல் அறிமுகப்படுத்திய பாஸ்கலின் மேம்பட்ட பதிப்பு. கூறு (மாடுல்) களை தனியாகத் தொகுக்க உதவுகிறது.

**modular : கூறுநிலை.**

**modular approach : கூறுநிலை அணுகுமுறை :** ஒரு திட்டத்தை வரிசைக் கிரமமான பிரிவுகளால் பிரித்தல். சிறிய அலகுகளாகப் பிரிப்பதனால் ஆய்வு, வடிவமைப்பு மற்றும் நிரல் தொடரமைப்பு முயற்சிகள் எளிமையாகும்.

**modular coding : தகவமைவு குறியீட்டு முறை :** செயல் முறைப்படுத்தும் உத்தி; இதில், ஒரு செயல்முறையில் தருக்க முறைப்பகுதிகள் பல்வேறு தனித்தனித் தகவமைவுகளாக அல்லது வாலாயங்களாகப் பகுக்கப்படுகின்றன; ஒவ்வொரு வாலாயமும் தனித்தனியே செயல்முறைப்படுத்தப்படும்.

**modular constraint : தகவமைவு வரையறை :** கணினி வரைகலையில், உருக்காட்சிகளின் சில அல்லது அனைத்துப் புள்ளிகளும், கண்ணுக்குப் புலனாகாத வலைச் சட்டத்தின் குறுக்கு வெட்டுப் புள்ளிகளில் அமைந்திருக்கும் வகையில், உருக்காட்சிகளின் இட அமைப்பில் ஏற்படுத்தப்படும் வரையறை.

**modular design : கூறுநிலை வடிவமைப்பு :** வன்பொருள் அல்லது மென்பொருள் வடிவமைப்பில் ஓர் அணுகுமுறை. இம்முறையில் ஒரு திட்டப் பணி சிறுசிறு கூறுகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு கூறும் தனியே உருவாக்கப் பட்டு, சோதிக்கப்பட்டு, இறுதியில் ஒருங்கிணைக்கப்பட்டு இறுதி வடிவம் பெறும். ஒவ்

வொரு கூறும் ஒரு குறிப்பிட்ட பணியை நிறைவேற்றுமாறு வடிவமைக்கப்படும். இம்முறையினால் உருவாக்க நேரமும், பரிசோதனை நேரமும் மிச்சமாகும். சிலபல கூறுகளை ஒன்றுக்கு மேற்பட்ட திட்டப் பணிகளுக்கும் பயன்படுத்திக் கொள்ளவும் முடியும்.

**modular element** : கூறுநிலை உறுப்பு.

**modularity** : தகவமைவுத் திறன்: கணினிகளை ஒரு தொகுப்புக் கட்டிடத்தில் வடிவமைப்பில் உருவாக்கும் கோட்பாடு. இது, சாதனத்தின் திறம்பாட்டை உயர்த்தவும், சிக்கன முறையான மேம்பாட்டுக்கும் உதவும்.

**modular programming** : தகவமைவுச் செயல்முறைப்படுத்துதல் : எளிதாக இடமாற்றம் செய்யக் கூடிய, சிறிய கணினி வாலாயங்களை உருவாக்குகிற செயல்முறைப்படுத்துதல். இது, தர அளவான இடைமுகப்புத் தேவைகளை நிறைவு செய்யும். செயல்முறையைச் செயற்பணிகளை முழுமையாகச் செய்யக் கூடிய வகையில், குறிப்பிட்ட பகுதிகளாகப் பகுத்து இது செய்யப்படுகிறது. மிகவும் சிக்கலான செயல்முறைகளையும் பொறியமைவுகளையும் உருவாக்குவதற்கு இது உதவுகிறது.

**modulatanty** : கூறு நிலைமை.

**modulate** : பண்பேற்று : ஒரு சமிக்கையின் சில பண்பியல்புகளை ஒரு நோக்கத்துடன் மாற்றியமைத்தல். பொதுவாக தகவலை வேறிடங்களுக்கு அனுப்பி வைக்கும் பொருட்டு இவ்வாறு பண்பேற்றம் செய்வதுண்டு.

**modulation/demodulation** : பண்பேற்றம்/பண்பிறக்கம்; அதிர் விணக்கம் : செய்திக் குறிப்புகளை அனுப்புவதில், உயர் அதிர்வெண் ஊர்திக்கு குழூஉக் குறியின் சில பண்புகளை, தாழ் அதிர்வெண் தரவு குழூஉக் குறிக்கு இணங்கியவாறு மாற்றும் செயல் முறை. கணினி சேர்முனையக் குழூஉக் குறிகளை செய்தித் தொடர்பு வசதிகளுக்கு ஏற்பு உடையதாக செய்வதற்குத் தரவுத் தொகுதிகளில் இது பயன்படுகிறது.

**modulator** : குறிப்பேற்றி : அதிர் விணக்கி : தரவுக் குறிப்புச் செயல்முறைப்படுத்தும் எந்திரத்திலிருந்துவரும் மின்னியல் துடிப்புகளை அல்லது துண்மிகளைப் பெற்றுக்கொண்டு அவற்றைச் செய்தித் தொடர்பு இணைப்பின் வழியாகச்

செலுத்துவதற்கு ஏற்புடைய குழூஉக் குறிகளாக மாற்றுகிறது.

**module** : கூறு; தகவமைவு: ஒரு செயல்முறையில் தருக்க முறைப் பகுதிகளில் ஒன்று. ஒரு பெரிய செயல்முறையை தன்னடக்கமான பல தருக்க முறைத் தகவமைவுகளாகப் பகுக்கலாம். இந்தத் தகவமைவுகளைப் பல செயல்முறையாளர்கள் தனித் தனியே எழுதிச் சோதனை செய்யலாம். பிறகு இத்தகவமைவுகளை ஒன்றாக இணைத்து முழுச் செயல்முறையாக அமைத்து விடலாம்.

**modulo** : மீதி; வகுத்தல் தகவமைவுச் சார்பலன் : வகுத்தலில் மீதத்தைக் கொடுக்கும் ஒரு கணிதச் சார்பலன். 'x' என்ற எண்ணின் 'n' தகவமைவின் மூலம் x/n என்ற முழு எண் மீதம் கிடைக்கிறது. எடுத்துக்காட்டு : 1000-இன் 84 தகவமைவு 1000/84 அல்லது 76.

**moire** : மங்கல்; தெளிவின்மை : பொருத்தமற்ற தெளிவுக்கூறுடன் ஒரு படிமம் திரையில் காட்டப்படும்போது அல்லது அச்சிடப்படும்போது மங்கலாக, மினுக்கலுடன் தெளிவின்றி இருத்தல். தெளிவின்மைக்கு பல அளபுருக்கள் காரணமாய் உள்ளன. படிமத்தின் அளவும் தெளிவும், வெளியீட்டுக் கருவியின் அளவு-தெளிவுடன் ஒத்தில்லாதபோது இந்த நிலை ஏற்படும்.

**molecular beam epitaxy** : மொலிக்யூலர் பீம் எபிடாக்சி: அடுக்குகளைப் பிரிப்பதனால் உருவாக்காமல் அணு-அளவு அடுக்குகளைச் சிப்புவில் 'வளர வைக்கும்' தொழில் நுட்பம்.

**molecules** : மூலக்கூறுகள்.

**monadic** : எதிர் இயக்கச் செயற்பாடு; ஒருறுப்பு : 'எதிர்' இயக்கி (NOT operated) போன்ற ஒரே இயக்கப்படு எண்ணை மட்டுமே பயன்படுத்துகிற ஒரு கணிதச் செயற்பாடு தொடர்பானது.

**monitor** : காட்சித்திரை; கணித்திரை; கண்காணிப்புத்திரை; திரையகம் : *1.* கட்டுப்பாட்டுச் செயல்முறை அல்லது மேற்பார்வைச் சாதனம். *2.* ஒளிப்பேழைக் காட்சித்திரை.

**monitoring systems** : கண்காணிப்பு முறைகள்.

**monitor programme** : கண்காணிப்பு நிரல்.

**monochrome** : ஒரே வண்ணத் திரை; ஒரே நிறமுடைய : முன்னணியில் ஒரு நிறத்தையும்

பின்புறத்தில் ஒரு நிறத்தையும் காட்டுவது. சான்றாக, வெண்மையின்மீது கறுப்பு, கறுப்பின்மீது வெண்மை, கறுப்பின்மீது பச்சை.

**monochrome adapter** : ஒற்றை நிறத் தகவி : ஒரேயொரு முன் புல நிறத்தில் ஒளிக்காட்சிக் சமிக்கையை உருவாக்கும் திறனுள்ள ஓர் ஒளிக்காட்சி ஏற்பி. சிலவேளைகளில் ஒற்றை நிறத்தையே வெவ்வேறு அடர்வு களில் காண்பிக்கும், சாம்பல் அளவீட்டைப் போன்றது.

**monochrome card** : ஒரு நிறப் பட அட்டை : ஒரே நிற அட்டை : கணினியின் விரிவாக்கத் துளை விளிம்பில் பொருந்துகிற சுற்று வழி அட்டை. இது ஒரே நிறக் குழூஉக் குறிகளை உண்டாக் கும். பயன்படுத்தப்படும் காட்சித் திரையைப் பொறுத்து இது, வெள்ளை/அம்பர்/பச்சை நிறச் சாயல்களை உண்டுபண்ணும்.

**monochrome display** : ஒற்றை நிறத் திரைக்காட்சி : 1. ஒற்றை நிறத்தில் மட்டுமே தோன்றும் ஒளிக்காட்சித் திரைக்காட்சி. அந்த ஒற்றைநிறம், பயன்படுத் தப்படும் பாஸ்பரைப் பொறுத் தது. அனேகமாக பச்சை அல் லது ஆம்பர் நிறமாக இருக்கும். 2. ஒரே நிறத்தையே வெவ் வேறு அடர்வுகளில் காண்பிக் கும் திறன்பெற்ற திரைக்காட்சி.

**monochrome monitor** : ஒரே நிறக் காட்சித்திரை; ஒரே நிறத் திரை: மாறுபட்டதொரு கறுப்பு வண்ணம் பின்னணியில் தனி யொரு வண்ண (வெள்ளை, அம்பர், அல்லது பச்சை) எழுத்துகளைக் காட்சியாகக் காட்டும் ஒரு தனிவகைக் காட்சித்திரை. இதனால் மிகக் கூர்மை வாய்ந்த தெளிவான காட்சி உருவாகிறது. எனவே மிகஎளிதாகப் படிக்க முடிகிறது. பெரும்பாலும் சொல்செயலி பயன்பாடுகள், வணிகப் பொறி யமைவுகள் கல்விச் சாதனங்கள் போன்ற கணினி சேர் முனையங்கள் பல மணி நேரம் தேவைப்படுகிற, ஆனால் பல வண்ணக்காட்சிகள் தேவைப் படாத பயன்பாடுகளில் இது பயன்படுத்தப்படுகிறது.

**monochrome printer** : ஒற்றை நிற அச்சகப்பொறி.

**monodic boolean operator** : ஏக பூலியன் இயக்கர்; ஏக பூலியன் செயற்குறி.

**monographics adapter** : ஒற்றை வரைகலைத் தகவி : ஒற்றைநிற உரை மற்றும் வரைகலைப் படங்களை மட்டுமே காட்ட முடிகிற ஒளிக்காட்சித் தகவி.

செயல்பாட்டின் அடிப்படையில் ஹெர்க்குலிஸ் வரைகலை அட்டை (HGC)யுடன் ஒத்தியல்பு உடையது.

**monolingual :** ஒற்றைமொழி.

**monolingual coding :** ஒற்றை மொழிக் குறிமுறை.

**monolithic :** தனிக் கன்ம அடுக்கு; ஒருங்கிணைந்த: தனியொரு கன்ம அடுக்கு தொடர்பானது. இதன் அடிப்படையில் ஓர் ஒருங்கிணைந்த மின்சுற்று வழி உருவாக்கப்படுகிறது. தனியொரு கன்ம அடுக்குச் செயல்முறையில் பல்வேறு தனித்தனி தகவுச் செயல்முறைகளை இணைப்புத் தொகுப்பி மூலம் ஒருங்கிணைக்கலாம்.

**monolithic integrated circuit :** தனிக் கன்ம அடுக்கு ஒருங்கிணைப்பு மின்சுற்று வழி: ஒரு பொருளின் ஒரே பாளத்தில் அமைக்கப்படும் மின்சுற்று வழி. இது, கலப்பு மின்சுற்று வழியிலிருந்து மாறுபட்டது; இதில், தனித்தனிப் பாளங்களில் மின்சுற்று வழி அமைப்பிகள் அமைக்கப்பட்டிருக்கும்; அவை இறுதி மின்சுற்று வழியுடன் மின்னியல் முறையில் இணைக்கப்பட்டிருக்கும்.

**monolithic kernel :** ஒரு சீரான கருவகம்.

**monophonic :** ஒரே ஒலியுடைய: ஒரு தனி வழித்தடத்தைப் பயன்படுத்தி ஒலியை மீண்டும் ஏற்படுத்துதல்.

**monospace font :** சமஇட எழுத்துரு : தட்டச்சில் பயன்படுத்தப்படும் எழுத்துருவைப் போன்றது. ஒவ்வோர் எழுத்தும் கிடைமட்டத்தில் ஒரே அளவான இடத்தை அடைத்துக்கொள்ளும். (எ-டு) i மற்றும் m ஆகிய இரண்டு எழுத்துகளும் அவற்றின் அகலம் எப்படி இருப்பினும் அடைத்துக் கொள்ளும் இடம் ஒரே அளவானதாக இருக்கும்.

**monospacing :** ஒற்றை இடைவெளிவிடல் : ஒரு அங்குலத்துக்கு *10* எழுத்துகள் விடுவது போன்று ஒரே மாதிரியான குறுக்கு வாட்ட இடைவெளி விடுதல்.

**monroe Jay R :** மன்ரோ ஜே ஆர் : *1911*இல், முன்பு ஃபிராங்க் பால்ட்வின் வடிவமைத்த வடிவமைப்புகளைப் பயன்படுத்தி, முதலாவது விசைப்பலகை சுழல் எந்திரத்தைக் கண்டுபிடித்து, வணிகமுறையில் பெரும் வெற்றி கண்டவர்.

**monte carlo method :** மான்டி கார்லோ முறை : ஒரு கணக்குக்குத் தீர்வுகாணத் திரும்பத் திரும்பக் கணிப்புகளைச் செய்திடும்

முறை. ஒன்றுக்கொன்று இடைத் தொடர்புடைய ஏராள மான மாறியல் மதிப்புருக்கள் உள்ள சிக்கலான கணக்கு களுக்குத் தீர்வுகாண இந்த முறை பயன்படுகிறது.

**montissa** : மடக்கையின் பதின்மக் கூறு.

**.montreal.ca** : .மான்ட்ரீல்.சிஏ : ஓர் இணைய தள முகவரி கனடா நாட்டு மான்ட்ரீலைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**MOO** : மூ : பொருள்நோக்கான மட் என்று பொருள்படும் MUD, Object Oriented என்ற தொடரின் சுருக்கம். MUD என்பது Multiuser Dungeon என்பதன் சுருக்கம். ஒரு பொருள்நோக்கு மொழியை உள்ளடக்கிய மட், மூ என்று அழைக்கப்படுகிறது. பயனாளர் கள் தனிப்பரப்புகளையும் அதில் பொருள் உறுப்புகளை யும் உருவாக்க முடியும். மூ, மட் பயன்பாட்டைவிட விளை யாட்டுகளை உருவாக்கவே அதிகம் பயன்படுகிறது.

**.moov** : .மூவ்; .எம்ஓஓவி : மெக்கின்டோஷ் கணினிகளில் பயன்படுத்தப்படும் குவிக் டைம் மூவி ஒளிக்காட்சிக் கோப்புகளைக் குறிக்கும் கோப்பின் வகைப்பெயர் (file extension).

**MOOV** : மூவ் : மெக்கின்டோ ஷின் குவிக்டைம் திரைப்படங் களுக்கான ஒரு கோப்பு வடிவம். உரை, கேட்பொலி, ஒளிக்காட்சி, கட்டுப்பாடு அனைத்தையும் ஒத்திசைந்த தடங்களில் சேமித்து வைக்கும்.

**more than** : மேலும்.

**Morlund Samuel (1625-1695)** : மோர்லண்ட் சாமுவேல் (1625-1695) : நேப்பியர் சட்டங்களை மேம்படுத்தி ஒரு பெருக்கல் கருவியைக் கண்டுபிடித்தவர். கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் ஆகிய நான்கு கணிதச் செய்முறைகளையும் கணக்கிடு வதற்கு ஒரு கணித எந்திரத்தை *1666*இல் கண்டுபிடித்தார்.

**morpher** : உருமாற்றி.

**Morphing** : உருமாற்றம்.

**Morse code** : மோர்ஸ் குறியீடு: பத்தாம் நூற்றாண்டின் நடுப் பகுதியில் சாமுவேல் மோர்ஸ் உருவாக்கிய புள்ளிகளும் கோடு களும் கொண்ட தகவல் குறியீடு. ஒரு புள்ளி என்பது ஒரு வோல் டேஜ் கொண்டு செல்லும் அலை அல்லது ஒரு குறிப்பிட்ட நேரம் கொண்ட ஒளிக்கற்றை ஆக இருக்கலாம்.

தொலைபேசி வருவதற்கு முன்பு தந்தி மூலம் செய்திகளை அனுப்ப இது பயன்பட்டது.

**MOS : எம்ஓஎஸ் :** உலோக ஆக்சைடு அரைக்கடத்தி திண்மப் பாருள் எனப் பொருள்படும் 'Metalic Oxide Semiconductor' என்ற ஆங்கிலப் பெயரின் தலைப்பெழுத்து குறும்பெயர்.

**mosaic : மொசைக்:** வைய விரி வலை, பிரபலமாவதற்கு முக்கிய காரணமான வரைகலை வலை மேலோடி. என்சிஎஸ்ஏவில் எழுதப்பட்டது.

**MOS device : மோஸ் சாதனம்:** 'போர்ன்' வகைப் பொருளில் தனி வழித் தடத்தில் மின்சாரம் ஓட அனுமதிக்கும் சாதனம். வழித் தடப்பகுதியில் இன்சுலேட் செய்யப்பட்ட எலெக்ட்ரோடு மூலம் இது கட்டுப் படுத்தப்படுகிறது.

**MOSFET : மாஸ்ஃபெட்:** 'உலோக ஆக்சைடு அரைக் கடத்தித் திண்மப் பொருள் புல விளைவு மின்மப் பெருக்கி' என்று பொருள்படும் 'Metallic Oxide Semiconductor Field Effect Transistor' என்ற ஆங்கிலப் பெயரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்

**MOS/LSI : எம்ஓஎஸ்/எல்எஸ்ஐ:** பார்க்க : உலோக ஆக்சைடு அரைக்கடத்தித் திண்மப் பொருள் (Metallic Oxide Semi conductor); பேரளவு ஒருங் கிணைப்புத் தொழில்நுட்பம் (Large Scale Integration Technology).

**most significant bit : மிகு மதிப்பு பிட்:** எண்ணின் ஒன்று அல்லது மேற்பட்ட பைட்களின் (bits) ஓர் இரும தொடர்ச்சியான துண்மிகளின் வரிசையில் அதிக இட மதிப்புக் கொண்ட துண்மி (bit). (அடையாள துண்மியைத் தவிர்த்து).

**most significant character : மிகு மதிப்பு எழுத்து :** ஒரு சரத்தி லுள்ள இடது ஓர எழுத்து. MSC என்பது இத்தொடரின் சுருக்கம்.

**Most Significant Digit (MSD) : மிக முக்கிய இலக்கம் :** ஓர் எண் ணில் மிகப்பெரும் மதிப்பினை அல்லது முக்கியத்துவத்தைக் கொண்டுள்ள இலக்கம். எடுத்துக்காட்டாக 58371 என்ற எண்ணில் மிகப்பெரும் முக் கியத்துவம் வாய்ந்த இலக்கம் 5.

**motherboard : தாய்ப்பலகை; தாய் இணைப்புப் பலகை; தாய் இணைப்பு:** மின்சுற்றுவழி அட் டைகள் பலகைகள் அல்லது தகவமைவுகள் ஒன்றோ டொன்று பிணைக்கப்பட்டுள்ள இணைப்புப் பலகை. ஒரு நுண் கணிப்பொறியின் தலையாய



தாய்ப் பலகை

மின்சுற்று வழிப்பலகை. இதனைப் பொறியமைவுப் பலகை. பின்தளப் பலகை என்றும் கூறுவர்.

**motif :** மோட்டிஃப்: ஒப்பன் மென்பொருள் ஃபவுண்டேஷன் அங்கீகரித்த வரைகலை பயனாளர் இடைமுகம்.

**motion capture :** அசைவுப் பதிவு.

**motion JPEG :** நகர்வு ஜேபெக் : நகர்வு ஒளிக்காட்சித் தகவலைச் சேமித்து வைப்பதற்கான தர வரையறை. ஒளிப்பட வல்லுநர் குழு ஒருங்கிணைப்பு (JPEG) முன் வைத்தது. ஒளிக்காட்சித் தகவலின் ஒவ்வொரு சட்டத்தையும் ஜேபெக் தர வரையறைப்படி இறுக்கிச் சுருக்கும்.

**motion path :** ஓடும் பாதை : உயிர்ப்படப் பொருள் ஒன்று பின்பற்ற வேண்டிய பாதை.

**motor :** விசைப்பொறி.

**motorola :** மோட்டோரோலா : நுண் செயலிகள் உட்பட மின்னணுவியல் சாதனங்கள் தயாரிக்கும் நிறுவனம்.

**mount :** பொருத்து; நிறுவு : ஒரு கணினியில் பொருத்தப்பட்ட ஒரு வட்டினை அல்லது நாடாவை கணினி அடையாளங்கண்டு அவற்றை கோப்பு முறைமையில் இணைத்துக் கொள்ளும்படி செய்தல். இச்சொல் பெரும்பாலும் ஆப்பிள் மெக்கின்டோஷ் மற்றும் யூனிக்ஸ் அடிப்படையிலான கணினிகள் வட்டுகளை அணுகச் செய்வதைக் குறிக்கப் பயன்படுகிறது.

**mouse :** எலி வடிவச் சாதனம்; சுட்டு நுண்பொறி; சுட்டுக் கருவி; சுட்டி: காட்சித் திரையில் ஒரு சறுக்குச் சட்டத்தை அல்லது வேறு பொருளை அங்குமிங்கும் நகர்த்துவதற்குப் பயன்படும் சாதனம். ஒரு நுண்பொறியில் ஒரு சிறு பெட்டியின் உச்சியில் ஒரு தட்டையான பரப்பில் நகர்த்தக்கூடிய ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட பொத்தான்



எலி வடிவச் சாதனம்

கள் அமைந்திருக்கும். இந்தப் பெட்டி ஒரு வால் போன்ற கட்டிழை மூலம் இணைக்கப் பட்டிருக்கும். நுண்பொறி நகரும்போது திரையில் சறுக் குச் சட்டம் இணையாக நகர் கிறது. குறிப்பிட்ட செயல் களுக்குக் குறிப்பிட்ட பொத் தான்கள் அழுத்தப்படுகின்றன. சறுக்குச் சட்டத்தைத் திரையில் எந்தத் திசையிலும் மூலை விட்டக் கோட்டிலுங்கூட இந்த நுண் பொறியால் நகர்த்த முடி யும். இது இச்சாதனத்தின் மிகப்பெரும் நன்மையாகும்.

**mouse button : சுட்டு நுண் பொறிப் பொத்தான் :** கணினி நிரல்களை அனுப்புவதற்கு சுட்டு நுண்பொறியின் உச்சி யிலுள்ள ஒரு விசை.

**mousekeys : சுட்டி விசைகள் :** மைக்ரோசாஃப்ட் விண்டோ ஸில் உள்ள ஒரு வசதி. பயனா ளர், சுட்டிக் குறியை நகர்த்த விசைப்பலகையின் எண் களடங்கிய விசைத் தொகுதி யைப் பயன்படுத்த அனுமதிக்கப் படுகிறது. வழக்கமான சுட்டியை நகர்த்துவதில் இடர்ப்பாடு உள்ளவர்களுக்காகவே இத் தகைய வசதி தரப்பட்டுள்ளது.

**mouse pad : சுட்டி நகர்த்து அட்டை :** சுட்டியை நகர்த்து வதற்காக மிருதுவான மேற் பரப்பை அளிக்கின்ற ஏறக்குறைய 9 அங்குல சதுர அளவுள்ள துணி மூடிய ரப்பர் அட்டை.

**mouse pointer : எலி வடிவ சுட்டிக்காட்டி:** சுட்டியின் கட்டுப் பாட்டில் இயங்கும் திரையில் உள்ள பிம்பம் அல்லது சுட்டி (கர்சர்).

**mouse port : சுட்டித் துறை :** 1. பொதுவாக பீசியையொத்த கணினிகளில் சுட்டி அல்லது அதுபோன்ற சுட்டுக் கருவியை இணைப்பதற்கென்றே உள்ள பொருத்துவாய். சுட்டிக்கென ஒரு துறை இல்லையெனில், ஒரு நேரியல் துறையில் சுட்டியை இணைத்துக் கொள்ள லாம். 2. ஆப்பிள் மெக்கின்

டோஷ் கணினிகளில் ஆப்பிள் டெஸ்க்டாப் பாட்டைத் துறையைக் குறிக்கும்.

**mouse sensitivity : சுட்டி உணர்வு :** சுட்டியின் நகர்வுக்கும் திரையில் காட்டியின் (Cursor) நகர்வுக்கும் இடையேயுள்ள உறவு. அதிக உணர்வுள்ள சுட்டியை அதிக தொலைவு நகர்த்தினால்தான் திரையில் காட்டி (cursor) சிறிது தொலைவு நகரும். சுட்டிக்கான இயக்கி நிரலில் உணர்வினைக் கூட்டினால் திரையில் காட்டி மெதுவாக நகரும். இதனால் பயனாளர் தம் விருப்பப்படி காட்டியை நகர்த்த முடியும். கேட்/கேம் (CAD/CAM) பணிகளில் துல்லிய தன்மைக்கு அதிக உணர்வுள்ள சுட்டி உகந்தது.

**mouse trails : சுட்டிச் சுவடுகள் :** சுட்டியை நகர்த்தும்போது திரையில் நகரும் சுட்டிக் குறி (mouse pointer) நகர்ந்து வந்த பாதையில் தெரிகின்ற சுவடுகள். மடிக் கணினி, கைஏட்டுக் கணினி ஆகியவற்றில் சுட்டிச் சுவடுகள் மிகவும் பயன்படும். ஏனெனில் அவற்றில் இயங்கா அணித் திரைக் காட்சி (passive matrix display) முறை உள்ளது. சுட்டிக் குறி நகர்வது, சுவடுகள் இருந்தால்தான் நன்கு தெரியும். பழைய ஒற்றைநிறத் திரைகளுக்கும் சுவடுகள் இருப்பின் நல்லது. விண்டோஸ் இயக்க முறைமையில் தேவையெனில் சுவடுகள் தெரியும்படி வைத்துக் கொள்ளலாம்.

**.mov : .எம்ஓவி :** ஆப்பிளின் குவிக்டைம் வடிவிலுள்ள திரைப்படக் கோப்புகளின் வகைப் பெயர்.

**movable head disk unit : நகரும் முனையுடைய வட்டு அலகு; நகரும் முனை வட்டகம் :** இது ஒரு சேமிப்புச் சாதனம் அல்லது பொறியமை. இதில் கவிந்த முறையில் முலாம் பூசிய வட்டுகள் அடங்கியுள்ளன. இந்த வட்டுகளால் பரப்பில் தரவு இரும எண் தரவு முறைப்படி வரிசைப்படுத்தப்பட்டுள்ள காந்தப் புள்ளிகளின் வடிவில் சேமித்து வைக்கப்படுகின்றன. தரவு, வட்டுகளைச் சுற்றி வட்டப் பாதைகளில் அமைக்கப்படுகின்றன. வட்டுகளில் தேவையான வட்டப் பாதையில் எந்திர முறையில் நகர்த்தக்கூடிய தலைக் கரங்களை ஓடவிட்டுப் படிக்கவும் எழுதவும் செய்யலாம்.

**move : நகர்த்தல்; நகர்வு :** *1.* சேமிப்புச் சாதனத்தில் படியெடுக்க வேண்டிய தரவுவை ஓர் அமைவிடத்திலிருந்து இன்னோர் அமைவிடத்திற்கு நகர்த்துதல். *2.* கணினி வரைகலையில்

ஒரு வரைகலை ஓரினப் பொறியமைவில் தற்போதுள்ள இடநிலையை மாற்றுதல்.

**move/copy** : நகர்த்தல்/நக லெடுத்தல்.

**move/copy sheet** : தாள் நகர்த்து/ நகலெடு.

**movement of arm** : புயத்தின் இயக்கம்.

**moving average** : நகரும் சராசரி; மாறும் சராசரி : ஒரு தரவுத் தொடர் வரிசையில் குறிப்பிலா மாற்றத்தின் ஏற்ற இறக்கச் சராசரியைக் கணித்திடும் முறை. இதன்படி தொடர் வரி சையில் மிக அண்மைக்குரிய வரலாற்றுத் தரவுகளே பயன் படுத்தப்படுகின்றன. தொடர் வரிசையில் தரவுகளில் ஏற்படும் மாற்றத்தையொட்டி இது மாறு வதால் இந்தப் பெயர் ஏற் பட்டது. இந்தச் சராசரி சிறு சிறு ஏற்றத்தாழ்வுகளால் மறைந்து விடக்கூடிய போக்குகளைக் காட்டும்.

**moving molecules** : நகரும் மூலக் கூறு : இந்திய எஸ்.சி.எஸ். அல்லது பி.பி.சி. அக்காரன் கணினிக்கான கல்வி மென் பொருள். அழுத்தம் மற்றும் வானிலையின் மாற்றங்கள் எவ் வாறு மூலக்கூறுகளின் இயக் கத்தைப் பாதிக்கின்றன என் பதைக் காட்டும் யூனிக்கார்ன்.

**mozilla** : மோசில்லா: நெட் ஸ்கேப் நேவிகேட்டர் 'Read me' கோப்பின்படி நெட்ஸ்கேப் என்ற சொல்லின் உச்சரிப்பு இப்படித்தான் அமையும்.

**.mpeg** : .எம்பெக் : எம்பெக் (MPEG) வடிவில் அமைந்த வரைகலைப் படிமக் கோப்பு களை அடையாளங்காட்டும் கோப்பு வகைப்பெயர். (MPEG-Moving Pictures Experts Group).

**MPEG** : எம்பெக் : 1. திரைப்பட வல்லுநர்கள் குழு எனப் பொருள்படும் Moving Pictures Experts Group என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். கேட்பொலி மற்றும் ஒளிக்காட் சித் தகவல்களை இறுக்கிச் சுருக்குவதற்கான தரவரையறை கள். தகவல் தொழில்நுட்பத்துக் கான ஐஎஸ்ஓ/ஐஇசி கூட்டுத் தொழில் நுட்பக்குழு உரு வாக்கியவை. எம்பெக் தர வரை யறை பல்வகைப்பட்டவை. வெவ்வேறு சூழ்நிலைகளில் செயல்படுவதற்கென வடி வமைக்கப்பட்டவை.

**MPEG-1** : எம்பெக்-1 : சிடிரோம் தொழில்நுட்பத்துக்கான மூல எம்பெக் தர வரையறை. ஒளிக் காட்சி மற்றும் கேட்பொலித் தரவுகளைச் சேமிக்கவும் மீட்

டெடுக்கவும் வடிவமைக்கப் பட்டது. 1.5 எம்பிபீஎஸ் வரை யிலான நடுத்தர அலைக் கற்றை இரண்டு கேட்பொலித் தடங் கள், பின்னலுறா ஒளிக்காட்சி ஆகியவற்றை எம்பெக்-1 வரை யறுக்கிறது.

**MPEG-2** : எம்பெக்-2 : எம்பெக்-1 தர வரையறையின் நீட்டித்த வடிவம். தொலைக்காட்சி அலைபரப்புக்காக (ஹெச்டி டீவி உட்பட) வடிவமைக்கப் பட்டது. 40 எம்பிபீஎஸ் வரை யிலான உயர்நிலை அலைக் கற்றையை, ஐந்து கேட்பொலித் தடங்கள்,' பலதரப்பட்ட சட்ட அளவுகள் மற்றும் பின்னலுறு ஒளிக்காட்சிகளை வரையறுக் கிறது.

**MPEG-3** : எம்பெக்-3 : தொடக்கத் தில் உயர் வரையறைத் தொலைக்காட்சிக்கான (HDTV) எம்பெக் தர வரையறையாகும். ஆனால் இதற்குப் பதிலாக எம்பெக்-2 பயன்படுத்த முடி யும் என்பதால், எம்பெக்-3 மதிப்பிழந்தது.

**MPEG-4** : எம்பெக்-4 : ஒளிக் காட்சித் தொலைபேசிகள் மற்றும் பல்லூடகப் பயன்பாடு களுக்காக வடிவமைக்கப்படும் தர வரையறை. எம்பெக்-4 64 கேபிபீஎஸ் வரையிலான அடிநிலை அலைக்கற்றையை வழங்குகிறது.

**.mpg** : .எம்பீஜி : எம்பெக் குழு வினர் வரையறுத்த வடிவமைப் பைப் பயன்படுத்தி இறுக்கிச் சுருக்கப்பட்ட கேட்பொலி மற் றும் ஒளிக்காட்சித் தகவலைக் கொண்ட, குறியாக்கம் செய்யப் பட்ட தகவல் தாரைகளை அடை யாளம் காட்டும் கோப்பு வகைப்பெயர்.

**MP/M** : எம்பீ/எம் : நுண் கணினிகளுக்கான பல்பணி நிரல் எனப் பொருள்படும் Multi tasking Programme for Micro Computers என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். சிபீ/எம் இயக்கமுறைமையின் பல்பணி பல்பயனாளர் பதிப்பாகும்.

**MPOA** : எம்பீஓஏ : ஏடீஎம் வழி யாக பல் நெறிமுறை என்று பொருள்படும் Multi Protocol Over ATM என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஏடீஎம் குழு முன்வைத்த வரன் முறையாகும் இது. (ஏடீஎம் என்பது ஒத்திசையா பரிமாற்றல் பாங்கு என்று பொருள்படும் Asynchronous Transfer Mode என்பதன் சுருக்கம். ஏடீஎம் பயனாளர்கள் மற்றும் விற் பனையாளர்கள் இணைந்த அமைப்பே ஏடீஎம் குழு). தற்

போதுள்ள ஈதர்நெட், டோக்கன் ரிங் மற்றும் டீசிபீ/ஐபீ பிணையங்களுடன் ஏடீஎம்மை ஒருங்கிணைப்பதற்கான வரன்முறைகளாகும்.

**MPR II : எம்பீஆர் II :** விஎல்எஃப் கதிர்வீச்சு உட்பட ஒளிக்காட்சித் திரையகத்திலிருந்து உமிழப்படும் காந்த மற்றும் மின் புலத்தைக் கட்டுப்படுத்தும் தர வரையறை ஆகும். 1987இல் அளவீடுகள் மற்றும் சோதனைகளுக்கான சுவிஸ் கழகம் (Swedish Board for Measurement and Testing) உருவாக்கிய தன்முனைப்புத் தர வரையறை ஆகும். 1990இல் புதுப்பிக்கப்பட்டது.

**MPU : எம்பியூ:** பன்முகச் செயலி அலகு எனப் பொருள்படும். 'Multi Processing Unit' என்ற ஆங்கிலப் பெயரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**.mq : .எம்கியூ :** ஓர் இணைய தள முகவரி மார்ட்டினிக் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக்களப்பெயர்.

**.mr : .எம்ஆர் :** ஓர் இணைய தள முகவரி மௌரிட்டானியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**MR : எம்ஆர் :** மோடம் (இணக்கி) தயார் எனக்குறிக்கும் Modem Ready என்ற தொடரின் சுருக்கம். மோடத்தின் முன் பக்கப் பலகத்தில் (Panel) எரியும் ஒரு சிறு விளக்கு. மோடம் தயார் நிலையில் உள்ளதை உணர்த்துகிறது.

**.ms : .எம்எஸ் :** ஓர் இணைய தள முகவரி மான்ட்செர்ரட் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**MSD : எம்எஸ்டி:** 'மிக முக்கிய இலக்கம்' எனப் பொருள்படும் "Most significant digit" என்ற ஆங்கிலச் சொல்லின் சுருக்கம்.

**MS-DOS : எம்எஸ்-டாஸ்:** மைக்ரோசாஃப்ட் வட்டுச் செயற்பாட்டுப் பொறியமைவு' எனப் பொருள்படும் "Microsoft Disk Operating System" என்ற ஆங்கிலப் பெயரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இது "International Business Machines Corporation" (IBM) தயாரிக்கும் சொந்தக் கணினி (PC)களில் பயன்படுகிறது.

**MS-DOS mode : எம்எஸ் டாஸ் பாங்கு :** விண்டோஸ் 95/98/ என்டி போன்ற 32-பிட் இயக்க முறைமைகளில் பாவிக்கப்படும் எம்எஸ்டாஸ் பணிச்

சூழலை வழங்கும் ஒரு செயல் தளம் (shell).

**MS-DOS shell : எம்எஸ் டாஸ் செயல் தளம் :** பயனாளர் எம்எஸ்டாஸ் இயக்க முறைமையில் அல்லது எம்எஸ் டாஸில் பாவிக்கும் பிற இயக்க முறைமைகளில் செயலாற்ற அனுமதிக்கும் ஒரு சூழல்.

**MSDOS.SYS : எம்எஸ்டாஸ்.சிஸ் :** எம்எஸ்டாஸ் இயக்கத் தொடங்கு வட்டுகளில் மறைத்து வைக்கப்பட்டுள்ள இயக்க முறைமைக் கோப்புகளில் ஒன்று. இயக்க முறைமையின் கருவகமாய் (kernel) விளங்கும் மென்பொருள் இது.

**MSI : எம்எஸ்ஐ:** Medicum scale integration என்பதன் குறும்பெயர். நடுத்தர அளவு ஒருங்கிணைப்பு (Medium scale integration) என்பதன் சுருக்கம்.

**MSSG : எம்எஸ்எஸ்ஜி:** ''செய்தி'' என்று பொருள்படும் "Message" என்ற ஆங்கிலச் சொல்லின் சுருக்கம்.

**.ms.us : .எம்எஸ்.யுஎஸ் :** ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டு மிஸிஸிப்பி மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**MSX : எம்எஸ்எக்ஸ் :** மைக்ரோசாஃப்ட் கழகம் (Microsoft Corporation) வகுத்துள்ள திட்ட அளவு. வீட்டுக் கணினி அங்காடியை ஒருங்கிணைப்பதற்காக ஜப்பானியர் இதனைப் பயன்படுத்துகிறார்கள். ஜப்பான் முழுவதும் எம்எஸ்எக்ஸ் பயன்படுத்தப்படுகிறது.

**.mt : .எம்டீ :** ஓர் இணைய தள முகவரி மால்ட்டா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**MTBF : எம்டீபிஎஃப்:** செயலறவுகளுக்கு இடையிலான சராசரி நேரத்தைக் குறிக்கும் "Mean time between failures" என்ற ஆங்கிலச் சொற்றொடரின் தலைப்பெழுத்துச் சொல். ஒரு பொறியமைவு அல்லது அமைப்பு செயலிழக்காமல் எவ்வளவு நேரம் செயற்படும் என எதிர் பார்க்கப்படும் சராசரி கால நீட்சி.

**MTTF : எம்டீடீஎஃப்:** செயலறவுக்கான சராசரி நேரத்தைக் குறிக்கும் "Mean time to failures" என்ற ஆங்கிலச் சொற்றொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒரு பொறியமைவு அல்லது அமைப்பு குறைபாடின்றி செயற்படும் சராசரி கால நீட்சி.

**MTTR** : எம்டீடீஆர்: பழுது பார்த்தலுக்கான சராசரி நேரத்தைக் குறிக்கும் "Mean Time To Repair" என்னும் ஆங்கிலச் சொற்றொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். ஒரு கணிதப் பொறியமைவில் ஏற் படும் கோளாறினைக் கண்டு பிடித்துச் சரிசெய்வதற்குத் தேவைப்படுமென எதிர்பார்க் கப்படும் சராசரி நேரம்.

**mu** : மியூ: 'μ' என்ற கிரேக்க எழுத்தின் பெயர். இது நுண் மையைக் குறிக்கும் முத லெழுத்துச் சின்னமாகப் பயன் படுத்தப்படுகிறது. எடுத்துக் காட்டு : μS நுண் வினாடி (microp second).

**μC** : மியூசி: நுண்கணிப் பொறியைக் குறிக்கும் சுருக்கப் பெயர். 'μ' என்பது "மியூ" என்ற கிரேக்க எழுத்து ஆகும்.

**MUD** : மட்; எம்யுடி : பல் பயனாளர் நிலவறை என்று பொருள்படும் Multiuser Dungeon என்ற தொடரின் சுருக்கம். இணையத்தில் பல பயனாளர் கள் ஒரே நேரத்தில் பங்கு கொண்டு நிகழ்நிலையில் ஒரு வரோடு ஒருவர் ஊடாடி மகி ழும் விளையாட்டு. இணையத் தில் நிலவும் ஓர் மெய்நிகர் சூழல்.

**MUG** : எம்யூஜி: மம்ப்ஸ் பயன் படுத்துவோர் குழுமம் எனப் பொருள்படும் "Mumps Users Group" என்ற ஆங்கிலச் சொற் றொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**multiaccess** : பல்முனை அணுகல்; பன்முக அணுகல்.

**multiaccess computer** : பன்முக அணுகு கணினி; பல் பயன் கணினி : பல பயனாளர் ஒரே சமயத்தில் கணினித் தரவு ஆதாரங்களைக் கையாளும் வகையில் அமைக்கப்பட்டுள்ள கணினியமைவு. இதில், இயக்கு வதற்கு ஒன்றுக்கு மேற்பட்ட சேர் முனையங்களை இணைப் பதற்கு வசதி இருக்கும். இதில் உட்பாட்டு/வெளிப்பாட்டுச் சேர்முனையங்களை மையச் செயலகத்திலிருந்து வெகு தூரத்திலுள்ள இடங்களில் அமைக்கலாம். அப்போது இவை சேய்மைச் சேர் முனை யங்கள் (Remote terminals) எனப் படும். இதனை ஒரே சமயத்தில் பலர் இயக்கலாம். இந்தப் பொறியமைவு, கணிப்பொறி களையும், அதன் புறநிலைச் சாதனங்களையும் இயன்ற வரையில் மிகப் பெருமளவுக் குப் பயன்படுத்திக் கொள்கிறது.

**multi-access system** : பன்முக அணுகு முறைமை.

**multi address** : பன்முக முகவரி: ஒன்றுக்கு மேற்பட்ட முகவரிப் பகுதி அடங்கிய ஓர் அறிவுறுத்தப் படிவம்.

**multibus** : பல்வேறு வழித்தடம்: இராணுவம், தொழில்துறை மற்றும் விண்வெளி பயன்பாடுகளில் பயன்படுத்தப்படும் மேம்பட்ட தடையக் கட்டுமான அமைப்பு. செய்தி அனுப்புதல், தானாக அமைத்துக் கொள்ளுதல் மற்றும் மென்பொருள் தலையீடுகள் உள்ளடக்கியது.

**multi cast** : பலரறியப் பரப்புதல்; பல் பரப்பல்.

**multicast-backbone** : பல்முனைப் பரப்பு முதுகெலும்பு.

**multicasting** : பல்முனைப் பரப்புகை : ஒரு பிணையத்தில், ஒரே நேரத்தில் ஒரு செய்தியை ஒன்றுக்கு மேற்பட்ட இலக்குகளுக்கு அனுப்பி வைக்கும் செயல்முறை.

**Multi computer system** : பன்முகக் கணினியமைவு; பல் செயல் கணினியமைப்பு : இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட மையச் செயலகம் (CPU) அமைந்துள்ள கணினியமைவு.

**multics** : மல்டிக்ஸ் : மேக் திட்டத்தில் வடிவமைக்கப்பட்ட பன்முக அணுகு இயக்க அமைப்பு மற்றும் டிரேட்மார்க்.

**multidimensional** : பல்பரிமாண.

**multidimensional array** : பல் பரிமாண வரிசை : இரண்டு அல்லது மேற்பட்ட பரிமாணங்களைக் கொண்ட வரிசை.

**multidrop line** : பன்முகப்படி வரி; பன்முனைத் தொடல் : பல் சேர் முனையங்களை இயக்குவதற்கு ஒரேயொரு வழியை அல்லது வரியைப் பயன்படுத்தும் செய்தித் தொடர்புப் பொறியமைவுத் தொகுதி. இதனை பன்முக முனைவரி என்றும் கூறுவர். இது 'வரிக்கு வரி' என்பதற்கு மாறுபட்டது.

**multidrop network** : பன்முனையப் பிணையம்.

**multifile sorting** : பன்முகக் கோப்பு வகைப்படுத்துதல்; பல் கோப்பு வரிசைப்படுத்தல் : ஒவ்வொரு கோப்புக்கும் தனித்தனி நிலையளவுருக்களின் அடிப்படையில், இயக்குபவர் தலையீடின்றி இயக்கக்கூடிய, ஒன்றுக்கு மேற்பட்ட கோப்புகளை வகைப்படுத்தக்கூடிய தானியங்கு வரிசை முறை.

**multifinder** : பல்பணி இயக்கி; மல்ட்டி ஃபைண்டர் : ஆப்பிள் மெக்கின்டோஷின் ஃபைண்டர்

பயன்பாட்டின் ஒரு பதிப்பு. பல்பணிகளை ஒரே நேரத்தில் இயக்க வழிசெய்யும். ஒரே நேரத்தில் பல்வேறு பயன் பாடுகள் நினைவகத்தில் தங்கி யிருக்க வகை செய்வதே இதன் முதன்மையான பயன். ஒற்றைச் சுட்டிச் சொடுக்கில் பயன்பாடு களுக்கிடையே மாறிக் கொள்ள லாம். ஒரு பயன்பாட்டிலுள்ள தரவுவை இன்னொன்றுக்கு நகல் எடுக்கலாம். இயக்கத்தில் இருக்கும் பயன்பாடு மெய் யான பல பணிச் செயல் பாட்டை அனுமதிக்குமெனில் பின்புலத்தில் வேறொரு பணியை இயக்க முடியும்.

**multi frequency monitor : பல் அலையெண் கணித்திரை** : ஒரு எல்லையில் உள்ள அனைத்து அலை எண்களுக்கும் அனு சரித்துச் செல்லும் காட்சித்திரை அல்லது வி.ஜி.ஏ. மற்றும் சூப்பர் வி.ஜி.ஏ. போன்ற குறிப் பிட்ட அலை எண் தொகுதி களுக்கும் ஏற்புடையது.

**multi function board : பன்முகச் செயற்பணிப் பலகை: பல் செயற்பலகை:** ஒரு கணினி யமைவுக்கு ஒன்றுக்கு மேற் பட்ட புதிய திறம்பாட்டினை அளிக்கக்கூடிய செருகிகளைக் கொண்ட சாதனம். எடுத்துக் காட்டு : கடிகாரம் /நாட்காட்டி நினைவக விரிவாக்கப் பலகை அல்லது ஒருபோகு/தொடர் இடைமுகப்பு.

**multi-hop transmission : பல் தாண்டு பரப்புதல்** : மின்னணு மண்டலத்தின் செயற்போக்கு. அதன் வழியாக ஒரு வானொலி அலை பரப்பப்படும்போது, அலையில் அலையெண்ணைப் பொறுத்தே அது அமையும். குறைந்த அலையெண்களில், மின்னணு மண்டலம் அதிக மின்கடத்தி ஊடகமாகப் பயன் பட்டு குறைந்த ஒப்புடன் குறைந்த அளவில் உள்ள எந்த சமிக்கையையும் அனுப்பும். பூமியிலிருந்தும் மின்னணு மண்டலத்தின் கீழ்ப்பகுதி யிலிருந்தும் பிரதிபலித்து VLF அல்லது LF சமிக்கைகளை நீண்ட தூரத்துக்கு பிரதிபலித்தல் மூலம் அனுப்ப முடியும்.

**multihosting : பல் விருந்தோம் பல்** : பல்முனை ஐ.பி. முகவரி களுக்கு முகவரியிடப்பட்ட பொதிகளை கணினி ஏற்றுக் கொள்ளுமாறு கெஞ்சுவதில் ஒருமுறை. எந்த முகவரிக்குப் பொதி அனுப்பப்பட வேண்டி யிருக்கிறது என்பதைக் கண்டு பிடித்தவுடன், ஒரு தனி எந்திரத் தின் மூலமே பல சர்வர்களின் செயல்களை மாயமாகச் செய்ய முடியும்.

**multijob operation** : பன்முகப் பணிச் செயற்பாடு; பல்பணி செயற்பாடு : இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட பணி களை படிப்படியாக ஒரே சமயத்தில் நிறைவேற்றுதல். இது பன்முகச் செயல்முறைப் படுத்துதலுடன் ஒப்பிடத்தக்கது.

**multi layer** : பன்முக அடுக்கு; பல் அடுக்கு : மின் முலாம் பூசிய துவாரங்களின் மூலம் இணைக்கப்பட்டுள்ள பல மின் சுற்று வழி அடுக்குகளைக் கொண்ட ஒரு முன் மாதிரியான அச்சிட்ட மின்சுற்று வழிப் பலகை.

**multi level addressing** : பன் முக நிலை முகவரியிடல்.

**multiline** : பல் கம்பி ; பல் ஒளி யிழை : இரண்டு அல்லது மேற் பட்ட செய்தி அனுப்பும் பாதை களைக் (கம்பிகள் அல்லது ஒளி இழைகள்) கொண்டுள்ள தட யம் அல்லது வழித்தடம் அல்லது குழாய்.

**multiline function** : பல்வரிச் சார்பு.

**multilinked list** : பன்முக தொடுப்புப் பட்டியல்: பல் இணைப்புப் பட்டி : ஒவ்வொரு அணுவும் குறைந்தது இரண்டு கூர் முனைகளைக் கொண்ட பட்டியல்.

**multilink point - to - point protocol** : பல் தொடுப்பு முனைக்கு முனை நெறிமுறை : இணையத் தில் கணினிகள் தமது அலைக் கற்றைகளை ஒருங்கிணைக்க தம்மிடையே பல மெய்ம்மைத் தொடுப்புகளை (real links) ஏற்படுத்திக் கொள்ள அனுமதிக் கும் நெறிமுறை. ஒற்றை மெய்ம்மைத் தொடுப்பின் கொள்திறனைவிட அதிகக் கொள்திறனுள்ள ஒரு மெய் நிகர் தொடுப்பை (virtual link) இந்த நுட்பம் உருவாக்குகிறது.

**multimedia** : பல்லூடகம் : உரை, ஒலி, வரைகலை, அசை வூட்டம், ஒளிக்காட்சி ஆகிய வற்றின் தொகுப்பு. கணினி உலகில் பல்லூடகம் என்பது மீஊடகத்தின் (Hypermedia) ஓர் அங்கமாக விளங்குகிறது. மீ ஊடகம் என்பது மேற்காணும் ஐந்து ஊடகங்களையும் மீஉரை யுடன் (Hypertext) இணைக்கிறது.

**multimedia conference** : பல் ஊடக கருத்தரங்கு; பல்லூடகக் கலந்துரையாடல்.

**multimedia distributed parallel processing** : பல்ஊடக பகிர்ம இணைச் செயல்பாடு.

**multimedia extensions** : பல் ஊடக விரிவாக்கங்கள் : ஒலிப் பதிவு செய்தல், திரும்ப ஒலித்

தல், உயிர்ப்பட திரும்பல், ஜாய் ஸ்டிக், மிடி, சிடி ரோமுக்கான எம்.சி.ஐ. இடைமுகங்கள், ஒளிக்காட்சி வட்டுகள், ஒளிக் காட்சி நாடாக்கள் போன்ற வற்றுக்குப் பயனுள்ள விண்டோ வழமைகள்.

**multimedia PC : பல்லூடக பீசி (கணினி) :** பல்லூடக வசதி பெற்ற சொந்தக் கணினி. இதற் கான மென்பொருள், வன் பொருள் தர அளவீடுகளை பல்லூடக பீசி விற்பனைக் குழு (Multimedia PC Marketing Council) நிர்ணயம் செய்துள்ளது. ஒரு பீசியின் ஒலி, ஒளிக்காட்சி, சிடி-ரோம் இயக்கத் திறன்களின் குறைந்தபட்ச அளவீடுகளை இது வரையறுத்துள்ளது.

**multinode computer : பல்கணு கணினி :** பல செயலிகளைப் பயன்படுத்தும் ஒரு கணினி. மிகச் சிக்கலான பணியில் கணக்கீடுகளை இவை பகிர்ந்து கொள்ளும்.

**multipart forms : பல்பகுதி படி வங்கள்; பல்லடுக்குப் பல்தாள் படிவங்கள் :** கணினியில் தொட் டச்சுப் பொறிகளில் (impact printers) அச்சுக்குப் பயன்படுத் தப்படும் ஒருவகைத் தாள் தொகுதி. இரு தாள்களுக் கிடையே கரியத்தாள் (carbon paper) இருக்கும். அல்லது ஒவ் வொரு தாளின் பின்பக்கமும் ஒருவகை வேதிப்பொருள் பூசப் பட்டிருக்கும். இது கரியத்தாள் போன்றே செயல்படும். கடைசித் தாளில் இப்பூச்சு இருக்காது. ஒரே அச்சில் பல படிகளை எடுக்க இத்தாள் பயன்படுகிறது. ஒரு தொகுதி யில் மொத்தம் எத்தனை படிகள் எடுக்க முடியும் என்பதைக் கொண்டு இத்தாளின் பல்லடுக்கு (multipart) கணக்கிடப்படுகிறது.

**multipass : பன்முக ஓட்டம் :** மிகவும் சிக்கலான ஒரு பணியை ஒரே ஓட்டத்தில் செய்ய முடியாதிருக்கும்போது, ஒரே தரவுவை ஒன்றுக்கு மேற்பட்ட தடவை ஓடவிட்டு அதனை முழுமையாகச் செய்யும்முறை.

**multipass sort : பன்முக ஓட்ட வகைப்படுத்தல் : பல ஓட்ட வரிசையாக்கம் :** ஒரு மையக் கணினி இடைநிலைச் சேமிப்பி யின் உள்முக நினைவகத்தில் அடங்கியுள்ள ஒன்றுக்கு மேற் பட்ட தரவுகளை வகைப்படுத்து வதற்காக வடிவமைக்கப்பட்ட வகைப்படுத்தும் செயல் முறை.

**multi-path propagation : பல்-பாதை பரப்புதல் :** வான-அலை வானொலி இணைப்பின் இறுதி யில் வந்து சேரும் வானொலி அலைகள், மின்னணு மண்டலத் தில் இரண்டு அல்லது மேற்

பட்ட மாறுபட்ட பாதைகளைக் கடந்து வந்திருக்கும். ஒவ்வொரு அலையும் உருவாக்கும் மொத்த கள பலத்தை அது கொண்டிருக்கும். மின்னணு மண்டலம் அதன் அடர்த்தியை ஒட்டி தொடர்ச்சியான ஏற்ற இறக்கங்களைக் கொண்டிருக்கும் என்பதால் பாதை 1 மற்றும் 2-ன் நீளங்கள் மாறும். இந்த மாற்றம் பெறுமிடத்தில் மொத்த கள திறனை மாற்றும்.

**multiple access message : பன்முக அணுகு செய்தி.**

**multiple-access network : பன்முக அணுகு இணையம் :** ஓர் இணையத்தின் ஒவ்வொரு நிலையத்தையும் எந்த நேரத்திலும் அணுகுவதற்கான வசதியுடைய பொறியமைவு. இதில், இரு கணினிகள் ஒரே சமயத்தில் செய்தியனுப்புவதற்கு முடிவு செய்யும்போது அதற்கான நேரங்களை நிருணயிப்பதற்கான வசதி அமைந்துள்ளது.

**multiple access points : பன்முக அணுகு முனைகள்.**

**multiple-address instruction : பன்முக முகவரி ஆணை :** ஒரே செயற்பாட்டுக் குறியீட்டையும் இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட முகவரிகளையும் கொண்டுள்ள ஆணை. பொதுவாக, இரு முகவரி, மூன்று முகவரி, அல்லது நான்கு முகவரி ஆணை என்று குறிக்கப்பட்டிருக்கும். பார்க்க: இரு முகவரிக் கணினி; மூன்று முகவரிக் கணினி. இது, ஒரு முகவரி ஆணைக்கு மாறுபட்டது.

**multiple-address message : பன்முக முகவரிச் செய்தி :** ஒன்றுக்கு மேற்பட்ட இடங்களுக்கு அனுப்ப வேண்டிய செய்தி.

**multiple assignment statement : பன்மதிப்பிருத்து கட்டளை.**

**multiple connector : பன்முக இணைப்பி : பல்வழி இணைப்பி :** பல பாய்வு வரிகளை ஒரே வரிக்குள் அல்லது ஒரு பாய்வு வரியைப் பல பாய்வு வரிகளுக்குள் ஒருங்கிணைப்பதைக் குறிக்கும் இணைப்பி.

**multiple inheritance : பல்வழி மரபுரிமம்; பன்முக மரபுரிமை :** சில பெருநோக்கு நிரலாக்க மொழி (Object Oriented Programming Languages)களில் காணப்படும் பண்புக்கூறு. ஏற்கெனவே உருவாக்கப்பட்டுள்ள ஒன்றுக்கு மேற்பட்ட இனக்குழுக்களை அடிப்படையாகக் கொண்டு புதிய இனக்குழுவை உருவாக்க அனுமதிக்கும் செயல்முறை. இருக்கும் தரவு இனங்களை நீட்டிக்கவும்

இணைக்கவும் பல்வழி மரபுரிமம் வழி வகுக்கிறது. சி++ மொழியில் இத்தகு வசதி உள்ளது. ஆனால் ஜாவா மற்றும் சி# மொழிகளில் பல் வழி மரபுரிமம் அனுமதிக்கப் படுவதில்லை.

**multiple-job processing** : பன் முகப் பணிச் செய்முறைப்படுத் தல் : ஒன்றுக்கு மேற்பட்ட தரவு செய்முறைப்படுத்தும் பணியை ஒரே சமயத்தில் செய்வதைக் கட்டுப்படுத்துதல்.

**multiple-level control break** : பல்நிலை கட்டுப்பாட்டுத் தடை : கட்டுப்பாட்டு தடைகளுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட கட்டுப் பாட்டுக் களத்தைப் பயன் படுத்துவது.

**multiple page preview** : பன் முகப் பக்க முன்காட்சி; பலபக்க முன்காட்சி.

**multiple-pass printing** : பன்முக ஓட்ட அச்சடிப்பு ; பல் ஓட்ட அச் சிடல் : புள்ளி அச்சடிப்பிகளில் உயர்தரமான எழுத்துகளைப் பெறுவதற்குப் பயன்படுத்தப் படும் நுட்பம். அச்சுச் சுருள் முனை ஒரு முறை ஓடியதும், காகிதம் சற்றே நகர்கிறது; மற் றொரு ஓட்டம் நடைபெறு கிறது. இறுதியில் எளிதில் படித் திடக்கூடிய ஓர் அச்செழுத்து கிடைக்கிறது. இது நிழல் அச்சடிப்புக்கு மாறுபட்டது.

**multiple programme loading** : பன்முக நிரல் சுமை.

**multiple punching** : பன்முகத் துளையிடல்: பல் துளையிடல் : ஓர் அட்டைப்பத்தியில் இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட துளைகள் இடுதல்.

**multiple recipients** : பல் பெறு நர்கள் : ஒன்றுக்கு மேற்பட்ட மின்னஞ்சல் முகவரிகளை ஒற்றைவரியில் குறிப்பிட்டு ஒன்றுக்கு மேற்பட்ட பயனா ளர்களுக்கு மின்னஞ்சல்களை ஒரே நேரத்தில் அனுப்பி வைக் கும் திறன். முகவரிகளுக் கிடையே காற்புள்ளி அல்லது அரைப்புள்ளி, பிரிப்புக் குறி யீடாகப் பயன்படும்.

**multiple regression** : பன்முகப் பின்னிறக்கம்: பன்முகப் பின் னடை வியக்கம்: ஒன்று அல் லது அதற்கு மேற்பட்ட விளக்க அல்லது தற்சார்பு மாற்றம் சார்புடையதெனக் கருதப்படும். ஒரு சார்பு மாறிலியின் மதிப்பை ஊகித்தறிவதற்கான புள்ளியியல் முறை.

**multiple selection** : பன்முகத் தெரிவு.

**multiple user system** : பல் பயனாளர் பொறியமைவு; பல்

பயனாளர் அமைவு : ஒரே சமயத்தில் பலர் பயன் படுத்தும் வகையில் வடிவமைக்கப் பட்டுள்ள கணிப்பொறியமைவு.

**multiplex** : பன்முகப் பயன் பாட்டுப் பொறியமைவு: பன்மை யாக்கி : ஒரே சமயத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட பயனாளர் பயன்படுத்துவதற்கு அனுமதி யளிக்கும் பொறியமைவு.

**multiplexer** : ஒருங்கிணைப்பி; பல் பலன் தொகுப்பி.

**multiplexing** : ஒன்றுசேர்த்தல்; ஒருங்கிணைத்தல் : தரவு தொடர்பிலும், உள்ளீட்டு/ வெளியீட்டுச் செயல்பாடு களிலும் ஒற்றைத் தரவு தடத் தில் ஒரே நேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட வெவ்வேறு தரவு சமிக்கைகளை (signals) அனுப்பி வைக்கப் பயன்படுத்தப்படும் ஒரு நுட்பம். ஒரே தடத்தில் பயணிக்கும் வெவ்வேறு தரவு சமிக்கைகள் ஒன்றோடொன்று கலந்துவிடாமல் இருக்க நேரம், இடைவெளி அல்லது அலை வரிசை - இவற்றில் ஒன்றால் பிரிக்கப்பட்டு அனுப்பப்படு கின்றன. இவ்வாறு சமிக்கை களை ஒன்றிணைக்கப் பயன் படும் சாதனம் ஒன்றுசேர்ப்பி அல்லது ஒருங்கிணைப்பி (multiplexer) என்று அழைக்கப் படுகிறது.

**multiplexor (MPX)** : பன்முகக் கணினி; பல் பயன் தொகை: பன்மையாக்கி: ஒரு கணினித் தகவல் வழியினைப் பலர் பகிர்ந்து கொள்வதற்குப் பல செய்தித் தொடர்புப் பாதை களை அனுமதிக்கும் சாதனம்.

**multiplexor channel** : பன்முகக் கணினி வழி: பன்மையாக்கத் தடம் : ஒரு தனி வகை உட் பாட்டு/வெளிப்பாட்டுக் கணினி வழி. இது, ஒரு கணினிக்கும், ஒரே சமயத்தில் செயற்படும் புறநிலையச் சாதனங்களுக்கு யிடையில் தரவுகளை அனுப்ப வல்லது. இது தேர்திறக் கணினி வழியிலிருந்து வேறுபட்டது.

**multiplexor, data channel** : தரவுத் தட ஒன்று சேர்ப்பி.

**multiplication** : பெருக்கல்.

**multiplication time** : பெருக்கல் நேரம்: ஓர் இரும எண்ணுக்கான பெருக்கலைச் செய்வதற்குத் தேவைப்படும் நேரம். இது, பெருக்கல் செயற்பாட்டில் அடங்கியுள்ள கூட்டல் நேரங் கள் அனைத்திற்கும் அகற்சி நேரம் அனைத்திற்கும் சமமான தாகும்.

**multiplier** : பெருக்கி; பெருக் கெண் : *1.* கணக்கீட்டில் ஓர் எண்ணை எத்தனை முறை பெருக்க வேண்டும் என்பதைக்

குறிக்கும் எண். 4×5 என்பதில் 4 என்பது பெருக்கப்படு எண். 5 என்பது பெருக்கெண். 2. கணினியில் இருக்கும் ஒரு மின்னணு சாதனம். மையச் செயலகத்தின் புறத்தே இருப்பது. பெருக்கல் கணக்கீடுகளை இது செய்யும். தொடர் கூட்டல் முறையில் இது நிறைவேற்றப் படும். 4×5 எனில் 4 என்ற எண் 5 முறை கூட்டப்படும்.

**multiplier, digital : இலக்கப் பெருக்கி.**

**multipoint configuration : பல் முனை தகவமைவு :** ஒரு தகவல் தொடர்பு இணைப்பு. பல நிலையங்கள் தொடர்ச்சியாக ஒரே தகவல் தொடர்புத் தடத்தில் இணைக்கப்பட்டிருக் கும். பொதுவாக, தரவு தொடர்பு இணைப்பை ஒரு முதன்மை நிலையம் (ஒரு தலைமைக் கணினி) நிர்வகிக் கும். இணைக்கப்பட்ட ஏனைய நிலையங்கள் அதன் கட்டுப் பாட்டின்கீழ் இயங்கும்.

**multipoint line : பல்முனைக் கம்பி :** மூன்று அல்லது மேற் பட்ட சாதனங்களை ஒன்றோ டொன்று இணைக்கும் ஒரு தனிக் கம்பி.

**multiported memory : பல் இணைப்பு நினைவகம் :** ஒன்றுக்கு மேற்பட்ட அணுகு பாதை மூலம் அதன் உள்ளடக் கங்களை அணுக அனுமதிக்கும் நினைவகம். அதே நினைவகப் பகுதியை ஒரே வேளையில் படிக்கவும் எழுதவும் அது அனுமதிக்கிறது.

**multiprecision arithmetic : பன்முக எண் கணக்கியல் :** ஒவ் வொரு எண்ணையும் குறிப் பதற்கு இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட கணினிச் சொற்கள் பயன் படுத்தப்படும் கணித வடிவம்.

**multiprocessing : பல் நிரலாக்கம்; பன்முகச் செய் முறைப்படுத்தல்: பன்மைச் செய லாக்கம் :** பொதுவான கட்டுப் பாட்டின் கீழுள்ள பன்முக மையச் செயலகம் வாயிலாக இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட ஆணை வரிசை களை ஒரே சமயத்தில் நிறை வேற்றுதல்.

**multi processing arithmetic : பன்முக செயலாக்க எண் கணிதம்.**

**multiprocessor : பல் செயலி; பன்முகச் செய்முறைப்படுத்தி; பன்மைச் செயலகம் :** ஒரே பொதுவான கட்டுப்பாட்டின் கீழ் இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட மையச்

செயலகங்களைக் கொண்ட கணினி இணைவனம்.

**multiprocessor computer systems :** பல்செயலக கணினி அமைப்புகள் : மையச் செயலக வடிவமைப்புக்கு பல்செயலக அமைப்பு முறையைப் பயன் படுத்தும் கணினி அமைப்பு கள். ஆதரவு நுண் செயலகங்கள் பல்லாணைச் செயலகங்கள் மற்றும் இணைச் செயலக வடிவமைப்புகள் ஆகியவை களை உள்ளடக்கியது.

**multiprogramming :** பன்முகச் செயல் முறைப்படுத்தல் : ஒரே கணினியில் ஒரே சமயத்தில் இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட செயல்முறைகளை இயங்கச் செய்தல். நினைவகத் தில் ஒவ்வொரு செயல்முறைக் கும் அதற்கெனத் தனியிடம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதற்குத் தனித்தனிப் புற நிலைச் சாதனங்களும் உள்ளன. இவை அனைத்தும் மையச் செயலக அலகைப் பகிர்ந்து கொள்கின்றன. மையச் செயலக அலகைவிடப் புறநிலைச் சாதனங்கள் மெதுவாகச் செயற் படுகின்றன. இதனால் இது சிக்கனமானது. பெரும்பாலான செயல்முறைகள், தங்கள் நேரத்தைக் கடைசி வரை உட்பாட்டுக்காக /வெளிப் பாட்டுக்காகக் காத்திருந்து கழிக் கின்றன. ஒரு செயல்முறை காத்திருக்கும்போது, இன் னொரு செயல் முறை, மையச் செயலக அலகைப் பயன் படுத்திக் கொள்கிறது.

**multi reel file :** பல்சுருள் கோப்பு.

**multireel sorting :** பன்முகச் சுருணை வகைப்படுத்தல் : ஒன்றுக்கு மேற்பட்ட உட் பாட்டு நாடாவைக் கொண்டுள்ள ஒரு கோப்பின் தானியங்கி வரிசைமுறை.

**multiscan monitor :** பன்முக வருடு திரை; பன்முக நுண் ணாய்வு முகப்பு: ஒரு எல்லைக் குள் உள்ள அனைத்து அலை வரிசைகளுக்கும் அனுசரித்துப் போகும் காட்சித்திரை.

**multistar network :** பன்முக விண்மீன் பிணையம் : தரவு செய்தித் தொடர்புகளின் பிணை யம். இதில் பல தாய்க் கணினி கள் பிணைக்கப்பட்டிருக்கின் றன. ஒவ்வொரு தாய்க் கணினி யும் சிறிய கணினிகளின் நட்சத்திரத்தைச் சொந்தமாகக் கொண்டிருக்கின்றன.

**multi syllabus approach :** பன் முகப் பாடத்திட்ட அணுகு முறை.

**multisync monitor :** பல் ஒத் திசைவுத் திரையகம் : பலதரப்

பட்ட செங்குத்து மற்றும் கிடை மட்ட ஒத்திசைவு வீதங்களுக்கு ஈடுகொடுக்கும் திறன்பெற்ற ஒரு கணினித் திரையகம். அத் திரையகங்களுக்கு பல்வேறு வகைப்பட்ட தகவிகளைப் (Adapters) பயன்படுத்திக் கொள்ள முடியும். ஏனெனில் அவை ஒளிக்காட்சிச் சமிக்கை யில் ஒத்திசைவு வீதத்துக்கு ஏற்ப தாமாகவே தகவமைத்துக் கொள்ளும் திறன் பெற்றவை.

**multisystem network : பன்முகப் பொறியமைவுப் பிணையம்: பன் முறை பொறியமைப்புப் பிணை யம் :** இரண்டு அல்லது அவற் றுக்கு மேற்பட்ட தாய்க் கணினி களைக் கொண்டிருக்கிற செய் தித் தொடர்புகள். இது, செய்தித் தொடர்பு கொள் வதற்கு எந்தக் கணினியைப் பயன்படுத்த ஒரு சேர்முனையம் விரும்புகிறதோ அந்தக் கணினியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள இயல்விக்கிறது.

**multi task : பல் பணி.**

**multitasker :** பல்செயலாற்றல் : பல நிரலாக்கத் தொடர்களை ஒரே நேரத்தில் திறந்து இயங்க வைக்கும் கட்டுப்பாட்டு நிரல் தொடர். நிரல் தொடர்களுக் கிடையே நீங்கள் மாறி செயல் படலாம். இயக்குபவரின் கவனம் தேவைப்படாதவை பின்னணியில் இயங்கிக் கொண்டிருக்க, முன்னணியில் திரையில் உள்ள நிரல் தொடரை நீங்கள் இயக்கலாம்.

**multitasking :** பன்முகப் பணி யாக்கம்: பன்முறைப் பணி யாக்கம் : ஒரே சமயத்தில் இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட பணிகளைச் செய்வதற்கான ஒரு கணினியின் திறம்பாடு.

**multitask operation :** பன்முகப் பணிச் செயற்பாடு : பல் பணி யாக்கம் : ஒரே கணினியில் ஒரே சமயத்தில் இயங்கும் ஒரு செயல்முறையினுள் உள்ள இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட கூறுகள்.

**multithreaded application :** பல் புரிப் பயன்பாடு : ஒரே நேரத்தில் ஒரு நிரலில் உள்ள ஒன்றுக்கு மேற்பட்ட கிளைப் பணிகள், கிளைநிரல் புரி களாகப் பிரிந்து ஒரே நேரத்தில் செயல்படுத்தப்படுவது. இந்த முறையில் செயலி வாளா இருக் கும் நேரம் குறைக்கப்படுகிறது.

**multithreading :** பல் நூலிழைத் தல்: ஒரு தனி நிரல் தொடருக் குள் பல் பணி ஆற்றுதல். ஒரே நேரத்தில் பரிமாற்றங்களையும் செய்திகளையும் அது செயலாக் கம் செய்யும். ஒரே நேரத்தில்

சேர்ந்தியங்கும் ஒலி ஒளி பயன் பாடுகளை உருவாக்கவும் இது தேவைப்படும். திரும்ப வரும் குறியீட்டுமுறை இதற்கு அதி கம் பயன்படுத்தப்படுகிறது.

**multiuser : பல் பயனாளர்:** இரண்டு அல்லது மேற்பட்ட பயனாளர்கள் சேர்ந்தியங்கும் கணினி.

**multiuser DOS : பல் பயனாளர் டாஸ் :** ஒரு தனி பி.சி.யிலிருந்து பல ஊமை முனையங்கள் இயங்க அனுமதிக்கும் டாஸ் - ஏற்புடை இயக்க அமைப்பு. டிஜிட்டல் ரிசர்ச் நிறுவனம் இப்பணியில் 10 முகப்புகள்/ பி.சி.க்களைப் பயன்படுத்தி 386 எஸ்எக்ஸ் மையச் செயலகம் அல்லது உயர் எந்திரங்களை இயக்க முடியும். Concurrent DOS-ஐ நீக்கி இது ஏற்படுத்தப் பட்டது.

**multi user file processing : பல் பயனாளர் கோப்புச் செயலாக்கம்.**

**multiuser systems : பலர் பயன் படுத்தும் பொறியமைவுகள்.**

**multi variate : மல்டி வேரியேட் :** பல மாறிலிகளை எதிர்கால முரைக்கும் மாதிரியில் பயன் படுத்துவது.

**multi view ports : பன்முகக் காட்சித் திரைகள் :** இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட காட்சித்திரைகளைக் காட்டும் திரைக்காட்சி. இந்தக் காட்சித் திரைகள் அடுத்தடுத்து அமைந் திருக்கும். ஒன்றையொன்று சார்ந்திருப்பதில்லை.

**multi volume file : பல தொகுதிக் கோப்பு :** மிகப்பெரிய கோப்பு. இதற்கு ஒன்றுக்கு மேற்பட்ட வட்டுத் தொகுதி, சுருணை, அல்லது காந்த நாடா தேவைப்டும்.

**multiway branching : பல்வழி கிளை பிரித்தல்.**

**MUMPS : மம்ப்ஸ்:** மசாசூசெட்ஸ் பொது மருத்துவமனைப் பயன் பாட்டுச் செயல்முறைப்படுத் திப் பொறியமைவு எனப் பொருள்படும் "Massachusetts - General Hospital Utility Program ming System" என்ற ஆங்கிலச் சொற்றொடரின் சுருக்கம். இது, குறிப்பாக மருத்துவ ஆவணங் களைக் கையாள்வதற்காக வடி வமைக்கப்பட்ட ஒரு கணினி மொழி. தரவு மேலாண்மை யிலும் வாசகங்களைக் கையாள் வதிலும் இந்த மொழி வெகு வாகப் பயனுடையது.

**MUP : மியூபீ :** நுண் செயலி என்று பொருள்படும் 'Micro processor' என்ற ஆங்கிலச் சொல்லின் சுருக்கம். (μ என்பது

மியூ என்ற கிரேக்க எழுத்து. இது நுண்மையைக் குறிக்கும் குறியீடாகும்).

**mus** : மியூஎஸ் : நுண் வினாடி என்று பொருள்படும் 'μs' என்ற ஆங்கிலச் சொல்லின் சுருக்கம். 'μ' என்ற கிரேக்க எழுத்து நுண்மையைக் குறிக்கும்.

**MUSE** : மியூஸ் : பல்பயனாளர் பாவிப்புப் பணிச்சூழல் என்று பொருள்படும் Multi User Simulation Environment என்பதன் சுருக்கம்.

**musical language** : **இசை மொழி** : கணினி உட்பாட்டுக்குப் பொருத்தமான குறியீட்டில் இசைச் சுரங்களைக் குறிப்பதற் கான முறை.

**musicomp** : **இசைச்செயல் முறை மொழி; இசையமைப்பு** : இசையமைப்புச் செயல்முறை மொழி. இது மூல இசைச் சுரங்களை உருவாக்குவதற்கும் இசை ஒருங்கிணைப்புக்கும் வழி செய்யும் நுட்பங்களை அளிக்கிறது.

**music synthesizer** : **இசை இணைப்பி:** இசையைப் பதிவு செய்வதற்கும், ஒளி பரப்பு வதற்கும் ஒரு கணினியுடன் இணைக்கப்படும் சாதனம்.

**mute** : ஒலி நிறுத்தம்.

**mutual exclusion** : **பரஸ்பர விலக்கம்:** ஒரு நிரலாக்க நுட் பம். ஒரு நினைவக இருப்பிடம் அல்லது உள்ளீட்டு/வெளி யீட்டுத்துறை அல்லது ஒரு கோப்பு போன்ற ஏதேனும் ஒரு கணினி வளத்தை ஒரு நேரத்தில் ஒரு நிரல் அல்லது நிரல்கூறு மட்டுமே அணுகுவதை உறுதிப் படுத்தும் முறை. அறைக் கதவில் நான் வேலையாய் இருக்கிறேன்; இடையூறு செய் யாதீர் என்று ஓர் அறிவிப்புப் பலகையை வைத்துவிட்டு உள்ளே பணிகளை மேற் கொள்ளும் முறையை ஒத்தது. ஓர் அறிவிப்புக் குறிப்பு அல்லது குறியீடு (semaphores/flags) மூலம் ஒன்றுக்கு மேற்பட்ட நிரல்களின்/நிரல்கூறுகளின் நடவடிக்கைகள் முறைப் படுத்தப்படுகின்றன.

**MUX** : மக்ஸ்: 'Multiplexor' என்ற ஆங்கிலச் சொல்லின் சுருக்கம்.

**.mv** : .எம்வி : ஓர் இணைய தள முகவரி மாலத் தீவுகளைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**MVC architecture** : **எம்விசி கட்டுமானம்.**

**MVT** : எம்விடீ: ஒரு மாறியல் எண்ணிக்கைப் பணிகளுடன் கூடிய பன்முகச் செயல்முறைப்

படுத்துதல் என்று பொருள்படும் "Multi programming with a variable number of tasks" என்ற ஆங்கிலச் சொற்றொடரின் சுருக்கம். இதனைப் ''பல தொல்லைச் செயல்படுத்துதல்'' என்றும் வேடிக்கையாகக் கூறுவர்.

**.mw : .எம்டபிள்யூ :** ஓர் இணைய தள முகவரி மாலாவி நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.mx : .எம்எக்ஸ் :** ஓர் இணைய தள முகவரி மெக்ஸிகோ நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.my : .எம்ஒய் :** ஓர் இணைய தள முகவரி மலேசியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**my briefcase : என் கைப்பெட்டி:** விண்டோஸ் 95 மற்றும் விண்டோஸ் என்டி 4.0-வுக்கு கோப்பு-ஒருங்கிணைப்பு பயன் பாடுகளைப் பயன்படுத்தும் மேசைக் கணினி பிம்பம்.

**My Computer : என் கணினி.** விண்டோஸ் 95/98 இயக்கமுறை மையில் முகப்புத்திரையில் இருக்கும் ஒரு கோப்புறை.

**My Documents : என் ஆவணங் கள்.** விண்டோஸ் 95/98 இயக்க முறைமையில் முன்னியல்பாய் இருக்கும் ஒரு கோப்புறை.

**mylar : மைலார்:** காந்த நாடா போன்ற தகவல் ஊடகத்திற்கு ஓர் ஆதாரமாகப் பயன்படுத்தப் படும் பாலிஸ்டர் படலத்தின் வணிகப் பெயர்.

**MYOB : எம்யோப் :** உன் வேலை யைப் பார் எனப் பொருள்படும் Mind Your Own Business என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். மின்னஞ்சல் மற்றும் செய்திக் குழுக்களில் பயன்படுத்தப்படுவது.

**my two cents : என் பங்களிப்பு; மை டூ சென்ட்ஸ் :** செய்திக் குழுக் கட்டுரைகளிலும் அவ் வப்போது மின்னஞ்சல் செய்தி களிலும் அஞ்சல் பட்டியலிலும் பயன்படுத்தப்படும் ஒரு தொடர். குறிப்பிட்ட செய்தி, நடந்து கொண்டிருக்கும் விவாதத்தில் எழுத்தாளரின் பங்களிப்பு என்பதைக் குறிப் பிடுவது.

**.mz : .எம்இஸட் :** ஓர் இணைய தள முகவரி மொஸாம்பிக் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

# N

**.na :** .என்ஏ : ஓர் இணைய தள முகவரி, நமீபியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**naive user :** கற்றுக்குட்டி.

**NAK :** நேக் : ஏற்காமை அறிவிப்பு : Negative Acknowledgement என்பதன் குறும்பெயர். ஒரு செய்தி பெறப்பட்டது அல்லது ஒரு முகப்பு அதை அனுப்ப விரும்பவில்லை என்பதைக் குறிக்கும் தரவுத் தொடர்புக் குறியீடு.

**NAL :** என்ஏஎல் : ஆப்பிள் National Aeronautical Laboratory என்பதன் குறும்பெயர். பெங்களூரில் உள்ள இந்திய அரசின் நிறுவனமான தேசிய விமானவியல் ஆய்வகம்.

**name :** பெயர் : நிரல் தொடர், கட்டுப்பாட்டுச் சொற்றொடர் வாக்கியம், தரவு பகுதிகள் அல்லது பட்டியலிடப்பட்ட செயல்முறை போன்றவைகளை அடையாளம் காட்டும் எண்ணெழுத்துத் தொடர்.

**name and location :** பெயரும் இருப்பிடமும்.

**name box :** பெயர்ப் பெட்டி.

**named anchor :** பெயரிட்ட நங்கூரம்: ஹெச்டிஎம்எல் மொழி ஆவணத்தில் பயன்படுத்தப் படும் ஒரு குறிசொல். ஒரு மீத்தொடுப்புக்கான இலக்கைக் குறிக்கிறது. பெயரிட்ட நங்கூரங்கள் பயனுள்ளவை. ஏனெனில் ஓர் ஆவணத்துக்குள்ளேயே ஒரு குறிப்பிட்ட பகுதிக்கு ஒரு தொகுப்பின் மூலம் தாவிச் செல்லப் பயன் படுகிறது. பெயரிட்ட இலக்கு என்றும் அழைக்கப்படும்.

**named pipes :** நேம்டு பைப்ஸ் : சிறு பரப்பு இணைய நிர்வாகி ஐ.பி.சி. சலுகை. ஒரு இணையத்தில் அல்லது ஒரே கணினிக்குள்ளே ஓடிக்கொண்டிருக்கும் ஒரு பயன்பாட்டிலிருந்து மற்றொன்றுக்கு தரவுகளை மாற்ற அனுமதிப்பது. செயலாக்கங்களுக்கிடையிலான தரவு தொடர்புகளுக்கு 'பைப்' (pipes) என்ற சொல்லை யூனிக்ஸ் உருவாக்கியது.

**name field :** பெயர்ப் புலம்.

**name, file :** கோப்புப் பெயர்.

**name of the font :** எழுத்துருவின் பெயர்.

**name server : பெயர் வழங்கு பவர்:** இணையத் தொடர்புப் பெயர்களையும் எண் ஐ.பி. முகவரிகளையும் கவனிக்கின்ற டாசில் இயங்கும் கணினி. பெயரை ஒரு பருப்பொருள் முகவரியாக மாற்றும் மென் பொருள். பெயர்கள் என்பவை பயனாளர் பெயர்கள், கணினி கள், அச்சுப்பொறிகள், சேவைகள் அல்லது கோப்புகள் போன்ற எதுவாகவும் இருக்கலாம்.

**name value pair : பெயர்-மதிப்பு இணை :** பேர்ல் (perl) நிரலாக்க மொழியில் ஒரு தரவு தொகுதி யில் தகவலானது ஒரு குறிப் பிட்ட பெயருடன் தொடர் புடையதாயுள்ளது.

**NAMPS : நாம்ப்ஸ் :** குறுங் கற்றை தொடர்முறை நட மாடும் தொலைபேசிச் சேவை என்று பொருள்படும் Narrow Band Analog Mobile Phone Service என்ற தொடரின் தலைப் பெழுத்துச் சுருக்கம். மோட்டோ ரோலோ நிறுவனம் முன்வைத்த தர வரையறை. தற்போதைய ஆம்ப்ஸ் (AMPS) செல் தொலை பேசி தரவரையறையை இலக்க முறைச் சமிக்கைத் தகவலுடன் இணைத்து உருவாக்கப் பட்டது. உயர் செயல்திறன் மற்றும் அதிக ஆக்கத்திறனும் கிடைக்கும்.

**NAND : நந்த் :** Not-and என்பதன் குறுக்கம். இது ஒரு அளவை இயக்கி. P ஒரு கூற்று; Q ஒரு கூற்று என்றால் P, Q வின் நந்த் உண்மையாக வேண்டுமானால் ஒரு கூற்றாவது பொய்யாக இருக்கவேண்டும் அல்லது எல்லா கூற்றுகளும் உண்மை யாக இருந்தால் நந்த் பொய்யாக இருக்க வேண்டும் என்பதை உணர்த்துவது. Not, and இரண்டும் இணைந்தது.

**nano : நானோ :** ஒரு கோடியில் ஒன்று என்பதை உணர்த்தும் முன்னொட்டு.

**nanoacre : நானோக்கர் :** கணினி யின் சிப்புப் பரப்பைக் குறிப் பிடும் அலகு. ஒரு ஏக்கரில் நூறு கோடியில் ஒன்று. ஒரு ஒருங் கிணைந்த மின்சுற்றின் பரப்பைக் குறிப்பிடுவது.

**nanocomputer : நானோ கணினி :** ஒரு நொடியில் நூறு கோடியில் ஒரு பங்கு நேரத்தில் செய லாக்கம் செய்யவல்ல கணினி.

**nanosecond : நானோ நொடி :** ஒரு நொடியில் பில்லியனில் ஒன்று. ஒரு நொடியில் ஆயிரம் மில்லியனில் ஒன்று. ns என்று சுருக்கப்படுவது. மில்லி, மைக்ரோ நொடி போன்றது. இப்போது உருவாக்கப்படும் கணினிகள் ஒரு நானோ

நொடிக்கும் குறைவான நேரத்தில் நிரலைச் செய்யவல்லன. ஒரு நொடியில் ஒரு பில்லியன் நிரல்களைச் செய்யவல்லதாக கணினி உருவாகி உள்ளது.

**Napier, John : 1550-1617 : ஜான் நேப்பியர் :** (1550-1617) : கணக்கிடுதல் மற்றும் கணிதத்தில் பல சாதனைகளைப் புரிந்த ஸ்காட்டிஷ் பிரபு. மடக்கை (லாகரிதம்)யும் நேப்பியரின் கோல் என்னும் கணக்கிடும் சாதனத்தையும் உருவாக்கியவர்.

**napiers bones : நேப்பியரின் கோல்கள்; நேப்பியர் குச்சிகள் :** பெருக்கவும், வகுக்கவும், வர்க்கமூலம் கண்டுபிடிக்கவும் பயன்படும் எண் கம்பிகளைக் கொண்ட தொகுதி. *1614*இல் ஜான் நேப்பியரால் கணக்கிடும் கம்பிகள் உருவாக்கப்பட்டன. ஸ்லைடு ரூலைக் கண்டுபிடிக்க *1630*இல் வில்லியம் ஆட்ராட் இதைப் பயன்படுத்தினார்.

**narrowband : குறுகிய கற்றை :** குறைந்த அலைவரிசைகளில் குறைந்த அளவு தரவுகளைக் கையாளும் தகவல் தொடர்பு அமைப்புகளை இது குறிப்பிடுகிறது.

**narrow bandwidth channels : குறுங்கற்றை வழித்தடங்கள் :** தந்திர வழித் தடங்கள் போன்ற குறைந்த வேகங்களில் மட்டுமே தகவல்களை அனுப்பும் தகவல் தொடர்பு வழித் தடங்கள்.

**narrow SCSI : குறுகிய ஸ்கஸ்ஸி :** ஒரு நேரத்தில் எட்டு துண்மி (bit) தரவுவை மட்டுமே அனுப்ப வல்ல ஸ்கஸ்ஸி அல்லது ஸ்கஸ்ஸி-2 இடைமுகம்.

**NASA : நாசா :** National Aeronautics and Space Administration என்பதன் குறும்பெயர்.

**nass-schneidermann chart : நாஸ்-சினைடர்மேன் விளக்கப் படம் :** *1970* களின் ஆரம்பத்தில் ஐசக் நாசி மற்றும் பென் சினைடர்மேன் உருவாக்கிய ஒரு வகை ஓடுபடம். பல்வேறு வடிவமுடைய பெட்டிகளையும் வடிவங்களையும் பயன்படுத்தி பொருள்களை உற்பத்தி செய்தல் அல்லது சேவைகளை அளித்தல் தொடர்பான பல செயல்களைக் குறிப்பிட வைத்தார். என்எஸ் (NS) வரைபடம் அல்லது என்எஸ் வடிவங்கள் என்று இவை அழைக்கப்படுகின்றன. கணினி நிரல் தொடர்களுக்கான ஓடு படங்களை அமைப்பதற்கும் என்எஸ் வரைபடங்கள் பயன்படுகின்றன.

**NAT : நேட் :** பிணைய முகவரி பெயர்ப்பு எனப் பொருள்படும்

Network Address Translation என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். அக இணையம் (Intranet) அல்லது பிற தனியார் பிணையங்களுக் குள் பயன்படுத்தப்படும் ஐபீ முகவரிகளையும் இணையத் தின் ஐபீ முகவரிகளையும் பெற இந்த அணுகுமுறை உதவுகிறது.

**National Attachment Point : தேசிய இணைப்பு முனை :** அமெரிக்காவில் தேசிய அறிவியல் கழகத்தினர் (National Science Foundation) இணையப் போக்குவரத்துக்கு அமைத்த நான்கு இணைப்பக முனை களில் ஒன்று. இணையச் சேவையாளர்கள் தங்களுடைய பிணையத்தை ஏதேனும் ஒரு தேசிய இணைப்பு முனையில் இணைத்துக்கொள்ள வேண் டும். அதன் மூலம் பிற இணையச் சேவையர்களுடன் தகவலை பரிமாறிக் கொள்ள முடியும். நான்கு தேசிய இணைப்பு முனைகள் இருக்குமிடங்கள். *(1) சான்ஃபிரான்ஸிஸ்கோ வளை குடாப்பகுதி (பசிபிக் பெல் நிறுவனம் இயக்குகிறது) (2) சிகாகோ (அமெரிடெக் நிறு வனம்) (3) நியூயார்க் (ஸ்பி ரின்ட் நிறுவனம்) (4) வாசிங் டன் டி.சி. (என் எஃப்எஸ் அமைப்பு).*

**National Information Infrastructure : தேசிய தகவல் உள்கட் டமைப்பு :** வருங்கால உயர் அகல்கற்றை (Broad Band) விரி பரப்புப் பிணையம். அமெரிக்க அரசு முன்வைத்துள்ள திட்டம். அமெரிக்கா முழுவதும் உள்ள பயனாளர்களுக்கு தரவு, தொலைநகல், ஒளிக்காட்சி மற்றும் குரல் ஆகியவற்றை எடுத்துச் செல்லும். பெரும் பாலும் தனியார் நிறுவனங்களே இப்பிணையத்தை நிறுவ உள் ளன. இணையத்தில் கேட்ட வுடன் ஒளிக்காட்சி கிடைக் கக்கூடிய சேவையை பயனாளர் கள் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டுள்ளனர். இத்தேவை தனியார் நிறுவனங்களை இத் திசை நோக்கித் தூண்டும் என அமெரிக்க அரசு கருதுகிறது. இதன்மூலம் கிடைக்கக்கூடிய சேவைகள் என முன் வைக்கப் பட்டுள்ள பெரும்பாலான சேவைகள் இணையத்திலேயே இப்போது கிடைக்கத் தொடங்கி விட்டன.

**National Science Foundation : தேசிய அறிவியல் கழகம் :** அமெரிக்க அரசின் முகமை. அறி வியல் ஆய்வுக்கென அமைக்கப் பட்டது. ஆய்வுத் திட்டப் பணிகளுக்கும் அறிவியல் தகவல் தொடர்புத் திட்டப்

பணிகளுக்கும் நிதியுதவி அளிக்கப்பட்டது. முன்னாளில் இணையத்தின் முதுகெலும்பாய் விளங்கிய என்எஸ்எஃப்நெட் இதன் படைப்பே.

**native : உள்ளார்ந்த :** தொடக்கத்தில் இருந்த வடிவில் நிலவக்கூடிய ஒன்றின் பண்புக்கூறு. (எ-டு) மென்பொருள் பயன்பாடுகள் பல்வேறு கோப்பு வடிவங்களைக் கையாளும் திறன் படைத்தவை. ஆனாலும் அவை உள்ளார்ந்த நிலையில் தன் சொந்த வடிவமைப்பையே பயன்படுத்திக் கொள்கின்றன. வேறு வடிவமைப்பில் உள்ள கோப்புகள் பயன்பாட்டு மென்பொருளின் உள்ளார்ந்த வடிவமைப்புக்கு மாற்றப்பட வேண்டும்.

**native application : உள்ளார்ந்த பயன்பாடு :** ஒரு குறிப்பிட்ட வகை நுண்செயலிக்காக உருவாக்கப்பட்ட நிரல். அந்த நுண்செயலியில் மட்டுமே செயல்படும். உள்ளார்ந்த பயன்பாடு அல்லாத பயன்பாடுகளைவிட அதிவேகமாகச் செயல்படும். அல்லது பயன்பாடுகள் வேறொரு இடைநிலை நிரலின் உதவியுடன்தான் செயல்பட முடியும்.

**native code : உள்ளார்ந்த குறிமுறை :** ஒரு குறிப்பிட்ட கணினி அல்லது செயலிக்காக எழுதப்பட்ட கட்டளைத் தொகுதி.

**native compiler : தன்மொழி மாற்றி : உள்ளூர்த் தொகுப்பி:** ஒரு குறிப்பிட்ட கணினியில் மட்டும் பயனாகக்கூடிய குறியீட்டை உருவாக்கும் தொகுப்பு.

**native data base : உள்ளார்ந்த தரவுத் தளம்.**

**native file format : உள்ளார்ந்த கோப்பு வடிவம் :** ஒரு பயன்பாடு உள்ளார்ந்த நிலையில் தகவலை கையாளப் பயன்படுத்தும் கோப்பு வடிவம். பிற வடிவமைப்புகளில் உள்ள கோப்புகளை உள்ளார்ந்த அமைப்புக்கு மாற்றிய பின்னரே கையாள முடியும். (எ-டு) ஒரு சொல்செயலி மென்பொருள், ஆஸ்கி (ASCII) உரை வடிவில் உள்ள உரைக்கோப்புகளை அடையாளம் காணும். ஆனால் அவற்றை தனக்கேயுரிய சொந்த வடிவமைப்புக்கு மாற்றிய பின்னரே அவற்றைத் திரையில் காட்டும்.

**native language : தன் மொழி :** ஒரு உற்பத்தியாளரின் எந்திரங்களுக்கு மட்டுமே புரியும் மொழியைக் கொண்ட கணினி.

**native mode : உள்ளூர் முறை:** ஒரு கணினியின் வழக்கமான ஓட்டும் முறை. அதன் உள்ளே

அமைந்த நிரல் தொகுதியிலிருந்து நிரலாக்கத் தொடரை இயக்குவது. 386 போன்ற உயர் நிலை கணினி பாதுகாக்கப் பட்ட முறையில் இயங்கும்.

**native user : தன்னார்வப் பயனாளர்** : கணினியில் ஏதாவது செய்யவேண்டும் என்று ஆசைப்படுபவர். ஆனால் அதற்கு நிரல் தொடர் அமைக்கும் பட்டறிவு இல்லாதவர்.

**natural : இயற்கையான; இயல்பான** : மென்பொருள் ஏஜி (AG) யிடமிருந்து வரும் நான்காம் தலைமுறை மொழி. பெருமுகக் கணினியிலிருந்து நுண் கணினி வரையிலான பலவகைக் கணினிகளில் இயங்குவது.

**natural input-output devices : இயற்கை உட்பாட்டு - வெளிப் பாட்டுச் சாதனங்கள்.**

**natural language : இயல்மொழி; இயற்கை மொழி** : மனிதர்கள் பேசுகின்ற அல்லது எழுதுகின்ற மொழி. கணினி நிரலாக்க மொழி மற்றும் எந்திர மொழியிலிருந்து மாறுபட்டது. கணினி அறிவியலில் செயற்கை நுண்ணறிவு என்ற பிரிவில், இயற்கை மொழிகளை கணினி புரிந்து கொள்வது, அதனைக் கணினிச் சூழலுக்கேற்ப பயன்படுத்துவது ஆகியவை பற்றிய ஆய்வுகள் அடங்கும்.

**natural language processing : இயற்கை மொழியாய்வுச் செயலாக்கம்** : கணினி அறிவியல் மற்றும் மொழியியல் ஆகியவற்றில் ஒரு ஆய்வுப் புலம். எழுதப்படும் அல்லது பேசப்படும் மனித மொழியை அறிந்து கொள்ளும் மனித மொழிக்கு மறுமொழியிறுக்கும் கணினி அமைப்புகள் பற்றி ஆராயப்படுகின்றன.

**natural language query : இயற்கை மொழி வினவல்** : ஒரு தரவுத் தள முறைமையில் தரவுவைப் பெற இயற்கை மொழிகளின் (ஆங்கிலம், தமிழ் போன்ற) கட்டளைகள் மூலம் உருவாக்கப்பட்ட வினவல். (எ-டு) எண்பதுக்குமேல் மதிப்பெண் பெற்றவர் எத்தனை பேர்? வினவல் கட்டளைத் தொடர் அமைப்பு குறிப்பிட்ட இலக்கண விதிகளுக்கு உட்பட்டு இருக்க வேண்டும். அப்போதுதான் கணினி அதைப் பகுத்து அறிந்து செயலாற்ற முடியும்.

**natural language support : இயற்கை மொழி ஆதரவு** : மனிதர்களின் குரலை அறிந்து கொள்ளும் கணினி. பயனாளர்

குரல் கட்டளைகளை அவரின் சொந்த மொழியிலேயே தரலாம். கணினி அதற்கேற்ப செயலாற்றும்.

natural language system : இயற்கை மொழியாய்வு அமைப்புகள்; இயற்கை மொழியாய்வு முறைமை.

natural number : இயற்கை எண் : சுழி அல்லது அதைவிடக் கூடுதல் மதிப்புள்ள ஒரு முழு எண்.

natural video image : இயற்கையான ஒளிக்காட்சித் தோற்றம் : ஒளிக்காட்சி ஒளிப்படக் கருவி வி.சி.ஆர். அல்லது ஒளிக்காட்சி வட்டு இயக்கி போன்றவற்றில் இருந்து எடுக்கப்பட்ட உருவம். உண்மையான பருப் பொருளிடமிருந்து பிரதிபலிக்கப்பட்டு தோன்றிய ஒளிக்கதிர்களைக் கொண்டது என்று எதிர்பார்க்கப்படுகிறது. கணினி உருவாக்கும் உருவங்களிலிருந்து மாறுபட்டது.

NAU : நாவ்: (1) Network Access Unit என்பதன் குறும்பெயர். கணினியை லேனுக்கு ஏற்றதாகச் செய்யும் இடைமுக அட்டை. (2) Network Addressable Unit என்பதன் குறும்பெயர். பெயர் மற்றும் முகவரியால் குறிக்கக்கூடிய எஸ்.என்.ஏ. அலகு.

navigation : வழிநடத்தல்; வழி செலுத்தல்; வழி கண்டறிதல்.

navigation bar : வழிநடத்து பட்டை : இணையத்தில் உலா வர அல்லது ஒரு குறிப்பிட்ட வலைத் தளத்தைச் சுற்றி வர மீத்தொடுப்புகளைத் தொகுத்து முகப்புப் பக்கத்தில் வைக்கப் பட்டுள்ள பட்டை.

navigation button : வழி செலுத்து பொத்தான்.

navigation keys : வழிநடத்து விசைகள் : திரையில் காட்டியின் (cursor) நடமாட்டத்தைக் கட்டுப்படுத்தும் அல்லது வழி நடத்தும் விசைகள். விசைப் பலகையில் உள்ள நான்கு அம்புக்குறிகள், பின் இடவெளி (backspace), முடிவு (End), தொடக்கம் (Home), மேல்பக்கம் (Page up), கீழ்ப்பக்கம் (Page Down) ஆகிய விசைகள் இவற்றில் அடங்கும்.

navigator : நேவிக்கேட்டர் : நெட்ஸ்கேப் நிறுவனம் உருவாக்கிய இணைய உலாவி மென்பொருள் (Browser).

navigator for e-mail : மின் அஞ்சல் வழிசெலுத்தி.

.navy.mil : .நேவி.மில் : ஓர் இணைய தள முகவரி அமெரிக்கக் கப்பற்படையைச் சேர்ந்தது

என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**.nb.ca : .என்பி.சிஏ :** ஓர் இணைய தள முகவரி கனடா நாட்டைச் சேர்ந்த நியூ புருன் ஸ்விக் மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**NBCD : என்பிசிடி :** Natural Binary Coded Decimal என்பதன் குறும் பெயர்.

**NBP : என்பிபீ :** பெயர் பிணைப்பு நெறிமுறை என்று பொருள்படும் Name Binding Protocol என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஆப்பிள்டாக் குறும்பரப்புப் பிணையத்தில் பயனாளருக்குத் தெரிந்த கணுக் கணினிகளின் பெயர்களை ஆப்பிள்டாக் முகவரிகளாக மாற்றும் பயன் பாட்டு நெறிமுறை.

**NBS : என்பிஎஸ் :** National Bureau of Standards என்பதன் குறும் பெயர். கணினி தொழிலுக்கு தர நிர்ணயங்களை உருவாக்கப் பொறுப்பேற்றுள்ள அரசு அமைப்பு.

**N/C : என்/சி :** National Computer Conferences என்பதன் குறும் பெயர், ஆண்டுதோறும் (அமெரிக் காவில்) நடைபெறும் ஒரு பெரிய கணினி வணிகக் கண்காட்சி.

**.nc : .என்சி :** ஓர் இணைய தள முகவரி நியூ காலிடோனியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**NCB : என்சிபி :** Network Control Block என்பதன் குறும்பெயர். நெட்பயாஸ் (NetBIOS) போக்கு வரத்து விதிமுறைகளில் பயன் படுத்தப்படும் பொதி அல்லது பொட்டல அமைவு.

**NCC : என்சிசி :** தேசிய கணினி மாநாடு எனப் பொருள்படும். 'National Computer Conference' என்பதன் குறும்பெயர். கணினி பயனாளர்கள், கல்வியாளர்கள், மென்பொருள் கருவி உரு வாக்குபவர்கள் ஆகியோரைக் கொண்டு ஆண்டுதோறும் நடை பெறும் மாநாடு. அமெரிக்க தரவுச் செயலாக்கச் சங்கங்களின் மாநாடு சார்பில் நடைபெறுகிறது.

**NCGA : என்சிஜிஏ :** National Computer Graphics Association என்பதன் குறும்பெயர்.

**N-channel MOS (NMOS) : என்மாஸ் :** எதிர்மறை சக்தி அளிக்கும் மின்னோட்ட முறை யினைப் பயன்படுத்தும் மின் சுற்று. PMOS-ஐ விட இரண்டு மடங்கு வேகம் கொண்டது. ஆனால் குறைவான அடர்த்தி கொண்டது.

**NCIC : என்சிஐசி :** 'தேசியக் குற்றத் தகவல் மையம்' எனப் பொருள்படும் 'National Crime Information Centre' என்பதன் குறும்பெயர். அமெரிக்கா முழுவதும் நடைபெறும் குற்றங்கள் தொடர்பான தரவுகளைக் கொண்ட அமெரிக்கப் புலனாய்வுத் துறையின் கணினி மய கட்டமைப்பு. சட்டத்தைப் பராமரிக்கும் அமைப்புகள். அரசின் எல்லா நிலைகளிலும் இதை அணுகலாம்.

**NCR : என்சிஆர் :** National Cash Register என்பதன் குறும்பெயர். ரொக்கப் பதிவேடுகளை உற்பத்தி செய்ய ஜான் ஹெச். பேட்டர்சன் உருவாக்கிய ஒரு அமெரிக்க நிறுவனம்.

**NCR corporation : என்சிஆர். அமைவனம் :** கணினிக் கருவியைப் பெருமளவில் உற்பத்தி செய்யும் அமைவனம்.

**NCR paper : என்சிஆர். காகிதம் :** No Carbon Required என்பதன் குறும்பெயர். கார்பன் காகிதத்தைப் பயன்படுத்தாத பல்-பகுதி காகிதம். முந்தைய தாளின் பின் பகுதியில் மை சேர்க்கப் பட்டிருக்கும்

**NCSA : என்சிஎஸ்ஏ :** மொசைக்கை உருவாக்கிய National Center for Super-computing Applications என்பதன் குறும்பெயர். இல்லினாய்ஸ் பல்கலைக் கழகத்தில் இருப்பது.

**NCSA server : என்சிஎஸ்ஏ வழங்கன் :** இல்லினாய்ஸ் பல்கலைக் கழகத்திலுள்ள மீத்திறன் கணிப் பணிப் பயன்பாடுகளுக்கான தேசிய மையம் (National Center for Super Computing Applications) NCSA எனச் சுருக்கமாக அழைக்கப்படுகிறது. இவ்வமைப்பு உருவாக்கிய ஹெச்டீடீபீ வழங்கன் கணினியும் இதுவும், செர்ன் (CERN) ஆய்வுக் கூடத்தில் உருவாக்கிய வழங்கன் கணினியும்தாம் வைய விரிவலைக்காக உலகிலேயே முதன்முதலாக உருவாக்கப் பட்ட ஹெச்டீடீபீ வழங்கன் கணினிகளாகும். பயனாளர்கள் இவற்றிலுள்ள தரவுவை பதிவிறக்கம் செய்து பயன் படுத்தலாம்.

**NCSA telnet : என்சிஎஸ்ஏ டெல்நெட்:** மீத்திறன் கணிப்பணிப் பயன்பாடுகளுக்கான தேசிய மையம் (National Center for Super Computing Applications) உருவாக்கி விநியோகித்த ஓர் இலவச டெல்நெட் கிளையன் மென்பொருள்.

**.nc.us : .என்சி.யுஎஸ் :** ஓர் இணைய தள முகவரி

அமெரிக்க நாட்டின் வடக்கு கரோலினா மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**NDBMS** : என்டிபிஎம்எஸ் : Network Database Management System என்பதன் குறும்பெயர்.

**NDIS** : என்டிஐஎஸ்: Network Driver Interface Specifications என்பதன் குறும்பெயர். தரவு இணைப்புப் பகுதி இயக்கிகள் தொடர்பில்லாத வன்பொருள் எழுதும் மைக்ரோசாஃப்ட் (Microsoft) விளக்கக் குறிப்பு. *(ஊடக அணுகுமுறை அடுக்கு).*

**NDMP** : என்டிஎம்பீ : பிணையத் தரவு மேலாண்மை நெறிமுறை என்று பொருள்படும் Network Data Management Protocol என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். பிணைய அடிப் படையிலான கோப்பு வழங்கன் கணினிகளுக்கான ஒரு திறந்த நிலை நெறிமுறை. பணித் தளம் சாரா தரவு சேமிப்பை அனுமதிக்கிறது.

**NDRO** : என்டிஆர்ஓ: Non Destructive Readout என்பதன் குறும்பெயர்.

**.ne** : .என்இ : ஓர் இணைய தள முகவரி நைஜர் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**near letter quality** : ஏறக்குறைய எழுத்துத் தரம் : சில அச்சுப் பொறிகள் உருவாக்கும் வெளியீடு பற்றியது. எழுத்துத் தர அச்சுப்பொறியில் கிடைப் பதுபோல் புள்ளியணி (dot matrix) அச்சுப்பொறியில் எழுத்துகள் படிப்பதற்கு அவ்வளவு எளிதாக இருக்காது.

**near leter quality printer** : ஏறத் தாழ எழுத்துத் தரம் ஒத்த அச்சுப் பொறி.

**near pointer** : காட்டிக்கு அருகில் : இன்டெல் *80 x 86* பிரிக்கப்பட்ட முகவரியில் ஒரு தனி பிரிவுக்குள் (ஆஃப்செட்) உள்ள நினைவக முகவரி.

**neat chipset** : நீட்/சிப்செட்: Enhanedd at chipset என்பதன் குறும்பெயர். சிப்ஸ் அண்டு டெக்னாலஜிஸ் நிறுவனத்தின் ஏடி (AT) வகுப்பு எந்திரங்களை உருவாக்கப் பயன்படும் சிப்பு களின் தொகுதி. ஏஎம்எஸ் திறன் சேர்க்கப்பட்டது. *286*-சார்ந்த பீசியின் அடிப்படை அளவை சிப்புகளாக சிபியு பயாஸ் மற்றும் நீட் (neat) சிப் செட்டு களைக் கூறலாம்.

**NEC** : என்இசி: *1954*ஆம் ஆண்டிலேயே கணினிகளை

உருவாக்கத் துவங்கிய முன்னணி ஜப்பானிய கணினி உற்பத்தி நிறுவனம். முதல் ஐபிஎம் பெருமுகக் கணினியின் அறிமுகத்திற்கு இரண்டு ஆண்டுகள் கழிந்த உடனே இந்நிறுவனம் செயல்பட்டது.

**NECC** : என்இசிசி : 'தேசியக் கணினி கல்வி மாநாடு' எனும் பொருள்படும். 'National Educational Computing Conference' என்பதன் குறும்பெயர். கல்வியில் கணினிகளைப் பயன்படுத்துவதில் ஆர்வமுள்ள கல்வியாளர்களின் ஆண்டுக் கூட்டம்.

**needle, sorting** : வரிசைப்படுத்தும் ஊசி; வகைப்படுத்தும் ஊசி.

**negate** : மறுதலி; எதிர் மறை வினை : NOTஎன்னும் அளவை இயக்கி செயல்படுதல்.

**negation** : எதிர்நிலை : இரு நிலைகளில் நிலவும் (இரும) சமிக்கை (signal) அல்லது துண்மி தோரணியை (bit pattern) அதற்கு எதிர்நிலையாக மாற்றியமைத்தல். (எ-டு) 1001 என்னும் துண்மிகளை 0110 என மாற்றியமைத்தல்.

**negative entry** : குறையெண்/எதிரெண் உள்ளீடு : ஒரு கணிப்பானில் உள்ளீடு செய்யப்பட்ட எண்ணுக்குக் குறை (Negative) அடையாளமிட்டு அவ்வெண் மதிப்பை குறையெண் மதிப்பாக மாற்றியமைத்தல்.

**negative number** : எதிர்மறை எண்.

**negative true logic** : எதிர்மறை உண்மை அளவை : அதிக மின் சக்தியானது '0' வையும் குறைந்த மின் சக்தி '1' ஐயும் குறிப்பிடும் அளவை அமைவு.

**negative value** : மறிநிலை மதிப்பளவு.

**negotiation** : பேரம்; ஒப்பந்தப் பேச்சு : ஒருவருக்கொருவர் நிறைவு தரும் ஒப்பந்த உறவை ஏற்றுக் கொள்ளும் முயற்சியில் சேவைகள் மற்றும் கடமைகளை பரிமாறிக் கொள்ளும் கலை.

**NELIAC** : நெலியாக் : Naval Electronics Laboratory International Algorithmic Compiler என்பதன் குறும்பெயர். அறிவியல் மற்றும் நிகழ்நேர கட்டுப்பாட்டு பிரச்சினைகளைத் தீர்க்க அதிகம் பயன்படும் உயர்நிலை நிரல் தொடர் மொழி.

**nematic** : நெமாட்டிக் : நூல் போன்ற அமைப்புடைய படிக நிலைக்கு முந்தைய, நீர்மை நிலைக்குப் பிந்தைய ஒரு பொருளின் நிலை. சான்றாக, திரவப் படிகம்.

**neper** : நேப்பர் : நேப்பியரின் மடக்கை எண் அடிப்படையிலான ஒரு அளவை அலகு. இரண்டு மதிப்புகளுக்கு இடையிலான விகிதத்தை அது குறிப்பிடுகிறது.

**nerd** : ஆர்வலர்.

**nest** : உள்ளமை; வலை; வலைப்பின்னல்; ஒன்றுக்குள் ஒன்று : ஒரு கட்டமைப்புக்குள் அதேபோன்ற கட்டமைப்பை இடம்பெறச் செய்தல். (எ-டு) : 1. ஒரு தரவுத் தளத்தில் உள்ள அட்டவணைக்குள் வேறோர் அட்டவணை இருக்கலாம். 2. ஒரு நிரலில் உள்ள செயல்முறைக்குள் இன்னொரு செயல்முறை வரையறுக்கப்படலாம். 3. ஒரு தரவுக் கட்டமைப்பில் (data structure), ஓர் ஏட்டிலுள்ள (record) ஒரு புலம் (field) இன்னோர் ஏடாக இருக்கலாம்.

**nested block** : பின்னிய கட்டம்; உள்ளமைத் தொகுப்பு : ஒரு நிரல் தொடர் கட்டத்தின் உள்ளே அமைக்கப்படும் மற்றொரு நிரல் தொடர் கட்டம்.

**nested loop** : கூட்டுக் கொக்கி வளையம்; பின்னிய வளையம்; உள்ளமை வளையம் : வேறொரு வளையத்தின் உள்ளே அமைந்துள்ள வளையம்.

**nested programme** : உள்ளமை நிரல் தொடர்; பின்னல் நிரல் தொடர் : வேறொரு பெரிய நிரல் தொடரின் ஒரு பகுதியாக உள்ள ஒரு நிரல் தொடர்.

**nested subroutine** : பின்னல் துணை வாலாயம் ; உள்ளமைத் துணைச் சுற்று; பின்னிய துணை வழமை : ஒரு துணைச் சுற்றின் உள்ளே வேறொரு துணைச்சுற்றின் அழைப்புச் சொற்றொடர் மூலம் பெறக் கூடிய துணைச் சுற்று. பேசிக் மொழியில் உள்ள GOSUB இத்தகைய ஒன்று.

**nested transaction** : வலைப் பின்னல் பரிமாற்றம் : ஒரு நிரலில், ஒரு பரந்த பரிமாற்றச் செயல்பாட்டினுள் வேறொரு செயல்பாடு அல்லது செயல் பாடுகளின் வரிசை இடம் பெற லாம். புறத்தே இயங்கும் பெரிய பரிமாற்றத்தை முடிவுக்குக் கொண்டு வராமலே உள்ள இயங்கும் சிறிய பரிமாற்றத்தை முடிவுக்குக் கொண்டுவர முடியும்.

**nesting** : ஒன்றுள் ஒன்று; உள்ளமைவு : வேறொரு நிரல் தொடர் பிரிவுகள் அல்லது தரவு கட்டங்களுக்குள் நிரல் தொடர் பிரிவுகள் அல்லது தரவு கட்டங்களை அமைத்தல். அல்ஜிப்ரா முறை பின்னலில் தொகுக்கும் விளக்கத்தை அடைப்புக் குறிகளுக்குள் பின்வருமாறு குறிப்பிடலாம் (W*X*(A-B)).

**nesting loop** : ஒன்றுள் ஒன்றான மடக்கி.

**.net** : .நெட் : *1.* இணையக் களப்பெயர் அமைப்பில் மேல்நிலை களத்தைக் குறிக்கும் சொல். இணையச் சேவையாளர் என்பதை அடையாளங்காட்டும் நெட் என்பது முகவரியின் இறுதியில் இடம் பெறும். 2. மைக்ரோசாஃப்ட் அறிமுகப் படுத்தியுள்ள புதிய தொழில் நுட்பம். மொழிசாரா பணித் தளத்தை (Language Independent Platform) வழங்கும் ஒரு தொழில்நுட்பம். விசுவல் பேசிக்/விசுவல் சி++, சி#, விபிஸ்கிரிப்ட், ஜேஸ்கிரிப்ட் போன்ற மொழிகளில் எழுதப் படும் நிரல்களை மொழி மாற்றம் செய்து இடைநிலை மொழி நிரலாக மாற்றியமைத்து பொது மொழி இயக்கச் சூழலில் (Common Language Runtime-CLR) இயக்க முடியும்.

**net[1]** : வலை; இணையம் : இணையத்தில் மக்களையும், நிறுவனங்களையும் குறிக்கப் பயன்படும் முன்னொட்டு (Prefix) *(எ-டு)* : இணையச் சமூகத்தில் மிகவும் மரியாதைக் குரிய நபரை இணையக் கடவுள் (net.god) என அழைப்பர்.

**net[2]** : நெட்; வலை : *1.* இணையம் (Internet) என்பதன் சுருக்கம். 2. யூஸ்நெட் (Usenet)-டின் சுருக்கம்.

**net address** : வலை முகவரி; இணைய முகவரி : வைய விரி வலை (World Wide Web)-யின் முகவரி. இதனை யூஆர்எல் என்றும் அழைப்பர். உலகளாவிய வள இடங்காட்டி. (Universal Resource Locator) என்பதன் சுருக்கம். தனித்த (Unique) அல்லது சீரான (Uniform) வள இடங்காட்டி என்று கூறுவாரும் உண்டு.

**NetBEUI** : நெட்பிஇயுஐ : நெட் பயாஸ் மேம்பட்ட பயனாளர் இடைமுகம் (Net BIOS Enhanced User Interface) என்பதன் சுருக்கம். பிணைய இயக்க முறைமைகளுக்கான மேம் படுத்தப்பட்ட நெட் பயாஸ் நெறிமுறை. லேன் மானேஜர் (Lan Manager) வழங்கன் கணினி களுக்காக ஐபிஎம் நிறுவனம் உருவாக்கியது. இப்போது வேறு பல பிணையங்களிலும் பயன்படுத்தப்படுகிறது.

**netBSD** : நெட்பிஎஸ்டி : தன்னார்வ முயற்சியினால் உரு வாக்கப்பட்ட பிஎஸ்டி யூனிக்ஸ் இயக்க முறைமையின் இலவசப் பதிப்பு. நெட்பிஎஸ்டி பல்வேறு வன்பொருள் பணித்தளங்களில் செயல்படக்கூடியது. போஸிக்ஸ் (POSIX) தர வரையறைக்கு ஒத்திசைவானது.

**net.god : இணையக் கடவுள் :** இணையச் சமூகத்தில் மிகவும் செல்வாக்குப் பெற்ற மரி யாதைக்குரிய நபர்.

**nethead : வலைக் கிறுக்கன்; இணையப் பைத்தியம் :** 1. இணையத்துக்கு அடிமை யானவர்போல எந்நேரமும் இணையத்திலேயே மூழ்கிக் கிடப்பவர். 2. rec.music.gdead செய்திக் குழுவில் அல்லது அது போன்ற அமைப்பில் கலந்து கொள்ளும் சுவைஞர்.

**net history : வலை வரலாறு.**

**netiquette : வலைப் பண்பாடு; இணைய நாகரிகம் :** பிணைய நாகரிகம் என்று பொருள்படும் Network Etiquette என்பதன் சுருக்கச் சொல். மின்னஞ்சல் மற்றும் யூஸ்நெட் (செய்திக் குழுக்கள்) கட்டுரைகள் போன்ற மின்னணுச் செய்தி களை அனுப்பும்போது கடைப் பிடிக்க வேண்டிய பண்பு நெறி கள் பற்றிய கோட்பாடுகள். இணைய நாகரிகத்துக்கு ஒவ்வாத செயல்பாடுகள் சில. சர்ச்சைக்குரிய கருத்துகள் - மன உணர்வுகளைப் புண்படுத்தும் செய்திகள் - தனிப்பட்ட முறை யில் சாடுதல் - தொடர்பில்லாத ஏராளமான குப்பைச் செய்தி களை அனுப்பி வைத்தல் - ஒரு திரைப்படம், தொலைக்காட்சிப் படம், புதினம் போன்றவற்றின் கதைமுடிவை முன்பே அறிவித்துவிடல் - தீங்கு விளை விக்கும் செய்திகளை மறை யாக்கம் செய்யாமல் வெளியிடல் - தொடர்பில்லாத அஞ்சல் குழுவுக்கு தொடர்பில்லாத செய்திகளை அனுப்புதல்.

**netizen : வலைவாசி; இணையக் குடிமகன் :** இணையத்தில் அல்லது பிற பிணைய அமைப்புகளில் நிகழ்நிலைத் தரவுத் தொடர்புகளில் பங்கு பெறும் ஒருவர். குறிப்பாக இணையக் கலந்துரையாடல், அரட்டை போன்றவற்றில் பங்கு பெறுபவர்.

**Net Meeting : நெட் மீட்டிங் :** இணையக் கலந்துரையாடலுக் கான மைக்ரோசாஃப்டின் மென் பொருள்.

**net news : நெட் நியூஸ் : ஒரு இணைய நிரல்.**

**NetPC : வலைப்பீசி; இணையக் கணினி :** 1996ஆம் ஆண்டில் மைக்ரோசாஃப்ட் மற்றும் இன்டெல் நிறுவனங்கள் உரு வாக்கிய ஒரு கணினிப் பணித் தள வரன்முறை. குறிப்பாக விண்டோஸ் என்டி வழங்கன் அடிப்படையிலான பயன் பாட்டு நிரல்களை இயக்கும்

கணினிகளுக்கானது. கிளையன் கணினிகளில் இயங்கும் பயன்பாடுகளைக் குறிக்காது.

**net personality :** வலைநபர்; இணையத் திலகம்; இணையத் தளபதி : இணையத்தில் ஓரளவு செல்வாக்குப் பெற்ற நபரைக் குறிக்க வழங்கும் பேச்சு வழக்குச் சொல்.

**net police :** வலைக் காவலர் : இணையத்தில் நடைபெறும் தரவு பரிமாற்றத்தை ஒழுங்கு படுத்த தம்மைத் தாமே காவலர்களாய் நியமித்துக் கொண்டு தாங்கள் சரியென நினைக்கும் விதிமுறைகளை நடைமுறைப் படுத்த முயல்பவர்கள். இணையப் பண்பாட்டை மீறுபவர்களுக்கு எதிராக இவர்களின் நடவடிக்கைகள் அமையும். மின்னஞ்சல் வழியாக விருப்பத்துக்கு எதிரான விளம்பரங்களை அனுப்புபவர்களையும் இவர்கள் விட்டு வைப்பதில்லை. செய்திக் குழுக்கள் அல்லது அஞ்சல் பட்டியல்களில் தவறான அரசியல் கருத்துரைகளை வெளியிடுபவர்களையும் கண்காணித்து நடவடிக்கை எடுப்பார்.

**netroom :** பின்னலமைப்பகம்; இணையப்பகுதி: ஹெலிக்ஸ் மென்பொருள் நிறுவனம் உருவாக்கிய டாஸ் நினைவக மேலாளர். பெரிய கட்டமைப்பு இயக்கிகளை டாஸ் நினைவகத்தில் சுருக்குவதற்கு இது பயன்படுகிறது. அதனுடைய 'டிஸ்கவர்' பயன்பாடானது கணினி அமைப்பில் அப்போது உள்ள உறுப்புகளைப்பற்றி அறிவிக்கும்.

**netscape :** நெட்ஸ்கேப்: ஜிம் கிளார்க் மற்றும் மார்க் ஆண்டர்சென் உருவாக்கிய ஒரு நிறுவனம். வணிகச் சந்தைக்காக பணியகங்களையும், மேலோடி (Browser)களையும் இந்நிறுவனம் உருவாக்கியது. அவற்றில் ஒன்றுதான் இப்போது மிகவும் புகழ்பெற்று விளங்கும் இணைய மேலோடியான ''நெட்ஸ்கேப் நேவி கேட்டர்'' - இதைப் பரவலாக 'நெட்ஸ்கேப்' என்றே அழைப்பர்.

**Netscape Communicator :** நெட்ஸ் கேப் கம்யூனிகேட்டர் : இணைய உலாவி,மின்னஞ்சல், வலைப்பக்கம் உருவாக்கி போன்ற பயன்பாடுகள் அடங்கிய கூட்டுத் தொகுப்பு. நெட்ஸ்கேப் நிறுவனத் தயாரிப்பு.

**Netscape Navigator :** நெட்ஸ்கேப் நேவிக்கேட்டர் : நெட்ஸ்கேப் நிறுவனம் வெளியிடும் இணைய உலாவி மென்

பொருள். இணையப் பயனாளர்கள் பலரும் விரும்பிப் பயன்படுத்துவது. விண்டோஸ் 3.1, விண்டோஸ் 95, விண்டோஸ் என்டி, விண்டோஸ் 2000, மெக்கின்டோஷ் மற்றும் யூனிக்ஸின் பல்வேறு வகை இயக்க முறைமைகளுக்குமான தனித்தனி நேவிக்கேட்டர் பதிப்புகள் உள்ளன. என்சிஎஸ்ஏ நிறுவனத்தின் மொசைக் இணைய உலாவிதான் வைய விரிவலைக்கான முதல் உலாவி. மொசைக்கின் அடிப்படையில் உருவாக்கப்பட்டதுதான் நெட்ஸ்கேப் நேவிக்கேட்டர். இப்போது நெட்ஸ்கேப் கம்யூனிக்கேட்டரின் ஓர் அங்கமாக வெளியிடப்படுகிறது.

**netspeak** : நெட்ஸ்பீக்; வலைப் பேச்சு: மின்னஞ்சல், இணைய அரட்டை, செய்திக் குழுக்கள் ஆகியவற்றில் ஆங்கிலத்தைப் பயன்படுத்துவது பற்றிய மரபுகளின் தொகுதி. பெரும்பாலும் தலைப்பெழுத்துக் குறும்பெயர்களாக இருக்கும். (எ-டு). IMHO, ROFL. நெட்ஸ்பீக்கை எப்படிப் பயன்படுத்துவது என்பதை இணையப் பண்பாடு நிர்ணயிக்கிறது.

**net telephone** : வலைத் தொலைபேசி.

**net-top box** : வலைப்பெட்டி; இணையப் பெட்டி; வலைக் கணினி : குறைந்த அளவு வன்பொருள் பாகங்கள் கொண்ட ஒருவகை சொந்தக் கணினி. இணையத்தில் கிடைக்கும் மின்னஞ்சல், வலை உலா மற்றும் டெல்நெட் இணைப்பு போன்ற பல்வேறு சேவைகளை குறைந்த செலவில் நுகர்வதற்கென உருவாக்கப்பட்ட கணினி. இக்கணினிகளில் நிலைவட்டு இருக்காது. நிறுவப்பட்ட நிரல்கள் எதுவும் கிடையாது. ஆனால் தேவையான தரவுகளை, மென்பொருள் பயன்பாடுகளை இக்கணினி இணைக்கப்பட்டுள்ள பிணையத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

**netview** : நெட்வியூ : எஸ்என்ஏ மற்றும் பிற எஸ்என்ஏ அல்லாத, ஐ.பி.எம் அல்லாத சாதனங்களுக்கான மைய முகவு மற்றும் கட்டுப்பாட்டினை வழங்கும் ஐ.பி.எம் எஸ்என்ஏ மேலாண்மை மென் பொருள். நெட் வியூவை டோக்கன் ரிங் லேன்கள், ரோம் சி.பி.எக்ஸ்கள் மற்றும் ஐ.பி.எம். அல்லாத மோடெம்களுடன் நெட்வியூ/பீசியை இணைப்பதுடன் புரவலரிடம் கட்டுப்பாட்டை யும் பராமரித்து வருகிறது.

**netware** : நெட்வேர் : நெட்வேர் இயக்க அமைப்பின் பயனாளர் குழு.

**network** : பிணையம்; கட்டமைப்பு : 1. ஒன்றோடொன்று பிணைந்த கணினி அமைப்புகள் மற்றும் முனையங்கள். 2. தரவுத் தொடர்பு வழித் தடங்களில் பிணைக்கப்பட்டுள்ள தொடர் முனைகள். 3. ஒரு திட்ட நட வடிக்கைகள் பணிகள் நிகழ்வு களுக்கிடையேஉள்ள அமைப்பு உறவு.

**network adapter** : பிணையப் பொருத்தி; பிணைய ஏற்பி : ஒரு பணி நிலையம் அல்லது பணி யகத்தைப் பிணைத்து ஒரு கட்டமைப்பில் தரவுப் பரிமாறிக் கொள்ள உதவும் அச்சிடப்பட்ட மின்சுற்று அட்டை. ஈதர்நெட், டோக்கன் ரிங் மற்றும் லோக் கல் டாக் போன்ற அணுகுமுறை தரவுப் பிணைப்பு நெறிமுறை (Protocol)யின் மின்னணுப் பணி களை இது நிறைவேற்றுகிறது. அனுப்பும் ஊடகம் (முறுக்கிய பிணை கூட்டிணைப்பு அல்லது ஒளி இழைக் கம்பி) பிணையத் திலுள்ள அனைத்து பொருத்தி களுக்கிடையில் நேரடி பிணைப்பு ஏற்படுத்தும்.

**network adminstrator** : பிணைய நிர்வாகி : ஒரு தரவுத் தொடர்பு பிணையத்தைப் பராமரித்து அதன் திறமையான இயக்கத்துக் குக் காரணமாக இருப்பவர். புதிய பயன்பாடுகளை நிறுவுதல் பிணைய நட வடிக்கையைக் கண்காணித்தல் உள்ளிட்ட பணிகள் செய்யப் படும்.

**network analysis** : பிணைய ஆய்வு ; பிணையப் பகுப்பாய்வு : ஒரு திட்டக் கட்டமைப்பின் பகுதிகளைப் பட்டியலிடல். இதில் ஆரம்பம், முடிவு தேதிகள், ஒட்டம் மற்றும் சார்பு நெறி முறைகளைக் குறிப்பிடலாம்.

**network architecture** : பிணையக் கட்டமைப்பு : ஒரு தகவல் தொடர்பு அமைப்பை வடிவமைத்தல். இதில் வன் பொருள், மென்பொருள், அணுகுமுறைகள் மற்றும் பயன் படுத்தும் வரைமுறைகளும் உள்ளடங்கும். கணினிகள் சுயேச்சையாக இயங்கலாமா அல்லது பிணையத்தைக் கண் காணிக்கும் பிற கணினிகளால் கட்டுப்படுத்தப்படலாமா என் னும் அணுகுமுறையை அது வரையறுக்கிறது. அயல் பிணை யத்துடன் எதிர்கால அணுசரிப்பு மற்றும் பிணைப்புத் தன்மை ஆகியவற்றை இது முடிவு செய்கிறது.

**network card** : பிணைய அட்டை.

**network charts** : பிணைய வரை படங்கள் : கால மதிப்பீடுகள் மற்றும் நடவடிக்கை உறவு களைக் கூறும் வரைபடங்கள்.

**network client : பிணையக் கிளையன்.**

**network computer : பிணையக் கணினி** : பிணையத்தில் இணைத்துக் கொள்வதற்குத் தேவையான வன்பொருள், மென்பொருள்களைக் கொண்ட ஒரு கணினி.

**network control programme : பிணையக் கட்டுப்பாட்டு நிரல் :** பெருமுகக் கணினி அடிப்படையிலான ஒரு தகவல் தொடர்புப் பிணையத்தில் பொதுவாக தகவல் தொடர்பு கட்டுப்படுத்தியில் தங்கியிருக்கும் நிரல். தகவல் தொடர்புப் பணிகளை இது நிறைவேற்றி வைக்கிறது. தகவல்களை திசைவித்தல், பிழைக்கட்டுப்பாடு, தடக் கட்டுப்பாடு, முனையங்களை அவை தகவல் அனுப்புகின்றனவா எனச் சோதித்தல் இவை போன்ற பணிகளை மேற்கொள்கிறது. இதன் காரணமாய் தலைமைக் கணினி பிற செயல்பாடுகளில் கவனம் செலுத்த முடிகிறது.

**network database : பிணையத் தரவுத் தளம் :** 1. ஒரு பிணையத்தில் செயல்படும் தரவுத் தளம். 2. ஒரு பிணையத்தின் பிற பயனாளர்களின் முகவரிகளைக் கொண்டுள்ள தரவுத் தளம். 3. தரவு மேலாண்மையில் தரவு ஏடுகள் ஒன்றோடொன்று ஒன்றுக்கு மேற்பட்ட முறையில் தொடர்பு கொண்டுள்ள ஒரு வகைத் தரவுத் தளம். பிணையத் தரவுத் தளம் படிநிலைத் தரவுத் தளம் போன்றது. ஓர் ஏட்டுக்கும் இன்னோர் ஏட்டுக்கும் தொடர்ச்சியான உறவுமுறை இருக்கும். சிறிய வேறுபாடும் உண்டு. கடுமையான கட்டமைப்பு இல்லாதது. எந்தவொரு ஒற்றை ஏடும் ஒன்றுக்கு மேற்பட்ட ஏடுகளைச் சுட்ட முடியும். இரண்டு ஏடுகளுக்கிடையே ஒன்றுக்கு மேற்பட்ட பாதைகள் இருக்க முடியும். ஆனால் படிநிலைத் தரவுத் தளத்தில் இரு ஏடுகளுக்கு இடையே ஒரேயொரு பாதைதான். பெற்றோர் ஏட்டிலிருந்து குழந்தை ஏட்டுக்குப் பாதை உண்டு.

**network database management system (NDBMS) : பிணைய தரவுத் தள மேலாண்மை அமைப்பு :** தொடர்புள்ள நிரல் தொடர்களைத் தொகுத்து தரவுத் தளத்தில் ஏற்றி, அணுகி, கட்டுப்படுத்தல். தரவுப் பதிவேடுகளை குறியீடுகள் உள்ள கூட்டு அமைப்பில் பிணைத்து அடிக்கடி புதுப்பிக்கப்படும்.

**network data structure : பிணையத் தரவு அமைப்பு :** தரவுகளை அமைக்கும் ஒரு அளவை அணுகுமுறை. திசை

முறையில் பிணைய முனைகளை பிணைக்க இது அனுமதிக்கிறது. ஒவ்வொரு முனைக்கும் பல ''சொந்தக்காரர்கள்'' இருக்கலாம். மேலும் அதனை அடுத்து எத்தனை தரவு அலகுகளும் இருக்கலாம்.

**network device driver : பிணையச் சாதன இயக்கி :** பிணையத்தில் இணைக்கப்பட்ட கணினியிலுள்ள பிணையத் தகவி அட்டையின் செயல்பாட்டைக் கட்டுப்படுத்தும் மென்பொருள். இது, பிணைய தகவி அட்டைக்கும் கணினியின் ஏனைய வன்பொருள் மற்றும் மென் பொருளுக்கும் இடையேயான தரவுத் தொடர்பினை ஒழுங்குபடுத்துகிறது.

**network diagram : பிணைய வரைபடம்; பிணைய வரிப்படம்.**

**network directory : பிணையக் கோப்பகம் :** குறும்பரப்புப் பிணையத்தில் பயனாளர் பணி புரியும் கணினி அல்லாத வேறொரு கணினியின் வட்டில் இடம்பெற்றுள்ள கோப்பகம். பிணையக் கோப்பகம் என்பது பிணைய இயக்ககம் (drive) என்பதிலிருந்து மாறுபட்டது. பயனாளர் கோப்பகத்தை மட்டுமே அணுகமுடியும். வட்டினில் அக்கோப்பகம் தவிர பிற பகுதிகளையும் பயனாளர் அணுகமுடியுமா என்பது, பிணைய நிர்வாகி அவருக்கு வழங்கியுள்ள அணுகுரிமைகளைப் பொறுத்தது. ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினியில் பிணைய கோப்பகம் பகிர்வுக் கோப்புறை (shared folder) என்றழைக்கப்படுகிறது.

**network drive : பிணைய இயக்கி :** ஒரு பிணையத்தில் பல் பயனாளர்களுக்கும் கணினிகளுக்கும் கிடைக்கும் வட்டு இயக்கி. ஒரு பணிக்குழுவில் உள்ள பலருக்கான தரவு கோப்புகளை பெரும்பாலும் சேமிக்கிறது.

**Network File System : பிணையக் கோப்பு முறைமை :** சன் மைக்ரோ சிஸ்டம்ஸ் நிறுவனம் உருவாக்கிய பகிர்ந்தமை கோப்பு முறைமை ஆகும். விண்டோஸ் என்டீ மற்றும் யூனிக்ஸ் பணிநிலையங்களின் பயனாளர்கள் தொலைதூரப் பிணையத்திலுள்ள கோப்புகளையும் கோப்பகங்களையும் அணுக முடியும்.

**networking : இணைய அமைப்பாக்கம் :** 1. தகவல் தொடர்பு வசதிகளின் மூலம் தரவு செயலாக்கப் பணிகளை விநியோகிக்கும் தொழில் நுட்பம்.

2. பிணையங்களை வடிவமைத்தல்.

**network interface card :** பிணைய இடைமுக அட்டை.

**network laser printer :** பிணைய லேசர் அச்சுப்பொறி; பிணைய ஒளியச்சுப்பொறி.

**network latency :** பிணைய நேரம் : ஒரு பிணையத்தில் இரண்டு கணினிகளுக்கிடையே தகவலைப் பரிமாறிக் கொள்ள எடுத்துக்கொள்ளும் நேரம்.

**network layer :** பிணைய அடுக்கு : ஐஎஸ்ஓ/ஓஎஸ்ஐ மாதிரியத்தில் உள்ள ஏழு அடுக்குகளில் மூன்றாவது அடுக்கு. கணினிகளுக்கு இடையேயான தகவல் தொடர்புகளை வரையறுக்கிறது. தரவுத் தொடுப்பு (Data link) அடுக்குக்கு மேல் இருக்கும். நிர்ணயிக்கப்பட்ட இலக்குக்குத் தரவு சென்றடைவதை உறுதி செய்கிறது. ஒரு சாதனத்திலிருந்து இன்னொரு சாதனத்துக்கு தரவு இடம் பெயர்வதை ஒழுங்குபடுத்தும் மூன்று அடுக்குகளுள் (தரவுத் தொடுப்பு, பிணையம், போக்குவரத்து) நடுவில் உள்ளது.

**network model :** பிணைய மாதிரியம்: தரவுத் தளக் கட்டமைப்புக்கான பல்வேறு மாதிரியங்களில் ஒன்று. அவற்றுள் (1) பிணையமாதிரியம் (2) படிநிலை மாதிரியம் (3) உறவுமுறை மாதிரியம் ஆகியவை மிகவும் முக்கியமானவை. பிணைய மாதிரியம், ஏறத்தாழ படிநிலை மாதிரியம்போன்றது. ஒரேயொரு முக்கிய வேறுபாடு உண்டு. பிணைய மாதிரியத்தில் ஓர் ஏடு ஒன்றுக்கு மேற்பட்ட சேய் ஏடுகளைக் கொண்டிருக்க முடியும். பிணைய மாதிரிய அடிப்படையிலான ஒரு தரவுத் தள மேலாண்மை அமைப்பினை படிநிலை மாதிரியத்தைபோல மாற்றியமைக்க முடியும்.

**network modem :** பிணைய இணக்கி: ஒரு பிணையத்தில் பயனாளர்கள் பகிர்ந்து கொள்ளும் இணக்கி. (எ-டு) ஒரு நிகழ்நிலைச் சேவையாளரை, ஓர் இணையச் சேவையாளரை, ஒரு சேவை அமைப்பை அல்லது பிற நிகழ்நிலை வளங்களை அணுக பயனாளர்கள் தொலைபேசிமூலம் அணுகும்போது இந்தப் பிணைய இணக்கிப் பயன்படுகிறது.

**network neighbourhood :** நெட்வொர்க் நெய்பர்குட் : பிணையச் சுற்றம் : விண்டோஸ் 95/98 இயக்க முறைமையில் முகப்புத் திரையில் இடம்பெற்றுள்ள சின்னம்.

**network news** : பிணையச் செய்தி : இணையத்தில் இருக்கும் செய்திக் குழுக்கள். குறிப்பாக யூஸ்நெட் படிநிலையில் வந்த செய்திக் குழுக்களைக் குறிக்கும்.

**network of networks** : பிணையங்களின் பிணையம். இணையத்தைக் குறிக்கும்.

**network operating system** : பிணைய இயக்க அமைப்பு : ஒரு வளாகக் கோப்பு சேவையில் தங்கும் கட்டுப்பாட்டு நிரல் தொடர். ஒரு பிணையத்தில் உள்ள பணி நிலையங்களில் இருந்து தரவுக்காக வரும் வேண்டுதல்களை அது கையாள்கிறது.

**network operation center** : பிணையச் செயல்பாட்டு மையம் : ஒரு நிறுவனத்தில் பிணையப் பாதுகாப்புக்கு பொறுப்பான அலுவலகம். பிணையத்தின் செயல்திறனை மேம்படுத்தும் அதேவேளையில் பிணைய அமைப்பின் செயலிழப்பு நேரத்தைக் குறைக்கவும் முயலும்.

**network protocol** : பிணைய நெறிமுறை : ஒரு கணினிப் பிணையத்தில் தகவல் தொடர்பினை சாத்தியமாக்குவதற்கு வரையறுக்கப்பட்ட விதிகள் மற்றும் அளபுருக்களின் தொகுதி.

**network services** : பிணையச் சேவைகள் : 1. ஒரு நிறுவனச் சூழலில் பிணையம் மற்றும் கணினிகளைப் பராமரிக்கும் பணிப்பிரிவு. 2. விண்டோஸ் பணிச்சூழலில், பிணைய அச்சிடல் மற்றும் கோப்புப் பகிர்வு போன்ற பிணையச் செயல்பாடுகளைச் சாத்தியமாக்கும் இயக்க முறைமையின் நீட்டிப்புகள்.

**network software** : பிணைய மென்பொருள் : ஒரு பிணையத்தில் வேறொரு கணினியை இணைத்துக் கொள்ள அல்லது பங்குபெற உதவும் மென்பொருள்.

**network structure** : பிணையக் கட்டமைப்பு : ஒரு குறிப்பிட்ட பிணைய மாதிரியத்தில் பயன்படுத்தப்படும் ஏடுகளின் ஒழுங்கமைவு.

**network termination** : பிணைய முடிப்பு.

**network terminator** : பிணைய முடிவுறுத்தி; பிணையச் சாதன இணைப்பி : ஒரு ஐஎஸ்டிஎன் சாதனம். ஐஎஸ்டிஎன் தொலைபேசி இணைப்புத் தடத்திற்கும், முனைய தகவிகளுக்கும் (Terminal Adapter) அல்லது

ஐஎஸ்டிஎன் தொலைபேசி போன்ற முனைய சாதனங்களுக் கும் இடையே இடைமுகமாய்ச் செயல்படும் சாதனம்.

**network theory** : பிணையக் கொள்கை: ஒரு மின் பிணை யத்தின் உறுப்புகளின் உறுப்பு களை பொதுமைப்படுத்தி வகைமைப்படுத்தல்.

**network time protocol** : பிணைய நேர நெறிமுறை : ஓர் இணைய நெறிமுறை. இணை யத்தில் இணைக்கப் பட்டுள்ள கணினிகளின் ஒத்திசையா கடி காரங்களுக்கான நெறிமுறை.

**network topologies** : பிணைய இடத்தியல்கள் : பயன்படுத்து பவர்களின் இருப்பிடங்கள் மற்றும் பயன்பாட்டுத் தேவை களைப் பொறுத்து முனைகளை யும் தகவல் தொடர்புகளையும் ஒன்றோடொன்று பிணைத்தல். நட்சத்திர பிணையம், வளைய பிணையம், பல்முனை பிணை யம், மர பிணையம், பின்னல் பிணையம் போன்ற பல பிணை யங்கள் உள்ளன.

**network transport protocol** : பிணைய போக்குவரத்து நெறி முறை.

**network virtual terminal** : மெய் நிகர் முனையப் பிணையம்.

**neumann concept** : நியூமன் கோட்பாடு.

**neural net** : நியூரால் பிணையம்; நரம்பணு பிணையம்: மனித மூளையின் அடிப்படை நினை வாற்றல் அலகு போன்று செயற் படக்கூடிய பல்வேறு செயற் பாடுகளைச் செய்யவல்ல கணித மாதிரி வடிவம். நியூரான் என்பது அடிப்படை நரம்பு உயிரணு ஆகும். ஒரு புழுவின் மூளையில் இந்த உயிரணுக்கள் 1000 வரையில் இருக்கும். மனி தனிடம் 10,000 கோடி நரம்பு உயிரணுக்கள் உள்ளன. இந்த நியூரான் என்ற சொல்லி லிருந்தே இப்பெயர் வந்தது.

**neural network** : நரம்பணுப் பிணையம் : மனித மூளை யானது தகவலைக் கையாளு தலைக் கற்றுக் கொள்ளல், நினைவில் இருத்தல் போன்ற பணிகளை எவ்வாறு செய் கிறதோ அதே அடிப்படையில் அமைக்கப்படும் ஒரு செயற்கை நுண்ணறிவு அமைப்பு. மனித நரம்பு மண்டலத்திலுள்ள நரம்பு செல்களான நியூரான் களின் செயல்பாட்டை ஒத்த வாறு இதன் செயல்பாடு அமை யும். நரம்பணுப் பிணையம் என்பது சிறுசிறு செயலாக்க உறுப்புகளின் ஒருங்கிணைப்பு ஆகும். ஒவ்வோர் உறுப்பும்

சிறு எண்ணிக்கையில் உள்ளீடு கள்/வெளியீடுகளைக் கொண்டிருக்கும். இந்தச் செயலாக்க உறுப்புகள் உள்ளீடுகளின் தன்மையைக்கொண்டு கற்றுக் கொள்ளும் திறன் படைத்தவை. எனவே இதன்மூலம் விரும்பிய வெளியீட்டைப் பெற முடியும். நரம்பணுப் பிணையங்கள் தோரணி உணர்தல், பேச்சுப் பகுப்பாய்வு மற்றும் பேச்சு ஒருங்கிணைவு போன்ற துறைகளில் பயன்படுகின்றன.

**.ne.us** : .என்இ.யுஎஸ் : ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டின் நெப்ரஸ்கா மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**neutral network computers : நரம்பணு பிணையக் கணினிகள்; நியூரான் பிணையக் கணினிகள்** : மின் சுற்றுக்கள் உள்ள பரிசோதனை எந்திரங்கள். மனித மூளையின் நியூரான்கள் அல்லது நரம்பு செல்களிடையே உள்ள இடை பிணைப்புகளை ஒட்டி வடிவமைக்கப்பட்டது.

**new** : புதிது.

**newbie** : புதுமுகம்; கற்றுக்குட்டி : *1.* இணையத்தில் அனுபவமில்லாத பயனாளர். *2.* ஏற்கெனவே அடிக்கடிக் கேட்கப்படும் கேள்விகளுக்கான பகுதியில் விளக்கங்கள் இருந்தபோதும் அதைப்பற்றி அறியாமல் அதே தகவலை ஐயமாகக் கேட்கும் அனுபவமில்லாத யூஸ்நெட் பயனாளர் குறித்து கிண்டலாகக் கூறப்படும் சொல்.

**new card** : புதிய அட்டை; புது அட்டை.

**new century schoolbook** : புதிய நூற்றாண்டு பள்ளி நூல் : பாட நூல்கள் மற்றும் பருவ இதழ்களுக்காக உருவாக்கப்பட்டது. எளிதாகப் படிக்கக் கூடிய எழுத்தச்சின் முகம்.

**new database** : புதிய தரவுத் தளம்.

**new file** : புதுக் கோப்பு.

**newline** : புதுவரி : ஆவணத்தில் தட்டச்சு, செய்யும்போது ஒரு வரி முடிந்து புதிய வரி தொடங்குகிறது என்பதை உணர்த்தும் குறியீடு. முந்தைய வரியின் இறுதியில் அமையும்.

**newline character** : புதியவரி எழுத்து/குறியீடு : திரைக்காட்சி அல்லது அச்சுப்பொறியில் காட்டியை அடுத்த வரியின் தொடக்கத்துக்கு நகர்த்தும் கட்டுப்பாட்டுக் குறியீடு. செயல்பாட்டளவில் புதியவரிக்

குறியீடு என்பது நகர்த்தியின் திரும்புகை (carriage return), வரியூட்டல் (line feed) ஆகிய இரண்டு குறியீடுகளும் இணைந்த ஒன்றாகும்.

new message : புதுச் செய்தி.

new/open/close : புதிய/திற/மூடு : அனைத்து மென்பொருள்களிலும் கோப்பு (File) பட்டியில் இருக்கும் தேர்வுகள்.

new option : புதிய விருப்பத் தேர்வு.

new record : புதிய ஏடு.

news : செய்திகள்.

new search : புதிய தேடல்.

news feed or newsfeed : செய்தி ஊட்டல்; செய்தி உள்ளிடல் : செய்தி வழங்கன்களில் செய்திக் குழுக் கட்டுரைகளை விநியோகித்தல், பரிமாறிக் கொள்ளல், பரப்புதல். என்என்டீபீ நெறிமுறை அடிப்படையில் பிணைய இணைப்புகள் மூலமாக தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளும், செய்தி வழங்கன்களுக்கிடையே ஒத்துழைப்பை ஏற்படுத்தி இப்பணிகள் மேற்கொள்ளப்படுகின்றன.

news group : செய்திக் குழு : இணையத்தில் குறிப்பிட்ட தலைப்புகளில் உறுப்பினர்கள் கலந்துரையாடும் மன்றம். ஒரு செய்திக் குழுவில் கட்டுரைகள் இடம்பெறும். அவற்றுக்கான ஐயங்கள், பதில்கள், மறுப்புரைகள் இடம் பெறலாம். ஒவ்வொரு செய்திக்குழுவுக்கும் ஒரு பெயர் உண்டு. படிநிலையில் தொடர்ச்சியான சொற்களினால் (இடையே புள்ளியிட்டு) கருப்பொருளின் உட்பிரிவுகள் குறிப்பிடப்பட்டிருக்கும். (எ-டு) : rec.crafts.textiles.needlework.

news master : செய்திப் பொறுப்பாளர்; செய்தித் தலைவர் : இணையத்தில் ஒரு குறிப்பிட்ட புரவன் கணினியில் செய்தி வழங்கனைப் பராமரிக்கும் பொறுப்பில் இருக்கும் நபர். newsmaster@domain.name என்ற முகவரிக்கு அனுப்பப்படும் அஞ்சல்கள் இவருக்குப் போய்ச் சேரும்.

.newsrc : .நியூஸ்ஆர்சி : யூனிக்ஸ் அடிப்படையிலான, செய்தி வாசகர்களுக்கான நிறுவு கோப்பினை அடையாளங் காட்டும் கோப்பு வகைப்பெயர் (File extention). இந்த நிறுவு கோப்பு, பயனாளர் உறுப்பினராயுள்ள செய்திக் குழுக்களின் பட்டியலையும் ஒவ்வொரு செய்திக் குழுவிலும் பயனாளர் ஏற்கெனவே வாசித்த கட்டுரைகளின் பட்டியலையும் கொண்டிருக்கும்.

**news reader : நியூஸ்ரீடர் :** ஒரு யூஸ் நெட் கிளையன் நிரல். யூஸ்நெட் செய்திக் குழுவில் பயனாளர் உறுப்பினராகவும், கட்டுரைகளைப் படித்தறியவும், பதில்களை அனுப்பவும், மின் அஞ்சல் மூலம் பதில் அனுப்பவும், கட்டுரைகளை அனுப்பவும் உதவும். இன்றைக்கு பல இணைய உலாவிகளும் இத்தகைய வசதிகளைத் தருகின்றன.

**news server : செய்தி வழங்கன் :** இணையத்திலுள்ள செய்திக் குழுக்களின் தரவுகளை நியூஸ்ரீடர் கிளையன்களுக்கும் ஏனைய வழங்கன்களுக்கும் பரிமாறிக் கொள்ளும் ஒரு கணினியை அல்லது நிரலை இவ்வாறு அழைக்கலாம்.

**newton : நியூட்டன் :** ஆப்பிள் நிறுவனம் வெளியிட்ட சொந்த இலக்கமுறைத் துணைவன் (Peronal Digital Assistant) சாதனத்தின் பெயர் ஆப்பிள் நியூட்டன் மெலேஜ்பேடு எனப்பட்டது.

**Newton-Raphson : நியூட்டன்-ராஃப்சன் :** சமன்பாடுகளுக்குத் தீர்வு காண்பதற்குப் பயன்படுத்தப்படும் ஒன்றோடொன்று செயற்படக்கூடிய நடைமுறை.

**Newton OS : நியூட்டன் ஓஎஸ் :** ஆப்பிள் நியூட்டன் மெலேஜ்பேடு எனப்படும் சொந்த இலக்கமுறைத் துணைவனில் செயல்படும் இயக்க முறைமை.

**new wave : புதிய அலை (நியூ வேவ்) :** டாசுக்கும் விண்டோசுக்கும் இடையில் ஓடும் பீசி. செயற்பாட்டுச் சூழ் நிலை. எச்.பி. உருவாக்கியது. அது தரவுகளை ஒருங்கிணைத்து பணிகளை இயக்கி அமைப்புக்குள் செயலாற்றும். பல்வேறு தரவுப் பயன்பாடுகளைக் கலந்து ஒரு கூட்டு ஆவணத்தை உருவாக்கும் பொருள் மேலாண்மை வசதியை அனுமதிக்கும். ஏதாவதொரு மூலக் கோப்பில் தரவு புதுப்பிக்கப் பட்டால், அகநிலை இணைப்புகள் ஆவணத்தைத் தானாகவே மேம்படுத்தும். காலம் அல்லது நிகழ்வுகளால் இயக்கப்படும் உதவியாளர்களை உருவாக்க அனுமதிக்கும். புதிய அலைகளின்கீழ் இயங்க நிரல் தொடர்களை மாற்ற வேண்டும்.

**NeXT : நெக்ஸ்ட் :** நெக்ஸ்ட் கம்ப்யூட்டர் (NeXT Computer) என்ற நிறுவனத்தின் தயாரிப்பு. இந்த நிறுவனம் பின்னாளில் நெக்ஸ்ட் சாஃப்ட்வேர் நிறுவனம் என்றழைக்கப்பட்டது. ஸ்டீவன் ஜாப்ஸ் (Steven Jobs) என்பவர் 1985இல் நிறுவிய ஒரு கணினித் தயாரிப்பு மற்றும்

மென்பொருள் உருவாக்க நிறுவனம். இந்த நிறுவனத்தை 1995ஆம் ஆண்டு ஆப்பிள் கம்ப்யூட்டர் நிறுவனம் விலைக்கு வாங்கியது.

**next :** அடுத்த.

**next computer : நெக்ஸ்ட் கணினி :** நெக்ஸ்ட்-இன் நிறுவனத்திடமிருந்து வரும் யூனிக்ஸ் ஏற்பு பணி நிலையக் குடும்பங்கள். 68040 மையச் செயலகத்தைப் பயன்படுத்தி 1120 x 832 பழுப்பு அளவு வண்ண வரைகலை டிஸ்ப்ளே போஸ்ட் ஸ்கிரிப்ட் ஆகியவை உள்ளடக்கியது. 2.88 மீமிகு எண்மி நெகிழ் வட்டும் சிடி தர ஒன்சக்காக இலக்க முறை குறிப்பு செயலாக்க சிப்புவையும் கொண்டிருக்கும். உருவ செயலாக்கம் தரவுச் சுருக்கம் மற்றும் குரல் ஏற்பு போன்றவையும் நெக்ஸ்ட் ஸ்டெப் ஜேபிஇஜி மென்பொருள் மூலம் வண்ண கறுப்பு-வெள்ளை உருவங்களை சுருக்கலாம். ஆப்பிளின் முன்னாள் தலைவரான ஸ்டீவன் ஜாப்ஸ் 1985இல் நெக்ஸ்ட்டை உருவாக்கினார்.

**next page button :** அடுத்த பக்க பொத்தான்.

**.nf : .என்எஃப் :** ஓர் இணைய தள முகவரி நார்ஃபோல்க் தீவுகளைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.nf.ca : .என்எஃப்.சிஏ :** ஓர் இணைய தள முகவரி கனடா நாட்டின் நியூஃபவுண்ட்லாண்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.ng : .என்ஜி :** ஓர் இணைய தள முகவர் நைஜீரியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.nh.us : .என்ஹெச்.யுஎஸ் :** ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டின் நியூ ஹேம்ப்ஷைர் மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**.ni : .என்ஐ :** ஓர் இணைய தள முகவரி நிகராகுவா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**nibble : கொறியளவு ; தகை எண்மி:** ஓர் எண்மியின் (byte) பாதி. இது அடுத்தடுத்து நான்கு துண்மிகளை (bits)க் கொண்டது.

**NIC : நிக் :** 1. பிணைய இடைமுக அட்டை என்று பொருள்படும் network interface card என்பதன் சுருக்கம். 2. பிணையத் தகவல் மையம் என்று பொருள்

படும் network information center என்ற தொடரின் சுருக்கம். ஒரு பிணையத்தைப் பற்றியும் அதிலிருந்து பெறப்படும் சேவைகள் பற்றியும் பயனாளர்களுக்கு தகவல் வழங்கும் அமைப்பு. இணையத்தின் முதன்மை நிக், இன்டர்நிக் எனப்படுகிறது. அக இணையம் மற்றும் பிற தனியார் பிணையங்கள் தமக்கென தனியான நிக் அமைப்புகளைக் கொண்டிருக்கும்.

**nickel cadmium battery : நிக்கல் கேட்மியம் மின்கலன்** : கார மின்பகுப்புத் திரவம் கொண்ட மின்னூட்டத்தகு மின்கலம். இதே போன்ற ஈய அமில மின்கலன்களைவிட நிக்கல் கேட்மியம் மின்கலன்கள் நீண்ட நாட்கள் செயல்படுபவை. நீண்ட நாட்கள் சேமிக்க வல்லவை.

**nickel hydride : நிக்கல் ஹைட்ரைட்** : சக்தி ஏற்றக்கூடிய மின்கலங்களை உருவாக்கப் பயன்படும் பொருள். நிக்கல் மின்கலங்களைவிட இது ஒரு கிலோவுக்கு அதிக சக்தியைத் தருகிறது. நினைவக விளைவை அவை காட்டுவதில்லை.

**nickel metal hydride battery : நிக்கல் உலோக ஹைடிரைடு மின்கலன்** : நிக்கல் கேட்மியம், காரப்பொருள் மின்கலன்களைவிட அதிக வாழ்நாளும் உயர்ந்த செயல்திறனும் கொண்ட மறுமின்னூட்டத்தகு மின்கலம்.

**nickname : புனைபெயர்; செல்லப்பெயர்** : மின்னஞ்சலில் பெறுநர் முகவரி இடம் பெறும் இடத்தில் ஒன்று அல்லது மேற்பட்ட முழுப் பிணைய முகவரிகளைத் தருவதற்குப் பதில் சுருக்கமாகப் பயன்படுத்தும் பெயர். (எ-டு) kumar@annauniv.edu என்பதற்குப் பதிலாக kumar என்பது புனைபெயராக இருக்கலாம். நிரலில் புனைபெயர் நிலைப்படுத்தப்பட்டது எனில், முழுப் பெயரையும் கொடுப்பதற்குப் பதில் kumar என்று மட்டும் குறிப்பிட்டால்போதும். கணினித் துறையில் பணியாற்றுபவர்களின் முகவரிகள் name@computer.annauniv.edu என்றிருக்கலாம். computer faculty என்னும் புனை பெயர் கணினித் துறையைச் சார்ந்த அனைவரையும் குறிப்பதாக இருக்கலாம்.

**niladic : இயக்கப்படும் எண்கள் இல்லாத; உறுப்பிலா** : இயக்கப்படும் எண்கள் (operands) எதுவும் குறித்துரைக்கப்படாத ஒரு செயற்பாடு தொடர்புடையது.

**nil pointer : இன்மை சுட்டு**: ஒரு பிணைப்புள்ள பட்டியலின் முடிவினைக் குறிக்கப் பயன்படும் சுட்டு.

**nine's complement** : ஒன்பதின் குறை நிரப்பு எண்: ஒவ்வொரு இலக்கத்தையும் ஒன்பதிலிருந்து கழித்துக் கிடைக்கும் ஒரு பதின்ம எண்ணின் குறை நிரப்பு எண். எடுத்துக்காட்டு : 567 என்ற எண் 432 என்ற எண்ணின் ஒன்பதின் குறைநிரப்பு எண். இது 999 என்ற எண்ணிலிருந்து 432-ஐக் கழிப்பதன் மூலம் கிடைக்கிறது. இது ஒன்றின் குறை நிரப்பு எண், இரண்டின் குறை நிரப்பு எண், பத்தின் குறை நிரப்பு எண் போன்றது.

**ninety column card** : தொண்ணூறு பத்தி அட்டை : அகல்விரி தானியங்கிக் கணினியில் (Universal Automatic Computer-UNIVAC) அட்டை கையாள்தல் சாதனத்தில் பயன்படுத்தப்படும் துளையிட்ட அட்டை. இது 90 பத்திகளைக் கொண்டது. ஒவ்வொரு பத்தியில் ஓர் எழுத்தினைத் துளையிடலாம். இது ஹோலரித் அட்டை தொண்ணூற்றாறு பத்தி அட்டை ஆகியவற்றிலிருந்து வேறுபட்டது.

**ninetysix column card** : தொண்ணூற்றாறு பத்தி அட்டை : அட்டை கையாள்தல் சாதனத்தில் பயன்படுத்தப்படும் துளையிட்ட அட்டை. இது 18 வரிசைகளையும் 36 பத்திகளையும் கொண்டது. ஒவ்வொரு பத்தியிலும் மூன்று எழுத்துகளைத் துளையிடலாம். இது ஹோலரித் அட்டை தொண்ணூறு பத்தி அட்டை ஆகியவற்றிலிருந்து மாறுபட்டது.

**NIS** : நிஸ்; என்ஐஎஸ் : பிணைய தகவல் சேவை எனப் பொருள்படும் Network Information Service என்ற தொடரின் சுருக்கம்.

**nixie tube** : எண்காட்சிக் குழாய்; நிக்சி குழல்: தெளிவான எண்களைக் காட்சியாகக் காட்டுவதற்குப் பயன்படும் வெற்றிடக் குழாய்.

**n-key rollover** : என்-விசை சுற்றுதல் : வேக தட்டச்சுக்கான விசைப்பலகை மின்சுற்று வடிவமைப்பு. இதை சோதிக்க எந்த விசைகளில் இருந்தும் விரலை எடுக்காமல் நான்கு அடுத்தடுத்த விசைகளை அழுத்த வேண்டும். நான்கு எழுத்துகளும் திரையில் தோன்றினால் அந்த விசைப்பலகையில் இந்த விசை இருக்கிறது என்று பொருள்.

**.nl** : .என்எல் : ஓர் இணைய தள முகவரி நெதர்லாந்து நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும்புவிப்பிரிவுக் களப் பெயர்.

**NMOS or N-MOS** : என்-மாஸ்; என்மாஸ்: N-தட உலோக

ஆக்ஸைடு குறைகடத்தி எனப் பொருள்படும் N- channel metal oxide semiconductor என்பதன் சுருக்கப் பெயர். மாஸ்ஃபெட் (MOSFET-Metal Oxide Semi conductor Field Effictive Transistor) களில் மின் இணைப்புத்தடம் துளைகளின் நகர்வுகளால் ஏற் படுவதில்லை (மின்னணு ஓர் அணுவிலிருந்து இன்னோர் அணுவுக்கு இடம் பெயர் வதால் ஏற்படும் வெற்று இடம் துளை (hole) எனப்படுகிறது. மின்னணு இடம் பெயர் வதால்தான் துளை ஏற்படு கிறது. துளைகளைவிட மின் னணு வேகமாக இடம்பெயரும் என்பதால் என்மாஸ், பீமாஸை விட வேகமானது ஆனால் என் மாஸை வடிவமைப்பது கடின மானது அதிகச்செலவு பிடிக்கும்.

**NNTP : என்என்டீபீ :** பிணையச் செய்திப் பரிமாற்ற நெறிமுறை என்று பொருள்படும் Network News Transfer Protocal என்ற தொடரின் சுருக்கச் சொல். செய்திக் குழுக்களின் பரப்பு கையை இந்த இணைய நெறி முறை நிர்வகிக்கிறது.

**.no : .என்ஓ :** ஓர் இணைய தள முகவரி நார்வே நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**node : மைய முனை :** 1. ஒரு கணினி இணையத்தில் ஒரு சேர் முனையம் அல்லது செய்தித் தொடர்புக் கணினி. 2. மரம் போன்ற அமைப்பில் இரண்டு அல்லது அதற்கு மேற் பட்ட கிளைகள் ஒன்றிணையும் மைய முனை. 3. அச்சிட்ட மின் சுற்று வழிப்பலகையில் பல் வேறு அமைப்பிகள் ஒன்றாக இணையும் இடம்.

**noise : இரைச்சல் :** 1. ஒரு சாதனத்தில் அல்லது பொறி யமைவில் இயல்பான செயற் பாட்டிற்குக் குந்தகம் விளை விக்கும் விரும்பத்தகாத ஒலி. இது, அந்தச் சாதனத்தின் அமைப்பிகளாலோ இயற்கை யாகவோ அல்லது மனிதரின் குறுக்கீட்டினாலோ ஏற்பட லாம். 2. பிழைகள் உண்டாவதற் குக் காரணமாக இருக்கக்கூடிய போலிக்குறியீடுகள் அல்லது விரும்பத்தகாத குறியீடுகள்.

**noise immunity : இரைச்சல் ஏமக் காப்பு :** தேவையான குறி யீடுகளை மட்டும் ஏற்றுக் கொண்டு வேண்டாத குறியீடு களைஒதுக்கிவிடும் திறனுடைய சாதனம்.

**noise pollution : ஒலித் தூய்மைக் கேடு :** ஆக்கப் பணி களிலிருந்து கவனத்தைச்

சிதறடிக்கக்கூடிய ஓசை. குறிப் பாக அலுவலகங்களில் ஏற் படும் தேவையற்ற இரைச்சல். அச்சு எந்திரங்கள், தட்டச்சுப் பொறிகள், படியெடுப்பு எந்திரங்கள் போன்றவற்றி லிருந்து எழும் ஓசைகள் இவ் வகையின.

**non-blocking :** தடுக்காத நிலை : தடை அல்லது தாமதம் இன்றி ஒரு சமிக்கை, அது போய்ச் சேர வேண்டிய இடத்தை அடைதல்.

**non-breaking hyphen :** பிரிக்காத ஒட்டுக்குறி (ஹைஃபன்) : சொல் செயலிகளில் பயன்படுத் தப்படும் சொல். இதில் ஒரு கோட்டின் இறுதியில் வரும் (ஹைஃபன்) சேர்ந்த சொல் லைப் பிரிக்கக்கூடாது. சான் றாக ஃபிளிப்-ஃப்ளாப் என்ற சொல்லை இரண்டு வரிகளில் பிரித்தால் குழப்பம் ஏற்படும். பிரிக்காத சிறுகோட்டை நுழைத்தால் இரண்டு சொற் களை ஒன்றாகவே வைக்கும்.

**nonbreaking space :** முறிவிலா இடவெளி : ஒரு சொல்லின் இரு பகுதிகள் அல்லது இரு சொற்கள் வரியின் இறுதியில் வரும்போது பிரிந்துவிடாமல் இருக்க வழக்கமான இடவெளி (Space)-க்குப் பதிலாக இடம் பெறச்செய்யும் குறியீடு. இரு பகுதிகளும் பிரியாமல் ஒரே வரியில் இருக்கச் செய்யும். திரு. அறிவரசு என்ற சொற்கள் வரியின் இறுதியில் வரும்போது இடமில்லாமையால் திரு. என்பது முந்தைய வரியிலும் அறிவரசு அடுத்த வரியிலும் இடம் பெறும். திரு. அறிவரசு என்ற சொற்கள் இணைபிரியா மல் ஒரே வரியில் நிற்கவேண்டு மெனில் இரு சொற்களுக்கு மிடையே முறிவிலா இட வெளியை இடம்பெறச் செய்ய வேண்டும்.

**non conducting :** மின் கடத்தா திருத்தல்.

**non conducting state :** மின் கடத்தா நிலை.

**non conductor :** மின் கடத்தாப் பொருள் : மின்னோட்டம் பாய முடியாத பொருள். இது மின் கடத்திகளிலிருந்து வேறுபட்டது.

**noncontiguous data structure:** தொடர்பறு தரவுக் கட்டமைப்பு : நினைவகத்தில் தொடர்ச்சியில் லாமல் உறுப்புகள் இருத்தப்படு கின்ற ஒரு தரவு கட்டமைப்பை இவ்வாறு குறிக்கிறோம். வரை பட, மர வகையைச் சார்ந்த தரவு கட்டமைப்புகளின் உறுப்பு கள் நினைவகத்தில் தொடர்ச்சி யின்றி ஆங்காங்கே இருத்தப் படுகின்றன. அடுத்தடுத்த

உறுப்புகள் முகவரிச் சுட்டுகள் (pointers) மூலம் அறியப் படுகின்றன.

**non destructive read :** அழித்திடாப் படிப்பு : சேமிப்புச் சாதனங்களின் உள்ளடக்கங் களை அழித்து விடாத படிப்புச் செயற்பாடு.

**nondestructive readout :** அழிவிலாப் படிப்பு : நினைவகத்தில் உள்ள தகவலைப் படித்தவுடன் அழிந்து போகாமல் படிக்கும் முறை. தகவலை அழிய விடாமல் இருத்திவைக்கும் சேமிப்புத் தொழில்நுட்பம் அல்லது படித்தவுடன் தகவலை மீண்டும் புதுப்பிக்கும் தொழில் நுட்பம் மூலம் அழிவிலாப் படிப்பு இயல்வதாகிறது.

**non document :** வாசகமிலா ஆவணம்.

**non document mode :** ஆவணம் இல்லாத முறை : மூலமொழி நிரல் தொடர்கள் பிரிவு கோப்புகள் மற்றும் பொதுச் சொற்கோப்புகளையும் வேறு நிரல் தொடருக்கு மாற்றுவதற்காக உருவாக்கும் சொல் செயலாக்க முறை. உரிமையாளர் படிவக் குறியீடு இல்லாத சொற்பகுதியைக் கொண்ட கோப்பை உருவாக்குகிறது. நார்ட்டன் எடிட்டர், எக்ஸ் ஒய் ரைட் போன்ற சொல்செயலிகள் மற்றும் உரைத்தொகுப்பிகள் தானாகவே அஸ்கி சொற்கோப்புகளை உருவாக்குகின்றன. அவற்றுக்கு இந்த வாய்ப்பளித்தல் தேவையில்லை.

**none :** எதுவுமில்லை.

**nonerasable storage :** அழித்திட முடியாத சேமிப்புச் சாதனம் : கணிப்பின்போது தன்னிடம் அடங்கியுள்ள தகவல்களை அழித்திட முடியாத சேமிப்புச் சாதனம். துளையிட்ட காகித நாடா, துளையிட்ட அட்டைகள், சில வகை அழிக்க முடியாத படிப்புக் காந்த நினைவகம் ஆகியவை இவ் வகைச் சாதனங்கள்.

**nonexecutable statement :** நிறைவேற்ற முடியாத கட்டளை : ஒரு செயல்முறையை வகுத்து அந்தச் செயல்முறையில் அடங்கியுள்ள குறிப்பிட்ட நடவடிக்கை எதனையும் நிறைவேற்றும்படி கோராத கட்டளை. இது நிறைவேற்றத்தக்க கட்டளையிலிருந்து வேறுபட்டது.

**nongraphic character :** வரைகலையல்லாத எழுத்து; வரைவியல் சாராத உருக்காட்சி : அச்சடிப்பானுக்காக அல்லது காட்சித்திரைக்காக அமைக்கப்

படும்போது அச்சடிக்கத்தக்க எழுத்து உருக்காட்சியை உண் டாக்காத எழுத்து. எடுத்துக் காட்டு: சகடக் கட்டுப்பாடு; தலைப்பெழுத்து.

**nonimpact print :** தொடாஅச்சு; தாக்குறவிலா அச்சு.

**nonimpact printer : தாக்குற விலா அச்சடிப்பி :** வெளிப்பாடு களை அச்சடிப்பதற்காக மின் வெப்பம், லேசர் தொழில்நுட் பம், ஒளிப்பட உத்திகள் போன்றவற்றைப் பயன் படுத்தும் அச்சடிப்பி. இது தாக்குறவு அச்சடிப்பிலிருந்து வேறுபட்டது.

**noninterlaced :** இடைப் பின்ன லற்ற : வரிகளை மேலிருந்து கீழாக வரிசையாகக் காட்டி ஒரு சிஆர்டி ஒளி தருதல். ஒரு திரை யகத்தில் தானாகவே இடைப் பின்னல் உள்ளது இல்லாதது என்றாவதில்லை. இடைப் பின்னல் இல்லாத திரையகக் குறுக்குவாட்ட ஒளிக்காட்சி கட்டுப்படுத்தியிலிருந்து எடுத் துக்கையாளும் திறன் கொண்டிருக்கும்.

**nonlinear function :** நேரிலாப் பணி : ஒரு பணியை நேர் என்று சொல்வதானால் அதன் ஒரு அளவு வேறொன்றிலிருந்து நேர் விகிதத்தில் மாறுபட்டிருக்கும். ஆகவே அதன் வரைபடம் செங்குத்துக்கோடாக இருக்கும்.

**nonlinear programming :** ஒரு படியிலாச் செயல்முறைப் படுத்துதல் : ஒரு குறிப்பிட்ட சார்பலனின் மிகக் குறைந்த அல்லது மிகஉயர்ந்த மதிப் பினைக் கண்டறிவதற்காகப் பயன்முறைக் கணிதத்தில் உள்ள பகுதி. வகுத்துரைக்கப் படும் மாறிகள் அனைத்தையும் இதனால் கண்டுபிடிக்கலாம். இது ஒரு படிச்செயல் முறைப் படுத்துதலிலிருந்து வேறு பட்டது.

**nonmaskable interrupt : மறைக்கவியலாக் குறுக்கீடு :** மென்பொருள் மூலம் மற்றும் விசைப்பலகை அல்லது அது போன்ற சாதனங்களின் மூலம் உருவாக்கப்ட்டும் குறுக்கீட்டுக் கோரிக்கைகளை மீறி முன் னுரிமை எடுத்துக் கொள்கின்ற ஒரு வன்பொருள் குறுக்கீடு இவ்வாறு அழைக்கப்படுகிறது. இத்தகைய குறுக்கீட்டை பிற சேவைக் கோரிக்கைகள் மீறி விட முடியாது. மிகமோசமான நினைவகப் பிழை நிகழும் போது அல்லது மின் தடங் கலின்போது மட்டுமே இத்தகு மறைக்கவியலாக் குறுக்கீடு நுண்செயலிக்கு அனுப்பப் படும்.

**nonmodel** : முறை இல்லாத : முறை சார்ந்திராத தெளிவான முறை பொத்தான் அமைக்கா மல் ஒரு சூழ்நிலையில் இருந்து வேறொன்றுக்கு மாறுதல்.

**nonnumeric programming** : எண்களிலாச் செயல்முறைப் படுத்துதல் : எண்களை விடுத்து சைகைகளைக் கையாளும் செயல்முறைப்படுத்துதல். எண் மானக் கணிப்புகள் அல்லாமல் சொற்கள் போன்ற சைகைப் பொருள்களைக் கையாள்வதை இது குறிக்கிறது.

**nonoverlap processing** : உடன் நிகழா செயலாக்கம் : படித்தல், எழுதுதல், உள்முகச் செய் முறைப்படுத்துதல் ஆகியவை ஒரு தொடர் வரிசை முறையில் மட்டுமே நடைபெறும் உத்தி. இது மேற்கவிந்த செய்முறைப் படுத்துதலிலிருந்து வேறு பட்டது.

**nonprint** : அச்சுத் தவிர்ப்பு; அச்சடிப்புத் தடைத் துடிப்பு : எந்திரக் கட்டுப்பாட்டின்கீழ் வரிவாரி அச்சடிப்பினைத் தடுக் கிற ஒரு துடிப்பு.

**nonpreemptive multitasking** : முற்படு பல்பணியாக்கம் : ஒரு பயன்பாடு இயங்கும்போது, மையச் செயலகத்தின் கட்டுப் பாட்டை வேறொரு பயன் பாட்டுக்குத் தருதல். சான்றாக பயனாளர் உள்ளீட்டை ஏற்றுக் கொள்ள அது தயாராதல். இந்த முறையில் ஒரு நிரல் தொடர் ஒரு எந்திரத்தை ஆட்டி வைக்க முடியும்.

**nonprocedural language** : செயல்முறைசாரா மொழி : தொடர் கட்டளைகள், துணை நிரல்கூறுகள் செயல்கூறு அழைப்புகள் மற்றும் கட்டுப் பாட்டுக் கட்டமைப்புகள் கொண்ட நிரலாக்க மொழி களை செயல்முறைசார் மொழி என்றழைக்கிறோம். இவ் வாறில்லாமல் சில மெய்ம்மை கள், அவற்றுக்கிடையேயான உறவுமுறைகள் அடிப்படை யில் வினவல்கள் மூலமாகக் குறிப்பிட்ட விடையைப் பெறும் மொழிகளை செயல் முறைசாரா மொழிகள் என லாம். டி'பேஸ் ஃபாக்ஸ்புரோ, எஸ்கியூஎல் போன்ற மொழிகள் இவ்வகையில் அடக்கம். இவற்றை நான்காம் தலைமுறை மொழிகள் என்றும் கூறுவர்.

**nonprocedural query language** : நடைமுறைசாராக் கேள்வி மொழி : ஒரு தரவுத் தளத்துடன் செய்திப் பரிமாற்றம் செய் வதற்கான கணினி மொழி. இது கணினியை பயன்படுத்துபவர் தரவுவைப் பெறுவதற்குத்

தேவையான நடவடிக்கைகளைக் குறிப்பிடாமல் அவர் எதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறார் என்பதைக் குறித்துரைக்கிறது. எடுத்துக்காட்டு: சில பொறியமைவுகளில் பயனாளர் தேர்ந்தெடுத்த புலங்களில் வேண்டப்படும் மதிப்புகளின் அளவுகளை வெற்றுப் பதிவேடாக ஒரு காட்சித்திரையில் காட்டுதல்.

**nonreflective :** பிரதிபலிக்காத மை : ஓர் ஒளி எழுத்துப் படிப்பிக்குப் புலனாகக்கூடிய மையின் வண்ணம் எதுவும். இதனை, 'படிப்பு மை' என்றும் கூறுவர்.

**nonreturn to zero :** சுழி (பூஜ்யம்)க்குத் திரும்பாமை : காந்தப் பதிவுமுறை காந்த மயத்தில் துருவத்தை மாற்றுவதன் மூலம் இரும எண் 1-ஐ பதிவு செய்தல்.

**nonsequential computer :** வரிசை முறையிலாக் கணினி : ஒவ்வொரு அறிவுறுத்தத்தின் அமைவிடத்திற்கும் இயக்கப்படவேண்டிய கணினி.

**nonservo robots :** பணியிலா எந்திரன்கள் : நெகிழ்விலா தன்மையினால் கட்டுப்படுத்தப்படும் அமைப்பைக் கொண்ட எந்திரன்கள்.

**nonstop :** நிற்காத : டான்டெம் நிறுவனம் உருவாக்கிய பிழை தாங்கும் கணினி அமைப்புகளின் குடும்பம்.

**nonswitched line :** விசையிலா இணைப்பு; நிலைமாறா இணைப்பு : இரு முனைகளிடையே நிரந்தரமாக அமைக்கப்பட்டுள்ள செய்தித் தொடர்பு இணைப்பு. இதனைக் குத்தகை இணைப்பு என்றும் கூறுவர்.

**nonsystem disk :** முறைமையிலா வட்டு: ஏற்றும் தரவு (அமைப்பு கோப்புகள்) கொண்டிராத ஒரு நெகிழ்வட்டு. அத்தகைய வட்டைக்கொண்டு கணினியை இயக்க முடியாது.

**nontrivial :** எளிதற்ற(து) : எளிதான முறையில் தீர்வு காண முடியாதது. மிகவும் கடினமான பிரச்சினைக்கு சிக்கலான நிரலாக்கச் செயல்முறை மூலம் தீர்வு காண்பதை எளிதற்ற தீர்வு முறை என்கிறோம்.

**nonuniform memory architecture :** ஒழுங்கிலா நினைவகக் கட்டுமானம் : சீக்குவென்ட் (Sequent)-இன் சீரிலா அணுகு நினைவகத்திற்காக வடிவமைக்கப்பட்ட முறைமைக் கட்டுமானம். ஒரு பகிர்வு நினைவக வகை. மையப்படுத்தப்பட்ட ஒற்றை

நினைவகச் சில்லாக இல்லாமல் பல பகிர்வு நினைவகத் துண்டங்களைக் கொண்டதாக இருக்கும்.

**nonvolatile memory** : அழியா நினைவகம் : மின்சாரம் துண்டிக்கப்பட்ட பின்னும் அழி யாமல் வைத்திருக்கும் சேமிப் புச் சாதனம். ரோம், இப்ரோம், ஃபிளாஷ் நினைவகம், குமிழ் நினைவகம் அல்லது மின் கலத் தினால் பாதுகாக்கப்படும் சீமாஸ் ரோம் போன்ற உள்ளக நினைவகத்தைக் குறிக்கும் சொல். சிலவேளைகளில் வட்டு களைக் குறிப்பதும் உண்டு.

**non volatile storage** : அழியா வகை சேமிப்புச் சாதனம்; அழிவுறா சேமிப்பகம் : மின் விசை இல்லாதபோதும் தனது தரவுகளை இருத்தி வைத்துக் கொள்ளும் சேமிப்புச் சாதனம். காந்தக் குமிழ் நினைவகம். காந்த உள் மையச் சேமிப்புச் சாதனம் இந்த வகையின. இது அழியும் சேமிப்புச் சாதனத் திலிருந்து மாறுபட்டது.

**No.oP (NOP)** : செயற்படா; செயலிலா : செயற்படா திருத்தல் என்று பொருள்படும் no-Operation என்பதன் சுருக்கம். எடுத்துக்காட்டு : செயற்படா அறிவுறுத்தம்.

**no-operation instruction** : செயற் படாநிரல் : நிரல் மேடைக்குச் சாதகமான விளைவை மட்டுமே உண்டாக்கக் கூடிய கணினி ஆணை. இயல்பான வரிசைமுறையில் அடுத்த நிரலுக்குத் தானாக நகரும் வேலையை மட்டுமே இது செய்கிறது.

**nop instruction** : வினையிலா நிரல் : கணினி இயக்கத்தில் எந்தவித மாற்றமும் ஏற்படுத் தாத கணினி நிரல். ஆகவே இது 'நூப்' என்று அழைக்கப் படுகிறது.

**NOR** : எதிர் அல்லது : Not-or என்பதன் குறுக்கம். தருக்க முறை இயக்கியினால் இணைக் கப்பட்டுள்ள மாறிலிகள் இரண்டும் பொய்யானவையாக இருக்கும் போதுமட்டும் உண்மையின் ஒரு தருக்க முறை மதிப்பினை அளிக்கிற பூலியன் இயக்கி. இது, 'மற்றும்', 'அல்லது' ஆகிய வற்றுடன் ஒப்பிடத்தக்கது.

**Nor circuit** : இல் அல்லது மின் சுற்று.

**normal distribution** : இயல்பான பகிர்வு நிரல் : ஒரு நடு மதிப் பினைச் சுற்றி ஒழுங்குமுறை யாகத் தொகுக்கின்ற தன்மை

அனைத்தும் இயற்கையாக ஏற்படும் சிறப்பியல்புகளுக்கும் உண்டு. ஒரு பள்ளியில் குறிப்பிட்ட வகுப்பில் படிக்கின்ற மாணவர்களின் உயரம், ஒரு குறிப்பிட்ட நிலை வட்டின் உழைக்கும் நாட்கள், மக்கள் தொகையில் ஒரு நபர், ஒரு ஆண்டுக்குப் பயன்படுத்துகின்ற பெட்ரோலின் அளவு ஆகியவற்றை இதற்குச் சான்றாகச் சொல்லலாம். இந்த போக்கே வழக்கமான விநியோகம் எனப்படுவதை உருவாக்குகிறது. வரைபட அமைப்பில் ஒரு வழக்கமான விநியோகமானது மணி வடிவ வளைவை உருவாக்கும்.

**normal form** : இயல்பான வடிவம் : பதின்மப் புள்ளி எண்ணைக் குறிப்பிடுவது. இதில் பின்னப் பகுதியின் மிக முக்கிய இலக்கம் சுழி (பூஜ்ய) யாகவே இருக்கும்

**normalization** : இயல்பாதல் : தொடர்புமுறை தரவுத் தள மேலாண்மையில் திறமையான செயலாக்கத்திற்காக தரவுகளை பதிவேடு குழுக்களாகப் பிரிக்கும் செயல்முறை. இதில் ஆறு நிலைகள் உள்ளன. மூன்றாவது நிலையில் (மூன்றாவது வழக்கமான வடிவம்) பதிவேட்டிலுள்ள முக்கிய புலத்தினால் மட்டுமே தரவு அடையாளம் காட்டப்படுகிறது. சான்றாக நிரலிடம் தரவுவை அடையாளம் காண்பது, நிரல் எண், வாடிக்கையாளர் தரவு, வாடிக்கையாளர் எண்.

**normalize** : இயல்பாக்குதல் : ஒரு மாறியல் எண்ணளவின் அடுக்குக்குறி எண்ணையும் பின்னத்தையும் சரியமைவு செய்தல். இதன்படி பின்னம் வகுத்துரைக்கப்படும் ஓர் அளவெல்லைக்குள் இருக்குமாறு செய்யப்படும்.

**normal termination** : இயல்பான முடிப்பு : End அல்லது stop போன்ற நிறுத்தும் சொல். ஒரு நிரல் தொடரை முடிக்கும் செயல்.

**normal video** : இயல்பான ஒளிக் காட்சி : கறுப்புப் பின்னணியில் வெள்ளை எழுத்துகளைக் காட்டும் முறை.

**normal view button** : இயல்பான காட்சிப் பொத்தான்.

**normal wear** : இயல்பான தேய்மானம் : சராசரியான, அன்றாட பயன்பாட்டினால் ஒரு பொருளின்மீது இயற்கையான சக்திகள் ஏற்படுத்தும் சீர்கேடு.

**Nor operation** : இல் -அல்லது வாயில் செயலாக்கம்.

**Norton anitvirus :** நார்ட்டன் ஆன்டி வைரஸ். நச்சுநிரல் எதிர்ப்பு மென்பொருள்.

**norton commander :** நார்ட்டன் கட்டளை : பீசிக்கான கூட்டு மேலாண்மைப் பயன்பாட்டு நிரல் தொடர்கள்.

**norton editor :** நார்ட்டன் தொகுப்பி : பீட்டர் நார்ட்டன் என்பவரால் பீசிக்களுக்காக் உருவாக்கப்பட்ட ஒரு உரைத் தொகுப்பி.

**norton index :** நார்ட்டன் அடைவு; நார்ட்டன் அட்டவணை : கணினி வன்பொருள்/ மென்பொருள் செயலாக்க வேகத்தினை மதிப்பிடக்கூடிய பல முறைகளில் ஒன்று NI என்று சுருக்கி அழைக்கப்படுகிறது.

**norton SI :** நார்ட்டன் எஸ்.ஐ. : Norton System Information என்பதன் குறும்பெயர். கணினி செயல்பாட்டை அளக்கும் நார்ட்டன் பயன்பாடு. கணிப்பு அடைவு (சி.ஐ) மூலம் மையச் செயலக வேகத்தையும் வட்டு அடைவு (டி.ஐ) மூலம் வட்டின் வேகத்தையும் செயல்பாட்டு அடைவில் (பி.ஐ) சி.ஐ, டி.ஐ. ஆகிய இரண்டையும் கலந்தும் தரும். ஐ.பி.எம். எக்ஸ்.டி. இதற்கு ஒரு குறிப் பொருளாகப் பயன்படுத்தப் படுகிறது.

**norton utilities :** நார்ட்டன் பயன்பாடுகள் : சிமான்டிக் கார்ப்பரேஷன் உருவாக்கிய பீசி, மெக்கின்டோஷ்களுக்கான வட்டு மேலாண்மை பயன்பாட்டு நிரல் தொடர்கள். கோப்புகளைத் தேடித் தொகுத்தல், கோப்புகளை நீக்காமை, சேதமான கோப்புகளை திரும்பப் பெறுதல் போன்றவற்றுக்கான நிரல் தொடர்கள் இதில் அடங்கும். பீட்டர் நார்ட்டன் கணிப்பி நிறுவனம் உருவாக்கிய இத் தகைய நிரல் தொடர்கள்தாம் பீசிக்கான வட்டு பயன்பாடுகளை புகழடையச் செய்தன. குறிப்பிட்ட பணிக்கேற்ற தேவையற்ற தன்மைகள் இல்லாத வேகமான பயன்பாடுகளின் தொகுதியே அவை.

**NOS :** நாஸ் : Network operating System என்பதன் குறும்பெயர். ஒரு பிணையத்தில் அனுப்புவதைக் கட்டுப்படுத்தும் மென்பொருள்.

**NOT :** எதிர் : இது ஒரு தருக்க முறை இயக்கி. இதில் 'P' என்பது ஓர் அறிக்கை, எனில் 'P' பொய்யானதென்றால் 'P'-இன் 'எதிர்' உண்மையாகும்; 'P'

உண்மையென்றால் அதன் 'எதிர்' பொய்யானதாகும்.

**notation :** எண் அமைப்பு; குறிமானம் : எண்கள், சொற்றொடர்கள், சொற்கள் மற்றும் அளவுகள் எவ்வாறு எழுதப்படுகின்றன அல்லது எடுத்துரைக்கப்படுகின்றன என்பது. பதின்ம அல்லது இரும அமைப்பு போன்ற எண் அமைப்பில் எண்கள் அமையும் இடத்தைப் பொறுத்தே எண்களின் மதிப்பு முடிவு செய்யப்படும்.

**notation base :** தளக் குறிமானம்.

**notation, binary coded decimal :** இருமக் குறியீட்டுப் பதின்மக் குறிமானம்.

**notation, octal :** எண்மக் குறிமானம்.

**notation, radix :** அடிஎண் குறிமானம்.

**not boolean :** நாட் பூலியன் : ஒரு உள்ளீட்டைத் தலைகீழாக்கும் அளவை இயக்கம். உள்ளீடு '0' என்றால் வெளியீடு '1' ஆகும். இதுவே தலைகீழாகும்.

**notebook computer :** கையேட்டுக் கணினி : ஒரு கைப்பெட்டிக்குள் அடக்கி விடக்கூடிய வடிவளவுடைய ஒரு கணினி. இதில் ஒரு தட்டையான தகட்டுத் திரவப் படிகக் காட்சித்திரை பயன்படுத்தப்படுகிறது. இது ஒரு கையடக்கக் கணினியைவிடப் பெரியது. ஆனால் ஒரு மேசைக் கணினியை விடச் சிறியது.

**notelead :** குறிதாள் அட்டை.

**notepad :** நோட்பேடு : ஓர் உரைத்தொகுப்பான் மென்பொருள். விண்டோஸ் 95/98-இல் உள்ளது.

**not gate :** 'எதிர்' வாயில் : எதிராக்கம் செய்வதற்கான தருக்க முறைச் செயற்பாட்டுக்கு இணையான மின்சுற்று வழி.

**notis :** நோட்டிஸ் : நார்வேயின் நார்ஸ்க் டேட்டா நிறுவனத்தின் அலுவலகத் தானியங்கித் தொகுப்பு. சொல் செயலாக்கம் மற்றும் விரிதாளுக்கு அப்பால் சென்று மின்னஞ்சல் ஆவண சேமிப்பு வணிக வரைகலைகள் மற்றும் தொலையச்சுடெலக்ஸ் இடைமுகம் ஆகியவற்றை வழங்கக் கூடியது.

**nova :** நோவா : டேட்டா ஜெனரல் கார்ப்பரேஷன் என்ற நிறுவனம் தயாரிக்கும் கணினிகளுக்கான வடிவமைப்பு.

**NovaNet :** நோவாநெட் பிணையம் : இல்லினாய்ஸ் பல்கலைக் கழகத்தின் கல்வி ஆராய்ச்சி ஆய்வுக்கூடம் உருவாக்கிய

கல்விச் சேவைகளுக்கான செயற்கைக் கோள் சார்ந்த பிணையம். மூன்றாம் வகுப்பிலிருந்து பட்டமேற்படிப்பு வரை நூற்றுக்கணக்கான பாடங்களில் 10,000 மணிகளுக்கு மேலான பாடப்பொருள் இதில் உள்ளது.

**novell network : நோவெல் பிணையம் :** நோவலின் நெட்வொர்க் இயக்க அமைப்புகளில் ஒன்றினால் கட்டுப்படுத்தப் படும் குறும்பரப்புப் பிணையம் (LAN).

**Novel NetWare : நாவெல் நெட்வேர் :** நாவெல் நிறுவனம் தயாரிக்கும் குறுபரப்புப் பிணைய இயக்க முறைமையின் மென்பொருள் தொகுதிகள். ஐபிஎம்பீசி மற்றும் ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினிகளில் செயல்படக்கூடியவை. பிணையப் பயனாளர்கள் கோப்புகளையும், நிலைவட்டுகள் மற்றும் அச்சுப் பொறிகள் போன்ற முறைமை வளங்களையும் பகிர்ந்து கொள்ள நாவெல் நெட்வேர் அனுமதிக்கிறது.

**no wait state memory : காத்திருக்காத நிலை நினைவகம் :** மையச் செயலகத்தின் தேவைகளைச் சமாளிக்கும் அளவுக்கு வேகமுள்ள நினைவகம். சோம்பலாய் காத்திருக்கும் நிலைகளை அறிமுகப்படுத்த வேண்டிய தேவையில்லை.

**Noyce Robert : நாய்ஸ், ராபர்ட் :** கோளச் செய்முறையை ஜீன் ஹீர்னி என்பாருடன் சேர்ந்து உருவாக்கியவர். இதில் மின்சுற்றுவழி அமைப்பிகள், சிலிக்கன் போன்ற மென்வட்டில் ஒளிச்செதுக்குச் செய்வதன் மூலம் இணைக்கப்படுகின்றன.

**.np : .என்பீ :** ஓர் இணைய தள முகவரி நேபாள நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**NPN transistor : என்பீஎன் மின்மப் பெருக்கி :** மின்மப் பெருக்கிகளில் ஒருவகை. N-வகைப் பொருளால் ஆன உமிழிக்கும் திரட்டிக்கும் இடையில் பின்னப்பட்ட P-வகை பொருளால் ஆன அடிவாய் (Base) கொண்டது. அடிவாய், உமிழி, திரட்டி ஆகிய மூன்று முனையங்களின் வழியே மின்னோட்டம் பாய்கிறது. N-P-N மின்மப் பெருக்கிகளில் மின்னணுக்கள்தாம் மின்னூட்டச் சுமப்பிகளாய்ச் செயல்படுகின்றன. அவை உமிழியிலிருந்து திரட்டியை நோக்கிப் பாய்கின்றன.

**.nr :** .என்ஆர் : ஓர் இணைய தள முகவரி நௌரு நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**NRZ :** என்ஆர்இசட் : சுழி (பூஜ்யம்)க்குத் திரும்பாதிருப் பதைக் குறிக்கும். 'Non-return to zero' என்ற ஆங்கிலச் சொற் றொடரின் தலைப்பெழுத்துச் சொல். எண்முறைத் தரவு களைக் காந்த நாடாவில் குறி யீடாகப் பதிவு செய்வதற்கான பல முறைகளில் ஒன்று.

**ns :** என்எஸ் : நானோ விநாடி (Nanosecond) என்பதன் சுருக் கம். இது ஒரு விநாடியில் நூறு கோடியில் ஒரு பகுதியாகும்.

**NSAPI :** என்எஸ்ஏபீஐ : நெட் ஸ்கேப் வழங்கன் பயன்பாட்டு நிரலாக்க இடைமுகம் எனப் பொருள்படும் Netscape Server Application Programming Interface என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும் பெயர். நெட் ஸ்கேப் ஹெச்டீடீபீ வழங் கனுக்கும் ஏனைய பயன்பாட்டு நிரல்களுக்கும் இடையேயான இடைமுகத்துக்கான வரன் முறைகளை இது குறிக்கிறது. ஒரு வலை உலாவியிலிருந்து வலை வழங்கன் மூலமாகப் பயன்பாட்டு நிரல்களை அணுகு வதற்கு இதனைப் பயன் படுத்திக் கொள்ளலாம்.

**.ns.ca :** .என்எஸ்.சிஏ : ஓர் இணைய தள முகவரி கனடா நாட்டின் நோவா ஸ்காட்டியா மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**NSFnet :** என்எஸ்எஃப்நெட் : அமெரிக்க நாட்டின் தேசிய அறி வியல் கழகம் (National Science Foundation) உருவாக்கிய விரி பரப்புப் பிணையம். ஆர்ப்பா நெட்டுக்குப் (ARPAnet) பதிலாக சிவில் பயன்பாடுகளுக்காக உருவாக்கப்பட்டது. 1995 ஆண்டு வரை இணையத்தின் முது கெலும்பாய்த் திகழ்ந்தது. அமெரிக்க நாட்டில் இணையத் துக்கான முதுகெலும்புச் சேவை களை இப்போது தனியார் பிணையங்கள் வழங்கி வருகின்றன.

**NST :** என்எஸ்டி : ஒரு கட்டளை யின் ஆரம்பத்துக்கும் முடிவுக் கும் இடையில் வேறு ஒரு கட் டளையை உள்ளே நுழைத்தல்.

**NSTL :** என்எஸ்டிஎல் : National software testing laboratory என்பதன் குறும்பெயர். ஒரு அமெரிக்க தனியார் மென் பொருள் சோதனை மற்றும் மதிப்பீட்டு நிறுவனம்.

**NT : என்டி (விண்டோஸ்) :** மைக்ரோசாஃப்ட் நிறுவனத்தின் பிணைய இயக்க முறைமை. கிளையன்ட்/ சேர்வர் தொழில் நுட்பத்தில் அமைந்த சேர்வர் இயக்க முறைமை. விண்டோஸ் 95/98-ன் வரைகலைப் பணிச் சூழல் என்டியில் உண்டு. வருங் காலத்தில் 'விண்டோஸ் என்டி' என்பது 'விண்டோஸ் 2000' என்று பெயர் மாற்றம் பெறு கிறது. ஆல்பா செயலிகள் மிப்ஸ் (MIPS). தொழில்நுட்ப செயலிகள் மற்றும் இன்டெலின் 86 வரிசைச் செயலிகள் ஆகியவற்றிலும் என்.டி. (NT) இயங்கும்.

**.nt.ca : .என்டீ.சிஏ :** ஓர் இணைய தள முகவரி கனடா நாட்டின் வடமேற்கு பிரதேசத் தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**NTFS : என்டீஎஃப்எஸ் :** என்டீ கோப்பு முறைமை என்று பொருள்படும் NT File System என்பதன் சுருக்கம். விண்டோஸ் என்டீ இயக்க முறைமைக்கென தனிச்சிறப்பான முறையில் வடி வமைக்கப்பட்ட உயர்நுட்பக் கோப்பு முறைமை. இதில், நீண்ட கோப்புப் பெயர் இயலும். முழுமையான பாது காப்புள்ள அணுகல் கட்டுப் பாடு, கோப்பு முறைமை மீட்பு, மிகப் பரந்த சேமிப்பு ஊடகம் மற்றும் விண்டோஸ் என்டீ போசிக்ஸ் (POSIX) துணை முறைமைக்கான சிறப்புக் கூறு களை உள்ளடக்கியது. பொருள் நோக்குப் பயன்பாடுகளையும் ஏற்கிறது. அனைத்துக் கோப்பு களையும் பயனாளர் மற்றும் முறைமை வகுத்த பண்புக் கூறுகள் கொண்ட பொருள் களாகவே கருதிச் செயல் படுகிறது.

**NTP : என்டீபீ :** பிணைய நேர நெறிமுறை என்று பொருள் படும் Network Time Protocol என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். ஒரு கணினியின் உள்ளமை நேரத்தையும் அது தொடர்பு கொள்ளும் வழங்கன் கணினி அல்லது வானொலி, செயற்கைக் கோள் வாங்கி, மோடம் போன்ற பிறவற்றின் நேரத்தையும் ஒத்திசைவாக்கப் பயன் படுகிறது. குறும்பரப்புப் பிணையங்களில் ஒரு மில்லி வினாடிக்குள்ளான துல்லியம் பெற முடியும். விரிபரப்புப் பிணையங்களில் துல்லியம் சில பத்து மில்லி வினாடிகள்.

**NTSC : என்டிஎஸ்சி :** தேசியத் தொலைக்காட்சி அமைவனக் குழு (National Television System

Committee) என்பதன் குறும் பெயர். இது ஒரு வண்ணத் தொலைக்காட்சித் தர நிருணய அளவு.

**N-type semiconductor : என்-வகை குறைகடத்தி :** மின்சாரக் கடத்தல் மின்னணு மூலம் நடைபெறும் 'குறைகடத்திப் பொருள். P-வகை குறை கடத்திகளில் மின்கடத்தல், துளைகள் (holes-electron vacancies) மூலம் நடைபெறுகிறது. மிகை மின்னணுக் கொண்ட மாசுப் பொருள் சேர்த்து N-வகைக் குறைகடத்திகள் தயாரிக்கப்படுகின்றன.

**.nu : .என்யு :** ஓர் இணைய தள முகவரி நியூ (Niue) நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**nuBus : நுபஸ் :** ஈரோகார்டினால் (9U) வரையறுக்கப்பட்டு ஆரம்பத்தில் எம்ஐடியில் உருவாக்கப்பட்ட 32- துண்மி தடைய வடிவமைப்பு. தடையத்திற்கான உரிமைகளை டி.ஐ. மற்றும் வெஸ்டர்ன் டிஜிட்டல் நிறுவனங்கள் வாங்கிவிட்டன. டி.ஐ.யிடமிருந்து ஆப்பிள் நிறுவனம் இதற்கான உரிமையைப் பெற்று இதன் மின்சார பருப்பொருள் வரையறைகளை மெக்கின் டோஷுக்காக மாற்றியது.

**nucleus : உள்மையம்; உட்கரு :** ஒரு கட்டுப்பாட்டுச் செயல் முறையின் பகுதி. இது உள் முகச் சேமிப்புச் சாதனத்தில் அமைந்திருக்க வேண்டும்.

**nudge shadow : தள்ளு நிழல்.**

**NUI : என்யுஐ :** notebook user interface என்பதன் குறும் பெயர். கோ கார்ப்பரேஷன் தனது பேனா மற்றும் பாயின்ட் பேனா சார்ந்த இடைமுகத்திற்காக உருவாக்கப்பட்ட சொல்.

**nuke : அழி, முறி :** *1.* ஒரு கோப்பினை, கோப்பகத்தை அல்லது நிலைவட்டு முழுமையையும் அழித்தல். *2.* ஓர் இயக்க முறைமையின், ஒரு பயன்பாட்டின் அல்லது ஒரு நிரலின் செயல்பாடு ஒன்றை நிறுத்தி வைத்தல்.

**null : பயனிலா மதிப்பு; வெற்று மதிப்பு :** மிக அற்பமான அல்லது தகவல் எதுவும் தராத ஒரு மதிப்பு. இது ஒரு எண்மான மதிப்பு, சொற்களுக்கிடையிலான இடைவெளி போன்ற தகவல்களைக் குறிக்கும் ஒரு சுழி (பூஜ்யம்) அல்லது வெற்றிடத்திலிருந்து வேறுபட்டது.

**null character : இல்லாத எழுத்து; வெற்று எழுத்து :** ஒரு சேமிப்பகச் சாதனத்தின்

வெற்றிடத்தை நிரப்பப் பயன்படுத்தப்படும் எழுத்து. ஒரு வரிசை எழுத்துகளிலிருந்து அந்த வரிசையில் பொருள் மாறாமல் அந்த எழுத்தை சேர்க்கலாம் அல்லது நீக்கலாம்.

**null cycle** : பயனில் சுழற்சி; வெற்றுச் சுழற்சி : புதிய தரவு எதனையும் தராமல் ஒரு முழுச் செயல்முறையும் சுழல்வதற்குத் தேவையான நேரம்.

**null instruction** : பயினிலா ஆணை; வெற்று ஆணை.

**null modem** : வெற்று மோடெம் : அங்கே ஒரு மோடெம் இல்லாமலேயே தரமான மோடெம் குழாய்களைப் பயன்படுத்தி இரண்டு கணினிகளை இணைக்க அனுமதிக்கும் சாதனம். பெரிதாக்கல், குறிப் பேற்றம், குறிப்பிறக்கம் ஆகியவற்றைப் பயன்படுத்தாமலேயே செய்யப்படும் தகவல் தொடர்பு இணைப்பு. குறைந்த தூரத்திற்கு மட்டுமே வெற்று மோடெம்கள் முறையைப் பயன்படுத்த முடியும். நேரடி இணைப்பைக் கருத்தில் கொண்ட மிகக்குறைந்த நீளமுள்ள நேரடி உலோக இணைப்பு தருவதாக சில சமயம் வெற்று மோடெம்கள் குறிப்பிடப்படுகின்றன.

**null modem cable** : வெற்று மோடெம் குழாய் : மிக நெருக்க



வெற்று மோடெம் குழாய்

மாக உள்ள இரண்டு பர்சனல் கணினிகளை இணைக்கப் பயன் படுத்தப்படும் ஆர்எஸ்-232 -சி குழாய். தொடர் துறை (port) களை இணைப்பதுடன் ஒரு முனையில் அனுப்பும் கம்பிகளையும் மறுமுனையில் பெறும் கம்பிகளையும் கடக்கிறது.

**null pointer** : வெற்றுச் சுட்டு : சுழியை (பூஜ்யத்தை) நிரலாக்கத் தொடரில் குறிப்பிடும் முறை. வெற்றிபெறாத, தேடும் பணியின் பதில்களாக இருக்கலாம்.

**null string** : வெற்றுச் சரம் : எழுத்து எதுவும் இல்லாத ஒரு சரம்.

**null value** : வெற்று மதிப்பு.

**number** : எண் வரிசை : *1.* ஒரு குறிப்பிட்ட எண்மான முறை

யில் ஒரு மதிப்பினைக் குறிக்கும் குறியீடு அல்லது குறியீடுகள். 2. இது ஓர் இலக்கத்தையும் குறிக்கும்.

**number base :** எண் ஆதாரம்.

**number cruncher :** எண் உழல் ; பெருங்கணிப்பி : ஏராளமான கணிப்புகளையும் பிற எண் மானக் கணக்குகளையும் செய் வதற்கு வடிவமைக்கப்பட்ட செயல்முறை அல்லது கணினி.

**number crunching :** எண் நொறுக்கல்; எண் அரைத்தல் : ஏராளமான எண்வகைத் தரவு களின் கணக்கீடுகளைக் குறிக் கிறது. மீண்டும் மீண்டும் செய் கிற கணக்கீடாக இருக்கலாம். கணிதமுறையில் மிகச் சிக்க லானதாக இருக்கலாம். அல்லது இரண்டும் சேர்ந்ததாயிருக் கலாம். ஆனாலும் தரவு உள் ளீட்டு வெளியீட்டுச் செயல் பாடுகளை இது குறிப் பதில்லை. கணினியுள் நடை பெறும் அகநிலைச் செயலாக் கத்தையே குறிக்கிறது. எண் ணியல் துணைச் செயலிகள் இதுபோன்ற பணிகளை மேற் கொள்கின்றன. இதனால் கணினி களின் செயல்திறன் பெருமளவு அதிகரிக்கப் படுகிறது.

**number lock :** எண் பூட்டு.

**number generator :** எண் இயற்றி.

**number representation :** எண் மானக் குறியீடு : ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ள விதிமுறை களுக்கிணங்க, ஏற்றுக்கொள் ளப்பட்டுள்ள குறியீடுகளில் எண்களைக் குறிப்பிடுதல்.

**numbers, random :** குறிப்பிலா எண்கள்.

**number system :** எண்மான முறை : எண்களைக் குறிப்பிடு வதற்கு ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ள குறியீடுகளும், விதி முறைகளும் எண்மான முறை எனப்படும்.

**number system, binary :** இரும எண் முறைமை.

**numeral :** எண்; எண்மானம் : ஓர் எண்ணைக் குறிப்பதற்கு மரபு முறைப்படி பயன்படுத்தப்படும் குறியீடு. 6, VI, 110 என்பவை ஒரே எண்ணை வேறுவேறு எண்மான முறைகளில் குறிக்கும் குறியீடுகள் ஆகும்.

**numeralization :** எண் முறை யாக்கம் : அகர வரிசைத் தரவு களை எண்களில் குறிப்பிடுதல்.

**numeral system :** எண் முறை; எண் அமைப்பு ; எண்மான

முறை : எண்களைக் குறித்திடும் முறை. பொதுவாக பதின்ம அல்லது பதின்மான இலக்க முறை பயன்படுத்தப்படுகிறது. இது தவிர பல்வேறு இலக்க முறைகளும் பயன்படுத்தப்படு கின்றன. இவற்றில் ஈரெண் முறை, பதினாறெண் முறை, எட்டெண் முறை ஆகியவை குறிப்பிடத் தக்கவை.

**numerator :** பகுதி.

**numerator/denominator :** பின்ன எண் பகுதி/விகுதி.

**numeric :** எண் சார்ந்த : எண்கள் அல்லது எண் குறியீடுகள் தொடர்புடைய.

**numerical analysis :** எண் முறைப் பகுப்பாய்வு : கணக்கு களுக்கு விடை காண்பதற்கான ஆக்கமுறை நடைமுறைகளை ஆராய்ந்து கண்டுபிடித்தல் தொடர்பான கணிதப் பிரிவு.

**numerical control :** எண்முறைக் கட்டுப்பாடு : வரிசையான இலக்கங்களை உட்செலுத்தி குறிப்பாகக் காகித நாடாவில் எந்திரங்களைக் கட்டுப்படுத்தும் ஒரு அமைப்பு.

**numerical expression :** எண் மானக் கோவை.

**numerical indicator tube :** எண் முறைக் குறியீட்டுக் குழாய் : இலக்கங்களைக் காட்சியாகக் காட்டக்கூடிய ஓர் மின்னணு குழாய்.

**numeric character :** எண் எழுத்து : இலக்கத்தைக் குறிக் கிறது.

**numeric coding :** எண் குறி யீட்டு முறை : தரவுகளையும் அறிவுறுத் தங்களையும் குறிப் பதற்கு எண்களை மட்டுமே பயன்படுத்தும் குறியீட்டு முறை.

**numeric constant :** எண் மாறிலி : முழு எண்களை அல்லது மெய்ம்மை எண்களை மட்டுமே பயன்படுத்தும் செய்திக் குறிப்பு.

**numeric data :** எண் தரவு : கணக்கீடுகளைச் செய்யும்போது பயன்படுத்தப்படும் பண அளவு கள் மற்றும் பொருள் எண்ணிக் கைகளைக் குறிப்பிடுகிறது.

**numeric field :** எண் புலம்; எண் ணியல் படிவம் : கணக்கிடப்பட வேண்டிய எண்களை மட்டுமே கொண்டுள்ள தரவுப் புலம்.

**numeric keypad :** எண்ணியல் விசைத் திண்டு.



எண்ணியல் விசைத் திண்டு

**Numeric Lock Key** : எண்பகுதி பூட்டு விசை : நிலைமாற்று விசை. நிகழ்த்தும்போது (turned on) விசைப்பலகையிலுள்ள எண் பகுதியை செயல்பாட்டுக்குக் கொண்டு வருகிறது. அதன்பின் எண் விசைகளை ஒரு கணிப்பான் (Calculator) பாணியில் தரவு உள்ளீடு செய்யப் பயன் படுத்த முடியும்.

**numeric pad** : எண் பலகை: சில முகப்புகள் கூட்டல் எந்திரங்கள் அல்லது விசை துளைப்பிகள் ஆகியவற்றில் உள்ள எண் விசைகளின் தொகுதி. ஒரு வரியிலோ அல்லது செவ்வகக் கட்டமாகவோ இல்லாமல் ஒரு குழு அமைப்பில் கொடுக்கப் பட்டிருப்பதால் எண் தரவுகளை மிகவும் திறமையாக உள்ளீடு செய்யலாம்.

**numeric portion** : எண்ணியல் பகுதி.

**numeric type** : எண்வகை.

**numeric type field** : எண் வகைப் புலம்.

**numeric type variables** : எண் வகை மாறிகள்.

**numeric variables** : எண் மாறிலிகள்.

**numeric width** : எண்ணியல் அகற்சி.

**numlock** : எண் பூட்டு : விசைப் பலகையில் எண் அட்டையில் உள்ள ஒரு விசை. எண் அட்டையில் இலக்கங்களை தட்டச்சு செய்யும்போது மாற்று விசையை (Shift) அழைத்தும் தேவையின்றி இதை அழுத்தினால் போதுமானது.

**numlock key** : எண்பூட்டு விசை.

**.nyc.ny.us** : .என்ஒய்சி.என்ஒய்.யுஎஸ் : ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டின் நியூயார்க் மாநிலத்திலுள்ள நியூயார்க் நகரைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.ny.us** : .என்ஒய்.யுஎஸ் : ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டின் நியூயார்க் மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.nz** : .என்இஸட் : ஓர் இணைய தள முகவரி நியூஸிலாந்து நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

# O

Oasis : பாலைச்சோலை : பல நுண் கணினியமைவுகளில் பயன் படுத்தப்படும் பல பயனாளர் செயற்பாட்டுப் பொறியமைவு.

obey : பணிந்திணங்கு; கீழ்படி: ஒரு கணினி, தற்போது நிறை வேற்றப்படும் செயல்முறை யினை ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நிரல் மூலம் குறித்து உரைக்கப்படும் ஒரு செயற் பாட்டினை நிறைவேற்றுகிற செய்முறை.

object : பொருள்; இலக்கு; தக வமைவு : உருவாக்குபவருக்கு நிரலாக்கத் தொடர் பொருள்கள் திரும்பப் பயன்படுத்தக்கூடிய குறியீட்டுப் பிரிவுகள். சக்கரத் தினை ஒவ்வொரு முறையும் திரும்பக் கண்டுபிடிக்க வேண் டிய தேவையில்லாததுபோல் முந்தைய வேலையின் புதிய பயன்பாடுகளைப் பயன்படுத் திக் கொள்ள உதவுகின்றவை. இறுதிப் பயனாளருக்கு அவை திரைப்பொருள்கள் (ஐக்கான் கள், கோப்புப் பெயர்கள், விரி தாள் வரிசைகள், சொற்கட்டங் கள் போன்றவை. இவைகளை பொருள்களைப் போன்று கையாள முடியும். சான்றாக ஒரு கோப்பின் பெயரை அச்சுப் பொறி ஐகானுக்கு இழுத்து வந் தால் அக்கோப்பு அச்சிடப்படும்.

object attribute : பொருளின் பண்புக்கூறு.

object base : இலக்கு தளம்; பொருள் தளம்.

object code : இலக்குக் குறி யீடு; இயக்கு நிரல்; இலக்குச் சங்கேதம்; இலக்கு நிரல் : ஒரு தொகுப்பானிலிருந்து அல்லது இணைப்பானிலிருந்துவரும் வெளிப்பாடு. இதுவும் நிறை வேற்றத்தக்க ஒரு எந்திரக் குறி யீடாக அல்லது நிறைவேற்றத் தக்க எந்திரக் குறியீட்டினை மேலும் செய்முறைப்படுத்து வதற்குத் தக்கதாக அமைந் திருக்கும். இதனை "இலக்குச் செயல்முறை" (object programme) என்றும் கூறுவர்.

object computer : இலக்குக் கணினி : ஓர் இலக்குச் செயல் முறையை நிறைவேற்று வதற்குப் பயன்படுத்தப்படும் கணினி.

object database management group : பொருள்நோக்கு தரவுத் தள மேலாண்மைக் குழு : பொருள்சார் தரவுத் தளங்களுக்

கான தர வரையறைகளை வளர்த்தெடுக்கவும் பொருள் நோக்கு தரவுத் தளங்களுக்கான இடைமுகங்களை வரையறுக்க வும் உருவாக்கப்பட்ட அமைப்பு.

**object deck** : இலக்கு அடுக்கு; இலக்குக் காட்டு : ஓர் ஆதார அடுக்குக்கு இணையான எந்திர மொழியினைக் குறிக்கின்ற துளையிட்ட அட்டைகளின் தொகுதி.

**object designator** : இலக்கு நியமிப்பாளர்; பொருள் வடி வமைப்பாளர்.

**object desk** : பொருள் மேசை : எந்திர மொழியைக் குறிப்பிடும் துளையிட்ட அட்டைகளின் தொகுதி. ஆதார மேசைக்குச் சமமானது.

**object file** : இலக்குக் கோப்பு : எந்திரக்குறியீடு அல்லது செயல்படுத்தக்கூடிய கோப்பு டன் இணைக்கப்படக்கூடிய குறியீட்டு வரிகள்.

**objective-C** : இயக்கு-சி : பீசிக் களிலும் பிரபல பணி நிலையங் களிலும் இயங்கும் ஸ்டெப்ஸ் டோன் கார்ப்பரேஷன் உருவாக் கிய நோக்கம் சார்ந்த சி-நிரல் தொடர் மொழி. சி மொழியின் முதல் வணிக நோக்கிலான பொருள் சார்ந்த விரிவாக்கம் இதுதான்.

**objectives** : இலக்குகள் : ஒரு அமைப்பு சாதிக்க வேண்டிய செயல் திட்டங்கள்.

**object language (Target Language)** : இலக்கு மொழி : ஒரு மொழிபெயர்ப்புச் செய் முறையின் வெளிப்பாடு. பொதுவாக, இலக்குமொழி என் பதும் எந்திரமொழி என்பதும் ஒன்றுதான். இது "ஆதார மொழி" என்பதற்கு மாறு பட்டது.

**object language programming** : இலக்கு மொழிச் செயல்முறைப் படுத்துதல்; இலக்கு மொழிச் செயல்முறையாக்கம் : ஒரு குறிப்பிட்ட கணினியில் நிறை வேற்றப்படத்தக்க ஓர் எந்திர மொழியின் செயல்முறை வரைவு.

**object machine** : பொருள் எந்திரம் : குறிப்பிட்ட பொருள் நிரல் தொடரை திரும்பத் திரும்ப செய்யப் பயன்படுத்தப் படும் கணினி.

**object management group** : ஆப்ஜெக்ட் மேனேஜ்மென்ட் குரூப்; பொருள் மேலாண்மைக் குழு : பொருள்நோக்கு மென் பொருள் பயன்பாடுகளுக்கான பொது தரவரையறைகளை இறுதி செய்கின்ற ஒரு பன்னாட்டு அமைப்பு. 1989ஆம்

ஆண்டு அமைக்கப்பட்டது. பொருள் மேலாண்மைக் கட்டுமானம் (object management architecture - OMA) என்கிற தரக் கோட்பாட்டையும் இது வரையறுத்துள்ளது. பகிர்ந்தமை சூழல்களுக்குரிய தரப்படுத்தப்பட்ட பொருள் மாதிரியம் (object model) ஆகும் இது.

**object model :** பொருள் மாதிரியம் : சி++ போன்ற ஒரு பொருள் நோக்கு மொழிக்கான கட்டமைப்பு அடித்தளத்தைக் குறிக்கிறது. கருத்தியல் (abstraction), உடன்நிகழ்வு (concurrency), உறைபொதியாக்கம் (encapsulation), மரபுரிமம் (inherience), தொடர்நீடிப்பு (persistence), பல்லுரு வாக்கம் (polymorphism), வகைப்பாடு (typing) போன்ற கோட்பாடுகளைக் கொண்டது.

**object modules : காட்சிப் பொருள் தகவமைவு :** எந்திர மொழி நிரல் தொடர் அல்லது அத்தகைய நிரல் தொடரின் ஒரு பகுதி. இது ஒரு சேர்ப்பி அல்லது தொகுப்பியிலிருந்து வெளியீடாக வந்து, செயல்படுத்தப்படும் முன்பு இணைப்பு தொகுப்பாளரால் செயலாக்கப்படுவது.

**object orientation : இலக்கு** நோக்கிய; பொருள்சார்ந்த.

**object oriented :** பொருள் சார்ந்த; பொருள் பொருட்டு.

**object-oriented analysis :** பொருள் சார்ந்த ஆய்வு : ஒரு பிரச்சினையை ஒன்றோடொன்று தொடர்புடைய பொருள்களின் குழுவாக மாதிரி அமைத்து சோதனை செய்தல். ஒரு பொருளை அதன் வகுப்பு தரவு, பொருள்கள் மற்றும் நடத்தையை வைத்து வரையறை செய்யப்படும்.

**object-oriented computer :** பொருள் நோக்குக் கணினி.

**object-oriented database :** பொருள் சார்ந்த தரவுத் தளம் : தெளிவற்ற தரவு வகைகளை (பொருள்கள்) வைத்திருக்கின்ற தரவுத் தளம். ஒரு பொருள் சார்ந்த நிரல் தொடர் மொழியிலிருந்து பொருள்களை அது நேரடியாக சேமிக்க முடியும். எந்த வகையான தரவும் சேமிக்கப்படலாம். தரவுகளை செயலாக்கம் செய்வதற்கான விதிகள் அப்பொருளிலேயே சேர்க்கப்பட்டிருக்கும் என்பதால். பொருள் சார்பு தரவுத் தளங்கள் தரவு, சொற்கள், படங்கள், குரல் போன்ற எண்ணற்ற வகைப் பொருள்களை வைத்திருந்து அவற்றை எந்த வடிவிலும் மாற்றித் தரவல்லது.

**object-oriented DBMS :** பொருள் சார்ந்த டி.பி.எம்.எஸ் : பொருள் சார்ந்த தரவுத் தளத்தினை சமாளிக்கும் டி.பி.எம்.எஸ். தொடர்புடைய தரவுத் தள நிரல் தொடர்களில் செய்வதற்கு அரிதான, பொருள்களைப் பற்றிய சிக்கலான கேள்விகளையும் இது எளிதாகக் கையாளும்.

**object-oriented design :** பொருள் சார்ந்த வடிவமைப்பு : பொருள் சார்ந்த மாதிரி ஒன்றை அதனை உருவாக்கும் அமைப்புக்குத் தேவையான விளக்கக் குறிப்புகள் கொண்டதாக மாற்றுதல். நோக்கம் சார்ந்த ஆய்விலிருந்து பொருள்சார்ந்த வடிவமைப்புக்கு மாறுவது, அந்த மாதிரியமைப்பை விரிவாக்கி மேலும்மேலும் விவரம் சேர்ப்பதன்மூலம் செய்து முடிக்கப்படுகிறது.

**object-oriented development :** பொருள்நோக்கு மேம்பாடு.

**object-oriented graphics :** பொருள் சார்ந்த வரைகலை.

**object-oriented interface :** பொருள் சார்ந்த இடைமுகம் : ஐக்கான்கள், சுட்டி போன்றவற்றைப் பயன்படுத்துகின்ற வரைகலை இடைமுகம். மெக்கின்டோஷ், விண்டோஸ் போன்ற பணிச் சூழல்களை இவ்வாறு கூறலாம்.

**object oriented language :** பொருள் நோக்கம் சார்ந்த மொழி : பொருள் நோக்கம் சார்ந்த நிரல் தொடர் மொழி. தரவு செயலாக்கப் பணிகளுக்குப் பொருள்களை உருவாக்கிப் பயன்படுத்தும் நிரல் தொடர் மொழி.

**object-oriented operating system :** பொருள்நோக்கு இயக்க முறைமை : பொருள் அடிப்படையிலான இயக்கமுறைமை. பொருள்நோக்கு வடிவாக்க முறையில் அயலர்கள் மென்பொருள்கள் உருவாக்குவதற்கு உகந்த வகையில் இது வடிவமைக்கப்பட்டிருக்கும்.

**object oriented programming :** பொருள் சார்ந்த செயல்முறை வரைவு : தரவுப் பொருள்களின் ஒரு தொகுதியை மையமாகக் கொண்டுள்ள செயல்முறைப் படுத்தும் அணுகு முறை. இது, தரவுக்கும் குறியீட்டுக்கும் வெவ்வேறு அணுகுமுறையைக், கையாளும்.

**object oriented programming languages :** பொருள்நோக்கு நிரலாக்க மொழிகள்.

**object-oriented technology :** பொருள் சார்ந்த தொழில் நுட்பம் : உலக நடைமுறைகளாகப் பார்க்காமல் பொருள்களாகப் பார்க்கின்ற வாய்பாடு.

**object programme** : இலக்குச் செயல்முறை : கணினியில் இயங்குவதற்கு ஆயத்தமாக, கணினியிலிருந்து அல்லது இணைப்பானிலிருந்து வெளிப் படும் நிரல்கள். இதனை இலக்குக் குறியீடு என்றும் கூறுவர் இது ஆதாரச் செயல் முறைக்கு மாறுபட்டது.

**object reference** : பொருள் குறிப்பி : பொருள்நோக்கு நிர லாக்கத்தில், ஓர் ஆப்ஜெக்ட்டின் நினைவக இருப்பிடத்தை குறிக்கும் முகவரி.

**object relational server** : பொருள் உறவுநிலை வழங்கன் : இது ஒரு தரவுத் தள வழங்கன் கணினி. ஓர் உறவுநிலைத் தரவுத் தளத்திலுள்ள சிக்கலான தரவினங்களை பொருள் நோக்குமுறையில் மேலாண்மை செய்வதற்கு உகந்தது.

**object resource** : பொருள் வளம்.

**object type** : பொருள் வகை.

**object type inheritance** : பொருள் வகை மரபுரிமம்.

**object vision** : ஆப்ஜெக்ட் விஷன்; இலக்குப் பார்வை : விண்டோஸ் பயன்பாடுகளுக் காக போர்லேண்ட் நிறுவனம் உருவாக்கும் பயன்பாட்டு வளர்ச்சி அமைப்பு. பயனாளர் இடைமுக வடிவமைப்புக்காக வும் நிரல் தொடர் அளவைக் காகவும் ஒளிநுட்பத்தைப் பயன்படுத்துகிறது. விரிதாள்கள் மற்றும் தரவுத் தளங்களுக்கு இணைப்புகளை ஏற்படுத்தித் தருகிறது.

**object windows** : ஆப்ஜெக்ட் விண்டோஸ்; இலக்கச் சாளரம்: விண்டோஸ் பொருள்களின் வகுப்பு நூலகம். போர்லேண்ட் நிறுவனம் உருவாக்கிய இது, விண்டோஸ் பயன்பாடுகளை உருவாக்க உதவுகிறது. போர்லேண்ட் மற்றும் நோக்க மேலாண்மைக் குழு உருவாக் கிய திறந்த தர நிருணய முறை.

**object wrapper** : பொருள் மேலுறை: பொருள்நோக்கு மென்பொருள் பயன்பாடுகளில் பேசப்படுவது.

**oblique** : சாய்வு : ஒரு கணினி யில் அல்லது அச்சுப்பொறியில் உண்மையான சாய்வு எழுத்துரு (Italic Font) இல்லாதபோது, ஒரு ரோமன் எழுத்துருவைச் சற்றே சாய்த்து சாய்வு எழுத்துருபோல ஆக்கிக் கொள்கின்ற முறையை இவ்வாறு கூறுவர்.

**obsolescence** : பயனற்றது; காலம் கடந்தது : வன்பொருள் அல்லது மென்பொருள்களை உரிய காலத்துக்கு முன்ன

தாகவே மாற்றுவதைக் குறிப்பது. வழக்கமாகப் பயன்படுத்தி தேய்ந்து பழுதாவதைக் குறிப்பதல்ல. தொழில்நுட்ப முன்னேற்றங்களின் விளைவாக அண்மையில் பொருள்கள் வருவதால் இவற்றை மாற்ற வேண்டியதாகியுள்ளது.

**OC3 : ஓசி3 :** ஒளிவச் சுமப்பி 3 என்று பொருள்படும் Optical Carrier 3 என்பதன் சுருக்கம். சோனட் (SONET) எனப்படும் அதிவேக ஒளியிழை தரவு பரப்பு அமைப்புகளில் பயன்படுத்தப்படும் ஒளிச்சமிக்கை மின்சுற்றுகள் பலவற்றில் இதுவும் ஒன்று. ஓசி3 வினாடிக்கு *155.52* மெகாபிட் சமிக்கைகளைச் சுமந்து செல்கிறது. சோனட் மற்றும் ஐரோப்பிய முறையான எஸ்டிஹெச் இரண்டும் ஒருங்கிணைந்து செயல்பட இந்த வேகம் குறைந்தபட்ச வேகமாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

**occam : ஓசிசிஏஎம் :** ஒரே நேரத்திய இயக்கங்களைக் கையாளப் பயன்படுத்தப்படும் இணை செயலாக்க மொழி.

**OCR : ஓசிஆர் :** "ஒளியியல் எழுத்தேற்பு" என்று பொருள்படும் "Optical character recognition" என்ற ஆங்கிலச் சொற்றொடரின் குறும்பெயர்.

**octal : எண்மி; எண்ம; எண்ணிலை;** எட்டு என்னும் இலக்கத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு எண்மான முறை. இந்த எண்மி இலக்கங்கள் பெரும்பாலும் ஈரிலக்க எண்களைக் குறிக்கப் பயன்படுத்தப் படுகின்றன. இதில், ஒவ்வொரு எண்மி இலக்கமும் மூன்று ஈரிலக்க இலக்கங்களின் (துண்மிகள்) ஒரு தொகுதியைக் குறிக்கிறது. எடுத்துக்காட்டு: *111000010001101* என்னும் ஈரிலக்க எண்ணை, *70215* என்னும் எண்மி எண்ணாகக் குறித்துக் காட்டலாம்.• ஈரிலக்க எண்ணை எண்மி எண்ணாக மாற்றலாம்.

**octal digit : எண்ம இலக்கம்.**

**octal dump : எண்மி சேமிப்பு.**

**octal notation : எண்மக் குறிமானம்.**

**octal number : எண்ம எண்.**

**octal number systems : எண்மி எண்மான முறை.**

**octal numeral : எண்மி இலக்கம்; எண்ம இலக்கம்; எண்ம உரு :** ஒரு தொகையினைக் குறிக்கின்ற ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட இலக்கங்கள் கொண்ட எண். இதில் ஒவ்வொரு இலக்கமும் குறிப்பிடும் எண் அளவு "8" என்னும் மூலத்தை

அடிப்படையாகக் கொண்டிருக்கும். எண்மி எண்களில் பயன்படுத்தப்படும் இலக்கங்கள், *0, 1, 2, 3, 4, 5, 6, 7.*

**octal, binary coded :** இருமக் குறிமுறை எண்மம்.

**octal point :** எண்மி புள்ளி; எண்மப் புள்ளி : ஒரு கலப்பு எண்மி எண்ணில் முழு எண் பகுதியைப் பின்னப் பகுதியிலிருந்து பிரித்துக்காட்டும் மூலப்புள்ளி. *72.24* என்ற எண்மி எண்ணில் எண்மி புள்ளி இரு எண்களுக்குமிடையில் உள்ளது.

**octet :** எண்மி : எட்டுத் துண்மிகளைக் (bits) கொண்ட எட்டில்.

**OCX :** ஓசிஎக்ஸ் : ஓஎல்இ கஸ்டம் கன்ட்ரோல் என்பதன் சுருக்கம். ஓஎல்இ மற்றும் காம் தொழில் நுட்பம் இரண்டும் இணைந்த மென்பொருள் கூறு. ஒரு மென்பொருள் பயன்பாடு அழைக்கும்போது, அந்தப் பயன்பாட்டுக்கு விரும்புகின்ற சில பண்புக் கூறுகளை அளிக்கும் ஒரு கட்டுப்பாட்டினை இது உருவாக்கித் தருகிறது. ஓசிஎக்ஸ் தொழில்நுட்பம் வேறுபட்ட பணித்தளங்களில் செயல்பட வல்லது. *16*-பிட், *32* பிட் இயக்க முறைமைகளிலும், பல்வேறுபட்ட பயன்பாடுகளிலும் பயன்படுத்தவல்லது. விசுவல் பேசிக் பயன்பாடுகளுக்கு மட்டுமே பயன்படுத்த முடிந்த விபிஎக்ஸ் (Visual Basic Custom Control) தொழில்நுட்பத்தின் வாரிசாக வந்தது. ஆக்டிவ்எக்ஸ் தொழில் நுட்பத்தின் அடிப்படையாக விளங்குவது. ஓசிஎக்ஸ்-கள் விசுவல் சி++ மொழியில் எழுதப்பட்டாலும் வேறு பல மொழிகளிலும் எழுத முடியும். *1996* ஓஎல்இ கன்ட்ரோல் வரன்முறையில் இடம் பெற்றுள்ள ஓசிஎக்ஸ் தொழில் நுட்பத்தை மைக்ரோசாஃப்ட் நிறுவனம் வடிவமைத்துள்ளது.

**ODBC :** ஓடிபிசி : திறந்த தரவுத் தள இணைப்புநிலை என்று பொருள்படும் Open Database Connectivity என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். பிணையத்திலுள்ள ஒரு தரவுத் தளத்தை விண்டோஸ் பயன்பாடுகள் அணுகுவதற்கு ஒரு பொதுவான வழிமுறையை வழங்கும் இடைமுகம் ஆகும். மைக்ரோசாஃப்ட் நிறுவனத்தினர் உருவாக்கியது.

**ODBC Data sources :** ஓடிபிசி தரவு மூலங்கள்.

**odd pariy check :** ஒற்றைப் படைச் சரிபார்க்கும் முறை.

**odometer :** ஓடோமீட்டர் : தூர இடைவெளியைப் பதிவு செய்

யும் ஒரு கருவி. சைக்கிள் மோட்டார் வாகனங்களில் பயன்படுவது.

**OEM :** ஓஇஎம் : "மூலச் சாதனத் தயாரிப்பாளர்" என்று பொருள்படும் "Original Equipment Manufacturer" நிறுவனத்தின் குறும்பெயர். இந்த அமைவனம் பொருள்களிலும் சாதனங்களிலும் அமைப்பிகளாகப் பயன்படுத்துவதற்காகக் கணினிகளையும், புறநிலைச் சாதனங்களையும் வாங்கி, அவற்றைத் தனது வாடிக்கையாளர்களுக்கு விற்பனை செய்கிறது.

**off :** விடுப்பு; நிறுத்து.

**off-hook :** கொக்கிக்கு வெளியே : சுழற்றி, வெளியே பேசக்கூடிய தொலைபேசிக் கம்பியின் நிலை. உள்ளே வரும் தொலைபேசி அழைப்பை ஏற்று பதில் பேச தடை செய்கிறது. தொலைபேசி உருவான காலத்தில் கைக் கருவியை கொக்கியிலிருந்து வெளியே எடுத்து பேசியதைக் கொண்டு இச்சொல் உருவானது. on-hook என்பதற்கு எதிர்ச்சொல்.

**office application :** அலுவலகப் பயன்பாடுகள்.

**office automation :** அலுவலகத் தானியக்கம்; அலுவலகத் தன்னியக்கம் : எழுத்தர் மற்றும் மேலாண்மை அலுவலகப் பணியாளர்களின் ஆக்கத்திறனை மேம்படுத்துவதற்குக் கணினிகளையும் செய்தித் தொடர்புத் தொழில் நுட்பத்தையும் பயன்படுத்துதல்.

**office computer :** அலுவலகக் கணினி : ஓர் அலுவலகத்தில் பயன்படுத்துவதற்கான ஒரு நுண்கணினியமைவு. குறிப்பிட்ட அலுவலகப் பணிகளுக்காகத் தயாரிக்கப்பட்டுள்ள வட்டு அலகுகள், அச்சடிப்பி, மென்பொருள் போன்றவை இதில் உள்ளடங்கும்.

**office information system :** அலுவலகத் தகவல் பொறியமைவு; அலுவலகத் தகவல் அமைப்பு : சொல் செய்முறைப் படுத்திகள் வரைகலை முனைய அச்சடிப்பிகள். கணினியமைவு போன்ற பல்வேறு தகவல் குறிப்புப் பதிவு முனையங்கள் உள்ளடங்கிய பொறியமைவு.

**office links :** அலுவலகத் தொடுப்புகள்.

**office of the future :** வருங்கால அலுவலகம் : கணினி தரவுச் செய்தித் தொடர்பு முறைகள் பிற மின்னணுவியல் தொழில் நுட்பங்கள் ஆகியவற்றைப் பெருமளவில் பயன்படுத்தும் எதிர்கால அலுவலகம்.

இத்தகைய அலுவலகத்தில் பெரும்பாலான எழுத்தர் செயலக செய்தித் தொடர்புப் பணிகள் தானியக்க முறையில் நடைபெறும்.

**off screen formatting :** திரையில் முறைப்படுத்துதல்.

**off state :** விடுப்பு நிலை.

**office support systems :** அலுவலக ஆதரவு அமைப்புகள் : பலதரப்பட்ட கணினி ஆதரவு சேவைகளை ஒருங்கிணைக்கும் அலுவலக தானியங்கி அமைப்புகள். மேசை அச்சு இணைப்புகள் மின்னணு அஞ்சல் மற்றும் மின்னணு பணி மேலாண்மை ஆகியவற்றை உள்ளடக்கியது.

**office vision :** ஆஃபீஸ் விஷன்; அலுவலகப் பார்வை : எல்லா ஐபிஎம் குடும்பக் கணினிகளிலும் செயல்படுகின்ற ஒருங்கிணைந்த அலுவலக தானியங்கிப் பயன்பாடுகள். எஸ்ஏஏ. வினை பேரளவில் அமல்படுத்துவதில் அதுவே முதல் முயற்சி. பிரசன்டேஷன் மேனேஜரை அது உள்ளடக்கியது. 1989இல் அறிமுகப்படுத்தப்பட்ட இதில் மின்-அஞ்சல், பட்டியலிடல், ஆவண உருவாக்கம் மற்றும் விநியோகம் ஆகியவற்றுடன் முடிவெடுக்க ஆதரவு, வரைகலை பயன்பாடுகளும் அனைத்துப் பயனாளருக்கும் கிடைக்கும்.

**offline :** மறைமுகமாக; நேர் தொடர்பிலா; உடனடியற்ற முறை; பின் தொடர் : ஒரு கணினியின் மையச் செயல் முறை அலகுடன் நேரடியாகத் தொடர்பு கொண்டிராத கருவிகள், சாதனங்கள், ஆட்கள் பற்றியது. கணினியுடன் இணைக்கப்பட்டிராத சாதனம் பற்றியது மாகும். இது "நேரடியாக" (online) என்பதற்கு மறுதலை.

**offline navigator :** அகல்நிலை வழிச்செலுத்தி அகல்நிலை; திசைச்செலுத்தி : இணையத்திலிருந்து மின்னஞ்சல், வலைப் பக்கங்கள், செய்திக் குழுக் கட்டுரைகள் அல்லது பிற நிகழ்நிலை மன்றங்களிலுள்ள கருத்துரைகள் இவற்றைப் பதிவிறக்கம் செய்து, நமது கணினியிலுள்ள வட்டில் சேமித்து வைத்துக்கொண்டு, பின்னொரு சமயத்தில் இணைய இணைப்பு இல்லாமலேயே அவற்றைப் பார்வையிடுவதற்கென வடிவமைக்கப்பட்ட மென்பொருள். இணைய இணைப்புக்காக ஆகும் செலவு இதனால் மிச்சப்படுகிறது.

**offline processing :** பின் தொடரும் செயலாக்கம்.

**offline storage :** மறைமுக சேமிப்பி; இணையா சேமிப்பகம் : மையச் செயலகத்தின் கட்டுப் பாட்டின்கீழ் இயங்காத சேமிப்பி.

**offload :** பளு இறக்கம்; இறக்குதல் : 1. ஒரு கணினி யமைவின் பணிகளைச் சற்றுக் குறைந்த வேலைப் பளுவுள்ள மற்றொரு கணினிக்கு மாற்றுதல். 2. வெளிப்பாட்டுத் தரவுகளை ஒரு புறநிலைச் சாதனத்திற்கு மாற்றுதல்.

**offpage connector :** தொடர்பிலா பக்க இணைப்பி; மறுபக்க இணைப்பி; பக்க இணைப்பி : ஒரு தடவரிசை விளக்கப் படத்தில் ஒரு பக்கத்திலிருந்து மாறுபட்ட மற்றொரு பக்கத் திற்கு ஒரு தொடர் வரிசையை இணைப்பதற்குப் பயன்படுத் தப்படும் ஐங்கோணக் குறியீடு.

**offset :** எதிரீடு / குறை நிரப் பீடு; விலக்கம் : தேவைப்படும் மதிப்பு அல்லது நிலைமைக் கும், உள்ளபடியாக மதிப்பு அல்லது நிலைமைக்கும் இடை யிலான வேறுபாடு.

**off-the-shelf :** ஆயத்தப் பொருள் கள்; உடன் பயன் பொருள்கள்; ஆயத்த : விற்பனையாளர்களிட மிருந்து எளிதாகக் கிடைக்கக் கூடிய, மிகப் பெருமளவில் தயாரிக்கப்பட்ட கணினி வன் பொருள் அல்லது மென் பொருள்கள் பற்றியது.

**ohm :** ஓம் : மின்சாரத் தடையை அளப்பதற்கான அலகு. ஒரு மின் கடத்தியின் இருமுனை களுக்கிடையே 1 வோல்ட் மின்னழுத்தம் தரப்படும்போது அதன் வழியே பாயும் மின் னோட்டம் 1 ஆம்பியராக இருப் பின் அக்கடத்தி ஏற்படுத்தும் மின்தடை 1 ஓம்.

**ohnosecond :** ஓனோநொடி : தவறான நிரலைக் கொடுப் பதற்கும், அந்த நிரலினால் படுமோசமான விளைவுகள் ஏற்படும் என்று உணர்வதற்கும் இடையில் கழியும் நேரம். மிக மிகக் குறைவான நேரம்.

**.oh.us :** .ஓச்.யுஎஸ் : ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டின் ஓஹியோ மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**ok :** சரி.

**ok/cancel :** சரி/விடு.

**.ok.us :** .ஒகே.யுஎஸ் : ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டின் ஒக்ல ஹாமா மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**OLAP database** : ஓஎல்ஏபீ தரவுத் தளம் : நிகழ்நிலை பகுப் பாய்வுச் செயலாக்க தரவுத் தளம் என்று பொருள்படும் Online Analytical Processing Database என்பதன் சுருக்கம். வழக்க மான உறவுநிலைத் தரவு தளங் களைவிட அதிக சிக்கலான வினவல்களைக் கையாளும் திறன்படைத்த ஓர் உறவுநிலைத் தரவுத் தளம். தரவுகளை பல் பரிமாண முறையில் அணுக முடியும். அதாவது தரவுகளை பல்வேறு தேர்வு விதிகளின் அடிப்படையில் பார்வையிட முடியும். மிகவும் தீர்க்கமான கணக்கீட்டுத் திறன் உண்டு. சிறப்புத் தன்மை வாய்ந்த சுட்டு வரிசை (indexing) நுட்பங்கள் உள்ளன.

**OLE** : ஓஎல்இ; ஓலே : பொருள் தொடுப்பும் உட்பொதிப்பும் என்று பொருள்படும் (Object Linking and Embedding என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். பயன்பாட்டு மென்பொருள்களுக்கிடையே தரவுவைப் பரிமாறிக் கொள் வதற்கும் பகிர்ந்து கொள்வதற்கு மான ஒரு தொழில் நுட்பம். படம் வரையும் மென்பொருள் கொண்டு ஒரு படம் வரையப் பட்டுள்ளது. அது ஒரு படிமக் கோப்பில் சேமிக்கப்பட்டுள்ளது. சொல்செயலி மென்பொருளில் உருவக்கப்பட்ட ஓர் ஆவணத்தில் படிமக் கோப்புக்கான தொடுப்பு உருவாக்கப்பட்டுள்ளது எனில், படமானது ஆவணத்தின் ஓர் அங்கமாகவே தோற்றமளிக்கும். தொடுப்புள்ள படத்தில் செய்யப்படும் மாறுதல்கள் ஆவணத்திலுள்ள படத்திலும் பிரதிபலிக்கும். இதனையே "பொருள் தொடுப்பு" என்கிறோம். படத்தை நகலெடுத்து ஆவணத்தில் ஒட்டிவிடுவதை பொருள் உட்பொதிப்பு என் கிறோம். மூலப்படத்தில் செய்யப்படும் மாறுதல்கள் ஆவணப்படத்தில் பிரதி பலிக்காது. படத்தை மீண்டும் உட்பொதிக்க வேண்டும்.

**OLTP** : ஓஎல்டீபீ : நிகழ்நிலைப் பரிமாற்றச் செயலாக்கம் என்று பொருள்படும் (Online Transaction Processing) என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒரு தரவுத் தள மேலாண்மை அமைப்பில், தரவுகள் உள்ளீடு செய்யப்பட்ட உடனேயே அவை பரிசீலிக்கப் பட்டு முதன்மைக். கோப்பு களின் தரவுகள் புதுப்பிக்கப் பட்டுவிடும். நிதியக் கணக்கு வைப்புகளுக்கும், சரக்குக் கையிருப்பு மேலாண்மைக்கும் ஓஎல்டீபீ மிகவும் பயனுள்ளது.

**.om** : .ஓம் : ஓர் இணைய தள முகவரி ஓமன் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**OMA** : ஓஎம்ஏ : பொருள் மேலாண்மைக் கட்டுமானம் என்று பொருள்படும் Object Management Architecture என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். பொருள் மேலாண்மைக் குழு (Object Management Group) உருவாக்கிய பொருள் நோக்கு பகிர்ந்தமை செயலாக்கத்திற்கான வரையறை. ஓஎம்ஏ, கோர்பா (CORBA - Common Object Request Broker Architecture) எனப்படும் பொதுப் பொருள் கோரிக்கை தரகர் கட்டுமானத்தையும் உள்ளடக்கியது.

**omni directional** : பல திசையிலான : எல்லா திசைகளிலும் சான்றாக, பல திசையிலான வானலை வாங்கி (antenna) எல்லா திசைகளில் இருந்தும் சமிக்கைகளை ஏற்றுக் கொள்ளும்.

**omni page** : ஆம்னி பேஜ் : கேயர் கார்ப்பரேஷனிடமிருந்து பீசி மற்றும் மெக்கின்டோஷுக்காக உருவாக்கப்பட்ட எழுத்து உணர் மென்பொருள். சொற்பகுதியிலிருந்து வரைகலையைப் பிரித்துப் பார்க்கவும் பலவகையான அச்செழுத்துகளை சொற்பகுதியாக மாற்றித் தரவும் திறனுள்ள முதல் பீசி மென்பொருள்.

**omr** : ஓஎம்ஆர்; ஒளி வழிக் குறி உணர்விப்பி : optical mark reader என்பதன் குறும்பெயர்.

**on-board** : தன்னமைவு : "தரமான" கணினி மாதிரியின் ஒரு பகுதியாக ஒரு குறிப்பிட்ட வன்பொருள் சாதனத்தைச் சேர்ப்பதைக் குறிப்பிடுவது. சான்றாக, "ஐபிஎம் ராம்-ஆன் போர்டு" என்றால் இந்த அளவு ராம் குறிப்பிட்ட மாடல் கணினியில் தரமானதாக சேர்க்கப்பட்டுள்ளது என்று பொருள். "ஆன்-போர்டு" என்ற சொல் ஒரு குறிப்பிட்ட மின்சுற்று தாய் அட்டையில் உள்ளது என்பதையும் குறிப்பிடுகிறது.

**on-board computer** : ஊர்திக் கணினி : விண்வெளிக்கலம், உந்து ஊர்தி, கப்பல், விமானம் போன்ற ஓர் ஊர்தியில் நிறுவப்பட்டுள்ள கணினி.

**on-board regulation** : பலகை ஒழுங்குமுறை; பலகைச் சீராக்கம் : ஒவ்வொரு பலகையிலும் தனி மின் வலியளவு ஒழுங்கியக்கியைக் கொண்டுள்ள அமைப்பு முறை.

**one address** : ஒற்றை முகவரி.

**one-address computer** : ஒரு முகவரிக் கணினி : தனது நிரலைப் படிவமைப்பில் ஒரே யொரு முகவரியை மட்டுமே பயன்படுத்தும் கணினி. எடுத்துக்காட்டு: "ADD x" என்பதில் அறிவுறுத்தத் திலுள்ள முகவரியை 'x' குறிக்கிறது. இது இரு முகவரிக் கணினி, மூன்று முகவரிக் கணினி ஆகியவற்றி லிருந்து மாறுபட்டது. இதனை நான்கு முகவரிக் கணினியுடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

**one-address instruction** : ஒரு முகவரி அறிவுறுத்தம் : ஒரு நிரலையும் ஒரேயொரு முகவரி யையும் கொண்டுள்ள நிரல். சில தனிநேர்வுகளில், ஓர் ஒற்றை முகவரிக் கணினியின் நிரல் குறியீடானது, சுழி (பூஜ் யம்), பன்முக முகவரி நிரல்கள் இரண்டையும் கொண்டிருக்கும். இன்றுள்ள கணினிகளில் பெரும்பாலானவை ஒரு முக வரி நிரலையைக் கொண்டவை.

**one-chip computer** : ஒரு சிப்புக் கணினி : ஒரேயொரு சிப்பில் இயக்கப்படுகிற முழுமையான நுண்கணினி. இது "சிப்பு இயக்கக் கணினி" என்றும் அழைக்கப்படுகிறது.

**one-dimensional array** : ஒற்றைப் பரிமாண வரிசை : மின்வாய்க் கம்பிகளின் ஒற்றை வரிசையை அல்லது பத்தியைக் கொண்ட வரிசை முறை.

**one for-one** : ஒன்றுக்கு ஒன்று : சேர்ப்பியுடன் பெரும்பாலும் இணைத்துக்கூறும் சொற் றொடர். ஒரு மூலமொழி சொற்றொடர் வேறொரு எந்திர மொழி நிரலாக மாற்றப்படும். கடிதப் போக்குவரத்தில் அதிக மாகப் பயன்படும் வகை.

**one gate** : ஒரு வாயில்.

**one-level memory** : ஒரு நிலை நினைவகம் : ஒரே மாதிரியான செயல்முறை மூலம் சேமித்து வைக்கப்பட்டுள்ள இனங்கள் அனைத்தையும் அணுகக்கூடிய நினைவகம்.

**one line function** : ஒரு வரிச் செயல்கூறு.

**one-off** : ஒன்றுமட்டும் : 1. ஒரு பொருளை ஒரே நேரத்தில் மொத்தமாகத் தயாரிக்கும் முறைக்குப் பதிலாக ஒரு நேரத் தில் ஒன்று என்ற முறையில் தயாரிப்பது. 2. சிடி ரோம் எழுதும் பொறி ஒன்றில் ஒரு நேரத்தில் ஒரு நகல் மட்டுமே உருவாக்கும் முறை.

**one-out-of-ten-code** : "பத்தில் ஒன்று" குறியீடு : இந்தக் குறி யீட்டு முறையில், ஒரு பதின்ம இலக்கமானது 10 இரும இலக்

களால் குறிக்கப்படுகிறது; இவற்றில் 10 இரும இலக்கங்களில் ஒரேயொரு இலக்கம் மட்டுமே "ஒன்று" இலக்கமாக இருக்கும்.

**one-pass compiler** : ஒற்றை ஓட்டத் தொகுப்பி : ஒரே சமயத்தில் ஓர் ஆதார மொழிச் செயல்முறையில் ஓடி, ஓர் இலக்குத் தகவமைவை உண்டாக்கும் மொழிச் செயல்முறைப்படுத்தி.

**one's complement** : ஒன்றின் குறை நிரப்பு எண் : ஒரு குறிப்பிட்ட மதிப்பின் மறிநிலை எண்ணைக் குறிக்கும் இலக்கம். ஒன்றின் குறைநிரப்பு எண் என்பது ஓர் இரும இலக்கமாகும். இது அந்த இலக்கத்திலுள்ள ஒவ்வொரு துணுக்கின் துணுக்கு வரிசைமுறையை மாற்றுவதன் மூலம் பெறப்படுகிறது. எடுத்துக்காட்டு : 01100101 என்பது 10011010 என்ற ஈரிலக்கத்தின் ஒன்றின் குறைநிரப்பு எண். இரண்டின் குறை நிரப்பு எண், ஒன்பதின் குறை நிரப்பு எண், பத்தின் குறைநிரப்பு எண் ஆகியவற்றுடன் ஒப்பிட்டுப் பார்த்திடுக.

**ongoing activity** : நடப்பு/நடவடிக்கை.

**on-hook** : கொக்கி மீது : வருகின்ற தொலைபேசி அழைப்புகளைப் பெறுகின்ற ஒரு தொலைபேசிக் கம்பி. off-hook என்பதற்கு மாறானது.

**onion diagram** : வெங்காய வரைபடம் : ஒரு அமைப்பினை வரைபட முறையில் குறிப்பிடுவது. குழி வட்டங்களாகக் காட்டப்படுகிறது. வட்டத்தின் உள்ளே வட்டங்களாக அமைத்து, இறுதி உள்வட்டமே மையமாகும். மற்ற வெளி வட்டங்கள் அதைச் சார்ந்து இருப்பவை.

**online** : நேரடியாக; உடனடி முறை; உடன் நிகழ்வு : ஒரு கணினியின் மையச் செயலகத்துடன் நேரடித் தொடர்புடைய கருவிகள் , சாதனங்கள், ஆட்கள் பற்றியது. கணினியுடன் நேரடியாக இணைக்கப்பட்டுள்ள சாதனம் பற்றியதாகும். இது "மறைமுகமாக" (offline) என்பதற்கு மறுதலை.

**online analytical processing** : நிகழ்நிலைப் பகுப்பாய்வுச் செயலாக்கம்.

**online application** : நேரடிப் பயன்பாடுகள்.

**online banking** : நிகழ்நிலை வங்கிமுறை.

**online community** : நிகழ்நிலைச் சமூகம் : 1. இணைய மற்றும்

வைய விரிவலை ஆகியவற்றின் பயனாளர்களைக் கொண்ட தொகுதி இவ்வாறு அழைக்கப் படுகிறது. 2. தம் அரசாங்கம் பற்றியும், பொது மக்களைப் பாதிக்கின்ற பிரச்சினைகள் குறித்தும் நிகழ்நிலை அரசியல் மன்றங்களில் விவாதத்திற்காக எடுத்துரைக்கின்ற மக்கள் குழு. 3. ஒரு குறிப்பிட்ட செய்திக் குழு, அஞ்சல் பட்டியல், எம்யுடி, பிபிஎஸ் மற்றும் பிற நிகழ் நிலை மன்றத்தை அல்லது குழு வைச் சேர்ந்த உறுப்பினர்கள்.

**online database :** நேரடித் தரவுத் தளம்; உடன் நிகழ் தரவுத் தளம் : ஒரு முனையத்தில் பெரும் பாலும் ஒரு காட்சிச் சாதனத்தில் ஒரு பயனாளர் நேரடியாக அணுகக்கூடிய தரவுத் தளம்.

**online fault-tolerant system :** நேரடிப் பிழைதாங்கு பொறி யமைவு; உடனடி பிழை பொறுதி அமைப்பு : மென்பொருள் பிழைகள் இருந்தபோதிலும் சரி யாகச் செயற்படுகிறவாறு வடி வமைக்கப்பட்ட கணினியமைவு.

**online fonts :** நிகழ்நிலை எழுத் துருக்கள்.

**online help :** நேர்முக உதவி : திரையில் வரும் நிரல். நிரலாக்கத் தொடரின் உள்ளே இருந்து உடனடியாக வருவது.

**online information service :** நிகழ் நிலைத் தகவல் சேவை : தரவுத் தளங்கள், கோப்புக் காப்பகங்கள், கலந்துரையாடல் கள், அரட்டைக் குழுக்கள் மற்றும் இதுபோன்ற அமைப்பு களிலுள்ள தகவல்களை தொலை பேசி அல்லது தனித்த தகவல் தொடர்பு இணைப்பு அல்லது இணையம் வழியாக அணுகு வதற்கு வசதி செய்துதரும் வணிகமுறை. பெரும்பாலான நிகழ்நிலை தகவல் சேவை நிறு வனங்கள் தத்தமது சொந்த சேவைகளை மட்டுமின்றி பொதுவான இணையத் தொடர்பையும் வாடிக்கையாளர் களுக்கு அளிக்கின்றன. அமெரிக்கா ஆன்லைன், காம்பு செர்வ், மைக்ரோசாஃப்ட் நெட் வொர்க் ஆகியவை அமெரிக் காவில் நுகர்வோருக்கான மிகப் பெரும் நிகழ்நிலைத் தகவல் சேவை நிறுவனங்கள் ஆகும்.

**online problem solving :** நேரடிச் சிக்கல் தீர்வு ; உடனடிச் சிக்கல் தீர்வு : ஒரு கணினியமை வினைப் பல பயனாளர் சேய்மை முனையங்களிலிருந்து ஒரே சமயத்தில் பயன்படுத்து கையில் சிக்கல்களை நேரடி யாகத் தீர்ப்பதற்கான தொலைச் செய்முறைப் பயன்பாடு. இத்தகைய பயன்பாட்டில் ஒரு

சேய்மை முனையத்தில் பயன் படுத்துவோருக்கும் ஒரு மையக் கணினியமைவுக்கும் உள்ள ஒரு செயல்முறைக்குமிடையில் ஒரு பரிமாற்றம் அல்லது உரை யாடல் நடைபெறுகிறது.

online processing : உடன் நிகழ் செயலாக்கம்.

online service : உடன் நிகழ் பணி.

online state : நிகழ்நிலை நிலைமை : ஓர் இணக்கி (மோடம்) இன்னோர் இணக்கி யுடன் தகவல் தொடர்பு மேற் கொண்டிருக்கும் நிலை.

online storage : நேரடிச் சேமிப்பகம் : மையச் செயல கத்தின் கட்டுப்பாட்டிலுள்ள சேமிப்பகம்.

online transaction processing : நிகழ்நிலை பரிமாற்றச் செய லாக்கம்.

on/off : நிகழ்/அகல்.

on screening promotting : திரை யில் முறைப்படுத்தல்.

on-screen pasteup : திரையில் ஒட்டு : கணினி முகப்பின் அமைப்புப் படம்.

on state : தொகுப்பு நிலை.

ontime application : நேரடிப் பயன்பாடு.

on the fly : பறந்து கொண்டே : தேவைப்படும்போதெல்லாம் பெரும்பாலும் பயனாளர் தலை யிடாமல் பணி செய்வது. பணி யினை முடிப்பதிலான செயல் திறனில் எந்தவித பின் னடைவும் இருக்காது என்பதை உணர்த்துவது.

on web page : வலைப் பக்கத்தில்.

OP : ஓபீ : operation code இயக்கம். "செயற்பாடு" என்று பொருள்படும் "operation" என்னும் ஆங்கிலச் சொல்லின் குறும்பெயர்.

opacity : ஒளிபுகாத் தன்மை : ஒரு காகிதப் பரப்பின் வழியே ஒளி ஊடுருவி அதில் உருக் காட்சி கடக்காத நிலை.

opcode : செய்பணிக் குறிமுறை.

Opel, John : ஓப்பல், ஜான் : "பன்னாட்டு வணிக எந்திரக் கழகம்" (International Machines Corporation - IBM) என்ற அமை வனத்தை, 1981இல் நுண் கணினி வணிக அமைவனமாக மாற்றியவர். இவருடைய தலைமையில், இந்த அமை வனம் "IBM சொந்தக் கணினி" (IBM personal computer) என்ற நுண்கணினியை உருவாக்கியது.

open : திறப்பு நிலை; தொடங்கு நிலை: ஒரு கோப்பில் அல்லது

ஆவணத்தில் பணிபுரியத் தொடங்குவதற்கான செய் முறை.

**open access** : திறந்த அணுகு முறை : "சாஃப்ட்வேர் புராடக்ட்ஸ் இன்டர்நேஷனல்" நிறுவனத் தின் டிரேட் மார்க்.

**open an existing database** : இருக்கும் தரவுத் தளத்தை திற.

**open architecture** : வெளிப் படை கட்டமைப்பு ; திறந்த கட்டமைப்பு : ஒரு அமைப்பின் விளக்கக் குறிப்புகள் வெளிப் படையாகக் குறிப்பிடப்படு வது. தனியார் விற்பனையாளர் கள் கூடுதல் பொருள்களை உருவாக்க இதன் மூலம் ஊக்கு விக்கப்படுகிறது.

**open command** : திற ஆணை.

**open containing folder** : உள் கொண்ட கோப்புறை திற.

**open data base** : தரவுத் தளத்தைத் திற.

**opendoc** : ஓப்பன்டாக் : பொருள் நோக்கிலான ஒரு பயன்பாட்டு நிரலாக்க இடை முகம் (Application Programming Interface). வெவ்வேறு பணித் தளங்களில் உருவாக்கப்பட்ட பல்வேறு தனித்த நிரல்கள் ஒற்றை ஆவணத்தில் ஒன்றாக இணைந்து செயல்பட வழி வகுக்கிறது. ஓஎல்இ-யைப் போன்றே படிமங்கள், ஒலி, ஒளிக்காட்சி, பிற ஆவணங்கள், பிற கோப்புகள் ஆகியவற்றை உட்பொதித்து அல்லது தொடுப் பேற்படுத்தி ஆவணம் உரு வாக்க ஒப்பன் டாக் அனுமதிக் கிறது. ஆப்பிள், ஐபிஎம், ஆப் ஜெக்ட் மேனேஜ்மென்ட் குரூப் மற்றும் எக்ஸ் கன்சோர்ட்டியம் ஆகியவை இணைந்த கூட்டணி ஒப்பன் டாக்கை ஆதரிக்கிறது.

**open ended** : திறந்த நிலை யான; திறந்த முனையுடைய : மூலப்பொறியமைவைப் பாதிக்காமல் புதிய செயல் முறைகள், நிரல்கள், துணை வாலாயங்கள், மாற்றமைவுகள், வகைப்பாடுகள், வரையீடுகள் ஆகியவற்றை ஏற்றுக் கொள்ளக் கூடிய நிலை.

**open file** : திறந்தநிலைக் கோப்பு; திறந்த கோப்பு : படிப் பதற்கு எழுதுவதற்கு அல்லது இரண்டுக்கும் அணுகத் தக்க கோப்பு. இது மூடிய கோப் பிலிருந்து (closed file) வேறு பட்டது.

**Open Financial Connectivity** : திறந்தநிலை நிதியியல் இணைப்பு : மைக்ரோசாஃப்ட் நிறுவனம் வகுத்துள்ள வரன் முறை. மின்னணு வங்கிச் சேவைகளுக்கும் மைக்ரோ

சாஃப்ட் மணி (Microsoft Money) என்னும் சொந்த நிதி மென்பொருளுக்கும் இடையேயான ஓர் இடைமுகம் ஆகும்.

**open group** : ஓப்பன் குரூப்; திறந்தநிலைக் குழு : கணினித் துறையில் வன்பொருள், மென்பொருள் உற்பத்தியாளர்கள், பயனாளர்கள் ஆகியோர் இணைந்த ஒரு கூட்டமைப்பு. பல தரப்பட்ட விற்பனையாளர்களின் தரவு அமைப்பை வளர்த்தெடுப்பதே இதன் நோக்கம். 1996இல் ஓப்பன் குரூப் நிறுவப்பட்டது. ஓப்பன் சாஃப்ட்வேர் ஃபவுண்டேஷன் மற்றும் எக்ஸ்/ஓப்பன் கம்பெனி லிமிடெட் இரண்டும் இணைந்து இக் கூட்டமைப்பு உருவானது.

**opening a file** : கோப்புத் திறத்தல்.

**opening menu** : திறப்புக் கட்டளைப் பட்டியல்.

**open loop** : திறந்த வட்டம்; திறந்த வளையம் : செயலாக்கக் கட்டுப்பாடு அல்லது வழங்கு எந்திர அமைப்பில் மூத்த அல்லது கட்டுப்பாட்டுக் கருவியின் வேண்டுகோளுக்கு ஏற்ப ஒரு செய்தியைக் கணினி அச்சிடும் அமைப்பு.

**open message** : திறந்த செய்தி; வெளிப்படைச் செய்தி.

**openMPEG consortium** : ஓப்பன்எம்பெக் கூட்டமைப்பு : எம்பெக் தரவரையறைகளை பயன்பாட்டில் மிகுவிப்பதை நோக்கமாகக் கொண்ட, வன்பொருள், மென்பொருள் தயாரிப்பாளர்களின் பன்னாட்டுக் கூட்டமைப்பு.

**open option** : சிறந்த விருப்பத் தேர்வு.

**open plan** : வெளிப்படை திட்டம் : தனி அலுவலகங்களாக உருவாக்குகின்ற உட்பகுதிச் சுவர்கள் அதிகம் இல்லாமல் உருவாக்கப்படுகின்ற அலுவலக வடிவமைப்பு. தடுப்புகள் மற்றும் அலுவலக ஃபர்னிச்சர்களைப் பயன்படுத்தி பணி இடங்கள் உருவாக்கம்.

**open shop** : திறந்த நிலைக் களம் : ஒரு கணினி வசதியின் செயற்பாடு. இதில் பெரும்பாலான ஆக்கமுறைச் சிக்கல் செயல்முறைப்படுத்துதல்களும் ஒவ்வொரு செயல்முறைப் படுத்தும் வல்லுநர் குழுமத்தினால் அல்லாமல் ஒவ்வொரு சிக்கல் ஒழுங்கியக்குநரால் செய்யப்படுகிறது. இது "முடிவுற்ற களம்" (closed shop) என்பதற்கு மாறுபட்டது.

**open software foundation** ; திறந்த நிலை மென்பொருள்கழகம்.

**open standard** : திறந்தநிலைத் தர வரையறை : ஒரு வன்பொருள் சாதனம் அல்லது மென்பொருள் நிரலின் பண்புக் கூறுகளை விவரிக்கும் வரன் முறைகள். பொதுமக்களின் பார்வைக்குக் கிடைக்கும் குறுக்குச் செயலாக்கத்தை அதாவது ஓர் இயக்கமுறைமையில் செயல்படுவது இன்னோர் இயக்கமுறைமையிலும் செய்யப்படுவதை (Interoperability) ஊக்குவித்து, புதிய தொழில் நுட்பங்களை வளர்த்தெடுக்க உதவவே, இந்தத் திறந்தநிலைத் தரவரையறைகள் வெளியிடப் பட்டன.

**open subroutine** : திறந்த நிலைத் துணை வாலாயம், திறந்த துணை வழமை : ஒரு வாலாயத்தில் அது பயன் படுத்தப்படும் ஒவ்வொரு இடத்திலும் புகுத்தப்படும் துணை வாலாயம். இது முடிவுற்ற வாலாயத்திலிருந்து (closed routine) வேறுபட்டது.

**open system** : திறந்த அமைப்பு : பல தரப்பட்ட பொருள்களுடன் இடையிணைக்கப்படுகின்ற வகையில் வடிவமைக்கப்படும் விற்பனையாளர் தொடர்பில் லாத அமைவு. ஒன்று அல்லது இரண்டு விற்பனையாளருக் காக அல்லாமல் ஆர்வமுள்ளவர்கள் ஒருமித்து தர நிருணயங்கள் உருவாக்கப்படுகின்றன.

**open system interconnection** : திறந்தவெளி முறைமை இணைப்பு; திறந்த அமைப்பு இடைத்தொடுப்பி.

**operand** : இயக்கப்படும் எண்; செயப்படு பொருள்; செயலேற்பி : செயற்பாட்டுக்குள்ளாகும் தரவு அல்லது சாதன இனம். இது, ஓர் கட்டளையில் ஒரு முகவர் மூலம் அடையாளங் காணப்படுகிறது. எடுத்துக்காட்டு: ADD 100 to 400 என்பதில், "100", "400" இரண்டும் இயக்கப்படு எண்கள்.

**operand addresses** : இயக்கப் படு எண் முகவரிகள்.

**operate** : செய்முறையை இயக்கு ; இயக்கு.

**operating environment package** : செயற்பாட்டுச் சூழ்நிலை இயக்கம் : இறுதிப் பயனாளர்கள் இயக்க அமைப்பு மற்றும் அவற்றின் பயன்பாட்டு நிரல் தொடர்களுக்கிடையில் வரைகலை சார்ந்த இடைமுகத்தை உருவாக்கும் மென்பொருள் பொதிவுகள் அல்லது பல் பணியாற்றும் திறனும் அளிக்கப் படும்.

**operating ratio** : இயங்கு நேர விகிதம்.

**operating system : (OS) :** செயற்படு பொறியமைவு; இயக்க முறைமை; செயலாக்க நிரல் தொகை; இயக்கக் கட்டளை அமைப்பு : *கணினிச் செயல்முறைகளை நிறை வேற்றுகிற மென்பொருள். இதில் அட்டவணைப்படுத்து தல், தவறு கண்டறிதல், உட் பாட்டு, வெளிப்பாட்டுக் கட்டுப் பாடு, கணக்கீடு, தொகுப்பீடு, சேமிப்பகம் குறித்தளிப்பு, தரவு மேலாண்மை போன்ற பணிகள் அடங்கும்.*

**operating system disk :** இயக்க முறைமை வட்டு.

**operation :** செயற்பாடு; செய் முறை செயலாக்கம்; இயக்கம் : *1. வரையறுக்கப்பட்ட ஒரு நடவடிக்கை. 2. தனியொரு கணினி நிரல் அல்லது உயர் நிலை மொழி கட்டளை மூல மாகக் குறித்துரைக்கப்படும் நடவடிக்கை. சுருக்கம் ஒபீ (op).*

**operational feasibility :** இயக்க வாய்ப்பறிதல் : *உருவாக்கப் படும் (கணினி) அமைப்பை ஆதரித்து பயன்படுத்தி இயக் கும் விற்பனையாளர்களின் திறம் மற்றும் நிர்வாகம், பணி யாளர்கள், வாடிக்கையாளர்கள் ஆகியோரின் விருப்பமும் திறனும்.*

**operational management :** செயற்பாட்டு மேலாண்மை : *விவரங்களைச் செயற்படுத்து வதற்குப் பொறுப்பான மேற் பார்வையாளர்கள் அல்லது தலைவர்கள் மற்றும் அவற்றைச் செய்கிற அலுவலர்கள்.*

**operation analysis :** செயற் பாட்டுப் பகுப்பாய்வு.

**operation, AND :** உம் செயல்பாடு.

**operation, arithmatical :** எண் கணித செயற்பாடு.

**operation, binary arthmatic :** இரும கணக்கீட்டு செயற்பாடு.

**operation, binary boolean :** இரும பூலியன் செயற்பாடு.

**operation, complementary :** நிரப் பல் செயல்பாடு.

**operation, computer :** கணினிச் செயல்பாடு.

**operation center :** செயற்பாட்டு மையம்; செயலாக்கப் பகுப் பாய்வு : *ஒரு கணினி வாயி லாகத் தரவுகளைச் செய்முறைப் படுத்துவதற்கும் தேவையான வெளிப்பாட்டினைக் கொணர் வதற்கும் தேவைப்படும் ஆட் களையும் சாதன வசதிகளையும் கொண்டிருக்கிற இடப்பரப்பு.*

**operation code :** செயற்பாட்டுக் குறியீடு : *ஒரு கணினி*

நிறைவேற்ற வேண்டிய செயற் பாட்டினைக் குறித்துரைப் பதற்குப் பயன்படுத்தப்படும் நிரல் குறியீடு.

**operation, if-then** : அவ் வாறெனில் செயல்பாடு.

**operation, logical** : தருக்கச் செயல்பாடு.

**operation, NOR** : இல் அல்லது செயல்பாடு.

**operation on data** : தரவு செய லாக்கம்.

**operation personal** : செய லாக்கக் குழுமம்.

**operations analysis** : செயற் பாட்டுப் பகுப்பாய்வு : செயற் பாட்டு ஆராய்ச்சி.

**operations information system** : செயலாக்கங்களின் செய்தித் தகவல் அமைப்பு : ஒரு நிறு வனத்தின் செயலாக்க அமைப்பு கள் உருவாக்கும் செய்தி தகவல் களைத் திரட்டி செயலாக்கி சேமிக்கும் செய்தித் தகவல் அமைப்பு. மேலாண்மை செய்தித் தகவல் அமைப்புக் காகவோ அல்லது ஒரு செயலாக்க அமைப்புக்காகவோ தகவலை உள்ளீடு செய்தல்.

**operations personnel** : செயற் பாட்டாளர்கள் : கணினி மையத் தில் கணினிச் சாதனத்தைக் கட்டுப்படுத்துவதற்குப் பொறுப் பாக உள்ளவர்கள். இவர்கள் பொறியமைவுகளுக்கு விசை யூட்டுகிறவர்கள்; செயல்முறை களை ஏற்றுகிறார்கள்; செயல் முறைகளை இயக்குகிறார்கள்; சாதனங்களின் தவறான செயற் பணிகளை அறிவிக்கிறார்கள்.

**operations research** : செயல் பாட்டு ஆய்வியல்; இயக்க ஆய் வியல் : வணிகம், மேலாண்மை, நிர்வாகம் மற்றும் பிற துறை களில் செயல்திறனை பகுப் பாய்ந்து அதிகரிக்கக் கணித வியல் மற்றும் அறிவியல் அணுகுமுறைகளைப் பயன் படுத்தும் ஆய்வியல் முறை. இரண்டாம் உலகப்போரின் தொடக்க காலங்களில் இது உரு வாக்கப்பட்டது. தொடக்கத்தில் போரின்போது இராணுவச் செயல்பாடுகளை மேம்படுத்து வதெற்கென்றே இவ்வாய்வியல் முறை பயன்படுத்தப்பட்டது. அதன் பின்னரே வணிகம் மற்றும் தொழிலகங்களுக்கும் பரவியது. ஓர் அமைப்பை அல்லது செயல்முறையை சிறு பாகங்களாகப் பிரித்து அவற்றுக் கிடையேயான உறவாட் டத்தை நுணுகி ஆய்ந்து ஒட்டுமொத்த செயல்திறனை மேம்படுத்த இவ்வாய்வுமுறை பயன்

படுத்தப்பட்டது. இவ்வாய்வு முறை உயிர்நாடிப் பாதைமுறை (Critical Path Method), புள்ளியியல் (Statistics), நிகழ் தகவியல் (Probability), தரவுக் கோட்பாடு ஆகியவற்றை உள்ளடக்கியது.

**operator** : இயக்கர்; செய்முறைக் குறி : 1. இயக்கப்படும் எண்களின்மீது மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கையைக் குறித்துக் காட்டுகிற ஒரு செய்முறை. 2. ஓர் எந்திரத்தை இயக்குகிற ஆள்.

**operator associativity** : செயற்குறி இணைவு : ஒரு கணக்கீட்டுத் தொடரில் ஒரே முன்னுரிமையுள்ள இரண்டு செயற்குறிகள் எந்த வரிசையில் செயல்படுத்தப்படவேண்டும் என்பதைத் தீர்மானிக்கும் செயற்குறிகளின் பண்புக்கூறு. இடமிருந்து வலமாகவோ, வலமிருந்து இடமாகவோ இருக்கலாம். பெரும்பாலான செயற்குறிகளின் இணைவு இடமிருந்து வலமாக இருக்கும். சி-மொழியில் சில செயற்குறிகள் வலமிருந்து இடமாகச் செயல்படுத்தப்படுவது குறிப்பிடத்தக்கது.

**operator, machine** : பொறிச் செயல்பாட்டாளர்; பொறி இயக்குநர்.

**operator overloading** : செயற்குறிப் பணிமிகுப்பு : ஒரு குறிப்பிட்ட செயற்குறி, ஒன்றுக்கு மேற்பட்ட வகையில் செயல்படும் எனில் அதனைப் பணிமிகுப்பு என்கிறோம். எடுத்துக்காட்டாக, + என்னும் கணக்கீட்டுச் செயற்குறி இரண்டு எண்களைக் கூட்டப் பயன்படும். அதனையே இரண்டு சரங்களை (strings) இணைக்கப் பயன்படுத்துவோம் ("Good" + "Morning") எனில், இதனைச் செயற்குறி பணி மிகுப்பு என்கிறோம். இங்கே + என்னும் அடையாளம் இருபுறமும் கொடுக்கப்பட்ட மதிப்புகளின் தரவு இன (Data Type) அடிப்படையில் செயல்படும். அடா, சி++, சி# மொழிகள் செயற்குறிப் பணிமிகுப்பை அனுமதிக்கின்றன. சி, ஜாவா போன்ற மொழிகள் இக்கருத்துருவை (concept) அனுமதிக்கவில்லை.

**operator precedence** : செயற்குறி முன்னுரிமை : ஒரு கணக்கீட்டுத் தொடரில் ஒன்றுக்கு மேற்பட்ட செயற்குறிகள் இடம் பெறும்போது அவை எந்த வரிசையில் இயக்கப்பட வேண்டும் என்கிற விதிமுறை. அதிக முன்னுரிமை உள்ள செயற்குறி முதலில் செயல்படுத்தப்படும். எடுத்துக்

காட்டாக, 5x4+3 என்ற கணக்கீட்டில் முதலில் 5x4 செயல்பட்டு 20 ஆகும். பிறகு 20+3 செயல்பட்டு 23 ஆகும். 5+4x3 என்று இருப்பின் முதலில் 4x3=12 ஆகிப் பின் 5+12=17 ஆகும். பொதுவாக x, / ஆகியவை முதலிலும் +,- ஆகியவை அடுத்தும் செயல்படுத்தப்படும். ஆனால், கணக்கீட்டுத் தொடரில் பிறை அடைப்புக்குறிகள் இருப்பின் அவற்றுள் இருக்கும் கணக்கீடே எல்லாவற்றுக்கும் முன்பாகச் செயல்படும். 5x(4+3) என்று இருப்பின் 4+3=7 ஆகிப் பிறகு 5x7=35 ஆகும்.

optacon : ஆப்டாக்கோன் : கண் பார்வையற்றவர்கள் "படிப்பதற்கு" உதவும் ஒரு சாதனத்தின் வணிகப் பெயர். இது ஓர் ஒளிக்கற்றையிலிருந்து வரும் துடிப்புகளை எழுத்துகளின் வடிவங்களாக மாற்றுகிறது. பார்வையற்றவர்கள் எழுத்துகளைத் தடவிப் பார்த்துப் படிக்கலாம்.

optical character : ஒளியியல் எழுத்து; ஒளியியல் உரு : ஓர் ஒளியியல் எழுத்துப் படிப்பி மூலம் படிக்கக்கூடிய ஒரு தனி வகை எழுத்து.

optical character recognition : ஒளிவ எழுத்து உணர்வு : தாளில் அச்சிடப்பட்டுள்ள எழுத்துகளை அவற்றின் இருள், ஒளித் தோரணிகளை ஆய்வு செய்து அவ்வெழுத்துகளின் வடிவமைப்பைத் தீர்மானிக்கும் ஒரு மின்னணுச் சாதனத்தின் செயல்பாடு. வருடுபொறி அல்லது படிப்பி எழுத்துகளின் வடிவத்தைத் தீர்மானித்த பிறகு, ஏற்கெனவே சேமித்து வைக்கப்பட்டுள்ள எழுத்துகளுடன் தோரணியை ஒப்பீடு செய்யும் எழுத்துணர் வழிமுறைகளைப் பயன்படுத்தி, அவை கணினி எழுத்துகளாக மாற்றப்படுகின்றன. இதன் பயன் என்னவெனில், ஏற்கெனவே அச்சிடப்பட்ட ஆவணங்களை வருடி அவற்றைக் கணினி ஆவணமாக மாற்றுவதுடன், உரைப் பகுதியை மாற்ற, திருத்த முடியும் என்பது குறிப்பிடத்தக்கது.

optical communication : ஒளியியல் செய்தித் தொடர்புகள்; ஒளியியல் தொடர்புகள் : தரவுகள், படங்கள், உரைகள், பிற செய்திகள் ஆகியவற்றை ஒளி மூலம் அனுப்புதல். அனுப்பீட்டுக் கருவியிலிருந்து புறப்படும் ஒளியலைக் குறியீட்டினைத் தாங்கிச் செல்லும் ஒரு தரவு, ஓர் ஒளியியல் கால் வழியே சென்று, ஓர் அலை வாங்கியில் நுழைகிறது. அந்த

அலைவாங்கி, மூலத் தரவுவை மறு கட்டமைப் புச் செய்கிறது. ஒளியியல் இழைகள், லேசர்கள் ஆகியவை இந்தத் தொழில் நுட்பத்தில் அடங்கியுள்ளன. இவை தரவு அனுப்பீட்டுத் திறம் பாட்டினை பெரும் அளவுக்கு உயர்த்த உதவு கின்றன.



ஒளிவ இயக்ககம்

**optical computer** : ஒளிக் கணினி : செய்திகளைச் செயலாக்க கம்பிகளுக்குப் பதிலாக லேசர் ஒளிக்கற்றை களைப் பயன்படுத்தும் ஒரு வகைக் கணினி. இன்னும் இது பரிசோதனையில் மட்டுமே உள்ளது. மரபு வழியிலான கம்பியிணைப்பு கணினிகளை விட இது மிகவும் வேகமாக வேலை செய்கிறது.

**optical data storage divice** : ஒளிவ தரவு சேமிப்புச் சாதனம்.

**optical disk** : ஒளியியல் வட்டு: ஒளி வட்டு.

**optical drive** : ஒளிவ இயக்ககம் : ஒளிவ (குறு) வட்டுகளில் எழுத வும், படிக்கவும் முடிகிற ஒரு வட்டு இயக்ககம். சிடி ரோம் வட்டியக்ககம், மற்றும் வோர்ம் வட்டியக்ககங்களை எடுத்துக் காட்டுகளாகக் கூறலாம்.

**optical fiber** : ஒளியியல் இழை; ஒளியிழை : மின்னியல் அனுப் பீட்டு கம்பி வடம். இது மிக உயர்ந்த அளவு ஒளி ஊடுருவக் கூடிய கண்ணாடி இழையினால் ஆனது. இருமக் குறியீடுகளின் ஒரு கற்றையைக் கொண்டு செல்லும் வகையில் இதற்கு மிக விரைவான துடிப்பூட்டம் அளிக்கப்பட்டிருக்கும். இந்த ஒளியியல் இழைகள் மிகப் பெருமளவு தரவுகளைக் கொண்டு செல்ல வல்லவை; அத்துடன், மரபு இழைகளைச் சீர் குலைக்கக் கூடிய மின்னியல் குறுக்கீடுகளையும் தடுக்கிறது. கணினிச் செய்தித் தொடர்பு களில் ஒளியியல் இழைகளின் பயன்பாடு இப்போது மிகவும் பெருகியுள்ளது.

**optical fiber cable** : ஒளியிழை வடம்; இணைப்பு ஒளியிழை வடம்; கண்ணாடி இழை வடம்.

**optical imaging technique** : ஒளிவக் காட்சி நுட்பம்.

**optical laser disk** : லேசர் ஒளி வட்டு.

**optical mark reader** : ஒளிவம் குறி படிப்பி; ஒளியியல் குறி யெழுத்துப் படிப்பி : *அட்டைகளில் அல்லது பக்கங்களில் உள்ள வரைகலைக் குறியெழுத்துகளைப் படிக்கக் கூடிய உட்பாட்டுச் சாதனம்.*

**optical mark recognition (OMR)** : ஒளியியல் குறியெழுத்தேற்பு; ஒளியியல் குறியறிதல்; (ஓஎம்ஆர்) : *ஒரு குறிப்பிட்ட நிலையில் ஒரு குறியெழுத்தை இருத்தி வைப்பதன்மூலம் கணினிப் பொறி உட்பாட்டுக்காகத் தரவுகளை இன்னொரு ஊடகமாக மாற்றுவதற்குரிய தகவல் செய்முறைப்படுத்தும் தொழில்நுட்பம். இந்த நிலை ஒவ்வொன்றும் கணினிப் பொறிக்குத் தெரிந்திருக்கிற ஒரு மதிப்பினைக் கொண்டிருக்கும். அந்த மதிப்பு மனிதரால் அறியக் கூடியதாகவோ அல்லது அறிய முடியாததாகவோ இருக்கலாம். இது ஒளியியல் எழுத்தறிதலுடன் ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கது.*

**optical merge tree** : உகந்த இணைப்பு மரம்; உகப்பு இணைவு மரம் : *இயக்கச் செயற்பாடுகள் மிகக் குறும எண்ணிக்கையில் நிகழும் வகையில் சரங்களை இணைக்கிற வரிசை முறையினை மரவடிவில் உருப்படுத்திக் காட்டுதல்.*

**optical mouse** : ஒளிச்சுட்டி; எலி வடிவ ஒளிக்கருவி : *அதன் அசைவுகளுக்கு ஒளியைப் பயன்படுத்தும் எலி வடிவக் கருவி. இது ஒரு சிறிய மேசை மேல் உள்ள அட்டையின் மேற்பகுதியில் நகர்த்தப்படுகிறது. ஒரு ரெஃப்ளெக்டிவ் கிரிட் உள்ளது. எலி வடிவக் கருவி ஒரு ஒளியை வெளியிட்டு அது நகரும்போது ஏற்படும் மாற்றங்களைக் கண்டுபிடிக்கிறது.*

**optical page reader** : ஒளியியல் பக்கப் படிப்பி : *வாசகம் அச்சிடப்பட்ட ஒரு பக்கத்தை படித்தறிகிற உட்பாட்டுச் சாதனம்.*

**optical printer** : ஒளியியல் அச்சுப் பொறி.

**optical reader** : ஒளியியல் படிப்பி.

**optical reader wand** : ஒளியியல் படிப்பி கோல் : *பட்டைக் குறியீடுகளைப் படித்து கணினிக்குள் உரிய தரவுகளைச் செலுத்துகிற சாதனம்.*

**optical recognition device :** ஒளியியல் ஏற்புச் சாதனம்; ஒளியியல் அறியும் கருவி : காகித ஆவணங்களில் குறியீடிடப் பட்டுள்ள குறியீடுகளை அல்லது குறியெழுத்துகளைப் படிக்கக்கூடிய சாதனம். இது அந்தக் குறியீடுகளை அல்லது குறியெழுத்துகளை மின்னியல் துடிப்புகளாக மாற்றுகிறது.

**optical resolution :** ஒளிவத் தெளிவு.

**optical scanner :** ஒளியியல் வருடி; ஒளியியல் நுண்ணாய்வுக் கருவி.

**optical scanning :** ஒளியியல் நுண்ணாய்வு; ஒளியியல் வருடல் : எந்திரச் செய்முறைப் படுத்துதலுக்காகச் செய்திகளை மாற்றம் செய்கிற ஓர் உட்பாட்டு முறை. செய்தி எந்தப் பின்னணியில் தோன்றுகிறதோ அந்தப் பின்னணியின் பிரதி பலிப்பு அளவினை மதிப்பீடு செய்வதன்மூலம் இது செய்யப் படுகிறது.

**optical storage :** ஒளிவச் சேமிப்பு.

**optimising compiler :** உகப் பாக்கு மொழி மாற்றி.

**optimization :** உகந்த அளவாக்கம் ; செயற்பாட்டு நிரல் தொடர் : ஒரு முடிவினை ஒரு வடிவமைப்பினை அல்லது ஒரு பொறியமைவினை, இயன்ற வரையில் முழுமையானதாக அல்லது செயற்படத்தக்கதாக உருவாக்குகின்ற முயற்சிகள் மற்றும் செய்முறைகள்.

**optimization analysis :** உகந்த ஆய்வு : குறிப்பிட்ட தடைகளுக்கிடையில் கணித முன் மாதிரியின் தேர்ந்தெடுக்கப்பட்ட மாறிகளின் மதிப்புகளுக்கிடையில் ஒரு உகப்புநிலை மதிப்புக் கண்டறிதல்.

**optimize :** உகந்த அளவாக்கு; உகப்பாக்கு : சில நிலையளவுருக்களின் - குறிப்பாக செலவு சேமிப்பளவு கால அளவு-மதிப்பினைக் குறுமப் படுத்துகிற அல்லது பெருமப் படுத்துகிற வகையின் ஒரு செயல்முறையை எழுதுதல் அல்லது ஒரு பொறியமைவினை வடிவமைத்தல்.

**optimizer :** திறன்மிகுப்பி : ஒரு கணினி, பிணையம் அல்லது பிற சாதனம் அல்லது முறைமையின் செயல்திறனை மிகுக்கச் செய்யும் ஒரு நிரல் அல்லது சாதனம். எடுத்துக்காட்டாக, வட்டுத் திறன்மிகுப்பி நிரல், கோப்பு அணுகல் நேரத்தைக் குறைக்கிறது.

optimizing compiler : திறன்மிகுப்பு மொழி மாற்றி : இந்த மொழி மாற்றி அதன் வெளியீட்டை (சிப்பு மொழி அல்லது பொறி மொழி) பகுப்பாய்வு செய்து இன்னும் திறன்மிக்க (குறுகிய, வேக மான) கட்டளைத் தொகுதியாக மாற்றித் தரும்.

optimum : உகந்த அளவு : ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ள வகைப்பாடுகளின் நோக்கில் மிகச் சிறந்ததும் மிகவும் விரும் பத் தக்கதுமான அளவு.

optimum programming : உகந்த அளவுச் செயல்முறைப்படுத்து தல் ; உகந்த செயல்முறை நிரல் : ஒரு வகைப்பாட்டினைப் பொறுத்த அளவில் திறம் பாட்டினை பெரும் அளவுக்கு உயர்த்தும் செயல்முறைப் படுத்துதல். மிகக்குறைந்த அளவு சேமிப்பியின் பயன் பாடு, மிகக் குறைந்த அளவு புற நிலைச் சாதனப் பயன்பாடு, மிகக்குறைந்த அளவுக் கணிப்புக் காலம் போன்றவை இதில் அடங்கும்.

optimum quantity : உகந்த அளவு.

optimum tree search : உகந்த அளவு மர தேடல் : பல்வேறு மாற்று முறைகளில் மிகச் சிறந்த ஒன்றைத் தேர்ந்தெடுப்பதை நோக்கமாகக் கொண்ட மர தேடல் முறை.

option : விருப்பத் தேர்வு; வாய்ப்பு; தேடல்.

optional : விருப்பத் தேர்வு.

option key : விருப்பத் தேர்வு; தேடல் விசை : சில விசைப் பலகைகளிலுள்ள திருத்தம் செய்வதற்கான விசை. இதனை அழுத்தும்போது அடுத்துத் தட்டச்சு செய்யப்பட்டுள்ள எழுத்துகளுக்கு வேறுவிதமான பொருள் விளக்கம் அளிக்கிறது.

opto-electronics : ஒளி மின்னணுவியல் : ஒளியியலை யும் மின்னணுவியலையும் ஒருங்கிணைக்கும் தொழில் நுட்பம்.

OR : அல்லது : இரண்டு பிட்டு கள் (0 அல்லது 1) அல்லது இரண்டு பூலியன் மதிப்புகளை (சரி அல்லது தவறு) இணைப் பதற்கான ஒரு தருக்கமுறைச் செயல்பாடு. இச் செயல்பாட் டின் வெளிப்பாடு கீழ்க்காணும் வகையில் அமையும்.

oracle (software package) : ஆரக்கிள் (மென்பொருள் பொதிவு) : பெருமுகம், சிறு மற்றும் நுண்கணினிகள் போன்ற அனைத்து வகைக்

கணினிகளுக்கும் பயன்படக் கூடிய பிரபல தொடர்புறவு தரவுதள மேலாண்மைத் திட்டம்.

orange book : ஆரஞ்சுப் புத்தகம் : அமெரிக்க அரசின் பாதுகாப்புத் துறையின் பாதுகாப்பு தொடர் பான தரக் கட்டுப்பாடுகளைப் பற்றிய ஆவணம். நம்பிக்கைக் குரிய கணினி முறைமையை மதிப்பாய்வு அளவுகோல் செய் யும் டிஓடி தர வரையறை. 5200.28 எஸ்டீடி, டிசம்பர், 1985 என்ற தலைப்புடையது. A1 (மிகவும் பாதுகாப்பனது) முதல் D (குறைந்த பாதுகாப்புள்ளது) வரை பல்வேறு தர வரிசை களை வரையறுக்கும் ஒரு வழி முறை. உயிர்நாடியான தரவுவை பாதுகாக்க ஒரு கணினி முறை மைக்குள்ள தகுதிப்பாட்டை இத் தர வரிசை குறிக்கிறது.

ORB : ஓஆர்பி : பொருள் கோரிக்கைத் தரகர் எனப் பொருள்படும் Object Request Broker என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். கிளையன்/வழங்கன் பயன்பாடு களில் கிளையன் ஒரு பொருளுக் கான கோரிக்கயை முன் வைக்கும் ஓர் இடை முகம். ஓஆர்பி, கோரிக்கையை, பொருளை வைத்துள்ள வழங்கனுக்கு அனுப்பி வைக்கும். விடை மதிப்புகளை கிளையனுக்குத் திருப்பியனுப்பும்.

or circuit : அல்லது மின்சுற்று.

order : வரிசை முறை; எண் வரிசை; வரிசை : 1. ஒரு குறிப் பிட்ட விதிகளின் தொகுதிக் கிணங்க இனங்களை வரிசை முறையில் அமைத்தல். 2. பெரும்பாலான விரிதாள் செயல்முறைகளில் காணப் படும் நிரல். இது கணிப்பு வரிசைமுறையைப் பயன் படுத்துவோர் தீர்மானித்துக் கொள்வதற்கு அனுமதிக்கிறது.

ordered list : ஒழுங்கமை வரிசை.

order of operations : செயற்பாடு களின் வரிசைமுறை; இயக்க வரிசை: கணிதச் செயற்பாடு களின் படிவரிசை முறை. இதன் படி மொத்தமாக்கம் முதலிடம் பெறுகிறது. அடுத்து அடுக்குப் பெருக்கல், வர்க்க மூலங்கள் காணல், பெருக்கல், வகுத்தல் இடம் பெறுகின்றன. பின்னர் கூட்டல், கழித்தல் வருகின்றன.

ordinal number : வரிசை முறை எண் : ஒரு பொருளின் வரி சையை அடையாளம் காணும் எண். சான்றாக, பதிவேடு 34.

ordinate : செங்குத்து ஆயம்; நெட்டாயம் : ஒரு வரைபடத் தில் செங்குத்தாக உள்ள Y-அச்சு.

இது X-அச்சிலிருந்து (மட்டாயம்) வேறுபட்டது.

**.org** : .ஆர்க்; .ஓஆர்ஜி : இணையத்தின் களப்பெயர் அமைப்பு முறையில் உயர்நிலைக் களங்களுள் வணிக, கல்வி நிறுவனம் அல்லாத, ஆதாயநோக்கில் செயல்படாத நிறுவன அமைப்புகளைச் சுட்டும் பெயர். வணிக அமைப்புகள் .காம் (.com) என்ற பெயரையும், கல்வி நிறுவனங்கள் .இடியு (.edu) என்ற பெயரையும் கொண்டுள்ளன. கணித்தமிழ் சங்கம் வணிக நிறுவனமோ, கல்வி நிறுவனமோ அல்ல. எனவே அதன் பெயர் www. kanithamizh.org என அமைந்துள்ளது.

0 or 0 = 0,
0 or 1 = 1
1 or 0 = 1,
1 or 1 = 1

**organisation file** : கோப்பு ஒழுங்கமைப்பு.

**organise favourites** : கவர்வுகளை ஒழுங்குபடுத்து.

**organiser** : அமைப்பாளர்.

**organization** : சீர்மை சேமிப்பமைப்பு.

**organizational control** : அமைவனக் கட்டுப்பாடு : தகவல் பொறியமைவை ஊடுருவல், குறுக்கீடு, நாசவேலை போன்றவற்றிலிருந்து பாதுகாப்பதற்காக நிறைவேற்றப்படும் அலுவலர் நிருவாக நடைமுறைகள்.

**organization chart** : அமைவன வரைபடம் : ஒரு வணிக நிறுவனத்திலுள்ள பொறுப்புகள் எவ்வாறு பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளன என்பதைக் காட்டும் அமைப்பு முறை விளக்க வரைபடம். அமைவனப் படிநிலை அமைப்பின் பட விளக்கம். இது ஓர் அமைவனத்தின் பணியாளர்களிடையிலான உறவு சார்ந்த நிலையைக் காட்டுகிறது.

**OR gate** : அல்லது வாயில்; அல்லது வழி : உட்பாடுகள் இரண்டில் ஒன்று அல்லது இரண்டும் இருமமாக இருக்குமானால் உட்பாடு ஓர் இரும 1 ஆக இருக்கிற இரு விசைகளைக் கொண்ட கணினி மின்சுற்று வழி. இது "அல்லது இயக்கியை" (OR operator) இயக்குகிறது.

**orginal data** : தோற்றுவாய்த் தரவு; மூலத் தரவு : செய்முறைப்படுத்த வேண்டிய தரவு. இது, "செப்ப மற்ற தரவு" (Raw data) என்றும் அழைக்கப்படும்.

**orientation** : ஆற்றுப்படுத்தல்.

**origin** : தோற்றுவாய்; தொடக் கம் : குறியீட்டு முறையில் ஒரு செயல் முறையின் அல்லது செயல்முறைப் பகுதியின் முதல் அமைவிடத்தின் முழுமையான நினைவக முகவரி.

**original** : மூலப்படி.

**original equipment manufacturer (OEM)** : மூலச்சாதன உற்பத்தி யாளர் : மற்ற விற்பனையாளர் களிடமிருந்து சாதனங்களை விலைக்கு வாங்கி தனியொரு பொறியமைவாக ஒருங் கிணைத்து மறுவிற்பனை செய்யும் உற்பத்தியாளர்.

**Original Macintosh Keyboard** : அடிப்படை மெக்கின்டோஷ் விசைப்பலகை : தொடக்க கால ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினியுடன் தரப்படுவது. இது மிகவும் சிறியது. எண் விசைப் பகுதி மற்றும் பணிவிசைகள் (Function keys) இல்லாதது. ஏறத்தாழ தட்டச்சு விசைப் பலகையை ஒத்தது. 58 விசை களைக் கொண்டது. தட்டச்சுப் பலகையிலிருந்து இரண்டே இரண்டு மாற்றங்கள். கீழ் வரிசையில் இருபுறமும் உள்ள விருப்பத் தேர்வு விசைகள். இடவெளிப்பட்டையின் இடப் புறம் கட்டளை விசையும், வலப்புறம் நுழைவு விசையும் உள்ளன (Enter key).

**original message** : மூலத் தரவு.

**originate** : தொடங்கு.

**originate answer** : தொடங்கு/ மறுமொழிச் சாதனம் : செய்தி களை உண்டாக்கி மறுமொழி யளிக்கக் கூடிய ஒரு சாதனம். பெரும்பாலான தொலைக் கணினிச் சாதனங்கள் மறு



அடிப்படை மெக்கின்டோஷ் விசைப் பலகை

மொழி முறையில் அமைந்துள்ளன. எனவே பயன்படுத்துபவர் மறுமொழி முறையிலே இருத்தல் வேண்டும்.

**OR operator :** "அல்லது" இயக்கி : தருக்க முறை இயக்கி என்பது ஓர் அறிக்கை, 'Q' என்பது இன்னொரு அறிக்கை என்றால், P+Q என்பதன் 'அல்லது' (OR) என்பது, குறைந்தது ஒன்று உண்மையாக - இருந்தால் மட்டுமே உண்மையானதாகும்; எல்லாம் பொய் எனில் பொய்யானதாகும் என்பதைத் தெரிவிக்கும் தன்மையுடையது.

**orphan :** அனாதை வரி ; தொடக்கத் தனி வரி : ஒரு வாசகத்தின் ஒரு பக்கத்தின் அடியில் தன்னந்தனியாக அமர்ந்திருக்கும் ஒரு பத்தியின் முதல்வரி. இது எல்லா அச்சு வடிவங்களிலும் விரும்பத் தகாததாகக் கருதப்படுகிறது.

**orphan file :** உறவிலிக் கோப்பு; அனாதைக் கோப்பு : கணினிச் சேமிப்பில் பயனற்றுப் போன பின்பும் தங்கிவிட்ட ஒரு கோப்பு. எடுத்துக்காட்டாக, ஒரு குறிப்பிட்ட பயன்பாடு செயல்படுவதற்கு உதவியாக உருவாக்கப்பட்ட கோப்பு, அந்தப் பயன்பாடு கணினியிலிருந்து நீக்கப்பட்டபின் அனாதை ஆகிவிடுகிறது.

**orthoferrite :** ஆர்த்தோ ஃபெரைட் : இது இயற்கையாகக் கிடைக்கும் ஒரு பொருள். இது எதிர் காந்தத் துருவ முனைப்பின் பாம்பு போன்று நெளிந்த மாற்றுப் புலங்களைக் கொண்டதாகும். இது காந்தக் குமிழ் நினைவகத்துக்குப் பயன்படுத்தப்படுகிறது.

**orthographic :** எழுத்துக்கூட்டு முறை : அச்சு விரிவமைப்பு ஓவியம் அல்லது நிலப் படத்தின் அச்செழுத்து முறை. இதில் முனை நீட்டிக் கொண்டிருக்கும் வரிகள் ஓவியம் அல்லது நிலப்படத்தின் தளப் பரப்புக்குச் செங்குத்தாக இருக்கும்.

**.or.us :** .ஓஆர்.யுஎஸ் : ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டின் ஓரிகான் மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப்பெயர்.

**OS :** ஓஎஸ் ;இயக்க முறைமை: "செயற்படு பொறியமைவு" எனப் பொருள்படும் 'Operating System' என்ற ஆங்கிலச் சொல்லின் சுருக்கம்.

**OS/2 :** ஓஎஸ்/2 : ஐபிஎம் நிறுவனத்தின் இயக்க முறைமை. தொடக்க காலத்தில் ஐபிஎம், மைக்ரோசாஃப்ட் இரண்டின் கூட்டுத்திட்டப் பணியாய் இருந்தது. பின்னாளில்

மைக்ரோசாஃப்ட் விலகிக் கொண்டது. பாதுகாக்கப்பட்ட பாங்கில் (pro- tected mode) செயல்படும். மெய்நிகர் நினைவகம் கொண்ட பல் பணியாக்க இயக்க முறைமை. இன்டெல் 80286, 80386, +i486 மற்றும் பென்டியம் பிராசசர் கள் கொண்ட சொந்தக் கணினி களில் செயல்படவல்லது. பெரும்பாலான எம்எஸ்-டாஸ் பயன்பாடுகளும் ஓஎஸ்/2-வில் செயல்படும். அனைத்து எம்எஸ்-டாஸ் வட்டுகளையும் படிக்கும். பிரசென்டேஷன் மேனேஜர் என்கிற துணை அமைப்பைக் கொண் டது. இது வரைகலைப் பணிச்சூழலை வழங்குகிறது. பிணைய வசதி களைப் பெற "லேன் மேனேஜர்" உண்டு. வங்கிகள் நிறுவியுள்ள பெரும்பாலான ஏடீஎம் மையங் களில் ஓஎஸ்/2 முறைமையே பயன்படுத்தப்படுகிறது.

**oscillate** : ஊசலாடு : மிகக் குறைந்ததற்கும், மிக அதிக மானதற்குமான மதிப்புகளுக்கு மிடையில் வந்துவந்து போவது. ஊசலாடுவது என்பது ஒரு சுழற்சி. மாறும் அலைவு எண்ணின் ஒரு முழு அலை.

**oscillating sort** : ஊசல் வரிசை யமைவு: ஒரு நாடா இயக்கியின் திறம்பாட்டிற்கு முன்னும் பின்னும் படிப்பதற்கான வசதி யைக் கொடுக்கும் புறநாடா வரிசையமைவு.

**oscillation** : ஊசலாட்டம் : குறிப்பிட்ட கால இடைவெளி யில் மாறுகின்ற மாற்றத்துக்கு உள்ளாகும் நிலை. மின்னணு வியலில் ஊசலாட்டம் என்பது ஒரு குறிப்பிட்ட சமிக்கையில் ஏற்படுவது.

**oscillator** : அலையியற்றி : ஒரு கட்டுப்படுத்தப்பட்ட அலை வரிசையில் குறிப்பிட்ட கால இடைவெளியில் மாறிக் கொண்டே இருக்கும் வெளி யீட்டைத் தருகின்ற மின்னணுச் சுற்று. நிலையான அல்லது மாற்றத்தக்க வெளியீட்டைத் தரக்கூடிய வகையிலும் வடி வமைக்க முடியும். மின்னணுச் சுற்றுகளில் அலை இயற்றிகள் மிகவும் முக்கியமானவை. நிலையான அலைவரிசையை உருவாக்க சில அலை இயற்றி கள் குவார்ட்ஸ் படிகத்தைப் பயன்படுத்துகின்றன. சொந்தக் கணினிகளில் கடிகார அலைவரி சையை வழங்க ஓர் அலை இயற்றி பயன்படுத்தப்படு கிறது. 1 முதல் 200 மெகா ஹெர்ட்ஸ் வரை துடிப்பவை. செயலியும் மற்றபிற மின் சுற்றுகளும் இதனடிப்படையில் இயங்குகின்றன.

**oscillography** : ஊசல் உரு வாக்கம்; ஊசல் வரைவியல்: ஓர் எதிர்மின்வாய்க் கதிர்க்குழலின் முகப்பில் மின்னியல் குறியீடு களின் ஒரு தோரணியை உரு வாக்கிக் காட்டுதல்.

**oscilloscope** : ஊசல் உரு வாக்கக் கருவி ; அலைவு நோக்கிக் கருவி : இருளில் ஒளி விடும் ஒரு திரையில் சுடரொளி வீசுகின்ற ஒரு பரப்பிடத்தை உண்டாக்குகின்ற ஒரு மின்னணு வியல் சாதனம். இது இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட மாறிகளுக்கிடையிலான தொடர் பினைக் காட்டுகிறது. கணினி பராமரிப்புத் தொழில் நுட்பாளர் கள் இதனைப் பயன்படுத்து கின்றனர்.

**OSF** : ஓஎஸ்எஃப் : திறந்தநிலை மென்பொருள் கழகம் என்று பொருள்படும் Open Software Foundation என்பதன் தலைப் பெழுத்துக் குறும்பெயர். டிஇசி, ஐபிஎம், ஹெச்பி போன்ற நிறுவனங்கள் இணைந்து உருவாக்கிய ஆதாய நோக்கில்லாக் கூட்டமைப்பு. 1988இல் நிறுவப்பட்டது. யூனிக்ஸ் இயக்கமுறைமையில் செயல்படும் நிரல்களுக்கான தரக் கட்டுப்பாடுகள் மற்றும் வரன்முறைகளை வளர்த் தெடுப்பதும், மூல நிரல் வரைவுடன் மென்பொருள் களுக்கான உரிமங்களை உறுப் பினர்களுக்கு வழங்குவதும் இந்த அமைப்பின் நோக்கம். பகிர்ந்தமை கணிப் பணிச்சூழல் (Distributed Computing Environment), மோட்டிஃப் என்னும் வரை கலைப் பணிச் சூழல் (GUI), ஓஎஸ்எஃப்/1 என்னும் இயக்க முறைமை (யூனிக்ஸின் இன் னொரு வடிவம்) ஆகியவை ஓஎஸ்எஃபின் படைப்புகளில் சில.

**OSPF** : ஓஎஸ்பீஎஃப் : திறந்த மீக்குறு பாதை முதலில் எனப் பொருள்படும் Open Shortest Path First என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணையம் போன்ற ஐபீ பிணை யங்களுக்கான திசைப்படுத்தும் நெறிமுறை. ஒவ்வொரு கணு (node)வையும் செய்தி சென்றடைவதற்கான மிகக் குறுகிய பாதை எது என்பதைக் கணக்கிட்டு திசைவி (Router) வழிப்படுத்தும். திசைவி அதனோடு இணைக்கப்பட்ட கணுக்களிலுள்ள தொடுப்பு -நிலை விளம்பரம் (Link-State Advertisements) என்றழைக்கப் படும் தரவுவை, பிணை யத்திலுள்ள பிற திசைவிகளுக்கு அனுப்பி வைக்கின்றன. அங்கே தொடுப்புநிலைத் தரவு ஒன்று

குவிக்கப்பட்டு மீக் குறுபாதை கணக்கிடப்படுகிறது.

**OTOH** : ஓடீஓஹெச் : இன்னொரு வகையில் பார்த்தால் எனப் பொருள்படும் on the other hand என்பதன் தலைப்பெழுத்துக் குறும்பெயர். மின்னஞ்சல், இணையச் செய்திக்குழுக்கள் மற்றும் பிற விவாதக் குழுக்களில் அடிக்கடி பயன்படுத்தப்படுகிறது.

**OTPROM** : ஓட்ப்ரோம் : one time prom என்பதன் குறும்பெயர். ஒரே ஒருமுறை மட்டுமே நிரல் தொடரமைக்கக் கூடிய ப்ராம் சிப்பு.

**oughtred, william (1575-1660)** : அவுட்ரெட், வில்லியம் (1575-1660) : ஆங்கிலேயக் கணித மேதை; 1630இல் சறுக்கு விதியைக் கண்டுபிடித்தவர்.

**Outbox** : வெளிச்செல் பெட்டி; செல்மடல் பெட்டி : மின்னஞ்சல் பயன்பாடுகளில் வெளியே அனுப்பப்படும் கடிதங்களைச் சேமித்து வைக்கும் பெட்டி.

**outdegree** : புறமுகப்போக்கு; வெளியாகு எண் : ஒரு மைய முனையைவிட்டுச் செல்லுமாறு தூண்டப்பட்ட விளிம்புகளின் எண்ணிக்கை. இது உள் முகப்போக்கு (indegree) என்பதிலிருந்து வேறுபட்டது.

**outdent** : வெளித்தள்ளு; வெளிமுகமாக்கம்; வெளியாக்கம் : ஒரு வாசகத்தின் ஒரே பத்தியில் மற்ற வரிகளிலிருந்து இடது பக்கம் அதிக தூரம் நீட்டிக் கொண்டிருக்கும் ஒரு வரியை உள்முகமாகச் செய்முறைப் படுத்துதல். இது "விளிம்பு வெட்டுதல்" (indentation) என்பதற்கு எதிரானது.

**out line layout view button** : வெளிக்கோடு உருவரை காட்சிப் பொத்தான்.

**outer join** : வெளி இணைப்பு; புறச் சேர்க்கை : தரவுத் தள மேலாண்மையில் உறவுநிலை எண்கணிதத்தில் நிலவும் ஒரு செயற்குறி. புறச்சேர்க்கை என்பது ஒரு விரிவாக்கப்பட்ட சேர்க்கைச் செயல்பாடு ஆகும். தொடர்புடைய தரவுகள் பதியப்பட்டுள்ள இரண்டு அட்டவணைகளிலிருந்து தேவையான தரவுவைப் பிரித்தெடுக்கப் பயன்படுத்தப்படும் பல்வேறு செயல்முறைகளில் இதுவும் ஒன்று. முதல் அட்டவணையிலுள்ள அனைத்து ஏடுகள் இந்தச் செயல்பாட்டின் வெளிப்பாடாக அமையும். முதல் அட்டவணையிலுள்ள ஏடுகளுக்கு உறவுடைய ஏடுகள் இரண்டாவது அட்டவணையில் இருப்பின் அத்தரவுகள்

வெளியீட்டில் இடம் பெறும். அவ்வாறு இல்லாத ஏடுடன் வெற்று மதிப்புகளுடன் இடம் பெறும்.

**outer loop** : வெளிக்கொக்கி வளையம்.

**outline** : வெளிக்கோடு.

**outline font** : வெளிக்கோடு அச்செழுத்து : ஒவ்வொரு எழுத்துகளின் அடிப்படை வெளிக் கோடுகளைக் கொண்டு உருவாக்கப்பட்ட ஒருவகை அச்செழுத்து. வெளிக்கோடுகளை உண்மையான எழுத்துகளாக அளவிட்ட (பிட்மேப்) அச்சேறுவதற்குமுன் அளிக்கப்படுகிறது.

**outline processor** : வெளிக் கோடு செயலகம் : பயனாளர் ஆலோசனைகளை ஏற்கும் ஒரு மென்பொருள் பொதிவு. அவைகளை பயனாளர் குறிப்பிடும் வகையில் மாற்றி திரும்பமைத்து அதே எண்ணங்களின் பண்பட்ட மாதிரியாக அளிக்கிறது.

**outline utility** : வெளிக்கோட்டு பயன் கூறு.

**outlook express** : அவுட் லுக் எக்ஸ்பிரஸ் : ஒரு மின்னஞ்சல் மென்பொருள்.

**out-of-band signaling** : கற்றைப் புறத்து சமிக்கை முறை : ஒரு தகவல் தொடர்புத் தடத்தில் குரல் அல்லது தரவுவை அனுப்புவதற்கான கற்றை அகலத்துக்கு வெளியிலுள்ள அலைவரிசைகளில், கட்டுப்பாட்டுச் சமிக்கை போன்ற சிலவற்றை அனுப்பும் முறை.

**out-of-line** : முரணிய வரி ; வெளியமை வரி : செயல்முறையின் முதன்மை வரிக்குள் அமைந்திராத அறிக்கைகள். எடுத்துக்காட்டு: முடிவற்ற துணை வாலாயங்கள்.

**output** : வெளிப்பாடு; வெளிப் படுபொருள்; வெளியீடு : *1.* ஒரு கணினியின் உள்முகச் சேமிப்பு அலகிலிருந்து ஒரு சேமிப்பிக்கு அல்லது வெளிப்பாட்டுச் சாதனத்திற்கு மாற்றப்படும் தரவு. 2. கணினியினால் செய்முறைப்படுத்தப்பட்ட தரவுவின் இறுதி முடிவு. இது உட்பாடு (input) என்பதற்கு வேறுபட்டது.

**output area** : வெளிப்பாட்டுப் பகுதி : வெளிப்பாட்டுத் தரவுக்காக முதன்மைச் சேமிப்பியில் ஒதுக்கப்பட்டுள்ள பகுதி. இது "உட்பாட்டுப் பகுதி"க்கு (input area) வேறுபட்டது.

**output bound** : வெளிப்பாடு கட்டுப்பட்ட : வெளிப்பாட்டுப் பணிகளினால் ஏற்படும் அதிக அளவு தாமதத் தன்மை. குறை

வேக தரவு தொடர்புக் கம்பிகள் அல்லது அச்சுப்பொறிகள்.

**output buffer** : வெளிப்பாட்டு இடையிடம் ; வெளியீட்டு இடை நினைவகம்; வெளிப் பாட்டு நினைவறை : தரவுவை ஒரு புறச்சாதனத்திற்கு மாற்றப் பயன்படுத்தப்படும் கிடைத் தடுப்பு நினைவகம்.

**output channel** : வெளிப் பாட்டுத் தடம் : புறநிலை அலகு களையும் மையச் செயலகத்தை யும் இணைக்கின்ற ஒரு இணைப்புத் தடம். இதன் வழியாக வெளிப்பாட்டுக்காக தரவுகளை அனுப்பலாம்.

**output channel, input** : உள் ளீட்டு வெளியீட்டுத் திட்டம்.

**output data** : வெளிப்பாட்டுத் தரவு : செய்முறைப்படுத்துதலுக் குப் பிறகு ஒரு சாதனத்திலிருந்து அல்லது செய்முறையிலிருந்து வழங்கப்படும் தரவு. இது உட்பாட்டுத் தரவிலிருந்து வேறுபட்டது.

**output device** : வெளிப்பாட்டுச் சாதனம் : ஒரு கணினியிலிருந்து தரவு மதிப்புகளை எடுத்துக் கொண்டு, அவற்றைப் பயன் படுத்துபவர் விரும்பும் வடிவத் தில் வழங்குவதற்குப் பயன் படுத்தப்படும் அலகு. எடுத்துக் காட்டு : கணினி வெளிப் பாட்டு நுண்சுருள் பதிப்பி; இலக்க வரைவி ; அச்சடிப்பி; ஒளிக்காட்சி முனையம். இது உட்பாட்டுச் சாதனத்திலிருந்து வேறுபட்டது.

**output media** : வெளிப்பாட்டு ஊடகம்: வெளிப்பாட்டுத் தரவு களைப் பதிவு செய்வதற்கான இயற்பியல் பொருள். எடுத்துக் காட்டு : காகிதம், காந்த வட்டு, காந்த நாடா.

**output primitives** : வெளிப் பாட்டு அடிப்படைகள் : திரை யில் படங்களை உருவாக்கப் பயன்படும் அடிப்படை உறுப்புகள்.

**output signal, zero** : வெளி யீடில்லாக் குறிகை.

**output statement** : வெளிப் பாட்டுக் கட்டளை : விவரங் களை, விவரங்களின் அடிப் படையில் கணித்தறியப்பட்ட விடையை பயனாளருக்கு திரை யிலோ, அச்சிலோ, வட்டுப் பதிவாகவோ தெரிவிக்கப் பயன் படுத்தப்படும் கணினி மொழி நிரல் தொடர்.

**output stream** : வெளிப்பாட்டுத் தாரை;வெளியீட்டு ஓடை : ஒரு வெளிப்பாட்டுச் சாதனத்திற்கு மாற்றப்பட வேண்டிய தரவு களின் வரிசைத் தொகுதி.

**output unit** : வெளியீட்டகம் ; வெளிப்பாட்டகம்.

**outputting** : வெளிப்பாடு செய்தல் : பயனுள்ள தகவல் களின் வெளிப்பாட்டினை உண்டாக்குகிற செய்முறை.

**outsourcing** : வெளித்திறன் பெறல் : வெளிப்புற ஆலோசகர் கள், மென்பொருள் இல்லங்கள் அல்லது சேவை அலுவலகங் களுடன் ஒப்பந்தம் செய்து அமைப்பு ஆய்வு நிரல் தொடரமைத்தல் மற்றும் தரவு மைய இயக்கங்களைச் செய்தல்.

**oval** : நீள்வட்டம்.

**oval shape** : நீள்வட்ட வடிவம்; முட்டை வடிவம்.

**overdrive** : ஓவர்டிரைவ் : இன் டெல்லின் 486 மேம்படு மையச் செயலகம்.

**overdrive socket** : கூடுதல் இயக்ககப் பொருத்துவாய்.

**overflow** : ததும்பல் ; வழிதல்; மிகைமதிப்பு : ஒரு கணிதச் செயற்பாட்டில் பதிவேட்டில் அல்லது சேமிப்பு அமைவிடத் தில் அதன் கொள்திறனுக்கு மீறிய அளவில் ஓர் எண்ணள வினை உண்டாக்குதல்.

**over flow, arthmetic** : கணக் கீட்டு வழிவு.

**overflow error** : பொங்கி வரும் பிழை : கணக்கிடப்பட்ட தரவு ஒதுக்கப்பட்ட புலத்துக்குள் பொருந்தவில்லையென்றால் ஏற்படும் பிழை. முடிவு புலம் காலியாக விடப்படும் அல்லது பிழை நிலையைக் காட்டும் சில குறியீடு செய்யப்படும்.

**overhead** : தாங்கா சுமை; மேற் செலவு : 1. ஒரு செயல்முறையை அல்லது சாதனத்தை அதன் உயர்ந்த அளவுத் திறம்பாட்டுக் குக் குறைவாகச் செயற்படும் படி செய்யும் மட்டுமீறிய காரணிகளைக் குறிக்கும் சொல். 2. செயற்பாட்டுப் பொறியமை வும் செயல்முறையும் ஆக்க முறையான பணிகளைவிட நிருவாகப் பணிகளைச் செய்கிற போது நடைபெறும் ஆக்க முறையல்லாத முயற்சி.

**overlap** : மேலழுந்துதல்; உடன் நிகழ்தல் : ஒரு செயலினைச் செய்து கொண்டிருக்கும் அதே சமயத்தில் வேறொரு செய லினையும் செய்யும்படி செய் தல். எடுத்துக்காட்டு : மையச் செயலகம் அலகு நிரல்களை நிறைவேற்றிக் கொண்டிருக் கும்போது ஓர் உட்பாட்டுச் செயல்பாட்டினைச் செய்தல். ஒரே சமயத்தில் கணினி பல செயல்முறைகளை நிறைவேற்ற இம்முறை அனுமதிக்கிறது.

**overlapping : மேலழுந்து நிலை :** ஒரு திரைக்காட்சியில் சாளரங் கள் ஒன்றுக்கு மேல் ஒன்றாக அல்லது ஒவ்வொன்றின் எல்லைகளுக்குள் மேலழுந்தி இருக்கும் நிலை.

**overlap processing : மேலழுந்து செய்முறைப்படுத்துதல் :** ஒரு கணிவியில் உட்பாட்டினைச் செலுத்துதல், செய்முறைப் படுத்துதல், வெளிப்பாட்டு நடவடிக்கைகளைச் செய்தல் ஆகியவற்றை ஒரே சமயத்தில் நிறைவேற்றுதல். இது மேலழுந்தா செய்முறைப்படுத் துதலிலிருந்து வேறுபட்டது.

**overlay : மேற்கவிதல் :** ஒரு செயல்முறையின் கூறுகளை துணைச் சேமிப்பியிலிருந்து நிறைவேற்றத்தக்கதாக உள் முகச் சேமிப்பிக்கு மாற்றுதல். இதனால் இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட கூறுகள் பல்வேறு சமயங்களில் ஒரே சேமிப்பு அமைவிடங்களை பிடித்துக் கொள்கின்றன. உள் முகச் சேமிப்பியில் தற்போது அணுகப்பட்டு வரும் செயல் முறையை அல்லது தரவுகளை மட்டுமே வைத்துக் கொண்டு எஞ்சியவற்றை ஒரு நேரடிச் சேமிப்புச் சாதனத்தில் (காந்த நாடா அலகு) தேவையான காலம்வரை வைத்து உள்முகச் சேமிப்பியின் வடிவளவை அதிகரிப்பதற்கு இந்த உத்தி பயன்படுகிறது.

**overlay¹ : மேல்விரி¹ :** *1.* வட்டில் சேமிக்கப்பட்டுள்ள நிரல் மிகப்பெரியதாக இருப் பின் அதனை முழுமையாக நினைவகத்தில் ஏற்றமுடியாது. அத்தகைய நிரல்களுக்கு மேல்விரி கோப்புகள் தனியாக உருவாக்கப்படுகின்றன. நிரலை நினைவகத்தில் ஏற்றும்போது மேல்விரி கோப்பிலுள்ள ஒரு பகுதி நிரல் மட்டுமே நினைவகத்தில் ஏற்றப்படும். தேவைப்படும்போது அடுத்த பகுதி ஏற்றப்படும். அது நினை வகத்திலுள்ள முதல் பகுதியின் மீதே மேலெழுதப்படும். இந்த ஏற்பாட்டின்படி மிகப்பெரிய நிரலையும் நினைவகத்தில் ஏற்றி இயக்க முடிகிறது என்ற போதிலும் ஓரளவு இயக்க வேகம் குறைய வாய்ப் புள்ளது. 2. குறிப்பிட்ட பண்புக் கூறு களை அடையாளம் காணும் பொருட்டு திரை, மேசை அல்லது விசைப் பலகை மீது மேல்விரிக்கப்படும் அச்சிட்ட படிவம்.

**overlay² : மேல்விரி² :** *1.* கணினி வரை கலையில் ஒரு படிமத் தின்மீது இன்னொரு படிமத்தை மேல் விரித்தல். 2. ஒளிக்

காட்சிகளில், நிகழ்நேர அல்லது முன் பதியப்பட்ட ஒளிக்காட்சிச் சமிக்கைகளின் மீது கணினியில் உருவாக்கப்பட்ட ஒரு வரைகலைப் படிமத்தை மேல் பொருந்தச்செய்தல்.

**overlay card :** மேலோட்ட அட்டை : கணினியில் காட்டுவதற்கான ஒளிக்காட்சி மூலத்திலிருந்துவரும் என்.டி. எஸ்.சி. சமிக்கைகளை இலக்கப்படுத்தும் கட்டுப்பாட்டுப் பொறி.

**overloading :** அதிகப்பளு ஏற்றல் : நிரல் தொடரமைப்பால் ஒரே பெயரை ஒன்றுக்கு மேற்பட்ட ஒரே கணிப்புக் குறியீட்டினை வேறுவேறு விவர இனங்களுக்குப் பயன்படுத்தும் திறன். இதனால் சூழ்நிலைக்கேற்ப அவற்றை வேறுபடுத்த வேண்டியது தொகுப்பின் வேலையாகிறது.

**overloading constructor :** பணி மிகுப்பு ஆக்கி.

**overprint :** மேலச்சு : எழுத்தின் தோற்றத்திற்கு அழுத்தம் கொடுப்பதற்காக ஒரே நிலையில் ஒன்றுக்கு மேற்பட்ட முறைகள் அச்சிடும் செய்முறை.

**overpunch :** மேல் துளையிடல்; கூடுதல் துளையிடல் : ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட துளைகளுடைய ஒரு அட்டையின் பத்தியில் மேலும் துளைகளையிடுதல்.

**override :** மேலாணை; மேலூர்தல் ; ஊர்ந்தியங்கல் : ஒரு செயல்முறைக்குப் பதிலாக்கம் செய்வதன்மூலம் முன்னிருக்கும் மதிப்பினை மாற்றும் படி செய்தல்.

**overrun :** மேலோட்டம் ; மிகையோட்டம்; ஊர்ந்தியங்குதல் : ஒரே காலத்தில் இயங்கும் ஊடகத்தைக் கொண்ட இடைத்தடுப்பிலாக் கட்டுப்பாட்டு அலகிலிருந்து தரவுகளை மாற்றம் செய்யும்போதும் வழித் தடத்தின் திறம்பாட்டிற்கு மீறுகையாக நடவடிக்கையைச் செயல்முறை தூண்டும்போது ஏற்படும் நிலை.

**overscan :** மிகை நுண்ணாய்வு; மிகை வருடல் : கணினி திரை




மிகை வருடல்

யில் ஒரு வரியின் முடிவில் வாசக இழப்பீடு முறையாகச் சரியாக்கப்படாத நிலை.

**overseas** : அயல்நாட்டு : தொலைத்தரவு தொடர்புக் குழுமம்.

**overstriking** : மிகை அடிப்பு; மேலடிப்பு : அச்சுப்படியில் எடுப்பான முகப்பினைக் கொண்டு வருவதற்காக எழுத்து களை ஒன்றுக்கு மேற்பட்ட தடவை அச்சடித்தல்.

**overtype mode** : மேலெழுது முறை : ஏற்கனவே உள்ள எழுத்துகளின்மீது அவையழிந்து புதிய எழுத்துகள் அவ்விடத்தில் பதியுமாறு தட்டச்சிடும் முறை. INSERT Mode-க்கு மாறானது.

**overwrite** : மேலெழுதுதல் : ஓர் அமைவிடத்தில் ஒரு தரவுவைப் பதிவு செய்து, அந்த அமை விடத்தில் முன்னரே அடங் கியுள்ள தரவுவை அழித்தல் அல்லது சீர்குலைத்தல்.

**overwrite mode** : மேலெழுது பாங்கு: ஓர் ஆவணத்தில் உரை யைத் தட்டச்சுச் செய்யும்போது புதிதாகத் தட்டச்சு செய்யப் படும் எழுத்துகள் அந்த இடத் தில் ஏற்கெனவே உள்ள எழுத்து களை நீக்கிவிடும். இப்போது புழக்கத்தில் உள்ள சொல் செயலித் தொகுப்புகளில் பெரும்பாலும் உட்செருகு பாங்கே (Insert Mode) இயல் பானதாய் உள்ளது. தேவை யெனில் மேலெழுது பாங்காக மாற்றியமைத்துக் கொள்ளலாம்.

# P

**PABX** : பிஏபிஎக்ஸ் : "தனியார் தானியக்கக் கிளை இணைப் பகம்" என்று பொருள்படும் "Private Automated Branch Exchange" என்பதன் குறும்பெயர்

**pack** : திரட்டிக் கட்டு; பொதி : தரவுகளின் பல்வேறு குறுகிய அலகுகளை தனியொரு சேமிப்புச் சிற்றத்தினுள் செறிவாகத் திரட்டி வைத்தல். இதிலுள்ள தனித்தனி அலகு களைப் பின்னர் மீட்டுக் கொள்ளலாம். எடுத்துக்காட்டு : இரண்டு 4 துண்மிக்கு இரும எண் குறியீடிட்ட பதின்ம (BCD) எண்களை ஒரே 8 துண்மிக்குச் சேமிப்பி அமைவிடத்தில் சேமித்து வைத்தல். இது "கட்டவிழ்த்தல்" (unpack)என்பதற்கு மாறானது.

**package** : திரள் தொகுதி; பொதிவு; தொகுதி; பொதி; தொகுப்பு : ஒன்றுக்கு மேற்பட்ட வணிக நிறுவனங்களால் பயன்படுத்தப்படத்தக்க செயல்முறை அல்லது செயல்முறைகளின் தொகுதி.

**package, application** : பயன்பாட்டுத் தொகுப்பு

**packaged software** : திரள் தொகுதி மென்பொருள்; பொதி மென்பொருள்: ஒரு வன்பொருள் உற்பத்தியாளரினால் அல்லது ஒரு வன்பொருள் நிறுவனத்தினால் ஓர் உடன் பயன் தொகுதியாக விற்பனை செய்யப்படும் மென்பொருள். இதில், செயல்முறைகள், தொடர் வரிசை வரைபடங்கள் போன்ற ஆவணங்கள், பயனாளர் கையேடுகள், பரிசோதனை தரவுகள் அடங்கியிருக்கும். இவை வாடிக்கையாளரின் கணினியில் செயல்முறை பொருத்தப்பட்ட பிறகு, அது சரிவர செயற்படுவதற்கு உதவி புரிகிறது.

**packed binary** : இரும எண் தொகுதி.

**packed decimal** : பொதிந்த பதின்மம் : இரண்டு பதின்ம எண்களை ஒரு எட்டியலில் வைக்கக்கூடிய சேமிப்பு முறை. ஒவ்வொரு எண்ணும் நான்கு துண்மிகளில் இருக்கும். குறைந்த முக்கியத்துவ எட்டியலில் இந்தக் குறியீடு நான்கு துண்மிகளைப் பிடித்திருக்கும்.

**packet** : பொதிவு; பொட்டலம் : தரவுகளை அனுப்புவதற்கான தரவு பொதிவு. வாலாயம்,

முகவரி, பிழைக்கட்டுப்பாடு போன்ற கட்டுப்பாட்டு செய்தி களையும், தரவுகளையும் இது உள்ளடக்கியிருக்கும்.

**packet assembler/disassembler :** பொட்டலச் சேர்ப்பி/பிரிப்பி; பொதிச் சேர்ப்பி/பிரிப்பி : ஒரு பொட்டல இணைப்பகப் பிணையத்துக்கும், பொட்டல இணைப்பகமல்லாக் கருவிக் கும் இடையிலான ஓர் இடை முகம்.

**packet driver :** பொட்டல இயக்கி, பொதி இயக்கி.

**packet filtering :** பொட்டல வடி கட்டல்; பொதி வடிகட்டல் : ஐபீ முகவரிகளின் அடிப்படை யிலான பிணைய அணுகலைக் கட்டுப்படுத்தும் செயல்பாடு. பொதுவாக, தீச்சுவர் (firewall) அமைப்புகள் வடிகட்டிகளைக் கொண்டுள்ளன. பயனாளர்கள் ஒரு குறும்பரப்புப் பிணை யத்துள் நுழையவோ வெளி யேறவோ அனுமதி அளிக்கும் அல்லது மறுக்கும் பணியை இவ்வடிகட்டிகள் செய்கின்றன. மின்னஞ்சல் போன்ற தரவுப் பொட்டலங்களை அவை அனுப்பப்பட்ட இடத்தின் அடிப்படையில் ஏற்கவோ, புறக்கணிக்கவோ பொட்டல வடிகட்டல்முறை பயன் படுத்தப்படுகிறது. ஒரு தனியார் பிணையத்தின் பாதுகாப்பு இதன் மூலம் உறுதி செய்யப் படுகிறது.

**packetized voice :** பொதியப் பட்ட குரல் : நடப்பு நேர குரலை பொதி நிலை மாற்று கட்டமைப்பில் அனுப்புதல்.

**packing :** பொதிவாக்கம்; பொதித்தல் : தனியொரு சேமிப் பாக எட்டியலில் இரு எண் களைச் சேமித்து வைக்கும் செய் முறை.

**packing density :** பொதிவாக்க அடர்த்தி; பொதியடர்த்தி : பரப் பிடத்தின் ஓர் அலகில் அல்லது நீளத்தில் அடக்கி வைக்கப் படும் பயனுள்ள சேமிப்புச் சிற்றங்களின் எண்ணிக்கை. இது, பதிவாக்க அடர்த்தி என்றும் அழைக்கப்படும். எடுத்துக்காட்டு : ஓர் அங்குலத் திலுள்ள எழுத்துகளின் எண்ணிக்கை.

**packet lossage :** பொதிவு இழப்பு : ஒரு ஏற்புடைய நேரத் திற்குள் கிளம்பிய இடத்தி லிருந்து போய்ச் சேரவேண்டிய இடத்திற்குத் தரவுகள் போய்ச் சேராத நிலை ஒரு கட்டமைப் பில் தரவுகளுக்கு ஏற்படுதல். பாக்கெட்டுகள் தொலைந்து

போனால் அவற்றை மீண்டும் அனுப்ப வேண்டும். இதனால் தரவுத் தொடர்பு தாமதமாகிறது.

**packet sniffing :** பொதி முகர்தல் : ஒரு கட்டமைப்பில் உங்களுக்காக இல்லாத பொதிகளைப் படித்தல். ஈத்தர்நெட் புரோட்டோகால் வேலைகளினால் உங்கள் எந்திரத்தை பிறருக்கான பொதியை கவனிக்குமாறும் அதே குறும்பரப்புக் கட்டமைப்பில் உள்ள பிற கணினிகளைப் பார்க்குமாறும் அமைக்கலாம். இதன் மூலம் "in the clear" என்ற முறையில் அவர்கள் அனுப்புவதை கவனிக்கலாம். (அதாவது ஒரு பொதி முகரும் நிரல் தொடர் மற்றும் in the clearஇல் பயனாளர் அனுப்பும் பெயர் மற்றும் அனுமதிச் சொல்லைக் கவனிக்கலாம்).

**packet switching :** பொதி நிலை மாற்று : ஒரு தகவல் அனுப்பும் செயல்முறை. பொதியை அனுப்பும் சமயத்தில் மட்டுமே அந்த வழித்தடம் அடைபட்டிருப்பது போன்று முகவரியிடப்பட்ட பொதிகளை இது அனுப்புகிறது.

**PacKIT :** பேக்கிட் : ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினியில் பயன்படுத்தப்படும் ஒரு கோப்பு வடிவாக்கம். மேக் (mac) கோப்புகளின் தொகுதிகளைக் குறிக்கிறது. பெரும்பாலும் அக்கோப்புகள்- ஹஃப்மேன் முறையில் இறுக்கிச் சுருக்கப்பட்டிருக்கும்.

**pad :** திண்டு ; அட்டை மேடை : 1. ஓர் அச்சிட்ட மின்சுற்று வழிப்பலகையில் அமைப்பாக வரித்தகடுகளைப் பற்றவைப்பதற்கான ஓர் இணைப்பினை ஏற்படுத்துகிற தகடாக்கிய செப்புப் பரப்பு. அதாவது அச்சிட்ட மின்சுற்று வழிப் பலகையின் ஒரு பக்கத்திலிருந்து இன்னொரு பக்கத்துக்கு மாறிச் செல்வதற்கான செப்புவழி. 2. ஒரு தரவு புலத்தை வெற்றிட அச்செழுத்துகளால் நிரப்புதல்.

**pad character :** திண்டு எழுத்து : ஒரு வெற்றிடத்தை நிரப்புவதற்குப் பயன்படுத்தப்படும் இடைத்தடுப்பு எழுத்து.

**padding :** திண்டாக்கம் : ஒரு குறிப்பிட்ட நீளத் தகவல் பாளத்தினை போலி எழுத்துகள், சொற்கள், பதிவுகள், ஆகியவற்றினால் நிரப்புவதற்குப் பயன்படுத்தப்படும் உத்தி.

**paddle :** துடுப்பு; மத்து : ஒரு காட்சி முனையச் சறுக்குச் சட்டத்தை நகரும்படி செய்வதற்காகக் கையாளப்படும் சாதனம். துடுப்பிலுள்ள ஒரு சுழல்



துடுப்பு

வட்டினைச் சுழற்றுவதன் மூலம் சறுக்குச் சட்டத்தினை மேலும் கீழும் இடமும் வலமும் நகர்த்தலாம். இது கணிணியுடன் ஒரு கம்பிவடம் மூலம் இணைக்கப்பட்டிருக்கும். இது கணிணி வரைகலைகளிலும் ஒளிப்பேழை விளையாட்டுகளிலும் பயன்படுத்தப்படுகிறது.

**page** : பக்கம் : 1. ஒரு செயல்முறையின் அல்லது தகவலின் கூறு. இது பொதுவாக, குறிப்பிட்ட நீளமுடையதாக இருக்கும். இது ஒரு குறிப்பிட்ட முகவரியைக் கொண்டிருக்கும். எனினும், இதனைக் கணினியின் உள்முகச் சேமிப்பகத்தின் எந்தப் பகுதியிலும் இருத்தி வைக்கலாம். 2. திரையில் ஒரே சமயத்தில் காட்சியாகக் காட்டப்படும் வாசகம் அல்லது வரைகலை.

**page break** : பக்கம் நிறுத்தல் : மிகப் பல மென்பொருள் பயன்பாடுகளில் உள்ள ஒரு தன்மை. இதில் குறிப்பிடப்பட்ட பக்க (காகித) நீளத்திற்கு ஏற்ற வகையில் சொற்கள் கட்டங்களாக அனுப்பப்படும். அச்சிடுதலில் பக்கத்தின் இறுதியைக் குறிப்பிடும் குறியீடு. வன்பக்க நிறுத்தத்தை பயனாளர் நுழைத்தால் பக்கமானது அந்த இடத்தில் நிறுத்தப்படும். அதாவது அந்தக் கட்டுரையின் இறுதியில் மென்பக்க நிறுத்தத்தை சொல்செயலாக்கம் அல்லது அறிக்கை நிரல் தொடரில் நடப்பு அமைப்புகளுக்கேற்ப உருவாக்கப்படும். மென்பக்க நிறுத்தங்கள் தரவு சேர்க்கப்படும் போதோ அல்லது பக்க நீளம் மாறும் போதோ மாறக்கூடியது.

**page composition programme** : பக்க அமைப்பு செயல்முறை; பக்க அமைவு நிரல் தொடர் : தொழில் முறையாகத் தோன்றும் ஆவணங்களை உருவாக்கும் நிரல்தொடர். டி.டீ.பி. நிரல் தொடர் என்றும் அழைக்கப்படும்.

**page counter** : பக்க எண்ணி : பக்க எண்களைக் கூட்டி

ஒவ்வொரு பக்கத்தின் மேற் பகுதியிலும் பக்க எண்ணை அச்சிடும் ஒரு எண் மாறி.

**page description language :** பக்க விளக்க மொழி : அச்சக வெளியீட்டை வரையறை செய்யும் உயர்நிலை மொழி. பக்க விளக்க மொழியில் ஒரு பயன்பாடானது வெளியீட்டை உருவாக்கினால், அந்த வெளியீடு அதனை ஆதரிக்கும் எந்த அச்சுப்பொறியிலும் அச்சிடப்படும். எழுத்து மற்றும் வரைகலை உருவாக்கங்களை பயனாளர் கணினியில் செய்வதற்குப் பதிலாக அச்சுப்பொறியே செய்து கொள்ளும்.

**paged memory management unit :** பக்க நினைவக மேலாண்மை அகம்; பக்க நினைவக மேலாண்மை அலகு : பல்வேறு மென்பொருள் பயன்பாடுகள் அல்லது மெய்நிகர் நினைவக இயக்க முறைமைகள் பயன்படுத்துகின்ற நினைவகப் பகுதியை அணுகுதல் மற்றும் மேலாண்மை செய்தல் போன்ற பணிகளை நிறைவேற்றுகின்ற ஒரு மென்பொருள் பாகம்.

**page down :** கீழ்ப்பக்கம்; இறங்கு பக்கம்.

**page down key :** கீழ்ப்பக்க விசை : பெரும்பாலான கணினி விசைப்பலகைகளில் காணப்படும் அடிப்படையான விசை. PgDn எனக் குறிக்கப்பட்டிருக்கும். ஆனால் இதன் பணி வெவ்வேறு நிரல்களில் வெவ்வேறுவிதமாக இருக்கும். பெரும்பாலானவற்றில் இதை அழுத்தியதும் காட்டி (cursor) ஆவணத்தின் அடுத்த பக்கத்தின் தொடக்கத்தில் நிற்கும். அல்லது குறிப்பிட்ட எண்ணிக்கையிலான வரிகளைக் கடந்து நிற்கும்.

**page, end :** முடிவுப் பக்கம்.

**page fault :** பக்கக் கோளாறு : மாய நினைவகக் குறுக்கீடு. அடுத்த நிரல் அல்லது தரவு நினைவகத்தில் இல்லையென்றால் வட்டிலிருந்து தேவையான பக்கத்தை இது படித்தெடுக்கிறது.

**page footer :** பக்க முடிப்பு.

**page footer key :** பக்க முடிப்பு விசை.

**page frame :** பக்க அமைவிடம்; பக்கச் சட்டம் : ஆணைகளின் அல்லது தரவுகளின் ஒரு பக்கத்தை (பொதுவாக 2k அல்லது 4k சொற்கள்) சேமித்து வைக்கக்கூடிய கணினியின் பின்புலச் சேமிப்பகத்தின் அமைவிடம்.

**page header :** பக்கத் தலைப்பு : ஒவ்வொரு பக்கத்தின் மேற்

பகுதியில் அச்சிடப்படும் பொதுவான சொற்தொகுதி. அதில் பொதுவாகப் பக்க எண்ணும் ஒவ்வொரு பத்தியின் தலைப்புகளும் இருக்கும்.

**page header band :** பக்கத் தலைப்புப் பட்டை.

**page-image buffer :** பக்க-படிம இடையகம் : பக்க அச்சுப் பொறியில் பயன்படுத்தப்படும் நினைவகம். ஒரு பக்கத்திலுள்ள பிட்மேப் படிமத்தை தாங்கி யிருக்கும். அச்சுப்பொறி யிலுள்ள ராஸ்டர் படிமச்செயலி பக்கத்தை வடிவமைக்கும் அச்சுப்பொறி அப்பக்கத்தை அச்சிடும்.

**page-image file :** பக்க-படிமக் கோப்பு : ஒரு பக்கத்தை அல்லது திரைப் படிமத்தை அச்சுப் பொறியோ அல்லது பிறக் காட்சிச் சாதனங்களோ உரு வாக்குவதற்குத் தேவையான குறிமுறைகளைக் கொண்டுள்ள ஒரு கோப்பு.

**page in :** சேமிப்பக மாற்றம்; பக்கம் புகுத்தல் : வட்டுச் சேமிப் பகத்திலிருந்து முதன்மைச் சேமிப்பகத்து செயல்முறை களை அல்லது தரவுகளைப் பரிமாற்றம் செய்வதற்கான செய்முறை.

**page layout :** பக்க உருவரை.

**page layout programme :** உருவரை நிரலாக்கத் தொடர் : மேசை மேல் பதிப்பக முறை யாக உள்ள ஒரு பயன்பாட்டு நிரல் தொடர். இது பலவகை யான கோப்புகளில் இருந்து சொற்பகுதி மற்றும் வரைகலை களை சேர்ப்பிக்கிறது. சரியான இடத்தில் வைத்தல், அள வெடுத்தல், கூட்டல் மட்டும் திரையில் குறிப்பிடப்படும் பக்க வடிவமைப்பிற்கேற்ப நறுக்குதல் போன்றவற்றை செய்யும். புகழ்பெற்ற பக்க வடிவமைப்பு நிரல் தொடர் களாக பேஜ்மேக்கர், குவார்க் எக்ஸ்பிரஸ் மற்றும் வென்ச்சுரா பப்ளிஷர்ஸ் ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

**page layout view button :** பக்க உருவரைக் காட்சிப் பொத்தான்.

**pagemaker :** பேஜ்மேக்கர் : ஆல்டஸ் கார்ப்பரேஷன் பி.சி மற்றும் மெக்கின்டோஷுக்காக உருவாக்கிய முழு தன்மைகள் கொண்ட மேசைமேல் பதிப்பக நிரல்தொடர். மெக்குக்காக (Mac)1985இல் அறிமுகப் படுத்தப்பட்ட இதுதான் மேசை மேல் பதிப்பக முறைக்கு தர நிருணயத்தை அமைத்தது. சொல்லப்போனால் ஆல்டஸ் நிறுவனத் தலைவரான பால் பிரெய்னியார்ட் என்பவர்தான்

மேசைமேல் பதிப்பகம் (Desk Top Publishing) என்ற சொல் தொடரை உருவாக்கினார். இதன் பீ.சி பதிவு 1987இல் அறிமுகப்படுத்தப்பட்டது.

page makeup : பக்க உருவாக்கம் : ஒரு அச்சிடப்படும் பக்கத்தை அமைத்தல் (வடிவம் ஆக்கல்). இதில் தலைப்புகளை அமைத்தல், அடிப்பகுதிகள், பத்திகள், பக்க எண்கள், வரைகலை, விதிகள் மற்றும் எல்லைக் கோடுகள் ஆகியவற்றை வடிவமைப்பது அடங்கியுள்ளது.

page mode memory : பக்கமுறை நினைவகம் : பொதுவான மாறும் ரேம் சிப்பு வடிவமைப்பு.நினைவக துண்மிகள் வரிசை மற்றும் பத்தி ஒருங்கிணைப்புகளால் அணுகப்படும். இல்லையென்றால், ஒவ்வொரு பக்கமுறையும் அணுக தேர்ந்தெடுக்கப்படும் வரிகளில் உள்ள வரிசைகளையும், பத்திகளையும் நகர்த்தியாக வேண்டும். பக்க முறையில் ஒரு வரிசையில் உள்ள துண்மிகள் அனைத்தும் ஒரேஒரு முறை தேர்ந்தெடுக்கப்படுவதால், வேகமாக அணுக முடியும்.

page number : பக்க எண்.

page orientation : பக்கத் திசையமைவு : நீள்மை ஆண்மை இரண்டில் ஒன்று.

page out : வட்டு மாற்றம்; பக்கம் வெளியேற்றம் : கணினியின் முதன்மை நினைவகத்திலிருந்து வட்டுச் சேமிப்பிக்குச் செயல்முறைகளை அல்லது தரவுகளை மாற்றும் செய்முறை.

page preview : பக்க முன்காட்சி : சொல் செயலாக்க நிரல் தொடர்கள் மற்றும் பக்க வடிவமைப்புகள் பலவற்றில் காணப்படும் முறை. அச்சிடப்படும்போது ஒரு பக்கம் எவ்வாறு தோன்றும் என்று முழுப்பக்க அளவில் முன்னதாகவே காணலாம். இதில் தலைப்புகள், பகுதிகள் மற்றும் ஓரங்கள் போன்ற சேரும் தன்மைகளும் காணப்படும்.

page printer : பக்க அச்சடிப்பி; பக்க அச்சுப்பொறி : எழுத்து வாசகம் அடங்கிய ஒரு முழுப் பக்கத்தையும் அச்சடிக்கும் அச்சடிப்பி. இது, நிமிடத்திற்கு 2,000 வரிகளை அச்சடிக்கக் கூடியது.

page reader : பக்கப் படிப்பி : தகவல்களின் பல வரிகளை நுண்ணாய்வு செய்யக்கூடிய ஒளியியல் நுண்ணாய்வுச் சாதனம். இதில் நுண்ணாய்வு முறையானது உட்பாட்டுத் தகவல்களுடன் இணைக்கப்பட்டுள்ள செயல்முறைக் கட்டுப்பாடு

அல்லது கட்டுப்பாட்டுக் குறியீடு மூலம் தீர்மானிக்கப்படுகிறது.

**page recognition** : பக்கம் கண்டறிதல் : கணினியில் ஸ்கேன் செய்யப்படும் அச்சிட்ட பக்கத்தில் உள்ள உள்ளடக்கங்களைக் கண்டறியக்கூடிய மென்பொருள். ஒளி எழுத்து கண்டறிதலைப் பயன்படுத்தி அச்சிடப்படும் சொற்களை கணினி சொற்பகுதியாக மாற்றும். ஆனால் அதேவேளையில் ஒரு பக்கத்தில் உள்ள படங்கள் மற்றும் தலைப்புகளில் இருந்து சொற்பகுதி தானாகவே வேறுபடுத்தப்பட்டு அறியப்படும்.

**page set-up** : பக்க அமைப்பு : காகிதத்தில் சொற்பகுதி வரைபடங்கள் எவ்வாறு அளிக்கப்படுகின்றது என்பதையே இது குறிப்பிடுகிறது. பக்க அமைப்பில் இடம் பெறுவனவாக ஓரங்கள், தொடர் தலைப்புகள், பக்க எண்ணமைத்தல் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

**page setup/page preview** : பக்க அமைவு/பக்க முன்காட்சி.

**page size** : பக்க அளவு ; தாள் உருவளவு.

**page skip** : பக்கம் விடுதல்; பக்கத் தாவல் : நடப்புப் பக்கத்தின் எஞ்சிய பகுதியை தள்ளி விட்டு அடுத்த பக்கத்தின் உச்சிப்பகுதிக்கு அச்சடிப்பி நகர்ந்து செல்லும்படி செய்யக் கூடிய கட்டுப்பாட்டு எழுத்து.

**pages per minute** : பக்கங்கள் ஒரு நிமிடத்தில் : சுருக்கமாக பீபீஎம் (PPM அல்லது ppm) எனக் குறிக்கப்படும். ஓர் அச்சுப் பொறியின் வெளியீட்டுச் செயல்திறனைக் குறிக்கும் அளவீடு. ஒரு நிமிடத்தில் எத்தனை பக்கங்கள் அச்சிடும் என்பதைக் குறிக்கிறது. இந்த அளவீட்டை அச்சுப்பொறியைத் தயாரிக்கும் நிறுவனங்களே குறிப்பிடுகின்றன. பக்கம் என்பது வழக்கமான சாதாரணமான (ஏ4) பக்கத்தைக் குறிக்கும். அச்சிடும் பக்கங்களில் அதிகப்படியான வரைகலைப் படங்களோ எழுத்துரு அமைப்புகளோ இருப்பின் அச்சிடும் வேகம் அச்சுப்பொறியில் குறிப்பிட்டுள்ள பீபீஎம் வேகத்தைவிட வெகுவாகக் குறைந்திருக்கும்.

**page up** : மேல் பக்கம்; ஏறு பக்கம்.

**Page Up key** : மேல் பக்க விசை : பெரும்பாலான கணினி விசைப் பலகைகளில் காணப்படும் அடிப்படையான விசை. PgUp எனக் குறிக்கப்பட்டிருக்கும். ஆனால் இதன் பணி வெவ்வேறு நிரல்களில் வெவ்வேறு

விதமாக இருக்கும். பெரும்பாலானவற்றில் இதை அழுத்தியும், காட்டி (cursor) ஆவணத்தின் முந்தைய பக்கத்தின் தொடக்கத்தில் நிற்கும் அல்லது குறிப்பிட்ட எண்ணிக்கையிலான வரிகளுக்கு முன்னால் சென்று நிற்கும்.

**pagination : பக்க வரிசைப்பாடு; பக்கமாக்கல் :** *1.* ஒரு முழுப் பக்கத்தையும் வடிவமைக்கும் நோக்கத்திற்காக வரைகலைகளையும் அச்செழுத்துத் தொகுதிகளையும் மின்னணுவியல் முறையில் திறம்படக் கையாள்தல். *2.* ஓர் அச்சிட்ட வாசகத்தைப் பக்கங்களுக்கு இணையான அலகுகளாகப் பகுத்தல். *3.* பக்க எண் குறியீட்டு முறை.

**paging : பக்கக் குறியீட்டு முறை; பக்கமாக்கம் :** *1.* இயல்புச் (முதன்மை) சேமிப்பகத்திலிருந்து உள்ளபடியான (துணை) சேமிப்பகத்துச் செயல்முறைகளை முன்னும் பின்னும் நகர்த்துவதற்கான உத்தி. *2.* காட்சித்திரையில் காட்சியாக காட்டப்படும் பக்கத்திற்குப் பதிலாக அடுத்த அல்லது முந்திய பக்கத்தைக் காட்டுவதற்கான விசைப்பலகையிலுள்ள விசையின் செயற்பாடு.

**paging memory : பக்கமாக்கும் நினைவகம்.**

**paging rate : பக்கக் குறியீட்டு வீதம்; பக்கமாக்க வீதம் :** உள்ளபடியான சேமிப்புப் பொறியமைவுகளில் ஒரு கால அலகின்போது நடைபெறும் சேமிப்பக மாற்றங்கள், வட்டு மாற்றங்கள் ஆகியவற்றின் சராசரி எண்ணிக்கை.

**paint : படம்; வரைகலை :** *1.* கணினி வரைகலையில், திரையில் உண்மையாகவே ஓவியம் வரையப்படும். இதற்குப் பலகைக் குச்சி அல்லது சுட்டியைப் பயன்படுத்தி வண்ணபுருசுபோல இயக்கப்படும். *2.* திரையில் ஏதாவது ஓரிடத்தில் தட்டச்சு செய்ததும் திரைவடிவம் ஏற்படுத்தல். திரையினை சொற் பகுதியில் வண்ணப்படுத்தல்.

**paint brush : வண்ணத் தூரிகை :** பல்வேறு கணினி வரைகலைப் பொறியமைவுகளில் பயனாளருக்குப் பலவகைத் தூரிகை வடிவங்களை அளிக்க அமைந்துள்ள திறம்பாடு. காட்சித்திரையில் சுட்டியின் முள்ளை நகர்த்துவதன்மூலம் இது பயன்படுத்தப்படுகிறது.

**painter : வரைகலைஞர்; ஓவியர்.**

**painting : வண்ணந்தீட்டல் ; வண்ணப் பூச்சு :** *1.* ஒரு வரைகலை உட்பாட்டுச் சாதனத்தின்

இயக்கப் பாதையினைக் காட்சியாகக் காட்டுதல். 2. கணினி வரைகலையில் தேர்ந்தெடுத்த பரப்பினை ஒரு திண்ணிய வண்ணத்தால் நிரப்புதல். 3. ஒரு காட்சித்திரையில் வரைகலைத் தரவுகளைக் காட்சியாகக் காட்டும் செய்முறை.

**paint programme** : வண்ணப் படுத்தும் நிரல்தொடர் : வரைகலைப் பலகை அல்லது சுட்டியைப் பயன்படுத்தித் திரையில் ஓவியம் வரைவதுபோலச் செய்யும் வரைகலை நிரல் தொடர். ராஸ்டர் கிராஃபிக் உருவங்களை வண்ணப்படுத்தும் நிரல் தொடர் மூலம் உருவாக்கலாம்.



வண்ணப்படுத்தும் நிரல் தொடர்

**PAL** : பிஏஎல் : "நிலை மாற்ற வரி" எனப் பொருள்படும் "Phase Alternation Line" என்ற ஆங்கிலச் சொல்லின் தலைப்பெழுத்துச் சுருக்கம். பெரும்பாலான கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் பயன்படுத்தப்படும் வண்ணத் தொலைக்காட்சிப் பொறியமைவு.

**palatino** : வண்ணத் தட்டு : பல போஸ்ட்ஸ்கிரிப்ட் லேசர் அச்சுப்பொறிகளில் பயன்படுத்தப்படும் உள்ளமைந்த அச்செழுத்து.

**palette** : வண்ணத் தொகுதி; வண்ணத்தட்டு : ஒரு கணினி வரைகலைப் பொறியமைவில் அமைந்திருக்கக்கூடிய வண்ணங்களின் தொகுதி.

**palette code** : வண்ணத் தட்டு குறியீடு: கிடைத்துள்ள வண்ணத்தட்டிலிருந்து குறிப்பிட்ட நிறத்துடன் தொடர்புள்ள ஒரு எண்.

**palette register** : வண்ணத் தட்டு பதிவேடு : ஈஜிஏ (EGA) அல்லது பிசிஜே ஆரில் உள்ள 16 பதிவேடுகளில் ஒன்று. காட்சி நினைவகத்தில் வருகின்ற நிறத்திற்குத் தொடர்பான நிறத்தைத் திரையில் காட்டுகின்ற பதிவேடு.

**palmtop** : கையகக் கணினி; கையளவு : ஒரு கையால் பிடித்துக் கொண்டு மற்றொரு கையால் இயக்கக்கூடிய அளவு சிறியதாக உள்ள கணினி. கையளவு சிறப்பு விசைப் பலகைகள் அல்லது விசை அட்டைகள் அமைக்கப்பட்டு தரவு நுழைவு பயன்பாடுகள் செய்யப்படும். அல்லது குவெர்ட்டி (Qwerty) விசைப் பலகைகள் இருக்கும்.

**PAM** : பீஏஎம் : "துடிப்பு வீச்சு ஏற்ற இறக்கம்" என்று பொருள்படும் "Pulse Amplitude Modulation" என்ற ஆங்கிலச் சொல்லின் தலைப் பெழுத்துச் சுருக்கம். இதில் துடிப்பு வீச்சு ஏற்ற இறக்கச் சகடத்தின் மூலம் ஏற்ற இறக்க அலை உண்டாக்கப்படுகிறது.

**pan** : இடவல நகர்வு : ஒரு ஆவணம் அல்லது விரிதாளின் ஒரு பக்கத்திலிருந்து வேறொருப் பக்கத்திற்கு பக்கவாட்டாக நகர்வது. திரையைவிட ஆவணம்/விரிதாள் கூடுதல் அகலமாக இருக்குமானால் இது மிகவும் பயனுள்ளதாகும்.

**pane** : சாளரப் பாளம் ; சாளரப் பிரிவு : தனியொரு சாளரத்தைப் பிரித்து உருவாக்கப்படும் பகுதிகள்.

**panel** : பலகைப் பாளம்.

**panel, control** : கட்டுப்பாட்டுப் பலகம்.

**panning** : பக்கவாட்டு நகர்வு; இட வல நகர்வு : ஒரு காட்சித் திரையின் குறுக்கே காட்சியாகக் காட்டப்படும் வரைகலை தரவுகளின் கிடைமட்ட நகர்வு.

**PAP** : பீஏபீ : 1. நுழைசொல் சான்றுறுதி நெறிமுறை என்று பொருள்படும் Password Authentication Protocol என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். முனைக்குமுனை நெறிமுறையை (point-to-point protocol) பயன்படுத்தும் வழங்கனில் பயனாளர் நுழைய முயலும்போது அவருடைய அடையாளத்தைச் சரிபார்ப்பதற்கான ஒரு வழிமுறை. இதை விடக் கண்டிப்பான சாப் (CHAP - Challenge Hand - Shake Authentication Protocol) நெறிமுறை இல்லாதபோது பீஏபீ மிகவும் பயன்தரும். பயனாளர் பெயரையும் நுழைசொல்லையும் மறையாக்கமின்றி வேறொரு நிரலுக்கு அனுப்ப வேண்டிய கட்டாயம் நேரும் போதும் இது பயன்படும். 2. அச்சுப்பொறி அணுகல் நெறிமுறை என்று பொருள்படும் (Printer Access Protocol) என்பதன் தலைப் பெழுத்துக் குறும்பெயராகவும் கொள்ளலாம். ஆப்பிள்டாக்

பிணையங்களில் கணினி களுக்கும் அச்சுப்பொறிகளுக் கும் இடையிலான தகவல் தொடர்பினை மேலாண்மை செய்யும் நெறிமுறை ஆகும்.

**paper feed : காகித ஊட்டம்; தாள் ஊட்டம் :** ஓர் அச்சடிப்பிக் குள் காகிதத்தைச் செலுத்தும் முறை.

**paper jam : காகித அடைப்பு :** அச்சுப்பொறி, தொலை நகல் அல்லது ஒளிநகல் பொறிகளில் காகிதம் மாட்டிக் கொள்ளுதல். காகித அடைப்பை தடுப்பது மற்றும் சமாளிப்பதுபற்றிய ஆலோசனை விளக்கக் கையேட் டில் பொதுவாக இருக்கும்.

**paperless office : காகிதமற்ற அலுவலகம் ; தாளிலா அலுவல கம் :** காகிதமற்ற அலுவலகம் பற்றி நீண்ட காலமாகவே சொல்லப்பட்டு வந்தாலும் இப் போதும் ஒரு கட்டுக்கதை யாகவே உள்ளது. சில நிறுவனங் களில் காகிதப்பயன் குறைந் தாலும் பலவற்றில் உண்மை யாகவே கூடியிருக்கிறது. மேலும் காகித ஆவணமே இப்போதும் பரிமாற்றங்கள்மூலம் நிலை நாட்டப்பட்டு உள்ளது. சமயத் தில் அதிக சேமிப்பும் துல்லியத் திரைகளும் உள்ள கையகக் கணினிகள் பயணம் செய்யும் போது காகிதத்திற்கு மாற்றாக உள்ளன. ஒளி இழை கட் டமைப்புகள், தரவு, படம், குரல் மற்றும் காட்சியை விரை வாக அனுப்ப உதவுகின்றன. வண்ண லேசர் அச்சுப்பொறிகள் எங்கும் பரவி உள்ளதால், எத்தகைய சிக்கலானதாக இருந் தாலும், ஆவணத்தை மீண்டும் உருவாக்குவது எளிதானதே.

**paper-out sensor : காகித வெளி உணர் கருவி :** பிளேட்டனுக் குப் பின்னால் உள்ள ஒரு சிறிய பொத்தான். காகிதத்துடன் அதன் தொடர்புவிட்டுப் போகும் போது உடனடியாக சைகை தரு கிறது. இந்த சைகை பொது வாக, அச்சுப்பொறியினை நிறுத்துகிறது.

**paper source : தாள் வைப்பிடம்.**

**paper tape : காகித நாடா ; தாள் நாடா :** கணினிகளில் பயன் படுத்தப்படும் முதலாவது உட் பாட்டுச் சாதனம். இது தொலை யச்சு (Telex) எந்திரங்களில் பயன்படுத்தப்படுவது போன்ற ஒரு தொடர்ச்சியான பட்டைக் காகிதம் ஆகும். இந்தப் பட் டைக் காகிதத்தின் அகலத்தின் குறுக்கே, குறித்துரைக்கப்பட்ட எண்ணிக்கையிலான வரிசை களிலும் (chemicals), காகிதப் பட்டையின் நீளவாக்கில் பத்தி

களிலும் (frames) வட்டத் துளை களைத் இடுவதன் மூலம் தகவல் கள் பதிவு செய்யப்படுகின்றன.

ஒவ்வொரு வரிசையும் ஓர் எழுத்தினைப் பற்றி நிற்கின்றது. ஒருவரிசை பொதுவாக 8 அலை வரிசைகளாகப் பகுக்கப்பட்டி ருக்கும். ஒரு தனிவகை விசையைப் பயன்படுத்தித் தரவு கள் துளையிடப்படுகின்றன. இவை எழுத்துப் படிப்பி உதவி யால் படிக்கப்படுகின்றன.

**paper tape code :** காகித நாடாக் குறியீடு ; தாள் நாடா குறி முறை : காகித நாடாவிலுள்ள துளை களின் தோரணிகளை அவை குறிக்கும் ஆல்ஃபா எண்மான எழுத்துகளுடன் தொடர்பு படுத்தப் பயன்படுத்தப்படும் குறியீட்டு முறை.

**paper tape punch :** காகித நாடாத் துளையிடல்; தாள் நாடா துளையிடல் : குறியீட்டு உணர்வு வெளிப்பாட்டுச் சாதனம். இது கணினிக் குறியீட்டினை காகித நாடாவில் ஒரு புறக்குறியீடாக மாற்றுகிறது.

**paper tape reader :** காகித நாடாப் படிப்பி; தாள் நாடா வாசிப்பி : துளையிட்ட காகிதச் சுருளிலுள்ள துவாரங்களை எந்திரத்தின்மூலம் செய்முறைப் படுத்தக்கூடிய வடிவில் மாற்று வதற்குப் பயன்படுத்தப்படும் உட்பாட்டுச் சாதனம்.

**paper tape verifier :** காகித நாடா சரிபார்ப்பி; தாள்நாடா சரி பார்ப்புச் சாதனம்.

**paper-white :** தாள்-வெண்மை : ஒற்றைநிற கணினித் திரையகத் தில் ஒருவகை. வெண்மைநிறப் பின்புலத்தில் கறுப்புநிற எழுத்துகளைக் கொண்டிருத்தல் இதன் இயல்பு. இத்தகைய திரையகங்கள், கணினிப் பதிப் பகம் மற்றும் சொல்செயலாக்கச் சூழல்களில் மிகவும் செல் வாக்குப் பெற்றவை. ஏனெனில், வெள்ளைத்தாளில் கறுப்பு எழுத்துகள் அச்சிட்டது போன்ற ஒரு தோற்றத்தை இவை தருகின்றன.

**paper-white monitor :** தாள்-வெண்மைத் திரையகம் : அச் சிட்ட பக்கத்தை ஒத்திருக்கும், வெண்மைநிறப் பின்புலமும் கறுப்புநிற எழுத்துகளும் கொண்ட கணினித் திரையகம். சில உற்பத்தியாளர்கள் தாள்-வெண்மை என்பதை பாண்டுத் தாளில் இருப்பதுபோன்ற இழைக்கப்பட்ட வெண்ணிறப் பின்புலத்தைக் குறிக்கப் பயன் படுத்துகின்றனர்.

**parabola :** நீள்வட்ட வடிவம்; பர வளையம் : வட்டக் கூம்பின்

ஒரு பகுதியை ஊடு பொருள்களில் ஒன்றுக்கு இணையாக வுள்ள சமதளத்தினால் வெட்டுவதன் மூலம் கிடைக்கும் வரை கலை வளைவு. ஒரு குறிப்பிட்ட புள்ளியிலிருந்தும், ஒரு குறிப்பிட்ட காலக் கோட்டிலிருந்தும் சமதூரத்தில் இருந்து வரும் வகையில் நகர்ந்து செல்லும் ஒரு புள்ளியின் பாதை என்றும் இதனைக் கூறலாம்.

**parabolic reflector** : பரவளைய எதிரொளிர் : யு.எச்.எஃப் பேண்டுக்கு மேல் இறுதியிலும், எஸ்எச்எஃப் பேண்டிலும் உள்ள அலைவரிசைகளை ஒளிக் கற்றைகள்போலவே நடத்தலாம். பரவளைய எதிரொளிர்வைப் பயன்படுத்தி தேடுஒளியை உருவாக்கும்போது சக்திமிக்க ஒளிக்கற்றை பரவளைய எதிரொளிர்வு உள்ள இடங்களில் விழுவதுபோல் இதை (தட்டு என்று சொல்லப்படுவது)யும் பயன்படுத்தி இணைக்கற்றையில் தொகுக்கப்பட்டுள்ள வானொலி சக்தியுடன்கூடிய அதிகத் திறன் மிக்க அலைவாங்கியை அளிக்க முடியும். தட்டு குறுக்களவு வீட்டுத் தொலைக்காட்சி வாங்கிக்கு 20 செ.மீ. முதலாக செயற்கைக் கோள்களின் தரை நிலையங்களுக்கு 30மீ. வரை கொண்டிருக்கும்.

**paradigm** : கருத்தியல்; எடுத்துக் காட்டு; மேற்கோள், வாய்பாடு : ஒரு செயலாக்கத்துக்கோ அல்லது ஒரு முறைமைக்கோ மாதிரியத்தை வழங்கக்கூடிய ஒரு சரியான எடுத்துக்காட்டு அல்லது தோரணி.

**paradise** : பேரடைஸ் : வெஸ்டர்ன் டிஜிட்டல் கார்ப்பரேஷனின் பேரடைஸ் துணை நிறுவனம் உருவாக்கிய புகழ்பெற்ற காட்சி அட்டைகள்.

**paradox** : பேரடாக்ஸ் : போர்லாண்ட் நிறுவனத்திலிருந்து வரும் பீசிக்களுக்கான கட்டமைப்புக்குத் தயாராக உள்ள, தொடர்பு முறை டி.பி.எம்.எஸ். பயன்படுத்த எளிதாகவும் எடுத்துக்காட்டு முறையில் கேள்விகேட்கும் அமைப்பும் கொண்டது. அதனுடைய பால் (PAL)நிரல் தொடரமைப்பு மொழி தனித்தன்மை கொண்டது. பலபால் தொடர்கள் பரிமாற்ற பேரடாக்ஸ் கட்டளைகளைக் கொண்டது. இதனால் பேரடாக்ஸ் பயனாளர்கள் நிரல் தொடரமைப்பதை எளிதாகச் செய்ய முடியும். பேரபிக்ஸ் எந்திரம் (தகவல் தளப் பகுதி) தனியாகக் கிட்டும். "சி" நிரல் தொடர்கள் மூலமும் இதை அணுக முடியும்.

**paragraph** : பத்தி : ஒரு தருக்க முறைச் செய்முறைத் தொகுதியாக அமைந்துள்ள ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட கோபால் மொழி (Common Business Oriented Language COBOL) வாக்கியங்களின் தொகுதி. இது ஒரு பெயரின் பத்தித் தலைப்புக்கு முந்தியதாக அமைந்திருக்கும்.

**paragraph assembly** : பத்தி இணைப்பு : ஒரு சொல் செயலியில் அல்லது வட்டுகளில் சேமித்து வைக்கப்பட்டுள்ள பத்தியிலிருந்து ஓர் ஆவணத்தை இணைக்கும் செய்முறை.

**paragraph number** : பத்தி எண் : நினைவகத்தில் உள்ள நிலையை வரையறுக்கும் எண். 16 எட்டியல்களாக நினைவகத்தைக் குறிப்பிடுகிறது. சான்றாக பத்தி எண் 2 என்றால் இரண்டாவது 16 எட்டியல்கள் நினைவகத்தைக் குறிப்பிடுகிறது. இப்பத்தியினை நோக்கி காட்டி திரும்பினால் நினைவகத்தின் 17 எட்டியலை அது காட்டுகிறது என்று பொருள்.

**parallel** : ஒரு போகு; இணையான : 1. ஒரு சொல்லில் அல்லது செய்தியிலுள்ள ஊடுபொருள்கள் அனைததையும் ஒரே சமயத்தில் கையாள்தல். 2. கணினி வரைகலையில் நேரிணையான புள்ளி ஒவ்வொன்றிலிருந்தும் சமதூரத்தில் இருக்கின்ற ஒரு வரைகலைக் கோப்பில் உள்ள கோடுகளை அல்லது சமதளங்களை இது குறிக்கிறது.

**parallel access** : ஒரு போகு அணுகுதல்; இணை அணுகல் : ஒரு சேமிப்பிலிருந்து தகவல்களைப் பெறுவதற்கு அல்லது அதில் தகவலைகளைச் செலுத்துவதற்கு உதவும் செய்முறை. இதில் இத்தகைய அணுகுதலுக்குத் தேவையான நேரம் ஒரு குறிப்பிட்ட சேமிப்பு அமைவிடத்திலிருந்து ஒரு சொல்லின் ஊடுபொருள் கள் அனைத்தையும் ஒரே சமயத்தில் மாற்றுவதைப் பொறுத்ததாக இருக்கும். இது, தொடர் வரி அணுகுதலுக்கு மாறானது.

**parallel adder** : ஒரு போகு கூட்டல் கருவி; இணை கூட்டி : ஒவ்வொரு எண்ணளவிலுமுள்ள எல்லா எண்களையும் உள்ளே கொண்டுவந்து செயற்பாடுகளைச் செய்கிற கூட்டல் கருவி. இது தொடர்வரிசைக் கூட்டல் கருவியிலிருந்து வேறுபட்டது.

**parallel algorithm** : இணை நிலை படிமுறை : ஒரு படிமுறையில் ஒரேநேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட படிமுறைப்

பகுதிகள் செயல்படுமாறு அமைத்தல். இணை நிலைப் படிமுறைகள் பெரும்பாலும் பல்செயலாக்க சூழல்களில் பயன்படுத்தப்படுகின்றன.

**parallel and serial port :** இணை நிலை மற்றும் நேரியல் துறை.

**parallel arrays :** இணை வரிசைகள் : ஒன்றோடொன்று தொடர்புள்ள இரண்டு அல்லது மேற்பட்ட வரிசைகள்.

**parallel circuit :** ஒருபோகு (மின்) சுற்றுவழி; இணைச்சுற்று : அமைப்பிகள் ஒவ்வொன்றின் இருமுனைகளும் . ஒன்றுக்கொன்று இணையாக இணைக்கப்பட்டுள்ள மின்சுற்று வழி.

**parallel computer :** ஒருபோகு கணினி; இணைக் கணினி : எண்கள் அல்லது தரவு வரிகள் கணினியின் தனித்தனி அலகுகளினால் ஒருங்கே செய்முறைப் படுத்தப்படக்கூடிய கணினி.

**parallel computing :** இணை நிலை கணிப்பணி : ஒரு சிக்கலுக்குத் தீர்வு காண அல்லது ஒரு பணியைச் செய்து முடிக்க பல கணினிகளையோ அல்லது பல செயலிகள் கொண்ட கணினியையோ பயன்படுத்தும் முறை.

**parallel conversation :** இணை உரையாடல்.

**parallel conversion :** ஒருபோகு மாற்றம்; இணை மாற்றம் : ஒரு குறிப்பிட்ட கால அளவின் போது பழைய மற்றும் புதிய பொறியமைவுகள் இரண்டையும் இயக்கும்படி செய்து ஒரு புதிய தரவு செய்முறைப்படுத்தும் பொறியமைவுக்கு மாற்றக் கூடிய செய்முறை.

**parallel database :** இணை நிலை தரவுத் தளம் : ஒரே நேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட செயலிகள் அல்லது இயக்க முறைமைச் செயலாக்கங்களை பயன்படுத்திக் கொள்ளும் ஒரு தரவுத் தள அமைப்பு. எஸ்கியூஎல் வினவல்கள், ஏடுகள் புதுப்பித்தல்கள், தரவு பரிமாற்றங்கள், உள்ளீடு/வெளியீடு கையாளல், தரவு இடையக நிறுத்தம் போன்ற தரவு மேலாண்மைக் கோரிக்கைகளை நிறைவேற்ற இவை பயன்படுத்திக் கொள்ளப்படும். ஒரு இணைநிலை தரவுத் தளம், ஏராளமான உடன்நிகழ் பணிகளை பல செயலிகள் மூலமாகவும் பல சேமிப்புச் சாதனங்களிலுள்ள தரவுகளிலிருந்தும் நிறைவேற்றிக் கொள்ளும் திறன்படைத்தது. பல நூறுகிகாபைட் தரவு சேமிக்கப்பட்டுள்ள தரவு தளங்களிலும் விரைவான அணுகல் இயல்கிறது.

**parallel error** : இணைப் பிழை; நோக்கு மயக்கப் பிழை; விழிக் கோட்ட வழு.

**parallelelizing** : இணையாக்கல் : இணை செயலாக்கக் கணினிக் காக நிரல்களை உருவாக்குதல்.

**parallel input/output** : ஒருபோகு உட்பாடு/வெளிப்பாடு; இணை உள்ளீடு/வெளியீடு : ஒவ்வொரு துண்மிக்கும் தனக்கெனச் சொந்தக் கம்பியைக் கொண்டிருக்கிற தரவு அனுப்பீடு. அனைத்துத் துண்மிகளும் ஒரே சமயத்தில் அனுப்பப்படுகின்றன. இது, ஒரு சமயத்தில் ஒரேயொரு துண்மியை மட்டுமே அனுப்புவதிலிருந்து வேறுபட்டது. இது தொடர் உட்பாடு/வெளிப்பாடு என்பதற்கு மாறுபட்டது.

**parallel interface** : ஒருபோகு இடைமுகப்பு; இணை இடைமுகம் : ஒரு பாதைத் தொகுதியின் வழியே ஒரே சமயத்தில் தகவல்களை மாற்றக்கூடிய சாதனத்தின் வரம்பெல்லை.

**parallel operations** : இணைச் செயல்பாடுகள்.

**parallel operator** : இணைநிலை செயற்குழு; ஒருபோகு செயற்பாடு; இணை இயக்கம் : ஒரே தன்மையுடைய பல செயற்பாடுகளை அத்தகைய செயல் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியான ஒரேமாதிரியான அல்லது சரியொத்த சாதனங்களை அமைப்பதன்மூலம் ஒரே சமயத்தில் நிறைவேற்றுதல்.

**parallel port** : இணை துறை : உ/வெ இணைப்பு. அச்சுப்பொறி அல்லது பிற இணை இடைமுக சாதனத்துடன் இணைக்கப் பயன்படுகிறது. பீசியில் இது 25-பின் பெண் டிபி-25 இணைப்பி எனப்படும்.

**parallel printer** : ஒருபோகு அச்சடிப்பி; இணை அச்சுப் பொறி : ஒரே சமயத்தில் 8 கம்பிகளின் வழியே ஓர் எழுத்தினை (எழுத்து எண் முதலியன) கணினியிலிருந்து பெறுகின்ற அச்சடிப்பி.

**parallel printing** : ஒருபோகு அச்சடித்தல்; இணை அச்சிடல் : ஒரே சமயத்தில் ஒரு வரிசை முழுவதையும் அச்சடித்தல்.

**parallel processing** : இணைச் செயல்பாடு; இணை அலசல்; ஒருபோகு செயல்பாடு; இணைச் செயலாக்கம்; ஒருபோகு செய்முறைப்படுத்துதல் : பன்முகச் சாதனங்களில் இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட செய்முறைகளை ஒருங்கே அல்லது ஒரே சமயத்தில் நிறைவேற்றுதல்.

**parallel reading :** ஒருபோகு படிப்பு; இணை வாசிப்பு : ஒரு தரவு அட்டையிலிருந்து வரிசை வரிசையாகப் படித்தல். இது தொடர் படிப்பிலிருந்து வேறு பட்டது.

**parallel run :** ஒருபோகு ஓட்டம்; இணையோட்டம் : ஒரு புதிய பொறியமைவினை அல்லது செயல்முறையினை பழைய பொறியமைவுக்கு இணையாக ஓட்டுதல். இது எளிதான அனுப் பீட்டுக்கும் பிழையின்றி மாற் றம் செய்வதற்கும் உதவுகிறது.

**parallel server :** இணைநிலை வழங்கன் : வழங்கனின் செயல் திறனை மேம்படுத்த ஏதேனும் ஒருவகை இணைநிலைச் செய லாக்கத்தை நடைமுறைப்படுத் தும் கணினி அமைப்பு.

**parallel transmission :** இணைப் பரப்புகை; ஒருபோகு அனுப்பீடு; இணை செலுத்தம் : தகவல் தொடர்புகளில் தரவு மாற்றத் திற்கான ஒரே முறை. இதில் ஒரு கணினியின் துண்மிகள் அனைத்தும் ஒரே சமயத்தில் பொருத்தப்படுகின்றன. இது, தொடர் அனுப்பீட்டிலிருந்து வேறுபட்டது.

**parameter :** நிலையளவுரு : 1. வரம்பற்ற மாறி; முக்கியமாக ஒரு குறிப்பிட்ட பொறியமை வின் ஒரு பண்பு அல்லது வரை நிலை அடைமொழி. 2. ஒரு மாறிலியின் பண்புகளைத் தற் காலிகமாக ஏற்றுக் கொள்ளும் ஓர் இயற்கணித எண்ணுருக் கோவையிலுள்ள மாறிலி.

**parameter block :** அளவு கோல் கட்டம்: ஒரு சாதனம் அல்லது இயக்க அமைப்புப் பணியில் பயன்படுத்திய தரவுவை நீடித்திருக்க நினைவகத்தில் அமைக்கப்பட்டுள்ள மாறிலி களின் தொகுதி.

**parameter-driven :** அளபுரு முடுக்கம் : ஒரு நிரல் அல்லது செயல்பாட்டின் இயல்பு அல்லது வெளியீடு, அதற்கு வழங்கப்படும் அளபுருக்களின் மதிப்புகள் அடிப்படையில் தீர்மானிக்கப்படுவது.

**parameter passing :** அளபுரு அனுப்புகை : நிரலாக்கத்தில் ஒருவகைச் செயலாக்கம். ஒரு செயல்முறை அல்லது செயல் கூறின் அழைப்பு செயல் படுத்தப்படும்போது குறிப்பு அளபுருக்களுக்கு மெய்யான அளபுருக்களின் மதிப்புகளைப் பதிலீடு செய்வது.

**parameter RAM :** அளபுரு ரேம் : ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினிகளின் தாய்ப்பலகை களில் மின்கலத்தின் உதவியால்

பாதுகாக்கப்படும் சீமாஸ்-ரேமில் உள்ள ஒரு பகுதி. கணினி அமைப்பின் தகவமைவு பற்றிய தரவு இதில் சேமிக்கப் பட்டிருக்கும். பீரேம் (PRAM) என்று சுருக்கமாகக் கூறுவர்.

**parametric** : நிலையளவுருக்கள் சார்ந்த: ஒரு கோட்டு வளை வினை அல்லது இடப்பரப் பினை சில தற்காப்பு மாறிலி களின் அடிப்படையில் வரை யறுக்கிற உத்தி தொடர்பானது. கணினிவழி வடிவமைப்புப் பொறியமைவுகளில் பெரும் பாலும் பயன்படுத்தப்படுகிறது.

**parent** : தாய்க்கோப்பு : புதிய பதிவுருக்களை உருவாக்குவதற் குத் தேவைப்படுகிற, ஒரே தரவு ஆதாரமாக இருக்கக்கூடிய உள்ளடக்கங்களைக் கொண்டது.

**parent-child** : பெற்றோர்-குழந்தை : தகவல் தள மேலாண் மையில் இரண்டு கோப்பு களுக்கு இடையிலான உறவு முறை. பெற்றோர் கோப்பில் தொழிலாளர், வாடிக்கையாளர் போன்ற ஒரு பொருளைப் பற்றிய தேவையான தரவு இருக் கின்றது. குழந்தை அதிலிருந்து உருவானது. சான்றாக, ஒரு நிறுவனக் கோப்பின் குழந்தை என்று அதன் தொழிலாளர் கோப்பினைக் குறிப்பிடலாம்.

**parentheses** : இடை முறிப்புக் குறிகள்; பிறை வளைவான : பிறை வடிவ வளை அடைப்புக் குறிகள். இவை ( ) என்று குறிக்கப்படும். கணிதக் கணிப்பு களில் வளை அடைப்புக் குறி களுக்குள் உள்ள செயற்பாடுகள் முதல் முந்துரிமை வாய்ந்த தனிச் செயற்பாடுகளாகக் கருதப்படுகின்றன.

**parent menu** : தலைமைப் பட்டி.

**parent process** : பெற்றோர் செயலாக்கம் : வேறொரு துணைப் பகுதி (அல்லது குழந்தை) செயலாக்கத்தை உருவாக்கு கின்ற நிரல்தொடரின் (செயல் முறை) ஒரு பகுதி.

**parent programme** : பெற்றோர் நிரல் தொடர் : நினைவகத்தில் ஏற்றப்படும் முதல் அல்லது தலைமை அல்லது அடிப்படை நிரல் தொடர்.

**parent/child relationship** : தாய்/சேய் உறவு நிலை : செய்திகளை ஒரு தலைமுறையிலிருந்து அடுத்த தலைமுறைக்குக் கொண்டு செல்லுதல். புதிய செய்தியை (சேய்) உருவாக்கு வதற்குப் பழைய செய்தி (தாய்) இன்றியமையாததாகும்.

**parity** : சமன் : சமமாய் இருத்தலைக் குறிக்கும். கணினித்

தகவல் பரிமாற்றத்தில் பிழையைச் சோதிக்கும் செயல் முறைக்கு சமன் சரிபார்ப்பு (parity check) என்று பெயர். ஒரு துண்மித் தொகுதி ஒரு முனையிலிருந்து இன்னொரு முனைக்கு அனுப்பப்படும்போது எத்தனை 1-கள் இருக்கின்றன என்பதைக் கணக்கிட்டு அந்த எண்ணிக்கை ஒற்றைப்படையா இரட்டைப் படையா என்பதைப் பார்த்து 1 அல்லது 0-வை அந்தத் துண்மித் தொகுதியோடு சேர்த்து அனுப்புவர். இந்த 1 அல்லது 0, சமன் துண்மி(parify bit) எனப்படும். பெறும் முனையில் சமன் துண்மி அடிப்படையில் அந்தக் குறிப்பிட்ட துண்மித் தொகுதி பெறப்பட்டுள்ளதா என்பது சரிபார்க்கப்படும். துண்மித் தொகுதி ஓர் எழுத்துக் குறி எனில், செங்குத்து மிகைமைச் சரிபார்ப்பு (vertical redundancy check) என்றும், வேறுவகையான தொகுதி எனில், கிடைமட்ட மிகைமைச் சரிபார்ப்பு என்றும் கூறுவர். இரண்டு இணக்கிகளுக்கிடையேயான தகவல் தொடர்பு சமன் சரிபார்ப்பு ஒரு முக்கிய அளபுரு ஆகும். சமன் துண்மி சரியாக இருந்தால் மட்டுமே இரண்டு இணக்கிகளும் தரவுவைப் பரிமாறிக் கொள்ளும்.

**parity bit : சமநிலைத் துண்மி :** எட்டியல்களின் ஒரு வரிசையுடன் பின்னிணைப்புச் செய்யப்படும் ஒரு சோதனைத் துண்மி. இதனால் இந்தத் தடுப்புத் துண்மிக்கு உட்பட்ட எட்டியல்கள் அனைத்தின் கூட்டுத் தொகையானது எப்போதும் ஒற்றைப்படையாக அல்லது எப்போதும் இரட்டைப்படையாக இருக்குமாறு செய்யப்படுகிறது.

**parity check, odd :** ஒற்றைச் சமன் சரிபார்ப்பு.

**parity checking : சமநிலைச் சோதனை; இணைச் சரிபார்ப்பு :** தரவுத் துண்மிகளுடன் சேர்த்துச் சோதனைத் துண்மிகளைப் பயன்படுத்தி தன்னியக்கமாகப் பிழைகளைக் கண்டறிதல்.

**parity drive : சோதனை இயக்கி :** ஒரு வட்டு வரிசையில் சோதனை துண்மிகளை வைத்திருக்கும் தனி வட்டு இயக்கி.

**parity error : சோதனை பிழை :** ஒரு எழுத்தின் சோதனை துண்மியானது தவறாக இருக்குமானால் ஏற்படும் பிழை நிலை.

**park : நிறுத்து :** ஒரு படி/எழுது முனை நிலைவட்டினைத் தொடுமானால் அதனால் ஏற்படும் சேதத்தினைத் தடுக்க

அந்த அலகை அதன் இருப் பிடத்திற்குக் கொண்டு வருமுன் படி / எழுது முனையைப் பின்னுக்கு இழுத்துக் கொள்ளல். மின்சாரம் நிறுத்தப்படும்போது பெரும்பாலான நவீன இயக்கிகள் இவ்வாறு நிறுத்திக் கொள்கின்றன.

**Parkingson's Law** : பார்க்கின்சன் விதி.

**parse** : அலகு : ஒரு சொற்பகுதி சரத்தினை அதன் பிரிவு பகுதி களுக்கு கொண்டு செல்லுதல். டாஸ் (DOS) மூலம் கட்டளை வரி தகவலை அலகிட்டு கோப்பு அணுகு பணிகளில் பயன்படுத்துவதற்காக திருத்தி அமைக்க முடியும்.

**parser** : பாகுபடுத்தி/ பகுப் பாய்வி : அறிக்கைகளைப் பகுப் பாய்வு செய்து, அறிந்து கொள் கிற செயல்முறை அல்லது துணை வாலாயம்.

**parsing** : பாகுபடுத்தல் ; அலகிடல் : 1. அறிக்கைகளைச் சொற்றொடரியல் அலகுகளாகத் தனித்தனியாகப் பாகு படுத்தும் செயல் முறை. 2. ஒரு எழுத்துச் சரத்தினைப் பகுப்பாய்வு செய்து அதனை இன்னும் அதிக எளிதாகச் செய்முறைப்படுத்தும் அமைப்புக் குழுமங்களாகப் பகுத்தல்.

**part address** : முகவரிப் பகுதி.

**participatory media** : பங்கேற் கும் தகவலகம்.

**partition** : பிரிவினை : நினைவ கத்தில் ஒரு செயல்முறை நிறை வேற்றப்படும்போது அச்செயல் முறைக்கெனக் குறித்தொதுக்கப் படும் பகுதி.

**partitioning** : பிரிவினை செய் தல் ; பிரிப்பு : ஒரு கணினியின் சேமிப்புப் பகுதியைக் குறிப் பிட்ட பணிகளுக்காக அல்லது அலுவல்களுக்காக ஒதுக்கப் பட்ட சிறுசிறு அலகுகளாக உட்பகுப்பு செய்தல்.

**partition table** : பிரிவினைப் பட்டியல் : ஒரு நிலையான வட் டின் முதன்மைத் தொடக்கப் பதிவில் சேர்க்கப்பட்டுள்ள பட்டியல். ஒவ்வொரு பிரிவின் அளவு மற்றும் இருப்பிடம் பற்றிய தகவலை அது கொண் டிருக்கிறது.

**parts explosion** : உறுப்பு வரை தல் : ஓர் இணைப்பில் அடங்கி யுள்ள அனைத்துக் கூறுகளை யும் வரைதல். இது இந்தக் கூறுகள் ஒன்றோடொன்று கொண்டுள்ள தொடர்பினைக் காட்டும்.

**parts list** : உறுப்புப் பட்டியல் : உற்பத்தி செய்யப்பட்ட ஓர்

இனத்தை உற்பத்தி செய்வதற்குப் பயன்படுத்தப்பட்ட உறுப்புகள் அனைத்தின் அளவுகள், பெயர்கள், எண்ணிக்கைகள் அடங்கிய ஒரு தொகுப்பு. கணினி உதவிபெற்ற வடிவமைப்பு (Computer Aided Design-CAD) பொறியமைவுகளில் பெரும்பாலானவை இத்தகைய பட்டியல்களை ஒரு வடிவமைப்பு மற்றும் உற்பத்திச் செய்முறையின்போது தானாகவே புதுப்பித்துப் பேணிக் கொள்கின்றன.

**parts programmer :** உறுப்புச் செயல் முறையாளர் : எந்திர உறுப்புகளுக்கான இயற்பியல் விளக்கங்களைக் கணிதப் படிநிலைகளின் ஒரு தொடர் வரிசையாக மாற்றி அந்தப் படிநிலைகளுக்குக் கணினிக் குறியீடுகளை வகுத்தமைக்கிற செயல்முறையாளர்.

**party check, even :** இரட்டைச் சமன் சரிபார்ப்பு.

**party line :** தொகுப்புக் கம்பித் தொடர்; குழுமக் கம்பி : மையச் செயலகத்திலிருந்து புறப்படும் தனியொரு கம்பியுடன் இணைக்கப்பட்டுள்ள ஏராளமான சாதனங்களைக் குறிக்கும் சொல்.

**Pascal :** பாஸ்கல் (பாஸ்கல் எனும் கணினி மொழி) : கணினியுடன் தொடர்பு கொள்வதற்கும் சில கணிப்புகளைச் செய்யும்படி அறிவுறுத்துவதற்கும் பயன்படும் உயர்நிலைக் கணினி மொழிகளில் ஒன்று. இது பொது நோக்கத்திற்காக கட்டமைவு செய்யப்பட்ட செயல்முறைப்படுத்தும் மொழியாகும். இதனை சூரிச்சைச் சேர்ந்த நிக்லாஸ் விர்த் (Niklaus wirth) என்பவர் 1968 இல் கண்டுபிடித்தார். பிளைஸ் பாஸ்கல் (Blaise Pascal) என்ற ஃபிரெஞ்சுக் கணித மேதையின் நினைவாக இதற்கு இந்தப் பெயர் சூட்டப்பட்டது.

**Pascal, Blaise (1623-1662) :** பாஸ்கல், பிளைஸ் (1623-1662) : ஃபிரெஞ்சுக் கணித மேதை; மேசைக் கணிப்பி வகையைச் சேர்ந்த முதலாவது கூட்டல் எந்திரத்தை 1642இல் கண்டுபிடித்தவர்.

**pascaline :** பாஸ்கலைன் : 1642இல் ஃபிரெஞ்சு கணிதவியலார் பிளெய்ஸ் பாஸ்கல் உருவாக்கிய கணிப்பி எந்திரம். அதனால் கூட்டவும், கழிக்கவும் மட்டுமே முடியும். ஆனால் ஐரோப்பாவின் முக்கிய பகுதிகளில் அதன் 50 எந்திரங்கள் அமைக்கப்பட்டதால் அது மிகுந்த கவனத்தைப் பெற்றது.

**Pascal's calculator :** பாஸ்கல் கணிப்பி: பிளைஸ் பாஸ்கல்

என்ற ஃபிரெஞ்சுக் கணித மேதை 1642இல் கண்டுபிடித்த முதலாவது கூட்டல் எந்திரம். இது மேசைக் கணிப்பி வகையைச் சேர்ந்தது. இது பல்லிணைகளைக் கொண்ட "0" முதல் "9" வரையிலான இலக்கங்களைக் கொண்டது. இது கூட்டல், கழித்தல் கணிப்புகளைச் செய்யக்கூடியது.

**pass : ஓட்டம் :** *1.* ஒரு கணினி செயல்முறையை நிறைவேற்றுவதில் ஒரு முழுமையான உட்பாட்டுச் செய்முறைப் படுத்தலையும் வெளிப்பாட்டுச் சுழற்சியையும் குறிக்கிறது. *2.* ஓர் ஆதாரக் குறியீட்டினை ஒரு தொகுப்பி அல்லது இணைப்பி நுண்ணாய்வு செய்தல்.

**pass by address : முகவரி மூலம் அனுப்பல் :** ஒரு துணை நிரல்கூறுக்கு தருமதிப்பு அல்லது அளபுருக்களை அனுப்பி வைத்தலில் ஒரு வகை. இம் முறையில் அழைக்கும் துணை நிரல் அழைக்கப்படும் துணை நிரலுக்கு அளபுருவின் முகவரியை (நினைவக இருப்பிடத்தை) அனுப்பி வைக்கும். அழைக்கப்பட்ட துணை நிரல் அளபுருவின் மதிப்பை எடுத்தாளவோ, மதிப்பை மாற்றியமைக்கவோ, அதன் முகவரியைப் பயன்படுத்திக் கொள்ள முடியும்.

**pass by value : மதிப்பு மூலம் அனுப்பல் :** ஒரு துணை நிரல் கூறுக்கு தரு மதிப்பு அல்லது அளபுருவை அனுப்பி வைப்பதில் இன்னொரு வகை. இம்முறையில் அளபுருவின் மதிப்பு நகலெடுக்கப்பட்டு அந் நகல் மதிப்பு அழைக்கப்பட்ட துணை நிரலுக்கு அனுப்பி வைக்கப்படும். அழைக்கப் பட்ட துணைநிரல் நகல் மதிப் பைப் பயன்படுத்தலாம். மாற்றியமைக்கலாம். ஆனால் அளபுருவின் மூலமதிப்பை மாற்றியமைக்க முடியாது.

**passive device : ஓட்டச் சாதனம் :** குறியீடுகளை மாற்றியமைக்காமல் ஓட விடுகிற சாதனம்.

**passive graphics : ஓட்ட வரைகலை.**

**passive hub : அமைதியான முனை :** இயங்கக்கூடிய மின்னணு எதுவுமில்லாத, அனுப்பப் படும் சமிக்கைகளுடன் எதையும் சேர்க்கவியலாத கட்டமைப்பு முனை.

**passive matrix LCD : இயங்காத எழுத்துரு எல்சிடி. :** பொதுவான எல்சிடி. தொழில்நுட்பம். தேவையான பத்தியிலும் வரிசையிலும் மின்சாரத்தை அனுப்புவதன்மூலம் ஒரு படப்புள்ளியில் வெளிச்சம் ஏற்படுத்துகிறது.

**passive-matrix display :** முனைப்பிலா அணி காட்சித் திரை : விலை மலிவான தெளிவு குறைவான நீர்மப் படிகத் திரைக்காட்சி (Liquid Crystal Display). காட்சித்திரைக்கு வெளியே பொருத்தப்பட்டுள்ள மின்மப் பெருக்கிகளால் (Transistors) கட்டுப்படுத்தப்படுகின்ற ஏராளமான திரவப்படிகக் கலங்களை (Cells) கொண்டது. ஒரு மின்மப்பெருக்கி ஒரு முழு நெடுக்கை (Column) அல்லது கிடக்கை (Row)யின் படப் புள்ளிகளை கட்டுப்படுத்தும். முனைப்பிலா அணித் திரைகள் பெரும்பாலும் மடிக் கணினி கையேட்டுக் கணினிகளில் பயன் படுத்தப்படுகின்றன. ஏனெனில், அவை மிகவும் தட்டையாக இருக்கும். ஒற்றைநிற திரைக் காட்சிக்கு இவை தெளிவாக இருக்கும். ஆனால் வண்ணத் திரைக்காட்சி எனில் தெளிவு சற்றுக் குறைவாகவே இருக்கும். அதுமட்டுமின்றி திரையில் நேரெதிர் நோக்கினால்தான் தெளிவாகத் தெரியும். பிற கோணங்களில் பார்த்தால் தெளி வாக இருக்காது. முனைப்பு - அணி (Active Matrix) திரைக் காட்சிகளில் இக்குறைபாடுகள் கிடையாது. எனினும் முனைப் பிலா அணிக் காட்சித் திரை விலை குறைவானது.

**passive star :** அசைவற்ற நட் சத்திரம் : கட்டமைப்பு அமைப்பு முறை. கூடுதல் செயலாக்க மின்றி பலமுனைகளின் கம்பி களை இணைப்பது.

**password :** அனுமதிச் சொல்; உயிர்நிலைச் சொல் : கணினி யில் சேமித்து வைக்கப்பட் டிருக்கும் குறிப்பிட்ட செயல் முறைகளை அல்லது தரவு கோப்புகளை அணுகுவதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு தனிச் சொல் குறியீடு அல்லது குழூஉக் குறி. ஒரு கணினியமைவில் அடையாளங் காண்பதற்காக வும், பாதுகாப்பு நோக்கத்திற் காகவும் இது பயன்படுகிறது. ஒவ்வொரு பயனாளருக்கும் ஒரு தனிச் சொல் ஒதுக்கப் பட்டிருக்கும்.

**password protection :** அனுமதிச் சொல் பாதுகாப்பு ; அணுகுதல் காலப் பாதுகாப்பு .

**paste :** ஒட்டு : ஓர் ஆவணத் திலிருந்து முன்னதாக வெட்டி யெடுக்கப்பட்ட தகவலை ஒரு புதிய நிலையில் பொருத்துதல். சில கணினியமைவுகளில் வாச கத்தின் அல்லது வரைகலை யின் பரப்புகளை ஓர் ஆவணத் திலிருந்து வெட்டியெடுத்து பாதுகாத்து பின்னர் இன்னொரு ஆவணத்தில் ஒட்டலாம்.

**paste append** : புது ஏடாக ஒட்டு.

**paste as hyper link** : மீத்தொடுப்பாக ஒட்டு.

**paste insert** : செருகு ஒட்டு.

**paste/mix** : ஒட்டு/சேர்.

**paste special** : சிறப்பு ஒட்டு.

**patch** : வட்டப்பட்டை : *1. ஒரு பிழையைத் திருத்துவதற்காக அல்லது ஒரு செயல்முறையை மாற்றுவதற்காக ஒரு செயல்முறைக்குள் செலுத்தப்படும் குறியீட்டு முறையின் ஒரு பகுதி. 2. தற்காலிக மின்னியல் இணைப்பு. 3. கணினி வரைகலையில் ஒரு நீள்வளைவுப் பகுதி. இது மூன்று அல்லது நான்கு பக்கங்களைக் கொண்டிருக்கும். பரப்புகளின் முப்பரிமாணத்தை உருவாக்கும் வகையில் இவை அவற்றின் விளிம்புகளில் முதல்வரிசையுடன் இணைக்கப்பட்டிருக்கும். ஒரு வட்டப்பட்டையின் இந்த விளிம்புகள் பெரும்பாலும் முப்பரிமாணத் தொடர் உருவங்களை உருவாக்கும். இந்த வட்டப் பட்டைகளைக் கையாள்வது கடினம் எனினும் ஒரு வட்டப்பட்டை நூற்றுக் கணக்கான பலகோணக் கட்டங்களை ஏற்றுக் கொள்ளக்கூடியதாக இருப்பதால் தரவு தளத்தின் வடிவளவு வெகுவாகக் குறைகிறது. 4. ஒரு செயல்முறையை அல்லது நிறைவேற்றத்தக்க கோப்பினை மாற்றமைவு செய்தல். இதனைப் பொதுவாக ஒரு வாடிக்கையாளர் பொறியாளர் செய்கிறார்.*

**patch panel** : ஒட்டுப் பலகை : *கம்பி அமைப்புப் பலகை. பல தரப்பட்ட இடை இணைப்புகளுக்கான வசதியை நெட்டுளிகளின் வழியாக ஒட்டுப் பலகைகளுக்குப் பயன்படுத்துதல்.*

**patching** : ஒட்டுதல் : *1. ஒரு செயல்முறையை மாற்றியமைப்பதற்காக அல்லது செயல்முறைப்படுத்தலின் பிழைகளைத் திருத்துவதற்காக அந்தச் செயல்முறையின் இலக்குக் குறியீட்டினை மாற்றுவதன் மூலம் மாற்றமைவு செய்வதற்கான தற்காலிக உத்தி. இது பெரும்பாலும் செயல்முறையின் மறுதொகுப்பினை அல்லது மறு இணைப்பினைத் தவிர்ப்பதற்காகச் செய்யப்படுகிறது. 2. வன்பொருளுக்கு தற்காலிக வட்டப்பட்டைகள் செய்தல்.*

**patch string** : ஒட்டுச்சரம் : *தட்டு அணுகலின் கோப்பு கையாளும் முறையில் ஒரு கோப்பினை அடையாளம் காணப் பயன்படுத்தும் சரம். டாஸ் இயக்க அமைப்பு* (DOS)

கட்டளை அளவில் தேவைப் படும் அதே வடிவம்தான் இது. சிறப்பு இயக்கியிலிருந்து தொடங்கி பின் சாய்வுக் கோட்டினால் பிரிக்கப்பட்ட துணைப் பட்டியல் எண்களைக் கொண்டதாக இருந்து அஸ்கி "0" எட்டியல் பின் தொடர முடியும். சர நீளத்தின் அதிக அளவு 63 எட்டியல்கள்.

**path** : பாதை; வழி : தற்போதைய விவரக் குறிப்பேடு அல்லாத பிற ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட விவரக் குறிப்பேடுகளிலுள்ள ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நிறைவேற்றத்தக்க கோப்புகளைத் தேடியெடுக்கும்படி செயற்பாட்டுப் பொறியமைவுக்கு அறிவுறுத்தப் பயன்படுத்தப்படும் ஓர் நிரல்.

**path menu** : பாதைப் பட்டி : விண்டோஸ் சூழலில் ஒரு பகிர்வுப் பிணைய வளத்தினை அணுக உலகளாவியப் பெயர் மரபுப்படி அதன் பாதையை உள்ளீடு செய்வதற்குப் பயன்படுத்தப்படும் பட்டி அல்லது கீழ்விரி பட்டியல்.

**pathname** : பாதைப் பெயர் : ஒரு படிநிலைக் கோப்பு முறைமையில், நடப்புக் கோப்பகத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட கோப்பினை அணுகக் குறிப்பிடப்படும் கோப்பகம்/கோப்புறைப் பெயர்களின் பட்டியல். கோப்பகப் பாதை எனவும் அழைக்கப்படுவதுண்டு. (எ-டு) user\work\project\pay.mdb.

**path of execution** : நிறைவேற்று வழி.

**pattern** : தோரணி; தினுசு.

**pattern, bit** : பிட் தோரணி.

**pattern recognition** : தோரணி அடையாளம்; வடிவ அடையாளம் ; உருவமைப்பு காணும் செய்முறைகள்; உருவ வகையறிதல் : வடிவங்கள், உருவங்கள், உருவரைகள் போன்றவற்றைத் தானியக்க வழிமுறைகளின்படி அடையாளங் காணல்.

**patterns** : தோரணிகள்

**pause key** : நிறுத்தல் விசை; நிறுத்தி வைப்பு விசை; இடைநிறுத்து விசை: 1. ஒரு நிரல் அல்லது கட்டளையின் செயல்பாட்டை தற்காலிகமாக நிறுத்தி வைக்கும் விசை. அனைத்து வகை விசைப்பலகைகளிலும் இத்தகைய விசை உண்டு. ஒரு நீண்ட பட்டியல் திரையில் வேகமாக மேல்நோக்கி உருளும்போது இந்த விசையைப் பயன்படுத்தி நிறுத்தி நிறுத்தி பட்டியலைப் பார்வையிடலாம். 2. குறிப்பிட்ட நிரலில், நிரலர் விருப்பப்படி

விசைப்பலகையிலுள்ள ஒரு குறிப்பிட்ட விசையை அழுத்தினால் நிரல்/செயல்பாடு தற்காலிமாக நிற்குமாறு செய்யலாம். குறிப்பாக கணினி விளையாட்டு நிரல்களில் விளையாட்டை நடுவிலேயே நிறுத்தி வைக்க P என்னும் விசை பயன்படுத்தப்படுவதுண்டு.

**pause printing :** இடைவிடு அச்சிடல்.

**PAX :** பேக்ஸ் : Private Automatic Exchange என்பதன் குறும்பெயர். அலுவலகத்திற்குள் உள்ள தொலைபேசி அமைவு. (இணை கட்டுமான விரிவாக்கம் கொண்ட) இணைச் செயலக சூழ்நிலையில் இன்டெல்லின் 860 ரிஸ்க் (Risc) சிப்பின் தரத்தை ஒட்டிய, யூனிக்ஸ் சிஸ்டம் V மற்றும் அல்லையன்ட் கணினியின் இணை மற்றும் முப்பரிமாண (3-D) வரைகலை தொழில் நுட்பங்கள் கொண்டது.

**pay to play :** பணத்துக்குப் பாட்டு.

**payware :** பணப்பொருள் : பணத்திற்கு விற்கப்படும் மென்பொருள்.

**PBX :** பீபிஎக்ஸ் : Private Branch Exchange என்பதன் குறும்பெயர். அலுவலகத்தின் உள்ளே தொலைபேசி அமைக்கும் திட்டம். அங்குள்ள ஒவ்வொரு தொலைபேசி இணைவுகளுடன் இணைக்கப் படுவது மட்டுமல்லாது வெளிப்புற தொலைபேசி கட்டமைப்புடனும் இணைக்கப்படும். குறைந்த செலவில் வெளிப்புற அழைப்பை அனுப்புதல், அழைப்பை மேலனுப்புதல், மாநாட்டு அழைப்பு மற்றும் அழைப்பு கணக்கிடல் போன்ற அனைத்தையும் உள்ளடக்கியது.

**PC :** பீசி : சொந்தக் கணினி (Personal Computer), சட்டைப் பைக் கணினி (Pocket Computer), கையடக்கக் கணினி (Portable Computer), அச்சிட்ட மின்சுற்று வழி (Private Circuit), செயல்முறை மேடை (Programme Counter) ஆகியவற்றின் குறும்பெயர்.

**PCB :** பீசிபி: அச்சிணைப்பு அட்டை: அச்சிட்ட மின்சுற்று வழிப்பலகை என்று பொருள்படும் "Printed Circuit Board" என்ற ஆங்கிலச் சொற்றொடரின் தலைப்பெழுத்துச் சுருக்கம். இந்தப்பலகை, பிளாஸ்டிக்கினாலானது. இதில் கணினியின் பல்வேறு மின்னணுவியல் அமைப்பான்கள் பற்றவைத்து இணைக்கப்பட்டிருக்கும். இவை, இப்பலகையின் மேற்பரப்பில் பதிக்கப்பட்டுள்ள ஒன்றோ

டொன்று இணைந்த மெல்லிய கம்பிகள்மூலம் பிணைக் கப்பட்டிருக்கும்.

**PC bus : பீசி பாட்டை :** முதல் தலைமுறை பி.எம், பீசிக் களில் பயன்படுத்தப்பட்ட பாட்டை அமைப்பு முறை ஆரம்ப 8 துண்மி நடத்தையும், ஏடீ. யுடன் அறிமுகப்படுத்தப்படும் 16 துண்மி விரிவாக்கத்தையும் உள்ளடக்கியது. 8 துண்மி அட்டைகள் 8 துண்மி மற்றும் 16 துண்மி அமைப்புகளுடன் சேரும். ஆனால் 26 துண்மி அட்டைகள் 16 துண்மி பகுதி யில் மட்டும்தான் சேரும். ஐ.எஸ்.ஏ. பாட்டை என்றும் அழைக்கப்படும்.

**PC card : பீசி அட்டை :** நினைவக அட்டை அல்லது நினைவகம் மற்றும் உ/வெ அட்டை. பீசி-க்கான விரிவாக்க அட்டை.

**PC-compatible : பீசி-ஒத்தியல்பு :** ஐபிஎம் நிறுவனத்தின் பீசி/ எக்ஸ்டீ மற்றும் பீசி/ஏடீ வன் பொருள், மென்பொருள் வரன் முறைகளைக் கொண்ட கணினி களைக் குறிக்கிறது. இதுவே கணினித் தொழில்துறையில் சொந்தக் கணினிகளுக்கான ஏற்றுக் கொள்ளப்பட்ட தர வரையறை ஆகிப்போயிற்று. இவை இன்டெல் 80×86 அல்லது அதற்கு ஒத்தியல்பான சிப்புகளில் செயல்பட வல்லவை. இன்றைக்குப் பெரும் பாலான பீசி- ஒத்தியல்புக் கணினிகள் ஐபிஎம் அல்லாத நிறுவனங்களாலேயே தயாரிக்கப் படுகின்றன. சிலவேளைகளில் இவை நகலிகள் அல்லது வார்ப்பு கள் (clones) என்று அழைக்கப் படுகின்றன. ஐபிஎம் பீசி என்றும் அழைக்கப்படுவதுண்டு.

**PC-DOS : பீசி-டாஸ் :** சொந்தக் கணினிக்கான வட்டு இயக்க முறைமை எனப் பொருள்படும் Personal Computer - Disk Operating System என்பதன் தலைப் பெழுத்துக் குறும்பெயர். ஐபிஎம் நிறுவனத்தின் தயாரிப்பு. தொடக்க காலங்களில் ஐபிஎம் முக்காக மைக்ரோசாஃப்ட் நிறுவனம் டாஸ் இயக்க முறைமையை தயாரித்து வழங்கி வந்தது. பின்னாளில் மைக்ரோசாஃப்ட் சொந்தமாக எம்எஸ் டாஸ் என வெளியிட லாயிற்று. ஐபிஎம் தன் சொந்த இயக்க முறைமையை பீசி- டாஸ் என்ற பெயரில் வெளி யிட்டது. எம்எஸ்-டாஸ், பீசி- டாஸ் இரண்டும் முழுக்க முழுக்க ஒத்திருக்கும். சில பயன்பாட்டு நிரல்களின் கோப்புப் பெயர் மட்டுமே

இரண்டிலும் வெவ்வேறாக இருக்கும்.

**P-Channel MOS : (PMOS) : பீ-அலைவரிசை மாஸ் (பீஎம் ஓஎஸ்) :** பேரளவு ஒருங்கிணைப்புச் சாதனங்களுக்கான (LSID) மிகப் பழைய உலோக ஆக்சைடு மின் அரைக்கடத்தித் தொழில் நுட்பம். இது, N-அலைவரிசை மாஸ் என்பதிலிருந்து வேறுபட்டது.

**PC Keyboard : பீசி. விசைப் பலகை :** ஐ.பி.எம். பீசியுடன் அறிமுகப்படுத்தப்பட்ட விசைப் பலகை, எண் நுழைவு மற்றும் சுட்டி நகர்த்தலுக்கான இரட்டைப் பணி விசைப்பலகையைத் தருகிறது. தரத்துக்கு அப்பாற்பட்டு மாற்றுவிசை அமைக்கப் பட்டது குறித்து கடுமையாக விமர்சிக்கப்பட்டது. இக்குறையை ஏ.டீ. விசைப்பலகையில் சரிசெய்யப்பட்டது. விசை அமைப்புக்குத் தொடர்பின்றியும் ஐபிஎம் விசைப்பலகைகளை பயனாளர்கள் பெரும்பாலும் புகழ்கிறார்கள்.

**PCI local bus : பீசிஐ உள்ளகப் பாட்டை :** புற உறுப்பு சேர்த்திணைப்பு உள்ளகப் பாட்டை எனப் பொருள் தரும் Pheripheral Component Interconnect Local Bus என்ற தொடரின் சுருக்கம். ஒரு கணினியில் பீசிஐ வகை விரிவாக்க அட்டைகள் 10 வரை பொருத்த முடிகிற உள்ளகப் பாட்டை அமைப்பிற்காக இன்டெல் நிறுவனம் வரையறுத்த வரன்முறை. இப்பாட்டை செயல்பட பீசிஐ வகைச் செருகுவாய்கள் ஒன்றில் பீசிஐ கட்டுப்படுத்தி அட்டை செருகப்பட்டிருக்க வேண்டும். பாட்டையில் ஓரேநேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட மின்சமிக்கை பயணிக்கும் ஒருவகை ஒன்று சேர்ப்பு நுட்பத்தை (Multiplexing Technique) செயலாக்க பீசிஐ வரன்முறை அனுமதிக்கிறது.

**PCL : பீசிஎல் :** Printer Control Language என்பதன் சுருக்கம். எச்.பி.லேசர்ஜெட் பிரின்டர்களுக்கான கட்டளை மொழி. பல அச்சுப்பொறிகள், எழுத்தச்சு அமைப்பாளர்களுக்கு அதுவே நடைமுறை தர நிருணயமாக ஆகிவிட்டது. 1990இல் லேசர்ஜெட் III உடன் அறிமுகப்படுத்தப்பட்ட பீசிஎல். லெவல் 5 கம்ப்யூட்டர் கிராபிக்சின் புத்திசாலி அளவு மாறும் எழுத்தச்சுகளுக்கு ஆதரவு தருகிறது.

**PC LAN : பீசி லேன் :** ஐ.பி.எம். கட்டமைப்பு அல்லது ஐ.பி.எம். ஏற்புடைய பீசிக்கள். தனிநபர்

கணினிகளின் ஏந்தகையின் கட்டமைப்பு.

**PCM : பீசிஎம் :** "Plug Compatible Manufacturer" என்ற கணினிச் சாதனங்கள் தயாரிக்கும் நிறுவனத்தின் தலைப்பெழுத்துச் சுருக்கம். இதன் சாதனங்களை, தற்போதுள்ள கணினியமைவுகளில் செருகி, கூடுதலான வன்பொருள் அல்லது மென்பொருள் இடைமுகப்புகள் இல்லாமலேயே, அவற்றை இயக்கலாம்.

**PCMCIA : பீசிஎம்சிஐஏ :** சொந்தக் கணினி நினைவக அட்டைக்கான பன்னாட்டுச் சங்கம் என்று பொருள்படும் Personal Computer Memory Card International Association என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். கணினி வன்பொருள் உற்பத்தியாளர்கள் மற்றும் விற்பனையாளர்களின் குழு. பீசி அட்டை அடிப்படையிலான புறச்சாதனங்கள் மற்றும் அவற்றைத் தாங்கும் செருகுவாய்கள்பற்றிய ஒரு பொதுவான தரவரையறையை உருவாக்க இக்குழு அமைக்கப்பட்டது. குறிப்பாக மடிக் கணினி, உள்ளங்கைக் கணினி மற்றும் பிற கையகக் கணினி வகைகளுக்கும், ஏனைய நுண்ணறிவு மின்னணுச் சாதனங்களுக்குமான தரவரையறை இது. 1990இல் முதன்முதலில் வெளியீடு-1 என்ற பெயரில் அறிமுகப்படுத்தப்பட்ட, பீசி-அட்டைகளுக்கான தரவரையறையும் பீசிஎம்சிஐஏ என்ற பெயரிலேயே அழைக்கப்பட்டது.

**PCMCIA connector : பீசிஎம்சிஐஏ இணைப்பி :** 68-பின் உள்ள துளை இணைப்பி (Female Connector). பீசிஎம்சிஐஏ செருகுவாயில் உள்ளது. பீசி-அட்டையிலுள்ள 68-பின் நுழை இணைப்பி (Male Connector) யுடன் பொருந்துமாறு வடிவமைக்கப்பட்டது.

**PCMCIA slot : பீசிஎம்சி ஐஏ செருகுவாய் :** கணினியின் கட்டமைப்பில் அதன் புறச் சாதனத்தில் அல்லது பிற அறிவுநுட்ப மின்னணுச் சாதனத்தில் பீசி அட்டை (PC card)யை இணைப்பதற்காக இடம் பெற்றுள்ள ஒரு திறப்பு. பீசி அட்டை செருகுவாய் என்றும் அழைக்கப்படுவதுண்டு.

**PC memory card : பீசி நினைவக அட்டை :** 1. ஒரு கணினியின் ரேம் நினைவகத்தை அதிகரிக்கின்ற கூடுதல் மின்சுற்று அட்டை. 2. பீசிஎம்சிஐஏ வரையறுத்துள்ள வகை-I சார்ந்த பீசி அட்டை. இது வழக்கமான நிலைத்த ரேம் சிப்புகளைக்

கொண்டிருக்கும். ஒரு சிறிய மின்கலனால் தரவுவைக் காப் பாற்றி வைக்கும். கணினிக்குக் கூடுதல் ரேம் நினைவகம் தரு வதற்கென வடிவமைக்கப் பட்டது.

**PC Network : பீசி இணையம் :** ஐ.பி.எம்.மின் கட்டமைவு மற்றும் ஐ.பி.எம். ஏற்புடை பீசி-க்களுக்கான இணையம் எந்தவகையான தனிநபர் கணினிகளின் கட்டமைப்பு. ஐ.பி.எம். நிறுவனத்தின் முதல் பீசி லேன் 1984இல் அறிமுகப் படுத்தப்பட்டது. சி.எஸ்.எம்.ஏ/ சி.டி எண் முறையைப் பயன் படுத்தி நெட்பயாஸ் இடை முகத்தை அறிமுகப்படுத்தியது. அடையாள வளைய கட் டமைப்பு ஆதரவு பின்னர் சேர்க் கப்பட்டது. இதன் மைக்ரோ சாஃப்ட் வடிவம் எம்.எஸ்-நெட் என்று அழைக்கப்படுகிறது.

**P-code : பீ-குறியீடு :** ஓர் ஆதாரக் குறியீட்டினை ஒரு தொகுப்பி மூலம் பீ-குறியீடு எனப்படும் ஓர் இடையீட்டுக் குறியீடாக மாற்றக்கூடிய உத்தி. இது பிறகு ஒரு தாய் எந்திரத் தின் மீதுள்ள ஒரு தனிவகை பீ-குறியீட்டு மொழிபெயர்ப்பி மூலமாக, நிறைவேற்றத்தக்க இலக்குக் குறியீட்டினைப் பெறுவதற்குப் பயன்படுத்தப் படுகிறது. பாஸ்கல் மொழியின் பல்வேறு வடிவங்கள் இந்த பீ-குறியீட்டினைப் பயன் படுத்துகின்றன.

**PC Paintbrush : வண்ணத் தூரிகை :** இசட் சாப்ட் கார்ப்ப ரேஷன் நிறுவனம் உருவாக்கிய பீசி வண்ண மடிக்கும் நிரல் தொடர். பரவலாகப் பயன் படுத்தப்பட்டது. வரைகலை படிவத்திற்கு துறையின் தர நிருணயத்தை உருவாக்கியது. அதன் பீசி எக்ஸ் ராஸ்டர் வரைகலை வடிவம் பல வரை கலை அமைப்புகள் சொல் செய லாக்க மற்றும் மேசைமேல் பதிப்பக நிரல் தொடர்களில் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

**PCT : பீசிடீ :** நிரலைப் புரிந்து கொள் கருவி எனப் பொருள் படும் Programme Comprehension Tool என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். இது ஒரு மென்பொருள் பொறி நுட்பக் கருவியாகும். கணினி நிரல்களின் புரிதல் மற்றும்/ அல்லது செயல்படு தன்மை ஆகியவற்றைப் புரிந்துகொள்ள வழி வகுக்கும்.

**PC tools deluxe : பீசி டூல்ஸ் டீலக்ஸ் :** சென்ட்ரல் பாயின்ட் சாஃப்ட்வேர் நிறுவனத்தின் பீசி பயன்பாடுகளுக்கான ஒட்டு

மொத்த பேக்கேஜ். டாஸ் ஷெல் மற்றும் கோப்பு மேலாண்மை, தகவல் தொடர்புகள், வட்டு நினைவகப்படுத்தல், பின் ஆதரவு மற்றும் தரவு நெருக்குப் பயன்பாடுகளைக் கொண்டது.



பீசி/எக்ஸ்டீ விசைப் பலகை

**PCX : பீசிஎக்ஸ் :** இசட் சாஃப்ட் கார்ப்பரேசன் உருவாக்கிய பரவலாகப் பயன்படுத்தப்படும் ராஸ்டர் வரைகலை சேர்ப்புப் படிவம். இது மோனோகிராம் மற்றும் வண்ண முகப்பின் 2 துண்மி, 4 துண்மி, 8 துண்மி மற்றும் 24 துண்மிகளைக் கையாள்வதுடன் 1:1:1 முதல் 1:5:1 வரையிலான சுருக்க விகிதத்தை எட்டுகிறது.

**PC/XT : பீசி/எக்ஸ்டீ :** 1981இல் அறிமுகப்படுத்தப்பட்ட மூல ஐபிஎம் சொந்தக் கணினி. இன்டெல் 8088 மையச் செயலகத்தைக் கொண்டது.

**PC/XT keyboard : பீசி/எக்ஸ்டீ விசைப்பலகை :** ஐபிஎம் சொந்தக் கணினிக்கான மூல விசைப் பலகை திடமானது. நம்பகமானது. 83 விசைகள் கொண்டது. இதில், விசைகளை அழுத்தும்போது ஒரு தட்டச் சருக்கு கிளிக் என்னும் சத்தம் கேட்கும்.

**PDA : பீடிஏ :** சொந்த இலக்க முறைத் துணைவன் என்று பொருள்படும் Personal Digital Assistant என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும் பெயர். ஒரு குறுபயன் உள்ளங்கைக் கணினி. குறிப்பிட்ட சில வசதிகளை மட்டும் கொண்டது. நாட்காட்டி, குறிப்பெடுத்தல், தரவுத் தளம், கணிப்பான் போன்ற சில தனிநபர் பயன்பாடுகளையும் தகவல் தொடர்பு வசதியையும் கொண்டது. பெரும்பாலான பீடிஏ-க்கள் விசைப்பலகை, சுட்டி போன்ற உள்ளீட்டுக் கருவிகளுக்குப் பதிலாக பேனா அல்லது அது போன்ற சுட்டுக் கருவிகளைக்

கொண்டுள்ளன. ஆனால் சிலவற்றில் பேனா தவிர தொட்டச்சு செய்யக்கூடிய மிகச்சிறிய விசைப்பலகையும் சேர்த்துப் பயன்படுத்தப்படு கின்றன. தரவுவைச் சேமித்து வைக்க, மின்சாரம் அதிகம் தேவைப்படும் வட்டு இயக்க கங்களுக்குப் பதிலாக பளிச்சிடு நினைவகத்தைக் (Flash Memory) கொண்டுள்ளன.

**PD-CD drive : பீடி-சிடி இயக்ககம் :** அழித்தெழுது குறுவட்டு இயக்ககம் எனப் பொருள்படும் Rewriteable Disc-Compact Disc Drive என்பதன் சுருக்கம். இது ஒரு சேமிப்புச் சாதனம். ஒரு குறுவட்டு இயக்ககமும், இணைக்கப்பட்ட ஒன்று. அழித் தெழுது ஒளிவட்டுப் பேழை களில் 650 மெகாபைட் வரை தரவுவைச் சேமிக்க முடியும்.

**PDD : பீடிடி :** கையாளத்தகு இலக்க முறை ஆவணம் என்று பொருள்படும் Portable Digital Document என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். மேக் ஓஎஸ் இயக்க முறைமை யில் குவிக்டிரா ஜிஎக்ஸ் மென் பொருளில் உருவாக்கப்பட்ட ஒரு வரைகலைக் கோப்பு. இக் கோப்புகள், அச்சுப்பொறியின் தெளிவு சாரா வடிவமைப்பில் சேமிக்கப்படுகின்றன. பயன் படுத்தப்படும் அச்சுப்பொறி யின் உச்ச அளவு தெளிவு நிலை யில் அச்சிடப்படுகின்றன. ஆவணத்தில் பயன்படுத்தப் பட்ட மூல எழுத்துருக்களை அப்படியே அச்சில் பெறலாம். எனவே பீடிடி ஆவணங்களை அவை உருவாக்கப்பட்ட கணினி அல்லாத பிற கணினி களிலும் அச்சிட முடியும்.

**.pdf : .பீடிஎஃப் :** அடோப் சிஸ் டம்ஸ் உருவாக்கிய கையாளத் தகு ஆவண வடிவாக்க (Portable Document Format) முறையில் குறியாக்கம் செய்யப்பட்ட ஆவணங்களை அடையாளம் காட்டும் கோப்பு வகைப்பெயர். (file extension). ஒரு .பீடிஎஃப் கோப்பினை திரையில் பார்வை யிட அல்லது அச்சிட, அடோப் அக்ரோபேட் ரீடர் என்னும் இலவச மென்பொருள் உள்ளது.

**PDM : பீடிஎம் :** "துடிப்புக் கால ஏற்ற இறக்கம்" எனப் பொருள் படும் "Pulse Duration Modulation" என்ற ஆங்கிலச் சொற்றொட ரின் தலைப்பெழுத்துச் சுருக் கம். இந்தத் துடிப்புக் கால ஏற்ற இறக்கத்தில், ஒரு துடிப்பின் கால நீட்சியானது மாறுபடு கிறது. இது "பீஏஎம்" (Pam), "பீபீஎம்" (PPM) என்பவற்றுக்கு வேறுபட்டது.

**PDP** : பீடிபீ : ஒரு வகைக் கணினி. டிஜிட்டல் எக்யூப் மென்ட் கார்ப்பரேஷன் (Digital Equipment Corporation) என்ற அமைவனம் தயாரிக்கும் கணினிகளின் பெயர்.

**PDS** : பீடிஎஸ் : 1. நேரடி செயலிச் செருகுவாய் எனப் பொருள்படும் Processor Direct Slot என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். மெக் கின்டோஷ் கணினிகளில் மையச் செயலகத்தின் சமிக்கை களோடு நேரடியாக இணைக்கக் கூடிய விரிவாக்கச் செருகு வாயைக் குறிக்கிறது. ஒரு கணினியில் செயல்படும் மையச் செயலியைப் பொறுத்து பல்வேறு எண்ணிக்கையிலான பின்கள் மற்றும் பல்வேறு சமிக்கைத் தொகுதி கொண்ட பல்வேறு வகை பீடிஎஸ் செருகுவாய்கள் உள்ளன. 2. இணைநிலை தரவு கட்டமைப்பு என்று பொருள் படும் Parallel Data Structure என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறுக்கம். ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினிகளில் மூலக்கோப்பகத்தில் (Root Directory) மறைத்து வைக்கப் பட்டுள்ள ஒரு கோப்பு. ஆப்பிள் ஷேர் நிரலின்கீழ் பகிர்ந்து கொள்ளப்படும் கோப்பு இது. பல்வேறு கோப்புறைகளின் அணுகு சலுகைத் (Access Privilege) தரவுவைக் கொண்டிருக்கும்.

**.pe** : .பீஇ : ஓர் இணைய தள முகவரி பெரு நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**peak load** : உச்சச் சுமை.

**peak volume** : உச்ச ஒலி அளவு.

**.pe.ca** : .பீஇ.சிஏ : ஓர் இணைய தள முகவரி கனடா நாட்டின் பிரின்ஸ் எட்வார்டு தீவுகளைச் சார்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**pedagogical development** : கற் பித்தல் நெறிமுறை.

**PEEK** : கூர்நோக்கு:கணினியின் செயல்முறைப்படுத்தத்தக்க நினைவகத்தில் அமைவிடம் எதனையும் கூர்ந்து நோக்கு வதற்குச் செயல்முறையாளரை அனுமதிக்கிற கணினி மொழி நிரல்.

**peek-a-boo system** : துளை காண் முறை : அட்டைகளை ஒன்றன்மேல் ஒன்று அடுக்கி வைத்து அவற்றிலுள்ள ஒரு படித்தான அமைவிடங்களில் துளைகள் இருக்கின்றனவா,

இல்லையா என்பதைச் சரி பார்க்கும் முறை.

peep : எச்சரிக்கையொலி.

peer : சக : தகவல் தொடர்புகளில் ஒரே வரைமுறை அளவில் உள்ள வேறொரு இயங்கும் அலகு.

peer to peer : சம உரிமை; சகாவுக்குச் சகா; சமனிக்குச் சமனி.

peer-to-peer architecture : சம உரிமைக் கட்டுமானம் : தரவு தொடர்புக்கும் தரவுவைப் பகிர்ந்துகொள்வதற்கும் ஒரே நிரலை அல்லது ஒரே வகையான நிரலைப் பயன்படுத்துகின்ற இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கணினிகள் பிணைக்கப்பட்ட ஒரு பிணையம். சமனி (peer) என அழைக்கப்படும் ஒவ்வொரு கணினியும் சமமான கடப்பாடுகளைக் கொண்டவை. பிணையத்தில் ஒவ்வொரு கணினியும் பிறவற்றுக்கு வழங்கனாகச் செயல்படுகின்றன. கிளையன்/வழங்கன் கட்டுமானத்தில் உள்ளதுபோல் ஒரு தனி கோப்பு வழங்கன் இப்பிணையத்தில் தேவையில்லை. எனினும் தரவு போக்குவரத்து அதிகமாக இருக்கும்போது கிளையன்/வழங்கன் அமைப்பினைப்போல் செயல்திறன் இருக்காது. இக்கட்டுமானம் சம உரிமைப் பிணையம் (peer-to-peer network) என்றும் அழைக்கப்படும்.

peer-to-peer communications : சம உரிமைத் தகவல் தொடர்பு : அடுக்கு நிலைக் கட்டுமான அடிப்படையில் அமைந்த ஒரு பிணையத்தில் ஒரே தகவல் தொடர்பு மட்டத்தில் செயல்படக்கூடிய சாதனங்களுக்கிடையேயான தகவல் பரிமாற்றம். ஒன்று வழங்கன் (server) இன்னொன்று கிளையன் (client) என்கிற பாகுபாடு இதில் இல்லை.

peer-to-peer network : சகாவுக்கு சகா பிணையம் : அனைத்து பயனாளர்களும் அனைத்துப் பணி நிலையங்களில் தரவுகளை அணுக அனுமதிக்கும் குறும்பரப்பு பிணையம். அர்ப்பண கோப்பு வழங்கிகள் தேவைப்படாது. ஆனால் பயன்படுத்தப்படலாம்.

PEL : பீஈஎல் : படப்புள்ளி.

pen-based computing : பேனா சார்ந்த கணிப்பு : கணினியில் கையெழுத்து மற்றும் அடையாளங்களை நுழைக்க பேனாவைப் பயன்படுத்துதல்.

Pen Carriage : பேனாச் சகடம்.

pen computer : பேனாக் கணினி : முதன்மை உள்ளீட்டுச் சாதனமாக விசைப்பலகைக்குப் பதி

லாக பேனா (எழுத்தாணி) பயன்படுத்தப்படுகிற கணினி வகை. பேனாக் கணினி பெரும்பாலும் மிகச்சிறியதாக கையடக்கமான சாதனமாக இருக்கும். எல்சிடி திரை போன்ற குறைகடத்தி அடிப்படையிலான தட்டை வடிவ திரையகம் கொண்டவை. பேனா உள்ளீட்டுச் சாதனத்தில் பணியாற்றுவதற்கென்றே சிறப்பாக வடிவமைக்கப்பட்ட தனியான இயக்க முறைமையில் செயல்படும். அல்லது இத்தகு சிறப்புப் பயன் சாதனத்துக்கென்றே உருவாக்கப்பட்ட தனிப்பட்ட இயக்க முறைமையில் செயல்படும். சொந்த இலக்கமுறைத் துணைவர்கள் (Personal Digital Assistants) எனப்படும் நவீன கணினி வகையின் முன்னோடி மாதிரிகளாக பேனாக் கணினிகள் விளங்குகின்றன.

**Pen Plotter : பேனா வரைவி :** பார்க்க : வரைவி (Plotter), முரசு வரைவி (Drum Plotter). இது, நிலை மின்னியல் வரைவிலிருந்து (Electrostatic Plotter) வேறுபட்டது.

**penpoint : பென்பாயிண்ட் :** கோ கார்ப்பரேஷன் உருவாக்கிய இயக்க அமைப்பு. கையால் எழுதும் உள்ளீடுக்கு இடைமுகத்தை அறிவது. டாஸ் ஏற்புடை கோப்பு அமைப்பை அது பயன்படுத்துகிறது. ஆனால் டாஸ் பயன்பாடுகளை ஏற்பதில்லை. எழுதுபவரின் பேனா வீச்சுகளின் போக்கு, வேகம் மற்றும் ஒழுங்கு ஆகியவை ஆராய்ந்து ஏற்கப்படுகின்றன.

**pentium : பென்டியம் :** மார்ச்சு 1993இல் இன்டெல் நிறுவனம், இன்டெல் ஐ486 செயலிக்கு வாரிசாக அறிமுகப்படுத்திய புதிய நுண்செயலி. சிஸ்க் (CISC) அடிப்படையிலான நுண் செயலி. 33 இலட்சம் மின்மப் பெருக்கிகளைக் கொண்டது. 32 பிட் (துண்மி) முகவரிப் பாட்டை, 64 பிட் (துண்மி) தரவு பாட்டை, உள்ளிணைக்கப்பட்ட இரண்டு 8-கேபி நிலை-1 (L1) இடை மாற்றகம் ஆகியவை கொண்டது. முறைமை மேலாண்மைப் பாங்கு உண்டு. இதன்மூலம் கணினி மையச் செயலகம் தொடர்பிலாப் பணி செய்யும்போதும் எப்பணியுமின்றி வாளா இருக்கும்போதும் சில முக்கிய கணினி உறுப்புகளை மெதுவாக இயக்க அல்லது நிறுத்திவிட நுண்செயலியால் முடியும். தரவு நம்பகத்தன்மை, செயல்பாட்டு மிகைமைச் சரிபார்ப்பு ஆகிய வசதிகளும் உள்ளிணைக்கப்பட்டுள்ளன.

**Pentium Pro : பென்டியம் புரோ :** நவம்பர் 1995இல் இன்டெல் வெளியிட்ட 150-200 மெகா ஹெர்ட்ஸ் வேக 32 பிட் (துண்மி) செயலிகளின் குடும்பம். 8086 குடும்பச் செயலிகளின் அடுத்த தலைமுறை செயலிகளாகப் பென்டியம் புரோ விளங்கியது. பென்டியம் செயலிகளின் அடுத்தகட்ட வளர்ச்சி ஆகும். 32 பிட் (துண்மி) இயக்க முறைமைகளும் பயன்பாடுகளும் இதில் செயல்படும். இந்த வரிசையில் அண்மைக் காலத்தில் வெளியிடப்பட்டுள்ள செயலி பென்டியம் 4 ஆகும். 1.7 GHz வேகத்தில் செயல்படுகிறது.

**pentium upgradable : பென்டியமாய் மேம்படுத்தத்தகு :** 1. பென்டியம் வகைச் செயலியைப் பொருத்த முடிகிற ஐ486 தாய்ப் பலகை. 2. பென்டியம் செயலி பொருத்தி பென்டியம் வகை பீசியாய் மேம்படுத்த முடிகிற 486 பீசி.

**peopleware : அலுவலாளர்கள்; மனித வளம் :** செயல்முறைகளை வடிவமைத்தல், கணினிச் சாதனங்களை இயக்கிப் பேணி வருதல் போன்ற பணிகளைச் செய்கிற அலுவலர்கள்.

**pepper board : மிளகு அட்டை :** நெம்பர் நைன் கம்ப்யூட்டர் கார்ப்பரேசன் உருவாக்கிய பீசி-க்களுக்கான வரைகலை காட்சி அட்டைகளின் குடும்பம். கேட் (CAD) மற்றும் உயர் வரைவு வரைகலை பயன்பாடுகளுக்குத் தேவைப்படும் அதிகத் தெளிவான உருவங்களை வழங்குகிறது.

**perfective : முழுமையாக்கல்.**

**perforator : துளையிடு விசை; துளைப்பி :** காகித நாடாவில் துளையிடுவதற்கான விசைச் சாதனம்.

**perform : நிறைவேற்று; செயலாற்று :** ஒரு கணினியில் நிரல்களை நிறைவேற்றுதல்.

**performance : நிறைவேற்றத் திறன்; செயலாற்றல் :** ஒரு பொறியமைவின் மொத்த உற்பத்தித் திறனை அறுதியிடுவதற்கான முக்கியக் காரணி. இது பெரும்பாலும், அணுகு வசதி, வெளிப்பாடு, நிறைவேற்றக் காலம் ஆகியவற்றின் மூலம் தீர்மானிக்கப்படுகிறது.

**performance monitor : செயற்பாட்டு முகப்பு; நிறைவேற்ற அறிவிப்பி; செயலாற்றல் கண்காணிப்பி :** ஒரு கணினியினால் நிறைவேற்றப்படும் பணிகளின் அளவுகளைக் கண்காணித்துக் காட்டும் செயல்முறை.

**perfory** : துளைப்பட்டை : விசிறி மடிப்புக் கணினிக் காகிதத்தின் இரு பக்கங்களிலும் உள்ள, பிரித்தெடுக்கத்தக்க துளையிட்ட பட்டைகள்.

**perfs** : துளைகள் : குண்டூசி ஊட்டு விளிம்புகளை அகற்றி விட்டு தொடர் காகிதத்தை தனித்தனிப் பக்கங்களாகக் கிழித்தெடுப்பதற்கு உதவக் கூடிய துளைகள்.

**period** : காலம்; நேரம் : ஓர் அதிர்வலை ஒரு முழுசுழற்சிக்கு எடுத்துக்கொள்ளும் நேரம். ஓர் அதிரும் மின்அலையில் திரும்ப நிகழ்வுகளுக்கு இடையே உள்ள காலஇடவெளி. *f* என்பது அதிர் வின் அலைவுஎண் (ஹெர்ட்ஸில்), t என்பது நேரம் (வினாடியில்) எனில், $t=1/f$ ஆகும்.

**periodic reports** : காலமுறை அறிக்கை: பயன்படுத்துவோருக்கு ஒழுங்கான முறையில் தகவல் களை அளிக்கிற அறிக்கை.

**period, retention** : தக்கவைப்புக் காலம்.

**Peripheral** : வெளிப்புற; சுற்றப் பட்ட; வெளிப்பட்ட : கணினி யுடன் இணைக்கப்படும் முகப்பு, விசைப்பலகை, அச்சுப் பொறி, பிளாட்டர், வட்டு அல்லது நாடா இயக்கி, வரைகலை டேப்லெட், ஸ்கேனர், ஜாய்ஸ் டிக், பேடில் மற்றும் சுட்டி எந்த ஒரு வன்பொருள் சாதனமும்.

**peripheral device** : வெளிப்புறச் சாதனம் : ஒரு கணினி அமைப் பால் மையச் செயலகத்தைத் தவிர்த்த வெளிப்புற தகவல் தொடர்பினை வழங்கும் எந்த ஒரு கருவி அலகும், மையச் செயலக அல்லது அமைப்புப் பெட்டியின் வெளிப்புறத்தில் இணைக்கப்படுவதால் அவற்றை வெளிப்புறச் சாதனங் கள் என்று அழைக்கிறோம்.

**Peripheral equipment** : புற நிலைக் கருவி; புறநிலைச் சாதனம் : ஒரு கணினியமைவில் மையச் செயலகத்திலிருந்து வேறுபட்டுள்ள புறநிலைச் செய்தித் தொடர்புக்கு வசதி செய்து கொடுக்கிற சாதனங் களின் ஓர் அலகு. மைய செயலகத்தின் புறப்பகுதியுடன் இணைக்கப்பட்டிருப்பதால் இவை "புறநிலைச் சாதனங்கள்" எனப்படுகின்றன. எடுத்துக் காட்டு : உட்பாட்டு/வெளிப் பாட்டு அலகுகள்; துணைச் சேமிப்பு அலகுகள்; அட்டைப் படிப்பி தட்டச்சுப்பொறி; வட்டுச்சேமிப்பு அலகு.

**peripheral equipment operator** : புறநிலைச் சாதன இயக்குநர் :

சந்தடி மிகுந்த ஒரு கணினிக் கூடத்தில், கணினி இயக்கு நருக்கு கணினியின் சேர்முனைப் (console) பொறுப்பு குறித் தளிக்கப்படுகிறது. அவர் அதை விட்டுமிக அரிதாகவே அப்பால் செல்கிறார். வட்டு அடுக்கு களை ஏற்றி இறக்கவும், நாடாக் களைப் பொருத்தவும், அட்டை களை அடுக்கவும், வெளிப்பாடு களுக்கு முத்திரையிடவும், பல் வேறு உட்பாட்டு/வெளிப் பாட்டுச் சாதனங்களை இயக்கவும் கூடுதல் ஆட்கள் உதவுகிறார் கள். இவர்கள் பொதுவாகப் புறநிலைச் சாதன இயக்குநர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள்.

**peripheral power supply** : மாற்று மின்வழங்கி : ஒரு கணினி அல்லது ஒரு சாதனத்துக்கு வழங்கப்படும் வழக்கமான மின்வழங்கியில் பழுதேற்படும் போது மாற்று ஏற்பாடாக வைக்கப்பட்டுள்ள துணை நிலை மின்வழங்கி.

**peripherals** : வெளிப்புறக் கருவி கள் : ஒரு கணினி அமைப்பின் உள்ளீடு/வெளியீட்டுச் சாதனங் கள் மற்றும் துணை நிலை சேமிப்பு அலகுகள்.

**Periphery** : சுற்றுவரை.

**Perl** : பேர்ல் : ஒரு கணினி மொழி. செய்முறைப் பிழிவு மற்றும் அறிக்கை மொழி என்று பொருள்படும் Practical Extraction and Report Language என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். சி-மொழி மற்றும் யூனிக்ஸின் பல்வேறு பயன் கூறுகளின் அடிப்படையில் அமைந்த நிரல் மாற்றி (Interpreter) அடிப்படையிலான மொழி. உரைக் கோப்பு களிலிருந்து தகவலைப் பிரித் தெடுக்க மிகவும் திறன்வாய்ந்த, சரம் கையாளும் வசதிகளைக் கொண்டது பேர்ல் மொழி. சொற்களை இணைத்து ஒரு சரத்தைத் தொடுத்து அதனை ஒரு கட்டளை வடிவில் செயல் தளத்துக்கு (shell) அனுப்பும் திறனுள்ள மொழி. எனவே, பேர்ல் பெரும்பாலும் முறைமை மேலாண்மைப் பணிகளுக்கு ஏற்றதாகக் கருதப்படுகிறது. பேர்ல் மொழியில் எழுதப்படும் ஒரு நிரல் உரைநிரல் (script) எனப்படும். அமெரிக்க நாட்டு நாசா நிலையத்தின் பொறி உந்துதல் ஆய்வுக்கூடத்தில் லேரி வால் (Larry Wall) என் பவரால் வடிவமைக்கப்பட்டது.

**permanent font** : நிலையான அச்செழுத்து : அச்சுப்பொறி நிறுத்தப்படும்வரை அச்சுப்பொறி யின் நினைவகத்தில் தங்கியுள்ள அச்செழுத்து மென்பொருள்.

**permanent storage** : நிலைச் சேமிப்பி; நிலைத் தேக்கம்.

**permanent swap file** : நிலைத்த மாறுகொள் கோப்பு : *விண்டோஸ் இயக்க முறைமையில், மெய்நிகர் நினைவகச் செயல்பாடுகளுக்காகப் பயன்படுத்தப்படும் தொடர்ச்சியான வட்டுப் பிரிவுகளில் எழுதப்பட்ட ஒரு கோப்பு.*

**permission** : அனுமதி : *ஒரு பிணைய முறை அல்லது பல் பயனாளர் கணினி அமைப்புகளில் தன்னுடைய பயனாளர் கணக்கு மூலமாக ஒரு தரவுவை/வசதியை அணுகிப் பெற ஒரு குறிப்பிட்ட பயனாளருக்கு வழங்கப்படுவது. இத்தகைய அனுமதிகளை முறைமை நிர்வாகி அல்லது அதிகாரம் தரப்பட்ட வேறு நபர் பயனாளருக்கு வழங்குகிறார். இந்த அனுமதிகள் பற்றிய தரவு மையக் கணினியில் பெரும்பாலும் அனுமதிக் குறிப்பேடு permission log என்ற கோப்பில் சேமித்து வைக்கப்படுகின்றன. பயனாளர் கணினி அமைப்பில் ஒரு குறிப்பிட்ட வளத்தை (தரவு/வசதி) அணுக முற்படும் போது அனுமதிக் குறிப்பேட்டில் சரி பார்க்கப்பட்டு முடிவெடுக்கப்படுகின்றன.*

**permission, access** : அணுகு அனுமதி.

**permutation** : வரிசை மாற்ற வகை : *ஒரு பெரிய தொகுதியில் உள்ள பொருள்களின் ஒரு வகையான சேர்ப்பு முறை. சான்றாக, 1, 2, 3 என்னும் தொகுதி எண்களில் 6 வகையான பெர்முட்டேஷன்களைச் செய்ய முடியும். 12, 21, 13, 31, 23 மற்றும் 32.*

**perpendicular recording** : செங்குத்துப் பதிகை : *காந்த ஊடகங்களின் சேமிப்புத் திறனை அதிகரிப்பதற்கான ஒரு வழிமுறை. இம்முறையில் பதிவு செய்யும் தளத்துக்குச் செங்குத்து திசையில் அமையும் காந்தத் துருவங்களின் போக்கு, துண்மி (பிட்) மதிப்புகளைத் தீர்மானிக்கின்றன.*

**Persistence** : உறுதிப்பாட்டுத் திறன்; நீடிப்பாற்றல் : *ஒரு செறிவற்ற எரியத்தின் (Phosphor) ஒளியாற்றல் நீடிப்புத் திறன். ஓர் எரியத்திற்கு எலெக்ட்ரான் துப்பாக்கிகள் மூலம் கிளர்ச்சியூட்டிய பிறகு அது மங்கத் தொடங்குவதால், அது மிகவும் மெதுவாக மங்குவதற்கு ஒரு நீண்ட உறுதிப்பாட்டுத் திரை உதவுகிறது.*

**persistent data : நிலைத்த தரவு :** தரவுத் தளத்திலோ, நாடா போன்ற சேமிப்புச் சாதனங்களிலோ ஒருமுறை பதியப்படும் தரவு அடுத்த முறை அணுகும்போது அழிந்து விடாமல் நிலைத்திருத்தல்.

**persistent storage : நிலைத்த சேமிப்பு :** ரோம் (ROM) போன்ற நினைவகச் சேமிப்புச் சாதனங்களில் மின்சாரம் நிறுத்தப்பட்ட பின்னும் அழிந்துவிடாமல் காப்பாற்றப்படும் தரவு.

**personal and personality interview : நேரடி மற்றும் ஆளுமைக்கான நேர்காணல்.**

**personal communication : தனி வழி தகவல் தொடர்பு.**

**Personal computer : சொந்தக் கணிணி; தனிமுறைக் கணிணி :** நியாயமான விலையில் கிடைக்கும் நுண்கணினியமைவு. இது சொந்தப் பயன்பாட்டுக்கு உரியது. வணிகப் பயன்பாட்டுக்கு உரியதன்று.

**Personal computing : சொந்தக் கணினி முறை :** தரவுகளைப் பெறுதல் அல்லது பதிவு செய்தல் போன்ற பயன்பாடுகளுக்காகத் தனிநபர்கள், ஒரு சொந்தக் கணிணியை-பொதுவாக ஒரு நுண்கணினியைப் பயன்படுத்துதல். இது பெரும்பாலும் தானியங்கி விரைவுக் காசாளர் எந்திரங்களுடன் (Automatic Teller Machines) பயன்படுத்தப்படுகிறது.

**personal finance manager : சொந்தக் கணக்கு மேலாளர் :** பணம் கொடுத்த ரசீதுகள், காசோலைகள் போன்ற எளிய வரவு-செலவுக் கணக்கு வைப்புப் பணிகளுக்கு உதவுகின்ற ஒரு மென்பொருள் பயன்பாட்டுத் தொகுப்பு.

**personal form letter : தனியாள் படிவக் கடிதம்.**

**Personal Identification number :** தனியாள் அடையாள எண்.

**Personal Information Manager (PIM) : தனி நபர் தகவல் மேலாளர் (பிஐஎம்) :** சொற்பகுதி, எண் தரவு ஆகியவற்றை குறிப்புகள், 'பட்டியல்கள் குறிப்புரைகள் மற்றும் பலதரப்பட்ட பிற வகைகளில் இறுதிப்பயனாளர்கள் சேமித்து ஒழுங்குபடுத்தி, திரும்பப் பெறுவதற்கான மென்பொருள் தொகுப்பு.

**Personalized form letter : உருப் படிவக் கடிதம் :** ஒரு சொல் செய் முறைப்படுத்தும் பொறியமைவினால் அல்லது ஓர் இணைப்பு அச்சடிப்புச் செயல்முறையினால் கணினிவழி உருவாக்கப்பட்ட படிவக் கடிதம்.

**personal video recorder (PVR) :** தனியாள் ஒளிக்காட்சிப் பதிப்பி.

**Personal Workstation :** தனிநபர் பணி நிலையம் : தனிநபர் கணினி அல்லது பணி நிலை யங்கள் போன்றதே.

**perspective view :** தொலை யணிமைக் காட்சி : கணினி வரைகலையில் பொருள்களை முப்பரிமாணத்தில் (உயரம், அகலம், ஆழம்) காட்டும் ஒரு காட்சிமுறை. ஆழத்தன்மையை விருப்பப்படும் அளவுக்கு அமைத்துக் கொள்ளும்முறை. மனிதக் கண்களுக்கு ஓர் உண்மையான காட்சியைக் காண்பதுபோன்ற தோற்றத்தை ஏற்படுத்தும்.

**PERT :** பெர்ட் : திட்ட மேலாண் முறை : செயல்முறை மதிப்பீடு மற்றும் மறு ஆய்வு உத்தி என்று பொருள்படும் "Programme Evaluation and Review Technique" என்ற ஆங்கிலச் சொற்றொட ரின் தலைப்பெழுத்துச் சுருக் கம். இது, ஒரு செய்முறையின் ஒவ்வொரு நடவடிக்கைக்கும் தேவைப்படும் காலவரம்பினை யும், ஒவ்வொரு நடவடிக்கை யின் முடிவுக்கும், அடுத்து வரும் நடவடிக்கையின் செய லுக்குமிடையிலான தொடர்பு களையும் பகுப்பாய்வு செய்வதை உள்ளடக்கிய நீண்ட காலப் பேரளவுத் திட்டங் களைக் கட்டுப்படுத்துவதற்கான ஒரு மேலாண்மை உத்தி.

**PERT chart :** பெர்ட் வரைபடம் : காலத்திற்கு எதிரான பணிக் கூறுகளின் கூட்டுச் சார்புடை மைகளைக் குறிக்கும் வரை படம். இது வட்டங்களாகவும், இணைப்புக் கோடுகளாகவும் வரைகலை முறையில் காட்டப் பட்டிருக்கும்.

**peta :** பீட்டா : ஒரு குவாட்ரில் லியனைக் ($10^{15}$) குறிக்கும். P என்ற எழுத்தால் குறிப்பர். 2-ஐ அடியெண்ணாகக் கொண்ட இரும எண் முறையில் பீட்டா என்பதன் மதிப்பு 1, 122, 899, 906, 842, 624 ஆகும். இரண்டின் அடுக்காகக் கூறுவதெனில் $2^{50}$ எனலாம்.

**petabyte :** பீட்டாபைட் : PB என்ற எழுத்துகளால் குறிக்கப் படும். ஒரு குவாட்ரில்லியன் பைட்டுகளைக் (1, 125, 899, 906, 842, 624) குறிக்கிறது.

**PET computer :** பெட் கணிணி : Personal Electronic Transaction Computer என்பதன் குறும் பெயர். 1977 இல் கம்மோடர் நிறுவனம் சிபி/எம் மற்றும் ஃபிளாஸ்டிக் சார்ந்த தனி நபர் கணினியை அறிமுகப்

படுத்தியது. முதல் மூன்று தனி நபர் கணினிகளில் இதுவும் ஒன்று.

**Petri nets :** பெட்ரி வலைகள் : ஒரு போகு ஒருங்கிணைவுடன் கூடிய பொறியமைவுகளைக் குறிப்பதற்கான பயனுள்ள மாதிரி உருவம்.

**.pg :** .பீஜி : ஓர் இணைய தள முகவரி பாப்புவா நியூ கினியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**PGP :** பீஜிபீ : மிகச் சிறந்த அந்தரங்கம் என்று பொருள்படும் Pretty Good Privacy என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஃபிலிப் ஸிம்மர்மான் (Philip Zimmermann) உருவாக்கிய ஆர்எஸ்ஏ படிமுறைத் தருக்கத்தின் அடிப்படையில் அமைந்த பொதுத்திறவி மறையாக்க (Public Key Encryption) முறைக்கான ஒரு நிரல். பீஜிபீ மென்பொருளின் பராமரிப்பு உதவியில்லாத இலவசப் பதிப்பும், உதவியுள்ள வணிகப் பதிப்பும் கிடைக்கின்றன.

**.ph :** .பீஹெச் : ஓர் இணைய தள முகவரி ஃபிலிப்பைன்ஸ் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**phase :** அலையிடைப்படி; மாறுபாட்டுக் கோணம்; அலை ஒப்புப் படிநிலை : ஒரே அலைவரிசை உள்ள இரு சமிக்கைகளுக்கு இடையே உறவு நிலையை ஒப்பிடும் அளவீடு. இது கோணங்களில் அளக்கப்படுகிறது. ஒரு முழு அலைவுச் சுழற்சிக்கு 360 டிகிரிகள். ஒரு சமிக்கை இன்னொன்றை 0 முதல் 180 டிகிரிகள் வரை முந்தவோ பிந்தவோ முடியும்.

**Phase change recording :** நிலை மாற்றப் பதிவிடல் : ஒளிமுறை பதிவாகும் தொழில் நுட்பம். உலோக மேற்பரப்பின் படிகப் பகுதியில் மாற்றியமைப்பதன் மூலம் துண்மியை உருவாக்க லேசர் பயன்படுத்தப்படுகிறது. படிக்கும்போது துண்மி ஒளியைப் பிரதிபலிக்கிறது அல்லது ஏற்றுக் கொள்கிறது.

**Phased conversion :** படிப்படி மாற்றம் : பழைய தரவு அமைப்பிற்குப் பதிலாகப் புதிய அமைப்பினைப் படிப்படியாகப் புகுத்துவதற்கான பொறியமைவு நிறைவேற்ற முறை. இது நேரடி மாற்றத்திற்கு (direct conversion) மாறுபட்டது.

**phase encoding :** அலையிடைப் படி குறியாக்கம் : 1. தொடர் முறை (Analog) சுமப்பி அலை

மீது இலக்க முறைத் தரவுவை ஏற்றும் செயலாக்க முறை. குறிப்பிட்ட கால இடவெளியில் சுமப்பியின் படிநிலைக் கோணத்தை மாற்றி, தரவு அனுப்புகையில் துண்மி (பிட்) அடர்வு அதிகரிக்கப்படுகிறது. 2. மின்காந்த சேமிப்புச் சாதனங்களில் தரவுவைப் பதியும் ஒரு வகைத் தொழில்நுட்பம். இந்த முறையில் தரவு சேமிப்பு அலகு இருபகுதிகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொன்று எதிரெதிர் துருவநிலை கொண்டதாக காந்தப்படுத்தப்படுகிறது.

**Phase locked :** நிலைபூட்டிய: ஒரு மின்னணு மின்சுற்றில் ஒரே நேரத்திய தாக்குதலைப் பராமரிக்கும் தொழில்நுட்பம். உள்ளீட்டு சமிக்கைகளிடமிருந்து மின்சுற்றுகள் அவற்றின் நேரத்தை அமைத்துக் கொள்கின்றன. மேலும், ஒரேநேரத்தில் எல்லாம் இயங்குகின்றனவா என்பதற்கான பதில்பெறும் மின்சுற்றுகளையும் அவை வழங்குகின்றன.

**Phase modulation :** நிலைக் குறிப்பேற்றம் : அனுப்பும் தொழில்நுட்பம் தரவு சமிக்கையை அதனைக் கொண்டு செல்லும் அமைப்புடன் சேர்க்கிறது. கேரியரின் நிலையை மாற்றியமைப்பதன் மூலம் இது செய்யப்படுகிறது.

**phase-shift keying :** படிநகர்வு குறியாக்கம் : தகவலைக் குறியாக்கம் செய்ய இணக்கிகளில் பயன்படுத்தப்படும் ஒரு தரவு தொடர்பு வழிமுறை. இலக்க முறைத் தரகவலை ஏந்திச் செல்ல ஒரு சுமிப்பி அலையின் படி நிலை நகர்வு, அடிப்படையாகக் கொள்ளப்படுகிறது. இந்த நுட்பத்தின் எளிய வடிவம், சுமப்பி அலையின் படிநிலை இருநிலைகளில் ஏதேனும் ஒன் றில் இருக்கும். 0 டிகிரி நகர்வு இருக்கும் அல்லது 180 டிகிரி நகர்வு இருக்கும். அலையின் படிநிலையை நேரெதிராக மாற்ற முடியும்.

**Pheripheral Slots :** புறநிலைத் துளை விளிம்புகள் : சில கணினிகளின் இல்லத்திற்குள் அமைக்கப்பட்டுள்ள வெற்றுத் துளை விளிம்புகள். இவற்றின் மூலம், வன்பொருள்களின் எண்ணிக்கை அதிகரிக்காமல் திறம்பாடுகளைப் பெருக்குவதற்கு, அச்சிட்ட மின்சுற்று வழி அட்டைகளைச் சேர்க்கலாம். மின்சுற்றுவழிப் பலகைகளைச் செருகுவதற்கான தாய்ப் பலகை குழிப்பள்ளங்கள்.

**phoenix BIOS :** ஃபோனிக்ஸ் பயாஸ் : ஃபோனிக்ஸ் டெக்னாலஜிஸ் நிறுவனம் தயாரிக்கும் ரோம் பயாஸ் (ROM

BIOS). ஐபிஎம் ஒத்தியல்புக் கணினிகளுக்கு உகந்தது. பீசி வார்ப்புக் கணினிகளுக்கான மிகவும் செல்வாக்குப் பெற்ற ரோம் பயாஸ். ஐபிஎம் ஒத்தியல் புக் கணினிகளிடையே, சந்தையில் அறிமுகப்படுத்தப்பட்ட வுடனேயேஃபோனிக்ஸ் மிகவும் புகழ்பெற்று விட்டது.

**phone connector** : பேசி இணைப்பி : நுண்பேசி அல்லது



பேசி இணைப்பி

ஒரு இணைதலைபேசி (Head phone) போன்ற ஒரு சாதனத்தை ஒரு கேட்பொலிக் கருவி அல்லது கேட்பொலித் திறனுள்ள தகவி ஆகியவற்றுடன் இணைக்கப் பயன்படும் ஓர் உடன் இணைப்பு.

**phone dialer** : தொலைபேசிச் சுழற்றி.

**phone hawk** : தொலைபேசிக் கொள்ளையன் : மோடெத்தின் மூலம் ஒரு கணினியை அமைத்து தரவுகளை நகலெடுப்பது அல்லது அழித்தலைச் செய்பவனைக் குறிப்பிடும் குழுஉச் சொல்.

**phoneme occurance** : சொல்லில் எழுத்து வருகை.

**Phonemes** : ஒலியன்கள் : மனிதர் பேசும்முறையில் அடங்கியுள்ள மாறுபட்ட ஒலிகள். பேசும் சொற்களின் மிகச்சிறிய அலகுகள். எடுத்துக்காட்டு : க், ச், ஷ்.

**phonetic key board** : ஒலியியல் விசைப்பலகை.

**Phonetic System** : ஒலிப்பியல் முறை : குரல் தகவல் (ஒலியன்கள்) அடிப்படையிலான தரவுகளைப் பயன்படுத்திப் பேச்சு மொழி போன்ற ஒலிகளை உண்டாக்கும் முறை.

**phonological analysis** : ஒலியமைப்புப் பகுப்பாய்வு.

**phosphor** : எரியம் : பூமியில் அரிதாகக் கிடைக்கும் பொருள். இது எதிர் மின்கதிர்க் குழலின் உள்முகப்பில் பூசுவதற்குப் பயன்படுகிறது. ஒரு செய்தி அறிவிப்பின் எலெக்ட்ரான் துப்பாக்கிகள் உண்டாக்கும் ஒளியினை இது இருத்தி வைத்துக் கொள்கிறது. திரையில் காணும் ஒவ்வொரு புள்ளியும் உண்மையில் ஒரு குறிப்

பிட்ட நேரம் ஒளிரக்கூடிய ஓர் எரியமே ஆகும். புள்ளிகள் ஓர் உருக்காட்சியை உருவாக்கப் பயன்படுகின்றன.

**photo composition** : ஒளிப்பட அச்சுக்கோப்பு : அச்செழுத்து களைக் கோப்பதற்கு மின்னணு வியல்செய்முறைப் படுத்து தலைப் பயன்படுத்துதல். அச் செழுத்துகளை வரையறுப்பதை யும், அமைப்பதையும், அதனை ஒளிப்படச் செய்முறைப்படித் தயாரிப்பதையும் இது உள்ளடக்கும்.

**photoCD** : ஃபோட்டோ சிடி; ஒளிப்பட சிடி; ஒளிப்படக் குறு வட்டு : கோடாக் நிறுவனம் உருவாக்கிய இலக்கமுறை யாக்கத் தொழில் நுட்பம், 35மிமீ சுருள், நெகட்டிவ்கள், படப்பலகைகள் (slides), வருடப்பட்ட படிமங்கள் ஆகிய வற்றை ஒரு குறுவட்டில் சேமிக்கும் முறை. கோடாக் ஃபோட்டோ சிடி இமேஜ் பேக் என்னும் கோப்பு வடிவாக்க முறை என்றழைக்கப்படுகிறது. சுருக்கமாக பீசிடி என்பர். பெரும்பாலான ஒளிப்பட, படச் சுருள் தொழிலகங்கள் இந்த சேவையை வழங்குகின்றன. ஃபோட்டோ சிடியில் சேமிக்கப் படும் படிமங்களை சிடி- ரோம் மற்றும் பீசிடி கோப்புகளைப் படிக்கும் மென்பொருள் உள்ள எந்தவொரு கணினியிலும் பார்க்கமுடியும். சிடி-க்களில் பதியப்பட்டுள்ள படிமங் களைப் பார்வையிடுவதற்கென வடிவமைக்கப்பட்ட எந்த வொரு கருவியிலும் இப் படி மங்களைக் காண முடியும்.

**photoconductor** : ஒளியில் கடத்தி : ஒளிபடும்போது கடத்தும் திறம் அதிகரிக்கின்ற ஒரு பொருள். ஒளியில் கடத்திகள் பெரும்பாலும் ஒளி யுணர்வுகளில் பயன்படுத்தப் படுகின்றன. ஒளியிழை வடங் களில் ஒளியை ஏற்று அதனை மின்துடிப்பாக மாற்றும் பணியை இவை செய்கின்றன.

**photoelectric devices** : ஒளிப்பட மின்னியல் சாதனங்கள் : கண்ணுக்குப் புலனாகும் அகச் சிவப்பு அல்லது புறவூதாக் கதிர் வீச்சின் விளைவாக ஒரு மின்னியல் சைகையினை உண்டாக்கும் சாதனங்கள்.

**photo editor** : ஒளிப்பட தொகுப்பி : வருடப்பட்ட ஒளிப் படம் போன்ற படிமங்களை இலக்கமுறை வடிவில் கையாள் வதற்கான வரைகலைப் பயன் பாடு.

**photo pattern generation** : ஒளிப் படத் தோரண உருவாக்கம் :

ஒன்றன்மேல் ஒன்று படிந்துள்ள அல்லது அடுத்தடுத்துள்ள செவ்வகப் பரப்புகளின் ஒரு தோரணியில் ஒளிபடும்படி செய்து ஓர் ஒருங்கிணைந்த மின்சுற்று வழித் திரையை உண்டாக்குதல்.

**photo plotter** : ஒளிப்பட வரைவி: அச்சிட்ட மின்சுற்று வழிப் பலகை வடிவமைப்புக்கும், ஒருங்கிணைந்த மின்சுற்று வழித்திரைகளுக்கும் ஒளிப்பட முறைப்படி உயர்ந்த அளவு துல்லியமான கலைப் படைப்பு மாதிரிகளை உருவாக்குவதற்கான வெளிப்பாட்டுச் சாதனம்.

**Photo sensitive** : ஒளியுணர்வு.

**photo typesetter** : ஒளிப்பட அச்சுக் கோப்பி; ஒளி அச்சுக் கோப்பி : வாசகங்களைத் தொழில்முறையான உயர்தர அச்செழுத்துகளாக மாற்றக் கூடிய கணினிக் கட்டுப்பாட்டுச் சாதனம். பெரும்பாலான நூல்கள், ஒளிப்பட அச்சுக் கோப்பிகளில் அச்சுக்கோக்கப்படுகின்றன.

**photographic** : ஒளிப்படம்.

**photolithography** : ஃபோட்டோ லித்தோகிராஃபி : ஒரு சிப்புவில் உள்ள மின்சுற்றுப் பாதைகள் மற்றும் மின்னணுப் பொருள்களின் வடிவமைப்பை தகடின் மேற்பரப்புக்கு மாற்றுகின்ற லித்தோகிரஃபி நுட்பம். சிப்புவின் ஒவ்வொரு அடுக்குக்கும் ஒரு ஒளிப்பட மூடி உருவாக்கப்படும். தகட்டின் மீது ஒளி உணர் திரைப்படப் பூச்சு அளிக்கப்பட்டு ஒளிப்பட மூடி மூலம் ஒளிரும் ஒலியில் காட்டப்படும். தகடினைச் சென்றடையும் ஒளி, படத்தை கடினப்படுத்துகிறது. தகட்டை அமிலத்தில் அல்லது வெப்ப கியாஸ்களில் நனைத்தால் கடினப்படுத்தப்படாத பகுதி செதுக்கி எறியப்படுகின்றன.

**photomask** : ஒளிப்பட மூடி : ஒளிபுகக் கூடிய தகட்டின் தெளிவற்ற உருவம். ஒரு சாதனத்திலிருந்து வேறொன்றுக்கு ஒரு உருவத்தை மாற்ற வேண்டுமென்றால் ஒளி வடிகட்டி பயன்படுத்தப்படுகிறது.

**photomicrography** : ஒளிப்பட நுண்ணியல் : நுண்காட்டிப் படங்களை ஒளிப்படமெடுத்தல்.

**photon** : போட்டோன்; ஒளித் துகள் : ஒளியின் அடிப்படைப் பகுதிகள். அதன் மின்னணு இணைப்பகுதியைவிட அது சிறியது. ஆகவே போட்டோனிக் மின்சுற்றுக்குள்ளேயே அதனால் அதிக அளவு சிற்றுருவாக்க முடியும்.

**photonics** : ஒளிப்படவியல் : மின்சாரத்திற்குப் பதிலாக

ஒளியைப் பயன்படுத்தி எந்திர மின்சுற்றுகளை உருவாக்கிய அறிவியல்.

**photo-optic memory** : ஒளிப்பட-ஒளியியல் நினைவகம்; ஒளி ஊடக நினைவகம் : சேமிப்புக்காக ஒளியியல் ஊடகத்தைப் பயன்படுத்தும் நினைவகம். எடுத்துக்காட்டு : ஒளிப்படச் சுருளில் பதிவுசெய்வதற்கு ஒரு லேசரைப் பயன்படுத்தலாம்.

**photorealism** : நடப்பியல் ஒளிப் படம்; ஒளிப்பட நடப்பியல்; ஒளிப்பட எதார்த்தம் : ஒளிப் படத்துக்கு அல்லது நடப்பு வாழ்வின் தரத்துக்கு படங்களை/படிமங்களை உருவாக்குகின்ற செயலாக்கம். கணினி வரைகலையில் எதார்த்த ஒளிப் படத்திற்குத் திறன்மிக்க கணினிகள் தேவை. சிக்கலான கணிதத்தின் அடிப்படையிலான நுட்பம்மிக்க மென்பொருளும் தேவை.

**photorealistic image synthesis** : ஒளிப்பட நிகழ்வுணர் உருவப் பிரிவு : கணினி வரைகலையில், வரையறை செய்வதற்கான தொரு படிவம். உண்மையான உருவத்தை அது உள்ளபடியே காட்டுகிறது. மேற்பரப்பு உள்ளமைப்பு, ஒளிமூலங்கள், இயக்கத் தடங்கள், பிரதி பலித்தல் போன்ற தன்மைகளை அது உள்ளடக்கியுள்ளது.

**photoresist** : ஒளித்தடுப்பு : செதுக்குருவ மின்கடத்தாச் சாதனங்களில் பயன்படுத்தப் படும் செய்முறை. இதில், ஒரு சிலிக்கன் தகட்டு வில்லையில், இருக்க வேண்டிய பகுதியைத் திரையிட்டு மறைத்து, ஆக்சிகர மான பரப்பு அகற்றப்படுகிறது.

**photosensor** : ஒளிப்பட உணர் கருவி : ஒளி உணர் சாதனம். ஒளி முறை நுண்ணாய்வு எந்திரத் தில் பயன்படுத்தப்படுவது.

**phrase search** : சொல்தொடர் தேடல்.

**phreak**[1] : அத்துமீறி : ஒரு தொலைபேசிப் பிணையம் அல்லது பிற பாதுகாக்கப்பட்ட கணினி அமைப்புகளின் அரண் களை உடைத்து நொறுக்குபவர் அல்லது அத்துமீறி உள்ளே நுழைபவர்.

**phreak**[2] : அத்துமீறல் : தொலை பேசிப் பிணையம் அல்லது கணினிஅமைப்புகள்-இவற்றின் அரண்களை உடைத்து நொறுக்கி அத்துமீறல்.

**physical** : பருப்பொருளான: மின்னணு அல்லது எந்திர நிலையிலான சாதனங்களைக் குறிப்பிடுகிறது.

**physical address** : பருப்பொருள் முகவரி : ஒரு பொருள் அல்லது சாதனத்தின் உண்மையான, எந்திர முகவரி.

**physical coordinates** : பருப் பொருள் ஒருங்கிணைப்புகள் : ஒளிக் காட்சியமைப்பின் ஒரு இடத்தின் ஒருங்கிணைப்புகள். இதுமேல் மூலையில் அளப் பதை ஒட்டி அளக்கப்படும். இது 0,0 என்று கூறப்படும்.

**physical design** : வடிவமைப்பு; பருப்பொருள் : சேமிப்புச் சாதனங்களில் தரவுகள் எவ் வாறு வைத்து வரப்படுகின்றன என்பதையும் அவை எவ்வாறு அணுகப்படுகின்றன என்பதை யும் குறிக்கும் சொல்.

**physical-image file** : பருநிலை படிமக் கோப்பு : குறுவட்டில் (சிடி-ரோம்) பதிவதற்காக வைத்துள்ள தரவுவை நிலை வட்டில் சேமித்து வைத்துள்ள கோப்பு. இவ்வாறு ஒரு கோப்பில் சேமித்து வைப்பது சில சிக்கல்களைத் தவிர்க்க உதவுகிறது. குறிப்பாக குறு வட்டில் எழுதும்நேரம் மிச்சமா கிறது. சிதறிக்கிடக்கும் கோப்பு களை தேடிப்பிடித்து தொகுத்து எழுதுவதற்காக எடுத்துக் கொள்ளப்படும் அதிகநேரம் தவிர்க்கப்படுகிறது.

**physical layer** : பருநிலை அடுக்கு : ஏழு அடுக்குகள் கொண்ட ஐஎஸ்ஓ/ஓஎஸ்ஐ அடுக்கின் முதல் அல்லது மிக அடியிலுள்ள அடுக்கு. முற்றிலும் வன்பொருளைச் சார்ந்தது. தரவுப் பரிமாற்றத்தில் ஈடுபட்டுள்ள இரு கணினிகளுக்கிடையே இணைப்பை ஏற்படுத்தி பரா மரிக்கும் பணிகளின் அனைத்துக் கூறுகளையும் கவனித்துக் கொள்கிறது. வட (cable) இணைப்பு, மின்சார சமிக்கை கள் மற்றும் எந்திர இணைப்பு கள் ஆகியவை இவ்வடுக்கின் வரன்முறைகளுள் சில.

**physical link** : பருப்பொருள் இணைப்பு : இரண்டு சாதனங் களுக்கிடையிலான மின்னணு இணைப்பு. தரவு மேலாண்மை யில், ஒரு பட்டியல் அல்லது பதிவகத்தில் உள்ள காட்டி வேறொரு கோப்பில் தரவு எந்த இடத்தில் உள்ளது என்பதை அது குறிப்பிடும்.

**physical lock** : பருநிலைப் பூட்டு : தரவுவை பயனாளர் அணுகுவதைத் தடுத்தல். பூட்டினைத் திறத்தல், மூடல், பொத்தான் அல்லது கோப்பு பாதுகாப்பு எந்திர அமைப்பு மூலம் வழங்கப்படுகிறது. நெகிழ்வட்டின்மேல் செய்வது போன்றது.

**physical memory** : பருநிலை நினைவகம் : ஒரு கணினி அமைப்பில் பொருத்தப் பட்டுள்ள மெய்யான நினை வகம். இது மெய்நிகர் நினை வகத்துக்கு (Virtual Memory) மாறானது. 4எம்பி மட்டுமே பருநிலை ரேம் (RAM) நினை வகம் பொருத்தப்பட்டுள்ள ஒரு கணினியில் 200 எம்பிவரை மெய்நிகர் நினைவகம் வைத்துக் கொள்ள முடியும்.

**Physical object** : பருநிலைப் பொருட்கள்.

**Physical parts** : பருநிலை உறுப்புகள்.

**physical record** : பருப்பொருள் பதிவேடு : உட்பாட்டுக்கான அல்லது வெளிப்பாட்டுக்கான தரவு அலகு. துளை அட்டை, நாடா வட்டகை, ஒரு வட்டில் பதிவுசெய்தல் போன்றவை இவ்வகையின. ஓர் பருப் பொருள் பதிவுநூல் ஒன்று அல் லது மேற்பட்ட தருக்க முறைப் பதிவுகள் அடங்கியிருக்கலாம்.

**physical security** : பருப்பொருள் பாதுகாப்பு : ஒரு கணினி மையத் தில் சாதனங்களை அணுகு வதைக் கட்டுப்படுத்துவதற் கான காப்புகள், சிறப்புக் குறி யீடுகள், பூட்டுகள், மணியொலி அமைப்புகள் ஆகியவை.

**Pi (pye & π)** : பை : "பை" என்ற ஒலிப்புடைய கிரேக்க எழுத்து. வட்டத்தின் விட்டத்திற்கும் சுற்று வரைக்குமுள்ள வீதத்தினைக் குறிக்கும் அடையாள எழுத்து. இதன் மதிப்பு எட்டு பதின்மத் தானங்கள்வரைக் கணக்கிடப் பட்டுள்ளது. π:3.14159265

**pica** : பிக்கா; அச்செழுத்து அளவீடு : 1. ஓர் அங்குலத்தில் ஆறுவரிகள் அடுக்கக்கூடிய அளவுள்ள அச்சுருப் படிவம்.

**picking device** : பதிவுச் சாதனம்; பொறுக்குச் சாதனம் : ஒரு காட்சித் திரையில் தரவுகளைப் பதிவு செய்வதற்குப் பயன்படுத்தப்படும் ஒளிப்பேனா, சுட்டிப் பொறி போன்ற உட்பாட்டுச் சாதனம்.

**pico** : பிக்கோ : நூறாயிரங் கோடியில் ஒரு பகுதி.

**pico computer** : பிக்கோ கணினி : ஒரு வினாடியின் நூறாயிரங் கோடியில் ஒரு பகுதி நேரத்தில் தரவுகளைச் செய்முறைப்படுத் தும் திறன்வாய்ந்த ஒரு கணினி.

**picoJava** : பிக்கோஜாவா : ஜாவா மொழி நிரல்களை நிறை வேற்றுகிற நுண்செயலி. சன் மைக்ரோசிஸ்

**pico second** : பிக்கோ வினாடி : ஒரு வினாடியில் நூறாயிரங் கோடியில் ஒரு பகுதி.

**PICS** : பிக்ஸ் : இணைய உள்ளடக்கத் தேர்வுக்கான பணித் தளம் எனப் பொருள்படும் Platform for Internet Content Selection என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். ஒரு மென்பொருளைப் பயன்படுத்தி இணையப் பயனாளர் ஒருவர் இணையத்திலுள்ள தமக்குப் பிடித்த தகவலடங்கிய குறிப்பிட்ட தளங்களைத் தாமாகவே தேடி அணுகுமாறு செய்ய முடியும். அதேவேளையில் விரும்பத்தகாத தகவலடங்கிய தளங்களைப் புறக்கணிக்குமாறும் செய்யமுடியும். இவ்வாறு தளங்களைத் தேர்வு செய்ய வெவ்வேறான தரமதிப்பீட்டு முறைகள் பயன்பாட்டில் உள்ளன.

**.pict** : .பிக்ட் : மெக்கின்டோஷ் கணினிகளில் பயன்படுத்தப்படும் பிக்ட் (PICT) வடிவாக்க முறையில் பதிவு செய்யப்படும் வரைகலைப் படிமக் கோப்புகளை அடையாளங் காட்டும் கோப்பு வகைப்பெயர்.

**PICT** : பிக்ட் : பொருள்நோக்கு முறையிலோ பிட்-மேப் முறையிலோ வரைகலைப் படிமங்களைச் சேமிப்பதற்கான ஒரு கோப்பு வடிவாக்க வரையறை. ஆப்பிள் மெக்கின்டோஷ் பயன்பாடுகளில் முதன்முதலாக பிக்ட் கோப்பு வடிவாக்க முறை பயன்படுத்தப்பட்டது. எனினும், பல ஐபிஎம் ஒத்தியல்புப் பயன்பாடுகளும் பிக்ட் கோப்புகளை படிக்க முடியும்.

**picture** : படம்.

**picture box** : படப் பெட்டி.

**picture element** : படத் துகள்; படப் புள்ளி.

**picture graph** : படவரைவு : பட்டைகளுக்குப் பதிலாகக் குறியீடுகளைப் பயன்படுத்தும் பட்டை வரைபடம்.

**picture in picture** : படத்துள் படம்.

**picture processing** : பட அலசல்.

**picture tube** : படக்குழல் : எதிர்மின் கதிர்க் கொடியைத் திருப்பி ஒளியியக்கத் திரைமீது விழச் செய்ய உதவும் அமைப்பு. இது தொலைக்காட்சிப் படக்குழலாகப் பயன்படுத்தப்படுகிறது.

**pie chart** : வட்ட வரைபடம் : தகவல்களைக் குறித்துக் காட்ட உதவும் வரைபடம். இதில் தகவல்கள் ஒரு வகை வட்ட வடிவில் வரிசைப்படுத்தப்படுகின்றன. இதனால் தகவலின் ஒவ்வொரு இனத்தையும் ஒருங்கிணைந்த தகவலாகக் கண்ணால் பார்க்கலாம்.

**piezoelectric** : மின் அமுக்கம் : மின்னழுத்தத்திற்கு உட்படும்

போது எந்திரவியல் அழுத்தத்திற்கு உள்ளாகிற அல்லது எந்திரவியல் அழுத்தத்திற்கு உட்படும்போது மின்னழுத்தத்தை உண்டுபண்ணுகிற சில படிகங்களின் பண்பியல்பு.

**piggyback board :** குட்டி துணைப் பலகை ; மின்சுற்று வழிப் பலகை : ஒரு பெரிய மின்சுற்று வழிப் பலகைக்குக் கூடுதல் ஆற்றல் சேர்ப்பதற்காக அந்தப் பெரிய மின்சுற்றுவழிப் பலகையில் பொருத்தப்படும் ஒரு சிறிய அச்சிட்ட மின்சுற்று வழி.

**piggyback file :** துணைக் கோப்பு; குட்டிப் பைக் கோப்பு : ஒரு கோப்பு முழுவதையும் படியெடுக்காமல் கோப்பின் முடிவில் கூடுதல் பதிவுகளை ஏற்றுக்கொள்ளக்கூடிய கோப்பு.

**PILOT :** பைலட் (ஒரு கணினி மொழி): வாசகம் அடிப்படையிலான கணினி மொழி. முதலில், கணினி உதவியுடனான அறிவுறுத்தத்திற்கான ஓர் எழுத்தாளர் மொழியாக வடிவமைக்கப்பட்டது. தொடக்க மாணவர்களுக்கு கணினிச் செயல்முறைப் படுத்துதலைக் கற்பிக்கவும் பயன்படுகிறது. இதில், ஆற்றல் வாய்ந்த, சொற்றொடரியல் உரையாடல் செய்முறைப்படுத்தும் கட்டளைகள் அடங்கியுள்ளன.

**pilot method :** வெள்ளோட்ட முறை : விரிவான நடவடிக்கைப் பரப்பில் அல்லாமல், ஒரே பகுதியில் புதிய கணினி யமைவினைக் கையாள முயலும் நடவடிக்கை. எடுத்துக் காட்டு : ஓர் அமைவனத்தில் புதியதொரு தரவு பொறியமைவினைப் புகுத்தி, அது வெற்றிகரமாக இயங்குகிறது என்பதைக் கண்டறியும்வரை அதனை அந்த அமைவனத்தின் ஒரு பகுதி மட்டுமே பயன்படுத்துமாறு செய்தல்.

**pin :** பின் : "சொந்த அடையாள எண்" என்று பொருள்படும் "Personal Identification Number" என்ற ஆங்கிலச் சொல்லின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**pinch roller :** பிஞ்ச் ரோலர் : ஒரு நாடா இயக்கியில் உள்ள சிறிய




பிஞ்ச் ரோலர்

தாராளமாகத் திரும்பும் சக்கரம் அதை நகர்த்துவதற்காக மோட்டாரால் இயங்கும் நாடாவை அது தள்ளுகிறது.

**pin compatible** : மாற்றுச் சாதனங்கள் : ஒரே மாதிரியான செயற்பணிகளை ஆற்றும் சிப்புகள் மற்றும் சாதனங்கள் தொடர்புடையது. இவற்றை ஒன்றுக்கு மற்றொன்றை மாற்றிப் பொருத்தலாம். இந்தச் சாதனங்கள் ஒரே உட்பாட்டு/வெளிப்பாட்டுக் குறியீடுகளுக்கு ஒரே இணைப்புகளைப் பயன்படுத்துகின்றன.

**pincushioning** : பின்குஷனிங்: பக்கவாட்டில் சாய்கின்ற திரை தடுமாறல்கள்.

**pin feed** : குத்தூசி ஊட்டம் : அச்சு எந்திரத்தில் காகிதத்தை வாங்கிக் கொள்ளும் உருளையில் குத்தூசி மூலம் காகிதத்தை விடுதல். இது உராய்வு ஊட்டத்திலிருந்து வேறுபட்டது.




குததூசி ஊட்டம்

**ping of death** : மரண பிங்; மரண அடி; மரணத் தாக்கு : இணையத்தில் தீங்கெண்ணத்துடன் செய்யப்படும் ஓர் அழிவு நடவடிக்கை. இணையத் தரவு பரிமாற்றத்தில் ஒரு தரவுப் பொதி என்பது 64 பைட்டுகளுக்கு மிகாமல் இருக்கும். இதை விடப் பெரிய பொதி ஒன்றை பிங் நெறிமுறையில் இணையத்தின் வழியாக ஒரு தொலைவுக் கணினிக்கு அனுப்பி வைப்பதன் மூலம் அக்கணினியை நிலைகுலையச் செய்யமுடியும்.

**ping pong** : ஒன்றாடப் பயன்பாடு; மாறி மாறி : உள்ளபடிக்கு கணக்கற்ற கோப்புத் தொகுதியில் செய்முறைப்படுத்துதல் தொடர்ந்து நடைபெறும் வகையில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட சேமிப்புச் சாதனங்களை மாற்றி மாற்றிப் பயன்படுத்துதல்.

**ping-pong buffer** : பிங்-பாங் இடையகம் : இரு கூறுகளான இடை நினை

வகம். இரட்டை இடையகம் எனலாம். இதிலுள்ள ஒவ்வொரு பகுதியிலும் மாற்றி மாற்றி உள்ளீட்டால் நிரப்பப் படுவதும் வெளி யீட்டுக்கு வழித்தெடுப்பதும் நடை பெறும். இதன் காரணமாய் ஏறத்தாழ தொடர்ச்சியான உள்ளீட்டு/வெளியீட்டுத் தரவு களின் தாரை பாய்ந்து கொண் டிருக்கும்.

**pin grid array** : பின் கட்டக் கோவை : பலகையில் சிப்பு களைப் பொருத்தும் வழிமுறை. குறிப்பாக ஏராளமான பின்களைக் கொண்ட சிப்பு களுக்குப் பொருத்தமான முறை. பின்கட்டக் கோவை சிப்புகளில், பின்கள் சிப்புவின் அடிப்பாகத்திலிருந்து நீட்டிக் கொண்டிருக்கும். ஆனால் இரட்டை உள்ளிணைப்புத் தொகுப்புள்ள சிப்புகளிலும், ஈயமில்லா சிப்புச் சுமப்பித் தொகுப்புகளிலும் பின்கள் சிப்புவின் பக்கவாட்டு ஓரங் களில் நீட்டிக் கொண்டிருக்கும்.

**pinouts** : ஊசி வெளியீடுகள் : பல் கம்பி இணைப்பியில் உள்ள ஒவ்வொரு இணைப்பி யையும் பற்றிய விளக்கமும், நோக்கமும்.

**pins** : இணைப்பிகள் : ஓர் இரட்டை உட்பாட்டுத் தொகுதி





இணைப்பிகள்

யில், ஒரு அச்சடிப்பி மின் சுற்று வழிப் பலகையிலுள்ள குதை குழிகளில் செருகக்கூடிய சிறிய உலோக இணைப்பிகள்.

**pipe** : குழாய் : ஒரு நிரல் தொட ரின் வெளியீட்டை வேறொன் றின் உள்ளீடாக ஏற்றுக்கொள்ள பங்கிடும் இடம். டாஸ் மற்றும் ஓஎஸ்/2இல் குழாய் நிரல் என்பது செங்குத்தான வரி "சுர்" என்ற சொல்லாணை பட்டியலின் வெளியீட்டை வகைப்படுத்தும் பயன்பாட்டுக்கு அனுப்புகிறது.

**pipeline** : குழாய் இணைப்பு; தேக்க நீக்கம்; குழாய் தொடர் : ஒன்றன்மேல் ஒன்று அழுந்திச்

செயற்படும் சுழல் செயற்பணி. கணினிகளின் வேகத்தை அதிகரிக்க இது பயன்படுத்தப்படுகிறது. ஒரு கணினி நிரலை பல பகுதிகளாகப் பகுத்து, அவற்றை ஒரே சமயத்தில் நிறைவேற்ற இது உதவுகிறது.

pipelining : முறைவழிப்படுத்தல் : 1. நினைவகத்திலிருந்து நிரல்களைக் கொணர்ந்து குறிவிலக்கம் செய்து செயல்படுத்துவதில் ஒரு வழிமுறை. இம்முறையில் ஒரே நேரத்தில் பல நிரலாணைகளை வெவ்வேறு செயல் நிலைகளில் கொணர்ந்து குறிவிலக்கம் செய்து செயல்படுத்த முடியும். இதனால் ஒரு குறிப்பிட்ட நிரலை வேகமாகச் செயல்படுத்த முடியும். நுண் செயலி தேவையின்றிக் காத்திருக்கும் நேரத்தை மிச்சப் படுத்த முடியும். நுண்செயலி ஓர் நிரலையைச் செயல்படுத்தி முடிக்கும்போது அடுத்த நிரல் தயாராக இருக்கும். 2. இணை நிலைச் செயலாக்கத்தில் (parallel processing) நிரல்கள் ஒரு செயலாக்க அலகிலிருந்து இன்னொன்றுக்கு அனுப்பி வைக்கப் படும். தொழிலகங்களில் தொகுப்புப் பணித்தொடர் அமைப்பு (assembly line) போன்றது. ஒவ்வோர் அலகும் ஒரு குறிப்பிட்ட வகைச் செயல்பாட்டில் திறன் பெற்றிருக்கும்.

piracy : கள்ளத்தனமான : தனிப்பட்ட அல்லது வணிகப் பயன்பாட்டுக்காக சட்டத்தை மீறி மென்பொருளை நகலெடுத்தல்.

piracy investigaters : களவினைக் கண்டுபிடிப்பவர்கள்.

pirate : திருட்டு; களவு : உரிமை பெற்ற மென்பொருளை திருடுகின்ற (அல்லது அனுமதியின்றி நகலெடுக்கின்ற) ஒரு நபர் அல்லது நிறுவனம். புதிய இந்தி "எழுத்தச்சு" ஒன்றுக்கு 'Software Pirate'''' என்று பெயரிடப் பட்டுள்ளது.

.pit : .பிட் : பேக்ஐட் (pack IT) என்னும் முறையில் இறுக்கிச் சுருக்கப்படும் ஆவணக் கோப்புகளின் வகைப்பெயர் (extension).

pit and land : குழி, சமதளம்: குறுவட்டில் 0,1 பிட்டுகளை எழுதும் இடம்.

Pitch : அச்சுச் செறிவு ; எழுத்தடர்வு : அச்சிட்ட வரியிலுள்ள எழுத்துகளின் செறிவரைவு. இது, பொதுவாக ஓர் அங்குலத்தில் எத்தனை எழுத்துகள் என்ற வீதத்தில் குறிக்கப்படுகிறது. எடுத்துக்காட்டு : 10 செறிவளவு என்பது ஒவ்வொரு அங்குலத்திலும் 10 எழுத்துகள் அடங்கியுள்ளன என்று பொருள்படும்.

**pits :** குழிகள்.

**pivot table :** ஆய்ந்தறி அட்டவணை.

**pivote table report :** ஆய்ந்தறி அட்டவணை அறிக்கை.

**pixel (picture element) :** படக் கூறுகள்; படப்புள்ளி; படத் துணுக்கு; படத் துகள் : ஓர் எழுத்தினை அல்லது ஒரு வரைகலை உருக்காட்சியை உருவாக்கப் பயன்படுத்தப்படும் தனித் தனிப் புள்ளிகளில் ஒன்று. இது, காட்சித் திரையில் காணப்படும் உருக்காட்சியின் மிகச் சிறிய அலகு. இதனை, சேமித்து வைத்து, வரவழைத்து, காட்சியாகக் காட்டலாம்.




படப்புள்ளி

**pixel map :** படப்புள்ளி இயல் படம் : ஒரு வரைகலைப் படத்தின் படப் புள்ளிப் படிமத்தை அதன் நிறம், படிமம், தெளிவு, நீள அகலம், சேமிப்பு வடிவாக்கமுறை மற்றும் ஒரு படப் புள்ளியைக் குறிக்க ஆகும் துண்மி (பிட்)கள் இவை உட்பட விளக்கும் ஒரு தரவு கட்டமைப்பு (data structure).

**PJ/NF :** பீஜே/என்எஃப் : முன்னிறுத்து சேர் இயல்புப் படிவம் என்று பொருள்படும் Projection-join Normal form என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர்.

**.pk :** .பீகே : ஓர் இணைய தள முகவரி பாகிஸ்தான் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப்பெயர்.

**PKUNZIP :** பீகேஅன்ஸிப் : ஒரு பகிர் மென்பொருள் பயன்கூறு

நிரல். பீகேஸிப் (PKZIP) என்னும் நிரல் மூலம் இறுக்கிச் சுருக்கிய கோப்புகளை விரிக்கப் பயன்படுகிறது. பெரும்பாலும் பீகேஸிப், பீகே அன்ஸிப் இரண்டும் சேர்ந்தே கிடைக்கும். பீகேவேர் (PKware) என்னும் நிறுவனம் இவற்றை வெளியிடுகிறது. இந்த மென்பொருள்களை இந்த நிறுவனத்தின் அனுமதியின்றி வணிகப் பயன்பாடுகளுக்காக வெளியிட முடியாது.

**PLA** : பிஎல்ஏ : நிரலாக்கு தருக்கக் கோவை : "செயல் முறை வகுத்திடத்தக்க தருக்க முறை வரிசை" என்று பொருள்படும் "Programmable Logic Array" என்ற ஆங்கிலச் சொல்லின் குறும்பெயர். இது, ஒரு குறிப்பிட்ட அலுவல் பணியை மட்டுமே செய்வதற்குச் செயல்முறைப்படுத்தப்பட்டுள்ள, ஒரு தரப்படுத்திய தருக்கமுறை இணைவனத்தைப் பயன்படுத்துகிற, படிப்பதற்கு மட்டுமேயான நினைவகத்துக்கு (Rom) மாற்றாகப் பயன்படக்கூடியது.

**plaintext** : நேரடிவாசகம் : வழக்கமான செய்தியை அதன் மூலப்பொருள் வடிவில் குறிப்பிடுவதற்கு மறைமொழி வல்லுநர்கள் பயன்படுத்தும் சொல்.

**planar** : ஒருதள நிலை : 1. கணினி வரைகலையில் பொருள்கள் ஒரே தளத்தில் தோற்றமளிப்பவை. 2. குறைகடத்திப் பொருள்கள் உற்பத்தி முறையில் செயலாக்கத்தின் போது முழுமையும் சிலிக்கான் மென்தகடுகளின் மேற்பரப்பின் மூலத்தட்டை அமைப்பு மாறாமல் பராமரித்தல். மின்னோட்டப் பாய்வைக் கட்டுப்படுத்தும் தனிமங்களடங்கிய வேதியல் பொருட்கள் இந்த மேற்பரப்பின் கீழ் பரப்பப்பட்டுள்ளன.

**planar area** : பிளேனர் பகுதி : கணினி வரைகலையில், எல்லைகள் உள்ள பொருள். சதுரம் அல்லது பல் கோணம் போன்றது.

**planar transistor** : ஒருதள மின்மப் பெருக்கி : மின்மப் பெருக்கிகளுள் ஒரு தனிச்சிறப்பான வகை. மின்மப் பெருக்கியின் மூன்று பகுதிகளும் (திரட்டி, உமிழி, அடிவாய்) குறை கடத்திப் பொருளின் ஒற்றை அடுக்கில் இழையப்பட்டிருக்கும். வழக்கத்தைவிட அதிக அளவிலான வெப்பம் வெளியேறுவதற்கேற்ற வகையில் ஒருதள மின்மப் பெருக்கியின் கட்டமைப்பு அமைந்துள்ளது. எனவே இது மின்சக்தி மின்மப் பெருக்கிகளுக்கு (Power Transistors) உகந்த வடிவமைப்பாகத் திகழ்கிறது.

**planimeter : சமதளமானி :** ஒரு சமதள உருவம், ஒரு எழுத்தாணியால் வரையப்படும் போது, அந்த உருவத்தின் மேற்பரப்பினை அளவிடுவதற்கான புறநிலைச் சாதனம்.

**planit : பிளானிட் :** "பரிமாற்றுப் போதனையைச் செயல்முறைப் படுத்தும் மொழி" என்று பொருள்படும். "Programming Language for Interactive Teaching" என்ற ஆங்கிலச் சொல்லின் குறும் பெயர். கணினி வழி அறிவுறுத்தப் பொறியமைவுகளுடன் பயன் படுத்துவதற்காக வடிவமைக்கப் பட்ட ஒரு மொழி.

**plansheet : சம தளத் தகடு; விரி தாள் :** அகல் தகட்டுப் பணிப் பாளம் போன்றது.

**plasma display panel : படிகக் காட்சி முனையம்; மின்மக் காட்சித் திரை :** பொறியமைவு செய்த நியோன் ஆர்கான் வாயுவைப் பயன்படுத்துகிற காட்சி முனைய வகை. காட்சிப் பரப்பில் அடங்கியுள்ள ஓர் அச்சு வார்ப்புருவில் புள்ளிகளைத் திருப்புவதன் மூலம் உருக் காட்சி உருவாக்கப்படுகிறது. உயர் ஆற்றல் உருக்காட்சி உறுதிப்பாடுடையது; நீண்ட நேரம் ஒளிரக் கூடியது; சுடர் நடுக்கம் இல்லாதது.

**platen : தாள் அழுத்துத் தகடு;**




தாள் அழுத்துத் தட்டு

**அழுத்துத் தட்டு; அழுந்துந் தகடு; அச்சு உருளை :** அச்சகத்தில் அச்சுத்தாள் அழுத்தும் தகட்டுப் பாளம்.

**platform : மேடை :** ஒரு குறிப்பிட்ட மாதிரி அல்லது கணினி குடும்பத்திற்கான வன்பொருள் கட்டுமான அமைப்பு. மென் பொருள் உருவாக்குபவர்கள் தங்கள் நிரல் தொடர்களை எழுதுவதற்கு இது ஒரு தர அமைவாகும். இயக்க அமைப்பையும் இச்சொல் குறிப்பிடுகிறது.

**platform - dependent :** பணித் தளம் சார்ந்த.

**platform independant :** பணித் தளம் சாராமை.

**platform independent development environment :** பணித்தளம் சாரா உருவாக்கச் சூழல்.

**platform independent language :** பணித் தளம் சாரா மொழி. ஜாவா மொழியை இவ்வாறு சிறப் பித்துக் கூறுவர்.

**PLATO :** பிளேட்டோ : "தானியக் கப் போதனைச் செயற்பாடு களுக்கான செயல்முறைப் படுத்திய தருக்க முறை" எனப் பொருள்படும் "Programmed Logic for Automatic Teaching Operations" என்ற ஆங்கிலச் சொற்றொடரின் குறும்பெயர். இது, கணினி அடிப்படையிலான அறி வுறுத்தப் பொறியமைவு. இது பெரிய கணினிகளிலும், படிகக் காட்சி முனையங்களிலும் பயன்படுத்தப்படுகிறது. இதில் கிண்டர்கார்டன் முதல் பட்டப் படிப்பு வரையிலான மாணவர் களுக்கான பல்லாயிரம் பாடங்கள் அடங்கியுள்ளன.

**platter :** வட்டத்தட்டு : நிலை வட்டு இயக்கியில் உள்ளபடிக் குத் தகவல்களைச் சேமித்து வைக்கும் பகுதி. இது வட்ட




வட்டுத் தட்டு

மான தட்டை வடிவ உலோகத் தகடு. இதன் இருபரப்புகளிலும் பழுப்புநிற காந்தப்பொருள் பூசப்பட்டுள்ளது.

**play button :** இயக்குக் குமிழ்.

**player :** இயக்கி.

**PL/C :** பீஎல்/சி : PL/I என்ற செயல்முறைப்படுத்தும் மொழி யின் ஒரு பதிப்பு. இது கல்வி நிறுவனங்களில் பயன்படுத்தப் படுகிறது.

**PLCC :** பீஎல்சிசி : ஈயமற்ற பிளாஸ்டிக் சிப்புச் சுமப்பி என்ற பொருள்படும் Plastic Leadless Chip Carrier என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். பலகைகளில் சிப்புகளைப் பொருத்துவதில் பின்பற்றப்படும் ஈயமற்ற சிப்பு சுமப்பி முறையின் ஒரு வேறு

பாடான வகை. செலவு குறைவானது. இரண்டு சுமப்பிகளும் தோற்றத்தில் ஒன்றுபோல இருப்பினும் பீஎல்சிசி-க்கள் பருநிலையில் ஈயமற்ற சிப்புச் சுமப்பியுடன் ஒத்தியல்பற்றவை. ஏனெனில் அவை பீங்கான் (ceramic) பொருளால் ஆனவை.

**PL/I : பிஎல்/I** : "செயல்முறைப் படுத்தும் மொழி - I" (Programming Language - I) என்பதன் குறும் பெயர். இது பொது நோக்கத்திற்கான உயர்நிலை செயல்முறைப் படுத்தும் மொழி. இது அறிவியல் மற்றும் வணிகப் பயன்பாடுகளுக்காக வடிவமைக்கப் பட்டது. கோபால் (Cabol), ஃபோர்ட்ரான் (Fortran), ஆல்கால் (Algol) ஆகிய மொழிகளின் அம்சங்களை ஒருங்கிணைத்துள்ளது.

**PL/M : பிஎல்/எம்** : நுண் கணினிகளை செயல்முறைப்படுத்துவதற்குப் பயன்படுத்தப்படும் செயல்முறைப்படுத்தும் மொழி. இதனை "இன்டெல் கார்ப்பொரேஷன்" (Intel Corporation) என்ற நிறுவனம் வடிவமைத்தது. இது நுண்கணினிகளை மிக விரைவாக இயக்குவதற்கு நிரலிடுவதற்குரிய உயர்நிலை மொழி. இது PL/I என்ற பொதுநோக்குச் செயல்முறைப்படுத்தும் மொழியிலிருந்து வடிவமைக்கப் பட்டதாகும்.

**PL/M plus : பீஎல்/எம் பிளஸ்** : "பீஎல்/எம்" என்ற செயல் முறைப்படுத்தும் மொழியின் விரிவாக்கிய வடிவம். இதனை "நேஷனல் செமி கண்டக்டர்ஸ்" (National Semi Conductors) என்ற நிறுவனம் தனது நுண் செய் முறைப்படுத்திகளுக்காக வடிவமைத்தது.

**plot : வரைவு** : ஒரு வரைவி மூலம் வரைபடம் அல்லது உருவப்படம் வரைதல்.

**plotter : வரைவி; வரைவான்** : தானியக்கக் கட்டுப்பாட்டுப் பேனாக்கள் மூலம் காகிதத்தில் படங்களையும் வரைகலைக் காட்சிகளையும் வரைகிற ஒரு வெளிப்பாட்டுச் சாதனம். வரைகலைகளிலும், கணினி உதவியால் உருவாக்கப்படும் வடிவமைப்புகளிலும் பயன்படுத்தப்படுகிறது. பொறியியல் துறையிலும், துணி நெசவுத் துறையிலும் பணிபுரியும் வடிவமைப்பாளர்களுக்கு இது பெரிதும் உதவுகிறது. இதில், காகிதம் ஒரு தட்டையான படுகைமீது ஏற்றப்பட்டிக்கும். இதன்மீது வரைவதற்குரிய பேனா, X,Y அச்சுகளில் வரைபடங்களை வரைகிறது. இதில் பல்வேறு வண்ணங்களில் வரைபடங்களைப் பெறுவதற்கு

பல்வேறு வண்ணப் பேனாக்கள் பயன்படுத்தப்படுகின்றன.

plotter, data : தரவு வரைவி; தரவு வரைவுபொறி.

plotter in a cartridge : பெட்டியில் நினைவகத் தட்டுப் பகுதி : சான்டியாகோவின் பசிஃபிக் டேட்டா புராடக்ட்ஸ் நிறுவனத்தின் லேசர் அச்சுப்பொறிகளுக்காக ஒரு பெட்டியில் அமையும் எச்பிஜிஎல் போலச் செய்தது.

plotter resolution : வரைவு தெளிவுத் திறன்.

plotter software : வரைவி கணினிச் செயல்முறை; வரைவி மென்பொருள்.

plotter, x-y : x-y வரைவி.

plotting a curve : வளைகோடு வரைதல் : ஆயத்தொலைவுகளிலிருந்து புள்ளிகளை இடங்குறித்து, அந்தப் புள்ளிகளை இணைத்து வளைகோடாக வரைதல். இது, மாறிலிகளுக்கிடையிலான தொடர்பினைச் சித்தரிக்கும் உள்ளபடியான வளைகோட்டினை ஏறக்குறைய ஒத்திருக்கும்.

plug : இணைப்பி; செருகி : ஒரு கம்பி படத்திலுள்ள இணைப்பு. இது பொறியமைப்பின் ஒரு பகுதியாக அமைந்திருக்கும்.

plug and play : இணைத்து - இயக்கு; பொருத்தி-இயக்கு : இன்டெல் நிறுவனம் உருவாக்கிய வரன்முறைத் தொகுதி. ஒரு பீசியை இயக்கும்போது, திரையகம், இணக்கி மற்றும் அச்சுப்பொறி போன்ற புறச் சாதனங்களை தானாகவே அடையாளங்கண்டு தகவமைவுகளை அமைத்துக் கொள்ளும். பயனாளர் ஒருவர் புறச்சாதனம் ஒன்றை கணினியுடன் இணைத்து இயக்கிக் கொள்ளலாம். தனியாகத் தகவமைவுகளைக் குறிக்க வேண்டியதில்லை. இணைத்து - இயக்கு வசதி வேண்டிய பீசி-க்களில், இணைத்து இயக்கு வசதியுள்ள பயாஸ், இணைத்து இயக்குவதற்கான விரிவாக்க அட்டையும் இருக்க வேண்டும்.

plugboard : இணைப்பிப் பலகை; செருகுப்பலகை : அலகுப் பதிவுச் சாதனங்களின் செயற்பாட்டினைக் கட்டுப்படுத்தும் துளையிட்ட பலகை. இதனைக் கட்டுப்பாட்டுப் பலகை (Control Panel) என்றும் கூறுவர்.

plug compatible : மாற்று இணைப்பி; செருகுப் பொருத்தம் : இடைமுகப்பு மாற்றமைவு தேவைப்படாத புறநிலைச் சாதனம். இதனை மற்றொரு உற்பத்தியாளரின் பொறி

யமைவுடன் நேரடியாக இணைக்கலாம்.

**plug-in : கூடுதல் வசதி :** 1. ஒரு பெரிய பயன்பாட்டுத் தொகுப்பில் கூடுதல் வசதியை ஏற்படுத்திக் கொடுக்கும் ஒரு சிறிய மென்பொருள் நிரல். 2. தொடக்க காலங்களில் நெட்ஸ்கேப் நேவிக்கேட்டர் இணைய உலாவிக்காக இத்தகைய கூடுதல் வசதி மென்பொருள்கள் வெளியிடப்பட்டன. பொதுவாக இணைய உலாவி (Internet Browser) ஹெச்டிஎம்எல் ஆவணத்திற்குள் உட்பொதித்த, அசைவூட்டம், ஒளிக்காட்சி, கேட்பொலி தொடர்பான கோப்புகளை அடையாளம் காணாது. கூடுதல் வசதி மென்பொருளை நிறுவிக்கொண்டால் இது இயல்வதாகும். இப்போதெல்லாம் அனைத்து நிறுவனங்களுமே தத்தமது மென்பொருள் தொகுப்புகளுக்குக் கூடுதல் வசதி மென்பொருள்களை அவ்வப்போது வெளியிட்டு வருகின்றன.

**plugs and sockets : செருகிகளும் துளைகளும் :** எல்லா வகையான மின்னணுச் சாதனங்களையும் ஒன்றாக இணைக்கும் பருப்பொருள் இணைப்புகள்.

**.pm : .பீஎம் :** ஓர் இணைய தள முகவரி செயின்ட் பியாரே மிக்குலான் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப்பெயர்.

**PMOS : பீஎம்ஓஎஸ் :** "P-அலைவரிசை உலோக ஆக்சைடு மின்கடத்தாப் பொருள்கள்" (P - channel metallic oxide semi conductors) என்பதன் குறும்பெயர். இது உலோக ஆக்சைடு அரைக்கடத்தி பொருள் மின்சுற்று வழிகளில் மிகப் பழமையானது. இதில் பாயும் மின்னோட்டத்தில் நேர் மின்னழுத்தம் பாய்கிறது. இது, N-அலைவரிசை உலோக ஆக்சைடு அரைக்கடத்தி பொருள்களிலிருந்து (N-channel MOS) வேறுபட்டது.

**.pn : .பிஎன் :** ஓர் இணைய தள முகவரி பிட்கைர்ன் தீவுகளைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**PN : பீஎன் :** "போலந்துக் குறிமானம்" என்று பொருள்படும். "polish notation" என்னும் ஆங்கிலச் சொல்லின் குறும்பெயர்.

**PNP transistor : பீஎன்பீ மின்மப் பெருக்கி :** இருதுருவ (bipolar) மின்மப் பெருக்கிகளுள் ஒரு வகை. இதன் அடிவாய் (base) என் (N) - வகைப் பொருளால் ஆனது. பீ-வகைப் பொருளால் ஆன உமிழி (emitter) மற்றும்

திரட்டி (collector) இவற்றுக்கு இடையே செயல்படும். ஒரு மின்மப் பெருக்கியின் மூன்று முனையங்களான அடிவாய், உமிழி, திரட்டி ஆகிய மூன்றுக்குமிடையே மின்னோட்டம் பாயும். ஒரு பீஎன்பீ மின்மப் பெருக்கியில் துளைகளே (மின்னணு இடம் பெயர்ந்த வெற்றிடம்) பெருமளவு மின்சுமப்பிகளாகச் செயல்படுகின்றன. அவை உமிழியிலிருந்து திரட்டியை நோக்கி நகர்கின்றன.

**poaching** : கரவு அணுகுதல்; ஊடுருவல் : ஒரு பயனாளர் தனக்கு உரிமையுடையதாக இல்லாத தகவல்களைத் தேடிக் கோப்புகளை அல்லது செயல்முறைப் பட்டியல்களை அணுகுதல்.

**pocket computer** : பையளவுக் கணினி: கையில் கொண்டு செல்லக்கூடிய கையடக்கக் கணினி. விண்டோஸ் சிஇ என்னும் இயக்க முறைமையில் செயல்படும் இக்கணினியில், மேசைமேல் கணினியில் செயல்படும் அனைத்துப் பயன்பாட்டுத் தொகுப்புகளையும் இயக்க முடியும்.

**point** : புள்ளி; சுட்டு : வரைகலைத் தகவலில் மிகச்சிறிய அலகு. இது ஆயத்தொலைவு முறையில் தனியொரு அமைப்பிடத்தைக் குறிக்கிறது.

**point-and-click** : சுட்டு-பின் -சொடுக்கு : பயனாளர் ஒரு குறிப்பிட்ட தரவினைத் தேர்வு செய்து உரிய நிரலினை இயக்குவதற்கான ஒரு சுட்டி அல்லது பிற சுட்டுக் கருவிகள் மூலம் இதனை எளிதாகச் செய்ய முடியும். சுட்டியில் பொத்தானைச் சொடுக்கியும், பிற சுட்டுக் கருவிகளில் அதற்குரிய பகுதியில் அழுத்தியும் இதனைச் சாதிக்கலாம்.

**point and shoot** : சுட்டுவும் பாய்வும் : சுட்டியை (கர்சர்) ஒரு வரியிலோ அல்லது ஒரு பொருளின் மீதோ நகர்த்துவதன் மூலம் ஒரு பட்டியல் தேர்வை தேர்ந்தெடுப்பது அல்லது ஒரு பயன்பாட்டை இயக்குவது திரும்பச் செல்லும் விசை அல்லது எலிவடிவச் சுட்டிப் பொத்தானை நகர்த்தியும் இவ்வாறு செய்யலாம்.

**point arithmatic, fixed** : நிலைப் புள்ளிக் கணக்கீடு.

**point arithmatic, floating** : மிதவைப் புள்ளிக் கணக்கீடு.

**point, assumed decimal** : எடுகோள் பதின்மப் புள்ளி.

**PointCast** : பாயின்ட்காஸ்ட், முன் பரப்பு : இணையத்தில் ஒவ்வொரு பயனாளருக்கும் அவருக்கே உரித்தான செய்திக் கட்டுரைகளைத் தொகுத்துக் காட்டும் இணையச் சேவை. வைய விரிவலையில் உள்ள ஏனைய இணையப் பயன்பாடு களைப்போலன்றி பாயின்ட் காஸ்ட் தள்ளு தொழில் நுட்பத் தைப் (push technology) பின் பற்றுகிறது. கிளையனிலிருந்து குறிப்பிட்ட கட்டளை வரப் பெறாமலே, வழங்கன் தானாகவே தரவுவை அனுப்பி வைக்கும்.

**point, decimal** : பதின்மப் புள்ளி.

**point, entry** : நுழைவுப் புள்ளி; உள்ளீட்டு புள்ளி.

**pointer** : சுட்டு ; சுட்டுவான்; குறி; காட்டி; சுட்டி: *1.* தொடர் புடைய ஒரு பதிவின் முகவரியைக் கொண்டிருக்கிற ஒரு கோப்பு அட்டவணை, ஒரு பதிவேடு, அல்லது வேறு தரவுத் தொகுதியுடன் தொடர் புடைய ஒரு தரவுக் கூறு. *2.* சில கணினியமைவுகளில், நுண் பொறியின் அமைவிடத்தைக் குறிக்கிற காட்சித்திரையின் உருவமைப்பு.

**pointer arithmatic** : சுட்டுக் கணக்கீடுகள்.

**pointer type** : சுட்டு இனம்.

**point identification** : புள்ளி அடையாளம் : ஆயத்தொலைவு அமைவிடம், அதன் தனிச் செய் முறைப்படுத்தல் அலுவற்பணி கள் உட்பட ஒரு வரைகலைப் புள்ளி பற்றிய முழு விவரிப்பு.

**pointing** : சுட்டுதல்.

**pointing devices** : காட்டும் சாதனங்கள்; சுட்டிகள்; சுட்டிக் காட்டும் சாதனம் : இறுதிப் பயனாளர்கள் கட்டளைகளைச் செலுத்தவும், தேர்வுகளைச் செய்யவும் அனுமதிக்கும் சாதனங்கள். விசைப்பலகையைப் பயன்படுத்துவதற்கு மாற்றாக கணினி அமைப்பில் உள்ள எண் ணெழுத்து அல்லது தரவுகளை நேரடியாக நுழைக்க அனுமதிக் கும் சாதனங்கள். எலிவடிவ சுட்டி மற்றும் இயக்கப்பிடிகளைக் காட்டும் சாதனங்களாகும்.

**point listing** : சுட்டுப் பட்டிய லிடல் : பலரும் விரும்பிப் பார்வையிடும் வலைத்தளங் களை கொண்ட ஒரு தரவுத் தளம். தலைப்பு வாரியாக வகைப்படுத்தப்பட்டிருக்கும். வடிவமைப்பு, உள்ளடக்கத்தின் அடிப்படையில் வலைத் தளங்கள் தர வரிசைப்படுத்தப்பட்டிருக்கும்.

**point of presence** : கிளைப் புள்ளி; தொடு முனை; கிளை

முனை; தொடு புள்ளி : 1 விரி பரப்புப் பிணையத்தில் ஒரு பயனாளர் தொலைபேசி மூல மாகப் பிணைத்துக் கொள்ளும் முனை. 2. நீண்ட தொலைவு தொலைபேசி இணைப்புத் தடத்தில், உள்ளூர் தொலை பேசி இணைப்பகத்துக்கு அல் லது தனிப்பட்ட ஒரு பயனா ளருக்கான இணைப்பு பிரிந்து செல்லும் புள்ளி/முனை.

point of sale software : விற் பனை முனைய மென்பொருள்.

point of sale termination : விற் பனை முனைய முடிவிடம்.

point representation, fixed : நிலைப் புள்ளி உருவகிப்பு.

point representation, floating : மிதவைப் புள்ளி உருவகிப்பு.

point set curve : புள்ளித் தொகுதி வளைகோடு; புள்ளி இணைப்பு வளைவு : புள்ளி களிடையே குறுகிய கோடு களின் ஒரு வரிசையை வரை வதன் மூலம் வரையப்படும் வளைகோடு.

point to point : நேரடி இணைப்பு.

point to point line : நேரடித் தொடர் பிணைப்பு : ஒரு தாய்க் கணினிக்கும் ஒரு சேய்மை முனையத்திற்குமிடையில் ஒரு நேரடித் தொடர்பினைக் கொண்டுள்ள செய்தித் தொடர்பு பொறியமைவு.

point-of-sale (POS) terminal : விற்பனை முனை முகப்பு : 1. உடனடியாக விற்பனையை யும், இருப்பு பதிவேடுகளை யும் ஒரு மையச் செயலகத்தில் புதுப்பித்து, 2. அச்சிடப்பட்ட விற்பனை பரிமாற்ற இரசீதினைத் தருகின்ற திறனுடைய ஒரு உள் ளீட்டு/வெளியீட்டுச் சாதனம்.

point-to-point channel : நேரடி இணைப்புத் தடம்.

point-to-point protocol (PPP) : நேரடி இணைப்பு நெறிமுறை ; நேரடி இணைப்பு மரபொழுங்கு.

point-to-point Tunneling Proto-col : நேரடி இணைப்பு சுரங்க வழி நெறிமுறை : மெய்நிகர் தனியார் பிணையங்களுக்கான (Virtual Private Networks-VPN) நெறிமுறை. குறும்பரப்புப் பிணையத்தின் சில கணுக்கள் இணையத்தோடு தொடர்பு கொள்ள முடியும்.

poisson distribution : பாய்சான் விநியோகம் : 18ஆம் நூற்றாண்டு ஃபிரெஞ்சு கணிதவியலார் எஸ்.டி. பாய்சான் உருவாக்கிய புள்ளிவிவர முறை. நடக்கக் கூடிய நிகழ்வுத் தொடரின் விநியோகத்தைக் கண்டுரைக்க

இது பயன்படுத்தப்படுகிறது. சான்றாக தகவல் தொடர்பு அமைப்பு ஒன்றின் சராசரி பரி மாற்றத்தின் அளவினை மதிப் பிடக்கூடுமென்றால், ஒரு குறிப் பிட்ட காலத்தில் நடைபெறக் கூடிய பரிமாற்றங்களின் அதிக அளவு அல்லது குறைந்த அளவு எண்ணிக்கையையும் மதிப் பிடலாம்.

**poisson theory** : பாய்சான் கோட் பாடு : தரவு செய்தித் தொடர்புப் போக்குவரத்தின் ஒரு குறிப் பிட்ட அளவினைக் கையாள் வதற்குத் தேவைப்படும் இணைப்புக் கம்பிகளின் எண்ணிக்கையை மதிப்பிடு வதற்கான கணித உத்தி.

**POKE** : ஒரு கணினி மொழி நிரல் : கணினியின் செயல் முறைப்படுத்தத் தக்க நினைவுப் பதிப்பியில் இட அமைவு எதிலும் ஒரு மதிப்பளவினை நுழைப்பதற்குப் பயன்படுத்தப் படும் கணினி மொழி நிரல்.

**POL** : பீஓஎல் : இரும "1" ஒரு திசையில் பாயும் மின்னோட் டத்தினாலும் இரும '0' எதிர் திசை மின்னோட்டத்தினாலும் குறிக்கப்படுகிற ஒரு நிலை. இது, ஆக்க முறை உண்மைத் தருக்க முறைக்கு வேறுபட்டது.

**Polar** : துருவ முனைப் போக்கு.

**polar coordinates** : துருவ ஆயத் தொலைவுகள்; முனை ஆயங்கள் : ஒரு நிலையான புள்ளியிலிருந்து கோணத்தை யும் தொலைவையும் பொறுத்து ஒரு புள்ளியின் அமை விடத்தைக் குறித்துரைக்கின்ற வரைகலை முறை.

**polarity** : காந்தப்போக்கு : மின் சக்தி ஏறிய பகுதிகளின் போக்கு. ஒரு துண்மியின் இரும நிலையை இதுவே முடிவு செய்கிறது. நுண் வரைகலை யில் படிகளை எடுக்கும்போது ஒரு தோற்றத்திலிருந்து மற்றொன்றுக்கான வெளிச் சத்திலிருந்து இருளுக்குள்ளான உறவு. பாசிட்டிவ் காந்தப் போக்கு என்றால் வெளிச்சப் பின்னணியில் கறுப்பு எழுத்து கள் இருக்கும். நெகட்டிவ் காந்தப்போக்கு என்றால் கறுப்புப் பின்னணியில் வெள்ளை எழுத்துகள் காணப்படும்.

**polarized component** : துருவப் பட்ட கருவிப்பொருள் : ஒரு மின்சுற்றில் ஒரு கருவிப் பொருளை இணைக்கும்போது, மின்சுற்றின் துருவம் பார்த்து கருவிப்பொருளின் முனைகளை ஒரு குறிப்பிட்ட திசைப் போக் கில் இணைக்கவேண்டும். இருதிசையன்கள், மின்திருத்தி கள் மற்றும் சில மின்தேக்கிகள்

ஆகியவற்றை இந்த வகையில் சேர்க்கலாம்.

**polarizing filter : ஒளி வடிகட்டி :** முனையத் திரைகளில் கண்ணை உறுத்தும் கூசொளியைக் குறைப்பதற்குப் பயன்படுத்தப் படும் துணைச் சாதனம்.

**polish notation (PN) : போலந்துக் குறிமானம் :** ஒரு தொடர் கணிதச் செயற்பாடு களுக்கான தருக்க முறைக் குறி மானம். இதில் குழுமக் குறியீடு எதுவும் பயன்படுத்தப்படு வதில்லை. மாறாக போலந்து தருக்கவியலறிஞர் ஜான் லுக்காசியே வீக்ஸ் 1926இல் உருவாக்கிய முன்னடைக் குறி மானம் பயன்படுத்தப்படுகிறது.

**polling : சாதன நுண்ணாய்வு:** சில கணினி முனையப் பொறி யமைவுகளில் பயன்படுத்தப் படும் செய்தித் தொடர்புக் கட்டுப்பாட்டு உத்தி. இதில் மையச் செயலகம், ஒவ்வொரு சாதனத்திற்கும் செய்முறைப் படுத்துவதற்கு நேரம் தேவையா என்பதைச் சரி பார்க் கிறது. தேவைப்படுமாயின் அந்த அலகு தொடர்ந்து மற்றச் சாதனங்களை நுண்ணாய்வு செய்கிறது. இதற்கு ஒவ்வொரு சாதனத்தையும் விரைவாக இடைவிடாமல் நுண்ணாய்வு செய்திட வேண்டும்.

**polling cycle : தேர்வுச் சுழற்சி :** ஒரு நிரல் தன் கட்டுப்பாட்டில் உள்ள ஒவ்வொரு சாதனம் அல்லது பிணையக் கணு - ஆகியவற்றுக்கு தகவல் அனுப்ப எடுத்துக்கொள்ளும் நேரமும் தொடர் நிகழ்வுகளும்.

**pollution free : மாசு அற்ற; மாசு இல்லாத.**

**polygon : பாலிகன் :** கணினி வரைகலையில் ஒரு தனிப் பொருளாக நகர்த்தக்கூடிய அல்லது வண்ணத்தில் நிரப்பக் கூடிய பல பக்கங்களை உடைய பொருள்.

**polyhedron : பல்தளப் பிழப்புரு :** ஆறு அல்லது அதற்கு மேற் பட்ட பக்கங்களுடைய பொருள். இணைக்கப்பட்ட பாலிகான்களின் ஒரு குழு.

**polyline : பல்வரி :** கணினி வரைகலையில் இணைக்கபட்ட வரிகளின் ஒரு தொடராக அமைக்கப்படும் ஒரு தனிப் பொருள்.

**polymorphic tweening : பாலி மார் ஃபிக் ட்வீனிங் :** உயிர்ப்பட தொழில்நுட்பம். ஒரு பொருள் வேறு ஒன்றாக மாற்றும்போது இடைப்பட்ட உருவங்களை ஆரம்ப மற்றும் முடிவு வடிவங் களை வைத்து உருவாக்குவது.

**polymorphism** : பல்லுருப் பெறல் : பல உருவங்கள் என்பது பொருள். பொருள் சார்ந்த நிரல் தொடரமைப்பில் அனுப்பப்படும் பொருளுக்கு மாறுபட்ட முடிவுகளைத் தரக்கூடிய ஒரு பொதுவான வேண்டுகோளை (செய்தி) அனுப்பும் திறன்.

**polyphase sort** : பல கட்ட வரிசையாக்கம்; பன்முக நிலை வகைப்படுத்தி : புறநாடா வகைப்படுத்தி. இது ஆறு அல்லது அதற்குக் குறைவான நாடாக்களுக்குப் பயன்படுத்தப் படுகிறது.

**polyvision** : பல்காட்சி : அல்பைன் பாலிவிஷன் நிறுவனத்தின் தட்டை அட்டைக்காட்சி. செங்குத்தான மற்றும் கிடைமட்டமான மின்வாய்களுக்கிடையில்வரும் உலோக அயனிகளினாலான பிளாஸ்டிக் திரைப்படத்தினைப் பயன்படுத்துகிறது. இதில் மின்சாரம் குறுக்கிடும்போது உலோக அயனிகள் கறுப்பாகிவிடும்.

**pong** : பாங்க் : 1972ஆம் ஆண்டில் அட்டாரிக்கைச் சேர்ந்த நோலன் புஷ்நெல் (Nolan Bushnell) என்பவர் உருவாக்கிய உலகின் முதல் வணிக ஒளிக்காட்சி விளையாட்டு (first commercial video game). மேசை டென்னிஸ் போன்ற விளையாட்டு.

**pooler** : கூட்டிணைப்பி : முக்கிய நுழைவுத் தகவலை முதன்மை கணினிக்கு ஏற்புடைய வடிவத்தில் ஒருங்கிணைப்பதற்கான அல்லது மாற்றுவதற்கான சாதனம்.

**pop** : எடு : ஓர் அடுக்கை (stack) யில் மேலே உள்ள (கடைசியாகச் சேர்க்கப்பட்ட) உறுப்பினைக் கொணர்தல். இந்தச் செயலாக்கத்தில் அடுக்கையிலிருந்து அவ்வுறுப்பு நீக்கப் பட்டு விடுகிறது.

**pop instruction** : ஒத்தியல்பு நெட்வோ : மீட்பு செயற்பாட்டினை நிறைவேற்றுகிற கணினி நிரல்.

**POP-2** : பாப்-2 : பட்டியல் செய்முறைப்படுத்தும் மொழி. இது, எடின்பரோ பல்கலைக்கழகத்தில் உருவாக்கப்பட்டது.

**POP-3** : பாப்-3 : அஞ்சல் நிலைய நெறிமுறை 3 என்று பொருள்படும் Post Office Protocol 3 என்பதன் தலைப் பெழுத்துக் குறும்பெயர். டீசிபீ/ஐபீ பிணையங்களில் மிகப் பரவலாகப் பயன்படுத்தப்படும் அஞ்சல் நிலைய நெறிமுறையின் தற்போதைய பதிப்பு.

**populate** : பொரிவு; சோப்பு : ஒரு அச்சிடப்பட்ட மின்சுற்று அட்டையில் சில்லுகளையும் பொருள்களையும் பொருத்துதல். முழுதும் இனப்பெருக்கம் செய்த அட்டை என்பது, அதனுள் சேர்க்கக்கூடிய அனைத்துச் சாதனங்களையும் கொண்டிருக்கிறது என்றாகும்.

**populated board** : நெரிசல் பலகை : தனது மின்னணுவியல் அமைப்பிகள் அனைத்தையும் கொண்டுள்ள மின்சுற்று வழி. இது, 'நெரிசலற்ற பலகை' unpopulated board என்பதிலிருந்து வேறுபட்டது.

**popup** : மேல் மீட்பு : திரையில் உள்ள சொற்பகுதி அல்லது உருவத்தின் மேற்பகுதியில் அழைக்கப்பட்டு காட்டப்படுகின்ற ஒரு வகையான பட்டியல். தேவையான ஒன்றைத் தேர்ந்தெடுத்தபோது பட்டியல் மறைகிறது. திரை மீண்டும் வருகிறது.

**pop-up help** : மேல்விரி உதவி : ஒரு மென்பொருளில் வழங்கப்பட்டுள்ள நிகழ்நிலை (Online) உதவி அமைப்பு. பயனாளர் ஒரு குறிப்பிட்ட தலைப்பின் மீது சொடுக்கினால் உதவிச் செய்திகள் மேல்விரி சாளரங்களில் தோற்றமளிக்கும். பெரும்பாலும் சுட்டியின் வலது பொத்தானை அழுத்துவதால் இத்தகைய உதவி விளக்கக் குறிப்புகள் கிடைக்கும்.

**pop-up menu or popup menu** : மேல்விரி பட்டி : வரைகலைப் பயனாளர் இடைமுகத்தில், பயனாளர், ஒரு குறிப்பிட்ட உருப்படிமீது வைத்து, சுட்டியில் வலப்பொத்தானைச் சொடுக்கினால் உடனடியாய்த் திரையில் தோற்றமளிக்கும் ஒரு பட்டி. திரையில் எந்த இடத்தில் வேண்டுமானாலும் மேல்விரி பட்டி தோன்றும். பொதுவாக, பட்டியில் ஓர் உருப்படியைத் தேர்வு செய்தவுடன் பட்டி மறைந்துவிடும்.

**pop-up messages** : மேல்விரி செய்திகள் : மேல்-விரி உதவிக் குறிப்பைப் பயன்படுத்திக் கொள்ளும்போது திரையில் தோன்றும் செய்திகள்.

**pop-up window** : மேல்விரி சாளரம் : ஒரு குறிப்பிட்ட விருப்பத் தேர்வை தேர்ந்தெடுத்தவுடன் திரையில் தோன்றும் ஒரு சாளரம். பெரும்பாலும் சுட்டியின் பொத்தானை விடும்வரை இந்தச் சாளரம் பார்வையில் இருக்கும்.

**port**[1] : துறை : ஒரு கருவியில் பிற சாதனங்களைப் இணைப்பதற்கான பொருத்துவாய்.

**port[2] : கையாண்மை; ஏற்றுமதி :** 1. வேறுவகைக் கணினியில் இயங்கும் வகையில் ஒரு நிரலை மாற்றியமைத்தல். 2. ஆவணங்கள், வரைகலைப் படங்கள் மற்றும் பிற கோப்புகளை ஒரு கணினியிலிருந்து இன்னொரு கணினிக்கு மாற்றுதல்.

**portability : பெயர்வு ஆற்றல்; நகர்வுத் திறன் :** ஒரு செயல்முறையினை ஒரு கணினி சூழலிலிருந்து மற்றொரு சூழலுக்கு எளிதாக மாற்றுவதற்குரிய வசதி.

**portable : கையாளத்தகு ; கையாண்மைத் திறன் :** 1. ஒன்றுக்கு மேற்பட்ட கணினிகளிலோ, ஒன்றுக்கு மேற்பட்ட இயக்க முறைமைகளிலோ செயல்படும் திறன். மிகுந்த கையாண்மைத் திறனுள்ள மென்பொருள்களை மிக எளிதாக பிற கணினிகளில் இயக்கலாம். நடுத்தர கையாண்மைத் திறனுள்ள மென்பொருள்களை கணிசமான முயற்சிக்குப்பின் பிற கணினிகளில் இயக்கமுடியும். கையாண்மைத் திறனற்ற மென்பொருள்களைப் பிற கணினிகளில் இயக்க வேண்டுமெனில் ஏறத்தாழ புது மென்பொருளை உருவாக்குவதற்கு எடுக்க வேண்டிய அளவுக்கான முயற்சியை மேற்கொள்ள வேண்டும்.

**portable computer : கையாண்மைக் கணினி:** கையில் எளிதாக எடுத்துச் செல்லுமாறு வடிவமைக்கப்பட்ட கணினி. உருவ அளவு சிறிதாகவும் எடை குறைவானதாகவும் இருக்கும். கையேட்டுக் கணினி, மடிக் கணினி, உள்ளங்கைக் கணினிகளை இவ்வகையில் அடக்கலாம்.

**portable distributed objects : கையாளத்தகு பகிர்ந்தமைப் பொருள்கள் :** நெக்ஸ்ட் (NeXT) நிறுவனம் உருவாக்கிய மென்பொருள். யூனிக்ஸில் செயல்படும். ஒருவகைப் பொருள் மாதிரியத்தை (object model) வழங்குகிறது. ஒரு பிணையத்தில் பல்வேறு கணினிகளில் சேமித்து வைக்கப்பட்டுள்ள மென்பொருள் கூறுகளை அவை ஒரே கணினியில் இருப் பது போன்று எளிதாக அணுக முடியும்.

**Portable Document Format : கையாண்மை ஆவண வடிவாக்கம் :** அடோப் நிறுவனத்தின் வரன்முறை. மின்னணு ஆவணங்களைப் பற்றியது. அடோப் அக்ரோபேட் குடும்ப வழங்கன்களிலும், படிப்பிகளிலும் பயன்படுத்தப்படும்

ஆவண வடிவாக்கம். சுருக்கமாக பீடிஎஃப் (PDF) என அழைக்கப்படும்.

**portable document software :** கையாளத்தகு ஆவண மென்பொருள்.

**portable language :** கையாண்மை மொழி : வேறு வேறு கணினிகளில் ஒன்றுபோலச் செயல்படும் ஒரு கணினி மொழி. வெவ்வேறு கணினி அமைப்புகளுக்கான மென்பொருள்களை உருவாக்க இம்மொழியைப் பயன்படுத்தலாம். சி, ஃபோர்ட்ரான், அடா போன்ற மொழிகள் இந்த வகையைச் சார்ந்தவை. ஏனெனில் இவை வெவ்வேறு கணினி இயக்கமுறைமைகளில் ஒன்று போலச் செயலாக்கப்படுகின்றன. அசெம்பிளி மொழி கையாண்மைத் திறனற்ற மொழியாகும். குறிப்பிட்ட அசெம்பிளி மொழியின் நிரல் தொகுதி குறிப்பிட்ட நுண்செயலியில் மட்டுமே செயல்படும்.

**portable netware :** ஒத்தியல்பு நெட்வேர் : நாவெலின் நெட்வேர் ஆப்பரேட்டிங் சிஸ்டத்தின் ஓ.இ.எம். பதிப்பு. குறிப்பிட்ட விற்பனையாளரின் எந்திரத்திற்காக அதைத் தொகுக்கலாம்.

**Portable Network Graphics :** கையாண்மைப் பிணைய வரைகலை : பிட்மேப் வரைகலைப் படிமங்களைச் சேமிப்பதற்கான ஒரு கோப்பு வடிவாக்க முறை. ஜிஃப் (GIF) வடிவாக்க முறைக்கு மாற்றானது. ஆனால் ஜிஃப் வடிவாக்க முறைக்குள்ள சட்டக் கட்டுதிட்டங்கள் எதுவுமில்லை. சுருக்கமாக பீஎன்ஜி (png) என்பர்.

**portable programme:** ஒத்தியல்வுச் செயல்முறை : ஒத்தியல்வுக் கணினியமைவில் பயன்படுத்தக்கூடிய பொருள்.

**port address :** துறை முகவரி : ஒரு துறைக்கு முகவரியிடும் 0 முதல் 65535-க்குள்ளான ஒரு எண். நினைவக முகவரிகளிடமிருந்து துறை முகவரிகள் வேறுபட்டவை. அசெம்பிளி மொழியின் நிரல்களும் பேசிக் மொழியின் நிரல்களும் துறைகளை அணுக உதவும்.

**portal :** வலைவாசல்.

**port conflict :** துறை முரண்.

**port enumerator :** துறைக் கணக்கெடுப்பி : விண்டோஸ் இயக்க முறைமையில் இணைத்து இயக்கு (play and play) அமைப்பின் ஓர் அங்கம். கணினியை இயக்கும்போது, இந்த நிரல் உள்ளீட்டு/வெளியீட்டுத் துறைகளைக் கண்டறிந்து தகவமைவு

மேலாளருக்குத் (configuration manager) தெரிவிக்கும்.

**port expander : துறை விரி வாக்கி :** ஒரே துறையில் பல சாதனங்களை இணைக்கப் பயன்படும் ஒரு வன்பொருள் நுட்பம். இம்முறையில் ஒரு துறையில் பல சாதனங்கள் பொருத்தப்பட்டாலும் ஒரு நேரத்தில் ஒரு சாதனம் மட்டுமே துறையைப் பயன் படுத்திக் கொள்ளும்.

**portfolio management package : மேலாண்மை ஆவண வைப் பகத் தொகுப்பு :** முதலீட்டு இருப்புகளின் மாறும் மதிப்பைத் தேடி ஆராயும் நிரல் தொடர். ஆவண வைப்பகத்தின் நடப்பு நிலைபற்றிய அறிக்கை களை உருவாக்குவதன் மூல மும், (2) வாங்கும், விற்கும் விலைகள், முதலீட்டு வரு மானம், செலவுகள், இலாபங் கள், இழப்புகள் ஆகியவற்றைக் காட்டும் துல்லியமான வரி பதி வேடுகளை வைத்திருப்பதன் மூலமும் இதனைச் செய்கிறது.

**port number : துறை எண் :** இணையத்தில் இணைக்கப் பட்ட கணினியில் ஒரு குறிப் பிட்ட செயலாக்கத்துக்கென ஐபீ பொதிகளை அனுப்பிவைக்கப் பயன்படும் எண். சில துறை எண்கள் நன்கறிந்த துறை எண் கள் என்றழைக்கப்படுகின்றன. உலகளவில் ஒரு குறிப்பிட்ட சேவைக்கென நிரந்தரமாய் ஒதுக்கப்பட்டவை. எடுத்துக் காட்டாக, எஸ்எம்டீபீ- யின்கீழ் மின்னஞ்சல் தரவுகள் எப்போதுமே துறையெண் 25-க்கு அனுப்பப் படுகின்றன. எஃப்டீபீ-க்கு துறை எண் 21. ஹெச்டீடீபீ-க்கு துறை எண்-80. டெல்நெட் போன்ற சேவைகளுக்கு அவை தொடங் கும்போது தற்காலிக நிலை யில்லா துறை எண்கள் ஒதுக்கப் படுகின்றன. அந்தக் குறிப்பிட்ட தகவல் பரிமாற்றத்தில், அந்த எண்ணுக்கு தகவல் அனுப்பப் படும். முடிந்தவுடன் அந்த எண்ணின் பயனும் முடிந்து விடும். டீசிபீ மற்றும் யுடிபீ நெறிமுறைகளில் மொத் தம் 65,535 துறை எண்களைப் பயன் படுத்தமுடியும். 1 முதல் 1024 வரை சிறப்புத் துறை எண்கள். நிரலர்கள் தம் சொந்த நிரல் களில் 1024க்கு மேற்பட்ட எண்களையே பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

**portrait : உருவப்படம்; செங் குத்து வடிவம் :** வன்படி உரு வங்களைச் சார்ந்தது பற்றிய குறிப்பு புத்தகத்தில் இருப்பது போல ஒரு பக்கத்தின் குறும் பகுதியில் அந்த பணி அச்சிடப் படுகிறது என்பதை உருவப்

படம் குறிப்பிடுகிறது. 'portrait' என்றசொல் ஓவிய உலகத்திலிருந்து எடுக்கப்பட்டது. அதில் உருவப்படங்கள் செங்குத்தாகவே அமைக்கப்படுகின்றன.

portrait format : நீள்மை வடிவம்; செங்குத்து உருவமைவு.

portrait mode : உருவப்பட முறை : செயல்படுத்தப்பட்ட தீர்வு அல்லது அமைப்பின் விளைவுகளை செயல்படுத்தப் பட்டபின் கண்காணித்து மதிப்பீடு செய்தல்.

portrait monitor : நீள்மைத் திரையகம் : அகலத்தைவிட உயரம் அதிகமிருக்கும் கணினித் திரையகம். 8½-11 அங்குலத் தாளின் அளவுக்கு ஒத்த விகிதத்தில் இருக்கும் (அதே அளவு இருக்கும் என்பதில்லை).



நீளமைத் திரையகம்

ports : துறைகள்.

port settings : துறை அமைப்புகள்.

POS : போஸ் : விற்பனை முனையம் எனப் பொருள்படும் Point Of Sale என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒரு கடையில் பொருள்களுக்கான விலையைச் செலுத்தும் இடம். பெரும்பாலும் இந்த முனையங்களில் விற்பனைக்கான விலைச்சீட்டுத் தயாரிப்புப் பணிகள் முழுக்கவும் கணினி மயமாக்கப்பட்டிருக்கும். பொருளின்மீது ஒட்டப்பட்டுள்ள விலைச்சீட்டு அல்லது பட்டைக்கோடு, வருடி மூலம் படிக்கப்பட்டு விலைச் சீட்டை தயாரிக்கப்படும். மின்னணு பணப்பதிவேடுகள் இருக்கும். விற்பனை தொடர்பான அனைத்துத் தரவுகளும் சிறப்புச் சாதனங்கள் மூலம் பதியப்படும். இதுபோன்ற முனையங்கள் மிகப்பெரிய தானியங்கு பல்பொருள் அங்காடிகளில் செயல்படுகின்றன.

POSIT : போஸிட் : திறந்தநிலை முறைமை இணையச் செயல்பாட்டுத் தொழில் நுட்பத்துக்கான தனிக் குறிப்புகள் எனப்

பொருள்படும் Profiles For Open Systems Internet Working Technology என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். அமெரிக்க அரசின் பிணையக் கருவிகளுக்கான கட்டாயமற்ற தர வரையறைகள். டீசிபி/ஐபி நெறிமுறையை முற்றிலும் போஸிட் ஏற்கிறது. இது காஸிப்பு(GOSIP)க்கு அடுத்து வந்ததாகும்.

**position** : நிலை.

**positional notation** : இடநிலைக் குறிமானம்; இடம் சார்ந்த குறியீடு; இட மதிப்புக் குறியீடு : இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட எண்களைப் பயன்படுத்தி ஓர் எண்ணளவைக் குறிப்பிடும் முறை. இதில் வலமிருந்து இடமாக அடுத்தடுத்து வரும் எண்கள் அடிமூலத்தின் ஏறுமுக முழு எண்விசைப் பெருக்கமாகக் கொள்ளப்படும். எடுத்துக்காட்டு : 634 என்ற எண்ணின் பதின்ம எண் விசைப் பெருக்கத்தின் (வர்க்கம்) அடிமூலம் 10; இதன் மதிப்பு = $4x\ 10^0 + 3x10^1 + 6x10^2$.

**position, bit** : துண்மி நிலை; பிட் இட நிலை.

**position x** : x அச்சு ஆயத்தொலை.

**position y** : y அச்சு ஆயத் தொலை.

**positive logic** : உடன்பாட்டு தருக்கம்: '0' துண்மிக்காக குறைந்த மின்னழுத்தத்தையும், '1" துண்மிக்காக அதிக மின் அழுத்தத்தையும் பயன் படுத்தல். Negative Logic என்பதற்கு எதிர்ச்சொல்.

**positive true logic** : ஆக்கமுறை உண்மைத் தருக்க முறை : இந்தத் தருக்க முறையில் ஒரு குறைந்த அழுத்தம் '0' இன் ஒரு துண்மி மதிப்பளவைக் குறிக்கிறது; ஓர் உயர்ந்த அழுத்தம், '1' இன் ஒரு துண்மி மதிப்பளவைக் குறிக்கிறது.

**POSIX** : போசிக்ஸ் : யூனிக்ஸுக்கான கையாண்மை இயக்க முறைமை இடைமுகம் எனப் பொருள்படும் Portable Operating System Interface for Unix என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். போசிக்ஸ் தர வரையறைப்படி அமைந்த நிரல்களை ஒரு கணினியிலிருந்து இன்னொரு கணினியில் எளிதாக செயல்படுத்த முடியும். போசிக்ஸ், யூனிக்ஸ் முறைமைச் சேவைகள் அடிப்படையில் அமைந்தது. எனினும் வேறு பல இயக்க முறைகளாலும் செயல்படுத்தப்படும் வகையில் அது உருவாக்கப்பட்டுள்ளது.

**post** : அஞ்சல்; அஞ்சல்செய்; அஞ்சலிடு : செய்திக் குழு அல்லது பிற நிகழ்நிலைக் கலந்துரையாடலில் ஒரு கட்டுரை அளித்தல். பருநிலையிலுள்ள அறிக்கைப் பலகையில் அறிவிப்புகளை ஒட்டுதல் என்ற சொல்லிலிருந்து இச்சொல் உருவானது.

**post document operator** : பின் குறிப்பு செயற்குறி.

**post edit** : ஒட்டுத் தொகுப்பு; பின்னிலைச் செப்பம் : ஒரு முந்தையக் கணிப்பிலிருந்து வெளிப்பாட்டுத் தரவுகளைத் தொகுப்பித்தல்.

**postfix notation** : பின்னொட்டுக் குறிமானம்: ஒரு கணிதக் குறிமானமுறை. இதன் மூலம், 5, 3 என்ற இயக்கப்படு எண்களின் கூட்டலை 53+என்று குறிப்பிட முடியும். மறுதலைப் போலந்துக் குறிமானம், இந்தக் குறிமானத்தின் ஒரு வடிவமாகும். இது, முன்னொட்டுக் குறிமானத்திலிருந்து வேறுபட்டது.

**post implementation review** : பின் நிறைவேற்ற மறுஆய்வு : பல மாதங்கள் பயன்பாட்டிலுள்ள ஒரு பொறியமைவினை மதிப்பீடு செய்தல்.

**post increment operator** : பின் கூட்டு செயற்குறி.

**postmaster** : போஸ்ட் மாஸ்டர் (அஞ்சல் அதிகாரி) : 1. ஓர் அஞ்சல் வழங்கனில் மின்னஞ்சல் சேவைகளைப் பராமரிக்கும் பொறுப்பினை வகிப்பவரின் புகுபதிகைப் (logon) பெயர் (அதுவே, அவரின் மின்னஞ்சல் முகவரியுமாகும்). மின்னஞ்சல் சேவையில் கணக்கு வைத்திருக்கும் பயனாளர் ஒருவருக்கு மின்னஞ்சல் அனுப்புதல்/பெறுதலில் ஏதேனும் சிக்கல் இருக்கிறதெனில் போஸ்ட்மாஸ்டர் என்ற பெயருக்கு ஒரு செய்தியை அனுப்பி வைத்தால், அஞ்சல் வழங்கனின் நிர்வாகிக்கு சென்று சேர்ந்து விடும். (எ-டு) postmaster @ yahoo.co.in. 2. மின்னஞ்சல் அனுப்புதல்/பெறுதல் பராமரித்தலுக்கான ஒரு மென்பொருள். நூறு சதவிகிதம் ஜாவா மொழியிலேயே உருவாக்கப்பட்டது.

**post mortem** : பின்னாய்வு : ஒரு செயற்பாடு நிறைவேற்றப்பட்ட பின்பு அதனைப் பகுப்பாய்வு செய்தல்.

**post mortem dump** : பின்னாய்வுச் சேமிப்பு : ஒரு செயல்முறையின் நிறைவேற்றத்தின் முடிவில் செய்யப்படும் சேமிப்புக் குவிப்பு. இது, நொடிப்புச் சேமிப்புக் குவிப்பிலிருந்து வேறுபட்டது.

**post office protocol :** அஞ்சல் நிலைய நெறிமுறை : இணையத்திலுள்ள அஞ்சல் வழங்கனுக்கான நெறிமுறை. மின்னஞ்சலைப் பெற்று சேமித்து வைக்கிறது. முகவரி தாரருக்கு அனுப்பி வைக்கிறது. வழங்கனில் பிணைத்துக் கொள்ளும் கிளையன் கணினியில் அஞ்சலைப் பதிவிறக்கம் செய்யலாம். பதிவேற்றமும் செய்யமுடியும்.

**postprocessor :** பின் செயலி: முதலில் வேறொரு செயலியினால் கையாளப்பட்ட தரவுகளில்மீது செயல்படக்கூடிய தொடுப்பி (linker) போன்ற ஒரு மென்பொருள் நிரல் அல்லது ஒரு சாதனம்.

**PostScript :** போஸ்ட் ஸ்கிரிப்ட் (பின்குறிப்பு) : அடோப் சிஸ்டம்ஸ் நிறுவனத்தின் பக்க விவரிப்பு மொழி. நெகிழ்வு மிக்க எழுத்துரு வசதிகளும் உயர்தர வரைகலை வசதிகளும் உடையது. உலகறிந்த பக்க விவரிப்பு மொழியான போஸ்ட் ஸ்கிரிப்ட், பக்க உருவரைக்கும், எழுத்துருக்களை ஏற்றி வடிவமைக்கவும் ஆங்கிலம் ஒத்த எளிய கட்டளைகளைக் கொண்டது. அடோப் சிஸ்டம்ஸ் டிஸ்பிளே போஸ்ட்ஸ்கிரிப்ட் என்னும் மொழியையும் வழங்குகிறது. டிஸ்பிளே போஸ்ட் ஸ்கிரிப்ட் முற்ற முழுக்க விஸிவிக் (WYSIWYG-What You See Is What You Get) வசதியை வழங்குகிறது. திரையில் பார்வையிடவும் அப்படியே அச்சிடவும் இவ்விரண்டு மொழிகளும் இணைந்து பயன் தருகின்றன.

**Postscript font :** போஸ்ட் ஸ்கிரிப்ட் எழுத்துரு : போஸ்ட் ஸ்கிரிப்ட் பக்க விவரிப்பு மொழியில் வரையறுக்கப் பட்டுள்ள ஓர் எழுத்துரு. போஸ்ட்ஸ்கிரிப்டுக்கு ஒத்தியல்பான அச்சுப்பொறியில் அச்சிடுவதற்கென உருவாக்கப் பட்டது. போஸ்ட்ஸ்கிரிப்ட் எழுத்துருக்கள் பிட்மேப் எழுத்துருக்களிலிருந்து மாறுபட்டவை. நளினம், தெளிவு உயர் தரமானவை. அச்சுக்கலைத் துறையில் நிலை பெற்றுவிட்ட தரக் கட்டுப்பாடுகளுக்கு முற்றிலும் இசைந்தவை.

**PostScript printer :** போஸ்ட் ஸ்கிரிப்ட் அச்சுப்பொறி : போஸ்ட்ஸ்கிரிப்ட் ஆவணங்களை அச்சிடுவதற்கான அச்சுப் பொறி.

**post system :** பதிவு பொறியமைப்பு : பண்டக சாலைகளும், பேரங்காடிகளும் விற்பனை முனையப் பொறியமைவு

களைப் பயன்படுத்தி வருகின்றன. இதிலுள்ள பணப்பதிவேடுகள், உண்மையில் ஒரு தனி நோக்கக் கணினி முனையமாகும். இது, வணிக நடவடிக்கைகளை அப்பண்டக சாலையின் தரவுக் கோப்புகளில் நேரடியாகப் பதிவு செய்து, காட்சித் திரையில் காட்டுகிறது. இது, பட்டியலிடுவதைக் கட்டுப்படுத்துகிறது; கடன் வசதி அட்டை செல்லத்தக்கது தானா என்று சரிபார்க்கிறது; பிற தரவுகளைக் கையாள கைப்பணிகளைச் செய்கிறது.

posture : நிலைப்பாடு.

potentiometer : மின்னழுத்த ஆற்றல் மானி; மின்னழுத்த அளவி : எந்திரவியல் இயக்கத்திற்கு வீத அளவில் மின்னியல் வெளிப்பாட்டுக் குறியீடுகளை உண்டாக்குவதற்குப் பயன்படும் சாதனம்.

pots : பாட்ஸ் : மிகப் பழைய தொலைபேசி சேவை என்று பொருள்படும் Plain Old Telephone Service என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். அடிப்படையிலான எண் சுழற்றுத் தொலைபேசி இணைப்புகளிலிருந்து பொது இணைப்பகப் பிணையத்துடன் தொடர்பு ஏற்படுத்தும் முறையில் அமைந்தது. கூடுதல் வசதிகள், செயல்பாடுகள் எதுவும் இல்லாதது. ஒரு பாட்ஸ் இணைப்பு என்பது, மேசை மீதுள்ள ஒரு சாதாரண தொலைபேசிக் கருவியுடனான இணைப்பைக் குறிக்கிறது.

pour : ஊற்று : ஒரு கோப்பினையோ அல்லது ஒரு நிரலின் வெளிப்பாட்டையோ இன்னொரு கோப்புக்கு அனுப்பி வைத்தல் அல்லது இன்னொரு சாதனத்துக்கு அனுப்பி வைத்தல்.

power : வர்க்கம்; ஆற்றல் : எண்ணின் விசைப்பெருக்கத்தை (வர்க்கம்) குறிக்கும் குறியீடு. இதனை "அடுக்குப் பெருக்கம்" என்பர். நானகின் மூன்று வர்க்கம் என்றால் 4x4x4 என்பதாகும். இதனை $4^3$ என்று எழுதுவர்.

power amplifying circuit : மின் பெருக்க மின்சுற்றுவழி : ஓர் உட்பாட்டு மாற்று மின்னோட்ட (AC) மின்னழுத்தத்தை ஒரு வெளிப்பாட்டு நேர் மின்னோட்ட (DC) மின்னழுத்தமாக மாற்றக்கூடிய மின்னணுவியல் மின்சுற்றுவழி.

powerbook : பவர்புக் : ஆப்பிள் நிறுவனத்தின் மெக்கின்டோஷ் கணினிக் குடும்பத்தைச் சேர்ந்த கையகக் கணினிவகை. இதனை கையேட்டுக் கணினி (Notebook Computer) என்பர்.

**power down : விசை நிறுத்தம்:** 1. ஒரு கணினியை அல்லது புற நிலைச் சாதனத்தை நிறுத்தி விடுதல். 2. மின்தடங்கல் ஏற்படும்போது அல்லது மின் விசை நிறுத்தப்படும்போது, கணினிக்கு அல்லது அதனுடன் இணைந்துள்ள புறநிலைச் சாதனங்கள் சேதமடைவதைத் தடுப்பதற்காக கணினி மேற் கொள்ளும் நடவடிக்கை.

**power fail / restart : மின்தடங் கல்/தொடங்கல் :** மின்தடங் களுக்குப் பிறகு ஒரு கணினி தனது இயல்பான செயற் பாட்டினைத் தொடங்குவதற்கு இயல்விக்கும் வசதி.

**power failure : மின் நிறுத்தம்; மின்தடங்கல்; மின் துண்டிப்பு :** கணினி செயல்பட்டுக் கொண்டி ருக்கும்போது மின்சாரம் தடைப்படல். மாற்று மின் வழங்கி இல்லையெனில் கணினியின் நிலையா நினை வகத்தில் (RAM) தேங்கியுள்ள தரவுகள் இழக்கப்பட்டுவிடும்.

**powerful : ஆற்றல்வாய்ந்த:** வன் பொருள் விரைவாக இயங்குவ னவாகவும், வடிவளவில் பெரி தாகவும், தம்மையொத்த எந்தி ரங்களை விட அதிகப் பணி களைச் செய்யக் கூடியனவாக இருப்பின் ஆற்றல் வாய்ந்தவை எனக் கருதப்படும். மென் பொருள் திறமையாகச் செயற் படுவனவாகவும், பெருமளவுப் பணிகளைச் செய்யக்கூடிய வையாகவும் இருந்தால் அவை ஆற்றல் வாய்ந்தவை எனக் கருதப்படும்.

**power macintosh : பவர் மெக்கின்டோஷ் :** பவர்பீசி (Power PC) செயலி பொருத்தப் பட்ட ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினி. பவர் மெக்கின்டோஷ் 6100/60, 7100/66, 8100/80 கணினிகள் முதன்முதலில் 1994 மார்ச்சில் வெளியிடப்பட்டன.

**power management : மின் மேலாண்மை.**



பவர் மெக்கின்டோஷ்

**power, memory** : நினைவகத் திறன்.

**power off** : மின்னிணைப்புத் துண்டிப்பு.

**power on** : மின்விசைத் தொடுப்பு : மின்விசையைத் 'தொடுப்பு' நிலையில் வைத்து மின்னோட்டம் நடைபெறுவது அல்லது ஒரு சாதனத்திற்கு மின்னோட்டம் செல்லுமாறு செய்தல். இதனை 'விசையேற்றம்' (Power up) என்றும் கூறுவர்.

**power-on key** : மின்இயக்கு விசை; மின் நிகழ்த்து விசை : ஆப்பிள் ஏடீபி மற்றும் நீட்டித்த விசைப் பலகைகளில் மெக்கின் டோஷ் II கணினிகளை இயக்குவதற்கென அமைக்கப்பட்டுள்ள சிறப்பு விசை. இடப்புறம் நோக்கிய முக்கோணக் குறி இடப்பட்டிருக்கும். மின்சார நிகழ்/அகல் (on/off) நிலை மாற்றிக்குப் (switch) பதிலாகப் பயன்படுகிறது. மின்சாரத்தை நிறுத்துவதற்கென தனியான விசை கிடையாது. கணினியில் சிறப்புப் பட்டியிலிருந்து (menu) கட்டளையைத் தேர்வு செய்தால் கணினியின் இயக்கம் நின்றுபோகும்.

**Power - On Self Test** : மின்-நிகழ் சுயசோதனை : கணினியின் அழியா நினைவகத்தில் (ROM) சேமித்து வைக்கப்பட்டுள்ள நிரல் கூறுகளின் தொகுப்பு. நிலையா நினைவகம் (RAM), வட்டு இயக்ககங்கள், விசைப்பலகை போன்றவை சரியாக இணைக்கப்பட்டு செயல்படும் நிலையில் உள்ளனவா என்பதைப் பரிசோதிக்கும் நிரல்கள் இதில் உள்ளடங்கியுள்ளன. ஏதேனும் சிக்கல்கள் இருப்பின் இந்த நிரல்கூறுகள், பீப் ஒலி எழுப்பியோ, பிழை சுட்டும் செய்தி மூலமாகவோ பயனாளருக்குச் சுட்டிக்காட்டுகின்றன. இச் செய்திகள் பெரும்பாலும் வழக்கமான கணினித் திரையில் காட்டப்படும். மின்-நிகழ் சுயபரிசோதனை வெற்றிகரமாக முடிந்த பின், கட்டுப்பாடு, கணினியின் இயக்கத் தொடக்க நிரலேற்றிக்கு மாற்றப்படும்.

**power PC** : பவர் பிசி : பிஎம் / ஆப்பிளின் கூட்டு முயற்சிக்காக மோட்டோரோலா நிறுவனம் உருவாக்கும் 'ரிஸ்க்' (risc) சிப்பு.

**power PC platform** : பவர்பீசி பணித் தளம் : 601 மற்றும் அதன்பின் வந்த சில்லுகளின் அடிப்படையில் ஐபிஎம், ஆப்பிள், மோட்டோரோலா நிறுவனங்கள் உருவாக்கிய பணித்தளம். ஒன்றுக்கு மேற்பட்ட இயக்க முறைமைகளைப்

பயன்படுத்த இப்பணித்தளம் வழிசெய்கிறது. மேக் ஓஎஸ், விண்டோஸ் என்டீ, ஏஐஎக்ஸ் இயக்கமுறைமைகளில் செயல்படலாம். அந்த இயக்க முறைமைகளுக்காக வடிவமைக்கப்பட்ட மென்பொருள்களையும் பயன்படுத்தலாம்.

**Power PC Reference Platform :** பவர்பீசி மேற்குறிப்புப் பணித்தளம் : ஐபிஎம் உருவாக்கிய திறந்தநிலை முறைமை தரவரையறை. பல்வேறுபட்ட நிறுவனங்கள் உருவாக்கிய பவர்பீசி முறைமைகளுக்கிடையே ஒத்தியல்பை உறுதி செய்வதே ஐபிஎம் இதனை வடிவமைப்பதற்கான நோக்கமாகும். தற்போதைய ஆப்பிள் பவர்பீசி மெக்கின்டோஷ் முறைமைகள் ஐபிஎம்மின் பவர்பீசி மேற்குறிப்பு பணித்தளத்துடன் ஒத்தியல்பற்றவையாய் உள்ளன. வருங்காலப் பதிப்புகள் ஒத்தியல்புடையவையாய் இருக்க வாய்ப்புண்டு. சுருக்கமாக ப்-ரெப் (PReP) என்று அழைக்கப்படுகிறது.

**powerpoint :** பவர்பாயின்ட் : மைக்ரோசாஃப்ட் நிறுவனத்தின் விண்டோஸ் மற்றும் மெக்கின்டோஷ் அறிமுக பிரசென்டேஷன் நிரல் தொடர். மெக்கின்டோஷ் முதல் மேசைமேல் வழங்கும் நிரல்தொடரான இது, ஒட்டு மொத்தங்கள், கைவெளியீடுகள், பேசுபவர் குறிப்புகள் மற்றும் திரைப்பட பதிவிகளை வழங்குகிறது. ஜெனிகிராபிக் படவில்லைகளுக்கான வண்ணத் தொகுதி இதனுடன் சேர்ந்து வரும்.

**power supply :** மின்வழங்கி : மாற்று மின்னோட்ட (AC)மின் அழுத்தத்தை நேர்மின்னோட்ட (DC) மின்னழுத்தமாக மாற்றுகிற மின்சுற்றுவழி. ஒலித்துடிப்புகளும், மின்னழுத்த மாறுபாடுகளும் கணினியின் மின் சுற்றுவழிகளைச் சீர்குலைக்காதவாறு ஒரு விசை வழங்கீட்டு வெளிப்பாடு கண்டிப்பாக ஒழுங்கு முறைப்படுத்தப்படுகிறது.

**power surge :** மின் எழுச்சி; மின்னெழுப்பி : மின்னோட்டம் பாய்தல் திடீரென அதிகரித்துச் சிறிது நேரம் நீடித்திருத்தல். இதனால், கணினிச் செயற்பாடு முறையாக இயங்குவதில் சில சிக்கல்கள் உண்டாகலாம்.

**power telephone network :** திறன்மிகு தொலைபேசிப் பிணையம்.

**Power up :** மின்னேற்றம் : மின் இணைப்பு வழங்கல் : 1. ஒரு கணினியை அல்லது புறநிலைச் சாதனத்தை இயக்குவதற்கு

முடுக்கிவிடுதல். 2. விசை யோட்டம் செய்யப்படுகிற போது அல்லது மின்தடங் களுக்குப் பிறகு மீண்டும் விசை யூட்டப்படுகிறபோது ஒரு கணினிச் செய்முறைப்படுத்த மேற்கொள்ளும் நடவடிக்கை. இது, "விசை நிறுத்தம்" என்பதிலிருந்து வேறுபட்டது.

**power user** : சக்தி பயனாளர்: தனிநபர் கணினியில் மிகவும் திறமையுள்ள நபர். பலதரப் பட்ட மென்பொருள் பொதிகங் கள் பற்றிய அறிவுள்ளவர் என்பதைக் குறிப்பிடுகிறது.

**pph** : பிபிஎச்: 'மணிக்கு இத்தனை பக்கங்கள்' என்று பொருள்படும் "Pages per hour" என்ற ஆங்கில சொற்றொடரின் குறும்பெயர்.

**PPM** : பிபிஎம்: "துடிப்பு இட நிலை ஏற்ற இறக்க","துடிப்பு நேர ஏற்ற இறக்கம்" என்று பொருள்படும் "Pulse Position Modulation", "Pulse Time Modulation" என்ற ஆங்கிலச் சொற் றொடர்களின் குறும்பெயர்.

**PPP** : பீபீபீ : நேரடி இணைப்பு நெறிமுறை என்று பொருள் படும் Point to Point Protocol என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். தொலைபேசி இணைப்பு வழியாக ஒரு கணினியை இணையத்தோடு இணைப் பதற்கென 1991ஆம் ஆண்டில் இணையப் பொறியியல் முனைப்புக் குழு (Internet Engineering Task Force) உரு வாக்கிய தரவு தொடுப்பு நெறி முறை (Data Link Protocol). ஸ்லிப் (SLIP) நெறிமுறையை விடக் கூடுதலான தரவு ஒழுங்கு மற்றும் தரவு பாதுகாப்புக் கொண்டது. ஆனால் சற்றே சிக்கல் மிகுந்தது.

**.pr** : .பீஆர் : ஓர் இணைய தள முகவரி போர்ட்டோ ரீக்கோ நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**Pragmatics** : செயல்துறை உறவு; நடைமுறையியல் : குறி யீடுகளுக்கும், அந்தக் குறியீடு களைப் பயன்படுத்துவோர்க்கு மிடையிலான உறவு நிலையை ஆராய்தல்.

**PRAM** : பிரேம் : அளபுரு ரேம் எனப்பொருள்படும் parameter RAM என்பதன் சுருக்கம். மெக்கின்டோஷ் கணினிகளில் ரேம் நினைவகத்தின் ஒரு பகுதி. கணினியின் தேதி, நேரம், திரைத்தோற்றம் மற்றும் பிற கட்டுப்பாட்டுப் பலகத்தின் அமைப்புக் கூறுகள் போன்ற

தகவமைவுத் தரவுகளை பதிந்து வைத்துள்ள ரேம் நினைவகப் பகுதி.

**P-rating** : பீ-தரமிடல்; பீ-தர அளவீடு: செயல்திறன் தர அள வீடு என்று பொருள்படும் perfor- mance rating என்பதன் சுருக்கம். ஐபிஎம், சிரிக்ஸ் மற்றும் சில நிறுவனங்கள் இணைந்து உருவாக்கிய நுண்செயலி தர அளவீட்டு முறை. நடப்புநிலைப் பயன் பாடுகளின் ஒட்டுமொத்தத் பலன் (throughput) அடிப்படை யில் அமைந்தது. முன்பெல் லாம் நுண் செயலியின் கடிகார வேகமே தர அளவீட்டின் அடிப் படையாகக் கொள்ளப்பட்டது. சிப்புக் கட்டுமானங்களில் உள்ள வேறுபாடு, கணினியைப் பலதரப்பட்ட மக்கள் பயன் படுத்துவது போன்றவை கணக் கில் கொள்ளப்படவில்லை.

**Precaution** : முன்னெச்சரிக்கை.

**precedence** : முன்னுரிமை : ஒரு கணக்கீட்டுத் தொடரில் மதிப்புகள் கணக்கிடப்படும் வரிசை. பொதுவாக, பயன் பாட்டு நிரல்களில் பெருக்கல், வகுத்தல் முதலிலும், கூட்டல் கழித்தல் அதன்பிறகும் செய்யப் படுகின்றன. இந்த வரிசை முறையை மாற்ற வேண்டு மானால் பிறை அடைப்புக் குறிகளைப் பயன்படுத்தலாம். அடைப்புக் குறிகளுக்குள் இருப் பது முதலில் நிறைவேற்றப் படும். 3+4x5 = 23 (3+4)x5 = 35. காண்க : Operator Precedence.

**pre decrement operator** : முன் குறைப்பு செயற்குறி.

**Precision** : துல்லியம்; சரி நுட்பம்: ஒரு எண்ணளவினை குறித்திடும் துல்லியத்தின் அளவு. ஒரு கணிப்பு ஏறத் தாழத் துல்லியமாகச் செய்யப் படுகிறது. பை (π) என்பதன் உண்மையான மதிப்பு 3.14162 ஆகும். இது ஆறு எண்கள் வரைத் துல்லியமானது.

**precompiler** : முன்தொகுப்பி: இன்னொரு கணினி செயல் முறையின் ஆதாரக் குறியீடு களை அந்தச் செயல்முறை தொகுக்கப்படுவதற்கு அடுத்து முந்திச் செய்முறைப்படுத்துகிற கணினிச் செயல்முறை. இது அந்தச் செயல்முறைக்குப்பின் வரும் திறம்பாடுகளை அளிக்கலாம் : 1. தொகுப்பிக்கு ஏற்புடையதல்லாத வசதியான சுருக்கங்களைப் பயன்படுத்து வதற்கான திறம்பாடு; 2. தொகுப்பிக்கு ஏற்புடையதாக இல்லாத, தர அளவுப்படுத்தாத செயல்முறைப்படுத்தும்

கட்டளைகளைப் பயன்படுத்துவதற்கான திறம்பாடு; 3. ஒரு செயல்முறையாளர் எழுதும் ஆதார கட்டளைத் தர நிலைப் படுத்தும் திறம்பாடு.

**predefined function** : முன்வரையறுத்த செயற்பணி : பயன்படுத்துவோர் ஒரு செயல்முறையில் சேர்த்துக் கொள்வதற்கு உள்ள தர அளவுக் கணித நடைமுறை.

**predefined process** : முன்வரையறுத்த செயல்முறை : 1. வேறெங்கேனும் வரையறுக்கப் பட்டு பெயரால் மட்டுமே அடையாளங் காணக்கூடிய செய்முறை. 2. முடிவுறுத்திய துணை வாலாயம்.

**predefined process symbol** : முன் வரையறுத்த செய்முறைக் குறியீடு : ஒரு துணை வாலாயத்தினைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்படும் செவ்வகப் பாய்வு வரைபடக் குறியீடு.

**predicate** : பயனிலை: நிரல் தொடரில் வரும் ஒரு சொற்றொடர். இது ஒரு வெளிப்பாட்டை மதிப்பீடு செய்து தரவுவின் நிலைமையை அனுசரித்து உண்மை அல்லது பொய் என்ற பதிலைத் தரும்.

**predictive reports** : ஊக அறிக்கைகள்; முன் கணிப்பு அறிக்கை : திறமார்ந்த தந்திரமான முடிவுகள் எடுப்பதற்குப் பயன்படுத்தப்படும் வணிக அறிக்கைகள்.

**pre edit** : முன்னிலைத் திருத்தம்.

**preemptive multitasking** : முற்படு பல்பணியாக்கம் : பல் பணியாக்கத்தில் ஒருவகை. இயக்க முறைமையானது குறிப்பிட்ட கால இடைவெளியில் ஒரு நிரலின் செயல்பாட்டில் குறுக்கிட்டு, கணினியின் கட்டுப்பாட்டை, காத்திருக்கும் இன்னொரு நிரலுக்கு மாற்றித்தரும். இம்முறையில், ஏதேனும் ஒரு நிரல், கணினிச் செயல்பாட்டை ஏகபோகமாய் ஆக்கிரமித்துக் கொள்வது தவிர்க்கப்படுகிறது.

**preferences** : முன்தேர்வுகள்; முன்னுரிமைகள்; விருப்பத் தேர்வுகள் : பெரும்பாலான வரைகலைப் பயனாளர் இடைமுகங்களில், ஒரு பயன்பாட்டு நிரல் ஒவ்வொரு முறை இயக்கப் படும்போதும் எவ்வாறு செயல்படவேண்டும் என்பதை பயனாளர் வரையறுத்துக் கொள்ள முடியும். எடுத்துக் காட்டாக ஒரு சொல்செயலிப் பயன்பாட்டில் அளவுகோல் (ruler) தோன்றவேண்டுமா, கருவிப்பட்டை, நிலைமைப் பட்டை போன்றவை இருக்க

வேண்டுமா, ஆவணத்தின் தோற்றம் அச்சுக்குப் போவது போன்ற ஓர இடைவெளி களுடன் தோற்றமளிக்க வேண்டுமா மற்றும் இது போன்ற விருப்பத் தேர்வுகளை முன்கூட்டியே அமைத்துக் கொள்ள முடியும்.

**prefix notation :** முன்னொட்டுக் குறிமானம் : கணித எண்ணுருக் கோவைகளை உருவாக்குவதற் கான முறை. இதில் ஒவ்வொரு இயக்கு எண்ணும் இயக்கப்படு எண்களுக்கு முன்னதாக வரு கிறது. எடுத்துக்காட்டு: (x+y)xz என்னும் கோவையை 'xy+xz' என்று குறிக்கலாம். 5ஐயும் 3ஐ யும் கூட்டுவதை +53 என்று போலந்துக் குறிமானத்தில் குறிக்கலாம்.

**p-register :** செயல்முறைப் பதி வேடு : செயல்முறை மேடைப் பதிவேடு. இதில் நடப்பு கட்டளைகளின் அமைவிடம் பதிவு செய்யப்பட்டிருக்கும்.

**pre - increment operator :** முன் கூட்டுச் செயற்குறி.

**Preliminary study :** ஆரம்ப நிலை ஆய்வு.

**preloaded :** முன்பதிய வைத்த.

**premium rate service :** உயர் மதிப்புக் கட்டண சேவை : ஐஎஸ்டின் (ISDN - Integrated Services Digital Networks) தொலைதொடர்புச் சேவையில் ஒருவகை சேவை.

**preparation, data :** தரவுத் தயாரிப்பு.

**prepress :** முன் அச்சு : அச்சிடல் மற்றும் அச்செழுத்துக் கலையில், ஒளிப்படக் கருவிக்குத் தயாராகும் பொருள்களை அச்சு நிலைவரை தயாரித்தல். அச்சுக் கோப்பு மற்றும் பக்கமாக்குதல் இதில் அடங்கும்.

**preprinted forms :** முன் அச் சிட்ட படிவங்கள் : கணினி உரு வாக்கிய வெளிப்பாட்டினைக் கொண்டிருக்கும் படிவங்கள். இவற்றில் ஏற்கெனவே அச்சிட்ட தலைப்புகளுடனும் அடையாளத் தரகவல்களுட னும் கூடிய ஒரு கணினியமைவு பதிவு செய்யப்பட்டிருக்கும். இவை பெரும்பாலும் புறநிலை அறிக்கைகளைத் தயாரிக்கப் பயன்படுத்தப்படுகின்றன.

**preprocessor :** முன்செய்முறைப் படுத்தி; முன்னிலைச் செய லாக்கி : உட்பாட்டுத் தரவு களில், மேற்கொண்டு செய் முறைப்படுத்துவதற்கு முன்பு, மாற்றம் செய்தல், படிவமாக்கு தல், சுருக்கஞ் செய்தல் போன்ற செயற்பணிகளைச் செய்கிற செயல்முறை.

**presentation :** கருத்து விளக்கம்; முன் வைப்பு.

**presentation graphics :** அறிமுக வரைகலை; நிகழ்த்து வரை கலை : முன்வடிவுகள், திட்டங் கள், வரவு செலவுத் திட்டங்கள் ஆகியவற்றை உயர் மேலாண் மைகளுக்கு அளிப்பதில் முக் கியக் குறிப்புகளை வலியுறுத்திக் காட்டுவதற்குப் பயன்படுத்தப் படும் உயர்தர வணிக வரை கலைக் காட்சியுருக்கள்.

**presentation manager :** அறிமுக மேலாளர் : ஓஎஸ்/2இல் உள்ள மைக்கப்பட்ட விண்டோஸ் சூழ்நிலையில் உருவான வரை கலைப் பயனாளர் இடைமுகம் டாஸுக்கான சாளரத்தில் விண்டோஸில் உள்ளதுபோல இதுவும் ஒரு பயன்பாடு.

**preset :** முன் நிறுவுதல் : முதல் நிலைத் தகுநிலையை நிருண யித்தல். ஒரு வளைவின் கட்டுப் பாட்டு மதிப்பளவுகளை அறுதி யிடுதல் அல்லது அட்டவணை கள், பதிவேடுகள் போன்ற வற்றில் முதல்நிலை மதிப் பளவுகளை நிருணயித்தல் இதற்கு எடுத்துக்காட்டு.

**prespecified reports :** முன்வரை யறுக்கப்பட்ட அறிக்கைகள் : வேண்டும்போதோ அல்லது விதி விலக்காகவோ மேலாளர் களுக்கு காலமுறைப்படி தரவுவை முன்னதாகவே வழங்குமாறு வடிவமைக்கப் பட்ட அறிக்கைகள்.

**press :** அழுத்து : ஒரு நுண் பொறியில் விசைப்பொத்தானை அழுத்தும் செயல்.

**pressure-sensitive :** அழுத்தம் உணரி : ஒரு மெல்லிய பரப் பின்மீது அழுத்தம் கொடுக்கும் போது ஒரு மின் இணைப்பு ஏற் பட்டு, கணினியால் உணர்ந்து பதிவுசெய்யும் வகையில் ஒரு நிகழ்வினை ஏற்படுத்தும் ஒரு சாதனம். தொடுஉணர்வு வரைவு பேனாக்கள், தொடுவிசைப் பலகைகள், சில தொடுதிரைகள் இந்த வகையைச் சார்ந்தவை.

**pressure sensitive keyboard :** அழுத்த உணர்வு; விசைப் பலகை : மின்கடத்தும் மை யினாலான ஒரு மின்சுற்று வழி பொருத்தப்பட்ட, இரு மெல் லிய பிளாஸ்டிக் தகடுகளால் உருவாக்கப்பட்ட விசைப் பலகை. இது சிக்கனமானது; குட்டை வடிவமானது மலி வான பல நுண்கணினிகளில் பயன்படுத்தப்படுகிறது.

**pressure sensitive pen :** அழுத்த உணர்வுப் பேனா : ஓர் எண்ணாக்கியின் உதவியுடன் பயன்படுத்தப்படும் பேனா.

இதில் ஒரு அழுத்த நுண்ணிடை இயக்கமானி அடங்கியுள்ளது. இது எழுதும் அழுத்தத்தை உணர்ந்தறிந்து z-அச்சுத் தரவு வாக அனுப்புகிறது.

**prestel** : பிரெஸ்டெல் : இங் கிலாந்திலுள்ள வணிகமுறை ஒளிப்பேழை வாசகச் சேவை முறை.

**prety print** : அழகு அச்சு; ஒழுங்கு அச்சு : அச்சிடும்போது நிரல் கட்டளைகளை எளிதாகப் படித்துப் புரிந்துகொள்ளும் வகையில் வடிவமைக்கும் வசதி சில உரைத்தொகுப்பான்களில் உள்ளன. (எ-டு) நிரல் கூறு களுக்கிடையே ஒரு வெற்று வரி சேர்த்தல், பின்னல் நிரல் கூறு களுக்கு ஓர இடம்விடல், சில கட்டளை அமைப்புகளில் வரி களை உள்ளடங்கி அமைத்தல்.

**preventive maintenance** : தடுப்புப் பராமரிப்பு; தவிர்நிலை பேணல் : சாதனங்களைத் தொடர்ந்து செயற்பாட்டு நிலை யில் வைத்து வருவதற்கு உதவ ஒரு கணினியில் பயன்படுத்தப் படும் செய்முறைகள். தவறுகள் நேர்வதற்கு முன்பு அவற்றைக் கண்டுபிடித்து, தனிமைப் படுத்தி, திருத்தம் செய்வதற்கு இவை உதவுகின்றன. சாதனங் களை இயல்பு நிலையிலும் பழுது நிலையிலும் துப்புரவு செய்தல், சரியமைவு செய்தல், சோதனை செய்தல் போன்றவை இதில் அடங்கும்.

**preview** : முன்காட்சி : சொல் செயலி மற்றும் பிற பயன் பாடுகளில் உள்ள ஒரு வசதி. ஓர் ஆவணத்தை அச்சிடுவதற்கென வடிவமைத்தபின் நேராக அச்சுப்பொறிக்கு அனுப்பாமல், அச்சிடப்போகும் அதே வடி வமைப்பில் கணினித் திரையில் காணலாம். பயனாளருக்கு மன நிறைவு ஏற்படின் அப்படியே அச்சுப்பொறிக்கு அனுப்பி விடலாம்.

**previous** : முற்பட்ட, முந்தைய.

**previous page button** : முந்தைய பக்கப் பொத்தான்.

**primary and extended** : முதன்மை மற்றும் நீட்டிப்பு.

**primary channel** : முதன்மைத் தடம் : இணக்கி போன்ற தகவல் தொடர்புச் சாதனத்தில் தரவு அனுப்பு தடத்தின் பெயர்.

**primary cluster** : அடிப்படைத் தொகுதி; முதன்மைத் தொகுதி : தனியொரு அட்டவணை அமை விடத்தைச் சுற்றி அட்டவணை பதிவுகளைத் திரட்டுதல்.

**primary colours** : அடிப்படை வண்ணங்கள் : மற்ற வண்ணங் கள் அனைத்தையும் உருவாக்கக் கூடிய அடிப்படையான

வண்ணங்களின் தொகுதி. சிவப்பு, பச்சை, நீலம் ஆகியவை அடிப்படை வண்ணங்கள். வண்ணம் பூசுபவர்கள் சிவப்பு, மஞ்சள், நீலம் ஆகியவற்றை அடிப்படை வண்ணங்கள் என்பர். இந்த அடிப்படை வண்ணங்களை ஒன்றிலிருந்து ஒன்று உண்டாக்க முடியாது. ஆனால் இவற்றை ஒன்றோடொன்றுகலந்து வேறு வண்ணச் சாயல்களை உருவாக்கலாம்.

**primary data** : அடிப்படைத் தரவு : மூலாதாரத்திலிருந்து பெறப்பட்ட தரவு. வானிலை அறிவிப்புத் துறையில் பெறப்பட்ட பயனுள்ள தரவு அடிப்படை தரவுக்கு எடுத்துக்காட்டுகளில் ஒன்றாகும்.

**Primary Domain Controller** : முதன்மைக் களக் கட்டுப்படுத்தி : 1. விண்டோஸ் என்டீ-யில் பிணைய வளங்களையும், பயனாளர் கணக்குகளையும் மையப்படுத்தப்பட்ட முறையில் நிர்வகிக்க உதவும் ஒரு தரவுத் தளம். பயனாளர்கள் ஒரு குறிப்பிட்ட புரவன் கணினியில் நுழைவதற்குப் பதிலாக ஒரு களத்தினுள் நுழைய இந்த தரவுத் தளம் அனுமதிக்கிறது. ஒருகளத்தினுள் இருக்கும் கணினிகள் பற்றிய விவரங்களை வேறொரு கணக்கு வைப்புத் தரவுத் தளம் கவனித்துக் கொள்கிறது. களத்தின் வளங்களைப் பயனாளர்களுக்கு ஒதுக்கீடு செய்கிறது. 2. ஒரு குறும்பரப்புப் பிணையத்தில், களத்தின் பயனாளர் கணக்குகளுக்கான தரவுத் தளத்தின் முதன்மை நகலைப் பராமரித்து, பயனாளர்களின் புகுபதிகைக் கோரிக்கைகளைச் சரிபார்க்கும் பணிகளைக் கவனித்துக் கொள்ளும் வழங்கன் கணினி.

**primary index** : அடிப்படை அட்டவணை : ஒரு கோப்பின் நடப்புச் செயலாக்க வரிசை முறையைக் கட்டுப்படுத்தும் அட்டவணை.

**primary key** : அடிப்படைப் புதிர்க் குறிப்பு; முதன்மைத் திறவுகோல் : செய்முறைப் படுத்த பதிவேடுகளை வகைப் படுத்துவதற்கு அல்லது ஒரு கோப்பினுள் ஒரு குறிப்பிட்ட பதிவேட்டின் அமைவிடத்தைக் கண்டறிவதற்குப் பயன்படுத்தப் படும் ஒரு வழிகாட்டுங் குறிப்பு.

**primary memory** : முதன்மை நினைவகம்; அடிப்படை நினைவகம் : இது மையச் செயலகத்துடன் நேரடியாகத் தொடர்புடைய கணினி நினைவகம் (ரேம்) இது மின்சக்தி இல்லை

யென்றால் நினைவகத்தில் சேமித்தவற்றை வைத்துக் கொண்டிராது.

**primary storage :** முதன்மைச் சேமிப்பகம் : குறிப்பிலா அணுகு நினைவகமே (RAM) இவ்வாறு அழைக்கப்படுகிறது. முதன்மை யான பொதுப் பயன் சேமிப்புப் பகுதி ஆகும். நுண் செயிலி இந்த நினைவகப் பகுதியை நேரடியாக அணுகும். கணினி யில் வட்டு, நாடா போன்ற சேமிப்புச் சாதனங்கள் துணை நிலை சேமிப்பகங்கள் அல்லது சில வேளைகளில் காப்புச் சேமிப்பகங்கள் என்றும் அழைக்கப்படுகின்றன.

**prime factors :** பகாஎண் காரணிகள்.

**prime number :** பகாஎண்.

**primer :** முதன்மை ; ஆரம்ப: ஒரு ஆரம்ப விளக்கக் கையேடு.

**prime shift :** முதற்படி முறை மாற்றம்: ஓர் அமைவனத்தின் இயல்பான அலுவல் நேரத் துடன் ஒத்திருக்கிற வேலை முறைமாற்றம், முடிவு முறை மாற்றம் ஆகியவற்றிலிருந்து வேறுபட்டது.

**primitive :** ஆதிநிலை; தொடக்க நிலை: 1. ஆதாரமான அல்லது அடிப்படையான அலகு. ஒரு எந்திர நிரலின் மிக அடிமட்ட நிலையினை அல்லது ஒரு மொழி பெயர்ப்பின் மிகவும் கீழ்மட்ட அலகினைக் குறிக்கிறது. 2. கணினி வரை கலையில் புள்ளிகள், கோடுகள், கூறுகள், எழுத்துகள் போன்ற அடிப்படை வரைகலைக் கூறுகளைக் குறிக்கிறது.

**primitive data type :** மூலத் தரவு இனம்.

**primitive element :** ஆதிநிலைக் கூறு; தொடக்க நிலைக்கூறு : கோடு, கூறு, புள்ளி போன்ற வரைகலைக் கூறு. சிக்கலான உருவங்களை அல்லது உருக் காட்சிகளை உருவாக்குவதற்கு இவற்றை வரவழைக்கலாம் அல்லது மற்ற ஆதி நிலைக் கூறுகளுடன் இணைக்கலாம்.

**print :** அச்சு; அச்சிடு : கணிப் பணியில் தகவலை அச்சுப் பொறிக்கு அனுப்புதல். சில மென்பொருள்களில் சில வேளைகளில் இச்சொல், காண்பி, நகலெடு என்ற பொருள்களிலும் பயன்படுத்தப் படுகிறது. எடுத்துக்காட்டாக பேசிக் மொழியில் PRINT என் னும் கட்டளை வெளியீட்டைக் கணினித் திரையில் காட்டும். அதுபோலவே சில பயன் பாட்டுத் தொகுப்புகளில், PRINT

என்னும் கட்டளைமூலம் ஒரு கோப்பினை அச்சுப்பொறிக்கு அனுப்புவதற்குப்பதில் வட்டில் பதிவு செய்யும்படி திசை மாற்ற முடியும்.

print area : அச்சுப் பரப்பு.

print buffer : அச்சு இடையகம்; அச்சு இடைநினைவகம் : ஒரு தகவலை அச்சுப் பொறிக்கு அனுப்பும்போது, அச்சுப்பொறி அச்சிடத் தயாராக இல்லாத தருணத்தில், அனுப்பப்பட்ட தகவலை, நினைவகத்தின் ஒரு பகுதியில் தற்காலிகமாக இருத்தி வைக்கப்படுகிறது. இந்த நினைவகப் பகுதி அச்சு இடையகம் அல்லது அச்சு இடைநினைவகம் என்று அழைக்கப்படுகிறது. இந்த இடைநினைவகப் பகுதி (1) ரேம் (RAM) நினைவகம் (2) அச்சுப் பொறி (3) கணினிக்கும் அச்சுப் பொறிக்கும் இடையேயுள்ள ஒரு தனி சாதனம் (4) வட்டு - ஆகிய இவற்றுள் எதில் வேண்டுமானாலும் இருக்கலாம். எங்கு இருப்பினும், மெதுவாகச் செயல்படும் அச்சுப்பொறிக்கும் வேகமாகச் செயல்படும் கணினிக்கும் இடையே, தகவலின் தற்காலிகத் தங்குமிடமாகச் செயல்படுகிறது. அச்சு இடையகங்கள் வசதிகள் அடிப்படையில் வேறுபடுகின்றன. சிலவற்றில் ஒருசில எழுத்துகளையே இருத்த முடியும். சிலவற்றில் அச்சிடுவதற்கான கோப்புகளை ஒரு சாரை (Quene)யில் நிறுத்தி வைத்துக் கையாள முடியும். மறு அச்சிடல், சில அச்சுப் பணிகளை நீக்கிவிடுதல் போன்ற பணிகளைச் செய்ய முடியும்.

print chart : அச்சு வரைபடம்; அச்சிட்ட படிவம் : ஓர் அச்சடிப்பிக்கு ஒரு வெளிப்பாட்டு அறிக்கையின் உருப்படிவத்தை வரைவதற்குப் பயன்படும் படிவம். இது அச்சடிப்பி இடப் பரப்பு வரைபடம், அச்சடிப்பி வடிவமைப்புப் படிவம், அச்சுப் பக்க அமைப்புத் தகடு என்றும் அழைக்கப்படும்.

print column : அச்சுப் பத்தி: துணைக் கூட்டல் அல்லது கூட்டலிடப்படக்கூடிய வகையில் அச்சு அறிக்கையின் மீதுள்ள தகவல் பத்தி. அறிக்கை எழுதுபவரின் விளக்கக் குறியில் அச்சுப்பத்திகளே இன்றியமையாதவை.

print control character : அச்சுக் கட்டுப்பாட்டு எழுத்துரு : ஒரு வரி வாரி அச்சடிப்பியில் செயற்பாட்டுக்கான கட்டுப்பாட்டு எழுத்து. சகட மீட்சி, பக்க

வெளியேற்றம், வரிஇட பரப்பு போன்றவை இதில் அடங்கும்.

**print density : அச்சு அடர்த்தி :** ஓர் அளவீட்டு அலகில் அடக்கக்கூடிய அச்செழுத்துகளின் எண்ணிக்கை. எடுத்துக்காட்டு : ஒரு பக்கத்தில் அடங்கியுள்ள எழுத்துகளின் எண்ணிக்கை.

**printed circuit : (PC) : அச்சிட்ட மின்சுற்று வழி (பீசி) :** மின்கடத்தாத ஒரு தட்டையான தகட்டில் அச்சிடப்பட்ட, வெற்றிடம் அடைவு செய்த மின்முலாம் பூசிய மின்னணு வியல் மின் சுற்றுவழி.

**printed circuit board (PCB) : அச்சிட்ட மின்சுற்றுவழிப் பலகை :** பலகையிலுள்ள மின் கடத்தும் பொருளின் மூலம் மின்னியல் இணைப்புகள் கொடுக்கப்பட்டுள்ள மின் சுற்றுவழி. இதில் கம்பிகள் வாயிலாக இணைப்புகள் செய்யப்படவில்லை. ஒருங்கிணைந்த மின்சுற்றுவழிச் சிப்புகள், எதிர்ப்பிகள், மின் பெருக்கிகள், விசைகள் ஆகியவை இந்தப் பலகையில் ஏற்றப்படுகின்றன.



அச்சிட்ட மின்சுற்றுவழிப் பலகை

**printed density : அச்சிடப்பட்ட அடர்த்தி:** காகிதத்தில் எழுத்துகள் அல்லது வரைகலைகளை எவ்வளவு கறுப்பாக அச்சிடப் படுகிறது என்பதைக் குறிப்பிடுவது.

**Printed materials : அச்சுப்படிகள்**

**print element : அச்சுக் கூறு :** உருக்காட்சியை உள்ளபடிக்குக் காகிதத்தில் பதிவு செய்கிற அச்சிட்ட பகுதி. தளமட்டச் சக்கரம், விரல் சிமிழ் ஆகியவை பெருமளவில் பயன்படுத்தப் படும்அச்சுக்கூறுகள். இதனை 'அச்சுத் தலைப்பு' என்றும் கூறுவர்.

**printer : அச்சுப்பொறி; அச்சடிப்பி :** வன்படி வெளிப்பாட்டினை உரு வாக்குகிற வெளிப்பாட்டுச் சாதனம்.

**printer, barrel : சுழல் உருளை அச்சு.**

**printer buffer :** அச்சடிப்பி இடை நினைவகம் ; அச்சுப்பொறி இடை நினைவகம் : ஒன்று அல்லது மேற்பட்ட கணினி களிடமிருந்து அச்சுப் பொறிக்கு அனுப்புகின்ற நினைவகச் சாதனம். ஒவ்வொரு பக்கமும் அச்சிடும்வரை காத்திராமல், முழு வெளியீட்டையும் கணினிக்கு உதவுவது. அச்சுப் பொறி இடை நினைவகம் மற்றும் தானியங்கிப் பொத் தானுடன் இரண்டுக்கு மேற் பட்ட கணினிகள் இணைக்கப் பட்டு வெளியீட்டை முதலில் வந்தது முதலில் வழங்கப்படு கிறது என்ற முறையில் ஏற்றுக் கொள்ளப்படும்.

**printer cable :** அச்சுப் பொறிக் கம்பி: ஒரு அச்சுப் பொறியைக் கணினியுடன் இணைக்கும் கம்பி. ஒரு பீசியில் கேபிளிடம் 25 பின் டி.பி.25-ஆண் இணைவி கணினிக்காகவும் அச்சுப் பொறிக்காக 36 பின் சென்ட் ரானிக்ஸ் ஆண் இணைப்பியும் இருக்கும்.

**printer, chain :** தொடர் அச்சுப் பொறி.

**printer, character :** எழுத்து அச்சுப்பொறி.

**Printer Control Language :** அச்சுப்பொறி கட்டுப்பாட்டு மொழி : ஹீவ்லெட்-பேக்கார்டு நிறுவனம் தன்னுடைய லேசர் ஜெட், டெஸ்க் ஜெட் மற்றும் ரக்டுரைட்டர் ஆகிய அச்சுப் பொறிகளில் பயன்படுத்திய மொழி. லேசர் அச்சுப்பொறிச் சந்தையில் லேசர்ஜெட் முன்னணி இடம் வகிப்பதால் அச்சுப்பொறி கட்டுப்பாட்டு மொழியே நிலைத்த தர வரையறையாய் ஆகிவிட்டது.

**printer controller :** அச்சுப் பொறிக் கட்டுப்படுத்தி : ஓர் அச்சுப்பொறியில் குறிப்பாக ஒரு பக்க-அச்சுப் பொறியின் செயலாக்கத்திற்கான வன் பொருள். இது ராஸ்டர் படிமச் செயலி, நினைவகம் மற்றும் பொதுப்பயன் நுண்செயலி களையும் உள்ளடக்கியது. அச்சுப்பொறிக் கட்டுப்படுத்தி சொந்தக் கணினியின் ஓர் அங்கமாகவும் இருக்க முடியும். மிகுவேக வடத்தின் மூலமாக கணினியுடன் இணைக்கப் பட்டிருக்கும்.

**printer, daisy wheel :** டெய்ஸி சக்கர அச்சுப்பொறி.

**printer, dot :** புள்ளி அச்சுப் பொறி.

**printer, dotmatrix :** புள்ளியணி அச்சுப்பொறி.

**printer driver :** அச்சுப்பொறி இயக்கி : பல்வேறு பயன்

பாட்டுத் தொகுப்புகள் ஒரு குறிப்பிட்ட அச்சுப்பொறியில் அச்சிடுவதைச் இயல்விப்பதற் கென வடிவமைக்கப்பட்ட ஒரு மென்பொருள். அக்குறிப்பிட்ட அச்சுப்பொறியின் வன்பொருள் அமைப்பு, அகநிலை மொழி பற்றிக் கவலையின்றி அச்சிட லாம். பயன்பாட்டுத் தொகுப்பு கள் பல்வேறு வகையான அச்சுப்பொறிகளை அவற்றுக் குரிய சரியான இயக்கி நிரல் களின் உதவிகளுடன் பயன் படுத்திக் கொள்ள முடியும். இக் காலத்தில் வரைகலைப் பணித் தள இயக்க முறைமைகள் தம்மகத்தே கொண்டுள்ள இது போன்ற இயக்கி நிரல்களை பயன்பாட்டுத் தொகுப்புகள் ஒவ்வொன்றும், தங்களுக்கென இயக்கி நிரல்களை வைத்துக் கொள்ளத் தேவையில்லை.

**printer engine** : அச்சுப்பொறி எந்திரம் : லேசர் அச்சுப்பொறி போன்ற பக்க அச்சுப்பொறி களில் அச்சிடும் பணியை நிறை வேற்றுகிற பாகம். பெரும் பாலான அச்சுப்பொறி எந்திரங் கள் தன்னிறைவு பெற்றவை யாய், மாற்றத்தகு மைப்பேழை களைத் தம்மகத்தே கொண் டுள்ளன. இந்த எந்திரம் அச்சுப் பொறிக் கட்டுப்படுத்தி யினின்றும் வேறுபடுகிறது. உலகில் பெருமளவு பயன் படுத்தப்படும் அச்சுப்பொறி எந்திரங்கள் கேனன் (Canon) நிறுவனம் தயாரித்தவை.

**printer file** : அச்சுப்பொறி கோப்பு; அச்சுப்பொறிக் கோப்பு : அச்சிடப்படத் தயாராக அச்சு உருவ வடிவத்தில் உள்ள ஆவணம். அச்சுப்பொறிக்கு அச்சிட அனுப்பப்படும் தரவு களை ஒரு கணினிக் கோப்புக்கு திசை திருப்பி சேமித்து வைத்துக் கொள்ள முடியும். இத்தகைய கோப்பு பல்வேறு காரணங்களுக்காக உருவாக்கப் படுகிறது. எடுத்துக்காட்டாக, அச்சுக்கு அனுப்பப்படும் வெளி யீட்டை அப்படியே இன்னொரு கணினிக்கு அல்லது இன்னொரு நிரலுக்கு உள்ளீடாகத் தரமுடி யும். பின்னொருநாளில் இக் கோப்பினை நேரடியாக அச்சுப் பொறிக்கு அனுப்பி எத்தனை நகல் வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம். சில வேளைகளில் அச்சுப்பொறி இயக்கிக் கோப்பினைத் தவறுதலாக சிலர் அச்சுப் பொறிக் கோப்பு எனக் குறிப் பிடுகின்றனர்.

**printer font** : அச்சுப்பொறி எழுத்துரு: அச்சுப்பொறிக்குள் தங்கியிருக்கும் அல்லது அச்சுப் பொறிக்கென வைத்திருக்கும்

ஓர் எழுத்துரு. இத்தகைய எழுத்துருக்கள் அச்சுப் பொறிக் குள்ளேயே உள்ளமைக்கப் பட்டிருக்கலாம். பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். எழுத்துருப் பொதியுறைகளிலும் கிடைப்பதுண்டு.

printer format : அச்சடிப்பி உருப் படிவம் : அச்சுப் படிவம்: அச்சடிப்பு மண்டலங்களாகப் பகுக்கப்பட்ட அச்சுத்தாள். ஒவ்வொரு மண்டலத்திலும் ஒரு மதிப்பளவினை மட்டுமே அச்சடிக்க முடியும்

printer head : அச்சுமுனை.

printer interface : அச்சு இடைப் பிணைப்பு.

printer interrupt : அச்சுப்பொறி குறுக்கீடு : "Not Pusy" சமிக்கையை அச்சுப்பொறி அனுப்பும்போது ஏற்படும் வன்பொருள் குறுக்கீடு. குறுக் கீடும் வாலாயமானது. பொது வாக வெளியீட்டுத் தரவுவின் எழுத்தை அச்சுப்பொறிக்கு அனுப்பிவிட்டு கட்டுப்பாட்டை மையச் செயலகத்துக்கு அனுப் பும். இந்த நடைமுறையானது அச்சுப்பொறியை இயக்கும் அதேவேளையில் கணினியை வேறு நோக்கங்களுக்குப் பயன் படுத்தும்.

printer layour sheet : அச்சுப் பொறி உருவரைத் தாள்.

printer, line : வரி அச்சுப்பொறி.

printer maintenance : அச்சுப் பொறி பாராமரிப்பு.

printer, matrix : அணி அச்சுப் பொறி.

printer, page : பக்க அச்சுப் பொறி.

printer port : அச்சுத்துறை; அச்சுப் பொறித்துறை : ஒரு சொந்தக் கணினியில் ஒரு அச்சுப் பொறியை இணைக்கக் கூடிய இடம். பீசி ஒத்தியல்புக் கணினிகளில் பெரும்பாலும் இணைநிலைத் துறைகளே (parallel ports) அச்சுத் துறையாக பயன்படுத்தப்படுகின்றன. இயக்க முறைமை, இதனை எல்பீடீ (LPT) என்னும் தருக்க சாதனப் பெயராக அடையாளம் காண்கிறது. சில அச்சுப்பொறி களுக்குத் நேரியல் துறைகளை யும் (serial ports) பயன்படுத்திக் கொள்ள முடியும். ஆனால் முன் கூட்டியே இயக்க முறைமைக்கு இதை உணர்த்திவிடவேண்டும். ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினி களில் பெரும்பாலும் நேரியல் துறைகளே அச்சுப்பொறிக்குப் பயன்படுத்தப்படுகின்றன.

printer, quality : அச்சுத்தரம்.

**printer service :** அச்சுப்பொறி வழங்கி : ஒன்று அல்லது மேற் பட்ட அச்சுப்பொறிகளைக் கட்டுபடுத்தும் கட்டமைப்புள்ள ஒரு கணினி. அந்த அமைப்பின் அனைத்துப் பயனாளர்களிட மிருந்தும் வருகின்ற வெளி யீட்டு அச்சுத் தோற்றத்தினைச் சேமித்து ஒரு நேரத்தில் ஒரு வேலை என்ற வகையில் அச்சுப் பொறிக்கு வழங்குவது. இப் பணியானது பிணைய (Network) இயக்க அமைப்பின் ஒரு பகுதி யாகவோ அல்லது சேர்க்கப் பட்ட பயன்பாடாகவோ இருக்கலாம்.

**printer stand :** அச்சடிப்பி நிலை யடுக்கு : ஓர் அச்சடிப்பித் தாங்கியிருப்பதற்காக வடி வமைக்கப்பட்ட மரத்தாலான நிலையான அடுக்கு விசிறி மடிப்பு. அச்சடிப்பி காகிதத் திற்காக உச்சிப்பகுதியில் ஒரு திறப்பினைக் கொண்டிருக்கும்.

**printer, thermal :** வெப்ப அச்சுப் பொறி.

**printer, wheel :** சக்கர அச்சுப் பொறி.

**printer, wire :** கம்பி.

**print head :** அச்சு முனை : புள்ளி அச்சுருவாக்கிய டாட் மாட்ரிக்ஸ்; இங்க் ஜெட், தெர்மல் அச்சுப்பொறி போன்ற வற்றில் உள்ள அச்சு ஊடகத்தில் தோற்றத்தை ஏற்படுத்தும் அமைப்பு. அச்சு ஊடகத்தின் ஒரு பக்கத்திலிருந்து வேறொன் றுக்கு அச்சுமுனை மாறுவது வழக்கம்.

**print image :** அச்சு உருவம் : பேசிக் மொழியில் 'Print Using' சொற்றொடரில் அச்சிட்ட வெளியீட்டை வடிவமைக்கப் பயன்படும் சரம்.

**printing station :** அச்சிடும் நிலையம்.

**print job :** அச்சுப் பணி : பல எழுத்துகள் சேர்ந்து ஒரே தொகுதியாக அச்சிடப்படுதல். ஓர் அச்சுப்பணி என்பது பெரும் பாலும் ஆவணத்தை அச்சிடும் பணியாக இருக்கும். அந்த ஆவணம் ஒரு பக்கமாக இருக்க லாம்; நூறு பக்கங்களைக் கொண்டதாகவும் இருக்கலாம். ஒவ்வொரு ஆவணத்தையும் தனித்தனியாக அச்சிடுவதைத் தவிர்க்க, சில மென்பொருள் கள், பல ஆவணங்களை ஒரு குழுவாகச் சேர்த்து ஒரு அச்சுப் பணியாகச் செய்வதும் உண்டு.

**print layout sheet :** அச்சு விரி வமைப்புத் தகடு; அச்சமைப்புத் தாள் : ஓர் அச்சிட்ட அறிக் கைக்குத் தேவையான ஒர விளிம்புகளையும் இடை

வெளிகளையும் அமைப்பதற்குப் பயன்படுத்தப்படும் வரைபடம்.

**print medium :** அச்சு ஊடகம் : அச்சிடப்பட்ட தோற்றம் வெளிவரக்கூடிய மேற்பரப்பு. பெரும்பாலானவற்றில் அச்சு ஊடகம், காகிதம்தான். ஆனால், நுண்படல அட்டைகள், ஊடுருவு ஒளிப்படம் போன்றவையும் ஊடகமாக அமையும்.

**print mode :** அச்சுப் பாங்கு : அச்சு வெளியீட்டின் வடிவமைப்பைக் குறிக்கும் பொதுவான சொல். நீளவாக்கில் (portrait), அகலவாக்கில் (landscape) அச்சிடலாம். எழுத்தின் தரம், உருவளவு ஆகியவற்றையும் இச்சொல் குறிக்கும். புள்ளியணி அச்சுப்பொறி (dot-matrix printer) இரண்டு வகையான அச்சுப் பாங்குகள் உள்ளன. எழுத்துத்தரம் (Letter Quality-LQ), உயர் எழுத்துத் தரம் (Near Letter Quality - NLQ). சில அச்சுப்பொறிகள் ஆஸ்கி மற்றும் போஸ்ட்கிரிப்ட் எழுத்து வடிவங்களையும் ஏற்கும்.

**printout :** அச்சுப்படிவம் : கணினியமைவு வெளிப்பாட்டின் படிவம். இது ஓர் அச்சடிப்பானால் ஒரு பக்கத்தில் அச்சிடப்படுகிறது.

**print position :** அச்சு நிலை.

**print preview :** அச்சு முன்காட்சி.

**print quality :** அச்சுத் தரம் : ஓர் அச்சடிப்பியில் அச்சிடப்பட்ட ஓர் அச்சுப் படிவத்தின் தரம்.

**print queue :** அச்சு வரிசை : அச்சுப்பொறிக்காக ஒதுக்கப்பட்ட வெளியீட்டை அச்சுப்பொறி ஏற்கும்வரை வைத்திருக்கும் வட்டின் இடம்.

**print screen :** அச்சுத் திரை : திரையில் அப்போது உள்ள உருவத்தை அச்சிடும் திறன்.

**print screen key :** திரை அச்சு விசை: ஐபிஎம் பீசி மற்றும் ஒத்தியல்புக் கணினிகளின் விசைப்பலகைகளில் இருக்கும் ஒரு விசை. இவ்விசையை அழுத்தும்போது திரையில் தோற்றமளிக்கும் எழுத்துகளை அப்படியே அச்சுப்பொறிக்கு அனுப்பிவைக்கும். விண்டோஸ் இயக்க முறைமையில் இந்த விசையை அழுத்தினால் திரைத் தோற்றம் கிளிப்-போர்டில் பதியும். அதனை ஒரு வட்டுக் கோப்பாகச் சேமிக்கலாம். மாற்று (Alt) மற்றும் திரையச்சு (print screen) ஆகிய இரு விசைகளையும் சேர்த்து அழுத்தினால் இயக்கத்தில் இருக்கும் சாளரம் (Active Window) மட்டும் கிளிப்-

போர்டில் பதியும். ஆப்பிள் கணினிகளில் ஒத்தியல்பு கருதி இவ்விசை வைக்கப்பட்டுள்ளது.

**print server** : அச்சு வழங்கன் : ஒரு பிணையத்தில் அச்சுப் பொறிகளை மேலாண்மை செய்வதற்கென தனியாக ஒதுக்கப்படும் ஒரு பணி நிலையக் கணினி. பிணையத்திலுள்ள எந்தவொரு பணிநிலையக் கணினியும் அச்சு வழங்கனாகச் செயல்பட முடியும்.

**print setup** : அச்சு அமைப்பு முறை; அச்சு அமைவு.

**print spooler** : அச்சுச் சுருளி : முன்னணியில் மற்ற பணிகள் நடந்து கொண்டிருக்க பின்னணியில் அச்சிடுதல் நடைபெற அனுமதிக்கும் மென்பொருள்.

**print statement** : அச்சிடு கட்டளை : பேசிக் மொழியில், ஒரு தரவுவை திரையில் காட்டுவதற்கான கட்டளை.

**print text page** : உரைப்பக்கம் அச்சிடு.

**print to disk** : அச்சிலிருந்து வட்டுக்கு : வழக்கமாக அச்சுப் பொறிக்கு அனுப்பப்படும் வெளியீட்டை வட்டை நோக்கி அனுப்புவது. உருவாக்கப்படும் கோப்பானது தேவையான வடிவமைப்பு அல்லது படிவம் குறியீடுகளை உள்ளடக்கியதாக இருக்கும். அதை உருவாக்கிய டி.டீ.பி. நிரல் தொடர் அல்லது சொல் செயலகத்தின் தேவையின்றியே வேறு ஒரு சமயத்திலோ அல்லது தொலைவிலுள்ள ஒரு அச்சுப்பொறிக்கு அனுப்பியோ அச்சிட்டு கொள்ளலாம். பொதுவாக முதலில் வட்டுக் கோப்பினை உருவாக்கி, , பின்னரே அச்சிடப்படுகிறது. ஆனால் அச்சிலிருந்து வட்டுக்கு என்ற செயல்முறையில் கோப்பினை அச்சிடும் வேலை விலக்கப்படுகிறது.

**print to file** : கோப்பில் அச்சிடு : அச்சிடுவதற்கென வடிவமைக்கப்பட்ட ஓர் ஆவணத்தை அச்சுப்பொறிக்கு அனுப்புவதற்குப் பதிலாக, அப்படியே ஒரு கோப்பில் சேமித்து வைப்பதற்கான கட்டளை. பெரும்பாலான பயன்பாட்டுத் தொகுப்புகளில் இத்தகைய வசதி உள்ளது.

**print using the following driver** : கீழ்க்காணும் இயக்கி மூலம் அச்சிடு.

**print wheel** : அச்சுச் சக்கரம்; அச்சு சுருளை : ஒரு சக்கர அச்சடிப்பியின் ஓர் அச்சடிப்பு இடநிலையில் எழுத்துகளின்

தொகுதியை அடக்குகிற தனியொரு கூறு.

print zone : அச்சு வட்டாரம்; அச்சு மண்டலம்; அச்சுப் பகுதி : செயல்முறைப்படுத்தலில் ஒரு வெளிப்பாட்டுச் சாதனத்தி லுள்ள ஒரு குறிப்பிட்ட நீளப் பகுதி. இதனுள் தரவுகள் பத்தி களில் வரிசைப்படுத்தப் படுகின்றன.

priority : முன்னுரிமை; முந்துரிமை : நுண்செயலியின் கவனத்தைக் கவர்வதில், கணினியின் வளங்களைப் பயன்படுத்திக் கொள்வதில் முன்னுரிமை பின்பற்றப்படு கிறது. கணினி, கண்ணுக்குப் புலனாகாத முன்னுரிமைகளின் அடிப்படையிலேயே பல்வேறு வகையான முரண்களும் மோதல்களும் தவிர்க்கப்படு கின்றன. அதேபோல கணினி யால் நிறைவேற்றப்படும் பணி களும், எப்போது, எவ்வளவு நேரம் நுண்செயலியின் நேரத்தை எடுத்துக் கொள்ள முடியும் என்பது முன்பே தீர்மானிக்கப்பட்டு விடுகிறது. கணினிப் பிணையங்களில் பணி நிலையங்கள் எப்போது, எவ் வளவு நேரம் தகவல் தொடர்பு இணைப்பைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்கிற முன்னுரிமை நிர்ணயிக்கப்படு கிறது. எவ்வளவு விரைவில் அனுப்பப்பட வேண்டும் என்கிற முன்னுரிமை செய்திப் பரிமாற்றத்துக்குப் வரை யறுக்கப்படுகிறது.

priority assignment : முன்னுரிமைப் பணி.

Priority Frame : பிரியாரிட்டி ஃபிரேம்: (முன்னுரிமைச் சட்டம்) : இன்ஃபோ நெட் அண்ட் நார்தான் டெலிகாம் இன்க் நிறுவனம் உருவாக்கிய ஒரு தொலைத் தொடர்பு நெறி முறை. தரவு, படநகல் மற்றும் குரல் தகவல்களைச் சுமந்து செல்வதற்கென வடிவமைக்கப் பட்டது.

priority interrupt : முந்துரிமை இடையீடு : பொறியமைவினுள் மற்ற இடையீடுகளுக்கு மேலாக முந்துரிமையளிக்கப் பட்டுள்ள ஓர் இடையீடு.

priority processing : முந்துரிமைச் செய்முறைப்படுத்து தல் : ஒரு பணியின் வரிசை முறையைக் குறித்தளிக்கப்பட்ட முந்துரிமைகளின் அடிப்படை யில் செய்முறைப்படுத்துதல்.

privacy : தனிமறைவு; அந்தரங்கம் : ஒரு பயனாளரின் சேமிக்கப்பட்ட கோப்புகள், மின்னஞ்சல் போன்ற தரவுகள் அவருடைய அனுமதியின்றி

வேறெருவரும் பார்வையிடக் கூடாது என்கிற கருத்துரு. தனி மறைவுக்கான உரிமை என்பது பொதுவாக இணையத்தில் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. கணினி அமைப்புகளை நிறுவிப் பராமரிப்பவர்கள் தங்கள் அமைப்புகளில் பதிவாகும் எந்தவொரு தரவுவையும் பரிசோதிக்கும் உரிமையினைக் கோருகின்றனர். தனி மறைவினை முழுமையாகப் பெறப் பயனாளர்கள் மறை யாக்கம் போன்ற முனைப்பான நடவடிக்கைகளை மேற் கொள்ள வேண்டும்.

**privacy enhanced mail** : அந்தரங்க மேம்பாட்டு அஞ்சல்; தனிமறைவு மேம்பாட்டு அஞ்சல் : இணையத்தில் மின்னஞ்சல் செய்திகளின் தனி மறைவுத் தன்மை மற்றும் பாதுகாப்பினை உறுதிசெய்யும் மறையாக்க நுட்பங்களை பயன் படுத்துகின்ற மின்னஞ்சல் முறைமைக்கான இணைய தர வரையறை.

**private** : தனியார்.

**private automatic branch** : தனியார் தானியங்கு கிளை.

**private automatic branch exchange (PABX)** : தனியார் தானியக்கக் கிளை இணைப்பகம் : ஒரு வணிக அமைவனத்திற்குள் அல்லது தொழிற்சாலைக்குள் தொலைபேசித் தொடர்பினை ஏற்படுத்தி பொதுத் தொலைபேசி இணைப்பகத்திற்குச் செல்லும், அதிலிருந்துவரும் அழைப்புகளை அனுப்புவதைக் கட்டுப் படுத்துகிற தானியக்க தனியார் தொலைபேசி விசைப் பொறியமைவு.

**private channel** : தனியார் தடம் : இணையத் தொடர் அரட்டையில் (IRC) ஒரு குறிப்பிட்ட குழுவைச் சார்ந்தவர்களின் பயன்பாட்டுக்காக ஒதுக்கப் பட்ட ஒரு தடம். இத்தகைய தனியார் தடப்பெயர்கள் பிற பொதுப் பயனாளர்கள் பார்வையிலிருந்து மறைக்கப்பட்டு விடுவதுண்டு.

**private chat** : தனியார் அரட்டை; தனியார் உரையாடல்.

**Private Communications Technology** : தனிமுறைத் தகவல் தொடர்புத் தொழில்நுட்பம் : இணையத்தில் பாதுகாப்பான பொதுப்பயன் வணிகத்துக்காகவும் சொந்தத் தகவல் தொடர்புகளுக்காகவும் வடிவமைக்கப் பட்ட வரன்முறை. தனி மறைவு, சான்றுறுதி, பரஸ்பர அடையாளங்காட்டல் போன்ற

பண்புக் கூறுகளையும் உள்ளடக்கியது.

**private database** : தனியார் தரவுத் தளம்.

**private folders** : தனிமுறை கோப்புறைகள் : ஒரு பகிர்ந்தமைப் பிணையச் சூழலில், ஒரு பயனாளரின் கணினியில் இருக்கும் கோப்புறைகள். பிணையத்தின் பிற பயனாளர்கள் இந்தக் கோப்புறைகளை அணுக முடியாது.

**private key** : தனித்திறவி; தனி மறைக் குறி : மறைக்குறியீட்டு முறையில் இருதிறவி மறையாக்கத்தில் பயனாளர் பயன்படுத்தும் திறவி. பயனாளர் தன்னுடைய தனித்திறவியை கமுக்கமாய் வைத்துக் கொள்கிறார். தன்னுடைய இலக்க முறைக் ஒப்பங்களை மறையாக்கம் செய்யவும், பெறுகின்ற செய்திகளை மறைவிலக்கம் செய்யவும் பயன்படுத்திக் கொள்கிறார்.

**private key encryption** : சொந்தச் சாவியினாலான உருமாற்றம்.

**private line** : தனியார் இணைப்பு; தனியார் தடம்: ஒரு பயனாளருக்கு அவரது தனிப்பட்ட பயன்பாட்டுக்காக வழங்கப்பட்டுள்ள அலை வரிசை அல்லது சுற்று வழி.

**privately leased line** : தனியார் குத்தகைத் தடம் : தனியொரு வாடிக்கையாளரின் பயன்பாட்டுக்கான செய்தித் தொடர்பு இணைப்பு.

**private property** : தனிப் பண்புகள்.

**privatization** : தனியார் மயமாக்கம் : பெரும்பாலும் ஒரு நிர்வாகத்தை, வணிக அமைப்பை கட்டுப்பாட்டிலிருந்து வணிகத் தொழிலகத்துக்கு மாற்றியமைப்பது. கணினித் துறையைப் பொறுத்த மட்டில் இணையத்தின் முதுகெலும்பான பல்வேறு பிணையக் கட்டமைப்புகளை தனியார் துறைக்கு மாற்றுதல். எடுத்துக்காட்டாக, அமெரிக்காவில் 1992இல் என்எஸ்எஃப் நெட் அரசுக் கட்டுப்பாட்டிலிருந்து தனியார் வணிக அமைப்புகளுக்கு மாற்றித் தரப்பட்டுள்ளது.

**privileged instruction** : சிறப்புரிமை நிரல் : பயனாளர் எழுதிய வழக்கமான செயல்முறைகளில் பயன்படுத்துவதற்குக் கிடைக்கத்தக்கதாக இராத கணினி நிரல். இதனைச் செயற்பாட்டுப் பொறியமைவின் வாலாயங்களில் மட்டுமே பயன்படுத்த முடியும்.

**privileged mode :** சலுகைபெற்ற பாங்கு : இன்டெல் 80286 மற்றும் அதனினும் மேம்பட்ட நுண்செயலிகளின் பாதுகாக்கப் பட்ட இயக்கப் பாங்கில் ஏற்றுக் கொள்ளப்படும் ஒரு சிறப்பு வகை இயக்கப் பாங்கு. இதில், நினைவகம் மற்றும் உள்ளீட்டு/வெளியீட்டுத் துறைகள் (தடங்கள்) போன்ற கணினியின் உயிர்நாடியான உறுப்புகளைக் கையாளும்போது, மென் பொருள்கள் மிகவும் வரம்புக் குட்பட்ட செயல்பாடுகளையே நிறைவேற்ற முடியும்.

**PRN :** பீஆர்என் : அச்சுப் பொறி யின் தருக்கமுறைச் சாதனப் பெயர். டாஸ் இயக்க முறை மையில் வழக்கமான அச்சு சாதனத்துக்கென ஒதுக்கப்பட்ட பெயர். பீஆர்என் என்பது பெரும்பாலும் கணினியின் முதல் இணை நிலைத்துறையை (parallel port) குறிக்கும். எல்பீடீ1 என்றும் அறியப்படும்.

**probabilistic model :** நிகழ்தகவு உருமாதிரி : நிகழ்தகவுக் கணிதத்தைப் பயன்படுத்துகிற உருமாதிரி. எந்தத் தரவுகளின் தனி மதிப்பளவுகள் அறியப் படாமலிருந்து, ஆனால் அவற்றின் நீள் வீச்செல்லை நடவடிக்கையை ஊகிக்க முடியுமோ அந்தத் தரவுகளைப் பகுப்பாய்வு செய்வதற்கு இது பயன்படுத்தப்படுகிறது.

**probability :** நிகழ்தகவு : ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சி நிகழ்வதற் கான வாய்ப்புகளைக் கணக் கிடுதல். எடுத்துக்காட்டு : ஒரு நாணயத்தைச் சுண்டிவிட்டால் தலைவிழுவதற்கான நிகழ்தகவு 1/2; பூ விழுவதற்கான நிகழ் தகவு1/2. 0-9 வரைக் குறியிடப் பட்ட 10 சிப்புகளை ஒன்று கலந்து மேசையில் போட்டு ஆறுக்கு மேற்பட்ட எண் ணுடைய ஒரு சிப்பினை எடுப் பதற்கான நிகழ்தகவு 3/10 ஆகும்.

**probability theory :** நிகழ்தகவுக் கோட்பாடு : ஒரு தற்செயல் நிகழ்ச்சி நிகழ்வதற்கான வாய்ப்புகளின் அளவீடு. இது ஒரு குழுமத்தின் நடத்தை முறையை ஊகிப்பதற்குப் பயன்படுத்தப்படுகிறது.

**problem analysis :** சிக்கல் பகுப் பாய்வு : ஒரு சிக்கலுக்குத் தீர்வு காண ஒரு திட்டத்தைப் பயன் படுத்துதல். செயல்முறை உரு வாக்கச் சுழற்சியில் முதல் நடவடிக்கை.

**problem defining :** சிக்கல் வரை யறுத்தல்.

**problem definition :** சிக்கல் வரையறை : 1. ஒரு சிக்கலை

வரையறுத்துக்கூறப் பயன் படுத்தப்படும் தருக்க முறையை வகுத்தல். 2. செய்யப்பட வேண்டிய ஒரு பணியினை வரையறுத்துக் கூறுதல்.

**problem description :** சிக்கல் விவரிப்பு : தகவல் செய்முறைப் படுத்தலில், ஒரு சிக்கலை உரைத்தல். இதில், தீர்வுமுறை பற்றிய விவரிப்பும் உள்ளடங்கி யிருக்கலாம். இந்தத் தீர்வேகூட, தரவு, உருமாற்றம், நடைமுறை கள், தரவுகள், தடைகள், சுற்றுச் சூழல் ஆகியவற்றுக்கிடை யிலான உறவு நிலையாக இருக்கலாம்.

**problem oriented language (POL) :** சிக்கல் சார்ந்த மொழி : ஒரு குறிப்பிட்ட வகைச் சிக்கல் களை வசதியாக எடுத்துரைப் பதற்காக வடிவமைக்கப்பட்ட செயல்முறைப்படுத்தும் மொழி. இது, இணைப்பு மொழி, எந்திர மொழி, நடை முறை சார்ந்த மொழி ஆகிய வற்றிலிருந்து வேறுபட்டது.

**problem p.ogramme :** சிக்கல் செயல்முறை : மையச் செய் முறைப்படுத்தும் அலகு சிக்க லான நிலையில் இருக்கும் போது நிறைவேற்றப்படும் செயல்முறை; சிறப்புரிமை நிரல்களைக் கொண்டிராத ஒரு செயல்முறை.

**problem solving :** சிக்கல் தீர்வு ; சிக்கல் தீர்த்தல் : ஒரு கணினி யினால் தீர்க்கப் படக்கூடிய ஒரு சிக்கல். இதற்கு ஒரு துல்லியமான கணிதச் சமன் பாடு தேவைப்படுவதில்லை. எனினும், கணினி உணர்ந்து கொள்ளக்கூடிய சில விதிகளின் தொகுதி தேவைப்படும். இது ஆறு நடவடிக்கைகள் அடங்கிய ஒரு செய்முறையாகும் : (1) சிக்கலை அடையாளங் காணல் (2) தொடர்புடைய தரவுகளைச் சேகரித்து வகைப் படுத்துதல்(3) மாற்று உத்தி களை உருவாக்குதல் மற்றும் பகுப்பாய்வு செய்தல் (4) செயல் முறைப்படுத்து தல் (5) செயல் முறையை நிறைவேற்றுதல் (6) தொடர் நட வடிக்கையினை மேற்கொள்ளுதல். அனுபவ மும், உரிய சிக்கல் தீர்வு உத்தி களைக் கையாளுவதும் சிக்கல் களுக்குத் தீர்வு காண்பதை எளிதாக்கும்.

**procedural language :** நடை முறை மொழி : கோபால், ஃபோர்ட்ரான், பேசிக், சி, பாஸ்கல் மற்றும் டிபேஸ் போன்ற நிரல்தொடரமைப்பு பிரிவு தேவைப்படும் நிரல் தொடரமைப்பு மொழி. நிரல் தொடராளர்கள் அத்தகைய மொழிகளில் எழுதும்போது

தரவு செயலாக்கம் மற்றும் நிரல் தொடரமைத்தல் சார்ந்து சிக்கல் களை தீர்ப்பதற்குத் தேவை யான நடவடிக்கை முறையினை உருவாக்குவார்கள்.

**procedure** : நடைமுறை; செயற் படுமுறை; செயல்முறை : ஒரு நிரலில் ஒரு குறிப்பிட்ட பணியை மட்டும் நிறைவேற்று கின்ற கட்டளைத் தொகுதி. இக் கட்டளைத் தொகுதிக்கு ஒரு பெயர் உண்டு. ஒவ்வொரு செயல்முறைக்கும் உரிய மாறி கள், மாறிலிகள் அவற்றின் தர வினங்கள் வரையறுக்கப்படு கின்றன. பெரும்பாலும் ஒரு செயல்முறை இன்னொரு செயல்முறையால் அழைக்கப் படுவதுண்டு (இயக்கப்படுவ துண்டு). நிரலின் பிரதான செயல்பகுதியிலும் அழைக்கப் படலாம். சில கணினி மொழி களில் செயல்முறை, செயல் கூறு (procedure and function) என்று வேறுபடுத்திப் பேசப்படு கிறது. செயல்கூறு என்பது தன் பணியை முடித்தபின் ஓர் ஒற்றை மதிப்பை (குறிப்பிட்ட தரவின மதிப்பை) அழைத்த நிரலுக்குத் திருப்பியனுப்பும். செயல்முறை, தனக்கிட்ட பணியைச் செவ்வனே செய்து முடிக்கும். மதிப்பு எதையும் திருப்பியனுப்பாது.

**procedure call** : செயல்முறை அழைப்பு : நிரலாக்கத்தில் ஒரு செயல்முறையைச் செயல் படுத்துவதற்கான நிரல். ஒரு செயல்முறை அழைப்பு இன் னொரு செயல்முறையில் உட் பொதிந்து இருக்க முடியும். அல்லது நிரலின் முதன்மை யான பகுதியில் இடம்பெறும்.

**procedure division** : நடை முறைப் பகுப்பு; செயல்முறைப் பகுப்பு: ஒரு "கோபால்" செயல் முறையின் நான்கு முக்கிய பகுதிகளில் நான்காவது பகுதி.

**procedure oriented** : நடை முறை சார்ந்த : படி 'ஏ' விலிருந்து படி 'பி'-க்குப் போவ தற்காக பயனாளர் பின்பற்று கின்ற பயன்பாடு. தரவு நுழைவு நிரலாக்கத் தொடர்கள் சிறந்த எடுத்துக்காட்டுகள்.

**procedure oriented language** : நடைமுறை சார்ந்த மொழி : விரிவான சிக்கல்களின் ஒரு தொகுதிக்குத் தீர்வு காண்பதில் பயன்படுத்தப்படும் நடை முறைகளை வசதியாக எடுத்து ரைப்பதற்கு வடிவமைக்கப் பட்டுள்ள ஒரு செயல்முறைப் படுத்தும் மொழி. எந்திர மொழி, சிக்கல் சார்ந்த மொழி ஆகியவற்றிலிருந்து வேறு பட்டது.

**process** : செய்முறை ; செயற்பாங்கு; நடைமுறை : *1.* ஒரு குறிப்பிட்ட பலனை விளைவிப்பதற்கான, திட்டமிட்ட செயற்பாடுகளின் வரிசைமுறை. 2. செப்பமற்ற தரவுகளை பயனுள்ள செய்திகளாக உருமாற்றுதல்.

**process bound** : வரம்புறு செய்முறை: செய்முறைப் படுத்தியின் வேகத்தினால் வரம்புறுத்தப்பட்டுள்ள கணினியமைவு.

**process colour** : நிறச் செயலாக்கம் : ஓர் ஆவணத்தில், அச்சிடுவதற்காக நிறங்களைக் கையாளும் வழிமுறை. ஒவ்வொரு நிறத்தொகுதியும் அதன் மூல அடிப்படை நிறக்கூறுகளாகப் பிரிக்கப்படுகின்றன. மூன்று அடிப்படை வண்ணங்கள் : வெளிர்நீலம் (Cyan), செந்நீலம் (Magenta), மஞ்சள் (Yellow). கறுப்பு நிறத்தையும் சேர்த்துக் கொள்ளலாம். பிற நிறங்கள் அனைத்தும் இந்த அடிப்படை நிறங்களின் கலவையில் உருவாக்கப்பட்டு அச்சிடப் படுகின்றன.

**process control** : செய்முறைக் கட்டுப்பாடு : எண்ணெய்ச் சுத்திகரிப்பு, எஃகு உற்பத்தி போன்ற தொழில் செய்முறைகளைக் கட்டுப்படுத்துவதற்குக் கணினியைப் பயன்படுத்துதல்

**process control activity** : செய்முறைக் கட்டுப்பாட்டு நடவடிக்கை.

**process control computer** : செய்முறைக் கட்டுப்பாட்டுக் கணினி : செய்முறைக் கட்டுபாட்டுப் பொறியமைப்பில் பயன்புடுத்தப்படும் எண்மானக் கணினி. இதில் பொதுவாக நிரல் திறம்பாடு, சொல் நீட்சி, துல்லியம் ஆகியவை வரம்புறுத்தப்பட்டிருக்கும். காற்றில்லாத சூழல் வசதிகளில் பயன்படுத்துவதற்காக வடிவமைக்கப்பட்டது.

**process control system** : செயற்பாங்குக் கட்டுப்பாட்டு முறைமை.

**process conversion** : செய்முறை மாற்றம் : கணினியமைவின் இயக்க முறையை மாற்றியமைத்தல்.

**processing** : செய்முறைப் படுத்தல் : ஒரு சிக்கலைத் தீர்ப்பதற்குத் தரவுகளைக் கணினி மூலம் பலவிதமாகத் திறம்படக் கையாள்தல்.

**processing, automatic data** : தானியங்கு தரவுச் செயலாக்கம்.

**processing, background** : பின்புலச் செயலாக்கம்.

**processing, commercial data :** வணிகத் தரவுச் செயலாக்கம்.

**processing, data :** தரவுச் செயலாக்கம்.

**processing, electronic data :** மின்னணுத் தரவுச் செயலாக்கம்.

**processing mode, batch :** தொகுதிச் செயலாக்கப் பாங்கு.

**processing part :** செயல்முறைப் பகுதி.

**processing symbol :** செய்முறைப்படுத்தல் குறியீடு : *கணக்கிடுதல், நகரும் தரவுகளை முதல்நிலைப்படுத்தல் போன்ற செய்முறைப்படுத்தும் செயற்பாட்டினைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிற செவ்வகத் தொடர் வரைபடக் குறியீடு.*

**processing, remote :** தொலை நிலைச் செயலாக்கம்.

**processing unit, central :** மையச் செயலகம்

**processor :** செயலி; செய்முறைப்படுத்தி; செயலாக்கம் : *தரவுகளைக் கொண்டு செயற்பாடுகளைச் செய்யும் திறனுடைய சாதனம் அல்லது பொறியமைவு. எடுத்துக்காட்டு : மையச் செயலகம் (வன்பொருள்) அல்லது சொல் செயலி (மென்பொருள்). ஒரு கணினியைச் சில சமயம் மொழி (language processor)ச் செய்முறைப்படுத்தி என்பர்.*

**processor, array :** கோவைச் செயலி.

**processor bound :** வரம்புறு செய்முறைப்படுத்தி : *உள்ளபடியான செய்முறைப்படுத்துதலை அல்லது கணிப்புகளைச் செய்வதற்கு மையச் செய்முறைப் படுத்தும் அலகினைக் கொண்டு செல்வதற்கு எடுத்துக் கொள்ளும் நேரத்தினால் கணக்கம் செய்யப் படுகிற பொறியமைவுச் செயற்பாடு. இது வரம்புறு கணினி போன்றது. இது வரம்புறு உட்பாடு/ வெளிப்பாடு என்பதிலிருந்து மாறுபட்டது.*

**processor control :** செயலாக்கக் கட்டுப்பாடு : *அதன் அடிப்படை, மையப்படுத்தப்பட்ட கட்டுப்பாட்டுக்காக ஒரு செயலகத்தைப் பயன்படுத்தும் எந்த ஒரு சாதனமும். சான்றாக, தொலைபேசி அமைப்புகள் மற்றும் கண்ணாடி செய்தல் போன்ற பல தொழில்துறை நடைமுறைகள்.*

**processor, data :** தரவுச் செயலி.

**processor load :** செயலகச் சுமை : *ஒரே நேரத்தில் ஒரு செயலகம் எத்தனை வேலைகளை எடுத்துச் செய்யும் என்*

பதற்கான அளவு . 1.0 சுமை என்பது ஒரு செயலகம் ஒரு கடிகாரத்தின் ஒவ்வொரு சுழற்சியின் போதும் ஒரு வேலையைச் செய்தது என்று பொருள். 1.0-க்குக் கீழான சுமை என்றால் செயலக நேரம் வீணாக்கப்படுகிறது என்பது பொருள். 1.0-வுக்கு மேல் செயலக சுமை என்றால் ஒரு செயலகம் அப்போது கையாளும் சுமையை விட அதிகமாகச் செல்ல முடியும் என்பது பொருள்.

**processor, micro** : நுண்செயலி.

**processor, remote** : தொலை நிலைச் செயலி.

**processor, word** : சொல் செயலி.

**process signal** : செய்முறைக் குறிகை; செய்முறை சமிக்கை.

**procomm** : புரோகாம் : டேட்டா ஸ்டோர்ம் டெக்னாலஜிஸ் நிறுவனத்தின் புகழ்பெற்ற பீசி பங்குப் பொருள் தகவல் தொடர்பு நிரல் தொடர். பல வகையான நடைமுறைகள் மற்றும் முகப்புகளை அது ஆதரிக்கும். புரோகாம் பிளஸ் என்பது கூடுதல் தன்மைகள் உள்ள வணிகத் தொகுப்பு.

**Prodigy Information Service** : மேதமை தகவல் சேவை : ஐபிஎம் மற்றும் சியர்ஸ் இரண்டும் சேர்ந்து உருவாக்கிய நிகழ்நிலை தகவல் சேவை. இதன் போட்டியாளர்களான அமெரிக்கா ஆன்லைன் மற்றும் காம்பு செர்வ் ஆகியவற்றைப் போலவே, தரவுத் தள அணுகல், கோப்பு நூலகங்கள், நிகழ்நிலை அரட்டை, சிறப்பு ஆர்வக் குழுக்கள், மின்னஞ்சல், இணைய இணைப்பு போன்ற சேவைகளை வழங்கி வருகின்றது.

**product** : பெருக்குத் தொகை; பண்டம்; அட்டவணைப் பெருக்கல் : 1. கணிதத்தில் இரண்டு அல்லது மேற்பட்ட எண்களைப் பெருக்கிவரும் தொகை. 2. வடிவமைத்து உருவாக்கப்பட்டு விற்பனைச் சந்தையில் அறிமுகப்படுத்தப்படும் ஒரு பண்டம். 3. தரவுத் தள மேலாண்மை அமைப்பில் பயன்படுத்தப்படும் ஒரு செயற்குறி (operator). இரு அட்டவணைகளைப் பெருக்கும் போது முதல் அட்டவணையிலுள்ள ஒவ்வொரு கிடக்கையும் இரண்டாவது அட்டவணையின் ஒவ்வொரு கிடக்கையுடனும் இணைந்து மூன்றாவதாக ஓர் அட்டவணை உருவாக்கப்படும். 10, 20 கிடக்கைகள் உள்ள அட்டவணைகளைப் பெருக்கினால் 200 கிடக்கைகள் உள்ள அட்டவணை கிடைக்கும்.

**production database :** உற்பத்தித் தரவுத் தளம் : ஒரு நிறுவனத்தின் முக்கிய கோப்புகள் மற்றும் அன்றாட பரிமாற்றக் கோப்புகளை கொண்ட மைய தரவுத் தளம்.

**production run :** உற்பத்தி ஓட்டம்: வாலாயமாகத் தன் நோக்கத்தை நிறைவேற்றுகிற ஒரு செயல்முறையில் தவறு நேரிடும்போது அச்செயல் முறையை நிறைவேற்றுதல். எடுத்துக்காட்டு : வாராந்திர சம்பளப்பட்டியல் தயாரிப்பதற்கு ஒரு சம்பளப் பட்டியல் செயல்முறையை இயக்குவது ஓர் உற்பத்தி ஓட்டம் ஆகும்.

**production system :** உற்பத்தி அமைப்பு : ஒரு நிறுவனத்தின் அன்றாட வேலையைச் செயலாக்கம் செய்யப் பயன்படுத்தும் கணினி அமைப்பு. வளர்ச்சி மற்றும் சோதனை அல்லது தற்காலிக கேள்விகளுக்கும் ஆய்வுக்கும் பயன்படும் அமைப்புகளுடன் இதனை மாறுபடுத்திப் பார்க்க.

**productivity :** உற்பத்தித் திறன்: ஒரு மென்பொருள்/வன்பொருள் பொறியமைவு செய்யும் பணியினை அளவிடுதல். இது பெரும்பாலும் பொறியமைவின் வசதிகளையும் செயல்திறனையும் பொறுத்தது.

**professional :** தொழில்துறை ; தொழில்சார்ந்த; தொழில் தரமான; தொழில்நெறிஞர்.

**Professional Graphics Adapter :** தொழில்முறை வரைகலைத் தகவி : கேட் (CAD) பயன்பாடுகளுக்கென ஐபிஎம் நிறுவனம் அறிமுகப்படுத்திய ஒரு ஒளிக்காட்சித் தகவி. கிடைமட்டத் தெளிவாக 640 படப்புள்ளிகளையும், செங்குத்துத் தெளிவில் 480 படப்புள்ளிகளையும் 256 நிறங்களையும் கொண்டது.

**Professional Graphics Display :** தொழில்முறை வரைகலைக் காட்சித்திரை : ஐபிஎம் நிறுவனம் தன்னுடைய தொழில்முறை வரைகலைத் தகவியுடன் பயன்படுத்தப்பட வேண்டும் என்ற எண்ணத்தில் அறிமுகப்படுத்திய தொடர்முறை (Analog) காட்சித்திரை.

**professional write :** தொழில்சார் எழுத்து : சாஃப்ட்வேர் பப்ளிஷிங் நிறுவனத்தின் டாஸ் மற்றும் விண்டோசுக்கான சொல் செயலாக்க நிரல் தொடர். பயன்படுத்த எளிதானது. குழப்பமில்லாத கடிதங்கள் மற்றும் குறிப்புகளை எழுதுபவர்களின் தேவைகளை-அது சமாளிக்கிறது. PFS. : Write என்று முதலில் அழைக்கப்பட்ட இது

பீசி சொல் செயலகங்களில் ஆரம்பத்தில் தோன்றிய ஒன்று.

**profile : விவரக் குறிப்பு :** ஒரு நிரலின் பல்வேறு பகுதிகள் இயங்குவதற்கு எவ்வளவு நேரம் எடுத்துக்கொள்கிறது என்பதைத் தீர்மானித்து பகுப் பாய்வு செய்வதற்கான விவரக் குறிப்பு.

**profiling service :** பயனாளர் குறிப்புச் சேவை.

**programmable : நிரல்படு; நிரலாக்கத் தகு :** ஒரு பணியை அல்லது ஒரு செயல்பாட்டை நிறைவேற்ற, நிரல்களை ஏற்றுச் செயல்படும் நிலை. நிரலாக்கத் தகுநிலையில் இருப்பது என்பது 'கணினியின் பண்புக் கூறுகளில் ஒன்று.

**programmable calculator : செயல்முறைப்படுத்தத்தக்க கணிப்பிகள் :** கணினி போன்ற அம்சங்களைக் கொண்ட சில கணினிகளுடன் கூடிய கணிப்பி போன்ற சாதனம். பேசிக்மொழி யில் எழுதப்பட்ட சேமித்து வைக்கப்பட்ட செயல்முறையை நிறைவேற்றக் கூடிய கணிப்பி இதற்கு எடுத்துக் காட்டு.

**programmable communication interface : செயல்முறைப் படுத்தத்தக்க செய்தித் தொடர்பு இடைமுகப்பு :** செய்தித் தொடர்புக் கட்டுப்பாட்டுக் காகப் பயன்படுத்தப்படும் இடை முகப்புப் பலகை.

**programmable function key : செயல்முறைப்படுத்தத்தக்க செயற்பணித் திறவுகோல் :** கணினியிலுள்ள செயல்முறை யோடு சேர்ந்து மாறுகிற செயற் பணியைக் கொண்ட விசைப் பலகை திறவுகோல்.

**programmable interrupt controller : நிரல்படு குறுக் கீட்டுக் கட்டுப்படுத்தி:** குறுக் கீட்டுக் கோரிக்கைகளை (IRQs) கையாளும் இன்டெல் சிப்பு. அதிக அளவாக 15 ஐஆர்கியூக் களை கையாளக்கூடிய இரண்டு நிரல்படு குறுக்கீட்டுக் கட்டுப் படுத்திகள் ஐபிஎம் ஏடீ கணினி களில் பயன்படுத்தப்பட்டன. பின்னாளில் இவற்றுக்குப் பதிலாக மேம்பட்ட நிரல்படு குறுக்கீட்டு கட்டுப்படுத்தி (APIC)கள் பயன்படுத்தப் பட்டன. இவை பல்பணி யாக்கத்தை ஏற்கின்றன.

**programmable logic array : செயல்முறைப்படுத்தத்தக்க தருக்கமுறை வரிசை :** ஒரு குறிப்பிட்ட உட்பாடுகளின் தொகுதிக்கு வெளிப்பாடு களுடன்கூடிய ஒரு பகுதிப் பொருளின் கூட்டுத்தொகை யைக் கொடுக்கும் சாதனம்.

**programmable logic device :** நிரல்படு தருக்க சாதனம் : தயாரிப்பாளர் நிரலாக்காமல் வாடிக்கையாளரே நிரல் படுத்தக்கூடிய தருக்க சிப்பு. ஒரு வாயில் கோவையைப் (gate array) போன்று தருக்க வாயில் களின் தொகுதியைக் கொண் டிருக்கும். வாயில் கோவையைப் போன்று தயாரிப்பு நிலை யிலேயே நிரலாக்கம் செய்து முடிக்கப்படவேண்டிய தேவை யில்லை.

**programmable memory :** செயல் முறைப்படுத்தத்தக்க நினை வகம் : பொதுவாக பெரும் பாலான கணினிச் செயல்முறை களும் தரவுகளும் சேமித்து வைக்கப்படும் உள்ளடக்கத்தை மாற்றக்கூடிய நினைவகம். பெரும்பாலும் குறிப்பின்றி அணுகும் நினைவகம் (RAM) அல்லது செயல்முறைப்படுத்தத் தக்க படிப்பதற்கு மட்டுமே யான நினைவகம். (PROM)

**programmable read only memory :** செயல்முறைப் படுத்தத்தக்க படிப்பதற்கு மட்டுமேயான நினைவகம் : மின்னியல் துடிப்புகள் மூலம் செயல்முறைப்படுத்தக்கூடிய நினைவகம். ஒரு முறை செயல் முறைப்படுத்தியதும் அதனை படிக்கமட்டுமே செய்யலாம். செயல்முறைப்படுத்தத்தக்க படிப்பதற்கு மட்டுமேயான நினைவகம், நினைவகச் செயல் முறைப்படுத்தி எனப்படும் ஒரு தனிவகை எந்திரம் வெற்றுச் சிப்புகளில் புதிய செயல் முறையை எழுதுவதற்குப் பயன்படுத்தப்படுகிறது.

**programmatic interface :** நிரல் நிலை இடைமுகம் : *1.* பயனாள ரின் கட்டளைகளை அல்லது ஒரு தனிச் சிறப்பான நிரலாக்க மொழியின் அடிப்படையில் அமைந்துள்ள பயனாளர் இடை முகம். வரைகலைப் பயனாளர் இடைமுகத்துக்கு மாறானது. யூனிக்ஸ், டாஸ் போன்ற இயக்க முறைமைகள் இத் தகைய இடைமுகத்தைக் கொண்டுள்ளன. ஆப்பிள் மெக் கின்டோஷ் மைக்ரோசாஃப்ட் விண்டோஸ் ஆகியவை வரை கலைப் பயனாளர் இடை முகத்தைக் கொண்டுள்ளன. காண்க : command line interface, graphical user interface, iconic interface. 2. நிரலர் ஒருவர் ஒரு பயன்பாட்டு மென்பொருளை உருவாக்கும்போது அவருக்கு இயக்க முறைமை வழங்கும் செயல்கூறுகளின் தொகுதி.

**programme :** செயல் முறை; கட்டளைத் தொடர்; நிகழ்ச்சி நிரல்; கட்டளை நிரல்; ஆணை

நிரல் : ஒரு கணினி தரவுகளைச் செய்முறைப்படுத்தும்படி செய்வதற்கான தொடர்வரிசை நிரல்கள். இது, ஓர் உயர்நிலை ஆதார வடிவில் இருக்கலாம்; இதில், இதனைக் கணினி நிறைவேற்றுவதற்கு முன்னர் ஓர் இடைநிலைச் செய்முறைப் படுத்துதல் தேவைப்படும்; அல்லது கணினியால் நேரடியாக நிறைவேற்றக்கூடிய ஒரு பொருள் வடிவமாகவும் இருக்கலாம்.

programme, application : பயன்பாட்டு நிரல்.

programme area : செயல்முறைப் பகுதி.

programme, assembly : சில்லு மொழி நிரல்.

programme, background : பின்புல நிரல்.

programme card : செயல்முறை அட்டை : குறிப்பிட்ட குறியீட்டு முறைப்படி துளையிடப்பட்டு முக்கியத் துளையிடு மற்றும் சரிபார்த்தல் எந்திரங்களின் தானியக்கச் செயற்பாடுகளைக் கட்டுப்படுத்துவதற்குப் பயன்படுத்தபடும் அட்டை.

programme chaining : செயல்முறைப் பிணைப்பு: செயல்முறைகளை அல்லது செயல்முறைப்பகுதிகளை ஒன்றாகப் பிணைக்கும் செய்முறை. உள்முக நினைவகத்தைவிட பெரிதாகவுள்ள செயல்முறைகளை வரிசைமுறைப் பளுவேற்றம், அந்தச் செயல்முறையின் அடுத்தடுத்த பகுதிகளின் அல்லது தகவமைவுகளின் நிறைவேற்றம் வாயிலாக நிறைவேற்றப்படுவதற்கு அனுமதிக்கிறது.

programme coding : செயல்முறைக் குறியீடுதல் : அறிவுறுத்தங்களை ஒரு செயல்முறைப்படுத்தும் மொழியில் எழுதும் செய்முறை.

programme, computer : கணினி நிரல்

programme control : செயல்முறைக் கட்டுப்பாடு : செயற்பாடுகளை நெறிப்படுத்துவதற்கு ஒரு கணினி பயன்படுத்தப்படும் ஒரு பொறியமைவின் விவரிப்பு.

programme counter : செயல்முறை எண்ணி : கணினியினால் நிறைவேற்றப்படவேண்டிய அடுத்த செயல்முறை நிரலின் அமைவிடத்தைக் குறித்துக் காட்டுகிற பதிவகம்.

programme creation : நிரல் உருவாக்கம்; நிரல் ஆக்கம் : ஒரு நிரலின் இயங்குநிலைக் கோப்

பினை (executable file) தயார் செய்யும் செயல்முறை. வழக்க மாக, நிரல் உருவாக்கம் மூன்று படிநிலைகளைக் கொண்டது. (1) உயர்நிலை மொழியிலுள்ள மூலக் குறிமுறையை சிப்பு மொழி மூலக்குறிமுறையாக மொழிமாற்றுதல். (2) சிப்பு மொழிக் குறிமுறையை பொறி மொழி இலக்குக் கோப்புகளாக மாற்றியமைத்தல். (3) பொறி மொழிக் குறிமுறை இலக்குக் கோப்புகளை பல்வேறு தரவு கோப்புகள், இயக்கநேரக் கோப்புகள், நூலகக் கோப்பு களுடன் தொடுப்பு ஏற்படுத்தி இயக்குறு கோப்பாக மாற்றி யமைத்தல்.

**programmed check : செயல் முறைப்படுத்திய கட்டுப்பாடு :** ஒரு சிக்கலுக்கான செயல் முறைப்படுத்திய அறிக்கையில் இடைச் செருகல் செய்யப்பட்டு கணினி நிரல்களைப் பயன் படுத்தி நிறைவேற்றப்படும் ஓய்வுகள் அடங்கிய கட்டுப்பாடு.

**programme deck : செயல்முறை அடுக்கு :** ஒரு கணினி செயல் முறையில் அடங்கியுள்ள நிரல் களைக் கொண்ட துளையிட்ட அட்டைகளின் தொகுதி.

**programmed decision : முன் கூட்டி வரையறுக்கப்பட்ட தீர்வு :** ஒரு குறிப்பிட்ட முடிவு தேவை யென்றால் எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் குறித்த முன்னரே வரையறுக்கப்பட்ட விதிகளின் அடிப்படையில் தானியங்கியாக எடுக்கக்கூடிய முடிவு.

**programme development cycle : செயல்முறை மேம்பாட்டுச் சுழற்சி :** ஒரு கணினிச் சிக்கல் பகுப்பாய்வின் உதவியுடன் ஒரு சிக்கலுக்குத் தீர்வு காண்பதில் அடங்கியுள்ள படிமுறைகள். பதின்ம முறை எண்மான மேம் பாட்டுக் குறியீட்டுச் செயல் முறைச் சோதனை, ஆவணமாக் கம், ஒப்படைவு ஆகியவை இதில் அடங்கும்.

**programme documentation : நிகழ்ச்சி நிரல் ஆவணப் படுத்துகை**

**programmed instruction : செயல்முறைப்படுத்திய நிரல் :** ஒரு குறிப்பிட்ட பாடத்தைக் கற்பிப்பதற்கான குறிப்பிட்ட நிரல்களின் வரிசைமுறை. பல் வேறு கணினிச் செயல்முறைப் படுத்தும் பயிற்சி வகுப்புகள் உள்ளடங்களாக கல்வித்துறை களில் செயல்முறைப்படுத்திய நிரல் உத்திகள் பயன்படுத்தப் படுகின்றன. இதில் உள்ளார்ந்த பின்னூட்ட வசதி இருப்பதால்

இது முக்கியமாகத் தற்கல்வி வகுப்புகளில் பயன்படுத்தப் படுகிறது.

**programmed label :** செயல்முறைப்படுத்திய அடையாளச் சீட்டு : வட்டு நாடாக்கோப்புகள் ஆகியவற்றை எளிதாக அடையாளங் கண்டுகொள்வதற்காகப் பெரும்பாலான செயல்முறைகளில் கோப்பின் தொடக்கத்தில் ஒரு அடையாளச் சீட்டுப் பதிவினை உருவாக்குகிற உள்ளார்ந்த வாலாயத்தைக் கொண்டிருக்கின்றன. இது புறநிலை அடையாளச் சீட்டிலிருந்து வேறுபட்டது.

**programme, executive :** நிறைவேற்று நிரல்.

**programme file :** செயல்முறைக் கோப்பு : கணினிச் செயல்முறைகள் அடங்கிய கோப்பு.

**programme flowchart :** செயல்முறைத் தொடர்வரிசை வரைபடம் : ஒரு சிக்கலுக்குத் தீர்வு காணக் கணினியை எவ்வாறு பயன்படுத்த வேண்டும் என்பது பற்றிய குறியீடுகள், அறிவுறுத்தக்கோடுகள், தரவுகள் அடங்கிய வரைபடம். இது பொறியமைவுத் தொடர் வரிசை வரைபடத்திலிருந்து வேறுபட்டது.

**programme generator :** நிரல் இயற்றி : பயனாளர் தரும் சில வரன்முறைகள் மற்றும் உறவுமுறைகள் அடிப்படையில் ஒரு நிரலை (வழக்கமாக, மூலக் குறிமுறையில்) உருவாக்கித் தரும் இன்னொரு நிரல். ஒரு பயன்பாட்டு மென்பொருளை உருவாக்கும் பணியை எளிமைப் படுத்திட இதுபோன்ற நிரல் இயற்றிகள் பயன்படுத்தப் படுகின்றன.

**programme graph :** செயல்முறை வரைபடம் : ஒரு செய்முறையினை வரைபடமுறையில் உருவாக்கிக் காட்டுதல்.

**programme identification ID :** செயல்முறை அடையாளம் : செயல்முறையை அடையாளங் கண்டு கொள்ளுதல்.

**programme library :** செயல்முறை நூலகம் : கிடைக்கத்தக்க கணினிச் செயல்முறைகள், வாலாயங்கள், செயல்முறைகளின் பகுதிகள் ஆகியவற்றின் தொகுதி. நூலகத்தின் தொடர்புகள் மறுபயன்பாட்டுக்காகச் சேமித்து வைக்கப்படுகின்றன. அவை முழுமையான செயல்முறைகளாக இருப்பின், அவற்றை அப்படியே மறுபடியும் பயன்படுத்தலாம். வேலையைக் குறைப்பதற்காக செயல்முறைகளின் பகுதிகளை மற்றச் செயல்முறைகளாகப் படியெடுக்கலாம்.

**programme, linear :** நேரியல் நிரல்.

**programme listing :** நிரல் வரைவு : நிரலின் மூல வரைவின் நகல். பொதுவாக தாளில் அச்சிடப்பட்ட நிரல் வரைவைக் குறிக்கும். சில மொழி மாற்றிகள் (compilers) நிரல் வரைவினை வரி எண்கள், குறுக்கு மேற்குறிப்புகள் போன்றவற்றுடன் உருவாக்கித் தரும்.

**programme logic :** நிரல் தருக்கம் : ஒரு நிரலின் வடிவமைப்பு மற்றும் கட்டமைப்புக்குப் பின்னாலுள்ள தருக்கம்-எப்படிச் செயல்பட வேண்டும் என்பதும் அப்படிச் செயல்படுவதற்கான காரணங்களும்.

**programme maintenance :** செயல்முறைப் பராமரிப்பு : செயல்முறைகளிலுள்ள பிழைகளைத் திருத்தி தேவைக்கேற்ற மாறுதல்களைச் செய்து, சாதன மாற்றங்களின் சாதகங்களை இணைத்துச் செயல்முறைகளில் மாற்றம் செய்து, செயல்முறைகளை நாளது தேதி வரையில் சீரமைப்புச் செய்யும் செய்முறை.

**programme manager :** நிரலாக்கத் தொடர் மேலாளர் : விண்டோஸ் 3. X இயக்கத்தின் கட்டுப்பாட்டு மையம், பயன்பாடுகளைத் துவக்கவும் மேசை அச்சை நிர்வகிக்கவும் உதவுகிறது.

**programme, mircro :** நுண்நிரல்.

**programme, object :** இலக்கு நிரல்.

**programme planning :** நிரல் தொடர் திட்டமிடல் : குறியீடமைவுக்குத் தேவையான நிரல் தொடர் அளவையை உருவாக்குவது. ஒரு படம், பரம்பரைப் படம், போலி, குறியீடு அல்லது மற்ற திட்டமிடல் முறைகளினால் இது செய்யப்படுகிறது.

**programmer :** நிரல்; செயல் வரைவாளர்; நிரல் தொடரமைப்பவர் : கணினி நிரல் தொடர்களை வடிவமைத்து எழுதி சோதனை செய்து தருகின்றவர்.

**programmer/analyst :** செயல் முறையாளர்/பகுப்பாய்வாளர் : பொறியமைவுப் பகுப்பாய்வினையும் வடிவமைப்புச் செயற்பணிகளையும் செயல் முறைப்படுத்தும் நடவடிக்கைகளுடன் ஒருங்கிணைக்கும் முக்கிய பணியினைச் செய்யும் ஆள்.

**programmer board :** செயல் முறையாளர் பலகை : ஒரு பயனாளர் தனது கணினியமை

வில் பயன்படுத்துவதற்காக எழுதிப் படிக்கமட்டுமேயான நினைவகத்தை (PROM) அல்லது அழித்து எழுதிப் படிக்க மட்டுமேயான நினைவகத்தை (EPROM) செயல்முறைப்படுத்து வதற்கு அனுமதிக்கிற பலகை.

**programmers switch** : நிரலர் விசை; நிரலர் நிலைமாற்றி : ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினிகளில் இருக்கும் இணைப் பொத்தான்கள். கணினியை மீட்டியக்கவும் (reboot), இயக்க முறைமையின் அடிநிலைச் செயல்பாட்டில் கட்டளைவரி இடைமுகத்துக்கு மாறவும் இந்தப் பொத்தான்கள் பயன்படுகின்றன. தொடக்கக் காலங்களில் மென்பொருளை பரிசோதிக்கும் நிரலர்களுக்கே இத்தகைய செயல்பாடுகள் தேவைப்பட்டன. எனவே மெக் கின்டோஷின் தொடக்க மாதிரி யங்களில் கணினிப் பெட்டியின் உள்ளே இந்தப் பொத்தான்கள் மறைத்து வைக்கப்பட்டிருந்தன. பிற்காலக் கணினிகளில் அவை வெளிப்படையாகவே வைக்கப் பட்டன. மீட்டியக்கு பொத்தான் இடப்புறம் திரும்பிய முக் கோணக்குறியாலும் மற்றது ஒரு வட்டக்குறியாலும் குறிக்கப் பட்டிருக்கும்.

**programmes** : நிரல்கள்.

**programme, segmented** : துண்டமாக்கிய நிரல்.

**programme, service** : பணிநிரல்.

**programme, source** : மூலநிரல்.

**programme specifications** செயல்முறைக் குறியீடுகள் : ஒரு பொறியமைவின் தகவல் தேவைப்பாடுகள், தேவைப் படும் கோப்புகள், உட்பாட்டு/ வெளிப்பாட்டுக் குறிப்பீடுகள், செய்முறை தரவுகள் ஆகிய வற்றை அடையாளங் காட்டுகிற ஆவணம்.

**programme stack** : செயல் முறை அடுக்கு : தரவுகளையும் நிரல்களையும் குறிப்பாக ஓர் இடைத்தடுப்பின்போது தற் காலிகமாகச் சேமித்து வைப் பதற்குக் கணினி நினைவகங் களில் ஒதுக்கப்பட்டுள்ள பகுதி.

**programme state** : நிரல்தொடர் நிலை : பயன்பாட்டு நிரல் தொடரில் நிரல்களை நிறை வேற்றுகின்ற கணினியின் இயக்கமுறை.

**programme statement** : நிரல் தொடர் அறிக்கை: உயர் நிலை நிரல் தொடரமைப்பு மொழி யில் மரபுத் தொடர். நிரல் தொடர் தொகுக்கப்படும்போது நிரல் தொடரின் ஒரு சொற் றொடர் பல எந்திர நிரல்களை உருவாக்கும்.

**programme step** : செயல் முறைப்படி நிலை : நிரல்தொடர் படி : எந்திர மொழி நிரல் அல்லது சேர்ப்பிமொழி நிரல் போன்ற ஆரம்ப நிரல். Programme statement என்பதுடன் வேறுபடுத்துக.

**programme stop** : செயல்முறை நிறுத்தம் : செயல்முறையினுள் அமைக்கப்பட்டுள்ள நிறுத்த நிரல். இது சில நிலைகளில் ஒரு சிக்கலுக்குத் தீர்வுகாணும் செய்முறை முடிவுற்றதும் கணினியின் இயக்கத்தைத் தானாகவே நிறுத்திவிடுகிறது.

**programme storage** : செயல்முறைச் சேமிப்பகம் : செயல்முறை வாலாயங்களையும் துணை வாலாயங்களையும் சேமித்து வைப்பதற்கு உள்முகச் சேமிப்பகத்தில் ஒதுக்கப்பட்டுள்ள பகுதி. பல பொறியமைவுகளில் உள்ளடக்கங்களைத் தவறுதலாக மாற்றிவிடுவதைத் தடுப்பதற்குப் பாதுகாப்புச் சாதனங்கள் பயன்படுத்தப்படுகின்றன.

**programme, supervisory** : மேற்பார்வை நிரல்.

**programme switch** : செயல்முறை விசை : ஒரு செயல்முறைப்படுத்தும் வாலாயத்தில் இருவகை நடவடிக்கைப் போக்குகள் நடைபெறுவதை இயல்பிக்கும் முனை. இவற்றில் எது சரியானது என்பதை செயல்முறையில் வேறெங்கேனும் உள்ள ஒரு நிலை அல்லது பொறியமைவின் ஓர் உறுப்பு நிருணயிக்கிறது.

**programme, test** : சோதனை நிரல்.

**programme testing** : செயல்முறைச் சோதனை : ஒரு செயல்முறை எதிர்பார்க்கும் செயற்பணிகளைச் செய்கிறது என்பதை அறிந்து கொள்வதற்காக ஒரு செயல்முறையை நிறைவேற்றுதல்.

**programme, utility** : பயன்கூறு நிரல்

**programming** : செயல்முறைப்படுத்தல் : ஒரு சிக்கலை அதன் இயற்பியல் சூழலிலிருந்து கணினி ஏற்றுக்கொண்டு, அடிபணியக் கூடிய ஒரு மொழியில் மொழிபெயர்ப்பதற்கான ஒரு செய்முறை. அதாவது ஒரு செயல்முறையை வடிவமைத்து எழுதி சோதித்துப் பார்த்தல்; ஒரு சிக்கலுக்குத் தீர்வு காண்பதற்கான நடைமுறையைத் திட்டமிடுதல். இதில் சிக்கலைப் பகுப்பாய்வு செய்தல், அச்சிடுதலுக்குக் குறியிடுதல், உட்பாட்டு/ வெளிப்பாட்டு உரு

வமைப்புகளை அறுதியிடுதல், நடைமுறைகளைச் சரிபார்த்தல், சேமிப்பு இடத்தை ஒதுக்கீடு செய்தல், கணினியில் செயல் முறையின் ஓட்டத்தை மேற்பார் வையிடுதல் ஆகியவை இதில் உள்ளடங்கும்.

**programming aids : செயல் முறைப்படுத்தல் உதவிகள்:** கணினி பயன்படுத்துவோருக்கு உதவுகிற கணினிச் செயல் முறைகள். எடுத்துக்காட்டு : தொகுப்பிகள்; தவறு கண்டறியும் சாதனங்கள்; பிணைப்புப் பதிப்பிகள்; கணிதத் துணை வாலாயங்கள்.

**programming environment : நிரலாக்கச் சூழல்.**

**programming language : செயல் முறைப்படுத்தும் மொழி :** கணினிச் செயல்முறைகளில் நிரல்களை உருவாக்குவதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு மொழி. இது நூற்றுக் கணக்கில் உள்ள இவை முக்கியமாக மூன்று வகைப்படும். 1. எந்திர மொழிகள்; 2. இணைப்பு மொழிகள்; 3. உயர்நிலை மொழிகள்; எந்திர மொழிகளில் கணித தருக்கமுறை அலகு (ALU), கட்டுப்பாட்டு அலகு, நினைவக அலகு ஆகியவற்றின் வடிவளவைப் பொறுத்து நிரல் குறியீடுகளின் தொகுதி தீர்மானிக்கப்படுகிறது. எனவே, இந்த மொழிகளை எந்திரச்சார்பு மொழிகள் (machine depended language) என்றும் அழைப்பர். இணைப்பு மொழிகளில் நிரல்கள், தரவுகள், முகவரிகள் அனைத்தும், நினைவூட்டகங் களாகவும் குறியீடுகளாகவும் அடையாளச் சீட்டுகளாகவும் அளிக்கப்படுகின்றன. எந்திர மொழிகள், இணைப்பு மொழிகள் இரண்டும் தாழ்நிலை மொழிகள் (lowlevel language) எனப்படுகின்றன. உயர்நிலை மொழிகள் தாழ்நிலை மொழி களைப்போல் எந்திரத்தை அடிப்படையாகக் கொண்டிரா மல் சிக்கல் சார்புடையவனாக அமைந்துள்ளன. இதனால் சில குறிப்பிட்ட ஆங்கிலச் சொற் களையும் குறிமானங்களையும் பயன்படுத்தி நிரல்களின் வரிசை முறையினை உயர்நிலை மொழிகளில் எழுத முடிகிறது. உயர்நிலை மொழிகளில் எழுதப்படும் செயல்முறைகள் அனைத்தும் கணினியால் நிறை வேற்றப்படுவதற்கு முன்னர் எந்திரமொழியில் மொழி பெயர்க்கப்படுகின்றன.

**programming librarian : செயல் முறைப்படுத்தும் நூலகர் :** முதன்மைச் செயல்முறையாளர் குழுவைச் சேர்ந்த மூன்று

தலையாய உறுப்பினர்களில் ஒருவர், உருவாக்க ஆதார நூலகத்தைப் பராமரித்து செயற் படுத்தி வருகிறார். குறியீடுகள் உருவாக்கம், கணினி விரை வோட்டத்தைக் கட்டுப்படுத்து தல், வெளிப்பாடுகள் அனைத் தையும் கோப்பிடுதல் மற்றும் வகைப்படுத்துதல் ஆகியவை சிலரது பணிகளில் அடங்கும்.

**programming linguistics : செயல் முறைப்படுத்தும் மொழி யியல் :** சொற்றொடரியல், சொற்பொருளியல், செய்தித் தொடர்பியல் என்னும் ஒன்றோ டொன்று இணைவுடைய மூன்று கோட்பாடுகளை ஏதேனும் இரு பொறியமைவுகளிடையே செய்தித் தொடர்புக்கான மொழிகளாக உருவாக்கப் பயன் படுத்துதல். எந்திரப் பொறி யமைவு, மின்னியல் பொறி யமைவு, மனிதர் தொகுதி ஆகிய மூன்றில் இரண்டிற் கிடையே செய்தித் தொடர்புக்கு இது பயன்படுகிறது.

**programming team : செயல் முறைப்படுத்தும் குழு :** ஒரு செயல்முறைப்படுத்தும் திட்டம் குறித்தளிக்கப்பட்டுள்ள தனியாட்களின் குழுமம்.

**programming, structured : நிரல் தொடர் கட்டமைப்பு நிரலாக்கம்.**

**progress reporting : முன்னேற்ற அறிக்கையளிப்பு :** ஒரு பணி நடைபெற்றுக் கொண்டிருக்கும் போது படிப்படியான அதன் நிறைவேற்றம் பற்றிய அறிக்கை.

**project : திட்டப் பணி; செயல் திட்டம்; முன்னிறுத்து :** 1. ஒரு குறிப்பிட்ட பணியை கணினி மயப்படுத்துவதற்கான திட்ட வரைவு. 2. தரவுத் தள மேலாண் மையில் உறவுநிலைச் செய லாக்கத்தில் பயன்படுத்தப்படும் ஒரு செயற்குறி. கொடுக்கப் பட்ட அட்டவணையிலிருந்து குறிப்பிட்ட பண்புக்கூறுகளை (நெடுக்கைகள்) மட்டும் எடுத்து புதிதாக ஓர் அட்டவணையை உருவாக்கித் தரும்.

**project control : திட்டக் கட்டுப் பாடு :** ஒரு திட்ட மேலாண்மைச் சுழற்சியின் ஒரு நிலை இது. திட்டமிட்டுள்ள அட்டவணைப் பணியுடன், உள்ளபடி நிறை வேறிய பணியுடன், ஒப்பிட்டுப் பார்த்து, திட்டம் நிறைவேறு வதில் ஏற்படும் காலத் தாழ்வு களைத் தவிர்ப்பதற்குத் தக்க திருத்த நடவடிக்கைகளை நிறை வேற்றுகிறது.

**Project Gutenberg : கட்டன் பெர்க் திட்டப்பணி :** இணையத் தில் பொதுக்களத்தில் பல்வேறு

புத்தகங்கள் கிடைக்கும்படி செய்யும் திட்டப் பணி. இந்தப் புத்தகங்களுக்கான கோப்புகள் கூடுமானவரை அதிகமான மக்கள் அணுகும்வகையில் வெளிப்படையான ஆஸ்கி எழுத்து வடிவில் இருக்கும். இல்லினாய்ஸ் பல்கலைக் கழகத்தினர் இத்திட்டப் பணியை உருவாக்கியுள்ளனர். இத்திட்டப் பணியின் எஃப்டீபீ தளமுகவரி : ftp://mrcnext.cso.uinc.edu. இதன் வலைப் பக்க முகவரி : http://www.promo.net/pg.

**projecting** : திட்டம் வரைதல் : ஒரு முப்பரிமாண காட்சியின் இருபரிமாண வரைகலைக் காட்சி உண்டாக்குதல்.

**projection** : திட்ட விரிவாக்கம்: கடந்த காலப் போக்குகளை வருங்காலத்திற்கு விரிவுபடுத்துதல். இது வணிக மேலாண்மை உத்தியாகும். இதற்குக் கணினி வழங்கும் தகவல்கள் அளவற்ற பயனுடையவை.

**project library** : திட்ட நூலகம்: திட்டங்கள், பணிகள், நடவடிக்கைகள் ஆகியவற்றின் தரவுத் தளம். இதனை, புதிய திட்டங்களை வகுக்கும்போது மாற்றமைவு செய்து பயன்படுத்தலாம்.

**project life cycle** : திட்டப் பணி செயல்படுகாலச் சுழற்சி : ஒரு திட்டப்பணியின் தொடக்கம் முதல் இறுதிவரையுள்ள, முன் திட்டமிடப்பட்ட பல்வேறு கட்டப் பணிகளின் வரிசை முறைத் தொகுதி.

**project management** : திட்டப் பணி மேலாண்மை : ஒரு குறிப்பிட்ட திட்டப் பணியின் நடைமுறை மற்றும் செயலாக்கத்தில் திட்டமிடல், கண்காணித்தல் மற்றும் கட்டுப்பாடு ஆகிய செயல்பாடுகளைக் குறிக்கின்றது.

**project management programme** : திட்டப்பணி மேலாண்மை நிரல்.

**project manager** : திட்ட மேலாளர் : ஒரு திட்டத்தின் குறிக்கோள்களை நிறைவேற்றுவதற்குப் பொறுப்பாகவுள்ள ஆள். இவரைச் சில சமயம் திட்டக்குழுமத் தலைவர் என்பர்.

**projector** : ஒளிதரும் அலகு: கண்ணாடிகளையும் லென்சுகளையும் கொண்டு ஒளியை ஒரு குறிப்பிட்ட திடகோணத்தில் செலுத்தி மிக அதிகமாக ஒளிரும் படத்தைத் தருவது.

**project plan** : திட்டநிலை : ஒரு திட்ட மேலாண்மைச் சுழற்சியில் ஒரு நிலை (கட்டம்). இதில், பணித் திட்டத்தின் மேம்பாடு, அமைப்பு முறை அடங்கும்.

**project schedule** : திட்டக்கால அட்டவணை : ஒரு திட்டத்தின் ஒவ்வொரு பணியும் நடவடிக்கையும் தொடங்கும் நேரம் முடிவுறும் நேரம் பற்றிய தகவல்களைக் கொண்ட அட்டவணை.

**prokey** : புரோகீ : ரோஸ்சாஃப்ட் நிறுவனம் தயாரித்த பீசிக்களுக்கான விசைப்பலகை பெருசெயலகம். சொற்பகுதி வருதல் அல்லது கட்டளை வரிசையைப் பேரளவில் வரச்செய்து மீண்டும் மீண்டும் தட்டச்சு செய்வதை நீக்க உதவுவது.

**PROLOG** : புரோலாக் (ஒரு கணினி மொழி) : "செயல்முறைப் படுத்தல் தருக்கமுறை" என்று பொருள்படும் programming logic என்ற ஆங்கிலச் சொற்றொடரின் குறும்பெயர். இது "செயற்கை நுண்ணறிவில்" (Artificial Intelligence) பயன்படுத்தப்படும் ஓர் உயர்நிலைச் செயல்முறைப்படுத்தும் மொழி. இது, ஜப்பானில் பெருமளவில் பயன்படுத்தப்படுகிறது.

**PROM** : புரோம் : "செயல்முறைப் படுத்தத்தக்க படிப்பதற்கு மட்டுமேயான நினைவகம்" என்று பொருள்படும். "Programmable Read Only Memory" என்ற ஆங்கிலச் சொற்றொடரின் குறும்பெயர்.

**promiscuous mode** : ஒழுங்கினப் பாங்கு.

**promiscuous-transfer** : ஒழுங்கினப் பாங்கு மாற்றி : ஒரு பிணையத் தகவல் தொடர்பில், கணுக் கணினியானது, வருகின்ற தரவு பொட்டலங்கள் அனைத்தையும் அவற்றின் இலக்கு முகவரியைப் பொருட்படுத்தாமல் ஏற்றுக்கொள்கிற தரவு பரிமாற்றப் பாங்கு.

**prom programmer** : புரோம் செயல்முறைப்படுத்தி : செயல்முறைபடுத்தத்தக்க படிப்பதற்கு மட்டுமேயான நினைவகங்களை செயல்முறைப்படுத்துவதற்கும், அழித்திடத்தக்க செயல்முறைப்படுத்தத்தக்க, படிப்பதற்கு மட்டுமேயான நினைவகங்களை மீண்டும் செயல்முறைப்படுத்துவதற்கும் பயன்படுத்தப்படும் சாதனம். இது சில சமயம், "புரோம் தகனி" என்றும் அழைக்கப்படுகிறது.

**prompt** : நினைவுக்குறிப்பு ; தூண்டு எழுத்து; நினைவூட்டுத் தூண்டல் : கணினி, விசைப் பலகை உட்பாட்டினை ஏற்றுக் கொள்வதற்குத் தயாராக இருப்பதைக் குறிப்பதற்கான எழுத்து அல்லது செய்தி. பொதுவாக எந்தத் தரவுவைப் பதிவு செய்வது அல்லது எந்த

நடவடிக்கையினை மேற் கொள்வது என்பதைப் பயன் படுத்துபவருக்குத் திரையில் காட்டுகிற எழுத்து.

**proof :** பிழைத்திருத்தப் படி: வெளியிடுவதற்குச் சரியாக இருக்கிறதா என்று சோதிக்கப் பயன்படும் ஒரு பக்கம் அல்லது வெளியீட்டின் சோதனை நகல்.

**proofing programme :** பிழை திருத்தச் செயல்முறை : அகராதிச் செயல்முறை அல்லது எழுத்துப் பிழைத் திருத்தம் போன்றது.

**proof reader's marks :** பிழை திருத்துபவரின் குறியீடுகள் : ஒரு பிழைதிருத்தப்படியில் திருத்தங்கள் அல்லது பிழைகள் உள்ளன என்பதைக் குறிப்பிடும் குறியீடுகள். டிடீபியில் பயன்படுவது.

**propagated error :** பெருகிய பிழை; பரவும் பிழை; பரப்பிய பிழை : ஒரு செயற்பாட்டில் ஏற்பட்ட பிழை இன்னொரு செயல்பாட்டுக்கு உள்ளீடாக அமைதல். இதனால் புதிதாக இன்னொரு பிழை உருவாகும்.

**propagation :** பரவுதல் : ஓரிடத்திலிருந்து வேறு ஒரு இடத்திற்குப் பரவுதல்.

**propagation delay :** பரப்புகைக் காலத்தாழ்வு; பரப்புகைச் சுணக்கம் : ஒரு செயற்கைக் கோள் செய்தித் தொடர்புப் பொறியமைவில் ஏற்படும் காலத்தாழ்வு.

**properties :** பண்பியல்புகள்; பண்புகள்.

**properties and methods :** பண்புகள் மற்றும் வழிமுறைகள்.

**property :** பண்பு; பண்பியல்பு : விண்டோஸ் குடும்ப (95/98/எம்இ/என்டி/2000) இயக்க முறைமைகளில் ஒரு பொருள் அல்லது சாதனத்தின் பண்பியல்பு அல்லது அளபுருவைக் குறிக்கிறது. எடுத்துக்காட்டாக, ஒரு கோப்பின் பண்புகள் அதன் வகை, அளவு, உருவாக்கப் பட்ட நாள் போன்றவற்றை குறிக்கின்றன. அந்த கோப்பின் பண்பியல்புத்தாளில் இது போன்ற விவரங்களை அறியலாம்.

**property sheet :** பண்புத் தாள் : விண்டோஸ் 95 மற்றும் அதன் குடும்ப இயக்க முறைமைகளில் இருக்கும் ஒரு வகை உரையாடல் பெட்டி. File என்ற பட்டித் தேர்வில் அல்லது ஒரு பொருள்மீது வலது சொடுக்கில் வரும் பட்டித் தேர்வில் Properties என்பதை தேர்வு செய்வதன் மூலம் இந்த உரையாடல் பெட்டியைப் பெற முடியும். இதில் ஒரு கோப்பு, பயன்பாடு

அல்லது வன்பொருள் சாதனத்தின் பண்புக் கூறுகள் அல்லது தகவமைவுகள் பட்டியலிடப் பட்டிருக்கும். பெரும்பாலும் பண்புத் தாள், ஒன்றுக்கு மேல் ஒன்றாக அடுக்கிய அடுக்குத் தாள் அமைப்பில் இருக்கும். ஒவ்வொரு தாளிலும் உரையாடல் பெட்டிகளில் காணப் படும் வழக்கமான கட்டுப்பாடுகள் இடம் பெற்றிருக்கும். பயனாளர் விருப்பப்படி அளபுருக்களை அமைத்துக் கொள்ள முடியும்.

**proportion :** வீத அளவு.

**proportional font :** சரிவிகித எழுத்துரு : ஒரு குறிப்பிட்ட பாணியில், அளவில் உருவாக்கப்பட்ட எழுத்துரு வகை. இதில் ஒவ்வொரு எழுத்தும் எண்ணும் வெவ்வேறு அகலத்தில் உருவாக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக இவ்வகை எழுத்துருவில் i என்னும் எழுத்தின் அகலம் m என்ற எழுத்தின் அகலத்தைவிடக் குறைவு.

**proportional printing :** விகிதாச்சார அச்சில் : ஒவ்வொரு எழுத்துக்கும் இடைவெளி இடம் அதன் அகலத்தை ஒட்டிய விகிதத்தில் இருக்குமாறு அச்சிடுதல். பெரிய எழுத்து W-வானது சிறிய எழுத்து 'i'யைவிட அதிக இடத்தை எடுத்துக் கொள்ளும்.

**proportional spacing :** வீத அளவு இட வெளியிடல் : ஓர் அச்செழுத்துக்கு ஒதுக்கப் பட்டுள்ள இடை நிலை இட வெளி, அந்த எழுத்தின் அகலத் திற்கொப்ப இருக்குமானால் இடவெளியிடல் வீத அளவில் இருப்பதாகக் கருதப்படும். இந்த நூலிலுள்ள அச்சுக்கோப்பு வீத அளவு இடவெளியிடல் அடிப்படையில் அமைந்திருப் பதால், "Write" என்ற சொல் லிலுள்ள "W" என்னும் எழுத்து 'i' என்ற எழுத்தைவிட அதிக இடத்தை அடைத்துக் கொள் கிறது. இதற்கு மாறாக தர அளவுபடுத்திய தட்டச்சுப் பொறிமுறையில், எல்லா எழுத்துகளுக்கும் சரிசமமான இடவெளியே ஒதுக்கப்படுகிறது.

**proposition :** முற்கோள் : தருக்க முறையில் ஒரு முன்மொழிவு. இது மெய்ம்மையாகவும் இருக் கலாம்; பொய்ம்மையாகவும் இருக்கலாம்.

**proprietary :** தனியுரிமையுடைய.

**proprietary software :** தனி யுரிமை மென்பொருள் : ஒரு தனிமனிதருக்கு அல்லது வணிக நிறுவனத்திற்குச் சொந்தமான செயல்முறை. இது பதிப்புரிமை

கொண்டதாக அல்லது இன்னும் பொதுமக்களுக்கு வெளியிடப் படாததாக இருக்கும். இந்த மென்பொருளை அனுமதி யின்றி எவரும் சட்டப்படிப் பயன்படுத்தவோ, படியெடுக் கவோ முடியாது. இது 'பொது முறை மென்பொருள்'(Public domain Software) என்பதி லிருந்து வேறுபட்டது.

**protect** : பாதுகாத்தல் : ஒரு கணினியமைவின் செயல் முறையை அனுமதி பெறாமல் அணுகுவதைத் தடுத்தல். தீங்கு ஏற்படுவதைத் தடுக்கக் காப்பிடுதல்.

**protect document** : ஆவணப் பாதுகாப்பு.

**protected** : காக்கப்பட்ட.

**protected memory** : பாது காக்கப்பட்ட நினைவகம் : அழுத்தப்பட்ட நினைவகம் போன்றது. ஆனால் அதிலிருந்து வேறானது. கணித்தலில் யூனிக்ஸ் போன்ற இயக்க அமைப்புகள் வேறு செயல கங்கள் பயன்படுத்திக் கொண் டிருக்கும்போது நினைவகத்தை அணுகுவதைத் தடுக்கின்றனர். வேறு ஒரு செயல்முறை படுத்தும் நினைவக இடத்தை எந்த ஒரு செயல்முறையும் எழுதமுடியாது. டாஸ் போன்றவற்றில் இந்தக் கட்டுப் பாடு அமைப்பு இல்லை. விண் டோஸ் 95இல் இந்தச் சிக்கல் இருக்காது.

**protected mode** : பாதுகாக்கப் பட்ட முறை : இன்டெல் 286-கள் மற்றும் பின்னர் வந்த வைகளில் உள்ள நினைவகத் தின் அனைத்துப் பகுதிகளை யும் முகவரியிட கணினியை அனுமதிக்கும் ஒரு இயக்க நிலை. ஒரு நிரல்தொடர் மற் றொன்றின் நினைவக எல்லைக் குள் செல்லாமலும் இது தடுக் கிறது. இதனால் பல நிரல் தொடர்கள் பாதுகாக்கப்பட்ட சூழ்நிலையில் இயங்கமுடியும்.

**protected storage** : காப்பிட்ட சேமிப்பகம், தனிவகை நோக் கங்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ள சேமிப்பக அமைவிடங்கள். இது சேமிப்பதற்குப் பொருத்த மானது தானா என்பதை உறுதி செய்யும் ஒரு நடைமுறைக்கு உள்ளாகாமல் தரவுகளைச் சேமிக்க இயலாது.

**protection** : காப்பு.

**protection, data** : தரவுக் காப்பு.

**protection, file** ; கோப்புக் காப்பு.

**protocol** : மரபொழுங்கு; நெறி முறை; முறையான நடைமுறை கள்; விதி முறைத் தொகுப்பு : கணினியமைவுகளிடையே தகவல் பரிமாற்றம் பற்றிய விதி

களின் தொகுதி. எடுத்துக்காட்டு : ஐபிஎம் சொந்தக் கணினி; ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினி.

**protocol stack** : நடைமுறை இருப்பு: ஒரு தகவல் தொடர்பு கட்டமைப்பில் பயன்படுத்தப் படும் மரபொழுங்கு விதி முறைகள்.

**protocol suite** : நெறிமுறைக் கூட்டுத் தொகுப்பு.

**prototype** : மூல முன்வடிவம்; முன் மூல அச்சு : ஒரு மென் பொருள் தொகுதியின் அல்லது கணினி வன்பொருள் சாதனத் தின் அல்லது பொறியமைவின் முதல் பதிப்பு அல்லது முன் மாதிரி வடிவம். இது உற்பத்திக்கு முந்திய சோதனைக்குப் பயன்படுகிறது.

**prototyping** : மாதிரியமைத்தல்: இறுதி இயக்கமுறை அமைப் பின் இயங்கும் மாதிரி ஒன்றை உருவாக்கி, மேம்படுத்தி, சீர் செய்தல்.

**proving** : மெய்ப்பித்தல்; நிறுவு தல் : ஓர் எந்திரம், திருத்தப் பரா மரிப்புக்குப் பிறகு, குறை பாடுகள் இல்லாதிருக்கிறது என்பதை மெய்ப்பிப்பதற்கான சோதனை.

**proxy server** : பதிலாள் பணி யகம் : ஒரு வாடிக்கையாளர் நேரடியாகக் கேள்விகள் கேட் காமல் அவருக்காக ஒரு பணி யகம் கேட்பது. நெருப்புச் சுவர் கட்டமைப்பு முறையில் இணைய பாதுகாப்பான உள் கட்டமைப்பினுள் பதிலாள் பணியகம் அமரும்போது இது ஏற்படுகிறது. உள்கட்டமைப் பில் உள்ள ஒரு பயனாளர் வெளிவுலகுக்கு நேரடியாகக் கேள்விகள் கேட்க முடியாது. அவர் சார்பாக இது ஆவணங் களைக் கேட்கும்.

**psec** : பிசெக் : பிக்கோ வினாடி என்பதன் குறும்பெயர். இது ஒரு வினாடியின் நூறாயிரங் கோடியில் ஒரு பகுதி.

**pseudocode** : போலிக் குறியீடு: 1. இயக்கிகள்,இயக்கப்படு எண் கள், செயற்பாடுகள், அட்ட வணைப் பதிவேடுகளைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் கட்டுத்திட்டமற்ற குறியீடு களின் தொகுதி. 2.தொடர் வரிசை வரைபடங்களுக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படும் செயல்முறை வடிவமைப்பு முறை. இது, ஆங்கிலம் போன்ற கட்டளைகளை உரு வரையாகப் பயன்படுத்துகிறது.

**pseudocompiler** : போலி தொகுப்பு : ஒரு போலி மொழியை அல்லது இடைப் பட்ட மொழியை உருவாக்கிய

தொகுப்பு. இயக்கப்படுவதற்கு இது மேலும் தொகுக்கப்பட வேண்டும் அல்லது விளக்கப் பட வேண்டும்.

**pseudocomputer** : போலிக் கணினி : ஒரு மரபான நுண் செய்முறைப் படுத்தியின் தாயக எந்திர மொழியில் எழுதப் பட்டுள்ள மென்பொருள் மொழியாக்கச் செயல் முறை.

**pseudolanguage** : போலி மொழி : ஒரு கணினியினால் நேரடி யாகப் புரிந்து கொள்ள முடியாத மொழி; இது கணினிச் செயல் முறைகளை எழுதப் பயன் படுத்தப்படுகிறது. ஒரு போலிச் செயல்முறையைப் பயன் படுத்துவதற்கு முன்பு, அது, கணினி அறிந்து கொள்ளக்கூடிய ஒரு மொழியில் (எந்திர மொழி), மொழி பெயர்க்கப் பட வேண்டும். இது "குறியீட்டு மொழி" (symbolic language) போன்றது.

**pseudo machine** : போலிப் பொறி; போலி எந்திரம் : இவ் வகைப் பொறியில் நுண்செயலி வன்பொருளாக இருப்ப தில்லை. மென்பொருளிலேயே அதுபோல உருவாக்கப்படு கிறது. போலிப் பொறிக்காக எழுதப்பட்ட ஒரு நிரலை மறு மொழி மாற்றம் செய்யாமலே வெவ்வேறு பணித்தளங்களில் இயக்க முடியும். எடுத்துக் காட்டாக, ஜாவா மெய்நிகர் பொறியைக் (Java Virtual Machine-JVM) கூறலாம். ஒரு முறை பைட் குறிமுறையாக (Bytecode) மொழிமாற்றம் செய்யப்பட்ட ஜாவா புரோ கிராம்களை (.class கோப்புகள்) எந்தக் கணினியிலுள்ள ஜேவி எம்மிலும், மறுமொழி மாற்றம் செய்யாமலே இயக்க முடியும்.

**pseudo-operation** : போலிச் செயற்பாடு : கணினியின் செயற் பாட்டுத் தொகுதியாக வன் பொருளால் உணர்ந்தறியப் பட்டுள்ள தொகுதியின் ஒரு பகுதியாக இல்லாத செயற் பாடு. எனவே, இது எந்திரச் செயற்பாடுகளின் தொகுதியின் ஒரு விரிவாக்கம் ஆகும்.

**pseudo random** : போலி முறையிலா.

**pseudorandom number** : தொடர் பிலாப் போலி எண் ; போலி முறையிலா எண் : ஒரு நியதி வாத முறைப்படி ஒரு கணினி யினால் உருவாக்கப்படும் எண். இந்த எண்கள் குறிப்பின்றிச் செய்யப்படும் பல புள்ளியியல் சோதனைகளுக்கு உள்ளாக்கப் படுகின்றன. பெரும்பாலான நடைமுறை நோக்கங்களுக்காக இதனை ஒரு குறிப்பிலா எண்ணாகப் பயன்படுத்தலாம்.

**psychology** : உளவியல்; மனவியல்.

**p-system** : பி-பொறியமைவு: ஒரு நுண்கணினிச் செயற்பாட்டுப் பொறியமைவு. பல்வேறு எந்திரங்களில் பயன்படுத்தும் வகையில் இதில் செயல்முறைகளை எழுதலாம். இது, இந்தப் பொறியமைவின் முக்கிய நன்மையாகும். இது, பி-குறியீட்டினை ஒரு குறிப்பிட்ட கணினிக்குப் பொருத்தமான எந்திரமொழியில் மொழிபெயர்க்கிறது.

**.pt** : .பீடீ : ஓர் இணைய தள முகவரி போர்ச்சுகல் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும்புவிப் பிரிவுக் களப்பெயர்.

**publication language** : வெளியீட்டு மொழி : நூல் வெளியீடுகளுக்குப் பொருத்தமான நன்கு வரையறுக்கப்பட்டுள்ள ஒரு செயல்முறைப்படுத்தும் மொழி இன்றியமையாத தேவை. ஏனென்றால் சில மொழிகளில் பொதுவான எழுத்து முகப்புகளாக இல்லாத தனிவகை எழுத்துகள் பயன்படுத்தப்படுகின்றன.

**public broadcasting** : பொது ஒலி பரப்பு.

**public data network** : பொதுத் தரவுப் பிணையம்.

**public directory** : பொதுக் கோப்பகம் : ஒரு எஃப்டீபீ வழங்கனில் சேமித்து வைக்கப்பட்டுள்ள ஒரு கோப்பகம். பெயரிலாப் பயனாளர்கள் (anonymous users) கோப்புகளைப் பெறவும் தரவும் இதனை அணுக முடியும். சுருக்கமாக pub என அழைக்கப்படும்.

**public domain** : பொதுக் களம் : பதிப்புரிமை அல்லது பிற சொத்துரிமைப் பாதுகாப்பின் கீழ் வராத புத்தகங்கள், இசை அல்லது மென்பொருள் போன்ற படைப்பாக்கத்தின் தொகுதியைக் குறிக்கிறது. பொதுக் களத்தில் இருக்கும் படைப்புகளை இலவசமாக நகலெடுக்கலாம். திருத்தலாம். எந்தப் பயனுக்காகவும் எந்த வகையிலும் பயன்படுத்திக் கொள்ளலாம். இணையத்தில் கிடைக்கும் தரவுகளில் பெரும்பாலானவையும், உரைகள் மற்றும் மென்பொருள் பலவும் பொதுக்களத்தின் கீழேதான் உள்ளன. ஆனால் பதிப்புரிமை பெற்ற படைப்புகள் இணையத்தில் பொதுக்களத்தில் இடம் பெறுவதில்லை.

**public domain software** : பொதுமுறை மென்பொருள் : 1. பதிப்புரிமைச் சட்டங்களின் பாதுகாப்புக்கு உட்படாமலிருப்

பதும் சட்ட வழக்குகள் தொடரப் படலாம் என்ற பயமின்றிச் சுதந்திரமாக எல்லோராலும் பயன்படுத்தப்படுவதுமான மென்பொருள். ஒரு செயல் முறையை உருவாக்கியவர் பொதுமக்களுக்கு நன்கொடை யாக வழங்கிய ஒரு கணினிச் செயல்முறை. 2. தொலைக் கணினிகளில் பயன்படுத்தப் படும் இலவசச் செயல்முறை கள். இது "தனியுரிமை மென் பொருள்" (Proprietary Software) என்பதிலிருந்து வேறு பட்டது.

**public file :** பொதுக் கோப்பு : ஒரு அமைப்பு அல்லது கட்ட மைப்பின் அனைத்து பயனாளர் களுக்கும் கிடைக்கும் கோப்பு.

**public key :** பொது மறைக்குறி; பொதுத் திறவி : தனித் திறவி, பொதுத் திறவி ஆகிய இரண்டு திறவிகளின் அடிப்படையிலான மறையாக்கம். ஒரு பயனாளர் தனக்குரிய பொதுத்திறவியை பொதுமக்களுக்கு அறிவிக் கிறார். இதன்மூலம் எவரும் செய்திகளை மறையாக்கம் செய்து பயனாளருக்கு அனுப்ப லாம். பயனாளர் அச்செய்தி களை மறைவிலக்கம் செய்து படிக்க, தன்னுடைய இலக்க முறைக் ஒப்பமாகிய (digital signature) தனித் திறவியைப் பயன்படுத்திக் கொள்வார்.

**public key encryption :** பொதுத் திறவி மறையாக்கம் : மறையாக்கத் திற்கு இரட்டைத் திறவிகளைப் பயன்படுத்துகிற ஓர் ஒத்திசை வில்லா மறையாக்கமுறை. பொதுத்திறவியைப் பயன்படுத்தி மறையாக்கம் செய்யப்பட்ட செய்தியை, செய்திக்குரியவர் தனக்கே உரிய தனித்திறவி மூலம் மறைவிலக்கம் செய்து கொள்வார். இலக்கமுறைக் ஒப்பத்தைப் பொறுத்தவரை இந்த வழிமுறை எதிர்முறை யானது. அதாவது செய்தியை அனுப்புபவர் இரகசியத்திறவி யைப் பயன்படுத்தி ஒரு தனித்த மின்னணு எண்ணை உருவாக்கு கிறார். இச்செய்தியினைப் படிக்க விரும்புபவர் அதற்கேற்ற பொதுத்திறவி மூலம் பரி சோதித்து குறிப்பிட்ட நபரிட மிருந்துதான் செய்தி வந்ததா என அறிந்து கொள்ளலாம்.

**public network :** பொதுப் பிணையம் : பொதுவாக ஒரு கட்டணம் செலுத்தி எல்லோ ரும் பயன்படுத்தக்கூடிய ஒரு செய்தித் தொடர்புச்சாதனம்.

**public object element :** பொதுப் பொருள் உறுப்பு.

**public property :** பொதுப் பண்புகள்.

**public rights :** பொது உரிமை கள் : இணையத்தைப் பொறுத்த

மட்டில் பொது மக்கள் எந்த அளவுக்கு இணையத் தரவு களைப் பெறலாம் என்பதற்கு அறிவு பூர்வச் சொத்துச் சட்டத்தின் கீழ் வழங்கப்பட்டுள்ள உரிமைகள்.

**public Switched data network (PSDN) :** பொது இணைப்பகத் தரவுப் பிணையம்.

**Public Switched Telephone Network (PSTN) :** பொது இணைப் பகத் தொலைபேசிப் பிணையம்.

**publish and subscribers :** வெளியீடும் சந்தாவும் : கோப்பு களுக்கிடையே வெப்ப இணைப்புகளை ஏற்படுத்தும் மெக்கின்டோஷ் சிஸ்டம் 7-ன் திறன். ஒரு கோப்பின் அனைத்து அல்லது ஒரு பகுதியை பதிப்புக் கோப்பு என்று பதித்து, சந்தா தாரர் கோப்பாக மாற்றலாம். எந்த ஒரு பதிவித்த கோப்பைப் புதுப்பித்தாலும், சந்தாதாரர் கோப்பும் புதுப்பிக்கப்படும்.

**puck : கைவரை கலைச் சாதனம் :** ஓர் ஆள் கையில் பிடித்துக் கொண்டு கையால் இயக்கும் வரைகலை உட்பாட்டுச் சாதனம். இது ஒரு வரைகலைத் தகட்டில் ஆயத்தொலைவு களைக் குறிப்பதற்குப் பயன் படுகிறது.



கைவரை கலைச் சாதனம்

**pull :** இழு; மீட்பு.

**pulldown list :** கீழ் விரிப் பட்டியல்.

**pull down menu :** கீழ்விரி பட்டியல்; தலைவிரியும் பட்டி யல் : சுட்டு நுண் பொறியின் சுட்டுமுள்ளை ஒரு தலைப்புக்கு நகர்த்தி, பிறகு சுட்டு நுண் பொறிப் பொத்தானை அழுத்து வதன்மூலம் காட்சியாகக் காட்டத்தக்க விவரப் பட்டியல்.

**pull instruction :** மீட்பு நிரல்: செயல்முறை கீழ்த்தள்ளு அடுக் கின் உச்சியிலிருந்து தரவுகளை இழுக்கிற அல்லது மீட்கிற நிரல். இது விரைவுத் தள்ளு நிரல் போன்றது.

**pulse** : துடிப்பு; துடிப்புக் குறியீடு; அதிர்வு : மின் அழுத்தத்தில் நேர்மின்னாகவோ எதிர்மின்னாகவோ திடீரென ஏற்படும் மாறுதல். இது மின்சுற்று வழிக்குத் தகவலை அனுப்புகிறது.

**pulse code modulation** : துடிப்புக் குறியீடு; துடிப்புக் குறிப்பேற்றம் : பிரளம் அமைப்பில் ஒப்புமை சமிக்கையை தொடர்ந்து இடைவேளையில் மாதிரி எடுத்து ஒரு துடிப்பு அலைமாற்ற வீச்சு கலை மாற்ற (ஆம்ப்ளிட்டியூடு மாடுலேட்டர்) அலைவடிவை ஏற்படுத்தலாம். ஒரு சமிக்கையின் உயர்ந்த அலை வரிசையின் இரட்டை மதிப்பை மாதிரி அளவாகக் கொண்டு ஒரு உவமச் சமிக்கையைத் தொடர்ந்து மாதிரியெடுத்தால் குரலை மீண்டும் உருவாக்குவது போதுமானது. மாதிரித் துடிப்பின் கால இடைவெளிக்கு மட்டும் திறக்குமாறு அமைக்கப்பட்டுள்ள வாயிலைக் கொண்ட மின்சுற்றில் ஒத்திசைவு உவமச் சமிக்கையை அனுப்பி மாதிரி எடுக்கப்படுகிறது. இதில் வெளியீடாக வருவது PAM சமிக்கை.

**pulse duration modulation** : துடிப்பு கால அளவுப் பண்பேற்றம் : தொடர்முறை வடிவில் இருக்கும் தகவலை இலக்கமுறைச் செய்தியாக மாற்றியமைத்து குறியாக்கம் செய்வதில் ஒரு வழிமுறை. துடிப்பின் கால அளவை மாற்றியமைத்து இக்குறியாக்கம் செய்யப்படுகிறது. பண்பேற்றம் செய்யப்படுவதற்கு முன்பாக, சமிக்கையானது நிலையான அதிர்வெண், கால அளவு, வீச்சு கொண்ட தொடர்ச்சியான துடிப்புகளைக் கொண்டதாக இருக்கிறது. பண்பேற்றத்தின் போது துடிப்பின் கால அளவு மாற்றப்பட்டு தகவல் குறியாக்கம் செய்யப்படுகிறது.

**pulse modulation** : துடிப்புப் பண்பேற்றம்; துடிப்பு ஏற்ற இறக்கம் : தகவல்களை அனுப்புவதற்கு ஏற்ற இறக்கம் செய்யப்பட்டுள்ள அல்லது பண்பியல்புப்படுத்தப்பட்டுள்ள துடிப்புகளின் தொடர் வரிசையைப் பயன்படுத்தல். PAM, PPM, PDM போன்றவை இந்த ஏற்றஇறக்க வகையைச் சேர்ந்தவை.

**pulse position modulation** : துடிப்பு இடநிலைப் பண்பேற்றம் : தகவலைக் குறியாக்கம் செய்யும்போது துடிப்புகளின் இடநிலையை மாற்றியமைத்து சமிக்கையைப் பண்பேற்றம் செய்யும்முறை. பண்பேற்றம் செய்

யப்படுவதற்கு முன்பு சமிக்கை யானது நிலையான அதிர் வெண், கால அளவு மற்றும் வீச்சு கொண்டதாக இருக்கும். பண்பேற்றத்தின்போது துடிப் பின் இடநிலை மாற்றப்பட்டு, தகவல், குறியாக்கம் செய்யப் படுகிறது.

**pulse regenerators :** துடிப்பு மீட்டுருவாக்கிகள் : தொலை பேசிக்கம்பியின் பாதை நெடு கிலும் டிடிஎம் சமிக்கைகள் வலுப்பெறுகின்றன; பிரி கின்றன. பிழைகள் சேர்க்கப் படவில்லையென்றால் ஒரு குறிப்பிட்ட சமயத்தில் துடிப்பு இருக்கிறதா இல்லையா என்று கூறமுடியும். தேவைப்படும் துல்லியத்துக்குள் துடிப்பின் அலைவடிவத்தை வைத்திருக்க கம்பி நெடுகிலும் துடிப்பு மீட்டுருவாக்கிகள் அமைக்கப் பட்டுள்ளன. ஒவ்வொருமுறை துடிப்பு புதுப்பிக்கப்படும் போதும் ஒரு புதிய, சிதையாத துடிப்பு கம்பியில் அனுப்பப்படு கிறது. துடிப்பு இல்லை என்று கண்டுபிடிக்கப்படும்போது, துடிப்பு அனுப்பப்படுவதில்லை.

**pulses, clock :** கடிகாரத் துடிப்பு.

**punch :** துளையிடல்.

**punch buffer, card :** அட்டைத் துளை இடையகம்.

**punched card :** துளையிட்ட அட்டை : தரவு செய்முறைப் படுத்தும் செயற்பாடுகளில் பயன்படுத்தப்படும் காகித அட்டை. இதில் நூற்றுக்கணக் கான தனித்தனி அமைவிடங் களில் நுண்ணிய செவ்வகத் துளைகள் இடப்படுகின்றன. இத்துளைகள் எண்ணியல் மதிப்பளவுகளையும் ஆல்பா எண்ணியல் குறியீடுகளையும் குறிக்கின்றன.

**punched card code :** துளை அட்டை குறிமுறை.

**punched tape :** துளைநாடா.

**punching card :** அட்டை துளைத்தல்.

**punching position :** துளையிடு இட நிலை : ஓர் அட்டைப் பத்தியின் பிரிவினைப் பகுதி களில் ஒன்று. இதில் ஒரு துளை யினை இடலாம்.

**punching station :** துளையிடும் நிலையம் : விரற்கட்டைத் துளையிடு எந்திரம், அட்டைத் துளையிடு எந்திரம், ஆகியவற் றில். துளையிடும் செய்முறைக் காக ஓர் அட்டையினைப் பொருத்துவதற்கான பகுதி.

**punch, key :** விசைத் துளையிடல்.

**punch, keyboard :** விசைப் பலகை துளையிடல்.

**punch, x** : எக்ஸ்-துளை.

**punch, y** : ஒய்-துளை.

**punctuation syntials** : நிறுத்தக் குறி; பகுப்பாய்வு.

**punctuator** : நிறுத்தற்குறிகள்.

**purchase order** : கொள்முதல் கோரிக்கை.

**pure procedure** : தூய நடைமுறை : நிறைவேற்றத்தின் போது தனது எந்த பகுதியையும் மாற்றமைவு செய்து கொள்ளாத நடைமுறை.

**purge** : அழிப்பு : ஒரு கோப்பினை அழித்து விடுதல்.

**purge print document** : அச்சு ஆவணங்களை நீக்கு.

**purpose computer, general** : பொதுப் பயன் கணினி.

**purpose computer, special** : சிறப்புப் பயன் கணினி

**push** : தள்ளு : ஒரு செயல்முறை அடுக்கின் உச்சி அமைவிடத்தினுள் தரவுவைத் தள்ளிச் செலுத்துதல். அடுக்கின் சுட்டுமுள், அடுக்கின் உச்சிக்கு வருகிற அடுத்த அமைவிடத்தைச் சுட்டிக்காட்டும் வகையில் தானாகவே உயர்ந்து விடுகிறது. இது "விரைவுத் தள்ளல்" (Pop) என்பதிலிருந்து வேறுபட்டது.

**push instruction** : தள்ளு நிரல் : தள்ளும் செயற்பாட்டினை நிறைவேற்றுகிற கணினி நிரல்.

**pushdown list** : கீழ்த்தள்ளுப் பட்டியல் : கீழிருந்து மேல் நோக்கி எழுதப்படும் பட்டியல். இதில் ஒவ்வொரு புதிய பதிவும் பட்டியலின் உச்சியில் இடம் பெறும். பட்டியலின் உச்சியிலுள்ள இனம் முதலில் செய்முறைப்படுத்தப்படும்.

**pushdown stack** : கீழ்த்தள்ளு அடுக்கு : கணினியில் ஒரு கீழ்த் தள்ளுப்பட்டியலை நிறைவேற்றுகிற நினைவக அமைவிடங்களின் அல்லது பதிவேடுகளின் தொகுதி.

**push- pop stack** : விரைவுக் கீழ்த் தள்ளு அடுக்கு : ஒரு செயல் முறை முகப்பிலிருந்து தகவல்களைப் பெற்று, நிரல்களின் முகவரி அமைவிடங்களை "முதலில் கடைசி வெளிப்பாடு" அடிப்படையில் சேமித்து வைக்கிற பதிவேடு. இரு செயற்பாடுகளும் அடுக்குச் செய்முறைப்படுத்துதலில் அடங்கியவை. தள்ளுதல் என்பது பதிவேடுகளிலிருந்து அடுக்கினை நிரப்புவதைக் குறிக்கிறது. விரைவுத் தள்ளுதல் என்பது பதிவேடுகளிலிருந்து அடுக்கினை நிரப்புவதைக் குறிக்கிறது;

விரைவுத் தள்ளுதல் என்பது பதிவேடுகளுக்கு மாற்றுவதற் காக அடுக்கினைக் காலி செய் வதைக் குறிக்கிறது.

**push/pull tractor** : தள்ளு / இழு டிராக்டர் : அச்சிடும் தாள் இழுவை காகிதத்தை பிளேட்டனுக்குத் தள்ளுமாறும் பிளேட்டனில் இருந்து அதை வெளியே எடுக்குமாறும் பொத்தானிடக் கூடியது. தனித் தாள் தொடர்படிவங்களைத் தள்ளலாம். பெரும்பாலான பல்பகுதி படிவங்களும் வில்லைகளும் மோதிக் கொள் வதைத் தடுக்க இழுக்கப்பட வேண்டும்.

**pushup list** : மேல் தள்ளுப் பட்டியல் : இனங்களின் பட் டியல். இதில் ஒவ்வொரு இன மும் பட்டியலின் இறுதியில் பதிவு செய்யப்படுகிறது. மற்ற இனங்கள் பட்டியலில் அவை இடம் பெற்றுள்ள இடத்தில் அப்படியே இருந்துவிடும்.

**put** : புட் : நிரலாக்கத் தொட ரமைத்தலில் நடப்புப் பதி வேட்டை வெளியீட்டுக் கோப் பில் சேமிக்குமாறு கேட்கும் ஒரு வேண்டுகோள்.

# Q

**.qa : .கியூஏ :** ஓர் இணைய தள முகவரி குவாட்டார் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்

**.qc.ca : .கியூசி.சிஏ :** ஓர் இணைய தள முகவரி கனடா நாட்டின் கியூபெக் மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**.qt : .கியூடீ :** குவிக்டைம் வடிவாக்கம் கொண்ட பல்லூடகக் கோப்புகளை அடையாளம் காண உதவும் கோப்பின் வகைப்பெயர் (extension)

**quadbit : நான்மைத் துண்மி :** குவாம் (QAM) குறிப்பேற்றத்தில் (modulation) பயன்படுத்தப்படும் நான்கு துண்மிகளின் தொகுதி.

**quad-density : மிகைச் செறிவு ; நான்கு மடங்கு அடர்த்தி :** ஒரு கணினி வட்டுப் பொறியமைவின் தரவு சேமிப்புச் செறிவினைக் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தப்படும் சொல். ஒற்றைச் செறிவு வட்டுகளில் சேமித்து வைக்கக் கூடிய தரவுகளைப்போல் நான்கு மடங்கு தரவுகளை இந்தப் பொறியமைவுகளில் சேமித்து வைக்கலாம். இரட்டைப் பக்க இரட்டைச் செறிவு வட்டுகள் மிகைச் செறிவு வட்டுகள் ஆகும்.

**quadratic quotient search : இரு விசைப்படி ஈவு ஆய்வு; இரு விசைப்படி ஈவு தேடல் :** பிந்திய வரிசை அட்டவணை அமைவிடங்களை ஆராயும்போது இரு விசைப்படி எதிரீட்டினைப் பயன்படுத்தும் படிநிலை நடைமுறை.

**quadrature : உருச்சதுரச் சரியீட்டளவு :** பால் (PAL) தொலைக் காட்சி ஒளிபரப்பில் வண்ண சமிக்கைகளை அளிக்க அதிர் வலைவீச்சு குறிப்பேற்றம் பயன்படுத்தப்படுகிறது.

**quadrature amplitude modulation : உருச்சதுர சரியீட்டளவு அதிர் வலைவீச்சுக் குறிப்பேற்றம் :** நடுநிலை அதிவேகக் குறிப்பேற்றங்களில் பயன்படுத்தப்படும் ஒரு செய்தியனுப்பும் முறை.

**quadrature encoding : கால் வட்டக் குறியாக்கம் :** சுட்டி நகரும் திசையைத் தீர்மானிக்கப்

பயன்படுத்தப்படும் பொது வான வழிமுறை. சுட்டிப்பொறி களில் அதிலுள்ள கோளத்தின் அசைவு செங்குத்து அல்லது கிடைமட்ட திசைகளின் அள வாய் மாற்றப்படுகிறது. இதை நிர்ணயிக்க இரண்டு சிறிய வட்டுகள் உள்ளன. இந்த வட்டுகள் உள்ளே பொருத்தப் பட்டுள்ள இரு உணரிகளுடன் (sensors) உரசி, விலகுவதைக் கொண்டு செங்குத்து, கிடை மட்டத் திசைகள் நிர்ணயிக்கப் படுகின்றன. இரண்டு உணரி களில் எது முதலில் உரசப் படுகிறது என்பதைக் கொண்டு சுட்டியின் நகர்வு இடப்பக்கமா, வலப்பக்கமா என்பது தீர்மானிக்கப்படுகிறது.

**quadrillion :** ஆயிரம் கோடி கோடி : ஒரு இலட்சம் கோடி யில் ஆயிரம் மடங்கு.

**quad-type cable :** குவாட் வகை கம்பி வடம் : ஒட்டப்பட்ட இணைக்கம்பிகளை அதனுள் வைத்து ஒரு கேபிளை உரு வாக்கி இதை வசதியாகச் செய்யமுடியும். நான்குகள் அல்லது குவாடுகளாக இதைச் செய்யலாம். ஒட்டும் பொரு ளின் நிறத்தை வைத்து ஒவ் வொரு கம்பியும் அடையாளம் காணப்படுகிறது. இணைக் குழாய் அடையாளத்துக்குரிய தர நிறக் குறியீட்டின்படி இஃது செய்யப்படுகிறது.

**quality :** தரம்.

**quality assurance :** தர உத்திர வாதம்; தர உறுதிச்சான்று : ஓர் உற்பத்திப் பொருள் அல்லது ஓர் அமைப்பு வழக்காற்றில் நிலை நிறுத்தப்பட்ட தர வரையறை களைக் கொண்டுள்ளது என் பதை உறுதி செய்ய மேற்கொள் ளப்படும் செயல்முறைகள்.

**quality control :** தரக் கட்டுப் பாடு : செய்முறைப்படுத்தப் படும் பொருளின் தரத்தை மதிப் பிட்டு அறியும் உத்தி. முன் அறுதியிட்ட தர அளவுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்து இது செய்யப்படுகிறது. தர அளவு குறைபாட்டுடன் இருந்தால், அதனைச் சீர்செய்ய தக்க நட வடிக்கை எடுக்க இது உதவுகிறது.

**quality engineering :** தர அளவுப் பொறியியல்; தரப் பொறியியல் : பொருள்களின் தரத்தை வகுத் துரைப்பதும், தர அளவுகளை நடைமுறையில் செயற்படுத்து வதும், ஏற்றுக் கொள்ளப்பட்ட தர அளவு வகைப்பாடுகளுக்கு

இணங்கி நடக்குமாறு செய்வதும் இதில் அடங்கும்.

**quantify :** எண் அளவாக்குதல் : எண்ணியல் சாராத பொருள்களுக்கு எண்ணியல் மதிப்பளவுகளைக் குறித்தளித்தல்.

**quantities :** எண் அளவுகள்; பொருள் அளவுகள்.

**quantity :** எண்ணளவு : கணித முறையில் நேர் அல்லது மறுதலை மெய்ம்மை எண்.

**quantize :** குவாண்டைஸ் : சோதனைகளுக்காக ஒரு பொருளை விரும்பும் மதிப்புகளில் பிரித்தல்.

**quantum :** அளவை அலகு ; துளியம் : ஒரு பொறியமைவில் பயன்படுத்தப்படும் மிகச்சிறிய அளவை அலகு.

**quartz crystal :** பலவண்ணப் படிகம் : படிகக்கல்லை ஒரு குறிப்பிட்ட பருமனுக்குத் துண்டாக்குதல். இதில் மின்சாரம் பாய்ந்தவுடன் இது அதிர்கிறது. நுண்ணிய படிகம் ஒரு அங்குலத்தில் 1/20 முதல் 1/5 வரையுள்ள கணினியின் இதயத் துடிப்பை உருவாக்குகிறது.

**quasi language :** மொழிப் போலி.

**QUBE :** தரவு பயன்பாடு : உயர் அதிர்வெண் மின்கடத்தி வடத் தொலைக்காட்சியின் ஒரு பகுதியாக இருக்கிற தரவு பயன்பாடு. இது நேயர்கள் புதிய படங்கள் பார்க்க உதவுவது முதல் மருத்துவர்களுக்கும் வழக்குரைஞர்களுக்கும் தனிவகைத் தொழில் முறைத் தரவுகளை அளிப்பது வரை எல்லா வகை வசதிகளையும் செய்து கொடுக்கிறது. இது தரவு பரிமாற்ற வகையைச் சேர்ந்தது.

**queries :** வினவல்கள்

**query :** கேட்டறி; வினவுதல்; வினா; வினவல்: தரவுகளைக் கேட்டல். தரவுகளை ஒரு பொறியமைவிலிருந்து தரவுகளை வேண்டுதல்.

**query answer :** வினா-விடை.

**query by example :** எடுத்துக் காட்டு வழி கேட்டறிதல்; எடுத்துக் காட்டு வழி வினவுதல் : தேர்ந்தெடுத்த பதிவேடுகளுக்கான தகுதிப்பாடுகளை வரையறுத்துக் கூறி, ஒரு தரவுத் தளப் பொறியமைவிலிருந்து தரவுகளைக் கேட்டறிதல். தரவுகளைக் காண ஒரு நடைமுறையை விவரிப்பதற்குப் பதிலாக இவ்வாறு செய்யப்படுகிறது.

**query language** : கேட்டறி மொழி; வினவல் மொழி; வினவு மொழி : 1. ஒரு தரவுத் தளப் பொறியமைவிலிருந்து குறிப்பிட்ட வகையைச் சேர்ந்த தரவு எதனையும் வரவழைப் பதற்குப் பயன்படுத்தப்படும் நிரல்களின் தொகுதி. இதனை "தரவு கையாள் மொழி" (date manipulating language) என்றும் கூறுவர். இது "செயல்முறை யற்ற வினவல் மொழி" (non-procedural query language) என்பதுடன் ஒப்பிடத்தக்கது. 2. மிக்க உயர் நிலை இயற்கை மொழி. பயனாளர், குறியீடுகள் அல்லது உயிர் நிலைச் சொற்கள் எதனையும் அறிந்து கொள்ளா மலேயே, ஒரு கணினியமை விடம் கேள்விகள் கேட்பதற்கு அனுமதிக்கிறது. இதில், தனி வகை மென்பொருள்கள், பயனாளரின் வேண்டுகோளைப் பகுப்பாய்வு செய்து, அதன் பொருளை விளக்கிக் கூறி, காட்சித்திரையில் தக்க பதில் களைக் காட்டுகின்றன.

**query programme** : கேட்டறி நிரல் தொடர் : எண்ணி, காட்டி, ஒரு தரவுத் தளத்திலிருந்து தேவையான பதிவேடுகளை எடுத்துவரும் மென்பொருள். ஒரு வாடிக்கையாளரின் கணக்கை திரையில் கொண்டு வருவது போன்று ஒன்று அல்லது இரண்டு தேடல்களை மட்டும் கொண்ட பெரிய பயன்பாட்டின் ஒரு பகுதியாக இருக்கலாம் அல்லது எந்தச் சூழ்நிலையிலும் தேடி, தேர்ந் தெடுக்கக்கூடிய கேள்வி மொழியைக் குறிப்பிடுவதாக வும் இருக்கலாம்.

**query response** : வினவல் விடை; வினாவுக்குரிய பதில் : இயக்குபவரின் குறிப்பிட்ட வேண்டுகோளுக்குப் பதிலாக ஒரு கணினி முனையம் அனுப்பும் செய்தி.

**question answer** : வினா விடை : கணினியுடன் செய்திப் பரி மாற்றம் செய்து கொள்வதற் கான செய்முறை. பயனாளரி டம் கணினி ஒரு கேள்வியைக் கேட்கும்; அதற்குப் பயனாளர் பதிலளிப்பார்.

**question mark** : வினாக்குறி; கேள்விக்குறி : சில இயக்க முறைமைகளிலும் பயன்பாடு களிலும் எந்தவொரு ஒற்றை எழுத்துக்காகவும் பயன்படுத்தப் படும் பதிலீட்டுக் குறியீடு. எம்எஸ்-டாஸ், விண்டோஸ் என்டீ, ஓஎஸ்/2 ஆகிய இயக்க முறைமைகளில் பயன்படுத்தப்

படும் இரண்டு பதிலீட்டுக் குறி யீடுகளில் (wildcard characters) கேள்விக் குறியும் ஒன்று.

**queue : வரிசை ; சாரை :** கணினியின் செயற்பாட்டுக்கு உட்படுவதற்கு வரிசையில் காத்திருக்கும் இனங்களின் குழுமம். எடுத்துக்காட்டு: ஒரு தரவு அனுப்பீட்டுப் பொறி யமைவில் அனுப்பப்பட இருக்கும் செய்திகள். இனங் களின் வரிசைமுறையானது, செய்முறை முந்துரிமையை நிருணயிக்கிறது.

**queued access method : வரிசை அணுகுமுறை; சாரை அணுகல் முறை :** அணுகுமுறை, உட் பாட்டு/வெளிப்பாட்டுச் சாதனங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்தி, செயல்முறை களுக்கிடையில் தரவுகளை மாற்றுவதைத் தானாகவே ஒருங்கிணைக்கிற ஓர் அணுகு முறை. இதன் மூலம், உட் பாட்டு/வெளிப்பாட்டுச் செயல்முறைகளில் காலத் தாழ்வுகளைத் தவிர்க்கலாம்.

**queuing : வரிசைமுறையாக்கம் ; சாரையாக்கம் :** தரவு செய் முறைப்படுத்தும் வரிசையைக் கட்டுப்படுத்தும் உத்தி.

**queuing system : வரிசைமுறை அமைப்பு :** ஏராளமான தொலை பேசி அழைப்புகளை பெறு கின்ற வணிக மற்றும் பெரிய நிறுவனங்கள் பயன்படுத்து கின்ற, செயலகம் கட்டுப் படுத்துகின்ற பொத்தானிடும் அமைப்பு. இரயில்வே விசாரணை, விமான சேவை மற்றும் கேஸ் கம்பெனிகள் ஆகியவற்றை சான்றாகக் கூறலாம். வருகின்ற அழைப்பு களை வரிசைப்படுத்தி, மின் னணு முறையில் அழைத்தவர் களுக்கு ஒரு செய்தி அனுப்பப் படுகிறது. சான்றாக, இயக்கு பவர்கள் இப்போது சுறுசுறுப் பாக இருக்கிறார்கள். இயக்கு பவர் (ஆப்பரேட்டர்) கிடைத்த வுடன் உங்களுக்குப் பதில் கிடைக்கும். நீங்கள் வரிசையில் உள்ளீர்கள் என்று பதில் வரும். ஒவ்வொரு அழைப்பும் அது வரும் வரிசையில் கவனிக்கப் பட்டு காலியாக உள்ள முகப்புக்கு அனுப்பப்படுகிறது. முதலில் வருவது-முதலில் போக வேண்டும் என்ற கொள்கை யின்படி வரிசைமுறை அமைப்பு வேலை செய்கிறது. இதன்படி காத்திருக்கும் நேரம் எல் லோருக்கும் ஒன்றாகவே இருக் கும். ஒவ்வொரு இயக்குநருக்கும்

சமமான வேலை கிடைக்கவும் இது உதவுகிறது.

**queuing theory** : வரிசை முறையாக்கக் கோட்பாடு; சாரைக் கோட்பாடு : பணி முனைகளில் ஏற்படும் தாமதங்களை அல்லது தேக்கங்களை ஆராய்ந்தறிவதற்கு உதவும் நிகழ் தகவுக் கோட்பாட்டின் ஒரு வடிவம். நகரும் அலகுகளின் வரிசை முறைகளைத் திருத்துவது தொடர்பான ஆராய்ச்சி உத்தி. தரவுகளின் அல்லது முழுச் செய்திகளின் துணுக்குகளை வரிசைமுறையில் அமைப்பது இதில் உள்ளடங்கும்.

**quibinary code** : இரட்டுறு இரும எண் குறியீடு : பதின்ம எண்களைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்படும் இரும எண் குறியீடிட்ட பதின்ம குறியீடு. இதில் ஒவ்வொரு பதின்ம எண்ணும், ஏழு இரும எண்களினால் குறிக்கப்படும்.

**quick disconnect** : விரைவுத் தொடர்பு முறிவு ; விரைவுத் துண்டிப்பு : பொருத்து இணைப்பியை விரைவாகப் பூட்டவும், திறக்கவும் அனுமதிக்கும் மின்னியல் இணைப்பு வகை.

**quickdraw** : விரைவுவரை : மெக்கின்டோஷில் அமைக்கப்பட்டுள்ள வரைகலைக் காட்சி முறை. பயன்பாட்டிலிருந்து கட்டளைகளை ஏற்று, அதற்கேற்ற பொருள்களை திரையில் வரைகிறது. மென்பொருள் உருவாக்குபவர்கள் பணியாற்றக்கூடிய ஒரு தொடர்ச்சியான இடைமுகத்தை இது அளிக்கிறது.

**quick format** : உடனடிப் படிவம் : கோப்பு ஒதுக்கும் பட்டியல் மற்றும் ஒரு வட்டின் வேர் தரவு பட்டியலை விலக்கி காலியாகத் தோற்றமளிக்க வைக்கும் ஒரு டாஸ் கட்டளை. ஆனால், இது வட்டின்மீதுள்ள கோப்பு தரவுவை நீக்கவோ அல்லது மோசமான பகுதிகளை நுண்ணாய்வு செய்யவோ போவதில்லை. ஏற்கனவே, படிவம் அமைக்கப்பட்ட வட்டை உடனடியாகப் படிவம் அமைக்க இது விரைவான வழியைத் தருகிறது.

**quicksort** : விரைவுத் தொகுப்பு; வேக வகைப்படுத்தல்; வேக வரிசையாக்கம் : 1962-ல் சி.ஏ.ஆர். ஹோர்ஸ் என்பவர் அறிமுகப்படுத்திய திறன்மிக்க வரிசையாக்கத் தருக்க முறை. பிரித்தாளுதல் (devide and conquer) என்கிற போர்த் தந்திர முறையை அடிப்படையாகக்

கொண்டது. இம்முறைப்படி முதலில் வரிசையாக்கப்பட வேண்டிய பட்டியலில் மைய மதிப்பு தேடிக் கண்டறியப் படும். அச்சாணி (pivot) மதிப் பென இது அழைக்கப்படு கிறது. இவ்வுறுப்பை சிறிது சிறிதாக நகர்த்தி அதன் இயல்பான இடத்தில் இருத்த வேண்டும். அதன் பிறகு அச்சாணி மதிப்பைவிடக் குறைவான மதிப்புள்ள உறுப்பு கள் ஒருபுறமாகவும், அதிக மதிப்புள்ள உறுப்புகள் மறு புறத்திற்கும் தள்ளப்படு கின்றன. இப்போது இரு பட்டியல்கள் பெறப்படு கின்றன. அடுத்த கட்டமாக, இரு பட்டியல்களிலும் தனித் தனியாக மேற்கண்ட முறை செயல்படுத்தப்படும். முழுப் பட்டியலும் வரிசையாக்கப் படும்வரை தொடர்ந்து பட்டியல் பிரிப்பு நடைபெறும்.

**quicktime** : உடனடி நேரம்; குவிக் டைம் : மெக்கின்டோஷ் அமைப்பு 7-க்கான பல் ஊடக விரிவாக்கங்கள். ஒலி, ஒளி திறன்களை அளிக்கிறது.

**quickwin** : குவிக்வின்; விரைவுப் பயன் : மைக்ரோசாஃப்ட் நிறு வனத்தின் 'சி' மற்றும் ஃபோர் ட்ரான் வாலாயம்களின் நூலகம். டாஸ் பயன்பாடுகளை விண் டோஸ் சூழ்நிலையில் விரை வில் ஏற்ற அனுமதிக்கிறது. எழுத்து சார்ந்த பயன்பாடுகள் மீண்டும் அளவிடக்கூடிய விண்டோஸ்களில் ஓடுகின்றன.

**quinary** : ஐந்து சார்ந்த : பிகு வினரி (biquinary) குறியீடாகப் பயன்படுத்துவது, இதில் பதின்ம எண் இணை எழுத்து களாகவோ அல்லது எண்களா கவோ பயன்படுவது. இதில் a=0 அல்லது b=0,1,2,3 அல்லது 4 ஆக மதிப்பிடப்படும். முதல் கணிப்பியாகிய மணிச்சட்டம் இதைப் பயன்படுத்தியது.

**quit¹** : வெளியேறு¹ : 1. எஃப் டீபீ தரவுத் தொடர்பில் பயன்படும் ஒரு கட்டளை. கிளையன் கணினி தன்னைத் துண்டித்து விடும்படி வழங்கன் கணினிக்கு அனுப்பும் கோரிக்கை. 2. பெரும்பாலான பயன்பாட்டுத் தொகுப்புகளில், தொகுப்பை விட்டு வெளியேற உதவும் கட்டளை.

**quit²** : வெளியேறு² : 1. முறைப் படியான வெளியேற்றம். 2. ஒரு மென்பொருள் பயன்பாட்டை இயல்பான முறையில் மூடி விட்டு இயக்க முறைமையின் கட்டுப்பாட்டுக்குத் திரும்புதல்.

**quiting :** வெளியேறல்.

**qwerty board : குவர்ட்டி பலகை :** தரமான தட்டச்சுப் பொறியின் விசைப்பலகையைப்போலவே வடிவமைக்கப்பட்ட பீசி (pc) யின் விசைப்பலகை. இரண்டாவது வரிசையின் இடது பக்கத்தில் உள்ள எழுத்துகள் QWERTY சரமாக அமையும்.

**qwerty keyboard : குவர்ட்டி விசைப் பலகை :** ஒரு சொந்தக் கணினியின் (pc) விசைப்பலகை பட்டடை. இது, ஒரு செந்திறப் படுத்திய தட்டச்சுப் பொறியின் விசைப்பலகை போன்றே வடிவமைக்கப்பட்டது. இந்த விசைப்பலகையின் உச்ச அகர வரிசை வரியிலுள்ள முதல் ஆறு எழுத்துகள் "Q,W,E,R,T,Y" என்பனவாகும். இதையொட்டி இந்த வடிவமைப்பு "குவர்ட்டி" என்று பெயர் பெற்றது. இது நூறாண்டுகளுக்கு முன்பு வடிவமைக்கப்பட்டது. இப்போது, இது அவ்வளவாகத் திறன் பெற்றிருக்கவில்லை. பெரும்பாலான வணிக நிறுவனங்கள் இதனைக் கைவிட்டு வேறு திறன் வாய்ந்த அமைப்புகளைக் கையாண்டு வருகின்றன. இது "மால்ட்ரான் விசைப்பலகை" யிலிருந்து வேறுபட்டது.

# R

**R** : ஆர் : பதிவேடு (Register), வேண்டுகோள், மறு அமைவு (Reset) என்பனவற்றின் தலைப் பெழுத்துக் குறும்பெயர்.

**race condition** : போட்டி நிலை; பந்தய நிலை : இரு கணினி நிரல்கள் ஒருங்கே செயற்படும் போது, எது முதலில் முடிவடை யும் என்பதை அறிய முடியாத ஐயப்பாட்டுநிலை.

**rack** : அடிச்சட்டம் ; செருகும் சட்டம்: தொகுப்பிகள், அவற் றின் மின்வழங்கீட்டு அலகுகள் போன்ற மின்னியல், மின்னணு வியல் அல்லது பிற சாதனங் களை ஏற்றி வைக்கக்கூடிய உலோகச்சட்டம் அல்லது அடிச் சட்டம் அல்லது செருகுச் சட்டம்.

**rack mounted** : சட்டகச் சாதனம் : ஓர் உலோகச் சட்டகத்தில் பொருத்துவதற்காக அமைக்கப் பட்டுள்ள அமைப்பிகள். சோதனைச் சாதனம், நாடா இயக்கிகள், தொழில் துறைக் கணினிகள் போன்ற மின்னணுச் சாதனங்கள் பெரும்பாலும் சட்டகத்தில் ஏற்றிய அலகு களாகவே அமைந்துள்ளன.

**RAD** : ரேடு : அதிவேகப் பயன் பாட்டு உருவாக்கம் எனப் பொருள்படும் Rapid Application Development என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். கணினி அமைப்புகளை உரு வாக்கி நடைமுறைப்படுத்து வதில் ஒரு வழிமுறை. முழுத் திட்டப்பணியும் முடியும்வரைக் காத்திராமல், சிறுசிறு கூறு களாகப் பிரித்து அவை முடிந்த வுடன் அவ்வப்போது நடை முறைப்படுத்திவிடும் முறை. ஜேம்ஸ் மார்ட்டின் என்பவர் முதன்முதலில் இம்முறையை உருவாக்கிச் செயல்படுத்திக் காட்டினார். கேஸ் கருவிகள் (CASE Tools) மற்றும் காட்சி முறை நிரலாக்கச் (Visual Programming) சூழல்களில் இவ்வழி முறை பயன்படுத்தப்பட்டது. கேஸ் என்பது கணினி உதவி யிலான மென்பொருள் படைப் பாக்கம் (Computer Aided Software Engineering) என்பதன் சுருக்கம்.

**radial lines** : ஆரைக் கோடுகள்.

**radially** : நிரல் திக்கு.

**radian** : ஆரைக்கோணம் : ஒரு வட்டத்தில், அந்த வட்டத்தின் ஆரத்திற்குச் சமமான நீள முடைய ஒரு வில் மூலம் எதிர் வீழ்வாகும் மையக் கோணம்.

இவ்வாறு, ஒரு கோணத்தின் ஆரைக் கோண அளவு என்பது, அந்தக் கோணத்திற்கு எதிர் வீழ்வாகவுள்ள வில், அந்தக் கோணம் எந்த வட்டத்தின் மையக் கோணமாக இருக்கிறதோ அந்த வட்டத்தின் ஆரத்தின் வீத அளவில் இருக்கும்.

**radiation patterns** : கதிர்வீச்சுத் தோரணிகள் : ஒரு வானொலிச் செய்தித் தொடர்புப் பொறியமைவில், ஆதார அலைவரிசைச் சைகையானது, ஏதேனுமொரு அதிர்விணக்கத்தினைப் (modulation) பயன்படுத்தி அலைவெண் நிறமாலையின், ஒரு குறிப்பிட்ட பகுதியில் நிலைப்படுத்தப் படுகிறது. அதிர்விணக்கப்படுத்திய அலை பின்னர் ஓர் அனுப்பீட்டு வானலை வாங்கியின் அல்லது வான் கம்பியின்மூலம் ஒரு மின் காந்த அலைவடிவில் வாயு மண்டலத்தில் கதிர்வீச்சு செய்யப்படுகிறது.

**radio** : வானொலி.

**radio butttons** : வானொலிப் பொத்தான்கள் : ஒரேயொரு தேர்வினை மட்டுமே அனுமதிக்கக் கூடிய திரைமீதான பொத்தான்களின் வரிசை. ஒரு பொத்தான் தற்போது தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டால், வேறொரு பொத்தான் தேர்ந்தெடுக்கப்படும் போது முதல் பொத்தான் தேர்வு நீக்கப்பட்டு விடும்.

**radio clock** : வானலைக் கடிகாரம் : நிகழ்நேர சமிக்கைகளுடன்கூடிய, வானில் பரப்பப்படும் அலைகளைப் பெறக் கூடிய ஒரு சாதனம். இவ் வகைக் கடிகாரங்கள் பிணையத் தகவல் தொடர்பில் பயன்படுத்தப்படுகின்றன. பிணைய நேர நெறிமுறை (Network Time Protocol) யின் அடிப்படையில், புரவன் கணினியின் (Host) வன் பொருள் கடிகார நேரத்தை, உலகப் பொது நேர ஆயக்கூறு வடிவமைப்புடன் ஒத்திசையும்படி செய்ய இவை பயன்படுகின்றன.

**radio frequency** : வானொலி அலைவரிசை : சுருக்கமாக ஆர்எஃப் எனப்படுகிறது. மின் காந்த அலைக்கற்றையில் *3* கிலோ ஹெர்ட்ஸ் - *300* கிகா ஹெர்ட்ஸுக்கு இடைப்பட்ட அலைவரிசை. இது *30* மி.மீ - *0.3* மி.மீ அலைநீளத்தோடு உறவுடைய அலைவரிசை.

**radio shack** : மின்னணுவியல் கருவி உற்பத்தியாளர் : நுண் கணினியமைவுகள் உள்ளடங்களாக மின்னணுவியல் சாதனங்களை உற்பத்தி செய்து விற்பனை செய்பவர்.

**radio station guide** : வானொலி நிலைய வழிகாட்டி.

**radiowave** : மின்காந்த அலை.

**RADIUS** : ரேடியஸ் : தொலைபேசிப் பயனாளர் தொலைதூர சான்றுறுதி சேவை நெறிமுறை எனப் பொருள்படும் Remote Authentication Dial-In User Service Protocol என்பதன் தலைப் பெழுத்துக் குறும்பெயர். ஒரு பயனாளர் ஒரு பிணைய வழங்கனில் இணைத்துக் கொள்ள முயலும்போது, அவர் அனுமதி பெற்ற பயனாளர்தானா என்கிற சான்றுறுதியும், அணுகல் அனுமதியையும் வழங்குவதற்கெனத் தனியாக ஒரு சான்றுறுதி வழங்கன் (Authentication Server) இருக்கும். இணையத்திற்கென முன்மொழியப்பட்ட நெறிமுறை இது.

**radix** : ஆதார எண்; அடிமான எண்; அடிப்படை எண் : ஓர் எண்மான முறையில் ஆதார எண். எடுத்துக்காட்டு: இரும எண்மான முறையில் ஆதார எண் '2' . 'ஆதாரம்' (base) என்பதும் இதுவும் ஒன்றே.

**radix complement** : ஆதாரக் குறை நிரப்பு

**radix-minus-1 complement** : அடியெண்-கழித்தல்-1 நிரப்பெண்; அடியெண்ணுக்கு ஒன்று குறைந்த நிரப்பெண் : குறிப்பிட்ட இலக்கங்கள், வரையறுக்கப்பட்ட எண்ணிக்கையில் இடம்பெறும் எண் முறையில், இயலக்கூடிய அதிகப்பட்ச எண் மதிப்பிலிருந்து, ஓர் எண்ணைக் கழித்தால் வரும் விடையே அந்த எண்ணின் அடியெண்ணுக்கு ஒன்று குறைந்த நிரப்பெண் எனப்படுகிறது. 0 முதல் 9 வரை பத்து இலக்கமுள்ள பதின்ம எண் முறையில் ஐந்து இலக்க எண்களை எடுத்துக் கொள்வோம். இதில் அதிகப்பட்ச மதிப்புள்ள எண் 99999. 01234 என்ற எண்ணின் அடியெண்ணுக்கு ஒன்று குறைந்த நிரப்பெண் என்பது 99999-01234=98765 ஆகும். ஆக, இந்த எண் முறையில் எந்தவோர் எண்ணின் குறைஎண் (Negative) அடியெண்ணுக்கு ஒன்று குறைந்த நிரப்பெண்ணோடு ஒன்றைக் கூட்டிக் கொள்ள வேண்டும் (ஏனெனில் -a+a=0). இரும எண்முறையில் இரண்டு இலக்கங்களே உள்ளன. இங்கு அடியெண் 2. அடியெண்ணுக்கு ஒன்று குறைந்த நிரப்பெண் என்பது 1-ன் நிரப்பெண் (1's complement) ஆகும். மின்சுற்று அமைப்பில் தலைகீழாக்கி (Inverter) மூலம் ஓர் இரும எண்ணின் ஒன்றின் நிரப்

பெண்ணை எளிதாகப் பெறலாம்.

1 0 1 0 → ஓர் இரும எண்

↓ ↓ ↓ ↓ → தலைகீழாக்கிகள்

0 1 0 1 → ஒன்றின் நிரப்பெண்

**radix notation** : அடியெண் குறிமானம்; அடிப்படை எண் குறிமானம்.

**radix point** : ஆதாரப் புள்ளி : ஓர் எண்மான முறையில், எழுத்து (ஒரு புள்ளி) அல்லது உட்கடை எழுத்து என்பது, ஒரு முழு எண்ணிலிருந்து பின்னப் பகுதியைப் பிரித்துக் காட்டும் புள்ளி ஆகும். சான்று : இருமப் புள்ளி (binary point); பதின்மப்புள்ளி (decimal point); பதினாறிலக்கப் பதின்மப் புள்ளி (hexadecimal point); எட்டிலக்கப்புள்ளி (octal point).

**radix sorting** : ஆதார வகைப்பாடு; ஆதார எண் வரிசையாக்கம் : 'இலக்க முறை வகைப்பாடு' (digital sorting) என்பதும் இதுவும் ஒன்றே.

**radix sorting algorithm** : அடியெண் வரிசைமுறையாக்கப் படிமுறை : ஒரு உறுப்பினைக் கூறுகளாக்கி அடுத்தடுத்துள்ள அதன் பகுதிகளை அடிப்படையாகக் கொண்டு குழுவாகப் பிரித்து வரிசைமுறையாக்கும் தருக்கப் படிமுறை. (எ-டு) 0-999 எண் வரம்புக்குள் உள்ள எண்களை வரிசைப்படுத்தும் முறையைப் பார்ப்போம். முதலில் எண்களின் பட்டியல், நூறு மதிப்பிடத்தில் உள்ள இலக்கத்தின் அடிப்படையில் 10 குழுவாகப் பிரிக்கப்படும். பிறகு ஒவ்வொரு குழுவும் பத்து மதிப்பிடத்தில் உள்ள இலக்கத்தின் அடிப்படையில் பத்துப் பட்டியல்களாக வரிசைமுறைப் படுத்தப்படும். இறுதியில் ஒவ்வொரு பட்டியலும் இறுதி இலக்கத்தின் அடிப்படையில் வரிசைமுறைப்படுத்தப்படும். இந்தத் தருக்கப் படிமுறை இரும மதிப்பு அடிப்படையில் உறுப்புகளை வரிசைமுறைப் படுத்த மிகவும் திறன் வாய்ந்ததாகும். ஒவ்வொரு குழுவும் அதிகப்பட்சம் இரண்டு குழுக்களையே கொண்டிருக்கும். ஒப்பீடும் இரண்டு இலக்கத்தோடுதான்.

**rag** : பிசிறு; பிசிறு ஓரம்; ஓரப் பிசிறு : அச்சிடப்பட்ட ஒரு பக்கத்தில் உரைப்பகுதியின் வரிகள் இடப்புற அல்லது வலப்புற ஓரத்தில் ஒரே சீராக இல்லாமல் முன்பின்னாக இருத்தல். இக் குறைபாடில்லாமல் தவிர்க்க ஆவணம் உருவாக்கப்படும் போதே ஓரச் சீர்மை (Justification) செய்யப்பட வேண்டும். ஒரு புறமோ

அல்லது இருபுறமோ இத்தகு சீர்மை செய்யப்படலாம்.

**ragged left** : சீர்மையிலா இடப்புறம்; சீரிலா இடப்புறம் : நேர் கோடான வலதுபக்க ஓர விளிம்புடனும், ஒழுங்கற்ற இடப்பக்க ஓர விளிம்பும் கொண்டு அச்சிடப்பட்டுள்ள வாசகம். இதனைச் சரிநேர் வலப்புறம் (flush right) என்றும் கூறுவர். இது இடது வரிச் சரியமை (left justify) என்பதிலிருந்து வேறுபட்டது.

**ragged right** : சேரிலா வலப்புறம்; வலப்புறப் பிசிறு : அச்சடிக்கப்பட்ட உரைப்பகுதியில் வரிகள் வலப்புறத்தில் நேர்சீராக முடிவுறாமல் முன் பின்னாக முடிவுறும் நிலை. கடிதங்கள் மற்றும் பிற சொல்செயலி ஆவணங்கள் இடப்புறம் ஓரச் சீர்மையுடன் இருக்கும். வலப்புறம் பிசிறுடன் காணப்படும்.

**RAID** : ரெய்டு : தனித்த வட்டுகளின் மிகைக்கோவை என்று பொருள்படும் Redundant Array of Independent Disks என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். தரவு சேமிப்பு வழிமுறைகளுள் ஒன்று. தரவோடு சேர்த்து, பிழை திருத்தத்துக்கான தரவுகளையும் (சமன் பிட், ஹேமிங் குறிமுறை போன்றது) இணைத்து இரண்டு அல்லது மேற்பட்ட நிலை வட்டுகளில் பகிர்ந்து சேமிப்பதன் மூலம் செயல்திறனும், நம்பகத்தன்மையும் கூடுகிறது. கோவை மேலாண்மை மென்பொருள், நிலைவட்டின் கோவையை கவனித்துக் கொள்கிறது. வட்டுக் கட்டுப்படுத்தி, பிழை திருத்தத்தைக் கவனித்துக் கொள்கிறது. ரெய்டு, பெரும்பாலும் பிணைய வழங்கனில் பயன்படுத்தப்படுகிறது. அணுகல் வேகம், நம்பகத்தன்மை, செலவு இவற்றின் அடிப்படையில், ரெய்டு பல தரங்களில் செயல்படுத்தப்படுகிறது.

**raised flooring** : உயர்தளம்; உயர்த்திய தளம் : கணினி அறைகளில் பயன்படுத்தப்படும் உயர்ந்த மேடைத் தளம். இதனால், இணைப்புக் கம்பிவடங்களை சாதன அலகுகளிடையே நேரடியாக அமைக்கலாம்.

**RALU** : ராலு : பதிவேடு (register), கணிதம் மற்றும் தருக்கமுறை அலகு (arithmatic and logic unit) என்பதன் தலைபெழுத்துச் சுருக்கம். கணித மற்றும் தருக்கமுறைச் செயற்பாடுகள் நிறைவேற்றப்படும் ஒரு நுண்செயலியில் இது மிக முக்கிய பகுதியாகும்.

**RAM** : ஆர்ஏஎம்; ரேம் ; நேரணுகு நினைவகம்; குறிப்பிலா அணுகு நினைவுப் பதிப்பகம் : குறிப் பின்றி அணுகும் நினைவகம் (Random Access Memory) என் பதன் தலைப்பெழுத்துக் குறும் பெயர். இந்த நினைவகத்தில் தரவுகளையும் அறிவுறுத்தங் களையும் எழுதி பதிவு செய்ய லாம்; கணினியின் செயல்முறை நினைவகத்திலிருந்து தரவுகளை வரவழைத்துப் படிக்கலாம்; இதனுள் வெளியிலிருந்து செயல்முறைகளைச் செலுத்தி, பின்னர் நிறைவேற்றலாம்.

**RAM cache** : ரேம் இடைமாற்ற கம் : ரேம் (RAM) நினைவகத்தி லிருந்து தரவுவை எடுக்கவும் பதியவும் கணினியால் பயன் படுத்தப்படும் இடைமாற்று நினைவகம் (cache memory). கணினியால் அடிக்கடி பயன் படுத்தப்படுகின்ற தரவு கூறு கள், இடைமாற்று நினைவகத் தில் இருத்தி வைக்கப்படு கின்றன. வட்டுப்போன்ற துணை நிலைச் சேமிப்பகத்தில் தரவுவை அணுகுவதைவிட மிக வேகமாக அணுக முடியும்.

**RAM card** : ரேம் அட்டை : ரேம் நினைவகச் சிப்புகளும் நினை வக முகவரிகளை குறிவிலக்கம் (decode) செய்வதற்கான இடைமுகத் தருக்கப் பகுதியும் பொருத்தப்பட்ட ஒரு கூடுதல் வசதி மின்சுற்றுப் பலகை.

**RAM chip** : குறிப்பின்றி அணு கும் நினைவகச் சிப்பு : பல்லா யிரம் நினைவக முகவரிகளைக் கொண்ட ஓர் ஒருங்கிணைந்த சுற்றுவழி.

**RAM compression** : ரேம் இறுக்கம் : விண்டோஸ் 3.x இயக்கமுறைமையில் பொது நினைவகம் போதாமல் போகின்ற சிக்கலுக்கான தீர் வாக பல்வேறு மென்பொருள் விற்பனையாளர்கள் மேற் கொண்ட ஒரு தொழில்நுட்பம். ரேம் நினைவகத்தின் வழக்க மான உள்ளடக்கத்தை இறுக்கிச் சுருக்குவதன் மூலம், மெய் நிகர் நினைவகத்தில் (Virtual Memory-பெரும்பாலும் நிலைவட்டு) எழுதுதல்/படித்தல் தேவை குறைகிறது. எனவே கணினி யின் வேகம் அதிகரிக்கும். (ஏனெனில், ரேம் நினை வகத்தைவிட வட்டில் உள்ள மெய்நிகர் நினைவகத்தைக் கையாள்வது மெதுவாக நடை பெறும் செயலாகும்). ரேம் சிப்புகளின் விலை குறைந்த தாலும், நினைவகத்தை மிகவும் திறமையாகக் கையாளும் விண்டோஸ் 95/என்டீ வருகை யாலும் ரேம் இறுக்கம் என்னும் நுட்பத்திற்குத் தேவையில்லாமல்

போய்விட்டது. ஒருசில பழைய கணினிகளில் பயன்படுத்தப்பட வாய்ப்புண்டு.

**RAM cram** : குறிப்பின்றி அணுகும் நினைவகச் செறிவு : பயன் பாடுகளை இயக்குவதற்கான பற்றாக்குறை நினைவுப் பதிப் பகம். குறிப்பாக 1MB நினைவுப் பதிவு வரம்புடைய DOS மற்றும் சொந்தக் கணினிகள்.

**RAMDAC** : ரேம்டாக் : குறிப் பின்றி அணுகு நினைவக இலக்கமுறையிலிருந்து தொடர் முறைக்கு மாற்றி - என்ற பொருள் தரும் Random Access Memory Digital-to-Analog Convertor என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். விஜிஏ மற்றும் சில எஸ்விஜிஏ ஒளிக் காட்சி தகவி அட்டைகளில் பொருத்தப்பட்டுள்ள ஒரு சிப்பு. ஒரு படப்புள்ளியின் இலக்கமுறைத் தரவுவை திரை யகம் திரையிடத் தகுந்த முறை யில் தொடர்முறைத் (Analog) தகவலாய் மாற்றித் தரும். பொதுவாக ரேம் டாக் சிப்பு ஒளிக்காட்சிப் படங்களின் கூர்மையை மேம்படுத்தும்.

**RAM DISK** : ரேம் வட்டு.

**random** : தற்செயலான; தாறு மாறான; குறிப்பற்ற; வரிசை யிலா.

**random access** : குறிப்பின்றி அணுகுதல்; குறிப்பிலா அணு கல்; நேரடி அணுகுமுறை : சேமிப்பு வரிசை முறையைச் சார்ந்திராதிருக்கிற ஒரு சேமிப் பக அமைவிடத்திலிருந்து தரவுகளைப் பெறுகிற அல்லது தரவுகளைச் செலுத்துகிற செய் முறை. நேரடி அணுகுதல் என்பது இதன் மற்றொரு பெயர். இது, வரிசைமுறை அணுகுதல் (sequential access) என்பதிலிருந்து வேறுபட்டது.

**random access device** : குறிப் பிலா அணுகு சாதனம்.

**random access file** : குறிப்பிலா அணுகு கோப்பு; நேரடி அணுகு கோப்பு.

**random access storage** : குறிப்பிலா அணுகு சேமிப்பகம்; நேரடி அணுகு தேக்ககம்.

**random block** : குறிப்பற்ற தொகுதி; குறிப்பிலா தொகுதி : கோப்பினை அணுகுவதற்கான கோப்புக் கட்டுப்பாட்டுத் தொகுதி முறையில் தனியொரு குறிப்பற்ற கோப்புச் செயற் பாட்டின் மூலம் படிக்கப்படு கிற அல்லது எழுதப்படுகிற ஓர் ஆவணத் தொகுதி.

**random file organisation** : குறிப் பற்ற கோப்பு அமைப்பாக்கம் ; குறிப்பிலா கோப்பு அமைவனம்:

ஆவணங்களை நேரடியாக அணுகும் வகையில் ஒரு கோப்பினை உருவாக்குதல்.

**random files :** குறிப்பிலாக் கோப்புகள்: எவ்வித வரிசை முறையிலும் அமைக்கப்படாத கோப்புகள். நேரடி அணுகுச் சாதனத்தில் பதிவு செய்யப் பட்டுள்ள பதிவுகளின் முகவரி அடிப்படையில் தரவுகள் மீட்கப்படுகின்றன.

**random logic design :** குறிப் பிலாத் தருக்கமுறை வடி வமைப்பு : வெவ்வேறு தருக்க முறை மின்சுற்று வழிகளைப் பயன்படுத்தி ஒரு பொறியமை வினை வடிவமைத்தல்.

**random noise :** ஒழுங்கிலா இரைச்சல்; குறிப்பிலா இரைச்சல் : வீச்சுக்கும் நேரத்துக்கும் (Amplitude and Time) தொடர்பில்லா சமிக்கை. ஒழுங்கு வரிசை யில்லாப் பல அலைவரிசை களின் கலப்பு. குறிப்பிட்ட தோரணி கொண்டதாகவோ, முன்னறியக் கூடியதாகவோ இருக்காது.

**random number :** குறிப்பிலா எண் : இலக்கங்களின் தோரணி யற்ற வரிசைமுறை. ஒன்று அல் லது அதற்கு மேற்பட்ட சோதனை களில் குறிப்பின்மை மெய்ப் பிக்கப்படும். தற்செயலாக உண்டாக்கப்படும் ஊகிக்க முடியாத எண்.

**random number generation :** குறிப்பிலா எண் உருவாக்கம் : முன் தீர்மானிக்க முடியாத எண் வரிசையாக உருவாக்குதல். ஒருநேரத்தில் பட்டியலில் எந்த இடநிலையில் எந்த எண் வரும் என்பதை முன்கூட்டியே அறிய முடியாது. உண்மையில் பார்த் தால் குறிப்பிலா எண் உரு வாக்கம் என்பது நடைமுறை சாத்தியமற்றது. கணினியில் பயன்படுத்தப்படும் செயலாக்க முறையை உண்மையில் போலி யான குறிப்பிலா எண் உருவாக் கம் என்றுதான் கூற வேண்டும்.

**random-number generator :** குறிப்பிலா எண் உருவாக்கி : ஒரு போலிக் குறிப்பிலா எண் ணை அல்லது போலிக் குறிப் பிலா எண்களின் வரிசையை குறிப்பிட்ட வரம்புகளுக்குள் உருவாக்க வடிவமைக்கப் பட்டுள்ள கணினி செயல்முறை அல்லது வன்பொருள்.

**random processing :** குறிப்பிலா செய்முறைப்படுத்துதல்; குறிப் பிலா செயலாக்கம் : தரவுகளைக் குறிப்பின்றி அங்கொன்றும் இங் கொன்றுமாகச் செய்முறைப் படுத்துதல். இதுவும், 'நேரடி அணுகு செய்முறைப்படுத்துதல்'

(direct access processing) என்பதும் ஒன்றே. இது வரிசை முறைச் செய்முறைப்படுத்துதல் (sequential processing) என்பதிலிருந்து வேறுபட்டது.

**random READ :** குறிப்பின்றிப் படித்தல்; குறிப்பிலா படிப்பு : ஒரு நேரடி அணுகு சேமிப்புச் சாதனத்தில், தொடர்புடைய ஆவண எண்மூலம் ஓர் ஆவணத்தைப் படிப்பதற்கான திறன்.

**random record number :** குறிப்பிலா ஆவண எண் : ஒரு கோப்புக் கட்டுப்பாட்டுத் தொகுதியின் குறிப்பற்ற ஆவணப் புலத்தினுள் பதிவு செய்யப்படும் எண். பிந்திய கோப்புச் செயற்பாடுகள், இந்த எண்ணை, நடப்புத் தொகுதிக்கு மாற்றி, அதன் நடப்பு ஆவண மதிப்பினையும் மாற்றுகிறது.

**random sampling :** குறிப்பற்ற மாதிரி : ஓர் அளவாய்வில் அல்லது ஆய்வில் ஒருசார்பு ஏற்படாமல் பார்த்துக் கொள்வதற்காக, புள்ளியியல் பகுப்பாய்வில் பயன்படுத்தப்படும் ஓர் உத்தி. எடுத்துக்காட்டாக, ஒரு நாடாளுமன்றத் தேர்தல் முடிவு பற்றிய ஒரு கருத்துக் கணிப்பு, இடத்துக்கு இடம், நகருக்கு நகர், நேரத்துக்கு நேரம் மாறுபடக்கூடும். தரவுத் தளத்தில் மறைமுக ஒரு சார்பு, இயன்ற வரை இல்லாதவாறு குறிப்பற்ற மாதிரி பார்த்துக் கொள்கிறது.

**random WRITE :** குறிப்பின்றி எழுதுதல் : ஒரு நேரடி அணுகு சேமிப்புச் சாதனத்தில், தொடர்புடைய ஆவண எண் மூலம் ஓர் ஆவணத்தை எழுதுவதற்கான திறன்.

**range :** அளவெல்லை ; வீச்சு : ஒரு தனிமம் மேற்கொள்ளும் மதிப்பளவுகளின் வீச்செல்லை.

**range check :** அளவெல்லைச் சரிபார்ப்பு; வீச்சுச் சோதனை : ஒரு எண்மானத் தனிமம், ஒரு குறிப்பிட்ட அளவெல்லைக்குள் இருக்கிறதா என்பதைச் சரி பார்க்கும்முறை. எடுத்துக்காட்டு : மாதங்கள், 01-12 என்ற அளவெல்லைக்குள் இருக்கின்றனவா என்பதைச் சரிபார்த்தல்.

**range of applicability :** பயன்பாட்டுத் தன்மை வீச்சு.

**rank :** படிவரிசை ; படிநிலை : 1. முக்கியத்துவத்திற்கேற்ப ஏறு வரிசையில் அல்லது இறங்கு வரிசையில் அமைத்தல். 2. ஒரு குழுமத்தில் இடநிலையை அளவிடுதல். வரிசை அல்லது வகைப்பாட்டின் வரிசை முறை.

**rapid application development (RAD) tools :** அதிவிரைவுப் பயன்பாடு உருவாக்க கருவிகள்.

**rapid execution engine :** அதி விரைவு இயக்கப் பொறி.

**RARP :** ரார்ப்; ஆர்ஆர்ப் : முன் பின்னான முகவரி கணக்கிடு நெறிமுறை என்று பொருள்படும் Reverse Address Resolution Protocol என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். டீசிபீ/ஐபீ நெறிமுறையில் ஒரு குறும் பரப்புப் பிணையம் இணை யத்தில் இணைக்கப்படும்போது, ஒரு கணுவின் ஐபீ முகவரியை, வன் பொருள் முகவரிகளைக் கொண்டே கணக்கிட்டுவிடும். ஆர்ஆர்ப், ஐபீ முகவரியை நேரடியாகக் கண்டறியவே பயன்படுகிறது.

**raster :** ராஸ்டர்; கிடைவரி : ஓர் ஒளிக்காட்சித் தோற்றத்தில் செவ்வகத் தோரணி கொண்ட வரிகள். கிடைமட்ட வரிகளை வருடிப்பெறும் வரைகலை தரவு என்பதால் ராஸ்டர் வருடல் என்று பெயர் உண்டாயிற்று.

**raster display :** பரவல் காட்சி; விரிவாக்கக் காட்சி : ஒரு குறிப் பிட்ட தோரணி மூலம் ஒரு கற்றையினைப் பரவலாகக் காட்டும் ஒளிப்பேழைக் காட்சி. புள்ளிகளின் அச்சுவார்ப் புருவுடன் ஒரு விரிவான உருக் காட்சியை உருவாக்கிக் காட்டுதல். 'கண் காட்சி' (Vector Display) என்பதிலிருந்து வேறுபட்டது.

**raster fill :** பரவல் நிரப்பல்; விரி வாக்க நிரப்பு : ஓர் ஒளிப் பேழைத் திரையிலுள்ள விரி வாக்கக் கோடுகளிடையிலான இடைவெளிகளை நிரப்பு வதற்கு ஒரு வரைகலை ஒளிப் பதிவுக் கருவி பயன்படுத்தும் செய்முறை. இது திரையில் காணும் படத்திற்கு அதிகத் துல்லியமான தோற்றத்தை அளிக்கிறது.

**raster graphics :** பரவு வரை வியல்; விரிவாக்க வரைகலை : தரவுகளை ஒரே சீரான இடை மட்ட வரிசைகளாகச் சேமித்து வைத்துக் காட்சியாகக் காட்டு வதற்கான அல்லது ஒரு காட்சித் திரையினை வினாடிக்கு 30-60 மடங்கு உருப்பெருக்கித் தெளி வான உருக்காட்சிகளாகக்காட்டு வதற்கான ஒருமுறை. விரி வாக்கக் காட்சிச் சாதனங்கள் பொதுவாக நெறியக் குழல்களை (vector tabes)விட விரைவாகச் செயற்படுபவை; மலிவானவை.

**raster image :** ராஸ்டர் படிமம்; கிடைவரிப் படிமம் : ஒளி-இருள் அல்லது பல்வேறுபட்ட வண்ணப்படப் புள்ளிகள் செவ் வகக் கோவையில் (Rectangular Array) அமைந்து உருவாக்கப் பட்ட ஒரு காட்சிப் படிமம்.

**raster image processor :** ராஸ்டர் படிமச் செயலி : நெறிய

வரை கலை (Vector Graphics) அல்லது உரைப்பகுதியை ராஸ்டர் வரைகலையாக மாற்றித்தரும், வன்பொருள், மென்பொருள் அடங்கிய ஒரு சாதனம். இவை, பக்க அச்சுப் பொறி, ஒளிப்பட தட்டச்சு, மின்நிலை வரைவுப் பொறிகளில் பயன்படுத்தப்படுகின்றன. ஆவணத்தின் ஒரு பக்கத்திலுள்ள ஒவ்வொரு படப் புள்ளி (pixel)யின், ஒளிர்மை, நிறம் ஆகியவற்றின் மதிப்புகளைக் கணக்கிட்டு, நெறிய வரைகலைப் படிமத்தை உள்ளவாறே மீட்டுருவாக்கும் திறன் இச்சாதனத்துக்கு உண்டு.

**rasterization** : ராஸ்டர் மயமாக்கம்; ராஸ்டர் முறையாக்கம் : நெறிய வரைகலையை (Vector Graphics - புள்ளிகள், கோடுகள் அவற்றின் திசை போன்ற கணிதக் கூறுகளால் விவரிக்கப் படும் படிமங்கள்) ராஸ்டர் முறைக்கு (பிட் தொகுதிகள் மூலம் சேமிக்கப்பட்டுக் கையாளப்படக்கூடிய, படப் புள்ளித் தோரணிகளால் உருவாக்கப்படும் அதே மாதிரியான படிமங்கள்) மாற்றியமைத்தல்.

**rasterization of vectors** : நெறியாக்க ராஸ்டராக்கம் : நெறியாக்கங்களாலான அல்லது கோட்டுக் கூறுகளாலான வரை கலைப் பொருள்களின் 'ராஸ்டர் வரைகலைத் திரைகள், புள்ளிக் குறி அச்சு வார்ப்புரு, லேசர் அச்சடிப்பிகளுக்கான வெளிப்பாட்டுப் புள்ளிக்குறிகளாக மாற்றுதல். நெறியாக்க வரைகலை முனையங்களையும் வரைவிகளையும் பயன்படுத்தினாலன்றி, பொருள்சார்ந்த வரைகலைகள் அனைத்தும், காட்சிக்காகவும் அச்சடிப்பதற்காகவும் ராஸ்டர் உருக்காட்சிகளாக மாற்றப்படுதல் வேண்டும்.

**raster scan** : விரிவாக்க நுண்ணாய்வு; விரிவாக்க வருடல் : காட்சித்திரையில் காட்சிப் பகுதியை வரிவரியாக உருப்பெருக்கி உருக்காட்சியை உருவாக்குதல்.

**rate, clock** : கடிகார வீதம்.

**rate, keying-error** : விசைப்பிழை வீதம்.

**rate, read** : படிப்பு வீதம்.

**rate, utilization** : பயன்படுத்து வீதம்.

**rational number** : பின்ன எண்.

**rat's nest** : எலிக் கூடு; எலிவளை : அமைப்பிகளிடையிலான கணினி சார்ந்த இணைப்புகள் அனைத்தையும் பார்ப்பதற்கு அனுமதிக்கிற,

அச்சிட்ட மின் சுற்றுவழி வடிவமைப்புப் பொறியமைவுகளிலுள்ள கூறுகள். குறியீட்டு வாலாயத்தை உகந்த அளவில் வைத்திருப்பதற்கு மேற்கொண்டு அமைப்பிகளை இணைப்பதும், மேம்படுத்துவதும் தேவைதானா என்பதை நிருணயிப்பதை இது எளிதாக்குகிறது.

**raw data :** செப்பமற்ற தரவு; மூலத் தரவு : செய்முறைப்படுத்தப்படாத தரவு. இந்தத் தரவு படிப்பதற்குரிய ஓர் எந்திரச் செய்தித் தொடர்புச் சாதனத்தில் இருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம்; இதனை 'மூலத் தரவு' (original data) என்றும் கூறுவர்.

**raw mode :** கச்சாப் பாங்கு; செப்பமற்ற பாங்கு : எழுத்து அடிப்படையிலான ஒரு சாதனத்தை யூனிக்ஸ் மற்றும் எம்எஸ்-டாஸ் இயக்க முறைமைகள் நோக்கும் முறை. அச்சாதனத்தின் அடையாளக் குறி செப்பமற் பாங்கு எனத் தெரியவரின், இயக்க முறைமை உள்ளீட்டு எழுத்துக் குறிகளை வடிகட்டாது. நகர்த்தி திரும்பல் (carriage return), கோப் பிறுதிக் குறியீடுகள், வரியூட்டம் (line feed) மற்றும் தத்தல் குறியீடுகள் (tabs) போன்ற குறியீடுகளுக்கு இயக்க முறைமை, சிறப்பு வகைக் கவனிப்பு எதுவும் தருவதில்லை.

**ray tracing :** கதிர் படியெடுப்பு : உயர்தரக் கணினி வரைகலையை உருவாக்கும் நுட்பம் மிக்க சிக்கலான வழிமுறை. ஒரு வரையறுக்கப்பட்ட ஒளி மூலத்திலிருந்து ஒரு படிமத்தின் மீது ஒற்றைக் கதிரைச் செலுத்தி அது பிரதிபலிக்கும்போது எவ்வாறு மாற்றமடைகிறது என்பதைக் கருத்தில் கொண்டு படிமத்தின் ஒவ்வொரு படப்புள்ளியின் (pixel) நிறம், அடர்வு ஆகியவை கணக்கிடப்படுகின்றன. இதன் செயலாக்கத் திறன் அடிப்படையில் இம்முறை மிகவும் சிறந்ததாகக் கருதப்படுகிறது. ஒவ்வொரு கதிரின் ஒளி விலகல், ஒளிச் சிதறல், ஒளி உறிஞ்சல் ஆகியவற்றையும் படக்கூறுகளின் ஒளிர்மை, மறைப்பின்மை மற்றும் பிரதிபலிக்கும் தன்மை இவற்றையும், பார்வையாளர், ஒளிமூலம் இவற்றின் இடநிலை ஆகியவற்றையும் கணினி கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

**ray tube, cathode :** எதிர்மின் கதிர்க்குழாய்.

**ray tube store, cathode :** எதிர் மின்கதிர்க்குழாய் சேமிப்பு.

**RCA connector :** ஆர்சிஏ இணைப்பி : கலப்பொலிக்



ஆர்சிஏ இணைப்பி

(stereo) கருவி அல்லது கலப்பு ஒளிக்காட்சித் திரையகம், கணினியின் ஒளிக்காட்சித் தகவி - இவை போன்ற கேட்பொலி மற்றும் ஒளிக்காட்சிக் கருவிகளை இணைக்கப் பயன்படுத்தப்படும் இணைப்பி.

**R&D :** ஆர்&டி : ஆராய்ச்சி மற்றும் மேம்பாடு என்று பொருள்படும் Research and Development என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**RDBMS :** தொடர்பு நிலைத் தரவுதள மேலாண்மைப் பொறியமைவு : பன்முக அட்டவணைகளை அந்த அட்டவணைகளுக்குள் அடங்கிய பொதுவான தரவு இனங்கள் அல்லது புலங்கள் அடிப்படையில், ஒன்றுக்கொன்று இணைவுடையதாக அல்லது தொடர்புடையதாகச் செய்யக்கூடிய தரவுத் தளம். எடுத்துக்காட்டு: ஒரு பெயர் மற்றும் முகவரிக் கோப்பில், தெருப்பெயர், நகரின் பெயர், மாநிலத்தின் பெயர், தொலைபேசி எண் ஆகியவற்றுக்கான புலங்களும் அடங்கியிருக்கலாம். ஒவ்வொரு புலத்தையும் நிறைவு செய்து ஓர் ஆள் பற்றிய ஒரு தரவு ஆவணத்தை உருவாக்கலாம்.

**read :** படித்தல் : ஒரு உட்பாட்டு அல்லது கோப்புச் சேமிப்புச் சாதனத்திலிருந்து தரவுகளைப் பெறுதல். எடுத்துக்காட்டு : துளைகளின் தோரணியைக் கண்டறிந்து துளையிட்ட அட்டைகளைப் படித்தல்; காந்தத் தன்மையினை உணர்ந்தறிந்து ஒரு காந்தநாடா வட்டினைப் படித்தல். இது "எழுதுதல்" (write) என்பதிலிருந்து வேறுபட்டது.

**read-after-write procedure :** படிப்புக்குப் பிறகு எழுதும் நடைமுறை : ஒரு வட்டில் அல்லது நாடாவில் தரவுகளை எழுதுதல், அதனை மீண்டும் படித்தல், துல்லியத்தைப் பதிவு செய்வதற்காக இரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்தல்.

**read and write classes** : படி/ எழுது இனக்குழுக்கள்.

**reader** : படிப்பி : ஓர் உட்பாட்டுச் சாதனத்திலிருந்து கிடைக்கும் தரவுகளை எழுதித் தரும் ஒரு சாதனம்.

**reader, card** : அட்டைப் படிப்பி.

**reader, character** : எழுத்துப் படிப்பி.

**reader, film** : படம் படிப்பி.

**reader, magnetic ink character** : காந்த மை எழுத்துப் படிப்பி.

**reader, paper tape** : தாள் நாடாப் படிப்பி.

**read error** : படிப்புப் பிழை : ஒரு சேமிப்பகத்தில் அல்லது நினைவகத்தில் உள்ள தகவல்களைப் படிக்கத் தவறுதல். இது வாலாயமான நிகழ்வு இல்லையெனினும், காந்த மற்றும் ஒளியியல் பதிவுப் பரப்புகள், தூசியினால் அல்லது அழுக்கினால் மாசுபடக்கூடும். அல்லது சேதமடையலாம். நினைவகச் சிப்புகளின் உயிரணுக்கள் சரிவர இயங்காமற் போகலாம்.

**read head** : படிப்பு முனை : செய்தித் தொடர்புச் சாதனங்களிலிருந்து தரவுகளைப் படிப்பதற்காக வடிவமைக்கப்பட்ட காந்தச் சுருள் முனை.

**reading station** : படிப்பு நிலையம்; படிக்கும் நிலையம் : ஓர் உணர்ந்தறிச் செயல்முறை மூலம் படிப்பதற்காக பொருத்தப்பட்டுள்ள ஓர் அட்டைத் துளையின் - விசைத்துளையின் பகுதி.

**reading wand** : படிப்புக் கோல் : குறிகள், குறியீடுகளை ஒளியியல் முறையில் உணர்ந்தறிகிற சாதனம். எடுத்துக்காட்டு: ஒரு விற்பனை முனையத்தில் விலைச் சீட்டுகளைப் படித்தறியும் சாதனம்.

**reader, tape** : நாடாப் படிப்பி.

**README** : என்னைப்படி; ரீட்மீ : ஒரு மென்பொருளின் ஆவணமாக்கத்தில் சொல்லப்படாத, பயனாளருக்குத் தேவையான அல்லது பயனாளர் பார்த்து விவரம் பெறக்கூடிய தகவல்கள் அடங்கிய ஒரு கோப்பு. பெரும்பாலும் ரீட்மீ (Readme) கோப்பில் தகவல்கள் நேரடி உரை வடிவிலேயே (plain text format) வட்டில் எழுதப்பட்டிருக்கும். ஒரு குறிப்பிட்ட மென்பொருளில் மட்டுமே படிக்கும்படியானதாக இருக்காது. எந்த உரைத் தொகுப்பியிலும் படிக்கும்படியாகவே இருக்கும்.

**readme file** : 'என்னைப்படி' கோப்பு : மென்பொருள் பகிர்மான வட்டுகளில் படியெடுக்கப்

படும் வாசகக் கோப்பு. அதில், ஆவணமாக்கக் கையேட்டில் அச்சடிக்கப்பட்டிராத கடைசி நேரச் செய்திகள் அல்லது பிழை திருத்தம் அடங்கியிருக்கும்.

**read notification** : படித்த அறிவிக்கை: மின்னஞ்சலில் உள்ள ஒரு வசதி. அஞ்சலைப் பெற்றவர் அஞ்சலைப் படித்து விட்டார் என்பதை அஞ்சலை அனுப்பியவருக்கு தெரியப் படுத்தப்படும்.

**read only** : படிக்க மட்டும் : படிக்க மட்டுமேயான தகவல். திருத்தவோ மாற்றியமைக்கவோ முடியாது. படிக்க மட்டும் எனக் குறிக்கப்பட்ட கோப்பு அல்லது ஆவணத்தை திரையில் காட்டச் செய்து படிக்க முடியும். நகலெடுக்கலாம். ஆனால் எந்த வகை மாற்றமும் செய்ய முடியாது. படிக்க மட்டும் எனக் குறிக்கப்பட்ட நினைகவகத்தில் (ROM) முக்கிய நிரல்கள் சேமிக்கப்பட்டிருக்கும். அவற்றை இயக்கலாம்; ஆனால் மாற்றியமைக்க முடியாது. படிக்க மட்டும் எனக் குறிக்கப்பட்ட சேமிப்பு ஊடகங்களில் (சிடி ரோம் போன்றவை) பதியப் பட்டுள்ள தகவல்களை பயன் படுத்திக் கொள்ள முடியும். ஆனால் புதிய தகவல்களைப் பதிய முடியாது.

**read-only attribute** : படிப்பதற்கு மட்டுமான பண்பு : ஒரு கோப்பு படிப்பதற்கு மட்டுமேயானது என்பதையும், அது நேரம்வரை திருத்தம் செய்யப்படவில்லை அல்லது அழிக்கப்படவில்லை என்பதையும் குறிக்கின்ற கோப்புப் பண்பு.

**read only memory (ROM)** : படிப்பதற்கு மட்டுமேயான நினைவகம் (ஆர்ஓஎம்); படிப்பு நினைவகம் : அடிக்கடிப் பயன் படுத்தப்படும் நிரல்களின் ஒரு தொகுதி நிரந்தரமாகச் செயல் முறைப்படுத்தப்பட்டுள்ள ஒரு தனிவகைக் கணினி நினைவகம். இந்த நினைவகங்களில் சேமித்து வைக்கப்படும் தரவுகள், மின்விசை நிறுத்தப்பட்ட பின்னரும் நீடித்திருக்கும். இவற்றில், ஒரு முறை செயல் முறைகளை உள்ளடக்கி விட்டால், அந்தச் செயல்முறைகளில் மாறுதல் செய்யவோ, தவறுகள் நேர்ந்தால் திருத்தம் செய்யவோ இயலாது. காட்சித் திரை (monitor) வகுத்துத் தொகுப்பி (editor) பயனீட்டுச் செயல்முறைகள் ஆகியவை இந்த வகை நினைவகத்தைக் கொண்டவை. செயல்முறை வகுத்திடத்தக்க படிப்பதற்கு மட்டுமேயான நினைவகம் (PROM), அழித்திடத்தக்க செயல்

முறை வகுத்திடக்கூடிய படிப் பதற்கு மட்டுமேயான நினை வகம் (EPROM) ஆகியவை இதன் மாறுபட்ட பதிப்புகள்.

read only storage : படிப்புத் தேக்கம்; படிப்புச் சேமிப்பகம்.

readout : படித்துணர்த்தல் : ஒரு கணினி செய்முறைப்படுத்திய தகவல்களைத் தெரிவிக்கும் முறை. எடுத்துக்காட்டு: காட்சி; வரிவாரி அச்சடிப்பி; இலக்க முறை வரைவி.

read rate : படிப்பு விகிதம்.

read relay : படிப்பு அஞ்சல் : ஒரு கம்பிச் சுருள் வழியாகப் பாயும் மின்னோட்டம் ஒருமின் காந்தத்தை உண்டாக்குகிறது என்பதையும், அந்தச் சுருளின் இருமுனைகளும் எதிரெதிர் காந்தத் துருவங்களைக் கொண்டிருக்கும் என்பதையும் அடிப்படையாகக் கொண்ட ஒரு சாதனம்.

read, scatter : சிதறல் படிப்பு.

read time : படிப்பு நேரம்.

read/write : படிக்க/எழுத; படி/ எழுது: சுருக்கமாக ப/எ (R/W) எனக் குறிப்பிடலாம். குறிப் பிட்ட நினைவகப் பகுதியை அல்லது கோப்பினை அல்லது வட்டினை படிக்கவும் முடியும். மாற்றியமைக்கவும் முடியும்; புதிதாக எழுதவும் முடியும்.

read/write channel : படி/எழுது இணைப்பு அல்லது தடம்.

read/write head : படிப்பு எழுது முனை : ஒரு காந்தச் சேமிப்புச் சாதனத்தில் தரவுகளைப் படிக்க, எழுத அல்லது அழிக்கப் பயன் படுத்தப்படும் சிறிய மின் காந்தம். ஒரு வட்டின் அல்லது நாடா இயக்கியின் ஒரு பகுதி யாக அமைந்துள்ள ஒரு மின்-எந்திரவியல் அமைப்பு. இது, தரவுகளைச் சேமிப்பு ஊட கத்துக்கு (வட்டு அல்லது நாடா) மாற்றுகிறது. காந்தச் சேமிப்பு ஊடகத்தில் சிறிய காந்த முத்திரைகளை உண்டாக்கி, அடையாளங் காண்பதன் மூலம், இது இவ்வாறு செய்கிறது.

read/write memory : படி/எழுது நினைவகம் : இவ்வகை நினைவகச் சிப்புகளில் பதியப் பட்டுள்ள தரவுவைப் படித்தறிய லாம். திருத்தி எழுதலாம். குறை கடத்தி ரேம் சிப்புகள், உள்ளக நினைவகங்கள் (core memory) இவ்வகை படி/ எழுதுவகையைச் சார்ந்தவை.

readymade : உடன்பயன்.

readymade packages : உடன் பயன் செயல்முறைத் தொகுதிகள்.

ready made programme : உடன் பயன் செயல்முறைகள்.

**real address :** மெய் முகவரி : நினைவகத்தின் ஒரு குறிப்பிட்ட இருப்பிடத்தை குறிக்கும் முற்று (Absolute) முகவரி. பொறி முகவரி (Machine Address) என்றும் கூறலாம்.

**Real Audio :** ரியல் ஆடியோ : இணையத்தில் பெருமளவு பயன் படுத்தப்படும் மென்பொருள். இறுக்கிச் சுருக்கி வலை வழங்கன் களில் (Web Server) சேமித்து வைக்கப்பட்டுள்ள இசைப் பாடல் கோப்புகளை இணைய உலாவிமூலம் கொணர்ந்து, பயனாளரின் கணினியில் அதனை விரித்துப் பாட வைக்கும். இணையத்தில் நிகழ் நேர (Live) பாடல்களையும் கேட்கலாம். குறிப்பு : இப்போது கேட்பொலி, ஒளிக்காட்சி இரண்டுக்கும் சேர்த்து ரியல் பிளேயர் என்ற பெயரில் இணையத்தில் கிடைக்கிறது. இலவசமாக பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

**real constant :** மெய்ம்மை மாறிலி; மெய் மாறிலி : ஒரு பதின்மப் புள்ளியை உடைய எண். எடுத்துக்காட்டு: *26.4; 349.0.* இது *'மிதவைப்புள்ளி மாறிலி'* (floating point constant) என்றும் அழைக்கப்படுகிறது.

**real/float :** புள்ளி எண்; மெய் யெண்.

**realloca :** ரீ-அலாக்; மறு ஒதுக்கீடு : சி-மொழியிலுள்ள ஓர் உள்ளிணைக்கப்பட்ட செயல் கூறு. எம்அலாக் (malloc) என்னும் செயல்கூறு மூலம் ஏற்கெனவே குவியல் நினைவகத்தில் (heap memory)) ஒரு குறிப்பிட்ட சுட்டுக்கு (pointer) ஒதுக்கப்பட்ட நினைவகப் பகுதியை அதிக மாக்குவதற்கான செயல்கூறு.

**real mode :** மெய்ப் பாங்கு : இன்டெல் *80×86* குடும்ப நுண் செயலிகளில் செயல்படுத்தப் படும் இயக்கப் பாங்கு. மெய்ப் பாங்கு முறையில் செயலி யானது ஒரு நேரத்தில் ஒரு நிரலை மட்டுமே இயக்க முடி யும். *1* எம்பி நினைவகத்துக்கு மேல் அணுக முடியாது. ஆனால் முதன்மை நினைவகத்தையும், உள்ளீட்டு/வெளியீட்டு சாதனங் களையும் தாராளமாக அணுக முடியும். *8086* செயலியில் மெய்ப்பாங்கு மட்டுமே உண்டு. எம்எஸ் டாஸ் இயக்கமுறைமை மெய்ப்பாங்கில் மட்டுமே செயல்படும். இதற்கு மாறாக *80286* மற்றும் பிறகு வந்த நுண் செயலிகளில் பாதுகாக்கப்பட்ட பாங்கு (Protected Mode) அறி முகப்படுத்தப்பட்டது. இதில் ஒரே நேரத்தில் பல பணிகளைச் செய்யமுடியும். விண்டோஸ் இயக்கமுறைமை போன்ற பல்

பணி இயக்கமுறைமைகள் இதில் செயல்படும். இதற்குத் தேவையான நினைவக மேலாண்மை மற்றும் நினைவகப் பாது காப்பினை பாதுகாக்கப்பட்ட பாங்கு வழங்குகிறது.

**real-mode mapper :** மெய்ப் பாங்கு உறவாக்கி : விண்டோஸ் 3.x இயக்கச் சூழலில் 32 துண்மி (பிட்) கோப்பு முறைமையை அணுகுவதற்கான வசதி. டாஸ் சாதன இயக்கிக்கு 32-பிட் வட்டு அணுகு இடைமுகத்தை இந்த மெய்ப்பாங்கு உறவாக்கி வழங்குகிறது.

**real number :** மெய்யெண்; மெய்ம்மை எண்; உண்மை எண் : வேரளவையில்லாத எண் அல்லது கூறுபடாத எண் (பகா எண்).

**Real Soon Now :** மெய்-விரைவில்-இப்போது; கூடிய விரைவில்; வெகுவிரைவில் : உண்மையில் வெகுவிரைவில் நடைபெறாத ஒன்றைக் குறிப்பது. ஒரு வணிகமுறை நிரல் ஒரு குறிப்பிட்ட வசதியை அடுத்தப் பதிப்பில் தரும் என அறிவித்து விட்டுப் பல பதிப்புகளுக்குப் பின்னும் அவ்வசதியை வழங்காமலிருத்தல்.

**real storage :** மெய்ம்மைச்; சேமிப்பகம்; உண்மைச் சேமிப்பகம் : உள்ளபடியான சேமிப்புப் பொறியமைவிலுள்ள உள்முகச் சேமிப்பகம்.

**real time :** இயல்பு நேரம் ; உண்மை நேரம்; நிகழ் நேரம் : ஒரு வணிக அல்லது இயற்பியல் செயல்முறை நடைபெறுகிற உள்ளபடியான நேரத்தின் போது, தரவு செயல்முறைப் படுத்துதல் எத்துணை விரைவாக நடைபெறுகிறதோ அந்த நேரம். இத்தகைய தரவு செய்முறைப்படுத்துதலின் விளைவுகளை அந்தச் செய்முறையை வழிநடத்துவதற்குப் பயன் படுத்தலாம். உலகெங்குமுள்ள பயணச்சீட்டு முன்பதிவு அலுவலகங்கள் அனைத்தும் இதனைப் பயன்படுத்துகின்றன. வேதியியல் தொழிலிலும் இந்த இயல்பு நேரம் பெரிதும் பயன் படுகிறது.

**real-time animation :** நிகழ்நேர அசைவூட்டம்.

**real time applications :** நிகழ் நேரப் பயன்பாடுகள்.

**real time clock :** நிகழ் நேரக் கடிகாரம்; உண்மைக் காலங் காட்டும் கருவி : கணினியின் செயற்பாடுகளை, வெளியுலகில் நிகழும் நிகழ்வுகளுடன் ஒருங்கிணைப்பதற்காக குறிப்பிட்ட கால இடைவெளிகளில் செய்முறைப் படுத்தியை இடைத்தடுப்பு செய்கிற வன்பொருள். இது பெரும்

பாலும், மனித/கணினி இடை வினையை உள்ளடக்கியதாகும்.

**real time compression :** இயல்பு நேரச் செறிவாக்கம் : தரவுகளை விரைவாகச் செறிவாக்கம் செய் தலும், செறிவைத் தளர்த்தலும். ஸ்டேக்கர், சூப்பர் ஸ்டோர், டிபிஎல்ஸ் (Dos 6.0) போன்ற சொந்தக் கணினிப் பொருள்கள், ஒரு செறிவு இயக்கியை உரு வாக்குவதற்கு ஓரளவு நிலை வட்டு இடப்பரப்பை ஒதுக்க அனுமதிக்கிறது. அந்த இயக்கி யில் செயல்முறை எதனாலும் எழுதப்படும் தரவு எதுவும், மீண்டும் படிக்கப்படும்போது செறிவாக்கம் செய்யப்பட்டு, செறிவுத் தளர்வு செய்யப்படு கிறது.

**real time image generation :** இயல்பு நேர உருக்காட்சி ; நிகழ் நேர உருவாக்கம் : வரிசைமுறை பார்வையாளருக்குச் சரியாகத் தோன்றும் வகையில், விரை வான வேகத்தில் ஓர் உருக் காட்சியை புதிய நிலைக்கு கொணர்ந்து முடிவுறுத்துவதற் குத் தேவைப்படும் கணிப்பு களைச் செய்தல். எடுத்துக் காட்டு : வினாடிக்கு 30-60 சுழற்சிகள் என்ற வேகத்திற்குள் பல்லாயிரம் கணிப்புகள் நடை பெறும் வகையில் வான் பயண வேகத்தினைத் தூண்டுதல்.

**real time information system :** இயல்பு நேரத் தகவல் பொறி யமைவு : உரிய தலைமைக்கு கோப்புகளை உடனடியாக நாளது தேதிக்குத் திருத்துவதன் மூலம் அல்லது ஒரு செயற் பாட்டினை அதன் வேண்டுறுத் தப்பட்ட வேகத்தில் இயக்கு வதற்குப் போதுமான வேகத் தில் ஒரு கால அளவுக்குள் ஒரு பதிலை உருவாக்குவதன் மூலம், நடவடிக்கைகளுக்குப் பதிலளிக்கிற கணினியமைவு.

**real time operating system :** இயல்பு நேரச் செயற்பாட்டுப் பொறியமைவு : உட்பாட்டுச் சைகைகளுக்கும் நடவடிக்கை களுக்கும் உடனடியாகப் பதிலளிக்கக்கூடிய தலைமைக் கட்டுப்பாட்டுச் செயல்முறை.

**real time operations :** இயல்பு நேரச் செயற்பாடுகள் : கணினி செய்திடக்கூடிய, எந்த நேரத்தி லும் அல்லாமல், ஒரு குறிப் பிட்ட கணத்தில் நடைபெறு கிற செயல்முறைச் செயற்பாடு கள். திரை உயிரியக்கம், அபாய அறிவிப்புப்பணிகள், எந்திரன் கள் ஆகியவை இந்த இயல்பு நேரச் செயற்பாடுகளைப் பயன் படுத்துகின்றன.

**real time output :** நிகழ்நேர வெளிப்பாடு; இயல்பு நேர வெளிப்பாடு : தேவையானபோது

ஒரு பொறியமைவிலிருந்து வேறொரு பொறியமைவின் மூலம் அகற்றப்படும் வெளிப் பாட்டுத் தரவுகள்.

**real time processing : இயல்பு நேரச் செய்முறைப்படுத்துதல் :** தரவுகளைச் செய்முறைப் படுத்துவதற்கான முறை. இதில் தரவுகள், காலாந்தர முறையில் அல்லாமல் உடனடியாகச் செய் முறைப்படுத்தப்படுகின்றன. இது தொகுதிச் செய்முறைப் படுத்துதலிலிருந்து (batch processing) வேறுபட்டது. ஒரு தானியங்கி விரைவுக் காசாளர் பொறி (Automatic Teller Machine) இயல்பு நேரச் செய்முறைப் படுத்துதலைப் பயன்படுத்து கிறது. ஏனென்றால், இதில் பணப்பட்டுவாடா உடனடியாகச் செய்யப்படுதல் வேண்டும். இதுபோன்றே, விமானப் பயணச் சீட்டு முன்பதிவிலும் இயல்பு நேரம் பயன்படுத்தப் படுகிறது. இயல்புநேரச் செய் முறைப்படுத்துதலை நேரடிச் செய்முறைப்படுத்துதல் என்றும் கூறுவர்.

**real time processing record :** நிகழ்நேரச் செயல்பாட்டு முறைப் பதிவேடு.

**real time projects :** நிகழ்நேர செயல்திட்டம்; நிகழ்நேர திட்டப் பணி.

**real time systems : இயல்பு நேரப் பொறியமைவுகள் :** ஏதேனும் செய்முறையின் நேர வரம்புக்குள் தனது பணிகளைச் செய்து முடிக்குமாறு அல்லது தான் உதவிபுரியும் பொறியமை வுடன் இணைந்து ஒரே சமயத் தில் தன் பணிகளை முடிக்கு மாறு வேண்டுறுத்தப்படுகிற கணினியமைவு. பொதுவாக இந்தப் பொறியமைவுதான் உதவி புரிகிற பொறியமைவை விட வேகமாகச் செயற்படுதல் வேண்டும்.

**real-to-real tape : இயல்புக்கு இயல்பு நாடா :** இது ஒருவகைத் துணை நிலை நினைவகம். இது பிளாஸ்டிக் சுருள்களால் வைக்கப் பட்டுள்ள காந்த நாடாவைப் பயன்படுத்துகிறது. இந்த நாடா, முதன்மைப் பொறியமைவுக் கணினிகளில் தொடர்வரிசை அணுகு சாதனமாகப் பயன் படுத்தப்படுகிறது. இந்த நாடா வின் அகலம் : பொதுவாக 12 மி.மீ; நீளம் 600 மீ (2,400 அடி). ஒரு நாடாவின் தரவு அடர்த்தி ஓர் அங்குலத்திற்கு இத்தனை எண்மிகள் (bytes) என்று அளவிடப்படுகிறது. எடுத்துக் காட்டு: 800bpi; 1600bpi.

**reasonableness check : சரி நிலைச் சோதனை :** பெரும் பிழை எதுவும் நிகழ்ந்துள்ளதா

என்பதைக் கண்டுபிடிப்பதற்காகச் செய்முறைப்படுத்திய தரவுகளில் சோதனைகள் நடத்துவதற்கான உத்தி. உள்ளிருக்கும் தரவு கோடுகள் மேல்-கீழ் வரம்புகளைக் காட்டுகின்றனவா என்பதை செயல்முறைப் படுத்தும் நிரல்கள் சரிபார்க்கின்றன; தரவுகள் நியாயமாக இல்லை என்றால் அதனைச் சீர்செய்ய நடவடிக்கை மேற்கொள்கின்றன.

**reasonable test** : சரிநிலைச் சோதனை : ஒரு மதிப்பளவு இயல்பான அல்லது தருக்க முறையான அளவெல்லைக்குள் இருக்கிறதா என்பதை தீர்மானிப்பதற்கான ஒரு வகைச் சோதனை. புற ஒலியையும் உட்பாட்டுப் பிழைகளையும் கண்டு பிடிப்பதற்கான மின்னணுச் சைகைகளின்மூலம் இது செய்யப்படுகிறது.

**reassembling** : மறு செப்பனீடு.

**reboot** : புத்தியக்கம்; மறு தொடக்கம்; மறு ஆரம்பம்: ஒரு கணினியில் வன்பொருள்/மென்பொருள் செயலிழப்பு ஏற்படும் போது, அதனை எக்கித்தள்ளி மீண்டும் செயற்படுமாறு செய்தல். இது பெரும்பாலும் மனிதர் தலையீட்டின்மூலம் நடைபெறுகிறது.

**receive** : செய்தி ஏற்பு : செய்தி அனுப்புபவர் அனுப்பும் செய்திகளை வாங்கிக் கொள்ளுதல்.

**Receive Only (RO)** : ஏற்பு மட்டும் : விசைப்பலகை இல்லாத முனையங்கள் மற்றும் பிற சாதனங்களின் படிப்பதற்கு மட்டுமேயான திறம்பாடுகளைக் குறிக்கும் சொல். இது 'அனுப்ப மட்டும்' என்பதிலிருந்து வேறுபட்டது.

**receiver** : வாங்கி ; பெறுநர் : அனுப்புபவரால் அனுப்பப் படும் செய்தியைப் பெறுபவர்.

**recharge** : மறு மின்னேற்றம்.

**recipient** : பெறுபவர்; பெறுநர்.

**rec.newsgroups** : ரெக்.நியூஸ் குரூப்ஸ் : யூஸ்நெட் செய்திக் குழுக்களில் rec. படிநிலையில் ஓர் அங்கம். rec. என்னும் முன்னொட்டால் குறிக்கப்படும். இத்தகைய செய்திக் குழுக்களில் மனமகிழ் நடவடிக்கைகள், பொழுதுபோக்கு மற்றும் கலை தொடர்பான கலந்துரையாடல்கள் நடைபெறும்.

**recoat** : மறுபூச்சு.

**recognition, voice** : குரல் அறிதல்.

**recognizing exceptions** : விதி விலக்குக்காணும் செய்முறைகள்.

**recompile** : மறுதொகுப்பு : தவறு கண்டறிந்த பிறகு அல்லது செயல் முறையை வேறொரு வகைக் கணினியில் இயக்குவது அவசியமாகிற போது, ஒரு செயல்முறையை மீண்டும் தொகுத்தமைத்தல்.

**reconnection** : மறு இணைப்பு; மீள் இணைப்பு.

**reconstruction** : மறுகட்டுமானம்; மறு உருவாக்கம் : ஒரு தரவு தளப் பொறியமைவில், தரவு கள் சீர்குலைக்கப்பட்ட அல்லது அழிந்துபோன பிறகு, அந்தப் பொறியமைவை மீண்டும் அதன் முந்திய நிலைக்குச் சீர் படுத்திக் கொண்டுவருதல்.

**record** : பதிவேடு ; குறிப்பேடு; பதிவு; குறிப்பு; பதிவுக் குறிப்பு : ஒரே அலகாகக் கருதப்படும் தரவுவின் தொடர்புடைய இனங்களின் தொகுதி. ஒரு தரவு தளத்தின் ஒவ்வொரு இனத்தை யும் பற்றிய விவரிப்பு, ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட புலங்களைக் கொண்ட ஒரு பதி வேட்டின் மூலம் குறிக்கப்படு கிறது. எடுத்துக்காட்டு : ஓர் அகராதியில் அல்லது தொலை பேசி விவரக் குறிப்பேட்டில் அன்றாடம் புதிய இனத்தைச் சேர்த்தல்.

**record, addition** : சேர்ப்பு ஏடு.

**record chain** : ஆவணச் சங்கிலி : ஒரு கணினிக் கோப்பிலுள்ள ஓர் உள்முகப்பட்டியலாக ஒருங்கே அமைந்துள்ள ஆவணங்களின் ஒரு தொகுதி. இவை, சங்கிலி அல்லது சுட்டு முனை முகவரி எண்கள் மூலம் தருக்க முறை யில் பிணைக்கப்பட்டுள்ளன.

**record count** : பதிவேடுகளின் எண்ணிக்கை : கணினி ஆவணங் களின் உட்பாடு அல்லது வெளிப்பாடு பற்றிய எண்ணிக் கையின் ஒரு கட்டுப்பாட்டு மொத்தம். ஒரு பதிவுக் கணக் கினை கணினியால் உருவாக்கப் பட்ட கணக்குடன் ஒப்பிட்டுப் பார்த்து தரவுகளை இழக்காமல் பாதுகாக்கலாம்.

**record, data** : தரவு ஏடு

**record format** : ஏட்டு வடிவம்.

**record, fixed length** : நிலை நீள ஏடு.

**record head** : பதிவு முனை : நாடாப் பதிவகமுள்ள கணினி யில், நாடாவில் தரவுவை எழுதும் சாதனம். சில நாடாக் கணினிகளில் படிக்கும் முனை யிலேயே பதிவு முனையும் இணைக்கப்பட்டிருக்கும்.

**recording button** : பதிவுக் குமிழ்;பதிவுப் பொத்தான்.

**recording density** : செறிவுத் திறன் பதிவு செய்தல் ; பதிவு

அடர்த்தி : ஒரு நீட்டளவை அல்லது பரப்பளவு அலகில் சேமிப்பதற்கு அடங்கியுள்ள பயனுள்ள சேமிப்பகச் சிற்றங் களின் எண்ணிக்கை. எடுத்துக் காட்டு : ஒரு காந்த நாடாவில் ஓர் அங்குல நீளத்தில் அடங்கியுள்ள எழுத்துகளின் எண்ணிக்கை; ஒரு வட்டின் ஒற்றை இடைப் பரப்பில் ஓர் அங்குலத்தில் அடங்கியுள்ள துண்மிகளின் எண்ணிக்கை. பொதுவாகக் காந்தநாடாச் செறிவுத்திறன் அளவுகள்: ஓர் அங்குலத்திற்கு *800, 1600, 6250* (cpi).

**recording layout** : பதிவு இட அமைப்பு.

**recording software suite** : ஒலிப் பதிவு மென்பொருள் தொகுப்பு.

**record key** : ஆவண விடைக் குறிப்பு: ஓர் ஆவணத்திலுள்ள அந்த ஆவணத்தைக் குறிப்பாக அடையாளங் காட்டுவதற் காகவுள்ள ஒரு கட்டுப்பாட்டுப் புலம். கோப்பின் அமைப்புக் காரணி.

**record layout** : பதிவேட்டுக் கட்டமைவு : அமைப்பிகளின் வடிவளவு, வரிசைமுறை உட் பட, ஒரு பதிவேட்டில் தரவுக் கூறுகளை வரிசைப்படுத்திக் கட்டமைவு செய்தல்.

**record length** : பதிவேட்டு நீளம் : ஒரு பதிவேட்டின் வடிவளவின் அளவீடுகள். இவை பொது வாகச் சொற்கள், எண்மிகள், எழுத்துகள் போன்ற அலகு களில் குறித்துரைக்கப் பட்டிருக்கும்.

**record locking** : ஏடு பூட்டல் : பெரும்பாலும் பகிர்ந்தமை தரவுத் தளம் அல்லது பல் பயனாளர் தரவுத் தளங்களில், ஒன்றுக்கு மேற்பட்ட பயனாளர் கள் ஒரே நேரத்தில் ஓர் அட் டவணையிலுள்ள ஓர் ஏட்டில் எழுதுவதைத் தடுப்பதற்கான ஓர் ஏற்பாடு. முதலில் அந்த ஏட்டினை அணுகும் பயனாளர் அதனைப் பூட்டிவிட்டால் வேறு பயனாளர்கள் அணுக முடியாது.

**record management** : ஏட்டு மேலாண்மை.

**record manager** : பதிவு மேலாளர்; பதிவு முகமையாளர்; பதிவேட்டு மேலாளர் : 'கோப்பு மேலாளர்' (File Manager) என் பதற்கு இன்னொரு சொல்.

**record mark** : ஆவணக் குறி : ஓர் ஆவணத்தின் முடிவினைக் காட்டப் பயன்படுத்தப்படும் அடையாளக் குறி.

**record new macro** : புதிய குறுமம் பதிவுசெய்.

**record number** : பதிவேட்டு எண் : ஒவ்வொரு புதிய பதிவேடும் உருவாக்கப்படும் போது அதற்குத் தானாகவே குறித்தளிக்கப்படும் எண். எடுத்துக்காட்டு : சுட்டு எண். இதனைப் பயன்படுத்துபவர் அறிந்திருப்பார்.

**records management** : பதிவேட்டு மேலாண்மை : ஓர் அமைவனத்தின் ஆவணங்களை உருவாக்குதல், பேணிவருதல், காலாந்திர முறையில் அழித்து விடுதல் போன்ற காப்புப் பணி களைச் செய்தல்.

**record structure** : ஏட்டுக் கட்டமைப்பு : ஓர் ஏட்டில் இடம் பெறக்கூடிய புலங்களின் பட்டியல், ஒவ்வொரு புலமும் ஏற்கக்கூடிய மதிப்புகளின் வரையறைகள் உட்பட.

**recover** : மீட்பு : ஒரு செய லிழப்புக்குப் பிறகு செயல் முறையைத் தொடர்ந்து நிறை வேற்றுதல். ஒரு சிக்கலைச் சமாளித்தல்.

**recoverable error** : மீட்கத்தக்க பிழை : ஒரு செயல்முறையில் ஏற்படும் பிழையைக் கண்டறிந்து, திருத்தம் செய்து, செயல்முறைச் செயற் பாட்டினைத் தொடரக்கூடிய பிழை.

**recovery** : மீட்சி; மீட்பு : இழக் கப்பட்ட தரவுவை மீட்டெடுத் தல். கணினியில் பழுதேற் பட்டதால் பிழையாகிப்போன, முரண்பட்டுப்போன தரவுவை சரியாக்குதல். வட்டு அல்லது நாடாவில் முன்பே எடுத்து வைக்கப்பட்ட காப்பு நகலி லிருந்து, இழக்கப்பட்ட தரவு மீட்கப்படுவதையும் குறிக்கும்.

**Recreational Software Advisory Council** : பொழுதுபோக்கு மென்பொருள் ஆலோசனைக் கழகம் : *1994* ஆம் ஆண்டின் இறுதியில், மென்பொருள் வெளியீட்டாளர் சங்கம் (Software Publishers Association) தலைமை யில் ஆறு வணிக அமைப்புகள் இணைந்து உருவாக்கிய ஒரு சுயேச்சையான ஆதாய நோக்கில்லா அமைப்பு.

**rectangular coordinate system** : செவ்வக ஆயத்தொலைவுப் பொறியமைவு : ஒரு சம தளத்திலுள்ள ஒவ்வொரு புள்ளிக்கும், ஆயத்தொலைவு கள் எனப்படும் இரண்டு எண் களைக் கொடுத்து ஒரு முகவரியை அளிக்கின்ற பொறி யமைவு. இதுவும், "கார்ட்டீசியன் ஆயத்தொலைவுப் பொறி யமைவு" (Cartesian Coordinate system) என்பதும் ஒன்றே.

**rectifier** : மின்மாற்றி; திருத்தி : மாற்று மின்னோட்டத்தை நேர் மின்னோட்டமாக மாற்றுகிற மின்னியல் சாதனம்.

**recto** : ரெக்டூ; வலப்பக்கம்; ஒற்றைப்படையெண் பக்கம் : ஒன்றையொன்று பார்த்துக் கொண்டிருக்கும் இரு பக்கங் களில் வலது பக்கத்தைக் குறிக்கும். பெரும்பாலும் பக்க எண் ஒற்றைப் படையெண் கொண்டதாக இருக்கும்.

**recurring costs** : தொடர் செலவுகள் : அலுவலர் வழங்கீடு, சாதனங்கள் வாடகை, கணினி யமைவுடன் தொடர்புடைய அலுவலகச் செலவுகள் போன்ற, ஒரே சமயத்தில் செய்யப்படாத, தொடர்ச்சியாகச் செய்யப்பட வேண்டிய செலவினங்கள்.

**recursion** : தொடர் செயற்பாடு கள்; மீள்நிகழ்வு; மறு சுழற்சி : செயற்பாடுகளில் அல்லது கட்டளைகளில் ஒன்று, முழுத் தொகுதியின் பெயரில் குறித்துரைக்கப்பட்டுள்ள செயற் பாடுகளின் அல்லது செயல்முறை கட்டளைகளின் தொகுதி. ஒரே செயற்பாடுகளைத் தொடர்ந்து திரும்பத் திரும்பச் செய்தல்.

**recursive** : தொடர்நிகழ்வான; மறு சுழற்சி : திரும்பத் திரும்ப நிகழ்வதற்கான உள்ளார்ந்த அமைவுடைய ஒரு செய்முறை. ஒவ்வொரு மறுநிகழ்வும், முந்திய மறுநிகழ்வின் விளை வினைப் பொறுத்து அமையும்.

**recursive procedure** : தொடர் நிகழ்வு; மறுசுழற்சி முறை : 'A' என்ற நடைமுறை தன்னை நிறைவேற்றும்போது தன்னையே அல்லது 'B'என்ற மற்றொரு நடைமுறையை அழைத்தல்; அந்த 'B' நடைமுறை, 'A' நடை முறையை அழைத்தல்.

**recursive subroutine** : தொடர் நிகழ்வுத் துணைவாலாயம் ; மறு சுழற்சி துணை வாலாயம் : தன்னையே அழைக்கிற அல்லது மற்றொரு துணை வாலாயத்தை அழைக்கிற துணை வாலாயம். இரண்டாவது துணைவாலாயம், முதல் துணை வாலாயத்தை அழைக்கும்.

**recycle** : மறுசுழற்சி; மீள்சுழற்சி முறை.

**Recycle Bin** : மீட்சித் தொட்டி; ரீசைக்கிள் பின் : விண்டோஸ் 95/98 இயக்க முறைமையில் உள்ள ஒரு கோப்புறை. விண் டோஸின் முகப்புத் திரையில் (Desktop) ஒரு குப்பைத் தொட்டி போன்ற சின்னத்துடன் இது காட்சியளிக்கும். ஒரு கோப் பினை நீக்க வேண்டுமெனில், அதனை சுட்டி மூலம் இழுத்துக்

கொண்டு வந்து இத்தொட்டி யில் போட்டு விடலாம். இங்குள்ள கோப்புகள் உண்மை யில் வட்டிலிருந்து நீக்கப்படுவ தில்லை. நீக்கப்பட்ட கோப்பு மீண்டும் வேண்டுமெனில் இக் கோப்புறையிலிருந்து மீட்டுக் கொள்ளலாம். மீட்புத் தொட்டி யிலுள்ள கோப்புகளை ஒட்டு மொத்தமாக நீக்கவும், ஒரு குறிப்பிட்ட கோப்பினை நிரந் தரமாக நீக்கிவிடவும் வழி முறைகள் உள்ளன.

**Red Book** : சிவப்புப் புத்தகம்; செம்புத்தகம்; செந்நூல் : அமெரிக்க அரசின் தேசியப் பாதுகாப்பு முகமை உருவாக் கிய தர வரையறை ஆவணங் கள் இவ்வாறு அழைக்கப்படு கின்றன. நம்பத்தகுந்த கணினி அமைப்புகளின் மதிப்பாய்வு அடிப்படையின் நம்பத்தகுந்த பிணையப் பொருள் விளக்கம் என்பது இப்புத்தகத்தின் தலைப்பு. (Trusted Network Interpretation of the Trusted Computer System Evaluation Creteria). நம்பத்தகுந்த பிணைய பொருள்விளக்கம் என்கிற ஆவணமும் உண்டு. கணினி அமைப்புகளை A1 முதல் D வரை தரப்படுத்துவதற்கான வரையறுப்புகள் இப்புத்தகத் தில் உள்ளன. A1 என்பது மிக வும் பாதுகாப்பானது. D என்பது பாதுகாப்பற்றது. மிகவும் உயிர் நாடியான தரவுவைப் பாது காப்பதில் ஒரு கணினிப் பிணையத்துக்கிருக்கும் திறனை இத்தரவரிசை குறிக்கிறது.

**red- green- blue monitor** : சிவப்பு-பச்சை - நீலத் திரை யகம் : மிக உயர்ந்த வண்ணச் செறிவுடைய காட்சி அலகு.

**redirection** : திசை மாற்றம்; நெறிமாற்றம் : தரவுகளை அதன் இயல்பான இலக்கிலிருந்து இன்னொரு இலக்குக்கு நெறி மாற்றி அனுப்புதல். எடுத்துக் காட்டாக, அச்சடிப்பிக்குப் பதிலாக ஒரு வட்டுக்கோப்புக்கு அல்லது ஒரு உள்முக வட்டி லிருந்து ஒரு பணிய வட்டுக்கு மாற்றுதல்.

**redirector** : திசைமாற்றி; நெறி மாற்றி : ஓர் உள்முகப்பகுதி இணையத்தில் (LAN) தரவுகளைக் கேட்கும் பணி நிலையத்தின் வேண்டுகோளை ஒரு பணியத்துக்கு (server) அனுப்பி வைக்கிற மென்பொருள்.

**redlining** : செங்கோடிடல்; சிவப்புக் கோடிடல்; மாற்றம் பதிகை : சொல் செயலி மென் பொருளில் இருக்கும் ஒரு வசதி. ஓர் ஆவணத்தை ஒன்றுக்கு மேற்பட்டோர் பயன்

படுத்த வேண்டிய சூழ்நிலையில், ஒருவர் செய்யும் மாற்றங்கள் புதிய சேர்ப்புகள் நீக்கல்கள் ஆகியவை அடையாளமிட்டுக் குறித்து வைக்கப்படுகின்றன. ஓர் ஆவணம் உருவாக்கப்படுகையில் நிகழும் அனைத்து மாற்றங்களையும் குறித்து வைப்பதே இதன் நோக்கம்.

**redo** : தவிர்த்தது செய்; திரும்பச் செய்; விட்டதைச் செய். செய்தது தவிர்த்திருப்பின் (undo), தவிர்த்ததை மீண்டும் செய்வதற்கான கட்டளை.

**reduce** : குறை; அளவு குறை : வரைகலைப் பயனாளர் இடைமுகத்தில், பெரும்பாலாகப் பயன்படுத்தப்படும் சாளரத்தின் அளவினைக் குறைத்தல். தலைப்புப் பட்டையில் அதற்கென உரிய பொத்தானை அழுத்த வேண்டும் அல்லது சுட்டியின் குறியை சாளரத்தின் எல்லையில் வைத்து, சுட்டிப் பொத்தானை அழுத்தி விரலை எடுக்காமல் சாளர அகல உயரங்களை மாற்றியமைக்கலாம்.

**reduced font** : அளவு குறைந்த எழுத்து; சிறிய எழுத்து.

**reduction** : குறைப்பு : பதிவேடுகளின் நீளத்தைக் குறைப்பதற்காகக் காலிப் புலங்களை ஒழித்தல் அல்லது தேவையற்ற தரவுகளை நீக்குதல் மூலம் கணினிச் சேமிப்பக அளவை மிச்சப்படுத்தும் செய்முறை.

**redundance** : மிகைமை; மிகையாக்கம் : 1. ஒரு பொறியமைவில் ஒருகூறு தவறாக இயங்கும்போது, அந்தப் பொறியமைவு செயலிழந்து போவதைத் தடுப்பதற்காக ஒரு கூறினை இரட்டிப்பாக்குதல். 2. பல்வேறு கோப்புகளிடையே தரவுகளைத் திரும்ப இடம்பெறச் செய்தல். இது சில சமயம் தேவையாக இருக்கும், ஆனால், பெரும்பாலும் விரும்பத் தக்கதன்று.

**redundancy check** : மிகைமைச் சரிபார்ப்பு : ஒரு செய்தியைத் தெரிவிப்பதற்குத் தேவைப்படும் குறைந்த எண்ணிக்கையைவிட அதிக அளவில் துண்மிகளை அல்லது எழுத்துகளை மாற்றிச் சரிபார்த்தல். இந்தக் கூடுதல் துண்மிகள் அல்லது எழுத்துகள் சரிபார்க்கும் நோக்கங்களுக்காகத் திட்டமிட்டுச் செருகப்பட்டிருக்கும்.

**redundancy code** : மிகைமைக் குறிமுறை.

**redundant code** : மிகைமைக் குறியீடு : கூடுதலான சரிபார்ப்புத் துண்மி கொண்டுள்ள இரும குறியிடப்பட்ட பதின்ம மதிப்பளவு.

**redundant data : மிகைத் தரவு :** ஓர் அமைவனத்திற்கு இனி மேலும் தேவைப்படாதிருக்கிற தரவு அல்லது அதைவிடத் துல்லியமான அல்லது புதுமை யான தரவுகளினால் நீக்கம் செய்யப்பட்ட தரவுகள்.

**redundant information : மிகைச்செய்தி விவரம் :** ஒரு தரவுவின் சாரம் பல்வேறு வழிகளில் தெரியும் வகையில் தெரியப்படுத்தப்படும் செய்தி.

**reel : சுருள்.**

**reengineer : மறுசிந்தனை; மறு வரையறை :** வழக்கமாகப் பின் பற்றிவந்த செயல்முறைகளில், செயல்பாடுகளில் ஒரு மாற்றம் கொண்டு வருவதற்கான மறு சிந்தனை. கணினி அமைப்பு களின் சூழலில் இதன் பொருள், இதுவரை ஆற்றிவந்த பணி களின் செயல்முறையை மாற்றி யமைத்தல் - புதிய தொழில் நுட்பத்தின் பலன்களை முற்றாக நுகரவேண்டும் என்பதே நோக்கம்.

**reengineering : மறுசிந்தனை; மறு வரையறுப்பு; மீட்டுருவாக் கம் :** 1. ஒரு மென்பொருளைப் பொறுத்தவரை அதன் பல வீனங்களைக் களைந்து கூடு தலான பயன்களைச் சேர்த்து அதனை வலுவுள்ளதாக்குதல். 2. நிறுவன மேலாண்மையைப் பொறுத்தவரை உலகப் பொருளாதாரச் சூழலில் எதிர் கொள்ள வேண்டிய சவால் களைச் சமாளிப்பதற்கும் விரி வடைந்து கொண்டே செல்லும் தொழிலாளர் கூட்டத்தைத் திறமையாக மேலாண்மை செய் யவும் தரவு தொழில் நுட்பக் கோட்பாடுகளைச் செயல் முறைப்படுத்துதல்.

**reentrant : மறுபதிவு; மீள் நுழை :** இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட சுதந்திரமான செயல் முறைகளினால் ஒரே சமயத்தில் பயன்படுத்தப்படுகிற ஒரு வாலாயம் தொடர்புடையது.

**reentrant code : மறுபதிவுக் குறியீடு :** எத்தனை பயனாளர் விரும்பினாலும் அத்தனை பேரும் ஒரே சமயத்தில் பகிர்ந்து கொள்ளக்கூடிய, இணைப்பி உருவாக்கிய எந்திர மொழிச் செயல்முறைகள்.

**reentrant subroutine : மறு பதிவுத் துணைவாலாயம் :** ஒரு பன்முகச் செயல்முறைப் படுத்தும் பொறியமைவில், பல செயல்முறைகள் பகிர்ந்து கொள்கிற உள்முகச் சேமிப் பகத்தில் ஒரேயொரு படி மட்டுமே இருக்கிற ஒரு துணை வாலாயம்.

**reference[1]** : குறிப்பி[1] : சி++ நிரலாக்க மொழியில் ஒரு தரவு இனம். குறிப்பியை அறிவிக்கும் போதே அதில் ஒரு மாறிலியின் மூலம் தொடக்கமதிப்பிருத்த வேண்டியது கட்டாயம். அந்த மாறிலியின் மாற்றுப் பெயராக அக்குறிப்பி செயல்படும். அதாவது மாறிலிக்குப் பதிலாகக் குறிப்பியையே பயன்படுத்திக் கொள்ளலாம். (எ-டு. int n = 25; int& r = n) n என்பது int என்னும் தரவினத்தில் ஒரு மாறிலி. r என்பது n-ஐக் குறிக்க உருவாக்கப்பட்டுள்ள குறிப்பி. cout <<r; என்று கட்டளை அமைத்தால் 25 என (n-ன் மதிப்பு) காட்டும். n-ன் மாற்றுப் பெயர் போல r செயல்படும். 2. # ஜாவா, சி மொழிகளில் ஓர் இனக்குழுவில் (Class) உருவாக்கப்படும் இனப் பொருளை (Object) குறிப்பதற்குப் பயன்படும் மாறிலி (Variable). குறிப்பி, அடுக்கை நினைவகத்திலும், இனப்பொருள், குவியல் (Heap) நினைவகத்திலும் உருவாக்கப்படுகிறது. சி - மொழியிலுள்ள சுட்டுக்கு (Pointer) இணையற்றது.

**reference[2]** : குறிப்பு : ஒரு கோவையில் (Array) உள்ள உறுப்பு அல்லது ஓர் ஏட்டிலுள்ள ஒரு புலம் போன்ற ஏதேனும் ஒரு மாறிலியை அணுகுவதற்குப் பயன்படுவது.

**reference address** : மேற்கோள் முகவரி; குறிப்பு முகவரி.

**reference beam** : ஆய்வுக் கற்றை.

**reference.COM** : ரெஃபரன்ஸ். காம் : இணையத்திலுள்ள தேடு பொறி. 1,50,000க்கு மேற்பட்ட யூஸ்நெட் செய்திக் குழுக்கள், அஞ்சல் பட்டியல்கள், வலை மன்றங்கள் ஆகியவற்றின் முகவரிகளைச் சேமித்து வைத்துள்ள தளம். முகவரி : www.reference.com.

**reference edge** : பொருந்து முனை.

**reference parameter** : குறிப்பு அளபுரு : ஒரு துணை நிரல் கூறினை (sub-routine) அல்லது ஒரு செயற்கூறினை (function) அழைக்கும்போது ஒரு மாறியின் வெளிப்படையான மதிப்பினை அளபுருவாக அனுப்பி வைப்பதற்குப் பதிலாக மாறிலியின் முகவரியை அளபுருவாக அனுப்பிவைத்தல்.

**reference type** : குறிப்பு இனம்.

**reference variables** : பொருந்து மாறிலிகள்; குறிப்பு மாறிலிகள்.

**referential integrity** : சுட்டுமுறை முழுமையாக்கம் : தொடர்புறு தரவுத் தள மேலாண்மையில், ஒவ்வொரு அயல்விடைக் குறிப்பு ஒரு அடிப்படை விடைக் குறிப்பினைக் கொண்டிருக்கும் வகையில் உள்முகமாக அமைந்த பாதுகாப்பு.

**reflectance** : பிரதிபலிப்பி : ஒளியியல் நுண்ணாய்வில், ஓர் எழுத்துக்குக் குறித்தளிக்கப் பட்டுள்ள மதிப்பளவு அல்லது பின்னணியுடன் ஒப்பிடுவதற் கான மையின் வண்ணம்.

**reflectance ink** : பிரதிபலிப்பி மை; எதிரொளிர்வு மை : ஒளி யியல் நுண்ணாய்வில், ஒரு பிரதிபலிப்புத் திறனுடைய மை. இது, ஒரு குறிப்பிட்ட ஒளி யியல் எழுத்துப்படிப்பிக்கான ஏற்றுக்கொள்ளக்கூடிய காகிதப் பிரதிபலிப்புத் திறனுக்கு ஏறத் தாழ நெருக்கமாக இருக்கும்.

**reflected code** : பிரதிபலிப்புக் குறியீடு: 'பழுப்புக் குறியீடு' (grey code) என்பதும் இதுவும் ஒன்றே.

**reflection mapping** : பிரதி பலிப்பு படிவரைவு : கணினி வரைகலைகளில் ஒரு பொருளின் மீது பிரதிபலிப்பு களைத் தூண்டுகிற ஓர் உத்தி.

**reflective liquid-crystal display** : பிரதிபலிக்கும் நீர்மப்-படிகக் காட்சி : நீர்மப் படிகக்காட்சி யில் ஒரு வகை. படிக்கும் தெளிவை மிகுவிக்க ஓர அல்லது பின்புற ஒளியை பயன் படுத்தாமல், பிரதிபலிக்கும் உள்ளுறை ஒளியைப் பயன் படுத்தும்முறை. ஆனால் இத்தகு காட்சித் திரையை வெளிச்சத்தில் பார்த்தால் தெளி வாக இராது. எனவே அறைக்கு வெளியே திறந்தவெளியில் பயன்படுத்த முடியாது.

**reflective routing** : பிரதிபலிப்பு திசைவிப்பு : விரிபரப்புப் பிணையங்களில், பிணைய வழங்கன் கணினியின் சுமை யைக் குறைக்கும் பொருட்டு தரவுகள் பகிர்ந்தளிக்கப் படுவ துண்டு. ஒரு பிரதிபலிப்பி நிரல் மூலம் இது நிறைவேற்றப் படுகிறது.

**reflective spot** : பிரதிபலிப்புப் புள்ளி: ஒரு காந்த நாடாவின் இரு முனைகளிலும் வைக்கப் பட்டுள்ள உலோகத் தகடு. இதில் நாடாவில் ஏற்றப் பட்டுள்ள ஒளி, ஓர் ஒளி யுணர்வியில் பிரதிபலித்து, நாடா முடிந்து விட்டதைக் குறிக்கிறது.

**reflector** : பிரதிபலிப்பி : ஒரு பயனாளரிடமிருந்து சமிக்கை கிடைக்கப் பெற்றவுடன் பல பயனாளர்களுக்கு செய்தியை அனுப்பிவைக்கும் ஒரு நிரல். பொதுவகை பிரதிபலிப்பி களுள் மின்னஞ்சல் பிரதி பலிப்பி ஒன்று. ஒரு மின்னஞ் சல் கிடைக்கப்பெற்றவுடன் தன்னிடமுள்ள பட்டியலிலுள்ள

அனைத்து முகவரிகளுக்கும் அந்த அஞ்சலை திருப்பி அனுப்பி வைக்கும்.

**reformat : மறு அச்சுப்படி வாக்கம்; மறு படிவமாற்றம் :** தரவுவை ஒரு அச்சுப் படிவத் திலிருந்து இன்னொரு அச்சுப் படிவத்திற்கு மாற்றுதல்.

**refraction : ஒளி விலகல் கோட்டம் :** ஒளி, வெப்பம் அல்லது ஒலி வெவ்வேறு ஊடகங்களின் வழி பாயும் போது கோட்டமடைதல்.

**refresenrate : புதுப்பிப்பு வீதம்.**

**refresh : புதுப்பித்தல் :** 1. கணினித் திரையிலுள்ள படிமம் மாறாவிட்டாலும், படக்குழலில் பாஸ்பரஸ் கதிரியக்கப்படாமல் இருக்க, குறிப்பிட்ட இடை வெளியில் திரைக்காட்சி புதுப்பிக்கப்பட வேண்டும். 2. இயங்கு நிலை நினைவகச் (Dynamic Memory-DRAM) சிப்புகளில் இருத்தி வைக்கப்பட்டுள்ள தரவு இழக்கப்படாமல் இருக்க அடிக் கடி புதுப்பிக்கப்பட வேண்டும். நினைவகப் பலகை 16யிலுள்ள ஒரு மின்சுற்று தானாகவே இந்தப் பணி கூறினை செய்து முடிக்கும்.

**refreshable : புதுப்பிக்கத்தகு :** ஒரு நிரல் செயல்படுத்தப்படும் போது, அந்நிரலின் செயலாக் கத்தைப் பாதிக்காமல், அந்நிரல் பயன்படுத்திக் கொண்டிருக்கும் தரவுக்குப் பாதிப்பு ஏற்படா மல், நினைவகத்தில் தங்கி யுள்ள அந்நிரலின் கூறு ஒன்றினை வேறொன்றால் பதிலீடு செய்யும் வசதி.

**refresh circuitry : புதுத் தூண்டல் மின்சுற்று நெறி :** ஒரு காட்சித்திரையில் காட்டப் படும் தரவுகளையும், குறிப் பின்றி அணுகும் நினைவகத் தில் சேமித்துவைக்கப்பட்டு, படிப்படியாக மின்னேற்றத்தை இழந்து வரும் தரவுகளையும் மீட்டாக்கம் செய்வதற்குத் தேவையான மின்னணுவியல் மின்சுற்று நெறி.

**refresh cycle : புதுப்பிப்புச் சுழற்சி :** இயங்குநிலை குறிப் பின்றி அணுகு நினைவகச் (DRAM) சில்லுகளில் 1 என்னும் இருமத் தரவு பதியப்பட்டுள்ள நினைவக இருப்பிடங்களில் சேமிக்கப்பட்டுள்ள மின்னூட் டம் இழக்கப்படாமல் தக்க வைக்க அதனை அவ்வப்போது புதுப்பிக்க வேண்டும். நினைவகக் கட்டுப்படுத்தி மின் சுற்று, இதற்கான மின்துடிப் பைக் குறிப்பிட்டகால இடை வெளியில் வழங்குகிறது. ஒவ் வொரு மின்துடிப்பும் ஒரு புதுப் பிப்புச் சுழற்சி ஆகும். இத்

தகைய புதுப்பித்தல் இல்லை யெனில் இயங்குநிலைக் குறை கடத்தி ரேம்கள் தன்னிடமுள்ள தரவுவை இழந்துவிடுகின்றன, கம்ப்யூட்டர் இயக்கத்தை நிறுத்தும்போதும், மின்சாரம் துண்டிக்கப்படும்போதும் பதியப் பட்ட தரவு இழக்கப்படுவதைப் போல.

**refresh display cycle** : புதுத் தூண்டல் காட்சிச் சுழற்சி : ஓர் நெறியச் சாதனத்தில் காட்சி யாகக் காட்டப்பட வேண்டிய நெறியங்களின் வழியாக அடுத் தடுத்து நுண்ணாய்வுகள் அல்லது கடவுகள் நடைபெறு வதற்கான நேரம். ஓர் எதிர்மின் கதிர்க் குழலின் முகத்திலுள்ள எரியங்கள், ஒவ்வொரு முறை யும் அந்த எரியங்களிலிருந்து வரும் சுடரொளியில் ஏற்படும் ஏற்றத்தாழ்வை அகற்றுவதற் காகப் புதிதாகத் தூண்டிய விரைவு வேகத்தில் ஒவ்வொரு முறையும் நுழைவதன் விளை வாக ஒளிவிடுகின்றன. இதனால், உருக்காட்சி 1/30 அல்லது 1/60 வினாடி நேரத்தில் மறு உருவாக் கம் செய்யப்படுகின்றது.

**refreshing** : புதுத் தூண்டுதல் : பயன்படுத்தாமலிருக்கும்போது சிதைந்துபோகும் அல்லது மறைந்துபோகும் தகவல்களுக் குப் புத்துயிரூட்டுகிற அல்லது மீட்டாக்கம் செய்கிற செய் முறை. ஓர் எதிர்மின்கதிர்க் குழல் திரையிலுள்ள எரியங்கள், ஓர் எலெக்ட்ரான் கற்றையின் மூலம் இடைவிடாமல் தூண்டப் பட்டு ஒளிரும்படி செய்யப்பட வேண்டும். பொதுவாகச் சுடர் நடுக்கம் ஏற்படுவதைத் தடுப் பதற்காக 30-60 Hz என்ற வீதத்தில் உருக்காட்சி மறு உரு வாக்கம் செய்யப்பட வேண்டும். அதேபோன்று, இயக்காற்றல் வாய்ந்த நினைவகக் கூறுகள், அவற்றின் உள்ளடக்கங்கள் மறைந்து விடாமலிருக்க, அடிக் கடி அணுகப்படுதல் வேண்டும்.

**refresh memory** : நினை வகத்தைப் புதுப்பித்தல் : ஒரு வரை கலை விரிவாக்கத்தில் ஒரு குறிப்பிட்ட புள்ளி இருக் கிறதா, அகன்றுவிட்டதா என் பதைக் குறித்துக் காட்டும் மதிப் பளவினைக் கொண்டிருக்கிற, கணினி நினைவகத்திலுள்ள பகுதி. ஒளிர்வு, வண்ணம் பற்றிய தகவல்களையும் இது கொண்டிருக்கும்.

**refresh rate** : புதுத் தூண்டல் வேக வீதம்; புதுவலுவூட்டுவீதம் : CRT அல்லது இயக்காற்றல் RAM சிப்பு போன்ற சாதனங்கள் வினாடிக்கு எத்தனை முறை புதுவலுவூட்டம் பெறுகின்றன என்ற அளவீடு. கணினி வரை

கலைகளில், திரையில் ஓர் உருக் காட்சியை மறுவரைவு அல்லது காட்சியாகக் காட்ட அது எடுத்துக்கொள்ளும் நேரம்.

**refrigerator** : குளிர்பதனப் பெட்டி.

**regenerate** : மறு உருவாக்கம் : சேமிப்புச் சாதனங்களில், அழித் திடும் முறையில் பயன்படுத்தப் பட்டுள்ள தகவல்களை மறுபடி யும் எழுதுவதற்குப் பயன் படுத்தப்படும் ஒரு எண்ணள வினைப் புதுப்பித்தல்.

**regenerator** : புத்துயிரூட்டு அமைவு : செய்தித் தொடர்பு களில் மறுஉருவாக்கி போன் றது. மின்னணுவியலில் ஒரு நினைவகத்துக்கு அல்லது காட்சிச் சாதனத்துக்கு, அது தனது மின்னேற்றத்தை இழக்கும் போதெல்லாம் மீண்டும் மீண்டும் மின்விசை வழங்குகிற ஒரு மின்சுற்று வழி.

**region** : வட்டாரம் ; மண்டலம் : மாறுபடலாகும் எண்ணிக்கை யிலான பணிகளைக் கொண்ட பன்முகச் செயல்முறைப் படுத்தலில், ஒதுக்கப்பட்டுள்ள உள்முகச் சேமிப்பு இடப் பரப் பினைக் குறிக்கப் பயன்படுத்தப் படும் சொல்.

**regional communities** : வட்டாரச் சமூகக் குழுக்கள்

**regional settings** : வட்டார அமைப்புகள்.

**region fill** : பரப்பை நிரப்பல் : கணினி வரைகலையில், திரை யில் உருவாக்கப்பட்ட ஒரு வரையறுத்த பரப்பை (வட்டம், சதுரம், செவ்வகம் போன் றவை) தேர்ந்தெடுத்த நிறம், தோரணி அல்லது பிற பண்புக் கூறுகளால் நிரப்பும் நுட்பம்.

**register (R)** : பதிப்பி ; பதிவு ஏடு; பதிகம்; பதிவிடம் : சிறிதள விலான தரவுகளை அல்லது செய்முறைப்படுத்தும்போது இடைவிளைவுகளைத் தற் காலிகமாகச் சேமித்து வைப் பதற்காக ஒரு மையச் செயலகத்தில் பயன்படுத்தப் படும் உயர்வேகச் சாதனம்.

**register, access control** : அணுகுக் கட்டுப்பாட்டுப்பதிவகம்.

**register, address** : முகவரிப் பதிவகம்.

**register, arithmetic** : கணக் கீட்டுப் பதிவகம்.

**register, check** : சரிபார்ப்புப் பதிவகம்.

**register, circulating** : சுற்றுப் பதிவகம்.

**register, console display** : பணி யகக் காட்சிப் பதிவகம்.

**register, current instruction :** நடப்பு நிரல் பதிவகம்.

**register, error :** பிழைப் பதிவகம்.

**register, index :** சுட்டுவரிசைப் பதிவகம்.

**register level compatibility :** பதிவு நிலை ஒத்தியல்பு : மற்றொரு சாதனத்துடன் 100% ஒத்தியல்பாகவுள்ள வன் பொருள் அமைப்பி. இது ஒரே வகையான வடிவளவும், பெயர்களும் உடைய பதிவேடு கள் பயன்படுத்தப்படுகின்றன என்பதைக் குறிக்கிறது.

**register, shift :** பெயர்வுப் பதிவகம்.

**register, storage :** சேமிப்புப் பதிவகம்.

**registration :** பதிவு செய்தல் : ஒரு சுட்டுக் குறிப்பினைப் பொறுத்துத் துல்லியமாக இட அமைவு செய்தல்.

**registration mark :** பதிவுக் குறி : அச்சுத்தகடுகள் எடுக்கப்படும் படச் சுருள்களில் சரிநிகரான இடங்களில் அச்சிடப்படும் ஒரு குறி. வணிகமுறை அச்சடிப் பாளர்கள் தங்கள் அச்சு எந்திரங் களின் சிறந்த தரத்தைப் பேணு வதற்காக இந்தக் குறிகளைப் பயன்படுத்துகிறார்கள். பல் வேறு வண்ணங்களைத் துல்லியமாக அச்சிடுவதற்கு இது பயன்படுகிறது.

**registry :** பதிவேடு; பதிவகம் : விண்டோஸ் 95/98/என்டீ இயக்க முறைமைகளில் பயன் படுத்தப்படும் மையப்படி நிலை தரவுத் தளம். ஒன்று அல்லது மேற்பட்ட பயனாளர் கள்,பயன்பாடுகள், வன்பொருள் சாதனங்களுக்காக கணினியை தகவமைக்கத் தேவையான தகவல்களைச் சேமித்து வைக்க இது பயன்படுத்தப்படுகிறது. கணினி இயங்கிக் கொண்டிருக் கும்போது, கோப்புறை மற்றும் சின்னங்களின் பண்புகளில், கணினியில் இணைக்கப்பட்ட வன்பொருள்களில், பயனாளர் களின் விருப்பத்தேர்வுகளில், நிறுவப்பட்டுள்ள பயன்பாடு களின் தகவமைவுகளில் செய் யப்படும் அனைத்து மாற்றங் களும் தொடர்ந்து கண்காணிக் கப்பட்டு அவை பதிவேட்டில் பதிவு செய்யப்படுகின்றன. விண்டோஸ் 3.x-இல் இருந்த .INI கோப்புக்கும், எம்எஸ் டாஸில் இருந்த autoexec.bat, config.sys கோப்புகளுக்கும் மாற்றாக இது விளங்குகிறது. விண்டோஸ் 95/98 மற்றும் விண்டோஸ் என்டீ பதிவேடு கள் ஒன்றுபோல இருந்தாலும் வட்டில் பதியப்பட்டுள்ள முறையில் வேறுபடுகின்றன.

**registry editor : பதிவேடு திருத்தி :** விண்டோஸ் 95/98 இயக்கமுறைமையில் பதிவேட்டில் உள்ள விவரங்களை பயனாளர் விரும்பியவாறு திருத்த/ மாற்ற உதவும் ஒரு பயன்பாடு. regedit என்றும் கட்டளைமூலம் செயல்படுத்தப்படுகிறது.

**regression analysis : பின்னோக்கப் பகுப்பாய்வு :** இரு தரவுத் தொகுதிகளிடையிலான தொடர்பினை அறுதியிடுவதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு புள்ளியியல் உத்தி. எடுத்துக் காட்டாக, தென்னிந்தியாவில், மழைப் பொழிவு அதிகமாக இருந்தால் அரிசி விலை குறைவாக இருக்கும். இது, தென் கடலோரம் நெடுகிலும் கடல் மட்ட வெப்ப நிலைகளிடையே ஒரு தொடர்பினைக் காட்டும். இந்தப் பகுப்பாய்வு, இந்தத் தொடர்புகளை எண்ணளவுப் படுத்தி, எதிர்கால நிகழ்வினை ஊகித்துக்கூற உதவுகிறது.

**regression testing : பின்னோக்குச் சோதனை :** முன்னதாகச் சரிபார்க்கப்பட்ட ஒரு செயல்முறை விரிவாக்கம் செய்யப்படும்போது அல்லது திருத்தப்படும்போது, அதில் மேற்கொள்ளப்படும் சோதனைகள்.

**regression to the norm : உரு மாதிரிப் பின்னிறக்கம் :** ஒரு தரவு தொகுதியில் ஒரு மையத் மதிப்பளவினைச் சுற்றி இனங்களைச் செறிவாக்கம் செய்யும் போக்கு. இதில் மிகஅதிகமான மதிப்பளவுகள் கிடைக்கும். ஆனால் நாளடைவில் தரவுத் தொகுதி முழுவதும் அற்ப அளவாகச் சுருங்கிவிடும்.

**re-inking : மறு மையிடுதல் :** ஒரு துணிவகை அச்சடிப்பி நாடாவை, மீண்டும் பயன் படுத்தும் வகையில் மறு சீரமைத்தல்.

**reinstall :** மறுநிறுவல்.

**reject :** ஒதுக்கு.

**related files : தொடர்புறு கோப்புகள்:** கணக்கு எண் அல்லது பெயர் போன்ற ஒரு பொதுவான அம்சத்தின் பேரில் இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட தரவுக் கோப்புகளை இணைத்தல்.

**relation : தொடர்புநிலை ; உறவு நிலை :** 1. ஒரு குறிப்பிட்ட வரிசை முறையிலுள்ள இரு பொருள்கள் தொடர்புடையனவா இல்லையா என்பதைக் காட்டும் சமநிலை, ஏற்றத் தாழ்வு போன்ற ஒரு பண்பியல்பு. 2. தொடர்நிலை தரவுத் தள உரு மாதிரிகளில் தரவு சேமிப்பகத்தின் அடிப்படை வடிவமான ஓர் அட்டவணை. 3. ஓர்

இணைவன/படிமுறை உரு மாதிரியில், இனங்களின் தொகுதிகளிடையே பெயர் குறித்திட்ட தொடர்புநிலை.

**relational algebra :** உறவுநிலை இயற்கணிதம் : தரவுத் தளங்களில் உள்ள அட்டவணைகளைக் கையாள்வதற்கான விதிமுறைகள் மற்றும் செயல்பாடுகளின் தொகுப்பு. கீழ்க்காணும் செயல்பாடுகளைக் கொண்டு உள்ளது : select, project, product, union, intersect, difference, join (or inner join), divide. உறவுநிலைத் தரவுத் தளங்களில், ஏற்கெனவே இருக்கும் அட்டவணைகளின் அடிப்படையில் புதிய அட்டவணைகளை உருவாக்க உறவுநிலை இயற்கணிதம் பயன்படுத்தப்படுகிறது.

**relational calculus :** உறவுநிலை நுண்கணிதம் : தரவுத் தள மேலாண்மையில் அட்டவணைகளைக் கையாளப் பயன்படும் செயல்முறை சாரா வழிமுறைகளைக் குறிக்கும். இருவகை உறவுநிலை நுண்கணி தங்கள் உண்டு: 1. கள நுண்கணிதம் 2. ஏடுகளின் நுண்கணிதம். இரு நுண்கணிதங்களும் தமக்குள்ளே ஒரே மாதிரியானவை. உறவு நிலை இயற் கணிதத்துடன் உடன்பாடு கொண்டவை. இவற்றில் ஏதேனும் ஒன்றைப் பயன்படுத்தி, இருக்கின்ற அட்டவணைகளின் அடிப்படையில் புதிய அட்டவணைகளை உருவாக்க முடியும்.

**relational database :** தொடர்புறு தரவுத் தளம்.

**relational data structure :** தொடர் புறு தரவுக் கட்டமைவு : தரவுத் தளத்தினுள் தரவுக் கூறுகள் அனைத்தும் எளிய அட்டவணைகளின் வடிவத்தில் சேமிக்கப்படுவதாகக் காட்டும் ஒரு தருக்கமுறைத் தரவுக் கட்டமைவு. தொடர்புறு மாதிரியில் அமைந்த DBMS தொகுதிகள் பொதுவான தரவுக் கூறுகளைக் கொண்ட பல்வேறு அட்டவணைகளிலிருந்து தரவு அம்சங்களை இணைக்க வல்லவை.

**relational expression :** தொடர்பு நிலைக் கோவை : ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட இயக்கங்களைக் கொண்ட கோவை.

**relational model :** உறவுநிலை மாதிரியம் : தரவுகளை அட்டவணைகளில் சேமித்து வைக்கும் ஒரு தரவுத் தள மாதிரியம். அட்டவணையை (table), உறவு (relation) என்று அழைப்பதுண்டு. தற்காலத்தில் பயன்பாட்டில் உள்ள பெரும்பாலான தரவுத் தள மேலாண்மை அமைப்புகளில் இந்த வகை மாதிரியமே பின்பற்றப்படுகிறது.

**relational operation** : ஒப்பீட்டுச் செயல்பாடு.

**relational operator** : தொடர்பு நிலை இயக்கி; உறவு இயக்கி; உறவுச் செயல்பாடு; ஒப்பீட்டுக் குறியீடு : இரண்டு மதிப்பளவு களை ஒப்பிடுவதற்குப் பயன் படுத்தப்படும் குறியீடு. இது, மதிப்பளவு மெய்ம்மையான தாக அல்லது பொய்ம்மையான தாக இருப்பதற்கான நிபந் தனையைக் குறித்துரைக்கிறது.

**relational structure** : தொடர்பு நிலைக் கட்டமைவு : தரவு இனங்கள் அனைத்தும் ஒரே கோப்பில், ஒரு தருக்கமுறைச் சுட்டுகளின் தொகுதி மூலம் ஒன்றாகப் பிணைக்கப்பட்டுள்ள வாறு அமைக்கப்பட்டுள்ள தரவு தளப்படிவம். இந்த தரவு இனங் களுக்கிடையிலான தொடர்பு நிலைகளை வேண்டியவாறு மாற்றிக்கொள்ளலாம்.

**relationships** : உறவு முறைகள்.

**relative address** : தொடர்பு முகவரி ; சார்பு முகவரி : ஒரு குறிப்பிட்ட சேமிப்பு அமை விடத்தின் முழு முகவரியுடன் சேர்ந்து அமையுமாறு ஓர் ஆதார முகவரியுடன் சேர்க்கப்பட வேண்டிய முகவரி.

**relative cell reference** : ஒப் பிட்டு சிற்றம் மேற்கோள்; சார்புக் கலக் குறிப்பு.

**relative coding** : தொடர்புக் குறி யீட்டு முறை : எந்திர நிரல்களை முகவரிகளுடன் பயன்படுத்தும் குறியீட்டு முறை.

**relative coordinate** : தொடர்புறு ஆயத்தொலை : பயன்படுத்தப் படும் கடைசி ஆயத் தொலை வினைப்பொறுத்து நிருண யிக்கப்படும் ஓர் ஆயத்தொலை, (5,10) என்பது, வலப்பக்கம் 5 என்பதையும், மேல் நோக்கி 10 என்பதையும் குறிக்கிறது. (-5, -10) என்பது இடப்பக்கம் 5 என்பதையும், கீழ்நோக்கி 10 என்பதையும் குறிக்கிறது.

**relative movement** : தொடர்பு நகர்வு; சார்பு இயக்கம் : திரையில் ஒரு பொருள் அதன் கடைசி நிலையைப் பொறுத்துப் புதியதொரு நிலைக்கு நகருதல். இது '0'-லிருந்து நகர்வதற்கு மாறானது. "நகர்வு 4, 8" என்பது, வலப்புறமாக 4 அலகுகளும், கடைசி நிலையிலிருந்து மேலே 8 அலகுகளும் நகர்வதாகும். இது "முழு நகர்வு" (Absolute movement) என்பதிலிருந்து வேறுபட்டது.

**relative path** : சார்புப் பாதை : டாஸ், யூனிக்ஸ் இயக்க முறை மைகளில் பயன்படும் சொற் றொடர். தற்போது பணியாற்றிக் கொண்டிருக்கும் கோப்பகத்தை அடிப்படையாகக் கொண்டு

அமையும் கோப்பகப் பாதை. பயனாளர், ஒரு கோப்பு தொடர்பான கட்டளையைக் கொடுக்கும்போது, முழுப் பாதையும் கொடுக்கவில்லை எனில், நடப்புக் கோப்பகம் சார்புப் பாதையாக எடுத்துக் கொள்ளப்படும். C:\WORK> DEL C:\TC\PRG\ TEST.C என்ற கட்டளையில் TEST.C என்னும் கோப்பு இருக்கும் முழுப் பாதையும் சொல்லப்பட்டுள்ளது. ஆனால், C:\WORK> DEL TEST.C என்று கட்டளை அமைப்பின் TEST.C என்னும் கோப்பு WORK கோப்பகத்தில் உள்ளது எனப் பொருள்படும். C:\WORK> DEL PRG\TEST.C என்று கட்டளை அமைத்தால், WORK-லிலுள்ள PRG என்னும் உள்கோப்பகத்தி லுள்ள TEST.C என்று பொருள் படும். C:\WORK> DEL TC\PRG\ TEST.C என்ற கட்டளையும் C:\WORK\TC\PRG\ TEST.C என்ற கோப்பினையே குறிக்கும்.

**relative pointing device : ஒப்பு நிலை சுட்டுச் சாதனம் :** சுட்டி (Mouse), கோளச்சுட்டி (Track Ball) போன்ற, காட்டியை நகர்த் தும் சாதனத்தைக் குறிக்கிறது. திரையில் தோன்றும் காட்டி (Cursor), இவ்வகைச் சாதனம் திண்டின் (Pad)மீது எந்த இடத்தில் உள்ளது என்பதைப் பொறுத்து அமைவதில்லை. சாதனத்தின் நகர்வுகளைப் பொறுத்தே அமைகிறது. எடுத்துக்காட்டாக, சுட்டியைத் திண்டின்மீது ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்தில் தூக்கி வைத்தோமானால் திரையில் காட்டி நகர்வதில்லை. ஆனால், திண்டின்மீது உராயுமாறு சுட்டி யைச் சிறிதளவு நகர்த்தினால் போதும். திரையிலுள்ள காட்டி யும் நகரும். இவ்வகைச் சுட்டுச் சாதனங்கள், முற்றுநிலை (Absolute) சுட்டுச் சாதனங் களிலிருந்து வேறுபடுகின்றன. எடுத்துக்காட்டாக வரைகலைப் பலகை (Graphics Tablets) யில் குறிப்பிட்ட பரப்புக்குள் சுட்டுச் சாதனம் எந்த இடத்தில் இருக் கிறதோ அதற்கேற்ப திரை யிலுள்ள காட்டியின் இருப் பிடமும் அமைகிறது.

**relative URL : சார்பு யுஆர்எல் :** சீரான வள இடங்காட்டி (Uniform Resource Locator) என்பது சுருக்க மாக யுஆர்எல் என வழங்கப் படுகிறது. களப்பெயர், கோப் பக, உள்-கோப்பகப் பெயர்கள் எதுவுமின்றி ஆவணத்தின் பெயரையும், வகைப்பெயரை யும் மட்டுமே குறிப்பிடும் முறை. சிலவேளைகளில் கோப் பகப் பாதையில் ஒரு பகுதி கொடுக்கப்படலாம். நடப்புக்

கோப்பின் பாதையிலிருந்து கொடுக்கப்பட்ட கோப்பின் பாதை சார்புப் பாதையாக எடுத்துக் கொள்ளப்படும். www.msn.com\asp\net.html என்ற கோப்பினைப் பார்வையிடும் போது, www.msn.com\asp\csharp\ref.html எனக் குறிப்பிடுவதற்குப் பதிலாக, csharp\ref.html என்று மட்டும் குறிப்பிடுவது சார்பு யுஆர்எல் எனப்படும்.

**relay :** அஞ்சல்

**release[1] :** வெளியீடு : *1.* மென்பொருள்களின் பதிப்பு தொடர்பான சொல். மென்பொருள்கள் பதிப்பு எண் இடப்பட்டு வெளியிடப்படுகின்றன. விண்ஸிப் 7.0 (Version No) விண்ஸிப் 8.0 என்றெல்லாம் குறிப்பிடுவர். மிக அண்மைக்காலத்தில் வெளியிடப்பட்ட பதிப்போடு தொடர்புடைய வெளியீட்டை வரிசை யெண்ணிட்டு அழைப்பதுண்டு. Open Server System V Release 5.0, Lotus 1-2-3 Release 2.2 இவ்வாறு சில நிறுவனங்கள் மென் பொருளின் பெயரோடு சேர்த்தே வெளியீட்டு எண்ணையும் குறிப்பிடுவதுண்டு. 2. பொது வினியோகத்தில் கிடைக்கின்ற ஒரு மென்பொருள் தயாரிப்பின் பதிப்பு எண்.

**release[2] :** விடுவி; வெளியிடு; வெளியீடு : *1.* நினைவகத்தின் ஒரு பகுதியை அல்லது ஒரு புறச்சாதனத்தை அல்லது பிற வளம் ஒன்றினை கட்டுப்பாட்டிலிருந்து விடுவித்து இயக்க முறைமையின் கட்டுப்பாட்டில் ஒப்படைத்தல். *2.* ஒரு வன்பொருள்/மென்பொருள் தயாரிப்பை விற்பனைக்காக சந்தையில் அறிமுகப்படுத்தல்.

**release version :** வெளியீட்டுப் பதிப்பு : விலைக்கு வாங்குவதற்குத் தற்சமயம் கிடைக்கக்கூடிய ஒரு செயல்முறையின் பதிப்பு.

**relevancy ranking :** தேவைக்கேற்ப தரப்படுத்தம்.

**reliability :** நம்பகம் ; நம்பகத் தன்மை: செயல்முறைப் பொறியமைவு அல்லது தனிப்பட்ட வன்பொருள் சாதனம் எவ்விதப் பழுதுமின்றி தடையின்றி செயற்படுவதற்கான திறம்பாட்டின் அளவீடு.

**reload :** மறுஏற்றம் : *1.* ஒரு நிரலின் செயல்பாட்டில் எதிர்பாராத இடையூறு நேரும் போதோ, கணினிச் செயல்பாடு திடீரென நிலைகுலையும் போதோ, சேமிப்புச் சாதனத்திலிருந்து அந்நிரலை நினைவகத்தில் மீண்டும் ஏற்றுதல். 2. இணைய உலாவியில் தற்போது பார்த்துக் கொண்டிருக்கும் வலைப்பக்கத்தின்

புதிய நகலைப் பெறுதல். சிலவேளைகளில் இதன் மூலம் புதுப்பிக்கப்பட்ட தரவுவைப் பெறமுடியும். (எ-டு) நடை பெற்றுக் கொண்டிருக்கும் கிரிக்கெட் விளையாட்டின் ஓட்டவிவரம் அடங்கிய பக்கத் தைப் பார்வையிடல். ஒவ்வொரு மறு ஏற்றத்திலும் மிக அண்மைய ஓட்ட விவரம் கிடைக்கும்.

**relocatable addresses :** இடர்பெயர்தகு முகவரி; மறுஇட அமைவு செய்யத்தக்க முகவரி கள் : உள்முகச் சேமிப்பகத்தில் எந்த இடத்திலும் அமைந்திடக் கூடிய ஒரு செயல்முறையில் பயன்படுத்தப்படும் முகவரிகள்.

**relocatable code :** மறுஇட அமைவுக் குறியீடு : நினைவகச் செயல்முறைகள் எங்கு வேண்டு மானாலும் தங்கியிருக்க அனு மதிக்கும் பொறிக் கட்டமைவு, ஒரு தொடர்பு முகவரியாக்கத் தின்படி இது செய்யப்படுகிறது. இதில் வன்பொருள், பொறி அறிவுறுத்தங்களின் முகவரி களை ஓட்ட நேரத்தில் உயர்த்தி விடுகிறது.

**relocatable programme :** மறு இட அமைவு செய்யத்தக்க செயல்முறை : ஒரு கணினியின் உள்முகச் சேமிப்பகத்தில் கிடைக்கக் கூடிய பகுதி எதிலும் ஏற்றி, நிறைவேற்றுவதற்கு அனுமதிக்கிற, ஒரு வடிவத்தில் அமைந்துள்ள செயல்முறை.

**relocate :** மறுஇடஅமைவு செய்தல் : கணினிச் சேமிப்பகத் தில் எந்த இடத்திலும் நிறை வேற்றக்கூடிய வகையில் குறி யீடிடப்பட்டுள்ள ஒரு செயல் முறையை நகர்த்துதல்.

**relocation :** மறுஇட அமைவு : டாஸ் (DOS) நிறைவேற்றும் ஒரு செய்முறை. ஒரு EXE செயல் முறை ஏற்றப்படும்போது டாஸ் தள முகவரிகளை இழுக்கிறது. அதிலிருந்து மற்ற முகவரிகள் வெளிப்படுத்தப்படுகின்றன. இந்தத் தள முகவரிகளைச் செயல்முறை ஏற்றப்படும்வரை நிலை நிறுத்தமுடியாது. ஏனென் றால், நினைவகத்தில் செயல் முறை இடநிலை அதுவரைத் தெளிவாக இருப்பதில்லை. COM செயல்முறைகளுக்கு மறு இட அமைவு தேவையில்லை.

**remark :** குறிப்பு வரி.

**remarks :** குறிப்புரைகள் : கணினிச் செய்முறைப்படுத்தும் நடவடிக்கை எதனையும் செய் யாமல், அதே சமயம் செயல் முறையினைப் புரிந்து கொள்ளு கிற அல்லது மாற்றுகிற முயற்சி யில் எதிர்காலப் பயனாளருக்கு உதவக்கூடிய ஓர் ஆதாரமொழிச் செயல்முறையினுள் புகுத்தப்

படும் வாய்மொழிச் செய்திகள். இது உள்முக ஆவணமாக்க மாகப் பயன்படுத்தப்படுகிறது.

**remark statement** : குறிப்புரை அறிக்கை.

**remedial maintenance** : பரிகாரப் பராமரிப்பு : பொருளின் தவறான செயற்பணியினால் தேவைப் படும் பழுதுபார்க்கும் பணி. இது 'தடுப்புப் பராமரிப்பு' (Preventive maintenance) என் பதிலிருந்து மாறுபட்டது.

**reminder** : நினைவூட்டி.

**remote** : சேய்மை ; தொலைவு; தொலைவிடம் : ஒரு முனையம் அல்லது அச்சடிப்பி போன்ற ஓர் அணுக்கக் கணினியிலிருந்து மிகத்தொலைவு.

**remote access** : சேய்மை அணுகல்; தொலை அணுகல் : கணினியிலிருந்து தொலை விலுள்ள ஒரு நிலையம் அல்லது நிலையங்கள் மூலம் ஒரு கணினி வசதியுடன் செய்தித் தொடர்பு கொள்ளுதல்.

**remote access server** : சேய்மை அணுகு வழங்கன் : ஒரு குறும் பரப்புப் பிணையத்திலுள்ள புரவன் கணினி. இணக்கிகள் பிணைக்கப்பட்டிருக்கும். அதன் வழியாக தொலைதூரப் பயனா ளர்கள் தொலைபேசி வழியாக பிணையத்தில் நுழைய முடியும்.

**remote administration** : சேய்மை நிர்வாகம் : ஒரு பிணையத்தின் நிர்வாகம் தொடர்பான பணிகளை வழங்கன் கணினியிலிருந்து செய்யாமல் பிணையத்திலுள்ள வேறொரு கணினியிலிருந்து மேற்கொள்ளும் நடைமுறை.

**remote batch processing** : சேய்மைத் தொகுதி செயலாக்கம் : ஒரு சேய்மை அமைவிடத்தில், சிறிய கணினியமைவினைப் பயன்படுத்தி, தரவுகளை அடுக்கு அடுக்காகச் செய்முறைப் படுத்துதல்.

**remote communications** : சேய்மை தகவல் தொடர்பு : தொலைபேசி இணைப்பு அல்லது பிற தகவல் தொடர்பு இணைப்பு வழியாக தொலை விலுள்ள கணினியுடன் தகவல் பரிமாற்றம் செய்தல்.

**remote computing services** : சேய்மைக் கணிப்புச் சேவை : வாடிக்கையாளர்களுக்கு பணி மையங்கள் அளிக்கும் பணிகள். எடுத்துக்காட்டு: அடுக்குச் செய் முறைப்படுத்தல்; பரிமாற்றச் சிக்கல் தீர்வு (Interactive problem solving); ஆலோசனை (consulting).

**remote computer terminal** : சேய்மை கணினி முனையம்.

**remote console** : சேய்மைப் பணியகம்.

**remote control software :** சேய்மைக் கட்டுப்பாட்டு மென்பொருள் : ஒரு கணினியைப் பயன்படுத்துபவர் இன்னொரு இடத்திலுள்ள ஒரு கணினியுடன், அந்தச் சேய்மைக் கணினி உள்முகப் பொறியாக இருப்பதுபோன்றே, தொடர்பு கொள்வதற்கு அனுமதிக்கிற மென்பொருள். செயல்முறையின் ஒரு பகுதி உள்பொறியிலும், மற்றொரு பகுதி சேய்மைப் பொறியிலும் அமைந்திருக்கும். இது பொதுவாக, பயனாளருக்கு உதவி புரிவதற்காகத் தொழில் நுட்பாளர்களினால் பயன்படுத்தப்படுகிறது. ஒரு சேய்மைப் பொறியில் ஒரு செயற்பணியை நிறைவேற்றுவதற்கும் இது பயன்படுத்தப்படுகிறது.

**Remote Data Objects :** சேய்மை தரவுப் பொருள்கள் (ஆர்டிஓ) : விசுவல் பேசிக் 4.0 தொழிலகப் பதிப்பில் சேர்க்கப்பட்ட, பொருள்நோக்கிலான தரவுத் தள அணுகு கருவி. இதற்கென தனித்த கோப்பு வடிவாக்கம் எதுவும் இல்லை. ஆர்டிஓ-க்களை அண்மைக்கால ஓடிபிசி (ODBC-Open Data Base Connectivity) தரவரையறைக்கு உட்படும் தரவுத் தளங்களுக்காகப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆர்டிஓ-க்களின் செயல்வேகமும், குறைவான நிரல் வரிகள் மூலம் நிறைவான செயல்கள் ஆற்ற முடிவதும் இவை நிரலர்களிடையே மிகுந்த செல்வாக்குப் பெறக் காரணமாயிருந்தன.

**remote job entry :** சேய்மைப் பணிப் பதிவு : சேய்மை முனையங்களிலிருந்து, செய்முறைப் படுத்தும் பணிகளை வழங்கப் பயன்படுத்தப்படும் கணினிச் செயல்முறை.

**remote job service :** சேய்மைப் பணிச் சேவை.

**remote logging :** சேய்மைப் பதிகை.

**remote login :** சேய்மை புகு பதிகை : தரவுத் தொடர்பு இணைப்பு (தொலைபேசி போன்றவை) வழியாக தொலைவிலுள்ள ஒரு கணினி அமைப்பில் நுழைதலைக் குறிக்கும். புகுபதிவுக்குப்பின் பயனாளரின் கணினி, தொலைதூரக் கணினியின் ஒரு முனையமாகச் செயல்படும். இணையத்தில் சேய்மை புகுபதிகைக் டெல்நெட் என்னும் நிரல் மூலமாக நடைபெறுகிறது.

**remote phone :** சேய்மைப்பேசி.

**remote procedure call :** சேய்மைச் செயல்முறை அழைப்பு : ஒரு நிரலிலிருந்து நிரலுக்கு

வெளியே வரையறுக்கப் பட்டுள்ள ஒரு செயல்முறையை அல்லது வேறொரு நிரலை அழைக்க முடியும். அந்த வேறொரு செயல்முறை அல்லது நிரல், தனக்கிடப்பட்ட பணியை முடித்து, கிடைக்கப் பெறும் விடையை அழைத்த நிரலுக்கு அனுப்பி வைக்கும். அழைக்கப்படும் செயல்முறை அல்லது நிரல் தொலைதூரக் கணினியில் இருக்குமெனில் அதனை "சேய்மைச் செயல் முறை அழைப்பு" என்கிறோம்.

**remote processing : சேய்மைச் செயலாக்கம் :** ஒரு கணிணி யமைவுடன் சேய்மையில் இணைக்கப்பட்டுள்ள ஓர் உட்பாட்டு/வெளிப்பாட்டுச் சாதனத்தின் வாயிலாகக் கணினிச் செயல்முறையைச் செய்முறைப் படுத்துதல்.

**remote processor : சேய்மை நிலைச் செயலி**

**remote site : சேய்மை வரை யிடம் :** பகிர்மானக் கணிணி இணையத்திலுள்ள புறத் தொலைவிடம்.

**remote station : சேய்மை நிலையம்.**

**remote system : சேய்மைக் கணினி அமைப்பு :** ஓர் இணக்கி/தொலைபேசி ஆகிய வற்றின் மூலம் பயனாளர் அணுகக்கூடிய கணினி அல்லது கணினிப் பிணையம்.

**remote terminal : சேய்மை முனையம் :** தொலைவிலுள்ள கணினியிலிருந்து தனியாகப் பிரிந்துள்ள வரையிடங் களிலிருந்து ஒரு கணினியுடன் செய்தித் தொடர்பு கொள்வதற் கான சாதனம். இதற்கு, தொலைபேசிக் கம்பிகள் போன்ற செய்தித்தொடர்பு வசதிகள், நேரடிக் கம்பி வடங் களுக்குப் பதிலாகப் பயன் படுத்தப்படுகின்றன.

**removable disk : அகற்றத்தக்க வட்டு :** அதனதன் வட்டு இயக்கியில், படிப்பதற்காகவும், எழுதுவதற்காகவும் செருகக் கூடிய வட்டு அலகு. இதனைத் தேவையில்லாதபோது அகற்றி விடலாம். நெகிழ்வட்டுகள், வட்டுப் பொதியுறைகள் போன்றவை அகற்றத்தக்க வட்டுச் சாதனங்களாகும்.

**removable mass storage : அகற்று மொத்தச் சேமிப்பகம்.**

**removable media : அகற்றத்தக்க ஊடகம் :** தரவுகளைப் படிக்கிற அல்லது தரவுகளை எழுதுகிற சாதனத்திலிருந்து அப்புறப் படுத்தக்கூடிய நிலைவட்டு உறைகள் அல்லது பேழைகள்.

**remove** : அகற்று; நீக்கு.

**remove all** : அனைத்தும் அகற்று.

**remove all arrows** : அனைத்து அம்புக்குறிகள் நீக்கு. எம்எஸ் எக்செஸில் உள்ள ஒரு கட்டளை.

**remove filter** : வடிகட்டி அகற்று. எம்எஸ் அக்செஸில் உள்ள ஒரு கட்டளை.

**rename** : பெயர்மாற்று; மாற்று பெயர் : பெரும்பாலான கோப்பு முறைமைகளில் ஒரு கோப்புக்கு மாற்றுப் பெயர் கொடுப்பதற்கான கட்டளை.

**rename column** : நெடுக்கைப் பெயர் மாற்று.

**render** : வரைதல் : ஓர் இயல் புலகப் பொருளை அதன் உள்ள படியான தோற்றத்தில் வரைதல்.

**rendering** : வரைவு : கணினி வரைகலையில் முப்பரிமாண உருக்காட்சியை உருவாக்குதல். இதில், நிழல்கள், பிரதிபலிப்பு கள் போன்ற ஒளி வளைவுத் தூண்டுதல்கள் உள்ளடங் கியிருக்கும்.

**reorder point** : கையிருப்பு அளவு : ஓர் இனத்திற்கும் கூடு தலாக அனுப்பாணை அனுப்பு வதற்கு முன்பு கைவசமுள்ள மிகக்குறைந்த கையிருப்பு அளவு. பட்டியல் கட்டுப்பாட் டில் இன்றியமையாத அம்சம்.

**reorganize** : மீள் ஒழுங்கமை.

**repagination** : மறுபக்கமிடுதல் : ஒரு பலபக்க ஆவணத்தில் திருத்தம் செய்யும்போது, ஒரே சீரான பக்க நீளமும், தோற்ற மும் ஏற்படும் வகையில் ஒரு சொல்செயலி மூலம் சரியமைவு செய்யும் செய்முறை.

**repaint** : மறுவரைவு : நாளது தேதி வரையிலான வரைகலை அல்லது வாசகத் தரவுகளைப் பிரபலிக்கும் வகையில் ஒரு காட்சிச் சாதனத்தில் ஓர் உருக் காட்சியை மறுபடியும் வரைந்து காட்டுதல். இது பல்வேறு வரைகலைப் பொறியமைவு களில் முக்கிய அம்சமாக விளங்குகிறது. இது, காட்சித் திரையில் காட்டப்படும் வடி வமைப்பை தானாகவே மறு வரைவு செய்கிறது.

**repeat** : திரும்பச்செய் : சற்று முன் செய்த பணியை மீண்டும் செய்விக்கப் பல்வேறு பயன் பாட்டு மென்பொருள்களில் உள்ள கட்டளை.

**repeat counter** : பன்முறைப் பதிவுச் சாதனம் : ஒரு செயல் முறையில் ஒரு நிகழ்வு எத்தனை முறை நிகழ்கிறது என் பதைப் பதிவு செய்யும் செயல் முறைப் பதிவுச் சாதனம். இது பின்னர் ஒப்பிட்டுப் பார்ப் பதற்குப் பயன்படுகிறது.

**repeater** : மறுவுருவாக்கி : செய்தித் தொடர்புகளில் அனுப்பீட்டுத் தொலைவினை நீட்டிப்பதற்காக தகவல் சைகைகளைப் பெரிதாக்குகிற அல்லது மறு உருவாக்கம் செய்கிற ஒரு சாதனம்.

**repeating decimal number** : பன்முறை பதின்ம இலக்கம் : முடிவுறாமல் திரும்பத் திரும்ப வரும் பதின்ம எண். எடுத்துக் காட்டு : .3333333.... அல்லது .31282828.....

**repeating number** : பன்முறை எண்.

**repeat key** : பன்முறை விசைப் பலகை: மீண்டும் அழுத்தாமல் திரும்பத் திரும்பத் தொடர்பு ஏற்படும் வகையில் அழுத்தி வைத்திருக்கக்கூடிய விசைப் பலகையின் விரற்கட்டை.

**repetition** : மறுநிலை நிரல் : ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நிரல்களை குறிப்பிட்ட தடவைகள் நிறைவேற்றும்படி செய்கிற நிரல்.

**repetition instruction** : திரும்பச் செய்நிரல்.

**repetitive strain injury** : தொடர்பணி மிகையுழைப்பு ஊறு : கணினி விசைப்பலகையில் தொடர்ந்து பணிபுரிவதால், கணினித் திரையைத் தொடர்ந்து உற்றுநோக்குவதால் சிலவகை நோய்கள் வர வாய்ப்புண்டு. மணிக்கட்டுக்கு துன்பம் நேரா வண்ணம் விசைப்பலகை அமைப்பு இருக்க வேண்டும். கண்ணுக்கு அவ்வப்போது ஓய்வு தரவேண்டும். கண் கண்ணாடி அல்லது திரைக்குக் கூசொளி வடிகட்டி போன்றவை பயன்படுத்த வேண்டும்.

**reperforater** : மறுதுளையிடு கருவி : காகித நாடாத்துளை.

**repertoire** : அறிவுறுத்தத் தொகுதி : ஒரு குறிப்பிட்ட கணினிக்கு அல்லது கணினி குடும்பத்திற்குச் சொந்தமான நிரல்களின் முழுத் தொகுதி. இதனை நிரல் தொகுதி என்றும் கூறுவர்.

**replace** : பதிலீடு; மாற்றீடு : ஒரு குறிப்பிட்ட விவரத்தை வேறொன்றால் பதிலீடு செய்தல். பொதுவாக மாற்ற வேண்டிய விவரத்தைத் தேடிக் கண்டறிந்து, பின், அதனை மாற்றியமைப்பர். பெரும்பாலான சொல்செயலித் தொகுப்புகளில் குறிப்பிட்ட சொல்லை/சொல்தொடரைக் கண்டறிந்து புதியதென்றால் மாற்றியமைக்கும் "கண்டறிந்து மாற்று" (Find and Replace)

என்னும் வசதி உள்ளது. இருக்கும் விவரத்தையும் புதிய விவரத்தையும் குறிப்பிட வேண்டும். எழுத்து வடிவம் (Upper/Lower case) எப்படி யிருப்பினும் மாற்றச் செய்யவும் வசதி உண்டு.

**replacement theory** : பதிலமைவுக் கோட்பாடு : தேய்மானம், செயலழிவு பற்றிய கணிதம். இது பதிலமைவுச் செலவினை மதிப்பிடுவதற்கும், உகந்த அளவுப் பதிலமைவுக் கொள்கைகளைத் தீர்மானிப்பதற்கும் பயன்படுகிறது.

**replay** : மறு இயக்கம்; மீண்டும் இயக்கு.

**replication** : படியாக்கம் : ஒரு பகிர்ந்தமை தரவுத் தள மேலாண்மை அமைப்பில், ஒரு தரவுத் தளத்தை அல்லது அதன் ஒரு பகுதியை பிணையத்தின் பிற பகுதியிலுள்ள கணினி யிலும் நகலெடுத்து வைத்தல். பகிர்ந்தமை தரவுத் தள அமைப்புகள் ஒத்திசைவோடு விளங்க படியாக்கம் பயன்படுகிறது.

**reply to all** : அனைவருக்கும் பதிலிடு; யாவர்க்கும் பதில்.

**report** : அறிக்கை : பொதுவாக, வெளிப்பாட்டுத் தரவுகளுடன் தொடர்புடையது. தொடர்புடைய செய்திகளைப் படிப்பவர்கள் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் வரைபட மாக்குதல் இதில் அடங்கியுள்ளது. பயனாளருக்குத் தரவுகளை வழங்குவதற்கான ஒரு பொதுவான வழிமுறை. பெரும்பாலான அறிக்கைகள் திரைக் காட்சியில் அல்லது அச்சிட்ட பட்டியல்களில் காட்டப்படும்.

**report, error** : பிழை அறிக்கை.

**report file** : அறிக்கைக் கோப்பு : தரவுவைச் செய்முறைப்படுத்தும் போது உருவாக்கப்படும் கோப்பு. இது தேவையான வெளிப்பாட்டினை அச்சடிப்பதற்கு அல்லது காட்சியாகக் காட்டுவதற்குப் பயன்படுத்தப் படுகிறது.

**report format** : அறிக்கை படிவம் : பக்கம், பத்தித் தலைப்புகள், பக்க எண்கள், கூட்டுத் தொகைகள் ஆகியவற்றைக் காட்டுகின்ற ஓர் அறிக்கையின் உருவமைவு.

**report generation** : அறிக்கை உருவாக்கம் : ஒரு தரவுத் தளக் கோப்பு முழுவதிலிருந்து அல்லது அதன் பகுதியிலிருந்து திரைக் காட்சி அல்லது வன்படி ஆவணம் உருவாக்குவதற்காகத் தரவுவைக் கையாள்தல்.

**report generator** : அறிக்கை உருவாக்கி : எந்திரம் படிக்கத்தக்க

தரவுவை ஒரு அச்சிட்ட அறிக்கையாக மாற்றக்கூடிய செயல்முறை. தரவுத் தள மேலாண்மைப் பொறியமைவுத் தொகுதிகளின் ஓர் அம்சம். இது, ஒரு இறுதிப் பயனாளர், ஒரு தரவுத் தளத்திலிருந்து மீட்கப்பட்ட தரவுகளைக் காட்சியாகக் காட்டுவதற்காக ஓர் அறிக்கை உருவமைவை உடனடியாகக் குறிப்பிடுவதற்கு அனுமதிக்கிறது.

**report layout** : அறிக்கை உருவரை.

**report manager** : அறிக்கை மேலாளர்.

**reports** : அறிக்கைகள்.

**report writer** : அறிக்கை எழுது கருவி : தரவுக் கோப்புகளில் சேமிக்கப்பட்டுள்ள தகவல்களிலிருந்து செந்திறமான, வளமை அறிக்கைகளை உருவாக்கும் பயன்பாட்டுச் செயல்முறை.

**repository** : தொகுபதிவகம் : 1. ஒரு கணிப்பணி அமைப்பைப் பற்றிய அனைத்துத் தகவல்களின் தொகுப்பு. 2. ஒரு தரவுத் தளத் தின் தரவு அகராதியை உட் பொதியாய்க் கொண்டுள்ள மேற்பொதி.

**representation** : உருவகிப்பு.

**representation, binary** : இரும உருவகிப்பு.

**representation, binary coded decimal:** இருமக் குறிமுறை பதின்ம உருவகிப்பு.

**representation, data** : தரவு உருவகிப்பு.

**representation, fixcal point** : நிலைப்புள்ளி உருவகிப்பு.

**representation, floating point** : மிதவைப் புள்ளி உருவகிப்பு.

**representation, number** : எண் உருவகிப்பு.

**reproduce** : படிப்பெருக்கம் : ஒரே மாதிரியான ஊடகத்திலிருந்து தரவுகளின் பல படிகளை எடுத்தல். எடுத்துக் காட்டு : ஒரு குறிப்பிட்ட வட்டுத் தொகுதியிலிருந்து ஓர் இரட்டைப்படி வட்டுத் தொகுதியைப் பெறுதல்.

**reproducing punch** : படிப் பெருக்கத் துளையிடு கருவி : அட்டைகளின் அடுக்குகளை இரட்டைப் படியெடுப்பதற்கான சாதனம். ஒரு தலைமை அடுக்கின் துல்லியமான படியை அளிக்கவல்லது. அடுக்கின் ஒரு படியினை வேறுபட்ட வடிவமைப்பில் துளையிடவும் செய்யலாம்.

**reprogramming** : மறு செயல் முறைப்படுத்துதல் : ஒரு கணினிக்காக எழுதப்பட்ட ஒரு

செயல்முறையை இன்னொரு கணினியில் இயக்கக்கூடிய வகையில் மாற்றுதல்.

**reprographics :** படிப்பெருக்க வரைகலை : ஆவணங்கள், எழுத்துப் படிகள், படங்கள், ஓவியங்கள், படச்சுருள்கள் ஆகியவற்றைப் படியெடுத்தல், இரட்டைப் படியெடுத்தல் உள்ளடங்கிய தொழில்நுட்பம். ஒளிப்படப் படி, மாற்று அச்சடிப்பு, நுண்படச் சுருளாக்கம், மாற்று இரட்டைப் படியாக்கம் போன்ற உத்திகளும் இதில் அடங்கும்.

**request for discussion :** விவாதத்துக்கான கோரிக்கை : ஒரு குறிப்பிட்ட முடிவை எடுக்கும் முன்பாக அதற்குரிய விவாதத்துக்கு முறைப்படியான பரிந்துரையை முன்வைப்பது. குறிப்பாக யூஸ்நெட் படிநிலையில் ஒரு புதிய செய்திக் குழுவைச் சேர்க்கலாமா என்பது குறித்து விவாதிக்க வைக்கப்படும் கோரிக்கை. இதுவே முதற்கட்ட நடவடிக்கை. இறுதியில் ஓட்டெடுப்பு நடத்தி முடிவெடுக்கப்படும்.

**Request For Proposal (RFP) :** முன்மொழிவு வேண்டுகோள்: வன்பொருள்/மென்பொருள் விற்பனையாளர்களுக்கு, பொறியமைவுக் குறிப்பீடுகளுக்கிணங்கியவாறு சாதனங்களையும், மென்பொருள்களையும் முன்மொழியுமாறு வேண்டி அனுப்பப்படும் ஆவணம்.

**Request For Quotation (RFQ) :** விலைப்புள்ளி வேண்டுகோள் : வன்பொருள்/மென்பொருள் விற்பனையாளர்களுக்கு, சாதனங்களின் விலைகளைக் குறிப்பிட்டு விலைப்புள்ளி அனுப்புமாறு வேண்டி அனுப்பப்படும் ஆவணம்.

**request header :** வேண்டுதல் தலைப்பு : ஒரு சாதன இயக்கியைக் கட்டுப்படுத்துவதற்கு டாஸ் (DOS) உருவாக்கியுள்ள ஒரு நிலையளவுருத் தொகுதி.

**required :** கட்டாயத் தேவை. எம்எஸ் அக்செஸில் அட்டவணையில் ஒரு புலத்துக்கான பண்புக் கூறுகளுள் ஒன்று.

**requirement list :** தேவைப் பட்டியல் : மென்பொருள் என்னென்ன செய்ய வேண்டும் அல்லது அது எவ்வாறு கட்டமைக்கப்பட வேண்டும் என்பதைக் குறித்துரைக்கின்ற, முறையாக எழுதப்பட்ட அறிக்கை.

**requirements :** தேவைப்பாடுகள்.

**rerun :** மறுஓட்டம் : ஒரு கணினியில் ஒரு செயல்முறையை

அல்லது அதன் ஒரு பகுதியை மீண்டும் ஓட்டுதல். இது, பொதுவாக ஒரு திருத்தம் செய்வதற்காக, அல்லது ஒரு தவறான தொடக்கத்தின்போது அல்லது தடங்கலின்போது செய்யப்படுகிறது.

**Research Libraries Information Network : ஆராய்ச்சி நூலகத் தகவல் பிணையம் :** ஆராய்ச்சி நூலகங்களின் குழுக்கள் பற்றிய தகவல்கள் அடங்கிய, இணைய நிகழ்நிலைத் தொகுப்பு. பெரும்பாலும் அமெரிக்க நாட்டிலுள்ள மிகப்பெரும் ஆராய்ச்சி நூலகங்கள் இதில் இடம் பெற்றிருக்கும்.

**research network : ஆய்வுப் பிணையம்.**

**reserve : ஒதுக்கு; ஒதுக்கீடு :** ஒரு குறிப்பிட்ட புறச்சாதனத்தின் செயல்படு பரப்புக்கென தொடர்ச்சியான வட்டுப் பகுதியை ஒதுக்கீடு செய்வதற்கான கட்டளை. இலக்கமுறை ஒளிக்காட்சிச் சாதனங்கள் இக்கட்டளையைப் புரிந்து கொள்கின்றன.

**reserve accumulator : காப்புத் தொகுப்பி :** ஒரு மையச் செயலகத்துடன் இணைக்கப்பட்டுள்ள துணை சேமிப்புப் பதிவேடு.

**reserved character : ஒதுக்கப்பட்ட குறியீடு; சிறப்புக் குறியீடு :** விசைப்பலகையிலுள்ள சில குறியீடுகளுக்கு நிரல்களில் சிறப்புப் பொருள் உள்ளன. எனவே, அவற்றைக் கோப்பு, ஆவணம், பயனாளர் உருவாக்கும் ஏனைய செயல்கூறுகள், குறுமம் (Macro) ஆகியவற்றின் பெயர்களில் அக்குறியீடுகளைப் பயன்படுத்த முடியாது. பொதுவாக, நட்சத்திரக் குறி (★), முன்சாய்வு (/), பின்சாய்வு (\), வினாக்குறி (?), செங்குத்துக் கோடு (|) ஆகியவை ஒதுக்கப்பட்ட குறியீடுகளில் அடக்கம்.

**reserved words : காப்புச் சொற்கள்; சிறப்புச் சொற்கள்:** செயற்பாட்டுப் பொறியமைவுகள், மொழி பெயர்ப்பிகள் போன்றவற்றால் தங்கள் சொந்தப் பயன்பாட்டுக்காகச் சில சொற்கள் காப்பிடப்பட்டிருக்கும்; இச்சொற்களைப் பயன்பாடுகளிலும், செயல்முறைகளிலும் பயன்படுத்த முடியாது. இவை கணினிச் செயல்முறைப்படுத்தும் மொழிகளில் தனிப் பொருளை உடையவை. எடுத்துக்காட்டு: Read,FOR, LET, IF, GOTO, LPRINT.

**reset (R) : மாற்றமைவு; திரும்ப அமைதல் :** *1.* கணினி அமைப்புகளை ஒரு குறிப்பிட்ட அசை

வற்ற நிலைக்குத் திரும்பக் கொண்டு வருதல். 2. ஓர் இரும எண் சிற்றத்தை சுழி (பூஜ்ய) நிலைக்குக் கொண்டு வருதல்.

**reset button :** மறு இயக்கப் பொத்தான்; ஒரு வன்பொருள்/ மென்பொருள் செயலிழந்தபின் ஒரு கணினியை மறுபடியும் இயக்குவிக்கிற கணினிப் பொத்தான் அல்லது விடைக் குறிப்பு. எல்லா நடவடிக்கை களும் நிறுத்தப்பட்டுவிடும். நினைவகத்திலுள்ள தரவு எல்லாம் இழக்கப்பட்டுவிடும். ஓர் அச்சுப்பொறியின் நினைவ கத்தைத் துப்புரவு செய்து, கணினியிலிருந்து புதிய தரவுவை அது ஏற்றுக் கொள் வதற்கு அதனை மறுஇயக்கப் பொத்தான் தயார் செய்கிறது.

**reset, cycle :** மீட்பியக்கு சுழற்சி.

**reset key :** மாற்றமைவு விசை: ஒரு விசைப்பலகையிலுள்ள விசை. இது பொதுவாக ஒரு கணினியின் பகுதிகளை ஒரு செயல்முறை நிறைவேற்றப் படுவதற்கு முந்திய நிலைக்கு மாற்றுவதற்குப் பயன்படுத்தப் படுகிறது.

**reset mode :** மீளமைவுப் பாங்கு.

**reside :** நிலைநிறுத்தல் : நிலை யாகப் பதிவு செய்து வைத்தல். எடுத்துக்காட்டு : ஒரு செயல் முறையை ஒரு வட்டில் அல்லது நினைவுப் பதிப்பகத் தில் நிலைநிறுத்தி வைக்கலாம்.

**resident font :** உள்ளமை எழுத்துரு : அச்சுப் பொறி யினுள் அமைக்கப்பட்டுள்ள ஓர் எழுத்து முகப்பு. இதனை முன்னதாகக் கீழிறக்க வேண்டிய தேவையில்லை.

**resident module:** உள்ளமை தகவமைவு : நினைவகத்தில் எல்லா இடங்களிலும் இருக்க வேண்டிய ஒரு செயல்முறை யின் பகுதி. நினைவகத்தில் இவ்வாறு தரவுகளையும், நிரல் களையும் உடனடியாக அணுகலாம்.

**resident portion :** நிலையான பகுதி; நினைவகத்திடல் நின்று இயங்கும் பகுதி.

**resident programme :** நிலைப் புல நிரல் : ஒரு கணினியின் முதன்மை நினைவகத்தில் (ROM அல்லது RAM) நிறை வேற்றத்திற்குப் பிறகு ஒரு குறிப்பிட்ட இடப்பரப்பை நிலையாக ஆக்கிரமித்துக் கொள்ளும் நிரல்.

**residual value :** எஞ்சிய மதிப் பளவு; எச்ச மதிப்பு : ஒரு குத்தகைக் காலத்தின் முடிவில் ஒரு சாதனத்தின் மதிப்பளவு.

**resilient** : விரிவாற்றல் : பழுது பட்ட பின்னரும் தொடர்ந்து நிறைவேற்றும் திறனுடைய ஒரு பொறியமைவு.

**resistance** : தடை; மின்தடை; மின்தடுப்பி : மின்னோட்டத்தை தடுக்கும் திறன். மீக்கடத்தி களைத் தவிர பிற மின் கடத்தி களில் குறைந்த அளவோ, அதிக அளவோ மின்தடைப் பண் புள்ளது. குறைந்த மின் தடை யுள்ள உலோகங்கள் மின் கடத்தும் திறன்மிக்கவையாய் உள்ளன. எனவே இவை கடத்தி கள் (conductors) என அழைக்கப் படுகின்றன. கண்ணாடி, ரப்பர் போன்றவை அதிக மின்தடை உள்ளவை. இவை மிகக்குறை வான மின்சாரத்தைக் கடத்து கின்றன. எனவே இவை கடத் தாப் பொருள்கள் (Non-conductors) எனவும் (Insulators) விலக்கிகள் எனவும் அழைக்கப்படுகின்றன.

**resistor** : தடுப்பான்; தடுப்பி; மின்தடை : ஒரு தனிம மின்னி யல் சுற்று வழியின் அமைப்பி. இது மின்னோட்டப் பாய் வினைத் தடுக்கும்போது அல்லது எதிர்க்கும்போது வெப்பத்தை உண்டாக்குகிறது.

**resizing** : வடிவ மாற்றம்; அளவு மாற்றம்; மறுவடிவாக்கம் : முன் தீர்மானித்த நிலையளவுருக் களுக்கிணங்க ஒரு உட்பொரு ளினை அளவிடும் செய்முறை.

**resolution**: படப்புள்ளிச் செறிவு; துல்லியத் திரைத்தெளிவு; படத் தெளிவு; தெளிவுத்திறன் ; படிப்பாற்றல் : ஓர் ஒளிக்காட்சி யில் மீண்டும் வரவழைக்கக் கூடிய தகவல்களின் அளவு. இது காட்சியில் படக்கூறுகளின் (Pixels) எண்ணிக்கையில் குறிக் கப்படுகிறது.560x720 படக்கூறு கள் கொண்ட ஒரு படம், 275x400 படக் கூறுகள் கொண்ட படத்தைவிட அதிகத் துல்லிய மாக இருக்கும். உயர் தெளிவுத் திறன் ஒரு நேர்த்தியான உருக் காட்சியை உருவாக்குகிறது. கணினி வெளிப்பாட்டின் துல்லி யத்தை அளவிடும் அலகு இது.

**resolution of the terminal**: முனையத்தின் ஆற்றல் பிரிவீடு.

**resolution, plotter**: வரைவி தெளிவுத் திறன் : வரையப்பட்ட உருக்காட்சியின் தரத்தின் அளவீடு. ஒரு எண்மான வரை வியிலுள்ள முகவரியிடக்கூடிய புள்ளிகளின் எண்ணிக்கை, தெளிவுத் திறனைத் தீர்மானிக் கிறது. புள்ளிகள் அதிகமிருந் தால் தெளிவுத்திறனும் அதிக மாக இருக்கும்.

**resolve** : தீர்; தெளிவி : *1.* ஒரு தரவுத் தளத்தில் அல்லது

தேடறி அட்டவணை (Lookup Table)யில் ஒரு துண்டுத் தகவலை இன்னொன்றோடு தொடர்புபடுத்தல். 2. வன்பொருள் முரண்கள் எதுவும் ஏற்படாவண்ணம் தகவமைவு அளபுருக்களை அமைத்தல். 3. தருக்கமுறை நினைவக முகவரியை மெய்யான முகவரியாக மாற்றியமைத்தல் அல்லது மெய்முகவரியைத் தருக்கமுறை முகவரியாக மாற்றுதல்.

**resolve conflicts :** முரண்களைச் சரி செய்.

**resource :** ஆதாரம் ; வளம் : ஒரு கணினி ஆதாரம். அமைப்பின் தொகுதியைச் சேர்ந்த ஓர் நினைவகம், அச்சுப்பொறி, வட்டுச் சேமிப்பு அலகு, காட்சித்திரை, மென்பொருள், பொருள்கள், செயற்பாட்டு ஆட்கள் இந்த ஆதாரத்தில் அடக்கம்.

**resource allocation :** ஆதார ஒதுக்கீடு; வள ஒதுக்கீடு : கணினி ஆதாரங்களைப் பல்வேறு பணிகள் அல்லது நடவடிக்கைகளுக்கிடையே பகிர்ந்தளித்தல்.

**resource data :** வளத் தரவு : பட்டி, சாளரம் அல்லது உரையாடல் பெட்டி போன்ற ஒரு குறிப்பிட்ட வளத்துடன் தொடர்புடைய தரவுக் கட்டமைப்புகள், முன்வடிவங்கள், செயல்முறை வரையறைகள், மேலாண்மை நிரல்கூறுகள், சின்னக் குறிப்புப் படங்கள் மற்றும் இது போன்றவற்றைக் குறிக்கும்.

**resource file :** ஆதாரக் கோப்பு : பயன்பாட்டுச் செயல்முறைகளினால் பயன்படுத்தப்படுவதற்கு வட்டில் அல்லது நாடாவில் சேமித்து வைக்கப்பட்டுள்ள செயல்முறைகள் அல்லது தரவுகள்.

**resource fork :** ஆதாரக் கவடு : ஒரு மெக்கின்டோஷ் கோப்பின் ஆதாரப் பகுதி. எடுத்துக்காட்டாக, ஒரு வாசக ஆவணத்தில், இது தரவு வட்டிலுள்ள வாசகத்துக்குக் குறை நிரப்புகிற உருவமைவுக் குறியீடுகளைக் கொண்டிருக்கிறது. ஒரு செயல்முறையில், இது நிறைவேற்றத் தக்கக் குறியீடு, பட்டியல்கள், பலகணிகள், உரையாடல் பெட்டிகள், பொத்தான்கள், எழுத்து முகப்புகள், உருவடிவங்கள் ஆகியவற்றைக் கொண்டிருக்கும்.

**resource ID :** வள அடையாளம் : ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினியில் ஒரு குறிப்பிட்ட வள வகையில் ஒரு குறிப்பிட்ட வளத்தினை அடையாளம் காட்டும் ஓர் எண். (எ-டு) MENU

என்னும் வகையைச் சார்ந்த பல் வேறு மெனுக்களில், ஒரு குறிப் பிட்ட மெனுவைக் குறிக்கும் எண்.

**resource leveling : ஆதாரச் சம நிலையாக்கம் :** ஆதாரங்களைப் பெரிதும் உகந்த அளவில் பயன் படுத்தும் வகையில் மிதவை நேரத்துடன் நடவடிக்கைகளை அட்டவணைப்படுத்துதல். இதன் மூலம், ஆதாரத் தேவைப் பாடுகளில் ஏற்படும் பெரும் ஏற்றத் தாழ்வுகள் தவிர்க்கப்படு கின்றன.

**resource management : ஆதார மேலாண்மை :** அடிப்படைச் சேமிப்பகம், துணை நிலைச் சேமிப்பகம், மையச் செயலகம், செய்முறைப் படுத்தும் நேரம், உட்பாட்டு/ வெளிப்பாட்டுச் சாதனங்கள் போன்ற கணினிப் பொறியமைவு ஆதாரங்களை, மற்றும் பொறியமைவு மென் பொருள்கள், பயன்பாட்டு மென்பொருள் தொகுதிகள் மூல மாகப் பயன்படுத்துவதைக் கட்டுப்படுத்துகிற ஒரு செயற் பாட்டுப் பொறியமைவுச் செயற்பணி.

**resouce meter : வளமாணி.**

**Resource Reservation Setup Protocol : வள ஒதுக்கீட்டு அமைப்பு நெறிமுறை :** "தேவைக்கேற்ற அலைக்கற்றை" (bandwidth on demand) என்னும் வசதியை அளிப்பதற்கென வடி வமைக்கப்பட்ட ஒரு தகவல் தொடர்பு நெறிமுறை. ஒரு தகவல் பரிமாற்றத்துக்காக குறிப்பிட்ட அளவு அலைக் கற்றை, வழங்கன் கணினியால் ஒதுக்கப்பட வேண்டும் என்று தொலைதூர வாங்கிக் கணினி (receiver) கோரிக்கை வைக்கும். கோரிக்கை ஏற்றுக் கொள்ளப் பட்டதா இல்லையா என்ற தகவலை வழங்கன், தொலை தூர வாங்கிக்குத் தெரிவிக்கும்.

**resource sharing : ஆதாரப் பங்கீடு :** ஒரு மையச் செய லகத்தை பல பயனாளர்களும், பல புறநிலைச் சாதனங்களும் பகிர்ந்து கொள்ளுதல்.

**resource type : வள வகை; வள இனம் :** மெக்கின்டோஷ் இயக்க முறைமையில் உள்ள, கட்டமைப்பு மற்றும் செயல் முறை வளங்களுக்கான ஏராள மான இனக்குழுக்களில் ஒன்று. குறிமுறை, எழுத்துரு, சாளரங் கள், உரையாடல் பெட்டிகள், முன் வடிவங்கள், சின்னங்கள், தோரணிகள், சரங்கள், இயக்கி கள், காட்டிகள், நிற அட் டவணைகள், பட்டிகள் போன்றவை இவற்றில் அடங் கும். இவற்றை அடையாளங் காண, குறிமுறைக்கு CODE,

எழுத்துருவுக்கு FONT, காட்டிகளுக்கு CURS போன்ற பெயர்ச் சிட்டைகள் பயன்படுகின்றன.

**response :** பதில்.

**response position :** பதிலீட்டு இட நிலை : ஒளியியல் நுண்ணாய்வில், ஓர் ஒளியியல் குறியேற்புப் படிவத்தில் தகவல்களைக் குறிப்பதற்காகக் குறிக்கப்பட்டுள்ள பகுதி.

**response time :** பதிலீட்டு நேரம் : ஒரு குறிப்பிட்ட உட்பாட்டுக்குக் கணினி அமைவு பதிலளிக்க எடுத்துக் கொள்ளும் நேரம். ஒரு நிகழ்வுக்கும் அந்த நிகழ்வுக்குப் பொறியமைவு அளிக்கும் பதிலுக்குமிடையிலான இடை வேளை.

**response unit, audio :** கேட்பொலி தரு கருவி

**restart :** மறுதொடக்கம் : ஒரு செயல்முறை நிறைவேற்றத்தை மீண்டும் தொடங்குதல்.

**restore :** மீட்டாக்கம்; மீட்டெழுதல்.

**restore backed files :** காப்புக் கோப்புகளை மீட்டெடு.

**restore defaults :** முன்னிருப்புகளை மீட்டெடு.

**restore statement :** மீட்டாக்கக் கட்டளை.

**restricted function :** கட்டுப்படுத்திய செயற்பணி : ஒரு பயன்பாட்டுச் செயல்முறை வாயிலாகப் பயன்படுத்த முடியாத கணினி அல்லது செயற்பாட்டுப் பொறியமைவுச் செயற்பணி.

**result processing module :** தேர்வு முடிவுச் செய்முறைப் படுத்தும் தகவமைவு.

**results :** முடிவுகள்; விடைகள் : கணினிச் செய்முறைப் படுத்தலின் விளைபயன்.

**resume :** மீள் தொடக்கம்

**resume error :** மீட்டாக்கப் பிழை; மீள்தொடக்கப் பிழை.

**retention period :** வைத்திரு காலம்.

**reticle:** ஒளிநுண்வலை : ஒருங்கிணைந்த சுற்றுவழித் திரையை உருவாக்குவதற்குப் பயன்படும் ஒளிப்படத் தகடு.

**retrace :** மீள்படியெடுப்பு : ராஸ்டர்-வருடல் கணினித் திரையகத்தில் மின்னணுக் கற்றை பின்பற்றும் பாதை, வலது ஓரம் சென்றபின் இடது ஓரத்துக்குத் திரும்புவதும், திரையின் அடிப்பகுதியிலிருந்து மேல்பக்கத்துக்குத் திரும்புவதும் இவ்வாறு அழைக்கப்படுகிறது. மீள்படியெடுப்பின் போது மின்னணுக் கற்றையின்

இருப்பிடம், இடமிருந்து வலமாக அல்லது மேலிருந்து கீழான அடுத்தகட்டப் பயணத் துக்குத் தயாராக நிர்ணயிக்கப் படுகிறது. இவ்வாறு வல மிருந்து இடமாக, கீழிருந்து மேலாக மின்னணுக்கற்றை பயணிக்கும்போது, கற்றை அகல் நிலை (OFF) ஆக்கப்படு கிறது. இதனால் திரையில் தேவையற்ற ஒரு கோடு வரையப்படுவது தடுக்கப் படுகிறது. மீள்படியெடுப்பு ஒரு வினாடியில் பலமுறை நிகழ் கிறது. தீர்க்கமான ஒத்திசைவுச் சமிக்கைகள் மூலம் ஒவ்வொரு முறையும் மின்னணுக் கற்றை அகல் நிலையாக்கப்படுகிறது.

**retrieval** : மீட்பு : ஒரு தரவு தளத்தி லிருந்து அல்லது கோப்புகளி லிருந்து தரவுகளை மீள எடுத்தல்.

**retrival, information** : தகவல் மீட்பு.

**retrival of data** : தரவு மீட்பு.

**retrieve** : மீட்டெடு; முனைந்து பெறு; கண்டு எடு; பெறு : கேட்கப்பட்ட ஒரு குறிப்பிட்ட விவரம் அல்லது தரவுத் தொகுதி யின் இருப்பிடத்தைக் கண்ட றிந்து, கேட்ட நிரல் அல்லது பயனாளருக்கு அனுப்பி வைத் தல். வட்டுகள், நாடாக்கள், நினைவகம் போன்ற எத்தகைய சேமிப்பகங்களிலிருந்தும் தரவு வைக் கண்டுபிடித்து எடுக்கும் திறன் கணினிகளுக்குண்டு.

**retrieving** : மீட்டாக்கம் : சேமித்து வைக்கப்பட்ட தரவுகளைத் தேவையானபோது பெறுவதற் கான செய்முறை.

**retrofit** : புதுமையாக்கம்; மேம் பாட்டு உறுப்பிணைத்தல் : தற் போதுள்ள ஒரு பொறியமை வினை மேம்படுத்துவதற்காக அதனை நாளது தேதிவரைப் புதுப்பித்தல் அல்லது அதில் புதியன சேர்த்தல்.

**return:** மீள்வு ; திரும்பு : முதன்மைச் செயல்முறையில் உரிய இடத்திற்குக் கட்டுப்பாடு திரும்புவதற்கு அனுமதிக்கிற ஒரு துணைவாலாயத்தின் முடி விலுள்ள நிரல்களின் தொகுதி.

**return, carriage** : நகர்த்தித் திரும்பல்.

**return code** : திரும்பும் குறி முறை : நிரலாக்கத்தில் ஒரு செயல்கூறு (Function) அல்லது ஒரு செயல்முறை (Procedure) தன் பணியை முடித்தபின் கிடைக்கப் பெறும் விடையை அழைத்த நிரல் அல்லது நிரல்கூறுக்குத் திருப்பியனுப்பும். வெற்றிகர மாக விடை திருப்பியனுப்பப் பட்டதா என்கிற விவரம் அழைத்த நிரலுக்குக் கிடைக் கும். இந்த விவரமே திரும்பும்

குறிமுறை எனப்படுகிறது. இந்தக் குறிமுறையின் அடிப் படையிலேயே நிரலின் அடுத்த கட்ட நடவடிக்கை அமையும்.

**return from the dead** : சாவி லிருந்து மீள்வு; அழிவிலிருந்து மீள்வு : இணையத்தில் பணி புரிந்து கொண்டிருக்கும்போது திடீரென இணைப்புத் துண்டிக் கப்படலாம். அவ்வாறு துண்டிக் கப்பட்டு மீண்டும் இணைய இணைப்பைப் பெறல் இவ் வாறு அழைக்கப்படுகிறது.

**RETURN key** : மீள்வு விசை : ஒரு கணினி விசைப்பலகையில், காட்சிச் சறுக்குச் சட்டம் அல் லது அச்சடிப்பி ஊர்தி அடுத்த வரியின் தொடக்க நிலைக்கு நகரும்படி செய்யப் பயன் படுத்தப்படும் விசை.

**return to zero** : சுழிக்குத் திரும்புதல்: காந்த ஊடகங்களில் தரவுவைப் பதியும் ஒரு வழி முறை. காந்தப் புலம் இல்லாத நிலை, அடிப்படை நிலை அல்லது நடுநிலையாகக் கொள்ளப்படும்.

**return type** : திருப்பியனுப்பும் தரவினம்.

**reusable** : மறுபயனீடு; மறு பயனுறு ஒரு வாலாயத்தின் ஒரே படியினை இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பணிகளுக்குப் பயன் படுத்த அனுமதித்தல் ஒரு வாலாயத் தின் இயல்பு.

**reusable object** : மறு பயனுறு பொருள்.

**reusability** : மறுபயன்பாட்டுத் திறன் : ஒரே செயல்முறைப் படுத்தும் நிரல் தொகுதியை அல்லது பொறியமைவு வடி வமைப்பினை இன்னொரு பயன்பாட்டுக்கு முழுவதுமாக அல்லது பகுதியாகப் பயன் படுத்துவதற்கான திறன்.

**reverse** : தலைகீழ்; முன்பின்.

**reverse engineer** : மறி நிலை யாக்கம் : ஒரு முழுமை பெற்ற பொறியமைவின் அமைப்பி களைத் தனிமைப்படுத்துதல். ஒரு சிப்பு மறிநிலையாக்கம் செய்யப்படும்போது, அந்தச் சிப்புவில் அடங்கியுள்ள அனைத்துத் தனித்தனிச் சுற்று வழிகளும் அடையாளங் காணப் படுகின்றன.

**reverse path forwarding** : எதிர் நிலை வழி முன்னோக்கல்.

**reverse polish notation** : மறி நிலைப் போலிஷ் குறிமானம் : ஹேவெல்ட் பேக்கார்டு கணிப்பிகளில் பயன்படுத்தப் படும் பின்னொட்டுக் குறிமான வடிவம். இதில் இயக்கப்படு

எண்கள் இயக்கிகளுக்கு முன் னர் பதிவு செய்யப்படுகின்றன. இதில் z = a(b+c) என்னும் கோவை bc+axz = என்று எழுதப்படுகிறது.

**reverse text : மறிநிலை வாசகம்;** காகிதம் எந்த நிறத்தில் உள்ளதோ அதே நிறத்தில், ஒரு மாறுபட்ட கறுப்பு அல்லது வண்ணப் பின்னணியில் தட்டச்சு செய்யப்பட்ட வாசகம்.

**reverse video : மறிநிலை ஒளிக் காட்சி :** கணினி பயன்படுத்து பவரின் கவனத்தை ஒரு குறிப் பிட்ட இனத்திற்கு ஈர்ப்பதற்குக் காட்சித்திரையில் பயன்படுத் தப்படும் ஓர் உத்தி. இதனை தலைகீழ் ஒளிக்காட்சி என்றும் கூறுவர்.

**review : சீராய்வு; மீள் பார்வை :** ஒரு புதிய பொறியமைவின் செயற்பாட்டுத் திறனை மதிப் பிட்டறிதல்.

**rewind: மீள்சுற்று :** ஒரு காந்த நாடாவை அதன் தொடக்க நிலைக்கு மீண்டும் கொண்டு வருதல்.

**rewrite: மறு எழுத்து :** ஒன்றை அழித்துவிட்டு மீண்டும் எழுதுதல்.

**REXX : ரெக்ஸ் :** மறு கட் டமைப்பு நீட்டிப்புச் செயலாக்கி என்று பொருள்படும் Restructured Extended Executor என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஐபிஎம் பெரு முகக் கணினிகள் (Mainframes) மற்றும் ஓஎஸ்/2 பதிப்பு 2.0-லும் பயன்படுத்தப்பட்ட கட்டமைப்பு நிரலாக்க மொழி. இம்மொழி பயன்பாட்டுத் தொகுப்புகளை இயக்குகிறது. இயக்கமுறைமைக் கட்டளை களையும் செயல்படுத்தும்.

**RF : ஆர் எஃப் :** 'வானொலி அதிர்வெண்' என்று பொருள் படும் 'Radio Frequency' என்ற சொற்றொடரின் தலைப்பெழுத் துச் சுருக்கம். இது பல்வேறு மின்காந்தக் கதிர்வீச்சுகளைக் குறிக்கிறது. இது வினாடிக்கு 10,000 முதல் 40,000 கோடி சுழற்சிகள்வரை மாறுபடும். இது பெரும்பாலும் செய்தித் தொடர்பு நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்படுகிறது.

**RFC : ஆர்எஃப்சி : மதிப்புரைக்** கான கோரிக்கை எனப் பொருள் படும் Request for Comments என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். ஒரு தரவரையறை, ஒரு நெறிமுறை (protocol) அல்லது இணையச் செயல்பாடுகள் - இவற்றில் ஒன்றுபற்றி பிற பார்வையாளர் கள், ஆர்வலர்களின் கருத்துரை

களைக் கேட்டு இணையத்தில் வெளியிடப்படும் ஓர் ஆவணம். ஐஏபி-யின் கட்டுப்பாட்டில் இவை வெளியிடப்படுகின்றன. விவாதங்களுக்குப் பிறகு இவையே இறுதித் தரவரையறையாக ஆகிவிடுகின்றன. இன்டர்நிக் போன்றவற்றின் அமைப்புகளிடமிருந்து ஏராளமான ஆர்எஃப்சிக்-களை பெற முடியும்.

**RFI : ஆர்எஃப்ஐ :** வானலை அலைவரிசை இடையூறு எனப் பொருள்படும் Radio Frequency Interference என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். வானொலி, தொலைக் காட்சி போன்ற மின்னணுச் சுற்றுகளில், கணினி போன்ற பிற மின்சுற்றுகளில் உருவாகும் மின்காந்த கதிர்வீச்சினால் ஏற்படும் இரைச்சலைக் குறிக்கிறது.

**RF modulator : ஆர் எஃப் அதிர்விணக்கி :** சாதாரண தொலைக்காட்சியில் படம் தெரியும்படி செய்வதற்கு ஒரு நுண்கணினியை அனுமதிக்கும் ஒரு சாதனம்.

**RF shielding : ஆர்எஃப் காப்புறை :** வானலை வரிசை ஊடுருவாமல் தடுப்பதற்குப் பயன்படும் கட்டமைப்பு. பெரும்பாலும் உலோகத் தகடு அல்லது உலோக மேற்பூச்சினால் அமைந்திருக்கும்.

**RGB monitor : ஆர்ஜிபி திரையகம் :** சிவப்பு, பச்சை, நீலம் ஆகிய அடிப்படை நிறங்களுக்கான சமிக்கைகளை தனித்தனித் தடங்களில் பெறுகின்ற ஒரு வண்ணத் திரையகம். மேற்கண்ட மூன்று நிறங்களுக்கான நிலை அளவுகளை ஒற்றைத் தடத்தில் பெறுகின்றது. கலப்பு இனத் திரையகங்களைவிடப் பொதுவாக தெளிவான, தூய படிமங்களை உருவாக்கும் திறன்படைத்தவை.

**RGB video : ஆர்ஜிபி ஒளிக் காட்சி :** ஒருவகை வண்ண ஒளிக் காட்சிக் குறியீடு (சிவப்பு, பச்சை, நீலம்); செந்திறமான தொலைக்காட்சிப் பெட்டிகளில் பயன்படுத்தப்படும் கலவை வண்ண ஒளிக்காட்சியிலிருந்து வேறுபட்டது. இதனை ஒரு வண்ணக் காட்சித் திரையில் மட்டுமே காட்டலாம்; இதில் இந்த அடிப்படை வண்ணங்கள் ஒவ்வொன்றுக்கும் தனித் தனித் துப்பாக்கிகள் அமைந்திருக்கும். சாதாரண வண்ணத் தொலைக் காட்சி பெட்டிகளில் ஒரேயொரு துப்பாக்கி மட்டுமே இருக்கும். ஆர்ஜிபி திரைகள் துல்லியமும் பிரகாசமான வண்ணங்களும், உயர்ந்த தெளிவுத் திறனும் உடையவை.

**ribbon** : நாடா : பல்வேறு தாக்குறவு மற்றும் தாக்குறவற்ற (எடுத்துக்காட்டு : அனல்) அச்சுப்பொறிகளில் மையூட்டும் சாதனம். பெரும்பாலான நாடாக்கள், மையேற்றம் செய்யப்பட்ட செயற்கை இழைகளிலானவை. இவை இரு வகையின : ஒன்று, ஓரடி வகை; இதனை ஒரே முறைதான் பயன்படுத்தலாம், இன்னொன்று பன்முறை அடி வகை இதனைப் பலமுறை பயன்படுத்தலாம். பன்முறை அடிவகை நாடாக்களைவிட, ஓரடிவகை நாடாக்களைப் பயன்படுத்துவதற்குச் செலவு அதிகம் பிடிக்கும். எனினும் ஓரடிவகை நாடாவின் எழுத்துகள் அதிகத் தெளிவாக இருக்கும்.

**ribbon cable** : பட்டிகைக் கம்பி வடம் : ஒரு போக்கான கம்பிகள் தட்டையாக இணைக்கப்பட்ட கம்பி வடத்தின் தொகுதி. இதில் ஏராளமான கம்பிகள் அருகருகே அமைக்கப்பட்டிருக்கும். இது பெரும்பாலும் கணினிகளைப் புறநிலைச் சாதனங்களுடன் இணைக்கப் பயன்படுத்தப் படுகிறது.



பட்டகைக் கம்பிவடம்

**ribbon cartridge** : பட்டிகை உறை; நாடா பேழை : அச்சுப் பொறி நாடா வைக்கப் பட்டுள்ள பிளாஸ்டிக் உறை.

**ribbon spool**: நாடா கண்டு.

**right** : வலம்/வல.

**right, access** : அணுக்க உரிமை.

**right arrow** : வலது அம்புக்குறி.

**right click** : வலச் சொடுக்கு.

**right disk** : விறைப்பு வட்டு; நிலை வட்டு.

**right justified** : புலச் சரியமைவு : கடைசி எழுத்து (இலக்கம்) புலத்தின் கடைசி இடத்தில் ஒரு நிலைப்படுத்தப்படும் வகையில் அமைந்த பாட்டுப் புலத்தின் இணைப்பு முறை.

**right justify** : வலப்புற வரிச் சரியமைவு : கடைசி எழுத்து (இலக்கம்) புலத்தின் கடைசி இடத்தில் ஒரு நிலைப்படுத்தப்படும் வகையில் அமைந்த பாட்டுப் புலத்தின் இணைப்பு முறை.

**right or hard disks : விறைப்பு அல்லது நிலை வட்டுகள் :** இது அலுமினியத்தினால் ஆனது; இதன் பதிவுப் பரப்பு, பெரும் பாலும் குரோமியம் ஆக்சைடினால் முலாம் பூசப்பட்டிருக்கும். முன்பு ஒவ்வொரு வட்டும் 2மீமிகு எண்மி திறன் கொண்டிருந்தது. பின்னர் வந்த வட்டுகள் 4 மீமிகு எண்மியலுக்கு மேற்பட்ட சேமிப்புத் திறனைக் கொண்டிருந்தன. செந்திறமான வட்டுகளில் தனித் தனித் தடங்கள் இருக்கும். சில மாதிரிகளில் நிலையான சுருள்முறை இருக்கும். இவை மிகக்குறைந்த அணுகு நேரம் உடையவை. மற்ற மாதிரிகளில் நகரும் சுருள்முனைகள் இருக்கும். இவற்றைச் சரியான தடத்தில் செலுத்த வேண்டும்.

**right shift :** வல நகர்வு; வலது பெயர்வு.

**ring :** வளையம்; வட்ட முறை : தரவுக் கூறுகளை சுழல் முறையில் அமைத்தல்.

**ring connected :** வளைய இணைப்பு.

**ring/loop :** வளைய/மடக்கு.

**ring network :** வளைய பிணையம்; ஒவ்வொரு கணினியும்ட மற்றக் கணினிகளுடன் இணைக்கப்பட்டுள்ள கணினி இணையம். புவியியல் முறையில் கணினிகள் நெருக்கத்தில் இருக்கும்போது இது பயன்படுகிறது.



வளைய பிணையம்

**ripple sort :** அதிர்வலை வரிசையாக்கம்.

**RISC :** ரிஸ்க் : சுருக்க நிரல் தொகுதி கணிப்பணி என்று

பொருள்படும் Reduced Instruction Set Computing என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். மிகக்குறைந்த எண்ணிக்கையிலான எளிய நிரல்களின் அடிப்படையில் அதிவேகமாய் திறன்மிக்கதாய் செயல்படக்கூடிய ஒரு நுண் செயலி வடிவமைப்பு. ஒவ் வோர் நிரலையையும் ஒரு கடி காரச் சுழற்சியிலேயே அதி வேகமாய் செயல்படுத்துவதை அடிப்படையாகக் கொண்டது ரிஸ்க் கட்டுமானம்.

மிக எளிய நிரல்களைப் பொறுத்தமட்டில் ரிஸ்க் நுண் செயலிகளைக் காட்டிலும் சிஸ்க் (CISC-Complex Instruction Set Computing) நுண்செயலிகள் மிகவேகமாய் நிறைவேற்றுகின் றன. ஆனால், மிகவும் சிக்க லான நிரல்களைப் பொறுத்த மட்டில் ரிஸ்க் செயலிகளைவிட வேகத்தில் குறைந்தவையே கார ணம், சிஸ்க் செயலிகள் சிக்க லான செயல்பாட்டிற்கும் தனித் தனி நிரல்களைக் கொண் டுள்ளன. ரிஸ்க் செயலிகள் பல நிரல்களின் தொகுப்பாக அவற்றை நிறைவேற்ற வேண்டி யுள்ளது. சன் மைக்ரோ சிஸ்ட மஸ் நிறுவனத்தில் ஸ்பார்க் செயலி,மோட்டோரோலாவின் 88,000 இன்டெல்லின் ஐ 860, ஆப்பிள், ஐபிஎம் மோட்டோ ரோலா ஆகியவற்றின் பவர்பீசி, ரிஸ்க் வகையைச் சேர்ந்தவை.

**RI/SME** : ஆர்ஐ/எஸ்எம்ஐ : பன்னாட்டு எந்திரன் உற்பத்திப் பொறியாளர் கழகம் (Robotics International of the Society of Manufacturing Engineers) என்ற அமைவனத்தின் தலைப் பெழுத்துச் சுருக்கம். இது எந்திரன்களை வடிவமைத்துப் பயன்படுத்தும் பொறியாளர் களின் அமைப்பாகும்.

**RJE** : ஆர்ஜேஇ : 'சேய்மைப் பணிப் பதிவு' என்று பொருள் படும். 'Remote Job' என்பதன் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**RO** : ஆர் ஓ : 'பெறுதல் மட்டும்' என்று பொருள்படும் 'Receiving Only' என்பதன் தலைப் பெழுத்துச் சுருக்கம்.

**Roach, John** : ரோச் ஜான்: 1977இல் 'டாண்டி கார்ப்பொ ரேஷன்' 'TRS 80' என்ற அமை வனத்தின் வானொலிப் பிரிவு என்ற நுண்கணினியை வெளி யிட்டது. அப்போது அந்த அமைவனத்தின் துணைத் தலை வராக இருந்தவர் ஜான் ரோச். பெரும் புகழ்பெற்ற இந்த வகை நுண்கணினி உருவாக்கத்திற்கு வழிகாட்டியாக இருந்தவர்.

**roam** : நகர்த்தல் : ஒரு காட்சித் திரையைச் சுற்றி ஒரு காட்சிப் பலகணியை நகர்த்துதல்.

**robo stick** : தன்னியக்கக் கோல் : சறுக்குச் சட்டத்தைக் கையாள்வதற்கும் வரைகலைகளை உருவாக்குவதற்கும் பயன்படுத்தப் படும் ஓர் உட்பாட்டுச் சாதனம்.

**robot** : எந்திரன் : மனிதர்களின் மேற்பார்வையின்றி, சுற்றுச் சூழலை உணர்ந்து, உள்ளீட்டுக் கேற்றவாறு சுற்றுச்சூழலை ஓரளவுக்கு நுண்ணறிவோடு மாற்றும் திறன்பெற்ற ஒரு பொறி. பெரும்பாலும், மனித அசைவுகளையொத்த செயல் பாடுடைய எந்திரன்களே வடிவமைக்கப்படுகின்றன. ஆனால் உருவத்தில் அவை மனிதர் களைப்போல படைக்கப்படு வதில்லை. வாகனம் மற்றும் கணினி உற்பத்தி சாலைகளில் எந்திரன்கள் பொதுவாகப் பயன் படுத்தப்படுகின்றன.

**robot control language** : எந்திரன் கட்டுப்பாட்டு மொழி : எந்திரன்களைக் கட்டுப்படுத்து வதற்காக வடிவமைக்கப்பட்ட செயல்முறைகளுக்கான மொழி. சான்று : Val; ML; ரோபோலான்.

**Robotic Industries Association (RIA)** : எந்திர மனிதர் தொழிற் கழகம் : எந்திரன் தொழில் நுட்பத்தைக் கண்டுபிடித்துப் பயன் படுத்துவதற்கான ஒரு தொழில் முறைக் கழகம்; 1974இல் நிறுவப்பட்டது. இதில் நூற்றுக் கணக்கான எந்திரன் உற்பத்தி யாளர்கள், விற்பனையாளர்கள் பயன்படுத்தும் கூட்டமைப்பு கள், பணி நிறுவனங்கள், ஆலோசகர்கள், ஆராய்ச்சி நிலையங்கள் அங்கம் பெற் றுள்ளனர். இது எந்திர மனிதன் பற்றிய நடப்புத் தொழில் நுட் பம் பற்றிய தரவுகளையும், புள்ளி விவரங்களையும் சேகரித்து வெளியிடுகிறது.

**robotics** : எந்திரனியல்: எந்தி ரன்கள் பற்றிய செயற்கை அறி வாற்றல் துறை. எந்திர மனிதர் வடிவமைப்பு, பயன்பாடு பற்றிய அறிவியல்.

**ROBOTLAN** : ரோபோலான் : எந்திரன்களைக் கட்டுப்படுத்து வதற்குப் பயன்படுத்தப்படும் செயல்முறைப்படுத்தும் மொழி.

**robustness** : வீரியம்: தவறான தரவுகளைச் செலுத்துதல் போன்ற எதிர்பாராத சூழ்நிலை களில் நிலைமையைச் சமாளிக் கக் கூடிய அல்லது குறைந்தது அபாயத்தைத் தவிர்க்கக் கூடிய திறன்வாய்ந்த மென்பொருள் செயல்முறையின் அல்லது செயல்முறைத் தொகுதியின்

திறம்பாடு. எடுத்துக்காட்டு : உட்பாட்டில் பிழைகளை எதிர் பார்த்து, செய்முறையில் வேண்டு மென்றே ஒரு செயல்முறைத் தருக்கமுறையைச் சேர்த்தல்.

**rocket** : ராக்கெட் : ஒரு உள் ளெரி அறையின் பின்புறத் திலுள்ள குழாய் முனை அல்லது தாரை வழியாக வெளியேறும் வாயுக்களின்மூலம் செயற் படும், தானாகவே முன் செலுத் தப்படும் சாதனம்.

**rod memory** : தண்டு நினைவுப் பதிப்பி; தண்டு நினைவகம் : நிக்கல் அல்லது இரும்பு உலோகக் கலவை பூசப்பட்டு, கோல்களின் வடிவில் வெட்டப் பட்டுள்ள கணினிச் சேமிப்பகம்.

**role-playing game** : பாத்திர மேற்று நடிக்கும் விளையாட்டு : நடப்பு வாழ்க்கையில் சந்திக்கும் பாத்திரங்களை ஏற்று ஒரு குறிப் பிட்ட சூழ்நிலையில் அவர்கள் எப்படி நடந்து கொள்வார்கள் என்பதை நடித்துக் காட்டுவது. பெரும்பாலும் மேலாண்மைப் பயிற்சியகங்களில் பயிற்சியாளர் களுக்கு இத்தகைய பயிற்சி அளிக்கப்படுவதுண்டு. ஓர் அதிகாரியிடம் புகார் தர வரு கின்ற வாடிக்கையாளர் ஒருவர் எப்படி நடந்து கொள்வார், அதிகாரி அவரிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதை பயிற்சியாளர்கள் நடித்துக் காட்ட வேண்டும். மேலாண்மைப் பதவிகளை வகிக்கப் போகிறவர்கள் நடப்பு வாழ்வில் சந்திக்கவிருக்கும் சவால்களை எதிர்கொள்வதற்கு இத்தகைய பயிற்சிகள் உதவுகின்றன.

**rollback** : பின்னோட்டம் ; பின்னுருள்தல் : ஒரு பொறி யமைவில் தவறு நேர்ந்த பிறகு செயல்முறையை மீண்டும் தொடங்குவதற்கான பொறி யமைவு. தரவுகளும் செயல் முறைகளும் காலாந்திர இடை வெளிகளில் சேமித்து வைக்கப் பட்டிருக்கும். கடைசியாகப் பதிவான நொடிப்பொழு திலிருந்து பொறியமைவு மீண்டும் இயங்கத் தொடங்கும்.

**roller** : உருளை.

**roll out** : வெளிக்கொணர்தல் ; வெளியேற்றல் : துணைச் சேமிப்பிகளிலுள்ள உள்முகச் சேமிப்பியின் உள்ளடக்கங் களைப் பதிவு செய்தல்.

**rollover** : தற்காலிக நினைவுப் பதிப்பி; சுற்றிக் கொள்ளல் : தட்டச்சுச் செய்த எழுத்துகளை யும் நிரல்களையும் கணினி யமைவு எத்துணை வேகமாகச் செய்முறைப்படுத்த கூடுமோ அதைவிட வேகமாக அவை

பதிவு செய்யப்படும்போது அவற்றைச் சேமித்து வைக்கக்கூடிய இடைத்தடுப்பு நினைவகம்.

**roll paper : சுருள் காகிதம் :** ஒரு கண்டில் தொடர்ச்சியாகச் சுற்றி வைக்கப்பட்டுள்ள அச்சுக் காகிதம். இது, 'விசிறி மடிப்புக் காகிதம்' (fanfold paper) என்பதிலிருந்து வேறுபட்டது.

**roman : ரோமன் :** ஒருவகை எழுத்து வடிவம். சாய்ந்த வடிவமாக இல்லாமல் நிமிர்ந்து நிற்கும் வடிவம் கொண்ட எழுத்துரு.

**ROM Basic : ரோம் பேசிக் :** ரோம் (ROM-Read Only Memory) நினைவகத்தில் பதிந்து வைக்கப்பட்ட பேசிக்மொழி நிரல் மாற்றி (Interpreter)யைக் குறிக்கும். கணியை இயக்கியவுடன் பேசிக் மொழி நிரலை எழுதி இயக்கலாம். வட்டு அல்லது நாடாவிலிருந்து பேசிக் மென்பொருளை நினைவகத்தில் ஏற்ற வேண்டியதில்லை. தொலைக்காட்சிப் பெட்டியுடன் இணைத்து இயக்கக் கூடிய தொடக்ககால வீட்டுக் கணினி (Home Computer)களில் ரோம் பேசிக் இணைக்கப் பட்டிருந்தது.

**ROM card : ரோம் அட்டை :** அச்சுப்பொறிக்கான சில எழுத்துருக்கள் அல்லது சில நிரல்கள் அல்லது சில விளையாட்டுகள் அல்லது பிற தரவுகள் பதியப் பட்ட ரோம் (ROM) நினைவகச் சிப்புகள் பொருத்தப்பட்ட ஒரு செருகு அட்டை. ரோம் அட்டை, ஒரு பற்று அட்டை (Credit card) யின் அளவில் ஆனால் அதை விடப் பல மடங்கு தடிமனாக இருக்கும். ஒருங்கிணைப்பு மின்சுற்று அட்டைகளில் நேரடியாகத் தரவுகள் சேமிக்கப் பட்டிருக்கும்.

**ROM cartridge : ரோம் பொதியுறை :** ரோம் அட்டை (ROM card) ஒரு பிளாஸ்டிக் பொதியுறையில் இடப்பட்டு, இணைப்புமுனைகள் ஒரு விளிம்பில் வெளித்தெரிந்து கொண்டிருக்கும். இதனை அச்சுப்பொறி, கணினி, விளையாட்டுக் கருவி அல்லது பிற சாதனத்தில் எளிதாகப் பொருத்த முடியும். தொலைக் காட்சிப் பெட்டியுடன் இணைத்து விளையாடக்கூடிய பெரும்பாலான ஒளிக்காட்சி விளையாட்டுகள் (Video games) இதுபோன்ற ரோம் பொதியுறைகளில் கிடைக்கின்றன.

**ROM chips : படிக்கமட்டுமான நினைவுப் பதிப்பி சிப்பு.**

**ROM emulator : ரோம் மாதிரி; ரோம் போலிகை :** ஓர் இலக்குக்

கணினியில் ரோம் சிப்புகள் இருக்கும் இடத்தில் இணைக் கப்பட்டுள்ள, ரேம் (RAM) நினைவகச் சிப்புகள் அடங்கிய ஒரு சிறப்பு மின்சுற்று. தனி யான ஒரு கணினி இந்த ரேம் சிப்புகளில் தரவுவை எழுதும். இலக்குக் கணினி ரோம் சிப்பு களைப் படிப்பதற்குப் பதிலாக இந்த ரேம் சிப்புகளிலுள்ள தரவு வைப் படித்துக் கொள்ளும். ரோமில் இருத்திவைக்கும் நிரல்களைச் சரிபார்க்க (debug), அதிக செலவும் தயாரிப்பு கால மும் ஆகும் ரேம் சிப்புகள் இல் லாமலேயே இந்தவகை விலை குறைவான ரேம் சிப்புகளைக் கொண்டு செய்து முடிக்க முடி யும். ஈப்ரோம் (EPROM) சிப்பு களைக்காட்டிலும் ரோம் போலிகை விலை அதிகம் எனினும், ஈப்ரோமைவிட மிக விரைவாக உள்ளடக்கத்தை மாற்ற முடியும் என்பதால் இந்த வகை ரேம் சிப்புகளே பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன.

**ROM simulator** : ஆர்ஓஎம் மாற்றுரு : ஒரு பொறியமைவில் செயல்முறைச் சரிபார்ப்பின் போது Rom, PROM நினைவகங் களுக்குப் பதிலாகப் பயன் படுத்தப்படும் ஒரு பொது நோக்குச் சாதனம். இது மின் சுற்று வழி மாற்றுருவாக்கத்தில் இயல்பு நேரத்தை (Real time) அளிக்கிறது. இது பொறியியல் உருமாதிரிகளில் அல்லது படிப் பெருக்க உருமாதிரிகளில் தவறு களைத் திருத்துவதற்கான செயல்முறைகளில் அல்லது உற்பத்தி உருமாதிரிகளில் புதிய அம்சங்களைச் சேர்ப்பதற்குப் பயன்படுத்தப்படுகிறது.

**root** : வேர் ; மூலம் : ஒரு மர வரைபடத்தில் தலையாய கூறு அல்லது மையமுனை. இதி லிருந்து இலை முனைகளுக்கு கிளைகள் கிளைத்துச் செல்லும்.

**root account** : வேர்க் கணக்கு; மூலக் கணக்கு; முதன்மைக் கணக்கு : யூனிக்ஸ் இயக்க முறைமையில் கணினியின் செயல்பாடுகளை முழுமை யாகக் கட்டுப்பாடு செய்கின்ற பயனாளரின் கணக்கு. முறைமை நிர்வாகி, கணினி அமைப்பின் பராமரிப்புக்காக இந்தக் கணக்கினைத்தான் பயன் படுத்திக் கொள்கிறார்.

**root directory** : மூலச் சேமிப் பகம்; மூலக்கோப்பகம்; வேர்க் கோப்பகம்; முதன்மைக் கோப் பகம்; தலைமைக் கோப்பகம் : வட்டு அடிப்படையிலான படி நிலைக் கோப்பகக் கட் டமைப்புகளில் தலைமையாக இருப்பது. இதிலிருந்தே பிற

கோப்பகங்களும் உள் கோப்பகங்களும் பிரிகின்றன. ஒவ்வொரு கோப்பகமும் ஒன்று அல்லது மேற்பட்ட கோப்புகள் அல்லது உள்- கோப்பகங்களைக் கொண்டிருக்கலாம். (எ-டு) டாஸ் இயக்க முறைமையில் பின்சாய்வுக் கோடு (\) மூலக் கோப்பகத்தைக் குறிக்கிறது. அதன்கீழ்தான் பிற கோப்பகங்களும், உள் கோப்பகங்களும், கோப்புகளும் இடம் பெறுகின்றன.

**root name :** முதன்மைப் பெயர் : எம்எஸ் டாஸ், விண்டோஸ் போன்ற இயக்க முறைமையில் ஒரு கோப்பின் பெயர் இரு பகுதிகளைக் கொண்டது. முதல் பகுதி முதன்மைப் பெயர் என்றும், அடுத்த பகுதி நீட்டிப்பு (Extension) என்றும் அழைக்கப்படுகிறது. நீட்டிப்பு பெரும்பாலும் அக்கோப்பின் வகையைக் குறிப்பதாக அமையும். (எ-டு) : command. com; edit.exe; letter.txt. டாஸ் மற்றும் விண்டோஸ் 3.x-ல் முதன்மைப் பெயர் அதிக அளவாக எட்டு எழுத்துகளையே கொண்டிருக்கும். வகைப்பெயர் அதிக அளவாக மூன்றெழுத்துகள். இரண்டுக்கும் இடையே ஒரு புள்ளி இடம் பெறும். விண்டோஸ் 95/98/என்டி மற்றும் பிறகு வந்தவற்றில் கோப்பின் பெயர் அதிக அளவாக 255 எழுத்துகளைக் கொண்டிருக்கலாம்.

**rotate :** சுழற்று; திருகு; சுழல் நகர்வு : 1. திரையில் தோற்றமளிக்கும் ஓர் உருத்தோற்றம் அல்லது ஒரு வரைகலைப் படத்தை இன்னொரு கோணத்தில் பார்ப்பதற்காக திருப்புதல். 2. ஒரு பதிவகத்தில் (register) உள்ள துண்மிகளை இடப்புறம் அல்லது வலப்புறம் ஓரிடம் நகரச் செய்தல். இத்தகைய நகர்வினால் ஒரு முனையில் இடமின்றி நகர்த்தப்படும் இறுதி துண்மி(பிட்) எதிர்முனையில் வெற்றிடமாகும் இடத்தில் ஒட்டிக்கொள்ளும்.

**rotating memory :** சுழல் நினைவகம் : காந்தத் தரவு சேமிப்புச் சாதனம். இது ஒரு வட்டத் தகட்டுவடிவில் அமைந்திருக்கும். இது ஓர் ஒலிப்பதிவுத் தட்டுபோல் சுழலும்.

**rotation :** சுழற்சி கணினி வரை : கலையில் ஒரு கணினி உருவாக்கிய உருவத்தை, அதன் மூலப்புள்ளியிலிருந்து ஒரு குறிப்பிட்ட கோணத்திற்குச் சுழற்றுதல். முப்பரிமாண வரைகலையில், உருவத்தை இடப் பரப்பில் அச்சினைச் சுற்றிச்

சுழற்றி, வேறு தோற்றங்களை உருவாக்கலாம்.

**rotational delay** : சுழற்சி காலத் தாழ்வு; சுழற்சிச் சுணக்க காலம் : ஒரு வட்டின் ஒரு பகுதியிலுள்ள ஒரு பதிவு, எழுது/படிப்பு முனையின் கீழ் சுழல்வதற்கு எடுத்துக்கொள்ளும் நேரம்.

**rotation speed** : சுழற்று வேகம்.

**rotation tool** : சுழற்று கருவி.

**ROT13 encryption** : ராட்13 மறையாக்கம் : ஓர் எளிய தரவு மறையாக்கமுறை. தரவிலிலுள்ள ஒவ்வொரு ஆங்கில எழுத்தும், அதற்கடுத்து 13 எழுத்துகளும் பிறகுவரும் எழுத்தால் பதிலீடு செய்யப்பட்டிருக்கும். (எ-டு) A என்னும் எழுத்துக்குப் பதில் N என்னும் எழுத்து பதிலீடு செய்யப்படும். மறுமுனையில் N என்னும் எழுத்து A என மாற்றப்படும். Z என்னும் எழுத்து M-ஆக மாற்றப்படும். ராட்13 மறையாக்கம், தரவு வைப் பிறர் படிக்கக்கூடாது என் பதற்காகச் செய்யப்படு வதில்லை. செய்திக் குழுக்களில் பயனாளர் படிக்க விரும்பாத ஆபாசத் தரவுகளை குறியாக்கம் செய்யவே பயன்படுத்தப்படு கின்றன. சில செய்தி படிப்பு மென்பொருள்களில் ஒரு விசையை அழுத்தியவுடனே மறையாக்கம் செய்யவும், மறை விலக்கம் செய்யவும் வசதி உண்டு.

**RO terminal** : ஆர் ஓ முனையம்; படிக்க மட்டுமான முனையம்.: தரவுகளை ஏற்றுக்கொள்ள மட்டுமே செய்து, அனுப்பீடு செய்யாத செய்தித் தொடர்பு எந்திரம்.

**round** : தோராயம்; ஏறத்தாழ; முழுமையாக்கம் : ஓர் எண்ணின் பின்னப் பகுதியின் இலக்கங் களைக் குறைக்கும் வழிமுறை (எ-டு): மூன்றாவது இலக்கம் வரை போதுமெனில் நான் காவது இலக்கம் 5 அல்லது அதற்குமேல் இருப்பின் மூன்றா வது இலக்க மதிப்பை ஒன்று கூட்டிக் கொள்ள வேண்டும்.

12.3456 → 12.346

நான்காவது இலக்க மதிப்பு 5-க்குக் குறைவாக இருப்பின் மூன்றாவது இலக்க மதிப்பை அப்படியே வைத்துக் கொள்ள வேண்டும்.

65.4321 → 65.432

கணினி நிரல்களில், இவ்வாறு முழுமையாக்கல் செயல் படுத்தப்படுவதால், கணக்கீடு களில் குழப்பம் வருவதுண்டு. (எ-டு) நான்கு மண்டலங்களில் விற்பனையாகும் ஒரு பொரு

ளின் விற்பனை சதவீதத்தை தனித்தனியே முழுமையாக்கிக் கூட்டும்போது, சிலவேளை களில் மொத்த சதவீதம் 99 அல்லது 101 வர வாய்ப்புண்டு.

**rounding :** முழு எண்ணாக்கு தல்; தோராயமாக்கல் : ஓர் எண் ணில் மிகச்சொற்பமான பின்னப் பகுதியை விட்டு விட்டு, அந்த எண்ணை அதற்கு மிக நெருக்க மான எண்ணுக்கு முழுமை யாக்குதல்.

**round off error :** தோராயமாக்கல் பிழை.

**round robin :** சுழற்சி அட்ட வணை; தொடர் சுழல் : சாதனம் அல்லது செய்முறை ஒவ் வொன்றின் முடிவில் ஒரு குறிப் பிட்ட சுழற்சி வருமாறு அட்டவணைப்படுத்தும் முறை.

**round the clock :** முழு நேரமும்; நாள் முழுதும்.

**round trip time :** வட்ட அடைவு நேரம்; சுழற்சி அடைவு காலம்.

**routable protocol :** திசைவிப்பு நெறிமுறை : பிணைய முகவரி அல்லது சாதன முகவரி மூல மாக ஒரு கணினிப் பிணையத் திலிருந்து இன்னொரு பிணை யத்துக்குத் தகவலைத் திசைப் படுத்தப் பயன்படும் தகவல் தொடர்பு நெறிமுறை. டீசிபீ/ ஐபீ, இத்தகு நெறிமுறைக்கு ஓர் எடுத்துக்காட்டு ஆகும்.

**router :** திசைவி; வழிச்செலுத்தி; வழிப்படுத்தி: இணையப் (இன்டர்நெட்) போக்குவரத்து தனது இலக்கினை அடை வதற்கு எந்தப்பாதையில் செல்ல வேண்டும் என்பதை முடிவு செய்யும் கணினி. ஒரு வழிச் செலுத்தி, தனது உள்முக இணையத்தின் உள்ளே அல்லது வெளியே போக்குவரத்தினைக் கட்டுப்படுத்துவதற்கு, இணை யத் தொகுதிகளை வடிகட்டிக் கொள்ளவும் முடியும்.

**routine :** வாலாயம் ; நிரல்; வழமை : ஒரு குறிப்பிட்ட பணியைச் செய்வதற்கான ஒரு குறுகிய செயல்முறைக் குறி யீட்டுத் தொகுதி. முக்கியமாக இணைப்பு மொழிச் செயல் முறைகளில் பயன்படுத்தப்படு கிறது. சிலசமயம், செயல் முறையை (Programme)குறிக்கவும் பயன்படுகிறது.

**routine, end of file :** கோப்பு ஈற்று நிரல்கூறு.

**routing :** செல்வழிப்படுத்துதல் : ஒரு செய்தியை அளிப்பதற்காக ஒரு பாதையினைக் குறித் தளித்தல்.

**routing function :** குறைசெயல் நிரல் கூறு.

routing receipient : திசைவிப்பு பெறுநர்.

row : வரிசை : 1. ஒரு வரிசையின் ஒரு வரியின் கிடைமட்ட எழுத்துகள். 2. துளையிட்ட அட்டையில் துளையிட்ட நிலையிடங்களில் கிடைமட்ட வரிகளில் ஒன்று. 3. ஒரு மின்னணுவியல் விரிதாளில் செங்குத்துப் பகுதிகள். நெடுவரிசைகளும் (columns) கிடைவரிசைகளும் சேர்ந்து அதில் விரிதாள் அச்சு வார்ப்புருவாக அமைகின்றன.

row, binary : இருமக் கிடக்கை.

row, column : நெடுக்கை, கிடக்கை

row, number : கிடக்கை எண்; வரி எண்.

row, pitch : புரி அடர்த்தி வரிசை.

row/record : கிடைக்கை/ஏடு.

row source : கிடக்கை மூலம்.

row source type : கிடக்கை மூல இனம்

royalty : புனைவுரிமைத் தொகை.

RPG : ஆர்பிஜி; 'அறிக்கைச் செயல்முறை உருவாக்கி' என்று பொருள்படும். 'Report Programme Generator' என்பதன் தலைப்பெழுத்துச் சொல். இது, வணிகம் சார்ந்த, பெரிதும் புகழ் பெற்ற செயல்முறைப்படுத்தும் மொழி. உயர்ந்த கட்டமைப்பு உடையது; எளிதில் கற்றுக் கொள்ளக்கூடியது. பல வணிகச் செயல்முறைப்படுத்தவும், அறிக்கைகள் தயாரிக்கவும் பயன் படுகிறது.

RPROM : ஆர்பிஆர்ஓஎம் : 'மறு செயல்முறை வகுத்திடத்தக்க படிப்பதற்கு மட்டுமேயான நினைவகம்' என்று பொருள் படும். 'Reprogrammable Read Only Memory' என்பதன் தலைப் பெழுத்துச் சுருக்கம்.

RSA encryption : ஆர்எஸ்ஏ மறையாக்கம் : 1978இல் திருவாளர்கள் ரொனால்டு ரைவெஸ்ட், ஆதிசமீர், லியோனார்டு ஆடில்மேன் ஆகிய மூவரும் இணைந்து உருவாக்கிய மறையாக்க முறை. மூவர் பெயர்களின் (Rivest Shamir-Adleman) முதலெழுத்துகள் இணைந்து ஆர்எஸ்ஏ ஆயிற்று. இந்த மறையாக்க முறையை அடிப்படையாகக் கொண்டு பீஜிபீ (PGP-Pretty Good Privacy) மறையாக்க நிரல் உருவாக்கப் பட்டது.

RS-232C : ஆர்எஸ் - 232சி : அச்சடிப்பிகள், கணினிகள் போன்ற முனையச் சாதனங்களுக்கும், அதிர்விணக்கி (Modulator), அதிர் விணக்கம் நீக்கி (Demodulator)

போன்ற செய்தித் தொடர்புச் சாதனங்களுக்குமிடையில் தகவல் செய்தித் தொடர்புகளுக்கான தரஅளவு. பெரும்பாலான நுண்கணினிகள் RS-232C இடைமுகப்புகளை அளிக்கின்றன.

**RS-422 : ஆர்எஸ்-422 :** மிக உயர்ந்த வேகத்தொடர் இணைப்பு வழிக்காக அண்மையில் உருவாக்கப்பட்டுள்ள தர அளவு.

**RTFM : ஆர்டீஎஃப்எம் :** ஒளிப் பிழம்பான (அல்லது தோழமையான) விளக்கக் குறிப்பேட்டைப் படி என்று பொருள்படும் Read the Flaming (or Friendly) manual' என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஓர் இணையச் செய்திக் குழுவில் அல்லது விற்பனைப் பொருள் அறிமுக கருத்தரங்குகளில் கேட்கப்படும் கேள்விகளுக்கு வழங்கப்படும் ஒரு வழக்கமான பதில். குறிப்பேட்டில் அக்கேள்விக்கான பதில் விளக்கமாகத் தரப்பட்டுள்ளது என்பது பொருள்.

**RTS : ஆர்டீஎஸ் :** அனுப்பி வைக்கக் கோரிக்கை என்று பொருள்படும் Request To Send என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். தகவலை அனுப்பி வைக்க அனுமதி கேட்டு, இணக்கிக்குக் கணினி அனுப்பும் ஒரு சமிக்கை. பொதுவாக நேரியல் (serial) தகவல் தொடர்பில் இது பயன்படுத்தப்படுகிறது. ஆர்எஸ்-232-சி இணைப்புகளில் 4-வது பின்னில் அனுப்பப்படும் வன்பொருள் சமிக்கையே ஆர்டீஎஸ் எனப்படுகிறது.

**.ru : .ஆர்யு :** ஓர் இணைய தள முகவரி ரஷ்ய நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**rubber banding : ரப்பர் கட்டுக் கம்பி;** ஒரு மின்னணுவியல் பேனா அல்லது நுண்பொறி மூலமாக காட்சித் திரையின் குறுக்கே, ஓர் அமைப்பானைத் தேவையான அமைவிடத்திற்குத் தடம் பெயர்க்க அனுமதிக்கும் கணினி உதவிபெற்ற வடிவமைப்பு (CAD) திறம்பாடு. இது ஒரே சமயத்தில், தொடர்புடைய இடை இணைப்புகள் அனைத்தும் குறியீடு தொடர்ந்து இருந்து வரும்படி செய்யும்.

**rubout key : நீக்கவிடைக் குறிப்பு;** ஒரு முனையத்தில் பதிவு செய்யப்பட்ட கடைசி எழுத்தினை நீக்கம் செய்கிற விசைப்பலகை விடைக் குறிப்பு.

**rudder control : சுக்கான் இயக்கு விசை :** விமானப் பறப்புப் பாவிப்பு நிரல்களில், பயனாளர்

ஒருவர் சுக்கான் அசைவுகளை உள்ளீடு செய்வதற்கு வசதியாக அமைந்துள்ள, ஓர் இணை (pair) மிதிகட்டைகள் அடங்கிய ஒரு சாதனம். இது பெரும்பாலும் ஒரு விசைப்பிடி (Joystick)யுடன் சேர்த்துப் பயன்படுத்தப்படும்.

**ruggedized computer :** கடுஞ் சூழல் கணினி : ஒரு விண் வெளிக்கலம், ஓர் ஏவுகணை, ஒரு கப்பல், ஒரு நீர் மூழ்கிக் கப்பல், ஒரு பீரங்கி, ஓர் உழவுச் சாதனம் போன்ற தனிப்பட்ட சூழல்களில் அமைத்திடும் வகையில் வடிவமைக்கப்பட்ட கணினி.

**rule :** விதிமுறை ; விதி : ஒரு மெய்க்கோளின் வடிவத்தை உருவாக்கி, ஒரு முடிவினைச் செய்கிற அறிக்கைகள். இந்த முடிவுகள், 'என்றால்' (IF) என்ற நிபந்தனையும், 'பின்னர்' என்ற முடிவினையும் கொண்ட விதி முறைகளாக இருக்கும்.

**rule based education :** விதி வழிக் கல்வி.

**rule-based knowledge :** விதி முறை சார்ந்த தரவு : விதி முறைகள் வடிவிலும், செயலறிக்கைகளிலும் அமைந்துள்ள தரவு.

**ruler :** அடிக்கோல், வரைகோல் : சொல்செயலி போன்ற பயன்பாட்டு நிரல்களில் திரையில் தோற்றமளிக்கின்ற, அங்குலம் அல்லது சென்டி மீட்டர்களில் (அல்லது பிற அலகுகளில்) அளவு குறிக்கப்பட்ட வரைகோல். இது பெரும்பாலும் ஒரு வரியின் நீளம், தத்தல் (tab) அமைவுகள், பத்தி உள் தள்ளிடம் (paragraph indent) தொடங்கிடங்களைத் தீர்மானிக்க உதவும். விசைப் பலகை அல்லது சுட்டியைப் பயன்படுத்தி தத்தல் நிறுத்தங்களை (tab stops) இதன் மீது உருவாக்க, நீக்க, மாற்றியமைக்க முடியும்.

**ruler line :** வரைகோல் கோடு ; வரைகோடு : வாசகத்தையும் வரைகலைகளையும் திட்டப்படுத்திக் காட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் வரைகலை வரையுரு.

**rules-based deduction :** விதிதரு அனுமானம்: பொறியமைவுக்கும் பயன்படுத்துவோருக்குமிடையிலான உரையாடலை வழிச் செலுத்துகிற எளிய விதிகளின் தொகுதியான குறித்துரைக்கப்படும் தரவுகளிலிருந்து முடிவுகளைப் பெறுவதற்கான உத்தி.

**run :** ஓட்டுதல் ; இயக்குதல் : ஒரு கணினியில், குறிப்பிட்ட தரவு தொகுதியினைக் கொண்டு, ஒரு செயல்முறையை ஒற்றையாக அல்லது தொடர்ச்சியாக நிறைவேற்றுதல்.

**run around : சுற்றோட்டம் :** மேசை வெளியீட்டுத் தொகுதியில், ஒரு வரைகலை உருக்காட்சியைச் சுற்றி வாசகங்களை அமைத்தல்.

**run commond : 'இயங்கு' நிரல்.**

**run database query : தரவுத்தள வினவல் இயக்கு.**

**run macro : குறுமம் இயக்கு.**

**run-length limited encoding : இயக்க நீள வரம்புறு குறியாக்கம் :** சுருக்கமாக ஆர்எல்எல் குறியாக்கம் எனப்படுகிறது. மிக விரைவான, திறன் மிகுந்த தரவு சேமிப்பு வழிமுறை. குறிப்பாக வட்டுகளில் அதிலும் குறிப்பாக நிலைவட்டுகளில் தரவுவைச் சேமிக்கும் முறை. தகவலின் ஒவ்வொரு துண்மியும் (பிட்) உள்ளபடியே சேமிக்கப்படுவதில்லை. குறிப்பிட்ட தோரணியில் அமைந்த துண்மி (பிட்)கள் குறிமுறையாக மாற்றப்பட்டு பதியப்படுகின்றன. தொடர்ச்சியாக வரும் சுழிகளின் (zeroes) எண்ணிக்கை அடிப்படையில் மின்புலம் தீர்மானிக்கப்படுகிறது. மிகக்குறைந்த மின்புல மாறுதல்களுடன் நிறைந்த அளவு தரவு சேமிக்க முடிகிறது. பழைய முறைகளான எஃப்எம் (FM-Frequency Modulation) மற்றும் எம்எஃப்எம் (MFM - Modified Frequency Modulation) ஆகிய முறைகளில் இதே அளவு தரவுவைச் சேமிக்க மிக அதிகமான இடம் தேவைப்படும்.

**run manual : ஓட்டக் கையேடு :** ஒரு கணினி இயக்கத்துடன் தொடர்புடைய செய்முறைப்படுத்துதல், பொறியமைவுச் செயல்முறை, தருக்கமுறைக் கட்டுப்பாடுகள், செயல்முறை மாற்றங்கள், செயற்பாட்டு நிரல்கள் ஆகியவற்றை ஆவணமாக்கிய கையேடு அல்லது நூல்.

**running foot : ஓடும் அடி :** சொல்செயலி ஆவணங்களில் ஒரு பக்கத்தின் அடி ஓரப் பகுதியில் பக்க எண், அத்தியாயப் பெயர், தேதி போன்றவை ஒன்று அல்லது பலவும் சேர்ந்து ஒரு வரியில் அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட வரிகளில் அமைவது.

**running head : ஓட்டத் தலைப்பு ;** ஓர் ஆவணத்தின் அல்லது நூலின் பக்கங்கள் அனைத்தின் உச்சியிலும் காணப்படுகிற வாசகம். இது, நிறுமத்தின் சின்னமாக அல்லது பக்க எண்ணாக இருக்கலாம்.

**running time : ஓட்ட நேரம் :** ஓர் இலக்குச் செயல்முறையை நிறைவேற்றுவதற்கு எடுத்துக் கொள்ளப்படும் நேரம்.

**run on top of : உச்சி மேலோட்டம்;** ஒரு செயல்முறைக்குக்

துணைமையாகவுள்ள துணைச் செயல்முறையினை அதன் கட்டுப்பாட்டுச் செயல்முறை யாக ஓட்டுதல். இது 'கீழோட் டம்' (Run under) என்பதிலிருந்து வேறுபட்டது.

**run time :** ஓட்ட நேரம்: கட்டுப்பாட்டு அலகு தரவு களைப் பெறுவதற்கும் கணிதத் தருக்கமுறை அலகில் உண்மை யில் செய்முறைப்படுத்துவதற் கும் எடுத்துக் கொள்ளப்படும் நேரம். இதனை 'நிறைவேற்ற நேரம்' (Execution time) என்றும் கூறுவர். இது 'தொகுப்பு நேரம்' (Compilation time)என்பதிலிருந்து வேறுபட்டது.

**run time array :** ஓட்ட நேர வரிசை : RPGஇல் செயல்முறை ஓடத் தொடங்கிய பிறகு, உட்பாடு அல்லது கணிப்புக் குறிப்புரைகள் மூலம் ஏற்றப் பட்ட அல்லது உருவாக்கப் பட்ட ஓர் வரிசை.

**run-time binding :** இயக்கநேரப் பிணைப்பு : மாறிலி (Variable), சுட்டு (pointer) போன்ற ஓர் அடையாளங்காட்டி எதைச் சுட்டுகிறது என்பதை ஒரு நிரலை மொழிமாற்றும் நேரத் தில் (compile time) குறிக்காமல், நிரல் இயங்கும் நேரத்தில் முடிவு செய்து கொள்ளும்படி விட்டுவிடுதல். இதனை காலந் தாழ்ந்த பிணைப்பு (Late Binding) என்றும் கூறுவர். இயங்கு நிலைப் பிணைப்பு (Dynamic Binding) என்றும் கூறலாம்.

**run-time error :** இயக்க நேரப் பிழை: ஒரு நிரலில் ஏற்படும் பிழைகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம். 1. இலக்கணப் பிழை (syntax error). இதனை, மொழிமாற்றி (compiler) சுட்டிக் காட்டிவிடும். மொழி மாற்றும் நேரப் பிழை எனலாம். 2. தருக்க முறைப் பிழை (Logical Error) : இப்பிழையை மொழி மாற்றியோ, கணினியோ கண்டு பிடித்துச் சொல்லாது. நிரல் முழுமையாக இயங்கும் ஆனால் பிழையான விடை கிடைக்கும். இதற்குக் காரணம் நிரலர் தருக்க முறையில்' செய்த தவறாகும். 3. இயக்க நேரப் பிழை (run-time error) : மொழி மாற்றி பிழை சொல்லாது. நிரல் முழுமையாக நிறைவேற்றப்படாது. இயக்க நேரச் சூழல் (Run Time Environ-ment) அல்லது கணினி முறை மையால் பிழை சுட்டப்பட்டு நிரல் பாதியிலேயே நின்றுவிடும்.

**run time exception :** இயக்கநேர விதிவிலக்கு.

**run-time version :** இயக்கநேரப் பதிப்பு; இயக்கநிலைப் பதிப்பு :

1. இயக்குவதற்குத் தயாரான நிலையில் இருக்கும் நிரல் தொகுப்பு. பொதுவாக, நிரல் குறிமுறை (எந்திர மொழிக்கு) மொழிமாற்றப்பட்டு, பிழைகள் களையப்பட்டு எவ்வகையான தரவு தொகுதிகளுக்கும் சரியாகச் செயல்படும்வண்ணம் தயார் நிலையில் வைக்கப்படும் தொகுப்பு. 2. ஒரு முழுமையான மென்பொருள் தொகுப்பில் இருக்கவேண்டிய அனைத்து வசதிகளையும் தராமல், ஒரு சிலவசதிகளுடன் மட்டுமே வெளியிடப்படும் ஒரு சிறப்பு வெளியீடு.

**run under** : கீழோட்டம் : ஓர் உயர்நிலைச் செயல்முறையின் கட்டுப்பாட்டின்கீழ் ஓடுதல். இது 'உச்சி மேலோட்டம்' (Run on top of) என்பதிலிருந்து வேறுபட்டது.

**run unit** : ஓட்ட அலகு ; ஒன்று சேர்த்து நிறைவேற்றப்படும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட பொருள் செயல்முறைகள். எடுத்துக்காட்டு : COBOL;PL/I

**run user** : ஓட்டப் பயனாளர் : தற்போது நிறைவேற்றிவரும் விரைவுப் பட்டியலிலுள்ள தோற்ற நிலைப் பொறி.

**run web querry** : வலை வினவல் இயக்கு.

**.rw** : .ஆர்டபிள்யூ : ஓர் இணைய தள முகவரி, ருவாண்டா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**R/W** : ஆர் / ட்பிள்யூ ; படி/ எழுத்து நினைவகம்.

**RXD** : ஆர்எக்ஸ்டி : தரவுகளை பெறுதல் (Receive Data) என்பதன் சுருக்கம். தரவு பரிமாற்றத்தில் நேரியல் (serial) முறையில் ஒரு சாதனத்திலிருந்து இன்னொரு சாதனம் தரவுவைப் பெறும் தடம். (எ-டு) இணக்கியிலிருந்து கணினிக்குச் செல்லும் தரவு, ஆர்எஸ் -232-சி இணைப்புகளில் மூன்றாவது பின்னில் பெறப்படுகிறது.

# S

.sa : .எஸ்ஏ : ஓர் இணைய தள முக வரி. சவூதி அரேபியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**SAA (System Appplication Architecture) : எஸ்ஏஏ (பொறி யமைவுப் பயன்பாட்டுக் கட்டிடக் கலை) :** இது, ஒரு வகை IBM தர அளவுகளின் தொகுதி. 1987இல் அறிமுகப்படுத்தப்பட்டது. நுண் கணினிமுதல் முதன்மைப் பொறியமைவு வரை IBMஇன் அனைத்துக் கணினிகளிடை யிலும் தொடர்ச்சியான இடை முகப்புகளை இது ஏற்படுத்து கிறது. பயன்படுத்துவோர் இடைமுகப்புகள், செயல் முறைப்படுத்தும் இடை முகப்பு கள், செய்தித்தொடர்பு மரபுகள் ஆகியவற்றினாலானது.

**sabermetrician : புள்ளியியல் வாதி :** புள்ளிவிவர வல்லுநர் களைக் குறிக்கும் வழக்குச் சொல். இவர் விளையாட்டு அணிகள் மற்றும் விளையாட்டு வீரர்களின் எதிர்காலச் சாதனை களை ஊகித்தறியக் கணினி களைப் பயன்படுத்துபவர்.

**Sad Mac : வருத்த மேக்; சோக மேக்:** ஆப்பிள் மெக்கின்டோஷ் கணினிகள் இயக்கப்படும்போது தொடக்கநிலைப் பரிசோதனை களில் தோல்வியடைந்தால் கிடைக்கும் பிழைக் குறிப்பு. ஒரு சோகமான முகம் கொண்ட மெக்கின்டோஷ் படம் அடியில் ஒரு பிழைச் செய்தியுடன் தோற்றமளிக்கும்.

**safe mode : தீங்கிலாப் பாங்கு; பாதுகாப்பு பாங்கு :** விண்டோஸ் 95/98 இயக்க முறைமைகளில் ஒரு வகை இயக்கப் பாங்கு. பெரும்பாலான புறச்சாதனங்கள் துண்டிக்கப்பட்டு, பெரும் பாலான இயக்கி நிரல்கள் நினைவகத்தில் ஏற்றப்படாமல் கணினியை இயக்கும் முறை. இதன் மூலம் பயனாளர் தன் கணினியில் ஏற்பட்டுள்ள சிக்கலைக் கண்டறிந்து சரி செய்துகொள்ள முடியும். பணி முடித்து முறைப்படி கணினி இயக்கத்தை நிறுத்தாவிட் டாலும், வேறுசில காரணங் களினால் கணினி இயக்கம்பெற முடியாமல்போகும்போதும் இவ்வாறு நிகழும்.

**sag : மின்னழுத்த வீழ்ச்சி :** மின் விசை ஆதாரத்திலிருந்து வரும் மின்னழுத்தம் தற்காலிகமாக வீழ்ச்சியடைதல். இது,

மின்னழுத்தப் பெருக்கத்தி லிருந்து வேறுபட்டது.

**salami technique :** சிறிதளவு கையாடல் செய்தல்; சலாமி கையாடல் உத்தி : பெருமளவு ஆதாரங்களில் சிறிதளவு உடைமைகளைத் திருடுதல். ஒரே சமயத்தில் சிறு துணுக் கினை களவாடும் கையாடல் உத்தி எனப்படும். எடுத்துக் காட்டு : பல வங்கிக் கணக்கு களிலிருந்து சில காசுகளைத் திருடுதல்.

**sales forecasting model :** விற் பனை முன்னறிவிப்பு உருமாதிரி ; விற்பனை முன் மதிப்பீட்டு முன் மாதிரி ; விற்பனை முன்கணிப்பு மாதிரி : ஒரு முன்னறிவிப்பின் ஒவ்வொரு கால அளவின் போதும் ஆண்டு விற்பனையை அதிகரிப்பதற்காகப் பயன் படுத்தப்படும் உருமாதிரி. உட் பாட்டுக் காரணிகளில் அங்காடி அளவுகள், விற்பனை விலை கள், அங்காடி வளர்ச்சிவீதம், போட்டியாளர் நடவடிக்கை களில் அங்காடி அளவுகளின் பங்கு பிற காரணிகள் இதில் அடங்கும்.

**SAM :** சாம் : வரிசைமுறை அணுகுமுறை என்று பொருள் படும் "Sequential Access Method" என்பதன் குறும்பெயர். இது, ஒரு வட்டுக் கோப்பில் தரவு களைச் சேமிக்கவும், அதி லிருந்து தரவுகளை மீட்கவும் பயன்படும் முறை.

**samna :** சாம்னா : சொந்தக் கணினிகளுக்கான முதலாவது செய்முறைப்படுத்திகளில் ஒன்று. இதனை 1983 -இல் சாம்னா நிறுவனம் தயாரித்தது. இப்போது இது, லோட்டசின் ஒரு பகுதி.

**sample :** மாதிரி.

**sample data :** மாதிரித் தரவு : ஒரு பாய்வு வரைபடம் தருக்க முறையில் இருக்கிறதா என்றும், ஒரு செயல்முறை செயற்படு கிறதா என்றும் அறிந்துகொள் வதற்குப் பயன்படுத்தப்படும் புனைவுகோள் தரவுத் தொகுதி.

**sampling :** மாதிரி எடுத்தல் : ஒரு சீரான அல்லது இடையிடை யிலான காலஇடைவெளிகளில் ஒரு மாறிலியின் ஒரு மதிப் பினைப் பெறுதல்.

**sampling rate :** மாதிரி வீதம் ; மாதிரி எடுப்பு வீதம் : மாதிரி நிகழ்கிற அடுக்கு வீதம்.

**sampling ratio :** மாதிரி விகிதம் : கலைப்பொருள்களை அல்லது ஒளிப்படங்களை மின்னணு முறையில் நுண்ணாய்வு செய் யும்போது, மூல உருக் காட்சியிலிருந்து பதிவு

செய்யப்படும் படக்கூறுகளின் எண்ணிக்கை. நுண்ணாய்வு செய்பவர் 300 டிபிஐ எனப் பதிவு செய்திருக்கலாம். ஆனால் இறுதியில் 150 டிபிஐ மட்டுமே பதிவாகியிருக்கும். இந்த விகிதம் 2 : 1 ஆகும்.

**sampling synthesizer : மாதிரி கூட்டிணைப்பி; மாதிரி இணைப் பாக்கி :** படிக்க மட்டுமேயான நினைவகத்தில் சேமித்து வைக் கப்பட்டுள்ள இலக்கமுறைப் படுத்தப்பட்ட ஒலியை அடிப் படையாகக் கொண்டு, பல் வேறு அலைவரிசைகளில் ஒலியை உருவாக்கிட வடி வமைக்கப்பட்ட சாதனம். எடுத்துக்காட்டாக, ஒரு பியானோ ஒலித்துணுக்கை இலக்கமுறைப்படுத்தி நினை வகத்தில் சேமித்து வைத்துக் கொண்டு, பியானோ இசையைப் போன்றே பல்வேறு இசைத் துணுக்குகளை இணைப் பாக்கியில் உருவாக்கலாம்.

**sans serif : நுண்வரையிலா எழுத்துரு :** நுண்வரைகள், அலங் காரமாக அகன்ற அடித்தளங்கள், உச்சிக் கொண்டைகள் இல்லாத எழுத்து முகப்புகள்.

**SAPI : சேப்பி; எஸ்ஏபீஐ :** குரலறி பயன்பாட்டு நிரலாக்க இடை முகம் என்று பொருள்படும் Speech Application Programming Interface என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். விண்டோஸ் 95/98/ என்டீ இயக்கமுறைமைகளில் பயன் பாட்டுத் தொகுப்புகள் குரல் உணர்தல் மற்றும் உரையைப் பேச்சாக மாற்றல் போன்ற வசதிகளை உருவாக்கிக்கொள்ள முடியும்.

**sapphire : நீலமணி; நீலக்கல் :** சில வகை ஒருங்கிணைந்த சுற்று வழிச் சிப்புகளுக்கான கீழடுக்காகப் பயன்படுத்தப்படும் பொருள்.

**SAS : எஸ்ஏஎஸ் (புள்ளியியல் பகுப்பாய்வுப் பொறியமைவு) :** இது எஸ்ஏஎஸ் இன்ஸ்டிடியூட் என்ற நிறுவனம் தயாரித்துள்ள ஒருங்கிணைந்த புள்ளியியல் தொகுதி. இதில், தரவு நிரு வாகம், விரிதாள், சிபிடீ, (CBT) முன்னிடு வரைகலை, திட்ட நிருவாகம், நீட்சிமுறைச் செயல் முறைப்படுத்துதல், செயற் பாட்டு ஆராய்ச்சி, அட்டவணைப் படுத்துதல், புள்ளியியல் தரக் கட்டுப்பாடு, பொருளியல், நேரத் தொடர் பகுப்பாய்வு, கணிதப் பொறியியல், புள்ளியியல் பயன்பாடுகள் அடங்கியுள்ளன

**SASI (Shugart Associates Systems Interface) : எஸ்ஏஎஸ்ஐ : (ஷுகார்ட் அசோசியேட்ஸ் சிஸ்டம்ஸ் இன்டர்ஃபேஸ்) :** ஷுகார்ட் மற்றும் என்சிஆர்

நிறுவனங்கள் 1981இல் தயாரித்த புறநிலை இடைமுகப்புகள். இது 1986இல் ஏஎன்எஸ்ஐ மற்றும் எஸ்சிஎஸ்ஐ தரஅளவு களுடன் உருவாக்கப்பட்டது.

**SATAN (System Administrator's Tools for Analyzing Networks) :** சாட்டன் : பிணையங்களைப் பகுப்பாய்வு செய்வதற்கான பொறியமைவு நிருவாகியின் சாதனம். இது, பெரிதும் கவலை யளிக்கும் ஒரு நிகழ்வுக்கான பாதுகாப்புச் சாதனம். இது இன்றும் பயன்படுகிறது.

**satellite : செயற்கைக்கோள்; துணைக்கோள் :** செய்தித் தொடர்புச் சைகைகளை நெடுந் தூரம் அஞ்சல் செய்யக்கூடிய, பூமியைச் சுற்றிவரும் சாதனம்.

**satellite channel : செயற்கைக் கோள் அலைவரிசை ; துணைக் கோள் அலைவரிசை :** செயற்கைக் கோள் . . அனுப்பீட்டுக்காகப் பயன்படுத்தப்படும் ஊர்தி அலைவெண்.

**satellite communications : செயற்கைக்கோள் செய்தித் தொடர்பு; துணைக்கோள் செய்தித்தொடர்பு :** உலகெங்கும் தகவல்களை அனுப்புவதற்காக சுழன்றுவரும் நுண்ணலை அஞ்சல்களைப் பயன் படுத்துதல்.

**satellite computer : கிளைக் கணினி; துணைக்கோள் கணினி :** 1. கூடுதல் கணினி. இது பொது வாகச் சிறிய அளவில் இருக் கும். இது பெரிய கணினிப் பொறியமைவுக்கு உதவிகரமாக இருக்கும். இது கீழ்நிலை செயற்பணிகளைச் செய்தால், செய்முறைப்படுத்துதல் சிக்கன மாக இருக்கும். 2. ஒரு தொடர் பற்ற துணைக் கணினி.

**satellite dish antennae : செயற் கைக்கோள் வட்டில் வானலை வாங்கி :** இது ஒரு பிரதிபலிப்பி. இதன் மேற்பரப்பு ஒரு கோளம் போன்று உட்குழிவாக இருக் கும். இது செயற்கைக்கோள் களைக் கையாள்வதற்கு வட்டில் வானலை வாங்கியாகப் பயன் படுத்தப்படுகிறது.

**satellite link : செயற்கைக்கோள் இணைப்பு :** பூமியிலிருந்து ஒரு செய்தித்தொடர்புச் செயற்கைக் கோளுக்குச் சென்று மீண்டும் பூமிக்குத் திரும்பி வரும் சைகை. இது, தரைவழி இணைப்புக்கு மாறுபட்டது.

**satellite orbit : செயற்கைக்கோள் சுற்றுப்பாதை :** செயற்கைக் கோள் சுற்றிவருகிற சுற்றுப் பாதை.

**saturate : பூரிதமாக்குதல்; திகட்டுதல் :** எந்த அளவு

அதிகமாக ஈர்க்கும்படி செய்ய முடியுமோ அந்த அளவுக்கு அதிகமாக ஈர்க்கும்படி செய்தல். ஒரு வட்டில் அனைத்துத் தடங்களும் நிரப்பப்பட்டிருந் தால் அது பூரிதமாக்கப்பட்டு விட்டது என்று பொருள்.

saturated mode : பூரிதப் பாங்கு; முற்றுநிலைப் பாங்கு : ஒரு நிலைமாற்றுச் சாதனம் (switching device) அல்லது ஒரு பெருக்கியின் ஊடே பாய்கின்ற மின்னோட்டம் உச்ச அளவை எட்டிய நிலை. இந்த நிலையில் உள்ளீட்டுக் கட்டுப்பாட்டு சமிக் கையின் அளவை எவ்வளவு அதிகரித்தாலும் வெளியீட்டு மின்னோட்டத்தில் எவ்வித மாற்றமும் ஏற்படுவதில்லை.

saturation : பூரிதம்; முற்றுநிலை; முழுநிறைவு : 1. ஒரு நிலை மாற்றுச் சாதனம் அல்லது பெருக்கியின் முழு கடத்து நிலை. இந்த முற்றுநிலையில், இவற்றின் ஊடே உச்சஅளவு மின்னோட்டம் பாய்ந்து கொண் டிருக்கும். இருதுருவ (bipolar) மற்றும் புல-விளைவு (field-effect) மின்மப் பெருக்கிகளைக் கொண்ட மின்சுற்றுகள் குறித்தே பெரும்பாலும் இச்சொல் பயன் படுத்தப்படுகிறது. 2. வண்ண வரைகலையிலும், அச்சுத்துறை யிலும் ஒரு குறிப்பிட்ட நிறக் கலவையில் ஒரு குறிப்பிட்ட நிறத்தின் அளவு முற்றுநிலை பெற்றதாகக் குறிப்பிடுவர்.

save : சேமி; வேறிடச் சேமிப்பு : கணினியின் உள்முக நினைவகத் தில் அல்லாமல், ஒரு நாடா, வட்டு போன்ற வேறிடங்களில், மீண்டும் பயன்படுத்தும் வகை யில் தகவல்களைச் சேமித்து வைத்தல்.

Save as HTML : ஹெச்டீஎம்எல் ஆக சேமி.

Save as Type : வகையில் சேமி.

save record : ஏட்டைச் சேமி.

save results : விடைகளைச் சேமி.

Save/Save As : சேமி/எனச் சேமி.

save workspace : பணி வெளியைச் சேமி.

saving : சேமித்தல்.

.sb : .எஸ்பி : ஓர் இணைய தள முகவரி சாலமன் தீவுகளைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

s-100 bus : எஸ்-100-பாட்டை : இன்டெல் 8080, ஸிலாக் இஸட்-80 நுண்செயலிகளை அடிப் படையாகக் கொண்ட கணினி களின் வடிவமைப்பில் பயன் படுத்தப்பட்ட 100 (பின்கள்)

இணைப்பூசிகள் கொண்ட பாட்டை வரன்முறை. மோட்டோராலா 6800, 68000, இன்டெல் ஐஏபீx86 குடும்ப நுண்செயலிகளைக் கொண்ட கணினிகளும் எஸ்-100 பாட்டையின் அடிப்படையில் உருவாக்கப் பட்டவை. தொடக்ககால கணினி ஆர்வலர்களிடையே எஸ்-100 கணினிகள் மிகவும் செல்வாக்குப் பெற்று விளங்கின. அவை திறந்த நிலைக் கட்டுமான அமைப்பைக் கொண்டவை. பயனாளர் விருப்பத்திற்கேற்ப பல்வேறு வகைப் பட்ட கூடுதல் விரிவாக்கப் பலகைகளைப் பொருத்திக் கொள்வதற்கு இடமளிப்பதாய் அவை விளங்கியதே இதற்குக் காரணம்.

**.sc** : .எஸ்சி : ஓர் இணைய தள முகவரி செய்ச்செலீஸ் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**scalable** : விரிவாக்கத்தக்க : வடிவளவிலும், தோற்றத்திலும் மாற்றம் செய்யத்தக்க.

**scalability** : தகடாகும் தன்மை : விரிவடையும் திறன் வளர்ச்சிக்கு உதவுவதற்கு நடப்பு நடைமுறைகளில் குறைந்த அளவு மாற்றத்தைக் குறிக்கிறது.

**scalable font** : விரிவாக்க எழுத்துரு : ஓர் ஆவணத்தைக் காட்சியில் காட்ட அல்லது அச்சிட வேண்டியிருக்கும்போது, தேவையான புள்ளி அளவுக்கு உருவாக்கப்படும் எழுத்து கணினியில் பல்வேறு எழுத்து உருக்களை சேமித்து வைப்பதை விரிவாக்க எழுத்து முகப்பு தவிர்க்கிறது.

**scalable parallel processing** : அடையத்தக்க இணைநிலைச் செயலாக்கம் : பல்முனைச் செயலாக்கக் கட்டுமானத்தில் ஒருவகை. அதிகச் சிக்கலின்றி, செயல்பாட்டுத் திறனுக்குக் குறைவு நேராவண்ணம் கூடுதல் செயலிகளை இணைத்துக் கொள்ள முடியும்; கூடுதல் பயனாளர்களை உருவாக்கிக் கொள்ள முடியும்.

**scalable type face** : விரிவாக்க எழுத்துமுகம் : எந்த வடிவளவுக்கும் விரிவாக்கம் செய்யத்தக்க வகையில் வடிவமைக்கப்பட்ட எழுத்துகள், எண்கள், நிறுத்தற் குறிகள், குறியீடுகள் ஆகியவற்றின் ஒரு தொகுதி.

**scalar** : ஒற்றைமதிப்பு; அளவீடு; அளவுரு : ஏடு (record), கோவை (array), நெறியம் (vector) போன்ற சிக்கலான தரவு கட்டமைப்புபோல் இல்லாமல்

ஒற்றை மதிப்பை மட்டுமே கொண்டுள்ள ஒரு காரணி, ஒரு குணகம் அல்லது ஒரு மாறிலியை இது குறிக்கும். AB என்கிற ஒரு நெறியம், தொடக்கப்புள்ளி இறுதிப்புள்ளிக்கிடையே தொலைவு மற்றும் திசைப் போக்கு ஆகிய இரண்டு விவரங் களைக் கொண்டுள்ளது. ஆனால் AB என்று மட்டுமே குறித்தால், தொலைவை மட்டுமே குறிக்கும் ஓர் அளவீடு ஆகும்.

**scalar data type :** ஒற்றைமதிப்பு தரவு இனம் : இதைவிடப் பெரியது, அதைவிடச் சிறியது என்று ஒப்பிட்டுச் சொல்லத்தக்க தொடர் மதிப்புகளைக் கொண்டிருக்கும் தரவு இனம். முழு எண் (Integer), எழுத்து (Character), பயனாளர் வரையறுக்கும் எண்ணல் வகை (user defined enumerated type), பூலியன் ஆகிய தரவு இனங்களையும் இந்த வகையில் அடக்கலாம். மிதவைப்புள்ளி எண்களை இந்த வகையில் சேர்ப்பதில் இருவேறு கருத்துகள் நிலவு கின்றன. அவற்றையும் வரிசைப் படுத்தமுடியும், ஒப்பிட முடியும் என்றபோதிலும் தோராய மாக்கல், இனமாற்றத்தில் ஏற்படும் பிழைகளைக் கருத்தில் கொண்டு புறக்கணிப்பாரும் உளர்.

**scalar processor :** ஏறுமுகச் செய்முறைப்படுத்தி : ஒரே சமயத்தில் ஓர் இலக்கத்தில் கணிதக் கணிப்புகளைச் செய்யக் கூடிய கணினி. இது செயலகச் செய்முறைப்படுத்தியினின்றும் மாறுபட்டது.

**scalar value :** ஏறுமுக மதிப் பளவு : ஒரு செயல்முறைப் படுத்தும் மொழியில் ஏறுமுக மதிப்பளவு என அறிவிக்கப் பட்ட பகுபடா எண். இது ஒரு குறிப்பிட்ட அளவுக்குள் மதிப் பளவினைக் கொண்டிருக்கும். இது நெறியம் (vector) என்பதிலிருந்து வேறுபட்டது.

**scalar variable :** ஏறுமுக மாறிலி: செயல்முறைப்படுத்துவதில் ஒரேயொரு மதிப்பளவை யுடைய ஒரு மாறியல் மதிப்புரு.

**scale :** அளவுகோல் : *1.* இருக்கக் கூடிய சேமிப்பு அமைவிடத் திற்குள் பொருந்தும் வகையில் ஓர் எண்ணளவின் அளவினைச் சரியமைவு செய்தல். *2.* ஒரு வரைகலைக் கோப்பினை ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் பொருந்தும்படி செய்வதற்காக அதன் வடிவளவை ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மாற்று தல். *3.* வடிவளவு வரம்புகளுக் குள் பொருந்தும் வகையில் வரைகலைத் தரவுகளின்

எண்ணளவைப் பெருக்குதல் அல்லது வகுத்தல்.

**scale factor :** அளவுகோல் காரணி; அளவு காரணி; அளவு மாற்றுக்காரணி : ஒரு கணக்கில் வரும் எண்ணளவுகளைப் பெருக்குவதற்கு அல்லது வகுப்பதற்கு, மற்றும் அவற்றை வேண்டிய அளவுக்கு மாற்றுவதற்கும் பயன்படுத்தப்படும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட காரணிகள்.

**scaling :** அளவுமாற்றம் ; அளவிடல் : ஓர் உருக்காட்சியின் வடிவளவினை மாற்றும் செய்முறை. ஓர் உருக்காட்சியின் எல்லாப் பரிமாணங்களையும் நான்கு மடங்காக உருமாற்றம் செய்தல்.

**scan :** வருடு ; வருடல் ; நுண்ணாய்வு : *1.* தருக்கமுறை வரிசைமுறையில் புள்ளி புள்ளியாக ஆய்வு செய்தல். *2.* ஒரு தரவு கட்டமைப்பின் ஒவ்வொரு மைய முனையையும் பார்வையிடுவதற்கான அல்லது பட்டியலிடுவதற்கான பதின்முறை எண்மான நடைமுறை. *3.* ஒரு கண்காட்சித் திரையில் ஓர் உருக்காட்சியை உருவாக்குவதற்குத் தேவையான செயற்பாடு.

**scan area :** வருடுப் பகுதி; வருடல் பரப்பு ; நுண்ணாய்வுப் பகுதி : ஓர் ஒளியியல் எழுத்துப் படிப்பி மூலம் நுண்ணாய்வு செய்யப்படவிருக்கும் தகவல்களைக் கொண்டிருக்கிற ஓர் ஆவணப் படிவத்தின் பகுதி.

**scan code :** வருடல் குறியீடு ; நுண்ணாய்வுக் குறியீடு : விசைப் பலகையில் ஒரு குறிப்பிட்ட விசையை அழுத்தும் போது அல்லது விடுவிக்கும் போது, அதனால் உருவாக்கப் படும் எண்மானக் குறியீடு. இது *8048* விசைப்பலகை நுண்செய் முறைப்படுத்தியிலிருந்து *8255* புறநிலை இடைமுகப்புக்கு அனுப்பப்படும் ஒரு குறியீட்டு எண். இது, எந்த விசை அழுத்தப்பட்டிருக்கிறது அல்லது விடுவிக்கப்பட்டிருக்கிறது என்பதைத் தெரிவிக்கும். பிறகு, விசைப்பலகை நுண்ணாய்வுக் குறியீடுகளை ASCII குறியீடுகளாக மாற்றும்.

**scan head :** வருடல் தலைப்பு ; நுண்ணாய்வுத் தலைப்பு : இது நுண்ணாய்வு அல்லது தொலை நகலிச் செய்தியில் உள்ள ஒளியியல் உணர்வுச் சாதனம். இது நுண்ணாய்வு செய்யப்பட வேண்டிய உருக்காட்சியின் குறுக்கே நகர்த்தப்படும்.

**scan line :** வருடல் வரி ; நுண்ணாய்வு வரி : ஒரு வரைகலைச்

சட்டகத்திலுள்ள பல இடை மட்ட வரிகளில் ஒன்று.

**scanner** : வருடி; நுண்ணாய்வுக் கருவி; சுட்டும் கருவி : குறிப்பிட்ட காட்சி சைகைகளை உணர்ந்தறியக்கூடிய ஓர் ஒளியியல் சாதனம்.

**scanner channel** : வருடி அலைவரிசை; வருடல் தடம்; நுண்ணாய்வு வழி : தனிவழிகளில் அனுப்பீடு செய்வதற்கான தரவுகள் ஆயத்தமாக இருக்கின்றனவா என்பதைக் கண்டறிவதற்கான சாதனம்.

**scanner scatter plot** : வருடு பரவல் வரைவு; நுண்ணாய்வுப் பரவல் வரைவு : இரு தரவுத் தொகுதிகளிடையிலான தோராய இடைத்தொடர்பினைக் காட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் ஒருவகை வரைபடம். தரவுப் புள்ளிகள் வரைபடத்தில் தனித் தனிப்புள்ளிகளாகச் சிதறலாக அமைவதால் இது பரவல் வரைவு என்றும் அழைக்கப்படுகிறது. இவற்றின் உண்மையான அமைவிடங்கள் வரைபடத்தின் நிலையளவுருக்களினால் வரையறுக்கப்படுகிறது.

**scanning** : வருடுதல்; நுண்ணாய்வு செய்தல் : ஒரு கணினியின் தரவுப் பட்டியல், ஒரு குறிப்பிட்ட நிபந்தனையை நிறைவேற்றியுள்ளதா என்பதைக் கண்டறிவதற்காக அதிலுள்ள ஒவ்வொரு இனத்தையும் விரைவாக ஆய்வு செய்தல்.

**scan path** : வருடல் பாதை; நுண்ணாய்வு வழி : ஒளியியல் நுண்ணாய்வில், படிக்கப்பட வேண்டிய தரவுகளை எங்கு கண்டறிய வேண்டுமோ அந்தத் தெளிவான பகுதி. நுண்ணாய்வு வழியின் அமைவிடமும், படிக்கவேண்டிய தரவுகளின் அளவும் பொதுவாகப் பயன்படுத்தப்படும் எந்திரத்தைப் பொறுத்திருக்கின்றன.

**scan rate** : வருடல் வீதம்; நுண்ணாய்வு வீதம் : ஒரு நுண்ணாய்வுச் சாதனம் தனது காட்சிப்புலத்தில், ஒரு வினாடியில் எத்தனை தடவை மாதிரி எடுக்கிறது என்ற எண்ணிக்கை.

**scatter diagram** : பரவல் வரையுரு; சிதறல் வரையுரு : ஒவ்வொரு தரவுப் புள்ளியிலும் புள்ளிகள் அல்லது வேறு குறியீடுகள்மூலம் வரையப்படும் வரைபடம். இதனைச் சிதறல் வரைவு அல்லது புள்ளி வரைபடம் என்றும் கூறுவர்.

**scatter plot** : சிதறல் வரைவு; பிரி புள்ளி : ஒவ்வொரு தரவு முனையிலும் ஒரு புள்ளியை அல்லது சைகையினை வரை

வதன்மூலம் இருமாறியல் அலைவெண் பகிர்மானத்தைக் காட்டுகிற வரைவு. சில சமயம், இரு அச்சுகளில் குறிக்கப்படும் மாறியல் மதிப்புருக்களுக்கிடையிலான தொடர்பினைக் காட்டுவதற்கு ஒரு வளைவு அல்லது ஒரு கோடு சேர்க்கப்படுகிறது. இதனைச் சிதறல் வரைபடம் என்றும் கூறுவர்.

**scatter read/gather write :** பிரித்துப் படி/சேர்த்து எழுது ; சிதறல் படிப்பு/சேகரித்து எழுது : ஓர் உட்பாட்டுப் பதிவேட்டிலிருந்து அண்டையில் இல்லாத சேமிப்புப்பகுதிகளில் வைப்பதை சிதறல் படிப்பு குறிக்கிறது. அண்டையில் அல்லாத சேமிப்புப் பகுதிகளிலிருந்து ஓர் ஒற்றை இயற்பியல் பதிவேட்டில் தகவல்களை வைப்பதைக் குறிக்கிறது.

**scenaries :** சூழ்நிலைக் காட்சிகள்.

**schedule :** கால அட்டவணை : குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட தகவல்களை குறிப்பிட்டவாறு செயல்படுத்த கணினியை நிரல்படுத்தல்.

**scheduled maintenance :** கால முறைப் பராமரிப்பு; திட்டமிட்ட பேணுதல் : கணினிப் பொறியமைவின் நம்பகத்தன்மையைப் பேணுவதற்காகக் குறிப்பிட்ட கால இடைவெளிகளில் அதனைப் பேணிவருதல்.

**scheduled report :** காலமுறை அறிக்கை; குறிப்பிடப்பட்ட அறிக்கை; திட்டமிட்ட அறிக்கை : பயன்படுத்துவோருக்குச் சீரான கால இடைவெளிகளில் வாலாயத் தகவல்களை அளிப்பதற்காகத் தயாரிக்கப்படும் அறிக்கை.

**scheduler :** பட்டியலிடுபவர் ; கால முறைப்படுத்தி : செய்முறைப்படுத்துவதற்காகப் பணிகளைக் காலமுறைப்படுத்துகிற செயல்முறை.

**scheduling :** பட்டியலிடல்; கால முறைப்படுத்தல் : 1. ஒரு பன்முகச் செயல் முறைப்படுத்தும் கணினி மையத்தில் அடுத்து வரும் செயல்முறைகள் எவை என்பதைத் தீர்மானிப்பதற்கான பணி. 2. பகிர்ந்து கொள்ள முடியாத ஆதாரங்களை ஒதுக்கீடு செய்தல். எடுத்துக்காட்டு : மையச் செயலகம் அல்லது ஒருங்கிணைந்த மின்சுற்று வழிச் சாதனத்தை ஒரு குறிப்பிட்ட மணிக்கு, ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு ஒதுக்கீடு செய்தல்.

**scheduling algorithm :** அட்டவணை எண்மானம்; திட்டமிடலும் நெறி முறையும் : நிறைவேற்றவேண்டிய பணிகளை அட்டவணைப்படுத்தும் முறை.

இதில் முந்துரிமை, பணி வரிசையில் கால நீட்சி, கைவச முள்ள வள ஆதாரங்கள் ஆகி யவை இடம் பெற்றிருக்கும்.

**schema** : அமைப்பு முறைகள் ; (தரவுத் தள நிர்வாக மொழி களில் ஒன்று) : தரவுத் தளத்தின் கட்ட மைப்பினை வரையறுப் பதற்காக தரவுத் தள நிருவாகி யினால் பயன்படுத்தப்படும் உயர்நிலைக் கணினி மொழி.

**schematic** : திட்ட முறை யிலான; அமைப்புப் படம்; திட்ட முறை வரைபடம் : அமைப்பு களின் தொடர்புகளையும் அடையாளத்தையும் காட்டுகிற ஒரு மின்னணுச் சுற்றுவழியின் வரைபடம்.

**schematic symbols** : திட்ட முறைச் சைகைகள்; திட்ட முறைக் குறியீடுகள்; அமைப்புக் குறியீடுகள் : திட்ட முறை வரைபடங்களில் பயன்படுத்தப் படும் குறியீடுகள்.

**Scheutz, George** : ஷியூட்ஸ், ஜார்ஜ் (1785-1873) : இவர் 1834இல், சார்லஸ் பாபாஜின் எந்திரம் போன்ற ஓர் எந் திரத்தை உருவாக்கத் தொடங் கினார். இந்த எந்திரம் செய்து முடிக்கப்பட்டு, கணித அட்டவணைகளை அச்சடிக்கப் பயன்படுத்தப்பட்டது.

**Schickhardt, Wilhelm (1592-1635)** : ஷிக்ஹார்ட், வில்ஹெல்ம் (1592-1635) : ஜெர்மன் கணிதப் பேராசிரியர். கணிப்பு எந்திரத்தை 1624இல் கண்டு பிடித்தவர்.

**schottky diode** : ஸ்காட்கி இரு முனையம் : ஒரு திசையில் மட்டுமே மின்னோட்டத்தை அனுமதிக்கும் இரு முனையத் தில் ஒருவகை. இதில் ஒரு குறைகடத்தி அடுக்கும் ஓர் உலோக அடுக்கும் ஒன்றுசேர இணைக்கப்பட்டிருக்கும். அதி விரைவான நிலைமாற்று வேகமே (switching speed) இதன் சிறப்புக் கூறு.

**scientific applications** : அறி வியல் பயன்பாடுகள் : மரபாக எண்களை அடிப்படையாகக் கொண்ட, முன்னேறிய பொறி யியல் கணித அல்லது அறி வியல் திறம்பாடுகள் தேவைப் படுகிற பணிகள். வணிகப் பயன்பாடுகளின் விரிவான கோப்புக் கையாளும் திறம்பாடு கள் அரிதாகத் தேவைப்படும்.

**scientific computer** : அறிவியல் கணினி : அதிவேகக் கணிதச் செய்முறைப்படுத்தலுக்கான தனி வகைக் கணினி.

**scientific language** : அறிவியல் மொழி : கணிதச் செய்முறைப்

படுத்தலுக்காக வடிவமைக்கப் பட்ட செயல் முறைப்படுத்தும் மொழி. ALGOL, FORTRAN, APL போன்றவை இவ்வகையின. செய்முறைப்படுத்தும் மொழிகள் அனைத்தும் இந்த வகைச் செய்முறைப்படுத்தலை அனுமதித்தாலும், ஓர் அறிவியல் மொழியிலுள்ள கட்டளைகள், இந்த நடவடிக்கைகளை வெளிப் படுத்துவதை எளிதாக்குகின்றன.

**scientific method : அறிவியல் முறை :** ஒருவகைப் பகுப் பாய்வு முறைமையியல். இதில், உணர்ந்தறியும் நிகழ்வு, அந்த நிகழ்வின் காரண காரியங்கள் பற்றிய ஒரு முற்கோளை (Hypothesis) வகுத்தமைத்தல், பரி சோதனை மூலம் அந்த முற் கோளைச் சோதனை செய்தல், அந்தப் பரிசோதனைகளின் முடிவுகளைக் கணித்தறிதல், அந்த முற்கோள் பற்றி முடிவு கள் எடுத்தல் ஆகியவை உள்ளடங்கும்.

**scientific notation : அறிவியல் குறிமானம்; அறிவியல் குறியீடு :** எண்கள் ஒரு குறிப்பிட்ட இலக்குப் பகுதியாக அல்லது பொருத்தமான 10-இன் வர்க்கத் தின் அல்லது விசைக் குறி எண் ணின் மடக்கையின் பதின்மான மடங்குகளாக எழுதப்படுகிற குறிப்பான முறை. எடுத்துக் காட்டு: $0.32619 \times 10^7$ அல்லது 0.32619E+07 = 32,61,900.

**sci.newsgroups : அறி.செய்திக் குழுக்கள்; சை.நியூஸ்குரூப்ஸ் :** sci. (அறிவியல்) என்று தொடங் கும், யூஸ்நெட் செய்திக் குழு வின் படிநிலை அமைப்பு. கணினி அறிவியல் தவிர்த்த பிற அறிவியல் ஆய்வு மற்றும் பயன் பாடுகள் குறித்த விவாதங்கள் நடைபெறும் செய்திக் குழுக் களைக் குறிக்கும்.

**scissoring : கத்தரித்தல் :** பயன் படுத்துவோரின் குறிப்பிட்ட எல்லைகளில் அமைந்துள்ள காட்சிச் சாதனத்தில் ஒரு வடி வமைப்பின் பகுதிகளைத் தானாகவே அழித்துவிடுதல் அல்லது வெட்டிவிடுதல்.

**SCM : எஸ்சிஎம் :** கணினி மருத்துவக் கழகம் எனப் பொருள்படும் Society for Computer Medicine என்ற ஆங்கிலத்தொடரின் குறும் பெயர். இந்தக் கழகம், மருத் துவப் பயன்பாடுகளில் தானி யக்க முறையைப் பயன்படுத்து வதை வலியுறுத்துவதற்காக மருத்துவர்களையும் கணினி அறிவியலாளர்களையும் ஒருங் கிணைக்கிறது.

**scope : காட்சிப் பரப்பு ; நோக் கெல்லை; செயல் எல்லை :** ஒரு

மென்பொருள் செயல் முறையின் கட்டுப்பாட்டுப் பரப்பெல்லை. 1. ஊசல் மானி, பொதுக்காட்சி முனையம் போன்றவற்றில் பயன்படுத்தப் படும் CRT வகைத் திரை. 2. செயல்முறைப்படுத்துவதில், ஒரு செயல்முறைக்குள் உள்ள மாறியல் உருக்களின் காட்சித் திறன். 3. தரவுத் தளத்தில் "அடுத்த 50 ", "கோப்பு முடிவு வரையிலான நடப்புப் பதிவு" என்பன போன்ற பல்வேறு பதிவுகள்.

**SCO open desktop** : ஸ்கோ திறந்தநிலை மேசைப்பொறியமைவு : 386-களுக்கான பலர் பயன்படுத்தும், உள்ளபடியான நினைவக வரைபடச் செயற்பாட்டுப் பொறியமைவு. UNIX, XENIX, DOS, X-பலகணிப் (விண்டோஸ்) பயன்பாடுகள் ஆகியவற்றை இயக்கும் SCO-சிலிருந்து வெளியிடப் பட்டது.

**SCR** : எஸ்சிஆர் : சிலிக்கன் கட்டுப்பாட்டு மின்மாற்றுக் கருவி என்று பொருள்படும். 'Silicon Controlled Rectifier' என்ற ஆங்கிலத் தொடரின் தலைப் பெழுத்துச் சுருக்கம். இது பெருமளவு நேர்மின்னோட்டத்தை அல்லது மின்னழுத்தத்தைக் கட்டுப்படுத்தப் பயன்படும் ஒரு மின்கடத்தாச் சாதனம். இதன் இயல்புகள், பழைய வெற்றிடக் குழல் தைராட்ரானைப் போன்றவை. எனவே, இதனைச் சிலசமயம் "தைரிஸ்டர் " (thyristor) என அழைக்கின்றனர்.

**scrambler** : உந்தியேறு கருவி : பூட்டு விசைக்காகத் தரவுகளைக் குறியீடுகளாக்குவதற்கான சாதனம் அல்லது மென்பொருள் செயல் முறை.

**scrambling** : உந்தி ஏறுதல் : மறை நீக்கம் செய்ய முடியாதவாறு தரவுகளைக் குறியீடாக்குதல்.

**scrap** : துண்டு; துணுக்கு : கணினித் தரவு சேமிப்பில், வேறிடம் நகர்த்தவோ, நகலெடுக்கவோ, அழிக்கவோ குறிக்கப்பட்டுள்ள விவரங்கள் அடங்கிய ஒரு பயன்பாடு அல்லது ஒரு முறைமைக் கோப்பு.

**scrapbook** : ஒட்டுப் புத்தகம்; கிறுக்கும் நூல்;வரைவு நூல் : ஆவணங்களில் அடிக்கடிப் பயன்படுத்துவதற்காக வாசகங்களையும் படங்களையும் சேமித்து வைக்கும் பணி.

**scratch** : கீறு; விரைவாக எழுது : நினைவகத்திலிருந்து தகவலை நீக்குதல்.

**scratch file** : நீக்கக் கோப்பு; கீறல் கோப்பு; விரைவெழுத்துக் கோப்பு : ஒரு துணைச்சேமிப்புச்

சாதனத்தில் ஏற்றப்பட்டுள்ள தரவுகள் முழுவதையும் அல்லது பகுதியை படியெடுத்து தரவுகளின் கணிசமான கோப்பு களைச் செய்முறைப்படுத்தும் போது உருவாக்கப்படும் தற் காலிகக் கோப்பு.

**scratch filter** : அழித்தெழுது வடிகட்டி; கீறல் வடிகட்டி.

**scratchpad** : குறிப்பு அட்டை; கீற்றுத் திண்டு; கீறல் பட்டை; விரைவெழுத்துக் களம் : சில கணினிகளில் பதிவேடுகளுக் குப் பதிலாகப் பயன்படுத்தப் படும் சிறிய துரிதச் சேமிப் பகம். இதனைப் புதை நினை வகம் என்றும் கூறுவர்.

**scratchpad RAM** : அழித்தெழுது ரேம்; எழுதுபலகை ரேம் : ஒரு மையச் செயலகம் தற்காலிக தரவுச் சேமிப்புக்குப் பயன் படுத்திக் கொள்ளும் நினைவகம்.

**scratchpad storage** : அழிப்புத் திண்டுச் சேமிப்பகம்; விரை வெழுத்து சேமிப்பகம் : தரவு களைத் தற்காலிகமாகச் சேமித்து வைப்பதற்குப் பயன்படுத்தப் படும் ஒரு நினைவக இடம். அழிப்புத்திண்டு நினைவகங் கள், அதிவேக ஒருங்கிணைந்த சுற்று வழிகள் ஆகும்.

**scratch tape** : அழிப்பு நாடா; விரைவெழுத்து நாடா : அழித்து விட்டு மீண்டும் பயன்படுத்தத் தக்க காந்த நாடா.

**screen** : திரை : தகவல்கள் காட்சியாகக் காட்டப்படும் பரப்பு. எடுத்துக்காட்டு : ஒளிப் பேழைக் காட்சித்திரை.

**screen angle** : திரைக் கோணம் : நுண்பதிவுப் படத் திரைகளில் படப்புள்ளிகள் இடம்பெறும் கோணம். சரியான கோணம் மங்கல் தன்மையையும், நெளிவு அலைபோல் தோன்றும் விரும்பத்தகாத விளைவு களையும் குறைக்கும்.

**screen capture** : திரைப் பிடிப்பு : தற்போதுள்ள நேரடித்திரை உருக்காட்சியை ஒரு வாச்கத் திற்கு அல்லது வரைகலைக் கோப்புக்கு மாற்றுதல்.

**screen, display** : திரைக்காட்சி.

**screen dump** : திரைச் சேமிப்பு ; திரைத் திணி : தற்போது ஒரு காட்சித்திரையில் தோன்றும் தகவலை ஒரு அச்சுப்பொறிக்கு அல்லது வேறு வன்படிச் சாதனத்திற்கு மாற்றுகிற செய் முறை.

**screen editing** : திரை திருத்தம்.

**screen font** : திரை எழுத்துரு : நேரடித் திரைக்காட்சியில் பயன் படுத்தப்படும் எழுத்து உரு. WYSIWYG பொறியமைவுகளில்

அச்சடிப்பு எழுத்து உருக்களுக்கு இயன்றவரை நெருக்கமாக இருக்கவேண்டும். அச்சடிப்பு எழுத்து உருவுக்கு மாறுபட்டது.

**screen generator : திரை உருவாக்கி :** தனியாக உருவாக்கும் திரைக்காட்சியை ஏற்படுத்த பயன்படும் சிறப்புப் பயன்பாட்டு நிரல் தொடர்.

**screen memory : திரை நினைவகம்.**

**screen name : திரைப் பெயர் :** அமெரிக்க ஆன்லைன் இணையச் சேவையின் பயனாளர் ஒருவர் அறியப்படும் பெயர். திரைப்பெயர் பயனாளரின் உண்மைப் பெயராகவும் இருக்கலாம்.

**screen overlay : திரைமேல் விரிப்பு :** 1. காட்சித் திரையில் கூசொளியைக் குறைக்கின்ற தெளிவான நுண்ணிய வலைத் திரை. 2. திரையிலுள்ள காட்சிப் பொத்தான்களைத் தொடுவதன் மூலம் பயனாளர் கணினிக்கு நிரலிடுவதற்கு அனுமதிக்கிற தெளிவான தொடுசேணம். 3. திரையில் காட்சியாகக் காட்டப்படும் தற்காலிகத் தரவு பலகணி. திரை மேல் விரிப்பை நீக்கியதும்மேல் விரிப்பு செய்யப்பட்ட திரையின் பகுதி மீட்கப்படுகிறது.

**screen phone : திரைபேசி :** தொலைபேசிபோல் பயன் படுத்தக்கூடிய ஓர் இணைய சாதனம். இதில் ஒரு தொலை பேசி, எல்சிடி காட்சித்திரை, ஓர் இலக்கமுறை தொலை நகல் இணக்கி, ஒரு கணினி விசைப் பலகை, சுட்டி, அச்சுப்பொறி மற்றும் பிற புறச்சாதனங்களை இணைப்பதற்கான துறைகளை யும் கொண்டிருக்கும். திரை பேசிகளை குரல்வழித் தகவல் தொடர்புக்குரிய தொலைபேசி போலவும், இணையம் மற்றும் பிற நிகழ்நிலைச் சேவைகளுக் கான கணினி முனையங்கள் போலவும் பயன்படுத்தலாம்.

**screen pitch : திரை அடர்வு :** கணினித் திரையகத்தில், திரைக் காட்சியில் பாஸ்பர் புள்ளிகளுக் கிடையே உள்ள தொலை வினைக் கொண்டு திரை அடர் வினை அளக்கும் முறை. திரை அடர்வு குறைவு எனில் மிகத் தெளிவான காட்சி அமையும். எடுத்துக்காட்டாக .28 புள்ளி அடர்வுள்ள திரை .38 புள்ளி அடர்வுள்ள திரையைக் காட்டிலும் தெளிவான காட்சி கொண்டிருக்கும்.

**screen position : திரை இட நிலை :** ஒரு காட்சித்திரையில் வரைகலைத் தரவுகளின் அமை விடம்.

**screen prompt :** திரை நினைவூட்டு: பயனாளர் துல்லியமாகவும், முழுமையாகவும் தரவுகளை உட்பாடு செய்வதற்கு உதவுகிற ஒளிக்காட்சித்திரையின் மீது காட்சியாகக் காட்டப்படும் ஓர் அறிவுறுத்தம்.

**screen saver :** திரைக் காப்பு : பல கணினிகளில் ஒரு குறிப்பிட்ட நேர அளவுக்குச் சுட்டு நுண் பொறியை நகர்த்தாமல் அல்லது ஒரு விசைப்பலகை விரற் கட்டையை அழுத்தாமல் இருக்கும்போது திரையில் தோன்றும் ஒரு நகரும் படம் அல்லது தோரணி.



திரைக் காப்பு

**screen size :** திரை வடிவளவு ; திரை யளவு : ஓர் ஒளிப்பேழைக் காட்சி திரை காட்டக்கூடிய தகவல்களின் அளவு. திரைகளைத் தொலைக்காட்சிப் பெட்டிகளைப்போல் மூலைவிட்டமாகவோ, கிடைமட்ட மற்றும் கிடைமட்ட புள்ளிகளின் அல்லது எழுத்துகளின் எண்ணிக்கையாகவோ அளவிடலாம்.

**screen update :** திரைப் புத்தாக்கம் ; திரைப் புதுப்பி : புதிய தகவல்களைப் பிரதிபலிப்பதற்காகத் திரையின் உள்ளடக்கங்களை மாற்றும் செய்முறை.

**Scripsit :** எழுத்து அடை : ரேடியோ ஷாக் TRS&80 நுண் கணினிப் பொறியமைவுகளில் சொற்களைச் செய்முறைப் படுத்துவதற்கெனப் பயன் படுத்தப்படும் மென்பொருள் தொகுதி.

**scripting language :** உரைநிரல் மொழி : ஒரு குறிப்பிட்ட பயன் பாடு அல்லது செயல்கூறோடு தொடர்புடைய தனிச் சிறப்பான அல்லது வரம்புறு பணிகளை ஆற்றுவதற்கு வடிவமைக்கப்பட்ட ஓர் எளிய நிரலாக்க மொழி. பெரும்பாலும் வலைப் பக்கங்களை வடிவமைக்கும் ஹெச்டீஎம்எல் ஆவணங்களில் பயன்படுத்தப் படுகிறது.

**scripts :** எழுத்துகள் : நிகழ்வுகளின் வரிசை முறையினைக் குறிக்கும் ஸ்கீமா போன்ற கட்டமைப்பு.

**scroll :** நகர்த்து ; உருட்டு.

**scrollable field : சுருட்டத்தக்க புலம்** : ஒரு சிறிய காட்சிப் பரப்பில் பெருமளவுத் தகவல்களைக் காட்சியாகக் காட்டுவதற்கு அல்லது தொகுப்பதற்கு அனுமதிப்பதற்காகச் சுருட்டக் கூடிய திரையிலுள்ள குறுகிய வரி.

**scroll arrow : சுருள் அம்பு** : மேலும், கீழும், இடமும் வலமும் நகர்த்திச் சுட்டிக்காட்டுகிற உருவம். இணையான திசையில் திரையைச் சுருட்டுவதற்காக இது இயக்கப்படுகிறது.

**scroll bar : உருள்பட்டை** : சில வரைகலைப் பயனாளர் இடைமுகங்களில் திரைக்காட்சிப் பரப்பின் அடிப்பக்கத்திலும் பக்கவாட்டிலும் முறையே கிடைமட்டமாகவும், செங்குத்தாகவும் தோற்றமளிக்கும் பட்டைகள். சுட்டியின்மூலம் அவற்றின்மீது சொடுக்கி, திரைக்காட்சியில் மேலும் கீழும், பக்கவாட்டிலும் நகர்ந்து, முழுத் தோற்றத்தையும் பார்வையிட முடியும். சுருள் பட்டைகளில் நான்கு பகுதிகள் உள்ளன. இரு முனைகளிலும் முக்கோணப் புள்ளிகள். அதன் மீது அழுத்தினால் ஒவ்வொரு வரியாக நகரலாம். பட்டையின் மீது ஒரு சிறியபெட்டி. ஏதேனும் குறிப்பிட்ட இடத்துக்கு நகர்த்தலாம். பட்டையில் பெட்டியில்லா இடத்தில் சொடுக்கி பக்கம்பக்கமாய் நகரலாம்.

**scroll bar arrows : உருள் பட்டை அம்புக்குறிகள்.**

**scrolling : திரை சுழலல் ; சுருளாக்கம்; சுழற்றுதல்** : ஓர் ஒளிப்பேழைக் காட்சியில் தரவுகளை நகர்த்துதல். வாசகத்தில் விரும்பிய இடம் வரும் வரையில் வாசகம் திரும்பத் திரும்ப நகர்த்தப்படுகிறது. சுருள் மேல்நோக்கி நகர்ந்தால், திரையின் அடிப்பகுதியில் ஒரு புதிய வரி தோன்றும்; உச்சிப் பகுதியில் பழைய வரி மறையும். தரவுகளை வலமிருந்து இடமும், இடமிருந்து வலமும் கீழ் நோக்கியும் நகர்த்தும் திறனையும் இது குறிக்கிறது.

**scroll lock : திரைச்சுழல் பூட்டு.**

**scroll lock key : சுருள் பூட்டு விசை**: ஐபிஎம் பீசி/எக்ஸ்டீ மற்றும் ஏடீ ஒத்தியல்பு விசைப் பலகைகளில் எண்விசைத் திண்டின் மேல்வரிசையில் அமைந்திருக்கும். திரைக்காட்சி மேலும் கீழும் பக்கவாட்டிலும் சுருளும் தன்மைகளைக் கட்டுப்படுத்தும். சிலவேளைகளில் திரையின் உருள்தன்மையைத் தடுக்கும். மெக்கின்டோஷ் விசைப்பலகைகளில் மேல் வரிசையில் பணிவிசைகளுக்கு

வலப்புறம் அமைந்திருக்கும். நவீனப் பயன்பாட்டு மென் பொருள்கள் பெரும் பாலானவை இந்த சுருள்பூட்டு விசையைப் புறக்கணிக்கின்றன.

**SCSI : ஸ்கஸ்ஸி :** சிறு கணினி அமைப்பு இடைமுகம் என்று பொருள்படும் Small Computer System Interface என்ற தொட ரின் தலைப்பெழுத்துக் குறும் பெயர். அமெரிக்க தேசிய தரக் கட்டுப்பாட்டு நிறுவனம் (American National Standards Institute) அமைத்த எக்ஸ் 3டீ9.2 (X3T9.2) குழுவினர் வரையறுத்த அதிவேக இணைநிலை இடை முகத்துக்கான தர வரையறை. நிலைவட்டுகள், அச்சுப்பொறி கள் மற்றும் பிற கணினிகள், குறும்பரப்புப் பிணையங்கள் போன்ற ஸ்கஸ்ஸி புறநிலைச் சாதனங்களை ஒரு நுண்கணினி யில் இணைப்பதற்காக ஸ்கஸ்ஸி இடைமுகம் பயன்படுகிறது.

**SCSI bus : ஸ்கஸ்ஸி பாட்டை :** ஸ்கஸ்ஸி சாதனங்களிலிருந்து ஸ்கஸ்ஸி கட்டுப்படுத்திக்கு தரவுகளையும் கட்டுப்பாட்டு சமிக்கைகளையும் சுமந்து செல்லும் ஓர் இணைநிலைப் பாட்டை.

**SCSI chain : ஸ்கஸ்ஸி சங்கிலி :** ஸ்கஸ்ஸிப் பாட்டையிலுள்ள சாதனங்கள். ஒவ்வொரு சாதனமும் [புரவன் தகவியும் (Host Adapter) கடைசி சாதன மும் தவிர] இரண்டு வடங்கள் மூலம் வேறு இரு சாதனங் களுடன் இணைக்கப்பட்டிருக் கும். டெய்ஸி சங்கிலி போன்று தோற்றமளிக்கும்.

**SCSI connector : ஸ்கஸ்ஸி இணைப்பி :** ஒரு ஸ்கஸ்ஸி சாதனத்தை ஒரு ஸ்கஸ்ஸிப்



ஸ்கஸ்ஸி இணைப்பி

பாட்டையில் இணைக்கும் ஒரு வட இணைப்பி.

**SCSI device : ஸ்கஸ்ஸி சாதனம் :** கணினியின் மையச் செயலகத்து டன் தரவுகளையும் கட்டுப் பாட்டு சமிக்கைகளையும் பரி மாறிக் கொள்ள ஸ்கஸ்ஸி தர

வரையறைகளைப் பயன்படுத்தும் ஒரு புறநிலைச் சாதனம்.

**SCSI ID : ஸ்கஸ்ஸி ஐடி :** ஒரு ஸ்கஸ்ஸி சாதனத்தைத் தனித்து அடையாளம் காட்டும் குறியீடு. ஒரு ஸ்கஸ்ஸிப் பாட்டையில் இணைக்கப்பட்டுள்ள ஒவ்வொரு சாதனமும் வெவ்வேறு ஸ்கஸ்ஸி ஐடி-க்களைக் கொண்டிருக்கும். ஒரே ஸ்கஸ்ஸிப் பாட்டையில் உச்ச அளவாக எட்டு ஸ்கஸ்ஸி ஐடி-க்களை வைத்துக் கொள்ளலாம்.

**SCSI network : ஸ்கஸ்ஸிப் பிணையம் :** ஒரு ஸ்கஸ்ஸிப் பாட்டையில் இணைக்கப் பட்டுள்ள சாதனங்கள் அனைத்தும் சேர்ந்து ஒரு குறும் பரப்புப் பிணையம்போலச் செயல்படும்.

**SCSI port : ஸ்கஸ்ஸித் துறை :** கணினிக்குள்ளேயே இருக்கும் ஒரு ஸ்கஸ்ஸி புரவன் தகவி (Host Adapter) ஸ்கஸ்ஸித் துறை எனப்படுகிறது. கணினிக்கும் ஸ்கஸ், ஸிப் பாட்டையில் இணைக்கப்பட்டுள்ள அனைத்துச் சாதனங்களுக்கும் இடையே ஒரு தருக்கநிலை இணைப்பைத் (logical connection) தருகிறது.

**S-curve : எஸ்-வளைவு :** ஆட்களுக்கெதிராக நேரத்தை வரைகிற வளைவு. இது ஆதார ஒதுக்கீட்டினைச் சமனப் படுத்தப் பயன்படுத்தப்படுகிறது. ஆதாரங்களைச் சீரமைவு செய்வதற்கு ஆள் பலத்தைப் படிப்படியாகக் குறைப்பதற்கு இது உதவுகிறது.

**scuzzy : ஸ்கஸ்ஸி ;** SCSI-க்கு மற்றொரு பெயர்.

**.sd : .எஸ்டி :** ஓர் இணைய தள முகவரி சூடான் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**SDK : எஸ்டிகே :** மென்பொருள் உருவாக்கக் கருவித்தொகுதி - எனப் பொருள்படும் Software Development Kit என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். குறிப்பிட்ட வகைப் பயன்பாடுகளை உருவாக்குவதற்குத் தேவையான அனைத்து நிரல்கள், செயல்கூறுகள், மொழிமாற்றி, நிரல் திருத்தி போன்ற அனைத்துக் கருவிகளும் அடங்கிய மென்பொருள் தொகுப்பு.

**SDLC : எஸ்டிஎல்சி :** 1. ஒத்திசைத் தரவு தொடுப்புக் கட்டுப்பாடு என்று பொருள் படும் Synchronous Data Link Control என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். ஐபிஎம்மின் எஸ்என்ஏ (Systems Networks Architecture) அடிப் படையில் செயல்படும்

பிணையங்களில் பெருமளவு பயன்படுத்தப்படும் தரவு பரப்பு நெறிமுறை. ஐஎஸ்ஓ உருவாக்கிய ஹெச்டி எல்சி (High-Level Data Link Control) நெறிமுறையைப் போன்றது. 2. முறைமை உருவாக்க செயல் படுகாலச் சுழற்சி (System Development Life Cycle) என் பதன் தலைப்பெழுத்துக் குறும் பெயராகவும் கொள்ளப்படும். ஒரு மென்பொருளின் தேவை, இயலும் நிலை, செலவு-பலன் ஆய்வு, பகுப்பாய்வு, வடி வமைப்பு, உருவாக்கம், பரி சோதனை, நிறுவுகை, பரா மரிப்பு, மதிப்பாய்வு போன்ற ஒன்றன்பின் ஒன்றாகப் பல் வேறுநிலைகள் கொண்ட மென் பொருள் உருவாக்க வளர்ச்சிப் படிகளைக் குறிக்கிறது.

.sea : .சீ; .எஸ்இஏ : ஸ்டஃப்பிட் (stuffit) என்னும் நிரல்மூலம் இறுக்கிச் சுருக்கிய மெக்கின் டோஷ் காப்பக - தானாகவே விரித்துக் கொள்ளும் கோப்பின் வகைப்பெயர் (file extension).

seamless integration : இடை வெளியற்ற ஒருங்கிணைப்பு ; தற்போதுள்ள பொறியமை வுடன் இழைவாகப் பணி புரி கிற ஒரு புதிய பயன்பாடு, வாலாயம் அல்லது சாதனம். இதன்மூலம் புதிய அம்சங்களைத் தூண்டி விடலாம்; சிக்கல்களைக் கண்டறியப் பயன்படுத்தலாம்.

search : தேடுதல்; தேடு; தேடல் : ஒரு குறிப்பிட்ட நேரம் அல்லது பகுதி எண் போன்ற விரும்பிய பண்பினை அல்லது முன் நிருணயித்த வகைப்பாட்டினைக் கொண்டிருக்கின்ற ஓர் இனத் தொகுதியை தேடிக் கண்டறிதல்.

search algorithm : தேடு படி முறைத் தருக்கம் : ஒரு குறிப் பிட்ட தரவுக் கட்டமைப்பில் இலக்கு எனச் சொல்லப்படும் ஒரு குறிப்பி (reference) உறுப் பினைக் கண்டறிய வடிவமைக் கப்பட்ட படிமுறைத் தருக்கம்.

search and replace : தேடுதல் மற்றும் மாற்றமைத்தல் ;தேடி மாற்றியமை; தேடி மாற்று : ஒரு குறிப்பிட்ட எழுத்து வரிசை முறையைக் கண்டறிந்து அதற்குப் பதிலாக ஒரு புதிய வரிசை முறையை மாற்றுகிற மென் பொருள். இது சொல் செய் முறைப்படுத்தும் பயன்பாடு களில் முக்கியமானது.

search argument : தேடும் வாத முறை; ஓர் அட்டவணைத் தேடுதலில் இணைப்பு செய்யக் கூடிய தரவு இனம்.

search, binary : இருமத் தேடல்.

**search criteria** : தேடு நிபந்தனை; தேடல் கட்டுப்பாட்டு விதி : ஒரு தரவுத் தளத்தில் குறிப்பிட்ட தரவு மதிப்புகளைத் தேடிக் கண்டறிய தேடுபொறி பயன்படுத்தும் நிபந்தனைகள் மற்றும் விதிமுறைகள். (எ-டு) ஓர் அலுவலகப் பணியாளர் தரவுக் கோப்பில் 10,000 ரூபாய்க்கு மேல் சம்பளம் பெறும் பெண் அலுவலர்களின் பெயர், பணிப்பொறுப்புகளைக் கண்டறிதல். இங்கே "pay> 10,000 And Sex is Female" என்பது தேடு நிபந்தனை.

**search engine** : தேடு பொறி: இணையத்தில் (Internet) நாம் விரும்பும் தரவுவை தேடித் தரும் மென்பொருள்.

**searching word** : தேடும் சொல்.

**search key** : தேடும் விசைப் பலகை விரற்கட்டை; தேடும் விசை; தேடு சாவி : ஒரு தேடுதலை நடத்தும் நோக்கத்திற்காக ஒவ்வொரு இனத்தின் குறிப்பிட்ட பகுதிகளுடன் ஒப்பிடப் படும் தரவுகள்.

**search memory** : தேடல் நினைவகம்.

**search memory associative storage** : தேடல் நினைவக தொடர்புறு சேமிப்பகம்.

**search string** : தேடு சரம் : தரவுத் தளத்தில் தேடப்படுகின்ற ஓர் எழுத்துச்சரம். பெரும்பாலும் அது ஓர் உரைச்சரமாக இருக்கலாம்.

**search the web** : இணையத்தில் தேடு.

**search time** : தேடல் நேரம்.

**seasonally adjusted** : பருவ முறைச் சரியமைவு : முந்திய போக்குகளை மறைக்கிற அல்லது மாற்றமைவு செய்கிற பருவ முறைக் காரணிகளை அனுமதிப்பதற்குச் சரியமைவு செய்யப்பட்ட ஒரு தரவுத் தொகுதியை விவரிக்கப் பயன்படுத்தப்படும் ஒரு சொற்றொடர்.

**seat¹** : இருக்கை¹ : இருக்கை அடிப்படையிலான மென்பொருள் உரிமம் வழங்கும் முறையில் ஒரு பணி நிலையம் அல்லது ஒரு கணினியைக் குறிக்கிறது. அதாவது ஒரு கணினிக்கென வாங்கப்படும் ஒரு மென்பொருள் ஒரு கணினியில் மட்டுமே பயன்படுத்தப் பட வேண்டும்.

**seat²** : இருக்கை² : ஒரு செருகுவாய்க்குள் செருகப்படும் ஒற்றை உள்ளக நினைவகக் கூறு (Single Inline Memory Module) ஒன்றாக அமர்ந்து கொள்வது போல, ஒரு கணினியில்

அல்லது சேர்ந்திணைந்த கருவிகளில் ஒரு சிறிய வன்பொருள் உறுப்பை முழுதுமாகச் செருகி சரியாக நிலை நிறுத்துதல்.

**second** : வினாடி; நொடி: மெட்ரிக் முறையில் கால அளவின் அடிப்படை அலகு. பழக்கமான ஆங்கில முறையில் பயன்படுத்தப்படுகிறது.

**secondary channel** : துணை நிலை அலைவரிசை; செய்தித் தொடர்களில், முதன்மை அலைவரிசையிலிருந்து பெறப்பட்ட ஒரு துணை அலைவரிசை. இது, குறை கண்டறிய அல்லது மேற் பார்வை நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்படுகிறது. ஆனால், இது தரவு செய்திகளைக் கொண்டு செல்வதில்லை.

**secondary data** : துணைநிலைத் தரவு : இது மற்றொரு நோக்கத்திற்காக ஏற்கெனவே சேகரிக்கப்பட்டது. இப்போது ஒரு தரவு ஆதாரமாகப் பயன்படுத்தப்படுவது. கட்டுரைகள், செய்தியிதழ் செய்திகள் போன்றவற்றிலிருந்து சேகரிக்கப்பட்ட தரவுகள் இதில் அடங்கும்

**secondary index** : துணைநிலை வரிசை முறை : ஒரு தரவு கோப்புக்காக வைத்துவரப்படும் வரிசை முறை. ஆனால், கோப்பின் தற்போதைய செய்முறைப் படுத்தும் வரிசையைக் கட்டுப் படுத்த இது பயன்படுத்தப்படுவதில்லை.

**secondary key** : துணை விரற் கட்டை; இரண்டாம் நிலை விசை; துணைச் சாவி ; ஒரு கோப்பிலுள்ள பதிவேடுகளை அணுகுவதற்குப் பயன்படுத் தப்படும் புலம். இது தனிச் சிறப்பானதாக இருக்க வேண்டியதில்லை.

**secondary memory** : துணை நிலை நினைவகம்:

**secondary service provider** : துணை நிலைச் சேவை வழங்குநர் : வலைத் தரவுகளை வழங்குகின்ற, ஆனால் நேரடியான இணைய இணைப்பை வழங்காத ஓர் இணையச் சேவை வழங்கும் நிறுவனம்.

**secondary storage** : துணை நிலைச் சேமிப்பகம் : கணினியில் குறிப்பிலா அணுகு நினைவகம் (RAM) தவிர பிற தரவு சேமிப்பு ஊடகங்கள், குறிப்பாக நாடா அல்லது வட்டினைக் குறிக்கும்.

**secondary storage device** : துணைநிலைச் சேமிப்புச் சாதனம்.

**second generation computers** : இரண்டாம் தலைமுறைக்

கணினிகள்; கணினிகளின் தொழில்நுட்ப வளர்ச்சியில் இரண்டாம் தலைமுறையைச் சேர்ந்த கணினிகள். இதில் வெற்றிடக் குழாய்க்குப் பதில் மின்மப் பெருக்கி (டிரான்சிஸ்டர்) பயன்படுத்தப் பட்டது. இவ்வகைக் கணினிகள் 1959 முதல் 1964 வரை ஆதிக்கம் பெற்றிருந் தன. பிறகு இவற்றுக் குப் பதில் ஒருங் கிணைந்த மின்சுற்று நெறியைப் பயன் படுத்தும் கணினிகள் பயனுக்கு வந்தன.

**second, micro** : மைக்ரோ விநாடி.

**second source** : துணை ஆதாரம்; இரண்டாம் ஆதாரம்; இரண்டாம் மூலம் : மற்றொரு உற்பத்தியாளரின் உற்பத்திப் பொருளுடன் பரிமாற்றம் செய்து கொள்ளக்கூடிய ஒரு பொருளைத் தயாரிக்கும் உற் பத்தியாளர்.

**secret codes** : இரகசியக் குறியீடுகள்.

**secret key** : மறைக்குறி; மறைத் திறவி.

**section** : பிரிவு.

**sector** : வட்டக்கூறு;பிரிவு; பகுதி : இருபுறமும் ஆன எல்லையுடைய வட்டக்கூறு. ஒரு வட்டு மேற்பரப்பு இத் தகைய வட்டக்கூறுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.




வட்டக் கூறு

**sector interleave** : வட்டக்கூறு இடை இணைப்பு : ஒரு நிலை வட்டு வட்டக்கூறு இலக்க மிடுதல். ஒன்றுக்கு ஒன்று *(1 : 1)* என்ற இடை இணைப்பு வரிசை முறையில் அமைந்தது : *0, 1, 2, 3* முதலியன. இரண்டுக்கு ஒன்று *(2:1)* என்ற இடை இணைப்பு அடுத்த வட்டக்கூறு. ஒவ்வொன்றும் இரண்டாவதாக இருக்கும் வகையில் வட்டக் கூறுகளை மாறுபட அமைக் கிறது. 0,4,1,5, 2,6,3,7. ஒன்றுக்கு ஒன்று *(1:1)* என்ற இடை இணைப்பில், வட்டக் கூறிலுள்ள தரவு படிக்கப்பட்ட

பிறகு, இரண்டாவது வட்டக் கூறினைப் படிக்கும் அளவுக்கு வட்டுக்கட்டுப்படுத்தி விரைவாக இயங்கவேண்டும். இல்லையெனில், இரண்டாம் வட்டக் கூறின் தொடக்கம், எழுது/படிப்பு முனையைக் கடந்து சென்றுவிடும்; மீண்டும் அது முனையின்கீழ் வருவதற்கு மறுபடியும் ஒரு சுற்று சுற்றிவர வேண்டும். அதுபோதிய வேகத்தில் இயங்காவிட்டால், ஒரு *2:1* அல்லது *3:1* இடை இணைப்பு, ஒரே சுழற்சியில் வட்டக்கூறுகள் அனைத்தையும் படிப்பதற்கு அதற்குக் கால அவகாசம் கொடுக்கிறது.

**sector method :** வட்டக் கூறு முறை; பிரிவு முறை : ஒரு வட்டின் மேற்பரப்பினைக் குவிய வட்டக் கூறுகளாகப் பகுக்கக் கூடிய, நெகிழ்வட்டுகளுடன் பயன்படுத்தப்படும் வட்டு முகவரியிடும் முறை.

**secure channel :** பாதுகாப்பான தடம் : அனுமதியற்ற அணுகல் மற்றும் செயல்பாட்டிலிருந்து பாதுகாக்கப் பட்ட ஒரு செய்தித் தொடர்பு இணைப்பு. பொதுப் பிணையத்திலிருந்து விலகித் தனித்திருத்தல். மறையாக்கம் அல்லது பிற கட்டுப்பாட்டு முறைகளைப் பின்பற்றுவதால் இப்பாதுகாப்பு அமையலாம்.

**Secure Electronics Transactions Protocol :** பாதுகாக்கப்பட்ட மின்னணுப் பரிமாற்ற நெறிமுறை : இணையத்தில் பாதுகாப்பான தகவல் பரிமாற்றத்துக்கான நெறிமுறை. ஜிஇஇ, ஐபிஎம், மாஸ்டர் கார்டு, மைக்ரோசாஃப்ட், நெட்ஸ்கேப், எஸ்ஏஐசி, டெரிசா சிஸ்டம்ஸ், வெரிசைன், விசா கார்டு ஆகிய நிறுவனங்களின் கூட்டு முயற்சியில் இந்த நெறிமுறை உருவாக்கப்பட்டது.

**Secured Electronic Transaction (SET) :** பாதுகாப்பான மின்னணு பரிமாற்ற முறை.

**secure kernel :** காப்புக் கரு மூலம்; காப்புக் கரு : ஒரு பொறியமைவுச் செயல்முறையின் பாதுகாக்கப்பட்ட கூறு.

**secure site :** பாதுகாப்பான தளம் : பற்று அட்டை எண்கள் மற்றும் பிற சொந்தத் தகவல்களை அனுமதியற்ற நபர்கள் அத்துமீறி அணுகாவண்ணம் பாதுகாப்பான தகவல் பரிமாற்றத்தை உறுதி செய்யும் திறனுள்ள வலைத் தளத்தைக் குறிக்கிறது.

**secure transaction technology :** பாதுகாப்பான பரிமாற்றத் தொழில்நுட்பம் : சொந்தத் தகவல் களடங்கிய படிவங்களைச் சமர்ப்பித்தல், பற்று அட்டை மூலம் பொருள் வாங்குதல் போன்ற

நிகழ்நிலைத் தகவல் பரிமாற்றங்களில் பாதுகாப்பான செருகுவாய் அடுக்கு (SSL-Secure Sockets Layer), பாதுகாப்பான ஹெச்டீடீபீ, (S-HTTP) ஆகிய நெறிமுறைகளைப் பயன்படுத்துதல்.

**secure wide area network :** பாதுகாப்பான விரிபரப்புப் பிணையம் : ஒரு பொதுப் பிணையத்தில் (இணையம் போன்ற) தகவல் பரிமாற்றங்களை அத்துமீறி நுழைபவர்களின் குறிக்கீட்டிலிருந்து தடுக்க, மறையாக்கம் (encryption), சான்றுறுதி (authorisation), உறுதிச்சான்று (Authenti- cation) போன்ற பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டு தகவல் பரிமாற்றம் செய்து கொள்ளும் கணினித் தொகுதி.

**security :** பாதுகாப்பு : தீங்கு அல்லது இழப்பிலிருந்து கணினி அமைப்பையும் அதிலுள்ள தரவுவையையும் காத்தல். பெரும்பாலும் பலர் பயன்படுத்தும் கணினி அமைப்புகளில், தகவல் தொடர்புத் தடங்களில் இணைக்கப்பட்டுள்ள கணினிகளில் பாதுகாப்புக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. ஏனெனில் இதுபோன்ற கணினி அமைப்புகளில் அனுமதியில்லாத நபர்கள் அத்துமீறி நுழைய அதிக வாய்ப்புள்ளது.

**security control :** காப்புக் கட்டுப்பாடு.

**security files :** காப்புக் கோப்புகள்; பாதுகாப்புக் கோப்புகள் : முக்கியமானதும் இன்றியமையாததுமான தகவல்களுக்காக துணை யாதரவுக் கோப்புகள்.

**security log :** பாதுகாப்புப் பதிகை : தீச்சுவர் அல்லது பிற பாதுகாப்பு சாதனங்களினால் உருவாக்கப்படும் ஒரு பதிகை. அத்துமீறி நுழைய முயலுதல் போன்ற பாதுகாப்புக்குப் பங்கம் விளைவிக்கின்ற நிகழ்வுகளின் பட்டியல் மற்றும் அது போன்ற நடவடிக்கைகளில் ஈடுபட்ட பயனாளர்களின் பெயர்கள் அப்பதிகையில் பதிவாகியிருக்கும்.

**security monitor :** பாதுகாப்புக் கண்காணிப்பி : ஒரு கணினிப் பொறியமைவின் பயன்பாட்டைக் கண்காணித்து, அதன் ஆதாரங்களை அனுமதியின்றி, மோசடியாக, அழிக்கும் வகையில் பயன்படுத்துவதிலிருந்து பாதுகாக்கும் ஒரு மென்பொருள் தொகுதி.

**security programmes :** காப்புச் செயல்முறை; பாதுகாப்பு நிரல் தொடர்; காப்புநிரல் : கோப்புகளிலுள்ள தரவுகளை அணுகுவதைக் கட்டுப்படுத்தி, முனை

யங்களையும், பிற சாதனங்களையும் பயன்படுத்த அனுமதியளிக்கிற செயல்முறை.

**security specialist** : காப்பளிப்பு வல்லுநர்; பாதுகாப்பு வல்லுநர் : கணினி மையத்தின் பாதுகாப்புக்கும், தரவு ஆதாரங்களின் தருக்கமுறைப் பாதுகாப்புக்கும் பொறுப்பானவர்கள்.

**seed** : வித்து; விதை; மூல எண்: போலிக் குறிப்பின்மை எண் உருவாக்கியைத் தொடங்குவதற்குப் பயன்படுத்தப்படும் மாறிலி. முதல் எண்ணை உருவாக்கப் பயன்படுகிறது. பின் வரும் எண்கள் அனைத்தும் முந்திய பலன்களை அடிப்படையாகக் கொண்டவை.

**seek** : தேடு; கண்டறி; நாடல்: ஒரு நேரடி அணுகுச் சாதனத்தை ஒரு குறிப்பிட்ட அமைவிடத்தில் நிலைப்படுத்துவதற்கான அணுகுச் செயல்முறை.

**seek area** : தேடு பரப்பு; நாடும் பரப்பு.

**seek time** : கண்டறியும் நேரம்; தேடு காலம் : ஒரு நேரடி அணுகு சேமிப்புச் சாதனத்தின் அணுகு செயல்முறையினை ஒரு குறிப்பிட்டநிலையில் நிலைப்படுத்துவதற்குத் தேவைப்படும் நேரம். எடுத்துக்காட்டு : படிப்பு/எழுதுத் தலைப்பினை ஓர் இயக்கியை வட்டின் குறிப்பிட்ட தடத்தின்மீது நிலைப்படுத்துவதற்குத் தேவைப்படும் கால அளவு.

**segment** : வெட்டுக் கூறு; பிரிவு; பகுதி : 1. ஒரு செயல்முறையைப் பல கூறுகளாகப் பகுத்து, கூறுகள் உள்முகச் சேமிப்பிலும், மற்றக் கூறுகள் துணைச் சேமிப்பிலும் தங்கியிருக்கும்படி செய்தல். ஒவ்வொரு கூறிலும், மற்றொரு கூறுக்குத் தாவுவதற்கான அல்லது மற்றொரு கூறினை உள்முகச் சேமிப்புக்கு வரவழைப்பதற்கான நிரல்கள் அடங்கியிருக்கும். 2. ஒரு மேல்நிலைச் செயல் முறையை நிறைவேற்றும்போது ஒரு தருக்க முறை அலகாக ஏற்றக்கூடிய மிகச்சிறிய செயல்முறை அலகு. 3. தொலைத்தொடர்புக் களத்தைப் பொறுத்தவரையில், குறிப்பிட்ட அளவுள்ள இடைத் தடுப்பில் அடக்கக்கூடிய ஒரு செய்தியின் பகுதி.

**segmentation** : வெட்டுக் கூறாக்குதல்; பிரித்தல்; பகுதியாக்கல் : கணினிச் செயல்முறையினைத் தருக்கமுறை மாறியல் நீட்சிப் பகுதிகளாகப் பகுப்பதற்கான உத்தி.

**segment, data** : தரவுத் துண்டம்.

**segmented addressing architecture :** துண்டாக்க முகவரியிடல் கட்டுமானம் : இன்டெல் 80×86 செயலிகளில் பயன்படுத்தப் படும் ஒரு நினைவக அணுகு நுட்பம். இக்கட்டுமானத்தில் நினைவகம் 64 கேபி கொண்ட துண்டங்களாகப் பிரிக்கப்படு கிறது. நினைவக இருப்பிடங் கள் 16 துண்மி (பிட்) கொண்ட முகவரியால் குறிக்கப்படு கின்றன. 32-துண்மி முகவரித் திட்டம்மூலம் 4 ஜிபி நினை வகத்திலுள்ள துண்டங்களைக் கையாள முடியும்.

**segmented address space :** கூறு பாட்டு முகவரி இடவெளி : இது முகவரிப்படுத்தும் நினைவகம். இதில், ஒரு கூறுபாடு அல்லது ஆதாரம், எண் அதற்குச் சேர்க்கப்படும் ஒரு மாற்று மதிப்பு ஆகியவற்றின் அடிப் படையில் ஒவ்வொரு எண்மி யிலும் குறிக்கப்படுகிறது.

**segmented bar charts :** வெட்டுக் கூறாக்கிய பட்டை வரைபடம்; பிரிக்கப்பட்ட பட்டை வரைபடம் ; பகுதியாக் கிய பட்டை வரைபடம் : ஓர் ஒட்டு மொத்தத்தின் கூறுகளைக் குறிப்பதற்கு ஒன்றன் மேல் ஒன்றாக நிலைப்படுத்திய இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட வெட்டுக் கூறு களினாலான பட்டை வரை படம். இது குவிய வரை படத்தைப் போன்றது. இதில் ஒட்டுமொத்தத்தையும் அதன் உறுப்புப் பகுதிகளையும் ஒப் பீடு செய்வதற்கேற்ப பட்டை கள் பல்வேறு வடிவளவுகளில் அமைந்திருக்கும்.

**segmented programme :** கூறு பாட்டு நிரல்.

**segment register :** கூறுபாட்டுப் பதிவகம் : மையச் செயலகத் திலுள்ள நான்கு பதிவகங்களில் ஒன்று. இது, நினைவகக் கூறு பாட்டில், தொடக்க நிலை களைச் சுட்டிக்காட்டுகிறது. பதி வகத்திலுள்ள மதிப்பளவினை இது தானாகவே 16 ஆல் பெருக்கி, 1 மீமிகு எண்மி மையச் செயலகத்தில் உள்ள 65535 16- எண்மி முகவரி இடை வெளி எல்லைகளில் ஒன்றினை சுட்டிக்காட்டுகிறது. கூறு பாட்டுப் பதிவகங்களின் பெயர்கள். குறியீட்டுக் கூறு பாடுகள் (CS); தரவு கூறுபாடு (DS); அடுக்குக் கூறுபாடு (SS); மிகைக் கூறுபாடு (ES).

**segment value :** கூறுபாட்டு மதிப்பளவு : ஒரு நினைவகத்தில் 16-எட்டியல் அலகுகளிலுள்ள நினைவுப் பதிவினைக் குறிப் பதன்மூலம் ஒரு இடநிலையை

வரையறுத்துக் கூறும் ஓர் எண். இது பத்தி எண் என்றும் கூறப்படும்.

**sel (SELect) : எஸ்சிஎல் (செலெக்ட்):** *அச்சுப் பொறி மாற்றி மாற்றித் தொடு நிலைக்கும் விடுநிலைக்கும் எடுத்துச் செல்லும் அச்சுப்பொறி.*

**select : தெரிவு ; தேர்ந்தெடு ; தெரிவு செய் :** *பயனாளரின் குறிப்பிட்ட வரையளவுகளுக் கேற்ப தரவுத் தளத்திலிருந்து பதி வேடுகளின் தொகுதியைத் தெரிவு செய்தல். எடுத்துக் காட்டு : 1986-க்கு மேற்பட்ட ஆண்டுக்கான பதிவேடுகள் அனைத்தையும் தெரிவுசெய்தல்.*

**select all : அனைத்தும் தேர்ந் தெடு.**

**select all records : அனைத்து ஏடுகளையும் தேர்ந்தெடு.**

**selecting : தெரிவு செய்தல்.**

**selection control structure : தேர்வுக் கட்டுப்பாட்டமைப்பு.**

**selector : தெரிந்தெடுப்பி.**

**selection : தெரிவு செய்தல் ; தேர்வு :** *மாற்று முறைகளி லிருந்து தேர்ந்தெடுத்தல்.*

**selection sort : தெரிவுப் பிரிப்பி; தேர்ந்து பிரித்தெடு ; தேர்வு வரிசை :** *ஒரு பட்டியலிலுள்ள மிகப் பெரிய அல்லது மிகச் சிறிய மதிப்பளவு களைத் தேர்வு செய்து பட்டி யலைச் சுருக்குவதற்கான பிரிப்பி.*

**selection structure : தெரிவுக் கட்டமைப்பு ; ஒரு கட்டமைப் புப் பாய்வு வரைபடத்தின் மூன்று** *அடிப்படைக் கட்டமைப்பு களில் ஒன்று. சில நிபந்தனை களின்பேரில் இருமாற்று வழி களுக்கிடையே தேர்வு செய்ய உதவுகிறது. இதனை 'முடிவுக் கட்டமைப்பு' என்றும் கூறுவர்.*

**selective calling : தெரிவுப் பணி;** *செய்தித் தொடர்புகளில் இணையத்திலுள்ள எந்த நிலையம் செய்தியைப் பெற வேண்டும் என்பதைத் தெரிவிப் பதற்கு அனுப்பீட்டு நிலையத் திற்குள்ள திறன்.*

**selector channel : தெரிந் தெடுப்பு வழி; தேர்ந்தெடுக்கும் வழித் தடம்: தெரிவுத் தடம் :** *சில வகைக் கணினி பொறி யமைவுகளில் உள்ள உட் பாட்டு/ வெளிப்பாட்டு வழி. இதன்மூலம் தரவுகளை ஒரு புறநிலை சாதனத்தில் மட்டுமே ஒரே சமயத்தில் தரவுகளை ஏற்றவும் அதிலிருந்து மாற்றவும் செய்யலாம். இது 'பன்முக வழி' என்பதிலிருந்து வேறு பட்டது.*

**selector pen** : தெரிவுப் பேனா; ஒளிப்பேனா என்பதும் இதுவும் ஒன்று.

**selectric typewriter:** தெரிவுத் தட்டச்சு; *1961*இல் புகுத்திய தட்டச்சுப்பொறி. இதில் முதன் முதலில் ஒரு கால்ஃப் பந்து அளவுக்கான அச்சுத் தலைப்பு பயன்படுத்தப்பட்டது. இது, காகித ஊர்தியை அச்சுப் பொறியின் குறுக்கே நகர்த்துவதற்குப் பதிலாக காகிதத்தின் குறுக்கே நகர்ந்தது. இது விரைவாக, உலகில் மிகவும் புகழ்பெற்ற தட்டச்சுப்பொறியாக விளங்கியது.

**selenium** : செலனியம் ;ஒரு மின் கடத்தாப் பொருள். இது சிலிக்கன் போன்ற பண்பியல்புகள் கொண்டது. எனினும், இதன் விசையியக்க வேகம் சிலிக்கனைவிடக் குறைவு.

**self-adapting** : தன்-தகவமைத்தல்; தன் தகவமைவு; தன்வயத் தகவமைவு : கணினி அமைப்புகள், சாதனங்கள் அல்லது செயல்பாடுகள் சுற்றுச்சூழல் நிலைமைகளுக்கேற்ப தம்முடைய செயல்பாட்டுத் தன்மைகளைத் தகவமைத்துக் கொள்ளும் திறன்.

**self - booting** : தன் உந்தல் ; செயற்பாட்டுப் பொறியமை வினைத் தானாகவே இயக்குவிக்கும் செயல்.

**self-checking code:** சுய சோதனை குறியீடு ; தன் வயச் சரிபார்ப்புக் குறிமானம்.

**self-checking digit** : தானாக சரிபார்க்கும் இலக்கம் : குறியாக்கத்தின்போது ஓர் எண்ணின் இறுதியில் சேர்க்கப்படும் இலக்கம். குறியாக்கத்தின் துல்லியத்தை உறுதிசெய்வது இதன் நோக்கம்.

**self-clocking** : தன் காலப் பதிவு; பதிவு செய்யப்பட்ட குறியீட்டின் ஒரு பகுதியாகக் கடிகாரத் துடிப்புகள் அமையும் வகையில் ஒரு காந்த ஊடகத்தில் எண்மானத் தரவுகளைப் பதிவு செய்தல். இதில், நேரக் கணிப்புக்குத் தனிக் கடிகாரம் தேவையில்லை. தன் காலப்பதிவு உத்தியில் பொதுவாக நிலைக் குறியீட்டுமுறை பயன்படுத்தப் படுகிறது.

**self compiling compiler** : தானே தொகுக்கும் தொகுப்பு ; தன் வயத் தொகுப்பு : தொகுப்பானின் சொந்த ஆதார மொழியில் எழுதப்பட்டுள்ள, தானாகவே தொகுக்கும் திறனுள்ள ஒரு தொகுப்பி.

**self complementing code** : தானே குறைநிரப்புக் குறியீடு ;

தானே ஈடுகட்டும் குறியீடு ; தன்வயத்திருத்துக் குறிமானம் : எடையேற்றிய இரும எண் ஒன்றின் குறைநிரப்பானது, பதின்மக் குறிமானத்தில் எண் ஒன்பதின் குறை நிரப்பாக இருக்கும் பண்பினைக் கொண்ட குறியீடு.

**self correcting code : தானே திருத்தும் குறியீடு :** ஒரு எண் மானக் குறியீட்டு முறை. இதில் பிழைகள் மேற்செல்வது தானாகவே கண்டுபிடிக்கப்பட்டுத் திருத்தப்படுகின்றன. பிழை திருத்தும் குறியீடு என்பதும் இதுவும் ஒன்றே.

**self documenting code : தன் ஆவணமாக்கக் குறியீடு ;** செயல்முறை எழுதியவர் அல்லது இன்னொரு செயல் முறையாளர் எளிதில் புரிந்து கொள்ளக்கூடிய செயல் முறை அறிக்கைகள். 'சி'- மொழியை விட 'கோபால்' அதிகத் தன் ஆவணக் குறியீடுகளை அளிக்கிறது.

**self-extracting file : தன் விரிவாக்கக் கோப்பு :** ஒரு நிறைவேற்றப்படத்தக்க செயல்முறையாக மாற்றப்பட்டுள்ள செறிவாக்கம் செய்யப்பட்ட ஒன்று, அல்லது அதற்கு மேற்பட்ட கோப்புகள். இது இயக்கப்படும் போது தன் உள்ளடக்கங்களை விரிவாக்கம் செய்கிறது.

**self-modifying code : தானாக மாற்றியமைக்கும் குறிமுறை :** பொதுவாக, ஒரு மொழிமாற்றி (compiler) அல்லது சிப்பு மொழி மாற்றியினால் (assembler) உருவாக்கப்படும் இலக்கு நிரல் குறிமுறை புதிய கட்டளைகளை, முகவரிகளை, தரவு மதிப்புகளை ஏற்கெனவே இருக்கும் நிரல் தொகுப்பில் சேர்க்கும்போது தானாக மாற்றியமைத்துக் கொள்ளும்.

**self test : தன் சோதனை :** அச்சுப்பொறி செயற்பாட்டினைச் சோதனை செய்யும்முறை. இந்தச் சோதனையில் அச்சுப்பொறி தனது எழுதப்படிக்க மட்டுமேயான நினைவகத்தில் சேமித்து வைக்கப்பட்டுள்ள எழுத்துகளை அச்சடிக்கிறது.

**self validating : தானே செல்லுபடியாக்கும் குறியீடு; சுய மதிப்பீட்டுக் குறியீடு; தன் வயச் செல்லுபடிக் குறிமானம் :** தனது சொந்தப் பிழையின்மையினைத் தீர்மானித்து, அதன்படி மேற்செல்கிற குறியீடு.

**self-validating code : தானாகச் சரிபார்க்கும் குறிமுறை :** சரியாகச் செயல்படுகிறதா என

தன்னைத்தானே சரிபார்த்துக் கொள்ளும் நிரல் குறிமுறை. பொதுவாக, சில உள்ளீட்டு மதிப்புகளை தானாகவே எடுத்துக்கொண்டு, கிடைக்கின்ற விடையை, வரவேண்டிய வெளியீட்டு மதிப்புகளோடு சரிபார்த்துக்கொள்ளும்.

**semantic error** : சொற் பொருட் பிழை : செயல்முறைப்படுத்துவதில் செல்லத்தக்கதாக இராத தருக்க முறையில் எழுதுதல்.

**semantic gap** : சொற்பொருள் இடைவெளி : தகவல் அல்லது மொழிக் கட்டமைப்புக்கும் இயல்பு உலகுக்குமிடையிலான வேறுபாடு.

**semantics** : சொற்பொருளியல் : மொழி வடிவங்களில் சொற்களின் பொருள்பற்றி ஆராயும் அறிவியல். சைகைகளுக்கும் அவை குறிப்பிடும் பொருள்களுக்கிடையிலான தொடர்புகள் பற்றி ஆய்வு செய்தல்.

**semanting net** : சொற்பொருள் வலை : மனித அறிவை ஒரு வலைபோன்ற கட்டமைப்பாக அமைப்பாக்கம் செய்கிற ஓர் தரவு உருவாக்க முறை. இதில் மையமுனைகள், பொருள்கள், கோட்பாடுகள், நிகழ்வு அடங்கியிருக்கும்; இவை இணைப்புகளின் தன்மையைக் குறிப்பிடுகிற இணைப்புகளால் இணைக்கப்பட்டிருக்கும்.

**semaphores** : அணுகுமுறைக் குறிப்பு; ஒருங்கியல்பு வரையுருக்கள் : ஒரே சமயத்தில் இயங்கி தகவல்களைப் பகிர்ந்து கொள்ளும் இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட செயல்முறைகளின் நடவடிக்கைகளை ஒருங்கிணைப்பதற்குப் பயன்படுத்தப்படும் ஒருங்கு நிகழ்வாக்க வரையுருக்கள்.

**semiconductor** : மின் கடத்தாப் பொருள்; அரைக்கடத்தி; குறை கடத்தி : தாழ் வெப்பநிலையிலும் தூயநிலையிலும் மின் கடத்தாத திண்மப் பொருள். ஜெர்மேனியம், சிலிக்கன் போன்றவை இவ்வகையைச் சேர்ந்தவை. இதிலிருந்து ஒருங்கிணைந்த மின்சுற்று வழிகள் தயாரிக்கப்படுகின்றன.

**semiconductor device** : மின் கடத்தாச் சாதனம்; அரைக் கடத்திச் சாதனம்; குறைகடத்திச் சாதனம் : சிலிக்கன், ஜெர்மேனியம் போன்ற தூயநிலையிலுள்ள படிகப் பொருள்களிலிருந்து தயாரிக்கப்படும் மின்னியல் பொருள். இவை மின்னணு நோக்கங்களுக்குப் பயன்படுத்தும் அளவுக்கு கடத்திகளோ காப்புப் பொருள்களோ அல்ல.

தூய உலோகத்தின் படிகக் கட்டமைவில் ஆர்செனிக் போன்ற மாசு அணுக்கள் உட்செல்லுமானால் மின்னியல் சமநிலை சீர்குலைகிறது. நேர்மின் அல்லது எதிர்மின்னேற்ற ஊர்திகள் உண்டாகின்றன. அப்போது டயோடுகளும் மின்மப் பெருக்கிகளும் புகுத்தப்படுகின்றன.

**semiconductor field :** அரைக் கடத்திப் புலம்.

**semiconductor memory :** அரைக் கடத்தி நினைவகம்.

**semiconductor secondary storage (RAM disk) :** அரைக் கடத்தி துணை நிலைச் சேமிப்பகம் (வட்டு ) : கணினியின் அரைக் கடத்திச் சேமிப்பகத்தின் பகுதியை ஒரு வட்டு இயக்கியாக இருந்தாற்போன்று செயற்படச் செய்கிற முதன்மைச் செய்முறைப்படுத்தியாகவும், செயற்பாட்டு பொறியமைவாக அமைக்கிற மென்பொருள் மற்றும் கட்டுபாட்டு சுற்றுநெறியைப் பயன்படுத்துகிற ஒரு முறை.

**semiconductor storage :** அரைக் கடத்திச் சேமிப்பகம் ; ஓர் ஒருங்கிணைந்த மின்சுற்றுவழிச் சிப்புவில் திடநிலை மின்னணு அமைப்பிகளாக அமைந்துள்ள சேமிப்புப் பொருள்களைக் கொண்டுள்ள நினைவகச் சாதனம்.

**semi instructured decisions :** அரைகுறை முடிவுகள்; ஒரு பகுதி முன்னரே குறித்து வைக்கப்பட்டிருந்து, ஆனால் ஒரு திட்டவட்டமான பரிந்துரைத்த முடிவுக்கு வழி செய்யாத நடைமுறைகள் அடங்கிய முடிவுகள்.

**semirandom access :** அரை தற்செயல் அணுகல்; பகுதி நேரடி அணுகல்; பாதி குறிப்பற்ற அணுகுமுறை : விரும்பிய இனத்தைத் தேடுவதில் ஒரு வகை நேரடி அணுகுமுறையை இணைக்கிற ஒரு சேமிப்பில் தரவுகளைக் கண்டறியும் முறை.

**send :** அனுப்பு : தகவல் தொடர்புத் தடத்தின் வழியாக ஒரு செய்தியை அல்லது கோப்பினை அனுப்பி வைத்தல்.

**send to :** இவருக்கு அனுப்பு.

**send to back :** திருப்பி அனுப்பு.

**send later :** பின்னர் அனுப்பு.

**sendmail :** அனுப்பு அஞ்சல்; செண்ட் மெயில் : மின்னணு அஞ்சலைக் (e-mail) கையாள்வதற்குரிய ஒரு தர அளவான UNIX செயல்முறை. இதனை நிறுவுவது கடினம். அப்படி

நிறுவினாலும், பல பாதுகாப்பு அபாயங்களுக்கு இடந்தருகிறது. இதில் அடிக்கடித் தவறுகள் நிகழ்வதால் சேய்மைப் பொறிகளை அணுக இடமளித்துக் குழப்பம் உண்டாக்குகிறது.

**send now :** இப்போது அனுப்பு.

**sender :** அனுப்புநர்.

**send statement :** அனுப்பு கூற்று; அனுப்பு கட்டளை : ஸ்லிப் (SLIP), பீபீபீ (PPP) நெறிமுறைகளில், இணையச் சேவையாளரின் தொலைபேசி எண்ணைத் தொடர்பு கொண்டு சில குறிப்பிட்ட குறியீட்டெழுத்துகளை அனுப்புமாறு எழுதப்பட்ட கூற்று/கட்டளை.

**sense :** உணர்வுத்திறம்; உணர் : *1.* ஒரு வகைப்பாட்டின் குறிப்பிட்ட தொடர்பாட்டினை ஆராய்தல். *2.* வன்பொருளின் சில கூறுகளின் தற்போதைய அமைப்புமுறையைத் தீர்மானித்தல். *3.* ஓர் அட்டையில் அல்லது நாடாவில் துளையிடப்பட்ட துவாரங்களைப் படித்தல்.

**sense probe :** உணர்வு ஆய்வு ; உணர்வி : ஒரு காட்சித் திரையில் உணர்வுப் புள்ளிகளைத் தூண்டி விட்டு, அதன் மூலம் ஒரு கணினியில் உட்பாடு செய்கிற உட்பாட்டுச் செயல்முறை.

**sense switch :** உணர்வு விசை; உணர் பொத்தான் : கணினி இணைப்பு ஒரு செயல்முறை மூலம் வினவலாம். ஒரு பெரிய சிக்கலான செயல்முறையில் தவறு கண்டறியும்போது இது பெரிதும் பயனுடையதாக இருக்கும்.

**sensitive devices :** உணர்வுச் சாதனங்கள்.

**sensitivity :** உணர்வுத் திறன்; உள்வரும் சைகையில் ஏற்படும் மாறுதலுக்கு ஒரு கட்டுப்பாட்டின் உணர் திறன் அளவு.

**sensitivity analysis :** உணர் திறன் பகுப்பாய்வு; ஒரு கணித உருமாதிரியில் தனியொரு மாறிலியில் அடிக்கடி செய்யப்படும் மாறுதல்கள் எவ்வாறு ஏனைய மாறிலிகளைப் பாதிக்கின்றன என்று கண்காணித்தல்.

**sensor glove :** உணரிக் கையுறை : மெய்நிகர் நடப்புச் சூழல்களுக்கு, கையில் அணிந்து கொள்ளும் கணினி உள்ளீட்டுச் சாதனம். பயனாளரின் கைவிரல் அசைவுகளை இந்தக் கையுறை, சுற்றுச்சூழல் இருக்கும் பொருள்களை இயக்குவதற்குரிய கட்டளைகளாக மாற்றியமைக்கும். தரவுக் கையுறை (data glove) என்றும் அழைக்கப்படும்.

**sensors** : உணர்விகள் : வெப்ப நிலை, அழுத்தம், இதயத் துடிப்பு, காற்றுத் திசை, நெருப்பு போன்ற இயற்பியல் மாறுதல்களைக் கண்டறிந்து அளவிடக்கூடிய சாதனம். இயற் பியல் தூண்டல்களை மின்னனுச் சைகைகளாக மாற்றுகின்றன. எடுத்துக்காட்டு : கணினிகளில் உட்பாட்டினைச் செலுத்துதல்.

**SEPP** : எஸ்இபீபீ : இணை நிலைச்செயலாக்கத்துக்கான மென்பொருள் பொறியியல் எனப் பொருள்படும் Software Engineering for Parallel Processing என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். பகிர்ந் தமை நினைவக பல்செயலி களுக்கான இணைநிலைப் பயன்பாட்டு நிரல்களை உரு வாக்குவதற்குரிய கருவிகளை உருவாக்க, ஒன்பது ஐரோப் பியப் பல்கலைக் கழகங்களும், ஆராய்ச்சி நிறுவனங்களும் இணைந்து மேற்கொண்ட ஒரு திட்டப்பணி.

**sequence** : வரிசைமுறை : 1. ஒரு குறிப்பிட்ட விதிகளுக் கிணங்க இனங்களை வரிசைப் படுத்துதல். 2. எண்மான வரிசை முறையில் ஏறுமுக வரிசை.

**sequence character** : தொடர் எழுத்து.

**sequence check** : வரிசை முறைச் சரிபார்ப்பு ; வரிசைச் சோதனை : ஒரு தரவு தொகுதி ஏறுமுக வரி சையில் அல்லது இறங்குமுக வரிசையில் அமைந் திருக்கிறதா என்பதைச் சரி பார்க்கும் முறை.

**sequence of members**: எண் வரிசை முறை.

**sequence structure** : வரிசை முறைக் கட்டமைப்பு ; வரிசை அமைவு : ஒரு கட்டமைவு பாய்வு வரைபடத்தின் அடிப் படையான மூன்று கட்டமைப்பு களில் ஒன்று. இதில் நிரல்கள் வரிசைமுறையில் நிறை வேற்றப்படுகின்றன.

**sequential** : வரிசைமுறை யிலான; வரிசைமுறை சார்ந்த தொடர்வழி; வரிசைமுறை : கால முறை வரிசையில் நிகழ்வு கள் நிகழ்வது தொடர்பானது. இதில் நிகழ்வுகள் ஒரே சமயத் தில் நடைபெறுவதோ, ஒன்றின் மீதொன்று நிகழ்வதோ இல்லை.

**sequential access** : வரிசை முறை அணுகுதல்; தொடர்வழிச் சேர்வு; வரிசை அணுகுமுறை: சேமிப்புக் கோப்பிலிருந்து தரவு களை அவை சேமித்து வைக்கப் பட்டிருக்கும் வரிசைமுறை யிலேயே பெறும் செய்முறை. இதற்குக் காந்தநாடா தேவை.

இது காந்த வட்டுச் சேமிப்பகத்திலும் பயன்படுத்தப்படுகிறது. இதனைத் தொடர்வரிசை அணுகுதல் என்றும் கூறுவர். இது நேரடி அணுகுதல் என்பதற்கு மாறானது.

**sequential access device :** வரிசைமுறை அணுகுசாதனங்கள்.

**sequential access file:** வரிசை அணுகுமுறைக் கோப்பு.

**sequential algorithm :** வரிசைமுறைப் படிமுறைத் தருக்கம் : நிரலின் ஒவ்வொரு படிமுறையும் ஒரு குறிப்பிட்ட வரிசையில் இடம்பெறும் படிமுறைத் தருக்கம்.

**sequential computer :** வரிசைமுறைக் கணினி : காலமுறை வரிசையில் நிகழ்வுகள் நிகழ்கிற கணினி. இதில், நிகழ்வுகள் ஒரே சமயத்திலோ, ஒன்றின் மீது ஒன்றோ நிகழ்வதில்லை.

**sequential data organization :** வரிசை முறைத் தரவு அமைப்பு முறை : குறித்துரைக்கப்பட்டுள்ள வரிசைமுறைப் படித் தருக்கமுறைத் தரவுக் கூறுகளை அமைப்பாகச் செய்தல்.

**sequential data set :** வரிசைமுறைத் தரவுத் தொகுதி : காந்த நாடாவில் அமைப்பது போன்று அடுத்தடுத்த நிலைகளில் அமைக்கப்பட்ட பதிவேடுகளில் உள்ள தரவுத் தொகுதி.

**sequential data structure :** வரிசைமுறைத் தரவுக் கட்டமைப்பு : ஓர் அணு அதற்கு அடுத்துள்ள அணுவுக்கு அடுத்ததாகவுள்ள தரவுக் கட்டமைப்பு. இதனைப் பக்கத் தரவு கட்டமைப்பு என்றும் கூறுவர்.

**sequential device:** வரிசைமுறைச் சாதனம் : ஒருவகைப் புறநிலைச் சாதனம். இதிலிருந்து தரவுகளை வரிசை முறையில் படிக்கலாம்; அல்லது இதில் தரவுகள் வரிசைமுறையில் எழுதப்பட்டிருக்கும். இதில் எதனையும் விட்டுவிட முடியாது.

**sequential execution :** வரிசைமுறை இயக்கம் : நிரல் கூறுகளை அல்லது நிரல்களை ஒன்றன்பின் ஒன்றாய் தொடர்ச்சியாக நிறைவேற்றுதல்.

**sequential file :** தொடர்வழிக் கோப்பு.

**sequential file, index :** சுட்டு வரிசைக் கோப்பு.

**sequential file organization :** வரிசைமுறைக் கோப்பு அமைப்பாக்கம்; வரிசைமுறைக் கோப்பு ஒழுங்கமைப்பு : ஒரு விரறக் கட்டை அடிப்படையில் ஒரு குறிப்பிட்ட வரிசை முறையில்

கோப்புகளை அமைத்து வைத்தல். வரிசைமுறைக் கோப்புகளிலுள்ள பதிவேடுகள் ஒன்றன்பின் ஒன்றாக செய் முறைப்படுத்தப்பட வேண்டும்.

**sequential flow of control :** வரிசைமுறைக் கட்டுப்பாட்டுத் தொடர்வரிசை.

**sequential list :** வரிசை முறைப் பட்டியல் : பக்க அமைவிடங் களில் சேமித்து வைக்கப் பட்டுள்ள பட்டியல். இதனைச் செறிவுப்பட்டியல், நீட்சிமுறைப் பட்டியல் என்றும் கூறுவர்.

**sequential logic :** வரிசை முறைத் தருக்கம்; வரிசைமுறை அளவை : உட்பாட்டின் முந்திய நிலைமூலம் வெளிப்பாட்டு நிலை தீர்மானிக்கப்படுகிற சுற்றுவழி அமைப்புமுறை. இது இணைத் தருக்கம் என் பதிலிருந்து மாறுபட்டது.

**sequential logic element :** வரிசைமுறைத் தருக்க உறுப்பு : குறைந்த அளவாக ஒரு உள்ளீடு, ஒரு வெளியீடு மட்டுமாவது உள்ள ஒரு தருக்க மின்சுற்று உறுப்பு. இதன் வெளியீட்டு சமிக்கை, உள்ளீட்டு சமிக்கை அல்லது சமிக்கைகளின் இப் போதைய மற்றும் முந்தைய நிலைகளின் அடிப்படையில் இருக்கும்.

**sequential machine :** வரிசை முறை எந்திரம் : வரிசைமுறை விசைச் சுற்றுவழியின் ஒரு குறிப்பிட்ட வகையின் கணித உருமாதிரி.

**sequential pattern of excution :** வரிசைமுறை நிறைவேற்றம்.

**sequential processing :** வரிசை முறை செயலாக்கம்; வரிசை முறை செய்முறைப்படுத்தல் : வரிசையின்படி எண்முறை அல்லது அகரவரிசை முறையின் படி கோப்புகள் இயக்குதல் direct access processing, random processing என்பதற்கு எதிர்ச் சொல்.

**sequential storage :** வரிசை முறைச் சேமிப்பகம்; தொடர் வழிச் சேகரம் : தரவுகள் ஏறுமுக அல்லது இறங்குமுக எண் வரிசையில் அமைக்கப்பட்டுள்ள துணைநிலைச் சேமிப்பகம்.

**serial :** தொடர்வரிசை; தொடர்; தொடராக : 1. தனியொரு சாதனத்தில் இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட தொடர் புடைய நடவடிக்கைகள் வரிசை முறையில் நிகழ்தல். இது இணை நிகழ்விலிருந்து மாறுபட்டது.

**serial access :** தொடர்வரிசை அணுகுதல்; வரிசை அணுகு முறை : சேமிப்பகத்தில் அணுகு நேரத்திற்கும் தரவு அமைவிடத் திற்குமிடையில் ஒரு

வரிசைமுறைத் தொடர்பு இருக்கிற சேமிப்புச் சாதனத்தின் அல்லது ஊடகத்தின் விவரிப்பு. அதாவது, அணுகு நேரம், தரவு அமைவிடத்தைப் பொறுத்து அமைந்திருத்தல். இதனை வரிசை முறை அணுகுதல் என்றும் கூறுவர். இது நேரடி அணுகுதலிலிருந்து வேறுபட்டது.

serial adder : தொடர்வரிசை கூட்டல்பொறி; தொடர் வரிசைக் கூட்டி : தொடர்புடைய எண்ணளவுகள் ஒவ்வொன்றிலிருந்தும் ஒரேசமயத்தில் ஓர் இலக்கத்தைக் கொண்டு வருவதன்மூலம் செயற்பாடுகளைச் செய்கிற கூட்டல் பொறி.

serial board : தொடர்நிலைத் தளம்.

serial computer : தொடர் வரிசைக் கணினி; தொடர்நிலைக் கணினி : ஒவ்வொரு இலக்கமும் அல்லது ஒவ்வொரு தரவு சொல்லும், கணினியினால் தொடர்வரிசையில் செய்முறைப்படுத்தப்படுகிற கணினி. இது இணைவுக் கணினி என்பதிலிருந்து வேறுபட்டது.

serial communication : நேரியல் தகவல் தொடர்பு : இரு கணினிகளுக்கிடையே அல்லது ஒரு கணினிக்கும் பிற புறச்சாதனங்களுக்கும் இடையே நடைபெறும் தகவல் போக்குவரத்தில் ஒற்றைத் தடத்தில் ஒரு நேரத்தில் ஒரு துண்மி(பிட்) வீதம் தகவல் பரிமாற்றம் நடைபெறல். இத்தகைய தகவல் தொடர்பு நேர ஒத்திசைவு அல்லது ஒத்திசைவில்லா முறையில் நடைபெற முடியும். அனுப்பி, வாங்கி இரண்டுமே ஒரே பாட் (baud) வீதம், ஒரே சமன்பிட், ஒரே வகையான கட்டுப்பாட்டுத் தகவல்களையும் கொண்டிருக்க வேண்டும்.

serial data : தொடர்வரிசைத் தரவு; தொடர் நிலைத் தரவு : ஒரே சமயத்தில் ஒரு துண்மியாக வரிசை முறையில் அனுப்பப் படும் தரவு.

serial infrared : நேரியல் அகச் சிவப்பு : ஓர் அகச்சிவப்பு ஒளிக் கற்றையைப் பயன்படுத்தி, ஒரு மீட்டர் இடைவெளியில் உள்ள இரு சாதனங்களுக்கிடையே தரவுகளை அனுப்பிக் கொள்ள, ஹீவ்லெட்-பேக்கார்டு நிறுவனம் உருவாக்கிய ஒரு வழிமுறை. அனுப்பும், பெறும் சாதனங்களில் இருக்கும் துறைகள் (ports) ஒரு சீராக்கப் பட்டிருக்க வேண்டும் (aligned). இத்தகு அகச்சிவப்பு ஒளிக் கற்றை முறை பெரும்பாலும் மடிக்கணினிகளில், கையேட்டுக் கணினிகளில் பயன்படுத்தப்படுகின்றன. அச்சுப்பொறி போன்ற

புறச்சாதனங்களுக்கும் பயன் படுகின்றன.

**serial input/output :** **தொடர் வரிசை உட்பாடு/வெளிப்பாடு ; தொடர் நிலை உள்ளீடு/வெளியீடு :** துண்மிகள் ஒன்றன்பின் ஒன்றாக ஒற்றைக் கம்பி மூலம் அனுப்பப்படுகிற தரவு அனுப்பீடு. இது இணை உட்பாடு/வெளிப்பாடு என்பதிலிருந்து வேறுபட்டது.

**serial interface :** **தொடர்வரிசை இடைமுகப்பு ; தொடர்நிலை இடைமுகம் :** தரவுகள் அனைத்தும் துண்மி துண்மியாகத் தொடர்வரிசையில் நகர்கிற இடைமுகப்பு. இது இணை இடைமுகப்பு என்பதிலிருந்து மாறுபட்டது.

**serializability :** **நேரியலாக்கு இயலுமை; தொடர்வரிசைப் படுத்தும் திறன் ; வரிசை யாக்கப்படும் தன்மை :** பல பயன்பாட்டாளர்கள் ஒரே சமயத்தில் தரவுகளை அணுகும் போது, அதன் பலன், அவர்கள் ஒரே சமயத்தில் ஒருவராக அணுகும்போது நிகழும் பலனுக்கு நிகராக இருத்தல் வேண்டும். இந்த விளைவு 'தொடர் வரிசைப் படுத்தும் திறன்' எனப்படுகிறது.

**serialize :** **நேரியல்படுத்து :** பைட் பைட்டாக அனுப்பப் படும் இணை நிலை தகவல் பரிமாற்றத்தை, துண்மி துண்மியாக (பிட் பிட்டாக) அனுப்பப் படும் நேரியல் முறையாக மாற்றியமைத்தல்.

**Serial Keys :** **நேரியல் விசைகள்:** விண்டோஸ் 95ல் இருக்கும் ஒரு பண்புக் கூறு. தகவல் தொடர்பு, இடைமுகச் சாதனங்களைப் பொறுத்தமட்டில் விசையழுத் தங்களும், சுட்டிச் சமிக்கை களும் கணினியின் நேரியல் துறை (serial port) வழியாகவே ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

**serial machine :** **நேரியல் பொறி.**

**serial mouse :** **நேரியல் சுட்டி:** கணினியின் வழக்கமான நேரியல் துறையில் இணைக்கப் படும் ஒரு சுட்டுச் சாதனம்.

**serial operation :** **தொடர் வரிசைச் செயற்பாடு ; தொடர் நிலை இயக்கம் :** ஒரு சொல்லின் இலக்கங்கள் அனைத்தும் ஒரே சமயத்தில் அல்லாமல் வரிசை முறையில் கையாளப் படுகிற கணினிச் செயற்பாடு. இது இணைச் செயற்பாடு என்பதிலிருந்து வேறுபட்டது.

**serial port :** **தொடர்வரிசைத் துறை; தொடர்நிலைத் துறை; வரிசை ; இணைப்பு :** ஒரே சமயத்தில் ஒரு துண்மி வீதம் தரவுகளை ஏற்கவும் அனுப்ப

வும் பயன்படுத்தப்படும் கணினியின் உட்பாட்டு/வெளிப்பாட்டுத் துறை. பெரும்பாலான சொந்தக் கணினிகளில், ஒரு Rs-232C தொடர்வரிசை இடைமுகப்புத் துறை மூலம் தொடர்வரிசைத் தரவு செலுத்தப்படுகிறது.

**serial port adapter** : நேரியல் துறைத் தகவி : நேரியல் துறை அமைந்துள்ள, அல்லது தொடர் நிலைத் துறையை இன்னொன்றாக மாற்றியமைக்கின்ற ஓர் இடைமுக அட்டை அல்லது சாதனம்.

**serial printer** : தொடர்வரிசை அச்சுப் பொறி; வரிசை அச்சுப் பொறி; தொடர் நிலை அச்சுப் பொறி; தொடர் அச்சு எந்திரம் : ஒற்றைக் கம்பி வழியாக ஒரு சமயத்தில் ஒரு துண்மி வீதம் கணினியிலிருந்து தகவல்களைப் பெறுகிற அச்சடிப்பி. (ஒரு எழுத்து, எட்டு துண்மிகளுக்குச் சமம்). கட்டுப்பாட்டுச் சைகைகளைப் பரிமாற்றிக் கொள்வதற்கு ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட கூடுதல் கம்பிகள் தேவைப்படலாம். இது ஒரே சமயத்தில், 600 cps வேகத்தில் ஒரு எழுத்தை அச்சடிக்கிறது. இது இணை அச்சடிப்பி என்பதிலிருந்து வேறுபட்டது.

**serial processing** : தொடர் வரிசைச் செய்முறைப்படுத்துதல்; வரிசைச் செயலாக்கம்; தொடர் நிலைச் செயலாக்கம் : ஒரு கோப்பில் பதிவேடுகளை, அவை சேமித்து வைக்கப் பட்ட இயல்பான வரிசைமுறையில் ஒன்றன்பின் ஒன்றாகப் படித்தல் மற்றும்/அல்லது எழுதுதல். இது இணை செய்முறைப் படுத்தல் என்பதிலிருந்து வேறு பட்டது.

**serial reading** : தொடர்வரிசைப் படிப்பு; வரிசைமுறைப் படிப்பு ; தொடர்நிலைப் படிப்பு : துளையிட்ட அட்டையிலிருந்து பத்தி பத்தியாகப் படித்தல். இது இணையாகப் படித்தல் என்பதிலிருந்து வேறுபட்டது.

**serial transfer** : நேரியல் பரிமாற்றம்.

**serial transmission** : தொடர் வரிசை; தொடர் நிலைச் செலுத்தம் : தரவுகளை மாற்றம் செய்வதற்கான ஒரு முறை. இதில், ஓர் எழுத்தினைக் கோர்க்கின்ற துண்மிகள் வரிசைமுறையில் அனுப்பப்படுகின்றன. இது, இணை அனுப்பீடு என்பதிலிருந்து வேறுபட்டது.

**series** : தொடர்கள்.

**series circuit** : வரிசை மின்சுற்று : இரண்டு அல்லது மேற்பட்ட உள்ளுறுப்புகள் வரிசையாகத் தொடுக்கப்பட்ட ஒரு மின்

சுற்று. தொடர் மின்சுற்றில் ஒவ்வொரு உள்ளுறுப்பு வழியாகவும் மின்னோட்டம் (current) பாயும். ஆனால் மின் அழுத்தம் (voltage) உள்ளுறுப்பு களிடையே பகிர்ந்து கொள்ளப் படும்.

**serif** : செரிஃப் : எழுத்துகளில் அலங்கார முடிவுகளைக் கொண்ட ஓர் எழுத்துரு. இது செரிஃப் எழுத்து முகப்பு ஆகும்.

**server** : புரவலர் ; பணியகம் ; தலைமைக் கணினி : ஓர் இணையத்திலுள்ள கணினி. இதனைப் பல பயன்பாட்டா ளர்கள் பகிர்ந்து கொள்ளலாம்.

**server-based application** : வழங்கன்-சார்ந்த பயன்பாடு : ஒரு பிணையத்தில் பகிர்ந்து கொள்ளப்படும் ஒரு நிரல். பிணைய வழங்கனில் சேமிக்கப் பட்டிருக்கும். ஒரே நேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட கிளை யன்கள் அந்நிரலைப் பயன் படுத்திக் கொள்ளமுடியும்.

**server cluster** : வழங்கன் கொத்து : ஒருங்கிணைந்து ஒற்றை அமைப்பாகச் செயல்படும் தனித்தனிக் கணினிகளின் குழு மம். கிளையனைப் பொறுத்த வரை வழங்கன் கொத்து ஓர் ஒற்றை வழங்கன்போலவே தோற்றமளிக்கும்.

**server computer** : புரவலர் கணினி.

**server error** : வழங்கன் பிழை : பயனாளர் அல்லது கிளையன் கணினியின் பிழையாக இல்லா மல், வழங்கன் கணினியில் ஏற்படும் பிழை காரணமாக, ஹெச்டீடீபீ வழியாகக் கேட்கப் பட்ட ஒரு தகவலை நிறை வேற்றமுடியாமல் இருக்கும் நிலை. வழங்கன் பிழைகள், 5-ல் தொடங்கும் ஹெச்டீடீபீ-யின் பிழைக் குறியிட்டால் உணர்த்தப்படும்.

**server load** : தலைமைக் கணினி பணியகச் சுமை : ஒரு பிணையத் தலைமைக் கணினி எத்தனை அணுகுதல்களைப் பெறுகிறது என்பதைக் கணக்கிடும் அளவு முறை. இது பொதுவாக, வினாடிக்கு இத்தனை அழைப்புகள் என்ற கணக்கில் கணக்கிடப்படுகிறது.

**server push-pull** : வழங்கன் தள்ளு-இழு : கிளையன்/ வழங்கன் இணைந்த நுட்பங்கள் தனித்தனியாக வழங்கன் தள்ளல், கிளையன் இழுவை என்று வழங்கப்படுகின்றன. வழங்கன் தள்ளலில், வழங்கன், தகவலை கிளையனுக்குத் தள்ளி விடுகிறது. ஆனால் தரவு இணைப்பு திறந்த நிலை

யிலேயே உள்ளது. இதன் காரணமாய் தேவையான அளவுக்குத் தகவலை உலாவிக் குத் தொடர்ந்து அனுப்பிவைக்க வழங்கனுக்குச் சாத்தியமா கிறது. கிளையன் இழுவையில் வழங்கன், கிளையனுக்குத் தகவலைத் தருகிறது; ஆனால் தரவு இணைப்பு தொடர்ந்து திறந்திருப்பதில்லை. குறிப் பிட்ட காலஇடைவெளிக்குப் பிறகு மேலும் தரவு அனுப்பும் பொருட்டு தரவு இணைப்பை மீண்டும் திறக்குமாறு உலாவிக்கு வழங்கன் ஒரு ஹெச்டீஎம்எல் நிரலை அனுப்பி வைக்கும். பெரும்பாலும் ஒரு புதிய யூஆர்எல்லைத் திறக்கும் போது இது நிகழும்.

**server-side include :** வழங்கன் பக்கச் சேர்ப்புகள் : வைய விரி வலை ஆவணங்களில் இயங்கு நிலையில் உரையைச் சேர்ப் பதற்கான ஒரு நுட்பம். இவை வழங்கனால் அறிந்து கொள்ளப் பட்டு நிறைவேற்றப்படுகின்ற தனிச் சிறப்பான கட்டளைக் குறிமுறைகளாகும். அந்த ஆவணம் உலாவிக்கு அனுப்பி வைக்கப்படுவதற்கு முன்னதாக ஆவணத்தின் உடல் பகுதியில் அக்கட்டளைகளின் விடை சேர்க்கப்பட்டுவிடும். எடுத்துக் காட்டாக, உலாவிக்கு அனுப்பப் படும் ஆவணத்தில், அன்றைய தேதி, அப்போதைய நேரத்தை முத்திரையிட்டு அனுப்பி வைக்கலாம்.

**server tier :** வழங்கன் அடுக்கு.

**server type :** வழங்கன் வகை.

**service :** சேவை : *1.* தொழில் நுட்ப உதவி அல்லது பிணைய வசதி போன்ற வாடிக்கையாளர் அடிப்படையிலான அல்லது பயனாளர் நோக்கிலான ஒரு பணி. 2. நிரலாக்கம் மற்றும் மென்பொருள்களில் ஒரு நிரல் அல்லது நிரல்கூறு பிற நிரல் களுக்கு உதவி செய்தல். பெரும் பாலும், வன்பொருளுக்கு நெருக்கமான அடிநிலைப் பணி களாக இருக்கும்.

**Service Advertising Protocol :** சேவை விளம்பர நெறிமுறை : ஒரு பிணையத்திலுள்ள (கோப்பு வழங்கன் அல்லது பயன்பாட்டு வழங்கன் போன்றவற்றிலுள்ள) ஒரு சேவை - வழங்கும் கணுக் கணினி, பிணையத்திலுள்ள பிற கணுக்களுக்குத் தன்னை அணுக முடியும் என அறிவித்தல். ஒரு வழங்கன் இயக்கப்படும்போது, தனது சேவைகளை விளம்பரப் படுத்த இந்த நெறிமுறையைப் பயன்படுத்திக் கொள்கின்றது. அதே வழங்கன் அகல்நிலைக்கு மாறும்போது, இதே நெறி

முறையைப் பயன்படுத்தித் தன்னுடைய சேவைகள் இனி கிடைக்காது என்பதை அறிவிக் கின்றது.

**service bureau :** **சேவைக் கழகம்; பணி அலுவலகம் :** மற்ற ஆட் களுக்கு அல்லது அமைவனங் களுக்குத் தரவு செய்முறைப் படுத்துதல் சேவைகள் வழங்கு கிற அமைவனம். இது சில சமயம் கணினிச் சேவை நிறுமம் எனக் கூறப்படுகிறது.

**service contract :** **சேவை ஒப்பந்தம்; பணி ஒப்பந்தம் :** கணினி வணிகம், கணினிக் கடை, கணினி நிறுமம் போன்ற ஒரு கணினிப் பொறியமைவை உடனடியாகப் பழுதுபார்த்துக் கொடுக்கிற அமைவனத்துடன் செய்து கொண்டுள்ள ஒப்பந்தம்.

**service programme :** **சேவைச் செயல் முறைகள்; சேவை நிரல் தொடர்கள் :** ஒரு செயற்பாட்டுப் பொறியமைவின் கட்டுப் பாட்டுச் செயல்முறைகளுக்குத் துணைசெய்கிற செயல்முறைகள். மொழிபெயர்ப்பாளர், பயன் பாட்டு வாலாயம் போன்றவை இதற்கு எடுத்துக்காட்டு.

**service provider :** **சேவை வழங்குநர் சேவையாளர்.**

**service window :** **சேவைப் பல கணி; பணிச்சாளரம் :** ஒரு பராமரிப்பு உடன்படிக்கையில் உள்ளடங்கிய பகல் அல்லது இரவின்போதான மணி நேரங் கள் "பலகணிக்கு" வெளியே அளிக்கப்படும் சேவை இந்த உடன்படிக்கையில் அடங்காது.

**servo :** **செர்வோ ; செயற்பணி :** மின் எந்திரவியல் சாதனம். இது, துல்லியமான தொடக் கத்தை அளிப்பதற்குப் பின் னூட்டினைப் பயன்படுத்துகிறது. நாடா இயக்கியிலுள்ள விசைப் பொறி இயக்கம், ஒரு வட்டி லுள்ள ஓர் அணுகுகரத்தின் இயக்கம் போன்ற செயற் பணி களுக்காக நின்று கொள்கிறது.

**servo mechanism :** **பணிச் செயல்முறை; சேவை எந்திர அமைப்பு; பணி இயக்கமைப்பு :** பின்னூட்டுக் கட்டுப்பாட்டுப் பொறியமைவு.

**session :** **அமர்வுநேரம்; அமர்வு :** ஒரு கணினிப் பொறியமைவு இயக்குநர், ஒரு அமர்வில் ஒரு முனையத்தில் பணிபுரிகிற கால அளவு.

**session layer :** **அமர்வு அடுக்கு :** ஐஎஸ்ஓ/ஓஎஸ்ஐ ஏழு அடுக்கு களில் ஐந்தாவது அடுக்கு. தகவல் தொடர்பு கொள்ளும் இரண்டு சாதனங்களும் கட்டாயம் ஒப்புக் கொள்ளக்கூடிய விவரங்களை அமர்வு அடுக்கு கையாள்கிறது.

**set** : பொருத்துதல் ; தொகுதி ; குழு : 1. ஓர் இருமச் சிற்றத்தை 1 நிலையில் வைத்தல்; 2. ஒரு சேமிப்புச் சாதனத்தை ஒரு குறிப்பிட்ட நிலையில் வைத்தல். இது பெரும்பாலும் கழியாக இருக்கும். 3. தொடர்புடைய பொருள்களின் ஒரு தொகுதி. 4. ஒரு தொடர்புறு தரவுத் தளத்தில், பொருள்களின் தொகுதி. 5. ஓர் இணையத்தில்/படிமுறைத் தரவுத் தள உருமாதிரியில், ஒன்றும் பலவுமான தொடர்புகள். ஒரு பதிவு வகை இன்னொன்றுடன் இணைக்கப்பட்டிருக்கும் வழி.

**set block** : கணத் தொகுதி : ஒரு செயல்முறைக்கு ஒதுக்கப்பட்டுள்ள நினைவுப் பதிவுகளின் அளவைச் சுருக்கமும் விரிவாக்கமும் செய்யக்கூடிய ஒரு DOS செயற்பணி.

**set, data** : தரவுக் கணம்.

**set database password** : தரவுத் தள நுழைசொல் அமை.

**SETL** : எஸ்இடீஎல் : தொகுதிகளும், தொடர்புடைய கட்டமைப்புகளும் உள்ளடங்கிய பதின்முறை எண்மானச் செயல்முறைப்படுத்துதலுக்கு வசதி செய்து கொடுக்க வடிவமைக்கப்பட்ட உயர்நிலை மொழி.

**set of instructions** : நிரல்களின் தொகுதி.

**set print area** : அச்சுப்பரப்பு அமை.

**set theory** : கணக்கோட்பாடு : பொருள்களின் கணங்கள், அவற்றைக் கையாள்வதற்கான விதிகள்பற்றிய கணிதம் அல்லது தருக்க முறைப் பிரிவு. UNION, INTERSECT, COMPLEMENT ஆகியவை இதன் மூன்று அடிப்படைச் செயற்பாடுகள்.

**settings** : அமைப்புகள்.

**settling time** : நிலைநிற்கும் நேரம் : ஒரு வட்டு இயக்கத்திலுள்ள படி/எழுது முனை ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்கு நகரும்போது, புதிய இடத்தில் நிலைநிறுத்திக் கொள்ள எடுத்துக்கொள்ளும் நேரம்.

**set-top box** : மேல்நிலைப் பெட்டி : வடத் தொலைக்காட்சி சமிக்கைகளை தொலைக்காட்சிப் பெட்டியின் உள்ளீட்டு சமிக்கைகளாக மாற்றித்தரும் ஒரு சாதனம். தொலைக்காட்சி மூலமாக வைய விரிவலையில் உலாவர இத்தகு மேல்நிலைப் பெட்டிகள் பயன்படுகின்றன.

**setup** : நிறுவுகை; அமைப்பு முறை; அமைப்பு; அமைவு : ஒரு குறிப்பிட்ட சிக்கலுக்குத் தீர்வு

காண்பதற்கான தரவுகளின் அல்லது சாதனங்களின் அமைப்பு முறை.

**setup programme** : நிலைகொள் செயல்முறை : ஒரு பொறியமை வினை ஒரு குறிப்பிட்ட சூழலுக் கேற்ப உருவாக்குகிற மென் பொருள். சொந்தக் கணினி களில் ஒரு பெரிய சாதன மாற் றத்தைச் செயற்பாட்டுப் பொறி யமைவுக்குத் தெரிவிப்பதற்கு இது பயன்படுத்தப்படுகிறது.

**setup string** : நிலைகொள் சரம் : அச்சடிப்பி போன்ற ஒரு சாதனத்தைத் தொடக்கி வைக் கிற நிரல்களின் தொகுதி.

**setup time** : அமைப்பு முறை நேரம்; அமைப்பு நேரம்; நிறுவு நேரம் : மற்ற எந்திரச் செயற் பாடுகளைக் கணினி இயக்கு வதற்கிடையிலான நேரம். அதாவது, வட்டுகள் நகரும் அட்டைகள், படிவங்கள், பிற பொருள்கள் ஆகியவற்றை சாதனத்திற்குள்ளேயும் வெளி யேயும் மாற்றுவதற்கான நேரம்.

**setup wizard** : நிறுவுகை வழி காட்டி : மைக்ரோசாஃப்டின் விண்டோஸ் இயக்க முறைமை யில் ஒரு புதிய மென்பொருளை நிறுவிடப் பயனாளருக்கு உத விடும் ஒருநிரல். வரிசையாகக் கட்டமைக்கப்பட்ட வினாக்கள், விருப்பத்தேர்வுகள் மூலம் படிப்படியாக பயனாளரை இட்டுச் செல்லும் ஒரு வழிமுறை.

**seven- segment display** : ஏழு கூறுக் காட்சி : எண்மானக் கடி காரங்களில் காணப்படும் பொது வான காட்சிமுறை. இது எட்டு களின் ஒரு தொடர் போன்று தோன்றும் படிப்புமுறைகளை யும் குறிக்கும். தனித்தனியாக முகவரியிடத்தக்க ஏழுபட்டை கள் வரையில் தெரிந்தெடுத்த ஒளிர்வு மூலம் ஒவ்வொரு எண் அல்லது எழுத்து அமைக்கப் படுகிறது.

**.sf.ca.us** : .எஸ்எஃப்.சிஏ.யுஎஸ் : ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டு, கலிஃபோர் னியா மாநிலத்தில் சான்ஃபிரான் சிஸ்கோவைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**sferics** : ஸ்ஃபெரிக்ஸ் : வாயு மண்டல ஓசைகளைக் குறிக்கும் ஒரு சொல். செய்தித் தொடர்புக் கம்பியில் எந்த வகையான இடையீட்டையும் இது குறிக் கிறது.

**sfil** : எஸ்ஃபில் : மெக்கின் டோஷ் சிஸ்டம் 7இல் ஒலிக் கோப்புகளைக் குறிக்கும் கோப்பு வகைப் பெயர்.

.sg : .எஸ்ஜி : ஓர் இணைய தள முகவரி சிங்கப்பூரைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புலிப் பிரிவுக் களப்பெயர்.

.sgm : .எஸ்ஜிஎம் : தரநிலைப் பொதுப்படைக் குறியீட்டு மொழி (Standard Generalized Markup Language-SGML)யில் குறியாக்கம் செய்யப்பட்ட கோப்புகளை அடையாளம் காட்டும் எம்எஸ் டாஸ்/விண்டோஸ் 3.x கோப்பு வகைப் பெயர். எம்எஸ் டாஸ் மற்றும் விண்டோஸ் 3.x முறைமைகளில் கோப்பின் வகைப் பெயர் மூன்றெழுத்துகள் மட்டுமே. எனவேதான், sgml என்கிற வகைப்பெயர் மூன்றெழுத்தாகச் சுருக்கப்பட்டு விடுகிறது.

SGML : எஸ்ஜிஎம்எல் : தரநிலைப் பொதுப்படைக் குறியீட்டு மொழி எனப் பொருள்படும் Standard Generalized Markup Language என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். 1986ஆம் ஆண்டு பன்னாட்டுத் தரக்கட்டுப்பாட்டு அமைப்பு (ISO) ஏற்றுக்கொண்ட தகவல் மேலாண்மைத் தர வரையறை. பணித்தளம் மற்றும் பயன்பாட்டு மென்பொருள் சாராத ஆவணங்களை உருவாக்க வழிகோலுகிறது. இவற்றின் வடிவாக்கம், சுட்டுக் குறிப்பு மற்றும் தொடுப்புத் தகவல்கள், பணித்தளம் மாறினாலும் மாறாமல் காப்பாற்றப்படுகின்றன. பயனாளர்கள் தமது ஆவணங்களின் கட்டமைப்பை இலக்கணப் போக்கிலான நுட்பத்துடன் வடிவமைக்க உதவுகிறது.

.sh : .எஸ்ஹெச் : ஓர் இணைய தள முகவரி செயின்ட் ஹெலினா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

SHA : எஸ்ஹெச்ஏ : பாதுகாப்பான கூறுநிலைப் படிமுறைத் தருக்கம் எனப் பொருள்படும் Secure Hash Algorithm என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். செய்தி அல்லது தரவுக் கோப்பினை உருவகிக்க 160 துண்மி (பிட்) குறிமுறையில் கணக்கிடும் நுட்பம். செய்திச் சுருக்கம் என்றும் கூறப்படும். அனுப்புபவரே எஸ்ஹெச்ஏ-யைப் பயன்படுத்துகிறார். செய்தியைப் பெறுபவர் இலக்கமுறை ஒப்பத்தைச் சரிபார்க்க இதனைப் பயன்படுத்துகிறார்.

shade : கருமைச் சாயல்; நிழல் : கணினி வரைகலையில், தூய வண்ணத்துடன் கலக்கப்படும் கருமை நிறத்தின் அளவு.

**shade of grey** : சாம்பல் நிறச் சாயல்.

**shading symbols** : நிழல் குறியீடுகள் : தொகுதி வரைகலை எழுத்துகள். சில கணினி வரைகலைகளில் உள்ளமைந்த எழுத்துத் தொகுதிகளின் ஒரு பகுதி. இவை, வேறுபட்ட புள்ளிச் செறிவுகளை அளித்து மாறுபட்ட நிழற் சாயல்களின் தோற்றத்தைக் கொடுக்கிறது.

**shadow** : நிழல்.

**shadow mask** : நிழல் முகமூடி : ஒரு வண்ண CRT-இன் பார்வைக் கண்ணாடியின் பின்னால் ஒட்டிக் கொண்டிருக்கிற துளைகள் கொண்ட திரை. இந்தத் துளைகளின் வழியாக எலெக்ட்ரான் கற்றை பாஸ்ஃபோர் புள்ளிகளை நோக்கிப் பாய்ச்சப் படுகிறது.

**shadow memory** : நிழல் நினைவகம் : சில 80×86 செயலிக் கணினிகளில், கணினியின் இயக்கத்தைத் தொடங்கும் போது முறைமையின் ரோம் பயாஸ் நிரல்கூறுகளை, ரேம் நினைவகத்தில் பயன்படுத்தப் படாத பகுதியில் பதிவுசெய்ய, பயாஸ் நடைமுறைப்படுத்தும் ஒரு நுட்பம். இவ்வாறு நகலெடுத்து வைப்பதால் கணினியின் செயல்திறன் கூடுகிறது. பயாஸ் நிரல் கூறுகளை பயாஸில் சென்று தேடாமல், நினைவகத்திலுள்ள நிழல் நகல்களில் எடுத்துக் கொள்ளும். நிழல் ரேம், நிழல் ரோம் என்றும் கூறுவர்.

**shadow printer** : நிழல் அச்சுப் பொறி.

**shadow printing** : நிழல் அச்சடிப்பு; நிழல் அச்சு முறை : அச்சுத் தலைப்பினை அதன் முந்திய நிலையான 1/120 அங்குலத்திற்குள் அடக்கி பருமஎழுத்தாக அச்சடித்தல். முதல் அச்சடிப்புக்கும்மேல் அச்சடிப்புக்குமிடையில் சிறிதளவு பிழையான பதிவு மூலம் பரும எழுத்து உண்டாகிறது. இது பன்முக அச்சடிப்பிலிருந்து வேறுபட்டது.

**shadow RAM** : நிழல் ரேம் : ராம் பொதுவாக ROM சிப்புகளினால் கையாளப்படுகிற செயற்பணிகளை மேற்கொள்ளப் பயன்படுத்தப்படுகிற ஒரு RAM-இன் பகுதி. ROM-ஐவிட RAM விரைவாகச் செயற்படுவதால், செய்முறைப்படுத்தும் நேரத்தை மிச்சப்படுத்துகிறது. கட்டுப்பாட்டையும் மேம்படுத்துகிறது.

**Shannon, Claude E.** : ஷானோன், கிளாட் இ : பூலியன் இயற்கணிதம், குழூஉக்குறிக்

கலை, கணினிச் சுற்று வழிகள் ஆகியவற்றுக்கும், செய்தித் தொடர்புகளுக்கும் தமது தரவு கணிதக் கோட்பாட்டின் மூலம் அருந்தொண்டு புரிந்தவர்.

**shape** : வடிவம்.

**share** : பங்கமைப்பு ; பங்கு : நடுத்தர மற்றும் பேரளவு தரவு செய்முறைப்படுத்தும் பொறியமைவுகளைப் பயன்படுத்துவோரின் அமைவனம்.

**shared DASD** : பகிர்மான டிஏஎஸ்டி : தனியொரு தரவு மையத்தினுள் உள்ள, இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட கணினிகள் மூலம் அணுகக்கூடிய வட்டு அமைப்புமுறை. சொந்தக் கணினி இணையங்களில் பகிர்ந்து கொள்ளப்படுகிற வட்டுகள், கோப்பு புரவலர்கள் அல்லது தரவுத் தள புரவலர்கள் எனப்படும்.

**shared file** : பகிர்மானக் கோப்பு; பங்கிடும் கோப்பு; பகிர்கோப்பு: இரண்டு பொறியமைவுகளினால் ஒரே சமயத்தில் பயன்படுத்தப்படும் நேரடி அணுகுச் சாதனம். இது இரு கணினிப் பொறியமைவுகளை இணைக்கிறது.

**shared folder** : பகிர்வுக் கோப்புறை : ஒரு பிணையத்தில் இணைக்கப்பட்ட மேக்சிஸ்டம் 6.0 அல்லது பின்வந்த இயக்க முறைமையில் செயல்படும் ஒரு மெக்கின்டோஷ் கணினியில், ஒரு பயனாளர் பிணையத்தின் பிற பயனாளர்களுக்கு அணுக அனுமதி வழங்கக்கூடிய ஒரு கோப்புறை. ஒரு பீசியில் வழங்கப்படும் நெட்வொர்க் கோப்பகம் (Network Directory) என்பதோடு ஒத்தது.

**shared logic** : பகிர்வுத் தருக்கம் : ஒரு செயல்பாட்டை நடைமுறைப்படுத்த ஒன்றுக்கு மேற்பட்ட மின்சுற்றுகள் அல்லது மென்பொருள் நிரல்கூறுகளைப் பயன்படுத்துதல்.

**shared memory** : பகிர்வு நினைவகம் : 1. ஒரு பல்பணிச் சூழலில் ஒன்றுக்கு மேற்பட்ட நிரல்கள் அணுகுகின்ற நினைவகம். 2. இணைநிலைச் செயலிகள் கொண்ட கணினி அமைப்புகளில் தகவல் பரிமாறிக் கொள்ளப் பயன்படுத்தப்படும் நினைவகப்பகுதி.

**shared printer** : பகிர்வு அச்சுப்பொறி : ஒன்றுக்கு மேற்பட்ட கணினிகள் பயன்படுத்திக் கொள்ளக்கூடிய அச்சுப்பொறி. பிணையத்தில் இணைக்கப்படும் அச்சுப்பொறியும் இவ்வாறு ஒன்றுக்கு மேற்பட்ட கணினிகளால் பயன்படுத்திக் கொள்ளப்படும்.

**shared resource** : பகிர்வு வளம் : 1. ஒன்றுக்கு மேற்பட்ட சாதனங்கள் அல்லது நிரல்களால் பயன்படுத்திக் கொள்ளப்படும் ஒரு சாதனம் அல்லது தரவு அல்லது நிரல். 2. விண்டோஸ் என்டியில் பிணையப் பயனாளர்கள் அணுகுவதற்குரிய கோப்பகங்கள், கோப்புகள், அச்சுப்பொறிகள் போன்ற வளங்கள்.

**shareware** : பகிர்வு மென்பொருள் : "வாங்கும்முன் பயன்படுத்திப் பார்" என்ற அடிப்படையில் வினியோகிக்கப்படுகின்ற பதிப்புரிமை பெற்ற மென்பொருள். பரிசோதனை காலத்துக்கு அப்பாலும் அம்மென்பொருளைப் பயன்படுத்தும் பயனாளர்கள், அதனை உருவாக்கியவருக்கு ஒரு சிறிய தொகையை அனுப்பும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

**shareware and freeware** : பகிர்வு மென்பொருள் - இலவச மென்பொருள்.

**shareware centre** : பகிர்வு மென்பொருள் மையம்; பங்கீட்டு மென்பொருள் மையம்.

**sharing resources** : வளங்களைப் பகிர்ந்து கொள்ளுதல்.

**sharing, time** : காலப் பகிர்வு.

**sharpness** : கூர்மை : ஒரு காட்சிச் சாதனம் எண்மான வரைவி, அச்சுப்பொறி, சுருள் பதிப்பி போன்றவற்றில் உண்டாகும் உருக் காட்சிகளின் தெளிவும் தரமும்.

**sheet** : தாள்.

**sheet, coding** : குறிமுறைத் தாள்.

**sheet-fed scanner** : தாள் செருகு வருடுபொறி : இவ்வகை வருடுபொறிகளில் ஒரு நேரத்தில் ஒற்றைத்தாள் உள்ளிழுக்கப்பட்டு, நிலைத்திருக்கும் வருடுபொறியமைவின்மீது நகரும் போது பட/உரைத் தரவு பதியப்பட்டுவிடும். பல பக்கங்கள் உள்ள ஆவணங்களை தானாகவே தொடர்ச்சியாக வருடியெடுக்கும் வசதி இவ்வகை வருடுபொறிகளில் உண்டு.

**sheet feeder** : தாள் ஊட்டி; தாள் தள்ளி : ஓர் அச்சுப்பொறியுடன் இணைக்கப்படும் ஒரு சாதனம். இது, காகிதத் தாள்களை அல்லது உறைகளை ஒவ்வொன்றாக தானாகவே உட்செல்லும் வகையில் வடிவமைக்கப்பட்டிருக்கும். இது பெரும்பாலும் அச்சுப்பொறியின் அழுத்தத் தகட்டுப் பாளத்தில் அமைந்திருக்கும். இதனை அச்சுப்பொறி எந்திர முறையிலோ மின்னியல் முறையிலோ இயக்குகிறது.

**shelfware** : மாடப் பொருள்கள் : ஒரு வணிகரின் காட்சி மாடத்தில்

உள்ள அல்லது வாடிக்கையாளர் பயன்படுத்தாத பொருள்கள்.

**shell : உறைபொதி :** ஒரு செயல்முறையின் புறஉறை பொதி. இது பயன்படுத்து வோர்க்கு இடைமுகப்பினை அல்லது கணினிக்கு நிரல் பிறப் பிப்பதற்கான வழிமுறையினை அளிக்கிறது. உறைபொதிகள் என்பவை யூனிக்ஸ், டோஸ் போன்ற நிரலினால் செயற் படும் பொறியமைவுகளுக்காக உருவாக்கப்பட்ட கூடுதல் செயல்முறைகள் ஆகும். இது பொறியமைவினை எளிதாக இயக்குவதற்கான நிரல் தொகுதி யால் இயங்கும் இடைமுகப் பினை வழங்குகிறது. DOS 4.0, 5.0 ஆகியவை சொந்த உறை பொதிகளுடன் வருகின்றன.

**shell account : செயல்தளக் கணக்கு :** கட்டளைவரி இடை முகம் மூலமாக சேவையாளரின் கணினியில் இயக்கமுறைமைக் கட்டளைகளை இயக்கப் பய னாளருக்கு அனுமதி அளிக்கும் ஒரு கணினிச் சேவை. பெரும் பாலும் ஏதேனும் ஒரு யூனிக்ஸ் செயல்தளமாக இருக்கும். வரை கலைப் பயனாளர் இடைமுகம் (GUI) வழியாக இணையத்தில் உலாவர இதில் வசதியில்லை. இணைய வசதிகள் அனைத்துமே எழுத்து/உரை அடிப்படை யிலான கருவிகள் மூலமே பெற முடியும். இணையத்தில் உலாவ லின்ஸ்க் (Lynx) என்னும் உலாவி யும், பைன் (pine) என்னும் மின்னஞ்சல் மென்பொருளும் பெரும்பாலும் பயன்படுத்தப் படுகின்றன.

**shell out : உறைபொதி வெளிப் பாடு :** ஒரு பயன்பாட்டினை தற் காலிகமாக வெளிப்படுத்தி செயல்முறைப் பொறியமை வினுள் மீண்டும் செலுத்து வதற்கு ஒரு செயற்பணியைச் செய்து முடித்துவிட்டு மீண்டும் பயன்பாட்டுக்குள் செலுத்தி விடுதல் வேண்டும்.

**shell sort: ஷெல் பிரிப்பு ; வரிசைப்படுத்தும் முறை :** எண் களை அல்லது ஆல்ஃபா எண் மானத் தரவுகளைப் பிரிப் பதற்குப் பயன்படுத்தப்படும் முறை. இந்த முறையைக் கண்டுபிடித்தவர் டோனால்ட் ஷெல் என்பவர். அவர் பெய ரால் இந்தப் பெயர் பெற்றது. இது குமிழ் பிரிப்பைவிடத் திறமையானது.

**shielding : காப்பிடல் ; கவச மிடல் :** மின்னியல் அல்லது காந்தவியல் ஓசைகளுக்கு எதிராகக் காப்பிடுதல்.

**shift : நகர்த்தி; நகர்த்தல் :** ஓர் அலகிலுள்ள எழுத்துகளை

அல்லது தகவல்களைப் பத்தி வாரியாக இடமாக அல்லது வல மாக நகர்த்துவதற்கான கருவி.

**shift, arithmetical :** கணக்கியல் பெயர்வு.

**shift-click :** மாற்றி இயக்கு ; நகர்த்தி இயக்கு : விசைப் பல கையில் மாற்று விரற்கட் டையை அழுத்துகையில், நுண் பொறிப் பொத்தானை 'கிளிக்' செய்தல் (சொடுக்குதல்).

**shift key :** மாற்று விசை; மாற்றுச் சாவி : கணினி விசைப்பலகை மேலுள்ள விரற்கட்டை விசை. இதை அழுத்தும்போது கீழ் வரிசை எழுத்துகளுக்குப் பதிலாக தலையெழுத்தை அழுத்துவது டன் சில சிறப்பு எழுத்துகளை யும் அச்சிடும். பல விசைப் பலகைகளில் மாற்றுப் பூட்டாகப் பயன்படுகிறது. கீழ் நிலை எழுத்துக்கு வரவேண்டு மென்றால் மீண்டும் அழுத்த வேண்டும்.

**shift, logical :** தருக்கப் பெயர்வு.

**shift register :** மாற்றுப் பணிப் பதிவகம் : இருமக் குறியீடுகளை (துண்மிகள்) சேமித்து வைக்கிற ஒன்றோடொன்று இணைக்கப் பட்ட தொடர்களைக் கொண்ட ஒரு பதிவகம். இது துண்மி களை இடமும் வலமும் மாற்று வதற்கு உதவுகிறது. இரும மற்றும் தசம எண்மான முறை கள் இடநிலைக் குறியீட்டினை (இடதுகோடிநிலை மிக உயர்ந்த மதிப்புடையது) கொண்டிருக்கின்றன. எடுத்துக் காட்டாக *777123777* என்பதில் இடப் பக்கம் உள்ள ஏழுகள் வலப்பக்க ஏழுகளைவிட அதிக மதிப்புடையவை. இரும எண் குறியீட்டில் வலப்பக்கம் நகர்வது இரண்டால் வகுப் பதற்கு இணையானது. பதின்ம எண்ணில் வலப்பக்கம் நகர்வது பத்தால் வகுப்பதாகும். இருமக் கணிதத்திற்கு மாற்றுப் பணிப் பதிவகத்தைச் செய்முறைப் படுத்துவோர் பயன்படுத்து கின்றனர்.

**Shockley, William Bradford :** ஷாக்லெி வில்லியம் பிராட் ஃபோர்ட் : பெல் ஆய்வுக்கூட விஞ்ஞானி. இவர் வால்ட்டர் பிராட்டன், ஜான் பார்டீன் ஆகியோருடன் சேர்ந்து காந்தக் குமிழ் நினைவகத்தைக் கண்டு பிடிக்க உதவியாக இருந்த மின் மப்பெருக்கியைக் (டிரான் சிஸ்டர்) கண்டுபிடித்தார்.

**short :** சிறு முழு எண்; சி, சி++, சி#, ஜாவா மொழிகளில் கையா ளப்படும் தரவினம்.

**short card :** குறுகல் அட்டை : சொந்தக் கணினியில் செருகக் கூடிய அச்சிட்ட சுற்று வழிப்





குறுகல் அட்டை

பலகை. இது முழு வடிவளவு பலகையைவிட பாதியளவு நீள முடையதாகும்.

**shortcut** : குறுவழி : விண்டோஸ் 95/98இல் பெரும்பாலும் முகப்புப் பக்கத்தில் இருக்கும் ஒரு சின்னம். இதன் மீது பயனாளர் இரட்டைச் சொடுக்கிட்டு ஒரு நிரலையோ, ஓர் ஆவணத்தையோ, ஒரு தரவு கோப்பையோ, ஒரு வலைப் பக்கத்தையோ உடனடியாக அணுகமுடியும். பிற கோப்புறைகளிலும் இத்தகைய குறுவழிகளை உருவாக்கிக்கொள்ள முடியும்.

**shortcut key** : குறுவழி விசை.

**shorter wave length** : குறைந்த அலை நீளம்.

**shortest operating time** : குறுகிய செயற்பாட்டு நேரம்; மிகக் குறைந்த இயக்க நேரம்; சிறும இயக்க நேரம் : கணினியில் மிகக்குறுகிய காலத்தை எடுத்துக்கொள்ளும் அட்டவணைப்படுத்திய பணிகளுக்கான திட்டமிட்ட நடைமுறை.

**short-haul** : குறைதொலைவு : 20 மைல்களுக்கும் குறைவான தொலைவுக்கு ஒரு தகவல் தொடர்புத் தடத்தில், ஒரு

தகவல் தொடர்புச் சாதனம் சமிக்கைகளை அனுப்புதல்.

**short-haul modem :** குறுகிய இழுவை மோடெம் : செய்தித் தொடர்களில், ஒரு மைல் தூரம் வரை சைகைகளை அனுப்புகிற சாதனம்.

**shout :** கூவு; சத்தமிடு; அழுத்த மாய்ச் சொல்; உரத்துச் சொல் : மின்னஞ்சல் அல்லது செய்திக் குழு கட்டுரைகளில் அழுத்த மாய்ச் சொல்ல விரும்பும் கருத்துகளை அனைத்தும் பெரிய எழுத்தில் தெரிவிப்பது. மிகையான சத்தமிடல் வலைப் பண்பாட்டுக்கு எதிரானதாகக் கருதப்படுகிறது. இரண்டு நட்சத்திரக் குறிகளுக்கிடையில் அல்லது இரண்டு அடிக்கீறு (underscore)களுக்கிடையில் குறிப்பிடுவதன் மூலம் கருத்து களை உரத்துச் சொல்லலாம்.

**shovelware :** வாரியிடு பொருள்கள்; அள்ளித்தரு பொருள்கள் : இணையத்தில் இலவசமாக அல்லது மிகக் குறைந்த விலைக்குக் கிடைக் கின்ற மென்பொருள்கள், பகிர்வு மென்பொருள்களை ஒரு குறுவட்டில் (சிடிரோம் வட்டு) பதிவு செய்து விற்பது. இவற்றில் பெரும்பாலும் வரை கலைப் படிமங்கள், உரைப் பகுதிகள், சிறுசிறு பயன்கூறு கள் அல்லது பிற தரவுகள் இடம் பெறுவதுண்டு.

**show auditing toolbar :** தணிக் கைக் கருவிப்பட்டை காண்பி.

**show clock :** கடிகாரம் காண்பி.

**show log :** பதிகை காண்பி.

**show small icons in start menu :** தொடக்கப்பட்டியில் சிறுசின்னங் களைக் காண்பி.

**show sounds :** ஒலியைக் காட்டு : விண்டோஸ் 95/98 இயக்க முறைமைகளில் காது கேளாதோருக்கு அல்லது இரைச்சலான தொழில் கூடங் களில் பணிபுரிபவருக்கென அமைந்துள்ள வசதி. பயனாள ரின் கவனத்தைக்கவர சில பயன்பாட்டு நிரல்களில் ஒலி யெழுப்புமாறு அமைத்திருப் பர். அவ்வாறு ஒலி எழுப்பப் படும்போதெல்லாம் கண்ணில் படும்படியாக ஒரு செய்திக் குறிப்பைத் திரையில் காட்சிப் படுத்துமாறு கட்டளை யிட வசதியுள்ளது.

**SHRDLU :** எஸ்எச்ஆர்டிஎல்யூ; ஸ்ரட்லு : முதலாவது இயற்கை யான மொழிச் செயல்முறை. இது, சொற்றொடர்பு, சொற் பொருள் பகுப்பாய்வினை

உலகியல் அறிவுடன் ஒருங்கிணைக்கிறது.

**shrink-wrapped : முடித்துக் கட்டியது :** வணிக முறையில் வினியோகம் செய்யத் தயாராக பெட்டியில் போட்டு முத்திரையிடப்பட்டு விற்பனைக்கு வினியோகிக்கத் தயாராய் இருக்கும் பொருள். பெரும்பாலும், பீட்டா பதிப்பினை இவ்வாறு அழைப்பதில்லை. முடிக்கப்பட்ட இறுதிப் பதிப்பிற்கே இவ்வடைமொழி பயன்படுத்தப்படுகிறது.

**shrink wrapped software : குறுக்கப் பொதிவு மென்பொருள் :** சேமிப்பில் வாங்கிய மென்பொருள். பரவலாக ஆதரவு பெற்றுள்ள ஒரு தர அளவு மேடை.

**SHTML : எஸ்ஹெச்டீஎம்எல் :** வழங்கன் கூறாக்கும் ஹெச்டீஎம்எல் என்று பொருள்படும் Server-parted HTML என்பதன் சுருக்கம். வழங்கன் கணினியால் நிறைவேற்றப்படுகின்ற கட்டளைகள் உட்பொதிந்த மீவுரைக் குறியிடு மொழி (Hyper Text Markup Language)யில் அமைந்த உரை. எஸ்ஹெச்டீஎம்எல் ஆவணங்களை வழங்கன் முழுமையாகப் படித்துக் கூறாக்கி மாறுதல் செய்து உலாவிக்கு அனுப்பி வைக்கும்.

**S-HTTP : எஸ்-ஹெச்டீடீபீ :** பாதுகாப்பான மீவுரைப் பரிமாற்ற நெறிமுறை என்று பொருள்படும் Secure Hypertext Transfer Protocol என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். பல்வேறு மறையாக்கம் மற்றும் ஒப்புச்சான்று முறைகளை ஏற்பதாகும். அனைத்துப் பரிமாற்றங்களையும் முனைக்குமுனை பாதுகாப்பாக வைத்துக்கொள்ளவும் பரிந்துரை செய்யப்பட்டுள்ள ஹெச்டீடீபீயின் நீட்டிப்பு நெறிமுறையாகும்.

**shutdown : நிறுத்து; முடித்து வை :** தரவு இழப்பு எதுவும் நேராவகையில் ஒரு நிரலையோ, இயக்க முறைமையையோ முடிவுக்குக் கொண்டு வருதல்.

**shut off : நிறுத்துக.**

**.si : .எஸ்ஐ :** ஓர் இணைய தள முகவரி ஸ்லோவானிய நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**SI : எஸ்ஐ:** systems International என்பதன் குறும்பெயர். உலகளவில் பன்னாட்டு மெட்ரிக் முறையின் செந்தரம்.

**sibling** : உடன்பிறப்பு : ஒரு மரவுரு தரவுக் கட்டமைப்பில் ஒரே மூதாதையரிடமிருந்து கிளைத்த கணுக்கள்.




B, C ஆகியவை உடன் பிறப்புகள்
D, E, Fஆகியவை உடன்பிறப்புகள்

**sideband** : பக்கக்கற்றை; ஓரக் கற்றை : பண்பேற்றப்பட்ட சுமப்பி அலைக்கற்றையின் மேற் பகுதி அல்லது அடிப்பகுதி. இருபகுதிகளும் வெவ்வேறு தகவலைச் சுமந்து செல்லுமாறு செய்யமுடியும். இதன் காரண மாய் ஒற்றைத் தடத்தில் இரண்டு மடங்கு தகவலைச் சுமந்து செல்ல முடியும்.

**sidebar** : பக்கப் பட்டை; ஓரப் பட்டை : ஓர் ஆவணத்தில் முதன்மையான உரைப்பகுதிக்கு பக்கவாட்டில் இடம்பெறும் உரைத் தொகுதி. பெரும்பாலும் ஒரு வரைகலைப் படம் அல்லது கரை மூலம் பிரிக்கப் பட்டிருக்கும்.

**sidebard** : பக்கக் கவசம் : ஓர் ஆவணத்தின் முக்கிய வாசகப் பகுதியின் பக்கத்தில் வைக்கப் பட்டுள்ள ஒரு வாசகத் தொகுதி அல்லது ஒரு வரைகலைப் பிம்பம்.

**sided, double** : இருபக்க.

**sided, single** : ஒருபக்க.

**side effect** : பக்க விளைவு : ஒரு நடைமுறையில் அடிப்படை விளைவுடன்கூட ஏற்படும் பக்கவிளைவு.

**side head** : பக்கத் தலைப்பு; ஓரத்தலைப்பு : ஓர் அச்சு ஆவணத் தின் இடப்புற ஓரப் பகுதியில் (margin) உரையின் உடல்பகுதி யின் மேற்பகுதியோடு கிடை மட்ட சீரமைவாக இருக்கும் தலைப்பு. உரைப்பகுதிக்கு செங்குத்துச் சீரமைவாக இருப் பது இயல்பான தலைப்பாகும்.

**sidekick** : சைடுகிக் : போர் லண்ட் தயாரித்துள்ள சொந்தக் கணினிக்கான மேசைப் பயன் பாட்டுச் செயல்முறை. 1984இல் புகுத்தப்பட்டது. இது, சொந்தக் கணினிக்கான முதலாவது "பாப்பப்" (TSR) செயல்முறை யாகும். இதில் ஒரு கணிப்பி, வேர்ல்ட்ஸ்டார் இணக்க முடைய குறிப்பேடு, நியமன நாட்குறிப்பு, தொலைபேசிச் சுழற்சி, ASCII அட்டவணை ஆகியவை அடங்கியுள்ளன.

**Sieve of Eratosthenes : ஏரட்டோஸ்தீன்ஸின் சல்லடை :** பகா எண்களைக் கண்டறிவதற் கான ஒரு தருக்கமுறை. ஒரு கணினியின் அல்லது ஒரு மொழியில் படிமுறைத் தருக்கத்தில் எழுதப்பட்ட ஒரு நிரலின் வேகத்தைக் கண்டறியும் அளவுகோலாக இது பயன்படுத்தப் படுகிறது.

**sift : சலி; மாற்று :** பெருமளவுத் தரவுகளிலிருந்து வேண்டிய குறிப்பிட்ட இனத்தை வரவழைத்தல். இது தேர்ந்தெடுத்தல் என்பதிலிருந்து வேறுபட்டது.

**sifting : சலித்தல்; உள்முகப் பிரிப்பு :** மற்றப் பதிவேடுகளை உட்செலுத்துவதற்கு அனுமதிப் பதற்காகப் பதிவேடுகளை உள் முகமாகப் பிரிப்பதற்கான முறை.

**SIG : எஸ்ஐஜி :** தனி நலக் குழுமம் எனப் பொருள்படும் "Special Interest Group" என்பதன் தலைப்பெழுத்துச் சுருக்கம்.

**.sig : .சிக்; .எஸ்ஐஜி :** மின்னஞ்சல் அல்லது இணையச் செய்திக் குழுக்களில் பயன்படுத்தப்படும் ஒப்பக் கோப்புகளின் வகைப் பெயர் (Extension). இந்தக் கோப்பின் உள்ளடக்கம், மின்னஞ்சல் மடல் அல்லது செய்திக் குழுக் கட்டுரையின் இறுதியில் அவற்றுக்குரிய கிளையன் மென்பொருள்களால் தாமாகவே சேர்க்கப்பட்டுவிடும்.

**sigel density : தனிச் செறிவு.**

**SIGGRAPH : சிக்வரைகலை; சிக்கிராஃப் :** கணினி வரைகலைக் கான சிறப்பு ஆர்வலர் குழு எனப்பொருள்படும் Special Interest Group on Computer Graphics என்ற தொடரின் சுருக்கம். கணிப் பணி எந்திரச் சங்கத்தின் (Association for Computing) ஓர் அங்கம்.

**sign : குறி ; அடையாளம் :** ஓர் எண் நேர் எண்ணா அல்லது மறிநிலை எண்ணா என்பதைக் குறிக்கும் கணிதக் குறியீடு.

**signal : சைகை ; சமிக்கை :** செய்தித் தொடர்புக் கோட்பாட்டில், செய்தித் தொடர்புப் பொறியமைவில் ஒரு பன்னாட்டு இடையீடு. இது ஓசை என்பதிலிருந்து வேறுபட்டது.

**signal converter : சைகை மாற்றி :** ஒரு சைகையின் மின்னியல் அல்லது ஒளியியல் எழுத்துகளை மாற்றுகிற சாதனம்.

**signalling in/out of band : உள்/வெளிக்கற்றைச் சைகை :** செய்தித்தொடர்புகளில் உள் பட்டை என்பது, ஒரே அலை வீச்சினுள் தரவு சைகையைப்

போன்றே கட்டுப்பாட்டுச் சைகைகளை அனுப்புவதைக் குறிக்கிறது. "வெளிக்கற்றை" என்பதை அலைவீச்சுக்கு வெளியே கட்டுப்பாட்டுச் சைகைகளை அனுப்புவதைக் குறிக்கிறது.

**signaling rate** : சைகை விகிதம்; சமிக்கையிடும் விகிதம்: ஒரு செய்தித்தொடர்பு இணைப்பில் சைகைகள் அனுப்பப்படும் விகிதம்.

**signal processing** : காலம் சார்ந்த தரவு அலசல்.

**signal- to- noise ratio** : சைகை ஓசை விகிதம்; சமிக்கை இரைச்சல் விகிதம் : தரவுத் தொடர்புகளில் தேவையான சைகைக்கும் தேவையற்ற ஓசைக்கும் இடையிலான விகிதம்.

**signature** : ஒப்பம்; கையொப்பம்; குறியீட்டு எண் : அடையாளங்காண்பதற்காகவும், படிப் பாதுகாப்புக்காகவும் வன்பொருளில் அல்லது மென்பொருளில் அமைக்கப்பட்டுள்ள தனி எண்.

**signature block** : ஒப்பத் தொகுதி : ஒரு மின்னஞ்சல் செய்திக்கட்டுரை அனுப்பி வைக்கப்படுவதற்கு முன்பாகக் கடிதத்தின் இறுதியில், அஞ்சல் கிளையன் மென்பொருளினால் தானாகவே சேர்க்கப்படும் உரைப்பகுதி. ஒப்பத்தொகுதியில் பெரும்பாலும் பெயர், மின்னஞ்சல் முகவரி மற்றும் அச்செய்தியை/கட்டுரையை ஆக்கியோரை அடையாளங் காட்டும் குறிப்புகள் அடங்கியிருக்கும்.

**signature capture** : கையெழுத்துக் கவர்வு.

**sign bit** : அடையாளத் துண்மி; அடையாள இருநிலைத் துண்மி.

**sign digit** : சைகை எண்; அடையாள எண்; குறி எண்; குறி இலக்கம் : ஒரு சொல்லின் குறி நிலையிலுள்ள இலக்கம்.

**signed** : அடையாளமுள்ள.

**sign extension** : குறி விரிவாக்கம் ; அடையாள விரிவாக்கம் : ஒரு பதிவேட்டின் உயர்வரிசை நிலையிலுள்ள குறித் துண்மியின் இரட்டைப் படிநிலை. இது பொதுவாக ஒன்றின் குறை நிரப்பு அல்லது இரண்டின் குறைநிரப்பு இரும மதிப்புகளினால் நடைபெறுகிறது.

**sign flag** : குறிக்கொடி; அடையாளக் கொடி : ஒரு செயற்பாட்டின் மிக முக்கியமான துண்மி 1 என்னும் மதிப்பளவினைக் கொண்டிருக்குமானால், 1இன் நிலைக்குச் செல்லும் கரணம்.

**significance** : முகமையான.

**significant character, least** : குறை மதிப்பு எழுத்து.

**significant digit** : முக்கிய இலக்கம்; மதிப்புறு எண்; முதன்மை எண் : ஓர் எண்ணின் துல்லியத்துக்கு உதவி புரியும் ஓர் இலக்கம். முக்கிய இலக்கங்களின் எண்ணிக்கை மிகஅதிக மதிப்பளவைக் கொடுக்கும் இலக்கத்திலிருந்து கணக்கிடப்படுகிறது. இது மிக அதிக முக்கிய இலக்கம் எனப்படும். மிகக் குறைந்த மதிப்பளவைக் கொடுக்கும் மதிப்பளவு மிகக் குறைந்த முக்கிய இலக்கம் எனப்படும்.

**significant digits** : முக்கிய இலக்கங்கள் : ஓர் எண்ணுக்கு அதிக மதிப்பினைக் கொடுக்கக் கூடிய, அந்த எண்ணிலுள்ள இலக்கங்கள். எடுத்துக்காட்டாக, 00001234 என்ற எண்ணில் 1234 என்பவை முக்கிய எண்கள்.

**sign off** : கலைப்பு; அடையாளம் நிறுத்து; இணைப்புத் துண்டிப்பு : 1. ஒரு நேரப் பகிர்மான கணினி இணையத்திலிருந்து தொடர்பறுக்கும் செய்முறை. 2. பயன்பாட்டாளர்/கணினி இடைமுகப்பு எதனையும் கலைத்தல்.

**sign on** : இணைத்தல்; அடையாளம் கொடு ; இணைப்புத் தொடங்குதல் : 1. ஒரு நேரப் பகிர்மானக் கணினி இணையத்தில் இணைப்புக் கொடுக்கும் செய்முறை. 2. பயன்பாட்டாளர்/கணினி இடைமுகப் பிணை ஏற்படுத்துதல்.

**sign position** : குறியீட்டு நிலை; அடையாள நிலை; குறியிடம் : ஓர் எண்ணின் குறியீடு அமைந்துள்ள நிலை.

**silabi structure** : அசை பிரித்தல்.

**silica gel** : சிலிக்கா கூழ் : சிலிக்கன் டையாக்சைடின் மிகுந்த உறிஞ்சும் சக்தியுள்ள வடிவம். இது பெரும்பாலும் துளையுள்ள பைகளில் பொதியப்பட்டு, கப்பலில் செல்லும்போது, சேமித்து வைக்கும்போது ஈரத்தை உறிஞ்சுவதற்கான சாதனத்துடன் சிப்பம் செய்யப்பட்டிருக்கும்.

**silicon** : சிலிக்கன் : மின்மப் பெருக்கிகள், ஒருங்கிணைந்த மின்சுற்று வழிகள், சூரிய மின் கலங்கள் போன்றவற்றைத் தயாரிப்பதில் பயன்படுத்தப்படும் அலோக வேதியியல் தனிமம். மணலிலும், களிமண்ணிலும் காணப்படும் வேதியியல் தனிமம். இதன் அணு எண் 14.

**silicon chip** : சிலிக்கன் சிப்பு : மேற்பரப்பில் பல்லாயிரம்

மின்னணு அமைப்பிகளும் மின் சுற்று வழித் தோரணிகளும் செதுக்கப்பட்டுள்ள ஒரு சிலிக்கன் வில்லையின் ஒரு நுண்ணிய பகுதி.

**silicon compiler : சிலிக்கன் தொகுப்பி; சிலிக்கன் கட்டுப் படுத்தும் சரியாக்கி :** ஒரு சிப்பு வின் மின்னணு வடிவமைப்பை உறுப்புகளின் உண்மையான கட்டமைப்பாக மாற்றுகிற மென்பொருள்.

**silicon dioxide ($SiO_2$) : சிலிக்கன் டையாக்சைடு ($SiO_2$) :** பாறை, படிகக் கல், மணல், மணிக்கல் போன்றவற்றில் காணப்படும் கடினமான, பளபளப்பான கனிமம். (MOS) சிப்பு உரு வாக்கத்தில், இது மேல் படுகை யின் உலோக வழிகளுக்கும், கீழேயுள்ள சிலிக்கன் கூறு களுக்கு மிடையில் மின்காப் பினை ஏற்படுத்தப் பயன் படுத்தப்படுகிறது.

**silicon disk : சிலிக்கன் வட்டு :** நினைவகத்தில் நிரந்தரமாக மாற்றுருக் கொள்ளும் வட்டு இயக்கி. இது எடைக் குறைப் புக்காக "லேப்டாப்"களில் பயன் படுத்தப்படுகிறது. இதன் உள்ளடக்கங்களைப் பேணி வரு வதற்கு ஒரு மின் கலத்திலிருந்து இதற்கு இடைவிடாது மின் விசையூட்டப்பட வேண்டும்.

**silicon foundry : சிலிக்கன் வார்ப் படச்சாலை :** வடிவமைப்பினை மட்டும் கொண்டு, உற்பத்தி செய்யும் வசதிகள் இல்லாத மற்ற நிறுமங்களுக்காகச் சிப்பு கள் தயாரிக்கும் அமைவனம்.

**silicon-on-sapphire : மாணிக்கத் தில் சிலிக்கான் :** குறைகடத்தி களை உருவாக்குதலில் ஒரு வகை. செயற்கை மாணிக்கக் கல்லினால் கடத்தல் தடுப்பு செய்யப்பட்ட ஒற்றைச் சிலிக் கான் அடுக்கினால் ஆன குறை கடத்திச் சாதனங்கள்.

**silicon valley : சிலிக்கான் வேலி; சிலிக்கான் பள்ளத்தாக்கு :** கலிஃபோர்னியாவில் சான் ஃபிரான்சிஸ்கோ வளை குடாவுக்குத் தெற்கேயுள்ள நிலப்பகுதி இவ்வாறு அழைக்கப்படுகிறது. அதன் உண்மையான பெயர் சாந்தா கிளாரா பள்ளத்தாக்கு என்பதா கும். பாலோ ஆல்ட்டோ விலிருந்து சான்ஜோஸ் வரை யுள்ள பகுதி இது. மிகப்பெரும் மின்னணு மற்றும் கணினி ஆய்வு, உருவாக்கம் மற்றும் தயாரிப்பு நிறுவனங்கள் நிறைந் திருப்பதால் இப்பெயர் பெற்றது.

**silicon wafer : சிலிக்கன் வில்லை; சிலிக்கன் ஓடு; சிலிக் கன் சீவல் :** ஒருங்கிணைந்த சிப்புகள் உருவாக்கப் பயன்

படும் சிலிக்கன் சிப்பு. உருவாக்கியபின், இந்த வில்லை பல தனித்தனி சிப்புகளாக வெட்டப்பட்டு, கோட்டுத் தொகுதிகளில் இரட்டையாக ஏற்றப்படுகின்றன.

**SIMD** : எஸ்ஐஎம்டி : ஒற்றை நிரல் பல தரவு என்று பொருள்படும் Single-Instruction, Multi-Data என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணைநிலைச் செயலிக் கணினிக் கட்டுமானத்தில் ஒருவகை. ஒரு நிரல் செயலி நிரலை கொணர்ந்து மற்ற பல செயலிகளுக்கு நிரல்களை அனுப்பிவைக்கும்.

**SIMM** : சிம் : ஒற்றை உள்ளமை நினைவகக்கூறு என்று பொருள்படும் Single Inline Memory Module என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். நினைவகச் சிப்புகளை மேற்பரப்பில் செருகக்கூடியவாறு வடிவமைக்கப்பட்ட ஒரு சிறிய மின்சுற்றுப் பலகை.

**Simple Mail Transfer Protocol** : எளிய அஞ்சல் பரிமாற்ற நெறிமுறை : ஒரு பிணையத்திலுள்ள ஒரு கணினியிலிருந்து இன்னொரு கணினிக்கு செய்திகளை அனுப்புவதற்கான டீசிபி/ஐபி நெறிமுறை. இணையத்தில் மின்னஞ்சல்களை திசைவிக்க இந்த நெறிமுறை பயன்படுகிறது. சுருக்கமாக எஸ்எம்டீபீ (SMTP) என்று அழைப்பர்.

**simple querry wiz** : எளிய வினவல் வழிகாட்டி.

**simple type** : சாதாவகை; எளிய இனம்.

**simplex** : ஒரு வழி; ஒற்றையான; எளிய : தரவுகளை ஒரே திரையில் மட்டுமே அனுப்பக்கூடிய ஒரு செய்தித்தொடர்பு இணைப்பு. இது முழு டூப்ளெக்ஸ், அரை டூப்ளெக்ஸ் என்பவற்றிலிருந்து வேறுபட்டது.

**simplex transmission** : எளிய அனுப்பு வழி : செய்தித் தொடர்பினை முன்னரே நிருணயிக்கப்பட்ட ஒரு குறிப்பிட்ட திசையில் மட்டுமே அனுமதிக்கிற, ஒரு வழியின் ஊடே தகவல்கள் நகர்ந்து செல்லுதல்.

**SIMSCRIPT** : சிம்ஸ்கிரிப்ட் : தூண்டுதல் பயன்பாடுகளுக்காகக் குறிப்பாக வடிவமைக்கப்பட்ட உயர்நிலை செயல்முறைப்படுத்தும் மொழி.

**simulation** : தூண்டல்; போலச் செய்தல்; பாவனை; நடிப்பு; மற்றொன்றைப்போல் : மற்றொரு பொறியமைவின் செயல்முறையின் சில குறிப்பிட்ட

அம்சங்களை உருவாக்கிக் காட்டுதல். இயற்பியல் நிகழ்வு களை, ஒரு கணினியில் நிறை வேற்றப்படும் செயற்பாடுகளின் மூலமாக இன்னொரு கணினி மூலம் செயற்படுத்துதல்.

**simulator :** தூண்டு கருவி ; போலிச் செய்கருவி : ஓர் இயற் பியல் அல்லது அருவப் பொறியமைவின் செயல் முறையின் சில குறிப்பிட்ட அம்சங்களை உருவாக்கிக் காட்டுகிற சாதனம், கணினிச் செயல்முறை அல்லது பொறி யமைவு.

**simultaneous :** உடனிகழ்; ஒருங்கியல்; ஒரே நேர.

**simulataneous input/output :** உடனிகழ் உட்பாடு/வெளிப் பாடு; ஒருங்கியல் உட்பாடு/ வெளிப்பாடு ; ஒரே நேர உள் ளீடு/வெளியீடு : சில தகவல் களை உட்பாடாகச் செலுத்தவும், வேறு சில தகவல்களை வெளிப் பாடாக அமையவும் அனுமதிக் கிற சில கணினிப்பொறி யமைவுகளிலுள்ள செய்முறை.

**simultaneous processing :** ஒருங்கியல் செய்முறைப்படுத்து தல்; ஒரே நேரச் செயலாக்கம்; உடனிகழ் செயலாக்கம் : ஒரே நேரத்தில் இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட பணி களைச் செய்தல். இது உடனி கழ்வுச் செய்முறைப்படுத்துதலி லிருந்து வேறுபட்டது.

**sine wave :** சைன் அலை : ஒற்றை அலைவரிசையில் அதி ரும் பொருள்களினால் உரு வாக்கப்படும் ஒரே சீரான, குறிப்பிட்ட நேரச் சீர்மையுடன் கூடிய அலை.




சைன் அலை

**single :** தனி; ஒற்றை.

**single address :** தனிமுகவரி ; ஒற்றை முகவரி.

**single bit error :** ஒற்றை பிட் பிழை; ஒற்றைத் துண்மி வழு.

**single-board :** ஒற்றைப் பலகை : கணினியில் இருக்கும் ஒருவகை மின்சுற்றுப் பலகை. ஒரே ஒரு பலகை மட்டுமே இருக்கும். பொதுவாக, கூடுதலாக வேறு பலகைகளைச் செருவதற்கு இடம் இருக்காது.

**single board computer** : ஒற்றைப் பலகைக் கணினி ; ஒரே அட்டைக் கணினி : ஒரே பலகையில் CPU, ROM, RAM, புறநிலை இடைமுகப்புகள் உட்பட அனைத்து மின்சுற்று நெறியையும் கொண்டுள்ள கணினி.

**single click** : ஒற்றைச் சொடுக்கு.

**single density** : ஒற்றைச் செறிவு; தனி அடர்த்தி; ஒற்றை அடர்த்தி : ஒரு நெகிழ் வட்டில் தரவுகளைச் சேமித்து வைக்கும் முறை.

**single density disk** : ஒற்றை அடர்த்தி வட்டு : முதல் தலைமுறை நெகிழ்வட்டு.

**single numeric value** : ஒற்றை எண்ணியல் மதிப்பளவு.

**single path** : ஒற்றைவழி : இது ஒரு போகு இடை முகப்புக்கு மாறுபட்டது.

**single precision** : ஒற்றைத் துல்லியம்; ஒற்றைச் சரிநுட்பம் ; ஒரு மடங்கு துல்லியம் : ஓர் எண்ணைக் குறிப்பதற்கு ஒரு கணினிச் சொல்லைப் பயன்படுத்துதல். இது, இரட்டைத் துல்லியம், மும்மைத் துல்லியம் என்பவற்றிலிருந்து வேறுபட்டது.

**single precision number** : ஒற்றைத் துல்லிய எண் : நினைவகத்தின் 4 எண்ணியல்களுக்கு மட்டுமே பொதுவாக ஒதுக்கப்படும் ஒரு பதின்மப் புள்ளி எண்.

**single precision variable** : ஒற்றைத் துல்லிய மாறிலி.

**single setup** : ஒற்றை அமைவு.

**single-sided** : ஒற்றைப் பக்க : ஒரே ஒரு பக்கத்தில் மட்டுமே தகவல் பதிய முடிகிற நெகிழ் வட்டுகளைப் பற்றியது.

**single sided disk** : ஒரு பக்க வட்டு; ஒற்றைப் பக்கவட்டு : தகவல் படிக்கவும், எழுதவும் ஒரே ஒரு பக்கத்தை மட்டும் பயன்படுத்தும் வட்டு.

**single step** : ஒற்றை நடவடிக்கை; ஒரு நிலை; ஒற்றை அடி : கணினி இயங்கத் தொடங்கியவுடன் ஓர் நிரல் மட்டுமே நிறைவேற்றப்படும் வகையில் அமைந்த கணினிச் செயற்பாடு.

**single tasking** : ஒற்றைப் பணி.

**single threading** : ஒற்றை இழையூட்டம்; ஒற்றைப் புரியாக்கம் : 1. ஒரு நிரலுக்குள் ஒரு நேரத்தில் ஒரேயொரு செயலாக்கத்தை மட்டுமே இயக்குதல். 2. ஒரு மரவுரு தரவு கட்டமைப்பிலுள்ள ஒவ்வொரு இலைக் கணுவும் அதன் பெற்றோரைக் குறிக்கும் சுட்டினைக் கொண்டிருக்கும் நிலை.

**single user** : ஒற்றைப் பயனாளர்.

**single-user computer :** ஒற்றைப் பயனாளர் கணினி : ஒரேயொரு நபர் மட்டுமே பணிபுரியும் வண்ணம் வடிவமைக்கப்பட்ட ஒரு கணினி. சொந்தக் கணினி என்றும் அழைக்கப்படும்.

**signal, zero output :** வெளியீடில்லாக் குறிகை; வெளியீடில்லாச் சமிக்கை.

**sink :** வாங்கி : வேறொரு சாதனம் அனுப்புவதைப் பெறுகின்ற சாதனம் அல்லது சாதனத்தின் ஒரு பாகம்.

**SIP :** சிப்; எஸ்ஐபீ : ஒற்றை உள்ளகத் தொகுப்பு எனப் பொருள்படும் Single Inline Package என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணைப்புமுனைகள் அனைத்தும் சாதனத்தின் ஒரு புறத்தில் அமைந்துள்ள, ஒரு மின்னணுக் கருவியின் கட்டுமான வகை.

**SIPP :** எஸ்ஐபீபீ : ஒற்றை உள்ளகப் பின்னமைந்த தொகுப்பு என்று பொருள்படும் Single Inline Pinned Package என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**.sit :** .சிட்; .எஸ்ஐடீ : மெக்கின்டோஷ் கணினிகளில் ஸ்டஃபிபீட் நிரல் மூலம் இறுக்கிச் சுருக்கப்படும் கோப்புகளின் வகைப்பெயர் (File extension).

**site :** தளம் : தனிச்சுற்று வழியினைக் கேட்டு, தனியொரு HTTP சேவையர்மூலம் அளிக்கப்படும் சேவை. இந்தப் பொருள் வரையறையின்படி சுற்றுவழியில் உள்ள www.netgen. com ஒரு தளம் ஆகும்.

**site licence :** தள உரிமம் : கொள்முதல் செய்பவரின் வளாகத்தில் ஒரு குறிப்பிட்ட மென்பொருளைப் பயன்படுத்துவதற்கு ஒரு மென்பொருள் தயாரிப்பாளர் அல்லது அவரது முகவர் வழங்கும் ஓர் உரிமம். இந்த உரிமம், வளாகத்திலுள்ள ஒரு சில எந்திரங்களில் மட்டும் ஒரு மென்பொருளைப் பயன்படுத்த அனுமதிக்கிறது.

**site registration :** தளப் பதிவு.

**SI units :** எஸ்ஐ அலகுகள் : பன்னாட்டு மெட்ரிக்முறையில் அளவு அலகுகள். இது பொறியியல் அலகுகளிலிருந்து வேறுபட்டது.

**sixteen- bit chip :** பதினாறு துண்மிச் சிப்பு : ஒரே சமயத்தில் 16 துண்மிகளாகத் தகவல்களைச் செய்முறைப்படுத்துகிற நுண் செய்முறைப்படுத்தும் சிப்பு. இது, எட்டுத் துண்மிச் சிப்பு, 32 துண்மிச் சிப்பு ஆகியவற்றிலிருந்து வேறுபட்டது.

**size :** வடிவளவு ; பரிமாணம்.

**size box** : உருவளவுப் பெட்டி : மெக்கின்டோஷ் கணினித் திரையில் தோன்றும் விண்டோவின் சட்டத்தில் மேல் வலதுமூலையில் காணப்படும் இயக்கு விசை. பயனாளர் இந்தப் பெட்டிமீது சொடுக்கும்போது, சாளரம் உச்ச அளவுக்கும் பயனாளர் வரையறுத்த அளவுக்கும் இடையே மாறும்.

**.sj** : .எஸ்ஜே : ஓர் இணைய தள முகவரி ஸ்வால்பார்டு-ஜேன் மாயென் தீவுகளைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப்பெயர்.

**.sk** : .எஸ்கே : ஓர் இணைய தள முகவரி ஸ்லோவாக் குடியரசைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**sketching** : உருவரை தீட்டுதல்; செதுக்குதல்; வரைவு : கணினி வரைகலை உத்தி. இதில் சறுக்கியின் பாதை நெடுக கோடுகளின் ஒரு பட்டை வரையப்படுகிறது அல்லது தீட்டப்படுகிறது.

**sketch pad** : உருவரை திண்டு; செதுக்கு அட்டை; வரைவு அட்டை : காட்சித் திரையில் காட்டப்படும் செயல் முறைச் சேமிப்புப்பகுதி. இது, வரைகலையை அல்லது வாசகத் தகவல்களை நிரந்தரமாகச் சேமித்து வைப்பதற்கு முன்பு, இயக்குபவர் எளிதாகச் சேர்க்கவும் நீக்கவும் அனுமதிக்கிறது.

**skew** : சாய்வு; திரிபு; கோணல் : எப்படி இருக்கிறது, எப்படி இருக்க வேண்டும் என்பதற்கிடையேயான வேறுபாடு. (எ-டு) ஓர் ஆவணத்தை அச்செடுக்கும்போது உள்ளபடி அச்சாகாமல், சீரமைவு சரியின்றி அச்சாதல். மின்சுற்றுகள் பரப்பப்படும் சமிக்கைகளுக்கு ஒன்று போலப் பதிலிறுக்காத சூழ்நிலையில்,' உள்ளீடு வெளியீடுகளுக்கு இடையே வேறுபாடு இருத்தல்.

**skip** : துள்ளல்; தாண்டு; தவிர் : நிரல்கள் ஒரு வரிசை முறையில் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நிரல்களைப் புறக்கணித்து விடுதல்.

**skip forward** : முன்னோக்கி நகர்.

**skutch box** : ஸ்கட்ச் பெட்டி : ஸ்கட்ச் எலெக்ட்ரானிக்ஸ் நிறுவனம் உற்பத்தி செய்யும் ஒரு சாதனத்தின் பேச்சுவழக்குச் சொல். ஒரு தொலைபேசி இணைப்புபோன்ற பாவிப்புகளை (simulations) உருவாக்க இந்த சாதனம் உதவும். தொலைத்தொடர்பு அமைப்புகளையும் சாதனங்களையும் சோதனை செய்ய இச்சாதனம் உதவும்.

**.sl** : .எஸ்எல் : ஓர் இணைய தள முகவரி சியாரா லியோன் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**slab** : சொல் ; சொற்பகுதி : ஒரு சொல்லின் பகுதி.

**slace** : ஸ்லேஸ் : மற்றொரு சாதனத்தினால் கட்டுப்படுத்தப் படும் சாதனம்.

**slack time** : ஓய்வு நேரம்; தளர் நேரம்.

**slave** : அடிமை : வேறொரு சாதனத்தினால் கட்டுப்படுத்தப் படும் சாதனம்.

**slave system** : அடிமை முறைமை.

**slave tube** : அடிமைக் குழாய் : இரு குழாய்களும் ஒரே மாதிரி யாகச்-செயல்படுகிற வகையில் ஒரு மின்வாய் மற்றொரு மின் வாயுடன் இணைக்கப்பட்டுள்ள மின்வாய்.

**sleep** : உறக்கம் : செயல் முறைப்படுத்துவதில் முடிவற்ற வளையம் அல்லது செயல் முறைப்படுத்திய காலதாமதம் காரணமாக ஏற்படும் செயலற்ற நிலை. செயல் முறைப்படுத்தும் மொழியில் உறக்க கட்டளை யானது, ஒரு குறிப்பிட்ட காலஅளவுக்குக் காலத்தாழ் வினை உண்டாக்குகிறது.

**sleeve** : குழல் ; உறை ; காப் புறை : ஒரு நெகிழ்வட்டினைச் சேமித்து வைப்பதற்கான பாது காப்பு உறை.

**slew** : விசை ஊசல்; நகர்த்து; ஓட்டு : ஓர் அச்சுப்பொறி ஊடே காகிதத்தை நகர்த்தல்.

**slewing** : விசை ஊசலாட்டம்; நகர்த்துதல்; ஓட்டம் : எண்மான முறையில் கட்டுப்படுத்தப் படும் எந்திர சாதனங்களை ஒரு நிலையிலிருந்து இன்னொரு நிலைக்கு நகர்த்தும் வேகம்.

**slice** : துண்டம்; நறுக்கு : சிப்பு கட்டமைவின் ஒரு தனிவகை. இது, சொல் துண்மிக்கு வடி வளவை அதிகரிப்பதற்குச் சாதனங்களை இடையிணைப்பு செய்வதற்கு அனுமதிக்கிறது.

**slide** : காட்சி வில்லை; பட வில்லை : வரிசையாகக் காட்டப் படும் திரைக்காட்சி நிகழ்ச்சி யில் ஒரு படக்காட்சி.

**slide rule** : நகரும் சட்டகம் ; நழுவு நுண்ணளவு கோல்.

**slide show** : வில்லைக் காட்சி ; காட்சி வில்லைக் காட்சி : ஒளிப் பேழைக் காட்சித் திரையில் ஒரு காலவரிசைப்படி வரைகலை உருக்காட்சிகளைக் காட்டுகிற கணினி வரைகலை மென் பொருள்.

**slide show package** : காட்சி வில்லைக் காட்சித் தொகுதி ; வில்லைக் காட்சித் தொகுப்பு : ஒளிப்பேழைக் காட்சித் திரையில் இனங்களின் வரிசைமுறையில் வரைகலைகளைக் காட்டுகிற கணினி வரைகலை மென்பொருள் தொகுதி. மைக்ரோசாஃப்டின் பவர்பாயின்ட் பணித்தொகுப்பில் இது போன்ற திரைக்காட்சிப் படைப்பை உருவாக்க முடியும்.

**sliding window** : சறுக்குப் பலகணி; சறுக்குச் சாளரம் : ஒப்புகையளிப்பதற்கு முன்பு பன்முகத் தொகுதிகளை அனுப்புகிற செய்தித் தொடர்பு மரபு முறை. அனுப்பப்பட்டு ஒப்புகையளிக்கப்பட்ட தொகுதிகளின் போக்கினை இருமுனைகளும் கண்காணிக்கின்றன. அனுப்பப்பட்டு ஒப்புகையளிக்கப்பட்டவை பல கணியின் இடப்புறமும், அனுப்பப்பட்டு ஒப்புகையளிக்கப்படாதவை பலகணியின் வலப்புறமும் காணப்படும்.

**SLIP** : ஸ்லிப் : 1. நேரியல் இணைப்பு இணைய நெறிமுறை என்று பொருள்படும் Serial Line Internet Protocol என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஐபீ தரவுப் பொதிகளை தொலைபேசி இணைப்பு வழியாக அனுப்புவதற்கு அனுமதிக்கும் ஒரு தரவுத் தொடுப்பு நெறிமுறை (Data Link Protocol). ஒரு தனிக்கணினி அல்லது ஒரு குறும்பரப்புப் பிணையம், இணையத்துடனோ இன்னபிற பிணையங்களுடனோ இணைப்பு ஏற்படுத்திக்கொள்ள இது வசதி செய்கிறது.

**SLIP emulator** : ஸ்லிப் போன்மி; ஸ்லிப் ஒப்பாக்கி; ஸ்லிப் போலாக்கி : யூனிக்ஸ் செயல்தள இணைப்புகளில் நேரடியான ஸ்லிப் இணைப்பு வழங்காமல், ஸ்லிப் இணைப்பு போலவே செயல்படும் மென்பொருள். பெரும்பாலான இணையச் சேவை நிறுவனங்கள் யூனிக்ஸ் அடிப்படையிலேயே செயல்படுகின்றன. பயனாளர்களுக்கு செயல்தளக் கணக்கு மூலம் இணைய அணுகலை வழங்குகின்றன. ஸ்லிப் இணைப்பு போன்றே, ஸ்லிப் போன்மிகளும் பயனாளர், இணையத்தில் இணையும்போது, நேரடியாக, சேவை நிறுவனத்தின் யூனிக்ஸ் சூழலை அணுகுவதைத் தவிர்த்து, வரைகலை வலை உலாவிகளைப் போன்றே இணையப் பயன்பாடுகளை நுகர்வதற்கு வாய்ப்பளிக்கின்றன.

**slip stream** : சறுக்கு ஓட்டம் : மென்பொருளில் ஒரு நுண்ணிய

அல்லது கூட்டல் அதிகரிப்புச் சாதனத்தைப் பொருத்துதல். ஒரு புதிய பதிப்பு எண்ணை உருவாக்குவதன்மூலம் இத் தகைய சேர்ப்பினை அடை யாளங்காட்டாத வகையில் இது செய்யப்படுகிறது.

**slope : சரிவு நிலை :** ஒரு கிடை மட்ட அலகில் ஒரு வளை கோடு ஏறுகிற அல்லது இறங்கு கிற விகிதம்.

**slot : செருகுவாய்; கொள்தடம்; துளை விளிம்பு; பொருத்துமிடம் :** கூடுதலான அச்சிட்ட சுற்று வழிப் பலகைகளுக்கான கொள் தடம். வட்டினை அல்லது நாடாவைச் செருகுவதற்கும் எடுப்பதற்குமுரிய கொள்தடம். செய்தித் தொடர்புகளில், ஒரு குறுகிய அலைவரிசை.

**slotted ring : செருகுவாய் வளையம்.**

**Slow Keys : மெதுவிசைகள் :** மெக்கின்டோஷ் கணினிகளில் விசைப்பலகையில் இருக்கும் ஒரு வசதி. டாஸ், விண்டோஸ் முறைமைகளிலும் இவ்வசதி உள்ளது. பட்டறிவு இல்லாத பயனாளர்கள் விசைப்பலகை யில் தட்டச்சு செய்யும்போது கவனக்குறைவாக அருகிலுள்ள பிற விசைகள்மீது விரல்கள் லேசாகப்பட்டாலும் விரும்பத் தகாத எழுத்துகள் பதிவாவ துண்டு. இந் நிலைமையைப் போக்கவே இவ்வசதி வழங்கப் பட்டுள்ளது. ஒரு விசைமீது சிறிது நேரம் விரலை அழுத்தி வைத்திருந்தால்தான் அதற்குரிய எழுத்துத் திரையில் பதிவாகும்.

**SLSI : எஸ்எல்எஸ்ஐ; சில்சி :** மீப் பெரிய நிறைகோல் ஒருங் கிணைப்பு என்று பொருள்படும் Super Large Scale Integration என் பதன் தலைப்பெழுத்துச் சுருக்கம். ஒரு சிப்புக்கு பத்து இலட்சம் அல்லது கூடுதல் பாகங்களைக் கொண்ட மிகஅதிக அடர்த்தி சிப்புகளைப் பயன்படுத்துதல்.

**SLT : எஸ்எல்டி :** திண்மத் தருக்க முறை உத்தி எனப் பொருள் படும் Solid Logic Technique என் பதன் தலைப்பெழுத்துச் சுருக்கம். இதனை IBM புனைந்தது. ஒரு சுற்றுவழித் தகவமைவினை உருவாக்குவதற்கான நுண் மின்னணுத் தொகுதி உத்தியைக் குறிக்கிறது.

**slug : புடைப்பு ; பருங்குழை :** காகிதத்தில் அச்சடிப்பதன் மூலம், அச்சடிக்கத்தக்க எழுத்து அச்சுகளின் உருக்காட்சியைக் கொண்டு செல்கிற உலோக மெத்தை.

**.sm : .எஸ்எம் :** ஓர் இணைய தள முகவரி சான்மாரினோ

நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**small business computer : சிறுவணிகக் கணினி :** வணிகப் பயன்பாடுகளைச் செய்முறைப் படுத்துவதற்கான கணினிப் பொறியமைவினைச் சுற்றி உரு வாக்கப்பட்டுள்ள தனித்தியங் கும் தரவு செய்முறைப்படுத்தும் பொறியமைவு. சம்பளப் பட்டியல், கணக்குக் கொடுக்கல் வாங்கல் நிரல் பதிவு, சரக்குப் பட்டியல், பொதுப்பேரேடு போன்ற பயன்பாடுகளுக்கு இது பயன்படுகிறது.

**small caps : சிறு பெரிய எழுத்து கள்:** ஆங்கில எழுத்துகளில் சிறிய எழுத்து, பெரிய எழுத்து வேறுபாடு உண்டு. ஒரு குறிப் பிட்ட எழுத்துருவில் சிறிய எழுத்துகளும் பெரிய எழுத்து களும் உண்டு. ஓர் எழுத்துரு வில் வழக்கமாக இருக்கும் பெரிய எழுத்துகளின் உருவள வைவிடச் சிறியதாக இருக்கும் பெரிய எழுத்துகள் இவ்வாறு அழைக்கப்படுகின்றன. (எ-டு): small, SMALL, SMALL.

**small icons : சிறு சின்னங்கள்.**

**small model : சிறிய மாதிரியம் :** இன்டெல் 80×86 செயலிக் குடும்பத்தில் பயன்படுத்தப் படும் நினைவக மாதிரியம். இதில் நிரல் குறிமுறைக்கு 64 கேபி இடமும், தரவுகளுக்கு 64 கேபி இடமும் மட்டுமே ஒதுக்க முடியும்.

**small scale integration (SSI) : சிற்றளவு ஒருங்கிணைப்பு ; எஸ்எஸ்ஐ :** ஒருங் கிணைந்த சுற்று வழிகளின் வகை. இதில், ஒரு சிப்புவில் மிகக் குறைந்த செயற்பணிகள் அடங்கியிருக் கும். இது, நடுத்தர ஒருங் கிணைப்பு, பேரளவு ஒருங் கிணைப்பு, மிகப் பேரளவு ஒருங்கிணைப்பு ஆகிய வற்றிலிருந்து மாறுபட்டது.

**SMALL TALK : ஸ்மால்டாக் ; கணினி மொழிகளில் ஒருவகை :** சாதாரண மக்களும் கணினியை மிக எளிதாகப் பயன்படுத்தும் வகையில் வடி வமைக்கப்பட்ட மொழி மற்றும் மென்பொருள் பொறியமைவு. திரையில் உரு வங்களின் படவடிவங்களில் இயன்றளவு செயற்பாட்டுத் தேர்வுகளுக்கு உதவுகிறது. மிக அதிக அளவு படப்பரிமாற்றங் களுக்குச் இப்பொறியமைவு கள் உதவுகின்றன.

**smart : விரைவூக்கம்; திறமை யான; சூட்டிகையான :** தனக்கே யுரிய சில கணிப்புத்திறனைக் கொண்டிருத்தல். விரைவூக்கச்

சாதனங்கள் பெரும்பாலும் சொந்த நுண்செயலிகளைக் கொண்டிருக்கின்றன.

**smart card :** விரைவூக்க அட்டை; சாமர்த்திய அட்டை ; சூட்டிகை அட்டை : கணினியில் அமைக்கப்பட்டுள்ள கடன் அட்டை வசதி.

**smartcom :** விரைவூக்கச் செயல் முறை : ஹேய்ஸ் என்ற நிறுவனம் சொந்தக் கணினிகளுக்காகவும், 'மேக்' கணினிகளுக்காகவும் தயாரித்துள்ள செய்தித் தொடர்புச் செயல்முறைகளின் தொகுதி. இது பல முனையங்களுடன் பொருந்தத்தக்கது. இது பல்வேறு மரபு முறைகளுக்கு ஆதாரமாக இருக்கிறது.

**smartdrive :** விரைவூக்க இயக்கி : வட்டுப் புதைவுச் செயல்முறை. இது DOS4.0, விண்டோஸ் 3.0 ஆகியவற்றுடன் வருகிறது.

**smart install programme :** விரைவூக்க அமைவுச் செயல்முறை : தானாகவே உருக்கொடுத்துக் கொள்ளக்கூடிய விரைவூக்கச் செயல்முறை. இது, வன்பொருள் சூழலில் ஆதாரம் பெற்றிருக்கும்.

**smart key :** விரைவூக்க விசை : 'நோ பிரெய்னர் சாஃப்ட் வேர்' என்ற நிறுவனம் தயாரித்துள்ள சொந்தக் கணினி விசைப் பலகைக்கான பேரளவு செய் முறைப்படுத்தி. இது திரும்பத் திரும்பத் தட்டச்சு செய்வதைத் தவிர்ப்பதற்கு உதவும் முதல் பேரளவுச் செய்முறைப்படுத்தியாகும். இது ஒரு வாசகம் அல்லது நிரல் தொகுதிகளின் நிகழ்வுக்கான பேரளவினை உருவாக்குகிறது.

**smart linkage :** துடுக்குத் தொடுப்புகை : ஒரு நிரலில், அழைக்கப்படும் நிரல்கூறுகள் எப்போதும் சரியான இனத்து அளபுருக்களுடன் அழைப்பதற்கு உத்திரவாதம் செய்யும் பண்புக் கூறு. (எ-டு) : சி# மொழியில்,

```
void swap (ref int x, ref int
y)
{
- - - - - - - -
- - - - - - - -
}
```

என்று ஒரு செயல்கூறு வரையறுக்கப்பட்டுள்ளது. இந்த செயல்கூறினை, swap (ref a, ref b); என்று அழைக்கும்போது, a,b ஆகியவை int இனத்தைச் சேர்ந்தவைதானா என்பது சரி பார்க்கப்பட்டு செயல்கூறு இயக்கப்படும்.

**smart machines :** விரைவூக்க எந்திரங்கள்; திறமையான

எந்திரங்கள்; சூட்டிகை எந்திரங்கள் : கட்டுப்பாட்டுத் தனிமங்களாக நுண் செய் முறைப்படுத்துகிற எந்திரங்கள்.

**smart produce :** விரைவூக்கப் பொருள் : உள்ளேயே அமைக் கப்பட்டுள்ள நுண்கணினிகளை அல்லது நுண்செயலிகளைக் கொண்டிருக்கிற தொழில் துறை மற்றும் நுகர்வோர் உற்பத்திப் பொருள்கள். இவை, இத் தகைய பொருள்களின் செயல் திறனையும் திறம்பாடுகளையும் கணிசமாக அதிகரிக்கின்றன.

**smart quotes :** துடுக்கு மேற் கோள் குறிகள் : பெரும்பாலான சொல் செயலித் தொகுப்புகளில் " என்னும் சாதாரண மேற்கோள் குறிவிசையை அழுத்தும் போது, தாமாகவே சிறப்பு மேற் கோள் (" ") குறிகளாக மாறிக் கொள்ளும் வசதி உள்ளது.

**SMART system :** ஸ்மார்ட் முறைமை; ஸ்மார்ட் அமைப்பு : SMART என்பது தானாகவே கண் காணிக்கும் பகுப்பாய்வு அறி விப்புத் தொழில்நுட்பம் என்று பொருள்படும் Self-Monitoring Analysis and Reporting Technology என்ற தொடரின் தலைப்பெழுத் துக் குறும்பெயர். ஒரு சாதனத் தின் செயல்திறனையும் நம்பகத் தன்மையையும் கண்காணித்து முன்னறிந்து சொல்லும் தொழில் நுட்பம். இத்தொழில் நுட்பத் தில் செயல்படும் அமைப்புகள் பல்வேறு பழுதாய்வுச் சோதனை களை மேற்கொண்டு சாதனங் களின் குறைகளைக் கண்டறிந்து சொல்கின்றன. உற்பத்தியைப் பெருக்குதல், தரவுகளைப் பாதுகாத்தல் இதன் நோக்கம்.

**smart terminal :** விரைவூக்க முனையம்; திறமையான முகப்பு; சூட்டிகையான முனையம் : அனுப்பப்படும் அல்லது பெறப்படும் தகவல்களைச் செய்முறைப் படுத்துவதற்கு ஓரளவுக்குத் திறம்பாடுகள் கொண்ட முனையம். இது ஓர் அறிவுத்திறன் முனையம் போன்று திறனுடையதன்று. இது "ஊமை முனையம்" என்பதிலிருந்து வேறுபட்டது.

**smash :** தகர்; மோது : சேமிப்பி யின் ஒரு பகுதியை, அதன்மேல் இன்னொரு செயல்முறையை எழுதுவதன்மூலம் அழித்தல்.

**SMDS :** எஸ்எம்டிஎஸ் : இணைப் பிடு பல் மெகாபிட் தரவு சேவைகள் என்று பொருள் படும் Switched Multimegabit Data Services என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இது ஒரு மீஉயர் வேக, இணைப்பிடு தரவுப் போக்கு

வரத்துச் சேவை ஆகும். குறும்பரப்புப் பிணையங்களையும், விரி பரப்புப் பிணையங்களையும் பொதுத் தொலைபேசிப்பிணையம் மூலமாக இணைக்கிறது.

smilley : குறுநகையி.

S/MIME : எஸ்/மைம் : பாதுகாப்பான பல்பயன் இணைய அஞ்சல் நீட்டிப்புகள் என்று பொருள்படும் Secure/Multipurpose Internet Mail Extensions என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். பொதுத் திறவி (Public Key) மறையாக்கத்தை (encryption) பயன்படுத்திக்கொள்கிற ஓர் இணைய மின்னஞ்சல் பாதுகாப்புத் தர வரையறை.

SMIS : எஸ்எம்ஐஎஸ்; ஸ்மிஸ் : 'நிருவாகத் தகவல் பொறியமைவுக் கழகம்' என்று பொருள்படும். Society for Management Information System என்பதன் தலைப்பெழுத்துச் சுருக்கம். இது நிருவாகச் செயற்பாடுகளையும், தகவல் பரிமாற்றங்களையும் மேம்படுத்துவதற்கான ஒரு தொழில்முறை அமைவனம்.

smoke test : புகைச் சோதனை : ஒரு வன்பொருள் கருவியைச் செய்து முடித்தவுடன் அல்லது பழுதுபார்த்து முடித்தவுடன் அதனை இயக்கிப் பரிசோதித்தல். அக்கருவியிலிருந்து புகை வந்தாலோ, வெடித்து விட்டாலோ அல்லது எதிர்பாராக் கடும் விளைவு ஏற்பட்டாலோ அது நன்றாக இயங்குவதுபோல் இருந்தாலும், சோதனையில் தோல்வியடைந்ததாகவே கருதப்படும்.

smooth : சமனம் செய்தல்; எளிதான; சீரான : தரவுகளில் விரைவான ஏற்றத் தாழ்வுகளைக் குறைக்கிற அல்லது ஒழிக்கிற நடைமுறை.

smoothing circuit : சமனச் சுற்றுவழி : நேர்மின்னோட்டத்திலுள்ள மின்னணு வடிகட்டும் சுற்றுவழி. இது மாற்று மின்னோட்ட விசையிலிருந்து அதிர்வலைகளை அகற்றுகிறது.

smoothed data : சமனத் தரவு : புள்ளிவிவரத் தரவுகளில் வரைபடத்திலுள்ள வளைவுகளைச் சமனமாக்கும் வகையில் சராசரியாக்கம் செய்யப்பட்ட புள்ளிவிவரத் தரவு.

smooth scrolling : சமனச் சுருளாக்கம்; சுழற்றுதல்; சீரான உருளல் : ஒரு வரியிலிருந்து இன்னொருவரிக்குச் சுரிப்பிழப்பின்றி வாசகங்களைச் சுருளாக்கம் செய்வதற்கான திறம்பாடு.

**SMP server : எஸ்எம்பி வழங்கன் :** செவ்வொழுங்கு பல்செயலாக்க வழங்கன் (Symmetric Multiprocessing Server) என்பதன் சுருக்கம். கிளையன்/வழங்கன் பயன்பாடுகளில் வழங்கனின் செயல்திறனை மிகுவிக்க ஒரு கணினி எஸ்எம்பீ கட்டுமானத்தில் வடிவமைக்கப்படுகிறது.

**.sn : .எஸ்என் :** ஓர் இணைய தள முகவரி செனகல் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**SNA : எஸ் என் ஏ ; ஸ்நா : கணினி இணையக் கட்டமைப்பு :** பொறியமைவு இணையக் கட்டமைவு என்று பொருள்படும் Systems Network Architecture என்பதன் தலைப் பெழுத்துக் குறும்பெயர்.

**snail mail : நத்தை அஞ்சல் :** மரபுமுறையிலான அஞ்சல் போக்குவரத்தை அதன் வேகங் கருதி இணையப் பயனாளர்கள் கிண்டலாகக் குறிப்பிடுவது. மின்னஞ்சலோடு ஒப்பிடுகையில் மரபுமுறை அஞ்சல் நத்தை வேகமே.

**snapshot : நொடிப்புச் சேமிப்பு :** வன்பொருள் பதிவேடுகள், தகுநிலைக் குறியீடுகள் அனைத்தும் உட்பட நினைவகத்தின் உள்ளடக்கங்களைச் சேமித்து வைத்தல். செயற்பாடு நின்று விடும்போது பொறியமைவை மீண்டும் இயக்குவதற்கும், எங்கு எப்போது தவறு நேர்ந்தது என்பதைக் கண்டறியவும் இவ்வாறு காலமுறையில் செய்யப்படுகிறது.

**snapshot dump : நொடிப்புக் குவியல்; தடாலடித் திணிப்பு :** குறிப்பிட்ட சேமிப்பு அமைவிடங்களின் மற்றும்/அல்லது பதிவேடுகளின் உள்ளடக்கங்களின் செயல்முறை ஓடும் போது குறிப்பிட்ட புள்ளிகளில் அல்லது நேரங்களில் நிறைவேற்றுகிற பதிவேடுகளின் இயக்காற்றல் குவியல்.

**snapshot programme : நொடிப்பு நிரல்; நொடிப்பார்வை நிரல் :** குறிப்பிட்ட கால இடைவெளிகளில் நினைவகத்தின் ஒரு பகுதியை நொடிப் பார்வையிட்டு கண்காணிக்கும் நிரல்.

**.snd : .எஸ்என்டி :** சன், நெக்ஸ்ட், சிலிக்கான் கிராஃபிக்ஸ் கணினிகளில் பயன்படுத்தப்படும் மாறு கொள்ளத்தக்க (Interchangable) ஒலிக் கோப்பு வடிவாக்கத்தைக் குறிக்கும் கோப்பு வகைப்பெயர். அக்கோப்புகள் செப்பமற்ற கேட்பொலித் தகவலைக்

கொண்டிருக்கும். ஓர் உரை அடையாளங்காட்டி தொடக்கத்தில் இருக்கும்.

**sneakernet** : மறைநிலைப் பிணையம்; மறைமுகப் பிணையம் : பிணையத்தில் பிணைக்கப்படாத இரு கணினிகளுக்கிடையே நடைபெறும் தரவு பரிமாற்றம். பரிமாற வேண்டிய கோப்புகளை ஒரு நெகிழ் வட்டில் நகலெடுத்துக்கொள்ள வேண்டும். அவ்வட்டினை ஒருவர் நேரில் எடுத்துச் சென்று இன்னொரு கணினியில் கோப்புகளை நகலெடுப்பார்.

**SNMP** : எஸ்என்எம்பீ : எளிய பிணைய மேலாண்மை நெறிமுறை என்று பொருள்படும் Simple Network Management Protocol என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். டீசிபீ/ஐபீ-யின் பிணைய மேலாண்மை நெறிமுறை ஆகும். எஸ்என்எம்பீ-யில் முகவர்கள் எனப்படும் வன்பொருள் அல்லது மென் பொருள்கள், பிணையத்தில் இணைக்கப்பட்டுள்ள பல்வேறு சாதனங்களின் நடவடிக்கைகளைக் கண்காணித்து, பிணையப் பணி நிலையத் திரையில் காட்டுகின்றன. ஒவ்வொரு சாதனத்தின் கட்டுப்பாட்டுத் தகவல்களும் மேலாண்மைத் தகவல் தொகுதி என்னும் கட்டமைப்பில் பராமரிக்கப்படுகின்றன.

**SNOBOL** : ஸ்னோபால் : சரம் சார்ந்த குறியீட்டு மொழி எனப் பொருள்படும் String Oriented Symbolic Language என்பதன் குறும்பெயர். இதனை பெல் ஆய்வுக்கூடம் உருவாக்கியது. செயல்முறைத் தொகுப்பாக்கம், குறியீட்டுச் சமன்பாடுகள் உருவாக்கம் ஆகியவற்றில் முக்கியமாகப் பயன்படுகிறது. சர எழுத்துக்களை கையாள்வதற்கு முழுவசதி செய்து கொடுக்கிறது

**snow** : பூம்பனி : காட்சித் திரையில் மினுமினுக்கும் வெள்ளைப்புள்ளித் தோரணிகள். இது மென்பொருளுக்கும் கணினித் திரைக்குமிடையில் ஏற்படும் சிறிதளவு இணக்கமின்மை காரணமாக உண்டாகிறது.

**SO** : எஸ்ஓ (அனுப்ப மட்டுமான) : "அனுப்புதல் மட்டும்" என்று பொருள்படும் "Send Only" என்பதன் தலைப்பெழுத்துச் சுருக்கம். இது அனுப்புவதற்குமட்டுமான திறனுடைய சாதனத்தைக் குறிக்கிறது. இது "ஏற்பு மட்டும்" என்பதற்கு மாறானது.

**society for computer simulation (SCS)** : கணினித் தூண்டுதல்

கழகம்; கணினி போலி நிகழ்வுச் சங்கம் : தூண்டுதல் மற்றும் அதன் தொடர்பான தொழில் நுட்பங்களை மேம்படுத்துவதற்காக முக்கியமாகப் பாடுபடும் ஒரே தொழில் நுட்பக் கழகம். முக்கியமாக, நிருவாகம், சமூக, அறிவியல், உயிரியல், சுற்றுச் சூழல் சிக்கல்களைக் கையாள்கிறது. இதற்கு உலகெங்கும் உறுப்பினர்கள் உள்ளனர்.

**Society For Information Management :** தகவல் மேலாண்மைக் கழகம் : சிகாகோவில் செயல்படும் ஒரு தொழில் முறை அமைப்பு. தகவல் அமைப்புகளின் நிர்வாகிகளுக்கானது. முன்பு இதன்பெயர் : மேலாண்மைத் தகவல் அமைப்புக் கழகம்.

**society of certified data processors; (SCDP) :** சான்றளிக்கப்பட்ட தரவு செய்முறைப்படுத்துநர் கழகம்; சான்றிதழ் பெற்ற தரவு செயலாக்கங்களின் சங்கம் : சான்றளிக்கப்பட்ட கணினித் தொழில்முறையாளர்களின் நலன்களுக்காகவும் விருப்பங்களுக்காகவும் பாடுபடும் அமைவனம். இது 1971இல் அமைக்கப்பட்டது. அந்த அமைவனத்தின் நிலைப்பாடுகளையும், நடவடிக்கைகளையும், நெறியுறுத்தங்களையும் உறுப்பினர்கள் கட்டுப்படுத்துகிறார்கள். ICCP சான்று பெற்றோரின் நலன்களுக்குப் பாடுபடும் ஒரே நிறுவனம்.

**socket :** குதைகுழி ; துளை ; கோள்குழி : செருகியை பொருத்துவதற்குரிய கொள்குழி.

**soft :** மென்.

**soft clip area :** மென் பிடிப்புப் பகுதி; மென்பிடி பகுதி; மென் வரைபரப்பு : தரவுகள் ஒரு வரைவி சாதனத்தில் எந்தப் பகுதியில் அளிக்கப்பட வேண்டுமோ அந்தப் பகுதிகள், வரம்புகள்.

**soft copy :** மென்படி ; மென் பிரதி ; மென் நகல் : ஒரு ஒளிப் பேழை உருவமைவில் ஓர் ஒளி உருக்காட்சியாக அல்லது வன்படியாக அல்லாத வேறேதேனும் வடிவில் வழங்கப்படும் தரவு.

**soft error :** மென்பிழை : மீண்டும் அனுப்பிடத்தக்க திரிபடைந்த செய்தி போன்ற மீட்கத்தக்க சிறுபிழை. இது "வன்பிழை" என்பதிலிருந்து வேறுபட்டது.

**soft fails :** மென் தளர்வுகள் ; மென் தோல்வி ; மென் பிறழ்வுகள் : நுண் மின்னணுச் சுற்று வழிகளில் மின்காந்த நுண் அலைத் துகள்களினால் உண்டா

கும் ஓசைப் பெருக்கம். இதனால் கணினி நினைவகங்களில் சேமித்து வைக்கப் பட்டிருக்கும் தகவல்களில் திடீர் மாற்றம் ஏற்படக்கூடும். இந்த மாற்றங்கள் மென்தளர்வுகள் எனப்படும். இது சுற்றுவழிகளில் ஒருங்கிணைந்த நுண்மின்னணு அமைப்பிகளின் வடிவளவுகள் குறைந்து கொண்டே வருவதால் ஏற்படும் எதிர்பாராத விளைவுகளில் இதுவும் ஒன்று.

**soft font** : மென் எழுத்து : வன்பொருளிலிருந்து அல்லாமல் மென்பொருள் நிரல்களின் கோரிக்கையிலிருந்து வரவழைக்கப்படும் ஒரு எழுத்துரு. இந்த எழுத்துருக்களைப் பொதியுறைகளைவிட மலிவான விலையில் வாங்கலாம். பயனாளரின் குறிப்பிட்ட தேவைகளுக்கேற்ப இதனைத் தகவமைத்துக் கொள்ளலாம். மென்எழுத்துருக்களை பயன்படுத்துவதற்கு முன்பு அச்சுப்பொறிக்கு இறக்கம் செய்தல் வேண்டும். சொல் செயல்முறைப்படுத்திகள், மேசை வெளியீட்டுத் தொகுதிகள் பெரும்பாலும் இதனைக் கொண்டிருக்கின்றன.

**soft/hard copy** : மென்/வன் நகல்; வட்டு/அச்சு நகல்.

**soft hyphen** : மென் இடைக்கோடு; மென் ஒட்டுக்குறி; மென் சிறுகோடு : ஒருவரியின் இறுதியில் ஒரு சொல்லை அசைகளிடையே முறிப்பதற்காக மட்டும் அச்சிடப்படும் ஒட்டுக்குறி.

**soft keys** : மென்சாவிகள் ; மென் விரற்கட்டை ; மென் விசைகள் : பயன்பாட்டாளர் வரையறுத்த பொருளைக் கொண்டிருக்கும் விசைப் பலகையிலுள்ள விரற் கட்டைகள். இதன் பொருள், பயன்பாட்டாளருக்கும், செயல் முறைக்கும் மாறுபடக்கூடியது என்பதால் மென்விசை எனப் பெயர் பெற்றது.

**soft page break** : மென்பக்க முறிப்பு.

**soft patch** : மென் பட்டை : நடப்பு நிகழ்வுக்கு மட்டுமே நீடிக்கக்கூடிய நினைவகத்தில் தற்போதுள்ள எந்திர மொழியில் பொருத்தப்படும் ஒரு விரைவுச் சாதனம்.

**soft return** : மென் மடக்கு ; மென் திருப்பம் : வரியின் இறுதியைக் குறிப்பதற்கு வாசக ஆவணத்தில் மென்பொருளினால் செருகப்படும் குறியீடு. அதிகத் தகவல்கள் செலுத்தப் பட்டால், அதற்கேற்ப இந்த மடக்கு மாற்றப்பட்டு, வாசகம் திருத்தபடுகிறது. அச்சடிக்கும்

போது மென் மடக்கு, அச்சுப் பொறியால் வரி இறுதிக் குறியீடாக மாற்றப்படுகிறது.

**soft sector :** மென் வட்டக்கூறு; மென் பிரிவு; மென் பகுதி : ஒரு வட்டில் எழுதப்பட்டுள்ள தகவல்களைப் பயன்படுத்தி அந்த வட்டின்மீது வட்டக் கூறுகளை அல்லது பகுதிகளைக் குறிக்கும் முறை. வட்டிலுள்ள தரவுகளின் அமைவிடங்களை மென்பொருள் கணிப்புகள்மூலம் நிருணயிக்கும் முறை.

**soft sectored disk :** மென் கூறாக்கிய வட்டு : ஒரு குறிப்பீட்டுப் புள்ளியிலிருந்து மென்பொருள் படிமுறை வரிசையினால் கூறுகள் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ள ஒருவட்டு. வன் கூறாக்கிய வட்டுகளின் கூறுகள், வன்பொருள் குறியீடுகளினால் ஒதுக்கீடு செய்யப்பட்டிருக்கும். பெரும்பாலான வட்டுகள் மென் கூறாக்கத்தைப் பயன்படுத்துகின்றன.

**software :** மென்பொருள் ; மென் சாதனம்; மெல்லியல்பு; கணினி செயல்முறை : ஒரு கணினிப் பொறியமைவிலுள்ள இரும்பு அல்லது வன்பொருளுக்கு மாறுபாடாக, செயல்முறைகளின் தொகுதியைக் குறிக்கும் சொல். இவை கணினிப் பொறியமைவின் செயற்பாட்டையும், வன்பொருள்களின் இயக்கத்தையும் கட்டுப்படுத்துகின்றன. ஒரு கணினிப் பொறியமைவுக்கான மென்பொருள்கள், பயன்பாட்டுச் செயல்முறைகள் என்றும் பொறியமைவுச் செயல்முறைகள் என்றும் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**software application :** மென்பொருள் பயன்பாடு : ஒரு மென்பொருள் அல்லது கணினி செயல்முறைக்கான பொதுப்படையான பெயர்.

**software architecture :** மென்பொருள் உருவாக்கக் கலை ; மென்பொருள் கட்டமைப்பு : பொறியமைவு மென்பொருள் பயன்பாட்டினை வடிவமைத்தல். இதில் மரபு முறை, மற்ற செயல்முறைகளுடன் இடைத்தொடர்பு கொள்வதற்கான இடை முகப்புகள், எதிர்கால நெகிழ்திறன், விரிவாக்கத்திற்கான வசதிகள் உள்ளடங்கியிருக்கும்.

**software base :** மென்பொருள் ஆதாரம்; மென்பொருள் அடிப்படை; மென்பொருள் தளம் : ஒரு குறிப்பிட்ட கணினிப் பொறியமைவுக்கான மென்பொருள். மென்பொருள் ஆதாரம் எவ்வளவு விரிவாக

உள்ளதோ அந்த அளவுக்கு கணினிப் பொறியமைவு திறம் பாடுடையதாக இருக்கும்.

**software-based modem :** மென்பொருள் அடிப்படையிலான இணக்கி (மோடம்) : மறு நிரலாக்கத்தகு இலக்கமுறைச் சமிக்கை பொதுப்பயன் செயலிச் சிப்புவைக் கொண்ட ஓர் இணக்கி. இதில், இணக்கியின் செயல்பாடுகள் சிலிக்கானில் பொறிக்கப்பட்ட தனி சிப்புவுக்குப் பதிலாக ரேம் (RAM) அடிப்படையிலான நிரல் நினைவகத்தைக் கொண்டுள்ளன. மென்பொருள் அடிப்படையிலான இணக்கிகளின் பண்புக் கூறுகளையும் செயல்பாடுகளையும் மாற்றியமைக்க எளிதாக தகவமைவுகளைத் திருத்தியமைக்க முடியும்.

**software broker :** மென்பொருள் தரகர்: மென்பொருள் தொகுதிகளை விற்பனை செய்வதில் தனிக்கவனம் செலுத்தும் ஆள்.

**software carousel :** மென்பொருள் களரி : "சாஃப்ட் லாஜிக் சொலுஷன்ஸ்" என்ற நிறுவனம் சொந்தக் கணினிகளுக்காகத் தயாரித்துள்ள பணிவிசைச் செயல்முறை. ஒரே சமயத்தில் 12 பயன்பாடுகளைக் கொண்டு, அவற்றுக்கிடையே முன்பின் செல்வதற்கு இது அனுமதிக்கிறது.

**software company :** மென்பொருள் நிறுவனம் : மென்பொருள் கூடம்.

**software compatability :** மென்பொருள் ஒத்தியல்புத்திறன்; மென்பொருள் ஏற்புடைமை : ஒரு பொறியமைவுக்காக எழுதப்பட்ட செயல்முறையினை மாற்றம் எதுவுமின்றி இன்னொரு செயல்முறையில் பயன்படுத்தும் திறன்.

**software-dependent :** மென்பொருள் சார்பானது : அதற்காகவே உருவாக்கப்பட்ட ஒரு குறிப்பிட்ட நிரலோடு அல்லது நிரல் தொகுப்போடு இறுகிப் பிணைக்கப்பட்ட ஒரு கணினி அல்லது ஒரு மின்னணுச் சாதனம்.

**software development :** மென்பொருள் மேம்பாடு; மென்பொருள் உருவாக்கம் : ஒரு பயன்பாட்டாளரின் தேவைப்பாடுகளை நிறைவு செய்கிற செயல்முறைகளின் தொகுதிகளை உருவாக்குதல்.

**software documents :** மென்பொருள் ஆவணங்கள் : கணினிச் சாதனத்துடனும் மென்பொருள் பொறியமைவுகளுடனும் தொடர்புடைய எழுதப்பட்ட அல்லது அச்சிடப்பட்ட வாசகங்கள்.

**software encryption** : மென்பொருள் பூட்டுவிசை ; மென்பொருள் இரகசியக் குறியீடு ; மென்பொருள் மறையீடு : கணினியாக்கம் செய்யப்பட்ட தரவுகளை, வன்பொருள் சாதனங்கள் மூலம் அல்லாமல், செயல்முறைப்படுத்தும் உத்திகள் மூலம் குறியீடாக்கவோ மறைவிடுப்பு செய்யவோ செய்தல்.

**software engineering** : மென்பொருள் பொறியியல் : உற்பத்தி உருமாதிரிக் கணினிகளின் அடிப்படையில் பேரளவு மென்பொருள் பொறியமைவுகளை உருவாக்கிச் செயற்படுத்துவதைக் குறிக்கும் சொல். இச்சொல்லை நேட்டோ அறிவியல் குழுவின் கணினி அறிவியல் ஆய்வுக் குழுமம் 1967இல் உருவாக்கியது. கட்டுப்படுத்திய வடிவமைப்புகள், உயர்தரக் கணினி மென்பொருள்களை உருவாக்குதல், இயக்கமுறை முறைமைகளை வகுத்தல் போன்ற பல்வேறு தொழில் நுட்பங்கள் இதில் உள்ளடங்கும்.

**software error control** : மென்பொருள் பிழைக் கட்டுப்பாடு.

**software flexibility** : மென்பொருள் நெகிழ்வுத் தன்மை.

**software handshake** : மென்பொருள் கைகுலுக்கல் : பொதுவாக தரவுகள் ஒரு தடத்திலும் கட்டுப்பாட்டுச் சமிக்கைகள் தனித் தடத்திலும் அனுப்பி வைக்கப்படுவதுண்டு. அப்படியில்லாமல் இரண்டு இணக்கிகளுக்கிடையே தொலைபேசி இணைப்பு வழியே நடைபெறும் தகவல் தொடர்பில் இருப்பதுபோலத் தகவல்கள் அனுப்பப்படும் அதே இணைப்புக் கம்பிகள் வழியாகவே கட்டுப்பாட்டுச் சமிக்கைகளையும் அனுப்பி வைத்தல்.

**software house** : மென்பொருள் இல்லம்; மென்பொருளகம் : பொது மென்பொருள் தொகுதிகள், குறிப்பிட்ட மென்பொருள் தொகுதிகள் இரண்டையும் கணினிப் பொறியமைவு உரிமையாளர்களுக்கு விற்பனைக்கு வழங்கும் நிறுமம்.

**software installation engineer** : மென்பொருள் நிறுவு பொறியாளர்.

**software, integrated** : ஒருங்கிணை மென்பொருள்.

**software integrated circuit** : மென்பொருள் ஒருங்கிணைவு மின்சுற்று : சுருக்கமாக மென்பொருள் ஐசி என்றழைக்கப்படுவதுண்டு. ஓர் ஒருங்கிணைவு மின்சுற்று (ஐசி) ஒரு தருக்கப் பலகையில் பொருந்து மாறு வடிவமைக்கப்படுவது

போல, ஏற்கெனவே உள்ள ஒரு மென்பொருள் கூறினை ஒரு நிரலுக்குள் பொருந்துமாறு வடிவமைத்தல்.

**software interrupt** : மென்பொருள் இடையீடு : ஒரு மென்பொருள் INT அறிவுறுத்தத்தின் மூலம் ஏற்படுத்தப்படும் இடையீடு.

**software librarian** : மென்பொருள் நூலகர் : ஒரு நிறுமத்தில், வட்டுத் தொகுதிகள், நெகிழ்வட்டுகள், காந்த நாடாக்கள் போன்ற பெருமளவு மென்பொருள் தொகுதிக்கு பொறுப்பாகவுள்ள ஆள்.

**software license** : மென்பொருள் உரிமம் : ஒரு மென்பொருளை கொள்வினை செய்பவர் கையெழுத்திட்டுக் கொடுக்கும் ஒப்பந்தம். இதன்படி, வாங்கும் மென்பொருள்களை மறு விற்பனை செய்வதில்லை என்று வாங்குபவர் உறுதி மொழியளிக்கிறார்.

**software maintenance** : மென்பொருள் பராமரிப்பு; மென்பொருள் பேணல் : தற்போதுள்ள செயல்முறைகளில் தவறுகளைக் கண்டுபிடிப்பதற்கும், நீக்குவதற்குமான செய்முறை. இது பராமரிப்புச் செயல்முறையாளர்களால் செய்யப்படுகிறது.

**software monitor** : மென்பொருள் கண்காணிப்பி; மென்பொருள் திரையகம் : செயல் புரிவதை அளவிடும் நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்படும் செயல்முறை.

**software package**: மென்பொருள் தொகுதி; மென்பொருள் தொகுப்பு; மென்பொருள் பொதி : தொடர்புடைய கணினிச் செயல்முறைகளின் தொகுதி. இதில் பெரும்பாலும் ஒரு சேமிப்புச் சாதனத்தில் (நெகிழ் வட்டு) சேமித்து வைக்கப் பட்டுள்ள செயல்முறைகள்.

**software patent** : மென்பொருள் காப்புரிமை.

**software piracy** : மென்பொருள் திருட்டு; கணினி செயல்முறைத் திருட்டு; மென்பொருள் களவு : வணிக முறையிலான அல்லது காப்புரிமையுள்ள மென் பொருள்களை, உருவாக்கிய வரின் அனுமதியின்றிப் படியெடுத்தல்.

**software portability** : மென்பொருள் தகவமைத் திறன்; மென்பொருள் பெயர்வுத் திறன்; மென்பொருள் ஏற்புடைமை : ஒரு கணினிச் சூழலிலிருந்து இன்னொரு சூழலுக்கு ஒரு செயல்முறையை எளிதாக நகர்த்தும் திறன். கணினித்

தொழிலில் மூன்றாம் தரப்பு மென்பொருள் அதிகம் பரவி விட்டதால், இந்தத் திறன் மென் பொருள்களுக்கு அதிகம் தேவைப்படுகிறது.

**software product :** மென் பொருள் விளைபொருள் : செயல்முறைகள் தரவு ஆவண மாக்கும் சில சமயம் விற்பனை யாளர் உதவி ஆகியவை அடங் கியுள்ள விற்பனையாளர் தொகுதி. இது செயல்முறைப் படுத்தும் பொருள் என்றும் அழைக்கப்படும்.

**software protection :** மென் பொருள் பாதுகாப்பு; மென் பொருள் காப்பு : மென்பொருள் களை அனுமதியின்றிப் படி யெடுப்பதைத் தடுப்பதற்கான பாதுகாப்பு.

**software publisher :** மென் பொருள் வெளியீட்டாளர்; மென் பொருள் பதிப்பாளர் : மென் பொருள் தொகுதிகளை வெளி யிட்டு, விற்பனை செய்கிற வணிகம்.

**software publishing :** மென் பொருள் பதிப்பீடு : வழக்கத் துக்கு மாறான மென்பொருள் தொகுப்புகளை வடிவமைத்து, உருவாக்கி வினியோகித்தல்.

**software resources:** மென் பொருள் ஆதாரம்; மென்பொருள் மூலம்; மென்பொருள் வளம் : கணிப்புப் பொறியமைவுடன் இணைவுடைய மென்பொருள் களைக் குறிக்கும் செயல் முறை மற்றும் தரவு ஆதாரங்கள்.

**software science :** மென்பொருள் அறிவியல் : கணினிச் செயல் முறைகளின் அளவிடக்கூடிய பண்புகள் தொடர்பான ஆய்வுத் துறை.

**software stack :** மென்பொருள் அடுக்கு : நினைவகத்தில் அமைக்கப்பட்டுள்ள அடுக்கு.

**software suite :** மென்பொருள் கூட்டுத்தொகுப்பு.

**software system :** மென்பொருள் பொறியமைவு; மென்பொருள் முறைமை : ஒரு கணினிப் பொறியமைவில் பயன்படுத்தப் படும் கணினிச் செயல்முறை கள் அவற்றின் ஆவணமாக்கம் ஆகியவற்றின் முழுத் தொகுதி.

**software technology :** மென் பொருள் தொழில்நுட்பம்; கணினி செயல்முறை தொழில் நுட்பம்.

**software term :** மென்பொருள் சொல் : கணிப்பொறி அமைப் பைக் கட்டுப்படுத்தி வன் பொருளை இயக்குவதுபோல் அல்லாமல் மென்பொருள் தொகுதி நிரல் தொடரைக் குறிப்பிடும் மாற்றுச் சொல்.

கணினி அமைப்பின் மென் பொருள் பயன்பாடுகள், நிரல் தொடர்கள் மற்றும் அமைப்பு நிரல் தொடர்களாகப் பிரிக்கலாம்.

**software tool** : மென்பொருள் கருவி : மற்ற மென்பொருள் செயல்முறைகளை உருவாக்கு வதற்கு உதவும் செயல்முறை. இது, வடிவமைப்பு, குறியீடு தல், தொகுத்தல் போன்றவற் றைச் செய்ய பயன்படுத்து வோருக்கு உதவுகிறது.

**software transportability** : மென் பொருள் இடம் பெயர் திறன்; மென்பொருள் மாற்றத் திறன்; மென்பொருள்அனுப்பப்படும் தன்மை : ஒரு கணினிக்காக எழுதப்பட்ட ஒரு செயல் முறையை மற்றொரு கணினி மாற்றி, மாற்றம் எதுவுமின்றி செயல்படுத்தும் திறன்.

**softwhite** : மென்வெண்மை.

**solar cell** : சூரியச் சிற்றம்; சூரிய மின்கலம் : வெப்பக்கதிர் வீச்சினை ஈர்த்து மாற்றம் செய் கிற மின்கடத்தா மின்னியல் சந்திப்புச் சாதனம். இதில் சூரிய ஒளியின் ஆற்றல் நேரடியாக வும் திறம்படவும் மின்னாற்ற லாக மாற்றப்படுகிறது.

**solaris 2.0** : சோலாரிஸ் 2.0 : சன் சாஃப்ட் நிறுவனம் தயாரித் துள்ள ஸ்பார்க் கணினிகள், சொந்தக் கணினி ஆகியவற்றுக் கான பன்முகப்பணிச் செயற் பாட்டுப் பொறியமைவு. இது சோலாரிஸ் 1.0 (ஸ்பார்க் மட்டும்) உடன் இணைக்கக்கூடியது. இது பகிர்மான கணிப்புக்கு வடி வமைக்கப்பட்டது. TCP/IP மரபு முறை இதில் அடங்கும்.

**solder mask** : பற்றாசு மூடி : ஓர் அச்சடித்த சுற்றுவழிப் பலகை யில், பற்றாசு செய்யவேண்டிய பகுதிகளை மட்டும் மூடாமலிருக்கும் மின்காப்புத் தோரணி.

**solenold** : சோலனோல்ட் : ஒரு மின்சுற்று வழியை மூடுகிற காந்த விசை. இது பெரும் பாலும் இடை மாற்றீடாகப் பயன்படுகிறது.



சோலனோல்ட

**solicitation** : கோரிக்கை; அழைத்தல் : மென்பொருள்கள் வன்பொருள்கள் அல்லது சேவைகளுக்கான ஏலங்களைப் பணிந்தனுப்பும்படி விற்பனை யாளர்களிடம் கோருதல்.

**solid model** : திண்ம மாதிரியம்.

**solid modeling** : திடநிலை உரு மாதிரி : திடப்பொருள்களின் உருக்காட்சியை உருவாக்கு வதற்கான கணித உத்தி. இது வடிவத்திலிருந்து குறைந்த உருவமுடையது. கம்பிச் சட்டகம், மேற்பரப்பு உரு மாதிரி போலன்றி திடநிலை உருமாதிரிப் பொறியமைவுகள் எல்லா மேற்பரப்புகளும் சந்திக்கும்படி செய்து, பொருள் வடிவ கணித அளவில் துல்லிய மாக அமையுமாறு செய்கிறது. திடநிலை உருமாதிரியின் உள் ளடக்கங்களைப் புலப்படுத்து வதற்காக அதனைக் கூறிடலாம்.

**solid state** : திடநிலை; திட நிலை சாதனம் : ஒருங்கிணைந்த மின்சுற்று வழிகள், மின்மப் பெருக்கிகள் போன்ற திடப் பொருள்களில் மின்னியல் அல்லது காந்த நிகழ்வுகளைப் பொறுத்து அமைந்திருக்கும் மின்னணுவியல் அமைப்பிகள்.

**solid state cartridge** : திட நிலைப் பொதியுறை; திட நிலைப் பெட்டி; திடநிலைப் பேழை; திண்ம நிலைப் பேழை : பல நுண்கணினிப் பொறி யமைவுகளுடன் பயன்படுத்தப் படும் தகவமைவிலுள்ள செயல் முறைப்படுத்திய செருகி.

**solid state device** : திடநிலைச் சாதனம்; திண்ம நிலைக் கருவி : திடநிலை மின்னணுச் சுற்று வழித் தனிமங்களிலிருந்து தயாரிக்கப்பட்ட சாதனம்.

**solid-state disk drive** : திண்ம நிலை வட்டு இயக்ககம் : காந்த முறைச் சேமிப்பகத்துக்குப் பதிலாக ரேம் நினைவகச் சிப்பு களில் ஏராளமான தகவலைச் சேமித்து வைத்துக்கொள்ளும் சேமிப்புச் சாதனம்.

**solid state memory** : திடநிலை நினைவகம் : எந்திர பாகங்கள் எதுவுமில்லாத ஒரு மின்மப் பெருக்கம் செய்யப்பட்ட மின் கடத்தி அல்லது மெல்லிய சுருள்.

**solid state relay** : திடநிலை அஞ்சல் : எந்திரபாகங்கள் இல் லாத அஞ்சல். இதிலுள்ள விசைச் செயல்முறைகள் அனைத்தும் மின்கடத்திகள் அல்லது மென் சுருள் அமைப்பிகள்.

**solver** : தீர்வு வழங்கி; விடை வழங்கி : உருவாக்கம் செய் வதற்கு விரிதாளை அனுமதிக் கிற கணிதச் செயல்முறைகள்.

**SOM** : சாம்; எஸ்ஓஎம் : முறைமை பொருள் மாதிரியம் எனப் பொருள் படும் System Object Model என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். கோர்பா (CORBA) தரவரையறைகளை

செயல்படுத்துகின்ற, ஐபிஎம் மின் மொழிசாராக் கட்டுமானம்.

**SONET** : சோநெட் : ஒத்திசை ஒளிவப் பிணையம் என்று பொருள்படும் Synchronous Optical Network என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். அதிவேகத் தகவல் பரிமாற்றத்துக்கு (51.84 எம்பிபீஎஸ் முதல் 2.48 ஜிபிபீஎஸ் வரை) வழி வகுக்கும் இழைஒளித் தகவல் தொடர்பு தர வரையறைகளின் ஒரு வகைப்பாடு.

**son file** : மகவுக் கோப்பு.

**SOP** : எஸ்ஓபி : சொந்தச் செயற் பாட்டு நடைமுறை என்று பொருள்படும். Standard Operating Procedure என்பதன் தலைப் பெழுத்துக் குறும்பெயர்.

**sort** : பிரிப்பு; பிரி; வரிசைப் படுத்தல்; இணக்கப்படுத்து; வகைப்படுத்து : 1. பதிவேடு களை ஒரு தருக்கமுறைப்படி அமைத்தல். ஒரு கணினியில், காந்த வட்டுகளை அல்லது நாடாக்களைப் பயன்படுத்திப் பெரும்பாலும் பிரிப்பு செய்யப் படுகிறது. 2. வட்டில் அல்லது நாடாவிலுள்ள பதிவேடுகளைப் பிரித்தமைக்கிற பயன்பாட்டுச் செயல்முறை.

**sort algorithm** : வகைப்பாட்டு எண்மானம்; வரிசை நெறிமுறை : தகவல்களை ஒரு புதிய வரிசை முறையில் மறுபடியும் ஒழுங்கு படுத்துவதற்கான சூத்திரம்.

**sort effort** : பிரிப்பு முயற்சி; வரிசைப்படுத்தும் முயற்சி : ஒழுங்கற்ற பட்டியலை ஒழுங்கு படுத்துவதற்குத் தேவைப்படும் நிறுத்தங்களின் எண்ணிக்கை.

**sorter** : பிரிப்பி, வகைப்படுத்தி; வரிசையாக்கி.

**sort generator** : பிரிப்பு உரு வாக்கி; வகைப்படுத்தல் உரு வாக்கி; வரிசையாக்கி : ஒட் டத்தை உண்டாக்குவதற்கான ஒரு பிரிப்புச் செயல்முறையை உருவாக்குகிற செயல்முறை.

**sorting** : பிரித்தல்; பிரிப்பி; வரிசைப்படுத்தி : முன்பே தெரிந் தெடுத்த வரிசை முறைப்படி ஓர் அட்டைப் பதிவேடுகளின் தொகுதியைப் பிரித்தமைக்கும் சாதனம்.

**sort key** : வகைப்பாட்டு விசை : கோப்பின் வரிசைமுறையினைக் கட்டுப்படுத்துகிற, ஒரு பதி வேட்டிலுள்ள புலம் அல்லது புலங்கள்.

**sort/merge** : வரிசையாக்கு/ ஒன்று சேர்ப்புநிரல்.

**sort/merge programme**: பிரி/சேர் நிரல் தொடர்; வரிசை படுத்து/ சேர்ப்பு நிகழ்வு : வரையறுக்கப்

பட்ட வரிசையில் பதிவேடு களைப் பிரிக்கவோ சேர்க்கவோ பயன்படுத்தப்படும் பொது வான செயல்முறை.

**sort order :** வரிசை ஒழுங்கு.

**sound bandwidth :** ஒலிக்கற்றை அகற்சி : ஒலி அலைவெண் களின் வீச்செல்லை. மனிதரின் காது ஏறத்தாழ 20 முதல் 20,000 Hz ஒலி வீச்சைக் கேட்க முடி யும். ஆனால் மனிதரின் குரலுக்கு வீச்செல்லை 3,000Hz மட்டுமே.

**sound buffer :** ஒலி இடையகம் : கணினியிலிருந்து ஒலிபெருக்கி களுக்கு அனுப்பப்பட இருக் கும் ஒலித் தகவலின் துண்மிப் (பிட்) படிமங்களைச் சேமிக்கப் பயன்படும் நினைவகப் பகுதி.

**sound card :** ஒலி அட்டை : பீசி ஒத்தியல்புக் கணினிகளில் இருக்கும் ஒருவகை விரிவாக்க அட்டை. ஒலியைப் பதிவு செய்ய, ஒலியை மீண்டும் இசைக்கச் செய்ய முடியும். ஒரு WAV அல்லது MIDI கோப்பு களை அல்லது ஒரு இசைக் குறு வட்டிலிருந்து பாடல்களைக் கேட்க முடியும். தற்காலத்தில் விற்பனை செய்யப்படும் பெரும்பாலான கணினிகளில் ஒலி அட்டை தனியாக இருப்ப தில்லை. தாய்ப்பலகையிலேயே ஒருங்கிணைக்கப்பட்டுள்ளது.

**sound clip :** ஒலித்துணுக்கு; ஒலி நறுக்கு : ஒரு குறுகிய கேட் பொலித் துணுக்கைக் கொண் டுள்ள ஒரு கோப்பு. பெரும் பாலும் ஒரு நீண்ட இசைப் பதிவிலிருந்து எடுக்கப்பட்ட சிறிய ஒலித் துணுக்கு.

**sound editor :** ஒலித்தொகுப்பி; ஒலி திருத்தி : பயனாளர் ஒலிக் கோப்புகளை உருவாக்கிக் கையாள வகை செய்யும் ஒரு நிரல்.

**sound format :** ஒலி வடிவம்.

**sound generator :** ஒலி இயற்றி; ஒலி உருவாக்கி : செயற்கை ஒலியை உருவாக்கும் கருவி. ஒரு சிப்புவாக அல்லது சிப்பு நிலை மின்சுற்றாக இருக்கலாம். மின்வணுச் சமிக்கைகளை உருவாக்கி, ஒலிபெருக்கிகள் வழியாக செயற்கை ஒலியை ஒலிக்கச் செய்யலாம்.

**sound hood :** ஒலிக் கவிகை; ஓசை மூடி; ஒலிக்கூடு : பயன் பாட்டின்போது ஓசையைக் குறைப்பதற்காக அச்சடிப்பி மீது பொருத்தப்படும் சாதனம். இதனை "ஓசை அடைப்பு" என்றும் கூறுவர்.

**sound recorder :** ஒலிப் பதிவி.

**Sound Sentry :** ஒலிக் காவலாள்; ஒலிக் கண்காணி : சரியாகக்

காதுகேளாதோர், மிகுந்த இரைச்சலுக்கிடையே பணி யாற்றுவோர் - இவர்களுக்காக விண்டோஸ் 95/98 இயக்க முறைமையில் இருக்கும் ஒரு வசதி. கணினியில் பணிபுரிந்து கொண்டிருக்கும்போது எப்போ தெல்லாம் பீப் ஒலியெழுப்பி எச்சரிக்கை செய்யப்படுகிறதோ அப்போதெல்லாம் திரையில் பயனாளரின் கவனத்தைக் கவரும் வண்ணம் எச்சரிக்கைச் சின்னம் தோன்றும். திரை பளிச் சிடலாம் அல்லது பணி யாற்றும் சாளரத்தின் தலைப்புப் பட்டை மினுக்கலாம்.

**sound waves : ஒலி அலை.**

**source : ஆதாரம்; மூலம்; மூலா தாரம் :** ஒரு கள விளைவு மின்மப் பெருக்கியின் மூன்று முனையங்களில் அல்லது மின் வாய்களில் ஒன்று. வடிகால் வாயிலுக்குப் பாய்கின்ற மின் விசை ஊர்திகளின் தோற்றுவாய்.

**source code : ஆதார நிரல் தொடர்கள்; மூலக் குறிமானம்; ஆதாரக் குறிமுறை; மூல வரைவு :** ஒரு கணினியால் செய் முறைப்படுத்துவதற்கு முன் புள்ள மூலவடிவிலுள்ள நிரல் தொகுதி. கணினியானது ஆதாரக் குறியீட்டினைக் கணினி புரிந்து கொள்ளக்கூடிய ஒரு குறி யீடாகத் தானாகவே மாற்றுகிறது.

**source computer : ஆதாரக் கணினி; மூலக் கணினி :** ஆதாரச் செயல் முறையை ஓர் இலக்குச் செயல்முறையாக மொழிபெயர்க்கப் பயன்படும் கணினி.

**source data : மூலத் தரவு :** ஒரு கணினிப் பயன்பாடு, அடிப் படையாகக் கொண்டுள்ள மூலத் தரவுகள்.

**source data acquisition : மூலத் தரவுக் கொள்முதல் :** பட்டைக் குறிமானப் படிப்பி அல்லது பிற வருடல் சாதனங்களைப்போல, தரவுகளை உணரும் செயலாக் கம். அல்லது ஒலித் தரவுகளைப் பெறுவதையும் குறிக்கும்.

**source data automation : ஆதாரத் தரவு தானியக்கம்; மூலத்தரவு தானியங்கி :** தரவு பதிவுக்கான தானியங்கும் முறைகளைப் பயன்படுத்துதல். மரபுத் தரவுப் பதிவுமுறைகளில் தேவைப்படும் வேறுபல நட வடிக்கைகளையும், ஆட்களை யும், தரவு சாதனங்களையும் குறைப்பதற்கு அல்லது தவிர்ப்பதற்கு இது உதவுகிறது.

**source deck : ஆதார அடுக்கு; மூலப்பெட்டி :** ஆதாரமொழி யில் ஒரு கணினிச் செயல் முறையைக் கொண்டிருக்கிற அட்டை அடுக்கு. இது "பொருள்

அடுக்கு" என்பதிலிருந்து வேறு பட்டது.

**source directory :** மூலக் கோப் பகம் : ஒரு கோப்பு நகலெடுப் புச் செயல்பாட்டில் நகலெடுக்க விருக்கும் கோப்புகளின் மூலப் பதிப்புகள் இருக்கும் கோப்பகம்.

**source disk :** ஆதார வட்டு; மூல வட்டு : தரவுகளில் எதி லிருந்து பெறப்படுகின்றனவோ அந்த வட்டு. இது இலக்கு வட்டு என்பதிலிருந்து வேறு பட்டது.

**source document :** ஆதார ஆவணம்; ஆதார மொழி; மூல ஆவணம் : ஆதாரத் தரவுகளை எதிலிருந்து எடுக்க முடியுமோ அந்த மூல ஆவணம். பற்றுச் சீட்டு, விற்பனைச் சீட்டு போன் றவை இதற்கு எடுத்துக்காட்டு.

**source drive :** ஆதார இயக்கி: தரவுகள் எதிலிருந்து பெறப் படுகின்றனவோ அந்த வட்டு அல்லது நாடா இயக்கி. இது இலக்கு இயக்கி என்பதிலிருந்து வேறுபட்டது.

**source file :** ஆதாரக் கோப்பு: பொதுவாக ஓர் உயர்நிலை மொழியில் எழுதப்பட்டுள்ள ஒரு செயல்முறை. இது, ஒரு மொழிபெயர்ப்பு அல்லது தொகுப்புமூலம் பொருள் கோப்பினை உருவாக்கப் பயன் படுத்தப்படுகிறது.

**source language :** ஆதார மொழி; மூல மொழி : ஓர் இணைப்பு மொழி போன்ற ஒரு தாழ்நிலை மொழி அல்லது பேசிக், ஃபோர்ட்ரான், கோபால் போன்ற ஆதாரச் செயல்முறை எழுதப்படுகின்ற ஓர் உயர் நிலைமொழி.

**source media :** ஆதார ஊடகம்; மூல ஊடகம்; ஆதாரச் சாதனம் : மூலத் தரவு எடுக்கப்படுகிற ஆதார ஆவணங்கள்.

**source programme :** ஆதாரச் செயல்முறை; ஆதார நிகழ்வு; மூல நிரல் தொடர் : பேசிக், ஃபோர்ட்ரான், கோபால், பாஸ்கல் போன்ற ஆதார மொழி யில் அல்லது இணைப்பு மொழி யில் எழுதப்பட்டுள்ள கணினிச் செயல்முறை. இது ஒரு மொழி பெயர்ப்புச் செய்முறைக்கு உட்பட வேண்டும்.

**source register :** ஆதாரப் பதி வேடு; மூலப் பதிவு; மூலப் பதி வகம் : மாற்றம் செய்யப்படும் ஒரு தரவு சொல்லில் அடங்கி யுள்ள பதிவேடு.

**source (the) :** மூலம்; சோர்ஸ் : "சோர்ஸ் தொலைத் தொடர்புக் கழகம்" என்ற அமைவனத் தினால் நடத்தப்படும் தரவு

பயன்பாட்டுப் பணி. சந்தாதாரர்களுக்கு இந்தச் சேவை கிடைக்கும். கணினி பயன்பாட்டாளர்கள், விளையாட்டுகள் ஆடவும், தரவு ஆதாரங்களை அணுகவும், மின்னஞ்சல் அனுப்பவும், பெறவும், செய்தியிதழ்கள் படிக்கவும் இன்னும் பல காரியங்களுக்கும் பயன்படுகிறது.

**source statement** : ஆதார அறிக்கை : ஒரு செயல் முறைப்படுத்தும் மொழியிலுள்ள (ஆதார மொழி) நிரல் சொற்றொடர்.

**source worksheet** : மூலப் பணித்தாள்.

**SPA** : எஸ்பிஏ; ஸ்பா : 'பொறியமைவுகள் மற்றும் நடைமுறைகள் சங்கம்' என்று பொருள்படும். Systems and Procedures Association என்பதன் தலைப்பெழுத்துச் சுருக்கம். கருத்தரங்குகள் தொழில்முறைக் கல்வி, ஆராய்ச்சி ஆகியவை நடத்தி மேலாண்மைப் பொறியமைவுகளையும் நடைமுறைகளையும் மேம்படுத்துவது இதன் நோக்கம்.

**space** : எழுத்திடவெளி; இடவெளி : *1.* எழுத்துகளிடையிலுள்ள ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட வெற்றெழுத்துகள். 2. இரும சுழி (பூஜ்யம்)க்கு இணையான தொடர்பு வழி நிலை.

**spacebar : இடவெளி விசை; இடவெளிப் பட்டை; இடவெளிச் சட்டம்** : ஒரு விசைப் பலகையின் அடியிலுள்ள இடவெளிகளை உண்டாக்குவதற்கான நீண்ட குறுகிய விரற்கட்டை. இதனை ஒருமுறை அழுத்தினால், இது வாசகத்தில் செருகல் புள்ளியில் இடைவெளி உண்டாக்குகிறது.

**space character** : இடவெளி எழுத்து; இடவெளிக்குறி : விசைப் பலகையில் இடவெளிப்பட்டையை அழுத்துவதால் பதிவாகும் குறி. திரையில் அது வெற்று இடவெளியாக இருக்கும்.

**space-division multiplexing** : இடவெளிப் பிரிவு ஒன்றுசேர்ப்பு : மனிதர்களால் இயக்கப்பட்ட இணைப்பு பலகைகளுக்குப் பதிலாக முதன் முதல் புகுத்தப்பட்ட தகவல் தொடர்பு ஒன்றிணைப்பின் தானியங்கு வடிவம். ஆனால் அதன்பின் இம்முறைக்குப் பதிலாக அலைவரிசைப் பிரிவு ஒன்றிணைப்பு முறை (FDM) அறிமுகப்படுத்தப்பட்டது. இப்போது நேரப் பிரிவு ஒன்றிணைப்பு முறை (TDM) பின்பற்றப்படுகிறது.

**spaghetti code** : குழப்பக் குறியீடு; திருகு முறுகுக் குறிமுறை : ஒரு நிரலின் இயல்பான பாய்வு கெட்டுக் குழப்பத்தில் முடியும் நிலை. பெரும்பாலும் பொருத்தாத, அதிகப்படியான (GOTO) அல்லது JUMP கட்டளைகளைப் பயன்படுத்துவதால் இந்நிலை ஏற்படும்.

**spambot** : குப்பைசேர்த்தி : இணையத்திலுள்ள செய்திக் குழுக்களுக்கு தேவையற்ற செய்திகளையும் கட்டுரைகளையும் ஏராளமாகத் தாமாகவே திரும்பத்திரும்ப அனுப்பி வைக்கும் ஒரு நிரல்.

**span** : வீச்சளவு : மதிப்பளவுகளின் வீச்சில் மிக உயர்ந்த மதிப்பளவுக்கும் மிகக்குறைந்த மதிப்பளவுக்குமிடையிலான வேறுபாடு.

**spanning tree** : வீச்சளவு மரம் : இரு பண்புகளைக் கொண்ட ஒரு வரைபடத்தில் உட்படம் (1) அது ஒருமரம்; (2) மூல வரைபடத்தின் அனைத்து மைய முனைகளையும் கொண்டிருக்கும்.

**SPARC** : ஸ்பார்க் : அடுக்கு நிலை செயலிக் கட்டுமானம் என்று பொருள்படும் Scalable Processor Architecture என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். சன் மைக்ரோசிஸ்டம்ஸ் நிறுவனத்தின் நுண் செயலி வரன்முறை. ரிஸ்க் (RISC - Reduced Instruction set Computing-சுருக்க நிரல் தொகுதிக் கணிப்பணி) கட்டுமானத்தின் அடிப்படையில் அமைந்தது.

**spare parts** : உதிரி பாகங்கள்; மாற்றுக் கருவிகள்.

**sparse array** : அடர்த்தியற்ற வரிசை; அடர்விலா வரிசை: பெரும்பாலான பதிவுகள் சுழி (பூஜ்யம்)யின் மதிப்பளவைக் கொண்டுள்ள வரிசை.

**spatial data management** : இடப் பரப்பு தகவல் மேலாண்மை : தரவுகளை எளிதாகப் புரிந்து கொண்டு கையாளும் பொருட்டு, கணினித் திரையில் சின்னங்களை அடுக்கி வைத்திருப்பதைப்போல ஒரு குறிப்பிட்ட இடப்பரப்பில் தரவுகளைப் பொருள்களின் தொகுதியாக உருவகிக்கும் முறை.

**spatial digitizer** : இடத்தொடர்பு இலக்கமாக்கி; இடம் சார்ந்த எண்மானமாக்கி : கணினி வரைகலையில் முப்பரிமாணப் பொருள்களை உருவாக்கப் பயன்படுகிற சாதனம்.

**spawn** : கான் முளை : நடப்புச் செயல்முறையிலிருந்து மற்றொரு செயல்முறையைத் தொடங்குகிறது.

**spead, transmission** : பரப்பு வேகம்.

**speaker** : ஒலிபெருக்கி.

**spec** : ஸ்பெக் : 'தனிக்குறிப் பீடு' எனப் பொருள்படும் 'Specification' என்ற ஆங்கிலச் சொல்லின் சுருக்கம்.

**special character** : சிறப் பெழுத்து; சிறப்பு உரு : ஓர் எழுத்தாகவோ இலக்க மாகவோ, வெற்றிடமாகவோ இல்லாத வரைகலை எழுத்து. எடுத்துக்காட்டு : கூட்டல் குறியீடு, சமக்குறியீடு, உடுக் குறி, டாலர் குறியீடு, காற்புள்ளி முதலியன.

**special function key** : சிறப்புப் பணி விரற்கட்டை; சிறப்புச் செயற்பாட்டு விசை : ஓர் எந்திரச் செயற்பணியைக் கட்டுப் படுத்துகிற விசைப் பலகை யிலுள்ள ஒரு விரற்கட்டை. இது, ஒரு குறிப்பிட்ட கணினிச் செயற்பாட்டினைத் தொடங்கி வைக்கிறது.

**special interest group (SIG)** : தனி நலக் குழுமம்; சிறப்பு ஆர்வக்குழு: ஓர் அமைவனத் தினுள் உள்ள ஒரு தனிக்குழு மம். இது ஒரு தனிப் பொருட் பாடு குறித்தக் கூட்டங்கள் நடத்தும்; கருத்தரங்குகளை நடத்தும்; ஆவணங்களை வெளி யிடும். இந்தக் குழுமங்கள் தாங்களே தங்கள் அலுவலர் களைத் தேர்ந்தெடுத்துக் கொள் கின்றன. தங்கள் பணிகளை வகுத்துக் கொள்கின்றன. தாங்களே நிதி திரட்டிக் கொள் கின்றன.

**special key** : சிறப்புச் சாவி.

**special libraries association (SLA)** : சிறப்பு நூலகச் சங்கம் : நூலகங்கள் மற்றும் தகவல் வல்லுநர்களின் பன்னாட்டு அமைவனம். வங்கிகள் அருங் காட்சியகங்கள், சட்ட நிறுவனங் கள் போன்ற பல்வேறு தனி நலக் குழுமங்களுக்கான ஆதார மையங்களை இது நிறுவுகிறது.

**special purpose** : சிறப்பு நோக் கம் : முக்கியமான மாறுதல்கள் ஏதுமில்லாமல், ஒரு குறிப் பிட்ட வகைப் பயன்பாடுகளுக் கான நோக்கம். இது பொது நோக்கம் என்பதிலிருந்து வேறு பட்டது.

**special purpose computer** : சிறப்பு நோக்கக் கணினி : சில குறிப்பிட்ட வகைகளிலான எண்ணல் அல்லது தருக்க சிக்கல் களைத் தீர்ப்பதற்காக வென்றே உருவாக்கப்பட்ட கணினி. தானியங்கி ஒளிப்படக் கருவி முதல் வீட்டுச் சாதனங்களி

லிருந்து விண்கலங்களைக் கண் காணிப்பதுவரை பலவகையான பணிகளைச் செய்யத்தக்கது.

**special purpose programming language** : சிறப்பு நோக்க நிரல் தொடர் மொழி : ஒரு குறிப் பிட்ட வகையான சிக்கல் அல் லது பயன்பாட்டினை மட்டும் கையாளும் வகையில் உருவாக் கப்பட்ட நிரல்தொடர் மொழி.

**specialists** : வல்லுநர்கள்.

**special symbol** : சிறப்புக் குறியீடு.

**specific address** : குறிப்பிட்ட முகவரி.

**specification** : விளக்கக் குறிப்பு; விவர வரையறை; குறிப்பீடு : ஒரு சாதனம், செயல்முறை அல்லது உற்பத்திப் பொருளின் தேவைப்படும் தன்மைகள் பற்றிய விளக்கமான குறிப்பு.

**specification sheet** : விளக்கக் குறிப்பு தாள்; விவர வரையறை தாள் : ஆர்பீஜி (RPG)சொற் றொடர்களை குறியீடு செய்யப் பயன்படும் படிவம்.

**specification systems** : முறைமை வரன்முறை.

**specific fields** : குறிப்பிட்ட துறைகள்.

**specs** : ஸ்பெக்ஸ் : specifications என்பதன் குறும்பெயர்.

**spectral colour** : பட்டை ஒளி வண்ணம் : கணினி வரைகலை யில் ஒளியின் ஓர் ஒற்றை அலை நீளத்தின் வண்ணம். இந்த ஒளிப்பட்டையில் அடிப்பகுதி யில் செங்கருநீல வண்ணத்தில் தொடங்கி மேல்நோக்கி நீலம், ஊதா, பச்சை, மஞ்சள், ஆரஞ்சு என்று சென்று சிவப்பு வண் ணத்தில் முடியும்.

**spectral response** : பட்டை ஒளிப்பதில் செயல் : பார்க்கும் ஒளியின் வண்ணத்தை அடிப் படையாகக் கொண்டு ஒளி யுணர்வுச் சாதனத்தின் மாறியல் வெளிப்பாடு.

**spectrum** : நிறமாலை : ஒரு குறிப்பிட்ட வகைக் கதிர்வீச்சின் அலைவரிசை வரம்பெல்லை ஆகும். சூழ்நிலையைப் பொறுத்து ஒரு பொருளினால் உமிழப்படலாம் அல்லது உட்கவரப்படலாம்.

**speech recognition** : பேச்சு கண்டறிதல்; பேச்சறிதல் : நினைவகத்தில் உள்ள குரல் அமைப்புகளில் நுண் ஒலி பெருக்கியிலிருந்து வரும் சமிக்கைகளின் அமைப்புகளை ஒப்பிட்டு சேர்க்கும் கணினியின் திறன். இதன்மூலம் பேசவரும் சொற்களை அது அறிந்து கொள்கிறது.

**speech synthesis :** பேச்சு பிரித்தறிதல்; பேச்சுருவாக்கம் : குறிப்பிடப்பட்ட பேச்சுப் பகுதிகளை உண்மையான சொற்கள், சொற்றொடர்களாகவும் ஒலியன்களை சொற்களாகவும் வரிசைப் படுத்தித் தருவது.

**speech synthesizer :** பேச்சு பிரிக்கும் பொறி; பேச்சுருவாக்கி : எண்முறைக் குறியீட்டை புரிந்து கொள்ளக்கூடிய பேச்சாக மாற்றும் சாதனம். குறியீட்டை ஒலிபெருக்கி மூலம் அனுப்பி செயற்கை மனிதக்குரலாக பேச வைக்கிறது.

**speed :** செயல் வேகம்.

**speed buffering :** வேக இடையீடு : உட்பாட்டுக்கும் வெளிப் பாட்டுக்கும் இடையிலான வேக வேறுபாடுகளை ஈடு செய்யக்கூடிய உத்தி. இடையீட்டில் தரவுகள் அதிகவேகத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டு, குறைந்த வேகத்தில் வெளியிடப்படுகிறது அல்லது குறைந்த வேகத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டு அதிவேகத்தில் வெளியிடப்படுகிறது.

**speed of electricity/light :** மின் விசை/ ஒளிவேகம் : ஏற்றத்தாழ வினாடிக்கு 2,99,311 கி.மீ. வேகம்.

**speed of light :** ஒளியின் வேகம்; ஒளி வேகம் : ஒளி பயணம் செய்யும் வேகம். ஒரு நொடிக்கு 2,99,768 கி.மீ.கள் என்பது கணினிகளுக்கும் வெளிப்புற உறுப்புகளுக்கும் இடையில் தரவுகளை அனுப்புவதற்கு ஆகும் நேரம்.

**spell checker :** சொற்பிழை திருத்தி; சொல்திருத்தி.

**spelling checking :** சொல் பிழை திருத்தம் : சொல் செயலகத்துடன் தொடர்புள்ள கணினி நிரல் தொடர். ஒரு சொற்பட்டியலுடன் தட்டச்சு செய்யப்பட்ட சொற்களை ஒப்பிட்டு எழுத்துப் பிழைகளைக் கூறுவது.

**spew :** கக்கல்; உமிழ்வு : இணையத்தில் அளவுக்கதிகமான எண்ணிக்கையில் மின்னஞ்சல் செய்திகளையோ, செய்திக் குழுக் கட்டுரைகளையோ வெளியிடல்.

**spider :** சிலந்தி : இணையத்தில் புதிய வலை ஆவணங்களைத் தேடி அவற்றின் முகவரிகளையும் உள்ளடக்கத் தகவலையும் ஒரு தரவுத் தளத்தில் சேமித்து வைக்கும் தானியங்கு நிரல். குறிப்பிட்ட கால இடைவெளியில் தானாகவே இப்பணியைச் செய்து கொண்டிருக்கும். தேடு பொறிகள் மூலம் இத் தரவுத் தளத்தின் வாயிலாக வேண்டிய தரவுகளை எளிதாகத் தேடிப் பெறலாம். சிலந்தி நிரல்களை

இணைய எந்திரன் (Internet Robot) என அழைக்கலாம்.

**spider configuration :** சிலந்தியுரு அமைப்பு : விநியோகிக்கப்பட்ட அமைவில் ஒரு வகை. இதில் பல்வேறு கட்டமைப்பு கணிப்பு அமைப்புகளின் நடவடிக்கைகளை ஒரு மையக்கணினியமைவு கண்காணிக்கிறது.

**spike :** மின் துள்ளல் : குறுகிய உச்சமடையும் குறைந்த நேர வோல்டேஜ். திடீரென மின் சாரம் அதிகரிப்பது.

**spindle:** சுழல் முனை;சுழல் தண்டு : ஒரு வட்டு இயக்கியிலுள்ள சுழல் தண்டு. ஒரு நிலைவட்டில், தகடுகள் சுழல் முனையுடன் இணைக்கப்பட்டிருக்கும். அகற்றக்கூடிய ஒரு வட்டில், சுழல்முனை இயக்கியிலேயே இருக்கும்.

**spindle motor :** சுழல் தண்டு விசைப் பொறி.

**spin rate :** சுழல் வேகம்.

**spinwriter :** சுழல் எழுது பொறி; சுழல் எழுதி : ஒரு குறிப்பிட்ட வகையான உயர்தர கணினி அச்சுப்பொறி.

**spline :** இசைவான வளைவு : கணினி வரைகலையில் வருவது. கணிதமுறையில் எளிதானதும் பிரிந்திருக்கும் தரவுப் புள்ளிகளைச் சேர்ப்பதற்கு அழகிய வழி. தரவுப் புள்ளிகளிடையே அழகிய விளைவுகளையும் பரப்புகளையும் உருவாக்கப் பயன்படுவது மட்டுமல்லாது அளவுகோல்களுக்கிடையே நகர்த்தவும் பயன்படுவது. உயிர்ப் படங்களில் முக்கிய பின்னணிகளை விளக்கப் பயன்படுவது.

**split :** பிரி.

**split bar :** பகுத்த பட்டை; பிரிந்த பட்டை.

**split cell :** கலம் பிரி.

**spliting a window :** சாளரத்தைப் பிரித்தல்; பலகணிப் பகுப்பு; சாளரப் பகுப்பு : ஒரு பலகணியை இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட பாளங்களாகப் பகுத்தல்.

**split screen:** பகு திரை.

**split table :** அட்டவணை பிரி.

**split window :** பிரிந்த பலகணி; பகு சாளரம் : Split Screen போன்றது.

**spoken media :** பேச்சு ஊடகம்.

**spoofing :** ஏமாற்றுதல் : இணையத்தில் ஒரு தரவு, அனுமதி பெற்ற பயனாளர் ஒருவரிடமிருந்து அனுப்பப்பட்டது போன்ற ஒரு தோற்றத்தை உரு

வாக்குதல். எடுத்துக்காட்டாக, ஒரு பிணையத்தில் அனுமதி பெற்ற பயனாளர் ஒருவரின் ஐபீ முகவரியைக் காட்டி ஏமாற்றி உள்ளே நுழைதல் ஐபீ-ஏமாற்றல் எனப்படுகிறது.

**spool** : சுருணை; சுருள்: *1.*காந்த நாடா சுருணை. 2. காந்த நாடாவைச் சுருட்டுவது.

**spooler** : சுருளி : வேறு வேலைகளைச் செய்து கொண்டே அச்சுப்பொறியில் வன்படியை உருவாக்க கணினியை அனுமதிக்கும் நிரல் தொடர் அல்லது வெளிப்புறச் சாதனம்.

**spooling** : சுருட்டல் : *1.* பல்வேறு உள்ளீடு/வெளியீடு சாதனங்கள் ஒரேநேரத்தில் இயங்க அனுமதிக்கும் செயல்முறை. தாங்கிகளின் மூலம் ஒரு கணினி அமைப்பு தரவுகளை அனுப்புதல் அல்லது பெறுதல். 2. அமைப்பின் வேறொரு பகுதி அதை செயலாக்கத் தயாராகும் வரை நாடா கோப்பு அல்லது வட்டில் தரவுகளை தற்காலிகமாக சேமிக்க அனுமதிப்பது.

**spot** : புள்ளி; குறியிடம் : ஒரு போஸ்ட்-ஸ்கிரிப்ட் அச்சுப்பொறியில் ஒளி-நிழல் வேறுபாட்டு செயலாக்கத்தின் மூலம் உருவாக்கப்படும் ஒரு கலவைப் புள்ளி. ஒரு குறிப்பிட்ட படப்புள்ளியின் (pixel) சாம்பல்நிற அளவைச் சரியாக வெளிப்படுத்த குறிப்பிட்ட தோரணியில் பல புள்ளிகள் ஒரு குழுவாக இடம் பெறுகின்றன.

**spot colour** : குறியிட நிறம்; புள்ளி நிறம் : ஓர் ஆவணத்தில் நிறத்தைக் கையாளும் ஒரு வழிமுறை. ஒரு குறிப்பிட்ட நிறத்து மையினை வரையறுத்து விட்டால் அந்த ஆவணத்தில் அதே நிறத்தைக் கொண்ட பகுதிகள் ஒரு தனி அடுக்காக அச்சிடப்படும். ஒவ்வொரு குறியிட நிறத்துக்கும் அச்சுப்பொறி ஒவ்வொரு அடுக்காக அச்சிடும்.

**spot function** : குறியிடச் செயல்பாடு : ஒளி-நிழல் வேறுபாட்டு அமைப்பில் ஒரு குறிப்பிட்ட வகைத் திரைக்காட்சி உருவாக்கப் பயன்படும் போஸ்ட்-ஸ்கிரிப்ட் செயல்முறை.

**spray can** : தெளிப்பான் : பெயின்ட் பிரஸ், பெயின்ட் போன்ற ஒரு வரைவோவிய பயன்பாட்டு மென் பொருளில் படிமம் ஒன்றில் புள்ளிகளின் தோரணியை உருவாக்கப் பயன் படும் கருவி.

**spread sheet** : அகலத்தாள்; விரிதாள் : சிற்றறைக் கட்டங்களாக தரவு அல்லது வாய்பாடுகளை வரிசைபடுத்துகின்ற நிரல்

தொடர்களில் ஒன்று. பல வகையான வணிகப் பயன்கள் கொண்டது. லோட்டஸ் 1-2-3, எக்செல், சூப்பர்கால்க் போன்றவை வணிக விரிதாள்களில் புகழ் பெற்றவை.

**spreadsheet package** : விரிதாள் தொகுதி.

**spreadsheet compiler** : விரிதாள் தொகுப்பி : உருவாக்கிய விரிதாள் தொகுதியில்லாமல் இயங்குகிற விரிதாள்களை தனி நிலைச் செயல்முறைகளாக மொழி பெயர்க்கிற மென்பொருள்.

**spreadsheet programme** : விரிதாள் நிரல் : வரவு-செலவுத் திட்டம், நிதிநிலை அறிக்கை, முன்கணிப்பு மற்றும் பிற நிதி தொடர்பான பணிகளைச் செய்வதற்கென உருவாக்கப்பட்ட மென்பொருள் தொகுப்பு. தரவு மதிப்புகள் கட்டம் கட்டமான கலங்களில் எழுதப்படுகின்றன. வர்ய்பாடுகள் மூலம் தரவுகள் உறவுபடுத்தப்படுகின்றன. ஒரு கலத்தில் இருக்கும் மதிப்பினை மாற்றினால் தொடர்புடைய அனைத்துக் கலங்களிலுமுள்ள மதிப்புகள் மாற்றப்படும். விரிதாள் பயன்பாடுகள் பெரும்பாலும் வரைபட வசதிகளையும் கொண்டிருக்கும். உரை, எண் மதிப்புகள் மற்றும் வரைபடங்களுக்கான எண்ணற்ற வடிவமைப்பு (formating) வசதிகளைக் கொண்டிருக்கும்.

**spread spectrum** : அகல் ஒளிக்கற்றை : அனுப்பு மற்றும் ஏற்புச் சாதனங்கள் இரண்டிலும் உள்ள தனிவகைத் தோரணிக்கேற்ப ஊர்தி அலைவெண்ணைத் தொடர்ச்சியாக மாற்றுகிற வானொலி அனுப்பீடு. ஒரே இடப்பரப்பில் பன்முகக் கம்பியில்லா அனுப்பீடுகளை அனுமதிப்பதற்காகவும் பாதுகாப்புக்காகவும் இது பயன்படுத்தப்படுகிறது.

**spring tension** : வில் இழுவிசை.

**sprites** : வில் இழுப்பிசை : முகப்பில் உள்ள பிறசெய்திகள் அல்லது வரைபடங்களோடு தொடர்பின்றி சுயேச்சையாக நகர்த்தக்கூடிய அதிக துல்லியம் உள்ள பொருள்கள். திரையில் உள்ள பொருள்களின் முன்பாக அல்லது பின்புறத்தில் நகர்ந்து தன்னுடைய அளவு மற்றும் நிறத்தை மாற்றிக் கொள்ளக் கூடியது. உயிர்ப்பட தொடர்களை உருவாக்க உதவுவது.

**sprocket feed** : பற்சக்கரச் செலுத்துகை : அச்சுப்பொறியில் தாளினை உட்செலுத்தும் அமைப்பு. பற்சக்கரம் போன்ற அமைப்பு தாளின் துளைகளில்

பொருந்தி தாளை நகர்த்திச் செல்லும். இதில் பின் செலுத்துகை, இழுவைச் செலுத்துகை என இருவகை உண்டு.

sprocket holes : வழிப்படுத்துத் துளைகள் : அச்சுப்பொறியில் காகிதத்தை அனுப்புவதற்காக தொடர் எழுது பொருளின் இரு பக்கங்களிலும் சம இடைவெளியில் துளைகளை இடுவது.

SPX : எஸ்பீஎக்ஸ் : 1. வரிசை முறைப் பொட்டலப் பரிமாற்றம் எனப் பொருள்படும் Sequenced Packet Exchange என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஐஎஸ்ஓ/ஓஎஸ்ஐ நான்காம் அடுக்கான போக்குவரத்து அடுக்கில் (Transport Layer) செயல்படும் நெறிமுறை. நாவெல் நெட்வேரில் பயன்படுத்தப்படுகிறது. பொட்டலங்களை அனுப்பிவைக்க, எஸ்பீஎக்ஸ், செய்தி முடிந்துவிட்டதா என்பதை உறுதி செய்கிறது. பொதுவாக எஸ்பீஎக்ஸ்/ஐபீஎக்ஸ் எனச் சேர்த்தே குறிப்பிடுவர். 2. சில வேளைகளில், ஒரு திசை எனப் பொருள்படும் Simplex என்ற சொல்லின் சுருக்கமாகவும் குறிக்கப்படும்.

square root : எண் வர்க்க மூலம்.

square wave : சதுர அலை : அலைமானிமூலம் பார்க்கக் கூடிய எண்மானத் துடிப்பின் வரைகலை உருக்காட்சி. இது ஒரு குறிப்பிட்ட பரப்புவரை மிகவேகமாக எழுந்து, துடிப்பின் காலநீட்டிவரை மாறாமல் நின்று, துடிப்பின் முடிவில் வீழ்வதால் சதுர வடிவமாகத் தோன்றுகிறது.

squeezer : ஸ்குவீசர் : பேரளவு ஒருங்கிணைப்பு (எல்எஸ்ஐ) மின் சுற்றை அதன்மூல, பெரிய வடிவில் வடிவமைக்கும் நபர்.

.sr : .எஸ் ஆர் : ஓர் இணைய தள முகவரி சுரினாம் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

SRAPI : எஸ்ஆர்ஏபீஐ; ஸ்ரேப்பி : குரலறி பயன்பாட்டு நிரலாக்க இடைமுகம் எனப் பொருள்படும் Speech Recognition Application Programming Interface என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். நாவெல், ஐபிஎம், இன்டெல், பிலிப்ஸ் டிக்டேஷன் சிஸ்டம்ஸ் போன்ற நிறுவனங்களின் கூட்டமைப்பு உருவாக்கிய குரலறிதல், உரையினைப் பேச்சாக மாற்றுதல் போன்ற தொழில்நுட்பத்துக்கான, பணித்தளம் சாரா பயன்பாட்டு நிரலாக்க இடைமுகம்.

SSA : எஸ்எஸ்ஏ : நேரியல் சேமிப்பகக் கட்டுமானம் என்று

பொருள்படும் Serial Storage Architecture என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஐபிஎம் நிறுவனத்தின் இடைமுக வரன்முறை. வளைக் கட்டிணைப்பு (Ring Topology) முறையில் சாதனங்கள் ஒழுங்கமைக்கப்படுகின்றன. ஸ்கஸ்ஸி சாதனங்களுடன் ஒத்திசைவானது. ஒவ்வொரு திசையிலும் வினாடிக்கு 20 மெகாபைட் வரை தரவு அனுப்பி வைக்க முடியும்.

.st : .எஸ்டீ : ஓர் இணைய தள முகவரி சாவோ டோம்-பிரின்ஸ்பீ நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

stable : தொடக்குவிசை சுற்று.

stable tigger circuit : நிலை தொடக்கு விசைச்சுற்று.

stack : அடுக்கு : அடுக்கில் உள்ள பொருள்களை அவற்றின் நினைவக இடத்திற்கு முகவரியிடுவதற்குப் பதிலாக உள் நினைவகத்தில் சேமிக்கப்படும் வரிசைமுறை தரவுப் பட்டியல். அடுக்கின் மேற்பகுதியில் இருந்தோ அல்லது அடியில் இருந்தோ தகவல்களை கணினி எடுக்கிறது.

stacked job processing : அடுக்கப்பட்ட பணி செயலாக்கம் : கணினி அமைப்புக்குத் தருவதற்காக பல்வேறு வேலைகளை அடுக்கி வைக்க அனுமதித்து, அவைகளை ஒவ்வொன்றாக செய்ய அனுமதிக்கும் தொழில்நுட்பம். இயக்க வேண்டிய வேலைகளின் வரிசை அட்டைபடிப்பிக்குத் தரப்படுகின்றது. வேலை கட்டுப்பாட்டு அட்டைகளின்படி ஒவ்வொரு வேலையும் செய்யப்படுகிறது.

stacker : அடுக்கி.

stack pointer : அடுக்குச் சுட்டு; அடுக்குக் காட்டி : அடுக்கில் உள்ள இருப்பிடங்களைக் காட்டப் பயன்படும் சுட்டு. அடுக்கிலிருந்து ஒவ்வொரு புதிய தரவு வெளியே எடுக்கப்படும்போது அல்லது உள்ளே அனுப்பப்படும்போது ஒவ்வொரு எண் கூடிக்கொண்டே போகும்.

stack overflow : அடுக்குத் ததும்பல் : அடுக்கில் புதிய இனங்களுக்கு இடமில்லாத வகையில் ஏற்படும் பிழை நிலை. ஓர் இனம் வரவழைக்கப்பட்டு, அடுக்குக் காலியாக இருக்கும்போது அந்த அடுக்கு பற்றாக் குறையாக இருக்கிறது எனக் கருதப்படுகிறது.

ST506 interface : எஸ்டீ 506 இடைமுகம் : நிலைவட்டு

இயக்ககக் கட்டுப்படுத்திகளுக்கென சீகேட் டெக்னாலஜீஸ் நிறுவனம் உருவாக்கிய வன்பொருள் சமிக்கை வரன் முறை. இந்த இடைமுகத்தின் எஸ்டீ 506/412 பதிப்பு ஏற்றுக் கொள்ளப்பட்ட தர வரையறையாகி விட்டது.

**stack segment** : அடுக்குக் கூறு : அடுக்கினை வைத்திருப்பதற்கு ஒரு செயல்முறையினால் ஒதுக்கப்பட்டுள்ள நினைவகத்தின் பகுதி.

**stackware** : அடுக்குத் தரவு; மிகையட்டை அடுக்கு (தரவு), மிகையுரைச் செயல்முறை ஆகியவற்றிலான மிகையட்டைப் பயன்பாடு.

**stage analysis** : நிலைப் பகுப்பாய்வு : ஒரு அமைப்பாக்கம் தேவைப்படும் தரவுப் பொறியமைவில் ஒரு திட்டமிடும் செய்முறை. இது, அமைவனத்தின் வளர்ச்சிச் சுழற்சியில் நடப்புநிலை, அதன் தரவுப் பொறியமைத் தொழில் நுட்பப் பயன்பாடு ஆகியவை பற்றிய பகுப்பாய்வினை அடிப்படையாகக் கொண்டது.

**stairstepping** : படித் தாவல்; மாடி ஏறுதல்; மாடிப்படி : ஒரு வரைகலைக் கோடு அல்லது வளைகோடுகளை மாடிப்படிகள் போன்ற தோற்றமுடையதாக அமைத்தல்.

**stale data** : நாட்பட்ட தரவு.

**stale link** : நாட்பட்ட தொடுப்பு; பயனற்ற தொடுப்பு : நீக்கப்பட்ட அல்லது வேறிடத்துக்கு மாற்றப்பட்ட ஒரு ஹெச்டீஎம்எல் ஆவணத்தைச் சுட்டுகின்ற பயனற்ற மீத்தொடுப்பு.

**stand alone** : தனியாக நிற்றல்; தனித்து இயங்கு; தனித்த கணினி : தொலைக்கணினி அமைப்புடன் இணைப்புப் பெற்று அதைச் சார்ந்திருக்காமல் தனியாக நின்று தன்னிறைவு பெற்ற கணினி அமைப்பை விளக்குவது. வேறு எந்தக் கருவியும் இல்லாமல், தனியாக நிற்கும் சாதனம் தானே இயங்கிக் கொள்ளும்.

**stand alone computer** : தனித்தியங்கும் கணினி : தன்னடக்கத்துடன் வடிவமைக்கப்பட்ட கணினி. இதில், மனநிறைவுடன் செயற்படுவதற்கு வேறெந்த வன்பொருளையும் அல்லது மென்பொருளையும் அணுகவேண்டிய தேவையில்லை. ஒரு சொந்தக் கணினி பொதுவாக ஒரு தனித்தியங்கும் கணினியாகும்.

**stand alone graphics** : தனித்தியங்கு வரைகலை.

**stand alone graphics system :** தனியாக நிற்கும் வரைகலை அமைப்பு : நுண் கணினி அல்லது சிறு கணினி, சேமிப்பகம், ஒளிக்காட்சித்திரை முகப்பு மற்றும் உள்ளீடு/வெளியீடு சாதனங்களைக் கொண்டுள்ள வரைகலை அமைப்பு.

**stand alone programme :** தனித்தியங்கும் செயல்முறை : ஒரு செயல்பாட்டுப் பொறியமைவு அல்லாமல் இயக்குவதற்கு வேறெந்த மென்பொருளும் தேவைப்படாதிருக்கிற ஒரு கணினிச் செயல்முறை. தனித்தியங்காத செயல்முறைகளுக்குப் பொதுவாக வேறு மென்பொருள்களை ஏற்றுதல் அல்லது ஒரு மென்பொருள் வாலாய நூலக அணுகுதல் தேவைப்படும். பெரும்பாலான வணிகமுறை மென்பொருள் பயன்பாடுகளில் தனித்தியங்கும் செயல்முறைகள் பயன்படுத்தப்படுகின்றன.

**stand alone server :** தனித்தியங்கு வழங்கன்.

**stand alone system :** தனியாக நிற்கும் அமைப்பு : வேறொரு கணினியுடன் இணையாமல், வேறொன்றின் கட்டுப்பாட்டில் இல்லாமல் சுயேச்சையாக இயங்கக்கூடிய தன்னிறைவு கணினி அமைப்பு.

**standard :** செந்தரம் ; திட்ட அளவு : 1. ஒரே சீரான நடைமுறைகள் மற்றும் பொதுவான தொழில் நுட்பங்களை உருவாக்க உதவும் வழி காட்டி. 2. கணினி அமைப்பின் செயல்பாட்டை அளக்க உதவும் அளவுகோல். சட்டமுறையான அமைப்பு இதனை விதிக்கலாம் அல்லது பெரிய உற்பத்தியாளரின் நடைமுறையில் சாதாரணமாக உருவாக்கப்படலாம்.

**standard analog signals :** நிலையான தொடர்முறைக் குறியீடுகள்.

**standard buttons :** இயல்பான பொத்தான்கள்.

**standard cell :** செந்தரச் சிற்றம் : சிப்பு உருவாக்கத்திற்கு ஆயத்தமாகவுள்ள மின்னணு செயற்பணியின் முடிவுறுத்தப்பட்ட வடிவமைப்பு. இது ஒரு கடிகாரச் சுற்றுவழி அளவுக்குச் சிறிதாக அல்லது பேரளவுச் செய்முறைப்படுத்திய அளவுக்குப் பெரிதாக இருக்கும். இது வழக்காற்று வடிவமைப்புச் சிப்புகளைத் தயாரிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

**standard form :** பொது வடிவு.

**standard function :** முன்னிருப்பு செயல்கூறு; உள்ளிணைந்த செயல்கூறு : ஒரு குறிப்பிட்ட நிரலாக்க மொழியில் உள்ளிணைக்கப்பட்டுள்ள, பயன்

படுத்தத் தயாராய் உள்ள ஒரு செயல்கூறு.

**standard deviation** : செந்தரச் சாய்வு : ஒரு தரவுத் தொகுதியினுள் உள்ள தரவு இனங்களின் கோட்டமுறும் அளவு. தரவுகளின் பகிர்மானம் இயல்பாக இருக்குமானால், தரவுகளின் 68%, செந்தரச் சாய்வுக்கு ஒன்று கூடுதலாக அல்லது குறைவாக இருக்கும்; 95%, செந்தரச் சாய்வுக்கு மூன்றுக்குள் இருக்கும். ஆங்கிலச் சுருக்கம் : STDEV.

**standards enforcer** : தரம் அமல் படுத்துபவர்; செந்தர நடைமுறைப்படுத்தி : குறிப்பிட்ட நிரல் தொடரின் தரங்களும் நடைமுறைகளும் கடைப் பிடிக்கப்பட்டனவா என்று முடிவு செய்யப்பயன்படுத்தப் படும் கணினி நிரல் தொடர்.

**standard interface** : செந்தர இடைமுகம் : மையச் செயலக அலகுடன் அனைத்து வெளிப்புறச் சாதனங்களும் இணைக்கப்படும் செந்தரமான பருப்பொருள் வழிமுறை.

**standardise** : செந்தரப்படுத்தல்.

**standardist** : செந்தரப்படுத்து : செந்தரங்களை உருவாக்குதல் அல்லது ஏற்றுக்கொள்ளப்பட்ட செந்தரங்களுக்கு ஏற்றதாக்குதல்.

**standardization** : தர அளவுப் பாடு; தரப்படுத்தல்.

**standard mode** : செந்தரச் செயல் வகை : பலகணிச் செயற் பாட்டுச் செயல்வகை.

**standard newsgroup hierarchy** : இயல்பான செய்திக்குழு படிநிலை.

**standard output** : திட்ட அளவு வெளிப்பாடு.

**standard parallel port** : இயல் பான இணைநிலைத் துறை.

**standards** : செந்தர வரையேடுகள்.

**standard tool bar** : மரபுநிலைக் கருவிப் பட்டை.

**standard type** : திட்ட அளவு.

**standard width** : இயல்பான அகலம்.

**stand lay button** : மாற்றுப் பொத்தான்.

**standby equipment** : மாற்று ஏற்பாட்டுக் கருவி ; மாற்றுச் சாதனம் : முக்கிய கருவி எழுப்பும் கோளாறினால் செயல் படாமல்போனால் மாற்று ஏற்பாடாகப் பயன்படக்கூடிய இரண்டாவது கருவி.

**standby time** : மாற்று ஏற்பாட்டு நேரம்; காத்திரு நேரம் : 1. ஒரு கருவியிடம் கேள்வி கேட்டு அதனிடமிருந்து பதில் பெறுவதற்கு இடையிலான நேரம். 2. ஒரு கருவியை நிறுவுவதற்கும் அதனைப் பயன்படுத்துவதற்கும் இடையிலான நேரம்.

3. பயன்படுத்துவதற்குக் கருவி கிடைத்து பயன்படுத்தாத நேரம்.

**star : உடு உரு ; விண்மீன்:** வரைகலைப் பயன்பாட்டாளர் இடை முகப்பினையும், மேசை உருவகங்களையும் 1981இல் புகுத்திய ஜெராக்ஸ் பணி நிலையம். இது வெற்றி பெற வில்லை. எனினும் பிந்திய ஜெராக்ஸ் கணினிகளுக்கும், ஆப்பிள் லிசா, மெக்கின்டோஷ் போன்றவற்றுக்கும் தூண்டுத லாக இருந்தது.

**start bit : துவக்கும் துண்மி :** 1. ஒரு தரவு சொல் துண்மி அடையாளப்படுத்தும் துண்மிகள் அல்லது துண்மிகளின் தொகுதி. 2. ஒரேநேரத்தில் அல்லாத தொடர் செய்தி அனுப்புதலின் துவக்கத்தைக் குறிக்கும் துண்மி.

**star-dot-star : ஸ்டார்-டாட்-ஸ்டார் (*.*) :** எம்எஸ் டாஸ் இயக்கமுறைமையில் ஒரு கோப்பகத்திலுள்ள அனைத்துக் கோப்புகளையும் என்பதைக் குறிக் கிறது. கோப்பின் முதன்மைப் பெயர் எதுவாக இருப்பினும், வகைப்பெயர் எதுவாக இருப்பினும் என்பது இதன் பொருள்.

**start line : தொடக்கக் கோடு :** சறுக்கு உருக்காட்சி தொடங்கு கிற நுண்ணாய்வுக் கோடு. எடுத்துக்காட்டாக, ஒரு நிறக் காட்சியில் ஒரு வாசகக் கோட் டில் 14 இடைநிலை நுண்ணாய் வுக் கோடுகள் அமைகின்றன. இவை 0-13 என்று இலக்க மிடப்படுகின்றன. ஓர் இயல் பான சறுக்குத் தொடக்கம் 12, உச்சிக் கோடு 13.

**star network : நட்சத்திரப் பிணையம் :** மையப் புரவலர் கணினியும் செயற்கைக்



நட்சத்திர பிணையம்

கோள்கள் போன்ற சுற்றிலு முள்ள கணினிகளும் நட்சத்திர அமைப்பில் இணையும் கட்டமைப்பு. தொலைவில் உள்ள முகப்புகள் நிலத்தளவில் பரவலாகப் பிரிந்திருக்கலாம்.

**start :** தொடக்கம்; தொடங்கு; விண்டோஸ் இயக்க முறையில் பணிப்பட்டையில் (Taskbar) உள்ள பொத்தான் இதிலிருந்து தான் பணிகளைத் தொடங்க வேண்டும்.

**starting cluster :** தொடக்கத் தொகுதி : ஒரு வட்டில் ஒரு கோப்பு எதிலிருந்து பதிவு செய்யப்படுகிறதோ அந்தத் தொகுதி. கோப்பின் விவரத் தொகுதிப் பதிவு, தொடக்கத் தொகுதியைக் குறிக்கிறது. கோப்பு ஒதுக்கீட்டு அட்ட வணை, கோப்பினால் பின்னர் பயன்படுத்தப்படும் தொகுதி களைக் கூர்ந்து கண்காணித்து வருகிறது.

**starting point :** தொடக்கப் புள்ளி : பயனாளர்கள் வலைத் தளங்களைப் பார்வையிட உதவு வதற்கென வடிவமைக்கப்பட்ட ஒரு வைய விரிவலை ஆவணம். பெரும்பாலும், தேடுபொறி போன்ற கருவிகளையும், தேர்ந் தெடுக்கப்பட்ட வலைத் தளங் களுக்கான மீத்தொடுப்பு களையும் இந்த ஆவணம் கொண்டிருக்கும்.

**start menu :** தொடங்கு பட்டி.

**start/stop transmission :** தொடக்க/நிறுத்த அனுப்பீடு : கால இசைவற்ற அனுப்பீடு என்பதும் இதுவும் ஒன்றே.

**startup :** ஆரம்பித்தல் ; தொடங் கல் : சரியான ஆரம்ப நிலை களில் கணினி அமைவுச் சாத னங்களைத் துவங்கி பொருத்த மான மின் சக்தியை ஏற்றுதல்.

**startup application :** தொடக்கப் பயன்பாடு : கணினி இயக்கப் பட்டவுடன் கணினியின் கட்டுப் பாடு முழுமையையும் எடுத்துக் கொள்ளும் பயன்பாடு.

**STARTUP.CMD :** ஸ்டார்ட்அப். சிஎம்டி : ஓஎஸ்/2 இயக்க முறைமையில் தொடக்க இயக்க வட்டில் மூலக்கோப்பகத்தில் சேமித்து வைக்கப்பட்டுள்ள சிறப்புப் பயன்தொகுதிக் கோப்பு. எம்எஸ்டாஸில் இதற்கு இணையான கோப்பு ஆட்டோ இஎக்ஸ்இசி.பேட்

**startup disk :** ஆரம்பிக்கும் வட்டு : கணினி அமைப்பைத் துவக்குவதற்கு வேண்டிய தகவலைக் கொண்டுள்ள வட்டு (diskette).

**startup ROM : தொடக்க ரோம் :** கணினியை இயக்கியவுடன் ரோம் (ROM-Read Only Memory) நினைவகத்தில் பதியப்பட்டுள்ள தொடக்க இயக்க நிரல்கள் செயல்படுத்தப்படுகின்றன. கணினி தன்னைத் தானே பரிசோதனை செய்து கொள்ளவும், விசைப்பலகை, வட்டு இயக்ககங்கள் போன்ற சாதனங்களைச் சரிபார்க்கவும் ரோமில் பதியப்பட்டுள்ள நிரல் கூறுகள் உதவுகின்றன. இறுதியில் இயக்க முறைமையை நினைவகத்தில் ஏற்றும் நிரலை இயக்கும் தூண்டு நிரல் செயல்படுத்தப்படுகிறது.

**startup routine : தொடக்க வாலாயம் :** கணினியின் பயன்பாடு ஏற்றப்படும்போது நிறைவேற்றப்படும் வாலாயம். இணைவுடைய மென்பொருளைச் சுற்றுச்சூழலுக்குப் பழக்கப்படுத்துவதற்காக இது பயன்படுத்தப்படுகிறது.

**startup screen : தொடக்கத் திரை :** ஒரு நிரல் இயக்கப்பட்டவுடன் முதன்முதலாகத் தோன்றும் உரை அல்லது வரைகலைக் காட்சித்திரை. தொடக்கத் திரையில் பெரும்பாலும் மென்பொருளின் பதிப்பு, நிறுவன வணிகச் சின்னம் போன்ற தகவல்கள் இடம்பெறும்.

**stat : ஸ்டாட் :** Statistical or Photostat என்பதன் குறும்பெயர்.

**state : நிலை :** இரும எண்களைக் குறிப்பிடப் பயன்படும் இருநிலைச் சாதனங்களின் நிலை, சாதனங்கள் பொதுவாக இரண்டு நிலைகளில் மட்டும் இருக்க முடியும். ஒன்று இயங்கு அல்லது நிறுத்து.

**stateful : நிலைமைக் கண்காணி :** ஒரு கணினி அல்லது செயலாக்கம் தான் பங்குபெறும் ஒரு நடவடிக்கையினுடைய நிலைமையின் அனைத்து விவரங்களையும் நுணுக்கமாகக் கண்காணிப்பது. (எ-டு) செய்திகளைக் கையாளுகையில் அவற்றின் உள்ளடக்கத்தையும் கணக்கில் எடுத்துக்கொள்வது.

**stateless : கண்காணிக்காமல்; நிலை கருதாமல் :** ஒரு கணினி அல்லது செயலாக்கம் ஒரு நடவடிக்கையினுடைய நிலைமையின் அனைத்து விவரங்களையும் கண்காணிக்காமலேயே பங்குபெறுவது. (எ-டு): செய்திகளைக் கையாளும்போது அவற்றின் மூலம் (source), சேரிடம் மட்டுமே கணக்கில் எடுத்துக் கொள்வது. உள்ளடக்கத்தை விட்டுவிடுவது.

**statement : கட்டளை; கூற்று :** ஒரு நிரலாக்க மொழியில் நிறை

வேற்றப்படக்கூடிய மிகச்ச சிறிய சொல்தொடர். ஆணை என்றும் அறியப்படும்.

statement, arithemetic : கணக் கீட்டுக் கூற்று.

statement, control : கட்டுப் பாட்டுக் கூற்று.

statement label : சிட்டைக் கூற்று; அறிக்கை அடையாளம் : மூலமொழி நிரல் தொடரில் உள்ள சொற்றொடரின் வரி எண்.

state- of- the- art : கலையின் நிலை : மிக அண்மைய தரவுத் தொழில் நுட்பம் தொடர்பான புதிய தொழில் நுட்பங்களை உள்ளடக்கியதென்பதைக் குறிக் கும் மரபுத் தொடர்.

.state.us : ஸ்டேட்.யுஎஸ் : ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டு மாநில அரசைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

static : நிலையான ; மாறாத : நகராத அல்லது முன்னேறாத, நிலைத்த, ஓய்வில் உள்ள.

static allocation : நிலைத்த ஒதுக்கீடு : ஒருமுறை நடந்தேறும் நினைவக ஒதுக்கீடு. பெரும் பாலும் நிரல் தொடங்கும்போது செய்யப்படும். நிரல் செயல் பட்டு முடியும்வரை ஒதுக்கப் பட்ட நினைவகம் விடுவிக்கப் படாமலே கட்டுண்டிருக்கும்.

static analysis : நிலை ஆய்வு ; நிலை பகுப்பாய்வு : செயல் படுத்தாமலேயே ஒரு நிரல் தொடரை ஆராய்தல்.

static binding : நிலைத்த பிணைப்பு : நிரலை மொழி மாற்றும்போது (compiling) அல்லது தொடுப்புறுத்தும் போது (linkage) நிகழ்வது. நிரலிலுள்ள குறியீட்டு முகவரிகளை சேமிப் பிடஞ் சார்ந்த முகவரிகளாய் மாற்றியமைத்தல்.

static column memory : நிலைப் பத்தி நினைவகம் : நினைவகத் துண்மிகளை அணுகுவதற்கு மின்னணுத் துடிப்பு குறைவாகத் தேவைப்படும் ஒருவகைப் பக்கமுறை நினைவகம்.

static dump : நிலை திணிப்பு : எந்திர ஓட்டத்தில் ஒரு குறிப் பிட்ட நேரத்தில்-பெரும்பாலும் ஓட்டம் முடியும்போது- செய்யப் படும் சேமிப்பு திணிப்பு.

static electricity : நிலை மின் விசை : குறைந்த ஈரப்பதச் சூழல்களில் வேண்டுமென்றே மின்னேற்றம் செய்தல் அல்லது உராய்தல் காரணமாக உண்டா கும் நிலையான மின்னேற்றம்.

staticizing : பதிவக ஏற்றம் : கணினி சேமிப்பகத்திலிருந்து நிரல் பதிவேடுகளுக்கு நிரலை மாற்றி இயக்கப்படுவதற்குத் தயாராக வைத்திருத்தல்.

static memory : மாறா நிலை நினைவகம் : மின்சாரம் கிடைக்கும்வரை நிரலிடப்பட்ட நிலையிலேயே இருக்கும் நினைவகம். அதைப் புதுப்பிக்க வேண்டியதில்லை. அதற்கு ஒரு கடிகாரமும் தேவையில்லை.

static object : நிலை பொருள்; மாறாப் பொருள்.

static RAM : நிலை ரேம் : இயங்கும் ரேமில் (RAM) இருப்பது போல ஒரு நொடிக்குப் பல தடவைகள் புதுப்பிக்கப்பட வேண்டிய தேவையில்லாத நினைவகம். கணினியில் மின் சக்தி இருக்கும்வரை அதன் உள்ளடக்கங்களை இழக்காது. நிலை நினைவக இருப்பிடத்திற்கு கணினி ஒரு மதிப்பை அளித்துவிட்டால், அங்கேயே அது இருக்கும்.

static refresh : நிலை புதுப்பி : மையச் செயலாக்கக் கணினியில் அல்லாமல் தொலைதூர அறிவார்ந்த முகப்பில் தரவுகளைச் செயலாக்கும் முறை. தரவுகளை வேகமாகத் தொகுக்க அனுமதிக்கிறது. ஏனெனில், புரவலர் கணினிக்கும் தொலைதூர முகப்புக்கும் இடையில் தரவுகளை அனுப்பிப் பெற வேண்டிய தேவையில்லை.

static storage : நிலை இருப்பகம்; நிலை சேமிப்பகம் ; நிலை தேக்ககம் : தொடர்ந்து புதுப்பிக்கும் சுழற்சி தேவைப்படாத குறிப்பிட்ட வகையான அரைக்கடத்தி. ஒரு மின்னணு பொத்தானின் நிலையை மாற்றுவதன் மூலம் தரவுகளை வைத்திருக்க முடிகிறது. ஒருங்கிணைந்த மின்சுற்றுகளில் உள்ள மின்மப் பெருக்கி (flip-flop) ஏற்ற-இறக்கமுடையதாகும்.

station : நிலையம் : தரவு செய்தித் தொடர்பு அமைப்பில் உள்ளீடு/வெளியீடுகளில் ஒன்று. பணி நிலையக் கணினி (work-station)-க்கு இணைச் சொல்.

station, data : தரவு நிலையம்.

stationery : நிலையாவணம் : ஒருவகை ஆவணம். பயனாளர் இதனைத் திறக்கும்போது ஒரு நகல் எடுக்கப்பட்டு அந்த நகல் ஆவணம் திறக்கப்படும். பயனாளர் அதில் மாறுதல்கள் செய்து வேறுபெயரில் சேமித்துக் கொள்ளலாம். மூல ஆவணம் எப்போதும் மாறாமல் அப்படியே இருக்கும். நிலையாவணங்களை ஆவண முன்படி

வங்களாகவும் அச்சுவார்ப்புருக் களாகவும் பயன்படுத்தலாம்.

**stationary, continuous :** தொடர் தாள்.

**station, work :** பணி நிலையம்.

**statistical multiplexer :** புள்ளியியல் ஒன்றுசேர்ப்பி : தகவல் தொடர்புத் தடங்கள் ஒன்று சேர்ப்புச் சாதனம். இடையகச் சேமிப்புகளைப் பயன் படுத்தி நேரப்பிரிவு ஒன்று சேர்ப்பில் (Time Division Multiplexing) சில அறிவுநுட்பத் தகவல்களைச் சேர்த்து விடும். அதன்பின் ஒரு நுண்செயலி அனுப்புகின்ற தாரைகளை (streams) ஒன்று சேர்த்து ஒற்றைச் சமிக்கையாக மாற்றும். இயங்குநிலையில் இருக்கின்ற அலைக்கற்றையில் இத்தகவலுக்கென ஒதுக்கீடு செய்யும்.

**statistics :** புள்ளியியல் : தகவல்கள் நிகழ்வு, பகிர்மானம், பரப்பீடு எண்ணளவுகளில் அல்லது வேறுவிதமாக அளவிடும் அறிவியல். புள்ளியியல் பகுப்பாய்வுகளுக்குக் கணினிகள் பெருமளவில் பயன்படுத்தப்படுகின்றன. பல மென்பொருள் பயன்பாடுகள் குறிப்பாகப் புள்ளியியலுக்காகவே வடிவமைக்கப்பட்டுள்ளன. SPSS மினிடேப், சிஸ்டாட் போன்றவை இதற்கு எடுத்துக்காட்டு. பெரும்பாலான விரிதாள் தொகுதிகள் (20/20, லோட்டஸ் 1-2-3, மைக்ரோசாஃப்ட் எக்செல், போர்லாண்ட் குவாட்ரோ போன்றவை) பயனுள்ள புள்ளியியல் திறம்பாடுகள் கொண்டவை.

**status :** தகுதி ; தகுநிலை : ஒரு கணினி அமைப்பின் பாகத்தின் தற்போதைய நிலை.

**status bar :** நிலைமைப் பட்டை : மைக்ரோசாஃப்ட் விண்டோஸில் பெரும்பாலான பயன்பாட்டு நிரல்களில் சாளரத்தின் அடிப்பகுதியில் ஒரு பட்டை தென்படும். நிரலின் தற்போதைய நிலையைக் குறிக்கும் செய்தி அதில் தெரிந்து கொண்டிருக்கும். சில நிரல்களில் தற்போது தேர்வு செய்துள்ள பட்டிக் கட்டளைக்கான விளக்கத்தை நிலைமைப் பட்டையில் காணலாம்.

**status byte :** தகுநிலை எண்மி : ஒரு சாதனத்தின் நடப்புத் தகுநிலையை விவரிக்கும் துணுக்குத் தோரணியைக் கொண்டிருக்கும் நினைவக அமைவிடம்.

**status codes :** நிலைமைக் குறிமுறைகள் : ஒரு நடவடிக்கையின் முயற்சி வெற்றியா தோல்வியா என்பதைச் சுட்டும்,

இலக்கங்கள் அல்லது பிற எழுத்துகள் சேர்ந்த சரம். பழைய கணினி நிரல்களே குறி முறைகளைப் பயன்படுத்தின. இப்போதைய மென்பொருள் கள் பலவும் சொற்கள், படங்கள் வழியாக நிலைமையைச் சுட்டு கின்றன. யூனிக்ஸில் செயல் தளக் (shell) கணக்கு வைத்திருப் பவர்கள், வலையில், எஃப் டீபியில் பணிபுரியும்போது நிலைமைக் குறிமுறைகளைக் கண்டிருக்கலாம்.

status line : இணைப்பு நிலை : நடப்பு நடவடிக்கையினைக் காட்டும் திரையில் காட்டப் படும் தரவுக் கோடு.

status message : தகுநிலைச் செய்தி: வன்பொருள் சாதனங் களினால் அவற்றின் நடப்புச் செயற்பாட்டுச் சூழலில் அளிக்கப்படும் பொதுவாகக் கண்ணால் பார்க்கக்கூடிய ஒரு செய்தி. ஒரு அச்சுப்பொறியில் இத்தகைய செய்திகள், "ஆயத் தம்", "காகிதத்திற்கு வெளியே", "நேரடியாக" போன்றவற்றைக் கொண்டிருக்கும்.

status register : தகுநிலைப் பதிவகம் : ஒரு சாதனத்தின் நடப்புத் தகுநிலையை விவரிக் கிற ஒரு துண்மித் தோரணியைக் கொண்டிருக்கும் ஓர் ஒருங் கிணைந்த மின்சுற்று வழி.

status report : தகுநிலை அறிக்கை; தகுதி அறிக்கை : திட்டச் செலவுகள் மற்றும் திட்டத்திற்கு ஆனநேரம் ஆகிய வற்றை ஆராய்வது, மாறு பாடுகளைக் கணக்கிட்டு காட்டப்படும்.

step : படி : 1. கணினியை ஒரு நிரலை செய்ய வைப்பது. 2. கணினி வாலாயத்தில் ஒரு நிரல்.

step-by-step telephone exchange : படிப்படித் தொலைபேசி இணைப் பகம் : பொதுத் தொலைபேசி இணைப்பகங்களுக்காக முதன் முதலில் தயாரிக்கப்பட்ட தானி யங்கிப் பொறியமைவு. இதில், ஒரு குறிப்பிட்ட இணைப் பினைத் தேர்ந்தெடுப்பது பத்துக்கு ஒன்று என்ற தேர்வு முறைப்படி நடைபெறுகிறது. 1,00,000 இணைப்புகளுக்கு அனுகுதல் ஏற்படுத்துவதற்கு, இறுதித் தேர்வுக் கருவிக்கு முன்னதாக ஒரு தேர்வுக் கருவிக் குழுமநிலை அமைக்கப் படுகிறது.

step counter : படி எண்ணி.

step-frame : படிநிலைச் சட்டம் : ஓர் ஒளிக்காட்சிப் படிமத்தை ஒரு நேரத்தில் ஒரு சட்டம்வீதம் பதிவு செய்யும் செயல்முறை. நிகழ் நேரத்தில் தொடர்நிலை ஒளிக்காட்சிப் படிமங்களைப்

பதிவு செய்ய மிகமெதுவாகச் செயல்படும் கணினிகள் இந்தச் செயல்முறையைப் பின்பற்று கின்றன.

**stepped index multimode :** படிநிலைக் குறியீட்டுப் பன்முக முறை : ஒரு படி நிலைக் குறியீட்டுப் பன்முக முறை ஒளியியல் இழையின் அடிப்படைக் கட்டமைவினையும், அதன் கதிர்க் கோட்டக் குறியீட்டுத் தோற்றத்தினையும் படத்தில் காணலாம். இழையின் கதிர்க் கோட்டக் குறியீட்டில் ஏற்படும் திடீர் மாற்றம் உள் மையப் பகுதி எல்லையில் உண்டாகிறது. 2r1அளவு உள் மைய விட்டம் பொதுவாக 50-60 um அளவுடையது; சிலசமயம் இது 200um அளவு கொண்டதாக இருக்கும். 2r2 உள் மைய விட்டம், இயன்றபோதெல்லாம் 125 um அளவில் தரப்படுத்தப்பட்டுள்ளது.

**stepped motor :** ஏற்றிய மோட்டார் : துடிப்பு வருகின்ற குறிப்பிட்ட நேரத்தில் எல்லாம் சுழலுகின்ற எந்திர சாதனம். தட்டு மற்றும் இலக்கணமுறை வரைவிகளில் அதிகம் பயன் படுத்தப்படுவது.

**stepper :** காலடி : மரபு நிலை வட்டு இயக்கி என்பதன் ஒரு மாற்றுப் பெயர். படிப்பு/எழுது தலைப்பினை ஒவ்வொரு தடத்தின்மீது மறைமுகமான காலடிகள் மூலம் நகர்த்துவதன் வாயிலாக ஒவ்வொரு தரவு சேமிப்புத் தடத்துக்கும் இது அணுகும் வாய்ப்பை ஏற்படுத்துகிறது.

**stepper motor :** காலடி இயக்கு பொறி : குறிப்பிட்ட சிறிய கால அளவுகளில் சுழல்கிற இயக்கு பொறி. வட்டு இயக்கியில் அணுகுகரம் நகர்வதைக் கட்டுப் படுத்தப் பயன்படுத்தப்படுகிறது.

**step-rate time :** நகர்-வீத நேரம் : ஒரு வட்டின் உந்துமுனை ஒரு தடத்திலிருந்து அடுத்த தடத்திற்கு நகர்ந்து செல்ல எடுத்துக் கொள்ளும் நேரம்.

**stereolithography :** திண்ம வார்ப்பு நுட்பம்.

**stereophonic :** பலதிசை ஒலி : இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட வழிகளைப் பயன் படுத்தி ஒலியை உண்டாக்குதல். இது, 'ஒரு திசை ஒலி' என்பதிலிருந்து வேறுபட்டது.

**stereo viewing :** பலதிசைக் காட்சி; இருதடக் காட்சி.

**Stibitz, George :** ஜார்ஜ் ஸ்டீபிட்ஸ் : தன்னுடைய பகுப்பு எந்திரத்தை வடிவமைக்கும் போது மனித கணினியின்

பணிகளாக எந்திரம் செய்ய வேண்டியவை நான்கு பணிகள் என்று சார்லஸ் பாபேஜ் கூறினார். அவை : கணக்கிடும் அலகு, நினைவகம், கணிக்கப்படும் வரிசையில் தானியங்கி வாய்ப்பு மற்றும் உள்ளீடு-வெளியீடு. 1946இல் பெல் தொலைபேசி ஆய்வகத்தில் ஆராய்ச்சிக் கணித அறிஞராக இருந்த ஜார்ஜ் ஸ்டீபிட்ஸ் என்பவர் பாபேஜின் எண்ணங்களை உள்ளடக்கிய பல தொடர் கணிப்பிகளை வடிவமைத்தார்.

stick model : குச்சி முன் மாதிரி : கோடுகள் அல்லது வெக்டர் (நெறியம்)களால் ஆன படம். சான்றாக, உயிர் மருத்துவப் பயன்பாடுகளின் ஒரு நபர் அல்லது விலங்கின் உறுப்புகளைக் கோடுகளாக மாற்றி அதன் இயக்கத்தை ஒளி வடிவில் கவனித்து வரைபடமாக அமைத்து ஆராய்தல்.

Sticky Keys : நிலைத்த விசைகள் : தொடர்ந்து பல விசைகளை ஒரு சேர அழுத்துவதைத் தவிர்க்க, நகர்வு (shift), கட்டுப்பாடு (control), மாற்று (Alt) விசைகளை அழுத்தியபின் அப்படியே நிலைத்திருக்கச் செய்யும்முறை. பயனாளர் ஒரு விசையை அழுத்திப் பிடித்தவாறே இன்னொரு விசையை அழுத்த வேண்டியிருப்பதை இந்த மாற்று விசைகள் தவிர்க்கின்றன. முதலில் மெக்கின்டோஷில் அறிமுகப்படுத்தப்பட்டுப் பிறகு டாஸ், விண்டோஸிலும் இவ்வசதி தரப்பட்டுள்ளது.

stochastic : குறிப்பிலா; ஏதேச்சையான : குறிப்பின்றி நிகழும் நிகழ்வுகளை அடிப்படையாகக் கொண்டது. எடுத்துக்காட்டாக, குறிப்பிலா மாதிரியம் என்பது, ஏதேச்சையாக நிகழும் நிகழ்வுகளையும், திட்டமிட்ட நிகழ்வுகளையும் கணக்கில் எடுத்துக் கொள்கிறது.

stochastic procedures : வாய்ப்பியல் நடைமுறைகள் : அல்காரிதமிக் நடைமுறைகளுக்குப் பதிலாக செய்து பார்த்து பிழை நீக்கும் முறை.

stochastic process : வாய்ப்பியல் செயல்முறை : நிகழ்வுக் கொள்கையால் மட்டுமின்றி வேறெந்த வகையிலும் நுல்லியமாக விளக்க முடியாத காலம் அல்லது இடத்தினால் உருவாக்கப்பட்ட நிகழ்ச்சிகளைக் குறிக்கும் செயல்முறை.

stock : இருப்பு.

stock-screening package : ஏராளமான பொருளாதார தகவல்களை அலசி ஒரு குறிப்பிட்ட நபரின் விருப்பத்திற்கேற்ப

நிறுவனங்களின் பங்குகளை மட்டும் அடையாளம் காட்டும் நிரல் தொடர்.

**stop** : நிறுத்து.

**stop bit** : நிறுத்தும் துண்மி : *1.* ஒரு தரவுச் சொல்லின் இறுதியை அடையாளம் கண்டு தரவுச் சொற்களின் இடையில் உள்ள இடைவெளியை விளக்கும் துண்மி அல்லது துண்மிகளின் தொகுதி. *2.* ஒரே நேரத்தில் அல்லாத தொடர் அனுப்புதலின் இறுதியைக் குறிப்பிடும் துண்மி.

**stop button** : நிறுத்தும் குமிழ்; நிறுத்து பொத்தான்.

**stop code** : நிறுத்துக் குறியீடு : குறிப்பிட்ட கட்டுப்பாட்டு எழுத்து.

**stop line** : நிறுத்தக் கோடு : சுட்டி (cursor) உருவம் நிறுத்தும் தேடும் கோடு.

**STOP statement** : நிறுத்தக் கட்டளை.

**storage** : சேமிப்பகம் ; தேக்ககம்; சேமிப்புக் கொள்திறன் : தகவல்களை ஏற்றுக் கொண்டு தக்க வைத்து நினைவகம் விரும்பும் பின்னொரு நேரத்தில் வழங்கும் ஒரு சாதனம் அல்லது ஊடகத்தைக் குறிப்பிடுவது.

**storage allocation** : சேமிப்பக ஒதுக்கீடு; தேக்கக ஒதுக்கீடு : கணினி சேமிப்பகத்தின் குறிப்பிட்ட பகுதிகளுக்கு தகவல்களின் தொகுப்பு மற்றும் குறிப் பிட்ட நிரல் தொடர் பகுதிகளை ஒதுக்கீடு செய்தல். நினைவக ஒதுக்கீடு (Memory allocation) என்றும் சில சமயம் அழைக்கப்படுகிறது.

**storage area** : சேமிப்பகப் பரப்பு; தேக்ககப் பரப்பு.

**storage area, common** : பொதுச் சேமிப்பகப் பரப்பு.

**storage block** : சேமிப்புத் தொகுதி; தேக்ககப் பகுதி : உள் சேமிப்பகத்தின் தொடர்ச்சிப் பகுதி.

**storage, buffer** : இடையகச் சேமிப்பு.

**storage, bulk** : மொத்தச் சேமிப்பு.

**storage capacity** : சேமிப்புத் திறன்; தேக்கக் கொள்ளளவு : ஒரு சேமிப்பக சாதனம் எத்தனை தரவுகளைச் சேமிக்கும் திறனுடையது என்பது பற்றியது. கணினி துண்மிகளாக -கிலோ துண்மி, மெகா துண்மி, பெரும்பாலும் சொல்லப்படுகிறது. அல்லது 'சொல்' என்பார்கள்.

**storage circuit** : சேமிப்பக மின்சுற்று; தேக்கச் சுற்று : *0* அல்லது *1* ஆகிய இரண்டு நிலைகளில் ஒன்றாக பொத்தானிடப்படும் மின்சுற்று.

**storage, core** : உள்ளகச் சேமிப்பு.

**storage, data** : தரவு சேமிப்பகம்.

**storage density** : சேமிப்பக அடர்த்தி.

**storage device** : சேமிப்பகச் சாதன; சேமிப்புச் சாதனம் : கணினி அமைப்புக்குள் தரவு களை சேமிக்கப் பயன்படும் சாதனம். ஒருங்கிணைந்த மின் சுற்று சேமிப்பகம், காந்த வட்டு அலகு, காந்த நாடா அலகு, காந்த உருளை அலகு, நெகிழ் வட்டு மற்றும் நாடாப்பெட்டி போன்றவை இவ்வகையில் சேரும்.

**storage, disk** : வட்டுச் சேமிப் பகம்.

**storage dump** : சேமிப்பகத் திணிப்பு: ஒரு கணினியின் உள்ளக சேமிப்பகத்தின் உள் ளடக்கங்களில் பகுதி அல்லது முழு அச்சு வெளியீடு. பிழை களைக் கண்டறியப் பயன்படு கிறது. நினைவகக் கொட்டல் (Memory Dump) என்றும் அழைக்கப்படுகிறது.

**storage, fast-access** : விரை வணுகு சேமிப்பகம்.

**storage, internal** : அகச்சேமிப்பு.

**storage key** : சேமிப்பக விசை; தேக்ககச் சாவி : சேமிப்பகக் கட்டம் அல்லது தொகுதி களுடன் தொடர்புள்ள காட்டி. பொருத்தமான பாதுகாப்பு விசை அல்லது கட்டங்களைப் பயன்படுத்தினால் மட்டுமே பணிகள் செய்யமுடியும் என்பதே நியதி.

**storage location** : சேமிப்பக இருப்பிடம்; தேக்கக அமை விடம் : எழுத்து துண்மி அல்லது சொல் சேமிக்கப்படும் சேமிப் பகத்தின் இடம்.

**storage map** : சேமிப்பக வரை படம் : கணினி அமைப்புகளின் சேமிப்பக அலகுகளில் நிரல் தொடர்களும் தரவுகளும் எங்கே சேமிக்கப்படுகின்றன என்பதைக் காட்டும் வரைபடம்.

**storage media** : சேமிப்பக ஊடகம் : வட்டுகள், நாடாக்கள் மற்றும் குமிழ் நினைவு பெட்டி களைக் குறிக்கிறது.

**storage pool** : சேமிப்பகத் தொகுப்பு: வட்டு இயக்கிகள் போன்ற சேமிப்பகச் சாதனங் களைக் கணினி அமைப்புகளில் பொதுவாக வட்டுத் தொகுப்பு என்று அழைக்கப்படுகிறது.

**storage protection** : சேமிப்பகப் பாதுகாப்பு : சேமிப்பகச் சாதனங் களில் சில பகுதிகள் அல்லது முழுவதிலும் இருந்து அனுமதி பெறாமல் எழுதவோ அல்லது படிக்கவோ செய்வதற்கு

எதிராக பாதுகாப்பு அளிப்பது. இயக்க அமைப்புடன் இணைந்து வன்பொருள் வசதிகளால் தானாகவே செயல்படுத்தப்படு கிறது. நினைவகப் பாதுகாப்பு (Memory Protection) என்றும் அழைக்கப்படுகிறது.

**storage, random access :** குறிப் பிலா அணுகு சேமிப்பகம்.

**storage, read-only :** படிப்புச் சேமிப்பகம்.

**storage register :** சேமிப்பகப் பதிவகம்.

**storage, secondary :** துணை நிலைச் சேமிப்பகம்.

**storage, temporary :** தற்காலிகச் சேமிப்பகம்.

**storage, two-dimentional :** இரு பரிமாணச் சேமிப்பகம்.

**storage tube :** சேமிப்பகக் குழாய் : தகவல் அறிமுகப்படுத்தப் பட்டு பின்னர் வேறொரு சமயத் தில் வெளியே எடுக்கப்படு கின்ற எலெக்ட்ரான் குழாய். முதல் தலைமுறைக் கணினி களில் பயன்படுத்தப்பட்டது.

**storage unit :** சேமிப்பக அலகு.

**storage, virtual :** மெய்நிகர் சேமிப்பகம்.

**storage, working :** செயல்படு சேமிப்பகம்.

**storage, zero access :** சுழி அணுகு சேமிப்பகம்.

**store :** இருப்பகம்; சேமிப்பகம்; கிடங்கு; தேக்ககம் ; சேமிப்புப் பகுதி : 1. சேமிப்பகத்தின் பெயர். 2. சேமிப்பகத்தில் வைத்தல்.

**store and forward :** சேமித்து செலுத்து; இருத்தி அனுப்பு; தேக்கித் திருப்பல் : தகவல் தொடர்புப் பிணையங்களில் பயன்படுத்தப்படும் செய்தி யனுப்பு நுட்பம். செய்தியானது தற்காலிகமாக ஒரு திரட்டு நிலையத்தில் இருத்தி வைக்கப் பட்டுப் பிறகு உரிய இடத்துக்கு அனுப்பிவைக்கப்படும்.

**store and forward operating satellites :** சேமித்துச் செலுத்து செயற்கைக் கோள்.

**store and forward switching message :** இருத்தி அனுப்பும் இணைப்புறு செய்தி.

**store, associative :** சார்புநிலைச் சேமிப்பகம்.

**store, auxcillary :** கூடுதல் சேமிப்பு.

**store, backing :** காப்புச் சேமிப்பு.

**store, bulk :** மொத்தச் சேமிப்பு.

**store, core :** உள்ளகச் சேமிப்பு.

**store device, direct access :** நேரணுகு சேமிப்புச் சாதனம்.

**stored programme computer :** நிரல் தொடர் சேமிக்கப்பட்ட கணினி : உள்ளார்ந்த சேமிப்பு நிரல்களின் தொடர்களைச் செயல்படுத்தும் திறனுள்ள கணினி. நிரல்களில் கூறியுள்ள படி தரவுகளை மாற்றும் திறனுள்ளவை.

**stored programme concept :** சேமிக்கப்பட்ட நிரல்தொடர் கோட்பாடு; சேமிப்புச் செயல் முறைக்கோட்பாடு : கணினியின் உள்சேமிப்பகத்திற்குள் நிரல் களும், தகவல் மதிப்புகளும் சேமிக்க வருவது பற்றிய நிரல் களைத் தரும் கணினி. நிரல் களை விரைவாக அணுகி விரை வாக மாற்றமுடியும். 1945இல் ஜான்வோன் நியூமென் இக் கோட்பாட்டை அறிமுகப்படுத் தினார். இலக்கவியல் கணினி யின் முக்கிய தன்மை இதுவே.

**stored programme control :** சேமிக்கப்பட்ட நிரல்தொடர் கட்டுப்பாடு : வோன் நியூமென் என்ற கணினி விற்பன்னரால் உருவாக்கப்பட்ட கணினிக் கொள்கை. 1940களில் இருந்த கணினிகள் குறிப்பிட்ட வேலைக் காக உருவாக்கப்பட்டவை என்பதால் அவைகள் மாற்ற முடியாதவை என்பதை வோன் நியூமென் உணர்ந்தார். மாற்றக் கூடிய நிரல்களை சேமிக்கக் கூடியவைகளாக கணினியால் முடியும் என்பதால் பல்வகை யான பணிகளைச் செய்ய கணினியால் முடியும் என்று அவர் விளக்கினார். கணினி மென்பொருளின் தோற்றம் இதுதான்.

**stored programme machine :** பதிவான நிரல் தொடர் எந்திரம். சேமிப்பு நிரல் தொடர் எந்திரம்.

**store, magnetic:** காந்தச் சேமிப்பு.

**STP :** எஸ்டீபீ : உறையிட்ட முறுக்கிணை என்று பொருள் படும் Shielded Twisted Pair என்ற தொடரின் தலைப்பெழுத் துக் குறும்பெயர். சுருள் மற்றும் செப்பு இழைகளால் பின்னப் பட்ட உறையுள்ள வடத்தினுள் ஒன்று அல்லது மேற்பட்ட முறுக்கிணைக் கம்பிகள் இருக் கும். கம்பிகள் முறுக்கப்பட்டி ருப்பதால் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு மின் இடையூறு இருக்காது. வெளியிலிருந்து வரும் இடையூறுகளிலிருந்து பாதுகாக்க பாதுகாப்பு உறைகள் பயன்படுகின்றன. எனவே நீண்ட தொலைவு, அதிவேக தரவு பரிமாற்றத்துக்கு இவ் வகை வடங்கள் உகந்தவை.

**straight line code :** நேர்வரிக் குறியீடு : ஒரு நிரல் தொடர் வரிசையை ஒவ்வொரு தடவை

யும் திரும்ப வரும்போது தெளி வாக எழுதி திரும்பச் செய்யச் செய்தல். நேர்வரிக் குறியீடு அமைத்தால் குறைந்த இயக்க நேரமும் அதிக சேமிப்பக இடமும் (இதற்குச் சமமான லூப் குறியீடு அமைப்பதைவிட) கிடைக்கும். தேவைப்படும் இடமும் ஒரு மாறிலியைத் திரும்பத்திரும்ப பல தடவை கள் குறியீடு அமைப்பதுமே இதனைச் செய்வதில் உள்ள தடைகள்.

**strategic information systems : உத்தி மிக்க தகவல் அமைப்புகள் :** சந்தையால் மற்ற போட்டியாளர் களைவிட ஒரு நிறுவனத்திற்கு உத்தி மூலமான அனுகூலத்தை அளிக்கும் போட்டிப் பொருட் களையும் சேவைகளையும் அளிக்கும் தகவல் அமைப்புகள். வணிக முன்னோடித் தன்மை செயல்பாட்டுத்திறன் அதிகரிப்பு மற்றும் ஒரு நிறுவனத்தின் உத்திமிக்க தகவல் மூலாதாரங் களைப் பயன்படுத்துவதையும் இது குறிப்பிடுகிறது.

**stream : தாரை; பாயல்.**

**stream cipher : தாரை மறை யெழுத்து :** மாறா நீளமுள்ள திறவியைப் பயன்படுத்தி வரம் பிலா நீளமுள்ள தரவு தொடரை மறையாக்கம் செய்யும் வழி முறை.

**streamer : தொடரோட்டம் :** ஒவ் வொரு தனித்தனி தரவு தொகுதி களுக்கும் இடையில் நின்று துவங்குவதற்குப் பதிலாக தொடர்ச்சியாக அதிகவேகத் தில் இயங்கும் நாடாப் பெட்டி.

**streaming : தாரையாக்கம் :** காந்த நாடாச் சேமிப்புச் சாதனங் களில், நாடாவின் நகர்வைக் கட்டுப்படுத்தப் பயன்படுத்தப் படும் ஒரு குறைந்த விலை நுட்பம். நாடா இடையகங்கள் நீக்கப்பட்டு நகர்வு கட்டுப் படுத்தப்படுகிறது. இதன் காரணமாக நாடா இயங்கத் தொடங்குவதும் நிற்பதும் மெதுவாக நடைபெறுகிறது. எனினும் இதனால் மிகுந்த நம்பகத் தன்மையான சேமிப் பும், தரவு பெறுகையும் இயலக் கூடியதாகியுள்ளது. ஏதேனும் ஒரு பயன்பாட்டுக்கு அல்லது கணினிக்கு தொடர்ச்சியாக தரவுகளை வழங்க நேர்ந்தால் இம்முறை மிகவும் உகந்ததாகும்.

**streaming audio : தாரை யோட்டக் கேட்பொலி.**

**streaming tape drive : நாடா இயக்கி ஓட்டம் :** தொடர் நாடா இயக்கியைப்பிடித்துக் கொண் டிருக்கும் பெட்டி. நிலைத் தட்டு இயக்கிகளுக்கு மாற்று ஏற் பாடாகவே இது முக்கியமாகப் பயன்படுத்தப்படுகிறது.

**streaming video : தாரையோட்ட ஒளிக் காட்சி.**

**stream-oriented file : சரம் சார்ந்த கோப்பு :** தரவு கோப்பைவிட மேலும் திறந்தமுறையில் வடிவமைக்கக்கூடிய சொல் ஆவணம் அல்லது இலக்க முறை குரல்கோப்பு போன்ற கோப்பு. சொல் மற்றும் குரல் ஆகியவை தொடர்ச்சியான எழுத்துச் சரங்கள். ஆனால் தரவுத் தள பதிவேடுகள் நிலையான அல்லது ஓரளவு ஒழுங்கான படிவத்தில் திரும்பவரும் வடி வமைப்புகள்.

**street price : சில்லறை விற்பனை விலை :** ஒரு மென்பொருள் அல்லது வன்பொருள் தயாரிப்புக்கு நுகர்வோர் செலுத்தும் உண்மையான சில்லறை விற்பனை விலை. பெரும்பாலான வேளைகளில் பரிந்துரைக்கப்பட்ட சில்லறை விற்பனை விலையைவிடக் குறைவாகவே இருக்கும்.

**STRESS: ஸ்ட்ரெஸ் :** Structural Engineering System Solar என்பதன் சுருக்கம். கட்டுமானப் பொறியியல் சிக்கல்களை தீர்க்க உதவும் ஒரு சிக்கல் சார்ந்த மொழி.

**stress test : தகைவுப் பரிசோதனை; அழுத்தச் சோதனை :** ஒரு மென்பொருள் அல்லது வன்பொருள் அமைப்பின் செயல்பாட்டெல்லைகளை, உச்ச அளவுத் தரவுகள் அல்லது அதிகப்படியான வெப்ப நிலை போன்ற அதீத சூழ்நிலைகளில் பரிசோதனை செய்தல்.

**stress testing : அழுத்தம் சோதித்தல்; கிறுக்கச் சோதனை :** தரவுகளில் துல்லியக் கோளாறுகள் மற்றும் அசாதாரண தரவு தொகுதிகள் இருந்தாலும் கணினி அமைப்பு அல்லது நிரல் தொடர் தொடர்ந்து நம்பகமாக இயங்கும் என்பதை சோதனை இயக்கத்தின் மூலம் உறுதி செய்தல்.

**strike through : குறுக்குக் கோடிடல் :** தேர்ந்தெடுக்கப்பட்ட உரைப்பகுதி மீது ஒன்று அல்லது மேற்பட்ட கோடுகளைப் போடுதல். பொதுவாக ஒரு குறிப்பிட்ட பகுதி நீக்கப்பட்டதைக் குறிப்பதற்காக இவ்வாறு உரை வரிகளின் மீது குறுக்குக் கோடு போடப்படும்.

**strike out : வெட்டி அகற்றல்.**

**string : தொடர்சரம் ; சரம் :** ஒரு தனி தரவு தொகுதியாகக் கருதப்படும் துண்மிகள் அல்லது எழுத்துகளின் தொடர் வரிசை.

**string alphabetic : அகரமுதலிச் சரம்.**

**string arithmetic** : சரக் கணக்கீடு.

**string buffer** : சர இடையகம்.

**string, character** : எழுத்துச்சரம்.

**string constant**: சரமாறி எழுத் திலக்க மாறி.

**string constructor** : சரம் ஆக்கி.

**string data** : சரத் தரவு.

**string function** : எழுத்திலக்கச் சார்பு.

**string expression** : சரக் கோவை.

**string handling** : சரம் கையாளல் : எழுத்துச் சரங்களில் இயங்கக் கூடிய திறனுள்ள நிரல் தொடர் மொழி.

**string length** : சர நீளம் : ஒரு சரத்தில் உள்ள எழுத்துகளின் எண்ணிக்கை.

**string manipulation** : சரம் கையாளுதல் : எழுத்துச் சரங் களைக் கையாளும் தொழில் நுட்பம்.

**string, null** : வெற்றுச்சரம்.

**string processing languages** : சர செயலாக்க மொழிகள் : சர எழுத்துகளைச் செயலாக்க வடிவமைக்கப்பட்ட நிரல் தொடர் மொழிகள். சான்றாக கோமிட், ஸ்னோபால், ஆம்பிட் கன்வர்ட், ஆக்சில், பேனன் மற்றும் இடோல்.

**string variable** : சர மாறிலி; சர மாறியல் மதிப்புரு; எழுத் திலக்க மாறிலி : அகர வரிசை எண் ணெழுத்துச் சரங்களின் சரம்.

**stringy floppy** : சர நெகிழ்வட்டு : கணினி சேமிப்பகச் சாதனம். ஏடு (Wafer) எனப்படும் காந்த நாடாவைப் பிடித்துக் கொண் டிருப்பது. வழக்கமான நாடாப் பெட்டிகளைவிட ஏடு நாடாக் கள் மென்மையானதும் வேக மாக இயங்குவதுமாகும்.

**striping** : நீட்டுதல் : வேகத் தினை அதிகரிக்க தரவுகளில் இடை வெளிவிடுதல் அல்லது பன்முகப்படுத்தல்.

**strobe** : நேரச் சமிக்கை : விசைப் பலகை அல்லது அச்சுப்பொறி போன்ற உள்ளீட்டு/வெளி யீட்டுச் சாதன இடைமுகங் களின் வழியே, தரவு கடந்து செல்வதைத் தொடங்கி வைத்து ஒழுங்குபடுத்தும் நேரச் சமிக்கை.

**stroke** : அடி; தட்டல் : 1. விசையை அடித்தல். 2. கணினி வரைகலை அமைப்பில் அஸ்கி எழுத்துக் குறியீடுகளாக அல்லது வரைபடப் பொருளாக சேமிக்கப் படும் சொற்களாலான தரவு.

**stroke font** : கோட்டு எழுத்துரு : கோடுகளின் மூலம் உருவாக்கப் படும் எழுத்துரு. திண்ம வடி விலான வடிவங்களை நிரப்பிப்

பெறப்படும் எழுத்துருக்களுக்கு மாற்றானது.

**stroke weight :** அடிக்கும் எடை : அடிக்கப்பட்ட எழுத்தின் அடர்த்தி, ஒளி, ஊடகம், கருமை போன்றவைகளை அளப்பது. அச்செழுத்து வடிவமைப்பவர்கள் இச்சொல்லைப் பயன்படுத்துவார்கள்.

**stroke writer :** அடித்து எழுதுபவர் : தொடர் கோடுகளாக (வெக்டார்) திரையில் பொருள்களைப் பிரதிபலிக்கும் நெறிய (வெக்டார்) வரைகலை முகப்பு.

**strong typing :** ஆழ இன உணர்வு : நிரலாக்க மொழியிலுள்ள ஒரு பண்புக் கூறு. நிரல் செயல்படுத்தப்படும் போது ஒரு மாறிலியின் தரவினம் (Data type) மாற்றப்படுவதை அனுமதிக்காமை. அதுபோலவே, ஒரு செயல்கூறில் வரையறுக்கப்பட்டுள்ள அளபுருக்களும் அச்செயல் கூறினை அழைக்கும்போது தருகின்ற மதிப்புகளும் இனமொத்து இருக்க வேண்டும் என்பதைக் கட்டாயமாக்கும் பண்பு.

**structurad :** ஒழுங்கமைந்த.

**structural design :** கட்டுமான வடிவமைப்பு : செயலாக்கத்தின் கட்டுமான அளவை மற்றும் ஒட்டு மொத்த ஒருங்கமைவு.

**structure :** கட்டமைப்பு; ஒழுங்கமைவு : ஒரு பொருளின் பகுதிகளை வரிசைப்படுத்தல் அல்லது ஒழுங்குபடுத்துதல்; நிரல் தொடர்கள் ஒழுங்குபடுத்தப்படும் முறை.

**structure chart :** அமைப்பு வரைபடம்; கட்டமைப்பு வரைபடம் : ஒன்றுக்கொன்று தொடர்புடைய கட்டுப்பாடு அளவை நிரல் தொடர்கூறுகள் அல்லது நிறுவனம் ஆகியவற்றை ஆவணப்படுத்தக்கூடிய வடிவமைப்புக் கருவி. மேலிருந்து கீழிறங்கும் நிரல் தொடரமைப்பை வரைபடமுறையில் வழங்குவது.

**structured analysis :** வடிவமைக்கப்பட்ட ஆய்வு : யுவர்டன், டெமார்க்கோ, கேன் மற்றும் சார்சன் ஆகியோர் சேர்ந்து முறைமை பிரிப்பாய்வுக்கான முறையை அணுகுமுறையாகப் பயன்படுத்த உருவாக்கிய தொழில் நுட்பம். தரவு பாய்வு வரைபடங்கள், தரவு மாதிரியமைவு மற்றும் அமல்படுத்துவதைச் சாராத ஆவணப்படுத்துவதற்கான வரைகலை எண்முறையைப் பயன்படுத்துதல் ஆகியவற்றை உள்ளடக்கியது.

**structured coding :** கட்டுமானக் குறியீடமைத்தல் : அதிக

அளவிலான கட்டுமானம் உள்ளதாக நிரல் தொடர்களை எழுதும் முறை.

**structured decisions : வடிவமைக்கப்பட்ட முடிவுகள் :** முடிவு நடைமுறைகள் அல்லது அலைகளுக்காக உருவாக்கப் பட்ட முடிவு விதிகளால் கட்டமைக்கப்பட்ட முடிவுகள். எங்கு முடிவு தேவைப்படுகிறது என்பதை முன்னதாகவே குறிப் பிடும் நடைமுறைகளைக் கொண்ட சூழ்நிலையில் அவை அமையும்.

**structured design : கட்டுமான வடிவமைப்பு :** மேலிருந்து கீழ் வழியான பிரித்தளிப்பு மற்றும் தருக்கக் கட்டுபாட்டுக் கட்டு மானங்கள் மூலமாக நிரல் தொடர்களையும் குறியீடுகளை யும் வடிவமைக்கும் முறை.

**Structured English : கட்டுமான அமைப்பு ஆங்கிலம்; நெறிப் பட்ட ஆங்கிலம் :** புரியக்கூடிய ஆங்கிலச் சொற்களுக்குப் பதிலாகக் குறியீடுகளை அமைப்பதன் அடிப்படை யிலான மொழி அணுகுமுறை.

**structured flowchart : கட்டமைக்கப்பட்ட பாய்வு வரை படம் :** மூன்று ஒடுபட கட்டு மான அமைப்புகள் மூலம் சிக்கல் தீர்வுகளைக் குறிப்பிடும் முறை : வரிசைமுறை கட்டு மானம், தேர்வு கட்டுமானம் மற்றும் லூப் கட்டமைப்பு.

**structured programming : கட்டு மான நிரல்தொடரமைத்தல் :** மாற்றி அமைத்து குறியீடு அமைப்பதற்காக முக்கிய பணி களை கீழ்நிலை பகுதிகளாகப் பிரிக்க மேலிருந்து கீழ் மற்றும் சில அடிப்படை குறியீட்டுக் கட்டுமான கோட்பாடுகளைப் பயன்படுத்தி நிரல் தொடர் அமைக்கும் தொழில் நுட்பம். இதன்மூலம் சரியாகவும் தெளி வாகவும் தரவு மற்றும் கட்டுப் பாட்டு கட்டுமானங்களை உரு வாக்கி நிரல்தொடர் குறியீடு களை சிறப்பாக அமைக்க முடியும். நெறிமுறையில் படிப் படியாகப் போவதனால் நிரல் தொடரை மாற்றுவதிலும், பரா மரிப்பதிலும் குறைந்த செலவும், மூலத்தை முன்னேற்றமடையச் செய்யும் வாய்ப்பும் உண்டு.

**structured query language (SQL) : வடிவமைக்கப்பட்ட வினவு மொழி :** மேம்பட்ட தரவுத் தள மேலாண்மை அமைப்பு தொகுப்புகளுக்கு தரமானதாகக் கருதப்படும் ஒரு கேள்வி மொழி.

**structured walkthrough : கட்டமைக்கப்பட்ட; உலா :** வடி வமைப்பு பிழைகளைக் கண்டறி

யவும், கருத்துகள் மற்றும் அறிவைப் பரிமாறிக் கொள்ளவும் உருவாக்கப்பட்ட தொழில் நுட்ப மாநாடுகள் அல்லது விமர்சனங்கள். திட்டக்குழுவில் உள்ள அனைத்துத் தொழில் நுட்ப உறுப்பினர்களின் வேலைக்கான பொருளும் பிழை கண்டறிதலுக்கு முக்கியத்துவம் கொடுத்து தொழில்நுட்ப முறையில் விமர்சிக்கப்படும்.

**structure, file** : கோப்புக் கட்டமைப்பு.

**structure, tree** : மரவுருக் கட்டமைப்பு.

**STRUDL** : ஸ்ட்ருடல்: Structural Design Languages என்பதன் குறும்பெயர். கட்டுமானங்களை வடிவமைத்து ஆராயும் நிரல் தொடர் மொழி.

**stub** : அடிநிலை : ஒரு நிரல் தொடர்கூறு இதற்குக் குறியீடு இன்னும் எழுதப்படவில்லை. அப்போதுள்ள நிலையிலேயே நிரல் தொடரை சோதிக்க வடிவமைக்கப்பட்டது.

**stub testing** : அடிநிலைச் சோதனை : மேலிருந்து கீழ் கூறு நிலைச் செயலாக்கம். ஒரு சிறிய பொம்மை நிரல் தொடரை பெரிய நிரல் தொடரின் உள்ளே வேறொரு வாலாயத்துக்காக நுழைத்துப் பயன்படுத்துவது. அடிநிலை (ஸ்டப்) என்பது ஒரு சொற்றொடர் அளவு எளிதாக இருக்கலாம் அல்லது ஒரு நிரலாக இருக்கலாம். சான்று: (Return) திரும்பு.

**studies, feasibility** : சாத்தியக் கூறாய்வு.

**stuffit** : ஸ்டஃப்பிட் : அலாவு தீன் சிஸ்டம்ஸ், ஆப்டோஸ், கலிஃபோர்னியாவின் மெக்கின்டோஷ் பங்குப் பொருள் நிரல் தொடர். இது கோப்புகளை பலவகை நெகிழ்வட்டுகளாக சுருக்கித் தருகிறது.

**style** : பாணி : அச்சுப்பொறி வெளியீட்டுக்குப் பயன்படுத்தப்படும் எழுத்துகளைக் குறிப்பிடும் பொதுப்பெயர். பாணி என்பது சாய்வெழுத்து, தலைகீழாக்கல் - நிழல், வெளிக்கோடு போன்றவற்றை உள்ளடக்கியதாக அமையும்.

**style manual** : நடை கையேடு : எந்த வகையான நூலையும் வெளியிடுவதற்கு முன்பு கடைப்பிடிக்க வேண்டிய விதிகள் மற்றும் மரபுகளைக் கூறும் பல நிறுவனங்கள் வெளியிடும் ஒரு புத்தகம். சிறந்த எழுத்தச்சுகள் மற்றும் அச்சிடும் பழக்கங்கள் ஆகியவைகளுக்கு ஒரு வழிகாட்டியாக விளங்குவதுடன் வெளியிடுவதற்காகத்

தரவுகளை உருவாக்குபவர்களுக்கும் இது ஒரு பயனுள்ள குறிப்பாக அமையும்.

**style sheet** : நடை தாள் : ஒரு சொற்பகுதி கோப்பின் முழுமையும் அல்லது பகுதியில் பயன்படுத்தக்கூடிய பத்தி அல்லது எழுத்துத் தன்மைகளை அனுமதிக்கும் மென்பொருளின் பகுதி. சில சொல் செயலிகள் - சான்றாக : மைக்ரோசாஃப்ட் வேர்டு, வேர்டுபர்ஃபக்ட், மற்றும் பேஜ்மேக்கர், வென்ச்சுரா போன்ற டி.டீ.பி தொகுப்பு போன்றவற்றில் நடைதாள்கள் காணப்படுகின்றன. நடைதாள் என்பதில் பத்தியின் தன்மைகளின் அகலம், சாய்வெழுத்துகள், அடிக்கோடு பெரிய, சிறிய எழுத்து உள்தள்ளல்கள் போன்றவை அடங்கியுள்ளன. நடைதாளைப் பயன்படுத்துவதன் மூலம் வடிவத்தின் தொடர்ச்சியான, உடனடியான மாற்றங்களைச் செய்யமுடியும். வெளியீட்டில் சீரமைப்பைத் தருவதால் மென்பொருள் நிறுவனங்களிடமும், பெருநிறுவன பயனீட்டாளர்களிடமும் அவை பிரபலமாக உள்ளன.

**stylus** : எழுத்தாணி; எழுது கருவி : வரைபட அமைப்பில் பயன்படுத்துவது போன்ற உள்ளீட்டுச் சாதனங்களில் பயன்படுத்தப்படும் எழுதுகோல் வடிவக் கருவி.




எழுது கருவி

**stylus printer** : எழுத்தணி அச்சுப் பொறி.

**.su** : .எஸ்யூ : ஓர் இணைய தள முகவரி முன்னாள் சோவியத் யூனியனைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**sub** : பகுப்புகள்.

**subcommand** : துணைக் கட்டளை : ஒரு துணைப் பட்டியில் (submenu) இருக்கும் ஒரு கட்டளை. (ஓர் உயர்நிலைப் பட்டியிலிருந்து ஒரு விருப்பத் தேர்வை தேர்வுசெய்யும்போது கிடைக்கும் இன்னொரு பட்டி துணைப்பட்டி எனப்படும்).

**subdirectory** : உள் கோப்பகம் : வட்டில் ஒரு பெயரில் கோப்பகம் உருவாக்கப்பட்ட கோப்புகள் சேமித்து வைக்கப்படு

கின்றன. கோப்பகத்தின் உள் பிரிவினையாக உள்கோப்பகம் உருவாக்கப்படுகிறது.

**subdomain :** உள்களம்; கிளைக் களம்.

**sub form data sheet :** உள் படிவத் தரவுத் தாள்.

**subfunction :** துணைப் பணி : ஒரு செயலாக்க அமைப்பின் குறுக்கீடு செய்கின்ற பல பணி களில் ஒன்று. ஒரு பணி எண் எப்போதும் எச்மீதே வைக்கப் படும் என்றாலும் துணைப் பணி எண்களைச் செயல்படுத்து வதற்குமுன் அவற்றை அல்லில் (AL) வைக்கப்படும்.

**subject :** உள்ளடக்கம்; உட் பொருள்; கருப்பொருள்.

**subject tree :** கருப்பொருள் மரம் : வைய விரிவலையில் தரவுகளை கருப்பொருள் அடிப்படையில் வகைப்படுத்தி வரிசைப் படுத்தப்படும்முறை. ஒவ் வொரு வகையும் பல்வேறு கிளைகளாக உள் வகைகளாக பிரிக்கப்படும். அடிநிலை யிலுள்ள கணுக்கள் குறிப்பிட்ட வலைப்பக்கத்துக்கான தொடுப் பினைக் கொண்டிருக்கும். வைய விரிவலையின் கருப் பொருள் மரத்துக்குச் சிறந்த எடுத்துக்காட்டு "யாகூ" தளத்தின் முகப்புப்பக்கப் பட்டியல்.

**submarine cable :** கடலடிக் கம்பி வடம்; நீர் மூழ்கிக் கம்பிகள் : கடல் அடியிலிருந்து எடுக்கப்படும் நீர்மூழ்கித் தரவுத் தொடர்புக் கம்பிகள் மிகுந்த தொல்லை தருவன. ஆழ்நீரின் அழுத்தங்களைச் சமாளிக்கக் குழாய்கள் சீரமைப்புகளுக்கு (refit) அதிக தாங்கும் சக்தி தேவைப்படும். 19ஆம் நூற்றாண்டில் ஆழ்கடல் தந்திக் கம்பிகள் போட்டது போலவே ஆரம்பகால நீர்மூழ்கி தொலை பேசிக் கம்பிகளும் போடப் பட்டன. தேவையான பாது காப்பை அளிக்க கனமான இரும்புக் கவசக் கம்பிகள் ஒன்று அல்லது மேற்பட்ட அடுக்கு களாக தரவுத் தொடர்புக் கம்பி களின்மீது சேர்க்கப்பட்டன. மேம்பட்ட முறைகள் பின்னர் கடைப்பிடிக்கப்பட்டன.

**submarining :** நீர் மூழ்கி விடல் : மடிமேல் வைக்கும் கணினி போன்ற ஒரு மெதுவாகக் காட் டும் திரையில் சுட்டி (Cursor) நகர்வதைத் தற்காலிகமாகக் காண முடியாமல் போதல்.

**submenu :** துணைப்பட்டியல் : ஒரு பட்டியல் தேர்விற்குள் வாய்ப்புகளின் துணைப் பட்டியல். துணைப் பட்டிகளில் பல நிலைகள் இருக்கலாம்.

**subnet** : கிளைப் பிணையம்; உட்பிணையம் : ஒரு பெரிய பிணையத்தின் அங்கமாக இருக்கும் இன்னொரு பிணையம்.

**sub-notebook** : சிறு கையேட்டுக் கணினி : குறைந்த எடையுள்ள கையேட்டுக் கணினி. கணினிகள் இலேசாக ஆகும்போது, கையேட்டுக் கணினிகள் 1 முதல் 2 கிலோக்களும் கையேடு 3 முதல் 4 வரை எடை கொண்டிருக்கும்.

**subnotebook computer** : சிறு கையேட்டுக் கணினி : வழக்கமான மடிக் கணினியைவிடச் சிறிய, எடை குறைந்த கையடக்கக் கணினி.

**sub problems** : உட் சிக்கல்கள்.

**subprogramme** : துணை நிரல் தொடர் : ஒரு குறிப்பிட்ட பணியைச் செய்யும் நிரல் தொடரின் ஒரு பகுதி. ஒரு குறிப்பிட்ட பணி துணை நிரல் தொடராகக் கையாளப்பட்டால் ஒரு இடத்திற்குமேல் அது தேவைப்படும் போது நிரல் தொடரமைக்கும் நேரத்தைக் குறைக்கும். ஒரே ஒருமுறை அதற்குக் குறியீடமைத்து நிரல்தொடர்களில் பல இடங்களில் அதைப் பயன்படுத்த முடியும். துணை நிரல் தொடர்களை அமைக்க துணை வாலாயங்களும், பணிகளும் பயன்படுத்தப்படலாம்.

**subroutine** : துணை வாலாயம்; உப செயல்முறை; துணை வழமை : அதற்குள்ளே ஆரம்ப இயக்கம். எப்போதும் துவக்கப்படாத துணை வாலாயம். பிற நிரல் தொடர்கள். குறிப்பாக முதன்மை நிரல் தொடர் அழைக்கும்போது மட்டும் இயக்கப்படும்.

**subroutine reentry** : துணை வாலாயம் திரும்பவரல்; துணை மறு நுழை : வேறொரு நிரல் தொடர் அதனை முடிக்கும் முன்பாக ஒரு நிரல் தொடரில், அதை ஆரம்பித்தல். கட்டுப்பாட்டு நிரல் தொடர் முன்னுரிமை குறிக்கீடுக்கு ஆளாகும்போது இது ஏற்படும்.

**subschema** : துணை அமைவு : ஒரு குறிப்பிட்ட நிரல் தொடருக்காக தேவைப்படும் தரவு தருக்க முறையில் ஒழுங்குபடுத்துதல்.

**subscribe** : உறுப்பினராகு; சந்தாதாரர் ஆகு : 1. செய்திக் குழுக்களின் பட்டியலில் ஒரு புதிய செய்திக்குழுவைச் சேர்த்தல். புதிய செய்திக்குழுவிலிருந்து புதிய கட்டுரைகளை பயனாளர்கள் பெறுவர். 2. ஒரு அஞ்சல் பட்டியலில் அல்லது அது போன்ற சேவைகளில் பயனாளர் ஒருவர் உறுப்பினராதல்.

**subscript** : அடியெண் கீழ் எழுத்து; அடிக்குறி : 1. ஒரு அணி அல்லது ஒரு வரிசையைக் கொண்ட சேமிப்பக உறுப்பு களை வரையறை செய்யும் மாறிலியின் பெயருடன் இணைக்கப்படும் முழு எண் மதிப்பு. 2. கணினி அல்லாத அச்செழுத்துகளில் அதே குறி யீட்டின் மாறுபாடுகளிலிருந்து வேற்றுமைப்படுத்த ஒரு குறியீட்டின் வலது புறத்திலோ அல்லது கீழோ எழுதப்படும் ஒரு எழுத்து அல்லது இலக்கம். சான்று: $\theta_a$ $\theta_b$ (Superscript) மேலொட்டுக்கு எதிர்ச்சொல்.

**subscripted variable** : எண் வரிசையிட்ட மாறிலி : சிறிய குறியீட்டைத் தொடர்ந்துவரும் வரிசையில் ஏற்படும் எண் மதிப்பின் மாற்றத்தைக் குறிப் பிடும் குறியீடு. சான்று - சதுரங்கம் (2, 4) அல்லது A(7).

**subscript mode** : குறைத்தமைக் கும் முறை : எழுத்தின் இடத்தில் கீழ்ப்பகுதியால் வழக்கமான உயரத்தைவிடக் குறைந்த உயரத்தில் மூன்றில் இரண்டு பங்கு அளவு எழுத்து களை அச்சிடுகிறது.

**subset** : உட்கணம் ; துணைத் தொகுதி : ஒரு தொகுதியின் உள்ளே காணப்படும் வேறொரு தொகுதி.

**substitute** : பதிலீடு.

**substrate**: அடித்தளம் : நுண் மின்னணுவியலில், எதன்மீது ஒரு மின்சுற்று உருவாக்கப்படு கின்றதோ அந்தப் பருப்பொருள்.

**subtracter** : கழிப்பி.

**subtraction** : கழித்தல்.

**substring** : துணைச் சரம்; பகுதிச் சரம்: ஒரு எழுத்துச் சரத்தின் பகுதி.

**subsystem** : துணை அமைப்பு : முதன்மை அமைப்பின் கீழ் இயங்கும் துணை அமைவு.

**sub task** : உட்பணி.

**subtract** : கழி : உறவுமுறை தரவு தளத்தின் இரண்டாவது கோப்பில் இல்லாத ஒரு கோப்பில் இருக்கும் பதிவேடு களைக்கொண்டு மூன்றாவது கோப்பினை உருவாக்குதல்.

**subtree** : கிளைமரம் : மரவுரு தரவுக் கட்டமைப்பில், ஒரு கணுவிலிருந்து கிளைத்துச் செல்லும் கணுக்களை வைத்துப் பார்த்தால் அது ஒரு கிளை மர வுருவாகவே தோற்றமளிக்கும்.

**successive difference of expression** : எண்ணுருக் கோவை களில் தொடர் வேற்றுமை.

**suffix** : பின்னொட்டு.

**suggestion** : கருத்துரை.

**suite** : **கூட்டுத் தொகுப்பு** : நெருங்கிய தொடர்புள்ள நிரல் தொடர்களின் தொகுதி அல்லது குழு.

**suitecase** : **சூட்கேஸ்; (கைப் பெட்டி)** : மெக்கின்டோஷ் கணினிகளில், சில எழுத்துருக் களையும், சிறு பயன்கூறுகளை யும் கொண்ட ஒரு கோப்பு. தொடக்கக்கால மேக் இயக்க முறைமைப் பதிப்புகளில் இத்தகைய கோப்பு, திரையில் ஒரு கைப்பெட்டி போன்ற சின்னத்துடன் காட்சியளிக்கும்.

**sum** : **தொகை.**

**summarize** : **தொகுத்துக் கூறு** : செய்திக் குழுக்கள், அஞ்சல் பட்டியல்களில் கருத்துக் கணிப்பு நடத்தி மின்னஞ்சல் மூலமாக கருத்துகளைச் சேகரித்து, முடிவுகளைத் தொகுத்து வெளியிடல்.

**summary** : **சுருக்கம்; பிழிவு.**

**sun (Sun Microsystems)** : **சன் (சன் மைக்ரோசிஸ்டம்ஸ்)** : கட்டமைப்பு சார்ந்த, அதிகத் திறனுள்ள பணி நிலையங்களை உற்பத்தி செய்யும் 1982இல் நிறுவப்பட்ட நிறுவனம். தனியாக நிற்கும், கட்டமைப்புக் குட்பட்ட அமைப்புகள், வட்டில்லாத பணி நிலையங்கள், ஸ்பார்க், நுண் செயலகக் கட்டுமானம் கொண்ட கோப்பு வழங்கிகள் போன்றவற்றை இந்நிறுவனம் உற்பத்தி செய்கிறது. பிற விற்பனையாளர்களின் கணிப்பொறி அமைவுகளின் கட்டமைப்புகளின் பரிமாற்றம் செய்ய அனுமதிக்கும் திறந்த முறை மாதிரிகளை அது ஆதரிக்கிறது.

**super** : **மீத்திறன்; மிகுதிறன்.**

**superalc** : **சூப்பரால்க்** : கம்ப்யூட்டர் அசோசியேட்ஸ் நிறுவனத்தின் பீ.சி. விரிதாள் நிரல் தொடர். விசிகால்சின் காலடித் தடங்களை சுற்றி 80-களில் அமைக்கப்பட்ட ஆரம்பகால விரிதாள்களில் ஒன்று. சூப்பரால்க் 5 (1988) முப்பரிமாண திறனை அளிப்பதுடன், மேம்பட்ட வரைகலை மற்றும் 256 விரிதாள்களோடு இணைக்கப்படுகிறது.

**super computer** : **மீப்பெருங் கணினி; உயர் கணினி** : கிடைக்கின்ற பெருமுகக் கணினிகளில் மிகப்பெரிய, மிகவேகமான, மிகஅதிக விலையுள்ளது. அசாதாரண கணிப்பு சக்தி தேவைப்படும் நிறுவனங்கள் மற்றும் வணிக அமைப்புகளில் பயன்படுவது. எண் விழுங்கிகள் என்றும் சில சமயம் அழைக்கப்படுகிறது. ஏனென்றால் அவை ஒரு நொடிக்கு

இலட்சக்கணக்கான இயக்கங் களைச் செய்கின்றன. சில புதிய கணினிகள் ஒரு நொடிக்கு கோடிக்கணக்கான இயக்கங் களைச் செய்கின்றன.

**superconducting computers : மீக்கடத்திக் கணினிகள் :** அதிகத் திறனுள்ள கணினிகள். சுழற்சி நேரத்தைக் குறைக்க ஜோசப்சன் விளைவையும் மீக்கடத்தும் தன்மையையும் இவற்றின் மின் சுற்றுகள் பயன்படுத்துகின்றன.

**super conductor : மீக்கடத்தி :** அதிவேக மின்னணு மின்சுற்று.

**super disk : மீத்திறன் வட்டு, மிகுதிறன் வட்டு.**

**Super Drive : மீஇயக்கி :** அதன் அதிகபட்ச அடர்த்தி வடி வமைப்பில் 1.44 மீமிகு எண்மி தகவல்களைச் சேமிக்கும் மெக்கின்டோஷ் நெகிழ் வட்டு இயக்கி. முந்தை மேக் 400 மற் றும் 800 கிலோ எண்மி வட்டு களையும் அது பிடித்து எழுதும்.

**superfloppy : மீநெகிழ் வட்டு :** பீ.சி. யின் 3.5 வட்டு. அது 2.88 மீமிகு எட்டியலை (MG) வைத்துக்கொள்ளக் கூடியது. 1.44 மீமிகு எண்மி மற்றும் 720 கிலோ எண்மி வடிவமைப்பு களுக்கு ஏற்றதாக உள்ளது. 20 மீமிகு எண்மி வரிசையில் அதிகத் திறனுடைய நெகிழ்வட்டு.

**superKey : மீ விசை :** போர்லாண்ட் நிறுவனத்தின் பீ.சி. விசைப்பலகை பெரு செயலகம் பயன்படுத்துபவர் களின் விசைப்பலகை. மேக் ரோவை உருவாக்கவும், விசைப் பலகையை மறு ஒழுங்குபடுத்த வும் தரவுகளையும், நிரல் தொடர்களையும் இரகசியக் குறிப்பேற்றவும் இது பயனா ளர்களை அனுமதிக்கிறது.

**super market : பேரங்காடி.**

**supermini : மீக்குறு:** பேரளவு சிறு கணினி. சிறிய பெருமுகக் கணினிகளின் திறன் கொண்டவை.

**supermini computer : மீக்குறு கணினி :** 32 துண்மி சொற் களைப் பயன்படுத்தும் சிறு கணினி. அதிக சொல் நீளத்தின் மூலம் அதிக விளைவும் அதிக துல்லிய கணிப்பு, எளிய நிரல் தொடர் முன்னேற்றமும் ஏற் படும். மீக்குறு கணினியின் செயலாக்கத்திறன் ஒரு பேரளவு பெருமுகக் கணினியின் திறனுக்குச் சமமாக இருக்கும்.

**super pipelining : மீத்திறன் இணைச் செயலாக்ககம் :** ஒரே நேரத்தில் நுண்செயலி, ஒன்றுக்கு மேற்பட்ட செயல் பாடுகளை நிறைவேற்ற வழி செய்யும் முறை இணைச் செய

லாக்கம் (pipelining) எனப்படு கிறது. கொணர்தல், குறிவிலக்கல், இயக்குதல், திரும்பி எழுதல் போன்ற நுண் செயலிச் செயல்பாடுகள் சிறுசிறு கூறாகப் பிரிக்கப்பட்டு ஒரே நேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட பணிகள் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன. இதனால் நுண்செயலி வாளா இருக்கும் நேரம் குறைந்து அதன் செயல் திறன் அதிகரிக்கிறது.

superscalar : மீப்பெரும் அடுக்ககம் : நுண்செயலிக் கட்டுமான வகை. நுண்செயலி, ஒரு கடிகாரச் சுழற்சியில் பல நிரல்களை இயக்கிட வகைசெய்யும் கட்டுமான முறை.

Superscript : மேலொட்டு: ஒரு தொகுதியின் குறிப்பிட்ட பொருளை அடையாளம் காணவோ அல்லது எத்தனை மடங்கு என்பதைக் குறிப்பிடவோ ஒரு குறியீட்டின் வலது புறமாகவோ அல்லது மேலேயோ எழுதப்படும் எழுத்து அல்லது இலக்கம்.

superscript mode : மேலொட்டு முறைமை : எழுத்துகளுக்கான இடத்தின் மேற்பகுதியில் வழக்கமான உயரத்தைவிட மூன்றில் இரண்டு பங்கு உயரமுடைய எழுத்துகளை அச்சிடுகிறது.

super server : மீப் பணியகம் : பேரளவு ரேம் மற்றும் வட்டு திறன் பல் செயலகம் மற்றும் அதிவேக பல் செயலாக்கம் (நுண் வழித்தடம், அய்சா போன்றவை) ஆகியவற்றைக் கொண்ட கட்டமைவுப் பணியகம்.

super twist : சூப்பர் ட்விஸ்ட் : முந்தைய டி.என். தொழில் நுட்பத்தில் படிகங்களை 180 டிகிரி அல்லது அதற்கும் மேலே திருப்பி மேம்படுத்தும் எல்.சி.டி. தொழில்நுட்பம். அகன்ற பார்க்கும் கோணமும் மேம்பட்ட கருமையும் அளிக்கிறது. அதன் மஞ்சள் மற்றும் பச்சை நீல நிறத்தினால் அதை அடையாளம் காணமுடிகிறது.

superuser : தலைமைப் பயனாளர் : யூனிக்ஸில் வரம்பற்ற அணுகல் சலுகைகள் உடைய பயனாளர். பெரும்பாலும் அவர் முறைமை நிர்வாகியாக இருப்பார்.

super VAR : மீப்பெரும் வார்; மீப்பெரும் மதிப்பேற்று மறு விற்பனையாளர் : மிகப்பெரிய அளவிலான விற்பனையை மேற்கொள்ளும் மதிப்பேற்று மறு விற்பனையாளர் (Value-Added Retailer) என்பதன் சுருக்கம்.

supervisor : மேற்பார்வையாளர் : இயக்க அமைப்புப் போன்றது.

**supervisor call** : மேற்பார்வையாளர் அழைப்பு : பயன்பாட்டு நிரல் தொடரின் ஒரு நிரல். அது கணினியைக் குறுக்கீடு செய்து அதன் மேற்பார்வை நிலையை மாற்றுகிறது. இயக்க அமைப்பு பின்னர் அந்த அழைப்பை ஆய்ந்து அதனைக் கையாளுமாறு சரியான வாலாயத்துக்கு நிரலிடுகிறது.

**supervisor control programme** : மேற்பார்வையாளர் கட்டுப்பாட்டு நிரல் தொடர் : நினைவகத்தில் எப்போதும் இருக்கின்ற இயக்க அமைப்பின் ஒரு பகுதி கரு (Kernal) போன்றது.

**supervisor state** : மேற்பார்வையாளர் நிலை : செயலாக்க அமைப்பில் நிரல்களை இயக்குகின்ற கணினியின் செயலாக்க முறை. இந்த முறையில் உள்ளீடு / வெளியீடு நிரல் போன்ற பயன்பாட்டு நிரல் தொடரில் இல்லாத சிறப்பு நிரல்களை கணினி இயக்க முடியும். இச்சொற்கள் பெரிய கணினி எல்லா கணினிகளும் இந்த இரண்டு நிலைகளையும் வேறுபடுத்திப் பார்க்கக்கூடியவை.

**supervisory programme** : மேற்பார்வை நிரல்.

**supervisory system** : மேற்பார்வை அமைப்பு.

**supply company** : வழங்கும் நிறுவனம் : கணினி உற்பத்தியாளர்களால் உற்பத்தி செய்யப்படாத அல்லது விநியோகிக்கப்படாத பொருள்களை வழங்கும் நிறுவனம். அச்சுக் காகிதம், அச்சுப் பொறி, நாடாக்கள், வட்டுகள் போன்றவை.

**supply spool** : வழங்கீட்டுக் கண்டு.

**support** : ஆதரவு : வாடிக்கையாளருக்கு விற்பனையாளர் அளிக்கும் உதவியும் வாய்மொழி ஆலோசனையும்.

**support chip** : ஆதரவு சிப்பு : மையச் செயலகத்தை கணினியின் பிற பகுதிகளுடனோ அல்லது வெளிப்புறச் சாதனங்களுடனோ இணைக்கும் பெரிய ஒருங்கிணைந்த சிப்பு.

**support library** : ஆதரவு நூலகம் : ஏற்கெனவே உருவாக்கப்பட்டு சோதிக்கப்பட்டு ஆவணப்படுத்தப்பட்ட முழுநிரல் தொடர்களையும் துணை வாலாயங்களையும்கொண்ட நூலகம்.

**suppress** : ஒடுக்கு : கணினி வெளியீட்டிலிருந்து முன்செல்லும் சுழி (பூஜ்யம்)கள் அல்லது பிற தேவையற்ற எழுத்துகளை நீக்குதல்.

**suppression** : ஒடுக்குதல் : ஒரு சமிக்கையின் தேவையற்ற பகுதிகளை நீக்குதல்.

**surf** : உலாவு; மேய்; பார்வை யிடு : இணையத்தில் உலாவுதல். செய்திக்குழுக்கள், கோஃபர் வெளிகள், குறிப்பாக வைய விரிவலையில் தகவல் குவியல் களுக்கு மத்தியில் உலாவருதல். தொலைக்காட்சியைப் பார்க்கும் போது பல்வேறு அலைவரிசை களையும் மாற்றி மாற்றிப் பார்ப்பதுபோல இணையத் திலும் வேறுவேறு தலைப்பு களில் தகவலைத் தேடி இணையத் தளங்களிடையே ஒன்றிலிருந்து இன்னொன்றுக் குத் தாவி மேலோட்டமாகப் பார்வையிடல்.

**surface** : மேற்பரப்பு: CADஇல் ஒரு பொருளின் வெளிப்புற வடிவியல் மேற்பரப்புகள் எண் கட்டுப்பாடு மாதிரிகளுக்குத் தான் அதிகம் தேவைப்படும். கம்பிச்சட்டங்கள் மற்றும் திடப் பொருள்களுக்கு அது தேவைப் படுவதில்லை. டிபேசை உரு வாக்கிய வாய்ன் ராட்ளிஃப் பயன்படுத்திய சொல். 'டேட்டா பேஸ்' எந்திரத்துடன் இடைப் படுமாற்றம் செய்யும் மொழியே டிபேஸ்.

**surface modeling** : மேற்பரப்பு மாதிரியமைத்தல் : கேட் (Cad) முறையில், திடவடிவில் தோன் றும் பொருள்களைக் குறிப் பிடும் ஒரு கணிதத் தொழில் நுட்பம். கம்பிச் சட்ட மாதிரி யமைப்பைவிட, மேற்பரப்பு மாதிரியமைத்தல் பொருள் களைக் குறிப்பிட்ட ஒரு முழுமையான முறையாகும். ஆனால், திட மாதிரியமைத் தலைப் போன்ற மேன்மை யானதல்ல. திரையில் ஒன்றாகத் தோன்றினாலும் இவை வெவ் வேறானவை. திடமாதிரிகளைப் போல மேற்பரப்பு மாதிரி களைத் துண்டுகளாக்க முடியாது. மேலும் மேற்பரப்பு மாதிரியில் பொருளானது வடிவியல் (ஜியாமட்ரி) முறையில் தவறாக இருக்கலாம். ஆனால் திடமாதிரி யில் சரியாக இருக்க வேண்டும்.

**surface mount** : மேற்பரப்பு ஏற்றுதல் : மின்சுற்று அட்டை தொகுத்தளிக்கும் தொழில் நுட்பம். இதில் சிப்புகள் மற்றும் பிற பாகங்களில் உள்ள பின்களை பற்றவைக்கலாம். ஆனால் அவற்றின்மூலம் செய்ய முடியாது. அட்டைகள் சிறிய தானாலும் வேகமாகக் கட்டப் படும். தாய் அட்டைகளின் உற் பத்தி மற்றும் அசெம்பிளியில் பயன்படுத்தப்படும் ஒரு வடி வமைப்பு தொழில்நுட்பம். இணைப்பு ஊசிகளைக் குறைவாகப் பயன்படுத்தும் மேலமைப்பு வாய்ப்புகள் மேம் பட்டவையாக உள்ளன.

**surface mount technology :** மேற்பரப்பில் ஏற்றும் தொழில் நுட்பம் : பட்டைகளைத் தொகுத்து உற்பத்தி செய்யப் பயன்படுத்தும் ஒரு வடி வமைப்பு தொழில்நுட்பம். இணைப்பு ஊசிகளைக் குறை வாகப் பயன்படுத்துவதன் மூலம் இது மேம்பட்ட வெளிக் கோடமைப்பு வாய்ப்புகளை அளிக்கிறது.

**surface of resolution :** சுழற்சி மேற்பரப்பு : ஒரு குறிப்பிட்ட கோணத்தில் ஒரு நிலையான அச்சைச்சுற்றி சுழலும் ஒரு வளைகோட்டின் விளைவாக உருவாகும் உருவம்.

**surface of revolution :** சுழற்சிப் பரப்பு.

**surge :** எழுச்சி; வேகம் : மின் சக்தி திடீரென்று அதிகரித்தல்.

**surge protector :** வேகப் பாது காப்புப் பொறி; எழுச்சிக் காப்பு : திடீரென்று மின்சக்தி அதிகரித்து அதன் மூலம் மின் கருவிகள் பாழாவதைத் தடுக்க, அதை வடி கட்டி அனுப்பும் சாதனம். 110 வோல்ட் மின்சக்தி வெளியீடு உள்ள ஒரு பிளக்கில் வேகப் பாதுகாப்புப் பொறி பொருத்தப்பட்டு அதன்மூலம் கணினி அல்லது பிற சாதனங் களில் இணைக்கப்படும்.

**surge protection :** எழுச்சிப் பாதுகாப்பு.

**surges :** எழுச்சிகள்.

**surge suppressor :** எழுச்சி ஒடுக்கி : பல கணினி மின்சக்தி மூலங்களில் பொருத்தப்பட்ட மின்னணுச் சாதனம். மின்சக்தி ஏற்ற, இறக்கம் ஆகி கணினி யின் நுண்ணிய மின்னணு மின் சுற்றுக்களை சேதப்படுத்தா வண்ணம் தடுப்பது. லிஃப்ட் மோட்டார்கள், பற்றவைக்கும் சாதனங்கள் கம்ப்ரசர்கள் போன்ற பெரிய மின்சக்தி நுகரும் கருவி ஸ்பைக்குகளையும், சா்ஜ்களை யும் உருவாக்கித் தரும்.

**surging :** வேகமாகப்பாய்தல்; எழுதல் : ஒரு மின்சுற்றின் மின் னோட்டம் அல்லது மின்சக்தி திடீரென்று தற்காலிகமாக மாறுதல் அடைவது.

**surround :** சுற்றுவெளி.

**surround sound :** பல்திசை யொலி; சுற்றுவெளி ஒலி.

**suspend :** தற்காலிக நிறுத்தம்; இடை நிறுத்தம் : ஒரு இயக் கத்தை மீண்டும் துவக்கும் வகையில் நிறுத்தல்.

**suspend command :** இடை நிறுத்தக் கட்டளை : விண் டோஸ் 95/98 இயக்கமுறைமை களில் மின்சாரத்தைச் சிக்கன

மாகச் செலவழிக்க வகை செய்யும் ஒரு வசதி. கையடக்கக் கணினிகளில் இருந்த இவ்வசதி பிறவகைக் கணினிகளிலும் இன்றுள்ளன. தொடங்கு (start) பட்டித் தேர்வில் இடைநிறுத்து (suspend) என்னும் கட்டளையைத் தேர்வு செய்தால், கணினியின் இயக்கம் தற்காலிகமாக நிறுத்தப்படும். ஆனால் கணினிக்கான மின்சாரம் துண்டிக்கப் படாது. விசைப்பலகையில் ஒரு விசையை அழுத்தியதும் கணினி மீண்டும் இயங்கத் தொடங்கிவிடும்.

**sustained transfer rate :** தாக்குப்பிடிக்கும் பரிமாற்ற வீதம்; தளராப் பரிமாற்ற வீதம் : வட்டு அல்லது நாடா போன்ற ஒரு சேமிப்புச் சாதனத்துக்கு தகவலைப் பரிமாறும் வேகத்தைக் குறிக்கும் அளவீடு. வழக்கமான நேரத்தைவிட நீட்டித்த நேரத்துக்கு, சாதனத்தின் தரவு பரிமாறும் வேகத்தைக் குறிக்கிறது.

**.sv :** .எஸ்வி : ஓர் இணைய தள முகவரி எல்சால்வாடர் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**SVC :** எஸ்விசி : இணைப்புறு மெய்நிகர் மின்சுற்று என்று பொருள்படும் Switched Virtual Circuit என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். ஒரு பொதி இணைப்பகப் பிணையத்தில் (Packer Switched Network) இரண்டு கணுக்களிடையே ஏற்படும் தருக்க நிலை இணைப்பு. இரண்டுக்குமிடையே தரவுப் பரிமாற்றம் நடைபெற வேண்டியிருந்தால் மட்டுமே இத்தகைய இணைப்பு ஏற்படும்.

**SVGA :** எஸ்விஜிஏ : மீத்திறன் ஒளிக்காட்சி வரைகலைக் கோவை என்று பொருள்படும் Super Video Graphics Array என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஐபிஎம் ஒத்தியல்புக் கணினிகளில் உயர் தெளிவு வண்ணக் காட்சி தருவதற்காக 1989ஆம் ஆண்டு ஒளிக்காட்சி மின்னணுத் தரக் கட்டுப்பாட்டு சங்கம் (Video Electronics Standards Association-VESA) உருவாக்கிய ஒளிக்காட்சித் தரவரையறை. எஸ்விஜிஏ ஒரு தர வரையறை என்ற போதிலும் சிலவேளைகளில் ஒளிக்காட்சி பயாஸுடன் ஒத்தியல்புச் சிக்கல்கள் ஏற்பட வாய்ப்புண்டு.

**S-video connector :** எஸ்-ஒளிக்காட்சி இணைப்பி : ஒளிக்காட்சிச் சாதனங்களின் நிறச்செறிவு (Chrominance), ஒளிச்செறிவு (Luminance) ஆகியவற்றைத்

தனித்தனியே கையாளும் ஒரு வன்பொருள் இடைமுகம். ஆர்சிஏ -வகை அல்லது பிற கலவை இணைப்பிகளைப் பயன் படுத்திப் பெறுகின்ற படிமத்தை விடக் கூர்மையான படிமத்தை இவ்வகை இணைப்பிகள் தரவல்லவை.

swap : இடமாற்று, மாறுமிகள் : 1. இரண்டு பொருட்களை இடம் மாற்றிக்கொள்ளல். இரண்டு மாறிலிகளிலுள்ள மதிப்புகளை இடம் மாற்றிக் கொள்ளல். ஒரே நெகிழ்வட்டு இயக்கத்தில் இரண்டு வட்டுகளை மாறி மாறிப் பயன்படுத்தல். 2. நிரலின் ஒரு பகுதியையோ, தரவு களையோ நினைவகத்திலிருந்து வட்டுக்கு, வட்டிலிருந்து நினைவகத்துக்கு இடம் மாற்றிக் கொள்ளல்.

swap file : இடமாற்றுக் கோப்பு : 386இன் மேம்பட்டமுறையில் சாளரத்துக்காகவே தனியாக ஒதுக்கப்பட்ட நிலைவட்டில் உள்ள ஒரு பகுதி. நினைவகத் திலிருந்து தற்காலிகமாக தரவுவை இடமாற்றிக் கோப்புக்கு சாளரங் களை மாற்றித் தரும். இதனால் பிற தரவுகளுக்கு இடம் தாராள மாகக் கிடைக்கும். இட மாற்றிக் கோப்புகள் தற்காலிக மாகவோ நிரந்தரமாகவோ அமைக்கப்படும்.

swapping : இடமாற்று : 1. மெய் நிகர் சேமிப்பகத்தில் துணை சேமிப்பகத்திலிருந்து உள் சேமிப்பகத்திற்குக் கொண்டு வந்து இருக்கின்ற பக்கத்தை மாற்றுதல். 2. நேரப்பங்கீட்டு அமைப்பில் நிரல் தொடரை உள்சேமிப்பகத்திற்குக் கொண்டு வருதல் அல்லது சேமிப்பகத் தில் சேமித்தல். 3. உள்சேமிப் பகத்தில் இருப்பதை துணை சேமிப்பகத்துக்கு மாற்றும் அதே வேளையில் உள் நினை வகத்தில் இருப்பதை துணை சேமிப்பகத்துக்கு மாற்றுதல்.

swarm : பிழைத் தொகுதி : பல நிரல் தொடர் பிழைகள்.

swim : நீந்து : ஒளிக் (வீடியோ) காட்சித்திரையில் உள்ள உரு வங்கள் வன்பொருள் அல்லது வேறு கோளாறுகளினால் தானா கவே நகர்தல். காட்சித் திரை யில் விரும்பத்தகாத முறையில் படம் நகர்தல்.

switch : நிலைமாற்று : நிரல் தொடரமைத்தலில் ஒரு குறிப் பிட்ட இடத்தில் சொல்லப் பட்ட விதிமுறைகளுக்கேற்ப ஒன்று அல்லது பல நிரல் தொடர் வாக்கியங்களாக மாறுதல். 2. ஒரு கருவி அல்லது சாதனத்தை இயக்கு/நிறுத்து போன்று வேறுநிலைக்கு மின்

சாரம் மூலமாகவோ இயக்க முறையாலோ மாற்றுதல்.

**switch board manager :** நிலை மாற்றிப் பலகை மேலாளர்.

**switch, console :** பணியக நிலை மாற்றி.

**switched connection :** இணைப் பித் தொடர்பு.

**switched Ethernet :** இணைப் புறு ஈதர்நெட் : ஒரு ஈதர்நெட் குவியத்துக்குப் (Hub) பதிலாக ஓர் அதிவேக இணைப்பகத் தைப் (switch) பயன்படுத்தும் ஓர் ஈதர்நெட் பிணையம்.

**switched lines :** நிலைமாற்றுக் கம்பிகள் : பல்வேறு இடங்களுக்கு தொலைபேசி பொத்தான் மையங் கள்மூலம் இணைக்கப்படும் தகவல் தொடர்புக் கம்பிகள்.

**switched network :** நிலை மாற்றுப் பிணையம் : பன் னாட்டு அழைப்பு தொலை பேசி அமைப்பு. செலுத்து (transmission) நேரத்தில் ஒரு முனையில் இருந்து வேறொன்றுக்கு ஏற்படுத்தப் படும் தற்காலிக இணைப் பினைக் கொண்ட கட்டமைப்பு.

**switcher :** சுவிட்சர் (நிலை மாற்றி) : மெக்கின்டோஷ் கணினிகளில் உள்ள ஒரு தனிச் சிறப்பான பயன்கூறு. ஒரே நேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட நிரல்களை நினைவகத்தில் தங்கியிருக்கச் செய்யும். பின்னா ளில் சுவிட்சருக்குப் பதிலாக மல்ட்டிஃபைண்டர் (பல் முனைத் தேடி) என்னும் வசதி புகுத்தப்பட்டது.

**switches ;** நிலைமாற்று விசைகள்.

**switching :** இணைப்பித்தல் ; இணைப்புறுத்தல் : இரு முனை களுக்கிடையே தொடுப்பு ஏற் படுத்தவோ, தகவலைத் திசை வித்து அனுப்பவோ நிரந்தர இணைப்புகளுக்குப் பதிலாக தற்காலிகமாக இணைப்பிக்கும் ஒரு தகவல் தொடர்பு வழி முறை. எடுத்துக்காட்டாக, தொலைபேசி வழியான பிணைய இணைப்பில் அழைத் தவர்க்கும் அழைக்கப்பட்டவர்க் கும் இடையேயான தொடர்பு ஓர் இணைப்பக மையம் வழியே தான் நடைபெறுகிறது. கணினிப் பிணையங்களில் இரண்டு முனைகள் தகவல் பரிமாறிக் கொள்ள செய்தி இணைப்புறுத் தல் பொதி இணைப்புறுத்தல் என இரண்டு வகைகள் உள்ளன. இரண்டு முறையிலுமே இடை நிலை நிலையங்கள் மூலம் செய்திகள் திசைவிக்கப்படுகின் றன. இதனால் அனுப்பி/வாங்கி இரண்டுக்கும் இடையே தகவல் தொடர்பு ஏற்பட்டு விடுகிறது.

**switching algebra :** நிலைமாற்று குறிக் கணக்கியல் : நிலை மாற்று கொள்கைக்கு செயல் படுத்தப்படும்போது பூலியன் குறிக்கணக்கியலுக்குத் தரப் படும் பெயர்.

**switching circuit :** நிலைமாற்று மின்சுற்று : இலக்கமுறை மற்றும் நிலைமாற்று அமைப்பு களுடன் மின்சுற்று. இலக்கக் கணினிகள் தொலைபேசி அமைப்புகள் மற்றும் தானி யங்கி கணக்கெடுப்பு அமைப்பு கள் இதற்குச் சான்றுகள்.

**switching hub :** இணைப்பகக் குவியம் : வெவ்வேறு தகவல் தொடர்பு இணைப்புகளை ஒரு பிணையத்தில் இணைத்து, பிணையத்திலுள்ள கணினி களுக்கிடையே செய்திகளையும், தகவல் பொதிகளையும் திசை வித்து அனுப்பும் பணியைச் செய்யும் ஒரு மையச் சாதனம்.

**switching matrix :** நிலைமாற்று அணி : குறுக்குக் கம்பி, மீறும் அழுத்து கட்டை நிலைமாற்று ஆகிய இரண்டும் விசைப்படு அணியின் இயக்கத்தையே சார்ந் துள்ளன. இணைக்கவேண்டிய மின்சுற்றுகளை செங்குத்து மற்றும் கிடைமட்டக் கோடு களின் சரியான கோணங்களில் வரிசைப்படுத்துவதற்கான கோட் பாடு என்று இதைக் கூறலாம். இந்தக் கோடுகள் விசையின் உள்ளீடு அல்லது வெளியீடாகும்.

**switching speed :** இணைப்புறு வேகம் : ஏடீஎம் (ATM-Asynchronous Transfer Mode) அடிப்படை யிலான பொதி இணைப்புறு தொலைத் தகவல் தொடர்புத் தொழில்நுட்பத்தில் தரவுப் பொதிகள், பிணையத்தின் வழி யாக அனுப்பப்படும் வேகத்தைக் குறிக்கிறது. இணைப்புறு வேகம் வினாடிக்கு இத்துணை கிலோபிட்ஸ் அல்லது மெகா பிட்ஸ் என்ற அலகுகளில் அளக்கப்படுகிறது.

**switching theory :** நிலைமாற்றுக் கொள்கை : இரண்டு அல்லது மேற்பட்ட தனிப்பட்ட நிலை கள் உள்ள மின்சுற்றுகளுக்குப் பயன்படுத்தப்படும் கொள்கை.

**Switch Mode Power Supply (SMPS) :** நிலைமாற்று முறைமை மின்வழங்கி.

**switch more power supply :** நிலைமாற்று மின்வழங்கி.

**switch, toggle :** இருநிலை மாற்றி.

**switch-to computer :** கணினிக்கு நிலைமாற்று : குரல் தொலை பேசியுடன் தள அணுகு முறையை ஒருங்கிணைப்பது. எடுத்துக்காட்டாக, வாடிக்கை

யாளர் சேவை பயன்பாடுகளில் தானியங்கி எண்காட்டி போன்ற தொலைபேசி சேவைகளைப் பயன்படுத்தினால் உள்ளே வரும் அழைப்பு திரும்பப் பெற்று வாடிக்கையாளர் கோப் பின்மூலம் அடுத்துள்ள மனிதப் பிரதிநிதியிடம் செல்லும்.

**.sy : .எஸ்ஒய் :** ஓர் இணைய தள முகவரி சிரியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும்புவிப் பிரிவுக் களப் பெயர்.

**SYLK file : சில்க் கோப்பு :** குறி யீட்டுத் தொடுப்புக் கோப்பு என்று பொருள்படும் Symbolic Link File என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். பெரும் பாலும் விரிதாள் தரவுகளைப் பரிமாறிக் கொள்வதற்குப் பயன் படுத்தப்படும் மைக்ரோசாஃப்ட் நிறுவனத்தின் வடிவாக்க அடிப் படையில் உருவாக்கப்பட்ட கோப்பு. விரிதாள்களிலுள்ள வடிவமைப்புத் (Formating) தகவல்கள் மற்றும் சில மதிப்பு களுக்கிடையேயான உறவுமுறை கள் பாதுகாக்கப்படுகின்றன.

**syllable structure : அசை பிரிப்பி.**

**symbol : குறியீடு; குழூஉக்குறி :** 1. எழுத்து, எண் அல்லது அடை யாளம். ஒரு எண் இயக்கம் அல்லது உறவைக் குறிப்பிடு வது. 2. கணினியின் எழுத்துத் தொகுதியில் ஏதாவது ஒன்று.

**symbol font : குறியீட்டு எழுத் துரு :** சிறப்புவகை எழுத்துரு. வழக்கமான எழுத்துகள், நிறுத்தற்குறிகள், எண்களுக்குப் பதிலாக சிறப்பு அடையாளங் களைக் கொண்டிருக்கும். கணித அறிவியல், மொழியியல் குறி யீடுகள், பிறமொழி எழுத்துகள் இருப்பதுண்டு.

**symbolic address : குறியீட்டு முகவரி; குழூஉக்குறி முகவரி :** குறியீடுகளின் மூலம் கூறப் படும் முகவரி. கணினியால் மொழிபெயர்க்கப்படுவதற்கு முன்பாக தொகுப்பியினால் முழு முகவரியாக மாற்றப்படு வது. நிரல் தொடர் அமைப்ப வருக்கு எளியது.

**symbolic coding : அடையாளக் குறியீடமைத்தல் :** எந்திரமொழி யல்லாத குறியீட்டில் எழுதப் பட்ட நிரல்களை குறியீட்டில் அமைத்தல். இயக்கக் குறியீடு கள் இயக்கிகளுக்காக குறியீட்டு எண்முறையே இதில் பயன் படுத்தப்படுகிறது.

**symbolic device : குறியீட்டுச் சாதனம் :** உள்ளீட்டு வெளி யீட்டுக் கோப்பை குறிப்பிடப் பயன்படுத்தப்படும் பெயர். சான்று SYSDSK என்பது ஒரு

காந்த வட்டு அலகைக் குறிப்பிடுகிறது.

**symbolic editor** : குறியீட்டுத் தொகுப்பி : மூலமொழியில் மாற்றங்களைச் செய்ய, தயாரிப்புகளுக்குக் கணினியை உபயோகிப்பவர்களுக்கு உதவும் அமைப்பு நிரல் தொடர். ஒரு செய்தி வரிகளைச் சேர்த்தோ மாற்றியோ அல்லது நீக்கியோ இதைச் செய்யலாம்.

**symbolic I/O Assignment** : குறியீட்டு உள்ளீட்டு/ வெளியீட்டு மதிப்பிருத்தல் : ஒரு அட்டை படிப்பியைக் குறிப்பிட உள்ளீடு/ வெளியீட்டைக் குறிப்பிடும் பெயர்.

**symbolic language** : குறியீட்டு மொழி : கணினி அமைப்பின் உள்ளீட்டு மொழியாக இல்லாத எழுத்துகள், எண்களால் உருவாக்கப்பட்ட போலி மொழி. புனைவு மொழி (Fabricated Language) என்றும் அழைக்கப்படும்.

**symbolic link** : குறியீட்டுத் தொடுப்பு : வட்டில் ஒரு கோப்பகத்திலுள்ள கோப்புப் பட்டியலில், கோப்பகத்திலுள்ள ஒரு கோப்பினைச் சுட்டும் தொடுப்பினைப் பதிவுசெய்து வைத்தல்.

**symbolic logic** : குறியீட்டுத் தருக்க முறை.

**symbolic name** : குறியீட்டுப் பெயர்.

**symbolic programming** : குறியீட்டு நிரல் தொடரமைத்தல் : கணினி நிரல் தொடர்களை உருவாக்க குறியீட்டு மொழியைப் பயன்படுத்தல்.

**symbolic table** : குறியீட்டுப் பட்டியல்; குறியீட்டு அட்டவணை : ஒரு குறியீட்டுத் தொகுதியை வேறொரு குறியீடுகள் அல்லது எண்களின் தொகுதியுடன் ஒப்பிடும் பட்டியல். சான்றாக சேர்ப்பி (Assembly)யில் குறியீட்டுப் பட்டியலில் சேர்க்கப்பட்ட நோக்க நிரல் தொடர் முகவரியின் குறியீட்டு அடையாளம் இருக்கும்.

**symbol set** : குறியீட்டுத் தொகுதி : ஒரு நிரலாக்க மொழிக்குரிய குறியீடுகள் அல்லது ஆஸ்கியின் நீட்டிப்புக் குறியீடுகள் போன்ற ஒரு தரவுக் குறியாக்க முறைமை (Data Encryption System)யில் அனுமதிக்கப்பட்டுள்ள குறியீடுகளின் திரட்டு.

**symbol string** : குறியீட்டுச் சரம் : குறியீடுகளை மட்டுமே கொண்ட சரம்.

**symbol table** : குறியீட்டு அட்டவணை.

**symmetric digital subscriber line :** சீரொழுங்கு இலக்கமுறை சந்தாதாரர் இணைப்பு : செப்புக் கம்பிகளில் இருதிசைகளிலும் வினாடிக்கு 384 கிலோ பிட்டு கள் வேகத்தில் தரவுப் பரிமாற் றத்தை இயல்விக்கும் இலக்க முறைத் தொலைத் தகவல் தொடர்புத் தொழில் நுட்பம்.

**symmetric multiprocessing :** செஞ்சீர் பல்செயலாக்கம் : எந்த மையச் செயலகத்துக்கும் பயன் பாட்டு நிரல் அளிக்கத்தக்க பல் செயலாக்க வடிவமைப்பு. ஒரு மையச் செயலகமாகவோ அல்லது நிரலமைப்பவராகவோ செயல்படும். இவ்வாறே கணினியை ஏற்றி அடுத்துள்ள மையச் செயலகத்துக்கு வேலை யைப் பிரித்துக் கொடுத்து உள் ளீடு/ வெளியீடு வேண்டு கோள்களைச் சமாளிக்கிறது.

**symphony :** ஒத்திசைவு : லோட் டஸ் நிறுவனத்தின் பீ.சி.களுக் கான ஒருங்கிணைந்த மென் பொருள் தொகுப்பு. இதில் சொல், விரிதாள், வணிக வரை கலைகள், தகவல் தொடர்புகள் மற்றும். ஒரு பெரு மொழி ஆகியவை உள்ளடங்கும்

**SYN :** சின்; எஸ்ஒய்என் : ஒத் திசைவு செயல்படா எழுத்து என்று பொருள்படும் Synchronized Idle Character என்பதன் சுருக்கம். நேர ஒத்திசைவுள்ள தகவல் தொடர்புகளில் பயன் படுத்தப்படும் எழுத்து/குறி. அனுப்பும்/பெறும் சாதனங்கள் நேர ஒத்திசைவைப் பராமரிக்க இது உதவும்.

**sync character :** இசைவுரு : ஒரே நேரத்தில் தகவல் தொடர்பு களில் எழுத்துகளை ஒரே நேரத் தில் இயங்கச் செய்வதற்கு அனுப்பப்படும் எழுத்து.

**synchronization :** ஒரே நேரத்திய அமைப்பு ; ஒத்தியக்கம் : நிகழ்வு களை காலமுறைப்படி ஒழுங்கு படுத்துதல். தற்செயலாக ஒரே நேரத்தில் ஏற்படுவதாகவோ அல்லது குறிப்பிட்ட கால இடைவெளியில் ஏற்படு வதாகவோ அமைக்கப்படும்.

**synchronization check :** ஒரே நேரத்தில் நடைபெறும் சோதனை; ஒத்தியக்கச் சரி பார்ப்பு : சரியான நேரத்தில் ஒரு குறிப்பிட்ட நிகழ்வு அல்லது சூழ்நிலை ஏற்படுகிறதா என்பதை முடிவு செய்ய நடைபெறும் சோதனை.

**sychronized :** ஒத்திசைந்த.

**synchronize now :** இப்பொழுது ஒத்திசைவி.

**synchronous :** ஒத்தியக்க ; சீராக; சேர்ந்தாற்போல் : ஒவ்வொரு நிகழ்வு அல்லது ஒரு அடிப்

படை இயக்கத்தின் செயல் ஆகிய வற்றைத் துவங்கவும், அவற்றின் அடுத்த நிலைக்குப் போகவும் ஒரு நேரம் காட்டும் கடிகாரத் தின் சமிக்கைகளை ஒட்டி நடை பெறுவதைக் குறிப்பிடுகிறது.

**synchronous communication :** ஒரே நேரத்திய தரவுத் தொடர் புகள்; ஒத்தியக்கச் செய்தித் தொடர்பு : கணினிகளுக்கிடை யில் மிக அதிகவேகத்தில் தரவு களைப் பரிமாறிக்கொள்ளும் முறைகள். கவனமாக நேரம் அமைத்தலும், சிறப்பு கட்டுப் பாட்டுக் குறியீடுகளும் இதில் தேவை.

**syncrhronous computer :** ஒரே நேர கணினி; ஒத்தியியக்கக் கணினி : ஒரு கடிகாரம் உருவாக் கும் சமிக்கையின் விளைவாக இயக்கம் துவக்கப்படும் கணினி.

**synchronous DRAM :** ஒத்திசைவு டி'ரேம் : இயங்குநிலை குறிப் பிலா அணுகு நினைவகத்தின் (Dynamic Random Access Memory) ஒருவகை. வழக்கமான டி'-ரேம் நினைவகத்தைவிட உயர்கடிகார வேகத்தில் செயல் படக்கூடியது. ஒருவகை வெடிப்பு நுட்பத்தின் மூலம், அடுத்து அணுகவிருக்கும் நினை வக இருப்பிடத்தை முன்னறிந்து செயல்படும் திறன் படைத்தது.

**synchronous network :** ஒரே நேரத்திய கட்டமைப்பு ; ஒத்தியக்கப் பிணையம் : ஒரு பொது கடிகாரத்தின் துடிப்புக் கேற்ப ஒரே நேரத்தில் தகவல் தொடர்பு வழித்தடங்கள் செயல்படும் பிணையம்.

**synchronous operation :** ஒரே நேரத்திய இயக்கம்; ஒத்தியக்கச் செயல்பாடு : கடிகாரத் துடிப்பு களின் கட்டுப்பாட்டின்கீழ் இயங் கும் ஒரு கணினி அமைப்பு.

**synchronous protocol :** ஒத் தியக்க வரைமுறை : பைசிங்க், எஸ்டிஎல்சி, எச்டிஎல்சி போன்ற ஒத்தியக்க செலுத்தியைக் கட்டுப்படுத்தும் தகவல் தொடர்பு வரைமுறை.

**synchronous transmission :** ஒரேநேரத்தில் தரவு அனுப்புதல்; ஒத்தியக்கச் செலுத்தம் : ஒரு குறிப்பிட்ட விகிதத்தில் துண்மி கள் அனுப்பப்படும் முறை. நேர ஒருங்கிணைப்புக்கு ஒரே கடிகார சமிக்கைகளையே பயன் படுத்தி அனுப்புதலும், பெறு தலும் செய்தல்.

**synchronous UART :** ஒத்திசைவு யுஏஆர்டீ : யுஏஆர்டீ என்பது உலகப் பொதுவான ஒத்திசையா வாங்கி/அனுப்பி (Universal Asynchronous Receiver/ Transmitter) என்பதைக் குறிக்

கிறது. அனுப்பியும் வாங்கியும் ஒரே நேரச் சமிக்கையைப் பகிர்ந்து கொண்டால் ஒத்திசைவு நேரியல் தகவல் பரிமாற்றம் இயலும்.

**sync signal :** ஒத்திசை சமிக்கை : ஒத்திசைவுச் சமிக்கை (Synchronization Signal) என்பதன் சுருக்கம். கிடைவரி (Raster) ஒளிக்காட்சிச் சமிக்கையின் ஒரு பகுதி. ஒவ்வொரு வருடுவரியின் இறுதியையும் (கிடைமட்ட ஒத்திசைச் சமிக்கை), கடைசி வருடுவரியின் இறுதியையும் (செங்குத்து ஒத்திசைச் சமிக்கை) இது கொண்டிருக்கும்.

**synonym :** மாற்றுப் பெயர் : ஆர்டிபி எம்எஸ் தரவுதளத் தொகுப்பில் ஓர் அட்டவணைக்கு இன்னொரு மாற்றுப் பெயர் சூட்டி அதனையே கையாளலாம்.

**synonym dictionary :** இணைச் சொல் அகராதி (அகரமுதலி).

**syntax :** இலக்கணம்; தொடரியல் : ஒரு மொழி மற்றும் அதன் வெளிப்பாடுகளின் அமைப்பைக் குறித்த விதிகள். எல்லா தொகுப்பு நிலை மற்றும் உயர் நிலை மொழிகளும் ஒரு முறையான இலக்கணத்தைக் கொண்டவை.

**syntax analyser :** சொற்றொடர் பகுப்பி; சொற்றொடரிலக்கண பகுப்பாய்வி.

**syntax checker :** தொடரமைப்பு சரிபார்ப்பி : ஒரு நிரலாக்க மொழியில் கட்டளைத் தொடர் அமைப்புகளிலுள் பிழைகளை அடையாளம்காட்டும் ஒரு நிரல்.

**syntax diagram or flowchart :** இலக்கணத் தொடரியல் வரை படம் அல்லது பாய்வு வரை படம் : ஒரு குறிப்பிட்ட மென் பொருள் பயன்பாட்டின் இலக்கண விதிகளைக் காட்டும் பாய்வு வரைபடம். நிரல் தொடரமைப்பு மொழிகளில் பயன்படுத்தப்படுகிறது.

**syntax error :** இலக்கணப் பிழை : பயன்படுத்தப்படும் நிரல் தொடர் மொழியின் அமைப்பைக் குறித்த விதியை மீறுதல். READ என்பதற்குப் பதிலாக RIAD என்று தட்டச்சு செய்தால் அதற்குப் பொருள் என்ன என்று புரியாமல் கணினி தடுமாறும். இத்தகைய நிரல் தரப்படுமானால் உடனே கணினியிடமிருந்து 'பிழை' என்று பதில் வரும். சான்றாக, 110இல் பிழை வந்தால் ஆபத்தில்லை அல்லது ஆபத்தான பிழை என்று அது கூறும்.

**syntax rules :** இலக்கண விதி முறைகள்.

**synthesis :** ஒருங்கிணைவு; இணைப்பாக்கம் : தனித்தனி

உறுப்புகளை ஒருங்கிணைத்து இசைவிணைவான ஒரு முழு மையைப் பெறுதல். (எ-டு) : தனித்தனி இலக்கமுறைத் துடிப்புகளை ஒருங்கிணைந்து ஒலியை உருவாக்க முடியும். இல்க்கமுறைச் சொற்களை ஒருங்கிணைத்து மனிதப் பேச்சினை செயற்கையாக உருவாக்க முடியும்.

**synthesizer** : தொகுப்பி : ஒலியைத் தானாகவே உருவாக்கவோ அல்லது செயலாக்கவோ செய்யும் வெளியீட்டுச் சாதனத்தை தொகுப்பி என்று சொல்லலாம். சில தொகுப்பிகளில் நுண் செயலகங்கள் இருக்கும். கட்டுப் பாட்டுச் சாதனமாக அவை பயன் படுத்தப்படும். குரல் தொகுப்பிகள் தருகின்ற ஒலி, ஒரு நபர் பேசுவதற்காகவோ, இசைக் கருவிகளைப் போலவோ இருக்கும்.

**.sys** : .சிஸ் : முறைமை தகவமைவுக் கோப்புகளின் வகைப் பெயர். (extention).

**sysadmin** : சிஸ்அட்மின் : பெரும்பாலான யூனிக்ஸ் இயக்க முறைமைகளில் முறைமை நிர்வாகியின் புகு பதிகைப் பெயர் அல்லது மின்னஞ்சல் முகவரி.

**SYSOP** : சிசாப் : system operator என்பதன் குறும்பெயர். ஒரு மின்னணு செய்திப் பலகையை இயக்குபவர்.

**sysReq key** : சிஸ்ரக் விசை : system request key என்பதன் குறும்பெயர். மையக் கணினியின் கவனத்தை ஈர்க்கப் பயன் படுத்தப்படும் முகப்பு விசைப் பலகையில் உள்ள விசை. பீ.சி. விசைப்பலகைகளில் இந்த விசை உள்ளது. ஆனால், அபூர்வமாகவே பயன்படுத்தப்படுகிறது.

**system** : அமைப்பு; முறைமை : system என்பதை 'முறைமை' என்று கூறலாம். முறைகருவிகளின் திறன்கள், தொழில் நுட்பங்கள், மாற்றப்படக் கூடிய தகவல், ஒரு குறிப்பிட்ட மேலாண்மை நோக்கங்களை அடைவதில் இயக்கத்தை ஆதரித்தல் போன்றவற்றைக் கொண்டது. தொடர்புடைய வசதிகள், பொருள் சார்ந்த சேவைகள், ஆட்கள், தகவல் ஆகியவற்றைக் கொண்ட, விரும்பப்படும் இயக்கத்தைச் செய்வதற்குத் தேவையான தன்னிறைவுத் தன்மை கொண்டது.

**system 7** : சிஸ்டம் 7: மெக்கின் டோஷ் ஆப்பரேட்டிங் சிஸ்டத்தின் முக்கிய மேம்பாட்டு நிலை (1992). இதில் மெய்நிகர் நினைவகம், கூடுதல் நினைவக முகவரியிடல், வெப்ப இணைப்புகள் (பதிப்பு கூட்டு சேர்), பல்

பணியமைத்தல், உண்மை அச்சு எழுத்துகள் மற்றும் பயனாளர் இடைமுகத்துக்கான பலதரப் பட்ட மேம்பாடுகள் உள்ளன.

system 2000 : சிஸ்டம் 2000 : சாஸ் நிறுவனத்தின் பரம்பரை முறை, கட்டமைப்பு மற்றும் உறவுமுறை டிபிஎம்எஸ். இது ஐபிஎம், சிடிசி மற்றும் யூனிசிஸ் கணினிகளில் இயங்கு கிறது. சாஸ் சிஸ்டத்துடன் இது ஒருங்கிணைக்கப்பட்டது.

system administrator : முறைமை நிர்வாகி : ஒரு பல்பயனாளர் கணினி அமைப்பு அல்லது தகவல் தொடர்பு அமைப்பு அல்லது இரண்டையும் நிர் வகிக்கும் பொறுப்பினை வகிக் கும் நபர். இவரே, பயனாளர் களை உருவாக்குகிறார்; நுழை சொல் (password) வழங்குகிறார். பல்வேறு பாதுகாப்பு அணுகு நிலைகளை உருவாக்குகிறார். சேமிப்பு இடப்பரப்புகளை ஒதுக்கீடு செய்கிறார். அத்துமீறி நுழையும் நபர்களை, நச்சு நிரல்களைக் கண்காணிக்கிறார்.

system analyser : அமைப்பு பகுப்பாய்வி : சிக்கலான கருவி கள் மற்றும் அமைப்புகளின் கள சேவையின்போது ஆபத்துக்கு பயன்படும் எடுத்துச் செல்லக் கூடிய சாதனம்.

system analysis : அமைப்புப் பகுப்பாய்வு; முறைமைப் பகுப்பாய்வு; அமைப்பு அலசல் : ஒரு கணினி அமைப்பின் பகுதிகள் மற்றும் தேவைகளை விவரமாக ஆய்தல். நிறுவனத் தின் தேவைகளையும் விரிவாக ஆராய்தல். தற்போது பயன் படுத்தப்படும் தரவு அமைப்பு மற்றும் திட்டமிடப்பட்டுள்ள தரவு அமைப்பு ஆகியவற்றை ஆராய்தல்.

system analyst : அமைப்பு பகுப் பாய்வாளர்; முறைமைப் பகுப் பாய்வாளர்; அமைப்பு அலசர் : ஒரு நிறுவன அமைப்பின் நட வடிக்கைகள், முறைகள், நடை முறைகள் மற்றும் தொழில் நுட் பங்களை ஆராய்ந்து எத்தகைய செயல்களைச் செய்ய வேண்டும், அவற்றை எப்படிச் செய்ய வேண்டும் என்பதை முடிவு செய்யும் நபர். அமைப்பு ஆய்வைச் செய்யும் நபர்.

system approach : அமைப்பு அணுகுமுறை : அறிவியல் முறைசார்ந்த சிக்கல் தீர்க்கும் ஒழுங்குமுறையான செயலாக் கம். இது சிக்கல்களை வரை யறை செய்து, முறைமைகளின் சூழ்நிலையில் வாய்ப்புகளை வரையறை செய்கிறது. சிக்கல் அல்லது வாய்ப்பை விவரித்து தரவு தேடப்பட்டு மாற்றுத்

தீர்வுகள் காணப்பட்டு மதிப் பிடப்படுகின்றன. பிறகு, சிறந்த தீர்வு தேர்ந்தெடுக்கப்பட்டு செயல்படுத்தப்படுகிறது. அதன் வெற்றி மதிப்பிடப்படுகிறது.

**system, audit of computer** : கணினி முறைமைத் தணிக்கை.

**system, binary number** : இரும எண் முறைமை.

**system board** : அமைப்பு அட்டை : நுண்கணினியின் முதன்மை மின்சுற்றுப் பலகை. தாய்ப்பலகை, பின் தளம் (mother board, back plane) என்றும் அழைக்கப்படும்.

**system chart** : அமைப்பு வரை படம் : வரைபடத்தின் வகை களில் ஒன்று.

**system clock** : அமைப்பு கடி காரம் : கணினியில் உள்ள அனைத்து மின்சுற்றுகளையும் இயக்கும் அடிப்படை துடிப் பினை வழங்குகின்ற படிகம். இதில் 8253 நேரம் காட்டும் சிப்புவும் அடக்கம்.

**system commands** : அமைப்புக் கட்டளைகள்; பொறியமைவு நிரல்கள் : உரையாடல் நேரப் பங்கீட்டுமுறையில் இயக்கும் போது தரப்படும் சிறப்பு நிரல்கள். நிரல் தொடர்களை செயல்படுத்தவும் (RUN) அவற்றை வரிசைப்படுத்தவும் (LIST) சேமிக்கவும் (SAVE) மற்றும் இத்தகைய இயக் கங்களைச் செய்யவும் அவை கணினிக்கு நிரலிடுகின்றன.

**system component matrix** : அமைப்புப் பகுதிகள் அச்சுரு அமைப்பு : வன்பொருள், மென் பொருள், மனிதர்கள், பயன் படுத்தப்படும் வேலைகள் மற்றும் ஒரு தரவு அமைப்பில் உற்பத்தி செய்யப்படும் தரவு பொருட்களை ஆவணப்படுத் தும் அச்சுரு அமைப்பு.

**system console** : முறைமைப் பணியகம் : பெருமுகக் கணினி மற்றும் சிறு கணினி அமைப்பு களில் உள்ள கட்டுப்பாட்டு மையம். பிணைய அமைப்பு களில், பகிர்ந்தமை அமைப்பு களில், முறைமை நிர்வாகிக்கென ஒரு பணிநிலையம் ஒதுக்கப் பட்டிருக்கும். இப்பணி நிலை யம், குறும்பரப்புப் பிணையங் களில் உள்ள முறைமைப் பணியகத்தை ஒத்ததாகும்.

**system context** : அமைப்பு சூழ் நிலை : கணினி அமைப்புகள், துணை அமைப்புகள், கணினி யின் பாகங்கள் ஆகியவைகளை குறிப்பிட்ட சூழ்நிலையில் கண் டறிந்து 'systemic view' என்றும் கூறப்படும்.

**system, database management :** தரவுத் தள மேலாண்மை முறைமை.

**system development :** அமைப்புகள் மேம்பாடு : ஒரு அமைப்பை எண்ணி வடி வமைத்து, அமல்படுத்துதல் புலனாய்வு, பகுப்பாய்வு, வடி வமைப்பு, அமலாக்கம் மற்றும் பராமரிப்பு ஆகிய செயல் முறைகளின் மூலம் ஒரு தரவு அமைப்பை உருவாக்குதல். அமைப்பு உருவாக்க ஆயுள் 'சுழற்சி' தரவு அமைப்பு உரு வாக்கம் அல்லது பயன்பாடு உருவாக்கம் என்றும் கூறலாம்.

**system development cycle :** அமைப்பு உருவாக்க சுழற்சி : பயனாளர் மற்றும் தொழில் நுட்ப அலுவலரின் பரஸ்பர முயற்சி தேவைப்படும் தரவு முறைமை (பயன்பாடு) ஏற் படுத்துவதுபற்றிய தொடர் நிகழ்வுகள். இந்த சுழற்சி முறைமை பகுப்பாய்வு மற்றும் வடிவமைப்பிலிருந்து தொடங்கு கிறது. இதில் வாய்ப்பு ஆய்வு, பொது வடிவமைப்பு, மாதிரி அமைத்தல், விவர வடி வமைப்பு, செயல்பாட்டு விவரக் குறிப்பு ஆகியவை இடம் பெறும். நிரல் தொடரமைப் பில் வடிவமைப்பு, செயல் பாட்டு விவரக் குறிப்பு ஆகியவை இடம் பெறும். நிரல் தொடரமைப்பில் வடி வமைப்பு, குறியீடு சோதித்தல் மற்றும் செயல்படுத்துவதில் பயிற்சி, மாற்றல், நிறுவுதல் ஆகியவற்றையடுத்து இறுதி யாக பயனாளர் ஏற்பு ஆகியவை அடங்கி உள்ளன.

**system development tools :** அமைப்பு உருவாக்கக் கருவிகள் : ஒரு தரவு அமைப்பினை உரு வாக்கல் அல்லது பயன்பாடு களை உருவாக்கலுக்காக ஆய்ந்து, வடிவமைத்து ஆவணப்படுத்த உதவும் வரைகலை, சொற்பகுதி மற்றும் கணினி உதவி கருவிகள் மற்றும் தொழில்நுட்பம்.

**system diagnostics :** அமைப்பு குறை கண்டறிதல்கள் : ஒட்டு மொத்த கணினி அமைப்பின் கோளாறுகளைக் கண்டறிய பயன்படுத்தப்படும் நிரல் தொடர்கள்.

**system disk :** அமைப்புகள் வட்டு; முறைமை வட்டு : அமைப்பு மென்பொருளுக்கு மட்டுமே ஒதுக்கப்பட்ட வட்டுப் பெட்டி அல்லது வட்டு இயக்கி. இதில் செயலாக்க அமைப்பு சேர்ப்பிகள், தொகுப்புகள் மற்றும் பிற பயன்பாடு கட்டுப்பாடு நிரல் தொடர்கள் அடங்கி உள்ளன. இயக்க

முறைமை பதிவு செய்யப் பட்டுள்ள வட்டு. கணினியை இயக்க இந்த வட்டினைப் பயன்படுத்தலாம்.

system, disk operating : வட்டு இயக்க முறைமை.

systems engineer : முறைமைப் பொறிஞர்; அமைப்புப் பொறியாளர் : அமைப்பு ஆய்வு, அமைப்பு வடிவமைப்பு மற்றும் அமைப்பு நிரல் தொடர் பணிகளைச் செய்யும் நபர்.

system engineering : அமைப்பு பொறியியல்.

system error : முறைமைப் பிழை : இயக்க முறைமை தொடர்ந்து இயல்பாகச் செயல் பட முடியாதபடி முடக்கிப் போடுகிற மென்பொருள் பிழை. இப்பிழை ஏற்படின் கணினியை மீண்டும் இயக்குவதைத் தவிர வேறு வழியில்லை.

system failure : அமைப்புக் கோளாறு : வன்பொருள் அல்லது மென்பொருள் செயல் படாமை. செயலாக்க அமைப் பின் சிக்கலுடன் சேர்ந்த சிக்கலை இது குறிப்பிடலாம்.

system file : முறைமைக் கோப்பு : மெக்கின்டோஷில், இயக்க முறைமைக்குத் தேவையான எழுத்துருக்கள், சின்னங்கள், முன்னிருப்பான உரையாடல் பெட்டிகள் போன்ற வளங் களைக் கொண்டுள்ள வளக் கோப்பு.

system flowchart : முறைமை பாய்வு நிரல்படம்; அமைப்பு பாய்வு வரைபடம் : கணினி அமைப்பின் ஒரு பகுதி அல்லது முழுவதையும் வரைபட உருவில் குறிப்பிடுதல். ஒன்றோ டொன்று இணைந்துள்ள பாய்வு வரைபடக் குறியீட்டு முறையில் வரிசைப்படுத்தி குறியிட்ட பயன்பாட்டுக்கு ஏற்ப திட்ட மிடல், கட்டுப்பாடு மற்றும் இயக்க வர்ணனைகளோடு கணினி இயக்கம் குறிப்பிடப் படும்.

system folder : அமைப்பு மடிப்பு : மெக்கன்டோஷில் உள்ள ஃபோல்டர். இதில் சிஸ்டம், ஃபைன்டர், மல்டி ஃபைன்டர், அச்சக இயக்கி களின் எழுத்துகள், மேசை துணைப் பொருள்கள், ஐ என் ஐ டி-க்கள் மற்றும் சிடேவ்ஸ் (cdeus) ஆகியவை உண்டு.

system followup : அமைப்பின் தொடரல் : புதிர் நிறுவப்பட்ட கணினி இயக்கம் அதன் திட்டப் படி செயல்படுகிறதா என் பதைத் தொடர்ந்து மதிப்பீடு செய்து பரிசீலித்தல்.

**system font :** முறைமை எழுத்துரு : மெக்கின்டோஷ் மற்றும் சில பீசி பயன்பாடுகளில், பட்டித் தலைப்புகள், பட்டித் தேர்வுகள் போன்ற திரைத் தோற்ற உரைகளுக்கு கணினியால் பயன்படுத்தப்படும் எழுத்துரு. (ஆனால் சொல்செயலி அல்லது பிற பயன்பாடுகளில் உருவாக்கப்படும் ஆவணங்களில் இருக்கும் எழுத்துரு அல்ல).

**system generation (SYSGEN) :** அமைப்பு உருவாக்கம் (சிஸ்ஜெம்) : ஒரு குறிப்பிட்ட இடத்தில் நிறுவப்பட்டு, ஒரு அடிப்படை அமைப்பை துவக்கும் செயல். விற்பனையாளரிடமிருந்து பெறப்பட்ட பொதுவான செயலாக்க அமைப்பு முறையைத் தனிப்பட்ட பயனாளர் தேவைக்கேற்ப மாற்றுதல்.

**system house :** அமைப்பு அகம்; முறைமை அகம்; அமைப்புகளின் நிறுவனம் : பயனாளரின் தேவைகளுக்கேற்ப வன்பொருள், மென்பொருள் அமைப்புகளை உருவாக்கும் நிறுவனம்.

**system image :** அமைப்பு உரு : செயலாக்க அமைப்பு, ஓடும் நிரல் தொடர்கள் உள்ளிட்ட நடப்புச் செயலாக்கம் சூழ்நிலையின் நினைவகப் பார்வை.

**system implementation :** அமைப்பு அமலாக்கம் : ஒரு புதிய (கணினி) அமைப்பை உருவாக்குவதில் இறுதி நிலை. இந்த நிலையில் அமைப்பில் உள்ள பிழை முழுவதும் நீக்கப்படுகிறது. இது பயன்படுத்துவோரால் ஏற்றுக்கொள்ளப்படுகிறதா என்றும் சரியாக இயங்குகிறதா என்றும் முடிவு செய்யப்படுகிறது.

**system installation :** அமைப்பு நிறுவுதல் : ஒரு புதிய அமைப்பை இயக்கத்துக்குக் கொண்டு வருவதற்கான நடவடிக்கைகள்.

**system integration :** முறைமை ஒருங்கிணைப்பு : பல்வேறு மூலக் கருவித் தயாரிப்பாளர்களின் (OEMs) பொருட்களை ஒருங்கிணைத்து ஒரு குறிப்பிட்ட வாடிக்கையாளருக்காக உருவாக்கப்படுகின்ற ஒரு கணினி அமைப்பு.

**system integrator :** முறைமை ஒருங்கிணைப்பி.

**system interrupt :** அமைப்புக் குறுக்கீடு : ஒரு குறிப்பிட்ட இடத்தில் நிறுத்தப்பட்டாலும் மீண்டும் அந்த இடத்தில் இருந்து துவக்கப்படும் வகையில் நிரல் தொடர் அல்லது வாலாயத்தின் (ரொட்டீனின்)

வழக்கமான இயக்கத்தை நிறுத்துதல்.

system investigation : அமைப்பு புலனாய்வு : ஒரு வணிகச் சிக்கலுக்காகத் திட்டமிடப்படும் தரவு அமைப்பு தீர்வு குறித்த முதல் நிலை ஆய்வு மற்றும் திரையிடும் தேர்வு.

system, knowledge based : அறிவு வழி முறைமை.

system level : அமைப்பு நிலை : செயலாக்க அமைப்பு முறை அல்லது வேறுசில கட்டுப்பாட்டு நிரல் தொடர் செய்கின்ற இயக்கம்.

system library : முறைமை நூலகம்; அமைப்பு நூலகம்.

system life cycle : அமைப்பு ஆயுள் சுழற்சி : ஒரு தரவு அமைப்பின் பயனுள்ள வாழ்நாள். அதன் வாழ்நாளானது வணிகத்தின் தன்மை மற்றும் ஓட்டம், அத்துடன் தரவுத் தளம் மற்றும் பயன்பாடுகளை உருவாக்கப் பயன்படும் மென்பொருள் மேம்பாட்டுக் கருவிகளைப் பொறுத்தே அமையும்.

system loader : அமைப்பு ஏற்றி : அமைப்பு நூலகத்தில் உள்ள நிரல் தொடர்களைக் கண்டறியவும் கணினி அமைப்பின் உள் சேமிப்பகத்தில் அதை ஏற்றவும் பயன்படும் மேற்பார்வை நிரல் தொடர்.

system maintenance : அமைப்பு பராமரிப்பு : விரும்பத்தக்க அல்லது தேவையான மேம்பாடுகளைச் செய்வதற்காக ஒரு அமைப்பை கண்காணித்து, மதிப்பிட்டு, மாற்றுதல்.

system management information : அமைப்பு மேலாண்மை; மேலாண்மைத் தகவல் முறைமை.

system manual : முறைமை விளக்க நூல்; அமைப்புக் கையேடு : ஒரு அமைப்பின் இயக்கத்தைக் குறித்த தரவைக் கொண்டுள்ள ஆவணம். நிறுவனத்தின் தரவு ஓட்டம் பயன்படுத்திய படிவங்கள், உருவாக்கிய அறிக்கைகள், செய்யப்பட்ட கட்டுப்பாடுகள் அவற்றை முடிவு செய்ய தேவையான விவரங்களை நிர்வாகத்துக்கு அளிப்பது. வேலையின் விளக்கங்களும் பொதுவாக அளிக்கப்படும்.

system memory : அமைப்பு நினைவகம் : செயலாக்க அமைப்பைப் பயன்படுத்துகின்ற நினைவகம்.

system monitor : முறைமைக் கண்காணி.

system, operating : இயக்க முறைமை.

**system priorities :** முறைமை முன்னுரிமைகள்; அமைப்பு முன்னுரிமைகள் : தரவு அமைப்புத் திட்டங்களை எந்த வரிசையில் எடுத்துக் கொள்ளலாம் என்பதை முடிவு செய்யும் முன்னுரிமைகள்.

**system programmer :** முறைமை நிரல்; அமைப்பு நிரல் தொடராளர் : 1. ஒரு கணினியின் ஒட்டு மொத்த உற்பத்தித் திறனை மேம்படுத்தும் வகையில் அமைப்பின் பயன்பாட்டை திட்டமிட்டு, உருவாக்கி, கட்டுப்படுத்தி, பராமரித்து வரும் நிரல் தொடராளர். 2. நிரல் தொடரமைக்கும் அமைப்புகளை வடிவமைக்கும் நிரல் தொடராளர்.

**system programming :** அமைப்பு நிரல் தொடரமைத்தல் : கணினியின் செயலாக்க அமைப்புகளாக அமையும் நிரல் தொடர்களை உருவாக்குதல். சேர்ப்பிகள், தொகுப்பிகளின் கட்டுப்பாடு நிரல் தொடர்கள் மற்றும் உள்ளீடு/வெளியீடுகளைக் கையாள்தல் போன்றவை இத்தகைய நிரல் தொடர்கள். செயலாக்க அமைப்பு மென்பொருளை உருவாக்கிப் பராமரித்தல்.

**system prompt :** அமைப்புத் தூண்டி: கட்டளைக்காக செயலாக்க அமைப்பு காத்திருக்கிறது என்பதை குறிப்பிடும் திரையின் மேலுள்ள குறியீடு.

**system recovery :** முறைமை மீட்சி : கணினி செயல்படாமல் முடங்கிப்போகும்போது, அதனை செயல்படும் நிலைக்குக் கொண்டுவர மேற்கொள்ளும் நடவடிக்கை. இயக்க முறைமை செயல்படத் தொடங்கியதும் இந்த நடவடிக்கை தொடங்கும். சிலவேளைகளில் பழுதேற்பட்டபோது செயல்பாட்டில் இருந்த பணிகளை மூட வேண்டியிருக்கும். பழுதின் போது நினைவகத்திலிருந்து கட்டமைப்புகளை மீட்டுருவாக்க வேண்டியிருக்கும்.

**system requirements :** அமைப்புத் தேவைகள் : இறுதிப் பயனாளரின் தரவுத் தேவைகளை ஈடுசெய்யத் தேவைப்படும் தரவு அமைப்பின் திறன்கள். செயல் தேவைகள் Functional requirements என்றும் அழைக்கப்படும்.

**system reset :** அமைப்பை மீண்டும் சரிசெய்தல் : மீண்டும் அதைத் துவக்கியதாகவோ, நிறுத்தியதாகவோ கணினியை ஏமாற்றும்போது ஏற்படும் இயக்கம்.

**system resource :** முறைமை மூலம்; முறைமை வளம் :

மெக்கின்டோஷில் முறைமைக் கோப்பில் சேமிக்கப் பட்டுள்ள பற்பல நிரல்கூறுகள், வரையறுப்புகள், தகவல் துணுக்குகள் இவ்வாறு அழைக்கப்படுகின் றன. மிதவைப்புள்ளிக் கணக் கீட்டு நிரல் கூறுகள், எழுத்துரு வரையறைகள், புறச்சாதன இயக்கிகள் இவற்றுள் அடங்கும்.

**system security** : அமைப்பு பாது காப்பு : ஒரு நிறுவனம் மற்றும் அதன் வாடிக்கையாளர்களின் பதிவேடுகளின் இரகசியத்தைப் பாதுகாக்கப் பயன்படுத்தப் படும் வன்பொருள் மற்றும் மென்பொருளின் தொழில் நுட்ப கண்டுபிடிப்புகளும், மேலாண்மை நடைமுறைகளும்.

**systems management** : அமைப்பு மேலாண்மை: அமைப்பு உரு வாக்கல் மேலாண்மை. இதில் அமைப்பு ஆய்வு மற்றும் வடி வமைப்பு, பயன்பாட்டு மேம் பாடு மற்றும் அமலாக்கம் ஆகியவை உள்ளன.

**system software** : அமைப்பு மென் பொருள் : ஒரு கணினி அமைப்பின் இயக்கங்களுக்கு உதவி, கட்டுப் படுத்தும் நிரல் தொடர்கள். அமைப்பு மென் பொருள் என்பது செயலாக்க அமைப்பு போன்ற பலதரப் பட்ட நிரல்தொடர்களைக் குறிப்பது. தரவுத் தள மேலாண்மை அமைப்பு, தகவல் தொடர்பு கட்டுப்பாடு நிரல் தொடர்கள், சேவை மற் றும் பயன்பாடு நிரல் தொடர் கள் மற்றும் நிரல் தொடர் மொழி பெயர்ப்பிகள் ஆகி யவை இவ்வகையில் சேரும்.

**system software packages** : அமைப்பு மென்பொருள் தொகுப்பு : கணினியை இயக்கி, கட்டுப்படுத்தி அதன் செய லாக்கத் திறன்களை அதிகரிப் பதற்காக வடிவமைக்கப்பட்ட சிக்கலான நிரல் தொடர்களின் தொகுதி.

**systems solution methodology** : அமைப்பு தீர்வு வழிமுறை : சிக்கல் தீர்வுக்கான அமைப்பு அணுகுமுறை. உண்மை வணிக சூழ்நிலைகள், மாதிரி ஆய்வு களுக்காக இதை வழிமுறையாக மாற்றிச் சொல்லப்படுகிறது.

**system specifications** : அமைப்பு விளக்கக் குறிப்புகள் : அமைப்பு வடிவமைப்பு நிலை யின் உற்பத்திப் பொருள். வன் பொருள், மென்பொருள், வசதி கள், ஆட்கள், தரவுத் தளம் மற்றும் திட்டமிடப்பட்ட தரவு அமைப்பின் பயனாளர் இடை முகம் ஆகியவற்றைப் பற்றிய விளக்கக் குறிப்புகளை இது கொண்டுள்ளது.

**systems programms :** அமைப்பு நிரல் தொடர்கள் : கணினி அமைப்புகளின் உள் இயக்கங் களைக் கட்டுப்படுத்தும் நிரல் தொடர்கள். செயலாக்க அமைப்புகள், தொகுப்பிகள், மொழி பெயர்ப்பிகள், சேர்ப்பி கள், வரைகலை ஆதரவு நிரல் தொடர்கள் மற்றும் கணித வாலாயம்கள் போன்றவை இத் தகைய நிரல் தொடர்களாகும்.

**systems study :** அமைப்பு ஆய்வு : ஒரு வணிக அமைப்பை நிறுவவோ அல்லது மாற்றி அமைக்கவோ ஏற்றதா என்பதை முடிவு செய்யும் ஆய்வு.

**system support :** அமைப்பு உதவி : அமல்படுத்தப்படும் ஒரு கணினி அமைப்பின் பயன் மற்றும் மேம்பாட்டுக்கான சேவைகள் மற்றும் பொருள் களைத் தொடர்ந்து வழங்குதல்.

**system support programms :** அமைப்பு உதவி நிரல் தொடர் கள் : ஒரு கணினி அமைப்புக்கு பலதரப்பட்ட உதவி சேவை களை அளித்து அதன் இயக்கம், மேலாண்மை மற்றும் பயனாளர்களுக்கு உதவிடும் நிரல்தொடர்கள். அமைப்புப் பயன்பாடுகள் மற்றும் செயல் பாடு, காட்சித்திரைகள் இதற்குச் சான்றுகள்.

**systems synthesis :** அமைப் பைப் பிரித்தறிதல் : ஒரு சிக்கலைத் தீர்ப்பதற்கான நடை முறைகளைத் திட்டமிடுதல்.

**system termination :** அமைப்பு நிறுத்தம் : ஒரு கணினி அமைப் பில் உள்ள அனைத்துச் செய லாக்கங்களும் நிறுத்தப்பட்ட நிலை.

**system test :** அமைப்புச் சோதனை : சோதனைக்காக ஒரு முழு கணினி அமைப்பினை ஓட்டுதல்.

**system testing :** அமைப்பு களைச் சோதித்தல் : அமைப்பு ஆய்வாளர் விரும்பும் வண்ணம் உள்ளீடு/வெளியீடு உள்ளிட்ட அனைத்து நிரல் தொடர்களும் தொடர்பு கொண்டுள்ளதா என் பதை வரிசையாக தொடர் நிரல் தொடர்கள் மூலம் சோதித்தல்.

**system time/date :** அமைப்பு நேரம்/நாள் : கணினி நிறுத்தப் பட்டாலும் ஒரு மின்கலம் மூலம் நேரமும், நாளும் தொடர்ந்து ஓடிவருதல். புதி தாக உருவாக்கப்பட்ட அனைத்து கோப்புகளுக்கும் முத்திரை யிடவும், நேரம் சார்ந்த செயல் களைச் செய்யவும் இது தேவைப் படுகிறது.

**system tools :** முறைமைக் கருவிகள்.

**system unit :** அமைப்பு அலகு : நிலை வட்டு மற்றும் நெகிழ் வட்டு இயக்கிகள் போன்ற செயலாக்க அலகு மற்றும் சாதனங்களைக் கொண்ட கணினி யின் ஒரு பகுதி. ஐபிஎம். பீசி ஏற்புடைய அமைப்பு அலகில் நுண் செயலக சிப்பு, ரோம், ரேம் மற்றும் உள்ளீடு/வெளியீடு வழித்தடம் ஆகியவை இருக் கும். ஒன்று, இரண்டு அல்லது பல தட்டு இயக்கிகளும், வெளிப்புறப் பொருள்களைச் சேர்ப்பதற்கான விரிவாக்கப் பகுதிகளும் அதில் இருக்கலாம்.

**system user :** அமைப்புப் பயனா ளர் : ஒரு அமைப்பின் வசதிக் காகப் பயன்படுத்தும் ஒரு நபர், சாதனம் அல்லது ஒரு அமைப்பு.

**system utility programms :** அமைப்பு பயன்பாட்டு நிரல் தொடர்கள் : சிக்கல்களுக்குத் தீர்வு காணும்போதோ அல்லது இயக்கத்தின் ஒட்டுமொத்த, திறனை மேம்படுத்தவோ அமைப்பு நிரல் தொடராளருக்கு உதவும் நிரல் தொடர்களின் தொகுதி.

**System V :** சிஸ்டம் V : ஏடீ&டீ நிறுவனத்தினர் வெளியிட்ட யூனிக்ஸின் ஒரு பதிப்பு. இது தரப்படுத்திய பதிப்பாகும். இதனடிப்படையில் பல்வேறு வணிகத் தயாரிப்புகள் உரு வாக்கப்பட்டன.

**system V release 4.0 :** சிஸ்டம் V வெளியீடு 4.0 : 1989இல் வெளியிடப்பட்ட யூனிக்சின் ஒருங்கிணைக்கப்பட்ட பதிப்பு.

**.sz :** .எஸ்இஸட் : ஓர் இணைய தள முகவரி ஸ்வாஸிலாந்து நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

# T

**T1 or T-1 :** டீ1 அல்லது டீ-1: வினாடிக்கு 1.544 மெகாபிட் (மீமிகு துண்மி) அல்லது 24 குரல் தடங்களைக் கையாள வல்ல ஒரு டீ சுமப்பி. குரல் அழைப்புகளைச் சுமந்து செல்ல, ஏடீ&டீ நிறுவனத்தால் வடிவமைக்கப்பட்டது. இந்த உயர் அலைக்கற்றைத் தொலை பேசி இணைப்பில் உரைகளை யும் படிமங்களையும் அனுப்ப வும் பெறவும் முடிந்தது. டீ1 இணைப்புகளை பெரும்பாலும் மிகப்பெரிய நிறுவனங்கள் இணையத் தொடர்புக்காகப் பயன்படுத்திக்கொள்கின்றன.

**T2 or T-2 :** டீ2 அல்லது டீ-2 : வினாடிக்கு 6.312 மெகாபிட் அல்லது 96 குரல் தடங்களைக் கையாளவல்ல ஒரு டீ-சுமப்பி.

**T3 or T-3 :** டீ3 அல்லது டீ-3 : வினாடிக்கு 44.736 மெகாபிட் அல்லது 672 குரல் தடங்களைக் கையாளவல்ல ஒரு டீ-சுமப்பி.

**T4 or T-4 :** டீ4 அல்லது டீ-4 : வினாடிக்கு 274.176 மெகாபிட் அல்லது 4,032 குரல் தடங்களைக் கையாளவல்ல டீ-சுமப்பி.

**tab :** நிறுத்துநிலை; பட்டி அட்ட வணை; அட்டவணைப் பத்தி தாவல் : Terminal Anchor Block என்பதன் குறும்பெயர்.

**tabbing :** நிறுத்தம் : ஒளிக் காட்சித் திரையிலோ அல்லது அச்சுப்பொறியின் அச்சிடும் முனையிலோ ஒரு குறிப்பிட்ட பத்தியில் சுட்டியை (கர்சரை) நகர்த்துதல்.

**tab character :** நிறுத்துநிலை எழுத்து : அடுத்த நிறுத்தத் திற்குப் போவதைக் குறிப்பிடும் ஒரு ஆவணத்தில் உள்ள கட்டுப் பாட்டு எழுத்து.

**tab deimited :** நிறுத்து நிலைக் குறியீடு : புலங்களுக்கிடையில் விலக்கிகளாக நிறுத்து எழுத்து களைப் பயன்படுத்தி அமைக்கப் படும் சொல்கோப்புப் படிவம். காற்புள்ளியால் வரையறை செய்யப்படும் கோப்புகளைப் போலல்லாது, எண்ணெழுத்துத் தரவுகளில் மேற்கோள் குறிகள் இருப்பதில்லை.

**tab group :** நிறுத்து குழு.

**tab intervel :** நிறுத்து இடைவெளி.

**tab key :** நிறுத்தல் விசை : அடுத்த நிறுத்துமிடத்திற்கு சுட்டியை நகர்த்தும் விசைப் பலகையின் விசை.

**table** : பட்டியல் ; அட்டவணை : உடனடி பார்வைக்குத் தயாரான வடிவில் தரவுகளைத் தொகுத்தல். தொடர்ச்சியான இருப்பகங்களில் தரவு சேமிக்கப்படுகின்றன. நெடுவரிசை, கிடைவரிசை வடிவில் எளிதில் நுழைப்பதற்கேற்ப எழுதப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட தரவுவைப் பெறக்கூடிய இடத்தைக் கண்டறிய நெடுவரிசை, கிடைவரிசைகளின் கலப்பு உதவுகிறது.

**table, addition** : கூட்டல் அட்டவணை.

**table, datasheet** : தரவுத் தாள் அட்டவணை.

**table, decision** : தீர்வுகாண் அட்டவணை.

**table design** : அட்டவணை வடிவமைப்பு.

**table file** : அட்டவணைக் கோப்பு.

**table look up** : பட்டியல் பார்வை; அட்டவணை நோக்கல் : ஒரு பட்டியலில் தெரிந்த மதிப்புகளைக் கொண்டு தெரியாத மதிப்பைக் கண்டறியும் நடைமுறை.

**tablet** : வரைவு எண்ணாக்கி : கணினியில் பயன்படுத்துவதற்காக வரைகலைகளையும், படத் தரவுகளையும் மாற்றித்தரும் உள்ளீட்டுச் சாதனம்.

**table view** : பட்டியல் பார்வை : வரிசைகள், பதிவேடுகளையோ அல்லது பலவகைப்பட்ட பொருள்களையோ திரையில் நகர்த்துதல்.

**tabular** : அட்டவணை வடிவு.

**tabular form** : அட்டவணை வடிவம் : அச்சிடப்பட்ட வெளியீட்டுக்கு பட்டியல் பார்வை போன்றது.

**tabulate** : அட்டவணையிடு : 1. கூட்டல்களை அச்சிடு. 2. தரவுகளை பட்டியல் வடிவாக்கு.

**tabulating Equipment** : அட்டவணையிடும் கருவி : துளையிட்ட அட்டை தரவு செயலாக்க எந்திரங்கள், விளக்கிகள், மறு படியெடுப்பிகள், கணிப்பிகள் மற்றும் பட்டியலிடுவிகள் போன்றவை இதில் அடங்கும்.

**tabulator** : அட்டவணையாக்கி : மொத்த எண்ணிக்கைகளைக் காட்டி, அச்சிடும், துளையிட்ட அட்டை கணக்கீட்டு எந்திரம்.

**tab setting** : தத்தல் அமைப்புகள்.

**tabulation** : அட்டவணையிடல்; பட்டியலிடல்.

**tabulation character** : அட்டவணைப்படுத்தும் உரு.

**tabulator clear key** : தத்தல் நீக்கு; அட்டவணையாக்குத் திறவு.

**tabulator key** : அட்டவணையாக்குத் திறவு.

**tabulator mechanism** : அட்டவணையாக்க முறைமை.

**tabulator set key** : அட்டவணை நிறுவுச் சாவி.

**tabulator setting** : அட்டவணை அமைப்பு.

**tabulator stop** : அட்டவணை நிறுத்தம்.

**TACACS** : டக்காக்ஸ் : *முனைய அணுகல் கட்டுப்படுத்தி அணுகல் கட்டுப்பாட்டு முறைமை என்று பொருள்படும்* Terminal Access Controller Access Control System *என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். அனுமதிக்கப்பட்ட பயனாளர்கள் கொண்ட, தரவுத் தளம் சேமிக்கப்பட்டுள்ள, ஓர் மையப்படுத்தப்பட்ட ஒற்றை வழங்கனில் பயனாளர்கள் நுழைவதற்கான ஒரு பிணைய அணுகு நுட்பம். பயனாளரின் அடையாளத்தை அணுகு வழங்கன் உறுப்படுத்தியபின், புகு பதிகைத் தரவுவை பயனாளர் நாடிய தரவுத்தள வழங்கனுக்கு அனுப்பி வைக்கும்.*

**TAF** : முனைய அணுகு வசதி : Terminals Access Facility என்பதன் குறும்பெயர்.

**tag** : அடையாள ஒட்டு ; குறி ஒட்டு: *ஆணையின் முகவரியைப் பாதிக்கும் பட்டியல் பதிவெண்ணைக் கொண்டு செல்லும் நிரலின் பகுதி.*

**tag along sort** : ஒட்டோடு கூடிய வரிசையாக்கம்.

**tag field** : ஒட்டுப் புலம்.

**tag file** : ஒட்டுக் கோப்பு.

**tag sort** : அடையாள ஒட்டு : *பிரிக்கும் நடைமுறை. சரியான வரிசையை உண்டாக்க முக்கிய புலங்கள் முதலில் பிரிக்கப்படும். பின்னர் தரவு பதிவேடுகள் அந்த வரிசையில் வைக்கப்படும்.*

**tag switching** : ஒட்டு இணைப்பித்தல்; குறி இணைப்பாக்கம் : *திசைவித்தலையும்* (routing), *இணைப்பித்தலையும்* (switching) *ஒருங்கிணைத்து சிஸ்கோ சிஸ்டம்ஸ் நிறுவனம் உருவாக்கிய, ஒரு பல்லடுக்கு இணைய இணைப்பாக்கத் தொழில்நுட்பம்.*

**tail** : வால் : *ஒரு பட்டியலின் கடைசிப்பகுதியைக் கண்டுபிடிக்கும் சிறப்புத் தரவு பொருள்.*

**tail form** : வால் படிவம்.

**tail frame** : வால் சட்டம்

**tailing** : இறுதி காணல்.

**tailor made :** சிறப்பாகச் செய்யப் பட்ட : ஒரு குறிப்பிட்ட பணி, வணிகம் அல்லது வகையான மக்களுக்காக எழுதப்பட்ட ஒரு நிரல் தொடரை இது குறிக் கிறது. ஒரு தனிப்பட்ட வாடிக் கையாளர் இத்தகைய நிரல் தொடரைக் கேட்பார் அல்லது யாருக்கு வேண்டுமானாலும் விற்கப்படலாம்.

**talk :** டாக்; (பேசு; பேச்சு) : ஒரு யூனிக்ஸ் கட்டளை. இணையத் தில் ஓர் ஒத்திசைவு அரட்டைக் கான கோரிக்கையை உருவாக் கும். talk என்னும் சொல்லைத் தொடர்ந்து இன்னொரு பயனாளரின் பெயரும் முகவரி யும் தரப்பட வேண்டும்.

**talker :** டாக்கர் (பேச்சாளி) : இணைய அடிப்படையிலான ஒத்திசைவுத் தரவு தொடர்பு நுட்பம். பெரும்பாலும் பல் பயனாளர் அரட்டைச் செயல் பாடுகளுக்குப் பயன்படுத்தப் படுகிறது. வெவ்வேறு அறை களில், வெவ்வேறு கருத்து களைப்பற்றி அரட்டையில் ஈடுபடுவதற்கென கட்டளைகள் உள்ளன. நிகழ்நேரத்தில் பயனா ளர்கள் தமக்குள்ளே உரை வடி வில் கருத்துகளைப் பரிமாறிக் கொள்ள முடியும்.

**talk.newsgroups :** டாக்.நியூஸ் குரூப்ஸ் : டாக் படிநிலை யிலுள்ள யூஸ்நெட் செய்திக் குழுக்கள். talk. என்னும் முன் னொட்டினைக் கொண்டிருக் கும். விவாதத்துக்கிடமான தலைப்புகளில் வாதங்கள், கலந்துரையாடல்கள் நடை பெறும். ஏழு யூஸ்நெட் செய்திக் குழு படிநிலைகளுள் ஒன்று. பிற ஆறு : comp., misc., news., rec., sci., soc.

**take over :** ஏற்றல்; மேற்கொள்ளல்.

**take up spool :** ஏற்புக் கண்டு.

**talking computer :** பேசும் கணினி : பேச்சு பிரித்தறியும் கருவியைப் பயன்படுத்தி பேச்சை உருவாக்கும் கணினி அமைப்பு.

**tandem computers :** தொடர் இணைப்புக் கணினி : இரண்டு கணினிகள் இணைக்கப்பட்டு ஒரே நேரத்தில் ஒரே சிக்கலுக் காகப் பணியாற்றுவது.

**tandem processors :** தொடரி ணைப்புச் செயலகங்கள் : ஒரு பல் செயலகச் சூழ்நிலையில் ஒன்றோடொன்று இணைந் துள்ள இரண்டு செயலகங்கள்.

**tandy corporation :** டேண்டி நிறுமம் : நுண்கணினி அமைப் புகளின் உற்பத்தியாளரான ரேடியோஷாக் நிறுவனத்தின் தாய் நிறுவனம்.

**tangent :** தொடுவரை.

**tangent point** : தொடுபுள்ளி.

**tangible benefit** : மதிப்பிடக் கூடிய மிகு பலன் : ஒரு குறிப் பிட்ட பண மதிப்பைக் கூறக் கூடிய மிகு பலன்.

**TANSTAAFL** : டான்ஸ்டாஃபல் : இலவசப் பகல்விருந்து என்பது போன்று எதுவுமில்லை என்று பொருள்படும் There ain't no such thing as a free lunch என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணையத்தில் மின்னஞ்சல் அரட்டை, அஞ்சல் பட்டியல், செய்திக் குழுக்கள் மற்றும் பிற நிகழ்நிலை மன்றங் களில் பயன்படுத்தப்படும் சொல்.

**tap** : தட்டு : செய்தித் தொடர்பு களில், குறும் பரப்புப் பிணை யத்தில் முக்கிய அனுப்பும் ஊடகத்துடன் ஏற்படுத்தப்படும் பிணைப்பு.

**tape** : நாடா : தரவு உள்ளீட்டு சேமிப்பு அல்லது வெளியீட்டுக் குப் பயன்படுத்தப்படும் காந்த உணர்பொருள் பூசப்பட்ட அல்லது துளையிடப்பட்ட நீளமான பொருள். படிக்க அல்லது எழுதுவதற்கேற்ற ஓட்டத்திற்கு வசதியாக வரிசை முறையில் நாடாவின் குறுக்கே பல வழித்தடங்களில் தரவு பதிவு செய்யப்படும்.

**tape back-up unit** : நாடா ஆதரவு அலகு : ஒருவகை இரண்டாம் நிலை சேமிப்பகம். நிலைவட்டின் உள்ளடக்கங் களின் தனிப்படி எடுத்துவைக்கப் பயன்படும் நாடாப்பெட்டி.

**tape cartridge** : நாடாப் பேழை.



நாடாப் பேழை

**tape cassette** : நாடாப்பெட்டி : நுண்கணினி அமைப்புகளில் எண் முறை பதிவுக்காகப் பயன் படுத்தப்படும் வரிசைமுறை அணுகுசேமிப்பு ஊடகம்.

**tape code** : நாடாப் பதிவு முறை.

**tape control** : நாடாக் கட்டுப்பாடு.

**tape deck** : நாடா இயக்கி.

**tape drive** : நாடா இயக்ககம்.

**tape dump** : நாடா திணி : அறிக்கை வடிவில் அமைக்கா மல் நாடா உள்ளடக்கங்களை அச்சு வடிவில் எடுப்பது.

**tape label** : நாடா வில்லை : வழக்காமாக காந்த நாடா சுருணையில் உள்ள முதல் பதி வேடு. இதில் நாடாவில் எழுதப் பட்ட நாள், அடையாள எண் அல்லது பெயர் மற்றும் நாடா வில் உள்ள பதிவேடுகளின் எண் ஆகியவை இருக்கும்.

**tape leader** : நாடா முன்பகுதி : காந்த நாடாவின் முதல் சில மீட்டர்கள். அது அழிக்கப்படு வதற்கு வாய்ப்பு அதிகம் இருப் பதால் இவற்றைப் பயன்படுத்தி தரவு சேமிப்பதில்லை.

**tape librarian** : நாடா நூலகர் : கணினியில் அனைத்துக் கோப்பு களையும் பாதுகாப்பாக வைப் பதற்குப் பொறுப்பேற்றவர். காந்த நாடா வட்டுப் பெட்டி களில் உள்ள நிரல் தொடர்கள் மற்றும் தரவுக் கோப்புகள், நுண்திரைப்பட மற்றும் துளை யிட்ட அட்டைகள் ஆகிய வற்றை இவர் பாதுகாப்பார். கோப்பு நூலகர், தரவு நூலகர் அல்லது பாதுகாவலர் என்றும் அழைக்கப்படுபவர்.

**tape library** : நாடா நூலகம் : காந்த நாடா கோப்பினை பாது காப்பான, சுற்றுப்புறக் கட்டுப் பாடுள்ள சூழ்நிலையில் வைத் திருக்கும் சிறப்பு அறை.

**tape, magnetic** : காந்த நாடா.

**tape mark** : நாடா அடையாளம் : ஒரு நாடா கோப்பின் இறுதி முனையைக் காட்டும் கட்டுப் பாட்டுக் குறியீடு.

**tape operating system (TOS)** : நாடா இயக்கச் செயல்முறை : காந்த நாடாவில் நிரல் தொடர் களைச் சேமித்து வைக்கும் இயக்கச் செயல்முறை.

**tape punch** : நாடா துளைப்பி.

**tape reader** : நாடா படிப்பி.

**tape reader, paper** : தாள் நாடா படிப்பி.

**tape reel** : நாடாச் சுருள்.

**tape reproducer** : நாடா படி யெடுப்பி.

**tape resident system** : நாடா அமைப்பு இயக்கமைவு.

**tapes** : நாடாக்கள் : பாலியெஸ் டரை அடிப்பொருளாகக் கொண்டு ஃபெர்ரிக் அமிலத்தைப் பதிவு செய்யும் பரப்பாகக் கொண்டிருக்கும். நாடா சுருணை கள் 500 மீட்டர் நாடாக்களை வைத்திருக்கும். இதில் 100 மீமிகு எட்டியல் அல்லது மேற் பட்ட சேமிப்புத் திறனிருக்கும்.

**tape spool** : நாடாச் சுருள்; நாடா கண்டு.

**tape station** : நாடா இயக்ககம் ; நாடா நிலையம்.

**tape-to card converter :** நாடாவிலிருந்து அட்டைக்கு மாற்றி : காகித நாடா அல்லது காந்த நாடாவிலிருந்து துளையிட்ட அட்டைகளுக்குத் தகவலை மாற்றி அனுப்பும் சாதனம். பொதுவாக இது அணைமுகமாகவே செயலாற்றும்.

**tape transport :** நாடா அனுப்புப் பொறி : நாடா இயக்கியின் எந்திரப் பகுதி.

**tape tree :** நாடா மரம் : யூஸ்நெட் இசைச் செய்திக் குழுக்களிலும், அஞ்சல் பட்டியல்களிலும் பயன்படுத்தப்படுகின்ற கேட்பொலி நாடா வினியோகத்துக்கான ஒரு வழிமுறை. இந்த முறையில், பதிவு செய்யப்பட்ட ஒரு பாடல் பல்வேறு கிளைப் பயனாளர்களுக்கு அனுப்பப்படும். அவர்கள் அதனை பிற பயனாளர்களுக்கு அனுப்பி வைப்பர்.

**tape unit :** நாடா அலகு.

**tape verifier, paper :** தாள் நாடா சரி பார்ப்பி.

**tape volume :** நாடா தொகுதி.

**tape width :** நாடா அகலம்.

**TAPI :** டேப்பி; டீஏபீஐ : தொலைபேசிப் பயன்பாட்டு நிரலாக்க இடைமுகம் என்று பொருள்படும் Telephony Application Programming Interface என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். விண்டோஸ் திறந்த நிலை முறைமைக் கட்டுமானத்தில் (WOSA - Windows Open Systems Architecture) ஒரு நிரலாக்க இடைமுகம். விண்டோஸின் கிளையன் பயன்பாடுகள் ஒரு வழங்கனின் குரல்வழிச் சேவைகளை அணுகுவதற்கு உதவுகிறது. சொந்தக் கணினிகளுக்கும், தொலைபேசிக் கருவிக்கும் இடையே ஊடு செயல்பாட்டை (Interoperability) டேப்பி வழங்குகிறது.

**.tar :** .டார் : டார் நிரல் மூலம் உருவாக்கப்பட்ட இறுக்கப்படாத வடிவமைப்பில் உள்ள காப்பக கோப்பினை அடையாளங்காட்டும் வகைப்பெயர்.

**tar :** டார் : கோப்புகளை ஆவணப்படுத்தி பாதுகாப்பதற்கான யூனிக்ஸ் யூட்டிலிட்டி. 'compress' என்ற சொல்லுடன் சேர்த்துப் பயன்படுத்துகிறது.

**tar[1] :** டார்[1] : நாடாக் காப்பகம் (Tap Archive) என்பதன் சுருக்கம். யூனிக்ஸில் உள்ள ஒரு பயன்கூறு. பயனாளர் விரும்பினால் பல்வேறு கோப்புகளை ஒன்றாகச் சேர்த்து ஒரே கோப்பாக வைத்துக்கொள்ள இது உதவுகிறது. அந்த ஒற்றைக் கோப்பு

.tar என்னும் வகைப் பெயரைக் கொண்டிருக்கும். PKZIP போல, tar கட்டளை கோப்புகளை இறுக்கிச் சுருக்குவதில்லை. எனவே tar கோப்புகளை gzip மூலம் இறுக்கிச் சுருக்க முடியும். இறுக்கிய கோப்புகள் .tar.gz என்னும் வகைப் பெயரைக் கொண்டிருக்கும்.

**tar²** : டார்² : டார் பயன்கூறு மூலம் ஒரு கோப்புத் தொகுதியை ஒற்றைக் கோப்பாக மாற்றுதல்.

**target** : இலக்கு : கோப்பு நகல் பணியில், இலக்கு என்பது நகலெடுத்தது. கோப்புகளை வாங்குகின்ற வட்டு, விவரப் பட்டியல் அல்லது நாடா.

**target code (or) object code** : இலக்குக் குறிமுறை.

**target computer** : இலக்கு கணினி : ஒரு நிரல் தொடர் ஏற்றப்பட்டு ஓட்டப்படும் கணினி.

**target data set** : இலக்குத் தரவு அமைவு :

**target directory** : இலக்குத் தகைவுத் தொகுப்பு ; இலக்கு அடைவு : தரவு அனுப்பப்படுகின்ற விவரப்பட்டியல்.

**target disk** : இலக்கு வட்டு : நிரல் தொடர் அல்லது வட்டு நகலெடுக்கப்படும் வட்டு.

**target drive** : இலக்கு இயக்கி : தரவுகள் பதிவுசெய்யப்படும் வட்டு அல்லது நாடாவைக் கொண்ட இயக்கி.

**target language** : இலக்கு மொழி : வேறு ஒரு மொழியில் சரியாக மொழிபெயர்க்கப்படவேண்டிய மொழி.

**target path** : இலக்கு வழி.

**target programme** : இலக்கு நிரல் தொடர்.

**target statement** : இலக்குக் கட்டளை.

**tariff** : விலைப்பட்டியல்; கட்டண விகிதம் : செய்தித் தரவு தொடர்புகளில் இடம் பெறுகின்ற வெளியிடப்பட்ட விலைப்பட்டியல். ஒரு குறிப்பிட்ட கருவி, வசதி அல்லது தகவல் தொடர்பு பொது அமைவின் பணி ஆகியவற்றுக்கு இவ்வாறு விலை குறிப்பிடப்படுகின்றது.

**task** : பணிக் கடமை; பணிப் பொறுப்பு: கணினி சேமிப்பகத்தில் ஏற்றுதல் அல்லது நிரல் அமைத்தல் போன்ற குறிப்பிட்ட வேலையின் தன்மை.

**task bar** : பணிப்பட்டை : விண்டோஸ் 95/98/மீ/என்டீ/2000 முறைமைகளில் கணினித் திரையின் அடிப்பாகத்தில் தோற்ற

மளிக்கும் வரைகலைக் கருவிப் பட்டை. இயக்கத்திலிருக்கும் பல்வேறு பயன்பாடுகளை சின்னமாக்கி பணிப்பட்டையில் வைத்துக் கொண்டு தேவையானதை மட்டும் செயல்படுத்தலாம். தொடங்கு (Start) பொத்தானும், தேதி, நேரம் போன்ற விவரங்களும் இதில் உண்டு.

taskbar properties : பணிப் பட்டைப் பண்புகள்.

taskbar options : பணிப்பட்டை விருப்பத் தேர்வுகள்.

task button : பணிப்பொத்தான் : விண்டோஸ் இயக்க முறைமையில் ஒரு பயன்பாடு இயங்கிக் கொண்டிருக்கும்போது அதற்குரிய ஒரு பொத்தான் பணிப் பட்டையில் தோற்றமளிக்கும். இவ்வாறு தோற்றமளிக்கும் பொத்தான்கள்மீது சொடுக்கி, தேவையான பயன்பாட்டில் பணிபுரியலாம்.

task despatcher : பணிப் பொறுப்பு செலுத்தி.

task dispatcher : பணிச் செலுத்தி.

task list : பணிக் கடமைப் பட்டியல் : ஒருவர் இயக்குகின்ற அனைத்து பயன்பாடுகளும் காட்டி, அவைகளுக்கிடையில் பிரித்தளிக்க உதவும் ஒரு "விண்டோ" பணிக்கடமை பட்டியலைத் திறக்க வேண்டுமென்றால் "switch to" என்பதை கட்டுப்பாட்டுப் பட்டியலிலிருந்து தேர்வுசெய்யவேண்டும்.

task management : பணி மேலாண்மை : ஒரே நேரத்தில் கணினிக்குள் ஒன்று அல்லது மேற்பட்ட நிரல்தொடர்களை (பணிகளை) ஓட்டுவதைக் கட்டுப்படுத்துகின்ற இயக்க அமைப்பின் பகுதி.

task panel : பணிப்பொறுப்புச் சட்டம்; பணிச் சட்டம்.

task queue : பணிவரிசை.

task swapping : பணிப்பொறுப்பு இடமாற்று : இரண்டு பயன்பாடுகளுக்கிடையில் பிரித்தளித்தல். நடப்பிலுள்ள ஓடும் நிரல் தொடரில் இருந்து வட்டுக்கோ அல்லது பிற அதிவேக சேமிப்பக சாதனத்திற்கோ (துணை நினைவகம் ஈ.எம்.எஸ் போன்றவை) மாற்றிவிட்டு அந்த இடத்தில் வேறொரு நிரல் தொடரை ஏற்றுதல்.

task switching : பணி பிரித்தளித்தல் : தீவிரமான பயன்பாடுகளுக்கு இடையே பிரித்தளித்தல்.

.tc : .டீசி : ஓர் இணைய தள முகவரி துர்க்ஸ்-கைக்கோஸ் தீவுகளைச் சேர்ந்தது என்பதைக்

குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**T-carrier : டீ - சுமப்பி :** ஒரு பொதுச் சுமப்பி வழங்குகின்ற தொலைதூர இலக்கமுறைத் தகவல் தொடர்புத் தடம். இரு முனைகளிலுமுள்ள ஒன்று சேர்ப்பிகள் பல்வேறு குரல் தடங்களை ஒன்றிணைத்து இலக்கமுறைத் தரவுத் தாரைகளாய் (Digital Data stream) அனுப்பி வைக்கின்றன. பெறு முனையில் குரல் தடங்கள் தனித்தனியே பிரிக்கப்படுகின்றன. 1993ஆம் ஆண்டில் ஏடீ&டீ நிறுவனம் டீ-சுமப்பி சேவையை அறிமுகப்படுத்தியது. சுமந்து செல்லும் தட எண்ணிக்கையைப் பொறுத்து பல்வேறு நிலைகள் உள்ளன. டீ1, டீ2, டீ3, டீ4 ஆகியவை உண்டு. குரல் தகவல் தொடர்பு தவிர இணைய இணைப்புக்கும் டீ சுமப்பிகள் பயன்படுகின்றன.

**TcL/Tk : டீசிஎல்/டீகே :** கருவிக் கட்டளைமொழி / கருவித் தொகுதி எனப் பொருள்படும் Tool Command Language/Tool Kit என்பதன் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒரு உரை நிரல் மொழியும் (TCL), ஒரு வரைகலைப் பயனாளர் இடைமுகக் கருவித் தொகுதியும் (TK) இணைந்த ஒரு நிரலாக்க அமைப்பு. டீசிஎல் மொழி ஊடாடு நிரல்களுக்கும், உரைத் தொகுப்பான்களுக்கும் பிழை நீக்கிகளுக்கும், செயல்தளத்துக்கும் கட்டளைகளை வழங்க முடியும். அவை சிக்கலான தரவுக் கட்டமைப்புகளை உரை நிரல்களில் உட்செருகுகிறது.

**TCP : டீசிபீ :** பரப்புகைக் கட்டுப்பாட்டு நெறிமுறை என்று பொருள்படும் Transmission Contol Protocol என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். டீசிபீ/ஐபீ நெறிமுறையில் உள்ளிணைந்தது. தரவலை சிறுசிறு பொதிகளாக்கி, ஐபீ மூலமாக அனுப்பி வைக்கிறது. மறுமுனையிலிருந்து ஐபீ மூலம் பெறப்படும் தரவுப் பொதிகளைச் சரிபார்த்து ஒன்றுசேர்த்து முழுத் தரவுவை வடிவமைக்கிறது. ஐஎஸ்ஓ/ஓஎஸ்ஐ அடுக்குகளில் போக்குவரத்து அடுக்கில் டீசிபீ செயல்படுகிறது.

**TCP/IP : டீசிபீ/ஐபீ :** பரப்புகைக் கட்டுப்பாட்டு நெறிமுறை/ இணைய நெறிமுறை என்று பொருள்படும் Transmission Control Protocol/Internet Protocol என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இரு கணினிகளுக்கிடையேயான தகவல் தொடர்புக்கென

அமெரிக்கப் பாதுகாப்புத் துறையினர் உருவாக்கிய நெறிமுறை. யூனிக்ஸ் இயக்கமுறையின் அங்கமாக உருவாக்கப்பட்டது. இன்றைக்கு, இணையம் உட்பட பிணையங்களுக்குள்ளே தகவல் பரிமாற்றத்துக்கான, ஏற்றுக் கொள்ளப்பட்ட நெறி முறையாய் நிலைபெற்று விட்டது.

**TCP/IP Stack :** டீசிபீ/ஐபீ அடுக்கு : டீசிபீ/ஐபீ நெறி முறைகளின் தொகுப்பு.

**.td :** .டீடி : ஓர் இணைய தள முகவரி சாட் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**tear-off :** பிய்த்தெடு; கிழித்தெடு : வரைகலைப் பயனாளர் இடைமுகத்தில் (GUI), திரையில் தோன்றும் ஓர் உருப்படியை இழுத்துச் சென்று பயனாளர் விரும்பும் இடத்தில் வைத்துக் கொள்ளும் வசதி உண்டு. எடுத்துக்காட்டாக, வரைகலைப் பயன்பாடுகள் பலவற்றிலும் பட்டிகள், கருவிப் பெட்டிகள் போன்றவற்றை இழுத்துச் சென்று வேறிடத்தில் வைத்துக் கொள்ளும் வசதி உள்ளது.

**tear-off menu :** கிழித்து வெளியேறும் பட்டி : அதன் முதன்மை இடத்திலிருந்து வேறொரு பகுதிக்கு மாற்றி அனுப்பி நகர்த்தக்கூடிய திரை மீதுள்ள பட்டி அல்லது வண்ணத் தட்டு.

**techie :** நுட்பி; நுட்பர் : தொழில் நுட்பம் தெரிந்த நபர். பயனாளர் பணியாற்றும்போது ஏதேனும் சிக்கல் ஏற்பட்டாலோ, ஏதேனும் தொழில்நுட்பச் சிக்கலைப் புரிந்துகொள்ள முடியாமல் போனாலோ, உடனடியாகத் தொடர்பு கொண்டு ஆலோசனை பெறக்கூடிய நபர். நுட்பர் ஒரு பொறியாளராக இருக்கலாம் அல்லது ஒரு தொழில் நுட்பாளராக இருக்கலாம். ஆனால், பொறியாளர் அனைவரும் நுட்பராகி விட முடியாது.

**technical analysis package :** தொழில் நுட்ப ஆய்வுத் தொகுப்பு : பங்குச் சந்தையில் வாங்கவும், விற்கவும் சிறந்த நேரம் எது என்பதை முதலீட்டாளர்கள் முடிவு செய்ய உதவும் நிரல் தொடர். மாறும் சராசரிகள் வரைபடமாயமைத்தும், கூட்டியும், வணிக அளவுப் போக்குகளை வரைந்தும் பிற ஆய்வுப் பணிகளைச் செய்தும் முதலீட்டாளர்க்கு உதவுகிறது.

**technical interview :** தொழில் நுட்ப நேர்காணல்.

**technical support** : தொழில் நுட்ப உதவி.

**technical test** : தொழில்நுட்பச் சோதனை.

**technical writer** : தொழில்நுட்ப எழுத்தாளர் : கணினி கருவிவசதி அல்லது அது தொடர்பான பணிகள், மற்றும் மென்பொருள் அல்லது தொழில் நுட்பப் புலங்கள் தொடர்பான திட்டங்கள், பயிற்சிக் கையேடுகள், குறிப்புக் கையேடுகள், நிரல் தொடரமைப்புக் கையேட்டு நூல்கள் மற்றும் அறிக்கைகள் ஆகியவற்றைத் தயாரிப்பவர்.

**technique** : நுணுக்க முறை.

**technology** : தொழில்நுட்பம் : ஒரு பொருள் உருவாக்குவதற்காக அறிவு மற்றும் முறைகளைப் பயன்படுத்துதல்.

**technology, information** : தகவல் தொழில் நுட்பம்.

**technology lab** : தொழில்நுட்ப ஆய்வுக் கூடம்.

**technology transfer** : தொழில் நுட்ப மாற்றல் : இருக்கின்ற தொழில் நுட்பத்தை நடப்பு சிக்கல் அல்லது சூழ்நிலைக்குப் பயன்படுத்துதல்.

**technophile** : தொழில்நுட்ப ஆர்வலர் : வளர்ந்துவரும் தொழில்நுட்பத்தில் உற்சாகத்துடன் ஆர்வம் செலுத்தும் ஒருவர்.

**tech writer** : தொழில்நுட்ப எழுத்தாளர் : வன்பொருள் அல்லது மென்பொருளுக்கு ஆவண விவரம் எழுதுபவர்.

**telco** : டெல்கோ : தொலைபேசிக் குழுமம் எனப் பொருள்படும் Telephone Company என்பதன் சுருக்கச் சொல். பொதுவாக, இச்சொல் இணையச் சேவைகளை வழங்கும்

**tele** : தொலை : தொலைவிலிருந்தோ அல்லது தொலைபேசி மூலமோ செய்யப்படும் இயக்கம்.

**telecine** : தொலைத் திரைப் படம்.

**telecom** : தொலைத் தொடர்பு.

**tele-commerce** : தொலை வணிகம்.

**telecommuniting** : தொலைத் தகவல் தொடர்பு கொள்ளுதல் : அலுவலகத்திலிருந்து வீட்டுக்குத் தொலைத் தகவல் தொடர்பு மூலம் வீட்டிலிருந்தே பணியாற்றுவது.

**telecommunication** : தொலைத் தகவல் தொடர்புகள்; தொலைத் தொடர்பு : தகவல் தொடர்புக்

கம்பிகளின் வழியாக தரவுகளை மாற்றல்.

**telecommunications channel :** தொலைத் தகவல் தொடர்புத் தடம் : செய்தி அனுப்பும் இடத்தையும் பெறுபவரையும் இணைக்கும் தகவல் தொடர்புக் கட்டமைப் பின்பகுதி. தரவுவை அனுப்பவும், பெறவும் ஓரிடத்திலிருந்து வேறொரு இடத்திற்கு இணைக்கப் பயன்படும் கருவியும் இதில் அடக்கம்.

**telecommunications control programme :** தொலைத் தகவல் தொடர்பு கட்டுப்பாடு நிரல் தொடர் : தொலைத் தகவல் தொடர்புக் கட்டமைப்பில் கணினிகளுக்கும் முனையங்களுக்கும் இடையில் கட்டுப்பாட்டினைக் கவனித்துக் கொள்ளும் கணினி நிரல் தொடர்.

**telecommunications controller :** தொலைத் தகவல் தொடர்புக் கட்டுப்படுத்தி : ஒரு விவர தகவல் தொடர்பு இடைமுகச் சாதனம். (சிறப்பு நோக்க சிறு அல்லது நுண் கணினி) பல முனையங்களைக் கொண்ட தொலைத் தகவல் தொடர்புக் கட்டமைப்பை இது கட்டுப்படுத்தும்.

**telecommunications monitors :** தொலைத் தகவல் தொடர்பு திரையகம் : ஒரு தொலைத் தகவல் தொடர்புக் கட்டமைப் பின் கணினிகளுக்கும், முனையங்களுக்கும் கட்டுப்பாட்டைக் கவனிக்கும் கணினி நிரல் தொடர்கள்.

**telecommunications processors :** தொலைத் தகவல் தொடர்பு செயலகங்கள் : பல முனையங்களிடமிருந்து ஒரே நேரத்தில் தகவல்களை தகவல் தொடர்பு வழித் தடங்களுக்குக் கொண்டு செல்ல அனுமதிக்கும் பன்மையாக்கிகள், ஒருமுகப்படுத்திகள் மற்றும் தகவல் தொடர்புக் கட்டுப் படுத்திகள், கொத்துக் கட்டுப் படுத்திகள், பிழை கண்காணித்தல், சிக்கலறிதல், திருத்தல், குறிப்பேற்றம், குறிப்பேற்றமின்மை, தகவல் சுருக்குதல், விவரக் குறியிடல், செய்திகளை மறு குறியீடு அமைத்தல், துறை பூசல் (port contention (36-A)) இடைத்தடுப்பு (buffer storage) சேமிப்பகம் ஆகியவைகளுடன் செயற்கைக்கோள் மற்றும் பிற தகவல் தொடர்பு கட்டமைப்புகளுக்கு இடைமுகமாக இருத்தல் ஆகியவற்றையும் இவை செய்யும்.

**telecommunications specialist :** தொலைத் தகவல் தொடர்பு வல்லுநர் : தகவல் தொடர்பு கட்டமைப்புகளை வடிவமைப்பதற்குப் பொறுப்பேற்றுள்ளவர்.

**telecommunity** : தொலை சமுதாயம் : தொழில்நுட்ப ஏற்புடைத் தன்மைகள் இல்லாமல் தகவல் இலவசமாக அனுப்பி, பெறக்கூடிய சமுதாயம்.

**teleconference** : தொலை மாநாடு : தொலைத் தகவல் தொடர்பு மூலம் தொலைவான இடங்களில் உள்ளவர்களுடன் மின்னணு கூட்டம் நடத்துதல். நேருக்கு நேர் சந்தித்தல் மற்றும் பயணத்திற்கு மாற்றாகக் கருதப்படும் இத்தொலை மாநாடு இருவழி ஒளி-ஒலி வசதியுடன் நடத்தப்படுகிறது. தகவல் மற்றும் தொலை நகலி செலுத்தம் ஆகியனவும் தேவைக்கேற்ப இடம் பெறும்.

**telecoping** : தொலை நகலெடுத்தல்; நீண்ட தூர நகலெடுத்தல்

**telecopy** : தொலைபடி; தொலை நகல் குறிக்கவே பயன்படுத்தப்

**tele-education** : தொலைக்கல்வி.

**tele-entertainment** : தொலை பொழுது போக்கு.

**telegraph** : தந்தி : ஏறக்குறைய ஒரு நொடிக்கு 150 துண்மிகள் வேகத்தில் அனுப்பும் குறைந்த வேக தகவல் தொடர்புச் சாதனம். மோர்ஸ் காலத்தில் இருந்து நீடித்து வருபவை குரல் உரையாடலை அனுப்ப முடியாது.

**telehomecare** : தொலையில்ல மருத்துவம்.

**telemanagement** : தொலை மேலாண்மை : ஒரு நிறுவனத்தின் தொலைபேசி அமைப்புகளின் மேலாண்மை.

**tele marketing** : தொலைச் சந்தையமைப்பு : தொலைபேசி மூலம் விற்பனை செய்தல்.

**telematics** : டெலிமாட்டிக்ஸ் : தொலைத் தகவல் தொடர்புகள் மற்றும் தானியங்கி தகவல் செயலாக்கத்தின் சங்கமம்.

**telemedicine** : தொலை மருத்துவம் : குறிப்பாக தொலைத் தகவல் தொடர்புகள் தொலைக் காட்சியைப் பயன்படுத்தி ஊடுகதிர் (a) அல்லது ஒரு நோயாளியின் நேரடி உருவப் படங்களை தொலைவில் உள்ள வல்லுநருக்கு அனுப்புவது.

**telemedicine clinic** : தொலை நிலை மருத்துவமனை.

**telemeter** : தொலை அளவி.

**telemetry** : தொலை அளவி : தொலை அளவி கருவிகளை மின்சாரம் அல்லது வானொலி மூலம் தகவல்களை அனுப்புதல். நிலவைச் சுற்றிவரும் ஒரு விண் கலத்தின் மூலம் தரையில் உள்ள ஒரு நிலையத்திற்குத் தரவுகளை அளந்து அனுப்பலாம்.

**telnet[1]** : டெல்நெட்[1] ;தொலை இணைப்பு[1] : டெல்நெட் நெறி முறையை நடைமுறைப் படுத்துகின்ற கிளையன் நிரல்.

**telnet[2]** : டெல்நெட்[2] ;தொலை இணைப்பு[2] : டெல்நெட் நெறி முறையைப் பயன்படுத்தி இணையத்தின் மூலமாகத் தொலைதூரக் கணினியை அணுகுதல்.

**telnet[3]** : டெல்நெட்[3] ;தொலை இணைப்பு[3] : ஓர் இணையப் பயனாளர் இணையத்தில் பிணைந்துள்ள ஒரு தொலை தூரக் கணினியில் நுழைந்து, கட்டளைகளை இயக்க வகை செய்யும் நெறிமுறை. அக்கணினியுடன் நேரடியாக இணைக்கப்பட்ட, உரை அடிப்படையிலான ஒரு முனையம் போலவே செயல்பட முடியும். டெல் நெட், டீசிபீ/ஐபீ நெறிமுறைக் குடும்பத்தில் ஓர் அங்கம்.

**telephone** : தொலைபேசி.

**telephone equipment** : தொலைபேசிக் கருவி.

**telephone exchange** : தொலைபேசிப் பரிமாற்றம் / இணைப்பகம்.

**telephony** : தொலைபேசி முறை : ஒலியை மின் சமிக்கைகளாக மாற்றி, குழாய்கள் அல்லது வானொலி மூலம் அனுப்பி அவற்றை ஒலியாக மீண்டும் மாற்றி அனுப்புதல்.

**telephony device** : தொலைபேசிச் சாதனம் : ஒலி சமிக்கைகளை மின்சார சமிக்கைகளாக மாற்றி வேறிடத்துக்கு அனுப்பி, பெறுமிடத்தில் மின்சாரச் சமிக்கைகளை ஒலியாக மாற்றியமைக்கும் சாதனம்.

**telephotography** : தொலை ஒளிப்படவியல் : மின் தகவல் தொடர்பு வழித்தடங்களின் மூலம் ஒளிப்படங்களை அனுப்புதல். பொது தகவல் தொடர்பு அனுப்பும் நிறுவனங்கள் இவற்றை வழங்குகின்றன.

**teleprinter** : தொலை அச்சுப் பொறி; தொலை அச்சு : தானியங்கி அச்சிடும் சாதனம்.

**teleprocessing** : தொலை செயலாக்கம் : தொலைவில் உள்ள இடங்களுக்கும் தகவல் செயலாக்க மையத்திற்கும் மற்றும் இரண்டு கணினி அமைப்புகளுக்கும் இடையில் தொலைபேசிக் கம்பிகள் மூலம் தகவல்களை அனுப்புதல். தகவல் தொடர்புகள் மற்றும் தகவல் செயலாக்கக் கருவிகளை இணைத்துப் பயன்படுத்துவது.

**telesoftware** : தொலை மென்பொருள் : தொலைபேசிக் கம்பி அல்லது தொலைக்காட்சி

மூலம் தொலைச் சொற்பகுதி சமிக்கையில் கணினி நிரல் தொடர்களை அனுப்புதல்.

**teletext** : தொலைவுரை : ஒரு வழி தகவல் தொடர்பு ஊடகம். சில வீடியோ டெக்ஸ்ட் சேவை களில் பயன்படுத்துவது. ஒரே திரையளவில் சிறப்பு சுருக்கிய அளவில் தொலைக்காட்சித் தகவல்களைத் தொடர்ச்சியாக அனுப்பப் பயன்படுத்துபவர் கள் தங்களது திரையில் எந்தப் படத்தை பார்க்க விரும்புகிறார் களோ அதே படத்தை தங்கள் தொலைக்காட்சிப் பெட்டியில் மறு குறியீடமைத்துப் பெறலாம்.

**teletype interface** : தொலைத் தட்டச்சு இடைமுகம்.

**teletype mode** : தொலைத் தட்டச்சு முறை : தட்டச்சுப் பொறியில் தட்டச்சு செய்வது போல ஒரு நேரத்தில் ஒரு வரியில் வெளியீட்டை அனுப்பு வது. இதன்பொருள் தகவல்கள் காட்டவோ, அச்சிடவோ செய் யும்போது ஒன்றையடுத்து இன் னொரு வரியாக தரவு காட்டப் படும் அல்லது அச்சிடப்படும்.

**teletypewriter (TTY)** : தொலைத் தட்டச்சுப் பொறி : டீ.டீ.ஒய். தொலைத் தட்டச்சு அலகு.

**television receiver (TR)** : தொலைக்காட்சி பெறும் பொறி : ஒளிபரப்பப்படும் தொலைக் காட்சி சமிக்கைகளை வானலை வாங்கி மூலம் பெறுகின்ற திறனுடைய வணிக தொலைக் காட்சிப் பெட்டி போன்ற ஒரு காட்சி சாதனம். வானொலி அலைவரிசை குறிப்பேற்றி (மாடுலேட்டர்)கள் இணைத்து காட்சிச் சாதனமாக பல நுண் கணினிகளில் பயன்படுத்தலாம்.

**televoting** : தொலைநிலை வாக்களிப்பு.

**telex** : தொலை எழுதி : மேற்கத்திய ஒன்றியத்தினால் அளிக்கப்படும் தந்திச் சேவை.

**teller** : வங்கிப் பணப் பொறுப் பாளர்.

**telmet** : தொலை இணைப்பு.

**telpak** : டெல்பாக் : இரண்டு அல்லது மேற்பட்ட இடங்களுக் குப் பொது தகவல் தொடர்பு களை எடுத்துச் செல்வதற்காக அகலப்பாட்டை வழித்தடங் களை வாடகைக்கு எடுத்து, அதன் மூலம் நடத்தப்படும் சேவை.

**template** : படிம அச்சு : 1. வடி வியல் (geometric) ஒட்டு வரை படக் குறியீடுகளை வரையப் பயன்படுத்தப்படும் குழைம (plastic) வழிகாட்டி. 2. கணினி வரைகலையில், பொதுவாகப் பயன்படுத்தப்படும் . வடி

வமைப்பிகள் அல்லது வடிவமைப்பு உதவிகளின் பகுதிகள். ஒருமுறை உருவாக்கப்பட்டால், மீண்டும் வரைவதற்குப் பதிலாக, அதையே மீண்டும் தேடி எடுக்க முடியும். 3. மென்பொருள் மேம்பாட்டில் நிரல் தொடர்களின் தொகுதியின் மூலம் வட்டில் சேமிக்கப்பட்டதை கணினிக்கு நிரலிட்டு விரிதாளில் உள்ள தகவல்கள் பற்றிய சில இயக்கங்களைச் செய்யுமாறு கூறுதல். சான்றாக, டெல்லிக்கு மேற்கே உள்ள வாடிக்கையாளர்களுக்கு 10 விழுக்காடு ரயில் கட்டணத்தைக் கூட்டுக என்பது.

**template wizzard :** வார்ப்புரு வழிகாட்டி.

**temporary font :** தற்காலிக எழுத்துரு : மென்பொருளாலோ அல்லது கையாலோ அச்சுப்பொறியில் மீண்டும் திருத்தி அமைக்கும்வரை அச்சுப்பொறியின் நினைவகத்தில் தங்கியிருக்கும் மென் அச்செழுத்து.

**temporary password :** தற்காலி நுழைசொல்.

**temporary storage :** தற்காலிக சேமிப்பகம் : நிரல் தொடரமைத்தலில், இடைக்கால முடிவுகளை சேமித்து வைப்பதற்கான சேமிக்கும் இடங்கள்.

**ten key pad :** பத்து விசைப் பட்டை : எண்களை எளிதாக நுழைக்க உதவும் 0 முதல் 9 வரை எண்களை தனித் தொகுதியாகக் கொண்ட விசை. கணிப்பி விசை அட்டை போன்றது.

**ten's complement :** பத்தின் கூட்டெண் : ஒரு குறிப்பிட்ட மதிப்பின் எதிரெண்ணைக் குறிப்பிடப் பயன்படுத்தப்படும் எண். எல்லா எண்களும் 9 ஆக உள்ள ஒவ்வொரு இலக்கத்திலிருந்தும் கழித்து அதனுடன் ஒன்றைச் சேர்த்து இந்த எண் கொண்டு வரப்படுகிறது. சான்றாக 654-ன் பத்தின் கூட்டெண்ணாக வருவது 346. 999 உடன் 346-ஐக் கழித்து அதனுடன் 1-ஐக் கூட்டி இந்த எண் கொண்டு வரப்படுகிறது.

**tensile strength :** இழுப்பு வலு.

**tera :** டெரா : ஒரு ட்ரில்லியனுக்கு மெட்ரிக் முன்னிணைப்புச் சொல். டி என்று சுருக்கி அழைக்கப்படுகிறது.

**terabit :** டெராபிட் ; டெரா துண்மி : ஒரு டிரில்லியன் துண்மிகள். டிபி, டிபிட் அல்லது டெராபிட் என்றெல்லாம் அழைக்கப்படும்.

**terabit storage :** டெராபிட் சேமிப்பு : 12 துண்மிகள் அளவில் 10 திறனுள்ள சேமிப்புச் சாதனங்

களுக்குப் பயன்படுத்தப்படும் பொதுச்சொல்.

**terabyte :** டெராபைட் ; டெரா எட்டியல் : $2^{40}$ (2இன் 40 மடங்கு) அல்லது துல்லியமாக 1 009 511 627 776 எட்டியல்கள். அல்லது ஓராயிரம் மீமிகு எட்டியல்கள், ஒரு மில்லியன் மீமிகு எட்டியல்கள், ஒரு பில்லியன் கிலோ எட்டியல்கள் அல்லது ஒரு டிரில்லியன் எட்டியல்கள் என்று சொல்லலாம். ஒளி வட்டு பெரு சேமிப்பகச் சாதனங்களின் திறனை அளக்கப் பயன்படுகிறது.

**teraflops :** டெராஃபிளாப்ஸ் : மீத்திறன் கணினிகளின் வேகத்தை அளக்கும் அலகு. ஒரு வினாடியில் ஒரு டிரில்லியன் மிதவைப் புள்ளிக் கணக்கீடுகள் என்பதைக் குறிக்கும். ஒரு வினாடியில் எத்தனை டெராஃபிளாப்ஸ் எண்ணிக்கையிலான கணக்கீடுகளை ஒரு கணினி செய்ய முடியும் என்பதைக் கணக்கிட்டு அதன் வேகம் மதிப்பிடப்படுகிறது. 1 டிரில்லியன் - 1000 பில்லியன் ($10^{12}$).

**terminal :** முனையம்; முகப்பு : விசைப் பலகை காட்சி அல்லது விசைப் பலகை/அச்சுப் பொறிச் சாதனம். கணினியில் தகவல்களையும், நிரல் தொடர்களையும் உள்ளீடு செய்யவும், வெளியீட்டைப் பெறவும் இது பயன்படுகிறது.



முனையம்

**terminal adapter :** முனையத் தகவி.

**terminal address card :** முனைய முகவரி அட்டை.

**terminal buffer :** முனைய இடைநிலை நினைவகம்.

**terminal component :** முனைய அமைப்பி; முனையக் கூறு.

**terminal configuration facility :** முனைய உருவமைப்பு வசதி.

**terminal emulation :** முகப்பு போலச் செய்யப்படல் ; முனையம் போன்ற : சில சிறப்புத் தயாரிப்பு கணினிகள் வேறொரு கணினியின் முகப்பு போலச் செயல்படும் சூழ்நிலை.

**terminal emulator :** முனைய முன் மாதிரி.

**terminal entry :** முனையப் பதிவு.

**terminal error** : முனையப் பிழை : நிரல் தொடர் தொடர முடியாத அளவுக்கு கணிசமான விளைவு களை ஏற்படுத்தும் பிழை.

**terminal interrupt** : முனையக் குறிக்கீடு.

**terminal job** : முனையப் பணி.

**terminal mode** : முனைய முறை : முனையத்தைப்போல நடக்கு மாறு கணினியை செயல்படுத் தும் செயல்பாட்டு முறை. தட்டச்சு செய்யப்பட்ட விசைக் கோடுகளை அனுப்பவும், அனுப்பப்பட்ட தகவல்களைப் பெறவும் செய்கிறது.

**terminal node** : முனையக் கணு; முனையக் கரணை.

**terminal port** : முனையத் துறை.

**terminal response** : முனையப் பொறுப்பு முறை.

**terminal security** : முனையக் காப்பு.

**terminal server** : முனையப் பணியகம் : ஒரு கட்டமைப்பு அல்லது புரவலர் கணினியுடன் பலதரப்பட்ட முனையங்கள் இணைக்கப் பயன்படுத்தப் படும் கணினிக் கட்டுப்படுத்தி.

**terminal session** : முனைய அமர்வு : ஒரு முனையத்தில் ஒரு பயனாளர் செயலாற்றும் நேரம்.

**terminal stand** : முனைய நிறுத்தி; முனையத் தாங்கி : கணினி முகப்பை தாங்குவதற் கேற்ப வடிவமைக்கப்படும் மர அல்லது உலோகக் கட்டை.

**terminal strip** : முனையப் பட்டை : கம்பிகள் இணைக்கப் படும் திருகாணியின் தொகுதியைக் கொண்ட ஒட்டப்பட்ட பட்டை.

**terminal symbol** : முகப்புக் குறியீடு : செவ்வக வடிவ படக் குறியீடு, ஒரு செயல்முறையில் ஆரம்பநிலை மற்றும் முடிக்கும் நிலைகளைக் குறிப்பிடுகிறது.

**terminal table** : முனையப் பட்டிகை.

**terminal transactions facility** : முனையப் பரிமாற்று வசதி.

**terminal user** : முனையப் பயனளவு

**terminate** : முடிவுற்ற.

**termination** : முடிவுறல்.

**termination, abnormal** : இயல் பிலா முடிப்பு.

**terminator** : முடிப்பி : ஒரு தொடர் அல்லது கட்டமைப் பின் கடைசி முனையில் உள்ள வெளிப்புறச் சாதனத்துடன் இணைக்கப்பட்ட வன்பொருள் பகுதி.

**terminator cap** : முடிப்பிக் குமிழ் : ஓர் ஈதர்நெட் பாட்டையின் இரு முனைகளிலும் பொருத்தப் படும் தனிச்சிறப்பான இணைப்பி. இந்த இணைப்பி களில் ஒன்றோ இரண்டுமோ இல்லாமல் போனால் ஈதர்நெட் பிணையம் செயல்படாது.

**ternary** : மும்மை; மூன்றாலான : *1.* நிரலாக்கத்தில் ஓர் உறுப்பு மூன்று இயலும் மதிப்புகளில் ஒன்றைப் பெறும் பண்பியல்பு. *2.* ஒரு நிபந்தனையில் மூன்று வெவ்வேறு நிலைகள். *3.* அடி யெண் 3 கொண்ட எண் முறைமை. (இரும, எண்ம, பதின்ம, பதினறும முறை களைப்போல).

**terrestrial link** : தரைவழி இணைப்பு : தரையிலோ அல்லது அதன் அருகிலோ அல்லது அதற்கு அடியிலோ செல்லும் தகவல் தொடர்புக் கம்பி.

**test** : சோதனை : ஒரு நிரலைப் பல்வேறு கோணங்களில் பரி சோதித்தல். பல்வேறு உள் ளீட்டு மதிப்புகள் தந்து சரியாகச் செயல்படுகிறதா எனப் பரி சோதனை செய்தல்.

**test automation software** : சோதனைத் தானியங்கு மென் பொருள் : ஒரு மென்பொருள் பயன்பாட்டுத் தொகுப்பின் புதிய அல்லது திருத்திய பதிப்பைப் பரிசோதனை செய் வதற்கான அனைத்துச் செயல் முறைகளையும் ஒரு நிரல் மூலமே செய்து முடித்தல். சோதனையாளர் தரவேண்டிய உள்ளீடுகள் பிற கட்டளைகள் அனைத்தையும் சோதனைத் தானியங்கு மென்பொருளே செய்து முடிக்கும்.

**test box** : சோதனைப் பெட்டி.

**test data** : சோதனைத் தரவு : ஒரு குறிப்பிட்ட நிரல் தொட ரின் இயக்கத்தை சோதனை செய்வதற்காக உருவாக்கப்பட்ட தரவு. ஒன்று அல்லது இரண்டு கையால் கூட்டபட்ட முடிவுகள் அல்லது தெரிந்த முடிவுகளுடன் சோதனைத் தரவு இணைக்கப் பட்டு சோதனை செய்யப்பட்ட நிரல் தொடர் செல்லத்தக்க தாக்கப்படும். சாதனைத் தரவு வாகப் பயன்படுத்தப்பட்ட தரவு செல்லாததாக இருக்கும்.

**test driver** : சோதனை இயக்கி : சோதனை தகவல் தொகுதி களைத் திரட்டுவதில் வேறொரு நிரல் தொடரை இயக்கும் நிரல் தொடர்.

**testing** : சோதித்தல்; சோதனை செய்தல் : ஒரு நிரல் தொடரின் நடத்தையை மாதிரி தரவு தொகுதியின்மீது இயக்கி

சோதனை செய்தல். இதில் தவறான நடத்தைக்கான அனைத்து வாய்ப்புகளையும் கண்டறியும் முயற்சியில், செல்லு கின்ற மற்றும் செல்லாத தகவல் களும் இதில் சேர்க்கப்படும்.

**testing room :** ஆய்வு அறை.

**test message :** சோதனைச் செய்தி.

**test plan :** சோதனைத்திட்டம் : எத்தகைய சோதனை நடத்தப் படும் என்பதைப் பொதுவாகக் குறிப்பிடுவது. இதில் சகிக்கப் படும் அளவுகளின் வரையறை யும் உள்ளடங்கி இருக்கிறது.

**test post :** சோதனை அஞ்சல் : செய்தி எதுவுமில்லாத ஒரு செய்திக்குழுக் கட்டுரை. இணைப்பைச் சரி பார்க்க அனுப்பி வைக்கப்படுவது.

**test programme :** சோதனை செயல் முறை; சோதனை நிரல்.

**test run :** சோதனையோட்டம் : ஒரு நிரல் தொடர் சரியாக இயக்கப்படுகிறதா என்பதை சோதிப்பதற்கான ஓட்டம். சோதனை ஓட்டத்தின்போது, வெளியாகும் முடிவுகள் ஏற்கனவே உருவாக்கப்பட்ட முடிவுகளுடன் ஒப்பிடப்படும்.

**TeX or TEX :** டெக்ஸ் : கணித வியலாளரும் கணினி அறிஞரு மான டொனால்டு க்னத் (Donald Knuth) என்பவர் உருவாக்கிய ஒரு உரை வடிவமைப்பு மென் பொருள். ஆஸ்க்கி உரை உள்ளீட்டிலிருந்தே அறிவியல், கணித மற்றும் பிற தொழில் நுட்ப ஆவணங்களை உருவாக்க முடியும். யூனிக்ஸ், எம்எஸ் டாஸ், விண்டோஸ், ஆப்பிள் மேக் முறைமைகளுக்கான டெக்ஸ் இணையத்தில் இலவச மாகக் கிடைக்கிறது (ftp://ftp.tex.ac.uk/tex-archiev/). சில கூடுதல் வசதிகளுடன் விற்பனைக்கும் கிடைக்கிறது. ${\pi}r^2$ என உள்ளீடு செய்தால் $\pi r^2$ என்கிற வெளியீடு கிடைக்கும். டெக்ஸை குறுமங்கள் (macros) மூலம் விரி வாக்க முடியும். பல்வேறு வகை யான பயன்பாடுகளுக்கென குறுங்கோப்புகள் கிடைக் கின்றன.

**text :** உரை : சொல்லப்பட வேண்டிய தகவலை விளக்கும் எழுத்துகள், எண்கள் மற்றும் சொற்கள், கோடுகள் மற்றும் குறியீடுகளைக் கொண்டது. வரைகலை (Graphics)க்கு எதிர்ச் சொல்.

**text attribute :** உரைப்பாண்மை.

**text area :** உரைப்பகுதி.

**text based :** உரை சார்ந்த : எழுத்து சார்ந்த என்றும்

சொல்லலாம். சொற்களையே மிகுதியாகக் கொண்ட, சில வரை கலை எழுத்துகளையும் கொண்ட திரைக்காட்சி. சான்றாக, 80 பத்திகளின் 25 வரிசைகள்.

**text body :** உரை உடற்பகுதி.

**text box :** உரைப்பெட்டி : ஒரு வசனப் பெட்டியில் கட்டளையைச் செய்வதற்கு வேண்டிய தரவவைத் தட்டச்சு செய்யலாம். சொல் பெட்டி காலியாக இருக்கலாம் அல்லது வசனப் பெட்டி திறக்கும்போது சொற்களைக் கொண்டிருக்கலாம்.

**text colour :** உரை நிறம்.

**text compression :** உரை ஒடுக்கம்.

**text control :** உரைக் கட்டுப்பாடு.

**text curson :** உரைச் சுட்டி.

**text data :** உரை தரவு : ஆவணங்களில் பயன்படுத்தப்படும் சொல் தொடர்கள், வாக்கியங்கள், பத்திகள் மற்றும் பிற தரவு தொடர்ப் படிவங்கள்.

**text editing :** உரை பதிப்பு : மின்னணு முறையில் சேமிக்கப்பட்ட பொருளைச் சேர்த்தல், மாற்றல் மற்றும் நீக்குதல் ஆகியவற்றை உள்ளடக்கிய பொதுச்சொல்.

**text editor :** உரைத்தொகுப்பி; ஏடு திருத்தி; நூல் திருத்தி;நூல் செப்பமாக்கி; சொல் தொகுப்பி; சொல் பதிப்பி .

**text entry :** உரைப்பதிவு : உரை உள்ளீடு விசைப்பலகை மூலம் உரைக்கான எழுத்துகளை உள்ளிடல்.

**text field :** உரைப்புலம் : எண்ணெழுத்து தரவுகளான பெயர் மற்றும் முகவரிகளைத் தாங்குகின்ற தரவுக் கட்டுமான அமைப்பு உரைப்புலத்தில் அதிகமான அல்லது எல்லையற்ற சொற்பகுதி தங்கியிருக்குமானால், அது குறிப்புப் பகுதி என்று அழைக்கப்படலாம்.

**text file :** உரைக்கோப்பு : சொல்வடிவில் கூறப்பட்ட தரவலைக் கொண்டுள்ள கோப்பு.

**text formating programme :** உரைப் படிவ நிகழ்வு.

**textile design :** நெசவுத்துணி உருவரை.

**text lables :** உரைச் சிட்டைகள்.

**text line :** உரை வரி.

**text lock :** உரைப் பூட்டு.

**text management :** உரைப்பகுதி மேலாண்மை : உரைப்பகுதியை உருவாக்கி, சேமித்து, திரும்பப் பெறல். பலதரப்பட்ட அடிப்படையில் உரைப் பகுதிகளைத் தேடக்கூடிய, தேடிக்கொண்டு வரும் திறன்கள் என்பதை இது

உணர்த்துகிறது. சொல் செயல கமும் உரைப்பகுதியை சமாளிக் கிறது என்றாலும் அதற்கு தேடிக்கொண்டு வரும் திறன் கள் குறைவாகவே இருக்கும்.

**text mode :** உரைப் பாங்கு : கணினித் திரையகத்தின் ஒரு வகைக் காட்சிப் பாங்கு. இந்தப் பாங்கில் எழுத்துகள், எண்கள், ஏனைய குறிகள் மட்டுமே திரையில் தோன்ற முடியும். வரைகலைப் படிமங்களைக் காட்ட முடியாது. அதுமட்டு மின்றி, வடிவமைக்கப்பட்ட எழுத்து வடிவங்களையும் [சாய் வெழுத்து (Italics), மேல்எழுத்து (superscript), கீழ்எழுத்து (subscript)] காட்ட முடியாது. சுருக்க மாக, விசிவிக் (WYSIWYG-What You See Is What You Get) சாத்தியமில்லை எனலாம்.

**text processing :** உரை செய லாக்கம்: நிரல்தொடர் கட்டுப் பாட்டின் கீழுள்ள அகரவரிசை தரவுகளைக் கையாளுதல்.

**text processor :** உரை செய லாக்கி.

**text revision :** உரை மாற்றமைவு.

**text segment :** உரைப் பகுதி.

**text streame :** உரை பாய்வு.

**text string search :** உரைச்சரம் தேடல்.

**text suppression :** உரை அமுக்கம்.

**text system :** உரைப்பகுதி அமைப்பு : சொற்பகுதி தக வலைக் கையாள வன்பொருளை யும் சிறப்பாக எழுதப்பட்ட மென்பொருளையும் தொகுத்தல்.

**text transfer :** உரை மாற்றல் : முகப்பிலிருந்து தூர கணினிக்கு உரைக் கோப்புகளை மாற்றும் முறை.

**text to columns :** உரையை நெடுக்கையாக்கு.

**text - to - speech :** எழுத்து ஒலி வடிவு; எழுத்திலிருந்து ஒலி வடிவம்.

**text transmission :** உரை அனுப்பீடு.

**text transparency :** உரை ஒளிர்மை; சொல் புலப்பாடு.

**textual scrolling information :** சொல்லோட்டத் தகவல்.

**texture :** இழைவு; இழைமம் : கணினி வரைகலையில், இரு பரிமாண அமைப்பினை முப் பரிமாண மேற்பரப்பின் சிக்க லான தோற்றத்தைத் தர பயன் படுத்துவது. இதில் கலவையை மாதிரியாக அமைத்தல், ஒலி யங்கள் அல்லது எண்முறை ஒளிப்படங்களை அடிக்கடி

பயன்படுத்துதல் ஆகியவற்றின் மூலமாக இல்லாமலேயே செய்யப்படுகிறது. முப்பரிமான தரவுத் தள அமைப்புகள் செய்யமுடியாத கலவையை படத் துணுக்குகள் சேர்க்கின்றன. ஒரு கணினி படத்தில் (pixel) படப்புள்ளிகளை இருப்பிடமான ஏற்பாட்டில் செய்யும் வேலையை துணி நெசவில் பாவு நூல் வார்ப்பு மற்றும் ஊடிழைகளுடன் ஒப்பிடப்படுவதுண்டு. ஆகவேதான் இச் சொல் உருவானது.

**texture mapping : இழைப்பு விவரஙணயாக்கம் :** கணினி வரைகலையில், ஒரு சிறப்பு மேற்பரப்பை உருவாக்குதல். இவற்றை நெறிமுறையுடன் அமைக்க முடியும். ஒரு பொருளைச் சுற்றி துணை உருவத்தை மின்னணு முறையில் மேலமைப்பது.

**text window : உரைச் சாளரம் :** சில கணினி வரைகலை அமைப்புகளில் காட்சித்திரைகளில் காட்டப்படும் சொற்களின் பகுதி.

**.tf : .டீஎஃப் :** ஓர் இணைய தள முகவரி தெற்கு ஃபிரான்ஸ் பிரதேசத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.tg : .டீஜி :** ஓர் இணயை தள முகவரி டோகோ நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**TGA : டீஜிஏ :** 1. டார்கா (targa) என்பதன் சுருக்கம். ட்ரூவிஷன் நிறுவனம் உருவாக்கிய கிடைவரி (Raster) வரைகலைக் கோப்பு வடிவம். 16 துண்மி (பிட்), 24துண்மி (பிட்), 32 துண்மி(பிட்) நிறங்களைக் கையாளவல்லது. 2. மிகு தெளிவுள்ள ஒளிக்காட்சி வரைகலைப் பலகை வரிசைகளின் வணிகப் பெயர்.

**.th : .டீஹெச் :** ஓர் இணைய தள முகவரி தாய்லாந்து நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**the microsoft network(MSN) : மைக்ரோசாஃப்ட் நெட்வொர்க் (எம்எஸ்என்) :** மைக்ரோசாஃப்ட் நிறுவனத்தின், பல்வேறு வசதிகள் நிறைந்த நிகழ்நிலைச் சேவை. 1995ஆம் ஆண்டு ஆகஸ்டில், விண்டோஸ் 95 அறிமுகப்படுத்தப்பட்ட போது தொடங்கப்பட்டது.

**theorem : தேற்றம் :** எண்ணாக்கப்படிகூடிய ஒரு சொற்றொடர். ஒரு செல்லக்கூடிய வாக்குவாதத்தின் முடிவு.

**thermography** : வெப்பக் கதிர்.

**therminomic** : மின்மயத் துகள்.

**theorem prover** : தேற்றம் நிறு வலர் : ஒரு இலக்குடன் துவங்கி அதன் விளைவுகளைத் தேடி அந்த இலக்குக்காக ஒன்று சேரும் முடிவுகளைக் கூறும் நிரல் தொடர். தேற்றம் எண்ணாக் கும் நிரல் தொடரில் உண்மை களின் தொகுதியைக் கொண்ட தரவு ஆதாரம் அதன் உயத்துணர் நுட்பம் இலக்கினை அடையும் நிறைவைத் தருகின்ற கண்டு பிடிப்புகளை உருவாக்குகிறது.

**theorem proving** : தேற்றம் நிறுவல் : தானியங்கி அணுகு முறைகளாக நிலைநாட்டல், தேடல் மற்றும் விளைவுகளைத் தேடல் ஆகியவற்றைக் கூறலாம். ஒரு குறிப்பிட்ட தேற்றத்திற்கான நிரூபணத்தைத் தேடுவதை நிலைநாட்டத் தேடும் நிரல் தொடர் செய்கிறது. விளைவு தேடும் நிரல்தொடர் விளைவு கள் ஏற்படுவதைக் கண்டறி கிறது. பிறகு சிறப்பான விளைவு கள் தேர்ந்தறியப்படுகிறது.

**theory of numbers** : எண்களின் கொள்கை; எண்களின் கோட் பாடு : எண்களின் தன்மைகள் மற்றும் உறவுகள் பற்றிப் பொது வாகக் கூறும் கணிதவியலின் பிரிவு.

**thermal dye diffusion** : வெப்பச் சாய பரவல் : வெப்ப மெழுகு மாற்றல் போன்ற அச்சிடும் செயல்முறை. இதில் மைக்குப் பதிலாக சாயம் பயன்படுத்தப் படும். அச்சுமுனையானது நாடாவை சூடுபடுத்தி சாயத்தை திடவடிவில் மாற்றி திறவு காகிதத்தில் படிய வைக்கிறது. அதிக வெப்பம் இருந்தால் அச்சும் அடர்த்தியாக இருக்கும். ஒளிப்பட தரம் அருகில் வருவதுபோல தொடர் வண்ணம் உருவாக்கப்படலாம்.

**thermal printer** : மின் அச்சுப்பொறி; சூட்டு எந்திரம்; வெப்ப அச்சுப்பொறி: வெப்பம் உணரும் காகிதத்தில் வெளி யீட்டைத்தரும் தொடாத அச்சுப் பொறி மெழுகுப் பகுதிகளை உருக்க வெப்பத்தைப் பயன் படுத்துவது. அதில் உள்ள மை காகிதத்திற்கு மாறுகிறது. நடுத் தரத்தில் மறுபிரதி தருகிற இது மெதுவான வேகத்தில் இயங்கு கிறது. ஆனால், அந்தச் சாதனம் அதிக விலையில்லாதது, அமைதி யான, நம்பக்கூடிய ஒன்று.

**thermal stencil** : வெப்பப் பதிவு முனை.

**thermal wax transfer** : வெப்ப மெழுகு மாற்றல் : மெழுகு போன்ற ஒரு மையை காகிதத்

துக்கு மாற்றும் அச்சிடும்முறை, சான்றாக; வண்ண அச்சுப் பொறியில் பலநூறு திரும்ப வரும் தொகுதிகளான கறுப்பு, சியான், மெஜந்தா மற்றும் மஞ்சள் மை கொண்ட மைலார் நாடா பயன் படுத்தப்படுகிறது. ஒவ்வொரு நிறத்திற்கு எதிராகவும் ஒரு காகிதத் தூளை அழுத்தி சூடாக்கும் பொருள் களைக் கொண்ட ஒரு கோட் டின் வழியாகச் செல் லும்போது புள்ளிகள் அல்லது படப்புள்ளி களின் மை காகிதத்தில் மாற்றப்படுகிறது.

**thermal wax-transfer printer :** வெப்ப மெழுகு-மாற்றல் அச்சுப் பொறி : ஒரு சிறப்புவகை தொடா அச்சுப்பொறி (Non-impact printer). வெப்பத்தின் மூலம் வண்ண மெழுகினை தாளின்மீது உருகவைத்து படி மங்கள் வரையப்படுகின்றன. வழக்கமான வெப்ப அச்சுப் பொறியைப்போலவே, சூடாக்கு வதற்கு ஊசி(பின்)கள் பயன் படுத்தப்படுகின்றன. பல வண்ண மெழுகு பூசப்பட்ட நாடாமீது சூடான ஊசிகள் படும்போது ஊசிகளுக்கு அடி யிலுள்ள மெழுகு உருகித் தாளில் ஒட்டிக் கொள்கின்றன. ஊசிகள் தாளைத் தொடு வதில்லை.

**thesaurus : அகராதி; அகர முதலி :** பெரும்பாலான சொல் அகராதிகளில் உள்ள ஒரு தன்மை ஒரு குறிப்பிட்ட அனேகமாக அதிகம் பயன் படுத்தப்பட்ட சொல்லுக்கு மாற்றாக ஒரு சொல்லை கண்டுபிடிக்க உதவுகிறது. எந்த வகையான எழுத்துப் படைப்பை உருவாக் கினாலும் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலைக்கு மாற்றுச் சொற்கள் அல்லது மரபுத் தொடர்களை அது தருகிறது என்பதால் அகராதி என்பது மதிப்புமிக்க குறிப்புதவிப் பொருளாகும்.

**the world-public access UNIX : உலகம்-பொது அணுகல் யூனிக்ஸ் :** பாஸ்டனை மைய மாகக் கொண்ட மிகப்பழைய பொது அணுகு இணையச் சேவை வழங்கன். 1990 ஆண்டிலிருந்து இவ்வமைப்பு, தொலைபேசிமூலம் இணை யத்தை அணுகும் வசதியைத் தந்தது. அதாவது பொதுமக்கள் இணையத்தை அணுக முடியும். வைய விரிவலை அணுகல், யூஸ்நெட், ஸ்லிப்/பீபீபீ, டெல் நெட், எஃப்டீபீ, ஐஆர்சி, கோஃபர், மின்அஞ்சல் போன்ற பிற வசதிகளையும் வழங்கு கிறது. 1995 ஆம் ஆண்டிலிருந்து யுயுநெட் மூலமாக உள்ளூர்

தொலைபேசி வழி அணுகலை யும் அளித்து வருகிறது.

**thick film :** தடித்த படச்சுருள் : சிப்புவின் மேலுள்ள டிரான் சிஸ்டர்களாலான நுண்ணிய மேலடுக்குகளைவிட தடிமனான உலோகப் பொருள், அரைக் கடத்தி அல்லது காந்தப் பொருள். சான்றாக, தடித்த உலோகத் திரைப்படங்களை உயரின நுண் மின் சுற்றுகளின் பீங்கான் அடிப்பகுதியில் மேல் பூச்சாகப் பயன்படுத்தப்படுகிறது.

**thimple :** சிமிழ் : சிமிழ் வடிவத் தில் உள்ள அச்சிடும் பொருள். எழுத்துத் தர அச்சிடுவதற்குப் பயன்படுகிறது. சிமிழைச் சுற்றி எழுத்து அச்சுகள் வட்டமாக வரிசைப் படுத்தப்படுகின்றன. அச்சிடப்படவேண்டிய எழுத் தின் அச்சு சுழன்று சரியான இடத்தில் சுற்றிவரும்போது சுத்தியல் அதை முன்னோக்கி அழுத்தி காகிதத்தில் அச்சிடும்.

**thimble printer :** சிமிழ் அச்சுப் பொறி : சிமிழ் வடிவத்தில் அச்சு சக்கரத்தைப் பயன்படுத் தும் அச்சுப்பொறி. இதன் அடிக் கும் சாதனம் நாடாவுக்கு நேராக அடிக்கும் பகுதியைக் கொண்டு வந்து காகிதத்தில் அச்சிடுகிறது.

**thin client :** மெல்லிய கிளை யன்; சிறுத்த கிளையன்.

**thin film :** மெல்லிய படச்சுருள்; மென்படலம் : ஒட்டவைத்த அடிப்பகுதி, பொதுவாக ஒரு தட்டையான பிளேட்டுகளா லான மெல்லிய புள்ளிகளை வைத்து ஏற்படுத்தப்படும் கணினி சேமிப்பகம் அடிப்பகுதி யும் சேர்க்கப்பட்ட கம்பிகளில் உள்ள மின்சக்திமூலம் புள்ளிகள் காந்தப்படுத்தப்படுகின்றன.

**thin film head :** மெல்லிய படச் சுருள் முனை : அதிக அடர்த்தி உள்ள வட்டுகளுக்கான படி/ எழுதுமுனை நிக்கல்-இரும்பு மையத்தில் வைக்கப்பட்ட கடத் தும் படச்சுருளின் மெல்லிய அடுக்குகளால் இது அமைக்கப் படுகிறது.

**thin film storage :** மென் படலச் சேமிப்பகம்.

**thin server :** மெல்லிய வழங்கன்; சிறுத்த வழங்கன் : ஒருவகை கிளையன்/வழங்கன் கட்டுமானம். பெரும்பாலான பயன்பாடுகள் கிளையன் கணினியிலேயே இயங்கும். இதுபோன்ற கிளையன், கொழுத்த கிளையன் என வழங்கப்படுகிறது. எப்போதா வது தொலைதூர வழங்கனில் தரவு செயல்பாடுகள் நடக்கும். இதுபோன்ற ஏற்பாடு சிறந்த கிளையன் செயல்திறனைக்

கொடுக்கும். ஆனால் நிர்வாகப் பணிகளைச் சிக்கலாக்கிவிடும். எடுத்துக்காட்டாக, கிளையனிலிருக்கும் மென்பொருள்களை மேம்படுத்துவது மிகப் பெரும் சவாலாக இருக்கும்.

**thin space :** மெல்லிடவெளி; மெல்லிய இடவெளி : ஓர் எழுத்துருவில் அதன் பாயின்ட் அளவில் நான்கில் ஒரு பங்குள்ள கிடைமட்ட இடவெளி. எடுத்துக்காட்டாக, 12-பாயின்ட் அளவுள்ள ஓர் எழுத்துருவில் மெல்லிடவெளி 3-பாயின்ட் அகலத்தில் இருக்கும்.

**thin window display :** மெல்லிய சாளரக் காட்சி : விசைப்பலகைகள், பாக்கெட் கணினிகள் போன்றவற்றில் பயன்படுத்தப்படும் ஒரு வரி காட்சித்திரை. எல்சிடி அல்லது எல்இடி காட்சித் திரை.

**third generation computers :** மூன்றாம் தலைமுறை கணினிகள் : டிரான்சிஸ்டர்களுக்குப் பதிலாக பொருள்களை வாமனப் படுத்தி ஒருங்கிணைந்த மின் சுற்றுக்களைப் பயன்படுத்தும் கணினிகள், விலை குறைப்பு, வேகமான இயக்கம், கூடுதல் நம்பகத் தன்மை ஆகியவற்றை தரும் இவை 1964இல் அறிமுகப் படுத்தப்பட்டன. இன்னும் ஆதாரத் தொழில் நுட்பமாக இவையே உள்ளன.

**third generation language:** மூன்றாம் தலைமுறை மொழி : உயர்நிலை மொழிகளின் இன்றைய தலைமுறை இதுவே. சான்று: பேசிக், சி மற்றும் பாஸ்கல். 3GL என சுருக்கி அழைக்கப்படுகிறது.

**third party :** மூன்றாவதாள்; மூன்றாம் ஆள்; மூன்றாம் குழுமம்; தொடர்பற்றவர்; தொடர்பிலாக் குழுமம் : ஒரு பெரிய தயாரிப்பு நிறுவனத்தின் கணினிகள் மற்றும் புறச்சாதனங்களுக்குரிய உதிரி பாகங்களைத் தயாரித்து விற்றுவரும் குழுமத்தை இவ்வாறு அழைப்பர். பெரும்பாலும் பெரிய நிறுவனத்தோடு இவர்களுக்கு எவ்விதத் தொடர்பும் இருக்காது. கணினித் தயாரிப்பாளர், கணினிப் பயனாளர் நேரடித் தொடர்புடைய இந்த இருவர்க்கும் தொடர்பில்லாத மூன்றாவது ஆள் என்ற பொருளில் இவ்வாறு வழங்கப்படுகிறது.

**third-party lease :** மூன்றாமவர் அடைமானம் : ஒரு தனி நிறுவனம் உற்பத்தியாளரிடமிருந்து வாங்கிய கருவியை தானாக வேறு ஒரு இறுதிப்பயனாளருக்குத் தரும் ஒப்பந்தம்.

**thirty-two-bit chip** : முப்பத்திரண்டு துண்மிச் சிப்பு : ஒரே நேரத்தில் முப்பத்திரண்டு துண்மிகளைச் செயலாக்கம் செய்யும் மையச் செயலக சிப்பு.

**Thomas Charles Xavier (Colmar, Thomas)** : தாமஸ் சார்லஸ் சேவியர் (கால்மார், தாமஸ்) : *1820* இல் உருவாக்கப்பட்ட கணக்கிடும் எந்திரம். நடைமுறை சாத்தியமான, பயனுள்ள வகையில் செயலாற்றிய முதல் கணிப்பி என்று இதைப்பற்றி கூறப்படுகிறது.

**thrashing** : அடித்தல்; புடைத்தல்; தாக்குதல் : மெய்நிகர் நினைவக அமைப்பில் நினைவக ஏற்றலுடன் தொடர்புள்ள மேற்பகுதி'கடைதல்' (churning) என்றும் அழைக்கப்படுகிறது.

**thread** : புரி.

**threaded** : முறுக்கப்பட்ட : பல தனிப்பட்ட துணைநிரல் தொடர்களை அழைப்பதற்கேற்ற வசதியுள்ள ஒரு நிரல் தொடர்.

**threaded discussion** : கோத்த உரையாடல்; தொடரும் விவாதம் : ஒரு செய்திக்குழு அல்லது பிற நிகழ்நிலை மன்றங்களில், ஒவ்வொரு செய்தி அல்லது கட்டுரைக்கான பதில்கள், எதிர்ப் பதில்கள் அனைத்தையும் தனித்தனியே அகர வரிசைப் படியோ, கால வரிசைப்படியோ தொகுக்காமல் மூலச் செய்தியோடு தொடர்ச்சியாகப் பின்னுவது.

**threaded newsreader** : கோத்த செய்தி படிப்பி : செய்திக் குழுக்களின் செய்திகள்/அஞ்சல்கள்/பதில்களை ஒன்றன்கீழ் ஒன்றாய் ஒரே செய்திபோலக் காட்டும் செய்திப்படிப்பு நிரல். பதில்கள் தனித்தனியே அகர வரிசை/காலவரிசைப்படி தொகுக்கப்பட்டிருக்காது.

**threaded tree** : தொடுப்புறு மர அமைப்பு : மரமொத்த தகவல் அமைப்பை 'ஸ்கேன்' செய்வதற்கு உதவும் கூடுதல் சுட்டுகளைக் கொண்ட மர அமைப்பு.

**threading** : புரியாக்கம் : நிரலின் செயல்பாட்டு வேகத்தை அதிகரிக்க சில நிரலாக்க மொழிகளில் பயன்படுத்தப்படும் நுட்பம். (எ-டு) ஃபோர்த் (Forth), ஜாவா, சி# போன்ற மொழிகளில் புரியாக்க நுட்பம் உள்ளது. ஃபோர்த் மொழியில், ஒவ்வொரு புரியாக்கப்பட்ட துணை நிரல் கூறுகளிலும் காணப்படும் பிற துணைநிரல் கூறுகளுக்கான அழைப்புகள் (ஃபோர்த் மொழியில் முன் வரையறுத்த ஒரு சொல்) அந்த நிரல்கூறுகளுக்கான சுட்டுகளால் (pointers) பதிலீடு செய்யப்படுகின்றன.

**threat** : அச்சுறுத்தல்; மருட்டல்.

**threat agent** : அச்சுறுத்தி.

**three address computer** : மூன்று முகவரி கணினி; மும் முகவரி கணினி: அதன் நிரலிடல் முறையில் மூன்று முகவரிகளைப் பயன்படுத்தும் கணினி. சான்றாக, ADD A,B,C என்ற நிரல்களில் A மற்றும் சார்ந்துள்ள மதிப்புகள் காட்டப் பட்டு C உடன் அதன் முடிவு சேர்க்கப்படுகிறது.

**three address code** : மும் முகவரிக் குறியீடு.

**threat analysis** : அச்சுறுத்தல் பகுப்பாய்வு.

**three dimentional (3-D)** : முப்பரிமாண (3-D) மூவளவு : கணினி வரைகலையில், ஒரு மாதிரியின் உயரம், அகலம் மற்றும் ஆழத்தின் ஒவ்வொரு புள்ளியிலும் மூவிடப் பரி மாணங்கள் சேமிக்கப்படு கின்றன.

**three dimentional array** : முப் பரிமாண வரிசை : மூன்று மடிப்பு வகைகளை வரிசை, பத்தி, மடிப்பு-வழங்கும் வரிசை.

**three point curve** : முப்புள்ளி வளைவு.

**three state logic element** : மூன்று நிலை தருக்கப்பொருள் : மூன்று வெளியீட்டு நிலைகளை - நிறுத்தம், குறைந்த மின்சக்தி மற்றும் அதிக மின்சக்தி- தரு கின்ற மின்னணு பொருள்.

**three-tier client/server** : மூன்றடுக்கு கிளையன்/வழங் கன் : மென்பொருள் அமைப்பு கள் மூன்றடுக்குகளில் கட் டமைக்கப்பட்டுள்ள ஒரு கிளை யன்/வழங்கன் கட்டுமானம். (1) பயனாளர் இடைமுக அடுக்கு. (2) வணிகத் தருக்க அடுக்கு. (3) தரவுத் தள அடுக்கு. ஒவ்வோர் அடுக்கும் ஒன்று அல்லது மேற்பட்ட உறுப்பு களைக் கொண்டிருக்கும். எடுத்துக்காட்டாக, மேல் அடுக் கில் ஒன்று அல்லது பல பயனா ளர் இடைமுகங்கள் இருக்க லாம். ஒவ்வொரு பயனாளர் இடைமுகமும் நடு அடுக் கிலுள்ள ஒன்றுக்கு மேற்பட்ட பயன்பாடுகளுடன் ஒரே நேரத் தில் தொடர்பு கொள்ள முடி யும். நடு அடுக்கிலுள்ள பயன் பாடு ஒரேநேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட தரவுத் தளங்களுடன் தொடர்பு கொள்ள முடியும்.

**throttle control** : தடுப்பிதழ்க் கட்டுப்பாடு : கணினியில் விமானப் பாவிப்பி அல்லது விளையாட்டுகளில், பாவிப்பு எந்திரப் பொறியின் சக்தியைக் கட்டுப்படுத்தப் பயனாளருக்கு

உதவும் ஒரு சாதனம். தடுக்கிதழ், பெரும்பாலும் ஒரு விசைப்பிடி (JoyStick) அல்லது ஒரு சுக்கான் (Rudder) விசையுடன் இணைந்து பயன்படுத்தப்படும்.

**throughput** : முழுதும் செல்லல் : ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒரு கணினி அமைப்பு செய்யக்கூடிய பயனுள்ள செயலாக்கத்தின் மொத்த அமைப்பான அளவு.

**throw** : எறி : சி ++/ஜாவா/சி# மொழிகளிலுள்ள ஒரு கட்டளை.

**thumbnail** : விரல்நுனி; விரல் நகம்; குறுஞ்சின்னம் : ஒரு படிமத்தின் மிகச்சிறு வடிவம். படிமங்களை அல்லது பல பக்கங்களை வெகு விரைவாகப் பார்வையிடுமாறு மின்னணு வடிவில் அமைத்திருத்தல். எடுத்துக்காட்டாக, வலைப் பக்கங்கள் பெரும்பாலும் படிமங்கள் அல்லது குறுஞ் சின்னங்களைப் பெற்றிருப்பதுண்டு. இணைய உலாவி, முழு அளவுப் படிமத்தைவிட இக்குறுஞ்சின்னங்களை வெகு விரைவாகப் பதிவிறக்கம் செய்துவிடும். இக்குறுஞ் சின்னங்களை சுட்டியால் சொடுக்கியதும் முழுப் படம் திரையில் விரியும்.

**thumbwheel** : கட்டைவிரல் சக்கரம் : உள்ளீட்டுச் சுட்டியை நிலைக்க வைக்கும் சாதனம். ஒரு அச்சில் சுட்டியின் இயக்கத்தைக் கட்டுப்படுத்தும் சுழலும் சக்கரத்தைக் கொண்டது. விரல் சக்கரங்கள் இரட்டையாகவே இருக்கும். ஒன்று சுட்டியின் செங்குத்து இயக்கத்தையும், மற்றொன்று பக்கவாட்டு இயக்கத்தையும் கட்டுப்படுத்தும்.

**thyristor** : தைரிஸ்டர் : மூன்று அல்லது மேற்பட்ட இணைப்புகளைக் கொண்ட இருநிலைச் சாதனம்.

**TIA** : டீஐஏ : முன்கூட்டிய நன்றி என்று பொருள்படும் Thanks In Advance என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணையத்தில், ஒரு கோரிக்கையை முன்வைக்கும்போது, வழக்கமாகச் சொல்லப்படுவது.

**TICCIT** : டிக்கிட் : Time shared interactive computer controlled instructional television என்பதன் குறும்பெயர். சிறு கணினிகளையும் மாற்றம் செய்யப்பட்ட வண்ண தொலைக்காட்சிப் பெட்டிகளையும் ஒரே நேரத்தில் பல மாணவர்களுக்கு தனிப் பட்டமுறையில் சொல்லித் தருவதற்குப் பயன்படுத்தும் கணினி உதவிடும் கல்வி அமைப்பு.

**tick** : டிக் : 1. ஒரு கடிகாரத் துடிப்பு மின்சுற்றிலிருந்து

உமிழப்படுகின்ற, வழக்கமாய் அடிக்கடி ஏற்படுகின்ற சமிக்கை. இந்த சமிக்கையால் உருவாக்கப்படும் குறுக்கீட்டையும் இது குறிக்கிறது. 2. சில நுண்கணினி அமைப்புகளில், குறிப்பாக மெக்கின்டோஷ் கணினியில், ஒரு வினாடியில் அறுபதில் ஒருபங்கு. நிரல்கள் பயன்படுத்தும் அகநிலைக் கடிகாரத்தில் பயன்படுத்தப்படும் அடிப்படை நேர அலகு.

**ticket :** நெருக்க உரிமை.

**ticket based access control :** உரிமையுடனான நெருக்கக் கட்டுப்பாடு.

**ticket list :** நெருக்க உரிமைப் பட்டி.

**tie breaker :** கட்டு பிரிப்பி : ஒரே நேரத்தில் இரண்டு செயலாக்க அலகுகள் ஒரே வெளிப்புறச் சாதனத்தினைப் பயன்படுத்த முயற்சிக்கும்போது ஏற்படும் மோதலைச் சமாளிக்கும் மின்சுற்று.

**tie line :** முடிச்சு இணைப்பு : ஒரு நிறுவனத்தின் இரண்டு அல்லது மேற்பட்ட பிரிவுகளை (தொலை தூரக் கிளைகளை) இணைப்பதற்காக, ஒரு தகவல் தொடர்பு நிறுவனத்திடமிருந்து (தொலை தொடர்புத் துறையினர்) குத்தகைக்குப் பெறப்படும் ஒரு தனியார் இணைப்பு.

**tie mark :** கட்டு அடையாளம் : ஒரு அளவில் மதிப்புகளைக் காட்டும் அடையாளம். கண்டறியப்பட்ட எண் மதிப்புகளுக்கிடையில் உள்ள புள்ளிகளைக் காட்ட பயன்படுத்தப்படுகிறது.

**.tif :** .டிஃப் : குறியிட்ட படிமக் கோப்பு வடிவில் (Tagged Image File Format - TIFF) அமைந்த பிட்மேப் படிமங்களை அடையாளங் காட்டும் கோப்பு வகைப்பெயர்.

**TIFF or TIF :** டிஃப் : குறியிட்ட படிமக் கோப்பு வடிவாக்கம் எனப் பொருள்படும் Tagged Image File Format அல்லது Tag Image File Format என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும் பெயர். சாம்பல் அளவீட்டு வரைகலைப் படிமங்களை வருடி, சேமித்து, பரிமாறிக் கொள்ள, பெருமளவில் ஏற்றுக் கொள்ளப்பட்ட கோப்பு வடிவம். பழைய வரைவோவியப் பயன்பாடுகளில் (பழைய மேக்பெயின்ட் போன்ற) டிஃப் வடிவாக்கம் மட்டுமே இருந்து வந்தது. ஆனால் தற்போது பயன்பாட்டில் உள்ள நவீன நிரல்களில் ஜிஃப், ஜேபெக் போன்ற விதவிதமான வடிவாக்கங்களில் படிமங்களைச் சேமிக்க வசதிகள் உள்ளன.

**TIGA** : டிகா : டெக்ஸாஸ் இன்ஸ்ட்ரு மெண்ட்ஸ் வரை கலைக் கட்டுமானம் என்று பொருள்படும் Texas Instruments Graphics Architecture என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும் பெயர். டெக்ஸாஸ் இன்ஸ்ட்ருமென்ட்ஸ் நிறுவனத்தின் 340×0 வரைகலைச் செயலியின் அடிப்படையில் அமைந்த, ஒளிக்காட்சி தகவிக் கட்டுமானமாகும் இது.



காட்சி வில்லை

**tightly coupled** : இறுக்கமாக இணைக்கப்பட்ட : ஒன்றை ஒன்று சார்ந்திருக்கும் கணினி களைப் பற்றியது.

**tightly coupled multi processing** : இறுக்க இணைவு பன்மைச் செயலாக்கம்.

**tilde** : டில்டே : அஸ்கி எழுத்து எண் 126(-) சில பெரிய நிரல் தொடர் மொழிகளில் பயன் படுத்தப்படுவது. சான்றாக, லோட்டஸ் 1-2-3 ஒரு வரி திரும்ப வருவதைக் குறிப்பது.

**tile** : காட்சி வில்லை : வரை கலை ஓவியப்பொருளின் ஒரு பகுதி. சதுரம் அல்லது வைர வடிவமாக இருக்கலாம்.

**tiled** : அடுக்கப்பட்ட : பொருள் களை அடுத்தடுத்துக் காட்டுதல். சான்றாக, அடுக்கப்பட்ட சாளரங்களை ஒன்றின்மேல் ஒன்றாக வைக்கமுடியாது.

**tile vertically** : செங்குத்தாய் அடுக்கு.

**tiling** : உழுதல் : வரைகலை காட்சிப்பகுதியில் ஒரு இடத் தின் தனி நிறத்தைக் கொண்டு நிரப்பாமல் ஒரு அமைப்பைக் கொண்டு நிரப்புதல். சாளரங் களை வரிசைப்படுத்தும் முறை. இதில் சாளரங்கள் ஒன்றின் மீது ஒன்று மேலேறி நிற்காமல் அனைத்துச் சாளரங்களும் தெரியும். ஒவ்வொரு சாளரமும் திரையில் ஒரு பகுதியை எடுத்துக் கொள்கிறது.

**tiling screen** : சாயும் திரை : எளிதாகப் பார்க்க வசதியாக, முன் பின்னாகவும், மேலிருந்து கீழாகவும் மாற்றிக் கோணம் அமைக்கக்கூடிய ஒளிக்காட்சித் திரை.

**tilt down** : கிடை மட்டமாய் சரிவாக்கு.

**tilt left** : இடப்பக்கம் சரிவாக்கு.

**tilt right** : வலப்பக்கம் சரிவாக்கு.

**tiltup** : சாய்த்து உயர்த்து.

**time** : வேகம்; காலம்.

**time accass** : அணுகு நேரம்.

**time acceleration** : முடுக்கு நேரம்.

**time add** : நேரம் கூட்டு.

**time add - substract** : நேரம் கூட்டு - கழி.

**time, available machine** : இருக்கும் பொறி நேரம்; மொழிமாற்று நேரம்.

**time, compile** : தொகு நேரம்.

**timed backup** : நேரங்குறித்த காப்பு.

**time division** : நேரம் பிரிப்பி : தகவல் தொடர்பு வழித்தடத்தின் பரப்புத் திறனை மேம்படுத்த பயன்படுத்தப்படும் செலுத்து நுட்பம். துடிப்புக் குறியீட்டுக் குறிப்பேற்றம் என்றும் அழைக்கப்படுகிறது. இம்முறையில் ஒரு குறிப்பிட்ட குழுவைச் சேர்ந்த ஒவ்வொரு தரவு இணைப்புக்கும் ஒரு குறிப்பிட்ட நேரம் ஒதுக்கப்பட்டு அந்த நேரத்தில்தான் அது தரவுகளை அனுப்பிப் பெறும். அதன் அடுத்த நேரம் வரும்வரை அது அமைதியாக இருக்கும். அந்த நேரத்திற்குள் மற்ற தரவு இணைப்புகள் செயலாற்றும். இதன்படி பல்வேறு, தொடர்பில்லாத பயனாளர்கள் ஒரே தகவல் தொடர்பு இணைப்பை ஒரே சமயத்தில் பயன்படுத்த முடியும்.

**time division multiplexing (TDM)** : காலப் பிரிவு பல்வழி தரவு தரு முறை; காலப்பிரிவுப் பெருக்கம் : ஒரு பொது மின்சுற்றுப் பாதையில் பல வழித் தடங்கள் தகவலை அனுப்பும் முறை. இம்முறையில் ஒரு குறிப்பிட்ட நேரத்திற்கு முறைவைத்து ஒவ்வொரு வழித்தடத்திற்கும் பொது மின்சுற்றை ஒதுக்குவது.

**time error, run** : இயக்க நேரப் பிழை.

**time frame** : காலவரையறை.

**time, idle** : செயல்படா நேரம்.

**time log** : காலப் பதிவு : *24* மணிநேரம் போன்ற ஒரு குறிப்பிட்ட கால இடைவெளியில்

கணினி அமைப்பு எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என் பதைக் குறிப்பது.

**time-of-day count :** நாளின் நேரத்தை எண்ணுதல் : பயாஸ் தரவுப் பகுதியில் உள்ள ஒரு மாறிலி. நேர குறுக்கீட்டினால் தொடர்ந்து காட்டப்படுவது செயலாக்க முறை. அதனுடைய மதிப்பைப் பயன்படுத்தி நாளின் நேரத்தைக் கணக்கிடும்.

**time out :** நேரம் போனது ; காலங்கடந்தது : ஒரு குறிப் பிட்ட வெளிப்புறச் சாதனம் வேலை செய்யவில்லை என் பதைக் குறிப்பிட உள்ளீட்டு/ வெளியீட்டு இயக்கங்கள் பயன் படுத்தும் ஒரு சொல்.

**time out settings :** நேர முடிவு அமைப்புகள்.

**time quantum :** கால அளவு : நேரப் பங்கீட்டு அமைப்பால், ஒவ்வொரு அமைப்பாளருக்கும் ஒதுக்கப்படும் கால அலகு.

**timer :** காலங்காட்டி : கணினி யின் உட்பகுதியில் உள்ள கடி காரம்.

**timer clock :** நேரம் காட்டிக் கடி காரம்.

**time, real :** நிகழ் நேரம்.

**time, response :** மறுமொழி நேரம்.

**timer interrupt :** நேரங்காட்டி குறுக்கீடு : 8253 நேரம்காட்டும் சிப்புவால் ஒரு நொடிக்கு 18.2 தடவைகள் காட்டுமாறு தூண்டப் படும் ஒரு குறுக்கீடு. ஒவ் வொரு தடவை அது இயங்கும் போதும் பயாஸ் (Bios) நாளின் நேரத்தைக் காட்டும் கணக்கில் ஒன்று கூட்டப்படுகிறது.

**time, run :** இயக்க நேரம்.

**time scale :** கால அளவுமுறை.

**time, search :** தேடு நேரம்.

**time, seek :** நாடும் நேரம்; கண்டறி நேரம்.

**time series :** காலத் தொடர் : தரவுகளை நீண்ட கால அளவில் தொகுத்துக் கூறுதல். ஒரு குறிப் பிட்ட தரவு தொகுதியின் முழுப்பகுதியும் தெரியவில்லை என்றாலும் அவற்றின் எதிர் காலம் மதிப்புகளும் தெரிய வில்லை என்றபோதிலும் அத்தொகுதியின் பொதுவான நடத்தையை குறிப்பிடுவது.

**time series analysis :** காலத் தொடர் ஆய்வு : ஒரு தரவுத் தொகுதியின் நீண்ட காலப் போக்குக்கான காரணங்களைக் கண்டறிய பயன்படுத் தப்படும் ஒரு புள்ளி விவரமுறை. சான்றாக, கோதுமையின் விலை ஆண்டு முழுவதும் ஏறி,

இறங்குகிறது; ஆண்டுக்காண்டு மாறுகிறது. காலத் தொடர்பு ஆய்வு இந்த ஏற்ற, இறக்கத்திற்குள் ஒரு ஒழுங்கைக் கண்டு பிடித்து பருவகாலம், போக்குகள் மற்றும் வறட்சி போன்ற சுழற்சி நிகழ்வுகளைக் கண்டு பிடித்தல்.

time services : நேரத் தொடர்.

time share : காலப் பகிர்மானம்; பகிர்வு நேரம்.

time sharing : நேரப்பங்கிடல் ; காலப் பங்கீடு; நேரப் பகிர்வு முறை : ஏறக்குறைய ஒரே நேரத்தில் கணினி வசதியைப் பல பயனாளர்கள் பல்வேறு நோக்கங்களுக்காகப் பயன் படுத்தும் இயக்கமுறை. ஒவ் வொரு பயனாளரையும் தொடர்ச்சியாக அதன் வசதி யைப் பயன்படுத்திக் கொள்ள கணினி அனுமதித்தாலும், எல்லா பயனாளர்களும் ஒரே நேரத்தில் பயன்படுத்திக் கொண்டதாகவே தோன்றும்.

time sharing priority : நேரப் பங்கீட்டு முன்னுரிமை

time slice : காலச் சிப்பு : ஒரே அலகு.

time slicing : காலக்கூறு ; நேரம் கூறிடல் : பல நிரல் தொடர மைப்பு அமைப்பில் ஏதாவது ஒரு நிரல் தொடரே மையச் செயலகத்தை ஆக்கிரமித்துக் கொள்வதைத் தடுக்க, செய லாக்கத்தை ஒவ்வொரு நிரல் தொடருக்கும் பிரித்து ஒதுக்கும் முறை.

time slot : கால ஒதுக்கீடு ; நேர ஒதுக்கீடு : இரண்டு சாதனங்கள் ஒன்றாக இணைக்கப்படும் போது இடைவெளிவிட்டு தொடர்ந்து திரும்பத் திரும்ப வரும் நேரம்.

time to live : வாழ்நாள்; ஆயுள் காலம் : இணையத்தில் அனுப் பப்படும் ஒரு தரவுப் பொதி யின் தலைப்புப் புலம். அந்தப் பொதியை எவ்வளவு காலம் வைத்திருக்கலாம் என்பதைக் குறிக்கிறது.

time total : மொத்த நேரம்.

time transfer : பரிமாற்ற நேரம்.

timing signals : நேர சமிக்கை கள் : கணினி இயக்கங்களை ஒரே நேரத்தில் ஒருங்கிணைக்க வெளிப்புறச் சாதனங்கள் அல் லது செயலகங்களில் உருவாக் கப்படும் மின்துடிப்புகள். முக் கிய நேர சமிக்கைகள் கணினி யின் கடிகாரத்திலிருந்து வரு கிறது. பல மெதுவான சுழற்சி களாகப் பிரிக்கப்படும் அலை வரிசைகளை இந்த கடிகாரம் ஏற்படுத்துகிறது. நேரப்பங்கீடு

அல்லது உண்மை நேர கடிகாரத்திடமிருந்து மற்ற நேர சமிக்கைகள் வருகின்றன. வட்டு இயக்கிகள், நேர சமிக்கைகள் செய்ய நினைவக வட்டுப் பகுதி ஒன்றில் துளைகள் அல்லது அடையாளங்கள் செய்தோ அல்லது ஏற்கனவே பதிவுசெய்த எண் தரவுகளையோ பயன்படுத்தலாம்.

**tiny BASIC : சின்னஞ்சிறு பேசிக் :** முதல் தலைமுறை தனிநபர் கணினிகளில் பயன்படுத்தப்பட்ட அளவான நினைவகத்தைக் கொண்ட பேசிக் மொழியின் ஒரு துணைப்பகுதி.

**tiny model : மிகச்சிறு மாதிரியம் :** இன்டெல் 80×86 செயலிகளில் செயல்படுத்தப்படும் ஒரு நினைவக மாதிரியம். இதில், நிரல் குறி முறைக்கும், தரவுகளுக்கும் சேர்த்து மொத்தம் 64 கிலோபைட்டுகள் மட்டுமே வைத்துக்கொள்ள முடியும். சி-மொழி நிரல் ஒன்றை மிகச் சிறு நினைவக மாதிரியத்தில் மொழி மாற்றி (compile) உருவாக்கப்பட்ட EXE கோப்பினை, EXE2BIN போன்ற பயன்கூறுகள் மூலம் COM கோப்புகளாக மாற்றியமைக்க முடியும்.

**tip of the day : இன்றைய உதவிக் குறிப்பு.**

**title :** தலைப்பு.

**title bar : தலைப்புப் பட்டை :** விண்டோஸ் போன்ற வரைகலைப் பயனாளர் இடைமுகத்தில் (GUI) திரையில் தோன்றும் சாளரங்களின் மேற்பகுதியில் அச்சாளரத்தின் பெயரைத் தாங்கியிருக்கும் பட்டை. பெரும்பாலான தலைப்புப் பட்டைகளில் சாளரத்தை மூடவும், அளவு மாற்றுவதற்குமான பொத்தான்களும் இடம் பெற்றிருக்கும். தலைப்புப் பட்டையில் சுட்டியை வைத்து அழுத்திக்கொண்டு சாளரத்தை எங்கு வேண்டுமானாலும் நகர்த்திச் செல்லலாம்.

**.tj : .டீஜே :** ஓர் இணைய தள முகவரி தாஜிகிஸ்தான் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.tk : .டீகே :** ஓர் இணைய தள முகவரி டேக்கேலாவ் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**T2L : டி2எல் :** TTL என்பதற்கு மாற்றுப் பெயர்.

**TLA : டீஎல்ஏ :** மூன்றெழுத்துச் சுருக்கச்சொல் எனப் பொருள்படும் Three Letter Acronym என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

இணையத்தில் மின்னஞ்சல், செய்திக் குழுக்கள் மற்றும் பிற நிகழ்நிலை மன்றங்களில் கணினிக் கலைச்சொற்களில் இருக்கும் ஏராளமான சுருக்கச் சொற்கள், குறிப்பாக மூன் றெழுத்துச் சுருக்கச் சொற்கள் குறித்து அங்கதமாய்க் குறிப் பிடப்படும் சொல்.

**.tm** : .டீஎம் : ஓர் இணைய தள முகவரி துர்க்மேனிஸ்தான் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**.tn** : .டீஎன் : ஓர் இணைய தள முகவரி துனீசியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**.to** : .டீஓ : ஓர் இணைய தள முகவரி டோங்கா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**toggle** : **இருநிலை மாற்றி** : இரண்டு நிலையான அமைப்பு களைக் கொண்ட ஒரு சாதனம்.

**toggle case** : **இருநிலைமாற்றிப் பெட்டி; நிலைமாற்றிப் பெட்டி.**

**toggle keys** : **நிலைமாறு விசைகள்** : விண்டோஸ் 95/98 இல் உள்ள ஒரு பண்புக்கூறு. கேப்ஸ்லாக், நம்லாக், ஸ்குரோல் லாக் போன்ற நிலை மாற்று விசைகளில் ஒன்றை நிகழ் (ON) அல்லது அகல் (OFF) நிலையில் வைக்கும்போது மெல்லிய/ உரத்த பீப் ஒலி எழும்.

**toggle switch** : **இருநிலை மின் மாற்றி.**

**token** : **அடையாள வில்லை; அடையாளி ; வில்லை** : *1.* ஒரு நிரல் தொடரமைப்பு மொழி யில் உள்ள ஒரு பெயர் அல்லது பொருளைக் குறிப்பிடுகின்ற குறியீடு. *2.* ஒரு குறிப்பிட்ட நிலையத்தில் இணைய சமிக்கை மூலம் குறிப்பிட சில வழித் தடங்களில் பயன்படுத்தப்படு வது. எட்டு 1-கள் போன்ற துண்மிகளின் தொகுதி.

**token bus network** : **வில்லைப் பாட்டைப் பிணையம்** : தரவு போக்குவரத்தை ஒழுங்குபடுத்த வில்லை அனுப்பும் முறையைக் கடைப்பிடிக்கின்ற, பாட்டைக் கட்டமைப்பில் அமைந்த ஒரு குறும்பரப்புப் பிணையம் (பணி நிலையங்கள் ஒற்றை, பகிர்வு தரவு நெடு வழியில் பிணைக்கப் பட்டிருக்கும்). தரவு அனுப்பும் உரிமையை வழங்கும் வில்லை ஒரு நிலையத்திலிருந்து இன் னொரு நிலையத்துக்கு அனுப்பப் படும். ஒவ்வொரு நிலையமும்

வில்லையைச் சிறிது நேரம் வைத்திருக்கும். அந்நேரத்தில் அந்நிலையம் மட்டுமே தரவு அனுப்ப முடியும். அதிக முன்னுரிமை பெற்ற நிலையத்திலிருந்து அதற்கடுத்த முன்னுரிமை பெற்ற நிலையத்துக்கு வில்லை அனுப்பி வைக்கப்படும். அந்நிலையம், பாட்டையில் அடுத்த நிலையமாக இருக்கவேண்டியதில்லை. சுருங்கக்கூறின், வில்லையானது பிணையத்தில் ஒரு தருக்க நிலை வளையத்தில் (Logical Ring) சுற்றிவருகிறது எனலாம். வளையக் கட்டமைப்பில் இருப்பதுபோன்று பருநிலை வளையத்தில் (Physical Ring) சுற்றி வருவதில்லை. இத்தகு பிணையங்கள் ஐஇஇஇ 802.4-ல் வரையறுக்கப்பட்டுள்ளன.

**token passing : அடையாள வில்லை அனுப்புதல் :** ஒரு தகவல் தொடர்பு வழித்தடத்தை ஒன்றுக்கு மேற்பட்டவர் பிடித்துக் கொள்வதைத் தடுக்கும் ஒரு தொழில் நுட்பம். தகவல் தொடர்பு அமைப்பில் ஒரே ஒரு முறைமட்டும் வருமாறு குறியீடு இடப்பட்ட அடையாள வில்லை. ரேமில் உள்ள அடையாள வில்லையை வைத்திருக்கும் ஒரே ஒரு கணினி மட்டுமே தகவல்களை அனுப்பிப் பெற முடியும். இரயில்வே சமிக்கை முறையிலிருந்து அடையாள வில்லையை அனுப்பிப் பெறும் முறை பெறப்பட்டது. இரண்டு இரயில்கள் ஒரே பாதையில் வந்து மோதிக் கொள்வதை தடுப்பதற்காக அடையாளவில்லை அல்லது பேட்டனை முன்னும், பின்னும் எடுத்துச் செல்வார்கள்.

**token ring : அடையாளவில்லை வளையம் :** *1980* ஆரம்பத்தில் உருவாக்கப்பட்ட ஐபிஎம் கணினி கட்டமைப்பு வரைமுறைகளின் உரிமப்பொருள். IEEE 802-5 தர நிருணயத்தில் இது வரையறுக்கப்படுகிறது.

**token ring network : அடையாள வில்லை வளைய பிணையம் :** வரிசைமுறையில் அடையாள வில்லையை அனுப்பும் நுட்பத்தைப் பயன்படுத்தும் தகவல் தொடர்புப் பிணையம். இதில் பிணையத்தின் ஒவ்வொரு நிலையமும் அடையாள வில்லையை அதற்கடுத்த நிலையத்திற்கு அனுப்பும்.

**tolerance :** இணக்கம் ; பொறுதி.

**toll :** சுங்கம்.

**tone : நிறத்திண்மை :** கணினி வரை கலையில் மென்னிறம் மற்றும் நிழல்.

**toner : மை :** நகலெடுக்கும் எந்திரங்களிலும், லேசர் அச்சுப்

பொறிகளிலும் பயன்படுத்தப் படும் மின்சக்தி ஏற்றப்பட்ட/மை. கண்ணுக்குத் தெரியாத உருவத்தினை எதிர் துருவத்தில் உள்ள பலகை, உருளை அல்லது காகிதத்தில் விழச் செய்யும்.

**tool :** கருவி : சில கணினி அமைப்புகளில் உள்ள ஒரு பயன்பாட்டு நிரல் தொடர்.

**tool bar :** கருவிப்பட்டை.

**toolbox :** கருவிப்பெட்டி : முன் வரையறுக்கப்பட்ட (பெரும்பாலும் முன்பே மொழி மாற்றப்பட்ட) நிரல் கூறுகளின் தொகுதி. ஒரு குறிப்பிட்ட கணினிக்காக, ஒரு குறிப்பிட்ட பணிச்சூழலுக்கு, ஒரு குறிப்பிட்ட பயன்பாட்டுக்காக நிரல் எழுதும் ஒரு நிரலர் இந்த மென்பொருள் கருவிகளைப் பயன்படுத்திக்கொள்ள முடியும்.

**toolkit :** கருவிப்பெட்டி : ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் எழுதப்பட்டு, இயக்கப்படுவதற்கு அனுமதிக்கும் மென்பொருள் வாலாயங்களின் தொகுதி. பல்வேறு பணிகளைச் செய்வதற்காக பயன்பாட்டு நிரல் தொடர்கள் வாலாயங்களை அழைக்கும். சான்றாக, ஒரு பட்டியலைக் காட்டுதல் அல்லது வரைகலைக் கோடு ஒன்றை வரைதல்.

**toolkit software :** கருவித் தொகுதி மென்பொருள்; கருவிப் பெட்டி மென்பொருள் : முழு நிரல் தொடரையும் அவர்களே எழுதுவதற்குப் பதிலாக, பயனாளர்கள் தாங்களே தங்களது சிறப்புப் பயன்பாடுகளை ஏற்படுத்திக்கொள்ள அனுமதிக்கும் மென்பொருள் தொகுப்பு.

**tool palette :** கருவி வண்ணத் தட்டு: ஊடாடு வரைகலைத் தேர்வுக்காக 'பட்டியல்' அமைப்பில் திரை மீதுள்ள பணிகளின் தொகுதி - பெரும்பாலும் வரைகலை சார்ந்தது.

**tools :** கருவிகள்.

**top :** உச்சி ; உச்சிப் பகுதி.

**top down :** மேல்-கீழ்.

**top-down design :** மேல்-கீழ் வடிவமைப்பு : ஒரு நிரல் வடிவமைப்பு வழிமுறை. மீவுயர் நிலையில் நிரலின் செயல்பாட்டை (தொடர்ச்சியான பணிகள்) வரையறுப்பதில் தொடங்குகிறது. ஒவ்வொரு பணியும் அதன் அடுத்தநிலைப் பணிகளாக உடைக்கப்பட்டு வரையறுக்கப்படுகின்றன. இவ்வாறு அடுத்தடுத்த நிலைக்குச் செல்லல்.

**top down development :** மேலிருந்து கீழ் மேம்பாடு : கணினி நிரல் தொடர் மேம்பாட்டுக்கான வடி

வமைப்புக் கட்டுமான பிரிவு, மேம்பாட்டு செயலாக்கத்தின் போது உயர் நிலைப் பணிகள் யாவும் குறியீடு அமைக்கப் பட்டு வெளியமைப்பு வடிவத் தில் முன்னதாகவே சோதிக்கப் படும். கீழ்நிலை தரவுகள் சேர்க்கப்பட்டு வரையறைகள் மற்றும் இடைமுகங்கள் மூலம் போகப் போக சோதிக்கப்படும். வேலைக் கட்டுப்பாட்டு மொழி கள் மற்றும் செயலாக்க முறைகள் போன்ற மேல்நிலைகளில் துவங்கி இதன் மொத்த அமைப்பு உருவாக்கப்படுகிறது. படிப்படி யாக இது முன்னேறி நிரல் தொடர் கட்டுப்பாட்டுக் கூறுகள் வரை விரிந்து சென்று கீழ்நோக் கிய வரிசைமுறை அமைப்பில் நிரல் தொடர் கூறுகளின் மேலும் துல்லியமான நிலைகளுக்குக் கீழிறங்கி வருகிறது. இந்த அணுகுமுறை இரண்டுவகை விளைவுகளை ஏற்படுத்தும். முதலாவது, மேம்பாட்டினை ஒட்டி அதேவேளையில் கணினி அமைப்பு ஒருங்கிணைவது ஏற்படும். அடுத்ததாக, மேம் பாடு செய்யப்பட்டுக் கொண் டிருக்கும்போதே கூடுதல் திறனுடைய இயக்க அமைப்பு பயன்பட்டு வருகிறது.

**top-down methodology :** மேல்-கீழ் செயல்முறை : கலவையான தன்மையை ஒழுங்குபடுத்து வதற்கான கட்டுப்பாடான அணுகுமுறை. இதில் ஒரு அமைப்பின் மேல்நிலை பணி கள் அடையாளம் காணப்பட்டு பின்னர் இப்பணிகளை வரிசைக் கிரமமான புரியக்கூடிய கீழ் நிலை கூறுகளாகப் பிரிக்கப்படு கிறது.

**top-down programming :** மேல்-கீழ் நிரலாக்கம் : நிர லாக்கத்தில் ஓர் அணுகுமுறை. முதலில் நிரலின் முதன்மைப் பகுதி எழுதப்படும். முதன் மைப் பகுதியில் பல்வேறு துணை நிரல்களுக்கான அழைப்புகள் இருக்கும். அதன் பிறகு துணை நிரல்களுக்கான குறிமுறைகள் எழுதப்படும். அதில் இடம்பெறும் அடுத்த நிலை துணை நிரல்களுக்குப் பிறகு குறிமுறை எழுதப்படும்.

**topic drift :** தலைப்பு நழுவல்; தலைப்பு திசைமாறல் : இணையத்தில் நடைபெறும் நிகழ்நிலைக் கலந்துரை யாடலின் மூலக் கருப்பொருள், தொடர்புடைய அல்லது தொடர்பில்லாத பிற தலைப்புக் குத் தாவுதல். எடுத்துக்காட் டாக, தொலைக்காட்சி பற்றி விவாதித்துக் கொண்டிருக்கும் போது, திரைப்படத்துக்குத் தாவி, பிறகு செய்தித்தாளுக்குப்

போய், அரசியலுக்குச் சென்று, ஊழலுக்கு மாறி, விலைவாசியில் தொடர்ந்து, பழங்கள் காய்கறிகளின் நன்மையில் முடியலாம்.

**top/head :** மேல்/தலை (முனை).

**topic group :** தலைப்புக் குழு : நிகழ்நிலை விவாதப் பகுதி. ஒரு குறிப்பிட்ட கருப்பொருளில் பொதுவான ஆர்வம் உள்ளவர்களின் குழு.

**top-level domain :** மேல்நிலைக் களம் : இணைய முகவரிகளின் களப்பெயர் அமைப்பில், பெரும்பாலான களப்பெயர்களுக்குப் பொருந்தக்கூடிய பரந்த வகையைக் குறிக்கும். தற்போது பயன்பாட்டில் உள்ள மேல்நிலைக் களப்பெயர், .com, .edu, .gov, .net, .org, .mil, .int ஆகியவற்றில் ஒன்றாக இருக்கிறது.

**top-of-file :** கோப்பின் தொடக்கம் : 1. ஒரு கோப்பின் தொடக்கம். குறிப்பிட்ட பயன்பாட்டில் உருவாக்கப்படும் கோப்புகளின் முதல் பைட் ஒரு சிறப்புக் குறியீடாக இருக்கும். அதைக் கொண்டே அக்கோப்பு குறிப்பிட்ட வகையைச் சார்ந்தது என்பதை அறியமுடிகிறது. 2. வரிசை முறைப்படுத்தப்பட்ட ஒரு தரவுத்தள அட்டவணையில் முதல் ஏடு.

**top of page :** பக்கத்தின் மேற்பகுதி : ஒரு பக்கத்தின் மேல் பகுதி எங்கே இருக்கவேண்டும் என்று அச்சுப்பொறிக்குக் கூறுகின்ற ஒரு ஏற்பாடு. இதனால் சரியான இடத்தில் அச்சு துவங்கி காகிதத்தில் சரியாக முன்னேறி காகிதப் படிவத்தைப் பெறுகின்றது.

**top margin :** மேல் ஓரம்.

**topology :** கட்டமைப்பியல்; வடிவியல்; இடத்தியல் : ஒரு கட்டமைப்பின் வடிவமைப்பில் உள்ள பல்வேறு தகவல் தொடர்பு வழித்தடங்கள், சாதனங்கள் ஆகியவை ஒன்றோடொன்று இணைந்திருப்பதை வரைபடமாகக் காட்டும் ஒரு கணினி கட்டமைப்பு.

**.tor.ca :** .டீஓஆர்.சிஏ : ஓர் இணைய தள முகவரி கனடா நாட்டின் டொரன்டோ நகரைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**total :** கூட்டுத் தொகை.

**total bypass :** முழு ஒதுக்கல் : செயற்கைக்கோள் தகவல் தொடர்புகளைப் பயன்படுத்தி உள்ளூர் மற்றும் நீண்ட தொலைவு தொலைபேசிக் கம்பிகளை ஒதுக்குதல்.

**total time :** முழு நேரம்.

**total transfer** : முழு மாற்றல்.

**touch pad** : தொடு திண்டு : அழுத்த உணரிகளைக் கொண்ட ஒருவகை வரைகலை வரை பட்டிகை (tablet). கையால் தொட்டு காட்டியின் இடம் உணர்த்தப்படும். மின் காந்தத்தைப் பயன்படுத்தும் மிகு தெளிவு வரைபட்டிகை களும் உள்ளன.

**touch screen** : தொடுதிரை : கை விரல்களைப் பயன்படுத்தி திரையில் ஒரு குறிப்பிட்ட வாய்ப்பு அல்லது ஒரு பட்டியலின் பொருள் அல்லது இடை முகத்தைத் தேர்ந்தெடுத்துக் காட்டப் பயன்படுத்தப்படுவது.

**touch sensitive** : தொடு உணர்வு.

**touch sensitive screen** : தொடு உணர் திரை : 1. திரையில் குறிப்பிட்ட இடத்தில் விரலாலோ அல்லது வேறு பொருளாலோ தொடுவதன் மூலம் கட்டளைகளை அனுப்ப உதவும் காட்சித்திரை. 2. ஒரு ஒளிக்காட்சிக் குழாயின் முன்னால் தெளிவான குழைமத் தூளைச் (பிளாஸ்டிக்) சேர்த்துக் கொண்டுள்ள சிறப்பு வகை ஒளிக்காட்சி. எந்த இடத்தில் திரையில் தொடப்படுகிறது என்பதை திரை தெளிவாகக் கண்டறிந்து குறிப்பிடப்பட்ட பணியைக் கணினி செய்கிறது.

**touch sensitive tablet** : தொடு உணர் பலகை : வரைகலை மற்றும் பட வடிவில் உள்ள தரவுகளை எண் வடிவில் கணினி பயன்படுத்தும் வகையில் தரும் உள்ளீட்டுச் சாதனம். விரல் அல்லது எழுத்தாணி மூலம் பலகையைத் தொட்டால் வரைகலை தரவுகளை உருவாக்க முடியும்.

**touch tone telephone** : தொடு குரல் தொலைபேசி : அழுத்தும் பொத்தான் தொலைபேசி, தொலை செயலாக்க அமைப்புகளில் பயன்படுத்தப்படுவது.

**tower** : கோபுரம் : அகலத்தை விட அதிகமான உயரம் உடைய தரையில் நிற்கும் பெட்டி. மோட்டோரோலா 68,000 குடும்ப மையச் செயலகங்களைப் பயன்படுத்தும் என்சிஆரின் யூனிக்ஸ் சார்ந்த தனி மற்றும் பல் செயலகக் கணினி அமைப்புகளின் கோபுர வரிசை. தனியாக நிற்கும் தரையில் வைக்கப்படும் . பெட்டியைப் பயன்படுத்தும் தனிநபர் கணினிகளைப் பற்றிய ஒரு பொதுப் பெயர். மேசை இடத்தைக் குறைக்க இத்தகைய வடிவமைப்பு திட்டமிடப்பட்டது.



கோபுரம்

முகப்பும், விசைப்பலகையும் மேசைமீது வைக்கப்படும்.

**TPI : டி.பீ.ஐ :** tracks per inch என்பதன் குறும்பெயர். காந்த வட்டுகளில் சேமிப்பின் அடர்த்தியை அளக்கப் பயன் படுத்தப்படுவது.

**TP monitor : டீபீ கண்காணிப்பி :** தொலை செயலாக்கம் (Telepro -cessing) அல்லது பரிமாற்றச் செயலாக்கம் (Transaction Processing) என்பதன் சுருக்கம். முனையங்களுக்கும் (அல்லது கிளையன்களுக்கும்), பெரு முகக் கணினிக்கும் (அல்லது வழங்கனுக்கும்) இடையே நடைபெறும் தகவல் பரிமாற்றத்தைக் கட்டுப்பாடு செய்யும் ஒரு நிரல். ஒன்று அல்லது மேற்பட்ட நிகழ்நிலைப் பரிமாற்றச் செயலாக்கப் (OLTP) பயன்பாடுகளுக்கு முரணில்லாச் சூழலை வழங்குகின்றன.

**.tr : .டீஆர் :** ஓர் இணைய தள முகவரி துருக்கி நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**trace : தேடு ; சுவடு ; பதிவடையாளம்:** 1. பரவு காட்சித் திரையில், ஒளிக் கற்றையின் பாதையை 'வருடல்' (scan) செய்வது. 2. மின்னணு பாகங்களை மின்சுற்று அட்டைகளில் இணைக்கும் மின்னோட்டப் பாதை.

**trace dependents : சார்புகளைத் தேடு :** எம்எஸ் எக்ஸெல்லில் ஒரு கட்டளை.

**trace error : பிழை தேடு.**

**trace precedents : முன் காரணிகளைத் தேடு :** எம்எஸ் எக்ஸெல்லில் ஒரு கட்டளை.

**tracing routine : தேடும் வாலாயம் :** ஒரு நிரல்தொடரின் இயக்கத்தின்போது கணினி இயக்கப் பதிவகங்களில் அடங்கியிருப்பவற்றின் நேரப்படியான

வரலாற்றைக் கூறும் வாலாயம். ஒரு முழுமையான தேடும் வாலாயம்மூலம் ஒவ்வொரு முறை நிரல் செயல்படுத்தப் படும்போதும் பாதிக்கப்படும் இருப்பிடங்கள் மற்றும் அனைத்துப் பதிவகங்களின் தகுதியைக் கண்டறிய முடியும்.

**track** : ஓடுபாதை ; தட வரிசை; தடம்: *1.* காந்த நாடா அல்லது காந்தவட்டு போன்ற தொடர்ச்சி யான அல்லது சுழலும் ஊடகம் மீது தரவுகள் செல்லும் பாதை. 2. ஒளிக்காட்சியில் காட்டப்



ஓடுபாதை

படும் சுட்டி (கர்சர்), எழுத்தாணி, சுட்டுப்பொறி (மவுஸ்) அல்லது பிற உள்ளீட்டுச் சாதனத்தில் நகரும் நிலையைப் பதிவு செய் தல் அல்லது பின் தொடர்தல்.

**track address** : தடவரிசை முகவரி.

**track ball** : தடக்கோளம்; கோளச் சுட்டி : ஒரு கணினி காட்சித்


தடக் கோளம்

திரையில் சுட்டியைத் தேடப் பயன்படுத்தும் சாதனம். ஏற்றும் சாதனம், பொதுவாக ஒரு பெட்டி, ஒரு பந்தில் அமைக்கப் படுகிறது. பயனாளர் அந்தப் பந்தைச் சுழற்றினால் சுட்டி அதே வேகத்தில் நகரும். பந்தின் திசையிலேயே அது நகரும்.

**track changes** : மாற்றங்கள் குறித்து வை : எம் எஸ் வேர்டில் ஒரு கட்டளை.

**track density** : தட அடர்வு.

**tracking** : தேடல் : ஒளிப்பேனா, மின்னணு பேனா, கோளச் சுட்டி அல்லது சுட்டுப்பொறி ஆகியவற்றைக் கொண்டு காட்சித்திரையின் மேற்பகுதியில்

சுட்டியையோ அல்லது வேறு குறியீட்டையோ நகர்த்துதல்.

**track pad** : தடத்திண்டு : தொடுதலை உணரும் திறனுள்ள சிறிய தட்டை வடிவத் திண்டால் ஆன ஒரு சுட்டுச் சாதனம். பயனாளர்கள் திரையில் தோன்றும் காட்டியை இங்குமங்கும் நகர்த்த, தடத் திண்டின்மீது விரலை வைத்து நகர்த்தினால்போதும். இத்தகைய சாதனம் பெரும்பாலும் மடிக் கணினிகளில் பொருத்தப் பட்டுள்ளன.

**track pitch** : தட நெருக்கம்.

**track recovery** : தட மீட்பு.

**track reverse** : தடப் பின்னோட்டம்.

**track sector** : தடப் பிரிவு.

**track selector** : தடத் தேர்வுக் கருவி.

**tracks per inch** : ஓர் அங்குலத்தில் தடங்களின் எண்ணிக்கை : ஒரு வட்டில் ஓர் அங்குல ஆரப்பரப்பில் பதியப்பட்டுள்ள ஒரு மைய வட்டத் தடங்களின் (தரவுச் சேமிப்பு வளையங்கள்) அடர்த்தி. அதிக அடர்த்தி (அதிக எண்ணிக்கையிலான தடங்கள்) இருப்பின், வட்டில் அதிகமான தகவலைப் பதிய முடியும்.

**track time elapsed** : தட நேர முடிவு.

**track time remaining** : தட நேரம் மிச்சம்.

**tractor** : தாள் இழுப்பி; இழுவைத் தாள் ஊட்டி : அச்சுப் பொறிமூலம் தொடர்ந்து அனுப்பப்படும் காகிதத்தை நகர்த்துகின்ற அச்சுப்பொறியில் உள்ள ஒரு பகுதி.

**tractor feed** : இழுவைத்தாள் ஏற்பி : அச்சுப்பொறியின் பகுதியாக உள்ள ஒரு மின்னியந்திரச் சாதனம். இது தொடர்படிவ காகிதத்தை அச்சு எந்திரப் பகுதிக்கு அனுப்புகிறது.




இழுவைத் தாள் ஏற்பி

டிராக்டர் ஏற்புப் பகுதியில் உள்ள துளைகள் காகிதத்தை வாங்கி நகர்த்துகிறது.

**trademark** : வணிகச் சின்னம் : ஒரு நிறுவனம் தானே தயாரிக்கும் தனியுரிமை விற்பனைப் பொருட்களை அடையாளங் காட்டும் ஒரு சொல், சொல் தொடர், குறியீடு, அல்லது ஒரு படிமம் (அல்லது இவற்றுள் சிலவற்றின் சேர்க்கை). பெரும் பாலும் வணிகச் சின்னத்தின் அருகில் TM அல்லது ® என்ற குறியீடு இருக்கும்.

**trade off** : ஈடுகட்டல்.

**trade show** : வணிகக் கண் காட்சி; விற்பனைப் பொருட் காட்சி : பல்வேறு விற்பனை நிறுவனங்கள் சேர்ந்து தங் களுடைய விற்பனைப் பொருட் களை பொதுமக்களுக்குக் காட்சிப்படுத்தல்.

**traffic** : போக்குவரத்து : ஒரு தகவல் தொடர்பு இணைப்பு அல்லது தடத்தில் நடைபெறும் தகவல் பரிமாற்றங்கள்.

**traffic intensity** : போக்குவரத்து அடர்வு.

**traid** : டிரைட் : மூன்று துண்மிகள், எட்டியல்கள் அல்லது எழுத்துகள் போன்று மூன்றினைக்கொண்ட தொகுதி.

**trail** : செல் தடம்.

**trailer** : முன்னோட்டம் : 1. தரவு செயலாக்கத்தில், ஒரு கோப்பின் கடைசிப் பதிவேடு. அப்பதிவேட்டின் கோப்பில் உள்ள பதிவேடுகளின் எண்ணிக் கையையும் இடைநிலை கூட்டல்களையும் கொண்டிருக் கும். 2. தரவு தொடர்புகளில், ஒரு குறியீடு அல்லது குறியீடு களின் தொகுதி. அனுப்பப் பட்ட செய்தியின் கடைசிப் பகுதி இதில் இருக்கும்.

**trailer edge** : முன்னோட்ட விளிம்பு.

**trailer label** : முன்னோட்ட வில்லை : ஒரு கோப்பைப் பற்றிய அடையாளத் தகவலைக் கொண்டிருக்கும் அதற்கு முந்தைய கோப்பின் கடைசிப் பதிவேடு.

**trailer record** : முன்னோட்ட ஏடு.

**trailing edge** : பின்விளிம்பு : ஒரு மின்சாரச் சமிக்கையின் பிற்பகுதி. ஓர் இலக்கமுறை சமிக்கை நிகழ்நிலையிலிருந்து அகல்நிலைக்கு மாறும்போது அதன் பின்விளிம்பு நிலை மாற்றத்தைக் குறிக்கிறது.

**train[1]** : தொடர், வரிசை : தொடர் வரிசையாய் அமைந் திருக்கும் உருப்படிகள் அல்லது

நிகழ்வுகள். (எ-டு) இருமச் சமிக்கைகளை அனுப்பிடும் போது இடம்பெறும் இலக்க முறைத் துடிப்புகள்.

**train²** : பயிற்று; கற்பி : ஒரு மென்பொருள் அல்லது வன் பொருள் தயாரிப்பை எவ்வாறு பயன்படுத்துவது என்று இறுதிப் பயனாளருக்குக் கற்றுக் கொடுத்தல்.

**train printer** : தொடர் அச்சுப் பொறி : ஒரு தடத்தில் உள்ள குண்டு அச்சுகளைப் பயன் படுத்தும் வரி அச்சுப்பொறி.

**training** : பயிற்சி : 1. ஒரு குறிப்பிட்ட பொருள் பற்றிய தரவுகளைக் கற்றுத்தரல். மென் பொருளைப் பொறுத்தவரை ஒரு பயன்பாட்டில் காணப் படும் அனைத்துக் கட்டளை களின் மீது விளக்கம் தரப்படும். 2. தரவு தொடர்புகளில், இரண்டு மோடெம்கள் தங் களுக்குள் சரியான வரைமுறை மற்றும் செலுத்து வேகத்தை முடிவு செய்தல். 3. குரல் அறியும் அமைப்புகளில், ஒரு குரலைக் கண்டறிவதற்காக ஒரு வரின் மாதிரிகளையும் அமைப்பு களையும் பதிவு செய்தல்.

**transaction** : பரிமாற்றம் ; செயல் பரிமாற்றம்; செயலாக்கம்; செய் வினை : நடவடிக்கை அல்லது வேண்டுகோள். நிரல்கள், வாங்கல்கள், மாற்றல்கள், சேர்த்தல்கள் மற்றும் நீக்கல்கள் ஆகியவை ஒரு வணிகச் சூழ் நிலையில் பதிவு செய்யப்படும் பரிமாற்றங்களின் சான்றுகள். கேள்விகளும் மற்ற வேண்டு கோள்களும்கூட கணினிக்குப் பரிமாற்றங்கள் என்றாலும் அவற்றின் மீது நடவடிக்கை எடுக்கப்படுகிறது. பதிவு செய்யப்படுவதில்லை என் பதால் அவை பரிமாற்றங் களாகக் கருதப்படமாட்டாது. ஒரு கணினி அமைப்பின் வேகம் மற்றும் அளவை முடிவுசெய்ய பரிமாற்ற அளவே பெரும் காரணியாகக் கருதப்படும்.

**transaction code** : பரிமாற்றக் குறியீடு.

**transaction document** : பரிமாற்ற ஆவணம் : வணிகப் பரிமாற்றத் தின் ஒரு பகுதியாக வெளியிடப் படும் ஆவணம். சான்று - வாங் கும் நிரல், சம்பளக் காசோலை, விற்பனைப் பற்றுச்சீட்டு அல்லது வாடிக்கையாளர் சேவை.

**transaction file** : பரிமாற்றக் கோப்பு.

**transaction journal** : பரிமாற்ற இதழ்.

**transaction lock** : செயலாக்கப் பூட்டு; செய்வினைப் பூட்டு.

**transaction oriented processing :** பரிமாற்றம் தொடர்பான ஆய்வு.

**transaction processing :** பரி மாற்றச் செயலாக்கம்.

**transaction processing council :** பரிமாற்றச் செயலாக்கக் குழு : *வரையறுக்கப்பட்ட தர நிர்ண யிப்புகளை வெளியிடுவதை குறிக்கோளாகக் கொண்ட வன்பொருள், மென்பொருள் விற்பனையாளர்களின் குழு.*

**transaction programme :** பரி மாற்றச் செயல்பாடு.

**transaction terminal :** பரிமாற்ற முனையம் : *வங்கிகள் சில்லரைக் கடைகள், ஆலைகள் மற்றும் பணியிடங்களில் பரி மாற்றத் தரவுகளை அவை ஆரம்பிக்கும் இடத்தில் சேகரிக்கப் பயன்படுத்தப்படும் முனையம். சான்று : விற்பனை இட (POS) முனையங்கள் மற்றும் தானியங்கி டெல்லர் எந்திரங்கள் (ATMs).*

**transaction trailing :** பரிமாற்றச் சுவடு.

**transborder :** எல்லை கடந்த.

**transceiver :** அனுப்பி வாங்கி : *பல வடிவங்களில் வரும் உவம அல்லது துடிப்பு சமிக்கைகளை அனுப்பிப் பெறும் எந்திரம். சான்று : ஒரு கட்டமைப்பு ஏற்பியில் உள்ள தகவல் தொடர்பு செயற்கைக்கோள்.*

**transcribe :** புறச் சேமிப்பக படியெடுப்பி.

**transcript :** எழுத்துப்படி.

**transcription :** படியெடுப்புக் கருவி.

**transctional application :** பரி மாற்றப் பயன்பாடு.

**transcription machine :** எழுத்துப் படி பொறி.

**transducer :** விசைமுறை மாற் றமைவுக் கருவி : *ஒரு உள்ளீட்டு சமிக்கையை வேறு ஒரு வடி வத்தில் வெளியீட்டு சமிக்கை யாக மாற்றித் தரும் தன்மை அல்லது சாதனம்.*

**transfer :** மாற்றல் : *1. ஒரு பொருள் அல்லது தரவு தொகுதி யைப் படித்தல், படியெடுத்தல், அனுப்புதல் அல்லது சேமித்தல். 2. கட்டுப்பாட்டை மாற்றுதல்.*

**transfer address :** மாற்றல் முகவரி.

**transfer, conditional :** நிபந் தனை மாற்றல்.

**transfer control, conditional :** நிபந்தனைக் கட்டுப்பாடு மாற்றல்.

**transfer rate :** மாற்றல் விகிதம்; மாற்றல் வேகம் : *அனுகப்பட்ட*

தரவு ஒரு சாதனத்திலிருந்து வேறு ஒன்றுக்கு எந்த வேகத்தில் நகர்த்தப்படுகிறது என்பது.

**transfer, serial** : தொடர் மாற்றல்.

**transfer statement** : இடமாற்றுக் கூற்று; மாற்றல் கூற்று : ஒரு நிரலாக்க மொழியில், நிரலின் ஓட்டத்தில், கட்டுப்பாட்டை, நிரலின் இன்னொரு பகுதிக்குத் திருப்பிவிடும் கட்டளை. பெரும்பாலான மொழிகளில் GOTO என்னும் கட்டளை இப்பணிக்குப் பயன்படுத்தப்படுகிறது.

**transfer time** : பரிமாற்ற நேரம் : தரவு பரிமாற்றத்தில் தரவு பரிமாற்றம் தொடங்கிய நேரத்துக்கும் முடிந்த நேரத்துக்கும் இடைப்பட்ட நேரம்.

**transfer, total** : முழு மாற்றல்.

**transform** : உருமாற்று : அதன் பொருளை மாற்றாமல் தரவின் வடிவத்தை மாற்றுதல்.

**transform algorithm** : மாற்றல் நெறிமுறை : ஒரு பதிவு விசையில் எண் மதிப்பீடுகளைச் செய்து அதன் முடிவை அந்தப் பதிவேட்டின் முகவரியாகப் பயன்படுத்துவது.

**transformation** : உருமாற்றம் : கணினி வரைகலையில், ஒரு திரை உருவத்தின் அளவு அல்லது இடத்தின் மீது செய்யப்பட்ட மாற்றல்களில் ஒன்று. மூன்று அடிப்படை மாறுதல்களாக மொழி பெயர்ப்பு, அளவிடல் மற்றும் சுழற்சி ஆகியவற்றைக் கூறலாம்.

**transformer** : மின்மாற்றி ; உருமாற்றி : கணினி மின்வழங்கலில் 115 வோல்ட்டுகள், 60 ஹெட்சுகள் அதைவிடக் குறைந்த ஆனால் கணினி கருவி பயன்படுத்தக்கூடிய பொருத்தமான மின்னழுத்தமாக மாற்றித் தருதல்.

**transient** : மாறுகின்ற ; நிலையிலா; மாறுகுணம் : 1. மாற்றத்துக்குப் பிறகு சிறிது நேரம் அப்படியே இருக்கின்ற நிலையில் ஏற்படும் திடீர் மாற்றம் பற்றி ஆராய்வது. 2. மின்சக்தி அல்லது சமிக்கையில் திடீரென்று எழுச்சி ஏற்பட்டு அதனால் தவறான சமிக்கையும், பாகங்கள் கோளாறுகளும் ஏற்படுதல்.

**transient error** : மாறும்பிழை : ஏதாவது ஒருமுறை மட்டுமே ஏற்படுவது போன்றபிழை. அது மீண்டும் திரும்ப ஏற்படாது.

**transient portion** : தற்காலிகப் பகுதி; மாறும் பகுதி.

**transient programme** : மாறும் நிரல் தொடர் ; மாறுநிலை

செயல் முறை : கணினி அமைப் பின் முதன்மை நினைவகத்தில் தங்காத நிரல் தொடர். தேவைப் படும்போது நாடா அல்லது வட்டிலிருந்து நிரல் தொடர் களை கணினி படிக்கும்.

**transient state** : மாறும்நிலை : ஒரு சாதனம் அதன் முறைகளை மாற்றும் சரியான நேரம். சான்று : 0 முதல் 1-க்கு அல்லது அனுப்பு தலில் இருந்து பெறுதலுக்கு.

**transient suppressors** : மாறும் அழுத்திகள்; மாறுநிலை ஒடுக்கி : சிறு வோல்டேஜ் பிழைகளை சமாளிக்கும் சாதனம். நிலை யான மின்னோட்டத்தைத் தரு கிறது. குறுகிய நேர உயர்வோல் டேஜ் சமயங்களில் கருவிகளை அழுத்திகள் பாதுகாக்கின்றன.

**transistor** : டிரான்சிஸ்டர்; மின்மப் பெருக்கி : இடம்மாற்று (transfer), மின்தடை (resistor) என்ற இரு சொற்களின் கூட்டு. திண்ம நிலை மின்சுற்றுப் பொருள்கூறு. மூன்று முனை களுடன் இருக்கும். (1) அடி வாய் (base). (2) உமிழி (emitor). (3) திரட்டி (collector). இதில் பாயும் மின்னழுத்தம் (Voltage) அல்லது மின்னோட்டம் (Current) வேறொரு மின்னோட்டத்தைக் கட்டுப்படுத்தும். மின்மப் பெருக்கி பல்வேறு பணிகளைச் செய்கிறது. (எ.டு) திறன் பெருக்கி (amplifier), நிலை மாற்றி (switch), அதிர்வி (oscillator). நவீன மின்னணு வியலில் தவிர்க்கப்பட முடியாத மிக அடிப்படையான பொருள் கூறு ஆகும்.

**transistor : transistor logic (TTL)** : மின்மப் பொறி - மின்மத் தருக்க அளவை (டீடீஎல்) : இரு துருவ சாதனங்களின் மூலம் குறைந்த சக்திகளும் அதிவேக அளவை மின்சுற்றுகளால் உருவாக்கப் படும் ஒருங்கிணைந்த மின்



பலவகையான மின்மப் பொறிகள்

சுற்று அளவை. பொதுவாக குறைந்த சக்தி செக்கோட்டி மின்சுற்றுகள் வேகமாக இயங்கினும் அதிக செலவாகும். ஏனென்றால் தங்கமுலாம் பூசிய செக்கோட்டி டயோடுகள் ஒவ்வொரு டீடீஎல் தட உள்ளீட்டுக்கும் தேவைப்படுகின்றன.

**transit delay** : இடங்கடப்புச் சுணக்கம்.

**transition** : மாறுகை.

**transit symbol** : கடவுக் குழூஉக் குறி.

**translate** : மொழிபெயர் : பொருளை மாற்றாமல் ஒரு வகையான வடிவத்திலிருந்து வேறு ஒரு வடிவத்துக்கு தரவுகளை மாற்றுதல்.

**translation** : மொழிபெயர்ப்பு : *1.* கணினி வரைகலையில், ஒரு உருவத்தை திரையில் ஒரு புதிய இடத்துக்கும் மாற்றுதல். மொழிபெயர்ப்பின்போது, உருவத்தின் ஒவ்வொரு புள்ளியும் அதே வேகத்திலேயே நகரும்.

**translation time** : பெயர்ப்பு நேரம்.

**translator** : மொழிபெயர்ப்பி : ஒரு மொழி அல்லது குறியீட்டிலிருந்து வேறு ஒன்றுக்கு மொழிபெயர்ப்புகளைச் செய்யும் கணினி நிரல் தொடர்.

**transliteration** : ஒலிபெயர்ப்பு : Computer என்ற சொல்லைக் கம்ப்யூட்டர் என எழுதுவது.

**transmission** : பரவுதல் ; செலுத்துதல்; கடத்துதல்; அனுப்புதல்; அனுப்பீடு: ஓரிடத்திலிருந்து தரவுகளை அனுப்புதல் மற்றும் வேறு ஒரு இடத்திலிருந்து தரவுகளைப் பெறுதல். மூலத் தரவுகளை பெரும்பாலும் மாற்றாமல் அனுப்புவது.

**transmission, asynchromous data** : ஒத்திசையா தரவுப் பரப்புகை.

**transmission, data** : தரவுப் பரப்புகை.

**transmission facility** : பரப்பும் வசதி : தொலைமுகப்புகளுக்கும் கணினிகளுக்கும் இடையிலான தரவுத் தொடர்புகளின் இணைப்பு. தரவுத் தொடர்புக் கம்பிகள், நுண்ணலை பரப்பும் கம்பிகள், தரவுத் தொடர்பு செயற்கைக் கோள்கள், லேசர் தொலை பேசிக் கம்பிகள், ஒளி இழைகள், அலைவழிகாட்டிகள் போன்றவை இவ்வகையைச் சேர்ந்தவை.

**transmission medium** : செலுத்து ஊடகம்.

**transmission retry** : பரப்பு மறு முயற்சி.

**transmission speed** : செலுத்து வேகம்; பரப்பு வேகம்.

**transmission time** : செலுத்து காலம்; அனுப்பீடு காலம்.

**transmission time protection** : செலுத்துகாலப் பாதுகாப்பு ; இணை வழியில் பாதுகாப்பு.

**transmit** : அனுப்பு; பரப்பு : ஓரிடத்திலிருந்து தரவுகளை அனுப்பு அல்லது வேறு ஒரு இடத்திலிருந்து தரவு பெறு.

**transmitter** : அனுப்பி; பரப்பி; செலுத்தி; செய்தி பரப்பும் சாதனம் : மின்னியல் முறையில் குறியாக்கம் செய்யப்பட்ட தரவுவை வேறோர் இடத்துக்கு அனுப்புவதற்காக வடிவமைக்கப்பட்ட மின்சுற்று அல்லது மின்னணுச் சாதனம்.

**transmitting** : அனுப்புகின்ற : ஒரு நபரிடமிருந்து வேறொரு நபருக்கோ அல்லது ஒரு கணினியிடமிருந்து வேறொரு கணினிக்கோ தரவுகளை அனுப்பும் செயல்முறை. தொலை வெளிப்புற உறுப்பில் இருந்து கணினிக்கு அனுப்புவதுகூட இதில் சேரும்.

**transparent** : தெரியக்கூடிய : பயனாளர்களுக்கு அல்லது பிற சாதனங்களுக்குப் பார்க்க முடியாத ஒரு செயல்முறை. பயனாளர் தலையீடின்றி செய்யக்கூடிய கணினி இயக்கத்தைப் பற்றிக் கூறுவதால் இது பயனாளருக்குத் தெரியக் கூடியது.

**transperency adapter** : மறைப்பிலாத் தகவி.

**transponder** : செலுத்து அஞ்சலகம் : ஒரு தரை நிலையத்திலிருந்து வரும் சமிக்கைகளைப் பெற்று அதை ஒரு பெறும் நிலையத்திற்குப் பிரதிபலிக்கக்கூடிய செயற்கைக் கோளில் உள்ள பெரிதாக்கி.

**transportable computer** : அனுப்பக்கூடிய கணினி : எடுத்துச் செல்லக்கூடிய சிறிய கணினி. பொதுவாக சுமார் 10 கிலோவுக்குக் குறைவாக எடை உடையது.

**transport layer** : போக்குவரத்து அடுக்கு : ஐஎஸ்ஓ/ஓஎஸ்ஐ அடுக்கில் நான்காவது அடுக்கு. பிணைய அடுக்குக்கு நேர் மேலே உள்ளது. சேவையின் தரத்துக்கும், தரவுவைத் துல்லியமாக வினியோகிக்கவும் உதவுகிறது. பிழையைக் கண்டறிதல், அவற்றைச் சரிப்படுத்தும் பணிகள் இந்த அடுக்கில் நடைபெறுகின்றன.

**transport protocol** : போக்குவரத்து நெறிமுறை : இணைப்பு

ஏற்படுத்துவதற்கும் எல்லா தரவுகளும் பாதுகாப்பாக சென்று சேர்ந்துவிட்டனவா என்று பார்ப்பதற்குமான தரவு தொடர்பு விதிமுறை. ஓஎஸ்ஐ மாதிரியின் 4-வது பகுதியில் இது வரையறுக்கப்பட்டுள்ளது.

**transpose :** இடைமாற்றம் : தரவுகளின் இரு பொருள்களை ஒன்றுக்கொன்று மாற்றிக் கொள்ளுதல்

**transpose error :** இடமாற்றப் பிழை

**transputer :** டிரான்ஸ்பியூட்டர்; சில் கணினி : மின்மப்பெருக்கி (Transistor), கணினி (Computer) ஆகிய இருசொற்களின் கூட்டுச் சொல். ஒற்றைச் சிப்புவில் ஆன முழுக்கணினி. ரேம் நினைவகம் மையச் செயலகம் அனைத்தும் அடங்கிய ஒற்றைச் சிப்பு. இணைநிலைக் கணிப்பணி அமைப்புகளுக்கு அடிப்படையான கட்டுமான உறுப்பாகும்.

**transreciver :** பெற்றனுப்புச் சாதனம் ; பெற்றனுப்பி.

**transversal :** ஊடு வெட்டுக் கோடு : ஒரு நிரல் தொடரில் பிழை நீக்குவதற்காக ஒவ்வொரு சொற்றொடரையும் செயல்படுத்துதல்.

**trap :** பொறி : தெரிந்த இடத்திற்கு நிரல் தொடரின் நிபந்தனையுடன் கூடிய தூண்டுதல். நிரல் தொடர் இயக்கப்படும் போது பொறி வைக்கப் பட்டுள்ள இடத்திற்குப் போனவுடன் இது தானாகவே செயல்படுத்தப்படும்.

**trapdoor :** பொறிக்கதவு : தரவுவைப் பின்னர் பெறலாம் மாற்றலாம் அல்லது அழிக்கலாம் என்ற நோக்கத்தில் ஒரு தரவு செயலாக்க அமைப்பில் வேண்டுமென்றே உருவாக்கப் படும் பிரிவு.

**trapping :** பொறிவைத்தல் : ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு மாற்றும் வழக்கமான நிரல் தொடர் ஓட்டத்தில் கட்டுப்பாடு வைத்துக் கொள்ளும் வன்பொருள் வசதி.

**Trash :** குப்பைத் தொட்டி; குப்பைக் கூடை : மெக்கின் டோஷ் ஃபைண்டர் பயன்பாட்டில் குப்பைத் தொட்டிபோல் தோற்றமளிக்கும் ஒரு சின்னம். ஒரு கோப்பினை அழிக்க விரும்பும் பயனாளர் அக்கோப்புக்குரிய சின்னத்தை இழுத்துவந்து குப்பைத் தொட்டியில்விட வேண்டும். குப்பைத் தொட்டியில் இடப்பட்ட கோப்பு உண்மையில் அழிக்கப்படாது. தேவையானபோது மீட்டுக் கொள்ளலாம். குப்பைத் தொட்டிமீது இரட்டைச்

சொடுக்கிட்டுத் திறந்து மீட்க வேண்டிய கோப்பினை குப்பைத் தொட்டியிலிருந்து இழுத்து வெளியேவிட வேண்டும். குப்பைத் தொட்டியைக் காலியாக்கு (Empty Trash) என்னும் கட்டளை மூலம் அதிலுள்ள கோப்புகளை நிரந்தரமாக நீக்கிவிடலாம்.

**trash can** : கழிவுக் கலம் : கோப்புகளையும், மடிப்புத் தாள்கள் மற்றும் பயன்பாடுகளையும் நீக்குவதற்கும் நெகிழ்வட்டுகளை வெளியேற்றுவதற்கும் பயன்படும் மெக்கின்டோஷ் உருப்பொருள்.

**traverse** : பயணித்தல்; ஊடு கடத்தல் : நிரலாக்கத்தில், மர வுரு அல்லது அது போன்ற தரவுக் கட்டமைப்புகளில் அனைத்துக் கணுக்களையும் ஒரு குறிப்பிட்ட வரிசையில் அணுகுவதைக் குறிக்கும்.

**trays** : இழுப்பறைகள்.

**TRC** : டீஆர்சி : பட்டி தேடுகுறி: Terminal Reference Character என்பதன் குறும்பெயர்.

**tree** : மரம் : சுழற்சிகள் இல்லாது இணைக்கப்பட்ட வரைபடம். மர வரைபடம் என்றும் அழைக்கப்படுகிறது.

**tree diagram** : மர வரைபடம்.

**tree network** : மர பிணையம் ; மரக்கட்டமைப்பு : வரிசைமுறை முனைகளில் கட்டுப்பாடு அமைக்கப்படும் கட்டமைப்பு. குடும்ப மரத்தின் தலைகீழ் வடிவ அமைப்பாக காகிதத்தில் தகவல் தொடர்பு குறிப்பிடப் படுகிறது. கட்டமைப்பின் உச்சம் அல்லது மரத்தின் மேற்பகுதியானது கட்டமைப்பின் அடிப்படைக் கட்டுப்பாட்டினைக் குறிப்பிடுகிறது. இடைப்பட்ட கிளைகளில் கீழ்ப்பகுதியில் சில நிலைகளில் கட்டுப்பாடு தரப்படலாம்.



மரபிணையம்

**tree sort** : மர வகைப்படுத்தல் : ஒரு மரத்தின் முனைகளாகக் கருதப்படுபவற்றை மாற்றக் கூடிய வகைப்படுத்தும் முறை. ஒருபொருள் வேர்முனையை அடைந்தவுடன், கடைசி இலை முனையுடன் அது பரிமாற்றிக் கொள்ளப்படுகின்றது.

**tree structure** : மர அமைப்பு : தரவுகளை ஒருங்கமைப்பின் ஒரு வடிவமான வரிசைமுறை வடிவமைப்பிற்கான வேறொரு பொருளின் பெயர்.

**trellis-coded modulation** : பின்னல்-குறிமுறைப் பண்பேற்றம் : 90° தள்ளியிருக்கும் கால்வட்ட வீச்சுப் (Amplitude) பண்பேற்றத்தின் மேம்பட்ட வடிவம். வினாடிக்கு 9600 துண்மி(பிட்) அல்லது அதற்கும் மேற்பட்ட வேகத்தில் செயல்படும் இணக்கிகளில் பயன்படுத்தப்படுகிறது. சுமப்பி அலையின் பாகை, வீச்சு ஆகிய இரண்டின் மாற்றங்களுக்கு இயைந்தவாறு, தகவலானது தனித்த துண்மி (பிட்டு) தொகுதிகளாக குறியாக்கம் செய்யப்படுகிறது. பிழைச் சரிபார்ப்புக்கான துண்மிகளும் உடன் சேர்க்கப்படுகின்றன.

**trend line** : போககுக்கோடு : தெரிந்த தகவலுக்கு அப்பால் போக்குகளைக் கண்டறிந்து உரைப்பதற்காக தரவு வரிசைகளைக் கணித்து விரிவாக்கல்.

**triad** : மும்மை.

**trial version** : வெள்ளோட்டப் பதிப்பு; முன்னோட்டப் பதிப்பு.

**tribble click** : முச் சொடுக்கி.

**trichromatic** : மூவண்ணத் திறமான : மூவண்ணக் கலவை : கணினி வரைகலையில், மூவண்ணக் கலவை என்பது பொதுவாக மூன்று அடிப்படை நிறங்கள் (சிவப்பு, பச்சை மற்றும் நீலம்) ஒன்றாகச் சேர்ந்து மற்ற நிறங்களை உருவாக்குவதைக் குறிப்பிடுகிறது.

**trigger** : விசை வில் : ஒரு இயக்கப்பிடியின் மேலுள்ள பொத்தான். ஒரு நிகழ்ச்சியை ஆரம்பிப்பதற்காக ஏவுகணையைச் சுருக்கி அல்லது ஒரு சங்கடத்தைத் தூண்டுதல் போன்றவற்றைச் செய்ய ஒளிக்காட்சி விளையாட்டுகளில் பயன்படுத்தப்படுவது.

**trigonometry** : கோணவியல் : முக்கோணங்களின் பக்கவாட்டுகள் மற்றும் கோணங்கள் ஆகியவற்றின் உறவுகள் மற்றும் இந்த உறவுகளுக்கான பல்வேறு குறிக்கணக்கியல் முறை பணிகள் ஆகியவைப் பற்றி ஆராயும் கணிதவியலின் பிரிவு. சரியான

முக்கோணத்தில் அடிப்படை உறவுகளை கோணவியல் பணிகள் என்று அழைக்கப்படு கின்றன. பல நிரல் தொட ரமைப்பு மொழிகளில் இவை நூலக வாலாயங்களாகக் குறிப் பிடப்படுகின்றன.

**trim** : ஒழுங்கமை.

**triple precision** : மூன்று துல் லியம் ; மும்மை சரிநுட்பம் : கணினி வழக்கமாகப் பயன் படுத்துகின்ற, ஒரு பொருளில் மூன்று மடங்கு எண்களைப் பயன்படுத்தி வைத்திருத்தல்.

**triple twist** : மும்முறுக்கு : மேம் பட்ட தெளிவுக்காக படிகங் களை 260 டிகிரிகளில் முறுக்கு கின்ற மீ முறுக்கு மாறுபாடு.

**tristate logic** : மூன்று நிலை தருக்கம்; முன்நிலை தருக்க முறை : ஒருவகை சிறு மின்மப் பெருக்க தருக்க வடிவம். இதில் உள்ளீடு மற்றும் வெளியீடு வேலைகள் மூன்று நிலைகளை எடுத்துக் கொள்ளலாம். இரண்டு வழக்கமான குறைந்த ஒட்டம் மற்றும் 1,0 நிலைகளை ஏற்றல். பல மூன்று நிலை தருக்க சாதனங்களுக்கு நேரப் பங்கீட்டு தடயக் கம்பிகளை இது அனுமதிக்கிறது.

**tristimulus values** : முத் தூண்டல் மதிப்புகள் : பிற நிறங்களை உருவாக்கக் கலக்கப் படும் மூன்று அடிப்படை நிறங் கள் ஒவ்வொன்றின் அளவுகள்.

**trojan horse** : டிரோஜன் குதிரை : கணினி கிருமி(virus)களில் ஒரு வகை. கணினி குற்றவாளி ஒருவர் வேறொருவரின் நிரல் தொடரில் நிரலை விட்டு வைப் பார். நிரல் தொடர் வழக்க மானதுபோலவே செயல்பட்டு நாம் சேமித்து வைத்துள்ள கட்டளைத் தொடர்களையும் தரவுகளையும் பழுதாக்கி விடக் கூடியது.

**troll** : தூண்டில் செய்தி : ஒரு செய்திக் குழுவில் அல்லது பிற நிகழ்நிலைக் கலந்துரையாடல் களில், சூடான பதிலை எதிர் நோக்கி அஞ்சலிடும் சர்ச்சைக் கிடமான செய்தி. எடுத்துக்காட் டாக, வளர்ப்பு விலங்கு விரும்பி களின் செய்திக்குழுவில் பூனை யைத் துன்புறுத்துவதை நியாயப் படுத்தி ஒரு கட்டுரையை வெளியிடல்.

**tron** : டிரான் : புகழ்பெற்ற அதி நுட்ப முன் அடைச்சொல்.

**troubleshoot** : தவறு காணல்; பிழைகள் : கணினி நிரல் தொடரில் உள்ள ஒரு தவறு அல்லது வன்பொருள் அலகில் உள்ள ஒரு கோளாறைக் கண்டறிய முயலுதல்.

**trouble ticket : சிக்கல் சீட்டு :** ஒரு குறிப்பிட்ட சாதனம் அல்லது கணினியில் ஏற்பட்டுள்ள சிக்கல் பணிப் பாய்வுச் (work flow) செயலாக்கம் மூலமாகக் கண்டறியப் பட்டுத் தரப்படும் அறிக்கை. தொடக்க காலங்களில் இது தாளில் அச்சிடப்பட்டதாய் இருந்தது. இன்றுள்ள பல்வேறு பணிப்பாய்வு மற்றும் உதவி மேசைப் (Help Dest) பயன்பாடுகளில் மின்னணு சிக்கல் சீட்டுகள் பயன்படுத்தப்படுகின்றன.

**TRS (Tandy Radio Shack) :** டிஆர்எஸ் : Tandy Radio Shack என்பதன் குறும்பெயர். டான்டியின் பீசி.களுக்கு கூறப்பட்ட முதல் வணிகப் பெயர். 1977இல் முதன் முதலில் அறிமுகப் படுத்தப்பட்ட மூன்று கணினிகளில் ஒன்றாக டீஆர்எஸ் 800 இருந்தது. அதன் செயலாக்க அமைப்பின் பெயர் டீஆர்எஸ் டாஸ் (TRS. DOS).

**TRS DOS : டீஆர்எஸ் டாஸ் :** Tandy Radio Shack Disk Operating System என்பதன் சுருக்கப் பெயர். டீஆர்எஸ் 80 நுண் கணினிகளின் இயக்கமுறைமை.

**TRS 80 Microcomputer : டீஆர்எஸ் 80 நுண்கணினி :** டான்டி கார்ப்ரேஷனின் ஒரு பிரிவான ரேடியோ ஷாக் நிறுவனம் உற்பத்தி செய்த பல நுண் கணினி அமைப்புகளின் வணிகப்பெயர்.

**True Basic : ட்ரூபேசிக் :** மூல பேசிக் மொழியை உருவாக்கிய ஜான் கெம்னியும் தாமஸ் குர்ட்ஸும் இணைந்து, பேசிக் மொழியைத் தரப்படுத்தவும், நவீனப்படுத்தவும் 1983ஆம் ஆண்டில் ட்ரூபேசிக் மொழியை உருவாக்கினர். ட்ரூ பேசிக்கில் வரி எண்கள் தேவையில்லை. கட்டமைப்பான (structured), மொழிமாற்றி (compiler) அடிப்படையிலான மொழியாகும். உயர்நிலைக் கட்டுப்பாட்டுக் கட்டமைப்புகளை (control structures) கொண்டது. இதனால் கட்டமைப்பு நிரலாக்கம் (structured programming) இயல்வதாகிறது.

**true colour : உண்மை நிறம் :** 1. 16,77,216 நிறங்களை (24 துண்மி நிறம்) உருவாக்கக் கூடிய திறன். 2. ஒளிப் படம் போன்று நிற உருவங்களை உருவாக்கும் திறன். (24 துண்மி நிறம் குறைந்த அளவு தேவைப் படும்).

**true complement : உண்மை நிரப்பு எண் :** உண்மை நிரப்பு

பத்தின் நிரப்பு எண் மற்றும் இரண்டின் நிரப்பு எண்ணுக்கு உடன்பாட்டுச் சொல்.

**true image :** உண்மைத் தோற்றம் : நுண் மென் பொருளின் மேம்படுத்தப்பட்ட பிற் சேர்க்கை வரிமொழி மாற்றி. பிற்சேர்க்கை வகை 1 மற்றும் உண்மை வடிவ எழுத்துகளை இது அச்சிடுகிறது.

**True Type :** மெய்வகை : ஆப்பிள் கம்ப்யூட்டர் நிறுவனம் 1991இல் அறிமுகப்படுத்திய வெளிக்கோட்டு எழுத்துருத் தொழில்நுட்பம். மைக்ரோ சாஃப்ட் நிறுவனம் 1992 ஆம் ஆண்டில் வெளியிட்டது. இது ஒரு விசிவிக் (WYSIWYG) எழுத்துருத் தொழில்நுட்பம் ஆகும். அதாவது, திரையில் காணும் எழுத்து வடிவங்கள் அப்படியே அச்சில் கிடைக்கும்.

**truncate :** துணிப்பு; துணித்தல் : 1. துல்லியத்தை குறைத்து ஒரு எண்ணின் இறுதி எண்களை வெளியேற்றுதல். சான்றாக, 'பை' வரிசைகளை 3.14159 என்ற எண் துணிப்புச் செய்கிறது. எப்படியென்றால், இந்த எண்ணை எல்லையின்றி நீட்டிக்கலாம். 2. ஒதுக்கப்பட்ட இடத்தில் பொருந்தாத எழுத்துகளை வெட்டுதல். சான்றாக Rumplestrltskin என்ற பெயரை அச்சிட்ட அறிக்கையில் பத்து எழுத்துப் பெயர்ப் புலத்தில் பொருத்த வேண்டுமென்றால் அப்பெயரை rumplestil என்று சுருக்குதல்.

**truncation error :** சுருக்குவதில் பிழை; துணிப்புப் பிழை : சுருக்குவதனால் ஏற்படும் பிழை.

**trunk :** தொலை : இரண்டு தொலைபேசி பொத்தான் அமைப்பு மையங்களுக்கு இடையில் ஏற்படும் நேரடிக் கம்பி இணைப்பு.

**truth table :** உண்மைப் பட்டியல்; மெய்நிலை அட்டவணை : ஒரு இருமை மின்சுற்று உருவாக்குகின்ற உள்ளீட்டு/வெளியீட்டுக் கூட்டல்களின் அனைத்து வாய்ப்புகளையும் முறையாகப் பட்டியலிடல்.

**try :** முயல்.

**TSAPI :** டீசாப்பி; டீஎஸ்ஏபீஐ : தொலைபேசிச் சேவை பயன்பாட்டு நிரலாக்க இடைமுகம் எனப் பொருள்படும் Telephony Services Application Programming Interface என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். மிகப்பெரும் தொலை பேசி அமைப்புக்கும் ஒரு கணினிப் பிணைய வழங்கனுக்கும் இடையேயான இடைமுகத்துக்

குரிய தரவரையறைகள். நாவெல் நிறுவனமும் ஏடீ&டீ நிறுவனமும் இணைந்து உருவாக்கியவை. பல்வேறு தொலைபேசிக் கருவி உற்பத்தியாளர்களாலும் மென்பொருள் தயாரிப்பாளர்களாலும் ஆதரிக்கப்படுகிறது.

**T.120 standard : டீ.120 தரவரையறை :** ஒரு கணினிப் பயன்பாட்டுக்குள்ளேயே, கலந்துரையாடல், பலமுனைக் கோப்புப் பரிமாற்றம் போன்ற பல்முனைத் தகவல் தொடர்பு சேவைகளுக்காக பன்னாட்டுத் தொலைத் தகவல் தொடர்பு சங்கம் (ITU) உருவாக்கிய வரன்முறைகள்.

**TSR : டீஎஸ்ஆர் :** நினைவகத்தில் தங்கிச் செயல்படுதல் என்று பொருள்படும் Terminate and Stay Resident என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒரு நிரலை இயக்கியவுடன் நினைவகத்தில் சென்று தங்கிவிடும். ஆனால் செயல்படாது. ஒரு குறிப்பிட்ட நிகழ்வு நடைபெறும்போது அல்லது வேறொரு நிரல் இயங்கிக் கொண்டிருக்கும் போது நினைவகத்தில் இருக்கும் நிரலை இயக்கமுடியும். எம்எஸ் டாஸ் போன்ற பல்பணித் திறனற்ற இயக்க முறைமைகளில் இதுபோன்ற நிரல்கள் அதிகம் பயன்படுத்தப் படுகின்றன.

**.tt : .டீடீ :** ஓர் இணைய தள முகவரி டிரினிடாட் டொபேக்கோ நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**TTFN : டீடீஎஃப்என் :** இப்போதைக்கு டாட்டா என்று பொருள்படும் Ta Ta for now என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணையக் கலந்துரையாடல் குழு அல்லது தொடர் அரட்டையில் (IRC) பங்கு பெற்றுள்ள ஒருவர் குழுவிலிருந்து தற்காலிகமாக விலகிச் செல்லல். பிறகு வந்து சேர்ந்துகொள்வார்.

**TTY : டீடீஒய் :** தொலைத் தட்டச்சு (Teletypewriter) என்பதன் சுருக்கம். தொலைபேசி இணைப்பு வழியாக நடைபெறும் குறைந்தவேக தரவு தொடர்புக்கான கருவி. ஒவ்வொரு எழுத்துகளாக உள்ளீடு செய்ய ஒரு விசைப்பலகையும், தொலைவிலிருந்து வரும் தரவுவை ஒவ்வொரு எழுத்தாக அச்சிட அச்சுப்பொறியும் கொண்டது.

**tube, cathode : எதிர்மின் குழாய்.**

**tube store, cathod ray : எதிர்மின் கதிர்க் குழாய் சேமிப்பு.**

**tunnel : சுருங்கை வழி :** ஒரு நெறிமுறையின்கீழ் உருவாக்கப் பட்ட பொதி அல்லது செய்தியை இன்னொரு நெறிமுறைக்கான பொதியில் சுற்றிவைத்தல். இப்படிச் சுற்றி வைத்த பொதி, மேலுறை நெறிமுறையின் பிணையத்தில் இன்னோர் இடத் துக்கு அனுப்பப்படும். நெறி முறைக் கட்டுப்பாடுகளைத் தவிர்க்கவே இந்த வகையான பொதிப் பரிமாற்றம் பயன் படுத்தப்படுகிறது.

**tunnel diode : ஒத்தியைவு இரு முனையம் :** அதிவேக கணினி மின்சுற்று அமைப்பு மற்றும் நினைவகங்களில் பயன்படுத் தப்படும் மின்னணுச் சாதனம். பில்லியன் நொடிகளின் பின்னங்களாலான பொத் தானிடும் வேகம்.

**tuple : பண்புக்கூறுத் தொகுதி; கிடக்கை; ஏடு :** ஒரு தரவுத் தள அட்டவணையில் தொடர் புடைய, பண்புக் கூறுகளின் மதிப்புகளடங்கிய தொகுதி. உறவுநிலைத் தரவு தள மேலாண்மை அமைப்பில் இது ஒரு கிடக்கை (Row) ஆகச் சேமிக்கப்படுகிறது. உறவு நிலை யில்லா அட்டவணை கோப்பு களில் ஏடு (Record) என அழைக்கப்படுகிறது.

**turbo : டர்போ :** அதிவேக செய லாக்கம்/திறம்பட்ட இயக் கத்தைக் குறிப்பிடும் சொல். குறிப்பிட்ட பெயருடைய வன் பொருள், மென்பொருளைக் குறிப்பிட இச்சொல் பயன் படுத்தப்படுகிறது. பீசி.யில் வேகமான கடிகார விகிதத்தைக் குறிப்பிடுகிறது. போர்லாண்ட் தன்னுடைய டர்போ சி மற்றும் டர்போ பாஸ்கல் ஆகியவற்றில் இதைப் பயன்படுத்தி பிரபலப் படுத்தியது.

**turbo C : டர்போ சி :** பலதரப் பட்ட வணிகப் பொருள்களை உருவாக்கப் பயன்படும் போர் லாண்ட் நிறுவனத்தின் 'சி' தொகுப்பி. அதன் மிக நன்றாக வடிவமைக்கப்பட்ட 'பிழை நீக்கி' மிகவும் புகழ்பெற்றது.

**turbo mouse : டர்போ சுட்டி (மவுஸ்) :** கென்சிங்டன் மைக் ரோவேர் நிறுவனத்தின் மெக் கின்டோஷ் டிராக்பால். பந்து மெதுவாக நகர்ந்தால், சுட்டி மெதுவாக நகரும். ஆனால் அது வேகமாக நகர்ந்தால் திரையில் சுட்டி அதிக தூரம்போகும். பீசி.யில் அதற்கு இணை யானது திறம்பட்ட சுட்டி (expert mouse).

**Turbo Pascal : டர்போ பாஸ்கல் :** பெரும்பாலான நுண்கணினி

அமைப்புகளில் உள்ள பாஸ்கல் நிரல் தொடரமைப்பு மொழியின் புகழ்பெற்ற பதிப்பு.

**Turing** : தூரிங் : 1982இல் ஆர்.சி.ஹோல்ட் மற்றும் ஜே.ஆர்.கார்டி ஆகிய இருவரும் டோரொன்டோ பல்கலைக் கழகத்தில் உருவாக்கிய நிரல் தொடரமைப்பு மொழி. பாஸ்கல் நிரல் தொடர் மொழியில் உள்ள சில இயலாமைகளை நீக்குவதற்கென்றே இதன் அடிப்படை வடிவமைப்பு இலக்கினைக் கொண்டது. யூனிக்ஸ் இயக்க அமைப்பின் கீழும் இயங்குகிறது.

**Turing Alan M.** : தூரிங் ஆலன் எம் (1912-1954) : ஆங்கில கணிதவியாளர் மற்றும் தருக்க வியலார். இறப்பதற்குச் சற்று முன்பு உலகின் முதல் நவீன அதிகவேக எண்முறை கணினிகளின் வடிவமைப்பை உருவாக்கியவர்.

**Turing machine** : தூரிங் எந்திரம் : ஒரு சாதனத்தின் கணித மாதிரியமைப்பு. ஒரு நீண்ட நாடாவின் தற்போதைய நிலையை ஒட்டி அதன் உள்ளமைப்பை மாற்றுதல், எழுதுதல், படித்தல் மற்றும் நகர்த்துதல் ஆகியவற்றைச் செய்வது. ஆகவே கணினி போன்ற நடத்தையின் முன் மாதிரி ஆனது.

**Turing's test** : தூரங்கின் சோதனை : ஒரு கணினியிடம் அறிவுக் கூர்மை இருக்கிறதா என்பதை முடிவு செய்ய ஆங்கில கணிதவியலாரான ஆலன் தூரிங் உருவாக்கிய சோதனை. இதில் பங்குகொள்பவர்கள் ஒரு மனிதரும் ஒரு கணினியும். பதில் சொல்பவர்களில் யார் மனிதர், யார் கணினி என்பதை மூன்றாவது நபர் கண்டுபிடிப்பார். இந்தச் சோதனையின்படி, தேர்வாளரை கணினி எந்த அளவுக்கு ஏமாற்றுகிறது என்பதை வைத்து கணினியின் வெற்றியும், அதற்கு ஆதாரமாக அதன் திறமை, அறிவுக் கூர்மையும் கண்டறியப்படும்.

**turn around** : சுழற்சி திரும்ப வரும் : ஒரு குறிப்பிட்ட பணியைச் செய்ய எடுத்துக் கொள்ளும் நேரம். ஒரு குறிப்பிட்ட இலக்கை அடைய ஆகும் நேரம். ஒரு வேலையைச் செயலாக்கத்திற்குக் கொடுப்பதற்கும், முடிந்த வெளியீடு பெறுவதற்கும் இடையில் ஆகும் நேரம்.

**turnaround document** : சுழற்சி ஆவணம்; திரும்பிவரும் ஆவணம் : எந்திரம் படிக்கும் உள்ளீடாக ஒரு நிறுவனத்திற்குக் கணினி அமைப்பு அளிக்கும் வெளியீடு. (வாடிக்கையாளர்

விலை மதிப்பீடு மற்றும் பட்டியல்கள்).

**turnaround time :** சுழற்சி நேரம்; சுற்றித் திரும்பும் நேரம் : 1. பயனாளரிடமிருந்து கணினி மையத்திற்குப் பயணம் செய்ய ஒரு வேலைக்கு ஆகும் நேரம். கணினியில் இருந்து சென்று நிரல் தொடர் முடிவுகள் பயனாளருக்குத் திரும்ப வருவதும் இதில் கணக்கிடப் படும். 2. தரவு பரப்புதலுக்கு இடையில் ஆகும் நேரம். 3. அரை டுப்ளே வழித் தடத்தைப் பயன்படுத்தி அனுப்புதல்.

**turnaround form :** சுற்றித் திரும்பும் படிவம் : அடுத்து வரும் செயலாக்க நிலையின் போது வெளியீட்டுச் சாதனமே உள்ளீட்டு ஊடகமாகப் பயன் படும் நிலைமை.

**turn key :** திறவுகோல் திருப்பு; சாவி திருப்பு.

**turnkey system :** முழுப்பணி அமைவு : ஏற்கெனவே தயாரான நிலையில் பயன் படுத்த உதவும் கணினி அமைப்பு. வன்பொருள், மென்பொருள், பயிற்சி, பராமரிப்பு உதவி போன்ற ஒரு பயன் பாட்டுக்குத் தேவையான எல்லாமும் அதில் அடங்கும்.

**turn off :** நிறுத்தி : ஒரு கணினி அமைப்பை நிறுத்தும் (மின் சக்தி நிறுத்தும்) செயல்.

**turn on :** துவக்கு : ஒரு கணினி அமைப்பைத் துவக்கும் (மின் சக்தி துவக்கும்) செயல்.

**turnpike effect :** வழிமறிப்பு விளைவு : ஒரு தகவல் தொடர்பு அமைப்பில் அல்லது ஒரு பிணையத்தில் அளவுக்கதிக மான போக்குவரத்தினால் ஏற்படக்கூடிய முட்டுக்கட்டை நிலை.

**turtle :** ஆமை : திரையில் காட்டப்படும் முக்கோண வடிவ சின்னம். லோகோ மொழியுடன் ஆமை வரை கலையைப் பயன்படுத்துவதன் மூலம் வரைகலையின் கோடு களின் போக்கைக் கூறலாம். சான்று : தெற்காக நகர்த்து என்ற நிரல் வந்தால் ஆமை திரையின் அடிப்பகுதியை நோக்கி நகரும்.

**turtle graphics :** ஆமை வரை கலை : லோகோ மற்றும் பிற கணினி மொழிகளில் சேர்க்கப் பட்டுள்ள 'ரோபோ'வைப் போலச் செய்யும் வரைகலை. சிறுவர்களுக்கு படக் கணிதம் மற்றும் கணினி வரை கலையைக் கற்றுத் தருவதற்குப் பயன்படுவது.

**tutorial :** பயிற்சி : வன்பொருள் அல்லது மென்பொருள்

பயிற்சிக் கையேடு. அச்சிடப் பட்ட ஆவணமாகவோ அல்லது நாடா அல்லது தட்டின்மீது காந்த வடிவில் பதிவு செய்யப் பட்டதாகவோ இருக்கலாம்.

**tutorial programme : பயிற்சி நிரல் தொடர் ; பயிற்சி செயல் முறை :** புதிய பொருளை விளக்கி அதன் பிறகே பயனாள ரிடம் வைத்திருக்கக்கூடிய வகையில் விளக்கும் கணினி நிரல் தொடர்.

**.tv : .டீவி :** ஓர் இணைய தள முகவரி தூவாலு நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**TV : டி.வி ; தொலைக்காட்சி :** Television என்பதன் குறும்பெயர்.

**TVT : டி.வி.டி :** Television Typewriter என்பதன் குறும்பெயர். தொலைக்காட்சிப் பெட்டியை கணினி முனையமாக மாற்று வதற்காக சிறப்பாக வடி வமைக்கப்பட்ட விசைப்பலகை மற்றும் மின்னணுச் சாதனம். ஒளிக்காட்சி முனையம் (வீடியோ டெர்மினல்) .

**TV Terminal : டி.வி.முகப்பு; தொலைக்காட்சி முனையம் :** கணினி வெளியீட்டுச் சாதன மாகப் பயன்படும் பொது தொலைக்காட்சிப் பெட்டி.

**.tw : .டீடபிள்யூ :** ஓர் இணைய தள முகவரி தைவான் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**TWAIN : ட்வய்ன் :** ஓர் ஆர்வம் தூண்டும் பெயரில்லாத தொழில் நுட்பம் என்று பொருள்படும் Technology Without An Interesting Name என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். மென் பொருள் பயன்பாடுகளுக்கும், வருடு பொறியொத்த படிமக் கவர்வு சாதனங்களுக்கும் இடையேயான, ஏற்றுக் கொள்ளப்பட்ட செந்தர இடை முகம். ஏறத்தாழ அனைத்து வருடுபொறிகளிலும் ட்வய்ன் தொழில் நுட்பம் உள்ளது. மென்பொருள்களிலும் அத் தொழில் நுட்பத்தைப் பயன் படுத்திக் கொள்ளலாம்.

**tweak : நுண் இசைவிப்பு :** ஒரு கருவியின் பகுதியை மேம் படுத்தும் பொருட்டு சரி செய்தல் அல்லது நன்றாக ஒத்தியயைவு (tune) செய்தல்.

**tween : இடையுரு; இடையாள் :** கணினி வரைகலையில் உரு மாற்ற (morphing) நிரலில் தொடக்க உருவுக்கும் இறுதி உருவுக்கும் இடைப்பட்ட உருவங்களைக் கண்டறிதல்.

**twelve punch :** பன்னிரண்டு துளை : ஹோலரித்தின் துளை யிட்ட அட்டையில் மேல் வரிசையில் உள்ள துளை.

**twinaxial :** இரட்டை அச்சு : கோ-ஆக்சியல் போன்ற குழாய். ஆனால், இதில் ஒன்றுக்குப் பதிலாக இரண்டு உள்கடத்திகள் இருக்கும்.

**twin-cable :** இரட்டைக் குழாய் : அதே இரண்டு இடங்களுக்கு இடையில் பல இரண்டு கம்பி இணைப்புகள் வேண்டுமென் றால், உள்ளே பல இரட்டைக் கம்பிகளைக் கொண்ட கேபிள் தரப்படும். இதில் இணையாக கம்பிகள் முறுக்கேறும்.

**twinkle box :** மின்னும் பெட்டி : ஒளி உணர்கருவிகள், லென்ஸ் மற்றும் சுழல்வட்டு ஆகிய வற்றைக் கொண்ட உள்ளீட்டுச் சாதனம். முப்பரிமாண நிலை யில் உள்ள ஒளி உமிழ் பொருளை அதன் கோண ஒளி அறியும் திறனைக் கொண்டு கண்டறிய முடியும்.

**twisted pair :** முறுக்கப்பட்ட இணை: 'யுடிபி' (Unshielded Twister pair) என்று அழைக்கப் படும் மெல்லிய (22 முதல் 26 கேஜ்) குறுக்குகளைக் கொண்ட தொலைபேசிக் கம்பிகளில் உள்ள மூடப்பட்ட கம்பி. மற்ற இணைக் கம்பிகளின் குறுக் கீட்டைக் குறைக்க கம்பிகள் ஒன்றோடொன்று முறுக்கப் பட்டிருக்கும். அச்சு இணை (coaxial cable) கம்பிகள் அல்லது ஒளி இழைகளைவிட முறுக்கப் பட்ட கம்பிகளுக்குக் குறை வான பட்டை அகலம் இருக்கும்.

**twisted-pair cable :** முறுக் கிணை வடம் : இரண்டு தனித் தனி தடுப்புறையிட்ட கம்பிகள் ஒன்றாக முறுக்கப்பட்ட வடம். அருகிலுள்ள வடங்களிலிருந்து வரும் வானலை இடையூறு களைக் குறைக்க இவ்வடம் பயன்படுத்தப்படுகிறது. இரண் டிலொரு கம்பியில் முக்கிய மான தரவு சுமந்து செல்லப்படு கிறது. இன்னொரு கம்பி தரைப் படுத்தப்படுகிறது (earthed).

**twisted pair wire :** முருக் கிணைக் கம்பி.

**twisted wire :** முறுக்கிய கம்பி : தரவு தொடர்பு ஊடகம். இணைக் கம்பிகளை ஒன்றாக முக்கிய ஒரு கம்பி வடத்துடன் கட்டப்படுவதாகும்.

**two address computer :** இரு முகவரிக் கணினி : அதன் நிரல் படிவத்தில் இரண்டு முகவரி களைப் பயன்படுத்தும் கணினி. சான்றாக, ADD A+B நிரல்

என்றால் 'A' வின் மதிப்புகளுடன் 'B'ன் மதிப்புகளும் சேரக்கூடும். இது (B) -ன் பழைய மதிப்பை மாற்றுகிறது.

**two dimensional : இரு பரிமாணம் (2D) :** வரைகலை தகவலை புலனாகும் தன்மைகளுடன் வழங்குவது. உயரம் மற்றும் அகலம் எவ்வளவு என்று இரண்டு பருப்பொருள் தன்மையும் குறிப்பிடப்படும்.

**two dimensional array : இரு பரிமாண வரிசை :** பத்திகள் மற்றும் வரிசைகளைக் கொண்ட ஏற்பாடு.

**two-dimensional model : இருபரிமாண மாதிரியம் :** நீள, அகலம் கொண்ட பருநிலைப் பொருள்களைக் கணினியில் பாவிப்பது. ஆழம் உருவகப்படுத்தப்படுவதில்லை. x, y-ஆகிய இரு அச்சுகளில் பொருளின் பரிமாணங்கள் குறிக்கப்படும்.

**two dimentional storage : இரு பரிமாண சேமிப்பகம்.**

**two-out-of-five-code : ஐந்தில் இரண்டு குறிமுறை :** தரவு பரிமாற்றத்தில் பயன்படுத்தப்படும் பிழை உணர்வுமிக்க குறிமுறை. பத்து இலக்கங்கள் (0 முதல் 9 வரை) ஒவ்வொன்றையும் ஐந்து இரும இலக்கங்களால் (0, 1) குறிப்பது. ஐந்து இரும இலக்கங்களில் இரண்டு 1 மூன்று 0 ஆகவோ, இரண்டு 0 மூன்று 1 ஆகவோ இருக்கும்.

**two pass : இருமுறை கடத்தல் :** தரவுகளை இரண்டுமுறை மாற்ற வேண்டியுள்ள நிரல் தொடர் அல்லது இலக்கம் பற்றியது. முதல் முறை தரவு மூலம் செல்லும்போது அதன் நோக்கத்தை ஓரளவே நிறைவேற்றுகிறது. இரண்டாவது முறை தரவுவை கடக்கும் போதுதான் முழுமையாக நிறைவேற்றுகிறது.

**two-planet internet : இருகோள் இணையம்.**

**two's complement : இரண்டின் நிரப்பு எண் :** எதிர்மறை எண்களைக் குறிப்படும்முறை. உடன்பாடு அல்லது எதிர்மறை இருமை எண் ஒன்றை எதிர்க் குறியீடாக மாற்றவேண்டுமானால் எல்லா '0' க்களையும் 1 ஆகவும் எல்லா 1-களையும் 0-வாகவும் மாற்றி பின்னர் 1-ஐக் காட்ட வேண்டும்.

**two state devices : இரு நிலைச் சாதனங்கள்.**

**two-tier client/server : ஈரடுக்குக் கிளையன்/வழங்கன் :** ஒருவகை கிளையன்/வழங்கன் கட்டுமானம். இதில் மென்பொருள் அமைப்புகள் இரண்டு அடுக்கு

களாகக் கட்டமைக்கப்படு கின்றன. (1) பயனாளர் இடைமுகம்/வணிகத் தருக்க அடுக்கு. (2) தரவுத்தள அடுக்கு. நான்காம் தலைமுறை மொழிகள் (4GLs), இந்தவகை ஈரடுக்குக் கிளையன்/வழங்கன் கட்டுமானம் செல்வாக்குப் பெற்று விளக்குவதற்கு உதவின.

**two way branching :** இருவழிப் பிரிதல்; இருவழி கிளைத்தல்.

**two-wire cable :** இரண்டு கம்பி குழாய் : ஒரு கம்பி வடத்தில் உள்ள கடத்திகள் ஒன்றையொன்று மின்சாரத்தால் தாக்காவண்ணம் பாதுகாக்கப் பட்டுள்ளன. மேலே மூடப்படும் கம்பி மின் பாதுகாப்பு உள்ளது. வெளிப்பக்க உறை பீவிசி என்று அழைக்கப்படுகிறது. மின் தடுப்புச் செய்யப்பட்ட கம்பி வடத்தில் உள்ள இரண்டு கடத்திகளும் கம்பி வடம் நெடுகிலும் முறுக்கப்பட்டு 'இணை' என்று அழைக்கப்படுகின்றது.

**two - wire line :** இரண்டு கம்பி : வெற்றுக் கடத்திகளைப் பயன்படுத்தி தந்திக் கம்பிகளின் மேல் காப்புறைகளை உருவாக்குதல். குறை மின்சுற்று ஆகி தரவு தொடர்புத் தடை ஏற்படாமல் இருக்கும் கம்பிகள் ஒன்றையொன்று தொட அனுமதிக்கக் கூடாது.

**TXD :** டீஎக்ஸ்டி : தகவலை அனுப்பு (Transmit Data) என்பதன் சுருக்கம். அனுப்பப்படும் தரவுவை ஒரு சாதனத்திலிருந்து இன்னொரு சாதனத்துக்குச் சுமந்து செல்லப் பயன்படும் இணைப்புத் தடத்தைக் குறிக்கும். கணினியிலிருந்து இணக்கிக்கு ஆர்எஸ்-232-2 இணைப்புகளில் இரண்டாவது பின்.

**.txt :** .டீஎக்ஸ்டீ : ஆஸ்கி உரைக் கோப்புகளை அடையாளங் காட்டும் வகைப்பெயர் (extension). பெரும்பாலும் .டீஎக்ஸ்டீ வகைப்பெயர் கொண்ட ஆவணங்கள் வடிவமைப்புக் கட்டளைகளைக் கொண்டிருப்பதில்லை. இதன் காரணமாக இவ்வகைக் கோப்புகளை எந்த உரைத் தொகுப்பான் அல்லது சொல் செயலிகளிலும் கையாள முடியும்.

**Tymnet :** டிம்நெட் : நூற்றுக்கு மேற்பட்ட நாடுகளில் நிகழ்நிலைச் சேவைகளோடும், இணையச் சேவையாளர்களோடும் இணைப்புகளைக் கொண்டுள்ள ஒரு பொதுத் தரவுப் பிணையம்.

**type :** வகை : 1. தரவு அல்லது சொல்நுழைவில் விசைப்

பலகையில் உள்ள விசைகளை அழுத்துதல். 2. நிரல் தொடரமைவில், அதனுள் சேமிக்கப்பட்ட தரவுகளினால் முடிவு செய்யப்படும் மாறிலி வகை. சான்றாக, முழு எண், மிதக்கும் புள்ளி, தருக்க சரம், தரவு, இருமை ஆகியவை பொது தரவு வகைகளாக இருக்கும். 3. டாஸ் மற்றும் ஓஸ்/2 இல் சொல் தொகுப்புக் கோப்பின் உள்ளடக்கங்களைக் காட்டும் கட்டளை.

**type-ahead capability :** தொடர் தட்டச்சுத் திறன் : விசைப் பலகையில் தட்டச்சு செய்யும் விசையழுத்தங்களை இடைநிலை நினைவகத்தில் (Buffer Memory) சேமித்து வைத்துப் பிறகு திரையில் காட்டும் திறனுள்ள ஒரு கணினி நிரல். பயனாளர் வேகமாகத் தட்டச்சு செய்தால், அந்த வேகத்தில் எழுத்துகளைத் திரையில் காட்ட முடியாதபோது சில விசையழுத்தங்களை இழக்க நேரலாம். இப்படி நிகழ்வதைத் தவிர்க்கவே இடைநிலை நினைவகத்தில் உள்ளீடுகள் சேமிக்கப்படுகின்றன.

**type ball :** தட்டச்சுப் பந்து; அச்சுப் பந்து : பயன்படுத்தக் கூடிய எல்லா எழுத்துகளையும் கோல்ஃப் பந்துபோலத் தோற்ற



அச்சுப் பந்து

மளிக்கச் செய்யும் தட்டச்சு அடிக்கும் தன்மை. உயர்த்தப் பட்டுள்ள எழுத்துகளை சுற்றிலும் நகர்த்தக்கூடிய அச்சில் ஏற்றி வைக்கும். சுத்தியல்போல இயங்கி, காகிதத்தில் நாடாவை அழுத்தி எழுத்து உருவத்தை உருவாக்குகிறது.

**type casting :** இனமாற்றம்; வகை மாற்றம் : ஒரு தரவின மதிப்பை வேறொரு தரவினமாக மாற்றுதல் (எ.டு) மெய்யெண் இனமதிப்பை முழுஎண் மதிப்பாக மாற்றுதல்.

**type declaration :** இன அறிவிப்பு : பல நிரலாக்க மொழிகளில் பயனாளர் தாம் விரும்பும் தரவினங்களை உருவாக்கிக் கொள்ள வசதி உள்ளது. ஏற்கெனவே இருக்கும் மூலத் தரவினங்கள் சிலவற்றை ஒருங்கிணைத்து புதிய தர

வினங்களை உருவாக்கி அறிவிக்கலாம். (எ-டு) சி-மொழியில் struct அறிவிப்பு மூலம் புதிய தரவினங்களை உருவாக்கலாம். சி++, ஜாவா, சி# மொழிகளில் class என்ற அறிவிப்பின் மூலம் புதிய தரவினங்களையும் அவற்றின் பண்புகள், வழிமுறைகளையும் வரையறை செய்ய முடியும்.

**typeface :** அச்சுரு : அச்சிடுவதற்கான, குறிப்பிட்ட, பெயரிடப் பெற்ற எழுத்துகளின் தொகுதி. (எ-டு) Helvetica Bold Oblique. இது குறிப்பிட்ட கோணத்தில் சாய்வும் (Obliqueness), குறிப்பிட்ட அளவு கோடுகளின் தடிமனும் (Stroke Weight) கொண்டவை. அச்சுரு, எழுத்துரு (Font) விலிருந்து மாறுபட்டவை. எழுத்துருக்கள் குறிப்பிட்ட உருவளவில் (Point Size) உருவாக்கப்படுகின்றன. அச்சுரு, அச்சுருக் குடும்பத்திலிருந்து மாறுபட்டவை. (எ-டு) Helvetica Family. உறவுடைய பல அச்சுருக்களின் குழு.

**typeface family :** அச்செழுத்துக் குடும்பம் : வடிவமைப்பில் ஒன்றையொன்று தொடர்புள்ள அச்செழுத்துகளை குழுவாக அமைத்தல்.

**type font :** அச்செழுத்து வகை.

**typematic :** தொடர் அச்சு : அழுத்திக் கொண்டிருக்கும் வரை திரும்பத் திரும்ப அடித்துக் கொண்டிருக்கும் விசைப்பலகை எழுத்து.

**typematic rate :** தொடரச்சு விகிதம் : தொடர்ச்சியாக கீழே இறக்கியபோது திரும்பத் திரும்ப விசைப்பலகை விசைகளை குறியீடு அனுப்பும் வேகம்.

**type mismatch error :** விவர இன ஒத்திசையாப் பிழை : இரு மாறிகளைக் கையாளும் ஒரு கணக்கீட்டில், இரண்டு மாறிகளும் வெவ்வேறு விவர இனத்தைச் சார்ந்திருந்தால் வரும் பிழை.

**typeover :** மேல் அழுத்து; மேல் அச்சிடல் : அச்சிடப்பட்ட பிரதியில் தடிமனான எழுத்து வரும் வகையில் ஒரு எழுத்தை ஒரு முறைக்கு மேல் அடிக்கும் அழுத்தும் அச்சுப்பொறியின் திறன்.

**typeover mode :** மேல் அச்சிடல் முறை : சொல் செயலாக்கம் மற்றும் தரவு நுழைவில், விசைப் பலகை மூலம் தட்டச்சு செய்யப்படும் விசைகள் ஒன்றின் மேலே எழுதினாலோ அல்லது அப்போதைய சுட்டி இருப்பிடத்தினை மாற்றினாலோ இந்நிலை ஏற்படும்.

**type safety** : இனப் பாதுகாப்பு; வகைப் பாதுகாப்பு.

**typesetting** : அச்சுக்கோப்பு : தொழில்முறை தர எழுத்துகளை உற்பத்தி செய்யும் ஒளிப்பட மின் செயல்முறை. அச்சுக் கோப்பில் உள்ள அங்குலத்திற்கு 1200-2400 எண்கள் உள்ள திரை இருக்கும். இதன் மூலம் ஏறக்குறைய முழுமையான எழுத்துகள் உருவாகும்.

**type size** : அச்சுரு அளவு : அச்சிடுகின்ற எழுத்துகளின் உருவளவு. பாயின்ட் என்னும் அலகினால் அளவிடப்படும். ஒரு பாயின்ட் என்பது ஏறத்தாழ 1/72 அங்குலம்.

**type style** : அச்சுரு பாணி; அச்சுரு அழகமைவு : 1. எழுத்து வடிவத்தின் சாய்வுத் தன்மை. 2. ஒரு குறிப்பிட்ட எழுத்து வடிவு அல்லது எழுத்து வடிவக் குடும்பத்தின் ஒட்டுமொத்த வடிவமைப்பு. 3. எழுத்து வடிவில் ரோமன், தடிமன், சாய்வு, தடிமன் சாய்வு போன்ற அழகமைவுகளுள் ஒன்று.

**typewriter** : தட்டச்சுப் பொறி : கணினியுடன் இணைக்கப்பட்டு தரவு தொடர்புக்காகப் பயன்படுத்தப்படும் திறனுள்ள உள்ளீட்டு/வெளியீட்டுச் சாதனம்.

**type writer, console** : பணியகத் தட்டச்சுப் பொறி.

**typography** : அச்சுக்கலை : 1. எழுத்துரு வடிவமைப்பு மற்றும் அச்சுக்கோப்புக் கலை. 2. வடிவமைக்கப்படாத உரைப் பகுதியை அச்சிடுவதற்கு ஏற்ற வகையில் மாற்றியமைத்தல்.

**.tz** : .டீஇஸட் : ஓர் இணைய தள முகவரி தான்ஸானியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

# U

**u** : யு : பத்துலட்சத்தில் ஒரு பங்கு ($10^{-6}$) என்பதைக் குறிக்க கிரேக்க எழுத்து μ பயன் படுத்தப்படுகிறது. மியூ என்று உச்சரிக்கப்படும். மைக்ரோ (micro) என்று பொருள்படும். சில வேளைகளில் μ என்ற எழுத்துக்குப் பதிலாக u பயன் படுத்தப்படுகிறது.

**.ua** : யூஏ : ஓர் இணைய தள முகவரி உக்ரைன் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**UA** : யுஏ : எண்ணிக்கை தரப் படாத ஏற்பு.

**UAE** : யுஏஇ : Unintererruptible Application Error என்பதன் முத லெழுத்துக் குறும்பெயர். தடை வராத பயன்பாட்டுப் பிழை. விண்டோஸ் பதிப்பு 3.0வில் உள்ள பயன்பாட்டு நிரல் தொடர்.

**UCSD Pascal** : யுசிஎஸ்டி பாஸ் கல் : சாண்டியாகோவில் உள்ள கலிஃபோர்னியா பல்கலைக் கழகம் உருவாக்கிய பாஸ்கல் நிரல் தொடர் மொழியின் புகழ் பெற்ற பதிப்பு.

**UCSD P-System** : யுசிஎஸ்டி பீ-அமைப்பு : சாண்டியாகோவின் கலிஃபோர்னியா பல்கலைக் கழகத்தில் கென்னத் பவுல்ஸ் உருவாக்கிய நிரல் தொடர் உரு வாக்கும் அமைப்பு. ஒரு செயல் பாட்டு அமைப்பு, சொல் தொகுப்பி மற்றும் ஃபோர்ட் ரான், மைக்ரோசாஃப்ட் பேசிக் தொகுப்பிகள் ஆகியவை இதில் அடங்கும். 'P' என்பது pseudo computers என்னும் போலி கணினிகள் என்பதைக் குறிக்கும். இந்த அமைப்பின் தொகுப்பிகள் சரியான பீ-குறியீட்டை உருவாக்குகின்றன. இக்குறியீடு போலி கணினி களில் இயங்கக்கூடிய பீ-அமைப்பில் ஓடும் கணினி களுக்கு குறைந்த மொழி பெயர்ப்பு வசதி அளித்தால் போதும். பீ-குறியீடு கணினிக் காக குறியீடுகளை மாற்றித் தருகின்றன.

**UDP** : யுடிபீ : பயனாளர் தரவுச் செய்தி நெறிமுறை என்று பொருள்படும் User Datagram Protocol என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும் பெயர். டீசிபீ/ஐபீ-க்குள்ளேயே இணைப்பில்லா (Connection

Less) நெறிமுறை ஆகும் இது. ஐஎஸ்ஓ/ஓஎஸ்ஐ அடுக்கில் போக்குவரத்து அடுக்கில் செயல்படுகிறது. யுடிபீ, ஒரு பயன்பாடு தருகின்ற தரவு செய்திகளை, பொதிகளாக்கி ஐபி மூலமாக அனுப்பி வைக்கும். ஆனால், பொதிகள் ஒழுங்காகப்போய்ச் சேர்ந்தனவா என்பதைச் சரிபார்க்காது. எனவே யுடிபீ, டீசிபீ-யை விட வேகமானது, திறன்மிக்கது. இதன் காரணமாக, எஸ்என் எம்பீ உட்பட பல்வேறு நோக்கங்களுக்கு யுடிபீ பயன்படுத்தப்படுகிறது. ஆனால், இதன் நம்பகத்தன்மை செய்தியை உருவாக்கும் பயன்பாட்டைப் பொறுத்திருக்கிறது.

**uid :** பயனாளர் அடையாளப் பெயர்/ எண்.

**.uk :** .யுகே : ஓர் இணைய தள முகவரி இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**uknet :** யுகேநெட் : 1. கென்டக்கிப் பல்கலைக் கழக வளாகப் பிணையம். 2. இங்கிலாந்து நாட்டில், கென்ட் பல்கலைக் கழகத்தை மையமாகக் கொண்டு செயல்படும் ஓர் இணையச் சேவை நிறுவனம்.

**ULSI :** யுஎல்எஸ்ஐ (மிகப் பெரும் ஒருங்கிணைப்பு) : Ultra Large Scale Integration என்பதன் குறும்பெயர். super large scale integration போன்றதே இதுவும்.

**ultra DMA/33 :** அதிவேக டிஎம்ஏ/33 : நேரடி நினைவக அணுகலை அடிப்படையாகக் கொண்டு அண்மைக் காலத்தில் உருவாக்கப்பட்ட தரவு பரிமாற்ற நெறிமுறை. ஏற்கெனவே உள்ள ஏடீஏ/ஐடிஇ நெறிமுறையைவிடச் செயல்திறன் மிக்கது. வெடிப்புப் பரிமாற்ற வீதம் (Burst Transfer Rate) இருமடங்கு ஆகும். வினாடிக்கு 33 மெகா பைட்வரை அனுப்பும் திறன் வாய்ந்தது. தரவு பரிமாற்ற நம்பகத் தன்மையையும் அதிகமாக்கியுள்ளது.

**ultrafiche :** மீ நுண்படலம் : நூறு மடங்கு அல்லது அதற்கு மேற்பட்ட அளவில் உருவம் குறைக்கப்பட்ட நுண்படலம்.

**ultra high frequency :** மீஉயர் அலைவரிசை.

**ultra-large-scale integration :** மீப் பெருமளவு ஒருங்கிணைப்பு : ஒருங்கிணைப்பு மின்சுற்று உருவாக்கத்தில் ஒருவகை. மின்மப் பெருக்கி மற்றும் பிற பொருள் கூறுகளை மிக அடர்த்தியாகப்

பிணைத்தல். மீப்பெருமளவு என்பது எவ்வளவு என்று துல்லியமாக வரையறுக்கப்பட வில்லை. பொதுவாக, ஒரு இலட்சத்துக்கும் அதிகமான பொருள்கூறுகள் இருப்பின் இந்த வகையில் சேர்க்கலாம். சுருக்கமாக யுஎல்எஸ்ஐ எனப்படும்.

**ultra SCSI :** அதிவேக ஸ்கஸ்ஸி : ஸ்கஸ்ஸி-2 தரத்தின் நீட்டித்த வரன்முறை. வேக ஸ்கஸ்ஸி யின் பரிமாற்ற வீதத்தைப் போல இரண்டு மடங்கு வேகம் கொண்டது. 8-பிட் இணைப் பில் வினாடிக்கு 20 மெகாபைட் வீதமும், 16-பிட் இணைப்பில் 40 மெகாபைட் வீதமும் அனுப் பும் திறன் கொண்டது.

**ultrasonic :** கேளா ஒலி : மனிதர் கள் கேட்கும் அளவுக்கு அதா வது 20 கிலோ ஹெர்ட்சுக்கு மேற்பட்டது.

**ultraviolet light :** புறஊதா ஒளி : பார்க்கக்கூடிய ஒளியைவிட சிறியதான ஆனால் எக்ஸ் கதிர் களைவிட நீண்ட கதிர்களைக் கொண்ட ஒளி. அழிக்கக்கூடிய ப்ராமில் (Prom) எழுதப்பட்ட தரவுகள் அல்லது நிரல்களை அழிக்கப்பயன்படுத்தப்படுவது. ஈப்ராமை அழிப்பதற்கு, ப்ராம் நிரல் தொடர்கள் மூலம் மீண்டும் நிரல்தொடர் அமைக்க முடியும்.

**ultra-violet radiations :** புற ஊதாக் கதிர் வீச்சு.

**unary :** ஒருமம.

**unary operation :** ஒருறுப்புச் செயல்.

**unary operator :** ஒருறுப்பு இயக்கி : எதிர்மறைபோன்ற ஒரே ஒரு கூறினைக் கொண்டுள்ள கணித இயக்கி.

**unattended operation :** ஆளில் லாத இயக்கம் : இயக்குபவர் இல்லாமல் தரவு அனுப்புதல்/ பெறுதல்.

**unbuffered :** இடையகமற்ற : பெற்ற தரவுகளை இடைநிலை நினைவகத்தில் சேமித்து வைத்துப் பிறகு செயலாக்கு வதற்குப் பதிலாக, பெற்ற வுடனேயே செயலாக்கத்துக்கு உட்படுத்திவிடுகிற தன்மையைக் குறிக்கிறது.

**unbundle :** கட்டுப்பிரித்தல் : ஒரு மென்பொருள் கூட்டுத் தொகுப்பை மொத்தமாக விற் பதற்குப் பதில் அதிலுள்ள மென்பொருள் கூறுகளை தனித் தனியே பிரித்து விற்பனை செய்தல். (எ-டு) எம்எஸ் ஆஃபீஸ் தொகுப்பினுள் வேர்டு, எக்செல், அக்செஸ்

போன்றவற்றைத் தனித்தனியே விற்பனை செய்தல்.

**unbundled :** கட்டி அனுப்பாத : வன்பொருள் உற்பத்தியாளர்கள் கணினி வன்பொருள் விற்கும் போது தராமல் தனியாக விற்கும் மென்பொருள், பயிற்சி மற்றும் பணிகள் பற்றியது.

**unbundling :** கட்டப்படாத : வன்பொருள், மென்பொருள் மற்றும் பிற தொடர்புள்ள பணிகளைத் தனியாக விலை குறித்தல்.

**uncommitted logic array :** உறுதிப்படாத தருக்க வரிசை : ஒரு வகையான நிரல் தொடரமைக்கக்கூடிய தருக்கப் பகுதி.

**uncompress :** விரித்துப் பெருக்குதல் : இறுக்கிச் சுருக்கப்பட்ட (compressed) கோப்பினை விரித்துப் பெருக்கி மூலக் கோப்பினைப் பெறுதல்.

**unconditional branch :** நிபந்தனையற்ற கிளை : நிரல் தொடரமைத்தலில், GOTO, BRANCH, JUMP போன்ற நிரல். இந்த நிரல், கட்டுப்பாட்டினை நிரல் தொடரின் வேறு ஒரு பகுதிக்கு அனுப்புகிறது.

**unconditional branching :** நிபந்தனையிலா கிளைத்தல் : நிபந்தனையின்றிப் பிரிதல்.

**unconditional branch instruction :** நிபந்தனையற்ற கிளைபிரி நிரல்.

**unconditional transfer :** நிபந்தனையற்ற மாற்றல் : நிரல் தொடர் கட்டுப்பாட்டின்போது வழக்கமான வரிசையில் இயக்கப்படாமல், அதிலிருந்து பிரிந்துபோகச் செய்யும் ஒரு நிரல்.

**uncontrolled loop :** கட்டுப் படுத்தப்படாத கண்ணி : தருக்க இறுதியை அடையாத நிரல் தொடர் கணினி.

**undefined :** வரையறுக்கப்படாத : நிரல் தொடரில் பயன்படுத்தப் படுவதற்கு முன்பு தரவு வகை அல்லது குறிப்பிட்ட நீளம் தரப் படாத நிலையெண் அல்லது மாறிலியைக் குறிப்பிடல்.

**undefined variable :** வரையறுக்கப்படாத மாறிலி.

**undelete :** அன்டிலெட்; மீட்டெடு : நீக்கப்பட்ட கோப்புகளை மீண்டும் கொண்டு வரும் டாஸ் (DOS) கட்டளை கோப்புகளை நீக்கிய பிறகு அதன் மீது எழுதப்படாவிட்டால் மட்டுமே இது செயல்படும்.

**undeliverable :** சேர்ப்பிக்க முடியாத; வினியோகிக்க முடியாத : தகவலைப் பெறவேண்டியவரிடம் சேர்ப்பிக்க முடியாத

நிலை. ஒரு மின்னஞ்சலை முகவரிதாரருக்குச் சேர்ப்பிக்க முடியாமல் போனால், அஞ்சல் வழங்கன் அந்த மடலை, காரணத்தை விளக்கும் பின் குறிப்புடன் அனுப்பியவருக்கே திருப்பி அனுப்பிவைக்கும். மின்னஞ்சல் முகவரி தவறாக இருக்கலாம். முகவரிதாரரின் அஞ்சல் பெட்டி நிரம்பி யிருக்கலாம்.

**under colour separation : மூல வண்ணப் பிரிப்பு :** சிஎம்ஒய்கே வண்ண அமைப்பில், வண்ண அச்சிடலின் மூலவண்ணங் களான வெளிர்நீலம் (சியான்), செந்நீலம் (மெஜந்தா), மஞ்சள் நிறங்களைப் பிரித்து அவற்றுக்குச் சமமான சாம்பல் நிற அளவுகளாய் மாற்றி கறுப்பு மையால் அச்சிடும் முறை. இந்த முறையில், வண்ண மைகளைக் கலந்து உருவாக்கும் சாம்பல் நிறத்தைவிடத் தெளிவாகவும், கூர்மையாகவும் அமையும்.

**underflow : கீழோட்டம் ; தேக்க இயலா கீழ்நிலை :** 1. கணினி யின் சேமிக்கும் திறனைவிடக் குறைவான எண்ணிக்கையில் கணக்கிட்டு முடிவுகளைக் கணினி தருவதால் ஏற்படும் சூழ்நிலை. 2. மிதக்கும் புள்ளிக் கணக்கீட்டில் மடங்கின் கூட்டலுடன் எஞ்சியதைச் சேர்த்தால் மைனஸ் எண்வரும் சூழ்நிலை.

**underlining : அடிக் கோடிடல்.**

**undernet : அண்டர்நெட் :** இணைய தொடர் அரட்டை (IRC)க்காக உருவாக்கப்பட்ட பன்னாட்டுப் பிணையம். மிகப் பெரிய, மிகச்சிக்கலான ஐஆர்சி பிணையத்துக்கு மாற்றாக 1992 - ஆம் ஆண்டு உருவாக்கப் பட்டது. இதுபற்றிய விவரங்கள் undernet.org என்ற முகவரியில் கிடைக்கின்றன.

**underpunch : கீழ்த்துளை :** துளையிட்ட அட்டை பத்தியில் மூல தரக் குறியீட்டுத் துளைக்குக் கீழே போடப்பட்ட இரண்டாவது துளை.

**underscan : அண்டர்ஸ்கேன் :** காட்சித் திரையில் உள்ள வழக்க மான செவ்வக வடிவ பார்க்கும் பகுதியில் உள்ள ஒரு பகுதி.

**underscore : அடிக்கீறு :** கீழிறங்கித் தோற்றமளிக்கும் இணைப்புக்குறி. விசைப் பலகையில் இணைப்பு/ கழித்தல் (Minus/Hyphen) குறிக்கு மேல்பகுதியில் இருக்கும். நகர்வு (Shift) விசையுடன் சேர்த்து அழுத்தினால் அடிக்கீறு கிடைக்கும். பெரும்பாலும் இரட்டைச் சொற்களை ஒரே

சொல்லாகக் குறிப்பிடப் பயன்படுத்தப்படுகிறது. (எ-டு) First_Name, Basic_Pay அடிக் கோடு (underline) வேறு, அடிக் கீறு (underscore) வேறு. அது போலவே இணைப்புக் குறியும், அடிக்கீறும் வேறுவேறு.

**undo** : முன்செயல் நீக்கு : சொல் செயலாக்கக் கட்டளை. முந்தைய கட்டளைகளை செயலற்றதாக ஆக்கி சொற்பகுதியை மீண்டும் முன்பிருந்தது போலவே மாற்றுவது.

**undock** : பிரி; விலக்கு : 1. பிணைக்கப்பட்ட பணி நிலையக் கணினியிலிருந்து மடிக் கணினியைப் பிரித்தெடுத்தல். 2. கருவிப் பட்டையை சாளரத்தின் விளிம்பிலிருந்து பிரித்தெடுத்து வேறிடத்தில் வைத்தல். இதனால் கருவிப் பட்டை, விருப்பப்படி நகர்த்திச் செல்லும்படியான தனிச் சாளரமாக ஆகிவிடும்.

**unerase** : மீட்டெடு : முன்பே அழிக்கப்பட்ட கோப்புகளை மீண்டும் கொண்டுவர உதவும் சில பயன்பாட்டு மென்பொருள் நிரல். கோப்பை அழிப்பது என்பது கோப்பு ஒதுக்கும் பட்டியல் நுழைவினை மட்டுமே அழிக்கிறது. தரவுகள் பொதுவாக நீக்கப்படுவதில்லை.

**unexpected halt** : எதிர்பாரா இடை நிறுத்தம்.

**unformat** : வடிவமைப்பை மாற்று : ஒரு டாஸ் கட்டளை. தவறுதலாக வடிவமைக்கப்பட்ட தரவுகளை வட்டிலிருந்து எடுப்பதற்கு உதவும்.

**unformatted I/O** : வடிவமைக்கப் படாத உ/வெ : அமைப்புக் கட்டுப்பாடு செய்யப்படாமல் தரவுகளைப் படித்தல்/எழுதல்.

**unfreeze columns** : அணைத்து நெடுக்கையும் விடுவி.

**unhandled exception** : கையாளா விதிவிலக்கு : இயக்கநேரப் பிழைகளை முன்கூட்டியே அறிந்து அவற்றைக் கையாளும் நிரல் கூறுகளை நிரலர் எழுத வேண்டும். இது விதிவிலக்குக் கையாளுதல் (Exception Handling) என்றழைக்கப்படுகிறது. நிரலர் கையாளாத பிழை, இயக்க நேரத்தில் ஏற்படுமெனில், இயக்க முறைமை நிரலைப் பாதியிலேயே முடித்து விடும்.

**ungroup** : குழு கலை.

**unhide** : வெளிக்கொணர்.

**unhide columns** : நெடுக்கைகள் வெளிக்கொணர்.

**unibus** : ஒற்றைப்பாட்டை : அதிவேக தரவுத் தொடர்பு பாட்டை

அமைப்பு. மையச் செயலகத்தின் உள்நினைவகத்திற்கும் வெளிப்புறப் பகுதிகளுக்கும் இடையில் பங்கிட்டுக் கொள்வது.

**unicode : யுனிகோடு :** *1988-1991* காலகட்டத்தில் யுனிகோடு கூட்டமைப்பு உருவாக்கிய 16 பிட் எழுத்துக் குறியாக்கத் தர வரையறை. ஓர் எழுத்தைக் குறிக்க இரண்டு பைட்டுகள் பயன்படுவதால் மொத்தம் 65 ஆயிரத்துக்கு மேற்பட்ட ($2^{16}$) எழுத்துகளைப் பெறமுடியும். எனவே யுனிகோடில் உலகத்திலுள்ள வரிவடிவம் கொண்ட அனைத்து மொழி எழுத்துத் தொகுதிகளையும் பெற முடியும். ஆனால் 1-பைட் எழுத்துக் குறி முறையான ஆஸ்க்கியில் 256 எழுத்துகள் மட்டுமே இயலும். ஆஸ்க்கியின் 256 எழுத்துகளும் யுனிக்கோடின் முதல் 256 இடங்களில் இருத்தப்பட்டுள்ளன. 39,000 இடங்கள் பல்வேறு மொழிகளுக்கும் ஒதுக்கப்பட்டுள்ளன. 21000 இடங்கள் பண்டைச் சீன வரி வடிவத்துக்கு ஒதுக்கப்பட்டுள்ளன. மீதியிடங்கள் வருங்கால விரிவாக்கத்துக்கு வைக்கப்பட்டுள்ளன. தமிழுக்கு 128 இடங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. அதிகமான இடங்கள் கேட்டு கோரிக்கை வைக்கப்பட்டுள்ளது.

**unicorn : யுனிகார்ன் :** வீட்டு நுண் கணினி, கல்வி மற்றும் வீட்டு கணிப்புக்கு மிகவும் புகழ்பெற்றது. 64கே நினைவகத்துடன் வரும் 65028 நுண்மி சார்ந்தது. பி.பி. அக்கரன் (Acron) உடன் ஏற்புடையது. ஐபிஎம் பீசி மிகவும் புகழ் பெறவும், விலைகள் குறையவும் யூனிகார்னும் தன் புகழை இழந்தது.

**unidirectional : ஒரே திசையிலான :** ஒரு வழித்தடத்தில் தரவுகள் ஒரே ஒரு திசையில் மட்டும் அனுப்புவது.

**unidirectional printing : ஒரே திசையிலான அச்சிடல் :** ஒரே திசையில் மட்டும் அச்சிடல். இரு திசையில் அச்சிடுவதற்குப் பதிலாக துல்லியமாக செங்குத்து அமைப்பில் அச்சிடுகிறது.

**Uniform Naming Convention : ஒரு சீரான பெயரிடு மரபு :** பிணையத்தில், கோப்புகளுக்குப் பெயரிடுவதில் பின்பற்றப்படும் நடைமுறை. பிணையத்திலுள்ள பிற கணினிகள் ஒரு குறிப்பிட்ட கோப்பினைக் கையாள நேரும்போது குழப்பமில்லாமல் அதே பெயரை அதே பாதையுடன் அணுக வழியேற்படும்.

**Uniform Resource Citation :** ஒரு சீரான வள விவரிப்பு : வைய விரிவலையில் ஒரு பொருளைப் பற்றி விவரிக்கப்படும் முறை. ஒருசீரான வள அடையாளங் காட்டிகள் (URIs), படைப்பாளர் பெயர், வெளியிடுவோர் பெயர், தேதி, விலை இவை போன்ற பண்புக்கூறுகளையும், மதிப்பு களையும் கொண்டிருக்கும்.

**Uniform Resource Identifier :** ஒரு சீரான வள அடையாளங் காட்டி : இணையத்தில் எந்த மூலையில் இருப்பினும் ஒரு வளத்தை (கோப்பு போன் றவை) அதன் வகை மற்றும் இருப்பிடம் ஆகியவற்றுடன் அடையாளங்காட்டப் பயன் படுத்தப்படும் ஓர் எழுத்துச் சரம். இது, ஒரு சீரான வளப் பெயரையும் (URNs) ஒரு சீரான வள இடங்காட்டியையும் (URL) உள்ளடக்கியது.

**Uniform Resource Name :** ஒரு சீரான வளப் பெயர் : இணையத் தில் இருக்கும் ஒரு வளத்தை (கோப்பு போன்றவை) அதன் பெயரைக் கொண்டு அடை யாளம் காணக்கூடிய ஒரு திட்ட முறை. அவ்வளம் இருக்கும் இருப்பிடம் பற்றிக் கவலை யில்லை. ஒரு சீரான வளப் பெய ரின் வடிவமைப்பிற்கான வரன் முறைகள், இணையப் பொறி யியல் முனைப்புக் குழு (Internet Engineering Task Force - IETF) வின் பரிசீலனையில் உள்ளது. urn:, fpi;, path: போன்ற திட்ட முறையிலடங்கிய அனைத்து ஒரு சீரான வள அடையாளங் காட்டிகளை உள்ளடக்கியதாக இருக்கும். அவை, ஒருசீரான வள இடங்காட்டிகளையும் (URLs) கொண்டிருக்காது.

**UniForum :** யுனிஃபாரம் : *1.* திறந்த நிலை முறைமை வல்லுநர்களின் பன்னாட்டுச் சங்கம். யூனிக்ஸ் பயனாளர்கள், நிர்வாகிகளைக் கொண்ட அமைப்பு. 2. யுனிஃபாரம் அமைப்பினால் ஏற்பாடு செய்யப்பட்டு, சாஃப்ட்பாங்க் காம்டெக்ஸ் நிறுவனத்தால் நிர்வகிக்கப்பட்ட தொடர்ச்சி யான யூனிக்ஸ் வணிகக் கண் காட்சிகளைக் குறிக்கிறது.

**unify :** யூனிஃபை : ஒரு பொது நோக்க டிபிஎம்எஸ் பயன் பாட்டுப் பணித் தொகுப்பு. ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் மிகச் சிறந்ததைத் தேர்ந்தெடுக்கும் உள்ளமைக்கப்பட்ட ஆப்டி மைசரை (optimizer)அணுக பல முறைகளை வழங்குகிறது.

**unigraphics :** யூனிகிராஃபிக்ஸ் : மைக் டொனால் டக்ளஸ் சிஏ/ காட்/காம் அமைப்பு. விரிவான

வடிவமைப்பு, வரைவு, பொறியியல் ஆய்வு மற்றும் எண் கட்டுப்பாடு, தரவு உருவாக்கம் போன்ற பயன்பாடுகளின் அடிப்படையை உருவாக்குகிறது.

**uninitialized :** ஆரம்பிக்கப்படாத : ஒரு பெறுமிடம், சேமிப்பிடம், மாறிலி மற்றும் இவை போன்றவற்றின் ஆரம்ப மதிப்பு தருதல்.

**uninstall :** நிறுவியது நீக்கு; நிறுவுகை நீக்கு : ஒரு கணினியில் நிறுவப்பட்ட மென்பொருள் தொகுப்பை முற்றிலுமாக நீக்கிவிடுதல். விண்டோஸ் 95/98/என்டி முறைமைகளில் ஒரு மென்பொருளை நிறுவும்போது, சில கோப்புகளை முறைமைக் கோப்புறையில் எழுதிக் கொள்ளும். அம்மென்பொருளின் தகவமைவுகளை பதிவேட்டிலும் (Registry) குறித்துக் கொள்ளும். எனவே ஒரு மென்பொருளை சாதாரண முறையில் அழித்தோம் (Delete) எனில் மேற்சொன்ன தரவுகள் நீக்கப்படாமல் தங்கிப்போகும். பின்னாளில் தொல்லையேற்படும். எனவே, நிறுவுகை நீக்கல் முறையிலேயே ஒரு மென்பொருளை அகற்ற வேண்டும்.

**union :** ஒன்றல் : உறவுமுறை தரவுத் தளத்தில், இரண்டு கோப்புகளை ஒன்று சேர்த்தல்.

**union-compatible :** இணைக்கத்தகு : தரவுத் தள மேலாண்மையில் ஒரே வகையான ஒரே எண்ணிக்கையிலான பண்புக்கூறுகள் (புலங்கள் அல்லது நெடுக்கைகள்) கொண்ட இரண்டு அட்டவணைகளின் பண்பியல்பைக் குறிப்பது. union என்னும் கட்டளையை இவற்றுக்குப் பயன்படுத்த முடியும்.

**unipolar :** ஒரு துருவம் : ஒரு துருவம் மட்டும் கொண்டது.

**unit :** அலகு : சிறப்புப் பணி உள்ள எந்த ஒரு சாதனமும், கணித தருக்க அலகு, மையச் செயலக அலகு அல்லது காந்த நாடா அலகு.

**unit, audio response :** கேட்பொலி உணர் அலகு; கேட்பொலி உணர்பாகம்.

**unit, central control :** மையக் கட்டுப்பாட்டகம்.

**unit, central processing :** மையச் செயலகம்.

**unit, control :** கட்டுப்பாட்டகம்.

**United States of America Standards Institute :** அமெரிக்க நாட்டுத் தர நிறுவனம் (USASI) : அமெரிக்கத் தேசியத் தர நிறுவனத்தின் (ANSI) முந்தைய பெயர்.

**unit, logical** : தருக்கமுறை அலகு.

**unit position** : புல நிலை; ஒன்றின் நிலை : எண் புலத்தில் வலது இறுதி நிலை.

**unit record** : பதிவேடு அலகு : தரவுகளால் குறியீடு செய்யப்பட்டு கணினி உள்ளீடாகப் பயன்படுத்தப்படும் துளையிட்ட அட்டை.

**unit record system** : அலகு பதிவு அமைப்பு : தானியங்கி கணினிமய அமைப்புக்கு மாறாக தொழில் நுட்பாளர்கள் இயக்கும் பிரிப்பிகள், அடுக்கிகள் போன்ற மின்னியந்திர செயலாக்க எந்திரங்களைப் பயன்படுத்தும் தரவு செயலாக்க அமைப்பு. அலகு பதிவு அமைப்புகளெல்லாம் நவீன கணினிக் கருவிகளால் மாற்றப்பட்டுவிட்டன.

**unit, tape** : நாடா அலகு; நாடா அகம்.

**unit, visual display** : புலன் காட்சி அலகு.

**UNIVAC I** : யூனிவாக் I: *1951*இல் செய்து முடிக்கப்பட்ட வணிக வகையிலான முதல் மின்னணு எண்முறைக் கணினி. *1950*ஆம் ஆண்டின் (அமெரிக்க) மக்கள் தொகைக் கணக்குத் தொடர்பான தரவுகள் சிலவற்றைத் தொகுக்க மக்கள் தொகைக் கணக்கெடுப்பு அலுவலகம் இதைப் பயன்படுத்தியது. இத்தகைய கணினிகள் *48* செய்யப்பட்டன.

**universal asynchronous receiver/transmitter** : யுனிவர்சல் அசிங்க்ரனஸ் ரிசீவர்/டிரான்ஸ்மிட்டர் : தொடர் தரவுகளைப் பெற்று அவற்றை அனுப்புவதற்கான இணை வடிவமாக மாற்றும் ஒருங்கிணைந்த மின்சுற்றுச் சாதனம். இது தலைகீழாகவும் செய்யப்படும்.

**universal indentifier** : உலக அடையாளம் காட்டி : ஒருவரது அடையாளத்தை சோதித்தறிவதற்காக ஒரு நபருக்குத் தரப்படும் பல்லுரிமை தர எண்.

**universal language** : உலக மொழி : பல கணினிகளில் கிடைக்கக்கூடிய ஃபோர்ட்ரான், கோபால் மற்றும் பேசிக் போன்ற ஏதாவதொரு நிரல் தொடரமைக்கும் மொழி. பொது மொழி போன்றது.

**Universal Product Code (UPC)** : உலக உற்பத்திக் குறியீடு : பேரங்காடித் தொழிலில் உருவாக்கப்படும் கணினி படிக்கக் கூடிய பத்து இலக்க கணினிக் குறியீடு. பொருள் மேலுள்ள வில்லையின் மூலம் உற்பத்தி

யாளர்களையும், பொருள்களையும் அடையாளம் காண உதவுவது. 10 இலக்கு இலக்கப் பட்டையை அச்சிடுவதற்கான அச்சுப்பொறிகளையும், பேரங்காடியிலிருந்து வெளியேறும்போது குறியீடுகளை படிப்பதற்கான வருடி ஒளிச்சாதனங்களையும் பலதரப்பட்ட உற்பத்தியாளர்கள் உற்பத்தி செய்கிறார்கள். இதில் 5 இலக்கம் உற்பத்தியாளரை அடையாளம் காணவும், 5 இலக்கம் உற்பத்திக் குறியீட்டு எண்ணாகவும் செயல்படுகிறது.

**Universal Server : யுனிவர்சல் செர்வர் (உலகளாவிய வழங்கன்)** : 1. ஆரக்கிள் நிறுவனம் தயாரிக்கும் மென்பொருள். ஒரு ஹெச்டீடீபீ கோரிக்கையின் அடிப்படையில் உரை, ஒலி, ஒளிக்காட்சி போன்ற பலவிதமான தரவுகளை தனது தரவுதளத்திலிருந்து எடுத்துக் கொடுக்கும் மென்பொருள். 2. இன்ஃபார்மிக்ஸ் நிறுவனம் தயாரிக்கும் தரவுத் தள மென்பொருள். பயனாளருக்குத் தேவையான குறிப்பிட்ட தரவு இனங்களைக் கையாளவும், குறிப்பிட்ட வழிமுறையில் செயலாக்கவும் பல்வேறு மென்பொருள் கூறுகளுடன் செயல்படக்கூடியது.

**universal time coordinate : உலகளாவிய நேர மதிப்பு** : இணையத்தில் கணினிகளுக்கிடையேயான ஒத்திசைவு கருதிப் பயன்படுத்தப்படும் நேரம். பெரும்பாலும் கிரீன்விச் சராசரி நேரமாகவே இருக்கும்.

**UNIX : யூனிக்ஸ்: செயல்பாட்டு நிரல்; இயக்க அமைப்பு வகையில் ஒன்று** : ஏடீ&டீ பெல் ஆய்வுக்கூடங்களில் உருவாக்கப்பட்ட செயல்பாட்டு அமைப்பு. கணினிகளுக்கு என்று உருவாக்கப்பட்ட இது, பின்னர் நுண் கணினிகளில் ஏற்கப்பட்டது.

**UNIX shell account : யூனிக்ஸ் செயல்தளக் கணக்கு** : யூனிக்ஸ் முறைமைக்குக் கட்டளைவரி மூலமான அணுகலைத் தருகிறது. உரை வடிவிலானத் தரவுகளை மட்டுமே பெறமுடியும். வரைகலை வடிவிலான தரவுகளைப் பெறுவது சாத்தியமில்லை.

**UNIX shell scripts : யூனிக்ஸ் செயல் தளக் உரைநிரல்கள்** : வரிசையாக எழுதப்பட்டு கோப்புகளில் சேமிக்கப்பட்டு நிரல்களாக இயக்கவல்ல, யூனிக்ஸ் கட்டளைகள். எம்எஸ் டாஸில் தொகுதிக் கோப்பு (.bat) இத்தகு வசதியை நல்குகிறது.

**UNIX wizard** : யூனிக்ஸ் வழிகாட்டி : வல்லமைபெற்ற, உதவும் மனப்பாங்குள்ள யூனிக்ஸ் நிரலர். சில நிறுவனங்கள் இதையே ஒரு பணிப்பெயராகப் பயன்படுத்துகின்றன. comp.unix. wizards என்னும் செய்திக்குழு, பயனாளர்களின் பல்வேறு வினாக்களுக்கு விடையளிக்கிறது.

**unknown host** : தெரியாப் புரவன்; கண்டறியாப் புரவன் : கிளைக் கணினி, ஒரு குறிப்பிட்ட வழங்கன் கணினியில் இணைப்புக் கேட்டு கோரிக்கை சமர்ப்பிக்கும்போது, அத்தகைய வழங்கனைப் பிணையத்தில் கண்டறிய முடியவில்லையெனில் இத்தகைய பதிலுரை கிடைக்கும்.

**unknown recipients** : தெரியாத பெறுநர்; கண்டறியாப் பெறுநர் : ஒரு மின்னஞ்சலில் குறிப்பிட்டுள்ள பெறுநர் முகவரியைக் கண்டறிய முடியாதபோது அனுப்புநருக்குக் கிடைக்கும் தரவு.

**unlighted dot** : ஒளியூட்டாத புள்ளிக் குறி.

**unload** : இறக்கு; நீக்கு : ஒரு நிரல் தொடரை நினைவகத்திலிருந்து நீக்குவது. நாடா அல்லது வட்டினை அதன் இயக்கியிலிருந்து நீக்குவது.

**unmark** : அடையாளம் நீக்கல்: ஒரு சொற்பகுதியினை அதன் முக்கியத்துவத்திலிருந்து நீக்குதல், ஒரு பொருளை ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்குச் சேர்க்கப்பட்ட ஒன்றின் அடையாளத்தை நீக்குதல்.

**unmoderated** : நடுவரில்லாத; கண்காணிப்பாளரில்லாத : செய்திக் குழுக்களுக்கும், அஞ்சல் பட்டியல்களுக்கும் பெரும்பாலும் நடுவர் ஒருவர் இருப்பார். அவ்வாறு நடுவர் இல்லாத செய்திக்குழுக்களில் வழங்கனால் பெறப்படும் அஞ்சல் பட்டியல்களில் செய்திகள், கட்டுரைகள், சந்தாதாரர்களுக்குத் தாமாகவே அனுப்பி வைக்கப்படும்.

**unmount** : பெயர்த்தெடு; கழற்று; நீக்கு : ஒரு கணினியில் ஒரு வட்டினையோ நாடாவையோ பயன்பாட்டிலிருந்து நீக்கிவிடுதல். வன்பொருளாகக் கழற்றியெடுக்க வேண்டியதில்லை. மென்பொருள் கட்டளை மூலமாகவும் செய்ய முடியும். யூனிக்ஸ் முறைமையில் இச்சொல் அதிகம் பயன்படுகிறது.

**unpack** : பிரி; அவிழ் : இதற்கு முன்பு கட்டப்பட்ட தரவுகளின் சிறு அலகைத் தனித்தனியாகப் பிரிப்பது.

**unpopulated board** : பெருக்கப் படாத அட்டை : வாங்குபவரால் கொடுக்கப்படக்கூடிய மின் சுற்று அட்டை.

**unread** : படிக்கப்படாத : 1. ஒரு செய்திக்குழுவில் பயனாளர் ஒருவர் இதுவரை வாசித்திராத கட்டுரை. செய்தி வாசிப்புக் கிளையன் நிரல், பயனாளரால் படிக்கப்பட்ட, படிக்கப்படாத கட்டுரைகளுக்கிடையே வேறு பாடு கண்டு, அவர் இதுவரை படித்திராத கட்டுரைகளை மட்டுமே வழங்கனிலிருந்து பதி விறக்கம் செய்து தரும். 2. பய னாளருக்குக் கிடைக்கப்பெற்ற மின்னஞ்சல், ஆனால் மின்னஞ் சல் நிரல் மூலமாக இன்னும் திறந்து படிக்கப்படாதது.

**unrecoverable error** : திருத்த முடியாப் பிழை; மீட்க முடியாப் பிழை : ஒரு நிரலில் ஏற்படும் பிழை. சரிசெய்ய முடியாத நிலையில் இருத்தல். கணினிச் செயல்பாட்டில் ஏற்படும் பிழை நிலையையும் குறிக்கும். புற நிலைமீட்பு நுட்பத்தின் மூலமே சரி செய்ய முடிகிற அழிவு செய் பிழை.

**unsent message** : அனுப்பாச் செய்தி.

**unset** : தனியாக்கு : ஒரு துண்மி யின் அல்லது துண்மிகளின் தொகுதியின் மதிப்பை இருமை '0' ஆக மாற்றுதல்.

**unshielded cable** : உறையிடா வடம் : உலோக உறையிடப்படாத வடம். இதுபோன்ற வடங்களில் உள்ள கம்பியிணைகள் பெரும் பாலும் முறுக்கப்பட்டிருக்கும். அவ்வாறு முறுக்கப்படவில்லை யெனில் புறநிலை மின்காந்தப் புலங்களினால் இடையூறு ஏற் படும். இதன் காரணமாகவே, உறையிடா வடங்கள் குறைந்த தூரத் தரவு தொடர்புக்கே பயன் படுத்தப்படுகின்றன.

**unsigned** : அடையாளமற்ற.

**unsubscribe** : சந்தா நீக்கு : 1. ஒருவர் ஏற்கெனவே சந்தாதார ராக உள்ள ஒரு செய்திக் குழு வின் பெயரைப் பட்டி யலிலிருந்து (செய்திவாசிப்பு கிளையன் நிரல் மூலம்) நீக்கி விடுதல். 2. ஓர் அஞ்சல் பட்டிய லில் குறிப்பிட்ட மின்னஞ்சல் முகவரியை நீக்கிவிடல்.

**untar** : அன்டார் : யூனிக்ஸ் இயக்கமுறையில் இருக்கும் ஒரு பயன்கூறு. யூனிக்ஸின் டார் (tar) நிரல்மூலம் ஒன்று சேர்க்கப் பட்ட காப்பகக் கோப்பிலிருந்து தனித்தனிக் கோப்புகளாகப் பிரித்தெடுத்தல்.

**unzip** : அன்ஸிப் : gzip, pkzip மூலம் இறுக்கிச் சுருக்கப்பட்ட

காப்பகக் கோப்பினை விரித்துப் பெருக்கும் கட்டளை.

up : மேலே : இயங்கிக் கொண்டிருக்கின்ற கணினி அமைப்பின் நிலை.

up-and-running : மேலேற்றி ஓட்டுதல்; மேலேயும், ஓடுவதும் : சரியாக இயங்கும் ஒரு கணினியைக் குறிப்பிட இச் சொல் பயன்படுத்தப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட காலம் வேலை செய்யாமல் இருந்து இப்போது நன்றாக இயங்குகிறது என் பதைக் குறிப்பிடுகிறது.

up arrow : மேல் அம்புக்குறி.

update : இற்றைப்படுத்தல்; புதுப்பித்தல்; நிகழ்நிலைப் படுத்து; திருத்து; புதுநிலை : தரவுகளை மாற்றியோ அல்லது நீக்கியோ தரவுக் கோப்புகளை நடப்பில் உள்ளதாக ஆக்கல்.

updated driver : புதுப்பித்த இயக்கி.

updating and file maintenance : புதுப்பித்தலும் கோப்பு பரா மரித்தலும்.

upgrade : மேம்படுத்து : ஒரு கணினி அமைப்பு போன்றவற் றின் கணிப்புத் திறனை அதி கரிக்க அதை மாற்றி அமைப்பது.

upgrade processor : செயலி மேம்படுத்து.

upgrade, socket : பொருத்து வாய் மேம்படுத்து.

uplink : மேலிணை : தரை நிலையத்திலிருந்து செயற்கைக் கோளுக்கான தரவுத் தொடர்பு வழித்தடம்.

upload : மேலேற்று : ஒரு பயன் படுத்துபவரின் அமைப்பில் இருந்து தொலைவில் உள்ள கணினி அமைப்புக்குத் தரவு களை மாற்றுவது.

upper case : பெரிய எழுத்து : ஆங்கில எழுத்துகளில் இருக் கும் அமைப்பு முறை. a என்பது சிறிய எழுத்து (Lower Casee) A என்பது பெரிய எழுத்து (Upper Case).

upper memory area : நினைவக மேற்பகுதி : வழக்கமான நினை வகமான 640 கே.வுக்கு அருகில் உள்ள 384கே. முகவரியிடம் இதை மொத்த நினைவகத்தின் ஒரு பகுதியாகக் கொள் வதில்லை. ஏனென்றால், இப் பகுதி பயன்பாடுகள் தங்களது தகவலை சேமிக்கமுடியாது. இப்பகுதி காட்சித்திரை போன்ற கணினியின் வன்பொருளுக்காக ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளது. 386இன் மேம்பட்டமுறையில் விண்டோஸ் இப்பகுதியில் பயன்படுத்தப்படாத இடங் களை அணுக முடியும்.

**upper memory block (UMB) : நினைவக மேல்கட்டம்(யுஎம்பி) :** 80386 அல்லது சிறந்த அமைப்பின் கீழ் இருக்கும் 1 மீமிகு எட்டியலுக்கும் 640 கிலோ எட்டியலுக்கும் இடையில் உள்ள நினைவகக் கட்டம். சாதன இயக்கிகளும் டிஎஸ்ஆர்-களும் யுஎம்பி-யில் ஏற்றப்படலாம். ஏனென்றால், பயன்பாடுகளுக்குத் தேவையான வழக்கமான நினைவகத்தில் அதிக இடம் விட்டுவிட்டு அடிப்படை நினைவகத்தின் மதிப்புமிக்க இடத்தினை இவை எடுத்துக் கொள்ளாமல் இருக்க இது உதவும்.

**UPS : யுபீஎஸ் :** தடங்கலில்லா மின் வழங்கல் எனப் பொருள்படும் Uninterrupted Power Supply என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். கணினிக்கும் மின்வழங்கு முனைக்கும் இடையே பயன்படுத்தப்படும் சாதனம். இதனுள்ளே ஒரு மின் கலம் இருக்கும். திடீரென மின்சாரம் துண்டிக்கப்பட்டால், கணினிக்கு மின்கலத்திலிருந்து மின்சாரம் கிடைத்துவிடும். இதனால் கணினி தடங்கலின்றி தொடர்ந்து செயல்படும். மின் தடங்கலை உணர்ந்து உடனடியாக மின் கலத்துக்கு மாற்றித் தரும் சிறப்பு உணரி உள்ளே இருக்கும். 10 அல்லது 20 நிமிடங்களே மின்கலத்திலிருந்து கணினிக்கு மின்சாரம் கிடைக்கும். இந்த நேரத்துக்குள் பயனாளர் தன்னுடைய பணியை முறைப்படி முடித்துக் கொள்ள வேண்டும். முக்கிய தரவுகளை சேமித்துக் கொள்ள வேண்டும்.

**uptime : மேல்நேரம் :** நிற்காமல் ஒரு கருவி எவ்வளவு நேரம் வேலை செய்கிறது என்பதைக் குறிப்பிடும் கால அளவு.

**upward compatible : மேல் நோக்கிய ஏற்புடைமை :** இதற்கு முந்தைய மாதிரிகள் செய்யக் கூடிய அனைத்தையும் மேலும் கூடுதல் பணிகளைச் செய்யக் கூடிய கணினி அமைப்பு அல்லது வெளிப்புறச் சாதனம் என்பதைக் குறிப்பிடும் சொல் தொடர்.

**urban legend : நகர்ப்புறக் கதை :** இணையத்தில் நிகழ்நிலை உரையாடல்களில் சுற்றுக்கு வரும் வதந்திகள். உண்மை போல் தோற்றமளிக்கும் வதந்திகளை சிலர் உலவ விடுவதுண்டு. ஒரு சிறுவனுக்கு இதய அறுவைச் சிகிச்சைக்கு இரத்தம் தேவை என்பது போன்ற செய்திகள் உலவுவதுண்டு. ஆர்வத்தைத் தூண்டும்

சில செய்திகள் ஆபத்தைச் சுமந்து வருவதும் உண்டு. மின்னஞ்சலின் கருப் பொருளாக ஆர்வத்தைத் தூண்டும் செய்தி இருக்கும் அம்மடலைத் திறந்தால் உங்கள் கணினியில் நச்சுநிரல் குடியேறிவிடும்.

**URL : யுஆர்எல் :** ஒரு சீரான வள இடங்காட்டி எனப் பொருள்படும் Uniform Resource Locator என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். இணையத்திலிருக்கும் வளம் ஒன்றின் இருப்பிடம் காட்டும் முகவரி. இணைய வளங்களைக் கண்டறிய உலாவிகள் இந்த முகவரியையே பயன்படுத்திக் கொள்கின்றன. பெரும்பாலும் யுஆர்எல், அவ்வளத்தை அணுகப் பயன்படும் நெறிமுறையின் பெயரைத் தொடக்கத்தில் கொண்டிருக்கும். வளம் சேமிக்கப்பட்டுள்ள வழங்கனின் பெயர் அடுத்து இடம் பெறும். அடுத்து களப் பிரிவு இடம் பெறுவதுண்டு. (எ-டு). http://www.microsoft.com.

**.us : .யுஎஸ் :** ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர். பழைய ஆர்ப்பா நெட்டில் அமெரிக்க நாட்டுத் தளப் பெயர்கள் மட்டுமே இருந்திருக்க முடியும். எனவே, .com, .gov, .edu, .org, .mil, .net ஆகிய மேல் நிலைக் களப் பெயருக்கு அடுத்து .us என்று சேர்க்கப்படுவதில்லை. இப்போது இணையம் உலகெங்கும் பரவிவிட்டதால், அமெரிக்கத் தளங்கள் .gov.us, .mil.us என்பது போன்ற பின்னொட்டுகளைப் பெறும்.

**usability : பயன்படுத்தக்கூடிய தன்மை:** ஒரு கணினி அமைப்பைப் பயன்படுத்துபவர் அதன் தகுதி பற்றி மதிப்பீடு செய்தல்.

**usable : பயன்படத்தகு :** ஒரு மென்பொருள் அல்லது வன் பொருள் எப்பணிக்காக வடிவமைக்கப்பட்டதோ அப்பணியில் எளிதாகத் தகவமைத்துக் கொள்ளும் தன்மையை இவ்வாறு குறிப்பர். இப் பண்பு மிகுந்திருப்பின், அதனைக் கற்க எளிதாக இருக்கிறது, நெளிவு சுளிவாக உள்ளது. பிழைகளின்றி உள்ளது. தேவையற்ற குழப்பமான செயல்முறைகள் இல்லாத சிறந்த வடிவமைப்பைப் பெற்றுள்ளது என்று பொருள்.

**USB : யுஎஸ்பி :** உலகளாவிய நேரியல் பாட்டை என்று பொருள்படும் Universal Serial Bus என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர்.

வினாடிக்கு 1.5 மெகாபிட் தரவுகளை கணினிக்கும் புறச் சாதனங்களுக்குமிடையே பரிமாற்றவல்ல நேரியல் பாட்டை. குறுவட்டு (CD-ROM) இயக்ககங்கள், அச்சுப்பொறிகள், இணக்கிகள் (Modems), சுட்டிகள் (mice), விசைப்பலகைகள் போன்ற 127 புறச் சாதனங்களை ஒற்றைப் பொதுப்பயன் துறை வழியாக கணினியுடன் இணைக்க முடியும். டெய்சி சக்கர இணைப்பின்மூலம் இது சாத்தியம். உடனிணைப்புகளையும், பலவகை தரவுத் தாரைகளையும் ஏற்கும். இன்டெல் நிறுவனம் உருவாக்கியது. டெக் நிறுவன அக்செஸ் பாட்டையுடன் போட்டியிடக் கூடியது, குறிப்பாக குறைவேகப் பயன்பாடுகளில்.

**U.S. Department of Defence** : யு.எஸ். பாதுகாப்புத்துறை : அமெரிக்க அரசின் இராணுவப் பிரிவுதான் அக்கால ஆர்ப்பா நெட்டை (ARPANET) உருவாக்கியது. Advanced Research Project Agency என்பதன் சுருக்கமே ARPA என்பது. அன்றைய ஆர்ப்பா நெட்தான் இன்றைய இணையமாக வளர்ச்சி பெற்றுள்ளது.

**use** : பயன் : தரவுகளை அணுகுவதற்கு தரவுத் தளங்களைத் திறக்க டிபேஸ் III பிளஸ் மற்றும் ஃபாக்ஸ் பேஸ் போன்ற மொழிகளில் பயன்படுத்தப்படும் ஒரு கட்டளை. திறந்த தரவு, பயன்பாட்டில் உள்ளதாகக் கருதப்படும்.

**use error correction** : பிழை திருத்தும் வசதி.

**usenet** : யூஸ்நெட்: செய்திக் குழுக்களுக்கான பிணையம்.

**usenet user list** : யூஸ்நெட் பயனாளர் பட்டியல் : மாசாசூசட்ஸ் தொழில்நுட்ப நிறுவனம் (MIT) பராமரித்து வரும் மின்னஞ்சல் முகவரிகளின் பட்டியல். யூஸ்நெட்டில் அஞ்சலிடும் பயனாளர்களின் பெயரையும் மின்னஞ்சல் முகவரிகளையும் இப்பட்டியல் கொண்டிருக்கும்.

**user** : பயனாளர் : 1. சிக்கல் தீர்த்தல் அல்லது தரவு கையாளலுக்கு கணினியைப் பயன்படுத்துபவர் அல்லது சொந்தமாக வைத்திருப்பவர். 2. கணினி அமைப்பின் பணிகள் தேவைப்படுபவர்.

**user account** : பயனாளர் கணக்கு : பாதுகாப்பான பல் பயனாளர் கணினி அமைப்புகளில், அதை அணுகவும் அதன் வளங்களைப் பெறவும் ஏற்படுத்தப்பட்டுள்ள நடைமுறை.

இதுபோன்ற கணக்குகளை முறைமை நிர்வாகி உருவாக்கு கிறார். பயனாளர் கணக்கு என்பது, பயனாளர் பெயர், நுழைசொல், உரிமைகள், அனுமதிகள் ஆகியவற்றைக் கொண்டிருக்கும்.

**user agent :** பயனாளர் முகவர் : குறும் பரப்புப் பிணையங்களுக் காக ஐஎஸ்ஓ/ஓஎஸ்ஐ மாதிரியத் தில், கிளையன் கணினி, வழங் கனுடன் இணைத்துக்கொள்ள உதவும் ஒரு நிரல்.

**user and group accounts :** பய னாளர், குழுக் கணக்குகள்.

**user and group permissions :** பயனாளர், குழு அனுமதிகள்.

**user-defined characters :** பயனா ளர் வரையறுக்கும் எழுத்துகள்: பயனாளரால் வரை யறுக்கப்பட்டு சேமிக்கப்படும் எழுத்துகள்.

**user-defined data type :** பயனா ளர் வரையறுக்கும் தரவு இனம் : நிரலொன்றில் நிரலர் வரை யறுக்கும் தரவு இனம். நிரலாக்க மொழியில் இருக்கும் மூலத் தரவுகளிலிருந்து மாறு பட்டது. பயனாளர் உருவாக் கும் தரவினம் மூலத் தரவிகளின் சேர்க்கையாகவே இருக்கும். பெரும்பாலும் தரவுக் கட்டமைப்புகளை உருவாக்கப் பயன்படும். (எ-டு) : சி-மொழியில்

```
struct employee
{
chan name [15] ;
int age;
float wage;
};
struct employee e1, e2;
```

**user-defined exception :** பயனா ளர் வரையறு விதிவிலக்கு.

**user-defined function :** பயனாளர் வரையறுக்கும் பணி ; பயனாளர் வரையறைச் சார்பலன் : முன்வரையறை பணியைச் செய்வதற்கான நிரல் தொடரின் பகுதி அல்லது கூறு ஆக அமை யும் ஒரு தொகுதி அல்லது குழு நிரல்கள்.

**user defined function key :** பயனாளர் வரையறுக்கும் பணி விசை.

**user defined key :** பயனாளர் வரையறுக்கும் விசை : கணினி விசைப்பலகையில் உள்ள ஒரு விசை. அதன் பணி முன்பே வரையறுக்கப்படுகிறது அல்லது கணினி இயங்கும்போது நிரல் தொடர்மூலம் மாற்றப்படுவது. அந்த விசையை அழுத்தும் போது குறிப்பிட்ட பணி செய்யப்படும்.

**user files :** பயனாளர் கோப்புகள்.

**user-friendly :** பயனாளர் தோழமை யான : எளிதாகப் பயன்படுத்து வதற்கேற்ப வடிவமைக்கப் பட்ட மென்பொருள்/வன் பொருள் குறித்துப் பயன் படுத்தப்படும் சொல். சிக்க லான நடைமுறைகளைப் பயனாளர் நினைவு வைத்துக் கொள்ள வேண்டியதில்லை. பட்டறிவு இல்லாதவர்களும் பயன்படுத்த மிக எளிது.

**user-friendly software :** பயனாளர் - தோழமை மென் பொருள் : அளவான கணினி பின்னணி கொண்டவர்களும் கற்பதற்கும், பயன்படுத்துவதற் கும் எளிதாக உள்ள நிரல் தொடர் மற்றும் அமைப்பு களைக் குறிப்பிட இத் தொடர் பயன்படுத்தப்படுகிறது.

**user group :** பயனாளர் குழு : ஒரு கணினி அல்லது ஒரு உற்பத்தியாளரின் ஒருவகைக் கணினிகளை பயன்படுத்தி நிரல் தொடர்களை அமைப்பவர் கள் தாங்கள் பெற்ற அறிவைப் பங்கு கொள்ள அமைத்துக் கொண்ட குழு. தரவு பரிமாற் றம், நிரல் தொடர்கள் மற்றும் வணிகக் கருவிகளைப் பங்கிடல், கணினியின் வன்பொருள், மென்பொருள் மற்றும் செயல் பாடுகளைக் குறித்து ஆலோசனை யைத் தருதல்/பெறுதல் ஆகிய வற்றுக்காக உருவாக்கப்பட்டது. ஒருவர் வாங்கவிரும்பும் அல்லது பயன்படுத்த விரும்பும் ஒரு பொருள் பற்றி அதைப் பயன் படுத்தியவரிடம் பேசித் தெரிந்து கொள்ளலாம். செய்தி அறிக்கைகளும் பயனுள்ள தரவுகளைத் தருகின்றன.

**user interface :** பயனாளர் இடை முகம்; பயனாளர் இடைப்பாடு: பயனாளர் கணினியுடன் சேர்ந்து செயல்பட உதவும் பட்டியல்கள், திரை வடி வமைப்பு, விசைப்பலகை கட்டளைகள், கட்டளைமொழி மற்றும் உதவித் திரைகள் போன்றவை. சுட்டி மற்றும் தொடுதிரை போன்றவையும் இதில் சேரும்.

**user interface design :** பயனா ளர் இடைமுக வடிவமைப்பு : உள்ளீடு/வெளியீடு முறைகள் மற்றும் மனிதர் படிக்கக்கூடிய வற்றுக்கும் எந்திரம் படிக்கக் கூடிய படிவங்களுக்கும் இடை யிலானவை உள்ளிட்ட பயனா ளர்களுக்கும், கணினி அமைப்பு களுக்கும் இடையிலான இடைச் செயல்களும் வடிவமைப்பும்.

**user interface tier :** பயனாளர் இடைமுக அடுக்கு.

**user level security wiz :** பயனாளர் நிலை பாதுகாப்பு வழிகாட்டி.

**username :** பயனாளர் பெயர் : ஒரு கணினி அமைப்பில் அல்லது பிணையத்தில் பயனாளர் ஒருவரை அடையாளங் காணப் பயன்படுவது. புகுபதிகைச் செயல்பாட்டில் பயனாளர் முதலில் பயனாளர் பெயரை உள்ளீடு செய்ய வேண்டும். பிறகு சரியான நுழைவு சொல்லைத் தர வேண்டும். பயனாளர் ஒருவரின் மின்னஞ்சல் முகவரியில் @ அடையாளத்துக்கு முன்பாக இருக்கும் பெயரே பயனாளர் பெயராகவும் இருக்கும்.

**user profile :** பயனாளர் குறிப்பு; பயனாளர் விவரம் : ஒரு பாதுகாப்பு அமைப்பின் பகுதியாகப் பயன்படுத்தப்படும் தரவு. சான்றாக, பயனாளரின் வேலை, அறிவுப் பகுதிகளின் பணி, அணுகு சலுகைகள் மற்றும் மேற்பார்வையாளர் ஆகியவற்றைக் கூறலாம்.

**user programms :** பயனாளர் செயல்முறை.

**user's manual :** பயனாளரின் கையேடு : வன்பொருள் சாதனம், மென்பொருள் உருவாக்கம் அல்லது ஒரு அமைப்பு ஆகியவற்றை எவ்வாறு பயன்படுத்துவது என்பதனை விளக்கும் ஆவணம்.

**user state :** பயனாளர் நிலை : மோட்டோரோலா 680×0 நுண்செயலி செயல்படக்கூடிய மிகக் குறைந்த சலுகை நிலை. இந்த நிலையில்தான் பயன்பாட்டு நிரல்கள் செயல்படுகின்றன.

**user terminal :** பயனாளர் முனையம்.

**USnail :** யு'ஸ்னெயில் : 1. அமெரிக்க நாட்டு அஞ்சல் சேவைக்குத் தரப்படும் கிண்டலான பெயர். மின்னஞ்சலோடு ஒப்பிடுகையில் பழைய அஞ்சல் சேவை எவ்வளவு மெதுவானது என்பதைச் சுட்ட இவ்வாறு அழைக்கப்படுகிறது. 2. அமெரிக்க நாட்டு அஞ்சல் சேவையினால் வினியோகிக்கப்படும் மடல்.

**USRT :** யுஎஸ்ஆர்டீ : உலகளாவிய ஒத்திசைவு வாங்கி/அனுப்பி என்று பொருள்படும் Universal Synchronous Receiver Transmitter என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒத்திசைவுத் நேரியல் தரவு தொடர்புக்குத் தேவையான வாங்கி மற்றும் அனுப்பி இரண்டுக்குமான மின்சுற்றுகளையும் ஒருங்கே கொண்ட ஒற்றை ஒருங்கிணைவு மின் சுற்று.

**utility** : பயன்பாடு ; பயன்பாட்டு நிரல் தொடர் : ஒரு பயனாளர் பிற நிரல் தொடர்கள், நிரல் தொடர்மொழிகள், நிரல் தொடர் செயல்பாட்டு அமைப்புகள் மற்றும் கருவிகள் ஆகியவற்றை ஓட்ட, மேம்படுத்த, உருவாக்க அல்லது பகுத்தாய உதவும் நிரல் தொடர்.

**utility function** : பயன்பாட்டுப் பணி வட்டிலிருந்து நாடாவுக்குத் தரவுகளை நகலெடுத்தல் அல்லது கோப்புகளை வகைப்படுத்தல் அல்லது கலத்தல் போன்ற பணிகளைச் செய்யும் பயன்பாட்டு நிரல் தொடரின் பணி.

**utility programms** : பயன்பாட்டு நிரல் தொடர்கள் ; பயனீட்டுச் செயல்பாட்டு முறைகள் ; பயனீட்டுச் செயல் முறைகள் : ஒரு பட்டியல் ஊடகத்திலிருந்து வேறு ஒன்றுக்கு (வட்டிலிருந்து நாடா) தீரவுகளை மாற்றுதல், எழுத்து மாற்றல் போன்ற பொதுவாகத் தேவைப்படும் பணிகளை வழங்கும் கணினி நிரல் தொடர்கள். பெரிய கணினி அமைப்புகளை விற்பவர்கள் அவற்றுடன் பலதரப்பட்ட பயன்பாடுகள் மற்றும் பயனாளர்களுக்குப் பயன்படும் பயன்பாடுகளையும் சேர்த்தே விற்பார்கள். நினைவகத் திணிப்பு நிரல் தொடர்கள், நிரல் தொடர் பிழை நீக்கும் உதவிகள், கோப்பு கையாளும் நிரல் தொடர்கள், கணித வாலாயங்கள், வகைப்படுத்தும் நிரல் தொடர்கள், சொல் தொகுதி தொகுப்பிகள் ஆகியவற்றை சான்றாகக் கூறலாம்.

**utility routine** : பயன்பாட்டு வாலாயம்: வகைப்படுத்தல், கலத்தல் போன்ற கணினி அமைப்பின் இயக்கத்திற்கு அடிக்கடி தேவைப்படுகின்ற செயல்முறைகளைச் செய்யப் பயன்படும் மென்பொருள்.

**utility software** : பயன்கூறு மென்பொருள்.

**utilization ratio** : பயன்பாட்டு விகிதம்.

**utilization statistics** : பயன்கூறு புள்ளிவிவரம்; பயன்பாட்டுப் புள்ளிவிவரங்கள் : காலத்தை ஒட்டிய கணினியின் செயல்பாடு பற்றிய அளவீடுகள்.

**UTP** : யுடீபீ : உறையிடா முறுக்கிணை என்று பொருள்படும் Unshielded Twisted Pair என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒன்று அல்லது மேற்பட்ட முறுக்கிணைக் கம்பிகளை கொண்ட, கூடுதலான உறைகள் எதுவும் இடப்படாத ஒரு வடம். உறையிட்ட



யுடீபி

முறுக்கிணை வடத்தைவிட நெகிழ்வானது. குறைந்த இடப் பரப்பையே எடுத்துக் கொள்ளும். ஆனால் குறைவான அலைக்கற்றை அகலம் கொண்டது.

**UUCP : யுயுசிபீ :** யூனிக்ஸி லிருந்து யூனிக்ஸுக்கு நக லெடுப்பு என்று பொருள்படும் UNIX-to-UNIX Copy என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். நேரியல் தரவுத் தொடர்பினை, குறிப்பாக பொது இணைப்பகத் தொலை பேசிப் பிணையத்தைப் பயன் படுத்தி யூனிக்ஸ் கணினிகளுக் கிடையே தரவுப் பரிமாற்றம் செய்யப் பயன்படும் மென் பொருள் நிரல்களின் தொகுப்பு.

**uudecode[1] : யுயுடீக்கோடு[1] :** யுயு குறியாக்கம் செய்யப்பட்ட ஒரு கோப்பினை மூல இரும வடிவ மைப்பாக மாற்றும் யூனிக்ஸ் நிரலின் பெயர். இந்த நிரல் (யுயுஎன்கோடு நிரலோடு சேர்ந்து), படிமங்கள், இயக்கு நிலைக் குறிமுறை போன்ற இரும வடிவிலான தரவுகளை மின்னஞ்சல் செய்திக்குழு வழி யாக அனுப்பிவைக்க உதவுகிறது.

**uudecode[2] : யுயுகுறிவிலக்கம்[2] :** யுயுகுறியாக்கம் செய்யப்பட்ட கோப்பு ஒன்றினை யுயுடீக் கோடு நிரல் மூலமாக மீண்டும் மூல இருமக் கோப்பாகவே மாற்றும் செயல்முறை.

**.uue : .uue :** யுயுடீக்கோடு நிரல் மூலமாக, ஆஸ்கி வடிவமைப்பி லிருந்து குறிவிலக்கம் செய்து மீண்டும் இரும வடிவமைப் பாகவே மாற்றியமைக்கப்படும் கோப்பின் வகைப்பெயர்.

**uuencode[1] : யுயுஎன்கோடு[1] :** ஒரு பைட்டிலுள்ள ஒவ்வொரு பிட்டும் முக்கியத்துவம் உள்ள ஒரு இருமக் கோப்பினை அச்சிடத்தக்க 7துண்மி (பிட்) ஆஸ்கி எழுத்துகளாக, தரவு இழப்பு ஏற்படாவண்ணம் மாற்றியமைக்கும் ஒரு யூனிக்ஸ் நிரல். இந்நிரல் யுயுடீக்கோடு நிரலுடன் சேர்ந்து, படிமங்கள்,

இயக்குநிலைக் குறிமுறை போன்ற இரும வடிவிலான தரவுகளை மின்னஞ்சல், செய்திக்குழு வழியாக அனுப்பி வைக்க உதவுகிறது. இவ்வாறு குறியாக்கம் செய்யப்பட்ட கோப்பின் அளவு மூலக் கோப்பின் அளவில் மூன்றில் ஒரு பங்கே இருக்கும்.

**uuencode²** : யுயுகுறியாக்கம்² : யுயுகுறியாக்க நிரல்மூலம், ஓர் இருமக் கோப்பினை அச்சிடுவதற்கேற்ற 7 துண்மி(பிட்) ஆஸ்கி உரைக்கோப்பாக மாற்றியமைக்கும் செயல்முறை.

**uupc** : யுயுபீசி : ஐபிஎம் பீசிக்கள் மற்றும் டாஸில் செயல்படும் பீசி ஒத்தியல்புக் கணினிகள், விண்டோஸ் அல்லது ஓஎஸ்/2 முறைமைகளுக்கான பதிப்பு. தொலைதூரப் பிணையக் கணினிகளில் நுழைய, கோப்புகளைப் பதிய, நிரல்களை இயக்கப் பயன்படும் நிரல்களின் தொகுப்பு.

**.uy** : .யுஒய் : ஓர் இணைய தள முகவரி உருகுவே நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**.uz** : .யுஇஸட் : ஓர் இணைய தள முகவரி உஸ்பெகிஸ்தான் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

# V

**V : வோல்ட் :** *மின்னலகுக் கூறு.*

**V20, V30 : வி20, வி30 :** *என்இசி நிறுவனம் உருவாக்கிய நுண் செயலிகள். இன்டெல் 8088, 8086 ஆகியவற்றைவிட சற்றே மேம்பட்டவை. அதே நிரல் தொகுதிகளை, ஆனால் வேறுபட்ட நுண் நிரல்களைக் (microcode) கொண்டவை.*

**V.27ter : வி.27டெர் :** *2,400 மற்றும் 4,800 பிட்/வினாடி (bps) வேகத்தில் படிமங்களைப் பரிமாற்றம் செய்யக்கூடிய குழு-3 தொலைநகல் முறையில் பயன்படுத்தப்படும் பண்பேற்றத் திட்டமுறை (modulation scheme)க்கான சிசிஐடீடீ (இப்போது ஐடீயு-டீ என்று அழைக்கப்படுகிறது) அமைப்பு பரிந்துரைத்த வரன்முறைகள்.*

**V.29 : வி.29 :** *9,600 மற்றும் 7,200 பிட்/வினாடி (bps) வேகத்தில் தொலைபேசி இணைப்பு வழியாக படிமங்களை அனுப்புகின்ற குழு-3 தொலைநகல் முறையில் பயன்படுத்தப்படும் பண்பேற்ற திட்ட முறைக்கான, சிசிஐடீடீ (இப்போது ஐடீயு-டீ) பரிந்துரைத்த வரன்முறைகள்.*

**V.32turbo : வி.32டர்போ :** *19,200 பிட்/வினாடி (bps) வேக இணக்கி (மோடம்)களுக்காக ஏடீ&டீ நிறுவனம் உருவாக்கிய நெறிமுறை. சிசிஐடீடீ வி.32 தரம் நிர்ணயித்துள்ள வேகத்துடன் ஒத்தியல்பானது. ஆனால் இந்த நெறிமுறை ஏடீ&டீ-யின் தனியுரிமையுடையதாகும். சிசிஐடீடீ இதனை ஏற்றுக்கொள்ளவில்லை. சிசிஐடீடீ-யின் வி-வரிசையில் V.32 டர்போவுக்குப் பதிலாக வி.34 இடம் பெற்றுள்ளது.*

**V.54 : வி.54 :** *இணக்கி (மோடம்)களில் மடக்கு சோதனைச் சாதனங்களின் (Loop test devices) செயல்பாடுகளை வரன்முறைப்படுத்தும், சிசிஐடீடீ (இப்போது ஐடீயு-டீ) அமைப்பின் பரிந்துரை.*

**V.56bis : வி.56பிஸ் :** *சிசிஐடீடீ (இப்போது ஐடீயு-டீ) பரிந்துரைத்த பிணையப் பரப்புகை மாதிரியம். இரண்டு கம்பிகளுள்ள குரல்வழி இணைப்புகளில் இணக்கிகளின் செயல் திறனை மதிப்பாய்வு செய்வதற்கானது.*

**v.120 : வி.120 :** *ஐஎஸ்டிஎன் இணைப்புகளின் வழியாக*

நடைபெறும் நேரியல் தகவல் தொடர்புகளுக்காக, சர்வதேச தொலைத் தகவல் தொடர்பு சங்கம் (ITU) உருவாக்கிய தர வரையறைகள். எளிய அடைவு அணுகல் நெறிமுறை (Light weight Directory Access Protocol - LDAP) ஒத்த ஒரு நெறிமுறையைப் பயன்படுத்தி தகவல், பொதியுறையிடப்பட்டு அனுப்பப்படுகிறது. ஒரு தகவல் தொடர்புத் தடத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட இணைப்புகளை ஒன்று சேர்த்து அனுப்பி வைக்க முடியும்.

**.va** : .விஏ : ஓர் இணைய தள முகவரி வாட்டிகன் நகரைச் சார்ந்தது என்பதைக் குறிக்கும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**VAB : விஏபி : குரல் மறுமொழி வங்கி** : 'குரல் மறுமொழி வங்கி' என்று பொருள்படும் "Voice Answer Bank" என்பதன் தலைப்பெழுத்துசொல். இது ஒரு தொலைபேசி பிணையத்துடன் ஒரு கணினிப் பொறியமைவை பிணைக்கின்ற ஓர் ஒலி மறுமொழிச் சாதனம். இது தொலைபேசி நாடா முனையங்களிலிருந்துவரும் வினாக்களுக்குக் குரல்மூலம் விடையளிக்கிறது.

**vaccine** : தடுப்பூசி; தடுப்பு; நோய்த் தடுப்பி : ஒரு கணினி அமைப்பு அல்லது தரவு வட்டுகளில் உள்ள நச்சு நிரல் (வைரஸ்)களை நீக்கப் பயன்படும் மென்பொருள்.

**vaccum chamber** : வெற்றிட அறை.

**vaccum tube** : வெற்றிடக் குழாய்; வெற்றிடக் குழல் : மின்னோட்டம் பாய்வதைக் கட்டுப்படுத்துவதற்கான சாதனம். மின்



வெற்றிடக் குழல்

பெருக்கி கண்டுபிடிக்கப்படுவதற்குமுன்பு கணினிகளில் காணப்பட்ட தலையாய மின்னியல் சாதனம். வெற்றிடக் குழாயைப் பயன்படுத்தும் கணினிகள், முதல் தலைமுறைக் கணினிகள் எனப்படும்.

**VAL** : விஏஎல் : எந்திரன் இயக்கு மொழி : "Vicarm Arm Language" என்பதன் தலைப்பெழுத்துச் சுருக்கம். இது, எந்திரமனிதர்களைக் கட்டுப்படுத்துவதற்கான ஒரு கணினி மொழி.

**validation** : செல்லுபடியாக்கம்; செல்லுபடி சோதனை; ஏற்புடைத்தாக்கல் : உருவமைவு (எண் தோரணிகள், எழுத்திடைவெளி, எழுத்துகள்), வீச்செல்லைகள் (மேல் கீழ் மதிப்பளவு வரம்புகள்), சரிபார்க்கும் எண், ஒரு தலையாய கோப்பிலுள்ள சரிநிகர்ப் பதிவுகள் போன்ற சில வரிகளில் துல்லியத்திற்கான தரவு ஆய்வு.

**validation rule** : செல்லுபடி விதி; ஏற்புத் தகுதி விதி.

**validation suite** : செல்லுபடிச் சோதனைத் தொகுதி : ஒரு நிரலாக்க மொழியின் வரையறுக்கப்பட்ட வரன்முறைகள் கடைப்பிடிக்கப்பட்டுள்ளனவா என்பதை அளவிடுவதற்கான சோதனைகள் அடங்கிய ஒரு தொகுதி.

**validation text** : செல்லுபடி உரை.

**validity check** : ஏற்புத்தகுதிச் சரிபார்ப்பு; செல்லுபடிச் சரிபார்ப்பு : பெறப்படுகின்ற தரவு முன் வரையறுக்கப்பட்டுள்ளபடி முழுமையானதாகவும் முரண்பாடின்றியும் உள்ளதா என்று தீர்மானிக்க மேற்கொள்ளப்படும் பகுப்பாய்வுச் செயல்பாடு.

**valid octal numbers** : முறைப்படியான எட்டிலக்க எண்கள்

**value** : மதிப்பளவு; மதிப்பு; மதிப்பீடு: ஒரு கணினியின் நினைவகத்தில் சேமித்து வைக்கப்பட்டுள்ள நிலை எண் அல்லது எண்ணளவு.

**value added network (VAN)** : மதிப்பேற்றுப் பிணையம்; மதிப்புக் கூட்டிய பிணையம் : ஒரு பொது ஊர்தியிலிருந்து செய்தித்தொடர்புக் கம்பிகளைக் குத்தகைக்கு எடுத்துக் கொண்டு, அதில் மேம்பாடுகளைச் சேர்த்து அவற்றை மேம்படுத்துகிற பொறியமைவு. இது பிழை கண்டுபிடித்தல், விரைவான மறுமொழி நேரம் போன்றவற்றை எடுத்துக்கொண்டு, பின்னர் அவற்றை மற்றொரு தரப்புக்குக் குத்தகைக்கு விடுகிறது.

**value-added reseller** : மதிப்பேற்று மறுவிற்பனையாளர் : வன்பொருள், மென்பொருள்களை மொத்தமாக வாங்கி, பராமரிப்பு போன்ற பயனாளர்களுக்கான சேவைகளையும்

இணைத்து பொதுமக்களுக்கு மறுவிற்பனை செய்யும் ஒரு குழுமம்.

**value added service :** மதிப்புக் கூட்டிய சேவை : தகவல் தொடர்புத் துறையில் பயன் படுத்தப்படும் ஒரு சொல். சாதாரணமாக அமைப்பில் அதற்கு முன்பு வழங்கப் பட்டதைவிட கூடுதலாக தகவல் தொடர்பு இணைப்பில் வழங்கப்படும் சேவைகள் அல்லது ஆரம்பங்களுக்கு இப் பெயர் வழங்கப்படுகிறது. பொது அமைப்பும் இதை வழங்கலாம் அல்லது பொது அமைப்பின் துணை ஒப்பந்தக் காரராக வேறொரு நிறுவனமும் இதை வழங்கலாம்.

**value, null :** வெற்று மதிப்பு; இல் மதிப்பு.

**value list :** மதிப்புப் பட்டியல் : தரவுத் தளம் போன்ற பயன் பாட்டுத் தொகுப்புகளில் ஒரு குறிப்பிட்ட தரவுவைக் கண்டறி வதற்கான தேடு சரமாகவோ (search string), அல்லது வடி கட்டி எடுக்கப்படும் வினவலுக் கான மதிப்புகளாகவோ பயன் படுத்தப்படும் மதிப்புகளின் பட்டியல்.

**value type :** மதிப்பு இனம். சி மொழியில் int, char, float போன்ற மூல தரவு இனங் களும், struct, enum போன்ற தரவு இனங்களும் "மதிப்பு இனம்" எனப்படுகின்றன. சி# மொழியில் இத்தகு "மதிப்பு இனம்" தவிர class, interface, delegate ஆகியவை "குறிப்பு இனம்" என வகைப்படுத்தப்படு கின்றன.

**.vancouver.ca :** .வான்கூவர்.சிஏ : ஓர் இணைய தள முகவரி கனடா நாட்டு வான்கூவர் நகரைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**vapourphase refrigiration :** ஆவி வழி குளிரூட்டு முறை.

**vapourware :** ஆவிப்பொருள் : ஒரு உற்பத்தியாளர் அல்லது உருவாக்குபவரிடமிருந்து நீண்ட காலம் எடுத்துக் கொள்ளும் வன்பொருள் அல்லது மென் பொருளைக் குறிப்பிடும் சொல். அது இருக்கிறது என்றே எவரும் நம்பமாட்டார்கள் என்பதால் அதை ஆவி என்று கூறப்படுகிறது.

**variable :** மாறியல்; மாறி; மதிப் புரு; மாறுவகை : ஒரு சேமிப்பக அமைவிடத்திற்குக் குறித் தளிக்கப்பட்டுள்ள ஒரு குறி யீட்டுப் பெயர். இது நிலை எண் என்பதற்கு எதிரானது.

இதனை தரவு வகை என்றும் கூறுவர்.

**variable address :** மாறு முகவரி.

**variable block :** மாறு தொகுதி.

**variable expression :** மாறு நிலைத் தொடர் : குறைந்த பட்சம் ஒரு மாறிலியை (variable) அடிப்படையாகக் கொண்டுள்ள கணக்கீட்டுத் தொடர். எனவே நிரல் இயங்கும்போது கட்டாய மாக மதிப்பு கணக்கிட வேண் டிய தொடராக இது இருக்கும்.

**variable field :** மாறுபுலம்.

**variable length :** மாறு நீளம்.

**variable length field :** மாறு நீளப் புலம் : பல்வேறு நீளங்களுடைய மதிப்புகளைக் கொண்டிருக்கும் புலம்.

**variable-length record :** மாறுநீள ஏடு : மாறுநீளப் புலங்களைக் கொண்டுள்ள ஏடு. அல்லது மாறுபட்ட எண்ணிக்கையிலான புலங்களைக் கொண்டுள்ள ஏடு. குறிப்பிட்ட சூழ்நிலைகளில் சில புலங்கள் இருக்கலாம் அல்லது இல்லாமலும் போக லாம். இதன் காரணமாய் தரவுத் தளத்தில் ஒவ்வொரு ஏடும் வெவ்வேறு நீளத்தில் இருக்க வாய்ப்புண்டு.

**variable name :** மாறிலியின் பெயர் : ஒரு செயல்முறையில் ஒரு தரவு மதிப்பளவை அடை யாளங்காட்டும் எழுத்தெண் சொல். இது, மதிப்பளவுகளின் தொகுதியில் எந்த மதிப்பையும் எடுத்துக் கொள்ளலாம்.

**variable register :** மாறிலிப் பதி வகம் : ஒரு மாறிலியின் மதிப்பை இருத்தி வைக்கும் பதிவகம்.

**variable resistor :** மாறு மின்தடை.

**variables :** மாறிலிகள்.

**variable word length :** மாறியல் சொல் நீளம் : இது ஓர் எந்திரச் சொல் அல்லது இயக்கப்படு எண் தொடர்பானது. இதில், துணுக்குகள், எட்டியல்கள், எழுத்துகள் ஆகியவற்றில் மாறி யல் எண்ணிக்கை அடங்கியிருக் கும். இது நிலைச் சொல் நீட்சி என்பதிலிருந்து வேறுபட்டது.

**variation :** மாறுபாடு

**varname (Variable name) :** மாறிலிப் பெயர் : variable name என்பதன் குறும்பெயர். ஒரு மாறிலியின் பெயரைக் குறிப் பிடும் சுருக்கம்.

**VAX :** வாக்ஸ் : பெரிய நுண் கணினிப் பொறியமைவுகளுக் கான பெயர். இதனை எண் மானச் சாதனக் கழகம் தயாரிக்கிறது.

**.va.us :** .விஏ.யுஎஸ் : ஓர் இணைய தள முகவரி

அமெரிக்க நாட்டின் வர்ஜீனியா மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**VBX : விபிஎக்ஸ் :** விசுவல் பேசிக் வழக்காற்று இயக்கு விசை என்பதன் சுருக்கம். ஒரு விசுவல்பேசிக் பயன்பாட்டு மென்பொருளில் ஒரு சிறு பணியை முடிப்பதற்காக தனியே உருவாக்கப்பட்ட ஒரு மென்பொருள் கூறு. விபிஎக்ஸ் என்பது ஒரு தனியான இயங்கு கோப்பாகும். இது பெரும்பாலும் விசுவல்பேசிக் மொழியில் எழுதப்பட்டிருக்கும். பயன்பாடு இயங்கிக் கொண்டிருக்கும்போது இயங்கு நிலையில் பயன்பாட்டுடன் இணைக்கப்படும். விசுவல் பேசிக்கில் எழுதப்படாத பயன்பாடுகளில் கூட விபிஎக்ஸ் இயக்குவிசைகளைப் பயன்படுத்திக் கொள்ள முடியும். விபிஎக்ஸ் தொழில்நுட்பத்தை மைக்ரோ சாஃப்ட் உருவாக்கிய போதிலும் பெரும்பாலான விபிஎக்ஸ் இயக்கு விசைகளை மூன்றாம் நிறுவனங்கள் தயாரித்து வெளியிட்டுள்ளன. விபிஎக்ஸ் இன்னும் பயன்பாட்டில் இருந்தபோதிலும், தற்போது அதற்குப் பதிலாக ஓசிஎக்ஸ், ஆக்டிவ் எக்ஸ் போன்ற தொழில்நுட்பங்கள் வந்துவிட்டன.

**.vc : .விசி :** ஓர் இணைய தள முகவரி மேற்கிந்தியத் தீவுகளான செயின்ட் வின்சென்ட், கிரினே டைன்ஸ், விண்டுவார்டு ஆகிய பகுதிகளைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**VCACHE : விகேஷ் :** விண்டோஸ் 95 விஃபேட் (VFAT) இயக்கியுடன் பயன்படுத்தப்படும் வட்டு இடைமாற்று மென்பொருள். 32-பிட் குறிமுறை கொண்டது. பாதுகாக்கப் பட்ட பாங்கில் செயல்படக்கூடியது. ரேம் நினைவகத்தில், இடைமாற்றுப் பணிக்காகப் பயனாளர் தலையிட்டு நினைவக ஒதுக்கீடு செய்ய வேண்டியதில்லை. விகேஷ், தானாகவே இடம் ஒதுக்கீடு செய்து கொடுக்கும்.

**VCOMM : விகாம் :** விண்டோஸ் 95 இயக்க முறைமையில் இயங்கும் தகவல் தொடர்புக்கான சாதன இயக்கி (device driver). இது, ஒருபுறம் விண்டோஸ் அடிப்படையிலான பயன்பாடுகளுக்கும் இயக்கிகளுக்குமான இடைமுகத்தையும், மறுபுறம் துறை இயக்கிகள், இணக்கிகளுக்கான இடைமுகத்தையும் வழங்குகின்றது.

**VCR : விசிஆர் : Video Cassettee** Recorder என்பதன் குறும்பெயர். ஒளிக்காட்சி நாடாவில் பதிவு செய்து, திரும்ப இயக்கும் எந்திரம். விசிஆர்கள், அடிப்படையில் அனலாக் பதிவு எந்திரமாக இருந்தாலும் ஏற்பிகளின் மூலம் கணினிக்கு உதவ எண் தரவுகளை அதில் பதிவு செய்ய முடியும்.

**VDE : விடிஈ :** `Video Display Editor' என்பதன் குறும்பெயர். எரிக் மேயர் எழுதிய வேர்டு ஸ்டார், வேர்டு பர்ஃபெக்ட் ஏற்பு சேர் பொருள் சொல் செயலகம்.

**VDI : விடிஐ :** `Virtual Device Interface என்பதன் குறும் பெயர்.சாதன இயக்கிகளை உருவாக்கும் அன்சி (ANSI) தர நிருணய படிவம்.

**VDL : விடிஎல் (வியன்னா வரையறை மொழி) :** வியன்னா வரையறை மொழி எனப் பொருள் படும் "Vienna Definition Language" என்பதன் தலைப்பெழுத்துச் சொல். இது சிலசமயம் செயல் முறைப்படுத்தும் மொழிகளின் சொற்றொடரியலை வரையறுக்கப் பயன்படுகிறது.

**VDT : வி.டி.டீ ; ஒளித் தோற்றக் காட்சி முனையம் :** 'ஒளித் தோற்றக் காட்சி முனையம்' எனப் பொருள்படும் "Video Display Terminal" என்பதன் தலைப்பெழுத்துச் சுருக்கம். இது ஒரு காட்சித் திரையும், ஓர் உட்பாட்டு விசைப்பலகையும் கொண்டுள்ள ஓர் உட்பாட்டு/வெளிப்பாட்டுச் சாதனம். CRT முனையம் என்பதும் இதுவும் ஒன்றே.

**VDU : விடியூ (காட்சி அலகு) :** 'காட்சி அலகு' எனப் பொருள் படும் 'Virsual Display Unit' என்பதன் தலைப்பெழுத்துச் சுருக்கம். இது, சிலவகைத் திரைகளில் தரவுகளைக் காட்டும் ஒருபுறநிலைச் சாதனம்.

**vector : ஏவரை ; நெறியம் ; ஒரு அளவுச் சரம் :** 1. ஒரே பத்தி அல்லது வரிசை போன்ற ஒரே கோட்டில் வெளிப்படுத்தப் படுகிற எண்கள் அனைத்தின் பட்டியல். 2. வைப்பு நிலையறுதியின்றி, 'அளவறுதியும் திசையறுதியும்' உடைய அளவுரு. 3. கணினியியலில், தனியொரு குறியீட்டின் மூலம் எந்த இனத்தின் அமைவிடத்தையும் அனுமதிக்கிற ஒரு தரவு கட்டமைவு. 4. வரைகலைத் தரவுகளைக் கோடுகளாக வரைந்து காட்டக்கூடிய எதிர்மின் கதிர்க் குழாய். 5. வரைவானில், இரு புள்ளிகளை இணைக்கும் ஒரு கோட்டின் கூறு.

**vector display : நெறியக் காட்சி; ஏவரைக் காட்சி :** திரையில்

உருவங்களை வரைவதற்காக எலெக்ட்ரான் கற்றையைக் குறிப்பின்றி நகர்த்துகிற எதிர் மின் கதிர்க்குழாய்.

**vector font** : நெறிய அச்செழுத்து : கோடுகளால் இணைக்கப்பட்ட புள்ளிகளின் வரிசையினால் உருவாக்கப் படும் அச்செழுத்து. இதைப் பல்வேறு அளவுகளில் கூட்டி, குறைக்கலாம். `plotter fonts' என்றும் அழைக்கப்படும்.

**vector graphics** : நெறிய வரை கலை : துண்மி விவரணைப் புள்ளிகளாக இல்லாமல் சமன் பாடு வரிசைகளாக இவை வரையப்படும். துண்மி விவரணைகள்போல் அல்லாது தர இழப்பு இல்லாமல் அவற்றைப் பெரிதாக்கலாம்.

**vector pair** : நெறிய இணை ; ஏவரை இணை : ஓர் ஏவரை யின் எதிர்முனைகளாக அமைந் துள்ள தரவுப் புள்ளிகள்.

**vector processing** : சரச் செயலகம்.

**vector processor** : நெறியச் செயலகம் : ஒரே நேரத்தில் நெறியங்களின் (ஒரு பருமாண வரிசைகள்) மீது பல கணக்கீடு களைச் செய்கின்ற நிரல்களுடன் உருவாக்கப்பட்ட கணினி.

**vectra** : வெக்ட்ரா : எச்.பி. நிறு வனத்தின் பீசி. வரிசை. தாங்கு வனவாகவும், நம்பகத் தன்மை யுடையனவாகவும் வெக்டர் இருப்பதைக் காணலாம்.

**vendee** : வாங்குநர்: வன் பொருள் அல்லது மென்பொருள் பொறியமைவினை வாங்குகிற ஆள் அல்லது வணிக நிறுவனம்.

**vendor** : விற்குநர் : 1. கணினிப் புறநிலைச் சாதனங்கள், நேரப் பகிர்வுச் சேவை, கணினிச் சேவைகள் ஆகியவற்றை விற் பனை செய்கிற நிறுமம் அல்லது வணிக நிறுவனம். 2. ஒரு வாங்குநர் பொருள்களை வாங்குவதற்கான ஒரு வழங்குநர்.

**vendor code** : விற்குநர் குறியீட் டெண்; வணிகர் குறியீட்டெண்.

**venn diagram** : வென் வரை படம் : கணங்களின் (sets) மீதான செயல்பாடுகளின் விடையைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் ஒருவகை வரைபடம். ஒரு செவ்வகம் முழுதளாவிய கணத்தைக் குறிக்கும். அதனுள் இருக்கும் வட்டங்கள், பொருள் களின் கணங்களைக் குறிக் கின்றன. இரண்டு கணங்களுக் கிடையேயான உறவுமுறையை இரு வட்டங்களின் இடநிலை யைக் கொண்டு அறியலாம். இங்கிலாந்து நாட்டு கேம்பிரிட்ஜ்

பல்கலைக் கழக தருக்கவியல் அறிஞர் திரு. ஜான்வென் (1834-1923) அவர்களின் பெயரில் வழங்கப்படுகிறது.

ventura publisher : வெஞ்சுரா பதிப்பாளர்: பீசி. மற்றும் மெக்கின்டோஷ்களுக்கான டி.டீபி நிரல் தொடர். ஜெராக்ஸ் நிறுவனமான வெஞ்சுரா மென்பொருள் நிறுவனம் உருவாக்கியது. பெரிய ஆவணங்களுக்கு முழுஅளவு பக்க அமைப்பு தருகிறது. மற்ற வரைகலை சொல் செயலாக்க நிரல் தொடர்களில் உருவாக்கப்பட்ட தரவுகளை ஏற்பது டாஸ் பதிப்பில் ஜெம் (GEM) இடைமுகத்தில் வெஞ்சுரா வருகிறது.

verbose : நீள்விளக்கம்; நீள் செய்தி : மிகச் சுருக்கமான குறிமுறையில் தெரிவிப்பதற்குப் பதிலாக மிக நீண்ட, ஆங்கில உரைநடையை யாத்த செய்திகளைத் திரையிடல்.

verification : சரிபார்த்தல்.

verifier : சரிபார்ப்புச் சாதனம்; சரிபார்ப்பி : விரற்கட்டைத் துளையிடுவதில் ஏற்படும் தவறுகளைக் கண்டுபிடிக்கப் பயன்படும் சாதனம்.

verifier, automatic : தானியங்குச் சரிபார்ப்பி.

verifier, card : அட்டைச் சரிபார்ப்பி.

verifier, key : விசைச் சரிபார்ப்பி.

verifier, paper tap : தாள்நாடா சரி பார்ப்பி.

verify : சரிபார் : 1. ஒரு தரவு செய்முறைபடுத்தும் செயற்பாடு துல்லியமாக நிறைவேற்றப்பட்டிருக்கிறதா என்று கண்டுபிடித்தல். 2. தரவுவின் நேர்மைத் தரவினைச் சரிபார்த்தல்.

VERONICA : வெரோனிக்கா : மிகளிதில் தேடிக் காணக்கூடிய, கணினி ஆவணக் காப்பகங்களின் வரிசைமுறைப் பட்டியல் என்று பொருள்படும் Very Easy Rodent Oriented Netwide Index To Computerized Archives என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். நெவேடா பல்கலைக் கழகத்தில் உருவாக்கப்பட்ட இணைய சேவை. திறவுச்சொற்கள் அடிப்படையில் கோஃபர் காப்பகங்களைத் தேடிக் கண்டறியும். பயனாளர்கள் தேடலை விரிவாக்கவோ, குறுக்கவோ And, Or, போன்ற தருக்கச் சொற்களைப் பயன்படுத்திக்கொள்ள முடியும். தேடிய தரவு கிடைக்கப்பெறின், ஒரு புதிய கோஃபர் பட்டியலை உருவாக்கித் தரும்.

**version** : பதிப்பு : ஒரு குறிப்பிட்ட வன்பொருள் உருமாதிரியின் ஒரு குறிப்பிட்ட மென்பொருள் தயாரிப்பு. இது பொதுவாக ஏறுமுகமாக எண்ணிடப்படும். எடுத்துக்காட்டு: DOS 3.3 என்பது ஒரு வட்டுச் செயற்பாட்டுப் பொறியமைவின் பிந்திய பதிப்பு.

**version control** : பதிப்புக் கட்டுப்பாடு : பெரிய மென்பொருள் திட்டத்தில் மூலக் குறியீட்டை மேலாண்மை செய்தல். பதிப்புக் கட்டுப்பாடு மென்பொருள் தரவுத் தளத்தை உருவாக்கி அது தொடர்பான நிரல் தொடராளர்கள் உருவாக்கும் நிரல் தொடரின் மாற்றங்களை கண்காணிக்க உதவுகிறது.

**version number** : பதிப்பு எண் : ஒரு மென்பொருளின் வெளியீட்டுக்கான அடையாளம். 2.2 மற்றும் 2.3-க்கும் இடையிலான வேறுபாடு மிக அதிகமாகவும் இருக்கலாம். ஏனென்றால் புதிய வெளியீடுகள் புதிய தன்மைகளை மட்டும் சேர்க்கவில்லை. தொல்லை தரும் பிழைகளையும் நீக்குகிறது. 3.1 அல்லது 3.11 என்பது முந்தைய பதிப்பில் உள்ள பிழைகளை மட்டும் நீக்கியது. ஆனால் 3.1 மற்றும் 3.2 என்பதில் முந்தைய பொருளை மேம்படுத்தியதாகும்.

**verso** : வெர்சோ; இடப்பக்கம் : இடதுகைப் பக்கம்.

**vertex** : கோண முனை : 1. ஒரு முக்கோணத்தின் இருபக்கங்களும் இணையும் புள்ளி. 2. ஒரு வரைபடக் கோட்டில் உச்ச அல்லது நீசப் புள்ளி.

**vertical** : நெடுக்கு; செங்குத்து.

**vertical application** : செங்குத்துப் பயன்பாடு : ஒரு குறிப்பிட்ட வணிகம் அல்லது தொழிலின் தனிப்பட்ட தேவைகளை நிறைவு செய்வதற்கென்றே வடிவமைக்கப்பட்ட ஒரு சிறப்புநிலைப் பயன்பாடு. (எ-டு) : ஓர் உணவகத்தின் விலைப் பட்டி, அன்பளிப்புகள் மற்றும் கையிருப்புக் கணக்குகளைக் கவனிப்பதற்கென்றே உருவாக்கப்பட்ட பயன்பாட்டு மென்பொருள்.

**vertical bandwidth** : செங்குத்து அலைக்கற்றை : ஒரு காட்சித்திரை எந்த வீதத்தில் முழுவதுமாகப் புதுப்பிக்கப்படுகிறது என்பதைக் குறிக்கும் அளவீடு. ஹெர்ட்ஸில் (Hz) குறிக்கப்படுகிறது. பெரும்பாலும் காட்சித் திரைகளின் செங்குத்து அலைக் கற்றை 45 ஹெர்ட்ஸ் முதல் 100 ஹெர்ட்ஸ்வரை இருக்கும்.

**vertical blanking interval** : செங்குத்து வெறுமையாக்க இடை

வெளி : கிடைவரி-வருடு திரைக்காட்சியில் செங்குத்து வாக்கில் ஒருமுறை திரும்பிவர மின்னணுக்கற்றை எடுத்துக் கொள்ளும் நேரம்.

**vertical feed** : செங்குத்துச் செலுத்துகை.

**vertical frequency** : செங்குத்து அலைவரிசை.

**vertical justification** : செங்குத்தான வரியமைப்பு : மேலிருந்து கீழ்வரையிலான ஒரு முழுப் பக்கத்தின் பத்திகளில் இடத்தைச் சேர்ப்பது அல்லது நீக்குவது பற்றிய செயல்முறை.

**vertical recording** : செங்குத்துப் பதிவு : ஒரு வட்டில் தரவுகளின் காந்தத் துணுக்குகளை, அருகருகே அல்லாமல் செங்குத்தாக அமைக்கும் தொழில்நுட்பம். இந்தத் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி ஒரு வட்டில் பல கோடி தரவு எட்டியல்களைச் சேமிக்கலாம்.

**vertical redundancy check** : செங்குத்தான தேவையற்றவை சோதனை : தரவுத் தொடர்புகளில் உள்ள பிழை நீக்கும் நுட்பம். இதில் ஒரு தரவு கட்டத்தில் உள்ள ஒவ்வொரு துண்மிகளின் வரிசையிலும் சோதனை கூடுதல் எழுத்து சேர்க்கப்படும். VRC என்றும் அழைக்கப்படும்.

**vertical resolution** : செங்குத்து பிரி திறன் : கோடுகளின் எண் (மேட்ரிச்சில் உள்ள வரிசை).

**vertical retrace** : செங்குத்துத் திரும்புகை : கிடைவரி-வருடு (Raster Scan) திரைக்காட்சியில் மின்னணுக்கற்றை திரைமுழுக்க நிரப்பியபின், கீழ் வலது மூலையிலிருந்து மேல் இடது மூலைக்குத் திரும்பி வருதல்.

**vertical scan frequency** : செங்குத்து வருடி (நுண்ணாய்வு) அலைவெண் : ஒரு நொடியில் முழுகாட்சித் திரையும் எத்தனை தடவைகள் புதுப்பிக்கப்பட்டு அல்லது மாற்றி வரையப்படுகிறது என்பது. ஹெர்ட்ஸ் முறையில் அளக்கப் படுகிறது. காட்சி அமைப்புகள் 45 முதல் 200 ஹெர்ட்ஸ் வரையில் உள்ளன. சான்றாக அமெரிக்காவில் வி.ஜி.ஏ. என்பது 56 முதல் 60 ஹெர்ட்ஸ். ஐரோப்பாவில் 70 ஹெர்ட்சுக்கும் மேலே. டி.வி. யானது ஒரு நொடிக்கு 60 அரை படங்களாக புதுப்பிக்கப்படுகிறது. இவை ஒன்று கலந்து 30 முழுப்படம்/நொடிக்கு வருகிறது.

**vertical scan rate** : செங்குத்து வருடி விகிதம்: ஒரு நொடியில் சிஆர்டி மின்னணு ஒளிக்கற்றை யானது எத்தனை முறை சிஆர்டி திரையை முழுமையாக நிரப்பு

கிறது என்பது. காண முடியாத, மறுக்கத்தக்க மின் வீச்சுகளைத் தவிர்க்க வேண்டுமானால் இது 50 ஹெர்ட்சுகளைவிட அதிக மாக இருக்க வேண்டும்.

**vertical scrolling : செங்குத்துச் சுருளாக்கம் :** ஒரு பக்கத்தின் வழியே தரவுகளை மேலும் கீழும் நகர்த்துவதற்கான அல்லது ஒளிப்பேழைத் திரையில் காட்டு வதற்கான ஒரு பொறியமை வின் திறன்.

**vertical sync signal : செங்குத்து ஒத்திசைவுச் சமிக்கை :** கிடை வரி முறைத் திரைக்காட்சியில், காட்சியின் அடிப்பகுதியில் முந்தைய வருடு கோட்டின் முடிவைக் காட்டுகின்ற ஒளிக் காட்சிச் சமிக்கையின் ஒரு பகுதி.

**very high speed integrated circuit : மீவுயர்வேக ஒருங் கிணைப்பு மின்சுற்று :** மிக அதிகவேகத்தில் செயல்பாடு களை, குறிப்பாக தருக்கநிலைச் செயல்பாடுகளை நிறைவேற்றக் கூடிய ஓர் ஒருங்கிணைப்பு மின் சுற்று.

**Very Large Database : மிகப் பெரும் தரவுத்தளம் :** நூற்றுக் கணக்கான கிகாபைட்டுகள் அல்லது டெரா பைட்டுகள் அளவுள்ள ஏராளமான தரவு களைக் கொண்ட தரவுத் தள அமைப்பு. பொதுவாக மிகப் பெரும் தரவுத் தளங்கள் ஆயிரக் கணக்கான பயனாளர்களைக் கொண்டிருக்கும். கோடிக்கணக் கான ஏடுகள் உள்ள ஆயிரக் கணக்கான அட்டவணைகளைக் கொண்டிருக்கும். வேறுவேறு பணித் தளங்களிலும், வெவ் வேறு இயக்கமுறைமை களிலும் செயல்படுவதாக இருக் கும். பல்வேறு மென்பொருள் பயன்பாடுகளுடன் இயைந்து செயல் படுவதாக இருக்கும்.

**Very Large Memory : மிகப்பரந்த நினைவகம் :** மிகப்பெரும் தரவுத் தளத்தோடு தொடர் புடைய மிகப்பெரும் தரவு தொகுதிகளைக் கையாள்வதற் கென வடிவமைக்கப்பட்ட ஒரு நினைவக அமைப்பு. முதன்மை நினைவகத்தை அணுகுவதற்கு 64 துண்மி (பிட்) ரிஸ்க் (RISC) தொழில்நுட்பத்தை இந்தவகை நினைவகங்கள் பயன்படுத்து கின்றன. ஒரு கோப்பின் அளவு 2 மெகாபைட் வரை இருக்க லாம். 14 ஜிபி நினைவகத்தை இடைமாற்று நினைவகமாக பயன்படுத்திக் கொள்ள முடியும்.

**very large scale integration (VLSI) : பேரளவு ஒருங் கிணைந்த மின்சுற்றுகள்; மிகப் பேரளவு ஒருங்கிணைப்பு :** மிகப் பெருமளவு (1000 முதல்

*10,00,000 வரை)* அமைப்பிகளை ஒரே சிப்புவில் வைப்பதற்கான செய்முறை. பார்க்க : நான்காம் தலைமுறைக் கணினி; சிற்றளவு ஒருங்கிணைப்பு; நடுத்தர அளவு ஒருங்கிணைப்பு; பேரளவு ஒருங்கிணைப்பு; மீமிகைப் பேரளவு ஒருங்கிணைப்பு.

**VESA[1] : வேசா[1]** : விஎல்பாட்டை விரிவாக்கச் செருகுவாய்கள்.

**VESA[2] : வேசா[2]** : ஒளிக்காட்சி மின்னணுவியல் தரக்கட்டுப் பாட்டு கூட்டமைப்பு எனப் பொருள்படும் Video Electronics Standards Association என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒளிக்காட்சி மற்றும் பல்லூடக சாதனங் களின் தரங்களை மேம்படுத்து வதை நோக்கமாகக் கொண்ட வன்பொருள் உற்பத்தியாளர் களையும் விற்பனையாளர்களை யும் கொண்ட ஓர் அமைப்பு. காட்சித் தரவுத் தடம் (Display Data Channel-DDC), காட்சி மின்சார மேலாண்மை சமிக்கை யாக்கம் (Display Power Management - Signalling - DPMS), வேசா உள்ளகப்பாட்டை (VESA Local Bus - VL Bus) போன்ற தர வரை யறைகள் இவ்வமைப்பு உரு வாக்கியவற்றுள் அடங்கும்.

**vesicular film : வெசிக்குலர் ஃபிலிம்.**

**vetting : செப்பமாக்கல்; தணிக்கை செய்தல்** : பாதுகாப்பு அபாயங்களைக் குறைப்பதற் காக ஓர் ஆளின் பின்னணி பற்றி ஆராய்ந்தறியும் செய்முறை.

**V.everything : வி.எல்லாம்; வி.அனைத்தும்** : சிசிஐடீடீ (இப் போது ஐடியு-டீ) வி.34 வரை யறைகள் மற்றும் வி.வேகம் (V.fast) வகையைப் போன்ற பல் வேறு தனி உரிமை நெறிமுறை கள் ஆகிய இரண்டோடும் ஒத் தியைந்து செயல்படும் இணக்கி களைக் (மோடம்) குறிக்க, சில இணக்கி உற்பத்தியாளர்கள் பயன்படுத்துகின்ற சந்தைச் சொல். ஒரு வி. அனைத்தும் இணக்கி அதேவேகத்தில் செயல்படும் வேறெந்த இணக்கியுடனும் ஒத்தியைந்து செயல்படும்.

**V.Fast Class : வி.வேக வகுப்பு; வி.வேக இனக்குழு** : வழக் கிலிருந்த தர வரையறையான வி.34 நெறிமுறை அங்கீகரிக்கப் படுவதற்கு முன்பு ராக்வெல் இன்டர்நேஷனல் நிறுவனம், இணக்கிகளில் செயல் முறைப் படுத்திய, ஏற்றுக்கொள்ளப் பட்ட பண்பேற்ற தர வரை யறை. வி.வேக வகுப்பு, வி.34 ஆகிய இரண்டு இணக்கிகளுமே 28.8 கேபிபீஎஸ் வேகத்தில் பரிமாறச் செய்யும் திறன்

பெற்றவை என்ற போதிலும் வி.வேக வகை இணக்கிகள் வி.34 இணக்கிகளுடன் தரவுத் தொடர்பு கொள்ள முடியாது. வி.வேக இணக்கிகளை மேம் படுத்த வேண்டியது அவசியம்.

**VFAT** : விஃபேட் : மெய்நிகர் கோப்பு ஒதுக்கீட்டு அட் டவணை என்று பொருள்படும் Virtual File Allocation Table என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். விண்டோஸ் 95 இயக்கமுறைமையில், வட்டு களை அணுகுவதற்கு, நிறுவத்தகு கோப்பு முறைமை மேலாளர் (Installable File System Manager - IFS Manager) மென்பொருளின் கீழ் பயன்படுத்தப்படும் கோப்பு முறைமை இயக்கி மென் பொருள் இது. விஃபேட், எம்எஸ்-டாஸ் வட்டுகளுடன் ஒத்தியல்பானது. ஆனாலும் அதைவிட வேகமாகச் செயல் படக்கூடியது. விஃபேட் 32-பிட் குறிமுறையைப் பயன்படுத்து கிறது. பாதுகாக்கப்பட்ட பாங்கில் இயங்கக்கூடியது. வட்டு இடைமாற்றாக விகேஷ் (Vcache)-ஐப் பயன்படுத்து கிறது. நீண்ட கோப்புப் பெயர் களை ஏற்கிறது.

**.vg** : .விஜி : ஓர் இணைய தள முகவரி அமெரிக்காவின் விர்ஜின் தீவுகளைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**VGA** : விஜிஏ : ஒளிக்காட்சி வரைகலைத் தகவி என்று பொருள்படும் Video Graphics Adapter என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். இஜிஏ (EGA-Enhanced Graphics Adapter) தகவியின் அனைத்து ஒளிக் காட்சிப் பாங்குகளையும், கூடுதலான பல பாங்குகளையும் கொண்ட ஓர் ஒளிக்காட்சித் தகவி.

**VHLL** : விஹெச்எல்எல் : மீவுயர் நிலை மொழி என்று பொருள் படும் Very High Level Language என்ற தொடரின் தலைப்பெழுத் துக் குறும்பெயர்.

**VHSIC-programme** : விஎச்எஸ் ஐசி-செயல்முறை : அதிவேக ஒருங்கிணைப்பு மின் சுற்று வழிச் செயல்முறை. இது அரசு தனியார் தொழில் கூட்டுமுயற்சி. எதிர்கால ஆயுதங்களுக்கும் சாதனங்களுக்கும் பயன்படுத்த முற்போக்கான ஒருங்கிணைந்த மின்சுற்று வழிகளை இராணுவத் துறைக்கு வழங்குவது இதன் நோக்கம்.

**.vi** : .விஐ : ஓர் இணைய தள முகவரி பிரிட்டிஷ் வர்ஜின் தீவுகளைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

vi¹ : விஜ¹ : காட்சி எனப் பொருள்படும் visual என்பதன் சுருக்கம். யூனிக்ஸில் முதன் முதலாகப் பயன்படுத்தப்பட்ட முழுத்திரை உரைத் தொகுப்பி. மிகத் திறன்வாய்ந்த விசைப் பலகைவழிக் கட்டளைகளையும் உள்ளடக்கியது. இயலறிவால் எளிமையாகப் புரிந்து கொள்ளும் கட்டளைகள் என்று சொல்ல முடியாது. இமேக்ஸ் (Emacs) போன்ற பல்வேறு நவீன உரைத் தொகுப்பிகள் வந்துவிட்டபோதிலும் யூனிக்ஸில் விஜ உரைத்தொகுப்பி இன்னும் பரவலாகப் பயன் படுத்தப்படுகிறது.

vi² : விஜ² : யூனிக்ஸில் விஜ உரைத் தொகுப்பி மூலம் ஒரு கோப்பினைக் கையாள்வதற்கான கட்டளை. vi letter.txt எனக் கட்டளை அமைப்பின் letter.txt என்னும் கோப்புத் திரையில் விரியும்.

.victoria.ca : .விக்டோரியா.சிஏ : ஓர் இணைய தள முகவரி கனடா நாட்டு விக்டோரியா மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

video : ஒளிக்காட்சி; ஒளித் தோற்றம்; நிகழ்படம்; ஒளி வடிவம் : குறிப்பாக ஒளிப் பேழைக் காட்சி முனையத்திலுள்ள காட்சி.

video adaptor : ஒளிக்காட்சி ஏற்பி : ஒரு முகப்பின் கட்டுப்பாட்டு மின் சுற்று. காட்சிக்கான சமிக்கைகளை அனுப்புவது இதுவே.

video bandwidth : ஒளிக்காட்சிக் கற்றை அகலம்.

video board : ஒளிக்காட்சிப் பலகை.

video buffer : ஒளிக்காட்சி இடைநிலை நினைவகம் : திரையில் காட்டப்படும் தரவுவை வைத்துக் கொள்ள நினைவகத்தில் ஒதுக்கப்பட்ட பகுதி. சான்றாக, நிற வரைகலை அட்டை 16கி. நினைவகத்தைப் பயன் படுத்துகிறது. ஒளிக்காட்சி மின் சுற்று இடைநிலை நினைவகத்தின் உள்ளடக்கங்களைப் பிரித்து திரையில் காட்டுகிறது.

video camera : நிகழ்படக் கருவி; ஒளிக்காட்சி படப் பிடிப்புக் கருவி : தொடர்ச்சியான படங்களை எடுத்துக் காட்டுவதற்கோ அல்லது பதிவு செய்வதற்கோ சமிக்கைகளை உருவாக்கும் படப்பிடிப்புக் கருவி, உருவங்களை தொடரான கோடுகளாக பிரித்து அது படங்களை பிடிக்கிறது. ஒவ்வொரு

வரியும் ஒரு முறை நுண்ணாய்வு (ஸ்கேன்) செய்யப்பட்டு சிவப்பு, பச்சை மற்றும் நீல நிறங்களைக் கோடுகளிலிருந்து வடிகட்டி மாறும் சமிக்கை களாக அனுப்பப்படுகிறது. பெரும்பாலான ஒளிக் காட்சி படப்பிடிப்புக் கருவிகள் ஒப்புமை (அனலாக்) தான். ஆனால் இலக்கமுறை படப் பிடிப்புக் கருவிகளும் உள்ளன.

**video capture device :** ஒளிக் காட்சிக் கவர்வு சாதனம் : தொடர் முறை ஒளிக்காட்சிச் சமிக்கை களை இலக்கமுறை வடிவில் மாற்றி, கணினியின் நிலை வட்டில் அல்லது வேறு பெருஞ் சேமிப்புச் சாதனத்தில் பதிவு செய்கிற ஒரு விரிவாக்கப் பலகை. சில ஒளிக்காட்சிக் கவர்வு சாதனங்கள், இலக்க முறை ஒளிக்காட்சிகளை விசி ஆரில் பயன்படுத்துவதற்கேற்ற தொடர்முறை சமிக்கைகளாக மாற்றும் திறன்படைத்தவை.

**video card :** ஒளிக்காட்சி அட்டை : ஒரு ஒளித்திரைக்கான கட்டுப்பாட்டு இடைமுகம்.

**video clip :** ஒளிக்காட்சித் துணுக்கு : ஒரு நீண்ட ஒளிக் காட்சிப் பதிவிலிருந்து துணித்து எடுக்கப்பட்ட ஒரு குறுகிய காட்சியை உள்ளடக்கிய கோப்பு.

**video code :** ஒளிக்காட்சிக் குறியீடு : என்.டி.எஸ்.சி ஒளிக் காட்சியை இலக்கக் முறை குறி யீடாகவும், தலைகீழாகவும் மாற்றும் மின்சுற்று. சுருக்க நுட் பத்தை உள்ளடக்கி தரவுகளைக் குறைக்கிறது. முழு இயக்க ஒளிக்காட்சியாக இருக்கலாம் அல்லது இல்லாமற் போகலாம்.

**video compression :** ஒளிக் காட்சி இறுக்கம் : இலக்கமுறை வடிவில் பதிவு செய்யப்பட்ட ஒளிக்காட்சிப் படிமங்கள் கொண்ட கோப்புகளை இறுக்கி அளவினைச் சுருக்கும்முறை. இறுக்கிச் சுருக்கப்படவில்லை யெனில், 24துண்மி(பிட்) நிறம் கொண்ட 640×480 படப்புள்ளி தெளிவுள்ள ஓர் ஒளிக்காட்சிப் படத்தின் ஒரு சட்டம் ஒரு மெகாபிட் அளவிருக்கும். ஒரு நிமிடப் படம் ஒரு கிகாபைட் அளவிருக்கும். படிமத்தின் இயல்பான தரம் குறையா வண்ணம் ஒளிக்காட்சி இறுக்கம் சாத்தியம்.

**video conferencing :** ஒளிக் காட்சிக் கலந்துரையாடல்; காட்சி வழி உரையாடல்; ஒளிக்காட்சிக் கருத்தரங்கு; நிகழ்பட கலந்துரை யாடல் : தொலைவுள்ள வெவ் வேறு இடங்களில் இருந்து கொண்டு ஒரு கலந்துரையாட லில் பங்கு பெறுவோர் தத்தம்

படிமங்களையும் தமக்குள் அனுப்பிக்கொள்ளும் வசதி கொண்ட தொலைக் கலந்துரை யாடல். தொடக்க காலங்களில் தொடர்முறை ஒளிக்காட்சிகளை யும், செயற்கைக்கோள் தொடர்பு களையும் பயன்படுத்தி இவ் வகைக் கலந்துரையாடல் நடை பெற்றது. தற்போது இறுக்கிச் சுருக்கப்பட்ட இலக்கமுறைப் படிமங்கள் விரிபரப்புப் பிணையம் அல்லது இணையம் வழியாக அனுப்பி வைக்கப்படு கின்றன. 56கே தரவுத் தொடர்புத் தடம் உறைநிலை-சட்ட ஒளிக் காட்சியை ஏற்கிறது. 1.544 எம்பிபீஎஸ் (T1) தடத்தில் முழு-அசைவு ஒளிக்காட்சிப் படங் களை அனுப்பிவைக்க முடியும்.

**video controller** : **ஒளிக்காட்சிக் கட்டுப்படுத்தி** : சில வகையான ஒளிக் காட்சிப் பணிகளைக் கட்டுப்படுத்தும் சாதனம்.

**video cassette** : **ஒளிக்காட்சிப் பேழை.**

**video digitizer** : **ஒளிக்காட்சி இலக்கமாக்கி** : ஓர் ஒளிப்பேழை ஒளிப்பதிவுக் கருவியிலிருந்து வரும் சைகையினை இலக்க வடிவமாக மாற்றி, கணினிச் சேமிப்பகத்தில் சேமித்து வைக்கிற உட்பாட்டுச் சாதனம். இந்தச் சைகையினை கணினி மூலம் பகுப்பாய்வு செய்ய லாம்; மாற்றமைவு செய்யலாம்.

**video disk** : **ஒளிக்காட்சி வட்டு** : ஓர் ஒளிப்படப் பதிவை ஒத்திருக்கிற பிளாஸ்டிக் தகடு. இது, காட்சித்திரையில் தோன்றுகிற காட்சிப் பொருள் களை சேமித்து வைப்பதற்குக் குறைந்த செறிவுள்ள லேசர் கற்றைகளைப் பயன்படுத்து கிறது. ஒரு கணினி மூலம் பல ஒளிக்காட்சிகளைக் கட்டுப் படுத்தலாம்.

**video display** : **ஒளிக்காட்சி திரை; ஒளித்தோற்றக் காட்சி சாதனம்; நிகழ்படக் காட்சி** : கணினி வெளியீடான உரைப் பகுதி, வரைகலை போன்ற வற்றைக் காட்சியாகக் காட்டு கின்ற (அச்சிடுவதன்று) திறன் பெற்ற ஒரு சாதனம்.

**video display board** : **நிகழ்படக் காட்சி அட்டை; ஒளித்தோற்றக் காட்சி அட்டை** : கணினியின் முதன்மை முறைமைப் பலகை யின் அங்கமாக இல்லாமல், ஒரு விரிவாக்க அட்டையாக இருக்கும் ஒளிக்காட்சித் தகவி.

**video display metafile** : **ஒளித் தோற்றக் காட்சி மீஇயல்கோப்பு** : படிமங்களை ஒரு கணினி யிலிருந்து இன்னொரு கணினிக்கு அனுப்பி வைக்கத்

தேவையான ஒளிக்காட்சித் தரவு களைக் கொண்டுள்ள ஒரு கோப்பு.

**video display page :** ஒளித் தோற்ற காட்சிப்பக்கம் : ஒரு முழுத் திரைப் படிமத்தைக் கொண்டுள்ள, கணினியின் ஒளிக்காட்சி இடைநிலை நினை வகத்தின் ஒரு பகுதி. இடை நிலை நினைவகம் ஒன்றுக்கு மேற்பட்ட பக்கங்களை/ சட்டங்களைக் கொண்டிருக்க முடியுமெனில் திரை புதுப் பித்தல் மிகவேகமாக நிறைவு பெறமுடியும். ஏனெனில் ஒரு பக்கம் திரையில் காட்டப் பட்டுக் கொண்டிருக்கும்போது பார்க்கப்படாத பக்கத்தை நினைவகத்தில் ஏற்றிக் கொள்ள முடியும்.

**video driver :** ஒளிக்காட்சி இயக்கி : ஒளிக்காட்சித் தகவி வன்பொருளுக்கும் இயக்க முறைமை உட்பட பிற நிரல் களுக்கும் இடையே ஓர் இடை முகத்தை வழங்கும் மென் பொருள். திரையில் தெரியும் படிமங்களின் தெளிவு மற்றும் நிற ஆழத்தைப் பயனாளர் இந்த இயக்கி நிரல் மூலமாக விருப்பப் படி மாற்றியமைக்க முடியும்.

**video editor :** ஒளிக்காட்சித் தொகுப்பி : ஓர் ஒளிக்காட்சிக் கோப்பின் உள்ளடக்கத்தை மாற்றியமைக்கப் பயன்படுத்தப் படும் ஒரு சாதனம் அல்லது நிரல்.

**video game :** ஒளிக்காட்சி விளையாட்டு : கணினித் திரை யில் வரைகலையாகக் காட்டப் படும் நடவடிக்கையைத் திறமை யுடன் கையாண்டு ஆடும் ஆட் டம். சொந்தக் கணினிகளிலும், கேளிக்கை விடுதிகளிலும் இது மிகுதியாக ஆடப்படுகிறது.

**video game machine :** ஒளிக் காட்சி விளையாட்டுப் பொறி : ஒரு ஒளிக்காட்சி விளையாட்டில் காட்சியைக் கட்டுப்படுத்தும் சைகைகளை உண்டாக்குகிற சாதனம்.

**video gate array :** ஒளிக்காட்சி வாயில் வரிசை : பீசிக்களின் ஒளிக்காட்சிக் கணினியில் உள்ள ஒரு சிப்பு. வண்ணத் தட்டுப் பதிவுகள் உள்ளிட்ட பல கட்டுப்பாட்டு மற்றும் நிலைப் பதிவேடுகளை அது கொண்டிருக்கிறது.

**video generator :** ஒளிக்காட்சி உருவாக்கி : ஒளிக்காட்சியை உருவாக்கும் சாதனம்.

**video graphics adapter card :** ஒளிக்காட்சி வரைகலைத் தகவி அட்டை.

**video graphics board :** ஒளிக் காட்சி வரைகலைப் பலகை : ஓர் ஒளிக்காட்சித்திரையில் வரை கலைப் படிமங்களைக் காண் பிக்க ஒளிக்காட்சிச் சமிக்கை களை உருவாக்குகின்ற ஓர் ஒளிக்காட்சித் தகவி.

**video input camera :** ஒளிக் காட்சி உட்பாட்டு ஒளிப்பதிவுக் கருவி : ஒரு கணினியின் நினை வகத்தில், (ஒளிப்படங்கள், இயல்பு வாழ்க்கைச் சூழல்கள், ஓவியங்கள்) புள்ளி உருக் காட்சிகளாக மாற்றுகிற ஒளிப் பேழை ஒளிப்பதிவுக் கருவி. இலக்கமாக்கப்பட்ட உருக் காட்சிகளை ஒரு காட்சித்திரை யில் காட்டலாம் அல்லது வரை கலை அச்சுப்பொறிமூலம் காகிதத்தில் அச்சடிக்கலாம்.

**videoline mail :** ஒளிக்காட்சி அஞ்சல்; நிகழ்பட அஞ்சல்; ஒளிப்பட அஞ்சல்.

**video memory :** ஒளிக்காட்சி நினைவகம் : ஒளிக்காட்சித் தகவி அல்லது ஒளித்தோற்றத் துணை அமைப்பில் ஒரு காட்சிப் படிமம் உருவாக்கப்பட்டு இருத்தி வைக்கப்பட்டுள்ள நினைவகப் பகுதி. இப்பகுதியை அணுகுவதற்கு எழுது /படிப்பு செயலியைவிட ஒளிக்காட்சித் துணை அமைப்புக்குத்தான் முன்னுரிமை அதிகம். எனவே, முதன்மை நினைவகத்தை அணுகுவதைவிட ஒளிக்காட்சி நினைவகத்தைப் புதுப்பித்தல் மெதுவாகவே நடைபெறும்.

**video mode :** ஒளிக்காட்சிப் பாங்கு : ஒரு கணினியின் ஒளிக் காட்சித் தகவியும் திரையகமும் இணைந்து படிமங்களைத் திரை யில் காட்டும்முறை. பெரு மளவு புழக்கத்தில் உள்ளவை உரைப்பாங்கும் வரைகலைப் பாங்கும். உரைப்பாங்கினில் எழுத்து, எண், குறிகள் போன்ற குறியீடுகள் எதுவும் படப்புள்ளி களால் திரையில் வரையப்படு வதில்லை. ஆனால், வரை கலைப் பாங்கினில் எழுத்தாக இருந்தாலும் படமாக இருந் தாலும் அனைத்துத் திரைப் படி மங்களுமே படப்புள்ளிகளின் தோரணிகளாக ஒரு நேரத்தில் ஒரு புள்ளிவீதம் திரையில் வரையப்படுகின்றன.

**video monitor :** ஒளிக்காட்சித் திரை : செயல்முறையில் ஒரு தொலைக்காட்சி போன்ற சாதனம். இதில் அலைவரிசை களைத் தேர்ந்தெடுப்பதற்கான வசதி இல்லை. ஒளிக் காட்சி முனையை விசைப்பலகை போன்ற ஒரு புறநிலை ஆதாரத் திலிருந்து இது பட சைகை களைப் பெற்றுக் கொள்கிறது.

**video noise** : ஒளிக்காட்சி இரைச்சல்.

**video overlay card** : ஒளிக்காட்சி மேல் மூடி அட்டை : என்.டி. எஸ்.சி ஒளிக்காட்சியையும் கணினி உருவங்களையும் கலப்பதற்கு அனுமதிக்கும் வரைவியல் கட்டுப்படுத்தி.

**video picture** : ஒளிக்காட்சிப் படம்.

**videophone** : ஒளிக்காட்சிப் பேசி : படப்பிடிப்பி (camera), திரை (screen), நுண்ஒலிவாங்கி (Microphone), ஒலிபெருக்கி (Speaker) ஆகியவை கொண்ட ஒரு சாதனம். ஒரு தொலைபேசித் தடத்தில் ஒளிக்காட்சி சமிக்கைகள் மற்றும் குரலை அனுப்பவும் பெறவும் திறன் பெற்றது. வழக்கமான தொலைபேசி இணைப்பு வழியாக ஒளிக்காட்சிப் பேசியினால் உறை நிலை சட்ட ஒளிக்காட்சியை மட்டுமே அனுப்ப முடியும்.

**video port** : ஒளிக்காட்சித் துறை : ஒரு கணினியிலிருந்து திரையகத்துக்கு ஒளிக்காட்சிச் சமிக்கைகளை அனுப்பிவைக்கப் பயன்படும் வடத்தினை இணைக்கும் இணைப்புவாய்.

**video RAM** : ஒளிக்காட்சி ரேம் : கணினி காட்சித்திரையால் ஏகபோகமாகப் பயன்படுத்தப்படும் ரேமின் பகுதி. மையச் செயலகத்திற்கு தேவைப்படுவது போன்று ஒளிக்காட்சி ரேமைப் புதுப்பிக்கிறது. அது போல, திரை உருவங்களை ஒளிக்காட்சி ரேம் புதுப்பிக்கிறது. ஒளிக்காட்சி ரேமில் நேரடி அணுகல் சேர்ப்பி மொழி நிரல் தொடரின் மூலம் நடைபெறும்.

**video server** : ஒளிக்காட்சி வழங்கன் : கேட்டதும் கிடைக்கும் இலக்கமுறை ஒளிக்காட்சி மற்றும் அகலக்கற்றை ஊடாடு சேவைகளை ஒரு விரிபரப்புப் பிணையம் வழியாகப் பொது மக்களுக்கு வழங்குவதற்கென வடிவமைக்கப்பட்ட வழங்கன் கணினி.

**video signal** : ஒளிக்காட்சி சைகை : ஒரு CRTஇல் ஒவ்வொரு புள்ளியின் அமைவிடத்தையும், ஒளித்திறனையும் குறித்துக் காட்டுகிற தரவுகள் அடங்கிய மின்னியல் சைகை. அத்துடன் ஒரு திரையில் உருக்காட்சியைக் காட்டுவதற்கான நேரச் சைகைகளையும் கொண்டிருக்கும்.

**video standard** : ஒளிக்காட்சித் தரம்.

**video tape** : ஒளிக்காட்சி நாடா.

**video terminal** : ஒளிக்காட்சி முனையம் : உள்ளீட்டுக்கு ஒரு விசைப்பலகையையும், வெளி

யீட்டுக்கு ஒரு காட்சித் திரையையும் பயன்படுத்தும் தரவு நுழைவுச் சாதனம். காட்சித் திரை தொலைக்காட்சி போல தோன்றினாலும், தொலைக் காட்சி ஒளிக்காட்சி சமிக்கைகளை அது ஏற்பதில்லை.

**videotex systems : வீடியோ டெக்ஸ் அமைப்பு :** மனிதர்களுக்கும், சேமிக்கப்பட்ட தரவுத் தளங் களுக்கும் இடையில் பரிமாற்றங்களை அனுமதிக்கும் தனிநபர் கணிப்பு/தரவுத் தொடர்பு கட்டமைப்புகளுக்கான பொதுவான பெயர்.

**videotext : ஒளிக்காட்சி வாசகம் :** ஒன்றுக்கொன்று செயல்புரியும் மின்னணுத் தரவுப் பொறியமைவு. இது தொலைவாசகம் போன்றது. இதில், தரவுகளைப் பொறியமைவுக்கு மாற்றலாம். இதனைக் காட்சித் தரவு என்றும் கூறுவர்.

**video window : ஒளிக்காட்சிச் சாளரம் :** கணினி ஒரு தனிச் சாளரத்தில் காட்டப்படும் என்.டி. எஸ்.சி. ஒளிக்காட்சி (டி.வி).

**vidicon : வீடிக்கோன் :** ஒரு தொலைக்காட்சி ஒளிப்பதிவுக் கருவியினுள் இருக்கும் குழாய். இது ஒரு காட்சியின் உருக் காட்சியை மின்னியல் சைகையாக மாற்றுகிறது.

**view : காட்சி :** ஒரு தரவுத் தளத்தின் உள்ளடக்கங்களை பயன்பாட்டாளருக்கு வழங்குகின்ற முறை. இது, தரவுத் தளத்தில் புலங்களும், பதிவுகளும் சேமித்து வைக்கப்பட்டுள்ள அதேமுறையில் காட்சியில் காட்டப்பட வேண்டியதில்லை. பல்வேறு பயன்பாட்டாளர்களின் தேவைக்கேற்ப தனித்த முறையில் காட்டப்படுகிறது.

**viewdata : காட்சித் தரவு :** மனைத் தரவு வழங்கீட்டுப் பொறியமைவு. இதன் வழியாகப் பயன்பாட்டாளர்கள், ஒரு மையத் தரவுத் தளத்தை தங்கள் உள்ளூர் தொலைக்காட்சிகளிலிருந்து அணுகலாம். பயன்பாட்டாளர் குறிப்பிட்ட தரவுச் சட்டகங்களைக் கோரலாம். முக்கியமாக, தாங்கள் விரும்பும் தரவுகளை நேரடியாக அணுகலாம். இதனால் நேரம் மிச்சமாகிறது. இந்தப் பொறியமைவின் வாயிலாகப் பயன்பாட்டாளர் வேறு பயன்பாட்டாளர்களுடன் செய்தித்தொடர்பு கொள்ளலாம்.

**viewer : காட்சிப்படுத்தி :** ஒரு கோப்பின் வெளிப்பாட்டை அதனை உருவாக்கிய பயன்பாட்டுத் தொகுப்பு காண்பிக்கும் அதேமுறையில் திரையில் வெளிப்படுத்தும் ஒரு மென்

பொருள். எடுத்துக்காட்டு: ஜிஃப், ஜேபெக் கோப்புகளில் பதிவு செய்யப்பட்டுள்ள படிமங்களை இன்டர்நெட் எக்ஸ்புளோரர் காட்சிப்படுத்தும்.

viewport : காட்சித்துறை : ஒளிப்பேழைக் காட்சித்திரையில் தெரிந்தெடுத்த ஓர் அமைவிடத்தில் தெரிந்தெடுத்த படம் எதையும் பயன்பாட்டாளர் வைப்பதற்கு அனுமதிக்கிற செய்முறை.

vine : வைன்; படர்கொடி : ஒலி நாடாத் தரவுவை ஒன்றிலிருந்து இன்னொன்று என வரிசையாக நகலெடுத்து வினியோகிக்கும் முறை. திராட்சைக் கொடி படர்ந்து செல்வதுபோல இந்த நடவடிக்கை அமைவதால் இப்பெயர் ஏற்பட்டது. படர் கொடி நாடாக்களில் இலக்க முறை வடிவத்தில் தரவு பதியப் படுகிறது. எனவே நகலெடுப்பதால் ஒலியின் தரம் குறைந்து போவதில்லை.

virtual : தோற்றநிலை; உண்மை போன்ற; மெய்நிகர்: தோற்ற நிலைச் சேமிப்பகத்தில் உள்ளது போன்று இயல்பாகவுள்ள நிலையாக இல்லாமல் கண்ணுக்குத் தோன்றுகிற நிலை.

virtual address : தோற்றநிலை முகவரி : தோற்றநிலைச் சேமிப்புப் பொறியமைவுகளில் தோற்ற நிலைச் சேமிப்பைக் குறிக்கிற ஒரு முகவரி. எனவே, இது, பயன்படுத்தப்படும்போது, இயல்புச் சேமிப்பு முகவரியாக மாற்றப்பட வேண்டும்.

virtual card calling : தொலை பேசி அழைப்பு அட்டை; மெய்நிகர் அட்டை அழைப்பு.

virtual channel : மெய்நிகர் தடம் : ஒத்திசையாப் பரிமாற்றப் பாங்கினில் (Asynchronous Transfer Mode-ATM) ஒரு அனுப்பியிலிருந்து ஒரு வாங்கிக்கு அனுப்பப்பட்ட ஒரு தரவு, பயணம் செய்கிற பாதை.

virtual circuit : மெய்நிகர் மின்சுற்று : அனுப்பிக்கும் வாங்கிக்கும் இடையே நேரடி இணைப்பு இருப்பது போன்று தோற்றமளிக்கும் ஒரு தகவல் தொடர்பு இணைப்பு. ஆனால் உண்மையில் அவ்விணைப்பு பல சுற்றுப்பாதைகளில் சுற்றி இணைக்கப்பட்டிருக்கும்.

virtual classroom training : மெய் நிகர் வகுப்பறைப் பயிற்சி.

virtual community : மெய்நிகர் குழுமம்; மெய்நிகர் சமூகக் குழு.

virtual control programme interface : மெய்நிகர் கட்டுப் பாட்டு நிரல் இடைமுகம் :

இன்டெல் 386 மற்றும் மேம்பட்ட செயலிகள் உள்ள கணினிகளில் மைக்ரோசாஃப்ட் விண்டோஸ் போன்ற பல்பணிச் சூழலில் எம்எஸ்-டாஸ் நிரல்கள் விரிவாக்கப்பட்ட நினைவகத்தை அணுக அனுமதிப்பதற்கான வரன்முறை.

**virtual desktop : மெய்நிகர் முகப்புத் திரை :** விண்டோஸ் பணிச்சூழலில் பணிபுரிந்து கொண்டிருக்கும்போது சில பயன்பாட்டுத் தொகுப்புகளின் சாளரம் திரையின் முழுப்பகுதியிலும் பரவியிருக்கும். அப்போது விண்டோஸின் முகப்புத் திரை (desktop) பின்னால் மறைந்திருக்கும். இதுபோன்ற தருணங்களில் முகப்புத் திரையிலுள்ள குறுவழி (shortcut)/ பயன்கூறுகளை (utilities) அணுகுவதற்கு உதவிசெய்யும் நிரல். முகப்புத் திரை மேம்படு நிரல்.

**virtual device : மெய்நிகர் சாதனம் :** பருநிலையில் நிலவாத ஆனால் நிரல்கள் மூலம் குறிப்பிடப்படும் ஒரு சாதனம். (எ-டு) மெய்நிகர் நினைவகம் என்பது, முதன்மை நினைவகத்தில் இடமில்லாதபோது நிலைவட்டில் ஏற்படுத்தப்படும் தற்காலிக நினைவகப் பகுதி. இதேபோல, நினைவகத்தில், ஒரு மெய்நிகர் வட்டுப் பகுதியை உருவாக்க முடியும்.

**virtual device driver : மெய்நிகர் சாதன இயக்கி :** விண்டோஸ் 95/98 இயக்க முறைமையில் ஒரு வன்பொருள் அல்லது மென்பொருள். வளத்தினை மேலாண்மை செய்கின்ற ஒரு மென்பொருள். ஒரு வளம், முதல் அணுகலுக்கும் அடுத்த அணுகலுக்கும் இடையே சில தகவல்களைத் தக்கவைத்துக் கொள்கிறது எனில் (எ-டு: ஒரு வட்டுக் கட்டுப்படுத்தியில் நிலைமைத் தகவல் மற்றும் இடையகங்கள்), அதற்கான மெய்நிகர் சாதன இயக்கி ஒன்று இருக்க வேண்டும். பொதுவாக, மெய்நிகர் சாதன இயக்கிகள் மூன்றெழுத்துப் பெயர்களாக இருக்கும். முதல் எழுத்து V ஆகவும் கடைசி எழுத்து D ஆகவும் இருக்கும். நடு எழுத்து சாதன வகையைக் குறிக்கும். எடுத்துக்காட்டாக D என்பது திரைக்காட்சி (Display), P என்பது அச்சுப்பொறி (Printer), T என்பது நேரங்காட்டி (Timer) என இருக்கும். குறிப்பிட்ட சாதனவகை இப்போதைக்குக் கணக்கில் எடுத்துக் கொள்ளப் படாதது எனில் x என இருக்கும். அதாவது, மெய்நிகர் சாதன இயக்கி vxd என இருக்கும்.

**virtual drive :** மெய்நிகர் வட்டகம் : ரேம் வட்டகம் என்றும் கூறப்படும். வட்டு இயக்கியைப் போன்று நினைவகத்தின் ஒரு பகுதி பயன்படுத்தப் படும். வட்டைவிட நினைவகத்திலிருந்து கணினி வேகமாகப் படிக்க முடியும் என்பதால் மெய்நிகர் வட்டகங்கள் வேகமானவை. இருப்பினும், கணினியை நிறுத்தினாலோ அல்லது மீண்டும் துவக்கினாலோ ரேம் வட்டகத்தில் உள்ள தரவு மறைந்து போகும்.

**virtual execution system :** மெய்நிகர் செயற்பாட்டு முறைமை.

**virtual library :** மெய்நிகர் நூலகம்.

**virtual image :** மெய்நிகர் படிமம் : கணினி நினைவகத்தில் பதிவு செய்யப்பட்ட ஒரு படிமம். ஆனால், முழுப் படிமத்தையும், அப்படியே முழுமையாக ஒரே திரையில் காண்பிக்க முடியாத அளவுக்குப் பெரியது. இதுவரை பார்க்கவியலாத பகுதிகளை உருட்டி, விரித்துப் பார்வைக்குக் கொண்டுவர முடியும்.

**virtual-image file :** மெய்நிகர்-படிமக் கோப்பு : ஒரு குறுவட்டில் (CD-ROM) பதியவிருக்கின்ற தரவுகளைக் குறிக்கும் ஒரு கோப்பு. குறுவட்டில் பதியவிருக்கின்ற அனைத்துக் கோப்புகளும் ஓரிடத்தில் திரட்டப்படுவதற்குப் பதிலாக, அக்கோப்புகளுக்கான சுட்டுகள் (pointers) மெய்நிகர்-படிமக் கோப்பில் இடம் பெற்றிருக்கும். பதியப்பட வேண்டிய கோப்புகள் நிலைவட்டில் ஆங்காங்கே சிதறிக் கிடக்கலாம்.

**virtual home for the holidays :** விடுமுறைக் காலத்து மெய்நிகர் இல்லம்.

**virtualize :** மாயப் படுத்து; மெய்நிகராக்கு : மெய்நிகர் நினைவகத்தில் நிரல் தொடரை இயங்க வைத்தல்.

**virtual LAN :** மெய்நிகர் லேன் : வழங்கன் கணினிகளின் பல்வேறு குழுக்கள் ஒருங்கிணைக்கப்பட்ட ஒரு குறும்பரப்புப் பிணையம் (LAN). இவை வெவ்வேறு பகுதிகளில் நிறுவப்பட்டவை. என்றாலும் அவை ஒரே லேனில் இணைக்கப்பட்டவைபோலவே தகவல் பரிமாற்றம் செய்து கொள்கின்றன.

**virtual machine :** தோற்றநிலை எந்திரம்; மெய்நிகர் எந்திரம் : ஒரே சமயத்தில் ஓடும் தற்போதையக் கணினியின் பல படிகள் உள்ளதாகத் தோன்றும் பொய்த் தோற்றம்.

**virtual memory :** மெய்நிகர் நினைவகம்.

**virtual memory management :** மெய்நிகர் நினைவக மேலாண்மை.

**virtual monitor :** மெய்நிகர் கணித்திரை : மெக்கின் டோஷில், எந்த வகையான முகப்பையும் சேர்த்துச் செயல் படுவது மற்றும் பலவகையான பல்முகப்புகளைப் பயன் படுத்துவது. இரண்டு அல்லது மேற்பட்ட திரைகளில் ஒரே பொருளைக் காட்டுவதும் இதில் அடங்கும்.

**virtual name space :** மெய்நிகர் பெயர்வெளி : ஒரு பயன்பாடு குறிப்பிட்ட பொருள்களின் இட மறியப் பயன்படுத்தக்கூடிய படிநிலைத் தொடர்ச்சியால் அமைந்த பெயர்களின் தொகுதி. அப்படியொரு பெயர்களின் தொடர்வரிசை, மெய்நிகர் பெயர்வெளியில் அப் பொரு ளின் இருப்பிடப் பாதையைக் குறிக்கிறது. அக்கணினி அமைப் பில், அப்பாதையில் குறிப் பிட்ட படிநிலையில் பொருள்கள் அமைந்துள்ளனவா என்பது முக்கியமில்லை. (எ-டு) : ஒரு வலை வழங்கனின் மெய்நிகர் பெயர்வெளி என்பது, அந்த வழங்கன் செயல்படும் பிணை யத்திலுள்ள அனைத்து யுஆர்எல் களின் முகவரிகளைக் குறிக்கிறது.

**virtual network :** மெய்நிகர் பிணையம் : ஒரு பிணையத்தின் ஒருபகுதி, பயனாளரைப் பொறுத்தமட்டில் அதனளவில் ஒரு பிணையமாகத் தோற்ற மளித்தல். எடுத்துக்காட்டாக, ஓர் இணையச் சேவையாளர் ஒற்றை ஹெச்டீடீபி வழங்கனில் பல களங்களை (domains) அமைத்து, ஒவ்வொன்றையும் அவர்களுடைய குழுமத்தின் பெயரில் பதிவு செய்யப்பட்ட களப் பெயரின் வாயிலாகவே அணுகுமாறு செய்யலாம்.

**virtual object system (VOS) :** மெய்நிகர் பொருள் முறைமை.

**virtual path :** மெய்நிகர் பாதை : 1. ஒரு கணினியிலுள்ள கோப்பு முறைமையில் ஒரு கோப்பினை அணுகப் பயன்படுத்தப்படும் தொடர் வரிசையான பெயர்கள். அக்கோப்பு முறைமையில் அக் கோப்பின் பாதையைப் போலவே அமைந்திருக்கும். ஆனால், அக்கோப்பு பதிவாகி யுள்ள உண்மையான கோப்பக வரிசையாக இருக்க வேண்டு மென்ற அவசியமில்லை. எடுத்துக்காட்டாக, வழங்கன் கணினியின் பெயரைத் தொடர்ந்து வரும் யூஆர்எல்லின் ஒரு பகுதியை மெய்நிகர் பாதை எனலாம். 2. ஒத்திசையாப் பரி மாற்றப் பாங்கினில் (Asynchro-

nous Transfer Mode - ATM) பிணையம் வழியாக, ஒன்றாக இணைக்கப்படும் மெய்நிகர் தடங்களின் பிணைப்பை மெய் நிகர் பாதை என்று கூறலாம்.

**virtual peripheral** : மெய்நிகர் புறச்சாதனம் : இயக்க அமைப் பினால் செய்து காட்டப்படும் வெளிப்புறச் சாதனம். சான்றாக, வட்டுக்கு அச்சிடும் செயல் முறை.

**virtual printer** : மெய்நிகர் அச்சுப்பொறி : அச்சுப்பொறிக்கு அனுப்பப்படும் ஒரு வெளி யீட்டுத் தரவுவை, அச்சுப்பொறி கிடைக்கும்வரை (தயாராகும் வரை) ஒரு கோப்பினில் சேமித்து வைத்துக் கொள்ளும் வசதி. பெரும்பாலான இயக்க முறைமைகளில் இவ்வசதி உள்ளது.

**virtual private network** : மெய் நிகர் தனியார் பிணையம் : 1. இணையம் போன்ற பொதுப் பிணையத்தில் இணைக்கப் பட்ட கணுக் கணினிகளின் தொகுதி. மறையாக்கத் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி, வெளியார் எவரும் அத்துமீறி நுழையா வண்ணம், ஒரு தனி யார் பிணையம் போன்றே பாது காப்பான முறையில் தமக் குள்ளே தரவுகளைப் பரிமாறிக் கொள்ளல். 2. வேறொரு பிணையத்தின்மீது நிலையான மெய்நிகர் மின்சுற்றுகளின் வழியாக அமைக்கப்பட்ட ஒரு விரிபரப்புப் பிணையம். குறிப் பாக, ஏடீஎம் அல்லது சட்டகம் (frame) போன்ற தொழில் நுட்பங்களின் அடிப்படையில் அமைந்த பிணையம்.

**virtual processing** : மெய்நிகர் செயலாக்கம் : ஒவ்வொரு தரவு பொருளுக்கும் ஒரு செயலகம் இருப்பது போன்று காட்டப் படும் இணைச் செயலக நுட்பம். இருப்பதற்கு மேல் பல மெய்நிகர் செயலகங்கள் தரவுப் பொருள்களுக்காக இது உருவாக்கும்.

**virtual processor** : மெய்நிகர் செயலகம் : மெய்நிகர் செய லாக்க அமைப்பில் உள்ள போலியாக அமைக்கப்பட்ட செயலகம்.

**virtual reality** : மெய்நிகர் நடப்பு; மெய்த்தோற்ற எதார்த்தம்.

**virtual reality helmet** : மெய்நிகர் நடப்புத் தலைக்கவசம்.

**virtual real mode** : மெய்நிகர் உண்மைப் பாங்கு : இன்டெல் 80386 (எஸ்எக்ஸ் மற்றும் டிஎக்ஸ்), மற்றும் அதைவிட மேம்பட்ட நுண்செயலிகளில் இருக்கும் ஒரு பண்புக்கூறு.

ஒரேநேரத்தில் பல்வேறு 8086 (உண்மைப் பாங்கு) சூழல் களை உருவாக்கிக் காட்ட முடியும். ஒவ்வொரு மெய்நிகர் 8086 சூழலுக்கும் தேவையான மெய்நிகர் பதிவகங்கள் (registers), மெய்நிகர் நினை வகப் பகுதி ஆகியவற்றை இவ் வகை நுண்செயலிகள் வழங்கு கின்றன. ஒரு மெய்நிகர் 8086 சூழலில் செயல்படும் ஒரு நிரல், பிற மெய்நிகர் 8086 சூழல்களிலிருந்து முற்றிலும் பாதுகாக்கப்படுவதுடன், கணினி யின் முழுக் கட்டுப்பாடும் இந்த நிரலின் கீழ் இருப்பதுபோன்ற ஒரு தோற்றத்தையும் தருகிறது.

**virtual root : மெய்நிகர் மூலம் :** ஹெச்டீடீபீ அல்லது எஃப்டீபீ வழங்கன் போன்ற இணைய வழங்கனோடு பயனாளர் ஒருவர் இணைப்பை ஏற்படுத்திக் கொள்ளும்போது, காண்கின்ற மூலக் கோப்பகம். மெய்நிகர் மூலம் என்பது உண்மையான மூலக்கோப்பகத்தைச் சுட்டு கின்ற ஒரு சுட்டு ஆகும். மூலக் கோப்பகம் வேறு கணினியில் இருக்கலாம். மெய்நிகர் மூலம் வழியாகக் கிடைக்கும் நன்மை என்னவெனில், ஓர் இணைய தளத்துக்கு மிக எளிதாக ஓர் யூஆர்எல் உருவாக்க முடியும். யூஆர்எல்லுக்கு எவ்விதத் தீங்குமின்றி மூலக் கோப் பகத்தை வேறிடத்துக்கு மாற்ற முடியும்.

**virtual screen : மெய்நிகர் திரை :** கணினித் திரையின் எல்லைக்கு அப்பாலும் திரையிடப் பயன் படுத்திக்கொள்ளும் பகுதி. மிகப்பெரிய அல்லது மிகப்பல ஆவணங்களைக் கையாள இக் கூடுதல் பரப்பு பயன்படுகிறது.

**virtual server : மெய்நிகர் வழங் கன் :** ஒரு ஹெச்டீடீபீ வழங்கன் கணினிக்குள் இருந்து செயல் படும் ஒரு மெய்நிகர் கணினி. ஆனால் பயனாளரைப் பொறுத்த வரை ஒரு தனி ஹெச்டீடீபீ வழங்கனாகவே காட்சியளிக் கும். ஒரே ஹெச் டீடீபீ வழங் கனில் பல மெய்நிகர் வழங்கன் கள் இருக்க முடியும். ஒவ் வொன்றும் தத்தமது நிரல்களை இயக்கிக்கொள்ள முடியும். ஒவ்வொன்றும் உள்ளீட்டு, வெளியீட்டுச் சாதனங்களைத் தனிப்பட்ட முறையில் அணுக முடியும். ஒவ்வொரு மெய் நிகர் வழங்கனும் தனிக் களப் பெயரையும் ஐபீ முகவரியை யும் கொண்டிருக்கும். பயனா ளருக்கு அது தனி வலைத் தளமாகவே தோற்றமளிக்கும். பல இணையச் சேவையாளர் களும், தத்தமது தனி களப் பெயர்களை வைத்துக்கொள்ள

விரும்பும் வாடிக்கையாளர்களுக்கு இது போன்ற மெய்நிகர் வழங்கன்களை வழங்குகின்றனர்.

**virtual storage** : தோற்றநிலைச் சேமிப்பு; மெய்நிகர் சேமிப்பு : ஒரு குறிப்பிட்ட அளவு உள்முகச் சேமிப்பையும், சற்று அதிக அளவு குறைந்த வேகச் சேமிப்பியிலிருந்து உள்முகச் சேமிப்பிக்கு மாற்ற உதவுகிறது.

**virtual storage operating system** : மெய்நிகர் நிலைச் சேமிப்புச் செயற்பாட்டுப் பொறியமைவு : ஒரு கணினிப் பொறியமைவின் தோற்ற நிலைச் சேமிப்புத் திறனைப் பயன்படுத்தும் செயற்பாட்டுப் பொறியமைவு.

**virtual storefront** : மெய்நிகர் அங்காடி : இணையத்தில் ஒரு நிறுவனத்தின் இருப்பு. நிகழ்நிலை விற்பனைக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ள தளம்.

**virtual terminal** : மெய்நிகர் முனையம் : அந்நிய கணினியை அணுக அனுமதிக்கும் முனையத்தின் முயற்சி. சிறு அல்லது பெருமுகக் கணினியை பீசி மூலம் அணுகுவதைக் குறிப்பிடுகிறது.

**virtual troolfair** : மெய்நிகர் கண்காட்சி.

**virutal university** : மெய்நிகர் பல்கலைக் கழகம்.

**virtual world** : மெய்நிகர் உலகம் : முப்பரிமாண மாதிரியங்கள் கொண்ட சூழல். வீஆர்எம்எல் (VRML - Virtual Reality Modelling Language) மொழியில் உருவாக்கப்பட்டது. பயனாளர் அதில் தோற்றமளிக்கும் பொருள்களோடு, நடப்புலகப் பொருள்களைப் போன்றே ஊடாட முடியும்.

**virus** : வைரஸ்; நச்சு நிரல்: இயக்க அமைப்பு மற்றும் தரவுக் கோப்புகளின் ஒற்றுமையைப் பாதிக்கும் மென்பொருள். நிரல் தொடர் எந்திரத்தின் இயக்கத்தைத் தடுக்கவோ அல்லது தரவுகளை அழிக்கவோ இது முயற்சிக்கும். நச்சுநிரல் நிரல் தொடர்களைக் கண்டுபிடித்தவர் யார் என்பது தெரியவில்லையென்றாலும் உலகின் பல நாடுகளில் இது துவங்கியது. நச்சு நிரல்கள் தங்களைப் பெருக்கிக் கொள்ளக் கூடியவை. ஒரு நிறுவனத்தின் கணினி அமைப்பு முழுவதும் வேகமாகப் பரவும். நச்சு நிரலால் பாதிக்கப்பட்ட ஒரு வட்டை வேறொரு கணினியில் பயன்படுத்துவது போன்று வேண்டுமென்றே நச்சு நிரல் சேர்க்கலாம். நல்லவேளையாக நச்சுநிரல் தடுப்பு மென்பொருள்

தற்போது பரவலாகக் கிடைப்பதால் இதை ஓரளவு கட்டுப்படுத்தலாம்.

**virus signature : நச்சுநிரல் அறிகுறி** : ஒரு நச்சுநிரலை அடையாளங் காட்டும் கணினிக் குறிமுறை. நச்சுநிரல் எதிர்ப்பு மென்பொருட்கள், பாதிக்கப் பட்ட நிரல்களையும் கோப்புகளையும் கண்டறிய, ஏற்கெனவே அறியப்பட்ட நச்சு நிரல்களின் கணினிக் குறிமுறையைத் தேடிக் கண்டுபிடிக்கின்றன.

**visible page : தோன்றும் பக்கம்; வெளித்தெரி பக்கம்** : கணினி வரைகலையில், திரையில் காட்டப்படும் படிமம். திரைப் படிமங்கள் காட்சி நினைவகத்தில், பக்கம் எனப்படும் பகுதிகளில் எழுதப்படுகின்றன. ஒவ்வொரு பக்கமும் ஒரு திரைக் காட்சியைக் கொண்டுள்ளன.

**VisiCalc : விசிக்கால்க் (மின்னணு விரிதாள் நிரல்)** : பிரபலமான மின்னணு விரிதாள் செயல்முறை. ஒரு திரையில் தரவுகளை மின்னணுத் தாளாக அல்லது இணைப்பு அமைவிடங்களாகக் காட்டுகிறது. இணைப்பில் மாறியல் மதிப்புருக்களின் அமைவிடங்களுக்கு ஒரு பிரிவினையைப் பயன்பாட்டாளர் பயன்படுத்துகிறார்.

**vision recognition : காட்சி அடையாளம்; பார்த்தறிதல்** : கணினிமூலம் படத்தரவுகளைச் செய்முறைப்படுத்தும் முறை. எடுத்துக்காட்டாக: கணினியிலுள்ள செயற்கை அறிவுத்திறன், ஒரு குதிரையின் தொலைக்காட்சி உருக்காட்சியை அடையாளங் கண்டுகொண்டு, அது குதிரை என்று கூறுகிறது. உருக்காட்சிகளை அடையாளங் காண்பது, எந்திரங்களுக்கு மிகச் சிக்கலான செய்முறை.

**visual : புலனாதல்** : ஒரு ஒளிப்படம், வரைபடம், ஓவியம், பட்டியல் அல்லது வரைகலையைப் பயன்படுத்தி தரவு தொடர்பு கொள்ளுதல்.

**visual basic : விசுவல் பேசிக்** : விண்டோஸ் பயன்பாடுகளுக்காக உருவாக்கப்பட்ட மைக்ரோ சாஃப்ட் குவிக்பேசிக்கின் மேம்பட்ட பதிவு. விசுவல் பேசிக் கருவிப் பெட்டியில் இருந்து பயன்பாடுகளுக்குப் பொருள்களை இழுத்து வருவதன்மூலம் விண்டோஸ் பணித் தொகுப்புகள் உருவாக்கப்படுகின்றன.

**Visual Basic editor : விசுவல் பேசிக் தொகுப்பி.**

**Visual Basic For Applications : பயன்பாடுகளுக்கான விசுவல்**

பேசிக் : விண்டோஸ் 95/98 பயன்பாடுகளுக்கு நிரல் எழுதப் பயன்படுத்தப்படும் விசுவல் பேசிக் மொழியின் ஒரு குறுகிய வடிவம். மைக்ரோசாஃப்ட் நிறுவனம் உருவாக்கியுள்ள பல்வேறு பயன்பாடுகளில் உள்ளிணைக்கப்பட்டுள்ளது.

**Visual Basic, Scripting Edition : விசுவல் பேசிக், உரைநிரல் பதிப்பு :** பயன்பாடுகளுக்கான விசுவல்பேசிக் நிரலாக்க மொழியின் ஓர் உட்பிரிவு. இணையம் தொடர்பான நிரலாக்கத்துக்கென உரு வாக்கப்பட்டது. ஜாவா ஸ்கிரிப்ட் போன்றே விசுவல் பேசிக் உரைநிரல் பதிப்பின் கட்டளைகளும் ஒரு ஹெச்டீ எம்எல் ஆவணத்தில் உட் பொதிவாக இருக்கும். இன்டர் நெட் எக்ஸ்புளோரர் வலை உலாவி, இதன் நிரல்களை புரிந்து செயல்படுத்தும். விபி ஸ்கிரிப்ட், விசுவல் பேசிக் ஸ்கிரிப்ட் என்றும் அழைக்கப் படும்.

**Visual C++ : விசுவல் சி++ :** விண்டோஸில் செயல்படக் கூடிய, சி++ நிரலாக்க மொழி யின் பயன்பாட்டு உருவாக்க வடிவம். மைக்ரோ சாஃப்ட் வெளியிடும் விசுவல்ஸ்டுடியோ கூட்டுத் தொகுப்பின் ஓர் அங்கம். காட்சியடிப்படையான நிரலாக்கப் பணிச்சூழலை வழங்குகிறது.

**visual display : காட்சித்திரை :** ஒரு காட்சித்திரையில் படம் அல்லது வரைபடம் காட்டுதல் அல்லது ஒரு வரைவி மூலம் ஒரு வரைபடம் உருவாக்கிக் காட்டுதல் போன்று தரவு களைக் காட்சியாக உருவாக்கிக் காட்டுதல்.

**visual display terminal : புலன் காட்சி முனையம்:** திரையில் விசையிடப்பட்ட உள்ளீடு மற் றும் செயலக வெளியீட்டைக் காட்டும் திறனுள்ள சாதனம்.

**visual display unit : காட்சித் திரையகம்.**

**visual display unit, cathode ray tube : எதிர்மின்வாய் கதிர்க் குழாய் காட்சித் திரையகம்.**

**visualization : பார்க்கும் பொரு ளாக்கல் :** கணினி வரைகலை யில், எண் வடிவில் விளங்கிக் கொள்ள கடினமாக உள்ள போக்குகளை மனிதர்கள் கண்டு கொள்ள அனுமதிக்க எண் முறை தரவுகளை படவடிவ மாக மாற்றுதல். கொள்கை யளவிலும், நடைமுறையில் ஆராய்ச்சி சூழ்நிலைகளிலும் இது குறிப்பாக பயன்படுத்தப் படுகிறது.

**Visual J++ : விசுவல் ஜே++ :** மைக்ரோசாஃப்டின் காட்சி அடிப்படையிலான ஜாவா நிரலாக்கப் பணிச் சூழல். ஜாவா மொழியில் பயன்பாடுகளையும் குறுநிரல்களையும் உருவாக்கப் பயன்படுகிறது. மைக்ரோ சாஃப்ட் விசுவல் ஸ்டுடியோ வின் ஓர் அங்கம்.

**visual page : காட்சிப் பக்கம்; காணும் பக்கம் :** ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட சேமித்து வைக்கப்பட்ட திரைக்காட்சிக் கோப்புகள் அடங்கிய காட்சி உருவரை.

**visual programming : காட்சி நிலை நிரலாக்கம் :** நீண்ட கட்டளைத் தொகுதிகளை எழுதிச் செல்வதற்குப் பதில், பட்டித் தேர்வுகள், பொத்தான் கள், சின்னங்கள் மற்றும் பிற முன்வரையறுக்கப்பட்ட வழி முறைகளிலிருந்து அடிப்படை நிரலாக்கப் பொருள்கூறுகளைத் தேர்வுசெய்து பயன்பாடுகளை உருவாக்க வகைசெய்யும் ஒரு நிரலாக்க வழிமுறை.

**visual scanner : காட்சி வருடி.**

**visual symbols : காட்சிக் குறியீடுகள்.**

**visual table of contents : காணும் உள்ளடக்கப் பட்டியல் :** ஒரு நிறுவனத்துக்கு உள்ளேயோ அல்லது ஒரு குறிப்பிட்ட நிரல் தொடரிலோ தரவு ஓட்டத்தின் விளக்கங்களை வரைகலை வடிவில் காட்டும் ஒரு வரை படம். வரைபடத்தின் மேற் பகுதியில் காட்டுவதைவிட அடிப்பகுதியில் அதிகமான தரவுகள் காட்டப்படும். VTC என்று சுருக்கப்படும்.

**VL bus : விஎல் பாட்டை :** வேசா (VESA) உள்ளமை பாட்டை என்பதன் சுருக்கம். வீடியோ எலெக்ட்ரானிக்ஸ் ஸ்டேண்டர்டு அசோஷி யேஷன் நிறுவனம் அறிமுகப் படுத்திய உள்ளமை பாட்டைக் கட்டுமானத்தில் ஒருவகை. இதன்படி ஒரு பீசி தாய்ப் பலகையில் மூன்று விஎல் பாட்டை செருகுவாய்களை வைத்துக்கொள்ள முடியும். சிபீயு-வின் துணையின்றி நுண்ணறிவுத் தகவி அட்டைகள் தாமே சில செயல்பாடுகளை நிறைவேற்றும், பஸ் மாஸ்டரிங் இதில் இயலும். ஒரு விஎல் பாட்டைச் செருகுவாய் வழக்க மான இணைப்பியுடன் கூடு தலாக 16-பிட் நுண்தடக் கட்டு மான இணைப்பியைக் (Micro Channel Architecture Connector) கொண்டிருக்கும். ஆனால், தயாரிப்பாளரே இதனைத் தாய்ப்பலகையில் உள்ளிணைத்

திருக்க வேண்டும். வழக்கமான இணைப்பிகளை விஎல் பாட்டைச் செருகுவாய்களாகப் பயன்படுத்த முடியாது. விஎல் பாட்டைத் தகவி அல்லாத அட்டையை ஒரு விஎல் பாட்டைச் செருகுவாயில் பயன் படுத்த முடியும். ஆனால் அது உள்ளமை பாட்டையைப் பயன் படுத்த முடியாது. எனவே ஒரு சாதாரண பாட்டைச் செருகு வாய் போலவேதான் செயல் படும்.

**VLF radiation : விஎல்எஃப் கதிர் வீச்சு :** மிகக் குறைந்த அலை வரிசைக் கதிர்வீச்சு (Very-low Frequency Radiation) என்பதன் சுருக்கம். ஏறத்தாழ 300 ஹெர்ட்ஸ் முதல் 30 கிலோ ஹெர்ட்ஸ் வரம்பெல்லைக்குள் உள்ள அலைவரிசைகளில் நிகழும் மின்காந்தக் கதிர்வீச்சு. வானலைக் கதிர்வீச்சு என்றும் கூறுவர். கணினித் திரை யகங்கள் இத்தகைய கதிர் வீச்சை உமிழ்கின்றன. கணினித் திரையகம் இத்துணை அளவு தான் விஎல்எஃப் கதிர்வீச்சை உமிழ வேண்டும் என்கிற வரை யறையினை எம்பீஆர் II என்னும் தன்னார்வத் தர வரையறை உள்ளது.

**VLIW : விஎல்ஐடபிள்யூ :** மிக நீண்ட நிரல் சொல் என்ற பொருளைக் குறிக்கும் Very Long Instruction Word என்ற சொல் தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். சிறுசிறு எளிய நிரல்களை ஒன்றுசேர்த்து நீண்ட ஒற்றை நிரல் சொல்லாக உருவாக்கும் ஒருவகைக் கட்டுமானம். இந்நீண்ட நிரல் சொல் பல பதிவகங்களை எடுத்துக் கொள்கின்றது.

**VM : விஎம் :** மெய்நிகர் பொறி எனப்பொருள்படும் Virtual Machine என்ற சொல்தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். மெய்நிகர் பொறிச் செயல் திறனை வழங்கும் ஐபிஎம்மின் பெருமுகக் கணினிகளுக்கான இயக்க முறைமை.

**.vn : .விஎன் :** ஓர் இணைய தள முகவரி வியட்நாம் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**vocabulary : சொற்களஞ்சியம்; சொல் வளம் :** ஒரு குறிப்பிட்ட கணினிக்காக ஒரு செயல் முறையை எழுதுவதற்குப் பயன்படுத்தப்படும் குறியீடுகள் அல்லது நிரல்கள்.

**vocal sounds : பேச்சொலிகள்.**

**voder : ஓடர் :** பேச்சு ஒருங் கிணைப்பி.

**voder-speech synthesizer :** பேச்சுருவாக்கியின் பெயர்.

**voice answer back :** குரல் பதிலுரை; குரல் மறுமொழி : கட்டளைகள், வினவல்களுக்குப் பதிலுரையாக ஒரு கணினி, ஏற்கெனவே ஒலிப் பதிவு செய்யப்பட்ட செய்திகளைப் பயன்படுத்துதல்.

**voice-capable modem :** குரலறி திறனுள்ள இணக்கி : தன்னுடைய தரவு கையாளும் செயல்பாடுகளோடு குரல்வழிச் செய்திகளையும் ஏற்கும் திறனுள்ள ஒரு இணக்கி.

**voice channel :** குரல் வழித் தடம் : மனிதக் குரலைக் கொண்டு செல்லும் துணை வழித்தடம் அல்லது ஒளி பரப்பு வழித்தடம்.

**voice coil :** குரல் சுருளை : வேகமாக அணுகவும் நிலை வட்டு இயக்கி படி/எழுது முனை நுட்பம். வழக்கமான இயக்கிகளைவிட இது அதிகம் செலவாகக்கூடியது. ஒலி பெருக்கியில் உள்ளதைப் போன்ற தொழில் நுட்பமே இதிலும் பயன்படுத்தப்படுகிறது. கொடுக்கும் சமிக்கையின் சக்தியைப் பொறுத்து, அந்த சுருளை ஒரு குறிப்பிட்ட தூரம் நகர்ந்து தேவைப்படும் தரவு சேமிப்பு வழித்தடத்தின் மேல் சரியாக நிற்கும்.

**voice communications :** குரல் செய்தித் தொடர்பு; பேச்சுத் தொடர்பு : மனிதரின் கேள்வி வீச்செல்லைக்குள் ஒலியை அனுப்புதல். குரல் அல்லது ஒலியை ஒரு ஒத்த சொல் அல்லது இலக்கச் சைகைகளாக அனுப்பலாம்.

**voice frequencies :** குரல் அலை வரிசைகள் : நாம் பேசும்போது, நமது குரல் நாண்கள் அதிர்ந்து ஓசையை உருவாக்கி ஒரே அளவில் வாய்க்கும், தொண்டைக்கும் மூக்குக்கும் தொண்டைக் குழி வழியாகப் போய்ச் சேர்கிறது. இதில் ஏற்படும் ஒலிகள் பேச விரும்பும் ஒலியின் தன்மைகளுக்கேற்ப ஒலி அலைகளை ஏற்படுத்துகின்றன. உயிரெழுத்துகளை ஒலிக்க அதிக சக்தி தேவைப்படுகிறது. மெய்யெழுத்துகளுக்கு உதடுகள், நாக்கு, பற்கள் செயல்படுவதால் குறைந்த சக்தியே போதுமானது என்பதுடன் அதிக அதிர்வுகளும் ஏற்படுத்துகின்றன. இதன் அலைவரிசைகள் 100 முதல் 2,000 ஹெர்ட்சுகளாகும். குரலின் தொனியானது குரல் நாண்களின் அடிப்படை அலை வரிசைகளைப் பொறுத்தது. இது பெண்களுக்கு

200 முதல் 1,000 ஹெர்ட்சுகளாக வும், ஆண்களுக்கு 100 முதல் 500 ஆகவும் இருக்கும்.

**voice grade :** குரல் தரம் : வழக்கமான தொலைக்காட்சி இணைப்புகளில் பயன்படுத்தப் படும் கம்பிகளை கணினி இணைப்புகளுக்குப் பயன் படுத்துதல். பெரும்பாலான தொலைத்தொடர்புகளுக்கு இது இன்றியமையாதது. இது 300 முதல் 3,000 வரையிலான அலை வரிசைகளில் தரவுகளை 9,600 இணைப்புகளில் அனுப்ப அனு மதிக்கிறது. இது, அகல் இணைப்பு, குறு இணைப்பு என்பவற்றிலிருந்து வேறு பட்டது.

**voice-grade channel :** குரல்-தரத் தடம் : ஒரு தொலைபேசி இணைப்பைப் போன்ற தகவல் தொடர்புத் தடம். 300-3000 ஹெர்ட்ஸ் கேட்பொலி அலைக் கற்றை கொண்ட, குரல் தர வுவை அனுப்புவதற்கு ஏற்றது. வினாடிக்கு 33 கிலோபிட் வரை தொலைநகல், தொடர்முறை, இலக்கமுறைத் தரவுகளை அனுப் பிட ஒரு குரல்-தரத் தடத்தைப் பயன்படுத்திக் கொள்ள முடியும்.

**voice input :** குரல் உட்பாடு; குரல் உள்ளீடு; பேச்சாணை; குரலாணை : ஒரு கணினியில் மனிதக் குரலை உட்பாடாகப் பயன்படுத்த அனுமதிக்கும் உட்பாட்டுச் சாதனம்.

**voice mail :** குரல் அஞ்சல்; பேச்சு அஞ்சல் : தொலை பேசியில் பேசப்படும் செய்தி கள், இலக்க வடிவில் மாற்றப் பட்டு, கணினியின் நினை வகத்தில் சேமித்து வைக்கப்படு கின்றன. செய்திகள் வர வழைக்கப்படும்போது, அவை மீண்டும் குரல் வடிவுக்கு மாற்றப்படும்.

**voice messaging :** குரல் செய்தியளித்தல் : மின்னஞ்சலுக்கு மாற்றாக குரல் அஞ்சலைப் பயன்படுத்தல். பெறுபவர் இல்லை என்பதற் காக அல்லாமல் குரல் செய்திகள் வேண்டுமென்றே பதிவு செய்யப்படுகிறது.

**voice-net :** குரல்பிணையம் : இணையத்தில் நடைபெறும் தொலைபேசி வழியான தரவு பரிமாற்றத்தைக் குறிக்கும் சொல்தொடர். பெரும்பாலும், மின்னஞ்சல் ஒப்பத்தின் முன் பாக இடம்பெறுவது.

**voice output :** குரல் வெளிப் பாடு : கணினி, பேசும் மொழி மூலம் வெளிப்பாட்டினை வழங்க அனுமதிக்கிற ஒலி மறுமொழிச் சாதனம். இது

கணினி சார்ந்த நிரல், தன் சேவை எரிவாயு நிலையங்கள் போன்ற பல்வேறு பயன்பாடு களுக்கு உதவுகிறது.

**voice processing** : குரல் செயலாக்கம் : குரலைக் கணினி மூலம் கையாளுதல். இதில் குரல் சேமிப்பும் அனுப்புதலும், குரல் பதிலளிப்பு, குரல் கண்டறிதல் மற்றும் சொற் பகுதி முதல் பேச்சுத் தொழில் நுட்பம்வரை காணப்படும்.

**voice recognition** : குரல் கண்டறிதல் : மனிதக் குரலைக் கண்டுகொள்ள கணினி வன் பொருள்/மென்பொருளுக்குத் திறனளிக்கும் ஓரளவு புதிய தொழில்நுட்பம். கணினியில் சேர்ப்பதற்கேற்ற மின்னணு வடிவில் பேசப்படும் தரவு களை நேரடியாக மாற்றுதல்.

**voice recognition software** : குரலறி மென்பொருள்.

**voice recognition system** : குரல் காண் பொறியமைவு ; குரலறி அமைப்பு : பயன்பாட்டாளரின் குரலையும் சொற்களையும் அடையாளங்கண்டு புரிந்து கொள்ளக்கூடிய பொறியமைவு.

**voice recorder** : குரல் பதிப்பி.

**voice response** : குரல் மறு மொழி : பேச்சு வடிவிலான கணினி வெளிப்பாடு.

**voice synthesis** : குரல் ஒருங் கிணைப்பு : கணினியின் நினை வகத்தில் சேமித்து வைக்கப் பட்டுள்ள ஒலித் தோரணிகளை, ஒலிபெருக்கிமூலம் ஒலிபரப்பக் கூடிய சொற்களாக ஒருங்கிணைக் கும் கணினியின் திறம்பாடு.

**voice synthesizer** : குரல் இணைப்பாக்கி.

**void** : அற்றநிலை.

**volatile** : அழியக்கூடிய, மறையக்கூடிய.

**volatile file** : விரைவுக் கோப்பு; மாற்ற மிகு கோப்பு : புதிய புதிய பதிவேடுகளைப் புகுத்துவதும், பழைய பதிவேடுகளை நீக்கு வதும் அதிவேகத்தில் நடை பெறும் ஒரு கோப்பு. இதில் அணுகுநேரம் மாறக்கூடியது.

**volatile memory** : நிலையா நினைவகம்; அழியும் நினை வகம்; மறையும் நினைவறை : கணினியின் அடிப்படை நினை வகம். மின்சாரம் நிறுத்தப் பட்டால் தன்னுடைய தரவு களை எல்லாம் கணினி இழந்து விடும் என்பதை உணர்த்தும் சொல் என்பதால் இச்சொல் சரியாகவே அமைந்துள்ளது.

**volatile storage** : நிலையா சேமிப்பு; விரைவுச் சேமிப்பகம் : பொறியமைவிலிருந்து மின் விசை நீக்கப்பட்டால் உள்ளடக்

கங்களை இழந்துவிடக்கூடிய சேமிப்புச் சாதனம். இது விரைவற்ற சேமிப்பகம் என்பதிலிருந்து வேறுபட்டது.

**volatility : விரைவுத் திறன் :** ஒரு கோப்பு செய்முறைப்படுத்தப் படும்போது, பதிவேடுகள் சேர்க்கப்படுகிற அல்லது நீக்கப் படுகிற வேக வீதம். ஒரு தரவுத் தளத்தை வடிவமைப்பதில் இது முக்கியமான நிலையளவுரு ஆகும்.

**volt : வோல்ட் :** இரு முனைகளுக்கிடையேயான மின்னூட்ட வேறுபாடு அல்லது மின்னியக்கச் சக்தி. 1 கூலம்ப் மின்னூட்டம், 1 ஜூல் வேலையை முடிக்கும் முனைகளின் மின்னியக்க அளவு 1 வோல்ட் எனக் கணக்கிடப்படுகிறது. (அல்லது) 1 ஓம் மின் தடுப்பிமீது, பாயும் 1 ஆம்பியர் மின்னோட்டத்தை வழங்கும் மின்னியக்க வேறுபாடு.

**voltage : மின்னழுத்தம் :** மின் விசையின் அழுத்தம். ஒரு கணினி மின்சுற்று வழியில் உள்ள உயர் மின்னழுத்தம் 1 என்பதாலும், குறைந்த மின்னழுத்தம் ' 0 ' என்பதாலும் குறிக்கப்படுகிறது.

**voltage regulator : மின்னழுத்த முறைப்படுத்தி :** வெளிப்பாட்டு மின்னழுத்தத்தை முன் தீர் மானித்த ஓர் அளவில் வைத்திருக்கிற அல்லது முந்தையத் தீர்மானத்தின்படி மாற்றுகிற மின்சுற்றுவழி. இயல்பான உட்பாட்டு மின்னழுத்த மாறுதல் எவ்வாறிருந்தாலும் இந்த மாற்றம் நடைபெறுகிறது.



மின்னழுத்த முறைப்படுத்தி

**volts alternating current : வோல்ட் மாறுநிலை மின்னோட்டம் :** ஒரு மின்சார சமிக்கையின் உச்சம் முதல் உச்சம் வரையிலான மின்னழுத்த வீச்சுகள் அளவீடு.

**volume : தொகுதி; பாகம்/ஒலியளவு :** 1. கணினித் தரவுகளைச் சேமித்து வைக்கும் ஒரு வட்டு அல்லது நாடா. சிலவேளை

களில் மிகப்பரந்த நிலைவட்டு கள் பல்வேறு பாகங்களாகப் பிரிக்கப்படும். ஒவ்வொரு பாகமும் ஒரு தனி வட்டாகவே கருதப்படும். 2. கேட்பொலி சமிக்கையின் ஒலியளவு.

**volume control** : ஒலியளவுக் கட்டுப்பாடு.

**volume lable** : வட்டுப் பெயர் : ஒரு வட்டுக்கு அளிக்கப்படும் பெயர் (பொதுவாக விரும்பினால் மட்டும்).

**volume serial number** : தொகுதி வரிசை எண் : ஒரு வட்டு அல்லது நாடாவை அடையாளம் காணப் பயன்படும் வரிசை எண். தேவையெனில் வைத்துக் கொள்ளலாம். எம்எஸ் டாஸ் முறைமையில் தொகுதி வரிசை எண் என்று குறிப்பிடப்படுகிறது. ஆப்பிள் மெக்கின் டோஷ் கணினிகளில் தொகுதிக் குறிப்பு எண் (Volume Reference Number) எனப்படுகிறது. தொகுதி வரிசை எண் என்பது தொகுதிச் சிட்டை (volume label), தொகுதிப் பெயர் என்பதிலிருந்து வேறுபட்டது.

**volume table of contents** : வட்டு உள்ளடக்கங்கள் : ஆப்பிள் டாசின் கீழ்நிலை வட்டுகளுக்கான கோப்பு ஒதுக்கும் பட்டியல்.

**VON** : வோன் : இணையத்தில் குரல் எனப் பொருள்படும். Voice on Net என்பதன் தலைப்பெழுத்துக் குறும்பெயர். இணையத்தின் வழியாக நிகழ்நேரக் குரல் மற்றும் ஒளிக் காட்சித் தரவுகளை அனுப்புவதற்கான வன்பொருள், மென்பொருள் தொழில்நுட்பத்தின் ஒரு பரந்த வகைப்பாடு. இச்சொல்தொடரை உருவாக்கியவர் ஜெஃப் புல்வர் (Jeff Pulver). வான் கூட்டணி என்னும் அமைப்பை உருவாக்கியவர். வான் தொழில்நுட்பத்தை வரைமுறைப் படுத்துவதை எதிர்த்தார். வான் தொழில்நுட்பத்தை பொது மக்களிடம் கொண்டு செல்ல ஆர்வம் காட்டினார்.

**Von Neumann Architecture** : வான் நியூமன் கட்டுமானம் : சிறந்த கணிதவியல் அறிஞரான ஜான்வான் நியூமன் உருவாக்கிய, கணினி அமைப்பின் மிகப் பொதுவான கட்டமைப்பு. நிரல் என்னும் கருத்துரு பயன்படுத்தப்பட்டது. நிரலை நிரந்தரமாகக் கணினியில் சேமித்து வைத்துக் கொண்டு கையாள முடியும். பொறி அடிப்படையிலான நிரல்கள் மூலம் அதனை மாற்றியமைக்க முடியும். வரிசைமுறையிலான

செயலாக்கம் இக்கட்டுமானத்தின் சிறப்புக்கூறு. வரிசை முறை நிரல்களினால் ஏற்படும் குறைபாடுகளைப் போக்க பிற்காலத்தில் இணைநிலை கட்டுமானங்கள் உருவாயின.

**von neumann bottleneck :** வான் நியூமன் முட்டுக்கட்டை : வான் நியூமன் எந்திரத்தின் வேகத் தடைக்கான காரணங்களைக் குறிப்பிடுகிறது. அவை: 1. ஒரே வழித்தடத்தில் உள்ள மின் சுற்றுகள் அடிப்படை சேமிப் பகத்திலிருந்து கட்டுப்பாட்டுப் பிரிவுக்கு நிரல்களை எடுத்துச் செல்கின்றன. 2. ஒரே தரவு பாதையில் அடிப்படை சேமிப் பகத்திற்கும், கணித தருக்கப் பிரிவுக்கும் மின்சுற்றுகள் செயல்படுகின்றன.

**Von Neumann, John (1903-1957) :** வான் நியூமன், ஜான் (1903-1957) : இந்நூற்றாண்டின் தலைசிறந்த கணிதமேதைகளில் ஒருவர். முதலாவது மின்னணுக் கணினிகளில் ஒன்றை உருவாக்கியவர். இவர் சேமிப்புச் செயல்முறைக் கோட்பாட்டையும், விளையாட்டுக் கோட்பாட்டையும் உருவாக்கினார்.

**von neumann machine :** வான் நியூமன் எந்திரம் : வான் நியூமன் 1945இல் ஓர் அறிக்கையில் இந்த எந்திரம் பற்றி விவரித்துள்ளார். இது, ஒரு மின்னணுக் கணிப்புச் சாதனத்தின் தருக்கமுறை வடிவமைப்பாகும். சேமிப்புச் செயல் முறைக் கோட்பாடு இந்த எந்திரன் சிறப்புக் கூறாகும்.

**VPD :** விபீடி : மெய்நிகர் அச்சுப் பொறிச் சாதன இயக்கி என்று பொருள்படும் Virtual Printer Device Driver என்ற சொல் தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**VPS :** விபீஎஸ் : 'Vector Per Second' என்பதன் குறும்பெயர். நெறியம் (Vector) அல்லது வரிசை செயலகத்தின் வேகத்தை அளக்கப் பயன்படுத்தப்படுவது.

**VRC :** விஆர்சி : 'செங்குத்து மிகைச் சரிபார்ப்பு' என்று பொருள்படும் 'Vertical Redundancy Check' என்பதன் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**VRML :** வீஆர்எம்எல் : மெய்நிகர் நடப்பு மாதிரிய மொழி என்று பொருள்படும் Virtual Reality Modelling Language என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். சில ஒளிக்காட்சி விளையாட்டுகளில் இருப்பதுபோன்ற முப்பரிமாண ஊடாடு வலை வரைகலைக்கான காட்சி

விளக்க மொழி. பயனாளர், வரைகலைப் படிமங்களுடனும், பொருட்களுடனும் சேர்ந்து நடமாடலாம். 1994இல் மார்க் பெஸ்ஸி, டோனி பாரிசின் (Mark Pesce And Tony Parisin) ஆகியோரால் உருவாக்கப்பட்டது. சிலிக்கான் கிராஃபிக்ஸ் நிறுவன இன்வென்டார் கோப்பு வடிவாக்கத்தின் உட்பிரிவாகும் இது. விஆர்எம்எல் கோப்புகளை ஓர் உரைத் தொகுப்பியில் எழுத முடியும். விஆர்எம்எல் கோப்புகள் ஒரு ஹெச்டீடீபீ வழங்கனில் சேமிக்கப்படுகின்றன. இவற்றுக்கான தொடுப் புகளை ஒரு ஹெச்டீஎம்எல் ஆவணத்தில் சேர்ப்பதன்மூலம் பயனாளர் இக்கோப்புகளை நேரடியாக அணுக முடியும்.

**VT-52, TV-100, VT-200 : விடீ-52, விடீ-100, விடீ-200 :** டிஜிட்டல் எக்யூப்மென்ட் கார்ப்பரேஷன் தயாரித்து வெளியிட்ட முனையங்களின் மாதிரி எண்கள். செல்வாக்குப் பெற்ற கட்டுப்பாட்டுக் குறிமுறைகள் இந்த முனையங்களில் பயன்படுத்தப்பட்டன. ஒரு நுண் கணினியை இதுபோன்ற முனையங்களாகச் செயல்படுமாறு மாற்றியமைக்க அதற்குரிய மென்பொருள் பயன்படுத்தப்பட வேண்டும்.

**VTD : விடீடி :** மெய்நிகர் நேரங்காட்டிச் சாதன இயக்கி என்று பொருள்தரும் Virtual Timer Device Driver என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர்.

**.vt.us : .விடீ.யுஎஸ் :** ஓர் இணைய தள முகவரி அமெரிக்க நாட்டு வெர்மான்ட் மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.vu : .வியு :** ஓர் இணைய தள முகவரி வானுவாட்டு நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**vulnerability : வடுப்படும் நிலை :** பாதுகாப்பு இடர்ப்பாடுகளைத் தோற்றுவிக்கக் கூடியதாக ஒரு கணினியிலுள்ள பலவீனம்.

# W

**wafer** : மென்தகட்டுச் சிப்பு; சீவல் : மூன்று அல்லது நான்கு அங்குலம் கணமுடைய வட்ட வடிவ தகடு. இதில் பல ஒருங் கிணைந்த மின் சுற்று வழிகள் உருவாக்கப்படுகின்றன. பின்னர் தனித்தனிச் சிப்பு களாகப் பகுக்கப்படுகின்றன.

**wafer processing** : மென்தகடு செயலாக்கம் : மெல்லிய தகடு களாலான அரைக் கடத்திப் பொருளைச் செயலாக்கம் செய்து மின்சுற்றுகளை உரு வாக்குவது. செயலாக்கத் திற்குப்பின் தகட்டினை வார்ப் புரு படிவம் (die) அல்லது சிப்பு கள் என்று தனியாக்கப்படும்.

**wafer-scale integration** : மென் தகட்டு ஒருங்கிணைப்பு : ஒற்றை மென்தகட்டில் பல் வேறு நுண்மின்சுற்றுகளை ஒருங்கிணைத்து ஒரே மின் சுற்றாக கட்டுருவாக்குதல்.

**wafer sort** : தகடு பிரிப்பு : ஒரு மென் தகட்டில் எந்த 'டைஸ்' ஏற்றுக் கொள்ளக்கூடியது என்பதைச் சோதித்தறிதல்.

**WAIS** : வெய்ஸ் : விரிபரப்பு தகவல் வழங்கன் என்று பொருள் படும் Wide Area Information Server என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். இணையத்தில் ஆவணங்களைத் தேடி எடுப்பதற்காகப் பயன் படுத்தப்படும் யூனிக்ஸ் அடிப் படையிலான மென்பொருள். இணையத்தில் குவிந்து கிடக் கும் ஏராளமான ஆவணங்கள் கருப்பொருள் வாரியாக வகைப் படுத்தப்பட்டு அவற்றின், இருப்பிட முகவரிகள் 400-க்கு மேற்பட்ட வெய்ஸ் வழங்கன் களில் சேமித்து வைக்கப் பட்டுள்ளன. குறிப்பிட்ட திறவுச்சொல் அடிப்படையில் அவற்றுள் நமக்குத் தேவையான தகவலைத் தேடிப் பெற முடியும். திங்கிங்மெஷின் கார்ப்பரேஷன், ஆப்பிள் கம்ப் யூட்டர், டோவ்ஜோன்ஸ் ஆகி யோர் இணைந்து வெய்ஸை உருவாக்கினர். இயற்கை மொழி அடிப்படையிலான வினவல்களைப் பரிசீலிக்க இவர்கள் இஸட் 39.50 தர வரையறைகளைப் பயன் படுத்தினர். தனித்த வலைத் தளம் ஒன்றிலும் வெய்ஸ் நிரலை ஒரு தேடுபொறியாகப் பயன்படுத்த முடியும். சில வேளைகளில் வெய்ஸ் மூலம் பெறப்படும் ஆவணப்

பட்டியலில் தேவையற்ற தரவுகளும் இடம் பெறுவதுண்டு. வெய்ஸ் வழங்கனில் தரவுவைத் தேட பயனாளர்கள் வெய்ஸ் கிளையன் மென்பொருளைப் பயன்படுத்தவேண்டும்.

**waisindex : வெய்ஸ் சுட்டுக் குறிப்பு :** 1. வெய்ஸ் (WAIS-Wide Area Information Server) வினவல் மென்பொருள் மூலமாக, உரைக் கோப்புகளை அணுகுவதற்கு சுட்டுக்குறிப்பு பட்டியலை உருவாக்கும் யூனிக்ஸ் பயன் கூறு. 2. வெய்ஸ் வழங்களை அணுகுவதற்கான ஒரு யூஆர்எல் முகவரி wais://hostport/database என்பதுபோல் அமையும்.

**wait : காத்திரு :** ஒரு டிபேஸ் கட்டளை. பயனாளர் விசையை அழுத்தினால் ஒழிய நிரல் தொடர் இயக்கப்படுவது தள்ளிப்போகச் செய்வது. அதன் விளைவான விசைப்பதிவை குறிப்பிட்ட மாறிலியில் எழுத்துச் சரமாக சேமிக்கப்படுகிறது.

**wait state : காத்திருப்பு நிலை ; காத்திருக்கும் நிலை :** மையச் செயலகம் நிரல்களை நிறைவேற்றாமல், வாளாதிருக்கும் நிலை.

**wait time : காத்திருப்பு நேரம் :** மற்ற நடவடிக்கைகள் முடிவுறுவதற்காகக் காத்திருக்கும் ஒரு செயல்முறை அல்லது கணினி.

**Wallet PC : பணப்பைக் கணினி :** சட்டைப்பையில் வைத்துக் கொள்ளும் அளவுள்ள சிறிய அட்டை வடிவிலான கணினி. பணப்பை போன்றே பயன்பாடு உடையது. இதை வைத்துள்ள நபரின் மெய்நிகர் (virtual) அடையாளத்தைக் கொண்டிருக்கும். மேலும், பணம், பற்று அட்டைகள் மற்றும் பிற இன்றியமையாத் தகவல்களையும் கொண்டிருக்கும். நடமாடும் தகவல் மூலமாகவும் மற்றும் தகவல் தொடர்புக் கருவியாகவும் விளங்கும். இதுபோன்ற சாதனம், இன்னும் பயன்பாட்டுக்கு வரவில்லை. தயாரிப்பில் உள்ளது.

**wall paper : சுவர் தாள் :** சாளரச் (window) சொல். சாளரத்துக்குப் பின்னுள்ள அமைப்பைக் குறிப்பிடுவது.

**walk through : உலா; ஊடு நடை; உலா வருதல்.**

**WAMI : வாமி :** உலக மருத்துவத் தகவலியல் சங்கம் என்று பொருள்படும் World Association for Medical Informatics என்பதன் தலைப்பெழுத்துச் சுருக்கம்.

**wand : வருடுகோல்; உள்ளிடு கோல்; எழுத்தாணி :** கணினியில்

தரவு உள்ளீட்டுக்காகப் பயன் படுத்தப்படுகின்ற பேனா வடிவிலான சாதனம். வரை கலைக்கான வரைபட்டிகை எழுத்தாணி அல்லது பட்டைக் குறி படிப்பிகள்போன்ற வருடு கருவிகளை இவ்வகையில் சேர்க்கலாம்.

**wanderer :** வலைசுற்றி : வைய விரிவலையில் அடிக்கடி உலாவிவரும் பயனாளர். இவர்களில் பெரும்பாலோர் தாம் பார்வையிட்ட தரவுகளை வகைப்படுத்தி வைப்பதுண்டு.

**Wang Labor Tories :** வேங் லேபர் டோரிஸ் : அமெரிக்காவில் கணினிகளை உற்பத்தி செய்யும் புகழ்பெற்ற ஒரு நிறுவனம்.

**wangnet :** வேங்நெட் : வேங் நிறுவனத்தின் அகலத் தகவல் தொடர்பு வழித்தடம் கொண்ட குறும்பரப்புப் பிணையம் (LAN). இது தகவல்கள், குரல் மற்றும் ஒளியையும் கையாள்கிறது.

**wang writer :** வேங் ரைட்டர் : வேங் ஆய்வுக்கூடங்களில் உருவாக்கப்பட்ட சொல் செயலாக்கத் தொகுப்புகளில் ஒன்று.

**warm boot :** இதமான உயிரூட்டம்; உடன் தொடங்கல் : கணினியில் மின்விசை ஓடிக் கொண்டிருக்கும்போதும், மின் விசை நிறுத்தப்பட்டு விட்டதாகக் கணினி கருதும்படி செய்து, மீண்டும் உயிரூட்டும் செயல்முறை.

**warm link :** இதமான இணைப்பு : இரண்டு தரவு கோப்புகளுக்கு இடையிலான மென்பொருள் இணைப்பு. ஒரு கோப்பு புதுப்பிக்கப்படும்போது மற்றொன்றும் (தானாகவே) புதுப்பிக்கப்படும்.

**warm start :** இதமான தொடக்கம் ; உடன் தொடங்குதல் : இதமான உயிரூட்டம் என்பதும் இதுவும் ஒன்றே

**warm- up time :** ஆயத்த நேரம் : ஒரு சாதனத்திற்கு விசையேற்றுவதற்கும், அதன் வெளிப்பாட்டு எழுத்தாக்கப் பயன்பாடு தொடங்குவதற்குமிடையிலான இடைவேளை.

**warnier- orrchart :** வார்னியர் - ஆர் விளக்கப்படம் : பொதுவான செயலாக்கங்களை ஒரு புறத்திலும் (வழக்கமாக இடது புறத்தில்) மேலும் மேம்பட்ட தரவுகளை வலதுபுறத்திலும் காட்டும் விளக்கப்படம். வார்னியர்-ஆர் விளக்கப் படத்தினை 1970-களில் ஜீன் டொமினிக் வார்னியர் என் பவரும், கென்ஆர் என்பவரும் சேர்ந்து கண்டுபிடித்தார்கள்.

ஒரு குறிப்பிட்ட செயல்முறை அல்லது வகை வேறொன்றைச் சார்ந்திருப்பதைக் காட்டும் நிரல் தொடர் வடிவமைப்பில் இது பயன்படுத்தப்படுகிறது.

**warnier-orr diagram :** வார்னியர்-ஆர் வரைபடம் : அமைப்பு ஆய்வு மற்றும் வடிவமைப்புக்கு மென்பொருள் பொறியியல் துறையில் பயன்படுத்தப் படும் வரைகலை வரைபட தொழில் நுட்பம்.

**warning box :** எச்சரிக்கை பெட்டி : விண்டோஸ் நிரல் தொடரில் அதிகமாகப் பயன் படுத்தப்படும் பெட்டி வடிவிலான எச்சரிக்கை செய்தி.

**warning message :** எச்சரிக்கைச் செய்தி : கடுமையல்லாத ஒரு பிழை குறித்தப் பயன்பாட்டாளருக்கு எச்சரிக்கை விடுப்பதற்கு ஒரு தொகுப்பி மூலம் உருவாக்கப்படும் பிழை சுட்டும் செய்தி.

**warranty :** உத்திரவாதம்.

**watch point :** கவனப் பகுதி : பிழை நீக்குவதற்காக ஒரு நிரல் தொடரில் நுழைக்கப்படும் ஒரு நிலை. கவனப் பகுதிகள் ஒரு குறிப்பிட்ட நினைவகப் பகுதியின் உள்ளடக்கங்களைக் காட்டும்.

**water mark :** நீர்வரிக் குறி; நீர்க் குறி.

**WATFOR :** வாட்ஃபார் : கனடாவில் ஒன்டாரியோவிலுள்ள வாட்டர்லூ பல்கலைக்கழகத்தில் உருவாக்கப்பட்ட 'FORTRAN'-இன் பதிப்பு. 'வாட்ஃபிவ்' (watfiv) என்பது வாட்ஃபார் என்பதன் திருத்தப் பதிப்பு.

**Watson, Thomas J. Jr :** வாட்சன், தாமஸ் ஜே (இளையவர்) : கணினித் தொழிலில் IBM கழகத்தை முன்னணி நிலைக்குக் கொண்டு வந்தவர்.

**Watson, Thomas J. Sr (1874-1956) :** வாட்சன், தாமஸ் ஜே மூத்தவர்; (1874-1956) : IBM கழகத்தின் வழிகாட்டி. தலைசிறந்த விற்பனையாளர். 1952 வரை IBM தலைவராக இருந்தவர். சிந்தனை செய்வதே இவரது குறிக்கோளாக இருந்தது. எனினும் இலக்கமுறைக் கணினிகளுக்கு அதிகம் கிராக்கி இருக்கும் என்று இவர் கருதவில்லை.

**watt :** வாட் : ஒரு வினாடியில் ஒரு ஜூல் திறனை (energy) செலவழிப்பதற்கு இணையான மின்சக்தியின் அளவு. ஒரு மின்சாரச் சுற்றின் சக்தி, அந்த மின்சுற்றிலுள்ள மின்னூட்டம், அதில் பாய்கின்ற மின்னோட்டம்

ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டது.

E - மின்னூட்டம்
I - மின்னோட்டம்
R - மின்தடை
P - மின்சக்தி (வாட்டில்)

எனில்,

$$P = I \times E = I^2 \times R = E^2/R$$

**.wav** : .வேவ் : அலைவடிவ கேட்பொலி வடிவாக்கத்தில் பதிவு செய்துள்ள ஒலிக் கோப்புகளை அடையாளங்காட்டும் வகைப்பெயர் (file extension).

**wave** : அலை : கதிரியக்க சக்தியின் வடிவம். அனைத்து வானொலி சமிக்கைகளும், ஒளிக்கதிர்கள், எக்ஸ்- கதிர்கள் மற்றும் அண்டக் கதிர்களும் தொடர் அலைபோன்ற ஒரு சக்தியைக் கதிரியக்கம் செய்கின்றன.

**waveform** : அலைவடிவம் : ஒப்புமை (அனலாக்) வடிவில் ஒரு குறிப்பிட்ட ஒலி அலை அல்லது மின்னணு சமிக்கையின் அமைப்பு.

**wavelet** : சிற்றலை; அலைத் துணுக்கு : வரம்புக்குட்பட்ட நேரத்தில் மாறுபடுகின்ற ஒரு கணிதச் சார்பு. ஒலி போன்ற சமிக்கைகளை பகுத்தாய்வதற்கு அலைத்துணுக்குகள் உதவுகின்றன. மிகக்குறைந்த நேரத்தில் அலைவரிசையிலும் அலைவீச்சிலும் திடீரென மாற்றத்துக்கு உள்ளாகின்றன. ஆனால் சைன், கொசைன் சார்புகளில் வரம்பிலா நேரம்வரை அலைவரிசையும் (Frequency), அலைவீச்சும் (Amplitude) மாறாமல் அப்படியே இருப்பதைக் காணலாம்.

**WBEM** : டபிள்யூபிஇஎம் : வலை அடிப்படையிலான நிறுவன மேலாண்மை என்று பொருள்படும் Web-Based Enterprise Management என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒரு வலை உலாவியை (web browser), பிணையத்தைக் கண்காணிக்கும் ஒரு சாதனம் அல்லது ஒரு பயன்பாட்டு மென்பொருளுடன் நேரடியாகப் பிணைத்து வைக்கும் ஒரு நெறி முறை (Protocol).

**weak typing** : பலவீன இனப் பாகுபாடு; கண்டிப்பில்லா இன உணர்வு : தரவு இனங்களைக் (Data type) கையாளுவதில் நிரலாக்க மொழிகளில் கடைப் பிடிக்கப்படும் நடைமுறை. நிரலின் இயக்க நேரத்தில் ஒரு மாறிலியின் (Variable) தரவு இனத்தை மாற்ற அனுமதித்தல். (எ-டு): சி#, ஜாவா போன்ற மொழிகளோடு ஒப்பிடுகை

யில், சி-மொழி தரவு இனங்களைக் கையாள்வதில் ஒரு கண்டிப்பில்லாத நடைமுறையைப் பின்பற்றுகிறது எனலாம்.

**wear :** அணி.

**web :** (தரவு) வலை; இணையம் : மீவுரையால் (Hyper Text) ஆன, ஒன்றோடொன்று தொடுப்புடைய ஏராளமான ஆவணங்களின் தொகுப்பு. பயனாளர், முகப்புப் பக்கம் (Home Page) வழியாக இணையத்தில் நுழைகிறார்.

**web based Tamil education :** இணையம் வழி தமிழ்க் கல்வி.

**web browser :** வலை உலாவி; இணைய உலாவி : வைய விரி வலையிலோ, ஒரு பிணையத்திலோ அல்லது தன் சொந்தக் கணினியிலோ பயனாளர் ஒருவர் ஹெச்டீஎம்எல் ஆவணங்களைப் பார்வையிடுவதுடன், அதிலுள்ள மீத்தொடுப்புகள் மூலம் பிற ஆவணங்களையும் பார்வையிட்டு தேவையான கோப்புகளை பதிவிறக்கம் செய்து கொள்ள உதவும் ஒரு கிளையன் பயன்பாடு. லின்க்ஸ் (Lynx) போன்ற இணைய உலாவிகள், செயல்தளக் கணக்கு (Shell Account) வைத்திருப்பவர்கள் பயன்படுத்துவது. ஹெச்டீஎம்எல் ஆவணத்தின் உரைப் பகுதியை மட்டுமே பார்வையிட முடியும். பெரும்பாலான உலாவிகள் உரைப்பகுதி மட்டுமின்றி வரைகலைப் படங்கள், கேட்பொலி மற்றும் ஒளிக்காட்சித் தகவலையும் தருகின்றன. ஹெச்டீஎம்எல் ஆவணத்தில் உட்பொதிவாக இருக்கும் ஜாவா அப்லெட்டுகள் அல்லது ஆக்டிவ்எக்ஸ் இயக்குவிசைகள் போன்ற சிறு நிரல்களையும் இயக்கும் வல்லமை பெற்றுள்ளன. சில உலாவிகளுக்கு இதுபோன்ற பணிகளைச் செய்ய உதவி மென்பொருள்கள் (plug-ins) வேண்டியிருக்கலாம். தற்காலத்தில் பயன்பாட்டில் இருக்கும் இணைய உலாவிகள், பயனாளர்கள், மின்னஞ்சல் அனுப்பவும் பெறவும் உதவுகின்றன. செய்திக் குழுக்களைப் பார்வையிடவும் கட்டுரைகள் அஞ்சல் செய்யவும் பயன்படுகின்றன. மைக்ரோசாஃப்ட் நிறுவனத்தின் இன்டர்நெட் எக்ஸ்புளோரர், நெட்ஸ்கேப் நிறுவனத்தின் நேவிக்கேட்டர் ஆகிய இரண்டு உலாவிகளும் உலகத்தில் பெரும்பாலான பயனாளர்களால் பயன்படுத்தப்படுகின்றன. இணைய உலாவி சுருக்கமாக உலாவி என்றும் அழைக்கப்படுகின்றது.

**web browsing centre :** வலை உலாவி மையம்.

**webcasting** : வலைபரப்பு.

**web counter** : வலை எண்ணி.

**Web Crawler** : வெப்கிராலர் : அமெரிக்கா ஆன்லைன் நிறுவனத்தின் வைய விரிவலைத் தேடுபொறியின் பெயர்.

**web designing** : வலைப்பக்க வடிவமைப்பு.

**web development** : வலைசார் உருவாக்கம் : வைய விரி வலைப் பக்கங்களை வடிவமைத்தலும் நிரலாக்கலும்.

**web directory** : வலைக் கோப்பகம் : வலைத் தளங்களின் பட்டியல். யூஆர்எல்லின் பெயரும் அதைப் பற்றிய விளக்கமும் இடம் பெற்றிருக்கும்.

**web events** : வலை நிகழ்வுகள்.

**web form** : வலைப் படிவம்.

**web graphics** : வலை வரைகலை.

**Web index** : வலைச் சுட்டுகை : பயனாளர் ஒருவர், இணையத்தில் பிற வளங்களைத் தேடிக் கண்டறிய உதவுவதை நோக்கமாகக் கொண்ட ஒரு வலைத் தளம். வலைச் சுட்டுகை, தேடுகின்ற வசதியையும் கொண்டிருக்கலாம். அல்லது வளங்களைச் சுட்டுகின்ற தனித்தனி மீத்தொடுப்புகளை மட்டுமே கொண்டிருக்கலாம்.

**webmaster** : தளநிர்வாகி; தளத் தலைவர் : ஒரு வலைத்தளத்தை உருவாக்கிப் பராமரிக்கும் பொறுப்பினை வகிக்கும் நபர். மின்னஞ்சல்களுக்கு பதில் அனுப்புதல், தளம் சிக்கலின்றிச் செயல்படுமாறு கவனித்துக் கொள்ளுதல், வலைப் பக்கங்களை உருவாக்குதல், புதுப்பித்தல், தளத்தின் ஒட்டுமொத்தக் கட்டமைப்பையும் வடிவமைப்பையும் பராமரித்தல் ஆகிய பொறுப்புகளை தள நிர்வாகி வகிக்கிறார்.

**web page** : வலைப்பக்கம்; தளப் பக்கம்; இணையப் பக்கம் : வைய விரிவலையில் உள்ள ஆவணம். ஒரு வலைப்பக்கம் என்பது ஒரு ஹெச்டீஎம்எல் கோப்பு. தொடர்புடைய வரைகலை, உரைநிரல் (scripts) ஆகியவற்றை குறிப்பிட்ட கணினியில் குறிப்பிட்ட கோப்பகத்தின்கீழ் கொண்டிருக்கும். இவையனைத்தும் சேர்ந்தே ஒரு யூஆர்எல் எனப்படுகிறது. பொதுவாக, வலைப் பக்கங்கள் பிற வலைப் பக்கங்களுக்கான தொடுப்புகளைக் கொண்டிருக்கும்.

**web page design programme** : வலைப்பக்க வடிவமைப்பு நிரல்கள்.

**web page organizer** : வலைப் பக்க ஒருங்கிணைப்பு.

**web press** : வெப் அச்சகம் ; வலை அச்சகம் 'வெப்' எனப் படும் உருளையிலிருந்து காகிதத் தில் அச்சடிக்கும் அச்சகம்.

**web ring** : வலை வளையம்.

**web server** : வலைப் பணியகம்.

**web server form** : வலை வழங்கன் படிவம்.

**web site** : வலைத்தளம்; வலை யகம்; இணையத் தளம்; இணை யகம் : வைய விரிவலையில், ஒரு தனிநபர் அல்லது ஒரு நிறுவனம் தொடர்பான ஹெச்டீ எம்எல் ஆவணங்கள், தொடர் புடைய பிற கோப்புகள், உட் பொதி நிரல்கள், ஒரு ஹெச் டீடீபீ வழங்கன் மூலம் தகவல் வழங்குகின்ற தகவல் தளங்கள் இவையனைத்தும் சேர்ந்த தொகுப்பு. ஹெச்டீஎம்எல் ஆவணங்கள் மீத்தொடுப்பு (Hyperlinks)களினால் பிணைக்கப் பட்டுள்ளன. பெரும்பாலான வலைத்தளங்கள் உள்ளடக் கத்தைப் பொருளடக்க மாகத் தரும் முகப்புப் பக்கத்தைக் (Home Page) கொண்டிருக் கின்றன. பெரிய நிறுவனங்கள் தங்களின் ஒரே வலைத்தளத்திற் கென ஒன்றுக்கு மேற்பட்ட ஹெச்டீடீபீ வழங்கன் கணினி களை வைத்திருக்கின்றன. எனினும், ஒரே ஹெச்டீடீபீ வழங்கனில் ஒன்றுக்கு மேற் பட்ட சிறு வலைத்தளங்கள் இருக்கமுடியும். தனிநபர்கள் தமக்கென வைத்திருக்கும் பல நூறு வலைத்தளங்கள் ஒரே வழங்கனில் வைக்கப்பட்டுள் ளன. ஒரு வலைத் தளத்தைப் பார்வையிட பயனாளர் கணினி யில் இணைய இணைப்பு வசதி யும், ஒரு வலை உலாவி மென் பொருள் இருக்க வேண்டும்.

**web site addresses** : வலைத் தள முகவரிகள்.

**web style** : வலைப் பாணி.

**web terminal** : வலை முனையம் : மையச் செயலகம் (CPU), ரேம் (RAM), அதிவேக இணக்கி (Modem), மற்றும் இணையத்தில் இணைத்துக் கொள்வதற்குத் தேவையான கருவிகள், திறன் மிகுந்த ஒளிக்காட்சி வரை கலை-இவற்றைக் கொண்ட கணினி; நிலைவட்டு கிடை யாது. இது, பெரும்பாலும் வைய விரிவலையின் கிளை யனாக மட்டுமே செயல்படு மாறு வடிவமைக்கப்பட்டது. இதனைப் பொதுப்பயன் கணினி யாகப் பயன்படுத்த முடியாது.

**web TV** : வலை டீவி; வலைத் தொலைக்காட்சி : ஒரு சிறிய

கருவிப் பெட்டியின் உதவியுடன், வைய விரிவலையை அணுகி, வலைப்பக்கங்களைத் தொலைக்காட்சித் திரையில் காண்பதற்கான தொழில் நுட்பம்.

**webzine : வலைஇதழ்; இணைய இதழ்; மின்னிதழ்** : தாளில் அச்சிட்டு வெளிவரும் இதழ்களைப்போல, மின்னணு முறையில் பதிப்பித்து, வைய விரிவலையில் வெளியிடப்படுகின்ற இதழ்.

**weed : களை** : ஒரு கோப்பிலிருந்து விரும்பத்தகாத அல்லது தேவையற்ற இனங்களை அகற்றுதல்.

**weighted code : எடைக் குறியீடு** : துண்மியின் இடைநிலை ஓர் எடையிட்ட மதிப்பளவைக் கொண்டிருக்கிற குறியீடு. *8-4-2-1* என்ற எடையிட்ட குறியீட்டுப் பொறியமைவில் *529* என்ற பதின்ம எண், *0101 0010 1001* என்று எழுதப்படும்.

**weitek coprocessor : வெய்டெக் கூட்டுச் செயலகம்** : வெய்டெக் கார்ப்பரேஷன் உருவாக்கிய நுண் மற்றும் சிறு கணினிகளுக்கான அதிக திறன்மிக்க கணினி கூட்டுச் செயலகம். *1981*-முதல் இந்நிறுவனம் கேட் மற்றும் வரைகலை பணி நிலையங்களுக்கான கூட்டுச் செயலகங்களை உருவாக்கி வருகிறது. இதனைப் பயன்படுத்த மென்பொருளும் இதன் மீதே எழுதப்பட்டிருக்க வேண்டும்.

**WELL : வெல்** : முழுப்புவி மின்னணுத் தொடுப்பு என்று பொருள்படும் Whole Earth Electronic Link என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். கலிஃபோர்னியா மாநிலத்தில் சான்ஃபிரான்சிஸ்கோ நகரை மையமாகக் கொண்டு செயல்படும் ஒரு கலந்துரையாடல் அமைப்பு. பல்வேறு நகரங்களிலிருந்து இணையம் வழியாக, தொலைபேசி இணைப்பு மூலம் அணுக முடியும். இது ஒரு மெய்நிகர் மனிதச் சமூகமாக வளர்ச்சி பெற்றுள்ளது. கணினி வல்லுநர்கள் தவிர சாதாரண மக்களும் இதில் விரும்பிப் பங்கேற்கின்றனர். ஏராளமான பத்திரிகையாளர்களும் பிற செல்வாக்குப் பெற்ற அறிஞர்களும் பங்கு பெறுவதால், இதனுடைய குறைந்த எண்ணிக்கையிலான வாடிக்கையாளர்களையும் தாண்டி பொது மக்களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றுள்ளது.

**well behaved : நன்னடத்தையுள்ள** : ஒரு தர அமைப்பில்

இருந்து விலகிச் செல்லாத நிரல் தொடரைக் குறிப்பிடுகிறது.

**welcome page** : வரவேற்புப் பக்கம்.

**welknown port** : நன்கறிந்த துறை.

**west coast computer fair** : மேற்குக்கரைக் கணினிக் காட்சி : அமெரிக்காவில் சான்பிரான்சிஸ் கோவில் ஆண்டுதோறும் நடை பெறும் முக்கியமான நுண் கணினி வணிகக் கண்காட்சி.

**wetware** : வெட்வேர் : உயிரியல் அமைப்பு அல்லது அதைப் போலச் செய்ய முயலும் ஒன்று.

**wetzel** : வெட்ஜெல் : ஒரு எதிர் மின் கதிர்க்குழாயிலுள்ள உருக் காட்சியுடன் சேர்க்கப்படும் படக்கூறு. இது காட்சியின் தெளிவினை மேம்படுத்த உதவுகிறது.

**what if** : விரிதாள் வினவல் ; காரண விளைவு அலசல் : பெரும்பாலான மின்னணு விரிதாள் செயல்முறைகள் செயற்படுகிற வளாகம். மற்ற மதிப்பளவுகளின் கூட்டு விளைவினை தீர்மானிக்க புதிய மதிப்பளவுகளைப் புதிதாக அமைக்கலாம்.

**what-if analysis** : இது கொடுத் தால் எது கிடைக்கும்; இது தரின் எது வரும் : விரிதாள் பயன் பாட்டில் இருக்கின்ற வசதி. சில உள்ளீடுகளின் அடிப்படை யில் ஒரு குறிப்பிட்ட விடை பெறப்பட்டுள்ளது; உள்ளீட்டு மதிப்புகளில் ஒன்றை மாற்றும் போது, அதற்கேற்ப விடையும் உடனடியாக மாற்றம் பெறும். எடுத்துக்காட்டாக, வங்கியில் கடன் பெறும் ஒருவர், வெவ் வேறு வட்டி வீதங்களில் மாதத் தவணையாக எவ்வளவு செலுத்த வேண்டியிருக்கும் என்பதை உடனுக்குடன் அறிந்து கொள்ள முடியும். what will be the result, if the input is this? என்பதன் சுருக்கமே what - if analysis எனப்படுகிறது.

**whatis** : வாட்இஸ்; என்ன இது : 1. யூனிக்ஸ் கட்டளை. யூனிக்ஸ் கட்டளைகளில் பயன்படுத்தப் படும் சிறப்புச் சொற்கள் பற்றிய விளக்கங்களைத் தரும். 2. இணையத்திலுள்ள ஒரு மென்பொருளைத் தேடிக் கண்டறிய, அதைப்பற்றிய விவரிப்பில் குறிப்பிட்ட சொற்கள் உள்ளனவா எனத் தேடுவதற்குப் பயன்படும் ஓர் ஆர்க்கி (Archie) கட்டளை.

**wheel printer** : சக்கர அச்சுப் பொறி; உருளை அச்சு : அச்சடிக் கும் எழுத்துகளை உலோகச் சக்கரங்களில் கொண்டிருக்கும்

அச்சடிப்புச் செயல்முறை அமைந்துள்ள அச்சுப்பொறி.

**whetstones :** வெட்ஸ்டோன்ஸ் : பதின்மப் புள்ளி கணக்கீடு களைச் சோதிக்கும் பெஞ்ச் மார்க் நிரல் தொடர். ஒரு நொடிக்கு எத்தனை வெட்ஸ் டோன்கள் என்ற அளவில் இதன் முடிவுகள் கூறப்படுகின் றன. வெட்ஸ்டோன் I-32 துண்மி, வெட்ஸ்டோன் II-64 துண்மி இயக்கங்களைச் சோதிக்கின்றன.

**while loop :** நிகழ்சுற்று.

**WHIRLWIND :** வேர்ல்விண்டு : 1940களில் மாசாசூசட்ஸ் தொழில்நுட்ப நிறுவனத்தில் (MIT) உருவாக்கப்பட்டு, 1950 களில் பயன்படுத்தப்பட்ட, வெற்றிடக் குழாய்களினால் ஆன இலக்கமுறைக் கணினி. சிஆர்டீ திரைக்காட்சி, நிகழ் நேரச் செயலாக்கம் ஆகிய புதிய கண்டுபிடிப்புகள் வேர்ல் விண்டில் அறிமுகப்படுத்தப் பட்டன. இத்திட்டப் பணியில் உறுப்பினராய் இருந்த கென்னத் ஹெச் ஓல்சன் (Kenneth H. Olsen), 1957ஆம் ஆண்டில் டிஜிட்டல் எக்யூப்மென்ட் கார்ப்பரேஷனை நிறுவினார்.

**Whiteboard :** ஒயிட்போர்டு; வெண்பலகை; கரும்பலகை (நம் வழக்கு) : ஒரு பிணையத் தில் பல பயனாளர்கள் ஒரே நேரத்தில் ஓர் ஆவணத்தைத் திறந்து கையாள வகைசெய்யும் மென்பொருள். அனைத்துப் பயனாளர்களின் கணினித் திரை களிலும் ஒரே நேரத்தில் ஆவணம் திறக்கப்படும். ஒரு கரும்பலகையில் எழுதப்பட்ட விவரங்களைப் பலரும் கூடி நின்று படிப்பதைப்போல.

**white board window :** வெண் பலகைச் சாளரம்.

**white noise :** வெள்ளை ஓசை; வெண்ணிரைச்சல் : அச்சுப் பொறிகள், விசைப்பலகைகள், காலடிகள் போன்ற அலுவலகச் சந்தடிகளின் இடைவெளிகளை நிரப்புவதற்காக கேட்கக்கூடிய எல்லா அலைவெண்களிலும் உண்டாக்கப்படும் தொடர் ஓசை.

**white paper :** வெள்ளை அறிக்கை : பெரும்பாலும் ஒரு தொழில்நுட்பத் தரவுபற்றி முறைசாரா வகையில் விவரங் கள் தருதல் அல்லது வரைவு வரன்முறைகளை முன்வைத்தல்.

**white space character :** வெள்ளை இட எழுத்து : திரை யில் தோன்ற வேண்டியிராத எழுத்து. சான்றாக, இடை வெளி, டேப், வரி திரும்புதல் போன்றவை. இந்த எழுத்து களைப் பார்க்கவோ அல்லது

பார்க்காமல் இருக்கவோ பல சொல் செயலகங்கள் வாய்ப் பளிக்கின்றன.

**who is : ஹூஇஸ்; யார் எவர்? :** 1. இணையத்தில் சில களங்கள் (domains) வழங்கும் சேவை. அக்களத்தில் சேமித்து வைக்கப் பட்டுள்ள தரவுத் தளத்தில் மின்னஞ்சல் முகவரிகளையும், பயனாளர்கள் பற்றிய வேறுசில தரவுகளையும் பயனாளர் ஒருவர் அறிந்துகொள்ள இச் சேவை உதவுகிறது. 2. "யார் எவர்" சேவையைப் பெறப் பயன்படும் யூனிக்ஸ் கட்டளை. 3. நாவெல் பிணையத்தில் அந்த நேரத்தில் நுழைந்து பணி யாற்றிக் கொண்டிருக்கும் அனைத்துப் பயனாளர்களின் பெயர்களையும் பட்டியலிடும் கட்டளை.

**who is client : ஹூஇஸ் கிளையன்ட்; யார் கிளையன் :** பயனாளர் பெயர்கள், மின்னஞ்சல் முகவரிகள் மற்றும் பிற தரவுகள் அடங்கிய தரவுத் தளத்தை அணுகுவதற்குப் பயனாளர்க்கு வாய்ப்பளிக்கும் ஒரு கட்டளை. (யூனிக்ஸிலுள்ள ஹூஇஸ் கட்டளை போன்றது).

**who is server : ஹூஇஸ் சொ்வர்; வழங்கன் யார் :** ஹூஇஸ் கிளையன்ட் கட்டளை மூலம் தரவு அறிய விரும்பும் ஒரு பயனாளருக்கு தரவுத் தளத் திலிருந்து பயனாளர் பெயர்கள். மின்னஞ்சல் முகவரிகளை (பெரும்பாலும் ஓர் இணையக் களத்தினில் கணக்கு வைத்துள்ள பயனாளர்களின் பட்டியல்) வழங்குகின்ற மென்பொருள்.

**whole number : முழு எண் :** பின்னப் பகுதிகள் இல்லாத நேர். எடுத்துக்காட்டு : 84 அல்லது 22.0 அல்லது 0.

**wide area network (WAN) : நாடளாவிய கணினிப் பிணையம்; விரிபரப்புப் பிணையம் :** பல்லா யிரம் மைல் வட்டாரத்திற்குச் சேவைபுரியக்கூடிய வகையில் வடிவமைக்கப்பட்ட தகவல் செய்தித் தொடர்பு பிணையம்.

**Wide Area Telephone Service (WATS) : விரிபரப்பு தொலை பேசி சேவை :** 'வாட்ஸ்' தொடர்பு எனப்படும் அணுகு இணைப்பு மூலம், ஒரு குறிப் பிட்ட மண்டலத்தில் தகவல் தொடர்பு கொள்வதற்கு வாடிக்கையாளரை அனுமதிக் கிற தொலைபேசி நிறுமங்கள் வழங்கும் சேவை. அமெரிக்கா ஆறு "வாட்ஸ்" மண்டலங் களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. சுழற்சி அடிப்படையில் மாதக் கட்டணம் செலுத்தி இந்த வசதியை பயன்படுத்தலாம்.

**wide band** : அகல் அலை வரிசை; அகல் கற்றை : ஒரே பணியைத் திரும்பத்திரும்பச் செய்வதற்கான கணினி மொழிக் கட்டளை. தரவுத் தொடர்பு களில், குரல்வகை அலை வரிசையைவிட அலை அகற்சி யில் அகலமாக உள்ள ஓர் அலைவரிசை.

**wide/broad band** : அகல/விரி கற்றை.

**wide SCS[1] or Wide SCSI-2** : விரிந்த ஸ்கஸ்ஸி அல்லது விரிந்த ஸ்கஸ்ஸி-2 : ஒரு நேரத்தில் 16 துண்மி(பிட்)கள் வீதம் வினாடிக்கு 20 மெகா பைட்டுகள் வரை தரவுப் பரி மாற்றம் செய்யக்கூடிய ஸ்கஸ்ஸி-2 இடைமுகம். இவ் வகை ஸ்கஸ்ஸி இணைப்பியில் 68 பின்கள் உள்ளன.

**widow & orphan** : துணையிலி யும் அனாதையும் : அடுத்த பக்கத்தின் மேற்பகுதியில் தோன்றுகின்ற ஒரு பத்தியின் கடைசி வரியை துணையிலி (window) என்றும், ஒரு பக்கத் தின் கடைசிவரியில் வரும் ஒரு பத்தியின் முதல்வரியை அனாதை (orphan) என்றும் கூறுகிறோம்.

**width** : அகலம்.

**width of field** : புல அகற்சி.

**width table** : அகலப் பட்டியல் : ஒரு அச்செழுத்துத் தொகுதியில் உள்ள ஒவ்வொரு எழுத்தின் குறுக்குவாட்ட அளவுப் பட்டியல். சொல் செயலாக்க மற்றும் டி.டி.பி நிரல் தொடர் களில் பயன்படுத்தப்படுகிறது.

**width, tape** : நாடா அகலம்.

**wiener** : வைனர், நெர்பெர்ட் (1894-1964) : அமெரிக்க அறிவியலாளர். கணினியியல் எனப் பொருள்படும் cybernetics என்ற சொல்லைப் புனைந்து ஒரு புதிய அறிவியல் துறையை உருவாக்கியவர். மனித மூளையின் பல சிந்தனைச் செய்முறைகளைக் கணிதமுறை யில் தீர்மானித்து, கணினிகளில் பயன்படுத்தலாம் எனக் கருதி யவர். தானியக்கக் கோட் பாட்டின் முன்னோடி.

**wild card** : வரம்பிகந்த அட்டை; வரம்பிலா உரு : ஒரு செயற் பாட்டுப் பொறியமைவு நிரலில் செருகப்படும் ஓர் எழுத்து. இது, பல்வேறு பொருள்படு வதாகக் கூறப்படும். இது கோப்பு களுக்குப் பெயரிடும் முறை.

**wildcard characters** : பதி லீட்டுக் குறிகள் : ஓர் எழுத்து அல்லது பல எழுத்துகளுக்குப் பதிலீடாகப் பயன்படுத்தப் படும் விசைப்பலகைக் குறி.

பெரும்பாலும் நட்சத்திர அடையாளம் (*) ஒரெழுத்து அல்லது பல எழுத்துகளுக்குப் பதிலாக இடம் பெறும். கேள்விக்குறி (?) ஒரெழுத்துக்குப் பதிலாக இடம் பெறும். இயக்க முறைமைகளில் ஒன்றுக்கு மேற்பட்ட கோப்புகளை, அதாவது குறிப்பிட்ட கோப்புகளின் தொகுதியைக் கையாள இக்குறிகள் பயன்படுத்தப்படுகின்றன. (எ-டு): SALES.* என்பது SALES என்னும் முதன்மைப் பெயருள்ள, வகைப்பெயர் (extension) எதுவாக இருப்பினும் அத்தனை கோப்புகளையும் குறிக்கும். *.DOC என்பது DOC என்னும் வகைப்பெயர் கொண்ட அனைத்து கோப்புகளையும் குறிக்கும். SALES1. XLS, SALES2.XLS, SALES3.XLS ஆகிய கோப்புகளை SALE?.XLS என்று குறிப்பிடலாம்.

**Wilkes Maurice Vincent : வில்கஸ், மாரிஸ் வின்சென்ட் :** கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் மின்னணு சேமிப்புத் தானியங்கிக் கணிப்பியை 1949-இல் உருவாக்கிய குழுவின் தலைவராக இருந்தவர்.

**WIN32 : வின்32 :** விண்டோஸ் 95/98 என்டி இயக்க முறைமைகளுக்கான பயன்பாடுகள், இன்டெல் செயலி 80386 மற்றும் அதனினும் மேம்பட்ட செயலிகளிலுள்ள 32-பிட் நிரல்களைப் பயன்படுத்திக்கொள்ள வாய்ப்பளிக்கும், பயன்பாட்டு நிரலாக்க இடைமுகத்தைக் (Application Programm Interface - API) குறிக்கிறது. விண்டோஸ் 95/98, விண்டோஸ் என்டி ஆகியவை 16-பிட் உள்ள 80×86 நிரல்களையும் ஏற்கும் என்றபோதிலும், வின்32 செயல்திறன் மிக்கதாகும்.

**WIN32S : வின்32எஸ் :** வின்32 பயன்பாட்டு நிரலாக்க இடைமுகத்தின் ஓர் உட்பிரிவு. விண்டோஸ் 3.எக்ஸில் செயல்படக்கூடியது. இலவசமாக வழங்கப்படும் வின்32எஸ் மென்பொருளைச் சேர்த்துக் கொண்டால், ஒரு பயன்பாடு இன்டெல் 80386 மற்றும் மேம்பட்ட செயலிகளில், விண்டோஸ் 3.எக்ஸ் சூழலில் செயல்படும்போது, 32-பிட் நிரல்களைப் பயன்படுத்திக் கொள்வதால் செயல்திறன் அதிகரிக்கும்.

**winchester disk drive : வின்செஸ்டர் வட்டு இயக்கி :** அதிவேகத்துணை நிலைச் சேமிப்புச் சாதனம். இது ஒரு வகை நிலை வட்டு. இது காற்றுப் புகாத கொள்கலத்தில் வைத்து முத்திரையிடப்பட்டிருக்கும்.

**winchester disks : வின்செஸ்டர் வட்டுகள்.**

**winchester technology : வின்செஸ்டர் தொழில் நுட்பம் :** கடின காந்த வட்டு சேமிப் பகங்களில் நிரந்தரமாக (அணுகு கரங்கள் மற்றும் படி/எழுது முனைகளுடன்) மூடப்பட்ட பாதுகாப்பான பெட்டிகளில் வைக்கப்படுபவைகளுக்குத் தரப் படும் பெயர். பல அளவு களிலும், சேமிப்புத் திறன் களிலும் வின்செஸ்டர் வட்டு அமைப்புகள் வருகின்றன.

**window : பலகணி; சாளரம் :** ஒளிப்பேழைக் காட்சிப் பகுதி யில் ஒரு குறிப்பிட்ட நோக்கத் திற்காகக் குறித்தமைக்கப் பட்டுள்ள ஒரு பகுதி. திரையை பன்முகப் பலகணிகளாகப் பகுப்பதற்கு ஒரு தனிவகை மென்பொருள் அனுமதிக்கிறது. இந்தப் பலகணிகளை நகர்த்தலாம். பெரிதாகவோ சிறி தாகவோ ஆக்கலாம். இது பெரிய சொல் செய்முறைப் படுத்தும் ஆவணங்களுக்குப் பெரிதும் பயன்படுகிறது.

**window definition function : சாளர வரையறுப்புச் செயல்கூறு :** ஒரு மெக்கின்டோஷ் பயன்பாட் டில் ஒரு சாளரத்தோடு தொடர் புடைய வளத்தைக் குறிக்கும். ஒரு சாளரத்தை திரையில் காட்டும்போதும், சாளர அளவு களை மாற்றியமைக்கும்போதும் மெக்கின்டோஷ் "விண்டோ மேனேஜர்" நிரல் இந்த செயல் கூறை நிறைவேற்றும்.

**windowing : பலகணியாக்கம் ; சாளரமாக்கல் :** திரையில் ஒரே சமயத்தில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கோப்பு களை அல்லது ஒரு கோப்பின் பகுதிகளைக் காட்டுதல்.

**window menu : சாளரப் பட்டி.**

**windows : சாளரம்; பலகணி.**

**Windows 95 : விண்டோஸ் 95 :** இன்டெல் *80386*, அதற்கும் மேம்பட்ட செயலிகளில் செயல் படக்கூடிய ஓர் இயக்க முறைமை. வரைகலைப் பயனா ளர் இடைமுகம் கொண்டது. மைக்ரோசாஃப்ட் கார்ப்ப ரேஷன் ஆகஸ்ட் *1995*இல் வெளியிட்டது. விண்டோஸ் *3.11*, பணிக்குழுவுக்கான விண்டோஸ் *3.11*, எம்எஸ் டாஸ் ஆகிய அனைத்திற்கும் மாற்றாக வெளியிடப்பட்ட ஒரு முழுமையான இயக்கமுறைமை. விண்டோஸ் 3.x டாஸ்மீது செயல்படும் ஒரு பணிச்சூழல் (Operating Environment). ஆனால் விண்டோஸ் 95, டாஸின் உதவி யின்றிச் செயல்படும் ஒரு தனித்த இயக்க முறைமை. என்றாலும் எம்எஸ்டாஸ் மென்பொருள் களை விண்டோஸ் 95இல்

இயக்கமுடியும். 255 எழுத்துகள் வரை நீண்ட கோப்புப் பெயர் களை வைத்துக் கொள்ளலாம். எந்தப் பிணையத்தின் கிளைய னாகவும் செயல்படவல்லது. தம்மளவில் விண்டோஸ் 95 கணினிகளை ஒன்றாகப் பிணைத்து, சமனி- சமனி (peer to peer) பிணையம் அமைத்துக் கொள்ளமுடியும். இணைத்து -இயக்கு (plug and play) முறை யில் எந்தவொரு வன்பொருளை யும் அதுவாகவே அடையாளம் காணும். பல்லூடகம், இணைய இணைப்புக்கான வசதிகள் அனைத்தும் கொண்டது. 80386 செயலி, 4 எம்பி ரேம் உள்ள கணினிகளில் செயல்படும். என்றாலும் 80486 செயலி 8 எம்பி ரேம் இருப்பது நல்லது.

**windows application : விண்டோஸ் பயன்பாடு** : மைக்ரோ சாஃப்ட் விண்டோஸ் சூழலில் செயல்படுமாறு வடிவமைக்கப் பட்ட ஒரு மென்பொருள் பயன்பாடு.

**windows-based accelerator : விண்டோஸ் அடிப்படையிலான வேக முடுக்கி** : விண்டோஸ் மற்றும் விண்டோஸ் அடிப் படையிலான பயன்பாடுகளை வேகமாக இயக்குவதற்கென தனிச்சிறப்பாக வடிவமைக்கப் பட்ட மீத்திறன் விஜிஏ (Super VGA) ஒளிக்காட்சித் தகவியின் ஒருவகை. தகவியின் படிப்பு நினைவகத்தில் பதியப் பட்டுள்ள தனிச்சிறப்பு நிரல் கூறுகளின் உதவியால், சாதாரண எஸ்விஜிஏ ஒளிக் காட்சித் தகவிகளைவிடக் கூடுதல் வேகமும் திறனும் கொண்டது. இந்த நிரல்கள், ஒளிக்காட்சி தொடர்பாக ஆற்ற வேண்டிய சில பொறுப்பு களிலிருந்து விண்டோஸ் இயக்க முறைமையை விடுவிக் கின்றன. இதனால் செயல் பாட்டு வேகம் கூடுகிறது.

**Windows CE : விண்டோஸ் சிஇ** : மைக்ரோசாஃப்ட் விண்டோ ஸின் குறுகிய வடிவம். கையகக் கணினிகளுக்கென வடி வமைக்கப்பட்டது. எக்செல், வேர்டு, இன்டர்நெட் எக்ஸ் புளோரர், ஷெட்யூல்+, மின்னஞ்சல் கிளையன் போன்ற விண்டோஸ் பயன்பாடுகள் பலவற்றின் குறுகிய வடிவங் களையும் விண்டோஸ் சிஇ-யில் இயக்க முடியும்.

**Windows Driver Library : விண்டோஸ் இயக்கி நூலகம்** : மூல விண்டோஸ் தொகுப்பில் சேர்க்கப்படாத, மைக்ரோ சாஃப்ட் விண்டோஸ் இயக்க முறைமைக்கான வன்பொருள் சாதன இயக்கிகளின் தொகுதி.

**windows environment : சாளரச் சூழ்நிலை :** திரையில் பல் சாளரங்களை அளிக்கின்ற பயன் பாட்டு நிரல் தொடர் அல்லது விரிவாக்கம். டெஸ்க்வியூ, விண்டோஸ், பிஎம், மல்டி ஃபைன்டர், மற்றும் எக்ஸ் விண்டோ ஆகியவை இதற்குச் சான்றுகள். இப்போது செயலாக்க அமைப்பையே 'விண்டோஸ்' என்ற சொல் குறிப்பிடுகிறது.

**Windows Explorer : விண்டோஸ் எக்ஸ்புளோரர் :** விண்டோஸ் 95/98இல், கோப்பு மற்றும் கோப்புறைகளை மேலாண்மை செய்வதற்கு அமைந்துள்ள ஒரு பயன்கூறு. விண்டோஸ் 3.1-ன் கோப்பு மேலாளர் (File Manager) நிரலை ஒத்தது. ஒரு விண்டோவில் இரண்டு பாளங்கள் (Panels) இருக்கும். இடப்புறப் பாளத்தில் கோப்புறைகளின் பட்டியலைப் பார்வையிடலாம். ஒரு கோப்புறையைத் தேர்வு செய்து அதன் உள்ளடக்கத்தை வலப்புறப் பாளத்தில் பார்வையிடலாம்.

**Windows For Workgroups : பணிக் குழுவுக்கான விண்டோஸ் :** 1992ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட விண்டோஸின் ஒரு பதிப்பு. ஈதர்நெட் லேனில் செயல்படுமாறு வடிவமைக்கப்பட்டது. இதற்கென தனியான பிணைய மென்பொருள் தேவையில்லை.

**Windows keyboard : விண்டோஸ் விசைப்பலகை.**

**Windows Media Player : விண்டோஸ் மீடியா பிளேயர் - ஒரு மென்பொருள்.**

**windows metafile : விண்டோஸ் மெட்டாஃபைல்:** 'மைக்ரோசாஃப்ட்' விண்டோஸ் நிறுவனம் பயன்படுத்தும் வரைகலைக் கோப்புப் படிவம். இதில் நெறிய (வெக்டார்) வரைகலை, பிட்மேப், சொற்பகுதி ஆகியவை இடம்பெறும். சில சமயங்களில் மெட்டாஃபைல்களை தற்காலிக சேமிப்பகத்துக்கு பயன்படுத்துவார்கள். ஆனால், அதன் பயன்பாடுகள் பெரும்பாலும் மறுமுறை பயன்படுத்துவதற்காகச் சேமித்து வைக்கப்படுகின்றன.

**Windows Metafile Format : விண்டோஸ் மீகோப்பு வடிவாக்கம் :** நெறிய வரைகலைக் (vector graphics) கோப்புகளுக்கான விண்டோஸ் கோப்பு வடிவாக்கம். இரண்டு பயன்பாடுகளுக்கிடையே வரைகலைத் தரவுகளை பரிமாறிக் கொள்ளவும், இருவேறு பணி அமர்வு

களுக்கிடையே தரவுவைச் சேமிக்கவும் பயன்படுகிறது.

**Windows NT** : விண்டோஸ் என்டீ : மைக்ரோசாஃப்ட் நிறுவனம் உருவாக்கிய இயக்க முறைமை. என்டிஎஃப்எஸ் (NTFS) என்னும் பாதுகாப்பான கோப்பு முறைமையைக் கொண்டது. பல் பயனாளர் அமைப்பில் பாதுகாப்புமிக்கது. விண்டோஸ் என்டீ 4.0 பதிப்பு ஒர்க்ஸ்டேஷன், செர்வர், அட்வான்ஸ்டு செர்வர், டேட்டா சென்டர் செர்வர் என்னும் நான்கு வடிவங்களில் வெளியிடப்பட்டது.

**Windows NT Advanced Server** : விண்டோஸ் என்டீ அட்வான்ஸ்டு செர்வர் : விண் டோஸ் என்டீ-யின் மேம்பட்ட வடிவம். மையப் படுத்தப்படாத பகிர்ந்தமை கள (domain) அடிப்படை கொண்ட பிணைய மேலாண்மை மற்றும் பாதுகாப்புக் கொண்டது. மேம் பட்ட நிலைவட்டு பழுது தாக்குப்பிடித்தல் வசதிகளைக் கொண்டது. நிலைவட்டுகளில் ஏற்படும் எதிர்பாராப் பழுதுகளை எதிர்கொள்ள பிம்பமாக்கம் (Mirroring) போன்ற வசதிகள் உள்ளன. வலைவழங்கன்களுக்கு ஏற்ற இயக்கமுறைமை.

**windows programme** : விண்டோஸ் நிரல்தொடர் : இருக்கின்ற ஒரு இயக்கத் தொகுப்புக்கு விண்டோஸின் திறனைச் சேர்க்கின்ற மென்பொருள். விண்டோஸின் கீழே இயங்குவதற்காக எழுதப்பட்ட பயன்பாட்டு நிரல் தொடர்.

**Windows Update** : விண்டோஸ் - இற்றைப்படுத்தல்.

**Windows XP** : விண்டோஸ் எக்ஸ்பீ : மைக்ரோசாஃப்ட் வெளியிட்டுள்ள மிக அண்மைய இயக்கமுறைமைய விண்டோஸ் என்டீ 5.0 பதிப்பே இவ்வாறு பெயர் மாற்றம் பெற்றுள்ளது. எக்ஸ்பீ என்ற எழுத்துகள் eXPerience என்ற சொல்லைக் குறிக்கின்றன. கண்ணுக்கதிமான பயனாளர் இடைமுகத்தைக் கொண்டுள்ளது. குரல் கட்டளையை ஏற்கும். கையெழுத்தை அறியும். உரையைப் பேச்சாய் மாற்றும். இதுபோல் இன்னும் பல புதிய வசதிகளைக் கொண்டுள்ள பாதுகாப்பான திறன்மிக்க இயக்கமுறைமை.

**WinG** : விஞ்ஜி : விண்டோஸ் விளையாட்டுகள் என்று பொருள்படும் Windows Games என்பதன் சுருக்கம். விண்டோஸ் 95 சூழலில் கணினி விளையாட்டுகளுக்கான பயன்பாட்டு நிரலாக்க இடைமுகம் (API).

வின்ஜி-யின் கீழ், விளையாட்டு நிரல்கள் ஒளிக்காட்சிச் சட்ட இடையகத்தை (Video Frame Buffer) நேரடியாக அணுக முடியும். இதனால் வேகம் கூடும்.

**WINS : வின்ஸ் :** விண்டோஸ் இணையப் பெயரிடு சேவை எனப் பொருள்படும் Windows internet Naming Service என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒரு கணினியின் புரவன் பெயரை (Host Name) அதன் ஐபி முகவரியோடு பொருத்தும் விண்டோஸ் என்டீ செர்வர் வழிமுறை.

**WINS - Configuration : வின்ஸ் உள்ளமைவு.**

**Winsock : வின்சாக் :** விண்டோஸ் செருகுவாய் என்று பொருள்படும் Windows Socket என்பதன் சுருக்கம். விண்டோஸில் டீசிபி/ஐபி இடைமுகத்தை வழங்குகின்ற ஒரு பயன்பாட்டு நிரலாக்க இடைமுகம் (API). *1991*இல் நடைபெற்ற யூனிக்ஸ் மாநாட்டில் மென்பொருள் விற்பனையாளர்களிடையே நடைபெற்ற விவாதத்தின் அடிப்படையில் உருவாக்கப்பட்ட தர வரையறை. மைக்ரோசாஃப்ட் உட்பட பல மென்பொருள் தயாரிப்பாளர்களின் ஆதரவினை இது பெற்றது.

**Wintel : வின்டெல் :** மைக்ரோசாஃப்ட் விண்டோஸ் இயக்க முறைமையையும், இன்டெல் மையச் செயலகத்தையும் கொண்ட கணினிகளைக் குறிக்கும் சொல்.

**wire board : கம்பிப் பலகை.**

**wired : பிணைப்புறு; இணைப்புறு :** *1.* ஒரு மின்னணுச் சுற்று அல்லது வன்பொருள் தொகுதியின் பண்புக் கூறு. அவை எந்த வகையில் இணைக்கப்பட்டுள்ளதோ அதன்படியே தான் அதன் தகவமைவுகள் தீர்மானிக்கப்படுகின்றன. ஒரு மென்பொருள் மூலமாக விரும்பியவாறு நிரல்படுத்தவோ, ஒரு நிலைமாற்றியின் மூலம் மாற்றியமைக்கவோ முடியாது. *2.* இணைய வளங்கள், அமைப்புகள், பண்பாடு பற்றி அறிந்திருத்தல். *3.* இணையத்தோடு இணைப்பு ஏற்படுத்திக் கொள்ளல்.

**wired programme computer : கம்பிச் செயல்முறைக் கணினி :** நிறைவேற்ற செயற்பாடுகள், கம்பி அமைப்பு மற்றும் கம்பி இணைப்புகள் மூலம் குறிப்பிடப்படுகிற நிரல்களைக் கொண்டுள்ள கணினி. இந்தக் கம்பிகள், அகற்றக்கூடிய கட்டுப்பாட்டு தொடர்மூலம் பிணைக்கப் பட்டுள்ளன. இது

செயற்பாட்டுக்கு ஒரு குறிப் பிட்ட அளவு நெகிழ்திறனை அளிக்கிறது.

**wireframe** : வலைப்புள்ளிச் சித்திரம்; கம்பிச் சட்டம்.

**wireframe modeling** : கம்பிச் சட்ட மாதிரியமைப்பு : கேட் பயன்பாட்டில் முப்பரிமாணத் தைக் குறிப்பிடும் ஒரு நுட்பம். இதில் எல்லா கோடுகளும், எதிர்க்கோடுகளும் தெளிவாகக் காட்டப்படும். ஆனால், உட்புற உறுப்புகள் பார்வையிலிருந்து மறைக்கப்படும். மேற்பரப்பு மற்றும் திட மாதிரியமைப்பை விட, கம்பிச் சட்ட மாதிரி யமைப்பு முப்பரிமாண உருவங்களுக்கு எளிதானது.

**wireless** : கம்பியிலா.

**Wireless LAN** : கம்பியில்லா லேன் : தனித்த கணுக் கணினி களுக்கும் குவியத்துக்கும் (Nodes and Hub) இடையே பரு நிலை இணைப்பு எதுவும் இல்லாமல், வானலை, அகச் சிவப்பு ஒளிச்சமிக்கை அல்லது பிற தொழில்நுட்பத்தைப் பயன் படுத்தி தகவலை அனுப்பவும் பெறவும் முடிகிற குறும் பரப்புப் பிணையம். பயனர் ஒரு கையகக் கணினியை இங் கும் அங்கும் எடுத்துச் செல்ல வேண்டிய தேவை இருக்கின்ற அலுவலக அல்லது தொழில் கூடச் சூழல்களில் கம்பியில்லா லேன் தொழில்நுட்பம் மிகவும் பயன்படக்கூடியது.

**wireless telephone** : கம்பியிலா தொலைபேசி.

**wire printer** : கம்பி அச்சுப் பொறி.

**wire wrap** : கம்பிப் பொதிவு ; கம்பிச் சுற்றமைவு : மின்சுற்று வழிப் பலகை உருவாக்குவதில் ஒருவகை. இதில் மின் இணைப்புகள், உரிய உறுப்பு களின் இணைப்பு முனை களுக்கு இணையான கம்பங் களுடன் இணைக்கப்பட்ட கம்பிகள் வழியாக ஏற்படுத்தப் படுகின்றன.

**wire-wrapper circuits** : கம்பி சுற்றிய மின்சுற்றுகள் : அச்சிட்ட மின்சுற்றுப் பலகைகளில், உலோக இணைப்புத் தடங் களுக்குப் பதிலாக, துளையிடப் பட்ட பலகைகளில் கம்பிகளால் இணைக்கப்படும் மின்சுற்று. இணைப்புக் கம்பிகளின் முனைகள் நீண்ட பின்களின் மீது சுற்றி வைக்கப்பட்டிருக் கும். பெரும்பாலும் இத்தகைய மின்சுற்றுகள் கையால் செய்யப் பட்டவை. மாதிரியங்களை உரு வாக்கவும், மின்சாரப் பொறி யியலில் ஆய்வுகளை மேற்

கொள்ளவுமே இத்தகைய மின் சுற்றுகளைப் பயன்படுத்துவர்.

**wiring diagram :** கம்பி வரிப்படம்.

**Wirth, Niklaus :** விர்த், நிக்ளாஸ் : சுவிட்சர்லாந்தில் 1968இல் பிளைஸ் பாஸ்கல் பெயரால் 'பாஸ்கல்' என்ற கணினி மொழியை உருவாக்கியவர். இது பிரபலமான உயர்நிலைச் செயல்முறைப்படுத்தும் மொழியாகும். இது, கட்டமைவுச் செயல் முறைப்படுத்தும் உத்திகளைக் கையாள உதவுகிறது.

**wizard :** வித்தகர் : மைக்ரோசாஃப்ட்.

**.wmf :** .டபிள்யூஎம்எஃப் : நெறிய வரைகலை (vector graphics) அடங்கிய மைக்ரோசாஃப்ட் விண்டோஸ் மீகோப்புகளை அடையாளங் காட்டும் கோப்பு வகைப்பெயர் (extension).

**word :** சொல்; தகவல்; தரவு : துண்மிகளின், எழுத்துகளின் அல்லது எட்டியல்களின் தருக்க முறை அலகு. இது ஒரு தனி அலகாகக் கருதப்படுகிறது. இதனை ஒரே சேமிப்பு அமைவிடத்தில் சேமித்து வைக்கலாம்.

**word addressable :** சொல் முகவரியிடக்கூடிய : சொல் எல்லைகளுக்கு மட்டும் நினைவகத்திற்கு முகவரியிடும் கணினி.

**word-addressable processor :** சொல்-அழைதகு செயலி : நினைவகத்தில் ஒரு தனி பைட் அணுக இயலாத, ஆனால் பைட்களின் தொகுதியை அணுக முடிகிற ஒரு செயலி. ஒரு தனி பைட்டைக் கையாள வேண்டுமெனில் அந்த பைட் உள்ளடங்கிய நினைவகத் தொகுதியைப் படித்து எழுத வேண்டியதிருக்கும்.

**Word Art :** வேர்டு ஆர்ட் : எழிலான எழுத்துகளை உருவாக்க உதவும் மென்பொருள்.

**word coordinates :** சொல் ஒருங்கிணைப்புகள் : எக்ஸ் மற்றும் ஒய் ஒருங்கிணைப்பு வரிசையைக் குறிப்பிடும் மென்பொருளால் அமைக்கப்பட்ட திரை ஒருங்கிணைப்பு அமைப்பு. இதில் எதிர்மறை எண்கள் இருக்கலாம் அல்லது இல்லாமல் போகலாம். சான்று, -100 மற்றும் +100-க்கு இடது, வலது மதிப்புகள். இந்த ஒருங்கிணைப்புகளை திரையின் உருவ ஒருங்கிணைப்பு அமைப்புடன் அமைக்கப்படும். அதன்படி மேல் இடது மூலை எப்போதும் x=0 மற்றும் y=0 என்றே குறிப்பிடப்படும். இதில் உடன்பாட்டு எண்களே பயன்படுத்தப்படுகின்றது.

**word count :** சொல் எண்ணிக்கை.

**word length :** சொல்நீட்சி ; சொல் நீளம் : ஒரு சொல்லிலுள்ள துண்மிகளின் எண்ணிக்கை. பொதுவாக, இது 4,8,16 அல்லது 32 என்ற எண்ணிக்கைகளில் இருக்கும்.

**Word Pad :** வேர்டுபேட் : ஒரு சொல்செயலி மென்பொருள்.

**word parser :** சொல் பகுப்பான்.

**word passing :** சொல் பரப்பி.

**Wordperfect :** வேர்டுபர்ஃபெக்ட் : கோரல் நிறுவனம் வழங்குகின்ற முழுநீள சொல் செயலாக்கத்தில் அனைத்துத் தன்மைகளும் கொண்ட நிரல் தொடர். 1980இல் அறிமுகப்படுத்தப்பட்ட இது - ஐ.பி.எம் ஆப்பிள் II, மெக்கின்டோஷ், அமீகா, அட்டாசி போன்ற தனிநபர் கணினிகளில் பயன்படுகிறது. பதிப்பு 5.0 இல்... முன்பார்வை முறையும், பதிப்பு 6.0இல் வரைகலை முறையும் ஹையேர் டெக்ஸ்ட் ஆவணங்களை உருவாக்கும் திறனும் பெற்றுள்ளது.

**word processing: WP :** சொல் செய்முறைப்படுத்துதல் ; சொல் தொகுப்பு நிரல் தொடர் : ஒரு மின்னணு விசைப்பலகை, கணினி, அச்சுப்பொறி ஆகியவற்றைப் பயன்படுத்தி, மின்னணுமுறையில் வாசகங்களைச் சேமிப்பதற்கும், எழுதுவதற்கும், கையாள்வதற்குமான உத்தி. வாசகம் பொதுவாக நெகிழ் வட்டு போன்ற ஒரு காந்தச் சாதனத்தில் பதிவு செய்யப்படுகிறது. இறுதி வெளிப்பாடு காகிதத்தில் பதிவாகிறது.

**word processing centre :** சொல் தொகுப்பி ; செய்முறைப் படுத்தும் மையம் : சொல் செய்முறைப்படுத்தும் சாதனங்களையும், ஓர் அமைவனத்திற்கு எழுதிய செய்திகளைத் தயாரிப்பதற்குரிய வசதிகளையும் உடைய ஒரு மையம்.

**word processing machine :** சொல் செயலாக்க எந்திரம் : சொல் செயலாக்கப் பணிகளுக்கு மட்டுமே சிறப்பாகப் பயன்படுத்தப்படும் கணினி.

**word processing operator :** சொல் செய்முறைப்படுத்தும் இயக்குநர் : சொல் செய்முறைப்படுத்தும் சாதனத்தை இயக்குகிற ஆள்.

**word processing package :** சொல் செயலாக்கத் தொகுப்பு : சொல் செயலாக்கப்பணிகளைச் செய்யும் மென்பொருள்.

**word processing programme :** சொல் செய்முறைப்படுத்தும் நிரல் : வாசகத்தை எழுதுவதிலும், பதிப்பிப்பதிலும் உருவமைப்பிலும் கணினி பொறி

யமைவுக்கு வழிகாட்டுகிற மென் பொருள். இதுவும் சொல் செய்முறைப்படுத்தி என்பதும் ஒன்றே.

**word processing society (WPS) :** சொல் செய்முறைப்படுத்தும் கழகம் : சொல் செய்முறைப் படுத்துவதை ஒரு தொழிலாக வளர்ப்பதற்காகப் பள்ளிகளில் சொல் செய்முறைப்படுத்தும் கல்விச் செயல்முறைகளை ஊக்குவிக்கிற அமைவனம்.

**word processing system :** சொல் செய்முறைப்படுத்தும் பொறியமைவு: தானியங்கும் கணினிமயமாக்கிய தட்டச்சு, படியெடுப்பு, கோப்பிடுதல், எழுதக்கூறுதல், ஆவணமீட்பு ஆகியவற்றை தொடர்பு படுத்துகிற தகவல் செய்முறைப் படுத்தும் பொறியமைவு. இக் கால அலுவலகங்களில் அதிகம் பயன்படுத்தப்படுகிறது.

**word processor :** சொல் செய் முறைப் படுத்தி; சொல் செயலி; சொல் தொகுப்பி : வாசகங் களைக் கையாள்வதற்கு வசதி செய்துகொடுக்கும் கணினிச் செயல்முறை. இதனை, ஆவணங்களை எழுதுதல், சொற்கள், பத்திகள் அல்லது பக்கங்களைப் புகுத்துவதற்கு அல்லது மாற்றுவதற்கு பயன் படுத்தலாம். ஆவணங்கள் அச்சடிக்கவும் பயன்படுகிறது.

**word publishing :** சொல் பதிப் பித்தல் : கலத்தல், காட்டுதல் மற்றும் சொல்-வரைகலை அச் சிடல் போன்ற டி.டீ.பீ தன்மைகளை வழங்கும் சொல் செயலாக்கம்.

**word search :** சொல் தேடல்.

**word separator :** சொல் பிரிப்பி : ஒரு சொல்லைப் பிரிக்கின்ற ஒரு அமைப்பு-வெற்றிடம், காற் புள்ளி, புள்ளி, கேள்விக்குறி, வியப்புக்குறி போன்றன.

**words, reserved :** ஒதுக்கீட்டுச் சொற்கள்.

**Wordstar :** வேர்டுஸ்டார் : பெரும்பாலான நுண்கணினிப் பொறியமைவுகளில் உள்ள புகழ்பெற்ற சொல் செய் முறைப்படுத்தி. மைக்ரோ புரோ நிறுவனத்தின் தயாரிப்பு.

**word wrap :** சொற் பொதிவு ; சொல் மடிப்பு : ஒரு சொல், மூல வரிகளின் இறுதியில் பொருந்த வில்லையென்றால் அதனை தானாகவே அடுத்த வரியின் தொடக்கத்திற்கு நகர்த்தி விடு கிற சாதனம். இது சொல் செய் முறைப்படுத்தும் பொறி யமைவுகளில் காணப்படும்.

**work area :** பணி இடப் பரப்பு.

**work around** : ஒப்பேற்றுதல்; சமாளித்தல் : ஒரு மென்பொருளில் அல்லது வன்பொருளில் பிழை அல்லது பிற குறைபாடுகள் இருப்பினும் அக்குறைபாட்டினை நீக்காமலே குறிப்பிட்ட பணியை ஒருவாறாகச் செய்துமுடிக்கும் தந்திரம்.

**Workbook** : பணிப்புத்தகம் : எக்செல் போன்ற விரிதாள் பயன்பாடுகளில், பல தொடர்புடைய பணித்தாள்களைக் கொண்ட ஒரு கோப்பு.

**workbench** : பணிமேசை; பணிமேடை : வன்பொருள் மற்றும் மென்பொருள் இனங்களைப் பல பயன்பாட்டாளர்கள் பகிர்ந்து கொள்ள இடமளிக்கும் செயல்முறைப்படுத்தும் சூழல்.

**work breakdown structure** : பணி முறிவுக் கட்டமைவு ; பணிப் பகுப்புக் கட்டமைவு : ஒரு குறிப்பிட்ட திட்டத்தை முடிப்பதற்குத் தேவைப்படும் பணிக்கூறுகளையும் சாதனங்களையும் விரிவான பட்டியலாகத் தயாரித்தல். திட்டமிடும் செய்முறையை விரைவுபடுத்தத் திட்ட வரைவாளருக்குப் பயன்படும் சாதனம்.

**workflow application** : பணிப்பாய்வுப் பயன்பாடு : ஒரு திட்டப்பணியின் தொடக்கம் முதல் இறுதிவரை அனைத்து நடவடிக்கைகளையும் கண்காணித்து மேலாண்மை செய்வதற்கு உதவும் நிரல்களின் தொகுப்பு.

**work group** : பணிக்குழு : கோப்புகளையும் தரவுத் தளங்களையும் பங்கிட்டுக் கொள்ளும் இரண்டு அல்லது மேற்பட்ட தனி நபர்கள். பணிக்குழுவை ஒட்டி அமைக்கப்படும் 'லேனில்' மின்னணு தரவுகளைப் பங்கிட்டுக் கொள்ள முடியும்.

**work group computing** : பணிக்குழு கணிப்பு : பணிக்குழு சூழ்நிலையில் இறுதிப் பயனாளர் கணிப்பிடல். இதில் தங்களது வன்பொருள் மென்பொருள் மற்றும் தரவுத் தளங்களை குழுவின் வேலைகளுக்காக லேன் முறையில் பணிக்குழுவின் உறுப்பினர் எவரும் பயன்படுத்தமுடியும்.

**working directory** : பணியாற்றும் கோப்பகம் : தரவு மாற்றல்களுக்காக நடப்பில் பயன்பட்டுவரும் விவரத் தொகுப்பு.

**working storage** : செயற்படு சேமிப்பகம் : தற்காலிகச் சேமிப்பகம் என்பதும் இதுவும் ஒன்றே.

**work offline** : அகல்நிலை பணிசெய்.

**workplace shell :** ஓர்க்பிளேஸ் ஷெல்; பணியிட செயல்தளம் : ஓஎஸ்/2 இயக்க முறைமையின் வரைகலைப் பயனாளர் இடைமுகம். மேக்ஓஎஸ், விண்டோஸ் 95 போலவே ஓர்க்பிளேஸ் ஷெல்லும் ஆவணங்களை மையமாகக் கொண்டது. ஆவணக் கோப்புகள் சின்னங்களாகக் காட்டப்படும். ஒரு ஆவணச் சின்னத்தின்மீது சொடுக்கியதும் அந்த ஆவணம் உருவாக்கப் பட்ட பயன்பாடு முதலில் திறந்து பின் அதில் ஆவணம் திறக்கப்படும். ஓர் ஆவணத்தை அச்சிட அந்த ஆவணத்துக்குரிய சின்னத்தை அச்சுப்பொறி சின்னத்தின்மீது இழுத்து விட்டால்போதும். ஓர்க்பிளேஸ் ஷெல், பிரசென்டேஷன் மேனேஜர் மென்பொருளின் வரைகலைச் செயல் கூறுகளைப் பயன்படுத்திக் கொள்கின்றன.

**worksheet :** பணித்தாள் : விரிதாள், திட்டத்தாள் என்பனவும் இதுவும் ஒன்றே.

**worksheet compiler :** பணித்தாள் தொகுப்பு : spread sheet போன்றதே.

**workspace :** பணியிடம் :செயற்பாட்டுச் சேமிப்புக்காக ஒதுக்கப் பட்டுள்ள செயல் முறைகளுக்கும் தரவுகளுக்குமான உள்முக சேமிப்பு அளவினைக் குறிக்கும் சொல்.

**workstation :** பணி நிலையம் : ஒரே சமயத்தில் ஒருவரே பயன்படுத்துவதற்காக வடிவமைக்கப் பட்டுள்ள கணினிச் சாதனங்களின் தொகுதி. இது, ஒரு கணினியுடன் இணைக்கப் பட்ட ஒரு முனையமாகவோ, உள்முகச் செய்முறைப்படுத்தும் திறனுள்ள தனித்தியங்கும் பொறியமைவாகவோ இருக்கலாம். எடுத்துக்காட்டு: தனித்தியங்கும் வரைகலைப் பொறியமைவு; சொல் செய்முறைப் படுத்தி; நேரப்பகிர்வு முனையம்.

**work year :** பணியாண்டு : ஓர் ஆள் ஓராண்டு செய்துள்ள முயற்சிகள். ஒரு குறிப்பிட்ட பணியைச் செய்து முடிக்க எத்தனை ஆட்கள் தேவைப் படும் என மதிப்பிடப் பயன் படுத்தப்படும் சொல்.

**World Conference on Computer in Education (WCCE) :** கல்வியியல் கணிப்பொறி பற்றிய உலக மாநாடு (டபிள்யூசிசிஇ) : பன்னாட்டுத் தரவு செய்முறைப் படுத்தும் இணையமும், அமெரிக்கத் தகவல் செய்முறைப் படுத்தும் கழகங்களும் இணைந்து நடத்தும் பன்னாட்டுக் கணினிக் கல்வி மாநாடு. இது வெவ்வேறு நாடு

களில் நான்காண்டுகளுக்கு ஒரு முறை நடத்தப்படுகிறது.

**World Wide Web Consortium : வைய விரிவலைக் கூட்டமைப்பு :** வைய விரிவலை தொடர்பான அனைத்துப் பிரிவுகளிலும் நடைபெறும் ஆய்வுகளைக் கண்காணித்து சிறந்த தரக் கட்டுப்பாடுகளை நடைமுறைப் படுத்துவதற்கென உருவாக்கப் பட்ட வணிக மற்றும் கல்வி நிறுவனங்களின் கூட்டமைப்பு. சுருக்கமாக டபிள்யூ 3 சி (W3C) என்றழைக்கப்படும்.

**World Wide Web or World-wide Web (WWW) : வைய விரி வலை :** உலக முழுவதிலுமுள்ள ஹெச்டீடீபீ வழங்கன்களில் சேமித்து வைக்கப்பட்டுள்ள, ஒன்றோடொன்று தொடர்புடைய மீத்தொடுப்பு ஆவணங்களின் ஒட்டுமொத்தத் தொகுப்பு. வைய விரிவலையிலுள்ள ஆவணங்கள் வலைப்பக்கங்கள் எனப்படுகின்றன. இவை ஹெச்டீஎம்எல் மொழியில் எழுதப் பட்டவை. இவை யூஆர்எல் மூலம் அடையாளம் காணப்படுகின்றன. ஹெச்டீடீபீ நெறிமுறை மூலம் இவை ஒரு கணினியிலிருந்து இன்னொரு கணினிக்குப் பரிமாற்றம் செய்யப்படுகின்றன. இவற்றில் மீத்தொடுப்புள்ள சொல்/சொல் தொடர்மீது சுட்டியால் சொடுக்க அதனால் சுட்டப்படும் இன்னோர் ஆவணம் பயனாளருக்குக் கிடைத்துவிடுகிறது. அந்த இன்னோர் ஆவணம் ஒரு வரைகலைப் படமாகவோ, ஒலி, ஒளிக்காட்சிக் கோப்பாகவோ, ஜாவா குறுநிரலாகவோ, ஆக்டிவ்எக்ஸ் இயக்குவிசையாகவோ இருக்கலாம். வலைப்பக்கங்களைப் பார்வையிடும் பயனாளர் எஃப்டீபீ வழங்கனிலிருந்து கோப்புகளைப் பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். மின்னஞ்சல் அனுப்பலாம். ஐரோப்பிய நுண்துகள் இயற்பியல் ஆய்வுக் கூடத்தில் (Euro- pean Laboratory for Particle Physics - CERN) பணிபுரிந்த டிமோத்தி பெர்னர்ஸ் - லீ (Timothy Berners - Lee) என்பவர் 1989 ஆம் ஆண்டில் வைய விரிவலையை உருவாக்கினார்.

**worm : புழு : பெருக்கி:** தன்னைத் தானே இரட்டிப்பாக்கிக் கொள்ளும் ஒரு நிரல் தொடர். முனையப் பெருக்கி மிகப் புகழ்பெற்றது. இணையத்தில் இது தன்னைப் பெருக்கிக் கொள்கிறது.

**WOSA : வோசா :** விண்டோஸ் திறந்த நிலை முறைமைக் கட்டுமானம் என்று பொருள்படும் Windows Open System Architecture

என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். வெவ் வேறு விற்பனையாளர்கள் உரு வாக்கும் விண்டோஸ் அடிப் படையிலான பயன்பாடுகள் ஒன்றோடொன்று தொடர்பு கொள்ளச் செய்ய, மைக்ரோ சாஃப்ட் நிறுவனம் உருவாக்கிய பயன்பாட்டு நிரலாக்க இடை முகங்களின் (APIs) தொகுப்பு. திறந்தநிலை தரவுத் தள இணைப்புறுத்தம் (Open Data Base Connectivity-ODBC), செய்தி யனுப்பு பயன்பாட்டு நிரலாக்க இடைமுகம் (Messaging Application Programming Interface-MAPI) தொலைபேசிப் பயன் பாட்டு நிரலாக்க இடைமுகம் (Telephone Application Programming Interface-TAPI) விண்டோஸ் பொருத்துவாய்கள் (Windows Sockets - Winsock) மைக்ரோ சாஃப்ட் தொலைநிலை செயல் முறை அழைப்புகள் (Remote Procedure Calls - RPC) ஆகி யவை, வோசாவில் அடக்கம்.

**Wozniak, Stephen** : ஒஸ்னி யாக், ஸ்டீபன் : ஆப்பிள் கணினிக் கழகம் என்ற அமை வனத்தின் கூட்டு நிறுவனர். Apple ILa, மெக்கின்டோஷ் போன்ற பல நுண்கணினிப் பொறியமைவுகளை உருவாக் கியவர்.

**.wp** : .டபிள்யூபீ : வேர்டு பெர்ஃ பெக்ட் எனப்படும் (கோரல் நிறுவன வெளியீடு) சொல் செயலி மென்பொருளில் உரு வாக்கப்படும் ஆவணங்களை அடையாளம் காட்டும் கோப்பு வகைப்பெயர் (extension).

**WPM** : டபிள்யூபீஎம் : வினாடிக்கு எத்தனை சொற்கள் என்று பொருள்படும் Word Per Minute என்பதன் தலைப் பெழுத்துச் சுருக்கம். தரவு அனுப்பீட்டு வேகத்தின் அளவு.

**WRAM** : டபிள்யூரேம் : சாஊர குறிப்பிலா அணுகு நினைவகம் என்று பொருள்படும் Window Random Access Memory என்ற தொடரின் தலைப்பெழுத்துக் குறும்பெயர். ஒளிக்காட்சித் தகவிகளில் பயன்படுத்தப்படும் ஒருவகை ரேம். ஒளிக்காட்சி ரேம் (VRAM) போலவே, ஒரு வரைகலைப் படிமம் எழுதப் படும்போதே திரையை மறு வண்ணமிட (Repaint) டபிள்யூ ரேம் அனுமதிக்கிறது. ஆனால், வி'ரேமைவிட டபிள்யூ ரேம் வேகம் அதிகம் கொண்டது.

**wraparound** : சுற்றுப்பொதிவு : மிகப் பெரிய முகவரியிடத்தக்க அமைவிடத்திலிருந்து முதல் முகவரியிடத்தக்க அமை விடத்துக்கு மாற்றுதல், காட்சிச் சறுக்கு நகர்வினை கடைசி

எழுத்து நிலையிலிருந்து முதல் எழுத்து நிலைக்கு மாற்றுதல் போன்ற தொடர் செயற்பாடு.

**wrap round :** மடங்கித்தடுப்பு.

**.wri :** .டபிள்யூஆர்ஐ : மைக்ரோ சாஃப்ட்டின் ரைட் (write) பயன் பாட்டுத் தொகுப்பில் உரு வாக்கப்பட்ட ஆவணங்களை அடையாளம் காட்டும் கோப்பு வகைப்பெயர்.

**wrist rest :** மணிக்கட்டு தங்குமிடம் : தட்டச்சு செய் பவர்கள் தங்களது கை மணிக் கட்டினை உயர்த்தி விசைப் பலகை அளவுக்கு வைத்துக் கொள்ளும் மேடை.

**wrist support :** மணிக்கட்டு ஆதரவு : கைகளை மணிக்கட்டு நரம்பு நிலையில் வைத்துக் கொள்வதன்மூலம் கார்ப் பல்டன்னல் நோய்க் குறியைத் தடுத்துப் பாதுகாக்கும் பொருள்.



மணிக்கட்டு ஆதரவுக் கருவி

**write :** எழுது : 1. தகவல்களை கணினியிலிருந்து ஒரு வெளிப் பாட்டுச் சாதனத்திற்கு மாற்றும் செய்முறை. 2. உள்முகச் சேமிப் பகத்திலிருந்து துணைநிலைச் சேமிப்புச் சாதனங்களில் தரவு களைப் படியெடுத்தல். இது 'படி' என்பதிலிருந்து மாறு பட்டது. 3. விண்டோஸ் 3.x தொகுப்புகளில் இணைக்கப் பட்டிருந்த ஒரு சொல் செயலி (Word Processor).

**write back cache :** திருப்பி எழுதும் விரைவி : எழுதுவதைக் கை யாளும் வட்டு அல்லது நினைவக விரைவி. அதிவேக விரைவி நினைவகத் திற்கு மையச் செய லகத்தில் இருந்து எழுதப்பட்ட தரவு கள், எந்திரம் வேலை யின்றி இருக்கும் நேரத்தில் வட்டுக்கோ அல்லது நினைவகத் திற்கோ திருப்பி எழுதப்படுவது.

**write-behind cache :** எழுதும் முன் இடைமாற்று : நிரந்தரச் சேமிப்புக்காக வட்டில் எழுதப் படுவதற்கு முன்பாக தரவுவை இடைமாற்று நினைவகத்தில் குறுகிய நேரம் இருத்தி வைக்கும் தற்காலிகச் சேமிப்பு முறை. இவ்வாறான இடை மாற்று நடவடிக்கை பொது வாகக் கணினியின் செயல் திறனைக் கூட்டும். ஒப்பு நோக்கில் மெதுவாகச் செயல் படும் வட்டில், எழுதவும் படிக்கவும் அடிக்கடி அணுக வேண்டிய தேவையைக் குறைப் பதால் இது இயல்வதாகிறது.

**write enable ring :** எழுத உதவும் வளையம் : ஒரு நாடாச் சுருளில் தகவல்களைப் பதிவு செய் வதற்கு முன்பு அந்த நாடாச் சுருளில் பொருத்தப்படும் பிளாஸ்டிக் வளையம்.

**write error :** எழுதும் பிழை : ஊடகத்தில் ஏதாவது ஒரு கோளாறின் காரணமாக தகவல் களை நினைவகம் அல்லது சேமிப்பகச் சாதனத்திற்கோ அல்லது அதிலிருந்தோ பதிய முடியாத நிலை. நினைவகச் சாதனங்களில் மின்னணு சாதனங்களின் கோளாறுகளாலும் இவ்வாறு ஏற்படுவதுண்டு.

**write head :** எழுது முனை : சாதனங்களுக்குள் தரவுகளை எழுதுவதற்காக வடிவமைக்கப் பட்ட காந்தமுனை. இது படிப்பு முனை என்பதிலிருந்து மாறுபட்டது.

**write inhibit ring :** எழுத்துத் தடுப்பு வளையம் ; எழுதவிடா வளையம் : ஒரு காந்தநாடாவில் தரவுகளை எழுதுவதைத் தடுக்கப் பயன்படுத்தப்படும் பிளாஸ்டிக் வளையம். இது படிப்புக் காப்பு வளையம் என்பதிலிருந்து வேறுபட்டது.

**write mode :** எழுது பாங்கு : கணினிச் செயல்பாட்டில், ஒரு நிரல் ஒரு கோப்பில் எழுத (பதிய) முடிகின்ற நிலை. எழுது பாங்கில் ஒரு கோப்பில் ஏற்கெனவே இருக்கும் தகவல் களை மாற்றியமைக்க அனு மதிக்கப்படுகிறது.

**Write Once, Use Anywhare :** ஒருமுறை எழுதி எங்கு வேண்டு மானாலும் பயன்படுத்திக் கொள்.

**Write Once, Use Manytimes :** ஒருமுறை எழுதி பலமுறை பயன்படுத்து.

**write protect :** எழுதவிடா படிப்புக் காப்பு : ஒரு வட்டில் அல்லது நாடாவில் எழுதுவதைத் தடுப்பதற்கான நடைமுறை.

**write protection :** எழுதவிடாப் பாதுகாப்பு : முக்கிய தரவுகள் மற்றும் செயலாக்க அமைப்பு

போன்ற நிரல் தொடர்களில் தற்காலிகமாகவோ அல்லது வேண்டுமென்றோ மாற்றம்/ நீக்கல் ஆவதைத் தடுக்கப் பயன் படுத்தும் நுட்பம். வன்பொரு ளில் எழுதவிடாப் பாதுகாப்பு அளிக்க முடியும். சான்று : நெகிழ் வட்டில் எழுதவிடாப் பாது காப்பு நாட்கள், இரகசியச் சொல் போன்றவற்றின் மூலம் மென் பொருளிலும் பாதுகாப்பு அளிக்கலாம். நிலைவட்டுகளில் கட்டுப்பாட்டு மின்சுற்று மூலம் மட்டுமே எழுதவிடாப் பாது காப்பு அளிக்க முடியும்.

**write-protect notch** : எழுத விடாக் காப்புப் பிளவு : விரும் பத்தகாத தரவுகள் நெகிழ் வட்டு களில் (நுண் வட்டுகளில்) பதிவு செய்யப்படுவதிலிருந்து பாதுகாப் பதற்கான குறியீடு. இது, எழுத விடாத் தடுப்புப் பிளவின்மீது ஒரு பசையிட்ட இழையினை ஒட்டு வதன்மூலம் செய்யப்படுகிறது.

**write protect ring** : எழுதவிடாக் காப்பு வளையம் : ஒரு நாடாச் சுருளில் ஒட்டப்பட்டுள்ள காப்பு வளையம். இது, நாடா வில் எழுதுவதைத் தடுக்கிறது. இதனை எழுதவிடாத் தடுப்பு வளையம் என்றும் கூறுவர்.

**write protect sensor** : எழுத விடாத் தடுப்புணர்வு.

**write to** : எழுது.

**written media** : எழுத்து ஊடகம்.

**.ws** : .டபிள்யூஎஸ் : ஓர் இணையத் தள முகவரி மேற்கு சமோவாவைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**.wv.us** : .டபிள்யூவி.யுஎஸ் : ஓர் இணையத் தள முகவரி அமெரிக்க நாட்டு மேற்கு வர் ஜீனியா மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**WYSIBYG - What You See Before You Get it** : காண்பதே கிடைக்கும்.

# X

**X.25 : எக்ஸ்-25 :** பன்னாட்டுத் தொலைத் தொடர்பு தர வரையறை அமைப்பான ஐடீயு-டீ (முன்னாள் சிசிஐடீடீ) வெளியிட்டுள்ள பரிந்துரை. பொதி இணைப்புறு பிணையத்துக்கும், ஒரு முனையத்துக்கும் இடையேயான இணைப்பை வரையறுக்கிறது. எக்ஸ்.25 மூன்று வரையறைகளைக் கொண்டது. 1. பிணையத்துக்கும் முனையத்துக்குமிடையே மின்சார இணைப்பு. 2. தரவு பரப்புகை அல்லது தொடுப்பு-அணுகு நெறிமுறை. 3. பிணையப் பயனாளர்களிடையே மெய்நிகர் இணைப்புத் தடங்களை செயலாக்குதல். மூன்று வரையறைகளும் இணைந்து ஓர் ஒத்திசைவான, முழு இருதிசை, முனை-பிணைய இணைப்பை வரையறுக்கின்றன. பொதி வடிவம், பிழைக் கட்டுப்பாடு மற்றும் பிற பண்புக்கூறுகள், ஐஎஸ்ஓ வரையறுத்த ஹெச்டிஎல்சி (High Level Data Link Control) நெறிமுறையை ஒத்ததாகும்.

**X-acto knife : எக்ஸ்-ஆக்டோ கத்தி :** ஒட்டும் சமயத்தில் வெட்டவும், நகலெடுக்கவும், படங்களை ஒட்டவும் பயன்படும் கருவி.

**X-address : எக்ஸ்-முகவரி :** நினைவகத்தின் சரியான வரிசை குறிப்பிடப்படும் ஒருங்கிணைப்பு.

**X axis : எக்ஸ்-அச்சு :** ஓர் ஆயத் தொலைவுத் தளத்தில், கிடைமட்ட அச்சு. இது ஒய் அச்சு, இசட்-அச்சு என்பவற்றிலிருந்து வேறுபட்டது.

**Xbase : எக்ஸ்பேஸ் :** கிளிப்பர், ஃபாக்ஸ்புரோ போன்ற டிபேசை ஒத்த மொழிகள். ஆரம்பத்தில் டிபேசைப் போன்றதாகவே இருந்தாலும், புதிய கட்டளைகளும், தன்மைகளும் இதை டிபேசுக்கு ஏற்றவையாக ஓரளவே ஆக்கி உள்ளன.

**XCMD : எக்ஸ்சிஎம்டி :** புறக் கட்டளை (External Command) என்பதன் சுருக்கம். மெக்கின்டோஷ் கணினிகளுக்காக உருவாக்கப்பட்ட, ஹைப்பர்கார்டு என்னும் மீ ஊடக நிரலின் புறக்குறிமுறை.

**X Consortium : எக்ஸ்-கூட்டமைப்பு :** பல்வேறு வன்

பொருள் நிறுமங்களின் கூட்டமைப்பு. யூனிக்ஸின் வரைகலை பணிச்சூழலான எக்ஸ்-விண்டோஸின் தர வரையறைகளை நிர்வகிக்கும் அமைப்பு. இப்போது ஓப்பன் குரூப்பின் எக்ஸ் பணித் திட்டக்குழு எக்ஸ் விண்டோஸ் அமைப்பின் பொறுப்புகளை வகிக்கிறது.

**X copy : எக்ஸ் காப்பி :** கோப்புகளையும், துணை விவரத் தொகுப்புகளையும் நகலெடுக்கின்ற டாஸ் மற்றும் ஓஎஸ்/2 பயன்பாடு.

**X-datum line : எக்ஸ் விவர-வரி :** துளையிட்ட அட்டையில் மேல் மூலையின் ஓரத்தில் உள்ளதாகப் பயன்படும் ஒரு கற்பனைக்கோடு. சான்றாக, ஹொலரித்தின் 12 துளை வரிசை ஓரத்தின் அருகே உள்ள கோடு.

**XENIX : ஜெனிக்ஸ் :** இது, யூனிக்ஸ் என்ற செயற்பாட்டுப் பொறியமைவின் ஒரு திருத்திய பதிப்பு. இதனை நுண்கணினிகளில் பயன்படுத்துவதற்கு மைக்ரோசாஃப்ட் கழகம் தயாரித்துள்ளது.

**xerographic printer : மின்துகள் ஒளிப்பட அச்சுப்பொறி :** காகிதத்தில் ஓர் ஒளியியல் உருக்காட்சியை அச்சடிப்பதற்கான சாதனம். இதில், காகிதத்தில் மின்நிலைப்பாட்டு முறைப்படி மின்னேற்றம் செய்யப்பட்டுள்ள பகுதிகளை ஒளி மற்றும் இருள் பகுதிகள் குறிக்கின்றன. காகிதத்தில் ஒரு பொடித்த மைத்துகளைப் பூசும்பொழுது மின்னேறிய பகுதிகளில் அந்தப் பொடி ஒட்டிக்கொள்கிறது. ஒட்டிய பொடியை வெப்பமூட்டுதல் மூலம் காகிதத்தில் உருகச் செய்யப்படுகிறது.

**Xerox PARC : ஜெராக்ஸ் பார்க் :** ஜெராக்ஸ் பாலோ ஆல்ட்டா ஆய்வு மையம் (Xerox Palo Alto Research Center) என்பதன் சுருக்கம். கலிஃபோர்னியாவின் பாலோ ஆல்ட்டோவிலுள்ள ஆய்வு மற்றும் உருவாக்க மையத்தைக் குறிக்கிறது. குறும் பரப்புப் பிணையம் (LAN), லேசர் அச்சுப்பொறி, வரைகலைப் பயனாளர் இடைமுகம் (GUI) போன்ற நவீனக் கண்டுபிடிப்புகளின் பிறப்பிடம் ஜெராக்ஸ் பார்க்தான்.

**XFCN : எக்ஸ்எஃப்சிஎன் :** புறச்செயல்கூறு (External Function) என்பதன் சுருக்கம். முதன்மையான நிரலுக்கு வெளியே நிலவு

கின்ற ஒரு கட்டளைத் தொகுதி. முதன்மையான நிரலிலிருந்து அழைப்பு வரும்போது இது செயல்படத் தொடங்கும். இது செயல்பட்டு முடிந்தவுடன் ஒரு மதிப்பினை முதன்மையான நிரலுக்குத் திருப்பி அனுப்பும். மெக்கின்டோஷ் கணினிகளுக் கான ஒரு மீஊடக (Hyper-media) நிரலான ஹைப்பர் கார்டு என்னும் நிரலில் எக்ஸ்எஃப்சி என்-கள் பயன்படுத்தப்படு கின்றன.

**X-height : எக்ஸ்-உயரம் :** ஏற்றம் அல்லது இறக்கம் இல்லாத சிறிய எழுத்தின் உயரம். தேர்ந் தெடுக்கப்பட்ட அச்செழுத்தில் எக்ஸ் எழுத்தின் உயரத்திற்குச் சமமானது.

**x link : எக்ஸ் - தொடுப்பு.**

**xmodem : எக்ஸ்மோடம் :** ஒத் திசையாத் தகவல் தொடர்பு களில் பயன்படுத்தப்படும் ஒரு கோப்புப் பரிமாற்ற நெறி முறை. இது தரவுவை 128 பைட்டுகள் கொண்ட தொகுதி களாக அனுப்பிவைக்கும்.

**xmodem-CRC : எக்ஸ்மோடம் சிஆர்சி :** எக்ஸ்மோடம் கோப்புப் பரிமாற்ற நெறிமுறை யின் மேம்பட்ட பதிப்பு. தகவல் பரிமாற்றத்தில் ஏற்படும் பிழைகளைக் கண்டறிய, 2 பைட்டுகள் கொண்ட, சுழற்சி மிகைச் சரிபார்ப்பு (Cyclical Redundancy Check-CRC) முறையைக் கொண்டுள்ளது.

**xmodem 1k : எக்ஸ்மோடம் 1கே :** கோப்புப் பரிமாற்ற நெறி முறையான எக்ஸ்மோடத்தின் ஓர் உட்பிரிவு. தொலைதூர, மிகஅதிகத் தகவல் பரிமாற்றத் துக்காக வடிவமைக்கப்பட்டது. இதில், தகவல், 1 கிலோ பைட் (1024 பைட்) கொண்ட தகவல் தொகுதிகளாக அனுப்பப்படு கின்றது. மிகவும் நம்பிக்கைக் குரிய பிழைச் சரிபார்ப்பு நுட்பமும் கொண்டது.

**xon/xoff : எக்ஸ்ஆன்/எக்ஸ் ஆஃப்; எக்ஸ்நிகழ்/எக்ஸ்அகல் :** ஓர் ஒத்திசையாத் தகவல் தொடர்பு நெறிமுறை. இதில், தகவலைப் பெறும் சாதனம்/ கணினி, தகவலை அனுப்பும் சாதனம்/கணினியிலிருந்து தரவுப் பாய்வினைக் கட்டுப் படுத்த தனிச்சிறப்பான குறி யீடுகள் பயன்படுத்தப்படு கின்றன. தரவுவைப் பெறும் கணினி தொடர்ந்து தரவுவைப் பெற முடியவில்லையெனில் எக்ஸ்அகல் கட்டுப்பாட்டுக்

குறியீட்டை அனுப்பும். அதனைப் பெற்றவுடன் அனுப் பும் கணினி தரவு அனுப்புவதை நிறுத்திக் கொள்ளும். இது போல எக்ஸ்நிகழ் சமிக்கை கிடைத்தவுடன் தரவுவை அனுப்பத் தொடங்கும்.

**XOR : எக்சோர் (விலக்கும் அல்லது) :** "Exclusive OR" என்ற ஆங்கிலப் பெயரின் தலைப் பெழுத்துச் சுருக்கம்.

**xposition : எக்ஸ் நிலை; எக்ஸ்-அச்சு ஆயத்தொலை.**

**X protocol : எக்ஸ் விண்டோ அமைப்பின் நெறிமுறை.**

**X-punch : எக்ஸ்-துளை :** ஒரு ஹொலரித் அட்டையில் 11 ஆவது துளையிடும் நிலையில் துளையிடுதல். இதனை 11ஆம் துளை என்றும் கூறுவர்.

**x-ray lithography : எக்ஸ்-கதிர் லித்தோகிராஃபி :** ஒரு நுண் மீட்டருக்கும் குறைவான கோடு களைப்போட ஒருங்கிணைந்த மின்சுற்றைச் செயல்படுத்தும் ஒரு நுட்பம்.

**x-seriers : எக்ஸ் தொடர்.**

**x terminal : எக்ஸ் முனையம் :** ஓர் ஈதர்நெட் பிணையத்தில் இணைக்கப்பட்டுள்ள அறிவு நுட்பமுள்ள ஒரு காட்சிச் சாதனம். எக்ஸ்-விண்டோஸ் அமைப்பில் கிளையன் பயன் பாடுகளிலிருந்து வரும் கோரிக் கையின் அடிப்படையில் செயல் பாடுகளை நிகழ்த்தும்.

**X windows : எக்ஸ் விண்டோஸ் :** டிஜிட்டலும், ஐபிஎம்மும் சேர்ந்து எம்ஐடியில் உருவாக் கிய வரைகலை பணி நிலையத் துக்கான சாளர அமைப்புச் சூழ் நிலை. கட்டமைப்பில் உள்ள ஒரு கணினி அமைப்பில் உரு வாக்கப்பட்ட வரைகலையை வேறொரு பணிநிலையத்தில் காட்டுவதற்கு வரைகலைக்காக வடிவமைக்கப்பட்டது. எக்ஸ் விண்டோஸ் எல்லா செயலாக்க அமைப்பிலும் ஓடுமாறு அமைக்கப்பட்டு எல்லா பணி நிலைய விற்பனையாளர்களின் ஆதரவும் பெற்றது.

**x - window system : எக்ஸ்-விண்டோ சிஸ்டம் :** எம்ஐடீயில் உருவாக்கப்பட்ட, காட்சிப் படுத்தலைக் கையாள்வதற்கான தரப்படுத்தப்பட்ட நிரல்கூறு களின் தொகுப்பு. எந்த ஒரு நிறுவனத்தின் கட்டுப்பாட்டி லும் இல்லாதது. யூனிக்ஸ் பணி நிலையங்களில் பயன்படுத்தப் படுகிறது. எந்தவொரு

குறிப்பிட்ட வன்பொருளையோ, இலக்க முறைமையையோ சாராதது.

**X-Y chart : எக்ஸ்-ஒய் வரை படம் :** ஒரு தரவு தொடரை ஒரு நேர அச்சு இல்லாமல் இன்னொரு தரவு தொடருக்கு எதிராக வரைவதற்கு அனுமதிக்கிற வடிவம். இது இரு தொடர்களுக்குமிடையில் இணைத் தொடர்பு இருக்கிறதா என்பதைத் தீர்மானிக்கப் பயன்படுகிறது.

**x-y matrix : எக்ஸ்-ஒய் அணி :** கிடைமட்ட அச்சும் (x-axis), செங்குத்து அச்சும் (y- axis) இணைந்து குறுக்கை/நெடுக்கை கொண்ட ஓர் அமைப்பு.

**X-Y plotter : எக்ஸ்-ஒய் வரைவி :** ஒரு காகிதத்தில், கணினி மூலம், எக்ஸ், ஒய் ஆயத் தொலைவுகள் அடிப்படையில் புள்ளிக் கோடுகளை அல்லது வளைகோடுகளை வரையும் வெளிப்பாட்டுச் சாதனம்.

**x-y-z coordinate system : எக்ஸ் -ஒய்-இஸட் ஆயத்தொலை அமைப்பு :** முப்பரிமாண கார்ட்டீசியன் ஆயத்தொலை அமைப்பு. கிடைமட்ட (x), செங்குத்து (y) அச்சுகளுக்கு செங்கோணமாய் அமைந்துள்ள மூன்றாவது (z) அச்சினையும் கொண்டிருக்கும். இந்த x-y-z ஆயத்தொலை அமைப்பு, கணினி வரைகலையில் நீளம், அகலம், ஆழம் கொண்ட மாதிரியங்களை உருவாக்கவும், முப்பரிமான வெளியில் மாதிரியங்களை நகர்ந்துசெல்லச் செய்யவும் பயன்படுகிறது.

# Y

Y2K - Compliant : ஒய்2கே - தகவு.

yahoo : யாகூ : இணையத்தில் புகழ்வாய்ந்த தேடுபொறி. உலகின் முதல், வலைப்பக்க அடிப்படையிலான இணையத் தரவுகளின் திரட்டு. http://www.yahoo.com என்ற முகவரியில் காண்க. யாகூ இந்தியாவுக்கென கிளை நிறுவனத்தையும் தொடங்கியுள்ளது. இந்தியா தொடர்பான பல்வேறு இணையச் சேவைகள் இதன் மூலம் வழங்கப்படுகின்றன. முகவரி www.yahoo.co.in

yanoff list : யானோஃப் பட்டியல் : ஸ்காட் யானோஃப் உருவாக்கிப் பராமரித்து வரும் இணையச் சேவைகளின் பட்டியல் பேச்சுவழக்கில் இவ்வாறு அழைக்கப்படுகிறது. இணையச் சேவைகள், வளங்களின் மிகத் தொடக்ககாலத் திரட்டுகளில் யானோஃப் பட்டியலும் ஒன்று. முகவரி : www.spectracom.com/islist/

Y axis : ஒய்-அச்சு : ஓர் ஆயத் தொலைவுத் தளத்தில், செங்குத்து அச்சு. இது எக்ஸ்-அச்சு, இசட்-அச்சு என்பவற்றிலிருந்து வேறுபட்டது.

.ye : .ஒய்இ : ஓர் இணைய தள முகவரி யேமன் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

Y-edge leading : ஒய்-முனை முன்னணி : அதன் நீண்ட விளிம்பை முதலிலும் மேல் வரிசையை படிக்கும் நுட்பத்திலும் கொண்டுள்ள துளையிட்ட அட்டையைச் செலுத்தும் முறை. துளையிட்ட அட்டையின் மேல் வரிசை ஒய் (Y) வரிசை ஆகும்.

yellow pages : மஞ்சள் பக்கங்கள் : 1. சன்சாஃப்ட் (சன் மைக்ரோசிஸ்டம்ஸ் நிறுவனத்தின் மென்பொருள் பிரிவு) வழங்கிய யூனிக்ஸ் பயன்கூறின் பழைய பெயர். ஒரு பிணையத்திலுள்ள வளங்களின் பெயர்களையும் இருப்பிடங்களையும் கொண்ட ஒரு மையத் தரவு தளத்தைப் பராமரிக்கும் மென்பொருள். எந்தக் கணுக் கணினியில் இருப்பினும், பெயரைக் கொண்டு வளத்தைக் கண்டறிந்து இயக்கும் ஆற்றல் பெற்றது. இப்போது இப்பயன்கூறு நிஸ் (NIS-Network Information Service- பிணையத்

தகவல் சேவை) என்று அழைக்கப் படுகிறது. 2. அனைத்து களப் பெயர்கள் அவற்றின் ஐபீ முக வரிகளையும் கொண்ட இன்டர் நிக் பதிவுச் சேவையின் தரவு தளம். காண்க: IP Address, Domain Names 3. இணைய வணிகமுறை அடைவுச் சேவை களையும் இது குறிக்கும். சில அச்சிலும், சில மின்னணு வடி விலும் உள்ளன. சில இரு வடிவங்களிலும் நிலவுகின்றன.

**Yes/No/Cancel** : ஆம்/இல்லை/ விடு.

**YHBT** : ஒய்ஹெச்பிடீ : நீங்கள் தூண்டிலில் மாட்டிக் கொண்டீர் கள் என்று பொருள்படும் You Have Been Trolled என்ற தொட ரின் தலைப்பெழுத்துக் குறும் பெயர். இணையத்தில் மின்னஞ் சல் மற்றும் செய்திக் குழுக் களில், செய்தியைப் பெற்றவர் அறிந்தே விரிக்கப்பட்ட வலை யில் அறியாமல் மாட்டிக் கொண்டார் என்பதைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

**YHL** : ஒய்ஹெச்எல் : நீங்கள் தோற்றுவிட்டீர்கள் என்று பொருள்படும் You Have Lost என்ற தொடரின் தலைப் பெழுத்துக் குறும்பெயர். இணையத்தில் மின்-அஞ்சலில், செய்திக்குழுக்களில் ஒய்ஹெச் பிடீ-க்கு அடுத்து வழங்கப்படும் சொல்.

**.yk.ca** : .ஒய்கே.சிஏ : ஓர் இணைய தள முகவரி கனடா விலுள்ள யூக்கான் மாநிலத்தைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**Y modem** : ஒய் மோடெம் : எக்ஸ் மோடம் கோப்பு பரி மாற்ற நெறிமுறையிலிருந்து சற்றே மாறுபட்டது. கீழ்காணும் மேம்பாடுகளைக் கொண்டது. 1 கிலோ பைட் (1024 பைட்) தரவுத் தொகுதிகளைப் பரிமாறிக் கொள்ளும் திறன் பெற்றது. ஓரேநேரத்தில் ஒன்றுக்கு மேற் பட்ட கோப்புகளை அனுப்பும் திறன் பெற்றது. சுழற்சி மிகைச் சரிபார்ப்பு கொண்டது. கேன் என்னும் குறியீட்டை இரு முறை தொடர்ச்சியாய் அனுப் பிய பின்கோப்புப் பரி மாற்றத்தை நிறுத்தி வைக்கும்.

**Y-network** : ஒய் பிணையம் : மூன்று கிளைகளைக் கொண்ட நட்சத்திரப் பிணையம்.

**yocto** : யாக்டோ : அமெரிக்க அளவீட்டு முறையில் ஒரு செப்டில்லியனில் ஒரு பகுதியைக் குறிக்கும் முன் னொட்டுச் சொல். இது $10^{-24}$ அளவுடையதாகும்.

**yoke** : நுகம் : ஓர் ஒளிப் பேழைக் காட்சிக்கு முகவரி யிடுவதற்காகப் பயன்படுத்தப் படும் மின்னணு (எலெக்ட்ரான்) கற்றைக் கோட்டப் பொறி யமைவின் பகுதி.

**Y orientation** : y திசை அமைவு.

**yotta** : யோட்டா : அமெரிக்க அளவீட்டு முறையில் ஒரு செப் டில்லியினைக் குறிக்கும் மெட்ரிக் முன்னொட்டுச் சொல். இதன் அளவு $10^{24}$ ஆகும்.

**yourdan loop** : யூர்தான் லூப் : வெற்றுத் தரவு லூப்புகள் அல்லது முடிவற்ற லூப்புகளை உருவாக்குவதைத் தடுக்கும் யூர்தான் லூப். எட் யூர்தான் இதை முதலில் அறிமுகப் படுத்தினார்.

**y position** : ஒய் நிலை.

**Y-punch** : ஒய்-துளை: ஒரு ஹொலரித் அட்டையில், 12வது துளையிடும் நிலை. இதனை உயர் துளை, 12ஆம் துளை என்றும் கூறுவர்.

**.yt** : .ஒய்டீ : ஓர் இணைய தள முகவரி மயோட்டி நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**.yu** : .ஒய்யு : ஓர் இணைய தள முகவரி முன்னாள் யூகோஸ் லோவிய நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

# Z

**Z : இஸட் :** தடையின் தன்மை. சுழி (பூஜ்யம்) துண்மியைக் குறிப்பிடும் சொல்.

**.z : .இஸட் :** ஒரு கோப்பு வகைப் பெயர். ஜிஸிப் மூலம் இறுக்கிச் சுருக்கப்பட்ட யூனிக்ஸ் கோப்புகளை அடையாளங்காட்டும் வகைப் பெயர்.

**.za : .இஸட்ஏ :** ஓர் இணைய தள முகவரி தென் ஆஃப்ரிக்காவைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப்பெயர்.

**Z-80 : இசட்-80 :** பிரபல 8 துண்மி நுண் செய்முறைப் படுத்திச் சிப்பு. இது நுண் கணினிகளில் தளமாகப் பயன் படுத்தப்படுகிறது.

**Z-address : z-முகவரி :** பெரு சேமிப்பக அமைப்பில், தனித்த சிற்றறை முகவரியின் தன்மை. ஒரு குறிப்பிட்ட சிற்றறைப் பெட்டி இருக்கும் சுவற்றை இது காட்டுகிறது.

**zairia : ஜைரியா :** ஆதி அரபுச் சோதிடர்கள் உருவாக்கிய சிந்திக்கும் எந்திரம்.

**zap : அழி :** 1. தகவல் தள கோப்பிலுள்ள தகவல்கள் அனைத்தையும் மீட்க முடியாத வகையில் அழித்து விடுகிற நிரல். இது பல தகவல் தள செயல்முறைகளில் உள்ளது.

**zap disk : அழி வட்டு :** விஎம் செயலாக்க அமைப்பில் உள்ள மெய்நிகர் வட்டு. விட்டாம் (VTAM) குறியீட்டில் பயனாளர் எழுதும் மாற்றங்களைக் கொண்டுள்ளன.

**z- axis : z- அச்சு :** ஓர் ஆயத் தொலைத் தளத்தில், ஆழத்தைக் குறிப்பிடும் அச்சு. இது, எக்ஸ்-அச்சு, ஒய்-அச்சு என்பவற்றிலிருந்து வேறுபட்டது.

**z-buffer : z இடையகம்; z தாங்கி :** அய்க்ஸ் AIX செயலாக்க அமைப்பில் இசட்-மதிப்புகளை சேமிக்கும் நினைவகத்தின் பகுதி. பார்வையாளர் கண்ணுக்கும் படப்புள்ளிக்கும் இடையிலான தூரம் அல்லது ஆழத்தைக் கொடுக்கிறது.

**z-disk : இசட்-வட்டு :** சிஎம்எஸ் என்னும் உரையாடல் முகப்பு அமைப்பின் வட்டு விரிவாக்கம்.

**ZD Net : இஸட் டி நெட் :** தொழில் நுட்பம் சார்ந்த தனிச் சிறப்பான இணையக் குழுக்

களையும், இலவச/பகிர் மென்பொருள் பயன்கூறுகளையும் கொண்டிருக்கும் ஒரு வலைத் தளம். பீசி பயன்பாட்டாளர்களுக்கென வடிவமைக்கப் பட்டது. ஸிஃப்டேவிஸ் பதிப் பகக் குழுவினர் நிகழ்நிலை தரவு சேவையாக இதனை உரு வாக்கினர்.

**zepto : செப்டோ :** அமெரிக்க அளவீட்டு முறையில் ஒரு செக்ஸ் டில்லியனில் ஒரு பங்கு என்பதைக் குறிக்கும் மெட்ரிக் முன்னொட்டுச் சொல். இதன் மதிப்பு $10^{-21}$ ஆகும்.

**zero : பூஜ்யம்; சுழி :** பொதுவாக அளவின்மையைக் குறிப்பிடும் எண். பல கணினிகளில், நேர் மற்றும் எதிர் சுழி (பூஜ்யம்) களுக்குத் தெளிவான குறியீடுகள் உள்ளன.

**zero access storage : சுழி (பூஜ்யம்) அணுகு சேமிப்பகம்.**

**zero address instruction : சுழி முகவரி நிரல் :** முகவரி பகுதியே இல்லாத எந்திர நிரல்.

**zero-complemented transition coding : சுழி கூட்டெண் மாறும் குறியீடு:** தரவு சரத்தின் ஒவ்வொரு 0 துண்மிக்கும் அனுப் பப்பட்ட சமிக்கையின் நிலையை தலைகீழாக்கி தரவு குறியீடு அமைத்தல்.

**zero divide : சுழி வகுத்தல் :** ஒரு வகுத்தல் கணக்கீட்டில் வகுக் கும் எண் சுழியாக (பூஜ்யமாக) இருத்தல். எந்தவோர் எண்ணை யும் சுழியால் வகுத்துவரும் விடையைக் கணினி வழியாகக் கணிக்க முடியாது. எனவே ஒரு கணினி நிரலில் இதுபோன்ற கணக்கீடு அனுமதிக்கப்பட மாட்டாது. இதுஒரு பிழை யாகவே கருதப்படும்.

**zerofill : சுழி நிரப்பு :** சுழித்தைக் குறிப்பிடும் எழுத்துகளால் பயன்படாத சேமிப்பு இடங் களை நிரப்புதல்.

**zero flag : பூஜ்ஜியக் கொடி; சுழிக் கொடி:** ஓர் நிரல் சுழி மதிப்பளவைக் கொண்டிருக்கும் போது, தருக்க 1-க்குச் செல்கிற ஏற்ற இறக்கத் துடிப்பு.

**zeroize : சுழி(பூஜ்யம்)யாக்கல் :** ஒரு செயல்முறையைப் சுழி களுடன் தொடக்கம் செய்தல். நினைவகத்தில் இடைவெளி களைப் சுழிகளால் நிரப்புதல்.

**zero matrix : சுழி மேட்ரிக்ஸ் :** செல்லாத மேட்ரிக்சின் வேறொரு பெயர்.

**zero mode : சுழி முறை :** இலக்கமுறை வரைவியை இயக்கும் முறை. இதில் ஒவ் வொரு உள்ளீட்டுக் கட்டளை யும் ஏற்றத்தைக் குறிப்பிடு

வதுடன் ஏதாவது ஒன்று அல்லது இரண்டு அச்சுகள் தொடர்பான வேக மாற்றத்தை ஏற்படுத்துகிறது.

zero output signal : சுழி வெளிப்பாட்டு சமிக்கை (சைகை).

zero phase filter : சுழி நிலை வடிகட்டி : இரட்டைப்படை எண் மாதிரிகளைப் பயன் படுத்தும் ஒரு வடிகட்டி. மாதிரியின் நடு உள்ளீட்டைப் போன்ற அதேஇடத்தில் உள்ள வெளியீட்டை அளிக்கிறது.

zero point : சுழி புள்ளி : வென்ச்சுராவின் செங்குத்து மற்றும் குறுக்கு வாட்டக் கோடுகளின் மீதுள்ள 'சி' விளக்கங்களின் குறுக்கிணைப்பு.

zero point intersection : சுழி புள்ளி குறுக்கிணைப்பு : வெளியீட்டு விண்டோவின் மேல் இடதுமூலையில் குறுக்கே சந்திக்கின்ற கோடுகள்.

zero punch : சுழி துளை : ஹொலரித் துளை அட்டையின் மேலிருந்து மூன்றாம் வரிசையில் போடப்படும் துளை.

zero-slot LAN : சுழி-இட லேன் : தொடர் அல்லது இணை 'போர்ட்' டில் கணினிகளுக்கு இடையில் அனுப்புவதைக் குறிப்பிடுகிறது. 'லேன்' அட்டைகள் பயன்படுத்தும் விரிவாக்க இடம் இதனால் விடுவிக்கப்படுகிறது.

zero suppression : சுழி அமுக்கம்; சுழி ஒடுக்கம் : ஓர் எண்ணிலிருந்து முக்கியமற்ற சுழிகளை ஒடுக்கி விடுதல் (ஒழித்து விடுதல்). பொதுவாக, இது அச்சிடும் செயற்பாட்டுக்கு முன்பு அல்லது செயற்பாட்டின்போது செய்யப்படுகிறது. எடுத்துக் காட்டு : *00004763* என்ற இலக்கம் சுழி ஒடுக்கத்தின் பிறகு *4763* என்றாகிறது. பொதுவாக பக்க எண்ணிடுவதில் கையாளப்படுகிறது. தொடக்கப் பக்க எண்கள், *01*, *02*... அல்லது *001*, *002* ... என்பதற்குப் பதிலாக *1*, *2* ... என்று எண்ணப்படுகிறது.

zero track : சுழி(பூஜ்ஜிய)த் தடம்: 'பூட்' பதிவேட்டைக் கொண்ட வட்டின் முதல் தடம். மோசமான சுழி தடம் இருக்கும் வட்டைப் பயன்படுத்த முடியாது. சுழி தடம் உள்ள வட்டை சீரமைக்கும்போதோ அல்லது படிக்கும்போதோ மோசமான சுழி தடம், வட்டு பயனில்லை என்று டாஸ் காட்டும்.

zero track sensor : சுழி தட உணர்வி.

zero transmission level reference point : சுழி அனுப்பு

நிலை குறிப்புப் புள்ளி : ஒரு மின்சுற்றில் தோராய மதிப்பாகத் தேர்ந்த புள்ளி. அங்குதான் தொடர்புள்ள எல்லா அனுப்புதல்களும் குறிப் பிடப்படும்.

**zero wait state : காத்திருக்கத் தேவையில்லாமை; சுழி காத் திருப்பு நேரம்; காத்திருப்பற்ற நிலை :** குறிப்பிலா அணுகு நினைவகம் (RAM), செயலி யானது காத்திருக்க வேண்டிய தேவையில்லாத அளவுக்கு வேகமாய்ச் செயல்படும் நிலை.

**zero word : சுழி சொல் :** குறி யீட்டுக் கொள்கையில், சுழி இலக்கங்களை மட்டுமே கொண்ட ஒரு சொல். ஹம்மிங் இடத்தின் ஆரம்பத்தில் இது உள்ளது.

**zetta : ஸெட்டா :** அமெரிக்க அளவீட்டுமுறையில் ஒரு செக்ஸ்டில்லியனைக் குறிக்கும் மெட்ரிக் முன்னொட்டு அள வீட்டுச் சொல். ஒரு செக்ஸ் டில்லியன் என்பது $10^{21}$ ஆகும்.

**z-force : இசட்-விசை :** ஒரு தொடு திரையின் அழுத்தும் உணர்வு.

**z-fold paper : இசட்-மடிப்புத் தாள் :** விசிறி மடிப்புக் காகிதம் அல்லது தொடர் எழுது பொருளுக்கு மற்றொரு பெயர்.

**z-format : இசட்-வடிவமைப்பு :** படப் புள்ளியின் வடிவமைப்பு. வருடியின் வரிசையில் படப் புள்ளி மதிப்புகளின் தொகுதி யாக ஒருங்கிணைத்தல். AIX செயலாக்க அமைப்புடன் தொடர்புள்ளது.

**zif socket : ஸிஃப் பொருத்து வாய் :** செருகச் சக்தி தேவை யில்லா செருகுவாய் என்று பொருள்படும் Zero Insertion-force Socket என்பதன் சுருக்கம். ஒருங்கிணைந்த மின்சுற்றுப் பலகைகளுக்கான ஒருவகைப் பொருத்துவாய். ஒரு சிறிய நெம்பு கம்பி அல்லது திருப்புளி கொண்டு மெல்லத் திறந்து சிப்புவைச் செருகு வாயில் வைத்துவிட்டால் போதும், இறுகப் பற்றிக்கொள்ளும். பிற செருகுவாய்களில் சிப்புவை அழுத்திச் செருகவேண்டும். அடிக்கடி எடுத்துப்போட வேண்டிய சில்லுகளுக்கு/ அட்டைகளுக்கு ஸிஃப் பொருத்துவாய் உகந்தது. ஆனால் இவை அதிக இடத்தை அடைத்துக் கொள்ளும். மரபு முறைச் செருகுவாய்களைவிடச் செலவு அதிகமாகும்.

**zig-zag fold paper : சிக்-சாக் மடிப்புக் காகிதம் :** விசிறி மடிப் புக் காகிதம் அல்லது தொடர் எழுதுபொருளின் வேறு பெயர்.

**zilog : சிலாக் :** உலகின் முதல் கணினி செயலகச் சிப்பான இசட்- 80இன் உற்பத்தியாளர். இந்த சிப்புவால் அமைந்த கணினி சிபிஎம் செயலாக்க அமைப்பில் இயங்கியது. பின்னர் இதைவிட வேகமாகச் செயலாற்றும் இன்டெல் 8080 சிப்பு இதைப் பின்னுக்குத் தள்ளியது. அதற்கடுத்து ஐ.பி.எம் பீசியில் பயன்படுத்தப்பட்ட 8088 சிப்பு கணினித் துறையில் புரட்சியையே ஏற்படுத்தியது.

**zip : சிப் :** பீகேசிப்பைப் (PKZIP) பயன்படுத்தி ஒரு கோப்பை சுருக்குதல்.

**zip drive : ஸிப் இயக்ககம் :** அயோ மெகா நிறுவனம் உருவாக்கிய ஒரு வட்டு இயக்ககம். 3.5 அங்குல விட்டமுள்ள செருகுவட்டிலேயே (ஸிப் வட்டுகள்) 100 மெகா பைட் தரவை எழுத முடியும்.

**zip files : சிப் கோப்புகள் :** பிகேசிப்பைப் பயன்படுத்தி சுருக்கிய வடிவத்தில் உருவாக்கப்படும். ZIP விரிவாக்கம் உள்ள கோப்பு. இவற்றைப் பயன்படுத்த அவற்றை விரிக்க வேண்டும். PKUNZIP.EXE நிரல் தொடர் சுருக்கிய கோப்புகளை வழக்கமான அளவில் விரிக்கிறது. தரவு பாதுகாப்பதற்கு வசதியான, சிக்கனமான வழி இதுவே.

**zip mode : சிப் முறை :** வரைவியின் இயக்க முறை. இதில் ஒவ்வொரு உள்ளீட்டுக் கட்டளையும் கூட்டிய மாறுபாட்டைக் குறிப்பிடும்.



ஸிப் இயக்ககம்

**.zm : .இஸட்எம் :** ஓர் இணைய தள முகவரி ஜாம்பியா நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப் பிரிவுக் களப் பெயர்.

**zmodem : இசட் மோடம் :** எக்ஸ் மோடம் கோப்பு பரிமாற்ற நெறிமுறையின் மேம்

பட்ட வடிவம். அதிக அளவு தரவு பரிமாற்றத்தைக் குறைந்த பிழையுடன் கையாளும். கோப்பு பரிமாற்றம் எதிர்பாரா இடையூறு காரணமாய் இடையில் நின்றுபோய் மீண்டும் தொடங்கும்போது தொடக்கத்திலிருந்து தொடங்காமல் விட்ட இடத்திலிருந்து தொடங்கும் மீள் தொடங்கு குறியிடம் (checkpoint restart) என்னும் வசதியைக் கொண்டுள்ளது.

**z-net** : இசட்-நெட் : ஈதர்நெட் போன்ற குறும்பரப்புக் கட்டமைப்பு.

**zombie process** : **சோம்பி செயல்முறை** : அதன் நுழைவு செயலாக்கப் பகுதிக்கு வந்த போதிலும், பயனாளர் அல்லது கெர்னல் இடம் ஒதுக்கப் படாத, முடிந்த செயல்முறை. AIX இல் பயன்படுவது.

**zone** : **மண்டலம் ; வட்டாரம்** : மீண்டும் பயன்படுத்தக்கூடிய வட்டின் பகுதியில் தங்குகின்ற வட்டுப் பதிவேடுகளில் ஒரு பகுதி.

**zone - bit recording** : **மண்டல பிட் பதிவு.**

**zone bits** : **மண்டலத் துண்மிகள்; வட்டாரத் துண்மிகள்** : ஆல்ஃபா எண்மான எழுத்துகளைக் குறிக்கும் எண்மானத் துண்மிகளுடன் சேர்த்துப் பயன்படுத்தப்படும் தனிவகைத் துண்மிகள்.

**zoned decimal** : **பிரிக்கப்பட்ட பதின்மம்**: ஈ.பி.சி.டி.ஐ.சி-யில் குறியீடு இடப்பட்ட எண்ணெழுத்து, ஒவ்வொரு பதின்ம இலக்கமும் ஒரு எட்டியல் சேமிப்பக அளவுள்ளது. இலக்கங்கள் *4* முதல் *7* வரையிலான துண்மிகளிலும், குறியீடுகள் *0* முதல் *3* வரையிலும், மற்றவை *1* களிலும் இருக்கும். சான்றாக, பிரிக்கப்பட்ட பதின்ம படிவத்தில் *+123*-ன் பதின்ம மதிப்பு *111 0001 1111 0010 1100 0011* என்று குறிப்பிடப்படும். கட்டப்படாத பதின்ம படிவம் என்றும் இது அழைக்கப்படும்.

**zone header** : **மண்டலத் தலைப்பு** : ஆப்பிள் மெக்கின் டோஷ் கணினிகளில், ஒவ்வொரு நினைவகத் தொகுதியும் தொடக்கத்தில் ஒரு தலைப்பினைக் கொண்டிருக்கும். நினைவக மேலாண்மை அமைப்புக்குத் தேவைப்படும் தகவல் இத்தலைப்பில் அடங்கியிருக்கும். நினைவகத் தொகுதிகளை சிறப்பாகக் கையாள்வதற்கு இத்தகவல் உதவும்.

**zone portion** : **மண்டலப் பகுதி.**

**zone position** : **மண்டல நிலை.**

**zone punch :** மண்டலத் துளை; வட்டாரத் துளை : ஹொலரித் அட்டையில் ஒ, எக்ஸ் அல்லது ஒய் வரிசையிலுள்ள துளை.

**zoo210 :** ஸூ210 : கோப்புகளை இறுக்கிச் சுருக்கும் நிரலான ஸூ-வின் பதிப்பு 2.1 இவ்வாறு அழைக்கப்படுகிறது. இறுகிய கோப்புகளின் வகைப் பெயர் (extension) .zoo என இருக்கும். எல்ஹெச் ஆர்க் (LHARC) என்னும் நுட்பத்தின் அடிப்படையிலேயே ஸூ210-ன் படிமுறைத் தருக்கம் அமைந்துள்ளது. யூனிக்ஸ் மற்றும் இன்டெல் கணினிகளுக்கான ஸூ210 கிடைக்கிறது.

**zoom :** பெரிதாக்கு : பல வரைகலை மற்றும் சில விரிதாள் தொகுதிகளில் காணப்படும் தன்மை. வரைகலைப் பொருளின் ஒரு குறிப்பிட்ட பகுதியை பெரிதுபடுத்திப் பார்க்க இது பயன்ாளரை அனுமதிக்கிறது. ஒளிப்படக் கலையில் இருந்து இச்சொல் பெறப்பட்டது (ஜூம் லென்ஸ்).

**zoom box :** ஸூம்பெட்டி; பெரிதாக்கும் பெட்டி : மெக்கின்டோஷ் கணினிகளில் திரையில் தோன்றும் ஒரு சாளரத்தின் சட்டத்தில் மேல் வலது மூலையில் காணப்படும் ஓர் இயக்கு விசை (control). பயனாளர் இப்பெட்டிமீது மாறிமாறிச் சொடுக்கும்போது, சாளரம் மீப்பெரும் அளவுக்கும், பயனர் முன்பு சரி செய்து வைத்திருந்த தொடக்க அளவுக்கும் இடையே மாறிக் கொண்டிருக்கும்.

**zoomed video port :** பெரிதாக்கப்பட்ட ஒளிக்காட்சித்துறை.

**zoom factor :** பெரிதாக்குக் காரணி.

**zoom in :** அண்மையாக்கு; உள்ளிருப்பதைப் பெரிதாக்கு : பல் ஊடகப் பயன்பாடு அல்லது கணினி வரை கலையில் ஏற்படும் ஒளிப்பட மாற்றம், அது படமெடுக்கும் பொருளை நோக்கி ஒளிப்படக்கருவி நெருங்கி வருவதுபோல் தோன்றுவது. செயலாற்றும் பொருளின் நெருங்கிய பார்வை இதில் கிட்டுகிறது. விரிவாக செயலாற்ற இது மிகவும் உதவிகரமானது. 'இன்ஜூம்' முறையில் அளவு பெரிதாகும்.

**zooming :** மேற்செலுத்தம் ; பெரிதாக்கல் : தற்போது காட்சியில் தெரியும் படத்தின் அடுத்தடுத்த சிறிய பகுதிகள் மீது நகர்த்துவதன் மூலம் அல்லது முழுத்திரையினையும் விண்டோ மூடிக்கொள்ளும்வரை நகர்த்துவதன் மூலம் ஒரு வரைகலைக்

காட்சியின் தோற்றத்தை மாற்றுதல். ஒரு காட்சித்திரையில் காட்டப்படும் ஓர் உருவத்தை விரிவாக்குகிற அல்லது குறைக்கிற திறம்பாடு.

**zoom out : சிறிதாக்கு ; சேய்மையாக்கு:** கணினி வரைகலை அல்லது பல் ஊடகப் பயன்பாடுகளில், ஒளிமுறை ஒளிப் படக் கருவியில் ஏற்படும் மாற்றம். இதில் கருவியானது அது படம் பிடிக்கும் பொருளில் இருந்து பின்னோக்கி வருவது போலத் தோன்றும். 'ஜூம் அவுட்' முறையில் அளவு சிறிதாகும்.

**zoom pyramid : பிரமிடாக்கு :** அதிகத் தெளிவான உருவமும், அதையடுத்து அதன் பாதியளவே தெளிவான உருவமும் கொண்ட தொடர்ச்சியான இலக்க உருவங்கள். உயர் தெளிவுக்குத் தேவைப்படும் இடத்தில் மூன்றில் ஒரு பங்கே தேவைப்படும். எந்த வகையான தெளிவான உருவமும் விருப்பம்போல் பெறலாம். நேரடியாகவோ அல்லது ஒன்றில் ஒன்றை நுழைத்தோ பெறலாம்.

**Z-parameter : இசட்-அளவு கோல் :** நான்கு டிரான்சிஸ்டர்களின் தொகுதிக்குச் சமமான மின்சுற்று அளவு கோல்களில் ஒன்று. ஒய் அளவு கோலின் தலைகீழ் அமைப்பு.

**.zr : .இஸட்ஆர் :** ஓர் இணையதள முகவரி ஸயர் நாட்டைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும் பெரும் புவிப்பிரிவுக் களப் பெயர்.

**zulu time : ஸூலு நேரம் :** கிரீன்விச் சராசரி நேரம் என்பதைக் குறிக்கும் கொச்சை வழக்கு.

**Zuse, Konrad : ஜூஸ், கோன்ராடு :** கணினிச் சாதனங்களை உருவாக்குவதில் முன்னோடியாக விளங்கிய ஜெர்மன் அறிஞர். இவர், 1941இல், வியக்கத்தக்க முன்னேறிய அம்சங்கள் கொண்ட ஜூஸ் இசட்-3 என்ற எந்திரத்தை உருவாக்கினார். இதன் வேகம் மார்க் I கம்ப்யூட்டரின் வேகத்துக்கு இணையானது.